# A TAMIL BIBLE DICTIONARY

BY

A. C. CLAYTON

PART I

(PAGES 1—200)

4670

# வேத அகராதி

முதலாம் பாகம்

(பக்கம் 200)

[illegible]

அ. சி. கிளேற்றன் ஐயரால்

இயற்றப்பட்டது



THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA,
MADRAS, COLOMBO AND LONDON
1911

# PREFACE

THE *Tamil Bible Dictionary* is an attempt to present the result of the latest reliable Biblical scholarship in a form helpful to Tamil students of the Bible. It is a compilation, but a compilation based on recent research.

It is based on *The Dictionary of the Bible*, Five Volumes, edited by Dr. Hastings, 1898 to 1904, and *The Dictionary of the Bible*, One Volume, edited by Dr. Hastings, 1909.

The commentaries of Driver, Lightfoot, Sanday, G. A. Smith and similar scholars—not forgetting the incomparable Bengel—have been frequently consulted.

I am greatly indebted to the following writers for important articles that appear in Part I:—

The Rev. A. Fehlberg: அற்புதம்—*Miracles.*

The Rev. G. E. Phillips, B.A.: இயேசுகிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம்—*The History of Jesus Christ.*

,, இயேசுகிறிஸ்து அருளின உபதேசம்—*The Teaching of Jesus.*

,, இயேசுகிறிஸ்துவின் உயிர்த்தெழுதல்—*The Resurrection of Jesus.*

,, இயேசுகிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றிய புதிய ஏற்பாட்டிலுள்ள கோட்பாடுகள்—*The Christology of the New Testament.*

,, எரேமியா—*Jeremiah.*

The Rev. L. Reichard: உபவாசம்—*Fasting.*

The Rev. H. Schomerus: எபிரெயருக்கு எழுதின நிருபம்—*The Epistle to the Hebrews.*

The articles அகுஸ்தீன், அக்கினி, அரியானர், அவஸ்தைபூசுதல், அழைப்பு, ஆத்துமா, ஒலிவம், are adapted from articles written by the late Dr. Bower.

For the remaining nine hundred articles I am responsible.

As no concordance to the whole Tamil Bible exists I have tried to mention all proper names in the Tamil Bible and a number of common words, such as அரண், அரம், அடை, உருள், which strictly speaking ought only to be found in a concordance.

There is some inconsistency in the spelling of proper names in the Tamil Bible, some names being spelt in three, four or even five different ways, and this has added much to the difficulty of preparing a complete list and necessitated a great many cross references. Usually a subject is dealt with under the spelling that comes first in alphabetical order. Thus யெகு, Jehu, is discussed under ஏகு.

A word about these references may be of service. It was impossible to print in full the thousands of passages referred to in this volume. But the references are very important, have been carefully selected, and frequently give much information that is only outlined in the article in which the quotation appears. Hence to learn all that this *Bible Dictionary* has to teach the references need to be studied. In many cases it will be seen that only one reference is given after a proper name. This implies that the passage referred to will give all the available information. If the name is found to occur in a genealogical or geographical list, this will mean that at present no more is known about that person or place.

I need hardly add that in the references the ordinary figures give the numbers of the chapter and the 'superior' small figures give the numbers of the verses referred to.

I am deeply grateful to the American Tract Society, the Religious Tract Society, London, and the friends who have generously helped to make it possible to publish this book at a price within the means of all Tamil Preachers, Teachers, Evangelists and Biblewomen.

I may add that if health is continued the Second Part, completing half the work, will be published about the middle of 1911.

A. C. CLAYTON.

*January, 1911.*

# முகவுரை



தற்காலம் அதிக திறமையுற்ற வேத பண்டிதராகிய ஹேஸ்டிங்ஸ் ஐயரும் இன்னும் பல வேத சாஸ்திரிகளும் இங்கிலீஷில் எழுதிய வேத அகராதி, வேத வியாக்கியானம் முதலிய நூல்களை ஆதாரமாகக்கொண்டு இந்தத் தமிழ் **வேத அகராதி** எழுதப்பட்டிருக்கிறது.

இப்பிரதி இந்த **வேத அகராதியின்** முதலாம் பாகம். இதில் அடியிற்கண்ட விஷயங்களைப்பற்றி எழுதினவர்களும் அவர்கள் எழுதிய நிபந்தங்களும்:

| | |
|---|---|
| சங்: A. பெல்பெர்க் .... .... | அற்புதம். |
| ,, G. E. பிலிப்ஸ், பி.ஏ. | இயேசுகிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம். |
| ,, | இயேசுகிறிஸ்து அருளின உபதேசம். |
| ,, | இயேசுகிறிஸ்துவின் உயிர்த்தெழுதல். |
| ,, | இயேசுகிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றிய புதிய ஏற்பாட்டிலுள்ள கோட்பாடுகள். |
| ,, | எரேமியா. |
| ,, L. ரைகார்ட் .... .... | உபவாசம். |
| ,, H. சொமேரஸ் .... .... | எபிரெயருக்கு எழுதின நிருபம். |

காலஞ்சென்ற வேத சாஸ்திரியாராகிய பவர் ஐயர் எழுதிய வேத அகராதியில் கண்ட **அகுஸ்தீன், அக்கினி, அரியானா், அவஸ்தைபூசுதல், அழைப்பு, ஆத்துமா, ஒலிவம்** என்னும் பெயர்கொண்ட நிபந்தங்கள் திருத்தஞ் செய்யப்பட்டு இந்த **வேத அகராதியில்** சேர்க்கப்பட்டிருக்கின்றன. மற்றத் தொளாயிரம் நிபந்தங்களும் என்னால் எழுதப்பட்டன.

தமிழில் முழு வேதாகம சொல்லகராதி இல்லாததினால் அதைப்போலும் உதவுமாறு அநேக பதங்கள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த **வேத அகராதியை** வாசிப்போர் இதில் சொல்லியிருக்கும் ஒவ்வொரு நிபந்தத்தின் பொருளை முழுதும் அறியவேண்டும் என்று விரும்பினால், அந்தந்த நிபந்தத்தில் குறித்த வாக்கியங்களை எல்லாம் வேதத்தில் பார்ப்பது அவசியம்.

பல பதங்களைப்பற்றிய விசேஷம் அவ்வளவு இல்லாமையால், அவைகளைப்பற்றி அறியக்கூடியதெல்லாம் அடங்கியிருக்கும் ஒரே வாக்கியம் எழுதப்பட்டிருக்கிறது.

தமிழ் வேதாகமத்தில் ஒரே ஆளின் பெயர் அல்லது ஒரே இடத்தின் பெயர் வெவ்வேறு வசனங்களில் வித்தியாசமான எழுத்தில் எழுதியிருக்கிறதினால், அவையெல்லாம் தமிழ் அக்ஷர அட்டவணையின்படி இதில் எழுதப்பட்டிருக்கின்றன. உ-ம். **ஏகு, யெகு; எசேர், எத்சேர், ஏசேர், ஏசேர், ஏத்சேர்; ஆனக்கீம், ஏனாக்கீம்; உசியா, ஊசியா** காண்க.

நிபந்தங்களில் எழுதியிருக்கும் பெரிய எண்கள் அதிகாரங்களையும், அவ்வெண்களுக்குமுன் மேலிருக்கும் சிறு எண்கள் வசனங்களையும் காட்டுகின்றன.

அமெரிக்கா தேசத்து கிறிஸ்தவ புஸ்தக சங்கமும், லண்டன் பட்டணத்து சன்மார்க்க புஸ்தக சங்கமும், இன்னும் பல சிநேகிதரும் இந்த **வேத அகராதியைப்** பிரசுரம் செய்யும் பொருட்டு புரிந்த பேருதவியினால் இவ்வளவு நேர்த்தியாய் அச்சிடப்பட்ட இப்புஸ்தகம் சொற்ப கிரயத்துக்கு விற்பனையாகும்.

கடவுள் எனக்கு வேண்டிய சுகத்தை அளித்தால் இந்த **வேத அகராதியின்** இரண்டாம் பாகம் 1911-ஞ் ஜூலை மாதத்திற்குள் வெளியாகும்.

1911-ஞ் ஜனுவரிமீ. **ஏ. சி. கிலேற்றன்.**

# TAMIL BIBLE DICTIONARY

# வேத அகராதி

## அ.

**அ.** எபிரெய, கிரேக்க பாஷைகளின் எழுத்துக்களில் முதல் எழுத்து. **அல்பா ஆலேப்** காண்க.

**அகசாய். Ahazai.** = யாசெரா. 1 நாளா $9^{12}$ நெகே $11^{13}$.

**அகசியா. Ahaziah.** [கர்த்தர் பிடித்திருக்கிறார்].

1. இஸ்ரவேல் இராசாவாகிய ஆகாபினுடைய மகன். 1 இரா $22^{51}$. ஏறக்குறைய இரண்டு வருஷம் அரசாண்டு, பாகால் சேபூபைத் தொழுது கடைசியில் எலியா சொன்ன வார்த்தையின்படியே இறந்துபோனான். 2 இரா $1^{17}$.

2. யூதாவின் இராசாவாகிய யோராமினுடைய மகன். 2 இரா $8^{25}$ 2 நாளா $22^{6}$. இவனுக்கு மறுபெயர் யோவாகாஸ். 2 நாளா $21^{17}$. இவனும் பாகால் முதலிய கானான் தேசத்துத் தேவதைகளை வணங்கி வந்தவன்.

**அகஸ்பாய். Ahasbai.** 2 சாமு $23^{34}$.

**அகபு. Agabus.** கிலவுதியுராயன் அரசாண்ட காலத்தில் (கி-பி. 41-54) கொடிய பஞ்சம் உண்டாகும் என்றும், பவுல் சிறையில் வைக்கப்படுவான் என்றும் முன்னுரைத்த தீர்க்கதரிசி. அப் $11^{27}$ $21^{10}$.

**அகரா. Aharah.** 1 நாளா $8^{1}$. = அகிராம். எண் $26^{38}$. = எகி. ஆதி $46^{21}$.

**அகரி. Hagri.** 1 நாளா $11^{38}$.

**அகர்கேல். Aharhel.** 1 நாளா $4^{8}$.

**அகலியா. Hachaliah.** நெகேமியாவின் தகப்பன். நெகே $1^{1}$.

**அகாஸ்வேரு. Ahasuerus.**

1. இவன் கி-மு. 529-521-வரைக்கும் பெர்சியா ராஜ்யத்தை ஆண்ட கோரேஸ் (*Cyrus*) என்பவனின் மகனாகிய கம்புசேஸ் (*Cambyses*) என்னும் சக்கரவர்த்தி. இவ்விரண்டு பெயரும் ஒரு ஆளைத்தான் குறிக்கிறது என்பது சில வித்துவான்களுடைய அபிப்பிராயம்.

2. இவனுக்கு மறு பெயர் சஷ்டா (*Xerxes*). வட இந்தியாவின் மேற்கு எல்லை துவங்கி ஆபிரிக்கா கண்டத்தின் எத்தியோப்பியா மட்டுமுள்ள 127 நாடுகளை (கி-மு. 484-465) அரசாண்டான். தனது அரமனையில் வஸ்தி ராணிக்குப் பதில் எஸ்தரைப் பட்டத்து ராணியாக்கினான். **எஸ்தர்** காண்க.

3. தானி $9^{1}$. 'மேதிய குலத்தானாகிய அகாஸ்வேரு' என்பவனைப்பற்றி வேறொன்றும் தெளிவாய்ச் சொல்லப்படவில்லை. சிலர் கி-மு. 634-594-வரைக்கும் அரசாட்சி செய்த குவக்செரேஸ் (*Cyaxares*) இவன்தான் என்றும், இது அவனுடைய மறுநாமம் என்றும் சொல்லுகிறார்கள். சிலர் கி-மு. 594-559-வரைக்கும் அரசாண்ட குவக்செரேஸ் (*Cyaxares*) என்பவனுடைய மகனாகிய அஸ்தியகேஸ் (*Astyages*) இவன்தான் என்று சொல்லுகிறார்கள்.

**அகாதம். Gulf.** அகாதம் என்றால் அடிகாணாத ஆழம் என்பதைக் குறிக்கிறது. லூக் $16^{26}$-ல் 'பெரும் பிளப்பு' 'அகாதம்' என்பதைவிட சரியான மொழிபெயர்ப்பு.

**அகாய நாடு. Achaia.** பூர்வீக கிரேக்க தேசத்தின் ஓர் பிரிவு. அதின் முக்கிய பட்டணம் கொரிந்து. அப் $20^{2}$. 'கிரேக்க தேசம்' என்றது அகாய நாடு. அந்த நாட்டில் யூதர்கள் அநேகர் இருந்தார்கள். அங்கேயும் கிறிஸ்தவ சபை அதிகமாய்ப் பெருகினது. அப் $17^{17}$ $18^{4.\ 7.\ 27}$ 1 கொரி $2^{1}$.

**அகாயுக்கு. Achaicus.** 1 கொரி $16^{17}$. கி-மு. 146-ல் ரோமாபுரியின் சேனாதிபதி ஒருவன் அகாய நாட்டை ஜெயித்து அகாயுக்கு என்னும் பெயர் பெற்றான். அவன்

சந்ததியாருக்கும் அவன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும் இப்பெயர் வழங்கி வந்தது. பவுல் அப்போஸ்தலன் கொரிந்தியருக்கு எழுதின முதலாம் நிருபத்தை அந்த ஊருக்குக் கொண்டுபோனவர்களில் ஒருவன். இவன் அச்சேனாதிபதியின் குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருக்கலாம்.

**அகாவா**. **Ahava.** எஸ்றா $8^{15. 21}$. ஊரின் பெயர். அதிற் பாயும் ஆற்றுக்கும் அப்பெயர்தான். எஸ்றா ஜனங்களை எருசலேமுக்கு நடத்திக்கொண்டு போனபோது அங்கே மூன்றுநாள் தங்கி இருந்தான். அது பாபிலோன் பட்டணத்திற்குச் சமீபமாயிருந்தது என்று எண்ணவேண்டும்.

**அகி**. **Haggi.** [உற்சவத்தில் பிறந்தவன்]. ஆதி $46^{16}$.

**அகிக்காம்**. **Ahikam.** [என் சகோதரன் எழுந்துவிட்டான்]. 2 இரா $22^{12}$. யோசியா, யோயாக்கீம் காலத்தில் இராச சபையைச் சேர்ந்து எரேமியா தீர்க்கதரிசிக்கு உதவியாக இருந்தவன். எரே $26^{24}$.

**அகிஷாகார்**. **Ahishakar.** 1 நாளா $7^{10}$.

**அகிஷார்**. **Ahishar.** [என் சகோதரன் பாடினான்]. சாலொமோனின் அரமனை விசாரிப்புக்காரன். 1 இரா $4^{6}$.

**அகித்தூபு**. **Ahitub.** [என் சகோதரன் நன்மையாய் இருக்கிறான்].

1. ஏலியின் பேரன். 1 சாமு $14^{3}$.
2. ஆசாரியனாகிய சாதோக்குவின் தகப்பன். 2 சாமு $8^{17}$.
3. இன்னொருவன். 1 நாளா $6^{11}$.

**அகித்தோப்பேல்**. **Ahithophel.** [என் சகோதரன் மூடத்தனமாய் இருக்கிறான்]. கிலோ என்னும் ஊரில் பிறந்தவன். தாவீதின் பிரதான மந்திரி. அப்சலோம் இராசதுரோகம் செய்தபோது அகித்தோப்பேல் அவன் பக்கம் சேர்ந்தான். **அப்சலோம்** காண்க. 2 சாமு 16, 17 அதி. அப்சலோம் தனது ஆலோசனையைக் கவனியாமற் போனபோது இவன் தன் வீட்டுக்குப் போய்த் தற்கொலை செய்தான்.

**அகிமாஸ்**. **Ahimaz.** 2 சாமு $15^{27. 36}$. [என் சகோதரன் கோபமாய் இருக்கிறான்].

1. அப்சலோம் துரோகம் செய்தபோது அதைப்பற்றிச் சொல்லுகிற வேவுகாரனும் வேகமாய் ஓடுகிற தூதனும் இருந்தான். 2 சாமு $15^{17}$ $17^{17}$.
2. சவுலின் மனைவியாகிய அகினோவாம் என்பவளுடைய தகப்பன். 1 சாமு $14^{50}$.
3. சாலொமோன் ராஜாவின் அரமனைக்கு உணவுப் பொருட்களைச் சேகரிக்கிற 12 மணியகாரரில் ஒருவன். 1 இரா $4^{15}$.

**அகிமான்**. **Ahiman.**

1. ஏனாக்கின் வம்சத்தில் உள்ள ஒரு குடும்பம். எண் $13^{22}$.
2. லேவிய வாசற்காவலாளி. 1 நாளா $9^{17}$.

**அகிமெலேக்கு**. **Ahimelech.** [இராசாவின் சகோதரன்].

1. அகித்தூபுவின் மகன். 1 சாமு $21^{1}$. இவனுக்கு அகியா என்றும், அபிமெலேக்கு என்றும் பெயர். 1 நாளா $18^{26}$.
2. தாவீதின் தலைவர்களில் ஒருவன். 1 சாமு $26^{6}$.

**அகிமோத்**. **Ahimoth.** [என் சகோதரன் மரணமாய் இருக்கிறான்]. ஒரு லேவியன். 1 நாளா $6^{25}$.

**அகியா**. **Ahiah. Ahijah.** [கர்த்தரின் சகோதரன்].

1. சவுலின் காலத்தில் இருந்த பிரதான ஆசாரியன். அகிமெலேக்கு இவன்தான். 1 சாமு $14^{3. 20}$. இவன் சவுலின் சேனையோடு போய்த் தேவனுடைய சித்தத்தை அறிவித்தான். தாவீது சவுலுக்குப் பயந்து தப்பியோடிப் போனபோது இவன் அவனுக்குத் தேவசமுகத்து அப்பத்தையும் கோலியாத்தின் பட்டயத்தையும் கொடுத்தான். இதினிமித்தம் சவுல் இவனையும் இவன் இனத்தார் யாவரையும் கொன்றுபோட்டான். 1 சாமு 21, 22 அதி.
2. 1 இரா $4^{3}$.
3. ஒரு தீர்க்கதரிசி. 1 இரா $11^{29}$ $12^{15}$ $14^{2}$.
4. 1 இரா $15^{27}$.
5. 1 நாளா $2^{25}$.
6. 1 நாளா $11^{36}$.
7. 1 நாளா $26^{20}$.
8. நெகே $10^{26}$.

**அகியா**. **Haggiah.** [யேகோவாவின் உற்சவம்]. 1 நாளா $6^{30}$.

**அகியாம்**. **Ahiam.** 1 நாளா $11^{35}$.

**அகியான்**. **Ahian.** [சகோதரனைப் போன்றவன்]. 1 நாளா $7^{19}$.

**அகியூது**. **Ahihud.** [மகிமையுள்ள சகோதரன்].

1. ஆசேர் கோத்திரத்தின் பிரபு. எண் $34^{27}$.
2. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $8^{7}$.

3. சாலொமோனின் காரியதரிசிகளில் ஒருவன். 1 இரா 4³.

4. யெரொபெயாம் காலத்தில் ஓர் தீர்க்க தரிசி. 1 இரா 11²⁹ 14².

**அகியேசேர்.** **Ahiezer.** [உதவியான சகோதரன்].

1. தாண் கோத்திரத்தின் பிரபு. எண் 1¹².

2. தாவீது சவுலுக்கு பயந்தோடி ஒளித்திருந்தபோது அவனோடிருந்த வில்வித்தைக் காரரில் பிரதானமானவன். 1 நாளா 12¹.

**அகியோ.** **Ahio.** [அவனுடைய சகோதரன்].

1. உடன்படிக்கைப் பெட்டி தாவீதின் பட்டணத்திற்குக் கொண்டுவரப்பட்டபோது இரதசாரதிகள் இருவரில் ஒருவன். 2 சாமு 6³.

2. 1 நாளா 8³¹.

3. 1 நாளா 8¹⁴.

**அகிராம்.** **Ahiram.** **அகரா** காண்க.

**அகிரிப்பா.** **Agrippa.** **ஏரோது** காண்க.

**அகிலூத்.** **Ahilud.**

1. 2 சாமு 8¹⁶.

2. 1 இரா 4¹².

**அகிலேத்ஷகார்.** **Aijeleth Hash-Shahar.** சங் 22 தலைப்பில் காண்க. இதின் அர்த்தம் 'விடியற்காலத்துப் பெண்மான்' 'அல்லது விடியற்காலத்து உதவி.' இது இராகத்தின் பெயர். இந்த இராகத்திற்கு இந்தச் சங்கீதம் பாடப்படும்.

**அகினதாப்.** **Ahinadab.** 1 இரா 4¹⁴.

**அகினோவாம்.** **Ahinoam.** [அமைதியான சகோதரன்].

1. சவுலின் மனைவிகளில் ஒருத்தி. 1 சாமு 14⁵⁰.

2. தாவீதின் மனைவிகளில் ஒருத்தி. 1 சாமு 25⁴³ 27³ 30¹⁸.

**அகீஷார்.** **Ahishar.** 1 இரா 4⁶.

**அகீரா.** **Ahirah.** நப்தலியின் ஓர் பிரபு. எண் 1¹⁵.

**அகுசாத்.** **Ahuzzath.** ஆதி 26²⁶.

**அகுசாம்.** **Ahuzzam.** 1 நாளா 4⁶.

**அகுஸ்தீன்.** **Augustine.** அகுஸ்தீன் கி.பி. 354-ஆம் வட ஆபிரிக்காவில் உள்ள தகஸ்தே ஊரில் பிறந்தான். இவனுடைய தாய் மொனிக்கா (*Monica*) கிறிஸ்தவ மார்க்கத்தில் சிறந்த பக்தியுள்ளவளாய் இவனுக்குப் பக்திக்குரிய விஷயங்களைப் போதித்துவந்தும் இவன் வாலிபப் பிராயத்திலே கருத்தாகு (*Carthage*) என்னும் ஊரிலுள்ள சர்வ கலாசாலைக்குப் போய் அங்கே கிறிஸ்துவைப்பற்றிப் பல தப்பான கொள்கைகளைக் கற்று, அதிக துன்மார்க்கமாய் நடந்தான். பிற்பாடு ஆபிரிக்கா தேசத்தை விட்டு இத்தாலியா தேசத்திற்குப் போனான். இப்படி இவன் இருக்குங்காலத்தில் வேதத்தில் தியானம் வைப்பதற்கு வேண்டிய விருப்பத்தை இயேசுகிறிஸ்து இவனுடைய மனதிலே அருளினார். அதினால் இவன் முப்பத்தைந்து வயதானபோது ஒருநாள் தன் மித்திரனாகிய அலிப்பியுசை நோக்கி 'கற்றறிவில்லாதவர்கள் மோக்ஷம் சேரப் பிரயாசப்படுகிறார்கள். கற்றவர்களாகிய நாம் நிர்ப்பந்தராய் மாயையிலே அமிழ்ந்தி அவர்களைப் பின்பற்ற வெட்கப்படுகிறோம் அல்லவா? அவர்கள் காட்டுகிற முன்மாதிரியைப் பின்பற்றி நடக்கக்கடவோம்' என்று சொல்லித் தன் வீட்டைவிட்டு அதிக துக்கத்தோடு தோட்டத்திற்குள் போய் ஒரு அத்திமரத்தின் கீழ் முகங்குப்புற விழுந்து தன் இருதயத்திற் குடிகொண்டிருக்கிற தீமை யாவையும்பற்றி நினைத்து 'கர்த்தாவே! உம்முடைய கோபம் நாளைக்குத் தணியுமோ? இப்போதே தணியமாட்டாதோ?' என்று கண்ணீர்விட்டழுது அதிக அவாவாயும் ஊக்கமாயும் மன்றாடிக் கேட்டான். இவன் இவ்வித வியாகுலத்தில் இருக்கும்போது '*Tolle, lege; tolle, lege*' என்னும் பாட்டைப் பாடுகிற ஒரு சிறு பிள்ளையின் இனிய ஓசையைக் கேட்டான். இப்பதங்களுக்கு 'எடுத்து வாசி, எடுத்து வாசி' என்னும் அர்த்தத்தை இவன் அறிந்து, உடனே பவுல் அப்போஸ்தலன் ரோமருக்கு எழுதின நிருபத்தை எடுத்து அதைத் திறந்து அதில் வாசித்தான். இவன் பிற்பாடு இதைப்பற்றி எழுதினதாவது: 'நான் அப்புஸ்தகத்தை எடுத்து அதைத் திறந்து அதில் முதற்கண்ட வசனத்தை மௌனமாய் வாசித்தேன். அதாவது: களியாட்டும் வெறியும், வேசித்தனமும் காமவிகாரமும், வாக்குவாதமும் பொறாமையும் உள்ளவர்களாய் நடவாமல், பகலிலே நடக்கிறவர்கள் போலச் சீராய் நடக்கக்கடவோம். துர் இச்சைகளுக்கு இடமாக உடலைப் பேணாமலிருந்து, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைத் தரித்துக்கொள்ளுங்கள் (ரோ 13¹³·¹⁴). இவைகளே போதும்; மற்ற வசனங்களை வாசிக்க வேண்டியதில்லை என்றறிந்தேன். அப்போதே சந்தேகத்தினால் மூந்தி இருந்த இருள் எல்லாம் என்னைவிட்டு அகன்று போக, மீட்பின் ஒளி என் மனதில் பூரணமாய் வீசினது.'

இவ்விதமாய் அருஸ்தீன் குணப்பட்ட பின்பு அலிப்பியுஸ் இதை அறிந்து 'விசுவாசத்தில் பலவீனமுள்ளவர்களைச் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்ற அடுத்த வசனத்தை அருஸ்தீனுக்குக் காண்பித்து அதினாலே தானும் குணப்பட்டதை அவனுக்குத் தெரிவித்தான். அருஸ்தீன் உடனே அத்தனை வருஷகாலமாகத் தனக்காக ஜெபம் செய்து வந்த தன் மாதாவுக்கு இந்தச் சங்கதியைப் போய் அறிவித்தான்.

கி-பி. 387-ஆம் இவன் ஞானஸ்நானம் பெற்றான். இவன் ஆபிரிக்காவுக்குத் திரும்பிப்போன பிற்பாடு இவனுடைய பக்தி வைராக்கியத்தைப் பார்த்து 391-ஆம் இவனுக்குக் குருப்பட்டம் தரித்தார்கள். நாலு வருஷத்துக்குப் பிற்பாடு 45-ம் வயசிலே கண்காணியாய் அபிஷேகம் பண்ணப்பட்டு ஆபிரிக்காவில் 31 வருஷகாலம் பதிதரோடு தர்க்கம் செய்து பக்திக்குரிய பல புஸ்தகங்களை லத்தீன் பாஷையில் எழுதி 76-ம் வயசில் (கி-பி. 430) இறந்துபோனான்.

அருஸ்தீன் வேத சாஸ்திரத்தைக் குறித்துப் பல உபதேசங்கள் செய்தான். அவைகளில் முக்கியமானவை: ஆதாம் பாவம் செய்ததினால் அவன் சந்ததியாராகிய மனுஷர் யாவரும் ஜென்ம பாவத்தினால் முழுதும் ஆக்கினைக் குட்பட்டவர்களாய் இருக்கிறார்கள். அவர்களிற் சிலர் தேவனுடைய சித்தத்தின்படி அவருடைய இரக்கத்திற்கும், சிலர் தண்டனைக்கும் முன் குறிக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்விதமாய்த் தேவனால் முன் குறிக்கப்பட்டவர்கள் தங்கள் நிலைமையை மாற்ற முடியாது. இதைப்பற்றியும் வேறநேக விஷயங்களைப்பற்றியும் பதிதர்களுக்கு விரோதமாக இவன் அதிக உறுதியாய் எழுதி, இராசாங்கத்தார் அவர்களுடைய தப்பான கொள்கையினிமித்தம் அவர்களை வேதனைப் படுத்தித் தண்டித்து வரவேண்டுமென்று கிறிஸ்தவர்களுக்கு இவன் போதித்தது கிறிஸ்தவ சபையில் பலவிதமான அநியாயத்துக்கு ஏதுவாய் இருந்தது.

**அருஸ்து பட்டாளம்**. **Augustus' Band.** அப் 27[1]. இது ரோமராயனுடைய சேனையில் யுத்தத்திற்குப் போய்த் தைரியத்துடன் ஜெயம் அடைந்து ராயனுடைய பெயராகிய அருஸ்து என்னும் பெயர் பெற்ற ஒரு பட்டாளம். இதில் 500-1000 வரையில் போர்ச் சேவகர் இருந்தார்கள்.

**அருஸ்து ராயன்**. **Augustus Caesar.** லூக் 2[1]. இவன் கி-மு. 63-ஆம் பிறந்தான். 31-ஆம் சர்வ அதிகாரமும் உடையவனானான். கி-பி. 14-ஆம் இறந்தான். இவன் காலத்தில் குடிமதிப்பு உண்டானதினால் யோசேப்பும் மரியாளும் தங்கள் முற்பிதாக்கள் வசித்த ஊராகிய பெத்லெகேமுக்குப் போகவேண்டியதாய் நேரிட்டது. **ரோமாபுரி** காண்க.

**அருபா**. **Hakupa.** ஒரு குடும்பம். எஸ்ரா 2[51].

**அருமாய்**. **Ahumai.** 1 நாளா 4[2].

**அகெதோலிம்**. **Haggedolim.** நெகே 11[14].

**அகோலியாப்**. **Aholiab.** [என் தகப்பனுடைய கூடாரம்]. யாத் 35[34]. ஆசரிப்புக் கூடாரத்தைச் செய்தவர்களில் ஒருவன்.

**அகோலாள்**. **Aholah, Oholah (R.V.)** [கூடாரத்தில் உள்ளவள்]. எசே 23 அதி. அசீரியா தேசத்திலுள்ள சில ஸ்தலங்களுக்கு வேசிகள் போய்க் கூடாரங்கள் அடித்து அவைகளில் இருந்தார்கள். இப்பதத்தின் அர்த்தத்தின்படி இவளும் வேசிதான். இது எசேக்கியேல் தீர்க்கதரிசி சமாரியா தேசத்திற்கும் அதிலுள்ள 10 கோத்திரங்களுக்கும் உவமையாய்க் கொடுத்த பெயர்.

**அகோலிபாமா**. **Oholibamah.** ஒரு பிரபு. ஆதி 36[41].

**அகோலிபாமாள்**. **Oholibamah.** ஏசாவின் மனைவிகளில் ஒருத்தி. ஆதி 36[2].

**அகோலிபாள்**. **Aholibah, Oholibah (R. V.)** [அகோலாள் என்பதற்குச் சமனார்த்த பதம்]. எசே 23 அதி. எசேக்கியேல் யூதாவைப்பற்றி இப்பெயரைக்கொண்டு உவமையாய்ப் பேசுகிறான்.

**அகோவா**. **Ahoah.** 1 நாளா 8[4] 2 சாமு 23[9].

**அக்காத்**. **Accad.** ஆதி 10[10]. பாபிலோன் என்னும் மகா ராஜ்யத்திற்குப் பூர்வகாலத்தில் சிநேயார் தேசத்திலுள்ள நாலு ஊர்கள் சேர்ந்து மூலஸ்தானமாய் இருந்தன. அவ்வூர்களில் அக்காத் ஒன்று. அது கி-மு. 3800-ஆமத்தில் முதலாம் சர்கோன் என்னும் பாபிலோன் ராசாவின் முக்கிய பட்டணம். அது இஷ்டார் என்னும் சந்திரதேவதையின் முக்கிய ஸ்தலம்.

**அக்கான்**. **Akan.** ஆதி 36[7]. 1 நாளா 1[42]. = யாக்கான்.

**அக்கிக்கல்**. **Chrysolite.** வெளி 21[20]. சில வித்துவான்கள் புதிய எருசலேமின் ஏழாவது அஸ்திபாரம் அக்கிக்கல் என்று தமிழில் மொழிபெயர்த்தார்கள். சிலர் இதற்

குச் சுவர்ணரத்தினம் என்றுஞ் சொல்லுவார்கள். இது பசும்பொன் நிறமான ரத்தினங்களில் ஒன்று. **இரத்தினம்** காண்க.

**அக்கிரமக்காரன்.** சங் 14[4] 28[3] 36[12] நீதி 10[29] ஏசா 55[7] மத் 7[23] லூக் 13[27] ரோ 5[6].

**அக்கிரமம்.** யாத் 34[7] யோபு 13[26] 22[23] சங் 25[11] 32[2] 66[18] 79[8] 103[3] ஏசா 1[4] 5[18] 33[24] 40[2] 50[1] 53[6] எரே 3[13] 33[8] 50[20] எசே 43[10] ஓசி 14[2] ஆமோ 3[2] மீகா 7[19] மத் 24[12] ரோ 4[7] 6[19] 2 தெச 2[7] தீத் 2[14].

'பரிசுத்த ஸ்தலத்தைப்பற்றிய அக்கிரமம்.' எண் 18[1].

'ஆசாரிய ஊழியத்தைப்பற்றிய அக்கிரமம்.' எண் 18[1]. **பாவம்** காண்க.

**அக்கினி.** Fire.

1. தேவன் அக்கினி சூழ்ந்தவராக மோசேக்கும், ஏசாயாவுக்கும், எசேக்கியேலுக்கும், யோவானுக்கும் காட்சியானார். யாத் 19[18] ஏசா 6[4] எசே 1[4] வெளி 1[14]. 'உன் தேவனாகிய கர்த்தர் பட்சிக்கிற அக்கினி, அவர் எரிச்சலுள்ள தேவன்' என்பது (உபா 4[24] எபி 12[29]) அவருடைய பரிசுத்தத்தையும் நீதியையுங் குறிக்கின்றது. தேவனுடைய கோபம் அக்கினி என்னப்படும். எரே 48[45] உபா 32[22] ஏசா 33[14].

2. அவர் புடமிடுகிறவனுடைய அக்கினியைப்போல் இருப்பார் என்பது (மல்கி 3[2]) அக்கிரமக்காரரைத் தண்டித்துப் பட்சித்து, விசுவாசிகளைத் தம்முடைய உபதேசத்தால் சுத்திகரிக்கிற கிறிஸ்துவையும், அக்கினித் தூண் என்பது (யாத் 13[21]) அவருடைய ஆதரவையும், சுவாலையாய் எரிகிற அக்கினியோடு நியாயத்தீர்ப்புக்கு வருவார் என்பது (ஏசா 30[30] 2 தெச 1[6]) அவருடைய வல்லமையையும் குறிக்கின்றது.

3. பரிசுத்த ஆவியானவர் ஆத்துமாவைப் பிரகாசிப்பித்துச் சுத்திகரித்து, அன்பினாலும் வைராக்கியத்தினாலும் நிரப்புகிறபடியினாலே, அவருடைய செய்கைகள் அக்கினி என்று சொல்லப்படுகின்றன. மத் 3[11] அப் 2[3].

4. தேவனுடைய வேலைக்காரர் தங்கள் வேலைகளில் சுறுசுறுப்புள்ளவர்களானபடியால் அக்கினி என்னப்படுகிறார்கள். சங் 104[4].

5. கர்த்தருடைய வார்த்தை அக்கினியைப்போல் இருக்கிறது. எரே 23[29]. சத்திய வேதமானது அக்கினியைப்போல அனல் தந்து, களிம்பைப் பட்சித்து 'ஆத்துமாவைச் சுத்திகரிக்கிறது. 1 கொரி 3[13]. 'அக்கினியைப் பூமியின்மேல் போடவந்தேன்' என்பது (லூக் 12[49]) துன்பங்களையும் பிரிவினைகளையும் குறிக்கின்றது. சகரி 3[2]. கடவுள் எருசலேமுக்கு அக்கினி மதில். சகரி 2[5]. நாவு அக்கினியைப்போலிருக்கிறது. யாக் 3[5, 6].

6. திருச்சபையானது எல்லா விரோதங்களையும் மேற்கொண்டு விரோதிகளை வெல்லுகிறபடியினாலே, யாக்கோபின் வீட்டார் அக்கினி என்னப்படுகிறார்கள். ஒப [18].

7. மனிதருடைய தந்திரம், பொய், கோள், வம்பு முதலியவை தீங்குசெய்கிறபடியால் அக்கினி என்னப்படும். ஏசா 50[11].

8. பூர்வீகத்தார் மோளேகு என்ற விக்கிரகத்திற்கு இத்தேசத்தில் வழங்கிவருகிற தருமராஜா பண்டிகைக்கு ஒப்பாய் அக்கினியை மிதித்து, சூடுகளைப் போட்டுக்கொண்டு பல அருவருப்புகளையும் நடத்தினார்கள். லேவி 18[21] 2 இரா 16[3] 23[10].

9. (காலாக்கினி). சோதோம் அக்கினியால் பட்சிக்கப்பட்டதுபோல (ஆதி 19[24]) உலகமும் அக்கினியால் பட்சிக்கப்படும். 2 பேது 3[7, 12].

10. தேவனுக்கு இடப்பட்ட பலிகளைப் பட்சிக்கும்படி அக்கினி வானத்திலிருந்து இறங்கினது. ஆதி 15[17] லேவி 9[24] 2 நாளா 7[1] 1 இரா 18[38].

11. நரகத்திற்குரியவர்களுடைய புழு சாகாமலும், அக்கினி அவியாமலுமிருக்கிறதென்பது (மாற் 9[44]) வியாகுலப்படும் மனச்சாட்சியையும், தேவனுடைய கோபத்தையும் குறிக்கின்றது. அகுஸ்தீன், சீப்பிரியன் முதலான வேதசாஸ்திரிகள் நரகத்தில் புழுக்களும் அக்கினியும் உண்டென்கிறார்கள்.

**அக்கினிப்பள்ளம்.** **இன்னோம்** காண்க.

**அக்கூப்.** Akkub.

1. 1 நாளா 3[24].
2. 1 நாளா 9[17].
3. எஸ்று 2[42].
4. நெகே 8[7].

**அக்கெல்தமா.** Aceldama. 'குயவன் வீடு' (எரே 18[1]) என்பதும், 'குயவனுடைய நிலம்' (மத் 27[7]) என்பதும், 'இரத்த நிலம்' (அப் 1[19]) என்பதும் ஒரே நிலந்தான். பூர்வீகத்தில் யூதர்கள் இதற்கு அக்கெல்தமா என்று பெயரிட்டார்கள். இதற்கு 'இரத்தம் சிந்தின வயல்' என்று அர்த்தமாம். இது மோலேக் என்னும் தேவதையின் ஸ்தலமாகிய இன்னோம் பள்ளத்தாக்கிலே இருந்ததினால் அபௌத்திர இடமாய் இருந்தது.

இதிலேதான் யூதாஸ்காரியோத்து தற்கொலை புரிந்தான். பரதேசிகளை அடக்கம் செய்வதற்காக ஆசாரியர் அவன் திருப்பிக் கொடுத்த 30 வெள்ளிக்காசைக்கொண்டு அந்த நிலத்தை வாங்கினார்கள்.

**அக்கோத்ஸ்.** **Hakkoz.** ஒரு ஆசாரிய குடும்பம். 1 நாளா $24^{10}$.

**அக்கோபட்டணம்.** **Acco.** நியா $1^{31}$. மத்தியதரைக் கடலோரத்தில் தீருபட்டணத்திற்குத் தெற்கே ஏறக்குறைய 20 மைல் தூரத்திலுள்ள ஒரு துறைமுகம். இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயித்தபோது இந்த ஊரைப் பிடிக்கவில்லை. புதிய ஏற்பாட்டிலே இதற்குப் 'பித்தொலோமாய்' என்று பெயர். அப் $21^{7}$.

**அக்சாபு.** **Achsaph.** யோசு $11^{1}$ $19^{25}$. கலிலேயா நாட்டிலுள்ள இரண்டு ஊர்கள்.

**அக்சாள்.** **Achsah.** [காற் சிலம்பு]. காலேபின் மகள். நியா $1^{9.\ 15}$ யோசு $15^{19}$.

**அக்சீப்.** **Achzib.**

1. தீரு பட்டணத்திற்குத் தெற்கே ஏறக்குறைய 20 மைல் தூரத்தில் கடலோரமாயுள்ள ஒரு ஊர். இஸ்ரவேலர் கானான் தேசத்தைப் பிடித்தபோது இதை ஜெயிக்கவில்லை. இது பரிசுத்த பூமியின் கடைசி எல்லை என்பது எபிரெய ரபிமாருடைய அபிப்பிராயம். இதற்குத் தென்கிழக்கேயுள்ள எந்த ஊருக்குள்ளும் பரிசேயர் தங்கள் ஆசாரத்திற்கு யாதொரு இடையூறும் நேரிடாதபடி திராக்ஷரசமும் அப்பமும் எண்ணெயும் வாங்கிக்கொள்ளலாம் என்றும் இதற்குப் புறம்பே அவைகளை வாங்குவது தங்கள் ஆசாரத்திற்குக் கெடுதி என்றும் சொன்னார்கள். நியா $1^{31}$.

2. யூதாவிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{44}$. = கெசீப். ஆதி $38^{5}$. = கோசேபா. 1 நாளா $4^{22}$.

**அக்பான்.** **Ahban.** 1 நாளா $2^{29}$.

**அக்போர்.** **Achbor.**

1. ஆதி $36^{38}$.
2. 2 இரா $22^{12}$. = அபதோன்.

**அக்மேதா.** **Achmetha.** எஸ்ரு $6^{2}$. இது மேதியாநாட்டின் முக்கிய பட்டணம். இதில் இராசாங்கத்திற்குரிய பத்திரங்கள் வைக்கப்பட்டிருந்தன. கிரேக்க இதிகாசர் இதற்கு எக்பத்தானா *(Ecbatana)* என்று பெயரிட்டார்கள். தள்ளுபடி ஆகமத்தார் இந்த ஊரைப்பற்றிப் பலமுறை எழுதியிருக்கிறார்கள். ஆனால் இந்த ஊரின் கீர்த்திப் பிரஸ்தாபம் குன்றிப்போயிருக்கிறது. இதற்கு இப்போது வழங்குகிற பெயர் கமடான் *(Hamadan)*.

**அக்ராபீம்.** **Akrabbim.** சாக்கடலின் தென்புறத்திலிருந்து கானானின் தென்புறமாய்ச் செல்லுகிற 'தேள் நிறைந்த கணவாய்.' யோசு $15^{3}$.

**அக்லாப்.** **Ahlab.** நியா $1^{31}$.

**அக்லாயி.** **Ahlai.**

1. ஒரு பெண். 1 நாளா $2^{31}$.
2. ஒரு போர்வீரன். 1 நாளா $11^{41}$.

**அங்கவீனம்.** **Blemish.**

1. லேவிய கோத்திரத்தைச் சேர்ந்த ஆசாரியன் ஒருவன் அங்கவீனமாய் அதாவது அவயவங்களில் ஒன்று குறைந்து அல்லது கூடி இருந்தால் அவன் தேவாலயத்தில் ஊழியஞ்செய்யப் பாத்திரனல்ல. லேவி $21^{18-20}$.

2. அங்கவீனமுள்ள மிருகங்கள் பக்ஷிகள் பலிக்கு உவந்தவையல்ல. சில பலிகளுக்கு இது கட்டாயமான பிரமாணமல்ல. லேவி $22^{20-24}$ மல்கி $1^{13}$.

**அங்கீகரிப்பு.** **Acceptation.** ஏற்றுக்கொள்ளுதல். மல்கி $1^{13}$ லூக் $4^{24}$ அப் $10^{35}$ 2 கொரி $8^{12}$ 1 தீமோ $1^{15}$ $4^{9}$.

**அசசியா.** **Azaziah.** மூன்று பெயர். 1 நாளா $15^{21}$ $27^{20}$ 2 நாளா $31^{13}$.

**அசதியா.** **Hasadiah.** [யேகோவா தயை புரிந்தவர்]. 1 நாளா $3^{20}$.

**அசபியா, அஸபியா, அஷபியா, அஷாபியா.** **Hashabiah.**

1. 1 நாளா $6^{45}$.
2. 1 நாளா $9^{14}$.
3. 1 நாளா $25^{3}$.
4. 1 நாளா $26^{30}$.
5. 1 நாளா $27^{17}$.
6. 2 நாளா $35^{9}$.
7. எஸ்று $8^{19}$.
8. எஸ்று $8^{24}$.
9. நெகே $3^{17}$.
10. நெகே $11^{22}$.
11. நெகே $12^{21}$.

**அசரியா.** **Azariah.** [கர்த்தர் அவனுக்குச் சகாயர்]. இந்தப் பெயர் எபிரெயர்களில் அநேகருக்கு வழங்கப்பட்டது. பழைய ஏற்பாட்டில் 24 பேருக்கு.

2 இரா $15^{1-7}$. யூதாவின் ராஜா, கி-மு. 782-737. 2 நாளா 26-ம் அதி. முதலிய இடங்களில் இவனுக்கு உசியா என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவன் 16 வயசாய் இருக்கும்போது யூதேயா தேசத்தை ஆண்

டுகொள்ளும்படி ஆரம்பித்தான். இவன் குஷ்டரோகியாய் இருந்தான். இவன்காலத்தில் ஏசாயா தீர்க்கதரிசனம் சொல்ல ஆரம்பித்தான். இவன்காலத்தில் யூதாவுக்கு அதிக செல்வமும் சுகமும் இருந்தது. **உசியா** காண்க.

மூன்று பிரதான ஆசாரியர்கள் இப்பெயர் உடையவர்களாய் இருந்தார்கள். 1 இரா $4^{2}$ 2 நாளா $26^{17}$ $31^{10}$.

**அசரியேல், அசரேயேல்.** Azarel. [கடவுள் உதவி செய்கிறவர்].

1. = ஆசாரியேல். 1 நாளா $12^{6}$.

2. 1 நாளா $25^{18}$. = ஊசியேல். 1 நாளா $25^{4}$.

3. 1 நாளா $27^{22}$.

4. எஸ்று $10^{41}$.

5. நெகே $11^{13}$.

6. நெகே $12^{36}$.

**அசர்மாவேத்.** Hazarmaveth. ஆதி $10^{26}$.

**அசறு.** Scurvy. **வியாதி** காண்க.

**அசனியா.** Azaniah. நெகே $10^{2}$.

**அசாயா.** Asaiah. [யேகோவா செய்தார்].

1. 2 இரா $22^{12}$.

2. 1 நாளா $4^{36}$.

3. 1 நாளா $6^{30}$.

4. 1 நாளா $9^{5}$. = மாசெயா. நெகே $11^{5}$.

**அசாரேயேல்.** Asarel. 1 நாளா $4^{16}$.

**அசிங்கிரீத்து.** Asyncritus. [ஒப்பில்லாதவன்]. ரோ $16^{14}$. ரோமாபுரியிலுள்ள சபையைச்சேர்ந்த கிறிஸ்தவர்களில் ஒருவன். அக்காலத்தில் அகுஸ்துராயனுடைய வீட்டிலுள்ள ஒருவனுக்கு இந்தப் பெயர். ஒருவேளை அவன் இவனாயிருக்கலாம்.

**அசிசா.** Aziza.

1. அந்நிய ஜாதிப் பெண்களை மனைவிகளாகக் கொண்டதினால் தாங்கள் குற்றவாளிகள் எனக் கண்டு அவர்களைத் தள்ளிவிட்டுப் பாவ நிவிர்த்திக்காகப் பலியிட்ட ஆசாரிய புத்திரர்களில் ஒருவன். எஸ்று $10^{27}$.

2. தீர்க்கதரிசி ஒருவன். 2 நாளா $15^{1}$.

**அசிமா.** Ashimah. 2 இரா $17^{30}$. பாபிலோன் ராஜாவாகிய சர்கோன் அடிமைத்தனத்தில் தள்ளப்பட்ட இஸ்ரவேலருக்குப் பதிலாய்ச் சமாரியா பட்டணத்திலுள்ள ஆமாத்தின் மனுஷர்களை அவ்வூரில் வைத்தான். அவர்கள் அசிமா என்னும் தேவதையைத் தொழுதுவந்தார்கள். யூதருடைய பாரம்பரியத்தின்படி இந்த விக்கிரகம் ரோமமில்லாமல் ஆட்டைப்போல் அல்லது பூனையைப்போல் இருந்தது.

**அசீரியா.** Assyria.

1. இது ஆதியில் திகிரீஸ் (*Tigris*) என்னும் இதெக்கேல் (ஆதி $2^{14}$) ஆற்றின் ஓரத்தில் அசூர், நினிவே என்னும் பட்டணங்களைச் சுற்றிலும் இருந்த ஒரு ராஜ்யம். இந்த ராஜ்யம் ஒரு காலத்தில் ஒடுக்கமும் இன்னொரு காலத்தில் விசாலமுமாயிருந்தபடியால் இதற்கு எல்லை குறிக்கிறது கூடாத காரியம். இது அதிக கீர்த்தியடைந்திருந்தபோது பலஸ்தீனா, சீரியா, எகிப்துவரையும் எட்டியிருந்தது.

2. இதின் ஜனங்கள் யுத்தஞ் செய்வதிலும், முற்றிக்கை போடுவதிலும் சூரத்துவமுள்ளவர்கள். கோட்டையைக் காப்பதில் பராக்கிரமசாலிகள். கொள்ளையடிப்பதற்குத் தூரமான இடங்களுக்குப் போக விரும்புகிறவர்கள். யுத்தத்திற் பிடிக்கப்பட்டவர்களைக் குரூரமாய் நடத்துகிறவர்கள். ஏசா $33^{19}$.

இதின் ராஜாக்களும் ஜனங்களும் தங்கள் நகரங்களைச் சிறப்பிக்கும்படி கோயில்களையும் விசேஷமாய் அரமனைகளையும் கட்டி அவைகளை நூதனமான சித்திரவேலையினால் அலங்கரித்துவந்தார்கள்.

3. இவர்கள் நாகரீகமுள்ளவர்களாய் இருந்தார்கள். இவர்களுடைய ராஜ்யம் பாபிலோன் ராஜ்யத்திலிருந்து பிரிந்ததினாலும் இதற்கும் அதற்கும் சம்பந்தம் இருந்ததினாலும் இவர்கள் பாபிலோனியர்களைப்போலவே இருந்தார்கள் என்று நாம் நினைக்கவேண்டும்.

4. இவர்களும் பாபிலோனியரும் பல தேவர்களைதொழுதுவந்தார்கள். ஆனால் இவர்கள் அசூர் என்னும் முக்கிய ஸ்தலத்திலே பாபிலோனியர் வணங்காத 'அசூர்' என்னும் தங்கள் தேசத்தைக் காப்பாற்றுகிற தேவனை தொழுதுவந்தார்கள். பாபிலோன் தேசத்தில் ராஜாக்களைவிட ஆசாரியர்களுக்கே அதிகாரம் அதிகமாய் இருந்தது. அசீரியாவிலேயோ ராஜாதான் பிரதான ஆசாரியனாய் இருந்ததினால் ஆசாரியர் அவனுக்குட்பட்டவர்களாய் இருந்தார்கள்.

**சரித்திரம்.**—அசீரியா கி-மு. 2300-வருஷத்தில் அதாவது ஆபிரகாம் தான் பிறந்த இடத்தை விட்டுக் கானான் தேசத்திற்குப் புறப்பட்டுப்போன காலம் துவங்கி கி-மு. ஆறும்நூற்றாண்டு வரையில், 1700 வருஷங்களாக இருந்தது. இந்த ராஜ்யம் நேபுகாத்நேச்சார் பாபிலோனின் ராஜாவாக வருகிறதற்கு இரண்டு வருஷத்துக்கு முந்தி மேதிய

ராலே ஜெயிக்கப்பட்டது. இந்த ராஜ்யத்தினதும் பாபிலோன் ராஜ்யத்தினதும் சரித்திரம் ஒன்றோடொன்று கலந்திருக்கிறது. **பாபிலோன்** காண்க.

அசீரியா, பாபிலோனியா ராஜாக்கள்.

இந்த ராஜ்யங்களை ஏறக்குறைய 4000 வருஷங்களாக ஆண்டுவந்த அரசர்களின் நாம அட்டவணையைத் தானும் எழுதுகில் இச்சிறு புஸ்தகத்தில் இடம் போதாதிருக்க, அவர்கள் எல்லாருடைய சரித்திரத்தையும் இதில் அடக்கிச் சொல்வது கூடாத காரியமாகையால் நாம் வேதாகமத்தில் இருக்கிற ராஜாக்களைப் பற்றிய சரித்திரத்தைமாத்திரம் சுருக்கமாய்ப் பார்ப்போம்.

நிம்ரோத். *Nimrod.* ஆதி $10^{8-12}$.

இவன் அசீரியாவில் நினிவே என்னும் பட்டணத்தைக் கட்டி அங்கே தன் ராஜ்யத்தை ஆரம்பித்தான் என்றும், பாபிலோன் அல்லது பாபேல் என்னும் நகரத்தைக் கட்டினுன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவனுடைய சரித்திரத்தைப் பார்ப்போமானல் ஆதியாகமத்திற் சொல்லியிருக்கிறபடி இவன் பிரபலமுள்ளவன் என்பதையும், பாபிலோனியருடைய பாஷையில் இவனுடைய பெயரும் அவர்கள் தொழுதுவந்த மெரொதாக் (எரே $50^2$.) என்னும் தேவனுடைய பெயரும் ஒன்ருயிருந்ததினுல் அவர்கள் அவனைத் தேவனுக எண்ணிவந்தார்கள் என்பதையும் அறிவோம்.

அம்ராப்பேல். *Amraphel.* ஆதி $14^{1,9}$.

ஆபிரகாமோடு சண்டை செய்த 'சிநேயாரின் ராஜாவாகிய அம்ராப்பேல்' என்பவனும், பூர்வீகத்தில் பாபிலோனியா ராஜாவாகிய கம்முராபி (*Hammurabi*) என்பவனும் ஒருவன்தான் என்று தோன்றுகிறது. ஏறக்குறைய கி.மு. 2300-ளுடத்தில் இருந்த இந்த கம்முராபி சுமார் 50 வருஷம் அரசாண்டான். ஆதியாகமத்தில் இவனைக்குறித்துச் சொல்லியிருக்கிறவைகளினுல் இவனுடைய மகத்துவம்தோன்ருவிடினும், முற்காலத்தில் கற்பலகைகளிலும் மண்ணினுற் செய்த ஓடுகளிலும் இவனைக்குறித்து எழுதப்பட்டவைகளைப் பார்ப்போமானுல் கீர்த்தி, பொருள், பொக்கிஷம் ஆகிய இவைகளில் இவன் மற்ற எல்லா ராஜாக்களைப்பார்க்கிலும் மேன்மையுள்ளவன் என்று நன்ருய் அறியலாம். கண்டெடுக்கப்பட்ட அப்பலகைகளில் இவன் எழுதின 282 கட்டளைச் சட்டங்களை நாம் வாசிக்கும்போது நீதி நியாயத்தின்பேரில் இவன் அதிக விருப்பமுள்ளவன் என்பதை அவைகள் காட்டுகின்றன. அவைகளில் பெரியோர், வித்துவான்கள், வைத்தியர்கள், வியாபாரிகள், பயிர் செய்வோர், வேடர், அடிமைகள், வேலையாட்கள், கடனுளிகள் முதலானவர்களுடைய கடமையைப் பற்றியும்; கோவில்களையும், கோவில் மானியங்களைப்பற்றியும்; நீதி ஸ்தலங்களுக்குரிய விசாரணை, சாட்சி, தண்டனைஆகிய இவைகளைப்பற்றியும்; கோள்சொல்லுதல், நம்பிக்கைத்துரோகஞ்செய்தல், திருடுதல், கொலைபாதகம், விபசாரம், பில்லிசூனியம்ஆகிய இவைகளைப்பற்றியும்; விவாகமுறை, குடும்ப ஒழுக்கம், மறுமனையாட்டி வைத்தல், தள்ளுதற்சீட்டுக் கொடுத்தல், சுதந்தரபாகம்ஆகிய இவைகளைப்பற்றியும் தகுந்த பிரமாணங்கள் ஏற்படுத்தியிருந்தான். இப்பிரமாணங்களுக்கும் மோசேயின் பிரமாணங்களுக்கும் வித்தியாசம் இருந்தபோதிலும், இரண்டும் பல விஷயங்களில் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டிருக்கின்றமையால், சர்வ சாஸ்திரங்களிலும் கற்பிக்கப்பட்ட மோசே தனக்கு ஆயிரம் வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட இந்த ஏற்பாடுகளை அறிந்திருப்பான் என்று நாம் நினைக்க இடமுண்டு.

ஆபிரகாமின் காலமுதல், சாலொமோன் ராஜா இறந்த காலம்வரையும் இஸ்ரவேல் ராஜ்யத்துக்கும் யூதாவின் ராஜ்யத்துக்கும் அசீரியருக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. பிற்பாடு பாபிலோனியா ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் எருசலேம் பட்டணத்தை அழித்துப்போட்ட காலம்வரையும் அவைகளுக்குத் துவக்கத்தில் அசீரியரைப்பற்றியும் பிற்பாடு பாபிலோனியரைப்பற்றியும் எப்போதும் பயம் இருந்தது. இந்த ராஜ்யங்களைப்பற்றி நாம் வேதத்தில் வாசிக்கும்போது பூமிசாஸ்திரப் படத்தில் பார்த்தால், சீரியா தேசத்தின் கிழக்கெல்லை அசீரியா தேசத்தின் மேற்கெல்லைவரையும் எட்டியிருந்ததென்றும்; சீரியா தேசத்துக்குத் தெற்கே இஸ்ரவேல் ராஜ்யமும், அதற்குத் தெற்கே யூதாவின் ராஜ்யமும் இருந்ததென்றும் அறிவோம். இப்படி அவைகள் ஒன்றுக்கொன்று சமீபமாய் இருந்தபடியால் அசீரியா ராஜ்யம் பெருகினபோது முதலாவது சீரியாவுக்கும், இரண்டாவது இஸ்ரவேல் ராஜ்யத்துக்கும், கடைசியாய் யூதாவின் ராஜ்யத்துக்கும் அபாயம் நேரிட்டது. 1 இரா 20-ம் அதிகாரத்தை நாம் வாசித்தால் ஆகாப் என்னும் இஸ்ரவேல் ராஜாவுக்கும் பெனுதாத் என்னும் சீரியா ராஜாவுக்கும் நடந்த சண்டையைப் பற்றியும் அவர்கள் செய்துகொண்ட சமா

தான உடன்படிக்கையைப் பற்றியும் அறியலாம். மேலும் அக்காலத்தில் அசீரியர்கள் கற்பலகைகளில் எழுதியிருந்த சரித்திரத்தைப் பார்ப்போமானால் சமாதானமான பிற்பாடு இவர்கள் அசீரியரோடு செய்த யுத்தத்தைப்பற்றி அறியக்கூடும். இருகட்சியாருக்கும் பெரிய யுத்தங்கள் நடந்த பிற்பாடு (ஏறக்குறைய கி-மு. 850-ஆம் வருஷத்தில்) அசீரியா ராஜாக்கள் மகா பராக்கிரமசாலிகள் என்று சீரியரும் இஸ்ரவேலரும் அறிந்து சமாதானத்திற்காக அவர்களுக்குத் திறைகொடுக்கத் தொடங்கினார்கள்.



அசீரியரின தேவாலயத்தில் வாசல்காக்கும் விக்கிரகம்.

பெனாதாத் என்பவனுக்குப் பிற்பாடு ஆசகேல் (*Hazael*) என்னும் சீரியாவின் ராஜா அசீரியர் தன் தேசத்தில் சிலகாலமாகத் தொந்தரவு ஒன்றும் செய்யாமல் இருக்கிறதைப் பார்த்து, இஸ்ரவேல் ராஜ்யத்தையும் யூதாவின் ராஜ்யத்தையும் முறியடிக்க எத்தனித்தான். 2 இரா $10^{32}$ $12^{17}$ $13^{22}$. இதினிமித்தம் அசீரியா ராஜா கி-மு. 803-ஆம் வருஷத்தில் சீரியா தேசத்தில் பிரவேசித்து யுத்தஞ்செய்கையில் அவன் இஸ்ரவேல் ராஜாவாகிய யோவகாஸ் என்பவனுடைய காலத்தில் அந்த ராஜ்யத்துக்கு 'இரட்சகன்' ஆனான். 2 இரா $13^{5}$. இந்த அசீரியா ராஜாவின் பெயர் வேதத்தில் இல்லாதிருந்தாலும், அசீரியர் கற்பலகைகளில் எழுதியிருக்கும் சரித்திரத்தினால் அவன் 2-ம் சல்மனாசார்தான் என்று விளங்குகிறது.

இதற்குப் பிற்பாடு அசீரியா ராஜ்யத்தில் ஏதோ விபத்து உண்டானதினால் அதின் ராஜாக்கள் அதை விட்டு வெளியேறாதிருந்தபோது யோவாஸ் (*Jehoash*) என்னும் இஸ்ரவேலின் ராஜா சீரியரோடு யுத்தஞ்செய்து அவர்களை ஜெயித்தான். 2 இரா $13^{25}$.

யோவாஸ் இறந்தபின் (கி-மு. 781-ஆம் வருஷத்தில்) இரண்டாம் யெரொபெயாம் (*Jeroboam II*) இஸ்ரவேல் ராஜ்யத்திலும், கி-மு. 782-ஆம் வருஷத்தில் உசியா (*Uzziah*) என்பவன் யூதாவிலும் அரசாட்சிசெய்துவந்தார்கள். அப்போது ஏறக்குறைய 40 வருஷகாலம் எல்லா ராஜ்யத்திலும் அமைதி இருந்தது. இப்படி இந்த ராஜ்யங்கள் நாற்பது வருஷம் அமைதியாயிருக்குங் காலத்தில் இஸ்ரவேலரும் யூதரும் இனிமேல் அசீரியர் தங்களை ஒன்றும் செய்யமாட்டார்கள் என்று பயந்தெளிந்து துன்மார்க்கராயும் விக்கிரக ஆராதனைக்காரராயும் நடக்கத் தொடங்கினார்கள்.



அசீரியதேசத்துப் பிரபு.

ஆனால் இந்தச் சமாதானம் நித்தியமாய் இருக்



சனகெரிப் எபிரெயர்களுக்குச் செய்யும் வேதனை.

கும் என்று அவர்கள் ஏமாந்துபோகாத படி அவர்களுடைய பாவத்தினிமித்தம் அவர்களைத் தண்டிக்கக் கடவுள் அசீரியரைத் திரும்பவும் அனுப்புவார் என்று ஆமோஸ், (கி-மு. 775-750) ஓசியா (743-737) என்னும் தீர்க்கதரிசிகள் அவர்களை எச்சரித்து வந்தார்கள். ஆமோ $6^{7}$ ஓசி $9^{3}$ $11^{15}$. யூதாவின் ராசாவாகிய உசியா இறந்துபோன வருஷத்தில் யூதாவின் ராஜ்யத்திலும் ஏசாயா தீர்க்கதரிசி கி-மு. 701-ஞூலத்திலே அவர்களுக்கு நேரிடப்போகிற மோசத்தைப்பற்றிச் சொல்லிவந்தான். ஏசா $5^{26}$ மு. இதற்குப் பிற்பாடு மீகா என்னும் தீர்க்கதரிசியும் (720-ஞூமட்டும்) அப்படியே அவர்களை எச்சரித்துவந்தான்.

### பூல். *Pul.* 2 இரா $15^{19}$.

திகிலாத்பிலேசர் என்றும் (2 இரா $15^{29}$), தில்காத்பில்நேசர் என்றும் (1 நாளா $5^{26}$) மறு நாமங்கள் உள்ள இவன் சிறு பிராயத்தில் தோட்டக்காரனாயிருந்து பிற்பாடு போர்ச் சேவகத்தில் அமர்ந்து கொஞ்சக்காலத்திற்குள் யுத்த வித்தையில் சமர்த்தனாகி ஏசாயா தீர்க்கதரிசனம் உரைக்கிறதற்கு ஐந்து வருஷங்களுக்கு முன் (அதாவது கி-மு. 745-ஞூத்தில்) அசீரியாவில் அரசாட்சிசெய்து, கி-மு. 740-ஞூ சீரியா ராஜ்யத்தை ஜெயிக்கும்படி வந்தான். இவனுடைய பராக்கிரமத்தைப் பார்த்த மெனகேமும் (*Menahem*) அவனுக்குப் பின் வந்த பெக்காவும் (*Pekah*) ஆகிய இஸ்ரவேல் ராஜாக்கள் இவனுக்குப் பயந்து வெகுமதி கொடுத்தார்கள். 2 இரா $15^{19}$.

கி-மு. 734-ஞூ யூதாவின் ராஜாவாகிய ஆகாஸ் (*Ahaz*) இஸ்ரவேல் ராஜாவாகிய பெக்காவுக்குப் பயந்து ஓநாயிடம் ஆட்டுக்குட்டி சரண்புகுந்ததுபோல் தனக்கு உதவி செய்யும்படி பூல் இடத்தில் கேட்டான். 2 இரா $16^{7}$ மு. அப்பொழுது பாபிலோன் பட்டணத்தில் மெரோதாக்பலாதான் (*Merodach-Baladan*) என்னும் ராஜா திகிலாத்பிலேசருக்கு விரோதமாய்ப் பல காரியங்கள் செய்ததினால் இவன் சீரியாவை விட்டுப் பாபிலோனுக்கு வந்து அதை ஜெயித்து அங்கேதான் திகிலாத்பிலேசர் என்னும் பெயர் அடைந்து அசீரியாவையும் பாபிலோனியாவையும் ஒன்றாக இணைத்து, கி-மு. 727-ஞூத்தில் இறந்துபோனான்.

### சல்மனாசார். *Shalmaneser.* 2 இரா $17^{3}$.

இவன் இஸ்ரவேல் ராஜாவாகிய ஓசெயா (*Hoshea*) என்பவனோடு யுத்தஞ்செய்து சமாரியாவை 3 வருஷம் முற்றிக்கை போட்டு கி-மு. 722-ஞூத்தில் அங்கேதான் இறந்துபோனான். இவன் அசீரியா ராஜாக்களின் அட்டவணையில் நாலாம் சல்மனாசார். (*Shalmaneser IV.*)

### சர்கோன். *Sargon.* ஏசா $20^{1}$.

இவன் சல்மனாசாரின் தலைவர்களில் ஒருவனாயிருந்து சல்மனாசார் இறந்துபோக ராஜ்யத்தைத் தனதாக்கிச் சமாரியாவை ஜெயித்து பிரஜைகளில் 25,000 பேரைச் சிறைபிடித்துக் கி-மு. 722-705-ஞூ வரை அசீரியாவுக்கு ராஜாவாயிருந்தான். 2 இரா $17^{6}$.

இந்தச் சர்கோன் தன் ஜீவியகாலமெல்லாம் பல தேசங்களோடும் யுத்தஞ்செய்து தன் சத்துருக்களைக் கெடிகலங்கப்பண்ணினவன். இவர்களில் முந்திச் சொன்ன திக்லாத்பிலேசார் காலத்தில் இருந்த மெரோதாக்பலாதான் பிரதானமானவன்.

### மெரோதாக்பலாதான். *Merodach-Baladan.* ஏசா $39^{1}$.

இவனுடைய மறுநாமம் பெரோதாக்பலாதான். 2 இரா $20^{12}$. இவன் அசீரியா ராஜாவாகிய பூல் என்பவனுடைய காலத்திலே பாபிலோனியாவைப் பிடித்தபோது, பூல் இவனை அங்கிருந்து துரத்திவிட்டான். பிற்பாடு சல்மனாசார் சமாரியாவை முற்றிக்கைபோட்ட தருணத்தில் இரண்டாம்முறை இவன் பாபிலோனியாவைப் பிடித்து யூதாவின் ராஜாவாகிய எசேக்கியாவினிடத்தில் ஸ்தானாபதிகளை யனுப்பி, அசீரியரோடு யுத்தஞ் செய்வதற்குத் தனக்கு உதவிபுரி



சனகெரிப்புக்கு முன்பாக நிற்கும் யூதாவிலிருந்து வந்த அடிமைகள்.

யும்படி அவனைக் கேட்டான். ஏசா 39-ம் அதி. ஆனால் அசீரியா ராஜாவாகிய சர்கோன் இவனை ஜெயித்துப் பாபிலோனை மறுபடியும் அசீரியாவோடு இணைத்தான். சர்கோன் கி-மு 705-ஆம் ஆண்டில் இறந்து போனபிறகு இவன் திரும்பிவந்து மூன்றாம் முறை பாபிலோனைப் பிடித்து சனகெரிப்பின் மகனைச் சிறையாக்கி ஆறு மாதங்களாக அதை ஆண்டுவந்தான். இவ்வித தைரியசாலியான இவனைக் கடைசியாய் சனகெரிப் பாபிலோனிலிருந்து துரத்திவிட்டான்.

சனகெரிப். *Sennacherib*. **2** இரா $18^{13}$.

இவன் தகப்பனாகிய சர்கோனின் பட்டத்துக்கு வந்து மெரோதாக்பலாதானை ஜெயித்து, அசீரியாவையும் பாபிலோனையும் இணைத்து, ஏசாயா தீர்க்கதரிசனம் உரைத்தலை முடிக்கும்போது, கி-மு. 701-ஆம் ஆண்டில் சீரியா தேசத்திற்கு விரோதமாய்ப் படை எடுத்து வந்தான். இதை யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா அறிந்து, தன் ராஜ்யத்துக்கும் மோசம் வந்துவிட்டதென்று இவனுக்குப் பயந்து, எகிப்தியர் தனக்குத் துணையாக நிற்பார்கள் என்று நம்பிக்கையோடிருந்தும் அது பிரயோஜனப்படாமல் போயிற்று. சனகெரிப் நாற்பத்தாறு கோட்டைகளைப் பிடித்து இரண்டு லக்ஷம் ஜனங்களைச் சிறையாகப் பிடித்துத் தன் தேசத்திற்கு அவர்களைக் கொண்டுபோனான்.

எசேக்கியா பயங்கரமான இந்த மோசத்தை அறிந்து சனகெரிப்புக்கு விண்ணப்பங்களையும் வெகுமதிகளையும் அனுப்பினபோது, சனகெரிப் என்பவனுடைய சேனைத்தலைவன் முதலானவர்கள் எருசலேமுக்கு வந்து அங்கே எசேக்கியாவைக் கேலிபண்ணினார்கள். பிற்பாடு சனகெரிப் என்பவன் எருசலேம் பட்டணத்தை முற்றிக்கை போட்டான். அப்பொழுது கடவுள் சடுதியாய் அகோரமான கொள்ளைநோயை அசீரியரின் சேனை யிறங்கியிருந்த பாளயத்தில் அனுப்பி எத்தனையோபேரை அழித்ததைச் சனகெரிப் கண்டு பயந்து திரும்பிப்போனான்.

இதற்குப்பிறகு பாபிலோனியாவில் அடிக்கடி தொந்தரவு செய்துகொண்டிருந்த மெரோதாக்பலாதானை இவன் ஜெயித்து அந்தப் பட்டணத்தையும் அதின் கோட்டை கொத்தளங்களையும் நிர்த்தூளியாக்கி அசீரியாவின் முக்கிய பட்டணமாகிய நினிவேயை அலங்கரித்து, அதில் விநோதமான ராஜமாளிகைகளையும், அப்பட்டணத்தைச் சுற்றி எட்டு மைல் நீளமுள்ள மதிலையும் கட்டினான்.

இந்தப் பெரிய ராஜா ஒருநாள் கோவிலிலே பணிந்துகொள்ளுகிறபோது, இவனுடைய குமாரர்களில் இரண்டுபேர் இவனைப் பட்டயத்தினால் வெட்டிக் கொன்றுபோட்டதினால் (2 இரா $19^{37}$, பரிதாபப்படத்தக்க வண்ணமாய் இவன் மரித்தான். கி-மு. 681.

எசரத்தோன். *Esarhaddon*.
எஸ்றா $4^{2}$ **2** இரா $19^{37}$.

சனகெரிப்புடைய மகனாகிய இந்த ராஜா பெரிய சேனாபதியும் வித்துவானுமாய் இருந்தான். இவன் அசீரியாவையும் பாபிலோனியாவையும் ஒன்றாய் இணைத்து அரசு புரிந்துவந்தான் (கி-மு. 681-668). இவனுக்குக்கீழ் சிற்றரசனாய் இருந்த யூதாவின் ராஜாவாகிய மனாசே இவனுக்கு விரோதமாய் ராஜ துரோகம் செய்ததினால் இவனுடைய சேனாபதிகள் அவனைப் பாபிலோனுக்குக் கொண்டுபோனார்கள். 2 நாளா $33^{11}$.

அஸ்னாப்பார். *R. V. Osnappar.*
*A. V. Asnapper.* எஸ்றா $4^{10}$.

எசரத்தோனின் மகனாகிய இவன் கி-மு. 668-626-ஆம் வரை அசீரியாவையும் பாபி



நிம்ரோத்.

லோனையும் ஒன்றாய் இணைத்து அரசாண்டான். அசீரியர்கள் இவனுடைய பெயர் அசூர்பானிபால் (*Ashurbanipal*) என்று சொல்லுவார்கள். மண் பலகைகளில் இவன் தன்னைக்குறித்து எழுதிவைத்த சரித்திரத்தினால் இவனைப்பற்றி நாம் அநேக காரியங்களை அறிவதோடு, இவன் தன் அரமனையில் வளர்த்த சிங்கங்களோடும் காடுகளிலுள்ள சிங்கங்களோடும் தனியே சண்டை செய்வதற்கு அஞ்சாத தைரியசாலியாய் இருந்தான் என்றும் காண்கிறோம்.

சனகெரிப் கொள்ளைநோயினால் துரத்தப்பட்ட பிற்பாடு அசீரியாவைப்பற்றி இஸ்ரவேல் ராஜ்யத்திற்கும் யூதாவின் ராஜ்யத்திற்கும் யாதொரு பயமும் இருந்ததில்லை. இதிலிருந்து ஏறக்குறைய நூறு வருஷத்திற்கிடையில் அசீரியா ராஜ்யம் குன்றிப்போகப் பாபிலோன் ராஜ்யம் உன்னத ஸ்திதி அடைந்துவந்தது. கி-மு. 630-ஆ துவங்கி 50 வருஷங்களாகச் செப்பனியா, ஆபகூக், நாகூம், எரேமியா என்னும் தீர்க்கதரிசிகள் யூதாவின் ஜனங்களுக்கு அவர்கள் செய்யும் துன்மார்க்கத்தினிமித்தம் கடவுள் பாபிலோனியரைக்கொண்டு அவர்களைத் தண்டிப்பார் என்று சொல்லி எச்சரித்துவந்தார்கள்.

நூறு வருஷங்களுக்குப் பிற்பாடு பாபிலோனின் மகா பராக்கிரமமுள்ள சக்கரவர்த்தியாயிருந்த நேபுகாத்நேச்சார் என்பவனைப் பற்றி வேதத்திற் சொல்லியிருக்கிறதையும் அக்காலத்தில் கற்பலகைகளில் எழுதியிருக்கிறதையும் சேர்த்துப் பார்த்தால் அவனைக் குறித்து நாம் தெளிவாய் அறியக்கூடும்.

**நேபுகாத்நேச்சார். *Nebuchadnezzar.***
2 இரா $24^{1}$ எரே $27^{19}$ மு.

இவன் கி-மு. 605-561-ஆமட்டும் அரசாட்சி செய்து எகிப்தையும் யூதாவின் ராஜ்யத்தையும் தன் வசமாக்கி அவைகளுக்கிருந்த எல்லாக் கீர்த்தியும் குன்றிப்போகச் செய்தான். 2 இரா 24, 25 அதி. எரே 37 அதி. நேபுகாத்நேச்சாரின் ராஜசபையைச் சேர்ந்தவர்களில் தானியேலும் ஒருவன். இவன் மகா பக்தனாய்க் கோவில்களைக் கட்டி, சிலைகளையும் பொற்சிலைகளையும் செய்வித்து அவைகளை வணங்கினான். தானி $3^{1}$ $4^{30}$. மேலும் இவன் பாபிலோனில் ஏரி குளங்களையும் கால்வாய்களையும் வெட்டி, துறைமுக மேடைகளையும், பட்டணத்தைச் சுற்றி மூன்று பெரிய மதில்களையும் கட்டினான். இவனுடைய காலத்தில் பாபிலோன் வெகு அலங்காரமாய்த் தோற்றினாலும் சீக்கிரத்தில் அதற்கும் முடிவு வந்தது.

**ஏவில்மெரோதாக். *Evil Merodach.***
2 இரா $25^{27}$ எரே $52^{31}$.

நேபுகாத்நேச்சாரின் குமாரனாகிய இவன் கி-மு. 561-559-ஆ வரை ஏறக்குறைய இரண்டு வருஷம் அரசாட்சி செய்தான். இவன் யூதாவின் ராஜாவாகிய யோயாக்கீனைச் சிறைச்சாலையிலிருந்து விடுதலையாக்கினவன். இவனுக்கும் பாபிலோன் பட்டணத்தின் ஆசாரியர்களுக்கும் சச்சரவு இருந்ததினால் அவர்கள் இவனைக் கொன்றுபோடும்படி இவனுடைய சகோதரனை ஏவிவிட்டார்கள்.

ஏவில்மெரோதாக்குக்குப் பிற்பாடு வேதத்திற் சொல்லப்பட்டிராத இரண்டு ராஜாக்கள் பாபிலோனை ஆண்டார்கள். இவர்களில் பிந்தினவன் பாபிலோன் பட்டணத்திற்குள் வசிக்க விரும்பாமல் தன் குமாரனாகிய பெல்ஷாத்சார் (**Belshazzar**) என்பவனைத் தனக்குப் பதிலாக ஆளும்படி வைத்தான். இந்த பெல்ஷாத்சார் ராஜாவல்லாததினால் இவன் பாபிலோனின் பிரதி காவலனாய் இருந்தான். தானி $5^{11}$ $7^{1}$. ஆசாரிமார் செய்த துரோகத்தினால் பெர்சியா ராஜாவாகிய கோரேஸ் பாபிலோன் பட்டணத்தைப் பிடித்த அன்று ராத்திரியில் இவன் கொலைசெய்யப்பட்டான். (கி-மு. 539.) தானி 5-ம் அதி.

கோரேஸ் பாபிலோனைப் பிடித்து அதைப் பெர்சியாவோடு இணைத்து, அதைச் சிலகாலம் சிறப்பித்துவந்தாலும் அதின் கீர்த்தி குறைந்து வந்ததேயொழியத் திரும்ப ஒருக்காலும் ஒரு ராஜ்யமானதேயில்லை.

**அசுத்தம். Uncleanness.**

I. பழைய ஏற்பாட்டிலே லேவியராகமத்திலும் இன்னும் சில இடங்களிலும் கட்டாயமாய்க் கவனிக்கவேண்டிய ஆசாரத்திற்குரிய விதிகளோடு இன்னது அசுத்தம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(1) சயனம், பிரசவம் முதலியவற்றால் உண்டாகும் அசுத்தம். உபா 23[10] லேவி 15[18. 19. 25. 2] 12 அதி. இவைகளில் ஒவ்வொன்றுக்கும் சுத்திகரிப்பும் சொல்லப்பட்டிருக்கிறது.

(2) புசிக்கத் தகாதவைகளைப் புசித்தல் அசுத்தம். நியாயப்பிரமாணத்தின்படி மிருகம், பட்சி, நீர்வாழ்வன, ஊர்வனஆகிய இவற்றில் புசிக்கத் தகுந்தவைகள் எவை என்றும் தகாதவைகள் எவை என்றும் உபா 14[4] லேவி 11-ம் அதி. விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

(3) குஷ்டரோகியும் அவனைத் தொட்டவனும் அசுத்தமானவர்கள். குஷ்டரோகி இருக்கும் இடமும் அவன் தொட்ட யாவும் அசுத்தமானவை. லேவி 13[44]. **குஷ்டரோகம்** காண்க.

(4) பிரேதத்தைத் தொடுதல் முதலியவற்றால் உண்டாகும் அசுத்தம். எண் 19-ம் அதி. இவைகளைப்பற்றி யோசிக்குமிடத்து ஆசூசம் பலவிதமாய் இருந்ததென்றும், அதினால் பலதடையும் வசதியீனமும் உண்டானதென்றும் நாம் அறிவோம். முக்கியமாய் ஒருவன் தேவாலயத்திற்குப் போவதற்கும் பலி செலுத்துவதற்கும் ஆராதனை செய்வதற்கும் உத்தரவு கிடையாதிருப்பது அவனுடைய துர்லபமே.

II. கி-மு. ஏறக்குறைய 5-ம் நூற்றாண்டிலே யூதர்கள் பாபிலோன் சிறையிருப்பிலிருந்து வந்ததுமுதல் அவர்களில் நியாயப்பிரமாணத்திற்குரிய நியமங்களை அதிக நுட்பமாய் ஆசரித்தவர்களாகிய வேதசாஸ்திரிகளுக்கு அதிகாரம் பெருத்ததினால் அவர்கள் மோசேயின் நியாயப்பிரமாணத்திற்குத் தாங்கள் நினைத்தபடி வியாக்கியானம் செய்து அதை அதிகமாய் விபரித்துச் சுத்தத்தைப் பற்றியும் அசுத்தத்தைப்பற்றியும் பலவிதமான ஏற்பாடுகளைச் செய்தார்கள். மாற் 7[8].

இயேசுகிறிஸ்து நீதி நியாயத்துக்குரிய ஒன்றையும் மாற்றாமல் ஆசாரத்தைப்பற்றிப் பாரம்பரியத்தினாலுண்டான கட்டளைகளை அகற்றி, இவைகளை அநுசரியாததினாலே அசுத்தம் உண்டாகிறதில்லை என்றும், வெளி ஆசாரத்தின்படி நடப்பது அல்ல இருதயத்தில் உண்டாகும் தீமையே அசுத்தம் என்றும், அசுத்தம் இன்னதென்பது பாரம்பரிய கோட்பாட்டினால் அல்ல மனச்சாட்சியினால் அறியவேண்டும் என்றும் தெரிவித்தார். மத் 15[8].

யூதமார்க்கத்திற் பிறந்த ஆதிக் கிறிஸ்தவர்கள் இயேசுகிறிஸ்து அருளின இப்போதனையைப் பூரணமாய் அறியாமல் நியாயப் பிரமாணத்தை அநுசரித்துவந்தார்கள். அவர்களில் யாக்கோபும் பேதுருவும் மோசேயின் நியாயப்பிரமாணத்தை விட்டுவிட விரும்பவில்லை. கலா 2[9. 14].

அப் 10[15. 34]-ல் அசுத்தத்தைப்பற்றிப் பேதுருவுக்கு அருளின போதனையை நாம் பார்க்கலாம். அசுத்தம் இன்னதென்பதைப் பவுலே முதல் முதல் அறிந்து பாரம்பரியத்தினால் உண்டான ஆசாரத்தை ஆதிக் கிறிஸ்தவர்கள் முழுதும் கைக்கொள்ளவேண்டியதில்லை என்று தெரிவித்தான். ரோ 14[14].

அசுத்தமானவை. கொலோ 3[5] எபே 5[3] 2 பேது 2[10].

பாவத்தினால் அசுத்தமானவை. ஏசா 6[5] 35[9] 52[1] எசே 22[26] 36[29] ரோ 6[19] 14[14] 2 கொரி 6[17].

அசுசியாயிருக்கிறவன். அப் 10[28] எபே 5[5] எபி 9[13].

அசுத்த ஆவி. மாற் 1[23] 3[11] லூக் 4[33] அப் 5[16].

அஞ்ஞானத்தினால் அசுத்தம். எஸ்றா 6[21] 1 கொரி 7[14].

**அசுபா. Hasupha.** எஸ்றா 2[43].

**அசுபாள். Azubah.**

1. காலேபின் மனைவி. 1 நாளா 2[18].
2. யோசபாத்தின் தாய். 1 இரா 22[42].

**அசுப்பீம். Asuppim.** இது ஒரு காரணப்பெயர் அல்ல, பொக்கிஷசாலை அல்லது களஞ்சியம் என்று அர்த்தம்கொள்ளும் ஓர் பொதுப்பெயர். 1 நாளா 26[15-17].

**அசூபா. Hashubah.** 1 நாளா 3[20].

**அசூரீம். Ashurim.** அரபிதேசத்துக் கோத்திரங்களில் ஒன்று. ஆதி 25[3].

**அசூர். Assur, Ashur, Asshur, Asyria.**

1. சேமுடைய மகன். ஆதி 10[22].
2. அசூர் என்பதே அசீரியா. ஆதி 10[11] எண் 24[22] மு. **அசீரியா** காண்க.
3. அசீரியர் வணங்கின ஒரு தேவன். அவனுக்கு மறுபெயர் நிஸ்ரோகு 2 இரா 19[37].

**அசூர்.** Azzur.
1. நெகே $10^{17}$.
2. எரே $28^{1}$.
3. எசே $11^{1}$.

**அசேக்கா.** Azekah. [வெட்டப்பட்ட இடம்]. 1 சாமு $17^{1}$. யூதாவின் எல்லைகளி லுள்ள ஒரு கோட்டை அல்லது பாளயம்.

**அசேனு.** Hassenah. நெகே $3^{3}$. =சேனு.

**அசேனுவா.** Hassenuah. 1 நாளா $9^{7}$.= சேனுவா.

**அசேரா, அசேரீம்.** Ashera, Asherim. நியா $3^{7}$ $6^{25}$ 1 இரா $18^{19}$ 2 இரா $23^{6}$ ஏசா $27^{9}$. முதலிய பல இடங்களில் 'தோப்பு,' 'தோப்பு விக்கிரகம்,' 'தோப்பு விக்கிரகங்கள்' என்று அஃறிணையாகச் சொல்லப்பட்டிருக்கிற பெயர்களை நாம் வாசிக்கும்போது 'அசேரா' அல்லது 'அசேரீம்' என்பவைபோல அவைகளை உயர்திணையாக எண்ணவேண்டும். அசேரா என்பதற்கு இரண்டு அர்த்தம்.

(1) கானானியர் வணங்கின ஒரு தேவி. சிலர் நினைக்கிறபடி இத்தேவதையும் அஸ்தரோத்தும் ஒன்றுதான்.

(2) கானானியருடைய தேவ ஸ்தலங்களில் பலிபீடமும், அவர்கள் வணங்கும் கற்றூணும், தேவதைக்குப் பிரதிஷ்டை செய்த மரமும் இருந்தன. பிரதிஷ்டை செய்த இந்த மரத்திற்கு 'அசேரா' என்று பெயர். இந்துக்கள் துளசிமரத்தை வணங்குகிறது போல கானானியர்கள் இதை வணங்கிவந்தார்கள் என்று சில வித்துவான்கள் நினைக்கிறார்கள்.

**அசைபோடுகிறது.** Chew the cud. லேவி $11^{3-7, 26}$ உபா $14^{6-8}$.

**அசைவாட்டப்படும் காணிக்கை.** Wave offering. பலி காண்க

**அசோகமரம்.** A. V. Ash. R. V. Fir. ஏசா $44^{14}$. இந்தியா தேசத்திலுள்ள அசோகமரம் அல்ல. தேவதாரு விருக்ஷங்களில் இது ஒரு வகை.

**அச்சடையாளங்கள்.** Marks, Stigmata. கலா $6^{17}$. பவுல் காலத்தில் ஒரு கோயிலில் பணிவிடை செய்யும் அடிமைக்கு அக்கோயிற் கர்த்தாக்கள் அக்கோயிலிலுள்ள தேவதையைக் காட்டும் அடையாளமாகக் குறிசுடுவார்கள். இக்குறியுள்ள அந்த அடிமையை யாரும் தொந்தரவுசெய்தால் அத்தேவதை இவனைக் காத்துக்கொள்ளும் என்று நினைத்தார்கள். இதை அறிந்து பரி. பவுல் கலாத்தியரை நோக்கித் தனக்குச் சத்துராதிகள் அடித்த அடிகளினால் உண்டான தழும்புகள் தான் இயேசுவின் ஊழியக்காரன் என்றும் இயேசு தன்னைக் காப்பாற்றுவார் என்றும் காட்டும் அச்சடையாளங்கள் என்னும் கருத்தோடே சொல்லி, கலாத்தியர்கள் பயந்து தனக்கு இனி யாதொரு தொந்தரவும் செய்யாதபடி அவர்களை எச்சரிக்கிறான்.

**அச்சாரம்.** The earnest. 2 கொரி $1^{22}$ $5^{5}$ எபே $1^{14}$. வாங்குகிறவன் விற்கிறவனுக்கு வாக்களித்த முழுத் தொகைக்காக உறுதியைக் காட்டும்படி தற்சமயத்தில் கொடுக்கும் பாகம். அல்லது வேலைக்காரன் வாங்கவேண்டிய முழுத் தொகைக்காகத் தற்சமயத்தில் அவன் பெற்றுக்கொள்ளும் பங்கு. வாக்களித்த மிச்சத் தொகை இனிமேற் கொடுக்கப்படும். இவ்விதமாய்ப் பரிசுத்தாவியானவர் நம்மில் உண்டாக்கும் நன்மையானது நாம் புத்திர சுவிகாரத்தையும் நித்திய பாக்கியத்தையும் அடைவோம் என்பதற்கு உறுதியான அச்சாரம் என்று பவுல் அப்போஸ்தலன் காட்டுகிறான். அடைமானம் காண்க.

**அஸ்கலோன்.** Ashkelon, Ascalon. பெலிஸ்தருடைய ஐந்து முக்கிய பட்டணங்களி லொன்று. இது அத்தேசத்திற்கு ஓர் பெரிய கோட்டை. இங்கே தாகோன் என்னும் தேவதையை வணங்கிவந்தார்கள். எரேமியா, ஆமோஸ், செப்பனியா, சகரியா என்னும் தீர்க்கதரிசிகள் இதற்கு வரப்போகும் சாபத்தை முன் அறிவித்தார்கள். யோசு $13^{3}$ நியா $1^{18}$.

**அஸ்காத்.** Azgad. எஸ்ரு $8^{12}$.

**அஸ்கேனஸ்.** Ashkenaz, Ashchenaz.
1. கோமரின் மகன் ஆதி $10^{3}$.
2. அர்மீனியா தேசத்து ஒரு கோத்திரம். எரே $51^{27}$. சிலர் நினைக்கிறபடி இந்தக் கோத்திரமும் கொலோ $3^{11}$-ல் சொல்லியிருக்கும் 'புறதேசத்தான்' (*Scythian*) என்பதும் ஒன்றுதான்.

**அஸ்தகடகம்.** Armlet. 2 சாமு $1^{10}$. ஆபரணம் காண்க.

**அஸ்தரோத்.** Ashtoreth.
1. சீதோனியர் வணங்கிவந்த சந்திர தேவி. சாலொமோன் இதைப் பின்பற்றினான். 1 இரா $11^{5}$. சாலொமோன் இதற்காகக் கட்டின பலிபீடத்தை யோசியா அழித்தான். 2 இரா $23^{13}$. கானானியரைத் தவிர அசீரியர், பாபிலோனியர், மோவாபியர் இந்தத் தேவியை மிகவும் வணங்கிவந்தார்கள். இந்தத் தேவியின் தன்மையைப் பார்க்கப்

போனால் இது அவர்களுக்கு காமதேவி யாயும் யுத்தஜெய தேவியாயு மிருந்தது. இதைப் *பிரியப்படுத்தும்படி வேசித்தனம் பலமுறையும் செய்வார்கள். சில விஷயங் களில் இத்தேவியின் தயவு பெறும்படி



அஸ்தரோத் தேவி.

குடும்ப ஸ்திரீகளும் இதின் ஆலயத்தில் வேசித்தனமாய் நடப்பார்கள். இதினிமித் தம் இத்தேவியின் வணக்கமெல்லாம் அகோ ரமாயிருந்தது என்று பழைய ஏற்பாட்டின் மூலமாய் நாம் அறியலாம்.

2. யோர்தான் நதிக்குக் கிழக்கே பாசான் தேசத்திலுள்ள ஓர் பெரிய பட்டணம். உபா 1⁴.

**அஸ்தரோத் கர்னாயீம். Astaroth Karnaim.** [இரு கொம்புகளையுடைய சந்திர தேவி]. யோர்தான் நதிக்குக் கிழக்கேயுள்ள ஒரு ஊர். இந்த ஊரிலே யோபு வாசஞ் செய்தான் என்பது பாரம்பரியம். ஜனங்கள் இரு கொம்புகளையுடைய அஸ்தரோத் தேவி யின் சிலையை இந்த ஊரிலே வணங்கிவந் தார்கள் என்று தோன்றுகிறது. ஆதி 14⁵.

**அஸ்தோத். Ashdod.** [கோட்டை]. யோசு 11²² 1 சாமு 5⁶ 2 நாளா 26⁶ நெகே 4⁷.= அசோத்து. அப் 8⁴⁰. பெலிஸ்தியரு டைய ஐந்து பெரிய பட்டணங்களில் இது ஒன்று. இஸ்ரவேலர் இதைப் பிடியாததி னாலே ஏனாக்கியருக்கு இது ஒரு புகலிடம் ஆனது. இப்பட்டணத்தாருக்கும் யூதருக்கும் எப்போதும் விரோதம். கி-மு. 711-ஆம் த்தில் அசீரியா ராஜாவாகிய சர்கோன் சமாரியாவைப் பிடித்தபிறகு இப்பட்டணத் தை முற்றிக்கையிட்டு அதைப் பிடித்தான். கி-பி. நாலாம் நூற்றாண்டில் இது கிறிஸ் தவ அத்தியக்ஷருக்கு வாசஸ்தலம் ஆனது. ஆனால் இதின் கீர்த்தி வரவரக் குறைந்து போனதினால் இது இருந்த இடத்திலே இப் போது ஒரு சிறு கிராமம் மாத்திரம் இருக் கிறது.

**அஸ்தோத் பிஸ்கா. Pisgah.** இது கார ணப்பெயர் அல்ல. இதின் அர்த்தம் பிஸ்கா மலையின் கீழ்ப்பாகம். உபா 3⁷.

**அஸ்பதானா. Hashbaddanah.** நெகே 8⁴.

**அஸ்பாதா. Aspatha.** எஸ்தர் 9⁷.

**அஸ்பூக். Azbuk.** நெகேமியாவின் தகப்பன். நெகே 3¹⁶.

**அஸ்பேயா. Ashbea.** 1 நாளா 4²¹.

**அஸ்பேல். Ashbel.** [பாகாலின் மனு ஷன்]. இவன் பென்யமீனின் மகன். ஆதி 46²¹.

**அஸ்பேனாஸ். Ashpenaz.** நேபுகாத் நேச்சாரின் பிரதானிகளின் தலைவன். தானி 1³.

**அஸ்மாவேத். Azmaveth.**

1. 1 நாளா 8³⁶.
2. 2 சாமு 23³¹.
3. ஒரு ஊர். 1 சாமு 12³.

**அஸ்மோனா. Hasmonah.** எண் 33²⁹.

**அஸ்மோன். Azmon.** எண் 34⁴. = ஆத் சேம். யோசு 15²⁹.

**அஸ்ரா. Hasrah.** அர்காஸ் காண்க.

**அஸ்ரீக்காம். Azrikam.**

1. 1 நாளா 3²³.
2. 1 நாளா 8³⁸.
3. 1 நாளா 9¹⁴.
4. 2 நாளா 28⁷.

**அஸ்ரியேல். Asriel.** யோசு 17² 1 நாளா 7¹⁴.

**அஸ்ரியேல். Azriel.**

1. 1 நாளா 5²⁴.
2. 1 நாளா 27¹⁹.
3. எரே 36²⁶.

**அஸ்ரீக்காம். அஸ்ரீக்காம்** காண்க.

**அஸ்வாத். Ashvath.** 1 நாளா 7³³.

**அஸ்னா. Asna.**

1. இரண்டு ஊர்கள். யோசு 15³³· ⁴³.
2. ஒரு குடும்பத்தலைவன். எஸ்றா 2⁵⁰.

**அஸ்னாப்பார். Osnappar. அசீரியா ராஜாக் கள்** காண்க.

**அஸ்னோத் தாபோர். Aznoth Tabor.** யோசு 19³⁴.

**அஷபனா. Hashabnah.** நெகே 10²⁵.

**அஷாரேலா. Asherelah. எசரேலா** காண்க.

**அஷூரியர். Ashurites.** இப்பெயர் அசீ ரியரையும் அசூரீயையும் (ஆதி 25³) குறிக் காமல் ஒரு சீரிய கோத்திரத்தைக் குறிக்கி றது. 2 சாமு 2⁹.

**அஞ்சல்காரன். Post.** ராஜாவின் மெய் காப்பாளரில் ராஜாக்கள் அனுப்பும் நிருபங்

கொண்டு வேகமாய் ஓடுகிற சேவகன். 2 நாளா $30^6$ எஸ்தர் $8^{14}$ யோபு $9^{25}$ எரே $51^{31}$.

**அஞ்சனம்.** **Omen.** லேவி $20^{27}$ உபா $18^{10}$ 1 சாமு $28^{27}$ 2 நாளா $33^6$. **சூனியம்** காண்க.

**அஞ்ஞானி.** **Heathen.** சங் $135^{15}$ மத் $6^{7.32}$ $18^{17}$ 1 கொரி $5^1$ $10^{20}$ $12^2$. கிறிஸ்தவர்களிற் சிலர் விக்கிரகங்களை வணங்குகிறவனுக்கு இப்பெயர் சொல்லுவார்கள். ஆனால் மூலபாஷையில் இப்பெயர் அந்நியன் அல்லது புறஜாதியான் என்பதை மாத்திரம் கருதுகிறது. எபிரெயர் தங்களுடைய சொந்தத் தேசம், ஆசாரம், கோத்திரம் ஆகிய இவைகளில் சம்பந்தமில்லாதவர்களுக்கு இப்பெயரை வழங்கிவந்தார்கள். வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் மேலேசொன்ன எழு வாக்கியங்களில் இப்பெயரைக் காட்டும் மூலபதங்களுக்கு 'அஞ்ஞானி' என்று சொல்லியிருந்தாலும், பெரும்பாலும் அவைகளுக்கு 'ஜாதிகள்' 'புறஜாதிகள்' என்று எழுதியிருக்கிறார்கள். **ஜாதி, புறஜாதி** காண்க.

**அடகு.** **Pledge.** [அடைமானம், ஈடு]. கடனுக்காக வைக்கும் ஈடு. மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி ஏழை யொருவன் ராத்திரிகாலத்தில் பனிக்குப் போட்டிருக்கும் போர்வையையும் (யாத் $22^{26}$), விதவையின் வஸ்திரத்தையும் (உபா $24^{18}$), திரிகைக்கல்லையும் (உபா $24^6$) ஒருவரும் அடகாக வாங்கக்கூடாது.

**அடக்கம்.** **Burial.** **பிரேத அடக்கம்** காண்க.

**அடி.** **Beating.** மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி ஒருவன் குற்றவாளியாய்க் காணப்பட்டால் அவனுக்கு அதிக தண்டனை கொடாமல் 40 அடிவரையும் அடிக்கலாம். உபா $25^1$ 2 கொரி $6^5$ $11^{24}$. இந்தக் கட்டளையை மீறுதபடி யூதர்கள் குற்றவாளியை 39 அடிகளையும் அடிப்பார்கள்.

**அடிமைத்தனம்.** **Slavery.**

1. கானானுடைய சந்ததியாரின் அடிமைத்தனம். ஆதி $9^{25}$. யூதர்கள் 'நாங்கள் ஒருவருக்கும் அடிமைகளாய் இருந்ததில்லை' என்று பெருமை பாராட்டினாலும் (யோவா $8^{33}$ கலா $4^{31}$), எகிப்தியர், அசீரியர், ரோமர் முதலானவர்களுக்கு அடிமைகளைப்போல் இருந்தார்கள். **வேலைக்காரன்** காண்க.

2. பாவத்திற்கு அடிமை. ரோ $6^{16}$ $17^{20}$ எபி $2^{15}$ 2 பேது $2^{19}$.

3. நியாயப்பிரமாணத்திற்கு அடிமை. ரோ $8^{15}$ கலா $2^4$ $3^{10}$ $4^{9.24}$.

4. அழிவு, மரணம் இவைகளுக்குரிய அடிமைத்தனம். ரோ $8^{20}$.

5. கடவுளுக்கு அடிமை. ரோ $6^{22}$.

6. ரோ $1^1$ மு. 'இயேசுகிறிஸ்துவின் ஊழியக்காரன்' என்று சொல்லும்போது 'ஊழியக்காரன்' என்பதும் 'அடிமை' என்பதும் ஒன்றுதான் என்று நாம் அறியவேண்டும்.

**அடை.** **Cake.** யாத் $29^2$ லேவி $2^4$.



அடைக்கலப்பட்டணம்.

**அடைக்கலப்பட்டணம்.** **Cities of Refuge.** எண் 35 அதி. உபா $19^{11.12}$ யோசு 20 அதி. 1 சாமு $14^4$. முற்காலத்தில் ஒருவனை ஒருவன் கைப்பிசகாயாவது பகையினிமித்தமாயாவது கொன்றுபோட்டால் கொல்லப்பட்டவனுடைய இனத்தார் கொலைபாதகனைக் கொல்வது நியாயம் என்று சொல்லி அப்படியே செய்துவந்தார்கள். இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயித்த பிறகு கடவுள் கைப்பிசகாய் ஒருவனைக் கொன்றுபோட்டவன் ஓடிப்போய் இருக்கத் தக்கதாக ஆறு அடைக்கலப்பட்டணங்களைக் குறிக்கும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார். அப்படியே இந்தப் பட்டணங்களை யோர்தான் நதிக்குக் கிழக்கே மூன்றும் மேற்கே மூன்றுமாக அவர்கள் ஸ்தாபித்தார்கள். கானான் தேசப்படத்தை நாம் பார்ப்போமானால் ஒருவன் தான் இருக்கும் இடத்திலிருந்து அடுத்த அடைக்கலப்பட்டணத்துக்குப் போகவேண்டிய தூரம் 30 மைலுக்கு மேற்படாதென்று அறிவோம். கைப்பிசகாய்க் கொலை செய்தவன் லேசாய் ஓடிப்

போகத்தக்கதாக இடையிலே யாதொரு தடையும் இல்லாமல் இப்பட்டணங்களுக்குப் போகும் வழிகள் செம்மையாய் வைக்கப்பட்டிருந்தன. உபா 19³. பழிவாங்குகிறவன் வந்து அடைக்கலப்பட்டணத்தில் இருக்கிற கொலையாளி கைப்பிசகாய் அல்ல, பகையினிமித்தம் கொன்றவன் என்று அவன் மேல் குற்றஞ் சாட்டினால், சபையார் அதைப்பற்றி விசாரணைசெய்து கொலையாளி பகையினிமித்தம் கொன்றான் என்று அறிந்தால் பழிவாங்குகிறவன் அவனைக் கொல்லும்படி இடங்கொடுப்பார்கள். கொலையாளி கைப்பிசகாய்க் கொன்றான் என்று சபையார் கண்டால் அவர்கள் அவனுக்கு யாதொரு சேதமும் வராதபடி அடைக்கலப் பட்டணத்தில் வைத்திருப்பார்கள். பிரதான ஆசாரியன் மரித்தபிற்பாடு அவன் அடைக்கலப்பட்டணத்தை விட்டுத் தன் சொந்த ஊருக்குப் பயமின்றிப் போகலாம். எண் 35²⁸.

தேவாலயத்திலுள்ள பலிபீடம் அடைக்கல ஸ்தானமாயிருந்தது. 1 இரா 1⁵⁰ 2²⁸ யாத் 21¹⁴.

**அடைக்கலம்.** **Refuge.** [புகலிடம்]. தேவன் தம்மை நம்பினவர்களுக்கு அடைக்கலமானவர் என்று உபமானமாய்ச் சொல்லப்படுகிறதை **வேதத்தில்** நாம் அடிக்கடி பார்க்கிறோம். சங் 46¹ 62⁷ 91² நீதி 14²⁶ ஏசா 25⁴ மு.

**அடைக்கலான் குருவி.** பழைய ஏற்பாட்டிலே மூலபாஷையில் கீச்சு கீச்சு என்று சத்தமிடுகிற பட்சிகளுக்கு வழக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிற ஒரே பதத்தை 'குருவி' 'அடைக்கலான் குருவி' 'பட்சி' என்று தமிழில் மொழிபெயர்த்திருக்கிறது. புதிய ஏற்பாட்டிலே அடைக்கலான் என்று சொல்லப்படும் குருவிகள் இந்தியா தேசத்திலுள்ளவைகளைப் போன்றவைகள். அவைகள் பலஸ்தீனா தேசத்தில் ஏராளமாயுண்டு. அவைகள் நியாயப்பிரமாணத்தின்படி புசிப்பதற்கு விலக்கப்பட்டவைகளல்ல. சங் 84³ நீதி 26² மத் 10²⁹·³¹ லூக் 12⁶.

**அடைமானம்.** **Pledge.** கொடுக்க வேண்டிய கிரயத்திற்கு அல்லது வெகுமதிக்கு ஈடு. ஆதி 38¹⁷. **அச்சாரம், அடகு** காண்க.

**அடையாளம்.** **Sign.** இப்பதம் கடவுளுடைய வாக்குத்தத்தத்திற்கு அல்லது ஒரு காரியம் கடவுள்தான் செய்தார் என்பதற்கு அத்தாக்ஷியாய் வேதத்தில் வழங்கப்படுகிறது. உ-ம்.

வானவில். ஆதி 9¹².

விருத்தசேதனம். ஆதி 17¹¹.

பத்து வாதைகள். யாத் 10².

கிதியோனுக்கு. நியா 6-ம் அதி.

சவுலுக்கு. 1 சாமு 10⁷.

யூதர்களுக்கு. ஏசா 7¹⁴ எரே 44²⁹ எசே 14⁸.

மேய்ப்பர்களுக்கு. லூக் 2¹².

இயேசு கிறிஸ்துவும் அப்போஸ்தலரும் செய்த அற்புதங்கள் அடையாளங்களாய் இருந்தன. யோவா 3² அப் 15¹².

உலகத்தின் முடிவைப் பல பயங்கரமான அடையாளங்கள் காட்டும். மத் 24³⁰ லூக் 21²⁵ 2 தெச 2⁹ மு.

யூதர்கள் அடையாளங்களுக்காக அற்புதங்கள் செய்யும்படி இயேசுவைத் தொந்தரவு செய்தார்கள். மத் 12³⁸ மு. யோவா 4¹⁸.

**அட்டை.** **Leech.** பலஸ்தீனாவிலுள்ள ஆறுகளிலும் குளங்களிலும் அட்டைகள் அதிகம். நீதி 30¹⁵.

**அண்ணகன்.** **Eunuch.** ஆண்மை இல்லாதவன். ஏசா 56³. இயல்பாகவே ஆண்மை இல்லாதவர்களும், அப்படிச் செய்யப்பட்டவர்களுமாகிய இவர்களை அரமனை அந்தப்புரத்தில் ஊழியர்களாக ராஜாக்கள் வைத்தார்கள். சில காலத்திற்குப் பிற்பாடு இப்பதம் அர்த்தம் மாறிப்போய் அரமனையிலுள்ள உத்தியோகஸ்தருக்குப் பொதுவாய் வழங்கப்பட்டது. பிரதானிகள் (2 இரா 9³²), அரமனைப் பிரதானிகள் (எரே 41¹⁶), அரமனை வேலைக்காரர் (2 இரா 20¹⁸) இவர்களைக் குறிக்கும்படி மூலபாஷையில் இப்பதமே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அர்த்தத்தின்படியே (அப் 8²⁵) அண்ணகனுக்கு மந்திரி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சீரியர் முதலானவர்கள் தங்கள் தேவர்களைப் பிரியப்படுத்துவதற்காகத் தங்களை அங்கவீன மாக்கிக்கொள்ளுகிறதை வெறுத்து மோசே அண்ணகர்களும்கூட தேவாலயத்தில் பிரவேசிக்கப்படாது என்று நியாயப்பிரமாணத்தில் சொல்லியிருக்கிறான். உபா 23¹.

காம இச்சையை அடக்குவோர். மத் 19¹².

**அதமி நெக்கேப்.** **Adami-nekeb.** ஒரு பள்ளத்தாக்கு. யோசு 19³³.

**அதரோத்.** **Ataroth.**

1. மூன்று ஊர்களின் பெயர். எண் 32³ யோசு 16²·⁷.

2. ஒரு குடும்பம். 1 நாளா 2⁵⁴.

**அதரோத் அதார்.** **Ataroth addar.** [மகிமையுள்ள கிரீடங்கள்]. யோசு 16⁵.

**அதலியா.** **Adalia.** எஸ்தர் 9⁸.

**அதனாசி.** **Athanasius.** எகிப்து தேசத்திலே பல வருஷங்களாக மேற்றிராணியாய் இருந்த இவன் கி-பி. 296-ஆ பிறந்தான். இவன் அருந்தபசுபுரிந்த பரி. அந்தோனியாரைப் பார்த்து, தன் வாலிபப் பிராயத்தில் தானும் தபசு செய்துவந்தான். இவன் கி-பி. 325-ஆ மகா கொன்ஸ்தன்தீன் ராயன் காலத்தில் நிசேயா (*Nicea*) பட்டணத்தில் முதல் பொதுவான சங்கம் கூடினபோது, அரியானர் கொள்கைக்கு எதிரிடையாகக் குமாரனுகிய இயேசுகிறிஸ்து பிதாவோடொத்த ஒரே சுபாவமுடையவராய் இருக்கிறார் என்று உறுதிப்படுத்தினன். இராஜசபையில் அதிகாரமுள்ள அரியானர் இவனைத் துன்பப்படுத்தி இவனுடைய ஜீவிய காலமெல்லாம் இவனுக்கு விரோதமாய் அநேக கட்டுப்பாடுகள் செய்தார்கள். ஒருநாள் இவன் ஆராதனை நடத்தும்போது அவர்கள் போர்ச்சேவகரை அனுப்பி இவனைத் துரத்திவிட்டு இவனைக் கொன்றுபோடுகிறவர்களுக்கு வெகுமதி கொடுப்போம் என்று விளம்பரஞ் செய்திருந்தார்கள். இவன் அத்தியக்ஷனயிருந்த 49 வருஷங்களில் 20 வருஷம் தனது சத்துருக்கள் தனக்குச் செய்யவென் றெண்ணியிருந்த மோசத்திலிருந்து தற்காக்கும்படி வனத்திலும் தூர தேசங்களிலும் போய் அங்கே வசிக்கவேண்டியதாய் இருந்தது. இந்த 20 வருஷகாலத்தில் தனது சத்துருக்களின் போலி நியாயங்களுக்கு விரோதமாய்ப் புஸ்தகங்கள் பல எழுதி இயேசுகிறிஸ்துவைப் பற்றிய உண்மையான கொள்கையை ஸ்தாபிக்க முயன்றான். இவன் கி-பி. 373-ஆ இறந்துபோனன்.

**அதாத்தா.** **Hadattah.** = ஆத்சோர் அதாத்தா.

**அதாயா.** **Adalah.** [யேகோவா அலங்கரித்தார்].

1. 2 இரா $22^{1}$.
2. = இத்தோ. 1 நாளா $6^{21.\ 41}$.
3. = சேமா. 1 நாளா $8^{13.\ 21}$.
4. 1 நாளா $9^{12}$.
5. = ஆதாயா. 2 நாளா $23^{1}$.
6. எஸ்று $10^{29}$.
7. எஸ்று $10^{39}$.
8. நெகே $11^{5}$.
9. நெகே $11^{12}$.

**அதிகாரம், அதிகாரி.** **Authority, Rulers, Magistrates.**

1. எஜமானுடைய அதிகாரம். மத் $8^{9}$.
2. ராஜாவுக்கும் தேசாதிபதிக்கும் தங்கள் தேசத்தின்மேல் உள்ள ஆளுகை. லூக் $20^{20}$ $23^{7}$.
3. மனதில் உறுதியை உண்டாக்கும் வல்லமை. மத் $7^{28}$
4. அனுமதி. மத் $21^{23}$ அப் $9^{14}$.
5. இயேசுவின் அதிகாரம். மத் $9^{6}$ $28^{18}$ யோவா $5^{27}$.
6. அதிகாரத்துக்கு ஆதிகாரணர் கடவுள். ரோ $13^{1}$.
7. அதிகாரி = நியாயாதிபதி. நியா $18^{7}$ அப் $16^{20}$.
8. **அதிகாரங்கள்.** கடவுள் உண்டாக்கின மனுஷர்களைவிட அதிக வல்லமையுள்ள ஆவிகள்; அல்லது நல்லவர்கள் அல்லது பொல்லாதவர்கள். எபே $3^{10}$ $6^{12}$ கொலோ $1^{16}$ $2^{15}$ 1 பேது $3^{22}$.

ஆகாயத்து அதிகாரப் பிரபுவாகிய ஆவி. எபே $2^{2}$.

இருளின் அதிகாரம். கொலோ $1^{13}$.

9. அதிகாரங்கள் = நியாயாதிபதிகள். தீத் $3^{1}$.

**அதிசயமானவர்.** **Wonderful.** இப்பதம் 'ஆலோசனைக் கர்த்தர்' என்பதோடு சேர்க்கப்படவேண்டும் அசீரியர் படையெடுத்து வந்து யூதாவின் ஜனங்களைத் தண்டித்த பிறகு உண்டான அமைதியானகாலத்தில் கடவுள் அவர்களை நடத்தும்படி அதிசயமானவைகளைப் போதிக்க ஒருவரை அனுப்புவார் என்பது ஏசாயாவின் அர்த்தம். யூதசாஸ்திரிகள் 'அதிசயமானவர்' என்பது மேசியாவைக் கருதுகிறதென்றும், கிறிஸ்தவர்கள் இது இயேசுவைக் கருதுகிறதென்றும் சொல்லுகிறார்கள். ஏசா $9^{6}$.

**அதித்தா.** **Hatita.** எஸ்று $2^{42}$.

**அதித்தாயீம்.** **Adithaim.** யோசு $15^{36}$.

**அதிபதி.** **A. V. Deputy; R. V. Proconsul.** ரோமை ராஜ்யத்தின் சில நாடுகள் ரோமை ராயன் கையிலும், சில நாடுகள் ராஜ்யத்தின் மேலான சங்கத்தாரின் கையிலும் இருந்தன. முதலாவதான நாடுகளுக்குத் தலைவன் 'சேனுபதி' என்றும், இரண்டாவதான நாடுகளுக்குத் தலைவன் 'அதிபதி' என்றும் சொல்லப்படுவார்கள். அப் $13^{7}$.

அப் $19^{38}$-ல் சொல்லியிருக்கும் 'சேனுபதிகள்' என்பதற்குப் பதிலாக 'அதிபதிகள்' என்றிருக்கவேண்டும்.

கிறிஸ்து 'அதிபதி' (அப் $5^{31}$) என்றும், 'இரட்சிப்பின் அதிபதி' (எபி $2^{10}$) என்றும் சொல்லப்பட்டார்.

**அதிபா.** **Hatipha.** எஸ்று $2^{54}$.

**அதிரசம்.** **Wafers.** யாத். $29^{2.\ 23}$ லேவி $2^{4}$.

**அதிரமித்தியம்.** Adramyttium. சின்ன ஆசியாவிலுள்ள மீசியா நாட்டில் ஓர் கப்பல் துறைமுகபட்டணம். அப் $27^{2}$.

**அதீனோ-ஏஸ்னி.** Adina-Ezni. 2 சாமு $23^{8}$.

**அதும்மீம்.** Adummim. சாக்கடலின் பள்ளத்தாக்கில் இருக்கிற எரிகோ என்னும் பட்டணத்திலிருந்து மலை நாட்டிலுள்ள எருசலேமுக்குப்போகும் கணவாய். இதின் ஓரத்தில் மலைக்குகைகள் அநேகம் இருப்ப தால் இது கள்ளர் மிகுத்தவழி. யோசு $15^{17}$. நல்ல சமாரியன் கள்ளர் கையில் அகப் பட்டவனுக்கு இரக்கம் காட்டின இடம் இதுதான். லூக் $10^{14}$.

**அதுல்லாம்.** Adullam. எருசலேம் நக ரத்துக்குத் தென்மேற்கிலே யர்மூத் ஊருக் கும் அசேக்கா ஊருக்குஞ் சமீபத்திலிருந்த ஓர் ஊர். சவுலுக்குத் தாவீது பயந்துவந்து ஒளித்த குகை இதற்குச் சமீபமான மலையி லிருந்தது. ஆதி $38^{1}$ யோசு $12^{15}$ $15^{35}$ 2 நாளா $11^{7}$ நெகே $11^{30}$ மீகா $1^{15}$.

**அதேர்.** Ater. எஸ்று $2^{16}$.

**அதோராம், அதோனீராம்.** Adoram, Adoniram. தாவீது, சாலொமோன், ரெகொ பெயாம் என்னும் ராஜாக்களுக்குத் தீர்வை வாங்கிக் கொடுத்துவந்த பகுதி விசாரிப்புக் காரன். இவனை ஜனங்கள் கல்லெறிந்து கொன்றார்கள். 2 சாமு $20^{24}$ 1 இரா $4^{6}$ $12^{18}$.

**அதோராம்.** Hadoram.

1. ஆதி. $10^{27}$.
2. 1 நாளா $18^{10}$.
3. 2 நாளா $10^{18}$.

**அதோராயீம்.** Adoraim. யூதாவில் எபி ரோன் என்னும் பட்டணத்திற்கு ஏறக் குறைய 6 மைல் தூரமுள்ளது. இப்போது இது ஒரு சிறு கிராமமாயிருக்கிறது. 2 நாளா $11^{9}$.

**அதோனிசேதேக்.** Adonizedec. [நீதி யுள்ள கர்த்தர்]. எருசலேமின் எமோரிய ராஜாவாயிருந்தவன். இவன் யோசுவா எரி கோவையும் ஆயியையும் பிடித்த சங்கதியைக் கேட்டு, மற்ற ராஜாக்களோடே கூடிக்கொ ண்டு, யோசுவாவோடே யுத்தஞ் செய்தான். அப்போது யோசுவாவினாலே இவனும் இவ னோடிருந்த ஐந்து ராஜாக்களும் சங்கரிக்கப் பட்டார்கள். யோசு 10 அதி.

**அதோனிபேசேக்.** Adonibezec. [பேசேக் என்னும் கானானியர் வணங்கின ஒரு தேவன் கர்த்தராய் இருக்கிறான்]. கானான் தேசத்திலிருந்த பேசேக் என்ற ஊரின் ராஜா. இவன் மிகவும் குரூரனாய் அரசாண்டுகொண்டிருக்கையில் எழுபது ராஜாக்களுடைய கைகால்களின் பெருவிரல் களைத் தறித்து நாய்களைப்போல அவர்களைப் புசிக்கும்படி எப்படிச் செய்தானோ அப் படியே எபிரெயர்கள் இவனைப் பிடித்து இவ னுக்குச் செய்தார்கள். நியா $1^{5-7}$.

**அதோனியா.** Adonijah. [கர்த்தர்தான் எஜமான்].

1. தாவீதின் நாலாம் மகன். 2 சாமு $3^{4}$. அப்சலோம் இறந்தபிறகு நியாயத்தின்படி இவன்தான் யூதாவின் ராஜனாய் வரவேண் டியது. தாவீது அதிக விருத்தாப்பியனா யிருந்ததினால் பத்சேபாள் தன் குமாரனா கிய சாலொமோனுக்கு ராஜ்யபாரம் சேரும் படி பிரயத்தனம் செய்வாள் என்று இவன் அறிந்து, தான் ராஜாவாகிறதற்கு வேண் டிய முயற்சி செய்தும் தோல்வியடைந்து கடைசியில் கொல்லப்பட்டான். 1 இரா 1 அதி. $2^{1-36}$.

2. யூதருக்கு நியாயப்பிரமாணம் கற் பிக்க யோசபாத் அனுப்பிய ஒரு லேவியன். 2 நாளா $17^{7}$.

3. உடன்படிக்கைக்கு முத்திரை போட் டவர்களில் ஒருவன். நெகே $10^{16}$.

**அதோனீராம்.** Adoniram. [என் எஜ மான் மேலானவர்]. 1 இரா $4^{6}$. **அதோராம்** காண்க.

**அத்சலியா.** Azaliah. 2 இரா $22^{3}$.

**அத்சாள்.** Hadassah. எஸ்தரின் யூதப் பெயர். எஸ்தர் $2^{7}$.

**அத்செலெல்போனி.** Hazzelelponi. ஒரு பெண். 1 நாளா $4^{3}$.

**அத்தலியா.** Attalia. அப் $14^{25}$. பவு லும் பர்னபாவும் அந்தியோகியாவுக்குப் போகும்போது அவர்கள் பம்பிலியாநாட் டில் சந்தித்த ஒரு துறைமுகபட்டணம்.

**அத்தலியாள்.** Athaliah. 2 இரா 11-ம் அதிகாரத்தில் இவளுடைய சரித்திரம் விபர மாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. யெசபே லின் குமாரத்தியாகிய இவள் பாகாலை வண ங்கிவந்தவள். யூதாவின் ராஜ்யத்தில் இவள் ஒருத்திதான் ராஜ்யபாரத்தை நடத்தினாள்.

**அத்தாயா.** Athaiah. நெகே $11^{4}$.

**அத்தாய்.** Attai.

1. 1 நாளா $2^{35}$.
2. 1 நாளா $12^{11}$.
3. 2 நாளா $11^{20}$.

**அத்தாராள்.** Atarah. யெர்மெயேலின் மனைவிகளில் ஒருத்தி. 1 நாளா $2^{26}$.

**அத்தாலியா.** **Athaliah.** 1 நாளா 8[26].

**அத்தி.** **Addi.** லூக் 3[28].

**அத்திமரம்.** **Fig Tree.** பலஸ்தீனு தேசத்திலே அத்திமரம் அதிகமாயுண்டு. அத்திமரத்தின் நிழல் மிகவும் குளிர்ச்சியாய் இருப்பதினாலும், கிளைகள் நாலுபக்கமும் பரந்து இருப்பதினாலும், அதன்கீழ் ஜனங்கள் வாஞ்சையாய் உட்காருவார்கள். மீகா 4[4] யோவா 1[48]. அத்திமரம் கனிகொடுக்கும் விதம் விநோதமாயிருக்கிறது.

மார்கழி, தை மாதங்களில் அதின் இலைகள் எல்லாம் உதிர்ந்து, பங்குனி மாதத்தில் துளிர்விடும்போது (மத் 24[32] மாற்கு 13[28]) அது இலைகளோடே காயும் காய்க்கும். அக்காய்கள் பிஞ்சாயிருக்கும் பருவத்தில் காற்று வீசினால் பெரும்பாலும் கீழே உதிர்ந்து விழும். உன். பா. 2[13] வெளி 6[13]. முதற்தரமான அத்திமரங்களிற் காய்க்கும் அந்தக் காய்கள் இடையிலே விழாமல் பழுத்தால் அவைகள் நற்கனிகளாய் இருக்கும். ஏசா 28[4] எரே 24[2] ஓசி 9[10]. இந்த முதற் கந்தாயத்துக் கனிகள் சொற்பமா யிருந்தாலும் அதிக சுவையுள்ளவைகளாகையால் ஜனங்கள் அதிக பிரியத்தோடு அவைகளைச் சாப்பிடுவார்கள். முதற் கந்தாயமாகியஇந்தப் பழக்காலத்தில் அதே மரத்தின் கிளைகள் மறுபடியும் துளிர் விட்டுக் காய்க்கும். இந்த இரண்டாங் கந்தாயத்துக் காய்கள் ஆவணி மாதம் பழுக்கும். இரண்டாம் கந்தாயத்திலே பழங்கள் அதிகமாய் இருப்பதினால் இதை அத்திப்பழக் காலம் என்று சொல்லக்கூடும். அத்திப் பழக்காலம் அல்லாத சித்திரை மாதத்தில், அதாவது பஸ்காப்பண்டிகை காலத்தில், இயேசு முதற் கந்தாயத்துச் சில கனிகள் அல்லது இரண்டாம் கந்தாயத்துப் பிஞ்சுகள் இருக்கவேண்டும் என்று அறிந்து இலைகள் நிறைந்த ஒரு அத்திமரத்தண்டை போய் அதில் இலைகளேயன்றி பழமோ காயோ இல்லாமையால் அது பிரயோஜனமற்ற மரமென்று நிச்சயமாய்க் கண்டார். மத் 21[18] மாற் 11[12-21].

இயேசுவை நம்பாத யூதர்கள் கனிகொடாத அத்திமரத்தைப்போல் இருக்கிறார்கள். லூக் 13[6].

இப்போது இருக்கிற மாதிரியாய் அப்போது அத்திப்பழங்களை வற்றலாக்கி அல்லது வடைகளாகத் தட்டிவைப்பார்கள் 1 சாமு 25[18].

அத்திப்பழத்து அடை பிளவைக்கு நல்ல பற்று. 2 இரா 20[7].

ஆதாம் ஏவாள் அத்தியிலைகளைத் தைத்து உடுத்தினார்கள். ஆதி 3[7].

சகேயு ஏறி உட்கார்ந்திருந்த மரம் ஒரு வகை அத்தி. லூக் 19[4].

**அத்தீல்.** **Hattil.** எஸ்று 2[57].

**அத்தூஸ்.** **Hattush.**

1. ஒரு ஆசாரிய குடும்பம். நெகே 12[2].
2. சிறையிருப்பிலிருந்து வந்தவன். எஸ்று 8[2].
3. மதில் கட்டினவன். நெகே 3[10].



அத்தேனேயிலுள்ள முக்கிய தேவாலயம்.

**அத்தேனே.** **Athens.** கிரேக்க தேசத்திலுள்ள நகரங்களில் சிரேஷ்டமான இந்நகரம் துறைமுகத்திலிருந்து மூன்று மைல் தூரம் ஒரு சமவெளியிற் கட்டப்பட்டிருந்தது. இதின் மத்தியில் ஒரு மலையிலே கல்விக்குச் சரஸ்வதிபோலச் சொல்லப்படும் 'அத்தேனே' தேவிக்கும், இந்த மலைக்கு அடுத்த மார்ஸ் மேடை என்னும் குன்றின்மேல் முருகக்கடவுளைப்போல 'மார்ஸ்' என்னும் தேவனுக்கும் கோயில்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தன. அத்தேனே பட்டணம் விநோதமான சிற்பசித்திரம் அமைந்த ஆல

யங்களும் மாளிகைகளும் சாலைகளும் நிறைந்திருந்தது. கி-மு. 5-ம் நூற்றாண்டில் சித்திர சாஸ்திரிகள், கவிவாணர், வித்துவான்கள் ஆகிய இவர்களுக்குக் கீர்த்திபெற்ற இடமாயிருந்தது. கி-பி. 52-௵ பரி. பவுலின் காலத்தில் அது ரோமை ராஜ்யத்திற்குச் சேர்ந்திருந்ததினால் அவர்கள் அதின் கீர்த்தியைக் குறைக்காமல் அதைச் சிறப்பித்துவந்தார்கள். பரி. பவுலின் காலத்தில் அங்கே பெரிய சர்வகலாசாலை யொன்றிருந்தது. அப் $17^{19}$. பூர்வீகத்தில் அத்தேனேயிலுள்ள 'மார்ஸ் மேடை' என்னும் இடத்தில் ஒரு சங்கம் கூடினதினால் அதற்கு 'மார்ஸ் மேடை' என்று பெயர் வழங்கிவந்தது அச் சங்கத்தார் அந்த ஊரிலே பிரசங்கம் செய்கிறவர்களுக்கு உத்தரவு கொடுக்கவேண்டியிருந்ததினால் பரி. பவுல் அவர்களுடைய வேண்டுகோளின்படி அங்கே பிரசங்கம்பண்ணினான்.

**அத்பியேல்**. Adbeel. ஆதி $25^{13}$.

**அத்மா**. Admah. ஆதி $10^{19}$ உபா $30^{23}$ ஓசி $11^{8}$.

**அத்மாதா**. Admatha. ஒரு பிரதானி. எஸ்தர் $1^{14}$.

**அத்ரமலேக்கு**. Adrammelech.

1. அத்ரமலேக்கும் அன்னமலேக்கும் சல்மனாசார் தன் தேசத்திலிருந்து சமாரியாவுக்குக் கொண்டுவந்து குடியேற்றின ஜனங்கள் வணங்கிவந்த தேவர்கள். இந்தத் தேவர்களுக்குப் பலியாக அவர்கள் தங்கள் பிள்ளைகளை அக்கினியில் தகனித்துவந்தார்கள். 2 இரா $17^{31}$.

2. சனகெரிப்பைக் கொலைசெய்த அவனுடைய இரண்டு குமாரர்களில் ஒருவன். ஏசா $37^{38}$.

**அத்லாய்**. 1. = Adlai. 1 நாளா $27^{29}$.
2. = Hadlai. 2 நாளா $28^{12}$.

**அத்லாய்**. Athlai. எஸ்றா $10^{28}$.

**அத்னா**. Adna. [இன்பம்].

1. எஸ்றா $10^{30}$.
2. நெகே $12^{15}$.
3. 1 நாளா $12^{20}$.
4. 2 நாளா $17^{14}$.

**அநியாயம்**. Iniquity. 2 நாளா $19^{7}$ யோபு $4^{8}$ $15^{16}$ சங் $119^{133}$ நீதி $22^{8}$ சா $3^{26}$ ஆப $2^{12}$ மல் $2^{6}$ 2 தீமோ $2^{19}$. **அக்கிரமம்** காண்க.

**அந்திக்கிறிஸ்து**. Antichrist. [கிறிஸ்துவுக்கு எதிராளி]. 2 கொரி $6^{15}$ 1 யோவா $2^{18-22}$ $4^{3}$ 2 யோவா $^{7}$ வெளி $11^{4}$ ௸ $13^{1}$ ௸ 17-ம் அதி. $19^{11-21}$ பார்க்கவும். 'பாவ மனுஷன்.' 2 தெச $2^{3}$. ஆதிக்கிறிஸ்தவர்கள் இந்த உலகத்தில் இயேசுகிறிஸ்துவுக்கும் தங்களுக்கும் விரோதிகளாய்ச் சாத்தானுடைய செயலின்படி சகல வல்லமையோடு தங்களைத் துன்பப்படுத்தும் ராயரும், தங்களைப் பகைக்கும் ஜனமும் அந்திக்கிறிஸ்து என்று சொல்லிவந்தார்கள். ஆகவே வெவ்வேறான காலங்களில் இருக்கும் வெவ்வேறான வாதிகளை இப்பெயர் குறிக்கும். மேசியா வருவார் என்று எதிர் பார்த்திருந்த யூதர்கள் தங்கள் தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கின சத்துருக்களையும், தங்களைத் துன்பப்படுத்தினவர்களையும், அந்திக்கிறிஸ்து என்றும் அவர் வந்து அவர்களை அழிப்பார் என்றும் நம்பிக்கை யுடையவர்களா யிருந்தார்கள். கி-பி. 64-௵த்தில் நேரோ, கி-பி. 94-95-௵த்தில் தொமித்தியான் என்னும் ரோம ராயர்கள் கிறிஸ்தவர்களை அதிக குரூரமாய்த் துன்பப்படுத்தினதினால் அவர்கள் அந்த ரோமர் ராயர்களை அந்திக்கிறிஸ்து என்று நினைத்துவந்தார்கள். சில சமயங்களில் ரோமர் ராஜாங்கத்திற்கு இப்பெயர் வழங்குவதுண்டு. வெளிப்படுத்தப்பட்ட விசேஷத்தில் சொல்லியிருக்கிறதாவது: அந்திக்கிறிஸ்து, கிறிஸ்துவுக்கு விரோதமாய்க் கிரியை செய்து அவரை ஜெயிக்கிறவனாய்த் தோன்றினாலும், கடைசியில் கிறிஸ்துவே அவனை ஜெயிப்பார். வெளிப்படுத்தப்பட்ட விசேஷம் எழுதினதற்குப் பிறகு கிறிஸ்தவர்களில் சிலர் தங்களுக்கும் தங்கள் கொள்கைக்கும் விரோதிகளான புறமதஸ்தர்களையும், சிலர் தங்களைப்போல நினையாத வேறு கிறிஸ்தவர்களையும், சிலர் பல விஷயங்களில் சத்தியமார்க்கத்திற்கு இடறலாயிருக்கும் ரோமர் சபைக்குத் தலைவரான பாப்புவையும் அந்திக்கிறிஸ்து எனச் சொல்லுவதுண்டு.

**அந்திப்பத்திரி**. Antipatris. இது யோப்பா பட்டணத்திற்கு வடகிழக்கிலே ஏறக்குறைய 30 மைல் தூரத்திலிருக்கின்றது. யூதருடைய ராஜனாகிய பெரிய ஏரோது இந்த ஊரை விஸ்தாரமாகவுஞ் சிறப்பாகவும் புதுப்பித்து, அந்திப்பத்தர் என்னும் தன் தகப்பனுடைய பேரை இதற்கிட்டான். பவுல் அப்போஸ்தலனும் அவனைக் காத்திருந்த போர்ச்சேவகரும் எருசலேம் நகரத்திலிருந்து செசரியா பட்டணத்திற்குப் போகையில் இந்த ஊரிலே தங்கி இளைப்பாறிப் போனார்கள். அப் $23^{31, 32}$.

**அந்திப்பா.** Antipas.

1. **ஏரோது** காண்க.

2. பெர்கமு பட்டணத்தில் உண்மையுள்ள இரத்தச்சாட்சியாயிருந்த கண்காணி. வெளி $2^{13}$.

அந்தியோகியாவில் புறஜாதிகள் நியாயப்பிரமாணத்திற் சொல்லியிருக்கிறவைகளின்படி நடக்கவேண்டியதைப்பற்றி வாக்குவாதம் துவங்கினது. அப் 15 அதி. கலா $2^{11}$.

எருசலேம்பட்டணம் அழிந்தபிறகு சில நூற்றாண்டுகளாக அந்தியோகியா கிறிஸ்தவ சபையின் முக்கிய பட்டணமாயிருந்தது. இங்கே பத்துப்பொதுவான சங்கங்கள் நடத்தப்பட்டன.

பல சத்துருக்கள் பல முறையும் வந்து இதை முற்றிக்கைபோட்டதினாலும் பலதரம் இங்கே பூமி அதிர்ச்சி உண்டானதினாலும் இதின் கீர்த்தி படிப்படியாய் அற்றுப்போயிற்று.



சீரியாவிலுள்ள அந்தியோகியா.

**அந்தியோகியா.** Antioch. கி-மு. 300-ஆம்த்தில் சீரியா முதலான தேசங்களை ஆண்ட அரசன் ஒருவன் கட்டின இப்பெயருள்ள 16 நகரங்களில் 2 நகரம் புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிறது.

1. சீரியாவிலுள்ள அந்தியோகியா. அப் $11^{19}$. அப்போஸ்தலருடைய காலத்திலே இது நாகரீகம் சிறந்த பெரிய பட்டணமாய் இருந்தது. ராஜாக்கள் கட்டின மாளிகைகளும், தேவாலயங்களும், கோட்டைகளும் வெகு அலங்காரமாயிருந்தன. இந்தப் பட்டணத்திற்கும் துறைமுகத்துக்கும் இடையில் கப்பல் போகக்கூடிய பெரிய ஆறு இருந்ததினால் பல தேசங்களிலுமிருந்து வியாபாரிகள் வருவார்கள். இதிற் குடியிருக்கிறவர்கள் 5 லட்சம் பேர். அவர்கள் பல தேவர்களை வணங்கி, பல மதங்களையுடையவர்களாயும் அதிக துன்மார்க்கராயும் இருந்ததினாலே இது 'முறை தலை இல்லாத ஊர்' என்று பெயர் அடைந்தது. இங்கே தான் முதல்முதல் கிறிஸ்துவை அனுசரித்தவர்கள் கிறிஸ்தவர்கள் என்ற பெயர் அடைந்தார்கள். அப் $11^{26}$. பவுலும் பர்னபாவும் அடிக்கடி அங்கிருந்து உபதேசம் பண்ணப் புறப்பட்டுப் போனார்கள்.

அந்தியோகியாவின் சபை செய்த தருமம். அப் $11^{27}$.

2. பிசீதியாவிலுள்ள அந்தியோகியா. அப் $13^{14}$ $14^{21}$ $16^{6}$ $18^{22}$. பரி. பவுல் இதை நாலு தரம் சந்தித்தான்.

**அந்திரேயா.** Andrew. பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் ஒருவன், சீமோனுடைய சகோதரன். யோவா $1^{40}$. கலிலேயா நாட்டிலுள்ள பெத்சாயிதா ஊரான். யோவா $1^{44}$. செம்படவன். மத் $4^{18}$. சீமோனோடு ஒரே வீட்டில் வசித்தவன். மாற் $1^{29}$. இவன் இயேசுகிறிஸ்துவை அறிகிறதற்கு முந்தி யோவான்ஸ்நானனுடைய பிரசங்கத்தைக் கேட்டு இயேசுவைக்குறித்து அவன் கூறின சாட்சியைக்கொண்டு அவருடைய சீஷனானான். யோவா $1^{35-44}$. இவன் தன் சகோதரனை இயேசுவினிடத்தில் வரும்படி அழைத்தான். இயேசு இவன்பேரிலே அதிக பிரியம் வைத்தார். மாற் $13^{3}$. ஆதி கிறிஸ்தவர்கள் இவனைக் குறித்துச் சொல்லுகிறதாவது: இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்து பரலோகத்திற்குப் போனபிற்பாடு இவன் பல தேசங்களுக்கும் போய் இயேசுகிறிஸ்துவைப்பற்றிப் பிரசங்கித்துவந்தான். இவனுடைய பிரசங்கத்தைக் கேட்டு அகாயு நாட்டின் தேசாதிபதியின் மனையாட்டி இயேசுகிறிஸ்துவில் பக்திவைத்ததினால் அந்தத் தேசாதிபதி கோபம் மூண்டவனாய் அந்திரேயாவைப் பிடித்துச் சிலுவையில் அறைந்த

போது அதில் இரண்டு நாட்களாக இவன் வேதனை அடைந்த சமயத்திலும் சுற்றி நின்றவர்களுக்கு இயேசுகிறிஸ்துவைப்பற்றித் தைரியமாய் உபதேசித்து இரத்தச்சாட்சியாய் மரித்தான்.

**அந்தோதியா**. Anthothiyah. 1 நாளா $8^{24}$.

**அந்தோனியா**. Antonia. அப் $21^{31}$ மு. சொல்லியிருக்கிற இந்த அரணை கோட்டையைப் பெரிய ஏரோது கட்டி, இந்த விசேஷித்த பெயரை இதற்கு வைத்தான். இந்தக் கோட்டையின் உப்பரிகையில் காவலாளி ஒருவன் எப்பொழுதும் இருந்து சமீபத்திலுள்ள தேவாலயத்தின் பிராகாரங்களில் ஏதுங் கலகமுண்டாகுமானால் உடனே உள்ளேயிருக்கும் சேனாதிபதிக்கும் போர்ச்சேவகருக்கும் அங்கிருந்து செய்தி தெரிவிப்பான். **எருசலேம்** காண்க.

**அந்நியன்**. Stranger. இஸ்ரவேலன் அல்லாத மறு தேசத்தான். லேவி $22^{12}$ எண் $3^{38}$ உபா $17^{15}$ ஏசா $14^{1}$ ஓசி $7^{7}$ $8^{7}$ யோவே $3^{17}$ ஒப $1^{11}$ எபே $2^{12}$.

இஸ்ரவேலுக்கு விரோதி. ஏசா $1^{7}$ எசே $7^{21}$ $11^{9}$.

கள்ளப்போதகன். யோவா $10^{5}$.

லேவியன் அல்லாதவன். எண் $1^{51}$ $3^{10}$.

ஆசாரியன் அல்லாதவன். யாத் $29^{33}$ எண் $18^{4}$.

ஆரோனின் வம்சமல்லாதவன். யாத் $30^{33}$.

அந்நிய அக்கினி. லேவி $10^{1}$.

அந்நிய தேசம். 2 இரா $19^{24}$.

அந்நிய தேவன். சங் $81^{9}$.

அந்நிய பட்டணம். அப் $26^{11}$.

அந்நிய புத்திரன். லேவி $22^{25}$.

அந்நிய பெண். நீதி $2^{17}$.

அந்நிய ஸ்திரீ. நீதி $5^{20}$.

**அபக்தா**. Abagtha. அகாஸ்வேருவின் மாளிகையிலுள்ள பிரதானிகளில் ஒருவன். எஸ்தர் $1^{11}$.

**அபயம்**. Appeal. 'இராயருக்கு அபயம் இடுகிறேன்.' அப் $25^{11}$. ரோமர் ராஜ்யத்தின் நாடுகளில் கிரிமினல் வழக்கு (*Criminal cases*)ச் சம்பந்தமாகத் தேசாதிபதி செய்யும் தீர்ப்புக்கு அந்நாடுகளிற் பிறந்தவர்கள் பெரும்பாலும் அபயம் என்னும் மனு செய்யக்கூடாது. ஆயினும் ரோமாபுரியில் உள்ளவர்களுக்கும் மற்ற நாடுகளில் அந்தச் சுதந்தரம் பெற்றவர்களுக்கும் அபயம் இடுகிற சிலாக்கியம் இருந்தது. பரி. பவுல் இருந்த காலத்தில் இந்தச் சிலாக்கியத்தைப்பெற்ற ஒருவன் கோர்ட்டில் விசாரணைக்குள் இருக்கையில் அவன் ராயனுக்கு அபயம் இட்டால் தேசாதிபதி அவன் விஷயத்தில் இனி ஒன்றும் செய்யாமல், அந்தச் சங்கதியை ராயனுக்குத் தெரிவித்து உத்தரவுபெற்று அபயமிட்டவனை ராயனிடத்தில் அனுப்புவான். அப்போது ராயன் தானாக அல்லது ஒரு நியாயாதிபதியை ஏற்படுத்தி அதைப்பற்றி விசாரணை செய்வான். 2 தீமோ $4^{16}$.

**அபற்சாத்தியர்**. Apharsathchites. அசீரியாவிலிருந்து சமாரியாவுக்குக் குடியேற்றப்பட்ட ஜனம். எஸ்று $4^{9}$.

**அபாத்திரம்**. Unworthiness. அப் $13^{46}$ 1 கொரி $6^{2}$ $11^{27}$ $11^{29}$ லூக் $15^{19}$. காண்க.

**அபாயா**. Habaiah. ஒரு ஆசாரிய குடும்பம். எஸ்று $2^{61}$.

**அபாரீமின் மேடுகள்**. Iye-abarim. [புறதேசத்தின் மேடுகள்]. எண் $21^{11}$ $33^{44}$.

**அபிகாயில்**. Abigail. [தகப்பன் சந்தோஷமுள்ளவன்].

1. நாபாலின் மனைவியாகிய இவள் விதவையானபின் இவளைத் தாவீது விவாகஞ் செய்தான். 1 சாமு 25 அதி. $30^{5}$ 2 சாமு $3^{3}$.

2. இன்னொருத்தி. 2 சாமு $17^{25}$.

**அபிசாய்**. Abishai. [என் தகப்பன் ஈசாய்]. இவன் தன் மாமனாகிய தாவீதுக்கிருந்த பராக்கிரமசாலிகளில் பிரதானமான ஒருவன். 1 சாமு $26^{6}$. 2 சாமு 10 அதி. 16 அதி. 18 அதி. $21^{16}$ $23^{18}$.

**அபிசுவா**. Abishua.

1. 1 நாளா $6^{4}$.

2. 1 நாளா $8^{4}$.

**அபிசூர்**. Abishur. [தகப்பன் சுவராய் இருக்கிறான்]. 1 நாளா $2^{28}$.

**அபிஷாக்**. Abishag. தாவீது வயது சென்றிருக்கையில் அவனுக்கு உதவிசெய்த ஒரு பெண். 1 இரா $1^{15}$. தாவீது மரித்த பிறகு இவளைத் தனக்கு விவாகம்பண்ணிக் கொடுக்கும்படி அதோனியா கேட்டதினிமித்தம் சாலொமோன் அவனைக் கொன்றுபோட்டான்.

**அபிஷேகம்**. Anoint, Ordain.

1. எபிரெயர் ஒலிவமரத்து எண்ணெயை வழக்கமாய்ப் பூசுவார்கள். மரித்தவர்களுக்காகத் துக்கங்கொண்டாடும்போது எண்ணெய் பூசமாட்டார்கள். அவர்கள் உபசாரத்திற்காக விருந்தினருக்குத் தலையிலும் பாதத்திலும் எண்ணெய் வார்ப்பது வழக்கம்.

2. ராஜாக்களுக்கும் ஆசாரியர்களுக்கும் தேவனுடைய லட்சணம், வல்லமை, அவருடைய ஆவி அமைந்திருக்கின்றனவென்றும், அவர்களைக் கொலைசெய்பவர்கள் மாபாதகர் என்றும் காட்டும்படி பரிசுத்த தைலத்


அபிஷேகம்.

தால் அவர்களை அபிஷேகம் செய்வார்கள். 1 சாமு $16^{13}$.

3. 'அபிஷேகம் பண்ணினான்' என்று பொருள்கொள்ளும் 'மாஷாக்' என்னும் எபிரெய பதமாகிய வினையடியிலிருந்து வந்த 'மேசியா' என்னும் சொல்லுக்குச் சரியான அர்த்தமாவது 'அபிஷேகம்பண்ணப்பட்டவர்.' 'மேசியா' என்பதற்கு அதே அர்த்தமாய்க் கிரேக்குப் பாஷையில் 'கிறிஸ்து' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. எபிரெயர் கடவுள் அனுப்பப்போகிற இரட்சகருக்கு இப்பெயர் வழங்குவார்கள்.

4. தீர்க்கதரிசிகளில் எலிசாமாத்திரம் அபிஷேகம் பண்ணப்பட்டான். 1 இரா $19^{16}$.

5. யாக்கோபு ஒரு தூணையும், (ஆதி $28^{18}$) இஸ்ரவேலர் ஆசரிப்புக் கூடாரத்தையும் அதிலுள்ள பணிமுட்டுகளையும் அபிஷேகம் பண்ணினார்கள். யாத் $30^{28}$.

மார்க்க ஆசாரத்தின்படி பரிசுத்தத்திற்காக இதைப்போலப் பல மாதங்களிலும் அபிஷேகம் செய்வதுண்டு.

**அபிதா**. Abida. [தகப்பன் அறிகிறான்]. ஆதி $25^{4}$.

**அபிதூப்**. Abitub. 1 நாளா $8^{11}$.

**அபித்தால்**. Abital. [தகப்பன் பனியாய் இருக்கிறான்]. தாவீதின் மனைவிகளில் ஒருத்தி. 2 சாமு $3^{4}$.

**அபிநோகாம்**. Abinoam. [தகப்பன் பிரியமாய் இருக்கிறான்]. நியா $4^{6}$.

**அபிமாவேல்**. Abimael. ஆதி $10^{28}$.

**அபிமெலேக்கு**. Abimelech. [தகப்பன் ராஜாவாய் இருக்கிறான்].

1. கேராரின் ராஜா. ஆதி 20 அதி.

2. கிதியோனின் மறுமனையாட்டி மகன். நியா $8^{30}$ $9^{56}$.

3. ஒரு ஆசாரியன். 1 நாளா $18^{16}$. = அகிமெலேக்கு 1 சாமு $21^{22}$ ழு.

4. பெலிஸ்தியரின் ராஜாவாகிய ஆகீஸ் என்பவனுடைய மறு பெயர். சங் 34 தலைப்பு.

**அபியத்தார்**. Abiathar. சவுல் ராஜா நோபில் உள்ள ஆசாரியர்களைக் கொன்றபோது இவன் தாவீதண்டை தப்பியோடிப் போய் அவனோடிருக்கையில் அவனுக்கு உதவி செய்தவன். அதோனியா ராஜதுரோகஞ் செய்தபோது இவன் அவனைச் சேர்ந்திருந்ததினால் சாலொமோன் ராஜா இவனையும் இவன் வம்சத்தாரையும் ஆசாரிய உத்தியோகத்திலிருந்து நீக்கிவிட்டான். 1 சாமு $22^{11-23}$ $23^{6}$ 2 சாமு $15^{29}$ 1 இரா $1^{19}$ $2^{27}$.

**அபியா**. Abijah, Abia. [யேகோவா என் தகப்பன்].

1. ரெகொபெயாமின் மகன். 2 நாளா $13^{1}$. = அபியாம். 1 இரா $14^{31}$.

2. சாமுவேலின் இரண்டாம் மகன். 1 சாமு $8^{2}$.

3. யெரொபெயாமின் மகன். 1 இரா $14^{1}$.

4. சகரியா சேர்ந்த ஆசாரிய வகுப்பு. லூக் $1^{5}$ 1 நாளா $24^{10}$.

5. 1 நாளா $7^{8}$.

**அபியாசாப்**. Abiasaph. [தகப்பன் சேர்த்தான்]. யாத் $6^{24}$ 1 நாளா $6^{23}$.

**அபியாம்**. Abiam. 1 இரா $14^{31}$. **அபியா** காண்க.

**அபியாள்**. Abiah.

1. எஸ்ரோனின் மனைவி. 1 நாளா $2^{24}$.

2. ஆகாசின் மனைவி. = ஆபி. 2 இரா $18^{2}$ 2 நாளா $29^{1}$.

**அபியூ**. Abihu. [அவன் தகப்பனாய் இருக்கிறான்]. ஆரோனுடைய இரண்டாம் மகன். மோசேயோடு சீனாமலைமேல் போனவன். யாத் $24^{9}$. ஆசாரியன். யாத் $28^{1}$. அந்நிய அக்கினியைக் கொண்டுவந்ததினால் சாகடிக்கப்பட்டான். லேவி $10^{1}$.

**அபியூத்**. Abihud. [தகப்பன் மகிமையைப் பெற்றான்]. 1 நாளா $8^{3}$ மத் $1^{13}$.

**அபியேசர்**. Abiezer. [தகப்பன் உதவியாய் இருக்கிறான்].

1. கிதியோனைச் சேர்ந்த வம்சம். நியா $6^{24}$.

2. தாவீதின் போர்வீரரில் ஒருவன். 2 சாமு $23^{27}$.

**அபியேல்**. Abiel. [கடவுள் அவன் பிதா].

1. சவுல் ராஜாவின் பாட்டன். 1 சாமு $9^{1}$.

2. தாவீதின் பராக்கிரமசாலிகளில் ஒருவன். 1 நாளா $11^{32}$.

**அபிராம்.** **Abiram.** [அவனுடைய தகப்பன் மேலானவன்].

1. கோராகின் கூட்டத்தாரைச் சேர்ந்து மோசேக்கு விரோதமாய்க் கலகஞ் செய்தவன். நிலம் பிளந்து அவனையும் அவர்களையும் விழுங்கிப்போட்டது. எண் 16,17 அதி.

2. 1 இரா $16^{34}$.

**அபிலேனே.** **Abilene.** பெரேயாவுக்கு வடக்கிலுள்ள நாடு. இது லீபனோன் மலைக்கும் எர்மோன் மலைக்கும் இடையிலே இருந்தது. இதில் அபிலா என்னும் நகரமிருந்தபடியினாலே இதற்கு அபிலேனே என்னும் பெயருண்டாயிற்று. லூக் $3^{1}$.

**அபினதாப்.** **Abinadab.** [தகப்பன் நன்ருய் ஈகிருன்].

1. ஈசாயின் மகன். 1 சாமு $16^{8}$.

2. சவுலின் மகன். 1 சாமு $31^{2}$.

3. உடன்படிக்கைப் பெட்டியை ஏற்றுக்கொண்டவன். 1 சாமு $7^{1}$.

**அபிதான்.** **Abidan.** [என் தகப்பன் நியாயாதிபதியாய் இருக்கிருன்]. பென்யமீன் கோத்திரத்தில் ஒரு மூப்பன். எண் $1^{11}$.

**அபேதஸ்.** **Ebez.** யோசு $19^{20}$.

**அபெத்தோன்.** **Abaddon.** பாதாளத்தின் நாலு பாகங்களில் அடிப்பாகமாகிய இந்த இடத்தில் பாவிகள் தண்டிக்கப்படுவார்கள் என்பது எபிரெயரின் அபிப்பிராயம். யோவான் பாதாளத்தின் அதிகாரிக்கு இப்பெயர் சொல்லியிருக்கிருன். கிரேக்கு பாஷையில் இவன் பெயர் அப்பொல்லியோன். இதின் அர்த்தம் 'சங்காரன்.' வெளி $9^{11}$.

**அபேலே.** **Apelles.** இப்பெயர் பரி. பவுலின் காலத்தில் பேர்போன நாடகாசிரியனுக்கும் ரோமராயன் அரமனையிலுள்ள சிலருக்கும் இருந்தது. பவுல் ஒருவேளை இவர்களில் ஒருவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிருன். ரோ $16^{10}$.

**அப்.** **Ab.** **காலம்** காண்க.

**அப்சலோம்.** **Absalom.** [அவன் தகப்பன் சமாதானம்].

1. தாவீதின் மூன்ரும் மகன். 2 சாமு $3^{3}$. இவனைப் பற்றிய விபரமான சரித்திரம் 2 சாமு 13-19 அதி. அப்சலோம் தன் தகப்பனுக்குச் செய்த துரோகத்தினிமித்தம் இவனுக்குப் பிறகு யூதர் அப்பெயரை ஒருக்காலும் வழங்கினதேயில்லை. நீதி $10^{7}$.

2. அப்சலோம் = அபிசலோம். (*Abishalom*) மாகாளின் தகப்பன். 1 இரா $15^{2}$.

**அப்சேஸ்.** **Happizzez.** 1 நாளா $24^{15}$.

**அப்தா.** **Abda.** [பணிவிடை செய்கிறவன்].

1. 1 இரா $4^{6}$.

2. நெகே $11^{17}$. = ஒபதியா. 1 நாளா $9^{16}$.

**அப்தி.** **Abdi.** [யேகோவாவின் ஊழியன்].

1. 1 நாளா $6^{44}$.

2. 2 நாளா $29^{12}$.

3. எஸ்ரு $10^{26}$.

**அப்தியேல்.** **Abdiel.** [கடவுளின் அடிமை]. 1 நாளா $5^{15}$.

**அப்தெயேல்.** **Abdeel.** எரே $36^{26}$.

**அப்தோன்.** **Abdon.** [அடிமையானவன்].

1. ஒரு நியாதிபதி. நியா $12^{13}$.

2. ஒரு கோத்திரம். 1 நாளா $8^{23}$.

3. ஒரு வம்சம். 1 நாளா $8^{30}$.

4. யோசியாவின் ராஜசபையைச் சேர்ந்தவன். 2 நாளா $34^{20}$. இவனுடைய மறுநாமம் அக்போர். 2 இரா $22^{12}$.

5. ஒரு ஊர். யோசு $21^{30}$. = எபிரோன். யோசு $19^{28}$.

**அப்பம்.** **Bread, Cake.**

1. சில இடங்களில் 'அப்பம்' என்பதற்குப் பதிலாக 'ஆகாரம்' என்னும் பதம் உபயோகிப்பது நல்லது. ஆதி $18^{5}$ நெகே $9^{15}$ சங் $37^{25}$ பிர $11^{1}$ எசே $4^{16}$ மத் $4^{4}$ $6^{11}$ $7^{9}$ யோவா $6^{31}$.

2. யூதர்கள் செய்யும் பலவிதமான அப்பம். யாத் $29^{2}$ லேவி 2-ம் அதி. எண் $15^{20}$.

3. பஸ்கா பண்டிகை நாட்களிற் புசிக்கும் புளிப்பில்லாத அப்பம். யாத் $12^{8-15}$.

4. தேவ சமுகத்து அப்பம். பன்னிரண்டு கோத்திரங்களின்படி கர்த்தருக்கு முன்பாக வாரந்தோறும் ஓய்வுநாளில் மெல்லிய மாவினுல் சுட்டு வைக்கப்படும் பன்னிரண்டு அப்பங்கள். இவைகளை எடுத்து ஆசாரியர் பரிசுத்த ஆகாரமாகச் சாப்பிடுவார்கள். லேவி $24^{5}$.

5. தேவன் வனாந்தரத்தில் இஸ்ரவேலருக்குக் கொடுத்த மன்னு. யாத் $16^{3}$.

6. உவமானமாக வாற்கோதுமை அப்பம். நியா $7^{13}$.

இடுக்கத்தின் அப்பம். 1 இரா $22^{26}$.

கண்ணீராகிய அப்பம். சங் $80^{5}$.

ஞானத்தால் அடைந்த நன்மையைக் குறிக்கும் அப்பம். நீதி $9^{5}$.

திருப்பிப்போடாத அப்பம். ஓசி $7^{8}$.

சுவிசேஷ நன்மையைக் குறிக்கும் அப்பம். மத் $15^{26}$.

வானத்திலிருந்து வந்த அப்பம் (மன்னு). யோவா $6^{31}$. அதாவது, இயேசுகிறிஸ்து. யோவா $6^{41}$.

ஜீவ அப்பம். யோவா $6^{51}$.
'ஒரே அப்பமாயிருக்கிற நாம் எல்லாரும்.' 1 கொரி $10^{17}$.

கர்த்தருடைய ராப்போஜனத்தில் அவர் ஆசீர்வதித்த அப்பம். லூக் $22^{19}$.

இயேசுகிறிஸ்து வானத்திற்கு எழுந்தருளின பிற்பாடு கர்த்தருடைய ராப்போஜனத்தில் சீஷர்கள் புசித்த அப்பம். அப் $2^{42}$ $20^{7}$ 1 கொரி $11^{26}$.

**அப்பற்சாகியரும் அப்பற்சாத்தியரும். Aphersachites and Apharsathchites.** அசீரியர் இஸ்ரவேலின் ராஜ்யத்தை ஜெயித்துத் தங்கள் கிழக்குத் தேசத்திலிருந்து சமாரியாவில் குடியேற்றின ஜனம். எஸ்று $4^{9}$ $5^{6}$ $6^{6}$.

**அப்பா. Father.** பல பாஷைகளில் பொதுப்பட தகப்பனுக்கு இப்பெயர் வழங்குவார்கள். மாற் $17^{36}$ ரோ $8^{15}$ கலா $4^{6}$. இந்த வசனங்களில் இந்தச் சொல் கடவுளுக்கு மகா வணக்கமாய்ச் சொல்லியிருக்கிறது. **குடும்பம்** காண்க.

**அப்பாயிம். Appaim.** 1 நாளா $2^{30}$.

**அப்பார்சியர். Apharsites.** அசீரியாவிலிருந்து சமாரியாவில் குடியேற்றப்பட்ட ஜனம். எஸ்று $4^{9}$.

**அப்பியாள். Aphia.** இவள் பிலேமோனுடைய மனைவியாயிருக்கலாம். பிலே $1^{2}$.

**அப்பியுபுரம். Apiiforum.** ரோமாபுரியிலிருந்து தெற்கே 43–ம் மைலிலுள்ள அஞ்சல் ஸ்தானம். இங்கேதான் தபால்வண்டி மாற்றுவார்கள். அப் $28^{15}$.

**அப்பிராயீம். Hapharaim.** ஒரு ஊர். யோசு $19^{19}$.

**அப்பொலியோன். Apollyon.** வெளி $9^{11}$. **அபெத்தோன்** காண்க.

**அப்பொல்லோ. Apollos.** அப் $18^{24-28}$ 1 கொரி $1^{12}$ $3^{5}$ அப் $18^{24}$-ல் சொல்லியிருக்கிறதை நாம் பார்த்தால் இவன் அலெக்சந்திரியா பட்டணத்தின் யூதன் என்றும், இயேசுவின் சரித்திரத்தைப்பற்றி இவன் முதலில் அறியாதிருந்தும் யோவான்ஸ்நானனின் பிரசங்கத்தினால் அவரை நம்பினவன் என்றும் அறியலாம். இவன் அலெக்சந்திரியாவில் கல்வி சாதுரியம் அடைந்து இயேசுகிறிஸ்துவைப்பற்றி அதிக தீரமாய்ப் பிரசங்கம் பண்ணினதைக் கேட்டு அநேகர் இவன் பக்கமானார்கள். அப்பொல்லோவுக்கும் பவுலுக்கும் ஒற்றுமையிருந்தும் (1 கொரி $3^{18}$) அவரவர் பக்கம் சேர்ந்தவர்களுக்கிடையில் பிரிவினை உண்டானது. இவன் கொரிந்தைவிட்டுப் பவுலினிடத்திற்கு வந்திருக்கையில் பவுல் இவனைத் திரும்பவும் அங்கே போகும்படி வேண்டிக்கொண்டபோது, இவன் போக மனதில்லாமல் இருந்தான். 1 கொரி $16^{12}$.

**அப்பொல்லோனியா. Apollonia,** சின்ன ஆசியாநாட்டில் பவுல் சந்தித்த ஒரு ஊர். அப் $17^{1}$.

**அப்போகிரிப்பா. The Apocrypha,** [தள்ளுபடி ஆகமங்கள்]. 'அப்போகிரிப்பா' என்பது 'மறைக்கப்பட்டது' என்று அர்த்தமாம். முதலில் மற்றவர்கள் வாசியாதபடி பழைய ஏற்பாட்டோடு சேராமல் மறைத்து வைத்த சில ஆகமங்கள் இருந்தன. அப்போகிரிப்பாவில் சேர்ந்த இந்த ஆகமங்கள் கிரேக்க பாஷையில் எழுதினதினால் கிரேக்கு பாஷையைப் பேசின யூதர்களும் கிரேக்க பாஷையில் பழைய ஏற்பாட்டை மொழிபெயர்த்தவர்களும் இவைகளை அங்கீகரித்தும், பலஸ்தீனாவிலுள்ள யூதர்கள் தங்கள் எபிரெய பாஷையில் எழுதின பழைய ஏற்பாட்டின் ஆகமங்களோடு இவைகளைச் சேர்த்துக்கொள்ளவில்லை.

ஆதி கிறிஸ்தவர்கள் இவைகளை அனுசரித்தும், இந்தப் புஸ்தகங்களுக்கும் பழைய ஏற்பாட்டுக்குமுள்ள வித்தியாசத்தைக் கண்டறிந்தார்கள். இதினிமித்தம் பழைய ஏற்பாட்டு ஆகமங்களைப்போல் இவைகளை ஏற்றுக்கொள்வதற்கு இவைகள் தகுந்தவைகளல்ல என்ற அபிப்பிராயம் உண்டானது. புதிய ஏற்பாட்டிற் சேர்ந்த ஆகமங்களை எழுதினபிறகு இந்த ஆகமங்கள் படிப்படியாய் மகிமை குறைந்துபோயின. இவைகள் சத்தியவேதத்தில் உள்ள புஸ்தகங்களோடு சேர்க்கக்கூடாது என்று அபிப்பிராயம் உண்டானதினால் இவைகளுக்குத் தள்ளுபடி ஆகமங்கள் எனப் பெயரிடப்பட்டது.

இந்தத் தள்ளுபடி ஆகமங்கள் நாலு வகைப்படும்:—

## I. சரித்திரங்கள்.

*a.* **முதலாம் மக்கப்பேயர்.** இது மக்கப்பெயரென்னும் சகோதரர் சீரியா ராஜாவினுடைய அதிகாரத்திலிருந்து யூதரை விடுதலையாக்கும்படி செய்த யுத்தத்தைப்பற்றிய உண்மையான சரித்திரம்.

*b.* **இரண்டாம் மக்கப்பேயர்.** இது முதலாம் மக்கப்பெயர் என்னும் புஸ்தகத்திற்கு இரண்டாம் பாகம் அல்லாவிட்டாலும், அதே சரித்திரத்தை

விவரித்துச் சொல்லுகிறது. இதை எழுதினவன் இதில் பொய்யும் புளுகுமான காரியங்களைச் சேர்த்ததினால் முதற்புஸ்தகத்துக்குப்போல இதற்கு அவ்வளவு மதிப்பு இல்லை.

c. **1-ம் எஸ்றாஸ்.** இதின் ஆக்கியோன் இதில் பழைய ஏற்பாட்டிலுள்ள 'எஸ்றா' என்னும் புஸ்தகத்தை விஸ்தரித்து இன்னும் அநேக விஷயங்களைச் சேர்த்திருக்கிறான்.

## II. பாரம்பரிய சரித்திரங்கள்.

1. எஸ்தர் சரித்திரத்திற்குப் புறவணி.
2. சூசன்னாளின் சரித்திரம்.
3. மூன்று பரிசுத்த பிள்ளைகள் பாடின பாட்டு.
4. பேலும் பாதாள சர்ப்பமும் என்னும் கதை.
5. தோபித்.
6. யூடித்.

## III. தீர்க்கதரிசன புஸ்தகங்கள்.

1. **பாரூக்.** யூதர்கள் விக்கிரகாராதனையை விட்டு அடிமைத்தனத்திலிருந்து விடுதலையாகிப் பரிசுத்த பூமிக்கு வருவார்கள் என்னும் கருத்தை அடக்கிய ஓர் புஸ்தகம். இதோடு '**எரேமியாவின் நிருபம்**' சேர்த்திருக்கிறது.
2. **மனாசேயின் ஜெபம்.** இது மனாசே அசீரியா ராஜாவின் கையிலகப்பட்டிருக்கும்போது (2 நாளா 33 [12]) கடவுளை நோக்கிச் செய்த பிரார்த்தனை போல் தோன்றுகிறது.
3. **2-ம் எஸ்றாஸ்.** இதில் எஸ்றாஸ் என்பவன் கண்ட தரிசனங்கள் அநேகம் சொல்லப்பட்டிருக்கின்றன.

## IV. நீதியாகமங்கள்.

அப்போகிரிப்பாவில் நீதியைப் போதிக்கும் புஸ்தகங்கள் இரண்டு. அவைகளாவன:—

1. **சாலொமோனுடைய நீதி.**
2. **சீராக்குவினுடைய நீதி.**

இந்த இரண்டும் எபிரெய பாஷையில் அல்ல, கிரேக்க பாஷையில் எழுதப்பட்டுள்ளன. இவை யாவருக்கும் பிரயோஜன முடையவையாகையால் இவைகளை வாசிக்கலாம் என்று எண்ணுவது நியாயம்.

இன்னும் தள்ளுபடிப் புஸ்தகங்கள் அநேகம் இருந்தாலும் இவைகளே இங்கிலிஷ் பைபிலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தப் புஸ்தகங்களை எழுதினவர்கள், எழுதின காலம், எழுதின இடம் இவைகளைப்பற்றித் தீராத சந்தேகம் பல இருப்பதினால் இச்சிறு அகராதியில் இவைகளை விவரித்து எழுத முடியாது.

## V. அப்போகிரிப்பா சுவிசேஷங்கள்.

**சுவிசேஷங்கள்** காண்க.

**அப்போஸ்தலரின் நடபடிகள். Acts of the Apostles.** புதிய ஏற்பாட்டில் ஐந்தாம் புஸ்தகம். இது இயேசுகிறிஸ்து பரமண்டலத்திற்கு எழுந்தருளினதுமுதல் கி-பி. 61-ம் வரையிலும் ஆதி திருச்சபையின் சரித்திரத்தைக் கூறுகிறது.

இதில் விசேஷமாய் இரண்டு பாகங்கள் அடங்கியிருக்கின்றன.

i. 1-12 அதி. சபை ஸ்தாபனம், பேதுருவின் சரித்திரம்; யூதர்கள் அல்லாத புறஜாதியாருக்குள் நடந்த சுவிசேஷ பிரபல்லியம்.

ii. 13-28 அதி. பவுலின் சரித்திரம்.

1. **ஆக்கியோன்.** இதை எழுதினவன் 16[10]-ம் வசனத்தில் தன் பெயரைச் சொல்லாவிட்டாலும் பல விடங்களில் 'நாங்கள்' என்னும் பதத்தை வழங்குவதால், தான் பரி. பவுலோடு பிரயாணம் செய்கிறவன் எனக் காட்டுகிறான். இப்புஸ்தகத்தின் பாஷை நடையைக் கவனிக்கும்போது, இப்பாஷையை நன்றாய் அறிந்த வித்துவான்கள் இதை ஒரே ஆக்கியோன் எழுதினான் எனச் சொல்லுகிறார்கள். லூக் 1[3]-ஓடு அப் 1[1]-ஐ நாம் ஒப்பிட்டுப்பார்த்தால், இரண்டையும் பரி. லூக்கா எழுதியிருக்கவேண்டும் என அறியலாம்.

2. **காலம்.** கி-பி. 64, 65-ம் வருஷத்தில் நேரோராயன் பவுலைச் சிரச்சேதம் பண்ணினதையும் பேதுருவைச் சிலுவையில் அறைந்ததையும்பற்றி இப்புஸ்தகத்திற் சொல்லப்படாததினால் இத்துன்பங்கள் சம்பவிக்கிறதற்கு முன் எழுதப்பட்டது என்று நாம் நினைக்கலாம். சிலரோ இதின் ஆக்கியோன் இப்பெரிய உபத்திரவங்களைப்பற்றி வேறொரு புஸ்தகத்தில் எழுதக் கருதி இப்புஸ்தகத்தை கி-பி. 70-80 வருஷங்களுக்கிடையில் எழுதினான் என்று நினைக்கிறார்கள்.

3. **நோக்கம்.** இப்புஸ்தகம் நடந்த சங்கதிகளின் காலக்கிரமத்தைக் கவனிப்பதைப் பார்க்கிலும் ஆதிசபை அடைந்த பிரபல்லி

யத்தை அதிகமாய்க் கூறுகிறது. பெந்தெ கொஸ்தே நாள், ஏழு உதவிக்காரர் ஏற்படுத்தல், ஸ்தேவான் சரித்திரம், புறஜாதியாரான கொர்நேலியுவுக்கும் எத்தியோப்பியாவின் பிரதானிக்கும் ஞானஸ்நானம் கொடுத்தல், எருசலேம் பட்டணத்தில் நடந்த முதல் பொதுச் சங்கம், பவுல் பல இடங்களில் யூதரல்லாதவர்களுக்குப் பிரசங்கஞ் செய்தல், அவன் ரோம அதிகாரிகளுக்கு முன் செய்த அறிக்கை முதலியவை. மேலும் யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையில் உண்டான விரோதத்தைப்பற்றி அதிகந் தெளிவாய் இப்புஸ்தகத்தில் காணப்படுகிறது.

4. **உண்மை.** இப்புஸ்தகத்தை எழுதினவன் இதிற் குறித்திருக்கும் அதிகாரிகளுக்கு அவர்கள் இருக்கும் இடங்கள், அவர்களுடைய பட்டப்பெயர்கள், ஊர் வழக்கங்கள் ஆகிய இவைகளைப்பற்றி அதிக நிதார்த்தமாய்ச் சொல்லுகிறான். பவுல் கடைசியாய்ப் போன பிரயாணத்தை ஆராய்ந்தறியும்போது கப்பற் பிரயாணத்தில் நடந்த சங்கதிகளை அதிக திட்ப நுட்பமாய் எழுதியிருக்கிறான். இதினிமித்தம் இந்தப் புஸ்தகத்தில் எழுதின சரித்திரம் முற்றிலும் நம்பத்தக்கது.

**அப்போஸ்தலரின் விசுவாசப்பிரமாணம். Apostles Creed.** விசுவாசப்பிரமாணம் காண்க.

**அப்போஸ்தலன். Apostle.** 'அப்போஸ்தலன்' என்றால் அனுப்பப்பட்டவன்; அல்லது ஒரு அதிகாரிக்குப் பதிலாக அதிகாரத்தோடு அனுப்பப்பட்டவன்; அல்லது ஒரு ராஜா உத்தியோகவிஷயமாய் தான் போக முடியாத காலத்தில் தனக்குப் பதிலாக உத்தியோகஸ்தர்களில் தன் அதிகாரத்துடன் அனுப்பின ஒருவன்.

இயேசுகிறிஸ்து இந்த உலகத்தில் இருந்தபோது தமது ஊழியத்திற் பங்கு பெறவும், பரத்திற்குத் தாம் ஏறினபிறகு அவ்வூழியத்தைத் தாங்களே செய்யவும், தமது சீஷர்களில் முக்கியமாய் பன்னிரண்டுபேரை நியமித்தார். லூக் $6^{13}$ மத் $10^{1}$ யோவா $17^{18}$. இயேசு பன்னிருவரையும் அனுப்பினதினால் பன்னிரண்டு கோத்திரத்தாரான இஸ்ரவேலருக்குள் சுவிசேஷம் முதல் முதல் பிரபல்லியமாகவேண்டுமெனக் கருதினார். மத் $10^{16}$. அவர் காலத்திலே யூதர்கள் உலகத்திலுள்ள ஜாதிகள் எழுபது என்று எண்ணங்கொண்டிருந்ததினால் அவர் கடைசியாய் எருசலேமுக்குப் புறப்படும்போது எழுபது பேரை நியமித்து அனுப்பினதினால் உலகத்தில் எல்லா ஜாதியாருக்குள்ளும் சுவிசேஷம் பிரஸ்தாபப்படவேண்டும் என்பதைத் தெரிவித்தார். லூக் $10^{1}$. இயேசு பரத்திற்கு ஏறினபிறகு துரோகியான யூதாசுக்குப் பதிலாக மத்தியாவை அப்போஸ்தலனாக மற்ற அப்போஸ்தலர் நியமித்தார்கள். அப் $1^{12.23}$ $6^{6}$. 'அப்போஸ்தலர்' என்னும் இப்பெயர் தரித்தவர்கள் இப்பன்னிருவருமல்லாமல் பரி. பவுல் (அப் $14^{14}$), அன்றோனிக்கு, யூனியா, (ரோ $16^{7}$) கர்த்தருடைய சகோதரனாகிய யாக்கோபு (கலா $1^{19}$) இப்பெயரை யுடையவர்களாயிருந்தார்கள். இந்த வசனங்களை நாம் பார்க்கும்போது இப்பெயர் இயேசு ஏற்படுத்தின சீஷருக்கும் அல்லாமல், ஆதி சபையில் பயபக்தியுள்ள வேறு ஊழியர்களுக்கும் இடப்பட்டிருப்பதைக் காண்போம். ஆகவே, எந்த முகாந்தரத்தினால் இப்பெயரைப்பெற்றார்கள் என்று நம்மால் திட்டமாய்ச் சொல்ல முடியாது. சிலர் கபடமாய் இப்பெயரைத் தரித்துக்கொண்டார்கள். 2 கொரி $11^{13}$ வெளி $2^{2}$. 'அப்போஸ்தலன்' ஊர், வீடு இல்லாதவனும், ஒரு சபைக்கு அல்ல சபைகளுக்குப் பொதுவாக ஏற்படுத்தப்பட்டவனுமாயிருந்து தன் ஜீவியகாலபரியந்தம் இயேசுவுக்காக ஊழியஞ்செய்து அவருக்குச் சாட்சியாய் இருப்பது அவனுடைய முக்கிய கடமை.

**அப்னேர். Abner.** சவுலின் சேனைத் தலைவன். 1 சாமு $17^{55}$. சவுல் இறந்தபின் அவனுடைய மகனாகிய இஸ்போசேத் என்பவனை அப்னேர் ராஜாவாக்கினான். 2 சாமு 2-ம் அதி. ஆனால் இடையிலே உண்டான விரோதத்தினால் இவன் அவனைத் தாவீதின் கையில் ஒப்புவிக்க எண்ணியிருக்கும்போது யோவாப் தாவீதுக்குத் தெரியாமல் இவனைக் கொன்றுபோட்டான். இவன் சன்மார்க்கனாயிராவிட்டாலும் சவுல் இறந்தபிற்பாடு அவன் பக்கத்தாரில் இவன் அதிக தீரனும் சாமர்த்தியமுமுள்ளவன். 2 சாமு $3^{7-37}$.

**அமஞ்சி வேலை. Levy.** அரசனின் கட்டாயத்திற்கு கூலியில்லாமல் ஜனங்கள் அவனுக்கு அரமனை முதலான கட்டடங்களையும் இன்னும் பாரமான வேலையையும் செய்தல். 1 இரா $9^{21}$.

**அமத்சியா. Amaziah.**

1. யோவாசின் மகனாகிய யூதாவின் ராஜா. 2 இரா $14^{3}$. இவன் யேகோவாவை விட்டுப் பின்வாங்கிப்போனவன். 2 நாளா $25^{15}$.

2. தீர்க்கதரிசியாகிய ஆமோசுக்கு விரோதமாய் முறையிட்டவன். ஆமோ $7^{10}$.

3. 1 நாளா $4^{34}$.
4. 1 நாளா $6^{45}$.

**அமரியா, ஆமரியா.** **Amariah** [யேகோவா வாக்களித்தார்]. பழைய ஏற்பாட்டில் இப்பெயருள்ளவர்கள் ஒன்பது. 1 நாளா $6^{7}$ $6^{11}$ $23^{19}$ 2 நாளா $19^{11}$ $31^{15}$ எஸ்ரு $10^{42}$ நெகே $11^{4}$ $12^{2}$ செப் $1^{1}$.

**அமலேக், அமலேக்கியர்.** **Amalek, Amalekites.** கானான் தேசத்திற்குத் தெற்கேயும் எகிப்து தேசத்திற்குக் கிழக்கேயுமுள்ள வனாந்தரத்தில் பூர்வீகந் தொடங்கி அங்குமிங்கும் அலைந்து திரியும் ஓர் கோத்திரம். ஆதி $14^{7}$. இவர்களுக்கும் இஸ்ரவேலருக்கும் எப்போதும் விரோதம். யாத் $17^{8}$ நியா $3^{13}$ 1 சாமு $15^{3}$ $30^{18}$ 1 நாளா $4^{43}$ சங் $83^{6}$.

**அமனா.** **Amana.** ஒரு மலை. உன். பா. $4^{8}$.

**அமாசா.** **Amasa.** [பாரஞ் சுமக்கிறவன்].

1. தாவீதின் சகோதரி மகன். அப்சலோமின் சேனைத்தலைவனாகிய இவனுக்குத் தாவீது மன்னிப்புக் கொடுத்தும் யோவாப் இவனைக் கொன்றுபோட்டான். 2 சாமு 18-20 அதி.
2. 2 நாளா $28^{12}$ மு.

**அமாசாயி.** **Amasai.**

1. 1 நாளா $6^{25}$.
2. 1 நாளா $15^{24}$.
3. 1 நாளா $12^{18}$.

**அமாவாசி.** **New moon.** சந்திரன் காண்க.

**அமாவாசி கணிக்கிறவன்.** **Astrologer.** ஞனியம் காண்க.

**அமிசபாத்.** **Amizabad.** 1 நாளா $27^{6}$.

**அமித்தாயி.** **Amittai.** [உண்மையுள்ள]. யோனாவின் தகப்பன். 2 இரா $14^{25}$ யோனா $1^{1}$.

**அமுத்தாள்.** **Hamutal.** யோசியாவின் மனைவி. 2 இரா $23^{31}$.

**அம்சி.** **Amzi.**

1. 1 நாளா $6^{46}$.
2. நெகே $11^{12}$.

**அம்பிபோலி.** **Amphipolis.** கிரேக்கு தேசத்திலுள்ள மக்கெதோனியா நாட்டின் பிலிப்பு பட்டணத்திலிருந்து 40 மைல் தூரமாயிருக்கும் ஓர் பட்டணம். இதைப் பவுல் சந்தித்தான். அப் $17^{1}$.

**அம்பிலியா.** **Amplias.** ரோமை ராயனின் அரமனையிலுள்ள உத்தியோகஸ்தர்களில் கிறிஸ்தவனாயிருந்த ஒருவன். ரோ $16^{8}$ பிலி $4^{22}$.

**அம்பு.** **Arrow.**

1. ஓர் ஆயுதம். 1 சாமு $20^{20}$ 2 இரா $13^{15}$ எரே $51^{11}$.
2. தேவனுடைய ஆக்கினை. யோபு $6^{4}$ சங் $38^{2}$ $45^{5}$ எசே $5^{16}$.
3. கெட்ட ஆலோசனை. சங் $11^{2}$ $57^{4}$.
4. வார்த்தை. சங் $64^{4}$.
5. தேவநீதி. 2 சாமு $22^{15}$ ஆப $3^{11}$.

வில்லம்பு சொல்லம்பு மேதினியி லுண்டிரண்டு
வில்லம்பிற் சொல்லம்பு மேலதிகம்;—வில்லம்பு
பட்டுருவ வென்மார்பிற் பார்வேந்தா நின்குலத்தைச்
சுட்டுருவ வென்வாயிற் சொல். (கம்பன்)

**அம்மா.** **Ammah.** 2 சாமு $2^{24}$.

**அம்மாத்.** **Hammath.** [வெந்நீரூற்று]. கலிலேயாக் கடலோரத்தின் மேற்குத் திசையிலுள்ள நப்தலிநாட்டின் அரணிப்பான பட்டணங்களி லொன்று. யோசு $19^{35}$.

**அம்மிஷதாயி.** **Ammishaddai.** எண் $1^{12}$.

**அம்மியூத்.** **Ammihud.** [இனத்தானின் மகிமையாய் இருக்கிறான்].

1. எண் $1^{10}$.
2. எண் $34^{20}$.
3. எண் $34^{28}$.
4. 2 சாமு $13^{37}$.
5. 1 நாளா $9^{4}$.

**அம்மியேல்.** **Ammiel.** [கடவுள் என் இனத்தவர்].

1. எண் $13^{12}$.
2. 2 சாமு $9^{4}$.
3. 1 நாளா $26^{5}$.
4. =எலியாம். 1 நாளா $3^{5}$.

**அம்மினதாப்.** **Amminadab.** [என் இனத்தான் தயவுள்ளவன்].

1. ஆரோனின் மனைவியுடைய தகப்பன். யாத் $6^{23}$.
2. 1 நாளா $6^{22}$.
3. ஒரு லேவியன். 1 நாளா $15^{10}$.

**அம்மீ.** **Ammi.** 'என் ஜனம்' என்று அர்த்தம்கொண்ட இப்பதம் மன்னிக்கப்பட்ட இஸ்ரவேலருக்குக் கடவுள் அருளின பெயர். ஓசி $2^{1}$.

**அம்மூவேல்.** **Hammuel.** 1 நாளா $4^{26}$.

**அம்மெதாத்.** **Hammedatha.** ஆமானின் தகப்பன். எஸ்தர் $3^{1}$.

**அம்மொலெகேத்.** **Hammolecheth.** [ராணி?] 1 நாளா $7^{17}$.

**அம்மோத்தோர்.** **Hammoth-Dor.** யோசு $21^{32}$.

**அம்மோரியர்.** **Ammorites.** வழக்கமாய் எம்மோரியர். பூர்வீகத்தில் பலஸ்தீனாவிலும் பாபிலோனியாவிலும் வசித்த ஜனம். ஆதி $14^{7}$ எண் $21^{21}$ உபா $1^{20}$ $31^{4}$ 2 இரா $21^{11}$.

**அம்மோனியர், அம்மோன்.** **Ammonites, Ammon.** வட இஸ்ரயேலுக்குக்கிழக்கே வனாந்தரத்தில் இருந்த ஜனம். இஸ்ரவேலர் இவர்களைத் தங்களுக்குக் கீழானவர்கள் என்று நினைத்தார்கள். ஆதி $19^{38}$. இஸ்ரவேலர் கானான் தேசத்தைப் பிடித்தபோது இவர்களுடைய இடத்தைப் பிடிக்கவில்லை. உபா $2^{38}$ நியா $3^{13}$. அம்மோனியரும் மோவாபியரும் இஸ்ரவேலருக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தபோது யெப்தா இவர்களைத் துரத்திவிட்டான். நியா $11^{12}$. அம்மோனியரின் ராஜா மறுபடியும் இஸ்ரவேலர்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனான். 1 சாமு 11 அதி. அம்மோனியா ராஜாவுக்கும் இஸ்ரவேலர்களுடைய ராஜாவுக்கும் விரோதம் இருந்ததினால் இவர்களுடைய ராஜா தாவீதுக்கு உதவி செய்தான். 2 சாமு $10^{2}$. அம்மோனியரின் ராஜாவுடைய மகன் சண்டை செய்ததினால் தாவீது இவனை அதிக கொரோமாய்த் தண்டித்தான். 2 சாமு 10-12 அதி. பின்பு இவர்களுக்குள் சமாதானமிருந்தது. சாலொமோனுடைய மனைவிகளில் அம்மோனிய ராஜஸ்திரீ ஒருத்தி. 1 இரா $11^{1}$. ஆகாபின்காலத்தில் இவர்கள் சல்மனாசார் என்னும் ராஜாவோடே சண்டை செய்தார்கள். இவர்கள் மறுபடியும் யூதாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தார்கள். 2 நாளா $20^{1}$. நேபுகாத்நேச்சார் இவர்கள் யூதராஜ்யத்திற்குத் தொந்தரவு செய்யும்படி இவர்களை ஏவினான். 2 இரா $24^{2}$. பிறகு இவர்கள் யூதர்களோடு சேர்ந்து நேபுகாத்நேச்சாருக்கு விரோதஞ்செய்தார்கள். எரே $27^{3}$. யூதர்கள் பாபிலோன் அடிமைத்தனத்திலிருந்து திரும்பி வந்தபோது இவர்கள் எருசலேம் பட்டணத்தைப் புதிதாய்க் கட்டுகிறதற்கு ஆக்ஷேபனை செய்தார்கள். நெகே $2^{10}$. இதற்குப்பின் இவர்களுடைய சரித்திரம் தெரியவில்லை. இவர்கள் விக்கிரகாராதனைக்காரராய் மில்கோம் என்னும் தெய்வத்தை வணங்கிவந்தார்கள். இவர்கள் மிகவும் குரூரமானவர்கள். ஆமோ $1^{13}$.

**அம்மோன்.** **Hammon.**

1. நப்தலியின் ஒரு ஊர். ஒருவேளை அம்மாத்தும் இதுவும் ஒன்றுதான். 1 நாளா $6^{76}$.
2. ஆசேரின் ஒரு ஊர். யோசு $19^{28}$.

**அம்ராப்பேல்.** **Amraphel.** ஆதி $14^{1}$. **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**அம்ராம்.** **Amram.** [உயர்ந்த ஜனம்].

1. மோசேயின் தகப்பன். யாத் $6^{20}$.
2. எஸ்று $10^{34}$.
3. 1 நாளா $1^{41}$.



எபேசுவிலுள்ள அரங்கசாலை.

**அம்ராம்.** **Hamran.** 1 நாளா $1^{41}$. = எம்தான். ஆதி $36^{26}$.

**அம்னோன்.** **Amnon.**

1. தாமாரைக் கற்பழித்த தாவீதின் மகன். 2 சாமு $3^{2}$ $13^{1}$.

2. 1 நாளா $4^{20}$.

**அயா.** **Alah.** ஆதி $36^{24}$.

**அயினோன்.** **Aenon.** [ஊற்றுக்கண்]. கலிலேயாக் கடலுக்குத் தெற்கே யோர்தான் நதியின் ஓரத்தில் 20 மைல் தூரத்திலுள்ள நீர் ஊற்றுக்கள் ஏழு. தண்ணீர் ஏராளமாயிருந்த அந்த இடத்தில் யோவான் ஞானஸ்நானம் கொடுத்தான். யோவா $3^{23}$.

**அரங்கசாலை.** **Theatre.** எபேசு ரோமை முதலிய பட்டணங்களில் மலைக்குன்றின் சார்பிலே பள்ளமாகத் தளம் வெட்டி, அல்லது பெரிய கற்களினால் கட்டடம் கட்டி, இருபதினாயிரம்பேர் இருக்கத்தக்கதாக கல்லாசனங்கள் அவைகளில் சூழவர வைப்பார்கள். இங்கே நாடகங்கள் விளையாடுவதுமல்லாமல் பெரிய கூட்டங்களும் வைப்பார்கள். அப் $19^{29}$.

**அரண்.** **Fortress.** 'அரண்களின் தேவன்.' ஏசா $29^{7}$ தானி $11^{38}$.

**அரபிதேசம்.** **Arabia.** [வனாந்தரம்]. இது தெற்குப் பலஸ்தீனாமுதல் சீனா தீபகற்பம் உட்பட செங்கடலுக்குக் கிழக்குத்திசை வரையும் எட்டியிருக்கும் தேசம். இதின் மூன்று பாகங்கள் ஆவன: கல் அரபிநாடு, வனாந்தரநாடு, செழிப்புநாடு. இவைகளில் கல்நாடு இஸ்ரவேல் தேசத்திற்குச் சமீபம். அரபியா மகமதியருடைய மதத்திற்கு உற்பத்தி ஸ்தானம். அங்குள்ள முக்கிய பட்டணங்கள் மக்காவும், மதினாவும். 1 இரா $10^{15}$ 2 நாளா $21^{17}$ நெகே $2^{19}$ ஏசா $21^{13}$ கலா $1^{17}$.

**அரமனை.** **Palace.**

1. அரசன் மாளிகை. சாலொமோனுடைய மாளிகையின் விவரம்: 1 இரா $7^{1-12}$.

2. பிரதான ஆசாரியனுடைய வீடு. மத் $26^{3}$.

3. ஏரோதின் அரமனை. இது பெரிய ஏரோது எருசலேம் பட்டணத்தில் அவ்வூரின் தேசாதிபதி வந்து வாசம் பண்ணக் கட்டின ஒரு அழகான மாளிகை. மத் $27^{27}$ மாற் $15^{16}$ யோவா $18^{28, 33}$ $19^{9}$ அப் $23^{35}$.

4. 'அரமனை யெங்கும் உள்ளவர்கள்.' பிலி $1^{13}$. இது பிரீற்றோரியம் (*Praetorium*) என்று சொல்லப்படும் ரோமராயருடைய மெய்காப்பாளர் பாளயம். இப்பாளயத்தில் பரி. பவுல் வைக்கப்பட்டான்.

5. 'ராயனுடைய அரமனை.' பிலி $4^{22}$. ராயனுடைய உயர்ந்த உத்தியோகஸ்தர் முதல் அடிமைகள் மட்டுமுள்ள பணிவிடைக்காரர் அனைவரையும் குறிக்கிறது.

**அரம்.** **File.** 1 சாமு $13^{21}$.

**அராராத்.** **Ararat.** சீரியா தேசத்துக்கு வடகிழக்கேயுள்ள செழிப்பான மைதானத்தையும் பெரிய மலைகளையும் உட்கொண்ட தேசம். தற்காலத்தில் அதற்கு ஆர்மீனியா (*Armenia*) என்று பெயர். ஆதி $8^{4}$ 2 இரா $19^{37}$-ல் ஆராராத் என்று எழுதியிருக்கிறது.



அராராத் மலை.

**அராபா. Arabah.** [அக்கரையிலுள்ள தேசம்].

1. சாக்கடலுக்கு வடக்கும் யோர்தான் நதிக்கு மேற்குமாயுள்ள ஒரு சமபூமி. இதிலேதான் சோதோம் கொமோரா பட்டணங்கள் இருந்தன.

2. செங்கடலுக்கு வடக்கே சாக்கடல் வரையுமுள்ள ஒரு நாடு. இவ்விடத்தில் இஸ்ரவேல் புத்திரர் பிரயாணம் செய்து திரிந்தார்கள். எண் $20^{21}$ உபா $2^{8}$.

**அராப். Arab.** யோசு $15^{52}$.

**அராயா. Harhalah.** நெகே $3^{8}$.

**அரிசாய். Arisai.** எஸ்தர் $9^{8}$.

**அரிஸ்தர்க்கு. Aristarchus.** [சிறந்த மூப்பன்]. தெசலோனிக்கேயனாகிய ஒருவன். அப் $27^{2}$. பவுலோடு மூன்றும் பிரயாணத்தில் சின்ன ஆசியாவிலே தோழனாயிருந்த இவன் அவனோடு சிறைச்சாலையில் வைக்கப்பட்டான். கொலோ $4^{10}$.

**அரிஸ்தோபூலு. Aristobulus.** [நல்ல ஆலோசனைக்காரன்]. ரோமாபுரியில் வாசமாயிருந்த பெரிய ஏரோது ராஜாவினுடைய பேரனுக்கு இப்பெயர் இருந்தது. ரோ $16^{10}$-ல் 'அரிஸ்தொபூலுவின் வீட்டார்' என்பவர்கள் இவனுடைய அடிமைகளாய் இருக்கலாம்.

**அரிதாத்தா. Aridatha.** எஸ்தர் $9^{9}$.

**அரிதாய். Aridai.** எஸ்தர் $9^{3}$.

**அரிமத்தியா. Arimathea.** இந்த ஊரிலிருந்து யோசேப்பு என்னும் சீஷன் வந்தான் என்று சொல்லியிருக்கிறதேயொழிய இவனைப்பற்றி வேறு விசேஷம் சொல்லியிருக்கவில்லை. மத் $27^{57}$.

**அரியானர். Arians.** நாலாம் நூற்றாண்டிலே அலெக்சந்திரியா என்ற எகிப்துதேசத்திலுள்ள நகரியிலே திருச்சபைக்கு மூப்பனாய் இருந்த அரியான் என்பவன் கிறிஸ்துவுக்குப் பூரண தேவத்துவம் இல்லையென்ற கோட்பாடுள்ளவனா யிருந்தான். அவனாலே அரியானராகிய பதிதர் தோன்றினார்கள். கி-பி. 325-ஆம் வருஷத்திலே, மகா கொன்ஸ்தந்தீன் என்ற இராயனாலே நிசேயாநகரியிலே மற்றக் குருக்கள்தவிர 318 கண்காணிமார்கள் சேர்ந்த பொதுவான யோசனைச் சங்கத்திலே அதனாசி என்பவர் அரியான் என்பவனிடத்தில் தர்க்கித்தபோது கிறிஸ்துவின் தேவதன்மையைப்பற்றிய கொள்கை ஸ்தாபிக்கப்பட்டது. அரியான் என்பவன் சங்கத்துக்குமுன் கிறிஸ்து ஆதியிலிருந்து தேவத்தன்மையுடையவர் என்று சொல்லாவிட்டாலும் கிறிஸ்துவை தேவனுடைய வார்த்தை என்றும் சிருஷ்டிகரென்றும் மேலான சிருஷ்டியென்றும் தேவனால் உண்டாக்கப்பட்ட தேவன் என்றும் அவரை வணங்கக் கூடுமென்றும் பலவிதமாய்ச் சொன்னான். இவன் திருச்சபையினின்று விலக்கப்பட்டபின்பு மறுபடியும் அதிலே வந்து சேரும்படி மாறுபாடாய் விசுவாசப் பிரமாணத்தைக் கைக்கொள்ளுகிறேன் என்றதினிமித்தம் இராயன் இவன் உண்மையுள்ளவன் என்று நம்பினான். ஆனால் அதனாசி இவன் தந்திரத்தை அறிந்து என் சபையிலே இவனைச் சேர்க்கமாட்டேன் என்றான். பின்பு கொன்ஸ்தந்தீன் பட்டணத்திலிருந்த சபையிலே சேர எத்தனப்பட்டிருந்த ஒருநாளுக்கு முன்னே வயிற்றுவலியால் செத்தான்.

**அரியேல். Ariel.**

1. 'கடவுளுடைய பலிபீடம்' அல்லது 'கடவுளுடைய சிங்கம்' என்று அர்த்தம் கொண்ட இப்பெயர் எருசலேம் பட்டணத்திற்குக் கொடுக்கப்பட்டது. ஏசா $29^{1}$.

2. எஸ்றா $8^{16}$.

3. 2 சாமு $23^{20}$. (*R. V.*)

**அரியோகு. Arioch.**

1. ஒரு அரசன். ஆதி $14^{1}$.

2. ஒரு சேனைத்தலைவன். தானி $2^{14}$-ல் இவன் பெயர் ஆரியோகு என்று எழுதியிருக்கிறது.

**அரியோப்பகஸ். Areopagus.** [மார்ஸ் மேடை]. **அத்தேனே** காண்க.

**அரிவாள். Sickle.** யோவே $3^{10. 13}$ வெளி $14^{14. 18}$.

**அருமா. Arumah.** நியா $9^{41}$.

**அருமாப். Harumaph.** நெகே $3^{10}$.

**அருள். Grace.** **கிருபை** காண்க.

**அருவருப்பு. Abomination.** இதற்கு மூலபாஷையில் நாலு பதங்களுண்டு. அவைகளில் ஒன்று பலிசெலுத்தின மீதியான மாமிசம் கெட்டுப்போகும்போது அதற்குச் சொல்லப்படும் பெயர். லேவி $7^{18}$. மற்ற மூன்று பதங்கள் குலாசாரத்துக்கு விரோதமாயிருப்பவைகளையும் (ஆதி $43^{32}$) புறமதஸ்தர் வணங்கும் தேவர்களையும் (2 இரா $23^{13}$) சில முதலிய விக்கிரகங்களையும் (உபா $7^{25}$) சாப்பிடக்கூடாதவைகளையும் (லேவி $11^{10}$) பில்லிசூனியத்தையும் (உபா $18^{12}$) முறைகேடான இச்சைகளையும் (லேவி $18^{22}$) அநியாயமான ஊதியத்தையும் (நீதி $11^{1}$) குறிக்கின்றன. **கோடி** காண்க.

**அரு**. Rue. பழைய திருப்புதலில் 'அரு' என்னும் சொல்லுக்குப் பதிலாக இப்போது 'மருக்கொழுந்து' என்று வழங்கப்படுகிறது. லூக் $11^{42}$.

**அரேத்தா**. Aretas. இப்பெயர் சீரியாவின் ஓர் நாட்டிலுள்ள சில ராஜாக்களுக்குக் கோத்திரப்பெயரா யிருந்தது. இவர்களில் நாலாம் அரசனுடைய சேனைத்தலைவன் தமஸ்கு பட்டணத்தைக் காவல் செய்யும் போது பரி. பவுல் அவ்விடத்திலிருந்து கூடையில் இறக்கப்பட்டுத் தப்பினான். இந்த அரசன் அத்தேசத்தை எவ்வளவுகாலம் ஆண்டான் என்பது தெரியாது. 2 கொரி $11^{32}$.

**அரேலி**. Areli. ஆதி $46^{16}$.

**அரோசேத்து**. Harosheth. இந்த ஊரிலிருந்து கானானியரின் ராஜனாகிய யாபீன் என்பவனுடைய சேனாபதியாகிய சிசேரா வந்து எபிரெயரோடு யுத்தஞ்செய்தபோது பாராக் என்பவன் அவனை இந்த ஊர்வரைக்கும் வெட்டித் துரத்தினான். நியா $4^{2-14}$.

இந்த ஊர் 'புறஜாதிகளுடைய பட்டணம்' என்று சொல்லியிருப்பதற்குக் காரணம் தெரியாது.

**அரோதி**. Arodi. = ஆரோத். ஆதி $46^{16}$.

**அர்காஸ்**. Harhas. 2 இரா $22^{14}$ = அஸ்ரா. 2 நாளா $34^{22}$.

**அர்கீயர்**. Arkites. இவர்கள் அர்கா பட்டணத்தார். அர்கா பட்டணம் சீரியாவைச் சார்ந்த பெனிக்கேயருடைய துறைமுகங்களில் ஒன்று. 1 நாளா $1^{15}$.

**அர்கூர்**. Harhur. எஸ்று $2^{51}$.

**அர்கேலாயு**. Archelaus. மத் $2^{22}$. **ஏரோது** காண்க.

**அர்கோப்**. Argob.

1. கலிலேயாக் கடலுக்குக் கிழக்கில் பாசான் தேசத்திலுள்ள நாடு. உபா $3^{4}$.

2. ஒரு மெய்காப்பாளன். 2 இரா $15^{25}$.

**அர்கோல்**. R.V. Cricket, A. V. Beetle. ஒரு மாதிரியான வெட்டுக்கிளி. லேவி $11^{22}$.

**அர்க்கிப்பு**. Archippus. பிலேமோனுடைய வீட்டாரில் ஒரு பக்தன். பிலே 2-ம் வசனம். கொலோ $4^{17}$.

**அர்சா**. Arza. 1 இரா $16^{9}$.

**அர்ஷா**. Harsha. எஸ்று $2^{52}$.

**அர்தசஷ்டா**. Artaxerxes. அகாஸ்வேருவினுடைய மகன். கி-மு. 465-424-வரை அரசாண்டான். எஸ்று நெகேமியா என்னும் தீர்க்கதரிசிகள் எருசலேமுக்குப் போக அவர்களுக்கு உத்தரவு கொடுத்த பெர்சியாவின் அரசன் இவன். எஸ்று $4^{7}$.

**அர்தெமிஸ்**. Artemis. அப் $19^{24}$. = **தியானாள்**.

**அர்தோன்**. Ardon. 1 நாளா $2^{18}$.

**அர்த்தெமா**. Artemas. பரி. பவுலின் தோழர்களில் ஒருவன். தீத் $3^{12}$.

**அர்பக்சாத்**. Arphaxad. சேமின் மகன். ஆதி $10^{22}$ $11^{10}$.

**அர்பா**. Arba. **எபிரோன்** காண்க.

**அர்பாத்**. Arpad. கலிலேயாக் கடலுக்கு வடகிழக்கில் 30 மைல் தூரமுள்ள ஒரு பட்டணம். 2 இரா $18^{34}$.

**அர்மகெதோன்**. Armageddon. [மெகிதோ மலைகள்]. மெகிதோ என்னும் சமபூமியில் பல யுத்தங்கள் நேரிட்டதினால் பரி. யோவான் சாத்தானுக்கும் கடவுளுக்கும் திருப்போர் நடந்த இடத்திற்கு உபமானமாக இப்பெயர் இட்டான். வெளி $16^{16}$. **மெகிதோன்** காண்க.

**அர்மேனிய சபை**. Armenian Church. அர்மேனிய கிறிஸ்தவர்கள் கிரேக்க சபையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் நாலாம் நூற்றாண்டில் கிறிஸ்தவர்களானார்கள். இந்தச் சபைக்குப் பேற்றியார்க்கு (*Patriarch*) என்று சொல்லப்பட்ட நாலு தலைவர்களுண்டு. கிறிசொஸ்தம் என்கிறவனுடைய காலத்திலே வேதம் அர்மேனிய பாஷையிலே செப்த்துவகிந்து (*Septuagint*) என்னும் திருப்புதலிலிருந்து திருப்பப்பட்டது. இவர்கள் தங்கள் சொந்தப் பாஷையிலே ஆராதனை செய்வார்கள். இவர்கள் கிறிஸ்துவினுடைய இரண்டு சுபாவங்களும் ஒன்றோடொன்று கலந்திருப்பதினால் தெய்வ சுபாவம் மனுஷ சுபாவத்தை உட்கொள்ளும் என்றும் பரிசுத்தாவி பிதாவிலிருந்தே புறப்படுகிறார் என்றும் நம்புகிறார்கள். பதினாலாம் நூற்றாண்டு முதல் அர்மேனியரில் சிலர் ரோமசபையின் கொள்கைகளைச் சேர்ந்தவர்களா யிருக்கிறார்கள். அர்மேனியர் வார்த்தையாகிய தேவன் மனிதனாகி ஒரே ஆளாயும் ஒரே ஐக்கிய சுபாவமாயும் இருக்கிறார் என்றும் தேவன் மாறுதலில்லாமலும் வேற்றுமையில்லாமலும் மனிதனானார் என்றும் விசுவாசிக்கிறார்கள். இவர்கள் சுரூபங்களை வணங்காமல் சிலுவையையும் படங்களையும் ஆசரிக்கிறார்கள். இவர்களுடைய பிரதான குருக்கள் விவாகஞ் செய்யலாகாது. இவர்களுடைய ஆயுசில் ஒருதரம் எருசலே

மூக்கு யாத்திரைசெய்தால் புண்ணியம் உண்டென்கிறார்கள். இவர்கள் ஞானஸ்நானம் பண்ணும்பொழுது மூன்றுதரம் தண்ணீரிலே முழுகப்பண்ணி மூன்றுதரம் தண்ணீர் தெளிப்பார்கள். இவர்கள் செத்தவர்களுக்காக வேண்டுதல் செய்வார்கள். அடிக்கடி உபவாசமாயிருப்பார்கள். சிலுவை அடையாளத்தை வரைகிறார்கள். பரிசுத்த ஆவியின் தன்மையை அறியாதவர்களாய் சுய கிரியைகளினாலே இரட்சிக்கப்படுவோம் என்று எண்ணுகிறார்கள். இவர்களுக்குள்ளேயும் சந்நியாசிகளும் மடங்களுமுண்டு.

**அர்மோனி.** **Armoni.** ரிஸ்பாளின் மகன். 2 சாமு $21^{8}$.

**அர்மோன்.** **Chesnut tree.** எபிரெய பாஷையில் இப்பெயர் கொண்ட மரம் அதிக பெரிதும் அழகுள்ளதுமாய் இருக்கும். ஆதி $30^{37}$.

**அர்வனா.** **Araunah.** தாவீதுராஜா குடிமதிப்பு எழுதினபோது உண்டான கொள்ளைநோயை நீக்குவதற்கு இவனுடைய போரடிக்கும் களத்தை அவன் கிரயத்திற்கு வாங்கி அங்கே ஒரு பலிபீடம் கட்டிக் கர்த்தருக்குப் பலிசெலுத்தினான். பிற்பாடு இந்த இடத்திலே தேவாலயம் கட்டப்பட்டது. 2 சாமு 24 அதி. நாளாகமத்தில் இவனுடைய பெயர் ஓர்னான் *(Ornan)*. 1 நாளா $21^{18}$.

**அர்வாத்.** **Arvad.** சீதோனுக்கு வடக்கே பெனிக்கேயருடைய முக்கிய துறைமுகங்களில் ஒன்று. எசே $27^{8}$.

**அர்னான்.** **Arnan.** 1 நாளா $3^{21}$.

**அர்னெப்பர்.** **Harnepher.** 1 நாளா $7^{36}$.

**அர்னோன்.** **Arnon.** இப்பெயர் மோவாப் தேசத்திற்கு வட எல்லையாய் இருக்கின்ற பள்ளத்தாக்குக்கும் அதிற் பாயும் நதிக்கும் சொல்லப்படும். எண் $21^{13}$ நியா $11^{18}$ ஏசா $16^{2}$.

**அலங்கரித்தல்.** **Adorning.**

1. ஆடை ஆபரணத்தாற் சிங்காரித்தல். ஏசா $61^{10}$ 1 தீமோ $2^{9}$ 1 பேது $3^{3}$.

2. குணசீலம். தீத் $2^{9}$ 1 பேது $3^{5}$.

**அலங்காரம்.** **Beauty.**

1. அழகு. 2 சாமு $1^{19}$ ஏசா $13^{19}$.

2. குணத்தின்சிறப்பு. சங் $110^{3}$ நீதி $20^{29}$.

**அலங்கார வாசல்.** **The Beautiful Gate.** அப் $3^{2}$. **தேவாலயம்** காண்க.

**அலமேத்.** **Alameth.** [பாலத்துவம்]. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $7^{8}$.

**அலம்மேலெக்.** **Allamelech.** யோசு $19^{26}$.

**அலரி.** **Willow.** யோபு $40^{22}$ சங் $137^{2}$ ஏசா $15^{7}$.

**அலறுதல்.** **Cry.** ஆதி $27^{34}$ ஏசா $5^{7}$ எரே $25^{36}$.

**அலாமோத்.** **Alamoth.** [சிறு பெண்கள்]. 46-ம் சங்கீதத்தின் முகவுரையை நாம் பார்த்தால் பெண்கள் குரலெடுத்து இன்னிசையோடு அதைப் பாடவேண்டும் என்று தோன்றுகிறது.

**அலெக்சந்தர்.** **Alexanuer.**

1. கிறிஸ்துவின் சிலுவை மரத்தை அவரோடே எடுத்துக்கொண்டுபோன சிரேனே ஊரானான சீமோன் என்பவனுடைய குமாரன். இவனும் இவன் சகோதரனாகிய ரூபும் கிறிஸ்தவர்களாயிருந்தார்கள். மாற் $15^{21}$ ரோ $16^{13}$.

2. ஒரு சப்பாணியைக் குணமாக்கினதினிமித்தம் அப்போஸ்தலர்களைச் சிறைச்சாலையிலே போடுவித்த யூதர் சங்கத்தில் ஒருவன். அப் $4^{6}$.

3. எபேசு என்னும் ஊரில் ஒரு யூதன். அப் $19^{33}$.

4. கிறிஸ்தவனானபின்பு மறுதலித்தவன். 1 தீமோ $1^{20}$.

5. கன்னானாகிய அலெக்சந்தர். 2 தீமோ $4^{14}$.

6. மகா அலெக்சந்தர் *(Alexander the Great)* கிரேக்க தேசத்து ராஜா. இவனுக்கு இஸ்காந்தர் என்றும் பேர். இவன் கி-மு. 336-ஆம் வருஷத்திலே பட்டங்கட்டப்பட்டு பெர்சியா ராஜாவாகிய தாரியு மன்னனை ஜெயித்து இரண்டு நூற்றாண்டுகளாக நிலைநின்ற பெர்சியா ராஜ்யத்தைக் கட்டிக்கொண்டு கங்காநதிமட்டும் எல்லாவற்றையும் ஒரு குடையின்கீழ் ஆண்டுகொண்டிருந்தான். 1 மக்க $1^{1,9}$. கி-மு. 332-ஆம் வருஷத்தில் இவன் பாழாய்க்கிடந்த பழைய தீருவின் கல்லுக்கரடுகளை வாரிப் புதுத் தீருவைப் பிடிக்க, அதாலே கடலைத் தூர்த்து மடுவடைத்தான். அப்போது காசா பட்டணத்துக்கும் அதன் ராஜாவுக்கும் பெலிஸ்தருடைய மற்ற அயல் ஊர்களுக்கும் அழிவு வந்தது. சக $9^{2-5}$ செப் $2^{4}$. பின்பு இவன் எருசலேமுக்கு வந்தபோது யாதுவா என்கிற பிரதான ஆசாரியன் ஜனங்களோடே இவனுக்கு எதிராகப் போய் இவனால் வெகு தயவாய் ஏற்றுக்கொள்ளப்பட்டு பார்சு ராஜ்யம் கிரேக்கராலே கட்டிக்கொள்ளப்படு மென்கிறதின் பேரிலே தானி $8^{21}$ $11^{3}$-லே எழுதிவைத்

திருக்கிற தீர்க்கதரிசனங்களை இவனுக்குக் காண்பித்தான்; இதைக் கேட்டு இவன் தேவாலயத்திலே கர்த்தருக்குப் பலியிட்டான்; மேலும் சமாரியர் இவனைத் தங்கள் கோவிலுக்கு வரச்சொல்லியும் இவனுக்கு கலகம் பண்ணினபோது அவர்களைச் சமாரியா பட்டணத்தை விட்டுத் துரத்தினான் என்பது பாரம்பரியம். அந்தக் காலம்முதல் சிகேம் என்னும் ஊர் சமாரியரின் தேவஸ்தலமாயிருந்தது. யோவா $4^{5}$-லே சீகார் என்று சொல்லப்படுகின்றது.

கி-மு. 326-ஆம் வருஷத்திலே இவன் போருஸ் என்ற இந்து ராஜாவோடே போர்புரிந்து விக்கினத்தோடே அவனை ஜெயங்கொண்டு கலான் என்ற ஒரு பிரபலமான ஞானியைக் கண்டு பேசித் திரும்பிப் பெர்சியா தேசத்துக்குப் போய்ச் சேர்ந்தான். கி-மு. 325-ஆம் இவனுக்குப்பின் வடஇந்தியாவிலே ஒரு கிரேக்க ராஜ்யம் சிலகாலம் உண்டாயிற்று. இவன் தான் சென்றவிடமெல்லாம் வெற்றியடைந்த பின்பு தான் ஜெயிக்கும்படி வேறொரு தேசமும் இல்லை என்று கூறிக் கடைசியிலே மதுவினால் கெட்டழிந்து பாபிலோனுக்கு திரும்பி வந்து பெலன் என்ற விக்கிரக தேவனுடைய கோவிலை அலங்கரிக்கவேண்டுமென் றிருந்தபோது முகான் என்ற அவ்விடத்துச் சாஸ்திரிமார் இவனுக்கு எச்சரிக்கைபண்ணினபடி முப்பத்திரண்டாம் வயதிலே காலம்சென்றான். கி-மு. 323-ஆம் இவனுடைய பிரபுக்கள் அநேகங் கலகங்களைப் பண்ணினபின்பு இவனுடைய ராஜ்யத்தைச் சூரியா, ஆசியா, எகிப்து, மக்கெதோனியா என்று நாலு பிரிவாய்ப் பிரித்துப்போட்டார்கள்.

**அலெக்சந்திரியா.** Alexandria. அலெக்சந்திரியா மத்தியதரைக் கடலோரத்தில் மகா அலெக்சந்தராலே கி-மு. 331-ஆம் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு பட்டணம். இது அதிக சீக்கிரத்தில் முக்கிய வியாபார ஸ்தலமானது. இதில் அரமனைகள்மாத்திரம் 4,000 இருந்தன. இதிலுள்ள ஒரு பெரிய புஸ்தகசாலையில் ஏறக்குறைய ஏழு லட்சம் பிரதிகள் இருந்தன. இங்கேயுள்ள சர்வகலாசாலையில் உலகமெங்கும் கீர்த்திபெற்று விளங்கின அநேக வித்துவான்கள் இருந்தார்கள். ஆதிச்சபையில் மகா வேதசாஸ்திரிகளான கிலேமெந்து, ஒரிஜன், அதனாசி என்பவர்கள் இதில் கல்விகற்ற மாணவர். யூதர்கள் அநேகர் இந்த ஊரிலே வாசமாயிருந்தார்கள். பரி. மாற்கு இதிலேதான் கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தான். அப் $6^{9}$ $18^{24}$ $27^{6}$ $28^{11}$.

**அலெமேத்.** Alemeth. [மறைவிடம்].
1. ஒரு ஊர் = அல்மோன். 1 நாளா $6^{60}$.
2. சவுலின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $8^{36}$.
3. பெகேரின் மகன். 1 நாளா $7^{8}$.

**அலை.** Wave. யோபு $38^{11}$ சங் $107^{25}$ ஏசா $48^{18}$ யாக் $1^{6}$ யூதா $1^{13}$.
'மரண அலைகள்.' 2 சாமு $22^{5}$.

**அலோகேஸ், அல்லோக்கேஸ்.** Hallohesh. எருசலேம் மதிலைக் கட்டினவர்களிற் சிலர். நெகே $3^{12}$ $10^{24}$.

**அல்கூல்.** Halhul. யோசு $15^{58}$.

**அல்தஷ்கேத்.** Altaschit. Altassheth. 'அழிக்காதே' என்னும் அர்த்தங்கொண்ட இப்பதம் 57, 58, 59, 75-ம் சங்கீதங்களின் தலைப்பில் எழுதியிருக்கிறது. இந்தச் சங்கீதங்கள் அப்பெயர்கொண்ட இராகத்தின்படி பாடவேண்டியது. ஒருவேளை ஏசா $65^{8}$-ல் சொல்லியிருக்கிறது இப்பாட்டாயிருக்கலாம்.

**அல்பா, ஓமேகா.** Alpha and Omega. இவை கிரேக்க பாஷையில் முதலும் கடைசியுமான எழுத்துக்களாகையால், இயேசு கிறிஸ்து எல்லாருக்கும் எப்போதும் காரண கர்த்தராய் இருக்கிறார் என்று காட்டும்படி அவருக்கு இப்பெயர் கொடுக்கப்பட்டது. வெளி $1^{8}$ $1^{11}$ $21^{6}$ $22^{13}$.

**அல்பானம்.** Galbanam. தூபத்தோடு கலக்கும் ஒருவிதமான பிசின். யாத் $30^{34}$.

**அல்பேயு.** Alphaeus.
1. அப். யாக்கோபின் தகப்பன். மத் $10^{3}$. இவனுடைய மறுபெயர் கிலேயோப்பாவாக இருக்கலாம். யோவா $19^{25}$ லூக் $24^{18}$.
2. மத்தேயுவின் தகப்பன். மாற் $2^{14}$.

**அல்மோதாத்.** Al-modad. ஆதி $10^{26}$.

**அல்மோன்.** Almon. [மறைவிடம்]. யோசு $21^{18}$. அலெமேத் காண்க.

**அல்மோன் திப்லாத்தாயீம்.** Almon Diblathaim. இஸ்ரவேலர் பிரயாணம் செய்தபோது சந்தித்த இடம். எண் $33^{46}$.

**அல்யா.** Alvah. 1 நாளா $1^{51}$. = அல்வா. ஆதி $36^{40}$.

**அல்யான்.** Alian. 1 நாளா $1^{40}$. = அல்வான். ஆதி $36^{23}$.

**அல்லேலூயா.** Hallelujah. [யேகோவாவைத் துதியுங்கள்]. இது சங் 106, 111 மு. வெளி 19-ம் அதிகாரத்திலும் ஸ்தோத்திரத்தைக் குறிக்கப் பாவிக்கப்பட்டிருக்கிற எபிரெய பதம்.

**அல்லோன்.** Allon.
1. ஓர் பிரபு. 1 நாளா $4^{37}$.
2. ஓர் ஊர். யோசு $19^{33}$.

**அல்லோன்பாகூத்.** Allon-bachuth. [கண்மாரி சொரிந்த இடத்திலுள்ள கர்வாலி மரம்]. பெத்தேலுக்குச் சமீபமாயுள்ள ஒரு ஊர். ஆதி $35^{8}$.

**அல்வா.** அல்யா காண்க.

**அல்வான்.** Alvan. அல்யான் காண்க.

**அவஸ்தை பூசுதல்.** Extreme unction. இது ரோமான் சபையில் ஆசரிக்கப்படுகிற ஏழு சாக்கிரமெந்துக்களில் ஒன்று. நோயாளி மரணத்தறுவாயிலிருக்கும்பொழுது கண்காணியார் ஆசீர்வதித்த எண்ணெயைச் சுவாமியார் கொண்டுவந்து அவனுடைய கண், காது, மூக்கு, கை, பாதமாகிய அவயவங்களில் பூசுவதினால் அவனுடைய ஆத்துமாவுக்குத் தைரியத்தையும் பெலனையும் கொடுக்கிறதென்று நம்புகிறார்கள். ரோமான் சபையார் யாக் $5^{13-15}$-ம் வசனங்களில் இந்தச் சாக்கிரமெந்து ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லுகிறார்கள். நாம் இவ்வசனங்களை உற்றுணர்ந்து பார்த்தால் தேகத்தில் எண்ணெய் பூசுவது அல்ல, விசுவாசத்தோடு ஜெபம் பண்ணுவதே பிரதான காரியமும் அவனைச் சொஸ்தப்படுத்துவதற்கு ஏதுவுமாயிருக்குமென்று நன்கு விளங்கும். அன்றியும் ஆரோக்கியத்திற்காகத் தேகத்தில் எண்ணெய் பூசுவதேயொழிய வியாதிஸ்தன் அதினால் மோட்சகதி அடைவான் என்பதல்ல. அப்போஸ்தலர் நோயாளியின் சுகத்திற்காக எண்ணெய் பூசுங்கள் என்று சொல்லியிருக்கிறதைத் தவிர இதினால் ஆத்துமாவுக்கு யாதொரு நன்மையுமில்லை. மாற் $6^{13}$-ல் காண்கிறபடி பன்னிரண்டு சீஷர்களும் புறப்பட்டுப் போய் அநேக நோயாளிகளைச் சந்தித்து அவர்களுக்கு எண்ணெய் பூசி அவர்களைக் குணமாக்கினார்கள்.

**அவபக்தி.** Ungodliness. தேவ வணக்கம் இல்லாமை. ரோ $1^{18}$ $11^{26}$ 2 தீமோ $2^{16}$ தீத் $2^{12}$.

**அவயவம்.** Member.
1. சரீரத்தின் உறுப்பு. சங் $139^{16}$ ரோ $6^{13.19}$ $7^{23}$ 1 கொரி $12^{12.26}$ கொலோ $3^{5}$.
2. கிறிஸ்துவின் சரீரமாகிய சபையில் சேர்ந்த அங்கத்தவர். எபே $4^{25}$ $5^{30}$.

**அவிசுவாசம்.** Unbelief. தேவ அருளாகிய சத்தியத்தை அங்கீகரியாமை. யோவா $3^{18.36}$ எபி $3^{19}$ $10^{26}$ 1 யோவா $5^{10.12}$.

பூரண விசுவாசமில்லாமை. மத் $14^{30}$ $17^{17}$ மாற் $9^{19}$.

அவிசுவாசிகள் இரண்டுவிதமானவர்கள்.
1. சுவிசேஷத்தை அறியாத புறமதஸ்தர்கள். 1 கொரி $6^{6}$ 2 கொரி $6^{14}$.
2. சுவிசேஷத்தைக் கேட்டும் அதைத் தள்ளிவிடுகிறவர்கள். லூக் $12^{47}$ யோவா $3^{36}$ தீத் $1^{15}$ வெளி $21^{8}$.

சகரியாவின் அவிசுவாசம். லூக் $1^{20}$.

நாசரேத்தூராருடைய அவிசுவாசம். மாற் $6^{5}$.

சீஷர்கள் அவிசுவாசத்தினாலே சந்திரரோகியைக் குணமாக்கக் கூடாதவர்களானார்கள். மத் $17^{16}$.

இஸ்ரவேலரின் அவிசுவாசம். எபி $3^{19}$ $4^{6}$.

பவுல் முதலிற்கொண்ட அவிசுவாசம். 1 தீமோ $1^{13}$.

யூதர்களுடைய அவிசுவாசம். ரோ $11^{20}$.

**அவுழ்தம்.** Medicine. அவுழ்தத்தைப் பற்றி வேதத்தில் சொல்லியிருப்பதை நாம் கவனித்தால் வழக்கமாய் எபிரெயர்கள் வியாதிக்குப் பால், தேன், அத்திப்பழம், வாதுமை, காடி முதலியவற்றைக் கொடுத்துப் போஜனத்தின்மூலமாய்ச் சௌக்கியமாக்கப் பார்ப்பார்கள். கிலேயாத்தின் பிசின் தைலம், ஒற்தலாம், வெந்தயம், சீரகம் வாயுநிவாரணி மருந்தாகவும்; உவர்மண் பூச்சு மருந்தாகவும்; தூதாயீம் லேபன மருந்தாகவும் உபயோகிப்பார்கள். சிலுவையில் அறையப்பட்டவர்களுக்கு மருந்து கலந்த திராக்ஷரசம் நித்திரை மயக்க மருந்தாகக் கொடுப்பது வழக்கம். யாக் $5^{14}$ ஏசா $1^{6}$ $38^{21}$ லூக் $10^{34}$ ஆதி $30^{16}$ $37^{25}$ மத் $23^{23}$.

**அவோத்யாயீர்.** Havoth-jair யோர்தான் நதிக்குக் கிழக்கே பாசான் அல்லது கிலேயாத் நாட்டிலுள்ள சில ஊர்கள். உபா $3^{14}$.

**அழைப்பு.** Calling. சுவிசேஷத்தைநம்பி அதை ஏற்றுக்கொள்ளும்படிக்குக் கடவுளுடைய அருளடைதல். பிலி $3^{14}$ எபி $3^{1}$ 2 தெச $1^{12}$ ரோ $8^{28-30}$. இரேனியுசையர் வேதசாஸ்திரத்தில் அழைப்பையும் மெய்யறிவையுங்குறித்த நாற்பத்தேழாம் அதிகாரத்தில் சொல்லியிருக்கிறதாவது:

1. மனிதர்களெல்லாரும் பாவத்தினால் செத்தவர்களாய் இருக்கிறபடியால், முதலாவது அவர்களை விழிக்கச் செய்யவேண்டும். ஆவியானவர் தேவ ஊழியக்காரருடைய பிரசங்கத்தினாலும் வேத வசனத்தினாலும் [illegible] படிச் செய்யச் சித்தமுள்ளவராயிருக்கிறார். ஆதியிலே கிறிஸ்துவினால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலர்களும் அவர்களுக்குப்பின் ஏற்படுத்தப்பட்டுவருகிற மற்றப் போதகர்

களும் அவருடைய கட்டளையின்படி உலகமெங்கும் போய் இரட்சிப்பை அறிவித்து அந்த இரட்சிப்பையும் அதினாலே வருகிற மகிமையையும் ஏற்றுக்கொள்ளும்படிக்கு யாவரையும் அழைக்கிறார்கள். மத் $28^{19}$ மாற் $16^{15.\ 20}$. இதைக் கேட்கிறவர்களுக்கும் வாசிக்கிறவர்களுக்கும் பரிசுத்த ஆவி தமக்கேற்ற காலத்திலே புத்தியைப் பிரகாசிப்பிக்கிறார். இவர்கள் தங்கள் கெட்ட நிலைமையையும் கிறிஸ்துவினுடைய இரட்சிப்பையும் தெளிவாய் அறிந்து இந்த விசேஷங்களை அதிகமாய் ஆராய்ந்துபார்க்கும்படி மனதுள்ளவர்களாகிறார்கள். அநேகர் அந்த அழைப்புக்கு விரைவாயும் விருப்பமாயும் செவிகொடாமல் இருக்கிறபடியால், கர்த்தர் பலவிதமாய் அவர்களை அழைப்பார். வெளி $3^{20}$ அப் $2^{22.\ 36}$ $3^{13.\ 26}$ $10^{36.\ 43}$ $13^{17.\ 38}$ 2 கொரி $5^{18.\ 21}$. இந்த அழைப்பைக் குறித்துச் சொல்லிய வேறு வாக்கியங்கள் என்னவெனில்: 1 தெச $2^{11}$ $4^{7}$ $5^{24}$ 2 தெச $1^{12}$ $2^{14}$ 2 தீமோ $1^{9}$ 1 பேது $5^{10}$ ரோ $4^{17}$ $9^{11}$ $8^{30}$ $11^{29}$ கலா $5^{8}$ எபே $1^{18}$ $4^{4}$ எபி $3^{1}$ 2 பேது $1^{10}$.

2. இந்த அழைப்பு புற அழைப்பு, அக அழைப்பு என இருவகையா யிருக்கிறது. பரிசுத்த ஆவி புற அழைப்பைப் போதகர்மார் மூலமாயும் அக அழைப்பைத் தாமாகவும் நடத்திவருகிறார். அக அழைப்பு பிதா பாவிகளை இழுத்துக்கொள்ளுதல் என்றும், அவருடைய ஏவுதல் போதனை அருளென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பிதாவினுடைய ஆவியால் ஒருவனுடைய மனம் ஏவப்படுகிறதினாலே அவன் அழைப்புக்குச் செவிகொடுத்துக் கிறிஸ்துநாதரை நம்புவான். யோவா $6^{44-46}$ ரோ $8^{29.\ 30}$. இப்படி நம்புகிறவர்களே கிறிஸ்துவினுடைய ஆடுகள். பிதா இவர்களைக் கிறிஸ்துவுக்குக் கொடுத்தார். இவர்கள் கெட்டுப்போகார்கள். யோவா $10^{26.\ 29}$ $6^{37.\ 40}$. புற அழைப்புக்கும் அக அழைப்புக்கும் செவிகொடாமல் கிறிஸ்துவினுடைய இரட்சிப்பை அசட்டை பண்ணுகிறவர்கள் உண்டு. அவர்கள் கரடான வழிக்கும் கற்பாறைக்கும் முள்ளுள்ள இடத்துக்கும் ஒப்பாயிருக்கிறார்கள். மத் $13^{19.\ 22}$ $20^{16}$ $22^{14}$. அந்த அழைப்பை அவர்கள் அசட்டை பண்ணுகிறபடியால் தண்டனைக்கு உட்படுவார்கள். லூக் $7^{30}$ அப் $28^{24.\ 28}$ 2 தெச $1^{8.\ 9}$. தேவ ஆவி அவர்களுடைய உள்ளத்திலே ஓர் அளவாய்ச் சுவிசேஷத்தின் மகிமையைத் தோன்றப்பண்ணி அவர்களை அழைத்தும், அதை அவர்கள் தங்கள் சொந்த வெறுப்பினாலே எதிர்த்து அசட்டைபண்ணுவதைத் தடுக்க, அல்லது சுபாவப்படியிருக்கிற சுவாதீனத்தை நீக்கமாட்டார். அதைப்பற்றிய முகாந்தரம் நமக்குத் தெரியாது; கடைசியிலே அதுவும் நமக்குத் தெளிவாகும்.

3. இப்படியானால், போதகர்களுடைய பிரசங்கம் அநேகருக்கு வீணாயிருக்குமேயென்று கேட்டால், அது வீணாயிராது. என்னத்தினாலெனில், சுவிசேஷத்தைக் கேட்கப்போகிறவர்கள் இன்னார் என்று அவர்கள் அறியாமலிருக்கிறபடியால், மரணபரியந்தம் யாவருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணவேண்டும். மேலும் ஒருவன் குணப்படமாட்டான் என்று சொல்லுகிறதற்கும் இடமில்லையே. இன்றைக்கு நம்முடைய அழைப்புக்குச் செவிகொடாதவன் ஒருவேளை நாளைக்கு அல்லது வருகிற வருஷத்தில் அல்லது கடைசி நேரத்தில் செவிகொடுப்பான். இயேசுநாதர் போதித்தபடி, சிலர் அதிகாலையிலும் சிலர் மூன்றாம்மணி வேளையிலும் சிலர் ஆறாம் ஒன்பதாம்மணி வேளைகளிலும் சிலர் பதினோராம்மணி வேளையிலும் அழைக்கப்படுகிறார்கள். மத் $20^{2.\ 7}$. பவுல் அப்போஸ்தலன் சொல்லுகிறபடி போதகர்கள் இரட்சிக்கப்படுகிறவர்களுக்குள்ளும் கெட்டுப்போகிறவர்களுக்குள்ளும் தேவனுக்குக் கிறிஸ்துவின் நற்கந்தமாயிருக்கிறார்கள். கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே மரணத்திற்கு ஏதுவான மரணவாசனையாகவும் இரட்சிக்கப்படுகிறவர்களுக்குள்ளே ஜீவனுக்கு ஏதுவான ஜீவவாசனையாகவும் இருக்கிறார்கள். 2 கொரி $2^{15.\ 16}$. ஒருதிறத்தாரிடத்தில் தேவநீதியும் மற்றத்திறத்தாரிடத்தில் அவருடைய இரக்கமும் விளங்கும்; ஆதலால் உண்மையுள்ள போதகர்களுடைய பிரசங்கம் வீணாய்ப்போகாது. மேலும் சுவிசேஷத்தைக் கேட்கிறவர்களில் அநேகர் கிறிஸ்துவினிடத்தில் உடனே சேராமல்போனாலும், அவர்கள் அதிகமாய்ப் பாவஞ்செய்யாமல் சற்றே யோக்கியமாயும் சன்மார்க்கமாயும் நடக்கிறதற்கு ஏவப்படுவார்கள். அதுவும் பிரயோசனமல்லவா? ஆதலால் போதகர்கள் எப்பொழுதும் யாவரையும் கிறிஸ்துவினிடத்துக்கு அழைக்கவேண்டும். சுவிசேஷ வசனத்தின் மூலமாய்ப் பாவிகளை இரட்சிக்கவேண்டுமென்று தேவனுடைய கட்டளையிருந்தும், போதகர்கள் தங்கள் வீணான யோசனையினாலே அதைப் பொதுவாக யாவருக்கும் போதியாமல் இருக்கிறதினால், மற்றவர்கள் சத்தியத்தை அறியாததினால் வரும் குற்றமெல்லாம் அப்போதகர்களைச் சாரும்.

தேவ ஆவியின் அழைப்பு நம்முடைய மறுபிறப்புக்கும் விசுவாசத்திற்கும் ஆரம்பமானது.

**அளவு, நிறை ழ. Weights and Measures.**

**குறிப்பு.**—இதில் இங்கிலீஷ், தமிழ் அளவு நிறை முதலானவற்றின் பின்ன இலக்கங்களை நுட்பமாய்க் கணியாமல் உத்தேசம் இவ்வளவு என்று போட்டிருக்கிறோம்.

## I. நீட்டல் அளவை

### 1. பழைய ஏற்பாட்டில் வழங்கியிருக்கும் நீட்டல் அளவை

எபிரெயருக்குள் அரசன் கந்தாயம் வாங்குவதற்காக அளக்கும் நீட்டல் அளவை பொதுவான அளவையைப்பார்க்கிலும் $\frac{1}{6}$ நீளம்.

### நீட்டல் அளவையின் விவரம்

| | அரசனுக்குரிய அளவை. | பொதுவான அளவை. |
|---|---|---|
| 1. விரற்கடை. | சுமார் 1 அங்குலம். | $\frac{3}{4}$ அங்குலம். |
| 2. உள்ளங்கை, (4 விரற்கடை). | $3\frac{1}{2}$ ,, | 3 ,, |
| 3. சாண், (12 விரற்கடை). | $10\frac{1}{4}$ ,, | 9 ,, |
| 4. முழம், (2 சாண்). | $20\frac{1}{2}$ ,, | 18 ,, |
| 5. கோல், (6 முழம்). | 124 ,, | 106 ,, |

**குறிப்பு.**—'ஒருநாட் பிராயணம்.' எண் $11^{31}$. இதின் தூரம் திட்டமாய்த் தெரியாது. 'ஒரு முழம்.' நியா $3^{16}$. இதில் எபிரெய பாஷையிற் சொல்லியிருக்கிற *Gomed* என்னும் பதத்தை 'முழம்' என்று மொழிபெயர்த்திருக்கிறது. ஆனால் இதின் சரியான அளவு எவ்வளவு என்று தெரியாது.

### 2. புதிய ஏற்பாட்டிலுள்ள நீட்டல் அளவை

| தமிழ். | கிரேக்கு. | | |
|---|---|---|---|
| 1. பாகம். | *Orguia.* | அப் $27^{28}$. | 6 அடி. |
| 2. ஸ்தாதி. | *Stadion.* | வெளி $14^{20}$. | 600 ,, |
| 3. மைல். | *Milion.* | மத் $5^{41}$. | 1614 கஜம். |

இங்கிலீஷ் மைலுக்கு இது கொஞ்சம் குறைவு.

**குறிப்பு.**—'ஓய்வுநாட் பிரயாணம்.' அப் $1^{12}$. இது பழைய ஏற்பாட்டிற் சொல்லியிருக்கவில்லை. வேதசாஸ்திரிகள் ஓய்வுநாளில் இரண்டாயிரம் முழத் தூரத்திற் கப்பால் ஒருவரும் பிரயாணம் செய்யக்கூடாது என்று கட்டளை செய்திருந்தார்கள்.

## II. சதுர அளவை

'பத்து ஏர் நிலம்.' ஏசா $5^{10}$. ஒருநாளில் பத்து ஏர் மாடு உழக்கூடிய நிலம். அதாவது: 10 ஏக்கர் நிலம்.

## III. அளவு

### 1. பழைய ஏற்பாட்டில் வழங்கும் அளவு

| எபிரெய. | தமிழ். | இங்கிலீஷ். | தமிழ் (சென்னைப்படி). |
|---|---|---|---|
| *Homer* ... / *Kor* ... | கலம். / மரக்கால். | 704 *pints.* | 44 மரக்கால். |
| *Lethek* ... | ஒன்றரைக் கலம். ஓசி $3^{2}$. | 352 ,, | 22 ,, |
| *Ephah* ... / *Bath* ... | எப்பா. / குடம். | 72 ,, | $4\frac{1}{2}$ ,, / 36 படி. |
| *Seah* ... | படி. | 24 ,, | 12 ,, |
| *Hin* ... | படி. | 12 ,, | 6 ,, |
| *'Omer* ... / *'Issaron* ... | ஓமர் 'ஒரு மரக்காலில் பத்தில் ஒரு பங்கு.' | $7\frac{1}{8}$ ,, | $3\frac{1}{2}$ ,, |
| *Kab* ... | காற்படி. | 4 ,, | 2 ,, |
| *Log* ... | ஆழாக்கு. | 1 ,, | $\frac{1}{2}$ ,, |

**குறிப்பு.**—1. 'கைப்பிடி.' லேவி $2^{2}$. இது கட்டாயமான அளவு அல்ல. இது இவ்வளவுதான் கொண்டதெனத் திட்டமாய்த் தெரியாது.

2. 'மரக்கால்.' ஏசா $40^{12}$. மூலபாஷையிலுள்ள *Shalish* என்னும் இந்த அளவும் இவ்வளவு எனச் சரியாய்த் தெரியாது.

**2. புதிய ஏற்பாட்டில் வழங்கும் அளவு**

பழைய ஏற்பாட்டில் வழங்கிவந்த மூன்று அளவுகளுக்குப் புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் கிரேக்க பதங்களை வழங்கியிருக்கிறார்கள்.

| கிரேக்கு. | எபிரெய. | தமிழ். | வசனம். |
|---|---|---|---|
| *Batos.* | *Bath.* | குடம். | மத் $16^{6}$. |
| *Saton.* | *Seah.* | படி. | மத் $13^{33}$. |
| *Koros.* | *Kor.* | கலம். | லூக் $16^{7}$. |

இவைகளைவிட இன்னும் மூன்று அளவுகள் சொல்லுவார்கள். அவையாவன:

*Choenix* 'படி.' வெளி $6^{6}$. இது சென்னைப் படிக்குச் சரி.

*Modios* 'மரக்கால்.' மத் $5^{15}$. சென்னை $5\frac{1}{2}$ படிக்குச் சரி.

*Metretes* 'குடம்.' யோவா $2^{6}$. சென்னை 36 படி.

## IV. நிறை

**1. பழைய ஏற்பாட்டில் வழங்கும் நிறை**

பழைய ஏற்பாட்டில் முழுநிறை, பாதி நிறை என இரண்டு நிறைகள் உண்டு.

'அரசனுக்குரிய நிறை.' 2 சாமு $14^{26}$.

'பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல்.' யாத் $38^{26}$.

| | | முழு நிறை. | பாதி நிறை. |
|---|---|---|---|
| 1. *Gerah.* | கேரா. ($\frac{1}{20}$ சேக்கல்). | $\frac{1}{24}$ தோலா. | $\frac{1}{48}$ தோலா. |
| 2. *Beka.* | $\frac{1}{2}$ சேக்கல். | $\frac{1}{2}$ தோலா. | $\frac{1}{4}$ தோலா. |
| 3. *Shekel.* | சேக்கல். | 1 தோலா. | $\frac{1}{2}$ தோலா. |
| 4. *Maneh.* | இருத்தல். | $1\frac{1}{2}$ பவுண்ட். | $\frac{3}{4}$ பவுண்ட். |
| 5. *Kikkar.* | தாலந்து. | 98 பவுண்ட. | 49 பவுண்ட். |

**2. புதிய ஏற்பாட்டிலுள்ள நிறை**

*Litra.* 1 இருத்தல் = 12 அவுன்சு. யோவா $12^{3}$.

**குறிப்பு.**—'தாலந்து.' மத் $25^{15}$. இது நிறையல்ல, நாணயம். லூக் $19^{13}$-ல் சொல்லியிருக்கும் இருத்தலும் ஒரு நாணயந்தான்.

**அளவுகோல். Measuring Rod.** மூலபாஷையில் 'அளவு கோலுக்கும்' 'நாணலுக்கும்' ஒரே பதம். நாணல் அளவுகோலுக்கு உபயோகிக்கப்பட்டு வந்தது. எசே $40^{3}$ வெளி $11^{1}$.

**அளவு நூல். Measuring line.** நூல் காண்க.

**அறிவித்தல் புஸ்தகம். The Book of Revelation.** வெளிப்படுத்தின விசேஷம் காண்க.

**அறிவு. Knowledge.**

I. மனுஷர் அடையும் அறிவு.

(*a*) பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் அறிவு என்பது கல்வியினால் உண்டாகும் ஞானத்தை அல்ல கடவுள் அருளும் நீதி நியாயத்தைக் கிரகிக்கும் அறிவைக் குறிக்கிறது. ஏசா $11^{2}$. மேசியாவின் ராஜ்யத்தில் உள்ளவர்கள் தேவனிடத்திலிருந்து அறிவு பெற்றுக்கொண்டவர்கள். ஏசா $54^{13}$. தீர்க்கதரிசிகள் முதலானவர்கள் தேவன் அருளும் அறிவை அடைந்தவர்கள் என்றாலும் சாஸ்திரம் முதலிய விஷயங்களைப்பற்றிய கல்வி ஞானமில்லாதவர்களாய் இருந்திருக்கலாம். யோபு 38, 39 அதி.

(*b*) புதிய ஏற்பாட்டில் சுவிசேஷங்களில் அறிவு என்னும் பதம் சன்மார்க்கத்துக்குரிய அறிவைக் குறிக்கிறது. இயேசுகிறிஸ்து கடவுளைப்பற்றிய பூரண அறிவுடையவர். இந்த அறிவு மனுஷர்களில் இல்லாவிட்டால் அவர்கள் இருளிலே நடக்கிறார்கள். மத் $5^{8}$ யோவா $7^{17}$ $17^{3}$. பவுல் எழுதின நிருபங்களில் கடவுளைக்குறித்த அறிவு ஆவியானவரின் ஈவு எனச் சொல்லப்பட்டிருக்கிறது. 1 கொரி $1^{26}$ ௵ $2^{6}$ $12^{8}$.

அன்பு அறிவிலும் மேலானது. 1 கொரி $8^{1}$.

பொய்யான அறிவு. 1 தீமோ $6^{20}$ கொலோ $2^{8}$.

மெய்யான அறிவு எல்லாம் இயேசுகிறிஸ்துவுக்குள் அடங்கியிருக்கிறது. கொலோ $2^{3}$.

பவுல் கி-பி. 63-ல் தீத்துவுக்கு நிருபத்தை எழுதும்போது 'தேவபக்திக்கேதுவான சத்தியத்தை அறிகிற அறிவு' என்பதைப்பற்றிப் பேசுகிறான். தீத் $1^{3}$.

II. தெய்வீக அறிவு.

கடவுள் சர்வஞானம் உடையவர் என வேதவாக்கியங்கள் கூறுகின்றன. இதை விவரித்துச் சொல்லுதல் அனாவசியம்.

III. இயேசுகிறிஸ்து மனித அவதாரமாயிருந்த காலத்தில் அவருக்கு தெய்வீக தன்மை யிருந்தாலும், அவர் நமக்குத் தெளிவாய்த் தெரியாதவண்ணமாய்த் தம்மை மனுஷ சுபாவத்திற்கும் அறிவுக்கும் உட்படுத்தினதை நாம் சில விஷயங்களைக்கொண்டு அறிந்துகொள்ளக்கூடும். பிலி $2^{7}$.

(*a*) புத்தியிலே விருத்தியடைந்தார். லூக் $2^{52}$.

(*b*) அவர் கேட்ட சில வினாக்கள். மாற் $6^{38}$ யோவா $11^{34}$.

(*c*) **ஆச்சரியப்பட்டார்.** மத் 8:10.

(*d*) ஜெபம் செய்தார். மத் 26:39.

(*e*) சிலுவையில் அவர் சொன்ன வாக்குகள். மாற் 15:34.

(*f*) தமக்கும் மறைபொருளாக வைத்த இரகசியம் உண்டு என்றார். மாற் 13:32.

(*g*) அவர் தமது சுவிசேஷத்தைப் பூரண ஞானத்தோடும் அதிகாரத்தோடும் அருளினார். ஆனால் கல்வி விருத்திக்குரிய சாஸ்திரங்களைப்பற்றி நமக்குப் புது சமாசாரங்களை அறிவிக்கவில்லை.

**அறுபோத்.** **Arubboth.** 2 இரா 4:10.

**அறுப்புக்காலம்.** **Harvest Time.** பலஸ்தீனு தேசத்தில் யோர்தான் நதியை அடுத்த நிலங்கள் பள்ளமும் செழிப்புமாயிருப்பதினால் அங்கே அறுப்புக்காலம் கொஞ்சம் முந்தியும் மலைநாடுகளில் கொஞ்சம் பிந்தியும் தொடங்கும். அறுப்புக்காலம் வழக்கமாய்ச் சித்திரை துவங்கி வைகாசி கடைசிவரையும் ஏழுவாரம் நடக்கும். கோதுமை அறுக்கிறதற்கு இரண்டு வாரத்துக்கு முந்தி வாற்கோதுமை அறுப்பார்கள். வயல்களின் ஓரங்களில் நிற்கும் பயிரை அறுக்காமலும் தரையில் விழுந்து கிடக்கும் கதிர்களை எடுக்காமலும் அவைகளை ஏழைகளுக்காக விட்டுவிடுவார்கள். லேவி 19:9 23:15 உபா 16:9 24:19 ரூத் 2:2.

**அறுமீன்.** **Pleiades.** **நட்சத்திரம்** காண்க.

**அறை.** **Room, Chamber.** **வீடு** காண்க.

**அறைகிறது.** **Smiting.** **ஆக்கினை** காண்க.

**அற்கேவியர்.** **Archevites.** பாபிலோனியாவிலிருந்து சமாரியாவுக்குக் குடியேற்றப்பட்ட ஜனம். எஸ்று 4:9.

**அற்புதம்.** **Miracles.**

I. **சத்திய வேதம் அற்புதங்களைக் குறித்துச் சொல்வதென்ன?** திருவேதத்தில் பல அற்புதங்களைப்பற்றி வாசிக்கிறோம். தேவ ராஜ்யத்தின்பொருட்டு எக்காலங்கள் முக்கியமோ அக்காலங்களிலே அற்புதங்கள் மிகுதி. உதாரணங்கள்: இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து இரட்சிக்கப்பட்டு கானான் நாட்டைக் கட்டிக்கொண்ட காலம்; எலியா, எலிசா என்ற தீர்க்கதரிசிகள் இருந்த காலம்; இயேசுநாதர் இவ்வுலகத்தில் தங்கிய காலம்; திருச்சபை உண்டான காலம்.

சத்தியவேதத்தில் அற்புதங்களுக்குச்சொல்லியிருக்கும் முக்கியமான மூன்று பெயர்கள் ஆவன: அற்புதம், பலத்த செய்கை அல்லது வல்லமை, அடையாளம் அல்லது அதிசயம். உபா 34:10 யோவே 2:30 மத் 24:24 யோவா 4:48 அப் 2:19-22 ரோ 15:18 2 கொரி 12:12 ஃ. அற்புதங்களால் கவனிப்பும் பிரமிப்பும் உண்டாகிறதினால் அவற்றிற்கு அற்புதமென்று பெயர். அவை சிருஷ்டியின் சாதாரண முறைமைக்குப் பொருந்தாத சம்பவங்களாதலின் அவற்றால் பிரமிப்பு. தேவசெயலென்று விளக்கிக் காட்டிய தேவவல்லமை அவற்றால் வெளிப்படும். ஆகையால் அவைகளுக்கு வல்லமை அல்லது பலத்த செய்கை என்று பெயர். லூக் 11:20 மத் 12:28 லூக் 4:18.

அற்புதத்தால் விளங்கும் தேவவல்லமைக்கும் அற்புதம் செய்வோனது மனதுக்கும் இணக்கம் என்ன? அற்புதம் செய்வோன் தேவவல்லமையைத் தன்னைத் தெரியப்படுத்தும் கருவியாய் மாத்திரமல்ல, அது தேவச்செயலை அறிவிக்கும் சாட்சியாய் மாத்திரமல்ல, தன் சுய சித்தத்தோடு அதைக்கொண்டு புதுமை செய்கிறான். அற்புதங்கள் கடவுளுக்கே உரிய கிரியைகளென்று வேதம் சொல்லுவது மெய். யோவா 10:37 5:36 10:25 லூக் 5:17. ஆயினும் பலம் குறைந்த கடைமகனால் தேவனது வல்லமை கிரியை செய்யாது. ஆதலால் அற்புதம் செய்வதற்கு விசுவாசம் வேண்டுமென்று கிறிஸ்து சொல்லுகிறார். மாற் 16:17. விசுவாசம் தனித்து அற்புதம் செய்யக்கூடியதல்ல. ஆகிலும் விசுவாசமின்றி தெய்வீக அற்புதம் செய்ய முடியாது. மத் 17:19, 20. அப்படியிருக்க அற்புதம் செய்வோன் அதைத் தன் சொந்த கிரியையாகவும் செய்கிறான். ஆகையால் (மாற் 5:30) இயேசுவுக்குத் தெரியாமல் அவரிலிருந்து அற்புத வல்லமை புறப்பட்டது என்று பொருள்படாது. மத் 13:54. இவ்வாக்கியத்தால் அற்புதமும் ஞானமும் கூடியிருக்குமென்பது தெளிவு. புதுமைகாட்ட அற்புதச் செய்கைக்காரருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கடவுளின் அதிகாரமே அவர்களை இதற்குச் சமர்த்தராக்கும். மத் 9:6-8 லூக் 9:1. ஆதலால் இயேசுநாதர் யோவா 5:36-ல் கடவுள் தமக்குக் கிரியை செய்யக் கற்பித்தார் என்கிறார். அற்புதம் பண்ணுகிறவன் தான் அதைச் செய்யக்கூடியவனென்று அறிவான். அவன் இஷ்டத்துக்கேற்க எப்படி எங்கெங்கே தனக்குத் தேவவல்லமை வேண்டுமோ அப்படி அங்கங்கே அவனுக்குக் கிடைக்கும் எனினும் கிறிஸ்து செய்த அற்புதங்களுக்கும் வேதத்தில் சொல்லியிருக்கும் மற்ற அற்புதக்காரர் செய்த அற்புதங்களுக்கும் பெரிய வேற்றுமை உண்டு. இவர்களுக்கு விசுவாசம் வேண்டியிருக்க கிறிஸ்துவுக்கும் விசுவாசம் வேண்டுமென்று சொல்லப்படாது. அவருக்குக்

கடவுளோடு இருக்கும் சம்பந்தம் ஒப்புவமையற்றது. யோவா $14^{10, 11}$. ஆகையால் மற்றவர்கள் யாவரும் சொல்லக்கூடாத வண்ணமாக இயேசு தமது செய்கை பிதாவின் செய்கைக்கு இசையும் என்று சொன்னார். யோவா $5^{17}$. அற்புதம் செய்யும்படி இயேசுவுக்குப் பிதாவால் அதிகாரம் கிடைத்தது. மத் $9^{6-8}$. அவர் சீஷரோ அவராலே அதிகாரம்பெற்று (லூக் $9^{1}$ மாற் $16^{17}$) அவர் நாமத்திலே அற்புதம் செய்தார்கள். அப் $3^{6-16}$ $4^{9, 10}$ $16^{18}$.

பழைய ஏற்பாட்டின் காலத்தில் நடந்த அற்புதங்கள் கிறிஸ்து செய்த அற்புதங்களுக்கு வித்தியாசமானவை. பழைய ஏற்பாட்டின் காலத்தில் நடந்த வல்லமைகள் வரப்போகிற இரட்சிப்புக்காக உலகத்தைச் சரிப்படுத்தும்படி கடவுள் புறச்சாதியாரையும் சமய நிலைதவறின யூதரையும் தண்டிக்கப் போகிறார் என்பதைக் குறித்தன. ஆகையால் கிறிஸ்து உலகத்தில் வருமுன் நடந்த அடையாளங்கள் பலமுறையும் ஆக்கினைக்குரிய அற்புதங்கள். இயேசுநாதர் ஏராளமும் பலவகையுமான அற்புதங்களைச் செய்தார். மத் $8^{16}$ $9^{35}$ $14^{35, 36}$ $19^{2}$ $11^{2-5}$ லூக் $7^{18-22}$. அவர் உதவியின்பொருட்டும் தேற்றத்தின்பொருட்டும் அற்புதங்கள் செய்தார். லூக் $9^{54-56}$ யோவா $3^{17}$ யாத் $7^{12}$ 2 இரா $1^{9-17}$ $2^{23, 24}$. மத் 12-ம் அதி.

கிரேக்க பாஷையில் அற்புதங்களுக்கு மூன்றாம் பதத்துக்கு அடையாளம் அல்லது அதிசயம் என்று அர்த்தமாம். தமிழ் வேதத்தில் இதற்கு அடையாளம் என்றுமாத்திரம் சொல்லியிருக்கிறது. புதிய ஏற்பாட்டிலுள்ள அற்புதங்களின் நோக்கம்: முதலாவது அற்புதம் செய்வோரைக் கடவுள் அனுப்பியவராக ரூபிப்பதும் (2 கொரி $12^{12}$), இரண்டாவது விசேஷமாய் பரலோக ராஜ்யம் வரப்போகிறதையும் வந்திருக்கிறதையும் காண்பிப்பதுமாம். ஆகையால் அவற்றிற்கு 'அடையாளம்' என்று பெயர். உதாரணமாக கிறிஸ்து செய்த புதுமைகள் அவரே பரலோக ராஜ்யத்தை ஸ்தாபித்த இரட்சகர் என்பதற்கும் (மத் $12^{28}$ லூக் $11^{20}$), தேவ ராஜ்யம் எல்லாத் தீமையையும் நீக்கி இரட்சணியத்தை உலகத்தாருக்கு உண்டாக்கும் என்பதற்கும் (மத் $11^{5}$) அடையாளங்களாம்.

திருவேதத்தின் அற்புதங்கள் பரலோக ராஜ்யத்தின்பொருட்டு நடந்ததால் அவை தெய்வீக செய்கைகளாக மெய்ப்பட்டன. பிசாசுக்குரிய அற்புதங்கள் மனிதரைச் சத்தியத்துக்குக் கீழ்ப்படியப்பண்ணாமல் அதற்கு விரோதமாய்ச் செய்யத் தூண்டும். உபா $13^{1-5}$. ஓர் அற்புதத்தின் தன்மையை உணர்ந்துகொள்வதற்கு எப்போதும் அத்தோடு கூடியிருக்கும் அறிவிப்பையும் நோக்கத்தையும் நன்றாய்க் கவனித்தறியவேண்டும். இது தேவனது வசனத்திற்கும் நோக்கத்திற்கும் அமைந்தால் அவ்வற்புதம் தெய்வச்செயலென்று நம்பலாம். மற்றப்படி அது பிசாசின் செயலும் பொய் அற்புதமுமாம். சத்திய வேதத்தால் குறிப்புற்ற புதுமைக்காரர் தாங்கள் செய்த தீங்கை யனுபவிக்கும் சிலருக்கு மாத்திரமே அற்புதங்களால் உதவி புரிந்தார்கள். லூக் $4^{25-27}$. ஏனெனில் இரட்சிப்பின் நிறைவு இம்மையில் அல்ல மறுமையிலே வரும். ஆகையால் அற்புதங்கள் மோட்சத்தை முன் காட்டும் மெய்த் தீர்க்கதரிசனங்களென்று சொல்லலாம்.

திருவேதத்தில் சொல்லப்பட்ட மெய் அற்புதக்காரன் எவனும் தற்புகழ்ச்சியின் நிமித்தமும் அதிகாரப் பிரியத்தினிமித்தமும் லௌகீக நோக்கத்தினிமித்தமும் அற்புத அடையாளம் செய்யவில்லை. வேடிக்கைக்கென்று அவர்கள் வல்லமை நடப்பிக்கவில்லை. அற்புதம் செய்யும்படி சமயம் தேடவில்லை. அற்புதம் செய்யாவண்ணம் முயற்சி எடுத்தார்கள். இயேசுநாதர் அற்புதம் செய்வதல்ல சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதே தமது வேலையில் முக்கியமென்று தெளிவாகக் காட்டினார். மாற் $1^{33-39}$ லூக் $4^{42-44}$. அவர் யூதரின் விநோத ஆசைக்கு ஒருபோதும் இடங்கொடுக்கவில்லை. மத் $12^{38-42}$ லூக் $11^{29-32}$ மத் $16^{1-4}$ யோவா $4^{48}$. அதிசயங்காணாமல் விசுவாசிக்கிறவர்களைப் புகழுகிறார். யோவா $20^{29}$. அவிசுவாசிகள் அற்புதங்களைக் கண்டு விசுவாசமடையும்படி அவர் புதுமை காட்டவில்லை. இருந்த விசுவாசத்தைப் பலப்படுத்தும்படி புதுமை காட்டினார். யோவா $2^{11}$. ஆகையால் அற்புதம் செய்யுமுன் விசுவாசம் வேண்டுமென்கிறார். மாற் $9^{23}$. விசுவாசமற்றவர்களிடத்தில் அற்புதம் செய்யவில்லை. மத் $13^{58}$ மாற் $6^{5, 6}$. பாவத்தையும் அதனாலுண்டாகும் எல்லாத் தீங்குகளையும் அழிப்பது அவரது இரட்சணிய வேலையானதால் அதிசயங்கள் செய்தார். மாற் $2^{3-12}$.

II. **அற்புதமாவதேன்ன?** அற்புதம் இரண்டுவிதம். உள்ளான அற்புதம் ஒன்று, புறம்பான அற்புதம் ஒன்று. அல்லது மனத்துக்குரிய அற்புதம் ஒன்று, சடத்துக்குரிய அற்புதம் ஒன்று. மனத்துக்குரிய உள்ளான அற்புதமானது தன் சொந்தப் பலத்தினாலும் வினாவினாலும் கடவுளண்டை சேரக்கூடாத மனிதனை உள்ளத்தில்

பிடித்து கடவுளிடம் இழுக்கும் தேவ கிருபையின் செயல். தேவ கிருபை இன்றியே இரட்சிப்புக் கிடையாது. தேவ கிருபை மனிதனைத் தேவ பலத்தால் மனமாற்றவேண்டும். இந்த மனதுக்குரிய அற்புதம் கிறிஸ்துமார்க்கத்தின் மூல அற்புதம். இந்த உள்ளான அற்புதத்தை இல்லையென்று மறுக்கிறவன் கிறிஸ்துமார்க்கம் முழுவதையும் நிராகரிக்கிறான். ஆனாலும் மனதுக்குரிய அற்புதத்தை விவரிக்காமல் இங்கு புறம்பான சடத்துக்குரிய அற்புதத்தைப் பரிசோதிப்போம். சடத்துக்குரிய அற்புதமானது நமது அன்றாடக அனுபவத்தினால் விளங்காததும், நாம் அறிந்த இயற்கையான காரணங்களால்மாத்திரம் துலக்கமாகாததும், சடத்துக்கு மேலே கர்த்தர் ஒருவர் இருக்கவேண்டுமென்று காட்டுகிறதுமான சம்பவம். இந்த அர்த்தத்துக்கு ஏற்றபடி சரியாய்ப் பேசின ஒப்பனையான அற்புதங்கள் (*Relative miracles*) அற்புதங்களல்ல, முற்றான அற்புதங்கள் (*Absolute miracles*) மட்டுமே அற்புதங்களென்று சொல்லவேண்டும். ஒப்பனையான அற்புதமென்னவெனில், நாம் கண்டு அதிசயப்பட்டு முதலில் இன்னவிதமாயாயிற்று என்று சொல்ல முடியாதபோதிலும், சரியாய் நிதானிக்கிறபடி அது சிருஷ்டியின் சாதாரண முறைமைக்கு அமையவே நடந்த சம்பவம். இப்பேர்ப்பட்ட சம்பவங்களும் தேவச்செயலென்று விசுவாசி சொல்வான் (**பராமரிப்பு** காண்க). ஆகிலும் சரியாய்ச் சொல்லின் இவை அற்புதமல்ல. முற்றான அற்புதம் மனிதன் கிரகிக்காததும், ஒருபோதும் கிரகிக்க முடியாததும், சிருஷ்டியின் சாதாரண முறைமையின்படி தோன்றாததுமாயிருந்து நேரே கடவுளின் செயலால் உண்டான சம்பவம். சத்திய வேதத்தில் சொல்லப்பட்ட அற்புதங்களில் பலவற்றை ஒப்பனை அற்புதங்களென்று சொல்லக்கூடுமாயினும் வேறு பலவற்றை முற்றற்புதங்கள் தானென்று சொல்லவேண்டும்.

அற்புதம் சிருஷ்டியின் முறைமையை அழிக்கும் சம்பவம் என்று சொல்லலாகாது. கடவுள் உலகத்தைச் சிருஷ்டித்தபோது அது இனிமேல் ஒழுங்காய் இயங்கும்பொருட்டு சில பிரமாணங்களை ஏற்படுத்தினார். இப் பிரமாணங்களுக்குச் சிருஷ்டிப் பிரமாணங்கள் (*Laws of nature*) என்று பெயர். திருஷ்டாந்தமாக, விதை பூமியில் அழிந்து முளைத்துப் பயிராகி உலர்ந்துபோவதும்; ஒரு கல்லை உயர எறிந்தால் அது மறுபடியும் தரையில் விழுவதும் சிருஷ்டிப் பிரமாணங்களாம். சிருஷ்டிப் பிரமாணங்கள் ஒன்றோடொன்று நன்றாய் இணைந்திருப்பதால் உலகம் ஒழுங்காய் இயங்கும். சிருஷ்டிப் பிரமாணங்களில் ஒன்றை அழித்தால் உலகம் முழுவதும் அழிந்துபோவது நிச்சயம். அப்படியிருக்க, அற்புதம் ஒரு சிருஷ்டிப் பிரமாணத்தை அழித்து அவ்வாறு சிருஷ்டியின் முறைமையை நிர்மூலமாக்கும் சம்பவம் என்று சொல்லலாகாது. அற்புதம் சிருஷ்டிப் பிரமாணங்களாலும் சிருஷ்டிப் பிரமாணங்களுக் கிணைந்தும் நடந்த சம்பவம். இதெப்படியென்றால் கடவுள் சிருஷ்டியில் நமக்குத் தெரிந்ததும் தெரியக்கூடியதுமான வைகளோடு நமக்குத் தெரியாதவண்ணமாய் நடந்த சில அற்புதங்களை இசைக்கிறார். இவைகளைத் தீர உணர்ந்தறிவது நம்மால் கூடாது. கூடுமானால் அற்புதமாகாது. அற்புதமானதால் அது நமக்கு எப்போதும் இரகசியமாம்.

**III. அற்புதத்தைக் குறித்து கடந்தகாலத்து வித்துவான்கள் சொல்வதென்ன?** ஆதித் திருச்சபைகாலத்தில் ஒருவனும் அற்புதம் உண்மையென்பதை ரூபிக்க வேண்டுமென்று நினைக்கவில்லை. அற்புதம் உண்மையாய் நடந்தது என்று எல்லாரும் ஒத்துக்கொண்டார்களே. அவிசுவாசிகளின் நிராகரிப்புக்கு எதிராக அற்புதம் நடக்கக் கூடுமென்று முதன்மையாய் உறுதி சொன்னவர் ஒரிகேன் (*Origen* கி-பி. 185-254). அற்புதம் சிருஷ்டியின் முறைமைக்கு வேறுபாடல்லாமல் சிருஷ்டியின் முறைமைக்கு மேலானதேயென்று முதன்மையாய்ச் சாதித்தவன் அவனே. அகுஸ்தீன் (*Augustine* கி-பி. 354-430) அற்புதத்தை மெய்ப்பிக்க உலகத்திலுள்ளவையும் நடந்தவையு மெல்லாம் அற்புதம், அதாவது கடவுள் செய்த செயலென்று கற்பித்தான். அதிசயம் சிருஷ்டி முறைமைக்கு விரோதமன்றி சிருஷ்டி முறைமையைப்பற்றிய நமது அறிவுக்கே விரோதமென்று சொன்னான். அற்புதம் உண்டாவதெப்படி என்ற வினாவுக்கு அவன், கடவுள் உலகத்தைப் படைத்தபொழுது அதில் அற்புத விதைகளை விதைத்துவிட்டார். ஏற்றகாலத்தில் இந்த விதைகள் தானாய் முளைக்க அற்புதங்கள் நேர்ந்தன என்றான். இந்த உபதேசத்தாலே கடவுள் உலகத்தைப் படைத்து இயங்கப் பண்ணிய பின் அதைக் கவனிக்காமல் விட்டாரென்று சொல்லும் பொய்ப் போதகம் (*Deism*) உண்டாயிற்று. அதுமுதல் வித்துவான்கள் அற்புதம் என்பதற்கு வேறு அர்த்தம் சொன்னார்கள். அல்பெர்டு மக்னு (*Albertus*

*Magnus* கி-பி. 1193-1280) என்பவனும், தோமா அக்வீனே (*Thomas Aquinas* கி-பி. 1225-1274) என்பவனும், அற்புதம் சிருஷ்டிப் பிரமாணங்கள் ஒழிந்த சம்பவங்களேயன்றி சிருஷ்டிப் பிரமாணங்களை அழிக்கும் செயலுமாம் என்று போதித்தார்கள். அவர்களைப்போல் ரோமைச் சமயத்தை எதிர்த்த சுவிசேஷ மார்க்கத்தின் முதன்மையான வேத சாஸ்திரிகளும் சொன்னார்கள். இந்தப் போதகத்துக்கு எதிர்த்து நின்ற முதலானவர் ஸ்பினோஸா (*Spinoza* கி-பி. 1632-1677) என்ற தத்துவ சாஸ்திரி. அவர் அவிசுவாசி, எல்லாம் தெய்வம் (*Pantheism*) என்று சொன்னவன். அவன் போதனையாவது: எல்லாம் தேவமானால் சிருஷ்டிப் பிரமாணங்களும் தேவம்; அப்படியிருக்க தேவன் சிருஷ்டிப் பிரமாணங்களை விரோதித்தால் தம்மையே விரோதிப்பார்; அது முடியாதகாரியமாகையால் அற்புதம் கிடையாது; அற்புதங்கள் நேரிடுமென்று சொல்பவர் தேவதூஷணம் சொல்வார்கள். எனென்றால் தேவன் அற்புதங்கள் செய்வாரென்று சொல்லலும் அவர் முதலில் உலகத்தைப் பிழையின்றிப் படைக்கவில்லையாகையால் அவர் அதைப் பிற்பாடு அற்புதங்களால் சீர்திருத்த வேண்டியதாயிற்றென்று சொல்லலும் இரண்டும் ஒன்றுதான். அவனைப் போலவே டேவிட் ஹ்யூம் (*David Hume* கி-பி. 1711-1776) சாதித்து, அற்புதங்கள் சம்பவிக்குமென்று விசுவாசிக்கும் விசுவாசமானது மூடபக்தி யென்றான். இவ்விரண்டு விசுவாசமற்ற வித்துவான்களைப்போல் முக்கியமாக டேவிட் பிரேடரிக் ஸ்திரவுஸ் (*David Frederick Strauss* கி-பி. 1808-1874) என்பவனும் எர்னெஸ்ட் ரேனான் (*Earnest Renan* கி-பி. 1823-1892) என்பவனும் அற்புதமில்லை யென்று சொன்னார்கள். இவர்கள் சொன்ன நியாயங்களுக்கு என்ன சொல்லுவோம்? அற்புதம் சிருஷ்டிப் பிரமாணங்களை அழிக்கும் செயலென்ற தப்புக்கோட்பாட்டைக் கவிழ்ப்பது தவிர இவர்கள் சொன்ன நியாயங்கள் நாம் மேற்கூறிய சரியான கோட்பாட்டைத் தொலைக்க முடியாது.

IV. **அற்புதங்கள் அவசியமா?** நம்மைப் போல கேவல மனிதனாய் இவ்வுலகத்தில் தோன்றின கிறிஸ்துவே தேவன் என்று எதினால் அறிவோம்? விசேஷமாக, அவர் மரித்தோரிலிருந்து மறுபடியும் உயிர்த்தெழுந்ததினாலேதான். இதைப்பற்றி **இயேசுவின் உயிர்த்தெழுதல்** என்னும் நிபந்தத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அவர் உயிர்த்தெழுதல் முற்றான அற்புதமென்பது தெளிவு 1கொரி. 15[14. 17. 19]. சிலர் இதற்கு ஆக்ஷேபம் சொல்வதுண்டு.

1. கிறிஸ்துமார்க்கம் மனத்துக்குரியமார்க்கமேயன்றி வேறன்று. தேவன் புறம்பான அடையாளங்களால் சிருஷ்டியின் முறைமையில் தலையிடுவது தகுதியல்லவென்பார்கள். இதற்கு ஆக்ஷேப சமாதானமென்ன? அப்படிச் சொல்பவர்கள் கடவுள் சிருஷ்டியிலிரார் என்று சொல்வார்போலும். கடவுள் உலகத்தினுள்ளு மிருக்கிறாரே. அவருக்குச் சித்தான உலகம் அசித்தான உலகம் என்ற வேறுபாடில்லை. சித்தாசித்தில் தொழில் செய்கிறார். இல்லையெனில், அவர் எல்லாம் நிறைந்தவருமல்ல எல்லாம் வல்லவருமல்ல கடவுளுமல்ல. மேலும், தேவன் அசித்தான உலகத்தைக் கேட்டுக்காக வேண்டி சிருஷ்டிக்கவில்லை. அசித்தான உலகத்தையும் இரட்சணியத்துக்காக வேண்டியே சிருஷ்டித்தார். ரோ 8[19-21]. சடத்துக்குரிய சம்பவங்களுமெல்லாம், இரட்சிப்பின்பொருட்டே செய்த தெய்வீக அற்புதங்களனைத்தும் இரட்சிப்புக்காக நேரிடும்.

2. மற்றவர்கள் கடவுள் அதிசயங்களைச் செய்வாரெனில் அவர் முகாந்தரமின்றி அடிக்கொரு நினைவாய் தாமே சிருஷ்டித்த சிருஷ்டியின் முறைமையில் தலையிடுவார் என்பது போலும்; அப்படிச் சொல்வது கடவுளை இகழ்வதாமென்று ஆக்ஷேபிப்பார்கள். இதற்கென்ன சொல்வோம்? கடவுள் இளவழி பாடுள்ளவரல்ல. உலகத்தோற்றத்துக்கு முன்னே இரட்சணியத்தைக் கருதின அவர் ஒவ்வொரு அற்புதத்தையும் முன் நியமித்தார். அப் 15[18]. அவர் விடாப்பிடியும் நிலையுமுள்ள மாறாதவரானதாலே அவர் அற்புதம் செய்வது அவசியம். தேவனுக்கு யேகோவா ('இருக்கிறவராக இருக்கிறேன்.' யாத் 3[14] எபி 13[8]) என்ற பெயர் நியாயமென்பதற்கு அற்புதங்கள்தான் ரூபகாரம். எப்படியெனில், பாவம் நுழைந்த மனிதர்கள் கடவுள் அருளின இரட்சணிய தீர்மானத்திற்கு எவ்வளவு விரோதமாயிருந்தாலும், அவரது எண்ணத்தைக் கெடுக்க எவ்வளவு முயன்றாலும், அவர் உறுதியுடன் தமது எண்ணத்தை நிறைவேற்றுகிறவர் என்பது அற்புதங்களாலே விளங்கும். கடவுள் உலகத்தைச் சிருஷ்டித்த அதே நிலைமையில் உலகம் இப்போது இல்லையென்று நாம் மனதில் வைக்கவேண்டுமே. கடவுள் சுயாதீன சித்தமுள்ளவனுகப் படைத்த மனிதன் அவருக்கு எதிர்த்துப் பாவத்தில் நுழைந்து, கடவுள்செய்த பேரின்ப தீர்மானத்தைக் கெடுத்

தான். பாவத்தினிமித்தமும் தமது இரட்சணிய ஆலோசனை நிறைவேறவும் கடவுள் பலத்த செய்கைகளாகிய அற்புதங்களாலும், முக்கியமாகத் தமது ஒரே பேறான குமாரனை அனுப்புதலாகிய மகா பெரிய அற்புதத்தாலும், உலகத்துக்கு இரட்சிப்பை யுண்டு பண்ண வேண்டியதாயிற்று.

**V. அற்புதம் நடக்கக் கூடுமோ?** கடவுள் எல்லாம் வல்லவராகையால் அவர் அற்புதம் செய்யக் கூடியவர். அவர் அற்புதங்களை நடப்பிக்குங்கால் அவர் சிருஷ்டிப் பிரமாணங்களை அழிக்காமல் அவற்றைத் தமது நோக்கத்திற்கேற்க இணைத்துக் கையாளுவார் என்று பார்த்தோம். இப்படி அவர் சிருஷ்டியின் சாதாரணமுறைமைக்கு வேறுபாடானவற்றை மாற்றி அதை அற்புதவண்ணமாய் நடப்பிப்பாரென்பது மெய்தான். ஆகிலும் இது கடவுளால் ஏலாதென்றால் கடவுள் மனிதரையும் மிருகங்களையும் பார்க்க வல்லமை குறைந்தவர் என்பதாம். மனிதரும் மிருகங்களும் பலதரம் சிருஷ்டியின் சாதாரண முறைமையைப் பலவாறாக மாற்றுவதுண்டு. திருஷ்டாந்தமாக, ஓர் புல் முளைத்து வளர்ந்து பூத்து உலர்ந்து சாவது சிருஷ்டியின் சாதாரண முறைமை. மாடு இளம் புல்லைக் கடித்துத் தின்றால் அது சிருஷ்டிப் பிரமாணத்தை அழிக்குமா? இல்லை. அது இன்னொரு சிருஷ்டிப் பிரமாணத்தால் சிருஷ்டியின் சாதாரண முறைமையை மாற்றுகிறதல்லவா? மனிதன் தரையிலிருந்து பற்பல கல் கலந்த பொன் உண்டை எடுத்துத் தீயில் போட்டு அதைக் களிம்பறச் சுத்திகரித்து நாணயமாக்குவான். அப்படிச் செய்வதால் அவன் ஒரு சிருஷ்டிப் பிரமாணத்தை இன்னொரு சிருஷ்டிப் பிரமாணத்தால் மாற்றுவானல்லவா? அப்படியே வைத்தியன் மருந்து கொடுத்து வியாதியைத் தீர்த்துச் சிருஷ்டியின் சாதாரண முறைமையை மாற்றுவான். இதெல்லாவற்றையும் நாம் நமது புலன்களாலும் விளைவினாலும் உணர்ந்தறியக் கூடியதால் அது நமக்கு அதிசயமாகத் தோன்றுகிறதில்லை. கடவுள் அற்புதம் செய்தால் அவர் ஒரு காரியத்துக்காக வேண்டிச் சிருஷ்டியின் முறைமையை மாற்றிச் சிருஷ்டிப் பிரமாணங்களைத் தம் விருப்பத்துக்கு ஏற்றபடி இணைத்து அப்படியே முன்னே காணாத புதுமையை உண்டாக்குவார். இதை நாம் நமது புத்தியாலும் ஐம்புலன்களாலும் உணர்ந்தறியக் கூடாதபடியால் அற்புதம் என்று சொல்வோம். கடவுளுக்கு அது ஆச்சரியமல்ல. சிருஷ்டியின் மேற்பூச்சு நமக்கு ஒருவாறு தெரிகிறதொழிய அதன் இயல்பு தெரியாது. சிருஷ்டிப் பிரமாணங்களெல்லாம் நமக்குத் தெரியுமா? சில மாத்திரம் நமக்குத் தெரியும். மேலும் நமது அறிவு அநேக விஷயங்களில் பிழையுள்ளதென்று பல முறை நமக்குப் புலப்படும். நாம் ஓயாமல் தப்பெண்ணங்களை அகற்றிப் புதிய காரியங்களைக் கற்றுக்கொள்ளவேண்டும். உதாரணமாக, கொபர்நிக்கு (*Copernicus*, கி-பி. 1473-1543) என்ற வானசாஸ்திரி காலத்துக்குமுன் அனைவரும் சூரியன் பூமியைச் சுற்றுகிறதென்று நினைத்தார்கள். அவன் மூலமாய் பூமி சூரியனைச் சுற்றுவது சிருஷ்டிப் பிரமாணமென்று கற்றுக்கொண்டோம். முன்னே, ஒளி திண்பொருளை ஊடுருவிச் செல்ல முடியாதென்று எண்ணினோம். ரொந்தகன் (*Roentgen* கி-பி. 1845 பிறப்பு) என்ற வித்துவானே முதன்மையாய் கனத்தமரக்கதவினூடே படங்களைப் பிடித்து ஒளி திண்பொருளையும் ஊடுருவிச் செல்லு மென்று மெய்ப்படுத்தினான். நமது அறிவு எவ்வளவு ஓங்கினாலும் நாம் ஓர் புதுமை காணுமிடத்து இதனால் சிருஷ்டிப் பிரமாணமொன்று கெட்டுப்போயிற்றென்று சொல்லக்கூடாது. ஆபிரிக்காக் கண்டத்தில் ஒருவன் சீமை நாட்டில் சிலவேளை தண்ணீர்மேல் மாட்டுவண்டி போகக் கூடியவண்ணமாகத் தண்ணீர் சீதளத்தால் கல்லைப் போல் இறுகிப்போகுமென்று சொன்னபோது அத்தேசத்தார் அவன் தங்களுக்குப் பொய் சொல்லிக்கேலிசெய்வதாக நினைத்து அவனை அடிக்கப் போனார்கள். ஆலாங்கட்டி எப்படி யுண்டாகுமென்று அவர்கள் அறியாததால் அப்படி இருக்காதென்று எண்ணினார்கள். அற்புதம் எப்படியாமென்று நாம் அறியாததால் கடவுள் அற்புதம் செய்ய முடியாதென்பது கல்வியீனமுள்ள அத்தேசத்தாரின் அறியாமையைப்போலொத்தது. மனிதன் சில விஷயங்களில் தன் புத்தியால் சிருஷ்டியைக் கையாளக் கூடியவனாயின் எத்தனைக் கதிகமாகச் சருவ ஞானமும் சருவ வல்லமையும் நிறைந்த கடவுள் பிரபஞ்சத்தைக் கையாளுவார். அதுவுமன்றிக் கடவுள் மனிதரைப்போல அசித்துப் பொருளுக்குப் புறம்பானவரு மல்லாமல் அசித்துப் பொருளிலும் அவர் இருப்பவராம். ஆகவே கடவுள் இருக்கிறாரென்பது எவ்வளவு நிச்சயமோ, அற்புதம் நடக்கக்கூடும் என்பதும் அவ்வளவு நிச்சயம். அற்புதம் இல்லை என்று ஒருவன் சொன்னால் கடவுள் இல்லையென்று சொல்லவும் வேண்டும். ஆகையால் அற்புதம் நடக்கக் கூடுமென்பதை நாஸ்திகர் (*Atheists*) இடத்தில் ரூபிக்க முடியாது.

எனினும், அவர்களும் அற்புதம் இல்லை என்று சொல்லாமல் இருக்கமாட்டார்கள். உயிரினாலே உயிருண்டாகு மென்பது ஒரு சிருஷ்டிப் பிரமாணம். முதலில் உயிர் உலகத்தில் வந்ததெப்படி யென்று நாஸ்திகர்களைக் கேட்டால், அவர்கள் எங்களுக்குத் தெரியாதென்றும்; அல்லது, ஆதிகாலத்தில் பிறகு ஒருபோதும் உண்டாகாத வண்ணமாகவும் நமக்கு விளங்காத வண்ணமாகவும் தற்செயலாய் உயிர் உண்டாயிற்றென்றும் சொல்வார்கள். சிருஷ்டிப் பிரமாணங்களைத்தவிர மீண்டும் அப்படியே உண்டாகாதவாறும் நமக்கு விளங்காதவிதமாயும் நடந்த இச்சம்பவத்திற்கு அற்புதமேயொழிய வேறென்ன பெயர்? ஆகவே நாஸ்திகரும் அற்புதம் உண்டு என்பதை ஒத்துக்கொள்ள வேண்டும். அவிசுவாசி அற்புதம் தற்செயலென்பான். விசுவாசி அற்புதம் தேவ செயலென்பான். அவர்கள் இருவரில் உண்மையை அறிந்தவன் யார்?

**VI. தற்காலமும் அற்புதம் நடக்குமா?** கிறிஸ்து தமது சீஷருக்கு அவர்களும் அற்புதம் செய்வார்களென்று வாக்களித்து, தாம் செய்த அற்புதங்களைவிடச் சிறப்பான அதிசயங்களைச் செய்வார்களென்று உறுதி சொன்னார். யோவா $14^{12}$ மத் $17^{20}$ மு. தற்காலமோ அற்புதங்கள் கிடையாது. ஆகவே, தற்காலம் கிறிஸ்துமார்க்கத்தில் சரியான விசுவாசமில்லை என்று சிலர் சொல்வதுண்டு. இதற்கென்ன சொல்வோம்? முதலாவது, இக்காலத்தில் அற்புதம் அரிதாயினும் அற்புதம் இல்லை யென்று சொல்லக்கூடாது. இரண்டாவது, சத்திய வேதத்தின்படி அற்புதம் செய்யும் வரம் கடவுள் விசுவாசிகளனைவருக்கும் கொடுத்ததல்ல. அற்புதம் செய்யும் வரம் இரட்சிப்படையும் விசுவாசத்திற்கு அறிகுறியல்ல, அது திருச்சபையை ஸ்தாபித்த காலத்திலே சிலருக்கு மாத்திரம் அளித்த வரம். அக்காலத்தில் அது வேண்டியதாயிற்று. பிற்காலத்திலோ அவசியமில்லை. அப்படியே பவுல் அப்போஸ்தலன் கடைசியாய்த் தீமோத்தேயுவுக்கும் தீத்துவுக்கும் எழுதின நிருபங்களிலே சபையில் வேலைசெய்யும் தேவ ஊழியருக்கு அற்புதம் செய்யும் திறமை அவசியமென்று சொல்லவில்லை. மேலும் கிறிஸ்து மாற் $4^{26-29}$-ல் சொன்ன உவமையால் திருச்சபையுண்டான காலத்திற்குப்பின் நீடிய காலமாக வல்லமைகள் நடக்காது என்று காட்டுகிறார். வேளாண்மைக்குப் பருவங்களுண்டு. அவையாவன: விதை விதைக்கிற காலம், பயிர் விளைகிற காலம், விளைவு சேர்க்கிற காலம். விதை விதைக்கிற காலத்தில் மனிதன் கைப்பாடுபடவேண்டியது. பயிர் விளைகிற காலத்தில் அவன் ஒன்றுஞ் செய்ய அவசியமில்லை. நிலம் தானாகவே முளை கதிர் தானியம் இவற்றைக் கொடுக்கும். விளைவு சேர்க்கிற காலத்தில் மனிதன் மறுபடியும் கைப்பாடு படவேண்டியது. அப்படித் திருச்சபைக்கும் மூன்று காலம் உண்டு. அவையாவன: திருச்சபை உண்டாகும் காலம், திருச்சபை வளருங் காலம், திருச்சபை மோட்சம் சேருங் காலம். திருச்சபை உண்டான காலத்தில் கடவுள் கையிட்டு அற்புதங்களால் காரியப்படுத்த வேண்டியதாயிற்று. திருச்சபை வளருகிற தற்காலத்தில் அற்புதங்கள் தேவையில்லை. திருச்சபை மோட்சம் சேரும் காலமாகிய கிறிஸ்து மறுபடியும் வரும் காலத்தில் கடவுள் மீண்டும் அற்புதங்களைச் செய்வார். அதைப்போலப் பவுல் அப்போஸ்தலனும் 1 கொரி $13^{8}$-ல் அற்புதங்கள் ஓய்ந்திருக்கும் காலம் வருமென்று சொல்லுகிறான். யோவா $14^{12}$-ல் இயேசுநாதர் தம்மை விசுவாசிக்கிறவர்கள் தாம் செய்த கிரியைகளைப்பார்க்கிலும் பெரிய கிரியைகளைச் செய்வார்களென்பது மெய். அவைகளாவன: சுவிசேஷத்தைப் பிரசங்கித்தல், விசுவாசத்தைப் பிறப்பித்தல், மோட்சத்தை அளித்தல் முதலியவை. லூத்தர் (*Luther* கி-பி. 1483-1546) சொல்லுகிறபடி இவைகளே தேவனுடைய சரியான முக்கிய அற்புதங்கள். இவ்வற்புதங்கள் தினந்தோறும் நடக்கும்.

**அற்புதங்கள். Miracles.**

## பழைய ஏற்பாட்டிற் சொல்லியிருக்கும் அற்புதங்கள்

சோதோம் கொமோரா அழிக்கப்பட்டது. ஆதி $19^{24}$.

லோத்தின் மனைவி உப்புத்தூண் ஆனது. ஆதி $19^{26}$.

ஈசாக்கின் பிறப்பு. ஆதி $21^{1}$.

எரிகிற முட்செடி வெந்துபோகாதது. யாத் $3^{3}$.

ஆரோனுடைய கோல் சர்ப்பமாக மாறினது. யாத் $7^{8}$.

பத்து வாதைகள்.

1. நதி ரத்தமாய் மாறினது. யாத் $7^{19}$.
2. தவளைகள். யாத் $8^{1}$.
3. தூசி பேனாக மாறினது. யாத் $8^{16}$.
4. திரளான வண்டுகள். யாத் $8^{21}$.

5. மிருகங்கள்மேல் அனுப்பப்பட்ட கொள்ளைநோய். யாத் $9^{1}$.
6. கொப்புளங்கள். யாத் $9^{8}$.
7. கல்மழை. யாத் $9^{13}$.
8. வெட்டுக்கிளிகள். யாத் $10^{9}$.
9. காரிருள். யாத் $10^{21}$.
10. முதற்பேறுகள் கொல்லப்படுதல். யாத் $12^{29}$.

செங்கடல் வறண்டுபோனது. யாத் $14^{21}$.

மாராவின் தண்ணீர் தித்திப்பானது. யாத் $15^{23}$.

மன்னாவை அனுப்பினது. யாத் $16^{14}$.

ரெவிதீமில் கல்மலையில் தண்ணீர் சுரந்தது. யாத் $17^{5}$.

தபேராவில் மூண்ட அக்கினி. எண் $11^{1}$.

நாதாபும் அபியூவும் அழிக்கப்படுதல். லேவி $10^{1}$.

கோராகைப் பூமி விழுங்கினது. மற்றவர்களை அக்கினி பட்சித்தது. எண் $16^{31}$.

ஆரோனின் கோல் துளிர்த்தது. எண் $17^{8}$.

மேரிபாவிலே தண்ணீர் புறப்படச்செய்தது. எண் $20^{7}$.

வெண்கலச் சர்ப்பத்தைப் பார்த்துச் சுகமடைந்தது. எண் $21^{8}$.

பிலேயாமின்கழுதைபேசினது. எண் $22^{21}$.

யோர்தான் நதி இண்டாகப் பிரிந்தது. யோசு $3^{14}$.

எரிகோவின் அலங்கம் விழுந்தது. யோசு $6^{20}$.

சூரியனும் சந்திரனும் நின்றது, கல்மழை. யோசு $10^{12}$.

சிம்சோனின் பலம். நியா 14-16 அதி.

லேகியில் தண்ணீர் ஓடிவந்தது. நியா $15^{19}$.

தாகோன் விழுந்தது. மூலவியாதி. 1 சாமு $5^{1}$.

பெத்ஷிமேசூராருக்கு வந்த வாதை. 1 சாமு $6^{19}$.

இடிமுழக்கம். 1 சாமு $7^{10}$.

இடிமுழக்கமும் மழையும். 1 சாமு $12^{18}$.

முசுக்கட்டைச் செடியில் இரைச்சல். 2 சாமு $5^{23}$.

ஊசா அழிக்கப்பட்டது. 2 சாமு $6^{6}$.

யெரொபெயாமின் கை மரத்துப்போனது. 1 இரா $13^{4}$.

பனியும் மழையும் பெய்யாதது. 1 இரா $17^{1}$.

காகங்கள் எலியாவைப் போஷித்தது. 1 இரா $17^{4}$.

கைம்பெண்ணின் மாவும் எண்ணெயும். 1 இரா $17^{14}$.

அவளுடைய மகன் உயிரோடு எழுப்பப்பட்டது. 1 இரா $17^{17}$.

வானத்திலிருந்து அக்கினி வந்தது. 1 இரா $18^{17}$.

மழை வருஷித்தது. 1 இரா $18^{41}$.

அக்கினி சேனைத்தலைவர்களைப் பட்சித்தது. 2 இரா $1^{10}$.

எலியா யோர்தானைப் பிரித்தது. 2 இரா $2^{8}$.

எலியா அக்கினி ரதத்தின்மேல் பரமண்டலத்திற்கு ஏறிப்போனது. 2 இரா $2^{11}$.

எலியா யோர்தானைப் பிரித்தது. 2 இரா $2^{14}$.

உப்பு ஜலம் நல்ல தண்ணீரானது. 2 இரா $2^{22}$.

கரடிகள் வாலிபரை அழித்தது. 2 இரா $2^{24}$.

எலிசா தேசத்தைத் தண்ணீரினால் நிரப்பினது. 2 இரா $3^{20}$.

எலிசா கைம்பெண்ணின் எண்ணெயை அதிகரிக்கச் செய்தது. 2 இரா $4^{7}$.

சூனேமியாளுக்குப் புத்திர பாக்கியம். 2 இரா $4^{8}$.

சூனேமியாளின் மகனை உயிரோடு எழுப்பினது. 2 இரா $4^{32}$.

நஞ்சு கலந்த கூழைச் சுத்தமாக்கினது. 2 இரா $4^{38}$.

நூறு மனிதர்களுக்குப் போஷித்தது. 2 இரா $4^{42}$.

நாகமான் சொஸ்தமானது. 2 இரா $5^{14}$.

கேயாசி குஷ்டரோகியானது. 2 இரா $5^{17}$.

ஜலத்தில் இரும்பு மிதந்தது. 2 இரா $6^{5}$.

சீரிய ராஜாவின் ஆலோசனையை வெளிப்படுத்தினது. 2 இரா $6^{8}$.

சேனையின் கண்களைக் குருடாக்கினது. 2 இரா $6^{18}$.

சேனைகள் கண்பார்வை அடைந்தது. 2 இரா $6^{20}$.

எலிசாவின் எலும்பினால் பிரேதம் உயிர் அடைந்தது. 2 இரா $13^{21}$.

சனகெரிப்புடைய சேனை அழிதல். 2 இரா $19^{35}$.

சூரிய சாயை பின்னிடச்செய்தது. 2 இரா $20^{9}$.

உசியா குஷ்டரோகத்தினால் வாதிக்கப்பட்டது. 2 நாளா $26^{19}$.

அக்கினியிற் போடப்பட்ட மூன்று வாலிபர் வெந்து போகாதது. தானி $3^{19}$.

தானியேல் சிங்கக்குகையிலிருந்து இரட்சிக்கப்பட்டது. தானி $6^{16}$.

யோனா மச்சத்தின் வயிற்றிலிருந்து இரட்சிக்கப்பட்டது. யோனா $2^{10}$.

### புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் அற்புதங்கள்

(i) **மத்தேயு** சுவிசேஷத்தில்மாத்திரம் சொல்லியிருக்கும் அற்புதங்கள் மூன்று:

இரண்டு குருடர் பார்வை அடைந்தது. $9^{27}$.

ஊமையனைப் பேசச்செய்தது. $9^{32}$.

வரிப்பணம். $17^{24}$.

(ii) **மாற்கு** சுவிசேஷத்தில் மாத்திரம் சொல்லியிருக்கும் அற்புதங்கள் இரண்டு:

செவிடனும் தெத்துவாயனு மானவனைக் குணமாக்கினது. $7^{31}$.

பெத்சாயிதாவில் குருடன் ஒருவனுக்குப் பார்வை யளித்தது. $8^{22}$.

(iii) **லூக்கா** சுவிசேஷத்தில் மாத்திரம் சொல்லியிருக்கும் அற்புதங்கள் ஏழு:

இயேசு ஜனங்கள் நடுவினின்று கடந்துபோனது. $4^{30}$.

மீன்கள் அகப்பட்டது. $5^{4}$.

நாயீனூர் விதவையின் மகனை உயிரோடு எழுப்பினது. $7^{11}$.

கூனியைக் குணமாக்கினது. $13^{11}$.

நீர்க்கோவையுள்ளவனைக் குணமாக்கினது. $14^{1}$.

பத்துக் குஷ்டரோகிகளைக் குணமாக்கினது. $17^{11}$.

மல்குவின் அறுபட்ட காதைச் சொஸ்தப்படுத்தினது. $22^{50}$.

(iv) **யோவான்** சுவிசேஷத்தில்மாத்திரம் சொல்லியிருக்கும் அற்புதங்கள் ஏழு:

தண்ணீரை ரசமாக்கினது. $2^{1}$.

அதிகாரியினுடைய மகன் சொஸ்தமானது. $4^{46}$.

38 வருஷம் வியாதியாயிருந்தவன் சொஸ்தமானது. $5^{1}$.

இயேசு தேவாலயத்தில் ஜனங்கள் நடுவினின்று மறைந்துபோனது. $8^{59}$.

பிறவிக்குருடன் பார்வை அடைந்தது. $9^{1}$.

லாசருவை உயிரோடெழுப்பினது. $11^{38}$.

153 மீன்கள் அகப்பட்டது. $21^{1}$.

(v) **மத்தேயு, மாற்கு** சுவிசேஷங்களில் சொல்லியிருக்கும் அற்புதங்கள் மூன்று:

சீரோபேனிக்கேயாளின் மகளைப் பிடித்த அசுத்த ஆவியை நீக்கினது. மத் $15^{28}$ மாற் $7^{24}$.

நாலாயிரம்பேர் போஷிக்கப்பட்டது. மத் $15^{32}$ மாற் $8^{1}$.

கனியற்ற அத்திமரத்தைச் சபித்தது. மத் $21^{18}$ மாற் $11^{12}$.

(vi) **மத்தேயு, லூக்கா** சுவிசேஷங்களில் சொல்லியிருக்கும் அற்புதங்கள் இரண்டு:

நூற்றுக்கு அதிபதியினுடைய வேலைக்காரனைச் சொஸ்தமாக்கினது. மத் $8^{5}$ லூக் $7^{1}$.

பிசாசு பிடித்த ஊமையும் குருடுமானவனைக் குணமாக்கினது. மத் $12^{22}$ லூக் $11^{14}$.

(vii) **மாற்கு, லூக்கா** சுவிசேஷங்களில் சொல்லியிருக்கும் அற்புதம் ஒன்று:

ஜெப ஆலயத்தில் பிசாசு பிடித்தவனைச் சொஸ்தமாக்கினது. மாற் $1^{23}$ லூக் $4^{33}$.

(viii) **மத்தேயு, மாற்கு, லூக்கா** சுவிசேஷங்களில் சொல்லியிருக்கும் அற்புதங்கள் பத்து:

பேதுருவின் மாமியைக் குணமாக்கினது. மத் $8^{14}$ மாற் $1^{30}$ லூக் $4^{38}$.

கடலின் கொந்தளிப்பை அமர்த்தினது. மத் $8^{23}$ மாற் $4^{37}$ லூக் $8^{22}$.

லேகியோன் என்னும் பேய்பிடித்தவனைக் குணமாக்கினது. மத் $8^{28}$ மாற் $5^{1}$ லூக் $8^{26}$.

குஷ்டரோகியைச் சொஸ்தமாக்கினது. மத் $8^{2}$ மாற் $1^{40}$ லூக் $5^{12}$.

யவீரின் மகளை உயிரோடெழுப்பினது. மத் $9^{23}$ மாற் $5^{23}$ லூக் $8^{41}$.

பெரும்பாடுள்ளவளைச் சொஸ்தம் ஆக்கினது. மத் $9^{20}$ மாற் $5^{25}$ லூக் $8^{43}$.

திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கினது. மத் $9^{2}$ மாற் $2^{3}$ லூக் $5^{18}$.

சூம்பின கையையுடையவனைச் சொஸ்தமாக்கினது. மத் $12^{10}$ மாற் $3^{1}$ லூக் $6^{6}$.

சந்திரரோகியைக் குணமாக்கினது. மத் $17^{14}$ மாற் $9^{14}$ லூக் $9^{37}$.

எரிகோவில் குருடர்களுக்குப் பார்வை அளித்தது. மத் $20^{29}$ மாற் $10^{46}$ லூக் $18^{35}$.

(ix) **மத்தேயு, மாற்கு, யோவான்** சுவிசேஷங்களில் சொல்லியிருக்கும் அற்புதம் ஒன்று:

இயேசு கடலின்மேல் நடந்தது. மத் $14^{25}$ மாற் $6^{48}$ யோவா $6^{15}$.

(x) நாலு சுவிசேஷங்களிலும் சொல்லியிருக்கும் அற்புதம் ஒன்று:

5000 பேரைப் போஷித்தது. மத் $14^{15}$ மாற் $6^{30}$ லூக் $9^{10}$ யோவா $6^{1}$.

**அற்போனா.** **Harbona.** ஒரு அண்ணகன். எஸ்தர் $1^{10}$ $7^{9}$.

**அனதேமா.** **Anathema.** 1 கொரி $16^{22}$. **சாபத்தீடு** காண்க.

**அனனியா.** **Hananiah Onanias.** [யேகோவா கிருபையுள்ளவர்].

1. எருசலேமின் மதிலை மறுபடியும் கட்டினவர்களி லொருவன். நெகே $3^{23}$.

2. ஒரு ஊர். நெகே $11^{32}$.

3. முதற் கிறிஸ்தவ சபை உண்டான போது அதில் தான் செய்த வஞ்சகத்தால் கொலையுண்ட மாயக்காரன். அப் 5 அதி.

4. பவுல் குணப்பட்ட சமயத்தில் கடவுளால் அறிவிக்கப்பட்டு வந்து பவுலுக்கு போதனை செய்த அந்தியோகியாவிலுள்ள சீஷன். அப் $9^{10}$ $22^{12}$.

5. கி-பி. 57-ஆ பவுல் எருசலேம் பட்டணத்தில் பிடிக்கப்பட்டபோது சதுசேய கொள்கை யுடையவனும் அதிக லோபியும் குரூரனுமான ஒரு பிரதான ஆசாரியன். இவன் பரி. பவுலுக்கு விரோதமாய்ப் பிராது செய்தவன். கி-பி. 66-ஆ சண்டை தொடங்கினபோது இவன் ரோமருக்குச் சார்பாய் நின்றதினாலே மற்ற யூதர்கள் இவனைக் கொன்றுபோட்டார்கள். அப் $23^{2}$ $24^{1}$.

6. 1 நாளா $8^{24}$.

7. 1 நாளா $25^{4}$.

8. 2 நாளா $26^{11}$.

9. கள்ளத்தீர்க்கதரிசி. எரே $28^{11}$.

10. பிரபு. எரே $36^{12}$.

11. எரே. $37^{13}$.

12. 1 நாளா $3^{19}$.

13. நெகே $12^{12}$.

14. நெகே $7^{2}$.

15. =சாத்ராக். தானி $1^{7}$.

**அனகாராத்.** **Anaharath.** யோசு $19^{19}$.

**அனாமீம்.** **Anamim.** எகிப்து தேசத்தைச் சேர்ந்த ஒரு ஜாதி ஜனம். இவர்களைப் பற்றி நமக்குத் தெளிவாய் ஒன்றும் தெரியாது. ஆதி $10^{13}$.

**அனமெயேல்.** **Hannamel.** எரேமியாவின் பெரிய தகப்பனாகிய சல்லூமின் குமாரன். எரே $32^{7}$.

**அனயா.** **Anaiah.** [யேகோவா பதில் சொன்னார்]. நெகே $8^{4}$.

**அனானி, ஆனானி.** **Hanani.** ஐந்து பெயர்.

1. நெகே $1^{2}$.

2. 1 நாளா $25^{4}$.

3. 1 இரா $16^{1}$.

4. எஸ்றா $10^{20}$.

5. நெகே $12^{36}$.

**அனானெயேல்.** **Hananel.** [கடவுள் கிருபையுள்ளவர்]. எருசலேம் அலங்கத்தின் மேலுள்ள கோபுரம். நெகே $3^{1}$.

**அனியாம்.** **Aniam.** 1 நாளா $7^{19}$.

**அனூப்.** **Anub.** 1 நாளா $4^{8}$.

**அன்பு.** **Love.**

### I. பழைய ஏற்பாடு.

பழைய ஏற்பாட்டில் இதற்கு வழக்கமாய் மூலபாஷையில் ஒரே பதம் சொல்லியிருக்கிறது. ஆனால் மொழி பெயர்த்தவர்கள்: அன்பு, ஆசை, சிநேகம், நேசம், பட்சம்; பிரியம் என்னும் பெயர்ச்சொற்களையும், அன்புகூர நேசிக்க முதலான வினைச் சொற்களையும் மூலபதத்திற்குச் சொல்லியிருக்கிறார்கள்.

இப்பதம் மூன்று விஷயங்களைக் குறிக்கிறது.

1. ஆசை. 2 சாமு $13^{4}$ 1 இரா $11^{1}$ எரே $2^{33}$.

2. சிநேகம், குடும்பச் சிநேகம். ஆதி $22^{2}$ $25^{28}$ யாத் $21^{5}$ 1 சாமு $18^{16}$ 2 சாமு $1^{26}$ ஞ.

3. ஆவிக்குரிய அன்பு, ஞான அன்பு. எபிரெயர் கடவுள் தமது ஜனங்களை நேசிக்கிறார் என்றும், அவருடைய ஜனங்கள் அவரை நேசிக்கவேண்டும் என்றும் உறுதியாய் நம்பினார்கள். எசா $62^{3-5}$ $63^{7-10}$ ஓசி $2^{14-23}$ $11^{1-4}$.

*a*. கடவுள் இஸ்ரவேலரையும் நீதிமான்களையும் நேசிக்கிறார். உபா $4^{33}$ $7^{7}$ 1 இரா $10^{9}$ ஓசி $3^{1}$ $9^{15}$ $11^{4}$ $14^{4}$ செப் $3^{17}$ எரே $2^{2}$ எசா $43^{4}$ $48^{14}$ $63^{9}$ மல்கி $1^{2}$ சங் $11^{7}$ $47^{4}$ $78^{68}$ $87^{2}$ $146^{8}$ நீதி $3^{12}$ $8^{17}$ 2 நாளா $2^{11}$. இஸ்ரவேல் ராஜ்யத்திற்கு அழிவும் அந்த ஜனங்களுக்கு அடிமைத்தனமும் நேரிட்ட காலங்களில் கடவுள் காட்டின அன்பைக்குறித்துத் தீர்க்கதரிசிகள் அதிகமாய் உரைத்திருக்கிறார்கள். ஓசியாவிலும் எசாயா இரண்டாம் பாகத்திலும் நாம் இதைத் தெளிவாய்க் காணலாம்.

*b*. இஸ்ரவேலரும் நீதிமான்களும் கடவுளை நேசிக்கிறார்கள். யாத் $20^{6}$ உபா $6^{5}$ நெகே $1^{5}$ 1 இரா $3^{3}$ சங் $5^{11}$ $31^{23}$ $116^{1}$ $119^{97}$ மீகா $6^{8}$.

அன்பைக் குறிக்கும் வேறு பதங்கள். உபா $7^{7}$ $33^{12}$ சங் $91^{14}$ எசா $5^{1}$ உன்னத $1^{13}$.

### II. புதிய ஏற்பாடு.

பழைய ஏற்பாட்டில் கடவுளின் அன்பைப்பற்றி முன் சொன்ன வண்ணமாய் அநேக வசனங்களில் சொல்லியிருந்தாலும் அன்பு என்பதினால் தீமை செய்தவர்களின் மேலுள்ள கடவுளுடைய இரக்கம் முக்கியமாய் விளங்குகிறதென்று பழைய ஏற்பாட்டு ஆக்கியோன்கள் நினைத்தார்கள் எனத் தெரியவரும். புதிய ஏற்பாட்டில் பரி. பவுல்

அன்பைப்பற்றிப் பேசும்போது அதினால் வழக்கமாய் கடவுளை விசுவாசித்து அவருடைய சித்தத்தை நிறைவேற்றப் பிரயாசப்படுகிறவர்களுக்கு அவர் அருளும் கிருபையைக் குறிக்கிறான். பரி. யோவான் தேவனை நம்பினவர்களுக்கு அவர் காட்டும் சிநேகத்தைக் குறிக்கிறான்.

புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் அன்புக்கு மூலபாஷையில் உள்ள இரண்டு பதங்களை உபயோகிக்கிறார்கள்.

1. *Agape.* இது நல் உதவி, நற்கிரியை புரியும் உத்தம அன்பைக் குறிக்கிறது. யோவான் எழுதின நிருபத்தில் அன்பு, நேசம் என்பதைக் காட்டுவதற்கு இந்த நேர்த்தியான பதம் எப்பொழுதும் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. மத் $5^{43-48}$ $22^{37-39}$ லூக் $6^{27}$ யோவா $3^{16}$ $11^{5}$ $13^{24}$ ரோ $13^{8}$ 1 கொரி $8^{3}$ கலா $2^{20}$ 1 பேது $1^{22}$ 1 யோவா $2^{10}$.

2. *Philia.* சிநேகிதன் சிநேகிதனுக்குக் காட்டும் நட்பு அல்லது பிரியம். மத் $10^{37}$ யோவா $5^{20}$ $11^{3}$ $12^{25}$ $16^{27}$ $20^{2}$ $21^{15}$ 1 கொரி $16^{22}$.

அன்பைப்பற்றிய வேறே வாக்கியங்கள்.

கடவுள் அன்பாகவே யிருக்கிறார். 1 யோவா $4^{8.16}$. தேவனுடைய அன்பு மனுஷ அறிவுக்கு எட்டாதது. யோவா $3^{16}$. உன்னதமானது. 1 யோவா $3^{1}$. இலவசமாய் அருளப்படுவது. யோவா $17^{23}$. தேவன் பாவிகளை ரட்சிக்கும்படிக்குக் காட்டின அன்பு. ரோ $5^{5.8}$.

கிறிஸ்துவின் அன்பு. மாற் $10^{21}$ யோவா $11^{23}$ $15^{13}$ ரோ $8^{36}$ 2 கொரி $5^{14}$ எபே $3^{19}$ $5^{2.25}$ வெளி $1^{6}$ 1 யோவா $3^{16}$

சபையின் அன்பு. மத் $24^{12}$ யோவா $21^{15}$ ரோ $12^{9}$ 2 கொரி $8^{8.24}$ எபே $1^{15}$ $5^{2}$ 1 யோவா $2^{15}$ $4^{16.19}$ $5^{3}$ வெளி $2^{4}$.

ஒருவரிலொருவர் கூரும் அன்பு. யோவா $13^{35}$ $15^{17}$ கொலோ $1^{3}$ 1 பேது $1^{22}$ எபி $10^{24}$ $13^{1}$ 1 யோவா $4^{18}$ $3^{16}$.

போதகர் சபையினிடத்தில் கூரும் அன்பு: 1 கொரி $16^{24}$ 2 கொரி $2^{4}$. சபையார் போதகரிடத்தில் கூரும் அன்பு. 2 கொரி $8^{7.8}$ 1 தெச $5^{13}$ தீத் $3^{15}$.

அன்பு விசுவாசத்தைச் சிறப்பிக்கும். கலா $5^{6}$. சத்தியத்தின்பேரிலுள்ள அன்பு. 2 தெச $2^{10}$ எபே $4^{15}$.

பேதுரு அப்போஸ்தலன் கிறிஸ்துவை மூன்றுதரம் மறுதலித்தபடியினாலே அவர் மூன்றுதரம் சீமோனே, என்னில் அன்பு கூருகிறாயா என்று கேட்டார். யோவா $21^{15}$.

மனைவியின்மேலுள்ள ஆசை. கொலோ $3^{19}$ எபே $5^{25.28}$. அன்பில்லார். யோவா $5^{22}$.

**அன்பு விருந்து.** **Love Feast.** கிரேக்கு பாஷையில் இதற்கு 'அகபே' (*Agape*) அதாவது 'அன்பு' என்று பெயர். கிறிஸ்தவ மார்க்கம் உற்பத்தியானகாலத்தில் ரோம ராஜ்யத்தின் பல இடங்களில் புறமதஸ்தர்கள் நடத்தின சங்கங்கள் அநேகம் இருந்தன. இவைகளைச் சேர்ந்தவர்கள் குறித்த நாட்களில் விருந்துபண்ணுவது வழக்கம். இவ்விதமாய் ஒரு பொதுவிருந்து வைப்பது கிறிஸ்தவ சபையாருக்குள்ளும் உண்டானது. அவர்கள் இந்த விருந்தில் தங்கள் ஐக்கியத்தைக் காட்டினபடியால் இதற்கு 'அன்பின் விருந்து' என்று அர்த்தங்கொள்ளும் 'அகபே' என்னும் பெயர் இடப்பட்டது. பொது விருந்தும் நற்கருணையும் வெவ்வேறாய் இருந்தும், பொதுவிருந்திலே சேர்ந்த கிறிஸ்தவர்களுக்கு நற்கருணை பரிமாறப்படும். பொது விருந்துக்குக் கிறிஸ்தவர்கள் வந்தபிறகு பிரசங்கிமார் பிரசங்கம் செய்வார்கள். அப் $2^{46}$ $20^{7}$ 1 கொரி $11^{21}$.

இந்த விருந்து நடத்தப்பட்ட விதத்தைப்பற்றி இரண்டாம் நூற்றாண்டிலிருந்த தெர்த்துல்லியன் என்பவன் கிறிஸ்துமார்க்க விரோதிகளுக் கெழுதின புஸ்தகத்திற் சொல்லுகிறதாவது: நாங்கள் எங்கள் விருந்துகளைச் செருக்காய்ச் செய்கிறோம் என்று நீங்கள் சொல்லும் பழி தகாது. எங்கள் விருந்துக்குப் பேரே 'அன்பு' (**அகபே**). அதில் நாங்கள் எவ்வளவு செலவழித்தாலும் அதனால் பக்தி வளருமாகையால் எங்களுக்கு அது லாபமே. அதில் நாங்கள் ஏழைகளுக்கு உதவிசெய்து அவர்கள் பசியை ஆற்றுகிறோம். அதிலே அசுத்தமும், தாறுமாறும் எவ்வளவேனுமில்லை. ஏனெனில் கடவுளுக்கு விண்ணப்பம் செய்யுமுன்னே நாங்கள் (பந்தியில்) உட்காருகிறதில்லை. இரவிலே நாங்கள் கடவுளுக்கு ஆராதனை செய்யவேண்டியவர்களென் றறிந்து தகுதியான பிரகாரமாகவே நாங்கள் பசியை யாற்றச் சாப்பிட்டு ஒழுக்கமுடையவர்போல அளவாய்ப் பானம் பண்ணுகிறோம். நாங்கள் கடவுளுடைய சந்நிதானத்தில் இருக்கிறவர்கள்போலப் பேசுகிறோம். கை கழுவித் தீபங்கள் ஏற்றினபின்பு ஒவ்வொருவரும் வேத சங்கீதமாவது, சுயமாய் இயற்றின கீர்த்தனையாவது, கடவுளுக்கு ஸ்தோத்திரமாகப் பாடுகிறதுண்டு; அதனால் அவனவன் அளவுக்கு மிஞ்சிப் பானம் பண்ணவில்லை என்று தோன்றும். எங்கள் விருந்து ஜெபத்தோடே ஆரம்பிப்பதுபோல ஜெபத்தோடு முடியும். பிறகு அவ்விடம் விட்டு சண்டை சச்சரவு செய்யாமலும் சந்திப்போரனைவரையும் உதா

சனித்துச் சிற்றின்ப உல்லாசத்திற் பிரவேசிக்காமலும், சரீர முயற்சிக்கடுத்த விருந்துண்டோர்போல் அல்ல, ஞானபோஜனம் பண்ணினவர்கள்போல ஒழுக்கமும் கற்புமுடையோராய் நடக்கப் பந்தியினின்று கலைந்துபோகிறோம்.

இந்தமாதிரியான பொது விருந்திற்கு வந்தவர்கள் சமயாசமயத்தில் எல்லாவற்றையும் ஒழுங்கின்படி நடத்திக்கொள்ளவில்லை. 1 கொரி $11^{17-34}$. கள்ளப் போதகர்கள் சிலர் முறைமைக்கு விரோதமானவைகளைச் செய்தார்கள். யூதா $1^{12}$ 2 பேது $2^{23}$.

வேலை முடிந்தபிறகு, சாயங்காலங்களில் இந்த விருந்து செய்யப்பட்டதினால் புறமதஸ்தர்கள் இதைப்பற்றி மார்க்கத்தின்பேரிலே ஆக்ஷேபனை பண்ணினார்கள். ஆதலால் பொது விருந்துகள் செய்கிற வழக்கம் ஒழிந்துபோனது. பிறகு நற்கருணை பொது விருந்தில்லாமல் செய்யப்பட்டது.

தற்காலத்தில் மொரேவியர்களுக்குள்ளும், மெதொடிஸ்ற் சங்கத்தாருக்குள்ளும் அன்பின் விருந்து என்று சொல்லப்படும் ஆராதனை நடத்தப்படுகிறது. அதற்கு வருகிறவர்கள் பொது விருந்தை ஞாபகப்படுத்தும்படி கொஞ்சந் தண்ணீரும், அப்பத்துண்டும் சாப்பிட்டுச் சங்கீதம்பாடி ஜெபம்பண்ணிப் பக்திக்குரிய அனுபவத்தைச் சொல்லுவார்கள். இதைத் திரும்ப ஸ்தாபனம் செய்வதற்கு உவெஸ்லி ஐயர் பிரயாசப்பட்டார். பல இடங்களில் அப்பமும் தண்ணீரும் இல்லாமல் நடத்தப்படும் அனுபவசாட்சி ஆராதனைக்கு இந்தப் பெயர் வழங்கப்படும்.

**அன்றோனீக்கு.** **Andronicus.** [ஜெயவீரன்]. ரோமாபுரியிலுள்ள சபையில் சிறந்தவர்களில் இவன் ஒருவன். அக்காலத்தில் ரோமருடைய ராயனின் பரிவாரத்தில் இப்பெயர்கொண்ட ஒருவன் இருந்தான். இவன் அவனாயிருக்கலாம். ரோ $16^{7}$.

**அன்னத்தோன்.** **Hannathon.** யோசு $19^{14}$.

**அன்னமலேக்கு.** **Anammelech.** ஒரு தேவதை. 2 இரா $17^{31}$. **அந்ரமலேக்கு** காண்க.

**அன்னா.** **Annas.** கி-பி. 6-15-வரை பிரதான ஆசாரியன். அவ்வருஷத்தில் ரோம அதிபதி இவனை உத்தியோகத்திலிருந்து தள்ளினும் இவன் எருசலேமில் அதிக அதிகாரம் உடையவனானதினால் இயேசுவைப் பிடித்தவர்கள் பிரதான ஆசாரியனாகிய காய்பாவிடம் கொண்டுபோகிறதற்கு முந்தி அன்னாவிடம் அவரைக் கொண்டுபோனார்கள். யோவா $18^{13}$ மு. இவன் பேதுரு யோவான் இவர்களுடைய விசாரணையில் அதிகாரம் உடையவனானான். அப் $4^{6}$. இவன் சதுசேயன். பலிக்கு வேண்டியவைகள் இவன் கைவசத்திலும் இவன் பிள்ளைகளுடைய கைவசத்திலும் இருந்ததினால் இவர்கள் அவைகளில் வியாபாரஞ்செய்து அதிக ஆஸ்திக்காரர் ஆனார்கள். இயேசு தேவாலயத்திலிருந்து வியாபாரிகளைத் துரத்தினது, இவனுக்கு விசனத்தை உண்டாக்கியிருக்கும்.

**அன்னாள்.** **Hannah, Anna.** [கிருபை].
1. சாமுவேலின் தாய். 1 சாமு $1^{2}$.
2. வயோதிபமான தீர்க்கதரிசியானவள். லூக் $2^{36}$.

**அன்னியேல்.** **Hanniel.** [கடவுளின் கிருபை].
1. எண் $34^{23}$.
2. ஒரு வீரன். 1 நாளா $7^{39}$.

**அன்னியோன்னியம்.** **Fellowship.** **ஐக்கியம்** காண்க.

## ஆ.

**ஆகாக்.** **Agag.** சவுல் ஜெயித்துப் பிடித்து வந்த அமலேக்கியரின் இராஜாவாகிய இவனைச் சாமுவேல் கொன்றான். 1 சாமு 15 அதி.

**ஆகாசுடைய சூரிய கடியாரம்.** **Sundial of Ahaz.** 2 இரா $20^{11}$. **எசேக்கியா** காண்க.

**ஆகாஸ்.** **Ahaz.** [இவன் பிடித்திருக்கிறான்]. கி-மு. 734-715-வரை யூதாவின் ராஜா. இஸ்ரவேல் ராஜாவாகிய பெக்காவும் சீரிய ராஜாவாகிய ரேத்சீனும் திகிலாத்பிலேசர் ஆகிய அசீரியா ராஜாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனபோது இவனும் துணையாக அவர்களோடு போகாததினால் அவர்கள் இவன்மேல் கோபம்கொண்டு எருசலேமுக்கு விரோதமாய்ப் படை எடுத்து வந்தார்கள். அப்போது ஏசாயா அவர்களுக்கு பயப்படாமல் திடமனதாயிருக்கும்படி சொல்லியும் இவன் அசீரியா ராஜாவுக்குத் தன்னைக் கீழாக்கி அவன் உதவியைத் தேடினான். 2 இரா 16 அதி. ஏசா 7 அதி. அசீரியா ராஜா சீரியரை ஜெயிக்கும்போது அசீரியாவின் ஆலயங்களில் இருக்கும் பலிபீடங்களைப்போல எருசலேம் தேவாலயத்திலும் புதுப் பலிபீடத்தை இவன் கட்டினான். இவன் ஆண்டகாலத்தில் இவனோடு எசேக்கியா பத்து வருஷங்களாக உடன் ராஜாவாயிருந்தான்.

**ஆகாபு.** **Grass-hopper.** லேவி $11^{22}$. கிளி காண்க.

**ஆகாப்.** **Ahab.**

1. ஏறக்குறைய கி-மு. 875-853-வரை அரசாண்ட இஸ்ரவேலரின் ராஜாவாகிய ஆகாப் பல விஷயங்களிலும் திறமையுள்ளவன். பேனிக்கேயரின் ராஜாவோடு இவன் உடன்படிக்கைபண்ணி அவனுடைய மகளாகிய யேசபேலை விவாகஞ்செய்தான். 1 இரா $16^{31}$. பிறகு யூதாவின் ராஜாவாகிய யோராமோடு உடன்படிக்கை செய்து அவனுக்குத் தன் குமாரத்தியைக் கொடுத்தான். 2 இரா $8^{18}$. இவன் மகா ஐசுவரியவானாயிருந்து தனக்காகத் தந்தத்தினால் மாளிகை ஒன்று கட்டினான். 1 இரா $22^{39}$. இவன் சீரியர்களோடு பலதடவை யுத்தஞ்செய்தபோது முதலில் சீரிய ராஜாவாகிய பெனாதாத் இவனை ஜெயித்தான். 1 இரா $20^{2}$. இதைக்கண்டு இவன் அதிக பிரயத்தனஞ்செய்து பெனாதாத்தை ஜெயித்து அவனைச் சிறைபிடித்துப் போனான். அந்த நாட்களில் அசீரியர்கள், சீரிய ராஜ்யத்திற்கும் இஸ்ரவேல் ராஜ்யத்திற்கும் விரோதமாய்ப் படையெடுக்கப் போகிறார்கள் என்று நினைத்து, ஆகாப பெனாதாத்தை விடுதலைசெய்து அவனோடு உடன்படிக்கை பண்ணினான். 1 இரா $20^{34}$. கி-மு. 854-வரை இவர்கள் ஒன்றாய்ச்சேர்ந்து அசீரியா ராஜாவாகிய இரண்டாம் சல்மனாசாரை ஜெயித்தார்கள். இதற்குப் பிறகு சீரியருக்கும் இஸ்ரவேலருக்கும் விரோதம் மறுபடியும் உண்டானபோது ஆகாப தன் தேசத்தைக் காக்கும்படி அவர்களோடு செய்த யுத்தத்தில் மாண்டுபோனான். 1 இரா $22^{31}$. ஆகாப தீரத்தில் பெரிய அரசனாயினும் இவனுடைய மனைவியாகிய யேசபேல் பாகாலை வணங்கினதினாலும், அவள் இவனையும் அதற்கு இசையும்படி செய்ததினாலும் ஜனத்திற்கு அதிக நஷ்டம் நேரிட்டது. இதினிமித்தம் இவன் காலத்தில் யேகோவாவின் மார்க்கத்துக்கும் பாகாலின் மார்க்கத்துக்கும் விரோதம் உண்டானது. பாகால் பக்கத்தில் யேசபேலும் ஆகாபின் கூட்டத்தாரும், யேகோவாவின் பக்கத்தில் தீர்க்கதரிசியாகிய எலியாவும் சில பக்தரும் இருந்தார்கள். 1 இரா 17-19 அதி. இந்த விரோதம் இஸ்ரவேல் ராஜ்யம் அழியுமட்டுமிருந்தது. இவன்மேல் யேசபேலுக்கு இருந்த அதிகாரத்தைப்பற்றி நாபோத்தின் சரித்திரத்தை வாசித்தால் தெரியும். 1 இரா 21 அதி.

2. ஒரு கள்ளத் தீர்க்கதரிசி. எரே $29^{21}$.

**ஆகாயம்.** வானம், வானலோகம், பரம், பரமண்டலம். எபிரெயர் இந்த உலகம் ஒரு பெரிய சமபூமி என நினைத்தார்கள். இதின் கீழ்ப்பக்கம் இறந்துபோனவர்கள் இருக்க வேண்டிய பள்ளத்தாக்கு. உபா $32^{22}$ நீதி $15^{24}$. பூமிக்குமேலே தேவனும் தேவதூதர்களும் உயிர்த்தெழுந்த பக்தர்களும் இருப்பார்கள். ஆதி $28^{12}$ உபா $26^{15}$ மத் $22^{30}$. வானத்தைத் தாங்கும்படி தூண்கள் இருக்கின்றன. 2 சாமு $22^{8}$. வானத்திற்குப் பலகணிகள் உண்டு. ஆதி $8^{2}$. வானத்திலிருந்து மழை (உபா $11^{7}$) உறைபனி (ஏசா $55^{10}$) மின்னல் (2 இரா $1^{10}$) இடிமுழக்கம் (2 சாமு $22^{14}$) உண்டாகின்றன. வானத்தில் சூரிய சந்திர நட்சத்திரங்கள் பதிக்கப்பட்டிருக்கின்றன. ஆதி $1^{17}$.

எபிரெயர் பல வானங்கள் உண்டு என்று நினைத்தார்கள். உபா $10^{14}$. உன்னத வானம் அரசனின் மாளிகையைப்போல இருக்கிறதென்றும், அதிலே கடவுள் ஒரு அரசனைப் போல் சிங்காசனத்தின்மீது வீற்றிருந்து எல்லாவற்றையும் பார்க்கிறார் என்றும் எண்ணினார்கள். சங் $11^{4}$ ஏசா $63^{15}$.

யூத சாஸ்திரிகள் வானங்கள் ஏழு என்று நினைத்தார்கள். இதினிமித்தம் பவுல் 'மூன்றாம் வானம்' என்று சொல்லியிருக்கிறான். வழக்கமாய் மூன்றாம் வானத்திற்குப் பரதீசு என்று பெயர். 2 கொரி $12^{2}$. நீதிமான்கள் பரமண்டலத்திற்குப் போவார்கள் என்று புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் நம்பினார்கள். யோவா $14^{2}$ எபே $3^{14}$ 1 பேது $1^{4}$.

வானத்திலுள்ளவைகளைப்பற்றி வெளிப்படுத்தலில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. ஆனால் இவ்விபரமெல்லாம் அவ்வவ் வஸ்துவின் பொருள் அளவில் அல்ல ரூபகமாயும் உபமானமாயும் சொல்லியிருக்கிறது என்று நாம் நினைக்கவேண்டும்

பழைய ஏற்பாட்டில் வானம் இடத்தைக் குறித்தாலும் புதிய ஏற்பாட்டில் அது இடமோ (அப் $1^{10}$), கதியோ என்பதைப் பற்றியும்; மரித்தவுடனே மனுஷர் அதை அடைவார்களோ அல்லது கிறிஸ்து திரும்பி வந்த பிற்பாடுதான் அதை அடைவார்களோ என்பதைப்பற்றியும் தீர்மானமாய்ச் சொல்லியிருக்கவில்லை.

யூதர்கள் இயேசுவிடம் இதைப்பற்றி விசாரித்தபோது (மாற் $12^{25}$), அவர் அதைக்குறித்துப் பூரணமாய்ச் சொல்லாததினாலே நமக்கு வெளிப்படுத்தியிருக்கும் கடவுளுடைய சித்தத்தை நாம் நிறைவேற்றப் பிரயாசப்படுவது முக்கியம் என்பதையும், பரத்தைப்பற்றி அவ்வளவு விசாரிக்க வேண்டியதில்லை.

என்பதையும் தெரிவித்திருக்கிறார். **ஆதேல்** காண்க.

**ஆகாய். Haggai.**

1. தீர்க்கதரிசி. கி-மு. 536-ஆம் யூதர்கள் பாபிலோனியாவிலிருந்து எருசலேமுக்குத் திரும்பிவரும்போது இவனும் அவர்களோடு வந்தான். யூதர்கள் அங்கே வந்தவுடனே தேவாலயத்தைக் கட்டத் தொடங்கி பதினைந்து வருஷமாக அதை முடிக்கப் பிரயாசப்படவேயில்லை. இதினிமித்தம் கி-மு. 520-ஆமத்தில் ஆகாயும் சகரியாவுமாகிய தீர்க்கதரிசிகள் ஜனங்களுக்கு இதைப்பற்றி நல்ல வைராக்கியம் உண்டாகப் போதித்தார்கள். அந்த வருஷம் யூதர்கள் கணக்கின்படி ஆறும் மாதம் அதாவது புரட்டாசியில் ஆகாய் பிரசங்கம் துவங்கி அதை ஒன்பதாம் மாதத்தில் முடித்தான். இதைவிட வேறொரு விசேஷமும் ஆகாயைப்பற்றிச் சொல்லியிருக்கவில்லை.

2. ஆகாயின் தீர்க்கதரிசனம் நாலுபாகமாய்ப் பிரிக்கப்படும். (*a*) 1 அதி. (*b*) $2^{1-9}$. (*c*) $2^{10-19}$. (*d*) $2^{20-23}$.

யூதர்கள் அடிமைத்தனத்தில் விக்கிரகாராதனையிலிருந்து முழுவதும் விலகியிருந்ததினால் ஆகாயின் புஸ்தகத்தில் அதைப்பற்றி ஒரு வார்த்தையும் சொல்லியிருக்கவில்லை. சகரியா, மல்கியா இவர்களைப்போல் ஆகாய் சன்மார்க்க காரியங்களைக் குறித்து அவ்வளவு ஒன்றும் பேசவில்லை. தேவாலயத்தைச் சீக்கிரமாய்க் கட்டி முடிக்கவேண்டுமென்னும் நோக்கமே இவனிடம் இருந்ததென்று இவன் எழுதினவற்றால் தெரிகிறது.

**ஆகாரம். Food.**

1. எபிரெயர் குடும்ப விருந்து செய்யும் போதும், அகதிகளுக்கு விருந்து செய்யும் போதும், பலிசெலுத்தும் போதும் மாமிசமும் மற்றக்காலங்களில் பெரும்பாலும் தாபர பதார்த்தங்களும் சாப்பிடுவார்கள். ஆதியில் எல்லாரும் மாமிசம் சாப்பிடவில்லை என்பது முன்னோரின் அபிப்பிராயம். ஆதி $1^{29}$. பிற்காலத்தில் இதை விட்டுச் சாப்பாட்டில் சம்பிரமமாய் இருந்தார்கள். தாவீது அரசனுக்கும் சாலொமோன் அரசனுக்கும் இட்ட போஜனதிகளைப் பார்த்தால், இதைப்பற்றித் தெரியவரும். 2 சாமு $17^{28}$ 1 இரா $4^{22}$.

2. எபிரெயர்கள் முக்கியமாய்க் கோதுமை, வாற்கோதுமை, வறுத்தகோதுமை, 'வாற்கோதுமை அப்பங்கள்' இவைகளைச் சாப்பிட்டார்கள். ரூத் $2^{14}$.

3. பலவிதமான பயறு சாப்பிட்டார்கள். 2 சாமு $17^{28}$ எசே $4^{9}$. ஏசாவுக்கு யாக்கோபு கொடுத்த 'சிவப்பான கூழ்' வெண்காயம், கீரை முதலியவை போட்டுச் செய்யப்பட்ட 'பயற்றங்கூழ்' தான். ஆதி $25^{29}$. எகிப்து தேசத்திலுள்ள கீரைவகைகள் பல காணன் தேசத்தில் பயிரிட்டிருந்தார்கள். எண் $11^{5}$ நீதி $15^{17}$. இவைகளில் 'கசப்பான கீரை' (யாத் $12^{8}$), 'கடுகு' (மத் $13^{31}$) முதலிய பலவிதமான கீரைகளே.

4. ஒலிவமரத்தின் பழங்களையும் எண்ணெயையும் (யாக் $3^{12}$), அத்திப்பழ அடைகளையும் (1 சாமு $25^{18}$ எரே $24^{2}$), திராக்ஷப் பழ வற்றலையும், திராக்ஷப்பழ ரசத்தையும், பேரீச்சம்பழத்தையும் பலவிதமான வாதுமை முதலிய கொட்டைகளையும் சாப்பிட்டார்கள். காணுமல்போன மகன் சாப்பிட்ட 'தவிடு' என்னவென்றால் ஒருவகை மரத்தின் கொட்டையின் கோது அல்லது தோல்.

5. சுத்தமான மிருகம் பட்சிகளின் மாமிசம்மாத்திரம் சாப்பிடுகிறதற்கு உத்தரவு இருந்தது. லேவி $11^{23}$ உபா $14^{4}$. பெரும்பாலும் வெள்ளாடு, செம்மறியாடு, மாடு, மாட்டுக் கன்று இவைகளின் மாமிசம் சாப்பிட்டார்கள். 1 இரா $4^{22}$. பன்றி, ஒட்டகம், முயல், கழுதை இவைகளை எபிரெயர் ஒருபோதும் சாப்பிடமாட்டார்கள். உபா $14^{8}$.

6. பலவிதமான மச்சங்களைச் சாப்பிட்டார்கள். உபா $14^{9}$.

7. காடை, கவுதாரி, கோழி, பெரிய வாத்துமுதலியபறவைகளையும்(உபா $14^{11-18}$), குருவிகளையும் (மத் $10^{29}$) சாப்பிட்டார்கள்.

8. சீரியர் அசீரியர் எபிரெயர் ஒருவிதமான வெட்டுக்கிளிகளைச் சாப்பிட்டார்கள். லேவி $11^{22}$ மத் $3^{4}$.

9. பால் வெண்ணெய் முட்டை வழக்கமாய்ச் சாப்பிடுவார்கள்.

10. வெண்காயம், மிளகு, சீரகம், உப்பு, உளுந்து முதலியவற்றைப் பதார்த்தங்களுக்குச் சுவை கொடுப்பதற்கு வழக்கமாய் உபயோகிப்பார்கள்.

11. எபிரெயர்கள் ஒருபோதும் ரத்தம், குடல், சில கொழுப்பு, தானாய் இறந்து போன மிருகங்கள், காட்டுமிருகங்களினால் கொல்லப்பட்டவைகளாகிய இவைகளைச் சாப்பிடமாட்டார்கள். லேவி $3^{3}$ $17^{15}$ உபா $12^{16}$ $14^{21}$. **போஜனம்** காண்க.

**ஆகாரியர். Hagarites.** அரபியர்களில் அல்லது சீரியர்களில் யோர்தான் நதிக்குக் கிழக்கே வசித்த ஒரு கோத்திரம். 1 நாளா $5^{10}$.

**ஆகார். Achar.** [கலங்கப்பண்ணுகிறவன்]. ஆகான் இஸ்ரவேலைக் கலங்கப்பண்ணினதினால் ஆகோர் என்னும் பள்ளத்தாக்

திலே கொல்லப்பட்டான். இதற்காக இவன் பெயரை மாற்றி ஆகார் என்று எழுதினார்கள். யோசு 7 அதி. **ஆகான்** காண்க.

**ஆகார். Hagar.** [அன்னியன்]. சாராளின் அடிமைப் பெண். சாராளுக்குப் பிள்ளையில்லாத காலத்தில் அத்தேச வழக்கப்படி அவள் இவளைத் தன் புருஷனாகிய **ஆபிரகாமுக்கு** மறு மனையாட்டியாகக் கொடுத்தாள். ஆதி $16^{1}$ $21^{9}$ $25^{12}$ கலா $4^{22}$.

**ஆகான். Achan.** [ஒருவேளை இதின் அர்த்தம் கலக்கம்]. சாபத் தீடானதை எடுத்தவன். யோசு 7 அதி. **ஆகார்** காண்க.

**ஆகி. Haggi.** [பண்டிகை கொண்டாடுகிறவன்]. காத் வம்சத்தான். எண் $26^{15}$. = அகி. ஆதி $46^{16}$.

**ஆகிமோத். Ahimoth.** 1 நாளா $6^{25}$.

**ஆகிலா. Hachilah.** எபிரோனுக்குத் தெற்கேயுள்ள ஒரு மலை. 1 சாமு $23^{19}$.

**ஆகீசு. Achish.** பெலிஸ்தருடைய காத் என்னும் பட்டணத்தின் அரசன். 1 சாமு $21^{10}$.

**ஆகீத். Haggith.** [பண்டிகைக் குரியது]. அதொனியாவின் தாய். 2 சாமு $3^{4}$ 1 இரா $1^{5}$.

**ஆகீம். Achim.** ஒரு வேளை ஆகீம், யோயாக்கீம் இவ்விரண்டும் ஒன்றுதான். மத் $1^{14}$.

**ஆகூர். Agur.** நீதி 30-ம் அதிகாரத்திலுள்ள வசனங்களை இயற்றினவன்.

**ஆகே. Agee.** 2 சாமு $23^{11}$.

**ஆகேர். Aher.** [இன்னொருவன்]. 1 நாளா $7^{12}$.

**ஆகோர் Achor.** [கலகம்]. எரிகோ பட்டணத்திற்கு மேற்கிலுள்ள இந்தப் பள்ளத்தாக்கிலே எபிரெயர் ஆகானைக் கொன்றார்கள். யோசு $7^{26}$.

**ஆக்கில்லா, பிரிஸ்கில்லா. Aquila, Priscilla.** புருஷனும் மனைவியும் ஆகிய இவர்கள் ரோமாபுரியிலிருந்து துரத்தப்பட்டு (அப் $18^{2}$), கொரிந்து பட்டணத்திற்கு வந்து அங்கே பவுலைச் சந்தித்து அவனோடே எபேசுவுக்குப் போனார்கள். அப் $18^{18}$ 1 கொரி $16^{19}$. அங்கே அப்பொல்லோவைக் கண்டு அவனுக்கு உபதேசித்தார்கள். கி-பி. 57-ஆம் ஆண்டில் இவர்கள் மறுபடியும் ரோமாபுரியில் இருந்தார்கள். ரோ $16^{13}$. எட்டு அல்லது ஒன்பது வருஷங்களுக்குப் பிறகு மறுபடியும் எபேசு பட்டணத்திற்குப் போனார்கள். 2 தீமோ $4^{19}$.

**ஆக்கினை, உபத்திரவம், தண்டனை, வேதனை. Punishment, Torture.** பழைய ஏற்பாட்டில் ஒருவன் மற்றவனுக்குச் சேதஞ் செய்தால் அதற்குப் பதிலாக இவனும் சேதம் அடையவேண்டும். யாத் $21^{23}$. அல்லது ஒருவன் இன்னொருவனிடத்திலிருந்து ஒரு பொருளை அபகரித்தால் அதற்குப் பதிலாக அபகரித்த பொருளிலும் அதிகமாய்க் கொடுக்கவேண்டும். யாத் $22^{1-4}$. இந்தவிதமாகவே எபிரெயர்களும் சுற்றியிருக்கும் தேசத்திலுள்ளவர்களும் குற்றவாளிகளைத் தண்டித்துவந்தார்கள். வேதாகமத்திற் சொல்லியிருக்கும் தண்டனை, வேதனைகளில் முக்கியமானவைகள்:

1. கல் எறிதல். விக்கிரகாராதனைக்கும் இன்னும் 17 குற்றங்களுக்கும்: லேவி $24^{14}$ உபா $17^{7}$.

2. தீயிற்போடல். முறைகேடான குற்றத்திற்கு. லேவி $21^{9}$.

3. தூக்குதல். எகிப்து, பெர்சியா தேசங்களில் செய்த தண்டனை. ஆதி $40^{22}$ எஸ்தர் $7^{10}$.

4. கழுவேற்றுதல். உபா $21^{22}$.

5. சிலுவையில் அறைதல். இது ரோமர்கள் அதிக ஈனமான அடிமைகளுக்கிடும் தண்டனை. குற்றவாளியை முதலில் அடித்துச் சிலுவைமரத்தில் கைகளிலும் கால்களிலும் ஆணியறைவார்கள். சிலவேளை கைகளையும் கால்களையும் சிலுவையோடு கயிற்றினாற் கட்டுவார்கள். யோவா $19^{23}$ பிலி $2^{8}$.

6. சிரச்சேதம் செய்தல். மத் $14^{10}$.

7. மலைச் சிகரத்திலிருந்து கீழே தள்ளி விழுத்தல். 2 நாளா $25^{12}$.

8. வாளால் அரிதல். எபி $11^{37}$.

9. அடித்தல். யூதர்கள் ஒன்று குறைய நாற்பது அடி சவுக்கினால் அல்லது பிரம்பினால் அடிப்பார்கள். உபா $25^{3}$ அப் $22^{19}$.

10. ரோமர் பிரம்பினால் மிதமிஞ்சி அடித்தல் வழக்கமான ஒரு தண்டனை. அப் $16^{22}$.

11. ரோமர் வாரினால் அடிப்பது அதிக பயங்கரமானது. ஏனென்றால் வாரின் அந்தத்தில் எலும்புகளும் ஈயக்குண்டுகளும் கட்டியிருக்கும். யோவா $19^{1}$ அப் $22^{24}$.

12. தொழுமரத்தில் மாட்டுதல். அப் $16^{24}$.

13. ரோமத்தைப் பிய்த்தல். நெகே $13^{25}$.

14. கண்ணைப் பிடுங்குதல். நியா $16^{21}$.

15. கை காலின் விரல்களைத் தறித்தல். நியா $1^{5}$.

16. முள்ளுகளாலும் குறடுகளாலும் வாதித்தல். நியா $8^{16}$.

17. சிறையிற் போடுதல். இது பலவிதமாயிருந்தது. சிறைச்சாலைகளுக்கு உட்காவல் அறைகள் இருந்தன. அப் $16^{29}$. அந்

த் தேசங்களிலுள்ள சிறைச்சாலைகள் அதிக அசங்கியமாயும் அகோரமாயு மிருந்தன.

**ஆசகேல்.** **Asahel.** [கடவுள் செய்வோன்].

1. தாவீதின் சகோதரி மகன். 2 சாமு $2^{18}$.

2. நியாயப்பிரமாணிகளுகிய ஒரு லேவியன். 2 நாளா $17^{8}$.

3. காணிக்கை பார்க்கிற லேவியன். 2 நாளா $31^{13}$.

4. இன்ஞெருவன். எஸ்று $10^{15}$.

**ஆசகேல்.** **Hazael.** சீரியரின் ராஜா. ஏறக்குறைய கி-மு. 844-ஆத்தில் தனக்கு முன்னிருந்த அரசனைக் கொன்று போட்டுத் தனக்குப் பட்டம் சூடினவன். பின்னுல் வரும் வசனங்களைக்கொண்டு இவன் சரித்திரத்தை அறியலாம். 1 இரா $19^{15}$ 2 இரா $8^{8-29}$ $9^{14}$ $10^{32}$ $12^{17}$ $13^{3-25}$.

**ஆசரிப்புக் கூடாரம்.** **Tabernacle.** **கூடாரம்** காண்க.

**ஆசவேல்.** **ஆசகேல்** காண்க.

**ஆசனம்.** **சிம்மாசனம், ராஜாசனம்** **Seat, Throne.** பழைய ஏற்பாட்டில்: மேன்மைக்குரிய விசேஷித்த ஆசனம் ஆசாரியர்களுக்கும் (1 சாமு $1^{9}$), நியாயாதிபதிகளுக்கும் (சங் $94^{20}$), சேனுதிபதிகளுக்கும் (எரே $1^{15}$) பெரும்பாலும் ராஜாக்களுக்குமுண்டு. சாலொமோன் கட்டின சிம்மாசனத்தின் விபரம் 1 இரா $10^{18}$-ல் சொல்லியிருக்கிறது. தேவனுடைய சிம்மாசனத்தைப்பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறது. சங் $9^{7}$ ஏசா $6^{1}$. வழக்கமாய் 'ஆசனம்' என்னும் பதம் மகிமை அல்லது அதிகாரம் என்று கருதுகிறது. 2 சாமு $7^{16}$ சங் $45^{6}$. 'கொடுங்கோலாசனம்.' சங் $94^{20}$.

வேத சாஸ்திரிகள் சிலர் தூதர்களில் ஒரு வகுப்பைச் 'சிங்காசனங்கள்' என்று சொன்ஞர்கள். கொலோ $1^{16}$.

புதிய ஏற்பாட்டில்: பெரும்பாலும் கடவுளுடைய சிம்மாசனத்தைப்பற்றியும் இயேசு கிறிஸ்துவின் சிம்மாசனத்தைப்பற்றியும் சொல்லியிருக்கிறது. மத் $5^{34}$ எபி $4^{16}$ வெளி $1^{4}$. கிருபாசனம். எபி $8^{1}$. கிறிஸ்தவர்கள் இவ்விதமாய் இயேசு கிறிஸ்துவினுடைய ராஜரீகத்தைப்பற்றிப் பேசுவது ரோம ராஜாங்கத்தார் கிறிஸ்து மார்க்கத்தை வெறுப்பதற்குக் காரணமாயிருந்தது.

**ஆசனம்.** **மோசே உட்காரும் ஆசனம்.** **Moses' Seat.** வேதபாரகர் தாங்கள் செய்த பிரமாணங்கள் முதன்மையானவைகள் என்றும், யாவரும் அவைகளின் அதிகாரத்துக்குக் கீழ்ப்படியவேண்டும் என்றும் விரும்பி மோசேயின் அதிகாரத்தைக் குறைத்துத் தங்களைச் சிறப்பித்து, நியாயஸ்தலத்திலிருந்து மோசேயை நீக்கி அவனுக்குப் பதிலாகத் தாங்களே நியாயாசனத்தில் உட்கார்ந்திருக்கிறதுபோலக் காட்டினூர்கள். மத் $23^{2}$.

**ஆசா.** **Asa.**

1. யூதாவின் ராஜாவாகிய ஆசா கி-மு. 918-877-ஆ அரசாண்டான். இவன் புறமதங்களுக்குச் சார்பாய் இருந்த தன் பிரஜைகளைக் கடவுளுக்குரிய மெய்ப்பக்தியில் மறுபடியும் சேர்ப்பதற்கு மிகவும் பிரயாசப்பட்டான். இவன் யுத்தத்தில் மிகவும் திறமையுள்ளவன். 1 இரா $15^{8-24}$ 2 நாளா $14^{1}$ $16^{13}$.

2. ஒரு லேவியன். 1 நாளா $9^{6}$.

3. *Azzah.* பெலிஸ்தரின் ஒரு ஊர். உபா $2^{23}$.

**ஆசாசோன் தாமார்.** **Hazazon Tamar.** = என்கேதி. 2 நாளா $20^{2}$.

**ஆசாஸ்.** **Azaz.** 1 நாளா $5^{8}$.

**ஆசாப்.** **Asaph.** [சேர்க்கிறவன்].

1. 2 இரா $18^{18}$.

2. இராஜாவின் வனத்துக்குக் காவலாளன். நெகே $2^{8}$.

3. ஒரு லேவியன். 1 நாளா $26^{1}$.

4. தேவாலயத்தில் சங்கீதம் பாடுகிற வம்சமாகிய ஒரு கூட்டத்தார். 50-ம் சங்கீதம், 73-83-ம் சங்கீதங்கள் இவைகளின தலைப்பில் 'ஆசாபபின் சங்கீதம்' என எழுதியிருக்கிறது. இந்தச் சங்கீதங்களை இந்தக் கோத்திரத்தார் இயற்றினுர்கள்.

**ஆசாப்நேயா.** **Hashabneiah.**

1. நெகே $3^{10}$.

2. நெகே $9^{5}$.

**ஆசாரியர், லேவியர்.** **Priests, Levites.** ஆசாரியர்களுக்கும் லேவியருக்கும் வெவ்வேறுனகாலத்தில் வெவ்வேறுன கடமைகளும் மானியங்களும் விடப்பட்டிருந்தமையால் இவர்களைப்பற்றி விபரமாய்ச் சொல்ல முடியாது. யூதர்கள் பாபிலோன் அடிமைத்தனத்திலிருந்து வந்தபிறகு தேவாலயத்தை இரண்டாம்தடவை கி-மு. 536-ஆ கட்டத் துவக்கினபோது ஆசாரியர் லேவியர்ஆகிய இவர்களுடைய வேலையின்விஷயத்தில் கண்டிப்பான சட்டங்கள் நியமித்திருந்ததினுலே அதுமுதல் கி-பி. 70-ஆ பெரிய ஏரோது கட்டின தேவாலயம் அழியும்வரையும் அவைகளின்படி நடந்தார்கள். இதற்கிடையில் நடந்த இவர்களுடைய சில வரலாற்றைச் சொல்வது உபயோகமாயிருக்கும். இவ்வாறு லேவியராகமம் முழுவதிலும், எண்ணுகமம்

பல இடங்களிலும், யாத்திராகமம் 25-27-ம் அதிகாரங்களிலும், 35-40-ம் அதிகாரங்களிலும் விவரமாய்ச் சொல்லியிருக்கிறது.

**A. பிரதான ஆசாரியன்.**

1. பிரதான ஆசாரியனாய் இருந்தவனுடைய மூத்த மகனே இவ்வூழியத்திற்கு உரித்தானவன். பிரதான ஆசாரிய அபிஷேக முறை யென்னவென்றால் இவனுக்கு ஸ்நானம் செய்து விசேஷித்த உடை தரித்து எண்ணெய் பூசி காளை ஆட்டுக்கடா இவைகளைப் பலி செலுத்தி இவனைப் பிரதிஷ்டை செய்வார்கள். யாத் 29 அதி.

2. பிரதான ஆசாரியன் தையல் இல்லாத இளநீல அங்கியும் (யாத் 28[31]), விசித்திர வேலையான ஏபோத்தும் (யாத். 28[6]), மார்ப்பதக்கமும் (யாத் 28[15]), 'கர்த்தருக்குப் பரிசுத்தம்' என்று எழுதியிருக்கும் பொன் பட்டம் கட்டின பாகையும் (யாத். 28[36]) தரிப்பான்.



பிரதான ஆசாரியன.

3. பிரதான ஆசாரியனின் கடமைகள்: நித்திய போஜனபலி செலுத்துதல் (லேவி 6[20]), ஜனங்களின் பாவத்துக்காகப் பலியின் இரத்தத்தைத் தெளித்தல் (லேவி 4[17]), பாவ நிவிர்த்தியின் நாளில் மகா பரிசுத்த ஸ்தலத்தில் பாவ நிவிர்த்தி செய்தல் (லேவி 16 அதி) ஆகிய இவைகளே.

**B. ஆசாரியன்.**

1. இவன் ஆரோனின் குடும்பத்தைச் சேர்ந்தவனாய் இருக்கவேண்டும். இவன் தன் ஊழியத்திற்காக அபிஷேகம் செய்யப்படுவான். யாத் 29 அதி. லேவி 8 அதி. இவன் தரிக்கும் விசேஷித்த உடைகளாவன: சல்லடம், விசித்திர வேலையான அங்கி, இடைக்கச்சை, குல்லா. யாத் 28[42] 29[8] லேவி 8[13].

2. ஆசாரியனின் ஊழியம்:

*a*. பலி செலுத்தல். லேவி 1-6 அதி.

*b*. குஷ்டரோகம், கொள்ளைநோய் ஆகிய வியாதிகளைப்பற்றி விசாரித்துத் தீர்மானஞ் செய்தல். லேவி 13-14 அதி. மத் 8[4].

*c*. பூரிகைகள் ஊதல். எண் 10[10] லேவி 23[24].

3. ஆசாரியனின் சம்ரக்ஷணை.

*a*. லேவியர் வாங்கும் தசமபாகத்தில் இவர்களுக்குப் பத்தில் ஒரு பங்கு. எண் 18[26].

*b*. முதற் பலன்கள். எண் 18[12-19].

*c*. காணிக்கைகள். எண் 18[9] லேவி 24[9] மு.

**C. லேவியன்.**

1. லேவியனுக்கு அபிஷேகம் கிடையாது. இவனைப் பிரதிஷ்டை செய்யும் நாளில் இவன் இரண்டு காளைகளைக் கொண்டுவருவான். ஆசாரியர்கள் இவனுக்கு ஸ்நானம் செய்து இவனைச் சுத்தமாக்கி அக்காளைகளைப் பலி செலுத்துவார்கள். அப்பொழுது பிரதான ஆசாரியன் இவன் தலைமேலே தனது கையை வைத்து இவனை நித்திய பரிசுத்த ஊழியத்திற்காக நியமிப்பான். எண் 8[5-22]. லேவியர் வெவ்வேறு காலங்களில் 30, 25, அல்லது 20 வயதில் இந்த ஊழியத்திற்காக நியமிக்கப்படுவார்கள். எண் 4[3] 8[24] 1 நாளா 23[3].

2. லேவியர் பிரமாணத்தில் ஆசாரியர்களுக்குக் கட்டாயமாய் இட்டிருக்கும் ஊழியத்தையல்லாமலும் தேவாலயத்திலுள்ள வேறு ஊழியத்தையும் செய்துவந்தார்கள். எண் 18[2-7] 3[5-39]. வனாந்தரப் பிரயாணத்தில் ஆசரிப்பின் கூடாரத்தின் பணிமுட்டுச் சாமான்களைச் சுமந்து போவதற்கு நியமிக்கப்பட்டவர்கள் இவர்களே. இவர்களுடைய சம்ரக்ஷணை இஸ்ரவேலர் கொடுத்த தசமபாகம். எண் 18[26].

**D.** லேவியருக்கு மற்றக் கோத்திரங்களோடே பங்கும் சுதந்தரமும் இல்லாவிட்டாலும் மற்றவர்களுடைய நாடுகளிலுள்ள 48 ஊர்கள் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. உபா 10[9].

**E.** ஆசாரியர்கள் லேவியர்களுடைய உத்தியோக உற்பத்தியைப்பற்றிய பாரம்பரியமாவது: இவர்கள் யாக்கோபின் பன்னிரண்டு பிள்ளைகளில் லேவி என்பவனுடைய கோத்திரத்தார். யேகோவா முதற்பேறு சகலத்திற்கும் பதிலாக இவர்களை ஏற்படுத்தினார். எண் 8[18]. லேவியரின் கோத்திரத்திலுள்ள மூன்று வம்சங்களாவன: கெர்சோன், கோகாத், மெராரி. யாத் 6[16].

கடவுள் கோகாத் வம்சத்தைச் சேர்ந்த ஆரோன் என்பவனைப் பிரதான ஆசாரியனாக ஏற்படுத்தினதினால் அவனுடைய சந்ததியார் ஆசாரியராயும் அவனுடைய குடும்பத்தில் தலைமுறையாக உள்ளவர்கள் பிரதான ஆசாரியராயும் இருந்தார்கள். மேலும் ஆரோனும் மோசேயும் கோகாத் வம்சத்தைச் சேர்ந்ததினால் இந்த வம்சம் மேன்மையுள்ளதாயிருந்தது. ஆகையால் இதைச் சேர்ந்த லேவியர்கள் உடன்படிக்கைப் பெட்டி, பலிபீடம், தீபம் இன்னும் பரிசுத்தமான தேவாலயத்தின் பணிமுட்டுச் சாமான்களுக்குக் காவலாளிகளாய் இருந்தார்கள். எண் $3^{21}$.

**புதிய ஏற்பாட்டில்** இயேசுகிறிஸ்துவுக்கு ஆசாரியன் (எபி $5^{6}$) என்றும், பிரதான ஆசாரியன் (எபி $10^{21}$) என்றும் சொல்லியிருக்கிறது. பிரதான ஆசாரியனாகிய இயேசுகிறிஸ்து தமது ஊழியத்திற்கென்று நியமனம் பெற்றுச் சோதிக்கப்பட்டு நமக்காகத் தம்மைத்தாமே பலிசெலுத்தி விசுவாசிகளைப் பரிசுத்தமாக்கிப் பரமண்டலம் சென்று அங்கே நமது மத்தியஸ்தராய் வீற்றிருக்கிறார். விசேஷமாய் எபி 4 5 7 8 10-ம் அதிகாரங்களைப் பார்க்க.

கிறிஸ்தவ சபை ஓர் ராஜரீகமான ஆசாரியக் கூட்டம். 1 பேது $2^{9}$.

கிறிஸ்தவர்கள் எல்லாரும் ஆசாரியர்களாயிருக்கிறார்கள் வெளி $1^{6}$. பவுல் நாம் நமது சரீரங்களை ஜீவபலியாக ஒப்புக்கொடுக்க வேண்டும் என்று சொல்லும்போது இதே கருத்தோடு பேசுகிறான்.

புதிய ஏற்பாட்டிலே விசேஷித்த முறைமையின்படி கிறிஸ்தவர்கள் எல்லாரும் ஆசாரியர்களென்று தாராளமாய்ச் சொல்லி இருக்கிறதேயல்லாமல் சபையிலுள்ள குருமார் ஆசாரியர் என்று சொல்லியிருக்கிறதில்லை.

**ஆசாரியேல்.** **அசரியேல்** காண்க.

**ஆசான், ஆஷான்.** **1. Ashan.** யோசு $15^{42}$ $19^{7}$. **2. Azzan.** எண் $34^{26}$.

**ஆசியா. Asia.** இந்தியா சீனா முதலிய நாடுகள் உள்ள பெரிய கண்டத்திற்கு ஆசியா என்று வழக்கமாய்ச் சொல்லுவோம். புதிய ஏற்பாட்டில் 'ஆசியா' என்றால் அது சின்ன ஆசியாவின் மேற்குப் பாகமாகிய ஒரு நாட்டைக் குறிக்கிறது. அது மிகவும் செழிப்பும் செல்வமும் பொருந்திய இடம். வெளிப்படுத்தின விசேஷம் ஆரம்பத்தில் சொல்லியிருக்கும் எபேசு சிமிர்னா முதலிய சபைகள் இங்கே இருந்தன. பரி. பவுல் அநேக காலமாய் எபேசுவில் வசித்ததினாலே ஆசியா நாட்டில் சுவிசேஷம் மிகவும் பிரபல்லியமானது. அப் $2^{9}$ $19^{26}$ $20^{4}$ 1 கொரி $16^{19}$ 1 பேது $1^{1}$ வெளி $1^{4}$.

**ஆசியா நாட்டுத் தலைவர். Asiarch.** சின்ன ஆசியாவின் பட்டணங்களிலுள்ள சில பெரியோர்களுக்கு இப்பெயர் இடப்பட்டிருந்தது. இவர்கள் அந்த நாட்டின் ஆலோசனைச் சங்கத்தைச் சேர்ந்தவர்களாய் ரோமைதேவியையும் ரோமை ராயனையும் விக்கிரக ஆராதனைமூலமாய் வணங்கி வருவதை விருத்திசெய்து அதைப் பரிபாலிக்கும்படி நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்கள். அப் $19^{31}$.

**ஆசியேல். Asiel.** 1 நாளா $4^{35}$.

**ஆசியேல். Haziel.** 1 நாளா $23^{9}$.

**ஆசியேல். Jaaziel.** 1 நாளா $15^{20}$. **யாசியேல்** காண்க.

**ஆசீர். Assir.**
1. யாத் $6^{24}$.
2. 1 நாளா $6^{23}$.

**ஆசூம். Hashum.**
1. எஸ்றா $2^{19}$.
2. நெகே $8^{4}$.

**ஆசூர். Azzur.** **அசூர்** காண்க.

**ஆசேம். Hashem.** 1 நாளா $11^{34}$. =யாசேன் 2 சாமு $23^{32}$.

**ஆசேரீம். Hazerim.** இது காரணப் பெயர் அல்ல. இதின் அர்த்தம் 'ஊர்கள்.' உபா $2^{22}$.

**ஆசேர். Asher.** [பாக்கியம் உடையவன்]. யாக்கோபின் இரண்டாம் மகன். ஆதி $30^{11}$. ஆசேர் கோத்திரத்தாரின் நாடு கானான் தேசத்தில் வடமேற்கு மூலையில் உள்ளது. அது மிகவும் செழிப்பான இடம். இஸ்ரவேலரின் சரித்திரத்தில் ஆசேர் ஜனத்தைப்பற்றிய விசேஷம் ஒன்றுமில்லை. இவர்களுக்கும் கானானியருக்கும் அவ்வளவு விரோதம் ஒன்றும் இருக்கவில்லை. இவர்கள் மற்றக் கோத்திரங்களோடு சிசெராவுக்கு விரோதமாகப் படையெடுத்துப் போகவில்லை. நியா $5^{17}$. ஆனால் இவர்கள் கிதியோனுக்கு உதவி செய்தார்கள். நியா $6^{35}$.

**ஆசோ. Assos.** ஆசியா நாட்டில் பவுல் சந்தித்த அரணான ஓர் பட்டணம். அப் $20^{11}$.

**ஆசோ. Hazo.** ஆதி $22^{22}$.

**ஆசோத்து. Azotus.** **அஸ்தோத்** காண்க. அப் $8^{40}$.

**ஆசோர். Azor.** மத் $1^{13}$.

**ஆச்சரியம். Miracle.** **அற்புதம்** காண்க.

**ஆஸரோத்.** Hazeroth. இஸ்ரவேலர் கூடாரம் அடித்த ஓர் இடம். எண் $11^{35}$.

**ஆஸ்னாத்.** Asenath. யோசேப்பின் மனைவியாகிய இவள் ஓன் என்னும் ஊரின் பிரதான ஆசாரியனாகிய போத்திபிராவின் மகள். ஆதி $41^{45}$.



சீரியாவிலுள்ள ஆடு.

**ஆடு.** Sheep. ஆட்டுமந்தைக்கு முன்னாக மேய்ப்பன் போவான். சங் $23^{2}$ யோவா $10^{4}$. பிரயாணம் பண்ணும்போது மந்தைகளுக்கு முன்னாக ஒருவனும் பின்னாக ஒருவனுமாய் இரண்டு மேய்ப்பர் போவார்கள். நாலுபக்கமும் கற்களினால் மதில் கட்டியிருக்கும் கிடைக்குள் ஆட்டுமந்தையை ராத்திரியில் அடைத்து சமீபத்திலிருக்கும் மலைக்குகையொன்றில் அல்லது குடிசையில் மந்தைக்குக் காவலாக இடையர் தங்கியிருப்பார்கள். யூதேயா தேசத்து ஆட்டின் வால் அதிக புஷ்டியும் நீளமுமுள்ளது. ஆடு அதிக சாந்தமுள்ளதாகையால் இக்குணத்திற்கு இது அடிக்கடி உபமானமாய்ச் சொல்லப்படுகிறது. ஏசா $53^{7}$ ஓசி $4^{16}$. கள்ளப்போதகரின் தந்திரத்தைத் தெரிவிக்கும்படி அவர்கள் ஆட்டைப்போல் வேஷந் தரிப்பார்கள் என்று சொல்லியிருக்கிறது. மத் $7^{15}$ வெளி $13^{11}$.

**ஆட்டுமயிர்.** Wool. வஸ்திரம் நெசவு செய்வதற்கு ஆட்டுமயிர் உபயோகிக்கப்பட்டது. லேவி $13^{47}$. இது பூச்சிதின்னும் பொருளாதலால் பிரேத உடுப்பாகப் போடார்கள். ஏசா $51^{8}$. சணல் நூலும் ஆட்டுமயிரும் ஒரேதுணியில் நெசவு செய்யார்கள். லேவி $19^{19}$. ஆட்டுமயிர் துணிக்குச் சாயம் போடுவார்கள். எபி $9^{19}$. இது இயற்கையில் வெண்மையாய் இருக்கிறதினால் சுத்தத்தைக் குறிக்கிறது. சங் $147^{16}$ ஏசா $1^{18}$ தானி $7^{9}$ வெளி $1^{14}$. இவைகளில் சொல்லியிருக்கும் 'பஞ்சு' மூலபாஷையில் ஆட்டு மயிரைக் குறிக்கிறது. ஆட்டுமயிர் வியாபாரம். எசே $27^{18}$ 2 இரா $3^{4}$.

**ஆணி.** Nail. கூடார ஆணி. ஏசா $22^{23}$ நியா $4^{21}$.

**ஆணி.** Pin. நெசவு ஆணி. நியா $16^{14}$.

**ஆணை.** Oath. எபிரெயன் ஒருவன் தான் சொல்வது சத்தியமாய் இராவிட்டால் கடவுளின் சாபம் தன்மேல் வரும் என்பதைக் காட்டும்படி அவன் செய்யும் உறுதி வாக்கு. பலவிதமாய் ஆணையிடுவார்கள். 1 இரா $2^{23}$ எரே $29^{22}$ $42^{5}$ ஆதி $31^{50,53}$ நியா $8^{19}$ 1சாமு $20^{3}$. வழக்கமாய்க் கையை மேலே உயர்த்தி ஆணையிடுவார்கள். உபா $32^{40}$. சில சமயங்களில் கைகளைத் தொடையின்கீழ் வைத்து ஆணையிடுவார்கள். ஆதி $24^{4}$ $47^{29}$. பொய் ஆணைக்கு ஏற்ற தண்டனை இருந்தது. லேவி $6^{1}$. உடன்படிக்கையை ஆணையினால் ஸ்திரப்படுத்துவார்கள். ஆதி $21^{31}$ $26^{28}$ $31^{53}$ யோசு $9^{15}$ 2 இரா $11^{4}$. மனுஷர் தங்கள் வாக்கை ஆணையிட்டு ஸ்திரப்படுத்துவதுபோலக் கடவுளும் தமது வாக்கை ஆணையினால் ஸ்திரப்படுத்துகிறார் என்று எபிரெயர் சொல்லுவார்கள். ஆதி $22^{18}$ எபி $6^{17}$.



சீரியாவிலுள்ள ஆட்டின் தலை.

**ஆதமா.** Adamah. யோசு $19^{36}$.

**ஆதரியேல்.** Adriel. [கடவுள் என் துணை]. 1 சாமு $18^{19}$.

**ஆதாதேசர்.** Hadadezer. [ஆதாத் என்னும் தேவன் என் உதவி]. சோபாவின் ராஜாவாகிய இவனைத் தாவீது ஜெயித்தான். 2 சாமு $8^{3}$. இவனுடைய பெயர் ஆதாரேசர் என்றும் சொல்லியிருக்கிறது. 1 நாளா $18^{3}$.

**ஆதாத்.** Hadad.

1. எமோரியரும் பாபிலோனியரும் அசீரியரும் வணங்கிவந்த தேவன். ரிம்மோன்

தேவனும் ஆதாத்தேவனும் ஒன்றுதான். இடி முழக்கம், மின்னல், வாயு இவைகளுக்குத் தேவன். ஆதாத்ரிம்மோன் என்பதில் இந்தத் தேவனின் இரண்டு பெயர் சேர்ந்திருக்கிறது. சக $12^{11}$.

ஆதாத்ரிம்மோனின் புலம்பல். எசே $8^{14}$. **தம்மூசு** காண்க.

2. இஸ்மவேலின் ஏழாம் மகன். 1 நாளா $1^{30}$.

3. ஏதோமின் நாலாம் ராஜா. ஆதி $36^{35}$.

4. ஏதோமின் எட்டாம் ராஜா. 1 நாளா $1^{50}$. = ஆதார். ஆதி $36^{39}$.

5. தாவீதின் காலத்திலுள்ள ஏதோமின் ராஜாவினுடைய குமாரன். 1 இரா $11^{14}$.

**ஆதாத்ரிம்மோன்**. **Hadad-Rimmon.** சக $12^{11}$. **ஆதாத்** காண்க.



காட்டாடு.

**ஆதாம்**. **Adam.** [படைக்கப்பட்டவன் அல்லது செந்நிறமுள்ளவன்]. 'ஆதாம்' என்றால் பெரும்பாலும் அது பொதுவாய் மனுஷர் எல்லாரையும் குறிக்கிறது. ஆதாமினுடைய சிருஷ்டிப்பு விஷயத்தைப்பற்றி இரண்டுதடவை சொல்லியிருக்கிறது. முதல் சரித்திரம் அவன் சிருஷ்டிக்கப்பட்டவைகளில் பிரதானமானவன் என்று காட்டுகிறது. ஆதி $1^{26, 27}$. இரண்டாம் சரித்திரம் அவன் ஜீவனை யடையும் விஷயத்தைப்பற்றிக் குறிக்கிறது. ஆதி $2^{7}$. ஆதியாகமத்தில் எழுதியிருக்கிறபடி மனுஷன் வேலை செய்யவும் சமுசார நிலைமைக் குட்பட்டிருக்கவும், மிருகஜாதிகள்மேல் அதிகாரம் செலுத்தவும் படைக்கப்பட்டான் என்றும் அவன் நன்மை தீமை அறியாதவனாய்ச் செழிப்புற்ற பூங்காவனம் ஒன்றில் வைக்கப்பட்டான் என்றும் காண்கிறோம். இப்படியிருக்க அவன் தன் இஷ்டத்திற்கும் தேவனுடைய சித்தத்திற்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்ட காலத்தில் தன் ஆசைக்கிணங்கி இவ்வுலகத்தில் தீமை, வெட்கம், துன்பம், மரணம் ஆகிய இவை உண்டாகிறதற்கு இடங்கொடுத்தான்.

**புதிய ஏற்பாட்டில்,**

(*a*) சுவிசேஷங்களில்

1. இயேசு ஆதியாகமத்தில் சொல்லியிருக்கிறதைப்பற்றிப் பேசுகிறார். மத் $19^{4}$ மாற் $10^{6}$.

2. லூக்கா சர்வஜனங்களுக்கும் தன் சுவிசேஷத்தை எழுதும்போது இயேசு ஆதாமின் சந்ததியைச் சேர்ந்தவர் என்று சொல்லி இவ்விதமாய் மனுஷரோடு அவர் சம்பந்தப்பட்டவர் என்று காட்டுகிறான். லூக் $3^{38}$.

(*b*) நிருபங்களில் பவுல் ஆதாமைப்பற்றிப் பேசுகிறான்:

1. மனுஷர் எல்லாரும் கிறிஸ்துவின் மூலமாய்ச் சரீர விஷயத்திலும் ஆத்தும விஷயத்திலும் ஒரே ஜனமாயும் ஒரே குடும்பமாயும் இருக்கிறார்கள். 1 கொரி $15^{22}$.

2. ஆதாமுக்கும் கிறிஸ்துவுக்கும் உள்ள வித்தியாசமும் ஒப்பனையும். ரோ $5^{12-21}$.

3. ஆதாமின் தன்மைக்கும் கிறிஸ்துவின் தன்மைக்கும் உள்ள வித்தியாசத்தினால் நாம் உயிர்த்தெழுதலைப்பற்றி நினைக்கவேண்டியவைகள். 1 கொரி $15^{44-47}$.

4. ஆதாம் மூலமாய் வந்த துன்பம். 1 தீமோ $2^{13}$.

**ஆதாம்**. **Adam.** ஒரு ஊர். யோசு $3^{16}$.

**ஆதாரேசர்**. **Hadarezer.** **ஆதாதேசர்** காண்க.

**ஆதார்**. **Hadar.** **ஆதாத்** (5) காண்க.

**ஆதார் மாசம்**. **Adar.** யூதருடைய பஞ்சாங்கத்தில் இது பன்னிரண்டாம் மாசம். இந்த மாதத்தில் 14ல் யூதர் பூரீம் பண்டிகைநாளைக் கொண்டாடுவார்கள். எஸ்தர் $9^{19}$. **காலம்** காண்க.

**ஆதாள்**. **Adah.** [பிரகாசம்].

1. லாமேக்கின் மனைவிகளில் ஒருத்தி. ஆதி $4^{19}$

2. = பஸ்மாத்து. ஏசாவின் மனைவிகளில் ஒருத்தி. ஆதி $36^{2}$.

**ஆதியாகமம்**. **Genesis.**

1. **பொருளும் பிரிவுகளும்**. இப்புஸ்தகம் உலகத்தின் சிருஷ்டிப்பையும் மனிதர் உற்பத்தியையும் ஆதி பிதாக்களின் சரித்திரத்தையும் சொல்லுகிறது என்பது எபிரெயரின் அபிப்பிராயம். இதில் இரண்டு பாகங்கள் உண்டு.

(1) **ஆதி மனிதர்களின் சரித்திரம்.** 1–11 அதி. இதில் உலக சிருஷ்டிப்பு, பாவத்தின் துவக்கம், நாகரீகத்தின் ஆரம்பம், ஜலப்பிரளயம், ஜனங்கள் சிதறடிக்கப்படுதல் ஆகிய இவைகள் சொல்லியிருக்கின்றன.

(2) **ஆதி பிதாக்களின் சரித்திரம்** மூன்று பாகங்களாகப் பிரித்துப் பார்க்கலாம். ஆபிரகாம். ஆதி $12^1$-$25^{18}$. ஈசாக்கு $25^{19}$-36 அதி. யாக்கோபு, யோசேப்பு. 37-50 அதி. இவர்களின் சரித்திரங்களோடு பல வம்ச அட்டவணைகளும் உண்டு. இவைகளில் எபிரெயர்களுக்குத் தெரிந்த ஜனங்களின் உற்பத்தியும் எபிரெய ஜனத்திலுள்ள முதல் விசேஷங்களும் கடவுள் இந்த ஜனத்தை மற்ற ஜனங்களிலிருந்து தெரிந்தெடுத்த நோக்கமும் காட்டப்பட்டிருக்கின்றன.

2. **புஸ்தகத்தின் ஆரம்பம்.** ஆதியாகமத்தில் இதின் ஆக்கியோனைப்பற்றி ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. இதின் தலைப்பிலே இப்புஸ்தகம் மோசேயினால் எழுதப்பட்டது என்று சொல்லியிருப்பினும் இதில் அவன் எழுதினவைகள் பல இருந்தாலும், முழுதும் அவன் எழுதினது என்று சொல்வதற்குப் பல தடைகள் உண்டு.

மோசே இந்தப் புஸ்தகம் எழுதினான் என்பது யூதசாஸ்திரிகளின் பாரம்பரியம். அந்தத் தலைப்பு இப்புஸ்தகம் எழுதின காலத்தில் அல்ல பிற்காலத்தில் எழுதப்பட்டதினாலே, இந்த விஷயத்தில் அது அத்தாட்சியாகாது. ஆதிபாஷையில் தேறின வித்துவான்கள் இந்தப் புஸ்தகத்தில் இரண்டு ஆக்கியோன்கள் எழுதின புஸ்தகங்களை இன்னொரு ஆக்கியோன் ஒன்றாகச் சேர்த்திருக்கிறான் என்று தீர்மானித்திருக்கிறார்கள். இம்மூவர்களில் ஒரு ஆக்கியோன் கடவுளுக்கு 'யேகோவா' *(Jehovah)* அல்லது 'கர்த்தர்' என்றும், மற்றவன் அவருக்குத் 'தேவன்' *(Elohim)* என்றும், மூன்றாம் ஆக்கியோன் மார்க்காசாரம் இன்னது என்றும் சொல்லுகிறார்கள். மேலும் அந்த வித்துவான்கள் இப்புஸ்தகத்தின் பாஷை நடையைக் கவனித்து இதிலுள்ள முதல் இரண்டு ஆக்கியோன்களும் சாலொமோன் காலத்தில், அல்லது கிறிஸ்துவுக்கு 800வருஷ முன், அதாவது ஏசாயாவின் காலத்திலும், மூன்றாம் ஆக்கியோன் அதற்குக் கொஞ்சம் பிந்தியும் எழுதினார்கள் என்று சொல்லுகிறார்கள். மற்றச் சேமியரைப்போலப் பூர்வீக எபிரெயரும் தங்கள் காலத்தில் நடந்த சம்பவங்களைப்பற்றிச் செங்கற்களிற் சுருக்கமாய் எழுதியிருப்பார்கள் என்பதற்கு இடமுண்டு. அல்லாமலும் குடும்பங் குடும்பமாக ஒருத்தருக் கொருத்தர் அச்சம்பவங்களை வாய் மொழியாய் அறிவித்துவந்தார்கள். மேலும் கல்வியிற் சிறந்த மோசே எபிரெயருக்குள் சன்மார்க்கத்தை ஸ்திரப்படுத்தும்படியான வோர் புஸ்தகம் எழுதியிருப்பான் என்பது நம்பக்கூடியகாரியம். ஆதலால் முன்னோரும் மோசேயும் எழுதினவைகளும் வாய்மொழியாய்ச் சொன்னவைகளும் முதல் இரண்டு ஆக்கியோன்கள் எழுதின இரண்டு புஸ்தகங்களுக்கும் ஆதாரமாய் இருந்தன. பிற்காலத்தில் மூன்றாம் ஆக்கியோனான ஆசாரியனொருவன் அந்த இரண்டு புஸ்தகங்களையும் ஒன்றாகச் சேர்த்து இன்னும் மார்க்காசாரத்தைப்பற்றி விபரமாய் எழுதின புஸ்தகந்தான் ஆதியாகமமாம்.

3. **இதிலுள்ள சரித்திரம்.** சிலர் இதில் ஆபிரகாம் முதலியவர்களைப்பற்றிச் சொல்லியவைகள் பாரம்பரியமாய் வந்தவைகள் என்றும், இவைகள் உண்மையுள்ளவைகள் அல்ல என்றும் நினைக்கிறார்கள். ஆனால் பாபிலோனியர், அந்நிய ராஜாக்கள், கானானியர் அவர்களின் மார்க்க ஆசாரம், பழக்க வழக்கம் முதலியவற்றை நாம் பார்த்தால் இப்புஸ்தகம் உண்மையுள்ளது என்றும், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, யோசேப்பு இவர்கள் இந்த ஆகமத்திற் சொல்லியபடி நடந்தார்கள் என்றும் அறிவோம்.

4. **இப்புஸ்தகத்தின் பலன்.** இந்தப் புஸ்தகத்தில் ஆத்துமாவுக்குரிய போதனைகள் சொல்லியிருக்கிறதென யூதர்களும் கிறிஸ்தவர்களும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். இதின்படி பூர்வ கோத்திரப் பிதாக்கள் கடவுளுடைய சித்தத்தை அறிந்து தங்களுக்குத் தெரிந்தபிரகாரம் உண்மையோடும் உற்சாகத்தோடும் விசுவாசத்தோடும் நடந்து பயபக்தியும் சன்மார்க்கமும் இன்னது என்பதை மற்றவர்களுக்குக் காட்டினார்கள். இயேசுகிறிஸ்துவின் மூலமாய்க் கடவுளுடைய சித்தத்தை அறிந்தவர்களிலும் இருக்கக்கூடாத தப்பிதங்கள் பூர்வீகத்தாரில் இருந்தது என்று சொல்லியிருக்கிறதினாலே இப்புஸ்தகத்தின் ஆக்கியோனின் உண்மை காணப்படுகிறது. இப்புஸ்தகத்தை வாசிக்கும்போது ஆபிரகாம் முதலிய பக்தர்களின் குணாதிசயங்கள் நல்லவைகளாய் இருந்தாலுஞ்சரி, குற்றமுள்ளவைகளாய் இருந்தாலுஞ்சரி, அவர்கள் அக்காலத்தில் இருந்த விக்கிரகாராதனை, அகோரமான துன்மார்க்கம், குரூரமான நரபலிகள் ஆகிய இவற்றை நீக்கி, இவைகளை அருவருத்து வெறுக்கும் மெய்யான கடவுளாகிய யேகோவாவைத் தைரியத்தோடு வணங்கி, தங்கள்

சொந்தத் தேசத்தை விட்டுப் பரதேசிகளாய் அந்நிய தேசங்களில் வளர்ந்து அங்கே இறக்கும்படி நேரிட்டபோதிலும் யேகோவாவை அவர்கள் மறந்துபோகாமல் அவருடைய சித்தத்தை நிறைவேற்றும்படியான விசுவாசமும் உறுதியுமுள்ளவர்களாய் இருந்தார்கள் என்பதை நாம் கண்டு இப்புஸ்தகத்தில் நல் நம்பிக்கை முதலியவற்றைப்பற்றிய ஆவிக்குரிய போதனைகள் அடங்கியிருக்கின்றன என அறிவோமாக.

**ஆதியேல்.** **Adiel.**

1. 1 நாளா $4^{36}$.
2. 1 நாளா $9^{12}$.
3. 1 நாளா $27^{25}$.

**ஆதிராக்.** **Hadrach.** சீரியாவில் ஒரு இடம். சக $9^{1}$.

**ஆதிரியாக்கடல்.** **Adriatic Sea, Adria, Hadria.** மேற்கே தென் இத்தாலியா, சிசிலியா, மெலித்தா இவைகளிலிருந்து கிழக்கே கிரேக்கா, கிரேத்தா தீவுவரையும் பரந்திருக்கும் மத்தியதரைக் கடலின் ஓர் பாகம். அப் $27^{27}$.

**ஆதின், ஆதீன்.** **Adin.**

1. செருபாபேலோடு வந்தவர்கள். எஸ்று $2^{15}$.

2. எஸ்றுவோடு வந்தவர்கள். எஸ்று $8^{6}$ நெகே $10^{16}$.

**ஆதீத்.** **Hadid.** சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு பென்யமீன் கோத்திரத்தார் வசித்த ஒரு ஊர். எஸ்று $2^{33}$.

**ஆதேஸ்.** **Hades.** இது பழைய ஏற்பாட்டில் வழங்கியிருக்கும் 'ஷேவோல்' (*Sheol*) என்னும் பதத்திற்கு பதிலாகப் புதிய ஏற்பாட்டில் வழங்கப்படுகிறது. இதற்குப் பாதாளம் அல்லது மரித்தோரின் ஆவிகள் போய் இருக்கும் இடம் என்று அர்த்தம். இது நரகம் அல்லது தண்டிக்கப்படும் இடம் அல்ல; தண்டனைக்குரிய நரகம் வேறே. மத் $11^{23}$ $16^{18}$ லூக் $10^{15}$ $16^{23}$ அப் $2^{27.\ 31}$ வெளி $1^{18}$ $6^{8}$ $20^{13}$.

இது பாதாளம் என்று சொல்லலாம். மரித்தோர் எல்லாரும் இங்கே இருப்பார்கள் என்றும், முதலில் நல்லோர் தீயோருக்கு வித்தியாசம் இல்லை என்றும், பழைய ஏற்பாட்டுக் காலத்தில் எபிரெயர் நினைத்தார்கள். பிற்பாடு யூத வேதசாஸ்திரிகள் இருபகுதியாருக்கும் அவ்விடத்தில் வித்தியாசம் உண்டு என்று கற்பித்தார்கள். லாசருவையும் ஐசுவரியவானையும்பற்றி இயேசு சொன்ன உவமை இதற்கு ஒத்திருக்கிறது. லூக் $16^{14}$.

அப்போஸ்தலர் இயேசு மரித்தபோது ஆதேசுக்குப் போனார் என நினைத்தார்கள் என்று விளங்குகிறது. அப் $2^{17}$ ரோ $10^{7}$ எபே $4^{9}$ பிலி $2^{10}$ 1 பேது $3^{18-20}$ $4^{6}$.

எல்லா வேத சாஸ்திரிகளும் கடைசி இரண்டு வசனங்களின் அர்த்தத்தை ஒரே மாதிரியாகச் சொல்லுகிறதில்லை. ஆதி பிதாக்களில் அநேகர் அவர் நோவாவின் காலத்து ஜலப்பிரளயத்தில் மூழ்கினவர்கள் இருக்கும் இடத்திற்கும் போனார் என்றும், தற்கால போதகர் அவர் பொல்லாத ஆவிகளும் அல்லாமல் இறந்துபோன எல்லாரும் இருந்த இடமாகிய ஆதேசுக்குப் போனார் என்றும் சொல்லுகிறார்கள்.

**ஆதோன்.** **Addon.** நெகே $7^{61}$.

**ஆத்சாசோன்.** **Hazazon.** என்கேதி காண்க.

**ஆத்சார் அதார்.** **Hazar-Addar.**=எஸ்ரோன். யோசு $15^{3}$ எண் $34^{4}$.

**ஆத்சார் அத்திகோன்.** **Hazar-Hatticon.** [மத்தியிலுள்ள ஆத்சார்]. எசே $47^{16}$.

**ஆத்சார் காதா.** **Hazar-Gaddah.** யோசு $15^{27}$.

**ஆத்சார் சூவால்.** **Hazar-shual.** யூதாவின் தென்பாகத்திலுள்ள ஒரு ஊர். யோசு $15^{28}$.

**ஆத்சார்சூசா, ஆத்சார்சூசீம்.** **Hazar-susah.** சிமியோனின் ஒரு ஊர். யோசு $19^{5}$ 1 நாளா $4^{31}$.

**ஆத்சார் யேனான்.** **Hazar-enan.** இஸ்ரவேலின் வட எல்லையிலுள்ள ஒரு ஊர். எண் $34^{9}$.

**ஆத்சால்.** **Azel.** சக $14^{5}$.

**ஆத்சேம்.** **Ezem.** அஸ்மோன் காண்க.

**ஆத்சேல்.** **Azel.** 1 நாளா $8^{37}$.

**ஆத்சோர்.** **Hazar.**

1. யாபீனின் பட்டணம். யோசு $11^{1}$.

2. தென் யூதாவில் ஒரு பட்டணம். யோசு $15^{23}$.

3. எஸ்ரோன் என்னும் ஆத்சோர். யோசு $15^{25}$.

4. நெகே $11^{33}$.

5. காத்சோர். எரே $49^{28}$.

**ஆத்சோர் அதாத்தா.** **Hazor-Hadattah.** யோசு $15^{25}$.

**ஆத்தாகு.** **Hathack.** ஒரு அண்ணகன். எஸ்தர் $4^{5}$.

**ஆத்தாத்.** **Atad.** ஒரு ஊர். ஆதி $50^{10}$.

**ஆத்தாத்.** **Hathath.** 1 நாளா $4^{13}$.

**ஆத்துமா. Soul.** மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்களை உடைத்தாகிச் சரீரத்தை ஆண்டு நடத்துகிற அரூபமும், அழியாமையுமுள்ள வஸ்து. ஆதி 2[7].

ஆத்துமாவுக்கு மேற்சொல்லிய குணங்களாலே வேண்டுதல், வேண்டாமை இரண்டும் உண்டு; அவற்றால் மனிதன் சுவாதீனன் (*moral agent*) என்னப்படுகிறான். அதனாலே மனிதனுக்கும் மற்ற ஜீவபிராணிகளுக்கும் அநந்த வித்தியாசமுண்டு. பிர 3[21].

ஆத்துமா அழியாத வஸ்து என்பது விசேஷித்த கொள்கையாகையால் அதை நன்றாய் அறிந்து உறுதியாய் நம்பவேண்டியது. ஏனெனில் இந்த விஷயத்தில் நம்பிக்கை உண்டாயிருப்பதினால் மற்ற ஜீவஜெந்துக்களைப் பார்க்க மனுஷருக்கு உண்டாயிருக்கிற மேன்மையும், வேதத்தில் செய்யவேண்டுமென்று கூறிய காரியங்களின்படி நடப்பதில் உறுதியும், மனுஷர்களுக்குள்ளே சமாதானமும், வியாதியிலும் மரணத்திலும் வேண்டிய ஆறுதலும், நித்தியஜீவன் உண்டென்கிற மகிமையுள்ள நம்பிக்கையும் உண்டாகும். ஆத்துமாவைக்குறித்துப் பூர்வீக புறமதஸ்தர்கள் பலவிதமாய் நினைத்தவைகளையும், புத்தியினாலும் வேதத்தினாலும் ஆத்துமா நித்தியமென்பதற்கு நியாயங்களையும் எடுத்துக் காண்பிக்கிறோம்.

I. ஆத்துமா நித்தியவஸ்து என்று எல்லாவித மனுஷர்களாலும் எவ்விதத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட காரியமாயிருக்கிறது. சில ஞானிகள் ஆத்துமா தேவனுடைய அம்சமென்று சொல்லுகிறார்கள்; சிலர் ஆத்துமாவானது உலகத்திலிருக்கிற ஆவியோடொத்த ஆவியென்று நினைத்து, தண்ணீரானது சமுத்திரத்திற்போய்ச் சேருகிறதுபோல அது உலக ஆவியோடே சேர்ந்துபோகிறதென்று சொல்லுகிறார்கள்; சிலர் ஆத்துமாவானது தானிருந்த சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் பிரவேசிக்குமென்று சொல்லுகிறார்கள்; சிலர் ஆத்துமாவானது பஞ்ச பூதங்களினுடைய கூட்டமென்று சொல்லுகிறார்கள்; சிலர் சரீரத்தில் தோன்றிய வாயுவினது விகாரமே ஆத்துமா என்று சொல்லுகிறார்கள்.

II. ஆத்துமாவானது நித்தியவஸ்து என்பதற்குச் சில திருஷ்டாந்தங்களாவன:—

1. உபமானம். உலகத்திலுள்ள வஸ்துக்கள் சுத்தசூனியமாய் அழிந்துபோகாமல் வேறொரு பதார்த்தமாய் மாறுவது உண்டு. மண் பளிங்காகும், பஞ்சலோகங்கள் உருக்கி வார்க்கப்படும், புழுக்கள் பறக்கிற பூச்சிகளாகும், முட்டைகள் குஞ்சுகளாகும். இப்படி இருக்கிறபடியால் ஆத்துமாவானது சரீரத்தை விட்டுப் பிரிந்து மற்றொரு நிலையில் நிற்கக்கூடாதா?

ஜீவகாலத்தில் சரீரத்துக்குச் சம்பவிக்கும் வியாதி முதலியவைகள் ஆத்துமாவைப் பற்றுகிறதில்லை. இந்தச் சரீரம் உண்டி முதலிய வற்றால் பலமடைந்து வியாதி முதலியவற்றால் இளைத்துச் சுகமுதலியவற்றால் செழித்திருப்பதுண்டு. நேத்திரம் சிலகாலம் பார்வையில்லாமலிருந்து மறுபடியும் பார்வையைப் பெறும். இப்படிப்பட்ட மாறுதல் சரீரத்துக் குண்டாயிருந்தும் இவைகள் ஆத்துமாவுக் குண்டாகிறதில்லை. சரீரத்தில் ஓர் அவயவமாகிய கையாவது காலாவது அறுத்துப்போடப்பட்டால் ஆத்துமாவின் வல்லமை அதினால் குறைந்துபோவதில்லை. சிலர் மரணாவஸ்தையில் நிறைந்த சக்தியுள்ள ஆத்துமாவை உடையவர்களாயிருந்தும் தமக்கு ஆதாரமாகிய சரீரத்தின் பெலவீனத்தால் மயக்கமுள்ளவர்களாய் இருக்கிறார்கள். அது எப்படியெனில் வீணையை வாசிக்கிறவன் தான் வல்லமையுள்ளவனாயிருந்தும் வீணையினது தோஷத்தால் அவன் திறமை காணப்படமாட்டாது. அநேகர் மரணாவஸ்தையில் மயக்கமின்றித் தெளிவோ டிருக்கிறார்கள்; மரணத்தின் பெருங்குறியாகிய நித்திரையிலும் ஆத்துமாவானது அசைவுள்ளதாகவே இருக்கின்றது.

உயிருள்ள அஃறிணைப் பொருள்களெல்லாம் தத்தமக்கேற்ற அறிவுள்ளவைகளாய் இருந்தும் மனிதர்களைப்போலப் பகுத்தறியும் இயல்பினையுடைய ஆத்துமாக்களையுடையன அல்ல.

2. சரீர தர்மத்துக்கும் ஆத்தும தர்மத்துக்கும் வித்தியாசம் உண்டு. சரீரத்திற்குப் பூரித்தல், அசையாமை, பிரிவு, பளுவு, நிறம் முதலியவை யுண்டு. ஆத்துமாவுக்கு எண்ணம், அறிவு, ஆசை முதலிய குணங்கள் உண்டு. ஆத்துமாவுக்கும் சரீரத்திற்கும் சம்பந்தம் உண்டாயிருந்தாலும் அவைகள் வெவ்வேறான பொருள்களேயாம். சரீரத்தை நடத்துகிற பொருளுக்கு ஆவி என்றும், மனம் என்றும், ஆத்துமா என்றும் பேர். அது அரூபியாயிருக்கும் தன்மையால் ஆவி என்றும், பல குணங்களை உடைத்தாயிருக்கும் தன்மையால் மனம் என்றும், அழியாத்தன்மையை உடைத்தாயிருப்பதினால் ஆத்துமா என்றும் பேர்பெற்றது. ஆத்துமாவுக்கடுத்த குணங்களின் மேன்மையினால் அது அழியாத வஸ்து என்று அறிந்துகொள்ளலாம். ஆத்துமாவுக்கு ஆலோசிக்கவும், தீர்மானிக்கவும், ஞாபகத்தில் வைக்கவும், ஒரு நிமிஷத்தில் கடவுளின் பாதம் அடைந்து அண்ட சரா

சாங்களையெல்லாம் கடந்து அன்பின் வல்லமையினாலாவது, பக்தி வைராக்கியத்தினாலாவது மெய் மறந்து சாவுக்கு அஞ்சாமலிருக்கவும் வல்லமை உண்டு. இப்படிப் பட்ட வல்லமையுள்ளதாகிய ஆத்துமா அழிவுக்கு உரியதென்று எப்படிச் சொல்லலாம்?

**3.** ஆத்துமாவானது விவேகத்தில் நாள் தோறும் வளருகிறது. குருவியானது எப்போதும் தன் கூண்டை ஒரே மாதிரியாகக் கட்டுகிறது. இப்படியே உயிருள்ள அஃறிணைப் பொருள்கள் ஒரே நிலையுள்ள அறிவை உடைத்தாயிருக்கின்றன. ஆத்துமாவோ நாடோறும் கசடறக் கற்கும். இந்த உலகத்தின் காரியங்களையெல்லாம் அறிந்து பரலோகத்தில் தன் ஆசையைச் செலுத்தி அந்த உலகத்தின்கண்ணே நாட்டமாய் இருக்கின்றது; இத்தன்மையுள்ள ஆத்துமாவானது அழியும் என்று சொல்லக்கூடுமோ?

4. மனுஷர் யாவரும் அழியாத ஆத்துமாவை உடையவர்களாய் இருக்கிறோம் என்றும் மரித்தபின்பு உயிரோடிருப்போம் என்றும் தீர்மானித்திருக்கிறார்கள். மனுஷர் பூலோகத்தில் புகழையும் கீர்த்தியையும் விரும்புகிறதேன்? மட்டில்லாத இந்தப் பேரின்ப ஆசையை வீணாய்க் கடவுள் நமக்குள்ளே வைத்திருப்பாரா?

**5.** மனுஷர்கள் தாங்கள் செய்கிற கிரியைகளுக்குத் தக்க பலனை அடைவோமென்கிற கருத்தோடிருக்கிறார்கள். நாம் நன்மை தீமை செய்ய வல்லமை உடையவர்களாய் இருக்கிறதுமன்றி நாம் செய்கிற நன்மையினாலே சுகமும் தீமையினாலே துக்கமும் அனுபவிக்கிறவர்களாய் இருக்கிறோம். பாவஞ் செய்தால் வெட்கமும் துன்பமும் உண்டாகிறது; நன்மைசெய்தால் அதற்கேற்ற பலனை அனுபவிப்போம் என்கிற நம்பிக்கை நம்மில் அளவற்ற பாக்கியத்தை உண்டாக்குகிறது. ஆயினும் பெரும்பாலும் நன்மை தீமைக் கடுத்த பலன்களை இம்மையில் மனுஷர்கள் அனுபவிக்கக் காணோம். நீதிமான் துன்பத்தை அனுபவிக்கிறான்; அநீதிமான் இன்பத்தை அனுபவிக்கிறான். ஆகவே நீதியுள்ள கடவுள் இம்மையில் பாவ புண்ணியத்திற் கேற்ற பலா பலங்களைக் கொடாதிருந்தாலும் மறுமையில் எல்லாருக்கும் நன்மை தீமைக் கடுத்த பலனைக் கொடுப்பார் என்பதற்குச் சந்தேகம் இல்லை. இதுவும் ஆத்துமா அழியாத வஸ்து என்று நம்புகிறதற்கு ஓர் விசேஷித்த நியாயமாம்.

வேதாகமத்திலே ஆத்துமா அழியாத வஸ்துவென்று தெளிவாய்ச் சொல்லப்படுகிறது. ஆதி 5[24] யாத் 3[6] 2இரா 2[11] சங் 16[10.11] 17[15] 73[26] மத் 16[27] 22[31] 25[31] யோவா 5[28] 2கொரி 5[1-8].

'ஆவியும் ஆத்துமாவும்' என்று பிரித்துச் சொல்லுகிறது (1தெச 5[23]), சித்தத்தையும் அறிவையும் குறிக்கும்.

தேவனுடைய ஆத்துமம் என்பது அவருடைய சுபாவத்தைக் குறிக்கும். எரே 6[8].

ஆத்துமாவைக்குறித்த சில பொதுவான வாக்கியங்களாவன: உபா 11[13] சங் 34[22] 49[9] நீதி 11[30] ஏசா 55[2.3] 58[10] எசே 18[4] மத் 10[28] யோவா 12[27] லூக் 12[20].

**ஆத்ரோத் சோபான். Atroth Shophan.** எண் 32[35].

**ஆநேர். Aner.**

1. காநானிய பிரபு. ஆதி 14[24].
2. ஒரு ஊர். 1நாளா 6[70].

**ஆந்தை. Owl.** பலஸ்தீனாவில் பலவிதமாயிருக்கும். லேவி 11[17] 14[16] ஏசா 34[11]. **கூகை, கோட்டான்** காண்க.

**ஆபகூக். Habakkuk.**

1. இந்தத் தீர்க்கதரிசி தன்னைக்குறித்து ஆபகூக் ஆகமத்தில் எழுதியிருக்கிறதைத் தவிர வேறொன்றும் நமக்குத் தெரியாது.

2. ஆபகூக் தன் தேசத்தார் செய்த தீமையை அறிந்து அதற்குத் தண்டனையாக அவர்களுக்கு விரோதமாய்க் கல்தேயர் படையெடுத்து வருவார்கள் என்று ஏற்கனவே அவர்களுக்கு எச்சரிக்கையாக இந்தத் தீர்க்கதரிசனத்தைச் சொல்லுகிறான்.

3. யோசியா இறந்தபிறகு எட்டாம் வருஷம் (கி-மு. 600) ஆபகூக் இந்தத் தீர்க்கதரிசனத்தைக் கூறினான் எனத் தெரிகிறது.

4. பிரிவுகள்.

(i) 1[1-4]. தீர்க்கதரிசி தீமைக்கு வேண்டிய தண்டனை ஏன் வருகிறதில்லை என்று கேட்கிறான்.

(ii) 1[5-11]. எருசலேமைத் தண்டிக்கக் கல்தேயர் வருவார்கள் என்று கூறுகிறான்.

(iii) 1[12-17]. கோபாவேசத்துடன் வந்த கல்தேயரை கடவுள் தண்டிக்கிறார்.

(iv) 2[1-4]. தண்டனை இருந்தாலும் நீதிமான் தன் விசுவாசத்தினால் பிழைப்பான் என்று கூறுகிறான்.

(v) 2[5-20]. கல்தேயரைக் கடவுள் அழைத்திருந்தாலும் அவர்கள் செய்த பாவங்களுக்குத் தண்டனை வரும் என்று மறுபடியும் கூறுகிறான்.

(vi) 3 அதி. தீர்க்கதரிசி கடவுளுடைய மகத்துவத்தைப் பாடி அவர்பேரில் தனக்

கிருக்கும் உறுதியான நம்பிக்கையைக் காட்டு கிறுன்.

5. இந்தத் தீர்க்கதரிசி கடவுள் செய்யும் காரியங்களுக்குக் காரணங்களை யறிய ஆவலுள்ளவனு யிருக்கிறுன். இதில் யோபு என்னும் புஸ்தகத்திற்கும் அதற்குப் பின்வரும் தீர்க்கதரிசனங்களுக்குமுள்ள சம்பந்தத்தைக் காண்கிறோம்.

6. சில வித்துவான்கள் மூன்றும் அதிகாரத்திலுள்ள பாட்டும் மற்ற அதிகாரங்களும் ஒரே ஆக்கியோனுல் இயற்றப்படவில்லை என்று சந்தேகங்கொள்ளுகிறுர்கள். இந்தச் சந்தேகத்தைத் தீர்க்க நம்மால் முடியாது. ஆயினும் ஆபகூக் இந்தப் பாட்டை இயற்றினுலுஞ் சரி, இயற்றுவிட்டாலுஞ் சரி, சர்வ வல்லமையுள்ள கடவுளின் செய்கைகளைப்பற்றி இதில் எழுதப்பட்டிருக்கிறதை நாம் வாசிக்கும்போது அது நமக்கு சன்மார்க்க போதனையைக் கொடுக்கிறது என்றறிவோம்.



ஆபரணம்—காதணி.

**ஆபரணம்**. **Ornament.** எபிரெயர் தரித்த ஆபரணவகை பின்வரும் நாலு அட்டவணையிற் பார்க்கலாம். யாத் $35^{22}$ எண் $31^{50}$ ஏசா $3^{18}$ எசே $16^{11}$.

எபிரெய ஸ்திரீகள் காதணிகள் தரித்தார்கள். ஆதி $35^{4}$.

மூக்கின் வலதுபக்கத்தில் மூக்குத்தி யணிந்தார்கள். ஏசா $3^{21}$.

ஆதி $24^{22}$-ல் சொல்லியிருக்கும் 'காதணி' என்பது மூக்குத்தியாயிருக்கவேண்டும்.

கழுத்தில் பலவிதமான ஆபரணம் பூண்டார்கள். உன்னத $1^{10}$.

யாவரும் கைகளில் அஸ்தகடகமும் (2 சாமு $1^{10}$), விரல்களில் முத்திரை மோதிரமும், வச்சிரமணி மோதிரமும், கால்களில் பாதசரமும் அணிந்தார்கள். எண் $31^{50}$.

இந்த ஆபரணங்களில் அநேகம் பொன் அல்லது வெள்ளிக்கம்பியினுல் செய்யப்பட்டன. இத்தேசத்தில் சத்திய வேத அறிவு இல்லாத ஜனங்களைப்போல எபிரெயர் தாயித்து குளிசம் முதலானவற்றையும் ஆபரணமாகத் தரித்தார்கள் என நாம் நினைக்கவேண்டும். எகிப்திய தட்டார் விநோதமான ஆபரணங்கள் செய்வதில் பேர்போனவர்கள்.

இரத்தினக் கற்களின் பெயர்கள். யாத் $28^{17}$ எசே $28^{13}$ வெளி $21^{18}$.


ஆபரணம்—அஸ்தகடகம்.

**ஆபா**. **Avva.** ஆவா காண்க

**ஆபி**. **Abi.** = அபியான் (2).

**ஆபிக்**. **Aphik.** = ஆப்பேக்கு.

**ஆபிரகாம்**, **ஆபிராம்**. **Abraham, Abram.** ஆதியாகமத்தின்படி இப்பெயருக்கு அர்த்தம் என்னவென்றுல் 'திரளான ஜாதிகளுக்குத் தகப்பன்.' ஆதி $17^{5}$. இதின் மூலார்த்தம் 'சிறப்பு அடைந்த தகப்பன்.' ஆபிரகாமுடைய சரித்திரத்தை இவ்விடம் விபரமாய்ச் சொல்வது அனுவசியம். ஆதி 11-25 அதிகாரங்கள் பார்க்க.

ஆபிரகாம் பாபிலோனியா தேசத்திலிருந்து கானுனுக்கும் எகிப்துக்கும் வந்து தன் ஜீவகாலபரியந்தம் அந்தந்த இடங்களில் கூடாரம் அடித்து வசித்தான். இவனுக்கும் பாபிலோனியருக்கும் இப்படித் தேசவித்தியாசம் உண்டானதுமல்லாமல் பக்திவிஷயத்திலும் பெரிய வித்தியாசம் இருந்தது. அது என்னவென்றுல்: அவர்களைப்போல இவன் பல தேவர்களை வணங்காமல் யேகோவாவே தனக்கும் தன் குலத்துக்கும் தேவன் என்று அவர் ஒருவரையே வணங்கிவந்தான். ஆபிரகாம் தன் ஜீவியகாலமெல்லாம் யேகோவாவை நம்பி (கலா $3^{6}$), அவர் வெளிப்படுத்தின சித்தத்தை அறிந்து அதற்குக் கீழ்ப்படிந்து எல்லா நீதிக்கும் முன்மாதிரியாய் நடந்தான். மற்றக் கானுனியர் தங்கள் தேவர்களுக்கு நரபலி செலுத்தினதுபோல இவனும் யேகோவாவின்பேரில் பக்தியுடையவனுய் தன் குமாரனைப் பலி செலுத்துவதற்கு இணங்கினபோதிலும் யேகோவா இவன் மகனுக்குப் பதிலாக ஆட்டை பலியாக ஏற்றுக்கொண்டதினுல், அதுமுதல் எபிரெயர் நரபலி யேகோவாவுக்கு வெறுப்பான காரியம் என்று அறிந்தார்கள் எனத் தோன்றுகிறது.

யேகோவாவுக்கும் ஆபிரகாமுக்கும் உடன்படிக்கை உண்டானது. அதற்கு அடையாளமாக விருத்தசேதனம் ஏற்பட்டது. ஆதி 17[23]. சாராள் மரித்த பிறகு ஆபிரகாம் மக்பேலா என்னுங் குகையைத் தன் குடும்பத்திலுள்ளவர்களுக்காக வாங்கினது அவர்கள் வசித்த இடமாகிய கானான் அவர்களுக்குச் சுதந்தர பூமியாயிருக்கும் என்னும் இவனுடைய நம்பிக்கையைக் காட்டுகிறது.


ஆபரணம்—பாதசரம்.

**ஆபிரகாம் உடைய மடி. Abraham's Bosom.** மூலபாஷையின் வழக்கத்தின்படி விருந்திலே விருந்தாளிகள் உட்கார்ந்திருக்கையில், ஒருவன் அவனுக்கடுத்தவனின் மடியில் சாய்ந்திருப்பான் என்று சொல்வதினால் அது இருவருக்கு மிருக்கிற நேசத்தைக் காட்டும். லூக் 16[22] யோவா 13[23]. ஆதலால் ஆபிரகாம் லாசருவைத் தானிருக்கும் மோட்ச பாக்கியத்திலே பங்கடையும்படி சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டான் என்பதைக் காட்டுவதற்கு இப்படிச் சொல்லியிருக்கிறது.

**ஆபீப். Abib.** பயிர் கதிர் விடும் மாதம். இஸ்ரவேலர் சிறையிருப்பிலிருந்து வந்த பிறகு அதற்கு 'நிசான்' என்னும் பெயர் இடப்பட்டது. யாத் 13[4]. இது எபிரெயருக்கு வருஷத்தின் முதலாம் மாதம். இதில் பஸ்காப் பண்டிகை கொண்டாடுவார்கள். நெகே 2[1].

**ஆபேக்.** **ஆப்பெக்கு** காண்க.

**ஆபேத்நேகோ. Abednego.** [நேபோ என்னும் தேவனின் ஊழியன்]. தானி 1[7].

**ஆபேல். Abel.** [சுவாசம் அல்லது மூச்சு]. ஆபேல் செலுத்தின பலி மேன்மையுள்ளது என்பதற்குக் காரணம் ஆதியாகமத்தில் சொல்லியிருக்கவில்லை. ஆதி 4[2-10]. எபி 11[4]-ல் இவனுடைய விசுவாசம் அதற்குக் காரணம் என விளங்குகிறது. இரத்தச் சாட்சிகளில் ஆபேல் முதல்வன் என்று இயேசு சொன்னார். மத் 23[35] லூக் 11[51].

**ஆபேல் சித்தீம். Abel shittim.** [வேலமரமுள்ள மேய்ச்சல் தரை]. மோவாப் தேசத்திலுள்ள ஒரு ஊர். எண் 33[49].

**ஆபேல் பெத்மாக்கா. Abel Beth-maacah.** இஸ்ரவேலின் வட எல்லைக்குச் சமீபமாயுள்ள ஒரு ஊர். 1 இரா 15[20].

**ஆபேல் மாயீம். Abel Maim.** [தண்ணீர் உள்ள பசும் புற்றரை]. ஆபேல் பெத்மாக்காவும் இதுவும் ஒன்றுதான். 2 நாளா 16[4].

**ஆபேல் மிஸ்ராயீம். Abel Mizraim.** [எகிப்தியர் இருந்த மேய்ச்சல் நிலம்]. ஆதி 50[11].

**ஆபேல் மேகொலா. Abel Meholah.** [கூத்து விளையாடும் மேய்ச்சல் தரை]. யோர்தான் நதியின் பள்ளத்தாக்கிலுள்ள ஓரிடம். எண் 7[22] 1 இரா 19[16].

**ஆபோர். Habor.** ஒரு நதி. 2 இரா 17[6].

**ஆப்பெக்கு. Aphek.** [கோட்டை]. இந்தப் பெயர் பலஸ்தீனாவிலுள்ள நாலு ஊர்களுக்கு இருந்தது.

1. யோசு 12[18].
2. =ஆப்பீக். யோசு 13[4].
3. 1 சாமு 29[1].
4. 1 இரா 20[26].


ஆபரணம் — சிரபூஷணம்.

**ஆப்ரான். Hauran.** யோர்தான் நதிக்குக் கிழக்கே எர்மோன் மலைக்குத் தெற்கேயுள்ள செழிப்பான ஒரு நாடு. எசே 47[16].

**ஆப்னா. Abana.** தமஸ்கு பட்டணத்திலுள்ள ஆறு. 2 இரா 5[12].

**ஆமணக்குச் செடி. Castor oil plant.** எபிரெய பதம் 'சுரையைக்' குறிக்கிறது. யோனா 4[6].

**ஆமாத். Amad.** யோசு 19[26].

**ஆமாத். Hamath.** [கோட்டை]. இஸ்ரவேலின் வட எல்லையிலுள்ள சீரியா ராஜ்யத்திற்குள் ஒரு நாடும், அதின் தலை நகரியும். சாலொமோன் ராஜ்யமும், இரண்டாம் யெரொபெயாமின் ராஜ்யமும், ஆமாத்தின் எல்லைகள்வரையும் எட்டியிருந்தன. ஆமாத்

ஒரு பெரிய பட்டணம். 2 நாளா $8^{4}$ 2 இரா $13^{25}$ ஆமோ $6^{2}$ எசா $11^{11}$.

**ஆமாத்சோபா**. **Hamath Zobah.** 2 நாளா $8^{3}$.

**ஆமாம்**. **Amam**. யோசு $15^{26}$.

**ஆமால்**. **Amal**. 1 நாளா $7^{35}$.



ஆபரணம்—மூக்குத்தி.

**ஆமான்**. **Haman**. யூதர்களுக்கு விரோதி. இவன் சரித்திரம் எஸ்தரின் புஸ்தகத்தில் சொல்லியிருக்கிறது. பூரீம் பண்டிகைநாளில் யூதர்கள் இவன் பேரைச் சபிப்பார்கள். சில சமயங்களில் இவனைப்போல் ஒரு பொம்மை செய்து தூக்குமரம் ஒன்றில் அதைத் தூக்குவார்கள். அப்படிச் செய்தல் சிலுவைமரத்தில் அறையுண்ட இயேசுகிறிஸ்துவைப் பரிகாசம் பண்ணுவதுபோல் இருக்கிறது என்று கி-பி. ஐந்தாம் நூற்றுண்டிலுள்ள கிறிஸ்தவர்கள் எண்ணினதினுல் இதினிமித்தம் இவர்களுக்கும் யூதர்களுக்கும் அடிக்கடி சண்டை சச்சரவு உண்டானது.

**ஆமி**. **Ami**. = ஆமோன். எஸ்ரு $2^{57}$ நெகே $7^{59}$.

**ஆமூல்**. **Hamul**. [இரக்கம் பெற்றவன்]. ஆதி $46^{12}$.

**ஆமேன்**. **Amen**. இது 'உண்மையாகவே' அல்லது 'உறுதியாகவே' என அர்த்தங்கொள்ளும் எபிரெய பதம். இது ஜெபத்தின் உறுதிக்கும் அது நிறைவேறுதலுக்கும் உள்ள சம்பந்தத்தைக் காட்டுகிறது. சில சமயங்களில் இப்பதத்தை இரண்டு தடவை சொல்லுவார்கள். எண் $5^{22}$ உபா $27^{15}$ சங் $41^{13}$. ஆதி கிறிஸ்தவ சபையார் இச்சொல்லைத் தங்கள் ஜெபத்தில் வழங்கினுர்கள். 1 கொரி $14^{16}$. இப்பதம் புதிய ஏற்பாட்டில் 'மெய்யாகவே' என மொழி பெயர்த்திருக்கிறது. இயேசுகிறிஸ்து முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயங்களில் இந்த வார்த்தையைச் சொன்னுர். மத் $5^{18}$ யோவா $1^{51}$. இயேசுகிறிஸ்து உண்மையுள்ளவர் என்பதைக் காட்டுதற்கு 'ஆமென்' எனப் பெயர் அவருக்குச் சொல்லியிருக்கிறது. வெளி $3^{14}$ 2 கொரி $1^{20}$ காண்க.

**ஆமை**. **Tortoise**. பலஸ்தீனு தேசத்தில் கல்லாமை நீராமைகள் உண்டு. லேவி $19^{29}$-ல் சொல்லியிருப்பது ஆமையல்ல, பெரிய ஓணன் என நாம் நினைக்கவேண்டும்.

**ஆமோக்**. **Amok**. நெகே $12^{7}$.

**ஆமோஸ்**. **Amos**. [சுமை தாங்குகிறவன்].

I. **தீர்க்கதரிசி**. தீர்க்கதரிசனம் எழுதினவர்களில் இவன் முதல்வன். இவன் பெத்லெகேமுக்குத் தெற்கே தெக்கோவில் கம்பளியாடுகள் மேய்த்தவனும் புதிய ஏற்பாட்டின்காலத்தில் யோவான்ஸ்நானகன் வாசஞ்செய்த வனுந்தரத்தில் காட்டத்திப்பழங்கள் பொறுக்கினவனுமாய் இருந்தான். கம்பளி ரோமம் கொண்டுபோய்ப் பல ஊர்களிலும் வியாபாரஞ் செய்து திரிந்தவனுகையால் இவன் யூதாவின் ராஜ்யத்தில் இருந்தாலும் இஸ்ரவேல் ராஜ்யத்தில் நடக்கிற சங்கதிகளை அறிந்து யூதாவின் ராஜ்யத்தில் உசியாவும், இஸ்ரவேல் ராஜ்யத்தில் இரண்டாம் யெரொபெயாமும் கி-மு. 775-750-ளு அரசாளுங்காலத்தில் இஸ்ரவேல் ராஜ்யத்தைப் பற்றித் தீர்க்கதரிசனங் கூறினுன். ஆமோஸ் காலத்தில் 'தீர்க்கதரிசிகளின் புத்திரர்' என்ற ஒரு வகுப்பார் வழக்கத்தின்படி தீர்க்கதரிசனம் உரைக்கிறவர்களா யிருந்தார்கள். ஆமோஸ் அந்த வகுப்பைச் சேர்ந்தவனல்ல. கடவுள் தனக்கறிவித்தவைகளைக் கபடு, தந்திரம் ஒன்றுமில்லாமல் உண்மையாயும் உறுதியாயும் ஜனங்களுக்குத் தெரிவித்தான். இவனுடைய காலத்தில் இஸ்ரவேல் ராஜ்யம் செல்வம் பொருந்தியதாய் இருந்தும் அதில் எங்கும் பலவித அநியாயம், துன்மார்க்கம், விக்கிரகாராதனை, கடவுளை அலட்சியம் பண்ணுதல் முதலான அக்கிரமங்கள் நடந்தன. ஆமோஸ் தீர்க்கதரிசனங்கூற ஆரம்பித்தபோது, கள்ளத் தீர்க்கதரிசியாகிய அமத்சியா என்பவன் அவனுக்கு விரோதியானுன். ஆமோ $7^{10}$. ஆனுல் ஆமோஸ் அவனுக்குப் பயப்படாமல் இஸ்ரவேல் ராஜ்யத்தில் நடக்கும் பாவங்களுக்குத் தண்டனையாக அசீரியர் அவர்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வருவார்கள் என்று தீர்க்கதரிசனம் சொன்னுன்.

II. **இவன்கால நிலைமை**. மெய்ப்பக்தியில்லாத ஆராதனை ($2^{8}$) சன்மார்க்க முறைமையில்லாமை ($2^{7}$) தந்த மாளிகைகள் ($3^{15}$) மதுபானம் ($6^{6}$) அநியாயம் ($2^{8}$) சிற்றின்பப் பிரியரான ஸ்திரீகளின் குரூரம் ($4^{1}$) பரிதானம் ($5^{12}$) வியாபாரத்தில் பொய்யும் திருட்டுமான லாபம் ($8^{5}$) ஆகிய அக்கிரமங்களை

ஆமோஸ் கண்டு தீர்க்கதரிசனம் சொல்லத் துவங்கினன்.

III. பிரிவுகள்.

(1) $1^{2}$-$2^{16}$. தமஸ்குவும், காத்சாவைச் சுற்றியிருக்கிற மற்ற ஜனங்களும் செய்த மாபாதகங்களும், அவைகளுக்காக வரும் தண்டனைகளும்.

(2) $3^{1}$-$5^{27}$. மூன்று பிரசங்கம். இதில் பாவத்திற்காக ஜனங்கள் தமஸ்குவுக்கு அப்பாலே போகவேண்டும் என்று சொல்லுகிறான்.

(3) 6 அதி. நிர்விசாரிகளுக்கு இன்னொரு பிரசங்கம்.

(4) $7^{1}$-$9^{10}$. இதில் வெட்டுக்கிளி, அக்கினி, தூக்குநூல், கனி, பாழான தேவாலயங்கள் ஆகிய ஐந்து காட்சிகள் சொல்லியிருக்கின்றன.

(5) $9^{11-16}$. முடிவுரை.

சில வித்துவான்கள் இந்த வசனங்கள் வேறே ஆக்கியோனால் இயற்றப்பட்டன என்று நினைக்கிறார்கள்.

IV. ஆமோஸ் செய்த போதனை. இவனுடைய காலத்திற்கு முன்னே ஜனங்கள் வெவ்வேறான தேசங்களில் வெவ்வேறான தேவர்கள் இருந்தார்கள் என எண்ணினார்கள். ஆமோஸ் எங்குமுள்ள யேகோவாவைத் தவிர வேறே கடவுள் இல்லையென்றும் ($9^{7}$) யேகோவா நீதியுள்ள தேவன் என்றும் அநீதியுள்ளவர்களைத் தண்டிப்பார் என்றும் பஞ்சம், நோய் முதலியவை யேகோவா கூறின தண்டனைகள் என்றும் போதித்தான்.

எபிரெயர் யேகோவாவுக்கும் தங்களுக்கும் இருக்கும் சம்பந்தம் ஒருக்காலும் அழியாது என்று எண்ணமுள்ளவர்களாயிருந்தார்கள். இதைப்பற்றி ஆமோஸ் இந்தச் சம்பந்தம் சடங்காசாரத்தினால் அல்ல, உத்தம மெய்ப் பக்தியினால் நிலைநிற்கும்; அப்படியில்லாமல் அவர்கள் துன்மார்க்கராயிருந்ததினாலே சிறைப்பட்டுப்போவார்கள் என்று சொன்னான்.

**ஆமோஸ்**. Amos. இவன் ஆமோஸ் தீர்க்கதரிசியல்ல. லூக் $3^{25}$.

**ஆமோத்சு**. Amoz. ஏசாயாவின் தகப்பன். இவன் ஆமோஸ் தீர்க்கதரிசியல்ல. ஏசா $1^{1}$.

**ஆமோனா**. Hamonah. [திரள்]. எசே $39^{16}$.

**ஆமோன்**. Amon.

1. யூதாவின் ராஜா. 2 இரா $21^{19}$.

2. சமாரியா பட்டணத்துத் தலைவன். 1 இரா $22^{26}$.

3. இவன் பெயர் ஆமி என்றும் சொல்லப்படும். எஸ்ரு $2^{57}$ நெகே $7^{59}$.

**ஆமோன் கோகு**. Hamon Gog. எசே $39^{11}$.

**ஆயக்காரன்**. Publican. ரோமராயன் தன் ராஜ்யத்தில் ஒவ்வொருநாட்டிலும் வரி சேர்க்கும்படி பிலாத்துவைப்போலத் தேசாதிபதி ஒருவனை நியமித்திருந்தான். இவன் ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு வியாபாரம் முதலியவைகளுக்காகக் கொண்டுபோகப்படும் சாமான்களுக்கு வரி வாங்கும்படி ஆங்காங்குள்ள ஆயத்துறைகளில் ஆயக்காரரை நியமித்தான். இந்த ஆயக்காரர் ஜனங்களை அதிக தொந்தரவு செய்து அநியாயமாய் நடத்தினதினால் எந்தத் தேசத்து ஜனங்களும் அவர்களையும் அவர்கள் வேலையையும் வெறுத்தார்கள். அப்படியிருந்தும் பலஸ்தீனா தேசத்திலுள்ள யூதர்களிற் சிலர் தங்களையும் தங்கள் தேசத்தையும் ஜெயித்து அரசாளும் ரோமை அதிகாரிகளின் தயவு தங்களுக்கு வேண்டியிருந்ததால் ஆயக்காரராயும் சாதாரண ஆயக்காரருக்குத் தலைவராயும் இருந்தார்கள். லூக் $19^{2}$. இதினிமித்தம் மற்ற யூதர்கள் இவர்கள்பேரிலே பகையுள்ளவர்களானார்கள்.

**ஆயத்தநாள்**. The day of preparation. யூதர்களுடைய ஓய்வுநாளுக்கும் முதல் ஓய்வுநாளுக்கும் ஒவ்வொரு பண்டிகைத் தினத்துக்கும் முந்தினநாள். இவைகளில் பஸ்காவுக்கு முந்தின ஓய்வுநாள் யூதருக்கு விசேஷித்தநாள். மத் $27^{62}$ யோவா $19^{14}$.

**ஆயம்**. Customs. எஸ்ரு $4^{13}$.

**ஆயலோன்**. Aijalon.

1. தாண் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு ஊர். யோசு $19^{42}$.

2. செபுலோனைச் சேர்ந்த ஒரு ஊர். நியா $12^{12}$.

**ஆயா**. Aija.

1. = ஆயியும். நெகே. $11^{31}$.

2. ரிஸ்பாளின் தகப்பன். 2 சாமு $3^{7}$.

**ஆயாத்து**. Aiath. = ஆயி. ஏசா $10^{28}$.

**ஆயி**. Ai.

1. யோசு $7^{2}$.

2. எரே $4^{3}$.

**ஆயிரம் வருஷம்**. Millennium. பிசாசானவன் கட்டப்பட்ட பிற்பாடு இரத்தச்சாட்சியாய் மரித்தவர்கள் கிறிஸ்துவோடு அரசாளும் காலம். முதல் உயிர்த்தெழுதல் இதற்குத் துவக்கம். இதின் முடிவில் பிசாசானவன் தான் அழிந்துபோவதற்கு முன் சிலகா

லம் விடுதலைபெற்று ஜனங்களை ஏமாற்ற அவனுக்குத் தருணம் கிடைக்கும். வெளி $20^{2-7}$.

வெளிப்படுத்தப்பட்ட வாக்கியத்தை எழுதின ஆக்கியோனைத்தவிர புதிய ஏற்பாட்டை எழுதின மற்றெந்த ஆக்கியோன்களும், இயேசுவும் இதைப்பற்றித் தெரிவிக்கவில்லை. யூதர்கள் மேசியாவின் வருகையையும் அவர் இந்த உலகத்தில் ஸ்தாபிக்கும் ராஜ்யத்தையும் குறித்து எப்படி நம்பினார்களோ, அப்படியே ஆதி கிறிஸ்தவர்களும் இந்தக் காலம் வரும் என்று நினைத்து இதை ஒப்புக்கொண்டார்கள். இதுவரையும் சிலர் அப்படியே நினைக்கிறார்கள். ஆனால் வேதசாஸ்திரிகள் வெளிப்படுத்தப்பட்ட விசேஷத்தில் எழுதியிருக்கும் அநேக மறைபொருளான வாக்கியங்களைப் போலவே இதுவும் இருக்கிறது என்று தீர்மானித்திருக்கிறார்கள். ஆதி கிறிஸ்தவர்களும், அவர்களுக்குப் பின்னுள்ளவர்களிற் சிலரும் அப்போதைக்கப்போது ஆயிரம் வருஷ ராஜ்யத்திற்குக் காலம் சமீபமாய்விட்டது என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் இப்புஸ்தகத்தில் செய்யுள்போல எழுதின காட்சிகளை நாம் சொல்லார்த்தமாய் எடுக்கப்படாது.

**ஆயின்**. **Ain.** எபிரெய அக்ஷர வரிசையில் பதினாறாம் எழுத்து. சங் $119^{121}$.

**ஆயீன்**. **Ain.** [ஊற்று].

1. லேவியரின் பட்டணங்களில் ஒன்று. யோசு $15^{32}$.

2. கானானுக்கு வடகிழக்கேயுள்ள ஒரு ஊர். எண் $34^{11}$.

**ஆயீ**. **Ai, Hai.** [குவியல்]. ஆதி $12^{8}$ $13^{3}$ யோசு $7^{2}$ $8^{1}$.

**ஆயுதம். Arms, Weapons.**

1. எபிரெயர் தங்கள் தேசத்திலுள்ள மற்ற ஜனங்களைப்போல் கவசம் முதலானவை தரித்து ஈட்டி முதலானவை பிடித்து யுத்தஞ் செய்வார்கள்.

யுத்தாயுதங்கள் பலவகையாயிருந்தன.

புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் ஆயுதங்கள் ரோமராஜ்யத்துப் போர்ச்சேவகர் அணிந்தவைகள். எபே $6^{11}$.

2. எபிரெயர் கையில் ஏந்தும் ஆயுதங்களிற் சில :—

(1) எறிவல்லையம். யோபு $41^{23}$.

(2) வளைதடி. எசே $39^{9}$.

(3) வேல். எரே $50^{42}$. இது வளைதடியிலும் கொஞ்சம் பெரியது.

(4) ஈட்டி. யோசு $8^{18}$ நெகே $4^{13}$.

இராணுவத்தலைவர்களும் ராஜாக்களும் நெகேமியாவின் காலத்திலுள்ள ஜனங்களும் தரித்த ஈட்டிகள் வேலைப் பார்க்கிலும் பெரியனவாயிருக்கும். பாகாலின் தீர்க்கதரிசிகள் தங்களைக் கீறிக்கொண்ட ஈட்டிகள் (1 இரா $18^{28}$) பெரிய ஈட்டிகள் அல்ல எனத் தோன்றுகிறது.

(5) பட்டயம். எபிரெயருடைய பட்டயம் வளைவில்லாததும் குறுகினதாயும் இருந்தது. சில இருபுறமும் கருக்குள்ளன. சங் $149^{6}$. இருபுறமும் கருக்குள்ளது ஒருமுழம் நீளமுள்ள குத்துவாள். நியா $3^{16}$. பட்டயத்தின் உறை வெண்கலத்தினாலும் தோலினாலும் செய்யப்பட்டது. 1 நாளா $21^{27}$. பட்டயம் உறைகச்சையில் தொங்கும். 2 சாமு $20^{8}$.



கவசம்.

(6) வில்லாயுதங்கள் பலவிதமாய் இருந்தன. யுத்தவில் பெரிதாயிருந்தது. சக $9^{10}$. அம்புகள் அம்பறாத்தூணியில் வைக்கப்படும். யோபு $39^{23}$ சங் $127^{5}$.

(7) கவண் யுத்தவீரரும் மேய்ப்பர்களும் உபயோகிப்பார்கள். 1 சாமு $17^{40}$. சேனையில் கவண்காரர் பலர் இருந்தார்கள். 2 இரா $3^{25}$. கவண் எறிவதில் பென்யமீன்கோத்திரத்தார் அதிக திறமையுள்ளவர்கள். நியா $20^{16}$.

(8) இருப்பு முளையடித்த தண்டாயுதமும் வெட்டாயுதமும் சிலர் யுத்தத்திற்குக் கொண்டுவருவார்கள். எரே $51^{20}$ எசே $9^{2}$.

(9) கேடகம். வழக்கத்தில் சிறிதாயிருக்கும். ஆனால் எபே $6^{16}$-ல் சொல்லியிருக்கும் 'கேடகம்' ரோமைச் சேனைகள் பிடிக்கும் பெரிய பரிசை. 2 சாமு $22^{31}$.

(10) பரிசை முழுத் தேகத்தையும் காப்பதற்கு அணியும் கேடகம். எபே $6^{16}$ சங் $35^{2}$.

(11) தலைச்சீரா. இராணுவத்தலைவர்கள் வெண்கலச் சீராவும் (1 சாமு 17⁵), சாதாரண போர்வீரர் தோற்சீராவும் தரிப்பார்கள். எபே 6¹⁷-ல் சொல்லியிருப்பது வெண்கலத் தலைச்சீரா.

(12) கவசம். போர்க்கவசம். 1 சாமு 17⁵. மார்க்கவசம். 1 நாளா 26¹⁴ எபே 6¹⁴. இது மார்பையும் முதுகையும் காக்கும் கவசம். சில கவசம் சந்துகளுள்ளவை. இவை தொடையைக் காக்கும் கவசம். 1 இரா 22³⁴.

(13) வெண்கல காற்கவசம். 1 சாமு 17⁶.



ஈட்டி, வில், கத்தி.

**ஆயுதசாலை. Armoury.** பல இடங்களிலேயும் இருக்கும். சாலொமோனின் மாளிகையில் ஒன்றும் தேவாலயத்தில் ஒன்றும் இருந்தது. நெகே 3¹⁹ 1 இரா 10¹⁷ 2 இரா 11¹⁰.



கவசம்.

**ஆயுததாரி. Armour-bearer.** தன் எஜமானின் பரிசை கவசங்களையும் ஏனைய யுத்தாயுதங்களையும் கூடக் கொண்டுபோகிறவன். நியா 9⁵⁴ 1 சாமு 14⁷ 2 சாமு 18¹⁵.



கேடகம்.

**ஆரதா. Haradah.** எண் 33²⁴.

**ஆராராத். Ararat.** **அராராத்** காண்க.

**ஆரா.** 1. = **Ara.** 1 நாளா 7³⁸.

2. = **Hara.** இஸ்ரவேலர் சிறைப்பட்டுப் போன ஒரு ஊர். 1 நாளா 5²⁶.

3. = **Arah.** 1 நாளா 7³⁹.

4. = **Arah.** எஸ்றா 2⁵.

**ஆராதனை. Worship.**

1. எந்தத் தேசத்திலும் எக்காலத்திலும் ஜனங்கள் கடவுளுக்குச் செய்யும் ஆராதனையில் வணக்கம், ஸ்தோத்திரம், விண்ணப்பம் ஆகிய இவைகள் சேர்ந்திருக்கும். இவைகளோடு எபிரெயர் கானானியர் முதலானவர்கள் அடிக்கடி பலியும் செலுத்துவார்கள். பிற்காலத்திலுள்ள யூதர்கள் ஆராதனை நடத்தும்போது பிரசங்கம் செய்வது வழக்கம்.

2. ஆராதனை தனியாராதனை, குடும்ப ஆராதனை, பகிரங்க ஆராதனை என மூன்று வகைப்படும். பஸ்கா பண்டிகையில் குடும்ப ஆராதனை அதிகம் விசேஷித்தது.

3. தேவாலயங்களில் செலுத்தின பலி பலவிதமாயிருந்தது. **பலி** காண்க.

4. கடவுள் பிரசன்னராயிருக்கிறார் என மனதிற்கொண்டு ஜெபத்தில் காட்டும் வணக்கம் பலவிதமுண்டு. பாதரட்சையைக் கழற்றிப்போடுவார்கள். யாத் 3⁵. முழங்கால் படியிடுவார்கள் அல்லது முடக்குவார்கள். 1 இரா 19¹⁸. விக்கிரகாராதனைக்காரர் சிலையை முத்தம் இடுவார்கள். ஓசி 13². யாவரும் மார்பில் அடித்துக்கொள்ளுவார்கள். லூக் 18¹³. முகத்தை மூடிக்கொள்ளுவார்கள். யாத் 3⁶. முகங்

குப்புற விழுவார்கள். ஆதி $17^3$. இவ்விதமாய் ராஜாக்களுக்கும் பெரியோருக்கும் வணக்கஞ் செய்வார்கள். ஆதி $18^1$ 2 சாமு $14^3$. யவீரு இயேசு கிறிஸ்துவுக்கு இவ்வித வணக்கம் செய்தான். மாற் $5^{22}$. ஆனால் இவ்விதமான வணக்கம் கடவுளுக்கே உரியது என்பது ஆதி கிறிஸ்தவர்களின் தீர்மானம். அப் $10^{26}$ வெளி $19^{10}$.

5. ஸ்தோத்திரம் கடவுளுடைய நன்மைகளுக்காகவும் அவருடைய குணாதிசயங்களுக்காகவும் சர்வ ஜனங்களும் செய்யும் வழிபாடு. யாத் 15 ஆதி. சங் 104. தேவாலயத்தில் பாடுதற்கு சங்கீதக்காரர் இருப்பார்கள். அவர்களும் மற்றவர்களும் மாறிமாறிப் பாடுவார்கள். சங் 136. புதிய ஏற்பாட்டில் தேவனுக்கும் கிறிஸ்துவுக்கும் செய்யும் ஸ்தோத்திரம் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. ஆரோக்கியமானவர்களும் துன்பத்தில் ஆறுதல் அடைந்தவர்களும் பாவமன்னிப்புப் பெற்றவர்களும் அப்போஸ்தலர் முதலான பக்தர்களும் இவ்விதமாய் ஸ்தோத்திரம் செலுத்தினார்கள். வெளிப்படுத்தின விசேஷத்தில் இதற்குப் பல திருஷ்டாந்தங்களுண்டு. ஆராதனையில் கீர்த்தனைகளினாலும் கீதவாத்தியங்களினாலும் ஸ்தோத்திரித்தார்கள். யாத் $15^{20}$. சில சமயங்களில் சந்தோஷத்திற்காக நடனஞ்செய்தார்கள். யாத் $15^{20}$ 2 சாமு $6^{14}$.

ஆதி கிறிஸ்தவர்கள் ஆராதனையில் கீதங்கள் கீர்த்தனைகள் முதலான பாட்டுகளை உற்சாகமாய்ப் பாடினார்கள். எபே $5^{19}$ கொலோ $3^{16}$. அவர்கள் பாடின பாட்டுகளுக்குள் 1 கொரி 13-ம் அதிகாரத்தில் சொல்லியிருக்கும் அன்பைப்பற்றிய கீதம் ஒரு நல்ல திருஷ்டாந்தம்.

6. கடவுள் செய்த நன்மைகளை இன்னும் செய்யவும், ஆபத்துக்காலத்தில் உதவிபுரியவும், தேகசுகம் மழை தானியவிளைவு முதலான விசேஷித்த நன்மைகளைச் செய்யவும் அவரை நோக்கி விண்ணப்பம் பண்ணுவது வழக்கம். யாத் $5^{22}$ $8^{18}$ மு. தேவாலயத்திலும் பகிரங்க ஆராதனையில் இவ்விதமாய் விண்ணப்பம் செய்வார்கள். சாலொமோன் ராஜா இவ்விதமாய் விண்ணப்பம் செய்தான். 1 இரா $8^{22-53}$. சீலோ என்னும் பரிசுத்த ஸ்தலத்தில் அன்னாளும், தேவாலயத்தில் ஆயக்காரனும் தனிமையாய் விண்ணப்பம் செய்தார்கள். தங்கள் தங்கள் வீட்டிலேயும் ஆராதனை நடத்துவது எபிரெயருக்கு வழக்கம். தானி $6^{10}$ அப் $10^2$.

7. பழைய ஏற்பாட்டில் ஆராதனையில் பூர்வீகத்தில் பிரசங்கம் செய்கிற வழக்கமில்லை. எபிரெயர் பாபிலோனிய சிறையிருப்பிலிருந்து வந்தபோது அவர்களில் அநேகர் எபிரெய பாஷை அறியாததினால், ஓய்வுநாள்தோறும் வேதசாஸ்திரிகள் அந்தப் பாஷையில் எழுதின மோசேயின் நியாயப் பிரமாணத்தை வாசித்து ஜனங்கள் வழங்கின பாஷையில் அதை வியாக்கியானம் செய்வார்கள். பிற்காலத்தில் ஆராதனையில் பிரசங்கம் செய்கிற வழக்கத்திற்கு இது ஆரம்பமாயிருந்தது. நெகே $8^3$. இயேசுகிறிஸ்துவின் காலத்திலுள்ள யூதர்கள் எந்த ஜெப ஆலயத்திலும் ஓய்வுநாள்தோறும் வேதவாக்கியத்தைப்பற்றி ஆராதனையில் பிரசங்கம் செய்வார்கள். இயேசு இவ்விதமாய்ப் பல தடவைகளில் திவ்விய உபதேசம் செய்தார். மத் $4^{23}$ மாற் $1^{21}$. பவுலும் அப்படியே செய்தான். அப் $13^{14}$.

புதிய ஏற்பாட்டில் 'தீர்க்கதரிசனம் சொல்லுகிறது' என்பதற்குப் பதிலாக 'பிரசங்கம் பண்ணுகிறது' என வாசித்தால் அர்த்தம் தெளிவாய்த் தோன்றும். 1 கொரி 11, 13, 14-ம் அதிகாரங்களில் இந்த அர்த்தமாகவே சொல்லியிருக்கிறது.

**ஆராதனைக்கூட்டத்தின் பர்வதம். The Mount of Congregation.** பாபிலோனியர் தங்கள் தேவர் தேவிகள் வடதேசத்திலுள்ள உயர்ந்த மலைமேல் வசித்துக்கொண்டார்கள் என்று நம்பினார்கள். ஏசா $14^{13}$.

**ஆராத். Arad.**

1. யூதேயாவுக்குத் தெற்கே உள்ள ஒரு ஊர். எண் $21^1$.

2. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $8^{15}$.

**ஆராம். Aram.**

1. இதுவும் சீரியா ராஜ்யமும் ஒன்றுதான். ஏறக்குறைய கி-மு. 1300-ஆண்டில் ஆர்மீனியா முதலிய கீழ்த்தேசங்களிலிருந்து சில கோத்திரங்கள் பிரயாணம்செய்து சீரியா தேசம்வரையும் வந்து அங்கே குடியேறிச் சில ராஜ்யங்களை ஸ்தாபித்தார்கள். அவர்களிற் பெரிய வகுப்பார் தமஸ்கு பட்டணத்தை ஜெயித்து அங்கே தங்கள் ராஜ்யத்தை ஸ்தாபித்து மற்றவர்களுக்குத் தலைவர்களாயிருந்தார்கள். இவர்களும் எபிரெயரும் பல ஆண்டுகளாக சம்பந்தப்பட்டவர்களாய் இருந்தார்கள். தாவீது அரசன் ஆராமிலுள்ள கேசூரின் ராஜாவுடைய குமாரத்தியை விவாகம் செய்தான். 2 சாமு $3^3$. அவளுடைய குமாரனாகிய அப்சலோம் கேசூருக்கு ஓடிப்போனான். 2 சாமு $13^{38}$. தாவீது தமஸ்குவையும் சோபா முதலிய பட்டணங்களையும் ஜெயித்தான். 2 சாமு $8^6$ $10^{18}$. தாவீது இறந்த

பிறகு தமஸ்கு ராஜ்யம் இஸ்ரவேலரின் ஆளுகையைவிட்டு நீங்கி சிலகாலமாக இஸ்ரவேலருக்கும் யூதாவுக்கும் மாறிமாறி உதவி செய்தது. ஆகாப் ராஜ்யபாரம் செய்தது முதல் நூறு வருஷமாக தமஸ்குவுக்கும் இஸ்ரவேலருக்கும் அடிக்கடி யுத்தம் நடந்தது. ஆகாஸ் அரசாண்டகாலத்திலும் தமஸ்கு யூதாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனது. ஏசா 7 அதி.

கி-மு. 732-ஆம் வருஷத்தில் அசீரியர் இந்த ராஜ்யத்தை அழித்துவிட்டார்கள். பிற்காலத்தில் சீரியர்களில் அநேகர் கிறிஸ்துமார்க்கத்தைச் சேர்ந்தார்கள். அவர்கள் தங்கள் பாஷையில் கிறிஸ்துமார்க்க புஸ்தகங்கள் அநேகம் எழுதினார்கள். **ஆதாந்தேசம், ஆதாத், ஆசகேல், பெனாதாத்** காண்க.

2. கேமுவேலின் மகன். ஆதி $22^{21}$.

3. சோமோரின் குமாரன். 1 நாளா $7^{34}$

4. எஸ்ரோமின் மகன். மத் $1^{3, 4}$.

**ஆராரி.** Harari. [மலைவாசி].

1. 2 சாமு $23^{11}$. 2. 2 சாமு $23^{33}$.

**ஆரான்.** Haran, Charan.

1. ஆபிரகாமின் மூத்த சகோதரன். ஆதி $11^{26}$.

2. ஒரு லேவியன். 1 நாளா $23^{9}$.

3. காலேபின் மகன். 1 நாளா $2^{46}$.

4. மெசொபொத்தாமியாவில் எமோரியர் ஸ்தாபித்த நாகோரின் ஊர். இதில் சந்திரன் அதிகமாய் வணங்கப்படும். ஆதி $11^{31}$.

**ஆரியே.** Arieh. [சிங்கம்]. 2 இரா $15^{25}$.

**ஆரியோகு.** Arioch. **அரியோகு** காண்க.

**ஆரீப்.** Hariph. = யோரா. நெகே $7^{24}$ எஸ்று $2^{18}$.

**ஆரீம்.** Harim.

1. அந்நிய ஜாதியான ஸ்திரீகளை விவாகம்செய்த குடும்பத்தார். எஸ்று $10^{31}$.

2. இருபத்துநாலு ஆசாரிய வகுப்புகளில் மூன்றாவது. 1 நாளா $24^{8}$.

**ஆரும்.** Harum. 1 நாளா $4^{8}$.

**ஆருத்ஸ்.** Haruz. 2 இரா $21^{19}$.

**ஆரேதியர்.** Ardites. எண் $26^{40}$.

**ஆரேத்.** Hereth. 1 சாமு $22^{5}$.

**ஆரேப்.** Hareph. 1 நாளா $2^{51}$.

**ஆரோகண சங்கீதம்.** **A Psalm of ascents.** 120-134 சங்கீதங்கள். 'ஆரோகண' என்பதற்கு 'மேலே ஏறிப்போகிற' என்றர்த்தமாம். ஒருவேளை இஸ்ரவேலர் பாபிலோனியாவின் சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்குத் திரும்ப 'ஏறிப்போகும்' போது அல்லது அவர்கள் வருஷம்தோறும் பண்டிகை காலங்களில் எருசலேமை நோக்கி 'ஏறிப்போகும்' போது இந்தச் சங்கீதங்களைப் பாடினார்கள். ஸ்திரீ பிராகாரத்திலிருந்து மேலே இஸ்ரவேலர் பிராகாரத்திற்குப் பதினைந்து படிகள் உண்டு. இவைகளின்மேல் பிரயாணிகள் 'ஏறிப்போகும்' போது ஒவ்வொரு படியிலும் நின்று ஒவ்வொரு சங்கீதம் பாடுவார்கள் என்று சில வேதசாஸ்திரிகள் நினைக்கிறார்கள்.

**ஆரோதியன்.** Harodite. ஆரோத்துக்குக் கிட்டப் பிறந்தவன். 2 சாமு $23^{25}$.

**ஆரோத்.** Arod. = அரோதி. ஆதி $46^{16}$ எண் $26^{17}$.

**ஆரோத்.** Harod. கில்போவா மலையருகேயுள்ள ஓர் நீரூற்று. இதிலிருந்து எப்பொழுதும் தண்ணீர் ஏராளமாய்ப் பாயும். நியா $7^{1}$.

**ஆரோவே.** Haroeh. = ராயா. 1 நாளா $2^{52}$ $4^{2}$.

**ஆரோவேர்.** Aroer.

1. ரூபன் கோத்திரத்தின் ஒரு ஊர். உபா $2^{36}$ $4^{47}$.

2. யூதாவின் ஒரு ஊர். 1 சாமு $30^{28}$.

3. காத் கோத்திரத்தின் ஒரு ஊர். யோசு $13^{25}$.

**ஆரோன்.** Aaron. 'ஆரோன்' என்பதின் அர்த்தம் நமக்குத் தெளிவாய்த் தெரியவில்லை. சிலர் நினைக்கிறபடி அதற்கு 'பிரகாசமுள்ளவன்' என்று அர்த்தம். மோசேயின் மூத்த சகோதரனாகிய இவன் எகிப்திலிருந்து வந்த பிரயாணத்தில் மோசேக்கு உதவிக்காரனாய் இருந்து ஜனங்களுக்கு யாத்திரையில் நற்போதனை செய்தவன். யாத் $4^{30}$.

இவன் பிறப்பு. யாத் $7^{7}$.

இவன் மோசேக்குச் செய்த உதவிகள். யாத் 4-16 அதி.

இவன் மோசேயின் கையை உயர்த்தி நின்றது. யாத் $17^{9}$.

இவன் மோசேயோடு சீனாய் மலைக்குப் போனது. யாத் $24^{1}$.

இவன் பிரதான ஆசாரியன். யாத் 28-29 அதி. லேவி 8 அதி.

இவன் கோல் தளிர்த்தது. எண் 16, 17 அதி.

இவன் பொன்னினால் கன்றுகுட்டி செய்தது. யாத் 32 அதி.

இவனும் மிரியாமும் மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்தது. எண் 12 அதி.

இவன் மோசேயோடு கடவுள் இட்ட கட்டளையை மீறினது. எண் $20^{10}$.

பரிசுத்த பூமியில் அல்ல, ஓர் என்னும் மலையில் இறந்துபோனது. உபா $10^{6}$.

இவன் பிறந்து வளர்ந்து ஆசாரியனாய் அபிஷேகம் அடைந்து, பலி செலுத்தி, பன்னிரண்டு கோத்திரத்தின் பேர்களை மார்க்க வசத்தில் தரித்து, மகா பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசித்து, ஜனங்களுக்காக விண்ணப்பம் செய்து அவர்களை ஆசீர்வதித்துவந்ததினால் இவன் இயேசுகிறிஸ்துவுக்கு முன்மாதிரியாயிருந்தான். லூக் $1^{5}$ அப் $7^{40}$ எபி $5^{4}$ $7^{11}$ $9^{4}$.

**ஆரோனின் சந்ததியார். Children of Aaron.** **ஆசாரியன்** காண்க.

**ஆரோனுடைய தளிர்த்த கோல். Aaron's Rod.** எண் 17-ம் அதி. ஆரோனுடைய தளிர்த்த கோல் சாட்சிப் பெட்டிக்குள் வைக்கப்பட்டது என்று பிற்காலத்துப் பாரம்பரியம் சொல்லுகிறது. எபி $9^{4}$.

**ஆர். Ar.** ஒரு ஊர். எண் $21^{15}$ உபா $2^{36}$.

**ஆர்து. Ard.** = ஆதார். ஆதி $46^{21}$ 1 நாளா $8^{3}$.

**ஆர்லோத் மேடை. Gibeah-ha-araloth.** யோசு $5^{3}$.

**ஆலயம். Temple.** **தேவாலயம்** காண்க.

**ஆலா. Halah.** அசீரியர் இஸ்ரவேலைக் கொண்டுபோய்ச் சிறையில் வைத்த இடம். 2 இரா $17^{6}$.

**ஆலாக். Halak.** யோசுவா கானானில் படையெடுத்துப் போனபோது அவன் இந்த மலைக்குத் தெற்கே போகவில்லை. யோசு $12^{7}$.

**ஆலி. Hali.** யோசு $19^{25}$.

**ஆலூஸ். Alush.** எண் $33^{14}$.

**ஆலெப். Aleph.** சங் $119^{1}$. அ காண்க.



ஆலை.

**ஆலை. Press. Fat. Vat.** வழக்கமாய் ஒரு ஆலைக்கு மேலே பெரிதும் கீழே சிறிதுமான இரண்டு தொட்டிகள் உண்டு. மேல் தொட்டியில் திராட்சப்பழங்களைப் போட்டுக் காலால் மிதிக்க, ரசம் வாய்க்கால் வழியாக கீழ்த் தொட்டிக்குள் பாயும். பின்பு பெரிய தொட்டியிலுள்ள சக்கையைச் செக்கில் ஆட்டுவதுபோல பிழிந்த மீதி ரசமும் பாயும். ஏசா $63^{2}$ வெளி $19^{15}$.

**ஆலோசனைக்காரன். Counsellor.** பழைய ஏற்பாட்டில் அகித்தோப்பேலைப் போல ராஜாவின் மந்திரி. அதிசயமானவைகளை ஆலோசிக்கிறவர் அசீரியாவிலிருந்து யூதாவை விடுதலைசெய்ய வருவார் என்று ஏசாயா சொல்லுகிறான். புதிய ஏற்பாட்டில் ஆலோசனைச் சங்கத்தைச் சேர்ந்தவனையும் குறிக்கிறது. 1 நாளா $27^{32}$ ஏசா $9^{6}$ மாற் $15^{43}$ லூக் $23^{50}$.

**ஆலோசனைச்சங்கம். Sanhedrin.** [கூட உட்கார்ந்து இருக்கிறவர்கள்]. மத் $5^{22}$ அப் $5^{21}$ $22^{5}$ யோவா $11^{47}$.

அப்போகிரிப்பாவில் இச்சபையின் பெயர் முதலாவது காணப்படுகிறது. யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தகாலத்தில் விசேஷமாய் நியாயந்தீர்ப்பதற்கு இது ஏற்பட்டது என்று தோன்றுகிறது. கி-பி. 70-ஆண்டில் எருசலேம் பட்டணத்துக்கு அழிவு நேரிட்டபோது இச்சங்கமும் அழிந்தது. இதற்குத் தலைவன் பிரதான ஆசாரியன். இதில் ஒரு வருக்கொருவர் விரோதிகளான சதுசேயர் பரிசேயர் ஆகிய இருகட்சிக்காரர் இருந்தார்கள். அப் $23^{6}$. இயேசுவின் காலத்தில் இந்தச் சங்கத்தின் அதிகாரம் யூதேயாவில் மாத்திரம் இருந்ததினால் கலிலேயாவில் அவர் இருந்தபோது அவருக்கு விரோதமாய் இது ஒன்றும் செய்யக் கூடாததாயிருந்தது. அவர் இறந்தபிறகு இச்சங்கத்தின் அதிகாரம் எங்கும் பரம்பினதினால் தமஸ்குவிலிருந்த கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தக் கூடியதாயிருந்தது. அப் $9^{2}$. மோசேயின் நியாயப்பிரமாணத்திற்குரியவைகளைப்பற்றி இச்சங்கம் செய்யும் தீர்மானத்துக்கு கீழ்ப்படியாத எந்த யூத நியாயாதிபதியும் மரண ஆக்கினைக்குள்ளாவான்.

இந்தச் சங்கம் நியாயப்பிரமாணத்தை மீறுதல், தேவதூஷணம் பேசுதல், கள்ளத் தீர்க்கதரிசனம் உரைத்தல் முதலியவைகளை விசாரிக்கிறதற்குப் புதிய ஏற்பாட்டில் உதாரணங்கள் உண்டு. மத் $26^{57}$ யோவா $19^{7}$ அப் $4^{5}$ $7^{57}$ $22^{30}$. சேவகர்களைக்கொண்டு குற்றவாளிகளைப் பிடித்து அவர்களை விசாரணைசெய்ய இதற்கு அதிகாரம் உண்டு. மத் $26^{47}$. ஆனால் மரண ஆக்கினைக்குத் தீர்க்கப்பட்ட குற்றவாளிகளைக் கொல்லுவதற்கு ரோமை அதிகாரிகளின் உத்தரவு பெறவேண்டும். யோவா $18^{31}$. ஸ்தேவானின் காலத்தில் எருசலே

மிலே ரோமை அதிகாரிகளின் அதிகாரம் கொஞ்சம் குறைந்ததினால் அவனைக் கொலைக் குத் தீர்த்தபோது உத்தரவுபெறாமல் அவனைக் கொன்றுபோட்டார்கள்.

குற்றவாளி முன்னிற்க இச்சங்கத்தார் அரைவாசி சூழவர உட்கார்ந்துகொண்டு அவனை விசாரணை செய்வார்கள். இதில் எழுபத்தொருபேர் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் குற்றவாளி பட்சமாய்ப் பேசினால், அவன் திரும்ப குற்றவாளிக்கு விரோதமாய்ப் பேசக்கூடாது. குற்றவாளியை நிர்தோஷி என அவர்கள் அறிந்தால், உடனே அவன் நிர்தோஷி எனத் தீர்ப்பார்கள். நிர்தோஷி அல்லவென்று கண்டால் மறுநாளைக்கு முன்னே தீர்மானம் செய்யமாட்டார்கள்.

**ஆவா, ஆபா**. Avva. இதுவும் ஈவா என்னும் ஊரும் ஒன்றுதான் எனத் தோன்றுகிறது. இது எங்கே இருக்கிறதென்று தெளிவாய்த் தெரியாது. 2 இரா $17^{24}$.

**ஆவி**. Spirit. 'ஆவி' என்பதினால் குறிக்கப்படுபவை பல.

தேவனின் தன்மை. யோவா $4^{24}$.
கடவுள் தம்மை அறியும் அறிவு. 1 கொரி $2^{16}$.
அசுத்த ஆவிகள். மத் $10^{1}$ 1 தீமோ $4^{1}$.
பணிவிடை ஆவிகள். எபி $1^{14}$ அப் $23^{8}$.
பாதாளத்திலுள்ளவர்கள். 1 பேது $3^{19}$.
மீட்கப்பட்டவர்கள். எபி $12^{23}$.
சத்திய ஆவி. 1 யோவா $4^{6}$.
வஞ்சக ஆவி. 1 யோவா $4^{6}$.

ஆகாயத்து அதிகாரப் பிரபுவாகிய ஆவி. எபே $2^{2}$.

அடிமைத்தனத்தின் ஆவி. ரோ $8^{15}$.
புத்திர சுவிகாரத்தின் ஆவி. ரோ $8^{15}$.

பரிசுத்த ஆவியானவருக்கும் மனுஷருடைய ஆவிக்கும் உள்ள பேதம். ரோ $8^{16}$.

புதிய ஏற்பாட்டில் நம்முடைய ஆவி என்பது பரிசுத்தாவியினாலே சுத்திகரிக்கப்பட்டுப் புதிப்பிக்கப்பட்ட நமது ஆத்துமாவைக் குறிக்கும். இதினால் ஆவி என்பதற்கும் ஆத்துமா என்பதற்கும் வித்தியாசம் கண்டு கொள்ளலாம்.

பரிசுத்தாவி புது ஜீவனுக்குக் காரணராதலால் அந்த ஜீவன் ஆவிக்குரிய ஜீவனே.

ஆவிக்கேற்ற மாளிகை. 1 பேது $2^{5}$.
ஆவிக்கேற்ற பலி. 1 பேது $2^{5}$.
ஆவிக்குரிய விவேகம். கொலோ $1^{9}$.

ஆவிக்குரிய பாட்டு அல்லது 'ஞானப் பாட்டு.' கொலோ $3^{16}$.

'ஞானபோஜனம்' 'ஞானபானம்' 'ஞான கல்' இங்கே ஞானம் என்பது ஆவிக்குரிய ஞானத்தைக் குறிக்கிறது. 1 கொரி $10^{3, 4}$.

லௌகீக காரியங்களை மறந்து மேலான வைகளை நாடும் தியானம் அல்லது பரவசம். 1 கொரி $14^{14}$ வெளி $1^{10}$.

'ஆவியின்படி' அதாவது உள்ளத்தின்படி. ரோ $2^{29}$ $7^{6}$ 2 கொரி $3^{6}$.

பழைய ஏற்பாட்டில் மனுஷனுடைய ஆவி தேவனிடமிருந்து வருகிறது என்று சொல்லியிருக்கிறது. ஆதி $2^{7}$ ஏசா $42^{6}$.

புது ஜனனம் பரிசுத்தாவியினால் உண்டாகிறது. ரோ $8^{1-17}$ 1 கொரி $2^{11, 12}$. **பரிசுத்தாவி** காண்க.

**ஆவியர்**. Avvim. கானான் தேசத்தின் தென்மேற்கிலுள்ள பூர்வீகத்தார். உபா $2^{23}$.

**ஆவிலா**. Havilah. இந்த இடம் அரபிதேசத்தின் வடபாகமும் மத்திய பாகமுமாயிருக்கலாம். ஆதி $2^{11}$.

**ஆவீத்**. Avith. ஆதி $36^{35}$.

**ஆவீம்**. Avim. பென்யமீன் கோத்திரத்தாரின் ஒரு ஊர். யோசு $18^{23}$.

**ஆவேன்**. Aven, On.

1. ஆவேன், ஓன், பெத்ஷிமேஸ் ஒன்றுதான். ஆமோ $1^{5}$ ஆதி $41^{5}$ எரே $43^{13}$.

எகிப்து தேசத்திலுள்ள இந்த நகரத்தில் அதிக உற்சாகத்தோடு சூரியனைக் கும்பிட்டு வந்தார்கள். இந்த ஆலயத்தின் ஆசாரிமார் மகா வித்துவான்களாய் இருந்தார்கள். கி-மு. ஏறக்குறைய 200-ஆவத்தில் இதின் மகிமை படிக்குப்படி குறைந்து கிறிஸ்துவின்காலத்தில் முழுதும் இல்லாமற் போய்விட்டது. இப்பொழுது கல் ஸ்தம்பம் ஒன்றுமாத்திரம் அது இருந்த இடத்தைக் காட்டுகிறது.

2. ஆவேன் பள்ளத்தாக்கு. (*The Valley of Aven*) முந்தி வட சீரியாவில் சிறந்த பட்டணமாகிய பாகால்பெக் (*Baalbek*) இருந்த பள்ளத்தாக்கு. இப்பொழுது அவ்விடத்தில் பெரிய பாழான தேவாலயங்கள் மாத்திரம் அதின் அழகையும் மகிமையையும் குறிக்கிறது. ஆமோ $1^{5}$.

**ஆளுகை**. Government. 1 கொரி $12^{28}$. **தேவ ஊழியம்** காண்க.

**ஆற்றலரி**. Willow. இது இரண்டுவிதமாயிருந்தது. லேவி $23^{40}$ யோபு $40^{22}$ சங் $137^{2}$.

**ஆற்றாகு**. Athach. 1 சாமு $30^{30}$.

**ஆனதோத்**. Anathoth.

1. எருசலேமுக்கு வடக்கே இரண்டு மைல் தூரமாயுள்ள ஒரு ஊர். இது எரேமியாவின் பிறப்பிடம். யோசு $21^{18}$ 1 இரா $2^{26}$ எரே $1^{1}$.

2. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $7^{8}$.



வட சிரியாவில் பாழாய்க்கிடக்கும் ஆவேன்.

**ஆனகு**. **Anah.**

1. ஏசாவின் மனைவிகளில் ஒருத்தியின் தாய். ஆதி $36^{2}$.
2. சிபியோனின் மகன். ஆதி $36^{24}$.
3. ஓரியரின் பிரபு. ஆதி $36^{29}$.

**ஆனாக்கு, ஆனாக்கீம், ஏனாக்கீம்**. **Anak, Anakim.** [நெட்டைக் கழுத்துள்ளவன்]. (சில வசனங்களில் 'ஏனாக்கு' 'ஏனாக்கியர்' என்று தமிழில் எழுதியிருக்கிறது). யூதா கோத்திரத்தின் எல்லைக்குள் வசித்த மூன்று வகுப்பாராகிய பூர்வீக ஜனங்கள். காலேப் இவர்களை அங்கிருந்து துரத்திவிட்டான். யோசு $11^{21}$ $15^{13}$ $21^{11}$ எண் $13^{22}$.

**ஆனாத்**. **Anath.**

1. சம்காரின் தகப்பன். நியா $3^{31}$.
2. பூர்வீகத்தில் பலெஸ்தீனாவில் வணங்கின ஒரு தேவி. நியா $1^{33}$ ஏசா $10^{30}$.

**ஆனாபு**. **Anab.** எருசலேமுக்குத் தெற்கேயுள்ள ஆனாக்கியர் வசித்த ஒரு மலைக் கோட்டை. யோசு $11^{21}$.

**ஆனாயா**. **Anaiah.** [யேகோவா பதில் சொன்னார்]. நெகே $10^{22}$.

**ஆனானி**. **Hanani.** அனானி காண்க.

**ஆனான்**. **Hanan.** [கிருபை செய்கிறவன்]. ஏழு ஆட்களின் பெயர். நெகே $8^{7}$ $13^{13}$ $7^{49}$ 1 நாளா $8^{23}$ $8^{38}$ $11^{43}$ எரே $35^{4}$.

**ஆனான்**. **Anan.** நெகே $10^{26}$.

**ஆனீம்**. **Anim.** யோசு $15^{50}$.

**ஆனூன்**. **Hanun.** [கிருபை பெற்றவன்].

1. அம்மோன் புத்திரரின் ராஜா. 2 சாமு $10^{2}$.
2. நெகே $3^{13}$.
3. நெகே $3^{30}$.

**ஆனேஸ்**. **Hanes.** எகிப்திலுள்ள ஒரு ஊர். ஏசா $30^{4}$.

**ஆனேம்**. **Anem.** 1 நாளா $6^{73}$.

**ஆனோக்கு**. **Hanoch.**

1. ஆபிரகாமின் பேரன். ஆதி $25^{4}$.
2. ரூபனின் மூத்த குமாரன். ஆதி $46^{9}$.

## இ.

**இகாயோன்**. **Higgaion.** இதற்கு ஒரு வேளை 'பயபக்தியை உண்டாக்கும் ஓசையுள்ள இசை' என்றர்த்த மிருக்கலாம். இந்தச் சங்கீதத்தைப் பயபக்தியோடு பாடவேண்டும் எனத் தோன்றுகிறது. சங் $9^{16}$.

**இக்கபோத்**. **Ichabod.** [மகிமை இல்லாமை]. ஏலியின் பேரன். 1 சாமு $4^{19}$.

**இக்கேசு**. **Ikkesh.** [கபடமுள்ளவன்]. 2 சாமு $23^{26}$.

**இக்கோனியா**. **Iconium.** சின்ன ஆசியாவின் தென்பக்கமாய் மத்தியிலுள்ள ஒரு பட்டணம். இதற்கும் தெர்பைக்கும் இடையில் நல்ல ராஜபாதை உண்டு. இதற்கும் லீஸ்திராவுக்குமுள்ள தூரம் 18 மைல். இது செழிப்பான பூமி. வியாபாரத்துக்குப் பேர்போன இடம். இங்கே யூதர்கள் அநேகர் இருந்தார்கள். பவுலும் பர்னபாவும் இந்தப் பட்டணத்தை இரண்டுதடவை சந்தித்தார்கள். அப் $13^{51}$ $14^{21}$.

**இக்தலியா**. **Igdaliah.** எரே $35^{4}$.

**இசக்கார்.** Issachar. [இப்பதத்தின் அர்த்தம் ஒருவேளை வெகுமதி]. இவன் பிறப்பு. ஆதி $30^{18}$. யாக்கோபு இவனுக்குக் கொடுத்த ஆசீர்வாதம். ஆதி $49^{14}$. மோசே இவன் கோத்திரத்தாருக்குக் கொடுத்த ஆசீர்வாதம். உபா $33^{18}$. சீனாயில் எழுதின இவன் கோத்திரத்தின் குடிமதிப்பு. எண் $1^{29}$. மோவாபில் எழுதின குடிமதிப்பு. எண் $26^{25}$. இவன் வம்சம். 1 நாளா $7^{1-5}$. இந்தக் கோத்திரத்தின் நாடு யோர்தான் நதிக்கு மேற்கே தாபோர்மலை துவங்கி கில்போவா மலைவரையும் 20 சதுரமைல் பரந்திருந்தது. யோசு $19^{17}$. இசக்கார் கோத்திரத்தார் சிசெராவுக்கு விரோதமாய் யுத்தஞ் செய்தார்கள். நியா $5^{15}$. தோலா என்னும் நியாயாதிபதி இந்தக் கோத்திரத்தான். நியா $10^{1}$.

**இஸ்காள்.** Iscah. ஆதி $11^{29}$.

**இஸ்கோத்.** Ish-hod. 1 நாளா $7^{18}$.

**இஸ்பா.** Ishbah, Ispah.

1. 1 நாளா $4^{17}$.
2. 2 நாளா $8^{16}$.

**இஸ்பாக்.** Ishbak. ஆதி $25^{2}$.

**இஸ்பான்.** Ishpan. 1 நாளா $8^{22}$.

**இஸ்பி பெனோப்.** Ishbi-benob. 2 சாமு $21^{15}$.

**இஸ்போசேத்.** Ishbosheth. [வெட்கத்தின் ஆள்]. சவுலின் நாலாம் மகன். 2 சாமு $2^{8}$. = எஸ்பால். 1 நாளா $8^{33}$.

**இஸ்மவேல்.** Ishmael. [கடவுள் கேட்பாராக].

1. இவன் தாய் ஆகார். ஆதி $16^{4}$. இவள் கர்ப்பவதியாய் இருந்தபோது முதல்முறை வனாந்தரத்துக்குத் துரத்தப்பட்டாள். ஆதி $16^{6}$ மு. இவன் பிறப்பு. ஆதி $16^{2}$. சாராள் ஆகாரை இஸ்மவேலோடு இரண்டாம்முறை வனாந்தரத்துக்குத் துரத்தினது. ஆதி $21^{9}$. தேவதூதன் மறுபடியும் ஆகாரைக் கண்டு அவளுக்கு ஆறுதல் சொன்னபிறகு பாரான் வனாந்தரத்தில் தாயும் மகனும் வசித்தார்கள். இவன் எகிப்து தேசத்தாளாகிய ஒரு பெண்ணை விவாகம் செய்தான். ஆதி $21^{21}$. பாரம்பரியத்தின்படி இஸ்மவேல் அரபியரின் கோத்திரப்பிதா. இவனுக்குப் பன்னிரண்டு புத்திரர் பிறந்தார்கள். ஆதி $25^{22}$. இவர்கள் சீனாய் மலையிலுள்ளவர்களின் கோத்திரப்பிதாக்கள். இவர்கள் ஆபிரகாமுடைய மறுமனையாட்டியின் புத்திரர் ஆனதினால் எபிரெயர் இவர்களை, தங்களுக்குக் கொஞ்சம் கீழானவர்கள் என்றெண்ணிவந்தார்கள். இவர்களைப்பற்றிய பிற்காலத்துச் சரித்திரம் ஒன்றுமே சொல்லியிருக்கவில்லை. இஸ்மவேலின் கோத்திரத்திலுள்ள சிலரின் பேர் மாத்திரம் சொல்லியிருக்கிறது. 1 நாளா $2^{17}$. இஸ்மவேலருக்கும் இஸ்ரவேலருக்கும் எப்போதும் விரோதம். சங் $83^{6}$.

2. யோனத்தானின் சந்ததியானாகிய ஒருவன். 1 நாளா $8^{28}$.

3. ஒரு உத்தியோகஸ்தன். 2 நாளா $19^{11}$.

4. ஒரு சேனைத்தலைவன். 2 நாளா $23^{1}$.

5. தாவீதின் சந்ததியாரில் ஒருவன். எரே $41^{1}$.

6. ஒரு ஆசாரியன். எஸ்றா $10^{22}$.

**இஸ்மாயா.** Ishmaiah, Ismaiah.

1. 1 நாளா $12^{4}$.
2. 1 நாளா $27^{19}$.

**இஸ்மெராய்.** Ishmerai. 1 நாளா $8^{18}$.

**இஸ்ரகியா.** Izrahiah. 1 நாளா $7^{3}$ $27^{8}$.

**இஸ்ரவேல்.** Israel.

1. **பெயர்.** இப்பதம் வேதத்தில் நாலு அர்த்தத்தோடு சொல்லியிருக்கிறது: (1) யாக்கோபின் மறுபெயர், (2) எபிரெய ஜனம், (3) யூதாவிலிருந்து பிரிந்த இஸ்ரவேல் ராஜ்யம், (4) ஞானார்த்தமாய்த் தேவனுடைய பிள்ளைகள்.

இவ்விடத்தில் எபிரெயர் என்று சொல்லப்படும் ஜனங்களைப்பற்றிப் பேசுவோம்.

2. **இவர்களின் சரித்திரம்.** இதைப்பற்றி வேதத்தைக்கொண்டும் பாபிலோனியா அசீரியா எகிப்து முதலிய தேசங்களின் ஜனங்களுடைய சரித்திரத்தைக்கொண்டும் அவர்கள் கற்களில் வரைந்த அக்ஷராதிகளைக் கொண்டும் அறியவேண்டும். இவைகளை ஒன்றாய்ச் சேர்த்துப் பார்த்தால் சாலொமோன் ராஜாவுடைய மரணபரியந்தம் சம்பவித்தவைகளிற் சிலவற்றைப்பற்றிய சரித்திரம் கொஞ்சம் சந்தேகத்துக்குரியதாய் இருந்தாலும் அதற்குப்பின் நடந்தவை பொதுப்பட எல்லாம் தெளிவாய்த் தோன்றும்.

3. **இஸ்ரவேலின் உற்பத்தி.** இஸ்ரவேலரின் ஆதி பிதாக்களாகிய ஆபிரகாம் முதலியவர்களின் சரித்திரத்தை நாம் வாசித்தால் அசீரியாவிலிருந்து சீரியா வழியாய் அங்குமிங்கும் தங்கித் தரித்துப் பிரயாணம் செய்த சில கோத்திரத்தார் கானான் தேசத்திற்கும் அதற்குத் தெற்கே சீனாய்மலை நாட்டிற்கும் போய் இருந்தார்கள் என்றும், இவர்களில் ஐபிராத்து நதியைத் தாண்டிப்போன ஆபிரகாமின் சந்ததியாருக்கு இக்காரணத்தினால் எபிரெயர் எனப் பெயரிடப்பட்டது என்றும், இந்த எபிரெயர் எகிப்துதேசத்திற்குப்

போய் அங்கே வசித்தபோது அடிமைத்தனத்திற் குட்பட்டார்கள் என்றும் அறிவோம். அங்கே இரண்டாம் ராமசேஸ் என்னும் ராஜா கி-மு. 1292-1225-வரை ஆளுகை செய்யும்போது, ராமசேஸ் பித்தோம் என்று பேர்கொண்ட பட்டணங்களைக் கட்டினார்கள். இரண்டாம் ராமசேஸ் மரித்தபிறகு அவனுடைய மகனாகிய மெனெப்தா என்னும் பார்வோன் கி-மு. 1225-1215-வரை ராஜாவாயிருந்தான். அவன் காலத்திலே எபிரெயர் வனாந்தரத்தில் இருந்தார்கள் என்று எழுதின கற்பலகை கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. இவன்காலத்தில் எபிரெயர் தாங்கள் அடிமைத்தனத்திலிருந்த எகிப்தை விட்டுப் புறப்பட்டார்கள் என்று அறியலாம்.

4. **இவர்கள் பிரயாணம்.** அக்காலத்திலே பலெஸ்தீனாவில் எகிப்தியருக்குமேலதிகாரம் இருந்ததினாலும், அடிமைத்தனத்திலிருந்து வந்த எபிரெயராகிய இவர்கள் ஐக்கியத்திலும் தீரத்திலும் குறைந்தவர்களானதினாலும், மோசே இவர்களுக்குக் கற்பித்தயேகோவாவின் கட்டளைகளுக்கு இவர்கள் கீழ்ப்படியாதவர்களாய்ப் பலெஸ்தீனாவுக்கு உடனே போகாமல் வனாந்தரத்திலே நெடுநாள் அங்குமிங்கும் தங்கித் தரித்திருந்தார்கள். எண்ணாகமம் முதலிய ஆகமங்கள் இஸ்ரவேலர் வனாந்தரத்திலே நாற்பது வருஷம் திரிந்தார்களென்று சொல்லும்போது 'நாற்பது வருஷம்' என்பது எபிரெய பாஷையில் பெரும்பாலும் நெடுநாள் என்று அர்த்தமாம்.

5. **நியாயாதிபதிகள், ராஜாக்கள்.** இஸ்ரவேலர் எகிப்திலிருந்து வந்தபிறகு இருநூறு வருஷங்களாக (கி-மு. 1225-1025) அரசரின் ஆளுகை அற்றவர்களாய் இருந்தார்கள். முதலில் மோசேயும் யோசுவாவும் இவர்களை வழிநடத்தி, நியாயப்பிரமாணங்களை ஏற்படுத்தி, புறஜாதிகளைக் கானானை விட்டுத் துரத்தி, அங்கே இவர்களைக் குடியேற்றினார்கள். இவர்களுக்குப் பிறகு ஏகூத், தெபோராள், கிதியோன், யெப்தா, ஏலி, சாமுவேல் என்னும் நியாயாதிபதிகள் விசேஷமாய் இவர்கள்மேல் அதிகாரம் செலுத்தினார்கள். இந்தக் காலமெல்லாம் இவர்களுக்குத் தொந்தரவும் அபாயமும் அடிக்கடி நேரிட்டன. எப்படியென்றால், இவர்கள் முந்தி ஜெயித்தவர்கள் இவர்களுக்கு விரோதமாய் அடிக்கடி படையெடுத்து வந்தார்கள். இதினிமித்தம் கடைசியில் இதுவரையும் பிரிக்கப்பட்ட கோத்திரங்கள் ஒன்றாய்ச் சேர்ந்து சவுலை ராஜாவாக ஏற்படுத்தினார்கள். அந்தக் காலமுதல் இஸ்ரவேலர் ஒரே ஜனமாய் இருந்தார்களென்று சொல்லக்கூடும். சவுல் எத்தனைவருஷம் அரசாண்டான் என்பது தெளிவாய்த் தெரியாதாயினும் இவன் மரித்தபிறகு தாவீது கி-மு. 1017-வரை ராஜாவாக அபிஷேகம் செய்யப்பட்டானென்று நிச்சயமாய்ச் சொல்லலாம். இவன் நாற்பது வருஷம் அரசாண்டு ராஜ்யத்தை ஸ்திரப்படுத்தி அதை விசாலமாக்கிச் சத்துருக்களை முறியடித்து எருசலேமைத் தன் ராஜ்யத்திற்குத் தலைநகரி யாக்கினதினால் அவன்காலத்தில் ராஜ்யம் சிறப்புற்றிருந்தது. சாலொமோன் கி-மு. 977-937-வரை அரசாண்டான். இவன் காலம்வரையும் இஸ்ரவேலர் மேய்ப்பர்களும் பயிர்செய்கிறவர்களுமாய் இருந்து தீரு, நினிவே, ஆவேன் என்னும் பட்டணங்களின் நாகரீகம், கல்வி, ஆஸ்தி முதலானவை அற்றவர்களுமாய் இருந்தார்கள். ஆயினும் சாலொமோன் எகிப்தின் ராஜகுமாரத்தியை விவாகம் செய்து பெனிக்கேயரின் சிற்பாசாரிகளைக் கொண்டுவந்து தேவாலயத்தையும், மாளிகைகளையும் கட்டுவித்து, கப்பல் மூலமாய் இந்தியாமட்டும் வியாபாரம்செய்து சீர்திருந்தின மற்ற ஜனங்களைப்போல் இவர்களையும் நாகரீகத்தில் விருத்தியடையச் செய்தான்.

6. **ராஜ்யம் பிரிந்தது.** இஸ்ரவேல் ஜனம் ஏறக்குறைய 80 வருஷகாலம் ஒரே ராஜ்யமாய் இருந்தும் வடபாகத்தில் உள்ளவர்களுக்கும் தென்பாகத்தில் உள்ளவர்களுக்கும் நல் ஐக்கியம் இருந்ததில்லை. சாலொமோன் மரித்தபிறகு வடபாகத்திலுள்ளவர்கள் பலட்சியமுள்ள அவன் மகனாகிய ரெகொபெயாமின் ஆளுகையினின்று தங்களை விலக்கி யெரொபெயாமைத் தங்களுக்கு ராஜாவாக்கினார்கள். ஆகவே கி-மு. 937-வரைமுதல் பலெஸ்தீனாவில் இஸ்ரவேல் யூதாவென்னும் இரண்டு ராஜ்யங்கள் இருந்தன.

7. **இரண்டு இராஜ்யங்களின் சரித்திரம்.**

முதலாம் காலம்

| இஸ்ரவேல். | கி-மு. | யூதா. | கி-மு |
|---|---|---|---|
| யெரொபெயாம் | 937-915. | ரெகொபெயாம் | 937-920. |
| நாதாப் | 915-913. | அபியாம | 920-917. |
| பாஷா | 913-889. | ஆசா | 917-876. |
| ஏலா | 889-887. | யோசபாத் | 876-851. |
| சிம்ரி | சிலநாள். | | |
| உம்ரி | 887-875. | | |

இந்தக் காலத்தில் யூதாவுக்கும் இஸ்ரவேலுக்கும் உள்ள பகை அதிகமாய் இருந்தது. சீஷாக் ஆகிய எகிப்தின் ராஜா பலெஸ்தீனாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தும் இரண்டு ராஜ்யங்களும் சமாதானத்துக்கு வரவே இல்லை. 1 இரா 14[25]. யூதாவில் ஜனங்கள் பெரும்பாலும் மோசே ஸ்தாபித்த பிரமாணங்களையும் எருசலேம் தேவா

லயத்தின் ஆசாரத்தையும் தாவீதின் குடும்பத்தைச்சேர்ந்த ராஜாக்களேயும் பின்பற்றி வந்தார்கள். இஸ்ரவேலிலே யெரொபெயாம், பெத்தேல், தாண் என்னும் இடங்களில் கோவில்களேக் கட்டினதினல் அந்த நாட்டிலுள்ளவர்கள் பெரும்பாலும் பூர்வீகத்தில் கானனியருக்குள் இருந்த பழக்க வழக்கங்களே அனுசரித்துவந்தார்கள். 1 இரா $12^{29}$. மேலும் இஸ்ரவேல் ராஜாக்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. தகப்பன்மார் ராஜாக்களாய் இருந்தும் அவர்கள் குமாரர் அரசாளாமல் அரசாண்ட ராஜாக்கள் பலர். தகப்பனுக்குப்பிறகு அரசாண்டதாகச் சொல்லப்பட்டவர்கள் சிலரே. ஒரே குடும்பத்தில் மாத்திரம் நாலு தலைமுறைமட்டும் தகப்பனுக்குப் பிறகு மகன் அரசாண்டான். இப்படியிருக்கும்போது பிரஜைகளுக்கும் ராஜாக்களுக்கும் ஐக்கியம் இருப்பதெப்படி? இந்தக் காலத்தில் ஆசா, பாஷாவிலிருந்து யூதாவைக் காப்பாற்றும் பொருட்டு சீரியாவின் ராஜாவாகிய பெனுதாத்தின் உதவியைத்தேடினன். இதுமுதல் அசீரியா அடிக்கடி இந்த இரண்டு ராஜ்யங்களுக்குவிரோதமாகச்செய்தவைகளே நாம் கவனிக்கவேண்டும். வேதத்தில் உம்ரியைப்பற்றிக் கொஞ்சம் சொல்லியிருந்தும் இவன் இஸ்ரவேலிலுள்ள ராஜாக்களில் பெரியவன் என்று அறிவோம். இவன் சமாரியாவில் சாமாரியாவென்னும் கோட்டையைக் கட்டினவன்.

இரண்டாம் காலம்

| இஸ்ரவேல். | கி-மு. | யூதா. | கி-மு. |
|---|---|---|---|
| ஆகாப் | 875-853. | யோசபாத் | 876-851. |
| அகசியா | 853-851. | யோராம் | 851-843. |
| யோராம் | 851-842. | அகசியா | 843-842. |
| ஏகூ | 842-814. | அதலியா ராணி | 842-836. |
| யோவகாஸ் | 814-797. | யோவாஸ் | 836-796. |
| யோவாஸ் | 797-781. | அமத்சியா | 796-782. |
| | | அசரியா (உசியா) | 782-737. |

இந்தக்காலத்தில் இஸ்ரவேல் ராஜ்யம் சுற்றுப்புறத்துள்ள ராஜ்யங்களோடு சேர்ந்து அவைகளின் நாகரீகத்தையும் கேடான சடங்காசாரங்களேயும் பற்றிக்கொண்டது.



இரண்டாம சல்மனசாருக்கு ஏகூ அனுப்பின எபிரெய ஸ்தானபதிகள் கப்பம் கொடுத்தல். கி-மு. 840.

னிமித்தம் யேகோவாவின் வழிபாட்டை ஜனங்களுக்குள் ஸ்திரப்படுத்தும்படியும், ஆகாப் செய்த அநியாயத்தை நீக்கும்படியும், எலியா தீர்க்கதரிசி பிரயத்தனம் செய்தான். இந்தக்காலத்தில் யூதாவுக்கும் இஸ்ரவேலுக்கும் சமாதானம் உண்டானது. அசீரியர் முதலாவது இந்த இரண்டு ராஜ்யங்களுக்கும் விரோதமாய் சமீபித்து வந்தார்கள். அப்பொழுது ஆகாபும் சீரியா ராஜாவும் இன்னும் பத்து ராஜாக்களும் சேர்ந்து அசீரியரை ஜெயித்தார்கள். ஆனால் எலிசாவின் ஏவுதலினால் இஸ்ரவேலின் ராஜ்யத்தைப் பிடித்த ஏகூ, இரண்டாம் சல்மனாசார் என்னும் ராஜாவுக்குக் கீழ் அடங்கினான். இந்தக்காலத்தின் கடைசியில் இஸ்ரவேல் ராஜ்யம் உன்னத ஸ்திதி அடைந்தது.

### மூன்றாம் காலம்

| இஸ்ரவேல். | கி-மு. | யூதா. | கி-மு. |
|---|---|---|---|
| இரண்டாம் யெரொபெயாம் | 781-740. | அசரியா (உசியா) | 782-737. |
| சகரியா | 6 மாசம். | யோத்தாம் | 737-735. |
| சல்லூம் | 740-737. | ஆகாஸ் | 735-725. |
| மெனாகேம் | 737-735. | எசேக்கியா | 725-696. |
| பெக்காகியா | 2 மாசம். | | |
| பெக்கா | 735-733. | | |
| ஓசியா | 733-722. | | |

இரண்டாம் காலத்துக் கடைசியில் அசீரியர் முதலிய சத்துருக்களின் வல்லமை குறைந்துபோனதினால் இரண்டாம் யெரொபெயாமும் உசியாவும் அரசாண்டபோது இஸ்ரவேல் ராஜ்யமும் யூதா ராஜ்யமும் அதிக விருத்தியடைந்தன. இந்த ராஜ்யங்களில் ஐசுவரியத்தின் திரட்சியினால் அநியாயமும் அக்கிரமமும் அதிகமாய்ப்பரம்பினது. இதினிமித்தம் சில தீர்க்கதரிசிகள் இந்த அநியாயங்களைக் குறித்து உபதேசித்தார்கள். **ஆமோஸ்** தீர்க்கதரிசி இஸ்ரவேல் ஜனங்களிலுள்ள தீமை யாவற்றையும் கண்டித்துப் போதித்துவந்தான். **ஓசியா** தீர்க்கதரிசி ஜனங்களைத் தீமையினின்று மீட்கும் யேகோவாவின் அன்பைப் பற்றி உரைத்தான். கிராமவாசிகளாகிய இந்த தீர்க்கதரிசிகள் சுருக்கமாய் உரைத்தவைகளைக் கல்வி நாகரீகமுடைய **ஏசாயா** விவரித்துச் சொன்னான். இந்தக்காலத்தில் அசீரியா ராஜாவாகிய பூல் படையெடுத்து வந்து பெக்காவையும் சீரியா ராஜாவாகிய ரேத்சீனையும் ஜெயித்து பிரஜைகளில் பெரியவர்களாயிருந்த அநேகரைச் சிறைபிடித்துக் கொண்டுபோனான். பெக்காவுக்குப் பதிலாக ஓசியா திரும்பவும் கலகம் பண்ணினதினால் நாலாம் சல்மனாசார் இஸ்ரவேல் தேசத்தில் பிரவேசித்துச் சாமாரியாவை முற்றுகைபோட்டான். சல்மனாசார் இறந்து பிறகு சர்கோன் கடைசியாய்ச் சமாரியாவைப் பிடித்து ஏறக்குறைய முப்பதினாயிரம்பேரைச் சிறையாகக் கொண்டுபோனதுமல்லாமல் இஸ்ரவேல் ராஜ்யத்தையும் நிர்மூலமாக்கினான். கி-மு. 722.



கி-மு. 606. எகிப்துதேசத்தில் சிறையாக்கப்பட்ட எபிரெயர்.

### நான்காம் காலம்

| யூதா. | கி-மு. |
|---|---|
| எசேக்கியா | 726-697. |
| மனாசே | 697-641. |
| ஆமோன் | 641-639. |

அசீரியர் இவ்விதமாய்ச் சமீபித்து வந்தபோதிலும் யூதாவின் ராஜாவாகிய எசேக்கியா கீழ்ப்படிந்து நடந்ததினால் இவனுடைய ராஜ்யத்திற்குச் சில வருஷமாக யாதொரு அபாயமும் நேரிடவில்லை. பிறகு எசேக்கியா, ஏசாயா தீர்க்கதரிசியின் போதனையை விட்டு விலகி எகிப்தியர்களோடும் இன்னும் சில ராஜாக்களோடும் சேர்ந்து அசீரியர்களுக்கு விரோதமாய்க் கலகம் செய்தான். அப்பொழுது சனகரிப் என்னும் அசீரியர் ராஜா எகிப்திற்கும் பலெஸ்தீனாவுக்கும் வந்து,

எருசலேம் பட்டணத்தைப் பிடிக்காவிட்டா லும் (2 இரா $19^{35}$) எத்தனையோ இடங்க ளில் ஜெயமடைந்து ஜனங்களுக்குப் பயத்தை உண்டாக்கினான். இந்தக்காலத்தில் **மீகா** தீர்க்கதரிசி உபதேசம் செய்துவந்தான். இந்தக்காலமுதல் அந்நிய தேவர்களின் வணக்கம் அப்பட்டணத்தில் இல்லாததினால் எருசலேம் யேகோவாவின் முக்கிய ஸ்தலம் என்பது ஜனங்களின் மனதில் ஸ்திரப்பட் டிருந்தது. யோசியா அரசனாயிருந்தபோது **எரேமியா** ஜனங்களுக்குப் போதிக்கத் துவக் கினதினாலும், தேவாலயத்தில் உபாகமம் என்னும் புஸ்தகம் கண்டெடுக்கப்பட்டதினா லும், தீர்க்கதரிசிகள் உரைத்த போதனைகள் ஜனங்களின் மனதில் பதிந்திருந்ததினாலும் தேவாலயத்தில் யூதாவின் ஜனங்கள் நடத்தி வந்த ஆராதனை எல்லாம் நியாயப்பிரமாணத் தின்படி பரிசுத்தமாய்க் கைக்கொள்ளப்பட்ட தினாலும் சன்மார்க்கம் அபிவிர்த்தியடைந் தது.

ஐந்தாம் காலம்

| யூதா. | கி-மு. |
|---|---|
| யோசியா | 639-608. |
| யோவாகாஸ் | 3 மாசம். |
| யோயாக்கீம் | 608-597. |
| யோயாக்கீன் | 3 மாசம். |
| சிதேக்கியா | 597-586. |

எருசலேம் அழிக்கப்பட்டது கி-மு. 586.

யோசியா எகிப்து ராஜாவாகிய நேகோ வினால் ஜெயிக்கப்பட்டு இறந்தான். அப் பொழுது நேகோ யூதாவிலிருந்து அநேக ரைச் சிறைப்பிடித்துக் கொண்டுபோனான். இந்தக்காலத்தில் அசீரியா ராஜ்யத்தின் பலம் குன்றிப்போக, பாபிலோன் ராஜ்யம் அதிக விருத்தியடைந்தது. பாபிலோன் ராஜாவா கிய நேபுகாத்நேச்சார் எகிப்தையும் மற்றும் சுற்றுப்புறத்துள்ள ராஜ்யங்களையும் ஜெயித் தான். யோயாக்கீம் கலகம் பண்ணினதி னால் அவனுடைய மகனாகிய யோயாக்கீ னின் காலத்தில் நேபுகாத்நேச்சார் எருச லேமை முற்றுகைபோட்டு அதைப் பிடித் தான். கி-மு. 597.

அப்பொழுது பிரபுக்களிலும் ஆசாரியர் களிலும் பதினாயிரம்பேரைச் சிறையாகத் தன் தேசத்திற்குக் கொண்டுபோனான். இக் காலத்தில் **எரேமியாவும் எசேக்கியேலும்** யூதர்கள் ஆவிக்குரிய பயபக்தியடைந்து பரி சுத்தவான்களாய் இருக்கவேண்டுமென்று போதித்தாலும் சிதேக்கியா கலகம் பண்ணின தினால் நேபுகாத்நேச்சார் மறுபடியும் எருச லேமுக்கு வந்து அதை அழித்தான். கி-மு. 586. 2 இரா $25^{8}$.

ஆறாம் காலம். கி-மு. 586–420.

**சிறையிருப்பிலிருந்து திரும்புதல்.** கோ ரேஸ் மன்னன் பாபிலோனைப் பிடித்த பிறகு கி-மு. 538-ல் அங்கே சிறையா யிருந்த யூதர்களை அவன் விடுதலையாக்கி எருசலேமுக்குப் போகும்படி உத்தரவு கொ டுத்தபோதிலும், செருபாபேலோடு திரும்பி வந்தவர்கள் சிலர்தான். **ஆகாய், சகரியா** என்னும் தீர்க்கதரிசிகள் கி-மு. 520-ல் எரு சலேமுக்கு வந்து தேவாலயம் இன்னும் கட்டப்படவில்லையே என்று புலம்பினார்கள். கி-மு. 516-ல் இத்தீர்க்கதரிசிகள் செய்த எச்சரிக்கையை ஜனங்கள் பின்பற்றினவர்க ளாய் தேவாலயத்தைக் கட்டி முடித்தார்கள். எஸ்றா $6^{15}$.

எஸ்றாவாகிய முக்கிய வேதபாரகன் கி-மு. 458-ல் எருசலேமுக்கு வந்தான். பிறகு நெகேமியா பாபிலோனையும் அயல்தேசங்க ளையும் அரசாண்ட அர்தசஷ்டா என்னும் சக்கரவர்த்தியிடமிருந்து எருசலேம் மதில் களைக் கட்டுவதற்கு உத்தரவு பெற்றுக் கொண்டு அங்கே வந்தான். நெகேமியா அதிக உற்சாகத்தோடு அந்த வேலையை நடப்பித்ததினால் அவன் வந்த அதேவரு ஷத்தில் மதில்களைக் கட்டி முடித்தான். (கி-மு. 444). அவனும் எஸ்றாவும் லேவிய ராகமத்தில் சொல்லியிருக்கும் பிரமாணங் களின்படி தேவாலயத்தின் ஆராதனையை யும் ஜனங்களின் ஆசாரத்தையும் சீர்திருத்தி நடத்திவந்ததினால் அப்பொழுது வேதபாரகர் அதிக மேன்மை பொருந்தினவர்கள் ஆனார் கள். நெகேமியா 432-ம் வருஷம் மறுபடி யும் எருசலேமுக்கு வந்து அங்கே தலைவனா யிருந்தான்.

ஏழாம் காலம் கி-மு. 420-168.

அதற்குப் பிறகு ஏறக்குறைய 250 வரு ஷங்களாக யூதர்கள் அந்நிய ராஜாக்களுக் குக் கீழடங்கி நடந்தார்கள் என்பதைத்தவிர, அவர்களைப்பற்றி வேறொன்றும் தெரியாது. ஆனால் இந்தக்காலத்தில் பிரதான ஆசாரிய ரும், ஆலோசனைச் சங்கத்தாரும் அதிகாரம் பெற்றார்கள். அந்நிய அரசர்களுக்கு யூதர் கள் இராஜ்யத்துக்குரிய விஷயங்களில் கீழ் அமைந்தவர்களாய் இருந்தாலும், ஆராதனை, சன்மார்க்கம் முதலிய விஷயங்களில் அவர் கள் பிரதான ஆசாரியர்களுக்கும், ஆலோ சனைச்சங்கத்துக்கும் அதிக உற்சாகமாயும் வணக்கமாயும் கீழ்ப்படிந்து வந்தார்கள்.

### எட்டாம் காலம்
### மக்கபேயர் கி-மு. 168-63.

இந்த நூறுவருஷங்களில் மக்கபேயர் யூதர்களை அவர்களுக்கு விரோதமாயிருந்த அந்நிய ராஜாக்களுடைய கையிலிருந்து மீட்டு அவர்களை நடத்திவந்ததினால் யூதாவின் ராஜ்யம் மறுபடியும் மேல் நிலைக்கு வந்தது. இந்தக்காலத்திலும் பரிசேயர் சதுசேயர் என்பவர்களின் கொள்கைகள் உண்டாயிருந்தன. ஆனால் பிரதான ஆசாரியர்களுக்கும் யூதாவின் ராஜ்யத்திலுள்ள மற்றும் அதிகாரிகளுக்கும் ஐக்கியமில்லாததைக் கண்டு ரோமர்கள் கி-மு. 63-ஆம் எருசலேமைப் பிடித்து அந்தத் தேசம் எல்லாம் தங்கள் அதிகாரத்திற் குட்படுத்தினார்கள்.

### ஒன்பதாம் காலம். கி-மு. 63 முதல் கி-பி. 44 வரை.
### ஏரோதின் குடும்பத்தார்

இந்தக்காலத்தில் ஏரோதின் குடும்பத்தார் ரோமை ராயர்களுக்குப் பிரதி அரசர்களாயிருந்து பலெஸ்தீனாவிலே அதிகாரம் செலுத்தி வந்தார்கள். இவர்களில் கி-மு. 37-4. அரசாண்ட பெரிய ஏரோது முக்கியமானவன். அவன் எருசலேம் பட்டணத்தை அதிக அலங்காரமாய்ச் சிறப்பித்தான். அவன் காலத்தில் பரிசேயரின் கொள்கை பிரதான நிலைமைக்கு எட்டினது.

### பத்தாம் காலம். கி-பி. 44-70.

ரோமர்கள் பலெஸ்தீனாவை ஜெயித்தது முதல் விடுதலையடையும் நம்பிக்கை யூதர்களுக்குள் அதிகரித்ததினால், அடிக்கடி அவர்கள் ரோமர்களுக்குத் தொந்தரவு கொடுத்து, கடைசியில் கி-பி. 66-ஆம் பெரிய கலகம் செய்தார்கள். ஆனால் யூதர்களுக்குள் ஒற்றுமை யில்லாததினால் ரோமர்கள் எருசலேமை முற்றுகை போடும்போதே அவர்களுக்குள் பலவிதமான சச்சரவும் சண்டையும் அதின் தெருக்களிலும் தேவாலயத்திலும் நடந்தன.

ஆகவே கி-பி. 70-ஆம் தீத்து என்னும் ரோமைச் சேனாதிபதி எருசலேமைப் பிடித்து அதின் மதில்களை இடித்துத் தரைமட்டமாக்கி அதிலுள்ள பணிமுட்டுச் சாமான்களை ரோமாபுரிக்குக் கொண்டுபோனான். இதற்குப்பிறகு சில யூதர்கள் சில சமயங்களில் கலகம் செய்தார்கள். ஆலோசனைச்சங்கம் சிலகாலம் வேறோர் ஊரில் கூடினது. ஆயினும் எருசலேம் பட்டணமும் அதின் தேவாலயமும் அழிந்ததோடு எபிரெயரின் சரித்திரமும் முடிவுபெற்றது என்று சொல்லத்தகும்.

### இஸ்ரவேலின் காலக்கணிதச் சுருக்கம்

பின் சொல்லப்படுகிற கணிதம் இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் புறப்பட்டதுமுதல் துவக்குகிறது. அதற்கு முன்னுள்ள காலக்கணிதத்தைத் திட்பநுட்பமாய்க் காட்ட ஏதுவில்லை. நுட்பமான கணக்கின்பேரில் அடியில் வரும் கணிதம் கணிக்கப்பட்டிருக்கிறது. தேறின கணித சாஸ்திரிகள் எழுதியிருப்பவைகளையும் அதோடே ஒத்துப்பார்த்தும் இருக்கிறோம்.

## காலக்கணிதச் சுருக்கம்

| வருஷம் கி-மு. | இஸ்ரவேலருடைய சரித்திரங்களில் அடங்கிய சங்கதிகள். | வேறே தேசங்களில் அந்தந்தக் காலங்களில் இருந்தவர்களும் நடந்த சங்கதிகளும். |
|---|---|---|
| 1215 | இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் புறப்பட்டது. யோசுவாவின் மரணம் முதல் 1025-ஆம் வரைக்கும் ஒத்னியேல், ஏகூத், தெபொராள், பாராக், கிதியோன், அபிமெலேக்கு, தோலா, யாவீர், யெப்தா, இப்சான், ஏலோன், அப்தோன், சிம்சோன், ஏலி, சாமுவேல் என்பவர்கள் நியாயாதிபதிகளானது. | |
| 1025 | சவுல் .... .... .... .... .... .... | அம்மோன் ராஜாவாகிய நாகாஸ். அமலேக் ராஜாவாகிய ஆகாக். |
| 1017 | தாவீது எப்ரோனிலும், இஸ்போசேத்து மக்னயீமிலும் ஆண்டது. | |

| வருஷம் கி-மு. | இஸ்ரவேலருடைய சரித்திரங்களில் அடங்கிய சங்கதிகள். | | | வேறே தேசங்களில் அந்தந்தக் காலங்களில் இருந்தவர்களும் நடந்த சங்கதிகளும். |
|---|---|---|---|---|
| 1009 | தாவீது எருசலேமில் சகல இஸ்ரவேலரையும் ஆண்டது. நாத்தான், காத் தீர்க்கதரிசிகள். | | | தீருவின் ராஜாவாகிய முதலாம் ஈராம் (அபியால்), சோபாவின் ராஜாவாகிய ஆதாதேசர், ஆமாத்தின் ராஜாவாகிய தோயீ, அம்மோனின் ராஜாவாகிய ஆனூன். |
| | தாவீது கர்த்தருடைய பெட்டியைக் கொண்டுவந்து சீயோனில் வைத்தது; தனது ராஜ்யத்தை எகிப்து முதல் ஐபிராத்துநதி வரைக்கும் விஸ்தாரமாக்கினது. | | | |
| 977 | சாலொமோன் பட்டத்துக்கு வந்தது. நாத்தான் தீர்க்கதரிசி. | | | ஏதோமில் ஆதாத், கேனுபாத்து, தீருவில் ஈராம். |
| 973 | தேவாலயத்தைக் கட்டத் தொடங்கினது. அகியா தீர்க்கதரிசி. | | | |
| | | | | 950 எகிப்தின் ராஜாவாகிய சீஷாக். |
| 937 | சாலொமோனின் மரணம், ராஜ்யம் பிரிக்கப்பட்டது. | | | |
| | **யூதா ராஜ்யம்** | | **இஸ்ரவேல் ராஜ்யம்** | |
| 937 | ரெகொபெயாம். | | யெரொபெயாம். | |
| | செமாயா தீர்க்கதரிசி. | | அகியா தீர்க்கதரிசி. | |
| 932 | எருசலேம் சீஷாக்கால் கொள்ளையிடப்பட்டது. | | | |
| 920 | அபியாம். | | | தமஸ்குவில் தப்ரிமோன். |
| | யூதாவுக்கும் .... .... | .... | இஸ்ரவேலுக்கும் யுத்தம் நடந்தது. | |
| 917 | ஆசா. | | | |
| | | 915 | நாதாப் .... .... | எகிப்தில் சேரா. |
| | | 913 | பாஷா .... .... | தமஸ்குவில் முதலாம் பெனாதாத். |
| | | | ஏகூ, ஆனானி தீர்க்கதரிசிகள். | |
| 889 | ஆசா சீரியாவின் ராஜாவாகிய பெனாதாத்தின் உதவியைக்கொண்டு | .... | பாஷாவை .... .... | துரத்தினது. |
| | ஓதேத், அசரியா, அனனியா தீர்க்கதரிசிகள். | | | |
| | | 889 | ஏலா. | |
| | | 887 | சிம்ரி (7 நாட்கள்). | |
| | | 887 | உம்ரி. | |
| | | | சமாரியா ராஜதானியாக்கப்பட்டது. | |
| 876 | யோசபாத். | 875 | ஆகாப். | |

| வருஷம் கி-மு. | இஸ்ரவேலருடைய சரித்திரங்களில் அடங்கிய சங்கதிகள். | | | வெவ்வேறே தேசங்களில் அந்தந்த காலங்களில் இருந்தவர்களும் நடந்த சங்கதிகளும். |
|---|---|---|---|---|
| | | | ஆகாப் யேசபேலை மணம் புரிந்தது. | இவள் சீதோனின் ராஜாவாகிய ஏத்பாகாலின் மகள். |
| | இவன் .... .... .... | .... | ஆகாபுக்கு உதவியாக.. | தமஸ்கு ராஜாவாகிய இரண்டாம் பெனாதாத்துக்கு விரோதமாய் யுத்தஞ்செய்து, அபஜெயமடைந்தது. |
| | அம்மோனியரையும் மோவாபியரையும்ஜெயித்தது. | | எலியா, மிகாயா தீர்க்கதரிசிகள். | |
| | | 853 | அகசியா. | |
| | | | மோவாபின் கலகம். | |
| | | 851 | யோராம். | |
| | யோசபாத்.... .... .... | .... | யோராமுக்கு உதவியாய் | மோவாபோடு போர் புரிந்தது. |
| 851 | யோராம். இதற்குமுன் இவன் ஆகாபின் மகளாகிய அத்தாலியாளை மணம் புரிந்தது. | | | அசீரியா ராஜாவாகிய சல்மனாசாருக்கும் சீரியா ராஜாவாகிய ஆதாதேசருக்கும் யுத்தம் (850, 849, 846). |
| | யகாசியேல், எலியேசர் தீர்க்கதரிசிகள். | | | |
| | ஏதோமியரின் கலகம். | | எலிசா தீர்க்கதரிசி (854-805). | சீரியா ராஜாவாகிய ஆசகேல் (844-800). |
| 843 | அகசியா. | | | |
| | இவன் .... .... .... | .... | யோராமுக்கு உதவியாக .... .... .... | தமஸ்குவின் ராஜாவாகிய ஆசகேலுடன் போர்புரிந்து, அபஜெயமடைந்தது. |
| | அகசியாவும், இவனோடே .... .... .... | .... | யோராமும் ஏகூவினால் கொல்லப்பட்டது. | |
| 842 | அத்தாலியாள் ராஜ்யத்தை அபகரித்தது (இவள் 6 வருஷம் ஆண்டது). | 842 | ஏகூ .... .... .... | அசீரியா ராஜாவாகிய சல்மனாசாருக்கு ஏகூ கப்பங்கட்டினது. |
| 836 | யோவாஸ். | | | |
| | | 814 | யோவகாஸ். | |
| 814 | ஆசகேல் காத் பட்டணத்தைப் பிடித்ததும், அவன் எருசலேமை பயமுறுத்தினதும். | | இஸ்ரவேலரும் ஆசகேலால் அதிகமாய் நெருக்கப்பட்டது. | |
| | சீரியர் யூதாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்தல். | | | |
| 796 | அமத்சியா. | 797 | யோவாஸ். இவன் மூன்றுதடவை .... .... | மூன்றும் பெனாதாதை ஜெயித்தது. |
| | அமத்சியா ஏதோமை ஜெயித்தது. இவன் யோவாசால் அபஜெயமடைந்தது | | | |

| வருஷம் கி-மு. | இஸ்ரவேலருடைய சரித்திரங்களில் அடங்கிய சங்கதிகள். | | | | வேறே தேசங்களில் அந்தந்தக் காலங்களில் இருந்தவர்களும் நடந்த சங்கதிகளும். |
|---|---|---|---|---|---|
| 782 | அசரியா (உசியா). இவன் ஏதோமியரின் துறைமுகப் பட்டணமாகிய ஏலோதை அரணாக்கினது. | | | | |
| | | 781 | இரண்டாம் யெரொபெயாம். இவன் சீரியரோடே போர் புரிந்து இஸ்ரவேலின் எல்லைகளைத் திரும்பச் சேர்த்துக்கொண்டது. | | |
| | ஆமோஸ் தீர்க்கதரிசி (775-750). | | | | |
| | | | | 753 | ரோமாபுரி கட்டப்பட்டது. |
| | | | | 747 | பாபிலோனின் ராஜாவாகிய நேபோனேசர். |
| | | | | 745 | அசீரியா ராஜாவாகிய பூலுஎன்னும்திகிலாத்பிலேசர் (745-728). |
| | | | ஓசியா தீர்க்கதரிசி (743-737). | | |
| 741 | எசாயா தீர்க்கதரிசி முதலாம் பாகம் (741-701). | 740 | சகரியா (6 மாதம்). | | |
| | | 740 | சல்லூம். | | |
| 737 | யோத்தாம். | 737 | மெனாகேம். | | |
| | | | | 737 | இஸ்ரவேலர் அசீரியா ராஜாவாகிய பூலுக்குக் கப்பம் கட்டினது. |
| | | 735 | பெக்காகியா. | | |
| | | 735 | பெக்கா. | | |
| 735 | ஆகாஸ். | | | | |
| | ஆகாஸ் .... .... .... | | இஸ்ரவேலின் ராஜாவாகிய பெக்காவினாலும் | .... | சீரியா ராஜாவாகிய ரேத்சீனாலும் |
| | நெருக்கப்பட்டபோது அவர்களுடன் யுத்தம் பண்ண .... .... | .... | .... .... | | அசீரியா ராஜாவாகிய பூலினுடைய உதவியைத் தேடினது. |
| | ஓதேத் தீர்க்கதரிசி. | | பூலு அநேக ஜனங்களை சிறையாக | .... | அசீரியாவுக்கு அனுப்பினது. |
| | | 733 | ஓசியா. | 733 | ஓசியா அசீரியருக்குக் கப்பம் கட்டினது. |
| | | | இவன் .... .... | | எகிப்தின் ராஜாவோடு உடன்படிக்கை பண்ணி, அசீரியருடைய நுகத்தடியைத் தள்ளும்படி பிரயத்தனஞ் செய்தது. |

| வருஷம் கி-மு. | இஸ்ரவேலருடைய சரித்திரங்களில் அடங்கிய சங்கதிகள். | | | | வேறே தேசங்களில் அந்தந்தக் காலங்களில் இருந்தவர்களும் நடந்த சங்கதிகளும். |
|---|---|---|---|---|---|
| 725 | எசேக்கியா. முதலில் இவன் ஆகாசோடு ஏககால ராஜாவானான். இவன் பெலிஸ்தியரை ஜெயித்தது. | | | | |
| | | 725 | சமாரியா .... } | | } அசீரியா ராஜாவாகிய நாலாம் சல்மனாசா ரால் முற்றிக்கை போடப்பட்டது. |
| | | 722 | சர்கோன் சமாரியாவை அழித்தது. | 722 | அசீரியா ராஜாவாகிய சர்கோன் (722-705). |
| 720 | மீகா தீர்க்கதரிசி (720-695). | | இஸ்ரவேலர் சிறையாக ....} | .... | அசீரியாவுக்கு அனுப்பப்பட்டது. |
| | | | தேசம் அசீரியரால் குடியேற்றப்பட்டது. | | |
| | | | | 705 | அசீரியா ராஜாவாகிய சனகெரிப் (705-681). |
| 701 | மீதியான யூதா ராஜ்யத்திற்கு விரோதமாய் வந்த சனகெரிப்பின் படையெடுப்பு. | | | | |
| | அசீரியர் பாளயத்தின் சங்காரம். எசேக்கியாவினிடத்தில் அனுப்பப்பட்ட .... .... .... } | | | | } பாபிலோனின் ராஜாவாகிய மெரோதாக் பலாதானின் ஸ்தானாபதிகள். |
| 697 | மனாசே. | | | | |
| | | | | 691 | எகிப்தின் ராஜாவாகிய தீராக்கா (691-665). இவன் சனகெரிப்புடன் யுத்தம் பண்ணினது. |
| | எசரத்தோன் மறுபடியும் அசீரியரை இஸ்ரவேல் தேசத்தில் குடியேறும்படிக்கு அனுப்பினது. | | | 681 | அசீரியா ராஜாவாகிய எசரத்தோன். |
| | | | | 663 | எகிப்தில் முதலாம் பிஸமெத்திக்கு (663-610). |
| 641 | ஆமோன். (?) நாகூம் தீர்க்கதரிசி. | | | | |
| 639 | யோசியா. | | | | |
| 626 | எரேமியா தீர்க்கதரிசி (626-586). | | | | |
| | | | | 625 | பாபிலோனில் நேபொபொலேஸர் தன்னைச் சுயாதீனமாக்கிக்கொண்டது. |
| 621 | நியாயப்பிரமாணத்தின் ஆகமம் தேவாலயத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. மார்க்க திருத்தம். செப்பனியா, (?) நாகூம் தீர்க்கதரிசிகள். | | | | |
| | | | | 610 | எகிப்தில் நேகோ ஆண்டது (610-594). |

| வருஷம் கி-மு. | பலெஸ்தீனா. | பார்சியா ராஜ்யம். | | வேறே தேசங்கள். |
|---|---|---|---|---|
| 608 | யோசியா நேகோவோடு யுத்தம்பண்ணி மெகிதோவிலே கொல்லப்பட்டது. | | | |
| 608 | யோவாகாசு (3 மாதம்). யோயாக்கீம். | | | |
| 606-5 | நேபுகாத்நேச்சார் யூத ராஜ்யத்தாரைத் தனக்குக் கப்பம் கட்டப்பண்ணினது 70 வருஷ சிறையிருப்பு இந்த வருஷமுதல் துவங்குகிறதென்று பொதுப்படத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. | | 606 | மேதியர் நினிவேயைப் பிடித்தது. |
| | | | 605 | நேபுகாத்நேச்சார் கர்கிமேசில் நேகோ முறியடிக்கப்பட்டது. |
| 604 | எரேமியா புஸ்தகச்சுருளை எழுதியது. | | 604 | நேபுகாத்நேச்சார் பாபிலோனுக்கு ராஜாவானது (604-561). |
| | (?) ஆபகூக் தீர்க்கதரிசி. | | | |
| 597 | யோயாக்கீன் (3 மாதம்). எருசலேமைக் கல்தேயர் பிடித்தது. யோயாக்கீன் சிறையாக்கப்பட்டது. சிதேக்கியா (மத்தானியா) கல்தேயருக்குக் கீழ் ஆண்டது. | | | |
| 594 | எசேக்கியேல் பாபிலோனியாவில் தீர்க்கதரிசனம் சொல்லத் தொடங்கினது. | | 594 | எகிப்தின் ராஜாவாகிய இரண்டாம் பிஸமெத்திக்கு. |
| 589 | சிதேக்கியா பாபிலோனியருக்கு விரோதமாக எகிப்தியருடைய உதவியை நாடினது. | | 588 | எகிப்தின் ராஜாவாகிய ஒப்பிரா (ஆப்ரீஸ்) (588-569). |
| 587 | பாபிலோனியர் எருசலேமுக்கு முற்றுகைபோடுகிறது. | | | |
| 586 | எருசலேமின் அழிவு, ராஜா சிறையானது, அநேக ஜனங்கள் சிறையாக .... .... .... | | .... | பாபிலோனுக்கு அனுப்பப்பட்டது. நேபுகாத்நேச்சார் தீருவைப் பிடித்தது. |
| | நேபுகாத்நேச்சார் கெதலியாவை அதிகாரியாக ஏற்படுத்தினது. இவன் இஸ்மவேலால் கொல்லப்பட்டது. மீதியான யூதர் எகிப்துக்கு ஓடினது. (?) ஒபதியா தீர்க்கதரிசி. | | | |
| 561 | யோயாக்கீன் இதுமட்டும் பாபிலோனில் சிறைச்சாலையிலிருந்தது. | | | |
| | | | 555 | பெல்ஷாத்சார். |
| | | | 539 | கோரேஸ் பாபிலோனைப் பிடித்தது. |
| | பலெஸ்தீனா பார்சியா ராஜ்யத்தில் ஒரு நாடாகச் சேர்க்கப்பட்டது. | | | |
| 537 | சிறையிருப்பினின்று முதலாவதாக செருபாபேலோடு எருசலேமுக்கு. | கோரேசின் முதலாம் வருஷத்தில் வந்தவர்கள். | | |
| 536 | தேவாலயத்தைத் திரும்பவும் கட்டத் தொடங்கினது. | கம்புசே (529-522). | | |

| வருஷம் கி-மு. | பலெஸ்தீனா. | பார்சியா ராஜ்யம். | | வேறே தேசங்கள். |
|---|---|---|---|---|
| | | | 525 | கம்புசே எகிப்தை ஜெயித்தது. |
| 521 | .... .... .... .... | தரியு ஐஸ்தாஸ்பிஸ் (521-485). | | |
| 520 | தேவாலயத்தைக்கட்டும் வேலை .. .... .... | தரியுவின் இரண்டாம் வருஷத்தில் மறுபடியும் தொடங்கப்பட்டது. | | |
| 520 | ஆகாய், சகரியா: முதலாம் பாகம் (1-8 அதி.) தீர்க்கதரிசிகள். | | | |
| 516 | தேவாலயங் கட்டி முடிந்தது. | | | |
| | | | 509 | ரோமர் கார்தேஜ்புரியாரோடே செய்த முதல் உடன்படிக்கை. |
| 490 | .... .... .... .... | தரியு கிரேக்குக்கு விரோதமாய்ப் படையெடுத்தது. | | |
| | | | 490 | மரதோன் யுத்தத்தில் பார்சியர் கிரேக்கரால் ஜெயிக்கப்பட்டது. |
| | | | 486 | எகிப்து பார்சியாவுக்கு விரோதமாய்க் கலகம் செய்ததும், அது மறுபடியும் ஜெயிக்கப்பட்டதும் (484). |
| 485 | .... .... .... .... | முதலாம் சர்க்சே (எஸ்தர் ஆகமத்திலுள்ள அகாஸ்வேரு) (485-465). | | |
| 480 | .... .... .... .... | கிரேக்க தேசத்தின்மேல் படையெடுத்தது. | 480 | சர்க்சே சாலமீஸ் யுத்தத்தில் ஜெயிக்கப்பட்டது. |
| 464 | (?) மல்கியா தீர்க்கதரிசி. | முதலாம் அர்தசஷ்டா (எஸ்ரு 7-ல் சொல்லப்பட்ட அர்தசஷ்டா) (465-424). | | |
| | | | 461 | அத்தேனில் பெரிக்கிளீஸ். |
| 458 | சிறையிருப்பினின்று யூதர்கள் இரண்டாவதாக எஸ்றுவோடு எருசலேமுக்கு .... .... | அர்தசஷ்டாவின் உத்தரவின்பேரில் திரும்பினது. | | |
| 444 | நெகேமியா 432 வரைக்கும் எருசலேமில் 12 வருஷம் தேசாதிபதியாய் இருந்தது. | | | |
| 432 | ஆசாரியனுகிய மனுசே கெரிசீம் மலையில் ஒரு ஆலயத்தைக் கட்டினது. | | 431 | பெலொப்பொனிஷியன் யுத்தம் ஆரம்பித்தது. |
| 424 | .... .... .... .... | இரண்டாம் சர்க்சே (424). | | |

| வருஷம் கி-மு. | பலெஸ்தீனு. | பார்சியா ராஜ்யம். | | வேறே தேசங்கள். |
|---|---|---|---|---|
| | | சொக்த்தியானு (424). இரண்டாம் தரியு (நோது). | | சோக்கிரத்தே, செனோபன், தியுசிடியு என்பவர்கள் அத்தேனில் கீர்த்தியடைந்தது. |
| | யோவேல் தீர்க்கதரிசி. | | | |
| | | அர்தசவ்ஷ்டா மினேமோன் (405). | | |
| 366 | யோசுவா பிரதான ஆசாரியனாகிய தன் சகோதரன் யோகனனால் ஆலயத்தில் கொல்லப்பட்டது. | | | |
| | | அர்தசவ்ஷ்டா ஒகூ (362). | | |
| | | | 359 | மக்கெதோனியா ராஜாவாகிய பிலிப்பு. |
| | | அர்சேயு (அல்லது ஆரோகு) (339). | | |
| 336 | .... .... .... .... | தரியு கதமனு.... .... | 336 | அலெக்சந்தர் பிலிப்புவுக்குப் பிற்பாடு பட்டத்துக்கு வந்தது. |
| 332 | பிரதான ஆசாரியனாகிய யதுவா எருசலேமுக்கு விரோதமாய் வந்த அலெக்சந்தரின் கோபத்தைத் தணித்தது. | | | |
| | | தரியு கதமனு .... .... | 331 | ஆர்பேலாவில் அலெக்சந்தரால் அபஜெயமடைந்தது. |
| | சகரியா: இரண்டாம் பாகம் (9-14 அதி.). | | | |
| | | அலெக்சந்தரின் மரணம் (323). | | |
| | | **எகிப்து ராஜ்யம்.** | | |
| 320 | பலெஸ்தீனு .... .... | எகிப்தின் ராஜாவாகிய பித்தோலமியு சோத்தர் என்பவனால் பிடிபட்டது. | | |
| | அநேக யூதர்கள் .... | எகிப்துக்குக் கொண்டுபோகப்பட்டு அலெக்சந்தரியாவில் குடியேற்றப்பட்டது. | | |
| 314 | பலெஸ்தீனு சீரியாவின் ராஜாவாகிய அந்திக்கோனுவால் பிடிபட்டது. | | | |
| 301 | பலெஸ்தீனுவை .... | பித்தோலமியு மறுபடியும் கட்டிக்கொண்டது. | | |
| | (?) யோனு தீர்க்கதரிசி. | | 298 | மூன்றாவது சாம்னித் யுத்தம். |
| | | பித்தோலமியு பிலதெல்பு. | 286 | |

| வருஷம் கி-மு. | பலெஸ்தீனு. | | வேறே தேசங்கள். | |
|---|---|---|---|---|
| | | ஏறக்குறைய இந்தக் காலம் எபிரெய வேதாகமம் கிரேக்கபாஷையில் திருப்பப்பட்டது | 280 | |
| | | | | முதல் பியூனிக் யுத்தம் (264-241). |
| | | பித்தோலமியு யுகர்த்தே. | 247 | |
| | | பித்தோலமியு பிலோபதொர். | 221 | |
| 217 | சீமோன் .... .... | பித்தோலமியு பிலோபதொரைத் தேவாலயத்துக்குள் பிரவேசியாதபடி செய்தது. | | இரண்டாவது பியூனிக் யுத்தம் (218-201). |
| | | | 212 | சைரக்கூஸ் ரோமரால் பிடிபட்டது. |
| | | | 204 | பித்தோலமியு எப்பிப்பானேஸ். |
| 199 | பலெஸ்தீனு சீரியாவிலுள்ள அந்தியோகுவால் பிடிபட்டு தனது ராஜ்யத்தில் சேர்க்கப்பட்டது. | | | |
| 187 | சீரியாவில் செலுகஸ் பிலோபதொர். | | | |
| 176 | தேவாலயம் செலுகசின் சேனாபதியின் பிரயத்தினத்தினின்று பாதுகாக்கப்பட்டது. | | | |
| 175 | சீரியாவில் அந்தியோகு எப்பிப்பானேஸ் ராஜாவானது. | | | |
| 168 | அந்தியோகு எருசலேமைப் பிடித்து கொள்ளையிட்டு அசுசிப்படுத்தினது. | | | |
| | | | 168 | மக்கெதோனியா ராஜ்யம் முடிவடைந்தது. |
| 167 | மக்கபெயரின் தகப்பன் மரித்தது. | | | |
| 166 | (?) தானியேல் ஆகமம். | | | |
| 165 | யூதா மக்கபெயு எருசலேமை யூதர் வசம் திருப்பிக் கொண்டது. | | | |
| 161 | யோனத்தான் மக்கபெயு யூதாவுக்குப்பின் ஆண்டது. | | | |
| | | | 149 | மூன்றாவது பியூனிக் யுத்தம் (149-146). |
| | | | 146 | கார்தேஜ்புரியும் கொரிந்து பட்டணமும் அழிவுண்டது. ரோமர்கள் வட ஆபிரிக்காவைப் பிடித்தது. |
| 142 | சீமோன் மக்கபெயு அந்நிய அரசாட்சியினின்று யூதர்களை விடுவித்தது. | | | |
| 135 | யோவான் இர்க்கானு. | | | |
| | இவன் ஏதோமியரைக் கீழ்ப்படுத்தினது. | | | |
| 120 | இவன் சமாரியாவைப் பிடித்து, கலிலேயாவை வசப்படுத்தினது. | | | ரோமர்கள் அதிகாரம் அதிகமாய் அதிகரித்தது. |
| 105 | முதலாம் அரிஸ்தோபுலு. | | | |
| 104 | அலெக்சந்தர் யன்னேயு. | | | |

| வருஷம் கி-மு. | பலெஸ்தீனு சம்பந்திகள். |
|---|---|
| 94 | இவன் கீலேத்தியரையும் மோவாபியரையும் ஜெயித்தது. |
| 78 | அலெக்சந்தரினாள். |
| 69 | இர்க்கானுவுக்கும் இரண்டாம் அரிஸ்தோபுலுவுக்கும் ராஜ்யத்தைப்பற்றி உண்டான விவாதம். |
| 66 | ரோமர்கள் சின்ன ஆசியாவையும் சீரியாவையும் எகிப்தையும் பிடித்தார்கள். |
| 65 | இர்க்கானுவும் அரிஸ்தோபுலும் ரோமைத்தலைவனாகிய பாம்பிக்குத் தங்கள் காரியத்தைத்தெரியப்படுத்தினது. |
| 63 | பாம்பி எருசலேமைப் பிடித்து யூதேயாவை ரோமருடைய அதிகாரத்துக்கு உட்படுத்தினது. |
| 54 | தேவாலயம் கிரச்சஸ் என்னும் ரோமைத்தலைவனால் கொள்ளையிடப்பட்டது. |
| 48 | பார்ஸேலியா யுத்தம். யூலியுகேசார் பாம்பியை ஜெயித்தது. |
| 47 | ரோமைத்தலைவனாகிய யூலியுகேசாரால் அந்திப்பத்தர் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டது. |
| 44 | யூலியுகேசார் கொன்றுபோடப்பட்டது. |
| 43 | ஏரோதும் பாசெயேலும். |
| 42 | பிலிப்பி யுத்தம். |
| 40 | எருசலேம் பார்தியரால் பிடிபட்டது. |
| 37 | பெரிய ஏரோது யூதர்களின் ராஜாவாயிருந்து எருசலேமை மறுபடியும் பிடித்துக் கொண்டது. |
| 31 | ஆக்டியம் யுத்தம். |
| 27 | அகஸ்து ரோமருடைய ராயனானது. |
| 20 | ஏரோது ஆலயத்தைத் திரும்பக் கட்டத் துவங்கினது. |
| 4 | கிறிஸ்துவின் பிறப்பு. |
| | பெரிய ஏரோதின் மரணம். அர்கெலாயு. |
| கி-பி. | |
| 14 | திபேரியு ராயனானது. |
| 26 | பொந்தியுபிலாத்து யூதேயாவில் தேசாதிபதி. |
| 29 | இயேசு சிலுவையில் அறையப்பட்டது. |
| 36 | பிலாத்து பலெஸ்தீனாவை விட்டுவிட்டது. |
| 37 | திபேரியுராயன் இறந்துபோனது. காயு ராயனானது. |
| 41 | கிலவுதியு ராயனானது. |
| 52 | கல்லியோன் கொரிந்தில் அதிபதி. |
| 54 | நேரோ ராயனானது. |
| 64 | ரோமாபுரி தீப்பற்றினது. கிறிஸ்தவர்களுக்கு மகா உபத்திரவம். பேதுருவும் பவுலும் இரத்தசாக்ஷிகளாய் இறந்துபோனது. |
| 66 | யூதர்கள் செய்த பெரிய கலகம். |
| 70 | ரோமர்கள் எருசலேமை முற்றிலும் அழித்தது. |
| 94 | ரோமருடைய ராயனாகிய தொமித்தியன் கிறிஸ்தவர்களை உபத்திரவப்படுத்தினது. |

**இஸ்ரீ.** Izri. = சேரீ. 1 நாளா $25^{3.\ 11}$.

**இஸ்லியா.** Izliah. 1 நாளா $8^{18}$.

**இஸ்வா.** Ishvah. ஆதி $46^{17}$.

**இஸ்வி.** Ishui, Jesui.

1. ஆதி $46^{17}$.
2. சவுலின் இரண்டாம் மகன். 1 சாமு $14^{49}$.

**இஷி.** Ishi.

1. 1 நாளா $2^{31}$.
2. 1 நாளா $4^{20}$
3. 1 நாளா $5^{24}$.
4. 1 நாளா $4^{42}$.

**இஷியா.** Ishiah, Ishijah, Jeshiah.

1. 1 நாளா $7^{3}$.

2. 1 நாளா 23[20].
3. 1 நாளா 24[21].
4. 1 நாளா 24[25].
5. எஸ்றா 10[31].

**இஷ்தோப்.** Ish-tob. சீரியாவில் யெப்தா ஒளித்தோடின ஒரு நாடு. 2 சாமு 10[6].

**இஷ்மா.** Ishma. 1 நாளா 4[3].

**இடறுதல்.** Stumbling, Offence. மிருகம் பட்சி முதலானவற்றைப் பிடிக்க ஏற்றியிருக்கும் பொறியிலே இரை குத்திவைத்திருக்கும் ஆணிக்கு மூலபாஷையில் 'இடறல்' என்று சொல்லப்படும். மத் 18[7] லூக் 17[1].

**இடிமுழக்கம்.** Thunder. கடவுளின் வல்லமையையும் (1 சாமு 2[10]), அவர் செய்த தண்டனையையும் (ஏசா 30[30]), அவருடைய மகத்துவத்தையும் (யாத் 19[16] சங் 29) காட்டும்படி உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. இது தேவனுடைய சத்தம். சங் 104[7] யோபு 37[4] யோவா 12[28]. இடிமுழக்கம் வழக்கமாய்க் கோடைகாலத்தில் இராது. 1 சாமு 12[17].

**இதாலா.** Idalah. செபுலோனின் ஊர். யோசு 19[15].

**இதியேல், ஈத்தியேல்.** Ithiel. [கடவுள் என்னோடிருக்கிறார்].

1. பென்யமீன் கோத்திரத்தான். நெகே 11[7].

2. ஆகூர் இதியேலுக்கு உபதேச வாக்கியங்கள் உரைத்தான். நீதி 30[1].

**இதுமேயா.** Idumea. இதுவும் ஏதோமும் (*Edom*) ஒன்றுதான். முதலில் ஏதோமியர் மோவாபுக்குத் தெற்கே சீனாய் நாடு வரையும் வசித்த ஒரு கோத்திரம். இவர்களுக்கு முற்பிதா ஏசா. ஏசாவும் யாக்கோபும் இரட்டைப்பிள்ளைகளானதினால் ஏதோமியருக்கும் இஸ்ரவேலருக்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்தது. ஆதி 25[24]. ஆனால் யாக்கோபுக்கும் ஏசாவுக்கும் விரோதம் (ஆதி 27 அதி) உண்டானதுபோல அவர்கள் சந்ததியாராகிய இஸ்ரவேலருக்கும் ஏதோமியருக்கும் அடிக்கடி விரோதம் உண்டாகிக்கொண்டே இருந்தது. ஏதோமியர் தங்கள் தேசத்தின் வழியாய் இஸ்ரவேலர் கானான் தேசத்திற்குப் போக இடங்கொடுக்கவில்லை. எண் 20[18]. சவுல் ஏதோமியரோடு யுத்தஞ்செய்தான். 1 சாமு 14[47]. தாவீது இவர்களை ஜெயித்தான். 2 சாமு 8[13]. சாலொமோன் காலத்தில் இவர்கள் விடுதலை அடைந்தார்கள். 1 இரா 11[14]. நூறு வருஷத்திற்குப் பிற்பாடு யோசபாத் இவர்களை ஜெயித்தான். அவன் மோவாபியரோடு யுத்தம் பண்ணினபோது இவர்கள் அவனுக்கு உதவிசெய்தார்கள். 2 இரா 3[9].

மறுபடியும் விடுதலையானார்கள். 2 இரா 8[20]. அமத்சியா இவர்களை ஜெயித்தான். 2 இரா 14[7]. இதற்குப் பிற்பாடு ஏதோமியர் அசீரிய ராஜாக்களுக்கு வரி கொடுத்தார்கள்.

கி-மு. 586-ஆம் நேபுகாத்நேச்சார் எருசலேமை அழித்தபிறகு எபிரெயர் அநேகர் ஏதோமிலே போய் ஒளித்துக்கொண்டார்கள். ஏதோமியர் எருசலேமுக்கு வந்த நஷ்டத்திற்காகச் சந்தோஷம் அடைந்தார்கள். ஆதலால் ஒபதியா தீர்க்கதரிசி இவர்களுக்கு வரும் தண்டனையைப்பற்றிக் கண்டிப்பாய்ச் சொன்னான். ஒப 1[1].

இதற்குப்பிறகு அரபியர் ஏதோமியருக்குத் தொந்தரவு கொடுத்துக்கொண்டிருந்ததினால் ஏதோமியர் யூதாவின் எல்லையைக் கடந்து அங்கே வசித்தார்கள்.

யூதாஸ் மக்கபெயு இவர்களோடு சண்டைசெய்தான். கி-மு. 100-ஆம் அளவில் யூதர்கள் இவர்களை ஜெயித்ததினாலே இவர்கள் விருத்தசேதனம் அடைந்து யூதமதத்தைச் சேர்ந்தார்கள். இயேசுவின் காலத்தில் யூதர்களின்மேல் ஆளுகை செலுத்தின ஏரோதின் குடும்பத்தார் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்.

**இதெக்கேல்.** Hiddekel. இதுவும் திக்கிரீசும் ஒன்றுதான். வடமேற்காயுள்ள ஆர்மீனியாவிலிருந்து இந்தப் பெரிய நதி அசீரியா பாபிலோனியா நாடுகளுக்கூடாகப் பாய்ந்து பார்சியா குடாக்கடலுக்குள் விழுகிறது. ஆதி 2[14] தானி 10[4].

**இத்சேயார்.** Izhar.

1. லேவியின் பேரன். யாத் 6[18].

2. = எத்சோகார். 1 நாளா 4[7].

**இத்தரான்.** Ithran. [சிறந்தவன்].

1. ஆதி 36[26].

2. 1 நாளா 7[37].

**இத்தாகாத்சீன்.** Ittha-Kazin. செபுலோனின் எல்லையைக் குறிக்கும் ஒரு ஊர். யோசு 19[13].

**இத்தாமார்.** Ithamar. ஆரோனின் இளைய மகன். யாத் 6[23]. ஆசாரியன். யாத் 28[1]. இவன் பணிவிடை. லேவி 10[6. 12. 16]. ஆசரிப்புக் கூடாரத்தில் இவன் செய்யவேண்டிய பணிவிடை. எண் 4[21]. தாவீதின் காலத்திலிருந்த இவன் சந்ததியார். 1 நாளா 24[4].

**இத்தாயி, ஈத்தாய்.** Ithai, Ittai.

1. தாவீதின் சேனாதிபதிகளில் ஒருவன். 2 சாமு $15^{21}$ $18^{2}$.

2. பென்யமீன் கோத்திரத்தான். 2 சாமு $23^{29}$.

**இத்தாலியா தேசம்.** Italy. ஐரோப்பாக் கண்டத்திற்குத் தெற்கே மத்தியதரைக் கடலுக்குள் நீண்டிருக்கும் குடாநாடு. இதற்குத் தலைநகரி ரோமாபுரி. இத்தாலியாவில் துறைமுகங்கள் அநேகம் இருந்ததினாலும், இங்கேயுள்ள ஜனங்கள் யுத்த வீரத்துவம் உள்ளவர்களானதினாலும் இயேசுகிறிஸ்து உலகத்தில் இருந்த காலத்தில் மத்தியதரைக் கடலோரமாய் இருந்த தேசங்களில் இது பிரதானமானது. அக்காலத்தில் ரோமாபுரியிலுள்ள ராயன் பலெஸ்தீனா, கிரேக்கு, சின்ன ஆசியா, ஆபிரிக்கா முதலிய மற்றத் தேசங்களில் சக்கரவர்த்தியா யிருந்தான். மத் $22^{17}$ அப் $25^{11}$ $27^{1}$ ரோமாபுரியிலிருந்து நாலு திசைகளுக்கும் போர்ச்சேவகர் போவதற்காக ரஸ்தாக்கள் போட்டிருந்தமையால் எந்தத் தேசத்திலுமுள்ள வியாபாரிகள் அங்கே லேசாய்ப் போக்குவரவு செய்யக்கூடியதா யிருந்தது. கிறிஸ்துவின் காலத்திற்கு முந்தி யூதர்களில் அநேகர் அங்கே வந்து கூடுகிறதைக் கண்டு இத்தாலியர் அவர்களைப் பகைத்தார்கள். அப் $18^{2}$. ஆனால் பல யூதர்கள் அதை விட்டுப் போகாமலிருந்தார்கள். கிறிஸ்தவமார்க்கம் இத்தாலியா தேசத்தில் பரம்பினபோது புறமதஸ்தர்கள் கிறிஸ்தவர்களுக்கும் யூதர்களுக்கும் உள்ள வித்தியாசம் தெரியாமல் இருபக்கத்தாரையும் ஒரேவிதமாய் இகழ்ச்சி செய்துவந்தார்கள்.

**இத்தாலியா பட்டாளம்.** The Italian Band. இது இத்தாலியா சேனையிலுள்ள போர்ச்சேவகரின் கூட்டம். இதில் ஐஞ்ஞூறு அல்லது ஆயிரம்பேர் இருப்பார்கள். இத்தாலியாவிலிருந்து இந்தக் கூட்டத்தார் வந்ததினால் இந்தப் பெயர் அவர்களுக் கிடப்பட்டிருந்தது என்று தோன்றுகிறது. கொர்நேலியும் இதில் நூற்றுக்கு அதிபதியாயிருந்தான். அப் $10^{1}$.

**இத்திரா, எத்திரா.** Ithra. தாவீதின் சகோதரி புருஷன். 2 சாமு $17^{25}$.

**இத்திரான், இத்ரான்.** Ithran.

1. ஆதி $36^{26}$.

2. 1 நாளா $7^{37}$.

**இத்துரேயா.** Iturea. யோர்தான் நதிக்கும் கலிலேயாக்கடலுக்கும் கிழக்காய் உள்ள நாடு. இங்கேயுள்ளவர்கள் வில்வித்தையில் பேர்போனவர்கள். யோவான்ஸ்நானன் பிரசங்கம் பண்ணின காலத்தில் பெரிய ஏரோதின் குமாரனாகிய பிலிப்பு இந்த நாட்டை ஆண்டுவந்தான். லூக் $3^{1}$.

**இத்தோ.** Iddo.

1. எஸ்று $8^{17}$.

2. 1 நாளா $27^{21}$.

3. 1 இரா $4^{14}$.

4. 1 நாளா $6^{21}$.

5. தீர்க்கதரிசியாகிய இவன் சரித்திரப் புஸ்தகம் ஒன்று எழுதினான். 2 நாளா $9^{29}$.

6. சகரியாவின் தகப்பன். சக $1^{1}$.

7. ஒரு வம்சம். நெகே $12^{4}$.

**இத்பாஸ்.** Idbash. 1 நாளா $4^{3}$.

**இத்மா.** Ithmah. தாவீதின் போர்வீரரில் ஒருவன். 1 நாளா $11^{46}$.

**இத்ரியன்.** Ithrite. தாவீதின் போர்ச்சேவகரில் இரண்டுபேர் இந்த வம்சத்தைச் சேர்ந்தவர்கள். 2 சாமு $23^{38}$.

**இத்ரேயாம்.** Ithream. தாவீதின் ஆறும் மகன். 2 சாமு $3^{5}$.

**இத்னான்.** Ithnan. தெற்கே யூதாவுக்குச் சேர்ந்த ஒரு ஊர். யோசு. $15^{23}$.

**இந்திர நீலம்.** Sapphire. இரத்தினம். காண்க

**இந்துதேசம்.** India. இது வட இந்தியாவைக் குறிக்கிறது. ஆனால் சாலொமோன் வாங்கின யானைத் தந்தங்கள், குரங்குகள், மயில்கள் ஆகிய இவைகளுக்கு மூலபாஷையிலே சொல்லியிருக்கும் பதங்களை ஆராயுமிடத்துதென் இந்தியாவிலிருந்து பலெஸ்தீனா வரையும் வியாபாரம் நடந்தது என்று நாம் அறியலாம். எசேக்கியேல் சொல்லும் பதங்களும் இதற்கொத்திருக்கின்றன. 1 இரா $10^{22}$ எசே $27^{15.19.24}$. எஸ்தர் $1^{1}$ $8^{9}$.

**இபித்தியா.** Iphdeiah. [யேகோவா இரட்சிக்கிறார்]. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $8^{25}$.

**இப்சாம்.** Ibsam. 1 நாளா $7^{2}$.

**இப்சான்.** Ibzan. [மகிமையுள்ள ஒரு நியாயாதிபதி]. நியா $12^{8}$.

**இப்தா.** Iphtah. யோசு $15^{43}$.

**இப்தாவேல்.** Iphtah-el. யோசு $19^{14}$.

**இப்பார்.** Ibhar. [கடவுள் தெரிந்து கொள்ளுகிறார்]. தாவீதின் குமாரரில் ஒருவன் 2 சாமு $5^{15}$.

**இப்ரி.** Ibri. 1 நாளா $24^{27}$.

**இப்லேயாம்.** **Ibleam.** மனாசேயின் மேற்பாகத்திலுள்ள ஒரு ஊர். யோசு $17^{11}$.

**இப்னியா.** **Ibnijah.** 1 நாளா $9^{8}$.

**இப்னெயா.** **Ibneiah.** 1 நாளா $9^{8}$.

**இமெனேயு.** **Hymenaeus.** எபேசு பட்டணத்திலுள்ள ஒரு கள்ளப் போதகன். 1 தீமோ $1^{20}$ 2 தீமோ $2^{17}$.

**இம்மானுவேல்.** **Emmanuel.** [கடவுள் நம்மோடிருக்கிறார்]. ஏசா $7^{14}$ $8^{8}$ மத் $1^{23}$. ஏசா $9^{6}$ காண்க.

ஏசாயா மேசியாவாகிய இயேசுகிறிஸ்து தமது ஜனங்களை இரட்சிக்கும்படி வருவார் என்று அறிவித்தான் என்பது அநேகருடைய அபிப்பிராயம். ஆனால் அக்காலத்தின் சரித்திரத்தை ஆராயுமிடத்து கி-மு. 735-ஆம் சீரியா ராஜாவும் இஸ்ரவேல் ராஜாவும் ஆகாஸ் என்னும் யூதாவின் ராஜாவுக்கு விரோதமாய் ஒருங்கு கூடினார்கள் என்றும், ஆகாஸ் இதினால் பயந்து தன் தேசத்திற்குக் கெடுதி செய்யப்போகிற பூல் என்னும் அசீரியா ராஜாவோடு சமாதான சம்பந்தம் பண்ணினான் என்றும், ஜனங்கள் அதிக பயமும் கலக்கமும் உள்ளவர்களாய் இருக்கிறார்கள் என்றும் ஏசாயா தீர்க்கதரிசி அறிந்து (2 இரா $16^{6}$) இந்த எல்லாப் பயத்தையும் நீக்க உடனே பிறக்கப்போகிற ஒரு பாலகன் தேன் முதலியவை சாப்பிட அறியுமுன், அதாவது ஐந்து பிராயமாகுமுன், சீரியாவும் இஸ்ரவேல் ராஜ்யமும் ஜெயிக்கப்படும் என்று உரைத்தான். இவ்விதமாய் இந்த அடையாளத்தைக்கொண்டு தீர்க்கதரிசி அவர்களுக்கு ஆறுதல் சொன்னாலும், இவர் அசீரியாவினாலே அபஜெயம் அடைவார் (ஏசா $8^{8}$) என்று இன்னொரு வாக்கு உரைத்தான். யூதர்கள் சிறையிலிருப்பிலிருந்து வந்தபிறகு இந்த இரண்டு தீர்க்கதரிசனங்களையும் கண்டபடி கலந்து தங்கள் தேசத்திற்கு மேசியா வருவார் என்றும் அவர் தங்களுக்காகப் பாடுபடுவார் என்றும் நம்பி இம்மானுவேலை இரட்சகர் என நினைத்தார்கள். ஆதி கிறிஸ்தவர்களும் அப்படியே நினைத்தார்கள். **கன்னிகை** காண்க.

**இம்மேர், இம்மேர்.** **Immer.**

1. ஒரு ஆசாரிய குடும்பம். 1 நாளா $9^{12}$.
2. ஒரு ஆசாரியன். எரே $20^{1}$.
3. ஒரு ஊர். எஸ்றா $2^{59}$.

**இம்மை.** **உலகம்** காண்க.

**இம்ரா.** **Imrah.** ஒரு தலைவன். 1 நாளா $7^{36}$.

**இம்ரி.** **Imri.**

1. 1 நாளா $9^{4}$.
2. நெகே $3^{2}$.

**இம்லா.** **Imla.** ஆகாப் காலத்திலுள்ள ஒரு தீர்க்கதரிசி. 1 இரா $22^{8}$.

**இம்னா.** **Imna, Imnah, Jimna.**

1. 1 நாளா $7^{35}$.
2. எண் $26^{44}$.
3. 2 நாளா $31^{14}$.

**இயேசு என்னப்பட்ட யுஸ்து.** **யுஸ்து** காண்க.

**இயேசுகிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம்.** **History of Jesus Christ.** கி-பி. இருபதாம் முப்பதாம் ஆண்டுகளுக்கிடையில் நம்மிலொருவர் பலெஸ்தீனா தேசத்தில் வசித்திருப்போமென்றால் அத்தேசத்தின் அரசாளுகை முறை ராஜாங்கப் பிரிவினைகள், மார்க்க வைராக்கியங்கொண்ட வைதீகர்களுடைய அநுஷ்டான நிலை, சாமான்னிய ஜனங்களுடைய கருத்தும் கொள்கையும் இத்தியாதி விஷயங்களைக் கவனித்திருக்கக்கூடும். அப்போது லூக்கா சுவிசேஷத்தின் துவக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிற சிலரைப்போல, இயேசுநாதர் வெளிப்பட்டகாலத்து ஆரம்பமுதல் எல்லாவற்றையுங் கண்ணாரக் கண்டிருக்கலாம். அவ்வாறு எவைகளைக் கண்டிருக்கக்கூடுமோ, அவைகளையே இங்கு தொடர்பாக எழுதுவது எமது நோக்கம்.

1. **இராஜாங்கப் பிரிவினைகள்.** நம்முடைய ஆண்டவர் திரு ஊழியஞ் செய்த காலத்தில் யூதேயாநாடும், சமாரியாநாடும் ரோம ராஜ்யத்து அதிபதியின் (கவர்னர்) அதிகாரத்துக்குள் இருந்தன. கி-பி. 26-ஆம் முதல் 36-ஆம் வரைக்கும் பொந்தியுபிலாத்து என்பவன் இவைகளுக்கு அதிபதியாயிருந்தான். அவன் மகா கொடியவனென்று பெயர்பெற்றிருந்தான். லூக் $13^{1}$. சொல்லவேண்டுமானால், ரோமராஜ்யத்தில் பொதுவாகக் கண்டிப்பு அதிகமாயிருந்தது. அதிகாரிகள் பல துஷ்டரைக் கொன்றுவிட்டார்கள்; அடிக்கடி சிலுவையில் அறைதலாகிய குரூர தண்டனையை விதித்தார்கள். ஆனபோதிலும் சாதாரணமாக அவர்கள் அநியாயங்களைச் செய்யவில்லை. வரிவாங்குகிறதற்குச் சில உத்தியோகஸ்தரை நியமித்தார்கள். இவ்வுத்தியோகஸ்தருக்கு ஆயக்காரர் என்று பெயர். இவர்கள் செய்த தொழில் யூதர் யாவருக்கும் இழிவாய்த் தோன்றினபடியால், இவர்கள் எல்லாரும் இகழப்பட்டும் பகைக்கப்பட்டும் வந்தார்கள்.

பலெஸ்தீனாவின் வடபாகத்தையும் கீழ்ப் பாகத்தையும் ஏரோதுவின் குமாரர் ஆண்டுவந்தார்கள். கலிலேயா நாட்டுக்கும், பெரேயா நாட்டுக்கும் அந்திப்பா என்பவன் (கி-மு. 4-கி-பி. 39) இராஜா. இயேசுவானவர் அவனைக்குறித்துச் சொன்ன ஒரு வார்த்தையால் அவனுடைய குணத்தை அறிந்துகொள்ளுகிறோம். அவன் ஒரு நரி. லூக். $13^{32}$. பகிரங்கமான பாவத்தில் ஜீவித்துக்கொண்டிருந்தான். இன்னொரு சகோதரனுடைய மனைவியாகிய ஏரோதியாள் என்பவளை வைத்திருந்தான். ஆனாலும் அவன் முற்றிலும் உணர்வற்றவனா யிருக்கவில்லை; மார்க்க சம்பந்தமான விஷயங்களை அறியவேண்டுமென்று விரும்பினான். மாற் $6^{20}$ லூக் $23^{8}$. அவனுடைய முக்கிய பட்டணம் கலிலேயா கடலோரத்திலிருந்த திபேரியாவே.

இத்துரேயாவுக்கும், திராகொனித்திக்கும் ஏரோது பிலிப்பு இராஜாவாயிருந்து அத்தேசத்தை அமைதலாய் ஆண்டான். ஏரோதுவின் பிள்ளைகளில் நல்ல கீர்த்திபெற்றவன் இவனே.

**2. மதசம்பந்தமான கட்சிகள்.** **சதுசேயர்** என்பவர்கள் ஆசாரிய வேலையைச் செய்த சில உயர்ந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். அக்காலத்தில் அவர்களிலிருந்துதான் பிரதான ஆசாரியன் நியமிக்கப்படுவான். சனதிரீம் (*Sanhedrim*) என்கிற ஆலோசனைச் சங்கத்தில் அவர்கள் அதிக செல்வாக்குடையவர்கள். அவர்கள் எப்போதும் சமயத்துக்குத் தக்கதாகப் பேசுவார்கள். மத வைராக்கியமென்பது அவர்களுக்கில்லை. ரோமர் அவர்களுக்கு அதிகாரம் அதிகம் கொடுத்தார்கள். எப்படியாவது ஜனங்களுக்குள் கலகம் உண்டாகக் கூடாதென்பது அவர்கள் விருப்பம். கலகமுண்டானால் ரோமர் தங்களுடைய அதிகாரத்தைக் குறைத்துவிடுவார்களென்று பயந்தார்கள். இயேசுவைக் கொலைசெய்யும்பொருட்டு அவர்களும் பரிசேயரும் ஒன்றுசேர்ந்தபோதிலும், அவர்களுக்கும் பரிசேயருக்கும் சில பெரிய வித்தியாசங்களிருந்தன. பரிசேயரைப்போல அவர்கள் முன்னோர்களின் பாரம்பரியத்தை மதிக்காமல் பழைய ஏற்பாட்டிலுள்ள முதலைந்து புஸ்தகங்களை மாத்திரம் தங்கள் மார்க்கத்துக்கு மூலாதாரமாக எண்ணினார்கள். நடபடிகளின் புஸ்தகத்தில் நாம் பார்க்கிறபிரகாரம் இவர்களே எருசலேமில் கிறிஸ்துவின் சீஷர்களை அதிகமாய்த் துன்பப்படுத்தினவர்கள். '**பரிசேயர்**, அதாவது பிரிக்கப்பட்டவர்கள், சதுசேயரைப்போலிராமல், மார்க்கத்தில் மிகவும் வைராக்கியமுள்ளவர்கள். தொகையில் அவர்கள் ஆறாயிரத்துக்கு அதிகமாய் இருந்தார்கள். ஒழுக்கமுறையில் வழுவாதவர்கள். ஆயினும் இயேசுவின்காலத்தில் அவர்கள் அநேக விஷயங்களில் கெட்டுப்போயிருந்தார்கள். புறம்பான சடங்காசாரங்களை மிதமிஞ்சின கண்டிப்போடு அநுசரித்துக்கொண்டு, அதனால் பெருமையுள்ளவர்களாகி, அகத்துக்குரிய கடமைகளை அசட்டை பண்ணினார்கள். மாற் $7^{1-13}$ $12^{38-40}$ மத் $23^{13-23}$. பரிசேயரில் அநேகர் **வேதபாரகர்**. நியாயப்பிரமாணத்தை நுட்பமாய்க் கிரகித்து, அதிலுள்ள போதனையை விளக்கிக் காட்டுவது அவர்கள் வேலையாம். அக்காலத்தில் அவர்கள்தான் தேவாலயங்களில் குருக்களைப்போல் மதிக்கப்பட்டவர்கள். இந்தியாவில் பிரசித்திபெற்ற மடங்களிலுள்ள சில குருக்களுக்குச் சாதாரண ஜனங்கள் எவ்வளவு வணக்கம் காட்டுவார்களோ, அவ்வளவு வணக்கம் பலெஸ்தீனாவிலிருந்த சில வேதபாரகருக்கு ஜனங்கள் காட்டினார்கள். இன்னொரு வகுப்பாருக்குச் செலோத்தேயர் என்று பேர். இயேசுவின் சீஷரில் ஒருவன் இவ்வகுப்பினன். மத் $10^{4}$. இவர்கள் ரோமரைப் பகைத்து, கடவுளே ஆளவேண்டிய இஸ்ரவேலரை எந்த அந்நிய இராஜாங்கமும் ஆளுதல் தகாதென்று சொல்லி, ரோம அரசாட்சிக்கு விரோதமாக ஜனங்களுக்குள் கலகஞ் செய்துகொண்டிருந்தார்கள். எருசலேம் நகரத்தை ரோமர் முற்றுகை போட்டபோது, அவர்களே ஜனங்களுக்குத் தலைவராய் நின்று போராடினார்கள். அதுடன் அருவருக்கத்தக்க சில துர்ச்செயல்களையும் செய்தார்கள். **ஏரோதியர்** ஏரோது வம்சத்து இராஜாக்களுடைய பந்துமித்திரர்களாம். இவர்கள் விசேஷமாகக் கிரேக்கர் வழக்கங்களைப் பலெஸ்தீனா தேசத்தில் ஸ்தாபனம் செய்தார்கள். இதற்கு முன்னமே சீரியாவின் ராஜாக்கள் கிரேக்கு முறைமையின்படி சில நகரங்களை ஸ்தாபித்திருந்தனர். யோர்தான் நதிக்கு அக்கரையிலிருந்த பத்து ஊர்கள் இப்படி உண்டாயிருந்தமையால், அவைகளுக்குத் தெக்கப்போலி என்னும் கிரேக்க பேர் வழங்கினது. செசரியா என்னும் துறைமுகமும் இப்படிப்பட்ட ஊரே. இவ்விடங்களில் யூதர் அந்நிய தேசத்துக் கொள்கைகளைப்பற்றி அறிந்துகொண்டார்கள். அன்றியும் அநேக யூதர்கள் வியாபாரவிஷயமாய்த் தூரதேச சஞ்சாரம் செய்து குடியிருந்து, பண்டிகைக்காலங்களில் எருசலேமுக்கு வந்தபடியால், அவர்கள் மூலமாயும் யூதர் அந்நியதேச வழக்கங்களையும், ஆசாரங்களையும் கற்றுக்கொண்

டார்கள். கிழக்குத் தேசங்களில் பிரபலமா யிருந்த சில கொள்கைகளும் யூதருக்குள் நுழைந்திருந்தன. **எசேனேயர்** என்று பேர் கொண்ட ஒரு வகுப்பார் பாரசீகருடைய கோட்பாடுகளில் சிலவற்றை யனுசரித்து, சூரியனை நமஸ்கரித்து, ஸ்நானமுதலிய ஆசாரங்களைக் கைப்பற்றிப் பலியைத் தள்ளி, சரீரத்தையடக்கி, தங்கள் உலகப் பொருள்களைச் சகலருக்கும் பொதுவாக வைத்தனுபவித்து வந்தார்கள். அவர்கள் சாக்கடலருகே ஒரு மடத்தில் வாசஞ்செய்து வந்தார்கள்.

யூதமார்க்கத்தின் பொதுவான நிலைமை இவ்வாறு பாகுபாட்டினை யுடையதாய்ப் பலெஸ்தீனாவில் சாதாரண ஜனங்களுக்குள் யூதமார்க்கம் எப்படி இருந்ததென்றால், அது முற்றிலும் தாழ்ந்ததாயும் இருக்கவில்லை, முற்றிலும் உயர்ந்ததாயும் இருக்கவில்லை என்பதே.

அதின் குறைகளில் சில:

1. கடவுளைப்பற்றி யூதமார்க்கத்தில் மிகவும் உயர்தரமான எண்ணம் இருந்தபோதிலும், அவர் எப்போதும் மனுஷரை விட்டு, அவர்களுக்குத் தூரத்திலிருப்பவராகத்தோன்றினர். யேகோவா இஸ்ரவேல் ஜனங்கள் மேல் அதிக பிரியமுள்ளவரே யானபோதிலும், அவர் எல்லா ஜீவராசிகளினிடத்தும் அன்பாயிருந்து, ஒவ்வொரு சிருஷ்டியையும் நேசிக்கிற தன்மையுடைய பரமபிதாவென்கிற எண்ணம் யூதருக்கு இருக்கவில்லை. மேலும் யூதர் நியாயப்பிரமாணத்தை மிதமிஞ்சி மதித்தபடியாலும், நியாயப்பிரமாணத்தில் புறம்பாகச் செய்யவேண்டிய சடங்குகளைப்பற்றி விஸ்தரித்துச் சொல்லியிருக்கிறபடியாலும், அவர்கள் அகத்துக்குரிய நோக்கத்தை அசட்டை செய்தார்கள். நியாயப்பிரமாணத்தின்படி கிரியைகளை எவ்வளவு செய்வார்களோ, அவ்வளவு புண்ணியம் கிடைக்குமென் றெண்ணினார்கள். அதினால் நமது ஆண்டவர் மலைமேல் செய்த உபதேசம் அவர்களுக்கு அவசியமென்பது திண்ணம். கிரியையினால் ரக்ஷிப்புக் கிடைக்குமென் றிருந்தார்கள். அக்கிரியைகளைச் செய்கிறதும் எப்போதும் இலேசான காரியமன்று. நியாயப்பிரமாணத்தின் விதிகளை வழுவாமல் கைக்கொள்ளும்பொருட்டாக, அவைகளைச் சுற்றிலும் வேலியைப்போலப் பல கட்டளைகளை வேதபாரகர் ஏற்படுத்தி யிருந்தார்கள். இப்படிப்பட்ட எண்ணிறந்த சிறிய சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறது அவர்களுக்குத் தாங்கக்கூடாத பாரமாய் இருந்தது. மேலும் இந்தச் சிறிய கட்டளைகளிற் சில செவ்வையாயிருக்கவில்லை; திருஷ்டாந்தமாக 'கொர்பான்' என்பதைப்பற்றி மாற் 7[11-13]-ல் பார்க்க. விசேஷமாக இச்சட்டங்களைக் கைக்கொண்டவர்களுக்குள் பெருமையென்னும் குற்றம் அதிகரித்தது. பரிசேயரும் வேதபாரகரும் மற்றச் சாதாரண யூதரை இழிவாய் எண்ணினார்கள். அதேபிரகாரமாக யூதர் யாவரும் மற்றத் தேசத்தாரைக் கேவலமாக நினைத்தார்கள். நற்குணசாலியாயிருப்பது பெரிய காரியமென்று எண்ணாமல், யூதவமிசத்தில் பிறக்கிறதே பெரிய சிலாக்கியமென்று கருதினார்கள். லூக் 3[8] யோவா 8[33,39] ரோ 2[17-20].

இப்படிப்பட்ட பெருங்குறைவுகள் யூதமார்க்கத்தி லிருந்தபோதிலும், அதில் பல நல் விஷயங்களு மிருந்தன. நியாயப்பிரமாணத்தை மாத்திரமன்று, தீர்க்கதரிசன ஆகமங்களையும், சங்கீதங்களையும் மதித்தோருடைய பக்தி முழுமையும் ஜீவனற்றுப்போவது முடியாது. ஆகையால் புதிய ஏற்பாட்டில் சகரியா, எலிசபெத்து, சிமியோன், அன்னாள், நாத்தான்வேல், நிக்கொதேமு, அரிமத்தியா ஊரானாகிய யோசேப்பு முதலிய அநேக பக்தியுள்ள யூதரைக்குறித்து வாசிக்கிறோம். அக்காலத்தில் யூதரால் எழுதப்பட்ட ஏனோக்குப் புஸ்தகம், சாலொமோனுடைய சங்கீதங்கள், யூபிலிகளின் புஸ்தகங்கள், மோசே பரலோகம் செல்லுதல் முதலான நூல்களை நாம் வாசித்தால் உத்தம போதனைகள் பல அவைகளிற் காணலாம். சாதாரண யூதர்களுக்கு மதத்தைப்பற்றி அதி வைராக்கியமிருந்தது. யூதர் யாவரும் தங்கள் தேசத்தை ஒரு திருச்சபையாக எண்ணி, தேசத்தைப் பற்றியும், மார்க்க ஆசாரங்களைப் பற்றியும், எருசலேம் ஆலயத்தைப் பற்றியும் மிகவும் அபிமானமுள்ளவர்களாயிருந்தார்கள். மார்க்கத்தைக்குறித்து அவர்கள் ஏனோதானோவென் றிருக்கவில்லை.

மேலும் 9, 10, 22, 25, 35, 40, 69, 109 முதலிய சங்கீதங்களை நாம் வாசிக்கும்போது, அங்கே சிறுமையும் எளிமையுமானவர்கள், சாந்தகுணமுள்ளவர்கள், ஒடுக்கப்படுகிறவர்கள் என்று சொல்லப்படுகிற ஜனங்களைக் குறித்து வாசிக்கிறோம். துஷ்டர்களால் வரும் துன்பத்தை அவர்கள் அதிகமாய் அநுபவித்துக்கொண்டிருந்தாலும், கர்த்தர்மேல் உறுதியான நம்பிக்கை வைத்து, பக்தியோடும் சாந்தத்தோடும் தங்கள் காலத்தைச் செலவழித்து, கர்த்தர் ரக்ஷிக்கும்நாள் எப்போது வருமோவென்று பொறுமையுடன் காத்துக்கொண்டிருந்தார்கள். விசேஷமாக மேசியா வந்து நீதியுள்ள இஸ்ரவேலரை மீட்டுக்கொள்ளும் நாளுக்காக அவர்கள் மிகுந்த வாஞ்

சையுள்ளவர்களா யிருந்தார்கள். புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் இருந்த யோசேப்பு, மரியாள், சகரியா, எலிசபெத்து, சிமியோன், அன்னாள் ஆகிய இவர்கள் அவர்களைப் போன்றவர்கள். லூக் $1^{45-55}$-ல் அவர்களின் வாஞ்சையைத் தெளிவாய்ப் பார்க்கிறோம். பலெஸ்தீனாவில் இவ்வித நோக்கம் பொருந்தியிருந்தவர்கள் கொஞ்சம்பேர் அல்லர். இவர்கள் இயேசுநாதருடைய போதனைகளை ஏற்றுக்கொள்ளுகிறதற்குப் பக்குவப்பட்ட மனதுடையவரா யிருந்தார்கள்.

இன்னொரு விஷயத்தில் யூதமார்க்கத்தார் உணர்ச்சியடைந்திருந்தார்கள். பூர்வீகத்தில் அவர்களுடைய கொள்கைப்பிரகாரம் கடவுளுக்கும் யூதஜாதிக்கும் சம்பந்தம் இருந்ததேயொழிய, கடவுளுக்கும் தனித்தனி ஆத்துமாவுக்கும் சம்பந்தமில்லை. இப்போதோ, எசேக்கியேல் புஸ்தகம் 18-ம் அதிகாரத்திலிருக்கிற உண்மையை நன்றாய் உணர்ந்திருந்தார்கள். ஒவ்வொரு ஆத்துமாவும் கடவுளுக்கு முன்பாக உத்தரவாதம் உடையது என்பது எல்லாருக்கும் தெரியவந்தது. அதுவுமன்றி, வியாபாரத்திநிமித்தம் அநேக யூதர் அந்நிய தேசங்களிற் சஞ்சரித்தபடியினாலும், அந்நிய மார்க்கத்திலிருந்து அநேகர் யூத மார்க்கத்தில் பிரவேசித்தபடியாலும், யூதர்களிற் சிலர் அந்நிய மார்க்கங்களிலுள்ள நற்போதனைகளை அறிய வந்தார்கள். லூக் $7^{2-5}$ மாற் $15^{39}$ அப் $5^{34}$. இவர்களின் உள்ளத்தில் கிறிஸ்துவின் சுவிசேஷம் வேர்கொண்டது ஆச்சரியமன்று.

**மேசியாவைப்பற்றிய நம்பிக்கை.** எல்லாவற்றிலும் விசேஷமாக மேசியாவைப்பற்றிய நம்பிக்கையாலே இயேசுநாதருடைய வருகைக்கு யூதர் ஆயத்தம் பண்ணப்பட்டிருந்தார்கள். தானி 7-ம் அதிகாரத்தை ஆதாரமாகக்கொண்டு யூதர்கள் இந்நம்பிக்கையை உறுதிப்படுத்தினார்கள். அதிலே மிருகங்களாற் குறிக்கப்பட்ட ராஜ்யங்கள் ஒழிந்த பின்பு, மனுஷகுமாரனுடைய சாயலைத் தரித்த ஒருவர் மேகங்களுடனே வருகிறார். சகல ஜனங்களும் ஜாதியாரும், பாஷைக்காரரும் அவரையே சேவிப்பார்கள்; அவருக்குக் கர்த்தத்துவமும், மகிமையும், ராஜரீகமும் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று வாசித்து, அதினாலே மேசியா (அல்லது நாம் வழங்குகிறபடி ரக்ஷகர்) ஒரு பெரிய போர்வீரனாக வந்து, ரோம ராஜ்யத்தைக் கவிழ்த்து, துஷ்டரைத் தண்டித்து, சிஷ்டரை ரக்ஷித்துச் சதாகாலமும் இஸ்ரவேலின் ராஜாவாக வீற்றிருப்பாரென்று நம்பிக்கொண்டிருந்தார்கள். சில பக்தர் அவருடைய ராஜ்யம் ஆவிக்குரியதாயிருக்கும் என நம்பினார்கள். லூக் $2^{25, 38}$. பெரும்பான்மையோருடைய நம்பிக்கையில் உலகப்பற்றும் ஜாதி அபிமானமும் கலந்திருந்தன. ஆனாலும் நாம் கவனித்தற்குரிய ஆச்சரியமான காரியம் என்னவென்றால், யூதர் எவ்வளவு கஷ்டத்தில் அகப்பட்டுக்கொண்டிருந்தபோதிலும், அவர்கள் தேசம் எவ்வளவு க்ஷீணம் அடைந்தாலும், ரக்ஷகர் ஒருவர் வருவார் என்கிற நம்பிக்கையை அவர்கள் விட்டுவிடவே இல்லை. அந்த ரக்ஷகரைப் பற்றியும், அவர் ரக்ஷிக்கும் விதத்தைப்பற்றியும் அவர் அளிக்கும் ரக்ஷிப்பைப்பற்றியும் அவர்களுக்குப் பல தவறான அபிப்பிராயங்களிருந்தபோதிலும், மேசியா வருவாரென்கிற உறுதியான நம்பிக்கை இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளுகிறதற்கு அநேகரைப் பக்குவப்படுத்தி யிருக்கவேண்டும்.

இதுவரை குறிப்பிட்ட விஷயங்களை நாம் மனதில் வைத்துக்கொண்டால், இயேசுகிறிஸ்து செய்த சிறந்த ஊழியத்தைப்பற்றி தெளிவாயும் தொடர்பாயும் வாசிக்கலாம். அத்தொண்டைக்குறித்து மொத்தார்த்தமாக நாம் நிச்சயித்திருக்கிற இரண்டொரு காரியங்களை முதலில் சொல்லுவது உத்தமமென்று தோன்றுகிறது. (1) இயேசுகிறிஸ்து ஞானஸ்நானம் பெற்ற நாள் முதற்கொண்டு, தாம் மேசியா என்பதைப் பூரணமாய் உணர்ந்துகொண்டு, இவ்வுலகில் தாம் தேவனுடைய ராஜ்யத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்ற முழுத் தீர்மானம் உடையவராயிருந்தார். (2) அவ்விராஜ்யத்தைக்குறித்துச் சாதாரண ஜனங்களுக்குள்ளிருந்த கொள்கையை மாற்றவேண்டுமென்பது ஆதிமுதல் அவருக்கிருந்த நோக்கம். (3) அதைச் சரியாய் மாற்றவேண்டுமென்றால், முதல் ராஜாவைப்பற்றியன்று இராஜ்யத்தைப்பற்றியே விசேஷமாகப் பேசவேண்டியிருந்தது. ஆனபடியினாலே தாமே மேசியாவாக இருக்கிறதைக்குறித்து, முதலில் அவர் சாதாரணமாய்ப் பேசவில்லை. (4) ஆயினும் ராஜ்யத்தைப்பற்றிய கொள்கையை மாற்றினதின் நோக்கம், அந்த ராஜ்யத்தை ஸ்தாபனம் செய்தற்கேதான். ராஜாவாலேதான் ராஜ்யம் ஸ்தாபனமாகும். ஆகையால் முடிவில் ராஜாவைப்பற்றி விசேஷமாக எழுதப்பட்டிருக்கிறது. இயேசுவே அந்த ராஜாவென்று அவருடைய சரித்திரம் விவரமாய்ச் சொல்லுகிறது.

நமது ஆண்டவர் செய்த திருத்தொண்டைக் காலக்கிரமப்படி பின் வருமாறு சில பிரிவுகளாகப் பிரிக்கலாம்:—

A. பிரவேசகாலம்: ஞானஸ்நானம் பெற்றதுமுதல் முக்கிய அப்போஸ்தலரைத் தெரிந்துகொண்ட காலம்வரையும்.

**இடம்:** விசேஷமாக யூதேயாநாடு: கலிலேயாவுங்கூட.

**காலம்:** கி-பி. 26-ஆம் குளிர்காலமுதல், 27-ஆம் பஸ்காபண்டிகைவரை. மத் $3^{1}$-$4^{11}$ மாற் $1^{1-13}$ லூக் $3^{1}$-$4^{13}$ யோவா $1^{6}$-$4^{54}$.

B. பெருத்த கிரியைகளை நடப்பித்ததின் முதற்பாகம்: ராஜ்யத்தை ஸ்தாபித்தல்.

**இடம்:** விசேஷமாக கலிலேயா; எருசலேமிலுங்கூட.

**காலம்:** கி-பி. 27-ஆம் சுமார் பெந்தெகோஸ்து காலமுதல், 28-ஆம் ஏறக்குறைய பஸ்கா பண்டிகைவரைக்கும். மத் $4^{13}$-$13^{53}$ மாற் $1^{14}$-$6^{13}$ லூக் $4^{14}$-$9^{6}$ யோவா 5 அதி.

C. நடுப்பாகம்: இயேசு செய்யும் கிரியைகளும், பரிசேயருடைய விரோதமும்.

**இடம்:** கலிலேயா.

**காலம்:** கி-பி. 28-ஆம்த்தில் பஸ்காமுதல் கூடாரப் பண்டிகைவரை. மத் $14^{1}$-$18^{35}$ மாற் $6^{14}$-$9^{50}$ லூக் $9^{7-50}$ யோவா 6 அதி.

D. கிரியைகளை நடப்பிக்கும்காலத்தின் முடிவு; பாடுகள் சமீபமாகக் காணப்படுகின்றன.

**இடம்:** யூதேயா. யோவா $7^{1}$-$11^{54}$. பெரேயா. மாற் $10^{1}$ யோவா $10^{40}$.

**காலம்:** கி-பி. 28-ஆம் கூடாரப் பண்டிகைமுதல், 29-ஆம் பஸ்கா பண்டிகைவரை. மத் $19^{1}$-$20^{34}$ மாற் $10^{1-52}$ லூக் $9^{51}$-$19^{28}$. (இவைகள் காலவரிசையில் வைக்கப்படவில்லை.) யோவா $7^{1}$-$11^{57}$.

E. எருசலேமில் மகிமையோடு பிரவேசித்தல்; கடைசியில் செய்த போதனை; பாடுகள், மரணம், உயிர்த்தெழுதல், பரலோகம் செல்லுதல்.

**இடம்:** பெரும்பாலும் எருசலேம்.

**காலம்:** கி-பி. 29-ஆம் பஸ்காவுக்கு 6 நாள் முன், பெந்தெகோஸ்துவுக்கு 10 நாள் முன்வரை. மத் $21^{1}$-$28^{20}$ மாற் $11^{1}$-$16^{20}$ லூக் $19^{29}$-$24^{52}$ யோவா $12^{1}$-$21^{23}$.

A. பிரவேசப்பாகம்: ஞானஸ்நானம் பெற்றதுமுதல் முக்கிய அப்போஸ்தலரைத் தெரிந்துகொண்டதுவரை.

**இடம்:** விசேஷமாக யூதேயாதேசம்: கலிலேயாவுங்கூட.

**காலம்:** கி-பி. 26-ஆம்த்தின் குளிர்காலமுதல் 27-ஆம் பஸ்கா பண்டிகைவரை. மத் $3^{1}$-$4^{11}$ மாற் $1^{1-13}$ லூக் $3^{1}$-$4^{13}$ யோவா $1^{6}$-$4^{54}$.

ஞானஸ்நானம், சோதனை, முதலாம் சீஷர், கானாஊரில் அற்புதம், முதல் பஸ்காபண்டிகை, தேவாலயத்தைச் சுத்திகரித்தது, கலிலேயாவுக்குப் போனது.

**ஞானஸ்நானம்.** — யோவான்ஸ்நானன் என்ன பிரசங்கித்தானென்றால், மேசியா இப்போதே வந்து ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிறார்; நியாயத்தீர்ப்பினால் அவர் தம் ஆளுகையைத் தொடங்குவார்; ஆனபடியினால் அவருடைய வருகைக்குத் தங்களை ஆயத்தப்படுத்திக்கொள்ள ஒரே வழியுண்டு; அதாவது பாவத்தைப் பகைத்து, பரிசுத்த ஜீவியம் செய்து, மேசியாவுக்காக எதிர்பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். யோவான் சொன்ன வார்த்தைகளை மெய்யென்று ஒப்புக்கொண்டோர், ஒவ்வொருவராய் யோர்தான் நதியிலிறங்கி, தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, நீரில் ஸ்நானம்செய்து, கரை ஏறி, புது ஜீவியம் செய்வார்கள். இதுவே அவர்கள் பரிசுத்தம் பெற்றதற்கு அடையாளமாம். இச்சடங்கினால் குறிக்கப்பட்டதை ஞானஸ்நானம் என்பார்கள். இது இயேசுவுக்கு உத்தமகாரியமாகத்தோன்றினபடியால், அவரும் அவ்வாறு ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார். அச்சமயத்தில் பரிசுத்தஆவி அவர் மேல்இறங்கிவருகிறதையோவான் ஸ்நானன் தெளிவாகக் கண்டும், வானத்திலிருந்துண்டான ஒரு அசரீரிவாக்கைக் கேட்டும், இவர் தான்வரவேண்டியவர்என்று அறிந்துகொண்டான். அந்நிமிஷ முதற்கொண்டு, இயேசு தம்மை மேசியாவாகப் பூரணமா யுணர்ந்து கொண்டு, அதுமுதல் வீட்டுக்குப் போகாமல் தமது பகிரங்கமான தொண்டுக்குத் தம்மைத் தத்தம் செய்தனர். அன்றைக்குக் கண்ட காட்சியும், கேட்ட சத்தமும், யோவானையும் இயேசுவையும்தவிர மற்றவர்களுக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், யோவான் அன்றைக்கு அதைச் சகலருக்கும் அறிவித்தபடியினாலே, அன்றைக்கு இஸ்ரவேலுக்கு ரக்ஷகர் வெளிப்பட்டாரென்று சொல்லவேண்டும். சிலர் அவர் அந்நாள்வரை சாமான்னிய மனுஷனா யிருந்தாரென்றும், அன்றுமுதல் தெய்வீகத்தன்மை அவர்மேல் வந்து அமர்ந்தது என்றும் நினைக்கிறார்கள். இதைக்குறித்து (1) இப்படி நினைக்க யாதொரு முகாந்தரமுமில்லை; (2) யோவான் சுவிசேஷத்தின் ஆரம்பத்திலும், பவுலுடைய நிருபங்களிலும் நாம் கிறிஸ்துவின் வரலாற்றைப்பற்றி வாசிக்கிறவைகளுக்கு இப்படி நினைத்தல் விரோதமாக இருக்கிறது; (3) மேலும் ஆதிமுதல் பொதுவான சபையின் கொள்கை இதுவன்று என அறியவேண்டும்.

ஆயினும் ஞானஸ்நானம் பெற்ற அன்றைக்கு இயேசு பகிரங்கமாய் வெளிப்பட்டு, தாம் செய்யவேண்டிய ஊழியத்தைப்பற்றிப் புது உணர்ச்சியடைந்து அதை நிறைவேற்றுவதற்குத் தக்க திறமை பெற்றார். அன்று முதல் அவர் தம்மை மேசியாவாக உணர்ந்து, மேசியா செய்யவேண்டிய அற்புதக் கிரியைகளைச் செய்து, சீஷர்களை நியமிக்க ஆரம்பித்து, வாக்கிலும் செய்கையிலும் திவ்விய அதிகாரமுள்ளவராய்க் காணப்படுகிறார்.

**சோதனைகள்.** — ஞானஸ்நானத்திற்குப் பின்பு இயேசுகிறிஸ்துவுக்கிருந்த உணர்ச்சியைப்பற்றி நாம் அவருடைய சோதனையைக்குறித்தசரித்திரத்தினால் கொஞ்சம் அறிந்துகொள்ளுகிறோம். அச்சரித்திரம் முதலாவதாக இயேசுவாலே சொல்லப்பட்டிருக்கவேண்டும். தமக்குச் சம்பவித்ததையெல்லாம் அவர் தெளிவாகச் சாதாரண வார்த்தைகளில் சொல்லுகிறது அசாத்தியமாகையால் தமது அநுபவத்தை இப்படிக் குறிப்பிட்டிருக்கிறார். குறிப்பாகமாத்திரம் காட்டியிருந்தபோதிலும், அதிலே சில காரியங்கள் தெளிவாயிருக்கின்றன. அவர் அந்தச் சமயத்தில் தம்மை மேசியாவாக எண்ணினதோடுகூட, தமக்குச் சில புதிய வல்லமைகள் உண்டென்றும் அறிந்திருந்தபடியால், தாம் செய்யப்போகிற ஊழியத்தைக்குறித்துச் சீக்கிரத்தில் சில தீர்மானங்களைச் செய்யவேண்டியதாக இருந்தது. யூதர் எதிர்பார்த்திருந்த பிரகாரமாக உலக ராஜ்யங்களையெல்லாம் தமக்கு வசப்படுத்தி, தாவீதைவிட பெரிய மகிமையோடு எருசலேமில் மகாராஜாவாக வீற்றிருக்கவேண்டுமோ? தமக்கிருக்கிற இப்புதிய அற்புத வல்லமையைத் தமது தற்பிரயோஜனத்திற்காக உபயோகிக்கலாமா? ஆச்சரியமான செய்கைகளால் தாமே பிரசித்திபெற்ற மேசியாவென்று ரூபகாரப்படுத்தவேண்டுமோ? அல்லது மட்டில்லாத தமது அன்பைத் தமது கிரியைகளால் காட்டவேண்டுமோ? இவ்வித கேள்விகளுக்கு அவர் சோதனைகாலத்தில் உத்தரவுகொடுத்து, அந்நாள் முதற்கொண்டு, முடிவுபரியந்தம் அத்தீர்மானங்களின்படி தமது ஊழியத்தை நடத்தினார். அவருடைய ராஜ்யம் உலக ராஜ்யமன்று; ஆன்மாக்களை ஆளுகிற ராஜ்யம். அவருடைய அற்புத வல்லமை அவருடைய சொந்தக் கஷ்டங்களை நீக்க அல்ல; அவிசுவாசமுள்ள ஜனங்களைப் பிரமிக்கச்செய்ய அல்ல; மனிதருடைய குறைவுகளை நீக்கி, தேவனுடைய மகிமையையும் அன்பையும் வெளிப்படுத்துகிறதற்கேயாம்.

**முதற் சீஷர்.**—கானாவூரில் செய்த அற்புதம்.

சோதனைகள் முடிந்தவுடனே நேர்ந்த சம்பவங்களை நாம் நான்காம் சுவிசேஷத்தில் பார்க்கலாம். இயேசு சிலகாலம் யோர்தான் நதியண்டை யோவான்ஸ்நானனுக்குச் சமீபத்திலிருக்கையில், யோவான் இரண்டொரு முறை (யோவா $1^{29, 36}$) அவரைச் சுட்டிக்காட்டினமையால், யோவானுடைய சீஷரில் சிலர் இயேசுவே வரவேண்டிய மேசியாவென்று நம்பி அவரைப் பின்தொடர்ந்தார்கள். அச்சீஷர்கள் பிற்காலத்தில் இயேசுவால் அப்போஸ்தலராகத் தெரிந்துகொள்ளப்பட்டபோது எப்போதும் அவரோடுகூடவே இருந்ததுபோல ஆரம்பத்தில் இருக்கவில்லை. சில நாள் அச்சீஷர்கள் போய் அவருடைய உபதேசத்தைக் கேட்பார்கள். சிலகாலம் தங்கள் சாதாரண ஜீவனத்துக்குரிய தொழிலைப் பார்த்துக்கொள்ளுவார்கள். அவர்களுக்கும் இயேசுவுக்கும் இப்படிப்பட்ட சம்பந்தம் இருக்கும்போது, அவர்கள் யோர்தான் நதியை விட்டு கலிலேயாவுக்குப் போனார்கள். அந்நாட்களில் இயேசு யோசேப்பின் வீட்டை முற்றிலும் விட்டுவிடவில்லை. அப்பொழுது அவரோடுகூட அவருடைய தாயாரும் அவரிடம் புதிதாய்ச் சேர்ந்திருந்த சீஷரும் கானாவூரில் நடந்த கலியாணத்திற்கு அழைக்கப்பட்டார்கள். அங்கு அப்புதிய சீஷர்கள் அவர் செய்த முதலாம் அற்புதத்தைக் கண்டு, அவர்மேல் வைத்த விசுவாசத்தில் ஸ்திரப்பட்டார்கள்.

**முதலாம் பஸ்கா.**—அதன்பிறகு சிலகாலம் இயேசுநாதர் கப்பர்நகூமில் தங்கி, அங்கிருந்து பஸ்காபண்டிகைக்கு எருசலேமுக்குப் போனார். அதுசம்பந்தமாய் நாம் யோவான் சுவிசேஷத்தில் வாசிக்கிற பிரகாரமாக, அவர் தேவாலயப் பிராகாரத்தில் வியாபாரம் செய்கிறவர்களையும் வாங்குகிறவர்களையும் அங்கிருந்து துரத்தினார். மற்றச் சுவிசேஷங்களை நாம் வாசித்தால், இயேசு அறையப்படுவதற்கு முந்தின வாரத்தில் அவர் இப்படிச் செய்ததாகப் பார்க்கிறோம். மாற் $11^{15-18}$. ஒருவேளை அவர் இதை இரண்டுவிசை செய்திருக்கலாம். அது சந்தேகத்துக்கிடமாயிருக்குமாயின், நம்மில் பெரும்பான்மையோர் யோவான் அப்போஸ்தலனே நான்காம் சுவிசேஷத்தில் தாம் கண்ட காரியங்களைத் திட்டமாய் எழுதுகிறானென்று நம்புகிறபடியால், யோவான் எழுதியிருப்பதே சரியாயிருக்குமென்று நம்பவேண்டும். இயேசு வியாபாரிகளைத் துரத்திய செய்கையால் தாம் மார்க்கச் சீர்திருத்தம் செய்கிறவ

ராகக் காணப்படுகிறார். மேலும் யாவரும் இவ்வளவு அதிகாரமுடைய இவர் யாரென்று கேட்கவேண்டியது அவசியமாயிற்று. இக் காலத்தில் இயேசுவின் உபதேசத்தை ஏற் றுக்கொண்டோர் ஞானஸ்நானம் பெற்றார்க ளென்று யோவான் சுவிசேஷத்தில்மாத்திரம் (யோவா $3^{22}$ $4^{1}$) வாசிக்கிறோம். அவர் எருச லேமிலிருந்த காலத்தில் யூத மகா சங்கத் தைச் சேர்ந்த நிக்கொதேமுவோடு செய்த சம்பாஷணையில் அவர் மறுபிறப்பைப்பற்றிய உபதேசத்தை அருளிச்செய்தார். சிறிது காலத்துக்குள் யோவான்ஸ்நானன் ஏரோது அந்திப்பாவால் சிறையில் வைக்கப்பட்ட போது இயேசு கலிலேயாவுக்குப் போனார். அவர் சமாரியாநாட்டின் வழியாகப் போய்ச் சீகேம் என்னும் பெயருள்ள ஊரில் இரண் டொருநாள் தங்கி அநேகருக்கு உபதேசம் செய்தார். யோவா $4^{39-42}$. சமாரியருக்குங்கூட மேசியா வருகிறதைப்பற்றி ஒருவித நம்பிக் கை யிருந்தது. இயேசு தாமே இந்நம்பிக்கை யை நிறைவேற்றுகிறவரென்று அவர்களுக் குக் காட்டினதாக வாசிக்கிறோம். ஆனால் அக்காலத்தில் அவர் யூதருக்குத் தம்மை அவ் விதமாய் வெளிப்படுத்தவில்லை. யூதரல்லாத வர்களோடு ஒருவேளை அவர் தாராளமாய்ப் பேசியிருக்கலாம். மாற் $7^{31}$ யோவா $2^{13}$-$4^{42}$-ல் சொல்லப்பட்ட சம்பவங்களெல்லாம் மூன்று நாலு வாரத்துக்குள் நடந்திருக்கும். அப் போது ஆண்டவர் கலிலேயாவுக்குச் சென்று சிலகாலம் பகிரங்கமான ஊழியத்தை அதிக மாய்ச் செய்யாமலிருந்தார். அப்பொழுது அவருடைய சீஷர்கள் தங்களுடைய சாதா ரணமான தொழிலுக்குத் திரும்பிப் போ னார்கள்.

B. அதிகமான கிரியைகளை நடப்பிக்கிற முதற்பாகம். ராஜ்யத்தை ஸ்தாபித்தல்.

**இடம்:** பெரும்பாலும் கலிலேயா, எருச லேம்.

**காலம்:** கி-பி. 27-ஆம் சுமார் பெந்தெ கோஸ்துமுதல், 28-ஆம் ஏறக்குறைய பஸ்கா பண்டிகைவரைக்கும். மத் $4^{12}$-$13^{53}$ மாற் $1^{14}$-$6^{13}$ லூக் $4^{14}$-$9^{6}$ யோவா 5 அதி.

இப்பாகத்தில் நாம் கவனிக்கவேண்டிய விசேஷங்களாவன:—

1. பன்னிருவரை அழைத்தல்; பயிற்றல்; அனுப்புதல். பிறகு, லூக்கா சுவிசேஷத் தில் சொல்லியிருக்கிறபடி, எழுபதுபேரை அழைத்து அனுப்புதல்.

2. சிறிது சிறிதாய் யோவான்ஸ்நானன் ஊழியத்திற்கும் இயேசுவின் ஊழியத்திற்கு முள்ள வித்தியாசங்கள் வெளியாதல்; யோவானின் ஊழியத்தைவிட இயேசு செய்த ஊழியம் சிலாக்கியமாகத் தோன்றல்.

3. பரலோக ராஜ்யத்தின் யதார்த்தமான தன்மையைக்குறித்துச் சொல்லிய விவரமான உபதேசித்தல்.

4. மேசியாவுக்குரிய பல கிரியைகளை நடப்பித்தல்; விசேஷமாக வியாதியஸ்தரைச் சொஸ்தப்படுத்தல்.

5. இக்கிரியைகளைக் கண்ட சாதாரண ஜனங்கள் அதிகமாய்ப் பிரமித்துச் சந்தோ ஷப்பட்டாலும், இயேசுவின் உட்கருத்துக் களை உள்ளபடி அறியாமலிருத்தல்.

6. பரிசேயர், வேதபாரகர், இவர்கள் கொள்கைக்கும், இயேசுவின் போதனைக்கு முள்ள பெரிய வித்தியாசம் மேன்மேலும் வெளியாக, அவர்கள் பகையும் அதிகரித்தல்.

7. அவருடைய சீஷர்கள் அவரது செய் கைகளையும் வார்த்தைகளையும் கவனித்து, அவரே மேசியாவாக இருக்கவேண்டுமென்று நாளுக்குநாள் எண்ணங்கொள்ளல். இவை களைத் தனித்தனியே கவனிப்போம்.

(1) சீஷரை அழைத்தல். சீஷரை அழை த்தபிறகுதான் ஆண்டவர் தமது பகிரங்கமான ஊழியத்தை ஆரம்பித்தார். முதல் மூன்று சுவி சேஷகர்கள் அவ்வூழியத்தைப்பற்றிப் பேசு வதற்கு முன்னதாகவே சீஷரை அழைத் தலைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். ஒருநாள் மீன் பிடிப்பவர்களான சீமோனும் அந்தி ரேயாவும், யாக்கோபும் யோவானும் கடற் கரையில் தங்கள் வலைகளைப் பழுதுபார்த்துக் கொண்டிருக்கையில், இயேசு அங்கே வந்து நின்று, 'என்னைப் பின்பற்றி வாருங்கள்' என்று அழைக்கிறதைக் கேட்டார்கள். ஏற் கனவே அவர்கள் ஒருவிதமாய்ச் சீஷராயி ருந்தபோதிலும் இது நூதனமான அழைப்பு. இதுமுதல் அவர்கள் இயேசுவோடே தரித் திருந்து அவருடைய உபதேசத்தைத் தொட ர்ச்சியாய்ப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். அவர் கள் கேள்வி கேட்கும்போது, அவர் தக்க விடை சொல்லுவார். பிறருக்குச் சொல்லாத சில விஷயங்களை விவரமாய் அவர்களுக்கு உபதேசிக்கிறார். அவர் இவ்விதமாய் அழைத்த பன்னிருவரில் உயர்ந்த அந்தஸ்துள்ளவன் இல்லை. ஆனாலும் சிலருக்குச் சொத்திருக் கலாம். சிலருக்குச் சில சொந்த படவுக ளுண்டு. மத்தேயு ஒரு ஆயக்காரன். இரண் டாம் சீமோன் செலோத்தியர் வகுப்பைச் சேர்ந்தவன். இயேசு இவர்களைத் தெரிந்து கொண்ட நோக்கம் என்னவென்றால், இந்தச் சீஷர்களே கற்றுக்கொள்ளுகிறதற்கு ஆயத்த முள்ளவர்களும், தாங்கள் கற்றுக்கொண்டதை மற்றவர்களுக்குச் சொல்லக்கூடியவர்களுமா

யிருப்பார்கள் என்பதாம். அவர்களுக்கு அவர் தாம் மற்றோரிடத்தில் எடுத்துக் கூறப் போகிற போதனையை விவரமாகச் சொல்லியருளினார். அதின் பொருள் பரலோக ராஜ்யத்தின் ரகசியமே. அவர்கள் உடனே சகல காரியங்களையும் அறிந்துகொள்ளாமல், சிறிது சிறிதாகவும் அதிக தாமதமாகவும், உணர்வடைந்தார்கள்.

சிலகாலமானபிறகு (ஒருவேளை 28-ம் வருஷத்தின் துவக்கத்தில்) இயேசு தாம் போய்ச் சந்திக்காத சில நாடுகளுக்கும் கிராமங்களுக்கும் தமது சீஷர்களை அனுப்பினார். போதிக்கிறதற்கு அவர்களுக்கு அதிகாரம் அவர் கொடுக்கவில்லை. அவர்கள் சில அற்புதமான கிரியைகளைச் செய்து, பரலோக ராஜ்யம் சமீபித்திருக்கிறது என்கிற ஒரே விளம்பரத்தை எங்கும் கூறவேண்டும். மத் $10^{7}$. லூக்கா சுவிசேஷத்தில்மாத்திரம் எழுபது சீஷர்களை அனுப்பினதைப்பற்றிய விஷயம் சொல்லப்பட்டிருக்கிறதினாலும், லூக் $10^{1}$-ல் சில கைப்பிரதிகள் 'எழுபத்திரண்டு' என்று சொல்லுகிறதினாலும் சிலர் இதைப்பற்றி சந்தேகங் கொள்ளுகிறார்கள். ஏனெனில், பூர்வீகத்தில் உலகத்திலுள்ள ஜாதிகளின் தொகை 72 என்கிற ஒரு கொள்கையிருந்தது. அதனால் இஸ்ரவேலருக்கு எவ்வாறு 12 பேர் அனுப்பப்பட்டார்களோ, அவ்வாறே புறஜாதியாரான உலகத்திலுள்ள 72 ஜாதிகளுக்கும் 72 பேர் அனுப்பப்பட்டார்கள் என்று பிற்காலத்தில் எழுதப்பட்டிருக்கலாமென உத்தேசிக்கிறார்கள். ஆனாலும் அப்படிப்பட்ட ஐயத்துக்கு இடமில்லையென்று நம்மில் பெரும்பான்மையோருக்குத் தோன்றும். பன்னிரண்டு அப்போஸ்தலர்களைத்தவிர இன்னும் அநேகர் சீஷர்களாய் இருந்தார்களென்பது உண்மை. அவர்களில் சிலருக்கு அவர் விசேஷித்த வேலையைக் கொடுத்திருக்கலாம். இது ஆச்சரியமான காரியமன்று. மேலும் நாம் லூக்கா 10-ம் அதிகாரத்தை வாசிக்கும்போது, இந்தச் சரித்திரம் உண்மையானதென்று தோன்றுகிறது.

(2) யோவான்ஸ்நானனுடைய ஊழியத்துக்கும் இயேசுவின் ஊழியத்துக்கும் மிகுந்த வித்தியாசங்கள் தெளிவாதல். — யோவான் ஸ்நானனும், இயேசுவும் இயேசுவுடைய சீஷர்களும் ஒரே விளம்பரத்தோடு தங்களுக்குரிய பிரசங்கத்தொழிலை ஆரம்பித்தார்கள். அந்தமட்டுந்தான் அந்த ஊழியம் ஒன்றாயிருந்தது. ஆனால்யோவான் முன்னே செய்த ஊழியத்தை இயேசு பிந்தினகாலத்தில் ஒருங்கே கவனித்தபோது, 'பரலோக ராஜ்யத்தில் சிறியவனாயிருக்கிறவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறான்' என்று சொன்னார். மத் $11^{11}$. ஏனென்றால் யோவான் பரலோக ராஜ்யத்துக்குப் புறம்பே இருந்தான். யோவானுடைய ஊழியம் அதற்குரிய மனந்திரும்புதலைப்பற்றிய உபதேசத்துடனே நின்றுவிட்டது. தன் வேலைக்கிசைய யோவான் சந்நியாசமாய் வனவாசஞ் செய்தான். இயேசுவோ அவ்விதம் செய்யவில்லை. அதுவே எல்லாராலும் முதலாவது கவனிக்கப்பட்ட ஒரு வித்தியாசம். மாற் $2^{18-22}$ மத் $11^{18}$. ஆனால் புறம்பான வித்தியாசத்தைப்பார்க்கிலும் உள்ளான பெரிய வித்தியாசங்களிருந்தன. பரலோக ராஜ்யத்துக்காக ஒவ்வொருவனும் தன்னைச் சுத்தப்படுத்தி ஆயத்தம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று யோவான் உபதேசித்தபோதிலும், அதின் ராஜாவைக்குறித்தும், அந்த ராஜ்யத்தின் தன்மையைக்குறித்தும் சாதாரண யூதருக்கிருந்த எண்ணமே யோவானுக்கும் இருந்தது. இயேசுவோ அந்த எண்ணத்தை மாற்றி, ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் வகையையும் மாற்றும்படியே வந்திருந்தார். அதனாலே யோவான் தன்னுடைய அந்தியகாலத்தில் சிறைச்சாலையிலிருந்தபோது, தன் வேலையெல்லாம் கெட்டுப்போனதே என்கிற விசாரத்துடன், தான் எதிர்பார்த்திருந்த நியாயத்தீர்ப்பு முதலிய அடையாளங்களையெல்லாம் இயேசு செய்யவில்லை என்று அறிந்து, சந்தேகமுற்று அவர் வாஸ்தவமாகவே மேசியாதானோ அல்லது தான் அவரில்முன்கொண்ட நம்பிக்கையும்விசுவாசமும் வீணாய்ப்போயினவோ என்று விசாரிக்கும்படி சீஷரை அவரிடத்துக்கு அனுப்பினான். அந்தச்சமயத்தில் இயேசு தம்மை மேசியா என்று ஜனங்களுக்குச் சொல்ல விரும்பாமையால், யோவானுக்கு யாதொன்றும் நேராக விளக்கிக் காட்டாமல், ஏசாயாவின் ஆகமத்திலுள்ள சில வாசகங்களை அவனுக்கு நினைப்பூட்டி, அவ்விதமாக அவனுக்கு மேசியாவைப்பற்றியும் அவர் செய்யும் கிரியைகளைப்பற்றியும் இருந்த எண்ணத்தை மாற்றும்படி பிரயாசப்பட்டார்.

(3) ராஜ்யத்தைப்பற்றிய உபதேசம். — யோவான்ஸ்நானன் கேட்க இயலாமலிருந்த அநேக உபதேசங்களைக் கலிலேயாவில் கூடி வந்த திரளான ஜனங்கள் நாளுக்கு நாளாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். விசேஷமாகப் பன்னிருவரும் அவைகளைக் கற்றுக்கொண்டு வந்தார்கள். அக்காலத்தில் ஆண்டவர் அருளிச்செய்த உபதேசத்தின் விசேஷித்த பொருளானது பரலோக ராஜ்யத்தின் தன்மையும், அதின் குடிகளின் குணாதிசயங்களுமே. அதைக்குறித்து 'இயேசுவின்

போதனை' என்கிற நிபந்தத்தில் விவரிக்கப்படும்.

(4) மேசியாவுக்குரிய பல கிரியைகளை நடப்பித்தல்.—மேலே குறிக்கப்பட்ட இந்தக் காலத்தில் இயேசு அநேக அற்புதங்களைச் செய்தார். அந்த அற்புதங்கள் வாஸ்தவமாய் நடந்தன என்பதைக்குறித்து தற்காலம் சுவிசேஷ ஆராய்ச்சி செய்திருக்கிற ஒவ்வொருவருக்கும் சந்தேகங் கிடையாது. அற்புதங்கள் உலகத்தில் நடக்கவே முடியாது என்று சொல்லுகிறவர்களைத்தவிர, சுவிசேஷங்களில் சொல்லப்பட்ட அற்புதங்களைப்பற்றிய அத்தாக்ஷிகளை ஆராய்ந்தவர்கள் எல்லாரும் இவைகள் யதார்த்தமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவைகளைப்பற்றி கவனிக்கவேண்டிய சில காரியங்களாவன:

இந்த அற்புதங்கள் எல்லாம் இயேசு யோவான்ஸ்நானனுக்குச் சொன்ன விடையில் குறிக்கப்பட்ட கிரியைகளைப்போலிருக்கின்றன. அதாவது, அவைகள் இரக்கத்தின் கிரியைகளாயிருந்து, பூர்வீகத்தில் சொல்லப்பட்ட அநேக தீர்க்கதரிசனங்களை நிறைவேற்றுகிறவைகள். மேலும் இயேசு ஒரேவிதமான அற்புதங்களைமாத்திரம் செய்தார். தம்முடைய கஷ்டத்தை நீக்கிக்கொள்ள அவர் அற்புதம் செய்யவில்லை. அடையாளம் வேண்டுமென்று விரோதிகள் கேட்டபோது யாதொரு அடையாளத்தையும் அவர் காண்பிக்கவில்லை. அவர் வாய்மொழியாகச் சொன்ன அநேக உபதேசங்களைத் தாம் செய்த அற்புதங்களைக் கொண்டு உணர்த்திக்காட்டினார். அந்த அற்புதங்கள் போதனைக்கு ஏதுவாகவே இருந்தன. தாம் சொல்லிவந்ததற்கிசைய பரம ராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்தாரே ஒழிய, ஜனங்களைப் பிரமிக்கப் பண்ணுவதினிமித்தம் அவர் யாதொன்றுஞ் செய்யவில்லை.

(5) இந்தக் கிரியைகளைக் கண்டு சாதாரண ஜனங்கள் அதிக ஆச்சரியமும் சந்தோஷமுமடைந்தாலும், இயேசுவின் மன எண்ணத்தைச் சரியாய் அறிந்துகொள்ளாமல் இருத்தல்.— நாம் மேலே 4-ம் சுவிசேஷத்திற்கிசையக் காட்டியிருக்கிறபடி இயேசு பன்னிருவரை அழைக்க முந்தி விசேஷித்த ஒழுங்கு ஒன்றுமின்றிச் சில இடங்களுக்குப் போய் ஊழியம் செய்துவந்தார். ஒருவேளை அந்தக் காரணத்தால்தான் நாம் மாற் $1^{32-34}$-ல் வாசிக்கிறபிரகாரம், அவர் தம்முடைய பகிரங்கமான ஊழியத்தை ஆரம்பித்த அன்றைக்கே திரளான ஜனங்கள் அவரிடத்திற் கூடிவந்து அவருடைய கிரியைகளைக்குறித்தும் உபதேசத்தைக்குறித்தும் மிகுந்த களிப்படைந்தார்கள். அந்த நாளில் மாத்திரமன்று, அந்தக் காலத்திலெல்லாம் இயேசு எங்கே இருந்தாலும் திரளான ஜனங்கள் எப்போதும் அவரைச் சூழ்வே யிருந்தார்கள். ஜனங்கள் அவருக்கும் மற்ற ரபிமாருக்கும் செய்கையிலும் வார்த்தையிலு மிருந்த பெரும் வித்தியாசத்தைக் கண்டு அவர் அதிகாரத்தோடு பேசி, அதிகாரத்தோடு கிரியைகளை நடப்பிக்கிறார் என்று புகழ்ந்தார்கள். ஆனாலும் அவரே வரவேண்டிய ரக்ஷகரென்று அவர்கள் எண்ணவில்லை. பொதுவாக யோவான்ஸ்நானனுடைய வார்த்தைகளைக் கேட்டவர்கள் இச்சமயத்தில் அவைகளைப் பற்றிக் கவனியாமலிருந்தார்கள். சாதாரண ஜனங்கள் மகா தீர்க்கதரிசி யொருவர் தோன்றியிருக்கிறார் என்றுமட்டும் எண்ணினார்களென்று லூக் $7^{16}$-ல் பார்க்கிறோம்.

(6) பரிசேயர் விரோதித்தல்.—ஆரம்பத்திலே பரிசேயர் மற்றவர்களைப்போல இயேசுவுக்கும் அவருடைய சீஷருக்கும் சிநேகங் காட்டித் தங்கள் சொந்த வீடுகளுக்கு அவர்களைப் போஜனத்துக்கு அழைத்தார்கள். தீர்க்கதரிசியொருவர் தோன்றுகிறது அசாத்தியமென்று அவர்கள் சொல்லக்கூடியவர்களல்லர். அவர்கள் தங்கள் சொந்த நோக்கத்தின்படி அவர் மெய்யான தீர்க்கதரிசியா இல்லையாவென்று திரும்பத் திரும்பச் சோதிக்கும்படி பிரயாசப்பட்டார்கள். யோவா $1^{19}$ $7^{47}$ மத் $12^{38}$ $16^{1}$ $19^{3}$. என்றாலும் சீக்கிரத்துக்குள் அவர்களுக்குள்ளே சமுசயங்கள் தோன்றின. மேலும் பரிசேயருடைய ஒழுக்க முறைகளெல்லாம் கண்டிப்பாயும், இயேசுவினுடைய ஒழுக்க முறைகளெல்லாம் இரக்கமாயும் இருந்தன. உபவாசம், ஸ்நானம்முதலிய அநேக காரியங்களில் அவருடைய வழக்கத்துக்கும் பரிசேயருடைய ஆசாரத்துக்கும் நேர் விரோதமிருந்தது. இதுவுமன்றி பரிசேயர் இகழ்ந்த ஜனங்களோடு இயேசு மனப்பூர்வமாய்ச் சகவாசம் பண்ணினார். மாற் $2^{15-17}$. அதோடு அவர் பரிசேயரை பகிரங்கமாகக் கண்டிக்க ஆரம்பித்தார். விசேஷமாக ஓய்வுநாளைப் பற்றிய விஷயங்களில் அவர்கள் செய்திருந்த சட்டங்களை அவர் மீறி, அவர்களுடைய இரக்கமில்லாத தன்மையைக் காட்டினார்.

(7) இயேசு இன்னாரென்று சீஷருக்குச் சிறிது சிறிதாக வெளியாதல்.—இந்தக்காலத்தில் இயேசு தாம் மேசியா என்று யாருக்கும் தெளிவாய்ச் சொல்லவில்லை. பிசாசு பிடித்தவர்கள் அவரை அறிந்துகொண்டது ஆச்சரியம்; அவர்களை அவர் கண்டித்தது அதை விட ஆச்சரியம். அவர் அவ்விதம் செய்ததின் நோக்கமானது, ஜனங்கள் தாம் மேசியா

என்று அறியவந்தால், மேசியாவைப்பற்றி அவர்களது எண்ணம் தப்பிதமாயிருந்தமையால், உடனே அவர்கள் தம்மை ராஜாவாக்கும்படி கலகம் உண்டாக்குவார்கள் என்பதுதான். மேலும் சீஷர்கள் தாம் தம்மைப்பற்றிச் சொல்வதினாலன்று, தாங்களே தம்மைக் கவனிப்பதினாலே தாம் மேசியா என்று அறிந்துகொள்ளவேண்டுமென்று விரும்பினார். தவிர ராஜ்யத்தைக்குறித்து ஜனங்களுக்கிருந்த தப்பான எண்ணங்களை மாற்றின பிறகுதான் அதின் ராஜன் இன்னாரென்று அவர்களுக்குச் சொல்லவேண்டியது. ஆகையினாலே நாம் குறித்திருக்கிற இக்காலத்தில் அவர் தாமே மேசியாவென்று சொல்லாதபடிக்கு, மெய்யான மேசியாவுக்குரிய கிரியைகளை நடப்பித்து, அவ்விதமாய்த் தம்மைச் சிறுகச் சிறுக வெளிப்படுத்தினார்.

C. நடுப்பாகம்: இயேசுவின் கிரியைகளும், பரிசேயருடைய விரோதமும்.

**இடம்:** கலிலேயா. ஒரு முறை பலெஸ்தீனாவின் வட எல்லையைத் தாண்டிப்போதல்.

**காலம்:** கி-பி. 28-ஆம் வருஷத்தில் பஸ்காமுதல் கூடாரப் பண்டிகைவரையில். மத் $14^{1}$-$18^{35}$ மாற் $6^{14}$-$9^{50}$ லூக் $9^{7-50}$ யோவா 6 அதி. இதிலே பின்வரும் சங்கதிகள் கவனிக்கத்தக்கன.

1. சாதாரண ஜனங்கள் இன்னும் அதிகமாய் வைராக்கியங்கொண்டு, பிறகு அவர் தாங்கள் எதிர்பார்க்கிறவைகளைச் செய்யமாட்டாரென்று கண்டு, அதைரியப்பட்டுப் பின்வாங்கிப்போதல்.

2. வேதபாரகருக்குள்ளும் பரிசேயருக்குள்ளும் இன்னும் அதிகமான விரோதமுண்டாதல்.

3. சீஷருக்குள் சற்று அறிவுள்ள விசுவாசமுண்டாதல்; கடைசியாகப் பேதுரு தன் விசுவாசத்தை அறிக்கையிடுதல்.

4. மறுரூபமடைந்தபோது பிதாவே இயேசுவுக்குச் சாக்ஷி பகருதல்.

5. ஜெயங்கொண்டேன் என்கிற எண்ணம் இயேசுவுக்குள் உண்டாகுதல். மத் $11^{25-30}$ லூக் $10^{17-24}$.

6. அதேசமயத்தில் அவர் வரப்போகிற பாடுகளையும் உயிர்த்தெழுதலையும் தெளிவாகக் கண்டு, அவைகளைத் தெரிவிக்க ஆரம்பித்தல்.

இங்கே குறிக்கப்பட்ட இந்த ஆறுமாத காலங்களில் அவர் கலிலேயாவில் சிலகாலமாக தாமதித்திருந்து, 5000 பேரையும் 4000 பேரையும் போஷித்தல், ஜலத்தின்மேல் நடத்தல் முதலிய சில விசேஷித்த அற்புதங்களைச் செய்து, சில முக்கியமான போதனைகளை அருளிச்செய்தார். பிறகு இதுவரைக்கும் செய்யாத ஒரு பெரிய சுற்றுப்பிரயாணம் பண்ணினார். அதில் அவர் தீரு சீதோன் என்கிற அந்நிய நாடுகளைக் கடந்து, அப்புறம் பிலிப்பு செசரியாவுக்குக் கிழக்குப் பக்கமாகத் திரும்பி, மறுபடியும் தெற்கே சென்று, தெக்கப்போலியின் ஊர்கள் வழியாய்க் கப்பர்நகூமுக்கு வந்தார். இந்தப் பிரயாணத்தின் நோக்கம் பிரசங்கம் பண்ணுவதன்று. கலிலேயாவின் ஜனங்களுக்குள் இக்காலத்தில் அவரைக்குறித்து உண்டான நம்பிக்கையால் அவரை ராஜாவாக்கலாமென்றெண்ணினார்கள். யோவா $6^{15}$. இதற்குத் தப்பிக்கொள்ளுகிறதற்கும், தமக்கு நேரிடப்போகிற முடிவைக்குறித்துச் சீஷரோடு சாவகாசமாய்ச் சம்பாஷணை செய்கிறதற்கும் ஜனக்கூட்டத்தை விட்டுச் சீஷரோடு தனித்துப் போனார். மற்றவர்கள் இந்தச் சமயத்தில் தம்மை அறியவேண்டுமென்று அவர் விரும்பவில்லை. மாற் $7^{24.36}$ $8^{30}$ $9^{9}$ மத் $11^{20}$ முதலிய வாக்கியங்களில், அவர் கலிலேயாவில் செய்த ஊழியம் முடிவுக்கு வந்திருக்கிறதென்று பார்க்கிறோம்.

(1) சாதாரண ஜனங்கள்மேன்மேலும் வைராக்கியங்கொண்டு, பிறகு பின்வாங்கிப் போதல். கி-பி. 28-ஆம் வருஷத்துப் பஸ்கா பண்டிகைக்குச் சிறிதுகாலத்துக்கு முந்திக் கலிலேயா ஜனங்கள் இயேசுவைக் குறித்துக்கொண்டிருந்த எண்ணம் மேல்நிலைக்கு வந்தது. இதற்கு முகாந்தரம் அவர் ஐயாயிரம்பேரைப் போஷித்ததுதான். அப்போது கூடின ஜனக்கூட்டத்தில் எருசலேமுக்கு யாத்திரை பண்ணப் போகிறவர்கள் அநேகம்பேர் இருந்திருப்பார்கள். தாங்கள் எதிர்பார்த்திருந்த ரக்ஷகர் இவர்தான் என்று சொல்லி, இவருக்கு இஷ்டமானாலுஞ் சரி, இஷ்டமில்லாவிட்டாலுஞ் சரி, இவரையே ராஜாவாக்கி, ரோமரைத் துரத்தவேண்டுமென்று, அவர்கள் துணிவுகொண்டார்கள். யோவா $6^{15}$. அவரோ அவர்களைவிட்டு விலகிப்போனார். சிலபேர் அவரைப் பின்தொடர்ந்துபோய்க் கப்பர்நகூம் தேவாலயத்தில் அவரைக் கண்டுபிடித்தபோது, அவர்களுக்கு அவர், நாம் யோவா $6^{26-51}$-ல் வாசிக்கிற பிரசங்கத்தைச் செய்தார். அது ஒருவேளை அவர்களுக்கு விளங்காமலிருந்திருக்கலாம். எப்படியாவது அதுமுதற்கொண்டு அவர்கள் அதைரியப்பட்டு, அவரை விட்டுப் பின்வாங்கிப் போனார்கள்.

(2) பரிசேயருடைய விரோதம்.—இக்காலத்தில் இரண்டு மூன்று சம்பவங்களில் பரிசேயருடைய விரோதம் மிஞ்சிப்போயிருக்

கிறதைப் பார்க்கிறோம். மாற் 8[11.15]. விசேஷமாக மாற் 7[1-13]-ல் அடங்கிய பிரசங்கத்தில் அவர் பரிசேயரை முற்றிலும் கண்டித்துத் தள்ளிவிட்டதால், அதுமுதற் கொண்டு பகிரங்கமான விரோதம் ஏற்பட்டிருக்கலாம்.

(3) பன்னிருவருடைய விசுவாசம். பேதுருவின் அறிக்கை.—சாதாரண ஜனங்கள் அதைரியப்பட்டு விலகிப்போனாலும், சீஷர் அவர்களைவிடத் தங்கள் எஜமானனை நன்றாய் அறியக்கூடியவர்களா யிருந்தார்கள். அவர்களுக்கு மேசியாவைப்பற்றிப் பல தப்பபிப்பிராயங்களும் அவருடைய போதனைகளிற் பலவற்றை விளங்கிக்கொள்ளமாட்டாத கஷ்டமும் இன்னுமிருந்தபோதிலும், அவர்கள் அவர் மேலானவரென்று உறுதியாய் நம்பி வந்தார்கள். கடைசியாகப் பேதுரு, நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று பூரண மனதோடு அறிக்கையிட்டு, தங்களுடைய நம்பிக்கையை நன்றாக வெளியிட்டான். கிறிஸ்துவின் தன்மை இன்னதென்பதையும், அவர் செய்யும் ஊழியம் இன்னதென்பதையும் பற்றிய அறிவு பேதுருவுக்குக் குறைவாயிருந்தாலும், இயேசு அவனை ஆசீர்வதித்து, அவனுடைய ஜீவனுள்ள நம்பிக்கையின்மேல் அஸ்திபாரமிட்டுச் சபையைக் கட்டுவதாக வாக்கருளினார்.

(4) மறுரூபமடைதல். — இந்தச் சம்பவத்தைக்கொண்டு பேதுருவின் அறிக்கை உண்மையென்று கடவுளால் ஸ்திரப்படுத்தப்பட்டது. சில விஷயங்களில் இதற்கும் இயேசுவின் ஞானஸ்நானத்திற்கும் ஒற்றுமையுண்டு. அப்போஸ்தலர் வானத்திலிருந்து வருகிற ஒரு சத்தம் தங்கள் ஆண்டவருடைய மகிமையைக் கூறுவதைக் கேட்கிறார்கள். நியாயப்பிரமாணத்தின் ஸ்தானாபதியும், தீர்க்கதரிசனத்தின் ஸ்தானாபதியும் கூடநின்று அவர் அடையப்போகிற மரணத்தைக்குறித்துப் பேசுகிறதைக் கேட்கிறார்கள். இதின் முழு அர்த்தமும் அவர்களுக்கு அப்போது விளங்கியிருக்கமாட்டாது. மேலும் அவர்கள் இதைப்பற்றி மற்றவர்களுக்குச் சொல்லக்கூடாதென்று இயேசு கட்டளையிட்டார். ஆயினும் தெய்வ சாக்ஷி ஏற்பட்டதை யுணர்ந்து அவர்கள் விசுவாசத்தில் ஸ்திரப்பட்டிருப்பார்கள். இயேசுவும் அதினால் திடன்கொண்டிருப்பார்.

(5) இயேசுவினுடைய ஜெயமுள்ள உணர்ச்சி.—மனிதர் பார்க்கிறபிரகாரமாகப் பார்க்கப்போனால், இயேசுவின் ஊழியம் இக்காலத்திற்குள் பலிதமற்றுப் போயிருந்ததாகத் தோன்றும். கலிலேயாவில் செய்தவைகளைக் குறித்து நாம் மத் 11[20-24] யோவா 12[37-40] முதலிய இடங்களில் வாசிக்கிறபடி, பொதுவான ஜனங்கள் நன்றியும் விசுவாசமும் அற்றுப்போயிருந்தார்கள். ஆனாலும் இந்தச் சமயத்தில்தான் அவர் ஆழமான கருத்துள்ள இரண்டு வார்த்தைகளை உரைத்தார். லூக் 10[18]-ல், பிசாசின் வல்லமையெல்லாம் ஒடுக்கப்பட்டுப் போனதென்று வாசிக்கிறோம். மத் 11-ம் அதிகாரத்தில் ஜனங்களுடைய விரோதத்தையும் நன்றியின்மையையும் குறித்துப் பேசினவுடனே, அவர் பிதாவுக்கு ஸ்தோத்திரம் செலுத்தி, ‘சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது; குமாரனும், குமாரன் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும்தவிர, வேறொருவனும் பிதாவை அறியான்’ என்று சொன்னார். அதற்குச் சம்பந்தமாகவே ‘வருத்தப்பட்டுப் பாரம் சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்’ என்கிற கிருபையுள்ள அழைப்பையும் மனுஷருக்கு அருளிச்செய்தார். யார் யார் இந்த வாக்கியங்களை நன்றாய் ஆராய்ந்து அறிந்துகொள்ளுகிறார்களோ, அவர்கள் கிறிஸ்து மார்க்கத்தின் சாரத்தை அறிகிறார்கள்.

D. கிரியைகளை நடப்பிக்கிற காலத்தின் முடிவு; பாடுகள் சமீபமாகக் காணப்படுகின்றன.

**இடம்:** யூதேயா. யோவா 7[10] 11[54]. பெரேயா. மாற் 10[1] யோவா 10[40].

**காலம்:** கி-பி. 28-ஆம் கூடாரப் பண்டிகைமுதல், 29-ஆம் பஸ்கா பண்டிகை வரை. மத் 19[1]-20[34] மாற் 10[1-52] லூக் 9[51]-19[28]. (இது காலவரிசையில் வைக்கப்படவில்லை.) யோவா 7[1]-11[57].

இந்தக் காலத்தைக்குறித்து நாம் விசேஷமாக யோவான் சுவிசேஷத்திலிருந்துதான் அநேக காரியங்களை அறிந்துகொள்ளுகிறோம். இதில் அவர் புதியவிதமாகத் தம்மை ஜீவனையும் ஒளியையும் கொடுக்கிறவராகத் தம்முடைய போதனைகளில் வெளிப்படுத்தினார். இதற்கு முந்தி அவர் அருளிய போதனை விசேஷமாக ராஜ்யத்தைப் பற்றியது; இதுமுதல் அது விசேஷமாக ராஜாவைப் பற்றியது; தாமே ஜீவ அப்பம், ஜீவ தண்ணீர், உலகத்துக்கு ஒளி, நல்ல மேய்ப்பன், உயிர்த்தெழுதலும் ஜீவனுமென்று இப்போது தெளிவா யெடுத்துக் கூறுகிறார். மேலும், இந்தக் காலத்தில் தமக்கு நேரிடப்போகிற மரணத்தை மூன்றுமுறை தெரிவிக்கிறார். பேதுரு அறிக்கை பண்ணினபோதே தமக்கு நேரிடப்

போகிற மரணத்தைக்குறித்தும், அதன் பின்பு வரப்போகிற உயிர்த்தெழுதலைக்குறித்தும் திருவுளம்பற்றினார். மாற் $8^{31}$. மறுரூபம் அடைந்தபின்பு அவ்வாறே மறுபடியும் எச்சரித்துப் பேசினார். மாற் $9^{31.32}$. இந்தக் காலத்தின் முடிவிலே இன்னும் ஒருவிசை அதைப்பற்றி அவர் தம்முடைய சீஷருக்கு விவரமாகச் சொன்னார்.

அவருக்குப் பாடுகள் வரும் என்பது அந்தக் காலத்தின் தன்மையை நன்றாய்க் கவனித்த யாருக்கும் தெளிவாயிருந்திருக்கக்கூடும். ஏரோது அந்திப்பாவும் அவனைச் சேர்ந்தோரும் அவருக்கு விரோதமாயிருந்தார்கள். அவர்களைவிட பரிசேயர் அவரை அதிகமாய்ப் பகைத்தார்கள். இந்தக்காலத்தில் இரண்டுமுறை அவரைக் கொலை செய்கிறதற்குப் பிரயாசப்பட்டார்கள். யோவா $8^{59}$ $10^{39}$. அவர் இனிச் செய்யப்போகிறதெல்லாம் அவர்களுக்குப் பிரியமாயிருக்கப் போகிறதில்லை. ஆகவே அதின் முடிவு எவ்வாறாகுமென்று அதைப்பற்றி யூன்றிக் கவனிப்பவர்களுக்குத் தெரியக்கூடியதுதான். ஆயினும் அப்படிப்பட்டவர்களுக்கிருந்ததைப்பார்க்கிலும் அதிக தெளிவான அறிவு அவருக்கிருந்தது. தீர்க்கதரிசிகள் துன்பப்படுகிறது ஒரு பிரமாணம். மத் $5^{12}$ $23^{24.37}$. யோவான் ஸ்நானனுக்கு நேர்ந்த கதி அவருக்கு ஞாபகத்தில் இருந்தது. மாற் $9^{12}$. மேலும் வேதவாக்கு நிறைவேற வேண்டுமென்கிற உணர்ச்சி அவருக்குள் குடிகொண்டிருந்தது. லூக் $24^{25.44.46}$ முதலியன. பூர்வீக தீர்க்கதரிசனங்களை அவர் அறிந்திருந்தார். ஜெயங்கொள்ளுகிற மேசியாவைப்பற்றிச் சொன்ன வாக்கியங்களை, பாடுபடுகிற தேவனுடைய தாசனைப்பற்றிச் சொன்ன வாக்கியங்களோடு ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு, அவைகளை மனப்பூர்வமாய் நிறைவேற்றினார். அதுமாத்திரமல்ல, அவர் உலகத்தை ஜெயிக்கிறதற்கு ஒரு புது முறையை ஸ்தாபித்தார். மற்றவர்கள் முற்காலங்களில் பலாத்காரத்தினால் மேற்கொண்டிருக்க, அவரோ சாந்தத்தாலும், பலவீனத்தாலும், பொறுமையாலும் தீமையை மேற்கொண்டார். இந்தப் புதுமுறையால் பூரண ஜெயம்பெற வேண்டுமென்றால் மரணத்தையே அடையவேண்டுமென்று தெளிவாக அறிந்து சொன்னார். இதிலெல்லாம் தாம் தமது பிதாவின் சித்தத்தின்படி செய்கிறதாகப் பலமாய் உணர்ந்திருந்தார்.

E. **முடிவு:** எருசலேமில் மகிமையோடு பிரவேசித்தல், கடைசியான போதனை, பாடுகள், மரணம், உயிர்த்தெழுதல், பரலோகம் செல்லுதல்.

**இடம்:** எருசலேம்.

**காலம்:** கி-பி. 29-ஆம் பஸ்காவுக்கு 6 நாள் முந்தியிருந்து, பெந்தெகோஸ்துவுக்குப் பத்து நாளுக்கு முன்வரையில். மத் $21^{1}$-$28^{20}$ மாற் $11^{1}$-$16^{20}$ லூக் $19^{29}$-$24^{52}$ யோவா $12^{1}$-$21^{23}$.

இந்தக்காலத்தில் நடந்த சம்பவங்களின் கால விவரங்களைக்குறித்து சில கேள்விகளுக்கிடமுண்டு. ஆனபோதிலும் அவைகளெல்லாம் சுவிசேஷங்களில் மொத்தமாய்ச் சொல்லியிருக்கிறபடியே நடந்ததைப்பற்றி யாதொரு சந்தேகமுமில்லை. நாலு சுவிசேஷங்களையும் ஒத்துப் பார்க்கும்போது கடைசி ஆறு நாட்களின் சம்பவங்கள் பின்வரும் வரிசையில் நடந்தனவென்று சொல்லலாம்.

சனிக்கிழமை. — குஷ்டரோகியாகிய சீமோன் வீட்டில் போஜனபந்திக்குப் போதல்.

ஞாயிறு. — எருசலேமில் ஜெயகோலத்தோடு பிரவேசித்தல், தேவாலயத்தைச் சந்தித்தல், பெத்தானியாவுக்குத் திரும்புதல்.

திங்கள்.—எருசலேமுக்குப் போய், வழியில் அத்திமரத்தைச் சபித்தல், தேவாலயத்தைச் சுத்திகரித்தல், பெத்தானியாவுக்குத் திரும்புதல்.

செவ்வாய்.—எருசலேமுக்குப் போய், தேவாலயத்தில் போதித்தல், சதுசேயருக்கும் பரிசேயருக்கும் விடையளித்தல், சில உவமைகளைச் சொல்லுதல், பெத்தானியாவுக்குத் திரும்புதல்.

புதன்.—இயேசு எருசலேமுக்குப் போய்ப் பரிசேயரைக் கண்டித்தல், கடைசிக் காலத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்தல், ஆலோசனைச் சங்கம் அவரைப்பற்றி ஆலோசித்தல், யூதாஸ்காரியோத்து அவர்களோடு ஏற்பாடு பண்ணுதல், இயேசு பெத்தானியாவுக்குத் திரும்புதல்.

வியாழன்.—இயேசு பஸ்காவுக்கு ஆயத்தம் பண்ணுதல், இராப்போஜனம், கெத்செமனே தோட்டத்தில் ஆத்தும வேதனைப்படுதல், யூதாஸ் காட்டிக்கொடுத்தல், போர்ச்சேவகர் அவரைப் பிடித்து, பிரதான ஆசாரியன் வீட்டிற்குக் கொண்டுபோதல், அன்னா சில கேள்வி கேட்டல்.

வெள்ளி.—பொழுது விடியுமுன் ஆலோசனைச் சங்கம் காய்பாவுடைய மாளிகையில் கூடிவந்து இயேசுவை விசாரணைசெய்து குற்றவாளியென்று தீர்த்தல், அவரைக் குட்டியடித்தல், பேதுரு மறுதலித்தல், விடியற்காலமானபிறகு பிலாத்து விசாரணைசெய்தல், ஏரோதுவினிடத்தில் அனுப்புதல், மறுபடியும் பிலாத்து விசாரித்தல், தீர்ப்புச் சொல்லல், பரியாசஞ்செய்தல், வாரினாலடித்தல்,

கொல்கொதாவுக்குச் செல்லுதல், ஒன்பது மணிக்கு (மாற்கு அல்லது மத்தியானவேளையில் (யோவான்) அவரைச் சிலுவையில் அறைதல், மரணம், கல்லறையில் அவரை வைத்தல்.

இயேசு எருசலேமில் பிரவேசித்தபோது ஜனங்கள் ஆர்ப்பரித்தபோதிலும், அவர் 5000 பேருக்குப் போஜனமளித்தபோது அவர்களுக் குண்டான வைராக்கியத்தைப்போல இவ்வைராக்கியமும் நிலையற்றது. ஆர்ப்பரித்த சிலர் கலிலேயாவிலிருந்து எருசலேமுக்குப் பண்டிகைக்காக வந்தவர்கள். சிலர் அவர் லாசருவை உயிர்ப்பித்ததைக் கேள்விப்பட்டு வந்தவர்கள். இவர்களில் அநேகர் அவருடைய குணத்தை அறியாமல், மேசியாவைப்பற்றிய சாதாரண எண்ணமுள்ளவர்களாய் அவரை மேசியாவாக வாழ்த்தினார்கள். அதன்பிறகு இயேசு அவர்கள் நோக்கத்தின்படி செய்யாமல், கோவிலில் நின்றுகொண்டு அவர்களுடைய மார்க்கத்து அதிகாரிகளைக் கண்டித்து, ரோமருக்கு விரோதமாக ஒரு வார்த்தையும் சொல்லாமலிருக்கிறதை அவர்கள் பார்த்தபோது, அவர்களுக்குத் திடீரென்றுண்டான வைராக்கியம் திடீரென்று பகையாய் மாறிப்போனது. பரபாஸாகிலும் தன் தேசத்துக்குச் செய்தது தெளிவாயிருந்தது; இவரோ எங்களுக்கு விளங்காதபிரகாரமாய் வெறும்பேச்சு பேசுகிறவரென்று நினைத்து, சில நாட்களுக்குள்ளே 'சிலுவையில் அறையும், சிலுவையில் அறையும்' என்று கூக்குரலிட்டார்கள்.

ஒருவேளை யூதாஸ்காரியோத்துக்கும் அந்த எண்ணமிருந்திருக்கலாம். ஒருவேளை யூதாஸ் நான் அவரை இப்போது அதிகாரிகளுக்குக் காட்டிக்கொடுத்தால், அவர் தம்மை மேசியாவாகப் பிரசித்தப்படுத்தித் தமது வல்லமையைக் காட்டுகிறதற்கு அவசியம் ஏற்படும்; அப்போது எல்லாரும் அவர் பக்ஷத்தில் சேர்ந்துகொள்ள அவர் ராஜாவாக வீற்றிருப்பார் என்று நினைத்திருக்கலாம். இப்படி நினைக்க யாதொரு அத்தாட்சியு மில்லை. அவன் பணத்தின்பேரில் ஆசையுள்ளவனென்று யோவா 12⁵-ஏல் அறிகிறோம். அவ்வாசையோடு வேறு நல்லெண்ணங்களும் கலந்திருக்கலாம். அவன் முற்றிலும் கெட்டவனென்றால் இயேசு அவனைச் சீஷனாகத் தெரிந்திருக்கமாட்டார்.

பரிசேயருக்கும் இயேசுவுக்கும் இக்காலத்தில் நேர் விரோதமிருந்தது. அவர்கள் இன்னும் அவரிடத்தில் கேள்விகளைக் கேட்டாலும், அவர்களுடைய முழுநோக்கமும் பேச்சிலே அவரை அகப்படுத்தவேண்டுமென்பது தான். ஆனாலும் இந்தக் கடைசிவாரத்தில் பரிசேயரைவிட, சதுசேயர்தான் அதிகமாய்ப் பகை காட்டினார்கள். இவர்களே விசேஷமாக இயேசுவைக் கொலை செய்கிறதற்கு ஏற்பாடு பண்ணினவர்கள். இவர்களும் பரிசேயரும் அவரை விரோதிக்கிறதற்கு ஒன்றாய்ச் சேர்ந்தாலும் இவர்களுடைய நோக்கமும் பரிசேயருடைய நோக்கமும் ஒன்றல்ல. யோவா 11⁴⁸-ல் நாம் பார்க்கிறபிரகாரமாக அவர்களுக்கு ரோமர் தங்களுடைய அதிகாரத்தைக் குறைத்துப்போடுவார்கள் என்கிற கவலை இருந்தது. இந்தக் காலமுதற்கொண்டு அவர்களுடைய விரோதந்தான் அதிகமாயிருந்ததென்று பார்க்கிறோம். ஆனாலும் சங்கத்தாருக்கு மரண ஆக்கினை விதிக்கிறதற்கு அதிகாரமில்லை. ஆகையால் ரோம அதிபதி மூலமாகவே அவர்கள் தங்கள் காரியத்தை முடிக்கவேண்டும். அவர்கள் ஆலோசனைச் சங்கத்தில் அவர் தேவதூஷணம் சொன்னதாகக் குற்றம் பாரித்து தீர்ப்புச்செய்தார்கள். அந்தக் குற்றம் ரோமருக்குள் செல்லாதென்று கண்டு, அதை மாற்றி இவன் தன்னைக் கிறிஸ்து என்னப்பட்ட ராஜாவென்றும், இராயனுக்கு வரிகொடுக்க வேண்டுவதில்லை என்றும் சொல்லி, இவன் ஜனங்களைக் கலகப்படுத்தக் கண்டோம் என்று பிலாத்துவிடத்தில் பொய்க்குற்றஞ் சாற்றினார்கள். பிலாத்து விசாரித்து, அவரிடத்தில் குற்றம் இல்லையென்று சொல்ல, ஆலோசனைச் சங்கத்தார் ஜனக்கூட்டங்களைத் தூண்டிவிட்டு, பிலாத்துவின் கோழைத்தனத்தைக் கண்டு, தங்கள் இஷ்டத்திற்கு அவனை இணங்கச் செய்தார்கள். இவனை விடுதலை பண்ணினால், நீர் இராயனுக்குச் சிநேகிதனல்ல, இராயனேயல்லாமல் எங்களுக்கு வேறே ராஜா இல்லையென்று அவர்கள் சொல்ல, அவன் பயந்து, தன் கைகளைக் கழுவி, அவர்கள்மேல் அந்த உத்தரவாதத்தைச் சுமத்தினான்.

இயேசு சிலுவையில் அறையப்பட்ட நாளைக்குறித்தும் மணிநேரத்தைக்குறித்தும் வித்தியாசமான அபிப்பிராயங்களுண்டு. முதல் மூன்று சுவிசேஷங்களை நாம் வாசித்தால் இராப்போஜனம் பஸ்காவைப் புசித்த அன்றைக்கு நடந்தது என்று சொல்லியிருக்கிறது. யோவான் சுவிசேஷத்தை வாசித்தால் (யோவா 13¹ 18²⁸ 19¹⁴· ³¹) இராப்போஜனம் பஸ்காவுக்கு முந்தினநாளில் நடந்ததென்றும், மறுநாள் பஸ்காவுக்கு ஆட்டுக்குட்டியை அடிக்கிற அந்நாழிகையிலே இயேசு பாடுபட்டாரென்றும் சொல்லியிருக்கிறது. அதுபோலவே அவர் சிலுவையில்

அறையப்பட்ட நேரம் மாற் 15[25]-ல் நாம் வாசிக்கிறபிரகாரமாக மூன்றும் மணிநேரம், அதாவது காலமே ஒன்பதுமணி. ஆனால் யோவா 19[14]-ல் சொல்லுகிறபடி ஆறும் மணிக்குள், அதாவது பன்னிரண்டு மணிக்குள் விசாரணை முடியவில்லை. அநேகர் இவ்விஷயங்களில் நாலு சுவிசேஷங்களையும் ஒற்றுமைப்படுத்தப் பிரயாசப்பட்டிருந்தாலும் முடியவில்லை. எதுதான் சரி என்று தீர்மானிக்கிறதற்கு நமக்குப் போதுமான சாதனங்களில்லை. இன்னொரு விஷயத்தைக்குறித்து நமக்குச் சந்தேகங்களுண்டு. இக்கடைசி வாரத்தில் இயேசு எருசலேமின் அழிவை முன் தெரிவித்தாரென்பது நிச்சயம். அதற்குச் சம்பந்தமாக மாற் 13-ம் அதிகாரத்தில் உலகத்தின் முடிவைக்குறித்தும் கடைசி நியாயத்தீர்ப்பைக்குறித்தும், இயேசுவின் இரண்டாம் வருகையைக்குறித்தும் வாசிக்கிறோம். இவைகளின் சில வார்த்தைகளை அவர் எருசலேமின் அழிவைப்பற்றிச் சொன்னாரா, கடைசி நியாயத்தீர்ப்பைப்பற்றிச் சொன்னாரா என்று அறிகிறது கஷ்டம். ஒருவேளை சீஷர் இவ்விரண்டு காரியங்களையுங் கலந்து, எருசலேமின் அழிவு கடைசி காலத்தின் ஆரம்பமாயிருக்கும் என்று எண்ணி, அந்த எண்ணத்தால் இரண்டு காரியங்களையும்பற்றிச் சொன்னவைகளைச் சேர்த்துத் தெரிவித்திருக்கலாம். சிலர் உத்தேசப்படி மாற் 13-ம் அதிகாரத்தைப் பிரித்து, 1-6. 21-23. 9. 11-13. 28-29. 32-35. இவ்வாக்கியங்களில் இயேசுவின் உண்மையான போதனையிருக்குமென்றும், மற்ற வாக்கியங்களில் மேற்சொன்ன எண்ணத்தால் அவர் சொன்னதாக சீஷர்கள் நினைத்திருந்த போதனையடங்கியிருக்குமென்றும் சொல்லுகிறார்கள். அது இருக்கக்கூடியதுதான். விசேஷமாக மாற் 13[30. 31]-ஐ வாசிக்கும்போது இயேசு சொன்ன வார்த்தைகளைச் சீஷர் திட்டமாகத் தெரிவிக்கிறார்களோவென்று சந்தேகிக்கிறோம். இயேசு அந்தத் தலைமுறையிலே தாம் இரண்டாம்முறை வருவதாகத் தெரிவித்தாரா என்பது அதிக சந்தேகத்துக்கிடமானது. எருசலேம் கி-பி. 70-ஆண்டில் அழிந்துபோனதே அவருடைய இரண்டாம் வருகை என்று நினைக்கிறவர்களும் இருக்கிறார்கள். ஆனாலும் அவருடைய இரண்டாம் வருகையின் காலம் யாருக்கும் தெரியமாட்டாதென்று அவர்தாமே சொன்னதைப் பல விடங்களில் வாசிக்கிறோம்.

இயேசு பாடுகள் மத்தியில் நடந்த விதம்.— அந்தக் கடைசியான நாளிலே இயேசு பேசின வார்த்தைகள் சொற்பம், சாதாரணமாய் அவர் பொய்யான குற்றங்கள் சுமத்தக் கேட்டும், படாத பாடுகளைப் பட்டும், மவுனமாயிருந்தார். ஒருதரம் தாமே தேவனுடைய குமாரனென்று பிரதான ஆசாரியனுக்கு அறிக்கையிட்டு, பிறகு பிலாத்துவோடு சில நேரம் சம்பாஷணை பண்ணினார். மற்றப்படி பேசாமலிருந்தார். அவருடைய மனதை நாம் அந்த மவுனத்தாலும், அவர் பேசின சில வார்த்தைகளாலும் அறியவேண்டும். 'உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்' (மத் 5[44]) என்று சொன்னவர் தாம் சிலுவையில் அறையப்பட்டபோது திருவுளம்பற்றின முதல் வார்த்தையால் அதற்கு முன் மாதிரி காட்டினார். சிலுவையண்டை போகையிலுங்கூட அவர் தம்மை மறந்து மற்றவர்களுக்காகப் பரிதபித்தார். லூக் 23[28].

சிலுவையில் அறைதல். — சிலுவையில் அறைதல் ரோமரால் அடிமைகளுக்கும் கலகக்காரருக்கும்மாத்திரம் விதித்த குரூரமான இச்சித்திரவதை பெரிய அவமானமாயிருந்தது. கைகளும் கால்களும் குத்தப்படுதல், காயமுள்ள அங்கங்களை அசைத்து இழுத்தல், இரத்த ஓட்டத்தைத் தடுத்தல், மரண வேதனைகளால் உண்டான பயங்கரமான தாகம் ஆகிய இவைகளைச் சொல்லமுடியாது. அப்படிப்பட்ட மரணத்தின் கொடுமையும் அவமானமும் இயேசுவுக்குப் பூரணமாயிருந்தது. போர்ச்சேவகர் அவருடைய உடுப்புக்காகச் சீட்டுப்போட்டார்கள். அவரோடு சிலுவையில் அறையப்பட்ட ஒருவனும், கூடிவந்திருந்த ஜனக்கூட்டங்களும், பிரதான ஆசாரியரும் அவரைப் பரிகாசம் பண்ணினார்கள். சிலுவையில் அறையப்பட்டவர்கள் வேதனையைச் சகிக்கிறதற்குச் சாதாரணமாய்க் குடிக்கும் மருந்தை அவர் குடிக்கவில்லை. ஆறு மணி நேரமாக அவர் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார். மாற் 15[25. 34]. சாயங்காலம் மூன்று மணிக்கு அவர் மகா சத்தத்தோடு ஜீவனை விட்டார். மூன்று மணி நேரமாக இருள் மூடினது; தேவாலயத்தின் திரைச்சீலை கிழிந்தது. செத்தவர்கள் உயிரோடெழும்பினார்களென்று மத்தேயு சுவிசேஷம் சொல்லுகிறது. முதல் மூன்று சுவிசேஷங்களும் நூற்றுக்கு அதிபதி செய்த அறிக்கையைக் கூறுகின்றன.

கல்லறையில் வைத்தல். — இயேசுவினுடைய சிநேகிதர் ஜனக்கூட்டங்களுக்கு பயந்திருந்தும், அவருடைய பிரேதத்தை மரியாதையாய்ப் புதைக்கிறதற்காவது முயற்சி எடுத்துப் பிலாத்துவினிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டார்கள். அவர்களில் நிக்கொ

தேமுவும் அரிமத்தியா ஊரானாகிய யோசேப்பும் முக்கியமானவர்கள். அவர்கள் அவருடைய சரீரத்தைச் சிலுவையிலிருந்து இறக்கி, அதை மெல்லிய துப்பட்டியில் சுற்றி, கன்மலேயில் வெட்டியிருந்த கல்லறையில் வைத்து, அந்தக் கல்லறையின் வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்டி வைத்தார்கள். மத்தேயு சொல்லுகிறபிரகாரம், யூதர் கேட்டுக்கொண்டதின்பேரில், அதிகாரிகள் பிறகு அந்தக் கல்லுக்கு முத்திரை போட்டு. போர்ச்சேவகரை காவலாக வைத்தார்கள். மூன்றாம்நாளில் இயேசு உயிர்த்தெழுந்தார். **இயேசுவின் உயிர்த்தெழுதல்** என்னும் நிபந்தத்தில் அதைப்பற்றி விவரமாகச் சொல்லப்படும்.

நாற்பது நாளாக அவர் அநேகம் பேருக்குத் தரிசனமாகிப் பின்பு வெற்றிவேந்தராகப் பரலோகம் சென்றார். சென்ற விதத்தைக் குறித்து நமக்குக் கொஞ்சந்தான் தெரியும். அப்போஸ்தலர் நடபடிகள் முதலாம் அதிகாரத்தில் 'அவர் உயர எடுத்துக்கொள்ளப்பட்டார்; அவர்கள் கண்களுக்கு மறைவாக ஒரு மேகம் அவரை எடுத்துக்கொண்டது' என்று சொல்லியிருக்கிறது. அவர் சென்ற விதம் நமக்கு முக்கியமான காரியமன்று; அவர் அடைந்த மகிமையே முக்கியமானதே.

**இயேசுவின் பிறப்பைப்பற்றிய அனுபந்தம்.**—முதலில் நாம் பலெஸ்தீனாவில் ஆண்டவருடைய காலத்தில் வசித்தவர்கள் கண்டும் கேட்டும் இருக்கக்கூடிய காரியங்களை இம்மட்டும் சொல்லியிருக்கிறோம். இப்பொழுது அவருடைய பிறப்பைப்பற்றிப் பேசவேண்டும். மத்தேயு லூக்கா எழுதின சரித்திரங்களிலும் அவர் அற்புதமாய்த் தாவீதின் வம்சத்தில் கன்னிமரியாளிடத்தில் பெத்லகேம் ஊரில் பிறந்தாரென்றும், பிறகு அவருடைய பெற்றோர் நாசரேத்தூரில் குடியாயிருந்தார்களென்றும் சொல்லியிருக்கிறது. அதோடு இந்த இரண்டு சுவிசேஷங்களும் தனித்தனியே இன்னும் அநேக விவரங்களைச் சேர்த்திருக்கின்றன. இரண்டு சரித்திரங்களின் மொத்தப்பொருள் என்னவென்றால், தரித்திரத்திலும் கஷ்டத்திலும் பிறந்த இயேசு பாலகன் பரலோகத்துக்குரிய மகிமையோடு வாழ்த்தப்பட்டார் என்பதே. இவைகள் அவருடைய ஜீவியகாலத்தில் ஜனங்களுக்குப் பொதுவாகத் தெரியாதிருந்தன. அவருடைய தாயார் மூலமாகத்தான் கடைசியாகத் தெரியவந்திருக்கவேண்டும். அநேக வருஷமாக இந்தச் சங்கதிகளைத் தன் இருதயத்திலே வைத்துச் சிந்தனைபண்ணி, பிறகு சில சிநேகிதருக்குச் சொல்லியிருப்பாள். அவர்கள் மூலமாக அது மத்தேயுவுக்கும் லூக்காவுக்கும் தெரியவந்திருக்கும். இயேசுதாமே இந்தச் சங்கதிகளைப்பற்றி ஒரு நாளும் பேசவில்லை. அவர் யோசேப்பின் குமாரனாக எண்ணப்பட்டார். இவர் யோசேப்பின் குமாரனல்லவா என்று ஜனங்கள் அவரைக் குறித்து ஆக்ஷேபித்தபோது அவர் இல்லையென்று மறுக்கவில்லை. லூக்கா சுவிசேஷத்திலுங்கூட அவருடைய தாய் தகப்பன்மாரைக் குறித்து அடிக்கடி வாசிக்கிறோம். மேலும் மத்தேயுவிலும் லூக்காவிலும் அவருடைய வம்ச வரலாறு இரண்டுவிதமாய் வித்தியாசமாக எழுதப்பட்டிருந்தபோதிலும் இரண்டிலும் அது யோசேப்பு மூலமாக, தாவீதின் வம்சத்தைச் சேர்ந்திருக்கிறதாகக் காட்டப்படுகிறது. பவுலினுடைய நிருபங்களை நாம் வாசித்தால் மரியாள் கன்னிகையாய் இருந்து இயேசுவைப் பெற்றாள் என்பதைப்பற்றிப் பவுல் ஒன்றுஞ் சொல்லுகிறதில்லை. இதையெல்லாம் நாம் பார்க்கும்போது, கன்னிப்பிறப்பு இயேசுவினாலும் அவருடைய அப்போஸ்தலராலும் ஒரு முக்கியமான காரியமாக எண்ணப்படவில்லை என்று நாம் சொல்லக்கூடும். ஆனபோதிலும் அற்புதமான இரக்ஷகர் அற்புதமாகப் பிறந்தது நம்பக்கூடாத காரியமன்று. அற்புதமாக இம்மையில் தமது மனுஷீக ஜீவியத்தை முடித்தவர் அற்புதமாக அதை ஆரம்பித்திருப்பார் என்று நினைக்கிறதற்குத் தடையில்லை. (**இயேசுவின் வம்ச அட்டவணை** காண்க.)

இன்னொரு விஷயத்தைப்பற்றிச் சிலருக்கு உண்டாயிருந்த சந்தேகம் இப்போது நீங்கியிருக்கிறது. லூக் 2[2]-ல் சிரேனியு என்பவன் தேசாதிபதியா யிருந்தபோது குடிமதிப்பு எழுதப்பட்டதென்று வாசிக்கிறோம். ஆனால் சிரேனியு கி-பி. 6-வருஷத்தில் சீரியா நாட்டுக்குத் தேசாதிபதியாக நியமிக்கப்பட்டாரென்று நமக்குத் தெரிகிறது. இந்த விஷயத்தில் லூக்கா தப்பிதம் செய்திருப்பாரென்று அநேகர் நினைத்தார்கள். ஆனாலும் அதற்கு முந்தி சிரேனியுவுக்குச் சீரியாவில் உத்தியோகம் இருந்ததென்று இன்னொரு சாசனத்தால் தெரியவந்திருக்கிறது. மேலும் ரோம ராஜ்யத்தில் அந்நாட்களில் பன்னிரண்டு வருஷத்துக்கு ஒருமுறை குடிமதிப்பு எழுதுவது வழக்கம். ஆகையால் லூக் 2[2]-ல் சொல்லப்பட்டது முற்றிலுஞ் சரி என்பதற்கு ஆக்ஷேபனையில்லை. அப்படியானால் சாதாரண கணக்கின்படி அல்ல, கி-மு. ஐந்தாம் அல்லது ஆறாம் ஆண்டில் இயேசு பிறந்திருப்பார்.

இயேசு அருளிச்செய்த போதனையைக் குறித்துப் பிந்தின நிபந்தத்தில் சொல்லப்படும். அவருடைய குணாதிசயங்களை இங்கே விவரித்துச் சொல்லுகிறதற்கு இடமில்லை. சுவிசேஷகர் செய்ததுபோல நாம் அவருடைய ஜீவிய சரித்திரத்தைக்கொண்டு அவருடைய குணாதிசயங்களை அறியலாமென்று சொல்லி அதை விட்டுவிடுகிறோம். அவர் உலகத்துக்குச்செய்தவேலை எவ்வளவு என்று யாரால் சொல்லமுடியும்? லெக்கி (*Lecky*) என்பவன் தன்னுடைய சரித்திரப் புஸ்தகத்தில் சொன்னதுபோல, ஞானிகளுடைய எல்லாப் பிரசங்கங்களைப்பார்க்கிலும், சன்மார்க்கருடைய எல்லாப் போதனைகளைப் பார்க்கிலும், மனுஷரைப் புதுப்பித்து மிருதுவாக்குகிறதற்கு இயேசுவினுடைய ஊழியத்தின் மூன்று சுருக்கமான வருஷங்களே அதிகமாக நன்மையைச் செய்திருக்கின்றன.

**இயேசுகிறிஸ்து அருளின உபதேசம். The Teaching of Jesus Christ. அவர் போதித்த முறை.**—இக்காலத்தில் ஒருவன் சில போதனைகளை உலகத்தில் பிரபல்லியமாக்க விரும்பினால், அவன் தன் கோட்பாடுகளையெல்லாம் ஒழுங்காகவும் தொடர்பாகவும் ஒரு புஸ்தகத்தில் எழுதிப் பிரசுரமாக்குவான். இயேசு உபதேசித்த முறை அப்படியல்ல. அவர் கண்டவர்களுக்குச் சமயோசிதமான சத்தியங்களை விளக்கிக் காட்டி, வாய்மொழியாகவே தம்முடைய உபதேசங்களை யருளிச்செய்தார். அப்படி அவர் தொடர்பின்றியும் குறித்த ஒழுங்கின்றியும் போதித்தபோதிலும், அவர் மனுஷருடைய இருதயத்தின் கருத்தைப் பூரணமாய் அறிந்து, அவர்களது ஆத்துமாவுக்கு அத்தியந்தவசியமான தேவ அறிவு முதலியவற்றை எப்போதும் ஊட்டினவரானபடியால் அவர் சில சமயங்களில் தாம் பார்த்த சிலருக்குச் சொன்ன வார்த்தைகளானவை எச்சமயங்களிலும் எல்லாருக்கும் ஒருவாறு பொருந்தும். திருஷ்டாந்தமாக, சமாரியா ஸ்திரீக்கு அன்று உணர்த்திக் காட்டவேண்டிய சத்தியங்களை அவர் அவளுக்கு விளங்கத்தக்கதாய் எடுத்துக் காட்டினபோதிலும், 'தேவன் ஆவியாயிருக்கிறார், அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் அவரைத் தொழுதுகொள்ள வேண்டும்' என்று அவர் அப்போது சொன்ன வார்த்தை எத்தேசத்தாருக்கும் எச்சமயத்திலும் பிரயோஜனமாகும். அவர் பலெஸ்தீனாவிலுள்ள சில இடங்களில் சில சீஷர்களுக்குச் சொன்ன மொழிகளில் அநேகமானவை எக்காலத்திலும் உலகத்தார் யாவரும் கேட்கத்தக்கவைகளாகக் காணப்படும்.

அப்படியே அவர் தொடர்பில்லாமல் சொன்ன போதனைகள் சம்பந்தமில்லாமலும் பொருத்தமில்லாமலும் இருக்கவில்லை.

இவ்விடத்தில் கடவுளுடைய ராஜ்யம், பரம பிதா, மனுஷருடைய கடமைகள் ஆகிய இவைகளைப்பற்றி அவருடைய உபதேசத்தின் சாரத்தைக் காட்டுவது எமது நோக்கம்.

**I. கடவுளுடைய ராஜ்யத்தைப்பற்றிய போதனை.** — இயேசுகிறிஸ்து தம்முடைய திருத்தொண்டை ஆரம்பித்தகாலத்தில் அவர் யூதருக்கு நூதனமான வார்த்தைகளை வழங்காமல், யூதர்களுடைய மார்க்க நூல்களிலும் யோவான்ஸ்நானனுடைய உபதேசத்திலும் வழங்கின மிகவும் பழக்கமான சொற்களால் பரம சத்தியத்தை விளக்கினார். யூதருக்கிருந்த உறுதியான நம்பிக்கை என்னவென்றால், மேசியா வருங்காலத்தில் கடவுளைத்தவிரத் தங்களுக்கு வேறே அரசன் இருக்கமாட்டானென்பதும், இஸ்ரவேல் ஜனமே கடவுளுடைய ராஜ்யமாய் மாறிவிடு மென்பதுமேயாம். யோவான்ஸ்நானனுடைய உபதேசத்தின் பொருள் 'தேவனுடைய ராஜ்யம் சமீபித்திருக்கிறது' என்னும் வார்த்தைகளில் அடங்கும். அதற்குத் தொடர்பாகவே நாம் மத் $4^{23}$ மாற் $1^{14}$ லூக் $8^{1}$-ல் வாசிக்கிறபடி இயேசு கலிலேயாவின் ஜெபாலயங்களிலெல்லாம் கடவுளுடைய ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார். ஆயினும் நாம் அவருடைய ஜீவிய சரித்திரத்தில் பார்த்ததுபோல, சாதாரண ஜனங்களுக்கு ராஜ்யத்தைப் பற்றியிருந்த தப்பான அபிப்பிராயங்களை மாற்றுவதே அவருடைய முழுத்தீர்மானம். ராஜ்யத்தின் சுவிசேஷம் என்று சொல்லும்போது, உடனே அவருடைய உபதேசத்துக்கும் யோவான்ஸ்நானனுடைய உபதேசத்துக்குமுள்ள வித்தியாசம் தோன்றுகிறது. யோவான் ராஜ்யத்தைப்பற்றிப் பேசினபோது எல்லாரும் நடுநடுங்கி, பயந்து, மனஸ்தாபப்பட்டு, ராஜ்யத்தினால் தங்கள் மேல் வரக்கூடிய பயங்கரமான தீர்ப்புக்குத் தப்பிப் பிழைக்கக் கருதி, தங்கள் பாவங்களை விட்டுவிட்டார்கள். யோவானுடைய பிரசங்கத்துக்குச் 'சுவிசேஷம்' என்கிற பெயர் தகாது. இயேசுவோ அந்த ராஜ்யம் நல்ஈவு என்றும், எல்லாரும் நம்பித் தேடவேண்டிய இரக்ஷிப்பு என்றும் காட்டி, அதிலே இருதயம் நொறுங்குண்டவர்களுக்குக் காயங் கட்டுதலும், சிறுமைப்பட்டவர்களுக்கு விடுதலையும், கட்டுண்டவர்களுக்குக் கட்டவிழ்த்

தலும் இருக்கிறதென்னும் நற்செய்தியைக் கூறினார். கேட்போர்களுக்கு அவர் வார்த்தைகள் கிருபையுள்ளவைகளாகத் தோன்றின. கடவுளுடைய ராஜ்யத்தில், அல்லது மத்தேயு சுவிசேஷத்தின்படி பரலோக ராஜ்யத்தில், மனிதருக்கு விலையேறப்பெற்ற சிலாக்கியங்கள் அடங்கியிருக்கிறதென்று இயேசு சொன்னபோதிலும், அதிலுங்கூட அவருடைய போதனைக்கும் சாதாரண யூதருடைய கொள்கைக்கும் பெரிய பேதம் இருந்தது. அவர்கள் எதிர் நோக்கிய நன்மைகளாவன: சத்துருக்களை ஜெயித்து தேசத்திலிருந்து துரத்திவிடுதல், யூதஜனம் மகிமையடைதல், தேசம் அற்புதமாய்ச் செழிப்படைதல், எல்லோரும் சுகபோகிகளாக ஜீவித்தல் முதலியன. இயேசு செய்த மலைப்பிரசங்கத்தை நாம் வாசித்தால், அவர் சொன்ன ராஜ்யமும் அதின் சிலாக்கியங்களும் ஆத்மீகமானவை, அகத்துக்குரியவை, நல்லொழுக்கத்தைப் பற்றியவை என அறிவோம். உலக போகத்துக்கும் அவைக்கும் யாதும் சம்பந்தம் இல்லை. ராஜாங்க விஷயங்களுக்கும் அவைக்கும் கிஞ்சித்தும் ஒற்றுமையில்லை. அவைகள் தரும் பாக்கியங்கள் பாவமன்னிப்பு, நீதி முதலியவைகளே. இயேசு உபதேசித்த ராஜ்யத்தில் பிரவேசிப்போர்க்குத் துன்பமிருக்கும்; ஆனால் அத்துன்பத்தில் மேலான பாக்கியம் கிடைக்கும். மத் $5^{10-12}$. அந்த ராஜ்யம் பிரத்தியட்சமாய் வராது. லூக் $17^{20}$. அதில் பிரவேசம் செய்வோர்க்கு விசுவாசம் அவசியமானதால், அது யூதருக்குமாத்திரம் உரியதன்று. யூதருக்கில்லாத விசுவாசத்தை அவர் சில சமயங்களில் புறஜாதியாரிடத்தில் கண்டார். மத் $8^{10-12}$. பரலோக ராஜ்யமாவது இன்னதென்று ஒரு வாக்கியத்தில் சொல்லமுடியாது; ஆனால் பரமண்டல ஜெபத்தில் அதற்கு ஒரு நல்ல பொழிப்புரையுண்டு. 'உம்முடைய ராஜ்யம் வருவதாக' என்னும் விண்ணப்பத்தை இன்னும் தெளிவாய் விளக்கிக் காட்டும்படியாக, 'பரலோகத்தில் உம்முடைய சித்தம் செய்யப்படுகிறதுபோல, பூமியிலும் செய்யப்படுவதாக' என்று அதில் பிரார்த்திக்கப்படுகிறது. பரலோகத்தில் கடவுளுடைய சித்தம் செய்யப்படுவதுபோல, பூமியிலும் எங்கே செய்யப்படுகிறதோ, அங்கே பரம ராஜ்யம் உண்டென்று காண்கிறோம். அதின் தன்மையைப்பற்றி நாம் விசாரிக்கப் புகுந்தால், அது 'வருகிறது' (மத் $6^{10}$), 'கொடுக்கப்படுகிறது' (மத் $21^{43}$), 'ஏற்றுக்கொள்ளப்படுகிறது' (மாற் $10^{15}$), 'தேவனால் ஆயத்தம் பண்ணப்படுகிறது' (மத் $25^{34}$) என்று பார்க்கிறோம். மேலும் மனிதர் அதைச் 'சுதந்தரித்துக்கொள்ளுகிறார்கள்.' மத் $25^{34}$. அதில் 'பிரவேசிக்கிறார்கள்.' மத் $25^{21}$. அதைத் 'தேடுகிறார்கள்.' மத் $6^{33}$ $13^{45}$ விலையேறப்பெற்ற முத்தைப்பற்றிய உவமையில் காட்டியிருக்கிறதுபோல, அதுவே ஒருவன் தேடக்கூடிய மேலான நன்மை. இந்நன்மையை வருவிக்கிறதில் மனிதருடைய பிரயத்தனங்கள் உதவியாயிருந்தாலும், அது மனிதருடைய பிரயத்தனங்களால் உண்டாகாமல், கடவுளுடைய கிருபையால் ஈவாகக் கொடுக்கப்படுகிறது. அது இயற்கையாய் உற்பத்தியாகாமல், வெளிப்படுத்தின விசேஷத்தில் சொல்லியிருக்கிற பரிசுத்த நகரத்தைப்போல கடவுளிடத்தினின்று பரலோகத்தை விட்டு இறங்கி வரவேண்டும். இது சம்பந்தமாக, இயேசு சொன்ன பரம ராஜ்யம், தற்காலத்தில் இருக்கிற ராஜ்யமா, இனிமேல் உலக முடிவில் வரப்போகிற ராஜ்யமா என்று ஒரு கேள்வி உண்டாகலாம். சில வசனங்களை நாம் பார்க்கும்போது, அந்த ராஜ்யம் வந்தாயிற்று என்பதுபோலத் தோன்றுகிறது. 'நான் தேவனுடைய ஆவியாலே பிசாசுகளைத் துரத்துகிறபடியால், தேவனுடைய ராஜ்யம் உங்களிடத்தில் வந்திருக்கிறதே.' மத் $12^{28}$ லூக் $11^{20}$. 'இங்கே நிற்கிறவர்களில் சிலர் தேவனுடைய ராஜ்யம் பலத்தோடே வருவதைக் காணுமுன், மரணத்தை ருசிபார்ப்பதில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.' மாற் $9^{1}$. 'தேவனுடைய ராஜ்யம் உங்களுக்குள் இருக்கிறதே' லூக் $17^{21}$, என்கிற திருவசனங்களைக் கவனிக்க. இன்னும் சில வசனங்களைப் பார்த்தால், ராஜ்யம் இப்போது ஆரம்பம் பண்ணியிருந்தாலும், அது பிற்காலத்தில் பெரிதாக ஓங்கி வளரும் என்று சொல்லியிருக்கிறது. கடுகு விதையைப்பற்றிய உவமை, புளித்தமாவைப்பற்றிய உவமை (மத் $13^{31-33}$), இரகசியமாய் விளைந்த விதையைப் பற்றிய உவமை (மாற் $4^{26-29}$), இவைகளில் ராஜ்யத்தின் ஆரம்பம் சிறிது, அதின் வளர்ச்சி பெரிதென்று போதிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் அநேக இடங்களில் ராஜ்யம் கடைசி நாட்களில் வரவேண்டுமென்று பார்க்கிறோம். திருஷ்டாந்தமாக மத் $25^{34}$-ல் 'உலகம் உண்டானதுமுதல் உங்களுக்காக ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற ராஜ்யத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ராஜ்யமானது இப்படிப் பூரணப்படுதலுக்கும் இயேசுவின் இரண்டாம் வருகைக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. அதின் காலம் மனுஷகுமாரனுக்குங்கூடத் தெரியா

விட்டாலும் (மாற் $13^{32}$) அது வருகிறதென்பதற்குச் சில அடையாளங்கள் காணப்படும். அந்நாளில் மனுஷகுமாரன் வல்லமையோடும் மிகுந்த மகிமையோடும் வானத்தின் மேகங்கள்மேல் வந்து, எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புச் செய்து, சத்துருக்களைத் தண்டித்து, தெரிந்துகொள்ளப்பட்டவர்களை எத்திசைகளிலுமிருந்து சேர்த்து, ஒழியாத ஒரு ராஜ்யத்தை ஸ்தாபிப்பார். மத் 24 அதி. அப்போது நீதிமான்கள் தங்கள் பிதாவின் ராஜ்யத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்பார்கள். மத் $13^{43}$.

இப்படி அந்த ராஜ்யம் இறந்த, நிகழ், எதிர் காலங்களிலும் இருப்பதில் என்ன பொருத்தமிருக்கிறதென்று கேட்டால், நாம் முன்னே சொன்னபடி கடவுளுடைய சித்தம் பரலோகத்தில் செய்யப்படுகிறதுபோல, பூமியில் எங்கெங்கே செய்யப்படுகிறதோ, அங்கங்கே பரம ராஜ்யமுண்டு. ஆனபடியினலே இயேசு மனிதனுகப் பூமியில் வந்து தமது பிதாவின் சித்தத்தின்படி செய்தபோதே அந்த ராஜ்யம் வந்தது. அதின்பிறகு யார் யாருக்கு எந்தமட்டுக்கு அவருடைய இலட்சணம் வந்ததோ, அவரவர்களுக்குள் அம்மட்டுக்கு அவ்விராஜ்யம் இருந்தது. குடும்ப விஷயங்களையும் ராஜாங்க விஷயங்களையும் நடத்துகிறவர்கள் கடவுளுடைய ஆளுகைக்கு எவ்வளவுக்கு அடங்கியிருக்கிறார்களோ, அவ்வளவுக்கு அக்குடும்பங்களிலும் அத்தேசங்களிலும் கடவுளுடைய ராஜ்யம் வந்திருக்கிறது. அவ்விராஜ்யம் வருகிறதற்கு, இயேசு வந்து தமது கிரியைகளைச் செய்ததே துவக்கம். சீஷர்கள் அவரிடம் சேர்ந்து, அவரை நம்பி, அவரிடத்தில் கற்றுக்கொண்டபோது அது விருத்தியடைந்தது. பரிசுத்தஆவி அருளப்பட்டபோது அந்த ராஜ்யத்தை விருத்திக்குக் கொண்டுவரும்படியான பலம் மனுஷருக்குக் கொடுக்கப்பட்டது. அதன்பிறகு எந்தெந்தக் காலங்களில் விசேஷித்த சம்பவங்களால் மனிதர் கடவுளைச் சேவிக்கிறதற்குத் தங்களை ஒப்புக்கொடுத்திருக்கிறார்களோ, அந்தந்தக் காலங்களில் ராஜ்யத்தின் விருத்தி அதிகரிக்கிறது. கடைசியில் இயேசு தம்முடைய இரண்டாம் வருகையில் அதைப் பூரணப்படுத்துவார். அப்போது நடக்கப்போகிறது இன்னதென்று அவர் தெளிவாய்ச் சொல்லாதிருந்தபோதிலும், அந்தக் காலத்தில் கடவுளுடைய சித்தம் இப்பூலோகத்தில் பூரணமாய்ச் செய்யப்படுமென்று காட்டியிருக்கிறார்.

**II. பரம பிதாவைப்பற்றிய போதனை.**— இப்படியே இயேசு ராஜ்யம் என்கிற உபமானத்தைக்கொண்டு கடவுளுக்கும் மனிதருக்கும் இருக்கும் சம்பந்தத்தை விளக்கிக் காட்டி, சந்தோஷமும் நம்பிக்கையுமுள்ள ஒரு நற்செய்தியைக் கூறினர். அச்செய்தியிலடங்கிய சந்தோஷத்துக்குக் காரணம் அந்த ராஜ்யத்தை ஆளுகிறவர் கிருபையும் அன்புமுள்ள பிதாவாக இருப்பதுதான். அது பிதாவின் ராஜ்யம். ஆகையால் பிதாவாகிய தேவனைக்குறித்து இயேசு அருளின உபதேசத்தை நாம் இப்போது கவனிக்கவேண்டும். ராஜ்யத்தைப்பற்றிய உபமானத்தோடுகூட குடும்பத்தைப்பற்றிய உபமானத்தாலும் கடவுளுக்கும் மனிதருக்குமுள்ள சம்பந்தத்தைக் காட்டினர். ஆகையால் கடவுளை நோக்கிக் கூப்பிடும்போதெல்லாம் பிதாவே என்று வழக்கமாய்க் கூப்பிடுவார். கடவுள் அரசனுயிருக்கிறதற்கும் பிதாவாயிருக்கிறதற்கும் தடை ஒன்றுமில்லை. இந்த ராஜ்யத்தை ஆளுகிறவர் ராஜ பிதாவாக இருக்கிறார். இயேசு உலகத்துக்கு அருளின புதிய உபதேசம் விசேஷமாகப் பிதாவைப்பற்றிய இந்தப் போதனைக்குள் அடங்கியிருக்கிறது. கடவுளுக்குப் பிதா என்கிற பெயரை வழங்குகிறது நூதனமல்ல. கிரேக்குமார்க்க நூல்களிலும், இந்துமார்க்க நூல்களிலும், பழைய ஏற்பாட்டிலும் கடவுளுக்குப் பிதா என்னும் பேர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனபோதிலும் கிறிஸ்துவுக்கு முந்தி அப்பெயரைச் சொன்னவர்கள் சிருஷ்டிகர், காப்பாற்றுகிறவர் என்கிற அர்த்தத்தோடு வழங்கினார்களேயொழிய, அதிலே மறைந்துகிடக்கிற அருமையான பொருள் அவர்களுக்குத் தெரியவரவில்லை. இயேசுவே முதலாவது அதுவரைக்கும் புதைபொருளாய்க்கிடந்த அந்தப் பொக்கிஷத்தைக் காண்பித்து, அதை அறிவீனருக்கும், படிப்பாளிகளுக்கும், பாவிகளுக்கும், யோக்கியர்களுக்கும் சுதந்தரமாகக் கொடுத்தார்.

உலகத்திலுள்ள ஒரு தகப்பனுக்கும் அவனுடைய பிள்ளைகளுக்குமுள்ள சம்பந்தத்தை நாம் பார்த்தால், அதிலே ஏகதேசம் பின்வரும் ஏழு காரியங்கள் அடங்கி நிற்கும். (1) தகப்பன் பிள்ளைகளுக்கு ஜீவனைக் கொடுத்திருக்கிறான். (2) பிள்ளைகள் அவனுடைய சாயலாக இருக்கிறார்கள். (3) பிள்ளைகளுக்குத் தேவையானதை அவன் சம்பாதித்துத் தருகிறான். (4) தகப்பன் பிள்ளைகளைப் படிப்பித்துச் சிட்சை செய்கிறான். (5) அவன் பிள்ளைகளோடு எப்போதும் கலந்து பேசுவான். (6) அவன் பிள்ளைகளுடைய தப்பிதங்களை மன்னிக்கிறதற்குச் சித்தமான மனதுள்ளவனு யிருக்கிறான்.

(7) அவன் பிள்ளைகளுக்கு ஒரு சுதந்தரத்தைக் கொடுக்கிறான். கடவுளுக்கும் மனிதருக்கு முள்ள சம்பந்தத்தில் இவையெல்லாம் இருக்கின்றனவென்று இயேசு போதித்தார். முதலிரண்டு காரியங்களும் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டபடியால், அவைகளை அவர் விசேஷமாய் வற்புறுத்தவேண்டிய அவசியமில்லை. மிகுதியான ஐந்தையும் அவர் காட்டிக்கொண்டே இருந்தார்.

(*a*) கடவுள் தம்முடைய பிள்ளைகளுக்குத் தேவையானதைக் கொடுத்தருளுகிறார். அவர்களுக்குத் தேவையானது இன்னதென்று அவருக்குத் தெரியும். பட்சிகளைப் பிழைப்பூட்டுகிறவரும், புஷ்பங்களை உடுத்துவிக்கிறவருமாகிய அவர், தம்முடைய பிள்ளைகளைப் பிழைப்பூட்டுகிறதும் உடுத்துவிக்கிறதும் நிச்சயம். மத் $6^{28-32}$. உலகத் தகப்பன்மார் தங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்து இருக்கும்போது, அவர் தம்மிடத்தில் வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானதைக் கொடுப்பது அதிக நிச்சயம். மத் $7^{11}$.

(*b*) கடவுள் தமது பிள்ளைகளைப் படிப்பித்துச் சிட்சை செய்கிறார். இயேசு இதை ஒரு வசனத்தில் தெளிவாய்ச் சொல்லாதிருந்தபோதிலும், கடவுள் மனிதரை நடத்துதலைக் குறித்து இயேசு பொதுவாகச் சொன்ன போதனையில் இது அடங்கும். ஒரு பிள்ளை பள்ளியில் படிப்பது தனக்குக் கஷ்டமாயிருந்தாலும், அக்கஷ்டமே பின்பு நன்மையை விளைவிக்கிறது. அதுபோல் ஏழைகள், துயரப்படுகிறவர்கள், நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்களே என்று இயேசு கூறினார். தவிர, பிள்ளைகளுக்கு வரும் சிட்சை அவர்களுக்குக் கசப்பாகத் தோன்றினும், சிட்சை செய்யும் பிதாவை அவர்கள் நம்பவேண்டியதுபோல, நாமும் பிதாவின் மனதை அடிக்கடி அறியாதிருந்தாலும், அவர் செய்வதெல்லாம் நன்மையெனக் கருதி, 'ஆம், பிதாவே, இப்படிச் செய்வது உமது திருவுளத்திற்குப் பிரியமாயிருந்தது' என்று இயேசு சொன்னதுபோலச் சொல்லுகிறவர்களாக இருக்க வேண்டும்.

(*c*) கடவுள் தமது பிள்ளைகளோடு கலந்து பேசுகிறார். தகப்பனும் அவன் பிள்ளையும் ஒருவரோடொருவர் பேசாமலிருப்பார்களா? ஆகையால் கடவுளுக்கும் மனிதருக்கும் ஐக்கியமுண்டென்று சொல்லி, மனிதர் ஜெபத்தைக்கொண்டு அவரோடு பேசலாமென்றும், அவ்வித ஜெபங்களைக் கேட்டு அவர் உத்தரவு அருளுகிறாரென்றும் இயேசு அதிகமாய் வற்புறுத்திக் காட்டினார். உலகத்துக்குரிய சிலாக்கியங்களையும் ஆத்துமாவுக்குரிய சிலாக்கியங்களையும் சோர்வின்றிக் கேட்கவேண்டுமென்று பல உவமைகளைக்கொண்டு, லூக் $18^{1}$ $11^{5}$ முதலிய அநேக இடங்களில் அவர் உணர்த்திக் காட்டி, விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்டாலும் அவைகளையெல்லாம் பெறலாமென்று கூறினார். மத் $21^{22}$. மனிதர் தங்கள் பரமபிதாவோடு பேசவேண்டிய விதத்தை அவர் பரமண்டல ஜெபம் என்கிற சிறந்த திருஷ்டாந்தத்தால் காட்டினார்.

(*d*) கடவுள் தமது பிள்ளைகளுடைய தப்பிதங்களை மன்னிக்கிறதற்குச் சித்தமான மனதுள்ளவராயிருக்கிறார். மனிதர் பாவம் செய்யினும், கடவுள் அவர்களைச் சத்துருக்களாகப் பாவித்து அவர்களுக்குத் தீமை செய்யவேண்டுமென்று கருதாதவராயும், அவர்களைக் கடன்காரராகப் பாவித்து முழுக் கடனையும் வாங்கவேண்டுமென்னும் நோக்கமில்லாதவராயும், அவர்களைக்கெட்டுப்போன பிள்ளைகள்போலப் பாவித்து, அவர்கள் மனந்திரும்பினால், உடனே பிதாவடைவான அன்போடு ஏற்றுக்கொள்ளுகிறதற்குச் சித்தமுள்ளவராயும் இருக்கிறாரென்றும், லூக் 15-ம் அதிகாரத்தில் சொல்லிய மூன்று உவமைகளாலும் இன்னும் அநேக வார்த்தைகளாலும் இயேசு போதித்தார்.

(*e*) கடவுள் தமது பிள்ளைகளுக்கு ஒரு சுதந்தரத்தைக் கொடுக்கிறார். 'பயப்படாதே, சிறு மந்தையே, உங்களுக்கு ராஜ்யத்தைக் கொடுக்க உங்கள் பிதா பிரியமாயிருக்கிறார்' என்கிற வாக்கியம் இப்போதனைக்கு நல்ல திருஷ்டாந்தம். யோவா $14^{3}$ பார்க்க.

பிதா என்னும் பதம் இப்பொருள்பட, கடவுள் எல்லாருடைய தகப்பனாயிருக்கிறாரா, அல்லது அவருடைய குடும்ப ராஜ்யத்தில் சேர்ந்திருக்கிறவர்களுடைய தகப்பனாக மாத்திரம் இருக்கிறாரா என்கிற ஒரு கேள்வி பிறக்கக்கூடும். இயேசுவின் போதனைப்பிரகாரம் கடவுள் எல்லாருக்கும் பிதாவாயினும், அவருக்குத் தூரத்திலிருந்து விரோதமாய் நடக்கிறவர்களை அவர் பிதாவுக்கேற்ற கரிசனையோடு நடத்துகிறது அசாத்தியம். ஒரு வாலிபன் தன் நல்ல தகப்பனுக் கடங்காமல், வீட்டை விட்டு தூரதேசம் போய் துர்ச்சகவாசம் பண்ணிக் கெட்டுப்போனால், அவ்வாலிபன் அத்தகப்பனுக்கு மகனல்லனென்று சொல்வது வழக்கம். ஆனாலும் அந்த நல்ல மனுஷன் அந்த வாலிபனுக்குத் தகப்பனல்லனென்று சொல்லத் துணியமாட்டோம். அப்பிரகாரமாகவே கடவுள் எல்லோருடைய

பிதாவாயினும், பலர் அவருடைய பிள்ளைகள் நடக்கவேண்டியவிதமாய் நடவாமல், பிள்ளைகளுக்குரிய மேற்சொன்ன இலாக்கியங்களை இழந்துவிடுகிறார்கள். நாம் தேவனுடைய புத்திரர்களாயிருந்து பிள்ளைகளுக்கேற்ற இலாக்கியங்களைப் பெற்றுக்கொள்ளுகிறதற்கு நிபந்தனைகள் யாவை யெனக் கேட்டால், ஆண்டவர் மத் $18^3$-ல் சொல்லும் வாக்கியம் கவனிக்கத்தக்கது. ‘நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளைகளைப்போ லாகாவிட்டால், பரலோக ராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள்.’ இப்பரம குடும்பத்தில் பிரவேசிப்போர்கள் பிள்ளைகளுடைய இலட்சணங்க ளுள்ளவர்களா யிருக்கவேண்டும். அவைகளில் மூன்று இலட்சணங்களைக் குறித்து அவர் வெவ்வேறு இடங்களில் விவரமாய்ப் பேசியிருக்கிறார்.

(i) நம்புகிற சுபாவம்.—ஒரு குழந்தை தன் தகப்பனை முற்றிலும் நம்புகிறதுபோல, ஒரு மனிதன் பிதாவாகிய கடவுளை விசுவாசிக்கவேண்டும். சீரோப்பெனிக்கியா ஸ்திரீயின் விசுவாசத்தையும், கப்பர்நகூமிலிருந்த நூற்றுக்கதிபதியின் விசுவாசத்தையும் கண்டு இயேசு மிகவும் சந்தோஷப்பட்டாரென்று பார்க்கிறோம். கடவுளிடத்தில் விசுவாசமுள்ளவர்களா யிருங்களென்று அவர் சீஷருக்குச் சொன்னார். அவரில் விசுவாசமுள்ளவர்களா யிருப்பதில் அவர் அனுப்பினவராகிய இயேசுவை நம்புவதே ஒரு பாகம்.

(ii) தன் குறைவை உணர்தல். — ஒரு பிள்ளை தனக் கெல்லாம் இருக்கிறதென்று நினைப்பானா? அவன் மற்றவர்களுடைய கையிலிருந்து போஜன வஸ்திராதிகளை வாங்குகிறபடியால், அவன் தன்னைப் பூரணனென்றெண்ணாமல், தாழ்மையுள்ளவனா யிருக்கிறான். ராஜ்யத்தின் பிள்ளைகளுக்கு இக்குணம் விசேஷம். பசிதாகமுள்ளவர்களே பாக்கியவான்கள். மத் $5^6$. தூரத்தில் நின்ற ஆயக்காரனே நீதிமானாக்கப்பட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பிப் போனான். லூக் $18^{13}$. ஆஸ்திக்காரனான வாலிபன் தன்னைக்குறித்துத் திருப்தியுள்ளவனா யிருந்ததால், ராஜ்யத்துக்குப் புறம்பானவன். மாற் $10^{17}$.

(iii) தன் குற்றத்துக்காகத் துக்கப்படுதல்.—பிள்ளைகள் இயற்கையாகவே தாங்கள் செய்திருக்கும் ஏதாவது ஒரு குற்றத்தைக் குறித்து உணர்வுள்ளவர்களா யிருப்பார்கள். அதுபோலப் பரமபிதாவின் பிள்ளைகள் மனந்திரும்புவார்களென்று இயேசு முதலில் போதித்த போதனையில் விளங்கும். அவர் கலிலேயாவிலே வந்து, ‘மனந்திரும்பி, சுவிசேஷத்தை நம்புங்கள்’ என்று பிரசங்கித்தார். மாற் $1^{15}$. அவர் கெட்ட குமாரன் உவமையில் மனந்திரும்புதலைக் குறித்துத் தெளிவாக நமக்கு உணர்த்தியிருக்கிறார்.

மனிதர் பரம பிதாவின் பிள்ளைகளாயிருப்பதால், மனிதனாயிருப்பது எவ்வளவு மேன்மை! மனிதன் உலகத்தைப்பார்க்கிலும் பிரதானமானவனா யிருக்கிறான் உலக முழுவதும் ஒரு மனிதனுடைய ஆத்துமாவுக்கு ஈடன்று. இயேசு ஏழைகளையும், மானிடசாயலுள்ள எல்லோரையும் பார்த்து, ஜீவனுள்ள தேவனது பிள்ளைகளாகிய நீங்கள் அநேக அடைக்கலான் குருவிகளைப்பார்க்கிலும் விசேஷித்தவர்கள் என்று சொன்னது மாத்திரமன்று, நீங்கள் உலக முழுவதையும் பார்க்கிலும் விசேஷித்தவர்களென்றும் சொன்னார். ஒருவனுடைய ஆத்துமாவின் அருமை இயேசுவினால்தான் முதலாவது வெளிக்கு வந்தது. நாம் பூர்வீககாலத்து மார்க்க நூல்களை ஒத்துப் பார்க்கும்போது இயேசு திருவாய்மலர்ந்தருளிய பிதாவைப் பற்றிய போதனையால் மனிதருக்கு எவ்வளவு ஆறுதலைக் கொடுத்திருக்கிறாரென்று பார்க்கிறோம். எத்தனையோ ஞானிகள் இருளில் அழுகிற பிள்ளைகளைப்போலக் கடவுளைப்பற்றி நிச்சயமில்லாமல் புலம்பியிருக்கிறார்கள். பாலகருக்கு வெளிப்படுத்தின சத்தியம் இயேசுவின் மூலமாகத்தான் வந்தது. ‘குமாரனும், குமாரன் எவனுக்கு அவரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும் தவிர, வேறொருவனும் பிதாவை அறியான்.’ மத் 11 அதி. அதினால்தான் வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்கள் யாவரும் இயேசுவினிடம் போய்க் கற்றுக்கொண்டு இளைப்பாறுத லடையவேண்டும்.

**III. மனிதர் நடக்கவேண்டிய விதம்.**—இதைப்பற்றி இயேசு விசேஷமாய் வற்புறுத்திப் பேசின போதனையை நான்கு பிரிவுகளாய்ப் பிரிக்கலாம்.

(*a*) மனிதருடைய நல்லொழுக்க சம்பந்தமாய்ப் பரிசேயருக்கு வேண்டியமட்டும் நல்ல சட்டங்கள் இருந்தபோதிலும், அவர்கள் நல்லொழுக்கத்தையும் ஆசாரத்தையும் குழப்பிவிட்டதால் இரண்டும் ஜீவனற்றுப்போயிருந்தன. அவர்கள் அபிப்பிராயப்படி, நன்மை செய்கிறதும், ஆசாரங்களைக் கைக்கொள்ளுகிறதும் ஒன்றே இயேசு நன்மை செய்வது வேறு, ஆசாரம் வேறு என்று காட்டி, ஆசாரத்தைப்பார்க்கிலும் நன்மை செய்கிறதே பெரிய காரியமென்று உணர்த்தினார். யார் யார் தங்கள் உடன் மனிதரைப் பட்டினி

யாய்க் கிடக்கவிட்டு, தங்கள் பெற்றோருக்குங் கூட உதவி செய்யாமல் (மாற் $7^{11}$), கோவிலுக்குத் தருமப்பணத்தை அனுப்புகிறார்களோ, அவர்களை அவர் அதிக இழிவாக எண்ணுவார். பலியை அல்ல, இரக்கத்தையே விரும்புகிறேன் என்கிறது அவருக்குப் பிரியமான வழக்கச்சொல்லா யிருந்தது. ஓசி $6^6$ மத் $9^{13}$ $12^7$.

(b) அவர் செய்கை யன்று, நோக்கமே பெரிதென்று எண்ணினார். ஒருவன் நல்ல கிரியையைக் கெட்ட நோக்கத்தோடு செய்தால், அதில் யாதொரு பலனுமில்லை. நாம் துர்க்காரியங்களைச் செய்யாமல், நற்காரியங்களைச் செய்தால், அதுகூடப் போதாது. உள்ளம் சுத்தமாயும், இருதயத்தின் நோக்கம் செம்மையாயு மிருக்கவேண்டும். மலைப்பிரசங்கத்தின் ஒரு பெரிய பாகத்தில் இது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. உள்ளத்தில் தோன்றும் துர்யோசனை துர்ச்செய்கைக்குச் சமமே.

(c) இயேசு நாம் நம்முடைய உடன் மனுஷருக்குச் செய்யவேண்டிய கடமைக்கு ஒரு புதிய நோக்கத்தைக் காட்டினார். அன்பே அந்நோக்கம். பிறனுக்குத் தீமை செய்யாமலிருப்பதோடு, நாம் அன்பினால் நம்மால் இயன்றவரை அவனுக்கு நன்மை செய்ய வேண்டும். சுருங்கச்சொல்லில், மனுஷனுடைய கடமையாவும் அன்பு என்னும் ஒரு பதத்தில் அடங்கும். மத் $22^{37, 39}$. நாம் சத்துருக்களையும் நேசித்து, சமாரியனைப்போல சகலருக்கும் உதவிசெய்து, நமக்குப் பிரதி நன்மைகளைச் செய்யக்கூடாதவர்களுக்கு நன்மைபுரிந்து (லூக் $6^{34}$), பசியுள்ளோர்க்கு அன்னமளித்து, தாகமுள்ளோர்க்குத் தாகந் தீர்த்து, வியாதியிலும் காவலிலுமிருக்கிறவர்களைப் போய்ச்சந்தித்து (மத் $24^{34-36}$), தீயோர் மேலும் நல்லோர்மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி, நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள்மேலும் மழையைப் பெய்யச்செய்த பரமபிதாவினுடைய புத்திரராய் நடக்கவேண்டும். மத் $5^{45}$.

(d) கடைசியாகச் சொன்ன காரியத்தில் இன்னொரு விசேஷமான போதனை விளங்குகிறது. மனுஷனுடைய கடமையை அளக்கிறதற்கு இயேசு ஒரு புதிய அளவுகோலை ஏற்படுத்தினார். கடவுள்தாமே மனுஷருக்கு முன்மாதிரி. 'பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணரா யிருக்கிறதுபோல, நீங்களும் பூரண சற்குணரா யிருக்கக்கடவீர்கள்.' மத் $5^{48}$. இதினால் நாம் கடவுளுக்குச் சமானமுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்று அவர் சொல்லாமல், கடவுள் எப்படிப் பூரணப்பட்டவராய், நல்ல பிதாவா யிருக்கிறாரோ, அதற்குத் தக்கபடி நாம் அவருக்குப் பூரணமாய் நல்ல பிள்ளைகளாயிருக்கிறது நம்முடைய கடமையென்றும், அப்படியாகு மட்டும் நாம் திருப்தியடையக் கூடாதென்றும் சொல்லியிருக்கிறார். பரமபிதாவின் புத்திரன் இவ்வுலகில் எப்படி நடப்பானென்று இயேசுவில் தெளிவாய்ப் பார்த்திருக்கிறோம். நம்முடைய நடக்கையை நாம் அளவிட வேண்டுமென்றால், வேறே அளவுகோல் நமக்குக் கிடையாது, நாம் வைக்கவும் கூடாது. இதற்குச் சம்பந்தமாக நாம் இயேசுவின் போதனையில் இன்னொரு விசேஷத்தைக் கவனிக்கலாம். அவருடைய காலத்திற்குமுன் மனிதர் அதிக இழிவாய் எண்ணியிருந்த ஒருவித குணத்தை அவர் அதிகமாய் மெச்சிப் பேசினார். இக்குணத்தைப் பொறையுடைமை யென்று சொல்லலாம். துன்பப்படும்போது பொறுமையாயிருத்தல், தீமை செய்தவர்களுக்கு மன்னித்தல், எப்போதும் சாந்தகுணமுள்ளவர்களாயிருத்தல் முதலிய இவ்வித குணங்கள் இயேசுவின் காலத்திற்குமுன் பல ஜாதியாரால் நற்குணங்களாக எண்ணப்படவேயில்லை. இயேசுவோ அக்குணமுள்ளோரே பாக்கியவான்களென்று மலைப்பிரசங்கத்தில் கூறினார். தீமை செய்கிறவர்களுக்கு மன்னிக்கிறதை அவர் முக்கியமான விஷயமென மதித்து, நாம் மனுஷருக்கு மன்னிப்புக் கொடுத்தால் தான் கடவுளிடம் மன்னிப்புப் பெறுவோமென்று எச்சரித்தார். இந்தியா தேசத்தில் தான் பூர்வீகத்திலிருந்து இந்தப் பொறையுடைமை அதிகமாய் மதிக்கப்பட்டதால், இயேசுவின் போதனையில் இப்பாகம் இந்தியா தேசத்தார் இலேசாய் ஏற்றுக்கொள்ளலாம்.

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.' குறள் 151.

## இயேசுகிறிஸ்து அருளின உபதேசங்கள். The Discourses of Jesus Christ.

### 1. பிரசங்கங்கள்.

அவர் போதனையின் மூலாதாரம். யோவா $3^{1-21}$.

மேசியாவின் ராஜ்யம் (மலைப்பிரசங்கம்). மத் 5 6 7 அதி.

சமாரியா ஸ்திரீக்கு மேசியாவைப்பற்றிய போதனை. யோவா $4^{4-42}$.

நாசரேத்தூரில் மேசியாவைப்பற்றிய பிரசங்கம். லூக். $4^{16}$.

ஓய்வுநாளைப்பற்றிய பிரசங்கம். யோவா $5^{17}$.

பரலோக ராஜ்யத்தைப்பற்றிய பல உவமைகள். மத் 13 அதி.

பன்னிரண்டு அப்போஸ்தலருக்கு எச்சரிக்கையாகச் சொன்ன போதனை. மத் 10 அதி.

எழுபது சீஷர்களுக்கு எச்சரிக்கையாகச் சொன்ன போதனை. லூக் $10^{1-20}$.

கூடாரப்பண்டிகையில் செய்த உபநியாசம். யோவா $7^{14-39}$.

ஜீவ அப்பம். யோவா $6^{22-65}$.

உலகத்தின் ஒளி. யோவா $8^{12}$.

நல்ல மேய்ப்பன். யோவா 10 அதி.

மாயம், பயம், பொருளாசை ௸. லூக் 12 அதி.

மனந்திரும்புதல். லூக் $13^{1-10}$.

தாழ்மை, இடறல், மன்னிப்பு ௸. மத் 18 அதி.

இடையூறு, விசுவாசம் ௸. லூக் $17^{1-10}$.

தாழ்மை, தர்மம். லூக் $14^{1-14}$.

உபவாசம். மாற் $2^{18-22}$.

ஐசுவரியம். லூக் $16^{1-31}$ மத் $19^{23-30}$.

வேதபாரகரையும் பரிசேயரையும் பற்றியது. மத் 23 அதி. $16^{6-12}$.

மெய்ச் சீஷன். லூக் $14^{25-35}$.

கடைசி நியாயத்தீர்ப்பு. மத் 25 அதி.

சீஷர்களுக்குப் பரிசுத்தாவியின் வருகை முதலியவற்றைப்பற்றிய ஆறுதலைக் கொடுக்கும் போதனை. யோவா 14—17 அதி.

**2. ஆக்ஷேபனைகளுக்குப் பிரதியுத்தரம்.**

ஓய்வுநாளைப் பற்றியது. மத் $12^{1-8}$.

ஓய்வுநாளில் சொஸ்தம் ஆக்கினதைப் பற்றியது. லூக் $13^{14-17}$.

தம்மைப்பற்றிய சாட்சி. யோவா $8^{13-19}$.

தேவதூஷணம் (பெயெல்செபூல்). லூக் $11^{14-23}$.

ஆயக்காரரோடும் பாவிகளோடும் உள்ள சிநேகம். மத் $9^{10-13}$ மாற் $2^{15-28}$ லூக் $15^{1-2}$.

சீஷர்கள் உபவாசம்செய்யாதது. மத் $9^{14-17}$.

சீஷர்கள் பாரம்பரியத்தின்படி நடவாதது. மாற் $7^{1-16}$.

சீஷர்கள் பிசாசைத் துரத்தினவனைத் தடுத்தல். மாற் $9^{38-50}$.

சீஷர்கள் சிறு பிள்ளைகளைக் கொண்டு வந்தவர்களைத் துரத்தினது. மாற் $10^{13}$.

ஓசன்னா சொன்னவர்களைக் கண்டித்தது. மத் $21^{15-16}$ லூக் $19^{37-40}$.

இயேசு தமது மரணத்தைப்பற்றிப் பேசினபோது உண்டான தடை. மத் $16^{22}$.

யூதேயாவுக்குத் திரும்ப வருகிறதைப்பற்றி உண்டான தடை. யோவா $11^{8}$.

பூரண விசுவாச மில்லாதவர்களைப்பற்றி. லூக் $9^{59-62}$.

**3. வினாக்களுக்குப் பிரதியுத்தரம்.**

ஓய்வுநாளில் சொஸ்தம் ஆக்கலாமா? மத் $12^{10-13}$ லூக் $14^{1-6}$.

ராயனுக்கு வரிகொடுக்கலாமா? மத் $22^{17}$.

விபசார ஸ்திரீயைக் கல்லெறிந்து கொல்லலாமா? யோவா $8^{2-11}$.

நீர் கிறிஸ்துவா, ராஜாவா? யோவா $10^{24}$ $18^{33}$.

மீட்கப்பட்டவர்கள் சிலர் மாத்திரமா? லூக் $13^{23-30}$.

பரலோக ராஜ்யம் எப்பொழுது வரும்? லூக் $17^{20}$.

தள்ளுதற்சீட்டுக் கொடுக்கலாமா? மத் $19^{3}$.

நித்தியஜீவன் அடைவது எப்படி? மத் $19^{16-26}$ லூக் $10^{25-37}$.

இயேசுவைப் பின்பற்றுகிறவர்களுக்கு என்ன கிடைக்கும்? மத் $19^{27}$.

உயிர்த்தெழுதல் உண்டா? மத் $22^{23}$.

பிரதானமான கட்டளை என்ன? மத் $22^{34-45}$ மாற் $12^{28-34}$.

**4. சந்தேக நிவிர்த்தி.**

அடையாளம் தேடுகிறவர்களுக்கு. லூக் $11^{29-36}$ மத் $16^{1-4}$.

அதிகாரத்தைத் தள்ளுகிறவர்களுக்கு. மத் $21^{23-45}$.

இயேசுகிறிஸ்துவா என்று சந்தேகிக்கிறவர்களுக்கு. மத் $26^{63, 64}$.

**5. முன் அறிவித்தல்.**

மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் பற்றியது. மத் $16^{21}$ மாற் $9^{12}$ யோவா $2^{19}$ $6^{53, 62}$ $8^{28}$.

ஏரோதுவுக்கு முன் அறிவித்தல். லூக் $13^{31-35}$.

தமது மரணம் இன்னவிதமாய் இருக்கும் என்பதைப் பற்றியது. மத் $20^{17}$ மாற் $10^{32}$ லூக் $18^{31-34}$.

எருசலேமின் அழிவும் நியாயத்தீர்ப்பும். மத் 24 அதி. மாற் 13 அதி. லூக் 21 அதி.

பேதுருவின் மறுதலிப்பு. மத் $26^{34}$ மாற் $14^{30}$ லூக் $22^{31-34}$ யோவா $13^{38}$.

**6. எச்சரிக்கைகள்.**

செய்யாமல்கேட்கிறதைப் பற்றியது. மத் $7^{24-27}$ லூக் $6^{47-49}$.

ஐசுவரியவான்கள் முதலியவர்களுக்கு. லூக் $6^{24-26}$.

அறிந்தும் மனந்திரும்பாதவர்களுக்கு. மத் $11^{20-24}$ லூக் $10^{13-15}$.

இயேசுவை அறிக்கையிடாதவர்களுக்கு. லூக் $12^{8-10}$.

பரிசேயருக்கும் நியாயசாஸ்திரிகளுக்கும். மத் $23^{13-35}$ லூக் $11^{37-52}$.

எருசலேமைப் பற்றி. லூக் $13^{34}$.

**இயேசுகிறிஸ்து சொன்ன வாக்குகளில் எழுதப்படாதவை. The unwritten sayings of Jesus. Agrapa.** சுவிசேஷங்களில் இயேசு சொன்னவைகளில் சிலமாத்திரம் எழுதியிருக்கிறதினால் ஆதி சபையார் சுவிசேஷங்களில் எழுதப்படாதவைகளை அவருடைய சீஷர்கள் மூலமாய்க் கேட்டறிந்து தங்கள் ஞாபகத்தில் வைத்திருந்தார்கள் என்பது ஆச்சரியம் அல்ல. ஆயினும் வேதசாஸ்திரிகளிற் சிலர் இவ்வசனங்களைக் கண்டறியும்படி ஆதி கிறிஸ்தவர்களின் புஸ்தகங்களை அதிக ஆவலோடு ஆராய்ந்து பார்த்தும் அவர்கள் கண்டுபிடித்தவைகள் வெகு சொற்பம். பெரும்பாலும் நாலு சுவிசேஷங்களில் எழுதினவைகளுக்கு இவைகள் ஒத்திருக்கின்றன.

சுவிசேஷங்களில் இல்லாத இயேசுவின் வார்த்தைகள் ஐந்துவிதமாய் எழுதியிருக்கின்றன.

1. புதிய ஏற்பாட்டின் கையெழுத்துப் பிரதிகளில் சுவிசேஷங்களின் ஆக்கியோன்களால் அல்ல, அப்பிரதிகளின் லிகிதர்களால் எழுதிய இரண்டு மூன்று வாக்கியங்கள்.

(1) யோவா 8-ம் அதிகாரத்தில் விபசாரஸ்திரீயைப்பற்றிச் சொல்லிய வசனங்கள் யோவானால் எழுதப்பட்டன அல்ல; அவை வேறொருவனால் எழுதப்பட்டு அதில் சேர்க்கப்பட்டன என்று தோன்றுகிறது. யோவா 7⁵³-8¹¹.

(2) ஒரு கையெழுத்துப் பிரதியில் லூக் 6⁴-க்குப் பிறகு வேறெங்கும் காணப்படாத வசனம் ஒன்று எழுதியிருக்கிறது. அதாவது: அதே நாளிலே ஓய்வுநாளில் வேலை செய்கிறவனை அவர் பார்த்து, 'மனிதனே! நீ செய்தது இன்னதென்று அறிந்தாயானால் பாக்கியவானாய் இருப்பாய். அறியாவிட்டால் சபிக்கப்பட்டவனும் நியாயப்பிரமாணத்தை மீறுகிறவனும் இருப்பாய்' என்றார்.

(3) அப் 20³⁵-ல் சுவிசேஷங்களில் எழுதியிராத இன்னொரு வாக்கியம் இருக்கிறது. அதாவது: வாங்குகிறதைப் பார்க்கிலும் கொடுக்கிறதே பாக்கியம்.

2. இயேசுவைப்பற்றி ஆதி கிறிஸ்தவர்கள் எழுதின அப்போகிரிப்பா என்னும் சுவிசேஷங்களில் நாலு சுவிசேஷங்களிலு மில்லாத இயேசு உரைத்த பதினொரு வாக்கியங்கள் உண்டு. இவைகளில் முக்கியமானது ஒன்றே. அதாவது: தேடுகிறவன் கண்டடையுமட்டும் ஓய்ந்துபோகான்; கண்டடையும்போது ஆச்சரியப்படுவான்; ஆச்சரியப்பட்டு அரசாளுவான்; அரசாண்டு இளைப்பாறுதல் அடைவான்.

3. ஆதி பிதாக்கள் தாங்கள் கேட்டறிந்த பாரம்பரியத்தின்படி சுவிசேஷங்களில் இல்லாத சில வாக்கியங்களை எழுதியிருக்கிறார்கள். ஆனால் இவைகளுக்கும் நாலு சுவிசேஷங்களில் எழுதின வாக்கியங்களுக்கும் அவ்வளவு வித்தியாசம் இல்லை. அவைகளில் புதிதாய் எழுதியிருப்பவைகள் மூன்று மாத்திரம் உண்டு. அவையாவன:

(1) ஒருவனும் நாம் கேட்கவில்லை என்று சொல்லாதபடிக்கு நீங்கள் பன்னிரண்டு வருஷத்திற்குப் பிறகு உலகத்திற்குப் புறப்பட்டுப் போங்கள்.

(2) எனக்குச் சமீபமாய் இருக்கிறவன் நெருப்புக்குச் சமீபமாய் இருக்கிறான். எனக்குத் தூரமாய் இருக்கிறவன் ராஜ்யத்துக்குத் தூரமாய் இருக்கிறான்.

(3) உண்மையுள்ள காசுக்கடைக்காரர்களாய் இருங்கள்.

4. மகமதியர் எழுதின புஸ்தகங்களில் அவர்கள் பாரம்பரியத்தின்படி கேட்டறிந்த சில வாக்கியங்கள் உண்டு. அவைகளில் முக்கியமானவை:

(1) ஒருநாள் இயேசுவும் சீஷர்களும் வழியிலே நடந்துபோகும்போது செத்திருக்கும் நாய் ஒன்றைப் பார்த்தார்கள். சீஷர்கள் இது எவ்வளவு துர்நாற்றம் அடிக்கிறது என்று வெறுப்பாய்ச் சொன்னார்கள். இயேசுவோ இதின் பற்கள் வெள்ளையாயும் எவ்வளவோ அழகாயும் இருக்கிறது என்று சொன்னார்.

(2) இயேசு சொன்னதாவது, உலகம் உங்களை அடிமைகள் ஆக்காதபடிக்கு உலகத்தை உங்களுக்கு எஜமானாக ஏற்படுத்தாதிருங்கள்.

5. எகிப்தில் அக்சிரிங்கஸ் (*Oxyrhynchus*) என்னும் இடத்தில் கி-பி. 1897-ஆய் கண்டெடுக்கப்பட்ட சில கையெழுத்துப் பிரதிகளில் நாம் இதற்குமுன் அறியாத இயேசு சொன்ன வார்த்தைகள் சில எழுதியிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை:

(1) நீங்கள் உலகத்துக்காக உபவாசியாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தைக் கண்டடையமாட்டீர்கள்; ஓய்வுநாளில் உண்மையாய் ஓய்ந்திராவிட்டால் பிதாவைப் பார்க்கமாட்டீர்கள்.

(2) நான் உலகத்தின் மத்தியிலே நின்றேன். சரீரத்திலே நான் அவர்களுக்குக் காணப்பட்டேன். எல்லாரும் மதுபானம் பண்ணுகிறவர்களும் தாகம் அற்றவர்களுமாய் இருக்கக் கண்டேன். மனுஷ புத்தி

ரர்கள் இருதயக் குருடர்களாய்க் காணுததி ஞல் என் ஆத்துமா அவர்களின்பேரில் துக்கம் அடைகிறது.

(3) இருவர் தாங்கள் இருக்கும் இடத்தில் தேவன் இல்லாமல் இருக்கமாட்டார்கள். ஒருவன் தனியே இருக்கும் இடத்திலே நான் அவனேடிருக்கிறேன். கல்லேப் புரட்டு, அங்கே என்னைக் கண்டடைவாய். மரத்தைப் பிள, அங்கே நான் இருக்கிறேன்

**இயேசுவின் உயிர்த்தெழுதல். The Resurrection of Jesus.**

(*a*) இக்காலத்தில் உயிர்த்தெழுதலைக் குறித்துப் பலமும் உறுதியுமான சாட்சி கூறினும், உலக அமைப்பின்படி அது நடக்கக் கூடாத காரியம், புத்தியுள்ளோர் அதை நம்பமாட்டார்களென்பது சிலர் கூறும் ஆட்சேபனை. உலக அமைப்பு யாதென விசாரிக்கப் புகின், அதைப்பற்றி நமக்கு இருக்கும் அறிவு குறைவு; உலக அமைப்பின்படி எது நடக்கக்கூடும், எது நடக்கக்கூடாதென்று இலேசாய்ச் சொல்ல முடியாது. தற்கால சாஸ்திரிகள் கண்டு பிடித்திருக்கிற அநேக காரியங்களைக்குறித்து யோசிக்குங்கால், சில வருஷங்களுக்குமுன் நமது அபிப்பிராயத்தின்படி உலக இயற்கைப் பிரமாணங்களுக்கு விரோதமாய்த் தோன்றின சில காரியங்கள் நமக்கு அக்காலத்தில் தெரியாதிருந்த இயற்கைப் பிரமாணங்களின் படியே நடக்கின்றனவென்று இப்போது நமக்கு விளங்கும். ஜடம், சித்து முதலானவற்றைக் குறித்து நமக்குப் பூர்த்தியான அறிவு இருந்தால்மாத்திரம் ஒரு காரியம் ஒருநாளும் கூடாதென்று சொல்லத் தகுந்தவர்களாய் இருப்போம். ஆகையால் அறிவாளிகள் இயேசு உயிர்த்தெழுந்தாரா இல்லையா என்பதற்கு இருக்கிற அத்தாட்சியைப் பொறுமையோடு சீர்தூக்கிப் பார்ப்பார்கள்.

(*b*) வேறு சிலர் நினைக்கிறது யாதெனில், இயேசுநாதர் ஆவியின்பிரகாரமாய் எழுந்தார் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, அதுவே நமக்கு வேண்டியது; ஜடப்பொருளாகிய அவருடைய சரீரத்தைக்குறித்து நாம் ஏன் கவலைப்படவேண்டும்? உயிர்த்தெழுதலின் நம்பிக்கை நமக்கிருந்தால் வாஸ்தவமாய்க் கல்லறையை விட்டாரா இல்லையா என்கிற கேள்வியில் நமக்கு விசேஷித்த பிரயோஜனமில்லை என்பதே. இவ்விதம் நினைக்கிறவர்கள் கவனிக்காமல் விடுகிறது என்னவெனில், உயிர்த்தெழுதலுண்டென்கிற நம்பிக்கையாம். மூன்றும் நாளில் இயேசு கல்லறையை விட்டாரென்பதும் சம்பந்தமில்லாமலிருக்கிறதில்லை என்பது நிச்சயம். வெறுமையான கல்லறையண்டையில்தான் உயிர்த்தெழுதலின் நம்பிக்கை பிறந்தது. மூன்றும் நாளில் சீஷர்கள் கல்லறையண்டை வந்த நாழிகைமட்டும் அவர்களுக்கு உயிர்த்தெழுதலின் நம்பிக்கை இல்லை. சீஷர்கள் அவர் உயிர்த்தெழுந்திருப்பாரென்று உத்தேசித்து, வெறுமையான கல்லறையைப்பற்றிய கதைகளையெல்லாம் கற்பனை செய்தார்களென்று யாராவது சொல்லப் புகுந்தால், சாட்சிகள் எல்லாரும் அவ்வளவு பொய்யர்களென்று துணிந்து நினைக்கிறதற்கு யாதொரு வழியுமில்லை. புதிய ஏற்பாட்டிலுள்ள அத்தாட்சியைச் சிரத்தையோடு ஆராய்ந்து பார்த்தவர்கள் எல்லாரும் அது நம்பக்கூடியதுதானு அல்லவா என்று தீர்மானிக்கவேண்டும்.

**அத்தாட்சி**. முதல் அத்தாட்சி நான்கு சுவிசேஷங்களல்ல.

இந்தக் காரியத்தை ஆராய்கிற விஷயத்தில் அநேகர் தப்பிதமாய் ஆரம்பித்து, உடனே கஷ்டத்தில் சிக்கிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் நான்கு சுவிசேஷங்களிலுமுள்ள சரித்திரங்களை எடுத்து, ஒன்றோடொன்று ஒத்துப்பார்த்து, அவை ஒன்றுக்கொன்று வித்தியாசமாக இருக்கிறதைக் கண்டு தப்பெண்ணங்கொள்ளுகிறார்கள். இந்த அத்தாட்சிக்கு ஆரம்பம் சுவிசேஷங்களல்ல. சுவிசேஷங்கள் எழுதப்படுகிறதற்கு அநேக வருஷங்களுக்கு முன் இயேசு உயிரோடெழுந்தார் என்று ஆயிரக்கணக்கானபேர் நம்பி, அந்நம்பிக்கையால் மனம் மாறுதலடைந்து, உபத்திரவத்தின் மூலமாய்ப் பொதுவான திருச்சபையை ஸ்தாபித்தார்கள் அவர்கள் அப்படிச் செய்ததே உயிர்த்தெழுதலுக்கு முக்கிய அத்தாட்சி. புதிய ஏற்பாட்டிலுள்ள ஒரு புஸ்தகமாவது எழுதப்படாததற்கு முந்தி இந்நம்பிக்கை தனக்குரிய கிரியையைச் செய்து கொண்டிருந்தது. இந்த நம்பிக்கை இல்லாவிட்டால், புதிய ஏற்பாட்டின் ஒரு புஸ்தகமாவது எழுதப்பட்டிருக்கமாட்டாது. புதிய ஏற்பாட்டிலுள்ள பல அடையாளங்களைப் பற்றிய சரித்திரமும், வெறுமையான கல்லறையைப்பற்றிய சரித்திரமும், கலிலேயாவிலோ எருசலேமிலோ இயேசு சீஷருக்குத் தரிசனமானதைப்பற்றிய சரித்திரமுமாகிய இவை அவர் உயிர்த்தெழுந்ததற்கு முக்கிய அத்தாட்சிகள் அல்ல. புதிய ஏற்பாட்டின் ஒவ்வொரு ஏட்டிலும் நாம் காண்கிற புதிய ஜீவனும், உயிர்த்தெழுந்த இரட்சகர் கிறிஸ்தவர்களுக்குள் உயிர்ப்பித்த சக்தியுமாகிய இவைகளே உயிர்த்தெழுதலை நமக்கு நிச்சயப்படுத்துகின்றன.

இயேசு உயிர்த்தெழுந்ததினாலல்ல, அவர் உயிர்த்தெழுந்ததாக அவர்கள் நம்பின நம்பிக்கையினாலே இந்த மாறுதல் நடந்ததென்று சொன்னால், அவர்களுடைய நம்பிக்கை எப்படி உண்டானதென்கிற கேள்வி உடனே பிறக்கும். அவர்களுடைய நம்பிக்கை சரித்திரத்தை உண்டுபண்ணினதா, சரித்திரம் அவர்களுடைய நம்பிக்கையை உண்டுபண்ணினதா? இதுதான் கிறிஸ்துமார்க்கத்தின் சாரத்துக்குச் சம்பந்தமான பெருங் கேள்வி. இக்கேள்விக்குப் புதிய ஏற்பாட்டிலுள்ளவைகளைக்கொண்டே நாம் உறுதியான விடை பகரக்கூடும்.

மேற்சொன்னபடி புதிய ஏற்பாட்டில் எங்கும் பரம்பியிருக்கிற அந்தப் பொதுவான அத்தாட்சி நீங்கலாக, நமக்குக் காலக்கிரமத்தில் முதலாவதாக நிற்கிற நூல் அத்தாட்சி கொரிந்தியருக்கு எழுதின முதல் நிருபம் 15-ம் அதிகாரத்தில் அடங்கியிருக்கிறது. ஏறக்குறைய கி-பி. 55-ளுத்தில் எழுதிய அந்நிருபத்தில் அப்போஸ்தலனாகிய பவுல் சுமார் கி-பி. 50-ளுத்தில் கொரிந்து பட்டணத்துக்குச் சென்றபோது அவர் போதித்த சங்கதிகள் அடங்கியிருக்கின்றன. பவுல் அங்கே போதித்தவைகளெல்லாம் பொதுவான கிறிஸ்தவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவைகள்; பவுல்கிறிஸ்தவனானபோது அவைகளைப் பெற்றுக்கொண்டு, மற்றவர்களுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தான். 1 கொரி $15^{3}$. பவுல் எப்போது குணப்பட்டானென்று விசாரித்தால், சிலர் கிறிஸ்துவின் மரணத்திற்கு ஏழு வருஷங்களுக்குப் பின் என்றும், சிலர் மூன்று நாலு வருஷங்களுக்குப் பின் என்றும், ஒருவர் ஓரே வருஷத்திற்குப் பின் என்றும் சொல்லுகிறார்கள். இயேசுவின் மரணத்துக்கு அவ்வளவு சமீபமான காலத்தில் கிறிஸ்தவமதத்தின் சாராம்சங்களாய் ஒப்புக்கொள்ளப்பட்டவை என்னவெனில், கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து, மகிமையில் நிலைத்திருந்து, சிலபேருக்குத் தரிசனமானாரென்கிற இவைகளே. 1 கொரி $15^{3,4}$. அடக்கம் பண்ணப்பட்டதை இங்கே குறிப்பிட்டது கவனிக்கத்தக்க காரியம்; ஏனென்றால், அடக்கம் எப்படிச் சரீரப்பிரகாரமாக இருந்ததோ, அதின் பக்கத்தில் குறித்திருக்கிற உயிர்த்தெழுதலும் சரீரப்பிரகாரமாகவே இருக்கவேண்டும். அதோடுகூட 'மூன்றாம் நாள்' என்கிற வார்த்தையையுங் கவனிக்கவேண்டும். கிறிஸ்தவமார்க்கத்தை உண்டுபண்ணின சம்பவம், அதாவது அதுமுதல் கிறிஸ்தவர்கள் வாரத்தின் ஏழாம் நாளைத் தவிர்த்து, வாரத்தின் முதலாம் நாளை ஆசரிக்கப்பண்ணின அவ்வளவு முக்கியமான சம்பவம் அன்றைக்கே நடந்தது. இயேசுவின் உயிர்த்தெழுதலானது ஆவிக்குரிய லோகத்தில் நடந்த சம்பவம்மாத்திரம் அன்று; அது இவ்வுலகத்தில் உண்டானது; இவ்வுலக சரித்திரத்தில் அதற்குத் தேதியுண்டு. பிறகு பவுல் உயிர்த்தெழுந்த இயேசுவைத் தரிசித்தவர்களைக் காட்டுகிற அட்டவணையைக் கொடுக்கிறான். அவன் எழுதிய காலத்தில் அநேகர் ஜீவனோடு இருந்தார்கள். இந்த அட்டவணையை எழுதுகிறதில் ஒவ்வொரு தரிசனத்தையும் குறிக்க வேண்டுமென்பது அவனுடைய நோக்கம் அன்று. இயேசு யதார்த்தமாய்ப் பலருக்குத் தரிசனமானாரென்று உறுதியாய் ரூபிப்பதே அவனுடைய நோக்கம். ஆகையால் சுவிசேஷங்களில் சொல்லியிருக்கிறபடி இயேசு எருசலேமில் சில ஸ்திரீகளுக்குத் தரிசனமானதைப்பற்றிப் பவுலுக்கு ஒன்றுந் தெரியாது எனச் சொல்லக்கூடாது. மேலும் உயிர்த்தெழுந்த விதத்தைப்பற்றி இந்த இடத்தில் சொல்வதும் அவனுடைய நோக்கம் அன்று. ஆண்டவர் எந்த உருவத்தோடு தரிசனமானாரென்று சொல்லப்புகின், பவுல் அதிகமாய்ச் சொல்லக்கூடும். ஆண்டவர் தனக்குத் தமஸ்கு பட்டணத்துக்குச் சமீபத்தில் மகிமையோடு தரிசனமானதைக் குறித்தும் விஸ்தாரமாய் எழுதியிருக்கலாம். ஆனால் ஆண்டவர் உயிர்த்தெழுந்தாரென்கிற சத்தியத்தைமாத்திரம் இங்கு கூறுவது அவனுடைய நோக்கம். பவுலுக்கு உண்டான தரிசனத்தைக்குறித்து நாம் இன்னும் ஆராய்ந்தால், அதில் சில சங்கதிகள் நமக்குத் தெளிவில்லாமல் இருந்தாலும், ஒரு விஷயம் மிகுந்த தெளிவாயிருக்கிறது. கல்வாரி மேட்டில் சிலுவையில் அறையப்பட்ட நாசரேத்தூரானாகிய இயேசு, தேவனது வலதுபாரிசத்தில் மகிமையோடும் வல்லமையோடும் உயர்த்தப்பட்டிருக்கிறார் என்கிற விஷயத்தைப்பற்றி, அத்தரிசனத்தைக் கண்டபிறகு பவுலுக்கு யாதொரு சந்தேகமுமில்லை. உயிர்த்தெழுதலைக்குறித்து அவன் எழுதும்போதெல்லாம் மகிமை, வல்லமை என்னும் இவ்விரண்டு பதங்களை அதிகமாய்ச் சொல்லுகிறான். பிதாவின் மகிமையாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டார். ரோ $6^{4}$. மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததனாலே தேவனுடைய சுதனென்று பலமாய் ரூபிக்கப்பட்ட தேவகுமாரனாயிருக்கிறார். ரோ $1^{5}$. தேவனுடைய வல்லமையின் மகா மேன்மையான மகத்துவத்தைக் காண்பிக்க

வேண்டுமானால், அவர் கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து எழுப்பி, எல்லாத் துரைத்தனத்துக்கும், அதிகாரத்துக்கும், வல்லமைக்கும் கர்த்தத்துவத்துக்கும் இம்மையில் மாத்திரமல்ல, மறுமையிலும் பேர்பெற்றிருக்கும் எல்லா நாமத்துக்கும் மேலாய் இயேசு உயர்ந்திருக்கத் தக்கதாக அவரை உன்னதங்களில் தமது வலதுபாரிசத்தில் உட்காரும்படி செய்ததைத்திருஷ்டாந்தமாகக் கூறுகிறுன். எபே $1^{19-23}$. சர்வ வல்லமை என்பது கிறிஸ்துவை உயிர்ப்பித்த வல்லமையே. அந்த வல்லமை நம்முடைய ஆத்துமாவின் எல்லா அவசரங்களுக்கும் போதுமானது. எபே $3^{20}$ பிலி $3^{21}$-ல் அவன் உலகத்தில் நடமாடுகிற மனிதருடைய அற்ப சரீரத்துக்கு எதிராக உயிர்த்தெழுந்த கிறிஸ்துவின் மகிமையான சரீரத்தை வைக்கிறுன். உயிர்த்தெழுதலுக்குமுன் இயேசுவுக்கு இருந்த அற்ப சரீரத்திற்கும் அதற்குப்பின் இருந்த மகிமையான சரீரத்திற்கும் யாது சம்பந்தமென்று கேட்டால், பவுல் தனக்குத் தெரியாது எனச் சொல்லுவான். அது பரமரகசியம். 1 கொரி $15^{51}$. ஆயினும் இரண்டிற்கும் சம்பந்தமில்லை எனப் பவுல் ஒருநாளும் சொல்லியிருக்கமாட்டான். அந்த அற்ப சரீரமே மறுரூபமாக்கப்பட்டு, மகிமையின் சரீரமாக மாற்றப்பட்டதென்று சொல்லியிருக்கிறுன் என்று 1 கொரி $15^{51}$-ல் பார்க்கிறோம்.

**மற்ற நூல் அத்தாட்சி.**

பவுலைத்தவிர இன்னும் யாருக்கு எவ்விடங்களில் உயிர்த்தெழுந்த இயேசு தரிசனமானுரென்று எழுதியிருக்கிறதென்று பார்த்தால், புதிய ஏற்பாட்டில் சில தரிசனங்களைப்பற்றி வெகு சுருக்கமாய்ச் சொல்லியிருப்பதை வாசிக்கிறோம். இதைக்கொண்டு திட்டமான ஒரு அட்டவணையை எழுதுகிறது கடினம். ஆனாலும் பின்வரும் அட்டவணை சற்றேறக்குறைய சரியாயிருக்கும்.

1. கல்லறையிலிருந்து திரும்பிவந்த ஸ்திரீகளுக்கு. மத் $28^{8-10}$.

2. அதேநாளில் மகதலேனு மரியாளுக்கு. யோவா $20^{11-18}$.

3. உயிர்த்தெழுந்தநாளில் எருசலேமில் பேதுருவுக்கு. லூக் $24^{34}$ 1 கொரி $15^{5}$.

4. அன்று சாயங்காலம் எம்மாவுக்குச் சென்ற இரண்டு சீஷருக்கு. லூக் $24^{13-35}$ மாற் $16^{13,14}$.

5. அன்று எருசலேமில் பத்து அப்போஸ்தலருக்கு. மாற் $16^{14-18}$ லூக் $24^{36-49}$ யோவா $20^{19-23}$ 1 கொரி $15^{5}$.

6. ஒரு வாரத்துக்குப் பின்பு எருசலேமில் பதினொரு அப்போஸ்தலருக்கு. யோவா $20^{26-29}$.

7. கலிலேயாக் கடலருகே சில சீஷருக்கு. யோவா $21^{1-23}$.

8. ஐந்நூறுபேருக்கு அதிகமான சகோதரருக்கு. 1 கொரி $15^{6}$. ஒருவேளை மத் $28^{16-20}$.

9. யாக்கோபுக்கு. 1 கொரி $15^{7}$.

10. பரலோகம் செல்லுமுன் எருசலேமில் அப்போஸ்தலருக்கு. லூக் $24^{50-52}$ அப் $1^{3,8}$ மாற் $16^{19}$.

இவைகளைத்தவிர இன்னும் அநேக தரிசனங்கள் இருந்திருக்குமென நினைக்க இடமுண்டு.

இந்த அத்தாட்சி எல்லாம் சுத்தப் பொய் என்று இந்நாட்களில் கிறிஸ்துமார்க்க விரோதிகள்கூடச் சொல்லமாட்டார்கள். சில சீஷருக்கு ஏதோ ஒரு காட்சி காணப்பட்டதென்பது நிச்சயம். ஆனால் சீஷர்களுடைய மனதில் அதிக மலைவு இருந்ததால், அவர்கள் தாங்கள் இயேசுவைக் கண்டதாக நினைத்தார்கள் என்பது சிலருடைய உத்தேசம். என்றாலும் உலக சரித்திரத்தில் இவ்வளவு ஆசீர்வாதமான கிரியைகளை நடப்பித்தது எதுவோ, அது சிலருடைய மயக்கத்திலிருந்து உண்டாயிற்று என்று சொல்லுகிறது அதிக கஷ்டம். மேலும், ஏன் மூன்றும் நாளில் எழுந்தாரென்று சொல்லியிருக்க வேண்டும்? மூன்றும் நாளைக் குறித்து அப்போஸ்தலர்களெல்லாரும் கொடுத்த சாட்சி அதிக திட்டமாயிருக்கிறது. இயேசு உயிரோடு எழுந்திருக்கவில்லையென்று நினைக்கிறவர்கள், அவர் எழுந்தாரென்கிற தப்பிதமான சரித்திரம் எப்படி உண்டானதென்று விளக்கிக் காட்டும்படி எவ்வளவுதான் பிரயாசப்பட்டபோதிலும், அது அவர்களால் முடியவில்லை.

இயேசுவின் உயிர்த்தெழுதலின் அத்தாட்சியை நாம் சீர்தூக்கிப் பார்க்கையில், மூன்று விஷயங்களை நாம் மறக்கக்கூடாது.

**முதலாவது**, இது ஒரு சாதாரண மனிதனுடைய உயிர்த்தெழுதல் அன்று; இது இயேசுவின் உயிர்த்தெழுதல். ஏரோது அரசன் அல்லது ஒரு சாமானியமான மனிதன் எழுந்தானென்ருல் அது அசாத்தியம். ஆனால் இயேசு உயிரோடிருந்தபோது, அவர் நடந்துகொண்ட விதத்தையும், அவர் நடப்பித்த கிரியைகளையும் கவனித்தவர்கள் அவர் மரணத்தினால் கட்டப்படுதல் கூடாத காரியம் என்று உணர்ந்தார்கள். அவ்வுணர்ச்சியே அவர் எழுந்திருந்தாரென்னும் நம்பிக்

கைக்கு ஒரு முகாந்தரமாயிற்று; உயிர்த்தெழுதலை நம்பமாட்டோம் என்று சொல்லுகிறவர்கள் இவ்விஷயத்தை அடிக்கடி மறந்துவிடுகிறார்கள்.

**இரண்டாவது,** அப்போஸ்தலர்கள் இவ்வுயிர்த்தெழுதலை மனிதருக்குச் சொல்லிமுடியாத சந்தோஷத்தைக் கொடுக்கிற சுவிசேஷமாகக் கூறினார்கள். உயிர்த்தெழுதல் விருதாவாய் நடந்தகாரியம் அல்ல, அது மனிதருடைய இருதயத்துக்கும், மனச்சாட்சிக்கும் மேன்மையான பொருளைத் தரக்கூடியது. உயிர்த்தெழுதலும் அதின் நோக்கமும் சேர்ந்து மனிதருக்குத் தேவனுடைய அழைப்புப் போலக் காணப்பட்டது. பாவமன்னிப்பு வேண்டாமென்றும்; செத்தபிறகு கணக்குக் கொடுக்கப்போகிறதில்லையென்றும்; இயேசு சிலுவையில் மரித்துப்போய் உயிர்த்தெழுந்திருக்கவில்லை எனச் சாதிக்கிறதினால் நஷ்டமென்ன என்றும் சொல்லக்கூடிய மனுஷன் இருப்பான் ஆகில், அவன் உயிர்த்தெழுதலை ஒருநாளும் நம்ப முடியாதுதான். அதினுடைய அத்தாட்சியையும் அவனால் சீர்தூக்கிப் பார்க்க முடியாது. இப்படிச் சொல்லும்போது, அந்த அத்தாட்சி பலமற்றதென்று ஒப்புக்கொள்ளுகிறோமா? இல்லையே. கர்த்தரைக் கண்டிருக்கிறோம் என்று சொன்னவர்களுடைய சாட்சியே எல்லா அத்தாட்சிக்கும் மூலாதாரம். அவ்வத்தாட்சி மிகவும் பலமானதே. ஆனாலும் யார் யார் அந்த விஷயத்தில் மனிதருடைய இரட்சிப்புக்குரிய பெரிய காரியங்கள் அடங்கியிருக்கின்றனவென்று கண்டிருக்கிறார்களோ, அவர்களே அதினுடைய அத்தாட்சியைச் சரியாய் மதிக்கக்கூடியவர்கள். உயிர்த்தெழுதலானது அர்த்தமும் பிரயோஜனமும் அற்ற ஒரு சம்பவமென்றால், வேறெந்த அத்தாட்சியும் நமக்குப் போதுமானதாகத் தோன்றாது.

**மூன்றாவது,** இயேசு உயிர்த்தெழுந்தாரென்று நம்பினவர்கள் அதினால் மனம் திரும்பின விதத்தையும், அவர்களுக்கு வந்த ஆத்தும பலத்தையும், அவர்கள் அதினால் செய்த கிரியைகளையும், ஸ்தாபித்த திருச்சபையையும் கவனிக்கிறவர்கள், இவைகளெல்லாம் ஒரு பொய்யான கதையாலாவது, நாலுபேருடைய மயக்கத்தாலாவது உண்டாயிருக்குமா என்று கேட்பார்கள். ஏற்கனவே நாம் சொல்லியபடி, உயிர்த்தெழுதலுக்கு முக்கிய அத்தாட்சி யாதெனில், நாம் புதிய ஏற்பாட்டில் காண்கிற மிதமில்லாத புது ஜீவனே. உயிர்த்தெழுதலுக்குரிய வல்லமை சன்மார்க்க கிரியைகளை நடப்பிக்கிறதென்று மனிதர் பூர்வீகத்திலிருந்தே கவனித்து, பின்பு அதற்கு இருக்கும் மற்ற அத்தாட்சிகளைச் சீர்தூக்கிப் பார்த்து, அதை நம்பியிருக்கிறார்கள். அப்போஸ்தலர்கள் குணத்திலே மாறுதல் அடைந்ததும், திருச்சபை உண்டானதுமே உயிர்த்தெழுதலுக்கு முக்கிய அத்தாட்சி.

இம்மூன்று விஷயங்களையும் மனதில் வைத்துக்கொண்டு, நாம் நூல்களில் காண்கிற அத்தாட்சியைச் சீர்தூக்கிப் பார்த்தால், அது நமக்குப் போதுமானதாகத் தோன்றும்.

அது போதுமெனத் தோன்றினும், நமக்குச் சுவிசேஷங்களிலுள்ள சரித்திரங்கள் எல்லாம் ஒற்றுமையுடையதாகத் தோன்றுமெனச் சொல்லக்கூடாது. சில விவரங்களில்மாத்திரம் வித்தியாசங்களிருந்தாலும், அதினால் அத்தாட்சி பலம் அற்றுப்போகாது. ஏனென்றால் அநேகர் ஒரு காரியத்தைப் பற்றி உண்மையான சாட்சி கூறும்போது, சில வித்தியாசங்கள் இயல்பாய் வரும். அவர்கள் எல்லாரும் சேர்ந்து ஒரு கதையைக் கட்டினால்தான் யாதொரு வித்தியாசமும் தோன்றாது. அப்படியிருக்க நாம் நாலு சுவிசேஷங்களில் வாசிக்கிற சரித்திரங்களில் இம்மாதிரிச் சிறு விஷயங்களைக்குறித்து மாத்திரமல்ல, சில பெரிய விஷயங்களைக்குறித்தும் பேதங்கள் காணப்படுகின்றன. நாம் வாசிக்கிற விவரங்களையெல்லாம் இணைத்து இசைவாகவும் தொடர்பாகவும் சரித்திரத்தைச் சொல்லுகிறது அரிது. இது அநேகருக்குப் பெரிய ஆட்சேபனையாகத் தோன்றும். ஆனால் முதலில் தரிசனங்கள் காணப்பட்ட நாட்களில் எல்லாருக்கும் அதிக பிரமிப்பும் மனவெழுச்சியும் இருந்திருக்குமென்பது நிச்சயம். இப்போதுள்ள சுவிசேஷங்கள் அந்நாட்களுக்கு இருபது அல்லது முப்பது வருஷங்களுக்குப் பிந்தி எழுதப்பட்டபடியால், அந்நாட்களில் நடந்த சம்பவங்களின் விவரத் தொடர்ச்சியை நுட்பமாய் அறிய முடியவில்லை. மேலும் நாம் சுவிசேஷ சரித்திரங்களை இன்னும் ஆராயும்போது கண்ட தரிசனங்களை எல்லாம் ஒன்று தவறாமல் பதிவுசெய்வது எழுதினவர்களுடைய நோக்கம் அல்ல என்று பார்ப்போம். இயேசு உயிரோடெழுந்தாரென்றும், அவர் அப்போஸ்தலர்களுக்குத் தரிசனமானாரென்றும், உலகமெங்கும் போய்த் தமக்கு எல்லோரையும் சீஷர்களாக்கும்படி அவர்களுக்குக் கட்டளை யிட்டாரென்றும் சொல்லுகிறது அவர்கள் நோக்கமேயொழிய, எந்த ரூபத்தோடு தரிசனமானாரென்பதையும், எவ்வெவ்விடங்களில் யார் யாருக்குத் தரிசன

மாஞரென்பதையும் சகல விவரங்களோடும் நுட்பமாய் எழுதிவைக்கவேண்டுமென்பது அவர்கள் எண்ணம் அல்ல. அதற்குத் திருஷ்டாந்தமாக, லூக் 24-ம் அதிகாரத்தை வாசித்தால், உயிர்த்தெழுந்த நாளிலேயே இயேசு எம்மாவுக்குப் போன சீஷர்களுக்கும், சீமோனுக்கும், பன்னிருவருக்கும் தரிசனமாகி, தம்மைப்பற்றிய வேதவாக்கியங்களை விளக்கிக் காட்டி, அப்போஸ்தலர்களைப் பெத்தானியாவண்டையில் நடத்தி, அங்கே அவர்களை ஆசீர்வதித்து, அவர்களை விட்டுப் பிரிந்து பரலோகஞ் சென்ருரென்று நினைப்போம். ஆஞலும் லூக்கா அப்போஸ்தலர் நடபடிகளின் புஸ்தகத்தில் வேறேவிதமாக எழுதியிருக்கிருன். அதிலே உயிர்த்தெழுதலுக்கு ஆறு வாரத்துக்குப் பிறகுதான் இயேசு பரலோகஞ் சென்ருரென்று எழுதியிருக்கிறது. இவ்விரண்டிற்கும் பொருத்தமுண்டென்று லூக்கா நினைத்திருக்கவேண்டும். ஒருவேளை சுவிசேஷத்தை வாசித்தவர்கள் அதை நடபடிகளின் புஸ்தகத்தோடு சேர்த்து எப்போதும் வாசித்திருப்பார்கள். அவர்கள் எல்லாரும் லூக் 24-ம் அதிகாரத்தில் இச் சரித்திரங்களில் சொல்லியிருப்பதைக் கண்டிருப்பார்கள். லூக்கா தான் நடபடிகளின் புஸ்தகத்தில் விவரித்துச் சொல்லப்போகிற காரியங்களைச் சுவிசேஷத்தின் 24-ம் அதிகாரத்தில் சுருக்கிச் சொல்லியிருக்கிருன். உயிர்த்தெழுதல் நடந்தது யதார்த்தமல்லவென்று சொல்ல இதிலே யாதொரு நிமித்தமுமில்லை. அதேபிரகாரமாக இயேசு தம்முடைய சீஷர்களுக்குத் தரிசனமான இடங்களைக்குறித்து நமக்கு மற்றப்படி விளங்காமலிருக்கிற காரியங்களை விளக்கிக் காட்டலாம். மத்தேயு சுவிசேஷத்தில் நாம் வாசிக்கும்போது ($26^{32}$ $28^{7}$ $28^{10}$ $28^{16}$), அப்போஸ்தலர்கள் கலிலேயாவுக்குப் போய் அங்கே மாத்திரம் கர்த்தரைக் கண்டார்களென்று நினைப்போம். மாற்கு சுவிசேஷம் சரியானபடி முடிகிறதாய்க் காணப்படுகிறதில்லை. அது $16^{8}$-ம் வசனத்தோடு முடிந்துபோகிறது. ஆயினும் மாற் $16^{8}$-ம் வசனத்தை வாசிக்கும்போது மாற்குவும் தரிசனங்கள் கலிலேயாவிலே நடந்தனவென்றும் மத்தேயுவைப்போல எழுதியிருப்பானென்று நினைக்கவேண்டும். லூக்கா தன் சுவிசேஷத்தை எழுதினபோது மாற்கு சுவிசேஷத்தை நன்ருய் அறிந்துதான் எழுதிஞனென்பது சுவிசேஷங்களை நுட்பமாய் ஆராய்ச்சி செய்த வேதசாஸ்திரிகளுடைய கருத்து. ஆஞலும் இதுவரைக்கும் தரிசனங்கள் கலிலேயாவில் நடந்தனவென்று எழுதியிருக்கிற நூலை நன்ருய் அறிந்த இவன் தான் குறித்திருக்கிற தரிசனங்களெல்லாம் எருசலேமிலேயே நடந்தனவென்று எழுதியிருக்கிருன். லூக்கா கலிலேயாவில் கண்ட தரிசனங்களைக் குறித்துப் பேசாமல், எருசலேமில் கண்ட தரிசனங்களைக் குறித்துமாத்திரம் எழுதியிருக்கிருன். முதலில் நாம் இதைப் பார்க்கும்போது, இதில் ஏதோ ஒரு பெரிய தப்பிதமிருக்கிறதென்று நினைப்போம். ஆஞலும் மேற்சொல்லியபடி, உயிர்த்தெழுதலை நம்பின நாலு சுவிசேஷகர்கள் உயிர்த்தெழுதலை நம்பின கிறிஸ்தவர்களுக்கென்றே தங்கள் சுவிசேஷத்தை எழுதினபோது, எல்லாம் விவரமாய் எழுதாமல், சரித்திரத்தை அதிகமாகச் சுருக்கி, தங்களுக்கு முக்கியமாகத் தோன்றின காரியங்களைமாத்திரம் தெரிவித்தார்கள். அந்தச் சுவிசேஷகர்களுக்கு முக்கியமாய்த் தோன்றின காரியங்கள் எவையென்று சுவிசேஷ சரித்திரங்களில் நாம் பார்க்கலாம். அவையாவன: இயேசு சில சீஷரைப் பணிவிடைக்கென்று தெரிந்துகொண்டு, அவர்களோடு மூன்று வருஷகாலஞ் சஞ்சரித்து, அவர்களுக்குப் போதித்து, அவர்களைத் தமக்குப்பிறகு தேவ தொண்டை நடத்தும்படி நியமித்திருந்தார் என்பதும்; அவர்களுக்கே அவர் தரிசனமாகி, அவர்களுக்கு உயிர்த்தெழுந்ததின் அர்த்தத்தைக் காண்பித்தாரென்பதும்; அவர் திவ்விய மகிமையுள்ளவரும், தேவனுடைய வலது பாரிசத்தில் வீற்றிருக்கிறவருமாஞரென்று அவர்கள் உணர்ந்தார்களென்பதும்; அவருக்குச் சகல அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், பூலோகம் எல்லாவற்றையும் தமக்கு ஆதாயப்படுத்தும்படி அப்போஸ்தலர்களாகிய அவர்களை எங்கும் அனுப்பிஞரென்பதுமே. மற்ற விவரங்களில் சில வித்தியாசங்களிருந்தாலும், இந்த முக்கியமான காரியங்களைச் சுவிசேஷகர்கள் எல்லாரும் தெரிவித்திருக்கிருர்கள். இந்நோக்கத்திஞல் அவர்கள் பல தரிசனங்களை ஒன்ருய்த் திரட்டி, ஒரே தரிசனத்தைப்போலக் குறித்திருப்பார்களென்று நாம் உத்தேசிக்கலாம். அப்படித் திரட்டிவைத்திருக்கிற அத் தரிசனம் மத்தேயுவும் மாற்குவும் கலிலேயாவில் அருளப்பட்டதாகச் சொல்லுகிருர்கள். லூக்காவோ எருசலேமில் அருளப்பட்டதாகச் சொல்லுகிருன். யோவான் அது எருசலேமில் அருளப்பட்டதாகச் சொல்லி, பிறகு கலிலேயாவில் உண்டான இன்னெரு தரிசனத்தையும் தெரிவிக்கிருன். இயேசு தரிசனந் தந்த இடத்தையும் காலத்தையும் நுட்பமாய் எழுதுவது அவர்கள் நோக்கம்

அன்று. அவர் எழுந்து, சீஷர்களுக்குத் தரிசனமாகி, அவர்கள் பூலோகம் எங்கும் போய் அவரைப் பிரசங்கிக்கவேண்டுமென்று கட்டளை கொடுத்தார் என்பதைப் பதிவு செய்வதுதான் அவர்களுடைய நோக்கம். நாம் அவர்களைப் பார்த்து, உயிர்த்தெழுதலைப் பற்றி நீங்கள் எழுதிய சரித்திரங்களில் சில விவரங்களைச் சரியாய் எழுதவில்லை என்று சொன்னால் 'ஆம், இருக்கலாம்' என்று ஒப்புக்கொண்டிருப்பார்கள். அதினால் அவர்கள் உயிர்த்தெழுதலைப்பற்றிக் கொடுத்த சாட்சிக்கு யாதொரு பலக்குறைவும் இல்லை.

புதிய ஏற்பாட்டில் நாம் காண்கிற கிறிஸ்தவ மார்க்கம் உயிர்த்தெழுதலில்லாமல் கட்டப்பட்டிருக்க முடியாது. உயிர்த்தெழுதலே கிறிஸ்தவமார்க்கத்துக்கு அஸ்திபாரம் என்று சொல்லுகிறதில்லை. இயேசுவின் ஜீவியமும் ஊழியமும், அற்புதங்களும், பாடுகளும், உயிர்த்தெழுதலும் எல்லாம் ஒன்று சேர்ந்துதான் கிறிஸ்தவமார்க்கத்தின் அஸ்திபாரம் ஆனபோதிலும், அப்போஸ்தலனாகிய பவுல் 1 கொரி $15^{14-17}$-ல் சொன்னது இந்நாள் வரை மெய்யான வார்த்தைதான். 'கிறிஸ்து எழுந்திருக்கவில்லை என்றால், எங்கள் பிரசங்கமும் விருதா. உங்கள் விசுவாசமும் விருதா....நீங்கள் இன்னும் உங்கள் பாவங்களி லிருப்பீர்கள்.' இப்படியிருக்க உயிர்த்தெழுதலின் அத்தாட்சி அசைக்கக்கூடாதென்கிற உணர்ச்சி நமக்கு அதிக சந்தோஷத்தைக் கொடுக்கிறது. நாம் கர்த்தரைக் கண்டிருக்கிறோம் என்று சொன்னவர்கள் மாறுதல் அடைந்து, புதிய ஏற்பாட்டுப் புஸ்தகங்களில் காணப்படுகிற அற்புதமான ஆத்தும ஜீவனடைந்தவர்களாய், கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தார்கள். உயிர்த்தெழுதலின் நம்பிக்கை இந்நாள்வரைக்கும் அற்புத கிரியைகளை நடத்திவருகிறது.

**இயேசுகிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றிப் புதிய ஏற்பாட்டிலுள்ள கோட்பாடுகள். The Christology of the New Testament.** இயேசுகிறிஸ்து அவதரித்த காலத்தில் அவர் யார், அவருக்கும் பிதாவுக்கும் இருக்கிற சம்பந்தம் என்ன, அவருக்கும் மனிதருக்கும் இருக்கிற சம்பந்தம் என்ன, இத்தியாதி காரியங்களைக்குறித்து அவருடைய சொந்த மனதிலும் ஆதி கிறிஸ்தவர்களுடைய மனதிலும் இருந்த எண்ணங்களை எடுத்துக் காட்டுவது இங்கு எமது நோக்கம்.

இவ்விஷயத்தை நாம் பின்வருமாறு பிரித்து ஆராய்ந்தால் அது தெளிவாய் விளங்கும்:—I. முதல் மூன்று சுவிசேஷங்களிலுள்ள கோட்பாடுகள். II. அப்போஸ்தலர்கள் திருச்சபையை ஸ்தாபித்தகாலத்தில் போதித்த போதனை; இதற்கு அப்போஸ்தலர் நடபடிகளின் புஸ்தகத்தில் குறித்திருக்கிற பேதுருவின் பிரசங்கங்கள் திருஷ்டாந்தம். III. அப்போஸ்தலனாகிய பவுல் தன்னுடைய நிருபங்களில் குறித்திருக்கிற கோட்பாடுகள். IV. எபிரெயர் நிருபத்தின் கோட்பாடுகள். V. வெளிப்படுத்தின விசேஷத்தின் கோட்பாடுகள். VI. யோவான் சுவிசேஷத்தின் கோட்பாடுகள். VII. முடிவுரை.

**I. முதல் மூன்று சுவிசேஷங்களின் கோட்பாடுகள்.**

**(a) ஆண்டவருடைய மனுஷீகதன்மை:—** முதல் மூன்று சுவிசேஷங்களில் இயேசு மெய்யான மனுஷீகதன்மை யுடையவராகக் காணப்படுகிறார். அவர் சரீரத்திலும், புத்தியிலும், இயற்கையாய் வளர்ந்து, பசியும் தாகமும் அடைந்து, உபத்திரவங்களைச் சகித்து, மற்ற மனிதரைப்போல மரணத்தறுவாயில் கடவுளுக்கு ஒப்புக்கொடுக்கவேண்டிய ஆவியை யுடையவராயிருந்தார். சந்தோஷம், துக்கம், சமாதானம், அன்பு, கோபமாகிய உணர்ச்சிகள் எல்லா மனிதருக்கு மிருப்பது போலவே, அவருக்கு மிருந்தன. தாம் செய்துவந்த ஊழியத்துக்குப் பலத்தைப் பெறவும், பிதாவினால் நடத்தப்படவும், அவர் தாழ்மையாய்ப் பிரார்த்தனை செய்துவந்தார். தம் வல்லமையைத் தமக்காக உபயோகிக்க அவருக்கு உண்மையான சோதனைகள் நேர்ந்தன. சாதாரண இயற்கை விஷயங்களைக் குறித்து அவர் இருந்த தேசத்திலும் காலத்திலும்வழக்கமாயிருந்த அபிப்பிராயங்கள் அவருக்கு மிருந்தன. சாதாரண மனிதரைப்பார்க்கிலும் அவர் பிறருடைய உள்ளத்தை ஊன்றிப் பார்த்து அறிந்தாராயினும், சகலத்தையும் அறிகிற அறிவு அவருக்கு இருக்கவில்லை. மாற் $13^{32}$. காரியங்களை அறியக் கேள்விகளைக் கேட்பார். சிலபோது ஆச்சரியப்பட்டுத் தமது ஆச்சரியத்தை வெளியிடுவார். அத்திமரத்தில் கனியிருக்குமென்றெண்ணி அவர் அதன் கிட்டப்போனபோது அதில் கனி யிருக்கவில்லை. மாற் $7^{34}$ மத் $14^{19}$ $21^{18}$ லூக் $11^{20}$. முதலிய வசனங்களைப் பார்க்கும்போது, அவர் செய்த அற்புதங்களைத் தமது சொந்த சர்வவல்லமையால் செய்யாமல், கடவுளிடம் தாம் வைத்த விசுவாசத்தால் செய்தாரென நாம் நினைக்கவேண்டியதாயிருக்கிறது. இயேசு அவதார புருஷனாய் வந்தகாலத்தில் அவருக்கு மனுஷ சித்

தம், தெய்வ சித்தமாகிய இரண்டு சித்தங்களு மிருந்தனவென்று சிலர் உத்தேசிக்கிறார்கள். அப்படி உத்தேசிக்க இச்சுவிசேஷங்களில் யாதொரு அத்தாட்சியும் காணேம். உயிர்த் தெழுதலுக்குப் பிந்தி அவருக்கிருந்த மகிமை அதற்கு முந்தியு மிருந்திருக்குமென்று தப் பிதமாக நினைத்ததனாலே, அவ்வெண்ணம் உண்டாயிருக்கவேண்டும். அவதாரமாய் வந்த தேவகுமாரன் இப்புவியில் எந்த மனிதருக் கும் பொதுவாயிருக்கிற சுபாவத்தைப் பெற் றுக்கொண்டார்.

(*b*) **மேசியாவைப்பற்றியது:**—மேசியா அல்லது கிறிஸ்து என்கிற பேர் யூதருக்கு நன்றாய்த் தெரியும். இரண்டாம் சங்கீதத் தை வாசிப்பதினாலே இப்பதம் அவர்களுக் குப் பழக்கமாயிருக்கலாம். தமிழ் வேதபுஸ்த கத்தில் சங் 2²-ல் 'அவர் (கர்த்தர்) அபிஷே கம்பண்ணினவர்' என்பது மூலபாஷை யில் 'மேசியா' என்றும், கிரேக்கு மொழி பெயர்ப்பில் 'கிறிஸ்து' என்றும் விளங்கும். பரம ராஜ்யத்துக்குத் தலைவர், மீட்கப்பட்ட ஜனத்தின் புதிய அரசன் என்கிறதுதான் அக்காலத்தில் இப்பதத்தின் தாற்பரியம். இயேசு அப்பெயரைச் சொல்லி, தம்மு டைய போதனையால் அதற்கு இருக்கிற அர்த்தத்தைப் புதுப்பித்து, 'ஆவிக்குரிய இரட்சிப்பைக் கொடுக்கிறவர்' என்கிற பொருளை அதற்குக் கொடுத்தார். ஆகை யால் அவர் தமது தொண்டின் ஆரம்பநாட் களில் தம்மை மேசியாவென்று யாருக்கும் வெளியிடவில்லை. பிலிப்புச் செசரியாவின் திசைகளில் அவர் அதைக்குறித்துத் தமது சீஷரோடு பேசினபோது, பேதுரு செய்த அறிக்கையை அவர் மிகவும் புகழ்ந்தபோதி லும், காய்பாவுக்கு முன்பாக நின்ற சமயத் திலேதான் அவர் முதலாவதாக எல்லாருக்கு முன்பாகத் தம்மை மேசியாவென்று பகி ரங்கமாக வெளியிட்டாரென்று தோன்று கிறது. யோவான்ஸ்நானன் கேட்ட கேள் விக்கு இயேசு (மத் 11²⁻⁶) கொடுத்த பதிலைப் பார்த்தால், மேசியாவினுடைய தொழில் இன்னதென்று நாம் பார்க்கலாம். ஆனால் மேசியா என்கிற அந்தப் பழைய பேருக்கு அவர் நூதனமும் மேன்மையுமான பொரு ளைக் கொடுத்தார். தீர்க்கதரிசிகள் ஆதியில் மேசியாவைக் குறித்து என்ன உரைத்தனர் களோ, அவையெல்லாம் அவர் நிறைவேற் றினதோடு, பழைய பெயரில் அடங்காத பல காரியங்களைச் சம்பந்தப்படுத்தினார். ஏசா 53-ம் அதிகாரத்தில் சொல்லப்பட்ட பாடு படும் தேவனுடைய தாசனைக் குறித்து அதிக மாய்த் தியானஞ்செய்து, மேசியா உண்மை யாக யூத ஜனத்தை இரட்சிக்கும்பொருட்டு அப்படியே பாடுபட நேரிடுமென்று உணர்ந் தார். ஆகையால் பழைய பெயரில் வைத்த புதிய அர்த்தங்கள் பழைய துருத்தியில் ஊற் றின புதிய ரசத்தைப்போலிருந்தன. ஆனா லும் பழைய பெயர் இன்னும் வழங்கப் பட்டு, கடவுள் தமது ஜனங்களைத் தீமையி லிருந்து மீட்டுக்கொள்ளுகிறதற்கு ஒரு இர ட்சகரை அனுப்பியிருக்கிறார் என்கிறதற் குச் சாட்சி பகருகிறது.

(*c*) **மனுஷகுமாரன்:**—ஆண்டவர் தம்மைக் குறித்துத் தாம் பிரியமாய் வழங்கிவந்த பெயர் இது. ஏறக்குறைய 40 விசை இந்தப் பெய ரால் தம்மைக்குறித்து வழங்கினதை நாம் சுவிசேஷங்களில் பார்க்கிறோம். எந்த அர்த் தத்தோடு இதைச் சொன்னாரென்று திட் டமாகச் சொல்லுகிறது கஷ்டமானபோதி லும், அப்பெயரைக்குறித்து இரண்டொரு விஷயங்கள் தெளிவாயிருக்கின்றன. தானி 7¹³·¹⁴-ல் சொல்லப்பட்ட மனுஷ குமாரனை மூலாதாரமாக வைத்து, மனுஷ குமாரன் என்கிற பெயரால் இனி மகிமை யையும் ராஜ்யத்தையும் அடையப்போகிற மனுஷீக தன்மையைக் குறித்தார். பிறகு அவர் அருளிய அநேக உபதேசங்களால் அதற்குப் 'பாடுபடும் பிரதிநிதியாகிய புரு ஷன்' என்பதுபோன்ற அநேக தாற்பரியங் களை அந்தப் பெயரில் அடக்கிவைத்தார். அந்தப் பெயரைக் கேட்டவர்கள் உடனே மேசியா என்கிற அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளமாட்டார்கள். இல்லாவிட்டால் நாம் மத் 16¹³-ல் வாசிக்கிற கேள்வி வீண் கேள்வி யாகும். கேட்டவர்களுடைய காதில் அது எப்போதும் ரகசியமான அர்த்தமுள்ள ஒரு பெயராக விழுந்தது. அவர் மனிதருடைய யோசனையைத் தூண்டுகிறதற்கு இலேசாய் அர்த்தம் விளங்காத உவமைகளைக்கொண்டு எப்படிப் பேசினாரோ, அதே நோக்கத்தோடு அப்பெயரைச் சொன்னார் என்று தோற் றுகிறது. அப்பெயர் நமக்கும் அவருக்கும் பொதுவாயிருக்கிற மனுஷ சுபாவத்தைக் குறித்தபோதிலும், அவர் நம்மைக்காட்டி லும் பெரியவர் என்று குறிப்பாக நினைப் பூட்டுகிறது. அவர் மனுஷரைப்போலத் தாழ் ந்த நிலைமையுள்ளவர் என்று சொல்வதுடன், இனி அவருக்கு வரப்போகிற மேன்மை யையும் அது காட்டுகிறது. இப்படியாகப் பாடுகளின் மூலமாகவே மகிமையை அடை கிறவர் என்னும் பொருள் மனுஷகுமாரன் என்கிற பெயரில் படிப்படியாய் விளங் கினது.

(*d*) **தேவனுடைய குமாரன்:** — கிறிஸ்தவர்களாகிய நமக்கு இப்பெயரில் அடங்கிய மேலான பொருளானது, அதை முதலில் சொல்லுகிறவர்களுக்குத் தெரியவில்லை. பிசாசு பிடித்தவர்கள் (மாற் 3[11]); விசுவாசியாத யூதர்கள் (மத் 27[40]), நூற்றுக்கதிபதி (மாற் 15[39]), காய்பா (மத் 26[63]) முதலாயினோர் மேசியா என்கிற பொருள்படமாத்திரம் அதை வழங்கிவந்தார்கள். அவர் ஞானஸ்நானம் அடைந்தபோது அவரை நேசகுமாரன் என்று பிரஸ்தாபப்படுத்தின வார்த்தை, சங் 2[7]-ஐப் போலவே இருந்தமையால், மேசியா என்பதுதான் அதின் அர்த்தமெனப் புலப்படும். பழைய ஏற்பாட்டில் தெரிந்துகொள்ளப்பட்ட ஜனத்திற்கும், அவர்களை ஆண்டு அவர்களுக்குப் பிரதிநிதியாய் யேகோவாவினால் நியமிக்கப்பட்ட அரசனுக்கும், இனி வரப்போகிற சம்பூரணமுள்ள அரசனுக்கும் தேவகுமாரன் என்னும் பெயர் வழங்கப்படுகிறது. குமாரனென்றால் பிதாவினுடைய மகிமையையும், வல்லமையையும் சுதந்தரித்துப் பிதாவினுடைய முழு அன்பையும் அநுபவித்துக்கொண்டிருக்கிறவர் என்பதாம். இரண்டாவது சொல்லப்பட்ட அந்த உள்ளான விஷயந்தான் இயேசுவின் மனதில் அதிகமாயிருந்தது. முதல் மூன்று சுவிசேஷங்களின்படி அவர் தம்மைக்குறித்துத் தேவனுடைய குமாரன் என்னும் பேரை வழங்கவில்லை. ஜனங்கள் தம்மை மேசியாவென்று முதலில் அறியவேண்டாமென்று அவர் விரும்பினது அதற்குக் காரணமாயிருந்திருக்கலாம். அவர் தமது தத்துவத்தைக் காட்டும்போது வெறும் 'குமாரன்' என்கிற வார்த்தையை உபயோகித்ததற்கு அத்தாட்சியுண்டு. அவ்வார்த்தை மூன்று விசேஷித்த இடங்களில் (மத் 11[27] 28[19] மாற் 13[32]) சொல்லப்பட்டது மாத்திரமன்று; திராட்சத் தோட்டத்தைப்பற்றிய உவமையிலும் (லூக் 20[9-17]), வரியைக்குறித்து அவர் பேதுருவிடம் கேட்ட கேள்வியிலும் (மத் 17[25, 26]), தாவீதினுடைய குமாரனைப்பற்றியும், தாவீதினுடைய ஆண்டவரைப்பற்றியும், அவர் வேதபாரகரோடு பண்ணின சம்பாஷணையிலும் (மத் 22[41-45]) அந்த வார்த்தை குறிப்பாகக் காட்டப்பட்டிருக்கிறது. மேற்கூறியதைவிட உறுதியானது யாதெனில், அவர் கடவுளை நோக்கி 'என் பிதாவே' என்று சொல்லுகிற வழக்கம் (மத் 7[21] 10[32] 12[50] முதலிய இடங்களைக் கவனிக்க) அவரை மற்றவர்களிலிருந்து பிரிக்கிறது. இதுசம்பந்தமாய் நாம் முக்கியமாய் கவனிக்கவேண்டிய இடம், மத் 11[27]. 'சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது; பிதா தவிர வேறொருவனும் குமாரனை அறியான்; குமாரனும், குமாரன் அவரை எவனுக்கு வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும்தவிர, வேறொருவனும் பிதாவை அறியான்.' இவ்வாக்கியத்திலே பிதாவுக்கும் குமாரனுக்குமுள்ள சம்பந்தம் பூர்த்தியானதென்று பார்க்கிறோம். தீர்க்கதரிசிகளும் பரிசுத்தவான்களும் பூரணமாய் அறியாத பரமபிதாவை அவர் பூரணமாய் அறிகிறார். அவ்வித அறிவும் தரிசனமும் மற்றவர்களுக்கு அவர் மூலமாகவேயன்றி மற்றப்படி வராது. அதேபிரகாரமாக இயேசுவின் சுபாவமானது பிதாவுக்கேயன்றி, மற்றவர்களுக்குத் தெரிகிறதில்லை. மற்றவர்களுக்கும் கடவுளுக்கும் இருக்கமுடியாத நெருங்கிய ஐக்கியம் பிதாவுக்கும் குமாரனுக்கு முண்டு. கடவுளும் இயேசுவும் தங்கள் ஜீவனில் ஒன்றாகவே இருக்கிறார்கள். மனுமக்கள் இயேசுவின் மூலமாகவே தேவனுடைய புத்திரராகிறார்கள்

இயேசு தம்மைக் 'குமாரன்' என்றுணர்ந்த உணர்ச்சி அவருடைய முழு ஜீவியத்துக்குப் பணிவிடைக்கும் மூலாதாரமாக இருந்தது. அவர் தம்மை மேசியாவென்றும், பிறகு தேவன் தமக்குப் பிதாவென்றும், உணர்ந்து, தாமே தேவனுடைய குமாரனாயிருக்கிறபடியால் மேசியா செய்யவேண்டிய இரட்சிப்பின் கிரியைகளைச் செய்து, பரலோக ராஜ்யத்துக்குத் தலைவராக இருந்து, மனுஷகுமாரனாக வந்தாரென்று பார்க்கிறோம். எல்லாரிலும் அவர் மேன்மையான இயல்புள்ளவரானதினாலே, எல்லாரிலும் மேலான கிரியைகளைச் செய்து முடித்தார்.

(*e*) **இயேசுவுக்குத் தம்முடைய மேன்மையைப் பற்றியிருந்த எண்ணம்:** — மேற்சொன்ன பெயர்களினால் மாத்திரமன்று, இயேசு செய்த பல காரியங்களினாலும், பேசின பல வார்த்தைகளாலும், அவர் தம்மை மற்றெல்லா மனிதரைப்பார்க்கிலும் உயர்ந்தவராக உணர்ந்தாரெனப் பார்க்கிறோம். சாந்தமும் மனத்தாழ்மையு முள்ளவராகிய அவர் தமது நடத்தையில் சொல்லற்கரிய மேன்மை யுடையவராகக் காணப்பட்டார். அவருடைய சீஷர்களும், நாசரேத்து ஜெபஆலயத்தில் கூடினவரும், பிசாசு பிடித்தவர்களுமாகிய யாவரும் இம்மேன்மையைக் கண்டார்கள். தாயைப்பார்க்கிலும் தம்மை நேசிக்க வேண்டுமென்று அவர் தமது சீஷர்களுக்குச் சொன்னபோது, அது அவர்களுக்கு அநியாயமாகத் தோன்றவில்லை. மத் 10[37] லூக் 18[29]. மேலும், அவர் அற்புதங்க

ளைச் செய்கிறவராயிருந்ததினால் அல்ல, அவர் சிறப்புற்ற அதிகாரமுள்ளவராகக் காணப்படுகிறதினாலே, அவரை இவ்வளவாய் மேன்மைப்படுத்தினார்கள். பரலோக ராஜ்யத்தின் திறவுகோலை வைத்துக்கொண்டு, அதில் பிரவேசிப்பவர்கள் யாரெனத் தீர்மானிக்க அதிகாரமுடையவராகப் பேசினார். பூர்வீக நியாயப்பிரமாணம் விதித்திருந்த பல காரியங்களைத் தள்ளிவிட்டு, வருத்தப்படுகிறவர்கள் யாவரையும் தம்மண்டை அழைத்து, பாவத்தை மன்னிக்கிறதற்குத் தமக்கு அதிகாரமுண்டெனச் சொல்லி, திமிர்வாதக்காரனுக்கும் மரிக்கும் தறுவாயிலிருந்த குற்றவாளிக்கும் பாவமன்னிப்பை அளித்தார். கடவுள் மனிதரை எந்தமனதோடு பார்க்கிறார், அவர் எப்படி ஜெபத்தைக் கேட்கிறார், அவர் என்னத்தினாலே மனிதரை நியாயந்தீர்த்து பாவத்தை மன்னிக்கிறார், இத்தியாதி விஷயங்களில் கடவுளுடைய மனதைப் பூர்த்தியாய் அறிந்தவராகப் பேசினார். இவ்விஷயங்களைக் குறித்து ஒரு விநாடி நேரமாவது அவருக்குச் சந்தேக மூண்டானதாகத் தோன்றுகிறதில்லை. அவர் பூமியில் வந்ததால் தீமையின் வல்லமை ஜெயிக்கப்பட்டாயிற்று; அவர் தமது மரணத்தால் அநேகரை மீட்டுக்கொள்ளுவார்; அவர் மரித்தோரிலிருந்து எழுந்து இனிமேல் உலகத்தை நியாயந்தீர்க்க வருவாரென்கிற உணர்ச்சி எல்லாக் காலங்களிலும் அவருக் கிருந்தது. சீஷர்கள் அவருக்கும் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட பெரியோர்களுக்கும் வெகுதூரம் வித்தியாசமென்று உணர்ந்துகொண்டார்கள். மனிதர் தன்னுடைய நாமத்தை அறிக்கை செய்ய வேண்டுமென்று எந்தத் தீர்க்கதரிசி சொல்லியிருந்தான்? எந்தத் தீர்க்கதரிசி சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறதென்று சாதித்தான்? இயேசுவோ, தம்மை விசுவாசிக்கிறவர்களுக்கு இரட்சிப்பு இருக்கிறதென்றும், தமது நாமத்தினாலே கூடிவருகிறவர்களின் மத்தியில் தாம் இருப்பதாக வாக்களித்தார். முதல் மூன்று சுவிசேஷங்களில் இயேசுவினுடைய மனுஷீக தன்மையைப்பற்றி மாத்திரம் எழுதியிருக்கிறதென்று சொல்லுகிறவர்கள் இக்காரியங்களைக் கவனியாமலிருக்கவேண்டும். இச்சுவிசேஷங்களில் கிறிஸ்துவின் தத்துவத்தைக்குறித்துத் திட்டமான போதனையொன்றுமில்லையாயினும், அப்போஸ்தலர்கள் பிறகு கிறிஸ்துவின் தத்துவத்தைக்குறித்துத் தங்கள் பிரசங்கங்களில் சொன்ன காரியங்கள் வாஸ்தவமாயிருந்தால்தான், மேற்கூறிய விஷயங்கள் நமக்கு விளங்கும்.

## II. அப்போஸ்தலர்கள் திருச்சபையை ஸ்தாபித்தகாலத்தில் போதித்த போதனை.

நடபடிகளின் புஸ்தகத்தில் குறித்திருக்கிற பேதுருவின் பிரசங்கங்களில் கிறிஸ்துவின் தத்துவத்தைக்குறித்துத் திட்டமான போதனை அவ்வளவு சொல்லப்படவில்லை. சீஷர்கள் அவரை இன்னாரென்று அறிவதற்குச் சிலகாலஞ் சென்றது. பேதுரு இயேசுவைக்குறித்து முதலாவது பேசினதாவது, 'நசரேயனாகிய இயேசுவைக்கொண்டு தேவன் உங்களுக்குள்ளே பலத்த செய்கைகளையும், அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பித்து, அவைகளினாலே அவரை உங்களுக்கு வெளிப்படுத்தினார்.' அப் $2^{22}$. அப்படியே கொர்நேலியுவின் வீட்டில், 'நசரேயனாகிய இயேசுவைத் தேவன் பரிசுத்த ஆவியினாலும் வல்லமையினாலும் அபிஷேகம் பண்ணினார்; தேவன் அவருடனேகூட இருந்தபடியினாலே அவர் நன்மை செய்கிறவராயும், பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குணமாக்குகிறவராயும் திரிந்தார்' என்றான். அப் $10^{38}$. பேதுரு அந்த ஆரம்பநாட்களில் பிரசங்கித்த நற்செய்தியின் சுருக்கமானது: 'இந்த இயேசுவே வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட மேசியா; அதற்கு அவர் செய்த அற்புதங்களும், அவருடைய உயிர்த்தெழுதலும், அவர் மகிமையோடு பரலோகஞ் சென்றதும் அத்தாட்சி' என்பதே. இவ்வாறு சொன்னபோதிலும் அந்நாட்களில் இயேசுவை வெறும் மனுஷனாக அவர்கள் பாவித்தார்களென்று நாம் நினைக்கக்கூடாது. அவர் பிதாவினுடைய வலதுகரத்தினாலே உயர்த்தப்பட்டு, பரிசுத்த ஆவியைப் பெற்று அதைப் பொழிந்தருளியிருக்கிறார். அப் $2^{33}$. அவரே உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தோர்களுக்கும் பிதாவினால் ஏற்படுத்தப்பட்ட நியாயாதிபதி. அப் $10^{42}$. பிரசங்கிக்கப்படும் சுவிசேஷமெல்லாம் அவரைப்பற்றியதே; அவரையே விசுவாசிக்கவேண்டும்; அவரை நோக்கி மனந்திரும்பிப் பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம்பெறவேண்டும். அப் $2^{38}$. அவருடைய நாமத்தினாலே, அதாவது வெளிப்பட்ட அவராலே இரட்சிப்பு கிடைக்கும். அப் $2^{38}$ $3^{16}$ $4^{12}$ $10^{43}$. அவரை நோக்கி ஜெபம்பண்ணப்படுகிறது. அப் $1^{24}$ $7^{59}$ $9^{14}$. ஆகையால் விசுவாசிகள் அப்போது கிறிஸ்துவின் தத்துவத்தை வரையறுத்துப் பார்க்கிறதற்குப் பிரயாசப்படாமலிருந்தபோதிலும், அவரைச் சேவிக்கிறவர்களாயும் அவரை நம்புகிறவர்களாயுமிருந்தார்கள் என்பது தெளிவு. அவரோடு

புசித்துப் பானம் பண்ணினவர்கள், அவருடைய மரணத்தைக் கண்டவர்கள், அவரைப் பற்றி இவ்வித சிந்தனையுள்ளவர்களா யிருந்தார்கள்.

III. **அப்போஸ்தலனுகிய பவுலினுடைய கோட்பாடுகள்.**—பவுல் உலகத்தைப்பற்றி யோசித்த யோசனைக்கெல்லாம் கிறிஸ்துவே நடு மையம்; அவன் கிறிஸ்துவைப்பற்றி யோசித்த யோசனைக்கெல்லாம் இரட்சிப்பே நடு மையம். அவன் கிறிஸ்து மரித்து, எல்லாரையும் இரட்சித்திருக்கிறாரென்கிற நிச்சயத்தை மூலாதாரமாக வைத்துக்கொண்டு, அந்த நிச்சயத்திலிருந்து துவங்கி, அந்த தெய்வ புருஷன் யாராக இருக்கவேண்டுமென்று அனுமானிக்கிறான். அவர் எல்லாருக்காகவும் மரித்தவர் எல்லாரோடும் விசேஷித்த சம்பந்தமுடையவராக இருக்கவேண்டுமானதால், அவருடைய கிரியையும் அவருடைய தத்துவமும் பவுலினுடைய மனதில் ஒன்றித்திருக்கின்றன. இயேசு கர்த்தர் என்பதே பவுலினுடைய விசுவாசப்பிரமாணச் சுருக்கம். 1 கொரி 12³ ரோ 10⁹ பிலி 2¹¹. மற்றவர்களைப்போல அவனும் முதலில் யூதருடைய மேசியாவைக்குறித்து எண்ணின போதிலும், அவன் சீக்கிரத்தில், இயேசு யூதருக்காக மாத்திரமல்ல, உலகத்தார் எல்லாருக்காகவும் வந்தவரென்கிற உணர்ச்சியை அடைந்தான். 'மனுஷகுமாரன்' என்கிற பெயரை ஒருதடவையாகிலும் வழங்காமல், 'தேவனுடைய ராஜ்யம்' என்னும் பெயரால் இயேசுகிறிஸ்துவினுடைய தத்துவத்தைக் குறிப்பாகக் காட்டுகிறான்.

1. நாலு சுவிசேஷங்களில் இயேசுவைக்குறித்து எழுதியிருக்கிற விவரங்களெல்லாம் பவுலுக்குத் தெரிந்திருக்கும். அவன் ஆண்டவருடைய வார்த்தைகளைப் பரம அதிகாரமுடையனவாக எண்ணி அவைகளை எடுத்துரைக்கிறான். ஆனபோதிலும் இயேசு செய்த அற்புதங்களைப்பற்றியாவது, அவர் மனுஷனாக மனிதர் மத்தியில் நடந்த விதத்தைப்பற்றியாவது பவுலின் நிருபங்களில் ஒன்றையும் காணோம். அவர் மனுஷனாய்ப் பிறந்ததும், பாவமில்லாதிருந்ததும், இராப்போஜனத்தை ஸ்தாபித்ததும், சிலுவையில் மரித்ததும், மூன்றாம்நாளில் உயிர்த்தெழுந்ததுமாகிய இவைகளைமாத்திரம் பவுல் சொல்லுகிறான். மீட்பின் செயலைப்பற்றியும், அதினாலுண்டான சிலாக்கியங்களைப்பற்றியும் பவுல் முக்கியமாகச் சிந்தித்துக்கொண்டிருந்தபடியால், இயேசு மனுஷனாகச் செய்த காரியங்களைக்குறித்து அவன் பேசாமலிருந்தது ஆச்சரியமன்று. ஆயினும் இயேசு வாஸ்தவமாக மனுஷீக தன்மையுடையவரும் ஸ்திரீயினிடத்தில் பிறந்து, மாம்சத்தின்படி தாவீதின் சந்ததியாரில் ஒருவரும் என்பது பவுலின் விசுவாசம். ரோ 1⁵.

2. மாம்சமும் இரத்தமுமாகிய சரீரத்தைத்தவிர, இயேசுவிடத்திலிருந்த விசேஷம் என்ன வென்றால், 'பரிசுத்தமுள்ள ஆவி.' ரோ 1⁵. அதுவே அவருடைய இயல்பை முற்றிலும் ஆண்டது. அன்றியும், அவரை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்த சக்தியும் அதுவே.

3. பூமியில் இயேசு செய்த காரியங்களைக் குறித்துப் பவுல் அதிகமாய்ப் பேசாமலிருந்ததற்கு ஒரு காரணமிருந்தது. உயிர்த்தெழுந்த மகிமையுள்ள ஆண்டவரோடுதான் அவன் நாடோறும் சகவாசம் செய்தான். உலகத்தின் இரட்சிப்பு உயிர்த்தெழுந்த கிறிஸ்துவிடத்தினின்றே வருகிறதென்று பவுல் அதிகமாய் உணர்ந்து, 'நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்படி அறிந்திருந்தாலும், இனி ஒருபோதும் அவரை மாம்சத்தின்படி அறியோம்' என்று சொன்னான். 2 கொரி 5¹⁶. ஆனாலும் அவர் சொல்லும் மகிமையுள்ள கிறிஸ்து சிலுவையி லறையப்பட்ட கிறிஸ்துதான்; உலகத்தைத் தமது மரணத்தால் மீட்டுக்கொள்ளுகிற கிறிஸ்துதான். 2 கொரி 5¹⁹. பவுல் கிறிஸ்துவைப் பாவிக்கிறவிதமாவது: தமஸ்குவுக்குப் போகும் வழியில் இரட்சகர் தனக்குத் தரிசனமானதுபோல, அவர் கடவுளுக்கு அடையாளமாகிய பிரகாசமான ஜோதியில் வாசமாயிருக்கிறார்; அவர் தமது பாடுகளால் செய்த ஒப்புரவாக்குதலின் வேலையைப் பூரணப்படுத்தக்கூடிய ஸ்திதியை அடைந்திருக்கிறார். அவர் சபைக்கு நாயகன் மாத்திரமல்ல, பூரண சர்வ வல்லமையுமுடையவராகவும் இருக்கிறார். 'எல்லாத் துரைத்தனத்துக்கும், அதிகாரத்துக்கும், வல்லமைக்கும், கர்த்தத்துவத்துக்கும், இம்மையில் மாத்திரமல்ல, மறுமையிலும் பேர் பெற்றிருக்கும் எல்லா நாமத்துக்கும் மேலாய் அவர் உயர்ந்திருக்கத்தக்கதாக, தேவன் அவரை உன்னதங்களில் தம்முடைய வலதுபாரிசத்தில் உட்காரும்படி செய்து, எல்லாவற்றையும் அவருடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி இருக்கிறார். எபே 1²⁰⁻²². அவருடைய மகிமை இவ்வளவாயிருந்தாலும், அது இனிமேல்தான் பூர்த்தி பெறப்போகிறது. பரலோகத்தி லிருக்கிறவைகளும் பூலோகத்தி லிருக்கிறவைகளுமாகிய சகலமும் கிறிஸ்துவுக்குள்ளே கூட்டப்படவேண்டுமென்பது தேவனுடைய சித்தம். எபே 1⁹. அவருடைய ஆளுகை அவருடைய இரண்

டாம் வருகையில் மேல் நிலைக்கு வரும். இந்த மகிமையுள்ள ஆண்டவர் விசுவாசிகளுக்கு எட்டாத அதிக உயரத்திலிராமல், அவர்களுடைய பக்கத்திலும் அவர்களுக்குள்ளுமிருந்து கொண்டு, மட்டில்லாத அன்போடும் வல்லமையோடும் அவர்களை நடத்தி, ஏவி, ஆற்றி, அனல் மூட்டிக்கொண்டிருக்கிறபடியால், பவுல் தான் கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறதாகவும், தன்னுடைய ஜீவன் தன்னுடையதாயிராமல், தனக்குள்ளே வாசமாயிருக்கிற கிறிஸ்துவினுடைய ஜீவனு யிருக்கிறதாகவும் சொல்லுகிறான். கலா $2^{20}$. பவுல் தன்னுடைய சபையாருக்காகப் பண்ணுகிற விண்ணப்பமாவது, விசுவாசத்தினாலே கிறிஸ்து அவர்களுடைய இருதயங்களில் வாசமாயிருக்கவேண்டு மென்பதே. எபே $3^{17}$. பவுலுக்கும் உயிர்த்தெழுந்த கிறிஸ்துவுக்கும் இருந்த சகவாசத்திற்கு 2 கொரி $12^{8,9}$ திருஷ்டாந்தமாகும். பவுல் பயபக்தியோடு தன் ஆண்டவரோடு ஐக்கியப்பட்டு, இயல்பாகவே அவரை நோக்கி விண்ணப்பம் செய்துவந்தான். அவன் ஏன் கிறிஸ்துவை இப்படி தேவனுடைய ஸ்தானத்திலிருப்பவராகப் பாவித்தான் என்றால், ($a$) கிறிஸ்து மனுஷஜாதிக்கு இரட்சகரானதினால், இரண்டாம் ஆதாம் என்கிற பேரில் குறித்திருக்கிறபடி அவருக்கும் மனிதர் எல்லாருக்கும் விசேஷித்த சம்பந்தமுண்டு. ஆதாம் மூலமாய்ப் பிறந்த மனுஷஜாதிக்கு ஆதாம் தலைவனும், பிரதிநிதியுமா யிருந்ததுபோல, கிறிஸ்து தமது மரணத்தாலும், உயிர்த்தெழுதலாலும் புதிதும் மீட்கப்பட்டதுமாயிருக்கிற மனுஷ ஜாதிக்குத் தலைவரும் பிரதிநிதியுமாயிருக்கிறார். ரோ 5 அதி. மனுஷருடைய வளர்ச்சி மாம்சத்துக்கும் ஆவிக்கும் உரியதான இரண்டு படிகளை உடையது. கிறிஸ்துவிலிருந்த ஜீவனிலும், கிறிஸ்துவின் மூலமாய் வந்த ஜீவனிலும் ஆவிதான் பிரதானம். ஆவிக்குரிய ஒரு புதுச் சிருஷ்டிப்புக்குத் தலைவரும் காரணருமாகிய கிறிஸ்துவின் மூலமாகவே மனிதரைப் புதிப்பிக்கிறதற்குக் கடவுளின் கிருபை வருகிறது. ($b$) பவுல் கிறிஸ்துவை அவ்வளவு உயர்ந்த ஸ்தானத்திலிருப்பவராகப் பாவித்ததற்கு இரண்டாம் முகாந்தரம், கிறிஸ்து அவதாரமாக வராததற்கு முந்தி. ஆதியிலிருந்தே பரலோகத்தில் தேவனுடைய குமாரனு யிருந்தாரென்று அவன் நம்பினான். 1 கொரி $10^{4}$-ஐ வாசித்தால், வனாந்தரத்தில் யூத பிதாக்களுக்குத் தண்ணீரைக் கொடுத்த கன்மலை கிறிஸ்துவே என்று சொல்லுகிறான். 2 கொரி $8^{9}$-ல் கிறிஸ்து வலிய தமது மகிமையை விட்டாரென்றுசொல்லியிருக்கிறது. 'நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையை அறிந்திருக்கிறீர்களே; அவர் ஐசுவரியமுள்ளவராயிருந்தும் நீங்கள் அவருடைய தரித்திரத்தினால் ஐசுவரியமுள்ளவர்களாகும் படிக்கு, உங்கள் நிமித்தம் தரித்திரரானாரே.' இவ்விஷயம் பிலி $2^{5-11}$-ல் இன்னும் தெளிவாய் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. கிறிஸ்து தேவனுடைய ரூபமாயும் தேவனுக்குச் சமமாயு மிருந்தபோதிலும், எல்லா மனுஷர்களாலும் ஸ்தோத்திரிக்கப்படக் கூடியவராயிருந்தபோதிலும், அவைகளையெல்லாம் விட்டு, தம்மைத் தாழ்த்தி, மரித்து, இவ்விதமாய் மனுஷருடைய ஸ்தோத்திரத்திற்குப் பாத்திரரானார். இதினாலே பவுல் தாழ்மையென்னும் பாடத்தைப் பிலிப்பியருக்கு உணர்த்துகிறான்.

4. பவுலுக்கு இம்மாதிரியான எண்ணங்களிருந்ததைக் கண்டால், கிறிஸ்து உலகத்தையும் மனிதனையும் சிருஷ்டித்ததில் பங்கு பெற்றவரென்று அவன் நம்பினது ஆச்சரியமல்ல. கொலோ $1^{13-18}$-ல் பின் கூறப்படும்காரியங்கள் கவனிக்கப்படத்தக்கன. (1) கிறிஸ்துவைக்கொண்டே சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது. (2) அவர் சகலத்தையும்தாங்கிவருகிறார். (3) எல்லாம் அவரை இலக்காக வைத்து அவரிடம் செல்லுகிறது. இன்னொரு வாக்கியத்தில் ஒரே கடவுள் இருக்கிறார் என்று பவுல் சொல்லும்போதே, எல்லாம் கிறிஸ்துவின் மூலமாகவே உண்டாயிருக்கிறதென்று சாதிக்கிறார். 'பிதாவாகிய ஒரே தேவன் நமக்குண்டு; அவராலே சகலமும் உண்டாயிருக்கிறது; அவருக்கென்று நாமும் உண்டாயிருக்கிறோம். இயேசுகிறிஸ்துவென்னும் ஒரே கர்த்தரும் நமக்குண்டு; அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாயிருக்கிறது; அவர் மூலமாய் நாமும் உண்டாயிருக்கிறோம்.' 1 கொரி $8^{6}$. ரோ $9^{5}$-ல் கிறிஸ்து மேலான தேவனென்று சொல்லியிருக்கிறது; ஆனாலும் மூலபாஷையில் இவ்வார்த்தைகள் கிறிஸ்துவைக் குறிக்கிறதா, பிதாவைக் குறிக்கிறதாவென்று கண்டறிவது சந்தேகமா யிருக்கிறது. இப்படி இயேசுகிறிஸ்து தேவனுக்குச் சமமாயிருக்கிறவர் என்று பவுல் அடிக்கடி சொல்லி இருந்தபோதிலும், இன்னும் சில இடங்களில் கிறிஸ்து பிதாவுக்குக் கீழ்ப்பட்டவரா யிருக்கிறாரென்று அதிக தெளிவாய்ச் சொல்லியிருக்கிறான். கடவுள் கிறிஸ்துவை ஈவாக உலகத்துக்குக் கொடுத்தார், அல்லது கடவுளே கிறிஸ்துவுக்கு மகிமையைக் கொடுத்தார் என்று பின்வருமிடங்களில் பார்க்கிறோம். 'தம்முடைய குமாரனை தேவன் அனுப்பினார்.' கலா $4^{5}$,

'தம்முடைய சொந்த குமாரனென்றும் பாராமல் அவரை ஒப்புக்கொடுத்தார்.' ரோ $8^{32}$. 'தேவன் எல்லாவற்றிற்கும் மேலாக அவரை உயர்த்தினார்.' பிலி $2^{9}$. இவ்வாக்கியங்களைப்பார்க்கிலும் 1 கொரி $11^{3}$ தெளிவாயிருக்கிறது. 'ஸ்திரீக்குப் புருஷன் தலையாயிருக்கிறா னென்றும், கிறிஸ்துவுக்குத் தேவன் தலையாயிருக்கிறார் என்றும் நீங்கள் அறியவேண்டும்.' அதுபோல 1 கொரி $15^{28}$-ல் 'சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது, தேவனே சகலத்திலும் சகலமுமாயிருப்பதற்கு, குமாரன் தாமும் தமக்குச் சகலத்தையும் கீழ்ப்படுத்தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்.' கிறிஸ்து எப்படி பிதாவுக்குச் சமமாயும் கீழ்ப்பட்டவராயும் இருக்கக்கூடுமென்கிறதைப் பவுல் விளக்கிக் காட்டுகிறதில்லை. அதைப்பற்றிப் பவுலுக்கு அக்கரையில்லை. அவனிடம் அதைப்பற்றிக் கேள்வி கேட்டிருப்போமானால், ஒரு தகப்பனுக்கும் அவன் குமாரனுக்கும் ஒரே இயல்பு இருக்கிறதானாலும், குமாரன் கீழ்ப்பட்டவனாயிருக்கிறதுபோல கிறிஸ்து பிதாவோடு ஒரே இயல்புள்ளவராகவும், பிதாவுக்குக் கீழ்ப்பட்டவராகவு மிருக்கிறார் என்று ஒருவேளை சொல்லியிருப்பான்.

5. பவுல் கிறிஸ்துவைப்பற்றிப் போதித்த போதனை மற்ற அப்போஸ்தலர்கள் போதித்தவைகளுக்குச் சார்பாகவே இருந்தது. பவுல் நூதனமான கிறிஸ்தவமார்க்கத்தை ஸ்தாபித்தான் என்று சிலர் சாதிக்கும் சாதனைக்கு யாதொரு அத்தாட்சியும் இல்லை. நமக்குத் தெரிந்தவரையில் அவன் கிறிஸ்துவின் தத்துவத்தைக் குறித்துப் போதித்த போதனை உடனே எல்லாருக்கும் நியாயமாகவே தோன்றி, எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அவன் தன் எண்ணங்களில் முதலாம் அப்போஸ்தலர்களை மிஞ்சிப்போனானென்பது வாஸ்தவமானபோதிலும், அவர்களுடைய எண்ணங்களை மறுக்காமல், பரிபூரணப்படுத்தினான். கிறிஸ்து நமது வாக்குக்கு எட்டாதவரானதால் கிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றி நமக்குத் திருப்தியைத் தரும் மொழிகளால் அதை விளக்குகிறது அசாத்தியம். ஆனபோதிலும் பவுல் மற்றவர்களைப்பார்க்கிலும் அவரைப்பற்றிச் சொல்லக்கூடியதை அதிக தெளிவோடும் தீரத்தோடும் சொல்லியிருக்கிறான் என்பது நிச்சயம்.

**IV. எபிரேயர் நிருபத்தின் கோட்பாடுகள்.** — இந்நிருபத்தை எழுதினவனுடைய கொள்கையின்படி, கிறிஸ்து புதிதும் விசேஷித்ததுமான உடன்படிக்கைக்கு மத்தியஸ்தராக இருக்கிறார். அவர் ஒப்பில்லாத மகிமையுள்ளவரானபடியால், புதிய உடன்படிக்கை பழைய உடன்படிக்கையைவிடச் சிரேஷ்டமானது.

1. உலகத்தில் அவதரித்த இயேசுவைக் குறித்து இந்நிருபம் வெகு விவரத்துடன் சொல்லி, அவர் மெய்யான மனிதனென்று அதிக உணர்வோடு வர்ணித்துக் காட்டியிருக்கிறது. அவருடைய ஜீவியகாலத்தில் நடந்த சில சம்பவங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. $2^{14}$ $5^{7}$ $12^{2}$ $13^{12}$. இயேசு என்னும் பெயர் பத்துவிசை வருகிறது. அவர் எல்லா மனிதரையும்போல வளர்ந்து, தாம் பட்ட பாடுகளினால் கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார். $5^{8}$. எல்லாவிதத்திலும் நம்மைப்போல அவர் சோதிக்கப்பட்டும், பாவமில்லாதவராக இருந்தார். $4^{15}$. அவர் நமக்கேற்ற பிரதான ஆசாரியன் என்று காட்டும்போது, அவர் முற்றிலும் பாவமில்லாதவரென்று தெளிவாகச் சொல்லியிருக்கிறது. $7^{28}$. புதிய ஏற்பாட்டில் நாம் வேறெங்கும் காணாதபிரகாரமாக இயேசுவின் மனிததன்மைக்குரிய குணதிசயங்கள் இதில் அதிக உணர்வோடு விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவருடைய உண்மை ($2^{17}$ $3^{2}$), நம்பிக்கை ($2^{13}$), பயபக்தி ($5^{7}$) முதலிய நற்குணங்களைப்பற்றி வாசிக்கிறோம். மனுஷருக்குரிய இந்த அநுபவத்தினால் அவர் பூரணரானார் என்று $5^{9}$-ல் நாம் வாசிக்கும்போது, அவருக்கு எப்போதாவது குற்றம் இருந்ததென்பது அதின் தாற்பரியமாயிராதபடிக்கு அவருக்குள் மறைந்துகிடந்த இலட்சணங்களெல்லாம் அவருடைய மனுஷீக அநுபவங்களால் வெளிக்குக் கொண்டுவரப்பட்டன என்பது அதின் பொருள். பிதாவினுடைய சித்தத்தின்படி செய்யும் மனதை அவர் உலகத்தில் கற்றுக்கொள்ளாமல், அந்த மனதுள்ளவராகவே உலகத்தில் பிரவேசித்தார். $10^{5-7}$. அவர் தம்மைத் தாழ்த்தி, மனுஷனாக வந்ததின் நோக்கமானது, எல்லாரின் நிமித்தம் பாடுபட்டு, மரித்து, பாவிகள் எல்லாரையும் பரிசுத்தப்படுத்துவதே. அவருக்கு நேரிட்ட அந்த மரணத்தின் அவஸ்தையையும், வெட்கத்தையும்பற்றி அதிக உணர்வோடு எழுதியிருக்கிறது. $5^{7.8}$ $13^{12}$.

2. நிருபத்தின் ஆக்கியோன் இவ்வளவு தெளிவாக இயேசுவின் மனுஷீகதன்மையைக் காட்டியிருந்தபோதிலும், பவுலைப்போல அவனும் கிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றி அதிக சிறப்புடன் பேசுகிறான். அவன் பார்க்கிற உயர்த்தப்பட்ட கிறிஸ்து மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்த பிரதான

ஆசாரியனும் (9[28]), பரலோகத்திலுள்ள மகத்துவ ஆசனத்தின் வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறவருமாயிருக்கிறார். 8[1, 2]. இவ்வெண்ணத்திலிருந்து கிறிஸ்துவின் தத்துவத்தை அனுமானிக்கிறான். நிருபத்தின்துவக்கத்தில் குமாரன் என்பதாக அவரைக் கூறி (1[2]), அந்தக் குமாரன் மனுஷருக்கு மேலானவரென்று அநேகவிடங்களில் காண்பிக்கிறான். அவர் தேவனும் (1[8]), ஆதியிலும் சதாகாலத்திலும் என்றென்றைக்கு முள்ளவரும் (7[3] 13[8]), பிதாவினுடைய மகிமையின் பிரகாசமும், அவருடைய தன்மையின் சொரூபமுமாக இருக்கிறார். 1[3]. இப்படி நித்திய தேவனாயிருந்த அவர் தேவதூதரிலும் சற்றுச் சிறியவராக்கப்பட்டு (2[9]), சாவுக்குள்ளான மனிதராகிய நாம் தரித்திருக்கிற மாம்சத்தையும் இரத்தத்தையும் தரித்துக்கொண்டது (2[14-16]) ஆக்கியோனுடைய இருதயத்தில் உணர்வுண்டாகச் செய்கிறது. கிறிஸ்து மனிதனைப் பிறந்ததற்கு முந்தி ஜீவித்த ஜீவன் இந்நிருபத்தில் விசேஷித்துக் கூறப்பட்டிருக்கிறது. மோசே தான்தரித்தநிந்தையைகிறிஸ்துவினிமித்தமே தரித்தான். 11[26]. கிறிஸ்து கர்த்தாவாயிருந்து, ஆதியிலே பூமியை அஸ்திபாரப்படுத்தினார். 1[10]. தம்மைப் பலியாக ஒப்புக்கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தினாலேயே உலகத்தில் பிரவேசித்தார். 10[5]. அவர் மனித ஜாதியிலிருந்து உண்டானவரல்ல; அவர் மானிட ஜாதிக்குள் பிரவேசித்தவர். ஆனபோதிலும் அவர் மனிதனாக வாஸ்தவமாய்ப் பாடுபட்டார்; அவர்தாமே சோதிக்கப்பட்டுப் பாடுபட்டதினாலே, அவர் சோதிக்கப்படுகிறவர்களுக்கு உதவிசெய்ய வல்லமையுள்ள பிரதான ஆசாரியனாக இருக்கிறார். 2[18].

அவர் குமாரனாயிருந்து, தம்மை மரணத்தின்மூலமாய் மனிதருடைய பேராலே ஒப்புக்கொடுத்து, மனிதருக்காக மரித்து, தம்முடைய பிரதான ஆசாரியத்தொழிலை முடித்தார். தம்மை நித்திய ஆவியினாலே கொடுத்தார் என்று 9[14]-ல் சொல்லியிருக்கிறபடியால், அவருடைய புருஷத்துவத்தில் ஆவிதான் சத்தாயிருந்ததென்றும், அந்த ஆவியால் அவர் மரணத்தில் அழிந்துபோகாமல், பரலோக ஸ்தலத்திலுங்கூடப் பிரதான ஆசாரியத்தொழிலைச் செய்துகொண்டிருக்கிறாரென்றும், அறிந்துகொள்ளுகிறோம். குமாரனாகிய அவர் இப்போதுங்கூடப் பரலோகத்தில் நமக்காகக் கிரியை செய்துகொண்டு, விசேஷமாக நமக்காகப் பரிந்து பேசுகிறவராக இருக்கிறார். 9[24] 4[14] 13[8]. குமாரனாகிய அவர் எல்லாவற்றுக்கும் சுதந்தரவாளியும் மேசியாவுமாகப் பிதாவினுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார். குமாரனாகிய அவர் தமது பலியைப் பிதாவினுடைய சமுகத்துக்கு முன்பாக நமது நிமித்தம் ஏந்திக்கொண்டு பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசிக்கிறார். சொல்லப்புகின், கிறிஸ்து குமாரனாயிருப்பதே எபிரெயர் நிருபத்தின் கருத்து. அவர் குமாரனாயிருப்பதாலே நித்திய உடன்படிக்கை நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது.

**V. வெளிப்படுத்தின விசேஷத்தின் கோட்பாடுகள்.** — வெளிப்படுத்தின விசேஷத்தில் யூதமார்க்கத்தோடு மிகவும் சம்பந்தப்பட்ட கிறிஸ்தவ மார்க்கத்தைப் பார்க்கிறோம். பழைய ஏற்பாட்டிலும் மற்ற யூத புஸ்தகங்களிலும் மேசியாவைப்பற்றி சொல்லப்பட்ட காரியங்களே இதில் கிறிஸ்துவைக் குறித்துச் சொல்லப்பட்டவைகளுக்கு மூலாதாரம். ஆனபோதிலும் இந்தப் புஸ்தகத்தைப்பார்க்கிலும் கிறிஸ்துவின் தத்துவத்தை மேன்மைப்படுத்துகிற புஸ்தகம் வேறில்லை.

1. இப்புஸ்தகத்தில் கிறிஸ்துவின் உலக ஜீவனல்ல, பரலோகத்துக்குரிய அவருடைய ஜீவனே விசேஷமாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும், புருஷத்துவத்தைக் குறிக்கிற இயேசு என்னும் பெயர் அடிக்கடி வழங்கப்படுகிறது. ஆண்டவர் தாவீதுக்கும் யூதாவுக்கும் வேரும் சந்ததியுமாகக் காட்டப்படுகிறார். அவர் இருப்புக்கோலால் ஜாதிகளை ஆளுகிறவர். 2[27]. தானியேல் புஸ்தகத்தில் சொன்னதுபோல அவர் மனுஷகுமாரனுக் கொப்பானவரா யிருக்கிறார். 14[14]. கடைசி ஜெய நாளின் பிரகாசமுள்ள விடிவெள்ளி நட்சத்திரமுமாயிருக்கிறார். 22[16]. ஆட்டுக்குட்டி என்கிற பெயரால் இயேசு சிலுவையில் மரித்து முடித்த தொழில் குறிப்பாகக் காட்டப்படுகிறது. ஆட்டுக்குட்டி என்கிற பெயர் தான் கிறிஸ்துவைக் குறிக்கிற பெயர்களிலெல்லாம் இந்த ஆக்கியோனுக்குப் பிரியமானதென்று சொல்லலாம்.

2. ஆனபோதிலும் அந்த ஆக்கியோன் உலகத்தில் நடந்தவைகளைக்குறித்து அவ்வளவாய்க் கவனியாமல், உயர்த்தப்பட்ட கிறிஸ்துவின் மகிமையின்மேலே கண்ணாயிருக்கிறான். அவன் மேன்மேலும் கிறிஸ்துவை ஸ்தோத்திரித்து, கடைசியாகக் கிறிஸ்துவும் கடவுளும் ஒன்றேயென்று பாவிக்கிறானென்று சொன்னாலும் சொல்லலாம். கிறிஸ்து மரணத்திற்கும் பாதாளத்திற்குமுரிய திறவுகோல்களை யுடையவராக இருக்கிறார். 1[18]. மனுஷருடைய கதியைப்பற்றிய இரகசியங்களை அவர் ஒருவரே திறந்துகாட்ட முடியும். 5 அதி. அவர் அக்கினி ஜுவாலை போன்ற கண்களால் மனிதருடைய உள்ளிந்

திரியங்களையும் இருதயங்களையும் ஆராய்கிறவர். $2^{18, 23}$. அவர் சிருஷ்டிக்கு ஆதியும், தேவனுடைய வார்த்தையுமா யிருக்கிறார். $3^{14}$ $19^{13}$. கடவுளுக்குமாத்திரம் உரிய 'முந்தினவரும் பிந்தினவரும்' என்கிற பெயர் (ஏசா $44^{6}$ வெளி $1^{8}$) இந்தப் புஸ்தகத்தில் மகிமைபொருந்திய கிறிஸ்துவை மூன்று விசை குறிக்கிறது. $1^{17}$ $2^{8}$ $22^{13}$. அவரே எல்லாவற்றிற்கும் ஆதியும் அந்தமுமானவர். இது இப்புஸ்தகத்தில் திரும்பத் திரும்ப அதிக தாபந்தத்துடன் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சிருஷ்டியைத் தொழுதுகொள்ளாமல், கடவுளைத் தொழுதுகொள்ளவேண்டுமென்று $19^{10}$-ல் சொல்லியிருப்பினும், பராபரனுக்குமாத்திரம் செலுத்தப்படவேண்டிய ஸ்தோத்திரம் இப்புஸ்தகத்தில் எங்கும் கிறிஸ்துவுக்குச் செலுத்தப்படுகிறது. தேவனும் ஆட்டுக்குட்டியும் சேர்ந்து, ஒரே தொழுகையோடு ஸ்தோத்திரிக்கப்படுகிறார்கள். 'அப்பொழுது வானத்திலும், பூமியிலும், பூமியின் கீழிருக்கிற சிருஷ்டிகள் யாவும், சமுத்திரத்திலுள்ளவைகளும், அவற்றுள் அடங்கிய வஸ்துக்கள் யாவும், சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும் ஸ்தோத்திரமும் கனமும் மகிமையும் வல்லமையும் சதாகாலங்களிலும் உண்டாவதாக என்று சொல்லக் கேட்டேன்.' $5^{13}$ $7^{10}$. இதினால் அப்போஸ்தலர்கள் எப்படி பராபரனாகிய கடவுளைச் சேவித்தார்களோ, அப்படியே உயர்த்தப்பட்ட கிறிஸ்துவையும் சேவித்தார்கள் என்பது தெளிவு.

3. ஆனாலும் இந்தப் புஸ்தகத்திலுங்கூட இயேசு பிதாவுக்குக் கீழ்ப்பட்டவரென்று சில இடங்களில் சொல்லியிருக்கிறது. அவர் 'என் தேவன்' என்று சொல்லுகிறார். வெளிப்படுத்தின விசேஷம் தேவனால் கிறிஸ்துவுக்கு ஒப்புவிக்கப்பட்டது. $1^{1}$. கிறிஸ்து தமது அதிகாரத்தைத் தேவனிடத்திலிருந்து பெற்றுக்கொண்டார். $2^{26}$ $3^{21}$ $5^{9}$-ஐப் பார்த்தால், அவருக்கிருக்கிற மகிமை அவர் பூலோகத்தில் பட்ட பாடுகளின் பலனாயிருக்கிறதென்று தோன்றுகிறது.

### VI. யோவான் சுவிசேஷத்தின் கோட்பாடுகள்.

1. மற்றச் சுவிசேஷங்களில் இயேசுகிறிஸ்துவைக் குறித்துச் சொல்லியிருக்கிறவைகளுக்குப் பொருந்தாதவிதமாய் யோவான் சுவிசேஷத்தில் எழுதியிருக்கிறதென்று சிலர் நினைத்தாலும், அப்படி நினைத்தற்கு நிமித்தமில்லை. அதை எழுதினவன் ஒரு யூதன், அப்போஸ்தலர்களில் ஒருவன். மற்றச் சுவிசேஷகரைப்போல அவனும் இயேசு மேசியாவா யிருக்கிறாரென்று காட்டவேண்டுமென்றநோக்கத்துடனே எழுதியிருக்கிறான். $20^{31}$. இயேசு மேசியாவாயிருக்கிறதில் எவ்வளவு அர்த்தம் அடங்கியிருக்கிறதென்பதைக் குறித்து அவன் மற்றவர்களைப்பார்க்கிலும் அதிகமாய்த் தியானித்து, மற்றவர்களைவிட விவரமாயும் விஸ்தாரமாயும் எழுதியிருக்கிறானேயொழிய, மற்றவர்கள் எழுதினவைகளுக்குப் பொருத்தமில்லாதவைகளை அவன் எழுதவே இல்லை. $1^{49}$-ல் நாத்தானுவேல் இயேசுவின் அறிவைக் கண்டு, அவரை மேசியாவாக வாழ்த்துகிறான். சமாரிய ஸ்திரீ அவரே மேசியாவாக இருக்கவேண்டுமென்று அனுமானிக்கிறாள். 4 அதி. $7^{31}$-ல் 'கிறிஸ்து வரும்போது இவர் செய்கிற அற்புதங்களைப் பார்க்கிலும் அதிகம் செய்வாரோ' என்று கேட்ட ஜனக்கூட்டத்தார் அதேவிதமாய் யோசித்துக்கொண்டிருந்தார்கள். இயேசுவுக்குக் கொடுக்கப்பட்ட வேலை மேசியாவுக்குரிய வேலையே. செத்தவர்களை எழுப்பவும், நியாயந்தீர்க்கவும், பூர்வீக வாக்குத்தத்தத்தின்படி ஆவியைக் கொடுக்கவும், சகலத்தின்மேலும் ஆளுகையை ஏற்றுக்கொள்ளவும் வந்திருக்கிறார். $3^{35}$ $16^{15}$. இவையெல்லாம் மேசியா செய்யவேண்டிய வேலையே. ஆனாலும் ஒரே ஒரு வித்தியாசமுண்டு. யூதருடைய கொள்கையின்படி யூதஜாதிக்குள்மாத்திரம் மேசியா தன் வேலையைச் செய்யவேண்டும். இந்தச் சுவிசேஷத்தை நாம் பார்த்தால், இயேசு சர்வலோகத்தாருக்கென்றே மேசியாவுக்குரிய தொழிலைச் செய்கிறவராகக் காணப்படுகிறார்.

2. இந்தச் சுவிசேஷகன் மற்றவர்களைப் பார்க்கிலும் கிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றி நுட்பமாயும் தெளிவாயும் பேசுகிறான். முதல் மூன்று சுவிசேஷங்களில் ஒரேதரம் தெளிவாய்ப் பேசப்பட்ட பிதாவுக்கும் குமாரனுக்குமுள்ள சம்பந்தமானது இங்கே விவரமாய்ப் பேசப்படுகிறது. இயேசுவினுடைய தேவத்துவத்தை ஆரம்பத்திலேயே சொல்லி, அதைக் கடைசியிலும் யோவான் சொல்லுகிறான். மற்ற சுவிசேஷகர்கள் இயேசு அன்றாடக ஜீவியத்தில் காட்டினதை யோவான் சுவிசேஷகன் செவ்வையாய்ச் சொல்லி, விஸ்தரித்தும் காட்டுகிறான். அல்லது வேறேவிதமாகச் சொன்னால், மற்றச் சுவிசேஷகர்கள் இயேசு மேசியாவா யிருக்கிறார் என்று சொல்லியிருக்க, எந்தக் காரணத்தினாலே அவர் மேசியாவாயிருக்கிறாரென்று இவன் எடுத்துக் காட்டுகிறான். கிறிஸ்து கடவுளுடைய நித்திய சுதனும், கடவுளைப் பரிபூரணமாய் வெளிப்படுத்

திய புருஷனுமா யிருந்ததினாலேதான் அவர் மேசியாவா யிருக்கவேண்டும். இதைத் தெளிவாகக் காண்பிக்கும்பொருட்டே இந்தச் சுவிசேஷகன் இயேசுவின் ஜீவியத்திலிருந்து சிலவற்றைத் தெரிந்துகொண்டு, அவைகளை விஸ்தரித்து எழுதிவைத்திருக்கிறான்.

3. யோவான் சுவிசேஷத்தில் நாம் பார்க்கிற படம் மாம்சத்தில் வந்த பராபரனுடைய படமே. அதின் ஆரம்பம் முதற்கொண்டே இயேசு மனிதருக்கில்லாத மகத்துவமுள்ளவராகக் காணப்படுகிறார். ஆனபோதிலும் மனுஷருடைய சாதாரண ஜீவியம் அவருக்குத் தெரியாதென்று ஒருபோதும் சொல்லக்கூடாது. யோவான் எழுதின சுவிசேஷத்தைக் கருத்துடன் வாசிப்பவர்களுக்கு இயேசு மெய்யான மனிதனாயிருக்கிறாரென்பதைக்குறித்துச் சந்தேகமிராது. யாக்கோபின் கிணற்றண்டை அவருக்கிருந்த இளைப்பையும், லாசருவின் கல்லறையண்டை அவர் சிந்தின கண்ணீரையும், பன்னிருவருடைய ஐக்கியத்தில் அவருக்கிருந்த பிரியத்தையும், சிலுவையின்மேல் அவருக்கிருந்த தாகத்தையும், மறந்துபோக முடியுமா? விசேஷமாக இந்தச் சுவிசேஷத்தில் அதிக தெளிவுடன் காட்டியிருக்கிறதுபோல, அவர் எந்நேரமும் பிதாவின்பேரில் சார்ந்துகொண்டதே அவருடைய மனுஷீக தன்மைக்கு அத்தாட்சி. 'பிதாவானவர் செய்யக் குமாரன் காண்கிறதெதுவோ அதையேயன்றி, வேறொன்றையும் தாமாய்ச் செய்யமாட்டார்', 5[19] 7[28] 8[28] 10[37] முதலிய வாக்கியங்களை ஒத்துப்பார்க்க. அவர் திரும்பத் திரும்பத் தாம் பிதாவினால் அனுப்பப்பட்டவரென்றும், தமது பிதா தம்மிலும் பெரியவரா யிருக்கிறாரென்றும், தமக்கு வார்த்தைகளும் கிரியைகளும் பிதாவினால் கொடுக்கப்பட்டனவென்றும், தமக்கு ஞானமும் வல்லமையும் பரிசுத்த ஆவியின் மூலமாய்த்தான் வருகிறதென்றும், தாம் பிதாவினுடைய மகிமையைத் தேடுகிறவரென்றும், பிதாவினுடைய சித்தத்தின்படி செய்து அவருடைய கிரியையை முடிப்பதே தமக்குப் போஜனமென்றும் சொல்லுகிறார். நித்தியகாலமாய்க் குமாரனாய் இருந்ததினாலே அவர் பூமியில் மனுஷனாய் இவ்விதமாக குமாரனாய் நடந்தார். அவருடைய முழு தத்துவத்துக்கும் பிதாவே வேர். ஆனபடியினாலே யோவான் சுவிசேஷத்திலுங்கூட இயேசு பிதாவுக்குக் கீழ்ப்பட்டவராகக் காணப்படுகிறார். அவர் மெய்யான மனிதனாயிருந்து, மற்ற மனிதருக்கும் கடவுளுக்கும் இல்லாத விசேஷித்த சம்பந்தமுள்ளவராக இருக்கிறார்.

4. பன்னிரண்டு சீஷர்களுக்கு இயேசுவினுடைய நோக்கத்தைப்பற்றியிருந்த லௌகீக எண்ணங்களை மாற்றும்படி இயேசு பிரயாசப்பட்டாரென்று நாம் மற்ற மூன்று சுவிசேஷங்களில் வாசிக்கிறதுபோல இதிலும் வாசிக்கிறோம். அவருடைய போதனைக்குப் பலனாக, அவர்கள் கொஞ்சகாலத்துக்குள்ளே அவர் தெய்வீக புருஷனென்றும், அவர் கொடுக்கிற சிலாக்கியங்கள் எல்லா மனிதருக்கும் உரியவையென்றும் உணர்ந்தார்கள். 'நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நாங்கள் விசுவாசித்தும் அறிந்துமிருக்கிறோம்' என்று பேதுரு சொன்னான். 6[69]. ஆனாலும் அவர்கள் அவரைக் குமாரனாகத்தான் அறிகிறது அவருடைய விருப்பம். அவர் கடவுளைக்குறித்து 'என் பிதா' என்ற வார்த்தையை 30 விசையும், தம்மைக் குறித்து 'குமாரன்' அல்லது 'தேவனுடைய குமாரன்' என்பதை 17 விசையும் வழங்கியிருக்கிறார். 'குமாரன்' என்கிற வார்த்தையால் அவர் உலகத்துக்கு வந்த இயேசுவைக் குறிக்கிறாரென்றாலும், உலகத்தில் வந்தவர் குமாரனாயிருந்ததற்கு அவர் ஆதியிலிருந்தே குமாரனாயிருந்தது காரணமென்பது யோவானுடைய கொள்கை. உலகத்தோற்றத்துக்கு முன் (17[24]) அவருக்கும் பிதாவுக்கும் விசேஷித்த சம்பந்தமிருந்தது. அப்போதுங்கூட அவர் பிதாவின் மடியி லிருந்தார். 1[18]. 'பரலோகத்திலிருந்து இறங்கினவரும், பரலோகத்தி லிருக்கிறவருமான மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்துக்கு ஏறினவன் ஒருவனு மில்லை.' 3[12].

5. 'குமாரன்' என்கிற பெயரில் அடங்கிய பொருளை இயேசு இப்படி படிப்படியாகக் காட்டி, கடைசியாகத் தாம் மகிமையடைந்து தம்மைப் பின்பற்றினவர்களோடு சதாகாலமும் கூட இருப்பதாக 13–ம் அதிகாரம் முதல் கடைசி அதிகாரம் வரைக்கும் சொல்லிக் காட்டுகிறார். குமாரன் என்றால் பிதாவினால் விசேஷமாய் நேசிக்கப்பட்டவர் என்று முன்னமே அவர் சொல்லியிருக்க, குமாரன் என்றால், பிதாவினுடைய சர்வவல்லமையிலும் சர்வ ஆளுகையிலும் பங்கு பெறுகிறவர் என்று இப்போது காட்டுகிறார். அவருடைய கையில் பிதா எல்லாவற்றையும் ஒப்புக்கொடுத்திருக்கிறார். 13[3]. இயேசு உயிர்த்தெழுந்த பின்புதான் இந்த உபதேசம் சீஷர்களுடைய மனதில் நன்றாய்ப் பதிந்தது. தோமா என்பவன் அதை உணர்ந்து, 'என் ஆண்டவரே, என் தேவனே' என்று கூப்பிட்டான். இயேசு மரணத்தை ஜெயித்தவரும் மகிமையின் ஆண்டவருமாக அவனுக்

குத் தரிசனமானபோது, தான் யேகோவாவை எப்படி நம்பினுனே, அப்படியே இயேசுதான் கிறிஸ்து என்று அச்சமயத்தில் நம்பினுன். யேகோவா எவ்வாறு தமது பக்தருக்கு இருக்கக்கூடுமோ, அவ்வாறே தனக்குக் கிறிஸ்து இருக்கிருரென்று அறிக்கையிட்டான். கிறிஸ்தவமார்க்கத்தின் சாராம்சம் கிறிஸ்துவின் தெய்வீக தன்மையை அறிந்துணர்வது என்பதைப்பற்றி வேறெங்கும் இவ்வளவு தெளிவாய்க் காட்டப்படவில்லை.

6. 'மனுஷகுமாரன்' என்கிற பெயர் யோவான் சுவிசேஷத்திலும் அடிக்கடி வருகிறது. ஆனுல் தேவனுடைய குமாரனைப் பற்றிச் சொல்லப்பட்டவைகளெல்லாம் மனுஷ குமாரனைப்பற்றியும் சொல்லலாம். அவருடைய மகிமையைக்குறித்துப் பேசும்போதே மனுஷகுமாரன் என்பது அடிக்கடி வழங்கப்படுகிறது. $3^{14}$ $8^{28}$ $12^{34}$ $12^{23}$ $13^{31}$. யோவான் அப்பெயரை வழங்கும்போது, அவர் மனுஷனுக வந்ததே பெரிய அற்புதமென்று உணர்ந்து அப்படிச் சொன்னுனென்று தோன்றுகிறது. மனுஷகுமாரனுயிருக்கிறவருக்குப் பரலோகம் திறக்கப்பட்டிருக்கிறது; அவர் சதாகாலமாக அங்கே இருந்துகொண்டு, பிதாவைக் காண்கிருர். $3^{13}$. அவர் முன்னேஇருந்த இடத்திற்கு இனி ஏறிப்போகப் போகிருர். $6^{62}$.

7. கிறிஸ்துவின் தத்துவத்தைக்குறித்து யோவான் சுவிசேஷத்தில் இன்னும் பல வாருக விஸ்தரித்து எழுதப்பட்டிருக்கிறது. அவர் மெய்யான திராட்சச்செடியும் ($15^{1}$), உயிர்த்தெழுதலும் ஜீவனும் ($11^{25}$), ஜீவ அப்பமுமாக ($6^{32}$) இருக்கிருர். இவைகளில் கிறிஸ்துவுக்கும் அவரது சீஷர்களுக்குமுள்ள சம்பந்தம் பல உவமைகளைக்கொண்டு காட்டப்படுகின்றது. அவ்வித சம்பந்தமுள்ளவர் தெய்வீக தன்மையுள்ளவராகவே இருக்கவேண்டும். அதுவே கிறிஸ்துவின் தத்துவத்துக்கு மூலாதாரம். அவர் மனுஷருக்குச் செய்துவருகிற காரியங்கள் கடவுள்தான் செய்தவைகள்.

8. இதுவரை கூறியவற்றைச் சுருக்கிச் சொல்லில், இயேசுவே $10^{30}$-ல் 'நானும் என் பிதாவும் ஒன்ருயிருக்கிறேம்' என்று சொன்னதே சித்தத்தில்மட்டும் ஒன்று என்பார்களானுல், சித்தமே புருஷன் என்பது தற்காலத்தவர்களுக்குத் தெளிவுறத் தெரிந்த விஷயமே. சித்தத்தில் பூரண ஒற்றுமையுள்ளோர் தத்துவத்தில் வேற்றுமையாயிருப்பது அசாத்தியம்.

9. இனி சுவிசேத்தின் ஆரம்பத்தில் 'பரம வாக்கு' என்ற தேவனுடைய வார்த்தை என்பவரைப்பற்றிச் சொல்லியிருக்கிற விஷயங்களைக் கவனிக்கவேண்டும். பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் தேவனுடைய ஞானம், தேவனுடைய ஆவி, தேவனுடைய வார்த்தை முதலிய பெயர்கள் உலகத்தில் கிரியை செய்துவருகிற தேவனுடைய சக்தியைக் குறிக்கின்றன. பிறகு பைலோ (*Philo*) என்னும் சாஸ்திரி தேவனுடைய வார்த்தை என்பதைக்குறித்து ஒரு பெரிய தத்துவசாஸ்திர நூலே இயற்றினுன். பைலோ என்பவன் போதித்ததை யோவான் எடுத்துக்கொள்ளாமலிருந்தபோதிலும், 'தேவனுடைய வார்த்தை' என்கிற பெயரை அவனிடமிருந்து பெற்றிருக்கலாம். தத்துவ சாஸ்திரம் யோவானுக்குப் பெரிய காரியமல்ல; மனிதருடைய இரட்சிப்பே அவனுக்குப் பிரதானம். இயேசுகிறிஸ்துவிலே மனிதருக்கு வந்த ஒளிக்கும் ஜீவனுக்கும் 'தேவனுடைய வார்த்தை' என்கிற பெயர் தக்க பெயராக அவனுடைய அபிப்பிராயம். வார்த்தையாயிருந்தவரைக்குறித்துயோவான் $1^{1-}$ல் சொன்னதாவது: (1) வார்த்தையாகிய அவர் ஆதியிலிருந்தே இருக்கிருர்; (2) அவருக்கும் பிதாவாகிய தேவனுக்கும் இரண்டு புருஷர்களுக்கு இருக்கக்கூடிய ஜீவனுள்ள சம்பந்தமிருந்தது; (3) அவர்தேவனுயிருந்தார். அதின்பிறகு சிருஷ்டிப்பும் வெளிப்படுத்துதலும் யாவும் வார்த்தையின் மூலமாகவே வருகிறதென்று சொல்லியிருக்கிறது. அவர் மனிதருக்குள் ஜீவனும் ஒளியுமாயிருந்தார். ஆதியிலிருந்தே தெரியாதவிதமாக எல்லாருக்கும் இருந்த அவர், மனித அவதாரமாய் வந்து, தம்மை விசுவாசிக்கிறவர்களுக்குப் பராபரனுடைய புத்திரர்களாகும் அதிகாரத்தைத் தந்திருக்கிருர். முதல் வசனத்தோடு 14-ம் வசனம் நெருங்கிய அர்த்தமுடையதாய், வார்த்தை மாம்சமானதை இன்னும் விஸ்தரித்துக் காட்டுகிறது.

10. யோவான் எழுதிய முதலாம் நிருபத்தில் தேவனுடைய குமாரன் தோற்றத்தில் மட்டுமல்ல, வாஸ்தவமாய் மாம்சத்தில் வந்திருக்கிருர் என்பதை உறுதிப்படுத்துவதே பிரதான நோக்கம். அதில் கிறிஸ்துவும் தேவனும் ஒன்ருயிருக்கிருர்கள் என்கிற உணர்வு அதிக பலமாயிருக்கிறதினுல், 'கிறிஸ்து' 'தேவன்' என்னும் பதங்கள் சில இடங்களில் மாறிமாறிச் சொல்லப்படுகின்றன. 1 யோவா $5^{20}$.

VII. **முடிவுரை.**—புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் தத்துவத்தைப்பற்றிய கோட்

பாடுகளையெல்லாம் நாம்பார்க்கும்போது,முக்கியமாவது அக்காலத்து விசுவாசிகள் வெவ்வேறுவிதமான பதங்களைக்கொண்டு கிறிஸ்துவைக்குறித்து தங்களுக்கிருந்த எண்ணங்களை வெளியிட்டார்கள் என்பதே. அவர்களில் ஒவ்வொருவனும் தன் தன் கண்களால் கிறிஸ்துவைக் கண்டு, தான் கண்டதைத் தான் விரும்பின பதங்களைக்கொண்டு வெளியிட்டான். ஆயினும் எல்லாரும் கிறிஸ்துவில் கிருபையுள்ள கடவுள் தாமே உலகத்துக்கு வந்திருக்கிறார் என்று நம்பினார்கள். அதைப் பற்றி அவர்களில் ஒருவனுக்காவது சற்றேனும் சந்தேகமிருக்கவில்லை; ஆனபடியால் அவ்வெண்ணமே மற்றக் கிறிஸ்தவப் போதனைக்கு வேராக இருக்கிறது. இந்த மூல சத்தியத்தை விளக்க அவர்கள் பற்பல பதங்களையும் பெயர்களையும் சொல்லியிருந்தாலும், சத்தியமோ ஒன்றுதான். இயேசு தன் ஜீவனிலும் உணர்விலும் மெய்யான மனிதனாயிருந்தாரென்பதும், உலக சரித்திரத்தில் தோன்றுகிற அவருடைய ஜீவன் நித்திய பிதாவினுடைய ஜீவனோடு ஒன்றாயிருக்கிறதென்பதும், புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் யாவருக்கும் நிச்சயமாகவே இருந்தன.

கிறிஸ்துவின் தத்துவத்தைக் குறித்து எழுதுவது அப்போஸ்தலர்களுடைய நோக்கமல்ல; அவர்கள் தத்துவ சாஸ்திரத்தைப் பற்றி அல்ல, இரட்சிப்பைப்பற்றியே கண்ணும் கருத்துமுடையவரா யிருந்தார்கள். என்றாலும் கிறிஸ்து மனிதரை இரட்சிக்கும்பொருட்டுக் கடவுளுக்கும் மனிதருக்கும் இருக்கவேண்டிய சம்பந்தம் இரட்சிப்புக்கு விசேஷித்ததே. மனிதரைக் கிறிஸ்து தமது மரணத்தால் மீட்டுக்கொள்ளவேண்டுமென்றால், அவர் இன்னார் என்றும் அவர் தன்மை இன்னதென்றும் நமக்குக் காட்டும்பொருட்டே புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் பரிசுத்த ஆவியால் ஏவப்பட்டு கிறிஸ்து தத்துவத்தைக்குறித்து எழுதியிருக்கிறார்கள்.

**இயேசுகிறிஸ்துவின் சகோதரர். The Brethren of the Lord.** மரியாள் முதற் பிள்ளையாகிய இயேசுவையல்லாமல் இன்னும் நாலு ஆண்பிள்ளைகளையும் சில பெண் பிள்ளைகளையும் பெற்றாள். லூக் 2[7] மத் 13[35]. மரியாளுடைய மற்றப் பிள்ளைகள் இயேசுவை நம்பாமல் அவரைப் பைத்தியம் பிடித்தவர் என்றெண்ணி, அவர் பிரசங்கம் செய்ய விடாதபடி அவரைத் தங்கள் ஆதீனத்தில் வைக்கவேண்டும் என்று விரும்பினார்கள். மாற். 3[21]. அவர் உயிர்த்தெழுந்த பிற்பாடு அவர் இன்னார் என்பதை அறிந்து அவரை நம்பினார்கள். அப் 1[14].

மரியாள் எப்பொழுதும் கன்னிகையாய் இருந்தாள் என்று சிலர் நினைத்து, அந்தக் கொள்கையை ஸ்திரப்படுத்தும்படி இயேசுவின் சகோதரர் என்று சொல்லப்படுகிறவர்கள் யோசேப்பு முந்தி விவாகம்செய்தமனைவியின் பிள்ளைகள் என்று சொல்லுகிறார்கள். சிலர் 'சகோதரர்' என்பது உடன்பிறந்த சகோதரனைக் குறிக்காமல் மரியாளின் சகோதரியும் அல்பேயுவின் மனைவியுமாகிய மரியாளின் பிள்ளைகளைக் குறிக்கிறது என்று சொல்லுகிறார்கள். இந்த மரியாளும் இயேசுவின் தாயாகிய மரியாளும் சகோதரிகள் என்பதற்குப் போதுமான அத்தாட்சியில்லை. இரண்டு சகோதரிகளுக்கு ஒரே பேர் இருப்பது அபூர்வம்.

**இயேசுவின் வம்ச அட்டவணை. The Genealogies of Jesus.** மத்தேயுவும் லூக்காவும் இயேசுவின் வம்ச அட்டவணையை வித்தியாசமாய் எழுதியிருக்கிறார்கள். மத் 1[1] லூக் 3[23]. இந்த வித்தியாசத்துக்குக் காரணம் என்னவென்றால், மத்தேயு எழுதின அட்டவணையில் 'பெற்றான்' என்னும் பதம் ஜென்ம விஷயத்தைக் காட்டாமல் புத்திர சுவிகாரத்தின் சிலாக்கியத்தைக் குறிக்கிறது. இயேசு தாவீது அரசனின் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றும், ராஜபட்டத்துக்குரிய சுதந்தரவாளி என்றும் காண்பிக்கும்படி மத்தேயு ராஜாக்களின் வம்சவரிசையை எழுதி, அதில் அவருடைய பெயர் சேர்ந்திருக்கிறது எனக் காண்பிக்கிறான். லூக்காவோ ராஜ பட்டத்துக்குரிய இந்தச் சுதந்தரத்தைக் கவனியாமல் மனுஷகுமாரனாகிய இயேசு உண்மையாகவே மனுஷகுடும்பத்தைச் சேர்ந்தவர் என்று காட்டும்படி யோசேப்பின் ஆதி பிதாக்களின் வம்ச அட்டவணையை எழுதி அதில் அவருடைய பெயர் சேர்ந்திருக்கிறது எனத் தெரிவிக்கிறான். யூதர்கள் தங்கள் குடும்ப அட்டவணையை எழுதி அதைப் பத்திரப்படுத்திவைப்பது வழக்கம். 1 நாளா 3 அதி.

**இரகசியம். Mystery.** புதிய ஏற்பாட்டில் இப்பதம் மனிதனுடைய அறிவுக்கெட்டாத உட்பொருளை அதாவது கிறிஸ்தவ தத்துவ ஞான உத்தமபொருளைக் குறிக்கிறது. ரோ 16[25] வெளி 10[6] 1 தீமோ 3[16] 1 கொரி 2[7]. அக்காலத்தில் கிரேக்கருக்குள் அந்தரங்க சபைகள் அநேகம் இருந்தன. இவைகளில் அடிமைகளையும் கைதிகளையும்தவிர மற்றவர்கள் எவரும் சேர்ந்து ஜாதிபேதமின்றிச்

சகோதர ஐக்கியமாய் இருப்பார்கள். இச் சபைகளிற் சில மார்க்க சம்பந்தமாகத் தங்களுக்குள்ளே சடங்காசாரங்களையும் உற்சவங்களையும் நடத்துவார்கள். இவர்கள் நடத்தும் சடங்காசாரத்துக்கும் உற்சவத்துக்கும் 'இரகசியம்' என்று பெயரிட்டுக்கொண்டார்கள். இச்சபைகளிற் சில வாமசத்திரர் நடத்தின சடங்குகளைப்போல் தகாத சடங்குகள் உள்ளனவாயிருக்கும். ஆகையால் ரோம அதிகாரிகள் அவைகளின்பேரில் சமுசயமுள்ளவர்களாய் அநேக சட்டங்களை விதித்தார்கள். ஆதி கிறிஸ்தவர்கள் இவ்விதமான தகாத சபைகள் கூடுகிறார்கள் என்று ரோமை அதிகாரிகள் எண்ணினதே ஆதி கிறிஸ்தவர்களுக்கு அவர்கள் பல தடவைகளில் உபத்திரவம் செய்ததற்குக் காரணம்.

**இரக்கம்.** **Compassion, Loving-Kindness, Mercy, Pity.** வேதாகமத்தில் இப்பதம் அன்புகூருதல், தயை, பரிதாபம், கிருபை, மனஉருக்கம் முதலியவற்றைக் குறிக்கிறது. ஒருவன் இன்னொருவனுக்கும், அரசன் பிரஜைகளுக்கும் சிறையாக்கப்பட்டவர்களுக்கும், கடவுள் நல்லவர்களுக்கும் பாவிகளுக்கும், தகப்பன் பிள்ளைக்கும், பரோபகாரி ஏழைக்கும் காட்டும் மனஉருக்கம் எல்லாம் இச்சொல்லில் அடங்கியிருக்கிறது. தீர்க்கதரிசிகள், சங்கீதக்காரர், அப்போஸ்தலர் இவர்கள் எல்லாரும் விசேஷமாய் நமது ஆண்டவரும் இதைக்குறித்துப் போதித்துவந்தார்கள். ஆதி 43[14] சங் 78[38] 86[15] 103[31] ஏசா 55[3] 63[9] உபா 7[1.2] மீகா 7[18] மத் 5[7] ரோ 9[23] 12[1] யாக் 3[7] லூக் 16[24] 10[25] பிலி 2[1] 1 இரா 8[50] யாத் 15[13].

**இரசத்தொட்டி.** **Wine press**=ஆலை.

**இரட்சகர், இரட்சிப்பு.** **Saviour, salvation.** கடவுள் செய்யும் எந்த மீட்புக்கும் 'இரட்சிப்பு' என்று பொதுவாய்ச் சொல்லப்படுகிறது. விசேஷமாய் இது அவர் மனுஷரைப் பாவத்திலிருந்து நீக்கும் மீட்பைக் குறிக்கிறது.

**1. பழைய ஏற்பாட்டில்.**

இஸ்ரவேலர் செங்கடலைக் கடந்து சென்றது இரட்சிப்பு. யாத் 14[13].

யுத்தத்தில் ஜெயம் இரட்சிப்பு. யாத் 14[15]. கடவுள் இஸ்ரவேலருக்கு இரட்சகரை அனுப்புகிறவர். நெகே 9[27].

தாங்கள் செய்த தீமையினிமித்தம் மனஸ்தாபப்படுகிறவர்களும் நீதிமான்களுமே இரட்சிப்பை எதிர்பார்க்கலாம். சங். 18[1-3].

சத்துருக்களிலிருந்து மீட்கப்படுவதைவிட அநியாயத்தினின்றும் தீமையினின்றும் மீட்கப்படுதலைப்பற்றித் தீர்க்கதரிசிகள் போதித்தார்கள். ஜனங்களிடத்தில் நீதி பூரணமாய் விளங்கும்போது இரட்சகரின் ராஜ்யம் அவர்களுக்குள்ளே பரம்பும். எரே 31[31].

இவ்விதமான இரட்சிப்பு அந்நிய ஜனங்களுக்கும் அருளப்படும். ஏசா 45[23].

இதினால் அநேகர் இஸ்ரவேலின் ஆறுதல் வரும் என்று காத்திருந்தார்கள். லூக் 2[25].

**2. புதிய ஏற்பாட்டில்.**

*Soteria* ஆகிய மீட்பு. தேகசுகம் முதலான நன்மைகளுக்கு இப்பதம் சொல்லியிருக்கிறது. மத் 9[22]. ஆனால் இது வழக்கமாய் இயேசுகிறிஸ்துவினால் உண்டாகும் ஆசீர்வாதங்களைக் குறிக்கும். அவர் பாவத்திலிருந்து தமது ஜனங்களை இரட்சிக்கிறார். மத் 1[21].

இயேசுகிறிஸ்து இரட்சகர். லூக் 2[11]. அவர் நம்மை இரட்சிக்கும்படி வந்தார். லூக் 19[20]. அவருடைய மரணமும் உயிர்த்தெழுதலும் நமது இரட்சிப்புக்கு ஏதுவானது. ரோ 5[19]. அவர் அதிபதியும் இரட்சகருமானவர். அப் 5[31]. அவரைத் தவிர வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை. அப் 4[12].

சுவிசேஷத்தினால் உண்டாகும் நன்மைகள் எல்லாவற்றிற்கும் 'இரட்சிப்பு' என்னும் பதம் அப்போஸ்தலரால் வழங்கப்பட்டுவந்தது. பிலி 1[19] எபி 2[3] 1 பேது 1[9].



இரட்டு.

**இரட்டு.** **Sack cloth.** ஆட்டு ரோமத்தினாலும், ஒட்டக ரோமத்தினாலும் செய்த இரட்டை எபிரெயர் மரண துக்ககாலத்திலும் தங்கள் ராஜ்யத்தில் உண்டாகும் ஆபத்துக்காலத்திலும் தரிப்பார்கள். ஆதி 37[34] 1 இரா 21[27].

**இரண்டாம் வருகை.** **The Second Advent.** **வருகை** காண்க.

**இரதம்.** **Chariot.** எபிரெயர் அசீரியர் முதலானோர் வழக்கமாய் யுத்தத்துக்கென்று இரதங்களை வைத்திருப்பார்கள். கனவான்களிற் சிலர் இரதங்களில் ஏறிப்போவார்கள். ஆதி $50^{9}$ 2 இரா $5^{9}$ எரே $17^{25}$ அப் $8^{28}$. இரதம் இரு சக்கரங்களுக்கிடையில் அச்சுக்குமேல் பின் பக்கமும் மேற்பக்கமும் அடைப்பில்லாத பெட்டியைப்போல் இருக்கும். இதற்கு நுகமும் துலாச்சட்டமும் இருக்கும். இதில் போர்ச்சேவகர் லேசாய் ஏற இறங்கத் தக்கதாகப் பின்பக்கம் திறந்திருக்கும். வழக்கமாய் ஒரு இரதத்தில் இரண்டு குதிரைகள்தான் கட்டுவதுண்டு. இதில் யுத்தகாலத்தில் இரதசாரதியோடு ஒரு போர்வீரன் இருந்து போவான். சில சமயங்களில் இவர்களுக்குப் பாதுகாப்பாகக் கேடகம் சுமப்போனும் போவான். இதின் இரண்டு பக்கங்களில் அம்பறுத்தூணி முதலான யுத்தாயுதங்கள் வைக்கப்பட்டிருக்கும்.



இரதம்.

**இரத்த நீலம்.** அக்கெல்தமா காண்க.

**இரத்த பேதி.** **Dysentery.** வியாதி காண்க.

**இரத்தம்.** **Blood.** எபிரெயரின் அபிப்பிராயத்தின்படி இதில் உயிர் அல்லது ஆத்துமா தங்கியிருக்கிறது. ஆதி $4^{10}$ லேவி $17^{11}$.

**இரத்தாம்பரம்.** **Purple cloth.** மத்திய தரைக் கடலின் கரைகளிலுள்ள ஒருவித மான சிப்பிகளிலிருந்து எடுக்கப்படும் சிவப்பு நிறத்தால் தீரு முதலிய துறைமுகப் பட்டணங்களில் சாயவேலை செய்யப்படும் வஸ்திராதிகள் வழக்கமாய் ராஜாக்களும் தனவான்களும் தரிப்பார்கள். எசே $27^{7}$ மாற் $15^{17}$ அப் $16^{14}$.

**இரத்தினம்.** **Jewel.** வேதாகமத்தில் பிரதான ஆசாரியன் தரிக்கும் மார்ப்பதக்கம் (யாத் $28^{17}$ $39^{10}$), தீரு ராஜா தரிக்கும் அலங்கார 'மூடி' (எசே $28^{13}$), புதிய எருசலேமின் அஸ்திபாரம் (வெளி $21^{10}$) இவைகளிற் சொல்லிய பலவிதமான இரத்தினங்களின் அட்டவணைகள் மூன்று.

இந்த மூன்று அட்டவணைகளைச் சேர்த்து வேதத்தில் குறித்திருக்கும் இரத்தின வகைகளின் பெயர்களைப் பின்வருமாறு எழுதியிருக்கிறோம். ஆனால் இதில் 'இந்திரநீலம்,' 'வைடூரியம்' முதலிய பதங்களை நாம் வாசிக்கும்போது நமக்குத் தெரிந்த இந்த இரத்தின வகைகளுக்கும், எபிரெயருக்குத் தெரிந்த இந்த இரத்தின வகைகளுக்கும் வித்தியாசமிருக்கலாம் என்று நினைக்கவேண்டும்.

## இரத்தின அட்டவணை

| தமிழ் | இங்கிலிஷ் | வசனங்கள் |
|---|---|---|
| அக்கிக்கல் | *Chrysolite* | முந்தின மொழிபெயர்ப்பு. வெளி $21^{20}$. |
| இந்திரநீலம் | *Sapphire* | யாத் $28^{18}$ $39^{11}$ எசே $28^{13}$ வெளி $21^{19}$ உன். பா $5^{14}$. |
| கெம்பு | *A. V. Ligure* } *R. V. Jacinth* } | யாத் $28^{19}$ $39^{12}$. |
| கோமேதகம் | *Onyx, Sardonyx* | ஆதி $2^{12}$ யாத் $28^{20}$ $39^{13}$ எசே $28^{13}$ யோபு $28^{16}$ வெளி $21^{20}$. |
| சந்திரகாந்தம் | *Chalcedony* | வெளி $21^{19}$. |
| சுகந்தி | *Amethyst* | யாத் $28^{19}$ $39^{12}$ வெளி $20^{21}$. |
| சுநீரம் | *Jacinth* | வெளி $21^{20}$. |
| சுவர்ணரத்தினம் | *Chrysolite* | வெளி $21^{20}$. |
| சொகுசா | *R. V. Amber* | சிலர் மூலபாஷையில் இப்பதத்தின் அர்த்தம் 'தம்பாக்கு' என்று நினைக்கிறார்கள். எசே $1^{4, 27}$ $8^{2}$. |

| தமிழ் | இங்கிலிஷ் | வசனங்கள் |
|---|---|---|
| படிகப்பச்சை | *Beryl* | யாத் $28^{20}$ $39^{13}$ எசே $28^{13}$ வெளி $21^{20}$. |
| பத்மராகம் | *Sardius* | யாத் $28^{17}$ $39^{10}$ எசே $28^{13}$ வெளி $21^{20}$. |
| பவளம் | *Coral* | யோபு $28^{18}$ எசே $27^{16}$. |
| பளிங்கு | *Crystal* | யோபு $28^{17}$. |
| புஷ்பராகம் | *Topaz* | யாத் $28^{17}$ $39^{10}$ எசே $28^{13}$ யோபு $28^{19}$ வெளி $21^{20}$. |
| மரகதம் | *Emerald* | யாத் $28^{18}$ $39^{11}$ எசே $27^{16}$ $28^{13}$ வெளி $21^{19}$. |
| மாணிக்கம் | *Carbuncle* | யாத் $28^{17}$ $39^{10}$ எசே $28^{13}$. |
| முத்து | *Pearl* | யோபு $28^{18}$ மத் $13^{45}$ 1 தீமோ $2^{9}$ வெளி $21^{21}$. |
| யஸ்பி | *Jasper* | யாத் $28^{20}$ $39^{13}$ எசே $28^{13}$. |
| ரத்தினம் | *Ruby* | நீதி $3^{15}$ $8^{11}$ $20^{15}$ $31^{10}$. |
| வச்சிரம் | *Diamond* | யாத் $28^{18}$ $39^{11}$ எசே $3^{9}$ வெளி $21^{19}$. |
| வெள்ளைக்கல் | *Alabaster* | மத் $26^{7}$ மாற் $14^{3}$. |
| வைடூரியம் | *Agate* } *Chrysoprase* } | யாத் $28^{19}$ $39^{12}$ வெளி $21^{20}$. |
| வைரம் | *Carbuncle* | எசே $28^{13}$. |

**இரபி. Rabbi.** ரபி காண்க.

**இராகம். Music.** எபிரெயரின் இராகத்தைப்பற்றி நமக்கு அவ்வளவு தெளிவாய்த் தெரியாது. எபிரெயர் வழக்கமாய்ச் சத்தத்தை உயர்த்திப் பாடுவார்கள். சங்கீதங்களை நாம் பார்த்தால் அநேகம் தடவைகளில் அவைகளைப் பாடுகிறவர்கள் இரண்டு பிரிவுகளாக நின்று மாறிமாறிப் பாடுவார்கள் என்று தெரிகிறது. தேவாலயத்தில் பாடுகிறவர்களில் பலவிதமான பாடகர் உண்டு. 1 நாளா $15^{16}$. இராகங்களின் பெயர்களிற் சில 57-ம், 58-ம் சங்கீதங்களின் தலைப்பில் காண்க. பண்டிகை காலங்களிலும் ஊர்கோலம் செய்யும்போதும் நடனஞ்செய்து கீத வாத்தியங்கள் வாசிப்பார்கள். தேவாலயத்தில் மகா வணக்கத்தோடும் கெம்பீரத்தோடும் பாடுவார்கள்.

**இராகாப். Rahab.** ராகாப் காண்க.

**இராசி. 'Mazzaroth.'** நட்சத்திரம் காண்க.

**இராஜா. King.** பூர்வகாலத்திலே ராஜா தன் கோத்திரத்துக்கு ஆலோசனைக் கர்த்தாவாயிருப்பது சேமியர் ஜனங்களுக்குள் ஒரு வழக்கம் என்று தோன்றுகிறது. இவ்விதமான ராஜா எந்த ஊரிலும் இருப்பான்.

இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வந்தபோது அவர்களுக்கு அரசன் என்னப்பட்ட ஒருவன் இல்லாவிட்டாலும் மோசேயும் யோசுவாவும் இந்த அரசரைப்போல அவர்களை ஆண்டு நடத்திவந்தார்கள். யோசுவாவின் மரணத்துக்குப் பின் இஸ்ரவேல் ஜனங்கள் தங்கள் தங்கள் கோத்திரங்களாகப் பிரிந்து ஒரு தலைவனுடைய அதிகாரத்துக்குள்ளும் கீழ்ப்படியாததினால் தங்கள் சத்துருக்களின் கையில் அதிக இலகுவாய் அகப்பட்டார்கள். கிதியோன், சிம்சோன் முதலான 'நியாயாதிபதிகள்' வெவ்வேறான இடங்களிலும் காலத்திலும் சத்துருக்களின் கையிலிருந்து அவர்களை இரட்சித்தார்கள். ஆனால் இவர்களின் அதிகாரம் எல்லா ஜனங்கள்மேலும் இருந்ததில்லை. சவுல் தன் ஆளுகைக்குள்ளான இஸ்ரவேலர் எல்லார்மேலும் முதலாவது தன் சுய அதிகாரத்தைச் செலுத்தினான்.

சேமியருக்கு அரசன் என்னப்பட்டவன் யுத்தத்தில் பிரதான சேனாபதியாயும், நியாயத்தில் மேலான நீதிபதியாயும், சன்மார்க்க விஷயத்தில் தலைவனாயும் இருந்தான். சவுலும் தாவீதும் பலி செலுத்தினார்கள். 1 சாமு $13^{9}$ 2 சாமு $6^{13}$. பிரதான ஆசாரியர்களை நியமிக்கவும் அவர்களை நீக்கவும் சாலொமோனுக்கு அதிகாரம் இருந்தது. ஆனால் எபிரெயருக்குள் சன்மார்க்க விஷயத்திற் பெரும்பாலும் ராஜாக்கள் பிரவேசிப்பதில்லை.

எபிரெயருக்குள்ளே ராஜா இறக்கும்போது இராஜ்யபாரத்தை அவன் மகன் பெற்றுக்கொள்ளுவான்.

யூதாவின் இராஜ்யத்தில் ராஜாக்கள் எல்லாரும் தாவீதின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

எபிரெயருக்குள்ளே ராஜாக்கள் நியாயப் பிரமாணத்திற்கும் பழைய வழக்கத்திற்கும் விரோதமாய் ஒன்றும் செய்யக்கூடாது. திருஷ்டாந்தம், தாவீது உரியாவைக் கொன்று போட்டு அவன் மனைவியைத் தன் மாளிகையின் அந்தப்புரத்தில் வைத்திருந்தபோது அவன் கன அதிகாரமுடைய அரசனாய் இருந்தாலும் தீர்க்கதரிசியாகிய நாத்தான் அவன் செய்த குற்றத்தைக் கண்டித்துப் பேசப் பயப்படவேயில்லை. ஆகாப் அரசன் நாத்தானுடைய திராட்சத்தோட்டத்தை அபகரிக்க முன் நியாயப்பிரமாணத்தின்படி அவனை மூப்பர் குற்றவாளி என்று தீர்மானித்தார்கள். 2 சாமு $12^{9}$ 1 இரா $21^{9}$.

முதல் ராஜாக்கள் ஜனங்களிடத்திலிருந்து குறைந்த வரி வாங்கினார்கள். சாலொமோன் ராஜாவோ அதிக வரி வாங்கி, வியாபாரிகளுக்கும் ஆயத்திறை இட்டான். பிற்காலத்தில் இஸ்ரவேலின் தேசத்துக்கு விரோதமாய் அந்நிய ராஜாக்கள் படையெடுத்து வந்தபோது அவர்களுக்குக் கப்பங்கட்டுவதற்காக எபிரெய ராஜாக்கள் தங்கள் பிரஜைகளிடத்திலிருந்து சில விசேஷித்த வரிகள் வாங்கினார்கள். சில சமயத்தில் தேவாலயத்தின் பொக்கிஷத்திலுமிருந்து பணம் எடுப்பார்கள். 1 சாமு $8^{15}$ 1 இரா $10^{15}$ $15^{18}$ 2 இரா $23^{35}$.

கடவுள் 'இஸ்ரவேலின் ராஜா' என்றும் 'என் ராஜா' என்றும் சங்கீதக்காரரும் தீர்க்கதரிசிகளும் அடிக்கடி சொல்லியிருக்கிறார்கள். ஏசா $43^{15}$ $44^{6}$ சங் $10^{16}$ $24^{7}$ $44^{4}$ $74^{12}$ $84^{3}$.

தீர்க்கதரிசிகள் மேசியா ராஜா என்று சொல்லியிருக்கிறார்கள். சக $9^{9}$ ஏசா $32^{1}$.

புதிய ஏற்பாட்டில் இயேசுகிறிஸ்து தேவனுடைய இராஜ்யத்தில் ராஜா என்று பலர் எழுதியிருக்கிறார்கள். யோவா $18^{33, 37}$ 1 தீமோ $6^{15}$ வெளி $17^{14}$.

**இராஜாக்களின் புஸ்தகம். The Books of Kings.** இப்போதிருக்கிற இரண்டு பாகங்களும் துவக்கத்தில் ஒரு புஸ்தகமாக ஆக்கியோன் எழுதினான். அவன் இப்புஸ்தகத்தில் யூதா, இஸ்ரவேல் ராஜாக்களின் 400 வருஷச் சரித்திரத்தைச் சொல்லுகிறான்.

அவன் இதில் சாலொமோனின் நடபடிக்கைகளைக் குறித்ததினாலும், எலியா எலிசா என்னும் தீர்க்கதரிசிகளைப்பற்றி விவரமாய்ச் சொல்வதினாலும், சில ராஜாக்களைப்பற்றிச் சுருக்கமாயும், சில ராஜாக்களைப்பற்றி அதிகமாயும் பேசுவதினாலும், இந்தச் சரித்திரத்தை அவன் எழுதும்போது அவன் தனக்கு முந்தி எழுதினவர்களின் புஸ்தகங்களிலுள்ளவைகளைத் தெரிவித்து, அதோடே சன்மார்க்கத்துக் குரியவைகளைக் காட்டுவதே அவன் நோக்கமாய் இருந்தது என்று விளங்குகிறது.

எந்த ராஜாவைப்பற்றியும் அவன் எழுதும்போது அந்த ராஜாவின் வயது, ஆண்ட காலம், இவைகளையும் அவனைப்பற்றிய மற்ற விசேஷங்களையும் சொல்லி அவனுடைய குண லட்சணங்களைப்பற்றியும் பேசுகிறான். இந்த குண லட்சணங்களை எப்படித் தீர்மானம் செய்கிறான் என்றால் மேடைகளில் பலி செலுத்தும்படி இடங்கொடுத்த ராஜாக்கள் நல்லவர்கள் அல்லவென்றும், இடங்கொடாதவர்கள் நல்லவர்கள் என்றும் சொல்லுகிறான். இதினால் இஸ்ரவேல் ராஜாவாகிய யெரொபெயாம் முதலான ராஜாக்கள் பொன் கன்றுக்குட்டியை வணங்கினதினாலே அவர்கள் பொல்லாதவர்கள் என்றும், மேடைகளை அருவருத்த எசேக்கியா, யோசியா ஆகிய இவர்கள் மற்றவர்களைவிட நல்ல ராஜாக்கள் என்றும் தீர்மானம் செய்கிறான். இதினால் உபாகமத்தில் சொல்லியிருக்கும் நியாயப்பிரமாணத்தின்படி எருசலேம் தேவாலயத்திலே யேகோவாவை வணங்குவதே அவனுடைய ஆவலாய் இருந்தது என்று அறிவோம். உபாகமத்தில் விவரமாய் எழுதியிருக்கும் இன்னொரு போதனை ராஜாக்களின் புஸ்தகத்தில் காணப்படுகிறது. அதாவது யேகோவாவுக்குக் கீழ்ப்படிந்து நடக்கிறவர்கள்மாத்திரம் நல்வாழ்வை அடைவார்கள். தேவாலயம் பிரதிஷ்டையானபோது சாலொமோன் சொன்ன ஜெபத்தில் இதை அறியலாம்.

ராஜாக்களின் புஸ்தகம் முதற்பிரதி கி-மு. 600-ளவத்திலும், கடைசிப்பிரதி பாபிலோனியர் எருசலேமைப் பிடித்ததற்குச் சில வருஷங்களுக்கு முன்னும் கி-மு. 550-ளவத்தில் எழுதி முடிந்தன.

**இராஜாத்தி, இராஜஸ்திரீ.** இஸ்ரவேலில் ராஜாவின் மனைவிக்கு அதிகாரம் கொஞ்சந்தான். ராஜாவின் தாய்க்கோ அதிகாரம் அதிகம். திருஷ்டாந்தம்: பத்சேபாள், யேசபேல், அத்தாலியாள்.

**இராஜாவின் குளம். King's pool.** இதுவும் சீலோவாக்குளமும் ஒன்றுதான் எனத் தோன்றுகிறது. நெகே $2^{14}$. **சீலோவா** காண்க.

**இராஜாவின் தோட்டம். King's garden.** இது சீலோவாக் குளத்தண்டை இருந்திருக்கலாம். 2 இரா $25^{4}$.

**இராஜாவின் பள்ளத்தாக்கு. King's vale.** எருசலேமுக்குக் கிட்ட இருந்த 'சாவே'

என்னும் பள்ளத்தாக்கு. ஆதி 14$^{17}$ 2 இரா 18$^{17}$.

**இராஜ்யம், தேவனுடைய இராஜ்யம், பரலோக இராஜ்யம். The Kingdom, The Kingdom of God, The Kingdom of Heaven.** பழைய ஏற்பாட்டில்: கடவுள் எபிரெயர்களுக்கு ராஜா என்றும், அவர்களுடைய இராஜ்யம் அவருடையது என்றும் எல்லாரும் நினைத்தார்கள். பிறகு மேசியா வரும்போது அவருடைய இராஜ்யத்தில் நீதியுள்ளவர்கள்மாத்திரம் இருப்பார்கள் என்று சில தீர்க்கதரிசிகள் போதித்தார்கள். பிறகு இஸ்ரவேலரானாலுஞ்சரி, அந்நியரானாலுஞ்சரி, நீதிமான்கள் எல்லாரும் கடவுளுடைய இராஜ்யத்தில் சேர்ந்திருப்பார்கள் என்னும் கொள்கை உண்டானது.

புதிய ஏற்பாட்டில்: கிறிஸ்து வரும்போது பரம ராஜ்யம் ஸ்தாபிக்கப்படும் என்று அநேகர் எதிர் நோக்கியிருந்தார்கள். லூக் 1$^{67}$. அந்தக் காலத்தில் ரோமர்களின் அதிகாரம் யூதர்கள்மேல் இருந்ததினால் மேசியா வந்து ரோமர்களைத் துரத்தி, எருசலேமிலே தமது இராஜ்யத்தை ஸ்தாபிப்பார் என்று யூதர்கள் நம்பினார்கள். யோவான்ஸ்நானனும் இவ்விதமாய் நினைத்தான் என்று தோன்றுகிறது. மத் 11$^{2}$.

இயேசுகிறிஸ்து தேவனுடைய இராஜ்யத்தையும் பரலோக இராஜ்யத்தையும்பற்றிப் போதிக்கும்போதெல்லாம் தமது இராஜ்யம் இவ்வுலகத்துக்குரியதல்ல என்று பிரசங்கித்தார். லூக் 17$^{20}$ யோவா 18$^{36}$. இந்த இராஜ்யம் ஆவியில் எளிமையுள்ளவர்களுக்கும், நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்களுக்கும், சிறுபிள்ளைகளைப்போன்றவர்களுக்கும் உரியது. மத் 5$^{3}$ 5$^{10}$ 18$^{3}$. மேலும் இயேசுகிறிஸ்து மொழிந்தருளின உவமைகளில் இந்த இராஜ்யத்தில் அந்நிய ஜனங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவார்கள் என்றும், ஆசாரியர் மூப்பர்களாகிய இவர்களுக்கு முன் ஆயக்காரரும் வேசிகளும் பிரவேசிப்பார்கள் என்றும், அதில் கடவுளினுடைய சித்தம் நிறைவேறும் என்றும், அதில் பிரவேசித்தவர்கள் மறு ஜென்மம் அடைந்தவர்கள் என்றும் போதித்தார். மத் 6$^{10}$ 21$^{28}$ $^{43}$ யோவா 3$^{3}$.

சுருக்கமாய்ச்சொன்னால்கடவுளினுடைய சித்தத்தை அறிந்து அதின்படி நடந்து அவருடைய கிருபையினாலே பாவத்திலிருந்து மீட்பைப்பெற்றவர்களே அவருடைய இராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள். இந்த இராஜ்யம் இயேசுகிறிஸ்துவின்மேல் வைத்த விசுவாசத்தின் மூலமாய் இவர்களுக்குக் கிடைக்கும் ஆவிக்குரிய சுதந்தரம்.

இந்த இராஜ்யம் தோன்றுங்காலம் இரண்டு வகையாய்ச் சொல்லியிருக்கிறது. முதலாவது, கி-பி. 70-ல் எருசலேம் பட்டணம் அழிக்கப்பட்டபோது அது தோன்றுகிறதற்கு ஆரம்பம். மத் 16$^{28}$. இரண்டாவது, நிலத்தில் விதைத்த விதையைப்போல முளைத்து, கிறிஸ்து எல்லாருக்கும் எல்லாமுமாய் இருக்கும் காலம், இது பூரணமாய் விளங்கும். மாற் 4$^{26}$ கொலோ 3$^{12}$.

**இராட்டினம். Spinning wheel (R. V. Distaff.)** நீதி 31$^{19}$.

**இராட்சதர். Giants.**

1. 'நெபிலீம்' என்னும் எபிரெய பதம் தமிழில் இராட்சதர் என்று மொழிபெயர்த்திருக்கிறது. இந்த தேசத்திலே முன்னோர்கள் அசுரர் ஆதியவர்கள் எப்படி எண்ணப்படுவார்களோ, அப்படியே எபிரெயர்களும் இவர்களைப் பயங்கரவிதமாய் எண்ணுவார்கள். 'நெபிலீம்' அத்தேசங்களில் ஆதியிலிருந்த ஜனத்தைக் குறிக்கிறது என்று நினைக்கலாம். ஆதி 6$^{4}$ எண் 13$^{33}$.

2. எபிரெயர் கானான் தேசத்துப் பூர்வ ஜனங்களுக்கு 'ரெப்பாயீம்' என்று சொல்லுவார்கள். 'ரெப்பாயீம்' என்னும் பதம் செத்துப்போன வீரர் (சங் 88$^{10}$), அல்லது முன்னிருந்த பெரியோர், அல்லது கானானிய பூர்வ ஜனங்கள் ஆகிய இவர்களைக் குறிக்கிறது. **ஆனாக்கீம், ஏமியர், சம்சூமியர், சூசிமியர்** காண்க.

3. பழைய ஏற்பாட்டில் ஒகு, கோலியாத் முதலிய சில நெட்டையரான ஆட்களைப் பற்றி வாசிக்கிறோம். இவர்களுக்கும் இராட்சதர் என்று சொல்லியிருக்கிறது. யோசு 12$^{4}$ 1 சாமு 17$^{4}$ 2 சாமு 21$^{15}$.

**இராத்தல். Pound. அளவும் நிறையும்** காண்க.

**இராப்போஜனம் என்னும் சாக்கிரமெந்து, ஐக்கிய விருந்து, யூக்கரிஸ்ற். The Lord's Supper, Holy Communion, Eucharist.**

1. **பெயர்கள்.** — கர்த்தருடைய இராப்போஜனத்திற்கு முதற் பெயர் 'ஸ்தோத்திரம் செலுத்துதல்' என்று அர்த்தம் கொள்ளும் 'யூக்கரிஸ்ற்.' இயேசுகிறிஸ்து இராப்போஜனத்தை ஏற்படுத்தினபோது ஸ்தோத்திரஞ் செலுத்தினதினால் இப்பெயர் வந்தது. மத் 26$^{26}$.

இயேசுகிறிஸ்து காட்டிக்கொடுக்கப்பட்ட அந்த இராத்திரியிலே பஸ்காபோஜனம்செய்கிற வேளையில் அவர் இதை ஏற்படுத்தின

தினால் இதற்கு இராப்போஜனம் என்று சொல்லப்படுகிறது.

அன்பு விருந்தில் சேர்ந்தவர்கள் கிறிஸ்துவினுடைய கிருபையில் தாங்கள் ஐக்கியமுள்ளவர்களாய் இருக்கிறார்கள் என்று காட்டுகிறார்கள். மேலும் கர்த்தருடைய இராப்போஜனத்தில் பங்கு பெறுகிறவர்கள் கிறிஸ்து செலுத்தின பலியில் தங்களுக்கு இருக்கும் நெருங்கிய ஐக்கியத்தைக் காட்டுகிறதினால் இதற்கு 'ஐக்கிய விருந்து' என்னும் பெயர் இடப்பட்டது. 1கொரி $10^{16}$.

புதிய ஏற்பாட்டில் பரிசுத்த நற்கருணைக்கு 'அப்பம் பிட்குதல்' என்று சொல்லியிருக்கிறது. அப் $2^{42}$ $20^{7}$.

2. **நியமனம்.**—பரி. யோவான் இராப்போஜன நியமனத்தைப்பற்றி ஒன்றுஞ்சொல்லாவிட்டாலும் புதிய ஏற்பாட்டில் நாலு இடங்களில் இதைக்குறித்து விவரமாய்ச் சொல்லியிருக்கிறது. மத் $26^{26}$ மாற் $14^{22}$ லூக் $22^{14}$ 1கொரி $11^{23}$. கி-பி. 58-ஆம் ஆண்டிற்கு முன் 1கொரிந்தியர் என்னும் நிருபம் எழுதப்பட்டதினால் அதிலுள்ள சரித்திரம் சுவிசேஷங்களில் எழுதின சரித்திரத்துக்கு முந்தியது. இந்த நாலு சரித்திரங்களில் வித்தியாசம் கொஞ்சமுண்டு. ஒவ்வொரு ஆக்கியோனும் இயேசுகிறிஸ்து அருளின நன்மொழிகளிற் சிலவற்றைமாத்திரம் எழுதியிருக்கிறதேயொழிய, அவர்களில் ஒருவனும் அவர் சொன்ன வாக்கியங்கள் எல்லாவற்றையும் எழுதவில்லை. இதினிமித்தம் இந்த நாலு புஸ்தகத்தைக்கொண்டே நாம் இந்த நியமன முறைமையைப்பற்றித் தெளிவாய் அறியவேண்டும். மற்றவர்கள் எழுதினதற்கும் லூக்கா எழுதினதற்கும் இடையில் பார்த்தவுடன் ஒரு வித்தியாசம் தோன்றுகிறது. அது என்னவெனில் இயேசு இரண்டு தடவை பாத்திரத்தை எடுத்துச் சீஷர்களுக்குக் கொடுத்தார் என்று லூக்கா சொல்லுகிறான். லூக் $22^{17\cdot 20}$. ஆனால் இதைப்பற்றி நாம் ஆராயுமிடத்து லூக்கா எழுதினது தெளிவாய் விளங்கும். இயேசுகிறிஸ்துவும் சீஷர்களும் யூதருடைய முறைமையின்படி பஸ்காப்பண்டிகை விருந்து நடத்தினார்கள். இந்த முறைமையின்படி அந்த விருந்திலே பாத்திரத்தை மூன்றுதடவை ஆசீர்வதித்துப் பானம் பண்ணுவது வழக்கம். விருந்தின் துவக்கத்திலே விருந்துக்குத் தலைவன் பாத்திரத்தை எடுத்து ஸ்தோத்திரஞ்செலுத்தி விருந்திலே கடவுளுடைய ஆசீர்வாதம் இருப்பதாக என்று சொல்லிக் கொடுப்பான். இதுதான் லூக்கா சொல்லும் முதலாம் பாத்திரம். இது இயேசு சீஷர்களுடைய கால்களைக் கழுவினதற்கு முந்திக் கொடுத்ததென்று நினைக்கலாம். யோவா $13^{4}$. மற்றவர்கள் சொல்லும் பாத்திரமே லூக்கா சொல்லும் இரண்டாம் பாத்திரம். இது யூதருடைய பஸ்காபண்டிகை முறைமையின்படி மூன்றாம் பாத்திரம் எனத் தெரிகிறது. இது 'ஆசீர்வாதத்தின் பாத்திரம்.' 1கொரி $10^{16}$.

பன்னிரண்டு சீஷர்களைத் தவிர அந்த நேரத்தில் இயேசுவோடு வேறொருவருமில்லை. மாற் $14^{17}$.

யூதாஸ் என்பவனும் இன்னும் வெளியே போகவில்லை. லூக் $22^{21}$.

3. **இதை ஏற்படுத்தின நோக்கம்.**—

($a$) பஸ்காவில் அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினால் யூதர்கள் தங்கள் கோத்திரப் பிதாக்களின் குடும்பங்களிலுள்ள முதற்பேறானவர்கள் இரட்சிக்கப்பட்டதையும், எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து அடைந்த விடுதலையையும் நினைவுகூர்ந்தது போல, இந்த நற்கருணையில் கிறிஸ்தவர்களாகிய நாம் உலகத்துக்காகச் சிலுவையில் அறையுண்டு, தமது இரத்தத்தைச் சிந்தி, பாவத்திலிருந்து நம்மை விடுதலையாக்கின கிறிஸ்துவாகிய பஸ்காவை நினைவுகூருகிறோம். லூக் $22^{19}$.

($b$) சேமியர்களின் கொள்கையின்படி ஒருவன் தான் செலுத்தும் பலியை ஆசாரியன் பிரதிஷ்டை செய்தபிறகு, தான் அப்பலியின் ஓர் பங்கைப் புசித்து, தான் அதில் தான் வணங்கின தேவனோடு ஐக்கியப்பட்டவன் என்று நினைத்தான். இதின்படி பஸ்காப்பண்டிகையிலும் யூதர்கள் யேகோவாவோடு தாங்கள் ஆவிக்குரியவிதமாய் ஐக்கியப்பட்டவர்கள் என்று நினைத்தார்கள். இந்த ஐக்கியத்திற்கு அந்த விருந்து எப்படி அடையாளமாயிருந்ததோ, அப்படியே பரிசுத்த நற்கருணையில் நாம் இயேசுகிறிஸ்து செலுத்தின உத்தம பலியின் மூலமாய்க் கடவுளோடு ஆவிக்குரியவிதமாக ஐக்கியமுள்ளவர்களாயிருக்கிறோம் என்று நாம் நினைக்கலாம்.

4. **இதின் கொள்கை.**—இயேசுகிறிஸ்து அப்பத்தையும் இரசத்தையும் எடுத்து இவை தமது சரீரமும் இரத்தமும் என்று சொன்னதினால் ரோமான் மார்க்கத்தார், குருவானவர் அப்பத்தையும் இரசத்தையும் பிரதிஷ்டை செய்தவுடனே அவை மெய்யாகவே கிறிஸ்துவின் சரீரமும் இரத்தமுமாக மாறிவிடுகிறது என்று நம்புகிறார்கள். இதை நாம் இப்படி ஏற்றுக்கொண்டால் இயேசு தாம் 'வாசலும்' 'மேய்ப்பனும்' 'திராட்சச் செடியும்' என்று சொன்னதைப்பற்றி நாம் என்ன

அர்த்தம் கொள்ளவேண்டும்? அவர் இப்படி உபமானமாய்ச் சொன்னதேதவிர வேறொரு அர்த்தமும் இதில் அடங்கி யிருக்கவில்லை. லூதர் ரோமான் கொள்கைகளுக்கு விரோத மாயிருந்தாலும் இந்தக் கொள்கையை அவர் கொஞ்சம் சார்ந்தவராயிருக்கிருர். அவர் போதித்ததாவது: அப்பமும் இரசமும் உண்மையாகவே அப்பமும் இரசமுமாயிருப்ப தோடு அவை பிரதிஷ்டை செய்யும் சமயத்தில் கிறிஸ்துவினுடைய சரீரமும் ரத்தமுமா யிருக்கிறது.

ரோமான் கொள்கைக்கு *Transubstantiation*, லூதரின் கொள்கைக்கு *Consubstantiation* என்று வித்துவான்கள் சொல்லுவார்கள்.

**இராயனுடைய அரமனையிலுள்ளவர்கள்.** **அரமனை** காண்க.

**இராயன்.** **Emperor, Caesar.** **ரோமபுரி** காண்க.

**இருதயம்.** **Heart.**

**பழைய ஏற்பாட்டில்:**

இரத்தாசயம். ஆதி $45^{26}$. பல விடங்களில் இருதயம் தீமையான நினைவுகள் உள்ள மனதைக் குறிக்கிறது. ஆதி $6^{5}$. இதினிமித்தம் சங்கீதக்காரன் 'சுத்த இருதயத்தை எனக்குத் தாரும்' என்று வேண்டுகிருன். சங் $51^{10}$. இது ஆசை ஆவலுக்கெல்லாம் இருப்பிடம். உபா $19^{6}$ 1 இரா $8^{38}$. புத்தி, சித்தம், சுகம், துக்கம், உணர்ச்சி, மனச்சாட்சி முதலியவை இதிலிருந்து உண்டாகின்றன. யாத் $14^{5}$ நீதி $14^{10}$ ஆதி $8^{21}$ யோபு $27^{6}$ ழு.

இது காரணத்தினுலே தீர்க்கதரிசிகள் தேவனுடைய பூரண கிருபையைப் பெற்றுக்கொள்ள விரும்புகிறவர்களுக்குப் புது இருதயம் அவசியம் என்று சொல்லியிருக்கிருர்கள். எசே $18^{31}$ $36^{26}$.

**புதிய ஏற்பாட்டில்:**

இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள். மத் $5^{8}$.

விதைத்த நிலத்தைப்போல் இருதயமிருக்கிறது. லூக் $8^{15}$.

ஆவிக்குரிய ஞானம் இருதயத்தில் தங்கியிருக்கும். மத் $13^{19}$.

இருதயம் எப்படியோ நடையும் அப்படியே. லூக் $6^{45}$.

கடவுள் இருதயத்தை ஆராய்ந்து பார்க்கிறவர். ரோ $8^{27}$.

பரி. யோவான் மனச்சாட்சிக்குப் பதிலாக 'இருதயம்' எனச் சொல்லுகிருன். 1 யோவா $3^{20}$.

பரி. பவுலும் அப்படியே சொல்லுகிருன். ரோ $2^{15}$.

'பிரகாசமுள்ள மனக்கண்கள்.' எபே $1^{19}$ 2 கொரி $4^{6}$.

இருதயம் சரீரத்தின் உயிருக்கு ஆதாரமும் காரணமுமாய் இருக்கிறதினிமித்தம் ஆத்ம ஜீவனுக்கும் அது அப்படியே இருக்கிறது என்று சொல்வது வழக்கம்.

**இருள்.** **Darkness.** யோவா $3^{19}$ $8^{12}$ $12^{46}$ 1 யோவா $2^{11}$. **ஒளி** காண்க.

**இரை.** **Food.** ஏசா $9^{5.19}$. **ஆகாரம்** காண்க.

**இர்ஷேமேஸ்.** **Irshemesh.** **பெத்ஷிமேஸ்** காண்க.

**இலவங்கப்பட்டை.** **Cinnamon.** யாத் $30^{24}$ நீதி $7^{17}$ வெளி $18^{13}$. மூலபாஷையில் எழுதின பதம் இலங்கையில் வளருகிற இந்த மரத்தின் பட்டையைக் குறிக்கிறதினுல் இலங்கைக்கும் பலெஸ்தீனுவுக்கும் வியாபார சம்பந்தம் இருந்ததாகக் காணப்படுகிறது. எபிரெய ஸ்திரீகளுக்கு 'லவங்கம்' அதிக பிரியமான வாசனைச் சரக்கு.

**இல்க்கியா.** **Hilkiah.**

1. எசேக்கியாவின் ஒரு உத்தியோகஸ்தன். 2 இரா $18^{18}$.
2. எரேமியாவின் தகப்பன். எரே $1^{1}$.
3. நியாயப்பிரமாணப் புஸ்தகத்தைக் கண்டுபிடித்த பிரதான ஆசாரியன். 2 இரா $22^{3}$.
4. கெமரியாவின் தகப்பன். எரே $29^{3}$.
5. ஒரு லேவியன். 1 நாளா $6^{45}$.
6. ஒரு லேவியன். 1 நாளா $26^{11}$.
7. ஒரு ஆசாரியன். நெகே $12^{7}$.
8. எஸ்றுவின் தோழன். நெகே $8^{4}$.

**இல்லிரிக்கம்.** **Illyricum.** மக்கெதோனியா நாட்டிற்கும் ஆதிரியாக் கடலுக்கும் நடுவில் வட கிரேக்காவின் மேற்கெல்லையிலுள்ள பரி. பவுல் சந்தித்த ஒரு நாடு. ரோ $15^{19}$.

**இல்லேல்.** **Hillel.** நியா $12^{13}$.

**இளைப்பாறுதல், ஓய்வு, அமர்ந்திருத்தல்.** **Rest.** வேதாகமத்தில் சொல்லியிருக்கும் இளைப்பாறுதலைப்பற்றிய போதனை விசுவாசிகளுக்கு மனத்தேறுதலாய் இருக்கிறது. கடவுள் தம்மை நம்பிக் கீழ்ப்படிந்து தமது சித்தத்தின்படி நடக்கிறவர்கள் கவலை, துக்கம் இல்லாமல் இருப்பதற்கு அருளும் ஆறுதலும் அமைதியும் இதுவே. நெடுநாளாய்ப் பிரயாணம் செய்த இஸ்ரவேலருக்குக் கானனில் இளைப்பாறுதல். யாத் $33^{14}$ உபா $3^{20}$.

இளைப்பாறுதல் அடையவேண்டும் என்று எவரும் விரும்புவார்கள். சங் $55^{6}$. இது

சோம்பல்தனம் அல்ல. ஆதி $49^{15}$. இது சன்மார்க்கத்துக்குரியது. சங் $37^{7}$ எரே $6^{16}$. இது இயேசு அருளும் ஈவு. மத் $11^{28}$. பாவம் செய்த இஸ்ரவேலர் இதை அடையாமற் போனதுபோலப் பாவிகள் இதையடையமாட்டார்கள். சங் $95^{11}$ ஏசா $28^{12}$ $57^{20}$. கடவுள் ஓய்ந்திருந்தார் என்று எபிரெயர் வணக்கமாய்ச் சொன்ன இந்தக் கொள்கைக்கு ஓய்வுநாள், யூபிலி வருஷம் திருஷ்டாந்தங்கள். ஆதி $2^{2}$ யாத் $20^{11}$ லேவி $25^{4}$. ஆதி கிறிஸ்தவர்கள் மேலான இளைப்பாறுதலைக் குறித்து 'தேவனுடைய ஜனங்களுக்கு இளைப்பாறுகிற காலம் வருகிறது' என்று உறுதியாய் நம்பினார்கள். எபி $4^{9}$ வெளி $14^{13}$.

**இறகு.** 'Pen'. 3 யோவா 13-ம் வசனத்தில் சொல்லியிருக்கும் இப்பதம் நாணல் எழுதுகோலைக் குறிக்கிறது.



இன்ரோகேல்.

**இன்ரோகேல்.** **Enrogel.** [வண்ணான் ஊற்று]. இது யூதா பென்யமீன் நாடுகளுக்கு எல்லை. எருசலேமுக்குச் சமீபம். தாவீதின் வேவுகாரர் இங்கே தரித்திருந்தார்கள். அதோனியா இங்கே விருந்துபண்ணினான். 2 சாமு $17^{17}$ 1 இரா $1^{9}$.

**இன்னோம்.** **Hinnom.** இன்னோம் பள்ளத்தாக்கு அல்லது இன்னோம் குமாரனின் பள்ளத்தாக்கு எருசலேம் மதிலுக்குச் சமீபமாயிருந்தது. இதிலே கானானியர் தாங்கள் வணங்கின தேவர்களுக்குத் தங்கள் பிள்ளைகளை அக்கினியில் பலியாகச் செலுத்தினதினால் எரேமியா அதற்குச் 'சங்காரப் பள்ளத்தாக்கு' என்று சொல்லியிருக்கிறான். இதிலே தோப்பேத் இருந்தது. எரே $7^{32}$ $32^{35}$ 2 இரா $23^{10}$ 2 நாளா $28^{3}$ $33^{6}$. கேகேன்னா காண்க.



எத்தியோப்பியாவிலுள்ள ஈ.

## ஈ.

**ஈ.** **Flies.** 'எகிப்து நதிகளின் கடையாந்தரங்களிலுள்ள ஈ' தேனீயைப்பார்க்கிலும் பெரிது. ஏசா $7^{18}$. மழைகாலத்தில் கோடிக்கணக்காய் ஜென்மிக்கும் அந்த பயங்கரமான ஈக்கள் ஆடுமாடுகள் ஒட்டகங்கள் ஆகிய இவைகளுக்குச் சொல்லிமுடியாத உபத்திரவம் கொடுக்கிறதினால் அத்தேசத்தவர்கள் அவைகளுக்கு அதிகமாய்ப் பயப்படுவார்கள். அந்த ஈக்களின் தொந்தரவிலிருந்து க்ஷேமமாய் இருக்கும்படி அவர்கள் பெயெல்செபூலை வணங்குவார்கள்.

**ஈகால்.** **Igal.**

1. எண் $13^{7}$.
2. 2 சாமு $23^{36}$.

**ஈசாக்கு.** **Isaac.** ஆபிரகாம் சாராள் இவர்களின் மகன். இப்பெயரின் அர்த்தம் 'நகைக்கிறான்.' இதற்குக் காரணம் மூன்று விதமாய்ச் சொல்லியிருக்கிறது. ஆதி $17^{17}$ $18^{12}$ $21^{6}$. எட்டாம்நாளில் இவனுக்கு விருத்தசேதனம் செய்யப்பட்டது. ஆதி $21^{4}$. பாலியப் பிராயத்தில் பெயெர்செபாவிலே இருந்தான். தகனபலியாகச் செலுத்தும்படி இவன் மோரியா ஊருக்குக் கொண்டுபோகப்பட்டான். ஆதி $22^{12}$ $26^{5}$. இவன் மனைவியாகிய ரெபெக்காள் ஆபிரகாம் முன்னிருந்த ஆரான் என்னும் ஊரிலிருந்தும் நாகோர் கோத்திரத்திலிருந்தும் வந்தவள். இவர்களுக்கு ஏசா, யாக்கோபு என்னும் இரட்டைப் பிள்ளைகள் பிறந்தார்கள். ஆதி $25^{21}$. பஞ்சம் உண்டானபோது இவன் பெலிஸ்தியாவைச் சேர்ந்த கேராருக்குப் போனான். ஆதி $26^{1}$. இவன் செல்வத்தினால் விருத்தியடைந்ததையிட்டு பெலிஸ்தியர் இவன்மேல் வெறுப்படைந்தார்கள். ஆதி $26^{20}$. ஆதலால் இவன் பெயெர்செபாவுக்குத் திரும்பிப் போனான்.

ஏசாவுக்குக் கொடுக்கும் ஈசாக்கினுடைய ஆசீர்வாதம் யாக்கோபுக்குக் கொடுக்கப்பட்

டது. ஆதி 27 அதி. ஈசாக்கு '180-ம் வயதில்' மரித்து (ஆதி $35^{28}$), மக்பேலா கெபியிலே அடக்கம் பண்ணப்பட்டான். ஆதி $49^{31}$.

ஈசாக்கு ஆபிரகாமைப்போலத் தைரியசாலி யல்லாவிட்டாலும் கடவுளின்பேரில் அதிக பயபக்தியுள்ளவன். ஆதி $22^{7.8}$ $25^{21}$. ஈசாக்கு அடக்கமான குணமுடையவன். எபி $11^{17}$ யாக் $2^{21}$.

ஆமோ $7^{9.14}$. 'ஈசாக்கு' என்றால் 'இஸ்ரவேலர்' என்று அர்த்தமாம்.

ஆதி $31^{42.53}$. 'ஈசாக்கின் பயபக்திக்குரியவர்' என்பது இவன் மகா வணக்கமாய்த் தொழுதுகொண்ட யேகோவாவைக் குறிக்கிறது.

**ஈசாய்.** Jesse. தாவீதின் தகப்பன். 1 சாமு $14^{18}$ $16^{1}$ $17^{12}$ $22^{3}$.

'ஈசாய் என்னும் அடிமரம்' வரப்போகிற இரட்சகர் பிறக்கும் தாவீதின் வம்சத்தைக் குறிக்கிறது. ஏசா $11^{1}$.

**ஈசோப்பு.** Hyssop. இது சுவரில் முளைக்கும் சிறு பூண்டாயிருந்தாலும் காடியில் அல்லது தண்ணீரில் தோய்த்த கடற்காளானை இதன் தண்டில் மாட்டித் தூக்கினால் அது முறிந்துபோகாத அவ்வளவு பெலனுள்ளது. ஈசோப்புக் கொழுந்துகளின் கொத்தை எடுத்து, பஸ்காவின் இரத்தத்தில் தோய்த்துத் தெளிப்பதற்காகவும், குஷ்டரோகிகளைச் சுத்திகரிப்பதற்காகவும் உபயோகிப்பார்கள். யாத் $12^{22}$ லேவி $14^{4}$ 1 இரா $4^{33}$ யோவா $19^{29}$.

**ஈஷி.** Ishi. [என் பத்தா]. இஸ்ரவேலர் யேகோவாவுக்குத் தங்கள் பயபக்தியைக் காட்டும்படி அவரை 'பாகாலி,' அதாவது 'என் எஜமானே' என்று சொல்லாமல், 'ஈஷி,' அதாவது 'என் பத்தாவே' என்று சொல்லும்படி ஓசியா தீர்க்கதரிசி போதிக்கிறான். ஓசி $2^{16}$.

**ஈடு.** Pledge. **அடகு** காண்க.

**ஈட்டி.** Spear. **ஆயுதம்** காண்க.

**ஈத்தாய்.** Hiddai. = ஊராய். 2 சாமு $23^{30}$ 1 நாளா $11^{32}$.

**ஈத்தாய்.** Ittai. **இத்தாய்** காண்க.

**ஈத்தியேல்.** Ithiel. **இத்தியேல்** காண்க.

**ஈயம்.** Lead. கருங்கற்களில் வரைந்த அக்ஷரங்கள் துலாம்பரமாய் நெடுங்காலம் தோன்றும்படி ஈயத்தை உருக்கி அவைகளில் வார்ப்பார்கள். யோபு $19^{24}$.

**ஈயீம்.** Iim. யோசு $15^{29}$.

**ஈயேசேர்.** Iezer. எண் $26^{30}$. = அபியேசர்.

**ஈயேல்.** Hiel. ஏறக்குறைய கி-மு. 850-ளுத்தில் எரிகோ பட்டணத்தை மறுபடியும் கட்டினவன். 1 இரா $16^{34}$.

**ஈலேன்.** Hilen. 1 நாளா $6^{58}$.=ஓலோன். யோசு $15^{51}$.

**ஈயோன்.** Ijon. பெனுதாத்தும் பூஞும் பிடித்த நப்தலியின் ஒரு ஊர். 1 இரா $15^{20}$ 2 இரா $15^{29}$.

**ஈரல்.** Liver. **ஆனியம்** காண்க.

**ஈரா.** Hirah, Ira.

1. ஆடு மேய்க்கிறதில் யூதாவின் பங்காளி. ஆதி $38^{1}$.

2. ஒரு ஆசாரியன். 2 சாமு $20^{26}$.

3. ஒரு போர்வீரன் 2 சாமு $23^{26}$.

4. இன்னொரு போர்வீரன் 2 சாமு $23^{38}$.

**ஈராத்.** Irad. காயீனின் பேரன். ஆதி$4^{18}$.

**ஈராம்.** Hiram.

1. தீருவின் ராஜா. தாவீதும் இவனும் சிநேகிதர். சாலொமோனுக்கும் இவனுக்குமுள்ள ஏற்பாட்டினாலே சாலொமோன் இவனுக்குக் கோதுமையும் எண்ணெயும் வருஷந்தோறும் கொடுத்தான். இவனும் தேவாலயத்தைக் கட்டுவதற்கும் ஓப்பீருக்குக் கப்பல்போவதற்கும் உதவிசெய்தான். 2 சாமு $5^{11}$ 1 இரா $5^{1}$ $9^{6}$. சாலொமோன் இவனுக்கு இருபது ஊர்கள் கொடுத்தான் எனத் தோன்றுகிறது. 1 இரா $9^{10}$. ஒருவேளை ஈராம் அவ்வூர்களைச் சாலொமோனுக்குத் திரும்பவும் கொடுத்திருக்கலாம். 2 நாளா $8^{1}$.

2. தீருவிலிருந்த ஒரு சிற்பாசாரி. 1 இரா $7^{13}$. இவன் தகப்பன் தீரு பட்டணத்தான். இவன் தாய் நப்தலி அல்லது தாண் கோத்திரத்தாள். 1 இரா $7^{14}$ 2 நாளா $2^{14}$.

3. = Iram. ஒரு பிரபு. ஆதி $36^{43}$.

**ஈரு.** Iru. காலேபின் மூத்தமகன். 1 நாளா $4^{15}$.

**ஈரோத் பள்ளத்தாக்கு.** Pi-Hahiroth. இஸ்ரவேலர் சந்தித்த ஓரிடம். யாத் $14^{2}$ எண் $33^{7}$.

**ஈரோன்.** Iron. ஒரு ஊர். யோசு $19^{38}$.

**ஈர்.** Ir. = இரி. 1 நாளா $7^{7.12}$.

**ஈலாய்.** Ilai. = சல்மோன். 1 நாளா $11^{29}$ 2 சாமு $23^{28}$.

**ஈவா.** Ivvah. **ஆவா** காண்க.

**ஈவு.** Gift.

**பழைய ஏற்பாட்டில்:**

கணிசத்துக்காகவும் பெரியவர்களின் தயவு பெறும்படிக்காகவும் கொடுக்கப்படுகிறது. ஆதி $32^{20}$ $43^{11}$ நீதி $18^{16}$.

வெகுமதிக்குப் பதில் வெகுமதி கொடுக்கிறது. 1 இரா 10[10,13].

பெரும்பாலும் ஈவுக்கும் பரிதானத்துக்கும் வித்தியாசம் இல்லை. நீதி 17[8] அப் 24[26].

அடிக்கடி ராஜாக்களுக்குக் கப்பம் கட்டுவதாகிய ஈவு. 1 சாமு 10[27] 1 இரா 4[21] சங் 72[10].

தீர்க்கதரிசிகளுக்குக் கொடுக்கும் வெகுமதி. 1 சாமு 9[7] 2 இரா 8[9].

லேவியருக்கும் ஆசாரியர்களுக்கும் சம்ரக்ஷணைக்காகக் கொடுப்பது. யாத் 34[20].

ராஜாக்கள் பலதடவை பிரஜைகளுக்கும் ஏழைகளுக்கும் அன்னதானமும் நன்கொடையும் அளித்தார்கள். எஸ்த 2[18].

விவாக சம்பந்தமாகப் பரிசத்தோடு பல வெகுமதியும் கொடுப்பது வழக்கமாய் இருந்தது.

அரசனுக்குச் செலுத்தும் காணிக்கையைப்போல் கடவுளுக்குச் செலுத்தும் பலியினால் கடவுளுடைய தயவைப் பெற்றுக் கொள்ளலாம் என்று பூர்வீகத்திலே எபிரெயர்கள் நினைத்தார்கள். பிற்காலத்தில் ஆவிக்குரிய பக்தர்கள் கடவுள் பரிதானத்தின்மேல் பிரியமுள்ளவர் அல்ல என்று அறிந்தார்கள். உபா 10[18].

**புதிய ஏற்பாட்டில்:**

தேவகுமாரன், நித்தியஜீவன், பரிசுத்தாவி, கடவுள் அளிக்கும் ஈவு.

கிறிஸ்தவ ஆராதனையில் மனப்பூர்வமாய்க் காணிக்கை செலுத்துவது கிறிஸ்தவ கிரியைகளில் ஒன்று. மத் 5[23] அப் 11[29] ரோ 15[26] 1 கொரி 16[1] 2 கொரி 8, 9-ம் அதி பிலி 4[16].

**ஈளை.** Asthma, Consumption. உபா 28[22]. **வியாதி** காண்க.

## உ.

**உக்கிராணக்காரன்.** Steward. வீட்டு விசாரணைக் கர்த்தன். ஆதி 15[2] 43[19].

ராஜாவின் பிரதானிகளில் விசாரிப்புக்காரன். தானி 1[11].

காரியகாரன். மத் 20[8] லூக் 8[3].

உக்கிராணக்காரன். லூக் 16[2] கலா 4[2] 1 கொரி 1[17] தீத்து 1[7] 1 பேது 4[10].

**உக்கோக்.** Hukok.

1. =எல்காத். 1 நாளா 6[75].
2. யோசு 19[34].

**உசியா, ஊசியா.** Uzziah. [யேகோவா என் பலம்].

1. ஒரு லேவியன். 1 நாளா 6[24].
2. ஒரு உத்தியோகஸ்தனின் தகப்பன். 1 நாளா 27[25].
3. ஒரு ஆசாரியன். எஸ்று 10[21].
4. ஒரு யூதன். நெகே 11[4].
5. யூதாவின் ராஜா. **அசரியா** காண்க.

**உசீம், ஊசீம்.** Hushim.

1. =சூகாம், ஒரு குடும்பம். ஆதி 46[23] எண் 26[42].
2. ஒரு பெண். 1 நாளா 8[8].

**உஷா.** Husha. 1 நாளா 4[4].

**உஷாம்.** Husham. ஏதோமின் ராஜா. ஆதி 36[34].

**உஷ்ணம்.** Inflammation. உபா 28[22]. **வியாதி** காண்க.

**உடன்படிக்கை.** Covenant.

**பழைய ஏற்பாட்டில்:** இரண்டு பேருக்கிடையில் உண்டான ஏற்பாடு என்பது மூல பாஷையின் அர்த்தம்.

**புதிய ஏற்பாட்டில்:** இது இரண்டு பேருக்கிடையில் உண்டான ஏற்பாட்டையும் மரண சாதனத்தையும் குறிக்கும்.

1. **உடன்படிக்கை செய்தல்.**—பூர்வீகத்தில் உடன்படிக்கை செய்கிறவர்கள் உடன்படிக்கைப் பலியின் இரண்டு பாகங்களுக்கு நடுவாகப் போவார்கள். ஆதி 15[10,17]. பிற்காலத்தில் தேவன்பேரில் ஆணையிட்டு உடன்படிக்கை செய்வார்கள். ஆதி 26[31]. சில வேளை கையடித்துக் கொடுப்பார்கள். எஸ்று 10[19] எசே 17[18]. பூர்வீகத்தில் உடன்படிக்கைக்கு அடையாளமாகத் தூண் நடுவார்கள், அல்லது கல் குவிப்பார்கள். ஆதி 31[44-53]. பலதடவைகளில் தேவஸ்தலத்தில் அதின் தேவனைச் சாட்சியாக வைத்து உடன்படிக்கை செய்வார்கள். 2 இரா 11[4]. சில சமயங்களில் ஒருமித்து விருந்துசெய்வார்கள். 2 சாமு 3[20]. இரத்தம் தெளிப்பார்கள். யாத் 24[8].

2. **மனுஷர் செய்யும் உடன்படிக்கைகள்.**—ஜனத்துக்கு ஜனம் செய்யும் உடன்படிக்கை. ஆமோ 1[9]. ராஜாக்களுக்குப் பிரஜைகள் செய்யும் உடன்படிக்கை. 2 சாமு 5[3]. சிநேகிதன் சிநேகிதனுக்காகச் செய்யும் உடன்படிக்கை. 1 சாமு 18[3]. விவாகம் ஓர் உடன்படிக்கை. நீதி 2[17].

3. **கடவுளுக்கும் மனுஷனுக்குமுள்ள உடன்படிக்கைகள்.**—கடவுள் ஆதாமுக்குச் செய்த உடன்படிக்கை. ஆதி 2[16]. நோவாவுக்குச் செய்த உடன்படிக்கை. ஆதி 6[18]. ஆபிரகாமுக்குச் செய்த உடன்படிக்கை. ஆதி 5[18]. இது ஈசாக்கு யாக்கோபு இவர்களுக்கு

ஸ்திரப்பட்டிருந்தது. யாத் $2^{24}$. இஸ்ரவேலருக்கு மோசே மூலமாய்ச் சீனாய் மலையில் செய்த உடன்படிக்கை. யாத் $19^{5}$ $34^{10}$. மோவாபிலே இது ஸ்திரப்பட்டிருந்தது. உபா $29^{1}$. உடன்படிக்கை கற்பலகையில் எழுதிச் சாட்சிப் பெட்டிக்குள் வைக்கப்பட்டது. உபா $9^{9}$ $10^{2}$.

4. **சிலருக்குச் செய்த உடன்படிக்கை.**—பினெகாசின் சந்ததியில் ஆசாரியர் எப்பொழுதும் இருக்கும்படி செய்த உடன்படிக்கை. எண் $25^{12}$. தாவீதின் குடும்பத்தில் நித்தியமாய் ராஜரீகம் இருக்கும் எனச் செய்த உடன்படிக்கை. எரே $33^{21}$. யோசுவாவும், யோய்தாவும், எசேக்கியாவும், யோசியாவும், எஸ்றாவும் யேகோவாவை உறுதியாய் வணங்குகிறதற்கு உடன்படிக்கை செய்யும்படி ஜனங்களை ஏவினார்கள். யோசு $24^{25}$ 2 இரா $11^{17}$ $23^{3}$ 2 நாளா $29^{10}$ எஸ்று $10^{3}$.

5. **மோசேயின் உடன்படிக்கையின் நிவிர்த்தி.**—பிற்காலத்திலுள்ள தீர்க்கதரிசிகள் புதிய உடன்படிக்கையை எதிர்பார்த்தார்கள். அது ஆவிக்குரியதும் இஸ்ரவேல் ஜனங்களுக்கு மாத்திரமல்ல, யேகோவாவை வணங்கும் எல்லாருக்கும் அளிக்கப்பட்டதுமான உடன்படிக்கை. இதில் ஆபிரகாமுக்குச் செய்த உடன்படிக்கை அற்றுப்போகாமல் நிறைவேறும். எரே $31^{31}$ ஏசா $55^{3}$ அப் $3^{25}$ எபி $8^{7-13}$. இயேசுகிறிஸ்து மூலமாய்ப் புது உடன்படிக்கையாகிய 'வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கை' அருளப்பட்டது. எபி $8^{6}$ $12^{24}$ 2 கொரி $3^{6}$ கலா $3^{16}$ $4^{24}$.

6. **மாறாத உடன்படிக்கை.**—மூலபாஷையில் 'உப்பின் உடன்படிக்கை' ஒருவன் இன்னொருவன் வீட்டில் ஒரு உப்புக் கல்லாகிலும் வாங்கினால் அவர்கள் இருவருக்கும் மாறாத சிநேகம் இருக்கவேண்டும் என்பதைக் குறிக்கிறது. ஆதலால் 'மாறாத உடன்படிக்கை' 'உப்பின் உடன்படிக்கை' என எபிரெயர் சொல்லுவார்கள். 'உப்பிட்டாரை உள்ளளவும் நினை' என்ற பழமொழி இதற்கொத்திருக்கிறது. எண் $18^{19}$.

**உடன்படிக்கைப் பெட்டி.** **Ark of the covenant.** மூலபாஷையில் 'பெட்டி' என்னும் பதம் சாதாரணமாய் எந்தப் பெட்டியையும் (2 இரா $12^{10}$), எகிப்தியர் சுகந்தவர்க்கமிட்டுப் பிரேதத்தை யடக்கஞ்செய்யும் பெட்டியையும் (ஆதி $50^{26}$), எபிரெயர்களின் உடன்படிக்கைப் பெட்டியையும் குறிக்கும்.



உடன்படிக்கைப் பெட்டி.

உடன்படிக்கைப்பெட்டிக்கு வேறுபெயர்களும் உண்டு. அவையாவன:—'கர்த்தருடைய பெட்டி,' 'யேகோவாவின் பெட்டி,' 'தேவனுடைய பெட்டி,' 'சாட்சிப்பெட்டி,' 'பரிசுத்த பெட்டி.' இது மரத்தினாலே செய்யப்பட்டுப் பசும்பொன் தகட்டினால் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் மூடப்பட்டிருந்தது. இதைச் சுமந்துகொண்டு போவதற்கு இருபக்கங்களிலும் வளையங்களில் தண்டுகள் மாட்டியிருக்கும். இதின் நீளம் ஏறக்குறைய 4 அடி, அகலமும் உயரமும் 2¼ அடி.

உடன்படிக்கைப் பெட்டிக்குள் நியாயப்பிரமாணப் பலகைகள் வைக்கப்பட்டிருந்தன. உபா $10^{2}$.

வனாந்தரப் பிரயாணத்தில் இஸ்ரவேலர் இதை மகா வணக்கமாய் வைத்துத் தங்களோடே கொண்டுபோனார்கள். எண் $10^{33}$ழ. அவர்கள் கானான் தேசத்தைப் பிடித்தபோது இதையும் எங்கும் கொண்டுபோனார்கள். யோசு $3^{3}$ $6^{6}$. கடைசியில் இதைச் சீலோ என்னும் தேவஸ்தலத்தில் வைத்தார்கள்.

பெலிஸ்தியர் இதை அபகரித்தபோதும், திரும்ப இது கீரியாத்யாரீமிலும், ஓபேத்ஏதோம் வீட்டிலும் இருந்தபோதும், தாவீது இதை எருசலேமிலும் சாலொமோன் தான் கட்டின தேவாலயத்திலும் வைத்திருந்தபோதும் யேகோவா இது இருந்த இடங்களிலே பிரசன்னராயிருந்தார் என்று இஸ்ரவேலர் நம்பினார்கள் எனத்தெரிகிறது. 1 சாமு $4^{1}$-$7^{1}$ 2 சாமு $6^{10}$ 1 இரா $8^{1}$.

சாலொமோன் ராஜா இதைத் தேவாலயத்தில் வைத்தபிறகு இதைப்பற்றிய பிற்கால சரித்திரம் ஒன்றும் தெரியாது. ஒருவேளை இது கி-மு. 600-வரு அளவில் எரேமியாவின் காலத்தில் இருந்திருக்கலாம். எரே $3^{16}$.

யூத சாஸ்திரிகளின் பாரம்பரியத்தின்படி நேபுகாத்நேச்சார் எருசலேமைப் பிடிக்கும் முந்தி எரேமியா தீர்க்கதரிசி இந்தப் பெட்டியை மறைத்துவைத்தான். அதுமுதல் இது காணாமல் போய்விட்டது.

செருபாபேலும் ஏரோதும் கட்டின தேவாலயங்களில் உடன்படிக்கைப் பெட்டி வைக்கப்படவில்லை.

ஒருவேளை 'என் சமுகம்' (யாத் $33^{14}$) என்று சொல்லியிருப்பது உடன்படிக்கைப் பெட்டியைக் குறிக்கலாம்.

புதிய ஏற்பாட்டில் உடன்படிக்கைப் பெட்டி இரண்டுதடவை சொல்லியிருக்கிறது. எபி $9^{4}$ வெளி $11^{19}$.

**உடன்படிக்கையின் புஸ்தகம். The book of the covenant.** எபிரெயருடைய மூல நியாயப்பிரமாணங்கள், அதாவது யாத் $20^{22}$-$23^{33}$. இதற்கு இந்தப் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. யாத் $24^{7}$.

**உடுக்கை. Timbrel.** ஒரு மாதிரியான சிறு மிருதங்கம் அல்லது தம்புரு. **கீதவாத்தியம்** காண்க.

**உடும்பு. R. V. Gecko.** இது பலெஸ்தீனாவிலுள்ள பல்லி வகைகளில் ஒன்று. லேவி. $11^{30}$.

**உடை. Dress.**

1. பூர்வீகத்தார் முதல் முதல் தோல் உடைகளைத் தரித்துவந்தார்கள். ஆதி $3^{21}$. பிற்காலத்தில் ஆட்டு ரோமத்தினாலும் சணல் நூலினாலும் செய்த உடைகள் அவர்களுக்குப் பிரியமாய் இருந்தன. பழைய ஏற்பாட்டுப் புஸ்தகத்தில் 'பட்டு' என எழுதியிருந்தாலும் பட்டு அந்தக் காலத்தில் அத்தேசத்தில் இருந்தது நிச்சயமில்லை.

புதிய ஏற்பாட்டின் காலத்தில் 'பட்டு' உடையைப்பற்றி நன்றாய்த் தெரியவந்தது. வெளி $18^{11}$.

**2. உள் வஸ்திரம்.**

($a$) பூர்வீகத்தார் இடுப்பைச்சுற்றி வார்க்கச்சை, துணிக்கச்சை கட்டுவார்கள். பிற்காலத்தில் தீர்க்கதரிசிகள்மாத்திரம் இதைக் கட்டினார்கள். 2 இரா $1^{8}$ மத் $3^{4}$. மற்றவர்கள் உட்சட்டை போட்டார்கள்.

($b$) அப் $19^{12}$-ல் சொல்லியிருக்கும் 'கச்சை' அடிமைகளும் ஏழைகளும் இடுப்பிலே கட்டும் துணி.

($c$) முற்காலத்தில் ஆசாரியர்களும் தாவீது அரசனும் தரித்த 'ஏபோத்து' என்பது இடுப்பிற் கட்டின ஒருமாதிரியான உடையாயிருக்கலாம். 1 சாமு $2^{18}$ 2 சாமு $6^{14}$.

($d$) ஆசாரியர்கள் சல்லடங்கள் போட்டார்கள். பாபிலோனியர் 'நிசார்' உடுத்தினார்கள். யாத் $28^{42}$ தானி $3^{21}$.

($e$) எபிரெயர்களில் ஆண்கள் ஒருமாதிரியான உட்சட்டை கழுத்திலிருந்து முழங்கால்வரையும், பெண்கள் பாதம்வரையும் தரிப்பார்கள். சில சட்டைகளுக்குக் கையுண்டு.

யோசேப்பின் 'பல வர்ணமான அங்கி' கையுள்ள நீண்ட சட்டையாயிருக்கலாம். சில சட்டைகள் கையில்லாமல் ஒரேமாதிரியாய் நெய்யப்பட்டிருந்தன.



கச்சை.

3. **கச்சை.**—எல்லாரும் துணிமேல் அரையைச் சுற்றிக் கச்சை கட்டுவார்கள். ஏழைகள் இதற்குப் பதிலாகக் கயிறு கட்டுவார்கள். ஏசா $3^{24}$.

ஆசாரியர் தரிக்கும் கச்சை விசித்திரமாய்ச் செய்யப்பட்டிருக்கும். சிலர் பொற்கச்சை கட்டுவார்கள். யாத் $28^{8}$ வெளி $15^{6}$.

இதிலே பட்டயத்தின் உறையாவது பணப்பையாவது தொங்கும்.



சட்டை.

4. **மேல் வஸ்திரங்கள்.**

($a$) ஆண்களும் பெண்களும் சட்டையின் மேல் சணல் நூலினால் அல்லது ஆட்டு

ரோமத்தினால் செய்யப்பட்ட ஒருவிதமான சால்வை அல்லது கம்பளி போடுவார்கள். ஆதி 9[23] யாத் 12[34] நியா 8[25].

மத் 5[40]-ல் சொல்லியிருக்கும் 'வஸ்திரம்' என்றால் ஒருமாதிரிச் சட்டை. 'அங்கி' என்றால் ஒருமாதிரிச் சால்வை. ஒருவன் உட்சட்டை போட்டிருந்தும் மேல்வஸ்திரம் தரித்திராவிட்டால் அவன் நிர்வாணி என்று நினைத்தார்கள். யோவா 2[7] ஏசா 20[2].

(*b*) இன்னுமொரு மாதிரியான மேல் வஸ்திரம் மற்றெல்லா உடுப்புகளின்மேலும் போடுவார்கள். இதில் தலை நுழையக்கூடிய தாய் நடுவில் துவாரம் வெட்டப்பட்டிருக்கும் என்று தோன்றுகிறது. இது அதிக விலையுயர்ந்தது. ஓரங்களில் தொங்கல் உண்டு. இது கழுத்திலிருந்து பாதம்வரையும் நீண்டிருக்கும். சவுல், யோனத்தான், எஸ்றா இவர்கள் போட்ட சால்வைகள் இவைகளே. 1 சாமு 24[4] 18[4] எஸ்றா 9[3] யாத் 28[3].

சாமுவேலின் 'சின்னச் சட்டை' இந்த மாதிரியான சால்வைதான். 1 சாமு 2[19].



சால்வை.

(*c*) தீர்க்கதரிசிகள் ஒருமாதிரிச் சால்வை போட்டார்கள். 1 இரா 19[19]. இது வழக்கமாய் ஆட்டின் தோலினாலும் ஆட்டு ரோமத்தினாலும் செய்யப்படும். இதற்கு 'மயிர்ப் போர்வை' (சக 13[4]) 'மயிர் உடை' (2 இரா 1[8]) என்று சொல்லியிருக்கிறது.

யோவான்ஸ்நானன் ஒட்டக மயிரினால் செய்த இந்தமாதிரியான சால்வை போட்டான். மத் 3[4].

(*d*) 'மெல்லிய புடவை.' இது சணல் நூலினால் செய்த அதிக மெல்லிய சால்வை. நீதி 31[24].

(*e*) ரோமைப் போர்ச்சேவகர் இயேசுவின்மேல் போட்ட 'சிவப்பான மேல் அங்கி' ரோமைத் தலைவர்கள் கவசத்தின்மேலே போர்த்துக்கொள்ளும் ஓர் வஸ்திரம். மத் 27[28].

பரி. பவுலின் 'மேல் அங்கி' பிரயாணிகள் போடும் ஓர் மேல் வஸ்திரம். 2 தீமோ 4[13].

**5. தலைப்பாகை.**— ஆண்களும் பெண்களும் தலையில் பாகை அல்லது குல்லா தரிப்பார்கள். 'இராஜ முடி' (ஏசா 62[3]) 'குல்லா' (ஏசா 3[23]) தலைப்பாகையைக் குறிக்கின்றன. 'உறுமால்' (அப் 19[12]), 'சீலை' (யோவா 11[44] 20[7]) தலையில் கட்டும் தலைக்குட்டையைக் குறிக்கும்.



முக்காடு.

பெண்கள் முக்காடு போடுவார்கள். இது முழுத் தேகத்தையும் மூடுகிற மெல்லிய சால்வை. ஆதி 24[65] 38[14].

மோசே போட்ட 'முக்காடு' ஒரு சிறிய முக்காடு. யாத் 34[33].

6. ஐசுவரியமுள்ள பெண்கள் இவைகளைத்தவிர பல **விசித்திரமான ஆடைகள்** அணிவார்கள். இவைகளின் பெயர்கள் பல (ஏசா 3[19-24] எசே 16[10-12]) நமக்குத் தெரிந்தாலும் இவைகள் இன்னமாதிரி என்பது திட்டமாய்த் தெரியாது.

**7. பாதரட்சைகள்.**—எபிரெயர் பாதரட்சைகள் வெளியில் போடுவார்கள். புலம்பல் காலத்திலும், சிநேகிதர் வீட்டுக்குப்போகும் சமயத்திலும், தேவாலயத்திலும் பாதரட்சை போடமாட்டார்கள்.

8. **'மாற்று வஸ்திரங்கள்.'** இவை பண்டிகைக்காலத்தில் போடும் அல்லது பெரியோர்கள் விசேஷித்த காலங்களில் கொடுக்கும் உயர்ந்த வஸ்திரங்கள். ஆதி 45[22]. ('கலி


பாதரட்சை.

யாண வஸ்திரம்') மத் $22^{11}$. இந்தமாதிரி யான மாற்று வஸ்திரமாயிருக்கலாம்.

9. தமிழில் மொழிபெயர்த்தவர்கள் மூல பாஷையில் உடைகளுக்குச் சொல்லியிருக்கும் பெயர்களின் அர்த்தத்தின்படி மொழி பெயராமல் பொதுவாய் 'அங்கி,' 'கச்சை,' 'சால்வை,' 'வஸ்திரம்' என்று சொல்லியிருக்கிறதினாலே இப்பதங்கள் குறிக்கும் உடைகள் இன்னின்ன மாதிரியானவை எனத் தெரிந்துகொள்வது எளிதல்ல. **உறுமால், கிரீடம், சீலை, பாகை, ஏபோத்து** காண்க.


பாதரட்சை.

**உதவிக்காரன்.** **Servant, Minister, Deacon.** பிலிப்பு எபேசு பட்டணங்களை நீக்கி மற்ற இடங்களில் கிரேக்க பதமாகிய *Diakonos* பணிவிடைக்காரர், வேலைக்காரர், ஊழியக்காரராகிய இவர்களைப் பொதுவாய்க் குறித்தது. மத் $20^{26}$ யோவா $2^{5}$ 2கொரி $6^{4}$ $11^{23}$ கொலோ $1^{23}$ பிலி $1^{1}$ 1 தீமோ $3^{8-13}$.

சபைக்குரியவேலைக்கென்றுமுதல்நியமிக்கப்பட்ட ஏழுபேருக்கு 'உதவிக்காரர்' என்று அப்போஸ்தலர் நடபடிகளில் சொல்லியிராவிட்டாலும், ஆதி கிறிஸ்தவர்கள் ஒரு சபை ஆனவுடனே சபையின் விஷயத்தை விசாரிக்கவும், ஏழைகளைப் பராமரிக்கவும் உதவிக்காரரை ஏற்படுத்தினார்கள். அப் $6^{1-6}$.

பிலி $1^{1}$-லும் 1 தீமோ $3^{8-13}$-லும் சொல்லியிருக்கும் 'உதவிக்காரர்' பிலிப்பு எபேசுபட்டணங்களில் உத்தியோகஸ்தர்களாயிருக்கும் ஒரு வகுப்பு எனத் தோன்றுகிறது.

இவர்களுடைய ஊழியம் இன்னின்னவென்று விவரமாய்ச் சொல்லியிராவிட்டாலும், இவர்கள் ஏழைகளைப் பராமரிக்கவும், சபையின் காரியகர்த்தாக்களாயிருந்து தங்களால் இயன்றமட்டும் சபையின் விருத்திக்குரிய விஷயங்களைப் பார்த்து நடத்தவும் பிரயாசப்படுவார்கள்.

இவர்கள் மதுபானிகளாயும் பேராசையுள்ளவர்களாயும் கட்சிக்காரராயும் இராமல், நல்லொழுக்கம் நற்கீர்த்தி உள்ளவர்களாயும், குடும்பவிஷயத்தில் நல்முறைப்படி அதை நடத்துகிறவர்களாயும், விசுவாசத்தில் தேறினவர்களாயும் இருக்கவேண்டும். இவர்கள் சிலகாலம் சோதிக்கப்பட்டுக் கண்காணியார், மூப்பர் ஆகிய இவர்களுக்கு இரண்டாவதாகச் சபையின் உத்தியோகஸ்தராய் வைக்கப்படுவார்கள்.

ᐟ கி-பி. இரண்டாம் நூற்றாண்டில் உதவிக்காரர் நியமிக்கப்பட்டிருந்தார்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஆதி சபையில் உதவிக்காரரை ஏற்படுத்தும் விதம் தெளிவாய்த் தெரியாவிட்டாலும் மூப்பர்கள் அவர்கள் தலையில் கைகளை வைத்து ஆசீர்வாதம் சொல்லுவார்கள் என்றும், சபையார் அதற்குச் சம்மதிக்கவேண்டும் என்றும் நாம் அறியலாம். 1 தீமோ $5^{22}$ அப் $6^{6}$.

இந்த உதவிக்காரர் பிற்காலத்தில் குருமாரின் கைக்கீழ் உத்தியோகம் செய்துவந்தார்கள்.

**உதவிக்காரி.** **Deaconess.** பெபேயாள் ரோமைச் சபையிலிருந்த 'ஊழியக்காரன்' என்று மூலபாஷையில் சொல்லியிருக்கிறது. ஆதலால் உதவிக்காரன் செய்த உத்தியோகமே உதவிக்காரியும் செய்தாள் என்று நாம் அறிந்துகொள்ளவேண்டும். ரோ $16^{1}$ 1 தீமோ $3^{11}$-ல் பவுல் 'உதவிக்காரி' என்று சொல்லாவிட்டாலும் அவன் சபை உத்தியோகஸ்தர்களாகிய உதவிக்காரிகளைக் குறித்துப் பேசுகிறான் என்று சிலர் உத்தேசிக்கிறார்கள். பிற்காலத்தில் உதவிக்காரிகள் என்னும் சபை உத்தியோகஸ்தர்கள் இருந்தார்கள் என்று நிச்சயமாய் அறிந்துகொள்ளுகிறோம்.

**உத்தரிக்கிற ஸ்தலம். Purgatory.** மரித்த விசுவாசிகள் பாக்கியவான்களாயிருந்தாலும், மோட்சவாசிகள் வாழும் இடத்தில் ஆண்டவரைப் பார்க்கிறதற்குமுன் இன்னம் சில காலம் காத்திருக்கவேண்டும் என்ற கொள்கையினால், அவர்களுடைய மகிமை நிறைவாகவும், பரிசுத்தமுள்ளவர்களுடைய பாக்கியத்தில் அவர்கள் இருக்கவும், மரித்தவர்களுக்காக மன்றாடுகிற முறைமை இரண்டாம் நூற்றாண்டில் தொடங்கிற்று. இஷ்டப்பிரசாதத்தோடே மரித்தவர்கள் பாவக்கடன் முழுவதும் தீராமல் அந்தக் கடனைத் தீர்க்கும்படிக்கு உத்தரிக்கும் ஸ்தலம் ஒன்று உண்டு என்று பிற்காலத்தில் அநேகர் நினைத்தார்கள்.

இதைக்குறித்து ரோமான் மார்க்கத்தாரால் செய்யப்பட்டிருக்கிற ஞான உபதேசமாவது:

(i) புண்ணியவான்களுடைய ஆத்துமாக்கள் மோட்சம் போகிறதற்கு முன்னே அநித்திய ஆக்கினைகளைக்கொண்டு தங்கள் குற்றங்களை விமோசனம்பண்ணக் குறித்திருக்கும் ஸ்தலம் 'உத்தரிக்கிற ஸ்தலம்' என்று சொல்லப்படும்.

(ii) தங்கள் அற்பக் குற்றங்களையாகிலும் பொறுக்கப்பட்ட சாவான பாவங்களையாகிலும் உத்தரியாமல், தேவ இஷ்டப்பிரசாதத்தோடே மாணத்தை அடைகிறவர்களே உத்தரிக்கிற ஸ்தலத்துக்குப் போகிறவர்கள்.

(iii) நாம் அவர்களுக்கு உதவியாய்ப் பண்ணுகிற பூசை ஜெபதப தான தருமங்களைக் கர்த்தர் பார்த்து உத்தரிக்கிற ஸ்தலத்தில் இருக்கிறவர்கள் அனுபவிக்கிற வேதனைகளைக் குறையப்பண்ணுவதினால், அவர்கள் மோட்சம் அடைந்தவுடனே நமக்காக வேண்டிக்கொள்ளுவார்கள்.

இதற்கு உதாரணங்களாகத் தள்ளுபடியாக மத்திலும் புதிய ஏற்பாட்டிலுமுள்ள சில வசனங்களைக் கொடுக்கிறார்கள். அவைகள் முக்கியமானவை: 2 மக் 12⁴³⁻⁴⁶ மத் 12³² லூக் 12⁴⁸ 1 கொரி 3¹¹⁻¹⁵ 15²⁹.

இந்த வசனங்களை நாம் ஆராயுமிடத்து, இந்த உபதேசம் இவைகளில் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை என்றும், இவ்வசனங்கள் இந்த உபதேசத்தைக் குறிக்கிறதில்லை என்றும் அறியவேண்டும். திருஷ்டாந்தமாக: 1 கொரி 3¹¹⁻¹⁵-ம் வசனங்களில் சுவிசேஷத்தைப் போதிக்கிறவர்கள் மற்றவர்களைச் சீஷர்களாக்குகிற விதத்தைக் குறித்தும், அவர்களுடைய வேலைகள் அக்கினி என்னும் உபத்திரவத்தால் சோதிக்கப்படும் என்பதைக்குறித்தும் சொல்லியிருக்கிறதேயன்றி, உத்தரிக்கும் ஸ்தலத்தைக் குறித்து ஒன்றுஞ் சொல்லியிருக்கவில்லை என்று விளங்குகிறது. இறந்துபோனவர்களுடைய ஆத்துமாக்கள் கடைசி நியாயத்தீர்ப்பு நாள்வரைக்கும் 'ஆதேஸ்' என்னப்பட்ட மரித்தோர் ஸ்தலத்தில் இருந்து, மோட்சத்துக் கேற்றவர்கள் மோட்சகதியையும், நாகத்துக் கேற்றவர்கள் நரகவேதனையையும் அனுபவித்துக்கொள்வார்கள் என்று வேதஞ் சொல்லுகிறதேயன்றி, அது உத்தரிக்கிற ஸ்தலத்தைப்பற்றித் தெளிவாய் ஒன்றும் சொல்லுகிறதேயில்லை. பவுல் அப்போஸ்தலன் 'அவனவன் செய்த நன்மைக்காவது தீமைக்காவது தக்க பலனை அடையும்படிக்கு நாமெல்லாரும் கிறிஸ்துவின் நியாயாசனத்திற்கு முன்பாக வெளிப்படவேண்டும்' என்று சொல்லுகிறான். 2 கொரி 5¹⁰.

கடைசியாக, இந்த உபதேசம் இயேசு கிறிஸ்துவின் புண்ணிய பலன்கள் நம்மைப் பூரணமாய் இரட்சிப்பதற்குப் போதாது என்று போதிக்கிறதாகத் தோன்றுகிறது. ஆதலால் புரோட்டெஸ்டாண்டு கிறிஸ்தவர்கள் இந்த உபதேசத்தைத் தப்பறை என்று எண்ணி இதை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

**உத்திரம்.** Beam. மத் 7³. வீடு காண்க.

**உபத்திரவம்.** Persecution. ஆதி கிறிஸ்தவர்களின் உபத்திரவங்களைப்பற்றித் துன்பம் காண்க.

**உபவாசம்.** Fasting. உபவாசம் எகிப்தியர், பெர்சியர், கிரேக்கர், ரோமர் ஆகிய இவர்களுக்குள் வழக்கமாயிருந்த ஒரு சடங்காசாரம். இச்சடங்காசாரம் மனுஷன் தேவனது சமுகத்தில் தன்னைத் தாழ்த்துவதைக் குறிக்கும் ஒரு அடையாளம். உபவாசம் செய்த எந்த ஜாதியும் அதை ஒரு புண்ணியமாக எண்ணினதில்லை. உபவாசித்தல் யூதர்களுக்குப் பிரமாணமாயிருந்தது. உபவாசம் என்பது இன்னதென்று லேவி 16¹³-ல் சொல்லியிருக்கிறது. உபவாசித்தல் என்பது தன்னைத் தாழ்த்துதலே. அதற்கொத்த சிந்தனை இல்லாமல் உபவாசிப்பது தப்பு என்று தீர்க்கதரிசிகள் தெளிவாய்ச் சொல்லுகிறார்கள். ஏசா 58⁴ யோவே 2¹². மோசேயின் நியாயப்பிரமாணத்தில் பாவ நிவிர்த்திக்காகப் பெரிய நாளில்மாத்திரம் எல்லா ஜனங்களும் உபவாசிக்கவேண்டுமென்று கட்டளையிடப்பட்டது. லேவி 16²⁹ஞ 23²⁷ அப் 27⁹. பின்பு அபஜெயமாகிலும் (நியா 20²⁶ 1 சாமு 20³⁴), வாதைகளாகிலும் (யோவே 1¹⁴), தேவன் ஜனங்களை பயமுறுத்துதலாகிலும் (2 சாமு 12¹⁶ 1 இரா 21²⁷), ஜனங்களுக்குப் பொதுவான பாவமாகிலும் (1 சாமு 7⁶ யோவே 2¹²) நேரிட்ட காலத்திலும் எல்லா இஸ்ரவேலரும்

உபவாச நாட்களை ஏற்படுத்தினார்கள். சிறை யிருப்புக்குப் பிந்தினகாலத்தில் இஸ்ரவேல ரின் ராஜ்யங்கள் அழிக்கப்பட்ட பெரிய சம் பவங்களை நினைப்பூட்டின நாட்களும் வருஷா வருஷம் உபவாச நாட்களாகக் கொண்டாடப் பட்டன. சக $7^5$ $8^{19}$. கல்தேயர் முதல் முதல் பட்டணத்துக்குள் வந்த நாலாம் மாதத்திலும் (எரே $52^6$ழ), தேவாலயமும் பட்டணமும் அழிக்கப்பட்ட ஐந்தாம் மாதத்திலும் (2 இரா $25^8$ழ எரே $52^{12.13}$), கெதலியாவும் அவனோ டிருந்த பல யூதர்களும் கொன்றுபோடப் பட்ட ஏழாம் மாதத்திலும் (எரே $41^1$ழ), எருச லேமைச் சுற்றி முற்றிக்கை போடத் தொடங் கின பத்தாம் மாதத்திலும் (எரே $41^1$) உப வாச நாட்கள் கொண்டாடப்பட்டன. இந்த உபவாச நாட்களைக் கொண்டாடுவது முழு ஜனங்களுக்கும் பிரமாணமாயிற்று. சரித் திரக்காரனாகிய யோசேப்பு (*Josephus*) சொல்லுகிறபடி இதற்குப் பிறகு பெரிய இக்கட்டு நேரிட்டகாலங்களில் பெரிய பட் டணங்களிலுள்ளவர்களும் பல நாடுகளிலுள் ளவர்களும் தனி உபவாச நாட்களைத் தங்க ளுக்கு ஏற்படுத்தினார்கள். மேலும் மழை பெய்யாவிட்டால் எருசலேமிலிருந்த ஆலோ சனைச் சங்கத்தார் ஜனங்களெல்லாம் உபவா சிக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்கள். ஜனம் சிறை யிருப்புக்குப் பிந்தினகாலத் தில் நியாயப்பிரமாணத்தால் ஏற்படுத்தப் பட்ட உபவாச நாட்களைத்தவிர வரவர அதிகமதிகமாய் இன்னும் விசேஷித்த கார ணங்க ளில்லாமலும் வேறு உபவாச நாட் களையும் ஏற்படுத்தி, உபவாசித்தலைப் புண் ணியமாக எண்ணிக்கொள்ளத் தொடங்கி னார்கள். சக $7^5$ழ லூக் $2^{37}$ மத் $9^{14}$. விசே ஷமாக பரிசேயர் இப்படிச் செய்தார்கள். மத் $9^{14}$ லூக் $18^{12}$. பரிசேயர் மோசே சீனாய் மலையின்மேல் ஏறின வாரத்தின் ஐந்தாம் கிழமையிலும், அவன் திரும்பி இறங்கின இரண்டாம் கிழமையிலும் உபவாசித்தார் கள். சாயந்தரத்திலிருந்து சாயந்தரமட்டும் உபவாசம் பண்ணினார்கள். சில சமயங்க ளில் இதைவிட அதிகநேரம் உபவாசித்தார் கள். எஸ்தர் $4^{15}$ழ வசனங்களின்படி யூதர் கள் மூன்றுநாள் உபவாசமா யிருந்தார்கள். உபவாசித்தவர்கள் போஜனபான முதலிய வற்றையும் சாப்பிடாமலிருந்தார்கள். நியா யப்பிரமாணத்தினால் ஏற்படாத உபவாச நாட்களிலோ சில ஆகாரத்தைமாத்திரம் நிறுத் திவைத்தார்கள். தானி $10^2$ ழ. ஆயினும் சில நாட்களாய் ஆகாரம் ஒன்றும் தொடாத வர்களும் இருந்தார்கள். எஸ்தர் $4^{15}$.

பாவநிவிர்த்தி செய்யும் நாளில் வழக்க மான வஸ்திரத்துக்கு மேலே சாவு வஸ்திரம் என்னப்பட்ட ஒரு வெள்ளை உடுப்பையும் தலையின்மேலே சாவு குல்லா என்னப் பட்ட ஒரு குல்லாவையும் ஜனங்கள் தரித் துக்கொள்வது வழக்கம். அவ்வழக்கத்தி னால் பாவநிவிர்த்தி செய்யும் நாளில் நடந்த உபவாசம் 'வெள்ளை உபவாசம்' என்னப் பட்டது.

அதிக விசனத்துக்கும் மனஸ்தாபத்துக் கும் அடையாளமாக அநேகம்பேர் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக் கறுப்பு இரட்டைக் கட்டிக்கொண்டு சாம்பலைத் தலையின்மேல் தெளித்துக்கொள்வார்கள். 2 சாமு $13^{19}$ யோவே $1^{13}$. கறுப்புக்கம்பளி போட்டுக் கொண்டு உபவாசிப்பது 'கறுப்பு உபவாசம்' என்னப்பட்டது.

உபவாசித்தல் புதிய ஏற்பாட்டில் பிர மாணமாகக் கட்டளை யிடப்பட்டிருக்கிற தில்லை. யோவான்ஸ்நானனும் அவன் சீஷர் களும் அடிக்கடி உபவாசித்தார்கள். ஆயி னும் இயேசு மணவாளன் தங்களோடிருக் கையில் மணவாளனுடைய தோழர் துயரப் படுவார்களா என்றார். மத் $9^{15}$. மணவாளன் அவர்களைவிட்டு எடுபடும் நாட்கள் வரும், அப்போது தோழர் உபவாசிப்பார்கள். இதி னால், அவர் தாம் இறந்தபின் கிறிஸ்தவர்கள் உபவாசிக்க வேண்டுமென்று சொல்லாமல் தாம் அவர்களோடு இராதகாலத்தில் அவர் களுக்குத் துக்கமும் கஷ்டமும் என்கிற ஞான உபவாசம் வரும் என்று உவமான மாய்க் கருதுகிறார். பழைய ஏற்பாட்டுக் குரிய உபவாச சடங்கைத் தமது சீஷர்களுக் குப் பிரமாணமாக இயேசு வைக்கமாட்டார் என்பது மத் $9^{16.17}$-ம் வசனங்களுக்குப் பின் வரும் இரண்டு உவமைகளினால் விளங்கும். ஆகையால் உபவாசத்தைப்பற்றிய கட்டளை நீக்கப்பட்டிருக்கிறது என்பதற்குச் சந்தேக மில்லை. அப்போஸ்தலரும் பூர்வ கிறிஸ்த வர்களும் அடிக்கடி உபவாசித்தார்கள். அப் $13^2$ $14^{23}$ 1 கொரி $7^5$ $9^{27}$ 2 கொரி $6^5$ ழ. ஆயினும் ஜெபத்தோடு சம்பந்தமாக மாத்தி ரம் சுயசித்தங்கொண்டு அப்படிச் செய்தார் கள். ஏனெனில் உபவாசம் அப்போஸ்தல ரால் ஒரு இடத்திலும் பிரமாணமாக ஏற்படுத் தப்பட்டதுமில்லை; புண்ணியமாக எண்ணப் பட்டதுமில்லை. அதற்கு எதிரிடையாகப் பவுல் அப்போஸ்தலன் தேவனுடைய ராஜ் யம் புசிப்பும் குடிப்பும் அல்ல (ரோ $14^{17}$) என்று சொல்லுகிறான். மேலும் போஜனத் தையும் பானத்தையுங்குறித்து ஒருவனும் உங் களைக் குற்றப்படுத்தானாக என்பது அவன்

நமக்குச் சொன்ன புத்திமதி. கொலோ 2[16] கலா 4[9, 10]. அதுவுமல்லாமல் மனச்சாட்சியைப் பாரப்படுத்துகிற போஜனப் பிரமாணங்களைப் பிசாசுகளின் உபதேசம் என்கிறான். 1 தீமோ 4[1-3]. போஜன பானத்தைக் குறித்து அப்போஸ்தலர் கிறிஸ்தவர்களுக்குப் போதிக்கிறது இன்னது என்று பேதுரு சொல்லுகிறான். 1 பேது 4[7]. அதாவது தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருந்து ஜெபம் பண்ணுகிறதற்கு ஜாக்கிரதையாயிருங்கள் என்பதே. இதற்குப் போஜனத்தினாலாவது பானத்தினாலாவது தடை உண்டாகாதபடிக்கு ஜாக்கிரதையாயிருப்பது அவசியம் என்பது அர்த்தம். ஆயினும் அப்போஸ்தலர் உபவாசத்துக்குச் சம்மதித்ததால் பூர்வ கிறிஸ்தவர்களும் உபவாசத்தை நீக்காமல் அதை ஆவி மாம்சத்தை அடக்கும்படிக்கான எத்தனமாகவும், பாவ சங்கீர்த்தனத்தோடு சம்பந்தமாகவும் வழங்கிவந்தார்கள். ஆனால் அவர்கள் அதை ஒருக்காலும் புண்ணியமாக நினைக்கவுமில்லை; பிரமாணமாக வைக்கவுமில்லை. உபவாசித்தல் திருச்சபையில் முதல் இரண்டு நூற்றாண்டுகளில் ஒவ்வொருவனுடைய இஷ்டத்தின்பிரகாரம் விடப்பட்டிருந்தது. மூன்றாம் நூற்றாண்டு முதல் கிறிஸ்தவ சபையில் உபவாசம் பிரமாணமாயிற்று. நாலாம் நூற்றாண்டில் சில போதகர் உபவாசித்தல் பாவத்தை நிவிர்த்திசெய்யும் புண்ணியம் என்று போதிக்கத் துவங்கினார்கள். இந்த அபிப்பிராயம் ரோமர் சபையிலும் கிரேக்கர் சபையிலும் நிலைபெற்றது. யூதர்கள் இயேசுவைக் கொலைசெய்யத் தீர்மானித்த புதன் கிழமையும், இயேசு மரித்த 'பெரிய வெள்ளிக்கிழமையும்' அந்தக் காலமுதல் உபவாச நாட்களாயிருந்தன. 'பெரிய வெள்ளிக்கிழமைக்கு' முந்தின நாற்பது நாட்கள் உபவாச நாட்களாயிருந்தது. மோசே (யாத் 34[28]) நாற்பது நாள் உபவாசத்தினாலும், இஸ்ரவேலர் நாற்பது வருஷம் வனாந்தரத்தில் பயணம் செய்ததினாலும், கிறிஸ்து வனாந்தரத்தில் நாற்பது நாள் உபவாசித்ததினாலும், ஒருசந்தி உபவாசம் நாற்பதுநாளாயிருக்கவேண்டுமென்று சிலர் சொல்லுகிறதுண்டு. இன்னும் வேறே ஒருசந்தி காலங்களும் ஏற்படுத்தப்பட்டன.

ஒரே ஒரு உபவாசநாளாயிருந்தபட்சத்தில் ஆகாரத்தையெல்லாம் நிறுத்துவது பிரமாணமாயிருந்தது. பதினைந்தாம் நூற்றாண்டு முதல் சாயந்தரம் ஆறுமணிமுதல் மறுநாள் மத்தியானம்வரையில் மாத்திரம் உபவாசமாயிருக்கவேண்டும். பின்பு கண்ட யாவற்றையும் சாப்பிடலாமென்று கட்டளையிடப்பட்டது. அநேகநாளான உபவாசம் செய்கிறவர்கள் பட்டினியாயிருந்து சமயா சமயங்களில் கேவலமான சாப்பாட்டைமாத்திரம் சாப்பிட்டார்கள். கடைசியாக *Trent* என்னும் பொதுக் கூட்டம் சாதாரண ஒருசந்தி நாட்களிலாகிலும் காலத்திலாகிலும் பழம், பால், மாவு, மீன், முட்டை, வெண்ணெய் ஆகிய இவற்றைச் சாப்பிடலாமென்று கட்டளையிட்டது. ஆயினும் காணிக்கையாகப் பணம் கொடுத்தவர்களுக்கு வேறே ஆகாரத்தையும் சாப்பிடும்படிக்கு 'வெண்ணெய்க் காகிதங்கள்' என்னப்பட்ட சீட்டுகளினால் உத்தரவு (*Indulgences*) கொடுக்கக் கண்காணிகளுக்கும் குருக்களுக்கும் அதிகாரம் இருந்தது.

திருச்சபை சீர்திருத்தம் (*Reformation*) ஆனபின், சுவிசேஷ திருச்சபை (*The Reformed Church*) சுத்தவேதத்தின் பேரில் உபவாசம் பிரமாணம் அல்லவென்றும் புண்ணியம் அல்லவென்றும் போதித்தும், உபவாசத்தைத் தள்ளினதில்லை. லூதர் (*Luther*) உபவாசமுதலிய சரீர ஒடுக்கம் புறம்பான நல்லொழுக்கம்தான்; சரீரம் நிறைந்திருந்தால் பிரசங்கிப்பதற்கும், ஜெபிப்பதற்கும், படிப்பதற்கும், நன்மை செய்வதற்கும் உதவாது. ஆதலால் புண்ணியம் அடையும்படிக்கு அல்ல, பராபரனுடைய வார்த்தையைக் கைக்கொள்ளவும், ஆவிக்கு இடம் இருக்கவும்மாத்திரம் உபவாசமாயிருக்கலாம். மற்றப்படி உபவாசம் வேண்டியதில்லை. இப்படியிருக்க உபவாசத்தில் இறைச்சியோ, மீனோ, கொஞ்சம் நாளோ, அநேகம் நாளோ என்று கவனிப்பது வீண் என்று சொன்னான். கல்வீனும் (*Calvin*) லூதரைப்போல் போதித்தான். ஆதலால் சுவிசேஷ திருச்சபையில் உபவாச ஒழுங்கு இல்லை. ஆகிலும் திரு இராப்போஜனத்துக்குப் பட்டினியாய்ப் போவதும், தபசு நாட்களிலும் காலத்திலும் மட்டாகச் சாப்பிடுவதும் அநேகருக்கு வழக்கம். அப்படிச் செய்வது தேவ வசனத்தைக் கேட்பதற்கும் ஜெபிக்கிறதற்கும் மாம்சத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறதற்கும் ஏதுவாய் இருக்கும் என்று அனுபவத்தில் கண்டால் சந்தோஷமாய் அப்படிச் செய்யலாம்.

**உபாகமம். Deuteronomy.**

1. **உற்பத்தி**. இந்தப் புஸ்தகத்தில் மூன்று பிரசங்கங்களும், இரண்டு சங்கீதங்களும், (i) $1^{6}$-$4^{40}$ (ii) $5^{1}$-$26^{19}$ $28^{1-68}$ (iii) $29^{2}$-$30^{20}$ (iv) 32 அதி (v) 33 அதி. சில சரித்திரங்களும் எழுதியிருக்கின்றன.

பூர்வீககாலத்தில் புஸ்தகங்கள் எழுதின வர்களில் சிலர் விசேஷமாய் ஒரு உபதேசத்தை உரைக்க விரும்பினால் அவர்கள் தாங்கள் உரைத்த உபதேசத்தைத் தாவீது, ஏசாயா முதலிய மகான்கள் கூறினார்கள் எனப் பாவித்து வாஸ்தவமாய்த் தாங்கள் எழுதினவைகளை அந்த மகான்கள் எழுதினதாகச் சொல்வது தப்பிதம் அல்ல என்று நினைத்தார்கள். மோசே இந்த ஆகமத்தில் கண்ட இந்தமாதிரியான பிரசங்கங்களையும் சங்கீதங்களையும் சொல்லியிருப்பான் என்றாலும், அவன் இதில் தன் மரணத்தைப்பற்றி எழுதமாட்டான் என்றும், இந்தப் புஸ்தகத்திலிருக்கும் பாஷைக்கும் அவன் வழங்கும் பாஷைக்கும் வித்தியாசம் உண்டென்றும், இதில் சொல்லியிருக்கும் 'மேடைகள்' சடங்காசாரங்கள் ஆகிய இவைகளைக் குறித்த புத்தி போதனைகள் அவன் காலத்தில் அல்ல பிற்காலத்திலே உண்டானவைகள் என்றும் அறிந்து வேத சாஸ்திரிகள் அநேகர் இதில் மோசே போதித்தவைகள் அநேகம் இருந்தும் இந்தப் புஸ்தகம் மோசேயினால் அல்ல, பிற்காலத்தில் எழுதப்பட்டது என்று அபிப்பிராயம் கொள்ளுகிறார்கள். இதை எழுதினவன் யார் என்று நமக்குத் திட்டமாய்த் தெரியாது.

2. **காலம்.** இஸ்ரவேலின் சரித்திரத்தை நாம் ஆராயுமிடத்து யோசியா செய்த மார்க்க திருத்தத்துக்கு கி-மு 621-ல் தேவாலயத்தில் கண்டெடுக்கப்பட்ட பிரமாணப் புஸ்தகம் ஆதாரமாய் இருந்தது என்று அறிவோம். 2 இரா $22^{8}$. இந்தப் புஸ்தகம் உபாகமத்தில் 5-ம், 28-ம் அதி. மட்டும் உள்ள பாகம் எனத் தோன்றுகிறது. வேத சாஸ்திரிகள் அநேகர் இந்தப் புஸ்தகம் பெரிய தீர்க்கதரிசியாகிய ஏசாயா (கி-மு. 741-701-ல்), பயபக்தியுள்ள எசேக்கியா (கி-மு. 726-697-ல்) இவர்களுடைய காலத்தில் எழுதப்பட்டது என்று நினைக்கிறார்கள். ஆனால் 1909-ல் நவில் (*Naville*) என்பவன் எகிப்தியர் தங்கள் தேவாலயத்தைக் கட்டினபோது அதின் சுவர்களில் அல்லது அஸ்திபாரங்களில் சன்மார்க்கத்துக்குரிய புஸ்தகங்களைப் புதைத்துவைத்தார்கள் என்று தெரியப்படுத்தி, எகிப்து தேசத்தின் வழக்கங்களை நன்றாய் அறிந்த சாலொமோன் ராஜா தேவாலயத்தைக் கட்டுகையில் அதின் சுவரிலே பிற்காலத்தில் யோசியா கண்டெடுத்த நியாயப் பிரமாணமாகிய இந்தப் புஸ்தகத்தைப் புதைத்திருப்பான் என்று காட்டுகிறான். இது சரியானால் இந்த உபாகமப் புஸ்தகம் கி-மு 975-ல் எழுதப்பட்டது என்று நினைக்கவேண்டும். (*Expos. Times*, Oct. 1909. p. 45.)

3. **இந்தப் புஸ்தகத்தின் பொருட் சுருக்கம்.**

(*a*) 5-11 அதி. யேகோவா அருளின வாக்குத்தத்தம், அவர் செய்த தண்டனை, அவருக்கும் தமது ஜனங்களுக்கும் உள்ள சம்பந்தம், ஜனங்கள் அவருக்குக் காட்ட வேண்டிய கீழ்ப்படிதல், பரிசுத்தமாய் இருத்தல்.

(*b*) 12-26 அதி. விக்கிரகாராதனை, பரிசுத்தஸ்தலங்கள், லேவியர்கள், புசிக்கத்தக்கவைகள், புசிக்கத்தகாதவைகள், அடிமைத்தனம், பண்டிகைகள், பலிகள், தீர்க்கதரிசிகள், அடைக்கலப்பட்டணங்கள், யுத்தம், விவாகம், காணிக்கை முதலியவற்றைப் பற்றிய பிரமாணங்கள்.

(*c*) $28^{1-46}$. இப்பிரமாணங்களுக்குக் கீழ்ப்படிந்தவர்களுக்கு ஆசீர்வாதமும் கீழ்ப்படியாதவர்களுக்குச் சாபமும் கூறியிருக்கின்றன.

இந்த மூன்று பிரிவுகளும் சேர்ந்த பிரமாணங்கள் தேவாலயத்தில் கண்டெடுக்கப்பட்ட 'நியாயப்பிரமாணப் புஸ்தகம்' என்பது அநேக வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயம். நாம் உபாகமத்தின் போதனையைப் பார்த்தால் அஷேரா, விக்கிரகாராதனை, அந்நிய தேவர்களின் வணக்கம், வேசித்தனம், பில்லிசூனியம், நரபலி ஆகிய அசுத்த செய்கைகளிலிருந்து விலகி யேகோவாவின் வணக்கத்தில் பரிசுத்தமாய் இருக்கவேண்டும் என்பது ஆக்கியோனின் நோக்கம் என்பதை நாம் அறிந்துகொள்ளலாம். இதில் யேகோவாவின் பரிசுத்த தன்மையையும் அவருடைய ஜனங்கள் இருக்கவேண்டிய பரிசுத்தத்தையும்பற்றி விவரமாய்ச் சொல்லியிருப்பதினாலே யேகோவா ஒருவர்தான் வணக்கத்துக்குரியவர் என்றும், அவரைப் பல இடங்களில் அல்ல ஒரே இடத்தில் ($12^{11}$ $17^{18}$ மு) வணங்க வேண்டியது என்றும் எல்லாருடைய மனதிலும் பதியும்படி செய்வதே அவனுடைய விருப்பமாய் இருந்தது.

மேலும் அவன் மேடைகளில் நடந்த ஆராதனைகளை வெறுத்ததினாலே கானானியரின் வணக்கத்துக்கும் யேகோவாவை வணங்குதலுக்கும் உள்ள பெரிய வித்தியாசத்தைக் காட்டியிருக்கிறான்.

4. **மீதியான பாகங்கள்** $4^{1-40}$. ஜனங்களுக்கு எச்சரிக்கையாகச் சொன்ன பிரசங்கம்.

27-ம் அதி. உடன்படிக்கை செய்து அதை வணக்கமாய் ஒப்புக்கொண்டதைப் பற்றியது.

29-ம் அதி. 'மோவாப் தேசத்தில் செய்த உடன்படிக்கை.' இதில் யேகோவாவுக்குக்

கீழ்ப்படியாதவர்களின் அழிவைப்பற்றிச் சொல்லியிருக்கிறது.

32-ம் அதி. இஸ்ரவேலருக்குச் சொன்ன புத்திபோதனைகள் அடங்கிய பாட்டு.

33-ம் அதி. மோசேயின் ஆசீர்வாதம். யேகோவா இஸ்ரவேலருக்கு அருளின நன்மைகளைக் குறித்துப் பாடின சங்கீதம்.

**5. இப்புஸ்தகத்தில் காணப்படும் முக்கிய போதனைகள்.**

(*a*) யேகோவாவே உலகத்தில் எல்லாருக்கும் கர்த்தராயிருக்கிறார். $10^{14}$. ஆதலால் விக்கிரகாராதனை மகாபாவம். $6^{14}$ ழ.

(*b*) அவருடைய சித்தம் சன்மார்க்கப் பிரமாணமாம். $8^{4}$.

(*c*) அவர் தமது ஜனங்களை நேசிக்கிறார். $7^{7}$. ஆதலால் அவர்கள் சந்தோஷத்தோடு அவரை வணங்கி நேசிக்கவேண்டும். $6^{5}$ $12^{18}$.

(*d*) அவர்கள் மற்றவர்களுக்கும் மிருகஜீவன்களுக்கும் காட்டவேண்டிய இரக்கம். $22^{1}$ $24^{10}$.

(*e*) யேகோவா தமது இலட்சணங்களைத் தமது கிரியையினாலே காட்டியிருக்கிறார். ஆதலால் அவருடைய ஜனங்கள் யேகோவா செய்தவைகளைத் தங்கள் மனதில் வைப்பது அவசியமெனச் சொல்லியிருக்கிறது. $6^{6}$ $9^{5}$ $9^{22}$ $11^{19}$.

(*f*) அதேவண்ணமாய்ப் பண்டிகைக் காலங்களிலும் யேகோவா செய்தவைகளைக் குறித்து ஞாபகமுள்ளவர்களாயிருந்து, கானானியர் வணங்கின பாகால் முதலிய தேவதைகள் அல்ல, யேகோவா அத்தேசத்தின் பலன்களைக் கொடுத்திருக்கிறார் என்று நினைவுகூருவது அவர்களுடைய விசேஷித்த கடமை.

(*g*) இவைகளைக்குறித்துத் தங்கள் பிள்ளைகளுக்கு விவரமாய்ப் போதிக்கவேண்டியது அவசியம். $6^{20}$ $26^{5}$.

**உப்பரிகை.** **Pinnacle, Roof.** 2 சாமு $11^{2}$. **வீடு** காண்க. தேவாலயத்து உப்பரிகை. மத் $4^{5}$. **தேவாலயம்** காண்க.

**உப்பா.** **Huppah.** 1 நாளா $24^{13}$.

**உப்பாம்.** **Hupham.**=உப்பீம். ஆதி $46^{21}$ எண் $26^{39}$.

**உப்பார்சின்.** **Upharsin.** மெனே காண்க.

**உப்பு.** **Salt.** சாக்கடலில் ஏராளமான உப்பு உண்டு. அதற்குச் சமீபத்தில் உப்பளங்கள் இருந்தன. செப் $2^{9}$. சாப்பாட்டில் உப்பை உபயோகித்தார்கள். பிள்ளை பிறந்த நாளில் அதை உப்பால் சுத்திகரிப்பார்கள். பல்நோவுக்கு உப்புக்கல் வைப்பார்கள். காய்கறிகள் முதலானவை கெட்டுப் போகாதபடி உப்புப் போட்டுப் பத்திரப்படுத்துவார்கள். படைக்கும் எல்லாப் பலிகளோடும் உப்பையும் படைப்பார்கள். லேவி $2^{13}$. தூபத்திலும் தேவசமூகத்து அப்பங்களிலும் உப்புச் சேர்த்திருந்தது. இவைகளினால் உப்புக்குக் கெட்டுப்போகாமல் காக்கிறதும் சுத்தமாக்குகிறதுமான தன்மை இருக்கிறது என அறியலாம்.



உப்புக்கடலும் அதின் மேற்கரையிலுள்ள கிறிஸ்தவ மடமும்.

இந்தக் கருத்தாகவே இயேசுகிறிஸ்து ‘நீங்கள் பூமிக்கு உப்பாய் இருக்கிறீர்கள்’ என்று சொன்னார். மத் $5^{13}$.

சாக்கடலின் ஓரத்தில் உப்பு அதிகமாய் இருப்பதினாலே அதின் கரைகளில் புல்பூண்டுகள் முளைப்பதுமில்லை, அதில் மீன்கள் வசிப்பதுமில்லை. ஆகையால் உப்பு ஜீவ உற்பத்திக்கு இடங்கொடாது என்றறிந்து அழிவைக் குறிக்கும்படி அது உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது என்று உத்தேசிக்கலாம். உபா $29^{23}$ நியா $9^{45}$. ‘உப்பின் உடன்படிக்கை.’ **உடன்படிக்கை** காண்க.

**உப்புக்கடல்.** **Salt sea.** இது மற்றக் கடல்களைப்பார்க்கிலும் அதிக உப்பாய் இருக்கிறதினாலே 'உப்புக்கடல்' (*Salt sea*) என்றும், சோதோம் முதலான சமபூமியில் இருக்கிறதினாலே 'சமவெளியைச்சேர்ந்த கடல்' என்றும், யூதேயா நாட்டிற்குக் கிழக்கே இருக்கிறதினாலே 'கீழ்க்கடல்' என்றும், அதில் மீன்கள் முதலிய பிராணிகள் இல்லாததினால் 'சாக்கடல்' என்றும் சொல்லப்படுகிறது. ஆதி $14^{3}$ உபா $4^{48}$ எசே $47^{18}$. இதற்கு வேதத்தில் 'சாக்கடல்' என்று சொல்லப்படுகிறதில்லை.



உப்புக்கடலின் தென் கரை.

அரபியர் இதை 'லோத்தின் கடல்' என்று சொல்லுவார்கள். இதின் நீளம் 47 மைல், அகலம் $2\frac{3}{4}$-9 மைல். இது ஆழமான பள்ளத்தாக்கிலே இருக்கிறதினால் மத்தியதரைக் கடலின் நீர்மட்டத்துக்கு 1,293 அடி கீழே இருக்கிறது. இதின் தண்ணீர் வேறிடங்களுக்குப் பாயாமல் சூரிய வெப்பத்தினால் வற்றிப்போகிறதினால் இதில் உப்பு அதிகமாய் உண்டு. இதின் ஓரத்திலுள்ள சில இடங்களில் பாய்கிற நல்ல நீர் ஊற்றுகளில் மாத்திரம் மீன்கள் உண்டு.

**உப்புப்பட்டணம்.** **City of salt.** உப்புக்கடலின் மேற்குக் கரையிலுள்ள யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{62}$.

**உப்புப்பள்ளத்தாக்கு.** **Valley of salt.** தாவீதும் அமத்சியாவும் ஏதோமியரை முறியடித்த இடம். இது உப்புக்கடலின் தெற்கில் இருக்கிறது. 2 சாமு $8^{13}$ 2 இரா $14^{7}$.

**உம்தா.** **Humtah.** யோசு $15^{54}$.

**உம்மா.** **Ummah.** யோசு $19^{30}$.

**உம்ரி.** **Omri.**

1. பென்யமீன் கோத்திரத்தானாகிய ஒருவன். 1 நாளா $7^{8}$.

2. யூதா கோத்திரத்தான் ஒருவன். 1 நாளா $9^{4}$.

3. = 'ஓம்ரி.' இசக்காரின் ஒரு பிரபு. 1 நாளா $27^{18}$.

4. இஸ்ரவேலின் இராஜா. கி-மு. 887-875-வரை.

இவன் பாஷா என்பவன் கொல்லப்பட்ட பிறகு ராஜ்யத்தில் உண்டான உட்சண்டையில் ஜெயம் அடைந்து ராஜ்யபாரத்தைப் பெற்று, சமாரியாவைத் தன் முக்கிய பட்டணமாக்கி, அங்கே கோட்டை கொத்தளங்களைக் கட்டினான். இவன் பெனிக்கேயரோடு உடன்படிக்கைபண்ணி, தன் மகன் ஆகாப் என்பவனுக்குப் பெனிக்கேயரின் ராஜ குமாரத்தியாகிய யேசபேலை விவாகம் செய்து வைத்தான். இவன் மோவாப் ராஜ்யத்தைத் தன் வசமாக்கினான். தூரமான இடத்திலுள்ள அசீரியர்கள் இஸ்ரவேல் தேசம் 'ஓம்ரியின் வீடாகிய தேசம்' என்று அநேக காலம் சொல்லிவந்ததிலிருந்து ஓம்ரியின் மகத்துவத்தை அறியலாம். இவனுடைய பேத்தி அத்தாலியாள் யூதாவின் ராஜாவாகிய யோராமின் மனைவி. 1 இரா $16^{16-30}$ 2 இரா $8^{26}$.

**உயிர்த்தெழுதல்.** **Resurrection. Future life.**

1. **பழைய ஏற்பாட்டில்:**—எபிரெயர்கள் முதலில் மனிதரிலுள்ள ஜீவன் மரணத்திற்குப் பிறகு இருக்கும், அல்லது அற்றுப்போகும் என்பதைப்பற்றி ஒன்றும் தீர்க்கமாய்ச் சொல்லவில்லை. சங்கீதக்காரரும், தீர்க்கதரிசிகளும் இதைக்குறித்து வாவரத் தெளிவாய் ஆராய்ந்தறிந்து, மனிதர் மரணத்திற்குப் பிறகும் உயிரோடிருந்து, இவ்வுலகத்திற் தாங்கள் செய்த நன்மை தீமைகளுக்காகச் சுபாசுபங்களை அனுபவிப்பார்கள் என்று போதித்தார்கள். எபிரெயர்கள் மனிதர் மறு உலகத்

தில் சரீரமில்லாமல் பாக்கியம் அடையமாட்டார்கள், ஆகையால் சரீரம் இருக்கவேண்டியது அவசியம் என்று நினைத்தார்கள். ஆதி $5^{24}$ 2 இரா $2^{11}$ யோபு $14^{13}$ $19^{25}$ சங் $16^{10}$. ஓரியா தீர்க்கதரிசி உயிர்த்தெழுதல் உண்டு என்பதைப்பற்றி நம்பிக்கையுடையவனாய் இருந்தான். ஓசி $6^{2}$ $13^{14}$. ஆனால் இவனும் எசேக்கியேலும் ($37^{1}$) சொன்ன வாக்கியங்கள் மரித்தவர்களின் உயிர்த்தலைப்பற்றியல்ல, இஸ்ரவேல் ஜனங்களைப்பற்றிப் பேசியிருக்கிறது என்று சிலர் நினைக்கிறார்கள். ஏசாயா முதற்பாகத்தில் மரித்தோரின் உயிர்த்தெழுதலைப் பற்றித் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது. ஏசா $26^{19}$. ஆனால் இஸ்ரவேலருக்குத்தவிர புறஜாதியாருக்கு உயிர்த்தெழுதல் இல்லை என்று அவன் எண்ணியிருக்கலாம். ஏசா $26^{14}$. கடைசியாய் தானியேல் தீர்க்கதரிசி நீதிமான்களும் பாவிகளும் மரணத்திற்குப் பிற்பாடு உயிர்த்தெழுவார்கள் என்று சொல்லுகிறான். தானி $12^{2}$.

2. கி-மு. 100-ஆண்டில் எபிரெயர்கள் உயிர்த்தெழுதல் உண்டு என்பதைப்பற்றி உறுதியாய் நம்பினார்கள். 2 மக் $7^{14}$ $12^{43}$ $14^{46}$.

3. இயேசுகிறிஸ்துவின் காலத்தில் சாதாரணமானவர்களும் மரித்தவர்கள் கடைசிநாளிலே உயிர்த்தெழுவார்கள் என்று நம்பினார்கள். யோவா $11^{24}$.

4. **புதிய ஏற்பாடு:**—மரணத்திற்குப்பிறகு மனிதர் மறுபடியும் உயிர்த்தெழுந்திருப்பார்கள் என்பது இயேசுவின் போதனையில் எங்கும் அடங்கியிருக்கிறது. ஆயினும் மரணத்திற்குப்பின் நமது ஆத்துமா சரீரத்தோடு மறுபடியும் கூடியிருக்குமா என்பதற்கு அவர் தீர்மானமாய் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. அப்படியிருக்க, அவரே மறுபடியும் உயிர்த்தெழுந்து, முன்போலச் சாப்பிட்டபடியினாலே இவ்வுலகத்தில் நமக்கிருக்கும் சரீரத்திற்கும் மரித்தபிறகு இருக்கும் சரீரத்திற்கும் பல வித்தியாசம் இருக்குமானாலும், இரண்டிற்கும் ஒற்றுமை உண்டு என்று சிலர் நினைக்கிறார்கள். மத் $8^{11}$ $10^{28}$ மாற் $12^{25}$ லூக் $13^{29}$ $14^{14}$ $20^{35}$ $24^{41}$ யோவா $5^{21}$ $6^{40.44}$ $11^{24}$ $20^{19.20}$.

அப்போஸ்தலர்கள் இயேசுவின் உயிர்த்தெழுதலைப்பற்றி அடிக்கடி சாட்சி கொடுத்தார்கள். அப் $2^{24}$ $3^{15}$ $5^{30}$ மு. அவர்கள் நாம் எல்லாரும் மரணத்திற்குப் பிற்பாடு உயிரோடிருப்போம் என்று நம்பினார்கள். 1 கொரி $15^{3}$ எபி $6^{1}$ பிலி $3^{21}$ வெளி $20^{5}$. பரி: பவுல் விதைக்கும் பயிருக்கும் சம்பந்தம் எப்படியிருக்கிறதோ, அப்படியே ஜென்ம சரீரத்திற்கும் ஆவிக்குரிய சரீரத்திற்கும் சம்பந்தம் இருக்கிறது என்று காட்டுகிறான். 1 கொரி $15^{35-41}$. மற்ற அப்போஸ்தலர்கள் சரீரத்தைப் பற்றி அவ்வளவு விவரமாய்ச் சொல்லவேயில்லை. எல்லாரும் கிறிஸ்து தம்மை நம்பினவர்களுக்கு அருளும் நித்திய ஜீவனாகிய உயிர்த்தெழுதலைப்பற்றிப் பேசுகிறார்கள். **இயேசுவின் உயிர்த்தெழுதல்** காண்க.

இந்தப் பதத்தினால் 'உயிர்த்தெழுதல்' ஒரு நேரத்தில் நமக்கு உண்டாகும் மாறுதலைக் காட்டுவதும் அல்லாமல் நாம் பிரவேசிக்கும் நித்திய ஜீவன் என்னும் நிலைமையையும் அடிக்கடி காட்டுகிறது.

**உயிர்த்தெழுதல்.** **The Resurrection.** **இயேசுவின் உயிர்த்தெழுதல்** காண்க.

**உரல்.** **Mortar.** எண் $11^{8}$ யாத் $30^{36}$ நீதி $27^{22}$.

**உரியா.** **Uriah, Urijah.** ['யேகோவாவின் சுவாலை' அல்லது 'யேகோவா என் பிரகாசம்'].

1. தாவீதின் முப்பது போர்வீரர்களில் ஒருவன். இவன் அந்நிய ஜனத்தானாகிய ஏத்தியனானாலும் இவன் யேகோவாவை வணங்கினவன் என்று இவன் பெயரினால் அறிந்துகொள்ளலாம். இவன் மனைவியைத் தாவீது தனக்கு மனைவியாக்கினான். 2 சாமு $11^{1}$-$12^{15}$.

2. ஆகாசின் காலத்திலுள்ள ஒரு பிரதான ஆசாரியன். ஏசா $8^{2}$ 2 இரா $16^{10}$.

3. ஒரு தீர்க்கதரிசி. எரே $26^{20}$.

4. ஒரு ஆசாரியன். நெகே $3^{4}$.

5. எஸ்றாவின் தோழர்களில் ஒருவன் நெகே $8^{4}$.

**உருள்.** **Wheel.** 1 இரா $7^{30-32}$. **சக்கரம்** காண்க.

**உரோமாபுரியாருக்கு எழுதின நிருபம்.** **Epistle to the Romans.** **ரோமருக்கு எழுதின நிருபம்** காண்க.

**உரோமை.** **Rome.** **ரோமாபுரி** காண்க.

**உர்பானு.** **Urbanus.** ரோமாபுரியிலுள்ள அடிமைகளுக்கு வழக்கமாய்ச் சொல்லும் ஓர் பெயர். ரோமை ராயனுடைய அரமனையிலுள்ள சிலருக்கும் இப்பெயர் வழங்கிவந்தது. ரோ $16^{19}$.

**உலகம், பூமி, பூச்சக்கரம், இம்மை, பிரபஞ்சம்.** **World.**

I. **பழைய ஏற்பாட்டில்:**—எபிரெயர்கள் 'வானமும் பூமியும்' என்பது சர்வலோகம் எனக் குறித்தார்கள். ஆதி $1^{1}$. மனுஷர் வசிக்கும் இடத்திற்கு 'பூமி,' 'உலகம்,' 'பூச்சக்கரம்' என்று சொன்னார்கள். ஆதி $1^{1}$ சங் $9^{8}$ $24^{1}$ ஏசா $13^{11}$. இது கர்த்தருடை

யது; இதில் பாவம் உண்டு; கர்த்தர் இதை நியாயம் தீர்ப்பார்.

II. **புதிய ஏற்பாட்டில்:**—'உலகம்' 'இம்மை' 'பிரபஞ்சம்' என்பவைகளைக் காட்ட இரண்டு பதங்கள் வழக்கமாய்ச் சொல்லப்படுகின்றன.

1. *Aion.* இதின் அர்த்தம் 'யுகம்.' இதினால் உலகம் துவக்கமும் முடிவும் உள்ளதென்றும், இது ஒரு காலத்துக்குத்தான் இருக்கிறதென்றும் காட்டப்படுகின்றன. ஆதி கிறிஸ்தவர்கள் உலகத்தைச் சிருஷ்டித்தவராகிய இயேசுகிறிஸ்து எல்லாவற்றிற்கும் எல்லாமுமாய் இருக்கிறார் என்று சொல்லியிருக்கிறார்கள்.

'உலகம்.'—மத் $13^{39}$ $24^{3}$ எபி $1^{2}$ $9^{26}$ $11^{3}$ யோவா $9^{32}$ அப் $15^{18}$ தீத் $2^{12}$.

'இம்மை.'—மத் $12^{32}$ மாற் $10^{30}$ லூக் $18^{30}$ எபே $1^{21}$.

'பிரபஞ்சம்.'—லூக் $20^{34}$ 2 தீமோ $4^{10}$.

இந்த உலகம் பொல்லாதது; இதின் அதிபதிகள் கிறிஸ்துவைக் கொன்றார்கள்; 'இப்பிரபஞ்சத்தின் தேவனானவன்' அவிசுவாசிகளுக்குக் கெடுதி செய்கிறான். கலா $1^{4}$ 1 கொரி $2^{8}$ 2 கொரி $4^{4}$.

2. *Kosmos.* இது மனுஷர் வசிக்கும்படி கடவுள் ஒழுங்கு செய்த உலகத்தைக் குறிக்கிறது. யோவா $1^{10}$. இதில் பாவம் உண்டானது. ரோ $5^{12}$. இதற்குக் கிறிஸ்து வருகிறார். 1 தீமோ $1^{15}$. இதிலே கிறிஸ்தவர்கள் வாசமாய் இருக்கிறார்கள். ரோ $1^{8}$. இதில் கிறிஸ்து ஜெயம் அடைந்து அரசாளுவார். வெளி $11^{15}$.

புதிய ஏற்பாட்டிலே உலகத்தைக்குறித்துச் சொல்லியிருக்கும் போதனை எல்லாவற்றையும் சுருக்கமாய் எழுதுவதற்குமாத்திரம் இடம் இருக்கிறது. ஆதி கிறிஸ்தவர்கள் உலகத்திற்கும் கிறிஸ்துவுக்கும் எப்பொழுதும் சண்டையிருக்கும் என்பதை மறவாமல் ஜீவித்துவந்தார்கள்.

**உலகப்பொருள்.** **Mammon.** **மம்மோன்** காண்க.

**உலக்கை.** **Pestle.** நீதி $27^{22}$.

**உல்தாள்.** **Huldah.** [உக்கிர சிற்றமுள்ள சிறு கீரி]. கி-மு. 621-ஆ தேவாலயத்தில் நியாயப்பிரமாண புஸ்தகம் கண்டெடுக்கப்பட்டபோது, யோசியா ராஜா இதைக்குறித்து விசாரித்த தீர்க்கதரிசியாகிய ஒரு பெண். 2 இரா $22^{14}$.

**உல்லா.** **Ulla.** 1 நாளா $7^{39}$.

**உவமைகள்.** **Parables.**

I. **பழைய ஏற்பாடு.**

1. யோதாம்—மரங்கள் தங்களுக்கு இராஜாவை நியமிப்பது. நியா $9^{7}$.
2. சிம்சோன்—சிங்கத்தைப்பற்றிய விடுகதை. நியா $14^{14}$.
3. நாத்தான்—ஆட்டுக்குட்டி. 2 சாமு $12^{1}$.
4. தெக்கோவா விதவை – இரண்டு சகோதாரும் பழிவாங்கினவனும். 2 சாமு $14^{6}$.
5. அடியுண்ட தீர்க்கதரிசி—காவலில் வைக்கப்பட்டவன். 1 இரா $20^{35}$.
6. மிகாயா—இவன் கண்ட காட்சி. 1 இரா $22^{19}$.
7. யோவாஸ்—முட்செடியும் கேதுருமரமும். 2 இரா $14^{9}$.
8. ஏசாயா—திராட்சத்தோட்டம். ஏசா $5^{1}$.
9. எசேக்கியேல் – சிங்கக்குட்டிகள். எசே $19^{2}$.
10. எசேக்கியேல்—இரண்டுகழுகுகளும் திராட்சச்செடியும். எசே $17^{3}$.
11. எசேக்கியேல்—கொதிக்கும் கொப்பரை. எசே $24^{3}$.

II. **புதிய ஏற்பாடு.**

(i) மத்தேயு சுவிசேஷம்.

1. களைகள். $13^{1}$.
2. புதைத்திருக்கிற பொக்கிஷம். $13^{44}$.
3. விலையுயர்ந்த முத்து. $13^{45}$.
4. வலை. $13^{47}$.
5. இரக்கமற்ற ஊழியக்காரன். $18^{23}$.
6. தோட்டத்தில் வேலையாட்கள். $20^{1}$.
7. இரண்டு குமாரர். $21^{28}$.
8. ராஜகுமாரனின் கலியாணம். $22^{1}$.
9. பத்துக் கன்னிகைகள். $25^{1}$.
10. தாலந்துகள். $25^{14}$.
11. செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும். $25^{31}$.

(ii) மாற்கு சுவிசேஷம்.

1. நிலத்தில் தெரியாதவிதமாய் முளைக்கும் விதை. $4^{26}$.
2. விழித்திருக்கும் ஊழியக்காரர். $13^{34}$

(iii) லூக்கா சுவிசேஷம்.

1. இரண்டு கடன்காரர். $7^{41}$.
2. நல்ல சமாரியன். $10^{25}$.
3. பாதி ராத்திரியில் அப்பத்துக்காக வந்த சிநேகிதன். $11^{5}$.
4. ஐசுவரியமுள்ள மதிகேடன். $12^{16}$.
5. எஜமானுக்காகக் காத்திருந்த ஊழியக்காரர். $12^{35}$.

6. அநியாயமுள்ள விசாரணைக்காரன். $12^{4}$.
7. கனிகொடாத அத்திமரம். $13^{6}$.
8. பெருவிருந்து. $14^{16}$.
9. கோபுரம் கட்டுகிறவன். $14^{28}$.
10. யுத்தஞ்செய்யப்போகும் ராஜா. $14^{31}$.
11. காணாமல் போன வெள்ளிக்காசு. $15^{8}$.
12. கெட்டகுமாரன். $15^{11}$.
13. அநீதியுள்ள உக்கிராணக்காரன். $16^{1}$.
14. ஐசுவரியவானும் லாசருவும். $16^{19}$.
15. கீழ்ப்படிதலுள்ள ஊழியக்காரன். $17^{7}$.
16. ஊக்கமுடன் விண்ணப்பம் பண்ணின விதவை. $18^{1}$.
17. பரிசேயனும் ஆயக்காரனும். $18^{9}$.
18. ராத்தல். $19^{13}$.

(iv) மத்தேயு, லூக்கா சுவிசேஷங்கள்.

1. கன்மலையின் மேலும் மணலின் மேலும் வீடு கட்டினவர்கள். மத் $7^{24}$ லூக் $6^{47}$.
2. புளித்தமா. மத் $13^{33}$ லூக் $13^{21}$.
3. காணாமல்போன ஆடு. மத் $18^{12}$ லூக் $15^{4}$.

(v) மத்தேயு, மாற்கு, லூக்கா சுவிசேஷங்கள்.

1. மரக்காலால் மூடிவைத்த விளக்கு. மத் $5^{15}$ மாற் $4^{21}$ லூக் $8^{16}$.
2. கோடித்துண்டும் பழைய வஸ்திரமும். மத் $9^{16}$ மாற் $2^{21}$ லூக் $5^{36}$.
3. புது ரசமும் பழைய துருத்தியும். மத் $9^{17}$ மாற் $2^{22}$ லூக் $5^{37}$.
4. விதைக்கிறவன். மத் $13^{1}$ மாற் $4^{1}$ லூக் $8^{4}$.
5. கடுகுவிதை. மத் $13^{31}$ மாற் $4^{32}$ லூக் $13^{19}$.
6. திராட்சத்தோட்டமும் தோட்டக்காரரும். மத் $21^{33}$ மாற் $12^{1}$ லூக் $20^{9}$.
7. துளிர்விடும் அத்திமரம். மத் $24^{31}$ மாற் $13^{28}$ லூக் $21^{29}$.

**உவர்மண்**. Nitre. எரே $2^{22}$. நீதி $25^{20}$-ல் 'வெடியுப்பு' என்பதற்குப் பதில் 'உவர்மண்' என்றிருக்கவேண்டும்.

**உளி**. Chisel, R. Plane. ஏசா $44^{13}$.

**உளுந்து**. A. V. Fitches. R. V. mg. Black Cummin. Nigella-Sativa. ஏசா $28^{25}$.

**உள் இந்திரியங்கள்**. Reins. இருதயம் காண்க.

**உறுமால்**. Handkerchief, Napkin. அப் $19^{12}$. சீலை காண்க.

**உற்சாகபலி**. Free-will offering. பலி காண்க.

**உன்னதப்பாட்டு**. The Song of Solomon.

1. **இதைப்பற்றிய அபிப்பிராயம்**.—எபிரெய பாஷையில் 'உன்னதப்பாட்டு' என்னும் பதத்துக்கு இச்சங்கீதம் எல்லாப் பாட்டுகளைப்பார்க்கிலும் மேலானது என அர்த்தமாகும். அதிகந் தேர்ந்த எபிரெய சாஸ்திரிகளாகிய ரபிமார்களில் சிலர் வேதாகமத்திலுள்ள மற்றப் புஸ்தகங்களோடு இதைச் சேர்ப்பதைப்பற்றிச் சந்தேகங்கொண்டிருந்தபோதிலும், கிறிஸ்துவுக்குப் பின் முதலாம் நூற்றாண்டின் முடிவில் இதைச் சேர்க்கலாம் என்று தீர்மானஞ்செய்தார்கள்.

இது பஸ்கா பண்டிகையின் எட்டாம் நாளில் ஜெப ஆலயங்களில் பாடுவார்கள். இதில் யேகோவா தமது ஜனமாகிய இஸ்ரவேலரையும், இஸ்ரவேலர் யேகோவாவையும் நேசிக்கிறதைப்பற்றிச் சொல்லியிருக்கிறது என்று எபிரெயர் அபிப்பிராயம் கொண்டதினால் இப்படி அவர்கள் செய்தார்கள் என்று நினைக்கவேண்டும்.

அப்படியே ஆதி கிறிஸ்தவர்களும் இந்தப் பாட்டு கிறிஸ்துவுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உள்ள அன்பைச் சிறப்பித்துக் காட்டுகிறது என்று நம்பினதினால் இதைத் தள்ளிவிடாமல் ஏற்றுக்கொண்டார்கள்.

2. **தன்மை**.

($a$) சிலர் இது சாலொமோனுக்கும் அவன் விவாக மனைவிக்குமுள்ள அன்பைக் குறித்துப் பாடிய விலாசம் என நினைக்கிறார்கள்.

($b$) சிலர் ஒரு மேய்ப்பனுக்கு நியமிக்கப்பட்ட ஒரு கன்னிகையைச் சாலொமோன் தன் மாளிகையின் அந்தப்புரத்தில் வைத்திருந்தான் என்றும்; சாலொமோன் அவள் அரமனை இராணி ஆவதற்கு விருப்பமில்லாமல் அந்த மேய்ப்பனில் அவள் வைத்த அன்பின் மிகுதியைக் கண்டு அவளை மறுபடியும் அந்த மேய்ப்பனிடத்திற்கே அனுப்பினான் என்றும் காட்டுகிற ஒரு விலாசம் எனச் சொல்லுகிறார்கள்.

($c$) ஆனால் எபிரெயருடைய புஸ்தகங்களையும் சேமியரின் புஸ்தகங்களையும் நாம் பார்க்குமிடத்து அவைகளில் ஒரு விலாசமும் இல்லை. அது அப்படி ஓர் விலாசமானால் அதைச் சொல்லுகிறவர்களின் பெயரும் செய்கைகளும் ஏன் காணப்படவில்லை?

இதைக்கண்டு வேறு சாஸ்திரிகள் கொள்ளும் வேறு அபிப்பிராயம் என்னவென்றால்: இந்நாள்வரையும் சமாரியாவில் விவாகம் நடத்தும்பொழுது அதற்கு வரும் இனத்தார் சிநேகிதர் இதிலுள்ள பாட்டுகளைப்போன்ற பாடல்களைப் பாடுகிற வழக்கம் உண்டு. முற்காலத்தில் அதே வழக்கம் இருந்தது என்றும் அவர்கள் இந்தப் புஸ்தகத்திலுள்ள பாட்டுகளைப் பாடினார்கள் என்றும் எண்ணுவது நியாயம். இந்தப் புஸ்தகம் பல கீர்த்தனைக் கோவையாய் இருந்தாலொழிய இவைகளின் பிரிவுகளை அறிவது எப்படி? ஆதலால் இது விவாககாலத்தில் பாடும் ஓர் கீர்த்தனைக் கோவைதான்.

3. **இதின் உட்பொருளின் சுருக்கம்.** இந்தக் கோவையில் ஏழு பிரிவுகள் உண்டு.

(1) $1^{2}$-$2^{7}$. மணவாளன் மணவாட்டி இருவரும் தங்கள் அன்பைப்பற்றிப் பாடுகிறார்கள்.

(2) $2^{8-17}$. வசந்தகாலத்தில் மணவாளன் வருவதைப்பற்றியது.

(3) $3^{1-11}$. மணவாட்டியின் சொப்பனம். $3^{1-5}$. வேறு ஸ்திரீகள் பாடும் உப சங்கீர்த்தனம். $3^{6-11}$.

(4) $4^{1}$-$5^{1}$. மணவாளன் மணவாட்டிக்குத் தன் அன்பையும் அவளுடைய சௌந்தரியத்தையும்பற்றிப் பாடியது.

(5) $5^{2}$-$6^{9}$. மணவாட்டியின் இரண்டாம் சொப்பனம். இருவரும் ஒருவரை ஒருவர் புகழ்ந்து பாடியது.

(6) $6^{10}$-$8^{4}$. மணவாட்டியின் மனமகிழ்ச்சியும், இருவரும் ஒருவரை ஒருவர் புகழ்வதும் அடங்கியது.

(7) $8^{5-14}$. கலியாணகாலத்தில் இருவருக்குமுள்ள அன்பு.

4. **காலம்.** சாலொமோன் இதை எழுதினான் என்று பாரம்பரியமாய்ச் சொல்லப்பட்டுவருகிறது. இதற்குக் காரணம் அவன் ஆயிரத்து ஐந்து பாட்டுகளைப் பாடினான். 1 இரா $4^{32}$. மேலும் பூர்வீகத்தில் ஒருவன் புஸ்தகம் எழுதினால் சாலொமோன் அந்தப் புஸ்தகத்திலுள்ளவைகளை உரைத்திருக்கலாம் என்று எண்ணி சாலொமோன் இந்தப் புஸ்தகத்துக்கு ஆக்கியோன் எனச் சொல்வது குற்றமில்லை என்று நினைத்திருப்பான். இந்தப் பாரம்பரை இப்படியே நெடுகிலும் இருந்தது என நினைக்கவேண்டும்.

ஆனால் கி-பி. முதலாம் நூற்றாண்டில் எபிரெய ரபிமாருக்குள் இந்தப் புஸ்தகத்தைப் பற்றிச் சந்தேகம் இருந்தினாலும், எபிரெய பாஷையில் இல்லாத நூதன பதங்கள் இதில் இருந்ததினாலும், இது சாலொமோன் காலத்து இலக்கண நடைக்கு அல்ல, பிற்காலத்து இலக்கண நடைக்கு உரியதாகையால் கி-மு. மூன்றாம் நூற்றாண்டிற்குமுன் எழுதினதல்ல என்று தீர்மானிப்பது நியாயத்துக்கு விரோதமல்ல.

## ஊ.

**ஊகால்.** Ucal. நீதி $30^{1}$.

**ஊசா.** Uzzah.

1. 1 நாளா $8^{7}$.
2. எஸ்றா $2^{49}$.
3. 2 சாமு $6^{3}$.
4. ஒரு தோட்டம். 2 இரா $21^{18}$.
5. 1 நாளா $6^{29}$.

**ஊசாபேசேத்.** Jushab-hesed. 1 நாளா $3^{20}$.

**ஊசாயி.** Hushai.

1. அப்சலோம் கலகம் செய்த காலத்தில் தாவீதுக்கு உதவி செய்த ஒருவன். 2 சாமு $15^{32}$.
2. = Uzai. நெகே $3^{25}$.

**ஊசால்.** Uzal. ஆதி $10^{27}$.

**ஊசி.** Uzzi.

1. 1 நாளா $6^{5}$.
2. 1 நாளா $7^{2}$.
3. 1 நாளா $7^{7}$.
4. நெகே $11^{22}$.
5. நெகே $12^{19}$.

**ஊசிம்.** Hushim. உசீம் காண்க.

**ஊசியா.** Uziah. உசியா காண்க.

**ஊசியின் காது.** Needle's eye. லூக் $18^{25}$.

**ஊசியேல்.** Uziel. [கடவுள் என் பலம்].

1. யாத் $6^{18}$.
2. 1 நாளா $4^{42}$.
3. 1 நாளா $7^{7}$.
4. = அசரியேல். 1 நாளா $25^{4.18}$.
5. 2 நாளா $29^{14}$.
6. நெகே $3^{8}$.

**ஊசேன் சேரால்.** Uzzen-sherah. [சேராளின் பங்கு]. 1 நாளா $7^{24}$.

**ஊடை.** Woof. லேவி $13^{47}$. **நெசவு** காண்க.

**ஊத்ஸ்.** Uz.

1. சேமின் பேரன். ஆதி $10^{23}$.
2. நாகோரின் மகன். ஆதி $22^{21}$.
3. ஓரியரில் ஒருவன். ஆதி $36^{28}$.

4. ஒரு தேசம். புல $4^{21}$.

5. பெலிஸ்தியாவுக்கும் எகிப்துக்கும் நடுவிலுள்ள ஒரு தேசம். எரே $25^{20}$.

6. யோபு வசித்த ஊர். இது பலெஸ்தீனுவுக்கும் அரபியா வனாந்தரத்துக்கும் மத்தியிலுள்ள ஒரு தேசம் எனத் தோன்றுகிறது. யோபு $1^{1}$.

**ஊத்தாய்.** **Uthal.**

1. = *அத்தாயா.* 1 நாளா $9^{4}$ நெகே $11^{4}$.

2. எஸ்று $8^{14}$.

**ஊப்பாஸ்.** **Uphaz.** பொன் விளைகிற தேசம். ஒருவேளை இது ஓப்பீராய் இருக்கலாம். எரே $10^{9}$ தானி $10^{5}$.

**ஊமை.** **Dumbness.** **வியாதி** காண்க.

**ஊராம்.** **Huram.**

1. 1 நாளா $8^{5}$.

2, 3. **ஈராம்** காண்க.

**ஊராய்.** **Hural.** = ஈத்தாய்.

**ஊரி.** **Hurl.** 1 நாளா $5^{14}$.

**ஊரி.** **Url.**

1. யாத் $31^{2}$.

2. 1 இரா $4^{19}$.

3. எஸ்று $10^{24}$.

**ஊரியேல்.** **Uriel.** ['கடவுளின் சுவாலை' அல்லது 'கடவுள் என் பிரகாசம்'].

1. 1 நாளா $6^{24}$.

2. அப்போகிரிப்பாவில் எஸ்றுவுடன் பேசின தேவதூதன். 2 எஸ்று $4^{1}$.

**ஊரீம், தும்மீம்.** **Urim and Thummim.** இப்பதங்களுக்கு 'ஒளி, தோர்ச்சி' அல்லது 'மறு, மாசின்மை,' அல்லது 'மரணம், உயிர்,' அல்லது 'ஆம், இல்லை' என அர்த்தமாம்.

இவைகளைப்பற்றி வேதவாக்கியங்கள் சொல்லுகிற மூன்று விஷயங்கள் என்னவென்றால்:

(*a*) இவைகள் ஏபோத்து என்பதோடு சேர்ந்த இரண்டு சீட்டுகள். ஆனால் ஏபோத்தைப்பற்றித் திட்டமாய்த் தெரியாததினால், அதோடு இவைகளைச் சேர்த்த காரணமும் விதமும் தெரியாது.

(*b*) இவைகள் இரண்டு ஆனதினால் ஒரு சமயத்தில் இவைகளின் மூலமாய் ஒரு கேள்வியைமாத்திரம் விசாரித்து அறியலாம். அந்தக் கேள்விக்கு விழுந்த சீட்டினால் 'ஆம்' அல்லது 'இல்லை' என்று பதில் இருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது.

(*c*) கேட்ட கேள்விக்கு 'ஆம்' அல்லது 'இல்லை' என்று போதுமான பதில் இல்லாத தருணங்களில், கேட்கிறவர்கள் சீட்டின் கருத்தைப்பற்றி முந்தியே ஏற்பாடு செய்யவேண்டும். 1 சாமு $14^{41}$ $23^{4}$ $30^{7}$ 2 சாமு $2^{1}$.

இவைகள் பிரதான ஆசாரியனின் 'நியாய விதி மார்ப்பதக்கத்தில்' வைக்கப்பட்டிருக்கும். யாத் $28^{30}$ லேவி $8^{8}$ எண் $27^{21}$.

ஒருவேளை கர்த்தரிடத்தில் விசாரித்தறியும் காலத்திலே மார்ப்பதக்கத்தில் வைக்கப்பட்ட இவைகளை எடுத்து ஏபோத்தின் ஒரு பையிலே போட்டுக் குலுக்கி முதல் விழும் கல்லினால் தேவ சித்தத்தை அறிவார்கள். யோசு $16^{1}$ $19^{1}$.

இவைகளின் மூலமாய் விசாரிப்பது ஆசாரியரின் கடமை. உபா $33^{8}$ எஸ்று $2^{63}$ நெகே $7^{65}$.

ஊரீம் தும்மீம் என்பதைப்பற்றிச் சரியாய் ஒன்றுந் தெரியாவிட்டாலும் சில வித்துவான்கள் இவைகள் பாபிலோனியர் சீட்டுக்காக உபயோகித்த கூரில்லாத அம்புகளைப் போன்ற இரண்டு அம்புகள் (எசே $21^{21}$) என்று எண்ணுகிறார்கள். பெரும்பாலும் வேதசாஸ்திரிகள் இவைகள் இரண்டு சிறு கற்கள் என்று சொல்லுகிறார்கள்.

சிறையிருப்பிலிருந்து யூதர்கள் வந்தபிற்பாடு ஊரீம் தும்மீம் இல்லை.

**ஊருணி வாசல்.** **Fountain Gate.** **எருசலேம்** காண்க.

**ஊர்.** **Ur.**

1. 1 நாளா $11^{35}$.

2. 'ஊர் என்கிற கல்தேய பட்டணம்.' இது தென் பாபிலோனியா தேசத்தில் ஆதி காலத்திலுள்ள ஒரு ஊர். இங்கே சந்திர தேவியை அதிகமாய் வணங்கினார்கள். இதிலிருந்து ஆபிரகாம் புறப்பட்டான். ஆதி $11^{28}$.

3. = **Hur.** 1 இரா $4^{8}$.

**ஊர்வன.** **Creeping things.** **புழு, பூச்சி** காண்க.

**ஊலாம்.** **Ulam.**

1. 1 நாளா $7^{16}$.

2. 2 நாளா $8^{39}$.

**ஊலாய்.** **Ulal.** சூசான் பட்டணத்திற்குச் சமீபமாய் இருக்கும் ஒரு ஆறு. தானி $8^{2}$.

**ஊவேல்.** **Uel.** எஸ்று $10^{34}$.

**ஊழியக்காரன்.** **உதவிக்காரன், வேலைக்காரன்** காண்க.

**ஊழியம்.** **Ministry.** **தேவ ஊழியம்** காண்க.

**ஊற்று.** **Spring.** **நீரூற்று** காண்க.

## ஏ.

**ஏ. He.** எபிரெயர் எழுத்துக்களில் ஐந் தாம் எழுத்து. சங் $119^{33}$.

**எகலெலேல். Jehalaleel.**

1. 1 நாளா $4^{16}$.
2. 2 நாளா $29^{12}$.

**எகலேலல். Jehallelel.** 2 நாளா $29^{12}$.

**எகாப்செயேல். Jehabzeel.** = கப்செயேல். யூதாவின் தெற்கெல்லையிலுள்ள ஒரு ஊர். நெகே $11^{25}$ யோசு $15^{21}$.

**எகாமியாம். Jekameam.** ஒரு லேவியன். 1 நாளா $23^{19}$.

**எகிஸ்கியா. Jehizkiah.** [யேகோவா பலப்படுத்துகிறார்]. 2 நாளா $28^{12}$.

**எகிப்தியன். The Egyptian.** பேலிக்ஸ் ஜெயித்த கலகக்காரன். அப் $21^{38}$.

**எகிப்தின் நதி. The River of Egypt.** இது எகிப்திலுள்ள நைல் நதியைக் குறிக்கிறதில்லை. பலெஸ்தீனு தேசத்துக்குத் தென் மேற்கில் அதற்கும் எகிப்து தேசத்துக்கும் எல்லையாய் இருக்கும் ஒரு சிற்ருறு. எண் $34^{5}$.



பூர்வீக எகிப்து ராஜாக்களின் பெரிய சிலைகள்.

**எகிப்து. Egypt.**

**I. நிலவளம்.**—நைல் (*Nile*) நதியானது மத்தியதரைக் கடலுக்குள் பாய்வதினுல் முகத்துவாரத்துக் கெதிர் நிலமாய் உண்டான தரைக்கு எகிப்து தேசம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் ஆபிரிக்காக் கண்டத்தின் சமரேகைமட்டுமுள்ள பூமியை எகிப்தியர் எகிப்து தேசம் என்று சொன்னுர்கள். நைல் நதியின் கரைகளிலும் கால்வாய்களின் ஓரங்களிலும் பயிர் விளையக்கூடியதாய் இருந்ததினுல் ஜனங்கள் அங்கேயே வாசஞ்செய்தார்கள். மற்றப் பாகமெல்லாம் பெரும்பாலும் வனுந்தரம். பூர்வீகத்திலே எகிப்து இரண்டு பிரிவுகளாய்ப் பகுக்கப்பட்டிருந்தது. 'கீழ் எகிப்து' என்று சொல்லப்படும் பிரிவு கடல்மட்டத்துக்குச் சரியாய் இருந்தது. 'மேல் எகிப்து' அல்லது 'மத்திய எகிப்து' கீழ் எகிப்திற்குத் தெற்கில் உள்ளது. எபிரெயர் கீழ் எகிப்திலே வசித்தார்கள். இப்பாகங்கள் நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு நாட்டிற்கும் தலைநகரியும் இருந்தது. அந்தந்தத் தலைநகரியிலுள்ள கோவில்களின் தேவன் தேவியை வெவ்வேறுன நாட்டிற்கு முக்கிய தேவதைகள் என்று நினைத்தார்கள். எகிப்திலே மழை அபூர்வமானபடியினுலே நதியிலிருந்து தண்ணீர் பாய்ந்தால்தான் பயிர்நிலம் செழிப்பாய் இருக்கும். நதிப்பாய்ச்சல் குறைந்து போனுல் ஜனங்களுக்கு அதிக கஷ்டம். ஏசா $23^{3}$ எசே $29^{2}$.

**II. நாகரீகம்.**—எகிப்தியர் நாகரீகத்தில் சிறந்தவர்களாய் இருந்தார்கள். அவர்கள் கல்வியில் தேர்ந்தவர்களாய் அநேக புஸ்தகங்களை எழுதினுர்கள். அப் $7^{22}$. அவர்கள் சித்திரவேலையில் நிபுணர். அவர்கள் பெரிய தேவாலயங்களையும் மாளிகைகளையும் கட்டி, இந்நாள்மட்டும் வித்துவான்கள் ஆதியோர் புகழ்ந்து பேசும் சிறந்த கைவேலையாகிய விநோதமான விக்கிரகங்களை அங்கே செய்து வைத்தார்கள். அவர்கள் வைத்திய சாஸ்திரம் நன்ருய் அறிந்தவர்கள். அவர்கள் வாசனைத் திரவியமிட்டு அடக்கம் செய்த பிரேதங்கள் கெட்டுப்போகாமல் இந்நாள்வரையும் அப்படியே கண்டெடுக்கப்படுகின்றன.

**III. சரித்திர வரலாறு.**—எகிப்து தேசத்துச் சரித்திரம் கி-மு. 3300-ஞுத்தில் ஆரம்பித்ததினுலே அத்தனை வருஷங்களாயுள்ள ராஜ்யத்தின் சரித்திரத்தை இவ்விடத்தில் எழுதுவது கூடாதகாரியம். ஆகவே, வேதாகமத்திலுள்ள எகிப்து ராஜாக்களைப்பற்றிச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேும்.




பூர்வீக எகிப்து ராஜாக்களின் பெரிய சிலைகள்.

மேலும் முற்காலத்தில் அல்ல, பிற்காலத்திலிருந்து எகிப்து ராஜாக்களுக்கும் 'பெரிய வீடு' என்று அர்த்தங்கொள்ளும் 'பார்வோன்' என்னும் பெயர் வேதாகமத்தில் வழங்கினதினாலே சிலவசனங்களில் குறித்த ராஜா இன்னான் என்று சொல்வது சந்தேகத்திற்



எகிப்தியரின் நடனம்.

குரியது. ஆனால் வித்துவான்கள் ஆராய்ந்து அறிந்து அவர்களைப்பற்றி எழுதின அபிப்பிராயத்தை நாம் தழுவி அந்த ராஜாக்களின் பெயர், சரித்திரம் இவைகளை இவ்விடத்தில் தெரிவிக்கிறோம்.

1. ஆபிரகாம் காலத்திலுள்ள பார்வோன். ஆதி $12^{10}$. இவனைப்பற்றித் தெளிவாய் ஒன்றும் தெரியாது.

2. யோசேப்பு மந்திரியாய்ச் சேவித்த பார்வோன். ஆதி $40^{1}$. இவனைப்பற்றியும் விசேஷமாய் ஒன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை.

3. இஸ்ரவேலரைக் கொடுமையாய் நடத்தின பார்வோன். யாத் $1^{11}$. இவன் இரண்டாம் ராமசேஸ் (*Raamses II.* கி-மு.



எகிப்தில் அடிமைகள் செங்கல் செய்தல்.

1292–1225.). இவன் ஆலயங்களையும் பட்டணங்களையும் கட்டித் தன் தேசத்தை அலங்கரித்தான். சுகந்த திரவியமிட்டுக் காக்கப்பட்ட இவனுடைய பிரேதம் கி-பி. 1881-௵-த்தில் கண்டெடுக்கப்பட்டு, கைரோ பட்டணத்தின் காட்சிசாலையில் வைத்திருக்கிறதை இப்பொழுதும் நாம் காணலாம்.



எகிப்தில் அடிமைகள் செங்கல் செய்தல்.

4. அவன் மகனாகிய மெனெப்தா (*Meneptha*) என்பவனுடைய காலத்தில் எபிரெ

யர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டார்கள் என்று தோன்றுகிறது.

5. பேரேத்தின் மனைவி பித்தியாள் (*Bithiah*) என்பவளுடைய தகப்பனாகிய பார்வோன். 1 நாளா 4[18]. இந்தப் பார்வோனைப் பற்றி ஒன்றும் விசேஷமாய்ச் சொல்லியிருக்கவில்லை.

6. சாலொமோனின் மனைவிகளில் ஒருத்தியின் தகப்பனாகிய பார்வோன். 1 இரா 3[1] 9[16]. இவனைப்பற்றியும் ஒன்றும் தெரியாது.

7. ஆதாத்தின் சிநேகிதனாகிய பார்வோன். இவன் அவனுக்கு ராஜாத்தியாகிய தாப்பெனெஸ் (*Tahpenes*) என்பவளின் சகோதரியை விவாகம்செய்துகொடுத்தான். 1 இரா 11[18]. இவனைப்பற்றியும் தெரியாது.

8. சீஷாக் (*Shishak*). 1 இரா 11[40] 14[25]. இவன் ஏறக்குறைய கி-மு. 950-ஆம் முதல் 21 வருஷம் அரசாண்டான். முதல் யெரொபெயாம் இவனிடத்தில் அடைக்கலம் புகும்படி வந்தான். இவன் ரெகொபெயாமின் 5-ம் வருஷத்தில் எருசலேமைக் கொள்ளையடித்தவன்.

9. சேரா (*Zerah*). 2 நாளா 14[9]. இவன் ஆசாவின் காலத்தில் கி-மு. 917-876-ஆம் அரசாண்டான். இவன் யூதாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனவன். இவனைப்பற்றி வேறு விசேஷம் ஒன்றும் தெரியாது.


எகிப்து வண்ணார்.

10. சோ (*So*). இஸ்ரவேலின் ராஜாவாகிய ஓசியாவின் காலத்தில் கி-மு. 733-722-ஆம் அரசாண்டவன். 2 இரா 17[4]. இவன் எகிப்தில் ராஜாவாயிருந்தானோ ராஜாவின் சேனாபதியாய் இருந்தானோ என்பது சந்தேகம்.

11. தீராக்கா (*Tirhakah*). 2 இரா 19[9]. இவன் எசேக்கியாவின் காலத்தில் ஏறக்குறைய கி-மு. 701-ஆம் ஆண்டில் எகிப்தின் சேனாபதியாய் இருந்து அசீரியா ராஜாவாகிய சனகெரிப் ராஜாவோடு யுத்தம் செய்தவன். இவன் கி-மு. 691-665-ஆம் எகிப்துக்கு ராஜாவாய் இருந்தான். இவனுடைய ஆளுகையின் கடைசிக் காலத்தில் இவனுக்கும் அசீரியர்களுக்கும் ஓயாத சண்டை யிருந்தது.


எகிப்து பான பாத்திரம்.

12. நேகோ (*Necho*). 2 இரா 23[29] எரே 46[2]. கி-மு. 610-594-ஆம் அசீரிய ராஜ்யத்தின் வல்லமை குறைந்து போனபோது இவன் யூதா, இஸ்ரவேல், சீரியா முதலிய ராஜ்யங்களைப் பிடிக்கப்போய் மெகிதோ என்னுமிடத்தில் யோசியாவைக் கொன்று, அவனுக்குப்பின் ராஜ்யபாரத்தைப் பற்றிக்கொண்ட யோவகாசைத் தள்ளி, அவனுக்குப் பதிலாக யோயாக்கீமை ராஜாவாக்கினான். நேபுகாத்நேச்சார் நேகோவை ஜெயித்து யூதா முதலிய நாடுகளை மறுபடியும் தன் கைவசமாக்கினான்.

13. ஒப்பிரா (*Hophra*). எரே 44[30]. கி-மு. 588-569-ஆம் இவன் நேகோவின் பேரன். கிரேக்கர்கள் இவன் பெயரை அப்ரீஸ் (*Apries*) என்று சொன்னார்கள். இவனுக்கும் நேபுகாத்நேச்சாருக்கும் சண்டை நடந்துகொண்டிருந்தது. நேபுகாத்நேச்சார் எருசலேமைப் பிடித்தபோது அதை விட்டு ஓடிப்போன எரேமியாவுக்கும் மற்றவர்களுக்கும் ஒப்பிரா அடைக்கலம் கொடுத்தான். எரே 43[6].

ஒப்பிராவுக்குப் பிறகு பழைய ஏற்பாட்டில் எகிப்தைப்பற்றிய சரித்திரம் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. கி-மு. 527-ஆம் ஆண்டில் பெர்சியாவின் ராஜாக்கள் எகிப்தைத் தங்கள் ராஜ்யத்துக் குள்ளாக்கினார்கள்.

கி-மு. 405-ஆம் ஆண்டில் எகிப்தியர் மறுபடியும் விடுதலையடைந்து அறுபது வருஷம் தங்கள் சொந்த ராஜாக்களின் ஆளுகைக்குள் இருந்தார்கள். ஆனால் கி-மு. 345-ஆம் ஆண்டில் பெர்சியர்களால் மறுபடியும் ஜெயிக்கப்பட்டார்கள். கி-மு. 332-ஆம் பெரிய அலெக்

சந்தர் எகிப்தை ஜெயித்துத் தன் ராஜ்யத்தோடு சேர்த்து அங்கே அலெக்சந்திரியா


எகிப்த கட்டிலும் தலையணையும்.

என்னும் முக்கிய பட்டணத்தைக் கட்டினான். இவனுக்குப் பிறகு கிரேக்கர் எகிப்தைப் பல வருஷங்களாக ஆண்டார்கள். அக்காலத்தில் யூதர்கள் அலெக்சந்திரியா முதலிய பட்டணங்களில் வாசம்பண்ணி, சாலொமோன் எருசலேமில் கட்டின தேவாலயத்தைப்போல அவர்களும் தங்களுக்கு அங்கே தேவாலயங் கட்டினார்கள். மேலும் அவர்கள் அக்காலத்தில் எபிரெய பாஷையில் எழுதியிருந்த பழைய எற்பாட்டைக் கிரேக்க பாஷையில் மொழிபெயர்த்தார்கள். அதற்கு செப்துயாகிந்த் (*Septuagint*) என்னும் பெயர் இருந்தது. கி-மு. 30-ஆம் ரோமர்கள்


எகிப்தியர் பயிரிடுதல்.

எகிப்தைத் தங்கள் ராஜ்யத்தோடு இணைத்தார்கள். அப்போஸ்தலருடைய காலத்தில் அது அப்படியே ரோம ராஜ்யத்துக்குள் இருந்தது.

**IV. மார்க்கம்.** — எகிப்தியர் கட்டின தேவாலயங்களையும் சிலைகளையும் அவர்கள் எழுதிய புஸ்தகங்களையும் நாம் பார்த்தால் அவர்கள் பக்தி வைராக்கியத்தில் பேர்பெற்றவர்கள் என்று தோன்றுகிறது. மூவாயிரம் வருஷமாக இவர்கள் கைக்கொண்ட மார்க்க ஆசாரத்தைப்பற்றி இவ்விடத்தில் எழுதுவது கூடாத காரியமாதலால், இஸ்ரவேலர் காலத்தில் முக்கியமாய் அவர்களுக்குள் என்ன வணக்கம் இருந்ததோ அதைப் பற்றிச் சுருக்கமாய்ச் சொல்லுவோம்.

எகிப்தியரின் ஆசாரியர்களுக்குச் 'சுத்தமுள்ளவர்கள்' அல்லது 'தேவீக பிதாக்கள்' என்று பெயர். இவர்களது சம்ரக்ஷணை இவர்களிருந்த அந்தந்த தேவஸ்தான வரும்படியினால் நடத்தப்பட்டுவந்தது. இவர்கள் வெள்ளைச் சணல்நூல் வஸ்திரம் தரிப்பார்கள்;


எகிப்து ஆசாரியன்.

தலை முழுதும் மொட்டை யடிப்பார்கள்; அடிக்கடி ஸ்நானம் செய்வார்கள். திருவிழா நாட்களில் எகிப்தியர்கள் தங்கள் விக்கிரகங்களைத் தூக்கிக்கொண்டு ஊர்கோலம் சுற்றி வருவார்கள்.

முற்காலத்தில் எகிப்தியர்கள் தூபபலியையும் பிற்காலத்தில் அதோடு தகனபலிகளையும் செலுத்தினார்கள். கனவுகளில் கடவுளுடைய சித்தம் தங்களுக்கு அறிவிக்கப் படும்படி சில சமயங்களில் தொண்டர்கள் தேவாலயத்தில் போய்ப் படுத்துக்கொள்வார்கள். சூனியத்தில் அவர்களுக்கு அதிக நம்பிக்கை யுண்டு. கைகளிற் காப்புக் கட்டுவார்கள். மந்திரோபாய புஸ்தகங்களை எழுதுவார்கள்.


எகிப்தியர் வணங்கின இடபம்.

ஒவ்வொரு சாஸ்திரியும் தான் கொண்ட அபிப்பிராயத்தின்படியே நூல்களை எழுது



இரண்டாம் ராமசேஸ் யுத்தம்பண்ணுதல்.

சந்தோஷமாய்ப் பிரயாணம் செய்யும்படி கட்டளையிடுவான் என்றும் நம்பினார்கள். எகிப்தியர் மறுஜெனனம் உண்டு என்னும் கொள்கையுடையவர்களாய் இருந்தார்கள் என்று சிலர் நினைத்தாலும், அவர்கள் எழுதிய புஸ்தகங்களில் அப்படியொன்றும் காணப்படவில்லை. எகிப்தியர் தங்களை யாளும் ஒவ்வொரு ராஜனையும் தங்கள் தேவன் என்றும், அவன் தேவனுக்கும் மனுஷர்களுக்கும் இடையேயுள்ள மத்தியஸ்தன் என்றும் நம்பி ராஜாவுடைய சிலையை அவன் உயிரோடிருக்கும் போது வணங்குவார்வான், ஆனால் எல்லாரும் வித்தியாசமின்றி மாணத்திற்குப் பிறகு மனுஷனுடைய ஆவி பிழைத்திருக்கும் என்றும், மரித்தவர்களுக்கு ராஜாவாகிய தேவன் செத்தவர்கள் யாவரையும் நியாயம் விசாரித்துக் குற்றவாளிகளைக் குரூரமான பிசாசுகளின் கையில் ஒப்புவித்து, நீதிமான்களைக் கீழ்லோகத்தில் செழிப்பான இடத்தில் சேர்த்து, அதிக உத்தமர்களைச் சூரிய வாகனத்தில் ஏற்றி ஞானத்திலே அதிககள். மேலும் அவர்களுக்கு மூன்றுவிதமான தேவதைகள் உண்டு. முதலாவது, சூரிய, சந்திர, நக்ஷத்திரங்களிலும் பூமியிலுமுள்ள தேவதைகள். இரண்டாவது, யுத்தம், கல்வி, சத்தியம், நீதி முதலியவைகளுக்கு உறைவிடமான தேவதைகள். மூன்றாவது, அந்தந்த இடத்திற்குரிய தேவதைகள். ஒவ்வொரு கோவிலிலும் அதின் முக்கிய தேவனைத்தவிர வேறநேக தேவதைகளும் இருந்தன. ஒவ்வொரு தேவனோடு தேவியும் ஒரு



ஷேஷாக். கி-மு. 950.



ஷேஷாக் என்னும் பார்வோனின் குமாரத்தி.

பிள்ளையும் உண்டு. எகிப்தியர் ஆபிஸ் (*Apis*) என்று சொல்லப்படும் இடபத்தை அதிகமாய் வணங்கினார்கள். சில இடங்களில் குரங்கு, பூனை, நாரை, வண்டு முதலியவைகளை வணங்

கிறார்கள். எகிப்தியர் சில தேவர்களுக்கு மனுஷரூபம் உண்டென்றும், சில தேவர்களுடைய உடல் மனுஷரூபமும், தலை மிருகம், பட்சியினுடைய ரூபமும் உள்ளதாய் இருக்கிறது என்றும் நினைத்தார்கள். எகிப்தியருடைய மார்க்கம் அக்காலத்து வித்து ...நம் மற்றவர்களுக்கும் அதிகம்



தீர்க்கா கி-மு. 691-665.

பிரியமுள்ளது, ஆனதினால் கிறிஸ்தவ மார்க்கம் உதயமான காலத்தில் அதற்கு எகிப்தியர்களுடைய மார்க்கமே விரோதமாய் இருந்தது.

**எகியா.** Jehiah. ஒரு லேவியன். 1 நாளா $15^{24}$.

**எகியேலி.** Jehieli. 1 நாளா $26^{21}$.

**எகியேல்** [கடவுள் இருப்பாராக]. i. = ஏகியேல், யெகியேல். Jehiel.

1. 1 நாளா $15^{18}$.
2. 1 நாளா $23^{8}$.
3. 1 நாளா $27^{32}$.
4. 2 நாளா $21^{2}$.
5. 2 நாளா $31^{13}$.
6. 2 நாளா $35^{8}$.
7. எஸ்றா $8^{9}$.
8. எஸ்றா $10^{2}$.
9. எஸ்றா $10^{26}$.
10. எஸ்றா $10^{21}$.

**எகியேல்**, ஏயெல், யேயெல், ஏகியெல் ii. = Jeiel.

1. 1 நாளா $5^{7}$.
2. 1 நாளா $11^{44}$.
3. 1 நாளா $15^{18}$.
4. 2 நாளா $35^{9}$.
5. 2 நாளா $26^{11}$.
6. எஸ்றா $10^{43}$.
7. 2 நாளா $29^{14}$.

**எகுதியாள்.** Jehudijah. இது ஒருத்தியின் பெயர் அல்லது, 'யூத ஸ்திரீ' என்று அர்த்தம்கொள்ளும் பொதுப்பெயர். 1 நாளா $4^{18}$.

**எகூஷ், எயூஷ், ஏயூஷ்.** Jeush.

1. ஆதி $36^{5}$ 1 நாளா $1^{35}$.
2. 1 நாளா $7^{10}$.
3. 1 நாளா $8^{39}$.
4. 1 நாளா $23^{10}$.
5. 2 நாளா $11^{19}$.
6. 1 நாளா $8^{10}$.

**எகூபா.** Jehubbah. 1 நாளா $7^{34}$.

**எகெசேக்கியேல்.** Jehezekel. [யேகோவா பலப்படுத்துகிறார் = எசேக்கியேல்]. ஒரு ஆசாரியன். 1 நாளா $24^{16}$.

**ஏகேயால்.** Igeal. 1 நாளா $3^{22}$.

**எகேதியா.** Jehdeiah. [யேகோவா வாழ்த்துவாராக].

1. 1 நாளா $24^{20}$.
2. 1 நாளா $27^{30}$.

**எகோனியா.** Jeconiah. மத் $1^{11}$ = யோயாக்கீன்.

**எக்கமியா.** Jekameah.

1. 1 நாளா $2^{41}$.
2. 1 நாளா $3^{18}$.

**எக்காளம்.** Cornet. தானி $3^{5}$. **கீதவாத்தியம்** காண்க.

**எக்குத்தியேல்.** Jekuthiel. ஒரு யூதன். 1 நாளா $4^{18}$.

**எக்கேர்.** Eker. 1 நாளா $2^{27}$.

**எக்கோலியாள்.** Jecoliah. ஊசியா ராஜாவின் தாய். 2 நாளா $26^{3}$.

**எக்கோனியா, யோயாக்கீன்.** Jeconiah. இவன் மறு பெயர் 'யோயாக்கீன்,' 'கோனியா.' இவன் தகப்பனாகிய யோயாக்கீம் பாபிலோனியா ராஜாவாகிய நேபுகாத்நேச்சாருக்கு விரோதமாய்க் கலகஞ் செய்ததினால் அந்த ராஜா அவனைத் தண்டிக்கும்படி வரும்போது அவன் மரணம் அடைந்தான். அவன் மகன் யோயாக்கீன் ஆகிய இவன் அப்போது ராஜ்யபாரம் பெற்று கி-மு. 597-ஆம் ஆண்டில் அரசாண்ட மூன்று மாதத்திற்குள் நேபுகாத்நேச்சார் இவன் ராஜ்யத்தைப் பிடித்தான். இவன் பாபிலோனி

யாவிலே 37 வருஷம் சிறையிருந்தான். ஏவில்மெரோதாக் இவனைக் காவலிலிருந்து விடுதலை செய்தான். 2 இரா $24^{8}$ $25^{27}$ எரே $24^{1}$ $28^{4}$ $37^{1}$ மத் $1^{11}$.

**எக்ரோன்.** **Ekron.** இஸ்ரவேலரால் பிடிக்கப்படாத பெலிஸ்தரின் ஒரு பட்டணம். உடன்படிக்கைப்பெட்டி இங்கே கொண்டு வரப்பட்டது. இங்கே பாகால்சேபூலை வணங்கினார்கள். தீர்க்கதரிசிகள் இதற்கு வரும் தண்டனையைக்குறித்து அறிவித்தார்கள். யோசு $13^{3}$ 1 சாமு $5^{10}$ 1 இரா $1^{2}$ சக 9-10 அதி.

**எக்லாயீம்.** **Eglaim.** ஏசா $15^{8}$.

**எக்லாள்.** **Egla.** [கிடாரிக் கன்று]. தாவீதின் மனைவிகளில் ஒருத்தி. 2 சாமு $3^{5}$.

**எக்லோன்.** **Eglon.** இஸ்ரவேலை ஜெயித்த மோவாபின் ராஜா. ஏகூத் இவனைக் கொன்றான். நியா $3^{12}$.

**எசரத்தோன்.** **Esarhaddon.** 2 இரா $19^{37}$. **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**எசரேலா.** **Jesharelah.** =அஷாரேலா. 1 நாளா $25^{2,14}$.

**எசாயா.** **Jeshaiah.** [யேகோவா செய்த மீட்பு].

1. 1 நாளா $3^{21}$.
2. 1 நாளா $25^{3}$.
3. 1 நாளா $26^{25}$.
4. எஸ்றா $8^{7}$.
5. எஸ்றா $8^{19}$.
6. நெகே $11^{7}$.

**எசிசாய்.** **Jeshishai.** [யேகோவா பூர்வ காலத்திலுள்ளவர்]. 1 நாளா $5^{14}$.

**எசியோன்.** **Hezion.** சீரியா ராஜாவாகிய பெனாதாத்தின் பாட்டன். 1 இரா $15^{18}$. இவன் ரேசோன் என்பவனாய் இருக்கலாம். 1 இரா $11^{23}$.

**எசியோன் கேபர்.** **Ezion Geber.** செங்கடலில் உள்ள ஒரு துறைமுகம். உபா $2^{8}$ 1 இரா $9^{23}$.

**எசெபேயாப்.** **Jeshabeab.** ஒரு லேவியன். 1 நாளா $24^{13}$.

**எசேக்.** **Eshek.** 1 நாளா $8^{39}$.

**எசேக்கியா.** **Hezekiah.**

1. பெரிய யூத ராஜாக்களில் ஒருவன். இவன் கி-மு. 725-ளு தன் தகப்பனாகிய ஆகாஸ் என்பவனோடு ஏககால அரசனாயிருந்து பிறகு கி-மு. 715-697-ளு ஆளுகை செய்துவந்தான். இவன் ராஜ்யபாரம் செய்த கடைசி வருஷங்களில் இவனுடைய மகனாகிய மனாசே இவனோடு ஏககால அரசனாய் இருந்தான். இதினிமித்தம் சில விஷயங்களில் இவனுடைய ஆளுகையின் கால வரலாறு தெளிவாய்த் தெரியவில்லை. இவனுடைய தகப்பன் அசீரியர்களுக்குக் கீழ் அடங்கி யிருந்ததினாலே அவர்கள் யூதா தேசத்திற்குத் தொந்தரவு கொடுத்துக்கொண்டு வந்தார்கள். இதை அறிந்து மெரோதாக் பலாதான் பாபிலோனியாவிலே அசீரியர்களுக்குள் கலகம் பண்ணும்போது அவன் அதிலே தனக்கு உதவியாய்க் கூடிவரும்படி எசேக்கியாவிடம் பிரதிநிதிகளை அனுப்பினான். ஏசா $39^{1}$. எகிப்தியர்களும் அசீரியர்களை ஜெயிப்பதற்குச் சம்மதமாயிருந்தார்கள்.

எசேக்கியா ஏசாயா தீர்க்கதரிசியின் ஆலோசனைக்கு விரோதமாய் இந்தப் பிரதிநிதிகளையும் எகிப்தியரையும் நம்பி, அசீரியர்களுக்கு விசுவாசமுள்ள பெலிஸ்திய ராஜாவின் தேசத்தின்மேல் படையெடுத்துப் போனான். முதல்முறை எசேக்கியா ஜெயம் அடைந்தான். 2 இரா $18^{8}$. ஆனால் கி-மு. 701-ளுத்தில் அசீரியா ராஜாவாகிய சனகெரிப் எசேக்கியா முதலாகிய தன் விரோதிகளைத் தண்டிக்கும்படி நினைத்து அவர்களுடைய 'நாற்பத்தாறு மதில் சூழ்ந்த ஊர்களை' பிடித்தபோது, எசேக்கியா பயந்து, அவன் கீழடங்கினவனாய் அவனுக்குக் கப்பம் கட்டினான். 2 இரா $18^{14}$. அதற்காகத் தேவாலயத்திலுள்ள பொன் தகட்டையும் அவனுக்குக் கொடுத்தான். சனகெரிப் கப்பம் வாங்கிக் கொண்டுதன் தேசத்துக்குப் போனபிறகுஒரு வேளை எசேக்கியா தான் செய்த ஏற்பாட்டின் படி நடவாமல் இருந்திருக்கலாம். ஏனென்றால் சனகெரிப் சில வருஷத்திற்குப் பிற்பாடு எருசலேமை முற்றிக்கை போட வந்தான். ஆனால் அப்பொழுது சடுதியாய் உண்டான ஒரு பெரிய கொள்ளைநோயினால் அவனுடைய சேனை அழிக்கப்பட்டதினால் பயந்து எருசலேமைப் பிடியாமல் திரும்பிப் போய் விட்டான். 2 இரா $19^{35}$ ஏசா $37^{36}$. அதே காலத்தில் எசேக்கியா வியாதிப்பட்டு மரணப் படுக்கையில் இருந்தபோது அவன் இன்னும் சிலகாலம் இருப்பான் என்பதற்கு ஒரு அடையாளம் கொடுக்கப்பட்டது. அதாவது ஆகாசுடைய சூரிய கடியாரத்தில் நிழல் பத்து ரேகை பின்னிட்டுப் போனது. இப்படி நடப்பது அசாத்தியம் என்று சிலர் சொன்னாலும் வான சாஸ்திரிகள் சொல்லுகிறதாவது: சில வேளைகளில் ஆகாயத்தில் கண்ணுக்குத் தெரியாத ஒருவிதமான மெல்லிய மேகம் வருவதுண்டு. இந்தமேகத்தைஊடறுத்து, கீழே வரும் சூரிய கதிர்கள் வழக்கம்போல் ஒரு

சூரிய கடியாரத்தில் முந்திப் போகாமல் வளைந்து பின்னுக்குப் போவதுபோல் தோன்றும்.

எசேக்கியா யேகோவாவில் பக்தியுள்ளவனாய் மார்க்க சீர்திருத்தவிஷயமாய் அநேக காரியங்கள் செய்தான். 'மேடைகளை அகற்றி, சிலைகளைத் தகர்த்து, மோசே பண்ணின வெண்கலச் சர்ப்பத்தை உடைத்தான்.' 2 இரா $18^{4}$. இதில் ஏசாயா தீர்க்கதரிசி இவனுடைய ஆலோசனைக்காரனாய் இருந்தான். இவனுடைய சரித்திரத்தை நாம் வாசிக்கும்போது இவனிடத்திலுள்ள பயபக்தியை அறிந்து, இவனுடைய காலத்தில் அசீரியர் எகிப்தியர் ஆகிய இவர்களினால் பெரிய விக்கினங்கள் நேரிட்டிருந்தாலும் இவன் தன் ராஜ்யத்தை யேகோவாவின் மார்க்கத்தில் உறுதியாய் ஸ்திரப்படுத்தியிருந்தான் என்று தெரியவரும்.

2. ='**எஸ்கியா**.' **Hizkiah.** செப்பனியா தீர்க்கதரிசியின் முன்னோர்களில் ஒருவன். செப் $1^{1}$.

3. ஒரு குடும்பத்தலைவன். எஸ்றா $2^{16}$.

4. 1 நாளா $3^{23}$.

**எசேக்கியேல்**. **Ezekiel.** [யேகோவா பலப்படுத்துகிறார்].

I. **தீர்க்கதரிசி**.—பூசியின் குமாரனாகிய எசேக்கியேல் ஒரு ஆசாரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். இவன் யோயாக்கீன் என்னும் ராஜாவோடு கி-மு. 597-௵ பாபிலோன் தேசத்துக்குச் சிறையாகக் கொண்டுபோகப்பட்டான். சிறையில் இருந்த ஐந்தாம் வருஷம் தீர்க்கதரிசனம் உரைக்கத் தொடங்கினான். $1^{2}$. சிறையிருப்பின் 9-ம் வருஷம் அவன் மனைவி இறந்தாள். $24^{18}$. இவனும் இவனோடிருந்தவர்களும் மூப்பர்களால் கேபார் நதிக்கரையிலே நடத்தப்பட்டவர்கள். இவனுக்குச் சொந்த வீடு இருந்தது. $3^{15.\,24}$. இவன் (கி-மு. 592-570) இருபத்திரண்டு வருஷம் தீர்க்கதரிசனம் உரைத்துவந்தான். $1^{2}$ $29^{17}$. இவன் பலமுறையும் 'கர்த்தருடைய கரம் என்மேல் அமர்ந்தது' என்று சொல்வதினாலே யேகோவாவின் தரிசனம் இவனுக்குக் கிடைத்தது என்று காணப்படுகிறது. $1^{3}$ $8^{1}$ $37^{1}$ $40^{1}$. முதலில் இவன் செய்த போதனையை எபிரெயர்கள் கவனிக்கவே இல்லை. $3^{7}$. ஆனால் வரவர அவர்களில் அநேகர் இவன் உரைத்தவைகள் யாவும் உண்மை என்று அறிந்து இவன் போதனைகளைக் கேட்கும்படி இவனிடம் வந்தார்கள். $14^{1}$. இவன் தனக்கு வந்த தொந்தரவுகளினாலும் துக்கங்களினாலும் மனஞ் சோர்ந்து போகாமல், தன் அன்புள்ள மனைவி இறந்த காலத்திலும் சன்மார்க்க விஷயங்களைக்குறித்து ஜனங்களுக்குப் புத்திபோதனை செய்வதில் தைரியசாலியாய் இருந்தான். $3^{14}$ $24^{16}$ $33^{7}$. எசேக்கியேல் முதலில் உரைத்த தீர்க்கதரிசனங்களிற் பாதி அவனால் எழுதப்பட்டது. $37^{16}$. பாதி வாய்மொழியாய்க் கூறப்பட்டது. $3^{10}$. இவன் தன் ஆசாரிய ஆசாரத்தில் சுத்தமுள்ளவனாய் இருந்தும் ($4^{14}$), எப்போதும் இவன் சடங்காசாரத்தை யல்ல, நீதிநியாயத்தையே நாடினவன். 33 அதி. இவனுடைய விருத்தாப்பிய சரித்திர வரலாறு ஒன்றும் தெரியாது. சிலருடைய அபிப்பிராயம் என்னவென்றால், இவன் கண்டித்த விக்கிரகாராதனைக்காரனாகிய ஒரு எபிரெயன் இவனைக் கொன்றான் என்பதே. பிற்காலத்தில் பாக்தாத் (*Baghdad*) கிட்ட இவன் அடக்கம் பண்ணப்பட்டான் என்னும் பாரம்பரியத்தை நம்பி யூதர்கள் அந்த இடத்திற்கு யாத்திரை செய்தார்கள்.

II. **புஸ்தகம்**.—எசேக்கியேலின் புஸ்தகத்தில் யாவரும் தெளிவாய் அறிந்துகொள்ளத்தக்க இரண்டு பாகங்கள் உண்டு. இவைகளில் இவன் காலம் தேதியைப் பலதடவை காட்டுகிறான். $1^{1}$ $8^{1}$ $20^{1}$ $24^{1}$ $26^{1}$ $29^{1.\,17}$ $30^{20}$ $31^{1}$ $32^{1.\,17}$ $33^{21}$ $40^{1}$.

*a*. **முதலாம் பாகம்**.— இவன் கி-மு. 592-587-௵த்தில் உரைத்த போதனைகள் 1-24 அதிகாரங்களில் சொல்லியிருக்கின்றன. இவைகளில் எபிரெயர்கள் செய்த பாவங்களைக் கண்டித்து, வரப்போகிற நியாயத்தீர்ப்பைக்குறித்து விவரமாய்ச் சொல்லுகிறான். இதில் இருக்கிற பிரிவுகள்.

1. முகவுரை. இவன் கண்ட தரிசனம். $1^{1}$-$3^{21}$.

2. சாதனையினாலும் போதனையினாலும் ஜனங்களை எச்சரித்தது. $3^{22}$-$7^{27}$.

3. எருசலேமில் நடந்துவந்த அருவருப்பான தீமைகள். 8-11 அதி.

4 பாவங்களை அறிவித்துப் புத்திபோதனை செய்து வருங்கோபாக்கினையைக் குறித்து எச்சரிக்கை கூறினது. 12-19 அதி.

5. பாபிலோன் ராஜா வந்து செய்யப்போகிற தண்டனை சீக்கிரம் வரும் என்று உரைத்தது. 20-24 அதி.

*b*. **இரண்டாம் பாகம்**.—தண்டனைக்குப் பிறகு எருசலேம் மனஸ்தாபப்பட்டு நல்ல நிலைமைக்கு வரும் என்ற நம்பிக்கையைக் காட்டுகிறது.

1. விரோதிகள் துரத்தப்பட்டது. 25-32 அதி.

2. இஸ்ரவேலர் அறியவேண்டிய சன்மார்க்கமும், கடைசியாய்ச் சத்துருக்களின் அழிவும். 33-39 அதி.

3. கடவுளுடைய நகரிக்கு வரும் சிறப்பும், அவருடைய ஜனங்களுக்கு வரும் சுகமும். 40-48 அதி.

III. **எசேக்கியேலின் போதனைகளாவன.**—எசேக்கியேல் இஸ்ரவேலரை அதிகமாய்க் கண்டித்துப் பேசுகிறான். அவர்கள் எகிப்திலிருந்து வந்ததுமுதல் எப்பொழுதும் பாவமே செய்தார்கள். 20[5]. எருசலேம் தீமை நிறைந்த ஊர். 16 அதி. விக்கிரகாராதனை அவர்கள் செய்த பாவங்களுக்குக் காரணம். ராஜாக்களும் ஆசாரியர்களும் மற்ற எல்லா ஜனங்களும் பாவம் செய்தவர்கள். ஓய்வுநாளை அசட்டைபண்ணி, தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, வேசித்தனம் கொலை முதலிய அக்கிரமங்களைச் செய்து, கடவுளுடைய நீதியைத் தள்ளி, அவரால் தங்களுக்குச் சகாயம் செய்ய முடியாது என்று நினைத்து, தங்கள் இஷ்டப்படி நடந்தார்கள். யேகோவாவோ பாவம் நிறைந்த இந்த ஜனங்களை முழுதும் அழித்துப்போடாமல், தங்கள் பாவங்களை உணர்ந்து குணப்பட்டவர்களுக்கு வேண்டிய புது இருதயத்தைக் கொடுத்து, அவர்களுடைய சத்துருக்களைத் துரத்தி, அவர்களுடைய தேசத்தை ஆசீர்வதிக்கச் சித்தம் கொள்ளுகிறார். ஒவ்வொருவனும் தன் பாவத்திற்கு உத்தரவாதியாய் இருக்கிறான். ஆயினும் யேகோவா யாவருக்கும் தமது கிருபையைக் கொடுக்கச் சித்தமாய் இருக்கிறார். 18-33 அதி-ல் விசேஷமாய்க் காண்க. 40-48 அதி-ல் எசேக்கியேல் குணப்பட்ட இஸ்ரவேலரின் நிலைமையை விஸ்தரித்துக் காட்டுகிறான். நல்ல நிலைமைக்கு வந்த இந்தப் புது ராஜ்யத்திலே தேவாலயமும் அதின் ஆசாரமும் ஆராதனையும் முக்கியம் என்றும்; பிரதான ஆசாரியனும் தலைவனும் ராஜாவும் இதில் விசேஷமாய்க் காணப்படுகிறதில்லை என்றும் பார்க்கிறோம். பன்னிரண்டு கோத்திரங்களும் பரிசுத்த பூமிக்குத் திரும்பவும் வரும் என்றும்; யேகோவாவின் மகிமை எங்கும் இருக்கும் என்றும்; 'அந்நாள்முதல் நகரம் "கர்த்தர் அங்கே இருக்கிறார்" என்னும் பெயர் பெறும்' என்றும் சொல்லியிருக்கிறது. 48[35]. இந்தப் புஸ்தகத்தின் கடைசி அதிகாரங்களிலுள்ள தரிசனங்களோடு வெளிப்படுத்தப்பட்ட விசேஷத்தில் சொல்லியிருக்கும் தரிசனங்களை ஒப்பிட்டுப் பார்த்தால், ஆதி கிறிஸ்தவர்கள் இப்புஸ்தகத்தை அதிகமாய்க் கவனித்தார்கள் என்று அறியலாம்.

IV. **தீர்க்கதரிசியே இப்புஸ்தகம் எழுதினது.**—வேதசாஸ்திரிகள் குறித்த காலங்களில் எசேக்கியேல் தீர்க்கதரிசிதான் இப்புஸ்தகத்தின் பாகங்களை எழுதி, எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்தான் என்றும், ஒருவேளை இன்னொருவன் இதில் சில வசனங்களைமாத்திரம் சேர்த்திருந்தாலும் இப்புஸ்தகம் முழுதும் எசேக்கியேலின் புஸ்தகம் தான் என்றும் சொல்லுகிறார்கள்.

**எசேர், எத்சேர், ஏசேர், ஏசேர், ஏத்சேர்.** Ezer. [உதவி].

1. ஆதி 36[21].
2. 1 நாளா 7[21].
3. 1 நாளா 4[4].
4. 1 நாளா 12[9].
5. நெகே 3[19].
6. நெகே 12[42].

**எசேனேயர்.** Essenee. கி-மு. 200 வருஷங்களுக்கு முந்திச் சன்மார்க்கமும் நியாயப்பிரமாணத்துக்குரிய ஆசாரமும் குறைந்துபோனதினாலும், பெரியோர்கள் அக்காலத்தில் அதிகாரம் பெற்றிருந்த கிரேக்க ராஜாக்களின் சமயத்திற்கும் தத்வசாஸ்திரத்துக்கும் இசைந்து நடந்ததினாலும், யூதர்களிற் சிலர் இவைகளைப் பார்த்து வெறுப்படைந்தவர்களாய் யேகோவாவின் மகிமை விளங்கச் செய்யவும், மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளவும், அந்த நியாயப்பிரமாண ஆசாரத்தின்படி முன்னோர்களைப் பார்க்கிலும் அதிக நுட்பமாய் அதை அனுசரிக்கவும் துவங்கினார்கள். இவர்கள் கி-மு. 130-ஆம் முதல் சபைகளாகச் சேர்ந்து, பரிசுத்த ஜீவியத்தைத் தேடினதினாலே பரிசுத்தவான்கள் என்று அர்த்தம்கொள்ளும் எசேனெயர் என்னும் பெயர் இவர்களுக்கு உண்டானது. மோசேயின் பிரமாணத்தின்படி பரிசுத்தவான்களாய் இருப்பது இவர்களுடைய முக்கிய நோக்கம். எஸ்றா 10[11]. ஆதலால் இவர்கள் கிரேக்கரும் அக்கிரமமாய் நடந்த ஆசாரியர்களும் போய்வந்த தேவாலயத்துக்குப் போகாதிருந்தார்கள். இந்தக் கொள்கையை மிக நுட்பமாய்க் கைக்கொண்ட இவர்கள் பணம் பொருள் யாவற்றையும் நீக்கி, விவாகம் செய்யாதவர்களாய் வனாந்தரமான சில ஊர்களிற் போய் வசித்துவந்தார்கள். யோவான் ஸ்நானன் இவர்களுடைய கொள்கையை உடையவன் அல்லாவிட்டாலும், அதற்குச் சார்பாய் இருந்தான் என்றுதோன்றுகிறது. இவர்களுடைய பெரிய சபை சாக்கடலின் ஓரத்தில் இருந்தது.

**எஸ்கியா, எசேக்கியேல்** காண்க.

**எஸ்கோல்.** **Eshcol.** [திராக்ஷப்பழக்குலை].

1. ஆபிரகாமின் சிநேகிதரில் ஒருவன். ஆதி 14[13].

2. திராக்ஷத் தோட்டங்களுள்ள பள்ளத் தாக்கு. எண் 13[23].

**எஸ்தரின் சரித்திரம். The Book of Esther.**

1. **வேதாகமத்தில் எப்படிச் சேர்க்கப் பட்டது?**—யூதர்களிலும் ஆதி கிறிஸ்தவர்களி லும் அநேகர் இப்புஸ்தகத்தில் ஞானபோ தனை குறைந்திருக்கிறது என்றும், இதில் யேகோவா அல்லது கடவுளின் பெயர் ஒரு தரமும் இல்லை என்றும் கண்டு இது ஒரு கதைபோலிருக்கிறது என நினைத்து இதை வேதாகமத்தில் சேர்க்கவில்லை. ஆனால் பெ ரும்பாலும் யூதர்களும் கிறிஸ்தவர்களும் இதை ஏற்றுக்கொள்ளுகிறார்கள்.

2. **காலமும் ஆக்கியோனும்.**—இதின் பா ஷைநடையைப் பார்த்தால் இது கி-மு. இர ண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது எனத் தோன்றுகிறது. யூதர்கள் சகல நாடுகளிலும் சிதறுண்டு பரம்பியிருக்கிறார்கள் (எஸ்தர் 3[8]) என்றதினாலே, யூதர்கள் சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்டதற்கு அநேக வருஷங் களுக்குப் பிற்பாடு இது எழுதப்பட்டது என அத்தாட்சி ஆகிறது.

ஆக்கியோனின் பெயர் திட்டமாய்த் தெரி யாது.

3. **இதின் பொருள்.**—இது அகாஸ்வேரு, வஸ்தி, மொர்தெகாய், ஆமான், எஸ்தர் ஆகிய ஐந்துபேரைக் குறித்துச் சொல்லுகிறது. இதில் யூதர்கள் பூரீம் பண்டிகையில் கொண் டாடின சந்தோஷத்திற்குக் காரணம் காட்டி யிருக்கிறது. எஸ்தர் 3[7] 9[15].

4. **இதின் தன்மை.**—இதில் சொல்லியிரு க்கும் அகாஸ்வேரு கி-மு. 485-465-ளுத் தில் அரசாண்ட சேர்க்ஜிஸ் (*Xerxes*) என்று சொன்னாலும், இதிலிருக்கும் சரித்திரத்தைப் பற்றி வேறொரு சாட்சியுமில்லை. இப்புஸ் தகம் சத்திய வேதத்தில் உள்ள மற்றப் புஸ்த கங்களைப்போல் ஞானத்துக்குரிய போதனை களைக் கொடுக்கிறதில்லை யென்று கண்டா லும், இதில் நாம் சன்மார்க்கத்துக்குரிய சில விஷயங்களைக் காணக்கூடியதாய் இருக் கிறது.

**எஸ்தர்.** **Esther.** [நட்சத்திரம்]. பெர்சி யாவிலே இவளுக்கு அத்சாள் என்று பெயர். எஸ்தர் 2[7]. இவள் சரித்திரம் எஸ்தர் புஸ்த கத்தில் சொல்லியிருக்கிறது.

**எஸ்தாவோல்.** **Eshtaol.** சிம்சோன் முத லாவது தேவ அருளைப் பெற்றதும் அடக் கம் பண்ணப்பட்டதுமான தென் யூதாவில் ஒரு இடம். நியா 13[25] 16[31].

**எஸ்தெமோா.** **Eshtemoa.**

1. ஒரு ஊர். யோசு 15[50].

2. ஒரு ஆள். 1 நாளா 4[17].

**எஸ்தோன்,** **Eshton.** 1 நாளா 4[11].

**எஸ்பாய்.** **Ezbai.** 1 நாளா 11[37].

**எஸ்பால்.** **Eshbaal.**=**இஸ்போசேத்.**

**எஸ்பான்.** **Eshban.** ஆதி 36[26].

**எஸ்போன்.** **Ezbon.**

1. =ஒஸ்னி. ஆதி 46[16] எண் 26[16].

2. 1 நாளா 7[7].

3. =**Heshbon.** உபா 2[26] உன். பா 7[4]. இது எமோரியரின் முக்கிய பட்டணம். சாக் கடலின் வட எல்லைக்கு ஏறக்குறைய 15 மைல் கிழக்கே இருந்தது. நேபோமலை இதின் சமீபமாய் இருந்தது.

**எஸ்ராயி. எஸ்ரோ.** **Hezrai. Hezro.** 2 சாமு 23[35] 1 நாளா 11[37].

**எஸ்ரி.** **Ezri.** 1 நாளா 27[26].

**எஸ்ரோ.** **Hezro.** =எஸ்ராயி.

**எஸ்ரோன்.** **Hezron.**

1. ஆதி 46[9].

2. ஒரு குடும்பம். ஆதி 46[12].

3. =ஆத்சார் அதார். ஒரு ஊர். யோசு 15[3] எண் 34[4].

**எஸ்லி.** **Esli.** லூக் 3[25].

**எஸ்றா.** **Ezra.**

1. ஒரு குடும்பம். நெகே 12[1].

2. யூதர்களின் தலைவன் ஒருவன். எஸ்றா பாபிலோனியா சிறையிருப்பிலிருந்து அவ் விடத்திலுள்ள அர்தசஷ்டா ஆகிய பெர் சியா ராஜாவின் காலத்தில் கி-மு. 458-ளுவ யூதர்களை எருசலேமுக்குத் திரும்ப நடத் திக்கொண்டு போனவன். இவனைப்பற்றி விசேஷமாய் இவன் தான் எழுதின சரித் திரத்திலும் (எஸ்றா 7, 10 அதி), நெகேமி யாவின் சரித்திரத்திலும், இன்னும் எஸ்றா நெகேமியா என்னும் புஸ்தகங்களின் மற்றப் பாகங்களிலும் காணலாம். இவன் 'இஸ்ர வேலின் தேவனாகிய கர்த்தர் அருளிய மோசேயின் நியாயப்பிரமாணத்தில் தேறின வேதபாரகன்.' எஸ்றா 7[6]. இவன் காலத் தில் பாபிலோனியாவிலுள்ள யூதர்கள் ராஜா வின் தயவு பெற்றவர்களாய் நிர்ப்பந்த நிலை மையில் அல்ல, ஆஸ்தி கல்வி நாகரீகம் உடையவர்களாய்த் தீர்க்கதரிசிகளின் ஏவு தலினாலே யேகோவாவின் மார்க்கத்துக்கு

உண்மையோடு திரும்பினவர்களாய் இருந்தார்கள். அக்காலத்தில் ஜனங்கள் ஆதி பாஷையாகிய எபிரெய பாஷையைப் பேசாததினால் அப்பாஷை தெரிந்தவர்களுக்கும் அதில் சத்தியவேதத்தை எழுதக்கூடிய வேத பாரகருக்கும் அதிகாரம் அதிகரித்தது. அவர்களில் பிரதானமானவன் எஸ்றா. இவன் எருசலேமில் மீதியாயிருந்த யூதர்களுக்கு வந்த நிர்ப்பாக்கியத்தையும் தரித்திரத்தையும் அறிந்து, அவர்கள்மேல் பரிதாபங்கொண்டவனாய் எருசலேமில் மறுபடியும் பாபிலோனில் சிறையிருந்தவர்களை ஸ்தாபிக்கக் கருத்துக்கொண்டு, ராஜாவிடத்திலிருந்து சன்னத்துப் பெற்றான். எஸ்றா $7^{11}$. கி-மு. 458-ஆம் ஆண்டில் இவனும் பாபிலோனிலிருந்து போக விரும்பினவர்களும் புறப்பட்டு நாலு மாதத்திற்குப் பிறகு எருசலேம் வந்து சேர்ந்தார்கள். இவன் அங்கே வந்து தனக்குக் கிடைத்த அதிகாரத்தின்படி எல்லாரும் நியாயப்பிரமாணத்துக்கு இணங்கி நடப்பதற்கு ஏற்பாடு செய்து, விசேஷமாய் அந்நிய ஸ்திரீகளை விவாகம் செய்கிறவர்களின் விஷயத்தில் ஒரு நியாய சங்கத்தையும் ஸ்தாபித்தான். எஸ்றா $9^{2}$. இதற்குப்பிறகு பதின்மூன்று வருஷம் இவனைப்பற்றி ஒன்றும் சொல்லியிருக்கவில்லை.

நெகேமியா எருசலேமுக்கு வந்து அதின் மதில்களைக் கட்டினபிறகு, கி-மு. 444-ஆம் ஆண்டில் எஸ்றா ஜனங்களுக்கு முன்பாக நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தை வாசித்தான் என அறிகிறோம். அக்காலத்தில் கூடாரப் பண்டிகை கொண்டாடினார்கள். நெகே $8^{13}$. இவன் செய்த பிரயத்தனத்தினாலே யூதர்கள் இதன்பின் மோசேயின் நியாயப்பிரமாணத்தை விடாமல் உறுதியாய்க் கைக்கொண்டார்கள்.

**எஸ்றாவின் புஸ்தகம். The Book of Ezra.**

1. முதலில் நாளாகமங்கள், எஸ்றா, நெகேமியா என்னும் இம்மூன்று புஸ்தகங்களும் ஒரு புஸ்தகமாய் இருந்தது என்றும் எபிரெய ஆகமத்தை எழுதினவர்கள் இவைகளை வெவ்வேறு புஸ்தகமாகப் பிரித்தார்கள் என்றும் தோன்றுகிறது.

2. **இதின் பிரிவுகள்.**—இதில் இரண்டு பாகங்கள் உண்டு.

(1) 1-6 அதி. கோரேஸ் பாபிலோனியாவைப் பிடித்தபிறகு செருபாபேலின் காலத்தில் கி-மு. 537-ஆம் ஆண்டு அநேகர் எருசலேமுக்குத் திரும்பிப்போனார்கள் என்றும்; தேவாலயம் கட்டத் தொடங்கினார்கள் என்றும்; அப்போது சத்துருக்கள் அதைத் தடுத்தார்கள் என்றும்; ஆகாய் சகரியா தீர்க்கதரிசிகளின் ஏவுதலினாலே கி-மு. 516-ஆம் ஆண்டில் யூதர்கள் அதைக் கட்டி முடித்தார்கள் என்றும் சொல்லியிருக்கிறது.

(2) 7-10 அதி. ஏறக்குறைய அறுபது வருஷங்களில் சம்பவித்தவை ஒன்றுஞ் சொல்லப்படாமல், கி-மு. 458-ஆம் ஆண்டு எஸ்றா பாபிலோனியாவிலிருந்து எருசலேமுக்கு அநேகரை நடத்திக்கொண்டு போனான் என்றும்; அவ்விடத்தில் அந்நிய ஸ்திரீகளை விவாகம் செய்துகொள்ளுகிறவர்களின்பேரில் அவன் ஏற்பாடு செய்தான் என்றும் விவரமாய்ச் சொல்லியிருக்கிறது. எஸ்றாவின் பிற்காலச் சரித்திரம் நெகேமியாவின் புஸ்தகத்தில் இருக்கிறது.

3. **இதின் உண்மை.**—பிற்காலத்து வேத சாஸ்திரிகள் இப்புஸ்தகத்திலுள்ள நகல்கள் உண்மையுள்ளவைகள் என்று அறிந்து காலத்தையும் மற்ற விஷயங்களையும் ஆராய்ந்து இவைகளும் நம்பப்படத்தக்கவை என்றும், இப்புஸ்தகம் உண்மையுள்ள சரித்திரம் என்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

**எஷானா.** **Jeshanah.** பெத்தேலுக்கு வடக்கே 3¼ மைல் தூரமாயுள்ள ஒரு ஊர். 2 நாளா $13^{19}$.

**எஷிமோன்.** **Jeshimon.** ['வனாந்தரம்' அல்லது 'காடு'].

1. சாக்கடலுக்கு வடக்காயும், யோர்தான் நதிக்குக் கிழக்காயுமுள்ள ஒரு வனாந்தரம். எண் $21^{20}$.

2. சாக்கடலுக்குத் தெற்கிலுள்ள ஒரு மலை நாடு. 1 சாமு $23^{24}$.

**எஷியா.** **Jesiah.**

1. 1 நாளா $12^{6}$.

2. **இஷியா** காண்க. 1 நாளா $23^{20}$.

**எஷியான்.** **Eshan.** எபிரோன் மலைநாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு $15^{52}$.

**எட்டி.** **Worm-wood.** கசப்பான ஒரு செடியும் அதின் கனியும். உபா $29^{18}$ வெளி $8^{11}$.

**எண்கள்.** **Numbers.** மூன்று, ஏழு என்னும் எண்கள் எபிரெயர்களுக்குள் விசேஷமான எண்கள். இவைகள்முதலிய சில எண்களைப்பற்றிச் சிலவற்றைக் கவனிக்க வேண்டும்.

**ஒன்று.** இது ஏகத்துவத்தையும், அபின்னமான தன்மையையும் குறித்தது. உபா $6^{4}$ எபே $4^{5}$.

**மூன்று.** இது முழுமையைக் குறிக்கிறது. மூன்று வருஷப் பஞ்சம், மூன்று மாதச் சங்

காரம், மூன்று நாள் கொள்ளைநோய். இவைகளில் தாவீது ஒன்றைத் தெரியவேண்டியது. 1 நாளா $21^{12}$. தமஸ்குவின் மூன்று பாதகங்கள். ஆமோ $1^{3}$ $2^{1}$ மு. மூன்று மேய்ப்பர்கள். சக $11^{8}$. மூன்று புருஷர். தானி $3^{23}$. மூன்று வேளை ஜெபம். தானி $6^{13}$. மூன்று நாள் மூன்று ராத்திரி இயேசு கல்லறையில் இருந்தது. மத் $12^{40}$. திரியேகத்துவம். 1 யோவா $5^{8}$.

**ஏழு**. இது பரிசுத்தத்தைக் குறிக்கும் விசேஷித்த எண். கடவுள் சிருஷ்டிப்பை முடித்து ஏழாம் நாள் ஓய்ந்திருந்தார். வாரத்தில் ஏழு நாள். ஏழாம் வருஷம் ஓய்வு வருஷம். கடவுள் ஜலப்பிரளயத்திற்கு முன் ஏழு நாள் காத்திருந்தார். எவ்வேழு சுத்த மிருகங்கள் பேழைக்குள் விடப்பட்டன. ஏழு வருஷம் யாக்கோபு ராகேலுக்காக வேலை செய்தான். எகிப்தில் ஏழு வருஷம் செழிப்பும் ஏழு வருஷம் பஞ்சமும். ஏழு நாள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகையும், கூடாரப்பண்டிகையும் கொண்டாடினது. ஏழு கிளை விளக்கு. எரிகோ பட்டணத்தை ஏழு ஆசாரியர்கள் ஏழு நாள் ஏழு எக்காளத்துடன் சுற்றினது. பழைய ஏற்பாட்டில் இன்னும் அநேக இடங்களில் இந்த எண் சொல்லப்பட்டிருக்கிறது. இது எப்பொழுதும் பரிசுத்தத்தையும் தேவனுடைய சித்தத்திற்குப் பிரியமாய் இருப்பதையும் காட்டுகிறது. புதிய ஏற்பாட்டில் வெளிப்படுத்தின விசேஷத்தில், சபைகள், விளக்குத்தண்டுகள், ஆவிகள், நட்சத்திரங்கள், முத்திரைகள், எக்காளங்கள், இடிமுழக்கங்கள், கலயங்கள், வாதைகள், தூதர்கள், அந்திக்கிறிஸ்துவின் தலைகள் எவ்வேழாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**நாற்பது**. இது அநேகம் என்பதைக் குறிக்கிறது. நாற்பது வருஷம் பிரயாணம். இஸ்ரவேலர் நாற்பது வருஷம் மன்னாவைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். மோசே மலையில் நாற்பது நாள் நாற்பது ராத்திரி தங்கினான். மோசே நாற்பது வருஷம் வனாந்தரத்திலே இருந்தான். எகிப்து நாற்பது வருஷம் பாழான வனாந்தரமாயிருக்கும். எசே $29^{10}$. எலி நாற்பது ராத்திரி நாற்பது பகல் பிரயாணம் பண்ணினான். 1 இரா $19^{8}$. இயேசு நாற்பது நாள் வனாந்தரத்திலிருந்தார்.

**ஏழெழுபது**. இதுவும் 'முழுமை' என்பதைக் குறிக்கிறது. மத் $18^{22}$.

**அறுநூற்று அறுபத்தாறு**. யூதர்களுக்குள் ஒரு சாஸ்திரத்தின்படி எழுத்தட்டவணையில் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு எண்ணைக் குறிக்கிறது. இதன்படி 'மிருகத்தின் இலக்கம்' ஆகிய இது 'நேரோராயன்' என்னும் ரோமர் ராயனைக் குறிக்கிறது.

**எண்ணாகமம். Numbers.**

1. மோசே எழுதின புஸ்தகங்களில் இது நான்காவது என்று தலைப்பில் போட்டிருக்கிறது. ஆனால் வேதசாஸ்திரிகள் ஆதியாகமம் மோசேயினாலே எழுதப்படவில்லை என்று சொல்வதுபோலவே இப்புஸ்தகமும் அவனாலே எழுதப்படவில்லை என்று சொல்லுகிறார்கள். முதலில் ஆதியாகமத்தில் மூன்று புஸ்தகங்கள் இருந்ததுபோலவே இதுவும் முதலில் மூன்று புஸ்தகங்களாக இருந்தது என்றும், கடவுளுக்கு 'யேகோவா' என்று பெயரிட்டிருக்கிறவனும், 'தேவன்' என்று பெயரிட்டிருக்கிறவனும், ஆசாரத்தைப்பற்றிப் பேசுகிறவனும் ஆகிய மூவர் அப்புஸ்தகங்களுக்கு ஆக்கியோன்கள் என்றும் நினைக்கிறார்கள். இவர்கள் மோசேயிலிருந்து வாய்மொழியினாலும் கையெழுத்துப் பிரதிகளினாலும் தாங்கள் எழுதினவைகளில் பலவற்றைச் சேர்த்தது மோசே இதற்கு ஆக்கியோன் என்னும் யூதர்களின் அபிப்பிராயத்துக்குக் காரணம்.

2. **பிரிவுகள்.**—இந்தப் புஸ்தகத்தில் இஸ்ரவேலர் வனாந்தரத்தில் செய்த பிரயாணத்தைக்குறித்து அதின் துவக்கத்திலும் முடிவிலும் நடந்தவைகளை அதிக விவரமாய்ச் சொல்லியிருக்கிறது.

இதில் மூன்று பாகங்கள் உண்டு.

A. சீனாய் மலையிற் கொடுத்த பிரமாணங்கள். $1^{1}$-$10^{10}$. குடிமதிப்பு, பாளயத்தின் ஒழுங்கு, லேவியருக்குரிய ஆசாரம், அசுத்தம், காணிக்கைகள், சமுசய நிவிர்த்தி ஏற்பாடுகள், நசரேயரின் கொள்கை, ஆசீர்வாதங்கள், விலக்கு, லேவியரின் பிரதிஷ்டை, பஸ்காபண்டிகையைப்பற்றிய இரண்டாம் கட்டளை, மேகஸ்தம்பம், வெள்ளிப்பூரிகைகள்.

B. சீனாய் மலையிலிருந்து ஏதோமுக்குச் செய்த பிரயாணம். $10^{11}$-$21^{9}$. பிரயாணத்தின் ஒழுங்கு, எத்திரோ ஜனங்களைப் போகவிடுதல், ஜனங்களின் முறுமுறுப்பு, எழுபது மூப்பர்களை நியமித்தல், மீரியாமும் ஆரோனும் செய்த கலகம், வேவுகாரரின் பயணம், போஜனபானம், காணிக்கை, ஓய்வுநாள், கோராகு முதலியவர்கள் செய்த கலகம், லேவியரின் கடமைகள், செங்கடாரி சடங்கு, மீரியாமின் மரணம், மோசேயின் கோபம், ஆரோனின் மரணம், ஏதோமைச் சுற்றிப் போகிறது, வெண்கலச் சர்ப்பம்.

C. $21^{10}$-$36^{13}$. ஏதோமிலிருந்து யோர்தான் கரைக்குப் பிரயாணம், பாட்டுகள்,

எமோரியரை ஜெயித்தல், மோவாபைச் சந்தித்தல், பிலேயாமின் சரித்திரம், வேசித்தனம், விக்கிரகாராதனை, பினேகாஸ் ஆகிய பிரதான ஆசாரியனை நியமித்தல், இரண்டாம் குடி மதிப்பு, சுதந்தர உரிமை, மோசே மரணத்திற்குத் தன்னை ஆயத்தப்படுத்துதல், காணிக்கைகள், பொருத்தனைகள், மீதியானியர் அழிக்கப்படுதல், ரூபேன் காத் மனாசே தங்களை யோர்தானுக்குக் கிழக்கே ஸ்தாபித்தல், இஸ்ரவேலர் செய்த பிரயாணத்தின் விவரம், கானான் தேசத்தில் அவர்கள் தங்களை ஸ்தாபிப்பதைப்பற்றிய நியமம், லேவியரின் ஊர்கள், அடைக்கலப் பட்டணங்கள்.

3. மேற்சொன்ன அட்டவணையை நாம் பார்த்தால் இந்தப் புஸ்தகம் சரித்திரத்தையல்லாமலும் நியாயப்பிரமாண விவரங்களைப் பற்றியும் சொல்லுகிறது என அறிந்து கொள்ளலாம். இஸ்ரவேலரைப்பற்றிய இந்தச் சரித்திரத்தில் மோசேயின் பயபக்தியையும் (12[3]), விசுவாசத்தையும் (10[29]), யேகோவாவின்மேல் இருந்த அவன் சிநேகத்தையும் (12[6]), இஸ்ரவேலரில் அவன் வைத்த அன்பையும் (11[2. 10. 27] 12[1] 21[7]), அவனுடைய பயத்தையும் (11[10]), ஜனங்கள் காட்டின வெறுப்பையும் (20 அதி) நாம் காணலாம். இவைகள் யாவையும் சேர்த்து இப்போது வேதத்தில் இருக்கும் புஸ்தகமாய்ச் செய்தவன் இதை வாசிக்கிறவர்களுக்கு எச்சரிப்பும், புத்தி போதனையும் கூறுகிற ஒரு தீர்க்கதரிசியாய் இருக்கிறான். இந்தப் போதனைகளின்படி இஸ்ரவேலர் ஒரே கடவுளாகிய யேகோவாவுக்குக் கீழ்ப்படிந்து அவருடைய கட்டளைகளின்படி நடந்தால்மாத்திரம் அவர்களுக்குப் பாக்கியமுண்டாகும் என்பதைக் காட்டியிருக்கிறான்.

4. **காலம்.** — ஆதியாகமம் எழுதப்பட்ட காலத்தில் இதுவும் எழுதப்பட்டது. இதின் முக்கிய பாகம் கி-மு. எட்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பது அநேகருடைய அபிப்பிராயம். **ஆதியாகமம்** காண்க.

**எண்ணெய்.** **Oil.** வேதாகமத்தில் இருநூறு இடங்களில் சொல்லியிருக்கும் எண்ணெய் என்பது ஒலிவமரத்தின் எண்ணெயாம். இது தேகத்தில் பூசுகிறதற்கும், போஜனத்தில் சேர்ப்பதற்கும், விளக்கு எரிப்பதற்கும், மருந்துவகையில் கலப்பதற்கும் உபயோகித்து வந்தார்கள். சங் 104[15] எண் 1[8] 1 நாளா 9[29] ஏசா 1[6] லூக் 10[34]. சடங்காசார முறையில் எண்ணெய் பலவிதமாய் உபயோகிக்கப்பட்டது. யாத் 30[24] லேவி 2[1] 5[11] 14[10]. எண்ணெய் கானானியருக்கு அதிக லாபத்தைக் கொடுக்கும் வர்த்தகமாயிருந்தது. எசே 27[17] ஓசி 12[1]. 'தன் காலை எண்ணெயிலே தோய்ப்பான்' (உபா 33[24]) என்பது அதிக செழிப்பைக் காட்டுகிறது. விருந்தாளிகளின் தலையில் எண்ணெய் பூசுவது சந்தோஷத்திற்கு ஒரு அடையாளம். சங் 45[7].

**எதிதாள்.** **Jedidha.** யோசியாவின் தாய். 2 இரா 22[1].

**எதுத்தூன்.** **Jeduthun.**

1. தேவாலயத்தில் பாடின சங்கீதக்காரரில் ஒரு வகுப்பு. 1 நாளா 25[1].

2. அல்லது கீதவாத்தியம் அல்லது ஒரு இராகத்தின் பெயர். சங் 39, 62, 77 தலைப்பு.

**எதேத்.** **Jetheth.** ஆதி 36[40].

**எத்சேர்.** **Jezer.** **எசேர்** காண்க.

**எத்சோகார்.** **Jezoar.** **இத்சேயார்** காண்க.

**எத்சோகார்.** **Jezoar.** 1 நாளா 4[7]. **சோகார்** காண்க.

**எத்தியோப்பியா, கூஷ்.** **Ethiopia.** இது எகிப்துக்குத் தெற்கே தற்காலத்தில் நூபியா (*Nubia*) அல்லது சூதான் என்னும் பெயர் கொண்ட வனாந்தரமான தேசம். இங்கே உள்ள ஜனங்கள் அதிக தைரியஸ்தராய் இருந்ததினாலே எகிப்திய ராஜாக்கள் இவர்களைத் தங்கள் சேனைகளிற் சேர்த்தார்கள். எகிப்து ராஜ்யத்தின் வல்லமை குறைந்து போனபிறகு எத்தியோப்பியர் தங்களுக்கு ஒரு ராஜாவை நியமித்தார்கள். இவன் எப்பொழுதும் இவர்களுடைய முக்கிய தேவனாகிய அம்மோனைப் பணிந்து நடந்தான். பிறகு இவர்கள் எகிப்தை ஜெயித்து அதைச் சிலகாலம் (கி-மு. 715–664-வரை) ஆண்டார்கள். தீராக்கா ஒரு எத்தியோப்பிய ராஜா. கி-மு. 24-ல் ரோமர்கள் எத்தியோப்பியரின் ராஜாத்தியாகிய கந்தாகே என்பவளோடு சண்டை செய்தார்கள். எரே 39[15] எசே 29[10] 2 இரா 19[9].

**எத்திரா.** **Ithra.** **இத்திரா** காண்க.

**எத்திரோ.** **Jethro.** இவனுடைய மறுபெயர்கள் ரெகுவேல், ஒபாப். இவன் சீனாய் தேசத்திலுள்ள மோசேயின் மாமன். யாத் 2[18. 19] 18[1] எண் 10[29] நியா 4[11].

**எத்ரேயி.** **Edrei.**

1. பாசான் ராஜாவின் முக்கிய பட்டணம். உபா 1[4].

2. ஒரு ஊர். யோசு 19[37].

**எத்லோன்.** **Hethlon.** எசேக்கியேல் தரிசனத்தில் கண்ட தேவ ராஜ்யமாகிய இஸ்ரவேலின் எல்லையிலுள்ள ஒரு ஊர். எசே 47[15].

**எத்னன்.** **Ethnan.** 1 நாளா $4^{7}$.

**எத்னி.** **Ethni.** = யாத்திராயி. 1 நாளா $6^{21. 41}$.

**எந்தோர்.** **Endor.** சவுலுக்குக் குறி சொன்ன அஞ்சனம் பார்க்கிற ஸ்திரீ வசித்த இடம். 1 சாமு $28^{7}$ சங் $83^{9}$.

**எபிரேய பாஷை.** **Hebrew Tongue.** பழைய ஏற்பாட்டுக் காலத்திலுள்ள எபிரெய பாஷைக்கும் இயேசுவின் காலத்திலுள்ள யூதர்கள் பேசின எபிரெய பாஷைக்கும் வித்தியாசம் இருந்தது. இதற்கு 'அரமேயா பாஷை' என்பது விசேஷித்த பெயர். இயேசுவும் பவுலும் இந்தப் பாஷையில் யூதருக்குப் பிரசங்கம் செய்தார்கள். மாற் $5^{41}$ $15^{34}$ அப் $21^{40}$. **எப்பத்தா** காண்க.

**எபிரேயருக்கு எழுதின நிருபம்.** **The Epistle to the Hebrews.**

**I. இந்நிருபத்தை எழுதினவன்.**—எபிரெயருக்கு எழுதின நிருபம் என்னும் பெயருள்ள வேதாகமம் எழுதினவன் இன்னான் என்பது நமக்குத் தெரியவில்லை. அலெக்சந்திரியா (*Alexandria*) புரத்திலுள்ள வேத சாஸ்திரிகளாகிய பாந்தேனுஸ் (*Pantaenus*) கிளமெந்து (*Clemens*) ஒரிகென் (*Origen*) என்பவர்கள் பவுல் அப்போஸ்தலன் இதை எழுதினவனைச் சாதித்தும், அவன் எழுதின வேறு நிருபங்களது பாஷை நடைக்கும், இந்த நிருபத்தின் பாஷைநடைக்கும் காணப்படும் வேறுபாட்டினால் அவன் ஓர் சீஷனைக்கொண்டு இந்நிருபத்தை எழுதுவித்ததாகவும் சொல்லுகிறார்கள். தெர்துல்லியன் (*Tertullian*) என்பவன் பர்னபாஸ் (*Barnabas*) இதை எழுதினவனாகச் சொல்ல, ரோமாபுரி சபையைச்சேர்ந்த சாஸ்திரிகளாகிய இரினாயுஸ் (*Irenaeus*), ஹிப்போலிற்றுஸ் (*Hippolytus*) என்பவர்கள் பவுல் அப்போஸ்தலன் இதை எழுதினவன் அல்ல என்றும், எழுதினவன் இன்னான் என்பது தெரியாது என்றும் சாதிக்கிறார்கள். சிலர் சுமார் கி-பி. 90-ஆம் ஆண்டில் ரோமாபுரியானாகிய கிளமெந்து (*Clemens*) என்பவனும், சிலர் அப்பொல்லோ (*Apollo*) என்பவனும் இதை எழுதினதாகப் பாவிக்கிறார்கள்.

**II. இந்நிருபம் எழுதப்பட்ட காலம்.**—முதல் நூற்றாண்டிலே ரோமாபுரிச் சபை கொரிந்துபட்டணத்துச் சபைக்கு எழுதின ஓர் நிருபத்திலே எபிரெயருக்கு எழுதின நிருபத்திலுள்ள வாக்கியங்களை எடுத்துக் கூறினதை நாம் காண்கிறதினால், இந்நிருபம் முதல் நூற்றாண்டிலே எழுதப்பட்டது என்பதில் ஐயமில்லை. வருஷம் இன்னதென்று உறுதியாகச் சொல்ல முடியாது. இந்நிருபத்தைப் பெற்றவர்களுக்கு யூதருடைய மதத்தைப்பற்றி அதிக விருப்பம் உண்டானது என்று சில சாஸ்திரிகள் அறிந்து, இது எருசலேம்பட்டணம் அழிக்கப்பட்ட கி-பி. 70-ஆம் ஆண்டுக்கு முன் எழுதப்பட்டிருக்கும் என்று சாதிக்க, வேறு சிலர் $3^{7-11}$ $3^{15}$-$4^{11}$-ஐக் கொண்டு 70-ஆம் ஆண்டுக்குப் பின் எழுதப்பட்டிருக்கும் என்று சொல்லுகிறார்கள்.

**III. இந்நிருபம் பெற்றவர்கள்.**—எபிரெயர்கள் யூதர்களில் கிறிஸ்தவ சபையைச் சேர்ந்தவர்கள் என்பது இந்த நிருபத்திலுள்ள முழுப் பொருளாலும் விளங்கும். இந்நிருபம் பொதுவாகக் கிறிஸ்தவர்களான எல்லா யூதர்களுக்கும் எழுதப்படாமல் ஒரே சபைக்கு எழுதப்பட்டது. $2^{3}$ $5^{12}$ மு $6^{10}$ $10^{32}$ மு $13^{19}$. அச்சபை இன்னது என்பது நமக்கு உறுதியாகத் தெரியாது. சிலர் அச்சபை அந்தியோகியா (*Antioch*) என்றும், சிலர் எருசலேம் என்றும், சிலர் பலெஸ்தீனா நாட்டிலுள்ள ஒரு சபை என்றும், சிலர் அலெக்சந்திரியா என்றும், சிலர் ரோமாபுரியிலுள்ள சபைகளில் ஒரு சபை என்றும் வெவ்வேறான நியாயங்களைக்கொண்டு உத்தேசிக்கிறார்கள்.

இந்தச் சபை இன்னது என்று உறுதியாகச் சொல்ல முடியாதாயினும், இதின் தன்மையை நிருபத்தில் கூறப்பட்டவைகளினால் அறிகிறோம். இதில் சேர்ந்தவர்கள் கிறிஸ்தவர்களாகி நெடுங்காலமாயிற்று. $5^{12}$. அவர்கள் இயேசுகிறிஸ்துவினுடைய சீஷர்களால் உபதேசம் பெற்றவர்கள். $2^{3}$. அவர்கள் பெற்ற உபதேசம் குறைவற்ற உபதேசம். $6^{1. 2}$. அவ்வுபதேசம் பலன் தந்தது. அன்பின் செயலாலும் ($6^{10}$), இயேசுகிறிஸ்துவினிமித்தம் பட்ட துன்பங்களில் விசுவாசத்தில் சோர்ந்து போகாமையாலும் ($10^{32-34}$), அவர்கள் தங்களை உறுதியான கிறிஸ்தவர்களாகக் காட்டிக்கொண்டார்கள். நிருப மெழுதினவன் சென்ற காலத்தைப்பற்றி அவர்களை மெச்சிப் புகழ்ந்துபேசி, நிகழ்காலத்தைப்பற்றி அவர்கள் ஆரம்பத்திலே கொண்ட நம்பிக்கையை முடிவுபரியந்தம் உறுதியாய்ப் பற்றிக்கொண்டிருக்கும்பொருட்டு ($13^{14}$), அவர்களுக்குப் புத்தி சொல்லுகிறான். ஏனெனில் அவர்கள் நெகிழ்ந்த கைகளையும் தளர்ந்த முழங்கால்களையும் உடையவர்களையும் பிசகிப்போகிறவர்களையும் ($12^{12. 13}$) போன்றவர்களும், பாவப் பற்றுதலை எதிர்த்துநின்று போராடுவதிலே தளர்ந்தவர்களும் ($12^{1-4}$), அறிவில்

தேறாமல் குறைந்துபோனவர்களும் ($5^{11-14}$), முதலில் துன்பத்தைத் தளர்ச்சியின்றிப் பொறுத்தும் பிறகு அற்ப துன்பத்தைப்பற்றி முறுமுறுக்கிறவர்களாய் இருந்தார்கள். $12^{4-11}$ $13^{13}$. இயேசுகிறிஸ்துவினிமித்தம் அற்ப துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் இயேசுகிறிஸ்துவைப் பற்றினதினாலுண்டான நஷ்டத்தையும் லாபத்தையும் ஒப்பிடுகிறார்கள். $3^7$-$4^{10}$. ஏசா என்பவன் ஒருவேளைப் போஜனத்துக்காகத் தன் சிரேஷ்ட புத்திரபாகத்தை விற்றுப் போட்டதுபோல் ($12^{16}$), அவர்கள் இம்மையை அனுபவிக்கும்பொருட்டு, கிறிஸ்தவர்கள் அனுபவிக்கும் பெரிய நன்மைகளை ($12^{23.24}$) அற்பமாக எண்ணினவர்கள். எல்லாவற்றிலும் சிறந்தவராகிய தேவனுடைய குமாரனையும் அவர் நமக்காகச் சிந்தின இரத்தத்தையும் காலின்கீழ் மிதித்து ($10^{29}$), இயேசுவைக் கொன்றுபோட்ட பாவிகள் செய்த பாவத்தை மீளவும் அவர்கள் செய்வார்கள் என்று நினைக்க ஏதுவுண்டு. அவர்கள் அவரை மறுதலிக்காது உறுதிப்படும்பொருட்டு நூலாசிரியன் இந்நிருபத்தை எழுதினான்.

**IV. நிருபத்தின் பொருள்.**—நூலாசிரியன் பழைய ஏற்பாட்டையும் புதிய ஏற்பாட்டையும் ஒப்பிடுகிறான். அவன் பழைய ஏற்பாடு கொடுக்கும் சிறந்த பலனை எடுத்துக்காட்டி இயேசுகிறிஸ்துவினாலுண்டான புதிய ஏற்பாடு அதிலும் சிறந்தது என்று ரூபித்துக் கூறுகிறான்.

$1^{1-4}$. **முகவுரை**. இயேசுகிறிஸ்துவினால் நமக்குத் தரப்பட்டது இது என்று தொகுத்துக் கூறுகிறான்.

தேவசுதனும், உலகத்தின் ஆண்டவருமாகிய இயேசுகிறிஸ்து தேவனுடைய சித்தத்தை அருளிச்செய்து நமது பாவங்களை நீக்கும் சுத்திகரிப்பை உண்டுபண்ணினார்.

A. $1^5$-$6^{20}$. **முதல் பாகத்தில்** நூலாசிரியன் கடவுள் பழைய ஏற்பாட்டின் காலத்தில் யாரைக்கொண்டு தம்மை வெளிப்படுத்தினாரோ அவர்களையும் இயேசுகிறிஸ்துவையும் ஒப்பிடுகிறான்.

*a*. தேவன் தம்மைச் சீனாய் மலையில் தேவதூதர்களைக்கொண்டு வெளிப்படுத்தினதினால் பழைய ஏற்பாடு புதிய ஏற்பாட்டிலும் சிறந்தது என்று சொல்பவரை மறுத்து, இயேசு தேவசுதனானபடியாலும், தேவனுடைய சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறவராகையாலும், அவர் தேவதூதர்களில் பெரியவர் என்று கூறி, பெரியவராகிய இயேசுவின் திருவாக்குகளை அற்பமாக எண்ணும் பேதமையை உணர்த்துகிறான். $1^5$-$2^4$.

*b*. இயேசுகிறிஸ்து தேவதூதர்களிலும் பெரியவராகக் காணப்படாமல் மரிக்கவும், தேவதூதர்களின்கீழ் தாழ்த்தப்படவும் கண்டோம் என்று சொல்பவரை மறுத்து, நாம் வஞ்சகனாகிய பிசாசானவனோடும், பாவத்தோடும் செய்யவேண்டிய போராட்டத்தில் இயேசு நமக்குத் துணை என்பதற்கு அவருடைய மரணம் அத்தாட்சியாகையால், அவருடைய மரணம் அவரது அன்பின் மிகுதியைக் காட்டி, அது அவரையும், பிதாவையும் மகிமைப்படுத்துகிறது என்று உணர்த்துகிறான். $2^{5-18}$.

*c*. தேவன் மோசேயை உண்மையுள்ளவனாகத் தீர்த்துக் கனப்படுத்தினதினால் மோசே இயேசுவுக்கு ஒப்பானவன் என்று சொல்பவரை மறுத்து, மோசே உண்மையுள்ள தொண்டன் என்றும், இயேசு உண்மையுள்ள சுதன் என்றும் காட்டுகிறான். $3^{1-6}$.

*d*. பழைய ஏற்பாட்டின் பலன் இஸ்ரவேலருக்குப் பிறப்பினால் சொந்தமாகும் என்று பழைய ஏற்பாட்டின் மேன்மையை வலியுறுத்திச் சொல்பவரை மறுத்து, கிறிஸ்தவர்கள் விசுவாசித்துப் பேரின்பத்தை அடைவதையும், விசுவாசிக்காமல் தண்டிக்கப்படுவதையும்போல் இஸ்ரவேலரில் சிலர் பழைய ஏற்பாட்டின் பலனை விசுவாசித்து, அதை அடைந்ததையும், சிலர் விசுவாசிக்காமல் தண்டிக்கப்பட்டதையும் வேதப்பிரமாணத்தால் காட்டுகிறான். $3^7$-$4^{13}$.

*e*. தேவன் பழைய ஏற்பாட்டிலே மோசேயையன்றி ஆசாரியனாகிய ஆரோன் என்பவனையும் நியமித்து வைத்தார். ஆசாரியனது தொழிலால் பாவமன்னிப்புக் கிடைக்கும் என்று பழைய ஏற்பாட்டைப் புகழ்ந்துரைப்போரை நோக்கி இயேசு ஆசாரியன் என்றும், அவர் பிதாவினால் உயர்த்தப்பட்டு நமது குறைவுகளை அறியும் மேலான ஆசாரியன் என்றும் உணர்த்துகிறான். $4^{14}$-$5^{10}$.

$5^{11}$-$6^{20}$. இரண்டாம் பாகத்தில் இயேசு மெய்யான ஆசாரியன் என்பதை நூலாசிரியன் விவரித்துக் காட்ட ஆரம்பிக்குமுன் பலவகை புத்திமதிகளைச் சொல்லுகிறான்.

*a*. அவர்கள் நல்விர்த்தி யடையாமையைப் பற்றி நூலாசிரியன் கண்டித்து, $5^{11}$-$6^3$.

*b*. இயேசுவை மறுதலிக்காதபடி எச்சரிக்கிறான். $6^{4-20}$.

B. $7^1$-$10^{18}$. **இரண்டாம்பாகத்தில்** நிருபமெழுதினவன் இயேசுகிறிஸ்து மரித்து உயிரோடெழுந்து மெய்யான ஆசாரியன் ஆனார் என்று உணர்த்துகிறான்.

*a*. வேதம் இயேசுகிறிஸ்துவை மெல்கிசேதேக்கின் முறைமையின்படி பிரதான ஆசா

ரியனுகக் கூறலால், அவர் ஆரோன் என்னும் ஆசாரியனில் மேலான ஆசாரியன். ஆபிரகாமும் அவரை மேலான ஆசாரியனுகக் கனப்படுத்தினுன். $7^{1-10}$.

*b.* பழைய ஏற்பாட்டின் ஆசாரியரைப்போல இயேசுகிறிஸ்து நியாயப்பிரமாணத்தினலன்றி அழியாத ஜீவனுக்குரிய வல்லமையால் ஆசாரியன் ஆனர். $7^{11-17}$.

*c.* நம்மைக் குறைவின்றி மீட்டு ரட்சிக்க வல்ல ஆசாரியனுகவே கடவுள் இயேசுவை நியமித்தார். $7^{18-25}$.

*d.* அவர் பரிசுத்தராயும், வானங்களில் உயர்ந்தவராயும், ஒரே பலியை இடுகிறவராயும் இருப்பது அவர் மெய்யான ஆசாரியனுதற்கு அத்தாட்சியாம். $7^{26-28}$.

*e.* அவர் மனுஷரால் செய்யப்பட்ட ஸ்தலத்தில் அல்ல, கடவுளால் ஸ்தாபிக்கப்பட்ட மெய்யான கூடாரத்தில் ஆசாரிய ஊழியம் செய்யும் ஆசாரியன். $8^{1-6}$.

*f.* நாம் பரிசுத்தமாவதற்கு ஏதுவாகிய நிலைபெற்ற புதிய உடன்படிக்கையைச் செய்வித்தவர் அவர். $8^{7-13}$.

*g.* பழைய ஏற்பாட்டின் காலத்தில் மகா பரிசுத்த ஸ்தலம் மறைந்ததினுல் பழைய ஏற்பாடு குறைவாயிருந்து, குறைவற்ற புதிய ஏற்பாட்டைச் சுட்டிக் காட்டுகிறது. $9^{1-10}$.

*h.* பழைய ஏற்பாட்டின் காலத்தில் பிரதான ஆசாரியன் வருஷத்தில் ஒருதரம் மகா பரிசுத்த ஸ்தலத்துக்குட் புகுந்து, குறிப்பாகச் செய்ததை, இயேசுகிறிஸ்து தமது இரத்தத்தைச் சிந்தி உண்மையாகவே செய்து முடித்தார். $9^{11-14}$.

*i.* இயேசு இட்ட பலி, புதிய உடன்படிக்கையை உறுதிப்படுத்துகிறது. $9^{15-28}$.

*j.* பழைய ஏற்பாட்டின் ஆசாரியர் மீண்டு மீண்டு பலி செலுத்தினது அந்தப் பலி பலன் தராததற்கு அத்தாட்சி. இயேசுஇட்ட ஒரே பலி, குறைவற்ற பலன் தரும். $10^{1-18}$.

C. $10^{19}$-$12^{29}$. **முன்றம்பாகத்தில்** நூலாசிரியன் ஆசாரியனுகிய இயேசு இட்ட பலியையும், அதன் பலனையும் நினைத்து, கிறிஸ்தவர்கள் செய்யவேண்டியதை உணர்த்துகிருன். கிறிஸ்தவர்கள் இஸ்ரவேலரைப்போல விசுவாசிக்கவேண்டும்.

*a.* நூலாசிரியன் முன் சொன்னவைகளை நினைப்பூட்டி இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கும் விசுவாசத்திலே நிலைநிற்க புத்தி சொல்லி ($10^{19-26}$),

*b.* மறுதலிக்கிறவர்களுக்கு வரும் தண்டனையையும் ($10^{26-31}$),

*c.* அவர்கள் முந்திக் காட்டின உறுதியையும் ($10^{32}$-$11^{2}$),

*d.* திருஷ்டாந்தத்தினுல் ($11^{3-40}$),

*e.* துன்பத்திலும் விளங்கிநிற்கும் கடவுளுடைய அன்பையும் ($12^{1-11}$),

*f.* பாவப் பற்றுதலோடு நாம் செய்ய வேண்டிய போராட்டத்தையும் ($12^{12-17}$),

*g.* உண்மையுள்ளவர்கள் அடையும் வீடாகிய பேரின்பத்தையும் காட்டித் தன் போதனையை வலியுறுத்துகிருன். $12^{18-29}$.

D. **முடிவுரை.** $13^{1-19}$. பலவகை புத்திமதிகள்.

*a.* கிறிஸ்தவர்களுக்கு ஏற்ப நடக்கவும் ($13^{1-6}$),

*b.* யூதர்களையும் அவர்களுடைய மதத்தையும் விட்டுக் கிறிஸ்தவ சபையில் உண்மையாக இருக்கவும் ($13^{7-16}$),

*c.* சபையின் தலைவர்களுக்குக் கீழமைந்து, தனக்காக வேண்டுதல் செய்யவும் ($3^{17-19}$), நூலாசிரியன் புத்திசொல்லி,

*d.* வாழ்த்துதல் கூறி ($13^{20-25}$) நிருபத்தை முடிக்கிருன்.

**எபிரெயர்.** Hebrews. இஸ்ரவேல் காண்க.



தற்கால எபிரோன் பட்டணம்.

**எபிரோன், எப்ரோன்.** Hebron, Ebron

1. கோகாத்தின் மூன்றும் மகன். யாத் $6^{18}$.

2. கோராகின் தகப்பன். 1 நாளா $2^{42}$.

3. = *Hebron*. எருசலேம் பட்டணத்துக்கு 20 மைல் தெற்கேயுள்ள ஒரு பட்டணம். இதின் முதற்பெயர் கீரியாத்அர்பா. இதின் எல்லைக்குள் இருந்த மக்பேலா என்னும் கல்லறையை ஆபிரகாம் எப்பெரோன் என்பவனிடத்திலிருந்து வாங்கினான். ஆதி $23^{2}$. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் பிரவேசித்தபோது ராக்ஷதரைப்போன்ற மூன்று ராஜாக்கள் இதை ஆண்டார்கள். எண் $13^{22}$. காலேப் இதைப் பிடித்துச் சுதந்தரமாக்கிக் கொண்டான். யோசு $14^{12}$. தாவீது எருசலேமைப் பிடிக்கும்வரையும் இங்கே ஏழரை வருஷம் அரசாண்டான். 2 சாமு $5^{5}$. அப்சலோம் இந்த இடத்தில் கலகம் செய்தான். 2 சாமு $15^{7}$. யூதர்கள் சிறைபிடிக்கப்பட்டுப் போனபிறகு ஏதோமியர் இதைக் கைப்பற்றினார்கள். நெகேமியாவின் காலத்தில் யூதர்கள் மறுபடியும் இதைத் தங்கள் வசமாக்கினார்கள். நெகே $11^{25}$.

**எபூசியர், எபூசு, யெபூசியர்.** **Jebuzites, Jebus.** *தாவீது அரசன் எபூசைப் பிடிக்குமுன் அதில் வசித்த ஒரு கானானிய கோத்திரம் எபூசியரே. பிற்பாடு இந்த ஊருக்கு எருசலேம் என்று பெயர் வழங்கிவந்தது. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் பிரவேசித்தபோது இவர்களை ஆண்ட ராஜனின் பெயர் அதோனிசேதேக். யோசு $10^{3}$ நியா $19^{11}$ 2 சாமு $5^{6}$.* **எருசலேம்** *காண்க.*

**எபெத்மெலேக்.** **Ebed-Melech.** *[ராஜாவின் ஊழியன்]. எரேமியா தீர்க்கதரிசிக்கு உதவிசெய்த ஒரு எத்தியோப்பியன். எரே $38^{7}$.*

**எபெனேசர்.** **Ebenezer.** *[உதவியின்கல்].*

*1. உடன்படிக்கைப்பெட்டி இழந்துவிடப்பட்ட ஓர் போர்க்களம். 1 சாமு $4^{1}$.*

*2. பெரிய ஜெயம் அடைந்த போர்க்களம். 1 சாமு $7^{12}$. இதற்கு இந்தக் கல் ஜெய சின்னத்துக்காக நாட்டப்பட்டது.*

**எபேசியர் நிருபம்.** **The Epistle to the Ephesians.** *பரி. பவுல் ரோமாபுரியிலே சிறையாய் இருந்தபோது இந்த நிருபத்தை எழுதி, கொலோசெயர், பிலேமோன் நிருபங்களோடு இதையும் தீகிக்குவினிடம் கொடுத்து அனுப்பினான்.*

**I. இந்நிருபம் யாருக்கு எழுதப்பட்டது?**— *இதின் முகவுரையில் 'எபேசு' என்று சொல்லியிருக்கும் பதம் இரண்டு பூர்வீக கையெழுத்துப்பிரதிகளில் இல்லாததினாலும், இதில் எழுதினவைகள் பொதுவாய் இருக்கிறதினாலும், இது எபேசியருக்குமாத்திரம் அல்ல, சின்ன ஆசியாவின் சபைகளுக்குப் பொதுவாய் எழுதப்பட்டது என்று வேதசாஸ்திரிகள் அநேகர் நினைக்கிறார்கள். அப்படியானால், இது லவோதிக்கேயா சபைக்கு எழுதின நிருபமாய் இருக்கலாம். கொலோ $4^{16}$.*

**II. நிருபத்தின் நோக்கம்.** — *எபேசியர் நிருபத்தையும், மற்ற நிருபங்களையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் மற்ற நிருபங்கள் கிறிஸ்தவ சபையிலுள்ள தீமைகளைக் கண்டிக்கவும், கிறிஸ்தவமார்க்க கொள்கைகளை ஸ்திரப்படுத்தவும் எழுதியிருக்கிறதாகத் தோன்றுகின்றன. இந்த நிருபமோ யூதர்களும், புறஜாதிகளும் கிறிஸ்துவுக்குள் ஐக்கியப்பட்டு அவருடைய உத்தம ஆலோசனை நிறைவேறுகிறதைக் காட்டும்படி எழுதப்பட்டிருக்கிறது.*

**III. முக்கிய போதனைகள்.**—*(1) கிறிஸ்தவ சபையானது தேவன் ஆதிமுதலாய்க் கொண்ட ஆலோசனையின் நிறைவேறுதல். கிறிஸ்தவ சபை சரீரம்; கிறிஸ்து அதற்குத் தலையாய் இருக்கிறார். $1^{23}$ $2^{16}$ $3^{6}$ $4^{12}$ $4^{16}$. கிறிஸ்தவ சபை கட்டடம்; கிறிஸ்து அதற்கு மூலைக்கல். $2^{21}$. சபை மனைவி; கிறிஸ்து தலைவன். $5^{23-27}$. (2) கிறிஸ்து செய்த பிராயச்சித்தம் இவ்வுலகத்தில் மாத்திரம் அல்ல, பரலோகத்திலும் முக்கியமானது. $1^{10. 14}$ $2^{7}$ $3^{10}$. (3) பரிசுத்தாவியின் ஊழியத்தைக்குறித்து இந்த நிருபத்தில் விவரமாய்ச் சொல்லியிருக்கிறது. $1^{13. 17}$ $2^{18}$ $3^{16}$ $4^{3. 30}$ $5^{9}$. (4) ஐக்கியத்தையும் அதை உண்டாக்கும் குணாதிசயங்களையும் காட்டி அதைப்பற்றிக் கிறிஸ்தவர்களுக்குச் சொல்லும் புத்தி போதனை. $4^{1-7. 15. 25-32}$ $5^{2}$. (5) கிறிஸ்தவ இல்லற ஜீவியம். $5^{22}$-$6^{9}$. கிறிஸ்தவ போர்வீரனைப்பற்றி விவரமாய்ச் சொல்லியிருக்கிறது. $6^{10-18}$.*

**IV. இந்நிருபம் பரி. பவுல்தான் எழுதினது.**—*சிலர் இந்த நிருபத்துக்கும் இதற்கு முந்தி எழுதப்பட்ட நிருபங்களுக்கும் பாஷை நடையிலும், அவைகளிலுள்ள கொள்கைகளிலும் வித்தியாசம் இருக்கிறது என்றும்; இதில் 'அப்போஸ்தலர்கள், தீர்க்கதரிசிகள்' ($3^{6}$ $4^{13}$) என்பவர்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறவைகள் பிற்காலத்தில் எழுதப்பட்டவைகள் என்றும் எண்ணினதினால் இந்த நிருபம் பரி. பவுலின்காலத்தில் அல்ல, பிற்காலத்திலே எழுதப்பட்டது என்பது அவர்கள் துணிவு.*

*இதற்கு மாறுத்தரமாக:*

*1. அந்த சமயத்திலே எழுதப்பட்ட கொலோசெயர், பிலிப்பியர் நிருபங்களும் இந்த நிருபமும் பாஷைநடையில் ஒன்று*

தான். பவுல் மற்ற நிருபங்களில் வழங்கியிருக்கும் பதங்கள் இதிலும் உண்டு.

2. நூலாசிரியன் பொதுவாகச் சபைகளைப்பற்றியும், கிறிஸ்து ஆதியிலிருந்து எல்லாச் சிருஷ்டிப்புக்கும் காரணகர்த்தர் என்பதைப்பற்றியும் எழுதினதினால், சில வருஷங்களுக்கு முன்னே தெசலோனிக்கேயருக்கு எழுதின நிருபத்திற்கும் இதற்கும் வித்தியாசம் முதலிலே தோன்றினாலும், அவைகளில் எழுதப்பட்டவைகள் ஒன்றுக்கொன்று விரோதமானவைகள் அல்ல. மேலும், இயேசுகிறிஸ்து உடனே திரும்பிவராமல் அவர் கடவுளுடனே எல்லாரையும் வரவர ஐக்கியப்படுத்தித் தமக்குள்ளே கடவுளுடைய சித்தமெல்லாம் நிறைவேற்றுவார் என்று இதில் சொன்னதினாலே, பரி. பவுல் இதற்கு முந்தி எழுதின நிருபங்களில் காட்டியிருக்கும் எண்ணங்களுக்கு இது எதிராய் இல்லை. ஏறக்குறைய மூன்று வருஷம் பரி. பவுல் சபைகளைக் கண்டு சந்திக்காமலும் சபைகளின் விஷயங்களில் பிரவேசியாமலும் ரோமாபுரிக்கு வந்து அதின் மகிமையைப் பூரணமாய்ப் பார்த்தபின், சிறையில் இருந்த காலத்தில் கிறிஸ்தவ ராஜ்யத்தைக் குறித்து யாதொரு ஆலோசனையும் செய்யாமல் இருந்திருப்பானோ? அவன் அதைப்பற்றித் தீர்க்கமாய் ஆலோசித்திருப்பான் என்று நாம் எண்ணவேண்டும். அப்படியிருக்க முன்னிருந்த நிருபங்களைவிட இந்த நிருபத்தில் அநேக காரியங்களைப்பற்றித் திட்டமாய் எழுதியிருப்பது ஆச்சரியமா?


அரங்கசாலையிலிருந்து காணப்படும் பாழாய்ப்போன எபேசு.

3. 'அப்போஸ்தலர்' 'தீர்க்கதரிசிகள்' இவர்களைப்பற்றி இதில் பேசுவதுபோலவே இதற்கு முந்திக் கொரிந்தியருக்கு எழுதின நிருபத்திலும் எழுதியிருக்கிறான். 1 கொரி $15^{28}$.

ஆதலால் பரி. பவுல் இந்த நிருபத்தை எழுதவில்லை என்று ஆட்சேபிப்பது எப்படி?

மேலும், இந்த நிருபம் பிற்காலத்தில் இன்னொரு கிறிஸ்தவன் எழுதினது என்றால் அவன் யார்? அவன் இதைப் பரி. பவுலின் நிருபங்களோடு சேர்த்தது எப்படி?

மேலும் பாரம்பரியத்தினாலே பவுல்தான் இதை எழுதினான் என்று விளங்குகிறது. ஆதிபிதாக்கள் இதை ஒத்துக்கொள்ளுகிறார்கள். இந்த நிருபத்தை அதிக ஆராய்ச்சியோடு வாசிக்கிறவர்கள் இதைப் பரி. பவுல்தான் எழுதினான் என்று காண்பார்கள் என்பதற்கு ஐயமே இல்லை.

**V. மற்ற நிருபங்களுக்கும் இதற்கும் உள்ள சம்பந்தங்களிற் சில.**

1. கொரிந்தியருக்கு எழுதின நிருபம். 'பொருள்.' 1 கொரி $1^{15}$. 'சுவிசேஷத்தின் இரகசியம்.' 1 கொரி $2^{7}$. ஆவியின் ஊழியம். 1 கொரி $2^{10}$ $12^{4}$. கிறிஸ்துவுக்குள் எல்லாம் அடங்கி இருக்கிறது. 1 கொரி $15^{24}$.

2. பிலிப்பியருக்கு எழுதின நிருபம். கிறிஸ்துவின் மகிமை. பிலி $2^{9}$ எபே $1^{20}$. உண்மையான விருத்தசேதனம். பிலி $3^{3}$ எபே $2^{11}$. ஐக்கியம். பிலி $1^{27}$ எபே $6^{17.18}$. கிறிஸ்தவ நகராதீனம். பிலி $1^{27}$ $3^{20}$ எபே $2^{12.19}$.

**எபேசு. Ephesus.** ரோமை ராஜ்யத்திலுள்ள சின்ன ஆசியாவுக்குத் தலை நகரியாகிய இது கடலோரத்திலிருந்து மூன்று மைல் தூரம் ஒரு ஆற்றின் கரையில் இருந்த ஒரு பெரிய துறைமுகம். இதிலிருந்து சின்ன ஆசியாவிலுள்ள மற்றப் பட்டணங்களுக்குப் பாதைகளிருந்ததினால், இங்கிருந்தும் கிரேக்கு இத்தாலியாமுதலிய தேசங்களிலிருந்தும் பிரயாணிகளும் வியாபாரிகளும் போக்குவரவு செய்வார்கள். இதின் பக்கத்தில் ஒரு சிறிய குன்றின்மேல் கட்டப்பட்டிருந்த மிகவும் அழகான கோவில் ஒன்றில் தியானாள் என்னும் தேவியை வணங்கும்படி லட்சக்கணக்கான ஜனம் வந்து கூடும். **தியானாள்** காண்க. இங்கே ஒரு மலைச்சார்பில் 24,000 ஜனம் கொள்ளக்கூடிய அரங்கசாலை ஒன்று

வெட்டப்பட்டிருந்தது. அதின் படம் 30-ம் பக்கம் பார்க்க. இந்தப் பட்டணத்திலுள்ள பெரியோர்கள் 'ஆசியாநாட்டுத் தலைவர்கள்' என்னப்படுவோர்கள். அப் 19³¹. இங்கே ரோமை ராஜ்யத்தின் நியாயசங்கம் இருந்தது. இது ஆசியாநாட்டின் தேசாதிபதி இருந்த மத்தியஸ்தானம். இங்கே யூதர்கள் அநேகர் இருந்தார்கள். இந்தப் பட்டணத்துக்குப் பரி. பவுலும் தீகிக்கும் தீமோத்தேயுவும் இன்னும் அநேக கிறிஸ்தவர்கள் வந்ததுமல்லாமல் அதைப்பற்றி நன்றாய் அறிந்திருந்தார்கள். பாரம்பரியத்தின்படி பரி. யோவான் அநேக வருஷகாலம் இதிலே கண்காணியாய் இருந்தான். எபேசு பட்டணத்தில் கிறிஸ்தவ மார்க்கத்துக்கு விரோதமாய்ப் பகை எப்பொழுதும் இருந்தது. 1 கொரி 15³² 16⁹ 2 கொரி 1⁸ அப் 18¹⁹ 19¹⁷ 20¹⁷ 21²⁹ 1 தீமோ 1⁴ 2 தீமோ 4¹² எபே 6²¹ கொலோ 4¹⁰ 1 பேது 5¹³ வெளி 1¹¹ 2¹.

**எபேஸ் தம்மீம்.** **Ephes - Dammim.** 1 சாமு 17¹ = பாஸ் தம்மீம். 1 நாளா 11¹³.

**எப்சிபாள்.** **Hephzi-bah.** [அவளில் என் பிரியம்].

1. ராஜாவாகிய மனாசேயின் தாய். 2 இரா 21¹.

2. உன்னத சீயோனுக்கு உவமானமாய்ச் சொல்லப்படும் பெயர். ஏசா 62⁴.

**எப்பத்தா.** **Ephphatha.** இப்பதத்திற்குச் சீரிய பாஷையில், 'திறந்திருக்கவேண்டும்' என்று அர்த்தமாம். இயேசுகிறிஸ்து பேசினவைகளில் இந்தப் பதமும், இன்னும் சில சீரிய பதங்களும் இருப்பதினாலே அக்காலத்தில் மற்ற யூதர்களைப்போல் அவர் வழக்கமாய்ச் சீரியா என்னும் அரமேயா (*Aramaean*) பாஷையை எப்பொழுதும் பேசிக்கொண்டார். மாற் 7³⁴. இந்தப் பாஷையும் அக்காலத்தில் யூதர்கள் பேசின 'எபிரெய' பாஷையும் ஒன்றுதான். அப் 21⁴⁰.

**எப்பனேத்து.** **Epaenetus.** பவுலை நேசித்தவர்களில் ஒருவன். ஒருவேளை இவன் எபேசு பட்டணத்தானாய் இருக்கலாம். ரோ 16⁵.

**எப்பா.** **Ephah.**

1. **அளவு** காண்க.

2. ஒரு யூதன். 1 நாளா 2⁴⁷.

**எப்பாப்பிரா.** **Epaphras.** ஒரு கொலோசெயன். கொலோ 1⁷ 4¹². இவன் பவுலோடு காவலில் இருந்தவன். பிலே 1²³.

**எப்பாப்பிரோதீத்து.** **Epaphroditus.** பிலிப்பியர்கள் இவன் மூலமாய் ரோமாபுரியிலே சிறையாக்கப்பட்ட பவுலுக்கு உதவி செய்தார்கள். பிலி 2²⁵ 4¹⁸. இவன் ரோமாபுரியிலே அதிக ஊக்கத்தோடு தேவ ஊழியம் செய்தவன். பிலி 2²⁶· ²⁷.

**எப்பாள்.** **Ephah.** காலேபின் மறுமனையாட்டி. 1 நாளா 2⁴⁶.

**எப்பிக்கூரர்.** **Epicureans.** எப்பிக்கூருஸ் கி-மு. 307-ஆம் வருஷத்தில் அத்தேனே பட்டணத்துக்கு வந்த ஒரு கிரேக்க தத்துவ சாஸ்திரி. இன்பமே கதி என்பது இவன் கொள்கை. இதினால் மனிதர் சிற்றின்பத்தை அல்லாமலும் பயம் துக்கம் நோவு துன்பம் முதலியவற்றையல்ல, எல்லாவற்றிலும் மனரம்மியத்தை நாடி, அதைப் பெற்றுக்கொள்ளவேண்டும் என்பது அவன் கருத்து. அக்காலத்தில் கிரேக்கர் வணங்கின தேவர்கள் உலகத்தைச் சிருஷ்டிக்கவில்லை என்றும்; தற்செயலாய் அணுக்கள் சேர்ந்து உண்டானது என்றும்; மனிதர் விஷயத்தில் தேவர்கள் பிரவேசிக்கமாட்டார்கள் என்றும்; மரணத்தில் நாம் ஒன்றும் உணருகிறதில்லை என்றும்; மரணத்துக்குப்பிறகு நமது ஆவியின் நிலைமையைப்பற்றி நமக்கு யாதொரு அக்கறையும் இல்லை என்றும் போதித்தான். இவன் தேவன் இல்லை என்று சொல்லாவிட்டாலும் இவன் நாஸ்திகரில் ஒருவன் என்று அநேகர் எண்ணுவார்கள். அப் 17¹⁸. அப்படியிருக்க முன்னிருந்த தேவர்களை வணங்கினவர்களின் மனதிலே சந்தேகம் உண்டானதினால் அவர்களில் உண்மையை விரும்பினவர்கள் இயேசுகிறிஸ்துவைப்பற்றிக் கேட்பதற்கு மனதில் ஆயத்தமாய் இருந்தார்கள். இவ்விதமாய் இந்த நாஸ்திக மதம் கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வழி திறந்தது.

**எப்பிராத்தா, எப்ராதா.** **Ephratah.**

1. இதற்குக் 'காலேபின் எப்ராதா' என்றும் விசேஷ பெயர். 1 நாளா 2²⁴. இதைப் பற்றி வேறொன்றும் தெரியாது.

2. **பெத்லகேம்** காண்க.

**எப்பிராயீம்.** **Ephraim.** [செழிப்புள்ள நாடு].

1. இவன் யோசேப்பின் மூத்த மகன். இவன் தாய் ஆஸ்னாத் என்னும் எகிப்திய ஸ்திரீ. ஆதி 41⁵⁰. யாக்கோபு இவனைத் தன் புத்திரர்களில் சேர்த்தான். ஆதி 48¹⁴.

2. எப்பிராயீம் கோத்திரம். முதலில் எப்பிராயீம் பெரிய கோத்திரம் அல்ல. எண் 1³³ 26³⁷. முதலில் எப்பிராயீம் கோத்திரத்தாரும் மனாசே கோத்திரத்தாரும் தங்களைப் பிரிக்காமல் யோசேப்பின் கோத்திரத்தார் என்று நினைத்தார்கள். 2 சாமு 19²⁰ 1 இரா 11²⁸. யெரொபெயாம் என்னும் இஸ்ரவேலின் முத

லாம் ராஜா எப்பிராயீம் கோத்திரத்தான். 1 இரா $1^{26}$. இவர்களுடைய நாடு கானான் தேசத்தில் உத்தம பாகம்.

3. எருசலேமுக்கு வடக்கே பாலாத்சோர் என்னும் ஊருக்குச் சமீபமாய் உள்ள ஒரு ஊர். 2 சாமு $13^{23}$.

4. லாசருவை உயிரோ டெழுப்பினதற்குப் பிற்பாடு இயேசு போன எருசலேமுக்கு வடமேற்கே உள்ள ஒரு ஊர். யோவா $11^{54}$.

5. எப்பிராயீம் காடு. இது யோர்தானுக்குக் கிழக்கே இருந்திருக்கலாம். 2 சாமு $18^{6}$.

6. எப்பிராயீம் மலை. இது மத்திய பலெஸ்தீனாவிலுள்ள மலைநாடு. நியா $7^{24}$.

**எப்பிராயீம் வாசல்.** எருசலேம் காண்க.

**எப்பிரோன்.** Hebron. எபிரோன் காண்க.

**எப்புனே, எப்புன்னே.** Jephuneh.

1. காலேபின் தகப்பன். எண் $13^{6}$.

2. 1 நாளா $7^{38}$.

**எப்பெரோன்.** Ephron.

1. ஆபிரகாமுக்கு மக்பேலா விற்ற ஏத்தியன். ஆதி 23 அதி.

2. யூதாவின் வட எல்லையிலுள்ள மலைநாடு. யோசு $15^{9}$.

**எப்பேர், ஏப்பேர்.** Hepher, Epher.

1. எண் $26^{32}$.

2. 1 நாளா $4^{6}$.

3. 1 நாளா $11^{36}$. 4. ஒரு ஊர். யோசு $12^{17}$. 5. ஆபிரகாமின் சந்ததியாரில் ஒருவன். ஆதி $25^{4}$.

6. 1 நாளா $4^{17}$.

7. 1 நாளா $5^{24}$.

**எப்ராத்தா.** Ephrathah. எப்பிராத்தா காண்க.

**எமோரியர்.** Amorites. அம்மோரியர் காண்க.

**எமோர், ஏமோர்.** Hamor. [ஆண் கழுதை]. இவன் சீகேமின் தகப்பன். ஆதி $33^{19}$ 34 அதி. யோசு $24^{32}$ $9^{28}$.

சீகேமில் குடியேறினவர்கள். 'எமோரின் மனுஷர்' ஆதலால் எமோர் என்பது ஒரு கோத்திரத்தைக் குறிக்கிறது.

**எம்தான்.** Hemdan. அம்ராம் காண்க.

**எம்மாவு.** Emmaus. எருசலேமிலிருந்து ஏறக்குறைய 8 மைல் தூரத்திலுள்ள ஒரு ஊர். லூக் $24^{13}$. இந்த இடம் இப்போது தெரியவில்லை.

**எயூஷ்.** Jeush. எகூஷ் காண்க.

**எயோதியாள்.** Euodia. இவள் ஒருவேளை பிலிப்பு பட்டணத்திலுள்ள சபையில் இருந்த ஊழியக்காரி. பிலி $4^{2}$.

**எராபோலி.** Hierapolis. [பரிசுத்த பட்டணம்]. சின்ன ஆசியாவிலே கொலோசெயா லவோதிக்கேயா பட்டணங்களுக்குச் சமீபமாய் உள்ள ஒரு ஊர். இதில் ஓர் வெந்நீர் ஊற்றுண்டு. கொலோ $4^{13}$.



மேற்கிலிருந்து காணப்படும் எரிகோ சமபூமி.

**எப்ரோன்.** Hebron. எபிரோன் காண்க.

**எப்ரோனா.** Ebronah. எண் $33^{34}$.

**எப்லால்.** Ephlal. 1 நாளா $2^{37}$.

**எமீமாள்.** Jemimah. ['நான் சுகம்,' அல்லது 'புறா']. யோபின் புத்திரிகளில் ஒருத்தி. யோபு $42^{14}$.

**எமுவேல் = நேமுவேல்.** Jemuel. ஆதி $46^{10}$ எண் $26^{12}$.

**எரிகோ.** Jericho. யோர்தான் நதியின் பள்ளத்தாக்குக்கு மேற்கே சாக்கடலின் வட எல்லையிலிருந்து வடக்கே 5 மைல் தூரமாய் உள்ள ஒரு ஊர். இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வந்து இந்த ஊரை அழித்தார்கள். யோசு 1-7 அதி. பிறகு இது ஒரு சிறு கிராமமானது. ஆனோன் அவமதித்த தாவீதின் சேனாபதிகள் இங்கே ஒளித்திருந்தார்கள். 2 சாமு $10^{5}$. மறுபடியும் ஈயேல் இதைக்

கட்டினான். யோசுவா சொன்ன சாபத்தை நீக்கும்படி அவன் தன் இரண்டு பிள்ளைகளைப் பலியாகச் செலுத்தினான் என்று சிலர் நினைத்தாலும், அது நிச்சயமானது என்று தோன்றுகிறதில்லை. 1 இரா $16^{34}$. தீர்க்கதரிசி புத்திரரின் சங்கம் இங்கே இருந்தது. 2 இரா $2^{5}$. இஸ்ரவேலர் தாங்கள் யூதாவிலிருந்து பிடித்தவர்களை இங்கே விடுதலையாக்கினார்கள். 2 நாளா $28^{15}$. பாபிலோனியர் இங்கே சிதேக்கியாவை ஜெயித்தார்கள். 2 இரா $25^{5}$. பர்திமேயு சகேயு இங்கே இருந்தார்கள். இதற்குப் போகும் வழி நல்ல சமாரியனின் உவமையில் சொன்ன இடம். மாற் $10^{46}$ லூக் $19^{1}$ $10^{30}$. இதின் நிலம் மனுஷர் ஜீவிப்பதற்குச் சுகமான இடமாயில்லாவிட்டாலும் பயிர் செய்வதற்கு அதிக செழிப்பான பூமி.

**எரிச்சல்**. Wrath. ஆதி $4^{5}$ யோவா $7^{23}$ ரோ $10^{19}$.

**எரிபந்தம்**. Inflammation. வியாதி காண்க.

**எரிபாயி**. Jeribai. தாவீதின் போர்வீரர்களில் ஒருவன். 1 நாளா $11^{46}$.

**எரிமோத், எரேமோத், யெரிமோத்**. Jeremoth, Jerimoth.

1. 1 நாளா $7^{8}$. 2. 1 நாளா $8^{14}$.
3. 1 நாளா $23^{23}$. 4. 1 நாளா $25^{22}$.
5. 1 நாளா $27^{19}$. 6. எஸ்றா $10^{26}$.
7. எஸ்றா $10^{27}$. 8. எஸ்றா $10^{29}$.
9. 1 நாளா $7^{7}$. 10. 1 நாளா $12^{5}$.
11. 1 நாளா $24^{30}$. 12. 1 நாளா $25^{4}$.
13. 2 நாளா $31^{13}$.
14. தாவீதின் மகன். 2 நாளா $11^{18}$.

**எரியா**. [யேகோவா காண்கிறார்].

1. *Irijah*. எரேமியா பிடித்த தலைவன். எரே $37^{13}$.

2. *Jeriah*. ஒரு லேவியன். 1 நாளா $23^{19}$.

**எரியோத்**. Jerioth. காலேபின் மனைவிகளில் ஒருத்தி. 1 நாளா $2^{18}$.

**எருசலேம்**. Jerusalem.

I. **நிலைமை**.—பலெஸ்தீனாவுக்குத் தலை நகரியாகிய இது அத்தேசத்தின் மலைநாட்டில் கட்டப்பட்டிருந்தது; இதற்குச் சுற்றிவர எல்லையாக இரண்டு பள்ளத்தாக்குகள் உண்டு. (i) கீதரோன் ஆறு அல்லது யோசபாத்தின் பள்ளத்தாக்கு. 2 சாமு $15^{23}$ யோவே $3^{2}$. இது வடக்கிலிருந்து தென்கிழக்காய்ப் போய் மறுபடி தெற்கே திரும்பி வரவர ஆழமாய் யூதா வனாந்தரம்வரையும் எட்டியிருக்கிறது. இது எருசலேமையும் ஒலிவ மலையையும் பிரிக்கிறது. (ii) இன்னோம்குமாரனின் பள்ளத்தாக்கு. எரே $7^{32}$. இது எருசலேமுக்கு வடமேற்கே இருந்து தென் கிழக்காய்ப் போய்ப் பட்டணத்திற்கு நேர் தெற்கே கீதரோன் பள்ளத்தாக்கோடு சேருகிறது. இன்னொரு பள்ளத்தாக்கு இந்த இரண்டு பள்ளத்தாக்குகளுக்கு ஊடாகப் போய் எருசலேமை இரண்டு பாகங்களாகப் பிரித்து கீதரோன் பள்ளத்தாக்கோடு சேருகிறது.

எருசலேம் பட்டணம் நாலு மலைக் குன்றுகளின்மேல் நாலுபாகமாகக் கட்டப்பட்டிருக்கிறது. 2 இரா $22^{14}$. அவையாவன: அக்கிரா (*Acra*), பெசெதா (*Bezetha*), சீயோன் (*Zion*), ஓபேல் (*Ophel*). ஓபேலில் மோரியா (*Moriah*) ஒரு பாகம். இந்தப் பெயர்கள் நமக்குத் தெரிந்திருந்தும் ஒவ்வொரு பாகத்தின் எல்லையைப்பற்றித் திட்டமாய்ச் சொல்ல முடியாது.

எருசலேமில் நீரூற்றுக்கள் குறைவான படியினாலே ஜனங்கள் பட்டணத்தின் வெளியில் வெட்டியிருக்கும் கேணிகளிலிருந்து மழைகாலத்தில் தண்ணீர் வந்து விழும்படி சாலகங்களைக் கட்டியிருந்தார்கள். 2 இரா $18^{17}$ $20^{20}$ ஏசா $7^{3}$. இவைகளில் விசேஷமாய் நமக்குத் தெரிந்தது சீலோவாம் குளம். தாவீது அரசன் சாலகத்தின் வழியாய்ப் போர்வீரரை அனுப்பி எருசலேமைப் பிடித்தான்.

II. **இதின் ஸ்தாபனம்**.

1. முதல் முதல் இதைக் கட்டினவன் இன்னானென்று நமக்குத் தெரியாது. வேதத்திற் சொல்லியிருக்கிறபடி சாலேமின் ராஜாவாகிய மெல்கிசேதேக் எருசலேமின் அரசனாய் இருந்தான் என்று சிலர் நினைக்கிறார்கள். ஆதி $14^{18}$. அப்படியானால் எருசலேம் கி-மு. 2300-ளவத்தில் கட்டப்பட்டது என்று தோன்றுகிறது. கி-மு. 1450-ளவத்தில் 'உருசலிம்' என்னும் ஊரின் அரசன் எகிப்து அரசனுக்குக் கொடுத்த செங்கல்லில் பதித்த கடிதங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. எபிரெயர்கள் முதலில் இதற்கு 'எபூசு' என்னும் பெயர் இட்டிருந்தாலும் (யோசு $18^{28}$) ஆதி தொடங்கி இதற்கு எருசலேம் என்னும் பெயர்தான் இருந்ததென்று அந்தக் கற்களிலுள்ள அட்சராதிகளைக்கொண்டு விளங்கும்.

2. தாவீது இதைப் பிடிக்கும்வரையும் இஸ்ரவேலருக்கு இது அந்நியமாய் இருந்தது. நியா $19^{12}$. எபூசியரிடமிருந்து இதைப் பிடித்த ஓபேல் பாகமும் சீயோன் பாகமும் 'தாவீதின் நகரமாய்' இருந்தது. 2 சாமு $5^{7}$.




ஒலிவமலையிலிருந்து காணப்படும் எருசலேம்.

இதற்குத் தாவீதும் சாலொமோனும் கட்டின 'மில்லோ' எது என்று தெரியாது. 2 சாமு $5^{9}$ 1 இரா $9^{15}$. தாவீது இதை முக்கிய பட்டணமாக ஸ்தாபித்து இதில் உடன்படிக்கைப் பெட்டியைக் கொண்டுவந்து (2 சாமு $6^{12}$), இதற்கு ஒரு தேவாலயம் கட்ட விரும்பித் தடையுண்டானதைக் கண்டபோதிலும் (2 சாமு $7^{4}$), எபூசியனாகிய அர்வனா என்பவனுடைய போர் அடிக்கிற களத்தில் அதைக் கட்டும்படி ஏற்பாடுசெய்தான். 2 சாமு $24^{16}$. 'தாவீது அரசன் நகரத்துக்கு வெளியே' சாலொமோன் பல கட்டடங்களைக் கட்டி

இவைகளைப் பட்டணத்தோடு சேர்க்கும்படி புதிய எல்லைகளைப் போட்டான். 1 இரா $9^{24}$.

3. யூதாவின் ராஜாக்கள் ஆண்டகாலத்தில் இப்பட்டணத்தின் நாலுபாகங்களும் வரவரப் பெரிதாக்கப்பட்டன. எசேக்கியா ராஜா சீலோவாம் சாலகத்தைக் கட்டினான் என்று தோன்றுகிறது. பல ராஜாக்கள் இந்தப் பட்டணத்தின் மதில்களைப் பழுதுபார்த்து, அவைகளைப் புதிதாய்க் கட்டினார்கள். சாலொமோன் கட்டின தேவாலயத்தை யோசியா பழுதுபார்த்தான். கி-மு. 932-௵த்தில் எகிப்திய அரசனாகிய சீஷாக் இதைப் பிடித்தபோது இதை அழிக்கவில்லை. கி-மு. 586-௵த்தில் நேபுகாத்நேச்சார் இதைப் பிடித்து முழுதும் அழித்தான்.



பெத்தானியாவிலிருந்து காணப்படும் எருசலேம்.

4. கி-மு. 537-௵த்தில் யூதர்கள் எருசலேமுக்குத் திரும்ப வர ஆரம்பித்த காலத்தில் அதையும் அதிலுள்ள தேவாலயத்தையும் மறுபடியும் கட்டத் தொடங்கினார்கள். தேவாலயம் கட்டி முடிந்திருந்தாலும் நெகேமியா சிறையிருப்பிலிருந்து வந்தபோது, அவனுடைய ஏவுதலினாலே கி-மு. 444-௵த்தில் அதின் மதில்களையும் கோட்டைகளையும் மறுபடியும் கட்டினார்கள். நெகேமியா புஸ்தகத்தை நாம் பார்த்தால் அவன் காலத்தில் கட்டின மதில்களையும் வாசல்களையும்பற்றி விவரமாய் அறியலாம். வாசல்கள் எவையென்றால்:

(*a*) இன்னோன் பள்ளத்தாக்கை நோக்கியிருக்கும் வாசல்கள்.

பள்ளத்தாக்கின் வாசல். நெகே $3^{13}$.
குப்பைமேட்டு வாசல். நெகே $3^{13}$.

(*b*) கீதரோன் ஆற்றை நோக்கியிருக்கும் வாசல்கள்.

ஊருணி வாசல். நெகே $3^{15}$.
தண்ணீர் வாசல். நெகே $3^{26}$.

(*c*) வடபக்கத்திலுள்ள வாசல்கள்.

குதிரை வாசல். நெகே $3^{28}$.
கிழக்கு வாசல். நெகே $3^{29}$.
மிப்காத் வாசல். நெகே $3^{31}$.
ஆட்டு வாசல். நெகே $3^{32}$ யோவா $5^{2}$.
மீன் வாசல். நெகே $3^{3}$.
பழைய வாசல். நெகே $3^{6}$.
எப்பிராயீம் வாசல். 2 இரா $14^{13}$.
மூலை வாசல். 2 இரா $14^{13}$.

தேவாலயத்துக்கு இன்னும் சில வாசல்கள் இருந்தன.

சூர் வாசல். 2 இரா $11^{6}$.
காவலின் பிறகே இருக்கிற வாசல். 2 இரா $11^{6}$.
சல்லெகெத் அல்லது மேற்புறமான வாசல். 1 நாளா $26^{16}$.
பர்பார் அல்லது வெளிப்புறமான வாசல். 1 இரா $26^{18}$.
கிழக்கு வாசல். எசே $11^{1}$.
அலங்கார வாசல். அப் $3^{10}$.

இவைகள் இருந்த இடங்களை ஆராய்ந்து அறியும்படி அநேகர் பிரயாசப்பட்டும் சிலவற்றைப்பற்றித்திட்டமாய் அறியவில்லை.

5. கி-மு. 333-௵த்தில் பெர்சியரின் அதிகாரத்தை கிரேக்கர் அழித்ததினாலே யூதர்கள் கிரேக்கருடைய ஆளுகைக்குட்பட்டார்கள். கி-மு. 168-௵த்தில் கிரேக்க அரசனாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் (*Antiochus Epiphanes*) என்பவன் யூதமார்க்கத்தை முழுதும் அழிக்கும்படி கருதி எருசலேமிலுள்ள தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, பல தேவதைகளை வணங்கும்படி யூதர்களை வருத்தப்படுத்தினான். இதினிமித்தம் மக்கபெயர் கலகம்பண்ணி எபிரெய ராஜ்யத்தை மறுபடியும் ஸ்தாபித்தார்கள். அவர்கள் சந்ததியார் ஒருவரோடொருவர் சண்டை செய்ததினாலே ரோமர்கள் கி-மு. 63-௵த்தில் படையெடுத்து வந்து

எருசலேமைப் பிடித்துத் தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கி, அதிலுள்ள பொக்கிஷங்களைக் கைப்பற்றிச், சில வருஷங்களுக்குப் பிறகு ஏரோதின் வீட்டாருக்கு அதையாளும் அதிகாரத்தைக் கொடுத்தார்கள்.

6. பெரிய ஏரோது கி-மு. 43-ஆம்த்தில் யூதேயாவை அரசாண்டு, எருசலேமை அலங்கரித்து, அதில் மாளிகைகளேயும், அந்தோனியா கோட்டையையும், இன்னும் இரண்டு கோட்டைகளேயும், ஒரு பெரிய அரங்கசாலையையும், விசேஷமாய்த் தேவாலயத்தையும் மிகவும் சிறப்பாய்க் கட்டினன்.

7. ஏரோது இறந்தபிறகு இயேசுவின் காலத்தில் எருசலேமைப்பற்றிய விசேஷம் ஒன்றும் இல்லை. அக்காலத்தில் கிறிஸ்தவர்களால் கணிசமாய் எண்ணப்பட்ட கல்வாரிமேடும், இயேசுவை அடக்கம்செய்த கல்லறையும் இருந்த இடங்கள் பிந்தின நூற்றாண்டுகளிலுள்ளவர்களுக்குக் குறிப்பாய் ஒன்றும் தெரியாது. தற்காலத்தில் சிலர் குறிக்கிற இடங்கள் அவைகள் இருந்த இடங்கள் அல்ல என்பது நிச்சயம்.

கி-பி. 66-ஆம்த்தில் யூதர்கள் கலகம் பண்ணினதினால் ரோமர்கள் வந்து எருசலேமை முற்றிக்கை போட்டு கி-பி. 70-ஆம்த்தில் அதை அழித்துப்போட்டார்கள்.

8. அநேக வருஷங்களுக்குப் பிறகு ரோமர்கள் அதை மறுபடியும் கட்டினார்கள். கி-பி. நாலாம் நூற்றாண்டில் கிறிஸ்தவர்கள் எருசலேமில் கட்டியிருக்கும் பரிசுத்த ஸ்தலங்கள் உண்மை என்று நம்பி அவ்விடங்களுக்கு யாத்திரை செய்தார்கள். கி-பி. 637-ஆம்த்தில் மகமதியர் எருசலேமைப் பிடித்துச் சிலகாலம் தவிர இதுவரையும் அதில் ஆளுகை செய்துவருகிறார்கள். இப்பொழுது மறுபடியும் அது பெரிய நகரமாய் இருக்கிறது.

9. எபிரெயர் தங்கள் சொந்தத் தேசத்தில் அல்லது தூரதேசத்தில் அல்லது சிறையிருப்பில் எங்கேயிருந்தாலும் தாவீதின் காலமுதல் அவர்கள் எருசலேம் பட்டணத்தின்பேரில் அதிக வாஞ்சையும் பிரியமுமுள்ளவர்களாய் எப்பொழுதும் அதை நினைத்து, மறுபடியும் தேவனுடைய ராஜ்யம் அங்கே ஸ்தாபிக்கப்படும் என்றும், எருசலேமுக்கு மேசியா வருவார் என்றும் எதிர்நோக்கி யிருக்கிறார்கள். சங் 137[5] ஏசே 40-48 அதி. ஏசா 66 அதி. ஆ. 'எருசலேம்' அல்லது 'சீயோனின் மகள்' என்பது யூதர்களை அல்லது தேவனுடைய ஜனங்கள் எல்லாரையும் குறிக்கிறது. ஏசா 1[1] 40[2] செப் 3[14].

இந்த நோக்கத்தின்படி ஆதி கிறிஸ்தவர்கள் தேவனுடைய குமாரனாகிய மேசியா ஸ்தாபித்த ராஜ்யத்திற்குப் 'புதிய எருசலேம்' அல்லது 'மேலான எருசலேம்' என்று சொன்னார்கள். கலா 4[26] வெளி 21[2].


தெற்கிலிருந்து காணப்படும் எருசலேம்.

நாம் இவ்விடத்தில் எருசலேமைப்பற்றி மிகச் சுருக்கமாய்ச் சொல்லி யிருக்கிறோம். ஆனால் இங்கே சொல்லி யிருக்கிறவைகளினால் எருசலேமின்சரித்திரமும் இஸ்ரவேலின் சரித்திரமும் ஒன்றுதான் என அறியவேண்டும்.

**எருசாள்.** Jerusha. யோதாம் ராஜாவின் தாய். 2 இரா 15[33].

**எருது.** Bull. கன்று காண்க.

**எருப்பேசேத்.** Jerubesheth. [வெட்கம் சண்டை செய்கிறது]. **கிதியோன்** காண்க.

**எரேமாயி.** Jeremai. எஸ்றா 10[33].

**எரேமியா.** Jeremiah.

1. ஒரு போர்வீரன். 1 நாளா 12[10].
2. இன்னொரு போர்வீரன். 1 நாளா 12[13].

3. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா 12⁴.

4. மனாசே கோத்திரத்தான். 1 நாளா 5²⁴.

5. யோசியாவின் மனைவிகளில் ஒருத்தியின் தகப்பன். 2 இரா 23³¹ 24¹⁸.

6. எரேமியா தீர்க்கதரிசியின் காலத்தில் ரேகாபியரின் தலைவன். எரே 35³.

7. ஒரு ஆசாரியன். நெகே 12¹.

8. இன்னொரு ஆசாரியன். நெகே 10².

9. பெரிய தீர்க்கதரிசி. அடுத்த நிபந்தம் காண்க.

**எரேமியா.** Jeremiah.

**I. எரேமியாவின் ஜீவிய சரித்திரம்.**—எருசலேம் நகரத்திலிருந்து வட கிழக்குத் திசையை நோக்கி நடந்துபோனால், தற்காலம் ஆனத்தா என்றும், பூர்வீகத்தில் ஆனதோத் என்றும் சொல்லப்பட்ட ஒரு ஊருக்கு ஒன்றேகால் மணிநேரத்தில் போய்ச் சேரலாம். அவ்வூருக்கும் சாக்கடலுக்கும் இடையில் ஒரு பெரிய பாலைவனம் இருக்கிறது. அந்த ஊரில் பரம்பரையாய் வசித்துவந்த ஒரு ஆசாரிய குடும்பத்தில் ஏறக்குறைய கி-மு. 650-ளவத்தில் எரேமியா பிறந்திருப்பான். அவன் வாலிபனாக இருக்கையில் யூத ஜனங்கள் யேகோவாவைச் சரியானபடி வழிபடவில்லை. யேகோவாவைத் தவிர வேறு தேவர்கள் உண்டென்றும், யேகோவா தங்கள் ஜாதிக்கேயுரிய தேவனென்றும் அவர்கள் நினைத்து, அவரைக் கானானியருடைய பொல்லாத சடங்காசாரங்களின்படி ஆராதித்துவந்ததோடு மேடான இடங்களில் சூரிய சந்திர நக்ஷத்திரங்களையும் சேவித்து, பல துன்மார்க்கமான சடங்குகளை அனுசரித்து வந்தார்கள். கி-மு. 621-ளவத்தில் ஒரு நியாயப்பிரமாணப் புஸ்தகம் எருசலேம் தேவாலயத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. அதின் பொருள் உபாகமம் என்னும் புஸ்தகத்தின் பொருளுக்கு ஒத்திருந்தது. யோசியா ராஜா அப்புஸ்தகத்தை அத்யந்த பயபக்தியோடு அங்கீகாரம் செய்து, அதிலே போதிக்கப்பட்டபிரகாரம் தன்னுடைய ராஜ்யத்தில் அதிக கண்டிதமான சீர்திருத்தம் செய்தான். 2 இரா 23 அதி. எரேமியா இந்தக் காரியங்களையெல்லாம் கருத்தாகக் கவனித்திருப்பான். ஆயினும் அந்த விஷயத்தில் அவன் ராஜாவுக்கு உதவி செய்திருப்பானென்பதற்கு நமக்கு அத்தாட்சியில்லை. ஒருவேளை, ராஜாவுடைய கண்டிப்பான ஏற்பாடுகளால் ஜனங்களுடைய இருதயம் சீர்ப்படவில்லையென்றறிந்து, அது பிரயோஜனமற்றது என்று நினைத்திருப்பான். 8⁸. ஐந்து வருஷங்களுக்குப் பின்பு (கி-மு. 616 அல்லது 617-ளவு), அவன் தீர்க்கதரிசன ஊழியத்திற்கு அழைக்கப்பட்டான். 1⁴⁻¹⁶. தன் தாயின் வயிற்றிலிருந்தே ஆண்டவர் இவ்வேலைக்குத் தன்னைத் தெரிந்துகொண்டாரென்று உணர்ந்து, அவன் அன்றுமுதல் நாற்பது வருஷ காலமாக (626-586), அந்த வேலையையே செய்தான். அவனுடைய சொந்தக் குடும்பத்தார், சொந்த ஊரார், எருசலேமிலுள்ள ஆசாரியர், கள்ளத் தீர்க்கதரிசிகள், ராஜாக்கள், சேனைத்தலைவர் யாவரும் அவனை விரோதித்தார்கள். 11²¹ 26⁸·⁹ 20² 37¹³ 36¹⁹·²⁶ 38⁴. அவன் உள்ளத்தில் அடிக்கடி வியாகுலம் உண்டானது. 9² 15¹⁶ 20¹⁴. ஆனாலும் முடிவுபரியந்தம் உண்மையுள்ளவனாக இருந்தான். கடைசியில் அவன் தன் சொந்த ஜனங்களுடைய கையினாலே கொலையுண்டானென்று பாரம்பரியமாய்ச் சொல்லப்படுகிறது. அவன் தன்னுடைய ஜனங்களினிமித்தம் இவ்வளவாகப் பாடுபட்டு, அவர்களால் புறக்கணிக்கப்பட்டதினாலே, அவன் கிறிஸ்துவுக்கு முன்னடையாளமான புருஷனென்று உண்மையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கி-மு. 608-ளவு யோசியா எகிப்து ராஜாவாகிய நேகோவோடு யுத்தஞ்செய்து, மெகிட்டோ என்னுமிடத்தில் ஜெயிக்கப்பட்டு மரித்தான். அந்தச் சம்பவத்தினாலே, யூதா ஜனத்திற்கு நேரிட்ட நஷ்டம் கொஞ்சமன்று. மார்க்கத்தைச் சீர்திருத்தின பக்தியுள்ள ராஜன் இப்படிக் கொலையுண்டு போனானேயென்று, அநேகம்பேர் அறிந்து தங்கள் பழைய வழக்கங்களுக்குத் திரும்பிப் போனார்கள். யோவாகாஸ் என்ற யோசியாவின் குமாரன் மூன்று மாதந்தான் அரசாண்டான். அதற்குப்பிறகு நேகோ அவனைப் பிடித்து, எகிப்துக்குக் கொண்டுபோய், அவனுக்குப் பதிலாக யோயாக்கீமை ராஜனாக வைத்தான். யோவாகாஸ் திரும்பவும் வரவேயில்லை. எரே 22¹⁰-லே அவனுக்காக எரேமியா செய்த புலம்பல் எழுதியிருக்கிறது. யோயாக்கீம், ராஜ்யத்தை முற்றிலும் கெடுக்கத்தக்க விதமாய் நடந்துகொண்டான். மார்க்கவிஷயங்களில் மனாசே ராஜாவினால் நேரிட்ட தீமைகள் யாவும் அவனுடைய காலத்தில் மறுபடியும் அதிகரித்தன. ராஜாங்கத்து விஷயங்களில் அவன் ஸ்திரமாய் ஒன்றையாவது செய்யாமல், கடைசியில் எகிப்து ராஜாவாகிய நேகோ பாபிலோன் ராஜாவாகிய நேபுகாத்நேச்சாரினால் முறியடிக்கப்பட்டபிறகு தான் பாபிலோன் ராஜாவுக்கிட்ட ஆணையை மூன்று வருஷத்துக்குள் மீறினது தன் தேசத்தின்மேல் அந்த ராஜாவின் கோபம்

மூளும்படி காரணமாய் இருந்தது. ஏழைகளை ஒடுக்கி, தான் ஆடம்பரமாய் வாழ்ந்து ($22^{13-17}$), தன் வார்த்தையை மீறிப் பேசினவர்களைக் குரூரமாய் நடத்திவந்தான். $26^{20-24}$. ஒரு கழுதையைப்போல அவன் புதைக்கப்படவேண்டுமென்று எரேமியா சொல்லுகிறான். $22^{18.19}$. அவனுடைய காலத்தில் எரேமியா அநேக முக்கியமான தீர்க்கதரிசனங்களைச் சொன்னான். ராஜாங்க விஷயங்களைக் குறித்து எரேமியா அக்காலத்தில் ஒரே ஒரு புத்திமதியைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான். அதாவது ராஜ்யம் நிலை பெற்று வாழவேண்டுமென்றால், எகிப்து ராஜாவை நம்பாமல், கர்த்தருடைய சித்தத்தால் ஜெயங்கொள்ளப்போகிற பாபிலோன் ராஜாவுக்குக் கீழ்ப்படியவேண்டும் என்பதே. இவ்வுறுதியான எண்ணம் எரேமியாவுக்குள்ளே இவ்வளவு தெளிவாயும் ஸ்திரமாயும் இருந்தது ஆச்சரியம். கி-மு. 605-ஆம் ஆண்டில் அந்த எண்ணம் மெய்யென்று பலமாய் ரூபிக்கப்பட்டது. கர்கெமீஸ் என்னுமிடத்தில் எகிப்து தேசத்து ராஜனாகிய நேகோவுடைய சேனைகளெல்லாம் பாபிலோனியரால் சின்னாபின்னமாய் முறியடிக்கப்பட்டன. 46-ம் அதிகாரத்தில் எரேமியாவுக்கு அது எப்படித் தோன்றிற்றென்று பார்க்கிறோம். அவன் பதின்மூன்று வருஷங்களாகச் சொல்லிவந்த காரியம் இதினாலே மெய்யென்று உறுதிப்பட்டது. பின்னும் சகல ஜாதியாரும் சில காலம் பாபிலோனுக்கு அடங்கி இருக்க வேண்டும் என்பது கடவுளுடைய சித்தம் என்று முன் சொன்னதைவிடப் பலமாகத் தெரிவித்தான். ஆனபோதிலும் எப்போதுமே அப்படி இருக்கமாட்டாது என்றும், ஜனங்களுடைய சிக்ஷை முடிந்தபிறகு ஒரு நல்ல காலம் பிறக்கும் என்றும், இஸ்ரவேல் ஜனம் எழுபது வருஷத்துக்குப் பின்பு சொந்தத் தேசத்துக்குத் திரும்பி வரும் என்றும், $25^{12}$-ல் போதித்தான். மூன்று வருஷத்துக்குப் பின்பு யோயாக்கீம் தான் பாபிலோனுக்குக் கட்டவேண்டிய கப்பம் கட்டாமல் நிறுத்த, நேபுகாத்நேச்சார் உடனே யுத்தத்திற்குச் சேனைகளைச் சன்னத்தமாக்கிக் கொண்டு யூதேயாவுக்கு வருகிறதற்குள் அவன் இறந்துபோனான். அவன் குமாரனாகிய யோயாக்கீன் பாபிலோன் அரசனால் சிறையாகக்கொண்டுபோகப்பட்டு, பாபிலோனில் முப்பத்தேழு வருஷகாலம் சிறையிலிருந்தான். அவனோடேகூட அநேக பெரியவர்களும் சிறையாகக் கொண்டுபோகப்பட்டார்கள். கி-மு. 597-ஆம் ஆண்டு எரேமியா அவர்களுக்கு ஒரு நிருபம் எழுதி, அத்தேசத்தில் வீடுகளைக் கட்டி, தோட்டங்களை யுண்டாக்கி, கலியாணஞ் செய்துகொண்டு, நிலையாயிருக்கும்படியான ஏற்பாடுகளைச் செய்துகொள்ளும்படி தெரிவித்தான். 29 அதி. யூதாவில் அரசனாயிருந்த சிதேக்கியா சிலகாலம் எரேமியா சொன்ன எச்சரிப்பின்படி பாபிலோன் ராஜாவுக்குக் கீழ்ப்படிந்து நடந்தான். ஆனாலும் ஒப்பிரா என்னும் பேருள்ள ஒரு புது அரசன் எகிப்துதேசத்தில் சிங்காசனமேறினவுடனே, சிதேக்கியா எரேமியா சொன்ன புத்திமதியைத் தள்ளிவிட்டு, பாபிலோனுக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினதினால் நேபுகாத்நேச்சார் நேரே எருசலேமுக்கு வந்து, கி-மு. 587-ஆம் ஆண்டில் எருசலேம் நகரத்தை முற்றுகை போட்டான். சிதேக்கியா பயப்பட்டு எருசலேமிலிருந்த அடிமைகள் ஆவலாய்ப் போர்செய்யும்படி அவர்களுக்குச் சுயாதீனத்தைக் கொடுத்தான். அச்சமயத்தில் எகிப்து அரசனுடைய சேனை யுத்தத்துக்கு வர நேபுகாத்நேச்சார் எருசலேமைச் சில காலம் விட்டு எகிப்தியருக்கு விரோதமாகப் போனான். உடனே எருசலேமில் இருந்தவர்களுக்கு வீண் நம்பிக்கை உண்டாயிற்று. எரேமியா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களுக்குப் பொய்யானதுபோலத் தோன்றிற்று. சிதேக்கியா தான் கொடுத்த வாக்கை மீறிச் சுயாதீனமாய்ப் போனவர்களை மறுபடியும் அடிமைத்தனத்துக் குள்ளாக்கினான். எரேமியா வெகுநாளாக சிறைச்சாலையில் வைக்கப்பட்டிருந்தான். இப்படியிருக்கையில் நேபுகாத்நேச்சார் ராஜா மறுபடியும் வந்து, எருசலேம் நகரத்தைச் சூழ்ந்துகொண்டான். எரேமியா சொல்லிவந்த வார்த்தைகளினால் ஜனங்கள் அதைரியப்பட்டுப் போகிறார்களென்று சொல்லிச் சிதேக்கியாவின் சேனைத்தலைவர்கள் அவனைப் பிடித்து, யாதொரு தீர்க்கதரிசியையும் பட்டயத்தால் கொல்லக் கூடாதாகையால், ஒரு ஆழமான குழியில் போடுவித்து, அவன் பசியினால் சாகும்படி அவனைச் சேற்றிலே விட்டுவிட்டார்கள். அவன் அந்தப் பயங்கரமான நிலைமையிலிருந்து ராஜாவினுடைய ஒரு அடிமையால் காப்பாற்றப்பட்டான். ஒன்றரை வருஷமாக எருசலேம் நகரம் முற்றிக்கை யிடப்பட்டதினால், நகரத்தார் சொல்லிமுடியாத வேதனைகள் சகித்த பிறகு பாபிலோன் சேனைவீரர் நகரத்தில் பிரவேசித்தார்கள். கி-மு. 586-ஆம் ஆண்டு நகரம் முழுமையும் தீக்கிரையாக்கப்பட்டது. ஜனத்தில் கொஞ்சங்குறைய விசேஷித்த மனிதர் எல்லாரும் பாபிலோன் தேசத்துக்குச் சிறையாகக் கொண்டுபோகப்பட்டார்கள். எரேமியா பாபிலோனுக்கு அநுகூலமாகப் பேசி

யிருந்தானென்று அதிகாரிகளுக்குத் தெரிய வந்தமையால், அவனைப் பாபிலோனுக்குக் கொண்டுபோகப் பலவந்தம்பண்ணுமல் அவனுடைய இஷ்டத்தின்படியே செய்கிறதற்கு இடங்கொடுத்தார்கள். சொந்தத் தேசத்திலிருக்கவேண்டுமென்று எரேமியா தீர்மானித்து, பாபிலோனியரால் அதிபதியாக நியமிக்கப்பட்ட கெதலியாவினிடத்திற்குப்போனுன். இரண்டு மாதங்களுக்குப் பிறகு கெதலியா சதியாகக் கொன்றுபோடப்பட, ஜனங்கள் எல்லாரும் பயந்து எகிப்து தேசத்துக்கு ஓடிப்போவோம் என்று யோசித்து, எரேமியாவின் ஆலோசனையைக் கேட்டார்கள். 41, 42 அதி. அவன் பத்து நாளாக யோசித்து, கடைசியாக எகிப்துவுக்குப் போக வேண்டாமென்று தெரிவித்தான். ஆயினும் ஜனங்கள் எப்போதும்போல அவன் சொல்லைத் தள்ளிவிட்டார்கள். அவனுக்கு நேரிட்ட துக்கம் அவனுடைய ஜீவகாலபரியந்தம் இருந்தது. அவர்களோடுகூட அவனும் எகிப்துக்குக் கொண்டுபோகப்பட்டு, அங்கேயும் அவர்கள் சந்திரனைக் கும்பிட்டபோது, அவன் அதற்கு விரோதமாகப் பேசினுன். அவன் மரித்துப்போன விதத்தைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. தன் சொந்த ஜனங்களுடைய கையால் கல்லெறியுண்டு மரித்ததாகப் பாரம்பரியமாய்ச் சொல்லப்பட்டுவருகிறது. நாற்பது வருஷகாலமாக உண்மையோடு செய்யப்பட்ட ஊழியம் இவ்வாறு முடிவடைந்தது.

II. **எரேமியாவின் புஸ்தகம்.** 36-ம் அதிகாரத்தில் நாம் வாசிக்கிறபடி கி-மு. 604-ஆம் வருஷத்தில் எரேமியா ஒரு புஸ்தகச்சுருளில் இம்மட்டும் தான் செய்த பிரசங்கங்களைச் சுருக்கி எழுதவேண்டுமென்று ஆண்டவரிடத்தில் கட்டளை பெற்றுக்கொண்டான். அந்தப்படி பாருக்கு என்ற ஒரு சீஷனை யழைத்து, தான் வாய்மொழியாய்ச் சொன்னதெல்லாம் எழுதினுன். பாருக்கு அதை எழுதி முடித்தபிறகு, அவன் ஒரு பண்டிகை காலத்தில் தேவாலயத்தில் கூடிவந்திருந்த அநேக ஜனங்களுக்கு முன்பாக அதைப் பகிரங்கமாய் வாசித்தான். இந்தப் புஸ்தகச் சுருளை யோயாக்கீம் ராஜா துண்டுதுண்டாகக் கிழித்து நெருப்பிலே எறிந்துவிட, எரேமியா அதற்கு அஞ்சாமல் மறுபடியும் அதன் பொருளைப் பாருக்குக்குச் சொல்ல, அவன் மீளவும் அதை எழுதினுன். அந்தச் சுருளின் பொருள் நமக்குத் தெரிந்த எரேமியா புஸ்தகத்தின் முதல் பாகத்தில் அடங்கியிருக்கவேண்டும். இருபத்து மூன்று வருஷங்களில் சொன்ன தீர்க்கதரிசனங்களை அந்தந்தச் சமயத்தில் உரைத்தபடியே திட்டமாக எழுதியிருக்கமாட்டான். அதினுலேதான் சில பாகங்கள் துண்டுகளாகவும் சம்பந்தமில்லாமலும் இருக்கக் காண்கிறோம். அவன் சாதாரண ஜனங்களுக்குத் தன் போதனையின் சுருக்கத்தைச் சொல்லி, தான் இஸ்ரவேல் ஜனத்தின் சரித்திரத்தைப்பற்றியும், அதின் தற்கால ஸ்திதியைப்பற்றியும், அதற்கு நேரிடப்போகிற காரியங்களைப்பற்றியும், தான் கொண்ட எண்ணங்களை ஜனங்களுக்குக் காட்டுகிறதுதான் அந்தப் புஸ்தகச் சுருளை எழுதினதின் நோக்கம். பிறகு இந்தச் சுருளிலடங்கிய பாகங்களோடு வேறு சில பாகங்களும் உண்டு. பொதுவாக நாம் எரேமியாவின் புஸ்தகத்தை வாசித்தால், அதின் ஒழுங்கு காலக்கிரமத்துக்குச் சரியாய் ஒத்துவருகிறதில்லை. அந்தக் காரணத்தால்தான் இக்காலத்திலுள்ள அநேகருக்கு எரேமியா புஸ்தகம் சரியாய்த் தெரிகிறதில்லை.

அந்தப் புஸ்தகச் சுருளைத்தவிர, யோயாக்கீம் ராஜாவின் பிந்திய வருஷங்களிலும், யோயாக்கீன் சிதேக்கியா ராஜாக்களின் காலங்களிலும் எரேமியா உரைத்த தீர்க்கதரிசனங்களும் நமக்குத் தெரிந்த எரேமியாவின் புஸ்தகத்தில் அடங்கியிருக்கின்றன. பிற்காலத்தில் எரேமியா மரித்தபிறகு அவனை நன்றாய் அறிந்த ஒருவன் அவனுடைய ஜீவிய சரித்திரத்தைப்பற்றிச் சில அதிகாரங்களை எழுதி அவைகளை இந்தப் புஸ்தகத்தில் சேர்த்திருக்கிறுன். இந்தச் சரித்திரக்காரன் பாருக்குவாயிருக்கக்கூடும். சில சிறு பாகங்கள் எரேமியாவாலும் அந்தச் சரித்திரக்காரனுலும் எழுதப்படாமல், இந்தப் புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சில வேதசாஸ்திரிகள் இப்புஸ்தகத்தின் வாக்கியங்களைக் காலக்கிரமத்துக்குத் தக்கதாகப் பிரித்து ஒழுங்குபடுத்தும்படி பிரயாசப்பட்டிருக்கிறுர்கள். எரேமியா அநேக வாக்கியங்கள் உரைத்த தருணங்கள் நமக்குத் தெரியாதிருந்தபோதிலும், எறக்குறைய பின்வரும் வரிசையின்படி நாம் வாசித்தால், புஸ்தகத்தின் பொருளைத் தெளிவாய் அறிந்துகொள்ளலாம்.

i. **கி-மு.** 626-604. **புஸ்தகச் சுருளின் பொருள்.** $1^{1.2.4-19}$ $2^{1-13.18-37}$ $3^{1-5.19-25}$ $4^{3-9.11-31}$ $5^{1-19.23-31}$ 6 அதி. $3^{6-16}$ 11 அதி. $12^{1-3.5-6}$ 18 அதி. 7 அதி. 8 அதி. $9^{1-21}$ $10^{17-24}$ $25^{1-3.7-11.15-29}$ $46^{1-12}$ 47 அதி. $48^{1-20.25.28.35-44}$ $49^{1-33}$.

ii. **கி-மு.** 604-597. **யோயாக்கீமின் பிந்தியகாலத்தில் உரைக்கப்பட்டவை.** 14 அதி. $15^{1-10.15-21}$ $16^{1-13.16-18.21}$ $17^{1-4.14-18}$ $12^{7-17}$ $35^{1-14.17-19}$.

**யோயாக்கீன் காலம். கி-மு.** 597. 13. *அதி.*

**சிதேக்கியா காலமும், பிந்திய காலமும். கி-மு.** 596-586. 24 *அதி.* $29^{1. 3-15. 21. 22. 31. 32}$ $49^{34-39}$ 22 *அதி.* $23^{1-6. 9-18. 21-40}$ $21^{1-10. 13. 14}$ $20^{14-18. 7-12}$ $32^{1. 2. 6-15. 24-44}$ $33^{1. 4-13}$ $23^{7. 8}$ ($= 16^{14.15}$) $30^{1-19. 13-21}$ $31^{1. 2-9. 15-34. 38-40}$ $46^{13-26}$.

**iii. எரேமியாவின் சரித்திரத்தைப்பற்றியது.** 19 *அதி.* $20^{1-6}$ $26^{1-19. 24. 20-23}$ 36 *அதி.* 45 *அதி.* $28^{1-a}$. $27^{1b-6. 8-22}$ $28^{1b-17}$ $51^{59-64}$ $34^{1-7}$ $37^{5. 3. 6-10}$ $34^{8-22}$ $37^{4. 11-22}$ $38^{1-28a}$ $39^{15-18}$ $39^{3. 14}$ $40^{6-16}$ 41-43 *அதி.* $44^{1-28}$.

**iv. எரேமியாவும் சரித்திரக்காரனும் எழுதாதவை.** $10^{1-16}$ $17^{19-27}$ $39^{1. 2. 4-12}$ $40^{1-6}$ $50^{1-58}$ 52 *அதி.*

*எரேமியாவினுடைய குணலக்ஷணங்களில் விசேஷமாய் உண்மை, பரிதாபம், கபடின்மை, மனவுருக்கம், தேவபக்தி, சில சமயங்களில் ஒருவிதமான கோபம் இவைகளையெல்லாம் இந்தப் புஸ்தகத்தின் பாஷை நடையில் நாம் பார்க்கலாம். அவன் சொன்ன சில வாக்கியங்கள் அவற்றின் உறுதியினாலும், துயரப்போங்கினாலும் நமது காதுகளில் பல நாளாகத் தொனித்துக்கொண்டேயிருக்கக்கூடியன. திருஷ்டாந்தமாக: 'அறுப்புக்காலம் சென்றது, கோடைகாலம் முடிந்தது, நாமோ ரக்ஷிக்கப்படவில்லை.'* $8^{20}$. *'இஸ்ரவேலின் நம்பிக்கையே, ஆபத்துக்காலத்தில் அதின் ரக்ஷகரே, நீர் தேசத்தில் பரதேசியைப்போலவும், இராத்தங்க இறங்குகிற வழிப்போக்கனைப் போலவும் இருப்பானேன்?' என்கிறான். மரணத்தையும் நாசத்தையும் பற்றி அவனைப்போல வேறே யாரும் அவ்வளவு பயங்கரமானவிதமாய் வல்லமையோடு தெரிவிக்கவில்லை.* $15^{1-9}$ $4^{23-29}$ *பார்க்க. மரணத்தைத் தெரிவித்தபோதிலும், ஜீவனைப் பற்றியும், அதின் சத்தங்களைப்பற்றியும், சந்தோஷங்களைப்பற்றியுந்தான் அவனுக்கு அதிக நாட்டம்.* $7^{34}$ $16^{9}$. *அழுகையின் தீர்க்கதரிசி என்கிறபேர் அவனுக்கிருந்தாலும், சில சமயங்களில் ஆண்டவர் இனிமேல் கொண்டு வரப்போகிற நன்மைகளைப்பற்றி மிகவும் நேர்த்தியாகச் சிறப்பாய்ச் சொன்னான்.* 31 *அதி.*

**III. எரேமியா புஸ்தகத்தின் போதனை.**- *எரேமியா புஸ்தகம் விசேஷித்த போதனைகளைச் சொல்லாமல் நமக்கு உத்தம பக்தியின் முன்மாதிரியைக் காட்டுகிறது. எரேமியாவுக்கு முந்தி பக்தர்கள் இல்லாமற்போகவில்லை. ஆனாலும் எரேமியா இவ்விதம் தன் ஜீவகாலமெல்லாம் இடைவிடாமல் கர்த்தருக்காகத் தான் நேசித்த ஜனங்களோடு செய்த போரினாலே பக்தி இன்னதென்று முன்னே தெரிந்ததைவிட இப்போது அதிக தெளிவாய்த் தெரிவித்திருக்கிறான். பழைய நூல் அவனுடைய அனுபவத்தால் புதிப்பிக்கப்பட்டது. அதோடு சில புதிய போதனைகளும் இணைக்கப்பட்டன.* **பாவம்** *இன்னதென்று ஓசியாவைப்போலக் காட்டினான். இஸ்ரவேல் யேகோவாவைச் சேவித்துக்கொண்டிருந்தபோதிலும், உண்மையான இருதயத்தோடு அவரைச் சேவிக்காமலிருப்பதுதான் பெரிய பாவம் என்றான். மனுஷனுடைய இருதயத்தின் எண்ணம்தான் விசேஷம். இருதயமே திருக்குள்ளதும் மகா கேடுள்ளதுமாயிருக்கிறது.* $17^{9}$. *அந்த இருதயமே மாற வேண்டும், நியாயப்பிரமாணமானது உள்ளத்தில் எழுதப்படவேண்டும்* ($24^{7}$ $31^{31-34}$) *என்று போதித்தான். சாதாரணமாய் மற்றத் தீர்க்கதரிசிகளைப்போல எரேமியா இஸ்ரவேலரை ஒரே ஜனமாகப்பாவித்து அவர்களுக்குப் போதனை கொடுத்தாலும், அவன் பாவத்தைப்பற்றி ஒவ்வொரு மனுஷனுக்கும் தனித்தனி உத்தரவாதமுண்டு என்னும்* ($31^{29. 30}$) *புது உபதேசத்தைப் பிரசித்தப்படுத்தினான்.*

*கடவுளைப்பற்றி எரேமியா தனக்கு முன் இருந்தவர்களைப் போலவே, போதித்தான்.* $14^{22}$ $5^{24. 22}$ $2^{11}$ $16^{19}$ *முதலிய வாக்கியங்களில் யேகோவா ஒரே தேவன், அவரே வல்லமையுள்ளவர் என்று சொல்லியிருக்கிறான். ஆனால் அதோடு நில்லாது யேகோவாவுக்கும் அவருடைய ஜனங்களுக்குமுள்ள சம்பந்தத்தினால்தான் அவருடைய திவ்விய லக்ஷணங்கள் தெளிவாகக் காணப்படுகின்றன என்றும் சொல்லுகிறான்.* $3^{19}$ $14^{7-9}$ $17^{12. 13}$ $23^{23. 24}$.

*மார்க்கம் இன்னதென்று தெளிவாகச் சொல்லுகிறான். 'மேன்மை பாராட்டுகிறவன் பூமியிலே கிருபையையும் நியாயத்தையும் நீதியையும் செய்கிற கர்த்தர் நான் என்று என்னை அறிந்து உணர்ந்திருக்கிறதைக் குறித்தே மேன்மை பாராட்டக்கடவனென்று கர்த்தர் சொல்லுகிறார்; இவைகளின்மேல் பிரியமாயிருக்கிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்.'* $19^{24}$. *'அவன் சிறுமையும் எளிமையுமானவனுடைய நியாயத்தை விசாரித்தான்; அப்பொழுது சுகமாய் வாழ்ந்தான்; அப்படிச் செய்வதல்லவோ என்னை அறிகிற அறிவு என்று கர்த்தர் சொல்லுகிறார்.'* $22^{16}$.

*மார்க்கத்தின் அஸ்திபாரமே நம்பிக்கை. கர்த்தர்மேல் நம்பிக்கை வைத்து, கர்த்தரைத்தான் நம்பிக்கையாகக் கொண்டிருக்கிற மனுஷன் பாக்கியவான் என்றிவ்விதமாகக் கூறுகிறான். எரேமியாவினுடைய இயற்*

கையான குணதிசயங்களில் பலவீனம் இருந்திருக்குமென்பதற்குச் சில அடையாளங்களிருக்கின்றன. 15[10.18] 9[2] 20[14-18]. எரேமியா தனிமையாயிருந்த காலத்தில் அடிக்கடி மனஞ்சோர்ந்துபோனான். சில சமயங்களில் தன்னை மனுஷராலும் தேவனாலும் தள்ளப்பட்டவனாக நினைத்தான். ஆனாலும் மனுஷரால் எவ்வளவு கொடுமையாய்த் தள்ளுண்டானோ, அவ்வளவுக்கு அதிகமாய் அவன் கடவுளிடத்தில் கிட்டிச் சேர்ந்து, ஐக்கியப்பட்டு, கடவுளை நம்பினான்.

**எரேமோத்.** Jeremoth. **எரிமோத்** காண்க.

**எரோகாம்.** Jeroham.

1. 1 சாமு $1^{1}$.
2. 1 நாளா $8^{27}$.
3. 1 நாளா $9^{12}$.
4. 1 நாளா $12^{7}$.
5. 1 நாளா $27^{22}$.
6. 2 நாளா $23^{1}$ மு.

**எர்மா.** Hermas. ரோமைச்சபையில் ஒருவன். இந்தப் பெயர் அடிமைகள் அநேகருக்கு வழங்கி வந்தது. ரோ $16^{14}$.

**எர்மே.** Hermes. ரோமைச்சபையில் ஒருவன். இந்தப் பெயர் அடிமைகளுக்கு வழங்கி வந்தது. ரோ $16^{14}$.

**எர்மொகேனே.** Hermogenes. பவுலின் தோழர்களில் அவனை விட்டுப் பிரிந்த ஒருவன். 2 தீமோ $1^{15}$.

**எர்மோன்.** Hermon. ஒன்பதினாயிரம் அடிக்குமேல் உயரமுள்ள சீரியாவின் ஓர் மலை. இது கலிலேயாக் கடலுக்கு வடக்கே ஏறக்குறைய முப்பது மைல் தூரமுள்ளது. இதின் பெயர் 'பிரிக்கப்பட்டது' அல்லது 'பரிசுத்த இடம்' என்று குறிக்கிறதினாலே இது ஆதியிலிருந்து பரிசுத்தஸ்தலமாய் எண்ணப்பட்டு வந்தது என நினைக்கவேண்டும். இதற்குப் 'பாகால் எர்மோன்' என்னும் மறுபெயரும் இருந்ததினால் (நியா $3^{3}$) கானானியர் பாகாலை அங்கே வணங்கினார்கள் என்று தோன்றுகிறது. பெனிக்கேயர் இதற்கு 'சீரியோன்' என்றும், எம்மோரியர் 'சேனிர்' என்றும் பெயரிட்டிருந்தார்கள். உபா $3^{9}$. ஒருவேளை இது இயேசு மறுரூபம் அடைந்த மலை. மாற் $9^{2}$. இது அதிக உயரமாய் இருந்ததினால் உறைபனி எப்பொழுதும் இங்கே இருக்கும்.

**எலாசா.** Elasah. [கடவுள் செய்தார்]. எஸ்றா $10^{22}$.

**ஏலாதா.** Eleadah. 1 நாளா $7^{20}$.

**எலாமீத்தர்.** Elamites. அப் $2^{9}$. **ஏலாம்** காண்க.

**எலி.** Mouse. பலெஸ்தீனாவில் எலி பலவிதமாய் இருக்கும். லேவி $11^{29}$.

**எலிக்கா.** Elika. 2 சாமு $23^{25}$.

**எலிகூ.** Elihu. [அவர் கடவுளே].

1. சாமுவேலின் முன்னோர்களில் ஒருவன். 1 சாமு $1^{1}$ = எலியேல். 1 நாளா $6^{34}$. = எலியாப். 1 நாளா $6^{27}$.
2. தாவீதின் மூத்தமகன். 1 நாளா $27^{18}$. = எலியாப். 1 சாமு $16^{6}$.
3. 1 நாளா $12^{20}$.
4. 1 நாளா $26^{7}$.
5. யோபின் மூன்று சிநேகிதர்களில் இளையவன். யோபு $32^{2}$.

**எலிசபாள்.** Elisheba. ஆரோனின் மனைவி. யாத் $6^{23}$.

**எலிசபேத்.** Elizabeth. [கடவுள் ஆணையிட்டிருக்கிறார்]. சகரியாவினுடைய மனைவி. யோவான்ஸ்நானகனுடைய தாய். இவள் ஆசாரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். மரியாளுடைய இனத்தாள். லூக் $1^{5.36.43}$.

எபிரெய பாஷையில் இந்தப் பதம் 'எலிசபாள்' என்று சொல்லியிருக்கிறது. யாத் $6^{33}$.

**எலிசா.** Elisha. ஆபேல்மேகொலாவில் பிறந்து ஆஸ்தியுள்ள ஒரு குடியானவனுடைய குடும்பத்தில் சேர்ந்தவன். ஓரேப் மலையிலிருந்துவந்த எலியா இவனைத் தீர்க்கதரிசனம் உரைக்கிறதற்கு அழைத்தபிறகு இவன் அவனுடைய உத்தம சீஷன். 'எலியாவின் கைகளுக்குத் தண்ணீர் வார்த்தவன்' என்பது இவனுடைய பெயர். 1 இரா $19^{16}$ 2 இரா $3^{11}$. எலியா பரலோகத்துக்குப் போன பிறகு இவன்தான் இஸ்ரவேலின் தீர்க்கதரிசிகளில் பிரதானமானவன். 2 இரா $2^{15}$. இவன் யோராம், ஏகூ, யோவகாஸ், யோவாஸ் என்னும் இஸ்ரவேலின் நாலு ராஜாக்கள் காலத்தில் (கி-மு. 851-797-வரை) தீர்க்கதரிசனம் உரைத்தான். விசேஷமாய் யோராம் காலத்தில் இவன்தான் தன் ஊழியத்தை நிறைவேற்றினான். 2 இரா $3^{1}$ $9^{1}$. இவன் பேரின் அர்த்தம் 'கடவுள் இரட்சிப்பாய் இருக்கிறார்.' இதில்தான் இவனுடைய குணதிசயங்களும் ஊழியத்தின் நோக்கமும் தோன்றும். இவன் பட்டணங்களில் வசித்தவன். இவனைப்பற்றிச் சொன்ன அற்புதங்கள் இரக்கமுள்ளவைகள். 2 இரா $2^{19}$ $4^{1.38.42}$ $5^{6}$ $6^{1}$ $8^{1}$. ஆனால் எலியாவைப்போல் இவனும் பாவத்தைக் கண்டிப்பான். 2 இரா $2^{23}$ $5^{27}$. [2 இரா $2^{23}$-ல் 'பிள்ளைகள்' என்பது எபிரெய பாஷையில் 'சிறுபிள்ளைகள்' அல்ல

'வாலிபர்கள்' என்று அர்த்தமாம்]. இவன் யோராம் செய்த பாவத்தைக் கண்டிக்காமல் விடவில்லை. 2 இரா $3^{13}$.

ஆகாபின் வீட்டாருக்கு எலியா இட்ட சாபத்தின்படி எலிசா ஏகூவை ராஜாவாக அபிஷேகம் செய்தான். 2 இரா $9^{6}$. இவனுடைய கீர்த்திப் பிரஸ்தாபம் சீரியருக்குத் தெரியும். பெனாதாத் என்னும் சீரியா ராஜா அனுப்பின ஆசகேல் தன் எஜமானைக் கொலை செய்து தான் சீரியாவின்மேல் ராஜா ஆவான் என்று தெரிவித்தான். 2 இரா $8^{7}$. மரண காலத்தில் இவன் யோவாஸ் என்னும் ராஜாவுக்குச் சீரியரின்மேல் ஜெயம் அடைவதைப் பற்றி அடையாளம் காண்பித்தான். 2 இரா $13^{15}$. இவன் பலதடவை வருகிற விஷயங்களை முன் அறிவித்தான். 2 இரா $4^{16}$ $5^{26}$ $6^{8}$ $7^{1}$ $8^{10.12}$ $9^{6}$ $13^{15}$.

**எலிசாமா, எலிஷாமா.** Elishama.

1. யோசுவாவின் பாட்டன். எண் $1^{10}$.
2. தாவீதின் மகன். 2 சாமு $5^{16}$.
3. =எலிசுவா. 2 சாமு $5^{15}$. 1 நாளா $3^{6}$.
4. 1 நாளா $2^{41}$.
5. கெதலியாவைக் கொன்றவன். 2 இரா $25^{25}$.
6. வேதபாரகன். எரே $36^{12}$.
7. ஒரு ஆசாரியன். 2 நாளா $17^{8}$.

**எலிசுவா.** Elishua. **எலிசாமா** காண்க.

**எலிஷாபாத்.** Elishaphat. 2 நாளா $23^{1}$.

**எலிதாத்.** Eldad. எண் $34^{21}$.

**எலிபால்.** Eliphal. 1 நாளா $11^{35}$. =எலிப்பெலேத். 2 சாமு $23^{34}$.

**எலிபெலேத், எலிப்பெலேத்.** Elephelet.

1. தாவீதின் குமாரர்களில் ஒருவன். 2 சாமு $5^{16}$.
2. தாவீதின் போர்வீரர்களில் ஒருவன். 2 சாமு $23^{34}$. =எலிபால். 2 நாளா $11^{35}$.
3. 1 நாளா $8^{39}$.
4. எஸ்றா $8^{13}$.
5. எஸ்றா $10^{33}$.

**எலிப்பாசு, எலீபாசு.** Eliphaz.

1. ஆதி $36^{4}$.
2. யோபினுடைய சிநேகிதரில் பெரியவன். யோபு $2^{11}$.

**எலிப்பெலேகு.** Eliphelehu. 1 நாளா $15^{18}$.

**எலிப்பெலேத்.** Eliphelet. **எலிபெலேத்** காண்க.

**எலிமா.** Eymas. இவன் மறுபெயர் பர்யேசு. அப் $13^{6}$. எலிமா என்பது 'வித்துவான்' அல்லது 'மாயவித்தைக்காரன்' என அர்த்தமாம். இந்த மாயவித்தைக்காரர் அக்காலத்தில் பலவித்தையையும் ஆராய்ந்து கலைஞானத்தோடு போலிஞானத்தையும் கலந்து பலரையும் வஞ்சித்துவந்தார்கள். இவர்கள் சத்தியம் நிறைந்த கிறிஸ்தவ மார்க்கத்துக்கு முக்கிய விரோதிகள். 'பர்யேசு' என்றால் 'இயேசுவின் மகன்' என்று அர்த்தமாம். யூதர்களுக்குள் இயேசு என்னும் பெயர் வழங்கிவந்தது.

**எலிமெலேக்கு.** Elimelech. நகோமியின் புருஷன். ரூத் $2^{1}$.

**எலியா.** Elijah. [யேகோவா தேவனாய் இருக்கிறார்].

1. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $8^{27}$.
2. ஒரு ஆசாரியன். எஸ்றா $10^{21}$.
3. ஒரு யூதன். எஸ்றா $10^{26}$.
4. தீர்க்கதரிசி.

எலியா ஆகாப் அகசியா என்னும் இஸ்ரவேல் ராஜாக்களின் காலத்தில் (கி-மு. 875-851) தீர்க்கதரிசனம் உரைத்த ஓர் மகா பக்தன். கீலேயாத் நாட்டின் திஸ்பி என்னும் ஊரிற் பிறந்தவன். 1 இரா $17^{1}$. இவன் தகப்பனுடைய சரித்திரத்தைப்பற்றியும், இவன் தீர்க்கதரிசனம் உரைக்கிறதற்கு முந்திய காலத்தைப்பற்றியும் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. இவன் தீர்க்கதரிசனம் உரைத்த காலத்தில் இஸ்ரவேலில் இருந்த சன்மார்க்கமெல்லாம் பாகாலை வணங்கினதினால் அழிந்துபோனதைப்போலத் தோன்றுகிறது. அக்காலத்திலிருந்த ஆகாப் என்னும் ராஜா ஏசபேல் என்னும் பெனிக்கேயாள் ஆகிய ராஜகுமாரத்தியை விவாகம்செய்து அவளுடைய நோக்கத்துக்கு கிசைந்து இஸ்ரவேலரின் தேசத்திலே ஜனங்கள் எல்லாரும் சோரமார்க்கத்தில் நடக்கும்படி தூண்டிவிட்டான். எல்லாரும் அவன் போனவழியிலே நடக்கும் போதே எலியா தீர்க்கதரிசி வந்தான். இவன் மயிர் உடை தரித்து, தோற்றத்தில் நாகரீகம் ஒன்றுமில்லாமல் இருந்தான். ராஜாவும் ராஜாத்தியும் ஜனங்களும் செய்த துன்மார்க்கத்தையெல்லாம் கண்டித்து, யேகோவாவின் நீதியையும் சன்மார்க்க நடையையும் நாடும்படி போதித்து வந்தான். யேசபேல் இவன் போதிக்கிறதெல்லாம் தான் விரும்பின மார்க்கத்துக்கு விரோதம் என்று கண்டு அவனை அகற்றும்படி கருதினாள். 2 இரா $1^{8}$ 1 இரா $16^{32}$ $17^{3}$.

எலியாவின் சரித்திரம்.—1 இரா $17^{1}$-$19^{21}$ $21^{1-29}$ 2 இரா $1^{1}$-$2^{15}$. இவைகளோடு 2 இரா $9^{36}$ $10^{10.17}$ 2 நாளா $21^{12}$ ஒப்பிட்டுப்பார்க்க.

எலியாவின் நோக்கம்:

1. பொய்த்தேவர்களின் வணக்கத்தை இஸ்ரவேலரிலிருந்து நீக்குவது;

2. ராஜ்யத்தை நீதியாய் நடத்துவது;

3. இஸ்ரவேலர் துன்மார்க்கத்தில் நடவாமல் யேகோவாவை வணங்கிப் பரிசுத்தத்தில் நடக்கச்செய்வது. எலியா விசேஷமாய் முதல் இரண்டு விஷயங்களைக் கருதிப் போதித்து வந்தான். அவனுக்குப் பின்வந்த தீர்க்கதரிசிகள் மூன்றும் நோக்கத்தைத் தங்கள் போதனையிற் காட்டியிருக்கிறார்கள்.

வேதாகமத்தில் பிற்காலத்தில் எலியாவைப் பற்றிச் சொல்லியது என்னவென்றால்: கர்த்தருடைய நாள் வருகிறதற்கு முன் இவன் வருவான். மல் $4^{5}$. இதினால் இவன் மேசியாவின் முன்தூதன் என்றும், யோவான் ஸ்நானன் இந்த வேலையை நிறைவேற்றினான் என்றும் சொல்லியிருக்கிறது. மத் $11^{14}$. இயேசு மறுரூபமடைந்தபோது தீர்க்கதரிசியாகிய இவன் அங்கே இருந்தான். மத் $17^{3}$. யூதர்கள் இவனுடைய போதனைகள் 'தீவட்டியைப்போல் அதிக பிரகாசமுள்ளது' என்று சொல்லி அவனைப் புகழ்ந்தார்கள். மகமதியர்களும் இவனை நன்கு மதிக்கிறார்கள்.

**எலியாக்கீம்.** **Eliakim.** [கடவுள் ஸ்திரப்படுத்துவார்].

1. எசேக்கியாவின் வீட்டாரில் ஒரு தலைவன். 2 இரா $18^{18}$ ஏசா $22^{20}$.

2. யோசியாவின் மகன். பார்வோன் நேகோ இவனைச் சிங்காசனத்தில் வைக்கும் போதே இவனுக்கு 'யேகோவா உயர்த்துகிறார்' என்று அர்த்தம்கொண்ட 'யோயாக்கீம்' என்னும் பெயர் இட்டான். 2 இரா $23^{34}$.

3. ஒரு ஆசாரியன். நெகே $12^{41}$.

4. மத் $1^{13}$.

5. லூக் $3^{30}$.

**எலியாசா.** **Eleasha.** 1 நாளா $8^{37}$.

**எலியாசிப்.** **Eliashib.** [கடவுள் திரும்பக் கொண்டுவருகிறார்].

1. ஒரு பிரதான ஆசாரியன். நெகே $12^{10}$.

2. ஒரு பாடகன். எஸ்றா $10^{24}$.

3. எஸ்றா $10^{27}$.

4. எஸ்றா $10^{36}$.

5. 1 நாளா $3^{24}$.

6. 1 நாளா $24^{12}$.

7. எஸ்றா $10^{6}$.

**எலியாதா.** **Eliada.**

1. = பெலியாதா. 2 சாமு $5^{16}$ 1 நாளா $14^{7}$.

2. 1 இரா $11^{23}$.

3. 2 நாளா $17^{17}$.

**எலியாத்.** **Elead.** 1 நாளா $7^{21}$.

**எலியாத்தா.** **Eliathah.** 1 நாளா $25^{4,27}$.

**எலியாபா.** **Eliahba.** 1 நாளா $11^{33}$. = எலியூபா. 2 சாமு $23^{32}$.

**எலியாப்.** **Eliab.** [கடவுள் தகப்பனாய் இருக்கிறார்].

1. எண் $1^{9}$.

2. எண் $16^{1}$.

3. தாவீதின் மூத்த சகோதரன். 1 சாமு $16^{6,7}$.

4. கீதவாத்தியக்காரன். 1 நாளா $15^{18}$.

5. 1 நாளா $12^{9}$.

6. 1 நாளா $6^{27}$.

**எலியாம்.** **Eliam.**

1. பத்சேபாளின் தகப்பன். 2 சாமு $11^{3}$. = அம்மியேல். 1 நாளா $3^{5}$.

2. 2 சாமு $23^{34}$.

**எலியூத்.** **Eliud.** மத் $1^{15}$.

**எலியூபா=எலியாபா.** **Eliahba.**

**எலியேசர்.** **Eliezer.** [கடவுள் உதவியாய் இருக்கிறார்].

1. ஆபிரகாமின் பிரதான ஊழியக்காரன். ஆதி $15^{2}$.

2. மோசேயின் மகன். யாத் $18^{4}$.

3. 1 நாளா $7^{8}$.

4. 1 நாளா $27^{16}$.

5. தீர்க்கதரிசி. 2 நாளா $20^{37}$.

6. எஸ்றா $8^{14}$.

7. எஸ்றா $10^{18}$.

8. எஸ்றா $10^{23}$.

9. எஸ்றா $10^{31}$.

10. ஒரு ஆசாரியன். 1 நாளா $15^{24}$.

11. ஒரு லேவியன். 1 நாளா $26^{25}$.

12. லூக் $3^{29}$.

**எலியேல், எலீயேல்.** **Eliel.** [கடவுள் கடவுளே].

1. 1 நாளா $6^{34}$.

2. தாவீதின் போர்வீரன். 1 நாளா $11^{46}$.

3. இன்னொரு போர்வீரன் 1 நாளா $11^{47}$.

4. 1 நாளா $12^{11}$.

5. 1 நாளா $5^{24}$.

6. 1 நாளா $8^{20}$.

7. 1 நாளா $8^{22}$.

8. 1 நாளா $15^{9}$.

9. 2 நாளா $31^{13}$.

**எலியேனாய்.** **Elienai.** 1 நாளா $8^{20}$.

**எலியோனாய்.** **Eliehoenai, Elioenai.**

1. 1 நாளா $26^{3}$.

2. எஸ்ரு $8^{4}$.
3. 1 நாளா $4^{36}$.
4. 1 நாளா $7^{8}$.
5. 1 நாளா $3^{23}$.
6. எஸ்ரு $10^{22}$.
7. எஸ்ரு $10^{27}$.
8. நெகே $12^{41}$.

**எலீசா.** Elishah. யாவானின் 'மகன்.' ஆதி $10^{4}$. அல்லது தென் இத்தாலியாவிலுள்ள ஒரு நாடு, அல்லது வடஆபிரிக்காவிலுள்ள ஒரு நாடு. எசே $27^{7}$.

**எலுசாய்.** Eluzai. 1 நாளா $12^{5}$.

**எலூல்.** Elul. **காலம்** காண்க.

**எலேயாசா.** Eleasha. 1 நாளா $2^{39}$.

**எலேயாசார்.** Elasah. எரே $29^{3}$.

**எலேயாசார்.** Eleazar. [கடவுள் உதவி செய்திருக்கிறார்].

1. ஆரோனின் மகன். ஆரோனுக்குப் பிறகு இவன் பிரதான ஆசாரியனாய் இருந்தான். உபா $10^{6}$ எண் $3^{2}$ $20^{25}$ $26^{1, 63}$ யோசு $14^{1}$ $17^{4}$ $19^{51}$ $21^{1}$ $24^{33}$ யாத் $6^{25}$.

2. 1 சாமு $7^{1}$.
3. 2 சாமு $23^{9}$.
4. 1 நாளா $23^{21}$.
5. எஸ்ரு $8^{33}$.
6. எஸ்ரு $10^{25}$.
7. மத் $1^{15}$.

**எலேயாலே.** Elealeh. மோவாப் தேசத்திலுள்ள இஸ்ரவேலர் ஜெயித்த ஒரு ஊர். எண் $32^{3}$ ஏசா $15^{4}$.

**'எலோயீ, எலோயீ லாமா சபக்தானி.'** 'Eloi, Eloi, Lama, Subachtani.' மாற் $15^{34}$. 'எலோயீ' என்னும் பதத்திற்குப் பதிலாக 'ஏலி' என்னும் பதம் மத்தேயு சுவிசேஷத்தில் எழுதியிருக்கிறது. மத் $27^{46}$. இவ்வாக்கியத்திற்கு 'என் கடவுளே, என் கடவுளே, ஏன் என்னை விட்டுவிட்டீர்' என்றர்த்தமாம். மரணகாலத்தில் இயேசு இந்த அரமேயா பதங்களைக் கூறினதினால், அந்தப் பாஷை அவர் சொந்த அல்லது சிறுவயதுமுதல் பேசிவந்த பாஷையாய் இருக்கலாம். மரணநேரத்தில் இயேசு பிதாவாகிய தேவன் தம்மைவிட்டுப் பிரிந்திருந்தார் என்று சொன்னதினால், அந்த க்ஷணத்திலே மனிதர் அடையவேண்டிய பாட்டை முழுதும் தாமே பட்டுத்தரித்தார் என்று காட்டினார் என்பது சில வேத சாஸ்திரிகளின் அபிப்பிராயம். வேறு சில வேதசாஸ்திரிகள், மரண நேரத்தில் இயேசுவுக்கிருந்த அளவற்ற வியாகுலத்தினாலும் வேதனையினாலும் இப்படி ஓலமிட்டார் என்று சொல்லுகிறார்கள். **எபிரேய பாஷை** காண்க.

**எல்காத்.** Helkath. ஒரு ஊர். யோசு $19^{25}$. = உக்கோக். 1 நாளா $6^{75}$.

**எல்காத் அசூரீம்.** Elkath-Hazzurim. [பட்டயவாயின் போர்க்களம்]. கிபியோனில் இருபத்துநாலு பேர் சண்டைசெய்த இடம். 2 சாமு $2^{16}$.

**எல்காய்.** Helkai. நெகே $12^{15}$.

**எல்க்கானா.** Elkanah. [கடவுள் பெற்றுக்கொண்டிருக்கிறார்]. 1. யாத் $6^{24}$. 2. அன்னாளின் புருஷன். 1 சாமு $1^{1}$. 3. 1 நாளா $6^{23}$. 4. 1 நாளா $6^{26}$. 5. 1 நாளா $9^{16}$. 6. 1 நாளா $12^{6}$. 7. 1 நாளா $15^{23}$. 8. ஒரு பிரதானி. 2 நாளா $28^{7}$.

**எல்க்கானான்.** Elhanan. [கடவுள் தயவுள்ளவர்].

1. 2 சாமு $21^{19}$ 1 நாளா $20^{5}$. **கோலியாத்** காண்க.

2. 2 சாமு $23^{24}$ 1 நாளா $11^{26}$.

**எல்சபாத்.** Elzabad.

1. 1 நாளா $12^{12}$.
2. 1 நாளா $26^{7}$.

**எல்சாபாத்.** **எல்சபாத்** காண்க.

**எல்சாபான்.** Elzaphan, Elizaphan.

1. ஒரு பிரபு. எண் $3^{30}$.
2. எண் $34^{25}$.

**எல்தாகா.** Eldaah. ஆதி $25^{4}$.

**எல்தாத்.** Eldad. இஸ்ரவேலர் வனாந்தரத்திலே இருந்தபோது அவர்களுடைய வழக்குகளைத் தீர்க்கும்படி நியமித்த எழுபது மூப்பர்களில் ஒருவன். எண் $11^{26}$.

**எல்தாய்** Heldai.

1. ஒரு சேனைத்தலைவன். ஒருவேளை இந்தப்பெயரும், எலேப், ஏலேத் என்னும்பெயர்களும் ஒருவனையே குறிக்கலாம். 2 சாமு $23^{29}$ 1 நாளா $11^{30}$ $27^{15}$.

2. பாபிலோனிலிருந்து திரும்பி வந்தவன். சக $6^{10}$. = ஏலேம். சக $6^{14}$.

**எல்தேக்கே.** El-Teke. யோசு $19^{44}$.

**எல்தேகோன்.** El-Tekon. யோசு $15^{59}$.

**எல்தோலாத்.** El Tolad. யோசு $15^{30}$. = தோலாத். 1 நாளா $4^{29}$.

**எல்நாத்தான்.** Elnathan. [கடவுள் தந்திருக்கிறார்].

1. யோயாக்கீனின் பாட்டன். 2 இரா $24^{8}$.

2. புஸ்தகச்சுருளை நெருப்பிற் போடாதபடி யோயாக்கீமை வேண்டிக்கொண்டவன். எரே $26^{22}$ $36^{25}$.

3. மூன்று பெயர்கள். எஸ்ரு $8^{16}$.

**எல்நாம்.** **Elnaam.** 1 நாளா $11^{46}$.

**எல்பா.** **Helbah.** நியா $1^{31}$.

**எல்பாரான்.** **El-Paran.** ஆதி $14^{6}$. **பாரான்** காண்க.

**எல்பால்.** **Elpaal.** 1 நாளா $8^{11}$.

**எல்பேலேத்.** **Elpelet.** 1 நாளா $14^{5}$. = எலிபெலேத் (1).

**எல்மோதாம்.** **Elmadam.** லூக் $3^{28}$.

**எல்லை, எல்லைக்குறி.** **Boundary, Boundary mark.** உபா $19^{14}$ $27^{17}$ ஓசி $5^{10}$ நீதி $22^{28}$ $23^{10}$ யோபு $24^{2}$.

**எழுதப்படாதவை.** **Agrapha.** **இயேசு சொன்னவைகளில் எழுதப்படாதவை** காண்க. பக். 113.

**எழுத்து.** **Writing.** ஆதிகாலத்தில் விளம்பரம் ஒன்று செய்யவேண்டுமானால் வழக்கமாய்த் தூதர்கள் அதை வாய்மொழியாய்க் கூறுவார்கள். சாலொமோன் வாயால் உரைக்கும் நீதிமொழிகளை ஜனங்கள் அவருக்கு முன்பாக வந்து கேட்பார்கள். 1 இரா $4^{32}$. தாவீதின் காலத்தில் ராஜாங்கத்துக்குரிய விஷயங்களை அவன் பிரதானிகளில் ஒருவன் எழுதினான். 2 சாமு $8^{16}$. ஏசாயாவின் காலத்தில் தீர்க்கதரிசிகள் சில சமயங்களில் தாங்கள் கூறினவற்றை முழுதும் எழுதாமல் சுருக்கமாய் எழுதுவார்கள். ஏசா $8^{1}$. எரேமியாவும் அவனுக்குப்பின் இருந்த தீர்க்கதரிசிகளும் தாங்கள் உரைத்தவைகளை விவரமாய் எழுதினார்கள். எரே $36^{17}$ ஆப $2^{2}$.



எபிரெயருடைய புஸ்தகச்சுருளும் மைக்கூடும்.

உபாகமம் என்னும் புஸ்தகம் எழுதப்பட்டது. ஆனால் மோசேயின் காலமுதல் உபாகமம் கண்டுபிடிக்கப்பட்ட காலம்வரையில் நியாயப்பிரமாணம் எழுத்தில் ஆனவிதத்தைப்பற்றித் தெளிவாய் ஒன்றும் தெரியாது. ஏசபேல் நிருபங்களை எழுதினாள். 1 இரா $21^{8}$. யோபு, ஏசாயா, எரேமியா ஆகிய இவர்கள் எழுதப்பட்ட பத்திரங்களைப்பற்றிப் பேசுகிறார்கள். யோபு $13^{26}$ $31^{35}$ ஏசா $10^{2}$ எரே $3^{8}$ $32^{16}$. யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு அவர்களிடத்திலுள்ள புஸ்தகங்கள் அநேகம் இருந்தன. பிர $12^{12}$. அக்காலம் முதல் அவர்கள் தங்கள் வம்ச அட்டவணையை எழுதிவந்தார்கள். கிறிஸ்துவுக்கு நூறு வருஷத்துக்கு முன் புஸ்தகசாலைகள் இருந்தன. 2 மக்கெபேயர் $2^{13}$. எபிரெயர்கள் கற்பலகைகளிலும் மரப்பல



நியாயப்பிரமாண புஸ்தகச்சுருள் வைக்கும் விசித்திர உறை.

கைகளிலும் எழுதிவந்தார்கள். ஏசா $30^{8}$ யோபு $19^{24}$. ஒருவேளை செப்புத்தகடுகளிலும் எழுதியிருக்கலாம். ஏசா $8^{1}$. இவைகளில் இருப்பெழுத்தாணிகளால் எழுதுவார்கள். சிலவேளை இந்த எழுத்தாணி கூர் மழுங்காதபடி அதன் நுனியில் வச்சிரம் பதிப்பார்கள். எரே $17^{1}$. சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்படுமுன் எபிரெயர்கள் புஸ்தகச்சுருளை உபயோகித்தார்கள். ஏசா $34^{4}$ $37^{14}$ எரே $36^{2}$. இவைகள் எகிப்திய தேசத்திலுள்ள பெரிய நாணலின் மேற்பட்டையினாலும் தோலினாலும் செய்யப்பட்டன. நாணற் குச்சியை எழுதுகோலாக

உபயோகித்து மையினால் இவைகளை எழுதுவார்கள். எரே 36[18] எசே 23[14]. விகிதர்கள் மைக்கூடும் (எசே 9[2]), எழுதுகோல் சீவுதற்குச் சூரியும் (எரே 36[23]), அரைக் கச்சையில் போட்டிருப்பார்கள்.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் தோற்சுருள் அதிகமாய் உண்டு. 2 தீமோ 4[13]. அப்போஸ்தலர்கள் தங்கள் நிருபங்களை நாணற்காகிதங்களில் எழுதினார்கள். 2 கொரி 3[3] 2 யோவா 12 வச.

சகரியா எழுதின 'பலகை' மெழுகு வார்த்த பலகையாயிருக்கலாம். லூக் 1[63].

**எறும்பு**. **Ant.** பலெஸ்தீனா தேசத்தில் எறும்புகளில் அநேக வகை உண்டு. எறும்பு முன்னறிவுக்கும் சுறுசுறுப்புக்கும் உதாரணமாகச் சொல்லப்படுகிறது. நீதி 6[6] 30[25].

**ஏனா, ஏனா**. **Hena.** இந்தப் பதத்தைப் பற்றி வேதசாஸ்திரிகளுக்குச் சந்தேகம். இது ஐபிராத்து நதியின் கரையில் உள்ள ஒரு ஊர் எனச் சிலர் உத்தேசிக்கிறார்கள். 2 இரா 18[34] 19[13] ஏசா 37[13].

**ஏனாதாத்**. **Henadad.** [ஆதாத்தின் தயவு]. எஸ்றா 3[9].

**என்ஆத்சோர்**. **En-Hazor.** [ஆத்சோரின் ஊற்று]. யோசு 19[37].

**என்எக்லாயீம்**. **En-eglaim.** எசே 47[10].

**என்கன்னீம்**. **Engannim.**

1. யூதாவில் ஒரு ஊர். யோசு 15[34].
2. கலிலேயாவுக்குத் தெற்கெல்லையாய் இருக்கும் ஒரு ஊர். யோசு 19[21].

**என்காதா**. **En-haddah.** யோசு 19[21].

**என்கேதி**. **Engedi.** [ஆட்டுக்குட்டியின் ஊற்று]. யூதா வனாந்தரத்தில் தாவீது ஒளித்திருந்த இடம். 1 சாமு 23[29] 2 நாளா 20[2] உன். பா 1[14] எசே 47[10]. இதற்கு ஆசாசோன் தாமார் என்றும் பெயர். ஆதி 14[7] 2 நாளா 20[2].

**என்சேமேஷ்**. **En-Shemesh.** [சூரியன் ஊற்று]. எருசலேமிலிருந்து எரிகோவுக்குப் போகும் வழியிலே பக்கத்திலுள்ள ஓர் நீர் ஊற்று. யோசு 15[7] 18[17].

**என்தப்புவா**. **Entappuah.** = தப்புவா. யோசு 17[7] 16[8].

**என்மிஸ்பாத்து**. **En-mishpat.** [நியாயத்தீர்ப்பின் ஊற்று]. யோசு 14[7]. **காதேஸ் பர்நேயா** காண்க.

**என்ரிம்மோன்**. **En-rimmon.** [மாதளத்தின் ஊற்று]. பெயெர்செபாவுக்குச் சமீபமான ஊர். நெகே 11[29].

**என்ரோகேல்**. **இன்ரோகேல்** காண்க.

## ஏ.

**ஏகத்துவ மார்க்கத்தார்**. **சோசினியர்** காண்க.

**ஏகி**. **Ehi.** = **அகிரா** காண்க.

**ஏகியேல்**. **Jehiel.** **எகியேல்** காண்க.

**ஏகூ, யேகூ**. **Jehu.**

1. ஒரு தீர்க்கதரிசி. 1 இரா 16[1].
2. ஒரு யூதன். 1 நாளா 2[38].
3. சிமியோன் கோத்திரத்தான். 1 நாளா 4[35].
4. ஒரு போர்வீரன். 1 நாளா 12[3].
5. இஸ்ரவேல் ராஜா.

ஆகாப் வீட்டார் செய்த காரியங்களைப் பற்றி இஸ்ரவேலர் அநேகருக்கு வெறுப்பு உண்டானது என்றும், எலியா ஆகாப் வீட்டாரின்மேல் சாபம் இட்டான் என்றும் இவனுக்கு நன்றாய்த் தெரியும். 2 இரா 9[25]. யோராம் ராஜாவுக்குப் பதிலாக இவன் கீலேயாத்திலுள்ள ராமோத்திலே சேனாபதியாய் இருக்கும்போது எலிசா அனுப்பின சீஷன் இவனை இஸ்ரவேலின் ராஜாவாக அபிஷேகம் பண்ணினான். இவன் சிங்காசனத்தைப் பிடித்து, யோராம் ராஜாவையும் ஆகாப் வீட்டாரையும் கொலைசெய்து இஸ்ரவேல் ராஜ்யத்தை யாண்டுவந்தான் (கி-மு. 842-814.). இதினிமித்தம் ஓசியா தீர்க்கதரிசி இவன் வீட்டில் பழி சுமரும் என்று கண்டான். ஓசி 1[4]. அசீரியர் செங்கற்களில் வரைந்த அக்ஷராதிகளை நாம் பார்த்தால் இவன் இரண்டாம் சல்மனாசர் என்னும் ராஜாவின் உதவியினாலே சீரியரை ஜெயிக்கும்படி அவனுக்குக் கப்பம் கட்டினான் என்று அறிவோம். அசீரியர்களோ கிழக்குத் தேசத்திலுள்ள சண்டைகளைப்பற்றிக் கவலைப்பட்டு ஏகூவுக்குத் தகுந்த உதவிசெய்யாமல் இருந்ததினாலே இவன் அரசாண்ட கடைசி வருஷங்களில் இஸ்ரவேல் ராஜ்யத்துக்குத் துன்பம் அதிகமாய் வந்தது.

**ஏகூஸ்**. **Jehush.** 1 நாளா 8[39].

**ஏகூத்**. **Ehud.**

1. மோவாப் அதிகாரத்திலிருந்து இஸ்ரவேலை ரட்சித்தவன். நியா 3[12].
2. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா 7[10].

**ஏசபேல், யேசபேல்**. **Jezebel.** சீதோன் ராஜாவின் மகளாகிய இவள் இஸ்ரவேல் ராஜாவாகிய ஆகாபின் மனைவி. இஸ்ரவேல் தேசத்தில் யேகோவாவின் மார்க்கத்தை எதிர்த்து எலியாவைப் பகைத்து அநியாயம் செய்தவள். 1 இரா 18[19] 21[1] 2 இரா 9[31]. புதிய

ஏற்பாட்டில் தியத்தீராசபையிலுள்ள மனுஷரை வஞ்சிக்கிற கள்ளதீர்க்கதரிசியானவளைப்பற்றி இந்தப் பெயர் உபமானமாய்ச் சொல்லி யிருக்கிறது. வெளி $2^{20}$.

**ஏசா. Esau.** ['செம்மஞ்சள்' அல்லது 'அதிக ரோமம் உடையவன்']. இவன் மலை நாட்டாரை ஜெயித்து சேயீரிலே தன்னை ஸ்தாபித்தான். இவன் சரித்திரம் ஆதி $25^{22.25.29}$ $26^{34}$ $27^{29}$ $28^{9}$ $33^{4}$ $36^{1}$ ஓசி $12^{3}$. ஏதோமியருக்குக் கோத்திரப் பிதா. ஆதி $36^{9}$. எபி $12^{16}$-ல் ஏசா உத்தம காரியங்களைக் கவனிக்காமல் ஆத்திரத்தோடு தாங்கள் விரும்பும் காரியங்களைச் செய்கிற சீர்கெட்டவர்களுக்கு முன் மாதிரியாய் இருக்கிறான்.

**ஏசாயா. Isaiah.** ['யேகோவாவின் உதவி' அல்லது 'யேகோவா உதவி செய்கிறார்']. கி-மு எட்டாம் நூற்றாண்டில் நாலு பெரிய தீர்க்கதரிசிகள் இருந்தார்கள். இவர்களில் ஆமோஸ் பெத்தேலில் பிரசங்கித்ததற்கு இருபது வருஷங்களுக்குப் பிறகும், ஓசியா பிரசங்கித்ததற்குச் சில வருஷங்களுக்குப் பிறகும், ஏசாயா பிரசங்கிக்கத் தொடங்கினான். ஏசாயா பிரசங்கித்த காலத்தில் மீகா பிரசங்கித்தான். ஏசாயா பிரதானமாய் யூதராஜ்யத்தைப்பற்றித் தீர்க்கதரிசனங் கூறினான்.

ஏசாயா தீர்க்கதரிசனப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறவைகளையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் இவனைப்பற்றி நாம் கொஞ்சம் அறிந்து கொள்ளலாம். இவன் உசியா, யோத்தாம், ஆகாஸ், எசேக்கியா என்னும் ராஜாக்களின் காலத்தில் தீர்க்கதரிசன ஊழியம் செய்தான் (கி-மு. 738-700.). இவன் அசீரியர் பலெஸ்தீனா, யூதா முதலிய தேசங்களுக்கு விரோதமாய் நாலுமுறை படையெடுத்துப் போனதைப் பார்த்தான். இவன் நாற்பது வருஷம் ஊழியம் செய்ததினாலே இவ்வூழியத்தைத் தான் முப்பதுவயதாய் இருக்கிறதற்கு முந்தித் தொடங்கினான் என்று நாம் அறியவேண்டும். இவன் தன் ஜீவியகால மெல்லாம் எருசலேமில் வசித்தான். ராஜாவும் ராஜ்யத்திலுள்ள மற்றும்பெரியோரும் இவனுக்கு நன்றாய்த்தெரிந்தவர்கள். $7^{1}$ $8^{2}$. இவன் மனைவியும் தீர்க்கதரிசியானவளாய் இருந்தாள். $8^{3}$. இவன் தன் பிள்ளைகளுக்குச் சேயார் யாசூப், மகேர்-சாலால்-அஷ்-பாஸ் என்னும் காரணப் பெயர் கொடுத்தான். $7^{3}$ $8^{3}$.

**இவனுடைய போதனையில்** அடங்கிய ஐந்து விஷயங்களின் சுருக்கம்.

1. அசீரியரின் மூலமாய் வரப்போகிற தண்டனையைப்பற்றி யூதர்களுக்குப் போதனை செய்தான். இந்தத் தண்டனைக்குக் காரணம் என்னவென்றால்:

(1) அவன் எங்கும் பார்த்த அநியாயமும் துன்மார்க்கமும். $2^{6}$-$4^{1}$ $5^{8-24}$.

(2) ஜனங்கள் யேகோவாவுக்குக் காட்டிய நன்றியீனம். $5^{1-7}$.

(3) ஜனங்கள் நீதி இரக்கம் செய்யாமல் வீண் சடங்காசாரங்களைச் செய்துவந்தது. $1^{2-31}$.

2. யேகோவா நீதியும் இரக்கமும் உள்ளவர், நீதியினிமித்தம் தமது ஜனங்களுடன் வழக்காடுகிறவர், தீமை பாவம் எல்லாவற்றையும் ஜெயிக்கிறவர்.

3. யேகோவா சர்வத்தையும் ஆளுகிறவர், ஆதலால் யூதர்கள் அசீரியரின் அல்லது எகிப்தியரின் உதவியைத் தேடக்கூடாது. $7^{4}$ $20^{1}$ $30^{1.15}$ $31^{1}$.

4. இஸ்ரவேலும் யூதாவும் தண்டிக்கப்படும். இஸ்ரவேல் அழிக்கப்படும். $9^{8}$-$10^{4}$ $17^{1-11}$. அப்பொழுது மீதியாய் ஒருபாகம் இருக்கும் என்றும், இந்தத் தண்டனைக்குப் பிறகு 'நீதிபுரம்' 'சத்தியநகரம்' என்னும் புதிய எருசலேம் இருக்கும் என்றும் சொல்லியது. $1^{26}$ $5^{26-30}$ $17^{6}$ மு.

5. மேசியாவாகிய சமாதானப் பிரபு வருவார். $9^{1}$.

குரூரமுள்ள மனாசே என்னும் அரசனின் காலத்தில் இவன் வாளினால் இரண்டாக வெட்டப்பட்டுச் செத்தான் என்பது பாரம்பரியமேயொழிய இவனுடைய மரணத்தைப்பற்றித் திட்டமாய் ஒன்றும் தெரியாது.

**ஏசாயாவின் புஸ்தகம். The Book of Isaiah.** இந்தப் புஸ்தகத்தில் பல புஸ்தகங்கள் சேர்ந்து ஒரே புஸ்தகமாய் உண்டாக்கப்பட்டது என்று வேதசாஸ்திரிகள் தீர்மானிக்கிறார்கள். இந்தப் புஸ்தகத்தில் இரண்டு பாகம் அடங்கியிருக்கிறது என அறியலாம்.

**முதலாவது,** அசீரிய ராஜாக்களாகிய பூல், நாலாம் சல்மனாசார், சர்கோன், சனகெரிப் ஆகிய இவர்கள் நாலுமுறை படையெடுத்து வந்த காலங்களில் ஏசாயா தீர்க்கதரிசனம் உரைத்தவைகள். 1-39 அதி.

**இரண்டாவது,** 40-66 அதி. இந்த அதிகாரங்களில் சொல்லியவை பலவிதமானவை. இவைகளுக்கு ஆக்கியோன் பெயர் இல்லை. இவைகளைச் சொன்னவர்கள் இவைகளில் தாங்களிருந்த காலத்தின் சரித்திரத்தை நமக்கு விளக்கமாய்ச் சொல்லாமல் ஆத்துமாவுக்கு நல் ஞானகாரமாகிய புத்தி போதனையைக் காட்டியிருக்கிறார்கள்.

இரண்டு பாகங்களாக எழுதியிருக்கும் தீர்க்கதரிசனங்கள் காலமுறையின்படி சொல்லியிருக்கவில்லை. உதாரணமாக: ஏசாயாவின் அழைப்பைப்பற்றி முதல் அதிகாரத்தில் அல்ல, ஆறும் அதிகாரத்தில் சொல்லியிருக்கிறது. முதலில் துண்டு துண்டுகளாக எழுதப்பட்ட முதலாம் பாகத்தின் வாக்கியங்களும் ஏசாயாவின் சீஷர்களால் ($8^{16}$) ஒன்றாகச் சேர்க்கப்பட்டது என்று நினைக்கலாம். கடைசியில் யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்த சில காலத்துக்குப் பிறகு இவைகளும் இரண்டாம் பாகத்தின் வாக்கியங்களும் சேர்ந்த புஸ்தகம் இப்போது வேதத்தில் நாம் காண்கிற ஏசாயா புஸ்தகமே.

இப்புஸ்தகத்தில் சொல்லியவைகளைக் காலக்கிரமத்தின்படி நுட்பமாய்ச்சொல்ல முடியாததினால் பின்னால் சொல்லிய வரலாற்றின்படி நாம் இப்புஸ்தகத்தை வாசித்தால் ஒருவேளை அதில் அடங்கிய பொருளை அறிவோம்.

**முதலாம் பாகம்**, 1-39 அதி.

1. ஏறக்குறைய கி-மு. 733-ஆம் ஆண்டில் திக்லாத் பிலேசர் என்னும் பூல் யூதாவுக்கு விரோதமாய் வருகிறதற்கு முந்திச் சொன்ன வாக்கியங்கள். $2^{1}$-$10^{4}$ $17^{1-14}$. இவைகளில் ஏசாயாவின் அழைப்பு, இஸ்ரவேல் யூதாவின் நிலைமை, அசீரியரின் வருகை, இஸ்ரவேலின் அழிவு, யூதாவில் மீட்பரின் வருகை இவைகளைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. திக்லாத்பிலேசர் வட இஸ்ரவேலில் ஒரு பாகத்தைப் பிடித்துத் தன் தேசம் சென்றான்.

2. ஏறக்குறைய கி-மு. 725-ஆம் ஆண்டில் சல்மனாசார் சமாரியாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போகிறதற்கு முன்சொன்ன தீர்க்கதரிசனங்கள். $28^{1-29}$ $10^{5}$-$11^{16}$. இஸ்ரவேலுக்கு வரும் அழிவைச் சொல்லி, யூதாவுக்கு எச்சரிக்கை செய்து, சீயோனுக்கு வரும் மகிமையைக் கூறுகிறான். கி-மு. 722-ஆம் ஆண்டில் அசீரியர்கள் சமாரியாவை அழித்தார்கள்.

3. கி-மு. 711-ஆம் ஆண்டில் சர்கோன் யூதா, மோவாப் முதலிய ராஜ்யங்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தான். அக்காலத்தில் ஏசாயா கூறின தீர்க்கதரிசனம். $10^{5-34}$ $22^{1-25}$ $36^{1}$ $20^{1-6}$ $21^{1-10}$ $16^{13.14}$ $38^{1-22}$ $39^{1-8}$.

4. கி-மு. 701-ஆம் ஆண்டில் சனகெரிப் சீதோன், ஏதோம், யூதா முதலியவைகளைத் தண்டிக்கும்படி வந்தான். அதற்கு முன் ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அநேகம். $29^{1-24}$ $30^{1-33}$ $31^{1-9}$ $32^{1-20}$. இவைகளில் எருசலேமின் முற்றிக்கையைப்பற்றியும், வரப்போகிற மீட்பைப்பற்றியும் யூதர்கள் எகிப்தை நம்பக்கூடாது என்பதைப்பற்றியும் சொல்லியிருக்கிறது. இக்காலத்தில் அந்நிய ஜாதியாரைப்பற்றிச் சொல்லியவைகள். $14^{24-32}$ $17^{12-14}$ $18^{1-7}$ $19^{1-25}$ $21^{1-17}$ $23^{1-18}$. இக்காலத்திலும் ஏசாயா பின்வருமாறு சொல்லுகிறான். யூதாவுக்கு உண்டாகும் துன்பம். $1^{1-31}$. எருசலேமில் நடக்கும் துன்மார்க்கம். $22^{1-25}$. அசீரியர்கள் திரும்பிப் போகுதல். $33^{1-24}$. இதோடு $36^{2}$ $37^{1-38}$ பார்க்க. இதோடு 19 அதிகாரமும் சேர்ந்தது.

**இரண்டாம் பாகம்**. 40-66 அதி. இதில் இரண்டு பிரிவுகள் உண்டு.

1. ஏசா 40-55 அதி. இந்த அதிகாரங்கள் பாபிலோனியாவில் இருந்த தீர்க்கதரிசியால் சிறையிருப்பில் இருந்த யூதருக்குச் சொல்லுகிறதுபோல் தோன்றுகின்றன. இதில் தீர்க்கதரிசி சிறையிருப்பின் முடிவையும், யூதர்கள் பாழாய்ப்போன எருசலேமுக்குத் திரும்பிப் போவதையும், கோரேஸ் அரசனையும், பாபிலோனின் அழிவையும்பற்றிச் சொல்லுகிறான். $44^{28}$ $45^{1}$ $49^{14-21}$ $51^{3.17-23}$ $52^{7-12}$ $54^{1-17}$. இவ்வசனங்களோடு $46^{1-13}$ $47^{1-15}$ அத்தாட்சியாகக் காண்க.

இந்த அதிகாரங்களில் தீர்க்கதரிசி சிறையிருப்பில் இருக்கிறவர்களுக்கு அவர்கள் தங்கள் துக்கமெல்லாம் விட்டு அவர்கள்மூலமாய் யேகோவா தம்மை மகிமைப்படுத்தி எல்லா ஜாதிகளுக்கும் சன்மார்க்கத்தைக் காட்டப் போகிறார் என்பதில் அவர்கள் நல்நம்பிக்கையுடையவர்களாய் இருக்கும்படி போதிக்கிறான். இதினிமித்தம் விக்கிரகாராதனை வீண் என்றும், சர்வவல்லமையும் ஞானமும் உடையவராகிய யேகோவாவின் தொண்டராய் எல்லாரும் இருக்கவேண்டும் என்றும் சொல்லுகிறான். $41^{8}$ $44^{1.21}$ $45^{4}$ $49^{3}$.

2. ஏசா 56-66 அதி. இவைகளில் யூதசபையில் அந்நியர்கள் பிரவேசித்தல்; ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரித்தல் ($56^{1-8}$), காவற்காரர்களின் அஜாக்கிரதை, விக்கிரகாராதனை, துன்மார்க்கமுள்ள சடங்காசாரங்கள் ($56^{9}$-$57^{21}$), எச்சரிப்பு (58, 59 அதி), யேகோவாவின் வருகை ($60^{1}$), சீயோனின் மகிமை (60-62 அதி), ஏதோமின் அழிவு ($63^{1}$), பாவஅறிக்கை ($63^{7}$-$64^{12}$), உண்மையுள்ளவர்களினதும் உண்மையில்லாதவர்களினதும் நிலைமை ($56^{9}$-$57^{21}$) ஆகிய இவைகளைப்பற்றித் தீர்க்கதரிசி விவரமாய்ச் சொல்லுகிறான். 40-55 அதிகாரங்கள் எழுதின காலத்தில் அல்லது அவைகளுக்குச் சற்றே முன்பின் இந்த அதிகாரங்கள் எழுதியிருக்கவேண்டும். இவைகள் அவ்வதிகாரங்களின் ஆக்கியோன்களால் எழுதப்பட்டவைகளாய் இருந்தாலுஞ் சரி, இல்லாவிட்டாலும் சரி, இவைகளில் மற்றெந்தப் பழைய ஏற்பாட்

டின் புஸ்தகங்களிலுள்ள போதனைகளைவிட ஆத்துமாவுக்குரிய நற்போதனைகள் அநேகமாய் அடங்கியிருக்கின்றன. சூரியன் உதிக்கும்போது அதின் பூரண பிரபையை எப்படி நாம் முன் அறிகிறோமோ, அப்படியே இயேசுகிறிஸ்து அறிவிக்கப்போகிற போதனையின் மகிமையை நாம் இந்த அதிகாரங்களில் முன்னதாகவே காணலாம். பொக்கிஷசாலைபோன்ற பழைய ஏற்பாட்டில் பல விதமான ஞானாபரணம் நிறைந்த புஸ்தகங்கள் இருக்கின்றன. அவைகளில் இதே விசேஷமானது.

**ஏசீர்.** Hezir.

1. 1 நாளா $24^{15}$.
2. நெகே $10^{20}$.

**ஏசேர்.** **எசேர்** காண்க.

**ஏசேக்கு.** Esek. [வழக்கு]. ஈசாக்கு வெட்டின கிணறு. இடம் தெரியாது. ஆதி $26^{20}$.

**ஏசேத்.** Hesed. [தயவு]. 1 இரா $4^{10}$.

**ஏசேர்.** Jesher. காலேபின் மகன். 1 நாளா $2^{18}$.

**ஏசேர்.** Ezer. **எசேர்** காண்க.

**ஏசேல்.** Ezel. [புறப்படப்போகிறது]. யோனத்தானும் தாவீதும் சந்தித்த இடம் 1 சாமு $20^{19}$.

**ஏஸ்னி.** Ezni. 2 சாமு $23^{8}$.

**ஏதாம், ஏத்தாம்.** Etam, Etham.

1. சிம்சோன் தன்னை மறைத்த இடம். நியா $15^{8}$.
2. ஒரு ஊர். 1 நாளா $4^{32}$.
3. ஒரு ஊர். 2 நாளா $11^{6}$. ஒருவேளை இந்த மூன்று இடங்களும் ஒன்றுதான்.
4. இஸ்ரவேலர் தங்கின ஒரு இடம். யாத் $13^{20}$.

**ஏதான், ஏத்தான்.** Ethan.

1. 1 நாளா $4^{31}$ சங் 89 தலைப்பு காண்க.
2. 1 நாளா $6^{42}$ = யோவா 1 நாளா $4^{21}$.
3. 1 நாளா $6^{44}$.

**ஏதேர்.** Eder.

1. இரண்டு ஊர்கள். ஆதி $35^{21}$ யோசு $15^{21}$.
2. இரண்டு புருஷர்கள். 1 நாளா $8^{15}$ $23^{23}$.

**ஏதேன் தோட்டம்.** Eden. கடவுள் உண்டாக்கின தோட்டமும், அதில் பாய்ந்த நதிகளும், விருக்ஷங்களும், ஆதித் தாய் தகப்பனின் சரித்திரமும் ஆதியாகமத்திற் சொல்லியிருக்கிறது. ஆதி $2^{10-14}$ $3^{22-24}$. வேதசாஸ்திரிகள் இதிற் பாய்ந்துகொண்டிருந்த நாலு நதிகளில் இரண்டு ஐபிராத்து, திகிரீஸ் தான் என்று ஒத்துக்கொள்ளுகிறார்கள். மற்ற இரண்டு நதிகள் இவை என்பது தெரியாது. மேலும் ஏதேன் தோட்டம் இருந்த இடத்தை நிதானமாய் அறியும்படி வேதசாஸ்திரிகள் வேண்டிய பிரயத்தனமெல்லாம் செய்தும் அனுகூலம் அடையவில்லை.

ஏதேன் என்னும் பதம் உத்தேசிக்குமிடத்து 'நேர்த்தியான' அல்லது 'திருப்தி கொடுக்கக்கூடிய' என அர்த்தமாம். செழிப்பான பூமிக்கு ஏதேன் அல்லது ஏதேன் தோட்டம் என்று சொல்லப்படுகிறது. ஆதி $13^{10}$ ஏசா $53^{3}$ எசே $31^{9, 18}$ யோவே $2^{3}$.

கி-மு. யூதர்கள் பழைய ஏற்பாட்டில் இல்லாத புஸ்தகங்களை எழுதினவர்களும் ஆதி கிறிஸ்தவர்களில் சிலரும் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தின்படி ஏதேன் தோட்டத்தைப்பற்றி விவரமாய்ச் சொல்லியிருக்கிறார்கள். புதிய ஏற்பாட்டில் இதின் பெயர் சொல்லப்பட்டிருக்கவில்லை. இதில் 'பரதீசு' என்று சொல்லப்பட்டதற்கு ஏதேனைப் பற்றிய அபிப்பிராயமே காரணம்.

**ஏதேன்.** Eden. 1. ஒரு லேவியன். 2 நாளா $29^{12}$ $31^{15}$.

2. ஒரு ஊர். எசே $27^{23}$.

**ஏதேன் புத்திரர்.** The sons of Eden. 2 இரா $19^{12}$ ஏசா $37^{12}$.

**ஏதோம்.** Edom. **இதுமேயா** காண்க.

**ஏத்.** Ed. [சாக்ஷி]. யோர்தானின் கிழக்குக் கரையில் கட்டின பலிபீடத்தின் பெயர். யோசு $22^{34}$.

**ஏத்.** Heth. கானானின் மகன். ஆதி $10^{15}$. ஏசாவின் மனைவிகள் 'ஏத்தின் குமாரத்திகள்' எனச் சொல்லியிருக்கிறது. இவர்கள் ஏத்தியரைச் சேர்ந்தவர்கள். ஆதி $27^{46}$. **ஏத்தியர்** காண்க.

**ஏத்சேர்.** **எசேர்** காண்க.

**ஏத்தானீம்.** Ethanim. **காலம்** காண்க.

**ஏத்தான்.** Ethan. **ஏதான்** காண்க.

**ஏத்தியர்.** Hittites. ஏத்தியர்கள் ஆதி காலத்தில் சின்ன ஆசியாவிலும், சீரியாவிலும் வசித்த ஓர் பெரிய ஜனம். ஆபிரகாம் ஒரு ஏத்தியனிடமிருந்து மக்பேலாவை வாங்கினான். இஸ்ரவேலர் கானானுக்கு வருகிறதற்கு முன்னே அங்கே ஏத்தியர் இருந்தார்கள். ஆதி 23 அதி. யாத் $3^{8}$ எண் $13^{29}$. இவர்கள் கி-மு. 1500-வருஷத்தில் எகிப்தியருக்குக் கப்பம் கட்டிக்கொண்டிருந்தார்கள் என்றும், அதற்குப் பிறகு இவர்களுக்கும் எகிப்தியருக்கும் அடிக்கடி சண்டை நடந்துகொண்

டிருந்தது என்றும் தெரிகிறது. ஒருவேளை சிசெரா ஒரு ஏத்திய சேனுபதியாய் இருந்திருக்கலாம். நியா 4². தாவீதின் காலத்தில் சில ஏத்தியர்களைப்பற்றியும், சாலொமோன் காலத்தில் இருந்த ஏத்திய ராஜாக்களைப்பற்றியும் வாசிக்கிறோம். 1 சாமு 26⁶ 2 சாமு 11³ 1 இரா 10²⁹. பிற்பாடு அசீரியர் பல இடங்களில் ஏத்தியரோடு யுத்தம் செய்ததினுலே இவர்கள் தங்கள் ராஜ்யங்களைப் பல இடங்களில் ஸ்தாபித்திருப்பார்கள் என்பது நிச்சயம். பல இடங்களில் இருந்த இவர்கள் சேர்ந்து ஒரு சமயத்தில் ஒரு பெரிய ராஜ்யத்தைச் சின்ன ஆசியாவிலே ஸ்தாபித்தார்களோ இல்லையோ என்பது திட்டமாய்த் தெரியாது.

**ஏத்திரோ.** Jethro. **எத்திரோ** காண்க.

**ஏத்தேர், யெத்தேர்.** Jether.

1. = எத்திரோ. மோசேயின் மாமன். யாத் 4¹⁸.
2. நியா 8²⁰.
3. 1 இரா 2⁵.
4. 1 நாளா 2³².
5. 1 நாளா 4¹⁷.
6. = இத்திரான். 1 நாளா 7³⁸.

**ஏத்தேர்.** Ether. யோசு 51⁴².

**ஏத்பாகால்.** Eth-Baal. [பாகாலின் தயவுபெற்றவன்]. ஏசபேலின் தகப்பனுகிய தீரு சீதோன் என்னும் ஊர்களின் ராஜா. 1 இரா 16³¹.

**ஏந்திரம்.** Mill-stone. எந்திரத்தின் அடிக்கல் மேற்கல்லேப்பார்க்கிலும் பெரிது. யோபு 41²⁴. புதிய ஏற்பாட்டிற் சொல்லியிருக்கிறபடி பெரிய எந்திரங்களை இரண்டு ஸ்திரீகள் ஆட்டி அரைப்பார்கள். மத் 24⁴¹. புதிய ஏற்பாட்டின் காலத்தில் கழுதை கட்டியாட்டும் எந்திரங்களும் இருந்தன. இவைகள் அதிகம் பெரிதாய் இருக்கும். மத் 18⁶-ல் இயேசு சொன்ன எந்திரம் இதுதான். வீட்டுப் பெண்கள் வழக்கமாய் எந்திரம் ஆட்டுவார்கள். தனவான்களின் வீடுகளில் அடிமைகள் ஆண்களும் பெண்களும் இந்த வேலே செய்வார்கள். நியா 16²¹ யாத் 11⁵. கஷ்டமான வேலேயாதலால் இது அடிமைத்தனத்தைக் குறிக்கிறது. ஏசா 47². எந்திரம் இல்லாமல் அன்றடகச் சாப்பாட்டுக்குத் தானியம் அரைப்பது கூடாதாகையால் அதையல்லது அதின் ஓர் கல்லே அடகாக வாங்கப்படாது. உபா 24⁶.



ஏபால், கெரிசீம் மலைகளும், சீகேம் ஊரும்.

**ஏபால்.** Ebal.

1. சீகேம் ஊருக்கு வடக்கே உள்ள ஒரு மலே. இதில் யோசுவா பலிபீடம் ஒன்று கட்டி நியாயப்பிரமாணத்தை மீறினவர்களுக்குச் சாபம் கூறினன். யோசு 8³³.
2. 1 நாளா 1²² = ஒபால். ஆதி 10²⁸.
3. 1 நாளா 1⁴⁰.

**ஏபூசியர்.** Jebusites. **எபூசியர்** காண்க.

**ஏபேத்.** Ebed. [அடிமை].

1. நியா 9²⁶.

2. எஸ்ரு $8^{6}$.

**ஏபேர். Eber. Heber.**

1. எபிரெயர்களுக்கு ஆதி பிதா. ஆதி $10^{21}$.
2. 1 நாளா $5^{13}$.
3. 1 நாளா $8^{12}$.
4. 1 நாளா $8^{22}$.
5. நெகே $12^{20}$.
6. ஆதி $46^{17}$.
7. யாவேலின் புருஷன். நியா $4^{17}$.
8. 1 நாளா $4^{18}$.
9. 1 நாளா $8^{17}$.

**ஏபோத்து.** Ephod. உடை (2. c.) **ஊரீம் தும்மீம்** காண்க.

**ஏப்பா.** Epah. ஒரு அரபிய கோத்திரம். ஆதி $25^{4}$ ஏசா $60^{6}$.

**ஏப்பாயி.** Ephal. எரே $40^{8}$ $41^{3}$.

**ஏப்பேர்.** Epher, Hepher. **எப்பேர்** காண்க.

**ஏமாம்.** Hemam. ஓரியர்களில் ஒரு கோத்திரம். ஆதி $36^{22}$. = ஓமாம். 1 நாளா $1^{39}$.

**ஏமான்.** Heman.

1. ஒரு சாஸ்திரி. 1 இரா $4^{31}$.

2. சங்கீதக்காரன் ஒருவன். 1 நாளா $2^{6}$ சங் 88 தலைப்பு காண்க.

3. ஒரு பாடகன். 1 நாளா $6^{33}$.

**ஏமீயர்.** Emims. மோவாபில் ராக்ஷதரைப்போன்ற பூர்வஜனம். உபா $2^{10}$ ஆதி $14^{5}$.

**ஏமோரியர்.** Amorites. **அம்மோரியர்** காண்க.

**ஏமோர்.** Hamor. **எமோர்** காண்க.

**ஏயேல்.** Jelel. **எகியேல்** காண்க.

**ஏயூஸ்.** Jeush. **எகூஷ்** காண்க.

**ஏராஸ்து.** Erastus. அப் $19^{22}$ ரோ $16^{23}$ 2 தீமோ $4^{20}$. இந்த மூன்று வசனங்களும் ஒருவனைக் குறிக்குமானால், கொரிந்து பட்டணத்திலுள்ள உக்கிராணக்காரனை இவன் ஆஸ்தியுடையவன் என நாம் நினைக்கவேண்டும்.

**ஏரான்.** Eran. எண் $26^{36}$.

**ஏரி.** Eri. ஆதி $46^{16}$.

**ஏரேக்.** Ereoh. பாபிலோனியா ராஜ்யத்தின் பூர்வ பட்டணம். ஆதி $10^{10}$.

**ஏரேஸ்.** Heres.

1. ஒரு மலை. நியா $1^{34}$.

2. ஒரு ஆள். 1 நாளா $9^{15}$.

**ஏரோதியர்.** Herodians. இவர்கள் யூதர்களில் ஏரோதுவின் கட்சிக்காரர். இவர்கள் பரிசேயரோடு இயேசுவுக்கு விரோதமாய் இருந்தவர்கள். மாற் $3^{6}$ $12^{13}$ மத் $22^{16}$.

**ஏரோதியாள்.** Herodias. **ஏரோது** காண்க.

**ஏரோதியோன்.** Herodion. ஒருவேளை ஏரோது வீட்டாரில் கிறிஸ்தவனான ஒருவன். ரோ $16^{11}$.

**ஏரோது.** Herod. ரோமர்கள் எகிப்து தேசத்தை ஜெயித்து எருசலேமை முதல் முறை பிடித்தபிறகு (கி-மு. 63) தங்கள் தேசத்தை ஆண்டுகொள்ளும் திராணி யூதர்களுக்குக் குறைந்ததினால் ரோமர்கள் அவர்களுடைய தேசத்தைத் தங்கள் ராஜ்யத்தோடு சேர்க்காவிட்டாலும், இதுமேயனாகிய **அந்திப்பத்தேர்** அதை ஆளும்படியான சிலாக்கியத்தை இவனுக்குக் கொடுத்தார்கள். இவன் யூதனல்ல, இதுமேயனாயிருந்ததினால் பரிசேயர் இவனை 'பாதி யூதன்' என்று பரிகாசமாய் அழைத்தார்கள். இவன் உற்சாகமும் கபடமும் உள்ளவனாய்ப் பல வருஷங்கள் ஆளுகைசெய்து கி-மு. 33-ஆவது மரித்தான்.

பெரிய **ஏரோது.** *Herod the Great.*

அந்திப்பத்தேரின் புத்திரர்களில் இவன் சாதுரியனும் புத்தி சிறந்தவனுமாயிருந்து கி.பி. 4-ஆவ வரையும் தன் ராஜ்யத்தை அதிக திறமையோடு ஆண்டு அத்தேசத்தையும், அத்தேசத்திலும் புறதேசங்களிலுமுள்ள யூதர்களையும் காப்பாற்றி, எருசலேமிலே பெரிய மாளிகை கோட்டை கோபுரங்களையும், மறுபடியும் தேவாலயத்தையும் அதிக சிறப்புற்றதாய்க் கட்டி ஜனங்களுக்கு அநேக நன்மைகள் செய்துவந்தான். ஆனால் இவன் அதிக குரோதியும் சமுசயப்படுகிறவனுமாயிருந்து தன் குடும்பத்திலுள்ளவர்களிலும், யூதர்களிலுள்ள தனவான்களிலும் அநேகரைக் கொலைசெய்தான். இதினிமித்தமும், இவன் கிரேக்க தத்துவ ஞானத்தையும் நாகரீகத்தையும் தழுவி நடந்ததினிமித்தமும் யூதர்கள் இவனை வெறுத்து இவன் அரசாண்டகாலத்திற் பலதடவை இவனுக்கு விரோதமாய்க் கலகம் செய்தார்கள். மத் $2^{1}$ லூக் $1^{5}$.

அர்கெலாயு. *Archelaus.*

பெரிய ஏரோது இறந்துபோனபிறகு அவனுடைய குமாரர்களுக்கு அவனுடைய தேசம் 'காற்பங்காக' பிரிக்கப்பட்டது. இவர்களில் அர்கெலாயு யூதேயாவிலும் இதுமேயாவிலும் அரசாண்ட இரண்டு மூன்று வருஷமான பிற்பாடு ரோமர்கள் இவனுக்கு ராஜ்யத்தை நடத்தும் திறமையில்லையென அறிந்து

கி-பி. 6-ஆம் முதல் யூதேயாவிலே தேசாதிபதிகளை வைக்கத் தொடங்கினார்கள். மத் 2[22].

ஏரோது அந்திப்பா. *Herod Antipas.*

பெரிய ஏரோதின் மகனாகிய அந்திப்பா கி-பி. 39-ஆம் வரையும் கலிலேயாவிலே அரசாண்டான். இவன் மிகுந்த துன்மார்க்கமுடையவன் என்பதற்குத் தன் சகோதரனாகிய பிலிப்புவின் மனைவி ஏரோதியாளை வைத்திருந்தது திருஷ்டாந்தம். யோவான்ஸ்நானனைச்சிரச்சேதஞ்செய்தவனும், இயேசுவைப் பரிகாசம் பண்ணினவனும் இவன்தான். கடைசியாய் ரோமர்கள் இவன்பேரில் சமுசயப்பட்டவர்களாய் இவனை ராஜ்யத்திலிருந்து நீக்கிவிட்டார்கள். மத் 14[1] லூக் 3[19] 9[7] 13[33] அப் 13[1].

பிலிப்பு. *Philip.*

பிலிப்பு யோர்தான் நதிக்கும் கலிலேயாக் கடலுக்கும் இடையிலுள்ள இத்துரேயா என்னும் ராஜ்யத்திற்குக் காற்பங்கு தேசாதிபதியாய் இருந்தான். பெரிய ஏரோதின் குமாரரில் நல்லவன் என்று சொல்லப்படுகிறவன் ஒருவன் இருந்தால் இவன்தான் அவன். இவன் கி-பி. 34-ஆம் வரையில் அரசாண்டான். லூக் 3[1].

பிலிப்பு. *Philip.*

இந்த பிலிப்பும் முந்தினவனும் ஒருவனல்ல. இவன் ஏரோதியாளின் புருஷன். இவன் அரசாளாமல் ரோமாபுரியில் இருந்தான். மத் 14[3] மாற் 6[17].

ஏரோதியாள். *Herodias.*

ஏரோதியாள் பெரிய ஏரோதுக்குப் பேத்தி. இவள் தன் புருஷனாகிய பிலிப்புவை விட்டு, ஏரோது அந்திப்பாவைச் சேர்ந்து மேலான அதிகாரத்தின்மேல் ஆசைகொண்டு இந்த அந்திப்பாவைக்குறித்து ரோமர்கள் சமுசயப்படத்தக்கதாகச் சில காரியங்கள் செய்யும்படி அவனை ஏவினதினால் அவனுடைய கேட்டுக்கு இவளே காரணமாய் இருந்தாள்.

சலோமே. *Salome.*

ஏரோதியாளின் மகளாகிய சலோமே யோவான்ஸ்நானனின் தலையைக் கொடுக்கும்படி கேட்டவள். மத் 16[3] மாற் 6[17].

முதலாம் ஏரோது அகிரிப்பா.
*Herod Agrippa I.*

பெரிய ஏரோதின் பேரனாகிய அகிரிப்பா ரோமாபுரியில் சக்கரவர்த்தியின் தயவுபெற்று, பிலிப்புவின் அதிகாரமும் லிசானியாவின் அதிகாரமும், அந்திப்பாவின் அதிகாரமும் உடையவனாய் அரசாளும்படி கி-பி. 39-ஆம்த்தில் எருசலேமுக்கு வந்தான். இவன் கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தி கி.பி. 42-ஆம்த்தில் அதிக நிர்ப்பந்தமாய் மரித்தான். அப் 12[20].

இரண்டாம் ஏரோது அகிரிப்பா.
*Herod Agrippa II.*

முதலாம் அகிரிப்பாவின் மகனாகிய இந்த அகிரிப்பாவுக்கு முன்பாகப் பரி. பவுல் பிரசங்கம் செய்தான். ரோமைச் சக்கரவர்த்தி இவன்பேரில் பலவிதமாய்த் தயவு வைத்தான். ஏறக்குறைய கி-பி. 100-ம் வருஷத்தில் இவன் ஏரோதுவின் குடும்பத்திலே கடைசியானவனாய் மரித்தான். அப் 26 அதி.

பெர்னீக்கே. *Bernice.*

இரண்டாம் அகிரிப்பாவின் சகோதரியாகிய பெர்னீக்கே மகா பொல்லாதவள் என்பது அக்காலத்திலுள்ளவர்களின் அபிப்பிராயம். அப் 25[13. 23] 26[30].

துருசில்லா. *Drusilla.*

இரண்டாம் அகிரிப்பாவின் சகோதரியாகிய துருசில்லா தன் முதற் புருஷனை விட்டுப் பலெஸ்தீனாவின் தேசாதிபதியாகிய பேலிக்ஸ் என்பவனைத் தன் புருஷனாக்கிக்கொண்டாள். யூதஸ்திரீயாகிய இவள் இவ்விதமாய் நியாயப்பிரமாணத்தை மீறினதினால் யூதர்களுக்கு வெறுப்பு அதிகம் உண்டானது. அப் 24[24].

ஏரோதின் குடும்பத்தார் இன்னும் அநேகர் இருந்தார்கள். புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிறவர்களைப்பற்றி மாத்திரம் இவ்விடத்தில் எழுத இடமுண்டு. அந்தக் குடும்பத்தில் அறிவு அதிகாரம் அந்தஸ்து உடையவர்கள் அநேகர் இருந்தார்கள். ஆனாலும், அவர்கள் எல்லாரும் ஆண்களும் பெண்களும் துன்மார்க்கமாய் நடந்தார்கள்.

**ஏர். Er.**

1. ஆதி 38[3].
2. 1 நாளா 4[21].
3. லூக் 3[28].

**ஏலா. Ela, Elah, Helah.**

1. 1 இரா 4[18].
2. ஆதி 26[41].
3. குடிவெறி முதலான துன்மார்க்கமான வழியில் நடந்த இஸ்ரவேலின் ராஜா (கி-மு. 889-887). 1 இரா 16[8].
4. 2 இரா 15[30].
5. 1 நாளா 4[15].
6. 1 நாளா 9[8].

7. தாவீதும் கோலியாத்தும் சண்டை செய்த இடம். இது எருசலேமுக்குத் தென் மேற்கே 12 மைல் தூரமாய் உள்ள ஒரு பள்ளத்தாக்கு. 1 சாமு $17^{2}$.

8. ஒரு பெண். 1 நாளா $4^{5}$.

**ஏலாசார்.** **Ellasar.** ஐபிராத்து நதிக்குக் கிழக்குக்கரையில் தென் பாபிலோனியா நாட்டிலுள்ள ஒரு ஊர். இதில் சூரிய தேவதையை அதிகமாய் வணங்கினார்கள். இதின் ராஜாவாகிய அரியோகு கானானியருக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனான். ஆதி $14^{1}$.

**ஏலாத்.** **Elath.** செங்கடலின் வடகிழக்குக் கிளையிலுள்ள ஒரு துறைமுகம். உபா $2^{8}$. =ஏலோத். 1 இரா $9^{26}$. ஏலோத் என்பதற்குப் 'பெரிய மரங்கள்' என்று அர்த்தம். இவ்விடத்தில் மரங்கள் இருப்பதினால் சாலொமோன் இங்கே கப்பல்களைச் செய்தான்.

**ஏலாம்.** **Elam, Helam.**

1. ஆதி $10^{22}$.
2. 1 நாளா $26^{3}$.
3. 1 நாளா $8^{24}$.
4. எஸ்றா $2^{7}$.
5. எஸ்றா $2^{31}$.
6. நெகே $12^{42}$.
7. சீரியரின் ஒரு நாடு. 2 சாமு $10^{16}$.

**ஏலாம்.** **Elam.** திகிரீஸ் நதிக்குக் கிழக்குப் பக்கத்தில் உள்ள ஒரு தேசம். இதின் தலைநகரி சூசான். ஏறக்குறைய கி. மு. 2300-லே ஆபிரகாம் இருந்த காலத்தில் ஏலாமியர் பாபிலோனியா ராஜ்யத்தில் அதிக மேலான அதிகாரமுடையவர்களாய் கானான்வரையும் பரம்பியிருந்தார்கள். ஆதி $14^{1}$. இதற்குப் பிற்பாடு பாபிலோனியர் இவர்களை ஜெயித்தார்கள். பிற்காலத்தில் ஏலாமியர் பாபிலோனியரோடு ஒன்றுகூடியிருந்தார்கள். தீர்க்கதரிசிகள் மேதியரையும் ஏலாமியரையும் குறித்து ஒன்றுபோல் பாவித்து இவர்களுடைய பேரினால் பெர்சியா ராஜ்யத்தைக் குறிக்கிறார்கள். ஏசா $21^{2}$ $22^{6}$ எரே $25^{25}$ $49^{34}$ எசே $32^{24}$. பாபிலோனியாவில் சிறையிலிருந்த யூதர்கள் ஏலாமியரை மேலாக எண்ணினார்கள் என்பதற்குச் சிறையிருப்பிலிருந்தவர்களுக்கு இப்பெயர் வழங்கினது அத்தாட்சியாம். 1 நாளா $8^{24}$ எஸ்றா $2^{7 \cdot 31}$.

**ஏலி.** **Eli.**

1. சீலோவிலே சாமுவேலுக்கு முன்னிருந்த நியாயாதிபதி. 1 சாமு $1^{12}$ $2^{12}$ $3^{1}$ $4^{4}$ $4^{16}$. இவன் நல்லவனும் தாழ்மை உள்ளவனுமாய் இருந்தான். ஆனாலும் குடும்பகாரியங்களையும் ராஜ்யபாரத்தையும் செவ்வையாய் நடத்தும் திறமை இவனில் இருந்ததில்லை என்று தெரிகிறது.

2. =**Heli.** யோசேப்பின் தகப்பன். லூக் $3^{23}$.

**ஏலி ஏலி.** **Eli, Eli.** **எலோயீ** காண்க.

**ஏலிகோரேப்.** **Elihoreph.** 1 இரா $4^{3}$.

**ஏலிம்.** **Elim.** [கர்வாலி விருக்ஷங்கள்]. எபிரெயர்கள் வனாந்தரத்தில் கண்ட பசுந்தரையும் நீரூற்றும் உள்ள இடம். இது இருந்த இடம் திட்டமாய்த் தெரியாது. யாத் $15^{27}$.

**ஏலியேல்.** **Eliel.** **எலியேல்** காண்க.

**ஏலேக்.** **Helek.** எண் $26^{30}$.

**ஏலேத்.** **Heled.** **எல்தாய்** காண்க.

**ஏலேப்.** 1. = **Heleb.** 2 சாமு $23^{29}$. **எல்தாய்** காண்க. 2. யோசு $18^{28}$.

**ஏலேப்.** **Heleph.** யோசு $19^{33}$.

**ஏலேம்.** **Helem.**

1. **எல்தாய்** காண்க.
2. 1 நாளா $7^{35}$.

**ஏலோத்.** **Eloth.** **ஏலாத்** காண்க.

**ஏலோன்.** **Elon.**

1. யோசு. $19^{43}$.
2. 1 இரா $4^{9}$.
3. எண் $1^{9}$.

**ஏல்-எல்லோகே-இஸ்ரவேல்.** **El-Elohe-Israel.** [கடவுள் இஸ்ரவேலின் கர்த்தராய் இருக்கிறார்]. சீகேமிலே வாங்கின இடத்தில் கட்டின பலிபீடத்துக்கு யாக்கோபு கொடுத்த பெயர். ஆதி $33^{20}$.

**ஏல்-பெத்தேல்.** **El-Bethel.** [கடவுளின் வீடு]. யாக்கோபு தான் காட்சி கண்ட இடத்திற்கு இட்ட பெயர். ஆதி $35^{7}$.

**ஏவாள்.** **Eve.** ['ஜீவன்' அல்லது 'உயிர் கொடுக்கிறது']. மனுஷஜாதியாருக்கு ஆதித் தாய். ஆதி $3^{20}$. புதிய ஏற்பாட்டில் இரண்டு இடத்தில் இப்பெயர் சொல்லியிருக்கிறது. 2 கொரி $11^{3}$ 1 தீமோ $2^{13}$.

**ஏவி.** **Evi.** மீதியானியனான ராஜா. எண் $31^{8}$.

**ஏவியர்.** **Hivites.** கானானில் எபிரெயருக்கு முன்னிருந்த பூர்வ ஜனம். இவர்கள் இஸ்ரவேலருக்குப் பயந்ததினால் அவர்களோடு உபாயமாய் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். இவர்களைப்பற்றித் திட்டமாய் ஒன்றும் தெரியாது. ஆனால் இவர்களுக்கும் எபூசியர்களுக்கும் சம்பந்தம் இருந்தது என்று தோன்றுகிறது. யாத் $3^{8}$ யோசு $9^{7}$ 2 சாமு $24^{7}$.

**ஏவில்-மெரோதாக்.** **அசீரியா ராஜாக்கள்** காண்க. பக். 12.

**ஏழு.** **Seven.** **எண்கள்** காண்க.

**ஏளாள்.** **Helah.** 1 நாளா $4^{5}$.

**ஏறெடுத்துப் படைக்கும் பலி.** **Heave offering.** **பலி** காண்க.

**ஏற்பாடு.** **Testament,** கடவுள் தம்மை விசுவாசிக்கிறவர்களுக்குத் தாம் ஆதியிலும் இயேசுகிறிஸ்துவின் மூலமாயும் கிருபையையும் உடன்படிக்கைகளையும் ஏற்படுத்தினதினாலே, இதை விவரித்துச் சொல்லும் வேதத்தின் முக்கியமான இரண்டு பாகங்களுக்கும் 'பழைய ஏற்பாடு' 'புதிய ஏற்பாடு' என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

**ஏற்றச்சால்.** = நீர்ச்சால். ஏசா $40^{15}$ எண் $24^{7}$.

**ஏனா.** **Hena.** **ஏனா** காண்க.

**ஏனாக்கு.** **Anak.** **ஆனாக்கு** காண்க.

**ஏனாம், ஏனாயீம்.** **Enaim.** யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{34}$. 'நீர் ஊற்றுகள்' (ஆதி $38^{14.21}$) என்பதற்குப் பதில் 'ஏனாயீம்' என்னும் ஊரின் பெயராய் இருக்கவேண்டும்.

**ஏனான்.** **Enan.** எண் $1^{15}$.

**ஏனோக்கு.** **Enoch.** [கற்றுக்கொண்டவன்].

1. காயீனின் மகன். ஆதி $4^{17}$.
2. காயீன் கட்டின ஒரு ஊர். ஆதி $4^{17}$.
3. சேத்தின் சந்ததியார்களில் உத்தம பக்தன். ஆதி $5^{18}$ எபி $11^{5}$ யூதா $1^{14}$.

**ஏனோஸ்.** **Enos.** சேத்தின் மகன். ஆதி $4^{26}$.

**ஏன்.** **Hen.** [அருள்]. சக $6^{14}$.

## ஐ.

**ஐக்கியம், அன்னியோன்னியம்.** **Communion, Fellowship.** ஆதி கிறிஸ்தவர்களுக்குள் ஐக்கியத்தைப்பற்றிய அபிப்பிராயங்கள் பலவிதமாய் இருந்தன.

1. எருசலேமில் ஆரம்பத்திலே கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்தவர்கள் தங்களை ஓர் பெரிய குடும்பம்போல் நினைத்துத் தங்கள் தங்கள் ஆஸ்திகளைப் பொதுவாய் வைத்துப் பாவித்து ஒரே ஐக்கியமாய் இருந்தார்கள். அப் $2^{44}$.

2. சில காலத்திற்குப் பிறகு சபை அதிகரித்ததினாலே முன்னிருந்த மாதிரியான ஐக்கியத்துக்குப் பதிலாக ஏழைகளைக் காப்பாற்றும்படி ஆஸ்தி உள்ளவர்களிடமிருந்து காணிக்கைகள் வாங்கி அவர்களைத் தாபரித்து நடத்தும்படி உதவிக்காரர்களை நியமித்தார்கள். அப் $6^{1}$. எருசலேம் பட்டணத்திலுள்ள சபை எப்போதும் ஏழைச்சபையாய் இருந்ததினால் பரி. பவுல் முதலான கிறிஸ்தவர்கள் மற்ற நாட்டுச் சபைகளில் உள்ளவர்கள் எருசலேம் சபையிலுள்ள தரித்திரருக்கு உதவி செய்யும் விஷயத்தில் ஏக ஐக்கியம் உடையவர்களாய் இருக்கவேண்டும் என்று அவர்களுக்குப் போதித்ததினாலே அவர்கள் அப்படியே செய்துவந்தார்கள். ரோ $15^{26}$ 2 கொரி $9^{13}$ $8^{4}$. இப்படி ஏழைகளுக்காகக் காணிக்கை கொடுப்பது கிறிஸ்தவ ஐக்கியத்தின் ஓர் பாகம்.

3. ஆதி கிறிஸ்தவர்கள் துவக்கத்திலிருந்து கிறிஸ்தவமார்க்கத்தின் சிலாக்கியங்களாகிய ஐக்கிய விருந்து, இரட்சிப்பு, பரிசுத்தாவியைப் பெறுதல் ஆகிய இவைகளில் தாங்கள் எல்லாரும் பங்கு பெற்றுச் சமாதானத்திலும் விசுவாசத்திலும் ஐக்கியப்பட்டவர்களாய் இருக்கவேண்டும் என்று தீர்மானித்து அப்படியே நடந்துவந்தார்கள். 1 கொரி $1^{9}10^{16}$ 2 கொரி $13^{14}$ கலா $2^{9}$ பிலி $2^{1}$.

4. கிறிஸ்தவ சிலாக்கியங்களில் அல்லாமலும் கிறிஸ்தவ கடமைகளை நிறைவேற்றுவதிலும் எல்லாக் கிறிஸ்தவர்களும் ஐக்கியப்பட்டிருந்தார்கள். கலா $2^{9}$ பிலி $1^{7}$ பிலே $1^{6}$ எபி $13^{16}$.

5. இவைகளைவிட இயேசுகிறிஸ்துவோடும் தேவனோடும் கொள்ளும் ஐக்கியம் தங்களில் ஒவ்வொருவனுக்கும் இருக்கவேண்டும் என்று ஆதி கிறிஸ்தவர்கள் நினைத்தார்கள். இந்த நோக்கமாய் இயேசுவின் பாடுகளின் ஐக்கியத்தைப்பற்றிப் பரி. பவுல் பேசுகிறான். பிலி $3^{10}$. முக்கியமாய் பரி. யோவான் இந்த ஐக்கியத்தைப்பற்றி விவரித்துச் சொல்லியிருக்கிறான். யோவா $15^{4}$ 1 யோவா $1^{3}$.

6. எவைகளில் சகோதர ஐக்கியம் இருக்கவேண்டும் என்று கேட்டால்: உபதேசம் (அப் $2^{42}$), ஏவப்படுதல் (எபி $10^{24}$), தேவபக்திக்கடுத்த முயற்சி (எபே $5^{21}$), கனம் பண்ணுதல் (ரோ $12^{10}$), சிநேகித்தல் (ரோ $12^{10}$), ஏகசிந்தை (ரோ $12^{16}$.), ஜெபம் (எபே $6^{18}$).

**ஐக்கிய விருந்து.** **Communion, Eucharist.** **இராப்போஜனம்** காண்க.

**ஐத்திகு.** **Eutychus.** அப் $20^{9}$.

**ஐநேயா.** **Aeneas.** அப் $9^{33}$.

**ஐபிராத்து.** **Euphrates.** இந்தப் பெரிய நதி ஏதேன் தோட்டத்திலிருந்து உற்பத்தியாகிறது என்று எபிரெயர்கள் நினைத்தார்கள். ஆதி $2^{14}$. அவர்கள் இதற்குப் 'பெரிய

நதி' என்று சொல்லுவார்கள். தாவீதின் ராஜ்யம் இந்த நதிவரையும் எட்டியிருந்தது. 2 சாமு $8^{3}$. இந்த நதி அசீரியா பாபிலோனியா ராஜ்யங்களுக்கு மேற்கெல்லையாக இருந்தது என்று தோன்றுகிறது. ஆபிரகாம் இந்த நதியைக் கடந்து போனதினாலே எபிரெயர்களுக்குக் 'கடந்துபோனவர்கள்' என்று அர்த்தங்கொள்ளும் 'எபிரெயர்' என்னும் பெயர் வழங்கினது. இந்த நதி பாபிலோன் பட்டணத்துக் கூடாகப் பாய்ந்து மொராயீம் என்னும் சதுப்பு நில வழியாய்ப் பார்சியாக் குடாக்கடலுக்குள் விழுகிறது. எரே. $50^{21}$. இதற்கும் திகிரீஸ் நதிக்கும் இடையிலுள்ள பூமி அதிக செழிப்புள்ளது. இதற்கும் சீரியாவுக்கும் மத்தியில் ஒரு பெரிய வனாந்தரம் இருக்கிறது. ஆதி $2^{14}$ $15^{18}$ 2 சாமு $8^{3}$.

**ஐபூலு**. **Eubouios.** ரோமைச் சபையில் பெரியவன் ஒருவன். 2 தீமோ $4^{21}$.

**ஐயோதியாள்**. **Euodia.** **எயோதியாள்** காண்க.

**ஐனிக்கே**. **Eunice.** லிஸ்திராவில் வசித்த தீமோத்தேயுவின் தாய். அப் $16^{1}$. 2 தீமோ $1^{5}$.

## ஓ.

**ஓகேல்**. **Ohel.** 1 நாளா $3^{20}$.

**ஓக்லாள்**. **Hogloh.** [கௌதாரி]. ஒரு பெண். யோசு $17^{3}$.

**ஓசாமா**. **Hoshama.** 1 நாளா $3^{18}$.

**ஓசாயா**. **Hoshaiah.** [யெகோவா இரட்சித்தார்]. நெகே $12^{32}$.

**ஓஸ்னி**. **Ozni.** = எஸ்போன். ஆதி $46^{16}$. எண் $26^{16}$.



ஒட்டகம்.

**ஒட்டகம்**. **Camel.** கி-மு. 3000-வருஷத்தில் கானான் தேசத்தில் சேமியர்கள் ஒட்டகங்களை உபயோகித்தார்கள். கானானியர்களுக்கும் மீதியானியர்களுக்கும் ஒட்டகம் பெரும் ஆஸ்தி. நியா $7^{12}$. வனாந்தரத்திற் குடியிருந்த ஜாதிகள் ஒட்டக மாமிசம் சாப்பிட்டார்கள். இஸ்ரவேலரோ சாப்பிடவில்லை. உபா $14^{7}$. யோர்தானுக்குக் கிழக்கில் உள்ள நாடுகளில் ஒட்டகங்களை அதிகமாய் வளர்த்தார்கள். ஒட்டக ரோமத்தினால் ஒருமாதிரியான துணி நெய்வார்கள். மாற் $1^{6}$. இயேசு யூதர்களுக்குள்ளே ஒட்டகத் தைப்பற்றி வழங்கிவந்த பழமொழியை எடுத்துக் கூறுகிறார். மத் $19^{24}$ $23^{24}$.

**ஓதாயா**. **Hodaviah.** 1 நாளா $3^{24}$.

**ஓதாவியா**. **Hodaviah.**

1. 1 நாளா $5^{24}$.
2. 1 நாளா $9^{7}$.
3. = ஒதியா. எஸ்றா $2^{40}$ நெகே $7^{43}$.

**ஓதியா**. **Hodiah,**

1. = ஒதாவியா. நெகே $7^{43}$.
2. 1 நாளா $4^{19}$.
3. நெகே $8^{7}$.
4. நெகே $10^{3}$.
5. நெகே $10^{18}$.

**ஓத்தாம்**. **Hotham.** 1 நாளா $7^{32}$.

**ஓத்தீர்**. **Hothir.** 1 நாளா $25^{4}$.

**ஓத்னி**. **Othni.** 1 நாளா $26^{7}$.

**ஓத்னியேல்**. **Othniel.** கீரியாத்செப்பேரைப் பிடித்து காலேபின் மகளாகிய அக்சாளை விவாகம் செய்த நியாயாதிபதி. நியா $1^{13}$.

**ஓநேசிமு**. **Onesimus.** அடிமையாகிய இவன் தன் எஜமானாகிய பிலேமோனை விட்டு ரோமாபுரிக்கு ஓடித்தோடினபோது அங்கே பவுலின் போதனையினாற் குணப்பட்டான். இவனை மன்னிக்கும்படிக்கும், மறுபடியும் இவனைத் தன்னிடம் அனுப்பும் படிக்கும் பவுல் பிலேமோனுக்கு ஒரு நிருபம் எழுதினான். கொலோ $4^{9}$. **பிலேமோன் நிருபம்** காண்க.

**ஓநேசிப்போரு**. **Onesiphorus.** சிறையிலிருந்த பவுலுக்கு உதவிசெய்த கிறிஸ்தவன் ஒருவன். 2 தீமோ $1^{16}$ $4^{19}$.

**ஓபதியா**. **Obadiah.** [யெகோவாவின் அடியான்].

1. ஒபதியாவின் தரிசன ஆக்கியோன். **ஓபதியாவின் தரிசனம்** காண்க.
2. எலியா முதலிய தீர்க்கதரிசிகளைக் காப்பாற்றினவன். 1 இரா $18^{3}$.
3. 1 நாளா $8^{38}$.

4. 1 நாளா $7^{3}$.
5. 1 நாளா $3^{21}$.
6. எஸ்று $8^{9}$.
7. நெகே $10^{5}$.
8. நெகே $12^{25}$.
9. 1 நாளா $9^{16}$. = அப்தா. நெகே $11^{17}$.
10. 1 நாளா $12^{9}$.
11. 1 நாளா $17^{29}$.
12. 2 நாளா $17^{7}$.
13. 2 நாளா $34^{12}$.

**ஒபதியாவின் தரிசனம். The book of Obadiah.** பழைய ஏற்பாட்டில் ஒபதியா என்று பதின்மூன்றுபேர் சொல்லப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் பழைய ஏற்பாட்டிலுள்ள புஸ்தகங்களில் அதிக சுருக்கமான இந்தப் புஸ்தகத்திற்கு ஆக்கியோன் இன்னான் என்பது தெரியவில்லை. இது ஏதோம் என்னும் தேசத்துக்கு வரும் அழிவும் (1-7 வச 10-15 வச), எல்லா மனுஷருக்கும் விசேஷமாய் ஏதோமுக்கு வரும் நியாயத்தீர்ப்பும் (8. 9. 15. 16. 21 வச) கூறுகிறது.

ஏதோமியர் யூதர்களுக்கு வந்த ஆபத்தைக் கண்டு மனமகிழ்ச்சி கொண்டதினால் அவர்களுக்கு இந்த அழிவு நேரிட்டது என்று சொல்லியிருக்கிறதினாலே இப்புஸ்தகம் பாபிலோனியர் கி-மு. 586-ஆண்டில் எருசலேமைப் பிடித்த காலத்துக்குக் கொஞ்சம் பிந்தி எழுதப்பட்டது என்று தோன்றுகிறது. மேலும் தீர்க்கதரிசி நியாயத்தீர்ப்பைப்பற்றிச் சொல்லி யூதரும் இஸ்ரவேலரும் மறுபடியும் தங்கள் ராஜ்யத்தைப் பெறுவார்கள் என்றும், சீயோனிலே யேகோவா அரசாளுவார் என்றும் சொல்லுகிறதினாலே கி-மு. 537-ஆண்டில் சிறையிருப்பிலிருந்து இவர்கள் எருசலேமுக்கு வருகிறதற்கு முன் தீர்க்கதரிசனம் உரைத்தான் என்று அறிந்துகொள்ளலாம்.

**ஓபாப்.** ஒபாப் **Hobab.** = எத்திரோ. எண் $10^{29}$ நியா $4^{11}$.

**ஒபிரா, ஒப்ரா, ஒப்ரா. Ophra.**

1. ஒரு ஊர். யோசு $18^{23}$ 1 சாமு $13^{17}$.
2. கிதியோன் பிறந்த ஊர். நியா $6^{11}$ $8^{27}$.
3. ஒரு யூதன். 1 நாளா $4^{14}$.

**ஒப்பிரா. Hophra.** கி-மு. 588-569-ஆ ஆபிரீஸ் (*Apries*) என்னும் எகிப்திய அரசனாகிய இவன் சீரியாவிலே நேபுகாத்நேச்சாரை ஜெயித்தான். பிற்பாடு நேபுகாத்நேச்சார் எருசலேமை அழித்தபோது அங்கிருந்து ஓடிவந்தவர்களுக்கு இவன் அடைக்கலம் கொடுத்தான். எரே $43^{6}$ $44^{30}$.

**ஓப்பீர். Ophir. ஒப்பீர்** காண்க.

**ஒப்புரவாகுதல். Reconciliation.** 'மாமிச சிந்தை தேவனுக்கு விரோதமான பகை' என்று பரி. பவுல் சொல்லியிருக்கிறான். ரோ $8^{7}$. இதினாலே பாவிகளாகிய நாம் எல்லாரும் தண்டனைக்குப் பாத்திரராய் இருக்கிறோம். இந்தப் பகையை நீக்கும்படி இயேசு கிறிஸ்து தமது மரணத்தின் மூலமாய்ப் பாவநிவாரணம் செய்து தேவனையும் நம்மையும் ஒப்புரவாக்கியிருக்கிறார். ரோ $5^{10. 11}$ 2 கொரி $5^{18}$ எபே $2^{16}$ கொலோ $1^{20.21}$. **பாவ நிவாரணம்** காண்க.

**ஒப்பேசி. Vopshi.** எண் $13^{14}$.

**ஒப்னி. Ophni.** யோசு $18^{24}$.

**ஓம்ரி. Omri. உம்ரி** காண்க.

**ஓரி. Hori.** ஆதி $36^{22}$.

**ஓரிகேன். Origen.** கிறிஸ்தவ சபையில் ஆதி பிதாக்களில் அதிவித்துவானான ஒருவன். கி-பி. 185-253-ஆண்டில் அல்லது 254-ஆ இவன் பதினாறு வயதுள்ளவனாய் இருந்தபோது தகப்பன் இரத்தச்சாட்சியாய் இறந்துபோனான். அதற்குப் பிற்பாடு அதிகம் கஷ்டப்பட்டவனாய் உபாத்திவேலை செய்து தாயையையும் தன் சகோதரர் ஆறுபேரையும் தாபரித்தான். இவன் கிரேக்க தத்துவ சாஸ்திரம் எல்லாங் கற்று கிறிஸ்தவ வேதசாஸ்திர தத்துவ ஞானத்தைப்பற்றிச் சிறந்த போதனை போதித்துவந்தான். இவன் தான் வாசம்பண்ணின இடமாகிய அலெக்சந்திரியாவிலே தனக்குச் சத்துருக்கள் அநேகர் இருந்ததைக் கண்டு கி-பி. 230-ஆண்டில், அந்தப் பட்டணத்தை விட்டுப் பலெஸ்தீனாவுக்கு வந்து கிறிஸ்தவமார்க்கத்தை அங்கே போதித்தான். கிறிஸ்தவமார்க்க விரோதிகள் இவனை அதிகமாய் வேதனைப்படுத்தினாலும், தைரியம் விடாது தன் எழுபதாம் வயசுவரைக்கும் கிறிஸ்தவ ஞான போதனையைப் போதித்து அதைத் திறப்படுத்தினான்.

**ஒரோநாயீம். Horonaim.** மோவாபிலுள்ள ஒரு ஊர். ஏசா $15^{5}$.

**ஓர்பாள். Orpah.** ரூத்தின் சகோதரி. ரூத் $1^{4}$.

**ஓர்மா, ஓர்மா. Hormah.** ['பிரதிஷ்டை செய்யப்பட்டது' அல்லது 'சபிக்கப்பட்டது']. பூர்வகாலத்தில் 'சேப்பாத்' என்று பெயர்கொண்ட தென் யூதாவில் ஒரு ஊர். எண் $14^{45}$ நியா $1^{17}$.

**ஓர்னான். Ornan. அர்வனா** காண்க.

**ஒலிம்பா. Olympas.** ரோமைச் சபையில் ஒருவன். ரோ $16^{15}$.



ஒலிவமலை.

பைப் பூப்போலிருக்கும். அதின் பிஞ்சு பச்சையாயும், காய் மங்கின மேகவர்ணமாயும், கனி கறுப்பாயும் நாவற்பழத்தைப் போலிருக்கும். அதின் கனிக்குள்ளே தசை பொதிந்த கொட்டை யுண்டு, அந்தக் கொட்டையை மூடியிருக்கும் தசைக் கனியைச் சாப்பிடுவார்கள்; அந்தக் கொட்டைக்குள்ளே இலுப்பை முத்தைப்போல் சில முத்து இருக்கும். அந்த முத்தில் எண்ணெய் எடுப்பார்கள்; அந்த எண்ணெயைத் தலையிலே தேய்த்துக் கொள்ளுவார்கள், சோற்றிலே விட்டும் சாப்பிடுவார்கள், கறியும் தாளிதம் பண்ணுவார்கள், விளக்கும் எரிப்பார்கள், வெட்டுக்காயங்களுக்கு மருந்தாகவும் போடுவார்கள். ஆதலால் அந்த மரங்கள் கானான் தேசத்தாருக்கு

**ஒலிவமலை. The Mount of Olives.** கீதரோன் பள்ளத்தாக்கினால் எருசலேமிலிருந்து பிரிக்கப்பட்டு அங்கிருந்து அரைமைல் தூரத்திலுள்ள மலைக்குன்றுகள். பழைய ஏற்பாட்டில் இந்த இடம் சிலதடவை மாத்திரம் சொல்லியிருக்கிறது. 2 சாமு 15[30] நெகே 8[15] எசே 11[23]. இயேசுகிறிஸ்துவைப் பற்றிய சரித்திரத்தின் முடிவிலே இதைப் பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறது. லூக் 19[41] 21[37] மத் 24-25 அதி. அப் 1[12]. இந்த மலைச்சார்பில் கெத்செமனே தோட்டம் இருந்தது. மத் 26[36]. ஆதி கிறிஸ்தவர்கள் இந்த மலையில் கன்னிமரியாளின்கல்லறை, இயேசு 'கர்த்தருடைய ஜெபம்' சொல்லிக்கொடுத்த இடம் முதலியவை இருந்தது என்று காட்டினார்கள். ஆனால் இதை நம்பத்தக்க அத்தாட்சி ஒன்றுமில்லை.

**ஒலிவம். Olive.** ஓர் மரம். பலவிதமான ஒலிவமரங்கள் உண்டு; அவற்றில் நாட்டொலிவமரம் காட்டொலிவமரம் என்னும் இரண்டு வர்க்கங்களைக் குறித்துமாத்திரம் வேதத்தில் சொல்லியிருக்கிறது. ஒலிவமரங்கள் அதிக உயரமாயும் பணிவாயுமிராமல் ஒருமட்டாயிருக்கும்; அந்த மரம் புடைத்துப் புடைத்துக் குமிள்போலிருக்கும். அதின் தோல் ஒப்புரவாயும் புகை வர்ணமாயு மிருக்கும்; அதின் உள் வயிரம் கட்டியாயும் மஞ்சள் நிறமாயுமிருக்கும். அதின் இலை பசுமையாயும் காம்பு வெள்ளையாயும் இலுப்பை இலைபோல நீண்டதாயுமிருக்கும். அதின் பூக்கள் கொத்துக் கொத்தாயிருக்கும். ஒவ்வொரு பூவாய்ப் பிரித்துப் பார்த்தால் இலுப்


ஒலிவம் பழம்.

# A TAMIL BIBLE DICTIONARY

BY

A. C. CLAYTON

PART II

(PAGES 201-352)

# வேத அகராதி

இரண்டாம் பாகம்

(பக்கம் 201–352)

இஃது

ஏ. சி. கிலேற்றன் ஐயரால்

இயற்றப்பட்டது



THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA,
MADRAS, COLOMBO AND LONDON
1911

# PREFACE TO PART II

In Part II of the *Tamil Bible Dictionary* the authorities used are the same as those used in Part I.

The Rev. L. Reichardt has contributed a valuable article on *The Cross* (சிலுவை) to this Part.

For the other articles I am responsible.

I hope to be able to announce the publication of Part III within twelve months.

Maps will be included in the last Part.

*April, 1911.* A. C. CLAYTON.

# முகவுரை

**வேத அகராதி** முதலாம் பாகம் எழுதுவதற்கு ஆதாரமாய்க்கொண்ட நூல்களே இந்த இரண்டாம் பாகத்திற்கும் ஆதாரம்.

இப்பிரதியில் சங். L. ரைகார்ட் ஐயர் 'சிலுவை' என்பதைப்பற்றி விபரமாயும் பிரயோஜனமாயும் எழுதியிருக்கிறார்.

மூன்றாம் பாகம் அச்சிடப்படும் காலத்தைக் குறித்து ஒரு வருஷத்திற்குள் தெரிவிக்கக்கூடும் என்று நம்புகிறேன்.

வேதத்தில் சொல்லியிருக்கும் இடங்களைக் காட்டும் படங்கள் கடைசிப் பாகத்தில் சேர்க்கப்படும்.

1911-௵ ஏப்ரில்௴. ஏ. சி. கிலேற்றன்.

# ADDENDA

இந்த வேத அகராதியில் சேர்க்கப்படவேண்டிய பதங்கள்:

பக்கம். 36. அழிவு. Loss. கேடு காண்க.
,, 58. ஆதார். Addar. ஆர்து காண்க.
,, 72. ஆனந்தம். Joy. எபி 1[9]. சந்தோஷம் காண்க.
,, 313. சீமியாத். Shimeath. சிமியாத் காண்க.

மிகுந்த பிரயோஜன முள்ளதாயிருக்கின்றன. அந்த மரங்கள் அத்தேசத்தில் எங்குமுண்டு; விசேஷமாய் ஒலிவமலையில் மிகுதியாயுண்டு. உபா $28^{40}$ $6^{11}$ யோசு $24^{13}$ நியா $9^{8}$ 1 நாளா $27^{28}$ 1 சாமு $8^{14}$ நெகே $5^{11}$ ஓசி $14^{6}$ யாக் $3^{12}$. சாலொமோன்ராஜா தான் கட்டின தேவால யத்தில் உடன்படிக்கைப் பெட்டிக்குமேல் ஒலிவமரத்தால் இரண்டு கேருபீன்களைச் செய்து வைத்திருந்தான். 1 இரா $6^{23}$.

**ஒளி, பிரகாசம், வெளிச்சம்.** Light. ஒளி பரிசுத்தம் என்பது பூர்வீகத்தாரின் எண்ணம். வேதாகமத்தை எழுதினவர்கள் இது கடவுளுடைய தன்மையைக் குறிக்கிறது என நினைத்தார்கள். கடவுள் ஒளியிலே வசிக்கிறார். 1 தீமோ $6^{16}$. அவர் ஒளியைத் தரிக்கிறார். சங் $104^{2}$. அவர் ஒளியாய் இருக்கிறார். இருள் அவரிடத்தில் இல்லை. 1 யோவா $1^{5}$. அவருடைய மகிமை ஒளியே. வெளி $21^{23}$. இயேசுகிறிஸ்து உலகத்திற்கு ஒளியாய் இருக்கிறார். யோவா $1^{4.5.9}$ $8^{12}$. அவர் கடவுளின் மகிமையின் பிரகாசம். எபி $1^{3}$. ஒளியில் நடப்பது மீட்பு. யோவா $8^{12}$ $12^{35.36}$ 1 யோவா $1^{7}$ 2 கொரி $4^{6}$ எபே $5^{8.14}$ 1 தெச $5^{5}$ 1 பேது $2^{9}$. கிறிஸ்தவர்கள் உலகத்திற்கு ஒளியாய் இருக்கவேண்டும். மத் $5^{14.16}$ பிலி $2^{14}$. மெய்ஞ்ஞானமற்று நடப்பது இருள். யோவா $3^{19}$ $8^{12}$ $12^{46}$ 1 யோவா $2^{11}$.



ஒற்தலாம்.

**ஒற்தலாம்.** Mint. மத் $23^{23}$.

**ஒன்று.** எண்கள் காண்க.

## ஓ.

**ஓகாத்.** Ohad. ஆதி $46^{10}$.

**ஓகாம்.** Hoham. எபிரோனின் ராஜா. யோசு $10^{3}$.

**ஓகிரான்.** Ochran. எண் $1^{13}$ $2^{27}$.

**ஓகு.** Og. பாசானின் ராஜாவாகிய இவன் ராக்ஷத ரூபமுடையவன். யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள இவனுடைய ராஜ்யத்தை எபிரெயர்கள் ஜெயித்தார்கள். யோசு $12^{4}$ உபா $3^{11}$. இவனுடைய இருப்புக்கட்டில் (உபா $3^{11}$) என்பது ஒருவிதமான கறுப்புக்கல்லினால் செய்த ஒரு கல்லறை என்று நாம் நினைக்கவேண்டும்.

**ஓசன்னா.** Hosanna. [காப்பாற்றும்]. இது எபிரெய பதம். மத் $21^{9}$ மாற் $11^{9}$ யோவா $12^{13}$. யூதர்கள் கூடாரப்பண்டிகையில் ஊர்கோலம் செய்யும்போது மரக்கிளைகளைப் பரப்பி 'ஓசன்னா, ஓசன்னா' என்று சொல்லி ஆர்ப்பரிப்பார்கள். அப்பண்டிகையின் ஏழாம்நாள் அவர்கள் இப்படி அதிகமாய் ஆர்ப்பரிப்பதினாலே அந்தத் தினத்திற்கு 'ஓசன்னா தினம்' என்னும்பெயர் வழங்கினது.

**ஓசா.** Hosah. [அடைக்கலம்].

1. ஒரு லேவியன். 1 நாளா $16^{38}$.
2. ஒரு ஊர். யோசு $19^{29}$.

**ஓசாயா.** Hoshaiah. [யேகோவா ரட்சித்தார்]. எரே $42^{1}$ $43^{2}$.

**ஓசாயி.** Hozai. 2 நாளா $33^{19}$.

**ஓசியா.** Hosea. [காப்பாற்றும்].

1. **தீர்க்கதரிசி.**—இந்தப்பெயரும் 'ஓசெயா' என்னும் பெயரும் ஒரே பெயர்போல் இருக்கின்றன. கி-மு. 781-ஆம் இரண்டாம் யெரொபெயாமின் காலத்தில் இஸ்ரவேல் ராஜ்யம் அதிக மகத்துவம் பெற்றிருந்தது. அவனுடைய காலத்துக்குப் பிறகு அதற்குக் கெடுதி அதிகமாய்ச் சீக்கிரத்தில் நேரிட்டது. ஆமோஸ் தீர்க்கதரிசனம் உரைத்த சில வருஷங்களுக்குப் பிறகு ஓசியா ஏறக்குறைய கி-மு. 743-ஆம் தீர்க்கதரிசனம் உரைக்கத் தொடங்கினான். ஓசியா தீர்க்கதரிசனம் உரைப்பதை முடிக்க முந்தி ஏசாயா 741-ஆமத்தில் தீர்க்கதரிசனம் சொல்லத் தொடங்கினான். தீர்க்கதரிசனம் உரைத்தவர்களாகிய ஆமோஸ், ஓசியா, ஏசாயா, மீகா என்பவர்களில் ஓசியா என்பவன் இரண்டாம் தீர்க்கதரிசி.

2. **இவன் தீர்க்கதரிசனம் உரைத்த காலம்.**—ஓசியாவைப்பற்றி இந்த ஆகமத்தில் மாத்திரம் சொல்லியிருக்கிறது. கி-மு. 740-ஆமத்தில் இறந்துபோன இரண்டாம்யெரொபெயாமுக்குப் பிற்பாடு இஸ்ரவேல் ஜனங்களுக்குள்ளிருந்த சண்டை சச்சரவு ஒழுங்கீனம் ($7^{3}$ $8^{4}$), எகிப்தியரும் அசீரியரும் சகாயம் தேடுதல் ($5^{13}$ $7^{11}$ $8^{9}$ $12^{1}$), அசீரியருக்கு

மெனுகேம் கப்பம் கட்டுதல் ($5^{13}$ $10^{15}$) ஆகிய இவைகளை நாம் இப்புஸ்தகத்தில் பார்க்கும்போது ஆமோஸ் கி-மு. 743-735-ளுக்தில் தீர்க்கதரிசனம் உரைத்தான் என்று தோன்றுகிறது.

3. **இவனுடைய போதனை.**–இவன் தன் மனைவி பிள்ளைகளைப்பற்றி உவமானமாய் எழுதியிருக்கும் முதலாம் இரண்டாம் அதிகாரங்களைக்கொண்டு அறியக்கூடியது என்னவென்றால், இஸ்ரவேல் யேகோவாவின் இரக்கத்தைத் தள்ளிவிட்டபோதும் அவர் தமது மாறாத காருண்ணியத்தைக் காட்டி பலியை அல்ல, இரக்கத்தையே விரும்புகிறார் ($6^{6}$) என்பதே. இதினாலே, இஸ்ரவேல் யேகோவாவைச் சடங்காசாரத்தினால் அல்ல, பூரண அன்பு, பயபக்தி, சன்மார்க்கம் இவைகளைக்கொண்டு சேவிக்கவேண்டும் என்று ஆமோஸ், ஏசாயா, மீகா ஆகிய தீர்க்கதரிசிகள் உரைத்ததுபோல இவனும் உரைத்துவந்தான்.

4. **புஸ்தகம்.**–1-ம், 3-ம் அதிகாரங்களில் இவன் தன் சரித்திரத்தையும், 2-ம் அதிகாரத்திலும் 4-14 அதிகாரங்களிலும் புத்தி போதனைகளையும் சொல்லுகிறான். ஓசியா முதலில் இவ்வதிகாரங்களிற் சொல்லியவைகளைத் துண்டுதுண்டுகளாக எழுதிப் பிரசுரஞ்செய்தான் என்றும், பிற்பாடு இவனாவது இவனுக்குப்பின் வந்தவனாவது இவைகளை ஒன்றாகச் சேர்த்தான் என்றும், பிறகு சிலர் இப்புஸ்தகத்திலுள்ளவை யேகோவாவினால் அருளப்பட்ட சத்திய வார்த்தைகள் என அறிந்து யூதாவிலுள்ள வேதபாரகர் வேதத்தில் சேரவேண்டிய புஸ்தகங்களை ஆராய்ந்துபார்த்துச் சேர்க்கும் காலம்வரையும் இப்புஸ்தகத்தைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார்கள் என்றும் வேதசாஸ்திரிகளில் அநேகர் நினைக்கிறார்கள்.

**ஓசேயா.** Hoshea.

1. = யோசுவா. எண் $13^{8}$ உபா $32^{44}$.

2. 1 நாளா $27^{20}$.

3. நெகே $10^{23}$.

4. இஸ்ரவேல் ராஜ்யத்தின் கடைசி அரசன் (கி-மு. 733–722). அசீரியரால் சிங்காசனத்தில் வைக்கப்பட்ட இவன் எகிப்தியரின் ஏவுதலினால் அசீரியருக்கு விரோதமாய்க் கலகம் செய்தபோது அசீரிய ராஜாக்களாகிய நாலாம் சல்மனாசாரும் சர்கோனும் சமாரியாவை முற்றிக்கைபோட்டு அதை அழித்தார்கள். 2 இரா $15^{30}$ $17^{1}$.

**ஓட்டம்.** Race. 2 தீமோ $4^{7}$ எபி $12^{1}$. **பந்தயம்** காண்க.



ஓணான்.

**ஓணான்.** Lizard. சாப்பிடக்கூடாது என்று விலக்கின ஜெந்துக்களில் ஒன்று. லேவி $11^{30}$.

**ஓதாவியா.** Hodaviah. **ஒதாவியா** காண்க.

**ஓதேஸ்.** Hodesh. [பிறை] ஒரு பெண். 1 நாளா $8^{9}$.

**ஓதேத்.** Oded.

1. ஒரு தீர்க்கதரிசியின் தகப்பன். 2 நாளா $15^{1}$.

2. ஒரு தீர்க்கதரிசி. 2 நாளா $28^{9}$.

**ஓத்.** Hod. [மகத்துவம்]. 1 நாளா $7^{37}$.

**ஓத்சேம்.** Ozem.

1. தாவீதின் சகோதரன். 1 நாளா $2^{15}$.

2. 1 நாளா $2^{25}$.

**ஓத்தாம்.** Hotham. 1 நாளா. $11^{44}$. = ஒத்தாம். 1 நாளா $7^{32}$.



எகிப்துதேசத்து ஓநாய்.

**ஓநாய்.** Wolf. பலெஸ்தீனாவிலுள்ள ஓநாய் நாயைப்பார்க்கிலும் பெரிதாய் இருக்கும். அங்குள்ள ஓநாய்கள் கூட்டம் கூட்டமாய் அல்ல, ஜோடி ஜோடியாய்த் திரியும். அவைகள் இராத்திரியில் இரைதேடித் திரிகிறதினாலே (எரே $5^{6}$ செப் $3^{3}$) தனிமையான இடங்

களில் ஆடுகளுக்குக் காவலாக இருக்கும் மேய்ப்பர்கள் அவைகளுக்கு அதிகமாய்ப் பயப்படுவார்கள். ஆதி $49^{27}$ ஆப $1^{8}$ எசே $22^{27}$ யோவா $10^{12}$.

கிறிஸ்தவ சபையைத் துன்பப்படுத்துகிற வர்கள் ஓநாய்களைப்போல் இருக்கிறார்கள். மத் $10^{16}$ அப் $20^{29}$.

**ஓபா. Hobah.** ஆபிரகாம் கல்தேயரைத் தள்ளிவிட்ட இடம். ஆதி $14^{15}$.

**ஓபாப். Hobab. ஓபாப்** காண்க.

**ஓபால். Obal.** = ஏபால் (2).

**ஓபில். Obil.** 1 நாளா $27^{30}$.

**ஓபேத். Obed.**

1. தாவீதின் பாட்டன். ரூத் $4^{17}$ மத் $1^{5}$.
2. 1 நாளா $2^{37}$.
3. 1 நாளா $11^{47}$.
4. 1 நாளா $26^{7}$.
5. 2 நாளா $23^{1}$.

**ஓபேத் ஏதோம். Obed-Edom.**

1. உடன்படிக்கைப் பெட்டியை ஏற்றுக் கொண்ட பெலிஸ்தியன். 2 சாமு $6^{10}$.
2. காவற்காரன். 1 நாளா $15^{18}$.
3. பாடகர். 1 நாளா $15^{21}$.

**ஓபேல். Ophel. எருசலேம்** காண்க.

**ஓப்பீர், ஓப்பீர். Ophir.** சேபா, ஆவிலா என்னும் தேசங்களோடு இப்பெயரும் சொல்லியிருப்பதினாலே இது அரபி தேசத்தில் உள்ளது என்று நினைக்கவேண்டும். ஆனால் இது அராபியாவிலே எந்தத் திசையில் இருக்கிறது என்பது தெரியாது. ஆதி $10^{29}$ 1 இரா $9^{28}$ $10^{22}$ $22^{48}$ 1 நாளா $1^{23}$. வேத சாஸ்திரிகளில் சிலர் இது ஒருவேளை தென் ஆபிரிக்காவில் இருந்தது என்றும், சிலர் இந்தியாவில் இருந்தது என்றும் நினைக்கிறார்கள். ஆனால் இதற்குப் போதுமான அத்தாட்சி இல்லை.

**ஓப்பிரா. Hophra. ஓப்பிரா** காண்க.

**ஓப்னி. Hophni.** ஏலியின் குமாரராகிய ஓப்னி பினெகாஸ் என்பவர்களின் பாவத்தினிமித்தம் அவன் வீட்டில் தேவனுடைய சாபம் வந்தது. 1 சாமு $2^{34}$ $4^{17}$.

**ஓமாம். Homam.** = ஏமாம்.

**ஓமார். Omar.** ஆதி $36^{11}$.

**ஓமெகா. Omega.** கிரேக்க பாஷையின் கடைசி எழுத்து. கடவுள் 'அல்பாவும் ஓமெகாவும்' என்பது அவர் ஆதியும் அந்தமுமாய் இருக்கின்றார் என்று அர்த்தமாம். வெளி $1^{8}$ $21^{6}$ $22^{13}$ஐ.

**ஓய்வு. Rest. இளைப்பாறுதல்** காண்க.

**ஓய்வுநாள் கர்த்தருடையநாள். The Jewish Sabbath. The Christian Lord's day.** தற்காலத்தில் வாரத்தின் முதல்நாளாகிய ஞாயிற்றுக்கிழமைக்குப் பொதுவாய் 'ஓய்வுநாள்' என்றும் 'கர்த்தருடைய நாள்' என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் யூதர்கள் வாரத்தின் ஏழாம் நாளுக்கு 'ஓய்வுநாள்' என்றும், ஆதி கிறிஸ்தவர்கள் வாரத்தின் முதலாம் நாளுக்கு 'கர்த்தருடைய நாள்' என்றும் சொன்னார்கள் என்பதை நாம் மனதில் வைக்கவேண்டும். பழைய ஏற்பாட்டில் ஓய்வுநாள் என்பது எப்பொழுதும் வாரத்தின் ஏழாம் நாளைக் குறிக்கிறது.

1. **யூதர்களின் ஓய்வுநாள்.**—யூதர்களின் பாவநிவிர்த்தி செய்யும் நாட்களிலும் மற்றும் திருநாட்களிலும் எபிரெயர் வேலையிலிருந்து ஓய்ந்திருந்ததினாலே (லேவி $16^{31}$ $23^{32}$) இப்படி அவர்கள் ஓய்ந்திருக்கும் காரணத்தையிட்டு வாரத்தின் கடைசிநாளுக்குச் சபாத் (*Sabbath*) அல்லது ஓய்வுநாள் என்னும் பெயர் வந்தது. எபிரெயரின் பழைய ஏற்பாட்டுப் புஸ்தகங்களை நாம் பார்த்தால் அவர்கள் வாரத்தின் ஏழாம் நாளை ஓய்வுநாளாக ஆசரித்த முறையை அறியலாம். யாத் $20^{8}$ $23^{12}$ $34^{21}$ உபா $5^{12}$. கடவுள் உலகத்தை ஆறு நாட்களில் சிருஷ்டித்து, ஏழாம் நாள் ஓய்ந்திருந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறதே இப்படி அவர்கள் ஓய்வுநாளை ஆசரிப்பதற்குக் காரணம் என்று சொன்னார்கள். ஆதி $2^{3}$. எபிரெயர்கள் எருசலேமிலிருந்து பாபிலோனுக்குச் சிறையாகக் கொண்டுபோகப்படுமுன் அவர்கள் ஏழாம் நாளை ஆசரித்து வந்தார்கள். 2 இரா $11^{5}$ $16^{18}$. சிறையிருப்பிலிருந்து வந்தபிற்பாடு இந்த நாளை முக்கியமாய்க் கவனித்து வந்தார்கள்.

2. **இந்த நாள் குறிக்கிறதென்ன?**—முதலாவது ஆதியிலே இந்த நாள் யேகோவாவுக்கென்று பரிசுத்தநாளாய் நியமித்த நாள். இரண்டாவது வேலையிலிருந்து இளைப்பாறும் நாள். சிறையிருப்பிலிருந்தபோது இந்த நோக்கத்தோடு ஓய்வுநாளை அதிக நுட்பமாய் ஆசரித்தவர்களும், அக்காலத்தில் அதிகாரம் பெற்றிருந்தவர்களாகிய வேதபாரகரும் 'ஏழாம் நாள் ஓய்ந்திருப்பாயாக' என்னும் கட்டளையை மனுஷர் செய்யமுடியாத அவ்வளவு பாரமானமாதிரியாய் விபரித்து அதற்குரிய ஏற்பாடுகள் செய்து, நியாயப்பிரமாணத்தில் மோசே ஓய்வுநாளில் விறகு பொறுக்கினவனைக் கொல்லும்படி கட்டளையிட்டான் (எண் $15^{32}$) என்றும், அவன் நெருப்பு மூட்டாதபடி கட்டளையிட்டான் (யாத் $35^{3}$) என்றும் சொல்லியவைகளை முன்

னிட்டு இந்தக் கண்டிப்பான கட்டளைகளை ஸ்தாபித்தார்கள். எபிரெயர் எருசலேமுக்குத் திரும்பிவந்த பிற்பாடு முக்கியமாய் ஆசரிக்க வேண்டியவைகளில் ஓய்வுநாளை ஆசரிப்பதும் ஒன்று எனத் தீர்மானித்தார்கள். நெகே $10^{31}$ $13^{15.17}$. எரேமியாவின் புஸ்தகத்திலும், ஏசாயா புஸ்தகத்தின் கடைசிப்பாகத்திலும் இந்தக் கொள்கை விளங்குகிறது. எரே $17^{21}$ ஏசா $56^{2}$ $58^{13}$ $66^{23}$. மக்கபெயர் சீரியா ராஜாவிலிருந்து தங்கள் தேசத்தை விடுதலையாக்கும்படி யுத்தம்பண்ணும்போது ஓய்வுநாளிலே போர்செய்ய மாட்டோம் என்ற ஏற்பாடு சில யூத பக்தர்களுக்குள் இருந்ததினாலே சில தடவை தாங்கள் அபஜெயம் அடைந்ததைப் பார்த்து யேகோவாவுக்குப் பரிசுத்தக் குலைச்சலாய் நடந்த இந்த ராஜாவிலிருந்து தங்கள் தேசத்தைக் காக்கும்படி ஓய்வுநாளிலும் யுத்தம் செய்வது நியாயம் என்று தீர்மானித்தார்கள். 1மக்கபெயர் $2^{31}$.

3. **புதிய ஏற்பாடு**.—புதிய ஏற்பாட்டின் காலத்தில் வேதபாரகர் ஓய்வுநாளைப்பற்றிப் பாரமும் கஷ்டமுமாய் விதித்த கட்டளைகளில் சில: அந்த நாளில் தானியம் கொய்து கையில் போட்டுக் கசக்கித் தின்பதும், தையல்காரன் தன் சட்டையில் தையல் ஊசி குத்தியிருப்பதும், கால் இல்லாதவன் மரக்கால் மாட்டி நடப்பதும், ஒருவன் படுக்கை எடுத்துக்கொண்டு போவதும் ஆகிய இவை முதலியவைகள் பாவம் என்று சொன்னார்கள். இதினிமித்தம் அவர்களுக்கும் இயேசுகிறிஸ்துவுக்கும் அடிக்கடி தர்க்கம் உண்டானது. மத் $12^{1.10}$ மாற் $2^{27}$ லூக் $4^{16}$ $13^{14}$ $14^{1}$ யோவா $5^{9}$ $7^{23}$ $9^{14}$. ஆதி கிறிஸ்தவ சபையில் யூதமார்க்கத்திலிருந்து வந்தவர்கள் ஏழாம் நாளை ஓய்வுநாளாக ஆசரித்தபோதிலும் வாரத்தின் முதலாம் நாளே கர்த்தருடைய நாள் என ஆசரித்தல் அதிகமாய்ப் பரம்பினதினாலே கிறிஸ்தவசபையில் எபிரெயர் கொண்ட பிரமாணம் குறைந்துபோக, கர்த்தருடைய நாள் பெரும்பாலும் ஆசரிக்கப்பட்டுவந்தது. எபிரெயர் ஓய்வுநாளைப்பற்றிய பாரமான கட்டளைகளினால் ஜனங்களை வருத்தப்படுத்தினதைப் பார்த்து பரி. பவுல் கிறிஸ்தவர்கள் நாட்களை விசேஷமாய் நினையாதபடி எச்சரிக்கிறான். ரோ $14^{5}$ கலா $4^{9}$ கொலோ $2^{16}$.

4. **'கர்த்தருடைய நாள்.'**—கிறிஸ்தவர்கள் முதலில் சபையாகக்கூடித் தினந்தோறும் ஆராதனை நடத்திவந்தார்கள். வரவரச் சபை வளர்ந்து வந்தபோது தினந்தோறும் ஒவ்வொருவரும் ஆராதனைக்கு வருவது கூடாத காரியம் என்று கண்டு, ஆராதனைக்கென்று குறித்த ஒருநாள் ஏற்படுத்த வேண்டியதாயிற்று. இயேசு உயிர்த்தெழுந்த நாள் அவருடைய சீஷருக்குச் சந்தோஷமான நாளான தினாலும், அந்த நாளிலே அவர் அவர்களுக்குத் தரிசனையானதினாலும், வாரத்தின் முதல் நாள் ஆராதனையின் நாளாயிற்று. அப் $20^{7}$ 1கொரி $16^{2}$. சிலகாலம் யூதமார்க்கத்திலிருந்து வந்த கிறிஸ்தவர்கள் வாரத்தின் ஏழாம் நாள் வாரத்தின் முதலாம் நாள் ஆகிய இரண்டையும் ஆசரித்துவந்தார்கள். ஆனால் கிறிஸ்தவ சபையில் ஆயிரக்கணக்காய்ப் புறமதஸ்தர்கள் சேர்ந்தபோது அவர்கள் வாரத்தின் முதலாம் நாளையே விசேஷமாக எண்ணி அதற்குக் 'கர்த்தருடைய நாள்' (வெளி $1^{10}$) என்றும், அவர்கள் அதை ஓய்வுநாளாக ஆசரித்ததினால் அதற்கு 'ஓய்வுநாள்' என்றும் பேர் ஏற்பட்டது. இந்த நாளில் இராப்போஜனம் வழக்கமாய்ப் பரிமாறினதினாலே இதற்கு 'அப்பத்தின் நாள்' என்று சிலர் சொன்னார்கள். புறமதஸ்தர்கள் வாரத்தின் முதல் நாளுக்கு 'சூரியநாள்' அல்லது 'ஞாயிற்றுக்கிழமை' என்று சொன்னார்கள். ஆதி கிறிஸ்தவர்கள் அந்த நாளிலே 'நீதியின் சூரியன்' ஆன இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்ததினாலே புறமதஸ்தர்கள் இட்டுக் கொண்ட அந்தப் பெயரையே அவர்களும் இட்டார்கள்.

**ஓய்வுநாள் பிரயாணம்**. A Sabbath Day's Journey. **அளவு** காண்க.

**ஓரம்**. Corner. எபிரெயர் பலிபீடத்தின் ஓரங்கள் அல்லது கோடிகள் (சக $9^{15}$), வயல்களின் ஓரங்கள் (லேவி $19^{9}$), தாடியின் ஓரங்கள் (லேவி $19^{27}$) இவைகளை விசேஷமாய்க் கவனித்தார்கள். **மூலைக்கல்** காண்க.

**ஓராம்**. Horam. கேசேரின் ராஜா. யோசு $10^{33}$.

**ஓரி**. Jackal.

1. நரிகள் கானான்தேசத்தில் ஏராளமாய் உண்டு. நியா $15^{4}$ உன். பா $2^{25}$ ஏசா $34^{14}$ எரே $9^{11}$.

2. = Hori. எண் $13^{15}$.

**ஓரியர்**. Horites. இப்பெயர் 'மலைக் குகைகளில் வாசஞ் செய்கிறவர்கள்' என அர்த்தங் கொள்ளுகிறது. ஏதோமியர் ஏதோம் தேசத்துக்கு வர முன் இவர்கள் அங்கேயுள்ள மலைகளில் குடியிருந்தார்கள். உபா $2^{12}$.

**ஓரேன்**. Oren. 1நாளா $2^{25}$.

**ஓரேபும் சேபும்**. Oreb and Zeeb. கிதியோன் ஜெயித்த 'காக்கையும்' 'ஓநாயும்' என்ற இரண்டு பிரபுக்கள். நியா $7^{25}$ $8^{3}$ சங் $83^{11}$.

**ஓரேப்.** **Horeb.** **சீனாய்** காண்க.

**ஓரேம்.** **Horem.** ஒரு ஊர். யோசு $19^{38}$.

**ஓரோனியன்.** **Horonite.** பெத்தொரோன் என்னும் ஊரில் குடியிருந்தவன். நெகே $2^{10}$.

**ஓர்.** **Hor.**

1. சாக்கடலுக்கு நேர் தெற்கே ஏறக்குறைய நாற்பது மைல் தூரமாயுள்ள ஆரோன்



ஓர் என்னும் மலை.

இறந்துபோன ஒரு பெரிய மலை. இவ்விடத்திலுள்ள காட்டு ஜாதியார் இதை ஆரோனின் மலை என்று சொல்லுகிறார்கள். எண் $33^{37}$.

2. பலெஸ்தீனாவின் வட எல்லையிலுள்ள ஒரு மலை. எண் $34^{7}$. இது எர்மோன் மலை என நினைக்கவேண்டும்.

**ஓர்மா.** **Hormah.** **ஓர்மா** காண்க.

**ஓலோன்.** **Holon.**

1. லேவியரின் பட்டணங்களில் ஒன்று. யோசு $15^{51}$.

2. மோவாபியரின் ஊர். எரே $48^{21}$.

**ஓனும்.** **Onam.**

1. ஆதி $36^{23}$.

2. 1 நாளா $2^{26}$.

**ஓனன்.** **Onan.** ஆதி $38^{8}$.

**ஓனோ.** **Ono.** பென்யமீன் தேசத்திலுள்ள ஒரு ஊர். 1 நாளா $8^{12}$ நெகே $6^{2}$.

**ஓன்.** **On.**

1. **ஆவேன்** காண்க.

2. எண் $16^{1}$.

## ஔ.

**ஔஷதம்.** **Medicine.** நீதி $12^{18}$ $13^{17}$. **அவுழ்தம்** காண்க.

## க.

**கசப்பு.** **Bitter.** யாத் $15^{23}$ உபா $32^{32}$ நீதி $27^{7}$ வெளி. $10^{9}$.

1. அருவருப்பு. நீதி $5^{4}$ எரே $2^{19}$.

2. துயரம். யோபு $7^{11}$.

3. கேடு. 2 சாமு $2^{26}$.

4. குரோதம். எபே $4^{31}$.

5. அவபத்தி. அப் $8^{23}$ யாக் $3^{14}$.

6. தவறுதல். எபி $12^{15}$.

7. கசப்பான ஜலம். எண் $5^{18}$. **சலம்** காண்க.

'கசப்பான சலம்,' 'பரிசுத்த சலம்,' *Water of Jealousy.* புருஷன் தன் மனைவி விபசாரம் செய்தாளென்று சமுசயங்கொள்ளும்போது அவள் தேவாலயத்தில் தரையிற் படிந்த தூசியைத் தண்ணீரிற்போட்டுக் குடிப்பாள். எபிரெயர்கள் அவள் அக்குற்றஞ் செய்திருந்தால் அதினால் அவள் மரித்துப்போவாள் என்று நினைத்து இந்த நீருக்குக் 'கசப்பான சலம்' அல்லது 'பரிசுத்த சலம்' என்று சொன்னார்கள். எண் $5^{11}$.

8. கசப்பான கீரை. யாத் $12^{8}$ எண் $9^{11}$.

9. கசப்பான தண்ணீர். யாக் $3^{11}$ வெளி $8^{11}$.

10. கசந்துகொள்ளல். கொலோ $3^{19}$.

**கசிப்பியா.** **Casiphia.** வட பாபிலோனியாவில் உள்ள ஒரு நாடு. எஸ்றா $8^{17}$.

**கசீசை.** **Girdle.** உடை காண்க.

**கஜானா.** **Treasury.** எஸ்றா $6^{1}$ $7^{21}$.

**கஜான்சிகள்.** **Treasurers.** பொக்கிஷ அறைகளின்மேல் விசாரிப்புக்காரர். எஸ்றா $7^{29}$ நெகே $13^{13}$.

**கஸ்பி.** **Cozbi.** மீதியானிய ஸ்திரீ. எண் $25^{15}$.

**கஸ்லூகீம்.** **Casluhim.** பூர்வஜனம். ஆதி $10^{14}$.

**கஷ்மூ.** **Gashmu.** **கேஷேம்** காண்க.

**கடகம்.** **Bracelet.** ஆதி $24^{22}$. **ஆபரணம்** காண்க.

**கடப்பாரை.** **Mattock.** 1 சாமு $13^{20}$.

**கடலுராஞ்சி.** **Osprey.** மீன் பிடிக்கிற ஒருவிதமான கழுகு. லேவி. $11^{13}$.

**கடல். Sea.** பலெஸ்தீனுவிலுள்ளகடல்கள்.

1. 'பெருங்கடல்' அல்லது 'பெலிஸ்தியரின் சமுத்திரம்' = மத்தியதரைக்கடல். யாத் 22[33].

2. 'சமபூமியின் கடல்' அல்லது 'சாக் கடல்' = உப்புக்கடல். 2 இரா 14[25].

3. 'கின்னரேத் கடல்' அல்லது 'திபேரியாக்கடல்' = கலிலேயாக்கடல். யோவா 21[1].

4. செங்கடல் = சிவந்த சமுத்திரம்.

**கடவுள், தேவன், சர்வேஸ்வரன். God.** கடவுள் இருக்கிறுர் என்பதை எபிரெயர் உறுதியாய் நம்பினுர்கள் என்பதற்கு முழு வேதமுமே அத்தாட்சியாய் இருக்கிறதினுல் அவருடைய அஸ்தித்துவத்தைப்பற்றி இங்கே கூறவேண்டியதில்லை. ஆனுல் ஆதி பிதாக்களும் தீர்க்கதரிசிகளும் கடவுளுடைய லட்சணங்களைக் குறித்து ஒரேவிதமாய் எண்ணினுர்கள் என நினைக்க இடமில்லை. கடவுள் 'பூர்வகாலங்களில் பங்கு பங்காகவும் வகை வகையாகவும்' தம்மை வெளிப்படுத்தினுர். ஏசா 28[10] எபி 1[1]. கடவுள் வெவ்வேறுன காலங்களில் தம்மை நம்பினவர்களுக்குத் தாம் இட்ட கட்டளைகளையும் அவர்கள் அவைகளைக் கைக்கொண்ட விதத்தையும் பற்றித் தெரிவித்தார் என்று வேதத்தைக் கொண்டு நாம் அறிந்துகொள்ளலாம்.

1. **பழைய ஏற்பாட்டில் கடவுளுக்கு இட்டிருக்கும் பெயர்கள்.**

(*a*) **எலோகீம்,** *Elohim,* = 'தேவன்.' வேதத்தில் சில இடங்களில் இப்பதம் தேவதைகளுக்கும், ஆவிகளுக்கும் நியாயாதிபதிகளுக்கும் சொல்லியிருக்கிறது. 1 சாமு 28[13] சங் 82[1]. ஆனுல் வழக்கமாய் இப்பதம் மேலான கடவுள் ஒருவரைக் குறிக்கிறது.

(*b*) **ஏல்,** *El,* = 'தேவன்.' இப்பதம் 'பலமுள்ளவர்' அல்லது 'ஆண்டுகொள்ளுகிறவர்' என்பதைக் காட்டுகிறது. ஆதி 31[13] யாத் 20[5].

(*c*) **ஏல்ஷட்டாய்,** *El Shaddai.* 'ஷட்டாய்' என்பதின் அர்த்தம் திட்டமாய்த் தெரியாது. ஆனுல் சர்வ வல்லவர் என்பதைக் குறிக்கிற பதம் என விளங்குகிறது. ஏல்ஷட்டாய் = சர்வ வல்லமையுள்ள தேவன். யாத் 6[3] எண் 24[4].

(*d*) **ஏல் எலியோன்,** *El Elyon,* = 'உன்னதமான தேவன்.' ஆதி 14[18] சங் 82[6].

(*e*) **அடோனய்,** *Adonai,* = ஆண்டவர். அடிமைகள் எஜமானுக்கு இப்பதத்தைச் சொல்லுவார்கள். தீர்க்கதரிசிகள் இப்பதத்தை அதிகமாய் வழங்கினுர்கள். ஏசா 6[11] 21[6] எரே 46[10].

(*f*) **யேகோவா,** *Jehovah, Jahweh, Yahweh.* இப்பதத்தின் மூலார்த்தம் திட்டமாய்த் தெரியாது. ஆனுல் மோசேயின் கால முதல் 'எப்போதும் இருக்கிறவர்' அல்லது 'இருப்பவர்' என்பதைக் குறிக்கிறது. கடவுளுடைய பெயர்களில் இது விசேஷமானது என்று எபிரெயர் நினைத்து வேதம் வாசிக்கும்போது இந்தப் பெயரை உச்சரிக்காமல் இதற்குப் பதிலாக 'அடோனய்' என்று சொல்லுவார்கள். யாத் 3[10].

(*g*) **யா,** *Jah,* தமிழில் இதற்கு 'கர்த்தர்' (யாத் 15[2]) என்றும், 'யேகோவா' (சங் 68[4]) என்றும் சொல்லியிருக்கிறது. **அல்லேலூயா** காண்க.

(*h*) **யேகோவா சபாயோத்,** *Jehovah Sabaoth.* = 'சேனைகளின் கர்த்தர்.' தீர்க்கதரிசிகளால் இப்பதம் அதிகமாய் வழங்கப்பட்டுவந்தது. கடவுள் இஸ்ரவேலின் சேனைகளுக்குக் கர்த்தர் என முதலில் வழங்கிவந்த இந்தச் சொல் பிற்பாடு அவர் தேவதூதர்களின் கர்த்தர் எனவும் கருதினது. ஏசா 1[9] 6[3].

(*i*) பல இடங்களில் மேற்சொன்ன பெயர்களில் இரண்டு சேர்ந்து சொல்லப்பட்டிருக்கிறது. 'யேகோவா எலோகீம்' எனப் பல முறையும் எழுதியிருக்கிறது.

2. **ஆதி எபிரெயர்களின் அபிப்பிராயம்.** கடவுள் கற்றூண்கள், மரங்கள், நீரூற்றுகள் முதலான சில குறித்த இடங்களை விரும்பி அவைகளில் வசிக்கிறுர் என்று கானனியர் முதலிய சேமியர் உறுதியாய் நம்பினுர்கள் என்றும் எபிரெயர்கள் முதலில் இவ்விதமாய் எண்ணங்கொண்டார்கள் என்றும் தோன்றுகிறது. ஆதி 12[7] 13[18] 35[7] யோசு 24[26].

மேலும் எபிரெயர்கள் யேகோவாவைத் தவிர அந்நிய தேவர்கள் உண்டு என நினைத்தார்கள். ஆதி 31[36] நியா 17[5] 1 சாமு 29[13].

சில சமயங்களில் எபிரெயர்கள் இந்த அந்நிய தெய்வங்களின் தயவு பெறும்படி இவைகளை வணங்கினுர்கள். ஆனுல் யேகோவாவே தங்கள் தேவன் என நம்பினுர்களேயொழிய இவைகளைத் தங்கள் தெய்வங்களாக ஒருக்காலும் ஏற்றுக்கொள்ளவேயில்லை என்பது பழைய ஏற்பாட்டின் மூலமாய்த் தெரிகிறது.

3. **மோசேக்குப் பிற்பாடு இருந்த அபிப்பிராயம்.**

இஸ்ரவேலர் பாகால், அஸ்தரோத் முதலிய தேவர்களைச் சிலவேளை பணிந்துவந்தா

லும் யேகோவா இஸ்ரவேலின் தேவன் என்றும், அவர் எல்லாத் தேவர்களிலும் மேலானவர் என்றும், அவருடைய ஜனங்கள் அவரைமாத்திரம் வணங்கவேண்டும் என்றும், அவர் அவர்களுக்கு உடன்படிக்கை செய்திருக்கிறார் என்றும் மோசே போதித்ததின் படி அவர்கள் வரவர அந்நிய தேவர்களை விட்டு யேகோவாவின்பெயரில் மாத்திரம் பக்தி வைத்தார்கள். அவர்கள் முதலில் யேகோவா மனுஷரூபமாய் ராஜாவைப்போலிருக்கிறார் என்று நினைத்து அவருடைய கரம், வாய், உதடுகள், செங்கோல், சிங்காசனம் முதலியவற்றைப் பற்றிப் பேசி யுத்தத்திலே அவர் தங்களுக்கு ஜெயம் கொடுப்பார் என்று எண்ணினார்கள்.

4. **தீர்க்கதரிசிகளின் அபிப்பிராயம்.**

தீர்க்கதரிசிகள் யேகோவாவை ஆவிக்குரியவிதமாய்த் தியானித்து, எல்லா விக்கிரக வணக்கத்தையும் கண்டித்து, யேகோவா எங்கும் இருக்கிறவர் (எரே $23^{24}$) என்றும், பரிசுத்தர் (ஏசா $6^{3}$) என்றும், அன்பு நிறைந்து தீமையை வெறுத்து அதிலிருந்து எல்லாரையும் ரட்சிக்க விரும்புகிறவர் என்றும் கற்பித்துவந்தார்கள். உபா $4^{35.\ 39}$ $6^{4}$ $10^{14}$ 1 இரா $8^{60}$ ஏசா $37^{16}$ $40^{12.\ 22.\ 28}$ $41^{4}$ $42^{5}$ $43^{10}$ $44^{6.\ 24}$ $45^{5.\ 12.\ 18}$ $48^{13}$ எரே $10^{7}$ எசே $35^{4.\ 9.\ 15}$ மல் $1^{5.\ 11.\ 16}$.

5. **சிறையிருப்புக்குப் பிற்பாடு உண்டான அபிப்பிராயம்.**

சிறையிருப்புக்குப் பிறகு இஸ்ரவேலர் அந்நிய தேவர்களையும் விக்கிரக ஆராதனையையும் முற்றிலும் விட்டுக் கர்த்தருடைய வாக்கு ஞானம் முதலியவற்றைப்பற்றி விபரித்து இயேசுவின் மூலமாய் வரும் போதனைக்கு ஆயத்தமுள்ளவர்களானார்கள்.

6. **புதிய ஏற்பாடு, கிறிஸ்தவர்களின் அபிப்பிராயம்.**

புதிய ஏற்பாட்டில் கடவுள் சர்வ வல்லமையுள்ளவரும் அல்லாமல் எல்லாருக்கும் அவர் அன்புள்ள பிதாவாகவும் இருக்கிறார் என்று காட்டியிருக்கிறதை நாம் காணலாம். இயேசு இப்படிக் கடவுள் தமக்குப் பிதாவாய் இருக்கிறார் என்றும், சர்வ ஜனங்களுக்கும் விசேஷமாய்த் தமது சீஷருக்குப் பிதாவாய் இருக்கிறார் என்றும் பூரணமாய்ப் போதித்திருக்கிறார். இந்தச் சத்தியத்தைக் குறிக்கும் வசனங்களில் சில: மத் $6^{9}$ லூக் $6^{35}$ யோவா $20^{17}$ அப் $17^{28}$ யாக் $1^{17}$ 1 பேது $1^{17}$.

7. **புதிய ஏற்பாடு கிறிஸ்தவ தத்துவஞானத்தை விபரித்துக் காட்டும் சாஸ்திரமல்ல.** திரியேகத்துவம் முதலியவற்றைப்பற்றி அறியவேண்டுமானால் **அரியானர், சொசீனியர், திரியேகத்துவம்** பார்க்க.

**கடற்காளான்.** **Sponge.** சீரியா தேசத்தைச் சேர்ந்த மத்தியதரைக் கடற்கரையில் இது ஏராளமாய் உண்டு. மத் $27^{48}$ மாற் $15^{36}$.

**கடன்.** **Debt.**

1. **பழைய ஏற்பாடு.**—நியாயப்பிரமாணம் கொடுக்கப்படும் காலத்தில் தரித்திரம் நேரிடும்போதுமாத்திரம் எபிரெயர்கள் கடன் வாங்குவார்களேயொழிய வியாபாரம் முதலிய தொழில் துறைகளுக்காகக் கடன் வாங்க மாட்டார்கள். இவ்விதமாய்க் கடன் வாங்கும் தரித்திரனிடத்திலிருந்து வட்டி வாங்குவது நல்லதல்ல. ஆகையால் வட்டி வாங்கப்படாது என்று சொல்லியிருக்கிறது. யாத் $22^{25}$ லேவி $25^{36}$ உபா $23^{19}$ $28^{12.\ 44}$.

உபாகமத்தில் சொல்லியிருக்கிறபடி அந்நியரிடத்திலிருந்து வட்டி வாங்குவது நியாயம் என விளங்குகிறது. சில விஷயங்களில் மாத்திரம் அடகு அல்லது அடைமானம் வாங்கலாம். உபா $24^{10}$ யோபு $24^{3}$. ஏழாம் வருஷத்தில் கடன் மன்னிக்கிறதைப்பற்றியது: உபா $15^{3}$.

வேதத்தின் சரித்திரத்தைப் பார்த்தால் அநேகர் மேற்சொல்லிய பிரமாணத்தைக் கைக்கொள்ளவில்லை என்று தோன்றுகிறது. 2 இரா $4^{1}$ ஏசா $24^{2}$ $50^{1}$ நெகே $5^{7}$ $10^{31}$ சங் $15^{5}$ $37^{21}$ நீதி $19^{17}$ $22^{7}$ $28^{8}$ எரே $15^{10}$.

2. **புதிய ஏற்பாடு.**—புதிய ஏற்பாட்டின் காலத்தில் தரித்திரத்தினிமித்தம் அல்லாமலும் வியாபாரம் முதலியவைகளுக்கும் முதல் வாங்கி அதற்கு வட்டியும் கொடுப்பது வழக்கமும் நியாயமுமாய் இருக்கும் என்பது இயேசுகிறிஸ்து சொன்ன பிரசங்கத்தினால் விளங்கும். மத் $25^{27}$ லூக் $16^{5}$ $19^{23}$.

கிறிஸ்தவ னொருவன் ஏழையின் விஷயத்தில் வட்டியைப்பற்றிக் கண்டிப்பாய் இருக்கப்படாது. லூக் $6^{34}$. கடன் பாவத்தைக் குறிக்கிறது. மத் $6^{12}$ லூக் $7^{41}$.

கிறிஸ்தவர்களிடத்தி லிருந்தாவது, புறமதஸ்தர்களிடத்தி லிருந்தாவது, தங்களுக்கும் சபைக்கும் துர்க்கீர்த்தி அல்லது இடையூறு வராதபடி கிறிஸ்தவர்கள் கடன் வாங்காமல் இருப்பது நல்லது. ரோ $13^{8}$.

**கடியாரம்.** **Dial.** **எசேக்கியா, சூரிய கடியாரம்** காண்க.

**கடிவாளம்.** **Bit, Bridle.** 'கடிவாளம்' எனக் குறிக்கிற எபிரெய கிரேக்க பதங்கள் இலகான், வார், தலைநாடா ஆகிய இம்மூன்றையும் காட்டுகிறது. சங் $32^{9}$ யாக் $3^{3}$.

**கடுகு.** **Mustard.** பலெஸ்தீனுவில் ஏராளமாயுள்ள இந்தச் செடி 12 அடி உயரத்திற்கு வளரும். அதின் சிறு விதைகளைச் சாப்பிடும்படி பட்சிகள் அதில் வந்து தங்கும். மத் $13^{31}$ $17^{20}$ லூக் $13^{19}$.



எபிரெயர்கள் கட்டில்மேல் உட்கார்ந்து கை கழுவினது.

**கடை.** **Market.**

1. கடைத்தெருவைக் குறிக்கிறது. எசே $27^{13}$ மத் $11^{16}$ மாற் $7^{4}$.

2. கிரேக்க பட்டணத்தில் அம்பலமான இந்த இடத்தில் வியாபாரத்திற்காகக் குடிசைகள் இருக்கும். இதைச் சுற்றி நியாயஸ்தலங்களும் கோவில்களும் பெரிய அரமனைகளும் கட்டப்பட்டிருந்தன. அப் $16^{19}$ $17^{17}$

**கட்கம்.** **Sword.** நீதி $25^{18}$. **ஆயுதம்** காண்க.

**கட்டில்.** **Beds, Couches.** எபிரெயர்களுக்குள் ஏழைகள் பாய்களிலும், ஐசுவரியவான்கள் கட்டில்களிலும் தூங்குவார்கள். கட்டில்கள் பலவிதமாய் அலங்கரிக்கப்படும். உபா $3^{11}$ ஆமோ $3^{15}$.

தந்தக்கட்டில். ஆமோ $6^{4}$.

**கட்டுக்கதைகள்.** **Fables.**

1. **உவமைகள்** காண்க.

2. புதிய ஏற்பாட்டில். 1 தீமோ $1^{4}$ $4^{7}$ 2 தீமோ $4^{4}$ தீத் $1^{14}$ 2 பேது $1^{16}$.

ஆதி கிறிஸ்தவர்களில் சிலர் தத்துவசாஸ்திரத்தில் மயங்கி கிறிஸ்துபோதித்தவைகளைத் தங்கள் அபிப்பிராயத்தின்படி மாற்றி, அவருடைய சரித்திரத்தைத் தாங்கள் நினைத்தபடி விபரித்துத் தங்கள் இஷ்டத்தின்படி சமயபேதங்கொண்டவர்களாய் நடந்தார்கள். பேதுருவும் பவுலும் இவர்களுடைய கொள்கைகளுக்கு இப்பதம் வழங்கினார்கள். **சுவிசேஷம்** காண்க.

**கட்டுவிரியன்.** **Basilisk.** எபிரெய பதம் ஒரு வேளை கவிகல்பிதமான பயங்கர பறவை நாகத்தைக் குறிக்கிறது. ஏசா $11^{8}$ $59^{5}$ எரே $8^{17}$.

**கணக்கன்.** **Writer.** நியா $5^{14}$ சங் $45^{1}$ எசே $9^{2}$.

**கணவாய்.** **Defile, Valley.** ஏசா $10^{28}$.

**கணிக்கிறவர்கள்.** **Astrologers.** **ஞானியம்** காண்க.

**கண்.** **Eye.** சரீரத்துக்குள் ஜன்னலைப்போல் கண்மூலமாய் வெளிச்சம் பிரகாசிக்கும் என்கிறது எபிரெயரின் அபிப்பிராயம். மத் $6^{22}$.

அழகிய கண்கள். 1 சாமு $16^{12}$ உன். பா. $1^{15}$ $5^{12}$.

மோகக்கண். நீதி $6^{25}$ ஏசா $3^{16}$. கூச்சப்பார்வை. ஆதி $29^{17}$. இது காமக்கண் எனக் கருதாமல் கூசிப்பார்க்கும் கண் எனக் கருதுகிறது.





கண்.

பெண்கள் கண்களுக்கு மையிடுவார்கள். எரே $4^{30}$ எசே $23^{40}$.

குஷ்டரோகி ஆரோக்கியமடைந்து சுத்திகரிக்கப்படும்போது அவன் கண்புருவம் சிரைக்கப்படும். லேவி $14^{9}$.

கண் பார்வைக்கு ஒருமாதிரியான பஸ்பம் கலிக்கம் போடுவார்கள். வெளி $3^{18}$.

கண் பலவித உபமானமாய்ச் சொல்லப்படுகிறது. நீதி 30[17] மத் 6[22] 1 யோவா 2[16].

**கண்காணிகளும் மூப்பர்களும். Bishops and Elders.**

1. **பதங்கள்.**

(*a*) **கண்காணி**, *Episkopos*, அல்லது மேல் விசாரணைக்காரன். அப் 20[28] பிலி 1[1] 1 தீமோ 3[2] தீத் 1[7] 1 பேது 2[25]. **புதிய ஏற்பாட்டில்** இந்த ஐந்து இடங்களில்மாத்திரம் இது சொல்லப்பட்டிருக்கின்றது.

(*b*) **மூப்பன்**, *Presbyteros*, அல்லது வயது முதிர்ந்தவன்.

பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் மூப்பர்கள் கானான் தேசத்தில் ஒவ்வொரு ஊரிலுமுள்ள காரியாதிகளைக் குறித்து நீதி விசாரணை செய்யும்படி அதிகாரம்பெற்ற தலைவர்களாம். பிற்காலத்தில் இவர்கள் ஜெப ஆலயக் கர்த்தாக்களாய் இருந்தார்கள். இவர்களைப்போலவே ஆதி கிறிஸ்தவ சபைகளில் கண்காணிகளும் மூப்பர்களும் இருந்தார்கள். கிறிஸ்தவ சபை ஸ்தாபிக்கப்பட்ட பத்தாம் வருஷம் (கி-பி. 44) பவுல் கொண்டுவந்த காணிக்கையை எருசலேமில் மூப்பர்கள் பெற்றார்கள். அப் 11[30]. ஆறு வருஷத்திற்குப் பிற்பாடு இவர்கள் கிறிஸ்தவ ஆலோசனைச் சங்கத்தில் சேர்ந்திருந்தார்கள். அப் 15[6]. எட்டு வருஷத்திற்குப் பிற்பாடு (கி-பி. 58) இவர்கள் பரி. பவுலை ஏற்றுக்கொண்டார்கள். அப் 21[18].

2. புதிய ஏற்பாட்டில் எந்த இடத்திலும் கண்காணிகளும் மூப்பர்களும் ஆகிய இந்த இரண்டு பேர்களும் சேர்ந்து சொல்லப்படாததினாலும்; பிலிப்பியருக்கு எழுதின நிருபத்தில் மூப்பரைவிட்டு கண்காணிகளுக்கும் உதவிக்காரருக்கும் எழுதியிருக்கிறதினாலும்; 1 தீமோ 3-ம் அதிகாரத்தில் பவுல் எபேசு பட்டணத்திலுள்ள (அப் 20[17]) மூப்பர்களைப்பற்றிப் பேசாமல் கண்காணிகளைப்பற்றிப் பேசுகிறதினாலும்; தீத்து 1-ம் அதிகாரத்தில் கண்காணிகளைப்பற்றிச் சொல்லாமல் மூப்பர்களைப்பற்றிச் சொல்லியிருப்பதினாலும்; ஆதி கிறிஸ்தவ சபையில் கண்காணிகளும் மூப்பர்களும் ஒரேவிதமான ஊழியத்தைச் செய்ததினாலும்; எபேசுவிலுள்ள மூப்பர்களைக் கண்காணிகள் என்று சொல்லியிருப்பதினாலும் (அப் 20[17. 28]); கண்காணி, மூப்பன் ஆகிய இவ்விரு பதங்களும் ஏகார்த்தமுடையவைகள் என நினைக்கவேண்டும். சில இடங்களில் கண்காணி என்பது வெவ்வேறான உத்தியோகத்தைக் குறிக்கிறதாய் இருந்தாலும் அவ்வித்தியாசம் இன்னது என நமக்குத் தெரியவில்லை.

3. **இவர்கள் நியமனம்.** ஆதி சபையில் பொதுச்சபையார்கள் இவர்களை நியமித்ததும், அப்போஸ்தலர்கள் அதை அனுமதித்து, ஜெபம் செய்து, தங்கள் கைகளை இவர்கள் தலைமேல் வைத்து இவர்களை அங்கீகரித்தலும் ஆகிய இவை இரண்டும் அவசியம் வேண்டும் என்று தோன்றுகிறது (அப் 6[5] காண்க). ஆனால் அப்போஸ்தலர்கள் தாமே மூப்பர்களை ஏற்படுத்தினார்கள் (அப் 14[23]) என்றும்; தீத்து மூப்பர்களை ஏற்படுத்தினான் (தீத் 1[5]) என்றும்; தீமோத்தேயு கண்காணிகளை ஏற்படுத்தினான் (1 தீமோ 3[15] 2 தீமோ 2[2]) என்றும் தெரிகிறது. அப்போஸ்தலர் காலத்திற்குப் பிற்பாடு அவர்களால் ஏற்படுத்தப்பட்டவர்கள் இவ்வூழியத்திற்குச் சபையினால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களைக் கண்காணிகளாயும் மூப்பர்களாயும் ஏற்படுத்துவார்கள். இரண்டாம் நூற்றாண்டில் கண்காணிகள் பெரிய அதிகாரத்தைப் பெற்றார்கள் எனத் தோன்றுகிறது. அந்தக் காலத்தில் சுற்றியிருக்கிற ஊர்களிலுள்ள கண்காணிகள் புதுக் கண்காணியை நியமித்து வந்தார்கள். பிற்பாடு மேற்றிராணி என்பவன் கண்காணியைப் பிரதிஷ்டை செய்வது வழக்கம் ஆனது.

4. இவர்களின் **கடமைகள்.**

(*a*) **மேல் விசாரணை.** மூப்பர்கள், அப் 20[28] 1 தீமோ 5[17]. கண்காணிகள், 1 தீமோ 3[5]. பொதுவாய், 1 தெச 5[12].

(*b*) **போதனை.** கண்காணிகள், 1 தீமோ 3[2] தீத் 1[9]. மூப்பர்கள், 1 தீமோ 5[17]. பொதுவாய், 1 தெச 5[12].

(*c*) **சபை பராமரிப்பு.** விசேஷமாய் வியாதியஸ்தரைச் சந்தித்தல், யாக் 5[14]. தரித்திரரையும் அந்நியரையும் பாதுகாத்தல், 1 தீமோ 3[2] தீத் 1[8].

**கண்ணாடி, தர்ப்பணம். Looking glass.** எபிரெயர் உபயோகித்த கண்ணாடி வட்டவடிவும் கைபிடி உள்ளதுமாய் வெண்கலத்தினால் செய்யப்பட்டிருந்தது. யாத் 38[8] யோபு 37[18] 1 கொரி 13[12] 2 கொரி 3[18] யாக் 1[23].

**கண்ணாடிக் கடல். Sea of glass.** யோவான் 'கண்ணாடிக் கடல்' என்று சொல்வதினால் அதின் பளபளப்பான பிரகாசத்தையும் அலங்காரத்தையும் காட்டுகிறான். வெளி 4[6] 15[2].

**கண்ணி, சுருக்கு, வலை. Snare, Gin.** குருவிகளைப் பிடிப்பதற்கு வேடர்கள் கண்ணியேற்றுவார்கள். சங் 124[7] நீதி 1[17] ஓசி 5[1] 9[8] ஆமோ 3[5] ரோ 19[9] 1 கொரி 7[35].

**கதர.** Gadara. கலிலேயாக் கடலுக்குத் தென்கிழக்கில் ஆறுமைல் தூரமாயுள்ள ஒரு ஊர். இதில் பேர்போன வெந்நீர் ஊற்றுகள் இருந்தன. இந்த ஊரில் இயேசு பிசாசு பிடித்தவர்களைச் சொஸ்தமாக்கினார். லூக் $8^{26}$ மாற் $5^{1}$.

சில கையெழுத்துப் பிரதிகளில் இந்த ஊரார் 'கெர்கெசேனர் நாடு' என்று எழுதப் பட்டிருக்கிறது. மத்தேயு சுவிசேஷத்தில் அப்படியே எழுதப்பட்டிருக்கிறது. மத் $8^{28}$. கெர்கெசேனர் நாடு கிர்காசியர் நாடு என்பதைக் குறிக்கிறது. யோசு $24^{11}$. ஆனால் பூர்வீக கையெழுத்துப் பிரதிகளில் 'கெர்கெசேனர்' அல்ல, 'கெராசேனர்' என வாசிக்கிறோம்.

இந்த பதங்கள் கலிலேயாக் கடலிலுள்ள கெர்சா என்னும் ஊரில் வசித்தவர்களைக் குறிக்கின்றன. இந்தக் கெராசா கலிலேயாக் கடலின் ஓரத்தில் தற்காலத்திலுள்ள கெர்சா என்னும் ஊர்.

**கதவு.** Door. 1 கொரி $16^{9}$. **வீடு** காண்க.

**கதிர்.** Spindle. நீதி $31^{19}$.

**கதை.** Story. **உவமை, கட்டுக்கதை** காண்க.

**கத்தரிகள்.** Snuffers. **தேவாலயம்** காண்க.

**கத்தாம்.** Gatam. ஒரு பிரபு. ஆதி $36^{11. 16}$.

**கத்தி.** Knife. ஆதியில் மற்ற ஜனங்களைப்போலவே எபிரெயரும் கற்கத்தி உபயோகித்தார்கள். 'கருக்கான கத்தி' என்பது இதைக் குறிக்கிறது. யோசு $5^{2}$. இந்தமாதிரியே பலிவெட்டுக் கத்தி. ஆதி $22^{6}$. சவரகன் கத்தி. எசே $5^{1}$. விகிதனின் சூரிக்கத்தி. எரே $36^{23}$.

**கத்தோலிக்கு.** Catholic. கி-பி. 381-ஆம் ஆண்டில் உத்தமனாகிய மகா தேயோடொசியு என்ற ராயனுடைய காலத்தில் கொன்ஸ்தந்திநோபில் என்னும் பட்டணத்தில் இரண்டாம் பொதுச்சங்கம் கூடினபோது, ராயனுடைய கட்டளையின்படி மெய்யான உபதேசத்தை நம்புகிறவர்கள் 'கத்தொலிக்' என்று பொதுச் சபையில் எண்ணப்பட்டார்கள்.

'கத்தொலிக்' என்னும் பதத்திற்கு 'பொது' என்றர்த்தமாம். ஆதலால் எவ்விடத்திலும் எப்போதும் எல்லாராலும் நம்பப்படத்தக்கது 'கத்தொலிக் சத்தியம்' என்று சொல்லவேண்டும். ரோமான் மார்க்கத்தார் தங்கள் சபை தான் சத்தியமானதை முழுதும் கைக்கொள்ளுகிறது என்று சொல்லித் தங்கள் சபையே 'கத்தொலிக் சபை' என நினைக்கிறார்கள். ஆனால் சத்தியத்தைப் பற்றிக்கொள்ளுகிற யாவரும் இயேசுவின் பொதுச் சபையிலே உள்ளவர்களாய் இருக்கிறார்கள்.

**கத்மியேல்.** Kadmiel. ஒரு குடும்பம். எஸ்ரா $2^{40}$. அல்லது ஒரு லேவியன். நெகே $10^{9}$.

**கத்மோனியர்.** Kadmonites. சாக்கடலின் கரையில் வசித்த ஆதிகாலத்து ஜனம். ஆதி $15^{19}$.

**கந்தகம்.** Brimstone. சாக்கடலின் சமீபமாய் உள்ள நீரூற்றுக்களில் கந்தகம் சேர்ந்திருக்கும். வேதத்தில் பல இடங்களில் கேட்டுக்கு உபமானமாய் இப்பதம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $19^{24}$ ஏசா $34^{9}$.

**கந்தவர்க்கங்கள்.** Spices. எபிரெயர் பலவிதமான கந்தவர்க்கங்கள் உபயோகித்து வந்தார்கள். இவைகளினால் வாசனை தைலங்கள் செய்து பூசுவார்கள். உன். பா $4^{10}$. பிரேதங்களுக்குத் தைலமிடுவார்கள். 2 நாளா $16^{14}$ மாற் $16^{1}$. **நளதம் மூ** காண்க.

**கந்தாகே.** Candace. எத்தியோப்பியரின் ராணி. இந்தப் பெயர் அந்த தேசத்திலுள்ள ராஜஸ்திரீகளில் சிலருக்கு வழங்கி வந்தது. அப் $8^{27}$.

**கபத்தா.** Gabbatha. எருசலேமில் 'தளவரிசை மேடை' என்பது இதன் மறுபெயர். எருசலேமில் அந்தோனியா என்னும் கோட்டைக்குச் சமீபமாய் இந்த மாதிரியான அம்பலம் ஒன்று இருந்தது. யோவா $19^{13}$.

**கபாலஸ்தலம். கல்வாரி** காண்க.

**கப்.** Kaph. எபிரெய பாஷையில் பதினோராம் எழுத்து. சங் $119^{81}$.

**கப்செயேல்.** Kabzeel. தென் யூதாவில் ஒரு ஊர். யோசு. $15^{21}$. **எகாப்செயேல்** காண்க.

**கப்தோர்.** Caphtor. பெலிஸ்தியர் ஆதிகாலத்தில் இந்த தேசத்திலிருந்து பலெஸ்தீனாவுக்கு வந்தார்கள். இது எந்த தேசம் என்று திட்டமாய்த் தெரியாது. ஒருவேளை கிரேத்தா தீவாய் இருக்கலாம். ஆதி $10^{14}$ ஆமோ $9^{7}$.

**கப்பத்தோக்கியா.** Cappadocia. சின்ன ஆசியாவிலே ரோமை ராஜ்யத்தில் கிழக்குத் திசையிலுள்ள ஒரு பெரிய நாடு. இங்கே யூதர்கள் அநேகர் வசித்தார்கள். இந்த நாட்டுக்குப் பரி. பவுல் பிரயாணம் செய்யவில்லை. இதிலுள்ள கிறிஸ்தவர்களுக்குப் பரி. பேதுரு எழுதின முதலாம் நிருபம் அனுப்பப்பட்டது. அப் $2^{9}$ 1 பேது $1^{1}$.

**கப்பம்.** Tribute. சீரியரும் அசீரியரும் இஸ்ரவேலரை ஜெயித்தபோது இஸ்ரவேல

ரின் ராஜாக்கள் அவர்களுக்குக் கப்பம் கட்டி வந்தார்கள். அசீரியா ராஜா தனக்குக் கப்பம் கொண்டுவந்தவர்களுடைய படம் வரைந்த கற்கள் இந்நாள்வரையும் இருக்கின்றன. 2 இரா $23^{33}$ எஸ்ரு $4^{13}$ எஸ்தர் $10^{1}$.

**கப்பர்நகூம். Capernaum.** இயேசு கலிலேயாவிலே பிரசங்கம் செய்தபோது இந்தப் பட்டணத்தில் அடிக்கடி சுற்றித் திரிந்தார். இது கலிலேயாக்கடலின் வடகரையிலுள்ள ஒரு பெரிய நகரம். மத் $4^{13}$ $8^{5}$ $11^{23}$ $17^{24}$ மாற் $1^{21}$-$2^{12}$ $9^{33}$ லூக் $4^{31}$ $7^{2}$ $10^{15}$ யோவா $2^{12}$ $4^{46}$ $6^{59}$.



ரோமருடைய கப்பல்.

**கப்பல், படவு. Ship, Boat.**

**1. பழைய ஏற்பாடு.** முதலில் இஸ்ரவேலர் கப்பலிற் பிரயாணம் செய்து வியாபாரம் பண்ணினவர்கள் அல்ல. அவர்கள் கானான் தேசத்துக்கு வந்தபோது கப்பலில் பிரயாணம் செய்து போனார்களோ அல்லவோ என்பது சந்தேகம். வரவர ஆசேர், தாண், செபுலோன், இசக்கார் ஆகிய கோத்திரத்தார் கப்பல் மார்க்கமாய்ப் பிரயாணம் செய்தார்கள். நியா $5^{17}$ ஆதி $49^{13}$ உபா $33^{19}$. சாலொமோன் காலத்தில் இஸ்ரவேலர் அதிக தூரமான இடங்களுக்கு கடற்பிரயாணம் செய்தார்கள். இந்தியாவரையும் பிரயாணம் செய்யும் கப்பல்களைச் சாலொமோன் எசியோன்கேபேரிலே வைத்தான். ஆனால் அவன் மரித்தபிறகு இஸ்ரவேலுக்கும் யூதாவுக்கும் உள்ள பகையினிமித்தம் அடிக்கடி உண்டான யுத்தத்தினால் அநேககாலம் கப்பல் பிரயாணம் திரும்பவும் நிறுத்தப்பட்டிருந்தது. யோசபாத் ஒப்பீருக்கு அனுப்பின கப்பல்கள் சேதம் அடைந்தன. 1 இரா $9^{26}$ $22^{48}$.

மக்கபெயர் காலத்தில் யோப்பா துறைமுகமாக ஏற்படுத்திய பிற்பாடு யூதர்கள் வியாபாரிகள் பல இடங்களுக்கும் போய் வியாபாரம் செய்துவந்தார்கள்.

பெனிக்கேயர் எப்பொழுதும் கப்பலிற் பிரயாணம் செய்தார்கள். அவர்கள் வழக்கமாய் இங்கிலாந்துவரையும் போனதற்குப் போதிய அத்தாட்சி உண்டு.

அசீரியர்கள் ஐபிராத்து திகிரீஸ் என்னும் பெரிய நதிகளில் தெப்பங்களிலும் பாரிசுகளிலும் போக்குவரவு செய்தார்களே ஒழிய கப்பல்களில் பிரயாணம் செய்யவில்லை என்று தோன்றுகிறது.

பாபிலோனியர் வழக்கமாய் கப்பல் பிரயாணம் செய்தார்கள். ஏசா $43^{14}$.

எகிப்தியர்கள் நைல் நதியில் நாணல்களினால் செய்த படவுகளை (ஏசா $18^{2}$) அல்லது தெப்பங்களை உபயோகித்தார்கள். அவர்கள் பெரிய கப்பல்களையும் செய்து அவைகளைத் தண்டுகளினாலும் பாய்களினாலும் செலுத்துவார்கள். ஏசா $33^{21, 23}$ எசே $27^{7}$.

**2. புதிய ஏற்பாடு.**

1. கலிலேயாக்கடலில் மீன் பிடிக்கிறதற்கும், அதின் கரைகளிலுள்ள ஊர்களில் வசித்தவர்கள் வியாபாரம் செய்வதற்கும் படவுகள் அநேகம் வைத்தார்கள். இவைகள் காற்றில் அகப்பட்டு மோசம் போனதென்றும், இவைகள் செம்படவர்கள் பிடித்த மீன்களால் நிறைந்து அதிக கஷ்டத்தோடு கரைக்கு இழுக்கப்பட்டது என்றும் சொல்லியிருப்பதினால் இவைகள் பெரிய படவுகள் அல்ல எனத் தோன்றுகிறது.

2. மத்தியதரைக்கடலிலுள்ள கப்பல்கள் அக்காலத்தில் பலவிதமாய் இருந்தன. அக்கடலில் சடுதியாய் புயல் வருவதினால் அவைகள் அடிக்கடி சேதம் அடைந்தன. 2 கொரி $11^{25}$. அப் 27-ம், 28-ம் அதிகாரங்களில் வியாபாரக் கப்பல்களைக்குறித்து அநேக காரியங்கள் சொல்லியிருக்கின்றன. பவுல் ஏறின முதல் கப்பல் தானியம் அதிகமாய் கொண்டுபோனதுமல்லாமல் அதில் 276 பேர்கள் இருந்து போகிறதற்கு அவ்வளவு இடமும் இருந்தது. அப் $27^{37}$. அதற்குப் பாய்மரமும் தண்டுகளாகிய சுக்கான்களும் நங்கூரங்களும் ($27^{39}$) இருந்தன. இந்தமாதிரியான கப்பல்களுக்கு ஒரு பாய்மரமும் அதற்குக் குறுக்கே பெரிய பாய் தாங்கி மரமும் உண்டு. இதில் பெரிய சதுரமான பாய் கட்டப்படும். முன்னணியத்திற்கும் பாய்மரத்திற்கும் இடையில் முக்கோணமான சிறு பாய் ஒன்று தொடுப்பார்கள். ஒரு பெரிய கப்பலுக்குப் பக்கத்தில் வழக்கமாய்ச் சிறு படவு கட்டித் தொங்கும். $27^{16}$. புயல் அடிக்கும் காலத்தில் ஆணிகளினால் ஒன்றுக்குமேல் ஒன்று வைத்துத் தைக்கப்பட்ட கப்பலின் பலகைகள் பிரிந்துபோகாதபடி சங்கிலிகளினாலும் வடக்கயிறுகளினாலும் அதன் எருக்கட்டைக்குக் கீழிருந்து மேற்

றளம் வரையும் சுற்றிச் சுற்றி நன்றாய் இறுக்கிக் கட்டிக் கப்பலைப் பெலப்படுத்துவார்கள். 'உபாயங்கள் செய்து கப்பலைச் சுற்றிக் கட்டினார்கள்' என்பது இதுதான் குறிக்கிறது. அப் 27[17]. மாலுமிகள் அடிக்கடி விழுது விட்டுப் பார்ப்பார்கள். 27[28]. திசையறி கருவி அக்காலத்தில் இல்லாததினால் கார் மேகம் உண்டாகும்போது மாலுமிகளுக்குத் திசை தெரியாததினால் கப்பல் சேதம் அடிக்கடி உண்டாகும். பெரிய கப்பல் 180 அடி நீளம் இருக்கும். போர்க்கப்பல்கள் இவைகளிலும் பெரிதாய் இருக்கும். அவைகளில் மூன்று வரிசைத்தண்டுகள் உண்டு. ஒவ்வொரு தண்டை வலிக்கிறதற்கு மூன்று அடிமைகள் இருப்பார்கள்.

சத்துராதிகளின் கப்பல்களை உடைப்பதற்குப் போர்க்கப்பல்களின் முன்னணியத்திலே பெரிய வெண்கலக் கொம்புகள் இருக்கும். முன்னோர் கப்பலின் முன்னணியத்தையும் பின்னணியத்தையும் அலங்காரமாய் வைப்பார்கள். வழக்கமாய் முன்னணியத்தில் ஒரு கண் வரைந்திருப்பார்கள். அங்கேதான் அக்கப்பலின்பேருள்ள தேவதையின் சிலை வைக்கப்பட்டிருக்கும். பவுல் ஏறின கப்பல்களில் ஒன்றின் பெயர் 'மிதுனம்.' சங் 48[7] 104[26] 107[23] நீதி 30[19] 31[14] ஏசா 60[9] எசே 27[9. 29] யோனா 1[3] தானி 11[30] வெளி 18[17].

3. ஆத்தும நங்கூரம் கிறிஸ்தவ நம்பிக்கையைக் காட்டுகிறது. எபி 6[19].

நாவு சுக்கானைப்போல் இருக்கிறது. யாக் 3[4].



ரோமருடைய யுத்த கப்பலின் முன்பாகம்.

**கப்பாய்.** Gabbai. நெகே 11[8].

**கமாலியேல்.** Gamaliel.

1. ஒரு பிரபு. எண் 1[10].

2. இல்லேல் (*Hillel*) என்னும் மகா கீர்த்திப் பிரஸ்தாபமுள்ள வேத சாஸ்திரியின் பேரனாகிய கமாலியேல் இயேசு பிரசங்கித்த காலத்தில் யூதருடைய ஆலோசனைச் சங்கத்தில் ஒரு அங்கத்தவனாய் இருந்தான். இவன் யூதர்கள் அந்நியருக்கு தயை காட்டவேண்டும் என்றும், ஸ்திரீகளுக்காக கவலை பரிதாபம் உற்றவர்களாய் இருக்கவேண்டும் என்றும், ஓய்வுநாள் ஆசரிப்பைப்பற்றி பாரமான கட்டளை யிடப்படாது என்றும் போதித்தவன். பரி. பவுல் இவனுடைய சீஷர்களில் ஒருவன். அப் 5[34] 22[3].

**கம்பம்.** Standard. எண் 2[18] எசா 30[17].

**கம்பளம்.** Carpets. நீதி 7[16].

**கம்பு.** Fitches. இது இந்த தேசத்திலுள்ள கம்பைப்போல் அவ்வளவு நல்லதல்ல. எசே 4[9] எசா 28[25].

**கம்மாட்டிம்.** Gammadim. இப்பதத்தின் அர்த்தம் திட்டமாய்த் தெரியாது. ஒரு வேளை 'போர்வீரர்கள்' என்று அர்த்தம் இருக்கலாம். எசே 27[11].

**கம்முராபி.** Hammurabi. **அசீரிய ராஜாக்கள்** காண்க.

**கயிறு.** Cord, Rope. எபிரெயர்கள் பலவிதமான கயிறுகளை உபயோகித்தார்கள். சிம்சோன் கட்டின 'அகணி நார்க்கயிறு' வில் நாண் என்று தோன்றுகிறது. நியா 16[7].


சீரியா தேசத்துக் கரடி.

**கரடி. Bear.** சீரியாவில் எர்மோன் முதலிய மலைநாடுகளில் கரடிகள் உண்டு. அவை மிகவும் பயங்கரமானவை. 1 சாமு $17^{34}$ 2 இரா $2^{24}$ 2 சாமு $17^{8}$ நீதி $17^{12}$ $28^{15}$. ஏசா $11^{7}$ ஓசி $13^{8}$.

**கரண்டி. Spoon, Shovel.** யாத் $27^{3}$ 1 இரா $7^{45}$.

**கராஷீமன். Ge-Harashim.** [சிற்பசாஸ்திரங்களின் பள்ளத்தாக்கு]. 1 நாளா $4^{14}$ நெகே $11^{35}$. இடம் தெரியாது.

**கரியபோளம். Aloe.** இது இப்போது மருந்திற்கு உபயோகிக்கும் கரியபோளம் அல்ல, இந்தியாவிலிருந்து வந்த வாசனையுள்ள மரத்தின் பிசின்தான் என்று தோன்றுகிறது. நீதி $7^{17}$ யோவா $19^{31}$.

**கருகலானவை. Doubts.** தானி $5^{12.16}$.

**கருங்காலி. Ebony.** விக்கிரகங்கள் முதலியவை செய்யும்படி பாபிலோனியரும் எகிப்தியரும் வட இந்தியாவிலிருந்தும், இலங்கையிலிருந்தும் கடல் மார்க்கமாயாவது தரை மார்க்கமாயாவது இந்த மரத்தை வருவித்தார்கள். எசே $27^{15}$.

**கருடன். Ossifrage. R. V. Gier Eagle.** சாக்கடலோரத்தில் வசிக்கும் இராஜாளி. இது சிறகு விரித்திருக்கும்போது பத்து அடி நீளமுள்ளது. இது அடிக்கடி தன் கூர்மையான நகங்களினால் ஆமையைப் பிடித்து உயர ஆகாயத்தில் கொண்டுபோய் ஆமையின் ஓடு உடைந்து சின்னா பின்னமாய்ப் போகும்படி அங்கிருந்து அதைக் கற்பாறை மேற் போட்டுக் கறியைப் பிடுங்கித் தின்னும். லேவி $11^{13}$.

**கருவாப்பட்டை. Cinnamon.** தித்திப்பும் காரமும் வாசனையுமுள்ள ஒரு மரத்தின் பட்டை. யாத் $30^{23}$. **இலவங்கப்பட்டை** காண்க.

**கருவாமரம். Cinnamon. இலவங்கப் பட்டை** காண்க.


எபிரோனிலுள்ள கருவாலி மரம்.

**கருவாலி மரம். Oak.** பலெஸ்தீனாவில் கர்மேல், பாசான் முதலிய இடங்களில் இந்த மரங்கள் அதிகம். இவைகளில் ஒன்பதுவகையுண்டு. இது பல நூற்றாண்டுகளாக இருக்கும். ஆதி $35^{4}$ நியா $6^{11}$ 2 சாமு $18^{9}$ ஓசி $4^{13}$ ஏசா $1^{29}$ $2^{13}$ எசே $27^{6}$.

**கரேயா. Kareah.** 2 ராஜா $25^{23}$.

**கர்காஸ். Carcas.** எஸ்தர் $1^{11}$.

**கர்கேமிஸ். Carchemish.** சீரியாவிலிருந்து அசீரியாவுக்குப் போகும் வழியில் ஐபிராத்து நதியைக் கடக்கும் இடத்தில் ஏத்தியர்களின் ஓர் முக்கிய பட்டணமாகிய இது கட்டப்பட்டிருந்தது. ஏசா $10^{9}$ எரே $46^{21}$.

**கர்க்கா. Karka.** தென் யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{3}$.

**கர்க்கோர். Karkor.** கிலெயாத்திலுள்ள ஒரு இடம். நியா $8^{10}$.

**கர்ஷேனா. Carshena.** எஸ்தர் $1^{13}$.

**கர்தா. Karta.** செபுலோனின் ஒரு ஊர். யோசு $21^{34}$.

**கர்தான். Kartan.** நப்தலியில் ஒரு ஊர். யோசு $21^{32}$.

**கர்த்தத்துவங்கள். Dominions.** கிரேக்க பாஷையில் இந்த பதம் பொதுவாக அதிகார ஆதீனத்தையும் ஆளுகையையும் குறிக்கிறது. மேலும் இப்பதம் உலகத்திலுள்ள அதிகாரிகளின் அதிகாரம், அல்லது தூதர்கணத்தில் சிலருக்குள்ள அதிகாரம், அல்லது இயேசுவின் மேலான அதிகாரம் ஆகிய இவற்றைக் குறிக்கிறது. கொலோ $1^{16}$ எபே $1^{29}$ 2 பேது $2^{10}$ யூதா $1^{8}$.

**கர்த்தருடைய இராப்போஜனம். இராப்போஜனம்** காண்க.

**கர்த்தருடைய சகோதரர். இயேசுகிறிஸ்துவின் சகோதரர்** காண்க.

**கர்த்தருடைய ஜெபம்.** இயேசு தமது சீஷருக்கு விண்ணப்பமும் ஸ்தோத்திரமும் செய்வதற்கு முன்மாதிரியாக இந்த ஜெபத்தைக் கற்றுக்கொடுத்ததினால் இது கர்த்தருடைய ஜெபம் என்று அழைக்கப்படுகிறது. மத் $6^{9-13}$. லூக் $11^{2-4}$.

**கர்த்தருடைய நாள்.**

1. **ஓய்வுநாள்** காண்க.

2. **= The Day of the Lord.** பாவமுள்ள எபிரெயரையும், தமது சத்துருக்களையும் கர்த்தர் தண்டித்து தமது ஜனத்தில் நீதியுள்ள மீதியானவர்களை உலகத்தின்மேல் அதிகாரிகளாய் ஏற்படுத்தும் காலம். ஏசா $2^{12}$ $34^{3}$ எரே $46^{10}$ எசே $30^{3}$ யோவே $2^{11}$ ஆமோ $5^{18}$ செப் $1^{14}$ மல்கி $3^{2}$.

**கர்த்தருடைய யுத்த புஸ்தகம். The Book of the Wars of the Lord.** எபிரெய பாஷையில் எழுதப்பட்ட இந்த பூர்வ புஸ்தகம் யுத்தத்தில் தமது ஜனங்களுக்கு உதவிசெய்த யேகோவாவைச் சிறப்பித்துப் பாடியிருக்கும் புஸ்தகம் எனத் தோன்றுகிறது. எண் $21^{15}$.

**கர்த்தர். Lord.** பழைய ஏற்பாட்டில் இப்பதம் யேகோவாவைக் குறிக்கிறது. புதிய ஏற்பாட்டில் 'கர்த்தர்', 'ஆண்டவர்' ஆகிய பதங்கள் கலந்து மாறி மாறிச் சொல்லியிருக்கிறது. கர்த்தர் = தேவன். மத் $1^{20}$ அப் $5^{19}$. = இயேசு. 1 கொரி $12^{3}$ ரோ $10^{9}$ வெளி $19^{16}$.

**கர்மியன். Garmites.** 1 நாளா $4^{19}$.

**கர்மீ. Carmi.**

1. யோசு $7^{1}$.
2. 1 நாளா $4^{1}$.
3. 1 நாளா $5^{3}$.
4. எண் $26^{6}$.

**கர்மீ. Charmis.** ஆதி $46^{9}$.

**கர்மேல். Carmel.**

1. எபிரோனுக்குத் தெற்கேயுள்ள ஒரு ஊர். யோசு $15^{25}$ 1 சாமு $25^{2}$.

2. தென் கிழக்கிலிருந்து மத்தியதரைக் கடலோரம்வரையில் நெடுகப்போகும் மலைத்தொடர். 1 இரா $18^{19}$ இது மிகவும் செழிப்பான பூமி. சா $33^{9}$. இங்கே மரங்கள் அதிகம். மீகா $7^{14}$.

**கலப்பை. Plough.** 1 சாமு $13^{20}$ ஆமோ $6^{12}$ எசா $30^{24}$ உபா $22^{10}$ லூக் $9^{62}$.

**கலம். Bason.** 2 சாமு $17^{28}$ 1 இரா $7^{45}$ நீதி $19^{24}$. வெள்ளிக்கலம். எண் $7^{13}$.

**கலாத்தியருக்கு எழுதிய நிருபம். The Epistle to the Galatians.**

1. **எழுதக் காரணம்.** இதை வாசிக்கும்போது பரி. பவுல் கலாத்தியரை இரண்டு தடவை சந்தித்தான் என்று அறிகிறோம். முதற்தடவை வியாதியாய் இருந்தான். $4^{13}$. இரண்டாம்தடவை யூதமார்க்க ஆசாரத்தைக் கவனிக்கவேண்டும் என்று சாதித்தவர்களுக்கு எச்சரிக்கை கூறுகிறான். அவன் இரண்டாம்தடவை சந்தித்ததற்குப் பிறகு யூத ஆசார அனுசாரிகள் மறுபடியும் வந்து கலாத்தியர் விருத்தசேதனம் பெறவேண்டும் என்றும், யூதமார்க்க ஆசாரங்களைக் கவனிக்கவேண்டும் என்றும் கட்டாயப்படுத்தினார்கள். இதைத் தடுக்கும்படி பவுல் இந்த நிருபத்தை எழுதினான். $1^{9}$ $5^{3}$.

2. **இந்த நிருபம் யாருக்கு எழுதப்பட்டது?** கலாத்தியர் என்னும் நிருபம் ரோமை ராஜ்யத்தைச் சார்ந்த கலாத்தியாநாட்டில் பொதுவாய் இருக்கிற கிறிஸ்தவர்களுக்கு எழுதப்

பட்டது என்று சிலர் நினைத்தாலும், தற்காலத்தில் வேதசாஸ்திரிகள் இது விசேஷமாய், தெர்பை, லீஸ்திரா, இக்கோனியா, பிசீதியாவிலுள்ள அந்தியோகியா என்னும் பட்டணங்களிலுள்ள கிறிஸ்தவர்களுக்கு எழுதப்பட்டது என்று நினைக்கிறார்கள். இப்பட்டணங்களைத்தவிர இவைகளுக்கு வடக்கே இருக்கும் கலாத்தியாவுக்குப் பரி. பவுல் போனானோ இல்லையோ என்பது சந்தேகம்.

3. **ஆக்கியோன்.** பரி. பவுல் இந்த நிருபத்தை எழுதினான் என்பதற்கு மறுப்பாக வேத சாஸ்திரிகள் அவ்வளவு கவனிக்கத்தக்க காரணம் இல்லை என்று தீர்மானிக்கிறார்கள். மேலும் அவன் இதை எழுதினதற்குச் சாட்சியாக அவன் இதில் தன்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறவைகள் அநேகம். உதாரணமாக அவன் தான் அப்போஸ்தல அதிகாரம் அப்போஸ்தலர் மூலமாய் அல்ல, தேவனிடத்திலிருந்தே பெற்றான் என்பதையும், தனது குணப்படுதலையும், அப்போஸ்தலரை நேசித்தலையும், எருசலேமுக்குத் தான் போனதையும் ($1^{18}$ $2^{1}$), தான் அப்போஸ்தலரைப் பார்த்ததையும், இன்னும் அநேக காரியங்களை விபரமாயும் குறிப்பாயும் சொல்லி யிருக்கிறான்.

4. **காலமும் இடமும்.** பரி. பவுல் கலாத்தியரிடத்துக்கு இரண்டுதடவை போனதைப் பற்றி நாம் தீர்மானமாய் அறிந்தால் இந்த நிருபம் எழுதப்பட்ட காலத்தைக் குறித்து அறிவோம். இதைப்பற்றி வேதசாஸ்திரிகளின் நாலு அபிப்பிராயங்களாவன:

1. பரி. பவுல் கலாத்தியரைச் சந்தித்த சமயங்கள் அப் $13^{3}$ $14^{21}$ வசனங்களிற் சொல்லியிருப்பவைகளானால், இந்த நிருபம் எருசலேமிலே கி-பி. 49 அல்லது 50-ஆம் ஆண்டில் நடந்த முதல் பொதுவான சங்கத்துக்கு முந்தி எழுதப்பட்டது என்று அறியவேண்டும்.

2. இந்த இரண்டு சந்திப்புகளும் அப் $16^{6}$ $18^{23}$-ல் சொல்லியபடியானால் இந்த நிருபம்,

(*a*) பவுல் இரண்டு கால் வருஷம் எபேசுவிலே இருக்கும்போது (அப் $19^{8}$) கி-பி. 54-56-ஆம் ஆண்டில்,

(*b*) அல்லது எபேசு பட்டணத்தில் கலகம் உண்டானபிறகு சிலகாலம் அவன் மக்கெதோனியாவிலே தங்கினபோது (அப் $20^{1}$) கி-பி. 56-57-ஆம் ஆண்டில் எழுதப்பட்டிருக்கவேண்டும்.

3. பவுல் கலாத்தியாவைச் சந்தித்த சமயங்கள் அப் $13^{13}$ $16^{6}$-ல் சொல்லியவையானால், அவனுடைய இரண்டாம் பிரயாணம் முடிந்தபிறகு சீரியாவிலுள்ள அந்தியோகியாவிலே, கி-பி. 53-ஆம் ஆண்டில் இதை எழுதினான் என்று அறியவேண்டும். தற்காலத்திலுள்ள வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயம் இதுவே.

எப்படியாவது இந்த அபிப்பிராயங்களைச் சேர்த்துப் பார்த்தால் கிறிஸ்தவ சபை ஸ்தாபிக்கப்பட்ட முப்பது வருஷத்திற்குள்ளும் ரோமர் நிருபத்துக்கு முந்தியும் எழுதப்பட்டது என்று அறியலாம்.

5. **இதன் பொருள் அடக்கம்.**

1–2 அதி. யூதமார்க்க ஆசாரத்தை விரும்புவோருக்கு எச்சரிக்கை; பவுல் குணப்படுதல்; அவனுடைய ஜீவிய சரித்திரம்; தேவனால் அவன் அப்போஸ்தல ஊழியத்துக்கு அழைக்கப்படுதல்.

$3^{1}$-$5^{12}$. சுவிசேஷத்திலுள்ள விடுதலை; ஆபிரகாம் நியாயப்பிரமாணத்தினால் அல்ல விசுவாசத்தினால் நீதிமான் ஆனான், அப்படியே அவனுடைய புத்திரர் நீதிமான்கள் ஆகவேண்டும்; பூரண விடுதலை அடையும்படி நியாயப்பிரமாணம் நல்ல சிட்சை கொடுத்ததானாலும், அது சில காலத்துக்குமாத்திரம் இருந்ததினால் கிறிஸ்துவுக்குள் பூரண விடுதலையடைந்த கலாத்தியர் மறுபடியும் அதற்கு இணங்குவது என் என்பதைப்பற்றி போதிக்கிறான்.

$5^{13}$-$6^{10}$. புத்தி போதனைகள்; தாங்கள் அடைந்த விடுதலையைப் பத்திரமாய்க் கைப்பற்றிக்கொள்வதோடு அதில் தீமை விளையாதபடி ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்.

$6^{11-18}$. பவுல் தன் சொந்தக் கையினால் எழுதின முடிவுரை.

**கலாத்தியா. Galatia.** சின்ன ஆசியாவில் வடகிழக்கில் உள்ள நாடு. கி-மு. 278-ஆம் ஆண்டில் ஐரோப்பாக்கண்டத்திலிருந்து கோல்ஸ் (*Gauls*) என்னும் பெயர்கொண்ட கலாத்தியர் இந்த நாட்டுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்து, ஐம்பது வருஷம் சண்டை செய்து, இதை ஜெயித்து, இதிற் குடியேறினார்கள். இவர்கள் அநேக வருஷம் சமீபத்திலிருந்த ரோமர்களின் தயவைப் பெற்றுத் தங்கள் ஆளுகையை நடத்திவந்தார்கள். கி-மு. 25-ஆம் ஆண்டில் ரோமைராயன் கலாத்தியருடைய இந்தத் தேசத்தைச் சுற்றியிருந்த தேசங்களோடு சேர்த்து, ஒரு பெரிய நாடாக ஸ்தாபித்தான். இதின் தென்பாகத்தில் தெர்பை, லீஸ்திரா, இக்கோனியா, பிசீதியாவிலுள்ள அந்தியோகியா இருக்கும். ஆகையால், 'கலாத்தியா' அத்தேசத்துக் கோல்சரின் சந்ததியாராகிய 'கலாத்தியர்' என்பவர்களின் நாட்டை, அல்லது ரோமை

ராஜ்யத்தைச்சேர்ந்த பெரிய நாட்டைக் குறிக்கிறது. 1 கொரி 16[1] 1 பேது 1[1] கலா 1[2].

**கலிக்கம்.** **Eye-salve.** விசேஷமாய் லவோதிக்கேயாவிலுள்ள வைத்தியர்கள் செய்தகீர்த்திபெற்ற நேத்திர பஸ்பம். வெளி 3[18].

**கலியாணம், விவாகம். Marriage.**

1. எபிரெயருக்குள்ளே புருஷனுடைய கோத்திரத்தை அவனுடைய மனைவியும் பிள்ளைகளும் சேர்ந்திருக்கவேண்டும். ஓசி 2[16] ஏசா 62[4]. யுத்தகாலத்தில் மற்ற ஜனங்களிலிருந்து பலவந்தமாய்ப் பெண் கொண்டார்கள். நியா 5[30] 21[8]. இதைப்பற்றி ஒழுங்கு இருந்தது. உபா 21[10]. பிற்காலங்களில் எபிரெயர்கள் முதிசம் கொடுத்தார்கள். கடைசியில் இருபகுதியாரும் நியாயசாஸ்திரிகளின் உத்தரவின்படி விவாக ஏற்பாடு செய்தார்கள்.

2. **பலதார விவாகம்.** ஒருவனுடைய மனைவி மலடியாயிருந்தால் அவன் இரண்டாம் மனைவியை விவாகஞ் செய்துகொள்ளலாம் என்று முன்னோர் உத்தரவு கொடுத்தார்கள். ஆதி 16[1]. மற்ற ராஜாக்களோடு ஐக்கியம் கொள்வதற்காக சாலொமோன் முதலியவர்கள் அவர்களின் குமாரத்திகளை விவாகம் செய்தார்கள். 1 நாளா 7[4] உபா 17[17]. தனவான்களில் சிலர் இந்த முறைமையின்படி விவாகம் செய்தார்கள். 1 சாமு 1[1] 2 நாளா 24[3]. ஆனால் எபிரெயர்கள் குடும்பத்தில் பகை பொறாமை இராதபடி ஒருவனுக்கு ஒரு மனைவிதான் இருக்கவேண்டும் என்று தீர்மானித்தார்கள். 2 இரா 4-ம் அதி. சங் 128 நீதி 31 அதி.

பலதார விவாகத்துக்கு எபிரெய வேத சாஸ்திரிகள் அனுசாரிகளாய் இருக்கவில்லை. யூதர்கள் வரவர இந்த வழக்கத்தை நிறுத்தினார்கள். கி-பி. 1000-ளூ த்தில் பிரான்சு, ஜெர்மனியிலுள்ள யூதர்கள் இதை நிறுத்திவிட்டார்கள். சில காலத்துக்குப் பிறகு ஐரோப்பாக்கண்டத்திலும் மற்ற இடங்களிலும் இது நிறுத்தப்பட்டது. ஆனால் மகமதியர் அரசாளுகிற இடங்களில் இப்போதும் இவ்வழக்கம் நடக்கிறது.

3. **பிரமாணங்கள்.** விவாகத்தைப்பற்றிய நியாயப்பிரமாணம். லேவி 18[7] 20[21] உபா 27[20] ஷ. ஆபிரகாம் உடன் பிறந்தசகோதரியை அல்ல, தகப்பனின் இன்னொரு மனைவியின் மகளை விவாகம் செய்தான். ஆதி 20[12]. இதோடே யாத் 6[20] 2 சாமு 13[13] எசே 22[11] காண்க.

சுதந்தரவாளியாகிய பெண்ணின் விவாகம். எண் 36[6]. ஆசாரியர்களின் விவாகம் லேவி 21[7, 14]. அந்நிய ஜாதியாரில் பெண் கொள்வதற்குத் தடை. ஆதி 24[4] 26[34]. தாவீது, சாலொமோன் முதலியோர் அந்நிய ஜாதி பெண்களை விவாகம் செய்தது. 2 சாமு 3[3] 1 இரா 3[1]. எபிரெய ஸ்திரீகள் அந்நிய ஜாதி புருஷரை விவாகம் செய்தது. 2 சாமு 11[3] 1 இரா 7[14] 1 நாளா 2[17]. இவ்விதமான கலியாணம் கானானியரோடு செய்யக்கூடாது. யாத் 34[16]. மோவாபியரோடும் எகிப்தியரோடும் விவாகம் இருந்தது. ஆதி 41[45] உபா 23[7] ரூத் 1[14]. எஸ்றாவும் நெகேமியாவும் இம்மாதிரியான விவாகங்களைத் தடுக்கும்படி பிரயாசப்பட்டார்கள். பிற்காலத்தில் யூதர்கள் அந்நியர்களோடு விவாக சம்பந்தம் வைக்கவேயில்லை. ஆனால் சின்ன ஆசியாவிலுள்ளவர்கள் இதை அவ்வளவாய்க் கவனிக்கவில்லை. தீமோத்தேயுவின் தாய் எபிரெய ஸ்திரீயாயிருந்தாலும் கிரேக்கனை விவாகம் செய்தாள். அப் 16[1]. வேசியின் பிள்ளை. உபா 23[2].

4. எபிரெயர்கள் சந்தானம் அற்றுப்போகாதபடி ஒரு சகோதரனுக்குப் பிள்ளையில்லாமல் இறந்துவிட்டால், இறந்தவனுடைய மனைவியை அவனது சகோதரனுக்குக் கொடுப்பார்கள். உபா 25[5] மத் 22[24]. இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வந்து யுத்தத்தில் குடும்பத் தலைவர்களில் அநேகர் கொல்லப்படும் காலங்களில் இந்த வழக்கத்துக்கு ஏது காரணம் இருந்தும் பிற்காலங்களில் அற்றுப் போயிற்று.

5. **கலியாண சடங்குகள்.**

(1) பெற்றோர்கள் பிள்ளைகளுக்கு விவாகம் ஏற்படுத்தினார்கள். இத்தேசத்து வழக்கம் போல எபிரெயர்கள் சிறு பிள்ளைகளுக்கு விவாகம் ஒருக்காலும் செய்யவேமாட்டார்கள். பெண்களின் சம்மதி கேட்பார்கள். ஆதி 24[8]. சில சமயங்களில் மகன் தனது பெற்றோரின் சம்மதத்திற்கு விரோதமாய் விவாகம் செய்வான். ஆதி 26[34]. சில சமயங்களில் மாப்பிள்ளையும் பெண்பிள்ளையும் விவாகம் ஏற்பாடு செய்வார்கள். 1 சாமு 18[20].

(2) விவாக நியமனமான பிற்பாடு பெண்ணுக்குப் பேசின மாப்பிள்ளைக்கேயொழிய வேறொருவனுக்கும் அவளைக் கொடுக்கப்படாது. நியமனத்திற்குப் பிறகு பெண் சோரமார்க்கமாய் நடந்தால் அது விபசாரம். உபா 22[23] மத் 1[19]. கலியாண நியமனத்தில் பெண்ணுடைய பெற்றோருக்குப் பரிசம் கொடுப்பார்கள். சில சமயங்களில் பொருள் கொடுப்பதற்குப் பதிலாக ஊழியஞ் செய்வார்கள். ஆதி 29 அதி. 1 சாமு 18[25] உபா 22[29] யாத் 22[16]. பெற்றோர் பெண்

னுக்குச் சீதனம் கொடுப்பது வழக்கமாயிருந்தது. ஆதி $29^{24}$ யோசு $15^{19}$ 1 இரா $9^{16}$. விபசாரத்தினால் அல்லாமல் வேறெந்த முகாந்தரத்தினாலும் புருஷன் தன் மனைவிக்குத் தள்ளுதற்சீட்டுக் கொடுத்தால் இவள் கொண்டுவந்த இந்தச் சீதனத்தைத் திரும்ப அவளுக்குக் கொடுக்கவேண்டும். மணவாளன் சில நன்கொடைகள் அளிப்பான். ஆதி $24^{53}$ எஸ்தர் $2^{9}$. நியமனமான பிற்பாடு பெண்ணின் பெற்றூர் அவளைப் பேசின மாப்பிள்ளைக்குக் கொடாவிட்டால் அது அவர்களுக்கு இகழ்ச்சி. 1 சாமு $18^{19}$.

(3) கலியாணச் சடங்கைப்பற்றி வேதத்தில் விபரமாய் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. நியமனமான உடனே அல்லது சிலகாலத்திற்குப் பிற்பாடு விவாகம் செய்துகொள்ளுவார்கள். விவாகம் செய்யும்போது மணவாளனின் தோழர் ஊர்கோலம் செய்து மணவாட்டியை அழைத்துப்போவார்கள். மத் $9^{15}$ $25^{13}$ சங் $45^{15}$. மணவாளனும் மணவாட்டியும் அலங்காரமான உடை தரிப்பார்கள். சங் $45^{13}$ வெளி $19^{8}$. ஊர்கோலம் செய்தபிறகு விருந்து கொண்டாடுவார்கள். ஆதி $29^{22}$ யோவா $2^{1}$. விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் வராவிட்டால் கலியாணம் செய்கிறவர்களுக்கு அது பெரிய இகழ்ச்சியாக எண்ணப்பட்டது. மத் $22^{7}$.

விருந்துக்குப்பிறகு மணவாளனும் மணவாட்டியும் மணவறைக்குப் போவார்கள். யோவே $2^{16}$. இக்கலியாண விருந்து சில நாட்களாக நடக்கும். நியா $14^{10}$. இந்த நாட்களில் தோழர்கள் உன்னதப்பாட்டுப் புஸ்தகத்திலுள்ள பாட்டுகளைப்போன்ற கீதங்களைப் பாடுவார்கள்.

கலியாணம் செய்து ஒரு வருஷத்திற்குள்ளாகப் புருஷன் யுத்தத்திற்குப் போகப்படாது. உபா $20^{7}$ $24^{5}$. யூதர்கள் விவாகம் நடத்தும்போது மணவாளன் மணவாட்டி இவர்களுக்காகத் தேவ ஆசீர்வாதம் கேட்பார்கள், ஆனால் இதைப்பற்றி வேதத்தில் யாதொரு விபரம் சொல்லியிருக்கவில்லை.

6. **மனைவி**. எபிரெயருக்குள் மனைவி வழக்கமாய்ப் புருஷனுடைய ஆதீனத்தில் இருந்தது என்றாலும் அவள் அவனுக்கேற்ற துணையாய் இருப்பதினாலே (ஆதி $2^{18}$) பூர்வகாலம் துவங்கி எபிரெயர் புருஷர்கள் தங்கள் மனைவிகளைக் கவனமாய் ஆதரித்தார்கள் என்று அறிவோம். ஆயினும் பிள்ளைகள் இல்லாதவளுக்கு தொந்தரவு இருந்தது. ஆதி $16^{4}$ $30^{1}$ 1 சாமு $1^{6}$. என்றாலும் புருஷன் தன் மனைவியைப் பகைத்தால் அவளுடைய பிள்ளைகளின் சுதந்தரத்தை மாற்றக்கூடாது. உபா $21^{15}$.

7. **விதவைகள்**. எபிரெயருக்குள் விதவைகள் பெரும்பாலும் மறு விவாகம் செய்யவில்லை; ஆனால் அவர்களின் நிலைமை கீழாக எண்ணப்படவில்லை. வேண்டுமானால் அவர்கள் விவாகம் செய்துகொள்ளலாம். ரூத் $4^{13}$. பரி. பவுல் ஆதி கிறிஸ்தவ விதவைகளுக்கு மறு விவாகம் செய்துகொள்ளலாம் என்று உத்தரவு கொடுத்தான். 1 கொரி $7^{39}$ $5^{14}$.

8. **விபசாரம்**. பூர்வகாலத்தில் ஒருவன் இன்னொருவனுடைய மனைவியோடு விபசாரம்செய்தால், அதினால் அவன் அவளுடைய புருஷனுக்கு அதிக கெடுதி செய்கிறான் என எபிரெயர் நினைத்ததினால், அவர்களுக்குள் விபசாரத்தைக் குறித்துக் கண்டிப்பான பிரமாணங்கள் இருந்தன. உபா $22^{13}$ யாத் $20^{14}$ $22^{16}$ லேவி $20^{10}$ $21^{9}$.

பிற்காலங்களில் சன்மார்க்கத்தை விரும்புகிற தீர்க்கதரிசிகள் விபசாரம் செய்யக்கூடாது என அடிக்கடி கண்டித்துவந்தார்கள். நீதிமொழியின் போதனையும் அப்படியே. நீதி $2^{18}$ $5^{8}$ $6^{26}$. புதிய ஏற்பாடு விபசாரத்தினால் புருஷனுக்கும் மனைவிக்கும் உண்டாகும் கெடுதியை யல்லாமல் இதில் தேவனுக்கு விரோதமான பாவத்தைக் காட்டுகிறது. மத் $5^{27}$ அப் $15^{29}$ 1 கொரி $5^{11}$ $6^{9}$ கலா $5^{19}$ 1 தெச $4^{3}$.

9. **தள்ளுதற்சீட்டு**. பூர்வகாலத்தில் எபிரெயருக்குள் புருஷன் தன் மனைவிக்குத் தள்ளுதற்சீட்டுக் கொடுப்பது உண்டு. லேவி $21^{7}$ ஆதி $21^{14}$. இதைப்பற்றிய பிரமாணம், உபா $24^{1}$-ல் பார்க்க. பிற்காலத்தில் இச்சீட்டுகள் தீர்மானமாய் எழுதி நியாயாதிபதிகள் வேதசாஸ்திரிகளுக்கு முன்பாகக் கொடுத்தார்கள். ஏசா $50^{1}$ எரே $3^{8}$. தள்ளுதற்சீட்டுக் கொடுப்பதற்கு சில தடைகள் உண்டு. உபா $22^{19, 29}$. புதிய ஏற்பாட்டிற் தள்ளுதற்சீட்டுக் கொடுப்பதைப்பற்றிய உத்தரவு கண்டுபிடிப்பது அரிது. மாற் $10^{11}$ லூக் $16^{18}$ 1 கொரி $7^{10}$. ஆனால் விபசாரத்தினிமித்தம் தள்ளுதற்சீட்டுக்கொடுக்கலாம் என இயேசு கிறிஸ்து உத்தரவு கொடுத்தார் என்று நாம் நினைக்கவேண்டும். மத் $5^{32}$ $19^{9}$. தள்ளுதற்சீட்டுக்கொடுக்கப்பட்டவளின் மறு விவாகம். மத் $5^{32}$.

10. **விவாக நிலைமை**. யூதர்கள் விவாக நிலைமையைச் சிறப்பித்தார்கள். இயேசு சிலருக்கு விவாகநிலைமை ஏற்றதல்ல என்று சொன்னாலும் அது மேன்மை அற்றது என்று நினைக்கவில்லை. மத் $19^{12}$. பரி. பவுல் தேவ ஊழியம் செய்கிறவர்கள் சிலர் விவாக நிலை

மையிற் பிரவேசித்தால் அவ்வூழியம் பூரண மாய்ச் செய்வதற்குத் தடைகள் சில நேரிடும் என்று எண்ணினாலும் பாவத்துக்கு இட மிராதபடி கிறிஸ்தவர்கள் விவாகம் செய்து கொள்ளலாமென்று சொல்லுகிறான். 1 தெச $4^4$ 1 கொரி 7 அதி. பிற்காலத்தில் அவன் எழுதின நிருபங்களில் விவாக நிலைமை பரி சுத்தமும் மேன்மையும் உள்ளது எனச் சிறப் பித்தான். எபே $5^{22}$ கொலோ $3^{18}$ 1 தீமோ $3^2$ மு. பரி. பேதுருவும், எபிரெய நிருபத்து ஆக்கியோனும் அப்படியே சொல்லியிருக் கிறார்கள். 1 பேது $3^1$ எபி $13^{14}$.

11. **உவமைகள்.** பழைய ஏற்பாட்டில் விவாகம் உவமையாய்ச் சொல்லியிருக்கிறது. ஓசி $2^{16}$ ஏசா $54^4$ $62^4$ எரே $31^{32}$ எசே 16 அதி. மல்கி $2^{11}$.

புதிய ஏற்பாட்டில். மாற் $2^{19}$ யோவா $3^{29}$ எபே $5^{25.27}$ 2 கொரி $11^2$ வெளி $19^{7.9}$ $21^{2.9}$ $22^{1.17}$.

12. நாம் வேதத்தில் விவாகத்தைப்பற் றிய பிரமாணம், வழக்கம் முதலியவற்றைப் பார்த்தால் எபிரெயர்கள் கானானியரைப் போல் குற்றம் செய்தும் ஆவிக்குரியவித மாய் நியாயாதிபதிகளும், தீர்க்கதரிசிகளும் விவாக நிலைமையின் பரிசுத்தத்தைப்பற்றிப் போதித்து வந்ததினால் பிற்காலத்தில் யூதர் கள், துன்மார்க்கத்தை வெறுத்து விவாகத் தை மேன்மைப்படுத்தினார்கள் என அறிந்து கொள்வோம். இயேசுவும் அப்போஸ்தலர் களும் இதின் உத்தம நிலைமையைக்குறித் துப் போதித்திருக்கிறார்கள். கிறிஸ்தவ சபை யார் இதைப்பற்றி இயேசு அருளின போத னையைப் படிப்படியாய் அறிந்து புருஷனும் மனைவியும் ஐக்கியத்திலும் பரிசுத்தத்திலும் தேவனுடைய திருநாமத்துக்குப் பணிவிடை செய்யவேண்டும் என்று உணர்ந்துகொண் டார்கள்.



வடமேற்கிலிருந்து காணப்படும் கலிலேயாக் கடல்.

**கலிலேயா.** Galilee. இயேசுவின் கா லத்தில் சமாரியாவுக்கு வடக்கே, மத்திய தரைக்கடலோரத்திலுள்ள பெனிக்கியா நாடு துவங்கி கிழக்கில் கலிலேயாக் கடல்மட்டும் உள்ள தேசம். இதின் நீளம் ஏறக்குறைய அறுபது மைல், அகலம் இருபத்தைந்து மைல். லீபனோன் மலையிலிருந்து இந்த நாட்டுக்கு அநேக ஆறுகள் பாய்கிறதினால் இது அதிக செழிப்புள்ளது. இது முதலில் அந்நிய ஜனம் அதிகமாய் வசித்த இடம். ஏசா $9^1$. ஆதலால் ஆசேர், நப்தலி, செபு லோன் கோத்திரத்தார் இங்கே வசித்தாலும், இஸ்ரவேல் ராஜ்யம் அசீரியர்களால் அழிக் கப்பட்ட பிறகு, அத்தேசத்தில் அந்நிய ஜாதி யார்களில் அநேகர் மீதியாய் இருந்த இஸ்ர வேலரோடு கலந்திருந்ததினால், யூதர்கள் அத் தேசத்திலுள்ள ஜனங்கள் முழுதும் எபிரெய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்று சொல்லி அவர்களைக் குறித்துப் பரிகாச மாய்ப் பேசுவதோடு அவர்கள் நாகரீகம் அற் றவர்கள் என்றும் எண்ணினார்கள். கலிலே யரின் பேச்சுக்கும் மற்ற யூதர்களுடைய பேச்சுக்கும் கொஞ்சம் வித்தியாசம் இருந் தது. யோவா $1^{16}$ $7^{52}$ மத் $26^{73}$. கலிலேயாவில் இயேசு பாலியப்பிராயத்தில் வசித்தபிறகு பலமுறையும் இங்கே சுற்றித் திரிந்து இங்

குள்ள கப்பர்நகூம், நாசரேத் என்னும் ஊர்களுக்குப் போய்க்கொண்டிருந்தார். அக்காலத்தில் இதை அரசாண்டவன் ஏரோது அந்திப்பா. பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் சிலரைத்தவிர மற்றெல்லாரும் கலிலேயர். ரோமர்கள் இதிற் கோட்டை கொத்தளங்கள் ஊர் மனைகள் கட்டினதினால் இயேசுவின் காலத்தில் ரோமர்களிலும் கிரேக்கர்களிலும் அநேகர் இங்கே வசித்தார்கள்.

இது தெபோராள், பாராக், யோனா, எலிசா முதலிய பெரியோர்களின் பிறப்பிடம்.

**கலிலேயாக் கடல். Sea of Galilee.** இது பலெஸ்தீனாவுக்கு வடக்கே ஒரு மலைநாட்டில் இருக்கிறது. இதின் நீளம் ஏறக்குறைய பதின்மூன்று மைல், அகலம் எட்டு மைல். வடக்கிலிருந்து வரும் யோர்தான் நதி இதற்கூடாகத் தெற்கே பாய்கிறது. இதின் மறுபெயர்கள்: கின்னரேத், கின்னரோத், கெனேசரேத், திபேரியாக்கடல். எண் 34[11] உபா 3[17] யோசு 11[2] 12[3] மத் 14[34] மாற் 6[53] லூக் 5[1] யோவா 6[1] 21[1]. இதின் கரையிலுள்ள கப்பர்நகூம் முதலிய ஊர்களுக்கு இயேசு அடிக்கடி போய்க்கொண்டிருந்ததினால் இதின் பிரஸ்தாபம் எங்கும் எட்டினது. இதிற் பிடிக்கும் மீன்கள் ரோமை ராஜ்யத்திலுள்ள தனவான்களுக்கு அதிக பிரியமுள்ளவைகள். இக்கடலில் அடிக்கடி புயல் காற்று வீசுவதுண்டு. 'கடல்' என்று சொல்வதினாலே சுவிசேஷகர்கள் கலிலேயாக் கடலைக் குறிக்கிறார்கள். லூக் 8[22] யோவா 6[16].



கலைமான்.

**கலைமான். Gazelle.** பலெஸ்தீனாவில் கலைமான்கள் அதிகம். 2 சாமு 2[18]. **வெளிமான்** காண்க.

**கல். Stone.** பலெஸ்தீனா கற்பாறையுள்ள இடமாகையால் அத்தேசத்தார் அவைகளைப் பலவிதமாய் உபயோகித்தார்கள். தலையணை. ஆதி 28[18]. ஆசனம். யாத் 17[12]. கிணற்றுக்கு மேல்மூடி. ஆதி 29[2]. குகைக்கு மேல் மூடி. யோசு 10[18]. திரிகை. உபா 24[6]. மதில், வீடு, அரமனை, தேவாலயம் முதலியவற்றைக் கற்களாற் கட்டுவார்கள். யுத்தம் செய்யும்போது கவணில் கல்வைத்து எறிவார்கள். முற்றுகை போடும்போது யந்திரங்களால் பெரிய கற்களை எறிவார்கள். 2 நாளா 26[15]. ஞாபகஸ்தம்பம், உயர்ந்த கற்குவியல். ஆதி 31[45] யோசு 8[29]. எல்லைக்கல். யோசு 15[6] உபா 19[14]. முதலில் ஒரு பெரிய கல்லினால் பலிபீடம் கட்டினார்கள். 1 சாமு 6[14]. பிற்பாடு கல்தச்சரால் வெட்டப்படாத கற்களை வைத்துக் கட்டினார்கள். யாத் 20[25].

கானானியர் பூமியிலே கற்றூண்களில் தேவதைகள் வசிக்கின்றன என்று எண்ணினார்கள்.

பூர்வகாலத்தில் எப்போதும் அழியாமல் இருக்கவேண்டிய நியாயப் பிரமாணங்களைக் கற்களில் வரைந்து எழுதினார்கள். யாத் 24[12] உபா 27[3] யோசு 8[30]. அஸ்திபார மூலைக்கல். எரே 51[26]. ஏசா 28[16]-ல் சொல்லியது அஸ்திபாரத்தின் முக்கிய கல்லாகையால் அது ராஜ்யத்தின் தலைவர்களுக்கு உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. 1 சாமு 14[38] ஏசா 19[13]. சங் 118[22]-ல் சொல்லிய மூலைக்குத் தலைக்கல் இரண்டு மதில்களைக் கோணத்தில் இணைப்பதினாலே அது முக்கியமான கல். ஆகையால் அது இயேசுகிறிஸ்துவுக்கு உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. மத் 21[42] அப் 4[11] 1 பேது 2[6].

**வெள்ளைக்கல்.** (i) **Alabaster** இது நளதம் முதலிய வாசனைத் தைலங்கள் வைப்பதற்கு உபயோகிக்கப்பட்டது. இது அதிக விலையுள்ளது. மத் 26[7] மாற் 14[3] லூக் 7[37].

(ii) **'White stone'** ரோமர்கள் முற்காலத்தில் விளையாடும் பலவிதமான பந்தயங்களில் யுத்த பந்தயம் முக்கியமானது. அரங்கசாலையில் இலட்சக்கணக்கான ஜனங்கள் கூடிவந்திருக்கும்போது அவர்களுக்கு முன்பாக ஈட்டி, பட்டயம் முதலான யுத்தாயுதங்களோடு போர்செய்வதற்குத் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் கட்சி கட்சியாக வந்து நிற்பார்கள். ஒரு கட்சி இன்னொரு கட்சியோடு யுத்தம் செய்யும்போது எந்தக் கட்சி ஜெயம் கொள்ளுமோ அந்தக் கட்சியோடு ஜெயம் கொண்ட இன்னொரு கட்சி யுத்தம் செய்யும். இப்படியே யுத்தம்செய்து கடைசியாக

எவன் ஜெயவீரனாய்க் காணப்படுவானோ அவனுக்கு யானைத்தந்தம் இழைத்த பலகை ஒன்றில் 'சிறப்போங்கியவன்' என்று எழுதி அதை அவனுக்கு ஜெயசின்னமாய்க் கொடுப்பார்கள். அதற்குப் பிற்பாடு இவனை 'சிறப்போங்கியவன்' என்று யாவரும் அழைப்பார்கள். 'வெள்ளைக்கல்' என்று சொல்லப்படும் இந்தத் தந்தாபரணத்தைப் பெற்ற இவன் அத்தேசத்துப் பெரியோர்கள் பிரஜைகளுக்கு இடும் எந்த விருந்திலும் பந்தியிருக்க உத்தரவுண்டு. இந்த ஜெயசின்னத்தை உதாரணமாகக்கொண்டு பரி. யோவான் 'வெண்மையான குறிக்கல்லையும் புதிய நாமத்தை தையும் கொடுப்பேன்' என்று எழுதியிருக்கிறான். வெளி $2^{17}$.

**கல்கோல்.** **Calkol.** மாகோலின் வித்துவானாகிய மகன். 1 நாளா $2^{6}$ 1 இரா $4^{31}$.

**கல்தச்சர்.** **Stone-cutters.** கல்தச்சர் மலைகளில் பெரிய கற்களைப் பிளந்து (1 இரா $5^{17}$), அவைகளை வெட்டி (2 சாமு $5^{11}$ 1 நாளா $14^{1}$), கட்டடங்களுக்காக அவைகளில் கொத்துவேலை முதலியவை செய்வார்கள். 1 நாளா $22^{15}$. இவர்கள் நிலத்தில் புதையல் வெட்டி எடுப்பார்கள். ஏசா $5^{2}$. கல்லறைகளும் வெட்டுவார்கள். ஏசா $22^{16}$.

**கல்தேயர்.** **Chaldeans.** இந்தப் பதம் பாபிலோனியாவின் தென் கிழக்கிலுள்ள ஒரு ஜாதியாரைத் திட்டமாய்க் குறிக்கிறது. இவர்கள் பலமுறையும் பாபிலோனியருக்குத் தொந்தரவு கொடுத்தார்கள். ஏசா $39^{1}$. வேதத்தில் இப்பதம் பெரும்பாலும் பாபிலோனியரைக் குறிக்கிறது. எரே $50^{10}$ $51^{24}$.

**கல்தேயன்.** **Chaldean.** ஒருவிதமான ஜோதிஷனைக் குறிக்கிறது. தானி $1^{4}$. **சூனியம்** காண்க.

**கல்யேத்.** **Galeed.** [சாட்சியான கற்குவியல்]. யாக்கோபும் லாபானும் உடன்படிக்கை செய்தபோது கட்டின கற்குவியல். ஆதி $31^{47}$.

**கல்லறை.** **Tomb.** எபிரெயர்கள் வழக்கமாய்க் கற்பாறையில் வெட்டின குழிகளில் பிரேதங்களை அடக்கஞ்செய்வார்கள். தனவான்கள் மலைச்சாரிலே சிறு அறைகள் வெட்டி, அவ்வறைகளின் சுவர்களில் மாடங்கள் செய்து, அவைகளில் பிரேதத்தை வைத்து, அவைகளின் வாசல்களைப் பெரிய கற்களால் மூடுவார்கள்.

லாசரு, இயேசு வைக்கப்பட்ட கல்லறைகள் இந்த மாதிரியானவை. இவைகளுக்கு மூடியாக வைக்கப்படும் சக்கரவடிவுள்ள கல் அக்கம் பக்கம் தள்ளித்திறந்து மூடத்தக்கதாக



மலைச் சாரில் வெட்டப்பட்ட கல்லறைகள்.

உருளும் பெரிய சில்லைப்போல் செய்யப்படும். 1 சாமு $10^{2}$ 2 சாமு $2^{32}$ 1 இரா $13^{22}$ 2 இரா $9^{28}$ லூக் $11^{47}$ யோவா $20^{12}$. பிரேதக்குழி. உபா $34^{6}$ சங் $5^{9}$.

**கல்லாய்.** **Kallai.** நெகே $12^{20}$.

**கல்லியோன்.** **Gallio.** ரோமை ராயனாகிய நேரோவின் மந்திரிகளிற் பேர்போன செனெக்கா (*Seneca*) என்பவனின் தமையன். பவுல் கொரிந்து பட்டணத்துக்குப் போனபோது இவன் அகாயா நாட்டுக்கு அதிபதியாய் இருந்தான். அப் $18^{12}$.

**கல்வாரி, கொல்கொதா.** **Calvary, Golgotha.** இந்த இரண்டு பதங்களும் 'கபாலஸ்தலம்' என்று மொழிபெயர்த்திருக்கின்றன.

கொல்கொதா. மத் $27^{33}$.

கபாலஸ்தலம். லூக் $23^{33}$.

இது எருசலேமுக்கு வெளிப்புறத்தில் இருந்தது. எபி $13^{12}$. அதற்கருகில் இருந்தது. யோவா $19^{20}$. தூரமான இடத்திலிருந்து பார்க்கக்கூடியது. மாற் $15^{40}$ லூக் $23^{49}$. இதற்குச் சமீபமாய் ராஜபாதை இருந்தது. மத் $27^{39}$.

இதில் மரித்துப்போன குற்றவாளிகளின் கபாலங்கள் கண்டுபிடிக்கப்பட்டதினாலாவது, இக்குன்று கபால வடிவம்போல் இருக்கிறதினாலாவது இதற்கு இப்பெயர் வந்தது என்பது முன்னோர்களின் அபிப்பிராயம். இதைப்போன்ற இரண்டு இடங்கள் எருசலேமுக்குக் கிட்ட இருக்கின்றன. ஆனால் அவைகளில் எது கபாலஸ்தலம் என்று சொல்ல முடியாது.

**கல்வி.** **Knowledge.**

1. எபிரெயர்களுக்குள் கல்விமான்கள் மோசேயின் நியாயப்பிரமாணங்களை ஆராய்ந்து படிப்பதினால் தேவனுடைய சித்

தத்தை மனுஷர் அறிந்துகொள்ளவேண்டும் என்று தீர்மானித்து அந்தப் பிரமாணங்களே உத்தம கல்வி என்று நினைத்தார்கள்.

2. **பள்ளிக்கூடம்** காண்க.

**கல்வின். Calvin.** யோவான் கல்வின் கி-பி. 1509-ஆம் வருஷத்தில் பிரான்சு தேசத்தில் பிறந்து 1564-ஆம் வருஷத்தில் இறந்துபோனான். அவ்விடத்திலிருந்த சுவிசேஷ சமயத்தாரின் மூலமாய்ச் சத்தியத்தை அறிந்து குணப்பட்டவனாய் இருக்கும்போது, அந்த ராஜ்யத்தில் கிறிஸ்தவர்களுக்கு உண்டான துன்பத்தினிமித்தம் 1536-ஆம் வருஷத்தில் ஜினிவா பட்டணத்திற்குப் போய் அங்கே குருவானான். அந்த நாள்முதல் புரோட்டெஸ்டான்டு மார்க்கத்தில் லூதரோடு பிரதான வேத சாஸ்திரியாய் இருந்து தன் போதனைகளை அநேக புஸ்தகங்களில் எழுதினான். இவைகளில் சுவிசேஷ சாஸ்திர நியாயத்தை விவரித்துச் சபையில் இருக்கவேண்டிய ஒழுங்கைத் தெரிவித்தான். இவன் தேவனின் தீர்மானம், தெரிந்துகொள்ளப்படுதல், பாவிகளின் மேலுள்ள தேவகிருபை ஆகிய இவற்றைக்குறித்து அதிக உறுதியாய்ப் போதித்துவந்தான்.

**கவண். Sling.** நியா $20^{16}$ 1 சாமு $17^{40}$ 2 நாளா $26^{14}$.

**கவராசம். Compasses.** ஏசா $44^{13}$.

**கவுதா. Cauda.** கிலவுதா காண்க.

**கவுதாரி, கௌதாரி. Partridge.** பாறையான இடங்களில் வசிக்கும் சிவப்புக் கால்கள் உள்ள கவுதாரிகளும், சாக்கடலின் கரையோரங்களில் வசிக்கும் கவுதாரிகளும் பலெஸ்தீனா தேசத்தில் அநேகமாய் உண்டு. 1 சாமு $26^{20}$ எரே $17^{11}$.

**கழலை. Wen.** லேவி $22^{22}$.



கழுகு.

**கழுகு. Eagle.** இப்பதம் எபிரெய பாஷையில் கழுகையல்லாமலும் வல்லூறு என்னும் பட்சியையும் குறிக்கிறது. உபா $22^{1}$ $28^{50}$ யோபு $39^{27.30}$ எரே $49^{16}$ ஏசா $40^{3}$ மீகா $1^{16}$ ஆப $1^{8}$ மத் $24^{28}$.



காட்டுக் கழுதை.

**கழுதை. Ass.** இது சீரியா தேசத்தில் குடி ஜனங்களுக்கு மிகவும் உபயோகமான மிருகம். விறகு தானியம் முதலானவை சுமந்துகொண்டு போகும். நெகே $13^{15}$ ஆதி $22^{3}$ எண் $22^{21}$. அத்தேசத்தில் வெண்ணிறமான கழுதைக்குக் குதிரையைவிட விலை அதிகம். ஏனென்றால் இது தனவான்கள் நியாயசாஸ்திரிகளுக்கு வாகனமாக எண்ணப்பட்டது. நியா $5^{10}$. அத்தேசத்தார் தற்காலத்தில் கழுதையையும் மாட்டையும் ஏரிற் கட்டி உழுகிறார்கள். இப்படிச் செய்வது எபிரெயர்களுக்கு வழக்கம் இல்லை. உபா $22^{10}$. மூன்று வருஷமட்டும் கழுதைக்குட்டியை வாகனமாக உபயோகிக்கக்கூடாது. காட்டுக்கழுதை (யோபு $24^{5}$) வனாந்தரத்தில் அதிகமாய் உண்டு. இது வேகமாய் ஓடும். யோபு $39^{5}$ ஆதி $16^{12}$.

**கழுவுகிறது. Washing.** எபிரெயர்கள் அதிக சுத்தமுள்ளவர்களாய் இருப்பதில் பிரியமுடையவர்கள். சாப்பாட்டில் பந்தியிருக்கிறதற்குமுன் கைகால் சுத்தி செய்வது வழக்கம். ஆதி $18^{4}$ $24^{32}$ மத் $15^{2}$. ஒருவன் இன்னொருவனின் பாதங்களைக் கழுவுவது மரியாதையையும் தாழ்மையையும் குறிக்கிறது. 1 தீமோ $5^{10}$ யோவா $13^{5}$. இயேசு கிறிஸ்துவின் ரத்தம் பாவ அழுக்கைக் கழுவுகிறது என்பது உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. யோவா $13^{10}$ 1 கொரி $6^{11}$ தீத் $3^{5}$ வெளி $1^{6}$.

**களஞ்சியம். Barn.** தானியத்தைக் குடங்களிலாவது, அதற்கென்று கட்டின அறைகளிலாவது (மத் $6^{26}$ லூக் $12^{18}$), புதையல்களிலாவது (எரே $41^{8}$) வைப்பார்கள். நீதி $3^{10}$ யோவே $1^{17}$ ஆகாய் $2^{19}$.



எகிப்தியர்களுடைய களஞ்சியம்.

**களம்.** **Threshing-floor.** ஒவ்வொரு ஊரிலும் களம் இருக்கும். எரே $51^{33}$ ஆமோ $2^{13}$ உபா $25^{4}$. போரடிக்கிற மாட்டை வாய் கட்டமாட்டார்கள். உபா $25^{4}$. சிலவேளை ஒரு பலகையின் கீழ்ப்பக்கத்தில் கருக்கான கற்களை நட்டு மாடு கட்டிக் களத்திலே யதை இழுத்து இவ்விதமாய்த் தானியம் வேறே பதர் வேறே யடிப்பார்கள். சில சமயங்களில் கற்களுக்குப் பதிலாக இருப்பு வட்டங்கள் கட்டுவார்கள். நீதி $20^{26}$ ஏசா $28^{27}$.



**களவு.** **Theft.** திருட்டு. யாத் $20^{15}$. கன்னமிடுதல். யாத் $22^{2}$. எல்லைக்கல்லு மாற்றுதல். உபா $19^{14}$. கள்ளத்தராசு. உபா $25^{15}$. பிறன் வயலில் மாடு மேயவிடுவது. யாத் $22^{5}$. அக்கினி கொளுத்துவது. யாத் $22^{6}$.

**களிகூருதல்.** **Rejoice.** சங் $149^{2}$ ஏசா $25^{9}$ மத் $5^{12}$ 1 பேது $4^{13}$ வெளி $19^{7}$. **சந்தோஷம்** காண்க.

**களிமண்.** **Clay.** குயவன் பாண்டங்கள் செய்யும் மண். ஏசா $29^{16}$ $41^{25}$ $64^{8}$ எரே $18^{6}$ நாகூம் $3^{14}$ தானி $2^{31}$ ரோ $9^{21}$.

**களைகள்.** **Tares.** களைகளும் நல்ல பயிர்களும் முளைக்கும்போது அவைகளுக்கு வித்தியாசம் தெரியாது. அவைகள் விளையும்போது களைத்தானியத்துக்கும் நல்ல தானியத்துக்கும் வித்தியாசம் தெரியும். களையின் தானியங்களிற் சில நஞ்சுள்ளவைகளாகையால் அவை புசிக்கத்தக்கவைகள் அல்ல. அறுப்புக் காலத்துக்குமுன் பெண்களும் பிள்ளைகளும் களைகளைப் பிடுங்கி எறிவார்கள். மத் $13^{24}$.

**கறை.** **Spot.** எபே $5^{27}$ 2 பேது $2^{13}$ $3^{14}$ யூதா $1^{12, 23}$.

**கற்பனைகள், பத்துக் கற்பனைகள். Ten Commandments.** கற்பனை என்னும் பதத்திற்கு எபிரெய பாஷையில் 'வாக்கு' என்று அர்த்தமாம். எபிரெயர் யேகோவா சீனாய்மலையில் இந்தப் பத்துக் கற்பனைகளை உரைத்து இரண்டு கற்பலகைகளில் வரைந்து கொடுத்தார் என்று சொன்னார்கள். யாத் 20¹ 24¹² 31¹⁸ 32¹⁵ உபா 5²⁵ 9¹⁰.

இவைகள் உடைந்தபிறகு புதிய பலகைகளில் வரையப்பட்டன. யாத் 32¹⁹ 34⁴·²⁸ உபா 9¹⁷ 10³.

இந்தக் கற்பலகைகள் உடன்படிக்கைப் பெட்டிக்குள் வைக்கப்பட்டிருந்தன. உபா 10⁵.

நேபுகாத்நேச்சார் எருசலேமைப் பிடிக்கு முன் எரேமியா இந்த உடன்படிக்கைப் பெட்டியை மறைத்துவைத்தான் என்பது யூத பாரம்பரியம். அதற்குப்பிறகு சாலொமோன் கட்டின தேவாலயத்தில் வைத்திருந்த உடன்படிக்கைப் பெட்டியும் அதற்குள் வைத்திருந்த இந்தக் கற்பலகைகளும் எப்படியோ காணமற் போய்விட்டன. 1 இரா 8⁹.

முதலில் பத்துக் கற்பனைகளும் கல்லில் வரைந்ததினாலே அவைகள் சுருக்கமாய் எழுதியிருந்தன என்பது வேத சாஸ்திரிகளின் அபிப்பிராயம். உ-ம். 'ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பாயாக' என்பது நாலாம் கற்பனைக்கு மூலவாக்கு.

ரோமான் மார்க்கத்தார்கள் விக்கிரக வணக்கத்தைக் கண்டிக்கும் இரண்டாம் கற்பனையை நீக்கி அதற்குப் பதிலாகப் பத்தாம் கற்பனையை இரண்டாக வகுத்து பின்வருமாறு எழுதியிருக்கிறார்கள்.

1. உனக்குக் கர்த்தாவான சருவேசுரன் நாமே, நமக்கு முன்பாக உனக்கு வேறே சருவேசுரன் இல்லாதே போவதாக.
2. உன் ஆண்டவராகிய சருவேசுரனுடைய திருநாமத்தை வியர்த்தமாகச் சுவீகரியாதே யிருப்பாயாக.
3. சருவேசுரனுடைய திருநாட்களை ஆசரிக்கத்தக்கதாக நினைப்பாயாக.
4. பிதாவையும் மாதாவையுஞ் சங்கித்திருப்பாயாக.
5. கொலை செய்யாமலிருப்பாயாக.
6. மோகம் அகமியாகமனம் பண்ணாதிருப்பாயாக.
7. களவாடாதிருப்பாயாக.
8. பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக.
9. பரர் தாரத்தை அபேட்சியாதிருப்பாயாக.
10. பரருடைமையை அபேட்சியாதிருப்பாயாக. (ஞான உபதேசம்.)

இஸ்ரவேலர் சில சமயங்களில் யேகோவாவின் விக்கிரகங்கள் செய்து (நியா 17³), அவைகளை வணங்கிவந்தார்கள் என்றும், விக்கிரக வணக்கத்தைக் கண்டித்த இரண்டாம் கற்பனையை மோசே எழுதவில்லை என்றும், சில வேத சாஸ்திரிகள் உத்தேசித்திருக்கிறார்கள். ஆனால் கானான் தேசத்திற்கு வந்த இஸ்ரவேலருடைய சரித்திரத்தை நாம் பார்ப்போமானால் விக்கிரக வணக்கம் அவர்களுடைய மார்க்க ஆராதனைக்கு முக்கிய இடறலாய் இருந்தது என்றும், அதைத் தடுக்கும்படி மோசே பிரயாசப்பட்டு இந்தக் கற்பனை கொடுத்தான் என்றும் அறியலாம். அக்காலத்திலுள்ள இஸ்ரவேலருக்கு நாகரீகமும் நீதி நியாயமும் நன்றாய்த் தெரியாததினால் சிறு பிள்ளைகளுக்குக் கொடுக்கும் போதனையைப்போல் அவர்களுக்கும் மோசே இந்தக் கற்பனைகளைச் சுருக்கமாயும் தெளிவாயும் கொடுத்தான். இவைகள் நீதி இன்னது என்பதை விபரமாயும் பூரணமாயுங் காட்டாவிட்டாலும் இவைகளில் நீதிக்குரிய மூல போதனைகள் அடங்கியிருக்கின்றன. மலைப்பிரசங்கத்தில் இயேசு தமது சீஷருக்கு இவைகளிலிருந்து ஆவிக்குரிய போதனைகளை விபரித்துச் சொன்னார்.

**கற்பு. Virtue.** பிலி 4⁸ வெளி 14⁴.

**கன்மலை. Rock.** ஓரேப், சேலா முதலிய கன்மலைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கே கழுகு, காட்டாடு, பாம்பு, தேனீ அதிகம். இம்மலைக்குகைகளில் பூர்வ ஜனங்கள் வசித்தார்கள். உபா 2¹². கன்மலைகள் பலமும், உயரமும், நிழல் கொடுக்கிறதுமாய் இருப்பதினால் இப்பதம் கடவுளுக்கு வழங்கியிருக்கிறது. சங் 18² ஏசா 17¹⁰ ஞ.

கன்மலை யுடைக்கிறது கடவுளின் பலத்துக்குத் திருஷ்டாந்தம். அசீரியர் பெரிய கன்மலைகள் தங்கள் தேவர்கள் என்று நினைத்தார்கள். 1 இரா 19¹¹ யோபு 14¹⁸.

கன்மலை உபமானமாய் இயேசுகிறிஸ்துவைக் குறிக்கிறது. 1 கொரி 10⁴.

**கன்று, பொற்கன்று. Golden calf.** இஸ்ரவேலர் வனாந்தரத்தில் கன்றுக்குட்டிகளை வணங்கினார்கள் என்பதற்கும் அதற்கு முந்நூறு வருஷத்திற்குப் பிறகு அவைகளை மறுபடியும் வணங்கினார்கள் என்பதற்கும் காரணம் எகிப்தியர் அவைகளை வணங்கினது அல்ல, பெனிக்கியர், சீரியர் முதலிய சேமி

யர் எல்லாரும் பாகாலைப் பின்பற்றினதே. சேமியர்கள் இந்த விக்கிரகங்களின் மூலமாய் அநேக தேவர்களின் பலத்தையும் சக்தியையும் காட்டுவார்கள். யேகோவாவின் கற்பனையை மறந்துபோன இஸ்ரவேலர் பூர்வ கொள்கையாகிய இந்த விக்கிரக ஆராதனைக்கு இசைந்தது ஆச்சரியம் அல்ல. இந்த ஆராதனை யேகோவாவின் மார்க்கத்துக்கு விரோதமானது என்று ஆமோஸ், ஓசியா தீர்க்கதரிசிகள் காட்டினார்கள். யாத் 32 அதி. உபா 9[7] 1 இரா 14[16] மு ஓசி 8[5] 10[5] 13[2] ஆமோ 3[14].

**கன்னுன்.** Coppersmith. 2 தீமோ 4[1].

**கன்னிகை.** Virgin.

1. பழைய ஏற்பாட்டில் வெவ்வேறான அர்த்தங்கொண்ட இரண்டு பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

(*a*) *Bethulah.* இப்பதம் கன்னிகையைக் குறிக்கிறது. இது இஸ்ரவேலருக்கும் (ஆமோ 5[2]), சீயோனுக்கும் (2 இரா 19[21]), எகிப்துக்கும் (எரே 46[11]), பாபிலோனுக்கும் (ஏசா 47[1]) உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது.

கன்னிகைகளைப்பற்றிய பிரமாணங்கள். உபா 22[33].

யோவேல் 1[8]-ல் சொல்லியிருக்கும் 'பெண்' என்னும் பதம் நியமிக்கப்பட்டு புருஷனை அறியாத விதவையைக் குறிக்கிறது.

(*b*) *Alemah.* இப்பதம் விவாகம் செய்யத்தக்க பருவத்துக்கு வந்த வாலிபனையும் (1 சாமு 17[56]), வாலிபப்பெண்ணையும் (ஏசா 7[14]) குறிக்கிறது. இப்பதம் பெரும்பாலும் விவாகம் செய்யாத பெண்களைக் குறித்தாலும் சொல்லர்த்தமாய் இது யௌவன பருவத்தைமாத்திரம் காட்டுகிறது. இந்த அர்த்தமாகவே 'பெண்' (யாத் 2[8]), 'பிள்ளையாண்டான்' (1 சாமு 17[56] 20[22]) என்று சொல்லியிருக்கிறது.

2. புதிய ஏற்பாட்டில் 'கன்னிகை' என்பது புருஷனை அறியாத பெண்ணைக் குறிக்கிறது. மத் 1[23] 25[1] லூக் 1[27] 2[36] அப் 21[9] 1 கொரி 7[28] 2 கொரி 11[2] வெளி 14[4].

**கன்னே.** Canneh. இந்த ஊர் எங்கே இருக்கிறது என்று தெரியாது. எசே 27[23].

## கா.

**காகம்.** Raven. செத்துப்போனதும் நாறினதுமான உடல்களைப் பட்சிக்கிறதினால் யூதர்கள் காக மாம்சம் சாப்பிடமாட்டார்கள். லேவி 11[15]. நோவாவின் பேழையில் இருந்தது. ஆதி 8[7] உன். பா 5[11] நீதி 30[17] ஏசா 34[11] யோபு 38[41] சங் 147[9] லூக் 12[24]. காகம் எலியாவைப் போஷித்தது. 1 இரா 17[4].



**காகாம்.** Gaham. ஆதி 22[24].

**காகார்.** Gahar. எஸ்றா 2[47].

**காகால்.** Gaal. சீகேமிலே கலகம் பண்ணினவன். நியா 9[26].

**காகிதம்.** Paper. எழுத்து காண்க.

**காசா.** Gaza. பெலிஸ்தியரின் ஐந்து முக்கிய பட்டணங்களில் ஒன்று. யூதா கோத்திரத்தின் எல்லைக்குள் இது இருந்தாலும் சில காலம்மாத்திரம் இது அவர்கள் வசம் இருந்தது. ஆதி 19[19] யோசு 10[41] 11[22] 15[47] நியா 16[1] மு.

**காசாம்.** Gazzam. ஒரு குடும்பம். எஸ்றா 2[48].

**காசியா.** Cassia. இலவங்கப்பட்டை காண்க.

**காசு.** Cash, Coin, Mite. பணம் காண்க.

**காசுக்காரர்.** Money changers. எருசலேம் தேவாலயத்தில் காணிக்கையாக எபிரெய நாணயம்மாத்திரம் போடவேண்டியதால் இயேசுவின் காலத்தில் ரோமை, கிரேக்கு, சீரியாமுதலிய இடங்களிலிருந்து தேவாலயத்துக்கு வந்த பிரயாணிகள் தங்கள் தங்கள் ஊர்களுக்குரிய பலவிதமான நாணயங்கள் மாற்றுவதற்குக் காசுக்காரர் அநேகர் எருசலேமிலே இருந்தார்கள். அவர்கள் தேவாலயத்தின் பிராகாரங்களில் பரிசுத்த ஸ்தலத்துக்குச் சமீபமாய்க் காசுக்கடைகள் வைத்து வியாபாரம் நடத்தினதினால் அங்கே உண்டான சந்தடி ஜனங்களின் பயபக்திக்கும் ஆராதனைக்கும் இடையூறாயிருந்தது. மத் 21[12] 25[27].



தற்காலத்தில் காசா பட்டணம்.

**காசேஸ்.** **Gazez.** 1 நாளா $2^{46}$-ல் சொல்லியிருக்கும் இரண்டுபேர்.

**காஞ்சொறி.** **Nettle.** இப்பூண்டு கானான் தேசத்துப் பாழிடங்களில் அதிகம். யோபு $30^{7}$ நீதி $24^{31}$ எசா $34^{13}$ ஓசி $9^{6}$.

**காடி.** **Vinegar.** எபிரெயர் செய்யும் திராக்ஷரசம் சீக்கிரத்தில் புளித்துக் காடியாகும். அப்போது அதைத் தண்ணீரோடு கலந்து சாப்பிடுவார்கள். ரோமைச் சேனையிலுள்ளவர்கள் இந்தவிதமான காடி வழக்கமாய்ச் சாப்பிட்டார்கள். நசரேயர் இதைச் சாப்பிடமாட்டார்கள். எண் $6^{3}$ ரூத் $2^{14}$ யோவா $19^{29}$.

**காடு.** **Forest.** கர்மேல், தாபோர், லீபனோன், பாசான் முதலிய இடங்களில் காடுகள் அதிகம்.



காடை.

**காடை.** **Quail.** கவுதாரி இனத்தைச் சேர்ந்த அதிக சிறு பட்சி. ஒவ்வொரு வருஷமும் சித்திரை மாசத்தில் காடைகள் திரள் திரளாய் ஆப்பிரிக்காக் கண்டத்திலிருந்து சீனாய் பலெஸ்தீனா நாடுகளுக் கூடாக ஐரோப்பாக் கண்டத்துக்குப் போகும். வருஷத்தின் கடைசியில் திரும்பவும் ஆப்பிரிக்காவுக்குப்போகும். யாத் $16^{13}$.

**காட்சி.** **Vision.** **தரிசனம்** காண்க.

**காட்டத்திமரம்.** (1) = **Sycamine.** ஒரு விதமான முசுக்கொட்டைச் செடியைக் குறிக்கிறது. லூக் $17^{6}$.

(2) = **Sycomore.** இது ஒரு மாதிரியான ஆலமரம். இது ஐம்பது அடி உயரத்துக்கு வளரும். இது நல்ல பழம் கொடாது. தச்சு வேலைக்கு நேர்த்தியான மரம். 1 இரா $10^{27}$ எசா $9^{9}$ ஆமோ $7^{14}$ லூக் $19^{4}$.

**காட்டாடு.** **'Satyr', Wild-goat.** எசா $34^{14}$.

**காட்டுப்பன்றி.** **Wild Boar.** சாக்கடலின் கரையில் புதர்களில் வசிக்கும். அநேகம் பயிர்களை அழிக்கும். சங் $80^{13}$. யூதர்களும் மகமதியர்களும் இதைச் சாப்பிடமாட்டார்கள். லேவி $11^{7}$.

**காட்டுப் புறா.** **Dove.** பலெஸ்தீனாவில் எழு மாதிரியான புறாக்கள் உண்டு. அவைகளில் ஒரு ஜாதியான காட்டுப் புறாக்கள் வசந்த காலத்தில் தெற்கேயுள்ள தேசங்களிலிருந்து கூட்டம் கூட்டமாய் வரும். சங் $55^{6}$ எசா $60^{8}$ எரே $8^{7}$. எருசலேமில் தெருக்களிலும் கோவில் கட்டடங்களிலும் இருக்கும். 'புறா' பிரீதியைக் குறிக்கும் பதம். உன். பா $1^{15}$ $5^{2}$. அத்தேசத்தார் பெண்களுக்கு இப்பதம் சொல்லுவார்கள். இது மாசின்மையையும் கபடின்மையையும் குறிக்



பலெஸ்தீனுவிலுள்ள ஒரு விதமான காட்டுப் புறு.

கிறது. ஓசி $7^{11}$ சங் $74^{19}$ மத் $10^{16}$. ஆகையால் பரிசுத்தாவிக்கு வழங்கும் சொல் மத் $3^{16}$. எபிரெயர்கள் புறுக்களைப் பலிகளாகச் செலுத்தினுர்கள். ஆதி $15^{9}$ லேவி $5^{7}$.



இன்னொரு விதமான காட்டுப் புறு.

**காணிக்கை.** **Gifts.** **ஈவு, பலிகள்** காண்க.

**காணிக்கைப் பெட்டிகள். 'Treasury'** கடவுள் தங்களுக்கு அளித்த விசேஷ நன்மைகளினிமித்தம் போடுகிறவர்களுக்காகச் சில பெட்டிகளும், அதற்கு முந்தின வருஷங்களில் குறைவாய்க் காணிக்கை போட்டவர்களுக்குச் சில பெட்டிகளும், கோயிற் செலவுக்கென்று பொதுவாய்க் கொடுக்கிறவர்களுக்குச் சில பெட்டிகளுமாக இப்படியே பதின்மூன்று காணிக்கைப் பெட்டிகள் எருசலேம் தேவாலயத்தில் வைக்கப்பட்டிருக்கும். மாற் $12^{41}$ $21^{1}$. மத் $27^{6}$-ல் சொல்லிய காணிக்கைப் பெட்டி என்பது தேவாலயத்திலுள்ள பொக்கிஷசாலையைக் குறிக்கிறது.

**காண்டாமிருகம்.** **Unicorn.** இது பெரிதும் அதிக மூர்க்கமுமுடையது. தன் இரண்டு கொம்புகளினுல் வேடரைப் பீறும். இதற்கு இங்கிலீஷில் உச்சிக்கொம்பன் (*Unicorn*) என்று சொல்லாமல், காட்டுமாடு (*Wild Ox*) என்று சொல்வது சரியாய் இருக்கும். எண் $24^{8}$ உபா $33^{17}$ யோபு $39^{9}$ சங் $22^{21}$ $92^{10}$ ஏசா $34^{7}$.

**காதணி.** **Ear-rings.** **ஆபரணங்கள்** **ஆனியம்** காண்க.

**காதியேல்.** **Gaddiel.** எண் $13^{10}$.

**காதீ.** =**Gadi.** 2 இரா $15^{14}$.
=**Gaddi.** எண் $13^{11}$.

**காது.** **Ear.** அடிமை என்பதைக் காட்டும்படி எஜமான் அவன் காதைக் கம்பியால் குத்துகிறது வழக்கம். யாத் $21^{6}$ உபா $15^{16}$. ஆசாரியன் கடவுளின் பிரமாணங்களுக்குச் செவிகொடுக்க வேண்டியவன் என்பதைக் காட்டும்படி பிரதிஷ்டை செய்யும்போது பலி செலுத்தின கடாவின் இரத்தத்தில் ஒரு துளி அவன் வலதுகாதின் மடலில் தெளிப்பார்கள். யாத் $21^{6}$ $29^{20}$ லேவி $8^{23}$ உபா $15^{17}$ 1 சாமு $9^{15}$ ஏசா $6^{10}$ எசே $23^{25}$ மீகா $7^{16}$ மத் $10^{27}$ $11^{15}$ $26^{51}$ மாற் $7^{33}$ லூக் $22^{50}$ யோவா $18^{10}$ அப் $17^{20}$ வெளி $2^{7}$.

**காதேஸ், காதேஸ் பர்நேயா.** **Kadesh, Kadesh Barnea.** [பரிசுத்தம்]. இதின் மறுபெயர் என்மிஸ்பாத், அதாவது 'நியாயத் தீர்ப்புச் செய்கிற ஊற்று.' இது சாக்கடலுக்குத் தெற்கே அல்லது தென்கிழக்கே ஐம்பதுமைல் தூரத்திலுள்ள ஏதோமின் தெற்கெல்லையைச் சேர்ந்த பாரான் வனுந்தரத்தில் இருந்தது. இது பூர்வமுதல் நன்ருய்த் தெரிந்த இடம். ஆதி $14^{7}$. இங்கே கோராகு கலகம் பண்ணினுன். எண் 16 அதி. மிரியாம் இறந்த இடம். எண் $20^{1}$. யோசே இஸ்ரவேலருக்குத் தண்ணீர் கொடுத்த இடம். எண் $20^{2}$. இங்கிருந்து வேவுகாரர் போனுர்கள். எண் $32^{8}$.

**காத்.** **Gad.** [பாக்கியமுள்ளவன்].

1. சில்பாளின் மூத்த குமாரன். ஆதி $30^{9}$.

2. யோர்தான் நதிக்குக் கிழக்கேயுள்ள காத் கோத்திரம். ஆதி $49^{19}$ உபா $30^{20}$ 1 நாளா $12^{8}$ எண் $32^{34}$. காத்தியர் தாவீதுக்கு உதவி செய்தார்கள். 1 சாமு $13^{7}$. இவர்கள் யெரொபெயாமுக்கு உதவிசெய்தார்கள். 1 இரா $12^{25}$. அசீரிய ராஜாவாகிய திகிலாத்பிலேசர் இவர்களைச் சிறைபிடித்துக் கொண்டுபோனுன். 1 இரா $28^{20}$.

3. காஞனியரும் யேகோவாவின் கட்டளைகளை மீறி நடந்த இஸ்ரவேலரும் வணங்கின சுகானுபோகம் கொடுக்கிற தேவதை. ஏசா $65^{11}$. இது பாகால் காத் முதலிய

இடங்களில் விசேஷமாய் வணங்கப்பட்டது. யோசு $11^{17}$.

4. தாவீது காட்டிலே ஒளித்திருந்தபோது அவனோடிருந்த மந்திரி. தாவீது குடிமதிப்பு எழுதினதினால் யேகோவா அவன்மேல் கொண்ட உக்கிரத்தைச் சொன்ன ஞான திருஷ்டிக்காரனும் தேவாலயத்தில் ஆராதனை ஒழுங்கு செய்தவனும் இவனே. 1 நாளா $29^{29}$ 2 சாமு $24^{11}$.

**காத்.** **Gath.** பெலிஸ்தியரின் ஐந்து முக்கிய பட்டணங்களில் ஒன்று. யோசு $11^{22}$ 1 சாமு $5^{8}$. கோலியாத் பிறந்த ஊர். 1 சாமு $17^{4}$. தாவீது இங்கேயுள்ள ராஜாவிடம் சகாயம் பெற்றான். 1 சாமு $21^{10}$. தாவீது இதைப் பிடித்தான். 1 நாளா $18^{1}$ 2 நாளா $26^{6}$. ஆசகேல் முற்றுகைபோட்டு இதைப்பிடித்தான். 2 இரா $12^{17}$. இதற்குப் பெரிய ஆபத்து நேரிட்டது. ஆனால் அது வந்த விதம் தெரியாது. ஆமோ $6^{2}$.

**காத் ஏபோ.** **Gath Hepher.** [வெட்டின ஆலை]. செபுலோன் எல்லைகளிலுள்ள யோனா குடியிருந்த இடம். 2 இரா $14^{25}$. =கித்தா-ஏபேர். யோசு $19^{13}$.

**காத்சா.** **Gaza.** **காசா** காண்க.

**காத்சோர்.** **Hazor.** **ஆத்சோர்** காண்க.

**காத்தாத்.** **Kattath.** யோசு $19^{15}$.

**காத்தான்.** **Hakkatan.** [மிகச் சிறியவன்]. சிறையிலிருந்து திரும்பிவந்த குடும்பம். எஸ்று $8^{12}$.

**காத் பள்ளத்தாக்கு.** **The Valley of Gad.** இது சாக்கடலின் கிழக்கோரத்தில் விழுகிற ஒரு சிற்றாறு. 2 சாமு $24^{5}$.

**காத்ரிம்மோன்.** **Gath-rimmon.**

1. தாணில் ஒரு ஊர். யோசு $19^{45}$.

2. மனாசேயில் ஒரு ஊர். யோசு $21^{25}$. =பிலியாம். 1 நாளா $6^{70}$.

**காபா.** **கேபா** காண்க.

**காபிரியேல்.** **Gabriel.** [கடவுளுடைய மனுஷன்]. யூத வேதசாஸ்திரிகள் காபிரியேல் தூதர் சேனைகளில் ஏழு தலைவர்களில் ஒருவன் என்றும், யோசேப்புக்கு வழிகாட்டினான் என்றும் (ஆதி $37^{15}$), மற்றத் தூதர்களோடு மோசேயை அடக்கம்பண்ணினான் என்றும் (உபா $34^{6}$), அசீரியர் சேனையைக் கொண்டுவந்தான் என்றும் (2 நாளா $32^{21}$) சொல்லுவார்கள். மகமதியர் மகமதுவுக்கு காபிரியேல் குரான் (*Koran*) என்னும் தங்கள் வேதத்தை அறிவித்தான் என்று சொல்லுகிறார்கள். தானி $8^{15}$ $9^{21}$ லூக் $1^{11, 26}$.

**காபூல்.** **Cabul.** 1 நாளா $9^{13}$.

**காபோன்.** **Cabbon.** யோசு $15^{40}$.

**காப்பு.** **Anklet.** **ஆபரணங்கள்** காண்க.



காப்பு நாடாக்கள்.

**காப்பு நாடாக்கள்.** **Phylactery.** எபிரெயர்கள் சில வேதவாக்கியங்கள் எழுதி அவைகளை 'ஜெபங்கள்' என்னும் இரண்டு சதுரமான தோற்கூடுகளில் வைத்து நாடாக்களினால் இடது கையிலும் நெற்றியிலும் இந்தக் கூடுகளைக் கட்டுவார்கள். இவை



நெற்றியில் கட்டப்படும் காப்பு நாடாக்கள்.

களில் வைக்கப்பட்ட வேதவாக்கியங்கள் நாலு. அவை என்னவென்றால்: யாத் $13^{1-10}$ உபா $6^{4-9}$ $11^{13-21}$.

ஸ்திரீகளும் பதின்மூன்று வயதுக்குட்பட்ட பிள்ளைகளும் அடிமைகளும் ஆகிய இவர்களைத்தவிர மற்ற இஸ்ரவேலர் எல்லாரும் இவைகளைத் தரிப்பார்கள். மத் $23^{5}$. இவைகளில் கடவுளின் கிருபையைக் காண்பிக்கிற வேத வசனங்கள் அடங்கியிருக்கிறதினால் அவர்கள் ஞாபகக்குறிப்புகளாகிய இவைகளைச் சாதாரண காலஜெபநேரத்தில் கட்டுவார்கள். ஆனால் ஓய்வுநாட்களும் திருநாட்களும் அந்தக் கிருபைக்கு அடையாளங்களானதினாலே அந்தத் தினங்களிற் கட்டமாட்டார்கள்.

எபிரெயர் இவைகளைத் தரிக்க ஆரம்பித்த காலம் திட்டமாய்த் தெரியாதிருந்தாலும் ஆதியிலே அவர்கள் காப்பு நாடாக்கள் கட்டவில்லை என்றும், கி-மு. இரண்டாம் நூற்றாண்டில் பரிசேயர் அதிகாரம்பெறும்போது

இவைகளைக் கட்டத் தொடங்கினார்கள் என்றும் இயேசுகிறிஸ்துவின் காலத்தில் பரிசேயரைத்தவிர வேறு சிலரும் இவைகளைத் தரித்தார்கள் என்றும் விளங்குகிறது.



கையில் கட்டப்படும் காப்பு நாடாக்கள்.

**காமாத்தியர்.** **Hamathites.** **ஆமாத்** காண்க.

**காமின் தேசம்.** **The Land of Ham.** எகிப்து. சங் $78^{51}$ $105^{23}$.

**காமுவேல்.** **Gamul.** 1 நாளா $24^{17}$.

**காமோன்.** **Kamon.** யாவீரை அடக்கம் செய்த இடம். இந்த இடம் எங்கேயிருக்கிறது என்று தெரியாது. நியா $10^{5}$.

**காம்.** **Ham.** [கறுப்பு]. 'காம்' எகிப்தையும் அதின் ஜனங்களையும் குறிக்கிறது. ஆதி $9^{25}$ $10^{6}$ சங் $78^{51}$ $105^{23}$. எபிரெயர்கள் தாங்கள் ஜெயித்த காம் சந்ததியாரில் சேர்ந்த கானானியரும் யேகோவாவினால் சபிக்கப்பட்டவர்கள் என்று நினைத்தார்கள். ஆதி $9^{25}$.

**காம்.** **Ham.** சூசிமியர் இருந்த தேசம். ஆதி $14^{5}$. இது எந்தத்திசையில் உள்ளது என்பது தெரியாது.

**காயாஸ்.** Gaash. ஒரு மலை. யோசு $24^{30}$.



காப்பு நாடாக்கள்.

**காயினான்.** **Cainan.** லூக் $3^{36}$.

**காயீன்.** **Kain.**

1. ஒரு ஊர். யோசு $15^{57}$.
2. = **கேனியன்.** எண் $24^{22}$.

**காயீன்.** **Cain.** ஆதி $4^{1}$-ல் இதற்கு 'மனுஷனைப் பெற்றேன்' என்று அர்த்தம் சொல்லப்பட்டாலும் இந்தப் பதத்தின் அர்த்தம் 'கொல்லன்' என்று சில வேதசாஸ்திரிகள் தீர்மானித்திருக்கிறார்கள். ஆதி $4^{1}$ எண் $24^{22}$ நியா $4^{11}$. எபி $11^{4}$ யூதா $1^{11}$ 1 யோவா $3^{12}$.

இந்தச் சரித்திரம் ஆதாமின் பின் சந்ததியாருக்குள்ளிருந்த பகையினால் உண்டான பாவத்தையும் அதற்கு வந்த தண்டனையையும் காட்டி, கொலையினால் விளையும் அகோரமான தீமையையும், பாவம் செய்தவர்கள் தாங்கள் செய்த ஒரு பாவத்தினால் ஏவப்பட்டு இன்னொரு பாவம் செய்வார்கள் என்பதையும் குறிக்கிறது.

**காயு.** **Gaius.**

1. பவுல் ஞானஸ்நானம் கொடுத்த ஒரு கிறிஸ்தவன். அப் $20^{4}$ ரோ $16^{23}$ 1 கொரி $1^{14}$.
2. மக்கெதோனியாவிலிருந்து வந்த காயு. அப் $19^{29}$.
3. யோவான் சொன்ன காயு. 3 யோவா $1^{1}$.

ஒருவேளை இம்மூன்று பெயர்களும் ஒருவனைக் குறிக்கலாம்.

**காய்ச்சல்.** **'Burning ague'.** லேவி $26^{16}$ உபா $28^{22}$.

**காய்பா.** **Caiaphas.** சதுசேயர் கொள்கையை உடைய கர்வம் உள்ள இவன் ரோமர்களினால் தன் மாமனாகிய அன்னா இருக்கும் காலத்தில் (கி-பி. 18-36.) பிரதான ஆசாரியனாய் நியமிக்கப்பட்டிருந்தான். இவன் நியாயத்துக்கு விரோதமாய் இயேசுவையும் அவருடைய சீஷர்களையும் வருத்தப்படுத்தினவன். மத் $26^{57}$ மாற் $14^{53}$ லூக் $22^{66}$ யோவா $11^{47}$ $18^{24}$ அப் $4^{6}$.

**காய்மகாரம்.** **Vindictiveness.** 1 சாமு $18^{9}$.

**காரியக்கர்த்தர்.** **Advocate.** நியாயாதிபதிக்கு முன்பாகக் குற்றவாளிக்காகப் பரிந்து பேசுகிறவர். இவர் கிறிஸ்து. 1 யோவா $2^{1}$. பரிசுத்தாவி. யோவா $14^{16}$ $15^{26}$.

**காரியக்காரன்.** **Steward.** **உக்கிராணக்காரன்** காண்க.

**காரிருள்.** **Blackness of darkness.** யூதா 13 வச.

**காருணியம்.** **R. V. Virtue.** 2 பேது $1^{3}$.

**காரேப்.** **Gareb.**

1. ஒரு போர்வீரன். 2 சாமு $23^{38}$.
2. ஒரு மலை. எரே $31^{39}$.

**கார்ப்பு. Carpus.** பவுல் சந்தித்த ஒருவன். 2 தீமோ 4[13].

**காலம். Time.**

1. நித்தியத்தில் ஒரு சிறு பாகம். சங் 90[43] 2பேது 3[8] வெளி 10[6].

2. தீர்க்கதரிசிகளின் தரிசனங்களில் 'காலம்' என்று சொல்லப்படுவது ஒரு வருஷத்தைக் குறிக்கிறது. தானி 4[16. 23] 7[25] வெளி 12[4].

3. **நாள்.** எபிரெயரின் அபிப்பிராயத்தின்படி ஆதியில் எல்லாம் இருட்டாய் இருந்தது. பிற்பாடு கடவுள் பகலை உண்டாக்கினபோது இரவும் பகலும் சேர்ந்து ஒருநாள் என்றும் சூரியன் அஸ்தமிக்கும் நேரமுதல் மறுபடி அஸ்தமிக்கும் நேரம் வரையில் ஒருநாள் என்றும் சொல்லிவந்தார்கள். ஆதி 1[14]. அவர்கள் ஒருநாளை மாலை நடுராத்திரி காலை மத்தியானம் என நாலு பாகங்களாகப் பிரித்தார்கள். பூர்வீக எபிரெயர்கள் இந்தப் பாகங்களைத் தவிர வேறே பாகங்களைக் குறிக்கவில்லை. தானி 4[19]-ல் சொல்லியிருக்கும் '**நாழிகை**' என்பது சிறு காலத்தைக் குறிக்கிறது. ஆகாசின் சூரிய கடியாரத்தில் '**பாகை**' என்று சொல்லப்படுவது எவ்வளவு நேரத்தைக் குறித்தது என்பது தெரியாது.

புதிய ஏற்பாட்டின் காலத்தில் சூரியன் உதிக்கும் நேரமுதல் அஸ்தமிக்கும் நேரம் வரையும் பன்னிரண்டு **மணி** என்று கணித்ததினால் அக்காலத்து யூதர்கள் கணித்த மணி நேரம், தற்காலம் எண்ணப்படும் மணிநேரத்தைப்போலிருந்தது. யோவா 11[9] 19[14].

ரோமைச் சேவகர் இராக்காலத்தை நாலு **ஜாமங்களாகப்** பிரித்தார்கள். மத் 14[25] லூக் 12[38].

'நிமிஷம்,' 'இமைப்பொழுது.' (1கொரி 15[52].) இவைகள் க்ஷணநேரத்தைப் பொதுவாய்க் குறிக்கிறது.

4. **மாசங்கள்.** எபிரெய மாசங்களின் பெயர்கள்.

(i) **ஆபிப்.** *Abib.* யாத் 13[14]. இது பயிர் கதிர்விடும் சித்திரை மாசம். பிற்காலத்தில் இதற்கு '**நிசான்**' (*Nisan*) என்று சொல்லப்பட்டது. நெகே 6[1]. இதில் பஸ்கா பண்டிகை கொண்டாடப்படும்.

(ii) **சீப்.** *Zib.* 1இரா 6[1].

(iii) **சீவான்.** *Sivan.* எஸ்தர் 8[9]. இதில் 'வாரங்களின் பண்டிகை' என்று சொல்லப்படும் பெந்தெகொஸ்தே கொண்டாடப்படும்.

(iv) **தம்முஸ்.** *Tammuz.* சகரி 8[19]. இந்தப் பெயர் வேதத்தில் சொல்லியிருக்கவில்லை.

(v) **அப்.** *Ab.* இதுவும் வேதத்தில் இல்லை.

(vi) **எலூல்.** *Elul.* நெகே 6[15].

(vii) **ஏத்தானீம்.** *Ethanim.* 1இரா 8[2]. எக்காளப்பண்டிகை, கூடாரப்பண்டிகை, பாவநிவாரண நாள் இதிலிருக்கும்.

(viii) **பூல்.** *Bul.* 1இரா 6[38].

(ix) **கிஸ்லே.** *Chislev.* நெகே 1[1]. இதில் தேவாலயப் பிரதிஷ்டையின் பண்டிகை கொண்டாடப்படும்.

(x) **தேபேத்.** *Tebeth.* எஸ்தர் 2[16].

(xi) **சேபாத்.** *Shebat.* சகரி 1[7].

(xii) **ஆதார்.** *Adar.* எஸ்றா 6[15]. இதில் பூரிம் பண்டிகை கொண்டாடப்படும்.

5. **வாரம்.** கடவுள் சர்வ சிருஷ்டிப்பையும் உண்டாக்கி ஏழாம்நாளிலே ஓய்ந்திருந்தாராகையால் எபிரெயர்கள் அந்த நாள் முக்கியமானது என்று நினைத்தார்கள். கிறிஸ்தவர்கள், இயேசு வாரத்தின் முதல்நாள் உயிர்த்தெழுந்ததினால் அதை முக்கியமாய் அனுசரித்து அதில் அப்பம் பிட்கும்படி நற்கருணைக்கு வந்து காணிக்கை சேர்த்து அது 'கர்த்தருடைய நாள்' என்று அதற்குப் பெயரிட்டார்கள். அப் 20[7] 1கொரி 16[2] வெளி 1[10].

எபிரெயர்கள் வாரத்தின் நாட்களுக்குத் திங்கள் செவ்வாய் முதலிய பெயர்கள் கொடாமல் 'முதலாம்நாள்' 'இரண்டாம்நாள்' என்று வழங்கிவந்தார்கள். ஓய்வுநாளுக்கு முந்தின வெள்ளிக்கிழமையில் ஓய்வுநாளுக்கு ஆயத்தப்படுத்துகிறதினால் அதற்கு '**ஆயத்த நாள்**' என்று பெயர் வைத்தார்கள். மத் 27[62].

பிற்காலத்தில் அந்தந்த வருஷத்தில் **ஊழி**யஞ்செய்கிற பிரதான **ஆசாரியனுடைய** பெயரை அந்தந்த வருஷத்துக்கு வைத்தார்கள்.

**காலா. Calah.** நினிவே பட்டணத்துக்கு இருபது மைல் தெற்கே உள்ள அசீரிய ராஜாக்கள் வசித்த ஒரு பட்டணம். ஆதி 10[11].

**காலாட்கள். Foot soldiers.**

1. இஸ்ரவேலர்களின் சேனையில் அதிகமாய்ப் பதாதிகள்தான் இருந்தது. 1சாமு 4[10] 15[4]. **சேனை காண்க.**

2. காலாட்கள் = சேவகர். *Footmen.* எண் 11[1] 1சாமு 1[10] 2சாமு 20[4] 1இரா 1[5] எரே 12[5].

**காலாள். Galal.** இரண்டு லேவியர்கள். 1 நாளா $9^{15}$ நெகே $11^{17}$.

**காலீம். Callim.** [குவியல்கள்]. எருச லேமுக்குச் சமீபமான ஒரு ஊர். 1 சாமு $25^{44}$ ஏசா $10^{30}$.

**காலேப். Caleb.** [நாய்]. இவன் இஸ் ரவேலர் யேகோவாவுக்குக் கீழ்ப்படிதலுள்ள வர்களாகும்படி அவர்களைப் பக்குவப்படுத்து வதில் தைரியஸ்தனாயிருந்தான். வேவுகாரர் களில் இவனும் யோசுவாவும் உண்மையுள் ளவர்கள். இவனுடைய சந்ததியார்கள் எபி ரோனைப் பிடித்தவர்கள். கடைசியாய் இவ னுடைய கோத்திரம் யூத கோத்திரத்தைச் சேர்ந்தது. எண் $13^{6}$ $14^{6, 24}$ உபா $1^{36}$ யோசு $14^{13}$ 1 சாமு $30^{14}$ 1 நாளா $2^{42}$.

**காவலாளர், சாமக்காரர். Watchmen.** பலெஸ்தீனா தேசத்திலுள்ள ஊர்களில் காவற் காரர் இராமுழுவதும் திரிவார்கள். உன். பா $3^{3}$ ஏசா $62^{6}$.

**காவலிலுள்ள ஆவிகள். 'The Spirits in the prison.'** 1 பேது $3^{19}$. **ஆதேஸ்** காண்க.

**காவல். Prison.** ஆதியிலே எகிப்தியர் குற்றவாளிகளை அடைப்பதற்காகச் சிறைச் சாலைகள் கட்டினார்கள். ஆதி $39^{20}$ $40^{3}$. யோசேப்பை அவன் சகோதரர் தண்ணீரற்ற ஆழமான துரவில் போட்டார்கள். ஆதி $37^{24}$. அதேமாதிரியான காவற்கிடங்குகள் அல் லது குழிகள் பல இருந்தன. யாத் $19^{29}$ எரே $37^{16}$ சகரி $9^{11}$.

எரே $37^{15, 16}$-ல் சொல்லியிருக்கும் காவற் கூடமும் சிம்சோன்போடப்பட்ட சிறைச்சா லையும் ஒன்றுதான். வேறுவிதமான காவல் அறைகளும் சிறைச்சாலைகளும் இருந்தன. மத் $14^{3}$ அப் $4^{3}$ $16^{24}$. சிறைச்சாலைகளில் தொழுமரங்க ளிருந்தன. அப் $16^{24}$ 2 நாளா $16^{10}$. அக்காலத்தில் சிறைச்சாலைகள் மிக வும் அசங்கியமாய் இருந்ததினால் கைதிகள் அநேகர் வியாதிப்பட்டு இறந்துபோனார்கள்.

**காவல் அறை. Prison. காவல்** காண்க.

**காவல்காரர். Watchmen. சேவகன்** காண்க.

**காவல் கிடங்கு. Prison. காவல்** காண்க.

**காவல் கூடம். Prison. காவல்** காண்க.

**காவல் வாசல். Gate of the guard. எருசலேம்** காண்க.

**காவற்காரர். Watchmen. காவலாளர்** காண்க.

**காளவாய். 'Furnace.'** 'இருப்புக் காள வாய்.' உபா $4^{20}$ 1 இரா $8^{51}$ எரே $11^{4}$.

**காளை. Calf. கன்று** காண்க.

**காற்பங்கு தேசாதிபதி. Tetrarch.** முற் காலத்தில் ஒரு பெரிய ராஜ்யத்தை நாலு பாகமாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திற்கு அதிகாரியாயிருப்பவன் 'காற்பங்கு தேசாதி பதி' என்று சொல்லப்படுவான். ரோமர் கள் இப்பெயரைச் சிற்றரசருக்குப் பொது வாய்ச் சொல்லுவார்கள். லூக் $3^{1}$. **ஏரோது** காண்க.

**காற்று. Winds.** பலெஸ்தீனாவில் அடிக் கும் வாடைக் காற்று அதிகம் குளிர் உள்ளது. மேற்கிலிருக்கும் மத்தியதரைக் கடலிலி ருந்து வீசுங்காற்று ஈரமுள்ளது. கிழக்கே வனாந்தரத்திலிருந்து மண் தூசி வாரி யிறைத்து வீசுங் கொண்டல்காற்று வெப் பமுள்ளது. தெற்கிலிருந்து வருங்காற்று அதிகம் காங்கை உள்ளது. உன். பா $4^{16}$ யோபு $37^{9}$ ஓசி $13^{15}$ 1 இரா $18^{44}$ எசே $17^{10}$ சங் $103^{16}$ லூக் $12^{54, 55}$. **சுழல்காற்று** காண்க.

'யூரோக்கிலிதோன்' என்று சொல்லப் படும் காற்று மத்தியதரைக் கடலின் கிழக் குப் பாகத்தில் மோதியடிக்கும் கடும் புயல். அப் $27^{14}$.

**கானா.** 1. = **Cana.** இயேசு முதல் அற்பு தம் செய்த கலிலேயா நாட்டிலுள்ள நாச ரேத்துக்குச் சமீபமாயுள்ள ஒரு ஊர். யோவா $2^{1}$ $4^{46}$ $21^{2}$.

2. = **Kana.** எப்பிராயீமில் ஒரு சிற்றாறு. யோசு $17^{9}$.

3. ஆசேரில் ஒரு ஊர். யோசு $19^{28}$.

**கானானிய ஸ்திரீ. Canaanite woman. சீரோபேனிக்கேயா** காண்க.

**கானானியர். Cananites.** இஸ்ரவேலர் பலெஸ்தீனாவுக்கு வருமுன் அதின் தென்பா கத்தில் மத்தியதரைக் கடலோரத்தில் வசித்த சேமியர். ஆதி $24^{3}$ யாத் $3^{17}$ எண் $13^{29}$ $14^{43}$. இவர்கள் பாஷைக்கும் எமோரியர் எபிரெயர் பாஷைக்கும் அவ்வளவு வித்தியா சம் இல்லை. பெலிஸ்தியர்கள் இவர்களின் கடலோரத்திலுள்ள ஊர்களைப் பிடித்தார் கள். பிற்காலத்தில் இவர்கள் பலவிடங்களி லும் வியாபாரம் செய்வதில் முயற்சியுள்ளவர் களாயிருந்ததினால் 'கானானியன்' என்பது 'வியாபாரி' என்பதைக் குறித்தது. ஏசா $23^{8}$ செப் $1^{11}$ எசே $17^{4}$ நீதி $31^{24}$.

**கானானியன். Cananaean.** இயேசுவின் சீஷர்களில் சீமோன் என்பவனுக்கு இது மறுபெயர். மத் $10^{4}$ மாற் $3^{18}$. இதின் மூலார்த்தம் 'எரிச்சல் உள்ளவன்.' ஆதலால்

இவனுக்கு லூக்கா 'எரிச்சல் உள்ளவன்' என்னும் அர்த்தம்கொள்ளும் கிரேக்கபதமாகிய 'செலோத்தே' என்று சொல்லியிருக்கிறான். லூக் $6^{15}$ அப் $1^{13}$. செலோத்தியர் கி-பி. 6-வருஷத்தில் ரோமர் அதிகாரிகளைத் துரத்தி மேசியாவின் ராஜ்யத்தை ஸ்தாபிக்கும்படி கலகம் செய்தார்கள். ரோமர் எருசலேமை முற்றுகை போட்டபோது இவர்கள் மகாவைராக்கியத்தோடு சண்டை போட்டார்கள். ஒருவேளை சீமோன் கிறிஸ்தவனாகுமுன் இந்தக் கொள்கை உடையவனாய் இருந்திருக்கலாம்.

**கானான்.** **Canaan.** காம் காண்க.

**கானான், பலெஸ்தீனா, பரிசுத்தபூமி Canaan, Palestine, The Holy Land.**

1. கானான் என்றால் எப்பொழுதும் அதே நீளம் அகலமுள்ளதாய் இருக்கும் தேசத்தைக் குறிக்கிறதில்லை. வழக்கமாய்ப் பழைய ஏற்பாட்டை எழுதினவர்கள் இது தாணிலிருந்து பெயெர்செபா மட்டுமுள்ள தேசம் என்று சொன்னார்கள். இதின் எல்லைகள் வடக்கே லீபனோன் மலை, தெற்கே 'எகிப்து நதி,' கிழக்கே பாசான் தேசம், மேற்கே மத்தியதரைக்கடல். ஆனால் அநேக காலம் மத்தியதரைக் கடலோரத்திலுள்ள பெலிஸ்தியர் தேசம் இதோடு சேர்ந்ததாய் இருக்கவில்லை. இது வடக்கேயிருந்து தெற்கே ஏறக்குறைய 120 மைல். ரோமர்கள் கானானுக்கு 'பலெஸ்தீனா' என்று பெயரிட்டார்கள். இதின் அர்த்தமாவது, பெலிஸ்தியருடைய நாடு. பலெஸ்தீனா என்னும் பெயர் வேதத்தில் இல்லை. யூதர்கள் இந்தப் பெயரைச் சொல்லாமல் கானான் என்னும் பெயரைச் சொல்லிவந்தார்கள். அவர்கள் வழங்[illegible]படி கானானை பலெஸ்தீனாவின் தென் மேற்குப் பாகத்தைக் குறிக்கிறது. இயேசு கிறிஸ்து பலெஸ்தீனாவில் எங்கும் போய்த் திரிந்ததினாலே பிற்காலத்தில் இதற்குப் 'பரிசுத்த பூமி' என்று பெயர் வந்தது.

2. கானானில் மலை நாடுகள் அதிகம். மலைகளிலிருந்து ஆழமான பள்ளத்தாக்குகளில் மழைகாலத்தில் பாய்கிற சிற்றாறுகள் அநேகம். வடக்கிலிருந்து கலிலேயாக் கடலின் வழியாய்ச் சாக்கடல்வரையும் பாயும் யோர்தான் நதி விழுகிற பள்ளத்தாக்கு மிகவும் ஆழமுள்ளது. லீபனோன் கர்மேல் எர்மோன் இவைகள் கானானிலுள்ள முக்கிய மலைகள். கர்மேல் மலையடிவாரத்திலிருந்து மத்தியதரைக் கடலோரமாய் இருக்கும் சமவெளி மிகவும் செழிப்புள்ளது. மற்றப் பாகங்களில் நஞ்சை விளையும் நிலங்கள் அவ்வளவு கிடையாது.

3. இத்தேசத்திலுள்ள ஆறுகள் பள்ளத்தாக்குகளில் விழுந்து ஓடுகிறதினால் ஜனங்கள் இவைகளிலிருந்து உதவிபெறாமல் மழைகாலத்தில் பெரிய கிணறுகள், குளங்கள், தொட்டிகள் கட்டி அவைகளிலுள்ள தண்ணீரை வயல்களுக்குப் பாய்ச்சுவார்கள். அல்லது மலைச்சாரலிலிருந்து ஊறும் நீரூற்றுக்களில் தண்ணீர் எடுப்பார்கள். விசேஷமாய் யூதேயாவில் தண்ணீர் அற்ற வனாந்தரங்கள் உண்டு. கானான் பெரும்பாலும் உஷ்ண தேசமாயிராவிட்டாலும் சாக்கடலின் பள்ளத்தாக்கிலுள்ள எரிகோ முதலிய ஊர்கள் உஷ்ணமான இடங்கள். அக்டோபர் மாசம் முதல் மார்ச் மாசம் வரையும் மழை பெய்யும். மற்ற மாசங்களில் மழை பெய்வது அபூர்வம்.

4. இத்தேசத்தில் கோதுமை, பயறு, கடலை, திராட்சச்செடி, பருத்தி, கத்தரி முதலியவை உண்டாகும். இங்கே நரி, ஓநாய், பலவிதமான மான், பன்றி, முயல், காட்டுப்பூனை, ஒட்டகம், எருமை, மாடு, ஆடு, கழுதை, நாய், கழுகு, கௌதாரி, புறா, கொக்கு, கோழி முதலியவைகள் உண்டு. சிங்கம் முற்காலத்தில் இருந்தது. ஆனால் தற்காலத்தில் இல்லை. பாம்பு பல்லிகள் அதிகம்.

5. கிறிஸ்துவின் பிறப்புக்கு 3000 வருஷத்துக்கு முன் கானான் தேசம் பாபிலோனியரின் அதிகாரத்துக்குள் இருந்தது என்பதைத் தவிர அதைப்பற்றி வேறொன்றும் தெரியாது.

ஏறக்குறைய கி-மு. 3000-வருஷத்தில் கானான் தேசத்திலுள்ள மலைக்கெபிகளுள் வாசம்பண்ணினவர்கள் பலர் இருந்தார்கள். ஓரியர் என்னப்படுகிறவர்கள் இவர்கள் தான். ஆதி $14^{6}$

ஏறக்குறைய கி-மு 2500-வருஷத்தில் சேமியர் இத்தேசத்தில் குடியேறினார்கள். இவர்கள் வேதத்தில் சொல்லியிருக்கும் கானானியர் அல்லது எம்மோரியர். இவர்கள் பாபிலோனியரின் அதிகாரத்துக்குள் இருந்தார்களோ இல்லையோ என்பது சந்தேகம். ஆதி $14^{15}$.

கி-மு. 1500-வருஷத்தில் இஸ்ரவேலர் எகிப்தை விட்டுப் போனபோது கானான் எகிப்தியரின் ஆளுகையின்கீழ் இருந்தது. இஸ்ரவேலர் முதலில் கானான் தேசத்தின் சில பாகங்களைமாத்திரம் பிடித்தார்கள். பெலிஸ்தியர் அநேககாலம் அவர்கள் ஆளுகைக் குட்பட்டவர்களாய் இருக்கவில்லை.

6. எபிரெயர்கள் கானான் தேசத்தைப் பன்னிரண்டு கோத்திரங்களுக்குப் பிரித்துக்கொ



எருசலேமில் எசேக்கியா வெட்டின குளம்.

டுத்தார்கள். கி-மு. 937-௵ முதல் இதை இஸ்ரவேல், யூதா என்னும் ராஜ்யங்களாகப் பிரித்ததினால் அதற்குப் பிறகு கோத்திரங்களின் எல்லைகளைப்பற்றி முக்கியமாய் ஒன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை. இயேசுவின் காலத்தில் யோர்தான் நதிக்கு மேற்கேயுள்ள பாகம் வடக்கே கலிலேயா, மத்தியில் சமாரியா, தெற்கே யூதேயா என்னும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இஸ்ரவேல் காண்க.

# கி.

**கிச்சிலி**. **Orange.** உன். பா $2^5$ $7^8$.

**கிஸ்பா**. **Gishpa.** நெகே $11^{21}$.

**கிஸ்லேயு**. **காலம்** காண்க.

**கிஸ்லோத்-தாபோர்**. **Chisloth-Tabor.** = கெசுல்லோத். நாசரேத் ஊருக்குச் சமீபமாய் உள்ள ஒரு ஊர். யோசு $19^{12.\ 18}$.

**கிஸ்லோன்**. **Chislon.** [பலம்]. எண் $34^{21}$.

**கிஷி**. **Kishi.** = குஷாயா. 1 நாளா $6^{44}$ $15^{17}$.

**கிஷியோன்**. **Kishion.** இசக்காரில் லேவியரின் ஊர். ஒருவேளை இதற்கு மறுபெயர் கேதேஸ். யோசு $19^{20}$ 1 நாளா $6^{72}$.

**கிடங்கு**. **Chamber.** **வீடு** காண்க.

**கிடாரி**. **Heifer.** **செங்கிடாரி, பலி** காண்க.

**கிடை, மந்தை**. **Fold.** நரி ஓநாய் முதலியவை ஏறக்கூடாத உயரத்துக்குக் கற்களடுக்கி நாலுபக்கமும் சுவர்கள் எழுப்பி அங்கே ஆடுமாடுகளைப் பலெஸ்தீனாவிலுள்ள மேய்ப்பர்கள் இராத்திரியில் அடைப்பார்கள். ஆபகூக் $3^{17}$ யோவா $10^{16}$. **தொழுவம்** காண்க.

**கிணறு, குளம், துரவு, தொட்டி**. **Well, Pool, Cistern.** பலெஸ்தீனா தேசத்தில் ஆறுகள் பள்ளத்தாக்கில் பாய்கிறதினாலும், உஷ்ணகாலத்தில் சுத்தமான தண்ணீர் பாயாததினாலும் அத்தேசத்து ஜனங்கள் வழக்கமாய்க் கிணறு, குளம், தொட்டி முதலியவை கட்டுவார்கள். ஆதி $26^{15.\ 32}$ 2 இரா $18^{31}$. அவர்கள் கிணறுகளைத் தூர்த்துப்போட்டால் தண்ணீர்ப் பஞ்சத்தினால் அத்தேசத்துக்குப் படையெடுத்து வருகிறவர்கள் அரிது. 2 இரா $3^{19}$ 2 நாளா $32^3$. மழைகாலத்தில் மேற்கூரையிலிருந்து தண்ணீர் விழும்படி ஒவ்வொரு வீட்டிலும் தொட்டிகள், சில இடங்களில் மலைக்குள்ளே தண்ணீர் அறைகள் துரவுகள் குளங்கள் கட்டுவார்கள். 2 சாமு $2^{13}$ $4^{12}$ 2 இரா $18^{17}$ யோவா $5^2$ $9^7$. எருசலேம் பட்டணத்தில் இம்மாதிரியான கிணறுகளுக்கும் தொட்டிகளுக்கும் கணக்கில்லை. ஒவ்வொரு தண்ணீர்த்தொட்டி அல்லது துரவுக்கும் மூடிவைப்பது கட்டாயப் பிரமாணம். யாத் $22^{33}$. சில சமயங்களில் வற்றிப்போன இந்தமாதிரியான குழிகளைக் காவற் கிடங்காக உபயோகிப்பார்கள். ஆதி $37^{20}$ எரே $38^6$. ஊற்றிலிருந்து வரும் 'ஜீவதண்ணீர்' துரவிலிருக்கும் தண்ணீரைப் பார்க்கிலும் மேலானது என்று சொல்லுவார்கள். எரே $2^{13}$ சக $14^8$ ஆதி $24^{13.\ 30}$ $29^8$ யாத் $2^{16}$.

**கிண்ணம்**. **Pot.** நியா $6^{38}$ மாற் $7^{4.\ 8}$.

**கிண்ணி**. **Bason.** யாத் $27^3$. 'ராஜாக்களின் கிண்ணி.' நியா $5^{25}$.

**கிதியோன்**. **Gideon.** ['வெட்டுகிறவன்' என்று அர்த்தம் இருக்கலாம்]. இவன் மறுபெயர்கள்: யெருபாகால் (நியா $6^{32}$), எருப்பேசேத் (2 சாமு $11^{21}$). இவனுடைய சரித்திரம் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. நியா $6^1$-$8^{35}$. இவன்காலத்தில் இஸ்ரவேலர் பாகால் தேவதையை வணங்கினார்கள். இவனே யேகோவாவின் வணக்கத்தை ஸ்தாபிக்கும்பொருட்டு அதிக முயற்சி செய்தான். ஆனால் இவன்தான் இஸ்ரவேலருக்கு ராஜாவாக விரும்பாமல் அவர்களிடமிருந்து பொன்னாபரணங்கள் முதலியவற்றை யெடுத்து 'ஏபோத்து' என்னும் ஒரு மாதிரியான விக்கிரகத்தை உண்டுபண்ணினான். நியா $8^{27}$.

**கித்காத்**. **Hor-Haggidgad.** [செபியுள்ள மலை]. எண் $33^{32}$.

**கித்நா ஏபேர்**. **Gith-Hepher.** **காத்** காண்க.

**கித்தாயீம்**. **Gittaim.** ராமாவுக்குச் சமீபமாயுள்ள ஒரு ஊர். 2 சாமு $4^3$ நெகே $13^{33}$.

**கித்தியன்**. **Githite.** காத் ஊரான். **காத்** காண்க.

**கித்தீத்**. **Gittith.** சங் 8, 81, 84 தலைப்பு. இப்பதம் ஒருவிதமான கீதவாத்தியத்தை அல்லது ராகத்தைக் குறிக்கிறது.

**கித்தீம்**. **Kittim, Cyprus.** மத்தியதரைக் கடலிலுள்ள சீப்புருதீவு. எசே $27^6$ அப் $11^{19}$ $13^4$. இப்பதம் அங்கேயுள்ள பூர்வ ஜனங்களைக் குறிக்கிறது. ஆதி $10^4$. இந்தப் பதம் ரோமர்களைக் குறிக்கலாம். தானி $11^{30}$. இந்தத் தீவிலே காடுகளும் செம்பு லோகமும் அதிகமாய் இருந்தன. இதில் சீரியர் வணங்கின அஸ்தரோத் என்னும் தேவதைக்குத் தூர்க்கமவிஷயமாய்ப் பணிவிடை செய்துவந்தார்கள். பர்னபாவும் மினாசோனும் இத்தீவிற் பிறந்தவர்கள். அப் $4^{36}$ $21^{16}$. பர்னபாவும் பவுலும் இங்கே சுற்றித் திரிந்து இயேசுகிறிஸ்துவைப்பற்றிப் போதித்தார்கள். இது ரோம ராஜ்யத்தில் ஒரு நாடு.

**கித்ரோன்**. **Kitron.** நியா $1^{30}$.

**கிபலி, கிப்லி**. **Gebal.** பெனிக்கேயாவில் ஒரு ஊர். யோசு $13^5$ 1 இரா $5^{18}$ எசே $27^9$. **கேபால்** காண்க.

**கிபார்**. **Gibbar.** எஸ்று $2^{20}$.

**கிபியா**. **Gibiah.** [மலை]. கேபா என்னும் ஊருக்குச் சமீபமாயுள்ள இரண்டு

இடங்களுக்கு இந்தப் பெயர் சொல்லப்பட்டது.

1. யூதாவின் மலைநாட்டிலுள்ள கிபியா. யோசு $15^{57}$.

2. பென்யமீனிலிருக்கும் கிபியா. நியா $19^{12}$ $20^{33}$ 1 சாமு $11^{4}$ ஏசா $10^{29}$.

**கிபியோன்.** Gibeon. [உயர்வான இடம்]. எருசலேம் பட்டணத்துக்கு வடக்கே பெரிய பூர்வீக பட்டணம். பென்யமீன் கோத்திரத்தில் லேவியரின் ஊர். இங்கே நீரூற்றுகள் அநேகம். 2 சாமு $2^{12}$ $20^{8}$ $21^{2}$ யோசு $9^{3}$ $10^{1}$ $18^{25}$ 1 இரா $3^{4}$ எரே $41^{12}$ நெகே $7^{25}$.

**கிபெத்தோன்.** Gibbethon. [மேடு]. தாணில் லேவியரின் ஒரு ஊர். யோசு $19^{44}$ 1 இரா $15^{27}$ $16^{15}$.

**கிப்சாயீம்.** Kibzaim. = யோக்மேயாம். யோசு $21^{22}$ 1 நாளா $6^{68}$.

**கிப்ரோத்–அத்தாவா.** Kibroth, Hattava. [காமத்தின் பிரேதக்குழி]. எண் $11^{34}$ $33^{16}$.

**கிப்லி, கிபலி** காண்க.

**கிமேல்.** Gimel. எபிரெய பாஷையின் மூன்றும் அட்சரம். சங் $119^{17}$.

**கிம்காம்.** Chimham. இவன் கட்டின சத்திரத்துக்குக் கிம்காம் பேட்டை என்று பெயர். 2 சாமு $19^{37}$ எரே $41^{17}$.

**கிம்சோ.** Gimzo. 2 நாளா $28^{18}$.

**கியூன்.** Chiun. ஆமோ $5^{26}$-ல் சொல்லியிருக்கும் 'கியூன்' என்னும் 'நக்ஷத்திர ராசி' அசீரியர் வணங்கிவந்த சனி தேவதையைக் குறிக்கிறது. இதுவும் 'சிக்குத்தும்' ஒன்றுதான். **சப்பாம்** காண்க.

**கிரகங்கள்.** Planets. **நட்சத்திரம்** காண்க.

**கிரயம்.** Price. 1 இரா $10^{28}$ யோபு $28^{15}$ ஏசா $55^{1}$ மத் $27^{6}$ அப் $5^{2}$ 1 கொரி $6^{20}$ $7^{23}$.

**கிரகணம்.** Eclipse. யோவே $2^{31}$ வெளி $6^{12}$. **சூரியன்** காண்க.

**கிராரேசேத்.** Kir Hareseth. மோவாப் நாட்டிலுள்ள ஒரு பெரிய கோட்டை. ஏசா $16^{7}$ 2 இரா $3^{25}$.

= கீராரேஸ். எரே $48^{31}$.

**கிரியைகள்.** Works.

1. ஜீவனத்துக்கடுத்த வேலைகள். யாத் $20^{9}$ $31^{15}$ உபா $5^{13}$.

2. நன்மை தீமைக்கேதுவான செய்கைகள். பிர $12^{14}$ யோபு $34^{25}$ நீதி $16^{3}$ ஏசா $29^{15}$ $41^{29}$ யோஹ $3^{10}$ மத் $5^{16}$ யோவா $4^{34}$ 2 தீமோ $1^{9}$.

3. சிருஷ்டிப்பு. ஆதி $2^{2}$ யோபு $34^{19}$.

4. பராமரிப்பு. யோவா $5^{17}$.

5. அற்புதம். யோவா $6^{28}$ $7^{21}$ $10^{32}$.

6. ஆக்கினை. ஏசா $5^{19}$ $28^{21}$.

7. இரட்சிப்பின் கிரியை திரியேக தேவனுடையதாயிருக்கிறது. 1 பேது $1^{2}$ யோவா $6^{29}$ $9^{4}$ ரோ $3^{20. 24. 28}$.

8. மனதினாலும் செய்கையினாலும் தேவனுக்கும் மனிதருக்கும் செலுத்தவேண்டுமென்று வேதத்திற் சொல்லியிருக்கிற கட்டளைகளைப் பரிசுத்த இருதயத்தோடு தேவனிடத்தில் அன்புகூர்ந்து அவருடைய சித்தத்திற் குட்பட்டு அவருடைய மகிமையை நோக்கி விசுவாசத்தோடே செய்யப்படுவதே நற்கிரியைகள் என்னப்படும். 1 கொரி $10^{31}$ எபே $2^{10}$.

ஒரு மனிதன் கிரியைகளினாலும் (யாக் $2^{24}$), மனிதர்களுக்கு முன்பாகத் தான் விசுவாசமுள்ளவனென்று ரூபகரிக்கவேண்டும். யாக் $2^{18}$.

9. கிறிஸ்துவினுடைய நீதி அல்லது புண்ணியம் தீயோரை நீதிமான்களாக்குகிறதற்குக் காரணம். கலா $2^{16}$. நற்கிரியைகள் அதின் காரியமாயிருக்கிறது. எபி $10^{24}$ யோவா $6^{29}$ $9^{4}$ 1 கொரி $3^{13. 14}$ ரோ $4^{6}$ $9^{11}$ $11^{6}$ எபே $2^{9}$ 2 தீமோ $1^{9}$.



கிரீடம்.

**கிரீடம், முடி.** Crown.

**I. பழைய ஏற்பாட்டில்:**—கிரீடம், முடி இவைகள் மூல பாஷையில் மூன்று பதங்களைக் கொண்டிருக்கிறது.

1. ஆசாரியர்கள் ராஜாக்கள் தாங்கள் அபிஷேகம் பெற்றதைக் குறிக்கும்படி முதலில் தலையைச்சுற்றி நாடாக் கட்டுவார்கள். பிரதான ஆசாரியன் நாடாவினால் நெற்றி

யில் பொற்றகடு கட்டுவான். 2 சாமு 1[10] 2 இரா 11[12] யாத் 29[6] 39[30].

2. அலங்காரத்துக்காகப் பெர்சியா ராஜாக்கள் தலைப்பாகை தரிப்பார்கள். எஸ்தர் 1[11] 2[17].

3. யூத ராஜாக்களும் அந்நிய ராஜாக்களும் விருந்தாளிகளும் மாலை அல்லது முடி சூடுவார்கள். 2 சாமு 12[30] 1 நாளா 20[2] ஏசா 28[1]. 'கிரீடம்' பல வசனங்களில் உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. நீதி 12[4] ஏசா 28[5].

II. **புதிய ஏற்பாட்டில்:**—கிரேக்க பாஷையில் வித்தியாசமான கிரீடத்தைக் குறிக்கும் இரண்டு பதங்கள் தமிழில் பொதுவாய்க் 'கிரீடம்' என மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.

1. *Stephanos.* ஸ்தெபனோஸ். இது பொன்னினால் செய்ததுமல்ல, ராஜத்துவத்துக்காகப் போடப்படுகிறதுமல்ல. இது கிரேக்கர்களும் ரோமர்களும் பந்தயங்களிலும் யுத்தங்களிலும் வெற்றியடைந்தவர்களுக்கு ஜெயசின்னமாய்ப் போடும் இலைகளினால் செய்த மாலை. 1 கொரி 9[25] 2 தீமோ 2[5] 4[8]. 'ஜீவகிரீடம்.' யாக் 1[12] வெளி 2[10]. 'வாடாத கிரீடம்.' 1 பேது 5[4]. இப்பதம் இயேசுவின் தலைமேல் போட்ட முள்முடி அல்லது முட்கிரீடத்தைக் குறிக்கிறது. மத் 27[29]. இது அடிக்கடி உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. பிலி 4[1] 1 தெச 2[19] வெளி 4[4] 9[7] 14[14].

2. *Diadema.* டியாதேமா. ராஜத்துவத்தைக் குறிக்கும் இக்கிரீடம் மூன்று இடங்களில்மாத்திரம் சொல்லியிருக்கிறது. வெளி 12[3] 13[1] 19[12].

**கிருபாசனம்.** Mercy seat. **ஆசனம், கூடாரம்** காண்க.

**கிருபாதாரபலி.** Propitiation.

I. **பழைய ஏற்பாட்டில்:** — பாவநிவிர்த்திக்காக ஒருவன் பாவியினிமித்தம் யேகோவாவினிடத்தில் பரிந்து பேசவேண்டும். நியாயப்பிரமாண ஆசாரத்தின்படி இவ்விதமாய்ப் பரிந்து பேசுகிறவன் ஆசாரியன். இவன் பாவிக்காகச் செய்யும் பலியினால் கடவுள் கோபம் நீங்கி, பாவியின்மீது கிருபையைக் காட்டுகிறவராவார். எபிரெயர்கள் தகனபலி, குற்ற நிவாரணபலி, பாவநிவாரணபலி ஆகிய இவைகளை இந்த நோக்கத்துடன் செலுத்தினார்கள். லேவி 4[35] ௵ 6[30] யாத் 32[30] எண் 25[13]. இதின்படி பாவநிவாரண நாளில் பிரதான ஆசாரியன் தேவாலயத்தின் மகா பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசித்து அங்கே கிருபாசனத்தின்மேல் பலியாய்ச் செலுத்தின காளையின் இரத்தத்தைத் தெளிப்பான். லேவி 16[14].

II. **புதிய ஏற்பாட்டில்:** — பழைய ஏற்பாட்டில் சொல்லியவைகளினால் புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் 'கிருபாதாரபலி' என்பதின் அர்த்தம் தெளிவாகும். ரோ 3[25] 1 யோவா 2[2] 4[10]. பரி. பவுல் சொல்லுகிறதின்படி கிறிஸ்துவின் இரத்தம் கிருபாதாரபலி என்றும்; அதினால்மாத்திரம் பாவம் நிவாரணமாகும் என்றும்; அதினாலே பூர்வீகத்தார் செய்த பாவம் மன்னிக்கப்படும் என்றும்; விசுவாசத்தினாலே அதின் பலனை அடைவோம் என்றும்; அப்பலனைப் பெற்றவர்கள் தேவநீதியை யடைந்து, முழுவதும் நீதிமான்களா யிருக்கிறார்கள் என்றும் நாம் அறிந்துகொள்ளலாம்.

**கிருபை.** Grace.

I. பழைய ஏற்பாட்டில் கிருபை என்னும் பதத்திற்கு மூலார்த்தம் 'தயவு.' ஆதி 6[8] 39[4]. ஆனால் சில வசனங்களில் 'அலங்காரம்' 'அழகு' 'சௌந்தரியம்' என்று அர்த்தமாம். நீதி 3[22] 4[9] 31[30] சங் 45[2]. யேகோவா பாவிகள்மேற் 'கிருபையுள்ளவர்' அதாவது தயவு காட்டுகிறவர். யாத் 33[19] 34[6] யோவே 2[13].

II. புதிய ஏற்பாட்டில் 'கிருபை' என்னும் கிரேக்க பதத்திற்கு மூலார்த்தம் 'சந்தோஷத்துக்கு ஏதுவானது' என்பதாம். கிறிஸ்தவமார்க்கம் முதலிலிருந்து கிருபையைக் குறித்து முக்கியமாய்ப் போதித்தது.

பரி. பவுல் அதைப்பற்றி விபரமாய்ச் சொல்லியிருக்கிறான். கிருபையானது மனுஷரை இரட்சிக்கும்படி தேவனை ஏவுகிற மூலகாரணம். கிருபாதாரமூர்த்தியாகிய கிறிஸ்துவின் மூலமாய் இது உண்டானது. இதினால் நாம் தேவனோடு ஒப்புரவாகி இயேசுவின் மூலமாய்ப் புது ஜென்மம் அடைந்தவர்களாய் இருக்கிறோம். யோவா 1[17] அப் 11[23] 13[43] தீத் 2[11] ரோ 5[1] 6[23] 1 கொரி 15[9] 1 தீமோ 1[16]. கிருபை பாவத்துக்கு நேர் விரோதமானது. கடவுள் பாவியினிடத்திலுள்ள பாவத்தை வெறுத்தும் அவன் பாவத்தை நீக்குவதற்குக் கிருபையுள்ளவராய் இருக்கிறார். ரோ 5[20] 6[1] 7[7]–8[4].

ஒருவன் இயேசுவின்மேல் விசுவாசம் உள்ளவனாய் இருந்தால் அவருடைய கிருபை அவனை இரட்சிக்கிறதற்கு ஏதுவாயிருக்கிறது. எபே 2[8] தீத் 2[11].

கிருபையினாலுண்டாகும் இரட்சிப்பு கடனாக அல்ல இலவசமாகக் கொடுக்கப்படுகிறது. ரோ 3[24]. இயேசுகிறிஸ்து கடவு

ளின் கிருபையைப் பூரணமாய்க் காட்டி அதை மனுஷர் யாவருக்கும் பூரணமாய்க் கொடுக்க விரும்புகிறார். 2 கொரி 13[14] 2 தெச 1[11] யோவா 1[14]. கிருபை அடைந்தவர்கள் பாவத்திலிருந்து மீட்கப்பட்டுச் சந்தோஷம் நிறைந்த நிலைமையில் இருப்பார்கள். ரோ 5[2] 2 தீமோ 2[1].

**கிரெஸ்கே.** **Crescens.** பவுல் கடைசியாய்ச் சிறைச்சாலையிலிருந்தபோது அவனுக்கு உதவிசெய்த தோழன். 2 தீமோ 4[10].

**கிரேக்க சத்திய வேதம். Septuagint.** கிறிஸ்துவுக்குமுன் தூரதேசங்களிலுள்ளவர்கள் யூதமார்க்கத்துக்கு வந்து தங்களுக்குத் தெரிந்ததாயிருந்த கிரேக்கபாஷையில் எபிரெய வேதாகமத்தை நாலைந்துமுறை மொழிபெயர்த்தார்கள். மேலும் அதோடே கிரேக்கபாஷையில் எழுதின அப்போகிரிப்பாவிலுள்ள புஸ்தகங்களை அதிலே சேர்த்தார்கள். அந்த மொழிபெயர்ப்புகளில், கி-மு. 285-150-வருஷத்துக்குள் அலெக்சந்திரியா பட்டணத்தில் எழுதின மொழிபெயர்ப்பு முக்கியமானது. எழுபத்திரண்டு சாஸ்திரிகள் ஒரு தீவிலே கூடிவந்து எழுபத்திரண்டு நாட்களில் அந்த மொழிபெயர்ப்பை முடித்தார்கள் என்னும் பாரம்பரியத்தைக்கொண்டு அதற்கு 'எழுபது' என்று அர்த்தமுள்ள 'செப்துவகிந்த்' (*Septuagint*) என லத்தீன் பெயர் கொடுக்கப்பட்டது.

**கிரேக்க சபை. The Orthodox Greek Church.** கிரேக்க தேசம் ரோமருடைய ராஜாக்களுக் குட்பட்டிருக்கையில் கிறிஸ்துநாதர் யூதேயா தேசத்தில் பிறந்து உலகத்தாருக்கு ரட்சிப்பு உண்டுபண்ணினதும் அல்லாமல், அவரால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலர்கள் கிரேக்கதேசத்திலும் வந்து பிலிப்பி, தெசலோனிக்கே, அத்தேனே, கொரிந்து முதலான பட்டணங்களில் கிறிஸ்து சபைகளை ஸ்தாபித்தார்கள். அதுமுதல் கிறிஸ்து மார்க்கம் மேன்மேலும் விஸ்தாரமாகி வருகையில் புறமதங்கள் குறைந்துபோகத் துவங்கின. விசேஷமாகக் கிறிஸ்து பிறந்து 328-வருஷத்திலே கிறிஸ்தவனான கொன்ஸ்தந்தீன் என்னும் ராஜா ரோம நகரியை விட்டுக் கிரேக்க தேசத்தைச்சார்ந்த பிசந்தியம் (*Byzantium*) என்னும் ஊருக்குப்போய் அங்கே அரண்மனைகளைக் கட்டி வாசம் பண்ணி ஆளுகைசெய்து வந்தபோது அந்த ஊர் கொன்ஸ்தந்தீன்புரி என்னப்பட்டுரோம ராஜாங்கத்திற்குத் தலைநகரியாயிற்று. அங்கே அவன் கிறிஸ்தவ மார்க்கத்தில் சேர்ந்து அதைத்தன் ராஜ்யத்தின் மார்க்கமாகஏற்படுத்தினான். கி-பி. 324. அவனுக்குப் பின்பு 337-வருஷத்திலே இரண்டாம் கொன்ஸ்தந்தீன் என்பவன் கிரேக்க தேசத்தையுங் கிழக்கிலேயிருக்கிற மற்றத் தேசங்களையும் ஆண்டு பார்ஸியரோடே யுத்தம்பண்ணி அவர்களை ஜெயித்து 361-வருஷத்திலே இறந்துபோனான். அப்போது அவனுடைய மகனாகிய யூலியானுஸ் என்பவன் சிம்மாசனமேறினான். அதுவரைக்கும் அவன் தன்னைக் கிறிஸ்தவனென்று சொல்லிக் கிறிஸ்தவமார்க்கத்தைப் பற்றிக்கொண்டு வந்தான். ராஜாவானவுடனே அவன் கிறிஸ்தவமார்க்கத்தை வெறுத்துப் பூர்வீக மார்க்கத்தை ஸ்தாபிக்கப் பல யத்தனங்களைச் செய்தான். 363-வருஷத்திலே அவன் பார்ஸியரோடே யுத்தஞ்செய்யப் போகையில் கொலை செய்யப்பட்டான். அதற்குப் பிறகு முந்தின மார்க்கங்களை ஒருவரும் அனுசரிக்கவில்லை. கிறிஸ்தவ சபைக்கு யூலியான் செய்த துன்பங்களைத் தவிர கோத்தர், உன்னர் முதலான அந்நிய ஜனங்கள் பல துன்பங்களைச் செய்தார்கள். அதுவுமல்லாமல் கிறிஸ்தவமார்க்கத்தை அணைத்துக்கொண்ட பல கல்விமான்களாலே சத்திய வசனம் பலவிதமாய்ப் புரட்டப்பட்டதினால் சபைக்குள்ளே மிகுந்த கலகம் உண்டானது. அவர்களில் ஆரியானுஸ் என்பவன் கிறிஸ்துவானவருடைய தேவ தத்துவத்தை மறுதலித்து அநேகரைத் தன் பக்ஷமாய்ச் சேர்த்துக்கொண்டான். அதினாலேயும், பலவிதமான மற்றப் புரட்டுதல்களினாலேயும், கிறிஸ்தவ சபையிலே அநேகம் பிரிவினைகளும் துர்நடக்கைகளும் உண்டாயின. அவைகளை அமர்த்தும்படிக்கு ராஜாக்கள் பிரதானமான போதகர்களைக் கூடிவரச்செய்து, தர்க்கிக்கப்பட்ட உபதேசங்களைக்குறித்து விசாரணை செய்யப்பண்ணிப் பின்பு தங்கள் இஷ்டத்தின்படி தீர்ப்பு செய்துவந்தார்கள். அப்படிப்பட்ட சங்கத்தார் நிசேயா ஊரிலேயும், கொன்ஸ்தந்தீன்புரியிலேயும், எபேசு பட்டணத்திலேயுங் கூடிவந்தார்கள். இவைகளினாலும் அமைதலுண்டாகவில்லை. மேலும் அக்காலத்திலே ரோமாபுரியிலிருந்த போதகன் மற்றப் போதகர்களிலும் தன்னை மேன்மைப்படுத்தத் தொடங்கினதினாலே மேற்குத் தேசங்களிலுள்ள ரோமாபுரியைச் சேர்ந்த சபைகளுக்கும், கிழக்குத் தேசங்களிலுள்ள கொன்ஸ்தந்தீன்புரியைச் சேர்ந்த சபைகளுக்கும் கசப்பான பகை உண்டானது. மேற்கிலுள்ள சபைகளுக்கு லத்தீன் சபை (*Latin church*) என்றும், கிழக்கிலுள்ள சபைகளுக்கு கிரேக்க சபை (*Greek church*) என்றும் பெயர்கள்.

கிரேக்க சபை போதிக்கிறதாவது:-ரோமாபுரியிலுள்ள பாப்புவானவர் திருச்சபைக்குத் தலையல்ல என்றும்; இராப்போஜனத்தில் பரிமாறும் அப்பமும் திராட்சப்பழரசமும் கிறிஸ்துவினுடைய சரீரமும் இரத்தமுமாக மாறுகிறதில்லை என்றும்; எல்லாச் சபையாருக்கும் பாத்திரத்திலிருக்கிற திராட்சப் பழ ரசத்தையும் கொடுக்கவேண்டும் என்றும்; உத்தரிக்கிற ஸ்தலம் இல்லை என்றும்; எல்லாரும் வேத புஸ்தகத்தைச் சுயபாஷையிலே வாசிக்கவேண்டும் என்றும்; குருமார் குருபட்டாபிஷேகம் பெறுவதற்குமுன் விவாகம் செய்யலாம், ஆனால் அவர்கள் அபிஷேகம்பெற்றபின் முதலாம் மனைவி இறந்தால் மறுபடியும் விவாகம் செய்யக்கூடாது என்றும்; பாவ நிவாரணத்தைக் கிரயத்துக்கு விற்பது ஆகாது என்றும்; பரிசுத்த ஆவியானவர் சுதனிடத்திலிருந்து அல்ல பிதாவினிடத்திலிருந்து புறப்படுகிறவரா யிருக்கிறார் என்றும் அது போதிக்கிறது.

**கிரேக்க தேசம். Greece.** ஐரோப்பாக் கண்டத்தைச் சேர்ந்த மத்தியதரைக் கடலில் நீண்டிருக்கும் ஒரு குடாநாடு. இது சின்ன ஆசியா இத்தாலியா நாடுகளிலிருந்து மத்திய தரைக் கடலினால் பிரிக்கப்பட்டிருக்கிறது. இதின் வடபாகத்தில் மலைகள் அதிகமாய் இருக்கிறதினால் அங்குள்ள ஜனங்கள் மற்றத் தேசத்தவர்களால் அநேக காலம் ஜெயிக்கப்படவில்லை. இது பல நாடுகளுள்ளது. இவைகளில் புதிய ஏற்பாட்டிற் சொல்லியவை: மக்கெதோனியா, அகாயா. பவுலின் காலத்தில் முக்கிய பட்டணங்கள்: கொரிந்து, அத்தேனே. அப் 20[2].

கி-மு. 500-ஆம்முதல் நூறு வருஷங்களாக கிரேக்கதேசம் அதிகம் சிறப்புற்றிருந்தது. அக்காலத்தில் இச்சிறு தேசத்தில் நியாய சாஸ்திரிகளும், தத்துவ சாஸ்திரிகளும், கவிஞரும் இயற்றின புஸ்தகங்களை இந்நாள்மட்டும் அதிக பிரியமாய் வாசித்துவருகிறோம். அக்காலத்தில் இத்தேசம் அடைந்திருந்த நாகரீகம் மற்றத் தேசத்தார்களால் அதிகம் மெச்சப்பட்டிருந்தது. அதற்குப் பிற்பாடு கி-மு. 336-323-ஆம் யுத்தத்திற் சமர்த்தனான பெரிய அலெக்சந்தர் கிரேக்க தேசம் துவங்கி வட இந்தியாமட்டும் படையெடுத்து வந்து பலவிடங்களை ஜெயித்துப் பாபிலோனைத் தன் ராஜ்யத்திற்கு முக்கிய பட்டணமாக ஸ்தாபித்து, சில வருஷம் எண்ணிறந்த கீர்த்திபெற்று அரசாண்டான். அவன் இறந்த பிறகு அவன் ஸ்தாபித்த இந்த மேலான ராஜ்யத்தை அவனுடைய சேனாபதிகள் தங்களுக்குள் பிரித்துக்கொண்டார்கள். இதற்குப் பிறகு கி-மு. 146-ஆம் ஆண்டில் ரோமர்கள் வந்து கிரேக்க தேசத்தைப் பிடித்து அதின் நாடுகளைத் தங்கள் ராஜ்யத்தோ டிணைத்தார்கள். ரோமர்கள் யுத்தத்தில் கிரேக்கர்களை ஜெயித்தும், கிரேக்கர்கள் நாகரீகத்திற் சிறந்தவர்களானதினால் இவர்களைத் தங்களுக்கு முன்மாதிரியாக வைத்து இவர்களின் கல்வி, பாஷையாதியவற்றை அதிக ஆவலோடு கற்றார்கள். இவைகளைக் கற்றுக்கொள்ள விரும்பினவர்கள் அத்தேனே கொரிந்து பட்டணங்களிலுள்ள சர்வகலாசாலைகளிற் படித்து வந்தார்கள்.

கிரேக்கர் பல மார்க்கங்களை அனுசரித்தார்கள். அவர்களில் தத்துவ ஞானிகள் என்று சொல்லப்பட்டவர்கள் சிலர் கடவுள் இல்லையென்றும், சிலர் சர்வமும் கடவுள் என்றும் கொள்கையுள்ளவர்களாயிருந்தார்கள். சாதாரண ஜனங்கள் பல தேவர் தேவிகளையல்லாமல் தேவதைகளையும் வணங்கினார்கள். கொரிந்திலும் இன்னும் பல தேவாலயங்களிலும் சீரியர்களைப்போல் அவர்கள் அதிக துன்மார்க்கமாய்ச் சீரியர் தொழுத அஸ்தரோத் போன்ற காமதேவியை வணங்கினதினால் பலருக்குத் துன்மார்க்கத்துக்கும் சன்மார்க்கத்துக்கும் வித்தியாசம் இன்னது என்று தெரியாதிருந்தது. இதினாலே கொரிந்துப்பட்டணத்திலுள்ள சபையாருக்கு இடறல் உண்டானது என்று பரி. பவுல் அச்சபைக்கு எழுதின நிருபத்தினால் அறிகிறோம். **அகாயா, அத்தேனே, அலெக்சந்திரியா, இரகசியம், எப்பிக்கூரர், கொரிந்து, ஸ்தோயிக்கர், தெசலோனிக்கா, பிலிப்பி,** மு. காண்க.

**கிரேக்க பாஷை. Greek Language.** இக்காலத்தில் இங்கிலீஷ்பாஷை பிரயாணிகளும் உத்தியோகஸ்தரும் பல நாடுகளிலும் பேசுகிறதினால் எப்படி அது பரம்பிவருகிறதோ, அப்படியே இயேசுவின் காலத்தில் பெர்சியா முதல் இத்தாலியா மட்டும் கிரேக்க பாஷை பரவினது. இதினிமித்தம் சுவிசேஷம் ரோம ராஜ்யமெங்கும் லேசாய்த் தெரியவந்தது. அப் 21[37] யோவா 19[20].

**கிரேக்கர்கள். Greeks.** புதிய ஏற்பாட்டில் 'கிரேக்கர்' என்னும் பதத்திற்கு மூன்று அர்த்தமுண்டு.

1. கிரேக்க தேசத்தார். அப் 16[1] 18[4] ரோ 1[14].

2. யூதர்கள் அல்லாதவர்கள். யோவா 12[20] ரோ 9[16] 10[12] கலா 3[28].

3. யூதமார்க்கத்தைச் சேர்ந்த கிரேக்க பாஷையைப் பேசுகிறவர்களாகிய அந்நியர். அப் 6[1] 9[29].

**கிரேத்தா.** **Crete.** ஒருவேளை இது கப்தோர். ஆமோ 9⁷. இது மத்தியதரைக் கடலில் கிரேக்க தேசத்துக்கு அறுபதுமைல் தெற்கே 150 மைல் நீளமாயுள்ள ஒரு பெரிய தீவு. கி-மு. 67-ஆம் வருஷத்தில் ரோமர்கள் இதை ஜெயித்தார்கள். இங்கே யூதமார்க்கத்தைச் சேர்ந்தவர்கள் அநேகர் இருந்தார்கள். அப் $2^{11}$ $27^{7}$. இந்தத் தேசத்தார் நற்கீர்த்தி பெற்றிராததற்குக் காரணம் தெரியாது. தீத் $1^{12}$. இங்குள்ள சபைக்குத் தீத்து கண்காணியாய் இருந்தான்.

**கிரேத்தியரும், பிலேத்தியரும்.** **Cherethites and Pelethites.** சம்பளத்துக்குச் சேவித்த தாவீது அரசனின் மெய்க்காப்பாளர். 2 சாமு $8^{18}$ $15^{28}$. இவர்கள் பெலிஸ்தியரின் கோத்திரத்தார் என்றும், ஒருவேளை கிரேத்தா தீவிலிருந்து வந்தார்கள் என்றும் தோன்றுகிறது. ஆமோ $9^{7}$.

**கிர்காசியர்.** **Girgashites.** கானான் தேசத்தின் பூர்வீக கோத்திரங்களில் ஒன்று. யோசு $3^{10}$ $24^{11}$.

**கிலவுதா.** **Cauda, Clauda.** சரியாய்ச் சொல்லுகில் இது 'கவுதா' என்றிருக்கவேண்டும். மத்தியதரைக்கடலில் பரி. பவுல் இருந்த கப்பல் புசல் காற்றினால் அடிக்கப்பட்டு, இந்தச் சிறு தீவுக்குச் சமீபமாய் வந்தது. அப் $27^{16}$.

**கிலவுதியாள்.** **Claudia,** ரோமாபுரியிலுள்ள கிறிஸ்தவ சபையைச் சேர்ந்தவள். சிலர் நினைக்கிறபடி இவள் இங்கிலாண்ட் தேசத்திலிருந்து வந்தவளும் ரோமாபுரியிலுள்ள பூதேஞ்சுவின் மனைவியுமாயிருந்தாள். 2 தீமோ $4^{21}$.

**கிலவுதியு.** **Claudius.** கி-பி. 41-54-ஆம் அரசாண்ட ரோமை ராயன். அப் $11^{28}$ $18^{2}$. **ரோமை ராஜ்யம்** காண்க.

**கிலவுதியு லீசியா.** **Claudius Lysias.** எருசலேமில் அந்தோனியா என்னும் கோட்டையில் ரோமருடைய சேனையில் ஆயிரம் பேருக்குத் தலைவனான ஒரு கிரேக்கன். இவன் ரோமைபுரி வாசி என்னும் சுதந்தரத்தை அல்லது மானியத்தைப் பெற்றவன். அப் $22^{28}$ $23^{26}$.

**கிலாலாயி.** **Gilalai.** நெகே $12^{36}$.

**கிலியோன்.** **Chilion.** [இளைத்துப்போகிறவன்]. மோவாப் கோத்திரத்தைச் சேர்ந்த ஓர்பாளின் புருஷன். ரூத் $1^{2}$.

**கிலேயோப்பா.** **Cleophas.** **கிலோபா** காண்க.

**கிலேமெந்து.** **Clement.** பவுலின் உடனூழியரில் ஒருவன். பிலி $4^{3}$.

**கிலேயாத்.** **Gilead.** **கிலேயாத்** காண்க.

**கிலோ.** **Giloh.** அகித்தோப்பேல் பிறந்த தென் யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{51}$ 2 சாமு $15^{12}$.

**கிலோபா.** **Clopas.** கன்னிமரியாளின் சகோதரி புருஷன். இவன் கிலேயோப்பா என்றும் அல்பேயு என்றும் நினைக்கவேண்டும். மத் $10^{3}$ லூக் $24^{18}$ யோவா $19^{25}$.

**கில்கால்.** **Gilgal.** [வட்டமாய் நாட்டியிருக்கும் கற்கள்]. கானான் தேசத்தில் பூர்வீக ஜனங்கள் தேவதைகளுக்குப் பிரதிஷ்டை செய்த இடத்தைக் காட்டும்படி வட்டவடிவமாய்க் கற்களை நாட்டினார்கள். ஆதலால் இப்பெயர்கொண்ட இடங்கள் அத்தேசத்தில் பல உண்டு.

1. எரிகோவுக்குச் சமீபமாயுள்ளது. யோசு $14^{6}$ 1 சாமு $7^{16}$ ஓசி $4^{15}$ ஆமோ $4^{4}$.
2. யோசு $12^{23}$.
3. 2 இரா $4^{38}$.
4. உபா $11^{30}$.
5. யோசு $15^{7}$.

**கில்போவா.** **Gilboa.** கலிலேயாநாட்டில் சவுலும் அவன் குமாரரும் சங்காரம் செய்யப்பட்ட மேடு. 1 சாமு $28^{4}$ $31^{2}$.

**கில்மாத்.** **Chilmad.** எசே $27^{23}$.

**கிழக்கத்திப் புத்திரர்.** **Children of the East.** சீரியா வனாந்தரத்தில் திரிந்த கோத்திரத்தார். இவர்களிற் சிலர் கல்வித்திறமையுடையவர்கள். நியா $6^{3}$ ஏசா $11^{14}$ 1 இரா $4^{30}$ யோபு $1^{3}$ எண் $23^{7}$.

**கிழக்கு வாசல்.** **East Gate.** **எருசலேம்** காண்க.



கிளி.

**கிளி.** **Grass-hopper, Locust.** மூலபாஷையில் 'கிளி' என்னும் இனத்திற்குத் தமிழில் 'வெட்டுக்கிளி' என மொழிபெயர்த்திருக்கிறது. எரே $46^{23}$ 2 நாளா $7^{13}$ ஆமோ $7^{1}$.

'புச்சைப்புழு,' 'பச்சைக்கிளி,' 'முசுக்கட்டைப் பூச்சி' (யோவே $1^4$ $2^{25}$) இவைகள் இந்தப் பூச்சி வெட்டுக்கிளியாகிறதற்கு முன்னிருக்கிற பருவத்தைக் குறிக்கிறது.

'அர்கோல்,' 'சோலேயாம்,' 'ஆகாபு' (லேவி $11^{22}$), 'விட்டில்' (உபா $28^{42}$) இவைகள் சிலமாதிரியான கிளியினத்தைக் காட்டுகிறது.

இச்சிறு ஜெந்துக்கள் பயிர்கள், மரங்கள், கனிகள் யாவற்றையும் அழித்து நஷ்டத்தையுண்டாக்குகிறதினாலே இவைகள் நஷ்டத்தை யுண்டாக்கும் பகைவர்களுக்கு உபமானமாய் வேதத்தில் பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. யாத் $10^{14}$ ஏசா $33^4$ $40^{22}$ நாகூ. $3^{17}$ எரே $46^{23}$ சங் $109^{23}$. எபிரெயர்கள் வெட்டுக்கிளிகளைத் தின்பார்கள். லேவி $11^{22}$ மத் $3^4$.

**கிளை.** Branch. பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் பல இடங்களில் கிளை என்பது உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது.

புத்திரபாக்கியம். யோபு $15^{32}$. ராஜகுமாரன். தானி $11^7$. பெரியவன். ஏசா $9^{14}$.

'ஒரு கிளை எழும்பிச் செழிக்கும்' (ஏசா $11^1$) என்பது யூதர்களை அசீரியர்களிலிருந்து இரட்சித்து நீதியின் ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிற மேசியாவைக் காட்டுகிறது.

மேசியா தாழ்ந்த நிலைமையிலே எருசலேமுக்குத் திரும்பி வந்தவர்களிலிருந்து எழும்பிருப்பார் என்று காட்டும்படி சகரியா அவருக்குக் 'கிளை' என்று சொல்லியிருக்கிறான். சக $3^8$ $6^{12}$. செருபாபேல் காண்க.

**கிறிசோஸ்தம்.** Chrysostom. யோவான் என்னும் ஒரு மகா பிரசங்கிக்குத் 'தங்கவாய்' என்னும் அர்த்தம்கொண்ட இப்பெயர், இவன் பிரசங்கத்தில் மகா வல்லபன் என்பதைக் குறித்தது. இவன் பிறந்தது கி-பி. 347-ஆம். 381-ஆம் வருஷத்தில் அந்தியோகியாவில் உதவிக் குருவாயும் (*Deacon*), 386-ஆம் வருஷத்தில் மூப்பனாயும் இருந்தான். 398-ஆம் வருஷத்தில் கொன்ஸ்தந்தீன்புரிக்குப் பிரதான கண்காணியாய் நியமனம்பெற்று, அங்கே போனபோது இவனுக்கு விரோதமாய்ச் சத்துராதிகள் எழும்பி, இவன் 'ஒருவன் தனக்குத்தானே கெடுதி செய்யாவிட்டால் இவ்வுலகத்தில் எவனும் அவனுக்குக் கெடுதி செய்துகொள்வது கூடாதகாரியம்' என்று தைரியத்தோடு சொல்லியும், இவனுடைய உறுதியினிமித்தம் அவர்கள் இவனை அங்கிருந்து தூரதேசத்திற்குப் பிரயாணமாய்ப் போகும்படி துரத்திவிட்டார்கள். இவன் அதிக விருத்தாப்பியனாய் இருந்தமையாலும் கடும் வெய்யிலில் தலையிலொன்றுமில்லாமல் வெய்யிலின் அகோரம் பொறுக்கமாட்டாமையாலும் வழியிலே 407-ஆம் வருஷத்தில் இறந்துபோனான். இவன் பல பிரசங்கங்கள் செய்ததுமல்லாமல் அநேக வேதவியாக்கியானங்களும், வேதசாஸ்திரத்தைக்குறித்து அநேக புஸ்தகங்களும் எழுதினான்.

**கிறிஸ்தவமார்க்கம்.** Christianity. கிறிஸ்தவமார்க்கத்தைப்பற்றி வேதசாஸ்திரிகள் பலர் அநேக புஸ்தகங்கள் எழுதியிருப்பதினால் இவ்விடத்தில் அதைப்பற்றி விபரித்துச் சொல்லாமல் சுருக்கமாய்ச் சொல்வது போதும். கிறிஸ்துவின் சீஷர்கள் தங்களுக்குக் 'கிறிஸ்தவர்கள்' என்னும் பெயர் சொல்லும்போதே கிறிஸ்தவமார்க்கத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினார்கள். இயேசுவும் பவுலும் சொன்ன போதனையை முதலில் கிறிஸ்தவர்களும் பூரணமாய் அறியாததினால் கிறிஸ்தவமார்க்கத்தின் மேன்மையை அவர்கள் உணரவில்லை. ஆனால் வரவர இந்த மார்க்கம் உலகமெங்கும் பரம்பி, கல்வி நாகரீகம் முதலியவை விருத்தியடைவதற்குக் காரணமாயிருக்கிறது என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்வார்கள்.

கிறிஸ்தவமார்க்கத்தின் பிரதான இரண்டு லட்சணங்களாவன:

**1. புறத்தில் தோன்றுகிறவை.**

(i) கிறிஸ்தவமார்க்கம் யூத மார்க்கத்தோடு பலமாய் இணைக்கப்பட்டிருந்தது.

(ii) மேலும் கிறிஸ்தவமார்க்கம் திருத்தம் பெற்ற யூத மார்க்கம் அல்ல, இது எல்லாருக்கும் உதவும் ஜீவ மார்க்கம். இது கடவுளையும் அவருடைய சித்தத்தையும் நம்மெல்லாருக்கும் தெளிவாய்க் காட்டுகிறது. இது புது ஜென்மம், மீட்பு, கடவுளுக்கும் மனுஷனுக்குமுள்ள ஒப்புரவு, நன்னடக்கைக்கு வேண்டும் சக்தி, நீதி நியாயத்துக்கும் கடவுளுக்குச் செய்யும் பணிவிடைக்குமுள்ள ஒற்றுமை முதலியவற்றைக் காட்டுகிறது. இது அடிமைத்தனம், துன்மார்க்கம், அஞ்ஞானம் ஆகிய இவைகளைக் கண்டிக்கிறது. ஆதி கிறிஸ்தவர்கள் விரும்பின நீதி நியாயத்தை ஸ்தாபிக்கும் புதிய எருசலேமைப்போலக் கிறிஸ்தவமார்க்கத்தின் வல்லமையினாலே ஒவ்வொரு ஊரும் தேசமும் இருக்க வேண்டும்.

**2. அகத்தில் தோன்றுகிறவை.**—மெய்ப்பக்தராகிய கிறிஸ்தவமார்க்கத்தாரிலிருந்து கிறிஸ்தவமார்க்கத்தின் முக்கிய தன்மையை அறிகிறோம். அவையாவன:—

(i) கிறிஸ்துவை நம்புகிற நம்பிக்கை. இயேசுவின் சீஷர்கள் கிறிஸ்தவர்கள் என்று சொல்லப்படுவதற்கு முந்தியே அவர்பேரில் அவர்கள் வைத்த நம்பிக்கையினிமித்தம் 'விசுவாசிகள்' என்னப்பட்டார்கள்.

(ii) நம்பிக்கையோடு கூடிய கீழ்ப்படிதலின் வாஞ்சை. கிறிஸ்தவர்கள் சோம்பேறிகளாயிராமல் இயேசுவுக்காக உற்சாகத்துடனே பணிவிடை செய்து இவ்வுலகத்தில் அவருடைய ராஜ்யத்தை ஸ்தாபிக்கும்படி விரும்பி அவருக்கு உதவிக்காரராய் விளங்குகிறார்கள்.

(iii) கிறிஸ்தவமார்க்கம் சுய நயத்தை நாடாமல் பிறர் சுகத்தை நாடுகிறவர்களுக்குரிய மார்க்கம். கிறிஸ்தவ ராஜ்யத்திலுள்ளவர்கள் எல்லாரையும் தங்கள் ராஜாவின்கீழ் இருக்கிற பிரஜைகள் என்று எண்ணி, ஒவ்வொருவனையும் சகோதரனைக்கொண்டு, ராஜாவின்மேல் அன்புகூருவதுபோல் ஒருத்தர்க்கொருத்தர் அன்புகூரவேண்டிய மார்க்கம். இந்த அன்பைக்கொண்டு அவர்கள் மற்றவர்களைக் கிறிஸ்துவண்டைசேர்க்கும்படி விடாமுயற்சியோடு இருப்பார்கள்.

**'கிறிஸ்தவன்.'** 'Christian.'

**I. இப்பதத்தின் உற்பத்தி:**—புதிய ஏற்பாட்டில் இது மூன்றுதரம்மாத்திரம் சொல்லியிருக்கிறது. அப் $11^{26}$ $26^{28}$ 1 பேது $4^{16}$.

கிறிஸ்தவர்கள் முதலில் இப்பெயரைத் தங்களுக்கு இட்டுக்கொள்ளவில்லை. அவர்கள் தங்களுக்கு இட்டுக்கொண்ட பெயர்கள்: 'சீஷர்கள்.' அப் $11^{26}$. 'சகோதரர்.' அப் $9^{30}$. 'தேவன் தெரிந்துகொண்டவர்கள்.' ரோ $8^{33}$. 'பரிசுத்தவான்கள்.' ரோ $12^{13}$. 'விசுவாசிகள்.' 1 தீமோ $4^{12}$. 'மார்க்கம்.' அப் $19^{9}$.

யூதர்கள் இயேசுவைக் கிறிஸ்து என்று ஒப்புக்கொள்ளாததினால் அவர்கள் அவருடைய சீஷர்களைக் 'கிறிஸ்தவர்கள்' என்று சொல்லாமல் 'மதபேதம்' (அப் $28^{22}$), அல்லது 'நசரேயர்' (அப் $24^{5}$) என்று அழைத்தார்கள். ஆகையால் அக்காலத்தில் கிறிஸ்தவமார்க்கத்தின் உற்பத்தியைத் திட்டமாய் அறிந்த பரி. லூக்கா எழுதினதின்படி அந்தியோகியாவின் ஜனங்கள் முதலில் இயேசுவின் சீஷருக்கு இப்பெயர் கொடுத்தார்கள் என்று நாம் நம்பவேண்டும். எப்படியென்றால் ஏறக்குறைய கி-பி. 40-ஆம் வருஷத்தில் பர்னபாவும் பவுலும் அந்தியோகியாவின் சந்தைத் தெருக்களில் செய்த பிரசங்கங்களில் 'கிறிஸ்து' என்னும் சொல்லை அவ்வூரார் அடிக்கடி கேட்டு, அதின் அர்த்தம் தெளிவாய்த் தெரியாவிட்டாலும் அவர்கள் இந்த நவீன மார்க்கக் கொள்கைக்காரருக்கு இப்பெயர் தகுந்தது என்று நினைத்து அவர்களுக்கு இப்பெயர் இட்டுக்கொண்டார்கள்.

**II. இப்பெயர் பிரபல்யமானது:**—அந்தியோகியர் இப்பெயரை பரிகாசத்திற்காக இட்டிருந்தாலும் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறவனுக்கு 'கிறிஸ்தவன்' என்று சொல்வது தகுமானதினால் சீக்கிரத்தில் சில வருஷங்களுக்குள்ளாக இது எங்கும் தெரியவந்தது. கி-பி. 57-ஆம் வருஷத்தில் அகிரிப்பா ராஜாவும் ரோமை உத்தியோகஸ்தர்களும் இப்பெயரை அறிந்திருந்தார்கள். அப் $26^{28}$. அதற்குச் சில வருஷங்களுக்குப்பின் சின்ன ஆசியாவிலே இப்பெயர் எல்லாருக்கும் தெரிந்தது. 1 பேது $4^{16}$. கி-பி. 64-ஆம் வருஷத்தில் ரோமை ராயனாகிய நேரோவின் காலத்தில் இப்பெயர் ரோமைராஜ்யம் எங்கும் பரம்பினது. அப்போது ஒருவன் கிறிஸ்தவனாவது பலவிடங்களிலும் மரண தண்டனைக்குரிய குற்றமாயிருந்தது. கி-பி. 150-ஆம் வருஷத்தில் பொலிக்கார்ப் (*Polycarp*) தைரியமாயும் சந்தோஷமாயும் நான் கிறிஸ்தவன் என்று சொன்னான். அதற்குப்பின் வரவர பல தேசங்களிலும் இப்பெயர் நற்கீர்த்தியடைந்தது.

**III. கிறிஸ்தவன் என்பதின் அர்த்தம்.**

1. முதலில் ஜனங்கள் ஏரோதின் பக்கத்தாருக்கு ஏரோதியர் என்று எப்படிச் சொன்னார்களோ, அப்படியே கிறிஸ்துவைச் சார்ந்தவர்களுக்கு 'கிறிஸ்தவர்கள்' என்று சொன்னார்கள். முதலில் பரிகாசமாய்ச் சொல்லப்பட்ட 'கிறிஸ்தவர்கள்' சில வருஷத்திற்குப் பிற்பாடு பல இடங்களிலும் கொலைபாதகருக்குச் சமானமாய் இருக்கிறார்கள் என அதிபதிகள் தீர்மானித்தார்கள். ஆனால் கிறிஸ்தவர்கள் அருளாபிஷேகம் செய்யப்பட்ட கிறிஸ்துவைப்போல் தாங்கள் தேவ அருளினால் ராஜாக்களாகவும் ஆசாரியர்களாகவும் அபிஷேகம் பெற்றவர்கள் என நம்பினார்கள்.

2. மேலும் புறமதஸ்தர்கள் சில சமயங்களில் கிறிஸ்து என்னும் சொல்லைச் சரியாய் உச்சரிக்கத் தெரியாமல் 'கிரெஸ்து' என்று சொன்னார்கள். 'தயை உள்ளவர்' என்பது இதின் அர்த்தம். அப்படியே ஆதிபிதாக்கள் கிறிஸ்துவுக்கு அந்தப் பெயரிட்டு அவரைப்போல் கிறிஸ்தவர்கள் எல்லாரும் தயை உள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்று சொன்னார்கள்.

3. முதலில் கிறிஸ்தவமார்க்கம் யூதமார்க்கத்தில் ஓர் கொள்கையைப்போலத் தோன்றினது. கிறிஸ்தவன் என்னும் பெயர் பல

விடங்களிலும் பரம்பினதினாலே அது யூத மார்க்கத்திலிருந்து கிறிஸ்தவ மார்க்கம் பிரிக்கப்பட்டது என்பதற்கு அத்தாட்சியே.

4. கிறிஸ்தவர்கள் தங்களுக்கு இப்பெயர் சொல்லும்போது அவர்கள் புறஜாதியாருக்கு யூதமார்க்கமல்லாத ஒரு புதிய மார்க்கத்தைக் காட்டினார்கள் என்பதைக் குறித்தது.

5. கிறிஸ்தவர்கள் இப்பெயரைத் தங்களுக்குச் சொல்வதினால் கிறிஸ்தவ மார்க்கத்துக்கு ஒரு புஸ்தகம் அல்லது தத்வஞானம் அல்லது ஓர் காட்சி ஆகிய இவைகள் அல்ல, கிறிஸ்துவே காரணம் எனக் குறித்தார்கள்.

**கிறிஸ்து, மேசியா.** Christ, Messiah. எபிரெயர்களில் ஒருவனைத் தீர்க்கதரிசி அல்லது ஆசாரியன் அல்லது ராஜாவாக்க வேண்டுமானால் அவர்கள் அவனை அபிஷேகம் செய்வார்கள். 1 இரா $1^{39}$ $19^{16}$ யாத் $29^{7}$. அபிஷேகம் செய்யப்பட்டவன் என்பதற்கு எபிரெயர்கள் தங்கள் பாஷையில் 'மேசியா' என்று சொல்லுவார்கள். தீர்க்கதரிசிகள் கடவுளின் அருளினால் அபிஷேகம் செய்யப்பட்டுச் சிறையிலிருப்பவர்களை மீட்கும்படி வரும் ஒருவனை எதிர்நோக்கியிருந்ததினால் பிற்காலத்தில் யூதர்கள் விசேஷமாய்ப் பரிசேயர்கள் அந்த மீட்பனுக்கு 'மேசியா' என்று பெயர் சொல்லிவந்தார்கள். இயேசுவின்காலத்தில் யூதர்களில் அநேகரும் புறம்தங்களிலிருந்து யூதமதத்துக்கு வந்தவர்களும் சாதாரணமாய்க் கிரேக்க பாஷை பேசினதினால் அவர்கள் 'அபிஷேகம் பண்ணப்பட்டவன்' என்று அர்த்தங்கொண்ட 'மேசியா' என்னும் பதத்தைத் தங்கள் பாஷையில் மொழிபெயர்த்து அந்த மீட்பனுக்கு 'கிறிஸ்து' என்று கிரேக்க பெயர் இட்டார்கள். இயேசு இப்பெயர் தமக்குச் சொன்னார். யோவா $20^{31}$. அவருடைய சீஷர்கள் அடிக்கடி இப்பெயரை அவருக்குச் சொன்னார்கள். யோவா $4^{29}$ மத் $16^{16}$ லூக் $4^{41}$. யூதர்கள் அவர் கிறிஸ்துவோ இல்லையோ என்று சந்தேகப்பட்டார்கள். லூக் $3^{15}$. பிற்காலங்களில் வேதசாஸ்திரிகள் இயேசுவின் தெய்வீக தன்மையைப்பற்றிப் பேசும்போது கிறிஸ்து என்ற பெயரை வழங்கிவந்தார்கள். (கிறிஸ்துவின் ஜீவியம், உயிர்த்தெழுதல், போதனை இவைகளைப்பற்றி **'இயேசுகிறிஸ்து'** காண்க.)

**கிறிஸ்பு.** Crispus. கொரிந்து பட்டணத்து யூதஜெபஆலயத் தலைவன். அப் $18^{8}$ 1 கொரி $1^{15}$.

**கினீது.** Cnidus. சின்ன ஆசியாவின் தென்மேற்குக் கரையிலிருக்கும் ஒரு ஊர். அப் $27^{7}$.

**கினேதோன்.** Ginnethon. நெகே $10^{6}$ $12^{4}$.

**கினோஸ்திகிகர்.** Gnostics. கிறிஸ்தவ மார்க்கம் பரம்பினபோது பல தத்வஞானிகள் என்று சொல்லப்பட்டவர்கள் ரோமர், கிரேக்கர், எகிப்தியர், கிறிஸ்தவர்கள் ஆகிய இவர்கள் கைக்கொண்ட கொள்கைகளிலிருந்து உத்தம சித்தாந்த ஞானம் ஒன்றை உண்டாக்கும்படிப் பலவிதமாய்ப் பிரயாசப்பட்டார்கள். நற்குணமுடைய சிருஷ்டிகர்த்தாவிலிருந்து உலகத்தில் தீமை எப்படி வந்தது என்றும், மனுஷனுடைய ஜீவாத்மா சிறைச்சாலையைப்போல் பிரகிருதியில் கட்டப்பட்டது எப்படி என்றும் கேள்வியுடையவர்களாய், இவ்வுலகம் பரம கடவுளினால் அல்ல, பரிபூரண தெய்வத்துவமற்ற உபகடவுளினாலேயே உண்டாக்கப்பட்டு அங்கே தீமை விளையும்படி இடமுண்டானது என்றும்; எல்லா மனுஷரும் தமோதனராய் நடக்கவேண்டும் அல்லது அவர்கள் நன்மை தீமை எல்லாம் ஒன்றுதான் என நினைத்துத் தங்கள் இஷ்டத்தின்படி நடந்துகொள்ளலாம் என்றும் சொன்னார்கள்.

இவர்கள் கிரேக்க பாஷையில் 'கினோசிஸ்' என்னும் ஞானம் மேலானது என்னும் நிர்ணயம் உடையவர்களானதினால் 'கினோஸ்திகிகர்' என்று சொல்லப்பட்டார்கள். பாவத்திலிருந்து சாதாரணமானவர்கள் அல்ல, இந்தப் பரம ஞானத்தை யடைந்தவர்களேமாத்திரம் மீட்பு அடைவார்கள் என்று உறுதியாய் நம்பினார்கள். முதலில் புதிய ஏற்பாட்டில் கினோஸ்திகிகரைப்பற்றி யொன்றும் தெளிவாய்த் தெரியவில்லை. ஆனால் கொலோசெயருக்கு எழுதின நிருபத்தில் பரி. பவுல் சொல்லும் கொள்கைகள் கினோஸ்திகிகருடைய எண்ணங்கள்தான் என்று அநேகர் நினைக்கிறார்கள். கொலோ $1^{15-20}$ $2^{9-15}$ $14-23$.

**கின்னரம்.** Harp. **கீதவாத்தியம்** காண்க.

**கின்னரேத் கடல்.** Sea of Chinnereth. **கலிலேயாக்கடல்** காண்க.

## கீ.

**கீகோன், கீயோன்.** Gihon. [நீர் கொப்பளித்துப் பாய்கிறது].

1. எருசலேமின் தென்கிழக் கெல்லையிலிருந்து கூப்பிடுதூரத்தில் கீதரோன் பள்ளத்தாக்கிலுள்ள நேர்த்தியான நீரூற்று. சிலர் வேதசாஸ்திரிகள் நினைக்கிறபடி இந்த ஊற்று எருசலேமுக்கு மேற்கேயிருந்தது என்பதற்குப் பொதுவான அத்தாட்சியில்லை.

1 இரா 1[33] 2 நாளா 32[30]. கீலோவாம் காண்க.

**2.** ஏதேன் தோட்டத்திலுள்ள நதி. ஒரு வேளை எகிப்திலுள்ள சிறந்த நைல் நதியைக் குறிக்கலாம். ஆதி 2[13].

**கீசோனியன்.** **Gizonite.** 1 நாளா 11[34].



கைத்தாளம், சதங்கை.

**கீசோன்.** **Kishon.** கலிலேயாவின் தென்பாகத்தில் யெஸ்ரேல் என்னும் சம பூமியில் பாய்கிற ஆறு. மழைகாலத்தில் இதின் கரைகள் செங்குத்தாயும், இதில் சேறு நீர் அதிகமாயும் இருப்பதினால் இதைக் கடந்துபோகிறது கஷ்டம். நியா 4[7] 5[21] சங் 8[39].

**கீஸ்.** **Kish.**

1. சவுலின் தகப்பன். 1 சாமு 9[1] அப் 13[21].
2. 1 நாளா 8[30].
3. 1 நாளா 23[29].
4. எஸ்தர் 2[5].

**கீதம், கீர்த்தனை, சங்கீதம், பாட்டு.** **Hymn.** எபிரெயர்கள் ஆராதனை நடத்தும் போது கீதங்கள் வழக்கமாய்ப் பாடுவார்கள். சங்கீத புஸ்தகம் தேவாலயத்திலும் வீடுகளிலும் பாடுகிற பாட்டுகள் நிறைந்த புஸ்தகம். கிறிஸ்தவ சபையாரும் அப்படியே ஆராதனையில் பாட்டுகள் பாடுவது வழக்கம். மத் 26[30] எபே 5[19] கொலோ 3[16].

புதிய ஏற்பாட்டிலும் சில கீதங்கள் இருக்கின்றன. அவையாவன: *Magnificat, Benedictus, Gloria in Excelsis* என்னும் பாட்டுகள். லூக் 1[46-55. 68-79] 2[29-32].

மேலும் சிலர் நினைக்கிறபடி ஆதி கிறிஸ்தவர்கள் பாடின பாட்டுகளிற் சில புதிய ஏற்பாட்டில் காணப்படுகின்றன. 1 கொரி 13[1-13] எபே 5[14] 1 தீமோ 1[17] 3[16] 6[16] 2 தீமோ 4[18].

**கீதரோன், கெதரோன்.** **Kidron.** [சிற்றாறு பாயும் பள்ளத்தாக்கு]. எருசலேமின் கிழக்குப் பக்கத்திலிருக்கும் ஆழமான பள்ளத்தாக்கு. மழைகாலமொழிய இதிற் தண்ணீர் கிடையாது. இதின் மறுபெயர். 'யோசபாத்தின் பள்ளத்தாக்கு.' 2 சாமு 15[23] யோவே 3[2] யோவா 18[1]. இங்கே யூதருடைய பிரேதக்குழிகள் இருந்தன. 2 இரா 23[4] எரே 26[23] 31[40]. ஒருவேளை இது வறண்ட எலும்புகளின் காட்சி காணப்பட்ட பள்ளத்தாக்காயிருக்கலாம். எசே 37 அதி.

**கீதவாத்தியம்.** **Musical Instrument.** தமிழில் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் 'கின்னரம்,' 'சுரமண்டலம்,' 'தம்புரு' என்னும் பதங்களைப் பொதுவாய் மாறி மாறிச் சொல்லியிருக்கிறார்கள். ஆதலால் மூலபாஷையில் சொல்லிய கீத வாத்தியங்களை மூலபாஷையைக்கொண்டே நிதானமாய் அறியவேண்டும்.

எபிரெயர்கள் வாசித்துவந்த கீத வாத்தியங்கள்: தந்தி வாத்தியங்கள், ஊது வாத்தியங்கள், முழக்கு வாத்தியங்கள் என மூன்று வகையாயிருந்தன.



ஊது வாத்தியங்கள்.

1. **தந்தி வாத்தியங்கள்.**

(*a*) 'கின்னோர்' (*Kinnor*). இதற்குச் 'சுரமண்டலம்' என்றும் (எசா 5[12] 1 சாமு 16[16] 2 சாமு 6[5] யோபு 21[12] சங் 150[4]), 'கின்னரம்' என்றும் சொல்லியிருக்கிறது. ஆதி 4[21]. சுரமண்டலம் கைவிரலினால் அல்லது கம்பியினால் தட்டி வாசிப்பார்கள்.

(*b*) 'நெபெல்' (*Nebel*). இதற்குத் 'தம்புரு' என்றும் (எசா 5[12] 1 சாமு 6[5] சங் 150[3]), 'வீணை' யென்றும் (ஆமோ 5[23]) சொல்லி

யிருக்கிறது. இது கின்னோரைவிடப் பெரிய சுரமண்டலம்.

(c) வேறேவிதமான சுரமண்டலத்தைக் காட்டும் சில பதங்கள் உண்டு. ஆனால் இவைகளின் மாதிரி இன்னதென்று திட்டமாய்த் தெரியாது.



தோப் முதலிய கீத வாத்தியங்கள்.

2. ஊது வாத்தியங்கள்.

(a) 'காலில்' (Chalil) 'நாகசுரம்.' 1 சாமு $10^5$ ஏசா $5^{12}$ $30^{29}$ தானி $3^5$. விருந்துகளிலும் ஊர்கோலத்திலும் ஊதப்படும் இது பல மாதிரியாயிருந்தது. பிள்ளைகள் ஊதும் குழல். மத் $11^{17}$. 'புல்லாங்குழல்.' 1 கொரி $14^7$.

(b) 'ஊகாப்' (Ugab) இரண்டு மூன்று குழல்கள் சேர்ந்து பலவிதமான சத்தம் கொடுக்கும் வாத்தியம். இதற்கு 'நாகசுரம்' (ஆதி $4^{21}$) என்றும், 'கின்னரம்' (யோபு $21^{12}$) என்றும் சொல்லியிருக்கிறது.

(c) 'நாகசுரம்.' தானி $3^4$.

(d) 'தம்புரு.' தானி $3^4$.


அசீரியர் வாசித்த வீணை.

(e) 'எக்காளம்' (Trumpet). எபிரெயர் வாசித்த எக்காளம் மாட்டுக்கொம்பு ஆட்டுக்கொம்புகளினாற் செய்யப்பட்டது. தானி $3^4$ நியா $3^{27}$ சங் $150^3$. வேறுவிதமான எக்காளங்கள் வெள்ளியினாலும் வெண்கலத்தினாலும் நேராய் செய்யப்பட்ட பூரிகைகள். எண் $10^1$.


எகிப்தியர் வாசித்த சுரமண்டலம்.

3. முழக்கு வாத்தியங்கள்.

(a) 'தோப்' (Toph). இதற்கு மேளம் என்றும் (ஏசா $5^{12}$ 1 சாமு $6^5$ $18^6$), தம்புரு என்றும் (யாத் $15^{20}$ சங் $68^{25}$ $150^4$ யோபு $21^{12}$) சொல்லியிருக்கிறது. இவைகள் தமக்கு, சதங்கை, மேளம் முதலியவற்றைக் குறிக்கின்றன.

(b) 'கைத்தாளம்.' இதுவும் பல மாதிரியுள்ளதாயிருந்தது. 1 நாளா $16^5$ 2 சாமு $6^5$.

(c) கம்பிகளுள்ள ஒருவித முக்கோண வாத்தியம். 1 சாமு $18^6$.

(d) 'வீணை.' இது வெண்கலக் கம்பிகளினாற் செய்யப்பட்டிருப்பதால் அடிக்கும் போது நல்லோசை கொடுக்கும். 2 சாமு $6^5$.



**கீதியோன்.** **Gideoni.** எண் $2^{22}$.

**கீதோம்.** **Gidom.** நியா $20^{45}$.

**கீத்தோன்.** **Chidon.** ஓர் களம். 1 நாளா $13^9$.

= நாகோன். 2 சாமு $6^6$. இடம் தெரியாது.

**கீபெயா.** **Gibeah.**

1. காலேபின் பேரன். 1 நாளா $2^{49}$.
2. **கிபியா** காண்க.

**கீயா.** **Giah.** 2 சாமு $2^{24}$.

**கீயு தீவு.** Chios. சின்ன ஆசியாவின் மேற்குக் கரையிலிருந்து கொஞ்சம் தூரத்திலிருக்கும் ஒரு தீவு. இங்கே யுள்ளவர்கள் கிரேக்கர்களில் கீர்த்திபெற்றவர்கள். அப் $20^{15}$.

**கீயோன்.** Gihon. = கீகோன்.

**கீராரேஸ்.** Kir-haresh. **கீராரேசேத்** காண்க.

**கீரியாத்.** Keriath. யோசு $18^{28}$. = கீரியாத்யாரீம்.

**கீரியாத் அர்பா.** Kiriath-arba. எபிரோனின் மறுபெயர். ஆதி $23^{2}$ யோசு $14^{15}$.

**கீரியாத் ஊசோத்.** Kiriath-Huzoth. எண் $22^{39}$.

**கீரியாத்தாயீம்.** Kiriathaim.

1. யோர்தான் நதிக்குக் கிழக்கேயுள்ள ஒரு ஊர். யோசு $13^{19}$.

2. நப்தலியிலுள்ள ஒரு ஊர்.

= கர்தான். 1 நாளா $6^{76}$ யோசு $29^{32}$.

**கீரியாத் சன்னா.** Kiriath-Sannah. யோசு $15^{49}$. = தெபீர்.

**கீரியாத்-செபீர்.** Kiriath-Sepher. யோசு $15^{15}$. = தெபீர்.

**கீரியாத் பாகால்.** Kiriath-Baal. = கீரியாத் யாரீம்.

**கீரியாத்-யாரீம், கீரியாத் யெயாரீம்.** Kiriath-Arim, Kiriath-Jearim. [காட்டிலுள்ள ஊர்]. எருசலேமுக்கு ஒன்பது மைல் தெற்கு யூதா பென்யமீன் எல்லையிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{10}$. இந்த ஊருக்குத் தாவீது உடன்படிக்கைப்பெட்டி கொண்டுபோனான். 1 சாமு $7^{2}$ எஸ்று $2^{25}$. இதின் மறுபெயர்கள்:— கீரியாத் பாகால். யோசு $15^{60}$. பாலா. யோசு $15^{9}$. பாலே யூதா. 2 சாமு $6^{2}$ எரே $26^{20}$.

**கீரியாத் - யெயாரீம்.** Kiriath-Jearim. = கீரியாத் யாரீம்.

**கீரியோத்.** Kerioth. மோவாபிலுள்ள முக்கியமான ஒரு ஊர். எரே $48^{24}$ ஆமோ $2^{2}$. ஒருவேளை இதுவும் கிராரேசும் ஒன்றுதான். ஏசா $16^{11}$.

**கீரியோத்-எஸ்ரோன்.** Kerioth-Hezron. யோசு $15^{25}$.

**கீர்.** Kir.

1. அசீரியா ராஜ்யத்திலுள்ள ஒரு ஊர், இடம் தெரியாது. ஆமோ $1^{5}$ $9^{7}$ 2 இரா $16^{9}$ ஏசா $22^{6}$.

2. மோவாபின் மலைநாட்டிலுள்ள ஒரு அரண். ஏசா $15^{1}$ 2 இரா $3^{25}$.

**கீர்த்தனை.** Hymn. கீதம் காண்க.

**கீலேயாத்.** Gilead. [சாட்சிக்கு அடையாளமாகப் போட்ட கற்குவியல்].

1. = கிலேயாத். எண் $26^{29}$.

2. 1 நாளா $5^{4}$.

3. ஒரு மலை. நியா $7^{3}$.

4. கலிலேயாக் கடல், யோர்தான் நதி, சாக்கடல் இவைகளுக்குக் கிழக்கேயுள்ள சீரியா வனாந்தரம்வரையும் பரந்திருக்கும் செழிப்பான ஒரு மலைநாடு. ஆதி $37^{25}$ உன். பா $4^{1}$. இதின் வடபாகம் மனாசே கோத்திரத்துக்கும், தென்பாகம் ரூபன் கோத்திரத்துக்கும் சேர்ந்ததாயிருந்தது. நியா $5^{17}$ $20^{1}$ 1 சாமு $13^{7}$ 2 சாமு $2^{9}$ $17^{27}$ $19^{31}$ 1 இரா $2^{7}$ $17^{1}$ 2 இரா $15^{29}$ $24^{6}$ ஓசி $6^{8}$ $12^{11}$.

**கீலேயாப்.** Chileab. தாவீதின் மகன். 2 சாமு $3^{3}$. = தானியேல். 1 நாளா $3^{1}$.

**கீலோனியன்.** Gilonite. 2 சாமு $15^{12}$. கீலோ காண்க.

**கீல்.** Bitumen, Pitch. சில இடங்களில் கீல் நிலத்தின்கீழ் ஊற்றுகளில் வடியும். சாக்கடலின் பள்ளத்தாக்கில் இது உண்டு. ஆதி $6^{14}$ $14^{10}$ யாத் $2^{3}$ ஏசா $34^{9}$.

**கீறுதல்.** Cutting of the flesh. இறந்துபோனவர்களுக்காகத் தங்கள் துக்கத்தைக் காட்டும்படிக்கும், விசேஷமாய் அவர்களின் ஆவி உயிரோடு இருக்கிறவர்களுக்குத் தொந்தரவு கொடாதபடிக்கும், சேமியர்கள் முகத்திலும் கையிலும் தேகத்திலும் இரத்தம் சிந்தக் கீறிக்கொள்வது வழக்கம். மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி இப்படிச் செய்யப்படாது. லேவி $19^{28}$ உபா $14^{1}$ எரே $41^{5}$ $47^{5}$ $48^{37}$.

**கீனா.** Kinah. யோசு $15^{22}$.

**கீனாத்.** Ginath. 1 இரா $16^{21}$.

## கு.

**குகை, கெபி.** Cave. பலஸ்தீனா தேசத்தின் மலைநாடுகளில் இயற்கையாயுள்ள குகைகளைவிடப் பூர்வ ஜாதியாரான ஓரியர் முதலானவர்கள் வெட்டின குகைகள் அநேகம் இருந்தன. இவைகளில் ஜனங்கள் வசித்தார்கள். இவைகளில் அவர்கள் தங்களை ஒளித்துக்கொண்டார்கள். எந்தக்காலத்திலும் இக்குகைகளிற் பிரேதங்களை அடக்கம் பண்ணினார்கள். ஆதி $19^{30}$ $23^{17}$ யோசு $10^{16}$ நியா $6^{2}$ 1 சாமு $22^{1}$ 2 சாமு $17^{19}$ 1 இரா $18^{4}$ எரே $48^{28}$ யோவா $11^{38}$.

**குங்குமம். Saffron.** எபிரெயர் கறிவகைகளுக்கும் வர்ணங்களுக்கும் உபயோகித்த மஞ்சள் மூன்றுவிதமாய் இருந்தது. அவைகளில் இது ஒன்று. உன். பா $4^{14}$.

**குங்கிலியம். Onycha.** தூபவர்க்கங்களில் ஒன்று. ஒருவிதமான கடல் நத்தையிலிருந்து இது செய்யப்படும். யாத் $30^{34}$.

**குச்சு. Nail.** சுவரில் அறையப்பட்ட குச்சு உறுதியாயிருக்கிறதுபோல இஸ்ரவேலர் தேவஸ்தலத்தில் உறுதியான அடைக்கலம் பெற்றுக்கொள்ளுவார்கள் என்பதைக் குறிக்கிறது. எஸ்ரா $9^{8}$.

**குஷாயா. Kushaiah.** 1 நாளா $15^{17}$ கிஷி காண்க.

**குஷ்டம். Leprosy.** வேதாகமத்தில் குஷ்டம் நமக்குத் தெரிந்த பெருவியாதியை மாத்திரமல்ல, யானைக்காலையும் குறிக்கிறது. குஷ்டரோகிகள் ஊரைவிட்டு அப்புறத்தில் வசிக்கவேண்டும். தலைச்சவரம்செய்து மேல் உதட்டின்மேல் மூடிக்கட்டி ராஜபாதையில் போகாமல் தாங்கள் போகும் வழிகளில் தங்களுக்கு எதிரே யாரும் வந்தால் 'அசுத்தம், அசுத்தம்' என்று உரத்த சத்தமாய்க் கூவிக்கொண்டு போகவேண்டும். எபிரெயர் இது கடவுளால் வரும் தண்டனை என்று நினைத்தார்கள். உ-ம். அசரியா ராஜாவுக்கு வந்த குஷ்டம். 2 இரா $15^{5}$. எண் $5^{2}$ $12^{14}$ உபா $24^{8}$ 2 சாமு $3^{29}$ 2 இரா $5^{27}$ $7^{3}$ $15^{5}$ மத் $8^{2}$ $26^{6}$ லூக் $4^{27}$ $17^{12}$.

வீட்டுக் குஷ்டம். லேவி $14^{44}$. வஸ்திரக் குஷ்டம். லேவி $14^{55}$. இவைகள் ஒருமாதிரியான பூசணம் படர்ந்ததாய் இருக்கலாம்.

**குடம்.**

1. = *Bath.* ஓரளவு. 1 இரா $7^{26}$. அளவு காண்க.

2. = *Barrel.* தண்ணீர் எடுக்கவும், தானியம் போடவும் உபயோகிக்கப்படும் மட்பாண்டம். 1 இரா $18^{33}$.

3. = *Pitcher.* ஆதி $24^{14}$ மாற் $14^{13}$ எரே $35^{5}$.

**குடல். Bowels.** கோபம், பயம் முதலியவற்றிற்கு இருப்பிடம் குடல் என்பது எபிரெயரின் அபிப்பிராயம். 'உள்ளம்' (சங் $40^{8}$), 'வயிறு' (ஏசா $63^{15}$), 'குடல்' (சங் $71^{6}$) குடலைக் குறிக்கின்றன. யோபு $30^{27}$.

**குடிக்கிறது. Drink.**

1. **வழக்கமாய்த் தண்ணீர் சாப்பிடுகிறதைக் குறிக்கிறது.** நீதி $5^{15}$ யோவா $4^{13}$.

2. எதையும் அனுபவிக்கிறதைக் குறிக்கிறது. யோவா $4^{14}$.

3. மதுபானம் சாப்பிடுகிறது. 1 இரா $20^{16}$. **மதுபானம்** காண்க.

**குடிசை. Booth.** தோட்டங்களிலும் வயல்களிலும் பயிர்க்காவலுக்காகவும் குளிர் நிழலுக்காகவும் மரக்கிளைகளினாற் குடிசை கட்டப்படும். யோபு $27^{18}$ யோனா $4^{5}$ ஏசா $1^{8}$.

= கொட்டாரம். ஆதி $33^{17}$.

= கூடாரம். லேவி $23^{42}$ 2 சாமு $11^{11}$.

**குடிமதிப்பு. Census.**

1. மோசே சீனாய் மலையில் இஸ்ரவேலரின் குடிமதிப்பு எழுதினான். யாத் $38^{26}$.

2. பிரயாணத்தில் இரண்டாம் வருஷம் மறுபடியும் குடிமதிப்பு எழுதினான். எண் $1^{1}$.

3. கானான் தேசத்தில் இஸ்ரவேலர் பிரவேசித்தபோது குடிமதிப்பு எழுதப்பட்டது. எண் 26 அதி.

4. தாவீது குடிமதிப்பு எழுதும்படி பிரயாசைப்பட்டான். 2 சாமு $24^{1}$ 1 நாளா $21^{5}$ $24^{1}$.

5. ரோமர்கள் தங்கள் ராஜ்யத்தில் குடிமதிப்பு எழுதுவது வழக்கம். எகிப்து தேசத்தில் அவர்கள் பதினாலு வருஷத்துக்கு ஒருமுறை குடிமதிப்பு எழுதினது இதற்குத் திருஷ்டாந்தம். சீரியாவில் சிரேனியு அதிபதியாய் இருந்தபோது இரண்டுதடவை குடிமதிப்பு எழுதப்பட்டது. முதல்தடவை யோசேப்பும் மரியாளும் பெத்லெகேமுக்குப் போனார்கள். லூக் $2^{1}$ கி-பி. 6-ளு வரி யேற்படுத்தும்படி மறுதரமும் குடிமதிப்பு எழுதப்பட்டது. **சிரேனியு** காண்க.

**குடியிருப்பு. Habitation.** வழக்கமாய்க் 'குடியிருப்பு' 'வாசஸ்தலம்' என்பதைக் குறிக்கிறது. எண் $35^{34}$ அப் $17^{26}$.

**குடும்பம். Family.**

1. **குடும்பத்தில் உள்ளவர்கள்.** பூர்வீகத்தில் எபிரெயருக்குள் பாரித்த குடும்பத்திலுள்ளவர்கள்: வீட்டுத்தலைவன், அவன் மனைவிகள், அவர்கள் பிள்ளைகள், அவன் மறுமனையாட்டிகள், அவர்கள் பிள்ளைகள், பகைவர்க்குப் பயந்து அவனிடம் வந்து அடைக்கலம் புகுந்தவர்கள், யுத்தகாலத்தில் சிறையாய்ப் பிடிக்கப்பட்ட அடிமைகள் (நீதி $5^{30}$), அவர்கள் பிள்ளைகள், பரஸ்திரீகளின் பிள்ளைகள் (நியா $11^{1}$), மருமக்கள், அவர்கள் பிள்ளைகள், அந்நியர்கள்.

பூர்வீகத்தில் எபிரெயர்கள் மறுமனையாட்டி வைத்திருப்பது குற்றம் அல்ல என்று நினைத்தார்கள். மேலும் குடும்பத் தலைவ

னுக்கு இஷ்டமானால் அடிமைப் பெண்களை மறுமனையாட்டிகளாக வைத்துக்கொள்ளலாம். ஆனால் தன் மனைவிக்குச் சேர்ந்த அடிமைப் பெண்களை அவளுடைய உத்தரவின்றி மறுமனையாட்டிகளாக வைத்திருக்கக் கூடாது. ஆதி $16^{2}$. இந்த அடிமைப் பெண்கள் யுத்தத்தில் பிடிபட்டவர்களும் (நியா $5^{30}$), சிலவேளை ஏழைகளால் தனவான்களுக்கு விற்கப்பட்டவர்களுமா யிருந்தார்கள். யாத் $21^{7}$. நியாயப்பிரமாணம் உரைக்கப்பட்ட போது பலதார விவாகத்தையும் மறுமனையாட்டி வைத்திருப்பதையும் அது முழுதும் தடுக்காவிட்டாலும், அவ்வழக்கம் முழுதும் அற்றுப்போகும்படியான சட்டங்கள் உண்டாயிருந்தன. உபா $17^{17}$. தீர்க்கதரிசிகள் கடவுளுக்கும் அவருடைய ஜனங்களுக்குமுள்ள ஐக்கியத்தைக் காட்டும்படி ஒரே புருஷனுக்கும் ஒரே பெண்ணுக்குமுள்ள விவாகத்தை உவமானமாய்ச் சொல்லி அந்த விவாகமே மேலானது என்று அதைச் சிறப்பித்திருக்கிறார்கள்.

2. **மனைவி**. புருஷனின் சொத்துக்களில் மனைவி ஒன்றுதான் என்பது பத்தாங் கட்டளையினால் தெளிவாகிறது. பலதார விவாகம் இருந்தபோது மனைவியின் நிலைமை மகிமையுள்ளதாய் இருக்கவில்லை. விவாக மனைவியின் பிள்ளைகள் ஆஸ்தியின் பெரும் பாகத்திற்குச் சுதந்தரவாளிகளாய் இருந்தார்கள்.

புருஷனுக்கு மனைவியின்மேல் சர்வ அதிகாரமும் இருந்தது. அவன் தன் மனைவிக்குத் தள்ளுதற்சீட்டுக் கொடுக்கலாம். உபா $22^{13}$ ஏசா $50^{1}$ எரே $3^{8}$ மல் $2^{16}$. ஆயினும் மனைவி தன் புருஷனுக்குத் தள்ளுதற்சீட்டுக் கொடுக்கப்படாது.

ஒருவன் தான் வாங்கின அடிமைப் பெண்களை விவாகம் செய்தால் அவர்களை அவன் மறுபடியும் விற்கப்படாது. யாத் $21^{17}$ உபா $21^{14}$.

மனைவியானவள் எப்பொழுதும் கற்புள்ளவளாய் இருக்கவேண்டும் என்பதும், புருஷனோ பரஸ்திரீயிடம் போனால் அது அவ்வளவு குற்றமல்ல என்பதும் பூர்வீகத்திலுள்ள எபிரெயர்களின் அபிப்பிராயம். ஆதி $38^{1}$. ஆனால் யேகோவாவின் வணக்கத்தில் அபிவிர்த்தி அடைந்த பக்திமான்கள் இதைக்குறித்து நல்லெண்ணங்கொண்டார்கள். நீதி $5^{5}$. கிறிஸ்தவ மார்க்கம் பரம்பினபோது மனைவி கற்புடையவளாய் இருப்பதுபோல் புருஷனும் சன்மார்க்கனாய் இருக்கவேண்டும் என்று போதித்தது.

3. **பிள்ளைகள்**. பல மனைவிகளும் மறுமனையாட்டிகளுமுள்ள குடும்பத்திற் பிறக்கும் பிள்ளைகளுக் கிடையில் வெறுப்பும் பகையும் உண்டாவது இயல்பே. ஆதி $25^{28}$. பிள்ளைகள்மேல் தாய்மாருக்கு அதிகாரம் இருந்தாலும் மேலான அதிகாரம் தகப்பனுக்கே யிருந்தது. தகப்பன் விவாக ஏற்பாடுகளைச் செய்வான். ஆதி $24^{4}$ $28^{2}$ நியா $14^{2}$. பிள்ளைகளை விற்பதற்கும் (யாத் $21^{7}$), மற்றச் சேமியர்களைப்போல சில சமயங்களில் பொருத்தனைக்காகப் பிள்ளைகளைப் பலி யிடுவதற்கும் தகப்பனுக்கு அதிகாரம் இருந்தது. ஆதி $22^{2}$ நியா $11^{39}$ 2 இரா $3^{27}$. பிள்ளைகள் எந்தவிஷயத்திலும் பெற்றாருக்குக் கீழ்ப்படிந்தவர்களாய் இருந்தார்கள். துஷ்டத்தனமான பிள்ளைகளைக் கல்லெறிந்து கொல்லுவதற்கு மூப்பர்களுக்கு அதிகாரம் இருந்தது. உபா $21^{18}$.

4. **சுதந்தரம்**. தகப்பன் மரித்தபிறகு அவனுடைய ஜேஷ்ட புத்திரன் குடும்பத்துக்குத் தலைவன். மறுமனையாட்டிகளின் பிள்ளைகளுக்கு இந்தச் சிலாக்கியம் சில சமயங்களில் இருந்தது. ஆதி $21^{10}$ உபா $21^{17}$ 1 நாளா $5^{1}$. தகப்பன் ஜேஷ்ட புத்திர சிலாக்கியத்தை ஒரு பிள்ளையிலிருந்து இன்னொரு பிள்ளைக்கு மாற்றலாம். ஆதி $21^{10}$ $27^{37}$. நியாயப்பிரமாணத்தில் இந்த அதிகாரம் தடுக்கப்பட்டது. உபா $21^{15}$.

முதலில் பெண்களுக்கு முதற்பேறான சுதந்தர சிலாக்கியம் இருக்கவில்லை. ஆனால் பிற்காலத்தில் அவர்கள் தங்கள் கோத்திரத்தில் விவாகம் செய்துகொள்ளவும் தகப்பன் ஆஸ்தியில் பாகம் பெற்றுக்கொள்ளவும் பிரமாணம் இருந்தது. எண் $27^{1}$ $36^{1}$ யோபு $42^{15}$.

தகப்பனின் சொத்துக்குப் பாத்தியக்காரர்கள். எண் $27^{8}$ காண்க.

5. **விதவை**. விதவைக்குப் புருஷனுடைய ஆஸ்தியில் பங்குபாகம் இல்லை. ஆனால் சுதந்தரவாளி அவளைப் பராமரிக்கவேண்டும். புருஷன் பிள்ளையில்லாமல் இறந்துபோனால் அவளை அவன் சகோதரனுக்கு விவாகம் செய்துகொடுக்கலாம். ஆயினும் இந்த வழக்கம் வரவர அற்றுப்போயிற்று. உபா $25^{6}$ மத் $22^{24}$. **கலியாணம், குமாரன், சகோதரன், விதவை** மு. காண்க.

**குட்கோதா**. Gudgodah. உபா $10^{7}$. = கித்காத் மலை. எண் $33^{33}$.

**குட்டி**. Foal. ஆதி $32^{15}$ $49^{11}$ எசே $31^{6}$ சக $9^{9}$ மத் $21^{4}$.

**குணசாலி**. Virtuous. ரூத் $3^{11}$ நீதி $12^{4}$ $31^{10,29}$.

**குணப்படுதல், மனந்திரும்புதல். Conversion.** வேதத்தை மொழிபெயர்த்தவர்கள் இரண்டு கிரேக்க பதங்களைக் 'குணப்படுதல்,' 'மனந்திரும்புதல்' என மாறி மாறிச் சொல்லியிருக்கிறார்கள். அந்த இரண்டு கிரேக்க பதங்களாவன:

(i) *Metanoeo.* இப்பதம் ஒருவன் தான் செய்யவேண்டியவைகளைப்பற்றியும், தன் நிலைமையைப்பற்றியும், கடவுளுடைய அருளைப்பற்றியும், தன் பாவ சுபாவத்தைப்பற்றியும் முன்னிருந்த துரெண்ணத்தை மாற்றி மெய்ஞ்ஞானம் அடைவதைக் குறிக்கிறது.

(ii) *Epistrepho.* இப்பதம் ஒருவன் தீமையிலிருந்து சத்தியத்திற்குத் தன்னைத் திருப்புதலைக் குறிக்கிறது. இதற்கு 'மனந்திரும்புதல்' என்று தமிழில் சொல்லியிருப்பது சரியான அர்த்தம்கொண்டதாய் இருக்கிறது. மூலபாஷையிலுள்ள இரண்டு பதங்களின் அர்த்தத்தையும் நாம் ஒன்றாய்ச் சேர்த்துப் பார்த்தால் குணப்படுதல் ஆவது இன்னதென்று பூரணமாய் அறிந்துகொள்ளலாம். அதாவது நாம் முன்னிருந்த பழைய நோக்கத்தையெல்லாம் மாற்றி நம்மை முழுதும் மெய்ஞ்ஞானமாகிய சத்தியத்திற்கு முழுச் சித்தத்தோடு திருப்பவேண்டும் என்பதே குணப்படுதல்.

மனந்திரும்புதல். மத் 13[15] 18[3] அப் 15[3] சங் 51[13].

குணப்படுதல். மாற் 4[12] லூக் 22[32] அப் 3[20] 28[27].

திரும்புதல். உபா 30[10] ஏசா 55[7] அப் 9[35] 11[21].

குணப்படுதலுக்குத் திருஷ்டாந்தம்: லூக் 7[47] 15[17] 19[8] அப் 2[41] 8[5] 9[3].

குணப்படுதலும் மனந்திரும்புதலும் ஒரே விஷயத்தில் இரண்டு பாகங்களைக் குறிக்கின்றன. இது நீதிமான்களாவதற்கு முதற்படி. குணப்படுதலுக்கும் புது ஜென்மத்துக்கும் வித்தியாசம் உண்டு. குணப்படுதல் முதலில் நம்மால் ஆகவேண்டியது. புது ஜென்மம் பரிசுத்தஆவியினால் ஆகவேண்டியது.

**குணம். Virtue, Quality.** இந்து தத்துவ சாஸ்திரத்தில் 'குணம்' என்பது சாத்வீகம், இராசதம், தாமதம் என்னும் ஆதிவஸ்துவின் மூன்று லட்சணங்களைக் குறிக்கிறது. ஆனால் வேதாகமத்தில் இப்பதம் அவைகளைக் குறிக்காமல் பொதுவாய் நற்குணங்களைக் குறிக்கிறது.

**குணம் ஆக்குதல். Healing.** எண் 12[3] 2 இரா 20[5] சங் 6[2] 30[2] 41[4] 103[3] பிர 3[3] ஏசா 19[22] 57[18] எரே 17[14] ஓசி 6[1] 14[4] மாற் 6[5] லூக் 9[6] 1 கொரி 12[9].

**குதிரை. Horse.** எகிப்து தேசத்தில் குதிரைகள் அதிகம். ஆதி 47[17]. பலெஸ்தீனா தேசம் பெரும்பாலும் மலைநாடானதினால் எபிரெயர் சிறையிருப்புக் காலம்வரையும் குதிரைகளை அல்ல கழுதைகளையும் கோவேறு கழுதைகளையும் உபயோகித்துவந்தார்கள். அவர்கள் இவ்விதமாய்க் குதிரைகள் யுத்தத்திற்குத் தகுந்த வாகனம் என்று எண்ணினார்கள். நியாயப்பிரமாணத்தின்படி குதிரைகளை அதிகமாய் வைத்திருக்கப்படாது. உபா 17[16].

தாவீதுக்குக் குதிரை ரதங்கள் சில இருந்தன. 2 சாமு 8[4]. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து குதிரைகளைத் தருவித்தார்கள். ஏசா 31[1] எசே 17[15]. சாலொமோன் இவ்விதமாய் அநேக குதிரை ரதங்களை வைத்திருந்தான். 1 இரா 10[28] 2 நாளா 1[16]. அந்நியதேவர்களைத் தேடின ராஜாக்கள் சூரிய தேவனுக்குப் பிரதிஷ்டை செய்த குதிரைகளைத் தேவாலயத்தில் வைத்தார்கள். 2 இரா 23[11] சங் 20[7] 32[9] 33[17] ஏசா 5[28] 30[16] யோபு 39[19] எரே 47[3] சக 14[20].

**குதிரைவாசல். Horse gate.** எருசலேம் காண்க.



குத்துவிளக்கு.

**குத்துவிளக்கு, விளக்கு. Candle stick.** ஆதியில் ஜனங்கள் வெளிச்சத்திற்காகப் பிசினுள்ள மரக்கிளைகளை ஒன்றாகச் சூழ்கட்டி எரிப்பார்கள். கிதியோனின் சேனைகளிடமிருந்த 'தீவட்டிகள்' இவைகளாய் இருக்கலாம். நியா 7[16]. பிறகு நாம் மாடத்தில் வைக்கும் சிறு விளக்குகளைப்போன்ற விளக்குகள் மண்ணினால் செய்தார்கள். பிறகு மூடியுள்ள

விளக்குகளை உபயோகித்தார்கள். இவைகளில் திரிபோடுவதற்காக மூக்குகள் ஒன்று, மூன்று, நாலு அல்லது ஏழு இருந்தன. வெண்கலத்தினாலும் வெள்ளியினாலும் செய்த விளக்குகள் சில இடங்களில் இருந்தன. ஆசரிப்புக் கூடாரத்திலும் தேவாலயத்திலும் பொன்னினால் செய்த விளக்குகள் இருந்தன. யாத் $39^{37}$ 1 இரா $7^{49}$. திரி வழக்கமாய்ச் சணல் நூலினால் செய்வார்கள். ஏசா $42^{3}$. ஏழைகள் எப்பொழுதும் மண் விளக்குகளை உபயோகித்தார்கள். தனவான்கள் குத்துவிளக்குகள் எரித்தார்கள். குத்துவிளக்குகள் சில சல்லில் வெட்டுவார்கள். பிற்காலங்களில் சதாரணமான குத்துவிளக்குகள் உயரமான தண்டின்மேலும் அதிக நேர்த்தியான குத்துவிளக்குகள் சிறு பீடத்தின்மேலும் வைப்பார்கள். ஆசரிப்புக் கூடாரத்திலிருந்த குத்துவிளக்கு அதிக விநோதமான வேலையுள்ளது. விபரம். யாத் $25^{31}$ 1 நாளா $28^{15}$ காண்க.

ரோமர்கள் பெரிய ஏரோது கட்டின தேவாலயத்தை அழித்து அங்குள்ள குத்துவிளக்கை எடுத்துக்கொண்டுபோய் ரோமாபுரியில் அதைச் சுமந்து ஊர்கோலம் செய்த படம் அங்குள்ள சுவர் ஒன்றில் வரைந்திருப்பதை இப்போதும் பார்க்கலாம்.

எபிரெயர்களுடைய வீடுகளில் விளக்கு ஒன்று எப்பொழுதும் எரிந்துகொண்டேயிருக்கும். 1 இரா $11^{36}$ 2 இரா $8^{19}$. ஆதலால் விளக்கு அவிந்துபோவது குடும்பத்தின் அழிவைக் குறிக்கிறது. யோபு $18^{6}$ நீதி $13^{9}$.

விளக்கு பல வசனங்களில் உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. சங் $132^{17}$ வெளி $22^{5}$ மத் $5^{15}$ யோவா $5^{35}$ 2 சாமு $21^{17}$.

**குப்பி**. Box. ஒருவேளை தைலக்கொம்பும் இதுவும் ஒன்றுதான். 1 சாமு $10^{1}$.

**குப்பை வாசல்**. Dung gate. எருசலேம் காண்க.

**குமாரத்தி**. Daughter. இப்பதம் வழக்கமாய் மகளையும், சில சமயங்களில் இனத்தாளையும் குறிக்கிறது. ஆதி $28^{6}$. ஒரு ஊரில் வசிக்கும் ஸ்திரீகள் எல்லாரும் அதின் 'குமாரத்திகள்' என்று சொல்லியிருக்கிறது. ஏசா $3^{16}$. சீதோனியர் தீரு பட்டணத்தை ஸ்தாபித்ததினால் அதற்குச் 'சீதோன் குமாரத்தி' என்று சொல்லியிருக்கிறது. ஏசா $23^{12}$. எல்லா ஜனத்திற்கும் பொதுவாய்ச் சொல்லியிருக்கிறது. ஏசா $16^{1}$. **குடும்பம்** காண்க.

**குமாரன், புத்திரன், மகன்**. Son. இப்பதம் வழக்கமாய் மகனையும், சில வேளைகளில் பேரப்பிள்ளையையும், குடும்பத்திற் சேர்ந்தவனையும் குறிக்கிறது. ஆதி $29^{5}$ $48^{5}$ ரூத் $4^{17}$ மத் $1^{20}$. பெரியவன் சிறியவனை 'மகன்' என்று சொல்வதுண்டு. 1 சாமு $3^{6}$. ஒருவனுடைய குணத்தைக் காட்டும்படி எபிரெயர்கள் இவன் அக்குணத்தின் மகன் என்று சொல்லுவார்கள். இன்னதேசத்து மனிதர் என்பதற்கு அவர்கள் அத்தேசத்துப் புத்திரர் என்று சொல்லுவார்கள். உ-ம். 'கிழக்கத்திப் புத்திரர்.' நியா $6^{3}$. 'நரகத்தின் மகன்.' மத் $23^{15}$. 'பேலியாளின் மகன்.' நியா $19^{22}$. 'கீழ்ப்படியாமையின் புத்திரர்.' எபே $2^{3}$. 'கேட்டின் மகன்.' யோவா $17^{12}$.

**குமிழ்**. Bowl. 2 நாளா $4^{12}$.

**குமுறல்**. Thunder. **இடிமுழக்கம்** காண்க.

**கும்பம்**. Pommel. 2 நாளா $4^{12}$.

**குயவனுடைய நிலம்**. Potter's Field. மத் $27^{10}$. **அக்கெல்தமா** காண்க.



**குயவன்**. Potter. 2 சாமு $17^{28}$ ஏசா $29^{16}$ $41^{25}$ எரே $18^{2}$ சகரி $11^{13}$ ரோ $9^{21}$.

**குரங்கு**. Ape. பலெஸ்தீனா தேசத்தில் குரங்குகள் இல்லை. வியாபாரிகள் சாலொமோனுக்காக இவைகளைக் கொண்டுவந்தார்கள். 1 இரா $10^{22}$. 2 நாளா $9^{21}$.

**குரு**. Teacher. லூக் $6^{40}$.

**குருகு**. Gier eagle, Vulture. பலெஸ்தீனாவிலுள்ள பட்சிகளில் பெரியது இது தான். அங்கே இவை அதிகம். லேவி $11^{18}$ உபா $14^{17}$.

**குருடர், குருடு**. Blind men, Blindness. பலெஸ்தீனா தேசத்தில் குருடர் அதிகம். வெய்யில், தூசி, அழுக்கு, விருத்தாப்பியம்



குருகு.

இதற்குக் காரணம். ஆதி $29^{17}$ லேவி $26^{16}$ 1 சாமு $3^{2}$ 1 இரா $14^{4}$. எபிரெயர்கள் குருடு கடவுள் கொடுக்கும் சிட்சை என்று நினைத்தார்கள். யாத் $4^{11}$ அப் $13^{11}$. குருடன் ஆசாரியனாய் இருக்கப்படாது. லேவி $21^{18}$. குருடருக்கு இரக்கம் காட்டுவது அவசியம். லேவி $19^{14}$ உபா $27^{18}$. இயேசு பலதடவை குருடருக்குப் பார்வை அளித்தார். மாற் $8^{22}$ $10^{49}$ யோவா $9^{1}$. பவுல் குருடானது. அப் $9^{8}$. குருடு அடிக்கடி அறிவீனத்துக்கும் முக்கியமாய்த் தேவனுடைய அருளை அசட்டை செய்வதற்கும் உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. ஏசா $42^{18}$ மத் $15^{14}$ யோவா $12^{40}$ ரோ $2^{19}$ 2 கொரி $4^{4}$ 1 யோவா $2^{11}$ வெளி $3^{7}$.

**குருத்தோலை.** Palm Branch. யூதர்கள் சந்தோஷத்தைக் காண்பிக்கும்படி ஊர்கோலம் செய்யும்போது மரக்கொம்புகளைப் பிடிப்பார்கள். 1 மக்கபெயர் $13^{51}$ யோவா $12^{13}$ வெளி $7^{9}$.



அடைக்கலான் குருவி.

**குருவி, பட்சி, பறவை.** Bird.

1. **பழைய ஏற்பாட்டில்:** குருவி. லேவி $14^{6}$ சங் $84^{3}$ $124^{7}$.

பட்சி. ஆதி $1^{21}$ லேவி $17^{13}$ யோபு $28^{7}$ ஏசா $18^{6}$ எசே $39^{4}$ நீதி $1^{17}$.

பறவை. ஆதி $1^{30}$ $15^{11}$ 2 சாமு $21^{10}$ எரே $4^{25}$ எசே $31^{6}$.

2. **புதிய ஏற்பாட்டில்:** பறவை. மத் $13^{4}$ லூக் $13^{19}$. ஆனால் வெளி $18^{2}$ $19^{17.21}$. இவைகளிற் சொல்லிய 'பறவைகள்' மாம்சபட்சணிகளைக் குறிக்கின்றன.

3. பலெஸ்தீனா தேசத்தில் பறவைகள் அதிகம். எபிரெயர்கள் அவைகளைக் கவனமாய்ப் பார்த்துவந்தார்கள். உபா $32^{11}$ மத் $23^{37}$ நீதி $27^{8}$.



குலாரி வண்டில்.

**குலாரி வண்டில்.** Litter. ஏசா $66^{20}$. **வண்டி** காண்க.

**குலோவேயாள்.** Chloe. இவள் கிறிஸ்தவளோ இல்லையோ என்பது தெரியாது. இவள் கொரிந்து அல்லது எபேசுபட்டணத்தில் வசித்தவள். இவளுடைய வீட்டாரில் சிலர் கொரிந்து சபையிலுள்ள பிரிவினை, வாக்குவாதங்களைப்பற்றிப் பவுலுக்கு அறிவித்தார்கள். 1 கொரி $1^{11}$.

**குவர்த்து.** Quartus. ரோமாபுரியில் கிறிஸ்தவன் ஒருவன். ரோ $16^{23}$.

**குழந்தை.** Infant. இப்பதம் அதிகமாய் உபமானமாகச் சொல்லியிருக்கிறது. 1 கொரி $13^{11}$ கலா $4^{1}$ 1 கொரி $14^{20}$.

**குழல்.** Flute. **கீதவாத்தியம்** காண்க.

**குழாய்.** Pipe. சக $4^{2}$.

**குழி.** Pit, Hole. மலைநாடாகிய பலெஸ்தீனா தேசத்தில் மழை அதிகம் பெய்யாததினால் தண்ணீர் பிடிப்பதற்காகக் கட்டியிருக்கும் தொட்டிகளைத்தவிர குழிகள் அநேகம் வெட்டுவார்கள். அந்தக் குழிகளைச் சில சமயங்களிற் காவற் கிடங்குகளாக உபயோகிப்பார்கள். ஆதி $37^{20}$ 1 சாமு $13^{6}$ யாத் $21^{33}$ சங் $28^{1}$. சில இடங்களில் மூலபாஷையின்படி 'குழி' என்பது கிணறு (லேவி $11^{36}$), தூரவு (லூக் $14^{5}$) என்று சொல்லியிருக்கிறது.

**குழிமுசல்.** Coney. சாக்கடலின் ஓரத்திலுள்ள மலைநாடுகளில் குழிமுசல்கள் அதிகம். ஒருவன் கிட்டவந்தால் அவைகள் அதிவேகமாயோடி ஒளித்துக்கொள்ளும். லேவி $11^{6}$ சங் $104^{18}$ நீதி $30^{26}$.



குழி முசல்.

**குளம்**. **Tank.** **கிணறு** காண்க.

**குளவி**. **Hornet.** குளவிகள் பலெஸ்தீனு தேசத்தில் அதிகம். யாத் $23^{28}$ உபா $7^{20}$ யோசு $24^{12}$.

**குளிசம்**. **Amulet.** **சூனியம்** காண்க.

**குளிர்.** **Cold.** நீதி $25^{13.\ 20}$ யோபு $24^{7}$ $37^{9}$ சங் $147^{17}$ யோவா $18^{18}$ அப் $28^{2}$ 2 கொரி $11^{27}$ வெளி $3^{15}$.

**குளிர்காலம்**. **Winter.** பலெஸ்தீனு தேசத்தில் கார்த்திகைமுதல் மாசிவரையும் மழையும் கல்மழையும் பெய்யும். மலைநாட்டில் சில சமயங்களில் உறைமழை பெய்யும். **மழைகாலம், மாரிகாலம்** காண்க.

**குறடு**. **Tongs.** ஏசா $6^{6}$ $44^{12}$.

**குறிகாரர்**. **Soothsayers.** **சூனியம்** காண்க.

**குறிசொல்லல்**. **To tell omens.** எண் $23^{23}$ உபா $18^{10}$. **சூனியம்** காண்க.

**குறிப்படையாளம்**. **Way-mark.** வழிகாட்டும் கற்றூண் அல்லது கற்பலகை. எரே $31^{21}$.

**குறைபாடு.** **Quarrel.** கொலோ $3^{13}$.

**குறைவு**. **Want.** யோபு $30^{3}$ உபா $28^{48}$ 2 கொரி $8^{14}$ பிலி $2^{25}$ $4^{11}$.

**குற்றநிவாரணம்**. **Atonement.** **பாவநிவாரணம்** காண்க.

**குற்றநிவாரண காணிக்கை.** **Trespass offering.** **பலி** காண்க.

**குற்றநிவாரணபலி.** **Trespass offering.** **பலி** காண்க.

**குற்றமில்லாமை**. **Innocency.** தானி $6^{22}$ யோபு $9^{28}$ சங் $26^{6}$ $73^{13}$ மத் $27^{4}$.

**குற்றம்**. **Fault, guilt.** **தீமை, பாவம்** காண்க.

## கூ.

**கூகை.** **Night hawk.** இது மூல பதத்தின்படி ஒரு மாதிரியான ஆந்தை. லேவி $11^{16}$ உபா $14^{15}$.

**கூசா.** **Chuza.** ஏரோது அந்திபபா என்பவனுடைய காரியக்காரன். இவனுடைய மனைவியின் பெயர் யோவன்னாள். லூக் $8^{3}$.

**கூசான் ரிஷதாயீம்**. **Cushan-Rishathaim.** இஸ்ரவேலர் தங்களைக் கானான் தேசத்தில் ஸ்தாபித்தபிறகு அவர்களைத் தொந்தரவு செய்த மெசொப்பொத்தாமியாவின் ராஜா. நியா $3^{8}$.

**கூஷான்**. **Cushan.** ஆபகூ $3^{7}$.

**கூஷ்**. **Cush.**

1. காமின் மகன். ஆதி $10^{6}$.

2. எகிப்து தேசம். எசே $29^{10}$ 2 இரா $19^{9}$. **எகிப்து** காண்க.

3. சங் 7 தலைப்பு.

4. ஏலாம் தேசத்திலுள்ள ஒரு கோத்திரம். ஆதி $10^{8}$.

**கூடாரப்பண்டிகை**. **Feast of Tabernacle.** **பண்டிகை** காண்க.

**கூடாரம்**. **1. Pavilion.** இது ராஜ கூடாரம் ஆகிய பெரிய கூடாரம். இவை விசித்திர வேலையுள்ள துணிகளினால் தூண்களுக்கிடையில் இணைக்கப்பட்டிருக்கும். 2 சாமு $22^{12}$ 1 இரா $20^{12}$ எரே $43^{10}$. கூடாரத்துணி நெசவு செய்வது ஒரு தொழிலாய் இருந்தது. அப் $18^{2}$.

**கூடாரம்**. **2. Tent.** அரபியர் கம்பங்களிலும் கயிறுகளிலும் ஆட்டுமயிர்த் துணியை இணைத்துக் கூடாரங்கள் செய்வார்கள். ஆதி $25^{27}$ உன். பா $1^{5}$ எரே $4^{20}$ யோபு $36^{8}$ நியா $4^{21}$. இந்தக் கூடாரங்களின் பின்பாகம் பெண்கள் வசிப்பதற்காகத் திரையினால் மறைக்கப்பட்டிருக்கும். நியா $15^{1}$ உன். பா $3^{4}$. விவாகம் செய்த மணவாளன் மணவாட்டிக்கென்று மணவறையாகக் கூடாரம் புதுசாய்க் கட்டுவார்கள். சங் $19^{5}$ யோவே $2^{16}$.

போர்ச்சேவகர் யுத்தத்திற்குப் போகும்போது கூடாரங்களைக் கொண்டுபோவார்கள். 2 இரா $7^{7}$ எரே $37^{10}$.

**கூடாரம்**. **3. Tabernacle.**

1. **பெயர்கள்**. ஆசரிப்புக்கூடாரம். யாத் $29^{42}$.

கூடாரம். யாத் $26^{9}$.

யேகோவாவினுடைய (கர்த்தருடைய) கூடாரம். 1 இரா $2^{28}$.



ரம்.

கர்த்தருடைய ஆலயமாகிய வாசஸ்தலம். 1 நாளா $9^{23}$.

கர்த்தருடைய ஆலயம். யாத் $23^{19}$.

ஆசரிப்புக் கூடார வாசஸ்தலம். 1 நாளா $6^{32}$.

கர்த்தருடைய வாசஸ்தலம். லேவி $17^{3}$.

ஆசரிப்புக் கூடாரமாகிய வாசஸ்தலம். யாத் $39^{32}$.

தேவனுடைய ஆலயமாகிய வாசஸ்தலம். 1 நாளா $6^{48}$.

சாக்ஷியின் கூடாரம். எண் $9^{15}$.

சாக்ஷியின் வாசஸ்தலம். யாத் $38^{21}$.

பரிசுத்த ஸ்தலம். யாத் $25^{8}$.



ஆசரிப்புக் கூடாரம்.

2. **முதற் கூடாரம்.** முதலில் சொல்லியிருக்கும் கூடாரம் லேவி கோத்திரத்தானல்லாத யோசுவா பணிவிடை செய்த பாளையத்துக்குப் புறம்பே தூரமாய் வைத்திருந்த கூடாரம். யாத் $33^{7}$ எண் $11^{16}$ $12^{4}$ $14^{10}$. இது அவ்வளவு அலங்கார முள்ளதல்ல. இதைவிட லேவியர்கள் பணிவிடை செய்த பாளையத்தின் மத்தியிலுள்ள மகா விநோத ஆசரிப்புக் கூடாரம் மேலானது.

3. **ஆசரிப்புக் கூடாரத்தின் விபரம்.** மோசே முதலில் யேகோவாவை ஆசரிப்பதற்காகச் செய்த கூடாரத்தைப்பற்றி விப

ரம் ஒன்றும் சொல்லியிராவிட்டாலும் பெரிய ஆசரிப்புக் கூடாரத்தைப்பற்றி நியாயப்பிரமாணப் புஸ்தகங்களில் பூரணமாய்ச் சொல்லியிருக்கிறது. இதைக் காட்டும் வசனங்கள்: யாத் 25¹-27²¹ 30¹-31¹⁸ 35¹-40³⁸.

(a) ஆசரிப்புக் கூடாரத்தைச் சுற்றி 'வாசஸ்தலத்தின் பிராகாரம்' இருந்தது. இது கிழக்கிலிருந்து மேற்குவரையும் 100 முழம், வடக்கிலிருந்து தெற்குவரையும் 50 முழம். கிழக்குப்பக்கத்தில் இதற்குத் தொங்கு திரைகள் இருந்தன. மற்ற மூன்று பக்கங்களும் வெண்கலப் பாதங்களில் நாட்டியிருக்கும் தூண்களில் சணல்நூல் திரைச்சீலையினால் மறைக்கப்பட்டிருக்கும். யாத் 27⁹·¹⁶.

(b) இந்தப் பிராகாரத்தில் 'தகன பலிபீடம்' அல்லது 'வெண்கலப் பலிபீடம்' இருந்தது. யாத் 27¹ 38³⁰. இதற்கு நாலு கொம்புகள் இருந்தன. இதின் கீழ்பாகத்தை மூடும்படி சுற்றிவரச் சல்லடையொன்று கட்டப்பட்டிருந்தது.

(c அதே பிராகாரத்தில் ஆசாரியர்கள் தங்களைச் சுத்திகரிக்கும்படி வெண்கலத் தண்ணீர்த்தொட்டி யிருந்தது. யாத் 30¹⁷ 38⁸.

4. **வாசஸ்தலம்.** எபிரெயர்கள் ஆசரிப்புக் கூடாரம் விசேஷமாய் யேகோவாவுக்கான இருப்பிடம் என்று நினைத்து அதை மறைவிடமாகக் கட்டியிருந்தார்கள். யாத் 26¹.

(a) அந்த இடம் கொக்கிகளுக் கிடையில் இணைக்கப்பட்ட விசித்திர தையல் வேலையுள்ள சணல் நூலினால் நெய்த பத்து மூடு திரைகளினால் மறைக்கப்பட்டிருந்தது. இவைகளெல்லாம் ஒன்றாகச் சேர்ந்த இடம் யேகோவாவின் வாசஸ்தலம் என்று சொல்லியிருக்கிறது. யாத் 26⁶.

(b) இந்த அழகான சணல்நூல் கெட்டுப் போகாதபடி காப்பாற்றுவதற்கு மூன்று மூடிகள் இருந்தன. அவைகளாவன:

i. ஆட்டுமயிரினால் செய்த பதினொரு மூடு திரைகள். யாத் 26⁷.

ii. ஆட்டுக்கடாத் தோலினால் செய்த மூடி. யாத் 26¹⁴.

iii. தகசுத்தோலினால் செய்த மூடி. யாத் 26¹⁴.

கூடாரம் இவை யெல்லாவற்றினாலும் பாரம் தாங்காதாகையால் அதற்காக நாற்பத்தெட்டு சாரமரங்கள் நட்டிருப்பார்கள். இந்த மரங்களுக்குத் தமிழ் வேதாகமத்தில் 'பலகைகள்' என்று சொல்லியிருப்பது தப்பு. 'பலகை' என்பதற்குப் பதிலாக கிராதி, சாரமரம், ஏதண்டமரம் என்று சொல்வது சரி. யாத் 26¹⁵. இந்தச் சாரமரங்கள் பொன்தகட்டினால் மூடப்பட்டதாய் வெள்ளிப் பாதங்களில் நிறுத்தியிருக்கும். சாரமரங்களை நிறுத்தின பிற்பாடு அவைகள் அசையாதபடி மூன்று வரிசையில் தாழ்ப்பாள் கம்பிகள் மாட்டிப் பலப்படுத்தியிருக்கும். யாத் 26²⁶. ஆசரிப்புக் கூடாரத்தை நிறுத்தும்போது முதலாவது இந்தப் பாதங்களில் சாரமரங்களை நாட்டி அவைகளின்மேல் சணல்நூல் மூடு திரைகளைத் தொங்க விடுவார்கள். பின்பக்கமும், மற்றிருபக்கமும் மூடப்பட்டிருக்கும். முன்பக்கம்மாத்திரம் திறந்திருக்கும். இதை மூடும்படி ஐந்து தூண்களில் தொங்கு திரை கட்டியிருக்கும்.

5. **பரிசுத்த ஸ்தலம்.** இவ்விதமான கூடாரத்தின் நீளம் 30 முழம். இதில் யேகோவாவுக்கென்றுமாத்திரம் மகா பரிசுத்த ஸ்தலத்தை மற்றப்பாகத்திலிருந்து பிரிக்கும்படி, கூடாரத்துக்குள்ளே பின்பக்கத்திலிருந்து 10 முழம் மேற்கே நாலு தூண்களில் விசித்திர வேலைகள் செய்த திரைச்சீலை தொங்கும். கூடாரத்தில் அத்திரைச்சீலைக்கு முன்பாகம் 'பரிசுத்த ஸ்தலம்' என்றும், பின்பாகம் 'மகா பரிசுத்த ஸ்தலம்' என்றும் சொல்லுவார்கள்.

6. **பரிசுத்த ஸ்தலத்திலுள்ள பணிமுட்டுகள்.**

(a) தேவசமுகத்தப்பம் வைக்கும் மேசை. யாத் 25²³ எண் 4⁷. இது பொன் தகட்டினால் மூடியிருக்கும் ஒரு சிறு மேசை. இதில் தட்டுகளும் தூபக்கரண்டிகளும் வைக்கப்பட்டிருக்கும். யாத் 25²⁹ லேவி 24⁷.

(b) குத்துவிளக்கு. யாத் 25³¹. இந்த விளக்குத்தண்டில் ஒரு விளக்கும், அதின் பக்கங்களில் ஆறு கிளை விளக்குகளுமுண்டு. அதற்காகக் கத்தரிகளும் சாம்பல் பாத்திரங்களும் வைக்கப்பட்டிருக்கும். யாத் 25³⁸.

(c) தூபபீடம். யாத் 30¹. இது ஒரு முழச் சதுரம் உள்ளது. தேவசமுகத்தப்பம் வைக்கும் மேசை தென்பக்கத்திலும், குத்துவிளக்கு வடபக்கத்திலும், தூபபீடம் மகா பரிசுத்த ஸ்தலத்தை மறைக்கும் திரைச்சீலைக்குமுன் வைக்கப்பட்டிருக்கும்.

7. **மகா பரிசுத்த ஸ்தலத்திலுள்ள பணிமுட்டுகள்.** மகா பரிசுத்த ஸ்தலத்தில் வைக்கப்பட்டிருந்தவை: (a) உடன்படிக்கைப் பெட்டி; (b) அதின்மேல் கிருபாசனம்; (c) அதின்மேல் கேருபீன்கள். உடன்படிக்கைப் பெட்டியில் பத்துக் கற்பனைகள் எழுதின இரண்டு கற்பலகைகள் வைக்கப்பட்டிருந்தன. ஆசரிப்புக் கூடாரத்தில் மரம் முதலியவை பொன் தகட்டினால் மூடியி

ருந்தன. கிருபாசனமோ உடன்படிக்கைப் பெட்டியின்மேல் வைத்திருந்த பசும்பொன் பலகையா யிருந்தது. எபிரெயரின் அபிப்பிராயத்தின்படி உடன்படிக்கைப் பெட்டி, கிருபாசனம், கேருபீன்கள் ஆகிய இவைகள் சேர்ந்த இடம் உலகத்தில் மற்றெல்லா விடங்களையும்விட மகா பரிசுத்தமுள்ளது. யாத் $25^{10-22}$. அதில் யேகோவா மோசேயைச் சந்தித்து அவனுக்குக் கற்பிக்க வேண்டியவைகளைச் சொன்னார். மோசே வணக்கத்தோடு அதற்குள் போகலாம். யாத் $25^{22}$. அவனைத்தவிர பிரதான ஆசாரியன்மாத்திரம் பாவ நிவாரண நாளிலே மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கலாம். லேவி $16^{14}$. ஆசாரியர்கள் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கலாம். ஜனங்கள் சுற்றியிருக்கும் வாசஸ்தலத்தின் பிராகாரத்தில் நிற்க வேண்டும்.

8. **ஆசரிப்புக் கூடாரத்தின் அர்த்தம்.** முதலில் மோசே பாளையத்துக்குப் புறம்பே கட்டின கூடாரத்தில் யேகோவாவை ஏகாந்தமாய் வணங்கினான். யாத் $33^{7}$. அந்தக் கூடாரம் அடையாளமாக விசேஷமாய் ஒன்றையும் குறிக்கிறதில்லை. யாத்திராகமத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கும் ஆசரிப்புக் கூடாரத்தின் ஒவ்வொரு பாகத்திற்கும் அர்த்தம் உண்டு. வேதசாஸ்திரிகளில் அநேகர் இவை ஒவ்வொன்றிற்குமுள்ள அர்த்தத்தை விளக்கிக் காட்டியிருக்கிறார்கள். சுருக்கமாய்ச் சொன்னால் பாளையத்தின் நடுவில் இருந்த இந்த ஆசரிப்புக் கூடாரம் ஸ்தாபித்த இடத்தினாலும், கட்டின மாதிரியினாலும், இதின் பாகங்களினாலும், இதிலுள்ள பணிமுட்டுச் சாமான்களினாலும், யேகோவா ஒருவர், அவர் இஸ்ரவேலின் தேவன், அவர் அவர்களோடிருக்கிறார், அவர் மகிமை நீதியுள்ளவர், அவர் அரூபியாய் இருக்கிறார் என்பதை அறிகிறோம். யாத் $26^{6}$. இதில் யார் பிரவேசிக்கவேண்டியது என்பதைப்பற்றிய கட்டளையானது யேகோவாவின் பரிசுத்தத்தை முக்கியமாய்க் காட்டுகிறது.

9. **சரித்திரம்.** ஆசரிப்புக் கூடாரத்தைப் பற்றிய சரித்திரம் விபரமாய்ச் சொல்லமுடியாது. எபிரெயர்கள் கானான் தேசத்திற்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தபோது அவர்கள் கில்காலிலே பாளையம் இறங்கினார்கள். அதில் சில வருஷம் ஆசரிப்புக்கூடாரம் இருந்தது என்று தோன்றுகிறது. அவர்கள் தேசத்தை ஜெயித்தபிறகு இது சீலோவாவிலே இருந்தது என்று சொல்லியிருக்கிறது. யோசு $4^{19}$ $18^{1}$ 1 சாமு $1^{9}$. பெலிஸ்தியர் உடன்படிக்கைப்பெட்டியைப் பிடிக்கு முன் ஆசரிப்புக் கூடாரம் சாலொமோனின் காலம்வரையும் கிபியோனிலிருந்தது என்று தோன்றுகிறது. 1 நாளா $16^{39}$ 2 நாளா $1^{13}$. தாவீது உடன்படிக்கைப் பெட்டிக்காகத் தான் பிடித்த எருசலேமின் கோட்டையில் ஒரு கூடாரம் கட்டினான். 2 சாமு $6^{17}$ 1 நாளா $15^{1}$ 2 நாளா $1^{4}$. அந்தக் கூடாரம் சாலொமோன் மோரியா மலையில் கட்டின தேவாலயத்தில் வைத்திருந்தது. 1 இரா $8^{4}$ 2 நாளா $1^{4}$. **உடன்படிக்கைப்பெட்டி, கேருபீன்கள், தூபபீடம், தகனபலிபீடம், விளக்குத்தண்டு** காண்க.

**கூடு.** **Nest.** உபா $22^{6}$ $32^{11}$ யோபு $39^{27}$ சங் $84^{3}$ $104^{17}$ நீதி $27^{8}$ ஏசா $16^{2}$ மத் $8^{20}$. உபமானமாய் மலைமேலுள்ள கோட்டை. எண் $24^{21}$ எரே $49^{16}$. வீடு. யோபு $29^{18}$.

**கூடும்.** **Possible.** மத் $19^{26}$ மாற் $9^{23}$ லூக் $18^{27}$ ரோ $12^{18}$.

**கூடை.** **Basket.** எபிரெயர்கள் பலவித மான கூடைகளை உபயோகித்தார்கள். அலரிமிலாறுகளினாலும், நாணல்களினாலும், ஓலைகளினாலும் அவைகளைப் பின்னினார்கள். ஆதி $40^{16}$ யாத் $29^{3}$ உபா $28^{5}$ நியா $6^{19}$ எரே $24^{1}$ ஆமோ $8^{1}$.

புதிய ஏற்பாட்டில் இரண்டு மாதிரியான கூடை சொல்லியிருக்கிறது. அதில் ஒன்று கயிறு உள்ளது. அதைப் பலமாய்க் கட்டி முதுகில் போட்டுப்போவார்கள். மத் $14^{20}$. மற்றது பெரிதாயும் அகலமாயும் இருந்தது. மத் $15^{37}$ மாற் $8^{8}$ அப் $9^{25}$.

**கூட்டம்.** **Assembly.** ஆதி $49^{6}$ சங் $22^{17}$ $86^{14}$ புல $1^{15}$ ஏசா $1^{13}$ எரே $31^{4}$. **சபை, சங்கம்** காண்க.

**கூட்டாளி.** **Synzygus.** சிலர் 'கூட்டாளி' என்று அர்த்தம் கொண்ட கிரேக்க பதமாகிய *Synzygus* ஆளின் பெயர் என்றும், சிலர் பொதுப்பெயராய் 'உடன் ஊழியன்' என்றும் சொல்லுகிறார்கள். பிலி $4^{3}$.

**கூண்டு வண்டில்.** **Waggon, Litter.** எண் $7^{3}$. **வண்டி** காண்க.

**கூத்தா.** **Cuth, Cuthah.** அசீரியா ராஜாவாகிய சர்கோன் சமாரியாவிலிருந்து இஸ்ரவேலரைத் துரத்தினபோது அவர்களுக்குப் பதிலாக கூத்தா என்னும் ஊரிலிருந்து அநேகரைக் கூட்டிக்கொண்டு வந்தான். கூத்தா பாபிலோனுக்குச் சமீபமாயிருந்தது. 2 இரா $17^{24}$.

**கூத்து, நடனம்.** **Dance.** எபிரெயர்கள் நடனம் விளையாட்டுக்காக அல்ல, கடவுளுக்குத் தங்கள் களிப்பைக் காட்டும்படி செய்

வார்கள். சங் 150⁴ யாத் 32¹⁹ 1 சாமு 18⁶ 2 சாமு 6¹⁴ பிர 3⁴.

புதிய ஏற்பாட்டின் காலத்தில் தனவான் களைப் பிரியப்படுத்தும்படி அவர்களுக்குமுன் நடனம் செய்யும் பெண்கள் வேசிகளானதி னால் ஏரோதியாளின் மகளாகிய சலோமே நடனம் செய்தது மகா இகழ்ச்சியான காரி யம். மத் 14⁶.



எகிப்தியர்கள், ஆணும் பெண்ணும்.

**கூந்தல், தலைமயிர், தாடிமயிர். Hair, beard.** பெண்களுக்குக் கருங்கூந்தல் அழகு. உன். பா 4¹ 5¹¹ 7⁵ வெளி 9⁸. மொட்டை அல்லது குட்டைமயிர் கனவீனம். எசே 16⁷ 1 கொரி 11¹⁵.



கிரேக்கர்கள், ஆணும் பெண்ணும்.

முற்காலத்தில் புருஷர்கள் தலைமயிர் நீள மாய் வளர்ப்பார்கள். 2 சாமு 14²⁶ உன். பா 5². ஆசாரியர்கள் தலைமயிர் நீளமாய் வளர்க்கப்படாது என்ற பிரமாணம் இருந் தது. எசே 44²⁰. புதிய ஏற்பாட்டுக் காலத் தில் புருஷர்கள் நீண்டமயிர் வைக்கமாட் டார்கள். 1 கொரி 11⁶. நசரேயர் ஒருபோ தும் தலைமயிர் வெட்டவில்லை. எண் 6⁵ நியா 13⁵ 16¹³ 1 சாமு 1¹¹.

கானானியர் முன்னந்தலையின் மயிர் வெட் டித் தேவதைக்குப் பிரதிஷ்டை செய்ததி னால் எபிரெயர்கள் அப்படிச் செய்யப்படாது என்றபிரமாணம் இருந்தது. லேவி 19²⁷ 21⁵.

யேசபேல் மயிரைப் பின்னித் தலையைச் சிங்காரித்தாள். 2 இரா 9³⁰. யூதஸ்திரீகள் பொய் மயிர் பின்னிக் கட்டுவார்கள். ஏசா 3²⁴ எரே 7²⁹. எகிப்தியர்களில் சிலர் பொய்த் தாடி கட்டுவார்கள். ஆனால் அவர்களில் அநேகர் தலை தாடி எல்லாம் சவரஞ்செய் வார்கள். ஆதி 41¹⁴. எகிப்தியர் சீப்புகள் உபயோகிப்பார்கள்.



அசீரியன்.

பவுலும் பேதுருவும் ஸ்திரீகள் தலைமயிரை அதிக அலங்காரமாய் வைத்திருக்கப்படாது என்று எச்சரித்தார்கள். 1 தீமோ 2⁹ 1 பேது 3³. தலைமொட்டை யடிப்பதும் தாடைமயி ரைப் பிடுங்குவதும் அவமானம். 2 சாமு 10⁴ ஏசா 7²⁰ 50⁶ எரே 48³⁷.

தலைமயிரை அவிழ்த்துவிடுவதும் (லூக் 7³⁸), தலையை மொட்டை யடிப்பதும் (ஏசா 15² எரே 16⁶ ஆமோ 8¹⁰), தாடி மயிரைச் சவரஞ்செய்யாமல் நெடுநாள் அலங்கோல மாய் விடுவதும் (2 சாமு 19²⁴), தலைமயிர் பிடுங்குவதும் (எஸ்று 9³) துக்கத்துக்கு அடை யாளங்கள்.

குஷ்டம் அறியும்படி மயிரின் நிறத்தைப் பார்ப்பார்கள். லேவி 13³⁰. குஷ்டத்திலி ருந்து சுகமடைந்தவர்கள் தங்கள் மயிர் சிரைப் பார்கள். லேவி 14⁸.

எபிரெயன் ஒருவன் அடிமைப் பெண்ணை விவாகம் செய்யும்போது அவள் தன் தலை மயிர் எல்லாம் சிரைத்துவிடுவாள். உபா 21¹². எபிரெயர்கள் தலைமயிரைக்கொண்டு அல்லது தாடியைக்கொண்டு ஆணையிடுவார் கள். மத் 5³⁶. நரைமயிருக்கும் (நீதி 16³¹), வெள்ளைமயிருக்கும் (தானி 7⁹ வெளி 1¹⁴) கனம் உண்டு.

சவரகனும் கத்தியும். எண் 6⁵ 13⁵ உபா 21⁵ ஏசா 7²⁰ எசே 5¹.

**கூபி. Cub.** கூபி என்பதும் பூத் என்ப தும் ஒன்றுதான் என்று தோன்றுகிறது. எசே 30⁵ நாகூ 3⁹ 2 நாளா 12³.

**கூப்பிடுகிறது. Call.** நீதி 1²⁴ சங் 31¹⁷ 50¹⁵ 145¹⁸ ஏசா 55⁶.

**கூர். Sting.** 1 கொரி 15⁵⁵ வெளி 9¹⁰.

**கூர்பாகால். Gur-Baal.** [பாகாலின் வீடு]. 2 நாளா 26⁷.

**கூர்மலை. Gur.** 2 இரா 9²⁷.

**கூலி. Wages.** மீகா 3¹¹ மத் 20⁸ லூக் 10⁷. = சம்பளம். ஆதி 31⁸.

**கூலிக்காரன், கூலியாள். Hireling.** லேவி 19¹³ ஏசா 16⁴ மல் 3⁵ யோவா 10¹² மத் 20¹.

'கூலிக்காரன் நாட்கள்.' யோபு 7[1] 14[6]. 'கூலிக்காரன் வருஷம்.' ஏசா 16[14]. 'கூலிப் படை.' எரே 46[21].

**கூலிப்படை.** Mercenaries. சேனை காண்க.

**கூல்.** Hul. நமக்குத் தெரியாத ஒரு கோத்திரம். ஆதி 10[23].

**கூவேல்.** Geuel. [கடவுளின் மகிமை]. எண் 13[15].



கூழக்கடா.

**கூழக்கடா.** Pelican. லேவி 11[18] உபா 14[17]. சில இடங்களில் இதற்கு நாரை என்று சொல்லியிருக்கிறது. செப் 2[14] ஏசா 34[11] சங் 102[6].

பலெஸ்தீனா தேசத்தில் இந்த மாதிரியான கூழக்கடாக்கள் மூக்கிலிருந்து வால்வரையும் ஏறக்குறைய ஆறு அடி நீளம் உள்ளவை. இவைகளுக்கு மூக்கின்கீழ் ஒரு பை உண்டு. அதில் அவைகள் ஏரியில் பிடிக்கும் மீன்களைத் தங்களுக்கும் குஞ்சுகளுக்கும் வைத்திருக்கும்.

**கூழ்.** Pottage. ஆதி 25[29] 2 இரா 4[38].

**கூளி.** Kite. பெருங்கழுகு. ஏசா 34[15].

**கூனன்.** Crookbacked. லேவி 21[20].

**கூனி.** Guni.

1. ஆதி 46[24].
2. 1 நாளா 5[15].

**கூன்.** Cun, Chun. 1 நாளா 18[8]. =பேரொத்தாய். 2 சாமு 8[8].

## கெ.

**கெகென்னா.** Gehenna. இன்னோம் பள்ளத்தாக்குக்கு மறுபெயர். 2 நாளா 28[3] எரே 3[1]. இதில் பொய்த் தேவதைகளை வணங்கினதினாலும் செத்த மிருகங்களையும் குற்றவாளிகளின் பிரேதங்களையும் இதில் போடுகிறதினாலும் இது அருவருப்பான இடமாகையால் நரகத்துக்கு இப்பதம் சொல்லியிருக்கிறது.

ரபிமாரிற் சிலர் விபசாரக்காரரையும் கோள் சொல்லுகிறவர்களையும் கெகென்னாவில் எரியும் அக்கினி சுத்திகரிக்கும் என்றும், அது கடைசியில் அவிந்துபோகும் என்றும் நினைத்தார்கள் எனத் தோன்றுகிறது.

புதிய ஏற்பாட்டில் இது பாவிகளுக்குக் கிடைக்கும் நித்திய தண்டனையின் இடத்தைக் குறிக்கிறது. மத் 5[29] 10[28]. **ஆதேஸ், ஷேவோல்** காண்க.

**கெங்கிரேயா.** Cenchreae. கொரிந்து பட்டணத்தின் தென்கிழக்கிலுள்ள துறைமுகம். அதிலிருந்து சீரியாவுக்குக் கப்பல்கள் போகும். அப் 18[18] ரோ 16[1].

**கெசலோன்.** Chesalon. யோசு 15[10].

**கெசீப்.** Chezib. =அக்சீப். ஆதி 38[5]. யோசு 15[44].

**கெசீல்.** Chesil. யோசு 15[30].

**கெசுல்லோத்.** Chesulloth. =கிஸ்லோத்தாபோர். யோசு 19[12. 18].

**கெசூரியர்.** Geshurites. **கேசூர்** காண்க.

**கெஸ்ரியர்** Girzites, Gezrites. 1 சாமு 27[8]. **கேசேர்** காண்க.

**கெஞ்சுதல்.** Intreaty. சங் 119[57].

**கெடுகிறது.** Perish. மத் 5[29] 18[14] யோவா 3[15] 10[28] 1 கொரி 1[18] 2 பேது 3[9].

**கெதரோத்.** Gederoth. யோசு 15[41].

**கெதரோன்.** Kedron. **கீதரோன்** காண்க.

**கெதர்லாகோமேர்.** Chedor-laomer. பூர்வகாலத்தில் ஏலாம்தேசத்தை அரசாண்ட ராஜா. இவன் பல நாடுகளுக்கு அரசனாய் இருந்தான். ஆதி 16[1].

**கெதலியா.** Gedaliah.

1. எரேமியாவைப் பாதுகாத்தவன். எரே 26[24]. நேபுகாத்நேச்சார் இவனை யூதேயாவிலே அதிபதியாக நியமித்தான். இரண்டு மாதத்திற்குப் பிறகு இவனுடைய விரோதிகள் இவனைக் கொன்றார்கள். 2 இரா 25[25] எரே 40 அதி. யூதர்கள் அதுமுதல் ஒவ்வொருவருஷத்திலும் அந்த நாளிலே உபவாசம் பண்ணுவார்கள்.
2. 1 நாளா 25[3].
3. ஒரு ஆசாரியன். எஸ்று 10[18].
4. ஒரு பிரபு. எரே 38[3].
5. செப்பனியாவின் பாட்டன். செப் 1[1].

**கெதேமோத்.** Kedemoth. ரூபன் கோத்திரத்தில் லேவியருக்கு நியமித்த ஒரு ஊர். யோசு 13[18] 29[37] உபா 2[26].

**கெதேரா.** **Gederah.** யோசு $15^{36}$ 1 நாளா $12^{4}$.

**கெதேர்.** **Geder.** யோசு $12^{13}$ 1 நாளா $27^{28}$.

**கெதோர்.** **Gedor.**

1. ஓர் ஊர். யோசு $15^{58}$.
2. ஒரு நாடு. 1 நாளா $4^{39}$.
3. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $8^{31}$.
4. ஒரு குடும்பம். 1 நாளா $4^{4}$.
5. இன்னொரு குடும்பம். 1 நாளா $4^{18}$.

**கெத்சியாள்.** **Keziah.** [இலவங்கம்]. யோபின் மகள். யோபு $42^{14}$.

**கெத்செமனே.** **Gethsemane.** கீதரோன் ஆற்றுக்குமேல் ஒலிவமலையின் மேற்சார்பிலிருந்த தோட்டம். மத் $26^{36}$ மாற் $14^{32}$.

**கெபி.** **Cave, Pit.** ஆதி $19^{30}$ 2 சாமு $17^{9}$. **குகை** காண்க.

**கெபிரா.** **Chephira.** யோசு $9^{17}$ எஸ்று $2^{25}$.

**கெமரியா.** **Gemariah.**

1. இல்கியாவின் மகன். எரே $29^{3}$.
2. சாப்பானின் மகன். எரே $36^{10}$.

**கெமல்லி.** **Gemalli.** எண் $13^{12}$.

**கெம்பு.** **Sardius.** **இரத்தினம்** காண்க.

**கெம்மரீம்.** **Chemarim.** கன்றுக்குட்டி விக்கிரகங்களை வணங்கின பூசாரிகள். 2 இரா $23^{5}$ ஓசி $10^{5}$ செப் $1^{4}$.

**கெரசேனர்.** **Gerasenes.** **கதரா** காண்க.

**கெராசா.** **Gerasa.** **கதரா** காண்க.

**கெரான்.** **Cheren.** ஆதி $36^{26}$.



கெரிசீம்.

**கெரிசீம்.** **Gerizim.** சீகேம் ஊருக்குக் கிட்ட உள்ள ஒரு மலை. இதில் யோசுவா இஸ்ரவேல் ஜனங்களுக்கு முன்பாக பிரமாணத்தைக் கைக்கொண்டவர்களுக்கு ஆசீர்வாதம் கூறினான். பிற்காலங்களில் சமாரியர்கள் எருசலேமுக்குப் போகாமல் கெரிசீமை மேன்மைப்படுத்தி அங்கே தங்களுக்காகத் தேவாலயம் கட்டினார்கள். யோசு $8^{3}$ நியா $9^{7}$. **ஏபால்** காண்க.

**கெர்கெசேனர்.** **Gergesenes.** **கதரா** காண்க.

**கெர்சோம்.** **Gershom.** [‘அந்நியன்’ அல்லது ‘அலைந்து திரிகிறவன்’].

1. மோசேயின் மூத்த குமாரன். யாத் $2^{22}$ $4^{25}$ $18^{2}$.
2. 1 நாளா $6^{16}$.
3. எஸ்று $8^{2}$.

**கெர்சோன்.** **Gershon,** லேவியின் மூத்த மகன். ஆதி $46^{11}$. லேவி கோத்திரத்தில் இந்த வமிசத்துக்குக் கெர்சோனியர் என்று பெயர். எண் $3^{21}$ 2 நாளா $29^{12}$. கெர்சோனில் இரண்டு குடும்பங்கள். எண் $3^{21}$ 1 நாளா $23^{7}$.

**கெர்ச்சிப்பு.** **Roaring.** ஏசா $31^{4}$ சங் $104^{21}$ யோவே $3^{16}$ ஆமோ $3^{4}$ 1 பேது $5^{8}$.

**கெலாயா.** **Kelaiah,** **கெலிதா** காண்க.

**கெலால்.** Chelal. எஸ்ரு $10^{30}$.

**கெலிதா.** Kelita.=கெலாயா. எஸ்ரு $10^{23}$ நெகே $8^{7}$.

**கெலிலோத்.** Gelloth. [வட்டமாய்க் கற்கள் பதித்த இடம்]. யூதா பென்யமீன் எல்லையிலுள்ள ஒரு ஊர். யோசு $18^{17}$. இதின் மறுபெயர்கள்: கில்கால். யோசு $15^{7}$. பெத்கில்கால். நெகே $12^{29}$.

**கெல்போன்.** Helbon. தமஸ்குவுக்குச் சமீபமான ஒரு ஊர். எசே $27^{18}$.

**கெலூகி.** Cheluhi. எஸ்ரு $10^{35}$.

**கெனானி.** Chenani. நெகே $9^{4}$.

**கெனானியா.** Chenaniah. 1 நாளா $15^{22}$ $26^{29}$.

**கெனிசியர்.** Kenizzite. **கேனிசியர்** காண்க.

**கெனேசரேத்.** Gennesaret.

1. **கலிலேயாக்கடல்** காண்க.

2. கலிலேயாக்கடலின் மேற்கோரத்திலுள்ள ஒரு தேசம். மத் $14^{34}$ மாற் $6^{53}$.

## கே.

**கேகிலா.** Keilah. தென் யூதாவிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{44}$ 1 சாமு $23^{1}$ நெகே $3^{17}$.

**கேசாம்.** Gesham. 1 நாளா $2^{47}$.

**கேசீஸ்** Emek Keziz. யோசு $18^{21}$.

**கேசூர், கேசூரியர்.** Geshur. கலிலேயாக்கடலுக்கு வடகிழக் கோரத்திலுள்ள தேசத்தில் வசித்த சீரியர் கோத்திரத்தார். இவர்கள் தாவீதின் காலம் வரையும் தங்கள் சொந்த ஆளுகைக்குள் இருந்தார்கள். தாவீது அந்தத் தேசத்து ராஜாவின் மகளை விவாகம் செய்தான். உபா $3^{14}$ யோசு $12^{5}$ $13^{11}$ 1 சாமு $27^{8}$ 2 சாமு $3^{3}$ $13^{37}$ $15^{8}$ 1 நாளா $2^{33}$

**கேசேத்** Chesed. ஆதி $22^{22}$.

**கேசேர்.** Gezer. பெலிஸ்தியரின் நாட்டில் பூர்வ பட்டணம். கிறிஸ்துவுக்கு 3000 வருஷங்களுக்கு முன் பூர்வீக ஜனங்கள் அங்கே இருந்தார்கள். பிறகு கானானியர் வந்து அங்கே குடியேறினார்கள். எகிப்திய ராஜா இதைப பிடித்துச் சாலொமோனின் மனைவிக்கு இதைச் சீதனமாகக் கொடுத்தான். சீமோன் மக்கபேயு இதை ஜெயித்த பிறகு அவன் இங்கே வசித்த வீடு தற்காலத்தில் இங்கே பாழ்நிலமாக இருக்கும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. நியா $1^{29}$ 1 இரா $9^{16}$ 1 நாளா $20^{4}$ 1 மக்கபேயர் $13^{43}$.

**கெஷேம்.** Geshem. நெகேமியாவுக்கு விரோதமாய் இருந்த ஒரு அரபியன். நெகே $2^{19}$ $6^{1}$. = கஷ்மூ. நெகே $6^{7}$.

**கேடகம்.** Shield. **ஆயுதம்** காண்க.

**கேடு, அழிவு.** Destruction, Perdition.

1. அழிவு. லேவி $26^{38}$ எண் $16^{33}$ $17^{12}$ உபா $8^{19}$ 2 சாமு $1^{27}$ யோபு $8^{13}$ சங் $41^{5}$ எரே $17^{28}$ 2 பேது $3^{7}$.

2. கேடு. 1 தீமோ $6^{9}$ பிலி $1^{28}$ எபி $10^{39}$ யோவா $17^{12}$ 1 தெச $2^{3}$.

3. சேதம். அப் $27^{21.22}$ யோவா $6^{12}$.

4. நாசம். வெளி $17^{8.11}$.

5. நஷ்டம். பிலி $3^{7.8}$ 1 கொரி $3^{15}$.

**கேட்கிறது.** Hearing.

1. செவியால் கேட்பது. உபா $5^{24}$ 2 சாமு $15^{10}$ மத் $11^{4}$ அப் $13^{7}$ வெளி $1^{3}$.

2. அருள்புரிந்து கேட்பது. 1 இரா $8^{34}$ சங் $34^{6}$ $116^{1}$ யோபு $33^{1}$.

3. மனம் ஒத்துக் கேட்பது. மத் $17^{5}$ மாற் $4^{18}$ லூக் $16^{29}$ யோவா $8^{47}$ $10^{27}$ 2 தீமோ $4^{17}$.

4. சிலர் கேட்டும் உணராதிருப்பது. உபா $1^{43}$ ஏசா $6^{9}$ மத் $13^{19}$ யோவா $12^{40.47}$.

5. கற்றறிவது. உபா $6^{4}$ மத் $13^{17}$ யோவா $8^{26.40}$ 2 தீமோ $2^{2}$.

6. கவனமாய்க் கேட்பது நீதி $1^{8}$ ஏசா $33^{13}$ மீகா $1^{2}$ $6^{9}$.

'கர்த்தர் கேட்டார்' என்பது பரிதாபம் நிறைந்த அவருடைய பூரண அறிவைக் குறிக்கிறது. ஆதி $17^{20}$ யாத் $2^{24}$ சங் $78^{21}$.

**கேதார்.** Kedar. கிழக்குப் பலெஸ்தீனாவில் கூடாரவாசிகளா யிருந்தவர்கள். இவர்கள் வில்வித்தையில் சமர்த்தர்கள். ஆதி $25^{13}$ எரே $49^{28}$ ஏசா $21^{17}$ $42^{11}$ $60^{7}$ எசே $27^{21}$ சங் $120^{5}$ உன். பா $1^{5}$.

**கேதுரு மரம்.** Cedar. மற்ற இடங்களை விட லீபனோன் மலையில் இம்மரங்கள் அதிகம் நோத்தியானவை சங் $29^{5}$ ஏசா $35^{2}$ 2 இரா $19^{23}$ இதில் தைலம் போன்ற பிசின் இருப்பதால் வீட்டு வேலைக்கும் (சங் $104^{16}$), விசித்திர வேலைக்கும் (ஏசா $44^{14}$) அதிக பிரயோஜனமுள்ளது இது நூறு அடி உயரத்திற்கு வளர்ந்து நல் நிழலைக் கொடுக்கும். எசே $31^{3}$. கேதுரு மரம் அநேக காலத்துக்குக் கெட்டுப்போகாமல் இருக்கும். 'கேதுருக் கட்டை' லேவி $14^{4}$ எண் $19^{6}$. கேதுரு மரம் மலைச்சாரியில் வளருகிறதினால் எண் $24^{6}$-ல் சொல்லியிருக்கும் 'தண்ணீர் அருகே கேதுரு' வேறு மரத்தைக் குறிக்கிறது என நினைக்கவேண்டும்.



கேதரு மரம்.

**கேதெரோத்தாயிம்.** Gederothaim. *யோசு* $15^{36}$.

**கேதேஸ்.** Kedesh.

1. *யோசு* $15^{23}$.
2. 1 *நாளா* $6^{72}$.
3. *நப்தலியிலுள்ள அடைக்கலப்பட்டணமாகிய கேதேஸ். ஆதி* $4^{6}$ *யோசு* $20^{7}$. *திக்லாத்பிலேசர் இதைப் பிடித்தான்.* 2 *இரா* $15^{29}$.

**கேதோர்.** Gedor. **கேதோர்** *காண்க.*

**கேத்.** Heth. **ஏத்து** *காண்க.*

**கேத்தூராள்.** Keturah. [*தூபம்*]. *சாராள் மரித்தபிறகு ஆபிரகாமுக்கிருந்த மனைவி அல்லது மறுமனையாட்டி. ஆதி* $25^{1}$ 1 *நாளா* $1^{32}$.

**கேத்தேர்.** Gether. *ஆதி* $10^{23}$.

**கேத்மா.** Kedemah. *இஸ்மவேலின் மகன். ஆதி* $25^{15}$.

**கேபா.** Cephas. **பேதுரு** *காண்க.*

**கேபா.** Geba. [*மலை*]. *பென்யமீன் கோத்திர நாட்டிலுள்ள ஒரு கோட்டை. யோசு* $18^{24}$ $21^{17}$ 1 *சாமு* $13^{3}$ 1 *இரா* $15^{22}$ 2 *இரா* $23^{8}$ *நெகே* $11^{31}$ *ஏசா* $10^{29}$.

**கேபார்.** Chebar. *பாபிலோனியாவில் ஒரு பெரிய கால்வாய் அல்லது வாய்க்கால். எசே* $1^{1}$ $27^{9}$.

**கேபால்.** Gebal. *சங்* $83^{6}$.

**கேபிம்.** Gebim. *ஏசா* $10^{31}$.

**கேபேர்.** Geber. *சாலொமோனின் ஊழியக்காரன்.* 1 *இரா* $4^{19}$.

**கேப்பார் அம்மோனுய்.** Chephar Ammoni. *யோசு* $18^{24}$.

**கேமுவேல்.** Kemuel.

1. *நாகோரின் மகன். ஆதி* $22^{21}$.
2. *ஒரு பிரபு. எண்* $34^{24}$.
3. *ஒரு லேவியன்.* 1 *நாளா* $27^{17}$.

**கேயாசி.** Gehazi. *எலிசாவின் ஊழியக்காரன்.* 2 *இரா* $4^{12}$ $5^{20}$ $8^{4}$.

**கேரா.** Gera. *ஆதி* $46^{21}$ *நியா* $3^{15}$ 2 *சாமு* $16^{5}$.

**கேரா.** Gerah. *சேக்கலில் இருபதில் ஒருபாகம். யாத்* $30^{13}$. **அளவு, பணம்** *காண்க.*

**கேரார்.** Gerar. *பெலிஸ்தியருடைய ஊர்களில் ஒன்று. ஆதி* $10^{19}$ $20^{1}$ $26^{1}$ 2 *நாளா* $14^{13}$.

**கேரீத்.** Cherith. *யோர்தான் நதிக்குக் கிழக்கே எலியா சந்தித்த ஓர் சிற்றாறு.* 1 *இரா* $17^{3}$.

**கேருபீன்கள்.** Cherubim. *ஆசரிப்புக் கூடாரத்தில் கிருபாசனத்தின்மேல் கேருபீன்களும், திரைச்சீலையில் விசித்திரவேலையான கேருபீன்களும், சாலொமோன் கட்டின தேவாலயத்தில் கேருபீன்களும் இருந்தமையால், இவை பரிசுத்த ஸ்தலங்களைக் காப்பாற்றுகிறவைகள் என்றும், யேகோவாவின் வாகனங்கள் என்றும் சொல்லக்கூடும். யாத்* $25^{19}$ 1 *இரா* $6^{23}$ *சங்* $18^{10}$ $80^{1}$ *எசே* $10^{2}$. *இவை பரதீசில் ஜீவ விருக்ஷத்தைக் காப்பாற்றின. ஆதி* $3^{24}$ *எசே* $28^{14}$. *இவைகளின் ரூபம் இன்னமாதிரியானது எனச் சொல்ல முடியாது. யூதவேதசாஸ்திரிகள் கேருபீன்*

கள் பிரதான தேவதூதர்களில் ஒருவகை யென்று நினைத்தார்கள். கிறிஸ்தவ வேத சாஸ்திரிகளும் இதே அபிப்பிராயமுடைய வர்கள். பரி. யோவான் சொன்ன நாலு ஜீவன்கள் எசேக்கியேல் சொன்ன கேரு பீன்கள் போன்றவை. எசே $41^{18}$ வெளி $4^{6}$.

**கேருப்.** Cherub. செருபாபேலோடு சிறையிருப்பிலிருந்து வந்த யூதன். எஸ்ரு $2^{59}$ நெகே $7^{61}$.

**கேரேனுபுக்.** Kerenhappuch. [கண்ணுக்கிடும் மைநிறைந்த கொம்பாகிய பரணி]. யோபு சுகமடைந்தபிறகு பிறந்த மகள். யோபு $42^{14}$.

**கேரோஸ்.** Keros. எஸ்ரு $2^{44}$.

**கேலத்தா.** Kehelathah. எண் $33^{22}$.

**கேலிதா.** Kelita. **கேலிதா** காண்க.

**கேனஸ்.** Kenaz.

1. ஆதி $36^{11}$.
2. ஆதி $36^{42}$.
3. யோசு $15^{17}$.
4. 1 நாளா $4^{15}$.

**கேனாத்.** Kenath. யோர்தான் நதிக்குக் கிழக்கில் ஒரு ஊர். எண் $32^{42}$ 1 நாளா $2^{23}$.

**கேனான்.** Kenan. ஆதி $5^{9}$.

**கேனியர்.** Kenites. [ஒருவேளை 'கொல்லன்'] அமெலேக்கியரைப்போல் கூடாரவாசிகள். இவர்கள் சீனாய்மலை நாடு முதல் கானான் தேசம் வரையும் அலைந்து திரிந்த ஜனம். ரேக்காப் சந்ததியார் கேனியர்கள்தான். எண் $10^{29}$ நியா $1^{16}$ $4^{11}$ 1 சாமு $15^{6}$ $27^{10}$ 1 நாளா $2^{55}$.

**கேனிசியர்.** Kenizzite. கேனஸ் சந்ததியான். ஆதி $15^{19}$ யோசு $14^{6}$ 1 நாளா $4^{13}$.

**கேனுபாத்.** Genubath. ஆதாத்தின் மகன். 1 இரா $11^{20}$.

## கை.

**கை.** Hand. கையை விரித்து அல்லது ஏறெடுத்து ஜெபம்பண்ணுவது. யாத் $17^{11}$ 1 இரா $8^{22}$.

கையை உயர்த்துகிறது பிரதிக்கினையைக் குறிக்கிறது. ஆதி $14^{23}$.

'தொடையின்கீழ் கையை வைக்கிறது' என்பது ஆணையிடுவதைக் குறிக்கிறது. ஆதி $24^{3}$ $47^{29}$.

உச்சந்தலைமேல் கைகளை வைப்பது ஆசீர்வாதத்தைக் காட்டுகிறது. ஆதி $48^{14}$.

ஒருவன் தான் பலியாகச் செலுத்தும் ஆட்டின் தலையின்மேல் தன் கைகளை வைப்பதினால் தன் பாவ தோஷம் அந்த ஆட்டில் சுமத்துகிறான். யாத் $29^{10}$ லேவி $1^{4}$ $4^{3}$ $16^{21}$.

கையைக் கழுவுவது குற்றம் இல்லாமையைக் காட்டுகிறது. உபா $21^{6}$ சங் $26^{7}$ மத் $27^{24}$.

கைகளின் சுத்தம் நீதிக்கு அடையாளம். யோபு $22^{30}$ சங் $18^{20}$.

கையோடே கைதட்டுவது கோபத்துக்கு அடையாளம். எண் $24^{10}$.

ஒருவனுடைய கைகளுக்குத் தண்ணீர் வார்க்கிறவன் தான் அவனுக்கு வேலைக்காரன் என்பதைக் காட்டுகிறான். 2 இரா $3^{11}$.

கையடித்துக் கொடுப்பது ஏற்பாடு பண்ணுகிறதைக் குறிக்கிறது. நீதி $6^{1}$ $11^{21}$.

கை முடக்கிக்கொள்வது சோம்பலைக் காட்டுகிறது. நீதி $24^{33}$.

இடதுகையால் கவண்கல் எறிகிறவர்கள். நியா $20^{16}$.

இடதுகைப் பழக்கம். நியா $3^{15, 21}$.

'கர்த்தரின் கை' என்பது அவருடைய சர்வவல்லமையைக் குறிக்கிறது. உபா $2^{15}$.

'கர்த்தருடைய கரம் என்மேல் இருந்தது' என்பதினால் தீர்க்கதரிசி பரிசுத்தஆவி தன்னை ஏவுகிறது எனக் காட்டுகிறான். எசே $8^{1}$.

'கர்த்தருடைய கரம்,' 'என் கை,' 'என் பிதாவின் கை' என்பவைகள் தேவனுடைய பராமரிப்பைக் குறிக்கிறது. எஸ்ரு $7^{6}$ யோவா $10^{28, 29}$.

நியாயஸ்தலத்திலே சத்துராதி வலதுபக்கத்தில் நிற்பான். சங் $109^{6}$ சக $3^{1}$. காக்கிறவர் வலதுபக்கத்தில் நிற்பார். சங் $109^{31}$.

நமது இரட்சகர் பரமபிதாவின் வலது பாரிசத்திலே உட்கார்ந்திருப்பார். சங் $110^{1}$ ரோ $8^{34}$.

**கைகளை வைப்பது.** Laying on of Hands.

1. கைகளை வைப்பது என்பது ஒருவனுடைய தலைமேல் தன் கையை வைக்கிறவன் தானும் அவனும் கடவுளுக்கு முன்பாக ஐக்கியப்பட்டவர்கள் என்பதையும் தான் அவனுக்குக் கடவுளின் கிருபையைக் கொடுக்கிறான் என்பதையும் குறிக்கிறது. ஆதி $48^{14}$ உபா $34^{9}$.

2. ஒருவன் பலிசெலுத்தும்படி கொண்டுவருகிற ஆட்டின் தலைமேல் தன் கைகளை வைக்கிறதினால், தன் பாவதோஷத்தை அந்த ஆட்டின்மேல் சுமத்துகிறான். யாத் $29^{10}$ லேவி $1^{4}$ $4^{3}$ $16^{21}$.

3. புதிய ஏற்பாட்டில் கைகளை வைப்பது எப்பொழுதும் ஆசீர்வதிக்கிறதைக் குறிக்கிறது. பிள்ளைகளை ஆசீர்வதிக்கும்போதும்

(மத் 19[13]), சொஸ்தம் ஆக்கும்போதும் (மாற் 1[41] 6[5] லூக் 4[40] அப் 9[12]) கைகளை வைப்பார்கள்.

4. ஆதி சபையில் ஞானஸ்நானம் கொடுக்கும்போது கைகளை வைப்பது வழக்கம். அப் 9[17] 19[6]. சில சமயங்களில் விசுவாசிகள் தேவ கிருபையை அடையும்படி ஜெபம் பண்ணும்போது கைகளை வைப்பார்கள். அப் 8[17] 9[17] 19[6].

5. கர்த்தருடைய ஊழியத்திற்கு ஒருவனை நியமிக்கும்போது பெரியோர்கள் தங்கள் கைகளை அவன் தலைமேல் வைப்பார்கள். அப் 6[6] 13[3] 1 தீமோ 4[14] 2 தீமோ 1[6].

6. மனஸ்தாபப்பட்ட குற்றவாளியை மறுபடியும் சபையிற் சேர்க்கும்போது கைகளை வைத்து ஆசீர்வதிப்பது வழக்கம் என்று வேதசாஸ்திரிகள் சிலர் நினைக்கிறார்கள். 1 தீமோ 5[22].

**கைத்தாய், தாதி.** **Nurse.** எபிரெயர்கள் தங்கள் கைத்தாய்களை கனம் பண்ணுவார்கள். 'தாதி.' ஆதி 24[59] 35[8] 2 சாமு 4[4] 2 இரா 11[2]. 'கைத்தாய்.' ஏசா 49[23]. 'தாய்.' ரூத் 4[16] 1 தெச 2[7].

**கைத்தாளம்.** **Cymbal.** **கீதவாத்தியம்** காண்க.

**கைபிடிசுவர்.** **Battlement.** உபா 22[8]. **வீடு** காண்க.

**கைம்பெண், விதவை.** **Widow.** யாத் 22[22] லேவி 21[14] 22[13] உபா 27[19] 1 இரா 17[9] யோபு 24[3] 29[13] சங் 68[5] 146[9] ஏசா 9[17] எரே 7[6] எசே 22[7] சக 7[10] மத் 23[14] மாற் 12[40, 42] லூக் 2[37] 7[12] 18[3] அப் 6[1] 1 கொரி 7[8] 1 தீமோ 5[3] யாக் 1[27]. இவ்வசனங்களை நாம் பார்த்தால் எபிரெயர்களும் கிறிஸ்தவர்களும் கடவுள் விதவைகளுக்கு மிகுந்த கிருபையுள்ளவர் என்றும் அவர்களுக்கு நாம் நியாயமும் தர்மசிந்தையும் உடையவர்களாய் இருக்க வேண்டும் என்றும் நினைத்தார்கள் என அறிவோம். விதவைகள் மறுபடியும் விவாகம் செய்வதைக் குறித்து வேதத்தில் தடை ஒன்றும் சொல்லியிருக்கவில்லை.

## கொ.

**கொக்கு.** **Stork.** அரபியர்கள் கொக்குகளைப் பார்ப்பது சுப லாப திருஷ்டி என்று நினைத்தார்கள். பயிர்களிலுள்ள புழுக்களைக் கொக்குகள் தின்பதினால் அவைகள் திரளாய் வந்தால் பயிர் அதிகமாய் விளையும் என்று நினைத்தார்கள். வேதாகமத்தில் பல வசனங்களில் கொக்குக்கு நாரை என்று சொல்லியிருக்கிறது. லேவி 11[19] உபா 14[18] யோபு 39[13] எரே 8[7] சக 5[8].



எகிப்து தேசத்திலுள்ள கொக்கு.



கலிலேயாவிலுள்ள வெள்ளைக் கொக்கு.

**கொசுகு.** **Gnat.** மத் 23[24].

**கொடி, விருது.** **Banner, Ensign, Standard.** எகிப்தியரைப்போல இஸ்ரவேலரும் கொடி தூக்குவார்கள். ஆனால் அவைகளைப்பற்றி விபரம் தெரியாது. எண் 2[2] ஏசா 5[26] 10[18] உன். பா 2[4]. கொடிக்கும் கம்பத்துக்கும் வேதத்தில் வித்தியாசம் ஒன்றும் தோன்றவில்லை.

ரோமரின் சேனைகளில் ஒவ்வொரு பட்டாளத்திலும் கொடிச்சீலைகள் உண்டு. அவைகளில் அவர்கள் தங்கள் தேவர்களின் சொரூபங்களை வரைந்து அவைகளை வணங்கி வந்ததினால் அவைகள் 'பாழாக்குகிற அருவருப்பு' எனச் சிலர் நினைக்கிறார்கள். மாற் 13[14].

**கொடுக்கு.** **Sting.** வெளி 9[10].

**கொடுமை.** Violence. சங் 58² நீதி 4¹⁷ ஏசா 53⁹ 60¹⁸ எரே 51⁴⁶ எசே 45⁹ மீகா 6¹² ஆபகூ 1².

**கொட்டகை.** Stable. எசே 25⁵.

**கொட்டாரம்.** Stall. ஆதி 33¹⁷.

**கொத்தமல்லி.** Coriander. யாத் 16³¹ எண் 11⁷.

**கொத்தளம்.** Mound, முற்றுகையிடுகிற வர்கள் கட்டின மேடு. எரே 5¹⁰ எசே 4² 2 சாமு 20¹⁵ செப் 1¹⁶. **முற்றுகை** காண்க.

**கொத்துகிறது.** Dig. லூக் 13⁸ 16³.

**கொப்பரை.** Laver. 1 சாமு 2¹⁴ 1 இரா 7³⁸ 2 நாளா 4⁶ எசே 24³·⁶ மீகா 3³.

**கொப்புளம்.** Boils. ஆறும் வாதை. இது திரேகத்தில் பருக்களினால் உண்டாகும் வாதை. யாத் 9⁹. லாசருவின் பருக்கள் இவ் விதமானவையாய் இருக்கலாம். லூக் 16²⁰.

**கொப்பேர் மரம்.** Gopherwood. இது கேதுரு மரத்தை அல்லது மருத மரத்தைக் குறிக்கிறது. ஆதி 6¹⁴.

**கொமோரா.** Gomorah. **சமபூமியி லுள்ள பட்டணங்கள்** காண்க.

**கொம்பு.** Horn. இஸ்ரவேலர் ஆட் டுக்கொம்பு மாட்டுக்கொம்புகளைப் பலவித மான வேலைக்கும் உபயோகித்தார்கள். கொம் புகளாற் செய்த பாத்திரங்களில் எண்ணெய் வைப்பார்கள் 1 இரா 1³⁹ 1 சாமு 16¹. ஆட் டுக்கடாவின் கொம்புகளினால் ஒரு மாதிரி யான எக்காளவாத்தியம் செய்வார்கள். யோசு 6⁴. வல்லமையைக் குறிப்பதற்குக் கொம்பு உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. உபா 33¹⁷ சங் 18². 'கொம்பு உயர்ந்திருக்கிறது' என்பது சுகம் அல்லது ஜெயம் வந்திருக்கி றது என்பதைக் குறிக்கிறது. 1 சாமு 2¹ எசே 29²¹. 'கொம்பை உயர்த்தாதே' என்ப தற்குப் பெருமைக்கு இடங்கொடாதே என்று அர்த்தமாம். சங் 75⁴. 'கொம்பு வெட் டுகிறது' என்பது ஒருவனைத் தாழ்ந்துபோக வும் அழிந்து போகவும் பண்ணுவதைக் குறிக்கிறது. எரே 48²⁵. கொம்பு அரசனை அல்லது பெரியவனைக் குறிக்கிறது. தானி 7⁸. பலிபீடத்தின் நான்கு மூலைகளில் கொம்பு கள் வைக்கப்பட்டிருந்தன. 1 இரா 1⁵⁰.

**கொம்மட்டிக்காய்.** Melon. இது எகிப் தில் வளநிதமான இடங்களில் அதிகம் உண்டு. எண் 11⁵.

**கொம்மை.** Tower. செகே 3¹·¹¹. **கோட் டை** காண்க.



கொம்மட்டிக்காய்.

**கொரிந்தியருக்கு எழுதின முதலாம் நிரு பம்.** The First Epistle to the Corinthians.

1. **காரணம்.** கி-பி. 52-வருஷத்தில் பரி. பவுல் கொரிந்து பட்டணத்தில் கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தான். அவன் அவ்விடத்தி லிருந்து புறப்பட்டுப்போய் மற்ற ஊர்களுக் குப் பிரயாணம் பண்ணுகையில் அச்சபைக்கு அடிக்கடி சமாசாரங்கள் நிருபங்கள் மூலமாய் அறிவித்துக்கொண்டிருந்தான் என்று நாம் நினைக்கவேண்டும். உதாரணமாக: விபசா ரத்தைக் கண்டித்து ஒரு நிருபம் எழுதி னான். 5⁹.

இப்போது நாம் யோசிக்கும் நிருபம் கொரிந்தியருக்கு முதல் எழுதப்பட்டதால் புதிய ஏற்பாட்டில் இதற்குக் கொரிந்திய ருக்கு எழுதின 'முதலாம்' நிருபம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 7¹.

மேலும் சபையார் அல்லாமலும் அப்பட் டணத்தைச் சந்தித்த பிரயாணிகளும் அங்கே நடந்த சங்கதிகளைப் பரி. பவுலுக்கு அறிவித் திருப்பார்கள். இவ்விதமாய்க் குலோவேயா ளின் வீட்டார்களும் பல சமாசாரங்களை யும்பற்றி அவனுக்குச் சொல்லியிருப்பார் கள். 1¹¹.

2. **கொரிந்து சபையின் நிலைமை.** அச் சபையில் யூதர்களிருந்தாலும் அவர்கள் பெ ரும்பாலும் கிரேக்க சபையிலிருந்து வந்தார் கள் என்று தோன்றுகிறது. ரோ 16²⁹ 1 கொரி 6⁹ 7¹⁸ 9²⁰ 12²⁻¹³. இதினிமித்தம் சபையில் கற்புநெறி சன்மார்க்கம் இவைக ளைப்பற்றி அவர்கள் அவ்வளவு கவலையெடுத் துக்கொள்ளாததினால் துன்மார்க்கமும் தீமை யும் அதில் உண்டானது என்று அறிந்து பரி. பவுல் அவர்களுக்குச் சன்மார்க்கத்தைப் பற்றித் தெளிவாய்த் தெரிவித்தான். 1¹⁷.

3. **கட்சிக்காரர்.** கிரேக்கர் எப்பொழு தும் கட்சிக்காரர் என்பது உலகப்பிரசித்தம்.

அப்படியே அச்சபையிலுள்ளவர்கள் நாலு கட்சிகளாய்ப் பிரிந்தார்கள். அப்பொல்லோவைச் சேர்ந்தவர்கள் தத்துவஞானம் முக்கியமானது என்றும், கேபாவைச் சேர்ந்தவர்கள் மோசேயின் நியாயப்பிரமாணம் முக்கியமானது என்றும், கிறிஸ்துவைச் சேர்ந்தவர்கள் பவுலின் அதிகாரத்தை நீங்கினவர்களாயிருந்தார்கள் என்றும், பரி. பவுலைச் சேர்ந்தவர்கள் பவுலின் அதிகாரத்தை நன்குமதித்து மற்றவர்களை விரோதித்தார்கள் என்றும் தோன்றுகிறது. பரி. பவுல் இதெல்லாவற்றையும் அறிந்து இதனால் உண்டாகும் மோசத்தை அவர்களுக்குத் தெரிவித்துச் சபையானது எவ்வளவு பெரிதாயிருந்தாலும் அதிற் பிரிவினையிருந்தால் அது விருத்தியடைவது கூடாத காரியம் என்று காட்டுகிறான். 1[12].

4. **முறைகேடுகள்.** கொரிந்து சபையில் கட்சிகளைத்தவிர முறைகேடான செய்கையுமிருந்தது. ஒருவன் தன் தகப்பனின் மனைவியை வைத்திருந்தும் அவனை அச்சபையிலிருந்து விலக்காததினால் சன்மார்க்க நெறியைப்பற்றி அச்சபையார் அதிகமாய்க் கவனிக்கவில்லையென்று தோன்றுகிறது. இந்த விதமான முறைகேடு யூதருக்கு அருவருப்பான செய்கை. ஆமோ 2[7]. பரி. பவுல் இப்படி நடந்தவனைச் சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்கிறேன் என்று சொன்னதினால் அவன் இவனைச் சபையிலிருந்து நீக்கிச் சன்மார்க்கத்தின் மேன்மையை அவர்களுக்குக் காட்டுகிறான் (5 அதி.) என்று நாம் நினைக்கவேண்டும்.

5. **கொரிந்து சபையாரின் வழக்கு.** அவர்கள் ஒருவருக்கொருவர் விரோதமாய் ரோமை நியாயாதிபதிகளுக்கு முன்பாகப் பிராது செய்ததினால் அவர்கள் கிறிஸ்தவ சபைக்கிருக்கவேண்டிய மேன்மையைப் புறமதஸ்தர்களுக்கு முன்பாகக் குறைக்கிறார்கள் என்றும், அப்படி யிராதபடி சபையில் உத்தமரும் அறிவாளிகளுமா யிருக்கிறவர்கள் அவர்களுக்குள்ள பிராதுகளை விசாரித்துத் தீர்க்கிறது நல்லது என்றும் பரி. பவுல் போதிக்கிறான். 6 [1-11].

6. **விவாகத்துக்குரியவை.** இதற்கு அடுத்த பாகத்தில் (6[12]—7[40]) அப்போஸ்தலன் விவாக நிலைமைக்குரிய ஒழுங்கைப் பற்றிக் கற்புக்கு விரோதமான எந்தவித துன்மார்க்கமும் செய்யப்படாது என்றும்; விவாகம் செய்யாமலிருப்பது நல்லதானாலும் துராசையினால் இழுக்கப்படாதபடி விவாகம் செய்துகொள்ள வேண்டும் என்றும்; கிறிஸ்தவனாய் இருக்கிறவன் கிறிஸ்தவமார்க்கத்துக்கு வராத தன் மனைவியைத் தள்ளிவிட வேண்டியதில்லை என்றும்; அப்படியே கிறிஸ்தவமார்க்கத்துக்கு வந்த மனைவியும் கிறிஸ்தவனாகாத தன் புருஷனைத் தள்ளிவிட வேண்டியதில்லை என்றும்; கிறிஸ்தவமார்க்கத்துக்கு வராத புருஷனாவது மனைவியாவது பிரிந்துபோகப் பிரியப்பட்டால் போகலாம் என்றும்; கன்னிகைகளுக்கு விவாகம் செய்துகொடுப்பது நியாயந்தான் என்றும்; கால கஷ்டத்தினால் குடும்பத்தில் துன்பம் வருவதுண்டு என்றும்; கர்த்தருக்குட்பட்டவனும் விவாகம் செய்துகொள்ளப் பாக்கியம் பெற்றிருக்கிறான் என்றும்; விவாகத்தைக்குறித்து ஆக்ஷேபனை செய்கிறவர்களுக்குச் சொல்லுகிறான்.

7. **இடறலாயிருக்கிறவர்கள்.** (*a*) பிற்பாடு விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைக் கிறிஸ்தவர்கள் சாப்பிடுகிறதினால் அறிவிற் பூரணமற்ற சகோதரனுக்கு அது இடறலாய் இருக்குமாகையால் அதைப் பற்றி எச்சரிக்கையாய் இருக்கவேண்டும் என்று சொல்லுகிறான். 8[1-13].

(*b*) தேவாலயங்களில் கிரேக்கர்களில் அநேகர் இருக்கும் பந்தியில் கிறிஸ்தவர்களிலும் சிலர் பந்தியிருந்தார்கள். இப்படிப் பந்தியிருக்கிறவர்கள் விக்கிரகங்களை வணங்கிச் சாப்பிடுவார்கள் என்று அறிவீனமுள்ளவர்கள் சந்தேகிப்பார்களாகையால் அப்படிப்பட்ட விருந்துகளுக்குக் கிறிஸ்தவர்கள் போகப்படாது என்று பரி. பவுல் தீர்மானித்தான். 8[10-13] 10[14] 11[1].

(*c*) கொரிந்து சபையாருக்கு விசேஷமாய்ச் சொல்லுகிற இந்தக் காரியங்கள் கிறிஸ்தவர்கள் எல்லாரும் எப்பொழுதும் மற்றவர்களுக்கு இடறலாய் இராதபடி கைக்கொள்ளவேண்டும் என்பதாகச் சொல்லுகிறான். 9[1] 10[13].

8. **ஆராதனை.** (*a*) ஸ்திரீகள் அக்காலத்து ஆசாரத்தின்படி தேவாலயத்தில் முக்காடு இட்டுக்கொள்வது நல்லது என்று அப்போஸ்தலன் சொல்லுகிறான். 11[2-16].

(*b*) அன்பு விருந்து, கர்த்தருடைய இராப்போஜனம் இவைகளின் ஸ்தாபனத்தைக் குறித்து விபரமாய்ச் சொல்லி அவர்களிற் சிலர் இவைகளைத் தப்பிதமாய் நடத்திவந்ததைக் கண்டித்துப் புத்திமதிகள் கூறுகிறான். 11[17-34].

(*c*) கடவுளைப் பற்றினவர்களுக்கு அவர் அருளும் பரிசுத்தாவியின் மூலமாய்ப் பெற்றுக்கொள்ளும் அந்நிய பாஷைகளைப் பேசும் திறமை முதலிய வரங்கள் சந்தோஷத்துக்காகவல்ல, கிறிஸ்தவமார்க்க விருத்திக் கேதுவானவைகள் என்று சொல்லுகிறான். பெண்

கள் சபையில் மௌனமாய் இருப்பது நல்லது என்று சொல்லுகிறான். $12^{1}$-$14^{40}$. இந்தப் பாகத்தில் பரி. பவுல் அன்பைப்பற்றிச் சொல்லிய பாட்டு விசேஷமாய்க் கவனிக்கத்தக்கது. 13 அதி.

9. **சரீர உயிர்த்தெழுதல்,** மு. கொரிந்தியர் சரீர உயிர்த்தெழுதலைப்பற்றிச் சந்தேகப்பட்டிருந்ததினால் பரி. பவுல் அதைக் குறித்து விபரமாய்ச் சொல்லி இயேசுவின் உயிர்த்தெழுதலை அதற்கு அத்தாட்சியாகக் காட்டுகிறான்

கடைசியாக யூதேயாவிலுள்ள ஏழைகளுக்குக் காணிக்கை சேர்ப்பதைப்பற்றி ஏற்பாடு பண்ணிப் பல புத்திபோதனைகள் செய்து முடிக்கிறான்.

10. **காலம், உண்மை.** கி-பி. 95-ஆம் வருஷத்தில் கிலெமெந்து முதலாய் ஆதி பிதாக்கள் அநேகர் கொரிந்தியருக்குப் பரி. பவுல் எழுதின நிருபங்களைப்பற்றிச் சொல்லுகிறார்கள். இதற்கும் அப்போஸ்தலர் நடபடிகளுக்குமுள்ள சம்பந்தங்கள் பல. கொரிந்தியர் இரண்டு நிருபங்களையும், ரோமர், கலாத்தியர் இவர்களுக்கெழுதிய நிருபங்களையும் பரி. பவுல் எழுதினான் என்பதே நிச்சயம். கி-பி. 53-ஆம் வருஷத்தில் பரி. பவுல் எருசலேமுக்கு நாலாம் தடவை போனான். அதற்குப் பிறகு அவன் மூன்றாம் பிரயாணத்தில் எபேசு பட்டணத்திற்கு வந்து (அப் $18^{23}$) அங்கே இரண்டேகால் வருஷம் தங்கின போது கி-பி. 56-ஆம் முதலில் கொரிந்தியருக்கு இந்த 'முதலாம்' நிருபத்தை எழுதியிருப்பான்.

**கொரிந்தியருக்கு எழுதின இரண்டாம் நிருபம். The Second Epistle to the Corinthians.**

1. **காரணம்.** பரி. பவுல் இந்த நிருபத்தை எழுதும்போது கொரிந்து சபையைப்பற்றித் தீத்து அவனுக்குத் தெரிவித்த சங்கதிகள், கொரிந்தியர் தான் முன் எழுதின நிருபத்தை வாசித்துச் செய்த காரியங்கள், குற்றவாளியாகிய ஒருவனுக்கு அவர்கள் செய்த தண்டனை ஆகிய இவைகளினிமித்தம் அவன் கவலையுள்ளவனாயிருந்தான் என்று நாம் அறிந்துகொள்ளலாம். $2^{5-13}$ $7^{8}$ $11^{28}$.

2. கி-பி. 52-ஆம் வருஷத்தில் பரி. பவுல் இரண்டாம் பிரயாணத்தில் கொரிந்து சபையை ஸ்தாபித்து அங்கே ஏறக்குறைய இரண்டு வருஷம் இருந்தான். மூன்றாம் பிரயாணத்திலே அதாவது கி-பி. 56-ஆம் வருஷத்தில் எபேசு பட்டணத்திலிருந்து கொரிந்து சபையில் நடந்து வந்த வேசித்தனத்தைப்பற்றி ஒரு நிருபம் எழுதினான். அப் $18^{1}$ $19^{1}$ 1 கொரி $5^{9}$. இந்த நிருபம் காணாமற்போனது. ஒருவேளை அதே வருஷத்தில் எபேசுவிலிருந்து கொரிந்து பட்டணத்திற்குச் சிலகாலம் போயிருக்கலாம். $12^{14}$ $13^{1}$.

இதற்குப் பிறகு கி-பி. 56-ஆம் வருஷத்தில் முதலில் நமக்குத் தெரிந்த முதலாம் நிருபத்தை யெழுதிக் குற்றவாளிக்குச் செய்யும் தண்டனையைக் குறித்துத் தனது தீர்மானத்தைத் தெரிவித்தான். அப்போது தான் கொரிந்துவுக்குத் தீமோத்தேயுவை அனுப்பினான். 1 கொரி $4^{17}$ $16^{10}$.

பிறகு நமக்குத் தெரியாத இன்னொரு நிருபத்தைத் தீத்துவிடம் கொடுத்து அனுப்பியிருக்கலாம். $12^{8}$. பிறகு பரி. பவுல் எபேசை விட்டு மக்கெதோனியாவுக்கு வந்தான். அங்கேதான் தீத்து அவனைச் சந்தித்து அச்சபையில் நடந்த சங்கதிகள் எல்லாவற்றையும் பற்றி விசேஷமாய்ச் சிலர் பரி. பவுலின் அதிகாரத்திற்குள் இருக்கிறதையும் சிலர் பரி. பவுல் உண்மையாய் அப்போஸ்தலன் அல்ல என்று சொல்லுகிறதையும், சிலர் எருசலேமிலுள்ள வறியவர்களுக்குக் காணிக்கை கொடுக்கிறதைக்குறித்து ஆக்ஷேபனை செய்கிறதையும், சிலர் துன்மார்க்கமாய் நடக்கிறதையும் பற்றி யறிவித்தான். $7^{1}$.

இவைகளினிமித்தம் பரி. பவுல் அந்த வருஷக் கடைசியில் சபையார்களின் துன்மார்க்கத்துக்கு அவர்கள் செய்யும் தண்டனையைப் பற்றித் தனக்கிருந்த விசனத்தைக்குறித்தும், எருசலேம் சபையிலுள்ள தரித்திரருக்குக் காணிக்கை கொடுக்கும் தர்ம விஷயத்தைப் பற்றியும், தன் அதிகாரத்தைப் பற்றியும் இந்த இரண்டாம் நிருபத்தை எழுதினான். இதற்குப்பிறகு மூன்றாம் பிரயாணத்தில் கொரிந்து பட்டணத்துக்குப் போய் அங்கே மூன்று மாதம் தங்கினான். அப் $20^{3}$ 2 கொரி $13^{1}$. அங்கே அவன் தங்கியிருந்தபோது சபையாருக்குள் சமாதானமும் பக்திவிருத்தியும் உண்டாகி அவர்கள் எருசலேமிலுள்ள சபையாருக்குக் காணிக்கை சேர்த்து அவர்களிற் சிலர் பரி. பவுலுடனேகூட அதைக் கொண்டு போனார்கள்.

3. **காலம்.** இந்த நிருபத்தில் பரி. பவுல் மூன்றாம் பிரயாணத்தின் கடைசியில் கி-பி. 57-ஆம் வருஷத்தில் ஏப்ரில்மீ௳ எருசலேமுக்குக் கொண்டுபோன காணிக்கையைப்பற்றி விபரமாய்ச் சொல்லியிருக்கிறதினாலும், அவன் அதற்குமுன் மக்கெதோனியாவிலே சுற்றித்திரிந்து மூன்றுமாதம் கொரிந்துவிலே தங்கியிருந்ததினாலும், கி-பி. 56-ஆம் அக்டோபர்மீ௳ அவன் அதற்கு வர முந்தி அவன் இந்

நிருபத்தை எழுதியிருப்பான் என்று தோன்று கிறது. ஆதலால் முதலாம் நிருபம் எழுதி ஆறு மாதத்திற்குப் பிறகு இந்த நிருபம் எழுதப்பட்டது என்று நாம் நினைக்கவேண்டும்.

4. **உண்மை.** இதை நாம் வாசிக்கும்போது இது ஒரே நிருபந்தான் என்று அறிவோம். மேலும் பரி. பவுல்தான் இதை எழுதினுன் என்பதற்குச் சந்தேகமில்லை.

5. **பாஷை நடை.** இதில் பரி. பவுலின் மனதிலுள்ள எண்ணங்களையும் விருப்பங்களையும் துக்கங்களையும் பூரணமாய் அறியலாம். தீமையைக்குறித்து அதிக கண்டிப்புள்ளவனும் சுவிசேஷத்தைச் சிறப்பிக்கும் விஷயத்தில் திடசித்தமுள்ளவனும் பாவிகளின்மேல் பரிதாபமுள்ளவனுமாகிய இவனுடைய ஞான அனுபவத்தை நன்ருய் இதிலே அறிந்துகொள்ளலாம். தான் கண்ட தரிசனம், தனக்கிருக்கும் 'முள்,' தனது தேக பலவீனம், தனக்கு நேரிட்ட உபத்திரவங்கள் ஆகிய இவைகளைப்பற்றி இதில் சொல்லுகின்ருன். $4^{7}$ $10^{10}$ $11^{23}$ $12^{1,7}$.

இதில் துன்பத்திலுண்டாகும் பாக்கியமும், பலவீனத்திலுண்டாகும் தைரியமும், பூரணமாய் அறியக்கூடும். இதில் மோசேயின் நியாயப்பிரமாண மார்க்கமும், கிறிஸ்தவ மார்க்கமும், கிறிஸ்துவின் மரணமும், நித்திய ஜீவனும், கிறிஸ்துவின் அவதாரமும், திரியேக தத்துவமும் ஆகிய இவைகளைக்குறித்துச் சொல்லிக் கிறிஸ்தவமார்க்க தத்துவ ஞானத்தைக் காட்டுகிருன். $3^{6}$ $5^{14}$ $4^{16}$-$5^{8}$ $8^{9}$ $13^{14}$.

6. **பொருளடக்கம்.**

1. $1^{1-11}$. வாழ்த்துதல்.

2. $1^{12}$-$7^{16}$. கொரிந்துவிலே பரி. பவுல் செய்த ஊழியத்தையும் தன்னையும் பற்றிச் சொல்லியது.

(*a*) $1^{12}$-$2^{11}$. முன்னிருந்த அவனுடைய எண்ணங்களின் மாறுதல்.

(*b*) $2^{12}$-$7^{3}$. ஊழியத்தின் மேல்லமை ($2^{14}$-$4^{6}$), அதிலுண்டாகும் துக்கமும் நம்பிக்கையும் ($4^{7}$-$5^{10}$), அதின் நோக்கம் ($5^{11-21}$), அதைத் தான் நிறைவேற்றினது. $6^{1}$-$7^{3}$.

(*c*) $7^{4-16}$. தீத்து வந்து அறிவித்த செய்திகள்.

3. $8^{1}$-$9^{15}$. எருசலேமின் சபையிலுள்ள தரித்திரருக்குச் செய்யவேண்டிய தர்மம்.

(*a*) $8^{1-5}$. மக்கெதோனியாவின் நல் முன்மாதிரி.

(*b*) $8^{6}$-$9^{5}$. தீத்து அனுப்பப்பட்டது.

(*c*) $9^{6-15}$. இந்த விஷயத்தில் உற்சாகமாயிருக்கும்படி ஏவினது.

4. $10^{1}$-$13^{10}$. தான் மூன்ரும்முறை கொரிந்துவுக்கு வந்து தன் எதிராளிகள் செய்தது நியாயமல்லவென்று காட்டுவதைப் பற்றிச் சொல்லியது.

(*a*) $10^{1-18}$. அப்போஸ்தல அதிகாரம் பெற்றதைப்பற்றிச் சொன்னது.

(*b*) $11^{1}$-$12^{18}$. அப்போஸ்தல அதிகாரத்தின் மேன்மை.

(*c*) $12^{19}$-$13^{10}$. கொரிந்தில் அவன் செய்யப்போகிறதைப் பற்றியது.

5. $13^{11-13}$. புத்திமதிகள்.

**கொரிந்து. Corinth.** வேதத்தை வாசிக்கிறவர்கள் கொரிந்துபட்டணம் தனசம்பத்தும் பெருங்கீர்த்தியு முள்ளதுமாய் இருந்தது என்பதையும், அதிலுள்ளவர்கள் அக்காலத்து நாகரீகத்தில் பேர்போனவர்களாய் இருந்தார்கள் என்பதையும் அறிந்துகொள்வது அவசியம்; இல்லாவிட்டால் பரி. பவுல் கொரிந்தியருக்கு எழுதின நிருபங்களில் அநேக காரியங்கள் அவர்களுக்கு விளங்காது. கொரிந்து குடாக்கடல் கிரேக்க தேசத்தை இரண்டு பாகமாகப் பிரிக்கிறது அந்த இரண்டு பாகங்களும் கொரிந்து பூசந்தியினுல் இணைக்கப்பட்டிருக்கின்றன. இத்தாலியாவின் பட்டணங்களிலிருந்து சின்ன ஆசியாவுக்குப் போக விரும்புவோர் முதலில் ஒரு கப்பலில் ஏறிக் கொரிந்து குடாக்கடலில் பிரவேசித்து அங்கே இறங்கி பூசந்தியைத் தாண்டி அதற்குத் தென்மேற்கிலுள்ள கெங்கிரேயா துறைமுகத்தில் இன்னெரு கப்பலில் ஏறிச் சின்ன ஆசியாவுக்குப் போவார்கள். அப்படியே இத்தாலியாவுக்கும் சின்ன ஆசியாவுக்கும் ஜனங்கள் போக்குவரத்தா யிருந்தபடியினுல் கொரிந்து பட்டணத்தில் வியாபாரம் அதிகமாய் நடந்தது.

மேலும் அவ்விடத்தில் உலகத்தில் பிரஸ்தாபமுள்ள சர்வகலாசாலை இருந்ததினுல் பல தேசங்களிலுமிருந்து கல்வி கற்கும்படி அநேக மாணுக்கர் அங்கே வருவார்கள்.

இவைகளைத்தவிர அப்பட்டணத்தில் காமதேவிக்கென்று ஒரு பெரிய கோவில் கட்டப்பட்டிருந்தமையால் வேசிகள் அநேகர் அங்கே இருந்தார்கள். இதினுல் எல்லாத் துன்மார்க்கத்துக்கும் கொரிந்து இருப்பிடமாய் இருந்தது.

மேலும் அந்தப் பட்டணத்தில் இரண்டு வருஷத்துக் கொருமுறை பந்தய விளையாட்டுக்கள் நடந்தனவாதலால் ரோமை ராஜ்யத்தின் எத்திசையிலுமிருந்து அவ்விளையாட்டுக்



தற்கால கொரிந்து.

களைப் பார்க்கிறவர்களும் நடத்துகிறவர்களுமான கோடாகோடி ஜனங்கள் அங்கே வந்து கூடுவார்கள்.

கி-மு. 146-௵த்தில் அப்பட்டணத்தை ரோமர்கள் அழித்தாலும் ஜூலியு கைசர் *(Julius Caesar)* அதைத் திரும்பவும் கட்டினதினால் சீக்கிரத்தில் அது முன்னிருந்ததுபோல் பெரிதாயும் தனசம்பத்துள்ளதாயும் வந்தது. பரி. பவுலின் காலத்தில் அதில் குடியிருந்தவர்கள் யார் என்றால்: அந்தப் பட்டணத்தை இரண்டாந்தரம் ஸ்தாபித்த ரோமர்களின் சந்ததியார், ரோமை ராஜ்யத்திலுள்ள உத்தியோகஸ்தர், வியாபாரிகள், கிரேக்கர்கள், யூதர்கள், அந்நியர்கள் ஆகிய இவர்களே.

பரி. பவுல் முதல் வந்தபோது அங்கே தங்கவேண்டுமென்று அவன் கருதவில்லை எனத் தோன்றினாலும், அவன் கண்ட தரிசனத்தினால் அங்கே அவன் ஊழியம்செய்து ஒரு விசேஷித்த சபையை ஸ்தாபித்தான். அங்குள்ள யூதர்கள் முதலில் பரி. பவுலை ஏற்றுக்கொண்டாலும் இயேசுகிறிஸ்துவைக் குறித்து அவன் செய்த பிரசங்கத்தைக் கேட்டு அவனுக்கு விரோதிகளானார்கள். சிலரோ அவனுடைய போதனையைக் கேட்டு அவன் பக்கம் சேர்ந்தார்கள். அப் 18[1-11] ரோ 16[21] 1 கொரி 9[20].

நாம் கொரிந்து சபையிலுள்ளவர்களின் பேர்களைப் பார்த்தால் புறமதங்களிலிருந்து வந்தவர்கள் அநேகர் என அறிவோம். அப் 18[7] ரோ 16[21] 1 கொரி 12[2] 16[17].

பரி. பவுல் சிலகாலம் அங்கே இருந்த பிறகு அவனுக்கு உதவியாகச் சீலாவும் தீமோத்தேயுவும் வந்தார்கள். அவ்விடத்தில் அவன் தெசலோனிக்கேயருக்கு முதலாம் நிருபம் எழுதி அதற்குப் பதில் வந்தபிற்பாடு இரண்டாம் நிருபத்தையும் அவர்களுக்கு எழுதினான் என்று தோன்றுகிறது. 1 தெச 3[6].

அவன் கொரிந்து பட்டணத்தில் இருந்தபோது அவனுக்கு விரோதிகளான யூதர்கள் கல்லியோன் அதிபதிக்குமுன் கி-பி. 52-௵த்தில் அவனை விசாரணைக்காகக் கொண்டுவந்தார்கள். இதினால் கொரிந்து பட்டணத்தில் கிறிஸ்தவ சபை விருத்தியடைந்ததையும், அதற்கு விரோதமாய் யூதர்கள் வெறுப்பும் விரோதமும் கொண்டதையும், அப்பட்டணத்திலுள்ள மற்றவர்கள் யூதர்களுக்கு விரோதமாய் நடந்ததையும் நாம் அறிந்துகொள்ளலாம். அப் 18[17].

இங்கே கூடாரம் செய்கிறவர்களாயிருந்த பிரிஸ்கில்லாள், ஆக்கில்லா என்பவர்களுடைய வீட்டில் பரி. பவுலும் கூடாரவேலை செய்துகொண்டிருந்தான். இந்தச் சபையிலுள்ளவர்களுக்குப் பரி. பவுல் இழந்துபோன நிருபம் ஒன்றையும் (1 கொரி 5[9]), இப்போது வேதத்தில் இருக்கும் இரண்டு நிருபங்களையும் எழுதினான். அவன் மறுபடியும் கி-பி. 56-57-௵ மூன்று மாதமாகக் கொரிந்துவிலே இருந்தான். அப் 20[2].

துன்மார்க்கமும் பற்பல மதங்களும் நிறைந்த அப்பட்டணத்தில் பரி. பவுல் கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தது சுவிசேஷத்தின் வல்

லமைக்குச் சிறந்த அத்தாட்சியாய் இருக்கிறது.

**கொர்நேலியு.** Cornelius. யூதமார்க்கத்தில் விளங்கின உண்மையை அறிந்து அதிற் சேர விரும்பின அந்நியர்களில் அநேகர் அதற்குரிய எல்லாச் சிலாக்கியங்களையும் பெறுவதற்கு இடமில்லா விட்டாலும், அதிற் சேர்ந்துகொள்வதற்குத் தடையில்லை என்று யூத வேதசாஸ்திரிகளின் உத்தரவு இருந்ததினால், அவர்கள் அதிற் சேர்ந்தார்கள். அவர்களில் கொர்நேலியு ஒருவன். ...லியா பட்டாளத்தில் நூற்றுக்கு அதிபதியாய் இருந்தான். இவன் ஞானஸ்நானம் பெறுவது கிறிஸ்தவ சபை யூதருக்குள்ளே சிறு சங்கம் அல்ல, உலகத்தார் யாவரையும் கூட்டிச் சேர்க்கும் சங்கம் என்பதைக் குறிக்கிறது. அப் 10 அதி.

**கொர்பான்.** Corban. இப்பதம் பாபிலோனியரும் யூதரும் கடவுளுக்குக் கொடுக்க வேண்டிய காணிக்கையையும், அவர்கள் செய்யும் பொருத்தனையை நிறைவேற்றும்படி செலுத்துகிற காணிக்கையையும் குறிக்கிறது. 'காணிக்கை.' எசே 20[28]. 'பலி.' எசே 40[43]. 'கொர்பான்.' மாற் 7[11]. எபிரெயர்கள் சரியாய் யோசிக்காமல் தங்களுக்கும் தங்கள் தாய்தந்தையருக்கும் சம்ரக்ஷணைக்காக வைத்திருக்கிறவைகளைக் கடவுளுக்குக் கொடுப்பதாகப் பொருத்தனைசெய்து இவ்விதமாய்ப் பெரும்பாலும் தங்கள் பெற்றோரைக் கஷ்டத்தில் போடுகிறதினால், அவர்களுக்கு அநியாயம் செய்கிறதுபோலிருந்தது. யூத வேதசாஸ்திரிகள் இது அநியாயம் என்று அறிந்தும், முதலில் இதனால் தாய்தந்தையருக்குக் கஷ்டம் வந்தபோதிலும் செய்த பொருத்தனையை நிறைவேற்றவேண்டும் என்று தீர்மானித்தார்கள். உபா 23[21]. பிறகு கி-பி. 90-ஆம் ஆண்டில் அவர்கள் பெற்றோரைச் சம்ரக்ஷணை செய்வது உத்தம கடமை என்று அறிந்து இப்படிப் பொருத்தனை செய்வதை விலக்கவேண்டும் என்று உத்தரவு கொடுத்தார்கள்.

**கொலாயா.** Kolaiah.

1. எரே 29[21].
2. நெகே 11[7].

**கொலை.** Murder. நியாயப்பிரமாணத்தில் வேண்டும் என்று செய்யும் கொலைக்கும், கைப்பிசகாய்ச் செய்யும் கொலைக்குமுள்ள வித்தியாசம் அதிக தெளிவாய்க் காண்பித்திருக்கிறது. ஆதி 9[6] யாத் 20[13] 21[14] உபா 19[4-11] எண் 35[9]. 'எழுத்து கொல்லுகிறது' என்பதற்கு நாம் செய்த குற்றத்தினிமித்தம் நாம் தண்டனைக்குப் பாத்திரமுள்ளவர்கள் என்று நியாயப்பிரமாணம் சொல்லுகிறது என்றர்த்தமாம். 2 கொரி 3[6]. **அடைக்கலப் பட்டணம் காண்க.**

**கொலைபாதகன்.** Murderers. பேலிக்ஸ் கி-பி. 52-ஆம் ஆண்டில் யூதேயாவிலே அதிபதியா யிருந்தகாலத்தில் கொலைபாதகர் என்று சொல்லப்படும் கள்ளர் கூட்டம் கலகம் செய்தார்கள். யூதருக்கும் ரோமருக்கும் யுத்தம் நடந்தபோது இவர்கள் அதிக தைரியமாய் ரோமரோடு போர் புரிந்தார்கள். அப் 21[38].

**கொல்கொதாமலை.** Golgotha. **கல்வாரி** காண்க.

**கொல்லன்.** Smith. 1 சாமு 13[19] 2 இரா 24[14] ஏசா 44[12] எரே 24[1].

**கொலோசே.** Colosse. சின்ன ஆசியாவிலுள்ள பிரிகியாநாட்டில் ஓர் பட்டணம். பரி. பவுலின்காலத்தில் லவோதிக்கேயா பட்டணம் அதிக விருத்தியடைந்து வந்ததினாலே அதற்குக் கிட்ட உள்ள இப்பட்டணத்துக்கிருந்த மேன்மை கொஞ்சம் குறைந்துபோனது. பரி. பவுல் இப்பட்டணத்திற்குப் போகவில்லை. இங்கே எப்பாப்பிராவும் தீமோத்தேயுவும் தேவ ஊழியம் செய்தார்கள். கொலோ 1[1] 2[1] 4[12].

**கொலோசெயருக்கு எழுதின நிருபம்.** The Epistle to the Colossians.

1. **இதின் உண்மை.** பரி. பவுல் எழுதின நிருபங்களில் இதுவும் ஒன்று என்று திருச்சபையாரல்லாமலும் சமயவிரோதிகளும் ஒத்துக்கொண்டார்கள். இதுவும் பிலேமோனுக்கு எழுதின நிருபமும் ஒன்றுக்கொன்று அதிகமாய்ச் சம்பந்தப்பட்டிருக்கிறது.

2. **காலம்.** இது பரி. பவுல்தான் எழுதினது என்பதற்குச் சந்தேகமேயில்லை. அவன் ரோமாபுரியிலே சிறைச்சாலையிலிருந்தபோது (கி-பி. 60-61) எபேசியர், பிலேமோன், கொலோசெயர், பிலிப்பியர் ஆகிய நாலு நிருபங்களை எழுதினான். 4[3, 18].

3. **நோக்கம்.** கொலோசெயில் ஊழியம் செய்த எப்பாப்பிரா அங்கிருந்து ரோமாபுரிக்கு வந்து அங்கே தங்கிப் பரி. பவுலுக்குக் கொலோசெ சபையைக்குறித்துச் சொன்னதைக் கேட்டு அச்சபைக்கு இந்த நிருபத்தையெழுதி தீகிக்கு கையிற் கொடுத்து அனுப்பினான். பிலே 1[23]. கொலோ 4[3]. இதில் பரி. பவுல் அச்சபையில் தனக்கிருக்கும் பிரியத்தையும் நேசத்தையும் காட்டி கிறிஸ்தவ நடக்கைக்கு விரோதமான கொள்கையைப் பற்றி எச்சரிக்கிறான். அச்சபையில் சமயப்

புரட்டான விஷயம் இன்னதென்று நமக்குப் பூரணமாய்த் தோன்றவில்லை. ஆனால் அது ஒருமாதிரியான தத்துவஞான சாஸ்திரத்துக்குரியது என்று நினைக்கவேண்டும். அதாவது கடவுள் தாமே சிருஷ்டிப்புக்குக் கர்த்தா அல்லவென்றும், தூதர்கள் மூலமாய் அதை யுண்டாக்கினார் என்றும், மனுஷர் வேஷ மதவைராக்கியத்தினால் தங்கள் சரீரங்களை ஒடுக்கவேண்டும் என்றும், யூத சடங்காசாரங்களின்படி நடக்கவேண்டும் என்றும், இந்தச் சாஸ்திரத்தினாலே உத்தம ஞானம் அடையலாம் என்றும் போதித்தது.

ஆகையினால் பரி. பவுல் இதில் ஒரே மத்தியஸ்தராகிய இயேசுகிறிஸ்துவின் மகத்துவத்தையும் அவரில் நம்பிக்கை வைக்கிறவர்கள் அடையும் விடுதலையையும்பற்றிப் போதிக்கிறான். $2^{16, 18, 23}$.

4. **பொருளடக்கம்.** $1^{1-12}$. வாழ்த்துதல், ஸ்தோத்திரம், விண்ணப்பம்.

$1^{13}$-$2^{3}$. காணமுடியாத கடவுளின் சுரூபமாகிய கிறிஸ்துவின் தன்மையும் ஊழியமும்.

$2^{4}$-$3^{4}$. தத்துவசாஸ்திரத்தைப்பற்றிய போதனை. இயேசுவின் தேவத்துவத்தின் பரிபூரணம் எல்லாம் சரீரப்பிரகாரமாய் அடங்கியிருக்கிறது. அவர் மேலானவரும் ஜீவனையளிக்கிறவருமாய் இருக்கிறார். கிறிஸ்துவுடனே உயிர்த்தெழுகிறவர்கள் அவர் தேவனுடைய வலது பாரிசத்தில் உட்காருகிற இடத்திலுள்ள மேலானவைகளைத் தேடவேண்டும்.

$3^{5}$-$4^{6}$. கிறிஸ்தவர்கள், புருஷர், மனைவிகள், பெற்றோர், பிள்ளைகள், எஜமான்கள், அடிமைகள் ஒருவருக்கொருவர் செய்யும் கடமைகள்.

$4^{7-18}$. தீகிக்கு, ஒநேசிமு, மாற்கு முதலியவர்களைப்பற்றியும், தன் சொந்த நிலைமையைப்பற்றியும் சொல்லியது.

**கோல்லோசே.** Col-hozeh. [எல்லாம் பார்க்கிறது]. நெகே $3^{15}$.

**கொழுப்பு.** Fat. யூதருக்குள் ஆடுமாடுகளின் கொழுப்பும், சீரியா தேசத்தின் ஆட்டின் பெரிய கொழுப்புள்ள வாலும் சாப்பிடலாகாது என்ற கட்டுப்பாடு இருந்தது. யாத் $29^{22}$ லேவி $3^{3}$ $3^{17}$ $7^{22}$. 'இருதயம் கொழுத்திருக்கிறது' என்பது பொருமையைக் குறிக்கிறது. உபா $32^{15}$ சங் $119^{70}$ எரே $5^{28}$. கொழுப்பு நன்மையைக் குறிக்கிறது. ஆதி $27^{28}$ நெகே $9^{25}$ சங் $63^{5}$ எரே $31^{14}$.

**கொழுவிரும்பு.** Plough-share. 1 சாமு $13^{20}$.

**கொள்ளுகிறது.**

1. = *To buy.* ஆதி $33^{19}$ லேவி $22^{11}$ 2 சாமு $24^{21}$ ஏசா $55^{1}$ வெளி $3^{18}$.

2. = *To contain.* 1 இரா $8^{27}$ 2 நாளா $6^{18}$ யோவா $21^{25}$.

**கொள்ளி.** Fire-brand. நீதி $26^{18}$ ஏசா $7^{6}$ ஆமோ $4^{11}$.

**கொள்ளிவாய்ச் சர்ப்பம்.** Fiery Serpent. பலெஸ்தீனாவிலும் அதற்குத் தெற்கேயுள்ள வனாந்தரத்திலும் பாம்புகள் அநேகம் உண்டு. இவைகளில் விஷமுள்ள சில பாம்புகள் தீண்டும்போது அது தீயினால் சுட்ட வேதனையைப்போல் கொடிய வேதனையைக் கொடுக்கிறதினால் இவைகள் 'கொள்ளிவாய்ச் சர்ப்பம்' என்றும், 'அக்கினிச் சர்ப்பம்' என்றும் சொல்லப்படுகின்றன. எண் $21^{6}$ ஏசா $14^{29}$. இதினிமித்தம் எபிரேய பாஷையில் கொள்ளிவாய்ச் சர்ப்பத்திற்கு சுவாலை என்னும் அர்த்தம்கொண்ட 'சேராப்' என்று பெயர். ஆனால் இது இன்ன ஜாதிப் பாம்பு என்று சொல்லமுடியாது.

**கொள்ளை.** Prey. ஆதி $49^{27}$ எண் $14^{3}$ $31^{27}$ நியா $5^{30}$ ஏசா $10^{6}$ $33^{23}$ $49^{24}$ எசே $36^{4}$. பிலி $2^{6}$-ல் சொன்ன 'கொள்ளை' என்பதின் அர்த்தமாவது: 'பறித்துக்கொள்ளவேண்டிய பொருள்.'

**கொள்ளைநோய்.** Murrain. ஐந்தாம் வாதை. யாத் $9^{3}$. வாதை காண்க.

**கொறுக்கை.** Reed. ஏசா $19^{6}$.

**கொனனியா, கொனனியா.** Conaniah.

1. ஒரு லேவியன். 2 நாளா $31^{12}$.

2. இன்னொரு லேவியன். 1 நாளா $35^{9}$.

**கொன்ஸ்தந்தீன்.** Constantine. கி-பி. 306-ஆண்டில் ரோமை ராஜ்யத்துக்குக் கொன்ஸ்தந்தீன் ராயன் ஆனான். இவன் கி-பி. 312-ஆண்டில் கிறிஸ்தவனாகி, அதுமுதல் எல்லா மார்க்கத்திலும் கிறிஸ்தமார்க்கம் உத்தமம் என்பதை அந்தப் பெரிய ராஜ்யத்தில் யாவருக்கும் காட்டும்படி முயற்சி செய்தான். பலமுறையும் துன்பப்படுத்தப்பட்ட திருச்சபை இவனால்தான் சமாதானமும் விருத்தியும் அடைந்தது. இவன் விக்கிரக ஆராதனையையும் அதற்குரிய திருநாட்கள், தீர்த்தயாத்திரைகள், பலிகள் முதலிய சடங்காசாரங்களையும் அகற்றி விக்கிரக கோவில்களைக் கிறிஸ்தவ கோவில்களாக்கும்படி பல இடங்களிலும் கட்டளையிட்டான். ரோமாபுரிக்குப் பதிலாகத் தான் ஸ்தாபித்த கொன்ஸ்தந்தினுபுரியைப் பெரிய ரோமை ராஜ்யத்துக்குத் தலைநகரி யாக்கினான். இப்பட்டணத்தில்

அரமனை, கோட்டைகள், கோர்த்தியான கோவில், துறைமுகம் முதலியவைகள் கட்டி இதை அலங்கரித்தான். இவன் பள்ளிக்கூடங்களை ஸ்தாபித்தான். கடுதாசிச் சுருள்களிலும் தோற் சுருள்களிலும் வேதாகமத்தை எழுதுவதற்கு வெகுமதி கொடுத்தான். இவன் மூலமாய்த் திருச்சபை விருத்தியடைந்தும் பல விஷயங்களில் கிறிஸ்தவமார்க்கத்தை அதின் போதனையின்பிரகாரம் இவன் அனுசரிக்கவில்லை என்பதற்கும், அக்காலத்தில் இவனுடைய பெரிய உத்தியோகஸ்தர் இவன் தயவு பெறும்படி கிறிஸ்தவர்கள் ஆனார்கள் என்பதற்கும் ஐயமேயில்லை. என்றாலும் இவன் காலம்முதல் கிறிஸ்தவமார்க்கம் விக்கிரக ஆராதனையை ஜெயித்துவந்தது என்று காண்கிறோம்.

## கோ.

**கோகாத், கோகாத்தியர்.** Kohath. லேவி கோத்திரத்தின் மூன்று முக்கிய குடும்பங்களில் ஒன்று. ஆதி $46^{11}$ யாத் $6^{16}$ எண் $3^{17}$ 1 நாளா $6^{1}$ யோசு $21^{5}$. கோகாத்தியர்களில் நாலு பிரிவுகள் உண்டு. இவைகளில் ஆரோன், மோசே பிறந்த அம்ராம் குடும்பம் விசேஷமானது. யாத் $6^{20}$. கோராகு இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன். எண் 16 அதி. இஸ்ரவேலர் வனாந்தரத்தில் இருக்கும்போது கோகாத்தியர் தங்கள் கூடாரத்தை ஆசரிப்புக் கூடாரத்துக்குத் தென்திசையில் அடித்தார்கள். பயணம் பண்ணும்போது இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் பணிமுட்டுச் சாமான்களைத் தங்கள் தோள்களில்சுமந்து கொண்டு போவார்கள். எண் $3^{30}$ $7^{9}$. இவர்களுக்கு இருபத்துமூன்று ஊர்கள் இருந்தன. யோசு $21^{4}$. தேவாலயத்தில் இவர்களில் சிலர் பாடகராய் இருந்தார்கள். 1 நாளா $6^{31}$ 2 நாளா $20^{19}$ $29^{12}$.

**கோகு, கோக்.** Gog.

1. எசேக்கியேல் தீர்க்கதரிசி தரிசனத்தில் கண்ட யேகோவா இரட்சித்த இஸ்ரவேலருக்கு விரோதமாய்ப் படையெடுத்துவந்த ஒரு சேனபதி. எசே 38–39 அதி. பரி. யோவான் இந்த அர்த்தங்கொண்டே 'கோகு' என்று சொல்லுகிறான். வெளி $20^{7}$.

2. கோக் ரூபன் குடும்பத்தில் ஒரு கோத்திரம். 1 நாளா $5^{4}$.

**கோசாம்.** Cosam. லூக் $3^{28}$.

**கோசான்.** Gozan. நினிவே பட்டணத்திலிருந்து முப்பது மைல் கிழக்கிலிருந்த இடத்திற்கு அசீரியா ராஜா இஸ்ரவேலரைக் கொண்டுபோனான். 2 இரா $17^{6}$ $19^{12}$.

**கோசேன்.** Goshen.

1. யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{51}$.

2. தென்யூதாவில் ஒருதேசம். யோசு $10^{41}$.

3. பலெஸ்தீனாவின் தெற்கெல்லைக்குச் சமீபமாய் எகிப்தில் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்கப்பட்ட செழிப்புள்ள ஒரு தேசம். ஆதி $45^{10}$ எண் $11^{5}$.

**கோஸ்.** Hak-koz. அக்கோத்ஸ் காண்க.

**கோஸ்.** Kos. சின்ன ஆசியாவுக்குத் தென்மேற்கேயுள்ள தீவு. இங்கே வியாபாரம் அதிகமானதினாலும், மேற்குத் தேசங்களிலிருந்து எருசலேமுக்குப் போகிறவர்களுக்கு இது தங்குமிடமானதினாலும், இங்கே யூதர்கள் அநேகர் வசித்தார்கள். அப் $21^{1}$

**கோடரி.** Axe. உபா $19^{5}$ 1 சாமு $13^{20}$ மத் $3^{10}$.

**கோடி.** Corner. ஓரம் காண்க.

**கோடைகாலம்.** Summer. பலெஸ்தீனாவில் சீவான் மாசமாகிய ஆனிமுதல் ஏறக்குறைய மூன்றுமாசம் கோடைகாலம். அப்போது இரவும் பகலும் காங்கை அதிகம். ஆதி $8^{22}$ சங் $7_{4}^{14}$ ஆமோ $3^{15}$.

**கோட்டான்.** Owl. பலெஸ்தீனாவில் ஆந்தை இனத்தைச் சேர்ந்த பட்சிகளில் ஒன்று. லேவி $11^{17}$ உபா $14^{16}$ சங் $102^{6}$.

**கோட்டை.** Fortress. எபிரெயர்கள் தங்கள் ஊர்களைச்சுற்றி மதிலும், மதிலுக்கு வெளியே அலங்கமும் கட்டுவார்கள். மதிலின் மேல் கோபுரங்கள் கட்டிச் சத்துருக்கள் வராதபடி பார்க்கிறதற்கு அவைகளில் காவற்காரரை வைப்பார்கள். இவ்விதமாய்த் தங்கள் ஒவ்வொரு ஊரையும் காப்பாற்றிவந்தார்கள். பெரிய ஊர்களில் மலைக்குன்றுகளின்மேல் அல்லது மலைச்சார்பில் அரண்கள் கட்டுவார்கள். மேலும் பல தேசங்களிலுமிருந்து சத்துருக்கள் படையெடுத்துவந்து தங்கள் ஊர்களில் பிரவேசியாதபடி அவர்கள் தங்கள் ராஜ்யத்தின் எல்லைகளில் கோட்டைகளையும் கோபுரங்களையும் கட்டுகிற வழக்கம் இருந்தது. மலைக்குன்றின்மேல் ஸ்தாபித்திருந்த எருசலேம் பட்டணத்திற்குள் சத்துருக்கள் லேசாய்ப் பிரவேசியாதபடி கோட்டைகோபுரங்கள் பலமாய்க் கட்டியிருந்ததினால் அது அரணிப்பான நகரியென்று கீர்த்திபெற்றது. பிற்காலத்தில் யூதர்கள் 'கோட்டை' என்று சொல்லிவந்த அந்தோனியா என்னும் கோட்டை பெரிய ஏரோதுவினால் கட்டப்பட்டது. 2 சாமு $5^{7}$ $20^{15}$ 1 இரா $21^{23}$ 2 இரா $9^{17}$ 1 நாளா $11^{5}$ 2 நாளா $11^{11}$ $27^{4}$ நெகே $2^{8}$ சங் $48^{13}$ ஏசா $26^{1}$ அப் $21^{34}$ $22^{24}$. அந்தோனியா காண்க.



மதில் சூழ்ந்த யோப்பா பட்டணம்.

**கோனாய்.** **Wolf.** **ஓநாய்** காண்க.

**கோதுமை.** **Wheat.** தென் பலெஸ்தீனா வின் பள்ளத்தாக்குகளிலும், எர்மோன் மலைக் குக் கிட்ட இருக்கும் சமபூமியிலும் கோது மை அதிகமாய் விளையும். ஆதி $30^{14}$ யாத் $34^{12}$ உபா $32^{14}$ நியா $15^{1}$ 1 சாமு $12^{17}$ சங் $81^{16}$ $147^{14}$ மத் $3^{12}$ $13^{25}$ லூக் $3^{17}$.

**கோத்திரத்தலைவன்.** **Patriarch.** இப்பெயர் தாவீதுக்குச் சொல்லப்படுகிறது. அப் $2^{29}$. **கோத்திரப்பிதா** காண்க.

**கோத்திரப்பிதா.** Patriarch.

1. ஜலப்பிரளயத்திற்கு முன் இருந்த பூர்வ பிதாக்கள்.

2. இவர்களோடு இஸ்ரவேல் ஜனத்தின் ஆதி பிதாக்களாகிய ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு.

3. புதிய ஏற்பாட்டில் முன் சொன்னவர்களோடு யாக்கோபின் புத்திரருக்கும் தாவீதுக்கும் இப்பெயர் சொல்லப்படுகிறது. அப் $2^{29}$ $7^{8}$.

**கோத்திரம்.** Tribe. ஜனத்தின் பிரிவைக் குறிக்கிறது. ஆதி $17^{20}$. பன்னிரண்டு கோத்திரம் என்பது ஜனப்பெருக்கத்தைக் குறிக்கிறது. ஆதி $17^{20}$ $22^{20}$ $36^{15}$. கணக்கின்படி இஸ்ரவேலில் பதின்மூன்று கோத்திரம் உண்டு. ஆதி 29, 30 அதி. ஆனால் எபிரெயர்கள் மனாசே எப்பிராயீம் ஒரே கோத்திரமாக எண்ணிப் பன்னிரண்டு கோத்திரம் என்று சொல்லுவார்கள்.

**கோபம்.** Anger. எபிரெய பாஷையில் இதற்குப் பல பதங்கள் உண்டு. பெரும்பாலும் சொல்லியிருக்கும் பதத்துக்கு 'மூச்சு எறிதல்' என்பது மூலஅர்த்தமாம். ஆதி $27^{45}$ $30^{2}$ யாத் $4^{14}$ $11^{8}$ $32^{19, 22}$ சங் $6^{1}$ $103^{8}$ $145^{8}$. எபிரெயர் யேகோவாவின் கோபம் உக்கிரமுள்ளதாயும் பயங்கரமுள்ளதாயும் இருக்கிறதென்று சொல்லி, அது எப்பொழுதும் நியாயமாயும் தீமைக்கு விரோதமாயும் இருக்கிறது என்றும், கீழ்ப்படிதல் அதைத் தணிக்கும் என்றும் நினைத்தார்கள். லேவி $10^{6}$ உபா $13^{17}$ சங் $103^{8}$ ஏசா $12^{1}$ யோவே $2^{13}$ மீகா $7^{18}$.

புதிய ஏற்பாட்டில் இது அநியாயத்தைக் குறித்து நியாயமான கோபத்தையும், நியாயத்திற்கு விரோதமான கோபத்தையும் குறிக்கிறது. மாற் $3^{5}$ லூக் $4^{28}$ யோவா $3^{36}$ $7^{23}$ ரோ $2^{8}$ எபே $4^{31}$ கொலோ $3^{8}$.

**கோபு.** Gob. [தூரவு]. 2 சாமு $21^{18}$.

**கோபுரம்.** Tower. ஆதி $11^{4}$ 2 இரா $17^{9}$ உன். பா $4^{4}$ $7^{4}$ ஏசா $5^{2}$ சக $14^{10}$ மத் $21^{33}$ லூக் $13^{4}$. **கோட்டை** காண்க.

**கோப்.** Koph. எபிரெய அட்சரங்களில் பத்தொன்பதாம் எழுத்து. சங் $119^{145}$.

**கோமர்.** Gomer. ஆதி $10^{2}$ எசே $38^{6}$.

**கோமேதகம்.** Sardonyx. **இரத்தினம்** காண்க.

**கோமேர்.** Gomer. திப்லாயிமின் மகள். ஓசி $1^{3}$.

**கோரா, கோராகு.** Korah.

1. ஏசாவின் மகன். ஆதி $36^{5}$.

2. காலேபின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $2^{43}$.

3. தேவாலயத்தின் காவற்காரர். 1 நாளா $9^{11}$. இவர்கள் தேவாலயத்தில் பாடகராயும் இருந்தார்கள் என்று தோன்றுகிறது. சங் 42, 44-49, 84, 85, 87, 88 தலைப்பு.

**கோராகு, தாத்தான், அபிராம்.** Korah, Dathan, Abiram. இவர்கள் செய்த கலகத்தின் சரித்திரம். எண் 16, 17 அதி. இவர்கள் கீழ்ப்படியாமைக்குத் திருஷ்டாந்தம். சீராக்குவின் நீதி $45^{18}$ யூதா 11-ம் வசனம்.

**கோராசின்.** Chorazin. இயேசு எச்சரித்த இந்த ஊர் இருந்த இடம் தெரியாது. ஒருவேளை இது இப்போது கலிலேயாக்கடலின் வட எல்லையில் பாழாய்ப்போயிருக்கும் ஒரு ஊராய் இருக்கலாம். மத் $11^{21}$ லூக் $10^{13}$.

**கோரி.** Tomb. யோபு $21^{32}$. **கல்லறை** காண்க.

**கோரே.** Kore.

1. 1 நாளா $9^{19}$.

2. 2 நாளா $31^{14}$.



கோரேசின் கல்லறை.

**கோரேஸ்.** Cyrus. முதலில் கோரேஸ் பெர்சியாவின் அரசனாய் இருந்தான். மேதியரின் சக்கரவர்த்தி இவனுக்கு மேலதிகாரம் உடையவனாய் இருந்தான். ஏறக்குறைய கி-மு. 550-ல் இவன் தான் மேல்அதிகாரி யாகும்படி முயற்சி செய்து முதலில் மேதிய சக்கரவர்த்தியையும், சின்ன ஆசியாவிலுள்ள அரசர்களையும் ஜெயித்து, அப்புறம் பாபிலோனியாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போனான். பாபிலோனியாவிலே பெல்ஷாத்சார் அந்த ராஜ்யத்தைக் காப்பாற்றும்படி பிரயாசப்பட்டும் கோரேஸ் அந்தப் பட்டணத்தை கி-மு. 539-ல் ஜெயித்துப் பல தேசங்களிலுமிருந்து அந்தத் தேசத்துக்குச் சிறையாகக் கொண்டுவரப்பட்டவர்

களில் அநேகரைச் சிறையிலிருந்து மீட்டு, அவர்களைத் தங்கள் தேசங்களுக்கு அனுப்பி விட்டான். அப்பொழுது சிறையிலிருந்த யூதர்களையும் விடுதலை செய்தான். கி-மு. 529-ல் கோரேஸ் தனக்குப் பதிலாகத் தன் மகனை ராஜாவாக்கி, மூன்று வருஷங்களுக்குப் பிறகு இறந்துபோனான். ஏசாயா தீர்க்க தரிசனப் புஸ்தகத்தில் இரண்டாம் பாகத்தில் பாபிலோனியாவைத் தண்டிக்கவும், சிறையிலிருந்தவர்களை விடுதலை செய்யவும், பாழாக்கப்பட்ட எருசலேமைத் திரும்பப் பழுது பார்க்கவும், தேவாலயத்தைக் கட்டவும் யேகோவாவினால் அபிஷேகம் பெற்றவனும் அவருக்குப் பிரியமானவனுமாகிய கோரேஸ் மன்னனைப்பற்றி (ஏசா 40-48 அதி.) அடிக்கடி சொல்லியிருக்கிறது. கோரேஸ் யூதன் அல்லாவிட்டாலும் இவன் யேகோவாவைத் தொழுதுவந்தான் என்பதற்கு ஐயமேஇல்லை. 2 நாளா $36^{22}$ எஸ்ற $1^{1}$ $5^{13}$ தானி $6^{28}$ $10^{1}$ ஏசா $44^{28}$ $45^{1}$.

**கோரைப்புல்**. Flag. யோபு $21^{32}$.

**கோலாசனம்**. Throne. **ஆசனம்** காண்க.

**கோலான்**. Golan. கலிலேயாக்கடலுக்குக் கிழக்கேயுள்ள மூன்று அடைக்கலப் பட்டணங்களில் ஒன்று. உபா $4^{43}$ யோசு $21^{27}$.

**கோலியாத்**. Goliath. ஏறக்குறைய ஒன்பது அடி உயரமுள்ள பெலிஸ்தியனாகிய இவன் ஆனாக்கீம் என்னும் பூர்வ ஜனத்தைச் சேர்ந்த போர்வீரன். இவனைப்போன்ற மனிதருடைய கங்காளங்கள் கண்டுபிடிக்கப் படுகிறதினால் இவ்வளவு உயரமுள்ளவன் இருந்திருக்கவில்லையென்று சொல்ல முடியாது. தாவீது இவனைக் கொன்றான். 1 சாமு 17 அதி.

இது எபிரெயர் அங்கீகரித்த பாரம்பரியம். ஆனால் நாம் எபிரெய பாஷையில் நுட்பமாய் ஆராய்ந்து பார்த்தால், அல்லது அங்கிலேய புது திருத்த வேதாகமத்தைப் (*Revised Version*) பார்த்தால், எல்க்கானான் என்பவன் இவனைக் கொன்றான் என்றும் (2 சாமு $21^{19}$), எல்க்கானான் கோலியாத்தின் சகோதரனைக் கொன்றான் என்றும் (1 நாளா $20^{5}$) வித்தியாசமாய்ச் சொல்லியிருக்கிறது என்று அறிவோம். இதை முதலில் எழுதினவன் 'சகோதரன்' என்னும் பதத்தைக் கைப்பிசகாய் எழுதாமல் விட்டதினால் எல்க்கானான் கோலியாத்தைக் கொன்றான் என்று எழுதியிருக்கிறது.

**கோல்**. Rod. யாத் $4^{2}$ $7^{12}$ $10^{13}$ எண் $17^{2}$ 1 சாமு $14^{27}$ சங் $23^{4}$ ஏசா $10^{5}$ எசே $37^{16}$ மீகா $5^{1}$ எபி $9^{4}$ வெளி $12^{5}$ $19^{15}$.

**கோல், ஆரோனுடைய தளிர்த்த கோல்**. Aaron's Rod. லேவி கோத்திரத்தார்க்கு மாத்திரம் ஆசாரிய ஊழியம் செய்யவேண்டியது என்று காட்டும்படி யேகோவாவுக்கு முன்பாக வைத்த பன்னிரண்டு கோத்திரத் தலைவர்களின் கோல்களில் ஆரோனுடைய தளிர்த்த கோல் அடையாளமாம். இது எப்பொழுதும் சாட்சிப் பெட்டிக்குமுன் வைக்கப்படவேண்டியது. எண் $17^{10}$. பிற்காலத்தில் யூதர்கள் அது சாட்சிப் பெட்டிக்குள் வைக்கப்பட்டிருந்தது என்று சொன்னார்கள். எபி $9^{4}$.

**கோவா**. Goah. எருசலேமுக்குக் கிட்ட ஓர் ஊர். எரே $31^{39}$.

**கோவா**. Koa. பாபிலோனியா தேசத்தில் வடகிழக்குப் பாகத்தில் வசித்த ஒரு ஜனம். எசே $23^{23}$.

**கோவேறு கழுதை**. Mule. 2 சாமு $13^{29}$ $18^{9}$ 1 இரா $1^{33}$ $18^{5}$ எஸ்தர் $8^{10}$ சங் $32^{9}$ சக $14^{15}$.

**கோழி**. Hen. மத் $23^{37}$ லூக் $13^{34}$. **சேவல்** காண்க.

**கோள்**. Backbiting. நீதி $16^{28}$ 2 கொரி $12^{20}$.

**கோனியா**. Coniah. எரே $22^{24}$. **யோயாக்கீன்** காண்க.



கௌதாரி.

## கௌ.

**கௌதாரி**. Partridge. **கவுதாரி** காண்க.

## ச.

**சகசீமா**. Shahazumah. யோசு $19^{22}$.

**சகராயீம்**. Shaharaim. 1 நாளா $8^{8}$.

**சகரியா**. Zechariah. [கடவுள் கீர்த்தி பெற்றவர்].

1. 1 நாளா $9^{37}$. = சேகேர். 1 நாளா $8^{31}$.
2. 1 நாளா $9^{21}$.

3. ஒரு பாடகன். 1 நாளா $15^{18}$.

4. ஒரு ஆசாரியன். 1 நாளா $15^{24}$.

5. ஒரு கோகாத்தியன். 1 நாளா $24^{25}$.

6. ஒரு லேவியன். 1 நாளா $26^{11}$.

7. இத்தோவின் தகப்பன். 1 நாளா $27^{21}$.

8. ஒரு பிரபு. 2 நாளா $17^{7}$.

9. ஆசாபின் புத்திரர்களில் ஒருவன். 2 நாளா $20^{14}$.

10. யோசபாத்தின் மகன். 2 நாளா $21^{2}$.

11. யோய்தாவின் மகனாகிய தீர்க்கதரிசி. இவன் யோவாஸ் ராஜாவின் கட்டளைப்படி விக்கிரக ஆராதனை செய்தவர்களைக் கண்டித்ததினால் அவர்கள் இவனைத் தேவாலயத்தின் பிராகாரங்களில் கொன்றுபோட்டார்கள். 2 நாளா $24^{20}$ மத் $23^{35}$ லூக் $11^{50}$.

12. உசியாவின் காலத்தில் இருந்த தீர்க்கதரிசி. 2 நாளா $26^{5}$.

13. இஸ்ரவேலின் ராஜாவாகிய இரண்டாம் யெரொபெயாமின் மகன். கி-மு. 840-ஆம் ஆண்டில் ஆறுமாசம் இவன் அரசாண்டான். 2 இரா $14^{29}$ $15^{8}$.

14. ஏசாயாவின் காலத்தில் நம்பத்தக்கவனாய் இருந்த ஒருவன். ஏசா $8^{2}$.

15. எசேக்கியாவின் தாயாரின் தகப்பன். 2 இரா $18^{2}$.

16. ஆசாப் சந்ததியாரில் ஒருவன். 2 நாளா $29^{13}$.

17. ரூபன் கோத்திரத்தான். 1 நாளா $5^{7}$.

18 இன்னொரு கோகாத்தியன். 2 நாளா $34^{12}$.

19. தேவாலயத்தின் தலைவர்களில் ஒருவன். 2 நாளா $35^{8}$.

20. தீர்க்கதரிசி. **சகரியாவின் ஆகமம்** காண்க.

21. எஸ்றா $8^{3}$.

22. எஸ்றா $8^{11}$.

23. புத்திமான் ஒருவன். எஸ்றா $8^{16}$.

24. எஸ்றா $10^{26}$.

25. நெகே $11^{4}$.

26. நெகே $11^{5}$.

27. நெகே $11^{12}$.

28. நெகே $12^{35}$.

29. நெகே $12^{41}$.

30. யோவான்ஸ்நானனின் தகப்பன். யோவான் பிறக்குமுன் இவனுக்குத் தேவதூதன் தரிசனமானது; அவன் சொன்னதை இவன் நம்பாததினால் இவன் ஊமையனானது; தன் குமாரனுக்கு யோவான் என்று பேரிட்டது; இவன் பாட்டுப் பாடினது; இவைகளைத் தவிர வேறொன்றும் இவனைப்பற்றிச் சொல்லியிருக்கவில்லை. லூக் $1^{5-80}$.

**சகரியாவின் ஆகமம். The Book of Zechariah.** சகரியாவின் ஆகமம் இரண்டு பாகமாகத் தெளிவாய்த் தோன்றுகிறது.

A. 1-8 அதி. இவைகள் சகரியா எழுதின தீர்க்கதரிசனங்கள்.

B. 9-14 அதி. இவை வேறொரு தீர்க்கதரிசியினால் எழுதப்பட்டவை. அவன் இன்னான் என்பது நமக்குத் தெரியாது.

**A. 1-8 அதி. முதலாம் பாகம்.**

1. காலம். கி-மு. 537-ஆம் ஆண்டு எருசலேமுக்குத் திரும்பிவந்த யூதர்கள் பதினெட்டு வருஷமாகத் தேவாலயத்தைக் கட்டாததினால் ஆகாய், சகரியா இந்தத் தீர்க்கதரிசிகள் கி-மு. 520-ஆம் ஆண்டு முதல் அதைக் கட்டும்படி ஜனங்களையும் அங்குள்ள தலைவர்களையும் ஏவினார்கள். ஆகாய் தன் முதலாம் தீர்க்கதரிசனத்தை உரைத்ததற்கு இரண்டு மாதத்திற்குப் பிறகு, சகரியா தன் முதலாம் தீர்க்கதரிசனத்தை உரைத்தான். ஆகாய் மூன்று மாதம் மாத்திரம் தீர்க்கதரிசனம் உரைத்தான். ஆகாய் தீர்க்கதரிசனம் உரைத்ததற்கு இரண்டு வருஷத்திற்குப் பிறகு, சகரியா 7-8 அதிகாரங்களில் எழுதிய தீர்க்கதரிசனத்தைச் சொல்லி முடித்தான். இவை எல்லாம் தரியு ராஜாவின் இரண்டாம், மூன்றாம், நான்காம் வருஷத்தில் அதாவது கி-மு. 520-518-ஆம் ஆண்டு வரையும் உரைக்கப்பட்டன. இந்த எட்டு அதிகாரங்களில் சொல்லியவையெல்லாம் தேவாலயத்தைத் திரும்பக் கட்டுவதைக் குறித்தன.

**2. முதலாம் பாகத்தின் பொருளடக்கம்.**

(i) $1^{1-6}$. இஸ்ரவேலர் கடவுளிடத்தில் திரும்பவும் வருவதற்கு எச்சரித்தல்.

(ii) $1^{7}$-$6^{15}$. எட்டு தரிசனங்களும் ஒரு செய்கையும்.

(*a*) $1^{7-17}$. நாலு குதிரைகள், தேவதூதனுடைய விண்ணப்பம், எருசலேமைக் குறித்து யேகோவாவின் வாக்குத்தத்தம்.

(*b*) $1^{18-21}$. நாலு கொம்புகளும் அவைகளை முறிக்கிற கன்னாரும்.

(*c*) 2 அதி. அக்கினி மதில்சூழ்ந்த புதிய எருசலேம். சிறையிருந்தவர்களை அழைத்து அவர்களுக்குச் சொல்லும் பாட்டு.

(*d*) 3 அதி. எருசலேமில் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவுக்குத் தீர்க்கதரிசனமாக அளித்த வாக்கு.

(*e*) 4 அதி. ஏழு கிளைவிளக்கும் இரண்டு ஒலிவமரங்களும். செருபாபேலுக்கு எருசலேமில் தேவாலயத்தைப்பற்றிச் சொன்ன வாக்குத்தத்தம்.

(*f*) 5^{1-4.} கள்ளரையும் பொய்யரையும் கண்டிக்கும்படி பறக்கும் புஸ்தகச்சுருள்.

(*g*) 5^{5-11.} மரக்காலில் உட்கார்ந்த அக்கிரமக்காரி பாபிலோனியாவுக்குப் போவது யூதேயாவிலிருந்து குற்றம் மாற்றப்படுகிறதைக் குறிக்கிறது.

(*h*) 6^{1-8.} நாலு ரதங்கள் யேகோவா பூமியை ஆளுகிறதைக் குறிக்கிறது.

(*i*) 6^{9-15.} எட்டு தரிசனங்களுக்குப் பிறகு எருசலேமின் மகிமைக்காக யோசுவா பட்டாபிஷேகம் பண்ணப்படுதல்.

(iii) 7, 8 அதி. உபவாசத்திற்குப் பதிலாக விருந்து. முந்தின தீர்க்கதரிசிகள் சொன்னதின்படி நடப்பதும் நீதி நியாயம் செய்வதும் அவசியம். எருசலேமுக்கு வரும் சமாதானமும் சுகமும்.

**3. முதலாம் பாகம் குறிப்பது.** முந்தின தீர்க்கதரிசிகள் சொன்ன போதனையைச் சகரியா அறிந்து, ஜனங்கள் அப்போதனையைப்போன்ற உத்தம நீதி நியாயத்தைச் செய்யும்படி போதிக்கிறான். இவன் சமாதானம், யேகோவாவின் தயவு, தேவாலயத்தைப்பற்றிய நம்பிக்கை, சன்மார்க்கம், உண்மை ஆகிய இவைகளை விரும்புகிறான். ஆனால் இவன் பிரதான ஆசாரியனை அதிகமாய் நம்பினதினாலும், தேவாலயத்தைக் குறித்து அதிகமாய் மேன்மை பாராட்டினதினாலும், பிற்காலத்தில் யூதர்கள் இதைப் பிரமாணமாகக்கொண்டு தேவாலயத்தையும் அதற்குரிய சடங்காசாரத்தையும் மட்டுக்குமிஞ்சி மேன்மைப்படுத்த ஆரம்பித்தார்கள் என்று நாம் இந்த ஆகமத்தில் அறிகிறோம்.

**B. 9-14 அதி. இரண்டாம் பாகம்.**

**1. காலம்.**—இரண்டாம் பாகம் முந்தின பாகத்திற்கு ஏறக்குறைய 200 வருஷத்திற்குப் பின் எழுதப்பட்டது என்று அநேகர் நினைக்கிறார்கள். கி-மு. 332-301-லே எழுதப்பட்டது என்பது எபிரெய பாஷையில் தேறின சிமித் (G. A. Smith) முதலிய வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயம்.

**2. பொருளடக்கம்.**

(i) 9^{1}-11^{17}. இஸ்ரவேலரின் விரோதிகளுக்கு வரும் தண்டனை, சமாதானப் பிரபுவின் வருகை, யேகோவாவின் மூலமாய் வரும் ஜெயம்.

(ii) 12^{1}-13^{9}. மேய்ப்பர்களின் கண்டிப்பு, எருசலேமுக்கு விரோதமாய் வரும் ஜனங்களின் அழிவு, விக்கிரகங்கள், கள்ளத்தீர்க்கதரிசிகள், அசுத்தர்.

(iii) 14 அதி. எருசலேமின் முற்றுகை, சத்துருக்களுக்கு வரும் தண்டனை, ஆசாரம்.

பிற்காலத்தில் துன்பப்படுத்தப்பட்ட யூதர்களும் கிறிஸ்தவர்களும் இந்த அதிகாரங்களில் சொல்லியபடி தங்கள் சத்துருக்களுக்கு வரும் தண்டனையையும் தங்களுக்கு வரும் சுகத்தையும் அதிக விருப்பத்தோடு கண்டறிந்தார்கள். இந்த அதிகாரங்களை எழுதினவன் ஆசாரத்தை மெச்சி அளவுக்கு மிஞ்சிச் சிறப்பித்தான் என்று நாம் நினைக்க ஏது உண்டு. வேதபாரகர் யூதர்களுக்குள் அதிகாரம் அதிகமாய்ப் பெற்றகாலத்தில் இந்த அதிகாரங்கள் எழுதப்பட்டன என்பதற்கு இது அத்தாட்சியாய் இருக்கிறது.

**சகவான்.** Zaavan. ஆதி 36^{27}.

**சகேயு.** Zacchaeus. ஆயக்காரரில் இவன் பெரியவனென்றும் மத்தேயுவிலும் பெரியவன் என்றும் தோன்றுகிறது. லூக் 19^{1-10}.

**சகோதர சிநேகம்.** Brotherly Love. இயேசுவின் சீஷர்கள் எல்லாரும் சகோதரர் ஆனதினால் அவர்கள் ஒருவரை யொருவர் நேசிப்பார்கள். மத் 23^{8} கலா 6^{10}. விசுவாசிகளின் குடும்பத்தில் கிறிஸ்து முதற்பேறானவர். மற்றவர்கள் அவர் உடன் சகோதரரும் சுதந்தரவாளிகளுமாய் இருக்கிறார்கள். யோவா 20^{17} ரோ 8^{14}. கிறிஸ்தவன் கிறிஸ்தவனுக்குக் காட்டும் நேசம் அவன் உண்மையுள்ள சீஷனாயிருப்பதற்கு அடையாளம். யோவா 13^{34} 15^{12} 1 யோவா 2^{7} 1 பேது 2^{17}. சகோதர சிநேகம் கிறிஸ்தவன் கிறிஸ்தவனுக்கு உதவிசெய்வதற்குக் காரணமாம். கிறிஸ்தவன் கிறிஸ்தவனை ஏற்றுக்கொள்வான். 1 கொரி 12^{12}-13^{13} கலா 5^{13} எபே 4^{31}.

ஆதி கிறிஸ்தவர்கள் இந்தக் குணமுள்ளவர்களாய் அதிக ஊக்கத்தோடு நடந்து, தங்கள் ஊர்வழியாய் வருகிறவர்களை அனுசரித்து, ஏழைகளுக்கு உதவி செய்ததினால் திருச்சபையில் அந்நியோந்நியம் இருந்தது. எபி 13^{1} 2 பேது 1^{7}.

**சகோதரன்.** Brother.

1. உடன் பிறந்தவன். ஆதி 4^{2} 27^{11} மத் 4^{18}.
2. ஒப்புரவு. ஆதி 19^{7}.
3. பந்துத்துவம். யாத் 32^{27} 2 சாமு 13^{8}.
4. இஸ்ரவேலன். உபா 15^{12} நெகே 5^{7}.
5. சிநேகிதன். 2 சாமு 1^{26} 1 இரா 13^{10}.
6. கிறிஸ்தவன். அப் 9^{17} ரோ 14^{15} பிலி 2^{25} 1 யோவா 2^{9}. சகோதர சிநேகம் காண்க.

**சகோதரி.** Sister.

1. உடன் பிறந்தவள். ஆதி $24^{59}$ லேவி $18^{18}$.

2. இனத்தாள். ஆதி $12^{13}$ $20^{12}$ $26^{7}$.

3. அன்புடையாள். உன். பா $4^{9.12}$ $8^{8}$.

4. உவமானமாய்ச் சொல்லப்படும். எசே $16^{46.56}$ $23^{4}$ எரே $3^{10}$.

5. கிறிஸ்தவள். மத் $12^{49}$ ரோ $16^{1}$ 1கொரி $7^{15}$ யாக் $2^{15}$. **சகோதர சிநேகம்** காண்க.

**சக்கரம்.** Wheel. **உருள், வண்டி** காண்க.

**சக்காயி.** Zaccai. = சாபாய் (*Zabbai*). நெகே $3^{20}$ எஸ்றா $2^{9}$.

**சங்கத்தலைவன்.** Master of Assemblies. பிர $12^{11}$.

**சங்கம்.** General Council.

1. **ஆலோசனைச்சங்கம்** காண்க.

2. திருச்சபையில் கூடின பொதுவான சங்கங்கள் பல இருந்தன. பிற்காலத்தில் ரோமான் சபையும் கிரேக்க சபையும் பிரிக்கப்பட்டு அவைகள் வெவ்வேறு பொதுவான சங்கங்களை ஏற்படுத்தின. இவ்விடத்தில் முற்காலத்தில் ரோமான் சபையும் கிரேக்க சபையும் பிரிக்கப்படும்முன் அவைகள் அங்கீகரித்த முதல் ஏழு சங்கங்களைப் பற்றிமாத்திரம் சொல்லுவோம்.

(i) கி-பி. 325-ஆ. மகா கொன்ஸ்தந்தீன் என்ற ராயன் நிசேயா நகரியிலே (*Nice*) மூந்நூற்றுப் பதினெட்டுக் கண்காணியார்களை அழைத்து ஒரு சங்கத்தைக் கூட்டினான். இது இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்த நாள் யூதருடைய பஸ்கா பண்டிகையின் நாளில் கொண்டாடாமல், இப்போது அநுசரிக்கிற முறையின்படி பெரிய வெள்ளிக்கிழமையையும் இயேசு உயிர்த்தெழுந்த திருநாளையும் கொண்டாட வேண்டுமென்றும் சொல்லிக் கிழக்குச் சபையாருக்கும் மேற்குச் சபையாருக்குமுள்ள இதைப் பற்றிய தர்க்கத்தைத் தீர்த்தது. மேலும் இதில் பதிதராகிய அரியானருக்கு எதிராக இயேசுகிறிஸ்து பிதாவோடொத்த ஒரே சுபாவமாய் இருக்கிறார் என்று உறுதிப்படுத்தி, நிசேயா நியாயப்பிரமாணத்தின் முதல்மாதிரி விளம்பரம் செய்யப்பட்டது.

(ii) கி-பி. 381. கொன்ஸ்தந்தீன் புரியில் (*Constantinople*) கூடின சங்கம் பரிசுத்தாவி 'கர்த்தருமாய், ஜீவனைக் கொடுக்கிறவருமாய்ப், பிதாவிலிருந்து'....'புறப்படுகிறவருமாய்ப், பிதாவோடும் குமாரனோடும் கூடத் தொழுது தோத்திரிக்கப்படுகிறவருமாய்' இருக்கிறார் என்று உறுதிப்படுத்தி, நிசேயா சங்கத்தில் தீர்ந்த விசுவாச நியாயப்பிரமாணத்தை விபரமாய் விளம்பரம் செய்தது.

(iii) கி-பி. 431. இச்சங்கம் எபேசு (*Ephesus*) பட்டணத்தில் கூடினது. கிறிஸ்துவின் மானிட சரீரத்திற்கும் தெய்வீக தன்மைக்கும் உள்ள வித்தியாசத்தை அதிகமாய் விவரித்து கிறிஸ்துவுக்குள்ள மனுஷீக தன்மையும் தெய்வீக தன்மையும் ஒன்றுக்கொன்று பொருந்தியதல்ல என்று அவைகளைப் பிரித்துச் சொன்ன நெஸ்தோரியானரின் போலி நியாயத்தைத் தள்ளிவிட்டது.

(iv) கி-பி. 451. கால்சேதோன் (*Chalcedon*) என்ற நகரியிலே கூடின இச்சங்கம் கிறிஸ்துவின் இரண்டு சுபாவங்களையும் ஒன்றோடொன்று கலந்து அவர் பிறந்த பிறகு அவருடைய தெய்வீக சுபாவம் அவருடைய மனுஷீக சுபாவத்தை உட்கொண்டது என்று போதித்த ஐத்திக்கியானருடைய உபதேசத்தைத் தள்ளிவிட்டது.

(v) கி-பி. 553. கொன்ஸ்தந்தீன் புரியில் (*Constantinople*) கூடின சங்கம் கிறிஸ்துவினிடத்தில் ஒரே சித்தமும் ஒரே நடபடியும் உண்டென்றும், வார்த்தைமாத்திரம் மனுஷ சுபாவத்தைக்கொண்டு வேண்டுமென்றதை நடப்பிக்கிறது என்றும் சாதித்தவர்களின் உபதேசத்தைத் தள்ளிவிட்டது.

(vi) கி-பி. 680. கொன்ஸ்தந்தீன் புரியில் (*Constantinople*) கூடின இந்தச் சங்கம் கிறிஸ்து தெய்வீக சுபாவத்திற்கும் மனுஷீக சுபாவத்திற்கும் அடுத்த இரு சித்தம் உடையவராய் இராமல், ஒரே சித்த புருஷனாகவே இருக்கிறார் என்ற போதனையைத் தள்ளிவிட்டது.

(vii) கி-பி. 787. நிசேயா (*Nice*) நகரியில் கூடின சங்கம் சுரூபங்களுக்குச் செய்ய வேண்டிய வணக்கத்தையும் செய்யக் கூடாத வணக்கத்தையும்பற்றி ஏற்பாடு செய்தது.

**சங்காரம்.** Destruction, Slaughter. ஏசா $10^{25}$ $30^{25}$ எரே $7^{32}$.

**சங்கிலி, சரப்பணி.** Chian.

1. கைதிகளைக் கட்டுகிற சங்கிலிகள். எசே $19^{4}$ அப் $12^{6}$ $28^{20}$.

2. சிலர் கனத்தினிமித்தம் பொற்சங்கிலிகள் அணிவார்கள். ஆதி $41^{42}$ நீதி $1^{9}$.

3. அந்தகாரச் சங்கிலிகள். 2பேது $2^{4}$.

**சங்கீதங்கள்.** Psalms.

1. யூதர்கள் பழைய ஏற்பாட்டை 'நியாயப்பிரமாணம்,' 'தீர்க்கதரிசிகள்,' 'எழுதினவைகள்' என மூன்று பிரிவுகளாகப் பிரித்

தார்கள். அவர்கள் சங்கீதங்களை மூன்றும் பிரிவில் வைத்தார்கள். இதற்குச் 'சங்கீதப் புஸ்தகம்' அல்லது 'சங்கீதங்கள்' என்று பெயரிட்டார்கள். லூக் $20^{42}$ $24^{44}$ அப் $1^{20}$. இந்தப் புஸ்தகத்தில் இருக்கும் கீதங்கள் தேவாலயத்தில் பாடகரால் பாடவேண்டியவைகள். கீதவாத்தியங்கள் வாசித்து இவைகளைப் பாடுவார்கள். எபிரெய பாஷையில் இதற்குத் 'துதியின் புஸ்தகம்' என்று பெயர். ஆனால் சங்கீதங்களிற் சில துதித்தற்கான சங்கீதங்கள் அல்ல. இந்தப் புஸ்தகத்தில் 150 சங்கீதங்கள் உண்டு. இவைகளிற் சில இரண்டாகப் பிரிக்கப்படும். அவை ஒரே கோவையாய் இருக்கின்றன. உ-ம். 9, 10; 42, 43. சில சங்கீதங்கள் சில வித்தியாசத்துடன் இரண்டுதடவை எழுதப்பட்டிருக்கின்றன. உ-ம். $14 = 53$; $40^{13-17} = 70$; $108 = 57^{7-11} + 60^{5-12}$.

இப்புஸ்தகத்தில் இல்லாத சில சங்கீதங்கள் உண்டு. 1 சாமு $2^{1-10}$ ஏசா 12 அதி. $38^{10-20}$ ஆப 3 அதி. லூக்கா சுவிசேஷம் முதலாம் அதிகாரத்தில் சொல்லியிருக்கும் பாட்டுகளை நாம் பார்த்தால், யூதர்கள் இயேசுவின் காலத்திலும் பாட்டுகள் இயற்றிப் பாடி வந்தார்கள் என்று அறிவோம்.

**2. சங்கீத புஸ்தகத்தின் சரித்திரம்.** இச் சங்கீத புஸ்தகம் ஒரேகாலத்தில் ஒரே ஆக்கியோனால் ஒரே புஸ்தகமாக எழுதப்படாமல், பல சமயங்களில் பல ஆக்கியோன்களால் எழுதப்பட்டது என்று தோன்றுகிறது. இச் சங்கீதங்களை இப்புஸ்தகத்தில் சேர்த்தவனைப் பற்றியும் சேர்த்த காலத்தைப்பற்றியும் திட்டமாய் ஒன்றும் தெரியாது. ஆனால் எகிப்து தேசத்தில் ஏறக்குறைய கி-மு. 200-வருஷத்திற்கு முன் எழுதிய பழைய ஏற்பாட்டின் கிரேக்க மொழிபெயர்ப்பை நாம் பார்த்தால், கி-மு. 150-வருஷத்திற்குள் சங்கீதங்களெல்லாம் இப்போது இருக்கிறபிரகாரம் ஒரே புஸ்தகமாகச் சேர்க்கப்பட்டன என்றும், இவைகள் சேர்ந்த புஸ்தகம் இப்போதிருக்கிற சங்கீத புஸ்தகந்தான் என்றும் அறிவோம்.

**3. முந்தின பாட்டு புஸ்தகங்கள்.** இப்போது இருக்கிற சங்கீத புஸ்தகத்தில் சில சிறு பாட்டுப் புஸ்தகங்கள் சேர்க்கப்பட்டன. $72^{20}$-ல் ஒரு புஸ்தகத்தின் முடிவு. சில கீதங்கள் கோராகின் புத்திரருக்கு எழுதின கீதங்கள் என்று தலைப்புகளில் போட்டிருக்கிறதினால், அவையெல்லாம் இவ்விதமான சிறு பாட்டுப் புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டவை என்று நாம் நினைக்கலாம்.

ஆனால் இதைப்பற்றித் திட்டமாய்ச் சொல்ல முடியாது. பின் சொல்லியிருக்கிற சங்கீதங்கள் முற்காலத்து ஐந்து சங்கீத புஸ்தகங்களில் சேர்க்கப்பட்டன என்று உத்தேசிக்கலாம்.

(i) தாவீதின் சங்கீதங்கள். 3-41.

(ii) தாவீதின் சங்கீதங்கள் இன்னொரு கோவை. 51-72.

(iii) ஆசாப்பியர் என்னும் பாடகரின் சங்கீதங்கள். 50, 73-83.

(iv) கோராகு என்னும் பாடகரின் சங்கீதங்கள். 42-49, 84-89.

(v) ஆரோகண சங்கீதங்கள். 120-134. சில வேதசாஸ்திரிகள் இன்னும் இரண்டு சங்கீத புஸ்தகங்கள் உண்டு என்று சொல்லுகிறார்கள். ஆனால் இவைகளைத் தெளிவாய்க் கண்டறிய முடியாது.

16, 56-60. இவைகளுக்கு 'எடுக்கப்பட்டன' என்று அர்த்தங்கொள்ளும். 'மஸ்கீல்' என்று பெயர் இருப்பதினாலும், 57 சங்கீதங்களுக்கு 'இராகத்துடன் பாடவேண்டிய பாட்டு' என்று அர்த்தங்கொள்ளும் 'மிஸ்மோர்' என்று பெயர் இருப்பதினாலும், 55 சங்கீதங்களுக்கு 'இராகத்தலைவனுக்கு எழுதப்பட்டன' என்று அர்த்தங்கொள்ளும் பெயர் இருப்பதினாலும் இந்தச் சங்கீதங்களின் உற்பத்தியையும் தன்மையையும் பற்றிய முறையை நாம் அறியக்கூடும் என்று சிலர் நினைக்கிறார்கள். சங்கீதங்களின் தலைப்பில் சொல்லியிருக்கும் 'அலாமோத்' முதலிய பதங்கள் இப்பாட்டுகளைப்பற்றிய விசேஷத்தைக் குறிக்கின்றன. இப்பதங்களின் அர்த்தம் அக்ஷர அட்டவணையின்படி இந்த வேத அகராதியில் எழுதியிருக்கிறோம்.

**4. ஆக்கியோன்கள்.** இவைகளையெல்லாம் பார்த்து யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு மக்கபேயரின் காலம்வரையும் அவர்கள் அநேக சங்கீதங்களை இயற்றவும் பாடவும் பிரியமுள்ளவர்களாய் இருந்தார்களென்று நாம் நம்பலாம். சில சங்கீதங்களில் சிறையிருப்பைப்பற்றிய விஷயங்கள் சொல்லியிருப்பதினால் அச்சங்கீதங்கள் பாடின காலம் உத்தேசமாய் நாம் சொல்லக்கூடும். இதைப்போலத் தாவீது பல சங்கீதங்களை எழுதினானென்றும், இன்னும் பல சங்கீதங்களில் இருக்கிற வசனங்கள் அவனால் எழுதப்பட்டன என்றும் நாம் சொல்லக்கூடும். ஆனால் சங்கீதங்களில் எழுதியிருக்கும் தலைப்புகள் முற்காலத்தில் அல்ல, பிற்காலத்தில் எழுதப்பட்டதினாலே இப்போது சங்கீத புஸ்தகத்தில் எழுதியிருக்கிற முப்பத்தைந்து சங்கீதங்களைத் தாவீது எழுதினானென்பதற்கு சரியான அத்தாட்சி இல்லை.

**5. சங்கீத புஸ்தகத்தில் அடங்கிய பொருள்.** வித்தியாசமான காலங்களில் பல பக்தர்கள் எழுதிய இப்புஸ்தகத்தின் பொருளைச் சுருக்கமாய்ச் சொல்வது கூடாதகாரியம். ஆனால் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு யூதர்கள் இவைகளைத்தேடி ஆவலோடு பாடினார்கள் என்றும், அக்காலத்தில் இருந்த வேத சாஸ்திரிகள் பல புஸ்தகங்களிலிருந்து சங்கீதங்களை எடுத்து இவைகளைத் திருத்தி ஒரே புஸ்தகமாகச் சேர்த்தார்கள் என்றும், இவைகளில் அக்காலத்திலுள்ள பக்திக்குரிய அனுபவமும், கடவுளுக்குரிய வணக்கமும், எபிரெயருக்கு வரும் பலனும், அவர்களின் நம்பிக்கையும் எழுதியிருக்கிறது என்றும் நாம் தெளிவாய் அறியலாம். சங்கீத புஸ்தகத்தில் பலர் பலதடவை இவ்விதமாய்ப் பாடின கீதங்கள் இருந்ததினாலே இப்புஸ்தகத்தில் தீமைக்கும் அநியாயத்துக்கும் வரும் தண்டனையையும், மனஸ்தாபப்படுகிறவர்கள் செய்ய வேண்டிய அறிக்கையையும், துக்கப்பட்டவர்களுக்கு அருளப்படும் யேகோவாவின் இரக்கத்தையும், ஏழைகள்மேல் அவர் கொள்ளும் பரிதாபத்தையும், பக்தர்களுக்கு அவர் கொடுக்கும் ஆசீர்வாதத்தையும், அவர்கள் பெறப் போகும் மகிழ்ச்சியையும்பற்றி யாவரையும் பக்தியில் தூண்டிவிடும்படி சொல்லியிருக்கிறது. இந்தப் புஸ்தகத்தில் நம்முடைய ஆத்துமாவுக்குரிய எல்லா வாஞ்சையையும் அதற்குக் கடவுள் அருளும் விடையையும் தீர்க்கதரிசிகளின் போதனைகளைக் கற்றுக்கொண்ட பக்தர்கள் பூரணமாய்ப் போதிக்கிறார்கள்.

இதில் பாடகர் பல கீதங்களில் யேகோவா தமக்கு விரோதிகளாய் இருப்பவர்களின் மேல் பூர்வீக ராஜனைப்போல் கோபம் உடையவர் என்று பாவித்தாலும், பெரும்பாலும் இவைகளில் சர்வ லோகங்களுக்கும்மேலான கடவுள் தமக்குக் கீழ்ப்படிந்த யாவருக்கும் இரக்கமுள்ள காருண்ய கர்த்தராய் இருக்கிறாரென்று நாம் அறியலாம். மேலும் பாடகர் இச்சங்கீதங்களில் அக்காலத்தில் நேரிட்ட அநியாயத்தையும் துன்பத்தையும் மறந்து, வருங்காலத்தில் மேசியாவின் மூலமாய்க் கடவுள் ஸ்தாபிக்கும் ராஜ்யத்தை எதிர் பார்த்தார்கள். இதினிமித்தம் யூதர்களில் அநேகர் பாவத்தின் அகோரத்தைப் பூரண துக்கத்தோடு முழுதும் வெறுத்து அதைப்பற்றிப் புலம்பி, தங்களை மீட்கும்படி இவ்வுலகத்தில் தமது ஆளுகையை ஸ்திரப்படுத்தப்போகிற கடவுளை நம்பின இந்தச் சங்கீதங்களை ஆவலாய்ப் பாடினார்கள். கிறிஸ்தவர்களும் அந்தமன ஆறுதலோடு அவைகளைப்பாடி வந்தார்கள். அப்படியே எப்பொழுதும் யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சங்கீத புஸ்தகத்தின் மூலமாய்ச் சந்தோஷமும் மனத்தைரியமும் பூரணமாய் உண்டானது.

**சங்கீதம்.** Hymn. **கீதம்** காண்க.

**சஞ்சரிக்கிறது.** Sojourn. 2 இரா 8[1] தானி 4[24] சங் 120[5] எபி 11[8] அப் 8[6] 1 பேது 1[17].

**சடங்குகள்.** Ceremonies. ஆராதனைக் கடுத்த முறைகள். ஆலயம், விருத்தசேதனம், பலிகள், பண்டிகைகளும், புறம்பான ஆராதனை, ஸ்நானம், ஆசாரியப்பட்டமுதலிய நியம நிஷ்டைகளும், சடங்குப் பிரமாணத்தைச் சேர்ந்தனவாம். எண் 9[3] மாற் 7[4]. சடங்குகளென்கிற நுகத்தடி. அப் 15[10]. பக்திக்கு எழுப்புதலாயும் மிகவும் பிரயோஜனமுள்ள லேசான சில சடங்குகள்மாத்திரம் புதிய ஏற்பாட்டில் நியமிக்கப்பட்டிருக்கின்றன. மத் 28[19. 20] 1 கொரி 11[23] எபி 9[1. 10].

**சட்டம்.** Decrees. அப் 16[4] எபே 2[15].

**சட்டி.** Pot. யாத் 27[3] 38[3] 1 சாமு 2[14] 1 இரா 7[45] 2 இரா 25[14] 2 நாளா 4[11] யோபு 41[20].

**சணல்.** Flax. பலெஸ்தீனாவில் சணற்செடி அதிகமாய்ப் பயிர் செய்யப்படுகிறது. அதின் பூ நீலநிறம். சணற்செடி வளர்ந்து காய்ந்துபோகிற பருவத்தில் அதை வெட்டிக் கூரையில் வைத்து வெயிலில் உலர்த்தித் தண்ணீரில் போட்டு நார் உரித்து அதை நூலாக்கித் துணி நெய்வார்கள். சணல் விதையிலிருந்து மிகவும் உபயோகமான எண்ணெய் எடுப்பார்கள். யாத் 9[31] யோசு 2[6] ஏசா 19[9] ஓசி 2[9].

**சண்டை.** War.

1. எபிரெயருக்குள் ராஜாவின் ஆளுகை ஸ்தாபிக்கப்படுகிறதற்குமுன் சேனைகள் இல்லாததினால் அவர்கள் யுத்தத்திற்குப் போகும் பொழுது பல ஊர்களிலிருந்து சிறு கூட்டங் கூட்டமாகப் போவார்கள். நியா 4 அதி.

எபிரெயருக்கும் பெலிஸ்தியருக்கும் நெடுங்காலம் விரோதம் இருந்ததினால், எபிரெயர்கள் தங்களைக் காப்பாற்றும்படி தங்களுக்கு ராஜாக்களை ஏற்படுத்தினபிறகு அந்த ராஜாக்கள் சேனைகளை நியமித்தார்கள். எபிரெயர் மழைகாலத்திற்குப் பிறகு தங்கள் சத்துருக்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போவார்கள். போர்வீரரை யுத்தகளத்திற்கு அழைக்கும்படி எக்காளம் ஊதுவார்கள். 2 சாமு 11[1] 20[1] நியா 6[34] 1 சாமு 13[3]. யுத்த சேனையில் இன்னாரைச் சேர்க்கக்கூடாது என்று கட்டளை இருந்தது. உபா 20[5-8].

2. எபிரெயரின் அபிப்பிராயத்தின்படி சண்டைசெய்து விரோதிகளை ஜெயிப்பது

கடவுள் நியமித்த ஓர் கடமை. யுத்தத்தில் யேகோவாவின் சமுகம் தங்களோடு இருக்கிறதென்று காட்டும்படி சாட்சிப்பெட்டியை எபிரெயர் போர்க்களத்திற்குக் கொண்டு போவார்கள். போருக்குப் போகுமுன் அவர்கள் தங்களைப் பரிசுத்தப்படுத்திப் பலிசெலுத்துவார்கள். சத்துருவுக்கு விரோதமாய்ப் படையெடுத்துப் போகிறதற்குமுன் சீட்டுப் போட்டு யுத்தத்திற்கு ஏற்றசமயம் இன்னதென அறிவார்கள். பிற்காலத்தில் தீர்க்கதரிசிகளின் ஆலோசனையைக் கேட்பார்கள். எண் $21^{14}$ நியா $1^{1}$ 1 சாமு $7^{9}$ $13^{9}$ $17^{45}$ $23^{2}$ 2 சாமு $11^{11}$ 1 இரா $22^{5}$ யோவே $3^{9}$ எரே $6^{4}$.

3. சேனை போகிறதற்கு முன் வேவுகாரரை அனுப்புவது வழக்கம். யோசு $2^{1}$ நியா $1^{24}$ 1 சாமு $26^{4}$ 2 சாமு $15^{10}$.

போர்வீரர் தங்கும் பாளையங்களைப்பற்றி நமக்குத் தெரியாது. முற்றுகை போடும் போது சிலசமயங்களில் கூடாரங்கள் அடித்து அல்லது சிறு குடிசைகள் கட்டி அவைகளில் தங்குவார்கள்.

சேனைத்தலைவனுக்குப் புறம்பாகப் பெரிய கூடாரம் அடித்திருக்கும். 2 சாமு $11^{11}$ 1 இரா $20^{12}$. காவற்காரர் இரவை மூன்று சாமங்களாகப் பிரித்துப் பாளையத்தைக் காப்பார்கள். நியா $7^{19}$.

யுத்தத்தில் ஆர்ப்பரிப்போடு கூக்குரலிட்டுச் சத்துருக்களிடத்தில் ஓடிப்போவார்கள். பலதடவை சேனைத்தலைவன் தன் சேனையை மூன்று பாகங்களாக அணிவகுப்பான். அடிக்கடி பதிவிருப்பது வழக்கம். பிற்காலத்தில் போர்க்களத்தில் சேனைத்தலைவர்கள் தங்கள் சேனைகளை அதிக சாமர்த்தியத்தோடு நடத்தினார்கள் என்று தோன்றுகிறது. யோசு $8^{15}$ நியா $7^{16}$ 2 சாமு $10^{9}$ 1 இரா $22^{31}$.

4. யுத்தத்தில் ஜெயமடைந்தவர்கள் ஜெயிக்கப்பட்டவர்களுக்கு இரக்கம் காட்டவில்லை. ஆனால் அசீரியரைப்போல் எபிரெயர்கள் அதிக குரூரமானவர்களாய் இருக்கவில்லை.

யோசியாவின் காலத்தில் எபிரெயர்கள் யுத்தத்தில் பிடிபட்ட பெண்களையும் பிள்ளைகளையும் கொல்வது கூடாது என்று நினைத்தார்கள். உபா $20^{14}$. வழக்கமாய் அவர்கள் தாங்கள் யுத்தத்தில் பிடித்தவர்களைத் தங்களுக்கு அடிமைகளாக வைப்பார்கள் அல்லது விற்றுப்போடுவார்கள். யுத்தத்தில் கிடைத்த கொள்ளைப்பொருள்களைப் பங்கிட்டுச் சேனைத்தலைவர்களுக்கு விசேஷித்த பாகம் கொடுப்பது வழக்கம். 1 சாமு $30^{24-26}$. யுத்தத்திலிருந்து போர்வீரர் தங்கள் ஊர்களுக்குத் திரும்பி வரும்போது அவர்களைச் சந்திக்கும்படி பெண்கள் பாட்டுப்பாடி நடனம் செய்து போவார்கள். மக்கபேயர் ஜெயமடைந்ததற்காக ஸ்தோத்திர ஆராதனை நடத்தினார்கள். 1 சாமு $18^{6}$ 1 மக்கபேயர் $4^{24}$.

**சதிநினைக்க.** Quarrel. மாற் $6^{19}$.

**சதுசேயர்.** Sadducees. ஒருவேளை தாவீதின் காலத்தில் இருந்த பெரிய ஆசாரியனாகிய சாதோக்கு என்பவனின் பெயரைக்கொண்டு இவர்கள் தங்களுக்குச் 'சதுசேயர்' என்னும் பெயரை வழங்கி இதினால் ஆசாரியரின் கட்சியைத் தாங்கள் சேர்ந்தவர்கள் என்று குறித்தார்கள். 2 சாமு $8^{17}$. எசேக்கியேலின் அபிப்பிராயத்தின்படி சாதோக்கின் புத்திரர்மாத்திரம் உண்மையான ஆசாரியர்கள். எசே $40^{46}$ $43^{19}$ $44^{15}$ $48^{11}$. ஏறக்குறைய கி-மு. 200-ஆம் யூதர்களுக்குள் வெவ்வேறான கொள்கைகள் உண்டான போது அவர்களுக்குள் ஒரு வகுப்பினராகிய சதுசேயர்கள் எப்பொழுதும் ஆசாரியர்களுக்குரிய கணிசத்தையும் கீர்த்தியையும் நாடினவர்களாய் இருந்தார்கள். எல்லா ஆசாரியர்களும் சதுசேயர்கள் அல்ல. அவர்களிற் சிலர் பரிசேயரும் வேதபாரகருமாயிருந்தார்கள். ஆனால் பெரும்பாலும் எந்த ஆசாரியர்களும், பிரதான ஆசாரியர்கள் எல்லாரும் சதுசேயர்களாய் இருந்தார்கள். யூதேயாவிலும் எருசலேமிலுமுள்ள தனவான்கள் இந்தக் கட்சியை வழக்கமாய் ஏற்றுக்கொண்டார்கள். இவர்கள் பலகாலமாக அதிக உற்சாகத்தோடு ராஜாங்கத்துக்குரிய காரியங்களை நடத்திவந்தும், இயேசுவின் காலத்தில் இவர்கள் பொதுவான ஜனத்தின் பலனை அல்ல, தங்கள் சொந்தப் பலனைமாத்திரம் தேடி ஆசாரியர்களுக்குச் சன்மார்க்க விஷயங்களில் அல்ல, ராஜாங்க விஷயங்களில் எப்பொழுதும் மேலதிகாரத்தை ஏற்படுத்தும்படி பிரயாசைப்பட்டதினால் ஜனங்களின் அபிப்பிராயத்தின்படி இவர்கள் தேவனுடைய ராஜ்யத்தை அல்ல, தங்கள் சொந்த ஆதாயத்தைத் தேடினவர்களாய் இருந்தார்கள். இதினிமித்தம் ஆசாரியர்களுக்கு இருந்த கீர்த்தி குறைந்துபோனது. ஜனங்களும் சதுசேயர்களை முன்போல நம்பவில்லை. பரிசேயரின் கொள்கையில் பல தப்பிதங்கள் இருந்தும் அவர்கள் வேதத்தில் வைராக்கியமுள்ளவர்களும் மேசியாவின் ராஜ்யத்தைப் பற்றி நம்பிக்கையுள்ளவர்களுமாய் இருந்ததினால் லௌகீக சிந்தையுள்ள சதுசேயர்களுக்கும் பரிசேயர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை நாம் அறிந்துகொள்ளலாம். மேலும் வேதசாஸ்திர தத்துவஞானத்தில் வேறொரு வித்தியாசம் இருந்தது. அதாவது சதுசேயர்

மனிதன் மரித்தபின் அவனுடைய ஆத்துமா உயிரோடிருக்கும் என்பதை மறுதலிக்கா விட்டாலும், இவர்கள் மரித்தபின் சரீரத்திற்கு உயிர்த்தெழுதல் உண்டு என்னும் கொள்கையையும், மனுஷருக்கு உதவிசெய்யும் தூதர்கள் உண்டு என்னும் கொள்கையையும் ஏற்றுக்கொள்ளாமல் இவைகளை நீக்கினவர்களாய் இருந்தார்கள். மாற் $12^{18}$ அப் $23^{8}$. இயேசு வழக்கமாய்ச் சாதாரண ஜனங்களோடு சஞ்சரித்து அவர்களுக்குப் போதகம் செய்துவந்ததினால் பரிசேயர்கள் இயேசுவுக்கும் தங்களுக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்து அவருக்கு விரோதிகளானார்கள். முதலில் சதுசேயருக்கும் இயேசுவுக்கும் விரோதம் ஒன்றும் இருக்கவில்லை. ஆனால் வரவர எருசலேமில் சாதாரண ஜனங்களுக்குள் அவர் நற்கீர்த்தி பெற்றதினாலும் ஜனங்கள் அவரிடத்தில் திரள் திரளாய் வந்து சேர்ந்ததினாலும் எருசலேமில் கலகத்துக்கு அவை காரணமாயிருக்கும் என்று பயந்து சதுசேயரைச்சேர்ந்த ஆசாரியர்கள் அவரைக் கொல்லும்படி தீர்மானித்தார்கள். யோவா $11^{49}$. இதினிமித்தம் சதுசேயர் ஆதி கிறிஸ்தவர்களுக்கு விரோதமாய் இருந்தார்கள். மத் $3^{7}$ $16^{1}$ $22^{23}$ மாற் $12^{18}$ லூக் $20^{27}$ அப் 4, 5 அதி.

**சத்தம்.** Voice. ஆதி $3^{8}$ யாத் $15^{26}$ சங் $29^{3}$ ஆமோ $1^{2}$ மீகா $6^{9}$ மத் $17^{5}$ யோவா $10^{4}$ $12^{28}$ அப் $10^{13}$ 1தெச $4^{16}$ வெளி $1^{10}$ $14^{2}$ $16^{1}$ $21^{3}$.

**சத்தி.** Power. அப் $3^{12}$.

**சத்திய வேதம்.** Bible. வேதாகமம் காண்க.

**சத்தியம், உண்மை, மெய்.** Truth.

1. **பழைய ஏற்பாட்டில்:** மூலபாஷையில் 'மெய்' என்பதற்கு 'ஸ்திரப்பட்டது' என்று அர்த்தமாம். முதலில் எபிரெயர் உண்மையைக் குறித்து அவ்வளவு திட்டமாய்க் கவனிக்கவில்லை. ஆதி $12^{11}$ $20^{2}$ $26^{7}$ $27^{18}$. ஆனால் பத்துக் கற்பனையில் உண்மை பேசுவது அவசியம் என்று காட்டியிருப்பதை நாம் அறிந்துகொள்ளலாம். யாத் $20^{16}$.

தீர்க்கதரிசிகள் முதலிய பக்தர்கள் பொய்யைக் கண்டித்து உண்மையைச் சிறப்பித்து வந்தார்கள். ஓசி $4^{2}$ சங் $59^{12}$ நீதி $12^{22}$. சில வசனங்கள் உண்மையானது நியாதிபதி தீர்க்கும் நியாயத்தையும் (யாத் $18^{21}$), மேசியாவின் ஆளுகையையும் (ஏசா $42^{3}$), மனிதர் கடவுளுக்குக் காட்டும் விசுவாசத்தையும் (2இரா $20^{3}$), கடவுள் மனிதருக்கு விசுவாசமாய் இருப்பதையும் (ஆதி $32^{10}$ சங் $31^{5}$) குறிக்கின்றன. பிற்காலங்களில் 'சத்தியம்' வெளிப்படுத்தப்படும் வேதத்தையும் (தானி $8^{12}$ $9^{13}$) அல்லது பரமஞானத்தையும் குறித்தது. நீதி $23^{23}$. தள்ளுபடி ஆகமத்தில் 'சத்தியம்' அடிக்கடி பரம ஞானத்தைக் குறிக்கிறது.

2. **புதிய ஏற்பாட்டில்:** 'சத்தியம்' என்றால் தோற்றத்தில் அல்ல 'உள்ளபடி இருக்கிறது' என்று அர்த்தமாம். கிறிஸ்துவின் போதனையின்படி உண்மை பேசுவது இன்றியமையாத கடமை. இதினிமித்தம் கிறிஸ்தவ சபையில் உண்மை பேசுவது சிறந்த லக்ஷணமாய் எண்ணப்பட்டது. எபே $4^{25}$. பரி. பவுல் மனிதனுக்குத் தெரிவிக்கப்படும் கடவுளின் சித்தத்துக்குச் 'சத்தியம்' என்று சொல்லுகிறான். ரோ $1^{18}$. தேவனுடைய சித்தம் இயேசுவின் சுவிசேஷத்தில் விசேஷமாய் அறியப்படுகிறதினாலே 'சுவிசேஷம்' என்பதும் 'சத்தியம்' என்பதும் ஒன்றுதான். 2கொரி $4^{2}$ கலா $3^{1}$ எபே $1^{13}$ 1தீமோ $3^{15}$ 2தீமோ $2^{15}$. மற்ற நிருபங்களிலும் இவ்விதமாய்ச் சில இடங்களில் சொல்லியிருக்கிறது. எபி $10^{26}$ யாக் $1^{18}$ 1பேது $1^{22}$.

வெளிப்படுத்தின விசேஷத்தைத் தவிர பரி. யோவான் தான் எழுதின ஆகமங்களில் சத்தியத்தைப்பற்றி அதிகமாய்ச் சொல்லியிருக்கிறான். இயேசு சத்தியத்தின் தன்மையைக் காட்டி அதை வெளிப்படுத்தின விதத்தைப்பற்றிப் பரி. யோவான் எழுதின சுவிசேஷம் ஒரு உபந்நியாசம்போல் இருக்கிறது. பரி. யோவானின் போதனையின்படி பொய்க்கும் மாயையான தோற்றம் எல்லாவற்றிற்கும் சத்தியம் இயற்கையில் வித்தியாசமாய் இருக்கிறது; பரமவாக்காகிய இயேசு சத்தியமும், சத்தியத்தை விளக்குகிறவருமாய் இருக்கிறார். அந்தச் சத்தியம் தேவனுடைய சித்தத்தை வெளிப்படுத்துகிறது; அது ஜீவனும் ஒளியுமாய் இருக்கிறது. யோவா $1^{18}$ $3^{21}$ $7^{17}$ $8^{32}$ $14^{6,17}$ $16^{13}$ $17^{17}$ $18^{37}$ 1யோவா $1^{8}$ $2^{4}$.

**சத்திரம்.** Inn. யூதர்கள் மற்ற ஊர்களிலிருந்து தங்கள் ஊருக்கு வருகிறவர்கள் தங்கிப்போகும்படி தங்கள் வீடுகளில் ஒரு அறையை அவர்களுக்கென்று வைப்பார்கள். இந்தவிதமான அறையில் இயேசுவும் சீஷர்களும் இராப்போஜனம் பரிமாறினார்கள். மாற் $14^{14}$ லூக் $22^{11}$.

இவ்விதமான அறையைக் குறிக்கும் கிரேக்க பதம் லூக் $2^{7}$-ல் 'சத்திரம்' என்று மொழிபெயர்த்திருக்கிறது. இது ஊர்களின் வீடுகளிலுள்ள அல்லது சத்திரத்தி



சத்திரம்.

லுள்ள அறையைக் குறிக்கிறது. லூக் $10^{34}$-ல் சொன்ன 'சத்திரம்' நமக்குத் தெரியும் சத்திரங்களைப்போலிருந்தது

**சத்துரு.** **Enemy.** பகைஞன். ஆதி $22^{17}$ $49^{8}$ லேவி $26^{8}$ உபா $33^{29}$ சங் $25^{19}$ $80^{6}$ $106^{46}$ நீதி $25^{21}$ ஏசா $26^{11}$ $59^{19}$ புல $1^{2}$ மத் $5^{43}$ லூக் $1^{71}$ ரோ $5^{10}$ $12^{20}$ 1கொரி $15^{26}$.

**சத்துவம்.** **Power.** 1 நாளா $29^{12}$ சங் $68^{35}$ எபே $1^{19}$ $6^{10}$. சத்துவங்கள் லூக் $21^{26}$

**சத்தூ.** **Zattu.** நெகே $7^{13}$.

**சந்ததி.** **Generation.** ஆதி $22^{17}$ யாத் $17^{32}$ உபா $32^{5}$ சங் $12^{7}$ $109^{13}$ $112^{2}$ நீதி $30^{12}$ யோவே $1^{3}$ மத் $11^{16}$ $16^{4}$ $24^{34}$ லூக் $9^{41}$ யோவா $8^{33}$ அப $2^{40}$ எபி $3^{10}$.

**சந்தனம்.** **Lign-aloes, Aloes.** எபிரெய பதத்திற்கு இங்கிலீஷில் *Lign-aloes, Aloes* என்று சொல்லியிருந்தாலும், இது *Aloes* என்ற கரியபோளம் அல்ல *Sandal* என்னும் சந்தனம்தான். பூர்வீக காலத்தில் வியாபாரிகள் சந்தனமரத்தை அரபியா முதலிய தேசங்களுக்குக் கொண்டுபோனார்கள் அப்படியே சந்தனமரம் எபிரெயர்களுக்குத் தெரியவந்தது. சந்தனமரம் பெட்டி முதலியவை செய்வதற்கும் வாசனைத் திரவியம் செய்வதற்கும் உபயோகித்தார்கள். எண் $24^{6}$ சங் $45^{8}$ நீதி $7^{17}$ உன். பா $4^{14}$.

**சந்திரகாந்தம்.** **Chalcedony.** இரத்தினம் காண்க.

**சந்திரரோகி.** **Lunatic, Epileptic.** எபிரெயரும் கிரேக்கரும், ஒருவன் காக்காய் வலி வந்து அறிவற்று விழுகிறதற்கு அவன் நிலாவில் நித்திரை செய்வதுதான் காரணம் என்று சொன்னார்கள் இதினிமித்தம் இந்த வியாதியுள்ளவனுக்குச் 'சந்திரரோகி' என்று சொல்லுவார்கள் இந்த வியாதி சுவிசேஷங்களில் மூன்றிடத்தில் சொல்லியிருக்கிறது. மத் $17^{15}$ மாற் $9^{18}$ லூக் $9^{38}$ 'சந்திரரோகி.' மத் $4^{24}$ $17^{5}$.

**சந்திரன்.** **Moon.** சந்திரன் இரவை ஆளும் சிறிய சுடர். ஆதி $1^{16}$ சந்திரன் எல்லாரும் பார்க்கக்கூடியதாய்த் தோன்றி வளர்பிறை தேய்பிறையாய்ச் சுற்றிவருகிறதினால் சேமியர் எல்லாரும் அதை வணங்கி வந்தார்கள் அமாவாசை அவர்களுக்கு விசேஷித்தநாள் 'சந்திரன்,' 'மாசம்' இவைகளை அவர்கள் ஒரே அர்த்தமாய் எண்ணினார்கள். சூரியனைப்போல் சந்திரனும் ஒளி கொடுப்பதுமல்லாமல் மரம் செடி பயிர் வளரும்படி செய்யத்தக்கதான தன்மையையும் உடையது உபா $33^{14}$ இதினிமித்தம் அவர்களுக்கு அமாவாசை நாட்களில் பலி செலுத்துவதும் எக்காளம் ஊதுவதும் வழக்கம். ஒருவேளை பௌரணமி நாட்களிலும் அப்படி செய்வார்கள் சங $81^{3}$.

பழைய ஏற்பாட்டில் சந்திரன் யோசேப்புக்குக் கனவில் தோன்றினது. ஆதி $37^{9}$. சந்திரன் ஆயலோன் பள்ளத்தாக்கின்மேல் நின்றது. யோபு $10^{12}$ ஆப $3^{11}$. 'கர்த்தருடைய நாளில்' சந்திரன் இரத்தமயமாகும். யோவே $2^{10}$ மாற் $13^{24}$. மீட்கப்பட்ட சீயோனில் சூரிய வெளிச்சத்தைபபோல் சந்திர வெளிச்சம் இருக்கும். ஏசா $30^{26}$. யேகோவாவின் ராஜ்யத்தில் சந்திரன் இல்லை. ஏசா $20^{19}$ வெளி $21^{23}$. அந்நியரைப்போல் எபிரெயர் சந்திரனை வணங்காதபடி சொல்லி

இருக்கும் எச்சரிக்கை. உபா $4^{19}$ $17^{3}$. சந்தி ரனை வணங்கும்படி கையை முத்தம் இடுகிறது. யோபு $31^{26}$. எருசலேமில் சந்திர வணக்கம் இருந்தது. 2 இரா $23^{5}$. சந்திர தேவிக்கு 'சீன்' என்னும் பெயர் இருந்ததினால் சீனாய் மலையில் சேமியர்கள் அதை வணங்கினார்கள் என்று நாம் நினைக்கவேண்டும். எருசலேமில் சந்திரனை 'வானராக்கினி' என்னும் பெயர் சொல்லி வணங்கினார்கள். எரே $7^{18}$ $44^{15}$. இதுவும் அஸ்த ரோத்தும் ஒன்றுதான். நிலாவில் நித்திரை செய்வது சவுக்கியத்திற்கு ஈனம் என்று நினைத்தார்கள். பிற்காலத்திலுள்ளவர்களிலும் அநேகர் அப்படியே நினைத்தார்கள். சங் $121^{6}$. **சந்திரரோகி** காண்க.

**சந்தேகம், ஐயம், சமுசயம்.** Doubt. மத் $14^{31}$ $21^{21}$ $28^{17}$ மாற் $11^{23}$ லூக் $12^{29}$ யோவா $10^{24}$ $13^{22}$ அப் $25^{20}$ ரோ $14^{23}$ கலா $4^{20}$.

**சந்தை.** Market. மத் $11^{16}$ மாற் $7^{4}$. சந்தைவெளி. அப் $16^{19}$ $17^{17}$. **கடை** காண்க.

**சந்தோஷம், ஆனந்தம், களிகூருதல், மகிழ்ச்சி, மேன்மைபாராட்டுதல்.** Joy. மூல பாஷைகளில் சந்தோஷத்தைக் குறிக்கும் பல பதங்கள் உண்டு. பரி. பவுல் இதற்கு 'மேன்மை பாராட்டுகிறது' என்று அடிக்கடி விசேஷமாய்ச் சொல்லுகிறான். ரோ $5^{2}$ மு.

பழைய ஏற்பாட்டில்: யேகோவா தமது கிரியையைப்பற்றியும், தமது ஜனங்களைப் பற்றியும் சந்தோஷம் அடைகிறார். சங் $104^{31}$ செப் $3^{17}$. நீதிமான்கள் கடவுளிடத்தில் சந்தோஷம் அடைகிறார்கள். சங் 100. நீதிமான்கள் கடவுளுடைய இரக்கம், உண்மை, இரட்சிப்பு, நியாயப்பிரமாணம் இவைகளைப் பற்றிச் சந்தோஷம் அடைகிறார்கள். சங் $97^{12}$ 119 $149^{2}$. கடவுள் தமது ஜனத்திற்குச் செய்த நன்மைகளைப்பற்றியும் வாக்குத்தத்தங்களைப்பற்றியும் அவர்கள் சந்தோஷம் அடைகிறார்கள். சங் $51^{8}$ ஏசா 55 அதி. எரே $15^{16}$.

புதிய ஏற்பாட்டில்: மேசியா வருகிறதைப் பற்றிய சந்தோஷம் அதிகம். லூக் $1^{47}$ $2^{29}$. பரலோக ராஜ்யத்தைப்பற்றிய சந்தோஷம். மத் $5^{10}$ லூக் $10^{21}$ 15 அதி. யோவா $15^{11}$. கிறிஸ்தவர்கள் சுவிசேஷத்தின் பொக்கிஷத்தை அடைந்து சந்தோஷப்படுவார்கள். மத் $13^{44}$ 1 தெச $1^{6}$ ரோ $14^{17}$ கலா $5^{22}$. சபையிலுள்ள சகோதர சிநேகத்தைப்பற்றி அவர்களுக்குச் சந்தோஷம். ரோ $12^{15}$ பிலி $2^{2}$. சந்தோஷம் ஆவியின் கனிகளில் ஒன்று. கலா $5^{22}$. இம்மையில் நேரிடும் துன்பம் சந்தோஷத்தை உண்டாக்குகிறது. மத் $5^{10}$ ரோ $8^{35}$ 2 கொரி $7^{4}$ வெளி $7^{14}$.

**சந்நிதானம், சந்நிதி.** Presence of God. ஆதி $3^{8}$ $4^{16}$ உபா $12^{12}$ 2 நாளா $20^{9}$ யோபு $1^{12}$ $2^{7}$ சங் $95^{2}$ அப் $3^{19}$ 1 தெச $1^{9}$. **சமுகம்** காண்க.

**சந்நிதிஸ்தானம்.** Oracle. [பேசுகிறதற்கிட்ட இடம்]. 1 இரா $6^{16}$ $8^{6}$ $7^{49}$ 2 நாளா $3^{16}$ $4^{20}$ $5^{7}$. **தேவாலயம்** காண்க.

**சபிக்கப்பட்டவன்.** Anathema. **சாபத்தீடு** காண்க.

**சபிக்கிறது.** Curse. ஆதி $12^{3}$ $27^{29}$ லேவி $20^{9}$ எண் $22^{11}$ 1 சாமு $17^{43}$ லூக் $6^{28}$ ரோ $12^{14}$. **தூஷியம்** காண்க.

**சபூத்.** Zabbud. எஸ்றா $8^{14}$.

**சபெல்லியானர்.** Sabellians. பின்வரும் தப்பிதமான கொள்கையைப் போதித்த சபெல்லியஸ் என்பவனைப்பற்றி நமக்குத் தெளிவாய் ஒன்றும் தெரியாது. சபெல்லியானர் ஏகவஸ்துவாகிய கடவுள் திரியேகத்துவமாய் அல்லது மூவராய் இராமல், மூன்று நாமங்களைக்கொண்டு மூன்றுவிதமாய்த் தம்மை ஜனங்களுக்கு வெளிப்படுத்தி, பரமவாக்காக இவ்வுலகத்தைச் சிருஷ்டித்துக் காத்துவருகிறார் என்றும்; அவர் மனுஷ அவதாரமாக இவ்வுலகத்தில் வந்து பாவிகளுக்காக மரணமடைந்து அவர்களைத் தம்மோடு ஒப்புரவாக்கினார் என்றும்; அவர் பரிசுத்த ஆவியாக அப்போஸ்தலர்மேல் இறங்கித் திருச்சபையையும் தமது ஜனங்களையும் நடத்திவருகிறார் என்றும்; கடைசியில் மூன்றுவிதமாய்த் தோன்றின ஏகவஸ்துவாகிய கடவுள் இந்தத் தோற்றம் எல்லாம் விட்டு ஏகவஸ்துவாய் இருக்கிறார் என்றும் (1 கொரி $15^{28}$) ஒப்பிட்டுச் சொன்னார்கள். பிற்காலத்தில் உண்டான ஏகேசுர கொள்கை இந்தக் கொள்கைக்குப் பல விஷயங்களில் ஒத்திருக்கிறது.

**சபேயர்.** Sabaeans. **சேபா** காண்க.

**சபை.** Congregation, Assembly, Church.

1. **பழைய ஏற்பாடு**: எபிரெய பாஷையில் சபையைக் குறிக்கும் இரண்டு பதங்கள் உண்டு. இவைகளில் ஒன்று யேகோவாவின் ஆளுகைக்குள் ஏகோபித்திருக்கும் இஸ்ரவேல் ஜனத்தைக் குறிக்கிறது. மற்றது ஜனக்கூட்டத்தைக் குறிக்கிறது. இவ்விரண்டிற்கும் வேறே வித்தியாசம் இல்லை.

'சபை.' யாத் $12^{6}$ லேவி $4^{15}$ எண் $16^{3}$ நியா $20^{1}$ அப் $7^{38}$.

'கர்த்தருடைய சபை.' எண் $16^{3}$ $20^{4}$ $27^{12}$ $31^{16}$.

'சபையார்.' லேவி $4^{13}$ எண் $14^{5}$ $16^{6}$ உபா $31^{30}$.

2. **புதிய ஏற்பாடு**: வேதாகமத்தைக் கிரேக்க பாஷையில் மொழிபெயர்த்தவர்கள் முதல் எபிரெய பதத்திற்கு *Synagoge* என்றும், இரண்டாம் பதத்திற்கு *Ecclesia* என்றும் எழுதினார்கள். இயேசுவின் காலத்தில் ஒரு ஊரிலுள்ள ஜெபாலயத்தில் சேரும் கூட்டத்தை *Synagoge* என்று சொன்னதினாலும், யேகோவா இரட்சிப்புக்கென்று அழைத்த இஸ்ரவேலர் யாவரையும் *Ecclesia* என்று சொன்னதினாலும், ஆதி கிறிஸ்தவர்கள் வழக்கமாய்க் கிறிஸ்தவ சபையை *Ecclesia* என்று சொன்னார்கள். அப் $5^{11}$ $9^{31}$ $13^{1}$ $14^{23}$ $15^{41}$ $20^{17}$ ரோ $16^{5}$ 1 கொரி $1^{2}$ கொலோ $4^{16}$ 1 தெச $1^{1}$.

3. **ஆதி கிறிஸ்தவ சபை**. கிறிஸ்தவ மார்க்கம் பரம்பினபோது முதல் நூற்றாண்டில் (கி-பி. 70-ஓடு) எருசலேம் பட்டணம் அழிக்கப்படும்வரையும் எருசலேம் சபை மேலதிகாரம் பெற்றது. அப் $8^{1}$ $15^{2}$ $24^{17}$ கலா $2^{9}$. ஆனால் பரலோக ராஜ்யமும் கிறிஸ்தவ சபையும் ஆவிக்குரியவிதமாய் ஒன்றுதான் என்று இயேசுகிறிஸ்து பல உவமைகளில் கூறின உபதேசம் உலகமெங்குமுள்ள ராஜ்யத்தைக் குறிக்கிறது என கிறிஸ்தவர்கள் அறிந்து பல இடங்களில் ஜனங்கள் பலவிதமாய் இருந்தாலும் திருச்சபையானது ஒன்றுதானென்ற கொள்கை உண்டானது.

இதினிமித்தம் பரி. பவுல் கிறிஸ்தவர்கள் எல்லாரும் அந்நியோந்நியமாய் இருக்கிறார்கள் என்றும் (எபே $2^{13}$), திருச்சபை கிறிஸ்துவின் சுதந்தரம் என்றும் (எபே $1^{14}$), பரிசுத்த ஆவியின் வாசஸ்தலம் என்றும் (எபே $2^{18}$), கிறிஸ்துவின் சரீரம் என்றும் (எபே $4^{12}$), தூணும் அஸ்திபாரமுமுள்ள தேவனுடைய வீடும் என்றும் (1 தீமோ $3^{15}$), கிறிஸ்துவின் மணவாட்டி என்றும் (எபே $5^{25}$) சொன்னான்.

புதிய ஏற்பாட்டில் இயேசுகிறிஸ்து தமது சீஷர்களுக்குத் திருச்சபையைக் குறித்த ஏற்பாடு, முறை, சட்டம் கொடுத்ததினாலும், அது கடுகு விதையைப்போல் வளருமென்று போதித்ததினாலும், ஆவிக்குரிய விதமாய் அது எங்கும் வளருமென்று காட்டுகிறார். ஆசாரம், அதிகாரம், முறை, பாஷை, தேசம் முதலியவைகளில் அப்போஸ்தலருடைய காலத்தில் சபைகளில் வித்தியாசம் எப்படியிருந்ததோ அப்படியே இக்காலத்திலும் சபைகளில் அவ்விதமான வித்தியாசம் தோன்றினாலும் அவருடைய சித்தத்தைத் தேடுகிறவர்கள் எல்லாரும் அவருக்குள் ஒரே சபையாய் இருக்கிறார்கள் என்று அவருக்கு நாம் நன்றி செலுத்துவது நியாயம். **உதவிக்காரன், உதவிக்காரி, கண்காணி** காண்க.

4. **அந்நிய சபைகள்**. திருச்சபை வளரும்காலத்தில் பல பட்டணங்களிலும் அந்நியர் சேர்ந்து நடத்தின சபைகள் அநேகம் இருந்தன. இவைகளிற் சில உத்தியோகத்தின் பலனைப் பற்றியதாயிருந்தன. அப் $19^{27}$. சில குறித்த தேவதைகளை வணங்கும்படி கூடின. இவைகளிற் சில துன்மார்க்கமாய் நடத்தப்பட்டதினால் ரோமை அதிகாரிகளுக்கு அச்சபைகளைப்பற்றிச் சந்தேகம் இருந்ததினால் கிறிஸ்தவ சபையும் அதே மாதிரியானது என்று அவர்கள் நினைத்துக் கிறிஸ்தவர்களைப் பலமுறையும் துன்பப்படுத்தினார்கள்.

**சபைக்குப் புறம்பாக்குதல்**. **Excommunication.** **சாபத்தீடு** காண்க.

**சப்தா**. **Sabta.** இது அரபியா தேசத்தில் கிழக்கெல்லையிலுள்ள நாட்டை அல்லது அதில் வசித்த ஒரு கோத்திரத்தைக் குறிக்கிறது. ஆதி $10^{7}$.

**சப்தி**. **Zabdi.** ['யேகோவாவின் ஈவு,' 'என் ஈவு'].

1. யோசு $7^{1}$. =சிம்ரி. 1 நாளா $2^{6}$.
2. 1 நாளா $8^{19}$.
3. 1 நாளா $27^{27}$.
4. நெகே $11^{17}$.

**சப்திகா**. **Sabteca.** ஆதி $10^{7}$.

**சப்தியேல்**. **Zabdiel.** [கடவுள் எனக்கு ஈவாயிருக்கிறார்].

1. 1 நாளா $27^{2}$.
2. நெகே $11^{14}$.

**சப்பாம்**. **A. V. 'Tabernacle.'** ஆமோஸ் $5^{26}$-ல் 'சப்பாம்' என்பது எபிரெயர் தாங்கள் வணங்கின விக்கிரகத்தை வைத்துத் தூக்கிக் கொண்டுபோகும் கேடகமாம். மூலபாஷையில் இப்பதத்தின் அர்த்தத்தை நன்றாய் விசாரித்தறிந்த வேதசாஸ்திரிகள் அது 'சப்பாம்' அல்ல, முருகக் கடவுளைப்போன்ற சனியாகிய 'சிக்குத்' என்னும் அசீரியர் வணங்கின தேவதையைக் குறிக்கிறது என்று தீர்மானமாய்ச் சொல்லுகிறார்கள்.

**சப்பாணி**. **Lame Man.** சப்பாணிகள் ஆசாரியர்களாய் இருக்கக்கூடாது. லேவி $21^{18}$. யாக்கோபும் யோனத்தானின் மகனாகிய மேவிபோசேத்தும் சப்பாணியாய் இருந்தார்கள். ஆதி $32^{31}$ 2 சாமு $4^{4}$. இயேசு

அநேக சப்பாணிகளைக் குணமாக்கினார். மத் $21^{14}$ மு. பேதுருவும் யோவானும் சப்பாணிகளைச் சொஸ்தமாக்கினார்கள். அப் $3^{2}$.

**சப்பீராள்.** Sapphira. அப் $5^{1}$.

**சப்பேதா.** Shabbethal. எஸ்றா $10^{15}$.

**சமபூமி, சமனானவெளி, சமனானபூமி.** Plain.

1. இரண்டுமலைக் குன்றுகளுக்கு இடையில் உள்ள சமனான பள்ளத்தாக்கு. லீபனோன் எர்மோன் என்னும் மலைகளுக்கிடையிலிருக்கும் சமவெளியும், மெகிதோவும் பிரதானமானவை. ஆதி $11^{2}$ யோசு $11^{17}$ 2நாளா $35^{22}$ நெகே $6^{2}$ ஏசா $40^{4}$ எசே $3^{22}$.

2. மேடில்லாத சமனான பூமி. உபா $3^{10}$ சங் $26^{12}$ ஏசா $40^{4}$.

3. சாக்கடல் இருந்த மலைநாடுகளுக்கு மத்தியில் உள்ள சமபூமிக்கு எபிரெயர் சமனான வெளி அல்லது வனாந்தரம் என்று அர்த்தங்கொள்ளும் 'அராபா' என்று சொல்லுவார்கள். யோசு $4^{13}$ $18^{18}$ $33^{19}$ மத் $4^{1}$.

4. சோதோம் முதலிய ஐந்து பட்டணங்கள் உள்ள சமபூமி. ஆதி $14^{2}$.

5. 'செபேலா.' இது மத்தியதரைக் கடலோரத்தில் யூதேயாவின் எல்லையாய் அகன்று விசாலித்திருக்கும் சமனான பூமி. உபா $1^{7}$ யோசு $10^{40}$.

6. இயேசு பிரசங்கித்த 'சமனான பூமி' இன்ன இடம் என்று சொல்லமுடியாது. லூக் $6^{17}$.

**சமபூமியிலுள்ள பட்டணங்கள்.** Cities of the Plain. சோதோம், கொமோரா, அத்மா, செபோயீம், சோவார் அல்லது பேலா ஆகிய இவ்வைந்து பட்டணங்களுக்கும் இது பொதுப்பெயர். இவைகள் யோர்தான் பள்ளத்தாக்கில் இருந்ததினாலும், பெத்தேலிலிருந்து இவைகளைப் பார்க்கக்கூடியதாய் இருந்ததினாலும், இவைகள் என்கேதிக்கு வடக்கே இருந்ததினாலும், இவைகள் சாக்கடலின் வட எல்லையில் இருந்திருக்கவேண்டும். சில வேதசாஸ்திரிகளோ இவைகள் அதின் தெற்கெல்லையில் இருந்தன என்று உத்தேசித்திருக்கிறார்கள். அக்காலத்தில் இருந்த இப்பட்டணங்களிலுள்ளவர்கள் துன்மார்க்கமாய் நடந்ததினாலும், அகோரமானவிதமாய் அவர்கள் அழிக்கப்பட்டதினாலும், எபிரெயர்கள் துன்மார்க்கத்திற்கும் அதற்கு வரும் தண்டனைக்கும் சோதோம் கொமோரா என்று குறிப்பாய்ச் சொல்லுவார்கள். இதே அர்த்தமாய்ப் புதிய ஏற்பாட்டில் இவைகள் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $13^{3}$ $14^{7}$ 18, 19 அதி. ஏசா $1^{9}$ $13^{19}$ எரே $49^{18}$ எசே $16^{46}$ ஆமோ $4^{11}$ செப் $2^{9}$ மத் $10^{15}$ மாற் $6^{11}$ ரோ $9^{29}$ 2பேது $2^{6}$ யூதா $1^{7}$ வெளி $11^{8}$.

**சமபூமியின் கடல்.** Sea of the Plain. **உப்புக்கடல்** காண்க.

**சமயம்.** Sect. அப் $5^{17}$ $15^{5}$ $26^{5}$. 'மதபேதம்.' அப் $24^{5.14}$ $28^{22}$. சமயபேதமாகிய 'வேதப்புரட்டு.' 2பேது $2^{1}$.

**சமரியா.** Shemariah. **செமரியா** காண்க.

**சமனான நாடு.** The Plain. **சமபூமி** காண்க.

**சமா.** Shama. 1நாளா $11^{44}$.

**சமாதான பலி.** Peace-offering. **பலி** காண்க.

**சமாதானம்.** Peace.

1. **பழைய ஏற்பாட்டில்** இது வழக்கமாய் விரோதிகள் செய்யும் பிரயத்தனங்களினின்று யாதொரு பயமுமில்லாமல் சுகத்தோடே காக்கப்படுதலைக் குறிக்கிறது. இந்த அர்த்தமாய் ஒருவரையொருவர் சந்திக்கும்போது எபிரெயர் 'சாலோம்' அதாவது 'சமாதானம்' என்று சொல்லுவார்கள். 'சாலோம்' என்பதும் 'சலாம்' என்பதும் ஒன்றுதான். ஆதி $43^{23}$ சங் $122^{7}$. இப்படியே மேசியாவின் ராஜ்யத்தில் அனுபவிக்கப்படும் நன்மைகளில் சமாதானமும் ஒன்று. ஏசா $2^{4}$ $9^{6}$ சக $9^{10}$. 'சமாதான கர்த்தர்.' ஆதி $49^{10}$. யேகோவாவுக்கும் அவர் ஜனங்களுக்கும் உள்ள ஐக்கியத்தின் சமாதானம். சங் $29^{11}$. ஆசாரியர்களுக்கு அளிக்கப்பட்ட யேகோவாவின் சமாதான உடன்படிக்கை. எண் $25^{12}$ ஏசா $48^{18}$ $54^{10}$ சங் $119^{165}$.

2. **புதிய ஏற்பாட்டில்** 'சமாதானம்' தொண்ணூறுதடவை சொல்லியிருக்கிறது. இவைகளில் எண்பது புறத்திலுள்ள சமாதானத்தை அல்ல அகத்திலுள்ள சமாதானத்தைக் குறிக்கின்றன. லூக் $7^{50}$ யோவா $14^{27}$. நிருபங்களின் முகவுரையில் சொல்லியிருக்கும் சமாதானமானது கிறிஸ்தவர்கள் கிருபையில் அடைந்த நிலையுள்ள ஆத்துமாவின் சுகசெய்தியைக் குறிக்கிறது. ரோ $1^{7}$ 1கொரி $1^{3}$ கலா $1^{3}$. மேசியா அருளும் சமாதானம். லூக் $1^{79}$ $2^{14}$. கடவுளுக்கும் மனிதனுக்குமுள்ள ஐக்கியத்தின் சமாதானம். யோவா $16^{33}$ ரோ $8^{6}$ $15^{33}$. மீட்கப்பட்டவர்களுக்குத் தேவன் அளிக்கும் சமாதானத்தைப் பற்றிப் பரி. பவுல் சொல்லுகிறான். ரோ $5^{1}$ 2கொரி $5^{18}$ எபே $2^{13}$ கொலோ $1^{20}$. நமது

இருதயங்களில் இயேசுகிறிஸ்து அருளும் சமாதானத்தினாலே பூமியெங்கும் சமாதானம் உண்டாகும். கொலோ $3^{15}$.

**சமாரியர். Samaritans.** இவர்கள் கி-மு. 722-ஆம் வருஷத்தில் சர்கோன் ராஜா சமாரியாவை ஜெயித்துச் சிறையாகத் தன் தேசத்திற்கு அனுப்பின இஸ்ரவேலருக்குப் பதிலாக அவன் குடியேற்றின அந்நிய தேசத்தாரின் சந்ததியார். இந்த அந்நியராகிய அசீரியர் முதலில் வந்தபோது, அவர்கள் தங்கள் தேவதைகளை விட்டுவிடாமல் அசீரியாவிலே அவைகளை வணங்கினதுபோல, இங்கேயும் அவைகளைத் தொழுதுகொண்டிருந்தும், தங்களுக்குப் பல துன்பங்கள் நேரிட்டது என்று பார்த்து இவர்கள் யேகோவா கானான்தேசத்திற்குக் குலதெய்வம் என்று நினைத்து சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்ட இஸ்ரவேலர்களில் திரும்ப வந்த ஒரு ஆசாரியனின் போதனையினால் யேகோவாவை வணங்கி வந்தார்கள். மேலும் இவர்கள் தங்களுக்குள் இதற்காக ஆசாரியர்களையும் ஏற்படுத்தினார்கள். இதினிமித்தம் யூதர்கள் இவர்களை மிகவும் வெறுத்தார்கள். 2 இரா $17^{33}$. பிற்காலத்தில் ஏறக்குறைய எண்பது வருஷங்களுக்குப் பிறகு அசீரியா ராஜா இன்னும் அநேக அந்நியரைச் சமாரியாவில் குடியேற்றினான். எஸ்றா $4^{10}$. கி-மு. 536-ஆம் வருஷத்தில் யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தவுடனே அவர்களுக்கும் சமாரியர்களுக்கும் விரோதம் உண்டானது. எஸ்றா $4^{7}$ நெகே $4^{7}$. சமாரியர் பிற்காலத்தில் கெரிசீம்மலையில் ஒரு பெரிய தேவாலயத்தைக் கட்டினார்கள். இதினிமித்தமும் யூதர்கள் இவர்களைப் பகைத்தார்கள். இந்தப் பகை புதிய ஏற்பாட்டின் காலத்தில் அதிகம் இருந்தது. லூக் $17^{18}$ யோவா $4^{22}$. இயேசு நல்ல சமாரியன் ஒருவனின் நற்குணத்தை வியந்து பேசினதும், சமாரியனை குஷ்டரோகிக்குச் சுகம் அளித்ததும், சமாரிய ஸ்திரீக்கு உத்தமபோதனை கொடுத்ததும் அவருடைய ராஜ்யத்தில் ஜாதிபேதம் இல்லை என்பதைக் காட்டுகிறது. லூக் $10^{33}$ $17^{16}$ யோவா $4^{9}$.




தற்கால சமாரியா.

**சமாரியா. Samaria.** உம்ரி ராஜா சேமேரிலிருந்து தான் வாங்கின மலைக்குன்றின் மேல் சமாரியாவை ஸ்தாபித்து, அதில் கோட்டைகளைக் கட்டி, அதை முக்கிய பட்டணம் ஆக்கினான். 1 இரா $16^{24}$. முதலாம் பெனாதாத் இப்பட்டணத்துக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தான். 1 இரா $20^{34}$. ஆகாப் அங்கே பாகாலுக்குக் கோவிலையும், தனக்குத் தந்த மாளிகைகளையும் கட்டினான். இரண்டாம் பெனாதாத் இதற்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தும் ஜெயம் அடையாமற் போனான். 1 இரா $16^{32}$ $20^{1}$ $22^{39}$. யோராம் இங்கே ஆகாப் நாட்டின பாகாலின் கற்றூணை அகற்றிவிட்டான். 2 இரா $3^{2}$. இரண்டாம் பெனாதாத் மறுபடியும் இதற்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தான். 2 இரா 6, 7 அதி. சமாரியா இஸ்ரவேல் ராஜ்யத்திற்கு முக்கிய பட்டணமாய் இருந்தி

ணல் நூற்றிருபது வருஷங்களில் நடந்த இஸ்ரவேல் ராஜ்யத்தின் சரித்திரத்தில் இதின் சரித்திரம் அடங்கியிருக்கிறது. கி-மு. 725-ஆ அசீரியா ராஜாவாகிய நாலாம் சல்மனசார் சமாரியாவை மூன்று வருஷமாக முற்றுகை போட்டான். இவனுக்குப் பிறகு கி-மு. 722-ஆ அசீரியா ராஜ்யத்தைப் பெற்ற சர்கோன் சமாரியாவை அழித்து அசீரியாவுக்கு இஸ்ரவேலரைச் சிறையாக அனுப்பி அங்கிருந்த ஜனங்களைக் கொண்டுவந்து சமாரியாவில் குடியேற்றினன். 2 இரா 17$^{31}$.

பெரிய ஏரோது இங்கே மிகவும் நேர்த்தியான பல கட்டடங்களைக் கட்டினன். பிலிப்பு இங்கே ஊழியஞ்செய்து கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தான். அப் 8$^{5}$. இதற்குப் பிறகு இதின் கீர்த்தி குறைந்துபோனது.

**சமுகத்து அப்பம்.** Shewbread. இது தேவசந்நிதி ஸ்தலத்தில் வைக்கப்பட்டதினல் இதற்குச் 'சமுகத்து அப்பம்' என்று பெயர். இதற்கு 'நித்திய அப்பம்' என்றும் சொல்லியிருக்கிறது. எண் 4$^{7}$. இது ஆசரிப்புக் கூடாரத்திலும், நோப் என்னும் தேவஸ்தலத்திலும், சாலொமோன் கட்டின தேவாலயத்திலும் வைக்கப்பட்டது. லேவி 24$^{6}$ 1 சாமு 21$^{6}$ 1 இரா 6$^{20}$. இது சாலொமோனின் தேவாலயத்தில் சந்நிதி ஸ்தலத்திற்குமுன் பரிசுத்த ஸ்தலத்திலுள்ள மேஜையின்மேல் அல்லது பீடத்தின்மேல் வைக்கப்பட்டது. 1 இரா 6$^{20}$ 7$^{48}$. லேவியர்களில் நியமிக்கப்பட்டவர்கள் சமுகத்து அப்பம் சுடவேண்டும். லேவி 24$^{5}$ 1 நாளா 9$^{32}$. ஓய்வுநாள் தோறும் புதிதாய்ச் சுட்டுப் பிரதிஷ்டை செய்யப்படும் சதுரமான பன்னிரண்டு பெரிய ரொட்டிகளை அடுத்த ஓய்வுநாளில் ஆசாரியர்கள் தேவாலயத்திற்குள் சாப்பிட வேண்டும்.

பாபிலோனியர்கள் தங்கள் தேவதைகளுக்குப் புளிப்பில்லாத சமுகத்து அப்பங்கள் இஷ்டமான போஜனம் என்று நினைத்து, காணிக்கையாக அவைகளை அவைகளுக்குக் கொடுத்தார்கள். இதினல் தங்கள் தேவதைகள் தங்களின்மேல் பிரியமுள்ளவைகளாய் இருக்குமென்று நம்பினர்கள். பிற்காலத்திலுள்ள எபிரெயர்களோ இவைகள் பன்னிரண்டு கோத்திரங்களும் யேகோவாவுக்குச் செலுத்தும் நன்றியைக் குறித்தது என்று நினைத்தார்கள்.

**சமுகம்.** Presence. யாத் 33$^{14}$ 35$^{20}$ 1 நாளா 16$^{27}$ சங் 16$^{11}$ 31$^{20}$ 51$^{11}$ 139$^{7}$ யோனு 1$^{3.10}$ எபி 9$^{24}$. 'சமுகத்தின் தூதன்.' ஏசா 63$^{9}$. **சந்நிதானம்** காண்க.

**சமுசயம்.** Doubt. ரோ 14$^{23}$. **சந்தேகம்** காண்க.

**சமுசாரம்.** Family. **குடும்பம்** காண்க.

**சமுத்திரம்.** Sea. ஆதி 1$^{10}$ யோபு 7$^{12}$ சங் 68$^{23}$ நீதி 8$^{29}$ ஏசா 42$^{10}$ எரே 49$^{23}$ 1 கொரி 10$^{1}$ வெளி 5$^{13}$ 7$^{1}$ 20$^{13}$ 21$^{1}$. **சிவந்த சமுத்திரம்** காண்க.

**சமையல்.** Cooking. எபிரெயர்களுடைய வீடுகளில் கோதுமை பலவிதமான பயறு அரைப்பதற்குத் திரிகைக்கல்லும், மா பிசைவதற்குத் தொட்டியும், தண்ணீர் வைப்பதற்குப் பலவிதமான குடங்களும் கொப்பரைகளும், சமைப்பதற்குப் பலவிதமான பித்தளை செப்புப்பாத்திரங்களும் மண்பாத்திரங்களும் உண்டு. யாத் 8$^{3}$ 1 சாமு 2$^{14}$ 2 சாமு 17$^{28}$ லேவி 2$^{7}$. ராஜாக்கள் தனவான்களுடைய வீடுகளில் சமைக்கிறவர்கள் ஆண்களும் பெண்களும் சுயம்பாகிகளும் இருந்தார்கள். ஆதி 40$^{1}$ 1 சாமு 8$^{13}$ 9$^{23}$. **ஆகாரம்** காண்க.

**சமையற்காரன்.** Cook. 1 சாமு 9$^{23}$. 'அப்பம் சுடுகிறவன்.' எரே 37$^{4}$ ஓசி 7$^{4}$. 'அப்பம் சுடுகிறவள்.' 1 சாமு 8$^{13}$.

**சம்கார்.** Shamgar. நியா 3$^{31}$ 5$^{6}$.

**சம்கார்-நேபோ.** Samgar-Nebo. நேபுகாத்நேச்சார் எருசலேமைப் பிடித்தபோது அங்கே வந்த பாபிலோனியாவின் பிரபுக்களில் இவன் ஒருவன். ஒருவேளை இப்பதம் ஆளின் பெயரையல்ல, நேபோ என்னும் தேவதையினுடைய ஊழியன் அல்லது அத்தேவதையினுடைய ஆசாரியனைக் குறிக்கலாம். எரே 39$^{3}$.

**சம்கூத்.** Shamhuth. 1 நாளா 27$^{8}$. **சம்மா** காண்க.

**சம்சூமியர்.** Zamzummims. கானன் தேசத்தில் இருந்த ஆதிகாலத்து ஜனம். உபா 2$^{20}$. **ரெப்பாயீம்** காண்க.

**சம்சேராய்.** Shamsherai. 1 நாளா 8$^{26}$.

**சம்பத்து.** A. V. Jewels R. V. Peculiar Treasure. மல் 3$^{17}$.

**சம்பந்தம்.** Union. **ஐக்கியம், சகோதர சிநேகம்** காண்க.

**சம்பளம்.** Hire. ஆதி 31$^{8}$. ரோமர் போர்வீரருக்குக் கொடுத்த கூலி. லூக் 3$^{14}$. ரோ 6$^{23}$ 2 கொரி 11$^{3}$. **கூலி** காண்க.

**சம்பாரங்கள்.** Spices. = மசாலை. எசே. 24$^{10}$.

**சம்பிரதாயம்.** Tradition. **பாரம்பரியம்** காண்க.

**சம்பிரதி**. Recorder. சம்பிரதியின் ஊழியம் இன்னது என்று வேதத்தில் எந்த இடத்திலும் சொல்லியிருக்கவில்லை. ஆனால் இவன் ராஜாவுக்கு அதிக நம்பிக்கையுள்ளவனாய் அவனுக்காக ரூபங்கள் எழுதும் மந்திரியாய் இருந்ததினால் இவனுக்கு அதிகாரம் இருந்தது என்று நாம் நினைக்கவேண்டும். 2 சாமு $8^{17}$ $20^{25}$ 2 நாளா $26^{7}$.

**சம்பூரணம்**. Fullness. **பரிபூரணம்** காண்க.

**சம்மட்டி**. Hammer. எரே $23^{29}$ $50^{23}$ சங் $74^{6}$. சுத்தி. நியா $5^{26}$ $4^{21}$.

கொல்லனுடைய சுத்தி. 1 இரா $6^{7}$ ஏசா $44^{12}$ எரே $10^{4}$.

தச்சனுடைய சுத்தி. ஏசா $41^{7}$.

**சம்மதிக்கிறது**. Consent. ஆதி $34^{15}$ நீதி $1^{10}$ அப் $18^{20}$ 1 கொரி $7^{5}$.

**சம்மா**. Shamma, Shammah. 1. 1 நாளா $7^{37}$. 2. ஆதி $36^{13}$. 3. 1 சாமு $16^{9}$ $17^{13}$. = சிமேயா. 2 சாமு $13^{3}$. சீமேயி. 2 சாமு $21^{21}$. 4. 2 சாமு $23^{11}$. 5. = சம்மோத். 1 நாளா $11^{27}$. சம்கூத். 1 நாளா $27^{8}$.

**சம்மாயி**. Shammai. 1. 1 நாளா $2^{28}$. 2. 1 நாளா $2^{44}$. 3. 1 நாளா $4^{17}$.

**சம்முவா**. Shammua. 1. எண் $13^{4}$. 2. = சிமெயா. 2 சாமு $5^{14}$ 1 நாளா $3^{5}$. 3. = செமாயா (7) நெகே $11^{17}$ 1 நாளா $9^{16}$. 4. நெகே $12^{18}$.

**சம்மோத்**. Shammoth. = சம்மா (4) 1 நாளா $11^{27}$ 2 சாமு $23^{11}$.

**சம்லா**. Samlah. ஏதோமியரின் ராஜா. ஆதி $36^{36}$.

**சரசம்**. Mockery. ஆதி $39^{17}$.

**சரப்பணி**. Chain. ஆதி $41^{42}$ எசே $16^{11}$ நீதி $1^{9}$ தானி $5^{7}$ உன். பா $4^{9}$.

**சரீரம்**. Body. பழைய ஏற்பாட்டில் எபிரெய பாஷையில் சரீரத்தைக் குறிக்கும் பல பதங்கள் உண்டு. சரீரத்திற்குப் பதிலாக 'மாமிசம்' என்று பல இடங்களில் சொல்லியிருக்கிறது. புதிய ஏற்பாட்டில் சன்மார்க்கத்தையும் பயபக்தியையும் நாடின போதகர்களும் கிறிஸ்தவ சபையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் கற்பு நெறியுள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்று போதித்திருக்கிறதேயொழிய அவர்கள் சரீரத்திற்குரிய இயற்கைக்கு விரோதமான கடுந்தபம் செய்யும்படி சொல்லியிருக்கவில்லை. பரி. பவுல் 'தாழ்மையான சரீரம்' பாவத்திற்கும் மரணத்திற்கும் ஏதுவாய் இருக்கிறது என்று சொன்னாலும், அவன் அதை அற்பமாய் எண்ணாமல் கிறிஸ்தவர்கள் சரீரத்தை வேசித்தனத்திற்குக் கொடாமல் அதைப் பரிசுத்தமாய்ப் பேணும்படி போதித்து, கிறிஸ்தவ சபை கிறிஸ்துவின் அவயவமாய் இருக்கிறது என்று ஒப்பிட்டு அதைச் சிறப்பித்துப் பேசுகிறான். ரோ $6^{6}$ $7^{24}$ $12^{1}$ 1 கொரி $6^{13.19}$ பிலி $3^{21}$.

**சருகேன்**. Sharuhen. **சாராயீம்** காண்க.

**சருவம்**. Caldron. 1 சாமு $2^{14}$.

**சரேப்தா, சாறிபாத்**. Sarepta, Zarephath. சீதோன் ஊருக்குத் தெற்கே 8 மைல் தூரத்திலுள்ள ஓர் ஊர். 1 இரா $17^{9}$ லூக் $4^{26}$.

**சரேத்சேர்**. Sharezer.

1. சனகெரிப் கொன்றவர்களில் ஒருவன். 2 இரா $19^{37}$.

2. பெத்தேலின் பெரியோர்களில் ஒருவன். சக $7^{2}$.

**சர்கோன்**. Sargon. **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**சர்சேகிம்**. Sarsechim. பாபிலோனியா அரசாங்கத்தார்களில் ஒருவன். எரே $39^{3}$.



பாழாய்ப்போன சர்தை.

**சர்தை**. Sardis. சின்ன ஆசியாவின் மேற்குப்பாகத்தில் மலைமேல் கட்டின லீதியா ராஜ்யத்தின் பூர்வீக தலைநகரி. இதைச் சுற்றியிருக்கும் கீழ்த்தேசங்களிலிருந்து ஒரேயொரு பக்கத்தில் ஒடுக்கமான ஒரேயொரு வழியாய் இதற்குள் போகவேண்டியதால் சத்துருக்கள் உள்ளே பிரவேசியாதபடி சிறந்த கோட்டை யொன்று கட்டியிருந்தது. இத் தேசத்தார்கள் வணங்கிவந்த தேவதையின் கோவில் ஒன்று இந்த நகரியில் இருந்தது. கி-பி. 17-ஆம் வருஷத்தில் இங்கே பூகம்பம் உண்டானதினால் அதிக நஷ்டம் நேரிட்டதினிமித்தம் இதின் வியாபாரமும் கீர்த்தியும்

குறைந்துபோயின. இங்குள்ளவர்களில் அநேகர் வேறிடங்களுக்குப் போனார்கள். சில வருஷங்களுக்குப் பிறகு இங்கே ஸ்தாபிக்கப்பட்ட கிறிஸ்தவ சபை சீக்கிரம் அதிக கேவலம் அடைந்தது. வெளி 3[1]. ஆனால் சிலகாலத்திற்குப் பிறகு அது விருத்தியடைந்து மேற்றிராணி யொருவனுக்கு இருப்பிடமாயிற்று.



விரியன்.

**சர்ப்பம்.** **Serpent.**

கட்டுவிரியன். ஏசா 11[8] 14[29] 59[5].

சர்ப்பம். ஆதி 3[1] 49[17] யாத் 7[9] ஏசா 14[29] மத் 23[33].

பாம்பு. உபா 32[24].

வலுசர்ப்பம். உபா 32[32] சங் 91[13].

'வல்லூறு.' ஏசா 34[15]. எபிரெய பதம் ஒருவிதமான பாம்பைக் குறிக்கிறது.

அக்கினி சர்ப்பம். ஏசா 14[29].

கொள்ளிவாய்ச் சர்ப்பம். எண் 21[6].

விரியன். யோபு 20[14.16] ஏசா 11[8] 30[6] சங் 140[3] உபா 32[33] நீதி 23[32].

விரியன். மத் 3[7] 12[34] 23[33] லூக் 3[7] அப் 28[3].

மேற்சொன்ன அட்டவணையில் சர்ப்பத்தைக் குறிக்கும்படி தமிழ் வேதாகமத்தில் பல பதங்கள் சொல்லியிருக்கின்றன. மேலும் வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் ஒரே எபிரெய பதத்திற்கு வெவ்வேறான பதங்களை எழுதியிருக்கிறதினால் சில வசனங்களில் குறிக்கப்பட்ட பாம்பு இன்னதென்று அறிவது அரிது. பலெஸ்தீனா தேசத்தில் முப்பதுக்குமேல் பலவிதமான பாம்புகள் உண்டு. இவைகளிற் சில விஷமுள்ளவை. நல்ல பாம்பு என்று சொல்லப்படும் நாகப்பாம்பு அங்கே சில இடங்களில் இருக்கிறது. பலெஸ்தீனாவில் உள்ள பாம்பாட்டிகள் நாகப்பாம்புகளைப் பிடித்து ஆட்டுவார்கள். சங் 58[5]. அங்கே பல இடங்களில் இருக்கும் விரியனும் கட்டுவிரியனும் அதிக விஷமுள்ளவை. 'அக்கினிச் சர்ப்பம்,' 'கொள்ளிவாய்ச் சர்ப்பம்' ஒரு மாதிரியான விரியன். **கொள்ளிவாய்ச் சர்ப்பம்** காண்க.



நாகப்பாம்பு.

**சர்ப்பம், வெண்கலச் சர்ப்பம்.** **The Brazen Serpent.** 'கொள்ளிவாய்ச் சர்ப்பம்' தீண்டினவர்களைச் சுகமாக்கும்படி மோசே வெண்கலச் சர்ப்பத்தை உயர்த்தினான். எண் 21[4]. இதுவும் 'நெகுஸ்தான்' என்பதும் ஒன்றுதான். 2 இரா 18[4]. நெகுஸ்தான் என்பது 'வெண்கலக்கட்டி' மாத்திரம் குறிக்கிறது. இயேசு வெண்கலச் சர்ப்பத்தை உபமானமாய்ச் சொல்லியிருக்கிறார். யோவா 3[14].

**சர்வ சங்காரம்.** **End of the World.** ஆதி கிறிஸ்தவர்கள் இவ்வுலகத்தின் முடிவிலே சர்வமும் காலாக்கினியால் அழிந்து போகும் என்றும், அக்காலத்தில் இயேசுகிறிஸ்து மறுபடியும் வந்து எல்லாரையும் நியாயம் தீர்ப்பார் என்றும் நம்பினார்கள். மத் 25[41] 2 பேது 3[7-13] வெளி 20[10]. **வருகை** காண்க.

**சர்வாங்க தகனபலி.** **Burnt-offering.** பலி காண்க.

**சர்வேசுரன்.** **Almighty.** **கடவுள்** காண்க.

**சலக்கா.** **A. V. 'Release'. R. V. Rest.** எபிரெய பதம் 'வேலையில்லாமல் விடுமுறை காலம்' அல்லது 'தீர்வை மன்னிப்பு' என்று குறிக்கிறது. எஸ்தர் 2[18].

**சலப்பிரளயம்.** **Deluge.** சலப்பிரளயத்தைப்பற்றி எபிரெயர்கள் சொன்ன சரித்திரம் ஆதியாகமத்தில் சொல்லியிருக்கிறது. ஆதி 6[5]-9[17]. வேதசாஸ்திரிகள் இந்தச் சரித்திரத்தைப்பற்றி ஒரு பாகத்தில் சொல்லியிருப்பதற்கும் இன்னொரு பாகத்தில் சொல்லியிருப்பதற்கும் சில வித்தியாசம் இருக்கிறது என்று அறிந்து, இந்த இரண்டு அதிகாரங்க

ளில் இரண்டு சரித்திரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன எனத் தீர்மானித்திருக்கிறார்கள். உ-ம். $6^{18}$ $7^{2}$. மேலும் சலப்பிரளயம் இருந்த காலத்தைப்பற்றி வித்தியாசமாய்ச் சொல்லியிருக்கிறது. ஆதி $8^{3.6}$. ஆகவே சலப்பிரளயம் பூமியெங்கும் உண்டாயிற்று என்பதினாலும் மலையுச்சிவரையும் வெள்ளம் ஏறினது என்பதினாலும் இந்தச் சரித்திரத்தைப்பற்றிச் சொன்ன எபிரெயர்கள் தங்களுக்குத் தெரிந்த நாடுகளில் வெள்ளம் ஏராளமாய் வந்தபோது அது பூமியெங்கும் பரவினது என்று நினைத்தார்கள் என்று நாம் அறியலாம். எந்த ஜனத்தாரும் தங்களுக்குத் தெரிந்த தேசங்கள் எல்லாவற்றிற்கும் 'பூமியெங்கும்' அல்லது 'பூமியெல்லாம்' என்று சொல்வது வழக்கம். உபா $2^{25}$ 1 இரா $10^{24}$ அப் $2^{5}$ கொலோ $1^{23}$.

எபிரெயர்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன் பாபிலோனியர் செங்கல்லில் எழுதியிருந்த அக்ஷராதிகளைக்கொண்டு சலப்பிரளயத்தைக்குறித்து விபரமாய்ச் சொல்லியிருக்கிறார்கள். அது என்னவென்றால்: மனிதர் கட்டின பட்டணம் ஒன்றைத் தேவர்களில் நால்வர் பெரு வெள்ளத்தினால் அழிக்க நினைத்தபோது ஒரு தேவன் 'கில்கமேஸ்' என்னும் ஒருவனுக்குப் பெட்டி பேழையைப்போல் ஒரு பேழை செய்யவும் அதில் நானாவிதமான விலங்கு பறவை மனிதர் எல்லாம் சேர்க்கவும் கட்டளையிட்டான். ஏழு நாள் சலப்பிரளயம் இருந்தபிறகு இந்தப் பேழை மலைமேல் தங்கினது. அப்போது கில்கமேசின் 'ஆதிபிதா' புறா, தகைவிலான் குருவி, காகம் இவைகளை வெளியே விட்டுவிட்டான். பிற்பாடு கில்கமேஸ் பேழையைத் திறந்து, வெளியில் விட்ட மிருகங்களில் சிலவற்றைத் தேவர்களுக்குப் பலியிட்டான். இந்தச் சம்பவத்தை ஜனங்கள் ஞாபகத்தில் வைக்கும்படி அஸ்தரோத் தேவதையானது வானவில்லை ஸ்தாபித்தது. பிறகு தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பெருஞ் சமாதானம் உண்டானது. இந்தச் சரித்திரத்தில் சலப்பிரளயத்திற்குக் காரணம் தோன்றுகிறது. அதாவது: பாபிலோனியா தேசம் இரண்டு பெரிய நதிகளுக்கு இடையிலுள்ள சமபூமி. இந்த நதிகள் வடக்கே பெரிய மலைத்தேசங்களிலிருந்து பாயும். அந்த மலைத் தேசங்களில் பெருமழை பெய்வதினால் அந்த நதிகளில் தண்ணீர் ஏராளமாய் இருக்கும் காலத்தில் பூமியதிர்ச்சியினாலாவது வேறு காரணத்தினாலாவது அந்த நதிகள் கரைபுரண்டு அந்தச் சமபூமியெங்கும் பாயும்போது பிரளயம் உண்டாகும்.

பாபிலோனியர் சொன்ன இந்தச் சரித்திரத்திற்கும் எபிரெயர் சொன்ன சரித்திரத்திற்கும் பெரிய வித்தியாசம் இருக்கிறது. எபிரெயர்களுக்கு மெய்க் கடவுளைப்பற்றிய உத்தம ஞானம் இருந்தது என்பது அவர்கள் சொன்ன பாரம்பரியத்தில் தோன்றுகிறது. ஆதியாகமத்தில் பல தேவதைகளைப்பற்றியும், அந்த தேவதைகளுக்கிருந்த கட்சி, விரோதம் இவைகளைப்பற்றியும், அல்லது அவர்கள் மனுஷர்களுக்கு விரோதமாய் ஏதும் கருதினார்கள் என்பதைப்பற்றியும் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. யேகோவா அருளின மெய்ஞ்ஞானத்தினால் எபிரெயர்கள் தாங்கள் சொன்ன சலப்பிரளயச் சரித்திரத்திலே சன்மார்க்கத்திற்கு ஏதுவான பொருள் அடங்கியிருக்கிறது. அதாவது: யேகோவா ஒருவரும் எங்கும் வியாபித்திருக்கிறவருமாய் இருக்கிறார்; அவர் பாவத்தை வெறுத்து அதற்கேற்ற தண்டனை விதித்திருக்கிறார்; அவர் தமக்குக் கீழ்ப்படிந்தவர்களை நேசித்து அவர்களைக் காப்பாற்றி அவர்களோடு உடன்படிக்கை செய்கிறார் என்று காட்டுகிறார்கள்.

சலப்பிரளயத்தைப்பற்றிப் பழைய ஏற்பாட்டில் ஆதியாகமத்தைத் தவிர வேறு இரண்டு வாக்கியங்களிலும், புதிய ஏற்பாட்டில் ஐந்து வாக்கியங்களிலும் சொல்லியிருக்கிறது. ஆதி $6^{5}$-$9^{17.28}$ $10^{1.32}$ $11^{10}$ ஏசா $54^{9}$ சங் $29^{10}$ மத் $24^{38}$ லூக் $17^{27}$ எபி $11^{7}$ 1 பேது $3^{20}$ 2 பேது $2^{5}$.

இன்னும் பல தேசங்களில் பெரிய சலப்பிரளயங்கள் பல காலங்களில் நேரிட்டதினால் இந்துக்கள் கிரேக்கர் முதலிய ஜாதியார் அதைப்பற்றிய பாரம்பரிய சரித்திரங்களைச் சொல்லுவார்கள்.

கிரேக்கர்கள், தேசமெல்லாம் வெள்ளமாயிருக்கையிலே தைக்காலியோன் என்ற புண்ணியவான் ஒரு தோணியின்மேலே தப்பிப்போனபின்பு அவன் தேவனை நோக்கி தன்னைப் பரகதிக்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று மன்றாடியும் அவனாலே ஜனங்கள் மறுபடியும் குடிகள் பலுகினதென்று எழுதி வைத்தார்கள். அந்தப்படியே சத்தியவரதன் கிரேதாயுகத்தில் ஒருநாள் எழுந்திருந்து ஸ்நானமும், அர்ச்சனையும் பண்ணிக்கொண்டு விஷ்ணுவினிடமாயிருக்கும்போது 'திரேதாயுகம் வருகின்றது; அந்தச் சந்தியிலே சலப்பிரளயமாயிற்று; ஆகில் எனக்குப் புத்தி என்ன?' என்றான். அப்போது விஷ்ணு தன்னுடைய நாபிக்கமலமாகிய தாமரையிதழில் ஒன்றைத் தோணியாய் விட்டு அதிலே இவனை இருக்கச்சொல்லித் தான் மச்சமாய்த்

தன்னி அதைத் தாங்கிக்கொண்டான். மூன்றேமுக்கால் நாழிகையிலே உலகமெங்கும் சலப்பிரளயம் உண்டாகச் சகல தாபரசங்கமும் அழிந்துபோயிற்று என்று இந்து சாஸ்திரத்திலே சொல்லியிருக்கிறது.

**சலம்.** **Water.** **நீர்** காண்க.

**சலாத்தியேல்** **Salathiel.** **செயல்தியேல்** காண்க.

**சலீஷா.** **Shalishah.** சீலோவுக்கு மேற்கிலுள்ள நாடு. இதில் பாகால் சலீஷா இருந்தது. 1 சாமு $9^{4}$ 2 இரா $4^{42}$.

**சலேகேத்வாசல்.** **Shallecheth.** **எருசலேம்** காண்க.

**சலோமே.** **Salome.**

1. ஏரோதியாளின் மகள். **ஏரோது** காண்க.

2. இயேசு சிலுவையில் அறையப்பட்டபோது பக்கத்தில் நின்ற ஸ்திரீகளில் ஒருத்தி. மாற் $15^{10}$ $16^{1}$. இவள் செபெதேயுவின் மனைவி, யாக்கோபு யோவான் என்பவர்களின் தாய். மத் $20^{20}$ $27^{56}$ $15^{40}$. இவளும் இயேசுகிறிஸ்துவின் தாயார் மரியாளும் சகோதரிகள் என்பது சிலருடைய அபிப்பிராயம்.

**சல்கா, சல்காய்.** **Salecah.** யோர்தான் நதிக்குக் கிழக்கிலுள்ள பாசானின் கிழக்கெல்லையில் கட்டியிருந்த கோட்டை. உபா $3^{10}$ யோசு $13^{11}$.

**சல்மனுசார்.** **Shalmaneser.** **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**சல்மா.** **Salma.** 1 நாளா $2^{54}$. **சல்மோன்** காண்க.

**சல்மான்.** **Shalman.** இவன் இன்னான் என்பது தெரியாது. ஓசி $10^{14}$.

**சல்முனா.** **Zalmunnah.** 'சல்முனா' என்பது 'காப்பாற்றுதல் இல்லாதவன்,' 'சேபா' என்பது 'கொல்லப்படவேண்டிய பலி' என்று அர்த்தமாம். இந்த இரண்டு மீதியானிய ராஜாக்களையும் பழிவாங்கும்படி கிதியோன் கடமைப்பட்டுத் தன் சொந்தக் கையினால் கொன்றுபோட்டான். நியா $8^{18}$.

இந்த ஜெயத்தினால் எபிரெயர் அடைந்த பலன் முதலில் நமக்குத் தெளிவாய்த் தோன்றாவிட்டாலும் பிற்காலங்களிற் சொல்லியிருக்கும் வேதவாக்கியங்களின் மூலமாய் இது பூர்வகாலத்தில் எபிரெயர்கள் அடைந்த முக்கியமான ஜெயங்களில் ஒன்று என அறிவோம். ஏசா $9^{4}$ $10^{26}$ சங் $83^{11}$.

**சல்மோனா.** **Zalmonah.** எண் $33^{41}$.

**சல்மோனே.** **Salmone.** கிரேத்தாவின் வடகிழக்குக் கரையிலுள்ள முனை. அப் $27^{7}$.

**சல்மோன்.** **Salmon.** **Zalmon.**

1. ஒருவேளை இவனும் சல்மாவும் ஒருவன்தான். 1 நாளா $2^{54}$ ரூத் $4^{20}$.

2. சீகேமுக்குக் கிட்ட ஒரு மலை. நியா $9^{48}$ சங் $68^{14}$.

3. = சலாய். 1 நாளா $11^{29}$ 2 சாமு $23^{28}$.

**சல்லடங்கள்.** **Breeches.** **உடை** காண்க.

**சல்லாய்.** **Sallai.**

1. நெகே $11^{8}$.

2. = சல்லு. நெகே $12^{7, 20}$.

**சல்லு.** **Sallu.**

1. நெகே $11^{7}$ 1 நாளா $9^{7}$.

2. = சல்லாய் (2).

**சல்லூ.** **Salu.** எண் $25^{14}$.

**சல்லூம்.** **Shallum.**

1. கி-மு. 740-737-வரை இஸ்ரவேல் ராஜ்யத்தில் கலகம் அதிகமாய் இருக்கும் காலத்தில் ஒரு மாசம் அரசாண்ட ராஜா. 2 இரா $15^{10}$.

2. யூதாவில் யோவாகாஸ் என்னும் ராஜாவுக்கு எரேமியா 'சல்லூம்' என்று பெயர் சொல்லுகிறான். எரே $22^{10}$.

3. உல்தாளின் புருஷன். 2 இரா $22^{14}$.

4. 1 நாளா $2^{40}$.

5. 1 நாளா $4^{25}$.

6. பிரதான ஆசாரியன். 1 நாளா $6^{12}$.

7. = சில்லேம். ஆதி $46^{24}$ எண் $26^{49}$ 1 நாளா $7^{13}$.

8. 1 நாளா $9^{17}$.

9. = மெஷெலேமியா, செலேமியா. 1 நாளா $9^{19}$ $26^{1, 14}$.

10. 2 நாளா $28^{12}$.

11. எஸ்றா $10^{24}$.

12. எஸ்றா $10^{42}$.

13. நெகே $3^{12}$.

14. எரேமியாவின் பெரிய தகப்பன். எரே $32^{7}$.

15. எரே $35^{4}$.

**சவரகன் கத்தி.** **Razor.** எண் $6^{5}$ யாத் $13^{5}$ $16^{17}$ 1 சாமு $1^{11}$ சங் $52^{2}$ ஏசா $7^{20}$ எசே $5^{1}$. **கூந்தல்** காண்க.

**சவரம்.** **Shaving.** ஆதி $41^{14}$ அப் $21^{24}$. **கூந்தல், சவரகன் கத்தி** காண்க.

**சவரியார்.** **Xavier.** 'இந்துதேசங்களுக்கு அப்போஸ்தலன்' என்று கீர்த்திபெற்ற இயேசு சபையைச் சேர்ந்த பிரான்சீஸ்கு

சவரியார் (Francis Xavier) என்றபக்தியும் நல்லறிவுமுள்ள ஒரு குருவானவர் இந்தியாவுக்கு வந்து, கி-பி. 1542-ஆம் வருஷத்தில் கோவையிலிறங்கி அநேகரைக் கிறிஸ்தவர்களாக்கி, மலாக்கா, இலங்கை, ஜப்பான் முதலிய இடங்களுக்குப் போய், அநேகரைக் குணமாக்கி, சீனரைக் கிறிஸ்தவர்களாக்கப் போகையில் 1552-ஆம் வருஷத்திலே மரணமடைந்தான். 1622-ஆம் வருஷத்திலே பாப்பு சவரியாரை அர்ச்சியசிஷ்ட தொகைக்குட்படுத்தினான். ரோம சபையார்களில் சிலர், சவரியார் அற்புதங்களைச் செய்து ஜனங்களைத் திருப்பினான் என்பார்கள். கோவையில் இந்நாள்வரைக்கும் முக்கியமாயிருக்கும் அவனுடைய கல்லறையில் அற்புதங்கள் நடக்கிறதென்று அநேகர் நம்பி சவரியாரை நமஸ்காரம் செய்கிறார்கள்.

**சவிஷா.** **Shavsha.** 1 நாளா $18^{16}$. = சேவா. 2 சாமு $20^{25}$. செராயா. 2 சாமு $8^{17}$. சீசா. 1 இரா $4^{3}$.

**சவுக்காரம்.** **'Soap.'** எபிரெய பதம் குறிக்கிறது இன்னதென்று திட்டமாய்த் தெரியாது. எரே $2^{22}$ மல் $3^{2}$.

**சவுக்கு.** **Scourge, Whip.** 1 இரா $12^{11}$ 2 நாளா $10^{11}$ யோபு $5^{21}$ நீதி $26^{3}$ நாகூ $3^{2}$. **ஆக்கினை** காண்க.

**சவுந்தரியம்.** **Beauty.** 'அலங்காரம்.' 1 நாளா $16^{29}$ சங் $110^{3}$ நீதி $20^{29}$ ஓசி $14^{6}$. 'அழகு.' சங் $45^{11}$ நீதி $6^{25}$ ஏசா $3^{24}$ புல $1^{6}$. 'சவுந்தரியம்.' ஆதி $6^{1}$ 2 சாமு $11^{2}$ $14^{25}$ எஸ்தர் $1^{10}$ நீதி $31^{30}$ எசே $27^{3}$ சக $9^{17}$.

**சவுரியன்.** **Mighty.** சங் $45^{3}$ $89^{8}$.

**சவுல்.** **Saul.** அப்போஸ்தலனாகிய பவுலின் முதற்பெயர். **பவுல்** காண்க.

**சவுல்.** **Saul.** இவன் பென்யமீன் கோத்திரத்தான், கீசின் மகன், இஸ்ரவேலின் முதலாம் ராஜா. இவன் கி-மு. 1050-1017-வரைக்கும் அரசாண்டான் என்று உத்தேசமாய்ச் சொல்லலாம். ஆனால் இவன் ராஜ்யபாரத்தை அடைந்த காலத்தையும் அரசாண்ட வருஷங்களின் தொகையையும் சொல்வது அரிது. முதலில் இவன் யுத்தத்தில் ஜெயவீரனாய் இருந்து எல்லா எபிரெயர்களுக்கும் அல்ல, சாமுவேல் தீர்க்கதரிசிக்குக் கீழ்ப்படிந்த நாடுகளுக்குமாத்திரம் சேனைத் தலைவனைப்போல் இருந்தான். பிற்பாடு இவன் தென் பலெஸ்தீனாவை அதிக கொடுமையாய் நடத்தின பெலிஸ்தியரை ஜெயித்தான். இவனுடைய பராக்கிரமத்தினாலே காக்கப்பட்டவர்கள் இவனுடைய அதிகாரத்துக் குட்பட்டபோது இவன் மகிமை அடைந்தான். இவன் சரித்திரம் எல்லாம் 1 சாமு 9-31 அதிகாரங்களில் அடங்கியிருக்கிறது. அதில் இரண்டு பாகங்கள் உண்டு.

(i) முதலாம் பாகம்: சவுலுக்கும் சாமுவேலுக்குமுள்ள சம்பந்தம். சவுல் பெலிஸ்தியரினால் துன்பப்பட்ட எபிரெயர்களுக்கு அறியப்படாததற்குமுன் கடவுளின் கட்டளையினால் சாமுவேல் இவனை ராஜாவாக ஏற்படுத்தினான். இதினிமித்தம் இஸ்ரவேலர் இவனை யேற்றுக்கொண்டார்கள். முதல் இவன் ஒன்றும் செய்யாமல் சிலகாலம் பொறுத்துப் பிறகு அம்மோனியரின் நாட்டை ஜெயித்ததினால், எபிரெயர்கள் தாங்கள் இவனை ராஜாவாக்கும்படி முன்செய்த ஏற்பாட்டை உறுதிப்படுத்தினார்கள். இதற்குப் பிறகு சவுலும் யோனத்தானும் இஸ்ரவேலுக்கு வேண்டிய பாதுகாப்பு எல்லாம் செய்தார்கள். இக்காலத்தில் சவுல் பெருமையடைந்து சாமுவேல் சொன்ன புத்திமதியை அசட்டைபண்ணிப் பலிபீடங்களைக் கட்டித் தானே பலிசெலுத்தத் தொடங்கினான். 1 சாமு $14^{31}$. பிறகு யேகோவாவின் கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் எபிரெயருக்கு மகா கொடுமை செய்த சத்துருவாகிய அமலேக்கியா ராஜாவைக் கொன்றுபோடாமல், அந்த ராஜ்யத்தின் கொள்ளைப்பொருளைத் தனக்காகவும் தன் ஜனத்திற்காகவும் வைத்திருந்தான். இவன் இவ்விதமாய் யேகோவாவுக்கு விரோதமான சத்துருக்களுக்குத் தண்டனை முழுவதும் செய்யாததினால் இவனுக்கும் சாமுவேலுக்கும் இருந்த ஐக்கியமும் யேகோவாவின் தயவும் அற்றுப்போயிற்று.

(ii) இரண்டாம் பாகம்: இதில் சவுலுக்கும் தாவீதுக்கும் உள்ள சங்கதிகளைச் சொல்லி ராஜ்யபாரம் சவுலை விட்டு எடுக்கப்பட்டதையும், தாவீதுக்கு ராஜபட்டம் கொடுப்பதையும் காட்டியிருக்கிறது. முதலில் சுரமண்டலம் வாசித்தவனும் தைரியமுடையவனுமான தாவீதுக்கும் சவுலுக்குமுள்ள நேசம் அதிகமாயிருந்தது. 1 சாமு 16-19 அதி. தாவீது கோலியாத்தை ஜெயித்தபிறகு சவுல் இவன்பேரில் பொறாமைகொண்டு இவனைக் கொல்லும்படி வகைதேடினது. 1 சாமு $18^{10-25}$ $19^{11}$ $20^{29}$. தாவீது சவுலை விட்டு ஓடிப்போனபோது அவனுக்கு நோபிலுள்ள ஆசாரியர்கள் உதவிசெய்ததினால், சவுல் அவர்களைக் கொன்றுபோட்டான். இப்படியே அத்தேசத்திலுள்ள மற்ற ஆசாரியர்கள் தனக்கு விரோதங்கொள்ளும்படி சவுல் தானே தனது அதிகாரத்தைக் குறைத்திருப்பான். ஆனால் இவன் இதைக் கவனிக்காமல் தாவீதை யதிகமாய்ப் பகைத்து அவனைப்

பிடித்துக் கொல்லும்படியான நோக்கத்தை விடவேயில்லை. 1 சாமு 20-26 அதி. சவு லின் மரண சரித்திரத்தைப்பற்றி விபர மாய்ச் சொல்லியிருக்கிறது. 1 சாமு 28, 31 அதி. இதில் இவன் யேகோவாவின் பேரிலும் யேகோவாவின் தீர்க்கதரிசிகள் ஆசாரியர்களின்பேரிலுமுள்ள நம்பிக்கையை விட்டுச் குனியக்காரரின் கபடமான ஆலோ சனையில் நம்பிக்கை வைத்தான் என்பதை நாம் அறியலாம். இதினிமித்தம் இவன் பெலிஸ்தியரால் கொல்லப்பட்டபிறகு எபி ரெயர்கள் எல்லாரும் இவனுடைய வீட்டா ரின்பேரில் நம்பிக்கை வைக்காமல் யேகோ வாவுக்குக் கீழ்ப்படிந்த தாவீதுக்கு இசைந் தார்கள். சவுலின் பெயர் சில சங்கீதங்க ளின் தலைப்புகளிலும் புதிய ஏற்பாட்டில் ஒரு முறையும் சொல்லியிருக்கிறது. சங் 18, 25, 54, 57, 59 அப் $13^{21}$.

**சவுல்.** **Shaul.**

1. ஏதோமியரின் ராஜா. ஆதி $36^{37}$.

2. சிமியோனின் மகன். இவன் தாய் கானானிய ஸ்திரீ. ஆதி $46^{10}$ யாத் $6^{15}$ எண் $26^{13}$.

3. சாமுவேலின் முற்பிதாக்களில் ஒருவன். இவன் மறுபெயர் 'யோவேல்.' 1 நாளா $6^{24.\ 36}$.

**சளுக்து.** **A. V. Shine.** எரே $5^{28}$.

**சனகெரிப்.** **Sennacherib.** **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**சனோகா.** **Zanoah.**

1. யோசு $15^{34}$.

2. யோசு $15^{56}$.

**சன்சன்னு.** **Sansannah.** யோசு $15^{31}$.

**சன்பல்லாத்.** **Sanballat.** நெகேமியாவின் எதிரிகளில் பிரதானமானவன். இவன் பெயர் அசீரிய பதம் ஆனதினாலும் அப்பதத் திற்கு 'சீன் சந்திரதேவியே, உயிரைக் காப் பாற்றும்' என்பது அர்த்தம் ஆனதினாலும் இவன் அந்நியன் என்றும் பாபிலோனியர் வணங்கின தேவர்களை வணங்கினவன் என் றும் அறியலாம். நெகே $2^{10}$ $4^{1}$ $6^{1}$ $13^{18}$.

**சன்மார்க்க பிரமாணம்.** **Moral Law.** 'சன்மார்க்க பிரமாணம்' என்பது வேதத்தில் சொல்லியிருக்கவில்லை. வேதத்தில் 'பிரமா ணம்' என்று சொல்லியிருப்பது மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் குறிக்கிறது. ஆனால் தீர்க்கதரிசிகள் சங்கீதக்காரர் இவர்கள் சொன்ன போதனையை நாம் பார்த்தால், சன் மார்க்க பிரமாணமாவது இன்னது என்று அவர்களுக்குத் தெரியும் என்பதை நாம் அறிந்துகொள்ளலாம். மீகா $6^{8}$ சங் $15^{5}$ $24^{3}$. சன்மார்க்க பிரமாணம் என்பது நியாயப் பிரமாணத்தில் அடங்கிய சடங்காசாரங்களைப்பற்றி விதித்தவைகள் அல்ல, உண்மை, நீதி, நேர்மை முதலிய நல்நடைகளைக் கற் பிக்கும் ஒழுங்குகளைக் குறிக்கும். இயேசு நாதர் கிறிஸ்தவர்கள் எப்பொழுதும் கவனிக்க வேண்டிய சன்மார்க்க பிரமாணத்தைப்பற்றி மலைப்பிரசங்கத்தில் விவரமாய்ப் போதித்தார்.

**சன்னதம்.** **Oracle.** சவுல் எந்தோரிலுள்ள குனியக்காரியிடத்திற் குறி கேட்கும் படி போனதைப் பார்த்தால், குறி சொல் லுகிறவர்கள் பின்வரும் காரியங்களை முன் அறிவிக்கக்கூடும் என்பதை எபிரெயர்கள் நம் பினார்கள் என்று நாம் அறியலாம். 1 சாமு $28^{7}$. **குனியம்** காண்க.

**சன்னது.** **'Letter.'** அதிகார நிருபம். 'உத்தரவின் நகல்.' எஸ்று $4^{23}$ $7^{11}$.

## சா.

**சாகாப்.** **Shaaph.**

1. 1 நாளா $2^{47}$.

2. 1 நாளா $2^{49}$.

**சாகாம்.** **Zaham.** ரெகொபெயாமின் மகன். 2 நாளா $11^{19}$.

**சாகி.** **Shage.** 1 நாளா $11^{34}$.

**சாகியா.** **Shachia.** 1 நாளா $8^{10}$.

**சாகிறது.** **To die.** ஆதி $2^{17}$ $3^{4}$ $20^{7}$ யாத் $9^{4}$ $10^{28}$ $22^{14}$ $28^{43}$ லேவி $16^{2}$ 1 சாமு $14^{44}$ $22^{16}$ 1 இரா $2^{37.\ 42}$ எரே $26^{8}$ எசே $3^{18}$ $18^{4}$ $33^{8}$ ரோ $8^{13}$ பிலி $1^{21}$ வெளி $8^{9}$ $16^{3}$. **மரணம்** காண்க.



'சாக்குருவி.'

**சாக்குருவி, சாக்குருவி.** **A. V. Screech owl. R. V. Night Monster.** தமிழில் 'சாக்குருவி' என்னும் பதத்திற்கு எபிரெய

பாஷையில் 'லிலித்' என்று சொல்லியிருக்கிறது. இது ஒரு மிருகத்தை அல்லது பக்ஷியைக் குறிக்காமல் எபிரெயர் பயப்படும் ஒரு குரூர ரூபியைக் குறிக்கிறது. இந்த பயங்கரரூபி சர்வாங்கமும் ரோமம் உள்ளதாயிருந்தாலும் சௌந்தரியமுள்ள ஒரு மாதாவைப்போல் வேஷந்தரித்துப் பிள்ளைகளை ஏமாற்றி அவர்களைக் கொல்லும் என்று நினைத்தார்கள். எபிரெய வேதசாஸ்திரிகளிற் சிலர் ஏவாள் சிருஷ்டிக்கப்படுமுன் 'லிலித்' ஆதாமின் முதல் மனைவி என்றும், இவள் பல பிசாசுகளுக்குத் தாய் என்றும் சொன்னார்கள். ஏசா $34^{14}$.

**சாக்கார். Sacar.**

1. =சாரார். 1 நாளா $11^{35}$ 2 சாமு $23^{33}$.
2. 1 நாளா $26^{4}$.

**சாசா. Zaza.** 1 நாளா $2^{33}$.

**சாசாயி. Shashai.** எஸ்று $10^{40}$.

**சாஸ்காஸ். Shaashgaz.** ஒரு பிரதானி. எஸ்தர் $2^{14}$.

**சாஸ்திரி. Magi.** பெர்சியா தேசத்திலுள்ள சாஸ்திரிகள் அத்தேசத்தின் உயர்ந்த ஜாதியாராய் இருந்தார்கள். இவர்கள் அத்தேசத்தில் முன்னிருந்தவர்களானாலும் இவர்கள் அத்தேசத்தை ஜெயித்த பெர்சியருடைய ராஜ்யத்தில் அதிகாரம் அடையும்படி பெர்சியருடைய மார்க்கத்தை அனுசரித்துவந்தார்கள். 'ரப்மாக்' என்பது இவர்களில் ஒருவனைக் குறிக்கிறது என்று நாம் நினைக்கலாம். எரே $39^{3}$. இந்நாள்வரையும் பெர்சியர் புஷ்பத்தை முகத்துக்குமுன் பிடிக்கும் ஆசாரத்தை எசேக்கியேல் குறிக்கிறான். எசே $8^{17}$. பெர்சியருடைய மார்க்கத்தில் இல்லாத மூன்று வித்தைகளில் இந்தச் சாஸ்திரிகள் தேர்ந்தவர்களாய் அவைகளை விட்டுவிடாமல் இருந்தார்கள். அவையாவன: ஜோசியமும், கனாவின் அர்த்தம் சொல்லுதலும், சூனியமும். பரி. மத்தேயு சொன்ன சாஸ்திரிகளுக்கு ஜோசியமும், கனாவின் அர்த்தம் சொல்லுதலும் தெரியுமென்பதை அந்தச் சுவிசேஷத்தைக்கொண்டு நாம் அறிந்துகொள்ளலாம். மத் $2^{12}$. பெர்சியர் யூதர்களைப்போல் தேவதூதர்களையும் பேய் பிசாசுகளையும் அதிகமாய் நம்பினவர்களாய் இருந்தார்கள். அவர்கள் எல்லா ஞானத்திலும் சிறந்த ஒரே கடவுளும், பிரதானமான ஆறு தேவதூதர்களும், கடவுளுக்கு விரோதமான பேய்களும் உண்டு என்று உறுதியாய் நம்பிக் கடவுளுக்கும் பிசாசுகளுக்கும் சண்டை எப்பொழுதும் இருக்கிறதென்றும், அவர் அதில் ஜெயமடைந்து தீமையெல்லாம் போக்கடிப்பார் என்றும் நம்பினார்கள். அவர்களுடைய மார்க்கத்தில் அநேக நல்ல போதனைகள் இருந்ததினால் அவர்களிற் பரி. மத்தேயு சொன்ன சாஸ்திரிகள் புது நட்சத்திரம் ஒன்றைக் கண்டு இது ஒரு மகா பக்தன் பிறந்திருக்கிறார் என்பதற்கு அடையாளம் என அறிந்து மேசியாவாகிய அவரை வணங்கும்படி பெத்லெகேமுக்குப் போனது அசாத்தியமான காரியமல்ல. **நட்சத்திரம்** காண்க.

**சாஷாக். Shashak.** 1 நாளா $8^{14}$.

**சாட்சி. Witness.** எபிரெய பாஷையில் இப்பதத்தின் மூலார்த்தம் என்னவென்றால்: பலமுறையும் உறுதியாய் ஒரு சங்கதியைச் சொல்வதேயாம்.

பழைய ஏற்பாட்டில் 'சாட்சி' மூன்று விதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

(i) ஒரு சமாசாரத்தை ருசுப்படுத்தும் அடையாளம். திருஷ்டாந்தம்: கற்குவியல் (ஆதி $31^{46}$), மோசேயின் பிரசங்கம் (உபா $31^{26}$), யோபின் வியாதி (யோபு $16^{8}$), யோசுவா நாட்டின கல் (யோசு $24^{27}$); இப்படி சீஷர்களின் காலில் படிந்த தூசி அவர்களை ஏற்றுக்கொள்ளாதவர்களுக்கு விரோதமான சாட்சி. மாற் $6^{11}$.

(ii) நடந்த காரியத்தைக் குறித்த உண்மையை ருசுப்படுத்துகிறவன். இந்த அர்த்தத்தைக்கொண்டு உண்மையை ஸ்திரப்படுத்தும்படி கடவுள் சாட்சியாய் இருக்கிறார் என்று சொல்வது எபிரெயருக்குள் வழக்கமாயிருந்தது. ஆதி $31^{50}$ யோபு $16^{19}$. இவ்விதமாய்ப் பரி. பவுல் தன் உண்மைக்குக் கடவுள் சாட்சி என்று அடிக்கடி சொல்லுகிறான். ரோ $1^{9}$ 2 கொரி $1^{23}$.

(iii) நியாயஸ்தலத்தில் அல்லது பத்திரத்தில் சாட்சியிடுகிறவன். இதற்கு எரேமியா எழுதின பத்திரம் (எரே $32^{10}$), ரூத்தின் விவாக நியமனம் (ரூத் $4^{9}$) உதாரணங்களாம். பொய்ச்சாட்சியைப்பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறது. நீதி $19^{5}$ $21^{28}$ $25^{18}$ மு.

புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலர் இயேசுவின் ஜீவியம், மரணம், உயிர்த்தெழுதல் இவைகளுக்குச் சாட்சிகள். லூக் $24^{48}$ அப் $1^{8}$ $2^{32}$. இயேசுவுக்காகக் கொல்லப்பட்டவர்கள் 'சாட்சிகள்.' அப் $22^{20}$ எபி $12^{1}$ வெளி $2^{13}$ $17^{6}$. இயேசு தாமே உண்மையுள்ள சாட்சி. வெளி $1^{5}$ $3^{4}$.

**சாட்சிப்பெட்டி. Ark of Testimony.** யாத் $31^{7}$. **உடன்படிக்கைப் பெட்டி** காண்க.

**சாட்சியின் வாசஸ்தலம். Tabernacle of Testimony.** யாத் $38^{21}$. **கூடாரம்** காண்க

**சாண்.** Span. அளவு காண்க. பக்கம் 38.

**சாதனம், மரணசாதனம்.** Testament. புதிய ஏற்பாட்டில் பெரும்பாலும் 'உடன் படிக்கை' யென்று அர்த்தங்கொள்ளும் இப் பதம் இரண்டு வாக்கியங்களில் மரணசாத னத்தைக் குறிக்கிறது. ஆயினும் இது அவை களில் வித்தியாசமான அர்த்தமாய்ச் சொல்லி யிருக்கிறது.

(i) கலா 3[15]. இதில் சொல்லியிருக்கும் உடன்படிக்கை கிரேக்கரின் நியாயப்பிர மாணத்தின்படி மரணசாதனத்தைக் குறிக் கிறது. அந்தச் சாதனத்தில் சுதந்தரத்தை யும் சுதந்தரவாளியையும்பற்றி எழுதப்படும். கிரேக்கரின் நியாயப்பிரமாணத்தின்படி ஒரு வன் இந்தச் சாதனம் எழுதினபிறகு அவன் அதை மாற்ற முடியாது. ஆதலால் பரி. பவுல் இந்தக் கிரேக்கரின் சாதனம் அல்லது உடன்படிக்கை மாறாததுபோல கடவுள் செய்யும் உடன்படிக்கை மாறாது என்று உபமானித்துப் பேசுகிறான்.

(ii) எபி 9[16. 17]. எபிரெய நிருபத்தை வாசிக்கிறவர்கள் அக்காலத்தில் ரோமை ராஜ் ய்ம் எங்கும் இருந்த நியாயப்பிரமாணத்தைக் குறித்து அறிவார்கள். ரோமர்களின் நியா யப்பிரமாணத்தின்படி மரணசாதனத்தை எழுதினவன் மரிக்கும்வரையிலும், அச்சாத னம் செல்லுகிறதில்லை. அவன் அதை மாற் றலாம், கிழிக்கலாம், அல்லது புதிதாய் எழுத லாம். ஆனால் அவன் மரித்த நிமிஷம் துவங்கி அவன் எழுதின மரணசாதனம் உறுதியா யிற்று. ஆதலால் தேவனுக்கும் மனிதனுக் கும் உள்ள உடன்படிக்கையை இயேசுவின் மரணம் ஸ்திரப்படுத்துகிறது என்று சொல் லியிருக்கிறது.

**சாதுரியன்.** Eloquent. எசா 3[3] அப் 18[24].

**சாதோக்கு.** Zadok. சாலொமோன் நிய மித்த ஆசாரியன். 2 சாமு 8[17] 1 நாளா 6[4] 1 இரா 2[26].

1. இவனுடைய சந்ததியார் ஆசாரியர்க ளில் முதன்மையானவர்கள். மக்கபேயர் கா லம்வரையும் இருந்த பிரதான ஆசாரியர்கள் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். ஆசா ரிய பணிவிடை செய்யும் மானியம் இவர்க ளுக்கு இருந்தது. எசே 40[46] 48[11].

2. தாவீதின் போர்வீரர்களில் ஒருவன். 1 நாளா 12[28].

3. 2 இரா 15[33].

4. நெகே 3[4].

5. நெகே 3[29].

6. வேதபாரகன் ஒருவன். நெகே 13[13].

7. உடன்படிக்கைக்கு முத்திரையிட்ட வன். நெகே 10[21].

8. பிற்காலத்தில் பிரதான ஆசாரியர்களில் ஒருவன். 1 நாளா 6[12].

9. யோசேப்பின் முற்பிதாக்களில் ஒரு வன். மத் 1[14].

**சாத்தான்.** Satan.

1. **பழைய ஏற்பாட்டில்** 'விரோதி' என்று அர்த்தங்கொள்ளும் 'சாத்தான்' என் னும் பதம் முதலில் மூலபாஷையில் பொ துப்பெயராய்ச் 'சத்துரு' என்பதைக் குறிக் கும். எண் 22[22] 2 சாமு 19[22]. பிற்பாடு யேகோவாவின் சமுகத்தில் வரக்கூடிய தேவ புத்திரர்களில் ஒருவனுக்கு இது பட்டப்பெ யராய்ச் சொல்லியிருக்கிறது. இவன் மனு ஷருக்குள்ள குற்றங்களை விசாரித்து யேகோ வாவின் நியாயஸ்தலத்தில் அவர்களுக்கு விரோதமாய்க் குற்றம் சாட்டுவான். ஆனால் கடவுளின் உத்தரவு இல்லாமல் இவன் மனு ஷருக்கு விரோதமாய் ஒன்றுஞ் செய்யக்கூ டாது. யோபு 1[6] சக 3[2]. பிறகு 'சாத்தான்' பொதுப்பெயரை அல்ல, இஸ்ரவேலுக்கு விரோதமாயிருந்த ஒரு ஆவியின் விசேஷித்த பெயராயிருக்கிறது. 1 நாளா 21[1].

2. **தள்ளுபடி ஆகமத்திலும்** அக்காலத் தில் எழுதின புஸ்தகங்களிலும் பேய் பிசாசு களைப்பற்றி அதிகமாய்ச் சொல்லியிருக்கி றது. சில வசனங்களில் சாத்தான் என்னும் பெயர்கொண்ட பிசாசுகள் பல இருக்கின்றன என்றும், வேறு சில வசனங்களில் பிசாசு களுக்குத் தலைவனாகிய சாத்தான் ஒருவன் இருக்கிறான் என்றும் சொல்லியிருக்கிறது. இந்தச் 'சாத்தான்கள்' மனுஷர்கள் தீமை செய்யும்படி தூண்டும் என்றும், மனுஷர் பேரிலே குற்றஞ் சாட்டும் என்றும், தீர்ப்புப் பெற்றவர்களுக்குத் தண்டனை செய்யும் என் றும், 'ஏனோக்கின் புஸ்தகத்தில்' சொல்லப் பட்டிருக்கிறது. 'சாலொமோனின் ஞானம்' என்னும் புஸ்தகத்தில் சர்ப்பமும் சாத்தா னும் ஒன்றுதான் என்றும் இவனால்தான் உலகத்தில் மரணம் உண்டாகிறது என்றும் சொல்லியிருக்கிறது.

3. **புதிய ஏற்பாட்டில்** சாத்தானையும் இவன் ராஜ்யத்தையும்பற்றி அடிக்கடி சொ ல்லியிருக்கிறது. மாற் 3[26] 4[15]. சாத்தானும் பெயெல்செபூலும் ஒன்றுதான் என்று தோ ன்றுகிறது. மத் 12[26]. இவனுக்குப் 'பொல் லாங்கன்' என்று பெயர். மத் 13[19]. இவன் பிசாசுகளின் தலைவன். மத் 12[24]. சாத் தான் பரலோகராஜ்யத்திற்கு விரோதமான ராஜ்யத்தின் அதிபதி. மத் 12[26]. இவன்

மனிதர்களை ஏமாற்றுகிறவன். 2 கொரி $11^{3}$. இவன் சோதிக்கிறவனும், குற்றஞ் சாட்டுகிறவனும், தண்டனை செய்கிறவனு மாய் இருக்கிறான். மத் $4^{1}$ 1 கொரி $5^{5}$ வெளி $12^{10}$. இவன் இருளில் இருக்கும் இவ்வுலகத்தின் அதிபதி. யோவா $16^{11}$. இவ னுடைய கிருத்தியங்களை அழிக்கும்படி தேவ குமாரன் வந்தார். 1 யோவா $3^{8}$.

பரி. பவுலும் யோவானும் சர்ப்பமும் சாத் தானும் ஒன்றுதான் என்று உபமானமாய்ச் சொல்லுகிறார்கள். ரோ $16^{20}$ 2 கொரி $11^{2}$. பரி. பவுல் சாத்தானும் அவன் பரிவாரமும் வானத்திற்கும் பூமிக்கும் இடையில் வசிக்கி றார்களென்று எண்ணி சாத்தானுக்கு 'ஆகா யத்து அதிகாரப் பிரபு' என்று சொல்லுகி றான். எபே $2^{2}$ $6^{12}$.

4. **முதல் மூன்று சுவிசேஷங்களில்** இயேசு பாவத்தின் ராஜ்யம் இருக்கிறதென் றும், அதிலுள்ள அநேக பேய் பிசாசுகளும் அவைகளுக்கு மேலே தலைவனாகிய சாத்தா னும் இருக்கிறார்கள் என்றும், இவர்கள் பல வியாதி முதலிய தீமைகளுக்குக் காரணமென் றும், தாம் அந்த ராஜ்யத்தையும் அதின் வல்லமையையும் அழிக்க வந்தார் என் றும் இயேசு போதித்தார். மாற் $1^{24}$ $3^{15}$ $4^{15}$. தமது சீஷர்கள் பேய்களைத் துரத்துவது சாத்தானின் அதிகாரத்தை அழிக்கிறது என்று தெரிவித்தார். லூக் $10^{18}$. **பிசாசு** காண்க.

**சாத்ராக்.** **Shadrach.** தானியேலின் தோழனாகிய அனனியா என்பவனுக்கு நேபு காத்நேச்சாரின் பிரதானி சாத்ராக் என்று பெயரிட்டான். தானி $1^{7}$ $2^{49}$ $3^{13}$.

**சாந்தம்.** **Meekness.** எண் $12^{3}$ சங் $22^{26}$ $25^{9}$ $45^{4}$ $147^{6}$ மத் $5^{5}$ $11^{29}$ $21^{4}$ 1 கொரி $4^{21}$ 2 கொரி $10^{1}$ கலா $5^{23}$ $6^{1}$ எபே $4^{2}$ கொலோ $3^{12}$ 1 தீமோ $6^{11}$ யாக் $1^{21}$ $3^{13}$ 1 பேது $3^{4.15}$.

**சாந்து.** **Mortar.** ஆதி $11^{3}$ யாத் $1^{14}$ லேவி $14^{42.45}$.

**சாந்துக்காறை.** **Crescent.** ஒரு மாதிரி யான குளிசம் அல்லது தாயித்து. நியா $8^{21}$.

**சாபத்தீடு.** **Ban, Anathema, Excommunication.**

1. பூர்வகாலத்தில் கானான் பெலிஸ்தியா முதலிய தேசங்களிலுள்ள ஜனங்கள் ஒருவ ருக்கொருவர் விரோதமாய் இருந்ததினால் அவர்களுக்குள் அடிக்கடி சண்டை உண்டா னது. அவர்கள் தாங்கள் செய்யும் யுத்தங்க ளில் தாங்கள் வணங்கும் தேவதையின் சகா யத்தைத் தேடுவது வழக்கம். ஒரு ஜனம் இன்னொரு ஜனத்தை ஜெயித்தால் ஜெயிக் கப்பட்டவர்களின் ஊரிலுள்ள ஆண்கள் பெண்கள் பிள்ளைகள் யாவரையும் ஜெயித்த வர்கள் அடிமைகளாக்கி அவர்கள் சொத்து யாவையும் தங்களுக்குச் சொந்தமாக வைத் துக்கொள்வார்கள். ஆனால் யுத்தத்திற்குப் போகிறவர்கள் தங்கள் சத்துருக்கள் தங்களை ஜெயிப்பார்கள் என்று பயந்தால் அவர்கள் தங்கள் தேவதையின் உதவியைச் சந்தேகமின் றிப் பெற்றுக்கொள்ளலாம் என்று நம்பி நாங் கள் எங்கள் சத்துருக்களை ஜெயித்தால் எங் கள் தேவதைக்கு 'சாபத்தீடாக' ஜெயிக்கப் பட்ட சத்துருக்களைச் சங்கரித்து, அவர்கள் நிலம் சொத்து முதலிய யாவையும் அழித்து விடுவோம் என்று உறுதியான பொருத்தனை செய்வார்கள். இதற்குச் 'சாபத்தீடு' என்று சொல்லப்படுகிறது. தமிழில் மொழிபெ யர்த்தவர்கள் 'சாபத்தீடு' என்பதற்குப் பதி லாகச் 'சபிக்கப்பட்டவர்கள்' என்று பல வசனங்களில் எழுதியிருக்கிறார்கள்.

2. பழைய ஏற்பாட்டில் **யுத்த விஷயத்தில்** எபிரெயர்களுக்குள் வழங்கும் 'சாபத் தீடு' நாலுவிதமாயிருந்தது என அறிகிறோம்.

(i) யுத்தத்தில் ஜெயிக்கப்பட்ட சத்துருக் களின் சேனையையும், அவர்களின் ஊர் அங் குள்ள ஆண்கள் பெண்கள் பிள்ளைகள் இவர் களையும், ஆடு மாடு வீடுவாசல் பயிர் தானி யம் யாவற்றையும் யேகோவாவுக்குச் சாபத் தீடாக நிர்மூலமாக்கிவிடுவார்கள். இவ்வித மாய் யோசுவா எரிகோவையும், சவுல் அம லேக்கியரையும் அழிக்கும்படி கட்டளையிருந் தது. யோசு $6^{17}$ 1 சாமு $15^{3}$. இவ்விதமான பொருத்தனை சில தடவைகளில்மாத்திரம் இருந்தது.

(ii) எபிரெயர்கள் தங்கள் விரோதிகளைச் சேர்ந்த ஆண்கள் பெண்கள் பிள்ளைகள் இவர்களைமாத்திரம் யேகோவாவுக்குச் சாபத் தீடாகச் சங்கரித்து, ஆடுமாடுகள் முதலிய சொத்துக்களைத் தங்களுக்காக வைத்துக் கொள்வார்கள். உபா $2^{34}$ $3^{6}$ $7^{2}$ யோசு $11^{14}$.

(iii) சில தடவைகளில் ஆண்களைமாத் திரம் சாபத்தீடாக அழித்துப் பெண்களையும் பிள்ளைகளையும் தங்களிடத்தில் வைத்துக் கொள்வார்கள். இந்த வழக்கத்தைப்பற்றி உபாகமத்திலுள்ள நியாயப்பிரமாணத்தினால் நாம் அறிந்துகொள்ளலாம். உபா $20^{13}$.

(iv) அவர்கள் சில தடவைகளில்மாத்தி ரம் கன்னிகைப் பெண்களைத் தங்களிடத் தில் வைத்துக்கொண்டு மற்றெல்லாரையும் சாபத்தீடாகச் சங்கரிப்பார்கள். எண் $31^{17}$

ஜியா 21[11]. இவ்விதமாய் எபிரெயர்கள் யேகோவாவுக்குச் சாபத்தீடாகச் செலுத்தும் பிரதிக்கினைக்கும் மற்ற ஜனங்கள் தங்கள் தேவதைக்குச் சாபத்தீடாகச் செலுத்தும் பிரதிக்கினைக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லையெனத் தோன்றினாலும் இஸ்ரவேலரின் சரித்திரத்தில் எபிரெயர்கள் கானான் தேசத்திற்கு வந்தபோது கானானியர் முதலானவர்கள் அதிக துன்மார்க்கரும் பொல்லாதவர்களுமாய் இருந்ததினால் அவர்கள் யேகோவாவின் மார்க்கத்திற்கு இடறலாய் இருந்தார்கள் என்றும்; எபிரெயர்கள் சில தடவைகளில்மாத்திரம் இவ்விதமான பிரதிக்கினைகள் செய்தார்களென்றும் அறிகிறோம்.

3. **மார்க்கவிஷயத்தில்** ஒருவிதமான சாபத்தீடு இருந்தது. எப்படியென்றால் யேகோவாவின் மார்க்கத்தை மறுதலித்த இஸ்ரவேல் ஜனமும், விக்கிரகாராதனையை நடத்திவந்த ஊரும் சாபத்தீடாக எண்ணப்பட்டு அழிக்கப்பட்டது. யாத் 22[20] உபா 13[12].

4. யூதர்கள் **சிறையிருப்பிலிருந்து** வந்த பிற்பாடு பின்வாங்கிப்போனவர்களைக் கொன்றுபோடாமல், அவர்களை ஜனத்திலிருந்து புறம்பாக்கி, அவர்கள் சொத்தெல்லாம் தேவாலயத்திற்குச் சாபத்தீடாகக் கொடுத்தார்கள். ஒருவன் கடவுளுக்கு இன்னது கொடுப்பதாகச் செய்த பிரதிக்கினை என்று சொல்லப்படும் 'கொர்பான்' பிற்காலத்தில் சாபத்தீடாகச் செலுத்தும் பிரதிக்கினையாகிய வழக்கத்திற்கு ஆதிகாரணம். லேவி 27[28] எண் 18[14]. **கொர்பான்** காண்க.

5. **யேகோவாவை மறுதலித்தவர்கள்** ஜனத்திலிருந்து தள்ளப்படுவது சாபத்தீடு என்னும் வழக்கத்தின் ஓர் மாதிரி என்று நாம் பார்த்தோம். எஸ்றா 10[8]. இதுதான் புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் 'சபிக்கப்படுதல்' (*anathema*). புதிய ஏற்பாட்டின் காலத்தில் தங்கள் மார்க்கத்தை மறுதலிக்கிறவனைக் கொல்வதற்கு யூதருக்கு அதிகாரம் இல்லையாயினும் அவர்கள் அவனைச் சபையிலிருந்தாவது, ஜெப ஆலயத்திலிருந்தாவது புறம்பாக்க அதிகாரம் இருந்தது. யோவா 9[22] 12[42] 16[2] லூக் 6[22]. புறம்பாக்கப்பட்டவனுக்கும் மற்ற யூதர்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இராது. அவன் மரண அவஸ்தையாய் இருந்தாலும் அவர்கள் அவனுக்கு யாதொரு உதவியும் செய்யமாட்டார்கள். ஆனால் சில தடவைகளில் இவ்விதமான தண்டனையைக் குறைத்துப்போடுவார்கள்.

6. **ஆதி கிறிஸ்தவ சபையார்** இவ்விதமாய்க் குற்றவாளிகளைப் புறம்பாக்கினார்கள். இதைப்பற்றிய ஆறு வாக்கியங்கள் உண்டு.

(i) மத் 18[15]. குற்றவாளியின் விஷயத்தில் ஆதி சபையார் அனுசரித்த வழக்கம்.

(ii) 1கொரி 5[4]. கிறிஸ்தவ சபை மகா பொல்லாதவன் ஒருவன் குணப்படும்படி அவனைப் புறம்பாக்குதல்.

(iii) 2கொரி 2[6]. சபையார் தண்டனையாக இட்ட புறம்பாக்குதலைக் குறைக்கும்படி பரி. பவுல் சொல்லுகிறான்.

(iv) 2தெச 3[14]. கீழ்ப்படியாதவர்களைப் புறம்பாக்குதல்.

(v) 2 யோவா 10-ம் வசனம். கீழ்ப்படியாதவர்களின்பேரில் பரி. யோவான் செய்த புறம்பாக்குதல்.

(vi) 3 யோவா 9-ம் வசனம். யோவானைப் புறம்பாக்கும்படி பதிதர் செய்த ஏற்பாடு.

ஆதி கிறிஸ்தவர்கள் தங்கள் சபையில் சேர்ந்தவர்களை அதிகமாய்ப் பாதுகாப்பது வழக்கம். அக்காலத்தில் கிறிஸ்தவமார்க்கத்திற்கு வந்தவர்களை அவர்கள் விட்டுவந்த மார்க்கத்தார் விரோதித்துத் துன்பப்படுத்தினதினால், சபையாரும் தங்களில் ஒருவனைச் சபைக்குப் புறம்பாக்கிவிட்டால் அவனுக்கு உதவிசெய்வார் ஒருவரும் இல்லாமல் அவன் அதிகம் கஷ்டப்படுவான். ஆகையால் இத் தண்டனை பயங்கரமானது.

**சாபம்.** **Curse.** எண் 5[21] உபா 29[20] 30[7]. யோசு 6[18] யோபு 31[30] நீதி 3[33] மல் 2[2] கலா 3[10.13] வெளி 22[3].

**சாபாத்.** **Zabad.** ['கொடுத்திருக்கிறார்,' 'ஈவு'].

1. 1 நாளா 2[36].
2. 1 நாளா 7[21].
3. 1 நாளா 11[41].
4. = யோசகார். 2 நாளா 24[26] 2 இரா 12[21].
5. எஸ்றா 10[27].
6. எஸ்றா 10[33].
7. எஸ்றா 10[43].

**சாபாய்.** **Zabbai.**

1. எஸ்றா 10[28].
2. நெகே 3[20].

**சாபூத்.** **Zabud.** 1 இரா 4[5].

**சாப்.** **Saph.** ஒரு பெலிஸ்திய போர் வீரன். 2 சாமு 21[18] 1 நாளா 20[4].

**சாப்பாத்.** **Shaphat.**

1. ஒரு வேவுகாரன். எண் 13[5].
2. எலிசாவின் தகப்பன். 1 இரா 19[16] 2 இரா 3[11] 6[31].
3. = செபாத். 1 நாளா 3[22].
4. 1 நாளா 5[12].
5. 1 நாளா 27[29].

**சாப்பாம்.** **Shapham.** 1 நாளா $5^{12}$.

**சாப்பான்.** **Shaphan.** [மலை முயல்].

1. ஒரு வேதபாரகன். இவன் யோசியாவுக்குத் தேவாலயத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நியாயப்பிரமாண புஸ்தகத்தைக் காட்டினவன். இவனுடைய சந்ததியார் எரேமியா தீர்க்கதரிசியின் சிநேகிதர்கள். 2 இரா $22^{3}$ எரே $26^{24}$ $29^{3}$ $36^{12}$.

2. ஒருவேளை சாப்பானுடைய மகனாகிய யசனியா இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன். எசே $8^{11}$.

**சாப்பீர்.** **Shappir.** பெலிஸ்தியா சமபூமியிலுள்ள ஒரு ஊர். மீகா $1^{11}$. ஒருவேளை இதுவும் சாமீரும் ஒன்றுதான். யோசு $15^{48}$.

**சாப்பேர்.** **Shepher.** எண் $33^{23}$.

**சாப்போன்.** **Zaphon.** [வடக்கு]. யோசு $13^{27}$ நியா $12^{1}$.

**சாப்னாத்-பன்னேயா.** **Zaphnath-paaneah.** பார்வோன் யோசேப்புக்கு இட்ட பெயர். இதின் அர்த்தம் 'இவன் பிழைப்பான் என்று கடவுள் சொல்லுகிறார்' என்பதே. ஆதி $41^{45}$.

**சாமக்காரன்.** **Watchman.** **காவலாளி** காண்க.

**சாமீர்.** **Shamir.**

1. ஒரு ஆள். 1 நாளா $24^{24}$.

2. ஒரு ஊர். யோசு $15^{48}$.

3. தோலா அடக்கம்பண்ணப்பட்ட இடம். நியா $10^{1}$.

**சாமு.** **Samos.** சின்ன ஆசியாவின் மேற்கெல்லைக்குச் சமீபமாய் இருக்கும் செழிப்பான ஒரு தீவு. இங்கே உள்ள ஜனங்கள் கலைக்கியானத்திலும் வியாபாரத்திலும் பேர்போனவர்கள். இங்கே யூதர்கள் சிலர் இருந்தார்கள். மூன்றும் பிரயாணத்தில் பரி. பவுல் திரும்பிவந்தபோது இத்தீவைச் சந்தித்தான். அப் $20^{16}$.

**சாமுவேலின் புஸ்தகங்கள்.** **The Books of Samuel.**

1. சாமுவேலின் புஸ்தகங்கள் பூர்வீகத்தில் ஒரே புஸ்தகமாக இருந்தது. பூர்வீக காலத்து எபிரெயருடைய கைப்பிரதிகளில் அப்படியே எழுதப்பட்டிருக்கிறது. இப்புஸ்தகத்துக்கு எபிரெய பாஷையில் 'சாமுவேல்' என்னும் பதம் ஒரு பெயரேயொழிய சாமுவேல் என்பவன் இப்புஸ்தகங்களை எழுதினான் என்பதற்கு அத்தாட்சி இல்லை. மேலும் இவைகளில் சாமுவேலுடைய காலத்திற்குப் பிந்தி நடந்த சங்கதிகளும் பல உண்டு.

2. **பொருளடக்கம்.** இதில் சாமுவேலின் பிறப்புமுதல் தாவீதின் மரணம் வரையுமுள்ள சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறதினால் கி-மு. 1070-970-வரை இஸ்ரவேலரின் சரித்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்புஸ்தகங்களின் மூன்று பாகங்கள்.

I. 1 சாமு 1-15 அதி.

(1) 1 சாமு $1^{1}$-$7^{1}$. சாமுவேலின் வாலிபப் பிராயம்.

(2) 1 சாமு $7^{2}$-$12^{25}$. சாமுவேல் நியாயாதிபதியானது; சவுல் ராஜாவாக அபிஷேகம் பண்ணப்பட்டது.

(3) 1 சாமு $13^{1}$-$15^{35}$. சவுலின் ஆளுகை.

II. 1 சாமு $16^{1}$-2 சாமு $5^{3}$. தாவீது சகல இஸ்ரவேலருக்கும் ராஜாவாகிறதற்கு முந்திய சரித்திரம்.

(1) 1 சாமு $16^{1}$-$21^{1}$. தாவீது சவுலின் அரமனையில் இருந்த காலம்.

(2) 1 சாமு $21^{2}$-2 சாமு $1^{27}$. சவுல் ராஜா தாவீதைத் தள்ளிவிட்டது.

(3) 2 சாமு $2^{1}$-$5^{3}$. எப்பிரோனில் தாவீது அரசனாயிருந்தது.

III. 2 சாமு $5^{4}$-$24^{25}$. தாவீது இஸ்ரவேலர் எல்லாருக்கும் அரசன் ஆனது.

(1) 2 சாமு $5^{4}$-$8^{18}$. எருசலேம் முக்கிய பட்டணமாய் ஸ்தாபிக்கப்படுதலும், தாவீதின் ஆளுகையும்.

(2) 2 சாமு $9^{1}$-$20^{26}$. தாவீது செய்த பாவமும் அதினால் அவனுக்கு நேரிட்ட துன்பமும்.

(3) 2 சாமு $21^{1}$-$24^{25}$. தாவீதின் ஆளுகையைப்பற்றி எழுதின அனுபந்தங்கள்.

3. **இப்புஸ்தகங்களின் உற்பத்தியும் ஆக்கியோன்களும்.** இப்புஸ்தகங்களில் இவைகளுக்குமுன் தீர்க்கதரிசிகள் அல்லது 'தீர்க்கதரிசிகளின் புத்திரர்' எழுதின சில சரித்திரப் புஸ்தகங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பது எபிரெய பாஷையில் தேறின சாஸ்திரிகளின் அபிப்பிராயம். இவைகள் இவ்விதமாய்ச் சேர்க்கப்பட்ட காலத்தைப்பற்றித் திட்டமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் இவைகள் கி-மு. 700-வரை சேர்க்கப்பட்டன என்று நாம் சொல்லக்கூடும். சாமுவேலையும் தாவீதையும் பற்றிச் சொல்லும் சில பாகங்கள் அவர்கள் உயிரோடிருந்த காலத்தில் எழுதப்பட்டன.

4. **இப்புஸ்தகங்கள் எழுதப்பட்ட நோக்கம்.** சாமுவேல், சவுல், தாவீது என்பவர்களைப்பற்றி அறிந்தவர்கள் எழுதின புஸ்தகங்கள் இவைகளில் சேர்க்கப்பட்டதினால், இவைகள் அந்தப் பெரியோர்களைக் கண்

ணுடிபோல் துலாம்பரமாய்க் காட்டுகின்றன. மேலும் இப்புஸ்தகங்களில் இஸ்ரவேலர் ஒரே ஜனம் ஆனது தெளிவாய்த் தோன்றுகிறது. ராஜ்யம் உண்டானபோது தீர்க்கதரிசிகள் போதித்த சன்மார்க்கம், யேகோவாவின் வணக்கம், இஸ்ரவேலர் அனுசரித்த பலவிதமான ஆசாரம் முதலியவை இவைகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. 1 சாமு $10^{5}$ $19^{13}$ $23^{6}$ 2 சாமு $7^{22}$.

இவைகளின் ஆக்கியோன்கள் இவைகளில் பெரியோர்களேயும் ராஜாக்களேயும்பற்றிய சரித்திரத்தைச் சொல்லுவதும் அல்லாமல், அதின் மூலமாய் தங்கள் காலத்திலுள்ளவர்களுக்கு ஞான உபதேசத்தையும் கொடுக்க விரும்பினர்கள். அவர்கள் இஸ்ரவேலரின் சரித்திரத்தின் மூலமாய் யேகோவா தமது சித்தத்தை வெளிப்படுத்தி யிருக்கிரூர் என்று உறுதியாய் நம்பினர்கள். ஆதலால் அவர்கள் தங்கள் காலத்தில் இருந்த எபிரெயர்கள் யேகோவாவின் சித்தத்தை அறியும்படிக்கும் அதை ஏற்றுக்கொள்ளும்படிக்கும் இந்தச் சரித்திரங்களே இந்தப் புஸ்தகங்களில் தெரிவித்தார்கள். இதை அறிந்து எபிரெய வேத சாஸ்திரிகள் 'சாமுவேல்' என்னும் புஸ்தகத்தை வேதாகமத்திலுள்ள தீர்க்கதரிசன ஆகமங்களோடு சேர்த்தார்கள்.

**சாமுவேல். Samuel.** [கடவுளால் கேட்கப்பட்டவன்].

1. சாமுவேலின் ஜீவிய சரித்திரம் முதலாம் சாமுவேலில் விவரமாய்ச் சொல்லியிருக்கிறது. இவன் தன் தாயார் செய்த ஜெபத்திற்குக் கடவுள் கொடுத்த புத்திரபாக்கியமானதினுலும், அவள் இவனேச் சீலோவாவில் கடவுளுக்கென்று பிரதிஷ்டை செய்ததினுலும், இவன் யேகோவாவின் பக்தர்களில் உத்தமனுய் இருந்ததினுலும் அந்நாட்டிலுள்ள இஸ்ரவேலருக்கு நியாயாதிபதியானுன். இவன் நியாயஸ்தலத்திலிருந்து விசாரணே செய்த நியாயாதிபதி என்று நாம் சொல்ல முடியாது. சீலோ, ராமா, மிஸ்பே முதலிய ஊர்களுக்குப் போய் அங்கங்கே விசாரிக்கவேண்டிய விஷயங்களே விசாரித்து அவைகளேத் தீர்மானிக்கும்படி கர்த்தருடைய வார்த்தைகளேக் கூறினுன். இவனுடைய காலத்தில் பெலிஸ்தியர் எபிரெயர்களுக்கு விரோதமாய் வந்து பலவிதமாகவும் அவர்களே மோசநாசம் செய்ததினுல், இஸ்ரவேலருக்கு ராஜாவை ஏற்படுத்தவேண்டும் என்று இவன் மூலமாய் யேகோவாவின் வார்த்தை அறிவிக்கப்பட்டது. இப்படி ஏற்பாடு செய்வதினுல் இஸ்ரவேலர் இனிமேல் பல கோத்திரங்களாகப் பிரிக்கப்படாமல் ஒரே ஜனமாக இருப்பார்கள் என்பது இவனுடைய நோக்கமாய் இருந்தும் அப்படியாகுமோ என்பதைப்பற்றி இவனுக்குச் சந்தேகம் இருந்தது. மேலும் ஜனங்கள் ராஜாவை ஏற்படுத்தும்படி பிரியத்தைக் காட்டினதினுல் அவர்கள் தான் செய்த நன்மையை மறந்து நன்றியீனமாயிருந்ததை அறிந்தான். இதைப்பற்றி இவன் தன் கடைசிப் பிரசங்கத்தில் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறுன். 1 சாமு 12 அதி.

2. இதற்குப்பிறகு ராஜ்யபாரம் சவுலேவிட்டெடுக்கப்பட்டுத் தாவீதுக்குக்கொடுக்கப்படுவதைக் குறித்த சரித்திரத்தில் மறுபடியும் சாமுவேலேப்பற்றிச் சொல்லியிருக்கிறது. அங்கே சாமுவேல் சவுலின்பேரில் யேகோவாவின் கோபம் இருந்ததைப்பற்றிக் கூறுகிறுன். 1 சாமு $13^{13}$ $15^{10}$. சவுலுக்குப் பதிலாகத் தாவீதை ராஜாவாக இவன் அபிஷேகம் செய்தான். 1 சாமு $16^{1}$. தாவீது சவுலேவிட்டு ஓடிப்போனபோது அவன் சாமுவேல் அண்டை வந்தான். 1 சாமு $19^{18}$. இவன் மரித்தபோது இஸ்ரவேலர் எல்லாரும் இவனுக்காகப் புலம்பினர்கள். 1 சாமு $25^{1}$. மேலும் சவுலும் இவனுக்கு வணக்கம் உள்ளவனுய் இருந்தான் என்பதற்கு அவன் எந்தோரிலே உள்ள சூனியக்காரியை நோக்கி அவள் சாமுவேலேத் தனக்குக் காட்டும்படி கேட்டுக் கொண்டது அத்தாட்சியாம்.

3. இவையெல்லாவற்றையும் நாம் பார்த்து சாமுவேல், பாராக்கு, கிதியோன் முதலிய நியாயாதிபதிகளேப்போலவும் சவுல், தாவீது முதலிய ராஜாக்களேப்போலவும் யுத்தத்தில் சாமுவேல் பெரிய சேனுதிபதியாய் இராவிட்டாலும், இவன் யேகோவாவின்பேரில் அதிக பயபக்தியுள்ளவனுயும், இஸ்ரவேலரின் நன்மைக்காக அநேக விஷயங்களில் புத்தி யோசனேயுள்ளவனுயும், இஸ்ரவேலர் இனிமேல் பல கோத்திரங்களாகப் பிரிக்கப்படாமலும் ஜெயிக்கப்படாமலும் இருந்து அவர்கள் யேகோவாவுக்குப் பயந்து ஒரே ராஜ்யமாக ஒரே ராஜாவின் ஆளுகைக்குள் சுகம் அனுபவிக்கிறவர்களாகவும் இருப்பதை விரும்பினவனுயும் இருந்ததினுல் இவன் அதிக மேன்மை யுற்றவனுயிருந்தான்.

**சாமுவேல். Shemuel.** [கடவுளால் கேட்கப்பட்டவன்]. 'சாமுவேல்' என்பதும், 'சேமுவேல்' என்பதும் ஒன்றுதான்.

1. இவன் கானுன் தேசத்தைப் பங்கிட்டவர்களில் ஒருவன். எண் $34^{20}$.

2. 1 நாளா $7^{2}$.

**சாமெக்.** Samech. எபிரெய எழுத்துக்களில் பதினைந்தாம் எழுத்து. சங் $119^{113}$.

**சாமேத்.** Shamed. 1 நாளா $8^{12}$.

**சாமேர்.** Shemer. 1 நாளா $6^{31}$. **சேமேர்** காண்க.

**சாமோத்திராக்கே.** Samothrace. சின்ன ஆசியாவின் வடமேற்கு எல்லைக்கும் கிரேக்க தேசத்தில் பிலிப்பி பட்டணத்து நெயாப்போலி என்னும் துறைமுகத்துக்கும் இடையிலுள்ள ஒரு தீவு. பரி. பவுல் இரண்டாம் பிரயாணத்தில் பிலிப்பி பட்டணத்துக்குப் போகும் வழியில் இதைச் சந்தித்தான். அப் $16^{11}$.

**சாம்பல்.** Ashes. ஜனங்கள் தாங்கள் அடைந்த அபஜெயத்தினாலும் தேசத்தில் வந்த கொள்ளைநோயினாலும் குடும்பத்தில் நேரிட்ட விக்கினத்தினாலும் உண்டான துக்கத்தைக் காட்டும்படி சாம்பலையும் புழுதியையும் தலைமேல் வாரி இறைப்பார்கள். 2 சாமு $13^{19}$ நெகே $9^{1}$.

மனஸ்தாபப்பட்டவர்களும் துக்கப்பட்டவர்களும் சாம்பலில் உட்காருவார்கள், அல்லது அதிலே புரளுவார்கள். யோபு $2^{8}$ எரே $6^{22}$ யோனா $3^{6}$ எசே $27^{30}$ புல $3^{16}$.

இழிவையும் தாழ்மையையும் காட்டும்படி சாம்பல் உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. ஆதி $18^{27}$ யோபு $13^{12}$ $30^{19}$ சங் $102^{10}$ ஏசா $44^{20}$.

**சாம்பிராணி.** Frankincense. சில வசனங்களில் தூபம் அல்லது தூபவர்க்கம் என்பதற்குப் பதிலாக 'சாம்பிராணி' என்று இருக்கவேண்டும். ஏசா $43^{23}$ $60^{6}$ $66^{3}$ எரே $6^{20}$ $17^{26}$ $41^{5}$. இது தென் அரபியாவில் சாம்பிராணிமரத்தின் பட்டையிலிருந்து வடியும் பிசின். சமுகத்து அப்பம் வைக்கும்போது இதையும் தூபவர்க்கத்தோடு கலந்து வைப்பார்கள். யாத் $30^{34}$ லேவி $24^{7}$ உன். பா $4^{6}$.

**சாயல்.** Likeness. ஆதி $1^{26}$ $5^{1.3}$ $9^{6}$ உபா $4^{23.25}$ சங் $17^{15}$ ஏசா $40^{18}$ எசே $1^{5.16.28}$ $8^{2}$ $10^{1}$ ரோ $6^{5}$ $8^{3.29}$ 1 கொரி $15^{49}$ $11^{7}$ 2 கொரி $3^{18}$ $4^{4}$ பிலி $2^{7}$ யாக் $3^{9}$. **சிலை, சுரூபம், விக்கிரகம்** காண்க.

**சாயனன்.** Zaanan. ஒரு வேளை இதுவும் சேனானும் ஒன்றுதான். யோசு $15^{37}$ மீகா $1^{11}$.

**சாயீர்.** Zair. 2 இரா $8^{21}$.

**சாயீன்.** Zain. எபிரெய எழுத்துக்களில் ஏழாம் எழுத்து. சங் $119^{49}$.

**சாராப்.** Saraph. 1 நாளா $4^{22}$.

**சாராயி.** Sharai. எஸ்றா $10^{40}$.

**சாராயீம்.** Shaaraim.

1. யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{36}$.

2. 1 நாளா $4^{31}$. = சருகேன், சில்லீம். யோசு $19^{6}$ $15^{32}$.

**சாராய்.** Sarai. சாராளின் முதற்பெயர். **சாராள்** காண்க.

**சாரார்.** Sharar. **சாக்கார்** காண்க.

**சாராள்.** Sarah.

1. ஆதி $17^{15}$-வரையும் இவளுக்குச் 'சாராய்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. வேத சாஸ்திரிகள் சாராள் என்பதற்கும் சாராய் என்பதற்கும் அர்த்தத்தில் வித்தியாசம் இல்லை என்று நினைக்கிறார்கள். சாராள் என்பதற்கு அர்த்தம் 'ராஜகுமாரத்தி.' இவள் ஆபிரகாமின் மனைவி. இவளுக்கும் ஆபிரகாமுக்கும் ஒரே தகப்பன். ஆனால் ஆபிரகாமின் தாய் வேறே, சாராளின் தாய் வேறே. ஆதி $12^{13}$ $20^{12}$. எகிப்து ராஜாவும் கேராரின் ராஜாவும் சௌந்தரியமுள்ள இவளை ஆபிரகாம் இடத்திலிருந்து அபகரித்துத் தங்கள் அந்தப்புரத்திலே வைத்தபோது, அவர்கள் யேகோவாவினால் தண்டிக்கப்பட்டு இவளைத் திரும்பவும் ஆபிரகாமிடத்தில் அனுப்பிவிட்டார்கள். இவள் மலடியாய் இருந்தாலும் யேகோவாவின் அருளினால் இவளுக்கு ஈசாக்கு பிறந்தான். ஆதி $21^{1}$ எபி $11^{12}$. இவள் ஆகாருக்குச் செய்த காரியங்கள். ஆதி 16, 21 அதி. இவள் 127 வயதில் இறந்துபோனாள். ஆதி 23 அதி. பழைய ஏற்பாட்டில் ஆதியாகமத்தைத் தவிர ஏசா $51^{2}$-ல் மாத்திரம் சாராளைப்பற்றிச் சொல்லியிருக்கிறது.

புதிய ஏற்பாட்டில் இவளுடைய பெயர் நாலுதடவை மாத்திரம் சொல்லியிருக்கிறது. ரோ $4^{19}$ $9^{9}$ எபி $11^{11}$ 1 பேது $3^{6}$. இவளுக்கும் ஆகாருக்குமுள்ள சமாசாரத்தை பரி. பவுல் உபமானமாய்ச் சொல்லுகிறான். கலா $4^{21}$-$5^{1}$.

2. ஆசேருடைய குமாரத்தி. எண் $26^{46}$.

**சாரீத்.** Sarid. யோசு $19^{10}$.

**சாரேத், சேரேத்.** Sered. ஒரு பள்ளத்தாக்கு. எண் $21^{12}$ உபா $2^{13}$.

**சாரோன்.** Sharon. [சமபூமி].

1. யோப்பா பட்டணம் முதல் கர்மேல் வரையும் சமாரியா தேசத்தின் மேற்கெல்லையில் மத்தியதரைக்கடற்கரையிலுள்ள சமபூமி. இது தெற்கிலிருந்து வடக்குவரையும் ஏறக்குறைய 50 மைல். இதின் வடபாகத்தில் கருவாலிமரம் அதிகம். இங்கே புல்லுள்ள மேய்ச்சல் தரை அதிகமாய் உண்டு. ஒலிவ

மரமும் கிச்சிலி மரமும் பல வர்ணமான புஷ்பங்களும் இங்கே கன்றாய் வளரும். 1 நாளா 27[29] உன். பா 2[1] ஏசா 33[9] 35[2] 65[10] அப் 9[35].

2. தாபோர் மலைக்கும் கலிலேயாக் கடலுக்கும் இடையில் உள்ள இன்னொரு சாரோன். ஒருவேளை 'லசரோன்' என்பது இதைக் குறிக்கலாம். யோசு 12[18].

3. பாசான் தேசத்தில் உள்ள இன்னொரு சாரோன். 1 நாளா 5[16].

**சார்தான், சேரேதா, சேரோத். Saretan.** இந்த மூன்று பதங்களும் யோர்தான் நதியின் ஓரத்தில் இருக்கும் ஒரு ஊரைக் குறிக்கிறதாகத் தோன்றுகிறது. யோசு 3[16] 1 இரா 11[26] நியா 7[22].

**சாலகம். Conduit.** எபிரெயர் கானான் தேசத்தில் தங்களை ஸ்தாபிக்குமுன் அத்தேசத்திலுள்ள எபூசியர் முதலான பூர்வ ஜனங்கள் தங்கள் சத்துருக்கள் தங்கள் ஊர்களை முற்றுகை போடும்போது தங்களுக்குத் தண்ணீர் குறைந்துபோகாதபடி வெளியே நீரூற்றுகளிலிருந்து பூமிக்குள்ளாக வெட்டின சாலகங்களின் வழியாய்த் தண்ணீர் பாய்ந்து தங்கள் ஊருக்குள்ளே வரும்படி செய்துகொள்வார்கள். இந்தச் சாலகங்களில் எசேக்கியா ராஜா கீயோன் ஊற்றிலிருந்து வெட்டின சீலோவாம் குளத்திற்கு வரும் சாலகம் முக்கியமானது. இது ஓபேல் மலைக்குள்ளே ஏறக்குறைய 1,700 அடி நீளமுள்ளது. வண்ணார் துறைவழியிலுள்ள மதகு யாவருக்கும் நன்றாய்த் தெரிந்த இன்னொரு சாலகமாய் இருந்தது. ஆனால் அது இருந்த இடம் இப்பொழுது தெரியாது. தாவீது சாலகம் வழியாய் எருசலேமுக்குள் பிரவேசித்து எபூசியரை ஜெயித்தான். 2 இரா 18[17] 20[20] ஏசா 7[3].

**சாலமி. Salamis.** இது சீப்புருதீவின் கிழக்குக் கரையில் வியாபாரத்தில் பேர்போன பட்டணம். பவுலும் பர்னபாவும் முதல் பிரயாணத்தில் இதைச் சந்தித்தார்கள். இது அத்தீவின் கிழக்குப்பாகத்தின் தலைநகரி. அப் 13[5]. கிரேக்கர் கப்பல் யுத்தத்தில் சர்க்சேயை ஜெயித்த இடமாகிய சாலமி வேறே.

**சாலா. Shelah.** லூக் 3[35]. **சேலா (2)** காண்க.

**சாலாபீன், சாலீம், சால்பீம். Shaalbim.** நியா 1[35] யோசு 19[42] 1 இரா 4[9]. ஒருவேளை இதுவும் சால்போனும் ஒன்றுதான். 2 சாமு 23[32].

**சாலாப். Salaph.** நெகே 3[30].

**சாலிம். Salim.** அயினோனுக்கு சமீபமாய் யோர்தான் நதிக்கு மேற்குக் கரையில் உள்ள ஒரு ஊர். இது சமாரியாநாட்டின் வடகிழக்கு மூலையில் இருந்தது என்று நாம் நினைக்கலாம். யோவா 3[23].

**சாலீம். Shaalbim. சாலாபீன்** காண்க.

**சாலேப். Sheleph.** ஆதி 10[26].

**சாலேம். Salem, Shalem.**

1. மெல்கிசேதேக் அரசாண்ட ஊர். இதுவும் எருசலேமும் ஒன்றுதான் என்று அநேகர் நினைக்கிறார்கள். ஆதி 14[18].

2. சீகேமுக்குக் கிட்ட ஒரு ஊர். ஆதி 33[18].

**சாலொமோனின் நடபடி புஸ்தகம். The Book of the Acts of Solomon.** பலர் சாலொமோனின் சரித்திரத்தை எழுதினார்கள். 2 நாளா 9[29]. 'சாலொமோனின் நடபடி புஸ்தகம்' என்பது அவர்கள் எழுதின ஆகமங்களைக் குறிக்கலாம். 1 இரா 11[41]. அக்காலத்து ராஜாக்கள் தாங்கள் செய்த சமாசாரங்களை தங்கள் பின்சந்ததியார் அறியும்படி எழுதுவதற்குச் சம்பிரதிகளை நியமிப்பது வழக்கம்.

**சாலொமோனுடைய மண்டபம். Solomon's Porch.** யோவா 10[23] அப் 3[11] 5[12]. **தேவாலயம்** காண்க.

**'சாலொமோனுடைய வேலையாட்களின் புத்திரர்.' 'The Children of Solomon's Servants.'** எஸ்றா 2[55, 58] நெகே 7[57] 11[3]. இவர்கள் தேவாலயத்தில் பலவிதமான சேவகம் செய்தார்கள். **நிதனீமியர்** காண்க.

**சாலொமோன். Solomon.** [சமாதானம்].

1. தாவீதின் மகன், சகல இஸ்ரவேலருக்கும் அரசன். ராஜாக்களின் புஸ்தகங்களிலும் நாளாகம புஸ்தகங்களிலும் சாலொமோனின் சரித்திரம் விபரமாய் எழுதப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு புஸ்தகங்களிலும் இவனுடைய ஞானம், ஐசுவரியம், மகிமை முதலியவை அதிகமாய்ச் சிறப்பித்துச் சொல்லியிருப்பதினால் பிற்காலத்தில் எபிரெயர்கள் தங்கள் தேசத்தில் வந்த துன்பத்தைப் பார்த்து சாலொமோனின் காலம் கிரேதாயுகத்தைப் போல் அதிக பாக்கியமுள்ள காலம் என்று நினைத்தார்கள்.

2. **காலம்.** சாலொமோன், சீஷாக், ஈராம் என்பவர்களைப்பற்றிய காலக்கணக்கு அதிக நுட்பமாய்ச் சொல்லியிராவிட்டாலும் அவர்களின் சரித்திரத்தைப் பார்த்து சாலொமோன் கி-மு. 977-937-வரை அரசாண்டான் என்று சொல்லலாம்.

**3. சாலொமோனின் வாலிபப்பிராயம்.** இவனுடைய தாயாகிய பத்சேபாள் இவனை ராஜாவாக்கும்படி கருத்துள்ளவளாய் இருந்ததினால் தாவீது இவனை உபராஜாவாய் நியமித்தான். இவனுடைய மறுபெயராகிய 'யெதிதியா' என்பதற்கு 'யேகோவாவுக்கு பிரியம் உள்ளவன்' என்று அர்த்தமாம். இதினால் நாத்தான் தீர்க்கதரிசி கடவுள் தாவீது செய்த குற்றத்தை மன்னித்திருப்பார் என்று குறித்தான். 2 சாமு $12^{25}$. அதோனியா ராஜ்யம் தனக்குச் சேரவேண்டும் என்று பிரயாசைப்பட்டாலும், பத்சேபாளும் நாத்தானும் செய்த பிரயத்தனத்தினால் இவனே ராஜாவானான்.

**4. சாலொமோன் ராஜாவானது.** சாலொமோன் முதலில் சத்துருக்களிலிருந்து தன்னையும் தன் ராஜ்யத்தையும் காப்பாற்றும்படி அவர்களிற் சிலரைக் கொன்று தன் ஆளுகையை ஸ்திரப்படுத்திச் சீக்கிரத்தில் தன் ராஜ்யம் விருத்தியடையும்படி செய்தான். தாவீது அரசனின் ஆளுகையில் இஸ்ரவேலர் எல்லாரும் ஒரேஜனமாக ஐக்கியமாயிருந்தார்கள். சாலொமோன் இஸ்ரவேலர் அந்நிய ஜனங்களுக்கு முன்பாக மேன்மையடையும்படி எருசலேமிலுள்ள கோட்டையை நன்றாய்ப் பலப்படுத்தி இன்னும் பல கோட்டைகளைக் கட்டிச் சில ராஜாக்களை ஜெயித்துச் சிலரோடு சமாதான உடன்படிக்கையும் செய்தான். 1 இரா $9^{15.24}$ 2 நாளா $8^{3}$. வியாபாரம் விருத்தியடையும்படி அவன் செய்த ஏற்பாடுகளில் முக்கியமானவை: எகிப்தியரோடு செய்த உடன்படிக்கை. 1 இரா $3^{1}$ $9^{16}$. பெனிக்கேயரோடு செய்த உடன்படிக்கை. 1 இரா $5^{1-12}$.

**5. சாலொமோனுடைய ராஜ்யத்தில்உண்டான பலன்.** முதலில் வியாபாரம் விருத்தியடைந்ததினாலும் அவனுடைய ராஜ்யம் மற்றவர்களுக்கு முன்பாக மேன்மை யடைந்ததினாலும், இஸ்ரவேலருக்கு மனரம்மியமும் திருப்தியும் உண்டானது. ஆனால் சாலொமோன் தேவாலயத்தைத் தவிர இன்னும் பல தேவாலயங்களையும் அநேக சிறந்த மாளிகைகளையும் கோட்டைகளையும் கட்டினதினாலும், அமஞ்சி வேலையில் அநேகரை வைத்திருந்ததினாலும், அரமனையில் செலவு மிகுதியாய்ச் செய்ததினாலும், தங்களிடத்திலிருந்து வரி அதிகமாய் வாங்கினதைக் கண்டு அநேகர் விசனப்பட்டார்கள். இதுதான் யெரொபெயாம் செய்த கலகத்திற்குக் காரணம். 1 இரா $4^{2}$ $5^{13}$ $6^{38}$ $7^{1}$ $9^{20}$ $10^{15}$ $11^{1}$. இவன் மற்ற ஜனங்களுக்கு முன்பாக எவ்வளவு புகழ்ச்சியடைந்தானோ அவ்வளவுக்குத் தன் ஜனங்களை அழிவுக்குக் கொண்டுவந்தான் என்று சொல்ல நியாயம் உண்டு. ஆயினும் இவன் காலத்தில் யேகோவாவின் வணக்கம் அதிக கீர்த்திபெற்றது.

**6. சாலொமோனின் ஞானம்.** யூதர்கள் சாலொமோனின் ஞானம் மற்ற எல்லா நீதி ஞானத்துக்கும் மூலம் என்று நினைத்து நீதிமொழிக்கும், உன்னதப்பாட்டுக்கும், பிரசங்கி என்னும் புஸ்தகத்துக்கும், வேதத்தில் இல்லாத சில சங்கீதப் புஸ்தகங்களுக்கும், தள்ளுபடி ஆகமத்திலுள்ள சில நீதி புஸ்தகங்களுக்கும் சாலொமோன்தான் ஆக்கியோன் என்று சொன்னார்கள். 1 இரா $3^{5}$ $4^{29}$ $10^{1}$.

**7. சாலொமோனுடைய துஜதிசயங்கள்.** இவன் யேகோவாவின் உத்தம வணக்கத்தை ஸ்திரப்படுத்தவும், இஸ்ரவேல் ராஜ்யம் விருத்தியடையும்படி செய்யவும், மற்ற ஜனங்களுக்கும் இஸ்ரவேலருக்கும் உடன்படிக்கை ஏற்படுத்தவும் முதலில் முயன்று தன் மன உற்சாகத்தைக் காண்பித்தான். ஆனால் இவன் தான் வைத்திருந்த அநேக மனைவிகளின் ஏவுதலினால் அந்நிய தேவர்களை வணங்கினதினாலும், வீணான ஆடம்பரங்களுக்காகக் கணக்கில்லாத பணம் செலவழித்ததினாலும், தன் தேசத்தில் தான் உண்டாக்கின விருத்தியை எல்லாம் அழித்தான். தனக்கிருந்த ஞானத்தினால் தன்னைத்தான் நடத்திக்கொள்ளத் திறமை இல்லாததினால் தன்னயத்தினாலும் பெருமையினாலும் தனக்கு முன்னிருந்த மேன்மையைக் குறைத்தான்.

**சால்பீம்.** Shaalbim. **சாலாபீன்** காண்க.

**சால்போன்.** Shaalbon. 2 சாமு $23^{32}$. **சாலாபீன்** காண்க.

**சால்வை.** Mantle. **உடை** காண்க.

**சாவி.** Mildew. 1 இரா $8^{37}$ 2 நாளா $6^{28}$.

**சாவி.** Key. **திறவுகோல்** காண்க.

**சாவு.** Death. **சாகிறது, பிரேத அடக்கம்** காண்க.

**சாவே கீரியத்தாயீம்.** Shaveh-Kiriathaim. மோவாப் தேசத்திலுள்ள ஒரு சமபூமி. ஆதி $14^{5}$.

**சாவே பள்ளத்தாக்கு.** Valley of Shaveh. **ராஜாவின் பள்ளத்தாக்கு** காண்க.

**சாறிபாத்.** Zarephath. **சரெப்தா** காண்க.

**சானாயீம்.** Zaanaim. இதுவும் சானனிம் ஒன்றுதான். நியா $4^{11}$ யோசு $19^{33}$.

**சானனிம்.** Zaaninnim. **சானாயீம்** காண்க.

## சி.

**சிகாயோன்.** **Shiggaion.** *சங் 7 தலைப்பிலும், ஆபகூக் 3*[1]*-லும் சொன்ன இந்தப் பதம் ஒருவேளை அதிக உற்சாகத்தோடு பாடவேண்டிய ஒரு இராகத்தைக் குறிக்கலாம்.*

**சிக்குத்.** **Siccuth.** *ஆமோ* 5[26]. **சப்பராம்** *காண்க.*

**சிக்ரி, சிக்கிரி.** **Zichri.**

1. = *சித்ரி. யாத்* 6[21].

2, 3, 4, 5. *நாலு பென்யமீன் கோத்திரத்தார்.* 1 *நாளா* 8[19. 23. 27] *நெகே* 11[9].

6. 1 *நாளா* 9[15].

7. 1 *நாளா* 26[25].

8. 1 *நாளா* 27[16].

9. 2 *நாளா* 17[16].

10. 2 *நாளா* 23[1].

11. 2 *நாளா* 28[7].

12. *நெகே* 12[17].

**சிக்ரோன்.** **Shikkeron.** *யோசு* 15[11].

**சிக்லாக்.** **Ziklag.** *காத் ராஜ்யத்தில் தாவீதுக்குக் கொடுத்த ஒரு ஊர்.* 1 *சாமு* 27[6] 30[1] 2 *சாமு* 4[10] *நெகே* 11[28]. *இது யூதா அல்லது சிமியோன் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு* 15[31] 19[5].



*சிங்கம்.*

**சிங்கம்.** **Lion.** *எல்லாக் காட்டுமிருகங்களிலும் பெலனும், வீரமும், மூர்க்கமுமுள்ளது. இது வேங்கையிலும் பெரிதாயிருக்கும். இதின் தலை உருண்டையாயும் பருப்பமாயும், காது வட்டமாயும், கண்கள் தீப்பொறிபோல் சிவப்பாயும், வாய் விசாலமாயும், கடைவாய்ப் பற்கள் மிகுந்த உறுதியாயும், மற்றப் பற்கள் கூர்மையாயும், மீசை நீண்டதாயும், நெஞ்சு படர்ந்ததாயும், கால்கள் குட்டையும் பருப்பமும் திறமுமாயும், நகம் வளைந்து சுருக்கி நீட்டிக்கொள்ளத்தக்கதாயும் இருக்கும். சிங்கத்தின் நிறம் மாணிறமாயிருக்கும். ஆண் சிங்கத்துக்குப் பிடரியிலே குதிரையின் பிடர்மயிரைப்போல் இருபக்கங்களிலும் ரோமம் வளர்ந்திருக்கும். பெண் சிங்கத்துக்கு அப்படி இராது. மோப்பம் பிடித்து மிகுந்த தூரத்திலுள்ள மிருகங்களையும் கண்டறியும்; பூனைபோல கண் பாதி விழித்துக்கொண்டு சற்றுநேரம் தூங்கும்; இதின் கெர்ச்சிப்பின் சத்தம் இடிமுழக்கம் போலிருக்கும்; இதற்கு யாவும் பயப்படும். இது தன் குட்டிகளிடத்தில் மிகுந்த ஆதரவாயிருக்கும். இதின் குட்டிகள் பிறந்து சில நாள்வரைக்கும் கண்கள் திறவாமலிருக்கும். பசியில்லாவிட்டால் சிங்கம் சிறு மிருகங்களைச் சாடையாய் விட்டுவிடும். பசியிருந்தால்மாத்திரம் கொன்று தின்னும். வல்லவர்கள் சிலர் இந்தச் சிங்கக்குட்டிகளைப் பிடித்துப் பழக்கி வளர்த்துச் சங்கிலியிற் பூட்டிக் கொண்டு திரிவார்கள்.*

*எபிரெயர்கள் பெரிய சிங்கம், பால சிங்கம், பெண் சிங்கம், கெர்ச்சிக்கிற சிங்கம் ஆகிய இவைகளைக் காட்டும்படி ஐந்து பதங்கள் வழங்கினார்கள். அப்பதங்களையும் வேதத்தில் சொல்லியிருக்கும் பலவசனங்களையும் நாம் பார்த்தால் சிங்கங்கள் ஏறக்குறைய ஐஞ்ஞூறு வருஷ காலம் பலெஸ்தீன தேசத்தில் இல்லாதிருந்தும் முற்காலத்தில் இவைகள் அங்கே ஏராளமாய் இருந்தன என்று நாம் அறியலாம். யோர்தான் நதியின் பள்ளத்தாக்கிலுள்ள காடுகளில் இவைகள் அநேகமாய் இருந்தன. எரே* 49[19]. *இவைகள் ஆடுமாடுகளையும் மனிதர்களையும் பட்சிக்கும்.* 1 *சாமு* 17[34] 1 *இரா* 13[24] 2 *இரா* 17[25] *ஏசா* 31[4] *ஆமோ* 3[12] *மீகா* 5[8]. *இதின் பயங்கரமான கெர்ச்சிப்பு பலதடவை வேதத்தில் சொல்லியிருக்கிறது. எரே* 25[30] *ஓசி* 5[14] *யோவே* 3[16]. *யூதாவும், தாணும், இஸ்ரவேலும் சிங்கம் என்று உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. ஆதி* 49[9] *உபா* 33[22] *எண்* 23[24]. *புதிய ஏற்பாட்டில் 'சாத்தான் கெர்ச்சிக்கிற சிங்கம்' என்று சொல்லப்படுகிறான்.* 1 *பேது* 5[8]. *'யூதா கோத்திரத்துச் சிங்கம்' என்பது மேசியாவைக் குறிக்கிறது. வெளி* 5[5].

**சிங்காசனம்.** **Throne.** **ஆசனம்** *காண்க.*

**சிங்காரம்.** **Beauty.** **சவுந்தரியம்** *காண்க.*

**சிசெரா.** **Sisera.**

1. *கானான் தேசத்து ராஜாவாகிய யாபீனுடைய சேனாபதி. பாராக் இவனை ஜெயிக்கும்போது யாகேல் இவனைக் கொன்றாள். நியா 4, 5 அதி. சங்* 83[9].

2. *நிதனீமியர்களில் ஒருகுடும்பம். எஸ்ரா* 2[53].

**சிஸ்** Ziz. சாக்கடலிலிருந்து யூதாவின் மலைநாட்டுக்குப் போகும் பள்ளத்தாக்கு. 2 நாளா $20^{16}$.

**சிஸ்மாய்.** Zismai. 1 நாளா $2^{40}$.

**சிதறியிருக்கிறவர்கள்.** The Dispersion. பலெஸ்தீனு தேசத்தில் அல்லாத யூதர்களுக்குச் 'சிதறியிருக்கிறவர்கள்' என்று பெயர். 2 மக்கபெயர் $1^{27}$ யோவா $7^{35}$ யாக் $1^{1}$ 1 பேது $1^{1}$. ஆகாப் ராஜாவின் காலமுதல் இஸ்ரவேலரில் சிலர் தங்கள் தேசத்தை விட்டு அந்நிய தேசங்களுக்குப் போனுர்கள். 1 இரா $20^{34}$. ஆயினும் நேபுகாத்நேச்சார் யூதர்களைச் சிறையாக்கிப் பாபிலோனியாவுக்குக் கொண்டுபோனதுமுதல் இஸ்ரவேலர்களில் அநேகர் முதலாவது அந்நிய தேசங்களில் குடியேறினுர்கள். அந்த ராஜா ஏறக்குறைய அரை லட்சம்பேர் தமது ராஜ்யத்திலுள்ள பட்டணங்களில் வசிக்கும்படி இடங்கொடுத்தான். 2 இரா $24^{12}$ எரே $52^{15}$ எசே $3^{15}$ எஸ்று $8^{17}$. பாபிலோனியாவிலிருந்து சிலர் எருசலேமுக்குத் திரும்பிப் போனுர்கள். மற்றவர்கள் அத்தேசத்திலும் மற்றும் அநேக தேசங்களிலும் வியாபாரம்பண்ணி ஜீவனம் செய்தார்கள்.

எகிப்து தேசத்தில் அநேக யூதர்கள் இருந்தார்கள். அவர்கள் அதிலேதான் கி-மு. 170-லுவத்தில் ஒரு தேவாலயங் கட்டினுர்கள். ஆனுல் யூதர்கள் யாவரும் எருசலேமிலுள்ள பெரிய தேவாலயத்திற்கு வருஷந்தோறும் காணிக்கை யனுப்பி, கூடுமானுல் பண்டிகை காலங்களில் அதற்குப் பிரயாணம் பண்ணும்படி விரும்புவார்கள். எரே $44^{1}$ அப் $2^{10}$. இவ்விதமாய்ச் சிதறியிருக்கிறவர்கள் வழக்கமாய் எபிரெய பாஷை வழங்காமல் கிரேக்க பாஷையை வழங்குவார்கள். அவர்களும் அப்பாஷையிலே வேதாகமத்தை மொழிபெயர்த்தார்கள். இதினிமித்தம் யூதா தேசத்திலுள்ளவர்கள், இவர்கள் தங்களுக்குக் கீழானவர்களென்று நினைத்தார்கள்.

**சிதேக்கியா.** Zedekiah.

1. கி-மு. 597-586-லு மட்டும் யூதாராஜ்யத்தில் அரசாண்ட ராஜா. இவன் சிம்மாசனத்திற்கு வந்த யோசியாவின் மூன்றும் மகன். நேபுகாத் நேச்சார் கி-மு. 597-லுவத்தில் முதலாவது எருசலேமைப் பிடித்துப் பாபிலோனியாவுக்கு எண்ணுயிரம் பெரியோர்களைக் கொண்டுபோகும்போது இவனை யூதாவிலே ராஜா வாக்கினுன். இவன் முதல் பெயர் மத்தனியா. ஆனுல் நேபுகாத்நேச்சார் இவனுக்கு 'யேகோவாவின் நியாயம்' என்று அர்த்தங்கொண்ட 'சிதேக்கியா' எனும் மறுபெயர் கொடுத்து, தானே யேகோவாவின் தயவினுலே எருசலேமை ஜெயித்தான் என்பதைக் காட்டினுன். அக்காலத்தில் சிதேக்கியா நேபுகாத்நேச்சாருக்குத் தான் கீழ்ப்படிந்து நடக்கும்படி உறுதியான வாக்குத்தத்தம் கொடுத்தான். 2 இரா $24^{17}$ எசே $17^{13}$. பாபிலோன் ராஜா தன் தேசத்திற்குப் போனபிறகு யூதர்கள் புத்தியீனமாய் அப்பெரிய ராஜாவுக்கு விரோதமாய்க் கலகம் செய்யும்படி பிரயாசப்பட்டார்கள். எரேமியா தீர்க்கதரிசி அவர்கள் இவ்விதமாய்ச் செய்யக்கூடாதென்று உரைத்தாலும், மற்றத் தீர்க்கதரிசிகள் எகிப்து ராஜா அனுப்பின ஸ்தானுபதிகளை நம்பிக் கலகம் செய்யும்படி சிதேக்கியாவை ஏவினுர்கள். இதையறிந்து நேபுகாத்நேச்சார் உடனே வந்து முதலாவது எகிப்தியர்களை முறியடித்துப் பிறகு எருசலேமை முற்றுகை போட்டான். யூதர்கள் இதைப் பார்த்துப் புத்தியடையாமல் எரேமியாவைக் கொல்லும்படி கருதினுலும், சிதேக்கியாவின் பிரதானிகளில் ஒருவன் அவனைக் காப்பாற்றினுன். எரே 38 அதி. சிதேக்கியா நேபுகாத்நேச்சார் எருசலேமை உடனே ஜெயிப்பானென்று அறிந்து தன்னைத் தப்புவிக்கும்படி இரகசியமாய் ஓடிப்போகும்போது, நேபுகாத்நேச்சார் இவனைப் பிடித்து, இவன் பிள்ளைகளை இவனுக்கு முன்பாகச் சங்கரித்து, இவனுடைய கண்களைக் குருடாக்கி இவனைப் பாபிலோனியாவுக்குக் கொண்டுபோனுன். அங்கேதான் மரித்தான். 2 இரா $25^{4}$.

2. ஆகாபின் அரமனையிலுள்ள கள்ளத் தீர்க்கதரிசிகளில் ஒருவன். 1 இரா $22^{11}$.

3. யோயாக்கீன் காலத்தில் பாபிலோனியாவுக்குக் கொண்டுபோகப்பட்ட ஒரு தீர்க்கதரிசி. இவன் மகா பொல்லாதவன் என்று தோன்றுகிறது. எரே $29^{21}$.

4. ஒரு பிரபு. எரே $36^{12}$.

5. நெகே $10^{1}$.

**சித்தம்.** Will.

1. கடவுளை ராஜாவாக அல்லது தகப்பனுகப் பாவித்து அவருடைய சித்தத்தைப்பற்றி வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $46^{10}$. புதிய ஏற்பாட்டில் இது அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. மத் $6^{10}$ $12^{50}$ $26^{39}$ யோவா $4^{34}$ $6^{38}$ அப் $21^{14}$ ரோ $9^{19}$ $12^{2}$ கொலோ $1^{1}$ 1 தெச $5^{18}$ 2 பேது $3^{9}$.

சில வசனங்களில் இது தேவனுடைய பிரமாணத்தைக் குறிக்கிறது என்று சொல்லலாம். மத் $7^{21}$ ரோ $12^{2}$.

சில வசனங்களில் கடவுள் செய்த ஆலோசனையைக் குறிக்கிறது. அப் $13^{36}$ எபே $1^{10}$ பிலி $1^{13}$ யாக் $1^{18}$ 1 பேது $3^{17}$.

2. பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் மனுஷர் சுயாதீன சித்தமுடையவர்கள் என்று காட்டியிருக்கிறது. உ–ம். ஆதாம், ஆபிரகாம், யோபு.

புதிய ஏற்பாட்டில் இயேசு, பரி. பவுல் முதலியவர்கள் இவ்விதமாய்ப் போதித்தார்கள். லூக் $15^{18}$ யோவா $5^{14}$ ரோ $7^{18}$ எபி $13^{18}$ 2 தீமோ $3^{12}$. கடவுள் எல்லாரையும் ரட்சிக்கும்படி விரும்பியும், மனுஷர்கள் தான் அந்த ரட்சிப்பை அங்கிகரிக்கவேண்டும் என்பது இந்தக் கொள்கையோடு இசைந்திருக்கிறது. 2 பேது $3^{9}$ 1 தெச $2^{4}$. இதைப்பற்றி **அழைப்பு** காண்க.

3. பல இடங்களில் மனுஷனுடைய சித்தம் என்று சொல்லப்பட்டிருப்பது அவனுடைய விருப்பத்தையும் நோக்கத்தையும் ஏற்பாடு செய்யக்கூடிய திராணியையும் காட்டுகிறது. மத் $21^{31}$ லூக் $12^{47}$ யோவா $1^{13}$ 2 பேது $1^{21}$.

**சித்திரம்**. A. V. Picture, R. V. Imagery. ஏசா $2^{16}$. **சிலை** காண்க.

**சித்திரவேலை**. Carved work. யாத் $31^{5}$ $35^{32}$ 1 இரா $6^{18.29.35}$ சங் $74^{6}$.

**சித்தீம், சீத்தீம்**. R. V. Acacia, Shittim-wood. A. V. Shittah. வனாந்தரங்களில் வளரும் நல்ல வேலைக்குரிய மரம். இப்பதம் இரண்டு மூன்றுவிதமான மரங்களைக் குறிக்கலாம். இந்த மாதிரியான மரங்கள் சாக்கடலின் பள்ளத்தாக்கில் அநேகம் இருந்திருக்கலாம். ஆசரிப்புக் கூடாரத்தில் வைக்கப்பட்ட உடன்படிக்கைப்பெட்டி இந்த மரத்தினால் செய்யப்பட்டது. யாத் $25^{5.10}$ $26^{15}$ $27^{1}$ உபா $10^{3}$ ஏசா $41^{19}$.

**சித்தீம்**. Siddim. சாக்கடலுக்குச் சமீபமாய் இருந்த ஒரு பள்ளத்தாக்கு. இது இருக்கும் இடம் திட்டமாய்ச் சொல்லியிருக்கவில்லை. ஆனால் சமபூமியிலுள்ள பட்டணங்களிலிருந்து இது அதிகதூரம் இருந்ததில்லை யென்று நாம் சொல்லக்கூடும். ஆதி $14^{3}$.

**சித்தீம்**. Shittim.

1. எரிகோ பட்டணத்துக்கு எதிராய் இஸ்ரவேலர் இறங்கியிருந்த பாளையம். இதிலிருந்து யோசுவா வேவுகாரரை அனுப்பினான். இங்கே இஸ்ரவேலர் மோவாபிய ஸ்திரீகளை விவாகம் செய்கிறதற்குத் தொடங்கினார்கள். எண் $25^{1}$ யோசு $2^{1}$ $3^{1}$.

2. மீகா $6^{5}$-ல் சொன்ன சித்தீம் இன்ன இடமென்று தெரியாது.

3. எருசலேமிலிருந்து சாக்கடலுக்குச் செல்லும் ஒரு பள்ளத்தாக்கு. யோவே $3^{18}$.

**சித்ராய்**. Shitrai. 1 நாளா $27^{29}$.

**சித்ரி**. Sithri. யாத் $6^{22}$.

**சித்ரி**. Zithri. **சிக்ரி** (1) காண்க.

**சித்னா**. Sitnah. [சண்டை]. கேராரில் வெட்டின கிணற்றின் பெயர். ஆதி $26^{21}$.

**சிநேயார், சிநேயார், சினேயார்**. Shinar. பழைய ஏற்பாட்டில் இந்தப் பதம் பாபிலோனிய தேசத்தையும் ராஜ்யத்தையும் குறிக்கிறது. ஆதி $10^{10}$ $11^{2}$ $14^{1}$ ஏசா $11^{11}$ சக $5^{11}$ தானி $1^{2}$.

**சிநேயாவ்**. Shinab. அத்மாவின் ராஜா. ஆதி $14^{2}$.

**சிந்திகேயாள்**. Syntyche. பிலிப்பி சபையில் ஒரு கிறிஸ்தவள். இவள் அச்சபையில் உதவிக்காரியாய் இருக்கலாம். பிலி $4^{2}$.

**சிந்தை**. Thought. யோபு $17^{11}$ சங் $119^{113}$ மத் $15^{19}$ மாற் $7^{21}$ லூக் $2^{34}$ ரோ $2^{15}$ 1 தீமோ $4^{15}$. **நினைவு** காண்க.

**சிபியாள்**. Zibiah. ராஜாவாகிய யோவாசின் தாய். 2 இரா $12^{1}$.

**சிபியோன்**. Zibeon. ஆதி $36^{2.20.24}$.

**சிபோலேத், ஷிபோலேத்**. Sibboleth, Shibboleth. 'ஷிபோலேத்' என்னும் எபிரெய பதத்திற்கு 'கதிர்' அல்லது 'சிற்றாறு' என்பது பொருள். எப்பிராயீம் கோத்திரத்தார் 'ஷி' என்னும் அட்சரத்தைச் சரியாய் உச்சரிக்காமல் 'சி' என்று சொல்லுவார்கள். ஆகையால் கீலேயாத்தியர்களுக்கும் எப்பிராயீமருக்கும் சண்டையிருக்கும்போது, கீலேயாத்தியர் தாங்கள் கொல்லப்போகிற எப்பிராயீமரை அறியும்படி தாங்கள் அவர்கள் சந்தித்தவர்களெல்லாரும் 'ஷிபோலேத்' என்பதைச் சொல்லும்படி கட்டாயப்படுத்தினார்கள். 'சிபோலேத்' என்கிறவர்கள் எப்பிராயீமர்தான் என்றறிந்து உடனே அவர்களைச் சங்கரிப்பார்கள். நியா $12^{1}$.

**சிப்தான்**. Shiphtan. எண் $34^{24}$.

**சிப்பாய்**. Sippai. = சாப். 2 சாமு $21^{18}$ 1 நாளா $20^{4}$.

**சிப்பியோன்**. Ziphion. ஆதி $46^{16}$.

**சிப்பிராள்**. Shiphrah. எபிரெய மருத்துவச்சிகளில் ஒருத்தி. யாத் $1^{15}$.

**சிப்போராள்**. Zipporah. [ஊர்க்குருவி]. எத்திரோவின் மகள், மோசேயின் மனைவி. யாத் $2^{21}$ $4^{24}$ $18^{2}$.

**சிப்போர்.** Zippor. [ஊர்க்குருவி]. பாலாக்கின் தகப்பன். எண் $22^{2}$ நியா $11^{25}$.

**சிப்போன்.** Zephon. எண் $26^{15}$.

**சிப்மா, சேபாம்.** Sibmah, Sebam. யோர்தான் நதிக்குக் கிழக்கே ரூபன் நாட்டில் நேபோ மலைக்குக் கிட்டேயுள்ள ஒரு ஊர். இதுவும் சேபாவும் ஒன்றுதான். எண் $32^{3}$ ஏசா $16^{8}$ எரே $48^{32}$.

**சிப்மியன்.** Shiphmite. 1நாளா $27^{27}$.

**சிப்மோத்.** Siphmoth. 1சாமு $30^{28}$.

**சிப்ராயிம்.** Sibraim. எசேக்கியேல் கண்ட காட்சியில் பரிசுத்த பூமியின் வட எல்லை. எசே $47^{16}$. ஒருவேளை இதுவும் சிப்ரோனும் ஒன்றுதான்.

**சிப்ரோன்.** Ziphron. கானான் தேசத்தின் வட எல்லையிலுள்ள ஓர் இடம். எண் $34^{9}$. ஒருவேளை இதுவும் சிப்ராயிமும் ஒன்றுதான்.

**சிமாத்தியர்.** Shimeathites. காலேபின் குடும்பத்தின் ஒரு பங்கு. 1நாளா $2^{55}$.

**சிமியா, சிமீயா, சிமேயா, சிமேயா.** Shimea.

1. = சம்முவா. 1நாளா $3^{5}$ 2சாமு $5^{14}$.
2. 1நாளா $6^{30}$.
3. 1நாளா $6^{39}$.
4. = சம்மா. 1சாமு $16^{9}$ 2சாமு $13^{3}$.
5. = சிமியாம். 1நாளா $8^{32}$ $9^{38}$.

**சிமியாத்.** Shimeath. 2இரா $12^{21}$.

**சிமியோன்.** Simeon. [கேட்குதல்].

1. யாக்கோபுக்கும் லேயாளுக்கும் பிறந்த இரண்டாம் மகன். ஆதி $29^{33}$ $30^{20}$. இவன் சந்ததியார் கானான் தேசத்தில் யூதாவின் தென்மேற்குப் பாகத்திற்கும் பெலிஸ்தியரின் தேசத்தின் தென்பாகத்திற்கும் இடையிலுள்ள நாட்டில் வசித்தார்கள். யாக்கோபு லேவி கோத்திரத்தையும் சிமியோன் கோத்திரத்தையும் சபித்தான். ஆதி $49^{5}$. யூதா கோத்திரத்தோடு கானானியருக்கு விரோதமாய்ப் படையெடுத்தவன். நியா $1^{3}$. இந்தக் கோத்திரத்தைப்பற்றி யூதாராஜ்யத்தின் பின் சரித்திரத்தில் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை. இந்தக் கோத்திரத்தார் சீக்கிரத்தில் யூதா கோத்திரத்தில் கலந்திருந்தார்கள். முந்தி சிமியோனுக்குக் கொடுத்த ஊர்கள் பிறகு யூதாவின் ஊர்களோடு எழுதியிருப்பது இதற்கு அத்தாட்சி. யோசு $19^{2-5}$ 1இரா $19^{3}$ 1சாமு $27^{6}$.

2. யூதா மக்கபேயுவின் பாட்டனின் தகப்பன். 1மக்கபெயர் $2^{1}$.

3. பாலகனாகிய இயேசுவைக் கையில் ஏந்தி ஆசீர்வதித்த விருத்தாப்பியனான பக்தன். லூக் $2^{25}$.

**சிமியோன்.** Symeon.

1. இயேசுவின் முற்பிதாக்களில் ஒருவன். லூக் $3^{30}$.

2. அந்தியோகியா சபையிலுள்ள ஒரு தீர்க்கதரிசி. அப் $13^{1}$.

3. = சீமோன் பேதுரு. அப் $15^{14}$.

**சிமிர்னா.** Smyrna. இது சின்ன ஆசியாவின் மேற்கு எல்லையில் உள்ள ஒரு துறைமுகம். பூர்வகாலத்தில் ஸ்தாபிக்கப்பட்ட இந்த ஊரைப் பலதடவை சத்துருக்கள் அழித்தார்கள். ஆனாலும் ஒவ்வொருதடவையும் திரும்பத் திரும்ப மேனிலைக்கு வந்தது. கடைசியில் கி-மு. 290-ல் இது ஸ்தாபிக்கப்பட்டது. இங்கே நல்ல துறைமுகம் ஒன்று இருந்ததினால் சின்ன ஆசியாவுக்கு அநேக ஜனங்கள் போக்குவரவு செய்வார்கள். ஆகையால் இங்கே வியாபாரம் அதிகமாய் நடந்தது. இந்த ஊர் அதிகம் அழகுள்ளதாயிருந்ததினாலும், இங்கேயுள்ள ஜனங்கள் தங்கள் பக்தியில் சிறந்தவர்களானதினாலும், அவர்கள் ரோமைராயருக்கு விசுவாசமுள்ளவர்களாய் இருந்ததினாலும், ரோமை அதிகாரிகள் இதின்மேல் தயவுள்ளவர்களும் பிரியமுள்ளவர்களுமாய் இருந்தார்கள். இங்கே 'சுவர்ணவீதி' என்று சொல்லப்படும் அழகான பாதை யிருந்தது. இது இருந்த நாட்டில் அடிக்கடி பூமியதிர்ச்சி உண்டாகும். பரி. யோவான் இங்கேயுள்ள கிறிஸ்தவ சபைக்கு எழுதின நிருபத்தினால் அச்சபையைச் சேர்ந்தவர்கள் உண்மையுள்ளவர்களும் வருத்தத்தையும் துன்பத்தையும் சகித்து இருதயத்தில் உண்மையான ஐசுவரியமுள்ளவர்களாய் இருந்தார்கள் என்று அறிவோம். இங்கேயுள்ள யூதர்கள் கிறிஸ்தவ மார்க்கத்துக்கு அதிகம் விரோதமாய் இருந்தார்கள். இவ்வூரிலேதான் பொலிக்கார்ப் இரத்தச்சாட்சியாய் மரித்தான். வெளி $2^{8}$.

**சிமேயி, சிமேய், சீமேயி.** Shimei. [யேகோவா பிரஸ்தாபமுள்ளவர்]. இந்தப் பெயர் எபிரெயருக்குள் அடிக்கடி வழங்கி வந்தது. ஆனால் இந்தப் பெயருள்ளவர்களில் பலரைப்பற்றி அவ்வளவு விசேஷம் இல்லை.

1. பென்யமீன் கோத்திரத்தையும் சவுலின் குடும்பத்தையும் சேர்ந்த தாவீதுக்கு விரோதமானவன். தாவீது சிலகாலமாக இவனை மன்னித்துப் பிற்பாடு சாலொமோன் இவனுக்கு தண்டனை செய்யும்படி கட்டளையிட்டான். 2சாமு $16^{5}$ $19^{18}$ 1இரா $2^{8,36}$.



சிமிர்னா.

2. சாலொமோனின் பரிவாரத்தில் ஒருவன். 1 இரா $1^{8}$ $4^{18}$.

3. தாவீதின் திராட்சத்தோட்டங்களுக்குத் தலைவன். 1 நாளா $27^{27}$.

4. ஒரு பிரபு. 1 நாளா $3^{19}$.

5. சிமியோன், ரூபன் கோத்திரங்களின் அட்டவணையில் சொல்லியிருக்கும் பெயர். 1 நாளா $4^{26}$ $5^{4}$. = சேமா. 1 நாளா $5^{8}$.

6. லேவியின் பேரன். யாத் $6^{17}$.

7. 1 நாளா $6^{29}$.

8. 1 நாளா $6^{42}$.

9. தேவாலயத்து சில பாடகர்களில் ஒரு குடும்பம். 1 நாளா $25^{17}$.

10. எசேக்கியாவின் காலத்தில் தேவாலயத்தில் சீர்திருத்தம் செய்த ஒரு லேவியன். 2 நாளா $29^{14}$.

11. எஸ்றா $10^{23}$.

12. எஸ்தர் $2^{5}$.

13. = சம்மா. 1 சாமு $16^{9}$ 2 சாமு $21^{21}$.

14. = சேமா. 1 நாளா $8^{13, 21}$.

15. சிமேயி குடும்பம். சக $12^{13}$.

**சிம்சாய்.** **Shimshai.** எஸ்றா $4^{8}$.

**சிம்சோன்.** **Samson.**

1. சிம்சோனுடைய சரித்திரம் நியாயாதிபதி புஸ்தகத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. நியா $13^{24}$-$16^{30}$. இதினாலே சிம்சோன் மகா பராக்ரமசாலி என்றும், பல தடவைகளில் பயமின்றிப் பெலிஸ்தியர்களை ஏமாற்றினான் என்றும், இருபது வருஷமாக இஸ்ரவேலரைக் காப்பாற்றினான் என்றும் அறிவோம். ஆனால் இந்த அதிகாரங்களில் சொன்ன ஊர்களைப்பற்றி நாம் விசாரித்தால், சிம்சோன் எல்லாக் கோத்திரங்களுக்கும் அல்ல, தென் கானானில் ஒரு நாட்டிலுள்ள எபிரெயர்களுக்குமாத்திரம் நியாயாதிபதியாயிருந்தான் என்று அறியவேண்டும்.

2. இவன் சரித்திரத்தில் கி-மு. ஏறக்குறைய 1000-ஆண்டுக்கு முன் தங்கள் ஊர்களில் எபிரெயர்கள் நடத்தின சடங்காசாரங்களை நாம் தெளிவாய்ப் பார்க்கக்கூடும். ஆனால் நாம் அந்த சரித்திரத்தைப் பார்க்கும்போது அக்காலத்திலுள்ள எபிரெயர்கள் பல விஷயங்களில் சன்மார்க்கத்தைப்பற்றியும், யேகோவாவின் வணக்கத்தைப்பற்றியும் அவ்வளவு ஜாக்கிரதையில்லாமல் இருந்தார்கள் என்று தோன்றுகிறது.

இந்த அதிகாரங்களிலேயொழிய சிம்சோனுடைய பெயர் பழைய ஏற்பாட்டில் மறுபடியும் சொல்லப்படவில்லை. புதிய ஏற்பாட்டில் ஒருதடவைமாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. எபி $11^{32}$.

**சிம்மா.** Zimmah. 1 நாளா $6^{20}$.

**சிம்மாசனம்.** Throne. ஆசனம் காண்க.

**சிம்ராத்.** Shimrath. 1 நாளா $8^{21}$.

**சிம்ரான்.** Zimran. ஆபிரகாமுக்கு கேத்தூராள் பெற்ற ஆறும் மகன். ஆதி $25^{2}$.

**சிம்ரி.** Shimri.

1. 1 நாளா $4^{37}$.
2. 1 நாளா $11^{45}$.
3. 1 நாளா $26^{10}$.
4. 2 நாளா $29^{13}$.

**சிம்ரி.** Zimri.

1. பினேகாஸ் கொன்ற சிமியோன் கோத்திரத்தில் ஒரு பிரபு. எண் $25^{6}$.
2. = சப்தி. ஆகாமின் பாட்டன். யோசு $7^{1}$ 1 நாளா $2^{6}$.
3. 1 நாளா $8^{36}$.
4. சிம்ரியினுடைய ராஜாக்கள் கிழக்குத் தேசங்களிலுள்ள ஜனங்களைக் குறிக்கலாம். எரே $25^{25}$.
5. கி-மு. 887-ஆம் ஏலா ராஜாவைக் கொன்றுபோட்டு ஏழு நாட்களாக இஸ்ரவேலில் அரசாட்சிசெய்து உம்ரியினால் கொல்லப்பட்ட ராஜா. 1 இரா $16^{9}$.

**சிம்ரீத்.** Shimrith. 2 நாளா $24^{26}$. = சீமியாத்.

**சிம்ரோன்.** Shimron.

1. எண் $26^{24}$.
2. யோசு $11^{1}$ $19^{15}$.

**சிம்ரோன் மேரோன்.** Shimron-Meron. இதுவும் சிம்ரோனும் ஒன்றுதான். யோசு $11^{1}$ $12^{20}$.

**சிரங்கு, சொறி.** Itch. சீரியாதேசத்தில் தற்காலத்திலுள்ள இந்த வியாதி முற்காலத்திலும் இருந்தது. இது தேகத்தைச் சுத்தமாய்ப் பேணாததினால் உண்டாகிறது. இதினிமித்தம் இந்த வியாதியுள்ளவர்கள் ஆசாரியர்களாய் இருக்கப்படாது. லேவி $21^{20}$ உபா $28^{27}$.

**சிரிக்கிறது.** Laugh. **நகைக்கிறது** காண்க.

**சிருஷ்டிப்பு.** Creation. ஆதியாகமத்தில் சிருஷ்டிப்பின் வரலாறு இரண்டுவிதமாய்ச் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு வரலாறும் வெவ்வேறானகாலத்தில் வெவ்வேறான ஆக்கியோன்களால் எழுதப்பட்டவை என்பது எபிரெய பாஷையில் தேறினவர்களுடைய அபிப்பிராயம்.

முதலாவது, ஆறு நாட்களில் (i) வானமும் பூமியும், ஒளியும் இருளும்; (ii) ஆகாய விரிவும்; (iii) சமுத்திரமும் தரையும், புல் பூண்டுகளும்; (iv) சந்திர சூரிய நட்சத்திரங்களும்; (v) மச்சங்களும், பட்சிகளும், மிருகங்களும் சிருஷ்டிக்கப்பட்டபின் (vi) தேவசாயலான புருஷனும் ஸ்திரீயும் சிருஷ்டிக்கப்பட்டார்கள் என்று சொல்லியிருக்கிறது. ஆதி $1^{1}$-$2^{4}$.

இரண்டாவது, கடவுளுக்கு யேகோவா என்று பெயர் சொல்லியிருக்கிறவன், யேகோவா வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார் என்றும், பூமி புல் பூண்டு இல்லாமல் வெட்டாந்தரையாய்க் கிடந்ததென்றும், யேகோவா மனுஷனைச் சிருஷ்டித்தார் என்றும், அவனுக்காக ஒரு தோட்டம் உண்டாக்கினாரென்றும், அதில் அவன் வேலைசெய்தான் என்றும், அவனுக்குதவியாக கடவுள் ஸ்திரீயை உண்டாக்கினார் என்றும், அந்தத் தோட்டத்தில் சர்ப்பம் அவர்களை மொற்றினது என்றும், அவர்களுக்கு யேகோவா தண்டனை விதித்தார் என்றும் சொல்லியிருக்கிறது. ஆதி $2^{4}$-$3^{24}$.

இந்த இரண்டு வரலாற்றையும் பார்த்து, இவைகளுக்கும், எபிரெயர் சொன்ன இந்தச் சிருஷ்டிப்பின் வரலாறுகளுக்கும் பல நூற்றாண்டுகளுக்கு முந்தி பாபிலோனியா தேசத்தார் தங்கள் தேசத்து தேவர்களில் 'மார்துக்' என்று பெயர்கொண்டவன் செய்த உலக சிருஷ்டிப்பைப்பற்றிய சரித்திரத்துக்கும் பல வித்தியாசம் உண்டு. ஆனால் இவைகளில் வானம் நட்சத்திரம் மனுஷன் சிருஷ்டிக்கப்பட்டதைப்பற்றிய ஒற்றுமைகள் பல உண்டு. இவைகளையெல்லாம் சேர்த்துப் பார்த்தால் அக்காலத்தில் சேமியர் யாவரும் பூமி கடலில் தெப்பம்போல் வைக்கப்பட்ட ஒரு பெரிய சமபூமியென்றும், வானம் எல்லாவற்றையும் மூடும் கூரைபோன்ற ஒரு மண்டலம் என்றும், எல்லா நட்சத்திரங்களிலும் சூரியனும் சந்திரனும் பெரியவை என்றும் நினைத்தார்கள் எனத் தோன்றுகிறது.

இவைகளை அறிந்து நாம் ஆதியாகமத்தில் உள்ள சரித்திரத்தை எழுதினவர்கள் தங்களுக்குத் தெரிந்தமட்டும் உலக சிருஷ்டிப்பைப்பற்றிச் சொன்னாலும், அவர்களுக்கு உலக சிருஷ்டிப்பின் வரலாறு தெரிந்தது என்று சொல்ல முடியாது. வானசாஸ்திரம் பூகோள உறுப்பிலக்கண சாஸ்திரங்களில் தேறினவர்கள் இப்பூமி ஆறு நாட்களில் அல்ல, ஆறு யுகங்களிலுமல்ல, யுகா யுகங்களில் சிருஷ்டிக்கப்பட்டது என்றும், அது இப்போதிருக்கிற நிலைமைக்கு படிப்படியாய் வந்தது என்றும், உலகம் சிருஷ்டிக்கப்படுமுன் அநேக நட்சத்திரங்கள் உண்டாக்கப்பட்டது என்றும், சந்திரன் ஒரு பெரிய

நட்சத்திரமல்ல, ஆறின தீப்பொறியைப் போல் இருக்கிறது என்றும் ஆதியாகமத்தில் சொல்லியிருப்பதற்கு எதிரான நியாயத்தைச் சொல்லுகிறார்கள்.

இதினிமித்தம் ஆதியாகமம் சொல்வது வீண்கதைபோல் இருக்கிறது என்று சொல்லலாமா? அல்ல. முன்சொன்ன பாபிலோனியா கதையோடு ஆதியாகமத்தில் சொல்லியிருக்கிறதை நாம் ஒப்பிட்டால் எபிரெயர்கள் அடைந்த இரண்டு மூன்று முக்கியமான உண்மைகளை நாம் கவனிக்கவேண்டும். அவையாவன:

(i) பல தேவர்கள் இல்லை; ஒரே கடவுள்தான் உண்டு. அந்நியர்கள் வணங்கின பல தேவர்களில் உள்ள குற்றம் குறைகள் அவரில் இல்லை.

(ii) அவர் தமது நற்சித்தத்தை நிறைவேற்றும்படி உலகத்தையும் அதிலுள்ள யாவற்றையும் சிருஷ்டித்தார்.

(iii) அவர் மனிதர்களை நேசித்து அவர்கள் நன்மை செய்யும்படி விரும்பிக் கட்டளை கொடுத்தும், அவர் மனுஷரைச் சுயாதீன சித்தமுடையவர்களாய்ச் சிருஷ்டித்தார்.

(iv) ஒவ்வொரு மனுஷனும் உத்தமனாயிருக்கவேண்டும்.

(v) கடவுள் மனுஷனை நேசிக்கிறார். ஆனால் தீமை செய்கிறவனைத் தண்டிப்பார். தண்டனை செய்யும்போது அவனுக்கு ஜீவ வழியைக் காட்டுவார். இவைகளையும் இன்னும் நல்ல புத்தி போதனைகளையும் அறிந்து, இந்த அதிகாரங்களில் வானசாஸ்திரத்திற்கும் பூகோள உறுப்பிலக்கணத்திற்கும் ஆதாரம் இல்லாவிட்டாலும், இதிலே ஆவிக்குரிய சத்தியம் உண்டு என்று எபிரெயர்கள் அறிந்து அவர்கள் கற்பித்த உத்தம போதனையை அறிந்துகொள்வோமாக. ஆதி 1[1] சங் 96[5] 134[3] ஏசா 40[28] 42[5] 44[24] 48[13] எரே 10[11] அப் 4[24] 14[15] எபி 11[3].

**சிரேஷ்.** **Zeresh.** ஆமானின் மனைவி. எஸ்தர் 5[10].

**சிரேனியு.** **Cyrenius, Quirinius.** சிரேனியு சீரியா தேசத்தில் இரண்டுமுறை தேசாதிபதியாய் இருந்தான். கி-பி. 6-லு இவன் இரண்டாம்முறை தேசாதிபதியாய் இருந்து குடிமதிப்பு எழுதுவித்தான் என்பதற்கு அத்தாட்சி உண்டு. ஆனால் இந்தக் குடிமதிப்பு லூக்கா சுவிசேஷகன் சொன்ன 'முதலாம் குடிமதிப்பு' அல்ல, சிரேனியு எழுதின இரண்டாம் குடிமதிப்புதான். சிரேனியு எழுதுவித்த 'முதலாம் குடிமதிப்பு' இவன் முதலாம் முறை சீரியாவில் தேசாதிபதியாய் இருந்தபோது எழுதினது. எகிப்து தேசத்தில் ரோமர்கள் பதினாலு வருஷத்துக்கு ஒருமுறை குடிமதிப்பு எழுதினதுபோல் சீரியாவிலும் எழுதினார்கள் என்று நினைக்க இடம் உண்டு. இதின்படி சிரேனியு செய்த 'முதலாம் குடிமதிப்பு' ஏறக்குறைய கி-மு. 7-லு துவங்கியிருந்தது. அந்தக்காலத்தில் சிரேனியு சீரியா தேசத்துக்குச் சாதாரண தேசாதிபதியாய் அல்ல, சீரியா தேசத்தாருக்கும் சமீபத்திலுள்ள சிலிசியாநாட்டின் மலைத் தேசத்தாருக்கும் சண்டை உண்டானதினாலே இவன் ரோமராயனிடத்திலிருந்து அதிகாரம்பெற்றுச் சாதாரண தேசாதிபதியுடன் விசேஷித்த தேசாதிபதியாய் இருந்து, குடிமதிப்பு முதலியவற்றைப் பார்த்துவந்தான். இந்த 'முதலாம் குடிமதிப்பில்' யூதர்களைப் பிரியப்படுத்தித் தங்கள் முறையின்படி அவர்களில் ஒவ்வொருவனும் தான் பிறந்த ஊருக்குப் போய் அங்கேதான் கோத்திர அட்டவணையில் பெயர் எழுதும்படி ஏற்பாடு செய்தான். இரண்டாம்தடவை இவன் தேசாதிபதியாய் இருந்தபோது ஜனங்கள் தாங்கள் இருந்த இடங்களிலே அவர்கள் பெயர் எழுதும்படி இவன் ஏற்பாடு செய்ததினால் இது யூதர்கள் தங்கள் ஆசாரத்திற்கு விரோதமானது என்று பயந்து பெரிய கலகம் பண்ணினார்கள். லூக் 2[1] அப் 5[37].

**சிரேனே.** **Cyrene.** சிரேனே வட ஆப்பிரிக்காவில் லீபியாநாட்டின் தலைநகரி. இதிலுள்ள யூதர்களும் அலெக்சந்தரியா பட்டணத்து யூதர்களும் எருசலேம் பட்டணத்தில் தங்களுக்கு ஒரு ஜெப ஆலயம் கட்டினார்கள். இவர்களில் அநேகர் கிறிஸ்தவர்களானார்கள். மாற் 15[21] அப் 2[10] 6[9] 11[20] 13[1].

**சிரைக்கிறது.** **Shave.** லேவி 14[9] உபா 21[12] நியா 16[19] 2 சாமு 10[4] யோபு 1[20] 1 கொரி 11[6]. **கூந்தல், சவரம்** காண்க.

**சிலந்திப்பூச்சி.** **Spider.** யோபு 8[14] ஏசா 59[5]. இந்த இரண்டு வசனங்களில் இதின் வலை உபமானமாய்ச் சொல்லியிருக்கிறது. நீதி 30[28]-ல் சொல்லியிருக்கும் பதம் எபிரெய பாஷையில் சிலந்திப்பூச்சியை அல்ல, வீட்டுப்பல்லியைக் குறிக்கிறது.

**சிலம்பம்.** **Buffet.** 1 கொரி 9[26].

**சிலம்பு.** **Anklets.** ஏசா 3[18]. **ஆபரணம்** காண்க.

**சிலாம்புகள்.** **Scales.** அப் 9[18]-ல் சொல்லியிருக்கும் பரி. பவுலின் கண்களிலிருந்து விழுந்த 'மீன் செதில்கள்' என்பதற்குப் பதிலாக அவ்வசனத்துக்குப் பக்கத்தில் 'சிலாம்

புகள்' என்று மொழிபெயர்த்தவர்கள் எழுதியிருக்கிறார்கள். அவனுடைய கண்களை மூடியிருந்த படலத்தைக் குறிக்கும்படி இப்பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

**சிலிசியா. Cilicia.** சின்ன ஆசியாவின் தென்கிழக்கிலுள்ள நாடு. இதின் கிழக்குப் பாகம் சீரியாவின் எல்லையை அடுத்தது. சீரியாவிலும் சிலிசியாவிலும் உள்ள சபைகளுக்கு ஐக்கியம் இருந்தது. சர்வகலாசாலை இருந்த தர்சுபட்டணம் இதின் தலைநகரி. இதில் பரி. பவுல் மாணாக்கனாய் இருந்து படித்தான். அப் $6^{9}$ $15^{23}$ $21^{39}$ $22^{3}$ கலா $1^{21}$.



மூன்று விதமான சிலுவைகள்.

**சிலுவை. The Cross.**

1. **சிலுவைமரம்.** சிலுவை பாரசீகர், மேதியர், சீரியர், கர்தாகியர் இவர்கள் உபயோகித்த வாதைக் கருவி. ரோமர் சிலுவையைத் தண்டனைசெய்யும் கருவியாகக் கையாடினார்கள். இக்கருவிக்குப் பூர்வீகத்தில் பலபெயர்கள் இருந்தன. பிந்தினகாலத்திலே இதற்குக் குருக்ஸ் (*Crux*) என்னும் லத்தீன் பதம் பொதுவாய் வழங்கினது. சிலுவையில் நெடுமரம் குறுக்குமரம் என இரண்டு மரங்கள் உண்டு. பூமியில் நட்டிருக்கும் நெடுமரத்தின் நுனியின்மேலாகிலும் (T) அதற்குச் சற்றே கீழாகிலும் (✝) சிலுவைகளில் குறுக்குமரம் தைக்கப்படும். அந்திரேயாவின் சிலுவை X என்னும் அட்சரத்தைப் போன்றது. இந்தச் சிலுவை ஒன்றில் அப்போஸ்தலனாகிய அந்திரேயா அறையப்பட்டான் என்பது பாரம்பரை. ரோமாபுரியில் தரையிலுள்ள கெபிகளில் (*Catacombs*) வெட்டப்பட்ட கல்லறைகளின் சுவரில் இது வரையப்பட்டிருக்கிறது. இது கிரேக்க பாஷையில் கிறிஸ்து என்கிற பதத்தின் முதல் எழுத்தைக் குறிக்கிறது.

இந்தச் சிலுவை மரங்கள் இரண்டும் கரடுமுரடுள்ளவை. குறுக்குமரம் ஒரு ஆளின் இரண்டு கைகளையும் நீட்டி அதில் அவைகளை அறையத்தக்க நீளமானது. ஆண்டவருக்குத் தாகம் உண்டானபோது ஒருவன் அவர் குடிக்கிறதுக்குக் காடி நிறைந்த கடற்காளானை ஈசோப்புத்தண்டு ஒன்றில் மாட்டி அவர் வாய்க்குக் கிட்ட நீட்டினான் என்று யோவா $19^{29}$-ல் வாசிக்கிறோம். ஈசோப்புத்தண்டு 1-2 அடி நீளமானது. ஆதலால் நெடுமரம் ஆள் உயரத்துக்கு அவ்வளவு அடி உயரமானது என்பது விளங்கும். பெரும்பாலும் நெடுமரம் பூமிக்குள் நடப்பட்டபிறகு மரணத்தீர்ப்புக்குள்ளானவன் குறுக்குமரத்தை அந்த இடத்திற்குச் சுமந்துகொண்டு போவான். அங்கே இக்குறுக்குமரத்தை நெடுமரத்தோடு பதிப்பார்கள். பிற்பாடு குற்றவாளியின் கைகளையும் கால்களையும் கயிறுகளால் சிலுவையோடு சேர்த்துக் கட்டுவார்கள் அல்லது ஆணிகளால் அறைவார்கள்.

கால் நிற்கிறதுக்கு நெடுமரத்தில் ஒரு கட்டை அமைக்கப்பட்டிருந்ததோ என்பது சந்தேகம். சில சமயங்களில் திரேகத்தைத் தாங்குகிறதற்கு நட்டமரத்தில் ஒரு கட்டை தைத்திருக்கும்.

மரணத்தீர்ப்புக் குள்ளானவனைச் சிலுவையில் அறைவதற்குக் கொண்டுபோகும்போது அவன் செய்த குற்றம் இன்னதென்று காட்டுகிற ஒரு எழுத்துப் பலகை (*Titulus*) அவன் கழுத்தைச் சுற்றிப் போட்டிருக்கும். இப்பலகை (மத் $27^{37}$ மாற் $15^{26}$ லூக் $23^{38}$ யோவா $19^{29}$) இயேசுவின் சிரசுக்குமேல் பதிக்கப்பட்டதால் அவரை அறைந்த சிலுவை நமக்குத் தெரிந்த குருசுபோல இருந்ததென்பது நிசம்.

2. **சிலுவைஎன்பதுக்குரிய ஞானார்த்தம்.**

(*a*) கிறிஸ்து சிலுவையில் தொங்கி இறந்தது அவர் நடப்பித்த இரட்சணியகிரியையில் எல்லாவற்றிலும் முக்கியமானதால் (யோவா $3^{14}$) இரட்சிப்பைக் கூறும் சுவிசேஷம் எல்லாம் சிலுவையைப்பற்றிய சுவிசேஷம் என்னப்பட்டிருக்கிறது. 1 கொரி $1^{18}$.

(*b*) அதுவுமன்றி சிலுவை அதேகாரணத்தால் கிறிஸ்து நமக்கு உண்டுபண்ணின இரட்சிப்புக்கும் அவர் ஏற்படுத்தின கிறிஸ்தவ மார்க்கத்துக்கும் அடையாளமே.

(*c*) மேலும் சிலுவை கிறிஸ்து இரட்சணிய கிரியையினிமித்தம் பட்டனுபவித்த பாடுகளுக்கும் மரணத்துக்கும் அடையாளமானதால் அது கிறிஸ்தவனுக்கு வரும் எந்தத் துன்பத்தையும் அல்ல, இயேசு இரட்சகரை அவன் பின்செல்வதினாலும் அவரைக் குறித்து அறிக்கையிடுவதினாலும் வரும் துன்பங்களையும் அவமானத்தையும் குறிக்கிறது.

3. **சிலுவையில் அறைதல்.** சிலுவையில் அறைதல் மரணத்தீர்ப்புக்குள்ளானவனை மிக

வும் அவமானப்படுத்துவதும் கரோ வேதனைப் படுத்துவதுமேயாம். உபா 21[23] கலா 3[13].

செத்தவர்களையும் அவமானத்துக்காக சிலுவையில் அறைவது உண்டு. கொடூர வேதனையோடு மனுஷர்களைக் கொல்வது யூதர்களுக்கு அருவருப்பாகவே இருந்ததால் 'தூக்கிப்போடுதல்' என்னும் எபிரெய பதம் சத்தியவேதத்தில் முந்திக் கொல்லப்பட்டவர்களினது பிரேதங்களைப் பின்பு எச்சரிப்புக்காகவும் அவமானத்துக்காகவும் ஒரு மரத்திலாவது தூக்குமரத்திலாவது தூக்கிப்போடுதலைக் குறிக்கும் என்பதைப்பற்றிச் சந்தேகமில்லை. ஆதி 40[19] யோசு 10[26] உபா 21[22]. பிந்தின காலத்தில் யூதர்கள் பெனிக்கியர்களைப்போல் இவ்வாறே குற்றவாளிகளையும் சத்துருக்களையும் கொல்லுவார்கள்.

ரோமர், கர்தாகியர் செய்ததுபோல் யூதர்கள் முதலில் அடிமைகளைமாத்திரம் சிலுவையில் அறைந்துவந்தும் பின்பு சுயாதீன ஜனங்களையும் சிலுவையில் அறைந்தார்கள். ஆயினும் சிலுவையில் அறையப்பட்டவர்கள் பெரும்பாலும் தாழ்ந்த ஜனங்களா யிருந்தார்கள். கொலை, கலகம், திருட்டு, வஞ்சனை ஆகிய இவைகள் சிலுவையில் அறைவதற்கு ஏதுவாயின. அறையுமுன் மரணத்தீர்ப்புக்குள்ளானவனை அடிப்பது ரோமருக்குள் வழக்கம். மரணத்தீர்ப்புக்குள்ளானவன் அடிமையாயிருந்தால் வாரினாலும் சுயாதீனமுள்ளவனாயிருந்தால் தடியினாலும் அடிக்கப்படுவான்.

பல ஊர்களில் சிலுவைகளை நடுவதற்கு நியமிக்கப்பட்ட இடம் ஒன்று இருந்தது. அவ்விடம் ஊருக்கு வெளியே எங்கும் காண்கிற மேடுகளின்மேலும் ஜனங்கள் நடக்கும் வழி ஓரத்திலும் இருந்தது. மரணத்தீர்ப்புக்குள்ளானவனுடைய வஸ்திரம் சிலுவையில் அறையும் சேவகருக்குச் சொந்தம்.

கொடூர வேதனையினாலும் இரத்தஞ்சிந்துதலினாலும் காயங்களால் உண்டான காய்ச்சலினாலும் அறையப்பட்டவர்கள் சீக்கிரத்தில் இறந்தது ஆச்சரியமல்ல. ஆயினும் பலர் இரண்டு மூன்று நாட்களாக அவஸ்தைப்பட்டபின்மாத்திரம் இறப்பார்கள். அப்படி சிலுவையில் தொங்கினவர்கள் வெகுநேரம் அவஸ்தைப்படாதபடிக்குக் காவலாளர் இவர்களைக் கால்களை முறித்தாவது ஈட்டியினால் குத்தியாவது கொன்று பிரேதங்களைக் காட்டுமிருகங்களுக்கு இரையாக விட்டார்கள். நியாயப்பிரமாணத்தின்படி (உபா 21[22]) சிலுவையில் அறையப்பட்டவர்களின் பிரேதத்தை இரவில் தொங்கவிடுதல் கூடாதகாரியமானதினாலும், ஓய்வுநாள் சமீபித்ததினாலும் யூதர்கள் சாயங்காலத்தில் சிலுவையில் தொங்கின இயேசுநாதருக்கும் இரண்டு குற்றவாளிகளுக்கும் கால்களை முறித்துக் கொல்லும்படி கேட்டுக்கொண்டார்கள். சிலுவையில் தொங்கினவர்களுக்கு மயக்கம் உண்டாகும்படிக்கு மருந்து கலந்த பானம் கொடுப்பது யூதர்களுக்கு வழக்கமாய் இருந்தது. இயேசு இதைக் குடிக்கவில்லை. மத் 27[34].

நாலாவது நூற்றாண்டுவரையில் சிலுவையில் அறைதல் ஆகிய தண்டனை வழங்கி வந்தது.

4. **சிலுவை வரைதல்** (போடுதல்). கிறிஸ்தவர்கள் சிலுவை வரைதல் இரண்டாம் நூற்றாண்டில் வழங்கினது என்பது நிச்சயம். வெளியே போகும்போதும், உள்ளே வரும்போதும், துணிகளை உடுத்தும்போதும், குளித்து முழுகும்போதும், சாப்பிடும்போதும், விளக்குகளைக் கொளுத்தும்போதும், படுக்கும்போதும், உட்காரும்போதும் நெற்றியில் சிலுவை வரைதல் எங்களுக்கு வழக்கம் என்றும், இவ்வழக்கம் முந்தி நெடுநாள் இருந்தது என்றும் தெர்த்துல்லியான் (*Tertullian*. கி-பி. 160-230) எழுதிவைத்தான். சிலுவை வரைதல் அப்போஸ்தலர் ஏற்படுத்தின ஒரு முறைமை என்று பசிலியு (*Basil*. கி-பி. 329-379) சாதிக்கிறான். கொன்ஸ்தந்தீனுக்குப் பிந்தினகாலத்தில் இம்முறைமை அதிகமாய் வழங்கத்தொடங்கிற்று. சாப்பிடுமுன் உணவின்மேல் சிலுவை வரைந்துவந்தார்கள். சண்டைக்குப் போகும் போர்ச்சேவகன் நெற்றியில் சிலுவை வரைவான். ஆராதனையில் ஜெபஞ் செய்யும்போதும், சுவிசேஷ வாக்கியத்தை வாசிக்கும்போதும், பிரசங்கம் தொடங்குவதற்கு முன்னும், எந்தத் திருப்பெயரையாவது சொல்லும்போதும், குருவாகிலும் சபையாராகிலும் சிலுவை வரைந்துவந்தார்கள். திரு ஞானஸ்நானம் பெற்றுக்கொள்பவன் முழுகுமுன் அவனுடைய மார்பிலும், நெற்றியிலும் சிலுவை வரையப்பட்டது. இப்படி மற்ற ஆராதனை முறைமைகளிலும் சிலுவை வரைதல் வழங்கிற்று. ரோமான் சபையில் மீசா (*Mass*) என்னும் ஆராதனையில் சிலுவை அடிக்கடி வரைதல் முறைமை. சீர்திருத்த சபையில் சிலுவை வரைதல் அரிது. சில இங்கிலீஷ் சபைகளிலும், பல லுத்தரன் சபைகளிலும், திரு ஞானஸ்நான முறைமையிலும், திரு இராப்போசன முறைமையிலும், ஆசீர்வாதம் கூறும்போதும் இது வரையப்படும். இதை வரைகிறவர்கள் கிறிஸ்தவமார்க்கத்துக்கும், ஞான திரவியங்களுக்கும் இயேசுவின் சிலுவை ஊற்றும் காரணமும் என்று சபையாருக்கு நினைப்பூட்டுவ

தற்கு ஆராதனையில் சிலுவை வரைதல் அடையாளமே என்று சொல்லுவார்கள்.

5. **சிலுவை வணக்கம்.** கிறிஸ்தவ மார்க்கம் பரம்பினபின் கோவில்களிலும், கோவில்களுக்கு முன்பாகவும், பீடங்களின் மேலும், கல்லறைத் தோட்டங்களிலும், வழி ஓரத்திலும் சிலுவை வைப்பது வழக்கமாயிற்று. சிலுவைகள் இயேசுகிறிஸ்து நமக்காகப் பட்ட பாடுகளேயும், அடைந்த மாணத்தையும் நினைப்பூட்டுவதற்குத்தான் முதலில் வைத்திருந்தும், பிந்தினகாலத்தில் அந்தச் சிலுவைகளே வணக்கத்துக்குப் பொருளாயின. எத்தனைக்கு அதிகமாய்ச் சபையார்கள் சிலுவைகளை வணங்கினார்களோ, அத்தனைக்கு அதிகமாய்க் கிறிஸ்துவை மறந்துவிட்டார்கள். இக்காரணத்தால் சீர்திருந்தின திருச்சபையில் எங்கே வீண்பக்தியெல்லாம் குலைந்துபோனதோ அங்கே சிலுவை வணக்கமும் அகன்றுபோனது. சுவிசேஷ கிறிஸ்தவர்கள் கோவில்களிலும் கல்லறைத் தோட்டங்களிலும் சிலுவையை வைப்பதால் சிலுவையின் அடையாளம் அவர்களுக்கு கிறிஸ்துவினால் உண்டான இரட்சிப்பையும் நித்திய ஜீவனின்மேலுண்டான நம்பிக்கையையும் குறிக்கும் அருமையான அடையாளத்தைத்தவிர வேறல்ல.

**சிலை.** **Image.** யாத் 23[24] 34[13] லேவி 26[30] எண் 33[52] உபா 7[5] 16[22] நியா 4[18] 1 இரா 14[23] 2 இரா 3[2] 17[10] எரே 43[13] தானி 2[31] 3[1] ஓசி 3[4] 10[1]. **சாயல், சுரூபம்,** விக்கிரகம் காண்க.

**சிலை, சுரூபம், சொரூபம், விக்கிரகம்.** **Image.** ஆதியில் சேமியர்கள் சிலைகளை வையாமல் ஆராதனை செய்தும் அவர்கள் கற்றூண்களையும் 'அசேரா' என்னும் மரஸ்தம்பங்களையும் வைத்தார்கள். பிறகு சித்திர வேலையான சிலைகளையும் சொரூபங்களையும் செய்தார்கள். 'தேராபீம்' என்பவைகள் பிரயாணஞ் செய்யும்போது லேசாய்க் கொண்டு போகத்தக்க சிறு விக்கிரகங்களாய் இருந்தன. ஆதி 31[19]. விக்கிரகங்களைக் குறிக்கும் பதினைந்து பதங்கள் பழைய ஏற்பாட்டில் உண்டு. இவைகள் சித்திர வேலையுள்ள விக்கிரகங்கள், பொன் முதலிய லோகத்தினால் வார்க்கப்பட்ட விக்கிரகங்கள் முதலியவற்றைக் குறிக்கின்றன. சில விக்கிரகங்கள் கன்றுக்குட்டி, சர்ப்பம் இவைகளின் சாயலாயும் மனுஷரின் சாயலாயும் இருந்தன. எசே 26[17] ஏசா 44[13] சங் 115[4] யாத் 32[8] 1 இரா 12[28] அப் 19[35]. இவைகளைக் களிமண், மரம், வெள்ளி, பொன் இவைகளால் செய்தார்கள். ஏசா 44[15] ஓசி 8[4]. இவைகளுக்கு வர்ணம் பூசி, உடுத்தி, சில சமயங்களில் முடிசூட்டி, தேவாலயங்களில் இவைகள் விழாதபடி கட்டி வைத்து, இவைகளுக்கு ஆகாரம் படைத்து, பலி செலுத்தி, தூபங்காட்டி, முத்தஞ்செய்து ஊர்கோலம் கொண்டுபோவார்கள். நியா 17[5] ஏசா 41[7] 44[15] 46[7] 65[11] எரே 10[4-9] ஓசி 8[4] 13[2]. **அசேரா, சுரூபம், சாயல், விக்கிரகம், விக்கிரகாராதனை** காண்க.

**சில்கி.** **Shilhi.** 1 இரா 22[42].

**சில்சா.** **Shilshah.** 1 நாளா 7[37].

**சில்தாய், சில்த்தாய்.** **Zillethai.**

1. 1 நாளா 8[20].
2. 1 நாளா 12[20].

**சில்த்தாய்.** **Zillethai.** **சில்தாய்** காண்க.

**சில்லா.** **Silla.** 2 இரா 12[20].

**சில்லாள்.** **Zillah.** ['நிழல்' அல்லது 'இருள்']. லாமேக்கின் இரண்டு மனைவிகளில் ஒருத்தி. ஆதி 4[19].

**சில்லீம்.** **Shilhim.** யோசு 15[32]. = சாராயிம் 2.

**சில்லேம்.** **Shillem.** = சல்லூம் 7. 1 நாளா 7[13] ஆதி 46[24].

**சில்வானு.** **Silvanus.** **சீலா** காண்க.

**சிவந்தசமுத்திரம், செங்கடல்.** **The Red Sea.** தெற்கிலிருந்து வடக்கே ஆயிரம் மைல் தூரம் ஆப்பிரிக்காவுக்கும் அராபியாவுக்கும் இடையிலிருக்கும் ஒடுக்கமான கடல். இது வடக்கே சீனாய்க்குடாநாட்டினால் இரண்டு குடாக்கடலாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து பிரயாணஞ் செய்தபோது இந்த இரண்டு குடாக்கடல்களில் மேற்குக் குடாக்கடலைக் கடந்துபோனார்கள். ஆனால் அவர்கள் கடந்துபோன இடம் நிதானமாய்ச் சொல்லமுடியாது. யாத் 14 அதி. இந்தக் கடல் சிவப்பு என்று சொல்வதற்குக் காரணம் தெரியாது. இதில் கிழக்கிலுள்ள குடாக்கடலின் வடபாகத்தில் ஏலாத்து, எசியோன் கேபேர் என்னும் துறைமுகங்கள் இருந்தன. இவைகள் எருசலேமுக்குத் தெற்கே 80 மைல் தூரத்திலிருந்தினால் யூத ராஜாக்கள் அனுப்பும் கப்பல்கள் இவைகளிலிருந்து ஒப்பீருக்குப் போகும். யாத் 10[19] 15[4] 23[31] எண் 21[4] நியா 11[16] 1 இரா 9[26] 22[48].

**சிவப்பு.** **Scarlet Red.** ஆதி 25[30] 38[28] 49[12] யாத் 25[4] 28[6] 35[35] 39[1] லேவி 14[51] யோசு 2[17] 2 இரா 3[22] எஸ்தர் 1[6] உன். பா 4[3] ஏசா 1[18] 63[2] சக 1[8] 6[2] மத் 27[28] எபி 9[19] வெளி 6[4] 12[3] 17[3] 18[16].



சிவிங்கி.

**சிவிங்கி, சிறுத்தை.** Leopard. சிவிங்கி யைப்பற்றிச் சொல்லியிருப்பவை: இதின் தோலிலுள்ள புள்ளிகள் (எரே $5^6$); மூர்க்கம் (ஓசி $13^7$); வேகம் (ஆப $1^8$); முரட்டுத்தனம் (ஏசா $11^6$).

சில ஊர்களின் பெயர்கள் சிவிங்கிகள் இருக்கும் இடத்தைக் குறிக்கிறதினாலே சிவிங்கிகள் கானான் தேசத்தில் அநேகம் இருந்தன என்று நாம் அறிந்துகொள்ள லாம். உ-ம். நிம்ரா, நிம்ரீம். எண் $32^3$ உன். பா $4^8$ ஏசா $15^6$ எரே $48^{34}$.

'புலி' என்பதும் 'சிறுத்தை' என்பதும் சிவிங்கியைக் குறிக்கலாம். ஏசா $11^6$ வெளி $13^2$. இந்த மிருகம் புலியிலும் சிறிதாயிருக் கும். ஆனால் பாய்ந்து அடித்துக் கொல்வ தில் புலியைப்பார்க்கிலும் பயங்கரமானது. இதின் மஞ்சள் வர்ணமான முதுகில் கறுப் புப் புள்ளிகள் இருப்பதினால் இது அழ குள்ளதாய்த் தோன்றும்.

**சிறகு.** Wings, Feathers. சங் $55^6$ $68^{13}$ $91^4$ நீதி $32^5$ வெளி $4^8$ $12^{14}$.

**சிறுத்தை.** Cheetah. சிவிங்கி காண்க.

**சிறுமலை.** Mizar. சங் $42^6$-ல் 'சிறு மலை' குறிக்கும் எபிரெய பொதுப்பெயர் ஆகிய 'மித்சகார்' என்பது இடத்தின் பெய ராய் இருந்து எர்மோன் மலையின் சிகரங் களில் ஒன்றாய்க் குறிக்கலாம்.

**சிறை.** Captive.

1. யுத்தத்தில் அகப்பட்ட சிறை. ஆதி $31^{26}$ உபா $21^{11}$ நியா $5^{12}$ 2 இரா $5^2$ $24^{16}$ 2 நாளா $28^{11}$ ஏசா $61^1$ எரே $13^{17}$ $52^{15}$ சங் $68^{18}$ $85^1$ எசே $16^{53}$ யோவே $3^1$ ஆமோ $9^{14}$ ஆப $1^9$.

2. உவமானமாய்ச் சொன்ன சிறை. ரோ $7^{23}$ 2 கொரி $10^5$ எபே $4^8$ வெளி $13^{10}$.

**சிறைச்சாலை.** Prison. காவல் காண்க.

**சிறையிருப்பு.** Captivity. கி-மு. 597-ஆம் வருஷத்திலும், 586-ஆம் வருஷத்திலும் நேபுகாத்நேச் சார் இரண்டு தடவைகளில் யூதேயாவிலி ருந்து பாபிலோனியாவுக்கு மொத்தமாக ஏறக்குறைய அரைலட்சம் யூதர்களைக் கொண்டுபோனான். இவர்களில் தனக்கு விரோதமாய்க் கலகம் பண்ணக்கூடிய சில ரைச் சிறைச்சாலையில் போட்டுச் சிலரைத் தன் அரமனையில் பிரதானிகளாய் வைத் தான். சாதாரணமான ஜனங்களைத் தன் ராஜ்யத்திலுள்ள சில நாடுகளில் குடியேற்றி அவர்கள் தங்களுக்கு வீடுகள் கட்டவும், பயிர் வியாபாரம் செய்யவும், தங்கள் ஆசா ரத்தின்படி ஆராதனை செய்யவும், தாங்கள் ஏற்படுத்தின மூப்பர்களால் நடத்தப்படவும் அவர்களுக்கு உத்தரவு கொடுத்தான். இதி னால் பாழாய்ப்போன எருசலேமிலே மீதி யாய் இருந்த யூதர்கள் அதிக தரித்திரரான போது சிறையிலிருந்தவர்கள் நல்ல நிலைமை யில் அதிக விருத்தி யடைந்தார்கள். எரே $29^5$ $41^5$ எசே $3^{15}$ $8^1$ $20^1$ $24^{18}$. சிறையிருப்பி லிருந்த யூதர்கள் முன்போலத் தேவாலயத் திலே சடங்காசாரங்களை நடத்தக்கூடாததி னால், அவர்கள் தாங்கள் பக்திக்குரியவித மாய்க் கடவுளை வணங்கவேண்டும் என்பதை அறிந்துகொண்டார்கள். சிறையிருப்பிலே அவர்களுக்கு ராஜா இல்லாததினால் தங் களை ஆளும்படிக்குப் புதிதாய்த் தாவீதின் ராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்கு வரப்போகிற மேசியாவைக் குறித்து அதிக வாஞ்சையோடு காத்திருந்தார்கள். இக்காலத்தில் அவர்கள் நியாயப்பிரமாணப் புஸ்தகங்களையும் சாஸ்தி ரப் புஸ்தகங்களையும் முன்னிருந்த தீர்க்க தரிசிகளின் ஆகமங்களையும் அதிக கவலை யோடு தேடி ஆராய்ந்து திருத்தஞ்செய்து பிர சுரம் செய்தார்கள். இக்காலத்திலும் எசேக்கி யேல், 'இரண்டாம் ஏசாயா' ஆகிய தீர்க்கதரி சிகள் ஜனங்களின் பயபக்திக்குத் தூண்டுதலா கப் போதனை செய்தார்கள். கி-மு. 539-ஆம் கோரேஸ் பாபிலோனியாவை ஜெயித்த போது சிறையிலிருந்த யூதர்களும் மற்ற யூதர்களும் தங்கள் தங்கள் தேசங்களுக்குப் போகும்படி உத்தரவு கொடுத்தான். இந்த உத்தரவின்படி செருபாபேல், எஸ்றா, நெகேமியா என்பவர்களால் நடத்தப்பட்ட வர்கள் எருசலேமுக்குத் திரும்பிப் போ னார்கள். ஆனால் திரும்பிப் போனவர்கள் அநேகம்பேர் அல்ல, பாபிலோனியாவிலே நின்றுவிட்டவர்களே அநேகர். பாபிலோனி யாவில் யூதர்கள் கி-பி. 1000-ஆம் மட்டும் ஆயிரத்தைஞ்ஞூறு வருஷக்காலமாக அத் தேசத்திலே குடியிருந்தார்கள். அவர்களில் நியாயசாஸ்திரிகள் அநேகர் யூதருக்குள் எங்கும் பெயர் பிரஸ்தாபமுள்ளவர்களாய் இருந்தார்கள். கி-பி. 1000-ஆம் முதல் அத் தேசத்தில் ஆளுகை செய்த அராபியர்கள்

தங்களுக்குச் செய்த தொந்தரவினிமித்தம் யூதர்கள் காலத்துக்குக் காலம் அத்தேசத்தை விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.

**சிற்பாசாரிகள்.** Stone-squarers. இவர்கள் கல்தச்சர்கள் வெட்டின கற்களில் சித்திரவேலை செய்கிறவர்கள். 1 இரா $5^{18}$ ஆமோ $5^{11}$.

**சினம்.** Anger. சங் $78^{49}$ எபே $7^{19}$. **கோபம்** காண்க.

**சிநேகம்.** Love, Friendship. எரே $31^{3}$ நீதி $15^{17}$ யாக் $4^{4}$. **அன்பு, சகோதர சிநேகம்** காண்க.

**சிநேகிதன்.**

1. அன்பன். 2 சாமு $19^{5}$ நீதி $14^{19}$ $17^{17}$ $18^{24}$ $27^{6}$ யோபு $2^{11}$ மீகா $7^{5}$ மத் $20^{13}$ $22^{12}$ $26^{50}$ லூக் $7^{6}$ யோவா $11^{11}$.

2. உவமானமாய். லூக் $16^{9}$ யோவா $15^{13}$ யாக் $4^{4}$.

3. 'தேவனுடைய சிநேகிதன்.' யாக் $2^{23}$ 2 நாளா $20^{7}$ ஏசா $41^{8}$. **அன்பு, சகோதர சிநேகம்** காண்க.

**சினேயார்.** Shinar. **சிநேயார்** காண்க.

## சீ.

**சீகா.** Zir, Ziha.

1. 1 நாளா $5^{13}$.
2. எஸ்றா $2^{43}$.

**சீகார்.** Sychar. தென் சமாரியா நாட்டிலுள்ள ஒரு ஊர். சிலர் நினைக்கிறபடி சீகேம் என்ற ஊரும் இதுவும் ஒன்றுதான். ஆனால் வேதசாஸ்திரிகள் இவைகள் இரண்டும் வெவ்வேறான ஊர்கள் என்று நினைக்கிறார்கள். இதற்குத் தெற்கே இரண்டுமைல் தூரத்தில் இந்த இரண்டு ஊர்களிலிருந்து யாக்கோபுடைய கிணறு இருந்தது. இது எருசலேமிலிருந்து ஏறக்குறைய 35 மைல் நேர் வடக்கே உள்ளது. யோவா $4^{5}$.

**சீகேம்.** Shechem. இது யாக்கோபு சிலகாலம் இருந்த இடம். இது எருசலேமுக்கு 35 மைல் நேர் வடக்கே இருந்தது. இதற்குத் தென் கிழக்கே யாக்கோபின் கிணறு இருந்தது. ஆதி $33^{18}$ யோவா $4^{12}$. இதற்குச் சமீபமாய்க் கருவாலிமரத்தின் அடியில் யாக்கோபு தன் குடும்பத்தார் வணங்கின சிலைகளைப் புதைத்தான். ஆதி $35^{4}$. இவ்விடத்தில் யோசுவா மூப்பர்களுக்குக் கடைசிப் பிரசங்கம் செய்தான். யோசு $24^{1}$. இது அடைக்கலப்பட்டணங்களில் ஒன்று. யோசு $20^{7}$. இஸ்ரவேலர் இவ்வூரை முழுதும் ஜெயிக்கவில்லை. இதில் பாகால் பேரீத் என்னும் தேவதையின் ஆலயம் இருந்தது. நியா $9^{4}$. யெரொபெயாம் இங்கே கோட்டை கட்டினான். 1 இரா $12^{1, 25}$. இதற்குப் பிறகு இதைப்பற்றிய விசேஷம் ஒன்றுமில்லை. எரே $41^{5}$. தற்காலத்தில் இது ஒரு பெரிய ஊராய் இருக்கிறது.

**சீகேம், செகேம், சேகேம்.** Shechem.

1. சீகேம் ஊரை ஸ்தாபித்தவன். ஆதி $33^{19}$ $34^{2}$.

2. =செகேம், சேகேம். மனாசே கோத்திரத்தில் ஒரு குடும்பம். எண் $26^{31}$ யோசு $17^{2}$.

**சீகோர்.** Shihor. இப்பதம் எகிப்து அல்லது எகிப்து நதியைக் குறிக்கிறது. ஏசா $23^{3}$ எரே $2^{18}$. அல்லது கானானுக்கும் எகிப்துக்கும் இடையிலுள்ள எல்லையைக் குறிக்கிறது. யோசு $13^{2}$ 1 நாளா $13^{5}$.

**சீகோர்-லிப்னாத்.** Shihor-Libnath. ஆசேர் கோத்திரத்தின் எல்லையிலிருந்த ஒரு ஊர். யோசு $19^{26}$.

**சீகோன்.** Shion. இது நாசரேத்து ஊருக்குக் கிழக்கே மூன்று மைல் தூரம் இசக்காரிலிருந்த ஒரு ஊர். யோசு $19^{19}$.

**சீகோன்.** Sihon. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் பிரவேசித்தபோது யோர்தான் நதிக்கும் சாக்கடலுக்கும் கிழக்கேயுள்ள எமோரியநாட்டின் ராஜா. இஸ்ரவேலர் வனாந்தரத்திலிருந்து கானான் தேசத்திற்குப் போனபோது அவர்கள் தன் தேசத்தின் வழியாய்ப் பிரயாணஞ்செய்ய அவர்களுக்கு இவன் இடங்கொடாததினால், அவர்கள் இவனையும் பாசான் தேசத்து ராஜாவாகிய ஓகுவையும் ஜெயித்து, இவனுடைய தலைநகரியாகிய எஸ்போனைப் பிடித்து, இந்த இரண்டு ராஜாக்களின் தேசங்களை ரூபன், காத், மனாசே என்னும் கோத்திரங்களுக்கு இருப்பிடமாக்கினார்கள். எண் $21^{21}$ உபா $2^{26}$ நியா $11^{19}$ நெகே $9^{22}$ சங் $135^{11}$ $136^{19}$.

எரே $48^{45}$-ல் 'சீயோன்' என்பது எஸ்போனைக் குறிக்கிறது.

**சீசா.** Shisha, Shiza, Ziza.

1. =சவிஷா 1 நாளா $18^{16}$ 1 இரா $4^{3}$.
2. 1 நாளா $11^{42}$.
3. 1 நாளா $4^{37}$.
4. 2 நாளா $11^{20}$.

**சீஷன்.** Disciple. இந்தியாவில் குருவுக்குச் சீஷர் இருப்பதுபோல், பூர்வகாலத்தில் எபிரெய சாஸ்திரிகளுக்கும், கிரேக்க தத்துவ ஞானிகளுக்கும் சீஷர்கள் இருந்தார்கள். இவர்கள் தங்கள் குருமாருக்குப் பணி

விடைசெய்து, அவர்கள் போதித்தவைகளைக் கற்றுக்கொண்டு, பிற்காலங்களில் அவைகளை மற்றவர்களுக்குப் போதித்து வந்தார்கள். இந்தச் சீஷர்களிற் சிலர் தங்கள் குருமார் போகும் இடமெல்லாம் அவர்களோடேகூடப் போவது வழக்கம். மத் $14^{12}$ மாற் $2^{18}$. இயேசுவின் சீஷர்கள் இரண்டுவகையாய் இருந்தார்கள்.

(i) இயேசுவை மேசியா என்று நம்பினவர்கள். இவர்கள் எல்லாரும் வழக்கமாய்த் தங்கள் சொந்த ஊர்களில் வசித்தார்கள். லூக் $6^{13}$ $19^{37}$.

(ii) பன்னிரண்டு அப்போஸ்தலராகிய சீஷர்கள். இவர்கள் தங்கள் ஊர்களையும் தொழில் துறைகளையும் விட்டு இயேசு போன இடமெல்லாம் அவருடனே கூடப் போனார்கள். இவர்கள் ஜனங்கள் இயேசுவுக்குக் கொடுத்தகாணிக்கைகளை வாங்குவதோடு, அவருக்குப் பணிவிடையும் செய்தார்கள். இவர்களும் இயேசுவும் ஒருவரிலொருவர் அன்புகூர்ந்ததினால் இவர்கள் அவருடைய ஊழியத்தில் அவருக்கு உதவிபுரிந்தார்கள். இயேசு பரமண்டலஞ் சென்ற பிற்பாடு இவர்கள் பல தேசங்களுக்கும் போய்ச் சுவிசேஷத்தைப் பிரபலியப்படுத்தும்படி உபதேசித்துவந்தார்கள். மத் $10^{1}$ $12^{1}$ $15^{23.32}$ யோவா $16^{17}$. **அப்போஸ்தலர்** காண்க.

**சீஷாக்.** Shishak. யெரொபெயாமுக்கு அடைக்கலங்கொடுத்து ஏறக்குறைய கி-மு. 932-ல் எருசலேமைக் கொள்ளையிட்ட எகிப்திய அரசன். 1 இரா $11^{40}$ $14^{25}$. இவனைப்பற்றி முன்னோர்கள் பின்வரும் கதையைச் சொன்னார்கள்: இவன் அநேக ஊர்களைப் பிடித்து, அநேக ராஜாக்களைச் சிறையாக்கி, அவர்களைத் தன் இரதத்தை இழுக்கும்படி செய்தான். இப்படி இவன் இரதத்தை இழுத்த ராஜாக்களி லொருவன் சக்கரத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். சீஷாக் என்பவன் இதைக் கண்டு ஏன் சக்கரத்தை உற்றுப்பார்க்கிறாய் என்றான். அதற்கு அவன், இந்தச் சக்கரம் சுழலுகிற வண்ணமாகவே உலகச்செல்வம் சுழலுகிறது என்றான்.

"துகடீர் பெருஞ்செல்வந்
தோன்றியக் காற்றொட்டுப்
பகடு நடந்தகூழ்
பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு
நில்லாது செல்வஞ்
சகடக்காற் போல வரும்." (நாலடியார்.)

செல்வமானது யாவரிடத்தும் நடுவு நிலைமையினை யுடையதாய் நிலைபெற்று நிற்காமல் வண்டியுருளைப்போலக் கீழ்மேலாகச் சுழன்றுகொண்டே செல்லுமாதலால், ஒருவனுக்குச் செல்வம் பெரிதாகத் தோன்றுமானால், தோன்றிய காலந்தொடங்கி எத்தொழிலாற் கிடைத்த அன்னத்தைப் பல விருந்தாளிகளுடனே கூடிக்கொண்டு உண்ணக் கடவன் என்பதாம்.

**சீட்டு.** Lot. சீட்டுப்போடுகிறது இஸ்ரவேலருக்கு வழக்கம். **ஊரீயம்** காண்க.

**சீட்டு.** Bill. வாங்கின பொருளுக்கும் பணத்திற்கும் விற்கிறவனுக்கு எழுதிக்கொடுக்கும் மொத்தக்கணக்கு. லூக் $16^{6}$. **கடன்** காண்க.

**சீதளம்.** Cold. ஆதி $8^{22}$. **குளிர்** காண்க.

**சீதோன்.** Sidon, Zidon. தீரு பட்டணத்துக்கு ஏறக்குறைய 20 மைல் வடக்கே சீரியாவின் மேற்குக்கரையிலுள்ள ஒரு துறைமுகம். இது பெனிக்கியரின் தலைநகரி. ஆதி $10^{15}$ யோசு $11^{8}$. சீதோனியர் கப்பல் ஓட்டுவதிலும், நெசவுவேலை லோகத்தினால் சித்திரவேலை செய்வதிலும், அதிக திறமையுடையவர்களாய் இருந்ததினால் அவர்கள் தேசம் அதிக கீர்த்திபெற்றிருந்தது. இஸ்ரவேலர் கானானுக்கு வந்தபோது சீதோனியரை ஜெயிக்கவில்லை. நியா $10^{12}$. சாலொமோனின்காலத்தில் சீதோனைப்பார்க்கிலும் தீரு அதிக மேன்மையுற்றிருந்தது. அசீரியர்கள் சீதோனை ஜெயித்தார்கள். பிற்காலத்தில் சீதோனியர்கள் நேபுகாத்நேச்சாருக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினார்கள். எரே $27^{3}$. யூதர்கள் அக்காலத்தில் இவர்களோடு சேர்ந்தபோது அந்த ராஜா எருசலேமுக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்தபிறகு சீதோனை ஜெயித்தான். எசே $28^{21}$.

பிற்காலங்களில் அநேக ராஜாக்கள் சீதோனை ஜெயித்து அதை அரசாண்டார்கள். கடைசியில் ரோமர்கள் அதைத் தங்கள் ராஜ்யத்தோடு இணைத்தார்கள். இயேசுவின் காலத்தில் இது மறுபடியும் கீர்த்தியடைந்தது. இயேசு ஒருவேளை இப்பட்டணத்துக்குப் போயிருப்பார். தற்காலத்தில் இங்குள்ளவர்கள் மீன் பிடிக்கிறவர்களும் கிச்சிலித்தோட்டம் செய்கிறவர்களுமாய் இருக்கிறார்கள். முந்தியிருந்த சீதோனின் செல்வம் குறைந்துபோயிற்று. மத் $11^{21}$ $15^{21}$ மாற் $3^{8}$ $7^{31}$ அப் $12^{20}$ $27^{3}$.

**சீத்தீம்.** Ziddim. யோசு $19^{35}$.

**சீத்தீம் மரம்.** Acacia. **சித்தீம்** காண்க.

**சீநியர்.** Sinite. கானான் தேசத்தின் பூர்வ காலத்திலுள்ள ஒரு ஜனம். ஆதி $10^{17}$.



வடக்கிலிருந்து காணப்படும் சீதோன்.

**சீபா.** Ziba. சவுலின் ஊழியரில் ஒருவன். இவன் சவுலின் மகனாகிய மேவிபோசேத்துக்கு நியமிக்கப்பட்ட உக்கிராணக்காரன். இவன் தாவீது அப்சலோமை விட்டு ஓடிப்போனபோது தன்வசத்திலிருந்த மேவிபோசேத் என்பவனின்பேரிலே பொய்யாய்க் குற்றம் சாட்டினான். 2 சாமு $9^{1}$ $16^{1}$ $19^{24}$.

**சீபியா.** Ziba. பென்யமீனின் கோத்திரத்தில் ஒருவன். 1 நாளா $8^{9}$.

**சீபேக்காய்.** Sibbechai. =மெபுன்னாய். 2 சாமு $23^{37}$ $21^{18}$.

**சீப்.** Ziph.

1. 1 நாளா $4^{16}$.
2. யோசு $15^{24}$.
3. எப்பிரோனுக்குத் தெற்கேயுள்ள ஒரு ஊர். இது இருந்த வனாந்தரமான இடத்தில் சவுலிலிருந்து தாவீது தன்னைக் காப்பாற்றினான். ரெகொபெயாம் இங்கே தனக்கு ஒரு கோட்டையைக் கட்டினான். யோசு $15^{55}$ 1 சாமு $23^{14}$ 2 நாளா $11^{8}$.

**சீப்.** Ziv. எபிரெயரின் பஞ்சாங்கத்தில் இரண்டாம் மாதம். 1 இரா $6^{1}$. **காலம்** காண்க.

**சீப்பா.** Ziphah. 1 நாளா $4^{16}$.

**சீப்பி.** Shiphi. 1 நாளா $4^{37}$.

**சீப்பிரியன்.** Cyprian. கர்த்தாகு என்ற நகரில் ஏறக்குறைய கி-பி. 200-ஆம் வருஷத்தில் இவன் பிறந்து கிறிஸ்தவனாகி அங்கேயுள்ள சபைக்கு கி-பி. 248-ஆம் வருஷத்தில் கண்காணியாய் இருந்தான். அக்காலத்தில் அநேக கிறிஸ்தவர்கள் குருவானவன் உண்மையுள்ள கிறிஸ்தவனாய் இருந்தாலும் சரி, பதிதனாய் இருந்தாலும் சரி, அவன் கொடுக்கும் ஞானஸ்நானத்திற்கு ஆக்ஷேபனை இல்லை என்னும் கொள்கையுடையவர்களாய் இருந்தார்கள். இவனோ பதிதர்கள் ஞானஸ்நானம் கொடுப்பது வீண் என்று சாதித்தான். இதினிமித்தம் ரோமாபுரியிலிருந்த கண்காணி இவனை மார்க்கத்திலிருந்து தள்ளிவிட்டான். ஆனால் இவன் இதிலே ரோமாபுரியிலுள்ள கண்காணிக்கு அதிகாரம் இல்லை என்று உறுதிப்படுத்தினான். இவன் இயேசுவுக்காக கி-பி. 258-ஆம் வருஷத்தில் இரத்தச்சாட்சியாய் மரித்தான்.

**சீப்புரு.** Cyprus. எபிரெயர் சீப்புரு தீவுக்கு 'கித்தீம்' என்று பெயர் சொன்னார்கள். **கித்தீம்** காண்க.

**சீமியாம்.** Shimeam. 1 நாளா $9^{38}$. =சிமியா (5).

**சீமேயி.** Shimei. **சிமேயி** காண்க.

**சீமோன்.** Simon.

1. இயேசுவின் சீஷர்களில் ஒருவன். இவன் முழுப்பெயர் கானானியனாகிய சீமோன். அல்லது செலோத்தே என்னப்பட்ட சீமோன். இதனாலே இவன் பலெஸ்தீனா தேசத்திலிருந்து ரோமர்களை நீக்கும்படி அதிக வாஞ்சை உள்ளவனாய் இருந்தான் என்று அறிவோம். இவனைப்பற்றி வேறு விசேஷம் இல்லை. மத் $10^{4}$ மாற் $3^{18}$ லூக் $6^{15}$ அப் $1^{13}$. **கானானியன்** காண்க.

2. இயேசுவின் சகோதரர்களில் ஒருவன். மத் $13^{55}$ மாற் $3^{21}$ யோவா $7^{3}$ அப் $1^{14}$. **இயேசுகிறிஸ்துவின் சகோதரர்** காண்க.

3. **பேதுரு** காண்க.

4. குஷ்டரோகியான சீமோன். பெத்தானியாவில் வசித்துவந்த இவன் ஒருவேளை மார்த்தாளின் புருஷன் அல்லது மார்த்தாள் மரியாளின் தகப்பனாய் இருக்கலாம். மத் $26^{6}$ மாற் $14^{3}$.

5. பாவமுள்ள ஸ்திரீக்கு இயேசு கிருபை காட்டும்போது, அவர் பந்தியிருந்த வீட்டின் எஜமான். இவன் ஒரு பரிசேயன். சிலர் நினைக்கிறபடி இவனும் குஷ்டரோகியான சீமோனும் ஒருவன்தான். லூக் $7^{40}$.

6. யூதாஸ்காரியோத்தின் தகப்பன். யோவா $6^{71}$ $13^{2.26}$.

7. இயேசுவின் சிலுவையைச் சுமந்தவன். மத் $27^{32}$ மாற் $15^{21}$. இவன் சிரேனே ஊரான். லூக் $23^{26}$.

8. யோப்பா பட்டணத்தில் சீமோன் பேதுருவை ஏற்றுக்கொண்ட தோல் பதனிடுகிறவன். அப் $9^{43}$.

**சீமோன் என்னும் மாயவித்தைக்காரன்.** **Simon Magus.** அப்போஸ்தலனாகிய பிலிப்பு சமாரியாவிலே சுவிசேஷப் பிரசங்கம் பண்ணும்போது, அவ்வூரில் மாயவித்தைக்காரனாகிய சீமோன், பிலிப்பு அசுத்த ஆவிகளைத் துரத்தினதையும், வியாதிக்காரரைச் சுகப்படுத்தினதையும் கண்டு, இவனும் ஞானஸ்நானம் பெற்றான். பேதுருவும் யோவானும் அவ்வூருக்கு வரும்போதே, அவர்கள் மூலமாய் கிறிஸ்தவர்களின்மேல் பரிசுத்த ஆவி இறங்கினதை அறிந்து, அதே வல்லமையைத் தானும் பெறும்படி, இவன் அப்போஸ்தலரிடத்திற்குப் பணம் கொண்டுவந்தான். இதைப்பற்றிப் பேதுரு இவனிடத்தில் மனஸ்தாபமுண்டாகும்படி இவனைக் கண்டித்தான்.

ஆதி கிறிஸ்தவர்கள் இந்த சீமோன் மகா பொல்லாதவனென்றும், இவன் ரோமாபுரிக்குப் போய், தான் செய்த மாயவித்தையினால் ரோமர் தன்னை வணங்கவும், தனது சிலைக்கு வணக்கம் செய்யவும் அவர்களை ஏமாற்றினானென்றும், இவன் பரி. பேதுருவுக்கு மகா விரோதியாய் இருந்தானென்றும், கடைசியில் இவன் ரோமாபுரியில் பரலோகத்திற்குப் பறக்கப் பிரயாசப்படும்போது, பரி. பேதுரு செய்த ஜெபத்தினாலே ஆகாயத்திலிருந்து விழுந்து செத்தானென்றும் சொன்னார்கள். இவனுக்கு 'தேவனுடைய பெரிதான சக்தி' இருந்ததென்ற சமாரியரின் அபிப்பிராயம் இதற்கு இணங்குகிறது. அப் $8^{9}$.

**சீயா.** **Sia.** = சீயாகா. எஸ்ரா $2^{44}$ நெகே $7^{47}$.

**சீயாகா.** **Siaha.** எஸ்ரா $2^{44}$. **சீயா** காண்க.

**சீயோர்.** **Zior.** யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{54}$.



தற்காலம் தென் கிழக்கிலிருந்து காணப்படும் சீயோன்.

**சீயோன்.** **Zion.** எருசலேம் பட்டணத்தில் நாலு குன்றுகள் உண்டு. இவைகளில் சீயோன் ஒன்று. 2 சாமு $5^{7}$. இக்காலத்தில் இந்தப் பெயர் தென்மேற்கு குன்றைத்தான் குறிக்கிறது. பூர்வகாலத்தில் 'சீயோன்' தென்கிழக்குக் குன்றைக் குறித்தது.

சீயோன் என்பதற்கு தாவீதின் ஊர் என்று சொல்லப்பட்டது. பூர்வகாலத்தில் இது வும் எபூசும் ஒபேலும் ஒன்றுதான். சீயோன் என்பது பலமுறை எருசலேமைக் குறிக்கி றது. சங் $7^{42}$ $87^{2}$ $128^{5}$ ஏசா $8^{18}$ எரே $8^{19}$ மீகா $4^{2}$. எருசலேம் காண்க.

**சீரகம்.** Cummin. கானான் தேசத்தார் சீரகச்செடி பயிரிடுவார்கள். செடியைக் காயவைத்துத் தடிகளினால் அடித்து அதின் விதையைச் சேர்த்து அப்பத்திற்கும் கறிக்கும் மருந்துகளுக்கும் உபயோகிப்பார்கள். ஏசா $28^{27}$ மத் $23^{23}$.

**சீரகூசா.** Syracuse. இத்தாலியா தேசத் திற்குத் தெற்கே மத்தியதரைக்கடலில் இருக் கிற சிசிலியா என்னும் பெரிய தீவின் கிழக் குக்கரையிலுள்ள தலைநகரி. கி-மு. 212-ஆ த்தில் ரோமர்கள் அதைத் தங்கள் ராஜ்யத் தோடு சேர்த்தார்கள். பரி. பவுல் கப்பல் சேதம் ஆனபிறகு மெலித்தா தீவிலிருந்து ரோமாபுரிக்குக் கப்பல் பிரயாணம் பண் ணினபோது, அவன் போன கப்பல் மூன்று நாளாக சீரகூசாவில் தங்கினது. அப் $28^{12}$.

**சீரா.** Sirah. 2 சாமு $3^{26}$.

**சீரியா.** Syria. இயேசுவும் அப்போஸ் தலரும் இருந்தகாலத்தில் சீரியா என்பது மத்தியதரைக் கடலின் கிழக்குத் திசையி லுள்ள வடக்கில் சின்ன ஆசியாவிலிருந்து தெற்கிலே எகிப்து தேசமட்டும் 600 மைல் பரவியிருந்த தேசத்தைக் குறித்தது. இதின் தென்பாகம் யூதேயா. இதற்கு மத்தியில் தம ஸ்கு பட்டணம். இதற்கு வடக்கிலே அந்தி யோகியா பட்டணம். அப்பொழுது இதெல் லாம் ரோம ராஜ்யத்துக்குள் ஒரு நாடாய் இருந்தது. நியா $10^{6}$ 1 இரா $19^{15}$ 2 இரா $5^{1}$ $13^{3}$ ஏசா $7^{2}$ $17^{3}$ எசே $16^{56}$ $27^{16}$ ஆமோ $1^{5}$ மத் $4^{24}$ லூக் $2^{2}$ அப் $15^{23}$ கலா $1^{21}$. ஆராம் காண்க.

**சீரியோன்.** Sirion. பெனிக்கேயர் எர் மோன் மலைக்கு இட்ட பெயர். உபா $3^{9}$. எர்மோன் காண்க.

**சீரோபேனிக்கேயா.** Syrophoenicia. சீரோபேனிக்கேயா ஸ்திரீ சீரியா தேசத்தி லுள்ள பெனிக்கேநாட்டில் பிறந்தவள். பரி. மத்தேயு இவள் 'கானானிய ஸ்திரீ' என்று சொல்லி இவள் எபிரெய ஜாதியானவ ளல்ல, எபிரெயர்களுக்கு முந்தி கானான் தேசத்திலிருந்த ஒரு ஜாதியைச் சேர்ந்தவள் என்று சொல்லுகிறான். மத் $15^{22}$ மாற் $7^{26}$.

**சீலா.** Silas. அப்போஸ்தலர் நடபடிக ளில் சொல்லியிருக்கிற சீலா என்பவனும் நிருபங்களில் சொல்லியிருக்கிற சில்வானு என்பவனும் ஒருவன்தான். சீலா எருசலே மிலுள்ள கிறிஸ்தவ சபையில் பேர்பெற்ற தீர்க்கதரிசியாயிருந்து எருசலேமின் கிறிஸ் தவ ஆலோசனைச் சங்கத்தில் புறமதங்களி லிருந்து வந்தவர்களைப்பற்றிச் செய்த தீர்மா னத்தை அந்தியோகியாவிலுள்ள கிறிஸ்த வர்களுக்குத் தெரிவிக்கப் போனவன். அப் $15^{32}$. பரி. பவுலின் இரண்டாம் பிரயாணத் தில், சீலா, பரி. பவுலுக்குத் தோழனாய் இருந் தான். அப் $15^{40}$ 16-ம் அதி. பரி. பவுல் அத் தேனே பட்டணத்திற்குப் போகும்போது தீமோத்தேயுவையும் சீலாவையும் பெரோயா விலே விட்டுவிட்டான். அப் $17^{14}$. இவர் கள் அவனிடத்திற்கு வந்தபிறகு அவன் இவர்களை மக்கதோனியாவுக்கு அனுப்பி னான் என்று தோன்றுகிறது. 1 தெச $3^{1}$. எப்படியாவது பரி. பவுல் கொரிந்துவிலே இருக்கும்போது சீலாவும் கூட அவனோ டிருந்தான். 2 கொரி $1^{19}$ 1 தெச $1^{1}$ 2 தெச $1^{1}$. சீலா பிற்காலத்தில் பரி. பேதுருவுக்கு உதவிக்காரனாயிருந்து அவன் எழுதின முத லாம் நிருபத்தைச் சின்ன ஆசியாவில் உள்ள கிறிஸ்தவர்களுக்குக் கொண்டுபோனான். 1 பேது $5^{12}$.

**சீலை.** Napkin. பிரயோஜனமில்லாத ஊழியக்காரன் ராத்தலை வைத்துப் புதைத்த சீலை. லூக் $19^{20}$. மரித்துப்போனவர்களின் முகத்தைக் கட்டும்படி உபயோகித்த சீலை. யோவா $11^{44}$ $20^{7}$.

இதுவும் அப் $19^{12}$-ல் சொன்ன உறுமா லும் ஒன்றுதான். அல்லது இது ஒரு மாதிரி பெரிய கைக்குட்டை அல்லது முக்காடு, அல்லது அகலக் கட்டையான ஒரு அங்க வஸ்திரத்தைக் குறிக்கிறது.

**சீலோ.** Shiloh. இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயித்தபின், அவர்கள் இங்கே பெரிய கூட்டமாகச் சேர்ந்துவந்தார்கள். யோசு $18^{1}$ $22^{12}$. நியாயாதிபதிகள் இருந்த காலத்தில் இது இஸ்ரவேலருக்கு ஒரு முக் கிய ஸ்தலம். இதற்கு அவர்கள் திரள் திர ளாய்ப் போவார்கள். நியா $18^{31}$ $21^{19}$ 1 சாமு $1^{3}$. இதில் ஆசரிப்புக் கூடாரத்திற்குப் பதி லாக ஒரு கட்டடம் இருந்தது. 1 சாமு $4^{12}$. பெலிஸ்தியர் உடன்படிக்கைப் பெட்டியை எடுத்தபிறகு இதன் கீர்த்தி குறைந்துபோ யிற்று. 1 சாமு $4^{12}$ சங் $88^{60}$ எரே $7^{12}$ $26^{6}$. இந்த ஊர் எருசலேமுக்கு 20 மைல் தூரம் நேர் வடக்கே எப்பிராயீம் கோத்திரநாட்டில் இருந்தது. இங்கே நல்ல நீர் ஊற்று இருக் கிறது.



சீலோ.

**சீலோனியன்.** Shilonite.

1. தீர்க்கதரிசியாகிய அகியா. 1 இரா $11^{29}$ $14^{2}$.

2. ஒரு குடும்பம். 1 நாளா $9^{5}$.



சீலோவாம் குளம்.

**சீலோவா, சீலோவாம்.** Siloam. [அனுப்புகிறது]. 'ராஜாவினுடைய குளமும்' சீலோவாம் என்பதும் ஒன்றுதான். நெகே $2^{14}$.

எருசலேமுக்குக் கிழக்கே இருந்த மதிலுக்கு வெளிப்பக்கத்தில் உள்ள ஆழமான கீதரோன் பள்ளத்தாக்கிலே நீரூற்று ஒன்று இருந்தது. பூர்வீகத்தில் எபூசியர் தங்கள் கோட்டையைக் கட்டினபோது இந்த நீரூற்றிலிருந்து தண்ணீர் மொண்டிருப்பார்கள். பிறகு கற்களினால் கட்டின வாய்க்கால் வழியாகக் கோட்டையின் அஸ்திபாரத்திற்குச் சமீபமாய்த் தண்ணீர் கொண்டுவந்தார்கள். எசேக்கியா ராஜா தண்ணீருக்காக இந்த வாய்க்காலுக்கு மதிலிலிருந்து வெளியே போவது மோசம் என்று அறிந்து ஓபேல் மலை மூலமாய் ஏறக்குறைய மூன்றுபர்லாங்கு (1700 அடி) நீளமுள்ள சாலகம் வழியாகத் தண்ணீர் வரும்படி செய்து, தண்ணீர் விழும்படி பட்டணத்திற்குள்ளே ஓபேல் மலையடிவாரத்தில் இக்குளத்தை வெட்டினான். 2 இரா $20^{20}$ 2 நாளா $32^{30}$. இந்தச் சாலகத்தில் 'மெதுவாய்ப் பாய்கிற தண்ணீரை'ப் பற்றி ஏசாயா பேசுகிறான். ஏசா $8^{6}$. இதின் நீளம் 75 அடி, அகலம் 71 அடி. இயேசுவின் காலத்தில் இதின் நாலு பக்கத்திலும் ஒரு மண்டபம் கட்டப்பட்டிருந்தது. இதின் பக்கத்தில் மலைக்குன்றின்மேல் கட்டின வீடுகளிலிருந்து இதற்குப் போவதற்காகப் படிகள் இருந்தன. நெகே $3^{15}$ லூக் $13^{4}$ யோவா $9^{7}$.

**சீவான்.** Sivan. எபிரெயரின் பஞ்சாங்கத்தில் மூன்றாம் மாதம். எஸ்தர் $8^{9}$. **காலம்** காண்க.

**சீனா.** Sina. 1 நாளா $23^{10}$.

**சீனாய்.** Sinai. செங்கடலின் வடபக்கத்தில் இருக்கிற இரண்டு குடாக்கடல்களுக்கு இடையிலுள்ள குடா நாடு.* இது வடக்கிலிருந்து தெற்கே ஏறக்குறைய 120 மைல் நீளம். இது வனாந்தரமும் மலையு

முள்ள நாடு. இங்கே நீரூற்றுகள் சில உண்டு. பெரும்பாலும் இந்த நாட்டிலே காட்டு ஜனங்களையொழிய இங்கே குடியேறினவர்கள் சிலர்மாத்திரம் உண்டு. முற்காலத்தில் இது எகிப்துக்குச் சேர்ந்தது. இங்கே ஒருவித மான நீலரத்தினம் உண்டாகிற சுரங்கங்கள் இருக்கிறதினால் எகிப்தியர்கள் இவைகளை வாங்கும்படி இந்த மலைநாட்டுக்கு அடிக்கடி வருவார்கள். இங்கேயுள்ள மலைகள் 8,000 அடிவரையும் உயர்ந்திருக்கும். நீரூற்றுகள் இருக்கிற பள்ளத்தாக்குகள்மாத்திரம் புல் பூண்டுகள் உள்ளதாயிருக்கும்.



சீனாய் மலை.

**சீனாய் மலை. Mount Sinai.** இதற்கு மறுபெயர் ஓரேப். 'சீனாய்' என்பதற்கு 'சீன் என்னும் சந்திரதேவதைக்குப் பிரதிஷ்டை செய்த மலை' என்று அர்த்தமாம். இந்த மலையிலிருந்துதான் மோசே நியாயப்பிரமாணப் பலகைகளைக் கொண்டுவந்தான். முன்னோர்கள் சொன்ன பாரம்பரியத்தின் படி சீனாய் குடாநாட்டிலுள்ள 'மோசேயின் மலை' என்னும் சிகரம் இதுதான்.

ஆதி கிறிஸ்தவ சந்நியாசிகள் இந்தச் சிகரத்திற்குக் கிட்ட கோட்டைபோன்ற மடம் ஒன்று கட்டினார்கள். அதில் ஐம்பது சந்நியாசிகள் தற்காலத்தில் இருக்கிறார்கள். இஸ்ரவேலர் சீனாய்மலைக்குப் பிரயாணம் செய்ததையும் அங்கிருந்து அவர்கள் நியாயப்பிரமாணம் பெற்றதையும்பற்றி யாத்திராகமத்திலும் எண்ணாகமத்திலும் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. யாத் 16, 19, 24, 31, 34 அதி. எண் 1, 3, 9, 10, 25, 33 அதி.

புதிய ஏற்பாட்டில் பரி. பவுல் 'சீனாய்' என்பதை உபமானமாய்ச் சொல்லுகிறான். கலா $4^{25}$.

**சீனீம். Sinim.** சீனீம் தேசம் யூதர்களுக்குத் தெரிந்த எல்லா தேசங்களுக்கும் தெற்கே அல்லது கிழக்கேயுள்ளது. சிலர் நினைக்கிறபடி இதுவும் தற்கால சீனாவும் (*China*) ஒன்றுதான். ஆனால் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. ஏசா $49^{12}$.

**சீன். Sin.** சீன் வனாந்தரம். எபிரெயர்கள் எகிப்திலிருந்து சீனாய்மலைக்குப் போன போது சீனாய் என்னும் குடாநாட்டிலுள்ள ஏலீமை விட்டுக் கடந்துபோன வனாந்தரம். யாத் $16^1$ $17^1$ எண் $33^{11}$.

**சீன். Sin.** மத்தியதரைக் கடலுக்குக் கிட்ட எகிப்திலுள்ள சீன் ஒரு பெரிய கோட்டையாய் இருந்தது. எசே $30^{15}$.

**சீன். Sin.** இது யூதாவுக்குத் தெற்கே செங்கடலின் வடகிழக்குக் குடாக்கடலிலிருந்து சாக்கடல்வரையும் பரந்திருக்கும் வனாந்தரம். எண் $13^{21}$ $20^1$ $27^{14}$ $33^{36}$ $34^3$ உபா $32^{51}$ யோசு $15^1$.

## சு.

**சுகந்தவர்க்கம். Spices.** இது தூபத்திற்காக உபயோகிக்கப்பட்ட சாம்பிராணி முதலிய வாசனைத் திரவியங்களுக்குப் பொதுப்பெயர். யாத் $30^{23}$ $35^8$ 2நாளா $16^{14}$.

**சுகந்த வர்க்கம் இடல். Embalm.** பிரேத அடக்கம் காண்க.

**சுகந்தம்.** Sweet Savour. ஆதி $8^{21}$ யாத் $29^{18}$ $30^{23}$ $39^{38}$ லேவி $23^{18}$ எண் $29^{2}$ எபே $5^{2}$ பிலி $4^{18}$.

**சுகந்திக்கல்.** Amethyst. இரத்தினம் காண்க.

**சுகம்.** Health.

*a.* தேக சுகம். ஆதி $29^{6}$ 2 சாமு $20^{9}$ 2 இரா $4^{26}$.

*b.* ஆத்தும சுகம். 3 யோவா 2-ம் வசனம்.

**சுக்கான்கள்.** Rudder. பூர்வகாலத்தில் ரோமர் கிரேக்கர்களுடைய கப்பல்களுக்குப் பின்பக்கத்தில் இரண்டு சுக்கான்கள் இருந்தன. இவைகள் பெரிய தண்டுகளைப்போல் இருக்கும். அப் $27^{39}$. கப்பல் காண்க.

**சுக்கோத்.** Succoth. [குடிசைகள்].

1. யோர்தான் நதிக்கு மூன்று மைல் கிழக்கே யாப்போக் என்னும் சிற்றாறுக்குச் சமீபமாயுள்ள இடம். யாக்கோபு இந்த வழியாகத் திரும்பி வந்து இங்கே குடிசைகளைக் கட்டினான். ஆதி $33^{17}$. கிதியோன் இந்த வழியாகவே மீதியானியரைத் தொடர்ந்து போனான். நியா $8^{5}$. இதற்குக் கிட்ட ஒரு பள்ளத்தாக்கு உண்டு. யோசு $13^{27}$ சங் $60^{6}$. இது காத்கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு $13^{27}$.

2. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து பிரயாணஞ் செய்தபோது ராமசேஸ் பட்டணத்தைக் கடந்துவந்து முதலாவது பாளையம் இறங்கின இடம். யாத் $12^{37}$ $13^{20}$ எண் $33^{5}$.

**சுக்கோத்பேனோத்.** Succoth-Benoth. அசீரியாவிலிருந்து சமாரியா பட்டணத்தில் குடியேறின அந்நியர்கள் வணங்கின ஒரு தேவி. இது பாபிலோனியர்கள் வணங்கின 'மார்துக்' என்னும் பிரதான தேவனின் மனைவியாய் இருக்கலாம். 2 இரா $17^{30}$.

**சுடர்.** Light. ஆதி $1^{14}$ $3^{24}$ பிலி $2^{14}$.

**சுடுகிறது.** Burn. ஆதி $11^{3}$. அப்பம் சுடுகிறது. ஆதி $19^{3}$ யாத் $12^{39}$ $16^{23}$ லேவி $24^{5}$ $26^{26}$ $28^{24}$ ஏசா $44^{15.19}$ எசே $46^{20}$. சுட்டெரிக்கிறது. எண் $19^{5}$ யோசு $8^{28}$ 2 இரா $23^{4}$ எரே $32^{29}$ அப் $19^{19}$.



சுண்டெலி.

**சுண்டெலி.** Mouse. கானான் தேசத்தில் எலிகள் பலவிதமாய் உண்டு. அவைகளில் இது ஒன்று. அத்தேசத்தில் அந்நிய தேவதைகளை வணங்கினவர்களிற் சிலர் மந்திர வித்தை ஆராதனையில் எலியைத் தின்பார்கள். எபிரெயர்கள் இந்தப் பழக்கத்தை வெறுத்தார்கள். லேவி $11^{29}$ 1 சாமு $6^{4}$ ஏசா $66^{17}$.

**சுண்ணாம்பு.** Lime. சிப்பியைப்போன்ற கற்களை அல்லது எலும்புகளைச் சுட்டு சுண்ணாம்பு செய்கிறது இஸ்ரவேலருக்கு நன்றாய்த் தெரிந்திருந்தது. வீடுகள் கட்டும்போது கற்களை ஒன்றோடொன்று இணைக்கவும் வெள்ளை அடிக்கவும் சுண்ணாம்பை உபயோகித்தார்கள். உபா $27^{2}$ ஏசா $27^{9}$ $33^{12}$ ஆமோ $2^{1}$ மத் $23^{27}$ அப் $23^{3}$.

**சுதந்தரம்.** Inheritance. ஆதி $31^{14}$ $48^{6}$ லேவி $20^{24}$ எண் $26^{54}$ $27^{9}$ $36^{8}$ உபா $10^{9}$ யோசு $13^{6}$ ரூத் $4^{5}$ சங் $2^{8}$ $16^{5}$ $28^{9}$ $79^{1}$ $105^{11}$ நீதி $13^{22}$ $19^{14}$ ஏசா $19^{25}$ எசே $44^{28}$ ஒப 17-ம் வசனம். மத் $21^{38}$ மாற் $12^{7}$ லூக் $20^{14}$ அப் $7^{5}$ $26^{18}$ ரோ $8^{17}$ கலா $3^{18}$ எபே $1^{12.14.18}$ $5^{5}$ கொலோ $1^{12}$ $3^{23}$ 1 பேது $1^{4}$ எபி $9^{15}$ $11^{8}$. குடும்பம் காண்க.

**சுதந்தரவாளி.** Heir. ஆதி $15^{3.4}$ $21^{10}$ 2 சாமு $14^{7}$ எரே $49^{1.2}$ மீகா $1^{15}$ மத் $21^{38}$ மாற் $12^{7}$ லூக் $20^{14}$ ரோ $4^{14}$ கலா $3^{29}$ $4^{1.7.30}$ தீத் $3^{6}$ எபி $1^{2.14}$ $6^{17}$ $11^{7}$ யாக் $2^{5}$ 1 பேது $3^{7}$. குடும்பம் காண்க.

**சுத்தம்.** Clean, Pure.

1. ஆசாரத்தின்படி சரீரசுத்தம், தீட்டில்லாமை. ஆதி 7² லேவி 12⁷ 13¹³·³⁹ 14⁹·⁵³ எண் 5²³ 9¹³ 18¹¹ எஸ்றா 6²⁰ மத் 23²⁶ யோவா 13¹⁰ மாற் 8².

2. குற்றமில்லாமை. நீதி 16² 21⁸ 20⁹ யோபு 14⁴ 17⁹ சங் 19⁹ 24⁴ எசே 36²⁵ மத் 5⁸ யோவா 13¹⁰ 1 தீமோ 5²² 3⁹ தீத் 1¹⁵ யாக் 3¹⁷ 1 யோவா 3³.

3. சுத்த இருதயம். சங் 51¹⁰ 24⁴ நீதி 19²⁰ மத் 5⁸ 1 தீமோ 1⁵ 1 பேது 1²².

**சுத்தி.** Hammer. 1 இரா 6⁷. **சம்மட்டி** காண்க.

**சுத்தேலாக்.** Shuthelah. எப்பிராயீமிலுள்ள கோத்திரத்தின் ஒருபாகம். எண் 26³⁵ 1 நாளா 7²⁰.

**சுநீரம்.** Jacinth. **இரத்தினம்** காண்க.

**சுபவேல், சூபவேல், செபுவேல்.** Shubael, Shebuel.

1. 1 நாளா 23¹⁶ 24²⁰.

2. 1 நாளா 25⁴·²⁰.

**சுபாவம்.** Nature.

1. இயற்கையான தன்மை அல்லது முறை. ரோ 1²⁶ 2¹⁴ 11²⁴ கலா 4⁸ 1 கொரி 11¹⁴ யாக் 1²³ 3⁷ யூதா 10-ம் வசனம்.

2. பிறந்த நிலை. ரோ 2²⁷ 11²¹ கலா 2¹⁵ எபே 2³. 'ஜென்ம சுபாவமுள்ள மனுஷன்.' 1 கொரி 2¹⁴. 'திவ்விய சுபாவம்.' 2 பேது 1⁴.

**சுப்பாம்.** Shupham. எண் 26³⁹. = சுப்பீம் (*Shuphim*). 1 நாளா 7¹². = செப்புப்பான் (*Shephuphan*). 1 நாளா 8⁵. = முப்பிம் (*Muphim*). ஆதி 46²¹.

**சுப்பீம்.** Shuphim. **சுப்பாம்** காண்க.

**சுமக்கிறது.** Bear. ஏசா 53⁴·¹¹ மத் 27³² 8¹⁷ லூக் 14²⁷ கலா 6²·⁵ எபி 9²⁸ 1 பேது 2²⁴.

**சுமாத்தியர்.** Shumathites. 1 நாளா 2⁵³.

**சுமை.** Burden. தமிழ் வேதாகமத்தில் வழக்கமாய்ப் 'பாரம்' என்று சொல்லப்படும். எரே 17²⁷ ஓசி 8¹⁰ மத் 11³⁰.

**சுயம்பாகி.** Baker. ஆதி 40¹ ஓசி 7⁴.

**சுயாதீனம்.** Free Will. **அழைப்பு, சித்தம்** காண்க.

**சுரமண்டலம்.** Harp. **கீதவாத்தியம்** காண்க.

**சுருக்கு.** Snare. ரோ 11⁹. **கண்ணி** காண்க.

**சுருங்கு.** Wrinkle. யோபு 16⁸.

**சுருள்.** Roll. சிறையிருப்புக் காலமுதல் எபிரெயர்களிற் சிலர் தோலினால் செய்யப்பட்ட சுருள்களிலும், சிலர் நீல நதிக்கரையில் வளரும் நாணற்பட்டையினால் செய்த நீண்ட சுருள்களிலும் புஸ்தகங்கள் எழுதுவார்கள். தோற்சுருள்கள் செய்யும் விதம் என்னவென்றால்: பதனிட்ட நேர்த்தியான தோல்களைச் சதுரமாய் வெட்டி ஒன்றோடொன்று பொருத்துவார்கள். இந்தச் சுருள்கள் அதிக நீளமாயிருக்கும். இவைகளை ஒரு சட்டத்தில் சுருட்டுகிறதினால் இவைகளுக்குச் 'சுருள்கள்' என்று பெயர் வந்தது. இவ்விதமாய்த் தோலினால் செய்யப்பட்ட கைப்பிரதிகளை எழுதுவதற்கு அதிக கவனமும் சாமர்த்தியமும் அநேக நாட்களும் வேண்டுமாதலால் இவைகள் உயர்ந்த விலையுள்ளவைகள். எஸ்றா 6² எரே 36² எசே 2⁹ 3¹ சக 5¹. **எழுத்து** காண்க.

**சுருபம், சொருபம்.** Image. ஆதி 31¹⁹ யாத் 20⁴ லேவி 26¹ 1 சாமு 6⁵ ஆமோ 5²¹ மத் 22²⁰ மாற் 12¹⁶ லூக் 20²⁴ எபி 1³ வெளி 13¹⁴ 14⁹ 15² 16² 19²⁰ 20⁴. **தேராபீன், சாயல், சிலை, விக்கிரகம்** காண்க.

**சுரை.** Gourd. யோனாவுக்கு நிழலிட்ட ஆமணக்கு அல்லது சுரை. யோனா 4⁶. இது சீக்கிரம் வளர்ந்ததினாலும் நல்ல நிழல் கொடுத்ததினாலும் இது சுரைதான் என்று தீர்மானமாய்ச் சொல்லக்கூடும்.

**சுவர்.** Wall. லேவி 14³⁷ எண் 22²⁵ 1 சாமு 19¹⁰ 1 இரா 6⁶ எசே 8⁸ 12⁵ 41⁵ அப் 23³. **கோட்டை, மதில், வீடு** காண்க.

**சுவர்ணரத்தினம்.** Chrysolite. **இரத்தினம்** காண்க.

**சுவாசம்.** Breath. ஆதி 2⁷ 7²² 6¹⁷ 2 சாமு 2¹⁶ யோபு 4⁹ 19¹⁷ 33⁴ சங் 33⁶ 104²⁹ 135¹⁷ ஏசா 42⁵ எரே 51¹⁷ அப் 17²⁵.

**சுவாதீனம்.** Possession. 2 பேது 2¹⁹.

**சுவிகாரம்.** Adoption. **புத்திர சுவிகாரம்** காண்க.

**சுவிசேஷ அட்டவணை.** Harmony of the Gospels. நான்கு சுவிசேஷகர்களும் இயேசுகிறிஸ்துவைப்பற்றி எழுதிய நாலு சுவிசேஷங்களையும் காலக்கிரமத்தின்படி ஆதி கிறிஸ்தவ சபையிலுள்ள தாதியன் (*Tatian*) முதல் விளக்கிக் காட்டினான். அடியில் கண்ட சுவிசேஷ அட்டவணையில் நாலு சுவிசேஷங்களில் எழுதப்பட்ட சமாசாரங்கள் காலக்கிரமத்தின்படி காட்டப்பட்டிருக்கின்றன.

# சுவிசேஷ அட்டவணை

## A Harmony of the Gospels

### I. இயேசுவின் பிறப்பும் பாலியமும்

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| லூக்கா எழுதின முகவுரை .... | ............ | .... | .... | $1^{1-4}$. | |
| இயேசுவின் தெய்வீக தன்மை .... | ............ | .... | .... | .... | $1^{1-5}$. |
| வம்ச அட்டவணை .... .... | ............ | $1^{1-17}$ | .... | $3^{23-38}$. | |
| சகரியா தேவதூதனைக் கண்டது.. | எருசலேம் | .... | .... | $1^{5-25}$. | |
| மரியாள் தேவதூதனைக் கண்டது.. | நாசரேத் | .... | .... | $1^{26-38}$. | |
| மரியாள்எலிசபெத்தைச்சந்தித்தது. | ............ | .... | .... | $1^{39-56}$. | |
| யோசேப்பு கண்ட காட்சி .... | நாசரேத் | $1^{20-25}$. | | | |
| யோவான்ஸ்நானனின் பிறப்பு .... | ............ | .... | .... | $1^{57-80}$. | |
| இயேசுவின் பிறப்பு .... .... | பெத்லெகேம் | .... | .... | $2^{1-7}$. | |
| மேய்ப்பர்கள் .... .... .... | ,, | .... | .... | $2^{8-20}$. | |
| விருத்தசேதனம். தேவாலயத்தில் ஒப்புவித்தது .... .... | எருசலேம் | $1^{25}$. | .... | $2^{21-38}$. | |
| சாஸ்திரிகள் .... .... .... | பெத்லெகேம் | $2^{1-12}$. | | | |
| எகிப்துக்கு ஓடிப்போனது. ஏரோதின் கொடுமை .... .... | ............ | $2^{13-18}$. | | | |
| திரும்பினது .... .... .... | ............ | $2^{19-23}$ | .... | $2^{39-40}$. | |
| இயேசு தேவாலயத்திற்குப் போனது .... .... .... | ............ | .... | .... | $2^{41-52}$. | |

### II. A. பிரவேசப்பாகம்: ஞானஸ்நானம் பெற்றதுமுதல் முக்கிய அப்போஸ்தலரைத் தெரிந்துகொண்டதுவரை

**இடம்:** விசேஷமாக யூதேயாதேசம்: கலிலேயாவுங்கூட.

**காலம்:** கி-பி. 26-ஆம் வருஷத்தின் குளிர்காலமுதல் 27-ஆம் வருஷ பஸ்கா பண்டிகைவரை.
மத் $3^{1}$-$4^{11}$ மாற் $1^{1-13}$ லூக் $3^{1}$-$4^{13}$ யோவா $1^{6}$-$4^{54}$.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யோவான்ஸ்நானனின் ஊழியம்.. | ............ | $3^{1-12}$ | $1^{1-8}$ | $3^{1-20}$ | $1^{6-15}$. |
| இயேசுவின் ஞானஸ்நானம் .... | யோர்தான் நதி | $3^{13-17}$ | $1^{9-11}$ | $3^{21.\ 22}$. | |
| சோதனை .... .... .... | வனாந்தரம் | $4^{1-11}$ | $1^{12.13}$ | $4^{1-13}$. | |
| யோவான்ஸ்நானன் கூறின சாட்சி. | பெத்தாபரா | .... | .... | .... | $1^{19-35}$. |
| முதல் சீஷர்கள் .... .... | ,, | .... | .... | .... | $1^{37-51}$. |
| முதல் அற்புதம் .... .... | கானா | .... | .... | .... | $2^{1-12}$. |
| முதல் பஸ்கா. தேவாலயத்திலிருந்து வியாபாரிகளை முதல்முறை துரத்தினது .... .... | எருசலேம் | .... | .... | .... | $2^{13-23}$. |
| நிக்கொதேமு:... .... .... | ,, | .... | .... | .... | $3^{1-21}$. |
| யோவான்ஸ்நானன் கூறின கடைசிச் சாட்சி.... .... .... | அயினோன் | .... | .... | .... | $3^{23-36}$. |
| இயேசு சமாரியாவுக்குப் போனது. | ............ | .... | .... | .... | $4^{1-42}$. |
| இயேசு கலிலேயாவுக்குப் போய்க் கானாவிலே ராஜாவின் உத்தியோகஸ்தனுடைய மகனை சொஸ்தமாக்கினது .... .... | ............ | .... | .... | .... | $4^{43-54}$. |

## B. அதிகமான கிரியைகளை நடப்பித்ததின் முதற்பாகம்: ராஜ்யத்தை ஸ்தாபித்தல்

**இடம்:** பெரும்பாலும் கலிலேயா, எருசலேம்.

**காலம்:** கி-பி. 27-ஆம் சுமார் பெந்தெகோஸ்துமுதல், 28-ஆம் ஏறக்குறைய பஸ்கா பண்டிகைவரைக்கும். மத் $4^{12}$-$13^{53}$ மாற் $1^{14}$-$6^{13}$ லூக் $4^{44}$-$9^{6}$ யோவா 5 அதி.

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| பெதஸ்தா குளத்தண்டை வியாதிஸ்தன் சுகமானது .... .... | எருசலேம் | .... | .... | .... | $5^{1-47}$. |
| யோவான்ஸ்நானன் காவலில் வைக்கப்பட்டபின்பு, இயேசு கலிலேயாவில் பிரசங்கம்செய்து நாசரேத்துக்குப் புறம்பே தள்ளப்பட்டுக் கப்பர்நகூமில் குடியிருந்தது .... .... .... | கலிலேயா | $4^{13-17}$ | $6^{1-6}$ | $4^{14-31}$. | |
| அந்திரேயா, பேதுரு, யாக்கோபு, யோவான் இவர்களை அழைத்தது. மிகுதியானமீன்களைப்பிடித்தது. | கப்பர்நகூம் | $4^{18-22}$ | $1^{16-20}$ | $5^{1-11}$. | |
| ஜெபஆலயத்தில் அசுத்த ஆவி பிடித்தவனைச் சொஸ்தமாக்கினது.... | ,, | .... | $1^{21-28}$ | $4^{31-37}$. | |
| பேதுருவின் மாமியையும் மற்றவர்களையும் சொஸ்தமாக்கினது .... | ,, | $8^{14-17}$ | $1^{29-34}$ | $4^{38-41}$. | |
| தனிமையாய் ஜெபம் செய்யும்படி போனது .... .... .... | ............ | .... | $1^{35}$ | $4^{42}$. | |
| கலிலேயாவில்பிரயாணம்செய்தது. | கலிலேயா | .... | $1^{35-39}$ | $4^{42-44}$. | |
| குஷ்டரோகி சுகமானது .... | ,, | $8^{1-4}$ | $1^{40-45}$ | $5^{12-16}$. | |
| தனிமையாய் ஜெபம் செய்யும்படி போனது .... .... .... | ............ | .... | $1^{45}$ | $5^{16}$. | |
| திமிர்வாதக்காரன் சுகமானது .... | கப்பர்நகூம் | $9^{1-8}$ | $2^{1-12}$ | $5^{17-26}$. | |
| மத்தேயுவை அழைத்தது .... | ,, | $9^{9-17}$ | $2^{13-22}$ | $5^{27-39}$. | |
| சீஷர்கள் ஓய்வுநாளில் கதிர்களைக் கொய்து தின்றது .... .... | கலிலேயா | $12^{1-8}$ | $2^{23-28}$ | $6^{1-5}$. | |
| ஓய்வுநாளில் சூம்பின கையுடையவன் சுகமானது .... .... | கப்பர்நகூம் | $12^{9-14}$ | $3^{1-12}$ | $6^{6-11}$. | |
| தனிமையாய் ஜெபம் செய்யும்படி போனது .... .... .... | ............ | .... | .... | $6^{12}$. | |
| பன்னிரண்டு அப்போஸ்தலரை அழைத்தது .... .... | ............ | $10^{2-4}$ | $3^{13-19}$ | $6^{13-16}$. | |
| மலைப்பிரசங்கம் .... .... | ............ | $5^{1}$-$8^{1}$ | .... | $6^{17-49}$. | |
| நூற்றுக்கு அதிபதியின் வேலைக்காரன் சொஸ்தமானது .... | கப்பர்நகூம் | $8^{5-13}$ | .... | $7^{1-10}$. | |
| விதவையின் மகன் உயிர்த்தெழுந்தது .... .... .... | நாயீன் | .... | .... | $7^{11-17}$. | |
| யோவான்ஸ்நானன் சீஷர்களை அனுப்பினது .... .... | ............ | $11^{2-19}$ | .... | $7^{18-35}$. | |
| பாவியான ஸ்திரீ தைலம் பூசினது. | கப்பர்நகூம் | .... | .... | $7^{36-50}$. | |

| விஷயங்கள். | இடம் | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| இயேசு பன்னிருவரோடு கலிலேயாவில் பிராயாணம் செய்தது.... | கலிலேயா | .... | .... | $8^{1-3}$. | |
| குருடும் ஊமையுமான பிசாசு பிடித்தவன் சொஸ்தமானது. தேவ தூஷணத்தையும் அசுத்த ஆவியையும்பற்றிய பிரசங்கம் .... | ,, | $12^{22-46}$ | $3^{20-30}$ | $[11^{14-23}]$. | |
| இயேசுவின் தாயும் சகோதரரும் வந்தது .... .... .... | ............ | $12^{46}$ | $3^{31-35}$ | $8^{19-21}$. | |
| உவமைகள்:— | | | | | |
| விதைக்கிறவன் .... .... | ............ | $13^{1-23}$ | $4^{1-25}$ | $8^{4-18}$. | |
| விதை .... .... .... | ............ | .... | $4^{26}$. | | |
| களைகள் .... .... | ............ | $13^{24}$. | | | |
| கடுகு .... .... .... | ............ | $13^{31}$ | $4^{30}$ | $13^{18.19}$. | |
| புளித்தமா .... .... | ............ | $13^{33}$ | .... | $13^{20.21}$. | |
| விளக்கு.... .... .... | ............ | .... | $4^{21}$ | $8^{16}$. | |
| பொக்கிஷம் .... .... | ............ | $13^{44}$. | | | |
| முத்து .... .... .... | ............ | $13^{45}$. | | | |
| வலை .... .... .... | ............ | $13^{47-53}$. | | | |
| இயேசு கடற்கொந்தளிப்பை அமர்த்தினது .... .... .... | ............ | $8^{18-27}$ | $4^{35-41}$ | $8^{23-25}$. | |
| லேகியோன் சொஸ்தமானது .... | கெராசா | $8^{28-34}$ | $5^{1-15}$ | $8^{26-40}$. | |
| யவீரின் குமாரத்தி உயிர்த்தெழுந்தது. பெரும்பாடுள்ள ஸ்திரீ சுகமானது .... .... .... | கப்பர்நகூம் | $9^{18-26}$ | $5^{22-43}$ | $8^{41-56}$. | |
| இரண்டு குருடர் சுகமானது .... | ,, | $9^{27-30}$. | | | |
| ஊமையன் சுகமானது.... .... | ............ | $9^{32.33}$. | | | |
| இயேசு பன்னிரண்டு அப்போஸ்தலரைப் போதித்து அனுப்பினது. | ............ | $10^{1.5-42}$ | $6^{7-13}$ | $9^{1-6}$. | |

## C. நடுப்பாகம்: இயேசுவின் கிரியைகளும், பரிசேயருடைய விரோதமும்

**இடம்:** கலிலேயா. ஒருமுறை பலெஸ்தீனாவின் வட எல்லையைத் தாண்டிப் போதல்.

**காலம்:** கி-பி. 28-ஆம்வருஷத்தில் பஸ்காமுதல் கூடாரப் பண்டிகைவரையில். (ஏப்ரில்-அக்டோபர்.) மத் $14^{1}$-$18^{35}$ மாற் $6^{14}$-$9^{50}$ லூக் $9^{7-50}$ யோவா 6 அதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யோவான்ஸ்நானன் சிரச்சேதம் .. | மக்கேரு கோட்டை | $14^{1-12}$ | $6^{14-29}$ | $9^{7-9}$. | |
| இயேசு ஐயாயிரம்பேரைப் போஷித்தது .... .... .... | பெத்சாயிதா | $14^{13-21}$ | $6^{30-44}$ | $9^{10-17}$ | $6^{1-14}$. |
| இயேசு நீர்மேல் நடந்தது .... | கலிலேயாக்கடல் | $14^{22-36}$ | $6^{45-56}$ | .... | $6^{15-21}$. |
| ஜீவ அப்பத்தைப்பற்றிய பிரசங்கம். | கப்பர்நகூம் | .... | .... | .... | $6^{22-70}$. |
| பரிசேயரும் வேதபாரகரும் விரோதமாயிருந்தது. இயேசு சுத்தத்தைப்பற்றிப் பிரசங்கம்செய்தது. | ,, | $15^{1-20}$ | $7^{1-23}$. | | |
| சீரோபேனிக்கியா ஸ்திரீயின் மகள் சுகமானது.... .... .... | சீரியா | $15^{21-29}$ | $7^{24-30}$. | | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| செவிடும் ஊமையுமானவனும் மற்றவர்களும் சுகமானது.... .... | தெக்கப்போலி | $15^{30-31}$. | | | |
| இயேசு நாலாயிரம்பெயரைப் போஷித்தது .... .... .... | ........... | $15^{32-39}$ | $8^{1-10}$. | | |
| பரிசேயரின் புளித்தமாவைக் குறித்த எச்சரிப்பு .... .... | ........... | $16^{1-12}$ | $8^{11-22}$. | | |
| ஒரு குருடனுக்குப் பார்வை அளித்தது .... .... .... | பெத்சாயிதா | .... | $8^{22-27}$. | | |
| பேதுருவும் மற்ற சீஷர்களும் செய்த அறிக்கை .... .... .... | செசரியாபிலிப்பி | $16^{13-21}$ | $8^{27-30}$. | | |
| இயேசு முதல் முறை தாம் அடையும் மரணத்தை முன்னறிவித்தது .... .... .... | ,, | $16^{21-28}$ | $8^{31-38}$ | $9^{22-27}$. | |
| மறுரூபமானது .... .... | கலிலேயா | $17^{1-13}$ | $9^{2-13}$ | $9^{28-36}$. | |
| சந்திரரோகி சொஸ்தமானது .... | ,, | $17^{14-21}$ | $9^{14-29}$ | $9^{37-42}$. | |
| இயேசு தமது மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் மறுபடியும் முன்னறிவித்தது .... .... | ,, | $17^{22-23}$ | $9^{30-32}$ | $9^{43-45}$. | |
| வரிப்பணம் செலுத்தினது .... | கப்பர்நகூம் | $17^{24-27}$. | | | |
| தாழ்மை, மன்னிப்பு, தன்னடக்கம் என்பவைகளைப்பற்றிய போதனை .... .... .... | ,, | $18^{1-18}$ | $9^{33-50}$ | $9^{46-50}$. | |
| இரக்கமற்ற வேலைக்காரன் .... | ,, | $18^{23-35}$. | | | |

## D. கிரியைகளை நடப்பிக்கிற காலத்தின் முடிவு: பாடுகள் சமீபமாகக் காணப்படுகின்றன

**இடம்:** யூதேயா. யோவா $7^{10}$ $11^{54}$. பெரேயா. மாற் $10^{1}$ யோவா $10^{40}$.

**காலம்:** கி-பி. 28-ஆம் வருஷத்துக் கூடாரப் பண்டிகைமுதல், 29-ஆம் வருஷத்துப் பஸ்கா பண்டிகைவரை. (28-ஆம் வருஷ அக்டோபர்மீ முதல் 29-ஆம் வருஷ ஏப்ரில்மீ வரை.) மத் $19^{1}$-$20^{34}$ மாற் $10^{1-52}$ லூக் $9^{51}$-$19^{28}$. (இது கால வரிசையில் வைக்கப்படவில்லை.) யோவா $7^{1}$-$11^{57}$.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கடைசியாகக் கலிலேயாவை விட்டு இயேசு சமாரியா வழியாகக் கூடாரப்பண்டிகைக்குப்போனது. | சமாரியா | .... | .... | $9^{51-62}$. | |
| **கூடாரப் பண்டிகை.** (அக்டோபர்மீ) இயேசு செய்த போதனை. | எருசலேம் | .... | .... | .... | $7^{1-46}$. |
| சேவகர் அவரைப் பிடித்துக்கொள்ளும்படி வந்தது .... .... | ,, | .... | .... | .... | $7^{30-46}$. |
| விபசார ஸ்திரீக்கு அருளின மன்னிப்பு .... .... .... | ,, | .... | .... | .... | $8^{3-11}$. |
| பிரசங்கங்கள் .... .... .... | ,, | .... | .... | .... | $8^{12-59}$. |
| பிறவிக்குருடன் சுகமானது .... | ,, | .... | .... | .... | $9^{1-41}$. |
| 'வாசல்.' 'நல்ல மேய்ப்பன்' .... | ,, | .... | .... | .... | $10^{1-18}$. |
| இயேசு எருசலேமை விட்டு, எழுபது சீஷர்களை அனுப்பினது .. | யூதேயா | .... | .... | $10^{1-16}$. | |
| எழுபது சீஷர்கள் திரும்பி வந்தது. | ,, | .... | .... | $10^{17-24}$. | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| நல்ல சமாரியன் என்னும் உவமை. | யூதேயா | .... | .... | $10^{25-37}$. | |
| மார்த்தாள் மரியாள் என்பவர்களுடைய வீட்டுக்குப் போனது .... | பெத்தானியா | .... | .... | $10^{38-42}$. | |
| சீஷர்களுக்கு ஜெபம்பண்ணப் போதித்தது .... .... .... | யூதேயா | [$6^{5-13}$] | .... | $11^{1-13}$. | |
| இயேசு ஊமையனை சொஸ்தப்படுத்தி, தேவதூஷணத்தைக் கண்டித்தது .... .... .... | ,, | [$12^{22-45}$] | [$3^{20-30}$] | $11^{14-28}$. | |
| பிரசங்கங்கள்:— | | | | | |
| நினிவே .... .... | ,, | $12^{41}$ | .... | $11^{29-32}$. | |
| விளக்கு.... .... .... | ,, | .... | .... | $11^{33-36}$. | |
| ஊர்க்குருவிகள், பராமரிப்பு. | ,, | .... | .... | $12^{1-12}$. | |
| மதிகேடான ஐசுவரியவான்.. | ,, | .... | .... | $12^{13-21}$. | |
| கொல்லப்பட்ட கலிலேயர்.. | ,, | .... | .... | $13^{1-5}$. | |
| கனிகொடாத அத்திமரம் .... | ,, | .... | .... | $13^{6-9}$. | |
| கூனி சொஸ்தமானது .... .... | ............ | .... | .... | $13^{10-17}$. | |
| தேவாலயப் பிரதிஷ்டை (டிசெம்பர்மீ) பண்டிகைக்குப்போனது. | எருசலேம் | .... | .... | .... | $10^{22-30}$. |
| யூதர்கள் கல் எறிந்தது .... .... | ,, | .... | .... | .... | $10^{31-38}$. |
| இயேசு திரும்பி யோர்தானுக்கு அப்புறம் போனது .... .... | ............ | .... | .... | .... | $10^{39-40}$. |
| இரட்சிக்கப்பட்டவர்கள். ஏரோதைக்குறித்து எச்சரிப்பு .... | ............ | .... | .... | $13^{22-33}$. | |
| ஓய்வுநாளில் பரிசேயன் வீட்டில் நீர்க்கோவையுள்ளவனைச் சொஸ்தமாக்கினது .... .... | ............ | .... | .... | $14^{1-14}$. | |
| பெரிய விருந்தைப்பற்றிய உவமை. | ............ | .... | .... | $14^{15-24}$. | |
| மெய் சீஷன் .... .... .... | ............ | .... | .... | $14^{25-34}$. | |
| உவமைகள்:— | | | | | |
| 'காணாமல் போன ஆடு' .... | ............ | .... | .... | $15^{1-7}$. | |
| 'காணாமல் போன வெள்ளிக்காசு' .... .... | ............ | .... | .... | $15^{8-10}$. | |
| 'கெட்ட குமாரன்' .... | ............ | .... | .... | $15^{11-32}$. | |
| 'அநீதியுள்ள உக்கிராணக்காரன்'.... .... .... | ............ | .... | .... | $16^{1-18}$. | |
| 'ஐசுவரியவானும் லாசருவும்'. | ............ | .... | .... | $16^{19-31}$. | |
| லாசரு வியாதியாயிருந்தது .... | பெத்தானியா | .... | .... | .... | $11^{1-10}$. |
| இயேசு யூதேயாவுக்குத் திரும்பி வந்தது .... .... .... | ,, | .... | .... | .... | $11^{11-16}$. |
| லாசரு உயிரோடெழுந்தது .... | ,, | .... | .... | .... | $11^{11-46}$. |
| ஆலோசனைச் சங்கத்தில் காய்பாவின் யோசனை .... .... | எருசலேம் | .... | .... | .... | $11^{47-53}$. |
| இயேசு எப்பிராயீமிலுள்ள ஊருக்குப் போனது .... .... | எப்பிராயீம் | .... | .... | .... | $11^{54-57}$. |
| இயேசு எருசலேமுக்குக் கடைசியாகச் செய்த பிரயாணம் .... | சமாரியா நாடு | $19^{1}$ | $10^{1}$ | $17^{11}$. | |
| பத்துக் குஷ்டரோகிகள் சொஸ்தமானது .... .... .... | ,, | .... | .... | $17^{12-19}$. | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| அநீதியுள்ள நியாயாதிபதி .... | சமாரியா நாடு | .... | .... | $18^{1-8}$. | |
| பரிசேயனும் ஆயக்காரனும் .... | ,, | .... | .... | $18^{9-14}$. | |
| மனைவியைத் தள்ளிவிடுதலைப் பற்றியது .... .... .... | ,, | $19^{3-12}$ | $10^{2-12}$. | | |
| இயேசு சிறு பிள்ளைகளை ஆசீர்வதித்தது .... .... .... | ,, | $19^{13-15}$ | $10^{13-16}$ | $18^{15-17}$. | |
| ஐசுவரியமுள்ள வாலிபன் .... | ,, | $19^{16-22}$ | $10^{17-31}$ | $18^{18-30}$. | |
| திராட்சத்தோட்டத்தில்வேலையாட்களைப்பற்றிய உவமை .... | ,, | $20^{1-16}$. | | | |
| இயேசு மூன்றும் முறை தமது மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது .... .... | ,, | $20^{17-19}$ | $10^{32-34}$ | $18^{31-34}$. | |
| யாக்கோபும் யோவானும் செய்த விண்ணப்பம் .... .... | ,, | $20^{20-28}$ | $10^{35-45}$. | | |
| பர்திமேயுவுக்குக் கண்பார்வை அளித்தது .... .... .... | எரிகோ | $20^{29-34}$ | $10^{46-52}$ | $18^{35-43}$. | |
| சகேயு .... .... .... | ,, | .... | .... | $19^{1-10}$. | |
| பத்துராத்தலைப்பற்றிய உவமை.... | ,, | .... | .... | $19^{11-28}$. | |

## E. முடிவு: எருசலேமில் மகிமையோடு பிரவேசித்தல், கடைசியான போதனை, பாடுகள், மரணம், உயிர்த்தெழுதல், பரலோகம் செல்லுதல்

**இடம்:** எருசலேம்.

**காலம்:** கி-பி. 29-ஆம் பஸ்காவுக்கு 6 நாள் முந்தியிருந்து, பெந்தெகோஸ்துவுக்குப் பத்து நாளுக்கு முன்வரையில். (29-ஆம் ஏப்ரில்மீ-ஜூன்மீ.) மத் $21^{1}$-$28^{20}$ மாற் $11^{1}$-$16^{20}$ லூக் $19^{29}$-$24^{53}$ யோவா $12^{1}$-$21^{23}$.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **சனிக்கிழமை.** | | | | | |
| சீமோன் வீட்டில் விருந்து. மரியாள் தைலத்தை வார்த்தது .... | பெத்தானியா | $26^{6-13}$ | $14^{3-9}$ | .... | $12^{1-11}$. |
| **ஞாயிற்றுக்கிழமை.** | | | | | |
| இயேசு எருசலேமுக்குள் பிரவேசித்தது .... .... .... | எருசலேம் | $21^{1-11}$ | $11^{1-10}$ | $19^{29-44}$ | $12^{12-19}$. |
| அவர் தேவாலயத்தைப் பார்த்து பெத்தானியாவுக்குத் திரும்பிப் போனது .... .... .... | ............ | .... | $11^{11}$. | | |
| **திங்கட்கிழமை.** | | | | | |
| கனிகொடாத அத்திமரம் பட்டுப் போனது .... .... .... | ஒலிவமலை | $21^{18.19}$ | $11^{12-14}$. | | |
| இரண்டாம் முறை தேவாலயத்திலிருந்து வியாபாரிகளைத் துரத்தினது .... .... .... | எருசலேம் | $21^{12-17}$ | $11^{15-18}$ | $19^{45-48}$. | |
| பெத்தானியாவுக்குத்திரும்பிப்போனது .... .... .... | ,, | $21^{17}$ | $11^{19}$. | | |
| பட்டுப்போன அத்திமரத்தைப் பற்றிய பாடம் .... .... | ............ | $21^{20-22}$ | $11^{20-25}$. | | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| **செவ்வாய்க்கிழமை.** | | | | | |
| தேவாலயத்தில் செய்த பிரசங்கங்கள்:— | | | | | |
| தேவகுமாரனுடைய அதிகாரம் .... .... .... | எருசலேம் | $21^{23-27}$ | $11^{27-33}$ | $20^{1-8}$. | |
| இரண்டு குமாரரைப்பற்றிய உவமை .... .... | ,, | $21^{28-32}$. | | | |
| பொல்லாத தோட்டக்காரர் .. | ,, | $21^{33-46}$ | $12^{1-12}$ | $20^{9-19}$. | |
| ராஜகுமாரன் கலியாணம் .... | ,, | $22^{1-14}$. | | | |
| மூன்று கேள்விகள்:— | | | | | |
| (i) பரிசேயரும்ஏரோதியரும் இராயனுக்கு வரிகொடுப்பதைப்பற்றிக் கேள்வி கேட்டது .... .... .... | ,, | $22^{15-22}$ | $12^{13-17}$ | $20^{20-26}$. | |
| (ii) சதுசேயர் உயிர்த்தெழுதலைப்பற்றிக் கேள்வி கேட்டது .... .... .... | ,, | $22^{23-33}$ | $12^{18-27}$ | $20^{27-40}$. | |
| (iii) நியாயசாஸ்திரி பிரதான கற்பனையைப்பற்றிக் கேள்வி கேட்டது .... .... | ,, | $22^{34-40}$ | $12^{28-34}$. | | |
| கிறிஸ்துவானவர் தாவீதின் மகன். அது எப்படி? .... .... | ,, | $22^{41-46}$ | $12^{35-37}$ | $20^{41-44}$. | |
| **புதன்கிழமை.** | | | | | |
| வேதபாரகரையும் பரிசேயரையும் எச்சரித்தது .... .... | ,, | $23^{1-33}$ | $12^{38-40}$ | $20^{45-47}$. | |
| விதவை இரண்டு காசு கொடுத்தது. | ,, | .... | $12^{41-44}$ | $21^{1-4}$. | |
| கிரேக்கர்கள் வந்தது .... .... | ,, | .... | .... | .... | $12^{20-36}$. |
| அவிசுவாசமுள்ளவர்கள் .... | ,, | .... | .... | .... | $12^{36-50}$. |
| இயேசு தேவாலயத்தைவிட்டுப் புறப்படும்போது அதின் அழிவையும் எருசலேமின் அழிவையும் முன்னறிவித்தது .... .... | ஒலிவமலை | $24^{1-28}$ | $13^{1-23}$ | $21^{5-24}$. | |
| இரண்டாம்வருகையைப்பற்றியது. | ,, | $24^{28-51}$ | $13^{24-37}$ | $21^{24-26}$. | |
| உவமைகள்:— | | | | | |
| பத்துக் கன்னிகைகள் .... .... | ,, | $25^{1-13}$. | | | |
| ஐந்து தாலந்து .... .... | ,, | $25^{14-30}$. | | | |
| செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் .... .... .... | ,, | $25^{31-46}$. | | | |
| ஆலோசனைச் சங்கம். யூதாஸ் செய்த துரோகம் .... .... | எருசலேம் | $26^{1-16}$ | $14^{1-11}$ | $22^{1-6}$. | |
| **வியாழக்கிழமை.** | | | | | |
| பஸ்காவை ஆயத்தம் செய்தது .... | ,, | $26^{17-19}$ | $14^{12-16}$ | $22^{7-13}$. | |
| சீஷர்களுக்குள் உண்டான வாக்குவாதம். பஸ்கா போஜனம் .... | ,, | $26^{20}$ | $14^{17}$ | $22^{14-18}$. | |
| இயேசு சீஷர்களின் பாதங்களைக் கழுவினது .... .... | ,, | .... | .... | .... | $13^{1-20}$. |
| அப்பத்தைப் பிட்குதல் .... | ,, | $26^{26}$. | $14^{22}$. | $22^{19}$. | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| 'உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான்' .... .... | எருசலேம் | $26^{21-25}$ | $14^{18.19}$ | $22^{21-23}$ | $13^{21-25}$. |
| துணிக்கையைக் கொடுத்தது .... | ,, | .... | .... | .... | $13^{26.27}$. |
| யூதாஸ் புறப்பட்டுப் போனது .... | ,, | .... | .... | .... | $13^{28-35}$. |
| இயேசு பேதுருவின் மறுதலிப்பையும், சீஷர்கள் சிதறடிக்கப்படுவதையும் முன்னறிவித்தது .... | ,, | $26^{31-35}$ | $14^{27-31}$ | $22^{24-38}$ | $13^{36-38}$. |
| இயேசுபாத்திரத்தைஆசீர்வதித்தது. | ,, | $26^{27-29}$ | $14^{22-25}$. | | |
| இராப்போஜனத்துக்குப் பிறகு சீஷரைத் தேற்றும்படி இயேசு பரிசுத்த ஆவியையும், மெய்யான திராட்சச்செடியையும், தமது மரணத்தையும், தாம் அடையும் ஜெயத்தையும் பற்றிப் பிரசங்கம் செய்தது .... .... .... | ,, | .... | .... | .... | $14^{1}-16^{33}$. |
| இயேசு சீஷர்களுக்காகச் செய்த ஜெபம் .... .... .... | ............ | .... | .... | .... | $17^{1-26}$. |
| கீதம். புறப்பட்டது .... .... | ............ | $26^{30}$ | $14^{26}$ | .... | $18^{1}$. |
| இயேசு வியாகுலப்பட்டது .... | கெத்செமனே | $26^{36-46}$ | $14^{32-42}$ | $22^{39-46}$. | |
| இயேசுகாட்டிக்கொடுக்கப்பட்டது. | ,, | $26^{47-50}$ | $14^{43-46}$ | $22^{47.48}$ | $18^{2-9}$. |
| பேதுரு மல்குவின் காதை வெட்டினது .... .... .... | ............ | $26^{51-56}$ | $14^{47-49}$ | $22^{49-53}$ | $18^{10.11}$. |
| சீஷர்கள் ஓடிப்போனது .... | ............ | $26^{56}$ | $14^{50-52}$. | | |
| அன்னாவுக்குமுன் முதல்விசாரணை. | எருசலேம் | .... | .... | .... | $18^{12-14}$. |
| **வெள்ளிக்கிழமை.** | | | | | |
| காய்பாவுக்கும் ஆலோசனைச் சங்கத்துக்கும் முன் இரண்டாம் விசாரணை. பேதுரு மூன்றுதரம் இயேசுவை மறுதலித்தது. யூதர்கள் இயேசுவைப் பரிகாசஞ் செய்தது .... .... .... | ,, | $26^{57-75}$ | $14^{53-72}$ | $22^{54-71}$ | $18^{15-27}$. |
| பிலாத்துவுக்குமுன் மூன்றும் விசாரணை ஆரம்பமானது .... | ,, | $27^{1.2}$ | $15^{1.2}$ | $23^{1-5}$ | $18^{28-32}$. |
| யூதாஸ் மனஸ்தாபமும், மரணமும். | ,, | $27^{3-10}$. | | | |
| பிலாத்துவும் இயேசுவும் செய்த சம்பாஷணை .... .... | ,, | .... | $15^{3-5}$ | .... | $18^{33-38}$. |
| பிலாத்து இயேசுவை ஏரோதுவினிடத்திற்கு அனுப்பினது .... | ,, | .... | .... | $23^{6-12}$. | |
| பிலாத்து இயேசுவை விடுதலைசெய்யக் கருதினது. அவன் மனைவி கண்ட சொப்பனம். அவன் கை கழுவினது. யூதர்கள் பரபாசை விடுதலைசெய்யக் கேட்டது .... | ,, | $27^{11-26}$ | $15^{6-15}$ | $23^{13-19}$ | $18^{38-40}$. |
| இயேசு வாரினால் அடிபட்டது. போர்ச்சேவகர் பரியாசஞ் செய்தது .... .... .... | ,, | $27^{26-31}$ | $15^{15-20}$ | $23^{20-25}$ | $19^{1-16}$. |
| சிரேனியனாகிய சீமோன் சிலுவை சுமந்தது .... .... .... | ,, | $27^{32}$ | $15^{21}$ | $23^{26-32}$. | |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| இயேசு சிலுவையில் அறையப்பட்டது .... .... .... | கல்வாரி மலை | $27^{33-56}$ | $15^{22-41}$ | $23^{33-49}$ | $19^{17-42}$. |
| இயேசு அருளின ஏழு வாக்குகள்:— | | | | | |
| (i) 'பிதாவே, இவர்களுக்கு மன்னியும்' .... .... | ,, | ... | .... | $23^{34}$. | |
| சேவகர்கள் அவருடைய வஸ்திரத்தைப் பங்கிட்டது .... .... | ,, | $27^{35}$ | $15^{24}$ | $23^{34}$ | $19^{23}$. |
| யூதர்கள் செய்த பரியாசம். இரண்டு கள்ளர்கள் .... .... | ,, | $27^{39-44}$ | $15^{29-32}$ | $23^{35-43}$. | |
| (ii) 'இன்றைக்கு....பரதீசிலிருப்பாய்' .... .... | ,, | .... | .... | $23^{43}$. | |
| (iii) 'ஸ்திரீயே, அதோ உன் மகன் ழ' .... .... | ,, | .... | .... | .... | $19^{26.27}$. |
| இரவு .... .... .... | ,, | $27^{45}$ | $15^{33}$ | $23^{44.45}$. | |
| (iv) 'என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர்' .... | ,, | $27^{46}$ | $15^{34}$. | | |
| (v) 'தாகமாய் இருக்கிறேன்'. | ........... | .... | .... | .... | $19^{28}$. |
| காடி கொடுக்கப்பட்டது .... | கல்வாரி மலை | $27^{48}$ | $15^{36}$ | .... | $19^{29}$. |
| (vi) 'முடிந்தது' .... .... | ,, | .... | .... | .... | $19^{30}$. |
| (vii) 'பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன்' .... | ,, | .... | .... | $23^{46}$. | |
| தேவாலயத்தின் திரைச்சீலை கிழிந்தது .... .... .... | எருசலேம் | $27^{51}$ | $15^{38}$ | $23^{45}$. | |
| கல்லறைகள் திறந்தது .... .... | ,, | $27^{52}$. | | | |
| நூற்றுக்கு அதிபதி கூறின சாட்சி. | கல்வாரி மலை | $27^{54}$ | $15^{39}$ | $23^{47}$. | |
| ஸ்திரீகள் பார்த்துக்கொண்டது .... | ,, | $27^{55}$ | $15^{40}$ | $23^{49}$. | |
| போர்ச்சேவகன் ஈட்டியினால் அவர் விலாவில் குத்தினது .. .... | ,, | .... | .... | .... | $19^{34}$. |
| அடக்கம் .... .... .... | எருசலேம் | $27^{57-60}$ | $15^{42-47}$ | $23^{50-56}$ | $19^{38-42}$. |
| கல்லறையண்டை காவல் வைத்தது. | ,, | $27^{62-66}$. | | | |

## இயேசு உயிர்த்தெழுந்தபிறகு நாற்பது நாட்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மூன்றாம் நாளில் ஸ்திரீகள் கல்லறைக்குப் போய் இயேசு உயிர்த்தெழுந்திருக்கிறார் என்று அறிந்து, தேவதூதர்களைப் பார்த்துச் சீஷர்களுக்கு இதை அறிவிக்கும்படி போகையில் இயேசுவைக் கண்டது .... .... .... | தோட்டம் | $28^{1-10}$ | $16^{1-8}$ | $24^{1-10}$ | $20^{1.2}$. |
| பேதுருவும் யோவானும் கல்லறைக்குப் போனது .... .... | ,, | .... | .... | $24^{11.12}$ | $20^{3-10}$. |
| காவலாளர் பிரதான ஆசாரியனுக்கு நடந்தவை அறிவித்தது .... | எருசலேம் | $28^{11-15}$. | | | |
| மகதலேனா மரியாள் இயேசுவைக் கண்டது .... .... .... | தோட்டம் | .... | $16^{9-11}$ | .... | $20^{11-18}$. |

| விஷயங்கள். | இடம். | மத்தேயு. | மாற்கு. | லூக்கா. | யோவான். |
|---|---|---|---|---|---|
| எம்மாவுக்குப் போகிற இரண்டு சீஷர்கள் இயேசுவைக்கண்டது. | வழியில் | .... | $16^{12-13}$ | $23^{13-35}$. | |
| பேதுரு இயேசுவைக் கண்டது (1 கொரி $15^{5}$) .... .... | எருசலேம் | .... | .... | $23^{34}$. | |
| பத்து சீஷர்கள் இயேசுவைக் கண்டது .... .... .... | ,, | .... | .... | $24^{35-49}$ | $20^{19-23}$. |
| பத்து சீஷர்களும் தோமாவும் இயேசுவைக் கண்டது .... .... | ,, | .... | $16^{14-18}$ | .... | $20^{24-29}$. |
| கலிலேயாவுக்குப் போன சீஷர்கள் இயேசுவைக் கண்டது .... | கலிலேயாக்கடற்கரை | .... | .... | .... | $21^{1-24}$. |
| கலிலேயாவிலுள்ள ஒரு மலைமேல் சீஷர்கள் இயேசுவைக் கண்டது (1 கொரி $15^{5}$) .... .... | கலிலேயா | $28^{16-20}$. | | | |
| 500 சீஷர்கள் இயேசுவைக் கண்டது (1 கொரி $15^{6}$). | | | | | |
| யாக்கோபு இயேசுவைக் கண்டது (1 கொரி $15^{7}$). | | | | | |
| இயேசு பரலோகம் சென்றது .... | பெத்தானியா | .... | $16^{19.\ 20}$ | $24^{50-53}$. | |
| சுவிசேஷத்தின் நோக்கம் .... | ............ | .... | .... | .... | $20^{30.\ 31}$. |
| முடிவுரை .... .... .... | ............ | .... | .... | .... | $21^{25}$. |

**சுவிசேஷகன்**. **Evangelist.** சுவிசேஷம் என்பதற்கு மூலார்த்தம் 'நல்வார்த்தை' ஆனதினால் ஆதி கிறிஸ்தவர்கள் அந்த நற்செய்தியைக் கூறுகிறவனுக்குச் 'சுவிசேஷகன்' என்று பெயர் இட்டார்கள். இதின்படி பிலிப்பு என்பவனுக்குச் சுவிசேஷகன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப் $21^{8}$. ஆதி சபையில் சுவிசேஷகனின் ஊழியம் ஒரு உத்தியோகமல்ல. சுவிசேஷம் பிரபலியம் ஆகும்படி அதைப் பிரசங்கம் செய்வதற்குத் திராணியுள்ளவன் எவனும் சுவிசேஷகனாய் இருந்தான். எபே $4^{11-13}$. இப்படியே பரி. பவுல் எபேசுபட்டணத்தில் கண்காணியாகிய தீமோத்தேயு சுவிசேஷ ஊழியத்தைச் செய்யும்படி ஏவுகிறான். 2 தீமோ $4^{5}$.

**சுவிசேஷம்**. **Gospel.** *Gospel* என்பது 'தேவனுடைய வாக்கு.' மூலபாஷையில் சுவிசேஷம் என்பதற்கு 'நற்செய்தி' அல்லது 'நல்வார்த்தை' என்று அர்த்தமாம். இந்த நற்செய்தி என்னவென்றால் தேவசமாதானம், இரட்சிப்பு, அவருடைய அருள், ராஜ்யம் ஆகிய இவைகளே. மத் $4^{23}$ $9^{35}$ $24^{14}$ மாற் $1^{14}$ அப் $20^{24}$ ரோ $15^{19}$ எபே $1^{13}$. 'சுவிசேஷம்' என்பது இயேசுவின் மூலமாய் அருளப்பட்ட இவைகளை முற்றிலும் குறிக்கும் பொதுப்பெயர். மாற் $1^{15}$ $8^{35}$ $14^{9}$ $16^{15}$ அப் $15^{7}$ ரோ $11^{28}$ 2 கொரி $8^{18}$. ரோ $10^{16}$-ல் 'சுவிசேஷம்' தீர்க்கதரிசிகள் உரைத்த போதனையைப் பொதுவாய்க் குறிக்கிறது. வெளி $14^{6}$-ல் 'சுவிசேஷம்' தேவதூதன் கூறின சமாசாரத்தைக் குறிக்கிறது.

மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் எழுதின புஸ்தகங்களுக்கு ஆதி கிறிஸ்தவர்கள் 'சுவிசேஷம்' என்று பெயர் சொல்லவில்லை. கி-பி. 150-ளவு முதலாவது இவைகளுக்கு இந்தப் பெயர் வழங்கப்பட்டது.

ஆதி சபையில் நாலு சுவிசேஷங்களைத் தவிர 'எபிரெயருடைய சுவிசேஷம்,' 'எகிப்தியருடைய சுவிசேஷம்,' 'யாக்கோபினுடைய சுவிசேஷம்,' 'தோமாசின் சுவிசேஷம்' இன்னும் ஏறக்குறைய இருபது சுவிசேஷங்கள் வெவ்வேறான காலங்களிலும் வெவ்வேறான சபைகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தன. இவைகளில் மரியாளைக் குறித்தும், இயேசுவின் பிறப்பைக்குறித்தும், அவருடைய பாலியப் பிராயத்தைக்குறித்தும், பிலாத்து செய்த விசாரணையைக்குறித்தும் பல சங்கதிகள் உண்டு. ஆனால் இவைகளில் சொன்ன சமாசாரங்களுக்குப் போதிய அத்தாட்சி இல்லாததினாலும், இவைகளின் ஆக்கியோன்கள் தங்கள் அபிப்பிராயத்தின்படி இவைகளில் பல கதைகளை எழுதினதினாலும் பதிதர்கள் தங்கள் கொள்கைகளை

உறுதிப்படுத்தும்படி 'சுவிசேஷங்கள்' சில எழுதினதினாலும் ஆதி கிறிஸ்தவசபை இவைகளில் ஒன்றையும் பொதுவாய் அங்கீகரிக்காமல், இவைகளைப் பக்திவிருத்திக்காகமாத்திரம் வாசிக்கலாம் என்று உத்தரவு கொடுத்தார்கள். இந்தச் சுவிசேஷங்களை ஆராய்ந்து பார்க்கும்போது மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் இவர்கள் எழுதின சுவிசேஷங்களில் இல்லாத விசேஷம் ஒன்றும் இவைகளில் இல்லையென்று அறியலாம். **மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான்** காண்க.

**சுழல்காற்று, சூறவளி.** Whirlwind. அராபியாதேசத்தில் சுழல்காற்று அதிகமாய் உண்டாகும். வனாந்தரமான இடங்களில் இந்தக் காற்று அடிக்கும்போது தூசி மணல் பிரயாணிகளைச் சில வேளைகளில் மூடிக்கொள்ளும். தூரத்திலிருந்து இதைப் பார்த்தால் இது பூமியிலிருந்து வானத்துக்குப் பெரிய ஸ்தம்பம்போல் தோன்றும். இதைப் பார்க்கப் பயங்கரமாய் இருக்கும். எபிரெய பதங்கள் இந்தமாதிரியான சுழல் காற்றையும் அதிக மும்முரமாய் வீசி அடிக்கும் சூறவளிக்காற்றையும் குறிக்கின்றன. 'சுழல்காற்று.' ஏசா $17^{3}$. 'சூறவளி.' யோபு $37^{9}$ நீதி $1^{27}$. 'பெருங்காற்று.' யோபு $21^{18}$ $38^{1}$. சங் $83^{15}$ ஏசா $29^{6}$ எரே $23^{19}$.

**சுழற்படி.** Winding stairs. 1 இரா $6^{8}$. **தேவாலயம்** காண்க.

## சூ.

**சூகா.** Shuhah. 1 நாளா $4^{11}$.

**சூகார்.** Zuar. எண் $1^{8}$.

**சூகால்.** Shual. ஆசேர் கோத்திரத்தான். 1 நாளா $7^{36}$.

**சூகாள்.** Shuah. ஏபேரின் மகள். 1 நாளா $7^{32}$.

**சூகியன்.** Shuhite. யோபு $2^{11}$ $8^{1}$ $18^{1}$ $25^{1}$ $42^{9}$

**சூக்கியர்.** Sukkiim. எகிப்து ராஜாவாகிய சீஷாக்கின் சேனையோடு வந்த ஒரு கோத்திரம். 2 நாளா $13^{3}$.

**சூசன்னாள்.** Susanna.

1. தள்ளுபடி ஆகமத்தில் சொல்லியிருக்கும் கற்புள்ள ஸ்திரீயாகிய சூசன்னாளின் சரித்திரம் காண்க.

2. லூக் $8^{3}$.

**சூசான், சூஷான்.** Shushan. பெர்சியா ராஜ்யத்தில் மூன்று முக்கிய நகரிகளில் இதுவும் ஒன்று. இது திகிரீஸ் நதிக்குக் கிழக்கே ஏறக்குறைய நூறு மைல் தூரத்தில் பெர்சியாக் குடாக்கடலுக்கு வடக்கே நூற்று நாற்பது மைல் ஏலாம் என்னும் நாட்டில் இருந்தது. தானி $8^{2}$ நெகே $1^{1}$ எஸ்தர் $1^{1}$.

**சூசி.** Susi. எண் $13^{11}$.

**சூசிமியர்.** Zuzims. ஒருவேளை இவர்களும் சம்சூமியரும் ஒரு ஜனந்தான். இவர்கள் தென் பலெஸ்தீனாவில் உள்ள பூர்வீக ஜனம். ஆதி $14^{5}$ உபா $2^{20}$.

**சூஷங்கியர்.** Shushanchites. சூஷான் நாட்டிலிருந்து வந்து சமாரியாவில் குடியேறினவர்கள். எஸ்றா $4^{9}$.

**சூடு.** Heat. தானி $3^{19}$ பிர $4^{11}$ லேவி $13^{8}$.

**சூது.** Sleight. எபே $4^{14}$.

**சூநேம்.** Shunem. 1 சாமு $28^{3}$. **சூனேம்** காண்க.

**சூபவேல்.** Shubael. **சுபவேல்** காண்க.

**சூப்.** Suph. சூப் என்பதற்கு 'நீரில் வளரும் களைகள்' என்று அர்த்தமாம். அராபியா தேசத்தார் செங்கடலுக்குக் 'களைகளின் கடல்' என்று அர்த்தங்கொண்ட 'யம்சூப்' என்னும் பெயர் சொல்லுவார்கள். ஆதலால் உபா $1^{1}$-ல் சொல்லியிருக்கும் சூப் செங்கடலின் வடக்கிலுள்ள இரண்டு குடாக்கடல்களில் ஒன்றைக் குறிக்கிறது.

**சூப்.** Zuph.

1. சாமுவேலின் முற்பிதாக்களில் ஒருவன். = சோபாய். 1 சாமு $1^{1}$ 1 நாளா $6^{26.35}$.

2. சூப்தேசம் தென் கானானில் இருந்தது. ஆனால் இதின் எல்லைகளைத் திட்டமாய்ச் சொல்ல முடியாது. 1 சாமு $9^{5}$.

**சூப்பா.** Supha. எண் $21^{14}$.

**சூம்பின கை.** Withered hand. சூம்பின கை உடையவனுடைய கை நரம்புகளும் எலும்புகளும் முற்றிலும் மரத்ததுபோல் இருந்தது. மத் $12^{10}$ மாற் $3^{1}$ லூக் $6^{6}$ யோவா $5^{3}$.

**சூரிஷதாய்.** Zurishaddai. எண் $7^{36}$.

**சூரிய ஆராதனை.** Sun Worship. கானான் தேசத்தில் பூர்வ ஜனங்கள் சூரியனை வணங்கி அதற்குச் சிலைகளை உண்டாக்கினார்கள். ஆதி $37^{9}$ யாத் $23^{24}$ லேவி $26^{30}$ ஏசா $17^{8}$. இஸ்ரவேலர்களில் ஒருவன் இந்த மார்க்கத்தில் இசைந்தால் அவன் கல்லெறிந்து கொல்லப்படவேண்டும். உபா $17^{3}$. பிற்காலங்களில் எருசலேமிலே சூரியனை வணங்கும் ஆலயங்களில் இந்துக்கள் யானைகளை வைத்திருப்பதுபோல குதிரைகளை வைத்தார்கள். சில சமயங்களில் இஸ்ரவேலர் சாலொமோன்

கட்டின தேவாலயத்தின் பிராகாரங்களில் சூரிய ஆராதனையை நடத்திக்கொண்டார்கள். 2 இரா 23[5.11] 2 நாளா 14[5] 34[4] எசே 8[16].



பூர்வ காலத்திலுள்ள ஒரு சூரிய கடிகாரம்.

**சூரிய கடிகாரம்.** Dial. சூரிய கடிகாரம் என்னும் கருவியில் ஒரு பலகையின் மேல் ஆணிபோன்ற ஒரு குச்சி பதிக்கப்பட்டிருக்கும். அப்பலகையில் அந்த ஆணியைச்சுற்றிப் பாகையைக் குறிக்கும் ரேகைகள் வரைந்திருக்கும். பகலில் குச்சியின் நிழல் பாகைகளில் விழுந்து செல்லும்போது பார்க்கிறவர்கள் அந்த ரேகைகளை எண்ணி இத்தனை மணிநேரம் என்று அறிந்துகொள்ளுவார்கள். இந்தமாதிரியான கடிகாரம் நம் எல்லாருக்கும் நன்றாய்த் தெரியும். இதற்கும் ஆகாஸ் ராஜனுடைய கடிகாரத்திற்கும் வித்தியாசம் உண்டு. எப்படி என்றால் அதில் ஒரு ஸ்தம்பத்தைச் சுற்றிச் சூரியன் நிழல் விழும்படிக்கான பாகைகள் காட்டுவதற்குப் படிகள் கட்டப்பட்டிருந்தன. இவைகளில் விழும் நிழலைப் பார்த்து மணிக் கணக்குச் சொல்லக்கூடும். 2 இரா 20[11] ஏசா 38[8]. முன்போன சாயை பின்னிட்டுப் போனதை அறியும்படி **எசேக்கியா** காண்க. பக். 162.

**சூரியன்.** Sun. எபிரெயர்களின் அபிப்பிராயத்தின்படி வானஜோதிகளில் சூரியன் நட்சத்திரங்களைவிடப் பெரியது. அவர்கள் பூமி தட்டை என்றும்; பகலில் சூரியன் கிழக்கிலிருந்து மேலே மேற்கு முகமாய்ப் பறந்து அங்கிருந்து பூமிக்குக் கீழே திரும்பவும் கிழக்கே வரும் என்றும் நினைத்தார்கள். ஆதி 1[16] யாத் 16[21] உபா 33[14] நியா 5[31] யோபு 30[28] சங் 121[6] பிர 1[1]7 ஏசா 30[26] யோவே 2[31] மத் 13[43] வெளி 6[12] 21[23]. யோசுவா சூரியன் கிபியோன்மேலே நிற்கும்படி விண்ணப்பம்செய்ததினால் இஸ்ரவேலர் சூரியன் வாஸ்தவமாய் நின்றது என்று எண்ணினார்கள். யோசு 10[12] ஆப 3[11]. நமது அபிப்பிராயத்தின்படி அவர்கள் தங்கள் தலைவன் உற்சாகமாய் விண்ணப்பம் செய்ததினாலும், தாங்களும் அதிக முயற்சியோடு அந்நாளிலே அநேக காரியங்கள் செய்து முடித்ததினாலும் சாதாரண நாட்களைவிட அந்த நாளிலே பல நாழிகைகள் கூட இருந்தது என்று நம்பினதே இந்தப் பாரம்பரியத்துக்குக் காரணமாய் இருக்கலாம். வான சாஸ்திரிகளும் கணித சாஸ்திரிகளும் பலதடவை கணக்குப் பார்த்துச் சூரியன் ஒருபோதும் நிற்கவேயில்லையென்றும், பூமி தன் சுற்றோட்டத்தில் எப்போதும் ஒரே மாதிரியாய்ப் போய்க்கொண்டிருக்கிறதென்றும் சொல்லுகிறார்கள்.

**சூரியேல்.** Zuriel. எண் 3[35].



சூரை.

**சூரைச்செடி.** Juniper-tree. இது பலெஸ்தீனாவிலும் சீனாய்க் குடாநாட்டின் வனாந்தரமான இடங்களிலும் அதிகம். 1 இரா 19[5] சங் 120[4].

**சூர்.** Sur. ஒரு வாசல். 2 இரா 11[6]. **எருசலேம்** காண்க.

**சூர்.** Shur. எகிப்தின் வடகிழக்கெல்லையிலுள்ள ஒரு இடம். ஆதி 16[7] 20[1].

**சூர்.** Zur.

1. எண் 25[15].

2. 1 நாளா 8[30].

**சூலமித்தி.** Shulamite. சூலேம் அல்லது சூனேம் ஊராள். உன். பா 6[13].

**சூவா.** Shua. யூதாவின் கானானிய மனைவியின் தகப்பன். ஆதி 38[2] 1 நாளா 2[3].

**சூவா.** Shuah. ஆபிரகாமுக்கும் கேத்தூராளுக்கும் பிறந்த ஒரு மகன். ஆதி 25[2] 1 நாளா 1[32].

**சூவாக்.** Suah. ஆசேர் கோத்திரத்தான். 1 நாளா $7^{36}$.

**சூவால்.** Shual. பெலிஸ்தியர் படையெடுத்த தேசம். 1 சாமு $13^{17}$.

**சூளை.** Furnace. ஆதி $15^{17}$ $19^{28}$ யாத் $9^{8}$ நெகே $3^{11}$ $12^{38}$ தானி $3^{6}$ நாகூ $3^{14}$ மத் $13^{42}$ வெளி $9^{2}$. 'செங்கற்சூளை.' 2 சாமு $12^{31}$.

**சூளைகள் கோபுரம்.** Tower of the furnaces. எருசலேமின் மதிலில் ஒரு கோபுரம். நெகே $3^{11}$.

**சூறவளி.** Whirlwind. சுழல்காற்று காண்க.

**சூனி.** Shuni. ஆதி $46^{16}$.

**சூனியவித்தை.** Magic.

**1. இதைக்குறித்து வேதாகமத்தில் சொல்லியிருக்கும் பதங்கள்.**

அஞ்சனம். லேவி $27^{27}$ 1 சாமு $28^{3}$ 2 இரா $21^{6}$.

அமாவாசி கணிக்கிறவன். ஏசா $47^{13}$.

அம்புகளைக் குலுக்குதல். எசே $21^{21}$.

ஈரலால் குறிபார்ப்பது. எசே $21^{21}$.

ஊரீம் தும்மீம். யாத் $28^{30}$ லேவி $8^{8}$ உபா $33^{8}$ யோசு $16^{1}$ 1 சாமு $14^{41}$.

எத்தர்கள். 2 தீமோ $3^{13}$.

கல்தேயர். தானி $1^{4}$.

குறிசொல்லுதல். லேவி $27^{27}$ 1 சாமு $28^{3}$ எசே $21^{21}$ உபா $18^{10}$.

குறி கேட்கிறவன். உபா $18^{11}$.

சன்னதக்காரன். உபா $18^{11}$.

சாஸ்திரி. தானி $2^{27}$.

சீட்டுப்போடுதல். லேவி $16^{8}$ யோசு $21^{4}$ நியா $20^{9}$ நீதி $16^{33}$ 1 சாமு $14^{41}$ யோனா $1^{7}$.

சூனியம். ஏசா $47^{12}$.

சூனியவித்தை. மீகா $5^{12}$.

சூனியக்காரி. யாத் $22^{18}$.

சொப்பனக்காரன். ஆதி $37^{19}$ உபா $13^{1}$ யூதா $1^{8}$.

ஜோசியர். ஏசா $47^{12}$.

ஸ்தம்பனவித்தை. ஏசா $47^{12}$.

ஞானதிருஷ்டி. ஆதி $44^{5}$ அப் $10^{10}$.

தரிசனம்சொல்லுதல். சக $13^{4}$ எண் $24^{3, 16}$.

'தெராபீம்.' ஆதி $31^{19}$ நியா $18^{24}$ 1 சாமு $19^{13}$ 2 இரா $23^{24}$ எசே $21^{21}$.

நட்சத்திரம் பார்க்கிறவன். ஏசா $47^{13}$.

நிமித்தம் பார்க்கிறவன். எசே $21^{21}$.

நாளைச் சபிக்கிறவர். யோபு $3^{8}$.

நாள் பார்க்கிறவன். உபா $18^{10}$ ஏசா $2^{6}$.

'பாம்பாட்டிகள் ஊதும் சத்தம்.' சங் $58^{5}$.

பில்லிசூனியம். 1 சாமு $15^{23}$ 2 இரா $9^{22}$ கலா $5^{20}$.

மந்திரவாதி. ஆதி $41^{8}$ உபா $18^{11}$ ஏசா $19^{3}$ அப் $19^{13}$.

மாயவித்தைக்காரன். உபா $18^{11}$.

முணுமுணு என்று ஓதுகிற குறிகாரர். ஏசா $8^{19}$.

**2. சூனிய உற்பத்தி.** முதலில் தேவனுடைய சித்தத்தை அறியவேண்டும் என்ற வாஞ்சையே சூனியம் செய்வதற்குக் காரணம். ஆதியிலே கானான் தேசத்தில் உள்ளவர்களுக்குள் நியமிக்கப்பட்ட பூசாரிமாராகிய ஆசாரியர்கள் ஜனங்கள் தங்கள் தேவதைகளைத் தொழுது செய்யும் விண்ணப்பத்திற்குக் கொடுக்கும் உத்தரவை அவர்களுக்குத் தெரிவிப்பார்கள். இப்படித் தெரிவிக்கிறவர்கள் எல்லா ஆசாரியருமல்ல, அவர்களிற் சிலர் மாத்திரந்தான். அவர்கள் வணங்கிவந்த தேவர்கள் பலரானதினாலும், அவர்களை வணங்கினவர்கள் பலரானதினாலும், அவர்களுடைய வணக்கம் பலவிதமாய் இருந்ததினாலும், விண்ணப்பம் செய்கிறவர்களுக்கு பூசாரிகள் கொடுக்கும் உத்தரவும் பலமாதிரியாய் இருந்தது.

எபிரெயர்கள் கானான் தேசத்திற்கு வந்தபோது அவர்கள் யேகோவாவை வணங்குவதோடு, அஸ்தரோத் முதலியவர்கள் வாஸ்தவமாய்த் தேவர்கள் என்று நம்பினதினால் அந்தத் தேவர்களின் தயவு தங்களுக்குக் கிடைக்கும்படி பூர்வீகத்தார் வணங்கின அந்தத் தேவர்களைத் தாங்களும் பலமுறையும் வணங்க நேரிட்டது. இவ்விதமாய்ப் பூர்வீகத்தார் வணங்கின தேவர்களின் தயவைப் பெறுவதும், மறைபொருளை அறிவதுந்தான் எபிரெயர்களுக்குள் நடந்த சூனியத்துக்குக் காரணம். இதினிமித்தம் யேகோவாவுக்குச் செய்யும் வணக்கத்திற்கும் இந்தவிதமான சூனியத்திற்கும் தீராத விரோதம் இருந்தது என்று நியாயப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசன ஆகமங்களிலும் பலமுறையும் பார்க்கிறோம். இஸ்ரவேலர் மெய்யாய் யேகோவாவை உண்மையாக நம்பி அந்நிய தேவர்களின் ஆசாரத்தோடு சேர்ந்த சூனியம் எல்லாவற்றையும் கண்டித்து வந்தார்கள். யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிற்பாடு அவர்களிற் சிலர் சூனியத்தை அனுசரித்துவந்தாலும் பெரும்பாலும் அவர்கள் ஆவிக்குரியவிதமாய் யேகோவாவை வணங்கி அதை முற்றிலும் வெறுத்தார்கள்.

**3. இஸ்ரவேலருக்குள்ளே இருந்த சூனியத்தின் வரலாறு.**

(i) ஆபிரகாம் முதலிய ஆதி பிதாக்களின் காலமுதல் அசீரியர்கள் இஸ்ரவேலருக்கு விரோதமாய்ப் படையெடுத்து வந்த காலம்

வரையும், எபிரெயர்களில் மந்திரவாதிகளாய் இருந்தவர்கள் 'தெராபீம்' என்னும் சுரூப வணக்கம், சொப்பனர்த்தம், மரித்தோரைப் பாதாளத்திலிருந்து அழைக்கும் மந்திரம் ஆகிய இவைகளை அனுசரித்தார்கள். மந்திரங்களைச் சொல்லித் தேவனுடைய சித்தத்தை அறியலாம் என்பது எல்லாத் தேசத்தார்களுக்கும் பொதுவான நம்பிக்கையாய் எப்படி இருந்ததோ அப்படியே சூனியவித்தையில் தேறினவர்கள் மரித்தோரைப் பாதாளத்திலிருந்து அழைக்கக்கூடும் என்னும் நம்பிக்கையும் எபிரெயர்களுக்கு உறுதியாயிருந்தது.

நியாயப்பிரமாணத்தில் எபிரெயர்கள் சீட்டுப் போடுவதினாலும், குறி கேட்பதினாலும், யேகோவாவின் சித்தத்தை அறிவது நியாயமாயினும், யேகோவாவை வணங்கினவர்கள் சூனியத்தினால் அதை அறியும்படி பிரயாசைப்படுவது பொருந்தாமை என்று தீர்மானித்து அந்தக் குற்றத்திற்கேற்ற தண்டனைகள் ஏற்படுத்தினார்கள். அப்படியே முதல் ராஜாவாகிய சவுல் இப்படிச் செய்தவர்களை தேசத்தில் இராதபடி துரத்திவிட்டான். யாத் $22^{18}$ 1 சாமு $28^{3}$.

(ii) அசீரியர்கள் இஸ்ரவேலருக்கு விரோதமாய் வந்தபோது இஸ்ரவேலர் சுற்றிலுமிருந்த ஜனங்களோடு ஐக்கியப்பட்டவர்களாய் அந்த ஜனங்கள் நடத்தின சூனியவித்தை பழகும்படி தங்கள் தேசத்தில் அவர்களுக்கு இடங்கொடுக்கவேண்டியதாய் வந்தது. ராஜாவாகிய எசேக்கியாவும் யோசியாவும் அந்நிய தேவர்களின் விக்கிரக ஆராதனையையும் பலவித சூனியத்தையும் தெராபீம் முதலிய தேவர்களையும் தேசத்திலிருந்து அகற்றும்படி பிரயாசைப்பட்டார்கள். 2 இரா $18^{4}$ $23^{24}$ ஏசா $2^{6}$ எரே $10^{12}$.

(iii) எபிரெயர்கள் பாபிலோனியாவில் சிறையிருப்பில் இருக்கும்போது பலவித விநோதமான சூனியத்தைப்பற்றி அறிய வந்தார்கள். பாபிலோனியாவில் சூனியவித்தையும் மறைபொருள் தெரிவிப்பதும் ராஜாவின் பரிவாரங்களில் உள்ள பலருக்கு உத்தியோகமாய் இருந்தது. மந்திரம் எழுதுகிறவர்களும், பில்லிசூனியம் வைக்கிறவர்களும், மருந்து போடுகிறவர்களும், மாயவித்தைக்காரர்களும், ஜோசியர்களும் இருந்தார்கள் என்று தானியேலின் ஆகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தானி $2^{2}$ ஏசா $47^{12}$.

(iv) புதிய ஏற்பாட்டில் மாயவித்தைக்காரனாகிய சீமோன், எலிமா என்பவர்களைப்பற்றியும் தந்திர மந்திரங்களைப்பற்றியும் சொல்லியிருக்கிறது. எபேசு பட்டணத்தில் மந்திரவாதிகள் அநேகர் இருந்தார்கள். அப் $8^{9}$ $13^{8}$ $19^{9}$.

**4. சூனியத்தின் விசேஷ நோக்கங்களாவன:**

A. வரப்போகிற காரியங்களை அறிதல். (*Divination.*)

B. நினைத்த காரியத்தை இரகசியமாய் முடித்தல். (*Magic.*)

**A. வருங்காரியங்களை அறிதல்.**

(i) எபிரெயர்கள் தங்கள் ஜனத்தையும் தங்களையும் நடத்திக்கொள்ளுவது, விசாரணையில் குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பது, ஆராதனையில் காணிக்கையாகக் கொடுத்த மிருகத்தைத் தெரிந்தெடுப்பது, தேசத்தைப் பங்கிடுவது, விசேஷித்த ஊழியத்திற்காக ஆட்களை நியமிப்பது ஆகிய இவைகளில் யேகோவாவின் சித்தம் இன்னதென்று அறிவதற்குச் சீட்டுப்போடுதல் நியாயந்தான் என்று நினைத்தார்கள்.

'ஊரீம் தும்மீம்' என்பது ஒரு மாதிரியான சீட்டுப்போடுதலைக் குறிக்கலாம்.

சில வேளைகளில் அம்பறாத்தூணியைக் குலுக்கி அதிலிருந்து விழும் அம்பினால் தேவனுடைய சித்தத்தை அறிவார்கள். எசே $21^{21}$.

சில வேளைகளில் பலியிட்ட மிருகங்களின் ஈரலைப் பார்த்துக் குறிசொல்லுவார்கள். எசே $21^{21}$.

(ii) கனவின் மூலமாய் யேகோவாவின் சித்தத்தை அறியக்கூடும் என்பது இஸ்ரவேலருக்குள் உறுதியான நம்பிக்கையாய் இருந்தது. இது சிலதடவை உண்மையாய் இருந்தாலும், கள்ளத்தீர்க்கதரிசிகள் இதினால் பலரை ஏமாற்றினார்கள். உபா $13^{1}$ எரே $23^{25}$. தீர்க்கதரிசிகளோ உண்மையுள்ள தேவதரிசனங்களைத்தவிர மற்ற எல்லாச் சூனியமும் மந்திர தந்திரங்களும் மோசமானவைகளே என்று தீர்மானித்தார்கள். ஏசா $28^{7}$ எண் $24^{3}$.

(iii) குறிசொல்லுதல் பலவிதமாய் இருந்தது. சில மந்திரவாதிகள் பாத்திரத்தில் தண்ணீர் அல்லது ரசம் வார்த்து அஞ்சனக்காரர்களைப்போல் அதைப் பார்த்து, வரும் காரியங்களை முன் அறிவிக்கிறோம் என்று சொன்னார்கள். யோசேப்பு வைத்திருந்த பாத்திரம் இதைப்போன்றது என்று சிலர் நினைக்கிறார்கள். ஆதி $44^{5}$. மேகங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்துக் குறிசொல்லுகிற ஜோசியர்கள் விசேஷமாய்ப் பாபிலோனியாவில் இருந்தார்கள். தானியேல் பாபி

லோனிய ஞானிகளில் சிரேஷ்டனாயிருந்தாலும் இவ்விதமான சாஸ்திரங்களில் தேறினவனாயிருந்தானோ இல்லையோ என்பது நமக்குத் தெரியாது.

(iv) சூனியத்தில் தேறினவர்கள் வருங் காரியங்களை அறியும்படி ஆவிகளையும் மரித்தோர்களையும் அழைக்கக்கூடும் என்று இஸ்ரவேலர் உறுதியாய் நம்பினார்கள். சூனியக்காரர் தங்களிடத்தில் குறிகேட்கிறவர்களுக்கு இந்த ஆவிகளைக் காண்பிப்பார்கள். அல்லது அவைகளின் சத்தம் கேட்கும்படி செய்வார்கள். யூதர்கள் அல்லாமலும் கிரேக்கரும் இந்தவிதமான அதிகாரம் சூனியக்காரருக்கு உண்டென்று நம்பினார்கள். மரித்தோரின் ஆவிகள் இந்த உலகத்திற்குத் திரும்பவும் வராதென்று நம்மால் சொல்லமுடியாது. கடவுளுக்குச் சித்தமானால் அவைகள் வரமுடியும். ஆனால் சூனியத்தினால் ஒருவன் இவைகளை அழைக்கக்கூடும் என்பதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. ஏசாயா சொன்ன 'முணுமுணு என்று ஓதுகிறவர்களும்,' பரி. பவுல் சொன்ன 'எத்தர்களும்' இந்த மாதிரியான சூனியக்காரர்தான்.

(v) 'தெராபீம்' குடும்பத்தை க்ஷேமமாய்க் காப்பாற்றும் கிராம தேவதைகளைப்போன்ற தேவர்கள். முற்காலத்தில் எபிரெயர்களில் சிலர் மரித்தவர்களிடத்திலிருந்து தேவசித்தத்தை அறியும்படி எப்படி பிரயாசைப்பட்டார்களோ, அப்படியே தெராபீம் இடத்திலிருந்து அறியும்படி பிரயாசைப்பட்டார்கள் என்று நாம் நினைக்கலாம். பிற்காலங்களில் இவைகளின் மூலமாய் மற்றவர்களை மோசஞ்செய்யும்படி பிரயாசைப்பட்டார்கள் என்று தோன்றுகிறது.

**B. நினைத்த காரியத்தை இரகசியமாய் முடித்தல்.**

புதைக்கப்பட்டிருக்கும் திரவியம் முதலியவற்றை அடைவது, விரோதிகளுக்கு மோசம் செய்வது ஆகிய இவைகளைச் சூனியத்தின் மூலமாய் முடித்துக்கொள்ளலாம் என்று எபிரெயர்கள் நம்பினார்கள். மேலும் கண்திருஷ்டி, மரணம், வியாதி நீக்கும்படியும் இவைகளினால் மற்றவர்களை உபாதிக்கும்படியும் சூனியம் செய்வார்கள்.

(i) மற்றவர்கள் செய்த சூனியத்தின் மூலமாய் உண்டான மோசம் நீங்கும்படி செய்யும் சூனியம் நல்லது என்பது அக்காலத்தவர்களின் அபிப்பிராயம். இவ்விதமான பொல்லாத ஆவிகளும் சத்துருக்களும் செய்த பிரயத்தனத்தினின்று தங்களைக் காப்பாற்றும்படி பாபிலோனியா அசீரியா ராஜாக்கள் ஜோசியர் முதலியவர்களைத் தங்கள் அரமனையில் வைத்துச் சம்ரக்ஷணை செய்துவந்தார்கள். இதினிமித்தம் குளிசம், காப்பு முதலியவைகளை அநேகர் அணிந்துவந்தார்கள். வேதாகமத்தில் சொல்லியிருக்கும் 'பிறைச்சிந்தாக்கு,' 'காதணி' முதலியவைகள் இப்படிப்பட்ட தாயித்துகளாய் இருந்தனவென்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. ஏசா 3[18].

(ii) மற்றவர்களுக்கு விரோதமாய்ச் செய்த சூனியத்தை தீர்க்கதரிசிகள் அடிக்கடி கண்டித்துவந்தார்கள். இந்தச் சூனியம் பலவிதமாய் இருந்தது. சிலர் மந்திரம் ஓதிக் கீரைகளைச் சமைத்து அதைத் தெளித்துச் சாபம் இடுவார்கள்; சிலர் மருந்துபோடுவார்கள்; சிலர் கயிறுகளில் முடிச்சுக் கட்டுவார்கள்; சிலர் சுபாசுப தினங்களைக்குறித்துச் சொல்லுவார்கள்; சிலர் சத்துருவைப்போல் சுரூபம் செய்து அதில் காயத்தைக் காட்டும் சில வடுக்கள் பண்ணுவதினால் அந்தச் சத்துருவுக்கு மோசம் உண்டாகுமென்று நினைத்தார்கள்.

(iii) ஆதி கிறிஸ்தவர்களில் அநேகர் சூனியத்திற்குப் பயப்பட்டார்கள். ஆனால் அவர்கள் வரவர ஆவிக்குரியவிதமாய்க் கடவுளின் சித்தத்தை அறிந்து சூனியத்தில் யாதொரு உண்மையும் இல்லையென்று தீர்மானித்தார்கள். பேதைமை உள்ளவர்கள் சூனியக்காரர்களிற் சிலர் தாங்கள் இருந்தகாலத்தில் மற்றவர்களுக்குத் தெரியாத கலைக்கியானத்தை அடைந்து, மற்றவர்களுக்கு அற்புதமாய்த் தோன்றுகிற காரியங்களைச் செய்தார்கள் என்றும், அகஸ்மாத்தாய்ச் சூனியக்காரர் சொன்னதின்படி நேரிட்டவைகளைப் பார்த்துப் பயந்து சூனியக்காரர் அதிசயமானவைகளைச் செய்யக்கூடியவர்கள் என்றும் எண்ணிக்கொண்டார்கள். ஆனால் கிறிஸ்தவ வேதமாகிய ஒளி உதித்த தேசங்களிலுள்ள ஜனங்கள் புத்திபோதனையில் விருத்தி அடைந்த அளவுக்குத்தக்கபடி சூனியவித்தை அகன்றுபோயிற்று.

**சூனேமியாள்.** **Shunammite.** எலிசாவுக்குப் பணிவிடை செய்த சூனேம் ஊராள். 2 இரா 4[12].

**சூனேம்.** **Shunem.** இசக்கார் கோத்திரத்தின் தேசத்திலுள்ள ஒரு ஊர். ஒரு வேளை தாபோர் மலைக்குக் கிட்ட எலிசா கண்ட ஊர் வேறே. யோசு 19[18] 1 சாமு 28[4] 2 இரா 4[8].

**சூனேம்.** **Shunem.** அபிஷாக் பிறந்த ஊர். 1 இரா 1[3] 2[22].

## செ.

**செகரியா.** Shearlah. 1 நாளா $8^{38}$.

**செகரியா.** Sheharlah. 1 நாளா $8^{26}$.

**செகனியா, செக்கனியா.** Shechanlah.
1. 1 நாளா $3^{21}$.
2. எஸ்றா $8^{5}$.
3. 1 நாளா $24^{11}$.
4. 2 நாளா $31^{15}$.
5. எஸ்றா $10^{2}$.
6. நெகே $3^{29}$.
7. நெகே $6^{18}$.
8. நெகே $12^{3}$.

**செகூப்.** Segub.
1. 1 இரா $16^{34}$.
2. 1 நாளா $2^{21}$.

**செகேம்.** Shechem. **சீகேம்** காண்க.

**செக்கனியா.** Shechanlah. **செகனியா** காண்க.

**செக்காக்கா.** Secacah. யோசு $15^{61}$.

**செக்குந்து.** Secundus. தெசலோனிக்கே சபையிலுள்ள இவன் எருசலேமுக்கு பரி. பவுலுடன் பிரயாணம் பண்ணினான். அப் $20^{4}$.

**செங்கடல்.** Red Sea. **சிவந்த சமுத்திரம்** காண்க.

**செங்கல்.** Brick. பாபிலோனியாவிலும், எகிப்திலும், கானானிலும் ஆபிரகாமின் காலத்திற்கு அநேக நூற்றாண்டுகளுக்கு முந்தி மண்ணினால் உருவாக்கப்பட்டுப் பெரும்பாலும் சூரிய வெயிலில் காய்ந்த கற்களைப் பண்ணுவது அத்தேசத்தார்களுக்கு வழக்கம். சில வேளைகளில் அவைகளைச் சூளையில் போட்டு சூடாக்குவார்கள். மண் கெட்டியாயிருக்கும்படி அதில் வைக்கோல் கலந்து செய்வார்கள். பாபிலோனியாவிலே மண்ணினால் பலகைகளைப் பண்ணி அவைகளின்மேல் அடமானங்கள் முதலியவைகளை எழுதி அவைகளை வெயிலில் வைத்து அல்லது சூளையிற் போட்டுச் சூடாக்குவார்கள். இம்மாதிரி மண்பலகைகளில் வீடு, நிலம், பட்டணம் ஆகிய இவைகளின் படங்களை வரைந்திருப்பார்கள். இவ்விதமாய் அநேக புஸ்தகங்களை எழுதினார்கள். இவைகளுக்குக் கறையான், ஈரம் முதலியவைகளால் உண்டாகக்கூடிய கெடுதிகள் வராததினால், ஆபிரகாம் காலத்திற்கு முந்தி இவைகளை எழுதினவர்களும் அவர்கள் இருந்த பட்டணங்களும் முற்றிலும் அற்றுப்போயிருந்தாலும், அந்தச் செங்கற் புஸ்தகங்களும் அடமானங்களும் இந்நாள்மட்டும் இருக்கிறது. வேதசாஸ்திரிகள் இவைகளில் சொல்லப்பட்டிருந்த விஷயங்களை வாசித்து மொழிபெயர்த்து, இவைகளின் பொருள்களை நமக்குத் தெரிவித்து வந்திருக்கிறார்கள். எகிப்தியர் செய்த கற்கள் அகலத்திலும் நீளம் அதிகமாயிருந்தது. பாபிலோனியர் செய்த கற்கள் சதுரமாயிருந்தது. ஆதி $11^{3}$ யாத் $5^{7}$ 2 சாமு $12^{31}$ ஏசா $65^{3}$ எரே $43^{9}$ எசே $4^{1}$ நாகூ $3^{14}$. 'தட்டோடு.' லூக் $5^{19}$.

**செங்கிடாரி.** Red Helfer. எபிரெயரின் அபிப்பிராயத்தின்படி பிரேதத்தைத் தொட்டவன் முற்றிலும் தீட்டுப்பட்டிருப்பான். இப்படித் தீட்டுப்பட்டவன் சுத்தமாவது எப்படியென்றால்: ஆசாரியன் செங்கிடாரி ஒன்றைப் பாளயத்திற்கு வெளியே கொண்டுவந்து அதை முழுதும் தகனித்துச் சாம்பலாக்கி அந்தச் சாம்பலை ஒரு பாத்திரத்திற் போட்டு அதில் ஊற்றுநீர் விட்டுக் கலந்து, தீட்டுப்பட்டவன்மேல் 'தீட்டுக்கழிக்கும் ஜலம்' ஆகிய இந்த நீரை மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலும் தெளிப்பான். ஏழாம் நாளில் தீட்டுப்பட்டவன் சுத்தமாவான். இந்தச் சடங்காசாரம் யேகோவாவின் ஜனங்களாகிய இஸ்ரவேலர் பரிசுத்தமாய் இருப்பது அவசியமென்பதைக் காட்டும்படி அறிகுறியாயிருந்தது. எண் 19 அதி. எபி $9^{13}$.

**செங்கோல்.** Sceptre. ஆதி $49^{10}$ எண் $24^{17}$ சங் $45^{6}$ $110^{2}$ ஏசா $14^{5}$ எசே $19^{11}$ ஆமோ $1^{5}$ சக $10^{11}$ எபி $1^{8}$. 'பொற்செங்கோல்.' எஸ்தர் $4^{11}$ $5^{2}$ $8^{4}$.

**செசரியா.** Caesarea. ரோமை ராயர்களுக்கு 'சேசர்,' 'கேசர்,' 'கைசர்' என்னும் பட்டப்பெயர் இருந்தது. ஆதலால் பெரிய ஏரோது யூதேயாவின் கடலோரத்தில் யோப்பா பட்டணத்திற்கு வடக்கே ஏறக்குறைய 40 மைல் தூரத்தில் ஓர் பெரிய பட்டணம் ஸ்தாபிக்கும்போது, ரோமை ராயனுடைய தயவைப் பெறும்படி, அதற்குச் 'செசரியா' என்னும் பெயரிட்டான். இது மகா அலங்காரமாயிருந்தது. இதில் துறைமுகத்தைச் சுற்றிப் பெரிய மதிலும், அதில் கூடகோபுரங்களும், பயணக்காரருக்குச் சத்திரங்களும், ரோமை ராயனுடைய விக்கிரகத்திற்கு ஒரு தேவாலயமும், நகரத்திற்குத் தண்ணீர் பாயும்படி பெரிய கால்வாய்களும், அரங்கசாலைகளும், நியாயஸ்தலங்களும் ஆகிய இவை முதலானவைகளையும் கட்டினான். பெரிய ஏரோதின் மகனாகிய அர்கெலாயு துரத்தப்பட்ட பிறகு, ரோமை ராயன் அனுப்பின தேசாதிபதிகளுக்குச் செசரியா தலைநகரியாயிருந்

தது. இதில் சீக்கிரத்திலே கிறிஸ்தவ சபை யுண்டானது. அப் $8^{41}$. கொர்நேலியு இங்கே வசித்தான். அப் $10^{1}$. இதில் பரி. பவுல் இரண்டு வருஷத்திற்கு மேலே சிறையாக வைக்கப்பட்டிருந்தான். அப் 23, 26 அதி. இதில் ஒரு சமயத்தில் யூதர்கள் ரோமை ராயனுக்கு விரோதமாய்க் கலகம் பண்ணின தினாலே 20,000 யூதர்கள் கொல்லப்பட்டார்கள். இதில் கிறிஸ்தவ பொதுவான சங்கங்கள் சில வைக்கப்பட்டிருந்தன. தற்காலத்திலே இந்தப் பட்டணம் பாழான இடமாய் இருக்கிறது.

**செசரியா பிலிப்பி, பிலிப்புச் செசரியா.** **Caesarea Philippi.** பெரிய ஏரோதின் மகனாகிய பிலிப்பு, கலிலேயாக் கடலுக்கு ஏறக்குறைய 30 மைல் வடக்கே முன்னிருந்த ஒரு சிறிய ஊரில் கட்டடங்கள் கட்டி, அதை அலங்கரித்து, ரோமைராயனுடைய தயவைப் பெறும்படிக்குச் சேசர் அல்லது 'கைசர்' (*Caesar*) என்னும் அவனுடைய பெயரையும் தன் பெயரையும் சேர்த்து இதற்குச் 'செசரியா பிலிப்பி' என்று பெயரிட்டான். இங்கே அந்நியதேவர்களின் தேவாலயம் ஒன்று இருந்தது. இதற்குச் சமீபமாய் பேதுரு இயேசுவை மேசியா என்று அறிக்கையிட்டான். மத் $16^{16}$ மாற் $8^{27}$.

**செஸ்பாத்சார், சேஸ்பாத்சார், சேனுசார்.** **Sheshbazzar, Shenazzar.** 'சூரிய தேவனே, பிரபுவைக் காப்பாற்றும்' என்று அர்த்தங்கொண்ட 'செஸ்பாத்சார்' என்னும் பெயர் யூதாவின் பிரபு ஒருவனுக்கு இருந்தால், அப்பதம் பாபிலோனிய பாஷையில் உள்ள பதம் என நாம் அறியவேண்டும். நேபுகாத்நேச்சார் எடுத்த பணிமுட்டுகளைக் கோரேஸ் தேசாதிபதியாகிய இவனிடம் கொடுத்தபோது, அவைகளை இவன் எருசலேமுக்குக் கொண்டுபோனான். தேவாலயம் மறுபடியும் கட்டுகிறவிஷயத்தில் செருபாபேல் தலைவனாய் இருந்தபோது ராஜாங்க காரியங்களில் இவனும் கோரேஸ் அனுப்பின 'தேசாதிபதியாய்' இருக்கலாம். எஸ்ரா $1^{8}$ $5^{14}$. ஒருவேளை இவனும் 'சேனுசார்' என்பவனும் ஒருவன்தான். 1 நாளா $3^{18}$. ஒருவேளை இவனும் செருபாபேலும் ஒருவன்தான்.

**செட்டை.** **Wing.**

1. பக்ஷிகளின் சிறகு. யாத் $37^{9}$ யோபு $39^{13}$ பிர $10^{20}$ ஏசா $6^{2}$ $40^{31}$ எசே $17^{3}$ தானி $7^{4}$.

2. ஆதரவு. உபா $32^{11}$ சங் $36^{7}$ $91^{4}$ மல் $4^{2}$ மத் $23^{37}$.

**செதில்.** **Scale.** லேவி $11^{9}$ உபா $14^{9}$ அப் $9^{18}$. சிலாம்புகள் காண்க.

**செப ஆலயம்.** ஜெப ஆலயம் காண்க.

**செபதியா, செபத்தியா, செப்பத்தியா.** **Shephatiah.** [யேகோவா நியாயத்தீர்ப்பு செய்தார்].

1. 2 சாமு $3^{4}$.
2. எஸ்றா $2^{4}$.
3. எஸ்றா $2^{57}$.
4. நெகே $11^{4}$.
5. 1 நாளா $9^{8}$.
6. எரே $38^{3}$.
7. 1 நாளா $12^{5}$.
8. 1 நாளா $27^{16}$.
9. 2 நாளா $21^{2}$.

**செபதியா, செப்பதியா.** **Zebadiah.**

1. 1 நாளா $8^{15}$.
2. 1 நாளா $8^{17}$.
3. 1 நாளா $12^{7}$.
4. 1 நாளா $27^{7}$.
5. எஸ்றா $8^{8}$.
6. எஸ்றா $10^{20}$.
7. 1 நாளா $26^{3}$.
8. 2 நாளா $17^{8}$.
9. 2 நாளா $19^{11}$.

**செபத்தியா.** **Shephatiah.** செபதியா காண்க.

**செபம்.** **Prayer.** ஜெபம் காண்க.

**செபனியா, செப்பனியா, செப்பானியா.** **Shebaniah, Zephaniah.**

1. நெகே $9^{4}$.
2. நெகே $10^{4}$.
3. நெகே $10^{12}$.
4. 1 நாளா $15^{24}$.
5. 1 நாளா $6^{36}$.
6. 2 இரா $25^{18}$ எரே $21^{1}$ $29^{25}$ $37^{3}$ $52^{24}$.
7. சக $6^{10}$.

**செபாரீம்.** **Shebarim.** யோசு $7^{5}$.

**செபினா.** **Zebina.** எஸ்றா $10^{43}$.

**செபுதாள்.** **R. V. Zebidah, Zebuda.** யோயாக்கீமின் தாய். 2 இரா $23^{36}$.

**செபுலோன்.** **Zebulun.** [வாசம்]. யாக்கோபின் பத்தாம் மகன்; லேயாளின் பிள்ளைகளில் ஆறும் மகன். ஆதி $30^{20}$. செபுலோன் மூன்று வம்சங்களுக்கு ஆதிபிதா. ஆதி $46^{14}$ யோசு $19^{10}$ எண் $1^{31}$. இந்தக் கோத்திரத்தின் நாடு கலிலேயாக்கடலுக்கு மேற்கே ஆசேர் தாபோர் வரையும் பரந்திருந்தது. மத் $4^{13}$. இதற்குச் சமீபமாய்ச் சீதோன் பட்டணம் இருந்தது. இங்குள்ளவர்கள் கப்பல் யாத்திரை

செய்வதில் தைரியசாலிகள். ஆதி $49^{13}$ உபா $33^{19}$. இந்த நாடு அதிக செழிப்புள்ளது. இதின் குடிகள் அதிக தைரியஸ்தர்கள். நியா $4^{10}$. நியாயாதிபதியாகிய ஏலோன் இந்தக் கோத்திரத்தான். நியா $12^{11}$. அசீரியர்கள் வட இஸ்ரவேலை ஜெயித்தபோது அவர்கள் செபுலோன் கோத்திரத்தை அழித்தார்கள் என்று தோன்றுகிறது. 2 இரா $15^{29}$. இதின் சரித்திரத்தைப்பற்றி வேறே விசேஷம் ஒன்றும் சொல்லியிருக்கவில்லை.

**செபுவேல்.** Shebuel. 1 நாளா $23^{16}$. **சூபவேல்** காண்க.

**செபெதேயு.** Zebedee. யாக்கோபு யோவான் என்பவர்களின் தகப்பன். இவனுக்குக் கூலியாட்கள் இருந்ததினால் இவன் ஆஸ்தியுள்ளவனாய் இருந்தான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. இவன் மனைவியின் பெயர் சலோமே. மத் $4^{21}$ $10^{2}$ $20^{20}$ $26^{37}$ $27^{56}$ மாற் $1^{20}$ லூக் $5^{10}$ யோவா $21^{2}$.

**செபேலா.** Shephelah. **சமபூமி** காண்க.

**செபோயீமின் பள்ளத்தாக்கு.** The Valley of Zeboim. [கழுதைப் புலிகளின் பள்ளத்தாக்கு]. எருசலேம் இருக்கும் மலைநாட்டிலிருந்து யோர்தான் நதிக்கு இறங்கிப் போகிற பள்ளத்தாக்கு. 1 சாமு $13^{18}$ நெகே $11^{34}$.

**செபோயீம்.** Zeboim. சமபூமியிலுள்ள பட்டணங்களில் ஒன்று. ஆதி $10^{19}$ $14^{2}$ ஓசி $11^{8}$.

**செப்துவசின்த்.** Septuagint. **கிரேக்க சத்தியவேதம்** காண்க.

**செப்பத்தா.** Zephathah. 2 நாளா $14^{10}$.

**செப்பதியா.** Zebadiah. **செபதியா** காண்க.

**செப்பத்தியா.** Shephatiah. **செபத்தியா** காண்க.

**செப்பர்வாயீம்.** Sepharvaim.

1. அசீரியர் பிடித்த ஊர்களில் ஒன்று. ஏசா $36^{19}$ $37^{30}$. ஒருவேளை இதுவும் வட இஸ்ரவேலில் சிப்ராயிமும் ஒன்றுதான். எசே $47^{16}$.

2. வடபாபிலோனியாவில் உள்ள ஒரு ஊர். சமாரியா அழிக்கப்பட்டபிறகு அசீரிய ராஜா இங்கிருந்து ஜனங்களைக் கொண்டு போய்ச் சமாரியாவிற் குடியேற்றினான். இது பாபிலோனியாவின் தலைநகரிகளில் ஒன்று. 2 இரா $17^{24}$.

**செப்பனியா.** Zephaniah. [யேகோவா பொக்கிஷமாக வைத்திருக்கிறார்].

1. 1 நாளா $6^{36}$.

2. இல்கியாவின் பேரனாகிய 'இரண்டாம் ஆசாரியன்.' நேபுகாத்நேச்சார் எருசலேமை ஜெயித்தபிறகு அவன் இவனை ரிப்லாவிலே கொன்றுபோட்டான். 2 இரா $25^{18}$ எரே $21^{1}$ $29^{25}$ $37^{3}$ $52^{24}$.

3. சக $6^{10}$.

4. அடுத்த நிபந்தத்தைக் காண்க.

**செப்பனியா தீர்க்கதரிசி.** Zephaniah.

1. **தீர்க்கதரிசி.** செப்பனியாவைக் குறித்து இவன் இயற்றின புஸ்தகத்தில் நமக்குச் சில விஷயங்கள் தெரியவருகிறது. கி-மு. 639-608-வரை மட்டும் யூதா ராஜ்யத்தில் அரசாண்ட யோசியாவின்காலத்தில் இவன் தீர்க்கதரிசனத்தை உரைத்தான். இவனுடைய ஆகமத்திலே இவன் அந்நிய தெய்வத்தை வணங்குகிறதைப்பற்றி உரைத்தவை நாம் பார்த்து யோசியா யூதா தேசத்திலிருந்து விக்கிரக ஆராதனையைத் துரத்தும் முந்தி இந்தத் தீர்க்கதரிசிப் போதகத்தைப் போதித்தான் என்று தீர்மானிக்கிறோம். இந்த ஆகமத்தின் முதல் வசனத்தில் இவனுடைய முன்னோர்களைப்பற்றிச் சொன்னவைகளைப் பார்த்து அதில் சொன்ன 'எஸ்கியா' என்பவன் எசேக்கியா ராஜாவாயிருந்தான். ஆதலால், செப்பனியா ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவனென்று அறிகிறோம்.

2. **செப்பனியாவின் ஆகமம்.** இதில் இரண்டு பாகங்களுண்டு. முதல் இரண்டு அதிகாரங்கள் சேர்ந்து ஒரே பிரசங்கமாயிருக்கிறது. பிறகு மூன்றும் அதிகாரம் இன்னொரு பிரசங்கமாயிருக்கிறது.

(i) 1, 2 அதி. இந்த அதிகாரங்களில் பூமிக்கு வரும் நியாயத்தீர்ப்பும், யூதா, பிலிஸ்தியா, மோவாப், எத்தியோப்பியா, அசீரியா என்னும் தேசங்களுக்கு வரும் தண்டனையும், அத்தண்டனைக்குக் காரணங்களும் விபரமாய்ச் சொல்லப்படுகிறது. இரண்டாம் அதிகாரத்தில் உண்மையுள்ளவர்களுக்கு இரண்டு வாக்குத்தத்தங்கள் உண்டு. செப் $2^{3.7}$.

(ii) 3-ம் அதிகாரத்தில் எருசலேமின் பாவமும், சர்வலோகத்திற்கு வரும் தண்டனையும், சிறையிருப்பிலிருந்து மீட்கப்பட்டவர்களுக்குக் கிடைக்கும் மேன்மையும் சொல்லப்படுகிறது.

மனுஷர்கள் யாவரும் யேகோவாவைத் தொழுதுகொள்ளுவார்கள் என்று தீர்க்கதரிசி இதில் உறுதியாய்க் கூறுகிறான். இந்த ஆகமத்திலுள்ள பொருளை விசாரித்து, செப்பனியா தீர்க்கதரிசி அந்நிய தேவர்களை அகற்றிவிட்டு உண்மையோடே யேகோவாவை வணங்கும்படி இஸ்ரவேலர்களுக்குப் புத்தி

போதனையைக் கொடுக்கிற தீர்க்கதரிசியா யிருந்தானென்று தெளிவாய் அறிகிறோம். இவன் ஜனங்கள் உண்மையோடும் உற்சாகத் தோடும் யேகோவாவைத் தொழுதுகொள்ள வேண்டுமென்று கூறியதினாலே, 75 வரு ஷங்களுக்கு முந்தி எசேக்கியாவின் காலத்தி லுள்ள முதலாம் ஏசாயா தீர்க்கதரிசியைப் போன்றவனா யிருந்தான் என்று சொல்ல வேண்டியது.

**செப்பாத்.** Shaphat. 1 நாளா $3^{22}$. =சாப்பாத் (3).

**செப்பார்.** Sephar. ஆதி $10^{30}$.

**செப்பானியா.** Zephaniah. செபனியா காண்க.

**செப்பி.** Shephi. 1 நாளா $1^{40}$. =செப் போ. ஆதி $36^{23}$.

**செப்பி, செப்போ.** Zephi. Zepho. ஆதி $36^{11}$ 1 நாளா $1^{36}$.

**செப்புப்பான்.** Shephuphan. சுப்பாம் காண்க.

**செப்போ.** Shepho. =செப்பி.

**செப்போ.** Zepho. செப்பி காண்க.

**செப்னா.** Shebna. ஏசாயா கண்டித்த அரமனை விசாரிப்புக்காரன். 2 இரா $18^{18}$ ஏசா $22^{15}$ $36^{3}$.

**செமகியா.** Semachiah. 1 நாளா $26^{7}$.

**செமாராயீம்.** Zemaraim. யோசு $18^{22}$ 2 நாளா $13^{4}$.

**செமரியா.** Shemariah. [யேகோவா காப்பாற்றினார்].

1. 1 நாளா $12^{5}$.
2. 2 நாளா $11^{19}$.
3. எஸ்றா $10^{32}$.
4. எஸ்றா $10^{41}$.

**செமா.** Shema. சேமா காண்க.

**செமாயா, சேமாயா.** Shemaiah. [யேகோவா கேட்டார்].

1. ஒரு தீர்க்கதரிசி. 1 இரா $12^{22}$ 2 நாளா $12^{5}$.
2. 1 நாளா $3^{22}$.
3. ஒரு காவலாளி. நெகே $3^{29}$.
4. 1 நாளா $4^{37}$.
5. 1 நாளா $5^{4}$.
6. 1 நாளா $9^{14}$.
7. 1 நாளா $9^{16}$.
8. 1 நாளா $15^{8}$.
9. ஒரு வேதபாரகன். 1 நாளா $24^{6}$.
10. 1 நாளா $26^{4}$.
11. 2 நாளா $17^{8}$.
12. 2 நாளா $29^{14}$.
13. 2 நாளா $31^{15}$.
14. 2 நாளா $35^{9}$.
15. எஸ்றா $8^{16}$.
16. எஸ்றா $8^{13}$.
17. ஒரு ஆசாரியன். எஸ்றா $10^{21}$.
18. எஸ்றா $10^{31}$.
19. கள்ளத்தீர்க்கதரிசி. நெகே $6^{10}$.
20. நெகே $10^{8}$.
21. நெகே $12^{34}$.
22. ஒரு ஆசாரியன் நெகே $12^{35}$.
23. ஒரு பாடகன். நெகே $12^{36}$.
24. ஒரு பாடகன். நெகே $12^{42}$.
25. எரே $26^{20}$.
26. எரேமியாவுக்கு விரோதமாயிருந்த ஒரு தீர்க்கதரிசி. எரே $29^{24}$.
27. எரே $36^{12}$.

**செமாரியர்.** Zemarites. கானான் தேசத் திலுள்ள ஒரு பூர்வீக ஜனம். ஆதி $10^{18}$.

**செமிரா.** Semirah. 1 நாளா $7^{8}$.

**செமிரமோத்.** Shemiramoth. 1 நாளா $15^{18}$ 2 நாளா $17^{8}$.

**செமினீத்** Sheminith. சங் 6, 12 தலைப் பில் சொல்லியிருக்கும் இந்த எபிரெய பதத் தின் அர்த்தம் நமக்குத் திட்டமாய்த் தெரி யாது. வேதசாஸ்திரிகள் நினைக்கிறபடி இப் பதம் இந்தச் சங்கீதம் பாடவேண்டிய முறை யைக் குறிக்கிறது.

**செமீதா.** Shemida. எண் $26^{32}$.

**செமேபர்.** Shemeber. செபோயீமி யரின் ராஜா. ஆதி $14^{2}$.

**செம்பு.** Copper. லீபனோன் எர் மோன் மலைகளில் செம்பு விளையும். சீனாய் குடாநாட்டில் எகிப்தியர்கள் நிலத்திலிருந்து செம்பை அதிகமாய் வெட்டி யெடுத்தார்கள். செம்பும் வெள்ளியும் கலந்து வெண்கலமும், செம்பும் துத்தநாகமும் கலந்து பித்தளையும் செய்வார்கள். உபா $8^{9}$ யோபு $28^{2}$. பழைய ஏற்பாட்டில் சில இடங்களில் 'வெண்கலம்' என்று சொல்லியிருப்பது செம்பைக்குறிக் கிறது. மத் $10^{1}$-ல் 'செம்பு' என்பது செம் புக்காசைக் குறிக்கிறது.

**செம்புகம்.** Cuckoo. இந்தப் பட்சி நமக் குத் தெரிந்த செம்புகம் அல்ல, கடலோரத் தில் வசித்து மீன்பிடிக்கும் பட்சிகளில் ஒரு வகை. லேவி $11^{16}$ உபா $14^{15}$.

**செயல்தியேல்.** Shealtiel. = சலாத்தி யேல். எஸ்றா $3^{2}$ 1 நாளா $3^{17}$ மத் $1^{12}$.

**செயால்.** Sheal. எஸ்றா $10^{29}$.

**செயோரீம்.** Seorim. 1 நாளா $24^{8}$.

**செய்யுள்.** Poetry. பழைய ஏற்பாட்டிலே சங்கீதம், நீதிமொழி, யோபு என்னும் புஸ்தகங்கள் செய்யுளாக எழுதப்பட்டிருக்கிறது. இவைகளில் நீதியைப் பற்பலவிதமாக வர்ணித்திருக்கிறது. உன்னதப்பாட்டு விவாகம் நடக்கும் காலத்தில் பாடவேண்டிய கீதமாலையா யிருக்கிறது. ஏசாயா இம்மாதிரிப் பாட்டை நினைத்து 5-ம் அதிகாரத்தில் திராட்சத்தோட்டத்தைப்பற்றி ஒரு பாட்டுப் பாடுகிறான். மரித்தோர்களைப்பற்றிய மாலைகள் உண்டு. 2 சாமு $1^{17}$ $3^{33}$ எரே $9^{17}$. எரேமியா பாடின புலம்பலும் ஓர் செய்யுள். யுத்தத்தில் ஜெயமடைந்தவர்களைச் சிறப்பிக்கும்படி பாட்டுப் பாடுவது வழக்கம். புதிய ஏற்பாட்டிலே சில வாக்கியங்களைத்தவிர செய்யுள் இல்லை. **கீதம்** காண்க.

**செரகியா, செராகியா.** Zerahiah.

1. 1 நாளா $6^{6}$ எஸ்றா $7^{4}$.
2. எஸ்றா $8^{4}$.

**செராகியா.** Zerahiah. = செரகியா.

**செராகு, செரா, செராகு.** Zerah.

1. ஆதி $36^{13}$.
2. ஆதி $38^{30}$.
3. எண் $26^{13}$. = சோகார். ஆதி $46^{10}$.
4. 1 நாளா $6^{21}$.
5. தென் எகிப்திலிருந்து யூதாவுக்கு விரோதமாய்ப் படை எடுத்துப்போன ஒரு அரசன். 2 நாளா $14^{9}$.

**செராயா.** Seraiah. [யேகோவா பிரபுவாய் இருக்கிறார்].

1. = சவிஷா. 2 சாமு $8^{17}$ 1 நாளா $18^{16}$.
2. சிதேக்கியாவின் காலத்திலுள்ள பிரதான ஆசாரியன். எரே $52^{24}$ எஸ்றா $7^{1}$.
3. எரே $40^{8}$.
4. யோவாபின் தகப்பன். 1 நாளா $4^{13}$.
5. ஏகூவின் பாட்டன். 1 நாளா $4^{35}$.
6. = அசரியா. எஸ்றா $2^{2}$ நெகே $7^{7}$.
7. = அசரியா. நெகே $10^{2}$ 1 நாளா $9^{11}$.
8. எரே $36^{26}$.
9. எரே $51^{59}$.

**செருகாள்.** Seruah. யெரொபெயாமின் தாய். 1 இரா $11^{26}$.

**செருக், செருக்.** Serug. [கிளை]. ஆதி $11^{20}$ லூக் $3^{35}$.

**செருபாபேல், சொரொபாபேல்.** Zerubbabel. இவன் தாவீது கோத்திரத்தான். இவன் கோரேஸின்காலத்தில் சிறையிருப்பிலிருந்த யூதர்களை எருசலேமுக்கு நடத்தி வந்த அவர்களுக்குத் தலைவனாய் இருந்தவன். கி-மு. 520-ஆம் ஆகாய் சகரியா என்னும் தீர்க்கதரிசிகள் இவனும் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவும் தேவாலயத்தைத் திரும்பக் கட்டும்படி யேகோவாவினால் விசேஷமாய் நியமிக்கப்பட்டவர்கள் என்று கூறினார்கள். ஆகாய் இவனை யேகோவாவின் 'முத்திரை மோதிரம்' என்கிறான். சில வேதசாஸ்திரிகள் நினைக்கிறபடி சகரியா இவனுக்குக் 'கிளை' என்று பெயரிட்டுத் தன் அபிப்பிராயத்தின்படி இவன்தான் எபிரெயர்களை மீட்கும் மேசியா என்று காட்டினான். இவன் தேவாலயங் கட்டும்படி பிரயாசைப்பட்டபோது யூதர்களின் சத்துருக்கள் பல இடறல் செய்து இதைக்குறித்துத் தரியு என்னும் பெர்சிய ராஜாவுக்கு விண்ணப்பம் எழுதினார்கள். ஒருவேளை செருபாபேலுக்குச் செஸ்பாத்சார் என்னும் பெயர் மறுபெயராய் இருந்திருக்கலாம். ஆனால் இதைக்குறித்துத் தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. யோசேப்பும் மரியாளும் இவனுடைய சந்ததியார்கள். 1 நாளா $3^{19}$ எஸ்றா $2^{2}$ $6^{1}$ நெகே $7^{6}$ ஆகா $1^{1}$ $2^{23}$ சக $3^{8}$ $4^{1}$ $6^{9}$ மத் $1^{12}$ லூக் $3^{27}$.

**செருயா, செருயாள்.** Zeruah. யோவாவின் தாயார். 1 நாளா $2^{16}$.

**செரெபியா.** Sherebiah. நெகே $8^{7}$.

**செரேத்.** Sered. ஆதி $46^{14}$.

**செரேத்சகார்.** Zereth-Shahar. யோசு $13^{19}$.

**செர்கியு பவுல்.** Sergius Paulus. பரி. பவுலும் பர்னபாவும் சீப்புருதீவைச் சந்தித்தபோது அதில் செர்கியு பவுல் ரோமை அதிபதியாய் இருந்தான். இவன் அச்சிட்ட நாணயம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அப் $13^{7}$.

**செர்க்சேஸ்.** Xerxes. **அகாஸ்வேரு** காண்க.

**செலவு.** Expense, Charge. எஸ்றா $6^{4.8}$ லூக் $14^{30}$ அப் $21^{24}$ 1 கொரி $9^{7.18}$.

**செலூக்கியா.** Selucia. வட சீரியாவின் தலைநகரியாகிய அந்தியோகியா பட்டணத்தின் துறைமுகம். இதில் பெரிய கோட்டை ஒன்று இருந்தது. பரி. பவுலும் பர்னபாவும் அந்தியோகியாவிலிருந்து புறப்பட்டு முதலாம் பிரயாணத்தில் அவர்கள் இங்கே கப்பல் ஏறினார்கள். பெரிய அந்தியோகியாவுக்குப் போய்வருகிற ஜனம் அநேகமாய் இருந்ததினால் இந்தத் துறைமுகத்தில் வியாபாரம் அதிகம் நடந்தது. அப் $13^{4}$.

**செலூமியேல்.** Shelumiel. எண் $10^{19}$.

**சேலேமியா, சேலேமியா, சேல்மீயா.** **Shelemiah.** [யேகோவா வெகுமதியாயிருக்கிறார்].

1. எஸ்ரா $10^{39}$.
2. எஸ்ரா $10^{41}$.
3. நெகே $3^{30}$.
4. நெகே $13^{13}$.
5. எரே $37^{3}$.
6. எரே $37^{13}$.
7. 1 நாளா $26^{14}$.
8. எரே $36^{14}$.
9. எரே $36^{26}$.

**சேலெமோத்.** **Shelomoth.** = செலோமித் (3). 1 நாளா $23^{18}$ $24^{22}$.

**சேலேமியா.** **Shelemiah.** சேலேமியா காண்க.

**சேலோமி.** **Shelomi.** எண் $34^{27}$.

**சேலோத்தே.** **Zelotes.** அப்போஸ்தலனான சீமோனின் மறுபெயர். லூக் $6^{15}$. **கானானியன், சீமோன்** காண்க.

**சேலோப்பியாத்.** **Zelophehad.** மனாசே கோத்திரத்தான். இவனுக்குக் குமாரனில்லாததினால் இவனுடைய குமாரத்திகள் சுதந்தரத்தைப் பெற்றார்கள். எண் $26^{33}$ $27^{1}$ $36^{1}$ யோசு $17^{3}$. **குடும்பம்** காண்க.

**சேலோமித்.** **Shelomith.**

1. யேகோவாவின் நாமத்தை நிந்தித்ததினிமித்தம் கொல்லப்பட்டவனின் தாய். லேவி $24^{11}$.
2. செருபாபேலின் மகள். 1 நாளா $3^{19}$.
3. = செலெமோத். 1 நாளா $23^{18}$ $24^{22}$.
4. ரெகொபெயாமின் மகன். 2 நாளா $11^{20}$.
5. சிறையிருப்பிலிருந்து வந்த ஒரு குடும்பம். எஸ்ரா $8^{10}$.
6. மோசேயின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $26^{25}$.
7. கெர்சோனியரில் ஒருவன். 1 நாளா $23^{9}$.

**சேல்சா.** **Zelza.** 1 சாமு $10^{2}$.

**சேல்மீயா.** **Shelemiah.** சேலேமியா காண்க.

**சேவி.** **Ear.** உபா $32^{1}$ நெகே $9^{30}$ யோபு $32^{11}$ சங் $34^{15}$ $39^{12}$ $40^{6}$ பிர $1^{8}$ ஏசா $32^{9}$ $48^{8}$ $50^{5}$ $64^{4}$ எரே $6^{10}$ $7^{24}$ $36^{6}$ எசே $8^{18}$ மாற் $7^{35}$ 2 தீமோ $4^{4}$.

**செவிடர்.** **Deaf.** யாத் $4^{11}$ லேவி $19^{14}$ சங் $38^{13}$ ஏசா $29^{18}$ $35^{5}$ $42^{18}$ $43^{8}$ மீகா $7^{16}$ மத் $11^{5}$ மாற் $7^{32}$ $9^{25}$ லூக் $7^{22}$.

**செவித்தினவுள்ளவர்.** **'Having itching ears.'** 2 தீமோ $4^{3}$.

**செவெனே.** **Syene.** தென் எகிப்தில் நைல் நதிக்கரையோரமாயுள்ள ஒரு பெரிய நகரம். கி-மு. 500-ஆண்டிற்கு முந்தி முதல் இதிலே அநேக யூதர்கள் இருந்தார்களென்று நமக்குத் தெரியும். அவர்கள் இதிலே யேகோவாவுக்கு ஒரு நேர்த்தியான ஆலயங் கட்டினார்கள். அவர்களுடைய சத்துருக்கள் இதை அழிக்கும்போது இதைக்குறித்து ஒருவன் இதை கி-மு. 411-ஆண்டில் திரும்பக் கட்டும்படிக்குச் செய்த விண்ணப்பம் நமது கைவசத்திலிருக்கிறது. எசே $29^{10}$ $30^{6}$.

**செழிப்பு.** **Fat, Fertile.** 1 நாளா $4^{40}$ நெகே $9^{25}$ நீதி $11^{25}$ $28^{25}$ ஏசா $28^{1}$.

**சேனா.** **Senaah.** செருபாபேலோடு பாபிலோனியாவிலிருந்து வந்து எருசலேமின் மதிலைக் கட்டின ஒரு குடும்பம். = அசெனா. எஸ்ரா $2^{35}$ நெகே $3^{3}$. இந்தக் குடும்பத்துக்கு 'அசெனுவா,' 'செனுவா' மறுபெயர்களாயிருக்கலாம். 1 நாளா $9^{7}$ நெகே $11^{9}$.

**செனுவா.** **Senuah, Hasenuah.** = அசெனுவா. 1 நாளா $9^{7}$ நெகே $11^{9}$.

## சே.

**சேகேம்.** **Shechem.** **சீகேம்** காண்க.

**சேகேர்.** **Zecher.** 1 நாளா $8^{31}$.

**சேக்கல்.** **Shekel.** ஆதி $23^{15}$ யாத் $21^{32}$ $30^{24}$ லேவி $27^{3}$ எண் $18^{16}$ யோசு $7^{21}$ 1 சாமு $17^{5}$ 2 இரா $7^{18}$ ஆமோ $8^{5}$. 'அரைச்சேக்கல்.' ஆதி $24^{22}$ யாத் $30^{13}$. 'கால் சேக்கல்.' 1 சாமு $9^{8}$. **அளவு** (பக். 38) **பணம்** காண்க.

**சேக்கு.** **Secu.** 1 சாமு $19^{22}$.

**சேசாக்கு.** **Sheshach.** பாபிலோனுக்கு ஒரு பெயர். எரே $25^{26}$ $51^{41}$.

**சேசாயி.** **Sheshai.** காலேப் ஜெயித்த ஒரு கோத்திரம். யோசு $15^{14}$.

**சேசான்.** **Sheshan.** 1 நாளா $2^{31}$.

**சேஷ்டபுத்திர பாகம்.** **Birth-right.** தகப்பன் இறந்துபோனபிறகு சேஷ்டபுத்திரனுக்குத் தகப்பனுடைய ஆஸ்தியில் மற்றப் பிள்ளைகளைவிட இரட்டிப்பான பாகமிருக்கும். உபா $21^{17}$. சேஷ்டபுத்திரன் குற்றவாளியானால் இந்தப் பாத்தியம் அவனுக்குக் கிடைக்கமாட்டாது. ஆதி $49^{3}$ 1 நாளா $5^{1}$. இந்தப் பாத்தியம் மகா சிறப்புள்ளதென்று எபிரெயர்கள் நினைத்து, இதை அற்பமாய் எண்ணின ஏசாவே மகா துஷ்டன் என்று தீர்மானித்தார்கள். ஆதி $25^{23,28}$ எபி $12^{16}$. **குடும்பம்** காண்க.

**சேஷ்டபுத்திரன்.** First-born. இஸ்ரவேலர் முதற்பேருன பிள்ளைகள் யேகோவாவுக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டவர்களென்று அறிந்து அவர்களுக்காக யேகோவாவுக்குக் காணிக்கை செலுத்துவார்கள். யாத் $13^{2}$. இதைக்குறித்து நியாயப்பிரமாண புஸ்தகங்களில் பல பிரமாணங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. யாத் 13 அதி. $22^{29}$ $34^{19}$ எண் $3^{11}$ உபா $15^{19}$. அக்காலத்தில் கானான் தேசத்திலுள்ள பூர்வீக ஜனங்கள் சில சமயங்களில், சேஷ்டபுத்திரன் தெய்வங்களுக்குப் பிரியமான காணிக்கையா யிருப்பானென்று நினைத்து மோசம் நேரிடுங் காலங்களிலே இவனை நரபலியாகச் செலுத்துவார்கள். 2 இரா $3^{27}$ மீகா $6^{7}$. **குடும்பம்** காண்க.

**சேண்.** Shen. [பல்]. மிஸ்பாவுக்குச் சமீபமாயுள்ள ஒரு இடம். 1 சாமு $7^{12}$.

**சேதம்.** Loss. **கேடு** (5) காண்க.

**சேதாத்.** Zedad. பரிசுத்த பூமியின் வட எல்லையிலுள்ள ஒரு ஊர். எண் $34^{8}$ எசே $47^{15}$.

**சேதார்.** Shethar. ஒரு பிரபு. எஸ்தர் $1^{14}$.

**சேதார்.** Zethar. ஒரு பிரதானி. எஸ்தர் $1^{10}$.

**சேதேயூர்.** Shedeur. எண் $1^{5}$.

**சேத்தாம்.** Zetham. 1 நாளா $23^{8}$.

**சேத்தார்-போஸ்னாய்.** Shethar-Boznai. எஸ்று $5^{3}$ $6^{6.\ 13}$.

**சேத்தான்.** Zethan. 1 நாளா $7^{10}$.

**சேத்.** Seth. Sheth. [பதியம், முளை].

1. ஆதாமின் மூன்றாம் மகன். ஆதி $4^{25}$ $5^{3}$ 1 நாளா $1^{1}$ லூக் $3^{38}$.

2. எண் $24^{17}$-ல் சொன்ன 'சேத் புத்திரர்' என்பதற்கு 'கலகத்தின் புத்திரர்' என்பது அர்த்தமே.

**சேத்தூர்.** Sethur. எண் $13^{13}$.

**சேபா.** Zeba. **சல்முனா** காண்க.

**சேபா.** Seba. கூஷின் மூத்த மகன். ஆதி $10^{7}$ சங் $72^{10}$ ஏசா $43^{3}$. சேபா என்பது ஆபிரிக்காவில் செங்கடலின் மேற்குக்கரையிலுள்ள ஒரு ஜனத்தைக் குறிக்கலாம்.

**சேபா.** Sheba.

1. தாவீதின் காலத்தில் வட இஸ்ரவேல் ராஜ்யத்தில் சிங்காசனத்தைப் பிடிக்கும்படி கலகஞ்செய்தவன். யோவாப் இவன் இருந்த ஊரை முற்றுகை போட்டபோது, அந்த ஊரார் இவனைச் சிரச்சேதம் செய்தார்கள். 2 சாமு $20^{1}$.

2. காத் கோத்திரத்தான். 1 நாளா $5^{13}$.

3. ஒரு ஊர். யோசு $19^{2}$.

**சேபா.** Shebah, Shiba. [ஆணை]. இந்தத் துரவு அபிமெலேக்கும் ஆபிரகாமும் செய்த உடன்படிக்கைக்கு அடையாளம் ஆனதினால் அவர்கள் இதற்கு 'ஆணையின் கிணறு' என்று அர்த்தங்கொள்ளும் 'பெயெர் செபா' என்னும் பெயர் இட்டார்கள். ஆதி $21^{30}$. ஈசாக்கு இந்தப் பெயர்கொண்ட துரவை வெட்டினான் என்பது அவன் தன் தகப்பன் வெட்டின துரவு தூர்ந்துபோன போது அதைத் தோண்டினான் எனக் குறிக்கிறது என்று நாம் நினைக்கவேண்டும். ஆதி $26^{33}$. **பெயெர்சேபா** காண்க.

**சேபா ஜனம்.** Sheba. தென் அராபியாவில் செங்கடலின் கிழக்கு ஓரத்தில் ஒரு நாடு. ஆதி $10^{7.\ 28}$ $25^{3}$. இது அதிகம் செழிப்புள்ளது. இதில் பொன் விளைந்தது. சங் $72^{15}$ எரே $6^{20}$ எசே $27^{22}$ $38^{13}$. இதின் தேசத்தார்கள் கள்ளரும், ஜனங்களை மோசம் செய்கிறவர்களுமாய் இருப்பார்கள். யோபு $1^{15}$ $6^{19}$. இவர்கள் அடிமைகளை விற்பார்கள். யோவே $3^{8}$. இவர்கள் கொஞ்சம் நாகரீகமுள்ளவர்கள். சூரிய சந்திரனை வணங்குவார்கள்.

**சேபாவின் ராஜஸ்திரீ.** Queen of Sheba. சேபா தேசத்தை ஆண்டவர்களின் அட்டவணையில் சில ராஜஸ்திரீகளின் பெயர்களும் எழுதப்பட்டிருக்கின்றன. இவள் சாலொமோனைப் பார்க்கவந்ததைத் தவிர இவளைப்பற்றி வேதத்தில் வேறொன்றும் சொல்லியிருக்கவில்லை. 1 இரா 10 அதி. 2 நாளா 9 அதி.

**சேபாத்.** Shebat. **காலம்** காண்க.

**சேபாம்.** Sebam. **சிப்மா** காண்க.

**சேபூல்.** Zebul. நியா $9^{28}$.

**சேபேர்.** Sheber. 1 நாளா $2^{48}$.

**சேப்.** Zeeb. [ஓநாய்]. **ஓரேபும் சேபும்** காண்க.

**சேப்பாத்.** Zephath. நியா $1^{17}$. **ஓர்மா** காண்க.

**சேப்பாம்.** Shepham. எண் $34^{10}$.

**சேப்பாராத்.** Sepharad. சின்ன ஆசியாவில் சிறையாகக் கொண்டுபோன சில யூதர்கள் வசித்த நாடு. ஒப 20-ம் வசனம்.

**சேமா.** Shema, Shemaah.

1. = சமெயி (5) 1 நாளா $5^{8}$.

2. = சிமெயி (14) 1 நாளா $8^{13.\ 21}$.

3. நெகே 8⁴.

4. யூதாவிலுள்ள ஒரு ஊர். 1 நாளா $2^{43}$.

5. 1 நாளா $12^{3}$.

**சேமாயா**. Shemaiah. செமாயா காண்க.

**சேமீயர்**. Shemites. தற்காலத்து வேத சாஸ்திரிகள் காஞன், சீரியா, பெனிக்கேயா, அசீரியா, அரபியா, பாபிலோன் என்னும் தேசங்களில் வசித்த ஜனங்களுக்குச் 'சேமியர்' என்கிற பொதுப்பெயர் வழங்கிவருகிறார்கள். இந்த அர்த்தத்தின்படி நாம் இந்தப் பதத்தை இந்த அகராதியில் பல இடங்களில் வழங்கிவந்திருக்கிறோம்.

**சேமுவேல்**. Shemuel. சாமுவேல் காண்க.

**சேமேயீன்**. Semein. லூக் $3^{26}$.

**சேமேர்**. Shemer. 1 இரா $16^{24}$.

**சேம்**. Shem. [கீர்த்தி, பெயர்]. நோவாவின் இரண்டாம் மகன். பூர்வீக காலத்திலுள்ள எபிரெயர்களுக்குத் தெரிந்த தேசங்களுக்குள் மத்திய தேசங்களில் குடியேறின ஜனங்களுக்குக் கோத்திரப் பிதா. இதின்படி பாபிலோனியா, ஏலாம் தேசங்களிலுள்ள ஜனங்களுக்கு இவன்தான் ஆதி பிதா. ஆதி $6^{18}$ $9^{20}$ $10^{21}$ $11^{10}$.

**சேயார்-யாசூப்**. Shear-Jashub. 'மீதியானது திரும்ப வரும்' என்னும் அர்த்தங் கொண்ட இந்தப் பதம் ஏசாயாவின் புத்திரர்களில் ஒருவனுடைய பெயர். இதினாலே கடவுள் இஸ்ரவேலைத் தண்டித்து மறுபடியும் அவர்களைத் தங்கள் தேசத்திற்குத் திரும்பக் கொண்டு வருவார் என்று இது குறிக்கப்பட்டிருக்கிறது. ஏசா $7^{3}$ $8^{18}$ $10^{20}$.

**சேயிரா**. Seirah. நியா $3^{26}$.

**சேயீர்**. Seir.

1. பலெஸ்தீனாவுக்குத் தெற்கே சாக்கடலிலிருந்து சிவந்த சமுத்திரத்தின் கிழக்கிலுள்ள குடாக்கடல்மட்டும் 50 மைல் தூரம் எட்டின மலைநாடு. இதுவும் ஏதோமும் ஒரே நாடுதான். இதில் ஓர் என்னும் மலை இருந்தது. சேயீர் நாட்டில் 'ஓரியர்' என்னும் மலைக்குகைகளில் வசிக்கிற ஜனங்கள் குடியிருந்தார்கள். இந்தத் தேசத்தின் வழியாய் இஸ்ரவேலர் மோவாப் தேசத்திற்கு வந்தார்கள். ஆதி $14^{6}$ $32^{3}$ $36^{20}$ உபா $2^{12}$.

2. யூதா கோத்திர நாட்டின் எல்லைகளில் ஒரு ஊர். யோசு $15^{10}$.

**சேரா**. Zerah. சேராது காண்க.

**சேராபீன்கள்**. Seraphim. சேராபீன்கள் வேதாகமத்திலுள்ள ஒரு வாக்கியத்தில் சொல்லப்படுகிறது. ஏசா $6^{2}$. இதிலே ஏசாயா தேவாலயத்தில் ஆறு சிறகுகளைக் கொண்டு யேகோவாவின் சிம்மாசனத்திற்குச் சமீபமாய்ப் பறந்து, தாழ்மையையும், வணக்கத்தையும் காட்டின ஜீவன்களைப்பற்றிச் சொல்லுகிறான். ஆனால், இவைகளின் ரூபத்தைப்பற்றி அவன் வேறொன்றும் விபரமாய்த் தெரிவிக்கவில்லை. ஆகவே சேராபீன்கள் யேகோவாவின் பணிவிடைக்காரர்கள் என்பதேயொழிய நாம் ஒன்றும் தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. ஏசாயா பார்த்த சேராபீன்களையும், எசேக்கியேல் தீர்க்கதரிசி கண்ட ஜீவன்களையும், பரி. யோவான் கண்ட கண்கள் நிறைந்த ஜீவன்களையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால், இந்த மூன்று தரிசனங்களிலும் பார்த்த இவைகள் ஒரேவிதமான தோற்றந்தான் என்று உத்தேசிக்கலாம். ஏசா $6^{2}$ எசே 1, 2 அதி. வெளி $4^{8}$.

**சேராவ்**. Sheerah. 1 நாளா $7^{24}$.

**சேரீ**. Zeri. 1 நாளா $25^{3}$. = இஸ்ரி.

**சேருக்**. Zerug. = செருக்.

**சேரேஸ்**. Sheresh. 1 நாளா $7^{16}$.

**சேரேதா**. Zeredah. 1 இரா $11^{26}$. சார்தான் காண்க.

**சேரேத்**. Zered, Zereth.

1. சாரேத் காண்க.

2. ஒரு யூதன். 1 நாளா $4^{7}$.

**சேரோா**. Zererah. சேரோத் என்பதற்குப் பதிலாகச் சேரோா என்று சொல்ல வேண்டும். நியா $7^{22}$. சார்தான் காண்க.

**சேரோத்**. Zererah. இந்தப் பெயர் சேரோா என்று இருக்கவேண்டும். சார்தான் காண்க.

**சேரோர்**. Zeror. 1 சாமு $9^{1}$.

**சேர்**. Zer. யோசு $19^{35}$.

**சேலா**. Sela. [பாறை, செங்குத்தான மலை]. சேலா சாக்கடலுக்குத் தெற்கே 50 மைல் தூரத்திலுள்ள பெரிய செங்குத்தான மலைகளினால் சூழப்பட்ட ஆழமான பள்ளத்தாக்கிலுள்ள ஒரு ஊர். ஏதோம் ராஜ்யம் அழிந்துபோனபிறகு நபத்தேயர் (*Nabateans*) என்னும் ஓர் வகை ஜனம் ஏதோமியர்களுக்குப் பதிலாகத் தங்கள் ராஜ்யத்தை அத்தேசங்களில் ஸ்தாபித்து, அதற்கு இந்தப் பள்ளத்தாக்கிலுள்ள சேலா தலைநகரியாக ஏற்படுத்தினார்கள். அக்காலத்தில் அவ்விடத்திலே வியாபாரம் அதிகமாயிருந்தது. அந்த ஊர் இப்போது பாழாய்ப்போயிருந்தும், அதிலிருந்தவர்கள் மகா கஷ்டத்தோடும், பொறு



சேலா பள்ளத்தாக்கிலுள்ள மலையில் வெட்டப்பட்ட ஆலயங்கள்.

மையோடும், சாமர்த்தியத்தோடும் சுற்றியிருக்கிற மலைச்சார்புகளில் வெட்டின தேவாலயங்களும், அரங்கசாலைகளும், கல்லறைகளும் இந்நாள்மட்டுமிருக்கின்றன. இவைகளைப் பார்ப்பது பிரயாணிகளுக்கு ஆச்சரியமாயிருக்கும். கிரேக்கர்கள் இதற்குப் பாறை என்னும் அர்த்தங்கொண்ட 'பெட்ரா' என்னும்பெயரிட்டார்கள். எசேனியர் என்னும் கொள்கைக்காரரில் அநேகர் இந்த ஊரில் வசித்தார்கள். 2 இரா $14^{7}$ ஏசா $16^{1}$.

**சேலா.** Selah. இந்த சேலா என்னும் பதம் சங்கீத புஸ்தகத்தில் 71 முறையும், ஆப



சேலா பள்ளத்தாக்கிலுள்ள மலையில் வெட்டப்பட்ட ஆலயம்.

கூக்கின் ஆகமத்தில் 3 முறையும் ஆக 74 முறை சொல்லியிருக்கிறது. மேலும் யூதர்கள் தங்கள் ஜெப ஆலயத்தில் வழங்கிவந்த ஆராதனைப் புஸ்தகத்திலும், சாலொமோன் சங்கீதம் என்னும் புஸ்தகத்திலும் இப்பதம் சொல்லப்படுகிறது. இப்பதம் உரத்த சத்தத்தோடே பாடவேண்டிய வசனங்களையும் அல்லது கீத வாத்தியங்கள் வாசிக்கவேண்டிய இடங்களையும் குறிக்கலாம். ஆனால் திட்டமாய்ச் சொல்வது நம்மால் முடியாது. சங் $3^{24}$ ஆப 3 அதி.

**சேலா. Shelah.**

1. யூதாவின் இளையமகன். ஆதி $38^{5}$ எண் $26^{20}$.

2. =சாலா ஆதி $10^{24}$ லூக் $3^{35}$.

**சேலா. Zela.** இது பென்யமீன் கோத்திரநாட்டில் சவுலின் குடும்ப அடக்கம் பண்ணும் இடம். யோசு $18^{28}$ 2 சாமு $21^{14}$.

**சேலா-அம்மாலிகோத். Sela Hammahlekoth.** மாகோன் வனாந்தரத்திலுள்ள ஒரு மலை. 1 சாமு $23^{28}$.

**சேலேக். Zelek.** 2 சாமு $23^{37}$.

**சேலேஸ். Shelesh.** 1 நாளா $7^{35}$.

**சேலேத். Seled.** 1 நாளா $2^{30}$.

**சேவகர். Guard.** ராஜாக்களின் அரண்மனைகளிலுள்ள மெய்க்காவலாளர்களுக்கும், ராஜாக்களின் ரதத்திற்கு முந்தி ஓடுகிறவர்களுக்கும், பிரதான ஆசாரியர்களின் காவலாளருக்கும், தேவாலயக் காவலாளருக்கும் இந்தப் பெயர் வழங்குகிறது. 1 சாமு $22^{17}$ 2 சாமு $15^{1}$ 2 இரா $10^{25}$ மத் $5^{25}$ $26^{58}$ மாற் $14^{54}$ லூக் $12^{15}$ யோவா $7^{32}$ அப் $5^{22}$. **காவலாளர், ஜெப ஆலயம்** காண்க.

**சேவல். Cock.** யூதர்கள் ஏறக்குறைய கி-மு. 200-ளுவத்தில் பெர்சியா தேசத்திலிருந்து தங்கள் தேசத்திற்குக் கோழிகளைக் கொண்டுவந்தார்கள். நியாயப்பிரமாணத்தில் இவைகளைப்பற்றி ஒன்றும் சொல்லாததினால் பூர்வகாலத்தில் கோழிகளைப்பற்றி எபிரெயருக்குத் தெரியாது என்று நினைக்கவேண்டும். இவைகள் 'சுத்தமான' மிருகங்களில் ஒரு ஜாதி. பாவநிவாரண நாளுக்கு முந்தின மாலையில் யூதர்கள் தங்கள் குடும்பங்களிலுள்ள ஒவ்வொரு புருஷனுக்காக ஒரு சேவலும், ஒவ்வொரு பெண்ணுக்காக ஒரு பெட்டைக் கோழியும் பலி செலுத்துவார்கள். சேவல் கூவும் ஜாமம் இராவில் மூன்றாவது ஜாமம். இது பொழுதுவிடியுமுன் ஜாமம். இந்த நேரத்தில் சேவல் அடிக்கடி கூவுகிறதினாலே இந்த ஜாமத்திற்கு இப்படிப் பெயர் வந்தது. மத் $26^{34.74}$ மாற் $13^{35}$ $14^{30.68.72}$ லூக் $22^{34.60}$ யோவா $13^{38}$ $18^{27}$.

**சேவா. Sheva.**

1. 1 நாளா $2^{49}$.

2. = சவிஷா. 2 சாமு $20^{25}$ 1 நாளா $18^{16}$.

**சேவிக்கிறது. Serve.** ஆதி $14^{4}$ $15^{13}$ $25^{23}$ யாத் $20^{5}$ $21^{2}$ லேவி $25^{40}$ யோசு $24^{15}$ நியா $3^{8}$ 2 இரா $17^{41}$ எஸ்தர் $1^{11}$ அப் $27^{23}$ ரோ $1^{9}$.

**சேறு. Caly.** யோபு $8^{11}$ $30^{19}$ சங் $40^{2}$ ஏசா $10^{6}$ $57^{20}$ நாகூ $3^{14}$ யோவா $9^{6}$ 2 பேது $2^{22}$. 'உளை.' எரே $38^{6.22}$.

**சேனா. Zenas.** நியாயசாஸ்திரி ஒருவன் தீத் $3^{13}$.

**சேனாசார். Shenazzar.** யோயாக்கீனுடைய மகன். இவனும் சேஸ்பாத்சாரும் ஒருவனாய் இருக்கலாம். 1 நாளா $3^{18}$.

**சேனாபதி, சேனைத்தலைவன், தலைவன். Captain.**

1. பழைய ஏற்பாட்டில் அதிபதி, காவல் சேனாபதி, சேனைத்தலைவன் என்னும் பதங்கள் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. இப்பதங்கள் இஸ்ரவேல் கோத்திரங்களில் பெரியவர்களையும், அதில் அதிகாரம் பெற்றவர்களையும், ராஜாவின் பரிவாரங்களில் பிரதானமானவர்களையும் குறிக்கின்றன என்றாலும், எபிரெய பாஷையில் இந்த அதிகாரிகளைக் குறிக்கும்படி சொன்ன பதின்மூன்று வெவ்வேறான பதங்களின் அர்த்தங்களையும் இன்னவென்று நிதானித்துச் சொல்ல முடியாது. எண் $2^{3}$ 1 சாமு $8^{12}$ $22^{2}$ 1 இரா $20^{24}$ 2 இரா $18^{24}$ எரே $39^{9}$ $52^{14}$ எசே $23^{12}$.

2. புதிய ஏற்பாட்டில் கிரேக்க பாஷையில் சேனையில் மேலான அதிகாரத்தைப் பெற்றவர்களைக் குறிக்கும்படி இரண்டு பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

(i) *Chiliarchos.* இது ரோமர்களுடைய சேனையில் ஆயிரம்பேர் அடங்கிய பட்டாளத்திற்குத் தலைவன் என்பதைக் குறிக்கிறது. எருசலேம் பட்டணத்தில் பெரிய கோட்டையாகிய அந்தோனியாவிலே இந்த மாதிரிப் பட்டாளமிருக்கும். இந்தப் பட்டாளம் எருசலேமிலே யூதர்கள் கலகஞ் செய்யாதபடிக்கு எப்பொழுதும் ஜாக்கிரதையாய்க் காவல் செய்துகொண்டிருக்கும். இவர்களின் தலைவன் இயேசுவைப் பிடிக்கும்படி போர்ச்சேவகரோடே வந்தான். யோவா $18^{12}$. இந்த உத்தியோகத்தைக் கொண்ட சேனாபதி பரி. பவுலைத் தேவாலயத்தின் பிராகாரத்தில் பிடித்தான். அப் $21^{31}$ $22^{28}$ $23^{10}$ $24^{7}$ $25^{23}$. பரி. யோவான் இந்தப்

பதத்தைப் போர்ச்சேவகர்களில் அதிகார முடையவனைக் காட்டும்படி பொதுவாய்ச் சொல்லுகிறான். வெளி $6^{15}$ $19^{18}$.

(ii) *Strategos.* இந்தப் பதம் தேவாலயத்தின் பிராகாரங்களில் கூடிவந்த ஜனங்களில் சண்டை சச்சரவு வராதபடிக்கும், இராத்திரியில் அதற்குக் காவலாயிருக்கும் படிக்கும், ஆசாரியர்களால் நியமிக்கப்பட்ட சேவகர்களின் தலைவனைக் குறிக்கிறது. இவன் ஒரு லேவியன். இவன் ஆசாரியர்களின் கட்டளைகளின்படி நடந்து இயேசுவுக்கும் அப்போஸ்தலர்களுக்கும் விரோதமாய் வந்தான். லூக் 22 $^{4. 52}$ அப் $4^1$ $5^{24. 26}$.

3. அப். $28^{16}$-ல் சொன்ன சேனாபதியின் உத்தியோகம் இன்னதென்று திட்டமாய்த் தெரியாது. எப்படியாவது இவன் ரோமாபுரியில் பெரிய உத்தியோகஸ்தனாயிருந்தான் என்று நினைக்கவேண்டும்.

**சேனான்.** **Zenan.** யோசு $15^{37}$.

**சேனீர்.** **Senir.** **எர்மோன்** காண்க.

**சேனே.** **Seneh.** 1 சாமு $14^4$.

**சேனை.** **Army.**

1. சவுல் ராஜாவாகுமட்டும் இஸ்ரவேலர் பெலிஸ்தியர் முதலிய சத்துருக்களுக்கு விரோதமாய்ப் படையெடுக்கும்போது தாங்கள் விரும்பின தலைவர்களோடே கூட்டங் கூட்டமாய் யுத்தத்திற்குப் போவார்கள். யுத்தம் செய்தபிறகு அவர்கள் தலைவனை விட்டு விட்டு முன்போலத் தங்கள் ஊர்களுக்குப் போய் ஜீவனம் பண்ணுவார்கள். அவர்கள் இவ்விதமாய் யுத்தத்திற்குப் போக ஆயத்தமில்லாததினால், அவர்களுடைய சத்துருக்களுக்கு ஜெயம் அதிகமாய்க் கிடைத்தது. சவுல் ராஜா இதைப்பார்த்துச் சத்துருக்கள் வருங்காலத்தில் அவர்களைத் தடுக்கும்படி தமது ராஜ்யத்தில் எப்பொழுதும் ஆயத்தமுள்ள ஒரு சேனை இருக்கவேண்டியது அவசியம் என்று அறிந்து அதற்காகப் பிரயாசப்பட்டான். 1 சாமு $13^2$. தாவீது முதலில் தன்னைச் சவுலிலிருந்து காப்பாற்றும்படி தனக்கு வந்தவர்களை ஒரு சேனையாகச் சேர்த்தபிறகு, தான் ராஜாவானபோது 600 பராக்கிரமசாலிகளைத் தனக்கு மெய்க் காவலாளராக ஏற்படுத்தினான். இவர்களோடு சம்பளத்திற்கு வந்த அந்நியராகிய கித்தியரும், கிரேத்தியரும், பிலேத்தியரு மிருந்தார்கள். மேலும் விரோதிகள் வரும் சமயங்களில் தனக்கு முன்னிருந்த நியாயாதிபதிகள் அழைத்ததுபோலத் தானும் ஊர்களிலிருந்து ஜனங்களை அழைப்பான். 1 சாமு $23^{13}$ $30^9$ 2 சாமு $10^7$ $15^{18}$ $16^6$. இதற்குப் பிற்பாடு யூதாவிலும், இஸ்ரவேலிலும் எப்பொழுதும் ஆயத்தமுள்ள சேனைகள் வழக்கமாய் இருந்தன.

2. எபிரெய பட்டாளங்களில் ஆயிரம் பேர் இருப்பார்கள். ஒவ்வொரு பட்டாளத்தில் போர்ச்சேவகர் நூறு நூறாகவும், ஐம்பது ஐம்பதாகவும், பத்துப் பத்தாகவும் வகுக்கப்பட்டிருந்தார்கள். 1 சாமு $8^{12}$ $17^{18}$ $22^7$. ஒவ்வொரு வகுப்புக்கு ஒரு தலைவனும், முழுவதற்கும் ராஜா நியமித்த ஒரு சேனாபதியும் இருந்தார்கள். உபா $20^5$.

3. பூர்வீககாலத்தில் ஈட்டி, கேடகம், பட்டயம் ஆகிய யுத்தாயுதங்களை உபயோகிப்பதில் கைபடிந்த காலாட்கள் சேனையில் பெரும்பாலு மிருந்தார்கள். இவர்களோடு வில்லாளரும் கவண்கல் எறிகின்றவர்களு மிருந்தார்கள். 1 சாமு $4^{10}$ $15^4$ 1 நாளா $5^{18}$ 2 நாளா $26^{14}$. சாலொமோனின் காலத்தில் எபிரெயர்களுடைய சேனையில் போர்வீரர்களிற் சிலர் இரதங்களில் ஏறிப்போகிற வழக்கம் ஆரம்பித்தது. 1 இரா $4^{26}$ $9^{22}$.

4. தலைவர்கள் இருபது வயதுமுதல் ஐம்பது வயதுமட்டுமுள்ள ஆட்களை யுத்தத்திற்கு வரும்படி அழைப்பார்கள். எண் $1^3$ 2 நாளா $25^5$. ஆசாரியர்களும் இன்னும் சிலரும் யுத்தத்திற்குப் போகவேண்டியதில்லை. உபா $20^5$ எண் $2^{33}$.

5. பூர்வகாலத்தில் ஒவ்வொரு ஊர் அதிலிருந்து யுத்தத்திற்குப் போனவர்களுக்குச் சவரக்ஷணை செய்தது. மேலும் யுத்தவீரர்கள் தாங்கள் ஜெயித்த ஊர்களில் கிடைத்த கொள்ளைப்பொருள்களையும் பங்கிட்டுக் கொண்டார்கள். மக்கபெயர் காலமுதல் போர்ச்சேவகர்களுக்குச் சம்பளம் ஏற்பாடாயிற்று. கிடைத்த பொருள்களைப் பங்கிடுகிற விதத்தைக்குறித்து யாவருக்கும் தெரிந்த ஒழுங்கு இருந்தது. 1 சாமு $30^{24}$.

6. புதிய ஏற்பாட்டில் சொன்ன போர்ச்சேவகர்களும், நூற்றுக்கதிபதிகளும் ரோமை ராயனுடைய சேனையைச் சேர்ந்தவர்கள் தான். இவர்கள் யுத்தத்தில் தேக அப்பியாசத்திலும், ஆயுதங்களை உபயோகிக்கிறதிலும், மகா சாமர்த்தியமுள்ளவர்களாயும், பராக்கிரமசாலிகளாயு மிருந்ததினாலே, இயேசுவின் காலத்தில் ரோமை ராஜ்யம் மகா மேன்மையுள்ளதாயிருந்தது. ரோமை போர்ச்சேவகர் தங்கள் தலைவர்களுக்கு எப்பொழுதும் கீழ்ப்படிந்தவர்களாய் நடந்ததினாலே அவர்கள் பல விஷயங்களில் கிறிஸ்தவர்களுக்கு முன்மாதிரியாக உபமானமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறார்கள். **அதுஸ்து பட்டாளம், சேனாபதி** காண்க.

7. 'சேனை' என்பது பலமுறை உபமான மாய்ச் சொல்லியிருக்கிறது. ஆதி $32^{2}$ உபா $4^{19}$ 2 இரா $17^{16}$ $21^{3}$ $23^{4}$ 2 நாளா $18^{18}$ $33^{3}$ நெகே $9^{6}$ சங் $33^{6}$ $103^{21}$ $148^{2}$ ஏசா $34^{4}$ $40^{26}$ எரே $8^{2}$ $19^{13}$ $33^{22}$ தானி $8^{10}$ செப் $1^{5}$ லூக் $2^{13}$ அப் $7^{42}$ வெளி $9^{16}$ $19^{14}$.

**சேனைகளின் கர்த்தர்.** **The Lord of Hosts.** ='யேகோவா சபாயோத்.' **கடவுள்** காண்க.

**சேனைத்தலைவன்.** **Ethnarch.** 2 கொரி $11^{32}$-ல் சொன்ன 'சேனைத்தலைவன்' என்னும் தமிழ் பதத்திற்குக் கிரேக்க பாஷையில் எழுதப்பட்ட பதத்தின் சரியான அர்த்தம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்லமுடியாததனால், அந்நிய தேசத்தில் வசிக்கிற ஒரு கோத்திரத் தலைவனுக்கு இது பெயராயிற்று. பரி. பவுல் தமஸ்கு பட்டணத்து நகரத்தலைவனைக் குறிக்கும்படி இப்பெயரைச் சொல்லுகிறான். இப்பதம் பிரதான ஆசாரியனாகிய சீமோன் என்பவனைக் குறித்துச் சொல்லப்படுகிறது. 1 மக்கபெயர் $14^{47}$ $15^{1}$.

## சொ.

**சொகார், சோகார்.** **Zohar.**

1. ஆதி $23^{8}$.
2. ஆதி $46^{10}$. =சோரா. எண் $26^{13}$.
3. =எத்சோகார். 1 நாளா $4^{7}$.= இத்சேயார். யாத் $6^{18}$.

**சொதசா.** **R. V. Amber.** **இரத்தினம்** காண்க.

**சொக்கவெள்ளி.** **Pure silver.** 'சொக்க வெள்ளி' என்பதற்குப் பதிலாக 'சுத்த வெள்ளி' என்று தமிழ் வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. யோபு $22^{25}$.

**சொசிபத்தர்.** **Sosipater.** பரி. பவுல் பிறந்ததேசத்தில் பிறந்தவன். ஒருவேளை இவனும் சோபத்தரும் ஒருவன்தான். ரோ $16^{21}$.

**சொசீனியர்.** **Socinians.** பாஸ்தஸ் சொசீனஸ் (*Faustus Socinus*) என்பவனுடைய கொள்கைக்காரர். இவன் கி-பி. 1598-ஆம் போலோனியா ராஜ்யத்திலே கிறிஸ்து இரட்சகர்பேரிலே ஒரு புஸ்தகத்தை எழுதினான். இவன் வேதத்தில் மனிதருடைய புத்திக் கெட்டாத தொன்றும் இருக்கலாகாதென்றும், வேத உபதேசங்களைப் புத்தியினாலே பரீட்சை செய்யவேண்டுமென்றும், கிறிஸ்து மனுஷனேயழிய தேவன் அல்லவென்றும், பரிசுத்த ஆவி தேவவல்லமை மாத்திரமென்றும், தேவதத்துவத்தில் ஒரே ஆள் உண்டென்றும், கிறிஸ்து நல்ல மாதிரியைக் காண்பிக்கப் பாடுபட்டாரொழிய பாவத்துக்காக உத்தரவாதம் பண்ணவில்லையென்றும், ஜென்ம பாவமே இல்லையென்றும், சொன்னான்.

**சொஸ்தம்.** **Health.** நீதி $14^{30}$ மத் $4^{23}$ $8^{7}$ $9^{21}$ $10^{8}$ லூக் $8^{43}$ $13^{14}$ யாக் $5^{16}$.

**சொஸ்தேனே.** **Sosthenes.**

1. கொரிந்து பட்டணத்தின் ஜெப ஆலயத்தின் தலைவன். அப் $18^{17}$.
2. பரி. பவுல் எபேசு பட்டணத்தில் கொரிந்தியருக்கு முதலாம் நிருபம் எழுதும்போது அவனோடே இருந்த கிறிஸ்தவன். 1 கொரி $1^{1}$. இவனும் முன் சொன்ன ஜெப ஆலயத்தலைவனும் ஒருவனாயிருக்கலாம்.

**சொப்பனக்காரர்.** **Dreamer.** **சூனியம்** காண்க.

**சொப்பனம்.** **Dream.** ஆதி $20^{3}$ $28^{12}$ $31^{10}$ $37^{5}$ $40^{5}$ $41^{7}$ நியா $7^{13}$ 1 இரா $3^{5}$ தானி $2^{1}$ $4^{5}$ $7^{1}$ யோவே $2^{28}$ மத். $1^{20}$ $2^{12.19}$ $27^{19}$ அப் $2^{17}$. **சூனியம்** காண்க.

**சொரிமணல்.** **Quicksand.** வட ஆப்பிரிக்காவின் கரைக்குக் கிட்ட மத்தியதரைக் கடலில் சொரிமணல் இடங்கள் சில உண்டு. அலெக்சந்திரியா பட்டணத்திற்கு மேற்கே ஏறக்குறைய 600 மைல் தூரத்தில் பெரிய சொரிமணல் இடம் ஒன்றிருக்கிறது. இவ்விடங்களில் கடலுக்கு அடியிலுள்ள மணல் அடிக்கடி தெரியாதவிதமாய் அசைகிறதினாலே கப்பல் இவைகளுக்குள்ளே சிக்கிக்கொள்வதால் கப்பற் சேதம் உண்டாகும் என்று மாலுமிகள் பயப்படுவார்கள். அப் $27^{17}$.

**சொருபம்.** **Image.** **சுருபம்** காண்க.

**சொறி.** **Itch.** லேவி $21^{20}$. **சிரங்கு** காண்க.

## சோ.

**சோ.** **So.** கி-மு. 722-ஆம் ஆண்டில் எகிப்து தேசத்திலுள்ள சேனாபதி. 2 இரா $17^{4}$. **எகிப்து** காண்க.

**சோகாம்.** **Shoham.** 1 நாளா $24^{27}$.

**சோகார்.** **Zohar.** **சொகார்** காண்க.

**சோகெலேத்.** **Zoheleth.** [நாகரத்தினம், பிரகாசம் நிறைந்தகல்]. இன்ரோகேலுக்கருகிலுள்ள ஒரு கற்பாறை அல்லது ஸ்தம்பம். 1 இரா $1^{9}$.

**சோகேத்.** **Zoheth.** 1 நாளா $4^{20}$.

**சோக்கோ, சோகோ.** **Soco, Socoh.**

1. யூதாவில் மலைக்குன்றின்மேல் கட்டியிருந்த ஒரு கோட்டை. யோசு $15^{35}$ 1 சாமு $17^{1}$ 1 இரா $4^{10}$.

2. யோசு $15^{48}$.
3. 1 நாளா $4^{18}$.

**சோஷனீம்.** Shoshannim. சங் 45, 69-ம் சங்கீதங்களின் தலைப்பில் சொல்லியிருக்கிற இந்தப் பதம் எபிரெய ராகங்களில் ஒரு ராகத்தின் பெயர் என்று தோன்றுகிறது.

**சோஷானீம் ஏதேத்.** Shoshannim-Eduth. 80-ம் சங்கீதத்தின் தலைப்பில் சொல்லியிருக்கிற இந்தப் பதம், இந்தச் சங்கீதம் பாடவேண்டிய ராகம் இன்னதென்று குறிக்கிறது.

**சோதனை, சோதிக்கிறது, பரீட்சை.** Temptation.

1. 'சோதனை' என்பதற்கு இரண்டு அர்த்தங்களுண்டு.

(i) ஒருவனுடைய குணாதிசயங்களை அறியும்படி விசாரித்தல். ஆதி $22^{1}$ யாத் $20^{20}$ உபா $4^{34}$ $7^{19}$ $29^{3}$ நியா $2^{22}$ $3^{4}$ நீதி $17^{3}$ சங் $81^{7}$ மத் $4^{1}$ அப் $20^{19}$ 1 பேது $1^{6}$.

(ii) தீமை செய்வதற்குத் தூண்டுதல். மத் $6^{13}$ எபி $4^{15}$ யாக் $1^{1}$ $1^{13}$ வெளி $2^{10}$.

2. 'பரீட்சை' என்பதற்கு அநேகமாதிரியான இரண்டு அர்த்தங்களுண்டு.

(i) ஒருவனிடத்திலுள்ள கிருபை முதலிய நற்குணங்களை யறிவதற்குச் செய்கிற விசாரணை. வேதாகமத்தில் இப்பதம் யேகோவாவின் கிருபையைக்குறித்து முறுமுறுத்த இஸ்ரவேலரைப்பற்றி அடிக்கடி வழங்கிவருகிறது. யாத் $17^{2}$ எண் $14^{22}$ உபா $6^{16}$ சங் $78^{18}$ $106^{14}$ யாக் $1^{3}$.

(ii) சில விஷயங்களில் தீமை செய்யும் பொருட்டாக ஏவுதல். மல் $3^{15}$ மத் $4^{7}$.

3. 'சோதனைக்காரன்.' மத் $4^{3}$ 1 தெச $3^{5}$.

**சோதாய்.** Sotai. எஸ்றா $2^{55}$.

**சோதீ.** Sodi. எண் $13^{10}$.

**சோதோம்.** Sodom. **சமபூமியிலுள்ள பட்டணங்கள்** காண்க.

**சோபத்தர்.** Sopater. எருசலேமுக்குப் போகிற பரி. பவுலுடன் பிரயாணம்பண்ணின ஒரு கிறிஸ்தவன். அப் $20^{4}$. ஒருவேளை இவனும் சொசிபத்தரும் ஒருவன்தான்.

**சோபா.** Zobah. சீரியாதேசத்தில் தாவீதுக்கு விரோதமாய்ப் படை எடுத்த ஒரு கோத்திரம். 1 சாமு $14^{47}$ 2 சாமு $8^{3}$.

**சோபாக்.** Shobach. தாவீது ஜெயித்த சோபாபின் சேனாபதி. 2 சாமு $10^{16}$.

**சோபாக்.** Zophah. 1 நாளா $7^{35}$.

**சோபாப்.** Shobab.
1. 2 சாமு $5^{14}$.
2. 1 நாளா $2^{18}$.

**சோபாய்.** Shobai. எஸ்றா $2^{42}$.

**சோபாய்.** Zophai. = சூப். 1 நாளா $6^{26.35}$ 1 சாமு $1^{1}$.

**சோபால்.** Shobal.
1. ஆதி $36^{20}$.
2. 1 நாளா $4^{1}$.

**சோபி.** Shobi. தாவீதுக்கு இரக்கம் காட்டின அம்மோனியனான ராஜ குமாரன். 2 சாமு $17^{27}$.

**சோபேக்.** Shobek. நெகே $10^{24}$.

**சோபேபாக்.** Zobebah. 1 நாளா $4^{8}$.

**சோப்பார்.** Zophar. யோபினுடைய மூன்று சிநேகிதர்களில் ஒருவன். யோபு $2^{11}$ $11^{1}$ $20^{1}$ $42^{9}$.

**சோப்பீம்.** Zophim. எண் $23^{14}$.

**சோமேர்.** Shomer. = சேமேர் (3). 2 இரா $12^{21}$ 1 நாளா $7^{32}$.

**சோம்பல்.** Idleness. 'சோம்பல்.' யாத் $5^{8.17}$ நீதி $19^{15}$ $31^{27}$ பிர $10^{18}$ 1 தீமோ $5^{13}$ 'சோம்பன்.' மத் $25^{26}$. 'சோம்பேறி.' நீதி $6^{6}$ $10^{26}$ $12^{24.27}$ $13^{4}$ $15^{19}$ $19^{24}$ $20^{4}$ $21^{25}$ $22^{13}$ $24^{30}$ $26^{13-16}$.

**சோரா, சோரியா, சோராத்தியர்.** Zorah, Zoreah, Zorathites. யோசு $15^{33}$ நியா $13^{2}$ $16^{31}$ 1 நாளா $2^{53}$ 2 நாளா $11^{10}$.

**சோரியா.** Zorah. **சோரா** காண்க.

**சோரேக்.** Sorek. சோராவுக்குக் கிட்ட தெலீலாள் வசித்த பள்ளத்தாக்கு. நியா $16^{4}$.

**சோரொபாபேல்.** Zorobabel. **செருபாபேல்** காண்க.

**சோலேயாம்.** Bald locust. ஒருமாதிரி கிளி. லேவி $11^{22}$.

**சோவா.** Shoa. திகிரீஸ் நதிக்கரையில் அலைந்து திரிந்த ஒரு கோத்திரம். எசே $23^{23}$.

**சோவார்.** Zoar. ஆதி $19^{30}$. **சமபூமியிலுள்ள பட்டணங்கள்** காண்க.

**சோவான்.** Zoan. தென் எகிப்திலே ஒரு முக்கிய பட்டணம். இதில் ஒரு பெரிய தேவாலயமும் 90 அடி உயரமுள்ள ஒரு விக்கிரகமும் இருந்தது. எண் $13^{22}$ சங் $78^{12}$ ஏசா $19^{11}$ எசே $30^{14}$.

## சௌ.

**சௌந்தரியம்.** Beauty. **சவுந்தரியம்** காண்க.

## ஜ.

**ஜடை.** Lock of hair. நியா $16^{13}$.

**ஜப்தி.** Forfeit. எஸ்ரு $10^{8}$. **சாபத்தீடு** காண்க.

**ஜலப்பிரளயம்.** Deluge **சலப்பிரளயம்** காண்க.

**ஜலம்.** Water. **நீர்** காண்க.

**ஜனங்கள், ஜாதிகள்.** Nations. பழைய ஏற்பாட்டில், 'ஜாதிகள்,' 'ஜனங்கள்,' 'ஜனம்' என்னும் மூன்று பதங்கள் தமிழ் வேதாகமத்திலே சொல்லப்படுகிறது. இவைகளில் ஜாதிகள் என்பதற்கும், ஜனங்கள் என்பதற்கும் முதலிலே பேதம் தோன்றாவிட்டாலும், எபிரெயச் சொல் வழக்கத்தின்படி வித்தியாசமிருந்தது. 'ஜாதிகள்' என்பதற்குப் புறஜாதிகள், அந்நியஜாதிகள், அந்நியதேவர்களை வணங்கின ஜாதிகள் என்பதே அர்த்தம். 'ஜனங்கள்' என்பது பலதேசங்களின் குடிகளையே குறிக்கிறது. யாத் $34^{10}$ உபா $2^{25}$ $4^{6}$. 'ஜனம்' என்பது, வழக்கமாய் இஸ்ரவேல் ஜனம் என்பதைக் குறிக்கும். ஏசா $1^{3}$ ஓசி $1^{10}$ மீகா $6^{6}$. 'ஜாதிகள்.' ஆதி $10^{5}$ 2 நாளா $20^{6}$ சங் $2^{1.8}$ $9^{5}$ $33^{10}$ $46^{10}$ ஏசா $11^{10}$ $49^{22}$ $54^{3}$ $60^{3.5}$ எரே $4^{7}$ $49^{14}$ மல் $1^{11}$ லேவி $26^{33}$ 1 இரா $16^{3}$ $17^{8}$ எஸ்ரு $6^{21}$ எசே $12^{16}$. 'புறஜாதிகள்.' லேவி $25^{44}$ $26^{38}$ சங் $79^{1}$ $115^{2}$ ஏசா $42^{1}$ எரே $10^{2}$ $16^{19}$ எசே $20^{14}$ செப் $2^{11}$ யோவே $3^{9}$ மத் $20^{19}$ லூக் $21^{24}$ அப் $4^{28}$ $11^{1}$ $13^{46}$ ரோ $11^{11}$ கலா $2^{14}$ $3^{8}$ கொலோ $3^{11}$ எபே $2^{11}$ 1 தீமோ $2^{7}$.

முதலில் இஸ்ரவேலர் கானான் தேசத்திற்கு வரும்போது தங்களுக்கு யேகோவா கடவுளாய் எப்படி இருக்கிறாரோ, அப்படியே மற்ற ஜனங்களுக்கும் பாகால் முதலிய தேவர்களிருக்கும் என்று அபிப்பிராயங் கொண்டார்கள். பிறகு அவர்கள், யேகோவா எல்லா தேவர்களுக்கும் மேலானவராயிருக்கிறார், அல்லது யேகோவாமாத்திரம் உண்மையுள்ள தேவனாயிருக்கிறார் என்று அறிந்து, மற்ற ஜனங்களை இகழ்ந்து, அவர்கள் தங்களுக்குக் கீழானவர்களென்று தீர்மானித்தார்கள். உபா $3^{24}$ $10^{17}$ சங் $9^{5}$ 2 இரா $21^{2}$ ஏசா $2^{6}$ $17^{10}$ எரே $35^{15}$ ஆமோ $3^{15}$ $9^{10}$. இந்தக் கொள்கையின்படி இஸ்ரவேலர் மற்றத் தேசத்தாரின் குமாரத்திகளை விவாகத்தில் கொள்ளமாட்டார்கள். உபா $7^{2}$. சிறையிருப்பிலிருந்து யூதர்கள் தாங்கள் கானான் தேசத்திலுள்ளவர்கள் வணங்கின தேவதைகளைத் தொழுதுகொண்டதே தங்களுக்கு வந்த கஷ்டத்திற்குக் காரணம் என்றறிந்து, தாங்களே மற்ற ஜனங்களிலிருந்து பிரிக்கப்பட்டுப் பரிசுத்தவான்களாய் இருக்கவேண்டுமென்று தீர்மானித்தார்கள். எசே 40-48 அதி. இந்த அபிப்பிராயங் கொண்டு அவர்கள் இயேசுவின் காலத்திலும், யூதமார்க்கத்தாரல்லாதவர்களுக்கும் தங்களுக்கும் ஒற்றுமையில்லை என்றிருந்தார்கள். முதல் கிறிஸ்தவர்கள் யூதர்களாயிருந்து இயேசுகிறிஸ்துவின் சுவிசேஷத்தின் மூலமாய்ப் புறஜாதியார் மீட்பை அடைவது ஆச்சரியமான காரியமென்று நினைத்தார்கள். ஆனால் சீக்கிரத்திலே அவர்கள் இயேசு யாவரையும் இரட்சிக்க விரும்புகிறார் என்பதைக் கற்றுக்கொண்டு எல்லா தேசங்களிலும் சுவிசேஷத்தைப் பிரபல்யமாக்க முயன்றார்கள். இதைக்குறித்து அப்போஸ்தலர் நடபடிகளில் விபரமாய்ப் பார்க்கவேண்டும். அப் $10^{46}$.

இந்தியா தேசத்தில் வழங்கும் ஜாதிபேதத்தைப்போல எபிரெயர்களுக்கு அல்லது ஆதி கிறிஸ்தவர்களுக்கு ஜாதிவித்தியாசம் ஒன்றும் தெரியவில்லை.

**ஜன்னல்.** Window. ஆதி $26^{8}$ யோசு $2^{15}$ நியா $5^{28}$ 2 இரா $13^{17}$ 2 சாமு $6^{16}$ அப் $20^{9}$ 2 கொரி $11^{33}$. **வீடு** காண்க.

## ஜா.

**ஜாக்கிரதை.** Diligence. நீதி $12^{24.27}$ $13^{4}$ $21^{5}$ $22^{29}$ ரோ $12^{8}$ 2 கொரி $8^{7.22}$ தீத் $3^{12}$ 2 பேது $1^{5.10}$.

**ஜாதி.** People, Nation. **ஜனங்கள்** காண்க.

**ஜாதிலிங்கம்.** Vermillion. எரே $22^{13}$ எசே $23^{14}$.

## ஜீ.

**ஜீவ அப்பம்.** Bread of Life. யோவா $6^{35.48.51}$.

**ஜீவ ஊற்று.** Fountain of Life. சங் $36^{9}$ நீதி $13^{14}$ $14^{27}$. ஜீவதண்ணீரூற்று. வெளி $21^{6}$.

**ஜீவ கிரீடம்.** Crown of Life. யாக் $1^{12}$ வெளி $2^{10}$ $3^{11}$.

**ஜீவன்கள்.** A. V. Beasts, R. V. Living Creatures. எசே 1 அதி. $3^{13}$ $10^{15}$ வெளி 5, 6, 8, 11 அதி.

**ஜீவ தண்ணீர்.** Water of Life. உன். பா $4^{15}$ எரே $2^{13}$ சக $14^{8}$ யோவா $4^{10}$ வெளி $21^{6}$ $22^{1.17}$.

**ஜீவ புஸ்தகம். The Book of Life.** யூதர்கள் எந்த மனிதனும் செய்யும் நன்மை தீமையைப்பற்றி நிதானமான கணக்கு வைக்கும்படி கடவுள் ஜீவ புஸ்தகம், மரண புஸ்தகம் என்னும் இரண்டு புஸ்தகங்களைக் கொடுத்து, இவைகளை எழுதும்படி தூதர்களை ஏற்படுத்தியிருக்கிறார் என்றும்; ஜீவ புஸ்தகத்தில் பெயர் எழுதப்பட்டவர்கள் மேசியாவின் ராஜ்யத்தில் பங்கு பெற்றவர்கள் என்றும்; பிரதான தூதனாகிய மிகாவேல் இந்தக் கணக்குக்கு மேல்விசாரணைக்காரன். என்றும் நினைத்தார்கள். ஜீவ புஸ்தகம் பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும், மரண புஸ்தகம் யூதசாஸ்திரிகள் எழுதின வேறு ஆகமங்களிலும் சொல்லியிருக்கின்றன. தானி $12^{1}$ மல் $3^{16}$ சங் $69^{26}$ பிலி $4^{3}$ வெளி $3^{5}$ $13^{8}$ $17^{8}$ $21^{27}$.

**ஜீவ விருட்சம். Tree of Life.** ஆதி $2^{9}$ நீதி $3^{18}$ $11^{30}$ $15^{4}$ வெளி $22^{2,14}$.

**ஜீவன். Life.**

**I. பழைய ஏற்பாட்டில்:**

1. நடமாடுவதினாலும் சுவாசிக்கிறதினாலும் ஜீவன் அறியப்படும் என்றும்; பச்சை மரத்துக்கும் பட்டமரத்துக்கும் வித்தியாசம் இருந்தும் அவைகளுக்கு ஜீவன் இல்லை என்றும்; மனுஷர் மிருகங்களுக்குமாத்திரம் ஜீவன் உண்டு என்றும்; ஜீவனுக்கு இரத்தம் இருப்பிடம் என்றும்; சாப்பிடுவதற்கு மிருகங்களை அடிக்கும்போது அவைகளின் இரத்தத்தைச் சாப்பிடுவது கூடாது என்றும்; எபிரெயர்கள் நினைத்தார்கள். லேவி $3^{17}$ $7^{26}$ 1 சாமு $14^{33}$ யோபு $14^{7}$ ஏசா $11^{1}$ அப் $17^{25}$.

கடவுள் ஜீவனுக்குக் காரணகர்த்தரும் அதைக் காப்பாற்றுகிறவருமாய் இருப்பதினிமித்தம் அவருக்கு 'ஜீவனுள்ள தேவன்' என்று பெயர். சங் $36^{6}$ $42^{2}$.

2. ஜீவன் உடையவனாயிருப்பது மனுஷனுக்கு உத்தம பாக்கியம். மரணமோ அவனுக்குக் கேடு. உபா $30^{19}$ சங் $34^{12}$.

'ஜீவனைக் கண்டடைவது' பிழைத்திருப்பதையும் அல்லாமல் கடவுளுக்குக் கீழ்ப்படிந்து நீதியாய் நடப்பதையும் குறிக்கிறது. நீதி $3^{18}$ $8^{35}$.

3. 'நித்திய ஜீவன்' என்பது சிறையிருப்பின் காலத்திற்குப் பிறகு எழுதப்பட்ட தானியேலின் புஸ்தகத்தில் ஒருதடவைமாத்திரம் சொல்லியிருக்கிறது. இதைப்பற்றிய நம்பிக்கை பழைய ஏற்பாட்டில் தெளிவாய்ச் சொல்லியிருக்கவில்லை. தானி $12^{2}$ ஏசா $38^{11,18}$ பிர $9^{5,10}$ யோபு $14^{14}$.

**II. தள்ளுபடி ஆகமத்தில்:** சிறையிருப்புக்காலத்திற்குப் பிறகு யூதர்கள் மரணத்திற்குப்பின் ஜீவன் உண்டு என்றும், நீதிமான்கள் மரணம் அடையாமல் தேவனோடு நித்தியமும் வாழ்வார்கள் என்றும், தீயோர் தாங்கள் செய்யும் தீமைக்குத் தக்கதாகத் தண்டனை அடைவார்கள் என்றும் நம்பினார்கள். சாலொமோனின் நீதி 3-5 அதி.

**III. புதிய ஏற்பாட்டில்:**

1. **பதங்கள்:** ஜீவனுக்குக் கிரேக்க பாஷையில் மூன்று பதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

(i) *Zoe* என்பது நடமாடுகிறதும் கிரியை செய்கிறதுமான உயிரைக் குறிக்கிறது. மத் $7^{14}$ லூக் $12^{15}$ அப் $11^{18}$ ரோ $5^{10}$ 2 தீமோ $1^{10}$. 'நித்திய ஜீவன்' என்பதில் 'ஜீவன்' என்பது *Zoe*.

(ii) *Psyche* என்பது பிராணனை அல்லது உயிரோடிருக்கிற ஆத்துமாவைக் குறிக்கிறது. 'பிராணன்.' மத் $20^{20}$ ரோ $11^{3}$ $16^{4}$ அப் $20^{24}$. 'ஜீவன்.' மத் $6^{25}$ $10^{39}$ $20^{28}$ யோவா $12^{25}$.

(iii) *Bios* என்பது இம்மையை அல்லது இப்பிரபஞ்சத்தைக் குறிக்கிறது. 1 தீமோ $2^{1}$ 2 தீமோ $2^{4}$ 1 யோவா $2^{16}$ $3^{17}$.

2. **இயேசு அருளின போதகம்.** அவர் எந்த இடத்திலும் இம்மையிலுள்ள ஜீவனைக் குறித்து அற்பமாய்ப் பேசவில்லை. அது உத்தம நன்மையென்று பலமுறையும் சொன்னார். மத் $5^{21}$ $10^{29}$ $11^{19}$. ஆனால் இதைப்பற்றி அளவுக்குமிஞ்சிக் கவலைப்படுவதும், அதற்காக அதிகமாய் ஆஸ்தியைச் சேர்த்து வைப்பதும் நல்லதல்ல என்றும்; தமக்காக ஒருவன் தன் ஜீவனை இழந்துவிடுவது நலம் என்றும் சொன்னார். மத் $6^{19,31}$ $16^{25}$ லூக் $12^{15}$ யோவா $12^{25}$. இயேசு தாம் 'நித்திய ஜீவன்' என்று அடிக்கடி உரைத்தார். மத் $19^{17,29}$ மாற் $10^{30}$. அவருடைய போதனையில் அவர் சொன்ன 'ஜீவன்' என்பது பலமுறையும் நித்திய ஜீவனைக் குறிக்கிறது. மத் $7^{14}$ $19^{17}$ மாற் $9^{43}$ யோவா $3^{36}$ $10^{11}$.

3. **யோவான் சுவிசேஷம்.** யோவான் எழுதின சுவிசேஷத்தில் இயேசு நித்திய ஜீவனைப்பற்றி அருளின உபதேசம் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. இது கடவுளுடைய ராஜ்யத்திலுள்ளவர்கள் அவருடைய ஆளுகையின்படி நடப்பதைக் குறிக்கிறது. இது இம்மையில் ஆரம்பமாகும். இதற்கு இயேசுவை அறிவது மூலாதாரம். அவரே

ஜீவன், அவரில் பிழைக்கிறவர்கள் நித்திய ஜீவனை அடைவார்கள். யோவா 1⁴ 3³⁶ 5²⁴ 6⁴⁷ 14⁶ 17³.

4. புதிய ஏற்பாட்டில் மற்ற ஆகமங்களில் ஜீவனைப்பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறது. யோவான் எழுதின முதலாம் நிருபத்துக்கு இதுதான் முக்கியகாரியம். பரி. பவுல் கிறிஸ்துவின் மூலமாய் ஜீவன் உண்டாகும் என்றும், கிறிஸ்தவ ஜீவியம் கிறிஸ்து தான் என்றும், அவர் ஜீவனை உண்டாக்கினுரென்றும் சொல்லியிருக்கிறுன். ரோ 6²³ கலா 2²⁰ பிலி 1²¹ கொலோ 1¹⁶ 3³. பரி. பவுல் சொல்வதின்படி பலமுறையும் ஜீவன் என்பது நித்திய ஜீவனைக் குறிக்கிறது. ரோ 5¹⁷ 2 கொரி 5⁴ பிலி 2¹⁴. கிறிஸ்தவ ஜீவன் ஆவிக்குரிய ஜீவன். ஆனதினுல் அது எவ்வித்திலும் சன்மார்க்கத்தையே நாடும். ரோ 8⁶. வெளிப்படுத்தின விசேஷத்தில் 'ஜீவ கிரீடம்,' 'ஜீவ ஊற்று' முதலியவை கிறிஸ்துவுக்குள் ஜீவிக்கிற நித்திய ஜீவனைப்பற்றிய நோக்கத்தைக் காட்டுகின்றன.

**ஜீவாதிபதி.** Prince of Life. அப் 3¹⁵.

## ஜு.

**ஜுரம்.** Fever. மத் 8¹⁴ மாற் 1³⁰ லூக் 4³⁸ யோவா 4⁵² அப் 28⁸.

## ஜெ.

**ஜெகர்சகதூதா.** Jegar-sahadutha. 'சாட்சியாகக் கட்டப்பட்ட கற்குவியல்' என்றர்த்தங்கொள்ளும் இப்பெயர்கொண்ட கற்குவியலைத் தாங்கள் செய்த உடன்படிக்கைக்கு அடையாளமாக லாபானும், யாக்கோபும் கட்டினுர்கள். ஆதி 31⁴⁷.



ஜெப ஆலயத்தின் வாசல்.

**ஜெப ஆலயம்.** The Synagogue.

1. **ஜெப ஆலயத்தின் சரித்திரம்.** 'ஜெப ஆலயம்' என்பது சில வசனங்களில் ஓரிடத்திலே தேவனைத் தொழுதுகொள்ளும்படி கூடிவந்த சபையார்களின் சங்கத்தைக் குறிக்கிறது. அப் 9² வெளி 2⁹. ஆனுல் ஐம்பதுக்கதிகமான வசனங்களில் 'ஜெப ஆலயம்' சபையார்கள் ஆராதனை நடத்திக்கொள்ளும்படி கட்டின வீட்டைக் குறிக்கிறது. மத் 4²³ மு. சிறையிருப்பில் இருந்த எபிரெயர்கள் பாபிலோனியா தேசத்தில் தேவாலயத்தின் ஆசாரத்தை நடத்திக்கொள்ளாமல், வேதாகமத்தையும் தீர்க்கதரிசிகள் உரைத்த வாக்கியங்களையும் கேட்கும்படி கூடி வருவார்கள். இவ்விதமாய் அவர்கள் எசேக்கியேலின் வீட்டுக்கு வந்தார்கள். எசே 8¹ 20¹. ஒருவேளை அப்போது இதற்காகவே ஜெப ஆலயங்களைக் கட்டினுர்கள். எப்படியாவது நெகேமியாவின் காலமுதல் நியாயப்பிரமாணத்தைப்பற்றிப் போதனை அடையும்படி,

தாங்கள் இருந்த ஊர்களிலெல்லாம் தேவாலயங்களைக் கட்டினார்கள்.

**2. ஜெப ஆலயக் கட்டடமும் அதிலிருந்த பணிமுட்டுகளும்.** வழக்கமாய் ஜெப ஆலயம் சதுரமாயிருக்கும். அதின் வாசல் தெற்குத்திசையை நோக்கியிருக்கும். ஸ்திரீகளுக்கு அதற்குள்ளே பிரத்தியேகமான இடமிருக்கும். நியாயப்பிரமாணச் சுருளை வைக்கும்படி நேர்த்தியான பெட்டி ஒன்றும், அப்பெட்டிக்கு முன் இராப்பகலாய் எரிந்துகொண்டிருக்கும் தீபமும், வேதாகமத்தை வாசிக்கவும் பிரசங்கம்பண்ணவும் ஒரு பீடமும், அதைக் கேட்கும்படி கூடிவந்தவர்களுக்காக ஆசனங்களும், பெரியவர்களுக்குப் பீடத்திற்கு முன்பாக விசேஷித்த ஆசனங்களுமிருக்கும். அந்த விசேஷித்த ஆசனங்களுக்கு 'முதன்மையான ஆசனங்கள்' என்று பெயர். மத் $23^{6}$.

**3. ஜெபஆலயத்துஉத்தியோகஸ்தர்கள்.** மூப்பர்கள் தங்கள் ஊரிலுள்ள ஜெப ஆலயத்தைப் பார்த்துக்கொள்ளுவார்கள். அவர்கள் ஒருவனைக் காரியஸ்தனாக ஏற்படுத்துவது வழக்கம். இவன் 'ஜெப ஆலயத் தலைவன்.' மாற் $5^{22}$ லூக் $8^{41}$ $13^{14}$. இந்தத் தலைவன் அதிலுள்ள ஆராதனையைப்பற்றிய ஒழுங்கு செய்வான். அப் $13^{15}$. ஜெப ஆலயத்தைப் பெருக்கிச் சுத்தஞ்செய்யவும், பெட்டியிலிருந்து சுருளை எடுக்கவும், மறுபடியும் அதைப் பெட்டியில் வைக்கவும், குற்றவாளிகளை வாரினால் அடிக்கவும் 'ஜெப ஆலயத்துப் பணிவிடைக்காரன்' ஒருவ னிருந்தான். மத் $10^{17}$ $23^{34}$ லூக் $4^{20}$.

**4. ஜெப ஆலயத்து ஆராதனை.** புதிய ஏற்பாட்டின் காலத்திற்குப்பின் நடத்தின ஜெப ஆராதனையின் முறை நமக்குத் தெரியும். இயேசுவின்காலத்தில் இந்த முறையின்படி ஆராதனை நடந்தது என்று நாம் நினைக்கவேண்டும். அந்த ஆராதனையில் நாலு பாகங்களுண்டு.

(i) முதலாவது, எல்லாரும் நின்று சில வேதவசனங்களை உரத்த சத்தத்தோடு ஒருமித்துச் சொல்லுவார்கள். அந்த வாக்கியங்களாவன: உபா $6^{4-9}$ $11^{13-21}$ எண் $15^{37-41}$. பிறகு ஸ்தோத்திர வசனம் சொல்லுவார்கள்.

(ii) பிறகு ஒருவன்மாத்திரம் நின்று மற்றவர்களுக்காக ஜெபம்பண்ணுவான்.

(iii) ஜெபஞ்செய்தபின் சிலர் பீடத்தின்மேல் நின்று நியாயப்பிரமாணத்தில் ஒரு பாடத்தை வாசிப்பார்கள். ஓய்வுநாட் காலை ஆராதனையில்மாத்திரம் இன்னொருவன் தீர்க்கதரிசன ஆகமங்களில் தானே தெரிந்தெடுத்த வேத பாடத்தை வாசிப்பான். இவ்வாறே, இயேசு நாசரேத்தூரிலே ஏசாயா தீர்க்கதரிசனத்திலிருந்து பாடம் வாசித்தார். லூக் $4^{16}$.

அநேகருக்கு வேதாகமம் எழுதப்பட்ட எபிரெய பாஷை தெரியாததினால், வாசித்த வேத பாடங்கள் ஜனங்கள் வழங்கின பாஷையில் மொழிபெயர்த்துச் சொல்லப்பட்டன. இயேசுவின்காலத்தில் ஜெப ஆலயங்களிலே யூதர்கள் சங்கீதங்கள், நீதிமொழி, யோபு, உன்னதப்பாட்டு, ரூத், புலம்பல், பிரசங்கி, தானியேல், எஸ்றா, நெகேமியா, நாளாகமப் புஸ்தகங்கள் வாசிக்கமாட்டார்கள். வேத பாடத்தை வாசித்தபிறகு, ஒருவன் பீடத்தின்மேல் உட்கார்ந்து ஜனங்களுக்குப் பிரசங்கம் செய்யலாம்.

(iv) கடைசியிலே ஒரு ஆசாரியன் மோசே அருளின மொழிகளை ஆசீர்வாதமாகச் சொல்லுவான். (எண் $6^{24-26}$). ஆசாரியன் இல்லாவிட்டால், இன்னொருவன் ஜெபம்பண்ணி ஆராதனையை முடிப்பான்.

**5. ஜெப ஆலயத்தின் பிரயோஜனம்.** ஜெப ஆலயத்தின் மூப்பர்கள் குற்றவாளிகளை நியாயந்தீர்க்கும்படி அதில் கூடுவார்கள்; அதிலே பிள்ளைகளுக்காகப் பள்ளிக்கூடமிருக்கும். ஓய்வுநாள்தோறும் மற்றும் சில நாட்களிலும் அதில் ஆராதனை நடக்கும்.

ஆதலால் ஜெப ஆலயங்கள் எந்த ஊர்களிலும் சன்மார்க்கத்திற்கு அடையாளமாகவும் ஏதுவாகவு மிருந்தது. இவைகளில் பலி செலுத்தாமலும், சடங்காசாரங்க ளில்லாமலும், ஆவிக்குரியவிதமாய்க் கடவுளை வணங்கும்படி யூதர்கள் பழகிவந்தார்கள். சிதறியிருக்கிறவர்களும் பல தேசங்களில் தங்களுக்காக ஜெப ஆலயங்களைக் கட்டினார்கள். இவைகளில் புறமதஸ்தர்கள் மெய்க்கடவுளைப்பற்றிய வணக்கத்தை அறிந்துகொள்ளுவார்கள். தேவாலயம் அல்ல, ஜெப ஆலயமே கிறிஸ்தவ சபைகளுக்கு முன்மாதிரியாக இருந்தது.

**ஜெபம். Prayer.** வேதாகமத்தில் ஜெபம். கடவுளை நோக்கி நன்மைகளைப் பெறும்படிக்கான மன்றாட்டையும், பாவ அறிக்கையையும், துதி தோத்திரத்தையும், பிரதிக்கினைகளையும், ஆசீர்வாதங்களையும், சாபத்தையும் குறிக்கிறது. சிலவேளை ஜெபம் கடவுளோடே செய்யும் சம்பாஷணைபோலிருக்கிறது.

**1. ஜெபம் குறிக்கும் பதங்கள்.** பழைய ஏற்பாட்டிலே, யேகோவாவின் நாமத்தினால் சகாயம் தேடுதலும், மனதிலுள்ள துன்பத்தை யறிவித்தலும், அவருடைய தயவை வேண்டிக்கொள்ளுதலும், ஜெபத்தியானம் பண்ணுதலும் ஆகிய இவைகள் ஜெபத்திற்கு

மறுபெயர்கள். ஆதி $4^{26}$ நியா $3^{9}$ உபா $3^{23}$ சங் $72^{12}$ $105^{40}$ யோபு $15^{4}$ எரே $7^{16}$.

புதிய ஏற்பாட்டில், ஜெபம் என்பது ராஜாக்களுக்கும், பெரியோர்களுக்கும் விண்ணப்பம்செய்வதல்ல, கடவுளுக்குச்செய்யும் விண்ணப்பத்தைமாத்திரம் குறிக்கிறது. கடவுளுடைய 'நாமத்தைத் தொழுதுகொள்ளுதல்' ஜெபம்தான். அப் $9^{14}$. ஜெபத்திற்கு 'வேண்டிக்கொள்ளுதல்' இன்னொரு பெயர். மத் $6^{8}$ யோவா $17^{9}$ அப் $8^{22}$ ரோ $8^{27}$.

**2. ஜெபம் செய்யுங் காலமும், இடமும், விதமும்.**

(i) எபிரெயர்கள் எந்தக் காலத்திலும், எந்த இடத்திலும் ஜெபம்பண்ணுவதே தக்கது என்று தீர்மானித்தார்கள். ஆதி $24^{12}$ சங் $42^{6}$ $6^{12}$. இயேசு ஜெபம் பண்ணுகிறதற்கு எந்த இடமும், எந்தக் காலமும் நல்லதென்று போதித்தார். யோவா $4^{21}$. ஆனால் எபிரெயர்கள் முதலிலே உடன்படிக்கைப் பெட்டியிருந்த இடமாகிய சீலோவாவிலேயும், சாலொமோன் கட்டின தேவாலயத்திலேயும் விசேஷமாய் ஜெபம் பண்ணினார்கள். 1 இரா $8^{29}$ சங் $28^{2}$. பிற்காலங்களில் எந்த ஊர்களிலுமுள்ள ஜெப ஆலயங்களிலே ஜெபம் பண்ணுவது வழக்கமாயிற்று. அப் $16^{13}$. சிலரோ, யாவரும் தங்களைப் பார்த்து மெச்சிக்கொள்ளும்படி பகிரங்கமான இடங்களிலே நின்று ஜெபம் பண்ணுவார்கள். மத் $6^{5}$. பயபக்தியுள்ளவர்கள் தினம் மூன்றுதரம் ஜெபம் பண்ணுவார்கள். தானி $6^{1}$. அப் $10^{9}$. எபிரெயர்கள் நிமிர்ந்து நின்று ஜெபம் பண்ணுவார்கள். 1 சாமு $1^{26}$ லூக் $18^{11}$. அவர்களில் அநேகர் முழங்காற்படியிட்டு ஜெபம் பண்ணுவார்கள். ஏசா $45^{23}$ அப் $7^{60}$ எபே $3^{14}$. சிலர் குப்புற விழுந்து ஜெபம் பண்ணுவார்கள். யாத் $34^{8}$ மத் $26^{39}$. சிலர் கைகளை உயர்த்தி அண்ணாந்துபார்த்து ஜெபம் பண்ணுவார்கள். சங் $28^{2}$ $134^{2}$ ஏசா $1^{15}$ 1 தீமோ$2^{8}$.

(ii) எபிரெயர்கள் பலி செலுத்துங் காலத்திலே வானத்திற்கு ஏறுகிற தூபத்தின் புகையைப் பார்த்து, ஜெபத்திற்குத் தூபமானது உபமானமாய்ச் சொன்னார்கள். சங் $141^{2}$ லூக் $1^{10}$ வெளி $5^{8}$ $8^{3}$. உபவாசித்து விசேஷமான விண்ணப்பங்களைச் செய்வார்கள். ஆதி கிறிஸ்தவர்களும் அப்படியே செய்தார்கள். நெகே $1^{4}$ சங் $35^{13}$ அப் $13^{3}$ $14^{23}$. யூதர்கள் வழக்கமாய்ச் சொன்ன ஜெபங்களாவன: உபா $21^{7.8}$ $26^{5-15}$. இயேசு போதித்த கர்த்தருடைய ஜெபம்: மத் $6^{9}$ லூக் $11^{2}$. யோவான்ஸ்நானன் தனது சீஷர்களுக்கு ஜெபங்களைக் கற்றுக்கொடுத்தான். லூக் $11^{1}$.

**3. பழைய ஏற்பாட்டிலுள்ள ஜெபம்.**

(i) ஆபிரகாம் முதலிய கோத்திரப்பிதாக்கள் யேகோவாவை நோக்கி சம்பாஷணையையும், விண்ணப்பத்தையும், பிரதிக்கினையையும் செய்தார்கள். ஆதி $15^{1}$ $17^{15}$ $18^{23}$ $28^{20}$ $32^{11}$ $43^{14}$.

(ii) நியாயப்பிரமாணம் ஜெபஞ்செய்கிறதைப்பற்றி அவ்வளவு சொல்லுகிறதில்லை.

(iii) மோசே ஜெபத்தில் ஊக்கமாய் ஜெபம் பண்ணினான். யாத் $5^{22}$ $6^{1}$ $8^{12}$ $32^{11}$ எண் $11^{11}$ உபா $33^{6}$. யோசுவாவும், கிதியோனும், இஸ்ரவேலரும் பண்ணின ஜெபங்கள். யோசு $7^{7}$ $10^{14}$ நியா $6^{6.11}$.

(iv) சாமுவேல் ஜனங்களுக்காகப் பரிந்துபேசி, அடிக்கடி ஜெபத்திலே விண்ணப்பம் பண்ணினான். 1 சாமு $7^{5}$ $12^{23}$. தாவீது செய்த பல ஜெபங்கள். 1 சாமு $23^{2}$ $24^{12}$ 2 சாமு $12^{16}$ $24^{17}$. சாலொமோன் ஞானத்திற்காகச் செய்த ஜெபம். 1 இரா $3^{5}$. தேவாலயம் பிரதிஷ்டை செய்யுங்காலத்தில் அவன் செய்த ஜெபம் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. 1 இரா $8^{22-53}$. எலியா செய்த ஜெபங்கள். 1 இரா $17^{20}$ $18^{36}$ $19^{9}$. எலிசா செய்த ஜெபங்கள். 2 இரா $4^{33}$ $6^{17}$. எசேக்கியேல் செய்த ஜெபங்கள். 2 இரா $19^{15}$ $20^{3}$.

(v) தீர்க்கதரிசிகள் ஜனங்களுக்காக ஜெபத்திலே விண்ணப்பத்தையும், வேண்டுதலையும் வழக்கமாய்ச் செய்வார்கள். எந்தத் தீர்க்கதரிசன ஆகமத்திலும் இதற்கு உதாரணங்களுண்டு. ஆமோ $7^{2}$ எரே 14, 15 அதி.

(vi) சிறையிருப்பிலும் அதற்குப் பிந்தின காலத்திலும் எபிரெயர்கள் பாவத்தைப்பற்றித் தங்களுக்குள்ளே நல்லறிவடைந்து, ஜெபம் வழக்கமாய்ச் செய்வார்கள். ஏசா $63^{7}$-$64^{12}$ எஸ்ரு $9^{5-15}$ நெகே $1^{4}$ $9^{5}$.

(vii) சங்கீத புஸ்தகம் ஒரு ஜெபமாலைபோலிருக்கிறது. இதிலே அக்காலத்திலல்லாமலும் சர்வகாலத்துக்கும், பாவிகளும், பக்தர்களும் செய்யவேண்டிய எந்த தோத்திரமும், விண்ணப்பமும், பாவ அறிக்கையும் அடங்கியிருக்கிறதென்று சொல்லக்கூடும். தேகசுகம், துன்பத்தில் ஆறுதல் இவைகளையல்லாமலும் ஆவிக்குரிய நன்மைகளை யடையும்படி, இவைகளில் எத்தனையோ மன்றாட்டுகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சங் $6^{7}$ 42, 51, $69^{20}$ 77, 109, 119. நீதிமொழி புஸ்தகம் ஜெபம் பண்ணுவதைச் சிறப்பிக்கிறது. நீதி $15^{8}$ $28^{9}$ $30^{7}$. யோபினுடைய சரித்திரத்தில் யோபு பலதடவை கடவுளோடு தர்க்கம் பண்ணுவதைப்போல ஜெபம் செய்கிறான். யோபு 10, 42 அதி.

# A TAMIL BIBLE DICTIONARY

BY

A. C. CLAYTON

PART III

(PAGES 353—576)

# வேத அகராதி

மூன்றும் பாகம்

(பக்கம் 353–576)

இஃது

ஏ. சி. கிலேற்றன் ஐயரால்

இயற்றப்பட்டது

THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA,
MADRAS ALLAHABAD CALCUTTA RANGOON COLOMBO
1916

# NOTICE

Part IV, completing the work is in the press, and should be out by March, 1916.

## விளம்பரம்

இந்த அகராதியின் கடைசியான பாகம், அதாவது நான்காம் பாகம், 1916-ம் ௵ மார்ச்சு௴த்தில் பிரசுரம் செய்யப்படும் என்று நம்புகிறோம்.

4. **தள்ளுபடி ஆகமத்தில்** பக்திமான்கள் செய்த அநேக ஜெபங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அக்காலத்திலுள்ள யூதர்கள் அடிக்கடி ஜெபத்திலே கடவுளை நோக்கி அவருடைய தயவைத் தேடுவார்கள் என்பது இதில் தெளிவாய்த் தோன்றுகிறது. யுத்தத்திற்கு முந்தியும் பிந்தியும், யுத்தகளத்திலும், மக்கபெயர் ஜெபம் பண்ணினார்கள். இந்தக்காலத்திலும் யூதர்கள் தாங்கள் ஜெபம் பண்ணவும், நியாயப் பிரமாணத்தைப்பற்றி வியாக்கியானப் பிரசங்கத்தைக் கேட்கவும் எந்த ஊரிலேயும் ஜெப ஆலயங்களைக் கட்டினார்கள்.

5. **புதிய ஏற்பாடு.**

I. **இயேசுவின் முன்மாதிரியும் போதகமும்.**—யோவானும் லூக்காவும் எழுதின சுவிசேஷங்களில் இயேசு செய்த ஜெபங்களையும், ஜெபம் பண்ணுகிற விதத்தையும்பற்றித் தமது சீஷர்களுக்கு அவர் அருளிய போதனை விசேஷமாய் எழுதப்பட்டிருக்கிறது.

(i) **இயேசு காட்டிய முன்மாதிரி.**—அவர் விசேஷித்த காலங்களில் ஜெபம்பண்ணுவது வழக்கம். ஞானஸ்நானம் பெற்று (லூக் $3^{21}$), அப்போஸ்தலர்களை ஏற்படுத்தி (லூக் $6^{12}$), அற்புதம் செய்து (லூக் $9^{16}$ யோவா $11^{41}$), மறுரூபமடைந்து (லூக் $9^{29}$), கெத்செமனே தோட்டத்தில் துக்கப்பட்டு (லூக் $22^{39}$), சிலுவையில் அறையுண்டு (லூக் $23^{46}$), சீஷர்களுக்காக மன்றாடி (லூக் $22^{32}$ யோவா 17 அதி.) ஜெபம் பண்ணினார். பலதடவை அவர் தனிமையாய்ப்போய் ஜெபம் பண்ணினார். மாற் $1^{35.45}$ லூக் $6^{12}$.

(ii) **இயேசு அருளிய போதனை.**—சாதாரண நன்மைகளுக்காகவும், ஆவிக்குரிய நன்மைகளுக்காகவும் ஊக்கத்தோடே ஜெபம் பண்ணவேண்டும். மத் $6^{33}$ லூக் $11^{5}$ $18^{9}$. ஜெபம் பண்ணுகிறவர்கள் தாழ்மையோடே தங்களுக்குத் தீமை செய்கிறவர்களுக்கு மன்னிப்புச் செய்து ஜெபம் பண்ணவேண்டும். மத் $6^{14}$ லூக் $18^{9}$. மற்றவர்கள் தங்களைப் பார்த்துத் தங்களைப் புகழும்படி ஜெபம் பண்ணும் வழக்கம் நல்லதல்ல. மத் $6^{6}$ லூக் $6^{12}$. அலப்புதல் இல்லாமல் உண்மையோடே ஜெபம் பண்ணுவது அவசியம். மாற் $11^{23}$ $12^{40}$. விசுவாசிகள் ஏகோபித்து இயேசுவின் நாமத்தினாலே ஜெபம் பண்ணவேண்டும். மத் $18^{19}$ யோவா $14^{13}$ $15^{16}$ $16^{23}$.

II. **அப்போஸ்தலர் காலத்தில்:**

(i) ஆதி கிறிஸ்தவர்கள் உற்சாகத்துடனே ஜெபஞ்செய்தார்கள். அப் $3^{16}$ $4^{31}$ $9^{40}$ $10^{4}$ $12^{5}$ $16^{25}$. சுகப்படுத்தும்போதும், ஞானஸ்நானம் கொடுக்கும்போதும், ஊழியத்திற்கு ஏற்படுத்தும்போதும் ஜெபம் பண்ணினார்கள். அப் $8^{14}$ $13^{3}$ $28^{8}$. ஆராதனையில் ஆண்களும் பெண்களும் ஜெபம் பண்ணுவார்கள். தீத் $2^{1}$ 1 தீமோ $5^{5}$ 1 கொரி $11^{4}$ $14^{4}$ யாக் $5^{13}$.

(ii) பரிசுத்தாவி ஜெபம் பண்ணுகிறதற்கு உதவிபுரிவார். ரோ $8^{14}$ எபே $6^{18}$. இயேசு நமக்கு இதிலே உதவி செய்கிறார். கலா $4^{4}$ ரோ $8^{34}$ எபி $4^{15}$. கிறிஸ்துவுக்குச் சொல்லப்படும் ஜெபம். அப் $7^{59}$. ஜெபஞ்செய்யும்போது விசுவாசமும் அதற்குத்தக்க நடக்கையும் வேண்டும். யாக் $4^{3}$ 1 யோவா $3^{22}$ ரோ $12^{12}$ கொலோ $4^{2}$ 1 தெச $5^{16}$ 1 பேது $4^{7}$. ஆதி கிறிஸ்தவர்கள் தங்களுக்காகவும், அப்போஸ்தலர்களுக்காகவும் மன்றாட்டையும் ஸ்தோத்திரத்தையும் சொல்லிவந்தார்கள். ரோ $10^{1}$ $15^{5}$ $15^{32}$ பிலி $1^{3}$ 1 தெச $2^{13}$ 1 தீமோ $1^{12}$ 2 தீமோ $1^{3}$. புதிய ஏற்பாட்டின் கடைசி வசனங்கள் ஒரு ஜெபந்தான். வெளி $22^{20}$.

**ஜெயம்.** Victory. 2 சாமு $19^{2}$ 1 இரா $16^{5}$ 1 நாளா $29^{11}$ சங் $98^{1}$ ஏசா $25^{8}$ மத் $12^{20}$ யோவா $16^{33}$ 1 கொரி $15^{54}$ 1 யோவா $3^{10}$ $4^{4}$ $5^{4}$ வெளி $2^{7.11.17.26}$ $3^{5.12.21}$ $11^{7}$ $12^{11}$ $13^{7}$ $15^{2}$ $17^{14}$ $21^{7}$.

**ஜென்ம சுபாவம்.** Nature. எபே $2^{3}$

**ஜென்ம நாள்.** Birthday. ஆதி $40^{20}$ மத் $14^{6}$ மாற் $6^{21}$.

**ஜென்ம பாவம்.** Original sin. **பாவ நிவாரணம்** காண்க.

## ஜே.

**ஜேஷ்ட புத்திரன்.** Birthright. உபா $21^{17}$ 2 இரா $3^{27}$ எரே $31^{9}$ எபி $12^{16}$. **சேஷ்ட புத்திர பாகம், தலைச்சன், முதற்பேறு, மூத்த மகன்** காண்க.

## ஜோ.

**ஜோசியர்.** Astrologers. ஏசா $47^{13}$. **சூனியம்** காண்க.

**ஜோடிப்பு.** Beauty. ஏசா $28^{1}$.

## ஸ்.

**ஸ்காரியோத்.** Iscariot. இப்பதத்திற்குக் கீரியோத்தென்னும் ஊரில் வசிக்கிறவன் என்பது அர்த்தம். அந்த ஊர் தென் யூதாவிலுள்ள கீரியோத்-எஸ்ரோன் என்று இருக்கலாம். ஆதலால் யூதாஸ்காரியோத் அந்த ஊரான் என்று நினைக்கவேண்டும். யோவா $6^{71}$ $14^{22}$. **யூதாஸ்காரியோத்** காண்க.

**ஸ்குதியன்.** Scythian. தென் ஐரோப்பாவில் அலைந்து திரிந்த நாகரீகமற்ற குரூரமான ஓர் ஜனம். தமிழ் வேதாகமத்தில் 'ஸ்குதியன்' என்பதற்குப் பதிலாக 'புறதேசத்தான்' என்று சொல்லப்படுகிறது. கொலோ $3^{11}$. **புறதேசத்தான்** காண்க.

**ஸ்கேவா.** Sceva. எபேசு பட்டணத்தில் அசுத்த ஆவிகளைத் துரத்தும்படி இயேசுவின் நாமத்தை மந்திரமாகச் சொன்ன சில யூதர்களில் பிரதான ஆசாரியனான ஸ்கேவாவின் புத்திரர் இருந்தார்கள். இந்த ஸ்கேவாவைப்பற்றி வேறொன்றும் தெரியாது. அப் $19^{14}$.

**ஸ்தம்பம்.** Pillar. நெகே $9^{12}$ சங் $99^{7}$. மேகஸ்தம்பம். யாத் $13^{21}$ $14^{19}$ $33^{9}$ உபா $31^{15}$. மேகத் தூண். எண் $12^{5}$. அக்கினிஸ்தம்பம். யாத் $13^{21}$ நெகே $9^{12}$. **தூண்** காண்க.

**ஸ்தம்பன வித்தை.** Enchantments. ஏசா $47^{12}$. **சூனியம்** காண்க.

**ஸ்தலம்.** Place. 1 இரா $8^{29}$ 2 நாளா $6^{2}$ எஸ்ரா $2^{68}$ சங் $33^{14}$. 'வாசஸ்தலம்.' யாத் $39^{33}$ லேவி $17^{3}$ 1 இரா $8^{39,49}$. 1 நாளா $9^{23}$ 2 நாளா $6^{30}$. 'பரிசுத்த ஸ்தலம்' யாத் $25^{8}$ லேவி $7^{16}$ எஸ்ரா $9^{8}$ எசே $45^{4}$. **ஆசரிப்புக் கூடாரம், தேவாலயம்** காண்க.

**ஸ்தனம்.** Breast. நீதி $5^{19}$ உன். பா $7^{3}$ எசே $23^{3}$.

**ஸ்தாக்கி.** Stachys. ரோமாபுரியிலுள்ள சபையில் பரி. பவுலுக்கு நன்றாய்த் தெரிந்த ஒரு கிறிஸ்தவன். ரோ $16^{9}$.

**ஸ்தாதி.** Stadium. 600 அடி தூரம். வெளி $14^{20}$ $21^{16}$. **அளவு** காண்க. (பக் 38).

**ஸ்தானம்.** Place. யாத் $15^{17}$ 1 இரா $8^{13}$ எஸ்ரா $5^{16}$ எசே $3^{12}$ $43^{7}$ மீகா $1^{3}$.

**ஸ்தானாபதி.** Ambassador. ராஜாக்களும், சேனாபதிகளும், பெரியோர்கள் முதலியவர்களும் முக்கிய காரியங்களைப்பற்றித் தங்களுக்குப் பதிலாக ஏற்பாடு செய்யும்படி அனுப்பப்பட்டவர்களே ஸ்தானாபதிகள். சத்துருக்களும் ஸ்தானாபதிகளைக் கனம்பண்ணுவார்கள். ஒருவன் ஸ்தானாபதியை அவமானஞ் செய்தால், அது அந்த ஸ்தானாபதியை அனுப்பினவரை அவமானஞ் செய்ததுபோலிருக்கும். எண் $20^{14-21}$ உபா $2^{26}$ நியா $11^{12}$ யோசு $9^{4}$ ஏசா $30^{4}$ எசே $17^{15}$ லூக் $14^{32}$ $19^{14}$. எரேமியா $49^{14}$-ல் சொன்ன ஸ்தானாபதி ஒரு தேவதூதனைக் குறிக்கலாம். புதிய ஏற்பாட்டிலே ஸ்தானாபதி உவமானமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 2 கொரி $5^{20}$ எபே $6^{20}$.

**ஸ்திதி.** State. எஸ்தர் $2^{18}$.

**ஸ்திரீ.** Woman.

1. **பழைய ஏற்பாடு.** பூர்வகாலத்திலுள்ள எபிரெயருக்குள்ளே புருஷனைப்போல் ஸ்திரீக்குக் கணிசம் இல்லாதிருந்தாலும் அவள் புருஷனுக்கு அடிமையாய் அல்ல, ஏற்ற துணையா யிருக்கவேண்டுமென்பது எபிரெயருடைய அபிப்பிராயமாயிருந்ததென்று தெளிவாய்த் தோன்றுகிறது. ஆதி $2^{18}$ $3^{16}$. சாராளும், ரெபேக்காளும், ராகேலும் தங்கள் புருஷர்களைப்போல மேன்மை பெற்றவர்கள். மோசேயையும், ஆரோனையும்போன்ற மீரியாம் கீர்த்தியுள்ளவள். மீகா $6^{4}$. தெபோராள் நியாயாதிபதியாயிருந்தாள். நியா $4^{4}$. ராஜ ஸ்திரீகளாகிய யேசபேலும், அத்தாலியாளும் ராஜாங்க காரியங்களை நடத்தினவர்கள். புருஷர்களோடே மனைவிகளும் தேவஸ்தலங்களுக்குப் போவார்கள். 1 சாமு $1^{1}$. பலி செலுத்தும்போது ஸ்திரீகளும் அதற்கு உதவிசெய்வார்கள். நியா $13^{23}$. அவர்கள் தேவாலயத்திலே சங்கீதங்களைப் பாடுவார்கள். எஸ்றா $2^{65}$. நியாயப்பிரமாணத்தில் அவர்களுக்கு அநியாயம் இல்லாதபடிக்குப் பல நியாயங்களுண்டு. லேவி 12, 15 அதி. உபா 22 அதி. எண் 27 அதி. தீர்க்கதரிசிகள் மேற்கூறிய நியாயத்தின்படி ஸ்திரீகளுக்குச்செய்த அநியாயங்களைக் கண்டித்தார்கள். எரே $7^{6}$ எசே $22^{7}$ மல் $2^{16}$. மங்கள ஸ்திரீயின் சிறப்பு. நீதி 31 அதி.

2. **புதிய ஏற்பாடு.** இயேசு தமது போதகத்திலே எப்போதும் ஸ்திரீகளைக் கனப்படுத்திப் பேசுகிறார். அவர்கள் கற்புள்ளவர்களானாலுஞ் சரி, பாவிகளானாலுஞ் சரி, அவர் தமது ராஜ்யத்திலே எல்லாரையும் ஏற்றுக்கொள்ளும்படி சித்தமுள்ளவரா யிருந்தார். மத் $5^{27}$ $19^{3}$ லூக் $7^{37}$ $8^{2}$ யோவா $4^{27}$ $11^{1}$. ஆதி கிறிஸ்தவ சபையில் ஸ்திரீகள் புருஷர்களைப்போல அதிக கனம் அடைந்தவர்கள். அப் $1^{14}$ $2^{1}$ ரோ $16^{1}$. அச்சபையில் உதவிக்காரர்களைப்போல, உதவிக்காரிகளும் இருந்தார்கள். 1 தீமோ $3^{11}$. பரி. பவுல் இயேசு உடனே வருவார் என்றும், கிறிஸ்தவர்களுக்குத் துன்பம் வருகிறதென்றும் நம்பி, கலியாணத்தினால் பக்திக்குரிய விஷயத்தில் அநேகருக்கு இடறல் இருக்குமென்று பயந்தான். 1 கொரி 7 அதி. பிற்காலத்தில் எழுதிய நிருபத்தில் விவாகத்தைச் சிறப்பிக்கிறான். எபே $5^{22}$. கொரிந்துபட்டணம் மகா துன்மார்க்கம்நிறைந்த ஊர் ஆனதினால் கிறிஸ்தவ பெண்களின் பேரில் புறமதஸ்தர்கள் பரியாசமாய்ப் பேசாதபடிக்கு ஸ்திரீகள் சபையில் மௌனமாயிருக்கும்படி அவன் அவர்களுக்குப் புத்தி

மதி சொன்னான். 1 கொரி $14^{34}$. கிறிஸ்துவுக்கு முன்பாக எல்லாரும் ஒரே நிலையிலிருக்கிறார்கள் என்பது அவனுடைய அபிப்பிராயம். கலா $3^{28}$.

**ஸ்தேவான்.** Stephen. ஆதி கிறிஸ்தவர்கள் ஏழைகளைக் காப்பாற்றும்படி நியமித்தவர்களில் ஸ்தேவான் ஒருவன். இவர்கள் முதல் உதவிக்காரர்களா யிருந்தார்கள். இவர்களில் ஸ்தேவான் பிரதானமானவன். இவன் வாக்குவல்லவனா யிருந்து அதிக திறமையோடு சுவிசேஷத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்ததினால் யூதர்கள் இவன்பேரில் கோபம் மூண்டவர்களாய் இவனை இரக்கமின்றிக் கல்லெறிந்து கொன்றார்கள். இவனே கிறிஸ்தவ சபையில் முதலாம் இரத்தசாட்சியாக மரித்தான். இவன் தனக்காக ஆலோசனைச் சங்கத்தாருக்குமுன்பாகச் செய்த பிரசங்கமும் மரண சரித்திரமும் அப் 7-ம் அதிகாரத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. இவன் மரிக்கும்போது சவுலாகிய பவுல் அதற்குச் சாட்சியாக இருந்தான். அப் $7^{58}$ $8^{1}$. யூதர்கள்செய்த இந்த உபத்திரவத்தினிமித்தம் கிறிஸ்தவர்களில் அநேகர் எருசலேமிலிருந்து வேறு அநேக ஊர்களுக்குப் போய் அவைகளில் கிறிஸ்தவமார்க்கத்தைப்பற்றி அறிவித்தார்கள். இவ்விதமாய் ஸ்தேவானுடைய மரணத்தின் மூலமாய் இயேசுவின் ராஜ்யத்திற்குப் பலன் உடனே உண்டானது. அப் $11^{19}$ $22^{20}$.

**ஸ்தேவான்.** Stephanas. கொரிந்து பட்டணத்தில் வசித்த ஒரு கிறிஸ்தவன். பரி. பவுல் இவன் குடும்பத்திற்கு ஞானஸ்நானம் கொடுத்தான். இவன் எபேசு பட்டணத்திற்கு வந்து பரி. பவுலுக்கு அதிக உதவி செய்தான். 1 கொரி $1^{16}$ $16^{15}$.

**ஸ்தோத்திர பலி.** Thank-offering. லேவி $7^{12}$ $22^{29}$ 2 நாளா $29^{31}$ சங் $107^{22}$ $116^{17}$ ஆமோ $4^{5}$. **பலி** காண்க.

**ஸ்தோத்திரம்.** Praise. Thanks. லூக் $1^{64}$ 1 கொரி $14^{16}$ $15^{57}$ 2 கொரி $4^{15}$ $9^{11}$ எபே $5^{4}$ பிலி $4^{6}$ வெளி $4^{9}$ $7^{12}$. **துதி** காண்க.

**ஸ்தோயிக்கர்.** Stoics. கிரேக்க தத்துவ சாஸ்திரிகளில் எபிக்கூரரும், ஸ்தோயிக்கரும் பிரதானமானவர்களா யிருந்தார்கள். பரி. பவுல் அத்தேனே பட்டணத்தில் இவர்களுக்கு உபந்நியாசம் செய்தகாலத்துக்கு 350 வருஷங்களுக்குமுன் இந்த ஸ்தோயிக்கர் தத்துவஞானம் ஆரம்பமானது. இதை முதலாவது போதித்த சேனோ (*Zeno*) என்பவன் கிரேக்க பாஷையில் 'ஸ்தோவா' என்னும் மண்டபத்தில் முதலாவது சிஷர்களுக்குப் போதித்ததினாலே, இவர்களுக்கு ஸ்தோயிக்கர் என்னும் பெயர் வழங்கிவந்தது. ஸ்தோயிக்கருடைய போதனையாவது: ஒரு மனுஷன் எப்பொழுதும் புத்திக்கு இணங்கி நடக்கவேண்டும். புத்தியை யடைவதும் அதின்படி தன்னை ஆண்டுகொள்வதும் அவனுடைய கடமை. அவர்கள் சர்வமும் தேவன் என்னும் கொள்கையை அநுசரித்திருந்தார்கள். அவர்கள் சன்மார்க்கத்தைச் சிறப்பித்தும் இரக்கத்தையும், பரிதாபத்தையும் அற்பமாய் எண்ணிவந்தார்கள். உற்சாகத்துடனே சன்மார்க்கத்தை நாடுவது அவர்களுடைய தத்துவத்தின் மேன்மை. இது போதிக்கும் சன்மார்க்கமும், கிறிஸ்தவ சன்மார்க்கமும் சில விஷயங்களில் ஒற்றுமையுடையனவாய் இருந்தாலும் இந்தக் கொள்கையில், நித்திய ஜீவனைக் கொடுக்கும் ஏது இல்லாததினால் இது சீக்கிரத்திலே கீர்த்தி குறைந்து அற்றுப்போயிற்று. அப் $17^{18}$.

**ஸ்நானம்.** Bathing. எபிரெயர்கள் தேக சுத்திக்காக அடிக்கடி ஸ்நானம் செய்கிறது வழக்கம். அவர்கள் ஆசாரத்தின்படி தீட்டானவைகளைத் தொட்டால் ஸ்நானம் செய்வார்கள். பெரும்பாலும் ஸ்நானம் என்பது சர்வாங்க ஸ்நானத்தைக் குறிக்கிறது. கேசேர் பட்டணத்தில், சீமோன் மக்கபேயுவின் அரமனையில், ஸ்நானம் செய்யும் அறைகளும் அவைகளில் பெரிய கல் தொட்டிகளும் கட்டப்பட்டிருந்தன. யாத் $2^{5}$ லேவி $15^{6}$ $16^{28}$ $17^{16}$ எண் $19^{7-19}$ 2 சாமு $11^{2}$ 1 இரா $22^{38}$ எரே $2^{22}$. **அசுத்தம், சேங்கிடாரி** காண்க.

**ஸ்பானியா.** Spain. ஐரோப்பாக்கண்டத்தில் தென்மேற்கிலுள்ள தேசம். அப்போஸ்தலருடைய காலத்தில் இது ரோமை அரசாட்சிக் குட்பட்டிருந்த ஒரு நாடு. இதின் குடிகள் பயிர்த்தொழில் செய்வதல்லாமல், மலைநாடுகளிலுள்ள சுரங்கங்களிலிருந்து வெள்ளி, செம்பு முதலிய உலோகங்களை வெட்டி எடுப்பார்கள். ஸ்பானியாவிலுள்ள தனவான்களும் அரசாங்கத்தார்களும் அக்காலத்து நாகரீகத்தில் நன்றாய்த் தேறினவர்களா யிருந்தார்கள். அவ்விடம் போகும்படி பரி. பவுலுக்கு அதிக வாஞ்சையாயிருந்தது. அவன் போனானோ இல்லையோ என்பது தெரியவில்லை. ரோ $15^{24}$.

## ஷி.

**ஷிபோலேத்.** Shibboleth. **சிபோலேத்** காண்க.

**ஷிமியோன்.** Shimeon. அந்நிய தேசத் தாரை விவாகம் செய்தவர்களில் ஒருவன். எஸ்று $10^{31}$.

## ஷீ.

**ஷீமோன்.** Shimon. 1 நாளா $4^{20}$.

**ஷீலோ.** Shiloh. தமிழ்வேதாகமத்தில் 'சமாதான கர்த்தர்' என்பதற்குப் பதிலாக பக்கத்தில் 'ஷீலோ' என்று எழுதியிருக் கிறது. இந்த வசனம் மேசியாவின் வருகை யைக் குறிக்கிறது. ஆனால் 'ஷீலோ' என் பதின் அர்த்தம் திட்டமாய்ச் சொல்ல முடி யாது. ஒருவேளை 'உடையவர்' என்பது அர்த்தமாம். ஆதி $49^{10}$.

**ஷீன்.** Shin. எபிரெயருடைய எழுத்து அட்டவணையில் இருபத்தோராம் எழுத்து சங் $119^{161}$.

## ஷெ.

**ஷெவோல்.** Sheol. எபிரெய பதமா கிய 'ஷெவோல்' என்பதற்குச் சில வசனங் களில் 'நரகம்' என்று தமிழிலே சொல்லி யிருக்கிறது. உபா $32^{22}$ சங் $9^{17}$. பெரும் பாலும் இதற்குப் 'பாதாளம்' என்று சொல்லி யிருக்கிறது. 2 சாமு $22^{6}$ யோபு $11^{8}$ $26^{6}$ சங் $16^{10}$ $18^{5}$ $86^{13}$ நீதி $5^{5}$ $15^{11}$ ஏசா $5^{14}$ $14^{9}$ எசே $31^{16}$ $32^{27}$ ஆமோ $9^{2}$ யோனு $2^{2}$. எபி ரெயர்கள் அபிப்பிராயத்தின்படி பூமிக்குக் கீழே மரித்தோர்கள் சஞ்சரித்த இடம். இதில் மரித்தோர்கள் நடமாடுகிற வர்களாயிருக்கிறார்களோ அல்லது ஒன்றும் தெரியாமல் மௌன நிலையிலே யிருப்பார் களோ என்பதைக் குறித்து எபிரெயர்கள் தீர்மானமாய்ச் சொல்லுகிறதில்லை. எப்படி யாவது இதில் மரித்தோர்களுக்குத் தண்டனை செய்யுமிடம் இல்லாததினுல், இதற்கு 'நர கம்' அல்ல, 'பாதாளம்' என்று சொல்வது சரிதான். சங் $86^{13}$ $94^{17}$ யோபு $14^{3}$ எசே $32^{27}$. ஆதேஸ், கெகேன்னு காண்க.

## ஷே.

**ஷேபா.** Sheba. சேபா காண்க.

## ஞா.

**ஞாபகக்கறி.** Memorial offering. லேவி $2^{2.9.16}$. பலி காண்க.

**'ஞான இருதயம்.'** A heart of wisdom. யாத் $31^{6}$ $36^{8}$ நீதி $10^{8}$.

**ஞானஸ்நானம்.** Baptism.

**I. பதங்கள்.**

**1. கிரேக்க பழைய ஏற்பாடு.**—'ஞான ஸ்நானம்' 'ஞானஸ்நானம் கொடுத்தல்' என் பவைகளைக் குறிக்கும் கிரேக்கபதங்களின் அர்த்தத்தைத் தெளிவாய் அறியவேண்டுமா ஞல் ஏறக்குறைய கி–மு. 250–ம் வருஷம் எபிரெய பாஷையிலிருந்து கிரேக்கபாஷை யில் மொழிபெயர்க்கப்பட்ட செப்துவகிந்த் (*Septuagint*) என்னும் பழைய ஏற்பாட் டை ஆராய்ச்சி செய்யவேண்டும், ஏனென் ருல் இந்த நூலிலேதான் இந்த கிரேக்கப் பதங்கள் முதலாவது தோன்றுகின்றன.

(i) கிரேக்க பாஷையில் **பப்தைன்** (*Baptein*) என்னும் வினைச்சொல் ஒன்று உண்டு. இந்த வினைச்சொல்லின் பகுதி தான் ஞானஸ்நானத்தைக் குறிக்கும் மற்றப் பதங்களுக்கும் பகுதி. **'பப்தைன்'** என்னும் வினைச்சொல்லுக்கு இரண்டு அர்த்தம் உண்டு. பல வசனங்களில் அது 'தோய்த் தல்' என்று பொருள்படுகிறது. யாத் $12^{22}$ லேவி $4^{6.17}$ $9^{9}$ $14^{6.16.51}$. ஒரு வசனத்தில் அது 'அமிழ்த்துதல்' என்ற அர்த்தத்தில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. யோபு $9^{31}$.

(ii) **'பப்தைன்'** என்னும் வினைச்சொல் லின் பகுதியடியாகப்பிறந்த **'பப்திசைன்'** (*Baptizein*) என்னும் வினைச்சொல் கிரே க்க மொழிபெயர்ப்பிலே நாலுதடவை வரு கிறது.

(*a*) நாகமான் யோர்தான் நதியிலே 'முழு கினான்.' 2 இரா $5^{14}$.

(*b*) யூதீத் 'முழுகினுள்.' யூதித் $12^{17}$.

(*c*) தீர்க்கதரிசி, வெள்ளத்தின் தண்ணீர் ஒருவனை மூழ்கச்செய்கிறதுபோல அநியா யம் தன்னை 'மூழ்கச்' செய்கிறது என்று சொல்லுகிறுன். ஏசா $21^{4}$. [இந்த வாக்கி யம் கிரேக்க மொழிபெயர்ப்பிலேமாத்திரம் தோன்றுகிறது.]

(*d*) இறந்துபோனவனைத் தொட்டுத் தீட் டுப்பட்டவன் தன்னைச் சுத்திகரிக்கும்படி 'முழுக' வேண்டும். சீராகு $34^{25}$.

மேலும் கிரேக்க சரித்திர சாஸ்திரி ஒரு வன் கடலில் அமிழ்ந்துபோகிற கப்பல் களைப்பற்றிப் பேசும்போது, அவைகள் தண்ணீரில் 'முழுகிப்போகிறது' என்று குறிக்கும்படி **'பப்திசைன்'** என்னும் பதத் தை எழுதுகிறுன். இந்த வசனங்களைப் பார்க்கும்பொழுது **'பப்திசைன்'** என்னும் பதத்திற்கு 'முழுகுதல்' என்பது அர்த்தம் என்று சொல்லலாம். ஆனுல் லூக்கா சுவி சேஷகன் யூதர்கள் போஜனம் பண்ணும் முன் தங்கள் கைகால்களைக் கழுவுகிறதைக் குறித்துப் பேசும்போது 'கழுவுதல்' என் னும் அர்த்தத்திலே **'பப்திசைன்'** என்னும் பதத்தை எழுதியிருக்கிறுன். லூக் $11^{38}$ யோவா $13^{10}$ காண்க.

(iii) புதிய ஏற்பாட்டில் அடிக்கடி வருகிறதும் ஞானஸ்நானத்தைக் குறிப்பதுமான "பப்திஸ்மா' (*Baptisma*) அல்லது பப்திஸ்மோஸ் (*Baptismos*) என்னும் பெயர்ச் சொற்கள் கிரேக்க பழைய ஏற்பாட்டில் இல்லே.

**2. புதிய ஏற்பாடு.**

(i) புதிய ஏற்பாட்டிலே 'பப்தைன்' (*Baptein*) என்னும் பதம் 'தோய்த்தல்' என்ற அர்த்தத்தில் மூன்றுதடவை வருகிறது.

'விரலின் நுனியைத் தண்ணீரில் தோய்த்து.' லூக் $16^{24}$.

'இந்தத் துணிக்கையைத் தோய்த்து' யோவா $13^{26}$.

'இரத்தத்தில் தோய்க்கப்பட்ட வஸ்திரம்' வெளி $19^{13}$.

(ii) 'பப்திசைன்' (*Baptizein*) என்னும் பதம் புதிய ஏற்பாட்டில் அடிக்கடி வருகிறது.

(*a*) லூக் $11^{38}$-ல் போஜனம் பண்ணுகிறதற்குமுன் 'கழுவுகிறதை'க் குறிக்கிற இந்தப் பதம் ஆசாரத்தின்படி 'சுத்திகரித்தல்' அல்லது 'கைகழுவுதலே'க் குறிக்கிறது. (யோவா $13^{10}$ காண்க). மாற் $7^{4}$-ல் இப்பதத்துக்கு ஸ்நானம் பண்ணுதல் என்பது அர்த்தம் என்று வாசிக்கிறோம். ஆனால் பிரதானமான கையெழுத்துப் பிரதிகளே நாம் விசாரித்தால் இந்த வசனத்தில் 'பப்திசைன்' என்னும் பதம் அல்ல 'தெளித்தல்' என்று அர்த்தங் கொண்ட 'ரன்திசைன்' என்னும் பதம் காணப்படுகிறது.

(*b*) இரண்டு வசனங்களில் இயேசு தாம் படப்போகிற பாடுகளேக் குறிக்க இப்பதத்தை உவமையாகச் சொல்லுகிறார். மாற் $10^{38.39}$ லூக் $12^{50}$.

(*c*) இந்தப்பதம் யூதஆசார சுத்திகரிப்பைக் குறித்ததினால், புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் ஆவிக்குரிய சுத்திகரிப்புக்கு அடையாளமான 'முழுகுதலே'க் குறிக்கும்படி இப்பதத்தை வழங்கினார்கள். இவ்விதமாகவே யோவான் யோர்தான் நதியண்டை சீஷர்களுக்கு 'ஞானஸ்நானம் கொடுத்தலேயும்,' கிறிஸ்தவ சபையில் பிரவேசிக்கிறவர்களுக்கு 'ஞானஸ்நானம் கொடுத்தலேயும்' குறிக்கும்படி இந்த வினைச்சொல் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. மத் $3^{11}$ மாற் $1^{4}$ யோவா $1^{25}$ $3^{22.26}$ $4^{1}$ 1 கொரி $1^{14.16}$.

(iii) பெயர்ச்சொற்கள். புதிய ஏற்பாட்டில் 'பப்திஸ்மா' (*Baptisma*) 'பப்திஸ்மோஸ்' (*Baptismos*) என்னும் இரண்டு பதங்கள் உண்டு.

(*a*) இவைகளில் 'பப்திஸ்மோஸ்' என்னும் பதம் மூன்று வசனங்களில் மாத்திரம் வருகிறது.

மாற் $7^{4.8}$-ல் செம்பு முதலியவற்றை ஆசாரத்தின்படி 'கழுவுதலே'க் குறிக்கும்.

எபி $9^{10}$-ல் நியாயப்பிரமாணத்தில் கட்டளையிட்ட 'ஸ்நானங்களே'க் குறிக்கிறது.

எபி $6^{2}$ 'ஸ்நானங்களுக்கடுத்த உபதேசம்.' ஒருவேளே இந்த 'ஸ்நானங்கள்' நியாயப்பிரமாணத்திலுள்ள ஸ்நானங்களேயல்லாமல் கிறிஸ்தவ ஞானஸ்நானத்தையும் குறிக்கும்.

(*b*) புதிய ஏற்பாட்டிலும் திருச்சபைப் பிதாக்கள் எழுதின நூல்களிலும் 'பப்திஸ்மா' என்னும் பதம் அதிகமாய் வருகிறது.

யோவான்ஸ்நானன் கொடுத்த 'ஸ்நானம்' அல்லது 'ஞானஸ்நானம்.' மத் $3^{7}$ $21^{25}$ மாற் $11^{30}$ லூக் $7^{29}$ $20^{4}$ அப் $1^{21}$ $10^{37}$ $18^{25}$.

மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானம். மாற் $1^{4}$ லூக் $3^{6}$ அப் $13^{24}$ $19^{4}$.

கிறிஸ்தவசபையில்பிரவேசிக்கிறவர்களுக்குக் கொடுத்த ஞானஸ்நானம். ரோ $6^{4}$ 1 கொரி $12^{13}$ கொலோ $2^{12}$ எபே $4^{5}$ 1 பேது $3^{21}$.

யோவான்ஸ்நானனிடத்துக்குப் போய் இந்த ஞானஸ்நானத்தைப் பெற்றுக்கொண்ட கிரேக்கர்கள் இந்தச் சடங்குக்கு 'பப்திஸ்மா' என்னும் பதத்தை வழங்கிவந்ததினால் கிறிஸ்தவர்களும் அந்தச் சடங்குக்கு 'ஞானஸ்நானம்' அல்லது 'பப்திஸ்மா' என்று பெயர்வழங்கிவந்தார்கள் என நினைக்கிறதற்கு இடமுண்டு.

இயேசு உலகத்திலிருந்தகாலத்து யூதர்கள் புறமதங்களிலிருந்து தங்கள் மதத்தில் பிரவேசித்தவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்துவந்தார்களோ இல்லேயோ என்பதைப் பற்றிச் சந்தேகம் உண்டு. அக்காலத்தில் அவர்கள் அப்படிச் செய்யாவிட்டாலும் அதற்குச் சில வருஷத்துக்குப் பிற்பாடு அதை நடத்த ஆரம்பித்தார்கள்.

இது எப்படியானாலும் முதலில் இப்பதம் யூதர்கள் தங்கள் சடங்காசாரத்தின்படி செய்துவந்த சுத்திகரிப்பை மட்டுமே குறித்தது.

யோவான் கொடுத்த இந்த ஸ்நானம் யூதர்களுடைய ஆசாரத்தின்படி செய்த சுத்திகரிப்பைக் குறிக்காமல், அதைப் பெற்றுக்கொண்டவன் தான்செய்த பாவத்தைப்பற்றி மனஸ்தாபப்பட்டு பாவமன்னிப்பாகிய சுத்திகரிப்பைப் பெறும்படி காத்துக்கொண்டிருப்பதைக் குறிக்கும்.

மேலும் யோவான் தான் கொடுத்த ஸ்நானம் குறைவுள்ளது என்று அறிந்து தனது

சீஷர்கள் தனக்குப் பின்வருகிற மேசியாவின் மூலமாய் ஆவிக்குரிய ஞானஸ்நானம் பெற்றுப் பூரண சுத்தத்தை அடையவேண்டுமென்று போதித்தான். மாற் 1⁸.

II. இயேசு அருளின போதனை.–இயேசு எல்லா நீதியையும் நிறைவேற்றுவது தமக்குத் தகுதியாயிருக்கிறது என்று சொல்லி யோவான்ஸ்நானனிடத்தில் ஞானஸ்நானம் பெற்றார். மத் 3¹⁵ மாற் 1⁹ யோவா 1³².

இயேசு தாமே ஞானஸ்நானம் கொடுக்கவில்லை. அவருடைய சீஷர்கள் ஞானஸ்நானம் கொடுத்தார்கள். அவர்கள் யாருக்கு, எந்த நோக்கத்துடன், எவ்விதமாய் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் என்பதைப்பற்றி நமக்கு விவரம் தெரியாது. ஆனால் அவர்கள் அவருடைய உத்தரவில்லாமல் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் என்று நினைக்க முடியாது. யோவா 4².

பன்னிருவரையும் எழுபதுபேரையும் அனுப்பும்போது இயேசு அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்படி கட்டளையிடவில்லை. மத் 10⁵ லூக் 10¹.

கிறிஸ்தவ ஞானஸ்நானம் ஆவிக்குரியது. யோவா. 7³⁹. அவர் போனபின்பு இந்த ஞானஸ்நானம் வரும். அப் 1⁴.

III. கிறிஸ்தவ சபை. — பரிசுத்த ஆவி கிறிஸ்தவ சபையின்மேல் இறங்கினபின்பு கிறிஸ்தவர்கள் ஞானஸ்நானச் சடங்கை நடத்த ஆரம்பித்தார்கள். இந்தச் சடங்கை நடத்துகிறதற்கு இயேசு கட்டளை கொடுத்தார் என்று நினைக்க இடம் உண்டு. மத் 28¹⁹.

அடியிற்கண்ட வசனங்களில் இயேசுவின் பெயர்மாத்திரம் வருகிறபடியினால் ஆதி கிறிஸ்தவர்கள் ஞானஸ்நானம் கொடுக்கும்போது திரியேக தேவனுடைய நாமத்தையல்ல இயேசுவின் நாமத்தைமாத்திரம் சொல்லி ஞானஸ்நானம் கொடுத்தார்களென்று சில சாஸ்திரிகள் நினைக்கிறார்கள். அப் 2³⁸ 8¹⁵ 10⁴⁸ 19⁵ 1 கொரி 1¹³·¹⁵. இதற்கு மாறுத்தரமாக வேறு சிலர் இவ்வசனங்களில் ஞானஸ்நானத்தைப்பற்றி எழுதினவர்கள் அதைக் கொடுக்கும் முறையை விவரமாய்ச் சொல்லாமல் சுருக்கமாய் எழுதினபடியால் இயேசுவின் நாமத்தினாலே திரியேக தேவனின் நாமம் குறிக்கப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறார்கள்.

இது எப்படியானாலும், மத் 28¹⁹-ம் வசனத்தைப் பார்க்கும்போதும் திருச்சபைப் பிதாக்கள் எழுதின நூல்களை விசாரிக்கும்போதும் திரியேக தேவனுடைய நாமத்தினால் ஞானஸ்நானம் கொடுப்பது பூர்வகாலத்துத் திருச்சபை வழக்கம் என்று அறிந்துகொள்ளுகிறோம்.

IV. ஞானஸ்நானம் அவசியம்.—கிறிஸ்தவ சபையிலே பிரவேசிக்கிறவர்கள் ஞானஸ்நானம் பெறுவது அவசியம் என்பது ஆதி கிறிஸ்தவர்களுடைய அபிப்பிராயம் 1 கொரி 12¹³ கலா 3²⁷ அப் 2³⁷ 8¹² 9¹⁸ 10⁴⁸ 11¹⁵ 22¹⁶.

V. பரி. பவுல்.—பரி. பவுல் வழக்கமாய் ஞானஸ்நானம் கொடாவிட்டாலும் அவசியமான சமயங்களில் அந்தச் சடங்கை நடத்தினான். அவன் எழுதிய நிருபங்களில் அது அவசியம் என்பதைத் தான் உணர்ந்ததாகச் சொல்லுகிறான். அப் 16¹⁵ 1 கொரி 1¹⁴.

VI. ஞானஸ்நானம் கொடுக்கும் முறை.—புதிய ஏற்பாட்டை நாம் எவ்வளவு அதிக கவனமாய் ஆராய்ந்து பார்த்தாலும் அதிலே ஞானஸ்நானங்கொடுக்கும் முறையைப்பற்றி விபரமாய் ஒன்றும் சொல்லவில்லை. அப்போஸ்தலர் செய்த பிரசங்கத்தைக் கேட்டவர்களில், ஒருவன் தன்னிலுள்ள தீமையைக் குறித்துத் துக்கப்பட்டு மனந்திரும்பி இயேசுவின்மேல் பூரண பக்தி வைத்தால் அவன் ஞானஸ்நானத்தைப் பெற முடியும் என்று அப்போஸ்தலர் நடபடிகளில் அடிக்கடி வாசிப்பதும் அல்லாமல், அதின் முறையைப் பற்றி இன்னும் சில விஷயங்களையும் அறிந்துகொள்ளுகிறோம்.

யோவான்ஸ்நானன் காலமுதல் தண்ணீரினால் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. மேலும் உஷ்ணமான அந்தத் தேசங்களில் ஞானஸ்நானம் பெறப்போகிறவன் சாதாரணமாய்த் தண்ணீரில் முழுகி அதைப் பெறுவதுதான் அக்காலத்து வழக்கம் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. ஆனால் பரிசுத்த ஆவியின் அருள் ஞானஸ்நானம் பெறுகிறவன்மேல் இறங்கி வருகிறதைக் காட்டும்படி, போதகன் ஞானஸ்நானம்பெற விரும்புகிறவனுடைய சிரசின்மேல் தண்ணீர் தெளிக்கும் வழக்கம் திருச்சபையில் சீக்கிரம் ஆரம்பித்தது.

இரண்டாம் நூற்றாண்டுமுதல் கிறிஸ்தவ சபையில் தண்ணீர் தெளித்தலும், தண்ணீரில் முழுகுவதுமாகிய இந்த இரண்டு முறைகளும் அனுசரிக்கப்பட்டு வந்தது என்று நினைக்கிறதற்கு அத்தாட்சியுண்டு.

ஞானஸ்நானம் கொடுக்கும் விதத்தைப் பற்றித் திருச்சபையிலே பல நூற்றாண்டுகளாகப் பிரிவினையிருந்தது என்று இந்த வேத அகராதியை வாசிக்கிற யாவருக்கும் நன்றாய்த் தெரியும். இத்தனை வருஷக்காலமாக இருக்கும் பிரிவினையை நம்மாலே தீர்க்க

முடியும் என்று நாம் நம்புகிறதில்லை. ஆனால் இரண்டு மூன்று விஷயங்களைச் சொல்லத் துணிகிறோம்.

(i) ஞானஸ்நானம் முதலாவது உஷ்ண தேசங்களில் கொடுக்கப்பட்டது. அத்தேசங்களில் தண்ணீரில் மூழ்குகிறது அசௌக்கியத்துக்குக் காரணம் அல்ல. குளிரான தேசங்களிலோ தண்ணீரில் இறங்குவது அநேகருடைய சுகத்துக்கு அபாயகரமானது. அப்படியிருக்க உஷ்ணதேசங்களுக்குத் தகுதியான முறை வடபாகங்களிலுள்ள குளிரான தேசங்களுக்குத் தகுதியல்லாததினாலே, இருபாகத்தாரும் ஒரேமுறையைக் கட்டாயமாய் அனுசரிப்பது எப்படி?

(ii) ஞானஸ்நானம்பெற விரும்புகிறவன் முழுகி அதைப் பெறுவது அநேக சமயங்களில் கூடாதகாரியம். பிலிப்பிப் பட்டணத்திலுள்ள காவற்காரனுடைய வீட்டில் பவுல் திடீரென ஞானஸ்நானம் கொடுக்க நேர்ந்த போது அந்த வீட்டார் யாவரும் முழுகுகிறதற்கு அங்கே தண்ணீர் இருந்திருக்கும் என்று சொல்லத் துணிவது சற்று அரிதே. அப்படியே எருசலேம் பட்டணத்திற்குச் சமீபமாய் ஆறு இல்லாததினாலும், அந்தப் பட்டணத்திலே பெரிய ஏரிகள் இல்லாததினாலும், சீலோவாம் பெதஸ்தா என்னும் குளங்கள் சிறியவையானதினாலும், ஒரே நாளிலே 3,000 பேர் முழுகி ஞானஸ்நானம் பெறுவது ஆச்சரியமே.

(iii) ஞானஸ்நானம் பெறும்போது தண்ணீரில் இறங்கி முழுகிப் பெறுகிறதுதான் சரி, அல்லது தண்ணீர் தெளிக்கிறதுதான் சரி என்று புதிய ஏற்பாட்டில் கட்டளை இல்லை, ஏனென்றால் புதிய ஏற்பாட்டிலே இந்தச் சடங்கை ஆசரிக்கும் விதத்தைப்பற்றியல்ல, இதின் ஞானார்த்தத்தைக் குறித்தேவிசேஷமாய்ச்சொல்லியிருக்கிறது.

ஆதலால் ஞானஸ்நானம் கொடுக்கும் முறை அல்ல, அதினால் குறிக்கப்பட்ட ஆசீர்வாதமே முக்கியம் என்று சொல்லத் துணிவோம்.

VII. **ஞானஸ்நானத்தினால் குறிக்கப்பட்ட நன்மைகள்.** — தாங்கள் செய்கிறது இன்னதென்று நன்றாய்த் தெரிந்துகொண்டு பூரண அறிவோடு ஞானஸ்நானம் பெற்றவர்கள் பரிசுத்த ஆவியின் உதவியினால் அடையும் நாலு நன்மைகளுக்கு ஞானஸ்நானம் அடையாளமாயிருக்கிறது என்று புதிய ஏற்பாட்டிலே வாசிக்கிறோம்.

(*a*) பாவ மன்னிப்பு. அப் $2^{38}$ 1 கொரி $6^{11}$ எபி $10^{22}$ 1 பேது $3^{21}$.

(*b*) பாவத்துக்கு மரித்து கிறிஸ்துவுக்குள் உயிர்த்தெழுதல் அதாவது புதிய ஜீவனில் பிரவேசித்தல்.

இதற்கு வேதசாஸ்திரிகள் 'புது ஜென்மம்' என்று பெயர் வழங்குகிறார்கள். இந்தப் புது ஜென்மம் ஞானஸ்நான சடங்கினால் அல்ல பரிசுத்த ஆவியின் அருளினாலே உண்டாகிறது என்று நாம் எப்போதும் நினைக்க வேண்டும். உண்மையோடும் நம்பிக்கையோடும் பக்தியோடும் ஞானஸ்நானம் பெற்றவனுக்குப் புது ஜென்மம் எப்பொழுதும் உண்டாகிறது. திருச்சபையின் ஆதிபிதாக்களுடைய அபிப்பிராயமும் இதற்கு இசைந்திருக்கிறது. எப்படியெனில் கிறிஸ்தவ உபதேசத்தைப் பெற்றுக்கொண்டு இயேசுவின் மேல் பக்திவைத்து ஞானஸ்நானம் பெறுமுன் இயேசுகிறிஸ்துவுக்காக இரத்தசாட்சியாய் மரித்தவனும், இயேசுவுக்காக இரத்த சாட்சியாய் மரிக்க மனமுள்ளவனும் இந்த நன்மையை அனுபவிப்பார்களென்று அவர்கள் போதித்துவந்தார்கள். (Ambros. de obitu Valent Consol, 52 Tertul. de poeni. vi). ரோ $6^{2}$ கொலோ $2^{12}$.

(*c*) கிறிஸ்தவர்கள் யாவரும் ஏகசபையாகிய கிறிஸ்துவின் சரீரத்தில் ஐக்கியப்படுதல், 1 கொரி $12^{13}$ கலா $3^{27}$ எபே $4^{5}$.

(*d*) இயேசு அருளும் சுத்திகரிப்பு. யோவா $3^{5}$ எபே $5^{26}$ தீத் $3^{5}$.

VIII. **சிறுவருக்குக் கொடுக்கும் ஞானஸ்நானம்.**—சிறுபிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பதைப்பற்றிப் புதிய ஏற்பாட்டில் ஒன்றும் சொல்லியிராததினாலே சிறுவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பது நியாயமல்ல என்று வேதசாஸ்திரிகளில் சிலர் சொல்லுகிறார்கள்.

(i) சிறுவர் ஞானஸ்நானத்தைப் பற்றிப் புதிய ஏற்பாட்டிலே ஒன்றும் சொல்லப்படவில்லை என்பது நாம் ஒத்துக்கொள்ளவேண்டியதே; ஆனால் பூர்வகாலமுதல் திருச்சபையில் சிறுவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும் வழக்கம் இருந்தது என்பதற்கு அத்தாட்சிகள் உண்டு. இரண்டாம் நூற்றாண்டிலே அந்த வழக்கம் இருந்ததென்று திருச்சபைச் சரித்திரத்தினால் அறிகிறோம். சிறுவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பது தப்பிதமானால், அப்போஸ்தலர் அருளிய போதகத்தைக் கேட்டிருந்தவர்கள் இப்படிச் செய்வார்களா?

(ii) ஆதி கிறிஸ்தவர்கள் சிறுபிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்கள் என்று புதிய ஏற்பாடு சொல்லாததினால், அவர்கள் அந்த வழக்கத்தை அனுசரிக்கவில்லை என்று

சொல்வது நியாயம் அல்ல. ஏனென்றால், புதிய ஏற்பாடு ஆதி கிறிஸ்தவ சபையின் ஆசாரநூல் அல்ல. அது மூப்பர் நியமிப்பு, ஐக்கிய விருந்து, இராப்போஜனம் பரிமாறல் முதலிய ஆதி கிறிஸ்தவ ஆசாரங்களைப்பற்றி ஒன்றும் விபரமாய் எப்படிச் சொல்லவில்லையோ அப்படியே ஞானஸ்நானத்தைப் பற்றியும் விபரமாய்ச் சொல்லவில்லை.

(iii) யூதர்கள் தங்கள் குழந்தைகளுக்கு விருத்தசேதனம்பண்ணி அந்தப் பிள்ளைகள் கைக்குழந்தைகளாயிருக்கும்போதே தங்கள் மார்க்க சிலாக்கியங்களுக்கு உட்படச் செய்தார்கள். இப்படியே யூதமார்க்கத்திலிருந்து கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்த ஆதி கிறிஸ்தவர்களும் தாங்கள் பெற்ற ஞானஸ்நானத்தைத் தங்கள் பிள்ளைகளுங்கூடப் பெறவேண்டும் என்று நினைத்திருப்பார்கள்.

(iv) கிரேக்கர் ரோமர் முதலியவர்கள் மார்க்க விஷயங்களில் பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் வித்தியாசம் பாராட்டவில்லை. அப்படியே அவர்கள் அந்நிய மார்க்கத்திலிருந்து கிறிஸ்துமதத்துக்கு வந்தபோது தகப்பனுக்குக் கொடுக்கப்பட்ட ஞானஸ்நானம் பிள்ளைக்கும் கொடுக்கப்படக்கூடும் என்று அபிப்பிராயங் கொண்டிருப்பார்கள். அப்படிச் செய்வது கூடாதகாரியம்; ஆனால், அதைப் பற்றித் தெளிவான கட்டளையை எதிர்பார்த்திருப்பார்கள். புதிய ஏற்பாட்டில் அதைப் பற்றி ஒன்றும் சொல்லாததினால் புதிய ஏற்பாடு எழுதியகாலத்தில் சிறுபிள்ளைகளுக்கு ஞானஸ்நானம்கொடுப்பதைக்குறித்து ஆக்ஷேபனை யிருந்ததில்லை என்று நாம் அனுமானிக்கலாம். மேலும் கிறிஸ்தவர்கள் எல்லாரும் இந்த விஷயத்திலும் இதர விஷயங்களிலும் ஒரே ஆசாரத்தை அனுசரித்து வந்தார்கள் என்று நாம் நினைக்கக்கூடாது. திரியேக தேவன், தேவவாக்கு முதலிய கொள்கைகளைக் குறித்து ஆதிமுதல் திருச்சபையில் எப்படி அபிப்பிராய பேதங்களிருந்ததோ, அப்படியே இந்த விஷயத்தைக் குறித்தும் பேதம் இல்லாதிருந்தால் அது ஆச்சரியமே. திருச்சபையின் சரித்திரத்தில் நாம் விசாரித்தால் அந்தச் சபையில் ஆசாரம் போதகம் முதலிய விஷயங்களில் அபிப்பிராய பேதம் எப்பொழுதும் இருந்ததென்பதை நாம் அறிந்துகொள்வோம். பிந்தின நூற்றாண்டுகளில் திருச்சபை இவைகளைப்பற்றி வெவ்வேறான அபிப்பிராயங்களைக் கொள்வது கண்டிக்க வேண்டிய பாவம் என்று தீர்மானித்ததினால் பல நூற்றாண்டுகளாக திருச்சபையில் உண்டான பிரிவினைகளுக்கும், கொடூரமான உபத்திரவங்களுக்கும் இடம் உண்டாயிற்று.

(v) கொர்நேலியு ஞானஸ்நானம் பெற்றபோது அவனுடைய 'உறவின்முறையாரும்' விசேஷித்த சிநேகிதரும் ஞானஸ்நானம் பெற்றார்களென்றும் (அப் $10^{24.48}$); லீதியாள் ஞானஸ்நானம் பெற்றபோது அவளுடைய வீட்டாரும் ஞானஸ்நானம் பெற்றார்களென்றும் (அப் $16^{15}$); பிலிப்பிப் பட்டணத்து சிறைச்சாலைக்காரன் ஞானஸ்நானம் பெற்றபோது அவனுடைய வீட்டிலிருந்த அனைவரும் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப் $16^{33}$) என்றும் வாசிக்கிறோம். இந்த மூன்று வகுப்பாருக்குள்ளும் சிறுபிள்ளைகள் இல்லை என்று நாம் சொல்லமுடியுமா? இவ்வசனங்களில் கண்டிருக்கிற கிரேக்க பதங்கள் பெரியவர்களையும், சிறியவர்களையும், வேலைக்காரரையும், அடிமைகளையும் பொதுவாய்க் குறிக்கும்.

இதெல்லாம் பார்த்துப் புதிய ஏற்பாட்டை ஆராய்ச்சி செய்யும்போது ஆதி கிறிஸ்தவர்கள் குழைந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்துவந்தார்கள் என்று தெளிவாய்ச்சொல்லியிராவிட்டாலும், அவர்கள் சிறுவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கவே இல்லை என்று சொல்வதற்குப் பூரணமான நியாயம் இல்லை என்று தீர்மானித்து இரண்டாம் நூற்றாண்டு முதல் சிறுபிள்ளைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்துவந்த கிறிஸ்தவர்கள் புதிய ஏற்பாட்டுப் போதனைகளை மீறவில்லையென்றே நாம் சொல்லவேண்டியது.

**IX. ஞானஸ்நானத்தில் மூன்று பாகத்தார்.**—கிறிஸ்தவ சபையில் பிரவேசிக்கிறதற்கு ஏற்படுத்தப்பட்ட சடங்காகிய ஞானஸ்நானத்தில் மூன்று பாகத்தார் சம்பந்தப்படுகிறார்கள்.

(i) ஞானஸ்நானம் பெறுகிறவன் இயேசுவின் அருளினால் அதைப் பெற்றுக்கொள்வான்.

(ii) கிறிஸ்தவ சபையார் ஞானஸ்நானம் பெறுகிறவனைத் தங்கள் சபையிலே ஏற்றுக்கொண்டு இவன் கிறிஸ்தவனானதற்குச் சாட்சிகளாயிருக்கிறார்கள்.

(iii) சபைத்தலைவராகிய இயேசுவோ ஆவிக்குரியவிதமாய் இவனை ஏற்றுக்கொண்டு, இவனைச் சுத்திகரித்து, இவன்மேல் பரிசுத்த ஆவியின் கிருபை இறங்கச்செய்வார். இவனை ஏற்றுக்கொள்ளுகிறதற்கு இந்தச் சடங்கு அடையாளமே.

**X. மரித்தவர்களுக்காகப் பெறும் ஞானஸ்நானம்.**—1 கொரி $15^{29}$ Those who are baptized for the dead. இந்த வசனத்துக்கு வேதசாஸ்திரிகள் பலவித வியாக்கியானம் எழுதியிருக்கிறார்கள்.

தெர்த்துல்லியான் (Tertullian) காலத்தில் (கி-பி. 150–240) ஞானஸ்நானம் பெருமல் மரித்துப்போனவர்களுக்குப் பதிலாக சில கிறிஸ்தவர்கள் ஞானஸ்நானம் பெற்ருர்கள் என்பது நிச்சயமாய்த் தெரியும். தெர்த்துல்லியான் காலத்துக்கு முன்னே அந்த முறை அனுசரிக்கப்பட்டுவந்ததோ இல்லேயோ என்பது தெரியாது. அனுசரிக்கப்பட்டிருந்தால் பரி. பவுல் அதற்கு அனுமதி கொடுக்காவிட்டாலும், இந்த வசனத்தில் அவ்வித ஞானஸ்நானம் பெற்றவர்களேக் குறித்து எழுதிக்கொண்டிருக்கிருன். இம்முறை அனுசரிக்கப் படாதிருந்தால், இவ்வசனம் எதைக் குறிக்கிறதென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது.

**ஞானதிருஷ்டி.** Divination. ஆதி $44^{5.15}$ மாற் $14^{65}$ லூக் $22^{64}$ அப் $10^{10}$ $11^{5}$ $22^{17}$.

**ஞானதிருஷ்டிக்காரன்.** Seer. எபிரெய பாஷையில் இரண்டு எபிரெய பதங்களுக்குத் தமிழிலே ஞானதிருஷ்டிக்காரன் என்று சொல்லியிருக்கிறது.

(1) *Chozeh.* 2 சாமு $24^{11}$ 2 இரா $17^{13}$ 2 நாளா $9^{29}$ $29^{30}$ ஏசா $29^{10}$.

(2) *Roeh.* 1 சாமு $9^{9}$ 2 சாமு $15^{27}$ 1 நாளா $9^{22}$ $26^{28}$ 2 நாளா $16^{7}$ ஏசா $30^{10}$.

இந்த இரண்டு பதங்களுக்கும் வித்தியாசம் சொல்வது அரிது. இரண்டும் தரிசனத்தில் பார்க்கிறவனேக் குறிக்கின்றன. தீர்க்கதரிசிகளுக்கு *Roeh* என்பது பூர்வ காலத்துப் பெயர். **சூனியவித்தை காண்க.**

**ஞானமற்றவர்.** Fools. எபே $5^{15}$.

**ஞானம், ஞானுகமங்கள்.** Wisdom Literature. பழைய ஏற்பாட்டில் நீதிமொழிகள், யோபு, உன்னதப்பாட்டு, பிரசங்கி என்னும் நாலு புஸ்தகங்களும், தள்ளுபடி ஆகமத்தில் 'சீராக்குவின் மகனுகிய இயேசுவின் ஞானம்' 'சாலொமோனின் ஞானம்' என்னும் இரண்டு புஸ்தகங்களும், யூதர்கள் வழங்கிவந்த நீதிநூல்கள். இந்த நூல்களில் முதியோர்கள் உரைத்த ஞானேபதேசம் அநேகம் இருந்தாலும், இப்போதிருக்கிற நூல்கள் ஏறக்குறைய கி–மு. 350–150 வருஷங்களில் எழுதப்பட்டதென்பது எபிரெய கிரேக்க பாஷைகளில் தேறினவர்களுடைய அபிப்பிராயம். இந்த நீதிநூல்களில் எபிரெயர்கள் அடைந்த உத்தம ஞானம் சொல்லியிருக்கிறது. இவைகளில் சொன்ன கடவுளின் நீதி, நியாயம், நியாயப்பிரமாணம், சன்மார்க்கம் முதலானவைகளேப் பற்றி ஞானிகள் தீர யோசித்துத் தாங்கள் கற்றுக்கொண்ட போதகத்தை யாவரும் அறிந்துகொள்ளும்படி பொழிப்புரையாய்ச் சொல்லுகிருர்கள்.

சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்படு முன் எபிரெயர்களில் அநேகர் ஞானத்தில் சிறந்தவர்களானதினுல் நீதிநூல்களே எழுதினவர்கள் தங்களுக்கு முன்னிருந்தவர்கள் சொன்ன புத்தியைக் கற்றுக்கொண்டு பிரதானமான ஞானேபதேசத்தில் தேர்ச்சியடைந்தார்கள் என்று இவைகளில் தெளிவாய்த் தோன்றுகிறது. ஆதலால் இந்த ஆகமங்களின் உற்பத்தியை அறியவேண்டுமானுல் முற்காலத்திலுள்ள எபிரெயர்களுக்குப் போதிக்கப்பட்ட ஞானத்தையும் அதைப் போதித்த ஞானிகளேயும்பற்றி விசாரிக்க வேண்டும்.

1. **முதியோரின் ஞானம்.**

சிறையிருப்புக்கு முந்தி எபிரெயர்கள் ஒருவனுக்கு விசேஷித்த திறமையும், சாமர்த்தியமும் இருந்தால் அது கடவுள் அவனுக்கு அருளின விசேஷித்த ஈவு என்று எண்ணி, அதற்கு 'ஞானம்' என்று அர்த்தங்கொள்ளும் எபிரெய பதமாகிய *Cochema* என்று பெயர் சொன்னுர்கள். தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் *Cochema* என்னும் இந்தப் பதத்திற்கு பலதடவை 'யுத்தி,' 'புத்தி' என்று எழுதியிருக்கிருர்கள். எபிரெயர்களோ 'யுத்தி,' 'புத்தி' என்பவைகளின் வித்தியாசம் தெரியாமல் கடவுள் அருளின எல்லாத் திறமைகளுக்கும் 'ஞானம்' என்று சொன்னுர்கள். உதாரணமாக, அவர்கள் அபிப்பிராயத்தின்படி இந்த ஈவு கிழக்குத் தேசத்தாருக்கும், எகிப்தியர்களுக்கும், சிசெராவின் தாயாருக்கும், தீருபட்டணத்தாருக்கு மிருந்தது (ஆதி $41^{8}$ நியா $5^{29}$ 1 இரா $4^{30}$ எரே $10^{7}$ எசே $27^{8}$). இந்த 'ஞானம்' ராஜாக்களுக்கும், ஞானிகளுக்கும், பெரியவர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் இருக்கலாம் (உபா $16^{19}$ 2 சாமு $14^{1}$ $20^{22}$ 1 இரா $10^{23}$ யோபு $32^{9}$). இந்த 'ஞானம்' விசேஷமாய் முதியோர்களுக்கு அருளப்பட்டது (உபா $1^{15}$ யோபு $12^{12}$ $32^{7}$). ஆதலால் எபிரெயர்கள் சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்படு முன் அவர்களுடைய முதியோர்களில் 'ஞானிகள்' என்னும் பட்டப்பெயர்கொண்ட சிலர் இருந்தார்கள் என்று தெரியவருகிறது (பிர $9^{17}$ எரே $18^{18}$).

2. **இந்த ஞானத்தின் முறைகள்.**

முதியோர்கள் அடைந்த 'ஞானம்' பலவிதமாயிருந்தது. வெண்கல வேலையில்

தேறின சித்திரக்காரனுக்கும், ராஜாங்கவிஷயத்தில் திறமையுடைய ராஜாவுக்கும், வியாபாரவிஷயத்தில் வருமானம் அடைகிற கெட்டிக்காரனை வியாபாரிக்கும், விவேகமாய் நடந்துகொள்ளுகிறவர்களுக்கும், யுத்தகாலத்தில் புத்தியோடு நடக்கிற சேனாபதிகளுக்கும் 'ஞானம்' உண்டு (உபா $4^{6}$ 2 சாமு $14^{2}$ $20^{16}$ 1 இரா $2^{6}$ $3^{16}$ $5^{12}$ $7^{14}$ ஏசா $10^{13}$ எசே $28^{4-7}$). கடவுள் ஞானத்தினால் இவ்வுலகத்தைப் படைத்தார் என்று எரேமியா சொல்லுகிறான் (எரே $10^{12}$). ஆனால் சீக்கிரத்திலே இந்த விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்கிறவர்கள் சன்மார்க்கத்திற்கும், தெய்வ வணக்கத்திற்கும் ஏதுவான புத்திக்கு 'ஞானம்' என்கிற விசேஷித்த பெயரைச் சொன்னார்கள். தீமையை வெறுத்து, நன்மையை விரும்பி, கடவுளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதே 'ஞானம்' 'இதோ, ஆண்டவருக்குப் பயப்படுவதே ஞானம், பொல்லாப்பை விட்டு விலகுவதே புத்தி' என்று தங்களுக்குத் தெரிந்தமட்டில் ஞானத்தின் சாரத்தை விளக்கிக் காட்டியிருக்கிறார்கள் (யோபு $28^{28}$).

### 3. ஞானமும் தீர்க்கதரிசனமும்.

சிறையிருப்புக்காலத்திற்கு முந்தி இஸ்ரவேலிலே 'ஞானிகள்' அல்ல 'தீர்க்கதரிசிகள்' தான் முக்கியமானவர்கள். தீர்க்கதரிசிகள் ஞானிகளைப்போல விடுகதை, உவமை, பழமொழி முதலிய திருஷ்டாந்தங்கள் மூலமாய்ப் போதனை கொடுத்தார்கள் (நியா $9^{8}$ $14^{14}$ 1 சாமு $10^{12}$ 2 சாமு $12^{1}$ ஏசா $5^{1}$ $28^{23}$ எரே $31^{29}$). தீர்க்கதரிசிகள், கடவுள் ஒருவரே என்றும், ஒவ்வொரு மனுஷனும் தான் செய்த குற்றங்களைக்குறித்துக் கடவுளுக்கு உத்தரவாதியாயிருக்கிறனென்றும், கடவுளின் தயவைப் பெறும்படி காணிக்கை அல்ல நல்லொழுக்கந்தான் அவசியம் என்றும் போதித்தார்கள். தீர்க்கதரிசிகளுக்குப் பிற்பாடு ஆசாரியர்கள் ஆசாரத்தைச் சிறப்பித்துவந்தாலும், ஞானிகள் தீர்க்கதரிசிகள் போதித்த உண்மைகளை ஞானாகமங்களில் எழுதிவைத்து அவைகளின்மூலமாய் 'ஞானம்' என்பதைக் கற்றுக்கொடுத்தார்கள்.

தங்கள் காலத்தில் பக்தியை அழிக்கிற சடங்காசாரத்தின்மூலமாயும், கடவுளுடைய நீதி, நியாயத்தைப்பற்றிய சந்தேகங்களின் மூலமாயும், யூதர்கள் புதிதாய் அறிந்துகொண்டுவந்த கிரேக்கருடைய நாகரீகத்தின்மூலமாயும், யேகோவாவின் வணக்கத்திற்கு நேரிடும் மோசத்தை நீக்குவது இந்த ஆகமங்களின் நோக்கம்.

### 4. ஞானமும் தத்துவ சாஸ்திரமும்.

நீதிநூல்களில் தத்துவ சாஸ்திரம் இல்லை என்று சொல்லத் துணிகிறோம். கடவுள் இருக்கிறார் என்பதைப்பற்றியும், நாம் கடவுளுடைய சித்தத்தை அறிகிற விதத்தைப்பற்றியும், சித்தாந்தத்தைப்பற்றியும், ஆத்துமத்தின் தன்மையைப்பற்றியும் இந்தப் புஸ்தகங்களை எழுதினவர்கள் விசாரணை செய்யவில்லை. இவர்கள் கடவுள் இருக்கிறார் என்றும், நியாயப்பிரமாணத்தின் மூலமாயும் தீர்க்கதரிசிகள் உரைத்த போதனைகளின் மூலமாயும் அவருடைய சித்தத்தை அறிவோம் என்றும், அவர் இவ்வுலகத்தை ஆண்டுகொண்டு வருகிறார் என்றும், சந்தேகமின்றி நம்பி மனுஷர்கள் நியாயஸ்தலம், கடை, வீதி, வீடு, வயல் முதலிய இடங்களில் கடவுள் அருளின பிரமாணத்தைக் கைக்கொண்டு, அதின்படி நடக்கவேண்டியவிதம் இன்னதென்று தெரிவிக்கும்படி முதியோர்களும் தாங்களும் சொன்ன மொழிகளை ஒன்றாய்ச் சேர்த்து இந்த ஞானாகமங்களை இயற்றி வந்தார்கள்.

### 5. ஞானத்தின் தன்மை.

ஞானாகமங்களில் சொன்ன 'ஞானம்' என்பது இருவிதமாய் உண்டு.

(i) மனுஷர்கள் அடையக்கூடிய ஞானம்.

இது மனுஷர்களை ஏமாற்றுகிற சோதனைகளையும், தீமைகளையும் கண்டித்து அவர்களுக்கு இருக்கவேண்டிய கற்பு, நியாயம், இரக்கம் முதலியவற்றின் உத்தமத்தைக் காட்டி, மனுஷர்கள் ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய கடமைகளைத் தெளிவாய்க் குறிக்கிறது. நீதி $1^{2.7}$ $2^{2.10}$ $14^{6}$ பிர $1^{13.17}$ $7^{11}$ $9^{16}$.

(ii) மனுஷர்கள் அடையமுடியாத தெய்வீக ஞானம்.

இது இவ்வுலகத்தைப் படைத்து ஆண்டுகொள்ளுகிற வல்லமை. இது மனுஷர்களுக்குச் சுகதுக்கம், ஜீவன் மரணம் அளிக்கிற பிரமாணம் ஆகிய இவைகளைக் குறிக்கிறது. நீதி $3^{19}$. இந்த 'ஞானம்' மனுஷர்கள் சிற்சில சமயங்களில் குறிப்பாய்க் கவனித்துப் பார்த்தாலும் இதை முழுமையும் அறியக்கூடிய திறமை அவர்களுக்கு இல்லை (யோபு 28 அதி). மேலும் சாலொமோனின் ஞானாகமத்திலும், நீதிமொழிப் புஸ்தகத்திலும் 'ஞானம்' தேவனுக்குப் பணிவிடைசெய்கிற அதிகாரமுள்ள ஒரு தோழிக்குச் சமானமாக வர்ணித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானத்தினாலே அவர் சக

லத்தையும் சிருஷ்டித்திருக்கிறார் என்றும், ஞானத்தினாலே நீதிமான்களுக்கு இரக்கம் காட்டுகிறார் என்றும் சொல்லியிருக்கிறது (நீதி $4^7$ $7^4$ $8^{1.12.22}$ யோபு $28^{12}$. சாலொமோனின் ஞானம் $8^1$ $9^4$ $10^1$).

சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் ஞானகமங்களில் மனுஷர்கள் கடவுளுக்கும், மற்றவர்களுக்கும் செய்யவேண்டிய கடமைகளைப்பற்றி எபிரெயர்கள் அடைந்த உத்தம போதனைகள் உண்டு. இந்த ஆகமங்களில் உண்மை, நீதி, நியாயம் முதலிய நற்குணங்களைக்குறித்து எபிரெயர்களுக்கிருந்த வாஞ்சையை அறிகிறோம். இவைகளைக் கிரகித்துக்கொள்ளுகிற 'ஞானம்' எபிரெயர்களின் மூலமாய் அக்காலத்தில் அன்னியர்களில் அநேகருக்கும் நன்னெறியைக் காட்டினது. இவ்விதமாய் ஞானகமங்களிற் சொல்லிய 'ஞானம்' கிறிஸ்தவ உபதேசத்தை ஏற்றுக்கொள்ளும்படி அநேகரை ஏவினது.

6. ஞானகமங்களின் போதனை.

(i) **நீதிமொழிப் புஸ்தகத்தில்** ஞானமுள்ளவர்கள் முன்னோர்கள் நடந்த வழிகளில் நடக்கவேண்டும் என்றும், அவர்கள் நீதி நியாயத்தைச் செய்தால் அவர்களுக்கு இவ்வுலகத்தில் பலன் உண்டாயிருக்கும் என்றும், பக்திமான்களுக்குச் சுகம் இருக்கும் என்றும் தெரிவித்திருக்கிறது. இந்த ஆகமத்தை இயற்றினவர்கள் ஒருவன் நல்லவனாய் நடந்தால், அவன் பாக்கியசாலியாய் இருப்பான் என்றும், அவன் தரித்திரத்தையடைந்தால் குற்றஞ் செய்கிறவனாயிருப்பான் என்றும், அபிப்பிராயமுள்ளவர்களாயிருந்தார்களென்று தோன்றுகிறது. நல்லொழுக்கமே உத்தமம் என்பது அவர்களுடைய கருத்து.

(ii) **யோபின் புஸ்தகத்தில்** நீதிமொழிப் புஸ்தகத்திலில்லாத ஓர் விஷயத்தைக்குறித்து விசாரணையுண்டு. அதாவது நீதிமான் பலதடவை துக்கமும் கேடும் அதிகமாய்ச் சகிப்பது அவனுக்கு நியாயமாவென்கிற சந்தேகத்தைத் தீர்ப்பதே யோபின் ஆகமத்தின் நோக்கம். இதன்படி வருத்தப்பட்டவன் இவ்வுலகத்தில் தனக்கு நேரிடும் பல விஷயங்களில் கடவுள் ஆளுகின்ற விதத்தை அறியாமல் இருந்தால், அவன் தன் ஜீவியகாலத்தில் தனக்குக் கஷ்டநஷ்டம் நேரிடுவதைப் பற்றி ஆச்சரியப்படாமல், கடவுள் முடிவிலே எல்லாவற்றையும் நன்மையாக வாய்க்கச் செய்வார் என்பதை உறுதியாய் நம்பி, பொறுமையோடு இருக்கவேண்டும் என்று துக்கப்பட்ட நீதிமான்களை ஆற்றித் தேற்றும்படி இதில் ஞானோபதேசமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

(iii) **உன்னதப்பாட்டை** ஞானகமங்களிற் சேர்த்துக்கொள்வதற்குக் காரணம் முதலில் நமக்குத் தோன்றுகிறதில்லை. ஆனால் அக்காலத்தில் யூதர்களுக்குத் தெரிந்த அன்னிய மார்க்கங்களில் எல்லா சன்மார்க்கத்திற்கும் விரோதமாயிருந்த சடங்காசாரங்களை நாம் அறிந்துகொண்டு வந்தால், கற்பு, நல் அன்பு, இல்லறவொழுக்கம் ஆகிய இவைகளைச் சிறப்பித்த இந்த ஆகமம் ஞானகமங்களோடு சேர்க்கப்பட்டிருக்கிறது நியாயந்தான் என்று நமக்கு வெளிப்படும்.

(iv) **பிரசங்கி** என்னும் புஸ்தகத்தில் கடவுள் மனுஷர்களுக்கு இருக்கவேண்டிய உண்மையையும், நன்னடக்கையையும் கவனிக்கிறாரா என்பதைப்பற்றியும், நல்லவனுடைய நிலைமைக்கும், பொல்லாதவனுடைய நிலைமைக்கும் வித்தியாசம் இருக்கிறதா என்பதைப்பற்றியும் விசாரணை செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஆகமத்தின் ஆக்கியோன் பல காரணங்களினிமித்தம் இவைகளைக்குறித்துச் சந்தேகத்திற்கு இடம் நமக்கு இருக்கிறது என்று ஒத்துக்கொண்டாலும், கடவுள் எல்லாரையும் நேசித்து, எல்லாருக்கும் நன்மைசெய்யும்படி விரும்புகிறார் என்று நம்பி, நாம் எல்லாரும் மன உற்சாகத்தோடு அவர் நமக்கு அளித்திருக்கிற கடமைகளைச் சரிவர நிறைவேற்றினால் நமக்குப் பாக்கியம் கிடைக்கும் என்று புத்தி சொல்லுகிறான்.

(v) கிரேக்க பாஷையில் எழுதப்பட்ட **சீராக்குவின் மகனாகிய இயேசுவின் ஞானம் அல்லது சீராக்குவின் நீதி** (*Ecclesiasticus, the Wisdom of Jesus the son of Sirach*), என்னும் ஆகமத்தில் ஒரு வித்துவான் யூதர்கள் கீர்த்திபெற்ற தங்கள் முன்னோர்களைப்போல சன்மார்க்கத்திலும், பக்தியிலும் சிறந்தவர்களாய் நடக்கவேண்டுமென்றும், யூதர்கள் எப்பொழுதும் தங்கள் முன்னோர்கள் காட்டின முன்மாதிரியைப் பின்பற்றி நடக்கும்படி ஞானமுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்றும் அவர்களை எச்சரிக்கிறான். நீதிநூல் காண்க.

(vi) கிரேக்க பாஷையில் எழுதப்பட்ட **'சாலொமோனின் ஞானம் அல்லது சாலொமோனுடைய நீதி அல்லது ஞானத்தின் ஆகமம் அல்லது ஞானம்'** (*The Book of Wisdom, The Wisdom of Solomon*) என்னும் ஆகமத்தின் ஆக்கியோன் கிரேக்க தத்துவ சாஸ்திரத்தின்மூலமாய் அடைய வேண்டிய உண்மையைக் கற்றுக்கொண்டு.

தனக்கு முன்னிருந்த எபிரெய ஞானிகள் போதித்த உண்மையோடே இதைச் சேர்த்து யூதர்கள் அடையக்கூடிய ஞானம் அந்நியர் அடையக்கூடிய ஞானத்தைப்பார்க்கிலும் சிரேஷ்டம் என்று காட்டி, யூதர்களுக்குள் ளிருந்த ஞானத்தைச் சிறப்பித்துவருகிறான். **நீதிநூல்** காண்க.

இந்த ஆறு புஸ்தகங்களையும் வாசித்து நாம் இந்த ஞானிகள் கடவுளின் அருளினால் பல விதமான ஞானத்தை அடைந்தார்களென்று பார்த்தபோதிலும் மெய் ஒளியான கிறிஸ்து நாதரையல்லாமல், வேறு ஞானம் மனுஷர்களுக்குப் பூரண திருப்தியைக் கொடுக்க முடியாது என்று தீர்மானிக்கிறோம். விடி வெள்ளி வெளிச்சத்தைப்போல இந்த ஆகமங்களில் சன்மார்க்கம், பக்தி முதலியவை களைப்பற்றிய போதனை அநேகமுண்டு. அருணோதயம்போன்ற இயேசுவின் போதனையோ இவ்வுலகத்தில் ஜீவ பிரயாணம் பண்ணுகிற பரதேசிகளாகிய நமக்கு நாம் நடக்கவேண்டிய வழியைக் காட்டும்படி பிரகாசம் அருளும்.

**ஞானம்**. சாலொமோனின் ஞானம். **The Wisdom of Solomon**. **நீதிநூல்** காண்க.

**ஞானம்**. சீராக்குவின் ஞானம். **Ecclesiasticus**. **நீதிநூல்** காண்க.

**ஞானவான்**. **Wise**. ஞானமுள்ளவன் நீதி 3³⁵ 9⁹ 13¹⁴ 14³ 16¹⁴ 21²⁰ 24⁵ பிர 8¹ 9¹⁵ 12⁹ எரே 9¹² ஓசி 14⁹ ரோ 16²⁷ எபே 6⁵.

'ஞானமுள்ள தேவன்' 1 தீமோ 1¹⁷.

**ஞானாகமங்கள்**. **Books of Wisdom**. ஞானம் என்னும் நிபந்தத்திலே பழைய ஏற்பாட்டிலுள்ள நீதிமொழி, யோபு, உன்னதப்பாட்டு, பிரசங்கி என்னும் நாலு புத்தகங் களைத்தவிர, தள்ளுபடி ஆகமத்திலுள்ள சீராக்குவின் மகனாகிய இயேசுவின் நீதி சாலொமோனின் நீதி என்னும் இரண்டு நூல்களும் அடங்கும். பழைய ஏற்பாட்டிலுள்ள நீதிநூல்களைப்பற்றி விபரம் தெரிய வேண்டுமானால் அந்தத் தலைப்புகளை விசாரிக்கவேண்டும். தள்ளுபடியாகமத்திலுள்ள புத்தகங்களைப்பற்றி **நீதிநூல்** என்னும் தலைப்பைப் பார்க்கவேண்டும்.

**ஞானி**. **The Wise**. வித்துவான். தானி 2¹²·²¹ 4⁷ 5⁷ யோபு 5¹³ 15¹⁸ 34² சங் 49¹⁰ நீதி 1⁶ 9¹² 13²⁰ 22¹⁷ 29⁸ 29¹¹ பிர 2¹⁴ 6⁸ 7⁴ 8¹⁷ 9¹ 10² ஏசா 5²¹ 29¹⁴ 44²⁵ எரே 8⁸ 9²³ 10⁷ 18¹⁸ 50³⁵ மத் 11²⁵ 23³⁴ லூக் 10²¹ ரோ 1¹⁴·²² 16¹⁹·²⁷ 1 கொரி 1¹⁹·²⁶ 3¹⁸. **சாஸ்திரி**. **ஞானம்** காண்க.

**ஞானநுமான திரவியங்கள்**. **Sacraments**. இந்தப் பதம் வேதத்திலில்லை. ரோமான் சபையில் ஞானஸ்நானம், உறுதிபூசுதல், நற்கருணை, பச்சாத்தாபம், அவஸ்தைபூசுதல், குருத்துவம், மெய்விவாகம் என்னும் ஏழு முக்கியமான சடங்குகளுக்கும், மற்றச் சபைகளில் ஞானஸ்நானம், கர்த்தருடைய இராப்போசனமாகிய இவ்விரண்டிற்கும் 'ஞானநுமான திரவியங்கள்' அல்லது சாக்கிரமெந்து என்றலத்தீன் பெயர் பொதுப்பெயராக வழங்கிவருகிறது.

வேதபிரமாணப்படி யூதர்களுக்கு விருத்த சேதனம், பஸ்காவைப் புசித்தல் ஆகிய இவ்விரண்டு ஞானதிரவியாநுமானங்கள் உண்டு. அப்படியே கிறிஸ்தவர்களுக்கும் ஞானஸ்நானம், இராப்போசனமாகிய இரண்டு ஞானநுமான திரவியங்கள் உண்டு (யோவா 3²²⁻²⁶ 4¹ மத் 28²⁰·²⁶ மாற் 6⁴).

1160-ல் இறந்தவனாகிய பேதுருலோம்பார்து என்ற பாரிஸ் மேற்றிராணி தாம் எழுதின வேதசாஸ்திரத்தில் ஏழு சாக்கிரமெந்து என்ற ஞானதிரவியாநுமானம் உண்டென்று போதித்தபின்பு, 1198–1216-ல் பட்டத்திலிருந்த மூன்றாம் இன்னோசென்சி பாப்பு அதை ஸ்திரப்படுத்தினான்.

## ட.

**டாலெத்**. **Daleth**. இது எபிரெய பாஷை எழுத்தட்டவணையில் நாலாம் எழுத்து. எபிரெய பாஷையிலே 119-ம் சங்கீதம் 25-ம் வசனம் முதல் 32-ம் வசன முடிய ஒவ்வொரு வசனத்தின் முதல் பதத்துக்கு முதல் எழுத்து டாலெத்.

## டே.

**டேகை**. **Hawk**. பலெஸ்தீனா தேசத்தில் பதினெட்டுஜாதி பருந்துகள் உண்டு. எபிரெய பதங்கள் குறிக்கிற விசேஷித்த ஜாதி இன்னதென்று சொல்வது அரிது. ஆனால் டேகை என்பது இந்த ஜாதிகளில் சாதாரண ஜாதியைக் குறிக்கிறது என்று தோன்றுகிறது. லேவி 11¹⁶ உபா 14¹⁵ யோபு 31²⁶-ல் சொன்ன 'ராஜாளி' இந்தமாதிரிப பருந்துதான். இது அசுத்தமான மிருகங் களில் ஒன்று.

## த.

**தகசு**. **Badger**. ஆசரிப்புக் கூடாரத்தின் மேல்மூடி தகசுத்தோலினால் செய்யப் பட்டிருந்ததாக யாத்திரையாகமத்தில் வாசிக்கிறோம். யாத் 25⁵ 26¹⁴. தகசு என்பது பெருச்சாளிபோல் தரையில் குழிபறித்து அதிலே வாசம்பண்ணும் ஒரு சிறு மிருகம்.

அதின் தோல்மயிர் சிவப்புக்கலந்த தவிட்டு நிறமாயிருக்கும். இதின் தோலினால் கூடார மூடி செய்யலாம். ஆனால் தகசு சிறுமிருகம் ஆனதினாலும் தென்பலெஸ்தீனாவில் அபூர்வமானதினாலும் இதன்தோல் மேற்சொன்ன காரியத்துக்கு அவ்வளவு தகுந்த தல்லாததினாலும், இந்தப்பதம் ஒருவித ஆட்டைக் குறிக்கிற எபிரெயப்பதம் என்று அனுமானிக்கவேண்டியிருக்கிறது.

ஆங்கிலேய பாஷையில் புதிய மொழிபெயர்ப்பாகிய Revised Version நாம் பார்த்தால் தகசு என்பதற்குப் பதிலாக Seal's Skin அல்லது Porpoise Skin என்று சொல்லியிருக்கிறது. இந்தப் பதங்கள் சமுத்திரத்தில் கடல்பன்றியைக் குறிக்கும். ஆனால் இந்த மொழிபெயர்ப்பைப்பற்றி சந்தேகம்.

**தகபானெஸ்—தக்பானேஸ்.** Tahpanhes. எகிப்து தேசத்திலுள்ள கோசேன் நாட்டில் ஏறக்குறைய கி—மு. 650-ம் வருஷத்தில் கட்டப்பட்ட ஒரு பட்டணம். பூர்வ காலத்தில் இப்பட்டணத்தைச்சுற்றி இருந்த நாடு நீல நதிக்கால்வாய் ஒன்றினால் நீர்ப் பாய்ச்சப்பட்டு செழிப்புற்றிருந்தது. ஆனால் எகிப்து வனாந்தரத்திலிருந்து காற்று அடித்துக்கொண்டுவந்த மணலினால் இந்தக் கால்வாய் பிற்காலத்தில் மூடப்பட்டபடியால், இப்போது இந்நாடு செழிப்பற்றுக் கிடக்கிறது. ஆசியா நாட்டிலிருந்து வரும் விரோதிகளைத் தடுக்கும்பொருட்டு எகிப்து இராஜாக்கள் இந்தப் பட்டணத்தில் ஒரு கோட்டை கட்டினார்கள். கி—மு. 586-ஆம் கெதலியா கொலைசெய்யப்பட்டபின்பு, யோகனான் எரேமியாவையும் மற்ற யூதர்களையும் எருசலேம் பட்டணத்திலிருந்து தகபானெசுக்குக் கொண்டுபோனான். எரே $2^{16}$ $43^{7}$ $44^{1}$ $46^{14}$ எசே $30^{18}$ யூதீத் $1^{9}$.

**தகப்பன், பிதா.** Father.

(i) தந்தை ஆதி $9^{18}$ யாத் $20^{12}$ லூக் $15^{12}$ எபி $12^{9}$.

(ii) முன்னோர் ஆதி $4^{20}$ $15^{15}$ உபா $1^{8}$ யோபு $15^{18}$ மத் $3^{9}$ யோவா $4^{20}$ $8^{56}$ அப் $3^{25}$ ரோ $4^{16}$ $9^{5}$.

(iii) உபகாரி ஆதி $45^{8}$ நியா $17^{10}$ யோபு $29^{16}$.

(iv) வந்தனம் 2 இரா $2^{12}$ $5^{13}$.

(v) கடவுள் உபா $32^{6}$ ஏசா $63^{16}$ $64^{8}$ மத் $6^{9}$ $23^{9}$ லூக் $11^{2}$ யோவா $20^{17}$ ரோ $8^{15}$.

(vi) உவமையாக. யோபு $17^{14}$ $38^{28}$. 'ஜோதிகளின் பிதா' யாக் $1^{17}$. 'பிதாவாகிய பிசாசு' யோவா $8^{44}$.

(vii) தகப்பனுடைய அதிகாரம். யாத் $21^{15}$ லேவி $20^{9}$ உபா $21^{18}$. **குடும்பம்** காண்க.

(viii) தகப்பனுடைய கடமை. யாத் $12^{26}$ உபா $4^{9}$ $6^{6}$ $11^{18}$ சங் $78^{5}$ நீதி $22^{6}$ எபே $6^{4}$. 'நித்திய பிதா' ஏசா $9^{6}$. **குடும்பம் பிதா** காண்க.

**தகரம்.** Tin. எண் $31^{22}$ ஏசா $1^{25}$ எசே $22^{18}$ $27^{12}$. 'தகரம்' என்னும் பதம் சாதாரணமாய் வெள்ளீயம் பூசப்பட்ட இரும்புத் தகடுகளைக் குறிக்குமாயினும் பழைய ஏற்பாட்டிலே அது வெள்ளீயத்தையே குறிக்கும். இதையும் செம்பையும் கலந்தால் வெங்கலம் உண்டாகும். பெனிக்கேயர் இங்கிலாந்துக்கு மேற்கிலுள்ள தீவுகளிலிருந்து இந்த லோகத்தைக் கானான் முதலிய தேசங்களுக்குக் கப்பல்களில் கொண்டுவந்தார்கள்.

**தகர்க்கிறது.** Break. யாத் $34^{13}$ 2 இரா $18^{4}$ 2 நாளா $23^{17}$ $31^{1}$ மாற் $5^{4}$.

**தகனபலி.** Burnt offering. ஆதி $22^{7}$ $8^{20}$ யாத் $10^{25}$ $18^{12}$ $20^{24}$ $29^{18.25.42}$ $32^{6}$ $30^{9}$ லேவி $1^{6}$ $5^{7}$ $6^{9}$ $7^{2.37}$ $9^{7}$ $10^{19}$ $14^{13}$ $16^{3}$ $22^{18}$ எண் $6^{18}$ $7^{15}$ $15^{3}$ $28^{3}$ $29^{2}$ உபா $12^{5}$ யோசு $22^{23}$ நியா $13^{16}$ $6^{26}$ 1 சாமு $6^{14}$ $7^{9}$ $13^{9}$ $15^{22}$ 2 சாமு $6^{17}$ $24^{24}$ 1 இரா $3^{4}$ $8^{64}$ $18^{38}$ 2 இரா $16^{13}$ 2 நாளா $29^{28}$ $7^{1}$ எஸ்றா $3^{2}$ யோபு $1^{5}$ $42^{8}$ சங் $40^{6}$ $50^{8}$ $51^{16.19}$ $66^{13}$ ஏசா $1^{11}$ $40^{16}$ $43^{23}$ $56^{7}$ $61^{8}$ எரே $6^{20}$ $7^{21}$ $14^{12}$ $17^{26}$ $19^{5}$ $33^{18}$ எசே $40^{38}$ $43^{18}$ $44^{11}$ $45^{15}$ $46^{2}$ ஓசி $6^{6}$ ஆமோ $5^{22}$ மீகா $6^{6}$ எபி $10^{6}$ மாற் $12^{33}$. **பலி** காண்க.

**தகன பலிபீடம்.** Altar of Sacrifice. **தேவாலயம்** காண்க.

**தகாதவை.** Unseemly. நீதி $19^{10}$ $26^{1}$ ரோ $1^{28}$ எபே $5^{4}$.

**தகைவிலான் குருவி.** Swallow.

(i) எபிரெயபாஷையில் *deror* என்னும் பெயர்கொண்ட தகைவிலான் குருவி எப்போதும் ஒரே இடத்தில் நிலைவரமாயிராமல் வருஷந்தோறும் உஷ்ணதேசங்களிலிருந்து கானான் தேசத்துக்கு வரும். சங் $84^{3}$ நீதி $26^{2}$.

(ii) எபிரெய பாஷையில் *sus, sis.* என்னும் ஒருவித 'தகைவிலான் குருவி' என்பதற்குப் பதிலாக ஏசா $38^{14}$—ல் 'நமுடு' என்றும், எரே $8^{7}$-ல் 'கொக்கு' என்றும் தமிழ் வேதாகமத்தில் தப்பிதமாய்ச் சொல்லியிருக்கிறது.

(iii) தமிழ் வேதாகமத்தில் ஏசா $38^{14}$ எரே $8^{7}$-ல் சொன்ன 'தகைவிலான்' எபிரெய பாஷையில், *agur* என்று பெயர் கொண்ட ஒருவித கொக்கைக் குறிக்கின்றது.

கானான்தேசத்தில் பத்துவிதமான தகைவிலான் உண்டு.



தகைவிலான்.

**தக்கெமோனி.** Tahchemonite. ஒரு குடும்பப் பெயர். 2 சாமு $23^{8}$.= அக்மோனி 1 நாளா $11^{11}$ $27^{32}$.

**தக்பானேஸ்.** Tahpanhes. **தகபானேஸ்.** காண்க.

**தங்கம்.** Gold. **பொன்** காண்க.

**தங்குகிறது.** Abide. சங் $15^{1}$ $61^{4}$ எஸ்று $8^{15}$ யாத் $24^{16}$ யோசு $8^{9}$ 1 சாமு $26^{3}$ லூக் $24^{29}$ $19^{5}$ $2^{8}$ யோவா $1^{32}$ கலா $1^{18}$.

**தங்குகிறது.** Sojourn. ஆதி $12^{10}$ $32^{4}$ $47^{4}$ யாத் $3^{22}$ லேவி $17^{8}$ நியா $17^{7}$ எஸ்று $1^{4}$ எரே $42^{22}$ எசே $20^{38}$.

**தங்கை.** Younger sister. நியா $15^{2}$ எசே $23^{4.11}$. குடும்பம் காண்க.

**தசமபாகம்.** Tithes. கோத்திரப் பிதாக்கள் தசமபாகம் செலுத்தினதினாலே தசமபாகம் செலுத்துகிறது எபிரெயர்களுக்குள்ளே ஆதிகாலத்து வழக்கந்தான் என்பதை அறிவோம். ஆதி $14^{20}$ $28^{22}$. மேலும் மற்ற ஜனங்கள் கைக்கொண்ட பாரம்பரியங்களையும் நாம் ஆராயும்போது எபிரெயர்களும் பாபிலோனியர்களுமே அல்லாமல் வேறு அநேக ஜாதிகளும் ஆடுகளிலும் பயிர்பச்சைகளிலும் யுத்தக் கொள்ளைப்பொருள்களிலும் தங்கள் தேவர்களுக்குக் காணிக்கையாக தசமபாகம் கொடுக்கும் வழக்கத்தை அனுசரித்துவந்தார்கள் என்று தோன்றுகிறது. இந்த வழக்கத்துக்குக் காரணம் என்னவென்று பழையேற்பாட்டில் நாம் ஆராயும்போது, இதற்கு இருவிதமான காரணங்களைக் காண்கிறோம்.

எபிரெயர்கள் தங்கள் தேசம் கடவுளுக்குச் சொந்தமானதினாலே அவருக்குத் தசமபாகம் கொடுப்பது அவசியம் என்றும், கொடாவிட்டால் பிற்காலத்தில் அந்த நிலத்துக்கு ஆசீர்வாதம் இருக்கமாட்டாதென்றும் எண்ணினார்கள். லேவி $27^{30}$. மேலும் கடவுள் செய்த நன்மைகளுக்காக நன்றியறிதலைக் காட்டும்படி தாங்கள் பெற்றுக்கொண்ட எல்லாவற்றிலும் அவருக்குத் தசமபாகம் கொடுத்துவந்தார்கள். ஆதி $28^{20}$. பூர்வகாலத்தில் ஒவ்வொரு குடும்பத்தலைவனும் இந்தத் தசமபாகம் செலுத்திவந்ததாகத் தெரிகிறது. ஆசரிப்புக் கூடாரத்தின் பணிவிடையைச் செய்கிற லேவியர்கள் யேகோவாவை வணங்க வந்தவர்கள் செலுத்தின தசமபாகத்தைத் தங்கள் சுதந்தரமாக அனுபவித்துவந்தார்கள்.

எண்ணாகமத்தில் சொல்லியபடி, லேவிக் கோத்திரத்தாருக்குக் கானான் தேசத்திலே பங்கு இல்லாததினாலே, இந்த தசமபாக சுதந்தரம் அவர்களுக்குரியதாயிற்று. எண் $18^{21}$.

வருஷத்துக் கொருதரம் தசமபாகம் செலுத்துவது வழக்கம். உபா $14^{22}$. சிலர் இந்த வழக்கத்தைக் கவனிக்கவில்லை. ஆமோ $4^{4}$. சில சமயங்களில் ராஜாவுக்கும் தசமபாகம் செலுத்தப்பட்டது. ஆதி $14^{20}$ 1 சாமு $8^{17}$.

**தச்சன்.** Carpenter. எகிப்து தேசத்தில் அதிக சமர்த்தர்களாயிருந்த தச்சர்கள் பெட்டி ஏர் ஏணி முதலியவைகளைச் செய்கிறதும் அல்லாமல், விக்கிரகம் நிருமித்தல் முதலிய விசித்திர வேலைகளையும் செய்வார்கள். அப்படியே எபிரெயர்களுக்குள்ளே இருந்த தச்சர்களும் இவ்வித வேலைகளைச் செய்வார்கள். பல வசனங்களில் அவர்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. 2 சாமு $5^{11}$ 2 இரா $12^{11}$ $22^{6}$ 1 நாளா $14^{1}$ $22^{15}$ 2 நாளா $24^{12}$ எஸ்று $3^{7}$ ஏசா $41^{7}$ $44^{13}$ எரே $24^{1}$ $29^{1}$ சக $1^{20}$ ('தொழிலாளி') மத் $13^{55}$ மாற் $6^{3}$.

தச்சர்கள் உபயோகித்த ஆயுதங்களாவன. கோடரி. உபா $19^{5}$. வாச்சி. எரே $10^{4}$ சங் $74^{6}$. சம்மட்டி. சங் $74^{6}$ எரே $10^{4}$. சுத்தி. நியா $4^{21}$. வாள். ஏசா $10^{15}$. நூல். ஏசா $44^{13}$. உளி. ஏசா $44^{13}$. கவராசம். ஏசா $44^{13}$. அளவுநூல். எரே $31^{39}$.

யூதர்களுக்குள்ளே தச்சவேலை மேன்மையானது.

**தஸ்திர அறை.** Library. புஸ்தகசாலை எஸ்று $6^{1}$.

**தடவுகிறது.** Feel. ஆதி $27^{12.21}$ உபா $28^{29}$ நியா $16^{26}$ யோபு $5^{14}$ $12^{25}$ ஏசா $59^{10}$ அப் $17^{27}$.

**தடி.** Staff. யாத் $12^{10}$ எண் $13^{23}$ $22^{27}$ 1 சாமு $17^{40.43}$ 2 சாமு $23^{21}$ 1 நாளா $11^{23}$ சங் $23^{4}$ ஏசா $10^{15}$ மத் $26^{47.55}$ $10^{10}$ மாற் $14^{43.48}$ $6^{8}$ லூக் $22^{52}$ $9^{3}$.

**தடிப்பு.** 'Scab' லேவி $13^{2.19}$ $14^{56}$. **துஷ்டம்** காண்க.

**தடுக்கிறது.** Forbid. மாற் $9^{38}$ லூக் $9^{49}$ 2 பேது $2^{16}$.

**தடை.** Hindrance. ஆதி $24^{56}$ எண் $22^{16}$ எஸ்ரு $6^{8}$ மத் $19^{14}$ மாற் $10^{14}$ லூக் $6^{29}$ $11^{52}$ $18^{16}$ அப் $8^{36}$ $16^{6}$ $24^{23}$ $28^{31}$ ரோ $15^{22}$ 1 கொரி $9^{12}$ $14^{39}$ கலா $5^{7}$ 1 தெச $2^{16.18}$ 1 யோவா $1^{10}$ 1 பேது $3^{7}$.

**தட்சணமண்டலங்கள்.** The chambers of the South. யோபு $9^{9}$-ல் கண்ட எபிரெய பதங்கள் வானமண்டலத்தின் தென் திசையிலுள்ள நக்ஷத்திரங்களைக் குறிக்கிறது.

**தட்டான்.** Goldsmith. நெகே $3^{8.31}$ ஏசா $40^{19}$ $41^{7}$ $46^{6}$ எரே $10^{9.14}$ $51^{17}$. தட்டான் வேலை. மல் $3^{2.3}$ நீதி $17^{3}$ $27^{21}$ யாத் $25^{11.18}$ $26^{29}$ $30^{3}$ $37^{17}$ $39^{3}$ எண் $8^{4}$ $31^{50}$ 1 இரா $10^{16}$ 2 நாளா $9^{15}$.

**தட்டுகிறது.** Knock. 1 இரா $19^{5}$ உன். பா $5^{2}$ மத் $7^{7}$ லூக் $11^{9}$ $12^{36}$ அப் $12^{13}$ வெளி $3^{20}$.

**தட்டோடு.** Tile. லூக் $5^{19}$. **செங்கல்** காண்க.

**தட்டுமுட்டு.** Vessels. எரே $49^{29}$. **பாத்திரம் மண்பாண்டம்** காண்க.

**தண்டல் தண்டுகிறது.** Tax. உபா $15^{2}$ 2 இரா $23^{35}$ 2 இரா $15^{20}$. 'தண்டற்காரன்' தானி $11^{20}$ ஏசா $60^{17}$. **ஆயம், கப்பம், தீர்வை, வட்டி, வரி** காண்க.

**தண்டனை.** Punishment. **ஆக்கினை** காண்க.

**தண்டாயுதம்.** Maul. நீதி $25^{18}$ ஏசா $10^{5}$ $14^{5}$. **ஆயுதம்** காண்க.

**தண்டு.** Oar. எசே $27^{26-29}$ யோனா $1^{13}$ மத் $6^{48}$ யோவா $6^{19}$. **கப்பல்** காண்க.

**தண்டுகள்.** Staves. யாத் $25^{14}$ $27^{6}$ $30^{4}$ $35^{12}$ $37^{4}$ $38^{5}$ எண் $4^{6}$ 1 இரா $8^{6}$ 2 நாளா $5^{8}$.

**தண்ணீர்.** Water. **நீர்** காண்க.

**தண்ணீர் வாசல்.** Water-gate. நெகே $8^{1}$ $12^{37}$. **எருசலேம்** காண்க. பக். 178.

**ததேயு.** Thaddaeus. இவன் பன்னிரண்டு அப்போஸ்தலரில் ஒருவன். மத் $10^{13}$ மாற் $3^{18}$. லூக்கா சொன்ன 'யாக்கோபின் சகோதரனாகிய யூதா' இவன்தான். லூக் $6^{16}$ அப் $1^{13}$. யோவான் சொன்ன 'ஸ்காரியோத்தல்லாத யூதா' இவன்தான். யோவா $14^{22}$. இவனுக்கு மறுநாமம் லெபேயு. மத் $10^{3}$. லெபேயு என்னும் பதத்துக்கு அருத்தம் விளங்கவில்லை. அரமேய பாஷையிலே ததேயு என்னும் பதம் மார்பையும், லெபேயு என்னும் பதம் நெஞ்சையும் குறிக்கிறதினாலே, வேதாகமப் பிரதிகளைப் பெயர்த்தெழுதிய ஒருவன், இந்த வசனத்தில் ததேயு என்னும் பெயரோடு லெபேயு என்னும் பெயரையும் சேர்த்து எழுதினதாகச் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். பூர்வகாலத்துக் கையெழுத்துப் பிரதிகளில் இந்த வசனத்தில் லெபேயு என்னும் பதம் இல்லாததினால் ஆங்கிலேய பாஷையில் (*Revised Version*) லெபேயு என்னும் பதம் இல்லை.

ஒரு பாரம்பரியத்தின்படி ததேயு இயேசு அழைத்த எழுபது சீஷர்களில் ஒருவன். லூக் $10^{1}$. இவன் பெர்சியா தேசத்துக்குப் போய், வியாதிப்பட்டிருந்த அந்தத் தேசத்து ராஜாவைச் சுகப்படுத்தி அந்த ராஜாவையும் அந்தத் தேசத்து ஜனங்களையும் கிறிஸ்தவர்களாக்கி, அந்தத் தேசத்திலே பல வருஷம் ஊழியஞ்செய்து மரித்தான்.

இன்னொரு பாரம்பரியத்தின்படி இவன் சிலுவையில் அறையுண்டு இரத்தச்சாட்சியாக மரித்தான்.

**தத்தளிக்கிறது, தத்தளிப்பு.** Tremble. 1 சாமு $4^{13}$ ஏசா $32^{11}$ எசே $32^{10}$ ஓசி $12^{1}$ சக $12^{2}$.

**தத்மோர்.** Tadmor. 1 இரா $9^{18}$ 2 நாளா $8^{4}$. வேதசாஸ்திரிகளில் சிலர் எபிரெய கையெழுத்துப் பிரதிகளில் சிலவற்றை அத்தாட்சியாகக் கொண்டு இது யூதேயா வனாந்தரத்தில் உள்ள தாமார் என்னும் கோட்டையைக் குறிக்கிறது என்று அபிப்பிராயப்படுகிறார்கள். அப்படியல்லாமல் இது சீரியா வனாந்தரத்தில் ஸ்தாபகமான தத்மோர் என்னும் மிகவும் அழகிய பட்டணத்தைக் குறிக்கும். இப்பட்டணம் ஒரு வனாந்தரத்திலே இருந்தும், இவ்விடத்தில் நீரூற்றுகள் அதிகமாயிருக்கிறதினால் சீரியா தேசத்திலிருந்து பாபிலோனியா தேசத்துக்குப் போகும் பிரயாணிகள் இங்கே தங்குவார்கள். இந்த தேசங்களிலிருந்து பல வியாபாரிகள் இந்தப் பட்டணத்துக்கு வந்து இங்கே வியாபாரம் அதிகமாய்ப் பண்ணினார்கள். பிந்தின காலங்களில் ரோமர் இந்த தேசத்தை ஜெயித்து இதில் நேர்த்தியான தேவாலயங்களைக் கட்டி இதைச் சிறப்பித்துவந்தார்கள். அந்தக்காலத்தில் இதற்கு **பல்மைரா** (*Palmyra*) என்று பெயர். ஆனால் சில நூற்றாண்டுகளுக்குப் பின்பு ரோம ராஜ்யத்தின் மேன்மை குறைந்தபோது இந்தப் பட்டணத்தின் சிறப்பும் அற்றுப்போய்விட்டது. இப்பொழுதோ, சூரியதேவனுக்குக் கட்டப்

பட்ட தேவாலயத்தைச் சேர்ந்த 390 தூண்களில் அறுபது அல்லது எண்பது தூண்களும், இடிந்து கிடக்கிற சில கட்டிடங்களும், உடைந்துபோன விக்கிரகங்களும், பாழாய்க்கிடக்கிற கல்லறைகளும் வீடுகளுமே தத்மோர் முன்னிருந்த இடத்தைக் காட்டுகிறது. சாலொமோன் காலமுதல் அப்போஸ்தலர் காலம்வரை தத்மோருக்கும் பலெஸ்தீனாவுக்கும் வியாபாரம் இருந்தும் வேறுவித சம்பந்தம் இல்லாததினால், தத்மோரைப்பற்றி வேதாகமத்தில் விபரம் இல்லை.

**தத்னாய்.** Tatenal. தரியு ஹிஸ்தாஸ்பிஸ் இருக்கும் காலத்தில் (கி–மு. 521–485), மத்தியதரைக் கடலின் கரையிலுள்ள சீரியா தேசத்தைச் சேர்ந்த பெனிக்கேயா முதலிய நாடுகளுக்குத் தலைவன். எஸ்ரா $5^{3}$ $6^{3-13}$.

**தந்தம்.** Ivory. எபிரெய பாஷையில் தந்தத்துக்கு பல் என்றும், யானைத்தந்தம் என்றும் பெயர் இருக்கிறதினால் எபிரெயர்களுக்குத் தெரிந்த தந்தமும், நமக்குத் தெரிந்த தந்தமும் ஒன்றுதான் என்று நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. 1 இரா $10^{22}$ 2 நாளா $9^{21}$. பூர்வகாலமுதல் யானைத்தந்தம் யூதர்களுக்குள் மிக அருமையானது. ஆபரணங்களுக்காகவும் மாளிகை அலங்கரிப்பதற்காகவும் இதை உபயோகித்தார்கள். இதினாலே சாலொமோன் அலங்கரித்த ஒரு அரமனைக்கு 'தந்த மாளிகை' என்றுபெயர். 1 இரா $22^{39}$. சாலொமோனுக்கு யானைத்தந்தத்தினால் செய்யப்பட்ட ஒரு சிங்காசனம் இருந்தது. 1 இரா $10^{18}$. யானைத்தந்தத்தினால் செய்யப்பட்ட கட்டில்களை உபயோகித்த கனவான்களை ஆமோஸ் தீர்க்கதரிசி கண்டிக்கிறான். ஆமோ $6^{4}$. எசேக்கியா ராஜா சனகெரிப் ராஜாவுக்கு இந்தமாதிரி தந்தக் கட்டில்களைக் கப்பமாகக் கொடுத்தான் என்று அசீரியா ராஜாக்கள் வரைந்துவைத்த களிமண் பலகைகளில் காண்கிறோம்.

தந்தம் அழகுக்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. உன். பா $7^{4}$.



யானையும், யானைத்தந்தமும் கொண்டுவருகிறவர்கள்.

**தந்திரம்.** Craft. ஆதி $3^{1}$ $27^{35}$ 2 இரா $10^{19}$ யோபு $5^{13}$ $15^{5}$ சங் $83^{3}$ நீதி $7^{10}$ மத் $26^{4}$ லூக் $20^{23}$ 1 கொரி $3^{19}$ 2 கொரி $4^{2}$ $12^{16}$ $11^{3}$ $12^{16}$ எபே $4^{14}$ 2 பேது $2^{1}$.

**தந்திரவாதி.** Subtle. 1 சாமு $23^{22}$ 2 சாமு $13^{3}$.

**தந்தை.** Father. ஏசா $49^{23}$. **குடும்பம் தகப்பன்** காண்க.

**தபாகோத்.** Tabaoth. எஸ்ரா $2^{43}$ நெகே $7^{46}$. நிதனீமியர்களில் ஒரு குடும்பம்.

**தபீத்தாள் அல்லது தொர்க்காள்.** Tabitha, Dorcas. சீரியபாஷையில் 'தபீத்தாள்' என்பதற்கு மான் என்று அர்த்தம். கிரேக்கர்கள் அதே அர்த்தங்கொள்ளும் 'தொற்காள்' என்னும் பெயரை இவளுக்கு வழங்கி வந்தார்கள். இவள் யோப்பா என்னும் துறைமுகப் பட்டணத்தில் வசித்த தர்மகுணமுள்ள ஒரு கிறிஸ்தவள். பரி. பவுல் செய்த ஜெபத்தினாலே மரித்துப்போன இவளுக்குத் திரும்பவும் உயிர்வந்தது. அப் $9^{36}$.

**தபேயால்.** Tabeel. சீரியா ராஜாவும் இஸ்ரவேல் ராஜாவும் யூதா ராஜாவைத் தொந்தரவுசெய்யும்படி இவனுடைய மகனை ஏவிவிட்டார்கள். ஏசா $7^{5}$.

**தபேரா.** Taberah. வனாந்தரத்தில் பிரயாணம்பண்ணின இஸ்ரவேலர் சந்தித்த ஒரு இடம். இதைப்பற்றி நமக்கு வேறொன்றும் தெரியாது. எண் $11^{3}$ உபா $9^{22}$.

**தப்பறை.** Error, Heresy. **மதபேதம்** காண்க.

**தப்பிதம்.** Fault, error. ஆதி $31^{6}$ யோபு $19^{4}$ பிர $10^{5}$ ரோ $1^{27}$ எபி $9^{7}$. **தீங்கு, தீமை, பொல்லாங்கு** காண்க.

**தப்புகிறது.** Escape. ஆதி $19^{17}$ நியா $3^{26}$ 1 சாமு $14^{41}$ $19^{10}$ 1 இரா $18^{40}$ சங் $124^{7}$ $141^{10}$ நீதி $19^{5}$ பிர $7^{26}$ எரே $11^{11}$ ஆமோ $9^{1}$ மத் $23^{33}$ லூக் $21^{36}$ ரோ $2^{3}$ 1 கொரி $10^{13}$ எபி $2^{4}$ $11^{34}$ $12^{25}$ 2 கொரி $11^{33}$ 2 பேது $1^{4}$ $2^{18}$ 1 தெச $5^{3}$.

**தப்புவா.** Tappuah.

1. எப்ரோனின் மகன். 1 நாளா $2^{43}$. இது தென் யூதாவிலுள்ள ஒரு பட்டணத்தைக் குறிக்கிறது. யோசு $15^{34}$.

2. = என்–தப்புவா. யோசு $16^{8}$ $17^{7}$.

3. யோர்தான் நதிக்கு மேற்கிலுள்ள ஒரு பட்டணம். ஒருவேளை இதுவும் என்–தப்புவாவும் ஒன்றுதான். இதற்குத் திப்சா என்று பெயர். யோசு $12^{17}$ 2 இரா $15^{16}$.

**தப்ரிமோன்.** Tabrimmon. *சீரியா ராஜாவாகிய பெனாதாத்தின் தகப்பன்.* 1 இரா $15^{18}$.

**தமக்கை.** Sister. *யாத்* $2^{4.7}$ *எசே* $16^{46}$.

**தமஸ்கு.** Damascus. இரண்டு ஆறுகள் பாயும் ஒரு செழிப்பான சமபூமியிலுள்ள இந்த அழகிய பட்டணம் வடசீரியாவின் தலைநகரம். இது எருசலேமுக்கு வடக்கே 120 மைல் தூரத்தில் இருந்தது. உன். பா $7^{4}$. இதைச் சுற்றிலுமுள்ள தோட்டங்களில் கனிவர்க்க விருக்ஷங்கள் ஏராளம். இதிலே இப்போது ஏறக்குறைய ஒன்றரை அல்லது இரண்டு லக்ஷம் ஜனங்கள் இருக்கிறார்கள். இப்பட்டணத்துத் தச்சர் கொல்லர் முதலியவர்கள் அதிக சமர்த்தரானபடியாலும், அதன் பக்கத்திலே அலைந்து திரிந்த ஜனங்களுக்கு வேண்டிய யாவற்றிற்கும் இங்கே கடை இருந்தபடியாலும், சீரியா தேசத்திலிருந்து மெக்காவுக்கு வருஷந்தோறும் பிரயாணம் பண்ணிய மகமதியர் இந்தப் பட்டணத்தில் ஒன்றுகூடித் தங்கள் பிரயாணத்தைத் தொடங்கினதினாலும், அரபிதேசத்துக்குப் போகும் புகைரதப் பாதை இங்கே இருந்து ஆரம்பிக்கிறபடியாலும், இப்பட்டணம் தற்காலத்தில் ஒரு விசேஷித்த ஸ்தலமாயிருக்கிறது. ஆபிரகாமின் சரித்திரத்தில் இதன்பேர் கண்டிருக்கிறபடியால், இது அவனுடைய காலத்துக்கு முந்தி ஸ்தாபிக்கப்பட்டது என்று அறிகிறோம்.

1. பழைய ஏற்பாட்டில் இதன் சரித்திரம்.

ஆபிரகாம் இதற்கு ஐந்து ராஜாக்களைத் துரத்தினான். ஆதி $14^{15}$. ஆபிரகாமின் ஊழியக்காரனாகிய எலியேசர் தமஸ்குவிலிருந்து வந்தவன். ஆதி $15^{2}$. ஆபிரகாமின் காலத்திலிருந்து தாவீதின் காலமட்டும் தமஸ்குவைப் பற்றி வேதாகமத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை. தாவீது அதைப் பிடித்து தனக்குக் கீழ்ப்படுத்தினான். 2 சாமு $8^{5}$ 1 நாளா $18^{5}$. சாலொமோன் காலத்தில் ரேசோன் என்னும் சேனைத்தலைவன் இதற்குத் தன்னை ராஜாவாக்கிக்கொண்டு இஸ்ரவேலரைத் தொந்தரவுபண்ணினான். 1 இரா $11^{23}$. ஆசாவுக்கும் பாசாவுக்கும் சண்டையுண்டான போது ஆசா யூதாவுக்குச் சகாயம் செய்யும் பொருட்டு, தமஸ்குவின் ராஜாவாகிய பெனாதாத்தை வேண்டிக்கொண்டான். 1 இரா $15^{17}$. இப்படியே ஆகாபின் காலமட்டும் இஸ்ரவேல் ராஜ்யத்துக்கும் தமஸ்குவுக்கும் விரோதம் இருந்தது. ஆகாப் பெனாதாத் என்பவனோடுசமாதானம்பண்ணினதினாலே ஒரு தீர்க்கதரிசி அவனைக் கண்டித்தான். 1 இரா $20^{42}$. குஷ்டரோகத்திலிருந்து சொஸ்தமடையும்படி தமஸ்கு ராஜ்யத்திலிருந்து வந்த நாகமான் சொன்ன வார்த்தைகளால் யோர்தான் நதிக்கும் தமஸ்குவின் பக்கத்தில் பாய்கிற ஆப்னா பர்பார் என்னும் நதிகளுக்கும் உள்ள வித்தியாசத்தைக் காண்கிறோம். 2 இரா $5^{12}$. தமஸ்குவின் ராஜா யூதாவுக்கு விரோதமாய் மறுபடியும் படையெடுத்தான். 2 நாளா $24^{23}$. இரண்டாம் யெரொபெயாம் தமஸ்குவை மறுபடியும் முற்றுகைபோட்டுப்பிடித்தான். 2 இரா $14^{28}$. ஆனால் தமஸ்கு சீக்கிரத்தில் அவன் அதிகாரத்தைவிட்டு நீங்கியது. அதின் ராஜாவாகிய ரேத்சீன் ஆகாசைத் தொந்தரவுபடுத்தினான். 2 இரா $16^{5}$.

ஆகாஸ் தமஸ்குவின் ராஜாவுக்குப் பயந்து அசீரியா ராஜாவாகிய திகிலாத் பிலேசர் தனக்கு உதவிசெய்யும்படி வேண்டிக்கொண்டதினால் அசீரியாவின் மூலமாய் இஸ்ரவேலுக்குப் பெருத்த கெடுதிவரும் என்று ஏசாயா முன்னறிந்து ஆகாசைக் கண்டித்தான். ஏசா $7^{8}$ $10^{9}$ $17^{3}$. வேறு தீர்க்கதரிசிகள் எபிரெயர்களுக்குத் தமஸ்கு காட்டின பகையைக் கண்டிக்கிறார்கள். எரே $49^{23}$ ஆமோ $1^{3}$ சக $9^{1}$. தமஸ்குவில் நடந்த வியாபாரத்தைப்பற்றி எசேக்கியேல் தீர்க்கதரிசி சொல்லுகிறான். எசே $27^{18}$. இஸ்ரவேலுக்கு மேன்மை வருங்காலத்தில் அதின் ராஜ்யத்தின் எல்லைகள் மறுபடியும் தமஸ்குவரைக்கும் எட்டும் என்று எசேக்கியேல் தரிசனத்தில் கண்டான். எசே $47^{17}$.

2. புதிய ஏற்பாட்டில் இதன் சரித்திரம்.

பலதடவை தமஸ்குவுக்குப் போய் அங்கே தங்கிவந்த பரி. பவுல் அந்தப் பட்டணத்தில் தானே குணப்பட்டு, கூடைவழியாய் அப்பட்டணத்திலிருந்து தப்பித்துப்போய் அரபிதேசத்தில் சிலகாலம் ஒளித்திருந்தபிறகு தமஸ்குப் பட்டணத்துக்கே திரும்பிவந்தான். அப் $9^{2.18\text{-}27}$ $22^{5}$ $26^{12}$ 2 கொரி $11^{32}$ கலா $1^{17}$. பரி. பவுலின்காலத்தில் தென் சீரியாதேசத்தை அரசாண்ட ராஜாவின் சேனாபதி தமஸ்குமேல் படை எடுத்துச் சிலகாலம் இதன் மேல் அதிகாரம் செலுத்தினான். மற்றப்படி இது ரோம ராஜ்யத்தில் சீரியா நாட்டைச் சேர்ந்தது. **அரேத்தா** காண்க.

மேற்கூறியவற்றைத் தவிர தமஸ்குவைப் பற்றிப் புதிய ஏற்பாட்டில் வேறொன்றும் சொல்லப்படவில்லை.

3 புதிய ஏற்பாட்டுக் காலத்துக்குப் பிறகு ரோமராயர்கள் கிறிஸ்தவ மார்க்கத்தை அனுசரித்து, தமஸ்குவில் கட்டப்பட்டிருந்த அஞ்

ஞானக் கோயில்களைக் கிறிஸ்தவ தேவாலயங்களாக மாற்றினார்கள். கி—பி. 635—ஆம் மகமதியர் தமஸ்குவை ஜெயித்து அந்தக் கிறிஸ்தவ தேவாலயங்களைத் தங்கள் மதப்பள்ளிகளாக்கினார்கள். அக்காலமுதல் தமஸ்கு மகமதியர் கைவசத்தில் இருக்கிறது.

**தமையன்.** Brother. ஆதி $42^{38}$ 1 சாமு $20^{29}$ 2 சாமு $13^{3}$.

**தம்பிரான்.** God. 2 கொரி $4^{4}$ 'பிரபஞ்சத்தின் தேவனானவன்' = 'உலக தம்பிரான்.'

**தம்புரு.** Timbrel. யாத் $15^{20}$. **கீதவாத்தியம்** காண்க.

**தம்மூசு.** Tammuz. பாபிலோனியர் வணங்கின இந்தத் தெய்வதை பிந்தின காலங்களில் பெனிக்கேயர்கள் வணங்கினார்கள். தம்மூசு என்பதற்கு ஜீவனின் மகன் என்று அர்த்தம். சூரியதேவனும் கொலை செய்யப்பட்ட ஒரு மேய்ப்பனுமாகிய இவனை ரட்சிக்கும்பொருட்டு இவனுடைய தேவியாகிய அஸ்தரோத்து யமலோகத்துக்கு இறங்கிச் சென்றாள் என்று ஜனங்கள் நம்பி தம்மூசு என்னும் ஜூன்மாதத்தில் இவனுக்காக வருஷந்தோறும் புலம்பினார்கள். இவர்கள் சொன்ன இக்கதையானது குளிர்காலத்தில் சூரியனுடைய மேன்மை குறைவதையும் வசந்தகாலத்தில் பெருகி வருவதையும் காட்டுகிறது. மரித்துப்போன இவனுக்காக ஸ்திரீகள் செய்த புலம்பலைப்பற்றி எசேக்கியேல் தீர்க்கதரிசி பேசுகிறான். எசே $8^{14}$.

இந்தப் புலம்பலைப்பற்றி இன்னும் சில இடத்தில் சொல்லியிருக்கிறது என்று நினைக்கலாம். ஆமோ $8^{10}$ சக $12^{10}$.

புலம்புகிறவர்கள் பாடிய பாட்டைக்குறித்து எரேமியா பேசுகிறான் என்று உத்தேசிக்கலாம். எரே $22^{18}$.

**தயவு.** Favour. ஆதி $30^{27}$ $39^{21}$ யாத் $3^{21}$ 1 சாமு $16^{22}$ யோபு $10^{12}$ பிர $9^{11}$ சங் $30^{5}$ $45^{12}$ $89^{17}$ $119^{58}$ நீதி $8^{35}$ அப் $2^{47}$ $7^{46}$ $25^{3}$. **தயை** காண்க.

**தயிர்.** Curds. யோபு $10^{10}$.

**தயை.** Favour. ரூத் $2^{13}$ 1 சாமு $20^{29}$ எஸ்தர் $2^{15}$ $5^{2}$ சங் $102^{13}$ நீதி $3^{4}$ $11^{27}$ $12^{2}$ $13^{15}$ $14^{35}$ $16^{15}$ $18^{22}$ $19^{6}$ $22^{1}$ எரே $16^{13}$. **தயவு** காண்க.

**தரம்.** Times. யாத் $23^{17}$ லேவி $4^{6}$ $16^{14}$ 2 இரா $4^{35}$ உபா $16^{16}$ யோசு $6^{4}$ மத் $18^{22}$.

**தராசு.** Balances. இந்தியா எகிப்து பலெஸ்தீனா முதலிய தேசங்களில் உபயோகித்த தராசுகளுக்கு அவ்வளவு வித்தியாசம் இல்லை என்று நினைக்கலாம். இந்தத் தராசு ஒரு கோலோடு கயிற்றினால் தொடுக்கப்பட்ட இரண்டு தட்டுகள் உள்ளது. ஏசா $40^{12}$ $46^{6}$. சாமான் சரக்குகளை நிறை கணிக்கும்படிக் கடைக்காரனிடத்தில் படிக்கல்லுகள் இருக்கும். முதலில் அவைகள் வெறும் கல்லுகள் தான். பிற்காலங்களில் வியாபாரிகள் இரும்பு முதலிய லோகங்களைப் படிக்கல்லுகளாக உபயோகித்தார்கள். கடைக்காரர் வைத்திருக்கும் தராசுகளையும் படிக்கல்லுகளையும் சோதிக்கும்படி ராஜாக்களும் மூப்பர்களும் நியமித்த விசாரணைக்காரர் தங்கள் வேலையை அஜாக்கிரதையாய்ச் செய்யும்போது கடைக்காரர்கள் கள்ளத்தராசுகளை வைத்துக்கொண்டு பெரிய அநியாயம் செய்வார்கள். ஆதலால் சுமுத்திரையான தராசை வைத்திருப்பது நியாயமும் கள்ளத்தராசை வைத்திருப்பது கடவுளுக்கு முன்பாக பெரிய குற்றமுமாய் இருக்கிறதென்று தீர்க்கதரிசிகள் அடிக்கடி போதித்து வந்தார்கள். லேவி $19^{36}$ உபா $25^{13}$ நீதி $11^{1}$ $16^{11}$ $20^{10}$ எசே $45^{10}$ ஆமோ $8^{5}$ ஓசி $12^{7}$ மீகா $6^{11}$. பூர்வகாலத்தில் அச்சிடப்பட்ட நாணயங்கள் இல்லாததினால் வியாபாரிகள் பொன் வெள்ளி முதலியவைகளைத் தராசிலே வைத்து நிறைகணித்து வியாபாரம் பண்ணுவார்கள். ஆதி $23^{16}$ $43^{21}$ யோபு $31^{6}$ எரே $32^{10}$. கோதுமை முதலியவைகளைத் தராசிலே வைத்து அதிக திட்டவட்டமாய் அவைகளின் நிறையைக் கணிப்பது பஞ்சத்தின் மூலமாய்வந்த கஷ்டத்தைக் குறிக்கிறது. லேவி $26^{26}$ வெளி $6^{5}$.

**தரிக்கிறது.** 1. Abide, வாசம்பண்ணுகிறது. ஆதி $29^{19}$ யோசு $2^{22}$.

2. Put on, Wear. உடுத்துகிறது. லேவி $16^{4}$ $21^{10}$ உபா $22^{5}$ எஸ்தர் $5^{1}$ யோபு $29^{14}$ ஏசா $59^{17}$ ரோ $13^{12}$ 1 கொரி $15^{53}$ கலா $3^{27}$ எபே $4^{24}$ $6^{11}$ கொலோ $3^{10}$ 1 தெச $5^{8}$.

**தரிசனம், தரிசனை.** Vision. யூதர்கள் அபிப்பிராயப்படி சொப்பனங்களுக்கும் தரிசனங்களுக்கும் அவ்வளவு வித்தியாசம் இல்லை. இவை இரண்டின் மூலமாயும் கடவுள் மனுஷர்களுக்குத் தமது சித்தத்தை வெளிப்படுத்திவருகிறார் என்று நம்பினார்கள். வேதாகமத்தில் இவைகளுக்குள் தோன்றிய வித்தியாசம் கூறவேண்டுமானால் சொப்பனம் என்பது ஒருவன் தன் மனதில் கடவுள் சித்தத்தை அறியும்படி தான் கண்ட அடையாளம். தரிசனம் என்பது தீர்க்கதரிசியின் மனதில் கடவுள் வெளிப்படுத்தின போதனை. இராத்திரியில் கண்ட சொப்பனங்களில் கடவுள் தரிசனமாவார்

அல்லது தேவதூதன் ஒருவன் தரிசனமாவான் என்று யூதர்கள் நினைத்தார்கள். ஆதி $46^{2}$ எண் $24^{3}$ யோபு $4^{13}$ தானி $2^{19}$. ஆதி கிறிஸ்தவர்களுடைய அபிப்பிராயமும் இப்படித்தான் இருந்தது. அப் $16^{9}$. ஒருவன் உபவாசம்பண்ணி, ஜெபஞ்செய்து இச்சையடக்கமாயிருந்தால் அவன் ஞானதிருஷ்டியடைந்து யாதொரு சந்தேகமில்லாமல் கடவுளின் சித்தத்தை அறியக்கூடும் என்று அவர்கள் நினைத்தார்கள். தானி $10^{2}$ அப் $10^{9}$ $11^{5}$ $22^{17}$. இப்படியாக தரிசனங்கள் விசேஷித்த காலங்களில்மட்டும் கடவுள் நியமித்தவர்களுக்கு மாத்திரம் தோன்றும் என்று யாவரும் நினைத்தார்கள்.

தீர்க்கதரிசிகளில் அநேகர் சொப்பனம் விசேஷம் என்று நினையாமல், கடவுள் அருளிச்செய்த சித்தத்தைப்பற்றித் தியானஞ்செய்து, அவருடைய ஏவுதலினால் தாங்கள் அடைந்ததும் தாங்கள் உரைக்கவேண்டியதுமான அறிவுக்குத் தரிசனம் என்று சொல்லி இந்த தரிசனங்களின் ஆவிக்குரிய அர்த்தத்தை உரைப்பார்கள். சங் $89^{19}$ ஏசா $1^{1}$ $2^{1}$ $6^{5}$ எரே $1^{7}$ எசே $3^{12}$ ஆமோ $7^{14}$. இவ்விதமாய் அவர்கள் தரிசனங்களின் ஆவிக்குரிய அர்த்தத்தை அறிவித்தார்கள்.

2. புதிய ஏற்பாட்டிலே தரிசனங்களைப் பற்றிச் சில இடத்தில் சொல்லியிருக்கிறது. பரி. பவுல் தரிசனங்களைக் கண்டான். 2 கொரி $12^{1}$. அவன் தமஸ்குவுக்குப் போகும்போது இயேசுகிறிஸ்து அவனுக்குத் தரிசனமாய்த் தோன்றினதினால் அவன் கிறிஸ்தவனானான். அப் $9^{3}$ 1 கொரி $9^{1}$ $15^{8}$ கலா $1^{11}$. இவன் கண்ட வேறு தரிசனங்கள்: அப் $23^{11}$ $27^{23}$.

பரி. லூக்கா எழுதின புஸ்தகங்களில் சில தரிசனங்களைப்பற்றிப் பார்க்கிறோம். சகரியாவுக்குத் தேவதூதன் தரிசனமானான். லூக் $1^{11}$. மரியாளுக்குத் தேவதூதன் தரிசனமானான். லூக் $1^{26}$. தேவதூதர்கள் மேய்ப்பர்களுக்குத் தரிசனமானார்கள். லூக் $2^{9}$. கொர்நேலியுவுக்குத் தேவதூதன் தரிசனமானது. அப் $10^{3}$. பேதுருவுக்குத் தரிசனமானது. அப் $10^{17}$.

மத்தேயு சுவிசேஷத்தில் தேவதூதன் சொப்பனத்திலே யோசேப்புக்கும் சாஸ்திரிகளுக்கும் தரிசனமானான். மத் $1^{20}$ $2^{12.13\text{-}19}$. இயேசு மறுரூபமடைந்து சீஷர்களுக்குத் தரிசனமாய்த் தோன்றினார். மத் $17^{9}$. வெளிப்படுத்தின விசேஷத்தில் பல தரிசனங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. சில சமயங்களில் தான் கண்ட தரிசனங்களின் அர்த்தத்தைப் பரி. யோவான் சொல்லுகிறான். ஆனால் நான்காம் அதிகாரம் முதற்கொண்டு அக்காலத்திலுள்ள உபத்திரவத்தில் விழப்போகிற கிறிஸ்தவர்களுக்கு ஆறுதலைக் கொடுக்கும்படி தான் எழுதின தரிசனங்களின் அர்த்தத்தை அவன் சொல்லாததினால் அநேகர் அந்தத் தரிசனங்களுக்கு வெவ்வேறான அர்த்தங்களைச் சொல்லி வந்திருக்கிறார்கள். ஞானியம், சொப்பனம் காண்க.

**தரித்திரம், தரித்திரர்.** Poverty. The Poor. யாத் $23^{3}$ $30^{15}$ லேவி $14^{21}$ ரூத் $3^{10}$ யோபு $5^{16}$ நீதி $30^{8}$ $13^{18}$ $23^{21}$ $14^{31}$ $19^{4}$ $22^{9.16}$ $28^{8.11}$ $21^{17}$ ஏசா $14^{30}$ ஆமோ $2^{7}$ $4^{1}$ $5^{11}$ $8^{5}$ மத் $26^{11}$ $11^{5}$ $19^{21}$ மாற் $14^{5}$ லூக் $6^{20}$ $4^{18}$ யோவா $12^{6}$ ரோம $15^{26}$ 2 கொரி $8^{2.9}$ $6^{10}$ கலா $2^{10}$ யாக் $2^{2}$ வெளி $2^{9}$ $3^{17}$. வறுமை காண்க.

**தரியு.** Darius. 1. தரியு ஹிஸ்தாஸ்பிஸ். கி—மு. 521–485 வரையில் பெர்சியா ராஜ்யத்தை அரசாண்ட இவன் ஒரு மகா சக்கரவர்த்தி. தன் தேசத்தில் சிறையிருப்பிலிருந்த யூதர்களுக்கு விரோதமாய் இவன் ஒன்றும் செய்யாமல், அவர்கள் பலெஸ்தீனா தேசத்துக்குத் திரும்பிப்போகவும் அங்கே தங்கள் தேவாலயத்தைக் கட்டிக்கொள்ளவும் உத்தரவு கொடுத்தான். யூதர்கள் அந்த வேலையைச் செய்யும்படி தீர்க்கதரிசிகளாகிய ஆகாயும் சகரியாவும் அவர்களைத் தூண்டும்பொழுது அந்நாட்டிலுள்ள பெர்சியா அதிபதி அவர்கள் நடபடிகளைப்பற்றிச் சந்தேகப்படுவதைத் தரியு அறிந்து ஒரு தாக்கீது எழுதி அந்த வேலையை நடத்துகிறதற்கு உதவியும் செய்தான். எஸ்றா $4^{5}$ $5^{7}$ $6^{1}$ ஆகாய் $1^{1}$ $2^{10}$ சக $1^{1}$.

2. பெர்சியனாகிய தரியு. இவன் கி—மு. 336–330 வரை பெர்சியா ராஜ்யத்தை அரசாண்ட கடைசி ராஜாவாகிய தரியு கதமனுவாக இருக்கலாம். (Darius Codumanus.) நெகே $12^{22}$.

3. மேதியனாகிய தரியு. அகாஸ்வேருவின் மகனாகிய இவன் பெல்ஷாத்சார் மரித்தபின்பு பாபிலோனிய ராஜ்யத்தை அடைந்தான். என்று தானியேல் ஆகமத்தில் சொல்லியிருக்கிறது. தானி $5^{31}$ $9^{1}$ $11^{1}$. பாபிலோனை அரசாண்ட ராஜாக்களில் தரியு என்ற ஒருவனைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. கோரேஸ் என்னும் சக்கரவர்த்தியின் சேனாபதிகளில் காபிரியா (Gobryas) என்னும் பெயர்கொண்ட ஒருவன் கோரேசுக்காக பாபிலோனியாவைப் பெற்று அதிலே தேசாதிபதிகளை நியமித்து, பெல்ஷாத்சாரை ஜெயிக்கும் போர்வீரர்களுக்குத் தலைவனாக இருந்தான் என்று பாபிலோனியர் எழுதி

வைத்த சரித்திரங்களால் அறிவோம். இவனும் மேதியனாகிய தரியுவும் ஒன்றுதான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு.

**தரேயா.** Tahrea. மேவிபோசேத்தின் பேரன். 1 நாளா $9^{41}$.

**தரை.** Ground. ஆதி $18^{2}$ $19^{1}$ $33^{3}$ $38^{9}$ $44^{14}$ யாத் $9^{23}$ லேவி $21^{25}$ நியா $4^{21}$ ரூத் $2^{10}$ 1 சாமு $20^{41}$ 2 சாமு $2^{22}$ யோபு $2^{13}$ சங் $74^{6}$ $89^{44}$ ஏசா $3^{26}$ தானி $8^{18}$ ஆமோ $3^{14}$ மத் $10^{29}$ $15^{35}$ மாற் $9^{20}$ லூக் $22^{44}$ யோவா $8^{6}$ $9^{6}$ $18^{6}$. 'களிமண்தரை' 1 இரா $7^{46}$ **ஸ்தலம், நிலம், பூமி** காண்க.

**தர்கோன்.** Darkon. எஸ்றா $2^{56}$.

**தர்க்க சாஸ்திரி.** Disputer. 1 கொரி $1^{20}$.

**தர்க்கம்.** Dispute. மாற் $9^{34}$ அப் $6^{9}$ $9^{29}$ $15^{2.7}$ $24^{12}$ யூதா $1^{9}$ 1 தீமோ $6^{5}$.

**தர்க்தும்.** Targums. சர்கோன் என்னும் அசீரியா ராஜா ஏறக்குறைய கி—மு. 722—ஆம் சமாரியாவிலிருந்து அசீரியாவுக்குக் கொண்டுபோன இஸ்ரவேலருக்குப் பதிலாக சமாரியாவில் குடியேற்றின அந்நியருக்கு எபிரெயபாஷை சுத்தமாய்த் தெரியாததினாலும் கி—மு. 537—ஆம் முதல் பாபிலோனிய சிறையிருப்பிலிருந்து திரும்பி வந்த யூதர்களுக்குத் தாய்பாஷையாகிய எபிரெயபாஷை நன்றாய்த் தெரியாததினாலும், அக்காலமுதல் பலெஸ்தீனாதேசத்தில் எபிரெயபாஷை அவ்வளவு வழங்கவில்லை. அதற்குப் பதிலாக சாதாரண ஜனங்கள் அரமேய அல்லது சீரியா பாஷையைப் பேசி வந்தார்கள். இதினிமித்தம் எபிரெய பாஷையில் எழுதப்பட்ட பழைய ஏற்பாட்டு வேதாகமங்களை யூதர்கள் அறியவேண்டுமானால், அரமேய பாஷையிலே யாராவது ஒருவர் அதை மொழிபெயர்க்கவேண்டியிருந்தது. இதினால்தான் எஸ்றா முதலியவர்கள் நியாயப்பிரமாணப் புஸ்தகத்தைத் தீர்க்கமாக வாசித்து அரமேய பாஷையில் ஜனங்களுக்கு அதன் அர்த்தத்தைச் சொல்லி விளக்கிக் காட்டினார்கள். நெகே $8^{8}$. அந்தக் காலமுதல் ஜெப ஆலயங்களில் எபிரெய பாஷையில் எழுதப்பட்ட வேதாகமங்களை ஒருவன் நின்று மொழிபெயர்த்துச் சொல்வது வழக்கமாயிற்று. இவனுக்குத் துவிபாஷி என்று அர்த்தங்கொண்ட மெதுர்கெமான் (*Methurgeman*) என்னும் பெயர் இருந்தது. இவன் செய்த மொழிபெயர்ப்புக்குத் தர்க்கும் (*Targum*) என்று பெயர். முதலிலே ஒவ்வொரு துவிபாஷியும் தனக்குத் தெரிந்த மட்டும் எபிரெய வேதாகமத்தை மொழிபெயர்ப்பான். பிந்தின காலங்களில் யூதர்களுக்குள் இருந்த சில பெரிய போதகர்கள் இந்த அரமேய மொழிபெயர்ப்பை எழுதினார்கள். இவ்விதமாய் எபிரெய பாஷையிலிருந்து அரமேய பாஷைக்குத் திருப்பப்பட்ட சில மொழிபெயர்ப்புகள் நமக்குக் கிடைத்திருக்கிறது. நமக்குத் தெரிந்த ஆங்கில தமிழ் மொழிபெயர்ப்புகளைப்போல் தர்க்கும் வேதாகமத்தில் சொல்லப்பட்டவைகளைத் திட்ட நுட்பமாய்க் கூறி, அதோடே எபிரெய பதங்களின் அர்த்தத்தை விளக்கி அதன் வியாக்கியானத்தையும் உரைக்கும்.

**தர்சு.** Tarsus. தற்காலத்துச் சின்ன ஆசியாவின் தென் எல்லையிலே மத்தியதரைக் கடலின் வடபாகத்தை நோக்கியதும், ரோம ராஜ்யத்தைச் சார்ந்ததுமான சீரியா தேசத்தின் வடபாகத்திலே உள்ள சிலிசியா நாட்டில் ஒரு பட்டணம். பரி. பவுல் பிறந்த இந்தப் பூர்வீக தர்சுப்பட்டணத்தினூடே பாய்ந்த ஆறு அவ்விடத்தினின்று விலகி விட்டதினால் அது இப்போது செழிப்பும் மேன்மையும் அற்றுப் பாழாய்க்கிடக்கிறது. இப்பிரதான பட்டணத்தைப்பற்றிய சில விஷயங்களை நாம் அறிந்துகொள்ளலாம்.

பூர்வீகத்தில் அத்தேசத்தார் அங்கே பாயும் ஆறு சங்கமாகிற ஏரியை நல்ல துறைமுகமாக வெட்டி அதன் கரையிலே கோட்டை கொத்தளம் முதலியவைகள் கட்டியிருந்தார்கள். இந்தத் துறைமுகத்துக்கு எகிப்திலிருந்தும் சீரியாவிலிருந்தும் பல கப்பல்கள் வியாபாரத்துக்காக வரும். தர்சுவுக்குச் சமீபத்திலிருந்த மலைகளுக்கு ஊடே சின்ன ஆசியாவில் உள்ள அநேக பெரிய பட்டணங்களுக்கு ராஜபாதை போனதினால், ரோம ராஜ்யத்திலுள்ள எல்லாப் பட்டணங்களிலிருந்தும் தர்சுப்பட்டணத்திற்கு வியாபாரத்துகாக ஜனங்கள் வருவார்கள். வியாபாரிகளையல்லாமல் கல்விமான்களில் அநேகரும் இங்கு வந்து சிறந்த சர்வகலாசாலையை ஸ்தாபித்தார்கள். ஏறக்குறைய கி—மு. 175—ஆம் முதல் சீரியாதேசத்தை அரசாண்ட ராஜாக்கள் தர்சு முதலிய பட்டணங்களைச் சிறப்பித்து அவற்றின் குடிகளுக்கு அநேக சிலாக்கியங்கள் கொடுத்து அநேக யூதர்களை இப்பட்டணங்களில் குடியேற்றினார்கள். ஏறக்குறைய கி—மு. 100—ஆமத்தில் ரோமர் சிலிசியாநாட்டை ஸ்தாபித்து நாற்பது வருஷங்களுக்குப் பிற்பாடு தர்சுப்பட்டணத்தை அந்நாட்டிற்குத் தலைநகரமாக்கி, அதிலுள்ள பெரியவர்களுக்கு ரோம ராஜாங்க பிரஜா சிலாக்கியம் கொடுத்தார்கள். இவ்விதமாய் இந்த சிலாக்கியம்

பவுலின் முற்பிதாக்களுக்கும் அவனுக்கும் கிடைத்தது என்று நினைக்கலாம்.

ஸ்தோயிக்கர் சமயத்தைச் சேர்ந்தவனும் ரோமராயனுகிய அகஸ்துவுக்குப் பல வருஷங்களாகப் போதகனுய் இருந்தவனுமாகிய அத்தேனோடோரஸ் (*Athenodorus*) (கி-மு. 74–கி-பி. 7) என்பவன் கி–மு. 15–ஆண்டில் தர்சுவுக்கு வந்து இதிலே தங்கினுன். இவனும் இவனுக்குப் பின்வந்த இன்னொரு கல்விமானும் இந்தப் பட்டணத்துச் சர்வகலாசாலையில் அதிக அதிகாரம் உடையவர்கள் ஆனதினுல், இந்தச் சர்வகலாசாலையில் படித்த பரி. பவுல் ரோமர்களும் கிரேக்கர்களும் கற்றுக்கொண்ட தத்துவசாஸ்திரம் முதலியவற்றில் தேர்ச்சி அடையும்படிக்கு அவர்கள் உதவிசெய்திருப்பார்கள் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு.

தர்சுப்பட்டணத்தார் இந்தியாதேசத்துக்கு வந்த ஆரியர்கள் வணங்கின வருணதேவனைப்போன்ற ஒரு தேவனைத் தொழுதுவந்தார்கள். இவன் தங்களுக்குத் தானியம் முதலியவற்றை அருளினுன் என்று நம்பி, விமானத்தில் வீற்றிருக்கும் ஒரு விக்கிரகத்தை இவனுக்காக உண்டாக்கி அதைத் தங்கள் தேவாலயத்திலே நிறுத்தினுர்கள். சுப்பிரமணியனைப்போன்ற மகாவீரனும் வில் வாள் தண்டாயுதம் முதலியவற்றைத் தரித்திருந்தவனுமாகிய இன்னொரு தேவனையும் அவர்கள் வணங்கினுர்கள். அப் 9[11.30] 11[25] 21[39] 22[3].

**தர்ஷீஸ்.** Tarshish. பழைய ஏற்பாட்டை எழுதினவர்கள் அடிக்கடி இந்த இடத்தைப்பற்றிப் பேசுகிருர்கள். ஆனுல் அவர்கள் எழுதினவைகளை விசாரிக்கும்போது தர்ஷீஸ் இருக்கும் இடம் இன்னதென்று தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. இது பலெஸ்தீனுவிலிருந்து அதிக தூரத்திலிருந்ததென்றும் மத்தியதரைக் கடலின் மேற்குக் கரையிலிருந்ததென்றும் உத்தேசிக்கலாம். இந்தப் பதம் ஒரு பட்டணத்தையாவது அல்லது ஒரு தேசத்தையாவது குறிக்கலாம்.

சில வசனங்களில் தர்ஷீசைச்சேர்ந்த தீவுகளைப்பற்றிச் சொல்லியிருக்கிறதினுலே தர்ஷீஸ் கடற்கரையிலுள்ள ஓர் ராஜ்யத்தையும் அதைச் சேர்ந்த தீவுகளையும் குறிக்கும். ஒருவேளை இதுவும் தீராசும் (*Tirash*) ஒன்றுதான். ஆதி 10[2].

சிலர் நினைக்கிறபடி இதுவும் பரி. பவுல் பிறந்த தர்சுப்பட்டணமும் ஒன்ருயிருக்கலாம், ஆனுல் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. ஆதி 10[2] 10[4] சங் 72[10] ஏசா 60[9] 66[19] எசே 38[13] யோனு 1[3] 4[2].

வியாபாரிகள் தர்ஷீசிலிருந்து வெள்ளி, இரும்பு, வெள்ளீயம், காரீயம் முதலியவற்றைக் கொண்டுவருவார்கள். எரே 10[9] எசே 27[12].

'தர்ஷீசின் கப்பல்கள்' என்பது தர்ஷீஸ் துறைமுகத்திலிருந்துவந்த கப்பல்களைக் குறிக்காமல், வியாபாரத்துக்காக தூரதேசங்களுக்குப் போகும் ஒருவிதமான பெரிய கப்பல்களைக் குறிக்கிறது. 1 இரா 10[22] 22[48] 2 நாளா 9[21] 20[36] சங் 48[7] ஏசா 2[16] 23[1] எசே 27[25].

**தர்தா.** Darda. இவன் சாலொமோன் காலத்துக்கு முன்னே உள்ள ஒரு மகாவித்வான். இவனைப்பார்க்கிலும் சாலொமோன் ராஜா கல்வியில் சிரேஷ்டமானவன் என்று சொல்லி இருக்கிறது. தர்தா=தாரா 1 இரா 4[31] 1 நாளா 2[6].

**தர்தாக்.** Tartak. அசீரியாவிலிருந்து சமாரியாவுக்கு வந்த அந்நியர் தொழுதுகொண்ட ஒரு தெய்வம். இதைப்பற்றியும் அவர்கள் வணங்கிவந்த நிபேகாஸ் என்னும் தெய்வத்தைப்பற்றியும் இதுவரைக்கும் நமக்கு ஒன்றும் தெரியாது. 2 இரா 17[31].

**தர்த்தான்.** Tartan. அசீரியா பாஷைப் பதமாகிய 'தர்த்தான்' என்பதற்குச் சேனுபதி என்று அர்த்தம். அசீரியா ராஜாக்களாகிய சர்கோனும் சனகெரிபும் இப்பெயர்கொண்ட சேனுபதியைப் பெலிஸ்தியருக்கும் யூதருக்கும் விரோதமாய் அனுப்பினுர்கள். 2 இரா 18[17] ஏசா 20[1].

**தர்பேலியர்.** Tarpelites. அசீரியாவிலிருந்து சமாரியாவுக்குக் குடியேற்றப்பட்ட ஜனம். எஸ்று 4[9].

**தர்ப்பணம்.** Mirror. கண்ணுடி காண்க.



கண்ணுடி.

**தர்மப்பெட்டி.** Treasury. யோவா 8[20]-ல் சொன்ன தருமப்பெட்டி இருந்த இடம் தேவாலயத்தில் யூதர்கள் செலுத்தும் காணிக்

கைக்காக வைக்கப்பட்ட 13 காணிக்கைப் பெட்டிகள் நிற்கும் இடமே. இது ஸ்திரீகளின் பிராகாரத்துக்குப் பக்கத்தில் உள்ள ஒரு கல்மண்டபம். காணிக்கைப்பெட்டிகள் காண்க.

**தர்மம்.** Alms. ஈதல், அறம். 'தர்மசகாயம்.' ரோ $16^{31}$.

'வறியார்க் கொன்றீவதே யீகை, மற்றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.' [குறள்.]

'தர்மம்.' மத் $6^{1}$ அப் $10^{2}$ $24^{17}$ $9^{36}$. 'பிச்சை.' லூக் $11^{41}$ $12^{33}$ அப் $3^{2}$.

**தர்மத்தைப்பற்றிய வேதவசனங்கள்.**

தர்மம் கடவுளுக்குப் பிரியமானது. 2 கொரி $9^{7}$ எபி $13^{16}$.

அதைக் கடவுள் மறந்துவிடமாட்டார். எபி $6^{10}$.

கிறிஸ்து அதற்கு மாதிரி காட்டியிருக்கிறார். 2 கொரி $8^{9}$.

அது பரிசுத்தவான்களின் குணங்களிலொன்று. சங் $112^{9}$ ஏசா $32^{8}$ 2 கொரி $9^{2}$.

அது அன்பில்லாமல் செய்தால் பயன்படாது. 1 கொரி. $13^{3}$.

## தர்மம்.

தேவ பணிவிடைக்கும். யாத் $35^{21-29}$.

பரிசுத்தவான்களுக்கும். ரோ $12^{13}$ கலா $6^{10}$.

வேலைக்காரருக்கும். உபா $15^{12-14}$.

எளியவர்களுக்கும். உபா $15^{11}$ ஏசா $58^{7}$.

பரதேசிகளுக்கும். லேவி $25^{35}$.

சத்துருக்களுக்கும். நீதி $25^{21}$.

சகலருக்கும். கலா $6^{10}$.

கடன் கேட்கிறவர்களுக்கும். மத் $5^{42}$.

பிச்சை கொடுக்கிறதிலும். லூக் $12^{33}$.

ஆதரவற்றவர்களுக்குச் சகாயஞ்செய்வதிலும். ஏசா $58^{7}$.

தேவ ஊழியர்களுக்கு உதவிசெய்கிறதிலும். பிலி $4^{14-16}$.

சரீர உதவிசெய்வதிலும். பிலி $2^{30}$.

ஆடம்பரமில்லாமலும். மத் $6^{1-3}$.

ஐக்கியத்தோடும். ரோ $12^{8}$.

திராணிக்குத் தக்கதாகவும். உபா $16^{10-17}$ 1 கொரி $16^{2}$.

மனப்பூர்வமாயும். யாத் $25^{2}$ 2 கொரி $8^{12}$.

ஏராளமாயும் செய்யவேண்டும். 2 கொரி $8^{7}$ $9^{11-13}$.

## அதைச் செய்யாமை.

சாபத்தை வருவிக்கிறதாயும். நீதி $28^{27}$.

தேவனை நேசியாமைக்கு அத்தாட்சியாகவும். 1 யோவா $3^{17}$.

விசுவாச இன்மைக்கு அத்தாட்சியாகவும் இருக்கிறது. யாக் $2^{14-16}$.

தர்மத்தினால் வரும் ஆசீர்வாதங்களாவன. சங் $41^{1}$ நீதி $22^{9}$ அப் $20^{35}$.

அதைக் குறித்த வாக்குத்தத்தங்களாவன. சங் $112^{9}$ நீதி $11^{25}$ $28^{27}$ பிர $11^{1-2}$ ஏசா $58^{10}$.

அதைக் குறிக்கும் போதனையாவது. லூக் $3^{14}$ $11^{41}$ அப் $20^{35}$ 1 கொரி $16^{1}$ 1 தீமோ $6^{17.18}$.

## திருஷ்டாந்தங்கள்.

இஸ்ரவேலின் பிரபுக்கள்—எண் $7^{2}$. போவாஸ்—ரூத் $2^{16}$. தாவீது—2 சாமு $9^{7-10}$. பர்சிலா முதலானவர்கள்—2 சாமு $17^{28}$. அர்வனா—2 சாமு $24^{22}$. சூனேமியாள்—2 இரா $4^{8-10}$. யூதா—2 நாளா $24^{10.11}$. நெகேமியா-நெகே $7^{70}$. யூதர்கள்—நெகே $7^{71.72}$. யோபு—யோபு $29^{15.16}$. நேபுசராதான்—எரே $40^{4.5}$. யோவன்னாள் முதலானவர்கள்—லூக் $8^{3}$. சகேயு—லூக் $19^{8}$. ஆதி கிறிஸ்தவர்கள்—அப் $2^{45}$. பர்னபா—அப் $4^{36.37}$. தொற்காள்—அப் $9^{36}$. கொர்நேலியு—அப் $10^{2}$. பவுல்—அப் $20^{34}$. ஸ்தேவான் முதலானவர்கள்—1 கொரி $16^{17}$.

## விசேஷித்த திருஷ்டாந்தம்.

இஸ்ரவேலர்—யாத் $36^{5}$. ஏழைக் கைம்பெண்—மாற் $12^{42-44}$. மக்கெதோனியா சபைகள்—2 கொரி. $8^{1-5}$.

**தலீத்தாகூமி.** Talitha Cumi. இயேசுகிறிஸ்து பலெஸ்தீனாதேசத்தில் சஞ்சரித்த காலத்தில் அந்தத் தேசத்தார் சாதாரணமாய் எபிரெயபாஷையைப் பேசாமல் சீரியா என்னும் அரமேய பாஷையைப் பேசிவந்தார்கள். இயேசுகிறிஸ்துவும் ஜனங்களுக்குப் பிரசங்கம்பண்ணும்போது இந்தப் பாஷையை வழங்கினார் என்பதற்குச் சந்தேகமில்லை. பரி. மாற்கு தான் கிரேக்கபாஷையில் எழுதிய சுவிசேஷத்தில் இயேசு சொன்ன சில அரமேயப்பதங்களைச் சொல்லியிருக்கிறான். இவைகளில் 'தலீத்தாகூமி' என்பது ஒன்று. 'தலீத்தா' என்பதற்குச் 'சிறுபெண்ணே' என்றும் 'கூமி' என்பதற்கு 'எழுந்திரு' என்றும் அர்த்தம். மாற் $5^{41}$ $7^{11.34}$ $14^{36}$ $15^{34}$.

**தலை.** Head. தலை அல்ல இருதயமே புத்திக்கு இருப்பிடம் என்று எபிரெயர்கள் நினைத்தாலும் தலை ஜீவனின் இருப்பிடம் என்று நினைத்து அதை மேன்மைப்படுத்தினார்கள். ஆதலால் 1 சாமு $28^{2}$-ல் 'மெய்க்காவலன்' என்பதற்குப் பதிலாகத் 'தலைக்காவலன்' என்று நாம் வாசித்தால் எபிரெய

பதத்தின் அர்த்தத்தையும் எபிரெயர்களுடைய கருத்தையும் பூரணமாய் அறிந்துகொள்வோம்.

இப்படியே 'சிரசின்பேரில் சத்தியம் பண்ணுவது' என்பது பிரதானமான ஆணையைக் குறிக்கிறது. மத் $5^{36}$. அவயவங்களில் தலை முக்கியமானதினால் ராஜா அதிபதி முதலிய பெரியவர்களுக்குத் 'தலைவன்' என்னும் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. எண் $1^{4}$ $10^{4}$ உபா $28^{14}$ ஏசா $9^{14}$. தலைவன் காண்க.

இவ்விதமாய்ப் பரி. பவுல் மனைவிக்குப் புருஷன் தலை என்றும் சபைக்குக் கிறிஸ்து தலை என்றும் சொல்லுகிறான். எபே $4^{15}$ $5^{23}$ கொலோ $1^{18}$ $2^{19}$. 'தலை உயர்த்துகிறது' என்பது மேன்மை பாராட்டுகிறதைக் காட்டுகிறது. ஆதி $40^{13}$ சங் $24^{7}$ $27^{6}$. தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் 'தலையை எடுப்பது' என்பதை இந்தக் கருத்தோடு சொல்லியிருக்கிறார்கள். சங் $110^{7}$. தலையின்மேல் புழுதியை வாரிப் போட்டுக்கொள்வதுபோல் சிரசின்மேல் கையை வைப்பதும் தலையை மூடிக்கொள்வதும் துக்கத்துக்கு அடையாளங்கள். 2 சாமு $1^{2}$ $13^{19}$ $15^{30}$ புல $2^{10}$ எரே $2^{37}$ $14^{3}$. அப்படியே தலைப்பாகையை அவிழ்த்துத் தலைமயிரைப் பரப்புகிறதும் தலைமயிரைச் சவரம்பண்ணுவதும் துக்கத்துக்கு அடையாளங்கள். லேவி $10^{6}$ $13^{45}$ யோபு $1^{20}$ ஏசா $15^{2}$ $22^{12}$ எசே $7^{18}$ $24^{17}$ ஆமோ $8^{10}$. ஆசாரியர் தலைமயிரைச் சிரைக்கக்கூடாது. லேவி $21^{5}$. காஞனியரைப் போல பொய்த் தேவர்களுக்கு நேர்ந்துகொண்ட பொருத்தனைக்காக இஸ்ரவேலர் தங்கள் தலைமயிரைச் சிரைக்கக்கூடாது லேவி $19^{27}$ உபா $14^{1}$. மற்றப்படி இறந்துபோனவர்களுக்காக கொண்ட துக்கம் முடிந்ததையும், நசரேய பொருத்தனை முடிந்ததையும் லேவியன் தன்னைச் சுத்திகரித்துக்கொண்டதையும் குறிக்கும்படி தலைமயிரைச் சவரம்பண்ணுவது வழக்கம். எண் $6^{9}$ $8^{7}$ உபா $21^{12}$ அப் $18^{18}$. பலியிடும்பொழுது மிருகத்தின் தலையின்மேலும், ஆசீர்வாதம் கொடுக்கும்பொழுதும், பிரதிஷ்டை செய்யும்பொழுதும் நியமிக்கப்பட்டவன் தலையின்மேலும், கைகள் அடையாளமாய் வைக்கப்பட்டது. லேவி $16^{21}$ ஆதி $48^{14}$ எண் $27^{23}$ அப் $6^{6}$. மனுஷனைக் குறிப்பிக்கும்படி எபிரெயர்கள் எப்படி 'முகம்' என்னும் பதத்தைச் சொன்னார்களோ அப்படியே 'தலை' என்னும் பதத்தையும் சொன்னார்கள். எண் $1^{3}$ சங் $7^{16}$ நீதி $25^{22}$ ரோ $12^{20}$. கூந்தல் காண்க.

**தலை சிரைத்தல்.** Shaving the head. கூந்தல், தலை காண்க.

**தலைமயிர்.** Hair. கூந்தல், தலை காண்க.

**தலை முக்காடு.** Muffler. ஏசா $3^{19}$. உடை காண்க.

**தலைச்சன்.** First born. சங் $78^{51}$ $105^{36}$ $136^{10}$. ஜேஷ்டபுத்திரன், தலைப்பிள்ளை, முதற்பேறு, மூத்தமகன் காண்க.

**தலைச்சீரா.** Helmet. 1 சாமு $17^{5.38}$ 2 நாளா $26^{14}$ ஏசா $59^{17}$ எரே $46^{4}$ எசே $23^{28}$ $27^{10}$ $38^{5}$ எபே $6^{17}$ 1 தெச $5^{8}$. ஆயுதம் காண்க.

**தலைப்பிள்ளை.** First born. உபா $25^{6}$ சங் $135^{8}$ ஏசா $14^{30}$. ஜேஷ்ட புத்திரன், தலைச்சன், முதற்பேறு, மூத்தமகன் காண்க.

**தலைமாடு.** 'Bolster' 1 சாமு $19^{13.16}$ $26^{7.11.12.16}$. இந்த ஆறு வசனங்களில் எழுதின எபிரெய பதத்தின் சரியான அர்த்தம் என்னவென்றால் 'தலைமாடு' என்பது அல்ல, 'தலை இருக்கும் இடம்' என்பதே. வேறு வசனங்களில் 'தலைமாடு' என்பது சொல்லப்படுகிறதில்லை.

**தலைமுறை.** Generation. சங் $12^{7}$ $100^{5}$ ஏசா $30^{10}$ $51^{9}$ கொலோ $1^{25}$.

**தலையணை.** Pillow. எசே $13^{18}$ மாற் $4^{38}$—ல் சொன்ன தலையணை படவைத் தண்டு வலித்தவர்கள் உட்கார்ந்திருந்த பலகையின்மேல் போடப்பட்டிருந்த சிறு மெத்தையைக் குறிக்கும்.

**தலையாரி.** Officer. காவலாளர், சேவகர் காண்க.

**தலைவன், பிரபு.** Prince. அதிபதி, விசாரணைக்காரன், தலைவன், பிரபு முதலிய வற்றைக் காட்ட எபிரெய பாஷையில் பல பதங்கள் உண்டு. வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் இந்தப் பதங்களை விசாரித்து ஒவ்வொரு எபிரெய பதத்தின் அர்த்தத்தையும் தெளிவாய் அறிந்து அதற்கு அதின் அர்த்தத்தைக் காட்டும்படி தகுந்த தமிழ்ப்பதத்தை அந்த எபிரெய பதங்கள் வரும் இடங்களிலெல்லாம் பிரயோகியாமல், ஒரே எபிரெய பதத்துக்குப் பல தமிழ்ப் பதங்களை மாறி மாறி சொல்லியிருக்கிறதினாலே பல வசனங்களில் இந்தப் பதங்களின் விசேஷித்த அர்த்தம் தோன்றவில்லை. இவை எல்லாவற்றையும் திருத்துவது நம்மாலே முடியாத காரியமானாலும், தமிழ் வேதாகமத்தை வாசிக்கிறவர்கள் பல வசனங்களைத் தெளிவாய் அறியும்படி நாம் எபிரெய பதங்களையும் அவைகளுக்குப் பதிலாக தமிழ்

**வேதாகமத்தில் சொல்லியிருக்கிற தமிழ்ப் பதங்களையும் எடுத்துக் காட்டுகிறோம்.**

1. **சர்.** *(Sar).*

(i) மற்ற எபிரெய பதங்களைப்பார்க்கிலும் இதுதான் சாதாரண பதம். இதற்கு அதிகாரமுடையவன் என்றும் அரசாட்சி செய்கிறவன் என்றும் அர்த்தம். இந்தப் பதம் அதிகாரிகளையும் ராஜாக்கள் நியமித்த உத்தியோகஸ்தர்களையும் சேனாபதிகளையும் ராஜாவின் வீட்டில் உத்தியோகம் செய்கிறவர்களையும், இஸ்ரவேலரின் விசாரணைக்காரரையும் குறிக்கிறது. பிந்தினகாலத்தில் அதிபதி என்னும் அர்த்தங்கொண்ட இந்தப் பதம் ஜாதிகளின் தூதர்களுக்கும் பிரதான தூதனாகிய மிகாவேலுக்கும் சொல்லப்பட்டிருக்கிறது. தானி $10^{13.20}$ $12^{1}$.

'சர்' என்பதற்குத் தமிழ் வேதாகமத்தில் சொன்ன பதங்களாவன:

'அதிபதி' எண் $21^{18}$ தானி $10^{13}$ $12^{1}$ எரே $51^{23}$.

'அதிகாரி' நீதி $8^{16}$.

'தலைவன்' ஆதி $40^{2.16}$ 1 சாமு $22^{2}$ ஆதி $39^{21}$ தானி $1^{7}$.

'பிரபு' ஆதி $12^{15}$ 1 சாமு $18^{30}$ 1 இரா $11^{3}$ $9^{22}$ 2 இரா $24^{12}$ ஏசா $21^{5}$ தானி $10^{20}$.

'விசாரணைக்காரன்' யாத் $1^{11}$.

(ii) 'சர்' என்னும் ஆண்பால் பதத்துக்கு **சாரா** *(Sārā)* அல்லது **சாராள்** என்பது பெண்பால். இது ராஜகுலத்துப் பெண்களையும் ராஜாத்திகளையும் குறிக்கிறது. இதற்கு 'பிரபுக்கள் குலத்தாள்' 'பெரியவள்' 'நாயகி' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 1 இரா $11^{3}$ புல $1^{1}$ நியா $5^{29}$ ஏசா $49^{23}$.

2. **நாகீட்** *(Nāgid).*

'நாகிட்' என்பதற்கு உயர்ந்தவன், ஜனங்களால் நன்றாய்க் காணப்பட்டவன், கீர்த்தி பெற்றவன் என்று அர்த்தம். பெரிய உத்தியோகத்தை நடத்துகிறவனுக்கு இந்தப் பதம் வழங்கப்படும்.

இதற்குத் தமிழ் வேதாகமத்தில் சொன்ன பதங்களாவன:

'அதிபதி' 1 சாமு $9^{16}$ $10^{1}$ $13^{14}$ $25^{30}$ 2 சாமு $5^{2}$ 2 இரா $20^{5}$.

'அரமனைத் தலைவன்' 2 நாளா $28^{7}$.

'தலைவன்' 2 நாளா $11^{22}$.

'தேவாலய விசாரணைக்கர்த்தன்.' 2 நாளா $31^{13}$.

'பொக்கிஷ பிரதானி.' 1 நாளா $26^{24}$.

'வம்சத்தின் தலைவன்.' 2 நாளா $19^{11}$.

3. **நாசீ.** *(Nāsi).*

'நாசீ' என்பதற்கு உயர்த்தப்பட்டவன் என்று அர்த்தம். இது கோத்திரத் தலைவர்களுக்குச் சாதாரணமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. எசேக்கியேல் தான் தரிசனத்தில் கண்ட ராஜ்யத்தலைவனுக்கு இந்தப் பெயர் சொல்லுகிறான். இதற்குத் தமிழ் வேதாகமத்தில் சொன்ன பதங்களாவன:

'பிரபு' ஆதி $17^{20}$ $23^{6}$ $34^{2}$ யாத் $34^{31}$ எண் $13^{2}$.

'அதிபதி' எஸ்றா $1^{8}$ எசே $34^{24}$.

4. **நாடீப்.** *(Nādib).*

'நாடீப்' என்பதற்கு விரும்புகிறவன், இஷ்டமானவன், சிறந்த குணமுள்ளவன் என்று அர்த்தம். பல வசனங்களில் இது சாதாரணமாய்ப் பன்மையில் வருகிறது. வழக்கமாய் இதற்குப் பிரபு என்று தமிழ் வேதாகமத்தில் சொல்லியிருந்தாலும் வேறு பதங்களும் இதற்கு வழங்கியிருக்கிறது. இதற்குத் தமிழ் வேதாகமத்தில் சொன்ன பதங்களாவன:

'பிரபு' 1 சாமு $2^{8}$ சங் $47^{9}$ $107^{40}$ நீதி $8^{16}$.
'மேன்மக்கள்' எண் $21^{18}$.

'அதிபதி' சங் $83^{11}$.

5. இந்தப் பதங்களைத்தவிர சில வசனங்களில்மாத்திரம் தோன்றிய வேறே பதங்களும் உண்டு. இவைகளில் சிலவற்றைச் சொல்லுவோம்.

அவையாவன:—

**நாசீக்.** *(Nāsik)*= நியமிக்கப்பட்டவன், 'பிரபு.' சங் $83^{11}$.

**பர்தெமீம்.** *(Partemim)*= நடத்துகிறவன் 'ராஜகுலத்தார்.' தானி $1^{3}$.

**காத்சீன்.** *(Qātsin)* = நியாயத்தீர்ப்புச் செய்கிறவன்.

'அதிபதி' யோசு $10^{24}$.

'சேனாபதி' நியா $11^{6}$.

**ஷாலீஷ்.** *(Shālish)* = அதிகாரமுடையவன்.

'அதிபதி' யாத் $15^{4}$. 'சேனாபதி' 2 இரா $9^{24}$.
'சேர்வைக்காரர்' 1 இரா $9^{22}$.

**செகானீம்.** *(Segānim)* = பிரதிநிதி.

'அதிபதி' எசே $23^{6.12}$.

'அதிகாரி' எரே $51^{23}$.

**ராசோன்.** *(Rāzon)*= பெரியவன்; ரேத்சோன் என்னும் ராஜாவின் பெயர் இந்தக் கருத்தைக்கொண்டது. 1 இரா $11^{23}$.

'தலைவன்' நீதி $14^{28}$.

தானியேல் என்னும் புஸ்தகத்தில் பெர்சியா ராஜ்யத்தின் பல வரிசையைச்சேர்ந்த பிரபுக்களுக்கு விசேஷித்த பெயர்கள் எழுதப்பட்டிருக்கிறது. இந்தப் பதங்களின் அர்த்தத்தைத் திட்டநுட்பமாய்ச் சொல்வது அரிது. தானி $3^{2.27}$ $6^{2.7}$.

புதிய ஏற்பாட்டிலே 'ஆளுகிறவன்' என்று அர்த்தங்கொண்ட மூன்று பதங்கள் உண்டு.

1. அர்கேகஸ். (*Archegos*).

'அதிபதி' அப் $3^{15}$ $5^{31}$ எபி $2^{10}$.

'துவக்குகிறவர்' எபி $12^{2}$.

2. அர்கோன். (*Archon*).

'தலைவன்' மத் $9^{34}$ $12^{24}$ மாற் $3^{22}$.

'அதிகாரி' மத் $20^{25}$.

'பிரபு' 1 கொரி $2^{6.8}$ எபே $2^{2}$ வெளி $1^{5}$.

3. ஏகெமோன். (*Hēgemon*).

'அதிபதி' மத் $2^{6}$. **அதிபதி, சேனுபதி** காண்க.

**தல்போன்.** Dalphon. ஆமானுடைய இரண்டாம் மகன். எஸ்தர் $9^{7}$.

**தல்மனூத்தா.** Dalmanutha. இயேசுகிறிஸ்து நாலாயிரம்பேரைப் போஷித்த பிறகு, கலிலேயாக்கடலைத் தாண்டி இந்த தேசத்துக்கு வந்தார். மாற் $8^{10}$ மத் $15^{39}$-ல் கண்ட இப்பதத்துக்குப் பதிலாக சில கிரேக்க கையெழுத்துப் பிரதிகளில் 'மக்தலா' என்று சொல்லியிருக்கிறதினுல், தமிழ் வேதாகமத்திலும் 'மக்தலா' என்று சொல்லியிருக்கிறது. இந்த வசனத்தில் 'மக்தலா' என்பதற்குப் பதிலாக பூர்வீகத்தில் எழுதப்பட்ட வேறு சில முக்கியமான கையெழுத்துப் பிரதிகளில் 'மகடன்' (*Magadan*) என்று சொல்லியிருக்கிறது. இந்தப் பெயர்கள் குறிக்கும் இடங்கள் இன்னதென்று நமக்குத் தெளிவாய்த் தெரியாது.

**தல்மாத்தியா.** Dalmatia. இது மத்திய தரைக் கடலைச்சார்ந்த ஆத்ரியாதிக் கடலின் கிழக்குக்கரையிலே ரோமர் ஸ்தாபித்த இல்லிரிக்கம் என்னும் நாட்டின் தென்பாகத்திலே உள்ள ஒரு மலைநாடு. தீத்து இந்த நாட்டுக்குப் போய் அவ்விடத்தில் சுவிசேஷத்தைப் பிரபல்லியமாக்கின காலமுதல் அங்கே ஒரு கிறிஸ்தவ சபை இருக்கிறது. 2 தீமோ $4^{10}$.

**தல்மாய்.** Talmai.

1. எப்ரோனில் வசித்த ஓர் அந்நிய ஜாதி. இவர்கள் ஆனுக்கியர்களைப்போல ராக்ஷதர்கள். காலேப் இவர்களை ஜெயித்தான். எண் $13^{22}$ நியா $1^{10}$ யோசு $15^{14}$.

2. கேசூர் ராஜாவின் மகன். தாவீது இவனுக்குத் தன் மகளை விவாகஞ்செய்து கொடுத்தான். 2 சாமு $3^{3}$ $13^{37}$.

**தல்முத், பாரம்பரியம்.** Talmud. Tradition. இயேசுவும் பவுலும் முன்னோர்களுடைய பாரம்பரியத்தைப் பற்றிப் பல தடவை பேசுகிறார்கள். மத் $15^{2.3.6}$ மாற் $7^{3.5.8.9.13}$ கலா $1^{14}$ கொலோ $2^{8}$.

யூதர்கள் கைக்கொண்ட பாரம்பரியங்களைப் பற்றித் தெளிவாய் அறியவேண்டுமானால் ரபிமார் இயற்றிய 'தல்முத்' என்னும் நூலையும் அதற்கு முந்தின நூல்களையும் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

'சொல்லப்பட்ட பிரமாணம்' வேறே, 'எழுதப்பட்ட பிரமாணம்' வேறே என்று யூதசாஸ்திரிகள் போதித்து வந்தார்கள். 'எழுதப்பட்ட பிரமாணம்' மோசே இயற்றிய ஐந்து ஆகமங்களில் முற்றிலும் அடங்கி இருக்கிறது என்றும்; அது அவன் இஸ்ரவேலருக்குக் கற்பித்த எல்லாப் பிரமாணங்களுக்கும் சுருக்கமானதினால் அவற்றின் அர்த்தத்தைப் பூரணமாய் விளக்கிக் காட்டும்படி சீனாய் மலையில் கடவுள் தனக்குச் சொன்னவைகளை அவன் யோசுவாவுக்குச் சொன்னான் என்றும்; யோசுவா இவைகளை மூப்பர்களுக்குச் சொல்ல மூப்பர்கள் தீர்க்கதரிசிகளுக்கும், தீர்க்கதரிசிகள் எஸ்றா ஸ்தாபித்த 'பெரிய ஜெப ஆலயம்' என்று பெயர் கொண்ட சங்கத்தாருக்கும் அவைகளைச் சொன்னார்கள் என்றும் நம்பினார்கள். இது எப்படியாயினும் எஸ்றாவின் காலமுதல் ஜனங்கள் ஊர்களுக்கும் சந்தைகளுக்கும் வரும்போது திங்கள் வியாழக்கிழமைகள் தோறும் ஜெபஆலயங்களில் நியாயப்பிரமாணத்தை வாசிப்பதும் அரமேய பாஷையில் வியாக்கியானத்துடனே அதன் அர்த்தத்தைச் சொல்லுவதும் வழக்கமாயிற்று. இந்த வியாக்கியானங்களுக்கு 'விசாரணை' என்று அர்த்தங்கொண்ட மித்ராஷ் (*Midrash*) என்று பெயர். நெகே $8^{8}$. பிந்தின காலங்களில் இந்த 'மித்ராஷ்' எல்லாவற்றையும் சேர்த்து அதற்கு மிஷ்னு அல்லது 'இரண்டாம் நியாயப்பிரமாணம்' என்று பெயரிட்டார்கள். இந்த மிஷ்னு எழுதப்பட்டகாலத்தில் ரபிமார் கற்பித்த போதகமெல்லாவற்றையும் திரட்டிக் கூறுவது கூடாதகாரியமானதினாலும், பிந்தின காலங்களில் பெரிய ரபிமார் புதிய போதகங்களை உபதேசித்ததினாலும், முதல் மிஷ்னுவைத் தவிர வேறு நூல்களும் உண்டாயின. 'பிரபு' என்னும் மறுபெயர் கொண்டவனும்

கல்வியில் சிரேஷ்டனுமாகிய எகுதா என்பவன் தன் காலத்துக்கு முந்தினவர்கள் எழுதின இந்த நூல்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஏறக்குறைய கி-பி. 200—ஆம் நமக்குத் தெரிந்த மிஷ்னுவைக் கடைசியாக எழுதினான். இதில் பண்டிகைகள், பெண்கள், தீங்கு, பரிசுத்தமானவை இவைகளைப்பற்றி விபரமாய்ச் சொல்லியிருக்கிறது.

'எழுதப்பட்ட நியாயப்பிரமாணத்தில்' கூறின எல்லாவற்றையும் மிஷ்னு எப்படி விபரமாய்ச் சொல்லுகிறதோ, அப்படியே மிஷ்னுவில் கற்பித்த எல்லாவற்றையும் விபரமாய் அறிவிக்கும்படி 'கல்வி' என்று அர்த்தங்கொண்ட தல்மூத் என்னும் நூலை யூதரபிமார் இயற்றினார்கள். கோடா கோடி பாரம்பரியங்கள், வியாக்கியானங்கள், தர்க்கசாஸ்திரங்கள் முதலியவை அடங்கிய கலாசாகரமாகிய இந்தத் தல்மூத்தை வேதசாஸ்திர சாலைகளில் உள்ள மாணாக்கர் படித்து வந்தார்கள். கவனிக்கவேண்டிய அநேக விஷயங்கள் இதில் இருந்தபோதிலும் வீணை சடங்காசாரங்களைப்பற்றிய எண்ணிறந்த பிரமாணங்களும் பிரயோஜனமற்ற விஷயங்களைப்பற்றிய ஆழ்ந்த தர்க்கங்களும் அதிகமாய் இருக்கிறபடியால் இதை வாசிக்கிறது அதிக கஷ்டம்.

இதில் கண்ட நன்மொழிகளுக்குச் சில உதாரணங்களாவன:—

தீது பேசுகிறதற்கு வாய் திறவாதே.

நாம் விரும்பாதவைகளை மற்றவர்கள் நமக்குச் செய்யாதபடிக்கு அவர்கள் விரும்பாததை நாம் அவர்களுக்குச் செய்யக் கூடாது.

ஏழைகளுக்குச் சகாயம் செய்யாதவர்கள் வைத்தியனுக்குச் சம்பளம் கொடுப்பார்கள்.

மத்தியானத்தில் தீபம் ஏற்றுவது ஏன்? பெரிய குடத்தில் ஆடும் சிறிய காசு அதிக சத்தம் செய்யும்.

மாணாக்கர்களுக்குப் போதனை கொடுக்கப்படாததினாலே எருசலேம் நகரம் அழிந்தது.

பள்ளிக்கூடத்துக்குப் போகும் சிறுபிள்ளைகளினாலே உலகம் மீட்கப்படுகிறது; தேவாலயத்தைத் திரும்பக் கட்டும்பொழுதுகூட பிள்ளைகளுக்குப் புத்திபோதனை கொடாமல் இருக்கக்கூடாது.

கல்விமான் யாரென்றால் எல்லாரிடத்திலிருந்தும், எல்லாவற்றிலிருந்தும் கற்றுக்கொண்டவன்; வல்லவன் யாரென்றால் பொறுமையுள்ளவன்; ஆஸ்திக்காரன் யாரென்றால் தனக்குண்டானவைகளில் திருப்தியுள்ளவன்; கீர்த்திமான் யாரென்றால் மற்றவர்களை மேன்மைப்படுத்துகிறவன்.

மேற்கூறியவற்றைப்போன்ற ஆயிரக்கணக்கான நல்ல உவமைகளும் பழமொழிகளும் தல்மூத்தில் இருந்தும், இயேசு கண்டித்த பாரமான பிரமாணங்கள் இதில் ஏராளமாய் இருக்கின்றன. தனது சட்டையிற் ஊசியைக் குத்திவைத்திருந்த தையற்காரன் ஓய்வுநாளில் அதை எடுக்க மறந்துவிட்டு அதோடு நடந்தால், அவன் இரும்பைச் சுமந்துகொண்டு போனதினாலே ஓய்வுநாளை மீறி கடவுளுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தவனோ இல்லையோ என்பதும், காலற்றுப் போனவன மரக்கால் போட்டுக்கொண்டு ஜெப ஆலயத்துக்கு நடக்கலாமோ நடக்கக் கூடாதோ என்பதும்; ஜெபம் பண்ணும்போது ஒருவன் தனது பாதங்களைச் சேர்த்து நிற்கவேண்டுமோ அல்லது விரித்து நிற்க வேண்டுமோ என்பதும் முதலிய வீணை காரியங்களைப்பற்றித் தல்மூத்தில் வாசிக்கிறோம்.

யூத வேத சாஸ்திரிகள் 'சொல்லப்பட்ட பிரமாணம்' ஆகிய இந்தத் தல்மூத்தும் மோசேயின் நியாயப்பிரமாணமும் ஒரேவிதமான அதிகாரம் உடையவைகள் என்றும், வேதாகமத்திலுள்ள பிரமாணங்களைப்போலவே தல்மூத்திலுள்ள பிரமாணங்களும் பிரதானமானவைகள் என்றும் அபிப்பிராயங் கொண்டார்கள்.

தல்மூத்திலுள்ள கற்பனைகளை இயற்றின ரபிமார்கள் இயேசுவின் காலத்திலும் அதற்குப் பிந்தின நூற்றாண்டுகளிலும் ஜீவித்ததினால் கிறிஸ்துமதத்தைப்பற்றி அவர்களுக்குத் தெரியும் என்று நாம் சொல்லத் துணியலாம். ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த வேதசாஸ்திரிகள் கிறிஸ்தவர்களைக் குறித்தாவது கிறிஸ்துமதத்தைக் குறித்தாவது இதுவரைக்கும் இந்தப் பெரிய கலாசாகரத்தில் ஒன்றும் தெளிவாய்க் கண்டுபிடிக்கவில்லை. பாரம்பரியம் காண்க.

**தல்மோன்.** Talmon. தேவாலயத்தின் வாசற்காவலாளரில் ஒரு குடும்பம். 1 நாளா $9^{17}$ எஸ்றா $2^{42}$.

**தவழ்கிறது.** Creep. 1 சாமு $14^{13}$.

**தவளை.** Frog. தவளைகள் எபிரெயர்களுக்கு அருவருப்பானவைகள். அவைகள் எகிப்தியர் வணங்கிய 'ஹக்கா' என்னும் தெய்வத்துக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டவைகள். இரண்டாம் வாதையில் தவளைகள் தங்

கள் தேசத்தில் அதிகமாய்ப் பரவினதினாலும் தங்கள் மந்திரவாதிகள் அவைகளை அகற்ற சக்தியற்றவர்களாய் இருந்ததினாலும், அந்தத் தேவன் தங்களோடு கோபமாய் இருக்கிறான் என்று அவர்கள் ஆச்சரியப்பட்டிருப்பார்கள் என்பதை நாம் நினைக்கலாம். யாத் 8[3] லேவி 11[10] சங் 78[45] 105[30]. பரி. யோவான் தவளையைச் சர்வ அசுத்தத்திற்கும் அடையாளமாகச் சொல்லுகிறான். வெளி 16[13]. பலெஸ்தீனா தேசத்தில் தவளைகளும் தேரைகளும் வெகு சாதாரணம்.

**தவிக்கிறது, தவிப்பு.** Sigh சங் 31[10] ஏசா 21[2] 35[10].



தவிடு.

**தவிடு.** Husk. லத்தீன் பாஷையில் *Ceratonia Siliqua* என்று பெயர்கொண்டதும் பத்து அங்குலநீளமான காய்களை உடையதுமான ஒரு ஜாதி மரம் பலெஸ்தீனா தேசத்தில் உண்டு. இது மே மாசம் முதல் ஆகஸ்டு மாசம் வரைக்கும் காய்க்கும். இந்தக் காய்களில் தின்கிறதற்கேற்ற சதையும் அந்தச் சதைக்குள் அநேக நல்ல விதைகளும் உண்டு. நமது தேசத்திலே வெள்வேலின் நெற்றுக்களை ஆடுகளுக்கு இரையாக உபயோகிப்பது போல, பலெஸ்தீனா தேசத்தில் இந்த மரத்தின் பழங்களையும் மிருகங்களுக்கு இரையாகக் கொடுப்பார்கள். கஷ்டகாலங்களில் ஏழைகள் இவைகளைத் தின்பார்கள். இந்த மரத்தின் பழங்களுக்குத்தான் லூக்கா சுவிசேஷத்தில் தவிடென்றுசொல்லியிருக்கிறது. ஆகையால் கெட்டகுமாரன் நமக்குத்தெரிந்த தவிட்டை அல்ல இந்த மரத்தின் பழங்களைத் தான் சாப்பிட்டான் என்று நாம் நினைக்க வேண்டும். லூக் 15[16]. வெட்டுக்கிளிகளை அல்ல இந்தப் பழங்களைத்தான் யோவான் ஸ்நானகன் சாப்பிட்டான் என்று அநேகர் நினைக்கிறார்கள். மத் 3[4].

**தழல்.** 'Glowing Coals.' பலெஸ்தீனா தேசத்தாருக்கு நிலக்கரியைப்பற்றித் தெரியாததினால், அத்தேசத்தார் விறகுக்காக பல மாதிரி மரங்கள் வைத்து அதின் விறகையும் கரியையும் நெருப்புக்காக உபயோகிப்பார்கள். 1 இரா 19[6] ஏசா 6[6] 44[14] சங் 120[4]. அவர்கள் கரியைக் கணப்புமுட்டியிலே வைத்துக் குளிர்காய்வார்கள். எரே 36[22] மாற் 14[54]. இந்த அடுப்புக்கரியும் அதன் தழலும் சில வசனங்களில் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. 2 சாமு 14[7] 29[9] சக 12[6] சங் 18[8] 140[10] நீதி 6[28] 25[22] எசே 10[2] உன். பா 8[6].

**தழுவணை.** Cushion. எசே 13[18. 20]. தலையணை காண்க.

**தழை.** Sprouts. A V Mallows. R. V. Salt-wort. இதற்குரிய எபிரெய பதங்களை நாம் திட்டமாய் ஆராய்ந்து பார்க்கும்போது இது தழையை அல்ல ஒருவிதமான செடியைக் குறிக்கிறது. சாக்கடலின் கரையிலுள்ள சதுப்புநிலங்களில் வளரும் இந்தச் செடியினுடைய புளிப்பான இலைகளை ஜனங்கள் கஷ்டகாலங்களில் சாப்பிடுவார்கள். யோபு தனக்குவந்த கஷ்டகாலத்தைக் குறிக்கும்படி சாக்கடலின் கரையில் வளர்ந்த பிரயோஜனமற்ற முட்செடிகள் இருந்த இடத்திலுள்ள இந்தப் புளிப்பான செடியைப பிடுங்கித்தின்பதை உவமையாகச் சொல்லுகிறான். யோபு 30[4].

**தழைக்கிறது.** Make to flourish. யாத் 1[21].

**தளகர்த்தன்.** A. V. Captain. R. V. Marshal. சேனாபதிகளில் மேலான அதிகாரமுடைய ஒரு அதிபதி. எபிரெய பதங்களை விசாரிக்கும்போது அசீரியா ராஜாவின் அரமனையில் ராஜகட்டளைகளைக் களிமண் பலகைகளில் பதிவுசெய்கிறவர்களுக்கு இப்பெயர் முதலிலே சொல்லப்பட்டது என்று அறிகிறோம். எரே 51[27] நாகூ 3[17].

**தளம்.** Floor. 1 இரா 6[15.30] 7[7]. வீடு காண்க.

**தளம்பினவன்.** Unstable. ஆதி 49[4].

**தளருகிறது.** Sack. செப் 3[16].

**தளவாடம்.** Tackling (R. V. Mg. Furniture.) இந்தப் பதம் கப்பலின் பாய், பாய்

மரம், தண்டு, சுக்கான்கள் முதலியவற்றைச் சேர்ந்த கயிறு முதலானவைகளைக் குறிக்கிறது. அப் $27^{19}$.

**தள்ளுகிறது.** Put away, divorce. லேவி $21^{14}$ $22^{13}$ எண் $30^{9}$ உபா $24^{1}$ $22^{19}$ ஏசா $50^{1}$ எரே $3^{1}$ எசே $44^{22}$ மத் $1^{19}$ $5^{31}$ $19^{7}$ மாற் $10^{4}$ லூக் $16^{18}$ 1 கொரி $7^{11}$.

**தள்ளுண்டவள்.** Cast away. மீகா $4^{6.7}$.

**தள்ளுதற்சீட்டு.** Writing of divorce. உபா $24^{1.3}$ ஏசா $50^{1}$ மத் $5^{31}$ $19^{7}$ மாற் $10^{4}$. **கலியாணம்**, § 9, காண்க.

**தள்ளுபடி ஆகமம்.** Apocrypha. அப்போகிரிப்பா, ஞானம், நீதிநூல், மக்கபேயர், யூதீத் ம. காண்க.

**தள்ளுபடி சுவிசேஷங்கள்.** Apocryphal Gospels. **சுவிசேஷம்** காண்க.

**தறிக்க.** Cut off. உபா $25^{12}$ நியா $1^{6}$ 2 சாமு $4^{12}$ மத் $5^{30}$ $18^{8}$ மாற் $9^{43-45}$ கலா $5^{12}$.

**தற்பொழிவு.** Self interest. எரே $22^{17}$. பொருளாசை காண்க.

**தன்கூமேத்.** Tanhumeth. கெதலியாவினிடத்துக்கு வந்த எபிரெய சேனாபதிகளில் ஒருவன். 2 இரா $25^{23}$ எரே $40^{8}$.

**தன்னா.** Dannah, யோசு $15^{49}$.

## தா.

**தாகம்.** Thirst. நியா $15^{18}$ யோபு $24^{11}$ சங் $42^{2}$ $63^{1}$ $69^{21}$ ஏசா $55^{1}$ $44^{3}$ எரே $48^{13}$ $49^{10}$ மத் $5^{6}$ யோவா $4^{13.15.}$ $6^{35}$ $7^{37}$ $19^{28}$ ரோ $12^{20}$ 1 கொரி $4^{11}$ 2 கொரி $11^{27}$ வெளி $7^{16}$ $22^{17}$.

**தாகாஸ்.** Tahash. நாகோரின் மகன். ஆதி $22^{24}$.

**தாகாத்.** Tahath.

1. ஒரு லேவியன். 1 நாளா $6^{24}$.

2, 3. எப்பிராயீம் கோத்திரத்தைச் சேர்ந்த இரண்டு குடும்பங்கள். 1 நாளா $7^{20}$.

4. வனாந்தரத்தில் இஸ்ரவேலர் சந்தித்த ஒரு ஸ்தலம். இது இப்பொழுது நமக்குத் தெரியாது. எண் $33^{26}$

**தாகான்** Tahan. எப்பிராயீம் கோத்திரத்தைச்சேர்ந்த ஒரு குடும்பம். எண் $26^{35}$ 1 நாளா $7^{25}$.

**தாகோன்.** Dagon. காசாவிலும் அஸ்தோத்திலும் பெத்தாகோனிலும் பெலிஸ்தர் விசேஷமாய்த் தொழுதுகொண்ட ஒரு தேவன். யோசு $15^{41}$ நியா $16^{23}$ 1 சாமு $5^{2}$. பெலிஸ்தரைத் தவிர கானானியரிலும் அநேகர் இந்தத் தேவனை வணங்கிவந்தார்கள். இவன் மீன் தேவதையானதினால் இவன் விக்கிரகத்தின் மேல்பாகம் மனுஷரூபமும் கீழ்பாகம் மீன் ரூபமுமாய் இருந்ததென்று சிலர் நினைக்கிறார்கள். வேறு சிலர் நினைக்கிறபடி இவன் முதலிலே விவசாயத்துக்குத் தேவனாயிருந்து பிந்தின காலங்களில் யுத்ததேவனானான். பெலிஸ்தர் வணங்கின தேவர்களில் இவன் பிரதானமானவன் என்று தோன்றுகிறது. 1 சாமு $5^{4}$ $6^{18}$ 1 நாளா $10^{10}$.

**தாக்கீது.** Decree. ராஜா இட்ட கட்டளை. தானி $6^{7.8.12}$. **சன்னது, நகல்** காண்க.

**தாங்குகிறது.** Support. அப் $20^{35}$ 1 தெச $5^{14}$ ரோ $15^{1}$.

**தாசன்.** Servant. அதாவது 'யேகோவாவினுடைய தாசன்' அல்லது 'யேகோவாவினுடைய ஊழியன்.' **'யேகோவாவினுடைய தாசன்'** காண்க.

**தாடி.** Beard. லேவி $13^{29}$ $14^{9}$ $19^{27}$ 1 சாமு $17^{35}$ $21^{13}$ 2 சாமு $10^{4}$ $20^{9}$ 1 நாளா $19^{5}$ எஸ்றா $9^{3}$ சங் $133^{2}$ ஏசா $7^{20}$ $15^{2}$ எரே $41^{5}$ $48^{37}$ **கூந்தல்** காண்க.

**தாடை.** Jaw bone. உபா $19^{3}$ நியா $15^{15}$ யோபு $41^{2}$.

**தாண் கோத்திரம்.** Dan. ஆதியாகமத்தில் தாண் என்பவன் யாக்கோபின் ஐந்தாம் மகன் என்றும், நப்தலியின் அண்ணன் என்றும், இவனுடைய தாயார் ராகேலின் வேலைக்காரி என்றும் சொல்லியிருக்கிறது. ஆதி $30^{6}$. எபிரெயர் அபிப்பிராயத்தின்படி 'தாண்' என்பதற்குக் 'கடவுள் எனக்காக நியாயத்தீர்ப்பு செய்தார்' என்று அர்த்தம். இவனைக்குறித்தும், இஸ்ரவேலர் கானான் தேசத்தில் பிரவேசித்தகாலம்வரைக்கும் இவனிலிருந்து உற்பத்தியான கோத்திரத்தைக் குறித்தும் நமக்கு ஒன்றும் தெரியாது.

அக்காலத்தில் இந்தக் கோத்திரம் பெரிய கோத்திரம் என்று ஒரே ஒரு வசனத்தில் சொல்லியிருந்தாலும் (எண் $1^{38}$) வேறு சில வசனங்களில் இது பெரிய கோத்திரம் அல்ல என்று தெரியவருகிறது. எப்படியென்றால் தாண் என்பவனுக்கு ஒரே ஒரு மகன்தான் உண்டென்றும், எபிரெயபாஷையில் விசாரித்தால் 'தாண் கோத்திரம்' என்பதற்குப் பதிலாகத் 'தாண் குடும்பம்' (*Mishpachah*) என்று சொல்லியிருக்கிறது என்றும் இஸ்ரவேலர் கானானில் பிரவேசித்தபோது இந்தக் கோத்திரத்துக்கு ஒடுக்கமான நாடு கொடுக்கப்பட்டது என்றும் பார்க்கிறோம். ஆதி $46^{23}$ நியா $18^{11}$ எண் $26^{42}$.

முதலில் எப்பிராயீம் கோத்திரத்துக்குத் தெற்கேயும் பெலிஸ்தியர் தேசத்துக்கு வடகிழக்கேயும் உள்ள ஓர் ஒடுக்கமான மலைநாடு இந்தக் கோத்திரத்துக்கு இருந்தது. ஒருவேளை இவர்களுடைய மேற்கெல்லை மத்தியதரைக் கடல்மட்டும் எட்டினது. நியா $5^{17}$. ஆனால் கானானியர் செய்த தொந்தரவினிமித்தம் இவர்களுக்குச் சௌகரியம் இல்லாததினால், இவர்களில் சிலர் தென் பலெஸ்தீனாவிலுள்ள தங்கள் நாட்டிலிருந்து புறப்பட்டு கானான் தேசத்தின் வட எல்லையிலுள்ள எர்மோன் மலையின் தென்சாரலுக்கு அடுத்த நாட்டிலே லாயீஸ் என்னும் ஊரைப் பிடித்து அங்கே குடியேறினார்கள். அக்காலமுதல் தாண் என்னும் அந்த இடம் கானான் தேசத்துக்கு வட எல்லை என்று சொல்வது வழக்கம் ஆயிற்று. யோசு $19^{47}$ நியா $18^{29}$. அவ்விடத்திலே மீகா ஸ்தாபித்த விக்கிரகம் தெராபீம் முதலிய வைகளை இக்கோத்திரத்தார் கைப்பற்றிக் கொண்ட நாள்முதல் அவ்விடம் எப்போதும் விக்கிரக ஆராதனைக்கு முக்கிய ஸ்தலமாய் இருந்தது. தென்தேசத்திலே அவர்கள் விட்டுப்போன மீதியான குடும்பங்கள் படிப்படியாய் அற்றுப்போனதாகத் தோன்றுகிறது. இந்தக் கோத்திரத்தாரில் இரண்டு பெயர் முக்கியமானவர்கள்.

(1) ஆசரிப்புக் கூடாரத்துச் சித்திரவேலையில் மகா சமர்த்தனான அகோலியாப். யாத் $31^{6}$.

(2) சிம்சோன். நியா $13^{2}$.

தாண் கோத்திரத்துக்கு 'சர்ப்பம்' என்றும், 'பாலசிங்கம்' என்றும் சொல்லியிருக்கிறபடி இந்தக் கோத்திரத்தார் தங்கள் சத்துருக்களுக்காகப் பதிவிருக்கவும் திடீரென்று பாய்ந்து சண்டைபோடவும் தகுந்தவர்களானார்கள் என்று அறிவோம். ஆதி $49^{17}$ உபா $33^{22}$.

**தாண் பட்டணம், லாயீஸ், லேசேம்.** Dan, Laish, Leshem. இஸ்ரவேலர் கானான் தேசத்துக்குள் பிரவேசிக்குமுன்னே லாயீஸ் அல்லது லேசேம் என்னும் பெயர்கொண்ட கோட்டையின் பக்கத்தில் அசீரியா ராஜ்யத்திலிருந்துவந்த நாலு ராஜாக்களும் சோதோம் முதலிய பட்டணங்களின் ஐந்து ராஜாக்களும் சண்டை செய்தார்கள். ஆதி $14^{14}$ யோசு $19^{47}$ நியா $18^{29}$. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் குடியேறினபிறகு தாண் கோத்திரத்தாரில் சிலர் லாயீஸ் பட்டணத்தைப் பிடித்தார்கள். 1 சாமு $3^{20}$ 2 சாமு $24^{2}$ எரே $4^{15}$ எசே $48^{1}$. மீகா என்பவன் இந்த ஊரில் ஸ்தாபித்த விக்கிரகம் முதலியவைகளைத் தாண் கோத்திரத்தார் கைப்பற்றியதுமுதல் அது விக்கிரக வணக்கத்துக்கு முக்கியஸ்தானம் ஆயிற்று. யெரொபெயாம் இங்கே இருந்த தேவஸ்தலத்தைச் சிறப்பித்த காலம்முதல், இஸ்ரவேல் ராஜ்யம் இருந்த காலம் எல்லாம், இங்கு நடந்த விக்கிரக ஆராதனையேகோவாவை நன்றாய் வணங்காத படிக்கு எபிரெயர்களுக்கு இடையூறாயிற்று. 1 இரா $12^{29}$ 2 இரா $10^{29}$ ஆமோ $8^{14}$. இதுவும் 'தாண்யானும்' ஒன்றானால் யோவாப் குடிமதிப்பு எழுதும்போது இந்த ஊரைக் கணக்கிட்டான். 2 சாமு $24^{6}$ சீரியா ராஜாவாகிய பெனாதாத் இதைப் பிடித்தான். 1 இரா $15^{20}$. அது இருந்த இடம் இப்போது பாழாய்க்கிடக்கிறது.

**தாண்யான்.** Dan-jaan. 2 சாமு $24^{6}$.

**தாதி.** Nurse. ஆதி $24^{59}$ $35^{8}$ யாத் $2^{5}$ 2 சாமு $4^{4}$ 2 இரா $11^{2}$. **கைத்தாய்** காண்க.

**தாதீம்–ஒத்சி.** Tahtim-Hodshi. குடிமதிப்பு எழுதப்போது யோவாப் யோர்தான் நதிக்குக் கிழக்கே சந்தித்த ஒரு நாடு. 2 சாமு $24^{6}$.

**தாத்தான்.** Dathan. **கோராகு** காண்க.

**தர்பசேத்.** Dabbesheth. யோசு $19^{11}$.

**தாபரம்.** Habitation. சங் $91^{9}$ எரே $9^{10}$ $25^{37}$ ஏசா $32^{18}$ $33^{20}$ $34^{13}$.

**தாபராத், தாபிராத்.** Daberath. செபுலோன் கோத்திரத்தின் எல்லைகளுக்குள்ளே, அல்லது இசக்கார் கோத்திரத்தின் எல்லைகளுக்குள்ளே தாபோர் மலைக்குச் சமீபமான ஓர் ஊர். யோசு $19^{12}$ $21^{28}$ 1 நாளா $6^{72}$.

**தாபாத்.** Tabbath. இந்த இடத்தைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. நியா $7^{22}$.

**தாபாத்.** Taphath. சாலொமோனுடைய மகளாகிய இவள் அபினதாபின் மகனுக்கு மனைவியாயிருந்தாள். 1 இரா $4^{11}$.

**தாபிராத்.** Daberath. 1 நாளா $6^{72}$. **தாபராத்** காண்க.

**தாபெயேல்.** Tabeel. ஒரு பெர்சிய உத்தியோகஸ்தன். எஸ்றா $7^{4}$.

**தாபோர்.** Tabor.

1. செபுலோன் கோத்திரத்தின் எல்லைகளுக்குள்ளே லேவியர்களுக்கு நியமிக்கப்பட்ட ஓர் ஊர். ஒருவேளை இதுவும் கிஸ்லோத்தாபோரும் ஒன்றுதான். யோசு $19^{12}$ 1 நாளா $6^{77}$.

2. ஒப்ரா என்னும் ஊருக்குச் சமீபமான ஓர் இடம். நியா $8^{18}$.

3. பென்யமீன் கோத்திரத்திலுள்ள ராமாவிலிருந்து கிபியாவுக்குச் செல்லும் பாதை 'தாபோரிலுள்ள சமபூமி' வழியாய்ப் போகும். 1 சாமு $10^{3}$.

**தாபோர் மலை. Mount Tabor.** கர்மேல் மலையின் அடிவாரத்திலிருந்து கிழக்கு முகமாய்ப் பரவின யெஸ்ரயேல் சமபூமியின் வடகிழக்கே, கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூருக்குக் கிழக்கே 7 மைல் தூரத்திலுள்ள ஒரு மலை. நாசரேத்தூருக்கும் இதற்கும் இடையில் ஒரு பள்ளத்தாக்கு இருக்கிறதினால், மேடான அந்த ஊரில் வசிக்கிறவர்கள் இந்த மலையை நன்றாய்ப் பார்க்கக்கூடும். இதன் உயரம் 1,843 அடி மாத்திரமானாலும் மிக மேன்மையான தோற்றமுடையதாகையினாலும் இது பர்வதங்களில் பிரதானமானது என்று எபிரெயர்கள் சொல்லுவார்கள். சங் $89^{12}$ எரே $46^{18}$. இம்மலையின்மேல் ஏறினவர்கள் விநோத காட்சியாகிய யெஸ்ரயேலின் சமபூமி எல்லாம் பார்க்கக்கூடும்.



தாபோர் மலை.

இஸ்ரவேலர் கானானுக்குள் பிரவேசிக்கும்பொழுது இது செபுலோனுக்கும் இசக்காருக்கும் உள்ள எல்லைகளுக்குள் விடப்பட்டது. யோசு $19^{12}$. அந்தக்காலத்தில் இங்கே பலியிடும் தேவஸ்தலம் ஒன்று இருந்ததாகத் தோன்றுகிறது. உபா $33^{18}$. சிசெராவுடன் சண்டை செய்யும்படி தெபோராளும் பாராக்கும் தங்கள் சேனைகளை இந்த மலையில் கூட்டினார்கள். நியா $4^{6}$ நியா $8^{18}$–ல் சொன்ன 'தாபோர்' இந்த மலையை அல்லது ஒரு ஊரைக் குறிக்கலாம். கி–பி. மூன்றும் நூற்றாண்டுமுதல் கிறிஸ்தவர்களில் அநேகர் இயேசு மறுரூபமான மலை இதுதான் என்று நினைத்தார்கள். மாற் $9^{2}$ லூக் $9^{28}$. ஆனால் சுவிசேஷத்தில் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. இதில் கி–மு. 3–ம் நூற்றாண்டில் மலைச்சாரலில் கட்டப்பட்ட ஒரு பட்டணமும், ஏறக்குறைய கி–பி. 50–ல் ரோமருக்கு விரோதமாய்க் கட்டப்பட்ட ஒரு கோட்டையும் இருந்தது. ஏறக்குறைய கி–பி. 1000–ல் மகமதியரிடத்திலிருந்து பரிசுத்த பூமியை மீட்கும்படி கிறிஸ்தவர்கள் செய்த சிலுவை யுத்தகாலங்களில் பல வருஷமாக கிறிஸ்தவர்கள் கைவசத்திலிருந்த ஒரு கோட்டை இம்மலையில் இருந்தது. கி–பி. 1212–ல் மகமதியர் இதை ஜெயித்துத் தங்களுக்காக இந்த மலையில் ஒரு கோட்டை கட்டினார்கள். இப்போது பாழாய்க்கிடக்கிற

அக்கோட்டைகளுக்குப் பதிலாக இந்த மலையின்மேல் அதிக செழிப்பான தோப்புகள் இருக்கின்றன. இந்த மலையில் கிரேக்க சபையாரும் ரோம சபையாரும் தங்களுக்காக மடங்களையும் சத்திரங்களையும் கட்டியிருக்கிறார்கள்.

**தாப்பெனேஸ்.** **Tahpanes.** *பார்வோனின் மனைவியாகிய இந்த ராஜஸ்திரீயின் சகோதரியை ஏதோமியரின் ராஜாவாகிய ஆதாத்துக்குப் பார்வோன் கலியாணம் செய்துகொடுத்தான். இவள் ஆதாத்துக்குப் பெற்ற மகன்பெயர் கேனுபாத். 1 இரா* $11^{19}$.

**தாமரி.** **Damaris.** *அத்தேனே பட்டணத்திலுள்ள ஒரு கிறிஸ்தவள். அப்* $17^{34}$.

**தாமா.** **Temah.** *நிதனீமியர்களில் ஒரு குடும்பம். எஸ்றா* $2^{53}$.

**தாமார்.** **Tamar.**

1. *கானானியஸ்திரீ. ஆதி* $38^{11}$ *ரூத்* $4^{12}$ 1 *நாளா* $2^{4}$ *மத்* $1^{3}$.

2. *அப்சலோமின் சகோதரி. 2 சாமு* $13^{1}$.

3. *அப்சலோமின் மகள். 2 சாமு* $14^{27}$.

4. *எசேக்கியேல் கண்ட தீர்க்கதரிசனத்தில் மீட்டுக்கொண்ட இஸ்ரவேல் ராஜ்யத்துக்குத் தென்கிழக்கு எல்லை. இது சாக் கடலின் தென்பக்கத்தில் இருந்திருக்கலாம் ஆனால் பாழாய்க்கிடக்கிற அந்தத் தேசத்தில் இப்பெயர்கொண்ட ஒரு ஊர் இப்போது இல்லை. எசே* $47^{19}$ $48^{28}$. *ஒருவேளை இதுவும் 'வனாந்தர வெளியிலுள்ள தத்மோரும்' ஒன்றுதான். 1 இரா* $9^{18}$.

**தாயித்து.** **Amulet.** **தூனிய வித்தை** *பக். 334 காண்க.*

**தாய்.** **Mother.** *மாதா. ஏசா* $8^{4}$ *யாத்* $2^{8}$ $20^{12}$ $23^{19}$ *நீதி* $20^{20}$ *மத்* $1^{18}$ $12^{49}$ *யோவா* $19^{26}$ *எபே* $6^{2}$ 1 *தீமோ* $5^{2}$.

*பாட்டி. 1 இரா* $15^{10}$.

*தாதி. ரூத்* $4^{16}$ 1 *தெச* $2^{7}$.

*முன்னோர்களில் ஒருத்தி. ஆதி* $3^{20}$.

*அன்புடையவள் அல்லது தர்மசாலி. நியா* $5^{7}$ *ஏசா* $49^{15}$ *ரோ* $16^{13}$ *எரே* $16^{3}$.

*இஸ்ரவேல் ராஜ்யம். எசே* $19^{2.10}$.

*தலைநகரி. 2 சாமு* $20^{19}$.

*எருசலேம். கலா* $4^{26}$.

*பாபிலோன். வெளி* $17^{5}$.

*எபிரெயர்கள் தாய்மாரைக் கனப்படுத்தினார்கள். ஆதி* $37^{10}$ *யாத்* $20^{12}$ *லேவி* $19^{3}$ *உபா* $5^{16}$ 1 *இரா* $2^{19}$ *நீதி* $15^{20}$ $23^{22}$ $30^{11}$ *மத்* $15^{4}$ *மாற்* $7^{10}$. **குடும்பம்** *காண்க.*

**தாரா.**

1 = **Dara.** *தாரா = தர்தா. 1 இரா* $4^{31}$ 1 *நாளா* $2^{6}$.

2 = **Terah.** *இஸ்ரவேலர் வனாந்தரத்தில் சந்தித்த ஓர் இடம். எண்* $33^{27}$.

**தாராலா.** **Taralah.** *பென்யமீன் கோத்திரத்தின் எல்லைகளுக்குள் இருந்த ஓர் ஊர். யோசு* $18^{27}$.

**தாரை.** **Trumpet.** = *எக்காளம். மத்* $6^{2}$. **கீதவாத்தியம்** *காண்க.*

**தாலந்து.** **Talent.** *பழைய ஏற்பாட்டில் சொன்ன பொன் தாலந்து ஏறக்குறைய 6,150 சவரன் = ரூ. 92,250.*

*வெள்ளித்தாலந்து = 96 ராத்தல் வெள்ளி நிறை. இதின் விலை 410 சவரன் = ரூ. 6,150. யாத்* $38^{24.27}$.

*புதிய ஏற்பாட்டில் சொன்ன தாலந்து 240 சவரன் அல்லது 3,600 ரூ. பெறுமான ஒருபொன் நாணயம். மத்* $18^{24}$. **பணம்** *காண்க.*

**தாலம்.** **Dish. A. V. Charger.** *எண்* $7^{13.84}$ 2 *இரா* $21^{13}$ *மத்* $14^{8}$ $26^{23}$ *மாற்* $6^{25}$.

**தாவீதின் நகரம்.** **The City of David.** **எருசலேம் II. 2, சீயோன்** *காண்க.*

**தாவீது.** **David.** *[நேசிக்கப்பட்டவன்] யூதாக் கோத்திரத்தைச் சேர்ந்தவனும் பெத்லெகேம் ஊரில் பிறந்தவனும் ஈசாயின் எட்டு ஆண்மக்களில் இளையவனும் இஸ்ரவேலின் இரண்டாம் ராஜாவுமாகிய இவனைப்பற்றி வேதாகமத்திலுள்ள சரித்திர நூல்களிலும் சங்கீத புஸ்தகத்திலும் பல விஷயங்களை வாசிக்கிறோம். 1 சாமு* $16^{3}$ 1 *இரா* $2^{11}$ 1 *நாளா* $11^{1}$ $29^{30}$.

**1. பாலிய பருவம்.**

*தாவீதின் தகப்பனுடைய சொத்துக்கள் விசேஷமாய் ஆடுமாடுகளானதால் தாவீது சிறு பிராயமுதல் ஆடுமாடுகளுக்கு மேய்ப்பனாயிருந்தான். இவைகளைக் காக்கும்படி இவன் சிங்கத்தையும் கரடியையும் கொன்றுபோட்டதினால் தன் தைரிய குணத்தைக் காட்டினான். 1 சாமு* $17^{34.35}$. *இவனுடைய கீர்த்தி இஸ்ரவேலருக்குள்ளே பிரபலியமாகிறதற்கு மூன்று விஷயங்கள் காரணமாயிருந்தன:—*

i *சவுலுக்குப் பதிலாக வேறொரு ராஜாவை யேகோவா ஸ்தாபிக்கப்போகிறார் என்று சாமுவேல் தரிசனத்தினால் அறிந்து பெத்லெகேமுக்கு வந்து யேகோவாவின் கட்டளையின்படி தாவீதைத் தெரிந்து*

கொண்டு அவனை அபிஷேகம்பண்ணினன். 1 சாமு $16^{1-13}$.

ii. தாவீதின் தைரிய குணத்தைப்பற்றிய கீர்த்தியே யல்லாமல் சுரமண்டலம் வாசிக்கிறதில் இவனுக்கிருந்த திறமையைப்பற்றிய கீர்த்தியும் அத்தேசத்தில் சிலருக்குத் தெரிந்திருந்ததினால் சவுலைப் பிடித்திருந்த பொல்லாத ஆவியைத் துரத்தும்படிக்கு அவன்முன் சுரமண்டலம் வாசிப்பதற்கு வாலிபனாகிய தாவீதைத் தெரிந்துகொண்டார்கள். இதினிமித்தம் சவுல் தாவீதைத் தனக்கு ஆயுததாரியாக நியமித்தான். 1 சாமு $16^{14-23}$.

iii. கோலியாத் என்னும் ராக்ஷதனோடு சண்டைசெய்து தன் கவணினால் எறிந்த கூழாங்கற்களினால் அவனைக் கொன்றுபோட்டதினாலே, பாலியனாகிய தாவீது இஸ்ரவேலர் எல்லாருடைய கண்களிலும் மேன்மையடைந்தான். 1 சாமு 17.

இந்த மூன்று விஷயங்களினால் தாவீது யேகோவாவினால் நேசிக்கப்பட்டவன் என்றும், கவிஞர்களில் சிறந்தவன் என்றும், யுத்தத்தில் தைரியசாலி என்றும் தோன்றுகிறது. 'நேசிக்கப்பட்டவன்' என்று அர்த்தங்கொண்ட 'தாவீது' என்னும் பெயர் 'யேகோவா இவனை விசேஷமாய் நேசிக்கிறார்' என்பதைக் குறிக்கிறதென்று எபிரெயர் அபிப்பிராயப்பட்டார்கள்.

2. உத்தியோக பருவம்.

தாவீது கோலியாத்தை ஜெயித்ததினால் சவுலின் குமாரனாகிய யோனத்தானுக்கு இவன்மேல் நல்நேசமும் ராஜாவாகிய சவுலுக்கு இவன்பேரில் தீராத சமுசயங்களும் உண்டாயின. சவுல் தாவீதின்மேல் தன் ஈட்டியை இரண்டுதடவை எறிந்ததினால் அந்த சமுசயம் முதலாவது வெளிப்பட்டது. 1 சாமு $18^{10}$. அப்புறம் சவுல் தாவீதின் மேல் பட்சம் காட்டினாலும், அவன் பெலிஸ்தியர் கையில் மடியும்படி தந்திரம்பண்ணினான். 1 சாமு $18^{17}$.

இந்த உபாயமும் பலிதப்படாமற் போன பின்பு தன் மகளாகிய மீகாளை இவனுக்கு விவாகம்செய்து கொடுத்தான். 1 சாமு $18^{27}$. தாவீதினிமித்தம் யோனத்தான் செய்த முயற்சியினால் சவுலுக்கும் தாவீதுக்கும் திரும்பவும் சமாதானம் உண்டாயிருந்தாலும் தாவீதைக் கொன்றுபோடும்படி சவுல் இன்னொருதரமும் பிரயாசப்பட்டு தன் ஈட்டியைத் தாவீதின்மேல் எறிய அவன் அதற்குத் தப்பித்துக்கொண்டான். 1 சாமு $19^{8-10}$.

தாவீதைக் கொல்லும்படி சவுல் மறுபடியும் எத்தனித்து இவனைக் கொண்டுவரும்படி சேவகர்களை அனுப்பும்போது இவன் மனைவியாகிய மீகாள் செய்த தந்திரத்தினால் இவன் தப்பித்துக்கொண்டான். 1 சாமு $19^{11-17}$. தாவீது இப்பொழுது ராமாவில் வசித்த சாமுவேல் தீர்க்கதரிசியினிடத்துக்குப் போய் சவுலோடு தான் சமாதானம் ஆகக்கூடுமோ என்று யோனத்தான் மூலமாய்க் கடைசித் தரமாக விசாரித்து, சமாதானத்தைப்பற்றிய நம்பிக்கை இல்லை என்று தீர்மானித்து வனாந்தரத்துக்குப் போய் அங்கே வாசம்பண்ணினான். 1 சாமு 20.

3. வனவாச பருவம்.

அப்பால் தாவீது நோபு என்னும் தேவஸ்தலத்துக்குப் போய் தான் முன்னே கோலியாத்தினிடத்திலிருந்து உருவி அவ்விடத்தில் வைத்திருந்த அவனுடைய பட்டயத்தை எடுத்துக்கொண்டு பெலிஸ்தர் தேசத்துக்கு வந்து சிலகாலம் அங்கே ஒளித்திருந்தான். 1 சாமு $21^{1-15}$. பின்பு அங்கேயிருந்து அதுல்லாம் என்னும் கெபிக்குப் போய் அந்தக் கெபியையே தனக்கு ஒளிப்பிடமாக ஏற்படுத்திக் கொண்டு தன்னிடத்திற்கு வந்த எல்லாரையும் சேனையாகச் சேர்த்தான். 1 சாமு $22^{1}$. அப்பால் மிஸ்பே என்னும் காட்டிலுள்ள மோவாப் ராஜாவினிடத்துக்குத் தன் தாய் தகப்பன்மாரைக் கொண்டுபோய் விட்டுவிட்டு ஆரேத் என்னும் காட்டுக்குத் திரும்பப் போனான். 1 சாமு $22^{3-5}$. அங்கேயிருந்து கேகிலா என்னும் ஊர்மேல் படையெடுத்து பெலிஸ்தர்களை ஜெயித்து அதிலே சிலகாலம் தங்கியிருந்தபோது, நோபிலுள்ள ஆசாரியர்களுக்குச் சவுல் செய்த கொடூரத்தைப்பற்றிக் கேள்விப்பட்டான். 1 சாமு $23^{1-13}$.

சவுல் அனுப்பின வேவுகாரர் தாவீது இங்கே இருப்பதைத் தெரிந்துகொண்டதினாலும், அவ்வூரார் ராஜாவுக்குப் பயந்து தன்னைக் காட்டிக்கொடுத்துவிடுவார்கள் என்று தாவீது நினைத்ததினாலும் கேகிலாவை விட்டு சீப், மாகோன், என்கேதி என்னும் மலைநாடுகளுக்குப் போனான். 1 சாமு $23^{14-29}$. சவுல் இவ்விடத்திற்கும் தாவீதுக்குப் பின் சென்றும், அவன் ராஜாவின் கைக்குத் தப்பிக்கொண்டான். 1 சாமு $14^{1-16}$. இந்தக் காலத்தில் தன்னோடு விவாதம்செய்த நாபால் இறந்தபிறகு அவனுடைய மனைவியாகிய அபிகாயிலைத் தாவீது விவாகஞ்செய்தான். 1 சாமு 15 இதற்குப்பிறகு சீப்பியர் மூலமாய்த் தாவீது இருக்கும் இடத்தை அறிந்த சவுல் அவனுக்கு விரோதமாய்த் தன் பரிவாரத்தோடு சென்றபொழுது, தன் கையில்

அகப்பட்ட சவுலைத் தாவீது கொன்றுபோடாமற் காப்பாற்றினதினால், சவுல் தான் செய்த குற்றத்தைப்பற்றி மறுபடியும் மனஸ்தாபப்பட்டுத்தாவீதோடு சமாதானம் பண்ணினான். 1 சாமு 16. இந்தச் சமாதான ஏற்பாடு சிலகாலம்மட்டும் இருந்ததினால்தாவீது திரும்பவும் பெலிஸ்தரிடத்துக்குப் போய்த் தன்னை ஒளித்துக்கொண்டான். பெலிஸ்தர்களுடைய ராஜா இவனுக்குச் சிக்லாக் என்னும் ஊரைக் கொடுத்தான். 1 சாமு 27. பெலிஸ்தருக்கும் இஸ்ரவேலருக்கும் சண்டை உண்டானபோது தாவீது தங்கள் பக்கத்தில் உண்மையுள்ளவனா யிருக்கமாட்டான் என்று பெலிஸ்த பிரபுக்கள் சந்தேகப்பட்டதினால் இவன் தங்களோடு யுத்தத்துக்கு வர அவர்கள் சம்மதிக்கவில்லை. 1 சாமு 29. இதினிமித்தம் தாவீது பெலிஸ்தரின் ராஜாவுடைய அரமனையை விட்டுச் சிக்லாக்குக்குப் போய்த் தான் இல்லாதகாலத்தில் அமலேக்கியர் அங்கே வந்து அந்த ஊரை அழித்துவிட்டார்கள் என்று கண்டு உடனே அவர்களைப் பின்தொடர்ந்துபோய் அவர்களை ஜெயித்து, அவர்களிடத்திலிருந்து தான் கைப்பற்றிய கொள்ளைப்பொருளில் ஒருபங்கை யூதாவிலுள்ள தன் சிநேகிதர்களுக்கு அனுப்பிவைத்தான். 1 சாமு 30. இப்படியாகத் தாவீது அமலேக்கியரோடு சண்டைசெய்யப் போய்விட்டதினால் பெலிஸ்தர்களும் இஸ்ரவேலரும் யுத்தம் செய்யும்போது இவன் யுத்தகளத்தில் இருக்கவில்லை. இவன் சிக்லாக்குக்குத் திரும்பிவந்து அங்கே தங்கியிருக்கும்போது தான் யுத்தத்தில் சவுலுக்குவந்த அபஜெயத்தையும் அவனுடைய மரணத்தையும்பற்றிக் கேள்விப்பட்டான். 2 சாமு 1[1]. சவுல் இறந்துபோனபின்பு யூதாக் கோத்திரத்தார் ஏறக்குறைய கி—மு. 1017வருஷத்தில் எபிரோனிலே தாவீதை ராஜாவாக அபிஷேகம்பண்ணினார்கள். 2 சாமு 2[4].

4. ராஜாங்க பருவம்.

ராஜாவாகிய தாவீதின் சரித்திரத்தை நாம் படிக்கும்போது முதலாவது இவனுடைய ராஜ்யத்தில் நடந்த விஷயங்களையும், இரண்டாவது இவன் சுற்றுப்புறத்தாருக்குச் செய்த விஷயங்களையும் பார்க்கவேண்டும்:—

i. உள்நாட்டு விஷயம்.

தாவீது ராஜாவானபிறகு நெடுநாளாக இவனுக்கும் சவுலின் வம்சத்தாருக்கும் சண்டை இருந்தது. 2 சாமு 3[1]. ஏழுவருஷம்இவன் எபிரோன் என்னும் பட்டணத்தைத் தன் ராஜாங்கத்துக்குத் தலைநகரியாக வைத்துக்கொண்டு அரசாட்சி செய்துவந்தான். இவன் சவுலின் குடும்பத்தாரை ஜெயித்தபிறகு இஸ்ரவேலர் எல்லாருக்கும் தலைவனாய் இருந்ததினால், எபிரோனைப்பார்க்கிலும் தகுதியான ராஜதானியைத் தேடி எபூசியருடைய கோட்டையாகிய எருசலேமைப் பிடித்து, சீயோன் மலையின்மேல் தனக்காக ஒரு பெரிய கோட்டையைக் கட்டி, அதையே தன் ராஜ்யத்துக்கு முக்கிய ஸ்தானமாக்கி (2 சாமு 5[7]) உடன்படிக்கைப் பெட்டியையும் அங்கே கொண்டுவந்தான். 2 சாமு 6. இதிலே தேவாலயத்தைக் கட்ட இவனுக்கு விருப்பமானாலும் யேகோவா இதற்கு உத்தரவு கொடுக்கமாட்டார் என்றும் இவன் மகன் அதைக் கட்டுவான் என்றும் நாத்தான் தீர்க்கதரிசியின் மூலமாய் அறிந்தான். 2 சாமு 7.

இயேசுகிறிஸ்து அருளின சுவிசேஷத்தைக் கற்றுக்கொண்ட உத்தம குணசீலரைப்போல், தாவீது கடவுளுடைய சித்தத்தைப் பூரணமாய் உணர்ந்து அதின்படி தவறாமல் நடந்தான் என்று நினைக்கிறதற்கு இடமேயில்லை. தன்னால் இயன்றமட்டும் இவன் யேகோவாவின் சித்தத்தின்படி செய்ய நாடினான் என்பது நிச்சயமானாலும், பல விஷயங்களில் இவன் அக்காலத்திலுள்ளவர்களைப்போல தனது ஆசையின்படி நடந்தான் என்பதற்கு இவன் பத்சேபாளைத் தனக்கு மனைவியாக எடுத்துக்கொண்ட விஷயமே உதாரணமாகும்.

தாவீது அரசாட்சி செய்யும்போது இவன் மகனாகிய அப்சலோம் செய்த கலகத்தினால் இவனுடைய ஆளுகைக்குப் பெருத்த மோசம் சிலகாலம் இருந்தது. 2 சாமு 15[1]-18[33]. சேபா செய்த கலகத்தினால் அவ்வளவு மோசம் நேரிடவில்லை. 2 சாமு 20. தாவீதினுடைய ராஜ்யபாரத்தின் முடிவிலே அதோனியா செய்த குழப்பத்தைக் கலகம் என்று சொல்ல முடியாது. 1 இரா 1.

ii. புறநாட்டு விஷயங்கள்.

தாவீது தனது ராஜ்யத்தை ஸ்திரமாய் ஸ்தாபித்தபிறகு, தீருபட்டணத்தின் ராஜாவோடு சமாதானம் பண்ணினான். 2 சாமு 5[11] 1 நாளா 14[1]. பின்வரும் ஜாதியாரோடு தாவீது சண்டைசெய்தான்.

பெலிஸ்தர். 2 சாமு 5[17].

மோவாபியர். 2 சாமு 8[2].

சோபாபியர். 2 சாமு 8[3].

சீரியர். 2 சாமு 8[5].

ஏதோமியர். 2 சாமு 8[14].

அம்மோனியரும் சீரியரும். 2 சாமு 10[6] 11[1] 12[26].

பெலிஸ்தர். 2 சாமு $21^{15}$.

தாவீது இவர்களை ஜெயித்ததினால் இவனுடைய ராஜ்யத்தின் எல்லைகள் சீரியாநாட்டின் எல்லைகள்மட்டும் எட்டினது. இந்த யுத்தங்களை நடத்தும்படி இவன் பெரிய சேனையை ஸ்தாபித்தான். 1 நாளா 27. இவன் ஏறக்குறைய கி—மு. 977—ஆண்டில் இறந்து போனான்.

தாவீது யுத்தத்தில் வல்லவனும், தைரியத்தில் தீரனும், ராஜ்யபரிபாலனத்தில் அதி சமர்த்தனுமாய் இருந்ததினால், எபிரெயர் இவனை மகா மேன்மையாக மதித்து இவனுடைய பெயர் பிரஸ்தாபங்களை மெச்சிவந்திருக்கிறார்கள். சில சமயங்களில் இவன் கடுங்கோபஸ்தனாய் இருந்தாலும், தன் பிரஜைகளும் சிநேகிதரும் ஊழியக்காரரும் தன்னை நேசிக்கத்தக்கதாக பெரும்பாலும் பட்சத்தையும் நல்நேசத்தையும் அவர்களுக்குக் காட்டினான். இதினிமித்தம் அவர்கள் இவன் இயற்றிய சங்கீதங்களை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு பல வருஷங்களாக அவற்றைப் பாடிவந்தார்கள். 2 சாமு $1^{17-27}$ 2 சாமு $22^{2-51}$ சங் 18 ஆமோ $6^5$.

பின்வரும் சங்கீதங்களைத் தாவீது பாடினான் என்று அவற்றின் தலைப்புகளில் கண்டிருக்கிறது. சங் 3-9, 11-32, 34-41, 51-65, 68-70, 86, 108-110, 138-145. தாவீது இத்தனை சங்கீதங்களை இயற்றவில்லை என்பது வேத சாஸ்திரிகளில் அநேகருடைய அபிப்பிராயம். இது எப்படியானாலும் எபிரெய கவிஞர்களில் பிரதானமானவனாகிய இவனே இவற்றில் மிகுதியானவற்றைப் பாடினான் என்பது நிச்சயம். சங்கீதங்கள் காண்க.

தாவீதுராஜா செய்த முக்கிய விஷயங்கள் இரண்டு. முதலாவது, இவன் இஸ்ரவேல் கோத்திரங்கள் எல்லாவற்றையும் அவர்களுடைய நாடுகளையும் ஒரே ராஜ்யமாக இணைத்து, எல்லாருக்கும் எருசலேமிலே முக்கிய தேவஸ்தலத்தை ஏற்படுத்தினான். இவன் கால மட்டும் பற்பல தேவஸ்தலங்களில் யேகோவாவை வணங்கின இஸ்ரவேலர் இவன் காலத்துக்குப் பிறகு பல சமயங்களில் பிறஸ்தலங்களுக்குப் போனாலும், யேகோவாவைத் தொழுதுகொள்ளவேண்டிய ஸ்தலம் எருசலேமே என்பதை ஒப்புக்கொண்டார்கள். இவன் காலத்தில்தான் மார்க்க விஷயங்களுக்கும் ராஜாங்க விஷயங்களுக்கும் எருசலேம் இஸ்ரவேலர் எல்லாருக்கும் தலைப்பட்டணம் ஆனது. சாலொமோனுக்குப் பிறகு வடநாட்டார் யூதாக் கோத்திரத்திலிருந்து பிரிந்துபோனாலும், எருசலேமின் கீர்த்தி அதனாலே குறைந்துபோகவே இல்லை. மேலும் சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த யூதர்கள் தங்களை மீட்கும்படி வருகிற மேசியா தாவீதின் வம்சத்தில் பிறப்பார் என்று நம்பினதினாலே, தாவீதுக்கு அழியாக்கீர்த்தி உண்டானது.

**தாழ்ப்பாள்.** Bar. யாத் $26^{26}$ $36^{31}$ உபா $3^5$ நெகே $3^3$ யோபு $38^{10}$ சங் $107^{16}$ $147^{13}$ ஏசா $45^4$ நீதி $18^{19}$ எசே $38^{12}$ ஆமோ $1^5$ யோனா $2^6$.

**தாழ்மை.** Humility.

1. பக்தர்களுக்குள் இருக்கிற நற்குணம். உபா $8^2$ சங் $113^6$ $147^6$ மீகா $6^8$ நீதி $15^{33}$ $18^{12}$ $22^4$ $29^{23}$ மத் $11^{29}$ $18^4$ $23^{12}$ லூக் $14^{11}$ அப் $8^{33}$ 2 கொரி $10^1$ $12^{21}$ பிலி $2^8$ கொலோ $2^{23}$ $3^{12}$ யாக் $4^6$ 1 பேது $5^5$.

2. சீர்கேடு. உபா $21^{14}$.

**தாளடி.** Stubble. கதிர் அறுக்கும்பொழுது, தரையிலிருந்து கதிர்மட்டும் உள்ள பாகமாகிய தாளை அறுத்தபின் அதற்கு 'வைக்கோல்' என்றும் தரையில் விடப்பட்டிருக்கிற பாகத்துக்கு 'தாளடி' என்றும் சாதாரணமாய்ப் பெயர். செங்கல் செய்யும்போது அதைக் கெட்டிப்படுத்தும்படி களிமண்ணோடு வைக்கோலைக் கலந்து செய்வது எகிப்துதேசத்து வழக்கம். இஸ்ரவேலர் எகிப்தியர்களுக்கு அடிமைகளாக இந்தவேலை செய்தபொழுது, இதற்குத் தகுதியானதும் தாங்கள் களங்களுக்குப் போய் கஷ்டமில்லாமல் சம்பாதிக்கக்கூடியதுமான வைக்கோலை அவர்கள் உபயோகிக்கவொட்டாமல் அதற்குப் பதிலாக அவர்கள் தேசம் எங்கும் அலைந்து திரிந்து அகப்படுகிற இடங்களில் தாளடிகளை வேண்டிய அளவுக்குக் கஷ்டப்பட்டுப் பிடுங்கிச் சேர்த்து முன்போலவே செங்கல் செய்யும்படி எகிப்தியர் அவர்களைக் கொடுமைப்படுத்தினது அநியாயமே.

வைக்கோல், தாளடி, பதர் முதலியவற்றைச் சேர்த்து எரித்து உரமாக்கி உபயோகித்துவருவது அத்தேசத்து வழக்கமாகையினால் அதிசீக்கிரத்தில் அழிந்துபோகும் விஷயத்தைக் குறிக்கும்படி தாளடி பல வசனங்களில் உவமையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யாத் $5^{12}$ $15^7$ ஏசா $33^{11}$ $41^2$ $47^{14}$.

**தாளம்.** Cymbal. 2 சாமு $6^5$. 'கைத்தாளம்' 1 நாளா $13^8$ $15^{16.28}$ $16^5$ $25^1$ 2 நாளா $5^{12}$ $29^{25}$ எஸ்று $3^{10}$ சங் $150^5$ 1 கொரி $13^1$. கீத வாத்தியம் காண்க.

**தாளுகிறது.** 'Abide.' யோவே $2^{11}$. (சகிக்கிறவன் என்பதற்குப் பதிலாக பக்கத்தில் கண்ட பதம்).

**தாள்.** Stalk. ஆதி $41^{5.22}$ யாத் $9^{31}$.

**தாறுமாறு.** Confusion. ஆதி $11^{7.9}$.

**தாற்றுக்கோல்.** Goad. நியா $3^{31}$ 1 சாமு $13^{21}$ பிர $12^{11}$. முள் என்பதற்குப் பதிலாக தாற்றுக்கோல் என்று வாசிக்கவேண்டும். அப் $9^{5}$ $26^{14}$.

**தானதருமங்கள்.** Alms. அப் $10^{31}$. தர்மம் காண்க.

**தானம்.** Almsgiving. தர்மம் காண்க.

**தானம்.** Place. ஸ்தானம் காண்க.

**தானாக்.** Taanach.

கானானியரின் முக்கிய பட்டணங்களில் ஒன்றாகிய இது இசக்காரின் எல்லைகளுக்குள் இருந்தாலும் மனாசேகோத்திரத்தாரைச்சேர்ந்தது. இதிலிருந்து அவர்கள் கானானியரைத் துரத்தவேயில்லை. யோசு $12^{21}$ $17^{11}$ நியா $1^{27}$ 1 இரா $4^{12}$. இது லேவியருக்கு நியமிக்கப்பட்ட பட்டணங்களில் ஒன்று. யோசு $21^{25}$. இதில் ஒருகோட்டை இருந்தது. 1 நாளா $7^{29}$. தெபொராளும் பாராக்கும் சிசெராவுடன் இங்குதான் யுத்தம் செய்தார்கள். நியா $5^{19}$. இவ்விடம் இப்போது பாழாய்க்கிடக்கிறது.

**தானாத் சீலோ.** Taanath Shilo. எப்பிராயீம் கோத்திரத்தாரின் வடகிழக்கு எல்லையிலுள்ள ஓர் ஊர். யோசு $16^{6}$.

**தானியேலின் ஆகமம்.** The Book of Daniel.

**1. இதில் அடங்கிய சரித்திரமும் தரிசனங்களும்.**

தானியேல் ஆகமத்தை நாம் வாசிக்கும்பொழுது இதில் இரண்டு பாகங்கள் உண்டு என்று பார்ப்போம். முதல் பாகத்தில் தானியேல் என்பவனைக் குறித்தும், அவனுடைய தோழர்களைக் குறித்தும் சில சரித்திரங்களும் இரண்டாம் பாகத்தில் தானியேல் கண்ட சில தரிசனங்களும் உண்டு. இந்த ஆகமத்தின் பொருளின் சுருக்கம் என்னவென்றால்: யோயாக்கீம் யூதாவுக்கு ராஜாவான 3-ம் அல்லது 4-ம் வருஷத்தில் (கி—மு. 606), நேபுகாத்நேச்சார் எருசலேம் பட்டணத்தை முதல்தரம் பிடித்துக்கொண்ட சமயத்தில் தானியேலும் அவனைப்போல் உயர்குலத்தாராகிய வேறு சில வாலிபரும் சிறைக்குள்ளாகி பாபிலோனுக்கு வந்தார்கள். மூன்று வருஷமாக அவனுடைய தோழராகிய அனனியா, மீஷாவேல், அசரியா இம் மூவரோடும் அவன் கல்தேய கல்வியைக் கற்றுக்கொண்டு ராஜாவினிடம் இனி தகுந்த உத்தியோகம் பார்க்கிறதற்கான அறிவும் திறமையும் உடையவன் ஆனான். தாங்கள் விக்கிரகாராதனைக் கடுத்தவற்றால் தீட்டுள்ளவர்களாகாதபடிக்கு தெய்வபக்தியுள்ள அந்த நாலு வாலிபரும் ராஜாவின் விருந்தில் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட உணவையும் பானத்தையும் தொடாமல் இருந்தார்கள்.

தானியேலும் மற்ற மூன்று வாலிபரும் கல்தேய கல்வியைக் கற்று முடித்தபின் ராஜாவினிடம் பரீட்சை கொடுத்து கல்தேய ஞானிகளைப்பார்க்கிலும் அதிக சமர்த்தராகி ($1^{20}$) ராஜ்யத்தில் உத்தியோகஸ்தர் ஆனார்கள். சொப்பனங்களை வியார்த்தி செய்வதற்குக் கடவுள் தானியேலுக்கு அளித்திருந்த விசேஷித்த வரத்தால் அவன் நேபுகாத்நேச்சார் கண்ட சொப்பனத்துக்கு அர்த்தம் சொன்னான். மற்றெல்லா கல்தேய ஞானிகளாலும் சொப்பனம் அர்த்தப்படுத்த முடியாமலிருக்க, தானியேல் அதன் அர்த்தம் சொன்னபடியால் ராஜா அவனைப் பாபிலோன் என்னும் ஜில்லாவுக்குத் (*District*) தேசாதிபதியும் எல்லா சாஸ்திரிமார்களுக்கும் தலைவனும் ஆக்கினான் (தானி 2). ஆயினும் தானியேல் செய்த விண்ணப்பத்தின்படி ராஜா மேற்சொல்லிய மூன்று வாலிபரும் அந்த ஜில்லாவை ஆண்டுவரும்படி அவனோடு வைத்தான். தானி $2^{49}$.

3—ம் அதிகாரத்தில் பாபிலோனியா ராஜா தானியேலையும் அவன் தோழரையும் தான் நிறுத்தின சிலையையாகிலும் தன்னையாகிலும் கும்பிடச் செய்யும்பொருட்டு பிரயாசப்பட்டபோது அவர்கள் யேகோவாவை மறுதலிக்காமல் பெரிய ஆபத்துக்குட்பட்டும் கடவுள் அவர்களை ஆச்சரியப்படத்தக்கவாறு காப்பாற்றினார் என்று சொல்லியிருக்கிறது.

4—ம் அதிகாரத்தில் நேபுகாத்நேச்சார் கண்ட ஒரு சொப்பனத்தைப்பற்றியும், 5—ம் அதிகாரத்தில் பெல்ஷாத்சார் விருந்திட்ட சமயத்தில் சுவரில் கண்ட ஆச்சரியமான எழுத்துக்களைப்பற்றியும் விவரித்துச் சொல்லியிருக்கிறது. அந்தச் சொப்பனமும், எழுத்துக்களும் இந்த ராஜாக்கள் இருவருக்கும் அவர்கள் அகந்தையினாலும் அவர்கள் எருசலேம் பட்டணத்திலிருந்த பரிசுத்த ஸ்தலத்தை சேதப்படுத்தி ஈங்கிஷை செய்ததினாலும் வந்த அழிவைக் குறிக்கிறது.

6—ம் அதிகாரம் சிங்கக்கெபியில் தானியேல் காட்டின தைரியத்தைப்பற்றிய சரித்திரம்.

7—ம் அதிகாரத்தில் சொன்ன தரிசனத்தில் தானியேல் கண்ட நாலு பெரிய பிராணிகள் அதாவது, நாலு பெரிய உலக ராஜ்யங்களாகிய கல்தேய, பெர்சிய, கிரேக்க,

ரோமராஜ்யங்கள், ஒன்றுக்குப்பின் ஒன்றாக வருதலையும் அவைகள் அழிவுக்குட்படுதலையும் நித்திய தேவராஜ்யத்தின் உபத்திரவங்களையும் குறிக்கிறது.

8-12-ம் அதிகாரம் வரையிலுமுள்ள இரண்டாம் பாகம். அதில் மூன்று தரிசனங்கள் சொல்லியிருக்கின்றன. மேலும் தானியேல் (9-ம் அதி.) யூதஜனத்துக்கு வந்த தண்டனை நியாயமாக வந்ததென்று ஒப்புக்கொண்டு, யூதஜாதி யேகோவாவுக்கு விரோதமாய்ச் செய்த எல்லாப் பாவங்களையும் மனஸ்தாபத்தோடு அறிக்கையிட்டு, எரேமியா தீர்க்கதரிசி முன் சொன்னபடி அவர்கள் பாபிலோனில் சிறையாகி 70 வருஷம் கழிந்தபின் (எரே $21^{10}$ $25^{11}$) பாழாய்க்கிடந்த எருசலேம் பட்டணத்தையும் அதிலுள்ள பரிசுத்த ஸ்தலத்தையும் திரும்பக் கட்டுவதற்குப் பராபரனை வேண்டிக்கொண்டபோது, காபிரியேல் என்னும் தேவதூதன் தீர்க்கதரிசிக்குத் தரிசனமாகி இரட்சண்ய ஆலோசனை உலகத்தில் பூர்த்தியாய் நிறைவேறும் காலத்தைத் தெரிவித்தான்.

8, 10, 11, 12-ம் அதிகாரங்களில் சொல்லியிருக்கிற தரிசனங்களில் தேவதூதன் தேவராஜ்யத்தின் சரித்திரத்தைக்குறித்து நடந்தவற்றையும், நடப்பவற்றையும் விளக்கி ஒரு புதிய ராஜ்யம் தேவராஜ்யத்தோடு சண்டைசெய்து, குறித்தகாலத்தில் ஒழிந்துபோன பின்பு கடைசி சத்துருவாகிய நாலாவது ராஜ்யத்தின் வல்லமை உலகத்துக்கு நேரிடும் நியாயத்தீர்ப்பினால் ஒழிந்துபோம் என்று காட்டுகிறான்.

தானியேல் கண்ட இக்கடைசி இரண்டு தரிசனங்களுக்கும் நோக்கம் இன்னதென்று தானி $12^{4-13}$-ல் சொல்லியிருக்கிறது. தேவதூதன் தானியேலை அவன் கண்ட எல்லா தரிசன காட்சிகளையும் ஒரு புஸ்தகத்தில் எழுதிவைத்து வருங்காலங்களின் உபயோகத்துக்காகப் பத்திரப்படுத்தச் சொன்னான். $12^{10}$.

ஆதலால் இந்த நூலின் பொதுவான நோக்கம் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால், நியாயத்தீர்ப்பு பூர்த்தியாக நிறைவேறும் வரையில் நடக்கும் போராட்டங்களையும் உபத்திரவங்களையும் விசுவாசிகள் அறிந்து கடைசியாக வரும் ஜெயத்தின்மேல் நம்பிக்கைவைத்து நிலைபெற்று சுத்திகரிப்படைவதுதான்.

தானியேலின் மரணத்தைப்பற்றி ஒன்றும் தெரியாதிருக்க அவன் எருசலேமுக்குத் திரும்பிவந்து இறந்தான் என்பதே யூத பாரம்பரை.

2. **ஆக்கியோனும் காலமும்.** இதிலுள்ள சரித்திரத்தை நாம் வாசிக்கையில் நேபுகாத்நேச்சாரும் அவனுக்குப் பின்வந்த ராஜாக்களும் அரசாட்சி செலுத்திய காலமும் எரேமியா எசேக்கியேல் என்னும் தீர்க்கதரிசிகள் இருந்த காலமுமாகிய கி-மு. 6-ம் நூற்றாண்டில் தானியேல் என்பவன் தரிசனம் கண்டு ஏறக்குறைய கி-மு. 600-ளவு இதை எழுத ஆரம்பித்தான் என்று தோன்றுகிறது. ஆனால் எபிரெய பாஷையில் தேறின வேதசாஸ்திரிகளில் அநேகர் இந்த நூலை அதிக நுட்பமாய் ஆராய்ச்சிசெய்து இது எரேமியா எசேக்கியேல் என்னும் தீர்க்கதரிசிகளின் காலத்தில் எழுதப்பட்டது என்பதற்குச் சில ஆக்ஷேபனைகளைக் கண்டிருக்கிறார்கள். இவற்றில் சிலவற்றைக் கீழே கூறுகிறோம்:

(i) தமிழ் ஆங்கிலேய வேதாகமங்களில் தானியேல் ஆகமம் எரேமியா எசேக்கியேல் தீர்க்கதரிசன ஆகமங்களுக்கு அடுத்திருந்தாலும், எபிரெய ரபிமார் அதைத் தீர்க்கதரிசன ஆகமங்களோடு சேர்க்காமல் அவற்றினும் சற்றே குறைந்த மதிப்புடைய நாளாகமம், எஸ்தர் முதலியவை அடங்கிய கடைசிப்பாகத்தில் அதைச் சேர்த்தார்கள்.

(ii) தானி $2^{4}$-$7^{26}$. சீரியா பாஷையாகிய அரமேய பாஷையில் எழுதப்பட்டிருக்கிறது. அந்தப் பாஷை கி-மு. 600-ம் வருஷத்தில் பாபிலோனியா தேசத்தில் வழங்கப்படாததினால், அந்தத் தேசத்திலிருந்த தானியேல் அங்கு வழங்காத பாஷையில் இந்நூலின் ஒரு பாகத்தை எழுதுவானேன்? மேலும் மற்ற அதிகாரங்கள் எபிரெய பாஷையில் எழுதப்பட்டிருந்தாலும் அவற்றின் நடை எரேமியா தீர்க்கதரிசியின் காலத்தில் வழங்கின எபிரெய பாஷையின் நடையைப் போலிராமல் பிந்திய காலத்துப் பாஷை நடையை ஒத்திருக்கின்றது. இதில் கண்ட மூன்று கிரேக்கப் பதங்களும் இது பிந்திய காலத்தில் எழுதப்பட்டதைக் குறிக்கும்.

(iii) கி-மு. 200-ம் வருஷத்தில் எழுதப்பட்ட 'சீராகுவின் ஞானம்' என்னும் நூலின் ஆசிரியன் இஸ்ரவேலின் சரித்திரத்தை விவரமாய்ச் சொல்லும்போது தானியேலைப் பற்றிச் சொல்லாததினால் அவனுக்குத் தானியேல் ஆகமம் தெரியாது என்று தோன்றுகிறது.

(iv) பெல்ஷாத்சார் பாபிலோனுக்கு ராஜா என்றும் ($5^{1}$), நேபுகாத்நேச்சார் அவனுக்குத் தகப்பன் என்றும் ($5^{2}$), மேதியனாகிய தரியு பாபிலோனைக் கட்டிக்கொண்டான் என்

றும், ($5^{31}$) சொல்லியிருக்கிறது. இவை பாபிலோனிய சரித்திரத்தோடு பொருந்தாததினால், இந்த நூலாசிரியன் அக்காலத்தில் அல்ல அதற்கு அநேக வருஷங்களுக்குப் பிந்தியகாலத்தில் இருந்தான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. **அசீரியா, தரியு, பாபிலோன்** காண்க.

(v) 11-ம் அதிகாரத்தை நாம் பார்க்கும்போது சீரியாவின் ராஜாவாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் (*Antiochus Epiphanes*), என்பவன் ஏறக்குறைய கி-மு. 164-ம் வருஷத்தில் யூதர்களை உபத்திரவப்படுத்தின பொழுது நடந்த சம்பவங்களை இந்நூலாசிரியன் எழுதுகிறதினாலே, அவன் எப்பிப்பானேஸ் ராஜாவின் காலத்துக்கு முந்தியவன் அல்ல என்று நினைக்கலாம்.

சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் இந்நூலாசிரியன் சிறையிருப்பின் காலத்தில் பக்தியிலும் ஞானத்திலும் தேறின தானியேல் என்னும் ஒருவனைப்பற்றி உண்டாயிருந்த பாரம்பரியங்களைச் சேர்த்து அந்தியோகு ராஜா செய்த கொடிய உபத்திரவத்தினால் துயரப்பட்ட யூதர்கள் காட்டவேண்டிய தைரியம் வைராக்கியம் முதலிய குணங்களுக்கு இவனை உதாரணமாக வைத்து இவன் கண்ட தரிசனங்களின்மூலமாய் துன்பப்பட்டவர்களுக்கு ஆறுதல் சொல்லுகிறான் என்று மேற்கூறிய வேதசாஸ்திரிகள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

3. **பாஷை.** முன் சொன்னதுபோல $2^{4}$-$7^{26}$. எபிரெய பாஷையில் அல்ல அரமேய பாஷையில் எழுதப்பட்டிருக்கிறதினால் இந்நூலில் அரமேய பாஷையில் எழுதப்பட்ட ஒரு நூலும் எபிரெய பாஷையில் எழுதப்பட்ட இன்னொரு நூலும் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டதினால் இந்த பாஷை வித்தியாசம் தோன்றுகிறது என்று சிலர் நினைக்கிறார்கள். இதைப்பற்றிய சந்தேகத்தை நிவிர்த்திக்கக்கூடிய நியாயம் தெரியாவிட்டாலும் ஒரே நூலாசிரியன் இந்நூல் முழுவதையும் ஒரே நூலாக இயற்றினான் என்பது தற்காலத்து வேத சாஸ்திரிகளின் பொதுவான அபிப்பிராயம்.

4. **நோக்கம்.** உபத்திரவப்பட்டவர்களுக்கு ஆறுதல் கொடுக்கும்படி இந்த நூலாசிரியன் தேவராஜ்யம் ஸ்தாபகம் ஆகிறதைக் குறித்துப் பல தரிசனங்களை எழுதி அந்த தரிசனங்களின் அர்த்தத்தை விவரமாய்ச் சொல்லிக் கடவுளுக்காக உண்மையாய்ச் சாட்சி கொடுத்தவர்களும், கடவுளின் கற்பனைகளை மீறினவர்களும், நியாயத்தீர்ப்பு நாளில் உயிரோடெழுந்திருப்பார்கள் (தானி $12^{2}$) என்றும்; உண்மையுள்ளவர்களைக் காக்கும்படிக்கும், யேகோவாவின் சித்தத்தை நிறைவேற்றும்படிக்கும், மிகாவேல் முதலிய தேவதூதர்கள் இவ்வுலகத்தில் சஞ்சரிக்கிறார்கள் என்றும்; இவர்கள் கர்வங்கொண்ட ராஜாவைத் தண்டிப்பார்கள் என்றும் சொல்லி, கடவுளினுடைய சித்தத்தை வெளிப்படுத்தினதினாலே இந்நூல் எபிரெயர்களும் கிறிஸ்தவர்களும் எழுதின வெளிப்படுத்தல் என்னும் பெயர்கொண்ட பல நூல்களுக்கு முதனூல் என்று சொல்லுவோம்.

5. **அநுபந்தங்கள்.** செப்துவகிந்து என்னும் கிரேக்க மொழிபெயர்ப்பில் தானியேல் $3^{22}$ முதல் எபிரெய பாஷையில் இல்லாத 67 வசனங்கள் உண்டு. இவைகளில் மூன்று வாலிபர் செய்த ஜெபமும், சூளையைச் சூடாக்குகிற விஷயமும், ஓர் ஆசீர்வாதமும், விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. தள்ளுபடியாகமத்தில் இந்த நூலோடு சூசன்னாள் சரித்திரமும், பேலும் வலுசர்ப்பமும் என்னும் நூலுமாகிய இரண்டு பாரம்பரியக் கதைகள் சேர்ந்திருக்கிறது. ஆதி கிறிஸ்தவர்களால் அங்கீகரிக்கப்பட்ட இவைகள் தானியேல் என்பவனைப்பற்றிப் பேசினாலும், தானியேல் நூல் வேறே இவைகள் வேறே என்று நாம் தீர்மானிக்கவேண்டும்.

**தானியேல்.** Daniel.

1. தாவீதின் இரண்டாம் மகன். இவனுக்கு மறுபெயர் கீலேயாப். 2 சாமு $3^{3}$ 1 நாளா $3^{1}$.

2. எஸ்றாவோடு பாபிலோனிலிருந்து எருசலேமுக்கு வந்து உடன்படிக்கைக்கு முத்திரையிட்ட ஓர் ஆசாரியன். எஸ்றா $8^{2}$ நெகே $10^{6}$.

3. தீர்க்கதரிசி — **தானியேலின் ஆகமம்** காண்க.

## தி.

**திகிலாத் பிலேசர்.** Tiglath Pileser. **அசீரியா ராஜாக்கள்** காண்க.

**திகில்.** Wonder. Fear. யோபு $7^{14}$ ஏசா $66^{4}$ எரே $30^{5}$ $49^{24}$.

**திகைக்கிறது, திகைப்பு.** Wonder. ஏசா $29^{9}$ எரே $4^{9}$ எசே $32^{10}$.

**திக்கற்றவர்.** Destitute. சங் $102^{16}$ புல $5^{3}$ யோவா $14^{18}$.

**திக்கா.** Tikvah. = திக்வா (2.) எஸ்றா $10^{15}$.

**திக்குவாய்.** 'Slow of speech.' A. V. யாத் $4^{10}$.

**திக்லா.** Diklah. ஆதி $10^{27}$.

**திக்வா.** Tikva.

1. உல்தாளின் மாமன். 2 இரா $22^{14}$ 2 நாளா $34^{22}$. 2 நாளா $34^{22}$–ல் ஆங்கிலேய R. V–ல் திக்வா என்பதற்குப் பதிலாகத் தோகாத் (*Tokhath*) என்று எழுதப்பட்டிருக்கிறது.

2. =திக்கா. எஸ்ரு $10^{15}$.

**திசாகாப்.** Dizahab. மோவாப் தேசத்தில் செங்கடலுக்குச் சமீபமான ஒரு இடம். உபா $1^{1}$.

**திசை.** Region. யோவே $2^{20}$ சங் $48^{2}$ மத் $4^{16}$.

**திஸ்பி.** Thisbe. இது தீர்க்கதரிசியாகிய எலியா பிறந்த ஊர். 1 நாளா $17^{1}$. இது கலிலேயா நாட்டில் இருந்திருக்கலாம்.

**திஸ்பி, திஸ்பியன்.** Tishbeh, Tishbite. கிலெயாத் நாட்டில் உள்ள ஓர் ஊர். இதில் எலியா பிறந்ததால் இவனுக்கு அடிக்கடி திஸ்பியன் என்று சொல்லியிருக்கிறது. 1 இரா $17^{1}$ $21^{17}$.

**திஷான்.** Dishan. சேயீரின் மகன். ஆதி $36^{21}$. திஷோன் காண்க.

**திஷோன்.** Dishon.

1. சேயீரின் மக்களில் ஒருவன். ஆதி $36^{21}$.

2. ஆனாகுவின் மகன். ஆதி $36^{25}$.= திஷான். ஆதி $36^{26}$. யூதேயா மலைநாட்டில் உள்ள ஓரியருக்குள்ளிருந்த ஒரு வம்சத்தாருக்குத் 'திஷான்' என்றும் இன்னொரு வம்சத்தாருக்குத் 'திஷோன்' என்றும் பெயர் எனத் தோன்றுகிறது.

**திடம்.** Strength. யோசு $1^{6.7.9}$ உபா $31^{6}$ சங் $27^{14}$ $31^{24}$ ஏசா $35^{4}$ $41^{6}$ ஆகாய் $2^{4}$ 1 கொரி $16^{13}$ 1 தெச $5^{14}$ பிலி $1^{14}$.

**திடுக்கிடுகிறது.** To be terrified. யோபு $31^{34}$ எரே $4^{9}$ எசே $4^{17}$ $32^{10}$.

**திட்டு.** Little hill. ஏசா $42^{15}$.

**திதான்.** Dedan. தேதான் காண்க.

**திதிமு.** Didymus. [இரட்டைப்பிள்ளை]. யோவா $11^{16}$ $20^{24}$ $21^{2}$. அப்போஸ்தலனாகிய தோமாவின் மறுபெயர். தோமா காண்க.

**திதியால்.** Tidal. ஆதி $14^{1}$. பூர்வீக பாபிலோனியா ராஜாங்கத்தில் ஏறக்குறைய கி–மு. 2250–ஆம் வருஷத்தில் ஆபிரகாம் கானான் தேசத்தில் இருக்கும் காலத்தில் அம்ராபேல் முதலிய மூன்று சிற்றரசர்களோடு சோதோம் முதலிய பட்டணங்களுக்கு விரோதமாகப் படையெடுத்த ராஜாக்களில் ஒருவன். இவனுக்கு 'ஜாதிகளின் ராஜா' என்பது மறுபெயரானதினாலே இவன் பல கோத்திரங்களுக்கு அரசன் என்று தோன்றுகிறது. பாபிலோனியர் சரித்திரத்தில் இவன் தன் தகப்பனுக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினான் என்று தெரிகிறது. இதைத்தவிர இவனைப் பற்றி வேறொன்றும் தெரியாது.

**தித்சியன்.** Tizite. தாவீதின் போர்வீரனாகிய யோகாவுடைய மறுபெயர். 1 நாளா $11^{45}$.

**தித்திப்பு.** Sweet. நீதி $9^{17}$ $27^{7}$ ஏசா $5^{20}$ யாக் $3^{11}$.

**திபேரியா.** Tiberias.

ஏரோது அந்திப்பா கட்டின ஒரு பட்டணம். இதற்கு 'இராயனாகிய திபேரியுவின் பட்டணம்' என்னும் அர்த்தங்கொண்ட 'திபேரியா' என்று அந்த இராயனுக்கு முகஸ்துதியாக ஏரோது பெயரிட்டான். அவன் இதை ஸ்தாபித்த இடம் முன்னே சுடுகாடு ஆனதினால் யூதர்களுக்கு இந்த ஸ்தலம் வெறுப்பாய் இருந்தது. ஆதலால் ஏரோது அவ்விடத்திலே பலவந்தமாய்க்குடியேற்றின ஜனங்கள் யூதர்களுக்குள்ளே உயர்குலத்தார் அல்ல தாழ்ந்த குலத்தாரே.

கிரேக்க தேசத்திலுள்ள பட்டணங்களின் மாதிரியின்படி ஏரோது இதைக் கட்டி இதில் அவர்களுடைய தேவதேவதைகளுக்குத் தேவாலயங்களை ஸ்தாபித்தான். இது கலிலேயாக்கடல் மேற்கரையின் மத்தியில் கட்டப்பட்டது. இதின் பெயர் ஒரே ஒருதரம் மாத்திரம் புதிய ஏற்பாட்டிலே சொல்லப்பட்டிருக்கிறது. யோவா $6^{23}$. திபேரியாப் பட்டணம் கலிலேயாக்கடலின் கரையிலே இருப்பதினால் அதற்குத் 'திபேரியாக்கடல்' என்று பெயர். யோவா $6^{1}$ $21^{1}$. எருசலேம் பட்டணம் அழிந்துபோனபிறகு இதற்குத் தப்பிவந்த யூதர்களில் சிலர் கீர்த்திபெற்ற ரபிமாரானதினால் முன்னே அவர்கள் வெறுத்த இந்தப் பட்டணத்தில் யூதர்கள் எல்லாரும் மேன்மையாய் மதித்துவந்த ஒரு வேதசாஸ்திர கலாசாலை ஸ்தாபகமானது.

**திபேரியாக்கடல்.** The sea of Tiberius. கலிலேயாக்கடல் காண்க.

**திபேரியு.** Tiberius. அகுஸ்து என்பவனுக்குப் பிற்பாடு ரோம ராஜாங்கத்தில் சக்கரவர்த்தியான இவன் கி–மு. 42–ம் வருஷத்தில் பிறந்து கி–பி. 37–ம் வருஷத்தில் இறந்தான். இவன் முரட்டுக்குணமுள்ளவனானதால் தனக்குப்பின் இவனைச் சக்கரவர்த்தியாக நியமிக்க அகுஸ்துராயனுக்குப்



திபேரியா.

பிரியமில்லை. ஆனாலும், இந்த அதிகாரத்தைப் பெறத்தகுந்த தன் இனத்தான் வேறொருவனும் இல்லாததினால் அந்த ராயன் கி-பி. 11-ம் வருஷத்தில் சக்கரவர்த்தியின் மேலான அதிகாரத்தில் இவனைத் தன்னோடு சேர்த்துக்கொண்டான். கி-பி. 14-ம் வருஷத்தில் அகுஸ்து சக்கரவர்த்தி இறந்த பின்பு, திபேரியு மேலான அதிகாரம் அனைத்தையும் பெற்றுக்கொண்டு, கி-பி. 37-ம் வருஷமட்டும் 23 வருஷங்களாக ரோமராஜ்யத்தை ஆண்டுவந்தான். இவன் திறமையுள்ளவனானாலும் சமுசயமும் பயமும் நிறைந்தவனானதினால் தனது ஊழியக்காரரில் அநேகர் தன்னைக் கொலைசெய்யும்படி சதியாலோசனை செய்கிறார்கள் என்று அடிக்கடி நினைத்து அநேகரை அநியாயமாய்க் கொன்றுபோட்டான். இவன் அரசாண்ட வருஷங்களைக் கணக்கிடும்போது, இவன் ஆரம்பத்

தில் அகுஸ்துராயனேடு சேர்ந்து மேலான அதிகாரத்தை நடத்தின முதல் வருஷமே இவனது ராஜ்யபாரத்துக்கு முதல் வருஷம் என்று சாதாரணமாய் எண்ணப்பட்டதினுல், லூக் $3^1$–ல் சொன்ன இந்தச் சக்கரவர்த்தியினுடைய 13–ம் வருஷம் கி–பி. 25–26 ஷு குறிக்கலாம், மற்றப்படி கி–பி. 28–29 ஷு குறிக்கும்.

**திப்காத்.** Tibhath. வடசீரியாவிலுள்ள சோபா ராஜ்யத்திலுள்ள ஒரு பட்டணம். 1 நாளா $18^8$.

=தேபா ஆதி $22^{24}$.

=பேத்தா 2 சாமு $8^3$.

**திப்சா** Tiphsah. [கடந்துபோகும் இடம்].

1. சாலொமோனுடைய ராஜாங்கத்தின் வடகிழக்கு எல்லை. இவ்விடத்திலே வழிப்போக்கர் ஐப்பிராத்து நதியைக் கடந்துபோவார்கள். 1 இரா $4^{24}$.

2. தப்புவா. 2 இரா $15^{16}$.

**திப்ரி.** Dibri. லேவி $24^{11}$.

**திப்லா.** Diblah. எசேக்கியேல் சொன்ன இந்த ஊர் இருக்கிற இடம் இன்னதென்று நமக்குத் தெரியாது. எசே $6^{14}$.

**திப்லாயிம்.** Diblaim. தீர்க்கதரிசியாகிய ஓசியாவின் மனைவியாகிய கோமேரின் தகப்பன். ஓசி $1^3$.

**திப்னி.** Tibni. இஸ்ரவேல் ராஜ்யத்தின் ராஜாவாகிய உம்ரி என்பவனேடு நாலு வருஷமாக சண்டைசெய்து அவனுலே ஜெயிக்கப்பட்டவன். 1 இரா $16^{21}$.

**திமிங்கலம்.** Sea monster. யோபு $7^{12}$. தீர்க்கதரிசியாகிய யோனுவை விழுங்கின பெரிய மீன் திமிங்கலந்தான் என்று சிலர் நினைத்து யோனு ஆகமத்தில் சொன்ன 'பெரிய மீன்' என்பதற்குப் பதிலாகத் திமிங்கலம்' என்று சொல்ல விரும்புகிறுர்கள். மத்தியதரைக்கடலில் சில சமயங்களில் திமிங்கலம் இருக்கிறதினுல் இந்தப் 'பெரிய மீன்' திமிங்கலம் அல்ல என்று சொல்லத் துணியமாட்டோம். ஆனுல் எபிரெய பதத்தின் அர்த்தத்தை நாம் விசாரிக்கும்போது, இது திமிங்கலம் என்பதைக் குறிக்கிறது என்று சொல்வதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. திமிங்கலத்தைத் தவிர ஒரு மனுஷனை ஒரு மிக்க விழுங்கக்கூடிய சுறுமீன்களையும் நாம் அந்தக் கடலில் பார்த்திருக்கிறோம். ஒருவேளை இந்தப் பதம் இவைகளைக் குறிக்கலாம். யோபு $7^{12}$-ல் சொன்ன 'திமிங்கலம்' என்னும் பதம் எவ்விதமான பெரிய சமுத்திர ஜெந்துவையும் பொதுவாய்க் குறிக்கும். கடலில் விழுந்த ஒருவனைத் திமிங்கலம் உயிரோடு விழுங்கின பிற்பாடும் அவன் அதற்குள்ளிருந்து சுவாசித்துச் சில மணிநேரம் சாகாமல் உயிரோடிருப்பான் என்று சமுத்திரத்தில் திமிங்கலம் பிடிக்கிற மாலுமிகள் நிச்சயமாய்ச் சொல்லுகிறுர்கள்.

**திமிர்வாதம்.** Palsy. மத் $4^{24}$ $8^6$ $9^2$ மாற் $2^3$ அப் $8^7$ $9^{33}$. வியாதி காண்க.

**திமேயு.** Timaeus. பார்த்திமேயுவின் தகப்பன். மாற் $10^{46}$.

**திமோனு.** Dimonah. யூதாக்கோத்திரத்தின் தெற்கிலுள்ள ஊர்களில் ஒன்று. யோசு $15^{22}$. ஒருவேளை இதுவும் தீபோனும் ஒன்றுதான். நெகே $11^{25}$. **தீபோன்** காண்க.

**திம்னு.** Dimnah. யோசு $21^{35}$.

**திம்னு.** Timna, Timnah.

1. ஏதோமியர்களில் ஒரு பிரபு. ஆதி $36^{40}$.

2. எப்ரோன் பட்டணத்துக்குக் கிழக்கே யூதா மலைநாட்டிலுள்ள ஓர் ஊர். ஆதி $38^{12}$. யோசு $15^{57}$.

3. யூதாக் கோத்திரத்தின் வடஎல்லையிலுள்ள ஓர் ஊர். ஒருகாலத்தில் தாண் கோத்திரத்தையும் இன்னெரு காலத்தில் பெலிஸ்தரையும் சேர்ந்திருந்த இந்த ஊரிலே சிம்சோன் தன் கலியாணச்சடங்கை நடத்தினுன். இதற்கு 'திம்னுதா' என்று இன்னெரு பெயர் உண்டு. யோசு $15^{10}$ $19^{43}$ நியா $14^1$ $15^6$ 2 நாளா $28^{15}$.

**திம்னுதா.** Timnah. யோசு $19^{43}$. திம்னு (3) காண்க.

**திம்னுந் ஏரேஸ், திம்னுத் சேரா.** Timnath-Heres, Timnath-Serah. எப்பிராயீம் மலைநாட்டைச் சேர்ந்த இந்த ஊரில் யோசுவா சிலகாலம் குடியிருந்து இதிலே மரணமடைந்தான். திம்னுத் ஏரேஸ் என்பதற்கு சூரியனுடைய மாணியம் என்று அர்த்தமானதினுல் இந்த ஸ்தலத்தில் பூர்வீக ஜனங்கள் சூரியனை வணங்கினுர்கள் என்று நினைக்கலாம். இதற்கு இந்த அர்த்தம் உண்டாகாதபடிக்கு பிற்காலங்களில் விக்கிரக ஆராதனையை வெறுத்த வேதபாரகர், சூரியன் என்னும் அர்த்தங்கொண்ட ஏரேஸ் என்னும் பதத்தை அர்த்தமில்லாத சொல்லாகிய சேரா என்னும் பதமாக மாற்றினுர்கள். யோசு $19^{50}$ $24^{30}$ நியா $2^9$.

**திம்னுத் சேரா.** Timnath-Serah திம்னுந் ஏரேஸ் காண்க.

**திம்னுள்.** Timna.

1. ஏசாவின் மகனுகிய எலீபாசின் மறுமனையாட்டிகளில் ஒருத்தி. ஆதி $36^{12}$.

2. மலைநாட்டிலுள்ள ஓரியர் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு ஸ்திரீ. ஆதி 36[22].

**தியத்தீரா.** Thyatira. சின்ன ஆசியாவின் மேற்குபாகத்தில் இருக்கிற லீதியாவிலுள்ள இந்தப் பட்டணத்தை சிமிர்னு சர்தை முதலிய பெரிய பட்டணங்களிலிருந்து வடக்கேபோகிற ராஜபாதை ஊடறுத்துச் சென்றதினாலும், ரோமாபுரியிலிருந்து இப் பாதைவழியாய்ச் செல்லுகிற அஞ்சல்காரருக்கு இப்பட்டணம் ஒரு கெடிஸ்தலமாகையினாலும் இதிலுள்ள கடைகளுக்கு வியாபாரி முதலியவர்கள் அநேகர் வருவார்கள். இதில் ஒரு பெரிய கோட்டையும் இருந்தது. இந்த ஊரார் தங்கள் குடும்பங்களுக்கு ஆதித்தகப்பனாகிய ஒரு போர்வீரனுடைய சிரசைத் தங்கள் நாணயங்களில் சொரூபமாக அச்சிட்டு, இவனையும் இன்னும் சில தேவதேவிகளையும் வணங்கிவந்தார்கள். இதில் யூதர்களுக்கு ஒரு ஜெபஆலயம் இருந்தது. பிலிப்பிப்பட்டணத்திலுள்ள லீதியாள் இந்த ஊரிலிருந்து வந்தவள். அப் 16[14]. அந்தக்காலத்திலிருந்த தட்டார், கொல்லர், கன்னார், வர்ணப்பூச்சுக்காரர், நெசவுத்தொழிலாளர் முதலியவர்கள் தங்கள் தங்கள் தொழிலின் அபிவிர்த்திக்காக சங்கங்களை ஏற்படுத்தி அவற்றை நடத்திவருவது அத்தேசங்களில் வழக்கம். அப்படிப்பட்ட அநேக சங்கங்கள் இந்த தியத்தீரா பட்டணத்தில் இருந்தன. இதில் செய்த வெங்கலவேலை எங்கும் பேர்போனது. வெளி 2[18]-ல் கண்டபடி பரி. யோவான் இதிலுள்ள கிறிஸ்தவ சபைக்கு நிருபம் எழுதினதினால், கிறிஸ்தவ சபை உற்பத்தியானவுடனே இப்பட்டணத்திலும் சிலர் சபையை ஸ்தாபித்திருந்தார்கள் என்று நினைக்கலாம். அந்தச் சபையில் நிக்கொலாய் மதஸ்தர் இருந்தார்கள் என்பதற்கு அந்நிருபத்தில் அத்தாட்சி இருந்தபோதிலும் அவர்கள் அந்தச் சபையில் போதித்த கள்ளப்போதகம் இன்னதென்று தெளிவாய் அறிய முடியவில்லை. வெளி 1[11] 2[18-29].

**தியானம், தியானிக்கிறது.** Meditation யோசு 1[8] சங் 1[2] 5[1] 19[14] 49[3] 104[34] 119[15-48].

**தியானாள்.** Diana. எபேசு பட்டணத்தார் அதிக வைராக்கியத்துடனே வணங்கின அர்தெமிஸ் என்னும் தேவிக்கு லத்தீன் பாஷையில் தியானாள் என்று பெயரானதினால் ஆங்கிலேய பாஷையில் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் இவளுக்குத் 'தியானாள்' (*Diana*) என்னும் பெயரையே எழுதியிருக்கிறார்கள். தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்களும் இதைக்கொண்டு



தியானாள்.

அர்தெமிஸ் என்பதை தியானாள் என்று தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். இவள் மகா மாதா என்றும் பிள்ளைகள் பெறும்படி சக்திகொடுக்கிறவள் என்றும் யாவரும் வளரும்படி உதவிசெய்கிறவள் என்றும் எபேசியர் நினைத்து பல ஸ்தனங்களையுடைய ஒரு பெண்ணின் ரூபத்தை இவளுக்கு விக்கிரகமாக ஏற்படுத்தி, இவளை வணங்கி வந்தார்கள். எபேசியர்கள் இவளுக்காக எபேசு பட்டணத்திலே உலகமெங்கும் பிரசித்தியடைந்திருந்த ஓர் அலங்காரமான கோயிலைக் கட்டியிருந்தார்கள். இதிலே இந்தத் தேவியின் சொரூபத்தைக் காட்டுகிறதற்கு அநேக விக்கிரகங்களும் வானத்திலிருந்து விழுந்த ஒரு கல்லும் இருந்தது. அநேக தாசிகளைத் தனக்கு ஊழியக்காரிகளாக உடைய இந்தத் தேவியின் வணக்கம் பலவிதமான வேசித்தனத்துக்கு இடங்கொடுத்தது. அப்பட்டணத்தில் உள்ள தட்டார் அந்த அலங்காரமான கோயிலையும் அதற்குள் இருந்த தெய்வத்தையும் காட்டும்படி செய்த சிறிய வெள்ளிச் சிலைகளைத் தனவான்களும், சலவைக் கல்லினால் அல்லது களிமண்ணினால் செய்யப்பட்ட சிலைகளை ஏழைகளும் வாங்கி அவைகளைக் கோயிலுக்குக் கொண்டுபோய் ஆசாரியர்களுக்கு வேண்டிய காணிக்கை கொடுத்து அவற்றை ஆலயத்தில் பிரதிஷ்டைசெய்து வைப்பார்கள். இவைகளைச் சில காலம் கோயிலில் வைத்திருந்தபின்பு, ஆசாரியர் கற்சிலைகளையும் மண்சிலைகளையும் குப்பையில் எறிந்துவிட்டு வெள்ளிச் சிலைகளைத்

தட்டார்களிடத்தில் கொடுத்து அவைகளைப் புடத்திலிட்டு உருக்கி அவ்வெள்ளியைத் தாங்களே எடுத்துக்கொள்ளுவார்கள். குப்பையில் எறியப்பட்ட இந்தச் சிலைகளில் அநேகத்தை அத்தேசத்தார் சமயாசமயங்களில் இப்போதுங்கூட தோண்டியெடுக்கிறார்கள். தியானாள் தேவியை வணங்கும்படி வந்த தனவான்கள் அநேகரானதினால் அந்த ஊரில் இந்தச் சிறிய வெள்ளிக்கோயில்களைச் செய்த தொழிலாளிகளின் சங்கத்துக்கு அதிக லாபம் கிடைத்தது. அப் $19^{23,24,27,34,35}$. பரிசாரகி காண்க.

**தியோனீசியு.** Dionysius. அத்தேனே பட்டணத்தில் மார்ஸ்மேடை என்னும் இடத்தில் கூடிய சங்கத்தார் அந்த நகரில் பிரசங்கம்செய்ய விரும்புகிறவர்களுக்கு உத்தரவு கொடுக்க அதிகாரமுடையவர்களாய் இருந்தார்கள். பரி. பவுல் அவர்களுக்கு முன்பாக பிரசங்கம் பண்ணினான். அந்தச் சங்கத்தைச் சேர்ந்தவர்களில் தியொனீசியு என்பவன் கிறிஸ்தவனானான். அப் $17^{34}$.

**தியோத்திரேப்பு.** Diotrephes.

பரி. யோவானுக்கு விரோதமாய்ப் பொல்லாப்பு பேசிவந்தவனும், கிறிஸ்தவர்களை ஏற்றுக்கொள்வதற்குத் தடைசெய்தவனுமாகிய ஒரு கிறிஸ்தவன். இவனைப்பற்றி நமக்கு வேறொன்றும் தெரியாது. 3 யோவா $2^{9,10}$.

**திரணை.** Crown. Rim. யாத் $25^{11,24}$ $30^{4}$ $37^{11}$ 1 இரா $7^{29}$.

**திரவியம்.** Riches. வெளி $3^{17}$.

**திரள்.** Multitude. எரே $10^{13}$ யோவே $3^{14}$ சகரி $2^{4}$ மத் $4^{25}$ $5^{1}$ $8^{1}$ $15^{30}$ மாற் $9^{14}$ லூக் $5^{15}$ வெளி $7^{9}$.

**திராக்கோனித்தி.** Traconitis. தமஸ்கு பட்டணத்துக்குத் தென்கிழக்கில் கலிலேயாக் கடலுக்குக் கிழக்கே உள்ள வனாந்தரமான ஒரு நாடு. இதிலே மலைக்குகைகள் பல இருந்ததினால் கள்ளர்கள் இவைகளில் ஒளிந்திருப்பார்கள். இந்நாடு காற்பங்கு தேசாதிபதியாகிய பிலிப்புவின் அதிகாரத்துக்குள் இருந்தது. லூக் $3^{1}$.

**திராட்சச்செடி.** Vine. பூர்வகால முதற்கொண்டு பலெஸ்தீனா தேசத்தார் திராட்சச் செடியைப் பயிரிட்டு வந்திருக்கிறார்கள். அந்தத் தேசத்தில் வெயில்காலம் நீண்டதாகையினாலும் இராத்திரியில் பனி அதிகமானதினாலும் மலைச்சாரல்களில் திராட்சச்செடி செழிப்பாய் விருத்தியாகும். எரே $31^{5}$ ஆமோ $9^{13}$. திராட்சச்செடியில் பல ஜாதி உண்டு. வேதாகமத்தில் 'நற்கனி' கொடுக்கும் 'உயர்குல திராட்சச்செடியை'ப்பற்றிச் சில வசனங்களில் சொல்லியிருக்கிறது. ஆதி $49^{1}$ ஏசா $5^{2}$ எரே $2^{21}$. திராட்சச்செடி கனி கொடுக்கிறதற்குச் சில வருஷங்கள் செல்லுகிறதினால், ஜனங்கள் அதை விருத்திபண்ணுகிறதற்கு சண்டையில்லாத சமாதான காலமாயிருக்கவேண்டும். யுத்தகாலத்தில் இந்த தொழிலுக்கு நஷ்டம் உண்டாகும். ஆதலால் வேதாகமத்தில் "திராட்சச்செடியின் நிழலில்" குடியிருப்பது தேசத்தின் சமாதான காலத்தைக் குறிக்கும்படி உவமையாய்ச் சொல்லியிருக்கிறது. 1 இரா $4^{25}$ மீகா $4^{4}$ சக $3^{10}$ செப் $1^{13}$. திராட்சச்செடியின் நிழலுக்காகச் சில நாடுகளில் ஜனங்கள் தங்கள் வீட்டு வாசலுக்கு முன்பாக கிராதியினால் ஒரு பந்தல்போட்டு அதின்மேல் அந்தச் செடியைப் படரவிடுவார்கள். இஸ்ரவேலர் கானான்தேசத்தில் பிரவேசித்தபோது பல இடங்களில் நாட்டப்பட்டிருந்த திராட்சத்தோட்டங்களைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக்கொண்டார்கள். உபா $6^{11}$ யோசு $24^{13}$ நெகே $9^{25}$.

திராட்சத்தோட்டத்தை நாட்டுகிறதைப் பற்றி ஏசாயா தீர்க்கதரிசி விபரமாய்ச் சொல்லுகிறான். ஏசா 5. அதற்குச் சேதம் வராதபடிக்கு வேலி அல்லது சுவர் அவசியம். சங் $80^{12}$. திராட்சப்பழங்களிலிருந்து ரசம் பிழியும்படி மலைகளில் ஆலைகளை உண்டாக்குவார்கள். திருடராவது நரிகளாவது காட்டுப் பன்றிகளாவது உள்ளேவந்து செடிகளைப் பறிக்காதபடி காவற்காரனுக்கு ஒரு கோபுரம் கட்டுவார்கள். சங் $80^{13}$ உன். பா $2^{15}$ ஏசா $5^{2}$ மத் $21^{33}$. கனி பழுக்கும் காலத்தில் திராட்சத்தோட்ட எஜமானும் அவனுடைய வேலைக்காரரும் தோட்டத்திலே குடியிருப்பார்கள். வசந்தகாலத்தில் செடிகளுக்கு மத்தியில் உள்ள தரை எல்லாம் அதிக கவலையோடு தோண்டி களை நறுக்கிக் களை பிடுங்குவார்கள். லேவி $25^{3}$ ஏசா $5^{6}$. இதைக்குறித்து அஜாக்கிரதையாயிருந்தால், தோட்டம் சீக்கிரத்தில் பாழாய்ப்போம். நீதி $24^{30}$. சில ஜாதி திராட்சப்பழக் குலைகள் அதிக பெரிதாய் இருக்கும். எண் $13^{23}$. திராட்சக்கனி அறுத்தபிறகு குளிர்காலத்தில் திராட்சச்செடியின் இலைகளெல்லாம் உதிருகிறதினால், அக்காலத்திலே திராட்சத் தோட்டங்கள் அலங்காரமற்றுக் கிடக்கும். ஏசா $34^{4}$. திராட்சச்செடி கனி கொடாவிட்டால் கடவுள் தமது ஜனங்களைத் தண்டிக்கிறார் என்றும் அந்தச் செடிகள் நல்ல பலனைக் கொடுத்தால் அவர் அவர்களை ஆசீர்வதிக்கிறார் என்றும் இஸ்ரவேலர் நம்பினார்கள்.

லேவி 26⁵ சங் 78⁴⁷ எரே 8¹³ ஆப 3¹⁷. பூர்வீககாலத்தில் அத்தேசத்தில் திராட்சப்பழம் அதிகமானதினாலே அத்தேசத்தார் திராட்சரசத்தினால் தேன்போன்ற ஒருவித பாகு செய்வார்கள். வேதாகமத்தில் சொல்லியிருக்கிற தேன் என்னும் பதம் சில சமயங்களில் இந்தப் பாகைக் குறிக்கலாம். பல இடங்களில் இஸ்ரவேலர் திராட்சச்செடிக்கு உவமிக்கப்பட்டிருக்கிறார்கள். எசே 15, 17 அதி. ஏசா 5 அதி. சங் 80$^{8.14}$. யூதர்கள் தங்கள் நாணயங்களின்மேல் திராட்ச இலையின் உருவத்தை அச்சிடுவார்கள்.

புதிய ஏற்பாட்டிலும் திராட்சச்செடி உவமையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மத் 20¹ 21²⁸ யோவா 15¹ வெளி 14¹⁹.

உபா 32³²–ல் சொல்லப்பட்ட 'சோதோமில் பயிரான திராட்சச்செடி' தித்திப்பில்லாததும் பிரயோஜனமற்றதுமான ஒரு செடியைக் குறிக்கிறது. நல்ல சதைப்பற்றில்லாத இதன் கனி பார்வைக்கு அழகாய் இருந்தாலும் சாப்பிடும்போது சாம்பலையும் கசந்த மாவையும்போல இருக்கிறதினால், இது பொதுவாய் உபயோகமற்ற செடியைக் குறிக்கும் என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

**திராட்சரச ஜாடிகள்.** Wine Jars. இக்காலத்தில் வேதசாஸ்திரிகளில் சிலர் சமாரியா என்னும் நாட்டிலே ஆராய்ச்சியைச் செய்து அத்தேசத்தில் அகுஸ்துராயனுக்கென்று ஏரோதுராஜாவால் கட்டப்பட்ட ஒரு பெருங் கோவிலைத் தோண்டினபோது அந்தக் கோவிலின் அஸ்திபாரங்களுக்குக் கீழாக, இன்னொரு கட்டடம் இருக்கிறதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். அந்தக் கட்டடம் ஏறக்குறைய ஒன்றரை 'ஏகர்' விஸ்தீரணமுள்ள ஓர் கட்டடமாம். பலமுறை அது ஆகாபின் அரமனையாக இருந்திருக்கலாம் என்று சொல்லுகிறார்கள். அதிலே, திராட்சரசமும், எண்ணெயும் வைக்கப்பட்ட ஜாடிகளையும், இன்னும் சில பானைகளையும் கண்டுபிடித்தார்கள். எரே 48¹². அதுவுமன்றி, எபிரெய பாஷையிலே எழுதப்பட்ட ஒருவித பொருள் அட்டவணை அந்த ஜாடிகளோடிருந்தது; அதாவது, அந்தந்த ஜாடியில் வைக்கப்பட்ட திராட்சரசம் எந்தெந்த இடத்திலிருந்து வந்ததென்றும், யார் யாரால் அனுப்பப்பட்டதென்றும் அந்த அட்டவணையில் எழுதியிருந்தது. ஏறக்குறைய மூவாயிரம் வருஷங்களுக்குமுன் எழுதிய இந்த அட்டவணையைவிட, எபிரெய பாஷையில் எழுதப்பட்ட வேறு பழைய எழுத்துக்கள் இதுவரையிலும் எங்கேயாவது கண்டுபிடிக்கப்படவில்லை. அந்த அட்டவணையில், வேதாகமத்திலிருக்கும் பல பெயர்கள் காணப்படும். மேலும், அந்தப் பெயர்களில் அநேகம், 'பாகால்' என்னும் பேரோடு சேர்ந்திருக்கும். 1 இரா 16$^{30-33}$ 18$^{18.19}$ நாம் பார்த்தால், ஆகாப் என்பவன் பாகால் என்கிற தேவதைக்குக் கோவில்களைக் கட்டினதாகவும், அந்தப் பொய்த்தேவனை வணங்கினதாகவும், அந்தத் தேவதைக்குப் பணிவிடை செய்த அநேக ஆசாரியர்களுக்குச் சம்ரக்ஷணை செய்ததாகவும் காண்கிறோம். ஆகவே, அத்தருணத்தில் அநேகம் பிள்ளைகளுக்குப் பாகால் என்கிற பேர் இடப்பட்டிருக்கும் என்பதற்குச் சந்தேகம் இல்லை. இதுவும், ஆகாபைக் குறித்து வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதும் மெய் என்பதற்கு, இப்போது கண்டெடுக்கப்பட்ட அந்த அட்டவணை ஓர் அத்தாக்ஷியாகும்.

**திராட்சரசமும் மதுபானமும்.** Wine and strong drink.

1. **பெயர்கள்.** வேதாகமத்தை எழுதினவர்கள் திராட்சரசம் மதுபானம் என்னும் பதங்களினால் மயக்கஞ்செய்யக்கூடிய எவ்வித பானத்தையும் குறிக்கிறார்கள். லேவி 10⁹ 1 சாமு 1¹⁵ நீதி 20¹ லூக் 1¹⁵. வேதாகமத்தில் சொல் வழக்கின்படி 'திராட்சரசம்' என்பது திராட்சப்பழ ரசத்தையும் 'மது' அல்லது 'மதுபானம்' என்பது மற்ற சாராயங்களையும் குறிக்கும். சில வசனங்களில் 'திராட்சரசம்' என்பது அத்திப்பழரசத்தினால் செய்யப்பட்ட சாராயத்தைக் குறிக்கும். இதற்கு எபிரெய பாஷையில் வழங்கின பதங்களை நாம் விசாரிக்கும்போது பல வசனங்களில் தீரோஸ் (*Tirosh*) என்னும் ஒரு பதத்தைப் பார்க்கிறோம். அது திராட்சக் குலைகளிலிருந்து பிழிந்தெடுக்கப்பட்டதும் மயக்கஞ் செய்யாததுமான ரசத்தைக் குறிக்கிறது. இதற்குரிய வசனங்களையெல்லாம் இங்கே எடுத்துக்கூறுதல் நம்மால் இயலாது. உபா 7¹³ 11¹⁴ நெகே 10³⁷ ஏசா 24⁷. இந்தப் பதத்தைப் 'புதுத்திராட்சரசம்' (*New Wine*) என்று சொல்வது நல்லது. சில சமயங்களில் யூதர்கள் இதை உடனே சாப்பிடாமல், இதில் லாகிரி உண்டாகும்படி கொஞ்சக்காலம் வைத்திருந்து பிற்பாடு இதைச் சாப்பிடுவார்கள். ஆதலால் ஓசி 4¹¹–ல் தீரோஸ் என்பதற்கு மயக்கம் கொடுக்கும் 'மதுபானம்' என்று சொல்லியிருக்கிறது.

பலவிதமான திராட்சரசமும் அவற்றைக் குறிக்கும் பல பதங்களும் உண்டு. இவற்றின் வித்தியாசம் நமக்குத் தெளிவாய்த் தெரி

யாததினால் எல்லாப் பதங்களையும் 'திராட்சரசம்' என்று மொழிபெயர்ப்பது அவசியம் ஆயிற்று. யோவே $1^{5}$ ஆமோ $9^{13}$ ('மதுபானம்') அப் $2^{13}$. 'கலப்புள்ள சாராயம்' நீதி $23^{30}$. திராட்சரசத்தை 'திராட்சப்பழங்களின் இரத்தம்' என்று எபிரெயர்கள் உவமையாகச் சொன்னார்கள். ஆதி $49^{11}$ மத் $26^{29}$ உபா $32^{14}$ எஸ்றா $6^{9}$ தானி $5^{1}$.

2. **திராட்சரசம் இறக்கும் விதம்.** திராட்சச்செடி அதிக செழிப்பாய் விருத்தியாகும். கானான் தேசத்தில் ஏராளமான திராட்சத்தோட்டங்கள் உண்டு. 2 இரா $18^{32}$. (**திராட்சச்செடி** காண்க). அந்தத் தேசத்தில் அநேக நாடுகள் பாழாய்க்கிடந்ததினால் முன்போல செழிப்பான திராட்சத் தோட்டங்கள் தற்காலத்தில் அங்கே இல்லாவிட்டாலும், அந்தத் தோட்டங்களைக் காக்கும்படி கட்டப்பட்ட கோபுரங்களின் அஸ்திபாரங்களும் திராட்சரசம் இறக்கும்படி வைத்திருந்த ஆலைக்கற்களும் அத்தோட்டங்கள் முன்னே இருந்த ஸ்தலத்தைக் காட்டுகின்றன. மேலே பெரிதும் கீழே சிறிதுமான இரண்டு சிறிய தொட்டிகள் இந்த ஆலைக்குச் சாதாரணமாய் உண்டு. பெரிய தொட்டியில் திராட்சக் கனிகளைப்போட்டு, காலால் மிதித்து ரசம் வாய்க்காலின் மூலமாய்க் கீழ்த்தொட்டியில் பாயும்படி செய்து சக்கையை ஒருவித செக்கிலே போட்டு ஆட்டி மீதியான ரசத்தையும் இறக்குவார்கள். சில சமயங்களில் இரண்டு மூன்று தொட்டிகள் இருக்கும். 'ஆலையை மிதிக்கிறதை'ப்பற்றி வேதாகமத்தில் அநேக வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $5^{2}$ $63^{2.3}$ நெகே $13^{15}$ வெளி $14^{20}$ $19^{15}$.

கீழ்த்தொட்டியில் விழுந்த புதுரசத்தை மொண்டு துருத்திகளிலாவது பெரிய ஜாடிகளிலாவது வைத்துவைப்பார்கள். ஆகாய் $2^{16}$ மத் $9^{17}$. ரசம் பொங்கும்போது சில சமயங்களில் துருத்திகள் கிழிந்தும் ஜாடிகள் வெடித்தும்போம். (**திராட்சரச ஜாடிகள்** காண்க). இது பொங்கி வெறிகொடுக்கும் தன்மை யடைந்தபின்பு, இதை வடிகட்டி சிறு துருத்திகளிலும் ஜாடிகளிலும் அடைத்து வைத்துக்கொள்ளுவார்கள். மத் $23^{24}$ ஏசா $25^{6}$ எரே $48^{12}$. பிரயாணம் செய்கிறவர்கள் தங்களுக்கு வேண்டிய திராட்சரசத்தை துருத்திகளில் கொண்டுபோவார்கள். யோசு $9^{4}$.

திராட்சரசத்தை நெடுங்காலம் வைத்திருக்கவேண்டுமானால் அதை ஜாடிகளில் வார்த்து முத்திரைபோட்டு பண்டகசாலைகளில் அதை வைத்திருப்பார்கள். 1 நாளா $27^{27}$. லீபனோன், கெல்போன் என்னும் நாடுகளிலிருந்து பேர்போன திராட்சரசம் வரும். எசே $27^{18}$ ஓசி $14^{7}$.

3. **வேறு ரசபானங்கள்.** அத்திப்பழத்திலிருந்து ரசம் செய்யும்முறை பாபிலோனியர்களுக்கு நன்றாய்த் தெரிந்திருந்ததினால், எபிரெயர்களுக்கும் அது தெரிந்திருக்கும் என்று நினைக்கலாம். அத்தேசங்களில் ஜனங்கள் திராட்சரசம் செய்யும் முன்னே அத்திப்பழங்களிலிருந்து ரசம் செய்தார்கள். இதையல்லாமல் மாதளம்பழத்திலிருந்தும் ஒருவித ரசம் எடுத்தார்கள். உன். பா $8^{2}$.

4. **மதுபான மயக்கம்.** எபிரெயர் உபயோகித்த திராட்சரசத்தில் வெறியுண்டாக்கும் லாகிரி அவ்வளவு இல்லாததினால் அவர்கள் இதை வழக்கமாய்ச் சாப்பிட்டும் அவர்களுக்குள்ளே வெறிமயக்கம் உண்டாவது அபூர்வம். அதிக வெறிமயக்கம் உண்டாகும்படி பலவிதமான சாராயங்களைக் கலந்து வைக்கிறது பெரிய குற்றம் என்று ஏசாயா தீர்க்கதரிசி கண்டிக்கிறான். ஏசா $5^{22}$.

சில சமயங்களில் திராட்சரசத்தில் கந்தவர்க்கம் கலந்திருக்கும் உன். பா $8^{2}$. மதுபானங்குடித்து வெறிகொள்ளுவது துர்வழக்கம் என்று தீர்க்கதரிசிகள் சொல்லுகிறார்கள். ஏசா $5^{11}$ $28^{1}$ நீதி $20^{1}$ $23^{21.29}$ ஓசி $4^{11}$ ஆப $2^{15}$. பிந்தின காலங்களில் சிலுவையில் அறையுண்டோரின் அகோர வேதனையைத் தணிக்கும்படி ரோமாபுரி முதலிய ஸ்தலங்களிலுள்ள சில பரோபகாரிகள் குற்றவாளிகள் விஷயத்தில் பரிதாபம்கொண்டு, அவர்கள் சிலுவையில் இருக்கும்போது, மயக்கமடைந்து, ஸ்மரணையற்று, அதிக உபத்திரவம் இல்லாமல் உயிர் நீங்கும்பொருட்டு, கந்தவர்க்கம் கலந்த திராட்சரசத்தை அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்தார்கள். இயேசு அவ்வித மரணமடைய விரும்பவில்லை. மாற் $15^{23}$ மத் $27^{34}$.

5. **திராட்சரசம் சாப்பிடும் வழக்கம்.** திராட்சரசத்தை சாப்பிடாதபடி பொருத்தனை செய்துகொண்ட நசரேயர், ரேகாபியர் முதலியவர்களைத் தவிர எபிரெயர் எல்லாரும் திராட்சரசத்தைச் சாப்பிடுவார்கள். ஆசாரியர்கள் தங்கள் முறைமையின்படி தேவாலயத்தில் பணிவிடை செய்துவரும் காலத்தில் திராட்சரசம் அருந்தக்கூடாது. எரே $35^{14}$ தானி $1^{8}$ லேவி $10^{9}$. திராட்சரசம் தேவாலயத்தில் மற்றப் பலிகளோடு செலுத்தப்பட்டது. யாத் $29^{40}$ எண் $6^{3}$ $15^{5}$.

6. **மதுபான கண்டனம்.** திராட்சரசத்தின் மூலமாய்வந்த கெடுதிகளைப்பற்றி வே

தாகமத்தில் பல இடங்களில் சொல்லியிருக்கிறது. ஆதி 9²¹ 19³¹ 1 சாமு 25³⁶ 2 சாமு 13²⁸ 1 இரா 20¹² எஸ்தர் 1¹⁰ தானி 5²³ வெளி 17². திராட்சரசத்தைப்பற்றி உவமையாய்ச் சொன்னவைகள்:—

பரியாசம் செய்யும். நீதி 20¹. மனமயக்கம், துக்கம், வழிதப்புதல் முதலியவற்றை விளைவிக்கும். நீதி 23²⁹ ஏசா 5²² 28¹ 56¹² ஓசி 4¹¹ 7⁵ ஆமோ 6⁶ யோவே 3³. புதிய ஏற்பாட்டில் திராட்சரசம் குடிப்பதைப்பற்றிய எச்சரிப்புகள் உண்டு. ரோ. 14¹³ 1 கொரி 8⁸ 1 தீமோ 3³. இந்த வசனங்களில் அடங்கிய கருத்தின்படி, கிறிஸ்தவர்கள் அதைச் சாப்பிடுகிறதினால் தங்கள் சரீரத்துக்கு நேரிடக்கூடிய கெடுதி இல்லாவிட்டாலும், அதினால் உண்டாகக்கூடிய நன்மை இல்லை என்றும் அது அநேகருக்கு இடறலாய் இருக்கிறது என்றும் அறிந்து, அதைச் சாப்பிடாமலிருப்பதும் மற்றவர்களுக்கு அதைக் கொடாமலிருப்பதும் கிறிஸ்தவ ஆசாரத்துக்கு இசைந்திருக்கிறது என்று தீர்மானித்திருக்கிறார்கள்.

குறிப்பு.—2 சாமு 6¹⁹ 1 நாளா 16³ ஓசி 3¹ உன். பா 5²–ல் சொன்ன 'திராட்சரசம்' என்பதற்குப் பதிலாக, 'திராட்சப்பழ அடை' என்று சொல்லவேண்டும்.

**திராணி.** Ability. 1 கொரி 10¹³.

**திராத்தியர்.** Tirathites. வேதபாரகரில் ஒரு குடும்பம். 1 நாளா 2⁵⁵.

**திரிகிறது.** Wander. எரே 2²⁰ யோபு 15²³ 1 தீமோ 5¹³ எபி 11³⁷.

**திரிகை.** Wheel. எரே 18³. குயவன், மண்பாண்டம் காண்க.

**திரிபேனாளும், திரிபோசாளும்.** Tryphaena and Tryphosa. இவர்கள் பெயர்களின் அர்த்தத்தை நாம் விசாரித்தால் செல்வமாய் வாழ்ந்தவள் என்று அர்த்தம். இந்த அர்த்தமுடைய பெயரை யுடைத்தாயிருந்தாலும் இவர்கள் மகா கஷ்டத்தோடு ரோமாபுரியிலுள்ள சபையில் ஆண்டவருக்காகப் பணிவிடை செய்தார்கள். ரோ 16¹². அக்காலத்து ரோம ராயரின் ஊழியக்காரர் அடக்கம்பண்ணப்பட்ட கல்லறைகளில் ஒன்றிலுள்ள கற்பலகையின்மேல் திரிபேனாளின் பெயர் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதினால், இவள் ராயனுடைய அரமனையிலுள்ளவர்களில் ஒருத்தி என்று நினைக்க இடமுண்டு. பிலி 4²². கிரேக்க இலக்கணத்தில் தேறினவர்கள் கிரேக்க இலக்கணத்தின்படி இவர்களுடைய பெயர்கள் இவர்கள் கூடப்பிறந்த சகோதரிகள் அல்லது இனத்தார்கள் என்று குறிக்கிறது என்றும் அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள்.

**திரிபோசாள்.** Tryphosa. ரோ 16¹². திரிபேனாள். காண்க.

**திரியா.** Tiria. 1 நாளா 4¹⁴.

**திரியேகத்துவம்.** Trinity.

**I. திரியேகத்துவமாவது என்ன:**

1. இந்தக்கொள்கை பரமரகசியம். சுபாவ புத்தியினால் கடவுளிருக்கிறாரென்றும், அவர் பற்பல இலட்சணங்களை உடையவரென்றும் அறிந்துகொள்ளக்கூடுமானாலும், சுபாவ புத்தியினால் கடவுளின் தத்துவம் அல்லது அவருடைய தன்மை (*God-head*) இன்னதென்று அறிந்துகொள்ள முடியாது. கடவுள் ஒருவரே என்பது சந்தேகமற்ற விவகாரமானாலும், அந்த ஒருமையைப் பற்றி (*unity*) பூரணமாய் உணர்வது அரிது.

கடவுளாகிய பொருள் (*being*) அல்லது வஸ்து இன்னதென்றும், அவருடைய முக்கியமான தன்மை (*essence*) இன்னதென்றும், சுபாவ புத்திக்கு எட்டவே மாட்டாது. நாம் பஞ்சேந்திரியத்தினால் அறிந்துகொள்ளுகிற அநேக வஸ்துக்களின் தன்மையே இன்னதென்று நமக்குத் தோன்றாமலிருக்கும்போது ஆதிப்பொருளாகிய கடவுளினுடைய தன்மை இன்னதென்று நமக்கெளிதாய் விளங்குமோ? 'வானத்துக்கேறி இறங்கினவர் யார்? காற்றைத் தமது கைப்பிடிகளில் அடக்கினவர் யார்? தண்ணீர்களை வஸ்திரத்திலே கட்டினவர் யார்? பூமியின் எல்லைகளையெல்லாம் ஸ்தாபித்தவர் யார்? அவருடைய நாமமென்ன? அவர் குமாரனுடைய நாமமென்ன? அதை அறிவாயோ?' நீதி 30⁴.

கடவுளினுடைய தன்மை சிற்றறிவாளராகிய நம்முடைய புத்திக்கு விஷயமாகாததாய் இருக்கிறபடியால், வேதத்தின் மூலமாய் அவருடைய தன்மையைக் குறித்து நமக்கு அறிவித்ததையே உண்மையோடும் பக்தியோடும் நாம் அங்கீகரிக்கவேண்டும். அவருடைய சுபாவத்தைக்குறித்து அறிவித்ததாவது: 'தேவன் இருக்கிறவராக இருக்கிறேன்' என்றார். யாத் 3¹⁴. 'தேவனுடைய அந்தரங்க ஞானத்தை நீர் ஆராய்ந்து சர்வ வல்லவருடைய சம்பூரணத்தை நீர் அறியக்கூடுமோ?' யோபு 11⁷. 'இஸ்ரவேலே கேள் நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர்.' உபா 6⁴. 'தேவன் ஆவியாயிருக்கிறார், அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் ஆவியோடும் உண்மையோடும் தொழ

வேண்டும்.' யோவா 4[24]. 'நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள இராசனுமாய் அவரைத் தொழுதுகொள்ள ஒருவராக ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறார்.' 1 தீமோ 1[17]. இப்படி ஏகத்துவமாய் இருக்கிறவரைக்குறித்து அவர் திரியேகத்துவமாய் இருக்கிறார் (*Triune*) என்று சொல்வது பரமரகசியமானாலும் நாம் மிகுந்த வணக்கத்தோடும் விசுவாசத்தோடும் அன்போடும் அதை அங்கீகரிப்பதே நமது கடமை. மற்றப்படி 'அண்டரண்டங் கடந்து நிற்கின்ற ஜோதி' ஆகிய கடவுளின் தன்மையை யார் அறிந்து சொல்வார்?

நித்தியனே! காலத்தினதழிவின்
நிலையது மாறுபா டுறினும்
நீ குணமாறாய். சராசரப் பொருட்கு
நிவப்புள பொருளெனும் பெரியோய்,
உத்தமனே! நீ தனிக் கடவுளாம். இங்
குமைவிடத் தேவனு மில்லை.
உறுந் திரியேக சுவாமியே! மகிமை
யுள்ளநின் சமுகமே பொதுவாய்
எத்திசை மேவி நின்றுவற் சலமாய்,
யாவையுந் தழுவி நிச்சயமாய் [கொண்
இரங்கி, ஆதரித்தே, நடத்தி, ஆண்டு
டிடைவிடா திருந்து நீ வாழ்வாய்.
பத்தர்க ளுனையேகடவுளென் றுரைப்பார்.
பகரவே றொன்றையு மறியார்.
பாவிக ளுனையே யறியவும் அப்பாற்
பார்க்கவும் மதியிலை யுளரோ.

2. இந்தக் கொள்கையின் பொருளாவது: கிறிஸ்தவ வேதசாஸ்திரிகள் இந்தப் பரமரகசியத்தைப்பற்றிய ஆக்ஷேபனைகளை நிராகரிக்கும்படி செய்த வரையறுப்பு வாக்கியங்கள் அநேகம். இவைகளில் இரண்டுமட்டும் சொல்வது போதும்.

(i) 'பொதுவான விசுவாசமாவது, ஏகதேவனைத்திரித்துவமாகவும், திரித்துவத்தைஏகத்துவமாகவும் வணங்கவேண்டும் என்பதே. தேவத்துவமுள்ளவர்களைக் கலவாமலும், தேவதத்துவத்தைப் பிரியாமலும்இருக்கவேண்டும். பிதாவானவர் ஒருவர், குமாரனானவர் ஒருவர், பரிசுத்தஆவியானவர் ஒருவர். ஆனாலும் பிதாவுக்கும் குமாரனுக்கும் பரிசுத்த ஆவிக்கும் ஒரே தேவதன்மையும் சமமகிமையும் சமநித்திய மகத்துவமும் உண்டு' என்று அதனாசியு (*Athanasius*) என்பவனின் விசுவாசப்பிரமாணம் சொல்லுகிறது. (III. 3. கீழே காண்க.)

(ii) ஆங்கிலேய திருச்சபை வேதசித்தாந்தப் பிரமாணங்கள்: 'ஜீவனுள்ள ஒரே மெய்த்தேவன் உண்டு. சரீரம் இல்லாதவர், பகுக்கப்படாதவர், அளவில்லாத வல்லமையும்ஞானமும்கிருபையும்உள்ளவர். காணப்படுகிறதும் காணப்படாததுமாகிய சகலத்தையும் சிருஷ்டித்துக் காப்பாற்றுகிறவர். இந்த ஒரே தேவத்துவத்தில் ஒரே தன்மையையும், வல்லமையையும், நித்யத்துவத்தையும் உடைய பிதா குமாரன் பரிசுத்தஆவியாகிய மூவர் உண்டு.' (*Articles of Religion 1*)

II. புதிய ஏற்பாட்டில் இந்தக் கோள்கையைப்பற்றிக் கூறியது.

1. புதிய ஏற்பாட்டில் அடங்கிய போதனை. திரியேகத்துவத்தைப்பற்றிப் புதியேற்பாட்டில் கூறப்பட்டுள்ள விஷயங்களை நாம் விசாரித்தால் அவை பத்து எனக் காண்போம்.

(i) சதாகாலமாய்ப் பிதாவானவராகிய ஒரே கடவுள் இருக்கிறார்.

(ii) அவரோடு சதாகாலமாய்ப் பரிசுத்தாவியானவர் இருக்கிறார்.

(iii) அவருடன் அவருடைய ஒரே பேரான குமாரன் அறிவும் மகிமையும் பொருந்தினவராய் சதாகாலமாய் இருக்கிறார்.

(iv) காலம் நிறைவானபோது குமாரன் மனித அவதாரமாயும் தாழ்மையாயும் உலகத்தில் பிரவேசிக்கச் சித்தங்கொண்டு பிதா பரிசுத்தாவி என்பவர்களால் அனுப்பப்பட்டார். மத் 1[18] லூக் 1[35] யோவா 1[1] 1[14] பிலி 2[7].

(v) அவர் இவ்விதமாய் வருவது மனுஷர்களுடைய இரட்சிப்பின் பொருட்டே. அவர் வரும்முன் பிதாவினுடைய அன்பு மனுஷர் பேரில் இருந்தது, அவர் போனபின்பு பரிசுத்தாவியின் ஊழியம் அவர்களுக்குக் கிடைக்கிறது.

(vi) குமாரன் மனுஷரை மீட்கும்படி செய்யும் ஊழியத்தில் பரிசுத்தஆவி அவருக்கு அளவற்ற உதவிபுரிகிறார்.

(vii) தாழ்மையையும் மரணத்தையும் கல்லறையையும் அடைந்த குமாரன் உயிர்த்தெழுதலையும்மகிமையையும்பெற்றவராய்ப்பிதாவினிடத்துக்கு ஏறினார். பரிசுத்தாவியானவர் இதிலே உடன் ஊழியராய் இருக்கிறார். 1 பேது 3[18].

(viii) குமாரன் இவ்விதமாய்ப் பிதாவினிடத்திலிருந்து அனுப்பப்பட்டு, சாத்தானுடைய அதிகாரத்தை ஜெயித்து, உத்தம வரமாகிய பரிசுத்தஆவியையும், அவருக்குள்ளான சகல தெய்வீக வரங்களையும் மனுஷர்களுக்காகப் பெற்றுக்கொண்டு, தாம் செய்த மீட்பிலே மனுஷர்களும் பங்கு பெறும்படி

பரிசுத்தாவியானவரை இவ்வுலகத்திலே அனுப்பிவைத்தார்.

(ix) திருச்சபைக்கும் பிதாவுக்கும் மத்தியஸ்தராய் இருக்கிற இயேசுகிறிஸ்துவின் மூலமாய் மீட்பும், பரிசுத்தாவியின் மூலமாய் உத்தம ஞானமும் வருகிறது.

(x) கடைசியில் குமாரன் திரும்பவந்து நியாயத்தீர்ப்புச்செய்து, தமது ராஜ்யத்தைப் பிதாவினிடத்தில் ஒப்புக்கொடுப்பார். 1 கொரி $15^{24-28}$.

2. புதிய ஏற்பாட்டில் இந்தக் கொள்கையை ருசுப்படுத்தும் சில வாக்கியங்கள்.

கடவுள் ஒருவராயிருக்கிறதுமன்றி, மூவராயுமிருக்கிறார் என்று ஆதி கிறிஸ்தவர்கள் அபிப்பிராயங் கொண்டார்கள். அம்மூவரும் மூன்று தேவர்களல்ல, ஒரே தேவனுயிருக்கிறார் என்று புதிய ஏற்பாட்டில் பல வேத வாக்கியங்களினால் விளங்குகிறது.

(i) 'இயேசு பரமண்டலத்திற்கு எழுந்து போகிறதற்கு முன்னே அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: நீங்கள் பிதா, குமாரன் பரிசுத்தஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுங்கள் என்று கட்டளையிட்டார்.' மத் $28^{19}$.

ஞானஸ்நானத்தினாலே நாம் தேவனுக்குப் பணிவிடைக்காரராக நம்மை ஒப்புக்கொடுத்து வருகிறோமே. இந்த வாக்கியத்திலே நாம் நம்மைப் பிதா குமாரன், பரிசுத்தஆவியாகிய மூவருக்கும் ஒப்புவிக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறது. ஆதலால் தேவன் ஒரேவிதமான தன்மையையுடைய மூவராகவே இருக்கவேண்டும். இல்லாவிட்டால் நாம் நம்மைப் பிதாவாகிய தேவனுக்குமாத்திரமல்ல. தேவன் அல்லாத வேறு பேர்களுக்கும் ஒப்புக்கொடுக்கிறதாயிருக்குமே.

(ii) 'கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபையும் தேவனுடைய அன்பும் பரிசுத்தஆவியினுடைய ஐக்கியமும் உங்களனைவரோடுங்கூட இருப்பதாக' என்று பவுல் அப்போஸ்தலன் எழுதியிருக்கிறார். 2 கொரி $13^{13}$. இந்த வாக்கியத்தினாலும் தேவன் மூவராயிருக்கிறார் என்று தோன்றுகிறது. அல்லவென்றால் தேவனைத்தவிர வேறொருவர் கிருபையைக் கொடுக்கிறார் என்றும், வேறொருவருடனே நாம் ஐக்கியப்படலாம் என்றும் நினைக்கவேண்டியதாயிருக்கும். அப்படி நினைக்கக்கூடாதே.

(iii) நான் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறவனாயிருக்கிறேனென்றும் என்னை அனுப்பின பிதாவும் என்னைக்குறித்துச் சாட்சி கொடுக்கிறாரென்றும் பரிசுத்தஆவி வரும்பொழுது என்னைக்குறித்துச் சாட்சி கொடுப்பாரென்றும் இயேசுகிறிஸ்துநாதர் சொல்லியிருக்கிறார். யோவா $8^{17-18}$ $15^{26}$ 1 யோவா $5^{6}$. இதினாலே தேவன் மூவராயிருக்கிறாரென்று விளங்குகிறது.

3. இந்தக் கொள்கையை விளக்கும் உபமானங்கள்.

ஆதி கிறிஸ்தவர்கள் பலவிதமான உபமானங்களினால் திரியேகத்துவத்தைக் குறித்துச் சொன்னார்கள். மனிதர்களுக்குள்ளே மூன்று ஆட்களுக்கு மனுஷ சுபாவம் ஒரேவிதமாய் எப்படி உண்டோ, அப்படியே திரியேகத்துவத்திலும் வேறு தத்துவ சுபாவங்களையல்ல, ஒரே தத்துவத்தை (*essence*) யுடைய மூவரும் நம்முடைய சொற்ப புத்திக்குத் தோன்றும்படியாக மூன்று ஆட்களாய் இருக்கிறார்கள் என்றும்; (*persons, hypostases, subsistences,*) சக்தி, (*power,*) புத்தி, (*reason,*) சித்தம் (*will,*) ஆகிய திரிகுணங்கள் ஏகமனதைக் குறித்தாய் இருக்கிறதுபோல தேவதத்துவத்திலும் ஒரே தத்துவமுள்ள மூவர் இருக்கிறார்கள் என்றும்; சூரியனில் அசைவு, ஒளி, வெப்பம் ஆகிய திரிகுணங்களிருப்பதுபோலத் திரியேகத்துவத்திலும் மூவர் இருக்கிறார்கள் என்றும் உபமானமாய்ச் சொன்னார்கள். வேறு சிலர் கடவுள் சிருஷ்டிப்பு, இரட்சிப்பு, சுத்திகரிப்பு ஆகிய மூன்று தொழில்களினால் மூவராயிருக்கிறார் என்றார்கள். இவைகள் உபமானங்களேயொழிய அவர் தன்மையை விளக்குவிக்கும் திருஷ்டாந்தங்களல்ல. 'இப்படியிருக்கத் தேவனை யாருக்கு ஒப்பிடுவீர்கள்? எந்தச் சாயலை அவருக்கு ஒபபிடுவீர்கள்.' ஏசா $40^{18}$ $46^{5}$. திரியேகத்துவத்தில் மூன்று ஆட்களிருக்கிறார்களென்பது அநேகருக்கு விளங்காமையால் அவர்கள் அதைப்பற்றி விபரீத அர்த்தங்களைக் கொள்ளுகிறார்கள். ஆள் (*person*) என்பது நான், நீ, அவன் என்கிற தன்மை, முன்னிலை, படர்க்கைக்குரிய புத்தி சித்தமுள்ள உயர்திணைப் பெயரானாலும், கடவுளின் தொழில் முதலியவற்றில் திரியேகத்துவத்தில் வித்தியாசம் நாம் காண்பிக்கக்கூடுமேயொழிய தேவத்துவத்தில் வித்தியாசம் காண்பிக்க முடியாது. அப்படிச் சொல்வோமாகில் திரியேகத்துவத்தை ஏகத்துவமில்லாத திரித்துவம் ஆக்குவோம். அந்த நோக்கம் வேதத்தோடு ஒத்துவராது. (அறியானர், சபெல்லியானர் சோசீனியர் காண்க.)

III. இந்தக் கொள்கையின் சரித்திரம்.

கவனிப்பு.—(i.) முற்காலங்களில் வேத சாஸ்திரிகள் திரியேகத்துவத்தைப்பற்றிய

கொள்கையை யூதர்கள் ஏற்றுக்கொண்டார்கள் என்று நம்பி, அதைக் காட்டும்படி பின்வருகிற வசனங்களை எடுத்துக் கூறினார்கள்:—

(a) கர்த்தருடைய புஸ்தகத்திலே தேடி வாசியுங்கள்; அவருடைய வாய் இதைச் சொல்லிற்று; அவருடைய ஆவி அவைகளைச் சேர்க்குமென்று கர்த்தர் திருவுளம்பற்றியிருக்கிறாரென்று சொல்லியிருக்கிறது (ஏசா 34[16]). இந்த வாக்கியத்திலே அம்மூவரில் ஒருவர் பேசியிருக்கிறார். அவர் பிதாவையும் அவருடைய ஆவியையுங் குறித்துப் பேசியிருக்கிறார். இதினாலே தேவன் மூவரொன்று விளங்குகிறது.

(b) கர்த்தராகிய ஆண்டவரும் அவருடைய ஆவியும் என்னை அனுப்பினாரென்று கர்த்தர் திருவுளம்பற்றியிருக்கிறாரென்று சொல்லியிருக்கிறது (ஏசா 48[16]). இதிலே வார்த்தையானவர் பேசியிருக்கிறார். ஆதலால் இதினாலேயும் மூவரொன்பது விளங்குகிறது.

(c) கர்த்தருடைய வார்த்தையினால் வானங்களும், அவருடைய வாயின் சுவாசத்தினால் அவைகளின் சர்வசேனையும் உண்டாக்கப்பட்டதென்று தாவீது சொன்னார். சங் 33[6].

இதிலே சொல்லியிருக்கிற வார்த்தையானவர் கிறிஸ்துவையும், சுவாசமானது பரிசுத்த ஆவியையும் குறிக்கின்றன. அவ்விரண்டும் தேவனுடையதென்றும் சொல்லியிருக்கிறது. ஆனதால் தேவன் மூவராயிருக்கிறாரென்று இதினாலேயும் விளங்குகிறது.

(d) (i) மேலும் எபிரெயபாஷையில் தேவலக்ஷணங்களைக் குறிக்கிற அவருடைய பெயராகிய ஏலோகீம் (*Elohim*) என்பது பன்மைப் பெயராய் இருப்பதும் அந்தப் பன்மைப் பெயர் சில வசனங்களில் பன்மை வினைச்சொல்லோடேயும் வேறு அநேக இடங்களில் ஒருமை வினைச்சொல்லோடேயும் கூட்டப்பட்டிருப்பதும் யூதர்கள் மேற்சொன்ன கொள்கையுடையவர்களாயிருப்பதற்கு ஏதுவாயிருந்தன. இவ்விதமாக 'நமது சாயலாகவும் நமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக' (ஆதி 1[26]) என்ற வசனத்தைப்போல பல வசனங்களில் தேவன் தன்மைப் பன்மைப் பெயரைப் பிரயோகிப்பதைப் பார்த்து, இதுவும் இந்தக் கொள்கைக்கு அத்தாட்சியாய் இருக்கிறது என்று ஆதி கிறிஸ்தவர்கள் நினைத்தார்கள்.

(ii) எபிரெய பாஷையின் நடையையும் சீரியா அசீரியா முதலிய தேசங்களில் வழங்கின மற்ற பாஷைகளின் வழக்க நடையையும் நன்றாய் ஆய்ந்தறிந்த தற்காலத்து வேத சாஸ்திரிகளோ, மேலே காட்டிய இலக்கணக் குறிப்பு இந்தக் கொள்கையைக் குறிக்கிறதில்லை என்றும், எலோயீம் என்னும் பெயர்ச்சொல் பன்மையாய் இருப்பதும் சில இடங்களில் பன்மையோடு சேர்ந்திருப்பதும் எபிரெய பாஷையின் நடையேயன்றி வேறல்ல என்றும், அந்த உயர்திணைப் பன்மை மேன்மையைமட்டும் குறிக்கிறதென்றும் கூறுகிறார்கள்.

**2. பழைய ஏற்பாட்டுக் காலம்.** யூதர்கள் கடவுளின் தன்மையைக் குறித்துக்கொண்டிருந்த அபிப்பிராயங்கள் அனைத்தையும் சுருக்கமாய்ச் சொல்லுவதற்கும் இந்த அகராதியில் இடம் இல்லாததினால், சில விஷயங்களைமாத்திரம் இங்கே எடுத்துக்காட்டுவோம். முதலிலே, பாபிலோனியர், அசீரியர், பெலிஸ்தர் முதலியவர்களைப்போலவே, எபிரெயர்களும் யேகோவாவைப்போல பாகால் அஸ்தரோத் முதலிய அநேக தேவர்கள் உண்டு என்று நம்பினார்கள். மோசேயின் மூலமாய் இவர்கள் யேகோவாவைப்பற்றி நற்போதனைகளை அடைந்தபோதிலும், யேகோவா தங்கள் தேசத்துக்கே மேலான தேவன் என்றும், யேகோவாவைத் தவிர வேறு அநேக தேவர்கள் மற்ற தேசங்களில் அதிகாரம் உடையவர்களாய் இருக்கிறார்கள் என்றும் அவர்கள் தயவைப் பெறும்படி அவர்களுக்கும் காணிக்கையைச் செலுத்தி யேகோவாவுடன் அவர்களையும் வணங்குவது நல்லது என்றும் தீர்மானித்து, அப்படியே பலதடவை செய்துவந்தார்கள்.

தீர்க்கதரிசிகளின் காலமுதல் ஒரே தேவன் உண்டு என்பதின் அர்த்தத்தை எபிரெயர் அறிய வந்தார்கள். சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமானால், அதற்குப் பிற்பாடு தேவனுக்கும் தங்களுக்கும் இடையில் ஒரு மத்தியஸ்தன் இருக்கவேண்டுமென்று விரும்பி 'தேவதூதர்கள்,' 'ஞானம்,' 'வார்த்தை,' 'வெளிப்படுத்தல்,' 'யேகோவாவின் தாசன்' முதலிய பதங்கள் வரப்போகிற மேசியாவைக் குறித்தது என்று நம்பிவந்தார்கள். இதைக் குறித்துப் பற்பல விஷயங்களை அவர்கள் அறிந்துவந்தாலும் திரியேகத்துவத்தைப்பற்றியாவது, பரிசுத்தஆவியைக் குறித்துப் புதிய ஏற்பாட்டில் சொல்லப்பட்டிருக்கிற கொள்கையைப் பற்றியாவது அவர்கள் ஒன்றும் அறியவேயில்லை. திரியேகத்துவத்துள் மூன்றாம் ஆளாகிய பரிசுத்தஆவியைப் பற்றிய கொள்கை இயேசுகிறிஸ்து அருளின போதனையில் முதல்முதல் தோன்றுகிறது.

3. புதிய ஏற்பாட்டிலே திரியேகத்துவம் என்னும் கொள்கையைப்பற்றி ஒரு வாக்கியத்தில்கூட விபரமாய்ச் சொல்லியிராவிட்டாலும், நாம் முன்னே எடுத்துக்காட்டிய வாக்கியங்களிலேயும் அப்போஸ்தலர் எழுதின எல்லா ஆகமங்களிலும் அதுவே மூல போதனையா யிருக்கிறது. பரி. பவுல் முதலியவர்களுடைய மனதில் திரியேகத்துவத்தைப்பற்றிய கொள்கை இல்லாவிட்டால், கடவுள் செய்த ஊழியத்தைப்பற்றி அவர்கள் சொன்னவைகளை அறிவது அரிது. ஆனால் அப்போஸ்தலர் இயற்றிய நூல்களில் திரியேகத்துவத்தைப்பற்றிய மாறுபாடில்லாத கொள்கை இருந்தும், ஆதி கிறிஸ்தவர்கள் அனைவரும் திரியேகத்துவத்தைப்பற்றி பல அபிப்பிராயங்களுள்ளவர்களாய் இருந்தார்கள். சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால், இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டுகளில் உள்ள கிறிஸ்தவர்களில் அநேகர் பிதா குமாரன் பரிசுத்தஆவி என்னும் பெயர்களை வழங்கிவந்தாலும் அவர்கள் அப்பெயர்களில் அடங்கிய அர்த்தத்தையும் அம்மூவருக்குமுள்ள சம்பந்தத்தையும் நிதானமாயும் தீர்மானமாயும் விபரிக்கவில்லை. பதிதர்கள் குமாரனுடைய சுபாபத்தைப்பற்றியும் பரிசுத்த ஆவியின் ஊழியத்தைப்பற்றியும் கள்ள உபதேசங்களைப் பிரபலியமாக்கின காலமுதல் திருச்சபையில் சத்திய உபதேசம் நிலைநிற்கவேண்டும் என்று விரும்பினவர்கள் இந்தப் பரம கொள்கையைக்குறித்துப் பொதுவான சங்கங்களில் விசாரணைசெய்து சத்திய உபதேசத்தை நிர்ணயம் பண்ணி, அந்த உபதேசத்தைப் பொதுவான விசுவாசப் பிரமாணங்களுக்குள் அடக்கிப் போதித்துவந்தார்கள்.

கி—பி. 325—ஞ பிரசுரமான நிசியின் விசுவாசப்பிரமாணத்தில் (*Nicene Creed*) பிதாவுக்கும் குமாரனுக்கும் இருக்கிற சம்பந்தத்தை விபரித்து கி—பி. 381—ஞ கான்ஸ்தந்தீன்புரியில் (*Constantinople*) கூடின சங்கத்தார் பரிசுத்த ஆவி 'பிதாவிலும் குமாரனிலும் இருந்து புறப்படுகிறவர்' என்பதை உறுதிப்படுத்தி அந்தத் திரியேகத்துவத்திலுள்ள சம்பந்தத்தை மனுஷர்களுடைய அறிவுக்கெட்டினமட்டும் விளக்கிக் காட்டினார்கள். ஏறக்குறைய கி—பி. 500—ஞ பிரசுரமான அதனாசி விசுவாசப்பிரமாணம் அதனாசியு என்பவன் இயற்றின விசுவாசப் பிரமாணம் அல்ல. இதை இயற்றினவனுடைய பெயர் தெரியாது. ஆனால் இதை ஐரோப்பாக் கண்டத்தின் மேற்குத் தேசங்களில் இருக்கிற சபைகள் ஏற்றுக்கொண்டது என்றும், அந்த விசுவாசப்பிரமாணத்தில் திரியேகத்துவத்தைப்பற்றி விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது என்றும் பார்த்து கிறிஸ்தவ சபை 6—ம் நூற்றாண்டு முதல் இதில் சொன்ன உபதேசத்தை அங்கீகரித்து வந்தது என்று நம்பலாம். கிரேக்க சபை மேற்குத்தேசங்களிலிருந்த சபையைப்போல பரிசுத்தாவி 'பிதாவிலும் குமாரனிலும் இருந்து புறப்படுகிறவர்' என்று சொல்லாமல், அவர் பிதாவில் இருந்து புறப்படுகிறவரா யிருக்கிறார் என்றுமாத்திரம் சொல்லுகிறது. இதில் கிரேக்க சபைக்கும் மேற்கிலுள்ள சபைகளுக்கும் திரியேகத்துவத்தைப்பற்றிய முக்கிய வித்தியாசம் தோன்றுகிறது.

அக்காலம்முதல் வேதசாஸ்திரிகளிலும் தத்துவ சாஸ்திரிகளிலும் அநேகர் இந்தப் போதனையை விளக்கிக் காட்டும்படி பிரயாசைப்பட்டு தர்க்கசாஸ்திர நூல்களையும் தத்துவசாஸ்திர நூல்களையும் பல தேசங்களிலும் பல பாஷைகளிலும் எழுதியிருந்தாலும் மறைவான இந்தப் போதனை எப்பொழுதும் மறைபொருள்தான் என்று தீர்மானிக்க வேண்டியிருக்கிறது.

**திருக்கு.** Deceit. எரே $17^{9}$.

**திருச்சபை.** The Church. சபை காண்க.

**திருஷ்டாந்தம்.** Example. 1 கொரி $10^{6.11}$ 2 பேது $2^{6}$.

**திருஷ்டி.** Divination. மாற் $14^{65}$ லூக் $22^{64}$. ஞானதிருஷ்டி காண்க.

**திருடன், கள்ளன், திருடுகிறது.** Thief, Theft, Robber. (*a*) திருடன். யாத் $22^{8}$ உபா $24^{7}$ யோபு $24^{14}$ நீதி $6^{30}$ $29^{24}$ $30^{9}$ எரே $2^{26}$ $4^{27}$ ஓசி $7^{1}$ ஒப $1^{5}$ மத் $6^{19}$ $24^{43}$ லூக் $12^{33.39}$ யோவா $12^{6}$ 1 கொரி $6^{10}$ 1 தெச $5^{2}$ எபே $4^{28}$ 1 பேது $4^{15}$ 2 பேது $3^{10}$ வெளி $3^{3}$ $16^{15}$.

(*b*) கள்ளன். யோபு $30^{5}$ எரே $7^{11}$ எசே $18^{10}$ மத் $21^{13}$ $26^{55}$ $27^{38}$ மாற் $11^{17}$ $14^{48}$ $15^{27}$ லூக் $10^{30}$ $19^{46}$ யோவா $10^{1.8}$ $18^{40}$ 2 கொரி $11^{26}$. ஆக்கினை காண்க.

**திருநாட்கள்** Holy day. பண்டிகை காண்க.

**திரும்புதல்.** Return. ஆதி $14^{17}$ யாத் $13^{17}$ எண் $10^{36}$ உபா $30^{2}$ நியா $11^{31}$ யோபு $10^{21}$ சங் $116^{7}$ பிர $12^{7}$ ஏசா $10^{21}$ $35^{10}$ $51^{11}$ $55^{7.10}$ எரே $31^{8}$ ஓசி $3^{5}$ மல் $1^{4}$ எபி $11^{15}$.

**திரைச்சீலை.** Veil. ஆசரிப்புக் கூடாரம், தேவாலயம் காண்க.

**திர்கானா.** Tirkanah. காலேப்பின் மகன். 1 நாளா $2^{48}$.

**திர்சா.** Tirzah. [களிப்பு] யோசுவா பிடித்த 31 பட்டணங்களில் ஒன்று. முதலாம் யெரொபெயாம் முதலிய ராஜாக்கள் வாசம்பண்ணின ஓர் அழகான பட்டணம். இது சமாரியா நாட்டில் இருந்தது என்பதைத்தவிர இதைக்குறித்து நமக்கு ஒன்றும் தெரியாது. யோசு $12^{24}$ 1 இரா $14^{17}$ $15^{21}$ $16^{6}$ உன். பா $6^{4}$.

**திர்சாள்.** Tirzah. [களிப்பு] மனாசே கோத்திரத்தில் சுதந்தரம்பெற்ற செலோப்பியாத்தின் ஐந்து குமாரத்திகளில் ஒருத்தி. எண் $26^{33}$ $27^{1}$ $36^{11}$ யோசு $17^{3}$.

**திர்ஷாதா.** Tirshatha. பெர்சிய பாஷையில் திர்ஷாதா என்னும் பதம் முதன்மையுடையவன் அல்லது சங்கை பொருந்தியவன் என்று பொருள்படும். இவன் ராஜாவுக்காக விசேஷித்த உத்தியோகஞ்செய்து அவனுக்குப் பதிலாக அரசாட்சி செய்யும்படி அனுப்பப்பட்ட ஒரு பெரிய அதிகாரி. இந்த அர்த்தங்கொண்ட இப்பெயர் செருபாபேல் என்பவனுக்கும் நெகேமியா என்பவனுக்கும் சொல்லப்பட்டிருக்கிறது. எஸ்று $2^{63}$ நெகே $7^{70}$ $8^{9}$ $10^{1}$.

**தில்யான்.** Dilan. யோசு $15^{38}$.

**தில்காத்பில்நேசர்.** Tilgath Pilneser. பூல் அல்லது திகிலாத்பிலேசர் என்பவனுக்கு இது மறுபெயர். 1 நாளா $5^{26}$. **அசீரியா ராஜாக்கள்**, 10-ம் பக்.—காண்க.

**திவ்விய.** Divine. 2 பேது $1^{3,4}$.

**திறக்கிறது.** Open. யோபு $41^{14}$ சங் $51^{15}$ $104^{28}$ $105^{41}$ $118^{19}$ நீதி $24^{8}$ $31^{8}$ உன். பா $5^{2}$ எரே $32^{11}$ எசே $37^{12}$ மத் $2^{11}$ $7^{8}$ யோவா $1^{51}$ $9^{10}$ அப் $16^{26}$ 1 கொரி $16^{9}$ கொலோ $4^{3}$ வெளி $3^{8}$ $5^{3}$ $20^{12}$.

**திறப்பு.** Breach. எசே $26^{10}$ ஆமோ $6^{11}$.

**திறவுகோல்.** Key.

1. கதவின் பூட்டுக்குத் திறவுகோல். யூதர்களுடைய வீட்டு வாசல்களிலிருக்கிற கதவுகளுக்கு நமக்கு இருக்கிற இருப்புப் பூட்டுகளைப்போன்ற சிறு பூட்டுகள் இல்லை. வழக்கமாய், அந்தக் கதவைத் திறக்கும்படிக்கும் சாத்தும்படிக்கும் மரத்தினால் செய்த ஒரு பெரிய தாழ்பாள் இருக்கும். இந்தத் தாழ்பாளைத் தள்ளுகையில் அதை ஊடறுத்துச் செல்லுகிற சில துவாரங்களில், அதற்கு மேலேயிருக்கிற சில ஆணிகள் தாழ்பாளை இழுக்க முடியாதபடி இறங்கிக்கொள்ளும். கதவைத் திறக்கவேண்டுமானால் அந்த ஆணிகளை ஏற்றும்படி மரத்தினால் செய்த திறவுகோலை அவர்கள் உபயோகிப்பார்கள். கதவின் தாழ்பாளிலே துவாரங்கள் எப்படி இருக்குமோ அப்படியே இந்தத் திறவுகோலிலும் சில ஆணிகள் இருக்கிறதினால், இந்தத் திறவுகோலைத் தாழ்பாளுக்குக் கீழே போட்டு ஆணிகளினாலே தாழ்பாளுக்கு ஊடே இறங்கின ஆணிகளை மேலே ஏற்றி தாழ்பாளைப் பின்னாக இழுத்து இப்படியாகக் கதவைத் திறக்கவேண்டும். நியா $3^{25}$ நெகே $3^{3}$ உன். பா $5^{4}$ ஏசா $22^{22}$. பட்டணங்களுக்கும் கோட்டைகளுக்கும் மாளிகைகளுக்கும் உள்ள கதவுகளின் பூட்டுகள் மிகப் பெரிதாயிருக்கும்.

2. உவமையாக அறிவாகிய திறவுகோல். லூக். $11^{52}$. தாவீதின் திறவுகோல். வெளி $3^{7}$.

**'திறவுகோல்கள் என்பதின் அதிகாரம்'** The power of the Keys. கிறிஸ்தவ திருச்சபைச் சரித்திரத்தை நாம் விசாரிக்கும்போது இயேசுகிறிஸ்து பிரதமஸ்தானத்தையும் ஜனங்களை தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கச் செய்கிறதற்கும் தள்ளுகிறதற்கும் உரிய சர்வாதிகாரத்தையும் பரி. பேதுரு அப்போஸ்தலனுக்குக் கொடுத்தருளினார் என்னும் அபிப்பிராயத்தை ரோமான் சபையாரும் மற்றவர்களும் கைக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்று காண்கிறோம்.

மத் $16^{18,19}$-ல் இயேசு அதைக்குறித்து அருளின வாக்கியமாவது:

மேலும், நான் உனக்குச் சொல்லுகிறேன், நீ பேதுருவாய் இருக்கிறாய், இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்வதில்லை. பரலோகராஜ்யத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன்; பூலோகத்திலே நீ கட்டுகிறது எதுவோ அது பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும், பூலோகத்திலே நீ கட்டவிழ்ப்பது எதுவோ அது பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும்.

இந்தக் கொள்கைக்குத் 'திறவுகோலின் அதிகாரம்' என்று வேதசாஸ்திரிகள் பேர் சொல்லுவார்கள். மேற்காட்டிய இவ்வசனங்களை ஆதாரமாகக்கொண்டு, ரோமான் சபையார், பேதுருவுக்கும் அவனுக்குப்பின் ரோமாபுரியிலிருந்த பாப்புக்களுக்கும் இந்த அதிகாரம் இருக்கிறது என்றும் பேதுருவும் பாப்புக்களும் அவர்கள் ஏற்படுத்தியவர்களும்மாத்திரம் இயேசுகிறிஸ்துவுக்குப் பதிலாக இவ்வுலகத்திலே அதிகாரம் செலுத்தக்கூடியவர்கள் என்றும் தீர்மானமாய்ச் சொல்லுவார்கள். ஆனால் இவ்வசனத்தை நாம் ஆராய்ந்து பார்க்கும்போது இந்தக் கொள்கைக்கு இங்கே

திறவுகோல்கள் என்பதின் [illegible]

காரணம் இல்லை என்று அறிவோம். இதைக் குறித்த சில விஷயங்களைக் கவனிப்போம்:—

i. இதில் இயேசுகிறிஸ்து பேதுருவுக்கு அதிகாரத்தை அருளினதையும் பேதுரு தான் பல சபைகளுக்கு அஸ்திபாரக்கல்லாய் இருப்பதையும், அவன் கிறிஸ்தவ சபையில் பிரதம அதிகாரத்தைச் செலுத்துகிறதையும் நாம் ஒத்துக்கொள்ளவேண்டியதே.

ii. பரி. பேதுரு 'நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து' என்று அறிக்கையிட்டதினாலே அவன்தான் முதல் கிறிஸ்தவன் என்பதை நாம் ஒத்துக்கொள்ள வேண்டும்.

iii. இயேசு பரலோக ராஜ்யத்தின் திறவுகோலை அவனுக்குக் கொடுத்ததினாலே, அவன் தன் ஆண்டவருடைய பொக்கிஷசாலைக்கு விசாரணைக்காரனாயிருந்து மற்றவர்களைப் போஷிக்கவேண்டும் என்பது சில வேத சாஸ்திரிகளுடைய அபிப்பிராயம். லூக் $12^{42}$.

iv. பரி. பேதுரு பொக்கிஷசாலைக்கு மேல்விசாரணைக்காரனாய் இருந்தாலும் இந்த வசனத்திலே அவன் மேல்விசாரணைக்காரனாக அல்ல, வீட்டுவாசல் காவற்காரனாக, இந்தத் திறவுகோலைப் பெற்றுக்கொண்டான் என்பதும், இப்படியே பெந்தெகோஸ்து நாளில் யூதர்களுக்கும் செசரியாவில் புறஜாதிகளுக்கும் பரலோகவாசலைத் திறந்தான் என்பதும் பொதுவான அபிப்பிராயம். அப் $2^{41}$ $10^{34}$ $15^{7}$.

v. இந்த வசனத்தில் கட்டுவதைப்பற்றியும் கட்டவிழ்ப்பதைப்பற்றியும் சொல்லியிருக்கிறதினாலே பரி. பேதுரு சபையார் பரிசுத்தசபையில் பிரவேசிக்கிறதற்கும் துன்மார்க்கம் செய்கிறவர்களைத் துரத்துகிறதற்கும் அதிகாரம் பெற்றான் என்பது ஒத்துக்கொள்ளவேண்டிய விஷயமே. ஆயினும் அவன் மற்ற அப்போஸ்தலர்களோடும் மூப்பர்களோடும் அந்த அதிகாரத்தைச் செலுத்தினான் என்பதும் நாம் கவனிக்கவேண்டியதே. அப் $15^{6}$ $15^{22}$.

vi. ஆனால் இவ்விடத்தில் நாம் பார்க்க வேண்டிய ஒரு காரியமும் உண்டு. அது என்னவென்றால், பரலோகத்திலே கட்டுகிறதும் கட்டவிழ்ப்பதுமாகிய இந்தச் சிலாக்கியத்தைப் பெற்றவன் பேதுருமாத்திரம் அல்ல, மற்ற சீஷர்களும் இதைப் பெற்றிருந்தார்கள் என்று பார்க்கிறோம். மத் $18^{18}$. மேலும் பரி. பேதுருவுக்குப் பிரதானமான அதிகாரம் இல்லை. அப் $15^{13}$ கலா $2^{11}$.

பேதுரு யூதர்களுக்கும் புறஜாதியார்களுக்கும் பரலோகராஜயத்தின் வாசலைத் திறந்ததுபோலவே, மற்ற கிறிஸ்தவர்களும் அந்த ஊழியத்தை நடத்தி ஜனங்களுக்கு விசுவாசத்தின் கதவைத் திறந்தார்கள். அப் $8^{4}$ $11^{19}$ $13^{3}$ $14^{27}$.

vii. இவை எல்லாவற்றையும் பார்க்கும்போது, பரி. பேதுருவுக்கிருந்த அதிகாரத்தைக் குறிக்கும்படி இயேசுகிறிஸ்து இந்த வாக்கை அருளினாலும் இவ்வதிகாரமும் சிலாக்கியமும் அவனுக்குமாத்திரம் இருந்ததென்று சொல்வதற்கு அத்தாட்சி இல்லை.

viii. மேலும் மத் $18^{18}$-ல் இயேசு அருளின வாக்கு அப்போஸ்தலர்களுக்குமாத்திரம் அல்ல, சீஷரனைவருக்கும் பொதுவாகக் கொடுக்கப்பட்டதினாலே, மெய்க்கிறிஸ்தவர்கள் யாவரும் இதை அடையலாம் என்று நாம் சொல்லமுடியும்.

ix. இயேசு உயிர்த்தெழுந்தபிறகு, பாவங்களை மன்னிக்கிறதற்கும் மன்னியாதிருக்கிறதற்கும் சீஷர்களுக்கு வல்லமை கொடுத்தார். யோவா $20^{23}$. ஆனால் அவர் இந்த அதிகாரத்தை அப்போஸ்தலர்களுக்குமட்டும் கொடாமல் பொதுவாய்ச் சபையைச் சேர்ந்தவர்களாகிய சீஷர் அனைவருக்கும் பரிசுத்த ஆவியின் மூலமாய் இந்தச் சிலாக்கியத்தைக் கொடுத்தார். கலா $6^{1}$ லூக் $24^{33}$ 1 யோவா $2^{20}$.

**திறனு. Tyrannus.** பரி. பவுல் மூன்று மாசமாக எபேசுபட்டணத்தில் பிரசங்கம் பண்ணிய காலம் எல்லாம் யூதர்கள் தனக்கு அதிக விரோதமாய் இருந்தார்கள் என்று கண்டு அவர்களைவிட்டு விலகி திறனு என்பவனுடைய வித்தியாசாலையில் கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்து அங்கே போதித்துவந்தான் என்று வாசிக்கிறோம். அப் $19^{9}$. நாம் கிரேக்கபதத்தை விசாரித்தால், இந்த வித்தியாசாலை சிறுபிள்ளைகளுக்காக ஸ்தாபிக்கப்பட்ட பள்ளிக்கூடம் ஆவது அல்லது பெரிய மாணுக்கர்களுக்காக ஸ்தாபிக்கப்பட்ட 'பிரசங்கசாலை' ஆவது குறிக்கலாம். ஆதலால் திறனு ஒரு பள்ளிக்கூடத்து உபாத்தியாயராயாவது அல்லது பெரியவர்களுக்கு உபந்நியாசகனாயாவது இருக்கவேண்டும். அவன் பள்ளிக்கூடத்து உபாத்தியாயராய் இருந்தால் அந்தப் பள்ளிக்கூடம் அவன் வீட்டில் ஓர் அறையாய் இருக்கும். அவன் பெரியவர்களுக்கு உபந்நியாசகனாய் இருந்தால் அவனுடைய கலாசாலை அந்தப் பட்டணத்தில் ஓர் அலங்காரமான சபாமண்டபமாய் இருக்கும். இவன் கிறிஸ்தவனோ இல்லையோ என்பதைப்பற்றித் தெரியாவிட்

டாலும் இவன் கிறிஸ்தவர்களுக்குச் சத்துரு அல்ல என்பது நிச்சயம்.

**தினவு**. Itching. 2 தீமோ 4³.

**தினை**. Millet. எசே 4⁹. **ஆகாரம்** காண்க.

**தின்காபா**. Dinhabah. பூர்வீககாலத்து ஏதோமியரின் ராஜாவாகிய பேலா என்பவனின் முக்கிய பட்டணம். ஆதி 36³².

**தின்கிறது**. Eat. 1 இரா 13²⁸ 14¹¹ சங் 106²⁰ பிர 5¹¹ யோபு 40¹⁵ நீதி 30¹⁷ யோவே 1⁴.

**தின்பண்டம்**. Eatables. ஆதி 45²³. ஆகாரம் காண்க.

## தீ.

**தீக்கிகு**. Tychicus. சின்ன ஆசியாநாட்டில் பிறந்த இவன் பரி. பவுல் எருசலேமுக்குக் கடைசியாகப் பிரயாணம் செய்தபோது அவனுக்குத் தோழனாயிருந்தான். அப் 20⁴. ஆசியாநாட்டிலுள்ள எபேசுமுதலிய சபைகளுக்குப் பவுல் எழுதிய நிருபங்களை இவன் கொண்டுபோனான். எபே 6²¹. அப்படியே கொலோசெ பட்டணத்துக்குப் பவுல் எழுதிய நிருபத்தையும் கொண்டுபோனான். கொலோ 4⁷. பரி. பவுல் ரோமாபுரியில் சிறைச்சாலையிலிருந்தபோது தீகிக்குவைக் கிரேத்தாத்தீவுக்கு அனுப்பும்படியாக யோசனையாக இருந்தான். தீத் 3¹². ஆனால் அவன் இவனை எபேசுப்பட்டணத்துக்கு அனுப்பிவிட்டான். 2 தீமோ 4¹².

**தீக்கிரீஸ் நதி**. River Tigris. இதெக்கேல் காண்க.

**தீக்கிறது**. Blast. ஆதி 41⁶·²³·²⁷ 2 இரா 19²⁶ ஏசா 37²⁷.

**தீக்குருவி**. Ostrich. தீக்குருவியைக் குறிக்கிறதற்கு எபிரெய பாஷையில் மூன்று பதங்கள் உண்டு. தமிழ் வேதாகமத்திலும் ஆங்கிலேய A. V. திருப்புதலிலும் தீக்குருவியைக் குறிக்கும் பதத்தை கோட்டான் அல்லது ஆந்தை *(Owl)* என்று சில வசனங்களில் மொழிபெயர்த்திருக்கிறது. ஆங்கிலேய R. V. திருப்புதலிலே தீக்குருவி *(Ostrich)* என்னும் சரியான பதம் வருகிறது. லேவி 11¹⁶ உபா 14¹⁵ புல 4³ யோபு 39¹³ ஆகிய இந்த வசனங்களில் தீக்குருவி என்னும் சரியான பதத்தைக் காண்கிறோம். யோபு 30²⁹ ஏசா 13²¹ 34¹³ 43²⁰ எரே 50³⁹ மீகா 1⁸. ஆகிய இவ்வசனங்களில் நாம் வாசிக்கிற 'கோட்டான்' அல்லது 'ஆந்தை' என்பதற்குப் பதிலாகத் தீக்குருவி என்னும் பதம் இருக்கவேண்டும்.

ஆப்பிரிக்கா கண்டத்திலும் அரபி தேசத்திலும் சீரியாவுக்குத் தென் கிழக்கிலுள்ள வனாந்தரங்களிலும் தீக்குருவிகள் இருக்கிறது. பெட்டைத் தீக்குருவி தன் முட்டைகளைப்பற்றிக் கவனிக்கிறதில்லை என்று யூதர்கள் நினைத்தார்கள். யோபு 39¹⁵. ஆனால் இந்தத் தீக்குருவியின் இயல்பைப்பற்றி விசாரித்தறிந்தவர்கள் சொல்லியிருக்கிறதாவது, ஒவ்வொரு ஆண் குருவிக்கும் மூன்று அல்லது நாலு பெட்டைக்குருவிகள் இருக்கும். இவைகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து வனாந்தரத்திலுள்ள மணலில் பள்ளந்தோண்டும். பெட்டைக்குருவிகள் முப்பது அல்லது நாற்பது முட்டைகளை அந்த ஒரே குழியிலே இட்டு, அத்தேசங்களில் போதிய சூரிய உஷ்ணம் இருக்கிறபடியினால், அம்முட்டைகளைப் பகலில் அவயவங்காக்காமல், மணலை அப்பள்ளத்தில் தள்ளி மூடிவிட்டு இரவுதோறும் அந்த மூன்று அல்லது நாலு குருவிகளும் மாறிமாறி அந்த முட்டைகளுக்குக் குளிர் வராதபடி அவற்றை அடைகாக்கும்.



தீக்கோழி.

தீக்குருவிகள் தங்கள் செட்டையை அசைவாட்டி ஓடுகிற வேகமான ஓட்டத்தையும் அவைகள் அலறுகிற துக்கமான சத்தத்தையும்பற்றி வேதாகமத்திலே சொல்லியிருக்கிறது. யோபு 39¹³·¹⁸ மீகா 1⁸. எபிரெயர் இதன் இறைச்சியைப் புசிக்கிறதில்லை. லேவி 11¹⁶ உபா 14¹⁵.

**தீங்கு**. Evil. ஆதி 14³⁴ உபா 31¹⁷ பிர 2²¹ 5¹³ 10⁵ ஏசா 45⁷ எரே 11¹¹ எசே 7⁵ 1 கொரி 13⁵. **தீமை, பொல்லாப்பு** காண்க.

**தீங்கு, குற்றம்**. Crimes.

ஆசாரத்துக்கும் நடக்கைக்கும் உரிய அநேக குற்றங்கள் நியாயப்பிரமாண ஆகமங்களில் கண்டிக்கப்பட்டிருக்கிறது. அவை அனைத்தையும் விரிவாய்ச் சொல்லுவது முடியாததினால், சுருக்கமாய்ச் சொல்லுகின்றோம்.

1. ஆசாரத்துக்கு விரோதமான குற்றங்கள். யேகோவா ஒருவரே தங்களுக்குக் கடவுள் என்று எபிரெயர் அறிந்தபொழுது அவர்கள் அந்நிய தேவர்களைத் தொழுதுகொள்ளுவதையும் வானராசிகளின் வணக்கத்தையும் விக்கிரகாராதனையையும் தேவதூஷணத்தையும் பில்லிசூனிய வித்தையையும் மகா பாவங்களாகத் தீர்மானித்து அவைகளைக் கண்டித்தார்கள். யாத் $20^{3}$ $22^{20}$ லேவி $20^{27}$ $24^{13}$ உபா $13^{12}$ $17^{3}$ $17^{5}$ $27^{15}$.

இப்படியே ஓய்வுநாளில் (Sabbath) வேலை செய்வதற்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. யாத் $31^{15}$. பாவநிவாரண நாளிலே உபவாசம் செய்யாதவனும், பஸ்காப்பண்டிகையை ஆசரியாதவனும், தன் ஜனத்தாரில் இராமல் அறுப்புண்டுபோவான். லேவி $23^{29}$ எண் $9^{13}$. அபிஷேகதைல ஏற்பாட்டில் பரிசுத்தக் குலைச்சல் செய்கிறவனுக்கும் இரத்தம் புசிக்கிறவனுக்கும் இதே தண்டனை கூறப்பட்டிருக்கிறது. லேவி $7^{27}$ யாத் $30^{32}$.

2. குடும்ப ஆசாரத்துக்கு விரோதமான குற்றங்கள்:—எபிரெயர்கள் குடும்ப ஆசாரத்தைக்குறித்து அதிக ஜாக்கிரதையுள்ளவர்கள். குடும்பத்துக்குத் தீங்கு உண்டாக்கும் காரியங்களைச் செய்தவன் மகா பொல்லாதவன் என்று அவர்கள் நினைத்து அவ்வித தீங்குகளுக்குக் கொடிய தண்டனையை ஏற்படுத்தியிருந்தார்கள்.

அத்தீங்குகளில் விசேஷித்தவையாவன:—

விபசாரம். யாத் $20^{14}$ லேவி $20^{10}$ உபா $22^{22}$.

கன்னிகையைக் கெடுத்தல். யாத் $22^{16}$ உபா $22^{29}$.

பெண்ணைப் பலவந்தமாய்ச் சேர்தல். உபா $22^{25}$.

ஆண் புணர்ச்சி. லேவி $18^{22}$ $20^{13}$.

மிருகங்களோடு புணர்தல். யாத் $22^{10}$ லேவி $20^{15}$.

முறைகேடான பதினேழுவகை விவாகங்கள். லேவி $18^{6-18}$.

தகப்பன்மனைவியோடும் மருமகளோடும் சயனித்தல். லேவி $20^{11}$.

வேசித்தனம். லேவி $19^{29}$ $21^{9}$ உபா $22^{21}$ $23^{17}$.

தாய் தந்தையரை அசட்டை செய்தல். யாத் $20^{12}$ $21^{15}$ $21^{17}$ லேவி $20^{9}$ உபா $21^{18}$.

3. ஜனசங்கத்துக்கு விரோதமான தீங்கு.

பரிதானம். யாத் $23^{8}$.

பொய்ச்சாட்சி. யாத் $20^{14}$ உபா $19^{15}$.

கோட்சொல்லுதல். யாத் $23^{1}$ லேவி $19^{16}$ உபா $22^{13}$.

களவு. யாத் $20^{15}$.

கன்னமிடுதல். யாத் $22^{2}$.

எல்லைக்கல்லைத் திருட்டுத்தனமாய் நகட்டுதல். உபா $19^{14}$.

பிறனுடைய நிலத்தில் திருட்டுத்தனமாய்ப் பிரவேசித்தல். யாத் $22^{5}$.

கள்ளத்தராசு. லேவி $19^{35}$ உபா $25^{15}$.

தீவைத்தல். யாத் $22^{6}$.

4. ஜீவனுக்குச் செய்யுந் தீங்கு.

மனுஷரை அடித்தல், திருடுதல், கொலைசெய்தல் முதலிய பாவங்களைப்பற்றி பல ஒழுங்குகள் உண்டு. யாத் 21 அதி. எண் 35 அதி. உபா 19, 24 அதி.

இதில் சொன்ன குற்றங்களை எபிரெயர் எப்பொழுதும் கண்டித்தார்கள் என்று நாம் சொல்லக்கூடுமானாலும் அந்த நியாயங்களைச் செலுத்தும்படி அதிகாரிகள் இல்லாத காலங்களில் இந்தத் தீங்குகளைச் செய்கிற துஷ்டர்களுக்குப் பலதடவை தண்டனை இல்லை என்று ராஜாக்களின் சரித்திரத்தினாலும் தீர்க்கதரிசிகள் இயற்றிய ஆகமங்களினாலும் தெளிவாய் அறிகிறோம். ஆனால் பூர்வீக காலமுதல் ஆசாரம் ஜனசங்கம் முதலியவைகளைக்குறித்து நல்ல முறையைக் கைக்கொண்டதினாலே, எபிரெயர்கள் படிப்படியாக சன்மார்க்கவிஷயத்தில் சித்தியும் சிறப்பும் அடைந்தார்கள். கிறிஸ்தவசபை பல விஷயங்களில் யூதர்கள் கைக்கொண்ட சன்மார்க்கப் பிரமாணங்களை அனுசரித்து வந்ததினாலே, எபிரெய சன்மார்க்கம் இக்காலத்திலே கிறிஸ்தவ நாகரீகத்து அஸ்திபாரமாய் இருந்தது என்று சொல்லத் துணிகிறோம். **ஆக்கினை, கலியாணம், அடைக்கலப் பட்டணங்கள், தீமை, பழிவாங்குதல், பாவம்** காண்க.

**தீட்டு. Defilement.** ஆதி $34^{5.13}$ $49^{4}$ லேவி $13^{46}$ $18^{24}$ எண் $5^{2}$ $35^{34}$ $19^{20}$ 1நாளா $5^{1}$ எரே $16^{18}$ $3^{9}$ எசே $18^{11}$ $22^{11}$ மத் $15^{18}$ மாற் $7^{15}$ யோவா $18^{28}$ எபி $12^{15}$ **அசுத்தம், சுத்தம்** காண்க.

**தீட்டுக் கழிக்கும் ஜலம்.** Water of separation. (R. V. Marg. Water for impurity). எண் 19 அதி. 31[23]. செங்கிடாரி காண்க.

**தீண்டுகிறது.** Handle. கொலோ 2[21].

**தீத்து.** Titus.

அந்நியமார்க்கத்திலிருந்து கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவன். பரி. பவுல் செய்த பிரசங்கம் இவன் குணப்படுகிறதற்குக் காரணமாயிருக்கலாம். தீத் 1[4]. இவனுடைய வயசும் பிறந்த ஊரும் நமக்குத் தெரியாது. பரி. பவுலோடு இவன் அந்தியோகியாவிலிருந்து எருசலேமுக்குப் பிரயாணம் பண்ணினான். அப் 15[2] கலா 2[1]. அந்தியோகியாவிலுள்ள சபையில் கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்த யூதர்கள் புறமதத்திலிருந்துவந்த இவனுக்கும் மற்றவர்களுக்கும் ஞானஸ்நானத்தை அல்லாமல் மோசேயின் நியாயப்பிரமாணப்படி விருத்தசேதன சடங்கையும் செய்ய விரும்பினாலும், புறஜாதியான கிறிஸ்தவர்களும் அப்போஸ்தலனும் இதற்கு இணங்கவே இல்லை. எருசலேமில் கூடின முதலாம் பொதுவான சங்கத்தாரும் அப்படியே ஏற்பாடு செய்தார்கள். அப் 15[28]. ஆதலால் தர்க்கங்களைத் தீர்க்கும்படி அந்தச் சங்கம் கூடுகிறதற்கு தீத்துவின் விஷயம் காரணமாய் இருந்தது. இதற்குப்பின் பத்துவருஷங்களாக இவனைப் பற்றிய ஒரு விஷயமும் நமக்குத் தெரியவில்லை. ஆனால் பரி. பவுல் கொரிந்தியருக்கு எழுதின இரண்டாம் நிருபத்தினால் இவன் கொரிந்துப் பட்டணத்துக்கு மூன்று தரம் போயிருக்கலாம் என்று காண்கிறோம். 2 கொரி 8[6] 12[18]. இவன் கொரிந்துவிலிருந்து போய்விட்டபின்பு, அந்தச் சபையில் சில குழப்பங்கள் உண்டாயிருந்ததினாலே, இவன் மறுபடியும் அவ்விடத்துக்குப் போனான். 2 கொரி 2[12]. இவன் பரி. பவுலைச் சந்தித்தபிறகு ஏறக்குறைய கி–பி. 57-ல் மூன்றாந்தரமும் கொரிந்துப் பட்டணத்துக்குப்போய் நமது வேதாகமத்திலுள்ள கொரிந்தியருக்கு எழுதின இரண்டாம் நிருபத்தை அந்தச் சபையாருக்குக் கொடுத்து, அவர்கள் அளித்த காணிக்கையையும் பெற்றுக் கொண்டான். 2 கொரி 8[16].

இவனைக்குறித்து இதற்குப்பின் ஏழு வருஷமாக நாம் ஒன்றும் கேள்விப்படாவிட்டாலும், பரி. பவுல்தான் ரோமாபுரியில் கி–பி. 64–ல் கடைசித்தடவையாகச் சிறைச்சாலையில் இருக்கும்முன்னே இவனுக்கு எழுதிய நிருபத்தினால், தீத்து கிரேத்தாத்தீவிலே கிறிஸ்தவ சபையில் சகல விஷயத்தையும் ஒழுங்குபண்ணவும் மூப்பர்களை ஏற்படுத்தவும் ஆரோக்கியமான உபதேசத்தைப் போதிக்கவும் கண்காணியாய் இருந்தான் என்று அறிகிறோம். தீத் 1[5] 2[1] 2[15] 3[9].

இந்த நிருபத்திலே பரி. பவுல் தீத்து நிக்கொப்போலி என்னும் பட்டணத்திலே தன்னைச் சந்திக்கும்படி சொல்லுகிறான். பரி. பவுல் இவ்விதமாய் நிக்கொப்போலிக்குப் போனானோ இல்லையோ என்பது தெரியாது. அவன் அப்பட்டணத்துக்குப் போகும் முன்பே கடைசியாகச் சிறைச்சாலையில் வைக்கப்பட்டு இரத்தச்சாட்சியாய் மரித்ததாகத் தோன்றுகிறது. இது எப்படியாயினும் இதற்குப் பிற்பாடு தீத்துவைப்பற்றி நமக்கு வேறொன்றும் தெரியாது. ஒரு பாரம்பரியத்தின்படி இவன் தனது ஆயுசுகாலம் எல்லாம் விவாகஞ்செய்யாமல் அதிக விருத்தாப்பியம் அடைந்து கிரேத்தாதீவிலே கிறிஸ்தவசபைக்கு கண்காணியாய் இருந்ததாகத் தெரிகிறது.

**தீத்துவுக்கு எழுதின நிருபம்.** The Epistle to Titus. பரி. பவுல் ரோமாபுரியில் நேரோ ராயனுக்கு அபயம் இட்டபிறகு அவன் விடுதலையாகி சுவிசேஷப் பிரபலியத்தின் நிமித்தம் சிலகாலம் பிரயாணம் பண்ணுகையில், கிரேத்தாதீவைச் சேர்ந்தான் என்று தோன்றுகிறது. ரோமாபுரி தீப்பற்றின பின்பு நேரோ ராயன் கிறிஸ்தவர்களுக்கு விரோதமாய்ச் செய்த உபத்திரவத்தில் அவன் மறுபடியும் பிடிக்கப்பட்டு இரத்தச்சாட்சியாய் மரித்தான். ஆதலால் இது கி–பி. 61–க்கும் 64–க்கும் இடையில் எழுதப்பட்டது என்று சொல்லலாம்.

இது எழுதப்பட்டகாலத்தில் தீத்து கிரேத்தாதீவிலே பரி. பவுலுக்குப் பதிலாக கண்காணி அதிகாரத்தைச் செலுத்திக்கொண்டிருந்தான். கிரேத்தாதீவிலுள்ள சில பட்டணங்களில் கிறிஸ்தவ சபைகளும், அச்சபைகளுக்கு மூப்பர்களும் இருந்தபடியால் இந்தத் தீவிலே கிறிஸ்துமார்க்கம் சில வருஷங்களாக இருந்திருக்கிறது என்று அறிகிறோம். கிரேத்தாதீவார் சன்மார்க்கம் அற்றவர்கள் என்று முன்னோர் சொன்னார்கள். ஆதலால் இந்த நிருபத்திலே பரி. பவுல் கிறிஸ்தவர்களிடத்தில், உண்மை, பரிசுத்தம், நல்நடக்கை முதலிய நற்குணங்களை ஸ்திரப்படுத்தி, கட்சிக்காரரையும் கள்ளப் போதகர்களையும் கண்டிக்கிறான். 1[10] 1[16] 1[15] 2[1-15] 3[8] 3[10].

இந்த நிருபத்தில் சொன்ன கள்ளப்போதகம் யூதமார்க்கத்திலிருந்து கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவர்கள் அனுசரித்த கொள்கை

என்று தோன்றுகிறது. கிரேத்தாதீவிலே யூதர்கள் அநேகரானதினாலே யூதமார்க்கத்திலிருந்து கிறிஸ்தவர்களானவர்களும் அநேகர் என்று அறிகிறோம். தீத்து மூப்பர்களையும் கண்காணிகளையும் ஏற்படுத்தி அச்சபையில் உண்மையான கிறிஸ்தவ போதகத்தையும் ஒழுங்கையும் ஸ்தாபிக்கும்படி அதிகாரம் பெற்றான். தீத் $1^{5}$ $1^{7}$.

பொருளடக்கம். $1^{1-4}$ வாழ்த்துதல் $1^{5}$-$3^{11}$. தீத்துவுக்குக் கொடுத்த புத்திமதிகள்.

*a*. $1^{5-16}$. தகுந்த ஊழியக்காரர்களை ஏற்படுத்தல்.

*b*. $2^{1}$-$3^{11}$. அந்தச் சபையில் தீத்து ஸ்திரப்படுத்தவேண்டிய கிறிஸ்தவ குணலக்ஷணங்கள்.

i. $2^{1-15}$. முதிர் வயதுள்ளவர்களும் பாலியர்களுமான ஸ்திரீ புருஷரும் அடிமைகள் எஜமான்கள் முதலியவர்களும் கவனிக்க வேண்டியவைகள்.

ii. $3^{1-8}$. கிறிஸ்தவர்கள் அந்நியர்களுக்குக் காட்டவேண்டிய குணங்கள். அதிகாரிகளுக்கு அடங்கியிருத்தல். யாவரிடத்தும் சாந்தகுணம்.

iii. $3^{9-11}$. தீத்துவுக்குச் சொன்ன சில புத்திமதிகள்.

$3^{12-15}$ முடிவுரை.

இந்த நிருபத்திலே பரி. பவுல் கிறிஸ்து மதக் கொள்கைகளைக்குறித்த ஆழ்ந்த போதனையை சாஸ்திர யுக்தமாய்க் கொடுக்க விரும்பாமல் தீத்துவுக்கும் தனக்கும் உள்ள விஷயங்களைக் குறித்துமாத்திரம் எழுதுகிறான் என்பது இந்த நிருபத்தை வாசிக்கிறவர்கள் கவனிக்கத்தக்கது. கிறிஸ்தவ சபை இந்த நிருபத்தை வேதாகமத்தில் வைத்துக்கொண்டு, எப்பொழுதும் இதை விசேஷமாய்ப் பாராட்டிவரும் என்பதை பரி. பவுல் ஒருக்காலும் நினைத்திருக்கவேமாட்டான். தற்காலத்தில் ஒரு தகப்பன் மகனுக்கும், ஒரு சிநேகிதன் தன் சிநேகிதனுக்கும் எப்படிக் கடிதம் எழுதி அனுப்புவானோ, அப்படியே அவன் அக்காலத்திலும் தீத்துவுக்கு இந்த நிருபத்தை எழுதினான். ஆதலால் இந்த நிருபத்திலே பரி. பவுலின் மனதில் இருந்த நோக்கங்களையும் மற்ற கிறிஸ்தவ ஊழியர்களுக்குக் காட்டின நேசத்தையும் நாம் நன்றாய்ப் பார்க்கலாம்.

**தீபம்.** Lamp. சங் $119^{105}$ தானி $10^{6}$ நீதி $13^{9}$ $20^{20}$ வெளி $4^{5}$. தீத்துவிளக்கு காண்க.

**தீபோன்.** Dibon.

1. சாக்கடலுக்குக் கிழக்கே அர்னோன் நதியின் வடகரையிலுள்ள ஓர் ஊர். இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வருமுன் எமோரிய ராஜாவாகிய சீகோன் இதை மோவாபியரிடத்திலிருந்து பிடித்திருந்தான். காத் கோத்திரத்தார் இதை மறுபடியும் கட்டி இதற்குத் தீபோன்-காத் என்று பெயரிட்டார்கள். ஆனால் மோவாபியர் இதை மறுபடியும் பிடித்துக்கொண்டார்கள். எண் $21^{30}$ $32^{3}$ $33^{45}$ ஏசா $15^{2}$ எரே $48^{17}$. ஏசா $15^{9}$-ல் சொன்ன தீமோன் இதுதான் என்று நினைக்கலாம்.

2. யூதாநாட்டில் ஒரு ஊர். ஒருவேளை இதுவும் திமொனாவும் ஒன்றுதான். யோசு $15^{22}$ நெகே $11^{25}$.

**தீபோன்-காத்.** Dibon-Gad. எண் $33^{4}$. தீபோன் காண்க.

**தீமை.** Evil. ஆதி $2^{9}$ $3^{5}$ 1 சாமு $20^{8}$ சங் $5^{4}$ $109^{5}$ நீதி $15^{28}$ ஏசா $5^{20}$ எரே $5^{12}$ மீகா $3^{2}$ ஆப $1^{13}$ யோவா $5^{29}$ ரோம $3^{8}$ $12^{9}$ $12^{17}$ $12^{29}$ 1 தெச $5^{15}$ 1 தீமோ $6^{10}$ எபி $5^{14}$ 1 பேது $3^{17}$

தீமை, பாவம் முதலியவற்றைப்பற்றிப் பிந்தின காலங்களில் ரபிமாரும் வேத சாஸ்திரிகளும் தத்துவ சாஸ்திரிகளும் பல நூல்களை இயற்றிவந்திருந்தும், வேதாகமத்தில் இவற்றைக் குறிக்கும் நூல் அல்லது சாஸ்திரம் இல்லை என்றே சொல்லத் துணிகிறோம். இதைக்குறித்த சாஸ்திரத்தை ஒழுங்காய் அறியவேண்டுமானால் வெவ்வேறு காலங்களிலே வெவ்வேறு ஆசிரியர்கள் எழுதிய புஸ்தகங்களினின்று வெவ்வேறான பல வசனங்களைத் தொகுத்தெடுத்து, அவற்றோடு நானுவிதமான மனுஷ சுபாவத்தையும், குணலக்ஷணங்களையும், நாம் அறிந்த வேறு விஷயங்களையும் சேர்த்து ஒரு கொள்கையை ஏற்படுத்தலாம். பரி. பவுல் முதலியவர்கள் 'பாவம்' என்பதைக்குறித்து போதித்தவைகளிற் சிலவற்றைப் **பாவம்** என்னும் நிபந்தத்திலே கூறுகிறோம். எபிரெயர்களும் கிறிஸ்தவர்களும் தீமை என்னும் விஷயத்தைப்பற்றிப் பொதுவாய் நம்பினவைகளைமட்டும் இங்கே சொல்லுகிறோம்:—

1. **பழைய ஏற்பாடு.** பூர்வீகத்தில் எபிரெயர்கள் சன்மார்க்கத்துக்கு விரோதமானவற்றை யொழிய தகாத எவற்றையுமே தீமை (*ra'*) என்று சொன்னார்கள். ஆதி $28^{8}$ யாத் $21^{8}$ எரே $24^{3}$. ஆனால் சன்மார்க்கத்துக்கு விரோதமான விஷயங்களும் சீக்கேடும் ஜீவனையும் பாக்கியத்தையும் அழித்ததைக் காட்டும்படி இந்தப் பதத்தைப் பிரயோ

கித்துவந்ததினுல், இதே பதத்துக்கு பல வசனங்களில் 'தீங்கு' 'பொல்லாங்கு' 'தீமை' என்று தமிழ்வேதாகமத்தில் சொல்லியிருக்கிறது. இவ்வுலகத்தில் தீமை உண்டாகிறதைப்பற்றி எபிரெயர்கள் முதலில் சந்தேகப்படவே இல்லை. அவர்கள் அக்காலத்தில் உள்ள அந்நிய ஜாதியார் வணங்கின தெய்வங்களைப்போலவே யேகோவாவும் நன்மை தீமை செய்யக்கூடியவராயிருக்கிறார் என்று நினைத்தார்கள். இதற்கு அத்தாட்சியாக அநேக வசனங்கள் உண்டு. யாத் $12^{23}$ 2 சாமு $24^{1}$ $24^{15}$ 1 இரா $22^{23}$ சங் $78^{49}$ ஆமோ $3^{6}$ எசே $14^{9}$. ஆனுல் அவர்கள் கடவுளினுடைய பரிசுத்தத்தைக் குறித்த உண்மையைக் கொஞ்சம் அறிந்தபிறகு யேகோவா தாமே பாவம் செய்யும்படி மனுஷர்களை ஏவுகிறார் என்பது தப்பிதம் என்று உணர்ந்து, பரிசுத்தம் நிறைந்த யேகோவா அல்ல, பொய்யுரைக்கும் ஆவிகளே இப்படிச் செய்தன என்று தீர்மானித்துவந்தார்கள். நியா $9^{23}$ 1 சாமு $16^{14}$ 1 இரா $22^{22}$. இந்த எண்ணத்தின்படி ஆதியாகமத்தில் சர்ப்பம் ஏவாளைப் பாவஞ்செய்யும்படி ஏவினது என்று எழுதியிருக்கிறது. ஆதி $3^{1}$ 2 கொரி $11^{3}$. பிறகு எபிரெயர்களில் அநேகர் யேகோவாவுக்கு பெரிய சத்துருவாகிய சாத்தான் யேகோவாவின் உத்தரவின்படி மனுஷர்களைத் தீமை செய்யும்படி ஏவுகிறான் என்று நினைத்தார்கள். சக $3^{1}$. இதற்குப்பின், முற்றிலும் பரிசுத்தத்தையே எப்பொழுதும் விரும்புகிற கடவுளுக்கு விரோதமாய் அந்நியர் வணங்கின தேவதைகள் மனுஷரைப் பாவஞ்செய்ய ஏவுகின்றன என்று வாசிக்கிறோம். உபா $32^{4}$ $32^{17}$ சங் $106^{37}$ ஆப $1^{13}$. யூதர்கள் சிறையிருப்புக்குப் போன பிறகு எழுதப்பட்ட நூல்களில், பாவத்தில் விழுந்த தூதர்களும், அவர்கள் ராஜாவாகிய சாத்தானும் கடவுளுடைய ராஜ்யத்துக்கு விரோதமான ராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள் என்று யூதர்கள் அபிப்பிராயங்கொண்டார்கள். இதற்கு இணங்க பரி. பேதுருவும் யூதாவும் சொல்லுகிறார்கள். 2 பேது $2^{4}$ யூதா $1^{6}$.

**2. புதிய ஏற்பாடு.** புதிய ஏற்பாட்டிலே பரிசுத்தமான கடவுளின் சுபாவம் முற்றிலும் பரிசுத்தமாய் இருக்கிறது என்றும், அவரிடத்தில் தீமை இல்லை என்றும், தீமை செய்யும்படி அவர் மனுஷரை ஏவமாட்டார் என்றும் சொல்லியிருக்கிறது. ரோம $1^{18}$ $5^{10}$ யாக் $1^{13}$ 1 யோவா $1^{5}$ $2^{16}$ $3^{4}$. மனிதர்களுடைய மனதில் உண்டாகும் தீமையும் பொல்லாங்கும் சாத்தானுடைய வேலை. மத் $6^{13}$ $13^{19}$ 1 யோவா $5^{19}$. இந்தச் சாத்தான் அல்லது பிசாசானவனே மனிதர் தீமை செய்வதற்கும் தீமை செய்யும்படி ஏவப்படுகிறதற்கும் காரண கர்த்தாவாய் இருக்கிறான். மத் $4^{10}$ $13^{39}$ மாற் $4^{15}$ லூக் $22^{31}$ யோவா $8^{44}$ $13^{27}$. சாத்தானும் அவனுடைய தூதர்களும் தேவதுரோகம் செய்ததினுல் வானலோகத்திலிருந்து தள்ளப்பட்டு இவ்வுலகம் எங்கும் சுற்றித் திரிகிறார்கள். மத் $25^{41}$ எபே $4^{27}$ $6^{11}$ யாக் $4^{7}$ 1 பேது $5^{8}$ வெளி $12^{9}$. இவர்கள் கடைசியில் சிறையில் வைக்கப்படுவார்கள். வெளி $20^{2,10}$. சிக்ஷைக்காகவும் பக்திவிருத்திக்காகவும் சாத்தானும் அவனுடைய தூதர்களும் பக்தர்களை வருத்தப்படுத்துகிறார்கள் என்று சில வசனங்களிலும், கடவுள் தாமே அப்படிச் செய்கிறார் என்று வேறு சில வசனங்களிலும் சொல்லியிருக்கிறது. மத் $8^{28}$ லூக் $13^{16}$ 2 கொரி $12^{7}$ 1 தெச $3^{3}$ எபி $12^{5}$ வெளி $3^{19}$ $9^{1}$ $12^{12}$. நாம் இவையெல்லாவற்றையும் பார்த்து இவ்வுலகத்தில் தீமையுண்டாகிறதற்குக் காரணம் இன்னதென்றும், பரிசுத்தராகிய கடவுள் தாம் சிருஷ்டித்த உலகத்தில் அதற்கு இடங்கொடுக்கும் காரணம் இன்னதென்றும் வேதாகமத்தில் பூரணமாய்ச் சொல்லப்படுகிறதில்லை என்று தீர்மானமாய் அறியவேண்டும். ஆதி கிறிஸ்தவர்கள் தத்துவசாஸ்திரத்தைப் பற்றியல்ல சன்மார்க்கத்தைப்பற்றியே எப்பொழுதும் சிந்தித்து, நமக்கு நேரிடும் நோய் துக்கம் ஆக்கினை இவற்றின் மூலமாய் நமக்கு உண்டான நீதிக்குரிய பெலனும் பாவத்தை அகற்றும் சிலுவையின் ஜெயமும் முக்கியம் என்று எண்ணுகிறார்களேயொழிய இவற்றின் காரணங்களின் மறைபொருளை விளக்கிக் காட்டுகிறதில்லை. யோவா $12^{31}$ ரோம $8^{18-39}$ 1 கொரி $13^{12}$ $15^{24}$ கொலோ $2^{15}$ யாக் $5^{11}$ எபி $12^{7}$ 1 பேது $4^{13}$.

**தீமோத்தேயு. Timothy.** சின்ன ஆசியாவில் பிறந்தவனுகிய இவனுடைய தகப்பன் கிரேக்கன். இவனுடைய தாய் யூதஸ்திரி. அப் $16^{1}$. இவன் தாயாகிய ஐனிக்கேயாளும் பாட்டியாகிய லோவிசாளும் இவனைச் சிறுபிராயமுதலே யூதருடைய வேதசாஸ்திரத்தில் நன்றாய்ப் பழக்கிவந்தார்கள். 2 தீமோ $1^{5}$ $3^{15}$. பரி. பவுல் முதல்தரம் லீஸ்திராவுக்கு வரும்போது இவனும் இவனுடைய தாயாரும் கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்ததாகத் தோன்றுகிறது; ஏனென்றால் பரி. பவுல் இரண்டாந்தரம் வரும்போது இவன் சபையில் பெயர்பெற்றவனுயிருந்தான். அப் $16^{1}$.

பரி. பவுலே தீமோத்தேயுவைக் கிறிஸ்தவனுக்கினுன் என்று ஒரு வசனத்தில்

தோன்றுகிறது. 1 கொரி $4^{17}$. இது எப்படியாயினும், பவுல் தனது இரண்டாம் பிரயாணத்தில் இவனைத் தனக்குத் தோழனாக ஏற்படுத்திக்கொண்டான். அப் $16^{3}$. பவுலோடு சுவிசேஷவேலை செய்யும்பொருட்டு லீஸ்திராவிலுள்ள மூப்பர்களும் பவுலும் இவனைப் பிரதிஷ்டை செய்தார்கள். 1 தீமோ $4^{14}$ 2 தீமோ $1^{6}$. இவன் தாயார் யூதஸ்திரீயானதினால், இவனுக்கு மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி விருத்தசேதனம் செய்யாவிட்டால் யூதர்களுக்குள்ளே இவன் ஊழியஞ்செய்வதற்கு ஆக்ஷேபனை உண்டாகும் என்று தீர்மானித்து, பரி. பவுல் இவனுக்கு விருத்தசேதனம் பண்ணினான். அப் $16^{3}$.

இந்தப் பிரயாணத்தில் தீமோத்தேயு பரி. பவுலுடன் ஐரோப்பாக் கண்டத்திலுள்ள மக்கெதோனியா நாட்டுக்குப் போனான். பரி. பவுல் அத்தேனேப் பட்டணத்துக்குப் போகும்போது தீமோத்தேயு பெரோயாவில் தங்கிவிட்டான். அப் $17^{14}$. இங்கேயிருந்து அத்தேனே நகரத்துக்கு வந்து, தெசலோனிக்கே பட்டணத்துக்குத் திரும்பிப்போய்க் கொரிந்துவுக்குவந்து அங்கே அப்போஸ்தலனை மறுபடியும் சந்தித்தான். அப் $18^{5}$ 1 தெச $1^{1}3^{1}$ 2 தெச $1^{1}$. பரி. பவுல் மூன்றாம் பிரயாணம் பண்ணும்போது தீமோத்தேயு எபேசுப் பட்டணத்தில் பவுலோடு தங்கியிருந்து, பின்பு மக்கெதோனியாவுக்குப் போனான். அப் $19^{22}$. பரி. பவுல் கொரிந்தியருக்கு நேராய் அனுப்பின முதலாம் நிருபத்தில் தீமோத்தேயு மக்கெதோனியா நாட்டின் மூலமாய் அவ்வூருக்கு வருவான் என்று தெரிவிக்கிறான். 1 கொரி $4^{17}$ $16^{10}$. இதில் கண்டபடி தீமோத்தேயு கொரிந்துவுக்கு வந்து சேர்ந்தானோ இல்லையோ என்பது சந்தேகம். இது எப்படியாயினும், இவன் மறுபடியும் மக்கெதோனியாவில் இருப்பதாக 2 கொரி $1^{1}$-ல் பார்க்கிறோம். இதற்குப் பிற்பாடும் கொரிந்துவுக்கு வந்தான் என்பது தெரியும். ரோம $16^{21}$. அப்பால் பவுலும் இவனும் சின்ன ஆசியா நாட்டிலுள்ள துரோவாவுக்கு வந்தார்கள். அப் $20^{4}$.

பரி. பவுல் ரோமாபுரியில் சிறைச்சாலையில் இருந்தபோது தீமோத்தேயு அவனுடன் இருந்தான். பிலி $1^{1}$ $2^{19}$ கொலோ $1^{1}$ பிலே $1^{1}$. பரி. பவுல் இராயனுக்கு அபயமிட்டு விடுதலையடைந்தபிறகு இவன் சின்ன ஆசியாவிலுள்ள எபேசுப் பட்டணத்திலே இருந்தான். 1 தீமோ $1^{4}$ $3^{14}$. பரி. பவுல் இரண்டாந்தரம் ரோமாபுரியில் சிறைச்சாலையில் இருக்கும்போது தீமோத்தேயுவைத் தன்னிடம் வரும்படி அழைத்தான். 2 தீமோ $4^{9.21}$. இதற்குப்பின்பு தீமோத்தேயு சிறைச்சாலையில் வைக்கப்பட்டான். எபி $13^{23}$. ஒரு பாரம்பரியத்தின்படி இவன் பல வருஷங்களாக எபேசுப் பட்டணத்தில் கண்காணியாக இருந்து இரத்தச்சாட்சியாய் மரித்தான்.

**தீமோத்தேயுவுக்கு எழுதப்பட்ட நிருபங்கள். The two Epistles to Timothy.** பரி. பவுல் எழுதிய நிருபங்களில் தீமோத்தேயுவுக்கு எழுதின இரண்டு நிருபங்களும் தீத்துவுக்கு எழுதின நிருபமும் ஒன்றோடொன்று ஒற்றுமையுடையவைகள். அவன் எழுதிய மற்ற நிருபங்கள் சபைகளுக்கு எழுதப்பட்டவை. இந்த நிருபங்களையோ சபையில் அதிகாரம்பெற்றவர்களும், தனக்கு நன்றாய்த் தெரிந்தவர்களுமான தனது இரண்டு சிநேகிதர்களுக்கு எழுதினான். இந்த நிருபங்களில் அவர்கள் சபையை நடத்துகிற விஷயங்களையும் தனது மனசில் இவர்கள் மேலிருந்த நல் நேசத்தையும் பவுல் பூரணமாய்க் காட்டுகிறான். தீமோத்தேயுவுக்கு எழுதப்பட்ட இந்த இரண்டு நிருபங்களில் இது விசேஷமாய்த் தோன்றுகிறது. இவற்றைக் குறித்து இந்த நிபந்தத்திலே சொல்லுகிறோம்.

1. **ஆக்கியோன்.** பரி. பவுலே இவ்விரண்டு நிருபங்களையும் எழுதினான் என்பதற்கு இவைகளில் சொல்லப்பட்ட வசனங்களும் கிறிஸ்தவ சபை கைக்கொண்டு வந்திருக்கிற பாரம்பரியங்களுமே போதிய சாட்சி. ஐரேனேயு, அலெக்சந்திரியனாகிய கிலெமெந்து, போலிக்கார்ப்பு (*Irenaeus, Clement of Alexandria, Polycarp*) முதலியவர்களுக்கு இந்நிருபங்கள் நன்றாய்த் தெரிந்திருந்தது. அக்காலத்திலே இவைகளைத் தள்ளினவர்கள், பரி. பவுல் இவைகளை எழுதவில்லை என்று சொல்லாமல், இவைகளிலுள்ள போதனையை வெறுத்து இவைகளைத் தள்ளினார்கள். தற்காலத்திலே கிறிஸ்துமார்க்கத்துக்கு நேர் விரோதமாய் இருக்கிறவர்களைத்தவிர வேதசாஸ்திரிகள் யாவரும், பரி. பவுலே இவைகளை எழுதினான் என்று ஒத்துக்கொள்ளுகிறார்கள். கிறிஸ்துமத விரோதிகளுங்கூட, இவைகளில் பரி. பவுல் எழுதிய வாக்கியங்கள் அநேகம் உண்டு என்றே சொல்லுவார்கள்.

2. காலம். இந்நிருபங்கள் எழுதப்பட்ட காலத்தைப்பற்றி, இவைகளிலே பல விஷயங்கள் தெளிவாய்த் தோன்றுகிறது. அதாவது அப்போஸ்தலர் நடபடியாகமத்தில் சொன்ன சிறையிருப்பு முடிந்தபிறகு, பரி. பவுல் சுவிசேஷப் பிரசங்கம் செய்யும்படி

இன்னொரு பிரயாணம்பண்ணி, எபேசுப் பட்டணத்தில் தீமோத்தேயுவை விட்டுவிட்டு, மக்கெதோனியாவுக்குப் போய், அங்கேயிருந்து தீமோத்தேயுவுக்கு நிருபங்களை அனுப்பிவிட்டு, துரோவா, கொரிந்து, மிலேத்து, கிரேத்தாத்தீவு முதலிய இடங்களுக்குப் பிரயாணம்பண்ணினான். 1 தீமோ $1^4$ $3^{14}$ 2 தீமோ $4^{13}$ $4^{20}$ தீத் $1^5$ $3^{12}$. பரி. பவுல் இராயனுக்கு அபயமிட்டபிறகு கி–பி. 61-ஆம் விடுதலையடைந்தாலும், ரோமாபுரி தீப்பற்றினபின்பு கி–பி. 64-ஆம் மறுபடியும் பிடிக்கப்பட்டு, சிறைச்சாலையில் கடைசியாய் வைக்கப்பட்டான். ஆதலால் கி–பி. 61–ஆமத்துக்கும் 64-ஆமத்துக்கும் இடையில் இந் நிருபங்கள் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது.

**3. கள்ளப் போதனையைப்பற்றியது.** இவைகளில் பரி. பவுல் பலதடவை பதிதர் கைக்கொண்ட கள்ளப் போதனைகளைக் குறித்து எழுதுகிறான். இதற்குத் திருஷ்டாந்தம்:—

முடிவில்லாத வம்ச வரலாறுகள். 1 தீமோ $1^4$ தீத் $3^9$.

நியாயப்பிரமாணப் போதகராயிருக்க விரும்புதல். 1 தீமோ $1^7$.

விருத்தசேதனம். தீத் $1^{10}$.

யூதர்களுடைய கட்டுக்கதைகள். தீத் $1^{14}$ 1 தீமோ $1^4$.

நியாயப்பிரமாணத்தைக்குறித்த வாக்குவாதங்கள். தீத் $3^9$.

விவாகம்பண்ணாதிருக்கப் பிசாசின் உபதேசங்கள். 1 தீமோ $4^2$.

உயிர்த்தெழுதல் நடந்தாயிற்று என்னும் கொள்கை. 2 தீமோ $2^{18}$.

இவைகளைப் பார்க்கும்போது இந்தக் கள்ளப்போதகங்கள் இன்னதென்று நாம் தெளிவாய்ச்சொல்லமுடியாதிருந்தாலும், யூத ஆசாரம் அனைத்தையும் கிறிஸ்துமார்க்கத்தோடு இணைக்கும்படி விரும்பின பதிதர்கள் இந்தக் கள்ளப்போதனைகளில் சிலவற்றையும்; தூதர்கள், யுகங்கள் முதலிய கள்ளப் போதனைகளைக் கற்பிக்கிற கிநோஸ்திகிகர் என்னும் தத்துவஞானக் கொள்கைக்காரர் மற்றவைகளையும் போதித்துவந்தார்கள் என்று சொல்லலாம். கிநோஸ்திக்கர் காண்க.

**4. கிறிஸ்தவ போதனையைப் பற்றியது.** இந்த நிருபங்களில் பரி. பவுல் கிறிஸ்துவின் பெயரில் கிறிஸ்தவனுக்கு இருக்க வேண்டிய பக்தியாகிய விசுவாசத்தைப்பற்றிப் பேசினதும் அன்றி, கிறிஸ்தவர்கள் நம்பவேண்டிய விசுவாசத்தைப்பற்றியும் கிறிஸ்தவ சபையில் நன்றாய்த் தெரிந்த 'உண்மையான வார்த்தைகளை'ச் சொல்லி, அக்காலத்திலுள்ள கிறிஸ்தவர்கள் கைக்கொண்ட ஒருவிதமான விசுவாசப் பிரமாணத்தைப் பற்றியும் நினைத்திருக்கலாம். 1 தீமோ $1^{15}$ $3^1$ $4^9$ 2 தீமோ $2^{11}$ தீத் $3^8$. இதைப்போலவே இன்னொரு வசனத்தில் கிறிஸ்தவ சபையில் பாடப்பட்ட ஒரு ஞானப்பாட்டை வரைகிறான். 1 தீமோ $3^{16}$. கீதம் காண்க.

**5. சபை ஆசாரத்தைப் பற்றியது.** சபை ஆசாரத்தைப்பற்றி இந்த நிருபங்களில் சில விஷயங்கள் தோன்றுகிறது:

அப்போஸ்தலனுக்குப் பிரதான அதிகாரம் உண்டு. 1 தீமோ $1^{20}$ $2^1$ $2^8$.

தீமோத்தேயு அவனுடைய ஸ்தானாபதி. 1 தீமோ $1^3$ $3^{14}$ $4^{13}$ தீத் $3^{12}$.

கண்காணிக்கும் மூப்பனுக்கும் வித்தியாசமில்லை. தீத் $1^{5-7}$

ஸ்திரீகளையும் விதவைகளையும்பற்றிச் சில ஒழுங்குகள் உண்டு. 1 தீமோ $3^{11}$ $5^3$.

இந்த நிருபங்களில் பரி. பவுல் தீர்க்கதரிசிகளைக் குறித்து ஒன்றும் சொல்லுகிறதில்லை. 1 கொரி $16^{29}$.

**6. பொருளடக்கம் – முதலாம் நிருபம்.** 1 தீமோ $1^{1-2}$ வாழ்த்துதல்.

$1^{3-20}$. முகவுரை. தீமோத்தேயுவின் ஊழியத்தைப்பற்றிய எச்சரிப்பும் கிறிஸ்து இயேசுவின்பேரில் பவுலுக்கிருந்த நன்றியறிதலும்.

A. $2^1$–$4^5$. சபை ஆசாரம்.

(1) $2^{1-7}$. பகிரங்க ஜெபம் நடத்துகிறதைப் பற்றியது.

(2) $2^{8-15}$. சபைக்கூட்டத்தில் புருஷரும் ஸ்திரீகளும் அனுசரிக்கவேண்டிய ஒழுங்கு.

(3) $3^1$-$4^5$. சபையை நடத்துகிறவர்களைப் பற்றியது.

*a*. $3^{1-7}$. மூப்பனாகிய கண்காணி.

*b*. $3^{8-14}$. உதவிக்காரன்.

*c*. $3^{11}$. ஸ்திரீகள். (ஒருவேளை இவர்களும் உதவிக்காரராய் இருக்கலாம்.)

*d*. $4^{1-5}$ கள்ளப் போதகத்தைப்பற்றி எச்சரிப்பு.

B. $4^6$-$6^2$ தீமோத்தேயுவுக்குச் சில புத்திமதிகள்.

(1) $4^{6-16}$ தீமோத்தேயு செய்யவேண்டிய போதகத்தைப்பற்றியும் நடக்கவேண்டிய ஒழுங்கைப்பற்றியும் சில புத்திமதிகள்.

(2) $5^{1}$-$6^{2}$. புருஷர், ஸ்திரீகள், விதவைகள், மூப்பர், அடிமைகள் முதலியவர்களுக்கு இவன் காட்டவேண்டிய குணங்கள்.

$6^{3-21}$ முடிவு.

*a.* $6^{3-10}$. கள்ளப் போதகர்களைக் குறித்துத் திரும்பவும் எச்சரித்தல்.

*b.* $6^{11-14}$. ஆவிக்குரிய விஷயங்களைப் பற்றித் தீமோத்தேயுவை ஏவுதல்.

*c.* $6^{15-16}$. கடவுளை ஸ்தோத்திரித்தல்.

*d.* $6^{17-21}$. கடைசி வசனங்கள். சில புத்திமதிகளும் வாழ்த்துதல்களும்.

7. **பொருள் அடக்கம்—இரண்டாம் நிருபம்.** $1^{1-5}$. வாழ்த்துதலும் நன்றி செலுத்துதலும்.

A. $1^{6}$—$2^{13}$. பவுல் தனது நிலைமையை நினைத்துத் தீமோத்தேயுவுக்குக் கொடுத்த புத்திமதிகள். தீமோத்தேயு தன்னில் விருத்தி செய்யவேண்டிய தைரியம் உண்மை முதலிய குணலக்ஷணங்கள்.

B. $2^{14}$—$1^{8}$. பவுல் தீமோத்தேயுவின் நிலைமையை நினைத்து, மற்றவர்களுக்கு இவன் கற்பிக்கவேண்டிய போதகத்தைப் பற்றி இவனை எச்சரித்தல். அதாவது, தர்க்கவாதம், துர்இச்சை, வீண் விசாரணை, கள்ள போதகம் இவற்றை நீக்கி, அப்போஸ்தலனுடைய போதகத்தைக் கைவிடாமல் பொறுமையோடு சுவிசேஷவேலையை நிறைவேற்ற வேண்டியது.

$4^{9-22}$. முடிவு. பவுல் தீமோத்தேயுவைத் தன்னிடம் வரும்படி அழைத்து, இயேசுவின் கிருபையைப்பற்றி இவனுக்கு ஞாபகப்படுத்தி சில வாழ்த்துதல் சொல்லல்.

**தீமோன்.** Dimon.=தீபோன். ஒரு ஊர். ஏசா $15^{9}$. **தீபோன்** (1) காண்க.

**தீமோன்.** Timon. [சிறப்புள்ளவன்]. சபையின் ஏழு உதவிக்காரரில் ஒருவன். அப் $6^{5}$.

**தீய நோக்கம்.** A. V. 'Thought of foolishness.' நீதி $24^{9}$.

**தீராக்கா.** Tirhakah. 2 இரா $19^{9}$. எகிப்து (பக். 158) காண்க.

**தீராஸ்.** Tires. யாப்பேத்தினுடைய ஏழாம் மகன். ஆதி $10^{2}$. இந்தப் பெயர் மக்கெதோனியாவுக்குத் தெற்கிலுள்ள *Thrace* என்னும் கிரேக்கநாடு, அல்லது தர்சு (*Tarsus,*) அல்லது தர்ஷீஸ் என்பதைக் குறிக்கலாம். ஒருவேளை தீராசியர் என்பவர்கள் சீரியாவுக்கும் எகிப்துக்கும் விரோதமாய்ப் படை எடுத்த துருஷர் (*Turusha*) என்னும் ஒரு ஜனமாய் இருந்தார்கள்.

**தீரு.** Tyre. இது பரிசுத்த பூமிக்கு வடமேற்கே சீதோன் பட்டணத்துக்கு ஏறக்குறைய பதினைந்து மைல் தூரத்துக்குத் தெற்கே, மத்தியதரைக் கடற்கரையின் பக்கத்திலுள்ள தீவில் கட்டப்பட்டிருந்த ஒரு பட்டணம். இது இருந்த இடம் பாறையான பூமியானதினால், பாறை என்று அர்த்தங்கொண்ட தீரு என்னும் பெயர் இதற்கு வந்தது. இது அதி பூர்வீக காலத்திலேயே அஸ்திபாரம் போடப்பட்ட பட்டணம். ஏசா $23^{7}$. இதற்குச் சீதோன் குமாரத்தியென்னும் பெயர் இருந்ததினால், தீருவைவிட சீதோன் பூர்வீகமானது எனத் தோன்றுகிறது. ஏசா $23^{12}$. பூர்வீக கிரேக்க கவிராயராகிய ஓமர் (*Homer*) என்பவன் இயற்றிய காவியங்களிலும், கி—மு. 1430—ஆம் எகிப்தியர் செங்கற் பலகைகளில் எழுதின அக்ஷரங்களிலும் தீருவைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றது. யோசுவா காலன் தேசத்தைப் பிடித்தகாலத்தில், அவன் தீருநாட்டை ஏறக்குறைய கி—மு. 1,100—ஆம் ஆசேர் கோத்திரத்துக்குக் கொடுத்தான். யோசு $19^{29}$. ஆனால் இஸ்ரவேலர் தீருவை ஜெயிக்கவே இல்லை. கி—மு. 1000 ஆமத்தில் தாவீது காலன் தேசத்தை அரசாளும்போது தீருவிலே ராஜாவாய் இருந்த ஈராம் கடற்கரையோரத்திலுள்ள பழைய பட்டணத்தைப் புதுப்பித்து, சமீபத்தில் இருக்கிற சில தீவுகளில் கோட்டை முதலியவற்றைக் கட்டி, அதற்குப் புதிய தீரு என்று பெயரிட்டு, அலைதாங்கிச் சுவர் ஒன்று கட்டி, அனைத்தையும் ஒரு பட்டணமாக்கினான். இந்தப் புதிய தீருப்பட்டணத்திலே, தன் தெய்வத்துக்காக பெரிய தேவாலயத்தையும் தனக்காக சிறப்பான மாளிகையையும், இன்னும் பல கட்டடங்களையும் கட்டி, அந்நகரை அலங்கரித்தான். தீரியர் அந்தக் கடற்கரையிலுள்ள ஒருவித சிப்பியிலிருந்து யாவரும் விரும்புகிற இந்திரநீலத்தைச் செய்து மத்தியதரைக்கடலின் சர்வ திசைகளிலும் பிரயாணம்பண்ணி, வியாபாரம் நடத்தி, தனவந்தர் ஆனார்கள். அவர்களிற்சிலர் இங்கிலாந்து தேசமட்டும் கப்பற்பிரயாணம் பண்ணி அங்கேயிருந்து வெள்ளீயம் (*Tin*) கொண்டுவந்து விற்பனை செய்தார்கள். தாவீது சாலொமோன் என்னும் எபிரெய அரசர்களுக்கும் ஈராமுக்கும் அதிகச் சிநேகம் இருந்ததினால், தங்கம்கொண்டுவரும்படி ஈராமின் கப்பலாட்களோடு சாலொமோன் ஓப்பீருக்குத் தன் கப்பல்களை அனுப்பிவிட்டான். 1 இரா $9^{26}$ $10^{22}$. ஈராமின் கல்லறை இந்நாள்மட்டும் இருக்கிறது. தீருவுக்குங்கூட ராஜாவாயிருந்த சீதோனியரின் அரசனாகிய எத் பாகா



தற்காலத்து தீரு.

வின் குமாரத்தியாகியயேசபேல் ஆகாப்அரச னுக்கு மனைவியானாள். 1 இரா 16:31. கி—மு. 800—ளவு அசீரியர் சீரியா முதலிய ராஜ்யங் களுக்கு விரோதமாய்ப் படையெடுக்கும் பொழுது, தீருவுக்கு உபத்திரவகாலம் ஆரம் பித்தது. அசீரிய ராஜாக்கள் பலதடவை இதை முற்றுகை போட்டார்கள். அசீரியா ராஜ்யத்தின் வல்லமை குறைந்து போன போது, ஏறக்குறைய கி—மு. 600—ளவு தீருப் பட்டணம் சிலகாலம் அதிகீர்த்தி பெற்றது. இக்காலத்தில் இதிலிருந்த ஐசுவரியத்தைப் பற்றியும் பொல்லாங்கைப்பற்றியும் எசேக்கி யேல் விபரமாய்ச் சொல்லுகிறான். எசே 27. 28. அதி.

கி—மு. 606—ளவு பாபிலோனிய ராஜாக் கள் அசீரிய ராஜ்யத்தின்மேல் ஜெயங் கொண்டபிறகு தீரியருக்கும் எகிப்தியருக் கும் சிலகாலம் சமாதானம் இருந்தது. இங்

தக்காலத்தில் தான் தீரியர் அதற்கு முன் ஒருவரும் செய்யாததும் யாவரும் மெச்சத் தக்கதுமான ஒரு காரியம் செய்தார்கள். அதென்னவென்றால், சிவந்த சமுத்திரத்தில் கப்பல் ஏறி பெரிய கண்டமாகிய ஆப்பிரிக்காவைச்சுற்றி ஓடி, மூன்று வருஷம் கழித்து மத்தியதரைக் கடலுக்குள் புகுந்து தீருவைச் சேர்ந்தார்கள். இதேகாலத்தில் வேதாகமத்தில் சொல்லியிருக்கிற நேபுகாத்நேச்சார் பதின்மூன்று வருஷம் தீருவை முற்றுகைபோட்டு, பழைய பட்டணத்தை அழித்துவிட்டாலும், புதிய பட்டணத்தை அவன் பிடிக்கவே இல்லை. எசே 26[7] 29[18]. இந்த முற்றுகை நடக்கும் காலத்தில் தீருவுக்கு அதிக நஷ்டம் விளைந்தது. மேலும் நேபுகாத்நேச்சாருக்கும் எகிப்தியருக்கும் சண்டையிருந்த காலத்தில் நேபுகாத்நேச்சார் இதைப் பிடித்தான். எரே 44[30]. தீர்க்கதரிசிகள் தீருப் பட்டணத்தாருடைய மேட்டிமையைப் பற்றியும், அவர்கள் செய்த அநியாயத்தையும், அடிமைவியாபாரத்தையும் பற்றியும் சொல்லுகிறார்கள். எசே 28[2] ஆமோ 1[9] யோவே 3[4]. பாபிலோனிய ராஜ்யத்தை ஜெயித்துப் பாரசீக ராஜ்யத்தை ஸ்தாபித்த கோரேஸ், சிறையிருப்பிலிருந்து திரும்பி வந்த யூதர்கள் எருசலேமில் திரும்பவும் கட்டும் தேவாலயத்துக்குத் தீரியர் கேதுருமரங்களை அனுப்பும்படி கட்டளையிட்டான். எஸ்றா 3[7]. தீரியர் எருசலேமில் மீன் வியாபாரம் செய்தார்கள். நெகே 13[16]. கி—மு. 351—ஆம் சீதோனும் தீருவும் பாரசீக ராஜ்யத்துக்கு ராஜதுரோகம் பண்ணினதினாலே அந்த ராஜா சீதோனுக்கு விரோதமாய் வந்தபோது தீருப் பட்டணத்தார் மறுபடியும் அவனோடு சமாதானத்துக்கு வந்தார்கள். கி—மு. 332—ஆம் மகா அலெக்சந்தர் இந்தப் பட்டணத்தை முற்றுகைபோட்டு, இதைப் பிடித்து, இதன் குடிகளில் 8,000 பெயரைச் சங்கரித்து, 2,000 பெயரைச் சிலுவையில் அறைந்து 30,000 பெயரை அடிமைகளாக விற்று இந்தப் பட்டணத்தை முற்றிலும் அழித்தான்.

இதற்குப் பின்பு, தீரியர் இந்த நல்ல துறைமுகத்தைத் திரும்பவும் கட்டி, முன்போலவே செல்வம் அடைந்தார்கள். ரோமர்கள் இந்தப் பட்டணத்தாருக்குச் சுய ராஜ்ய சிலாக்கியம் கொடுத்தார்கள்.

இயேசுகிறிஸ்துவின் காலத்தில் மறுபடியும் பெரிய நகரமாய் இருந்த இதிலிருந்து தீரியரில் சிலர் அவருடைய உபதேசத்தைக் கேட்கும்படி வந்தார்கள். மாற் 3[8] லூக் 6[17]. இயேசு தாமே இந்தப் பட்டணத்துக்குப் போனார். மத் 15[21] மாற் 7[24] லூக் 10[13]. இதைப்பற்றி இயேசு சில சமயங்களில் பேசினார். மத் 11[21] லூக் 10[13]. அப்போஸ்தலர் நடபடி ஆகமத்தில் இதன் பெயர் மூன்று தடவை சொல்லப்பட்டிருக்கிறது. அப் 12[20] 21[3.7]. இந்தப் பட்டணத்தில் முன்னே ஒரு பெரிய விக்கிரக ஆலயம் இருந்த இடத்தில், மகா அலங்காரமான ஒரு கிறிஸ்தவ கோயில் கட்டப்பட்டிருந்தது. தற்காலத்தில் இது பாழாய்க்கிடக்கிறது.

**தீர்க்கதரிசனம்—தீர்க்கதரிசி. Prophecy, Prophet.**

**பழைய ஏற்பாடு.** இஸ்ரவேல் ராஜ்யத்திலிருந்த தீர்க்கதரிசிகள் பல நூற்றாண்டுகளாக நீதி நியாயங்களைப்பற்றி விசாரித்து அதைக்குறித்து ஜனங்களுக்குப் போதனை செய்ததினாலும், அந்தப் போதனைகளில் இஸ்ரவேலரேயொழிய மனுஷர் யாவரும் கவனிக்கத்தக்கவை பல ஆனதினாலும், இதைப் பற்றிச் சற்றே விபரமாய் யோசித்து இதில் அடங்கியிருக்கிற நாலு விஷயங்களைப்பற்றிச் சொல்லுவோம். அவையாவன:—

I. தீர்க்கதரிசனத்தைப்பற்றிய சரித்திரம்.

II. தீர்க்கதரிசிகளுக்குத் தேவவாக்கு உண்டான விதம்.

III. தீர்க்கதரிசிகளின் நோக்கமும் அவர்கள் செய்த போதகமும்.

IV. மேசியாவைப் பற்றிய தீர்க்கதரிசனம்.

I. 1. இஸ்ரவேலருடைய சரித்திரத்தை நாம் வாசிக்கும்போது, கடவுளின் சித்தத்தை உரைக்கிற தீர்க்கதரிசிகள் தாவீது அரசன் காலமுதல் ராஜாங்க விஷயங்களிலும் ராஜாவின் குடும்ப விஷயங்களிலும் அதிக அதிகாரம் பெற்றவர்களாய் இருந்தார்கள் என்றும், இதற்கு முந்தின காலங்களிலும் இஸ்ரவேலர் தேவசித்தத்தை விளக்குகிற இவர்களை அதிகமாய்க் கவனித்தார்கள் என்றும், அறிகிறோம். ஆனால், ஆரம்பத்திலே, தேவசித்தத்தை இப்படி விளக்கிச் சொன்னவர்கள் ஆசாரியர்களைப்போல ஒரு வம்சம் அல்லது ஒரு குடும்பத்தைச்சேர்ந்தவர்கள் அல்ல. அவர்கள் கடவுளுடனே அந்தரங்கமாய்ப் பேசி, அவரிட்ட கட்டளைகளை ஜனங்களுக்குத்தெரிவிக்கக்கூடியவர்களாய் இருந்தார்கள் என்று நாம் பொதுவாய்ச் சொல்லலாம். பூர்வகாலத்தில் பலி செலுத்தும் சடங்கை நடத்துகிறவர்கள் அதன் குறிப்புகளைக்கவனித்து நமது தேசத்து மந்திரவாதிகளைப்போல கடவுள் சித்தத்தைப் பலிகொண்டு வந்தவர்களுக்குத் தெரிவித்தார்

கள். ஆனால் இஸ்ரவேலர் படிப்படியாக இந்த மந்திரவாதிகளை இகழ்ந்து சடங்கை நடத்துகிறவர்கள் மூலமாய் தேவசித்தம் வெளிப்படும் என்பதை நம்பாமல் ஆசாரியர்களல்லாத தீர்க்கதரிசிகளாகிய ஒருவித பக்தர் மூலமாய் தேவசித்தம் அருளப்படுமென்று நம்பி வந்தார்கள். உபா $18^{10}$.

2. தீர்க்கதரிசியைக் குறிக்கும்படி சில பதங்களைப் பிரயோகித்து வந்தார்கள்.

3. மூன்று பதங்கள் விசேஷமாய்க் கவனிக்கப்படத்தக்கவை.

i. *Nabi* நபி. இந்தப் பதம் முந்நூறுதரத்துக்குமேல் வருகிறது. தமிழ் வேதாகமத்தில் தீர்க்கதரிசி என்று சாதாரணமாய் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிற இப்பதத்தின் மூல அர்த்தம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்வது முடியாதென்றாலும், தெரிவிக்கிறவன் அல்லது கூறுகிறவன் என்பது இதன் அர்த்தமாய் இருக்கலாம்.

ii. *Ro'eh* ரோகே. ஒன்பதுதரம் சொல்லப்பட்டிருக்கிற இந்தப் பதத்துக்குக் காண்கிறவன் என்பது மூல அர்த்தம். இது தமிழ் வேதாகமத்தில் ஞானதிருஷ்டிக்காரன் என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. 1 சாமு $1^{9}$ 2 சாமு $15^{27}$ 1 நாளா $9^{22}$ 2 நாளா $16^{7}$ ஏசா $30^{10}$.

iii. *Chozeh* கோசே. இருபதுதரம் சொன்ன இப்பதத்துக்கு உரைக்கிறவன் என்று அர்த்தம். இதுவும் தமிழ் வேதாகமத்தில் ஞானதிருஷ்டிக்காரன் அல்லது தரிசனம் பார்க்கிறவன் என்றே மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. 2 சாமு $24^{11}$ ஏசா $29^{10}$ ஆமோ $7^{12}$ மீகா $3^{7}$.

இவற்றைத் தவிர, கடவுளுடைய சித்தத்தை உரைக்கிறவனுக்கு 'தேவனுடைய மனுஷன்' 'கர்த்தருடைய தூதன்' 'ஆவியைப்பெற்ற மனுஷன்' என்னும் பெயர்களும் வருகிறது. ஆகா $1^{13}$ ஓசி $9^{7}$.

4. யேகோவாவினால் நியமிக்கப்பட்டு அவருடைய சித்தத்தைத் தெரிவித்துவந்த சிலருக்குப் பூர்வீகத்தில் தீர்க்கதரிசி என்ற பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணம்:—

ஆபிரகாம். ஆதி $20^{7}$.
கோத்திரப் பிதாக்கள். சங் $105^{15}$.
ஆரோன். யாத் $7^{1}$.

இஸ்ரவேலர் வனாந்தரத்தில் இருந்தபோது எல்தாத் மேதாத் என்னும் மூப்பர்களின் மேல் தீர்க்கதரிசனம் உரைக்கிற ஆவி வந்தது. எண் $11^{25}$. இஸ்ரவேலரல்லாதவர்களுக்கும் தீர்க்கதரிசனம் உரைக்கும் வல்லமை இருந்ததென்பதைப் பீலேயாமின் சரித்திரத்தில் காண்கிறோம். எண் 22–24 அதி. தரிசனத்தின் மூலமாயும் சொப்பனத்தின் மூலமாயும் தேவசித்தத்தை அறிகிற அறிவைப் பார்க்கிலும் விசேஷமான அறிவு மோசேக்கு இருந்தது. எண் $12^{5}$ உபா $18^{15}$.

தெபோராள் நியா $4^{4}$.
சாமுவேல் 1 சாமு $3^{20}$.

5. சாமுவேலின் காலத்துக்குமுன் சிலர் தீர்க்கதரிசனம் சொல்லிவந்தார்கள். அதற்குப் பிற்பாடு தீர்க்கதரிசனம் இல்லாத காலம் இல்லை. தீர்க்கதரிசிகளின் புத்திரர் என்னும் சங்கங்களைப்பற்றி நமக்குப் பூரணமாய்த்தெரியாவிட்டாலும் சாமுவேலின் காலம்முதல் தீர்க்கதரிசிகளில் சிலர் சீஷர்களைச் சேர்த்துக்கொண்டு சில நூற்றாண்டுகளாக தீர்க்கதரிசிகள் எப்போதும் இருக்கத்தக்கதாக, குரு சிஷ்ய முறையில் ஓர் ஏற்பாடு பண்ணினார்கள் என்று அறிகிறோம். இந்தமாதிரிச் சங்கங்கள் பலவற்றைப்பற்றி வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 1 சாமு $19^{18}$ 1 இரா $20^{35}$ 2 இரா $2^{3}$ $6^{1}$ ஆமோ $2^{11}$ $7^{14}$.

இந்தத் தீர்க்கதரிசிகளுக்கும் முந்தினகாலத்துத் தீர்க்கதரிசிகளுக்கும் ஒரு வித்தியாசம் தோன்றுகிறது. அதென்னவென்றால் முந்தியகால தீர்க்கதரிசிகள் சில சமயங்களில் மாத்திரம் இந்த வரத்தைப்பெற்று மற்றக் காலங்களில் சாதாரண ஜனங்களைப்போல் ஜீவித்தவர்களாயிருக்க, சாமுவேலின் காலமுதல் இருந்த தீர்க்கதரிசிகளும் தீர்க்கதரிசிகளின் புத்திரரும் இந்த வரத்தை எப்பொழுதும் உடையவர்களாயிருந்து, ஜனங்களுக்குப் போதகர்களைப்போல அடிக்கடி புத்திமதிகளைச் சொல்லுவார்கள். இவ்வாறாக சாமுவேலின் காலமுதல் தீர்க்கதரிசிகள் ஒரு வகுப்பார் ஆனார்கள். இதன்படி இஸ்ரவேல் சரித்திரத்தில் பல தீர்க்கதரிசிகளைக் குறித்து வாசிக்கிறோம். திருஷ்டாந்தம்:—

நாத்தான். 2 சாமு $7^{2}$.
காத். 2 சாமு $24^{11}$.
அகியா. 1 இரா $11^{29}$.
இத்தோ. 2 நாளா $9^{29}$.
எலியா. 2 இரா $1^{8}$.
எலிசா. 1 இரா $19^{14}$.

6. முதலிலே தீர்க்கதரிசிகள் தங்கள் போதனையை நூல்களில் எழுதவே இல்லை. அவர்கள் பொதுவான போதனைகொடாமல் சமயத்துக்குத் தக்கதாகமாத்திரம் போதித்தார்கள். மேலும் இப்போதனை பல தருணங்

களில் ஒருவனுக்குமட்டுமே புகட்டப்பட்டது. இவ்விதமாய் எலியா ஆகாப் ராஜாவையும், எலிசா ஏகூ ராஜாவையும் கண்டித்தார்கள். பிந்தின காலங்களில் தீர்க்கதரிசிகள் ஜனங்கள் எல்லாரும் அனுசரிக்க வேண்டிய நீதி நியாயங்களைக்குறித்து யேகோவாவின் சித்தத்தை அறியும்படி பிரயாசப்பட்டதினாலும், பற்பல ஊர்களில் அநேகர் அவர்கள் உரைத்த வாக்குகளைச் சிந்தித்துக் கொள்ளும்படி விரும்பினதினாலும், இந்தத் தீர்க்கதரிசிகள் அல்லது அவர்களுடைய சீஷர்கள் இவற்றைப் புஸ்தகம் முதலியவற்றிலே எழுதிவைத்தார்கள். எரே $36^{2}$. அக்காலமுதல் எபிரெயர்களுக்குச் சன்மார்க்கத்தைக் குறித்துப் போதிக்கும் போதகர்களான இந்தத் தீர்க்கதரிசிகளுடைய பெயரைக் காலக்கிரமமாய்ச் சொல்வது அரிதானாலும், உத்தேசமாய்ப் பின்வருமாறு நாம் சொல்லக் கூடும்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆமோஸ் | கி—மு. | 775 | முதல் | 750 | வரை. |
| ஓசியா | ,, | 743 | ,, | 737 | ,, |
| ஏசாயா | ,, | 741 | ,, | 701 | ,, |
| மீகா | ,, | 720 | ,, | 695 | ,, |
| எரேமியா | ,, | 626 | ,, | 586 | ,, |
| செப்பனியா | ,, (?) | 620 | | | |
| நாகூம் | ,, (?) | 620 | | | |
| ஆபகூக் | ,, (?) | 604 | | | |
| எசேக்கியேல் | ,, | 594 | ,, | 570 | ,, |
| ஒபதியா | ,, | 586 | ,, | ,, | ,, |
| ஆகாய் | ,, | 520 | ,, | ,, | ,, |
| சகரியா | ,, | 520 | ,, | ,, | ,, |
| மல்கியா | ,, (?) | 464 | அல்லது | 430 | |
| யோவேல் | ,, (?) | 400 | | | |
| யோனா | ,, (?) | 300 | | | |
| தானியேல் | ,, (?) | 166 | | | |

அசீரியர் பலெஸ்தீனாவுக்கு விரோதமாய் வரும்போது ஆமோஸ் ஓசியா என்பவர்கள் இஸ்ரவேல் ராஜ்யத்திலும், ஏசாயா மீகா என்பவர்கள் யூதாராஜ்யத்திலும் ஜனங்களுக்கு யேகோவா செய்யப்போகிற தண்டனையைக் குறித்தும், அதற்குத் தப்பித்துக்கொள்ளும்படி ஜனங்கள் அனுசரிக்கவேண்டிய நீதி நியாயங்களைக் குறித்தும் போதித்தார்கள். பாபிலோனிய ராஜ்யம் மேன்மைக்கு வரும்போது செப்பனியாவும் நாகூமும் யூதர்களுக்குப் புத்திமதிகளைச் சொன்னார்கள். பாபிலோனிய ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் யூதாவின்மேல் படையெடுத்த காலத்தில், எரேமியாவும் ஆபகூக்கும் தீர்க்கதரிசனம் சொன்னார்கள்.

யூதர் பாபிலோனியாவில் சிறையிருக்குங் காலத்தில், எசேக்கியேல் அவர்களுக்காக யேகோவா புதிதாய் ஸ்தாபிக்கப்போகிற ராஜ்யத்தைக் குறித்துத் தான் கண்ட தரிசனங்களைத் தெரிவித்தான். பாபிலோனியாவிலிருந்து சிலர் எருசலேமுக்குத் திரும்பி வந்த பிறகு, ஆகாயும் சகரியாவும் விசேஷமாய்த் தேவாலயத்தைத் திரும்பக் கட்டுகிறதைப்பற்றிப் பேசினார்கள். எஸ்றாவோடும் நெகேமியாவோடும் சிறையிருப்பிலிருந்து பின்னும் சில யூதர்கள் வருங்காலத்தில், மல்கியா தீர்க்கதரிசனம் உரைத்தான் என்று நாம் சொல்லக்கூடும். யோவேல், யோனா, ஒபதியா, ஏசாயா ஆகமத்தின் இரண்டாம்பாகம் ஆகிய இந்தத் தீர்க்கதரிசன ஆகமங்களின் காலத்தைக் குறித்து அவ்வளவு நிச்சயமாய் நமக்குத் தெரியாது.

7 சன்மார்க்கத்தைக் குறித்தே புத்திபோதனைகளைப் புகட்டிக்கொண்டுவந்த மேற்கூறிய தீர்க்கதரிசிகளைத் தவிர, சில கள்ளத் தீர்க்கதரிசிகளும் இருந்தார்கள். இவர்களைக் குறித்துத் திட்டமாய்ச் சொல்வது அரிது. இவர்களில் சிலர் நமது தேசத்திலுள்ள பேயாடிகளைப்போல இருந்தார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. 1 சாமு $16^{15}$ 1 இரா $22^{22}$. இந்தக் கள்ளத்தீர்க்கதரிசிகள் சன்மார்க்கத்தை விரும்புகிற மெய்த்தீர்க்கதரிசிகளுக்கு விரோதமான கட்சிக்காரர். 1 இரா $18^{22}$ $22^{11}$ எசே $34^{2}$ எரே $13^{14}$ $14^{14}$ $23^{25}$ $26^{18}$ $28^{9}$. இவர்கள் ஜனங்களுக்குக் கொடுத்த கள்ளப்போதனையை நீக்கும்படி எரேமியா தீர்க்கதரிசி வெகு உற்சாகத்துடனே பிரயாசப்பட்டான்.

8. யூதர்கள் சிறையிருப்பிலிருந்து திரும்பி வந்தபிறகு, கடவுளினுடைய சித்தத்தை விளக்குகிற பெரிய தீர்க்கதரிசிகள் அவர்களுக்குள் இல்லை. அப்பொழுது ஆசாரியர்களும் வேதபாரகரும் பிரதான அதிகாரத்தைச் செலுத்தி வந்தார்கள். தீர்க்கதரிசிகளைப்போல இவர்கள் நீதி நியாயம் முதலியவற்றைப்பற்றிய தேவ சித்தத்தை முக்கியமாய் விசாரிக்காமல், ஆசாரம் முறைமை நல்லொழுக்கம் முதலியவற்றைப்பற்றி விசேஷமாய்க் கவனித்துவந்தார்கள். தீர்க்கதரிசிகளில் ஒவ்வொருவரும் யேகோவாவின் சித்தத்தைப்பற்றிப் புதிய விஷயங்களை ஜனங்களுக்கு அறிவித்தவர்களாயிருக்க, ஆசாரியர்களும் வேதபாரகர்களுமோ புதிய சங்கதிகளை நாடாமல், முன்னோர்களுடையவழக்கபழக்கங்களை அறியும்படிக்கே எப்பொழுதும் நாடி, அவற்றிற்குரிய பற்பல பிரமாணங்களை ஏற்படுத்துவதே முக்கியம் என்று தீர்மானித்தார்கள். சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமானால், தீர்க்கதரிசிகள் கொடுத்த ஜீவனுள்ள வாக்குகளுக்குப் பதிலாக இவர்கள் முன்னோர்களுடைய பாரம்

பரியத்தையே வெகுவாகப் பாராட்டிவந்தார்கள். சங் 74[9].

II. தீர்க்கதரிசிகளுக்குத் தேவ வாக்கு உண்டான விதம்.

பூர்வத்திலே தீர்க்கதரிசி சொப்பனங்களின் மூலமாயும் தரிசனங்களின் மூலமாயும் தான் கண்ட குறிப்புகளின் மூலமாயும் தேவ சித்தத்தை அறிந்தான். எண் 12[6] உபா 13[1] எரே 24[1].

தீர்க்கதரிசி இந்த அடையாளங்களைக் காணும்போது, தான் யேகோவாவின் சித்தத்தைக்கூறும் சத்தம் என்பதை அறிந்துகொள்ளுவான். ஏசா 40[3]. முதலிலே ஜனங்கள் நியாயாதிபதியை அல்லது ராஜாவை ஏற்படுத்துவதைப்பற்றியும், யுத்தத்தில் செய்ய வேண்டிய காரியங்களைப்பற்றியும், ராஜா செய்யவேண்டிய நியாயத்தைப்பற்றியும், வனாந்தரத்தில் ஜனங்கள் பண்ணவேண்டிய பிரயாணத்தைப்பற்றியும், தேவ கட்டளைகளைத் தெரிவிப்பது விசேஷமான காரியம் என்று தீர்க்கதரிசிகள் நினைத்தார்கள். இவ்வண்ணமாகவே யோசேப்பு சாமுவேல் எலியா முதலியவர்கள் தீர்க்கதரிசனம் உரைத்தார்கள். தீர்க்கதரிசனம் சொல்லும் நேரத்திலே மாத்திரம் தீர்க்கதரிசன ஆவியானது இவைகளைத் தெரிவிக்கும்படி பூர்வீக தீர்க்கதரிசிகளை ஏவினது. பிந்தின காலங்களில் இந்த ஊழியத்துக்கு நியமிக்கப்பட்டவர்கள் மேற்கூறியவைகளைப்பற்றிய விஷயங்களை அல்ல நன்மை தீமைகளைப்பற்றி யேகோவாவின் சித்தத்தைப் பொதுவாய்த் தெரிவிக்கும்படி நியமிக்கப்பட்டவர்களாய் இருந்து, பல வருஷங்களாக அந்த ஊழியத்தை நிறைவேற்றும்படி பிரயாசப்பட்டுப் பலவிதமான போதனையை ஜனங்களுக்குக் கொடுத்தார்கள். நியா 6[34] 1 சாமு 10[6] 1 இரா 18[46] 2 நாளா 24[20] ஏசா 6[8] எரே 15[17] 20[9] மீகா 3[8].

பூர்வீக தீர்க்கதரிசிகளுக்கும் அந்தக் காலத்திலுள்ள குறிசொல்லுகிறவர்களுக்கும் வித்தியாசம் சொல்வது அரிது. ஆனால் ஏசாயா முதலிய பெரிய தீர்க்கதரிசிகள் குறிசொல்லுகிறவர்கள் அல்ல, இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் யாவரும் கவனிக்கவேண்டிய நீதி நியாயங்களைக் குறிக்கிறவர்களாயிருந்தார்கள்.

கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கும் மெய்த்தீர்க்கதரிசிகளுக்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் கள்ளத் தீர்க்கதரிசிகள் சமயத்துக்குத் தக்கதாக ஜனங்கள் கேட்க விரும்புகிற விஷயங்களையும் தங்களுக்கு லாபம் உண்டாக்குகிற விஷயங்களையுமே நாடுகிறவர்களாயிருக்க, மெய்த் தீர்க்கதரிசிகளோ ஜனங்களின் விருப்பத்தையும் தங்கள் லாபத்தையும் தேடாமல் நீதி நியாயத்தைமாத்திரம் அனுசரித்து வருவார்கள். மெய்த்தீர்க்கதரிசி இன்னான் என்பதும் கள்ளத் தீர்க்கதரிசி இன்னான் என்பதும் அவர்கள் அச்சமயத்தில் சொன்ன புத்திமதிகளினாலே அல்ல, அவற்றின் பலனைக் கண்டே நாம் தீர்மானிக்க வேண்டும்.

தற்காலத்தில் நாம் தீர்க்கதரிசனத்தையும் தீர்க்கதரிசிகளையும் குறித்து நினைக்கும்போது, சாதாரணமாய் நாம் தீர்க்கதரிசன நூல்களைக் குறித்தே நினைத்துக்கொள்ளுகிறோம். ஆனால் யேகோவாவினுடைய ஆவியினாலே ஏவப்பட்டவர்கள் தாங்கள் அவ்வாக்குகளை ஜனங்களுக்கு வாயால் கூறும்படி யேகோவாவே தங்களை ஏவினார் என்று நினைத்தார்கள். யேகோவா தனக்கு அருளின வேத வாக்கியங்களை அறிவிக்கும்படி தீர்க்கதரிசி தேவசமுகத்தினின்று உடனே ஜனங்களிடம் போவான். அந்தச் சமயத்திலே, தான் கூறியவற்றை அவன் எழுதவே இல்லை. அவன் அவற்றை எழுத விரும்பினால், அது சிலநாள் அல்லது சிலமாசம் அல்லது சிலவருஷத்துக்குப் பிறகுதான் எழுதப்படும். இவ்விதமாக பாருக்கு இருபது வருஷங்களில் எரேமியா சொன்ன வார்த்தைகளை ஒரு புஸ்தகச் சுருளிலே எழுதினான். எரே 36[4]. சில சமயங்களில் தீர்க்கதரிசி அல்ல, அவனுடைய சீஷர்கள் அவன் உரைத்தவற்றை ஒரு நூலில் சேர்த்தெழுதுவார்கள். இப்படியே ஏசாயா என்னும் புஸ்தகத்தில் பல வாக்கியங்கள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதை நாம் பார்க்கும்போது, தீர்க்கதரிசனம் உரைக்கும்படி யேகோவா தீர்க்கதரிசிகளுக்கு எப்படி நேராய் அருள்புரிந்தாரோ அப்படி அதே தீர்க்கதரிசனங்களைப் புஸ்தகங்களில் எழுதுகிறதற்கு அவர் அவர்களுக்கும் அவர்களுடைய சீஷர்களுக்கும் அருள்புரிய இல்லை என்று நாம் சொல்வது நியாயமே. ஆனால் அந்த ஆகமங்களில் சேர்க்கப்பட்ட வாக்கியங்கள் சுருக்கமாயும், உரைத்தகாலத்துக்குப் பிற்பாடும் சொல்லியிருந்தாலும், அவைகள் நீதி நியாயத்தைச் செய்யும்படி தேவவல்லமை உடையவைகளாயிருக்கிறது என்றும் எபிரெய ஜனங்கள் தீர்க்கதரிசிகள் உரைத்த வார்த்தைகளின் மூலமாய் யேகோவாவின் சித்தத்தை எப்படி அறிந்தார்களோ, அப்படியே இக்காலத்திலுள்ள நாம் இந்த ஆகமங்களின் மூலமாய் அவருடைய சித்தத்தை அறியக்கூடும் என்றும் கண்டு யேகோவா தேவவாக்கு கூறும்படி இந்த ஆகமங்களிலே சேர்த்தெழுதுவதற்கு அந்தத் தீர்க்கதரிசிகளையும் அவர்க

ளுடைய சிஷர்களேயும் ஒருவிதமாய் ஏவி ஞர் என்று நாம் தீர்மானமாய்ச் சொல்ல முடியும்.

III. தீர்க்கதரிசிகளின் நோக்கமும் அவர் கள் செய்த போதனையும்.

சவுலின் வேலேக்காரன் சாமுவேலினி டத்தில் எப்படிக் காணமற்போன கழுதைக ளேக் குறித்து விசாரிக்க விரும்பினனே, அப்படியே பலர் சாதாரண விஷயங்களேக் குறித்துத் தீர்க்கதரிசிகளிடத்தில் விசாரித் தார்கள். இவர்களில் சிலர் சரித்திரங்களே எழுதுவார்கள். 1 நாளா 29[30]. சிலர் ராஜாக் களுக்கு மந்திரிகளாய் இருந்தார்கள். இவர் களுக்கு யேகோவாவினுடைய மனுஷன் என்னும் பெயர் இருந்ததினலே ஜனங்க ளுக்கு யேகோவாவின் சித்தத்தைத் தெரி வித்து அதின்படி ஜனங்கள் நடப்பதற்குப் பிரயாசப்படுகிறதே அவர்களுடைய முழு நோக்கம். முற்காலத்தில் நடந்த சம்பவங்க ளேக் குறித்து யோசிப்பதும், தற்காலத்தில் நேரிடுகிறவைகளேக் குறித்து எச்சரிப்பதும் பிற்காலத்தில் வரும் விஷயங்களேக் குறித்து முன்னறிவிப்பதும் அவர்களுக்கு வழக்க மான காரியமானலும் எப்போதும் அவர்கள் யேகோவா தமது ஜனத்தில் தேடுகிற சன் மார்க்கத்தைக்குறித்து அதிக உற்சாகத்து டனே பேசுவார்கள். ஏசா 1, 58 அதி. மீகா 6 அதி. எசே 18 அதி. இவர்கள் தன்னயம், குடிவெறி, வேசித்தனம், ஏழைகளுக்குச் செய்யும் அநியாயம், சிற்றின்பம், பெருமை, விக்ரகாராதனே முதலிய பாவங்களேக் கண் டித்து பரிசுத்தம், கற்பு, இரக்கம், நல் நடக்கை முதலிய நற்குணங்களேக் குறித்துப் போதித்தார்கள்.

தீர்க்கதரிசிகள் முதலிலே ராஜாவுக்கு அல்லது தனவான் ஒருவனுக்குப் புத்திமதி சொன்னலும், வேதாகமத்தில் சொல்லப் பட்ட தீர்க்கதரிசிகள் இயற்றிய நூல்களே நாம் ஆராயும்பொழுது, அந்தப் பெரிய தீர்க் கதரிசிகள் ஜனங்கள் யாவருக்குமே பொது வாய்ப் புத்திமதிகளேச் சொன்னர்கள் என்று பார்க்கிறேம். சில சமயங்களில் சத்துருக் களுக்குப் பயப்படாமல் திடமனதாய் இருக் கும்படி ஜனங்களே ஏவுவார்கள். 2 இரா 19[1]. சில சமயங்களில், இரண்டு பெரிய சத்து ருக்கள் தங்களோடு சண்டை செய்யும்பொ ழுது, இஸ்ரவேலர் அதில் தலேயிடாமல் சமாதானமாய் இருக்கும்படி போதிப்பார் கள். ஏசா 30 அதி. சில சமயங்களில் பெரிய சத்துருக்களுக்குக் கீழடங்கியிருக் கும்படி ஜனங்களுக்குப் புத்தி சொல்லுவார் கள். எரே 21[4]. அவர்கள் இவ்விதமாய்க் கொடுத்த புத்திமதி ஜனங்களுக்கும் ராஜா வுக்கும் சில சமயங்களில் பிரியமாயும் சில சமயங்களில் வெறுப்பாயும் இருக்கும். இதற்கு எரேமியா ஆகமத்தில் நல்ல திருஷ் டாந்தம் பல உண்டு. ஆனல் தீர்க்கதரிசிகள் இவ்விதமாய் ராஜாங்க விஷயங்களேக் குறித் துப் பேசுகையில் அவர்களுடைய முக்கிய நோக்கம் ஜனங்கள் யேகோவாவுக்கு அட ங்கி அவர் இட்ட பிரமாணங்களே நிறை வேற்றுவதே உத்தம நன்மை என்பதே. ஒவ்வொரு தேசத்துக்கும் ஒவ்வொரு ஜனத் துக்கும் ஒரு தேவதை உண்டு என்று நினேத்த இஸ்ரவேலர் தீர்க்கதரிசிகள் உரைத்த இந்தச் சன்மார்க்க போதனேகளின் மூலமாய் முதலாவது மற்ற தேவர்களேப் பார்க்கிலும் யேகோவா பெரியவர் என்றும், அப்புறம் அவர் மற்ற தேவர்களேவிட பரிசுத் தர் என்றும், பிறகு யேகோவா ஒருவரே கடவுள் என்றும் நம்பி வந்தார்கள். இது தான் தீர்க்கதரிசிகளின் முக்கியபோதனே. இவற்றையெல்லாம் பார்த்த, தீர்க்கதரிசிக ளேப் பெரிய வித்வான்கள் என்றும் ராஜாங்க விஷயங்களில் அதிசமர்த்தர் என்றும் மகா பக்தர் என்றும் சொல்லி, இவற்றைவிட தீர்க்கதரிசனம் மேலானதல்ல என்று இகழ்ந்து கூறுவது நியாயமா? தீர்க்கதரிசி கள் இருந்த காலங்களே நாம் ஆராய்ந்து பார்க் கும்போது இஸ்ரவேலருடைய பயங்கர மான பாவநிலேமையையும் அவர்களேச் சுற்றி யிருக்கிற ஜனங்களேப்போலவே அவர்கள் செய்த அகோரமான துன்மார்க்கத்தையும் அந்தத் தீர்க்கதரிசிகள் கண்டு, விடாமுயற்சியு டனே ஜனங்களேச் சன்மார்க்கத்துக்குத் திருப்பவும் ஜனங்களிடத்தில் பரிசுத்தத்துக் குரிய நல் உணர்ச்சியை உண்டாக்கவும் கூறின புத்திபோதனேகளே நாம் யோசித்து, அவர்கள் கடவுளிடத்திலிருந்து விசேஷ வரத்தை அடைந்திருந்தார்களென்று தீர்மா னமாய்ச் சொல்லவேண்டும். சம்பவங்களே முன்னறிவிப்பது அவர்கள் பெற்றிருந்த விசேஷ வரத்துக்கு அத்தாட்சியாய் இருந்தா லும் அவர்கள் அக்காலத்தில் ஜனங்களுடைய மனதில் உண்டாக்கின மாறுதலே இதை விசேஷமாய் ஸ்திரப்படுத்துகிறது.

IV. மேசியாவைக் குறித்த தீர்க்கதரிச னம்.

ஜனங்களுக்குச் சிக்ஷை கொடுப்பதைப் பார்க்கிலும் ஜனங்களுடைய மனதில் நம்பிக் கை யுண்டாக்குவதே தீர்க்கதரிசிகளுக்கு முக் கிய கடமையாயிருந்தது. ஜனங்கள் யேகோ

வாவின் சித்தத்தை நிறைவேற்றினால் அவர் அவர்களை ஆசீர்வதிப்பார் என்று கூறி, உபத்திரவத்தில் விழுந்த ஜனங்களுக்கு வருங்காலங்களில் சுகம் கிடைக்கும் என்று உறுதியாய்ப் போதித்துவந்தார்கள். பிந்தின காலங்களில், இந்தச் சுகம் எல்லாம் மேசியாவின் மூலமாய் வரும் என்று போதித்தார்கள்.

அந்நிய மார்க்கத்தானாகிய கோரேஸ் என்பவனைப்பற்றி 'மேசியா' என்னும் பதம் முதல்முதல் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $45^1$. ஏறக்குறைய கி—மு. 200-ஆம் தானியேலின் ஆகமத்தில் 'பிரபுவாகிய மேசியா' என்பவனைப்பற்றி வாசிக்கிறோம். தீர்க்கதரிசிகள் உரைத்த, 'கிளை' 'மனுஷகுமாரன்' 'யேகோவாவினுடைய தாசன்' என்பவற்றைக் குறித்து நாம் விசாரிக்கும்போது சர்வ நீதி நியாயங்களையும் ஸ்தாபிக்கப்போகிற மீட்பர் ஒருவர் வருவார் என்று தீர்க்கதரிசிகளும் ஜனங்களும் நம்பிவந்தார்கள் என்று பார்ப்போம். 'யேகோவாவினுடைய தாசன்' காண்க. சங் 2, 8, 16, 45, 72 இவற்றை இயற்றினவர்கள் இவ்விதமாகவே தங்கள் காலத்தைக் குறித்து நினைத்து, வருங்காலத்தில் வருகிறவரைக் குறித்துப் பாடினார்கள் என்று சொல்லத் துணிகிறோம். இப்படியே ஏசாயா 53-ம் அதிகாரத்தை இயற்றினவன் அந்தக்காலத்திலுள்ள உபத்திரவப்பட்ட இஸ்ரவேலரைக் குறித்து நினைத்தும், வருங்காலத்தில் அவர்கள் அடையவேண்டிய பரிசுத்தத்தைக் குறித்து அறிவித்தும் வந்ததினாலே, கிறிஸ்தவ வேதசாஸ்திரிகளில் அநேகர் அவன் இயேசுகிறிஸ்துவைக் குறித்தே பேசுகிறான் என்று தீர்மானித்து வந்திருக்கிறார்கள். சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால், ஜனங்களுக்கு மீட்பையும் பரிசுத்தத்தையும் அருளும்படி 'அதிசயமானவர், ஆலோசனைக் கர்த்தா, வல்லமையுள்ள தேவன், நித்திய பிதா, சமாதானப் பிரபு' என்னப்பட்டவர் வரவேண்டியது அவசியம் என்று அறிந்து, தீர்க்கதரிசிகள் அந்த வருகையைக் குறித்து யூதர்களுடைய மனதிலே விருப்பம் உண்டாக்கினார்கள். மக்கபேயர் காலத்திலே, உண்மையுள்ளவர்களுக்குச் சொல்லமுடியாத வருத்தம் அந்நியர்கள் மூலமாய் உண்டானதினால், யூதர்கள் இன்னும் அதிக ஆவலுடனே அந்த வருகைக்காக எதிர்பார்த்திருந்தார்கள். இவ்வண்ணமே இயேசு பிறந்தபோது, யூதர்களுக்குள்ளே இருந்த பக்தர்களில் அநேகர் மேசியா வருங்காலம் சமீபித்திருக்கிறதென்று உணர்ந்து, அதற்காகக் காத்திருந்தார்கள். மத் $14^5$ லூக் $2^{25}$ $2^{36}$. மேல்கூறிய பக்தர் மனதிலுள்ள விருப்பத்தை நாம் காணும்போது கடவுள் ஒருவராயும் பரிசுத்தராயும் இருக்கிறார் என்பது தீர்க்கதரிசிகள் ஜனங்களுக்கு அறிவித்த முக்கிய போதனை என்றாலும், மேசியாவின் வருகையைப்பற்றி அவர்கள் அவர்களுக்கு அறிவித்த நல்நம்பிக்கையே சகல உபத்திரவங்களிலும் அவர்களுக்கு ஆறுதல் என்று சொல்வது அவசியம். தீர்க்கதரிசிகள் இவ்விதமாய் ஜனங்களுக்குச் சன்மார்க்கத்தைக் குறித்து நற்போதனை கொடுத்து, மேசியாவின் வருகையைப்பற்றி நல்நம்பிக்கையுண்டாக்கி இஸ்ரவேலருக்கும் யூதருக்கும் சன்மார்க்கத்திலே அளவில்லாத உதவிசெய்தார்கள்.

### V. புதிய ஏற்பாட்டுக் காலத்துத் தீர்க்கதரிசிகள். Prophets in New Testament Times.

1. **பெயர்.** கிரேக்கபாஷையில் 'பிரோபேதேஸ்' (*Prophetes*) என்னும் பதத்துக்குத் தமிழ் புதிய ஏற்பாட்டிலே 'தீர்க்கதரிசி' என்று சொல்லியிருக்கிறது. 'பிரோபேதேஸ்' என்னும் இந்த வார்த்தைக்கு 'தெளிவாய்ப் பேசுகிறவன்', 'மறைபொருளை விபரமாய்ச் சொல்லுகிறவன், முன்கூறுகிறவன்' என்பது மூலார்த்தம். சாதாரணமாய் வேதாகமத்தின் மூலமாயாவது, தன்னிடத்திலுள்ள பரிசுத்தஆவியின் உதவியினாலாவது தான் அறிந்த விஷயங்களைக் கிறிஸ்தவ சபைக்குள்ளே சொல்லுகிற அல்லது பிரசங்கிக்கிற 'தீர்க்கதரிசிக்கும்' பிந்தின காலங்களிலுள்ள பிரசங்கிகளுக்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால், இந்தத் தீர்க்கதரிசி தான் பிரசங்கஞ்செய்யுங்காலத்தில், பரிசுத்தஆவியின் விசேஷித்த ஏவுதலினாலே ஜனங்களுக்குப் போதனையைச் செய்வான்.

2 **சிமியோன் முதலியவர்கள்.** பழைய ஏற்பாட்டுக் காலத்திலே யூதர்களுக்குள்ளேயிருந்த தீர்க்கதரிசிகளைபோன்ற சில தீர்க்கதரிசிகளைப்பற்றிப் புதிய ஏற்பாட்டிலே வாசிக்கிறோம்.

அன்னாள் லூக் $2^{36}$.

சகரியா லூக் $1^{67}$.

சிமியோன் லூக் $2^{25}$.

யோவான்ஸ்நானன் மத் $11^9$ $14^5$ $21^{26}$ மாற் $11^{32}$ லூக் $7^{26}$ $20^6$.

3. **இயேசுகிறிஸ்து.** இயேசுகிறிஸ்துவே ஒரு தீர்க்கதரிசியாய் இருந்தார். வரப்போகிற தீர்க்கதரிசியைக் குறித்து உபாகமத்தில் சொல்லியிருந்ததினாலே, யூதர்களில் அநேகர் அவருடைய வருகைக்காக எதிர்பார்த்

திருந்தார்கள். உபா 18$^{15}$ யோவா 6$^{14}$ அப் 3$^{22}$ 7$^{37}$. அவருடைய சீஷர்களும் ஜனங்களும் அவர் தீர்க்கதரிசி என்றே நினைத்தார்கள். மத் 21$^{11}$ லூக் 24$^{19}$. தாம் தீர்க்கதரிசி என்று அவர் தாமே சொல்லியிருக்கிறார். மத் 13$^{57}$ லூக் 13$^{33}$. பரிசுத்தஆவியின் மூலமாய் அவர் எப்போதும் தமது சீஷர்களுக்குத் தீர்க்கதரிசன வரத்தை அருளுவார். யோவா 16$^{7,13}$ எபே 4$^{13}$. பெந்தெகொஸ்து நாளிலே இந்த வரம் வெளியரங்கமாய் அருளப்பட்டது. இவ்வரம் அவருடைய கிருபைக்கு அத்தாட்சி. 1 கொரி 14$^{5}$ வெளி 19$^{10}$ அப் 2$^{16}$.

4. **தீர்க்கதரிசிகளின் அழைப்பு.** மூப்பர்களும் கண்காணிகளும் வேறு மூப்பர்களையும் கண்காணிகளையும் உதவிக்காரரையும் ஏற்படுத்துவதும் பிரதிஷ்டை செய்வதும் எப்படி வழக்கமோ, அப்படிப்பட்ட வழக்கம் தீர்க்கதரிசிகளை ஏற்படுத்தும் விஷயத்தில் இல்லை. பரிசுத்த ஆவியானவர் இவர்களை அழைத்து ஏவுவார். ஆதலால் இவ்விதமாய் அழைக்கப்பட்ட தீர்க்கதரிசிகள் தாங்கள் சந்திக்கும் எந்தச் சபையிலும் தாங்கள் ஏவப்பட்டபொழுது தங்களுக்குத் தெரிந்தமட்டும் தங்களுக்கு உண்டான தேவவாக்கைச் சொல்லுவார்கள். இந்தத் தீர்க்கதரிசிகளில் பிரதானமானவர்கள் அப்போஸ்தலர்தான் என்று சொல்வது நியாயம். அப் 6$^{4}$ 13$^{1}$.

5. **கிறிஸ்தவ தீர்க்கதரிசியின் ஊழியம்.** அப்போஸ்தலர் விசேஷமாய் அந்நிய ஜாதிகளுக்கும், போதகர்கள் விசேஷமாய்க் கிறிஸ்தவர்களுக்கும் சுவிசேஷத்தையும் புத்திபோதனைகளையும் கூறுவார்கள். தீர்க்கதரிசிகள் சமயோசிதமான சத்தியத்தை பரிசுத்த ஆவியின் சகாயத்தினாலே உணர்ந்து கர்த்தருடைய சித்தத்தைப்பற்றிய புதிய விஷயங்களைச் சொல்லுவார்கள். 1 கொரி 12$^{28}$ 14$^{4}$ கலா 2$^{7}$ 1 யோவா 4$^{1}$. இவ்விதமாய் இவர்கள் பக்திவிருத்தியும், புத்தியும் ஆறுதலும் உண்டாகத்தக்கதாகப் பிரசங்கம் பண்ணுவார்கள். 1 கொரி 14$^{3}$. விசேஷித்த காலங்களில் கர்த்தருடைய சித்தத்தை இவர்கள் வெளிப்படுத்துவார்கள். திருஷ்டாந்தமாக, பர்னபாவையும் பவுலையும் சுவிசேஷ ஊழியத்துக்குப் பிரித்துவிடும்படி தேவகட்டளையைத் தீர்க்கதரிசிகள் அறிவித்தார்கள். அப் 13$^{1}$. சிற்சில சமயங்களில் வரும் விஷயங்களையும் முன் அறிவிப்பார்கள். அப் 11$^{28}$ 21$^{10}$.

6. **புதிய ஏற்பாட்டில் சொல்லப்பட்டிருக்கிற கிறிஸ்தவ தீர்க்கதரிசிகள்.**

யூதாவும் சீலாவும். அப் 15$^{32}$.

அந்தியோகியாவிலுள்ள தீர்க்கதரிசிகள். அப் 13$^{1}$.

அகபுவும் எருசலேமிலுள்ள தீர்க்கதரிசிகளும். அப் 11$^{27}$ 21$^{10}$.

சுவிசேஷகனாகிய பிலிப்புவின் குமாரத்திகள். அப் 21$^{9}$.

புதிய ஏற்பாட்டை வாசிக்கும்போது நாம் சில தீர்க்கதரிசிகளினுடைய பெயர்களைமாத்திரம் பார்த்தாலும், தீர்க்கதரிசிகள் சிலர்தான் என்று சொல்வது முடியாதகாரியம். ஒரே சபையில் அக்காலத்தில் அநேக தீர்க்கதரிசிகள் இருந்தார்கள் என்றும், அவர்களுக்கு அதிக செல்வாக்கும் கீர்த்தியும் இருந்தது என்றும், பரி. பவுல் எழுதிய நிருபங்களினால் அறிகிறோம். 1 கொரி 12$^{28}$ 15$^{29}$ எபே 2$^{20}$. பூர்வீக காலத்துத் தீர்க்கதரிசிகளில் சிலர் நூல்களை இயற்றினதுபோல, புதிய ஏற்பாட்டுக் காலத்திலும் சில தீர்க்கதரிசிகள் நூல்களை எழுதினார்கள். இதற்குத் திருஷ்டாந்தம் வெளிப்படுத்தின விசேஷம் என்னும் நூல். வெளி 1$^{3}$ 22$^{7}$. ஏறக்குறைய கி–பி. 120–ம் வருஷத்துக்குமுன் எழுதப்பட்டதும், அக்காலத்துச் சபை ஒழுங்கைப்பற்றி நமக்குப் பல விஷயங்களைத் தெரிவிப்பதுமான 'போதகம்' (*Didache*) என்னும் நூலிலே தீர்க்கதரிசிகளுக்கு அதிகக் கீர்த்திப் பிரஸ்தாபம் உண்டு என்றும், கண்காணிகளையும் உதவிக்காரரையும் பார்க்கிலும் இவர்களுக்குச் சபைகளில் அதிக மேன்மை இருந்தது என்றும் அறிகிறோம். ஆனால் தீர்க்கதரிசிகளின் அதிகாரத்தை விரும்பிய கள்ளத் தீர்க்கதரிசிகள் அநேகர் இருந்ததினாலும், கண்காணிகளும் உதவிக்காரரும் தங்கள் சபைகளில் படிப்படியாய் அதிக அதிகாரம் அடைந்ததினாலும், தீர்க்கதரிசிகளின் கீர்த்தி வரவரக் குறைந்துபோனது. ஏறக்குறைய கி–பி. 150-ம் வருஷத்துக்குப் பிற்பாடு கிறிஸ்தவ சபையில் 'தீர்க்கதரிசிகள் இல்லை' என்று அறிகிறோம்.

**தீர்க்கதரிசிகளின் புத்திரர். The sons of the Prophets.** தீர்க்கதரிசிகளின் புத்திரர் என்பது தீர்க்கதரிசிகளின் மக்களை அல்ல அவர்கள் ஸ்தாபித்த சில சங்கங்களைச் சேர்ந்த மாணாக்கரைக் குறிக்கும். இந்தச் சங்கங்களில் தீர்க்கதரிசிகள் சன்மார்க்கத்துக்குரிய விஷயங்களைப்பற்றித் தங்கள் சீஷர்களுக்குப் போதித்து, பிற்காலங்களில் தங்களுக்குப் பதிலாக அவர்களே ஜனங்களுக்கு வேண்டிய புத்திமதிகளைக் கொடுக்கும்படி அவர்களை ஆயத்தம்பண்ணுவார்கள். சாமுவேல் சந்தித்த சில ஊர்களில் இந்தச் சங்கங்

கள் இருந்ததினால், சாமுவேலே இச்சங்கங்களை முதலாவது ஏற்படுத்தினான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. இது எப்படியாயினும், சாமுவேலுக்குப் பிறகு சில காலம் இவைகள் இருந்தன என்பது நிச்சயம். 1 சாமு $10^{5}$ $19^{18}$ 1 இரா $18^{13}$ $20^{35}$ $22^{6}$ 2 இரா $2^{3}$ $6^{1}$ ஆமோ $2^{11}$ $7^{14}$.

**தீர்க்கதரிசியின் அடையாளங்கள். The mark of the Prophets.** 1 இரா $20^{37}$ சக $13^{6}$. இவ்வசனங்களில் தீர்க்கதரிசிகளுக்கிருந்த காயத்தைக் குறித்து வாசிக்கிறோம். முகமுக்காட்டினால் இந்தக் காயம் மறைக்கப்பட்டபடியால் இக்காயம் முக்கத்திலே இருந்தது என்று தீர்மானமாய்ச் சொல்ல வேண்டும். மேலும் தீர்க்கதரிசி தன் முக்காட்டை நீக்கினவுடனே ராஜா இவன் தான் தீர்க்கதரிசி என்று அந்தக் காயத்தினாலே அறிந்ததினால், தீர்க்கதரிசிகள் ஒரு காயம் அல்லது தழும்பை தங்கள் ஊழியத்துக்கு அடையாளமாக நெற்றியில் தரித்திருப்பார்கள் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு.

**குறிப்பு.** தமிழ் வேதாகமத்தில் சொல்லியிருக்கிற 'சாம்பல்' என்னும் பதத்துக்குப் பதிலாக மேற்கூறிய வசனங்களில், 'முக்காடு' என்னும் பதம் இருக்க வேண்டும். ஆங்கிலேய R. V. வேதாகமத்தில் மேற்சொன்ன வசனங்களைக் காண்க.

**தீர்க்கதரிசியானவள். Prophetess.**

1. தீர்க்கதரிசியின் மனைவி. ஏசா $8^{3}$.

2. தீர்க்கதரிசன ஊழியம் செய்கிறவள்.

மிரியாம். யாத் $15^{20}$.

தெபோராள். நியா $4^{4}$.

உல்தாள். 2 இரா $22^{14}$.

நொவதியாள். நெகே $6^{14}$.

3. புதிய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட தீர்க்கதரிசியான ஸ்திரீகள். யூதஸ்திரீயாகிய அன்னாள். லூக் $2^{36}$. சில கிறிஸ்தவ ஸ்திரீகள். அப் $21^{9}$ 1 கொரி $11^{5}$.

வெளி $2^{20}$-ல் சொன்ன கள்ளத் தீர்க்கதரிசியானவளுக்கு ஏசபேல் என்று பெயரானதினாலே, இவள் தீயத்தீரா சபையில் உள்ள கிறிஸ்தவர்களைப் பெரிய பாவத்துக்கு ஏவின ஒரு ஸ்திரீ என்று தோன்றுகிறது.

**தீர்க்கிறது, தீர்ப்பு. Determination, Judgement.** யாத் $21^{22}$ 1 இரா $3^{28}$ $7^{7}$ எஸ்று $7^{26}$ மத் $7^{2}$ யோவா $5^{30}$ $7^{34}$ அப் $25^{15}$ $24^{25}$ ரோ $1^{32}$ $5^{16}$.

**தீர்மானம். Determination.** 1 சாமு $20^{7}$ செப் $3^{8}$ சங் $2^{7}$ அப் $3^{13}$ $20^{16}$ $25^{25}$ $27^{1}$ ரோ $1^{32}$ 1 கொரி $2^{2}$.

**தீர்வை, வரி. Tribute, Toll, Taxing.** பழைய ஏற்பாட்டுக் காலத்தில் ராஜாக்களுக்குக் கிடைத்த வருமானமாவது:—

i. யுத்தத்தில் ஜெயித்த ராஜாக்களிடத்திலிருந்து வாங்கும் கப்பம். 2 நாளா $17^{11}$.

ii. வியாபாரிகள் கொடுக்கும் ஆயம். **ஆயக்காரன்** காண்க.

iii. பிரஜைகள் செலுத்தும் பல வரிகள். தானி $11^{20}$ எஸ்று $4^{13}$.

iv. ஜனங்கள் பல தடவைகளில் செய்யும் அமஞ்சிவேலை. 1 இரா $5^{13}$ $9^{21}$ $10^{14}$ 2 இரா $23^{33}$ எஸ்று $4^{13}$ $7^{24}$.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் ஜனங்கள் கொடுக்கவேண்டிய வரிகள் பல உண்டு:—

1. *Telos.* **தெலாஸ்.** ரோமர்கள் ஒவ்வொரு நாட்டிலும் பட்டணத்திலும் வியாபாரிகள் கொண்டுவந்த வர்த்தகத்தின்மேல் வரி வசூலிக்கும்படி, தமிழ் வேதாகமத்தில் நாம் வாசிக்கிற 'ஆயக்காரரை' ஏற்படுத்தியிருந்தார்கள். கலிலேயா நாட்டில் இந்த வரி ஏரோது ராஜாவுக்குக் கொடுக்கப்படும். இந்த வரிக்குத் 'தீர்வை' என்னும் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. மத் $9^{9}$ $17^{25}$ ரோ $13^{7}$.

2. *Phoros.* **பாராஸ்.** இது இத்தேசத்துத் தீர்வையைப்போன்ற நிலத்தீர்வை. ரோமராயனுக்குக் கொடுக்கப்பட்ட இந்த தீர்வைக்கு 'வரி' என்று தமிழ்வேதாகமத்தில் சொல்லியிருக்கிறது. ரோம. $13^{7}$.

3. *Kensos.* **கேன்சாஸ்.** தலைவரி. மத் $17^{25}$ $22^{17}$ மாற் $12^{14}$. இதுவும் ரோமராயனுக்குச் செலுத்தப்பட்டது. இதற்காகத்தான் வரிக்காசைக் கொடுக்கவேண்டும். **பணம்** காண்க. இதற்கு 'வரி' என்று சொல்லியிருக்கிறது.

4. *Didrachmon.* **டிடிராக்மொன்.** மத் $17^{24}$ வசனத்தில் சொன்ன இந்த 'வரிப் பணம்' எருசலேம் தேவாலயத்து தேவஸ்தானத்துக்கு ஒவ்வொரு இஸ்ரவேலனும் வருஷந்தோறும் செலுத்தவேண்டிய அரைச்சேக்கல். யாத். $30^{13}$. இது ரோமர்களால் ஏற்படுத்தப்படாமல், யூதர்களே ஏற்படுத்திக்கொண்ட ஒரு தலைவரி.

மேற்கூறிய இவ்வரிகளைத்தவிர பல நாட்டிலும் ஊர்களிலும் வேறுவிதமான வரிகளும் இருந்தது. **பகுதி** காண்க.

**தீலோன்.** Tilon. சீமோனின் மகன். 1 நாளா $4^{20}$.

**தீவட்டி.** Torch. நியா $7^{16}$ ஏசா $62^{1}$ நாகூ $2^{4}$ சக $12^{6}$ மத் $25^{1.4}$ யோவா $18^{3}$ வெளி $8^{10}$. **தீத்துவிளக்கு, பந்தம்** காண்க.

**தீவினை.** Evil. நீதி $13^{21}$ யோபு $4^{8}$. **தீமை, பொல்லாப்பு** காண்க.

**தீவு.** Island. எபிரெய பாஷையில் வழங்கும் பதம் தீவுகளையன்றி சமுத்திரத்தின் ஓரத்திலுள்ள நிலங்களையும் குறிக்கலாம். இவ்விதமாகவே 'ஜாதிகளுடைய தீவுகள்' என்பது மத்தியதரைக் கடலிலுள்ள தீவுகளையும் அதன் ஓரத்தில் உள்ள இராஜ்யங்களையும் குறிக்கும். ஆதி $10^{5}$ எஸ்த $10^{1}$ சங் $72^{10}$ ஏசா $23^{2}$ $42^{10}$ எசே $26^{18}$ செப் $2^{11}$.

கித்தீம் தீவு = சீப்புரு. எரே $2^{10}$ எசே $27^{6}$.

சீப்புரு தீவு—அப் $4^{36}$ $11^{19}$ $13^{4}$ $15^{39}$ $21^{3.16}$ $27^{4}$.

கிரேத்தாத்தீவு—அப் $27^{7.12}$ தீத் $1^{5}$.

கிலவுதா தீவு—அப் $27^{16}$.

மெலித்தாத் தீவு—அப் $28^{1}$.

பத்மு—வெளி $1^{9}$. **கித்தீம்** ஃ—காண்க.

**தீனாள்.** Dinah. யாக்கோபுக்கும் லேயாளுக்கும் பிறந்த மகள். ஆதி $30^{21}$. யாக்கோபுக்கு இருந்த வேறு குமாரத்திகளைப் பற்றி நமக்கு ஒன்றுந்தெரியாது. ஆதி $37^{35}$ $46^{7}$. ஏவியரின் பிரபுவாகிய சீகேம் இந்தத் தீனாளைக் கொண்டுபோய் அவளைக் கற்பழித்ததைப்பற்றியும், சிமியோனும் லேவியும் இதற்காக அவனிடத்தில் பழிவாங்கினதைப் பற்றியும் ஆதி 34-ம் அதிகாரத்தில் வாசிக்கிறோம். ஆதி $49^{5}$.

**தீனவியர்.** Dinaites. அசீரியாவிலிருந்து சமாரியாவுக்குக் குடியேற்றப்பட்ட ஜனம். எஸ்று $4^{9}$.

## து.

**துக்கம்.** Sorrow. சங் $88^{9}$ ஏசா $29^{2}$ லூக் $22^{45}$ யோவா $16^{20}$ 2 கொரி $7^{10}$ பிலி $2^{27}$ வெளி $18^{7}$. **பிரேத** அடக்கம் காண்க.

**துக்கிப்பு.** Mourning. ஆமோ $8^{10}$ பிர $7^{3}$.

**துடுப்பு.** Oar. எசா $27^{6}$. **கப்பல்** காண்க.

**துடைப்பம்.** Besom. ஏசா $14^{23}$.

**துணிகிறது.** Venture. மாற் $15^{43}$.

**துணிக்கை.** Morsel. மத் $14^{20}$ மாற் $6^{43}$ $7^{28}$ யோவா $13^{26}$.

**துணிவு.** Rashness (R. V. marg.) 2 சாமு $6^{7}$.

**துணை.** Help. ஆதி $2^{18}$ யாத் $18^{4}$ சங் $40^{17}$ $46^{1}$ $146^{5}$.

**துண்டம்.** Part. நியா $19^{29}$ லேவி $1^{8}$.

**துண்டிக்கிறது.** Hew in pieces. நியா $20^{6}$ 1 சாமு $11^{7}$ $15^{33}$ தானி $3^{29}$.

**துதி.** Praise. ஆதி $29^{35}$ யாத் $15^{11}$ 1 நாளா $16^{36}$ நெகே $12^{8}$ சங் $47^{6}$ $66^{8}$ சங் $102^{22}$ $113^{1}$–$118^{29}$ $136^{1}$ $145^{1-21}$ ஏசா $12^{1}$ எரே $17^{14}$ தானி $2^{23}$ எபி $13^{15}$ லூக் $2^{20}$ அப் $16^{25}$ வெளி $19^{5}$ **புகழ்** காண்க.

**துப்பட்டி.** Sheet. நியா $14^{12}$ ஏசா $4^{23}$ மத் $27^{59}$ மாற் $15^{46}$ அப் $10^{11}$ $11^{5}$='மெல்லிய புடவை' நீதி $31^{24}$. **உடை** காண்க.

**தும்மீம்.** Thummim. **ஊரீம்** காண்க. (பக். 155).

**துயரம்.** Sorrow. மத் $5^{4}$ சங் $107^{39}$.

**துரத்துகிறது.** Drive out. ஆதி $3^{24}$ யாத் $6^{1}$ யோசு $24^{18}$ சங் $44^{2}$ யோவா $2^{15}$ அப் $7^{45}$.

**துரவு.** Cistern. ஆதி $24^{30}$ நீதி $5^{15}$ பிர $12^{6}$ ஏசா $51^{1}$ லூக் $14^{5}$. **கிணறு** காண்க.

**துரிஞ்சில்.** Bat.

பலெஸ்தீனு தேசத்தில் பதினேழுவகைத் துரிஞ்சில் உண்டு. பாழாய்க்கிடக்கும் ஊர்களிலும், கல்லறைகளிலும், மலைச்சாரலில் உள்ள குகைகளிலும், கெபிகளிலும் இவைகள் ஏராளமாய் வசிக்கும். இவைகளுக்கும் பட்சிகளுக்கும் வித்தியாசம் உண்டு என்பதை எபிரெயர்கள் அறிந்திருந்தாலும், இவைகள் பட்சிஜாதிகளில் ஓர் இனம் என்றே நினைத்துவந்தார்கள். லேவி $11^{19}$ உபா $14^{18}$ ஏசா $2^{21}$.

**துரு.** Rust. மத் $6^{19}$ யாக் $5^{3}$.

**துருகம் துருக்கம்.** Tower. சங் $61^{3}$ நீதி $18^{10}$ ஏசா $32^{14}$ எரே $6^{27}$ மீகா $4^{8}$ செப் $3^{6}$. **கோட்டை, கோபுரம்** காண்க.

**துருசில்லாள்.** Drusilla. **ஏரோது** காண்க.

**துருத்தி.** = Leather bottle, wine skin. ஆதி $21^{14}$ யோசு $9^{4}$ நியா $4^{19}$ 1 சாமு $16^{20}$ யோபு $32^{19}$ சங் $56^{8}$ $119^{83}$ ஓசி $7^{5}$ ஆப $2^{15}$ மத் $9^{17}$ மாற் $2^{22}$ லூக் $5^{37}$.

= *Bellows* எரே $6^{29}$.

**துரும்பு.** Stubble. யோபு $13^{25}$ சங் $83^{13}$ ஏசா $40^{24}$ $41^{28}$ ஒப $1^{18}$ மல் $4^{1}$.

**துருவசக்கரம்.** Arcturus.

நேர் வடக்கே இருக்கும் நக்ஷத்திர ராசி. துருவநக்ஷத்திரம் நமது கண்ணுக்கு அசைவற்றதாய்த் தோன்றுகிறது. யோபு $9^{9}$ $38^{32}$.

**துரை.** Lord. எஸ்று $7^{25}$.

**துரைத்தனம்.** Dominion. எபே $1^{20}$ கொலோ $1^{16}$.

**துரோகிலியம்.** Trogyllium.

இது சின்ன ஆசியாவின் மேல்கரையிலே எபேசுப்பட்டணத்துக்குத் தெற்கே இருக்கிற ஒரு முனை. பரி. பவுல் ஏறின கப்பல் இந்த இடத்தைச் சந்தித்தது என்று சில கிரேக்க கையெழுத்துப் பிரதிகளில் கண்டிருக்கிறது. ஆங்கிலேய A. V. அப் $20^{15}$ காண்க.

**துரோப்பீமு.** Trophimus.

எபேசுப் பட்டணத்திலே பிறந்தவனும் அந்நிய மார்க்கத்திலிருந்து வந்தவனுமாகிய இவன் பவுலுடனே எருசலேமுக்குப் போன போது, பவுலையும் இவனையும் பட்டணத்திலே பார்த்த யூதர்கள் பவுல் புறமதஸ்தனாகிய இவனைத் தேவாலயத்துக்குத் தன்னோடு கூட்டிக்கொண்டுபோய் அதைப் பரிசுத்தக் குலைச்சலாக்கியிருப்பான் என்று ஆத்திரமாகத் தீர்மானித்து அவனோடு சண்டையிட்டார்கள். சில வருஷத்துக்குப் பிற்பாடு இவன் மிலேத்துவிலே இருந்தான். அப் $20^4$ $21^{29}$ 2 தீமோ $4^{20}$.

**துரோவா.** Troas. சின்ன ஆசியாவில் மீசியா நாட்டின் மேற்குக்கரையில் உள்ள ஒரு துறைமுகப்பட்டணம். மக்கதோனியாவுக்குப் போக்குவரத்தாயுள்ள கப்பல்கள் எல்லாம் இத்துறைமுகத்துக்கு வந்தபடியால் இங்கே அதிக வியாபாரம் நடந்தது. பவுலும் சீலாவும் தீமோத்தேயுவும் இப்பட்டணத்தைச் சந்தித்தார்கள். அப் $16^8$ $20^5$ 2 கொரி $2^{12}$ 2 தீமோ $4^{13}$.

**துர்க்கந்தம்.** Stink. ஏசா $3^{24}$.

**துர்க்குணம்.** Iniquity. சங் $18^{23}$.

**துர்ச்சன பிரவாகம்.** 'Floods of the ungodly.' 2 சாமு $22^5$ சங் $18^4$.

**துவளுகிறது.** Faint. எரே $51^{46}$.

**துளி.** Drop. உபா $32^2$ ஏசா $40^{15}$.

**துளிர்.** Bud. ஆதி $40^{10}$ எண் $17^8$ உன். பா $6^{11}$ எபி $9^4$.

**துள்ளுகிறது.** Leap. சங் $29^6$ $68^{16}$ $114^4$ உன். பா $2^8$ லூக் $1^{41}$.

**தூறடு.** Hook. யாத் $27^3$ எண் $4^{14}$ 2 இரா $19^{28}$ 1நாளா $28^{17}$ யோபு $41^2$ ஏசா $37^{29}$ எசே $29^4$ $38^4$ ஆமோ $4^2$.

**துன்பம்.** Persecution. சங் $10^2$ $31^{19}$ $119^{157}$ மத் $13^{21}$ மாற் $4^{17}$ $10^{30}$ அப் $8^1$ ரோ $8^{35}$ 2 கொரி $12^{10}$ கலா $5^{11}$ 2 தெச $1^4$ 2 தீமோ $3^{11,12}$. தீமை காண்க.

**துன்பம்.** Persecution. கிறிஸ்தவர்களுக்குத் துன்பம் இருக்கும் என்று இயேசு கிறிஸ்து தாமே தமது சீஷர்களுக்கு அறிவித்தார். ஆதி கிறிஸ்தவர்களுக்கு உண்டான துன்பங்கள் பல ஆனாலும், கிறிஸ்தவ சபை சாதாரணமாய்க் கணிக்கிறபடி பத்துத் துன்பங்கள் திருச்சபைக்கு உண்டானது. அவைகளின் விவரமாவது:

**முதலாம் துன்பம்** கி—பி. 64—ஆண்டிலே 2 தீமோ $4^{17}$—லே 'சிங்கம்' என்னப்பட்ட குரூரமான இராயனாகிய நேரோன் (*Nero*) ரோமாபுரியைச் சுட்டழித்துவிட்டு அந்நிய மார்க்கத்தார்களால் ராஜ துரோகிகள் என்று தூஷணிக்கப்பட்ட கிறிஸ்தவர்கள் பெயரிலே குற்றத்தைச் சாட்டினான். ஆனால் அவர்கள் தாங்கள் அல்ல என்று சாதித்த போது, அவன் மிகவும் கோபங்கொண்டு யாதொரு கேள்வியுமையில்லாமல் அவர்களைத் தண்டிக்கவேண்டுமென்று விளம்பரம் செய்து, முதலாவதாக வேதமார்க்கத்துக்குப் பொதுவான துன்பத்தை மிகவும் வரப்பண்ணினான். அதெப்படியென்றால், கிறிஸ்தவர்களில் அநேகரைக் கழுவேற்றி, கீல் பூசியிருக்கும் வஸ்திரம் உடுத்துவித்து, அவர்களைத் தீவட்டிகளைப்போல் கொளுத்தி, அவர்களில் அநேகரைத் துஷ்ட மிருகங்களுடைய தோற்களினால் மூடுவித்து, நாய்களால் கடிக்கவிட்டான். அப்போது பரி. பவுலும் பேதுருவும் இரத்தசாட்சிகளாய் மரித்தார்கள்.

**இரண்டாம் துன்பம்** கி—பி. 95—ஆண்டிலே தோமதியன் (*Domitian*) என்னப்பட்ட கொடிய இராயனுடைய காலத்தில் உண்டாயிற்று. இக்காலத்திலும் கிறிஸ்தவ மார்க்கம் ராஜதுரோகம் என்னப்பட்டது. அதினாலே அந்திப்பா என்ற இரத்தச்சாட்சி உயிரிழந்துபோனான் என்றும், இதில் கிறிஸ்தவர்களுக்கு ஆறுதல்சொல்ல வெளிப்படுத்தின விசேஷம் எழுதப்பட்டது என்றும் தோன்றுகிறது. (வெளி $2^{13}$).

**மூன்றும் நாலாம் துன்பங்கள்** கி—பி. 107—ஆண்டிலும், 125—ஆண்டிலும், திராஜன் (*Trajan*) ஆதிரியன் (*Hadrian*) என்னும் இராயர்களாலே உண்டாயிற்று. ஆனால் அவைகள் பொதுப்படவல்ல, சில தேசங்களிலேமாத்திரம் கிறிஸ்தவர்களுக்கு நேரிட்டன. அந்தத் துன்பங்களிலே கிலெமெந்தும், அந்தியோகியாவில் திருச்சபைக் கண்காணியாயிருந்த இன்னாசியும், (*Ignatius*) மற்றும் அநேக இரத்தச்சாட்சிகளும் குருமாரும் மரித்தார்கள். இதற்குப் பிறகு

கி–பி. 155–வருஷத்தில் சிமிர்னு என்னும் ஊரில் பொலிக்கார்ப்பு (*Polycarp*) அவ்விடத்தில் உண்டான ஒருதுன்பத்தில் இரத்தச்சாட்சியாய் மரித்தான். (பொலிக்கார்ப்பு காண்க).

**ஐந்தாம் துன்பம்** கி–பி. 165–வருஷத்தில் மாற்கு ஆரேலியு (*Marcus Aurelius*) ரோம ராயனுயிருக்கும்போது ஐந்தாம் துன்பத்தைச் சில அதிபதிகள் துவக்கி, இராயனுடைய சுரூபத்தை ஒரு தெய்வமாக வணங்கும்படி சொல்லி, 'மாட்டோம்' என்ற கிறிஸ்தவர்கள் பேரிலே குற்றஞ் சாட்டினார்கள். அந்தத் துன்பத்திலே யூஸ்தினும் (*Justin Martyr*) வருத்தத்துடனும் பொறுமையுடனும் பிள்ளைபெற்ற பெலிசித்தாஸ் (*Felicitas*) என்ற பாக்கியவதியும் இரத்தச் சாட்சிகளுடைய கிரீடம் தரிப்பிக்கப்பட்டார்கள், என்று நினைக்கலாம்.

**ஆறம் துன்பம்** கி–பி. 202–வருஷத்தில், ரோமராயனுகிய செப்திமியஸ் செவேரஸ் (*Septimius Severus*) காலத்தில் சில இடங்களில் கிறிஸ்தவர்களுக்குத் துன்பங்கள் உண்டாயின, ஆனல் கவனிக்கவேண்டியது என்னவென்ருல், இதற்குமுன் ஏறக்குறைய கி–பி. 150–வருஷ முதல் ரோமராஜ்யத்தில் ஏழைகளைக் காப்பாற்றவும் திக்கற்றவர்களை அடக்கம் செய்யவும், ஸ்தாபகமான சங்கங்களுக்கு உத்தரவு பத்திரம் கொடுத்த அதிகாரிகள் பல தேசங்களில் கிறிஸ்தவ சபைகளுக்கும் இடம் கொடுத்தார்கள்.

**ஏழாம் துன்பம்** கி–பி. 235–வருஷத்திலே மாக்சிமினஸ் (*Maximinus*) என்னும் இராயனுடைய காலத்திலே உண்டாயிற்று. ஓரிகேன் என்பவர் அப்போது உயிரோடிருந்து துன்பப்பட்டவர்களுக்கு ஆறுதலாயிருந்தார்.

முதலிலே கிறிஸ்தவ சபைகள் தனித்தனியாய் இருந்ததினுல் ஒரு இடத்தில் அதிகாரிகள் கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தினும், மற்ற இடங்களிலுள்ள அதிகாரிகள் அவர்களைத் துன்பப்படுத்தாமல் இருக்கலாம். இரண்டாம் நூற்றுண்டிலே கிறிஸ்தவ சபைகள் தனித்தனியாய் அல்ல, ஒரே பெரிய சபையில் சேர்ந்ததினுலும், அந்தப் பெரிய சபையில் லட்சக் கணக்கானவர்கள் பிரவேசித்ததினுலும், அந்தச் சபை ரோமராஜ்யத்தில் அனுசரித்த விக்ரக ஆராதனையை அனுசரிக்காததினுலும், இராஜ்யத்தில் மற்ற ஜனங்களைப் போல கிறிஸ்தவசபை ரோமராயனுடைய சிலையை வணங்காததினுலும், ரோமராயர்கள் இந்தப் பெரிய சபையின் பெயரிலே தீராத சமுசயம் வைத்து, எப்படியாவது தங்களுக்கு விரோதமாயிருக்கிற இந்தச் சபையை முற்றிலும் அழிக்கும்படி தீர்மானித்து, ரோமராஜ்யம் முழுவதிலும் கிறிஸ்தவர்களை உபத்திரவப்படுத்தும்படி உத்தரவு கொடுத்தார்கள்.

**எட்டாம் துன்பம்** கி–பி. 249–வருஷத்திலே டெசியஸ் (*Decius*) என்னும் இராயனுடைய காலத்திலுண்டாயிற்று. இது கொடிய துன்பம். இதில் அநேகம்பெயர் பலவிதமாய் கிறிஸ்துவின் நாமத்தை மறுதலிக்கும் பாவத்துக்குள்ளானர்கள். வேறு அநேகர் கஸ்திவாதைகளுக்கு அஞ்சி வனந்தரத்திலே போயிருந்ததினுல், கிறிஸ்தவ சபைக்குள் வனவாச முறைமை உண்டாயிற்று. இந்தத் துன்பம் பத்துவருஷங்களாக நடந்தது.

**ஒன்பதாம் துன்பம்** கி–பி. 257-வருஷத்தில் வலேரியானஸ் (*Valerienus*) ராயனுயிருக்கும்போது உண்டாயிற்று. இந்தத் துன்பத்திலே கர்த்தாகேவின் மேற்றிராணியாகிய சீப்பிரியான் (*Cyprian*) என்பவன் தலை வெட்டுண்டான். ரோமாபுரி லாவுரெஞ்சி (*Laurence*) என்பவன் சுடுதட்டின்மேலே வறுக்கப்பட்டு மரித்தான். நூறுபேர் பொங்குகிற சுண்ணும்பிலே போடப்பட்டார்கள்.

கி–பி. 260 கல்லியேனஸ் (*Galienus*) என்ற ராயன் கிறிஸ்தவ சபை ராஜாங்க அங்கீகாரம்பெற்ற ஒருசங்கமாக உத்தரவு கொடுத்தபிறகு 40-வருஷக்காலம் சமாதான நிலையிலிருந்தது.

**பத்தாம் துன்பம்** கி–பி. 303–வருஷத்திலே தியொகிலேதியன் (*Diocletian*) என்னும் ரோமருடைய ராயன் பத்தாம் துன்பத்தை ஆரம்பித்து அதைப் பத்துவருஷம் நடத்தினதினுல் ராஜாங்கத்தில் எங்கும் எண்ணிக்கைக்குள்ளடங்காத இரத்தச்சாட்சிகள் உபாதிக்கப்பட்டார்கள். கிறிஸ்தவ மதவிரோதிகள் ஜெபவீடுகளை நிர்மூலமாக்கி, வேதபுஸ்தகங்களைச் சுட்டெரித்தார்கள். இந்தத் துன்பத்தில் அலெக்சந்தரியா நகரியிலே பிறந்த கத்தரினுள் என்கிற தேவபக்தியுள்ள கன்னியாஸ்திரீ சொல்லமுடியாத உபத்திரவம் அடைந்து தலை வெட்டுண்டுபோனுள். இப்படி வேததுன்பங்களினுல் அநேகமாயிரம் கிறிஸ்தவர்கள் அழித்துப்போடப்பட்டாலும், அவர்கள் சிந்தின இரத்தம் கிறிஸ்துமார்க்கத்துக்கு விதையாய் இருந்தது. இந்தத் துன்பங்களுக்குப் பிந்தின காலங்களில் கிறிஸ்தவர்களுக்குள்ளும் சிலவேளைகளில் வித்தியாசக் கொள்கையினுல் உண்டாகும் தகாத யோசனையினுலும், உலகப் பெருமையினுலும், வீண் வைராக்கியத்தினுலும், ஒருவரை

ஒருவர் துன்பப்படுத்தினதுண்டு. சுவிசேஷமோ பகையையும் கரோத்தையுமல்ல, சமாதானத்தையும் இரக்கத்தையுமே படிப்பிக்கிறது. 1 கொரி. 13 அதி.

இக்காரியத்தைக்குறித்து நாலாவது நூற்றுண்டிலே மிகவும் சாதுரியமுள்ள வேதசாஸ்திரியாயிருந்த லக்தான்சியஸ் (*Lactantius*) என்பவன் எழுதினதாவது:—கொடுமையும் கட்டாயமும் செய்யலாகாது; ஏனெனில், வேதம் கட்டாயத்தால் பிரபலியப்படாது. மனிதர்கள் உபத்திரவத்தினாலல்ல, நியாயத்தினாலே யாதொரு விஷயத்தை அங்கிகரித்துக்கொள்ளவேண்டும். சங்காரகுணமும் தேவபக்தியும் ஒன்றையொன்று விரோதிக்கும்; சத்தியத்திற்கும், கட்டாயத்திற்கும், நீதிக்கும், கொரோத்திற்கும் பொருத்தமில்லை. வேதம் மற்றெல்லாவற்றிற்கும் மேலானகாரியமானபடியால், கட்டாயத்தினால் அதைக் காத்துப் பிரபலியப்படுத்த வேண்டுமென்பவர்கள் வேதத்தின் தன்மையையும் அதைக் காக்கவேண்டிய விதத்தையும் அறியாதவர்களே. ஏனெனில் வேதத்தைக் கொலையினாலும் கொரோத்தினாலும் அக்கிரமத்தினாலும் அல்ல, உற்சாகத்தினாலும் பொறுமையினாலும் விசுவாசத்தினாலுமே காக்கவேண்டும். மற்றவர்களுடைய இரத்தஞ் சிந்துதலினாலும் உபத்திரவங்களினாலும் துன்பத்தினாலும் வேதத்தைக் காக்க நாடுகிறவர்கள் வேதத்தைக் காக்காமல், அதின் பிரமாணங்களை மீறிக் கெடுத்துப்போடுகிறார்கள். அதேனெனில், வேதத்தை மனிதர்கள் தெரிந்துகொள்வதற்கு அகத்தியமாய் உற்சாகம் வேண்டும். உற்சாகமில்லாமல் வேதத்தை ஏற்றுக்கொள்வது பிரயோசனமற்ற காரியமே.

**துன்மார்க்கன்.** Ungodly, wicked. ஆதி 18[25] யோபு 3[17] 21[17] சங் 1[1] 10[2] 32[10] நீதி 11[7] பிர 8[10] ஏசா 26[10] எசே 3[18] ஆப 1[4] யூதா 1[18]. **அக்கிரமம், தீமை, பாவம்** காண்க.

## தூ.

**தூக்கம், தூங்குகிறது.** Slumber. 1 இரா 18[27] சங் 121[4] நீதி 6[10] 20[13] 1 தெச 5[6] அப் 20[9]. **நித்திரை** காண்க.

**தூக்கு நூல்.** Plumb line. ஏசா 28[17] ஆமோ 7[7] சக 4[10]. **நூல்** காண்க.

**தூக்குமரம்.** Gallows. உபா 21[22] யோசு 8[29] எஸ்தர் 5[15] 6[4] 7[9] 8[7] 9[13] லூக் 23[31] அப் 5[30] 10[39] கல் 3[13] 1 பே 2[24]. **ஆக்கினை** காண்க.

**தூசி.** Dust. துக்கத்தைக் காட்டும்படி தலைமேல் தூசியை அல்லது சாம்பலைப் போட்டுக்கொள்வது வழக்கம். யோசு 7[6] ஏசா 47[1] புல 3[29].

தூசி கீழ்வருவனவற்றைக் குறிக்கும்:

i. மரணம் அல்லது சரீரம் நிலையாமை. ஆதி 3[19] யோபு 7[29].

ii. திரள். ஆதி 13[16].

iii. எளிய நிலைமை அல்லது ஈனஸ்திதி. 1 சாமு 2[8] சங் 113[7].

iv. தூசியை அல்லது தரையை முத்தம் இடுகிறதும் மண்ணை நக்குகிறதும் பயத்தோடு கூடிய தாழ்மையைக் குறிக்கிறது. சங் 72[9] ஏசா 49[23].

v. தூசியைத் தூற்றுவது மகா அவமரியாதை. 2 சாமு 16[13] அப் 22[23].

vi. பாதங்களில் படிந்த தூசியை உதறுவது முன்னுள்ள சம்பந்தத்தை நீக்குவதைக் காட்டும். மத் 10[14] மாற் 6[11] அப் 13[51].

vii. மழையைத் தூசியாக மாற்றுவது கடவுளின் சாபத்தைக் குறிக்கும். உபா 28[24]. **தூள், புழுதி, பொடி** காண்க.

**தூஷணம்.** Blasphemy.

1. **பழைய ஏற்பாடு.** பழைய ஏற்பாட்டில் தூஷணம் என்பது கடவுளைப்பற்றியும் அவரது ஆளுகையைப்பற்றியும் இகழ்ந்து பேசுவதைக் குறிக்கிறது. லேவி 24[10-16] 2 இரா 19[6]. தேவாலயத்தையும் கடவுளின் திருநாமத்தையும் மதிக்காமல் அவமரியாதையாய்ப் பேசுவதும் தூஷணம். உபா 5[11] ஏசா 52[5] எசே 36[20].

அந்நிய மார்க்கத்தின்படி நடப்பதும், கடவுளின் பிரமாணங்களைக் கவனிக்காததும் தூஷணம். எண் 15[30] எசே 20[27]. ஓய்வுநாளில் விறகு பொறுக்குகிறது இதற்கு திருஷ்டாந்தம். எண் 15[32].

2. **புதிய ஏற்பாடு.** புதிய ஏற்பாட்டில் தூஷணம் என்பதைக் காட்டும் கிரேக்கபதம் தேவதூஷணத்தை அல்லாமல், இகழ்ச்சியாய்ப் பேசுவதையும் நிந்திப்பதையும் பொதுவாய்க் குறிக்கிறது. மத் 15[19] ரோ 3[8] 14[16] 1 கொரி 4[13] எபே 4[31] கொலோ 3[8] 1 தீமோ 6[4] 1 பேது 4[4]. இயேசுகிறிஸ்து தமக்குத் தெய்வீகத்தன்மையும் தேவலக்ஷணங்களும் உண்டு என்று போதித்ததினாலே யூதர்கள் அவர்மேல் தேவதூஷணமாகிய குற்றத்தைச் சாட்டினார்கள். மாற் 2[7] 14[64] யோவா 10[33]. யூதர்கள் இயேசுகிறிஸ்துவின்மேல் காட்டின விரோதம் தேவதூஷணமே என்பது சுவிசேஷகர் அபிப்பிராயம். மாற் 15[30] லூக் 22[65] 23[39] அப் 13[45] 18[6]. பரி. பவுல் கொ

டுத்த போதனை தங்கள் தெய்வமாகிய தியானாளுக்கு விரோதமான தேவ தூஷணம் என்று எபேசுப் பட்டணத்தார் நினைத்தார்கள். அப் $19^{37}$.

3. **தேவதூஷணத்துக்குத் தண்டனை** மரணம். லேவி $24^{16}$ யோவா $19^{7}$. இதினிமித்தம் யூதர்கள் ஸ்தேவானைக் கொன்றார்கள். அப் $6^{13}$ $7^{58}$.

4. **பரிசுத்த ஆவிக்கு விரோதமான தூஷணம்.** இது சுயத்தன்மையுடைய மனுஷன் கடவுள் தனக்குக் கொடுத்த இந்த வல்லமையை வேண்டுமென்று துர்ப்பிரயோகப்படுத்தி, தான் செய்தது இன்னதென்று தெளிவாய் அறிந்திருந்தும் கடவுளின் அதிகாரம் அனைத்தையும் நீக்கிவிட்டு, தீமையை முற்றிலும் விரும்புகிறதையும், கடவுளுக்கு விரோதமாய்க் காட்டும் தீராத பகையையும், அவர்பேரில் நிந்தையாகிய இகழ்ச்சியை கூறுகிறதையும் குறிக்கிறது. மத் $12^{31}$ மாற் $3^{29}$ லூக் $12^{10}$.

**தூண். Pillar.**

1. **'அம்முட்** ('mmud.) தூண் என்பது எபிரெய பாஷையில் வழங்கின இரண்டு பதங்களைக் குறிக்கும். இவற்றுள் அம்முட் ('mmud) என்பது மாளிகைகளிலும் ஆசரிப்புக்கூடாரத்திலும் உள்ளவைகளும் வெண்கலத்தினாலும் மரத்தினாலும் செய்யப்பட்டவைகளுமான தூண்களைப் பொதுவாய்க் குறிக்கும். யாத் $26^{32}$ நியா $16^{25}$ 1 இரா $7^{2}$. உவமையாய் இந்தப் பதம் மேகஸ்தம்பத்தையும் அக்கினிஸ்தம்பத்தையும் குறிக்கும். யாத் $13^{21}$ நியா $20^{40}$. தூண் என்பது புதிய ஏற்பாட்டிலே உவமையாகமாத்திரம் வழங்கப்பட்டிருக்கிறது. கலா $2^{9}$ 1 தீமோ $3^{15}$ வெளி $3^{12}$.

மச்சேபா. (*Mazzebah.*) சில வசனங்களில் தூண் என்பது மச்செபா (*Mazzebah.*) என்னும் எபிரெயபதத்தைக் குறிக்கிறது. 'மச்செபா' என்னும் இத்தூண்கள் முன் சொன்ன வெண்கலம் மரம் முதலியவற்றால் செய்யப்பட்ட மாளிகைத் தூண்கள் அல்ல, சில இடங்களில் நிறுத்தப்பட்டிருந்த கல் தூண்கள். கானானியர் பெனிக்கெயர் முதலியவர்கள் இவ்வித கல்தூண்கள் பலவற்றை நட்டுவைத்திருந்தார்கள். பூர்வீகத்தில் எபிரெயர்களும் அப்படியே செய்துவந்தார்கள்.

பழைய ஏற்பாட்டில் 'மச்செபா' தூண்கள் மூன்று விஷயங்களுக்காக நிறுத்தப்பட்டது என்று காண்கிறோம்.

i. **மரித்தவர்களுக்கு ஞாபகஸ்தம்பமாய் நடப்பட்ட கல்தூண்கள்.** ஆதி $35^{20}$ 2 சாமு $18^{18}$.

ii. **சாட்சிக்காக நிறுத்தப்பட்ட கல்தூண்கள்.** இவைகள் தேவதூதன் தரிசனமானதை அல்லது கடவுள் செய்த ஒரு விசேஷித்த சகாயத்தைக் குறிக்கும். தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் இந்த வசனங்களில் தூண் என்பதற்குப் பதிலாகக் கல் என்றுமாத்திரம் சொல்லியிருக்கிறார்கள். ஆதி $28^{18}$ $31^{13.44}$ $35^{14}$ யோசு $4^{7}$ $24^{27}$ 1 சாமு $7^{12}$.

iii. **கானானிய தேவஸ்தலங்களிலுள்ள பலிபீடத்தின் பக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்த கல்தூண்கள்.** எபிரெயர்கள் கானான் தேசத்தில் பிரவேசித்தபிறகு இந்த ஸ்தலங்களில் அவர்கள் பூஜைசெய்யும்போது இக்கல்தூண்களை வணங்கிவந்ததினாலே, இவ்வித தூண்களை நிறுத்தக்கூடாதென்று நியாயப்பிரமாணத்திலே கண்டிப்பாய்ச் சொல்லியிருக்கிறது. தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் சில வசனங்களில் இந்த மாதிரிக் கல்தூண்களைச் **'சிலை'** என்று சொல்லியிருக்கிறார்கள். ஆயினும் இவை சிலை அல்ல, உளியால் வெட்டப்படாத வெறுங் கல். தரையில் கிடக்கும் இப்படிப்பட்ட கல்லைக் கானானியர் எடுத்து, அதை உளியால் வெட்டாமல் பூமியில் நிறுத்துவார்கள். உபா $7^{5}$ $12^{3}$ ஓசி $3^{4}$ $10^{1}$.

இதுவும் அல்லாமல் சூரிய ஆராதனையில் ஒருவிதமான கல்தூணை அந்நியமார்க்கத்தார் நிறுத்துவார்கள். லேவி $26^{30}$ 2 நாளா $16^{5}$ ஏசா $27^{9}$.

'மச்செபா' என்னும் கற்கள் 2 அடி முதல் 10 அடி மட்டும் உயரமாய் இருக்கும். இவைகளின் நுனி வழுவழுப்பாய் இருந்ததினால் இதின்மேல் எண்ணெய் பூசினார்கள் என்று தோன்றுகிறது. பூர்வீகத்தில் இந்தக் கல் தூண்கள் ஞாபகஸ்தம்பமாய் நிறுத்தப்பட்டிருந்தாலும், இவற்றின் பக்கத்தில் பலிபீடத்தைக் கட்டினதினாலே, தாங்கள் வணங்கின தெய்வத்துக்கு இவை இருப்பிடம் என்று ஜனங்கள் நினைத்தார்கள் என்று தோன்றுகிறது. இதின்மேல் எண்ணெய் பூசுவது அல்லது பலியின் இரத்தத்தைத் தடவுவது அதற்குள் குடியிருந்த தெய்வத்துக்கு ஆகாரம். பிந்தின காலங்களில் எபிரெயர் முதலிய சேமியர்கள் கடவுளினுடைய ஆவிக்குரிய தன்மையை இன்னும் தெளிவாய் அறிந்ததினாலே, அவர்கள் வானலோக வாசிகளான தெய்வங்களுக்கு இந்தக் கல்தூண்கள் இருப்பிடம்

அல்ல, அவைகளுக்கு ஞாபகஸ்தம்பங்களாய் மட்டும் இருந்தன என்று எண்ணிவந்ததாகத் தோன்றுகிறது.

3. **யாக்கீனும் போவாசும்.** *Jachin and Boaz.* 1 இரா $7^{15-22}$ 2 நாளா $3^{17}$.

இவ்வசனங்களில் சொன்ன யாக்கீனும் போவாசும் இரண்டு பெரிய வெண்கலத் தூண்கள். சிற்பாசாரியாகிய ஈராம் மகா விநோதமாகவும் அலங்காரமாகவும் நாற்பது அடி உயரத்தில் செய்த இந்தத் தூண்கள் சாலொமோன் கட்டின தேவாலயத்தின் மண்டபத்தின் முன் நின்றது. இவைகள் அம்மண்டபத்தைத் தாங்கும் தூண்கள் அல்ல; இத்தேசத்துத் தேவாலயங்களில் தனித்தனியாய் நிற்கும் ஸ்தம்பங்களைப் போன்றவை. 'யாக்கீன்' என்னும் பதத்துக்கு 'அவர் ஸ்தாபித்தார்' என்றும், 'போவாஸ்' என்பதற்கு 'இதில் பலம்' என்றும் அர்த்தஞ்சொல்லுவதற்கு காரணம் இருந்தபோதிலும், இவற்றின் அர்த்தம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்வது அரிது. பெனிக்கேயர் தங்கள் தேவஸ்தலங்களில் எப்பொழுதும் பலிபீடத்தின் பக்கத்தில் கல்தூண்களை நிறுத்துவதை ஈராம் பார்த்திருந்ததினால், அவன் இவ்விதமாய் இந்த வெண்கலத்தூண்களை நிறுத்தியிருப்பான்; அல்லது தேவாலயத்தின் அலங்கரிப்பைமட்டும் கருதி இப்படிச் செய்திருப்பான். இவற்றையன்றி, வேறே காரணம் நமக்குத் தோன்றவில்லை.

**தூண்டில்.** Hook. ஏசா $19^{8}$ யோபு $41^{1}$ ஆமோ $4^{2}$ மத் $17^{27}$.

**தூதன்.** Angel.

I. பழைய ஏற்பாடு.

1. **இக்கோள்கையின் உற்பத்தி.** வேதாகமத்தை நாம் வாசிக்கும்போது எபிரெயர்கள் தூதர் இருப்பதாக எப்பொழுதும் நம்பிவந்தார்களென்று அறிகிறோம். ஆரம்பத்தில் எபிரெயர்கள், கானானியர் முதலியவர்களைப்போல கடவுளுக்கும் தூதர்களுக்கும் உள்ள வித்தியாசத்தைத் தெளிவாய்த் தெரிந்துகொள்ளாததினாலே யேகோவாவும் தூதர்களும் சோதோமை அழிக்குமுன்னே ஆபிரகாமிடத்தில் வரும்போது, அவர்களைப் பற்றி 'மூன்று புருஷர்' என்று சொல்லியிருக்கிறது. ஆதி $18^{2}$ $19^{1}$. அப்படியே முட்செடியின் அக்கினி ஜுவாலையின் மத்தியிலிருந்தவரைப்பற்றி 'கர்த்தருடைய தூதனானவர்' என்றும் 'கர்த்தர்' என்றும் 'தேவன்' என்றும் சொல்லியிருக்கிறது. யாத் $3^{2-4}$. முதலில் தூதர்கள் சிலரே என்றும், பிந்தின காலங்களில் கணக்கில்லாத சேனைகள் என்றும் எபிரெயர்கள் நினைத்தார்கள். ஆதி $28^{12}$ $32^{1}$. யேகோவாவினுடைய பரிசுத்த தன்மையை அவர்கள் அறிந்தபோது அவர் இவ்வுலகத்தில் இறங்கிவருவது முடியாது என்று தீர்மானித்து, அவர் தாமே வராமல் தமது சித்தத்தை நிறைவேற்றும்படி தம்முடைய தூதர்களை அனுப்புவதாக நினைத்தகாலமுதல், இத்தேவதூதர்கள் யேகோவாவைப்போல தெய்வீகமுடையவர்கள் அல்ல என்றும், அவர்கள் யேகோவாவுக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்றும் அபிப்பிராயங்கொண்டார்கள்.

2. **பதங்கள்.** எபிரெய பாஷையில் 'மலக்' (*Mal'ak*) என்னும் பதத்தின் கருத்தை தூதன் என்னும் பதம் நன்றாய்க்காட்டுகிறது. சில வசனங்களில் இந்தப் பதம் மனிதரைக் குறிக்கும்படி சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வசனங்களில் வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் இதற்கு 'ஆட்கள்' அல்லது 'ஸ்தானாபதிகள்' என்று சொல்லியிருக்கிறார்கள். ஆதி $32^{4}$ உபா $2^{26}$ நியா $6^{35}$.

தூதர்களுக்கு வழங்கும் சில பெயர்:

தேவகுமாரர். ஆதி $6^{2.4}$.

பலவான்களின் புத்திரர். சங் $29^{1}$ $89^{6}$.

பராக்கிரமசாலிகள். யோவேல் $3^{11}$.

பரிசுத்தவான்கள். சக $14^{5}$.

ஜாமக்காரர். ஏசா $62^{6}$.

காவலாளர். தானி $4^{14}$.

கர்த்தருடைய சேனை. யோசு $5^{14}$.

உன்னதமான சேனை. ஏசா $24^{21}$.

வான சேனை. உபா $17^{3}$.

மரணதூதர். நீதி $16^{14}$.

3. **தூதர்களுடைய தன்மை.** தூதர்கள் மானிடரூபத்தை அடைந்து மனுஷர்களைப் போல பேசுவார்கள். 1 இரா $19^{5}$.

போஜனபானம்பண்ணுவார்கள். ஆதி $18^{8}$.

நீதிமான்களைக் காக்கும்படி சண்டைசெய்வார்கள். ஆதி $32^{1}$ 2 இரா $19^{35}$ ஏசா $37^{36}$ யோவே $3^{11}$.

அறிவுள்ளவர்கள். 2 சாமு $14^{17}$.

அவர்களுக்குப் பூரண அறிவு இல்லை. யோபு $4^{18}$.

பறக்கக்கூடியவர்கள். ஏசா $6^{6}$.

மறைந்துபோகுந் தன்மையுடையவர்கள். 2 இரா $6^{17}$.

அவர்களில் கேருபீன்கள் சேராபீன்கள் என்று இருவகுப்பு உண்டு.

4. **தூதர்களுடைய பொதுவான ஊழியம்.** இஸ்ரவேல் புத்திரரை நடத்துவார்

கள். யாத் $23^{20}$. தூதர்கள் ஆபிரகாமின் வேலைக்காரனையும் தீர்க்கதரிசிகளையும் நடத்தினார்கள். ஆதி $24^{7}$ 1 இரா $13^{18}$ $19^{5}$ சக $1^{9}$.

மனுஷர்மேல் தக்க தண்டனை செலுத்துவார்கள். 2 சாமு $24^{16}$ சங் $35^{6}$ நீதி $16^{14}$.

மனுஷர்களைக் காக்கிறார்கள். ஆதி $19^{15}$ சங் $34^{7}$ $91^{11}$.

இவ்வுலகத்தில் நடக்கும் விஷயங்களைக் கடவுளுக்குத் தெரிவிப்பார்கள். யோபு $1^{6}$ $2^{1}$ சக $1^{8}$.

கடவுளைத் துதிப்பார்கள். சங் $103^{20}$.

**5. பிந்தினகாலத்து அபிப்பிராயங்கள்.** 'மலக்' என்னும் பதம் எசேக்கியேல் ஆகமத்தில் சொல்லப்படாவிட்டாலும், கடவுள் அனுப்பின தூதர்களைப்பற்றிய பல விஷயங்கள் இதில் உண்டு. 'ஆவி' 'புருஷன்' என்னும் பதங்கள் இந்த ஆகமத்தில் தேவதூதர்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. எசே $2^{2}$ $3^{12}$ $11^{5}$ $40^{3}$. கடவுள் அனுப்பின சொப்பனங்களின் அர்த்தத்தைத் தூதர்கள் மனுஷர்களுக்குச் சொல்லுவதாக எசேக்கியேல் ஆகமத்திலும் சகரியா ஆகமத்திலும் அறிகிறோம். சகரியா ஆகமத்திலே, தூதர்களுக்குள்ளே வெவ்வேறான வகுப்புகள் உண்டு என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. சக $2^{3}$ $3^{1}$. தானியேல் ஆகமத்தில் தூதர்கள் ஜாமக்காரராய் இருந்து இஸ்ரவேலைக் காக்கிறார்கள் என்று சொல்லியிருப்பதுடன், பிரதான தூதர்களாகிய மிகாவேல் காபிரியேல் என்பவர்களின் பெயர்களும் சொல்லப்பட்டிருக்கிறது. தானி $4^{13}$ $8^{16}$ $10^{13}$.

பாரசீகரும் பாபிலோனியரும் தூதர்களைப் பற்றித் தங்கள் மார்க்கங்களில் கொண்டிருந்த அபிப்பிராயங்களுக்கும் யூதர்கள் கொண்டிருந்த அபிப்பிராயங்களுக்கும் பல விஷயத்தில் சம்பந்தமுண்டு.

**II. அப்போகிரிப்பா.** தேவதூதர்கள் மனுஷரூபம் அடைந்து, மனுஷர்களைப் போல பேசி, மனுஷர்களை நடத்தி, துஷ்டர்களைத் தண்டித்து, நோயாளிகளுக்குச் சுகங் கொடுத்து, பக்தர்களைச் சொப்பனங் காணும்படி செய்து, அந்தச் சொப்பனங்களின்மூலமாய் அவர்களுக்குப் புத்தி போதனைகளை அறிவித்து பக்தர்களுடைய விண்ணப்பங்களைக் கடவுளுக்கு ஞாபகப்படுத்தி, அந்நிய மார்க்கத்தில் விழாதபடி அவர்களைக் காப்பாற்றி, பேய் பிசாசுகளைத் துரத்தி, பல அதிசயங்களைச் செய்து கடவுளைத் துதித்துவருவார்கள் என்று அப்போகிரிப்பாவில் வாசிக்கிறோம். இயேசுகிறிஸ்து பிறந்த காலத்திலும் அதற்குப் பிந்தின காலங்களிலும் யூத சாஸ்திரிகள் இவ்வண்ணமாகவே தேவதூதர்களைப்பற்றி விபரமாய்ச் சொல்லிவந்த கணக்கில்லாத விஷயங்களை இங்கே எடுத்துக்கூற இடம் இல்லை.

**III. புதிய ஏற்பாடு.**

**1. இயேசுகிறிஸ்துவின் போதனை.** தூதர்கள் வானலோகத்தில் இருக்கிறார்கள். மத் $18^{10}$ யோவா $1^{59}$.

தூதர்கள் மனுஷரைப்பார்க்கிலும் பெரியவர்கள், ஆனால் பரலோகத்தில் நீதிமான்களிலும் அவர்கள் பெரியவர்கள் அல்ல. லூக் $20^{36}$.

மரித்தவர்களின் ஆத்துமாக்களை இளைப்பாறுதலுக்குக் கொண்டுபோவார்கள். லூக் $16^{22}$.

தூதர்களுக்கு ஆண்மை பெண்மை இல்லை. மத் $22^{30}$.

அவர்கள் அநேகர். மத் $26^{53}$.

இரண்டாம் வருகையில் கிறிஸ்துவுடனே வருவார்கள். மத் $13^{39}$ $16^{27}$ $24^{31}$ $25^{31}$ மாற் $8^{38}$ லூக் $9^{26}$.

பொல்லாத தூதர்களும் உண்டு. மத் $25^{41}$.

தூதர்களுக்குச் சர்வ ஞானம் இல்லை. மத் $24^{36}$.

அவர்கள் சிறு பிள்ளைகளைக் காக்கிறார்கள். மத் $18^{10}$.

மனிதர் நன்மை செய்கிறதில் அவர்கள் மகிழுகிறார்கள். லூக் $15^{10}$.

இயேசுகிறிஸ்து அருளின போதகத்துக்கும், அவருக்கு முன் இருந்தவர்களின் போதகத்துக்குமுள்ள வித்தியாசத்தைச் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால், அவை மூன்று:—

i. பரலோகத்தில் தூதர்கள் விசேஷமாய் ஊழியஞ் செய்கிறார்கள்.

ii. இயேசுகிறிஸ்துவும் பரிசுத்த ஆவியும் மனுஷர்களிடத்தில் நேராய்ப் பேசுகிறதினாலே, இந்த தேவதூதர்கள் கடவுளுக்கும் மனுஷர்களுக்கும் இடையிலுள்ள மத்தியஸ்தர் அல்லது பிரதிநிதிகள் அல்ல.

iii. இயேசுவின் இரண்டாம் வருகையில் தேவதூதர் விசேஷித்த உத்தியோகம் வகிப்பார்கள்.

**2. சுவிசேஷகருடைய போதனை.** தூதர்கள் மனுஷர்களுக்குக் கடவுள் அனுப்பின கட்டளைகளைத் தெரிவிக்கிறார்கள் என்றும், இந்தத் தூதர்கள் கிறிஸ்துவுக்குப் பணி

விடை செய்கிறார்கள் என்றும் சுவிசேஷகர் சொல்லுகிறார்கள். மத் $1^{20}$ $2^{13}$ $4^{11}$ $28^{5}$ மாற் $1^{13}$ லூக் $1^{28}$ $(22^{43})$ $24^{23}$.

3. **அப்போஸ்தலர் நடபடி ஆகம போதனை.** தேவதூதர்கள் மனுஷர்களுக்குப் பிரத்தியக்ஷமாகத் தரிசனமாகி அல்லது சொப்பனங்களின் மூலமாய்த் தோன்றி அவர்களுக்கு வேண்டிய புத்தி போதனைகளையும் ஆறுதலையும், வருங்காரியங்களைப்பற்றிய எச்சரிப்புக்களையும் கொடுப்பார்கள். அப் $5^{19}$ $7^{30}$ $8^{26}$ $10^{3}$ $14^{13}$ $12^{8}$ $27^{23}$. 'ஆவிகளுக்கும்' 'தேவதூதர்களுக்கும்' வித்தியாசம் உண்டு என்று இந்த ஆகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப் $12^{15}$ $23^{8}$.

4. **பவுல் எழுதின நிருபங்களின் போதனை.**

கிறிஸ்து தூதர்களை உண்டாக்கினார். கொலோ $1^{16}$.

அவர்களில் பல வகுப்புகள் உண்டு. 1 தெச $4^{16}$.

மனுஷர்களுடைய விஷயங்களில் அவர்கள் பிரவேசிப்பார்கள். 1 கொரி $4^{9}$ $11^{10}$ ரோ $8^{38}$ 1 தீமோ $5^{21}$.

தூதர்களின் மூலமாய்க் கடவுள் மனுஷர்களோடு பேசுகிறதில்லை. கலா $1^{8}$.

தூதர்களை வணங்கக்கூடாது. கொலோ $2^{18}$.

கிறிஸ்துவின் இரண்டாம் வருகையில் தூதர்களும் வருவார்கள். 2 தெச $1^{7}$.

5. **எபிரெயருக்கு எழுதின நிருபப்போதனை.** எசேக்கியேல் ஆகமத்தில் தூதர்களைப் பற்றிச் சொன்ன விஷயங்கள் இந்த நிருபத்தில் காணப்படுகிறது. எபி $1^{4}$ $2^{7}$ $12^{22}$ $13^{2}$.

6. **பேதுருவும் யூதாவும் எழுதின நிருபங்களின் போதனை.** இவர்கள் தேவதூதரைக் குறித்துத் தெளிவாய் ஒன்றும் போதியாவிட்டாலும் பாவஞ்செய்த தூதர்களுக்கு வந்த தண்டனையைப்பற்றி இவர்கள் பேசுகிறார்கள். 2 பேது $2^{4}$ யூதா $1^{6}$.

7. **வெளிப்படுத்தின விசேஷ ஆகமத்தின் போதனை.** தூதர்களைப்பற்றி ஏராளமான விஷயம் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. 'தூதன்' என்னும் பதம் சபையைக் குறிக்கும். தூதர்கள் துஷ்டர்களின் மேல் வாதைகளை வரச்செய்கிறார்கள். மனிதர்களுக்குப் புத்தி போதனை கொடுக்கிறார்கள். கடவுளைத் துதிக்கிறார்கள். இயேசு கிறிஸ்துவைக் குறித்துச் சாட்சி கொடுக்கிறார்கள். வெளி $1^{20}$ $5^{11}$ $12^{7}$ $14^{15}$ $21^{9}$ $22^{6}$ $22^{16}$.

IV. **ஏழு சபைகளின் தூதர்கள். The angels of the Seven Churches.** வெளி $1^{20}$ 2 அதி. 3 அதி. இந்த ஏழு சபைகளின் தூதர்களைக்குறித்து வேதசாஸ்திரிகள் மூன்று அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள்.

i. இவர்கள் இந்தச் சபைகளில் பிரதானமான மூப்பர்களாய் அல்லது கண்காணிகளாய் இருந்தார்கள் என்று அநேகர் நினைக்கிறார்கள். ஆனால் வெளி $1^{20}$-ல் இவர்களுக்குச் சொல்லியிருக்கிற மேன்மை மனுஷர்களுடைய அறிவுக்கு எட்டாதது என்று சொல்லலாம்.

ii. வெளிப்படுத்தின விசேஷத்தின் மற்றப் பாகத்தில் தூதன் என்பது தேவதூதர்களைக் குறிக்கிறதினாலும், சிறு பிள்ளைகளைக் காப்பாற்றும்படி தேவதூதர்கள் இருக்கிறார்கள் என்று இயேசுகிறிஸ்து சொல்லியிருக்கிறதினாலும், சிலர் ஒவ்வொரு சபையையும் காக்கும்படி ஒரு தேவதூதன் இருக்கிறான் என்று அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள். இதற்கும் சத்தியவேதத்தில் போதிய அத்தாட்சி இல்லை.

iii. இந்த ஏழு தூதர்கள் ஏழு சபைகளை உவமையாய்க் குறிக்கிறதேயன்றி இவர்கள் தேவதூதர்கள் அல்ல என்று நினைப்பது நியாயமே. இவ்வண்ணமாகவே இச்சபைகள் தூண்டுவிளக்குகளாகவும் நக்ஷத்திரங்களாகவும் உவமிக்கப்பட்டிருந்தன.

இந்த ஆகமத்தில் கணக்கில்லாத விஷயங்கள் உவமையாய்ச் சொல்லியிருப்பதினாலே, இந்த வசனங்களிலும் பரி. யோவான் இந்தத் தூதர்களை உவமையாகச் சொல்லுகிறான் என்று நினைக்கவேண்டும். ஆனால் தீர்மானமாய் ஒன்றும் சொல்வது அரிது.

V. **கர்த்தருடைய தூதனானவன். The angel of the Lord.** பழைய ஏற்பாட்டில் சொன்ன தூதர்களில் 'கர்த்தருடைய தூதனானவன்' அல்லது 'யேகோவாவினுடைய தூதனானவன்' மகா பிரதானமானவன். இவன் மற்றத் தூதர்களில் ஒருவன் அல்ல. மனுஷர்களுக்குள் யேகோவாவின் பிரதிநிதியாகிய இவன் இஸ்ரவேலைக் காக்கும்படி பலதரம் வருவான். ஆதி $22^{11.15}$ யாத் $3^{2}$ $14^{19}$ $23^{23}$ எண் $22^{22}$ நியா $6^{11}$ 2 இரா $1^{3}$ சக $1^{9}$. சாதாரணமாய் இவன் மனுஷரூபமடைந்து வருவான். சில வசனங்களில் இவனுக்கும் யேகோவாவுக்கும் வித்தியாசம் இல்லை. ஆதி $48^{15}$ நியா $6^{12}$.

சில வசனங்களில் யேகோவாவே இவனை அனுப்பியிருக்கிறபடியால், இவனுக்கும் யே

கோவாவுக்கும் வித்தியாசம் உண்டு. ஆதி $16^{11}$ $21^{17}$ $24^{7}$ சக $1^{13}$.

மோசேயின் போதகத்தினால் எபிரெயர்கள் யேகோவாவினுடைய முக்கிய தன்மையையும் அவருடைய பரிசுத்தத்தையும் படிப்படியாய் அறிந்து, யேகோவா தாமே மனுஷர்களுக்குள்ளே வரமாட்டார் என்றும் தமது சித்தத்தை மனுஷர்களுக்குத் தெரிவிக்கும் படி ஒரு ஸ்தானாபதியை அனுப்புவார் என்றும் நம்பி, யேகோவா விசேஷித்த காலங்களில் அனுப்பின தூதனுக்கு 'கர்த்தருடைய தூதனானவர்' என்று பெயர் வழங்கிவந்தார்கள்.

'கர்த்தருடைய தூதனானவர்' என்பது இயேசுகிறிஸ்துவைக் குறிக்கிறது என்று சிலர் நினைக்கிறார்கள்.

புதிய ஏற்பாட்டில் நாம் வாசிக்கிற 'கர்த்தருடைய தூதன்' இவன் அல்ல, அவன் சாதாரண தேவதூதன்தான் என்று நினைக்க வேண்டும். மத் $1^{20}$ லூக் $2^{9}$.

**தூதாயீம்.** Mandrake.

எபிரெய பதமாகிய இது ஒருவகைச் செடியைக் குறிக்கிறது. ஆனால் இந்தச் செடி இன்னதென்று திட்டமாய்த் தெரியாததினாலே வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் அந்த எபிரெய பதத்தையே தமிழில் எழுதியிருக்கிறார்கள். பலெஸ்தீனா தேசத்தில் வெகு ஏராளமாய்க் காணப்படும் ஒரு



தூதாயீம்.

விதக் கிழங்குதான் இந்தத் தூதாயீம் என்று வேத சாஸ்திரிகளில் அநேகர் நினைக்கிறார்கள். இதன் பழம் சீமைத் தக்காளிப்பழம் போல் சிவப்பாய் இருக்கும். நித்திரை கொடுக்கும் வாசனை இதற்கு உண்டு. இதன் விதை நஞ்சு. வைத்தியப் பிரயோகத்துக்கும், விசேஷமாய்க் காமஇச்சை உண்டாக்கவும் பூர்வீகத்தார் இதைச் சாப்பிட்டார்கள். ஆதி $30^{14}$ உன். பா $7^{13}$.

**தூபகலசம்.** Censer. லேவி $10^{1}$ எண் $16^{6.39}$ 1 இரா $7^{50}$ 2 நாளா $26^{19}$ எசே $8^{11}$ எபி $9^{4}$ வெளி $8^{3}$. **கூடாரம், தேவாலயம், நெருப்புச்சட்டி** காண்க.

**தூபபீடம்.** Altar of Incense. யாத் $30^{27}$ $37^{25}$ 1 நாளா $6^{49}$ 2 நாளா $30^{14}$ லூக் $1^{11}$. **கூடாரம், தேவாலயம்** காண்க.

**தூபம்.** Incense.

வெள்ளைப்போளம் சாம்பிராணி முதலிய கந்தவர்க்கங்களால் பலிபீடத்தில் கடவுளுக்கு முன்பாக ஆசாரியர் தூபங்காட்டுவார்கள். யாத் $30^{34-38}$. ஒவ்வொருநாள் காலையிலும் மாலையிலும் ஆசாரியர்கள் பலிபீடத்திலிருந்து அக்கினி எடுத்து இந்தக் கந்தவர்க்கப் பொடிகளை அதில் போட்டு, தூபங்காட்டுவார்கள். யாத் $30^{7}$ லூக் $1^{9}$. பாவநிவாரண நாளிலே பிரதான ஆசாரியன் மகா பரிசுத்த ஸ்தலத்திலே தூபங்காட்டுவான். ஆரோன் குடும்பத்தைச்சேர்ந்த ஆசாரியர்மாத்திரம் தூபங்காட்டவேண்டும். எண் 16 அதி. 2 நாளா $26^{16}$. ஆசாரியர் தூபங்காட்டும்போது ஜனங்கள் வெளியே நின்று ஜெபம்பண்ணிக்கொண்டிருப்பார்கள். தூபங்காட்டுகையில் அதின் புகை வானத்துக்கு ஏறுகிறதுபோல தங்கள் ஜெபங்களும் ஏறும் என்று எபிரெயர்கள் நினைத்ததினாலே, தூபம் ஜெபத்துக்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. எண் $6^{22-27}$ சங் $141^{2}$ மல் $1^{11}$ லூக் $1^{10}$ வெளி $5^{8}$. விக்கிரகங்களுக்குத் தூபங்காட்டுவது பாவம். எரே $11^{12}$. அந்நியமார்க்கத்தி லிருந்துவந்த ஆதிகிறிஸ்தவர்கள் மோசேயின் நியாயப்பிரமாணத்தில் நியமிக்கப்பட்ட சடங்குகளை அனுசரிக்காததுபோல, அவர்கள் முதலில் இந்தச் சடங்கையும் அனுசரிக்கவில்லை. கிறிஸ்தவர்கள் துன்பப்படுத்தப்பட்ட பிந்தின காலங்களில் குகை முதலான மறைவான இடங்களில் அவர்கள் ஆராதனை நடத்தும்போது அங்குள்ள துர்நாற்றத்தை நீக்கும்படி சுகந்த வாசனையுள்ள தூபவர்க்கங்களை எரிக்க ஆரம்பித்தார்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள். இது எப்படியாயினும், கி—பி. 6—ம் நூற்றாண்டில் கிறிஸ்தவர்கள் மோசேயின் நியாயப்பிரமாணத்தில் ஏற்படுத்தின கட்டளையை அனுசரித்து அல்லது தங்களைச்சுற்றியிருந்த அந்நிய மார்க்கத்தாருடைய வழக்கங்களைப் பின்பற்றி, கிறிஸ்தவக் கோயில்களிலே தூபங்காட்டத் தொடங்கினார்கள்.

'தூபஸ்தம்பம்' '*Pillars of smoke*'. உன். பா $3^{6}$.

**தூபவர்க்கம்.** Frankincense. தூபவர்க்கமானது சில மரங்களின் பட்டையி

விருக்கும் ஒருவகைப் பிசின். சுகந்த வாசனையுள்ள இந்தத் தூபவர்க்கத்தை வியாபாரிகள் அரபிதேசத்திலிருந்து பலெஸ்தீனா தேசத்துக்குக் கொண்டுவருவார்கள். தேவாலயத்துத் தூபபீடத்தின்மேல் காட்டப்பட்ட தூபத்தில் இது ஒரு பாகம். தேவசமுகத்து அப்பம் செலுத்தும்போது ஆசாரியர் இதையும் செலுத்தினார்கள். யாத் $30^{34}$ லேவி $2^{1}$ $10^{1}$ $24^{7}$ உன். பா $4^{6}$ ஏசா $43^{23}$ $60^{6}$ எரே $6^{20}$ $17^{26}$ $41^{5}$ எசே $8^{11}$ மத் $2^{11}$ வெளி $5^{8}$ $8^{3}$ $18^{13}$. **சாம்பிராணி** காண்க.

**தூபால்**. Tubal. யாப்பேத்தின் மகனாகிய இவன் பெயர் சின்ன ஆசியாவின் தென்கிழக்குப் பாகத்தில் அசீரியா ராஜ்யத்துக்கு ஒருகாலத்தில் விரோதமாயிருந்த ஒரு ஜனத்தைக் குறிக்கிறது. இவர்கள் அடிமை வியாபாரமும் வெண்கலபாத்திர வியாபாரமும் செய்தார்கள். ஆதி $10^{2}$ ஏசா $66^{19}$ எசே $27^{23}$.

**தூபால்-காயீன்**. Tubal-Cain. 'கன்னருக்கும் கொல்லருக்கும் தகப்பனாகிய இவன்' விசேஷமாய் இந்த வேலைசெய்கிற தூபால் என்னும் கோத்திரத்தின் ஆதிப்பிதா. இவன் லாமேக்குவின் மகனும் காயீன் வம்சத்தைச் சேர்ந்தவனுமாய் இருக்கிறான் என்று ஆதியாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $4^{22}$.

**தூமா**. Dumah. [மௌனம்].

1. இஸ்மவேலின் பன்னிரண்டு மக்களில் ஒருவனாகிய இவனுடைய பெயர் பலெஸ்தீனா தேசத்துக்கு ஏறக்குறைய 200 மைல் தூரத்துக்கு கிழக்கே அரபிதேசத்தில் வசித்த ஒரு கோத்திரத்தைக் குறிக்கிறது. ஆதி $25^{14}$ ஏசா $21^{11}$.

2. யூதா மலைநாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு $15^{52}$.

**தூரா**. Dura. தூரா சமபூமி பாபிலோன் நகரத்துக்குச் சமீபத்தில் இருந்தது. உலர்ந்த எலும்புகளின் தரிசனத்தை எசேக்கியேல் இந்தச் சமபூமியில் கண்டான் என்று யூதவேதசாஸ்திரிகள் சொன்னார்கள். தானி $3^{1}$ எசே $37^{1}$.

**தூலம்**. Threshing Instrument. ஏசா $28^{27}$. **களம்** காண்க.

**தூள்**. Dust. ஆதி $13^{16}$ $18^{27}$ எண் $23^{10}$ 1 இரா $20^{10}$ 2 இரா $23^{6}$ யோபு $22^{24}$ ஏசா $29^{5}$ புல $3^{29}$. **தூசி** காண்க.

**தூற்றுக்கூடை**. 'Fan'. தூற்றுக்கூடையைக் குறிக்கும் எபிரெய பதம் இந்தத் தேசத்தில் வழங்கும் முறங்களை அல்ல, நாலடி நீளமுள்ளதும் நுனியில் நாலு ஐந்து கவர்களையுடையதுமான மரக்கோல்களைக் குறிக்கும். போரடிக்கப்பட்ட தானியத்தை இதனால் தூற்றி, மணியையும் பதரையும் பிரித்ததினாலே, தூற்றுக்கூடை கடவுள் மனிதர்களுக்குச் செய்கிற விசாரணைகளுக்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ரூத் $3^{2}$ ஏசா $30^{24}$ எரே $4^{11}$ $15^{7}$ $51^{2}$ மத் $3^{12}$ லூக் $3^{17}$.

## தெ.

**தெகாவியர்**. R. V. Dehaites. A. V. Dehavites. அசீரியா ராஜாவாகிய அஸ்னாப்பார் சமாரியாவில் குடியேற்றின கோத்திரங்களில் ஒன்று. எஸ்றா $4^{9}$.

**தெகினா**. Tehinnah. 1 நாளா $4^{12}$.

**தெக்கப்போலி**. Decapolis. தெக்கப்போலி என்னும் கிரேக்க பதத்துக்குப் 'பத்துப்பட்டணங்கள்' என்று அர்த்தம். இயேசுவின்காலத்தில் தமஸ்கு என்னும் ஒரு பட்டணத்தைத்தவிர மற்ற ஒன்பது பட்டணங்களும் கலிலேயாக் கடலுக்குத் தென்கிழக்கில் உள்ள நாட்டில் இருந்தது. அப்பட்டணங்களுக்குச் சுற்றியிருந்த நாட்டில் கொள்ளைக்காரக் கோத்திரத்தார்களால் தங்களுக்கு இடையூறு வாராதபடிக்கு, இப்பட்டணங்களில் உள்ள ஜனங்கள் தங்களுக்குள் மனசார்தான ஏற்பாடுகளைச் செய்துகொண்டு அந்தக் கொள்ளைக்காரர்களை பயமுறுத்தித் துரத்துவார்கள். இயேசுகிறிஸ்து இப்பட்டணங்களில் சிலவற்றைச் சந்தித்தார். மத் $4^{25}$ மாற் $5^{20}$ $7^{31}$.

**தெக்கேல்**. Tekel. தானி $5^{5}$. மெனே காண்க.

**தெக்கோவா**. Tekoah. இது பெத்லெகேம் ஊருக்குத் தெற்கே 5 மைல் தூரத்திலுள்ள ஒரு மலைக்கோட்டை. அப்சலோமுக்காகப் பரிந்துபேசின 'புத்திசாலியான ஸ்திரி' இந்த ஊரிலிருந்துவந்தவள். 2 சாமு $14^{2}$. வனாந்தரம் இதற்குச் சமீபமாய் இருந்தது. 2 நாளா $20^{20}$. ரெகொபெயாம் இதில் ஒரு கோட்டை கட்டினான். 2 நாளா $11^{6}$ எரே $6^{1}$. தீர்க்கதரிசியாகிய ஆமோஸ் இதில் மேய்ப்பனாய் இருந்தான். ஆமோ $1^{1}$.

**தெசலோனிக்கே**. Thessalonica. இது கிரேக்கு தேசத்திலே மக்கெதோனியா நாட்டிலே உள்ள ஒரு சிறப்பான ஊர். ரோமர் கிரேக்கு தேசத்தை ஜெயித்தபிறகு, மக்கெதோனியா நாட்டிற்குத் தெசலோனிக்கேப் பட்டணத்தைத் தலைநகரி ஆக்கி, அந்நகர விஷயங்கள் அனைத்தையும் தாங்களே நடத்தும்படிக்கு அப்பட்டணத்தாருக்குச் சிலாக்கியம் கொடுத்தார்கள். இதில் யூதர்கள் அநே

கரா யிருந்ததினாலே, அவர்கள் தங்களுக்காக ஜெப ஆலயங்களைக் கட்டியிருந்தார்கள். பரி. பவுல் இந்தப் பட்டணத்துக்கு வந்தபோது யூதர்கள் அவனிமித்தம் பெரிய கலகம் பண்ணினார்கள். இப்பட்டணத்துக் கிறிஸ்தவ சபையார் பரி. பவுலுக்கு உதவிசெய்தார்கள். இவர்களுக்குப் பரி. பவுல் இரண்டு நிருபங்களை அனுப்பினான். தேமா ரோமாபுரியை விட்டு வெளியேறினபிறகு தெசலோனிக்கேப் பட்டணத்துக்குப் போனான். அப் $17^{11}$ பிலி $4^{16}$ 2 தீமோ $4^{10}$.

**தெசலோனிக்கேயருக்கு எழுதின முதலாம் நிருபம். The First Epistle to the Thessalonians.**

1. **காலம்.** பரி. பவுல் தனது இரண்டாம் பிரயாணத்திலே பிலிப்பி பட்டணத்திலிருந்து தெசலோனிக்கேயுக்கு வந்து அங்கே பிரசங்கம் பண்ணினபோது சிலர் அவன் சொன்னதை நம்பினார்கள். இதினிமித்தம் யூதர்கள் கலகம் பண்ணினபோது, பரி. பவுல் பெரோவாவின் மூலமாய் அத்தேனே பட்டணத்துக்குப் போய்விட்டான். அவன் இங்கேயிருந்து கொரிந்து பட்டணத்துக்குப் போனபோது தீமோத்தேயு தெசலோனிக்கேயிலிருந்து அவனிடத்துக்கு வந்து சேர்ந்தான். அப் $17^{15}$ $18^{5}$ 1 தெச $3^{6}$. தீமோத்தேயு அந்தச் சபையைப் பற்றிச் சொன்ன சமாசாரத்தைப் பவுல் கேட்டபின்பு, கொரிந்துவிலிருந்து தெசலோனிக்கேயருக்கு இந்த முதலாம் நிருபத்தை எழுதினான். பரி. பவுல் கொரிந்து பட்டணத்தில் ஒன்றரை வருஷம் இருந்ததினாலும், தெசலோனிக்கே சபை அடைந்த விருத்தி அதிகம் என்று அவன் இந்நிருபத்தில் சொன்னதினாலும், இந்த நிருபம் அந்த ஒன்றரை வருஷத்தின் கடைசிப்பாகத்தில், அதாவது, ஏறக்குறைய கி—பி. 52-ல் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது. பரி. பவுல் சபைகளுக்கு எழுதின நிருபங்கள் எல்லாவற்றிலும் இதுதான் முதல் நிருபம்.

2. **பொருள்.** ரோமருக்கும் வேறு சில சபைகளுக்கும் எழுதப்பட்ட பெரிய நிருபங்களைப்போல, இதிலே சன்மார்க்கத்தைக் குறித்து நியாயதோரணையான போதனையை எழுதாமல், சபைக்கடுத்த விஷயங்களைப்பற்றிய சில புத்திமதிகளைப் பரி. பவுல் அதிக நேசத்துடனே எழுதுகிறான். ஆகையால் இதில் அடங்கிய பொருளை ஒரு அட்டவணையிலே எழுதுவது அரிது. ஆயினும் பின்வருமாறு இதிலடங்கியவற்றைச் சுருக்கமாய்ச் சொல்லக்கூடும்.

**A. $1^{1}$—$3^{13}$. தன்னையும் சபையாரையும் குறித்துச் சொன்ன விசேஷங்கள்.**

$1^{1-10}$. தெசலோனிக்கேயர் அடைந்த மனமாறுதலைக்குறித்து பரி. பவுலுக்குண்டான திருப்தி.

$2^{1-12}$. தெசலோனிக்கேயர் சுவிசேஷப் பிரசங்கத்தை அடைந்ததையும் அவர்கள் அதினாலே காட்டின நற்குணத்தையும் பற்றினது.

$2^{13-16}$. அவர்கள் இயேசுவின் நிமித்தம் சகித்த துன்பங்கள்.

$2^{17-20}$. அவர்களை மறுபடியும் பார்க்கும்படி பரி. பவுல் விரும்புதல்.

$3^{1-13}$. தீமோத்தேயு அந்தச் சபையைப் போய்ப் பார்த்து அதைக்குறித்துக் கொடுத்த நற்சாட்சியினால் பரி. பவுல் அடைந்த மகிழ்ச்சி.

**B. $4^{1}$—$5^{28}$. சன்மார்க்கத்துக்குரிய புத்தி போதனைகள்.**

$4^{1-8}$. சுத்தத்தையும் பரிசுத்தத்தையும் பற்றியது.

$4^{9-12}$. சகோதர சிநேகம் சுறுசுறுப்பு முதலியவை.

$4^{13-18}$. மரித்தவர்களைப்பற்றிய நம்பிக்கை. கர்த்தர் வரும்பொழுது அவர்கள் உயிர்த்தெழுந்திருப்பார்கள்.

$5^{1-11}$. இதினிமித்தம் அவர்கள் தங்களை ஆயத்தப்படுத்தி உற்சாகத்துடனே காத்திருக்கவேண்டும்.

$5^{12-22}$. சபை ஒழுங்கைப்பற்றிய சில புத்திமதிகள்.

$5^{23-28}$. விண்ணப்பமும் எச்சரிப்பும், வாழ்த்துதலும்.

3. **இதற்கு அந்தாட்சி.** இந்நிருபத்திலுள்ள விஷயங்களெல்லாம் பரி. பவுலின் விஷயத்துக்கும் நிலைமைக்கும் அக்காலத்திலுள்ள அந்தச் சபையின் நிலைமைக்கும் ஒத்திருக்கிறதினாலும், புதிய ஏற்பாட்டின் மொழிபெயர்ப்புக்களாகிய அரமேய லத்தீன் பாஷைகளில் செய்த பூர்வீக காலத்து மொழிபெயர்ப்புக்களில் இந்த நிருபம் இருக்கிறதினாலும், திருச்சபையின் பாரம்பரியமும் இதை அனுசரிக்கிறதினாலும், பரி. பவுலே இதற்கு ஆக்கியோன் என்பது நிச்சயம். இதைக்குறித்து விசேஷ ஆராய்ச்சிசெய்த வேத சாஸ்திரிகள் எல்லாரும் இது பரி. பவுல் எழுதின நிருபந்தான் என்று அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள்.

4. **நோக்கம்.** இதில் பரி. பவுல் இயேசுவின் தெய்வீகத்தன்மை, அவர் மனுஷர்க

ளுக்காகப் பட்ட பாடு, அவருடைய உயிர்த்தெழுதல், அவருக்கும் கிறிஸ்தவர்களுக்கும் உள்ள ஐக்கியம், பரிசுத்த ஆவியாகிய ஈவு, இவைகளைப்பற்றிச் சொல்லி, இவைகள் மனசிலே ஏற்றுக்கொள்ளக் கூடியவைகளாய் இருப்பதோடு, இவைகளே கிறிஸ்தவனுக்கு ஜீவனைக்கொடுக்கும் சத்திய வசனம் என்றும் சொல்லிக் காட்டுகிறான். இந்த நிருபத்தின் நோக்கத்தைச் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால், கிறிஸ்தவ ஜீவியத்தை விருத்தி செய்வதுதான்.

இதெல்லாம் பார்க்கும்போது இந்நிருபம் அந்நிய மார்க்கத்திலிருந்து கிறிஸ்து மார்க்கத்துக்கு வந்தவர்களுக்கு விசேஷமாய் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது.

**தெசலோனிக்கேயருக்கு எழுதின இரண்டாம் நிருபம். The Second Epistle to the Thessalonians.**

1. **காலம்.** தான் இயேசுவின் இரண்டாம் வருகையைப்பற்றிக் கொடுத்த போதனையைக் குறித்துச் சிலர் தப்பபிப்பிராயங் கொண்டதினாலும், சபையிலே உபத்திரவம் இருந்ததினாலும், சிலர் ஒழுங்கீனமாய் நடந்ததினாலும், சிலர் அப்போஸ்தலர்களுடைய பெயரைவைத்துக் கள்ள நிருபங்களை எழுதினதினாலும், பரி. பவுல் தெசலோனிக்கேயருக்கு முதலாம் நிருபத்தை எழுதிக் கொஞ்சக்காலத்துக்குள்ளே இந்த இரண்டாம் நிருபத்தை எழுதுவது அவசியமாயிற்று. கி—பி. 52—ம் வருஷக் கடைசியில், கொரிந்து பட்டணத்திலிருந்து இந்நிருபம் அனுப்பப்பட்டதாகத் தோன்றுகிறது.

2. **பொருள்.** $1^{1-2}$. வாழ்த்துதல்.

$1^{3-12}$. சபையார்நிமித்தம் ஸ்தோத்திரம் செலுத்தி, அவர்களைத் துன்பப்படுத்தினவர்களுக்கு தண்டனைவரும் என்று கூறியது.

$2^{2-12}$. இரண்டாம் வருகையைப்பற்றிய போதனை.

$2^{13.17}$. ஸ்தோத்திரமும் எச்சரிப்பும்.

$3^{1-2}$. சபையார் தனக்காக ஜெபம் பண்ணும்படி கேட்கிறான்.

$3^{3-5}$. அவன் அவர்கள்மேல் வைத்த நம்பிக்கை.

$3^{6-15}$. ஒழுங்கீனமாய் நடக்கிறவர்களைப் பற்றிய எச்சரிப்புக்கள்.

$3^{16-18}$. முடிவுரை.

3. **இதற்கு அத்தாட்சி.** முதல் நிருபத்துக்குக் கூறிய அத்தாட்சியே இதற்கும் உண்டு. மேலும் போலிக்கார்ப் என்பவன் இதிலிருந்து சில வாக்கியங்களை எடுத்துக் கூறுகிறான். இதற்கும் முதல் நிருபத்துக்கும் நடையில் ஒற்றுமையும் பொருளில் நெருங்கிய சம்பந்தமும் உண்டு. கிறிஸ்துவின் இரண்டாம் வருகையைக்குறித்து இந்த நிருபத்தில் கற்பித்த போதனையைப்பற்றிச் சிலர் ஆக்ஷேபனை செய்திருக்கிறார்கள். ஆனால் இந்தப் போதனையைக் குறித்துத் திட்பநுட்பமாய் விசாரிக்கும்போது இதற்கும் முதல் நிருபத்தில் கண்ட போதனைக்கும் விரோதம் இல்லையென்றே காணலாம். இதில் கண்ட போதனைகளுக்கும் மற்ற நிருபங்களில் பரி. பவுல் கொடுத்த போதனைகளுக்கும் ஒற்றுமை இருக்கிறதினாலே, பரி. பவுல்தான் இந்த நிருபத்தை எழுதினான் என்று நாம் தீர்மானமாய்ச் சொல்வது நியாயமே.

4. **நோக்கம்.** நாம் முன் சொன்னபடி, முதல் நிருபம் அந்நியமார்க்கத்திலிருந்து கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவர்களுக்கும், இந்த இரண்டாம் நிருபம் யூதமார்க்கத்திலிருந்து கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவர்களுக்கும்எழுதப்பட்டதென்று சில வேத சாஸ்திரிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். இது எப்படியாயினும், இதை வாசிப்பவர்களின் மனசிலே இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகையைப்பற்றியும் கிறிஸ்துமார்க்க சபை ஒழுங்கைப்பற்றியும் தெளிவான அறிவை உண்டாக்கும்படி, இந்த இரண்டாம் நிருபத்தை அப்போஸ்தலன் எழுதி அனுப்பினான் என்பதற்குச் சந்தேகம் இல்லை.

**தெபீர். Debir.**

1. யோசுவா எக்லோன் ராஜாவாகிய தெபீரையும் மற்ற நாலு ராஜாக்களையும் மக்கெதாவிலே ஜெயித்தான். யோசு $10^{3}$.

2. எப்ரோன் ஊருக்குச் சமீபமாய் இருந்த ஓர் ஊர். யோசு $10^{38}$ $15^{15}$. இதற்கு முதல்பெயர் கீரியாத் செப்பேர் அல்லது கீரியாத் சன்னா. யோசு $15^{15.49}$.

3. யூதாநாட்டின் வடஎல்லையிலுள்ள ஓர் ஊர். யோசு $15^{7}$.

4. யோர்தான் நதிக்குக் கிழக்கே காத் நாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு $13^{26}$.

**தெபோராள். Deborah.** [தேனீ]

1. ரெபேக்காளின் தாதி. ஆதி $24^{59}$ $35^{8}$.

2. இஸ்ரவேலின் நியாயாதிபதிகளில் நாலாம் நியாயாதிபதி. இசக்கார் கோத்திரத்தைச் சேர்ந்தவளும் லபிதோத்தின் மனைவியுமாகிய இவள் (நியா $4^{4}$ $5^{15}$) பெத்தேலுக்

கும் ராமாவுக்கும் மத்தியிலுள்ள மலைநாட்டில் வசித்தாள். இவள் மகா புத்திசாலியாகையினாலே, யாபீன் ராஜாவின் கொடூர ஆளுகையினின்று நீங்கும்படி இஸ்ரவேலருக்கு வேண்டிய உதவிசெய்தாள். எபிரெயர்களுக்குள்ளே ஜனசங்கை விஷயமாய் ஸ்திரீகள் தாழ்ந்த ஸ்திதியில் இருந்ததினால், இந்தத் தீர்க்கதரிசியானவளுக்கு ஜனங்கள் செய்த மேன்மையைப்பற்றி ஆச்சரியப்படுகிறோம். தான் ஜெயம் அடைந்தபிறகு இவள் பாடினபாட்டு, எபிரெய கவிகளில் பிரதானமானதாகத் தோன்றுகிறது.

**தெப்பம்.** R. V. Raft. A. V. Float. 1 இரா $5^{9}$.

**தெமேனி.** Temeni. [செல்வமுடையவன்] 1 நாளா $4^{6}$.

**தெமேத்திரியு, தேமேத்திரியு.** Demetrius.

1. எபேசு பட்டணத்தில் பரி. பவுலுக்கு விரோதமாய்க் கலகம்பண்ணின ஒரு கன்னான். அப் $19^{24}$.

2. பரி. யோவானால் மெச்சிக்கொள்ளப்பட்ட ஒரு கிறிஸ்தவன். 3 யோவா $1^{12}$.

**தெயுதாஸ்.** Theudas.

தெயுதாஸ் என்பவன் நானூறுபேரைச் சேர்த்துக்கொண்டு ரோமருக்கு விரோதமாய்ப் பலெஸ்தீனாவில் கலகம் பண்ணினானென்று கமாலியேல் சொன்னான். அந்தக் காலத்தில் பலெஸ்தீனா தேசத்தில் இவ்விதமாய்ப் பலபெயர் கலகம்பண்ணினாலும், இவனைப்பற்றி நமக்கு விசேஷம் ஒன்றுந் தெரியாது. ஆனால் கமாலியேல் பேசின காலத்துக்குப் பத்துவருஷத்துக்குப் பிறகு இன்னொரு தெயுதாஸ் ரோமருக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினானென்று யோசேப்பு (*Josephus*) என்னும் சரித்திரக்காரன் எழுதிய நூலிலே வாசிக்கிறோம். அப் $5^{33}$.

**தெய்வம்.** Godhead. அப் $17^{29}$. கடவுள், திரியேகத்துவம் காண்க.

**தெரபிந்து.** Terebinth.

ஆதி $43^{11}$–ல் சொன்ன இந்த தெரபிந்தும் கருவாலியும் ஒன்றுதான் என்று வேதசாஸ்திரிகளில் அநேகர் நினைத்ததினாலே தமிழ் வேதாகமத்தில் பல வசனங்களில் இதைக் கருவாலியென்று சொல்லியிருக்கிறது. கருவாலி காண்க.

ஆனால் நாம் இதைப்பற்றித் திட்டமாய் விசாரிக்கும்போது இது கருவாலிமரம் அல்லவென்றும், நல்ல வாசனையுடையதும் நல்ல நிழல் கொடுத்ததும் சாதாரணமாய்க் கல்லறைகளின் பக்கத்தில் நடப்பட்டதுமான ஒருவகை மரம் என்றும் அறிகிறோம்.

**தெரிந்து கொள்ளப்பட்டவளாகிய அம்மாள்.** The Elect Lady.

(i) இந்தப் பெயர் எபேசு பட்டணத்தில் உள்ள ஒரு சிறந்த கிறிஸ்தவ சீமாட்டியைக் குறிக்கும் என்று சில வேதசாஸ்திரிகளும்,

(ii) இது அந்த சபையை உவமையாய்க் குறிக்கிறது என்று வேறு சிலரும் சொல்லுகிறார்கள்.

(iii) மூலபாஷையில் எழுதின இரண்டு கிரேக்கபதங்களாலாகிய எக்லெக்டி குரியா (*Eklekte Kuria*) என்னும் பதங்களில் ஒன்று ஒரு பெண்ணினுடைய விசேஷித்த பெயராய் இருக்கும் என்றும், அப்படியானால் அவளுடைய பெயர் 'தெரிந்துகொள்ளப்பட்ட குரியா' அல்லது 'சீமாட்டியாகிய எக்லெக்டி' என்று மொழிபெயர்க்கவேண்டும் என்றும் வேறு சிலர் சொல்லுகிறார்கள். இதைப்பற்றி ஒன்றுந் திட்டமாய்ச்சொல்ல நம்மால் முடியாது. ஆனால் அந்தக் காலத்திலே ஒரு தனவானுடைய வீட்டிலே நூற்றுக்கணக்கான வேலைக்காரரும் அடிமைகளும் சேர்ந்திருந்ததினாலே ஒரே தனவாட்டியின் வீட்டில் ஒரு சபை முழுவதும் இருப்பது அசாத்தியம் அல்ல என்பதைக்கண்டு, இந்தப் பதங்கள் தனவாட்டியான ஒரு கிறிஸ்தவப் பெண்ணையும் அவளுடைய வீட்டில் கூடின சபையையும் குறிக்கிறது என்று உத்தேசிக்கிறோம். 2 யோவா $1^{1.13}$.

**தெரிந்துகொள்ளுதல்.** Election.

தெரிந்துகொள்ளுதல் என்னும் கொள்கையைப்பற்றி வேதசாஸ்திரிகள் வெகுவாகத் தர்க்கம்பண்ணி, இதையொட்டி எண்ணிறந்த நூல்களை எழுதியிருக்கிறார்கள். இந்தக் கொள்கைகளையெல்லாம் இந்த நிபந்தத்திலே விபரமாய்ச் சொல்லாமல் வேதாகமத்தில் இதைக்குறித்துச் சொன்ன விஷயங்களை மட்டும் இதிலே சுருக்கமாய்ச் சொல்வது போதும் என்று நினைக்கிறோம்.

1. **பழைய ஏற்பாடு.** தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் யார்? தெரிந்துகொள்ளுதலாவது என்ன? கடவுள் தமது சித்தத்தை நிறைவேற்றும்படி ஒரு ஜனத்தை அல்லது ஒரு ஆளைத் தெரிந்துகொண்டு விசேஷித்த ஊழியம்செய்ய கட்டளையிடுவார் என்பது பூர்வ காலத்து எண்ணம் என்று பழைய ஏற்பாட்டில் பார்க்கிறோம். இவ்விதமாக அவர் மற்ற ஜனங்களினின்று இஸ்ரவேல் ஜனத்தையும் (உபா $4^{37}$ $7^{7}$ சங் $105^{5}$), பன்னிரண்டு கோத்திரங்களில் லேவிக்கோத்திரத்தையும், லே

விக் கோத்திரத்தில் ஆரோன் குடும்பத்தை யும், மோசே, தாவீது, கோரேஸ் முதலிய ஆட்களையும், பிரித்தெடுத்துத் தமது ஊழியத் துக்காக, நியமித்திருக்கிறார். 1 இரா 8[16] சங் 106[23] ஏசா 42[1] 44[4] 45[6].

இவ்விதமாக கடவுள் ஆபிரகாமை அழைத்து, அவன் மூலமாக உலகத்தார் யாவருக் கும் ஆசீர்வாதம் உண்டாகும் என்று வாக் களித்து, ஈசாக்கையும் யாக்கோபையும் இதன்பொருட்டே நியமித்து, இஸ்ரவே லின் மூலமாய் அந்த வாக்கை நிறைவேற் றும்படி வழியை ஏற்படுத்தினார். கானான் தேசத்தில் தங்களுக்கு லோக ஐஸ்வரிய சுகசம்பிரமங்கள் உண்டாகும்பொருட்டு கட வுள் தங்களைத் தெரிந்துகொண்டு வந்திருக் கிறார் என்று இஸ்ரவேலரில் அநேகர் பூர் வீகத்தில் நம்பினாலும், பிந்தினகாலங்களில் கர்த்தர் தம்முடைய 'ஊழியக்காரனை' நிய மித்து அவன் மூலமாய் இஸ்ரவேலருக்கு மட்டும் அல்ல, எல்லா ஜனங்களுக்கும் இந்த ஆத்மீக பாக்கியத்தை அருளுவார் என்று சிலர் நம்பினதினாலே, யேகோவா நியமித்த இந்த 'மேசியா'வின் வருகையின்மூலமாய் ஜனங்கள் அடையவேண்டிய மீட்புக்காக அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

2. புதிய ஏற்பாடு.

பழைய ஏற்பாட்டில் சொன்ன 'தெரிந்து கொள்ளுதலுக்கும்' புதிய ஏற்பாட்டில் சொ ன்ன 'தெரிந்துகொள்ளுதலுக்கும்' இரண்டு விதமான வித்தியாசம் இருக்கிறது. முதலா வது, பழைய ஏற்பாட்டில் கடவுள் எப்பொ ழுதும் ஒரு ஜனத்தைத் தெரிந்துகொண்டு அதன்மூலமாய் உலகத்துக்கு மீட்பைக்கொ டுக்க விரும்புகிறவராயிருக்க, புதிய ஏற்பாட் டிலோ, ஒவ்வொரு ஆளையுந் தனித்தனி யாய்த் தெரிந்துகொள்ளுகிறார். இரண்டா வது, பழைய ஏற்பாடு தெரிந்துகொள்ளப் பட்டவர்கள் கடவுளுக்கு விசேஷித்த ஊழி யஞ்செய்யும்படி தெரிந்துகொள்ளப்பட்டி ருக்கிறார்களென்று கூறுகிறது; ஆதி 12[2] யாத் 19[3] உபா 4[34] ஆமோ 3[2] ஏசா 41-49 அதி. புதிய ஏற்பாடோ தெரிந்துகொள்ளப் பட்டவர்கள் விசேஷமாய் நன்மையாகிய இரக்ஷணியத்தைப் பெறும்படி தெரிந்து கொள்ளப் பட்டிருக்கிறார்களென்று கூறுகி றது இவ்விதமாய்த் தெரிந்துகொள்ளப்பட் டவர்கள் மீட்பை அடைந்து உலகத்துக்கு ஒளியாயும் கடவுளுக்கு உடன் ஊழியக்கார ராயும், யாவரும் வாசிக்கக்கூடிய ஜீவனுள்ள நிருபங்களாயும் இருந்து, தங்களைத் தெரிந்து கொண்டவரின் லக்ஷணங்களை மற்றவர்களுக் குத் தெரிவிக்கும்படி பிரயாசப்படுவார்கள். மத் 5[13] 1 கொரி 3[9] 2 கொரி 3[2] 1 பேது 2[9].

இரக்ஷணியமாகிய ஈவைப் பூரணமாய்ப் பெறுகிறவர்களைக் கடவுள் தெரிந்துகொள்ளு கிறார் என்பதையும் இதைக் குறித்துக் கிறிஸ் தவர்களாகிய நமக்கு அனுபவ சாட்சியுண்டு என்பதையும் யாவரும் ஒத்துக்கொள்ளுகிறார் கள். ரோம. 8[16].

கடவுள் ஒருவனை ஒரு ஊழியத்துக்குத் தெரிந்துகொள்ளும்பொழுது, அவன் அந்த அழைப்பைத் தள்ளிவிடக்கூடுமோ கூடா தோ என்றும்; மீட்புக்குத் தெரிந்துகொண்ட வன் அந்த நிலைமையில் பிரவேசித்தபிறகு அந்த நன்மையினின்று நீங்கி மறுபடியும் பா வத்தில் விழக்கூடுமோ கூடாதோ என்றும்; கடவுள் மீட்புக்குச் சிலரையும், தண்டனைக் குச் சிலரையும் தெரிந்துகொள்ளும்போது அவர்கள் நித்தியமாய் அந்தத் தண்டனையில் இருப்பார்களோ அல்லது கடைசியில் மோ க்ஷத்தை அடைவார்களோ என்றும்; மனு ஷர்களுடைய சுயாதீனத்துக்கும் கடவுளு டைய தெரிந்துகொள்ளுதலுக்கும் எவ்வித மான சம்பந்தம் இருக்கிறது என்றும், தத் துவசாஸ்திரிகள் ஓயாத தர்க்கவாதம் செய் வார்கள். இதைக்குறித்து மூன்று விஷ யங்களை நாம் கவனிக்கவேண்டும்.

முதலாவது, கடவுள் செய்ததெல்லாவற் றையும் பூரணமாய் அறியும்படி மனுஷர் களுக்கு அவ்வளவு அறிவு இல்லை.

இரண்டாவது, கடவுள் எல்லாவற்றையும் நியாயமாய்ச் செய்வார்.

மூன்றாவது, கடவுள் அளவற்ற கிருபை உள்ளவராயிருந்து சகலத்தையும் தமது கிரு பையின்படி செய்வார்.

தெரு. Street.

பலெஸ்தீனா தேசத்து ஊர்களிலுள்ள தெ ருக்கள் எல்லாம் நெருக்கமாயும் ஒடுக்கமாயும் கோணலாயும் இருக்கும். தமஸ்குப்பட்ட ணத்திலிருந்த 'நேர்த்தெரு' என்னப்பட்ட தெரு நமது அபிப்பிராயத்தின்படி நேராய் இல்லாவிட்டாலும், அத்தேசத்திலுள்ள மற்ற தெருக்களைப்போல அவ்வளவு கோணலாய் இராததினால் இதற்கு இந்தப் பெயர் வழங்க லாயிற்று. தமிழ் வேதாகமத்தில் வீதி, தெரு, சந்து என்னும் பதங்கள் சொல்லியிருந்தா லும், இவையனைத்தையும் சந்து என்று சொல்வதே தகுதி. இச்சந்துக்கள் சந்திக்கும் முச்சந்தி நாற்சந்திகளிலும் ஊர் வாசலண் டையிலும் விசாலமான வீதி சில இருக்கும். இவைகளில் சந்தைகளும் ஊர் மூப்பர் கூட்



எருசலேம் பட்டணத்திலுள்ள 'துக்கத்தின் தெரு' என்னும் தெரு.

டங்களும் நடக்கும். எரே 5[1] லூக் 14[21] அப் 9[11]. கடை, சந்தை, வீதி காண்க.

**தேரேசு.** Teresh. அகாஸ்வேருவின் பிரதானிகளில் ஒருவன். எஸ் 2[21].

**தெர்தியு.** Tertius. [மூன்றாம் புத்திரன்.]

பரிசுத்த பவுலின்காலத்தில் லிகிதர்களில் சிலர் மகா சாமர்த்தியமான ஒருவிதக் குறிப் பெழுத்துகளினால் தாங்கள் கேட்கும் பிர சங்கங்களை எழுதுவார்கள். அவர்கள் ஒரு வன் பேசும்போது அவன் சொல்லுகிற எல் லாவற்றையும் இவ்விதக் குறிப்பெழுத்தினால் எழுதி, பிற்பாடு சாவகாசமாக அவையனைத் தையும் சாதாரண அக்ஷரங்களில் எழுதுவார் கள். பரி. பவுல் சபைகளுக்குத் தமது நிரு பங்களை எழுதினபோது, இந்த லிகிதர்களில் ஒருவனை அழைத்து தான் சொல்லப்போ கிறதையெல்லாம் அவனுக்குத் தெரிவிப்

பான். இந்த லிகிதன் அதைச் சாதாரண அக்ஷரங்களில் பெயர்த்தெழுதிக்கொண்டு வரும்போது, பரி. பவுல் தனது சொந்தக் கையெழுத்தாலே வாழ்த்துதலையும் கையெழுத்தையும் எழுதுவான் என்று தோன்றுகிறது. ரோம சபைக்கு இவ்விதமாய் நிருபம் எழுதினவன் தெர்தியு. ரோம $16^{22}$ 1 கொரி $16^{21}$ கலா $6^{11}$ கொலோ $4^{18}$ 2 தெச $3^{17}$. இவனைப்பற்றி வேறொன்றும் நமக்குத் தெரியாது.

**தெர்த்துலியான்.** Tertullian.

இவன் கிறிஸ்தவ சபையைச்சேர்ந்த லத்தீன் சபைப் பிதாக்களில் முதல்வன். இவன் கி–பி. 160–ல் பிறந்து ஏறக்குறைய கி–பி. 240–ல் இறந்தான். இவனுடைய ஜீவிய சரித்திரம் நமக்குத் திட்டமாய்த் தெரியாது. ஆனால் இவன் எழுதின புஸ்தகங்கள் அநேகமானதினாலே, இவன் அஞ்ஞியமார்க்கத்திலிருந்து கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவன் என்றும், ரோமராஜாங்க நியாயப்பிரமாணங்களில் தேறினவன் என்றும் தர்க்கசாஸ்திரத்தில் நிபுணன் என்றும் தர்க்கவாதத்தில் ஆத்திரகுணமுடையவன் என்றும், கிறிஸ்தவ மதத்தை ஸ்தாபிக்கிறதற்கு அதிக வாஞ்சையுள்ளவன் என்றும், பதிதர்களுக்கும் யூதர்களுக்கும் விரோதமாய் ஆக்ஷேபனைபண்ணினவன் என்றும் கிறிஸ்தவசபையில் பரிசுத்தத்தையும் ஒருவித தபசு ஏற்பாட்டையும் நியமித்தவன் என்றும் தெளிவாய் அறிகிறோம்.

கள்ளத்தீர்க்கதரிசிகளின்மேல் பக்திவைத்த மந்தானர் (*Montanists*) என்பவர்களுடைய கொள்கைக்கும் கொஞ்சம் இசைந்தவனென்றினாலே இவன்பேரில் சிறிது ஆக்ஷேபனைக்கு இடம் இருந்தாலும், இவன் கிறிஸ்தவசபையைச் சிறப்பித்து, புறமதத்தை எப்பொழுதும் நிராகரித்துப்பேசி, அக்காலத்துச் சபைப் பிதாக்களிலே பிரதானமானவனாய் இருந்தான் என்று நாம் சொல்லக்கூடும்.

**தெர்த்துலு.** Tertullus.

பேலிக்ஸ் என்னும் அதிபதிக்குமுன்பாக பவுல் அப்போஸ்தலனுக்கு விரோதமாய்ப் பேசும்படி யூதர்கள் நியமித்த ஒரு தர்க்கவாதி. இவன் பெயர் லத்தீன்பதம் ஆனதினாலே, இவன் ரோமனாயிருக்கலாம் என்று நினைக்க இடம் உண்டு. அப் $24^{1}$.

**தெர்பை.** Derbe.

சின்ன ஆசியாவிலே ரோமர் ஏற்படுத்தின நாடாகிய கலாத்தியா நாட்டிலே உள்ள ஓர் ஊர். அவர்கள் உண்டுபண்ணின பெரிய ராஜபாதை இதின் ஊடேபோனதினாலே, இதில் வியாபாரம் அதிகமாய் இருந்தது. ஆனால் பவுல் சந்தித்த அந்தியோகியா இக்கோனியா என்னும் ஊர்களைப்போல இது பெரிய ஊர் அல்ல. அப் $14^{6}$ $16^{1}$ $20^{4}$.

**தெலாசார்.** Telassar.

இந்தப் பதத்துக்கு 'அசூரின்மேடு' என்று அர்த்தம். இது அசீரியா ராஜ்யத்தின் வடகிழக்கு எல்லையில் இருந்ததாகவும், அசீரியா ராஜாவாகிய சனகெரிப் இதில் ஏதேன் புத்திரரைச் சங்கரித்ததாகவும் தோன்றுகிறது. 2 இரா $19^{12}$ ஏசா $37^{12}$.

**தெலாயா.** Delaiah. [யேகோவா மீட்பராய் இருக்கிறார்.]

1. 1 நாளா $3^{24}$.
2. ஒரு ஆசாரியன். 1 நாளா $24^{18}$.
3. செமாயாவின் மகன். எரே $36^{12}$.
4. நெகே $6^{10}$.
5. குடும்பத்தலைவன். எஸ்றா $2^{60}$.

**தெலாயீம்.** Telaim. [ஆட்டுக்குட்டிகள்.]

யூதாநாட்டின் தென்தேசத்திலுள்ள இவ்விடத்திலே சவுல் தனது சேனைகளை ஒருதரம்சேர்த்தான். 1 சாமு $15^{4}$. ஒருவேளை இதுவும் தேலெமும் ஒன்றுதான். யோசு $15^{24}$ 1 சாமு $15^{4}$.

**தெலீலாள்.** Delilah. [காமாக்ஷி]

பெலிஸ்தருடைய நாட்டிலே குடியிருந்த ஒரு பெண். இவள் சிம்சோன் என்னும் நியாயாதிபதியைத் தன் வசப்படுத்தி அவனுடைய சத்துருக்களின் கையில் அவனைக் காட்டிக்கொடுத்தாள். நியா $16^{4}$.

**தெல் அர்சா.** Tel Harsha. பாபிலோனியா நாட்டிலுள்ள ஒரு ஊர். இது இருந்த இடம் இன்னதென்று நமக்குத் தெரியாது. எஸ்றா $2^{59}$ நெகே $7^{61}$.

**தெல் ஆபிப்.** Tel Abib. [?தானியமுள்ள மலை] பாபிலோனியாநாட்டில் கேபார் ஆற்றின் ஓரத்திலுள்ள ஊர். இதின் இடம் இன்னதென்று நமக்குத் தெரியாது. எசே $3^{15}$.

**தெல் மெலா.** Tel Melah. [உப்புமலை] பாபிலோனியாநாட்டில் நமக்குத் தெரியாத ஒரு ஊர். எஸ்றா $2^{59}$ நெகே $7^{61}$.

**தெளிக்கிறது.** Sprinkling. யாத் $24^{6}$ $29^{16}$ லேவி $14^{7.16}$ 2 இரா $16^{13}$ ஏசா $52^{15}$ $64^{3}$ எசே $36^{25}$ எபி $9^{13}$ $10^{22}$ $12^{24}$ 1 பேது $1^{2}$.

**தெள்ளுப்பூச்சி.** Fleas. பலெஸ்தீனா தேசத்தில் தெள்ளுப்பூச்சி அதிகம். 1 சாமு $24^{14}$ $26^{20}$.

**தெற்றுவாசல்.** R. V. Rampart. 2 சாமு $20^{15}$.

**தென்தேசம்** South country. Negeb

பழைய ஏற்பாட்டில் சொன்ன தென் திசை அல்லது தென்தேசம் எபிரோன் ஊருக்குத் தெற்கே வனாந்தரம்வரை சென்றதும் கிழக்கே உப்புக்கடல்மட்டும் எட்டினதும் மேற்கே பெலிஸ்தியருடைய நாடுவரை பரவினதுமான ஒரு நாடு. விபசாய வேலைக்கு அனுகூலமல்லாத இந்நாட்டில் ஆடுமாடுகளுக்கு மேய்ச்சல் அதிகம் இருந்தது. ஆபிரகாம் ஆகாப் ஈசாக்கு யாக்கோபு வேவுகாரர் முதலியவர்கள் இந்நாட்டில் நடமாடினார்கள். இது வழக்கமாய் அமெலேக்கியரைச் சேர்ந்தது. ரோமருடைய காலத்தில் ஜனங்கள் இந்நாட்டில் ஏரிகளை வெட்டினதினாலே, இது சிறப்புற்றிருந்தது. ஆனால் ஏறக்குறைய கி-பி. 500-ஆம் முதல் தற்காலம்வரை எல்லாம் பாழாய்க்கிடக்கிறது. ஆதி $12^{9}$ $13^{16}$ $20^{1}$ $24^{62}$ எண் $13^{17}$ உபா $1^{7}$ யோசு $10^{40}$ $19^{8}$ 1 சாமு $27^{10}$ எரே $13^{19}$ $32^{44}$.

**தென்றல்.** South Wind. யோபு $37^{17}$ உன். பா $4^{16}$ லூக் $12^{55}$ அப் $27^{13}$ $28^{13}$. காற்று காண்க.

## தே.

**தேகம்.** Body. சரீரம் காண்க.

**தேகுவேல்.** Deuel. காத்கோத்திரத்திலுள்ள ஒரு பிரபு. எண் $1^{14}$ $2^{14}$ $7^{42}$ ரேகுவேல் காண்க.

**தேக்கேர்.** Dekar. 1 இரா $4^{9}$.

**தேசம்.** Country. அப் $7^{3}$.

சுயதேசம் எபி $11^{14}$.

தூரதேசம் லூக் $15^{13}$ $19^{12}$.

பரமதேசம் எபி $11^{16}$.

பாழுந்தேசம் ஏசா $1^{7}$.

புறத்தேசம் மத் $25^{14}$.

வடதேசம் எரே $46^{10}$.

கிழக்குதேசம். எசே $47^{8}$ (மத் $2^{6}$) சக $8^{7}$.

தெற்குதேசம் சக $8^{7}$ ஆதி $24^{62}$.

**தேசாதிபதி.** Procurator.

மத் $27^{2}$-ல் சொன்ன 'தேசாதிபதி' என்னும் பதம் ரோமராயனால் நியமிக்கப்பட்ட ஒரு உத்தியோகஸ்தனைக் குறிக்கும். இராயனுக்கே கீழ்ப்பட்டிருந்த இந்தத் தேசாதிபதிகள் ரோமராயனுக்குப் பதிலாகச் சில நாடுகளில் அரசாட்சி செய்துவருவார்கள். இவர்களுக்கும் Proconsul என்னும் 'அதிபதிகளுக்கும்' வித்தியாசம் என்னவென்றால், 'அதிபதிகள்' இராயனால் அல்ல ரோமாபுரியிலுள்ள பெரிய சங்கத்தாரால் நியமிக்கப்பட்டு, அச்சங்கத்துக்கே கணக்கொப்புவிக்க வேண்டும். பிலாத்து தேசாதிபதியும் கல்லியோன் அதிபதியுமாய் இருந்தார்கள். அப் $18^{12}$. மத் $14^{1}$-ல் சொன்ன 'தேசாதிபதி' பிலாத்துவைப்போல அவ்வளவு பெரிய உத்தியோகஸ்தன் அல்ல. அதிபதி, காற்பங்கு தேசாதிபதி காண்க. தானி $2^{3.27}$ $6^{3}$-ல் சொன்ன 'தேசாதிபதி' பாரசீக ராஜ்யத்தில் அரசாட்சி செலுத்துகிற ஓர் உத்தியோகஸ்தனைக் குறிக்கும்.

**தேடுகிறது.** Seek. ஆதி $37^{16}$ சங் $34^{4}$ ஏசா $55^{6}$ எசே $34^{16}$ செப் $2^{3}$ மத் $7^{7}$ $6^{33}$ லூக் $15^{4-9}$ யோவா $13^{33}$ 1 கொரி $13^{5}$ கொலோ $3^{1}$.

**தேதான்.** Dedan. ஆபிரகாமுடைய பேரன். ஆதி $25^{3}$. = திதான். வட அரபி தேசத்திலுள்ள ஒரு கோத்திரம். ஆதி $10^{7}$ எசே $25^{13}$ $27^{20}$.

**தேத்.** Teth. எபிரெய அக்ஷர வரியில் ஒன்பதாம் எழுத்து. சங் $119^{65}$.

**தேபா.** Tebah. சோபாநாட்டிலுள்ள ஒரு ஊர். = திப்காத். ஆதி $22^{24}$ 1 நாளா $18^{8}$. = பேத்தா 2 சாமு $8^{8}$.

**தேபேசு.** Thebez. எப்பிராயீம் கோத்திரத்தைச்சேர்ந்த ஓர் ஊர். இதற்கும் சமாரியா பட்டணத்துக்கும் ஏறக்குறைய 10 மைல் தூரம். இதில் அபிமெலேக்கு இறந்தான். நியா $9^{50}$ 2 சாமு $11^{21}$.

**தேபேத்.** Tebeth. எஸ் $2^{16}$ வருஷத்தில் பத்தாம் மாதத்தின் பெயர். காலம் காண்க.

**தேமல்.** Spot. 'வெள்ளைத் தேமல்'. லேவி $13^{39}$. குஷ்டம் காண்க.

**தேமா.** Demas.

இவன் ரோமாபுரியில் பரி. பவுல் முதல் தரம் சிறையாக்கப்படும்பொழுது அவனுக்குத் தோழனாய் இருந்தான். கொலோ $4^{14}$ பிலே $1^{24}$. பரி. பவுல் இரண்டாந்தரம் ரோமாபுரியில் சிறையாக்கப்பட்டபொழுது கிறிஸ்தவர்களுக்கு மிகுந்த உபத்திரவம் உண்டானதினாலே, தேமா பரி. பவுலை விட்டுவிட்டு தெசலோனிக்கே பட்டணத்துக்குப் போய் விட்டான். 2 தீமோ $4^{10}$.

**தேமா.** Tema.

இஸ்மவேலின் புத்திரர்களில் ஒருவனாகிய இவனுடைய பெயர் அரபிதேசத்தின் மேற்கு பாகத்தில் உள்ள ஒரு கோத்திரத்தை இந்நாள்மட்டும் குறிக்கிறது. இக்கோத்திரத்

தார் இருக்கிற இடம் அரபிதேசத்திலிருந்து அசீரியாவுக்கும் சீரியாவுக்கும் போகும்வழியில் இருப்பதினாலே இந்த ஜனங்கள் வியாபாரக் கூட்டத்தாருக்குக் காவலாக வருவார்கள். ஆதி $25^{15}$ யோபு $6^{19}$ ஏசா $21^{14}$.

**தேமா. Temah.**

நிதனீமியர்களில் ஒரு குடும்பம். எஸ்றா $2^{53}$. இதற்குத் தமிழ்வேதாகமத்தில் 'தாமா' என்று சொல்லியிருக்கிறது. நெகே $7^{55}$.

**தேமான். Teman.**

ஏதோம் தேசத்திலுள்ள ஒருகோத்திரமும் அதைச்சேர்ந்த நாடும். இந்தக் கோத்திரத்தார் அறிவில் சிறந்தவர்கள் என்று மற்ற ஜனங்கள் யாவரும் நினைத்தார்கள். யோபுக்குப் புத்தி சொன்னவர்களில் ஒருவன் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவன். ஆதி $36^{11.42}$ யோபு $2^{11}$ எசே $25^{13}$ ஆமோ $1^{12}$ஒப $1^{9}$ ஆப$3^{3}$.

**தேமேத்திரியு Demetrius.** தெமேத்திரியு காண்க.

**தேயோப்பிலு. Theophilus.** [கடவுளுக்குப் பிரியமுள்ளவன்.]

பரி. லூக்கா தமது சுவிசேஷ நூலையும் அப்போஸ்தலர் நடபடி என்னும் நூலையும் இவனுக்கு அனுப்பினான். 'மகா கனம்பொருந்திய' அல்லது 'உத்தமனாகிய' என்னும் தமிழ்ப்பதங்களால் மொழிபெயர்க்கப்பட்ட கிரேக்கபதங்கள் மேன்மையிலும் ஆஸ்தியிலும் சிறந்தவனுக்கு மாத்திரம் பொருந்துமானதால், இவன் பேலிக்ஸ், பெஸ்து என்னும் அதிபதிகளைப்போல ரோமராயனுடைய பரிவாரங்களில் ஒரு பெரிய உத்தியோகஸ்தனாய் இருக்கலாம் என்று தோன்றுகிறது. அப் $23^{26}$ $26^{25}$. அந்நியர்கள் இந்தப் பெயரை வழங்காததினால், தேயோப்பிலு என்பது இவனுடைய குடும்பப் பெயராய் இராமல், இவன் கிறிஸ்துமார்க்கத்தைச் சேர்ந்தபிறகு ஞானஸ்நானத்தில் பெற்ற பெயராய் இருக்கவேண்டும். லூக் $1^{3}$ அப் $1^{1}$.

**தேராகு. Terah.**

1. ஆபிரகாமின் தகப்பன். இவனும் இவனுடைய மூன்று மக்களும் தென் பாபிலோனியா தேசத்திலுள்ள ஊர் (*Ur*) என்னும் ஸ்தலத்தைவிட்டு, ஆரான் என்னும் இடத்துக்கு வந்து அங்கேகுடியேறினார்கள். இவன் அந்நிய தேவர்களை வணங்கி வந்தான். ஆதி $11^{24}$ யோசு $24^{2}$ 1 நாளா $1^{26}$ லூக் $3^{34}$.

2. = 'தாராகு.' இஸ்ரவேலர் வனாந்தரத்திலே தங்கின ஓர் இடம். எண் $33^{27}$.

**தேராபீம். Teraphim.**

இஸ்ரவேலர் வணங்கின சொரூபங்களில் 'தேராபீம்' ஒருவகை சொரூபம். இவைகள் ஆலயங்களில் வைக்கப்பட்ட விக்கிரகங்களைப்போல பெரிய விக்கிரகங்களாய் இராமல், இந்துக்களின் வீட்டு தேவதைகளைப்போல வீட்டுக்குள்ளேயே வைக்கப்பட்டு அந்த வீட்டைக் காப்பாற்றும் தேவதைகளாய் இருக்கலாம் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. பாபிலோனியரும் சீரியரும் இவைகளை வணங்கிவந்தார்கள். இவைகளில் சில மானிட ரூபம் உடையவை. ஆதி பிதாக்கள் கானான்தேசத்துக்கு வருங்காலத்திலும், விசேஷமாய் நியாயாதிபதிகள் காலத்திலும் இவைகளை எபிரெயர் வணங்கி வந்தாலும் அதற்குப் பிந்தினகாலங்களில் சிலர் மாத்திரம் இவைகளை ஆராதித்து வந்தார்கள். ஆதி $31^{19}$ நியா $18^{20}$ 1 சாமு $19^{16}$ எசே $21^{26}$ ஓசி $3^{4}$. ராஜாவாகிய யோசியா இவைகளை வணங்குகிறதை நிறுத்தினாலும், அவன் காலத்துக்குப்பிறகு யூதாவில் சிலர் இந்த ஆராதனையை மறுபடியும் நடத்தினார்கள். 2 இரா $23^{24}$ சக $10^{2}$. எபிரெயர்கள் தேராபீங்களை வணங்குகிறவிதம் இன்னதென்று நமக்குத் தெரியாது. ஆனால் இவைகளை வணங்கினதினாலே மந்திரக்காரர் வருங்காரியங்களைக் குறித்துக் குறி சொல்லுவார்கள் என்பது எபிரெயர்களின் அபிப்பிராயம். யூதர்கள் தீர்க்கதரிசிகள் கொடுத்த தெய்வீகபோதனையைப் படிப்படியாய் அறிந்தபிறகு அவர்கள் இந்த ஆராதனையை நடத்தவில்லை. இதற்குப்பின்பு அநேக நூற்றாண்டுகளாக ஜனங்களை ஏமாற்ற விரும்புகிற சூனியக்காரர் தேராபீங்களைவைத்துவணங்கி அவற்றின் உதவியினாலே மந்திரவித்தையை அறிந்ததாகப் பாசாங்கு பண்ணிவந்தார்கள். தமிழ் வேதாகமத்தில் 'தேராபீம்' என்னும் பதத்துக்குப் பதிலாக 'சுரூபம்' என்னும் பதம் வருகிறது. சுருபம் சூனியம் விக்கிரகம் காண்க.

**தேலாக். Telah.** எப்பிராயீம் கோத்திரத்தான். 1 நாளா $7^{25}$.

**தேலேம். Telem.** 1. = தெலாயிம். யோசு $15^{24}$ 1 சாமு $15^{4}$.

2. அந்நிய ஜாதியான மனைவியைக்கொண்ட காவலாளன். எஸ்றா $10^{24}$.

**தேவஊழியக்காரர். தேவஊழியம். பணிவிடைக்காரர். பணிவிடை Ministers. Ministry.**

குறிப்பு. வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் தேவஊழியத்தைக் குறிக்கும்படி மூலபாஷையிற் சொன்ன பதங்களை மொழிபெயர்க்கும்பொழுது மூலவித்தியா

சங்கிளக் கவனிக்காமல் அதை இந்த நாலு பதங்களினாலே மனம் சேர்ந்தபடி மொழி பெயர்த்திருக்கிறார்கள்.

மூலபாஷையில் கண்ட ஒரே பதத்துக்குச் சில வசனங்களில் 'ஊழியக்காரன்' என்றும் சில வசனங்களில் 'பணிவிடைக்காரன்' என்றும் சொல்லியிருக்கிறதினாலே மூலபாஷையில் தோன்றும் வித்தியாசத்தைச் சில வசனங்களில் குறிக்காதபடிக்கும் சில வசனங்களில் மூலபாஷையில் இல்லாத ஒரு வித்தியாசத்தைக் குறிக்கும்படிக்கும் மொழி பெயர்த்திருக்கிறார்கள்.

1. பழைய ஏற்பாடு.

பணிவிடையையும் தேவ ஊழியத்தையும் எபிரெய பாஷையில் ஷாரத் (*Sharath*) என்னும் பதம் குறிக்கும். இது யோசுவா மோசேக்குச்செய்த வேலையையும், தேவதூதர்கள்செய்த ஊழியத்தையும், சாலொமோனுடைய வேலைக்காரர்செய்த வேலையையும் விசேஷமாய் ஆசாரியர்களும் லேவியர்களும் ஆசரிப்புக்கூடாரத்திலும் தேவாலயத்திலும் செய்த பணிவிடையையும் குறிக்கும். இதெல்லாம் பார்க்கும்போது பழைய ஏற்பாட்டுக் காலத்தில் தேவனுக்குப் பணிவிடைசெய்கிறதற்கும் கனவான்களுக்கு வேலைசெய்கிறதற்கும் ஒற்றுமை இருந்தது என்று அறியவேண்டும். மேலும் ஆசாரியர்களைத்தவிர, தேவதூதர் முதலியவர்களும் தேவனுக்காகப் பணிவிடைசெய்யக் கூடியவர்களாய் இருந்தார்கள் என்றும் அறிகிறோம். ஆனால் விசேஷமாய் 'பணிவிடை' 'ஊழியம்' என்னும் பதங்கள் ஆசாரியர்கள் தங்கள் ஆசாரத்தின்படி நடத்தும் பணிவிடையையே குறிக்கும். யாத் $24^{13}$ யோசு $1^{1}$ 1 இரா $10^{5}$ சங் $103^{21}$ $104^{4}$ 1 இரா $8^{11}$ எஸ்ரா $8^{17}$.

2. புதிய ஏற்பாடு.

ஊழியத்தை அல்லது பணிவிடையைச் செய்கிறவனைக் குறிக்கும்படி புதிய ஏற்பாட்டிலே மூன்று பதங்கள் உண்டு.

i. ஹீயுபெரெடேஸ் (*Hyperetes*). இந்தப்பதம் ஐந்து வசனங்களில் வருகிறது.

லூக் $4^{20}$–ல் இது ஜெபஆலயத்தில் பிரசங்கஞ்செய்கிறவனுக்குப் புஸ்தகங்கொடுக்கிற ஊழியக்காரனைக் குறிக்கும். ஜெப ஆலயம் காண்க.

அப் $13^{5}$–ல் இப்பதம் யோவான் மாற்கு என்பவன் அப்போஸ்தலர்களுக்குச் செய்த வேலையைக் குறிக்கும்.

லூக் $1^{2}$ அப் $26^{16}$ 1 கொரி $4^{1}$. இந்த மூன்று வசனங்களிலும் இப்பதம் கிறிஸ்தவசபையில் கிறிஸ்தவர்களுக்காகவும் தேவனுக்காகவும் சுவிசேஷத்தைப் பிரபலமாக்கும்படிக்கும் சபையார்களைக் காக்கும்படிக்கும் உற்சாகத்துடனே பிரயாசப்படுகிறவனைக் குறிக்கும். இதில் இந்த ஊழியம் செய்கிறவர்களுக்கும் பிரதிஷ்டைபண்ணப்பட்டு ஆசாரத்தின்படி யாவையும்செய்த ஆசாரியர்களுக்கும் சம்பந்தம் இல்லை. எந்தக் கிறிஸ்தவர்களும் செய்ய வேண்டிய ஊழியத்தை இது குறிக்கும்.

ii. லெதௌர்கஸ் (*Leitourgos.*) இந்தப் பதம் முதலாவது மூலபாஷையில் ஆசாரியர்கள்செய்த பணிவிடையை அல்ல, கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ளவர்களைக் காப்பாற்றும்படி ஒருவன்செய்த பிரயாசையைக் குறிக்கும். ஆனால் ஏறக்குறைய கி–மு. 285–ஆம் பழைய ஏற்பாட்டை எபிரெய பாஷையிலிருந்து கிரேக்கபாஷையில் மொழிபெயர்த்தவர்கள் 'லெதௌர்கஸ்' என்னும் பதத்தை ஆசாரியர்களையும் ஆசாரியர் செய்த பணிவிடையையும் குறிக்கும்படி மொழிபெயர்த்திருக்கிறார்கள். புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் இந்தக் கருத்தோடு இப்பதத்தைச் சொல்லாமல் அந்நியர்களுக்குச் சுவிசேஷப்பிரசங்கஞ் செய்கிறதைப்பற்றியும் கிறிஸ்தவர்களுக்கு உதவி ஜெபம் தர்மம் முதலியவைகளைச் செய்கிறதைப்பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். அப் $13^{2}$ ரோம $15^{16}$ 2 கொரி $9^{12}$ பிலி $2^{25.30}$. மேலும் அவர்கள் யூதர்கள் நடத்தின ஆராதனையைப்பற்றிப்பேசும்போதும், இந்தப் பதத்தை வழங்கி வந்தார்கள். லூக் $1^{23}$ எபி $9^{21}$ $10^{11}$ அவர்கள் கிறிஸ்தவர்களைப்பற்றி இந்தப்பதத்தை வழங்கும்போது முற்காலத்திலுள்ள ஆசாரியர்களுக்கும் கிறிஸ்தவசபையில் ஊழியஞ்செய்கிறவர்களுக்கும் ஒற்றுமை உண்டு என்று நினைக்கவே இல்லை.

iii. டையக்கனஸ், டையக்கானியா. (*Diakonos, Diakonia*). கிறிஸ்தவசபையில் போதனைகொடுக்கிறவர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கு உதவியும் தர்மமும் செய்கிறவர்களுக்கும் சபை விஷயங்களை ஒழுங்காய் நடத்துகிறவர்களுக்கும் 'டையக்கனஸ்' என்னும் பதம் சாதாரணமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பதம் ஒரு வீட்டிலேயாவது ஒரு ஊரிலேயாவது தங்களுக்குக் கட்டளையிடப்பட்ட விஷயங்களைச் செய்தவர்களையும், சாதாரண வேலைக்காரரையும் தாழ்ந்த நிலைமையிலுள்ளவர்களையும் குறிக்கிறது. புதிய ஏற்பாட்டை எழுதின பரி. பவுல் முதலியவர்கள் கிறிஸ்தவசபையில் ஊழியஞ்செய்கிறவர்களுக்கு இப்பதத்தை வழங்கினதினாலே, பலவிதமாயிருக்கிற அந்த ஊழியத்தைச் செய்கிறவர்கள் முற்காலத்தில் பல சிலாக்கி

யங்களையும், அதிகாரங்களையும் மேன்மையையும் உடையவர்களாய்த் தேவாலயத்து ஆசாரச்சடங்குகளை நடத்தின ஆசாரியர்களைப்போல் அல்ல, கிறிஸ்தவர்களுக்கும் மற்றவர்களுக்கும் எந்த விஷயங்களிலும் உதவி புரியும்படி ஜாக்கிரதையுள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்று கருதியே இந்தப் பதத்தைச் சொல்லுகிறார்கள். மார்த்தாளும் மரியாளும் இயேசுவுக்குச் செய்த பணிவிடையையும் தீமோத்தேயு முதலியவர்கள் பரி. பவுலுக்குச்செய்த பணிவிடையையும் குறிக்கும்படி இந்தப் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. மத் 27[55] லூக் 10[40] யோவா 12[2] அப் 19[22]. கிறிஸ்துவுக்குப் பின்செல்பவன் கிறிஸ்துவுக்கும் சகோதரர்களுக்கும் செய்த ஊழியத்தைக் குறிக்கும்படிக்கும் இப்பதம் சொல்லப்பட்டிருக்கிறது. யோவா 12[26] 1 கொரி 12[5] 1 பேது 4[10]. இவ்விதமாய்க் கிறிஸ்தவர்கள் எல்லாரும் தேவ ஊழியத்தைச் செய்கிறவர்களாயும் தேவ ஊழியக்காரராயும் இருக்கவேண்டும்.

முதலிலே கிறிஸ்தவசபையில் ஆராதனை செய்கிறவர்களுக்கும், ஆராதனை நடத்துகிறவர்களுக்கும், சாதாரண சபையாருக்கும், சபை ஒழுங்கைப் பார்க்கிறவர்களுக்கும், சபை அதிகாரிகளுக்கும், ஒரு வித்தியாசமும் இல்லை. ஆனால் சீக்கிரத்திலே சுவிசேஷப் பிரசங்கத்தைச் செய்யும்படி திராணியுள்ளவர்கள், சபை விஷயங்களை ஒழுங்காய்ப் பார்க்கக்கூடியவர்கள், ஏழைகளுக்குத் தர்மஞ்செய்கிற விஷயத்தில் அதிக விருப்பம் உடையவர்கள் ஜனங்கள் பேசுகிற பாஷைகளில் சுவிசேஷ பிரசங்கத்தை மொழிபெயர்க்கக்கூடியவர்கள் முதலானவர்கள் தாங்கள் செய்யத்தக்க விஷயங்களில் அதிக ஊக்கமும் உற்சாகமும் உடையவர்களாயிருந்ததினாலே மற்றவர்கள் இதைப் பார்த்துப் பிரசங்கம்செய்கிறதற்குச் சிலருக்கும், தர்மஞ்செய்யும்படி சிலருக்கும், சபை விஷயத்தைப் பார்க்கும்படி சிலருக்கும் இடங்கொடுத்தார்கள். அப் 6[4] 1 கொரி 12[5] 2 கொரி 3[6] எபே 3[6] 1 தீமோ 4[6]. சபை மூப்பர்கள் தங்களைப் பிரதிஷ்டை செய்ததினாலே அல்ல தாங்கள் ஒருவிதமான ஊழியத்தில் அதிக முயற்சியோடு நடந்ததினாலே ஆதிகிறிஸ்தவ தேவ ஊழியக்காரர் அந்தந்த ஊழியத்தைச் செய்யும்படி சமயம் பெற்றார்கள். அவர்களுக்கு அதிகாரமாவது மேலான உத்தியோகமாவது இல்லை. இயேசுவுக்காகவும் சபைக்காகவும் வேலைசெய்யும்படிக்கு அவர்களுக்கு சமயம் மாத்திரமே கிடைத்தது. இவர்களெல்லாரும் தேவஊழியஞ் செய்தார்கள்.

கிறிஸ்தவசபை உண்டாகி சில வருஷம் ஆனபிறகு, சபையிலே சபையார்களுக்கு உதவிபுரிகிறவர்களுக்கும் சபையை ஒழுங்காய் நடத்துகிற மூப்பர்கள் அல்லது கண்காணிகளுக்கும் விசேஷித்த அதிகாரம் வந்தது. அக்காலமுதல் சபைகளில் சேர்ந்தவர்கள் இந்த இரண்டுவிதமான ஊழியங்களை நடத்தும்படி ஊழியக்காரரையும் கண்காணிகளையும் ஏற்படுத்தத் தொடங்கினார்கள்.

சபையில் இவ்விதமாய் விசேஷித்த ஊழியஞ் செய்கிறவர்களுக்கு உதவிக்காரர் என்னும் பெயர் சொன்னார்கள். உதவிக்காரன் கண்காணி காண்க.

3. புதிய ஏற்பாட்டுத் தேவ ஊழியத்தின் உற்பத்தியும் லக்ஷணங்களும்.

நாம் முன்சொன்னபடி முதலிலே சாதாரண கிறிஸ்தவர்களுக்கும் கிறிஸ்தவசபை உத்தியோகஸ்தர்களுக்கும்பேதம் இல்லாவிட்டாலும் எருசலேம் பட்டணத்திலுள்ள சபை ஏழைகளுக்காக ஏழு உதவிக்காரரை ஏற்படுத்தினதினாலே அப்போஸ்தலர்களுடைய வேலை வேறே இவர்களுடைய வேலைவேறே என்று நாம் சொல்லவேண்டும். அப்போஸ்தலர் விசேஷமாய்ச் சுவிசேஷத்தை பிரபல்லியமாக்கும்படிக்கும் உதவிக்காரர் விசேஷமாய்ச் சபையைக்காக்கும்படிக்கும் உழைத்துவந்தார்கள். பரி. பவுல் இந்த வித்தியாசத்தைக் குறித்துப் பல வசனங்களில் சொல்லுகிறான். 1 கொரி 1[17] 9[6] 2 கொரி 3[6] 4[1] கொலோ 1[23]. இவ்விதமாய் ஆதிசபையில் பிரசங்கஞ் செய்கிறவர்களுக்கும் சபை விஷயங்களை ஒழுங்காய் நடத்துகிறவர்களுக்கும் கூடிய சீக்கிரத்தில் ஒரு வித்தியாசம் உண்டானது. ஆதிகிறிஸ்தவ சபையில் அப்போஸ்தலர்களைத் தவிர தீர்க்கதரிசிகள் என்பவர்களும் சுவிசேஷகர் என்பவர்களும் போதகர்கள் என்பவர்களும் கிறிஸ்தவர்களுக்கும் அந்நிய மதஸ்தர்களுக்கும் சுவிசேஷத்தைத் தெரிவித்துவந்தார்கள். அப் 11[27] 15[32] 21[8] 1 கொரி 12[28] எபே 4[12] 1 தீமோ 2[7] 2 தீமோ 4[5]. இவர்களில் அநேகர் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணும்படிக்கு ஒரே ஊரில் தங்காமல் பல இடங்களுக்கும் பிரயாணம்பண்ணினதினாலே கிறிஸ்தவசபை இவர்கள் மூலமாய் அதிக விர்த்தியடைந்தது. யூதர்களுடைய சபைகளில்போல கிறிஸ்தவசபைகளிலும் ஆதிகாலந்தொடங்கி விருத்தாப்பியத்தில் பிரவேசித்தவர்கள் கனமும் மதிப்பும் அடைந்து சபையில் ஆசாரப்போதகம் முதலியவற்றைக்குறித்து இயல்பாகவே அதிகாரம் உடையவர்களாய் இருந்தார்கள். முதலிலே இவர்கள்

ஒரு உத்தியோகத்துக்கு விசேஷமாய் நியமிக்கப்பட்டவர்கள் அல்ல. இவர்கள் கிறிஸ்து மார்க்க அனுபவத்தில் தேறினவர்களானதினாலும், வயசில் மூப்புடையவர்களானதினாலும், அந்தத் தேசத்து வழக்கப்படி சபையில் கனம் அடைந்தார்கள். சபை பெருகின பின்பு வயோதிபர் எல்லாரும் சபை விஷயங்களை நடத்துகிறதற்குத் தகுந்தவர்களல்லாததினாலே சபையார்கள் சிலரைமாத்திரம் இதற்காக ஏற்படுத்துவார்கள். சபையார் இதற்கு விசேஷமாய் நியமித்த இவர்களுக்கு மூப்பர் என்னும் பெயர் வழங்கிவந்தது. மூப்பர்களிலும் சிலர் சுவிசேஷப் பிரசங்கஞ் செய்வார்கள் என்பதற்குச் சந்தேகம் இல்லை. மூப்பர்களில் சிலர் சபைக்குத் தலைவராகிய கண்காணிகளானார்கள். ஆகவே ஒவ்வொரு சபையிலும் தேவ ஊழியத்தைச் செய்யும்படி நியமிக்கப்பட்டவர்கள் யாரென்றால்:—

*a*. கண்காணி அல்லது மூப்பன் அல்லது மூப்பரின் கூட்டம். இவர்கள் எல்லாரும் சபையை நடத்திக் காப்பாற்றிப் பல மற்றவர்களைத் தேற்றி, வியாதியஸ்தரைச் சந்தித்து, அவர்களுக்காக ஜெபம்பண்ணி, குற்றஞ்செய்தவர்களைச் சிக்ஷித்து, சபையை நடத்திச் சபையார்களுக்காக உபதேசம் பண்ணிவந்தார்கள். அப் $20^{17}$ 1 தீமோ $3^{2}$ யாக் $5^{14}$.

*b*. உதவிக்காரர்களும் உதவிக்காரிகளும். இவர்கள் வீடுவீடாய்ப்போய் ஏழைகளைக் குறித்து விசாரணைபண்ணி அவர்களுக்கு உதவிபுரிந்து வருவார்கள். இவர்கள் வழக்கமாய் உபதேசங் கொடுக்கவில்லை. பிலி $1^{1}$ 1 தீமோ $3^{8}$ $5^{8}$. உதவிக்காரர்களுக்கும் மூப்பர்களுக்கும் கண்காணிகளுக்கும் பிந்தின காலங்களில் மேன்மையிலும் அதிகாரத்திலும் இருந்த வித்தியாசம் ஆதியில் இருந்தது என்பதற்கு அத்தாட்சி இல்லை. நாம் முன் சொன்னபடி ஆதிசபையில் தேவ ஊழியஞ் செய்யும்படி ஒருவனுக்கு ஒருவிதமான திராணியிருந்தால், அதை நிறைவேற்றுகிறதற்குச் சபையார் அவனுக்கு இடங்கொடுத்தார்கள். இவ்விதமாய் முதலிலே தேவ ஊழியக்காரர் நியமிக்கப்பட்டார்கள். அப்போஸ்தலன், உதவிக்காரன், கண்காணி சபை காண்க.

**தேவகுமாரர், தேவபுத்திரர். The Children of God.**

பழைய ஏற்பாட்டிலே சில வசனங்களில் 'தேவகுமாரர்' என்பது தேவதூதர்களைக் குறிக்கும். ஆதி $6^{1}$ யோபு $1^{6}$ $2^{1}$ $38^{7}$. இவற்றைத்தவிர மற்ற வசனங்களில் 'தேவகுமாரர்' என்னும் பதத்தொடர் கடவுளுக்கும் மனுஷருக்கும் உள்ள மேலான சம்பந்தத்தைக் குறிக்கிறது. இதினாலே மனுஷர்கள் தேவசுபாவத்தையும் தேவலக்ஷணங்களையும் உடையவர்களாயிருந்து, அவர்மேல் அன்பும் நம்பிக்கையும் வைத்து, பிதாவாகிய அவருக்குக் கீழ்ப்படிதலுள்ள பிள்ளைகளாய் இருக்கிறார்கள் என்பது குறிக்கப்படும். இதின்படி இஸ்ரவேல் ஜனம் யேகோவாவுக்குக் குமாரனாய் இருக்கிறது. ஓசி $11^{1}$. கடவுள் இஸ்ரவேலைத் தன் குமாரன்போல் வளர்த்துவருகிறார் என்று ஏசாயா சொல்லுகிறான். ஏசா $1^{2}$. இஸ்ரவேலர் கடவுளுக்குக் குமாரரும் குமாரத்திகளுமாய் இருக்கிறார்கள். உபா $32^{19}$. கடவுள் தமது பிள்ளையாகிய இஸ்ரவேலை நேசித்துக் காப்பாற்றினதினாலே, இஸ்ரவேல் கடவுளைக் கனப்படுத்துவது அவசியம். ஏசா $43^{6}$ சங் $68^{5}$ $103^{13}$. இந்த விஷயத்தில் பழைய ஏற்பாட்டுக்கும் புதிய ஏற்பாட்டுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. நாம் மேலே சொன்னபடி பழைய ஏற்பாட்டில் சில வசனங்களில் இஸ்ரவேலர் தேவ புத்திரராய் இருக்கிறார்கள் என்று சொல்லியிருந்தாலும், சாதாரணமாய்க் கடவுள் தமது ஜனத்துக்குப் பிதாவாய் அல்ல, ராஜாவாய் அல்லது நியாயாதிபதியாய் இருக்கிறார் என்று சொல்வது சரி. புதிய ஏற்பாட்டிலோ கடவுள் மனுஷர்களுக்கு நேசமுள்ள தகப்பனும், மனுஷர் கடவுளுக்குப் புத்திரர்களுமாய் இருக்கிறார்கள் என்னும் கொள்கை வெகு தெளிவாய் எந்த நூலிலும் கூறப்பட்டிருக்கிறது. மத் $6^{25}$ லூக் 15 அதி. $11^{2}$. இயேசுகிறிஸ்துவுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தம் பிதா புத்திர சம்பந்தமானதினாலே, அது மனுஷருக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தத்திற்கு அடையாளமாய் இருக்கிறது. அவருடைய பிதா நமது பிதா. யோவா $1^{13}$ $11^{52}$ $20^{17}$ 1 யோவா $3^{1}$ $5^{2}$. பரி. பவுல் இதற்குப் பலவிதமான அத்தாட்சி கொடுக்கிறான். ரோ $8^{16}$ பிலி $2^{15}$. பரி. யோவான் தகப்பனுக்கும் பிள்ளைகளுக்கும் இயற்கையின்படியுள்ள சம்பந்தத்தைப்பற்றி நினைத்ததினாலும் பரி. பவுல் ரோமர்களுடைய நியாயப் பிரமாணத்தின்படி புத்திர சுவிகார சிலாக்கியங்களைப்பற்றி அதிகமாய் நினைத்ததினாலும், இவர்கள் இருவரும் கொடுத்த உபதேசத்தில் கடவுள் மனுஷர்களுக்கு ஈந்த சிலாக்கியத்தின் தன்மையை நாம் லேசாய்ப் பார்க்கலாம். கலா $4^{1}$. எபிரெயருக்கு எழுதின நிருபத்தின் ஆக்கியோன் கொடுத்த போதனையும், பரி. யாக்கோபு பேதுரு இவர்கள் கொடுத்த போதனையும் இதற்கு ஒத்திருக்

கிறது. எபி 2⁹ 12⁴⁻¹³ யாக் 1¹⁸ 1 பேது 1²³. ஆதிகிறிஸ்தவர்கள் இந்தச் சிலாக்கியத்தைக் குறித்து அதிகமாய் ஆறுதல் அடைந்தார்கள். வெளி 21⁷.

**தேவதாரி, தேவதாரு.** Fir tree.

அங்கிலேய வேதாகமத்தில் கூறிய *Fir* என்னும் பதம் *Cypress* என்னும் மரத்தைக் குறிக்கும். பெரிதும் எப்பொழுதும் பசுமையாய் உள்ளதுமான இந்தச் 'சைப்ரெஸ்' மரம் லீபனோன் மலைநாட்டில் ஏராளமாய் உண்டு. இது வெட்டுமரங்களுக்கும் கப்பல் செய்கிறதற்கும் உபயோகமாகும். 2 சாமு 6⁵ 1 இரா 5⁸ 6¹⁵ 2 இரா 19²³ சங் 104¹⁶ ஏசா 14⁸ 60¹³ எசே 31⁸ ஓசி 14⁸.

**தேவதீர்மானம்.** Divine Decree.

தேவதீர்மானமாவது சகலமும் இப்படியுண்டாகவும் இப்படி நடக்கவும் வேண்டுமென்கிற சித்தமேயாம். அது கடவுளினுடைய சித்தத்தின் ஆலோசனையென்றும், அவருடைய முன்யோசனையென்றும், அவருடைய தயையுள்ள சித்தமென்றும், அவருடைய முன்னறிவென்றும், அவருடைய முன்குறிப்பென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா 46¹⁰ ரோம 8²⁸·²⁹ எபே 1⁵·⁹·¹¹ மத் 11²⁶.

அவருடைய தீர்மானமாகிய சித்தம் நித்தியமாயும், ஒருவராலும் எதிர்க்கப்படாத சுயாதீனமாயும், அளவில்லாத விவேகமாயும், மாறுமையாயும், சகலத்தையும் அணைக்கிறதாயும் இருக்கிறது. ஆதலால் அவர் உலகத்தோற்றத்திற்குமுன் இயேசுகிறிஸ்துவின் மூலமாய் நம்மைத் தெரிந்துகொண்டாரென்றும் சகலத்தையும் ஏற்படுத்தினாரென்றும் வேதத்திலே விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது. எபே 1⁴ 2 தீமோ 1⁹ 1 கொரி 11¹⁷ ரோம 11³³. சர்வவல்லமை, சர்வஞானம் முதலான மகிமையுள்ளவருடைய தீர்மானங்கள் அப்படியே இருக்குமென்று இயல்பாய்த் தோன்றுகிறது.

1. கடவுள் சகலத்தையும் அறிகிறபடியால் உலகத்தோற்றத்திற்கு முன்னமே சகலமும் அவருக்கு நன்றாய்த் தெரிந்திருந்தன. அவைகளையும் அவைகளுடைய தன்மைகளையும், ஒன்றோடொன்றும் இருக்கும் சம்பந்தங்களையும், ஒன்றால் ஒன்று பிறப்பவைகளையும், அவர் ஒரே நோக்கத்தினாலே பார்த்தறிந்தார். அந்த ஒரே நோக்கம் ஒரு வித்தியாசமுமில்லாமலும் ஆதியில்லாமலும் நித்தியமாயிருக்கிறது. அன்றியும் அவர் அளவற்ற விவேகமுள்ளவரானபடியினாலே தம்முடைய மகிமைக்கும் உலகத்தின் சௌக்கியத்திற்கும் ஏற்றவைகளையும் ஏற்காதவைகளையும் நன்றாயறிந்து, ஏற்றவைகளைமாத்திரம் நடப்பிக்கிறதற்கு வேண்டிய எத்தனங்கள் யாவையும் ஏற்படுத்தினார். அன்றியும் அவர் சர்வவல்லமையுள்ளவரானபடியினாலே அவர் தகுதியாகத் தெரிந்துகொண்டதை நிறைவேற்றவும் தகுதியுள்ளவராயிருக்கிறார்.

ஆகையால் தாம் ஆதியிலே உண்டாக்கும் லோகத்திலே சகலத்தையும் குறித்துத் தீர்மானம்செய்யவும், அந்தத் தீர்மானத்தின்படி சகலத்தையும் நடப்பிக்கவும் தக்கவராய் இருக்கிறார். அவருடைய தீர்மான சித்தமில்லாமல் ஒன்றும் நடக்கமாட்டாதே.

2. வேதத்திலேயும் அப்படியே சொல்லியிருக்கிறது. யோபு 23¹³ ஏசா 44¹⁰ அப் 15¹⁸ சங் 104³¹. இந்த வாக்கியங்களினாலே சகலமும் கடவுளுடைய சித்தத்தின்படியே இருக்கிறதென்று நன்றாய் விளங்குகின்றது. அப்படி யல்லவென்றால், சாவஞானம், சர்வவல்லமை, மாறுமை, சுயாதீனம் என்ற குணங்கள் அவருக்கு இருப்பது எப்படி?

3. சகலமும் அவருடைய சித்தத்தின்படியே நடக்கிறதென்பது இத்தேசத்தார் சொல்லுகிற விதிக்கு ஒப்பாயிருக்கிறதல்லவா என்று கேட்டால், அப்படிச் சொல்லக்கூடாது. என்னத்தினாலென்றால், இத்தேசத்தார் சொல்லுகிற விதியினாலே மனிதனுடைய மனோற்சாகத்தையும், சுயாதீனத்தையும், நீதியையும், அநீதியையும், அவைகளுக்கேற்ற நற்பலனையும் துர்ப்பலனையும், அழித்துப்போடுகிறார்களே. கடவுளுடைய சித்தமாகிய தீர்மானம் அப்படிச் செய்கிறதில்லையே. ஒருவன் தன் இஷ்டத்தின்படியே நன்மையையாவது தீமையையாவது செய்யலாம், செய்யாமலும் இருக்கலாம். கடவுள் தமது திருச்சித்தத்தை நிறைவேற்றும்படிக்கு அவ்விரண்டுவகைகளையும் நடத்திக்கொள்ளுகிறாரேயல்லாமல், கட்டாயஞ் செய்கிறதில்லை.

திருஷ்டாந்தமாக, கடவுளுடைய கற்பனைக்கு விரோதமாக ஒருவனை ஒருவன் கொலைசெய்கிறான்; அந்தக் கொலைபாதகத்தைச் செய்யும்படிக்கு கடவுள் அவனைப் பலவந்தஞ்செய்யவில்லை. கொலைசெய்யப்பட்டவனிடத்தில் தம்முடைய சித்தத்தை நிறைவேற்றும்படிக்கு அந்தப் பாவத்தைச் செய்கிறதற்கு இடம்மாத்திரம் கொடுக்கிறார். அந்தப் பாவத்தைச் செய்ததற்காக அவனைத் தண்டித்தும் வருகிறார். கடவுள் அவனைப் பலவந்தஞ் செய்வாரானால், அவனை அதற்காகத் தண்டிப்பாரா? தண்டிப்பாரானால் அது அநியாயமாயிருக்குமே. தேவன் அநியாயஞ் செய்வாரோ? (ரோம 3⁵·⁶) விதியின்படி

அவன் அந்தப் பாதகத்தைச் செய்வானென்றால், அந்தக் குற்றத்தை விதியின்மேல் வைக்கவேண்டுமேயன்றி, அதினுடைய ஏவுதலின்படி செய்த மனிதன்மேல் வைக்கக்கூடாதே. ஆதலால் விதிக்கும் தேவதீர்மானத்துக்கும் மிகுந்த வித்தியாசமுண்டு.

4. சகலமும் தேவனுடைய சித்தத்தின்படி நடக்கிறதானால், கடவுளைப் பாவத்துக்குக் காரணரென்று சொல்லவேண்டுமேயென்றால், அப்படிச் சொல்லக்கூடாது. கடவுளுடைய தன்மையை அறியாதவர்கள் அப்படிச் சொல்வார்களேயல்லாமல், அதை அறிந்தவர்கள் அப்படிச் சொல்லமாட்டார்கள். பரிசுத்தமும் நீதியும் அன்புமுள்ளவர் எப்படிப் பாவத்துக்குக் காரணராயிருப்பார்? பாவமுள்ள தாய் தகப்பன்மார்களுங்கூட தங்கள் பிள்ளைகள்கெடுதியானவைகளைச் செய்யும்படி பார்க்கமாட்டார்களே. பரிசுத்தமுள்ள கடவுள் அப்படிச் செய்வாரா? பாவத்துக்குக் கடவுள் காரணராயிருக்கிறாரென்று வேதத்திலே சொல்லியிருக்கவில்லையே. மனிதர்கள் தங்களைத் தாங்களே கெடுத்துப்போட்டார்களென்றும்; பாவத்திற்காகக் கடவுள் அவர்களைத் தண்டிக்கிறாரென்றும்; அக்கிரமம் அவரிடத்திலே தங்கமாட்டாதென்றும், அநேக வசனங்களில் சொல்லியிருக்கிறது.

அப்படியிருந்தும், பாவம் உலகத்திலே வந்திருக்கிறது. அது அவருடைய உத்தரவு இல்லாமல் வரவும்மாட்டாது என்பது மெய்தான். ஆகிலும் அதினாலே தேவன் பாவத்திற்குக் காரணராயிருக்கிறாரென்று ஒருக்காலும் சொல்லாமல் பாவம் வருகிறதற்குக் கடவுள் இடங்கொடுத்தாரென்று மாத்திரம் சொல்லவேண்டும். பாவம் வராதபடிக்குக் கடவுள் தடைசெய்யக்கூடாதா என்று கேட்டால், தடைசெய்ய வல்லமையுண்டு. இருந்தும், அவர் உலகத்தை உண்டாக்கினபின்பு அரூபிகளில் சிலரும் ஆதிமனிதர்களும் பாவஞ்செய்வார்களென்று முன்னறிந்து, அவர்களுடைய சுயாதீனத்தை அழிக்கக்கூடாது என்றும் பாவஞ் செய்யாதபடிக்குத் தடைசெய்கிற அவருடைய வல்லமையைச்செலுத்தாமல், அதற்கு இடங்கொடுக்கவேண்டுமென்றும் தீர்மானமபண்ணினார் என்று நாம் நினைக்கக்கூடும். அப்படித் தீர்மானிக்கிறதற்கு அவரிடத்தில் தகுதியான நியாயமுண்டாயிருந்தது என்பதற்குச் சந்தேகமில்லை. அந்த நியாயம் நமக்கு இப்பொழுது தெரியாதிருந்தாலும், கடைசிநாளிலே அவர் இவ்வுலகத்தைக்குறித்து ஆதியில் செய்த யோசனை முழுவதும் நிறைவேறும்பொழுது அது நமக்கு அதிக தெளிவாய்த் தெரியும். ஆதலால் இந்தக் காரியம் இப்பொழுது நமக்கு மறைவாயிருக்கிறதினாலே, கடவுள் பாவத்திற்குக் காரணராயிருக்கிறாரென்று சொல்லவேகூடாது.

5. சகலமும் அவருடைய சித்தத்தின்படியே நடக்கிறதென்று சொல்லும்போது, மனிதருக்குச் சுயாதீனமில்லையென்று சொல்லவேண்டுமேயென்றால், அப்படியும் சொல்லக்கூடாது. சுயாதீனம் இல்லாவிட்டால் கடவுள் பாவிகளைத் தண்டிக்கலாமா? ஆதலால் அவருடைய தீர்மானத்திலே மனிதருடைய சுயாதீனத்திற்குக் குறைவுவராது. மனிதர்களும் தங்களுக்குச் சுய இஷ்டமுண்டென்றும், தாங்கள் மற்றொருவருடைய கட்டாயத்தினால் அல்ல தங்கள் இஷ்டப்படியே அநேக காரியங்களைச் செய்துவருகிறார்கள் என்றும் தங்கள் மனதிலே உணர்ந்திருக்கிறார்கள். அந்தச் செய்கைகள் யாவையும் கடவுள் ஆதியிலே அறிந்தார். மேலும் அவைகள் நல்லவைகளானாலும், பொல்லாதவைகளானாலும் தமது அளவற்ற யோசனையை நிறைவேற்றுகிறதற்குத் தகுதியானவைகள் எவ்வளவோ அவ்வளவுமாத்திரம் செய்யப்படும்படிக்கு இடங்கொடுத்தார். அவ்வளவுமாத்திரம் செய்யப்பட்டும் வருகிறது. அதினாலே மனிதருடைய சுயாதீனம் அழிக்கப்படாது; அழிக்கப்படுமானால் மோசே யூதர்களை நோக்கி, இன்றைக்கு நான் ஜீவனுக்கேற்றவைகளையும் மரணத்துக்கேற்றவைகளையும் உங்களுக்குமுன் வைத்தேன்; நீங்களே தெரிந்துகொள்ளுங்களென்று சொல்லுவானா? (உபா $30^{19}$) இயேசுவும் யூதர்களை நோக்கி, உங்களை என்னிடத்திலே சேர்த்துக்கொள்ள அநேகந்தரம் தேடினேன், நீங்கள் வரமாட்டோம் என்கிறீர்களென்றும் (லூக் $13^{34}$), உங்களுக்கு நித்தியஜீவன் கிடைக்கும்படிக்கு என்னை விசுவாசிக்கமாட்டீர்களென்றும் சொல்லுவாரா? (யோவா $5^{40}$)

6. கடவுளுடைய தீர்மானமாகிய சித்தத்தின்படி சகலமும் நடக்கிறதானால், மனிதர்கள் தங்களைச் சீர்ப்படுத்துவதற்குத் தடையுண்டாகுமல்லவா என்று கேட்டால், அப்படியும் இருக்கமாட்டாது. நாம் நம்மைச் சீர்ப்படுத்தப் பிரயாசப்படக் கூடாதென்று கடவுள் கட்டளையிடவில்லையே. நாம் செய்யவேண்டியவைகளைச் செய்யாமலிருக்க அவர் சொல்லவில்லையே; நம்மைச் சீர்ப்படுத்துகிறதற்கு வேண்டிய எத்தனங்களை அநுக்கிரகம் பண்ணாமல் இருக்கவில்லையே. அந்த அநுக்கிரகம் பெற்று உண்மையாய்ப் பிரயாசம்

எடுத்தவன் ஒருவனுகிலும் சீர்ப்படுத்தப்படாமல் இருக்கவுமில்லையே. நம்மைச் சீர்ப்படுத்தும்படிக்குப் பிரயாசப்படவேண்டுமென்றும் தீர்மானஞ் செய்தாரே. பிலி 2[12]. ஆதலால் நாம் நம்மைச் சீர்ப்படுத்தும்படிக்கு அவருடைய தீர்மானம் எப்படித் தடையாயிருக்கும்? சரீரத்துக்கேற்றவைகளும் கடவுளுடைய சித்தத்தின்படி நடந்துவருகிறது. ஒருவன் பயிர்செய்கிறவனு யிருக்கவேண்டுமென்றும், ஒருவன் கல்விமானு யிருக்கவேண்டுமென்றும், இவைகளையும் ஆதிமுதற்கொண்டு கடவுள் தீர்மானம்பண்ணினுர். அதினுலே பயிர்செய்கிறவன் இந்த வருஷத்திலே எனக்குப் பலனுண்டாகுமானுல், நான் என் நிலத்திலே உழுது, விதை விதைத்தாலும் விதையாமலிருந்தாலும் பலன் வருமென்று நினைத்துச் சும்மாவிருப்பானு? படிக்கிறவன் நான் கல்விமானுகத் தீர்மானமாக்கப்பட்டிருந்தால், ஜாக்கிரதையாய்ப் படித்தாலும் சும்மாவிருந்தாலும் கல்விமானுகலாமேயென்று நினைத்துச் சும்மாவிருப்பானு? பலனை அடையும்படிக்கும் கல்விமானுகும் படிக்கும் வேண்டிய முயற்சிகளைச் செய்வார்களல்லவா? அதுபோல நாம் சீர்ப்படுத்தப்படும்படிக்கு வேண்டிய ஜெபம் முதலான எத்தனங்களையும் செய்யவேண்டும். அந்த எத்தனங்களை அவரே கட்டளையிட்டார். ஆகையால் அவர் சகலத்தையும் தமது திருச்சித்தத்தின்படி நடத்திக்கொண்டுவருகையில், அந்த எத்தனங்களும் அந்தச் சித்தத்தின்படியே இருக்கிறபடியால் அவைகளை விட்டுவிடக்கூடாதே.

**தேவதூஷணம்.** Blasphemy. தூஷணம் காண்க.

**தேவதூதன்.** Angel. தூதன் காண்க.

**தேவத்துவம்.** Godhead. ரோம 1[20] கொலோ 2[9].

**தேவபக்தி.** Godliness.

வேதாகமத்திலே தேவபக்தி என்பது கடவுளைச் சரியாய் வணங்குகிறதையும் அவருக்குப் பணிவிடை செய்கிறதையும் குறிக்கும். கடவுளைத் தன் முழு இருதயத்தோடும் நம்பி, அவர்மேல் மிக பக்தி உள்ளவன் எப்பொழுதும் அவர் சித்தத்தின்படியே நடக்க விரும்புகிறுன். ஆதி 5[22-24] யோபு 4[6] சங் 12[1] மீகா 6[8] மல்கி 2[15] 1 தீமோ 4[7.8] தீத் 2[12] 1 தீமோ 4[7.8] தீத் 2[12] 1 பேது 1[6].

தேவபக்திக்கு நாலு பிரதானமான லக்ஷணங்கள் உண்டு:

i. மெய் அறிவு. சங் 119[99] 2 கொரி 6[6] கொலோ 2[3] 2 பேது 1[5].

ii. நன்னடக்கை. சங் 15[2] 17[3] ரோம 6[4] 13[13].

iii. வைராக்கியம். 1 இரா 19[10] 1 கொரி 4[12] 2 கொரி 9[2] கலா 4[18] கொலோ 4[13].

iv. பரிசுத்தம். ஏசா 35[8] 2 கொரி 7[1] கலா 5[24] பிலி 4[8] தெச 2[10].

சுகம், கீர்த்தி, நற்சீர், சமாதானம் முதலியவை தேவபக்தியின் பயனுனலும் அது 'ஆதாயத்தொழில்' அல்ல. 1 தீமோ 6[5] 2 தீமோ 3[5] 2 பேது 1[2] 2[6] 3[7.11].

1 தீமோ 1[16]-ல் சொன்ன 'தேவபக்திக்குரிய ரகசியம்' சர்வபக்திக்கும் மூலாதாரமாக இயேசு அருளின போதகத்தைக் குறிக்கும். தேவபயம் காண்க.

**தேவபயம்.** The fear of God.

I. தேவபயம்: நமது கடமை. உபா 10[12] நெகே 5[9] நீதி 14[2] பிர 12[13] அப் 4[19] தேவபயமில்லாமை துர்க்குணத்தைக் குறிக்கும். நீதி 14[2].

II. கடவுள் பயப்படத்தக்கவர். இதற்கு அத்தாக்ஷி:

1. அவர் செய்கைகள். உபா 10[21] யோசு 4[23] பிர 3[14].

2. அவர் மகிமை. உபா 28[58].

3. அவர் சர்வவல்லமை. யோசு 4[24] எரே 5[22].

4. தீமையின்பேரில் அவர் கோபம் லூக் 23[40] எபி 12[28.29].

5. அவர் ராஜாவாயும் பிதாவாயும் இருப்பது. மல் 1[6].

6. அவர் அருளின பாவமன்னிப்பு. சங் 130[4].

III. கடவுள் தமக்குப் பயத்தைக் காட்டுகிறவர்களுக்கு அருளின நன்மைகள்.

1. துன்பத்திலிருந்து இரட்சிப்பு. 2 இரா 17[36] சங் 34[7] 145[19] பிர 7[18].

2. சுகமும் செல்வமும். சங் 25[13] 31[19] 34[9] 111[5] 128[1] நீதி 10[27] 22[4].

3. தீமையிலிருந்து மீட்பு சங் 85[9] மல் 4[2] அப் 13[26].

4. இரக்கம். சங் 103[11.13.17] லூக் 1[50].

5. ஆவிக்குரியவிதமான ஆசீர்வாதங்கள் சங் 31[19] 115[13] நீதி 14[27] பிர 8[12] எரே 32[39.40] வெளி 11[18].

6. கனம்பண்ணுதல். 1 சாமு 2[30] சங் 60[4].

7. பிரியம். சங் $147^{11}$ அப் $10^{35}$.

8. போதகம். சங் $25^{19}$ $111^{10}$ யோபு $28^{28}$ நீதி $9^{10}$.

9. பராமரிப்பு. சங் $33^{18}$.

IV. தேவபயத்தின் பலன்.

1. ஞானம் அடைதல். யோபு $28^{28}$ சங் $111^{10}$ நீதி $9^{10}$.

2. பரிசுத்தக் குலைச்சலைச் செய்யாமை. லேவி $22^{32}$ நெகே $5^{9}$.

3. நல்ல ஊழியம் செய்தல். உபா $6^{13}$ 1 சாமு $12^{24}$ நெகே $5^{15}$ யோசு $24^{14}$.

4. கற்பனையை கைக்கொள்ளல். ஆதி $22^{12}$ உபா $5^{29}$ $6^{2}$ $10^{12}$ $13^{4}$ பிர $12^{13}$ எரே $32^{40}$ 2 கொரி $7^{1}$ எபே $5^{21}$.

5. பாவத்தை நீக்குதல். யாத் $20^{20}$ சங் $4^{4}$ $19^{9}$ நீதி $3^{7}$ $8^{13}$ $14^{16.27}$ $16^{6.16}$.

6. உண்மை. யாத் $18^{21}$.

7. தைரியம். நீதி $14^{2}$ ஏசா $50^{10}$.

V. அதன் உத்தம தன்மை. சங் $34^{11-14}$ நீதி $15^{16}$ நீதி $8^{13}$.

தேவ விசாரிப்பு. Providence. பராமரிப்பு காண்க.

தேவனுடைய இராஜ்யம். The Kingdom of God. இராஜ்யம் காண்க.

தேவன். God. கடவுள் காண்க.

தேவாராதனே. Worship. ஆராதனே, கீதம் காண்க.

தேவாலயம். Temple.

பொருள் அடக்கம்.

I. சீலோவிலுள்ள தேவாலயம்.
II. சாலொமோனின் தேவாலயம்.
III. எசேக்கியேலின் தேவாலயம்.
IV. செருபாபேலின் தேவாலயம்.
V. ஏரோதுவின் தேவாலயம்.
VI. வேறு இரண்டு தேவாலயங்கள்.

## தேவாலயம் Temple.

### I. சீலோவிலுள்ள தேவாலயம்.

இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வந்த பிறகு ஆசரிப்புக்கூடாரத்தில்மாத்திரம் யேகோவாவை வணங்கிவந்தார்கள் என்று சாதாரணமாய்ச் சொல்லுகிறோம். அவர்கள் வனாந்தரத்திலும் கானான்தேசத்திலும் இருந்தபோது யேகோவாவை ஆசரிப்புக்கூடாரத்திலே வணங்கினார்கள் என்பது மெய்யாயினும் சாலொமோன் யேகோவாவுக்குத் தேவாலயத்தைக் கட்டுமுன் இஸ்ரவேலர் ஆசரிப்புக் கூடாரத்தைத்தவிர வேறு சில ஸ்தலங்களிலே ஆராதனை நடத்தினார்கள் என்பதற்கு அத்தாட்சி உண்டு. கடவுள் தரிசனத்திலே நாத்தான் தீர்க்கதரிசியின்மூலமாய்த் தாவீதுக்கு ‘இந்நாள்வரைக்கும் நான் ஒரு ஆலயத்திலே வாசம்பண்ணுமல் ஒரு கூடாரத்திலிருந்து மறுகூடாரத்திற்கும், ஒரு வாசஸ்தலத்திலிருந்து மறுவாசஸ்தலத்திற்கும் போனேன்’ என்றதினாலே, இஸ்ரவேலர் பல இடங்களில் கடவுளுக்காகக் கூடாரங்களையும் ஆலயங்களையும் பிரதிஷ்டை செய்திருந்தார்கள் என்று அறிகிறோம். 1 சாமு $1^{9}$ 1 நாளா $17^{5}$. அவர்கள் கானான்தேசத்தில் பிரவேசித்தபிறகு சீலோவிலே ஆசரிப்புக்கூடாரத்தை நாட்டியிருக்கலாம். மேலும் பெலிஸ்தருக்கும் இஸ்ரவேலருக்கும் சண்டை உண்டாயிருந்தகாலத்தில் தேவனுடைய பெட்டி சீலோவிலேவைக்கப்பட்டிருந்ததினால் சாமுவேலின் இளம்பிராயகாலத்தில் சீலோ மற்ற ஸ்தலங்களைவிட முக்கியஸ்தலமாய் இருந்தது என்று சொல்லவேண்டும். பெலிஸ்தர் தேவனுடைய பெட்டியைப் பிடித்துக்கொண்டபொழுது சீலோவிலுள்ள கூடாரத்தை அழித்துப்போட்டார்கள். 1 சாமு $1^{3}$ $4^{11}$. பெலிஸ்தர் தேவனுடைய பெட்டியைத் திரும்ப அனுப்பினபோது அது கீரியாத் யாரீம் என்னும் ஊரிலே வைக்கப்பட்டதினாலே, அது இருந்த வீடு ஒருவித தேவஸ்தலமாய் இருக்கலாம் என்று நினைக்கவேண்டும். 1 சாமு $7^{2}$. சீலோவிலே ஏலியும் அவனுடைய புத்திரரும் ஆராதனையை நடத்திவந்தார்கள். சீலோ அழிந்துபோனபிறகு இவர்கள் நோபிலே இருந்தார்கள். 1 சாமு $21^{1}$. நோபிலிருந்த தேவஸ்தலத்தில் இஸ்ரவேலர் பிந்தினகாலங்களில் ஆராதனையை நடத்திவந்தாலும், தாவீதுராஜா சீயோன் என்னும் எருசலேமையும் அதன் கோட்டையையும் எபூசியரிடத்திலிருந்துபிடித்து அதைத்தனக்கு முக்கிய பட்டணமாய் ஏற்படுத்தி சீயோனிலே தேவனுடையபெட்டியை வைத்தபிறகு அந்தஸ்தலம் அந்நாள்முதல் எபிரெயர்களுக்கு முக்கிய தேவஸ்தலம் ஆயிற்று. 2 சாமு $6^{12}$ $15^{29}$. எருசலேமில் கட்டப்பட்ட தேவாலயங்கள் மூன்று:

1. சாலொமோன் கட்டின தேவாலயம்.

2. செருபாபேல் கட்டின தேவாலயம்.

3. பெரிய ஏரோது கட்டின தேவாலயம்.

4. இவற்றோடு தரிசனத்தில் எசேக்கியேல் கண்ட தேவாலயத்தையும் சேர்க்கலாம்.

இந்த தேவாலயங்கள் ஒரே இடத்தில் தான் நின்றன. எருசலேம் நகரத்தின் படத்தை நாம் பார்த்தால், அதன் கிழக்குப்பாகத்

தில் மற்ற பாகங்களைவிடக் கொஞ்சம் உயரமான ஒரு மலை இருக்கிறது. இம்மலைக்குள்ள இரண்டு பங்குகளில் தென்பங்குக்கு ஓபேல் என்றும் வடபங்குக்கு மோரியா என்றும் பெயர். ஓபேல் மலை நெருக்கமாயும் கோணலாயும் இருக்கிறது. மோரியா மலையின்மேல் ஒரு நல்ல மைதானம இருக்கிறது இந்த மைதானத்திலேதான் தேவாலயம கட்டப்பட்டிருந்தது. இந்த மைதானததிலே தேவாலயத்தின் அஸ்திபாரங்கள் இருககிற சில எல்லைகளைபபற்றி வேதசாஸ்திரிகளுக்குள்ளே அபிபபிராயபேதம இருநதாலும, இபபொழுது மகமதியருடைய பெரிய மசூதி இந்த அஸ்திபார°தின்மேல்தான் இருக்கிறது. தாவீது அரசன் காலததில இஙகே அர்வனாவின களம இருநதது. 2 சாமு 24[16] 1 நாளா 21[1]

## II. சாலொமோனின் தேவாலயம்.

1 சாலொமோன்கட்டிய தேவாலயத்தின் விபரம் வேதாகமத்தில் எழுதியிருக்கிறது. இதை வாசிக்கும்போது, அந்தத் தேவாலயத்தைககுறித்து நன்றாய் அறியக்கூடும். 1 இரா 6[1-38] 7[13-51]. ஆனால் அந்த விபரங்களை எழுதின சரித்திரக்காரர், அதிலுள்ள அலங்கார வஸ்துக்களைக் குறிக்குமபடி நமக்கும் எபிரெய சாஸ்திரிகளுககுந் தெரியாத பல பதங்களைச் சொல்லியிருக்கிறதினாலே, அந்த அதிகாரஙகளில் எழுதின சில விஷயஙகளை அறிவது கஷ்டம

1 சாலொமோன்கட்டின தேவாலயம் உள்ளளவில 60 முழ நீளமும 20 முழ அகலமுமாய கிழககுநோககி நின்றது. அதின் முன்பககததில 10 முழ நீளமான ஒரு மண




ஏரோதின தேவாலயம

A. மகா பரிசுதத ஸ்தலம்.
B. பரிசுதத ஸ்தலம்.
C. தகன பலிபீடம்.
D. வெணகலத் தொட்டி.
E. ஆசாரியர்கள் பிராகாரம்.
F. இஸ்ரவேலின் பிராகாரம்.
G. நிகானோர் வாசல்.
H ஸதரீகளின பிராகாரம.
I. அலஙகார வாசல.
J அநநியர்களின் பிராகாரம்.
K ஆசான் மணடபம்.
M. ராஜய மணடபம்.
N. மதில.
O. அறைகள்.

டபம் இருந்தது. உள்ளே ஆசரிப்புக்கூடா ரத்தைப்போல 60 முழமான இந்த ஆலயம் இரண்டு அறைகளாகப் பிரிக்கப்பட்டிருந் தது. முதலாவது 40 முழ நீளமான பரி சுத்தஸ்தலமும் அதற்கப்பால் 20 முழ சந் நிதிஸ்தானம் என்னும் மகா பரிசுத்தஸ்தல மும் இருந்தது. இந்த சந்நிதிஸ்தானம் 20 முழ நீளமும் 20 முழ அகலமும் 20 முழ உயரமுமாயிருந்தது. பரிசுத்தஸ்தலத்தின் உயரம் 30 முழம். 1 இரா 6[2-20]. மண்டபம் நின்ற முன்பக்கத்தைத் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் மூன்றடுக்குமெத்தை அறை கள் கட்டப்பட்டிருந்தன. இவைகளுக்குள் பிரவேசிக்கும்படி தென்பக்கத்தில் ஒரு வா சல் இருந்தது. தேவாலயத்தின் சுவர் அடி யில் அதிகக் கனமாயும் மேலே லேசாயும் இருந்ததினாலே, கீழே இருக்கிற அறைகள் 5 முழ அகலமும், இரண்டாம் அடுக்கில் உள்ள அறைகள் 6 முழ அகலமும், மூன் றும் அடுக்கிலுள்ள அறைகள் 7 முழ அகலமு மாய் இருந்தன. இந்த ஆலயத்துக்குச் சன னல்களும் பலகணிகளும் இருந்தாலும், அவைகள் இருந்த மாதிரியும் இடமும் திட்ட மாய்ச் சொல்லமுடியாது. 1 இரா 6[4]. மேல் அறைகளுக்குப் போகிறதற்குச் சுழற்படிகள் இருந்தன. 1 இரா 6[8].

2. இதின் உட்புறம்.

கிழக்குமுகம் பார்த்த மண்டபத்தின் மூல மாய் ஒரு வாசலுக்கு வந்து அந்த வாச லின் மூலமாய் பரிசுத்தஸ்தலத்துக்குள் பிர வேசிக்கவேண்டும். அந்த வாசலுக்கு மரத் தினால் செய்த பெரிய இரட்டைக்கதவு விசித்திரவேலை செய்யப்பட்டுப் பொன் தகடு அடிக்கப்பெற்றதாய் இருந்தது 1 இரா 6[34]. பரிசுத்தஸ்தலத்தில் தரைவரிசையின் மேல் கல்பாவி அதற்குமேல் தேவதாரு மரப் பலகை போட்டு, அதற்குமேல் பொன்தகட் டால் மூடியிருந்தது. பரிசுத்தஸ்தலத்தின் சுவரையும் சந்நிதிஸ்தானத்தின் சுவரையும் கேதுருமரப் பலகையினாலும், இப்பலகை களைப் பொன்தகட்டாலும மூடிவைத்திருந் ததினால், அந்தக் கல்சுவரைக் காணமுடியாது. சந்நிதி ஸ்தானத்துக்கும் பரிசுத்தஸ்தலத்துக் கும் மத்தியில் ஒரு சுவர் இருக்கவேண்டும். அதில் ஒலிவமரத்தினால் செய்யப்பட்ட ஒரு கதவு இருந்தது இந்த சந்நிதிஸ்தானத்தின் மத்தியில் ஒலிவமரத்தினால் செய்யப்பட்ட இரண்டு கேருபீன்கள் நின்றன. 10 முழ உயரமான இவைகளின் சிறகுகள் 10 முழம் பரவின. இவற்றின் நிழலிலே தேவனு டைய பெட்டி இருந்தது. 1 இரா 6[23] 2 நாளா 3[13]. இதற்குள்ளிருந்த எந்த வஸ்து வும் பொன்தகட்டால் மூடப்பட்டிருந்தது

N.B.—வேதசாஸ்திரிகளில் சிலர் தே வாலயத்திலுள்ள இத்தனை வஸ்துக்களை மூடுகிறதற்கு வேண்டிய அளவு பொன் அக்காலத்தில் இஸ்ரவேலரிடத்தில் இருப்பது கூடாதகாரியம் என்று தீர் மானித்து, ராஜாக்களின் புஸ்தகத்தை எழுதின வேதபாரகர் சாலொமோனின் ஆலயத்தைச் சிறப்பித்துக் கூறும்படி இத்தனை வசனங்களில் பசும்பொன் னைபற்றிப் பேசுகிறார்கள் என்று அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள். இது எப்படியாயினும் சாலொமோன் தன்னால் இயன்றமட்டும் பொன்னினா லே தேவாலயத்தை அலங்கரிக்க விரும் பினான் என்பது தெளிவாய் விளங்கும்.




தெற்கிலிருந்து தேவாலயத்தின் பக்கம்.

n. n. தென் மதில்.
a. சீயோன் மலை.
b. சீயோன் மலைக்கும் தேவாலயத்துக்கும் இடையி லுள்ள பாலம்.
o. p. y. வாசல்.
s. ஓபேல் கோபுரம்.
m. கீதரோன் ஆற்றின்மேல் போகும் பாலம்.
k. சாலொமோன் மண்டபம்.
c. மண்டபம்.
d. சுவர்.
e. மதில.
f. தேவாலயம்.
g. பலிபீடம்.
h. மண்டபம்.
i. நிகானோர் வாசல்.
j. அலங்கார வாசல்.

3. உட்புறத்திலுள்ள பணிமுட்டுகள்.

சன்னிதி ஸ்தானத்தில் கேருபீன்களும் தேவனுடைய பெட்டியும் இருந்தன. எபிரெயருடைய பாரம்பரியத்தின்படி, பூர்வகாலத்திலே இந்த தேவ பெட்டிக்குள்ளே பத்துக்கற்பனைப் பலகையும் ஆரோனுடைய துளிர்த்தகோலும் மன்னா வைக்கப்பட்ட பொன்பாத்திரம் ஒன்றும் இருந்தன. இவைகள் ஆசரிப்புக் கூடாரத்தில் இருந்திருக்கலாமாயினும், சாலொமோனின் தேவாலயத்துக்கு இவைகளைக் கொண்டுவந்தார்கள் என்பதற்கு அத்தாட்சி இல்லை. பரிசுத்தஸ்தலத்துக்குள்ளே சந்நிதிஸ்தானத்தின் வாசலுக்கு முன்பாக தேவசமுகத்து அப்பம் வைக்கிறதற்கு கேதுருமரத்தினால் செய்யப்பட்டதும் பலிபீடம் போன்றதுமான ஒருமேஜை இருந்தது. பிந்தினகாலங்களில் இந்த மேஜையும் தூபபீடமும் வேறாய் இருந்தாலும், இந்தக் காலத்தில் இவை ஒன்றுதான் என்று தோன்றுகிறது. இவைகளைத்தவிர விளக்குத்தண்டுகள், கத்தரிக்கோல்கள், கிண்ணங்கள், தூபகலசங்கள் முதலியவைகளும் இருந்தன. 1 இரா $6^{23}7^{49}$ எரே $52^{19}$. இந்த சமுகத்தப்பத்து மேஜையின் வலதுபுறத்தில் 5 விளக்குத்தண்டுகளும், இடதுபுறத்தில் 5 விளக்குத்தண்டுகளும் நின்றன. மோசே செய்த வெண்கலச்சர்ப்பம் தேவாலயத்தில் இருந்த இடம் நமக்குத் தெரியாது. 2 இரா $18^{4}$.

4. தேவாலயத்தின் பிராகாரங்கள்.

சாலொமோன் கட்டின தேவாலயமும் ராஜாவின் மாளிகையும் சிம்மாசன மண்டபமும் லீபனோன் மாளிகையும் இன்னும் சில கட்டடங்களும் மோரியா மலையின்மேலுள்ள சமதரையில் இருந்தன. இவைகளைச் சுற்றியிருந்த பெரிய பிராகாரத்தில் ஜனங்கள் யாவரும் உலாவிவரலாம். 1 இரா $7^{9}$. தேவாலயத்தைச் சுற்றியிருக்கிற இடம் ஒரு சுவரினால் அந்தப்பெரியபிராகாரத்திலிருந்து பிரிக்கப்பட்டது. இந்தச் சுவருக்கும் தேவாலயத்துக்கும் இடையிலிருந்த முற்றத்துக்கு 'உட்பிராகாரம்' என்று பெயர். 1 இரா $6^{36}$ $7^{12}$. இதற்குள்ளே தேவாலயம் நின்றது. ஆனால் ஜனங்கள் எப்படி பெரிய பிராகாரத்தில் பிரவேசிக்கலாமோ அப்படியே 'உட்பிராகாரத்திலும்' பிரவேசிக்கலாம் என்று தோன்றுகிறது. 1 இரா $8^{63}$ எரே $35^{1}$ $36^{10}$. இந்த விஷயத்தை நாம் கவனிக்கவேண்டும். ஏனென்றால் இதிலே சாலொமோன் கட்டின தேவாலயத்து ஆசாரத்துக்கும் மற்ற தேவாலயங்களின் ஆசாரத்துக்கும் உள்ள வித்தியாசம் காணப்படுகிறது. இந்த உட்பிராகாரத்துக்குள் ராஜா உட்பிரவேசிக்கும் மண்டபமும் காவலாளர் வாசல் பென்யமீன் வாசல்முதலிய வாசல்களும் இருந்தன. இவைகள் இருந்த திசைகள் எல்லாம் நம்மாலே சொல்வது அரிது. 2 இரா $11^{19}16^{18}$ 1 நாளா $9^{18}$ எரே $20^{2}$. இந்தப் பிராகாரத்தில் தேவாலயத்திற்குமுன் நிற்கிற மண்டபத்துக்கு நேர் முன்னே வெண்கல தகன பலிபீடம் இருந்தது. இதின் நீளமும் அகலமும் 20 முழம், உயரம் 10 முழம். 1 இரா $9^{25}$ 2 நாளா $4^{1}$. ஆகாஸ் ராஜா இந்த வெண்கல பலிபீடத்துக்குப் பதிலாக தான் தமஸ்குவிலே கண்ட பெரிய பலிபீடத்தைப்போல இன்னொரு அலங்காரமான பலிபீடத்தைச் செய்துவைத்தான். 2 இரா $16^{10}$. பலிபீடத்துக்கும் தேவாலயத்துக்கும் ஒரு நேர்கோடு வரைந்தால் அதற்குச் சற்று தெற்கே வெண்கலக்கடல் என்ற தொட்டி நின்றது. 1 இரா $7^{39}$. இத்தொட்டி வட்டவடிவாயும் 10 முழ குறுக்களவும் 5 முழ ஆழமும் உடையதாயும் இருந்தது. வெண்கலத்தினால் செய்யப்பட்ட இத்தொட்டி பன்னிரண்டு வெண்கல எருதுகளின்மேல் நின்றது. இந்த எருதுகளில் மூன்று வடக்கையும் மூன்று தெற்கையும் மூன்று கிழக்கையும் மூன்று மேற்கையும் நோக்கி நின்றன. பெரிய வெண்கலத்தொட்டியைத்தவிர, தமிழ் வேதாகமத்தில் 'வெண்கலக் கொப்பரைகள்' என்று சொல்லப்பட்ட தொட்டிகளும் இருந்தன. இவைகளைக் கொண்டுபோகவேண்டிய இடங்களுக்கு லேசாய்க் கொண்டுபோகும்படி இவற்றின் ஆதாரங்களுக்குச் சக்கரங்களைப்போன்ற உருளைகள் இருந்தன. மண்டபத்துக்குமுன் யாக்கீம் போவாஸ் என்னும் பெரிய வெண்கலத்தூண்கள் இருந்தன. (தூண் காண்க.)






ஏழு கிளைகளுள்ள குத்துவிளக்கு.

சாலொமோனுக்கு கட்டடவேலையில் உதவிசெய்யும்படி தீரு ராஜாவாகிய ஈராம் அனுப்பிய ஈராம் சிற்பாசாரி மகா உதவி புரிந்தான். இவனுடைய தாயார் நப்தலிக்

கோத்திரத்தாளானாலும், இவனுடைய தகப்பன் அக்காலத்தில் நாகரீகத்தில் மேன்மையடைந்திருந்த தீருப்பட்டணத்தைச் சேர்ந்தவன். இதினாலே அந்நியதேவர்களை வணங்



சமுக அப்பத்தின் மேசை.

கும் மார்க்கத்துக்கும் அக்காலத்திலுள்ள மெய் தேவனாகிய யேகோவாவைத் தொழுதுகொள்ளும் மார்க்கத்துக்கும் அவ்வளவு விரோதம் இல்லை என்று தோன்றுகிறது.

5. இதின் சரித்திரம்.

சாலொமோன் தேவாலயத்தைக் கட்ட ஏழு வருஷம் சென்றது. 1 இரா $6^{37}$. அது 33 வருஷக்காலம் பழுதில்லாமல் நின்ற பிறகு எகிப்து ராஜாவாகிய சீஷாக்கு அதைக் கொள்ளையடித்தான். 1 இரா $14^{25}$ 2 இரா $12^{9}$. சில சமயங்களில் யூதராஜாக்கள் தங்கள் தேசத்துக்கு விரோதமாய் வருகிற அந்நிய ராஜாக்களைச் சமாதானப்படுத்தும்படி தேவாலயத்திலுள்ள பொன்தகடு முதலிய பொக்கிஷங்களை எடுத்துக் கொடுத்திருப்பார்கள். 1 இரா $15^{18}$ 2 இரா $12^{18}$ $16^{8}$ $18^{15}$ $23^{35}$.

இந்த தேவாலயம் 350 வருஷம் நின்ற பிறகு நேபுகாத்நேச்சார் கி—மு. 586—ல் அதை முற்றிலும் அழித்துப்போட்டான். அந்த மூன்றரை நூற்றாண்டுகளில் இஸ்ரவேலருடைய ஆசாரவழக்கத்தில்வந்த வித்தியாசம் இருவிதமானது. அவர்கள் யேகோவா ஒருவரே கடவுள் என்றும் அவரைப் பல தேவஸ்தலங்களில் அல்ல எருசலேமில்மாத்திரம் தொழுதுகொள்ளவேண்டும் என்றும் நம்பினார்கள்.

## III. எசேக்கியேலின் தேவாலயம்.

எசேக்கியேல் தீர்க்கதரிசி தரிசனத்திலே கண்ட தேவாலயத்தைக்குறித்து வேதாகமத்திலே விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. எசே 40—43 அதி. இந்தத் தேவாலயம் தரிசனத்திலேமாத்திரம் காணப்பட்டதாயினும், எசேக்கியேல் தீர்க்கதரிசிதான் கண்ட இந்தத் தரிசனத்தின்மூலமாய் யூதர்கள் தேவாலயத்தைக் குறித்து கவனிக்க வேண்டிய விசேஷித்த போதனையை அவர்களுக்குத் தெரிவித்தான். அதாவது தேவாலயம் பரிசுத்த நகரத்தில் உள்ள பரிசுத்த மலையின்மேல் நிற்கும் பரிசுத்த ஸ்தலமாயிருக்கவேண்டும். அதைப் பரிசுத்தக் குலைச்சலாக்கும் காரியங்கள் கொஞ்சித்தேனும் இராதபடி பலவித எச்சரிப்புகள் கூறப்பட்டிருக்கிறது. அந்நிய தேவர்களை வணங்கினவர்களில் ஒருவனும் அதனுள் செல்லக்கூடாது. தேவாலயத்தைச் சுற்றிலும் ஆசாரியர்களைத்தவிர வேறொருவரும் பிரவேசிக்கக்கூடாத பிராகாரத்தை அவன் தன் தரிசனத்திலே கண்டதினால் பிற்காலத்தில் ஏரோதின் தேவாலயத்தில் இருந்த ஆசாரியர்களுடைய பிராகாரத்துக்கு இந்தத் தரிசன ஆலயப் பிராகாரம் முன்மாதிரியாய் இருந்தது. இந்தத் தீர்க்கதரிசி யேகோவாவினுடைய பரிசுத்தத்தைக்குறித்து அடைந்த அறிவே இவை யாவற்றிற்கும் காரணம்.

## IV. செருபாபேலின் தேவாலயம்.

பாபிலோன் தேசத்துச் சிறையிருப்பிலிருந்து கி—மு. 537—ல் கோரேஸ் சக்கரவர்த்தியின் உத்தரவின்படி எபிரெயர்களில் சிலர் செருபாபேலோடு திரும்பிவரும்போது அவர்கள் தேவாலயத்தை மறுபடியும் கட்டும்படி தொடங்கினார்கள். ஆனால், அவர்கள் சில பெயர்மாத்திரமானதினாலும், அந்த ஊழியம் அதிகக் கஷ்டமானதினாலும், கி—மு. 520—ல் ஆகாய் சகரியா என்னும் தீர்க்கதரிசிகள் அந்த விஷயத்தில் அவர்களை ஏவுங்காலமட்டும் தாமதம் பண்ணினார்கள். அந்தத் தீர்க்கதரிசிகள்செய்த உதவியினால் கி-மு. 516—ல் அந்தத் தேவாலயம் கட்டப்பட்



தூபபீட

டது. இதைப்பற்றி வேதாகமத்திலே விபரம் இல்லை. ஆனால் அவர்கள் தங்களால் கூடியமட்டும் சாலொமோனின் தேவாலயத்தைப்போலவே இதையும் கட்டப் பிரயாசப்பட்டிருப்பார்கள் என்று நினைக்கவேண்டும்.

இந்தத் தேவாலயத்திலே தேவனுடைய பெட்டி இல்லாததினால், சந்நிதிஸ்தானம் வெறுமையாயிருந்தது. மேலும் இதிலே பரிசுத்த ஸ்தலத்துக்கும் சந்நிதிஸ்தானத்துக்கும் இடையிலுள்ள சுவருக்குப் பதிலாகத் திரைச்சீலைமாத்திரம் இருந்தது. இந்தத் தேவாலயத்துக்கு இரண்டு உட்பிராகாரங்கள் இருந்தன. புறத்திலிருக்கிற பிராகாரத்தில் ஜனங்கள் யாவரும் தடையின்றி வரலாம். தேவாலயத்தைச் சுற்றி இருக்கும் உட்பிராகாரத்துக்குள்ளே ஆசாரியர்களும் லேவியர்களும்மாத்திரம் பிரவேசிக்கலாம். இந்தத் தேவாலயத்திலும் தகனபலிபீடம் வெண்கலத்தினாலே அல்ல கற்களினாலே செய்யப்பட்டிருந்தது. சீரியாராஜாவாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் கி–மு. 168–ல் எருசலேமைப் பிடித்து தேவாலயத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கி, அதன் பலிபீடத்தின்மேல் தனது தேவர்களுக்குப் பலியிட்டதினாலே, மக்கபேயர் அவனைத் துரத்திவிட்டுத் தங்கள் தேசத்தை மீட்டபிறகு புதிய தூபவர்க்கபீடம் தேவசமுகத்து அப்பமேஜை விளக்குத்தண்டு முதலிய பணிமுட்டுகளைச் செய்தார்கள். இந்தத் தேவாலயம் ஏரோதின் காலமட்டும் ஏறக்குறைய நானூறு வருஷமாக நின்றது.

## V. ஏரோதுராஜாவின் தேவாலயம்.

### 1. காலம்.

தேவாலயத்தை மறுபடியும் கட்டும்படி யூதர்களிடத்திலிருந்து உத்தரவு பெறுகிறதற்குப் பெரிய ஏரோது பலகாலம் முயற்சிபண்ணி கி–மு. 20–ல் அதற்கு உத்தரவு பெற்று வேலையை ஆரம்பித்தான். ஆசாரியர்களும் லேவியர்களும் ஆயிரம்பெயர் கல் தச்சவேலையைக் கற்றுக்கொண்டு ஒன்றரை வருஷத்துக்குள்ளே பரிசுத்த ஸ்தலத்தையும் சந்நிதிஸ்தானத்தையும் திரும்பக் கட்டினார்கள். மற்ற பாகங்களை முடிக்கிறதற்குப் பல வருஷங்கள் சென்றன. இயேசுகிறிஸ்துவின் காலத்திலும் அவை முடிவுபெறவில்லை. மத் 24[1]. மேலும் ரோமசேனாபதியாகிய தீத்து கி–பி. 70–ல் எருசலேமையும் தேவாலயத்தையும் முற்றிலும் அழிக்கிறதற்கு ஆறு ஏழு வருஷங்கள் இருக்கும்போதுதான் அந்த வேலை அனைத்தும் முடிவுபெற்றன.

### 2. அது நின்றும் இடத்தின் அளவு.

ஏரோதுராஜா மோரியாமலையின் சாரலிலே மகா கனமான கற்களினாலே அஸ்திபாரங்களை வேண்டியமட்டும் கட்டி அப்புறம் அவைகளுக்குள்ளே மணல் அடக்கி அந்த மலைமேலிருக்கிற மைதானத்தை அகலமாக்கினான். இவ்விதமாய்த் தேவாலயம் இருக்கும் இடம் வடக்கிலிருந்து தெற்குமட்டும் 400 கெஜமும் கிழக்கிலிருந்து மேற்குமட்டும் ஏறக்குறைய 340 கெஜமுமாய் இருந்தது.



தகனபலிபீட

### 3. மண்டபங்கள்.

இந்தப் பெரிய மைதானத்தைச் சுற்றி ஏரோதுராஜா நேர்த்தியான மண்டபங்களைக் கட்டினான். கிழக்குப்பக்கத்து மண்டபத்துக்குச் 'சாலொமோனின் மண்டபம்' என்றும் தெற்குமண்டபத்துக்கு 'ராஜமண்டபம்' என்றும் பெயர். யோவா 10[23] அப் 3[11] 5[12]. இந்த மண்டபங்களில் யூதர்கள் வழக்கமாய் உலாவிக்கொண்டிருப்பார்கள்.

### 4. புறஜாதியாருடைய பிராகாரம்.

இந்தப் பெரிய மண்டபங்களுக்குள்ளே இருக்கிற பிராகாரத்துக்குப் 'புறஜாதியாருடைய பிராகாரம்' என்று பெயர். இதிலே யூதரும் அந்நிய ஜாதியாரும் தடையின்றிப் பிரவேசிக்கலாம். எபிரெயர்கள் அச்சிட்ட பரிசுத்த பணம்மாத்திரம் தேவாலயத்திலே செல்லுமாகையால் அந்நியதேசத்திலிருந்து வந்தவர்கள் தங்கள் பணத்தை மாற்றும்படி இந்தப் பிராகாரத்தில் காசுக்காரர் இருப்பார்கள். பலிசெலுத்த விரும்புகிறவர்கள் இங்கேதான் சந்தையில் வாங்குகிறதுபோல ஆடுமாடு புறா முதலியவைகளை வாங்குவார்கள். மத் 21[13]. இந்த வியாபாரங்களினால் ஆசாரியர்களுக்கு அதிகலாபம் இருந்தது. இந்தப் பிராகாரத்துக்குள்ளே இருந்த ஒரு சிறு சுவர் யூதர்கள்மாத்திரம் பிரவேசிக்கும் உட்பிராகாரத்தைப் பெரிய பிராகாரத்திலிருந்து பிரித்தது. இந்தச் சுவருக்கு சோரேக் (*Soreg*) என்று பெயர்.

### 5. தேவாலயத்து மதில்.

தேவாலயம் நின்ற சமதரையைச் சூழ ஒரு பெரிய மதில் இருந்தது. இந்த மதிலின் மேல் சில கோபுரங்கள் இருந்தன. கிழக்கு மதில் இம்னேன் என்னும் செங்குத்தான

பள்ளத்தாக்குக்கு மேலே இருந்ததினாலே அதின்மேல் கட்டப்பட்ட உப்பரிகைகளிலிருந்து விழுவது மரணந்தான். மத் 4[5].

இந்த மதிலுக்குச் சில வாசல்கள் இருந்தன. தேவாலயம் இருக்கும் சமதரையிலிருந்து அந்தோனியா என்னும் ரோமருடைய மகா கோட்டைக்குப் போகும் படிகள் வடமேற்கு மூலையில் இருந்தன. மேற்குப்பக்கத்து மதிலில் தேவாலயத்திலிருந்து எருசலேமுக்குள் கோடாகோடி ஜனங்கள் குடியேறின ஆக்ரா என்ற பாகத்துக்கு ஒரு பள்ளத்தாக்கின்மேல் போட்டிருந்த ஒரு பாலத்தின்மேல் ஓர் வழியிருந்தது. தென்பக்கத்தில் 'உல்தாள் வாசல்கள்' என்னும் இரண்டு விசேஷித்த வாசல்கள் இருந்தன. இவைகளைத்தவிர எருசலேம் பட்டணத்திலுள்ள பள்ளமான சில இடங்களிலிருந்து அந்த அஸ்திபாரத்தின் மூலமாய் அப்பெரிய பிராகாரத்துக்குள் பிரவேசிக்கும் சில சுரங்கவழிகளும் இருந்தன. யூதர்கள் புறஜாதியாரின் பிராகாரத்திலிருந்து சோரேக் என்னும் சிறு சுவரைக் கடந்து சில படிகள்வழியாய் தேவாலயம் இருக்கும் சமதரைக்கு ஏறிச்செல்வார்கள். இந்த இடத்தைச்சுற்றிலும் இருந்த பெரிய மதில் அதிக கனமானதால், இது தேவாலயத்துக்கு லேசாய் ஒரு கோட்டையைப்போல் இருக்கலாம். இந்த மதிலில் வடபக்கத்தில் நாலு வாசல்களும் தென்பக்கத்தில் நாலு வாசல்களும் கிழக்குப்பக்கத்தில் ஒரு வாசலுமாக ஒன்பது வாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலுக்கும் மேலே ஒரு காவற்கோபுரம் இருந்தது. கிழக்குப் பக்கத்திலிருந்த வாசல் முழுவதும் வெண்கலமானதிலே, பார்வைக்கு அது மகா மேன்மையாகத் தோன்றும். இந்த வெண்கலம் கொரிந்துப்பட்டணத்திலிருந்து வந்ததினாலே இதற்குக் 'கொரிந்துவாசல்' என்றும், அலக்சாந்திரியாப் பட்டணத்திலுள்ள நிக்கானோர் என்னும் யூதன் இதைக் கட்டினதினாலே, 'நிக்கானோர் வாசல்' என்றும் அலங்காரமாய் இருந்ததினாலே 'அலங்காரவாசல்' என்றும் இதற்குப்பெயர். அப் 3[2]. ஒவ்வொரு வாசலின் கதவுகளும் இருபதுமுழ உயரமும் பத்துமுழ அகலமுமாய் இருந்தன.

6. ஸ்திரீகளின் பிராகாரம்.

வழக்கமாய் யூதர்கள் அலங்காரவாசல் மூலமாய்த் தேவாலயம் இருக்கும் முற்றத்தில் பிரவேசித்து முதலாவது ஸ்திரீகளின் பிராகாரத்துக்குள் வருவார்கள். இந்தப் பிராகாரம்மட்டும் ஸ்திரீகள் வரலாம். இதில் அவர்களுக்காக வடபக்கத்திலும் கிழக்குப்பக்கத்திலும் தென்பக்கத்திலும் படிகள் மூலமாய் ஏறிச்செல்லவேண்டியபடிமேடைகள் இருக்கும். தேவாலயத்தில் ஆராதனை நடக்கும்போது ஜனங்கள் ஸ்திரீகளின் பிராகாரத்தில் நிற்பார்கள். லூக் 1[10].

இந்த ஸ்திரீகளின் பிராகாரத்தில் பதின்மூன்று காணிக்கைப் பெட்டிகள் இருந்தன. மாற் 12[42]. காணிக்கைப் பெட்டிகள் காண்க.

7. இஸ்ரவேல் புருஷரின் பிராகாரம்.

ஸ்திரீகளின் பிராகாரத்துக்கும் இதைவிட உயரமான சமதரையாயிருந்த இன்னொரு பிராகாரத்துக்கும் இடையில் ஒரு பெரிய சுவர் மேற்குப்பக்கத்தில் இருந்தது. ஐம்பது முழ உயரமான ஒரு வாசல்மூலமாய் இந்த உயர்ந்த பிராகாரத்துக்கு இஸ்ரவேலரான புருஷர்கள் மாத்திரம் பிரவேசிக்கலாம். இந்த வாசலுக்கு மேல்வாசல் என்று பெயர். இது 50 முழ உயரமும் 40 முழ அகலமுமாய் இருந்ததினாலே, ஸ்திரீகளின் பிராகாரத்தில் ஆராதனைசெய்ய நிற்கிறவர்கள் ஆசாரியர்கள் பலிபீடத்தின்மேல் நடத்தும் ஆராதனையை எல்லாம் இந்த வாசலின் மூலமாய்ப் பார்க்கலாம். இஸ்ரவேல் புருஷரின் பிராகாரம் தேவாலயம் நிற்கும் சமதரையின் வடக்குக் கிழக்குத் தெற்குத்திசைகளில் இருந்தது. இதற்கு வடக்கிலும் தெற்கிலும் தேவாலயப் பணிமுட்டுகளுக்காக சில அறைகள் கட்டப்பட்டிருந்தன. இந்தப் பிராகாரத்துக்குள்ளே தேவாலயம் இருக்கும் ஸ்தலம் இருந்தது.

8. ஆசாரியர்களின் பிராகாரம்.

தேவாலயத்தின் சுவர்களைச் சேர்ந்த இடத்திற்கு ஆசாரியர்களின் பிராகாரம் என்று பேர். இதையும் இஸ்ரவேல் புருஷரின் பிராகாரத்தையும் பிரிக்கும்படி ஒரு சுவர் இருந்ததோ இல்லையோ என்பது சந்தேகம். இது எப்படியாயினும், ஆசாரியர்களின் பிராகாரத்தின் எல்லைக்குள்ளே ஆசாரியர்கள்மாத்திரமே பிரவேசிக்க முடியும். இந்த ஆசாரியர்களின் பிராகாரத்தில் தேவாலயம் நின்றது.

9. தேவாலயம்.

பெரிய ஏரோது கட்டின இந்தத் தேவாலயம் சாலொமோனின் தேவாலயத்தைப் போல் இருந்தது. ஆனாலும் இது அதைப் பார்க்கிலும் கொஞ்சம் உயரமாய் இருந்ததாகவும், முழுவதும் வெள்ளைக் கல்லினாலும் பசும் பொன்னினாலும் கட்டப்பட்டிருந்ததாகவும் தோன்றுகிறது. சாலொமோனின் தேவாலயத்தைப்போலவே இதற்கும் ஒரு பெரிய மண்டபமும் இரண்டு பாகங்களாகப்

பிரிக்கப்பட்ட விசாலமான ஓர் அறையும் உண்டு.

i. அந்த மண்டபம் 96 முழ உயரமும் 40 முழ நீளமும் 10 முழ அகலமுமானது. இதிலுள்ள வாசலின் மூலமாய் ஆசாரியர்கள் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கலாம். பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிக்கும் இந்த வாசல் 20 முழ உயரமும் 10 முழ அகலமுமாய் இருந்தது. இதன் கதவுகள் முழுவதும் பசும்பொன் தகட்டால் மூடப்பட்டிருந்தன. இதன் கதவுகளுக்கு முன் பாபிலோனியாவிலிருந்து வந்த ஒரு திரைச்சீலை தொங்கினது.

ii. பரிசுத்தஸ்தலம் 40 முழ நீளமும் 40 முழ உயரமும் 20 முழ அகலமுமாய் இருந்தது. இதற்கும் மகா பரிசுத்த ஸ்தலத்துக்கும் இடையில் அதிகக் கனமும் அலங்காரமுமான இன்னொரு திரைச்சீலை இருந்தது. மத் 27[51] எபி 6[19].

iii. மகா பரிசுத்தஸ்தலம் 20 அடி நீளமும் 20 அடி உயரமும் 20 முழ அகலமுமாய் இருந்தது. சாலொமோனின் தேவாலயத்தைப்போலவே, ஏரோதுவின் தேவாலயத்திலும் பரிசுத்தஸ்தலம் மகா பரிசுத்த ஸ்தலம் என்னும் பாகங்களின் சுவர்களில் சில அறைகள் இருந்தன. மேலும் தேவாலயத்தின் உயரத்தை அதிகமாக்கும்படி, பரிசுத்த ஸ்தலத்தின்மேலும் மகா பரிசுத்த ஸ்தலத்தின்மேலும் வெறுமையான இன்னொரு அடுக்கு அறை கட்டப்பட்டிருந்ததாகத் தோன்றுகிறது.

10. ஏரோதுவின் தேவாலயப் பணிமுட்டுகள்.

மண்டபத்துக்குமுன்னே ஆசாரியர்களின் பிராகாரத்தில் தகனபலிபீடம் இருந்தது. இது வெட்டாத கற்களினால் கட்டப்பட்டு அடிப்பாகத்தில் 32 முழ நீளமும் 32 முழ அகலமும், மேல்பாகத்தில் 24 முழ நீளமும் 24 முழ அகலமுமாய் இருந்தது. சில படிகளினாலே ஆசாரியர்கள் இதின்மேல் ஏறுவார்கள். பலிசெலுத்தும்படி ஏறிச் செல்வதற்கு படிகளில்லாதவேறொரு பாதை இருந்தது. பலிபீடத்தின் மேற்குப்பக்கத்தில் ஆசாரியர்கள் ஸ்நானம் செய்வதற்காக ஒரு வெண்கலத்தொட்டி இருந்தது. பரிசுத்த ஸ்தலத்துக்குள் திரைச்சீலைக்குமுன் தூபபீடம் நின்றது. தென்சுவருக்கு சமீபத்தில் ஏழு கிளைகளுள்ள தங்க விளக்குத்தண்டு நின்றது. கிழக்குச்சுவரண்டையில் தேவசமுகத்து அப்ப மேஜை இருந்தது. மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள்ளே பாவ நிவாரண நாளிலே பிரதான ஆசாரியன் கொண்டு வரும் தூபவர்க்க கலசத்தை வைக்கும் ஒரு கல்லைத்தவிர வேறொன்றும் இல்லை. ரோம சேனாபதியாகிய தீத்து எருசலேம் பட்டணத்தை அழிக்கும்போது பரிசுத்த ஸ்தலத்திலுள்ள விளக்குத்தண்டையும் சமுகத்தப்ப மேஜையையும் ரோமாபுரிக்குக் கொண்டு போனான். அவன் அங்கே கட்டின ஒரு மண்டபத்தில் இப்பணிமுட்டுகளின் வடிவத்தைச் சிற்ப ஆசாரிகள் வெட்டிவைத்திருக்கிறார்கள்.

இவ்விதமாய்ப் பொன்னினாலும் வெண்கலத்தினாலும் வெள்ளைக்கற்களினாலும் பல வித விசித்திர வேலையினாலும் அலங்கரிக்கப்பட்ட இப்பெரிய தேவாலயம், அக்காலத்தில் லோகப்பிரஸ்தாபமான கட்டடங்களில் ஒன்று. மலைமேலே கட்டப்பட்டு மதில்களினாலும் படிப்படியாய் ஒன்றைவிட ஒன்று உயரமாய் எழும்புகிற பிராகாரங்களினாலும் சூழப்பட்டு வெள்ளைக்கல்லினாலும் தங்கத்தினாலும்மூடப்பட்ட இந்தத்தேவாலயம் உறைபனியினால் மூடப்பட்ட ஒரு பெரிய மலைபோல் இருக்கிறது என்று யூத வேதசாஸ்திரிகள் சொன்னார்கள்.

## IV. தேவாலயத்தின் தினசரி ஆராதனை.

தேவாலயத்தில் நடந்த அன்றாடக ஆராதனை என்னவென்றால், விடியற்காலத்தில் ஆசாரியர்கள் எழுந்திருந்து, ஸ்நானம் பண்ணி, தங்கள் ஊழியத்துக்குரிய ஆடைகளைத் தரித்துக்கொண்டு, ஒவ்வொரு சடங்குக்கும் உரியவர்களை ஏற்படுத்தும்படி சீட்டுப்போடுவார்கள். இவ்விதமாய் பலிபீடத்திலிருந்து சாம்பலை எடுத்தல், விறகுபோடுதல், ஆட்டுக்குட்டிகளை வெட்டுதல், தூபபீடத்தைச் சுத்தமாக்குதல், விளக்குத்தண்டுகளை விளக்குதல் முதலிய பல வேலைகளைச் செய்யும்படி சிலரை ஏற்படுத்துவார்கள். சூரியன் உதயமாகும்போது தேவாலயத்தின் வாசல்களைத் திறந்து ஆட்டுக்குட்டிகளை வெட்டி, தூபபீடத்தை ஆயத்தஞ்செய்வார்கள். அப்பால் தூபங்காட்டி, வெட்டப்பட்ட ஆட்டுக்குட்டிகளைப் பலியாகசெலுத்தி ஆராதனை நடத்துவார்கள். பிறகு ஜனங்கள் யாவரும் பலியின் புகையைப் பார்த்து முகங்குப்புற விழுந்து ஜெபம்பண்ணுகையில், நியமிக்கப்பட்ட ஆசாரியன் தூபகலசத்தை எடுத்து தேவாலயத்துக்கு முன்னிருந்த மண்டபத்தின் மூலமாய்ப் பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசிப்பான். லூக் 1[9]. அவன் தூபங்காட்டினபின்பு திரும்பிவந்து மண்டபத்தின் வாசலில் நின்று ஜனங்களை ஆசீர்வ

திப்பான். பின்பு ஆசாரியர் பலியை பலி பீடத்தின்மேல் தகனித்து, பானபலியை வார்ப்பார்கள். இதைக்கண்டு லேவிக்கோத் திரத்தைச்சேர்ந்த அநேக பாடகர் அந்த நாளுக்கு நியமிக்கப்பட்ட சங்கீதத்தைப் பாடு வார்கள். அவர்கள் பாடுகையில் இரண்டு ஆசாரியர்கள் எக்காளத்தைப் பிடித்துத் தொனிக்கும்போது, ஜனங்கள் மறுபடியும் முகங் குப்புற விழுந்து வணங்குவார்கள். சங்கீதம் பாடியவுடன் பகிரங்க ஆராதனை முடிவு பெறும்.

பிறகு தங்களுக்காகப் பலிசெலுத்தும்படி வந்தவர்கள் தங்கள் பலிகளைக் கொண்டுவரு வார்கள். சாயங்காலத்திலும் ஏறக்குறைய நாலுமணிக்கு மறுபடியும் இதேமாதிரி ஆராதனை நடக்கும். இந்த ஆராதனையில் பரிசுத்த ஸ்தலத்திலுள்ள விளக்குத்தண்டின் மேல் தீபம் ஏற்றுவார்கள். கி—பி. 70—ஆம் தேவாலயம் அழிக்கப்பட்டபிறகு இந்த ஆராதனை நடத்தப்படவே இல்லை.

### VI. வேறு இரண்டு தேவாலயங்கள்.

எகிப்து தேசத்துக்குப்போன யூதர்கள் கி—மு. 525—ஆம் யேகோவாவைத் தொழுது கொள்ளும்படி ஒரு தேவாலயத்தைக் கட்டினார்கள் என்றும், எகிப்திய ஆசாரியர்கள் கி—மு. 411—ஆம் இதை அழித்தார்கள் என்றும் தோன்றுகிறது. மேலும் கி—மு. 770—ஆம் லேயான்தோபோலி (*Leontopolis*) என்னும் ஊரிலே ஒனியா (*Onias*) என்பவன் செருபாபேல் கட்டின தேவாலயத்தைப் போல ஒரு சிறு தேவாலயத்தைக் கட்டினதாகவும் தோன்றுகிறது. இந்த இரண்டு தேவாலயங்களும் சாதாரண ஜெப ஆலயங்களைவிட விசேஷித்தவைகள் ஆயினும் யூதர்கள் எருசலேமிலுள்ள தேவாலயங்களைப் போல் இவைகளை அவ்வளவாய் மதிக்கவில்லை.



ரோமர்கள் தேவாலயத்தின் பணிமுட்டுகளைக் கொண்டுபோதல்.

**தேவி.** Goddess. 1 இரா $11^{5.33}$ அப் $19^{27.35.37}$. அஸ்தரோத். தியானுஸ் காண்க.

**தேள்.** Scorpion. பலெஸ்தீனு தேசத்தில் பத்துவிதமான தேள்கள் உண்டு. இவைகளில் அநேக ஜாதித்தேள் ஜனங்களைக் கொட்டினால், அவர்களுக்கு அதிக நோவும் அதிகப் பலவீனமும், சிறுபிள்ளைகளைக் கொட்டினால், மரணமும் உண்டாகும். உபா $8^{15}$ எசே $2^{6}$ லூக் $10^{19}11^{12}$ வெளி $9^{3}$. சில வசனங்களில் தேள் என்பது உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. 1 இரா $12^{11}$ 2 நாளா $10^{11}$.



தேள்.

**தேறினவன்.** Perfect. இயேசுகிறிஸ்துவின் புண்ணிய பலத்தினால் நிலைபெற்ற நீதிமான். 1 கொரி $2^{6}$ பிலி $3^{15}$ கொலோ $1^{28}$ $4^{12}$ 2 தீமோ $3^{16}$.

**தேற்றரவாளன்.** Comforter. யோபு $16^{2}$ யோவா $14^{16.26}$ $15^{26}$ $16^{7}$. பரிசுத்தஆவி காண்க.

**தேனீ, தேன்.** Bees, Honey.

பலெஸ்தீனுதேசத்தில் தேனீ அதிகமாய் இருக்கிறது. சாக்கடலின் கரையிலுள்ள மலைநாட்டில் காட்டுத் தேனீ ஏராளம். இக்காலத்தில் குடியானவர்கள் அநேகர் தேனீ கட்டும் தேனுக்காக தேனீக்களை வளர்த்து வருவார்கள். செத்துப்போன சிங்கத்தின் உடலில் தேனீக்கூட்டமும் பிரவேசிப்பது ஆச்சரியமே. ஆனால் கானான்தேசத்தில் வழியோரத்தில் கிடக்கும் மிருகங்களின் எலும்புக்கூட்டில் தேனீக்கூட்டம் பிரவேசிப்பது தெரியாத விஷயமல்ல. இத்தேசத்திற்போல் அத்தேசத்திலும் தேனீக்களுக்கு கோபம் உண்டானால் அவை பட்சி அல்லது மிருகம் அல்லது மனுஷரைக் கொட்டிச் சில சமயங்களில் கொன்றுபோடும். உபா $1^{44}$ நியா $14^{8}$ சங் $118^{12}$. காட்டுத் தேனீக்களைப்போல அசீரியர் அதிக கோபமுள்ளவர்களான தினால் அவைகள் அவர்களுக்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $7^{18}$.

எபிரெயர்களுக்குப் பலெஸ்தீனுதேசத்தில் தேன் அதிகமாய்க் கிடைத்ததினாலே, அந்தத் தேசம் பாலும் தேனும் ஓடுகிறதேசம் என்று அதைச் சிறப்பித்துக் கூறினார்கள். யாத் 3[8]. பழையஏற்பாட்டில்சொன்னதேன் காட்டுத் தேனீசேர்த்த தேன். உபா 32[13] 1 சாமு 14[26]. ஜனங்கள் பூர்வீககாலமுதல் அந்தத் தேனை பலகாரங்களிலே கலந்தும் தனியாகவும் சாப் பிட்டு வந்தார்கள். மத் 3[4] மாற் 1[6] லூக் 24[42] யாத் 16[31]. தேன் வெயிலில் புளிப்ப டைந்து லாகிரிவஸ்துவாய் ஆகிறதினாலே ஜனங்கள் அதைத் தேவாலயத்திலே காணிக் கையாகக் கொடுக்கவேண்டுமானால், அவர் கள் அதை பீடத்தின்மேல் செலுத்தும் எந் தப்பலியிலும்கொடுக்கக்கூடாது. லேவி 2[11]. வீட்டிலே தேனை ஜாடிகளில் சேர்த்து அதை விற்கும்படி மற்றத் தேசங்களுக்கு இஸ்ரவே லர் கொண்டுபோவார்கள். ஆதி 43[11] 1 இரா 14[3] எசே 27[17].

ஆதி 43[11] எசே 27[17]—ல் சொன்ன தேன் திராட்சப்பழத்திலிருந்து செய்த ஒரு மாதிரி திராட்சரசத்தைக் குறிக்கிறது என்று சில சாஸ்திரிகள் நினைக்கிறார்கள்.

தேன் உவமையாய்ப் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. சங் 19[10] 119[103] நீதி 16[24] 24[13] உன். பா 4[11] 5[1]. திராட்சச்செடி காண்க.

## தை.

**தைக்கிறது.** Sew. ஆதி 3[7] யோபு 16[15] பிர 3[7] எசே 13[18].

**தையல்.** Needlework, Embroidery. யாத் 26[36] 27[16] 28[39] 38[17] நியா 5[30] சங் 45[14] எசே 27[7]. பாபிலோனியர்கள் முதலாவது ஊசியினால் சித்திரத்தையல் வேலையைச்செய் தார்கள். எகிப்தியர்களும் இந்த வேலையை நன்றாய்ச் செய்தார்கள்.

**தைரியம்.** Courage, Boldness. யோசு 2[11] 2 சாமு 10[12] 1 நாளா 19[13] நீதி 28[1] ('தை ரியவான்' ஆமோ 2[16]) அப் 28[15] 4[13.31] 9[29] 14[3] 18[26] 19[8] 2 கொரி 7[4] 10[2] எபே 3[12] பிலி 1[20] 1 தீமோ 3[13] எபி 10[20] 1 யோவா 4[17].

**தைலக்காரன்.** Apothecary, Perfumer. 'தைலக்காரன்' என்பதற்குப் பதிலாக 'கந்தவர்க்கம் விற்கிறவன்' அல்லது 'வாசனை த்திரவியங்கள் விற்கிறவன்' என்று இருக்க வேண்டும். யாத் 30[25.35] 37[29] 2 நாளா 16[14] நெகே 3[8] பிர 10[1]. பரிமளதைலம் காண்க.

**தைலக்குப்பி.** Box of Ointment. 2 இரா 9[1] 1 சாமு 10[1]. ஒருவேளை இதுவும் 'தைலக் கொம்பும்' ஒன்றுதான். 1 இரா 1[39]. கொம்பு காண்க.

**தைலக்கொம்பு.** Horn of oil. 1 சாமு 16[1.13] 1 இரா 1[39] கொம்பு, தைலக்குப்பி காண்க.

**தைலம்.** Ointment.

ஆங்கிலேய வேதாகமத்தில் பல வசனங்க ளில் சொல்லப்பட்ட *Ointment* என்னும் பதம் வழக்கமாய் எண்ணெயைத்தான் குறிக் கிறது. எபிரெயர்கள் ஸ்நானம் செய்கையில் எண்ணெய் உபயோகிப்பது வழக்கம். மே லும் அவர்கள் எண்ணெயைக் காய்ச்சி அதில் வாசனைத்திரவியங்கள் பலவற்றைச் சேர்த்து நற்கந்தம் உண்டாக்கி அதை உபயோகிப்பார் கள். யோபு 41[31] ரூத் 3[3] சங் 104[15] உன். பா 1[3] மத் 6[17] லூக் 7[46]. இதற்காக வெள் ளைப்போளத்தை அடிக்கடி உபயோகிப்பார் கள். இதற்குத் 'தைலம்' அல்லது 'பரிமள தைலம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. உன். பா 1[3]. பிரேதங்களை இவ்வித சுகந்த தைலங்களால் பூசுவதும் உண்டு. லூக் 23[56]. சில சமயங்களில் தனவான்கள் மருந்துச் சரக்குகள் கலந்த தைலத்தை வாங்குவார்கள். ஏசா 39[2] ஆமோ 6[6]. இவற்றில் 'நளததைலம்' அதிக விலையுயர்ந்தது. உன். பா 4[13] மாற் 14[3] யோவா 12[3]. எகிப்தியர்களைப்போலவே எபிரெயர்களும் தைலங்களை வெள்ளைக்கல் லில் வெட்டப்பட்ட பரணிகளில் வைத்தி ருப்பார்கள்.

ஆசரிப்புக்கூடாரம், தேவசமுகத்து அப் பமேசை, கூடாரப்பணிமுட்டுகள், விளக் குத்தண்டு, தூபபீடம், தகனபலிபீடம், வெண்கலத்தொட்டி முதலியவற்றின்மேல் 'பரிசுத்த அபிஷேக தைலத்தை' ஆசாரியர் கள் பூசி அவற்றைப் பிரதிஷ்டை பண்ணு வார்கள். மேலும் ஆசாரியர்கள் அபிஷேகம் பண்ணப்பட்டபொழுதும் இந்தப் பரிசுத்த தைலம் அவர்கள்மேல் பூசப்படும். யாத் 29[7]. 37[29] 40[9] சங் 133[2]. இந்தப் பரிசுத்த அபி ஷேகதைலம், வெள்ளைப்போளம் கருவாப் பட்டை வசம்பு என்பவை கலந்த ஒலிவ எண்ணெயால் செய்யப்பட்டது. யாத் 30[23-33]. தேவஸ்தலத்துக்காகச் செய்யப்பட்ட இந்தப் பரிசுத்த தைலத்தை தன் சொந்த உபயோகத்துக்கென்றாவது அந்நியன் ஒருவ னுடைய உபயோகத்துக்கென்றாவது பிர யோகிக்கிறவன் பரிசுத்தக்குலைச்சலான காரி யத்தைச் செய்தபடியால் ஜாதிப்பிரஷ்டனா கத் தள்ளிவிடப்படுவான்.

## தொ.

**தொகர்மா, தோகர்மா.** Togarmah. யாப் பேத்தின் பேரன். இவன் தகப்பன் கோ மேர். ஆதி 10[3].

'தோகர்மா வம்சத்தார்.' எசே $27^{14}$ $38^{6}$. வியாபாரம் செய்கிற இவர்கள் தென் அர்மேனியா அல்லது அசீரியாதேசத்திலிருந்து வந்தார்கள்.

**தொங்கல்கள்.** Fringes. எபிரெயர்கள் போர்த்துக்கொண்டமேல்சால்வையின் மூலைகளில் தொங்கல்களும், அத்தொங்கல்களில் சேர்த்துக் கட்டிய ஒரு இளநீல நாடாவும் இருக்கும். எண் $15^{37}$ உபா $22^{12}$. முன்காலத்திலே தொங்கல்களைக் கட்டும் வழக்கம் எபிரெயர்களுக்குள் இருந்தும் அது குறிக்கும் நோக்கம் இன்னதென்று தெரியவில்லை. ஆனால் பிந்தின காலங்களில் அவர்கள் இத்தொங்கல்களை ஞாபகக்குறிப்புக்களாக எண்ணி இவைகளைப் பார்க்கிறதினால் யேகோவாவின் ஜனங்களாகிய தாங்கள் அவருடைய நியாயப்பிரமாணத்தின்படி நடக்கவேண்டும் என்று தொங்கல்களை ஞாபகப்படுத்திக்கொண்டார்கள். எண் $15^{37}$ உபா $22^{12}$. புதிய ஏற்பாட்டில் சொன்ன 'ஓரம்' என்னும் பதம் சில வசனங்களில் தொங்கல்களையுடைய இவ்விதச் சால்வைகளையே குறிக்கிறது. மத் $9^{20}$ $14^{36}$ மாற் $6^{56}$ லூக் $8^{44}$. இந்நாள்வரைக்கும் யூதர்கள் ஜெபம் பண்ணும்பொழுது தொங்கல்கள் கட்டப்பட்ட தலீத் (*Tallith*) என்னும் ஒரு சால்வையைப் போர்த்துக் கொள்ளுவது வழக்கமாயிருக்கிறது.

**தொடருகிறது.** Follow. பின்பற்றுகிறது காண்க.

**தொடுகிறது.** Touch. ஆதி $3^{3}$ லேவி $5^{2}$ எண் $4^{15}$ எஸ்த $5^{2}$ யோபு $6^{7}$ சங் $104^{32}$ லூக் $8^{44}$ $11^{46}$ $24^{39}$ யோவா $20^{17}$ 1 கொரி $7^{1}$ 2 கொரி $6^{17}$ கொலோ $2^{21}$ 1 யோவா $1^{1}$.

**தொடை.** A. V. Shoulder. உபா $18^{3}$ எசே $24^{4}$ $34^{21}$.

**தொடை.** Legs. யாத் $12^{9}$ லேவி $1^{9}$ $8^{21}$.

**தொடைச்சந்து.** Sinew of the thigh. ஆதி $32^{25-32}$.

**தொட்டி.** 1. Laver. யாத் $30^{18}$ $31^{9}$. ஆசரிப்புக்கூடாரம் காண்க.

2. Cistern. எரே $2^{13}$. கிணறு காண்க.

**தொதாவாவு.** Dodavahu. [யேகோவாவினால் நேசிக்கப்பட்டவன்]. யோசபாத்து என்னும் ராஜாவுக்கு புத்திசொன்ன தீர்க்கதரிசியின் தகப்பன். 2 நாளா $20^{37}$.

**தொதானீம்.** Dodanim. யாவானுடைய இளையமகன். ஒரு கோத்திரம். ஆதி $10^{4}$ 1 நாளா $1^{7}$. ஒருவேளை இவர்களும் ரோது தீவில் வசித்த ரோதானீம் என்னும் கோத்திரத்தாரும் ஒன்றுதான்.

**தொபியா.** Tobiah, Tobijah. [யேகோவா நல்லவர்.]

1. யூதர்கள் பாபிலோனியா தேசத்திலிருந்து எருசலேமுக்குத் திரும்பி வந்தபிறகு, நெகேமியாவையும் அவன் செய்த ஊழியத்தையும் பகைத்து விரோதித்த அம்மோனி ஜாதியைச் சேர்ந்த ஒருவன். நெகே $2^{10}$ $4^{3}$ $6^{17}$ $13^{4}$.

2. சிறையிருப்பினின்று வந்த ஒரு குடும்பம். எஸ்று $2^{60}$.

3. யூதாவில் உபதேசம் பண்ணின ஒரு லேவியன். 2 நாளா $17^{8}$.

4. பாபிலோனிலிருந்து எருசலேமுக்கு வந்தவன். சக $6^{10.14}$.

**தொப்கா.** Dophkah. எண் $38^{12}$.

**தொய்கிறது.** Faint. சங் $61^{2}$.

**தொழிலாளி.** Workman. ஆதி $4^{22}$ நியா $5^{26}$ சக. $1^{20}$.

**தொழில்.** Work. 1 தீமோ $8^{5}$.

**தொழில்துறை.** Market. எசே $27^{13.17.25}$. கடை காண்க.

**தொழுகிறது.** Worship. ஆதி $22^{5}$ சங் $29^{2}$ யோவா $4^{20.23}$ எபி $11^{21}$ வெளி $11^{18}$. வணங்குகிறது, பணிகிறது காண்க.



தொழுமரம்.

**தொழுமரம்.** Stocks. யோபு $13^{27}$ $33^{11}$ எரே $29^{26}$ அப் $16^{24}$.

**தொழுவம், தொழும்.** Fold. எண் $32^{16}$ சங் $50^{9}$ $7^{-70}$ ஏசா $65^{10}$ மீகா $2^{12}$ செப் $2^{6}$ யோவா $10^{16}$.

**தொற்காள்.** Dorcas. தபீத்தாள் காண்க.

## தோ.

**தோகர்மா.** **Togarmah.** **தோகர்மா** காண்க.

**தோகாத்.** **Tokhath.** 2 நாளா $34^{22}$–ல் ஆங்கிலேய R. V.–ல் 'திக்வா' என்பதற்குப் பதிலாக 'தோகாத்' என்று சொல்லியிருக்கிறது.

**தோகு.** **Tohu.** [தாழ்மை]. சாமுவேலின் முன்னோர்களில் ஒருவன். இவன் மறுபெயர்கள் நாகாத், தோவா. 1 சாமு $1^{1}$ 1 நாளா $6^{26,34}$. **நகாத்** காண்க.

**தோகேன்.** **Tochen.** சிமியோன் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு ஊர். 1 நாளா $4^{32}$.

**தோஷம்.** **Defilement.** லேவி $13^{46}$ $14^{34}$. **அசுத்தம்** காண்க.

**தோட்டக்காரன்.** **Gardener, Husbandman.** மத் $21^{33}$ மாற் $12^{1}$ லூக் $20^{9}$ யோவா $20^{15}$ $15^{1}$. **விவசாயம்** காண்க.

**தோட்டம்.** **Garden.**

பலெஸ்தீனாதேசத்தில் நரி முதலியவை அதிகமாயிருக்கிறதினாலும், வெய்யில் அகோரமானதினாலும், நீர்ப்பாய்ச்சல் குறைவாய் இருப்பதினாலும், ஒருவன் நற்கனி கொடுக்கும் விருக்ஷஜாதிகளையும் புஷ்பச்செடிகளையும் வளர்க்க விரும்பினால், அவன் ஓர் இடத்தைச்சுற்றிலும் வேலியடைத்து, அதில் கிணறுதோண்டி, நீர்க்கால்களை வெட்டி இத்தேசத்திலுள்ள தோட்டங்களைப்போலவே ஒரு தோட்டத்தை உண்டுபண்ணவேண்டும். இதினிமித்தம் எபிரெயர்களும் அத்தேசத்திலுள்ள யாவரும் கீரைத்தோட்டங்களையும், கனிவர்க்கத்தோட்டங்களையும், புஷ்பத்தோட்டங்களையும் வைத்திருப்பார்கள். இத்தோட்டங்களில் கிச்சிலி, எலுமிச்சை, மாதளை, ஒலிவம் முதலிய கனிவர்க்க விருக்ஷஜாதிகளை வளர்ப்பார்கள். சாயங்காலங்களில் இத்தோட்டங்களில் உள்ள மனோகரமான நிழலில் உலாவுவார்கள். இவற்றில் நன்னிழல் அதிகமாயிருக்கிறதினாலே அந்நிய மதஸ்தர்கள் தோட்டங்களிலுள்ள தோப்புக்களில் விக்கிரக ஆராதனையையும் பொல்லாத சடங்காசாரங்களையும் வழக்கமாய் நடத்தினார்கள். இந்தத் தோட்டங்களில் உள்ள பாறைகளிலே பிரேதங்களை அடக்கஞ் செய்கிறதற்கு கல்லறைகளை வெட்டுவது வழக்கமாயிற்று. உபா $11^{10}$ 1 இரா $21^{2}$ 2 இரா $21^{18}$ $25^{4}$ செகே $2^{5}$ உன். பா $4^{16}$ $6^{2}$ $6^{11}$ ஏசா $57^{5}$ $58^{11}$ எரே $29^{5}$ ஆமோ $4^{9}$. 'கீரைக்கொல்லை' 1 இரா $21^{2}$. **ஏதேன் தோட்டம்** காண்க.

**தோதாயி.** **Dodai.** 1 நாளா $27^{4}$.

**தோதோ.** **Dodo.**

1. தாவீதின் பராக்கிரமசாலியாகிய எலெயாசாரின் தகப்பன். 2 சாமு $23^{9}$.

2. எல்க்கானாவின் தகப்பன். 2 சாமு $23^{24}$.

3. நியாயாதிபதியாகிய தோலாவின் பாட்டன். நியா $10^{1}$.

**தோத்தான்.** **Dothan.**

இது யோர்தான் நதிக்கு மேற்கே, கில்போவாமலைக்குத் தெற்கே, மனாசே கோத்திரத்திலுள்ள ஒரு சிறு மலைக்கோட்டை. எகிப்து தேசத்திலிருந்து பலெஸ்தீனாதேசத்தின்மூலமாய்த் தமஸ்குப் பட்டணத்துக்குப் போகிற ராஜபாதைக்குச் சமீபமாய் இது இருந்ததினாலும், இதில் நீரூற்றுகள் மிகுதியாய் இருந்ததினாலும், இதற்குக் கிட்ட இருந்த இடம் நல்ல மேய்ச்சல் தரையானதினாலும், பூர்வகாலத்திலே இக்கோட்டை விசேஷமானதாய் இருந்தது. தற்காலத்திலே எல்லாம் பாழாய்க்கிடக்கிறது. ஆதி $37^{17}$ 2 இரா $6^{13}$.

**தோபத்தோனியா.** **Tob Adonigah.** [கர்த்தராகிய யேகோவா நல்லவர்] யூதா பட்டணங்களில் போதனை கொடுத்த லேவியர்களில் ஒருவன். 2 நாளா $17^{8}$.

**தோபித்து.** **Tobit.**

கிரேக்கபாஷையை வழங்கும் எபிரெயர்கள் அதிகமாய் விரும்பின தள்ளுபடி ஆகமத்தில் சொல்லப்பட்டிருக்கிற ஒரு நூல். இதில் பக்தனாகிய தோபித்து, நினிவேப்பட்டணத்தில் சிறையாக்கப்பட்டு, பல சுகதுக்கங்களை அனுபவித்து, அப்பால் அதிலிருந்து ஓடிப்போகும்பொழுது வழியில் அவனுக்கு நேரிட்ட கஷ்டநஷ்டங்களெல்லாம் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் பிரதான பிசாசு, ராபாவேல் என்னும் பிரதான தூதன், சாராள் என்னும் கற்புள்ள ஸ்திரீ முதலியவர்களைப்பற்றியும் ஒரு நாய், ஒரு பெரிய மீன், தோபித்தின் மகனாகிய தோபிதா செய்த கலியாணம்முதலிய அநேக விநோதமான காரியங்களும் கூறப்பட்டிருக்கிறது. இந்த நூல் இயற்றப்பட்ட காலத்தைப்பற்றி நமக்குத் திட்டமாய் ஒன்றும் தெரியாவிட்டாலும், தேவாலயம், கலியாணச்சடங்கு, பிரேத அடக்கம் முதலியவற்றைக்குறித்து இப்புத்தகத்தில் அடங்கியவற்றைக் கவனிக்கும்போது, இது கி–மு. 200–முதல் கி–மு. 100 வருஷத்திற்குள் எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது. முதலிலே இது அரமேயா என்னும்

சீரியபாஷையில் எழுதப்பட்டதென்று சிலர் நினைக்கிறார்கள். ஆதிகிறிஸ்தவசபைப்பிதாக்களில் சிலர் இதைச் சபையில் பகிரங்கமாய் வாசிக்கும்படி உத்தரவுகொடுத்தார்கள். இப்புஸ்தகத்தில் நம்பக்கூடாத அநேக காரியங்கள் இருந்தாலும், இது சன்மார்க்கத்தைச் சிறப்பித்துக்கூறும் ஓர் நல்ல கதை என்று நாம் சொல்லலாம்.

**தோபேத்.** Tophet. இன்னோம் பள்ளத்தாக்குக்கு மறுபெயர். கானானியர் தாங்கள் வணங்கின தேவர்களுக்குத் தங்கள் பிள்ளைகளை தகனபலியாகச் செலுத்தின இன்னோம் பள்ளத்தாக்கிலே, ஆகாப் மனாசே என்னும் ராஜாக்களின் காலத்தில் எபிரெயர்களில் சிலர் அவ்வித பொல்லாத ஆராதனையை நடத்திவந்தார்கள். யோசியா ராஜா அந்த இடம் தகாது என்று தள்ளி, அதிலே எருசலேம் நகரத்துக் குப்பை முதலியவற்றைப் போட்டு அவற்றைச் சுட்டெரித்ததினாலும் அது எப்போதும் அசுத்தமும் புகையும் நிறைந்திருந்ததினாலும் அதின் பெயர் நரகத்துக்கு ஓர் அடையாளமும் உவமையுமாயிற்று. இதுவும் 'கெகென்னாவும்' ஒன்றுதான். 2 இரா $23^{10}$ எசா $30^{33}$ எரே $7^{31}$ $19^{6}$. இன்னோம் கேகன்னா காண்க.

**தோப்.** Tob. [நன்மை] தமஸ்கு பட்டணத்துக்குத் தெற்கிலுள்ள தேசம். இதில் யெப்தா குடியிருந்தான். நியா $11^{3}$.

**தோப்பு.** Grove. ஆதி $21^{33}$ 1 சாமு $22^{6}$ $31^{13}$. பல வசனங்களில் 'தோப்பு' 'தோப்பு விக்கிரகம்' என்னும் பதங்களுக்குப் பதிலாக 'அசேரா' என்பது இருக்கவேண்டும். அசேரா காண்க.

**தோப்பு விக்கிரகம்.** அசேரா காண்க.

**தோப்பேல்.** Tophel. சீனாய் வனாந்தரத்திலுள்ள ஓர் இடம். உபா $1^{1}$. ஒருவேளை இதுவும் திசாகாப் என்னும் இடமும் ஒன்றுதான்.

**தோமா.** Thomas. குடும்பத்தில் இவனுக்கு வழங்கின பெயர் என்னவென்று நமக்குத் தெரியாது. 'திதிமு' என்னும் பெயரைப்போல 'இரட்டைப்பிள்ளை' என்று அர்த்தங்கொள்ளும் 'தோமா' என்னும் பெயரும் ஒருவிதமான வசைப்பெயராய் இருந்தது. இதினாலேதான் சுவிசேஷத்தில் இவனுக்கு இந்தப் பெயர்மாத்திரம் வழங்கப்படுகிறது. இவன் பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் ஒருவன். முதல் மூன்று சுவிசேஷகர்களும் இவனுடைய பெயரைமாத்திரம் அப்போஸ்தலரின் நாமஅட்டவணையில் சொல்லுகிறார்கள். பரி. யோவான்மாத்திரம் இவனைக்குறித்து இரண்டு மூன்று காரியங்கள் சொல்லுகிறான். இயேசுகிறிஸ்துவின் ராஜ்யத்தைப்பற்றி நேரிட்ட விஷயங்களை மற்றச் சீஷர்கள் நம்பினதுபோல இவன் முதலிலே நம்பாவிட்டாலும், அவற்றை மனசிலே வைத்து அவற்றைப்பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சி செய்திருப்பான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. இவன் எந்த விஷயத்தைக் குறித்து விசாரணைபண்ண விரும்பினாலும், அதற்குப் போதுமான அத்தாட்சி யில்லாவிட்டால், இவன் மற்றவர்கள் சொல்லும் எதையும் நம்பமாட்டான். அதினாலே, இவனுடைய குணம் ஐயக்குணம் என்று நாம் சொல்லலாம். யோவா $14^{5}$ $20^{24}$. இவன் ஒரு விஷயத்தைக் குறித்துப் போதுமான அத்தாட்சி யடைந்தால், பின் அதை விட்டுவிடவே மாட்டான். இவன் யூதர்களின் கையில் இயேசுவோடுகூட மரணம் அடையும்படி விரும்பினான். யோவா $11^{14}$. இவன்தான் உயிர்த்தெழுந்த இயேசுவைப் பார்த்து 'என் ஆண்டவரே என் தேவனே' என்று சீஷர்களில் முதலாவது பூரண நம்பிக்கையோடே சொன்னான். யோவா $21^{28}$. இதற்குப் பிற்பாடு இவன் இயேசுவைக் குறித்த சந்தேகம் எல்லாம் நீக்கி அதிக உற்சாகத்துடனே அவருக்காக ஊழியஞ் செய்தான். இயேசு உயிர்த்தெழுந்தபிறகு இவன் ஏழு சீஷரோடு கலிலேயாவுக்குப் போய் இயேசுவைச் சந்தித்தான். யோவா $21^{2}$. ஆதிகிறிஸ்தவ பாரம்பரியத்தின்படி இவன் கிழக்கேபோய் பெர்சியாதேசத்தைத்தாண்டி, பார்த்தியா (*Parthia*) தேசத்தில் பிரசங்கம் பண்ணி, அங்கே கிறிஸ்தவ சபையை ஸ்தாபித்தான்.

வேறொரு பாரம்பரியத்தின்படி, இவன் இந்தியாதேசத்துக்கு வந்து திருவாங்கூரிலும் கொச்சியிலும் இருக்கிற சபைகளை ஸ்தாபித்து, பல இடங்களுக்குப் போய்ச் சுவிசேஷத்தைப் பிரபல்லியமாக்கிக் கடைசியில் மயிலாப்பூரிலே வேலாயுதத்தினால் குத்துண்டு இரத்தச்சாட்சியாய் மரித்தான். வேறு சிலர் கானா என்னும் ஊரிலிருந்து தோமா என்னும் ஓர் பெரிய வியாபாரி சீரியாதேசத்துப் போதகருடனே வந்து திருவாங்கூரில் உள்ளவர்களுக்குப் பிரசங்கம் பண்ணினதினாலே அப்போஸ்தலனாகிய தோமா ஸ்தாபித்த சபையை ஸ்திரப்படுத்தினான் என்று சொல்லுகிறார்கள். ஆனால் இதைக்குறித்து விசாரித்த சாஸ்திரிகள் இந்தச் சீரிய கிறிஸ்தவர்கள் பாபிலோனியா நாட்டில் உள்ள கிறிஸ்தவ சபையிலிருந்து வந்தவர்கள் என்றும், இந்தக் கிறிஸ்தவ சபைகள் கி—பி. 6—ம் நூற்றாண்டி

லே ஸ்தாபகமாயின என்றும் அப்போஸ்தல னாகிய தோமா இந்தியா தேசத்துக்கு வர வில்லை என்றும் பெரும்பாலும் நினைக்கிறார் கள்.

**தோயீ, தோயு.** Toi, Tou. தாவீதின் காலத்தில் காமாத் தேசத்துக்கு வடகிழக்கி லுள்ள ஆமாத் தேசத்தின் ராஜா. 2 சாமு 8[9] 1 நாளா 18[9].

**தோயு.** Tou. 1 நாளா 18[9]. தோயீ காண்க

**தோர்.** Dor. யோசுவாவுக்கு விரோதமாய்ச் சண்டைசெய்த ஊர்களில் ஒன்று. இது மேல் மனாசேயுக்கும் ஆசேருக்கும் இடையில் கர் மேல் மலைக்குச் சமீபத்தில் இருந்தது. இதிலி ருந்த பூர்வஜாதியாரை இஸ்ரவேலர் அகற்ற வே இல்லை. சாலொமோன்காலத்தில் இது அவனுடைய ராஜ்யத்திலிருந்தது. இதைப் பற்றி வேறொன்றும் நமக்குத் தெரியாது. யோசு 11[2] 12[23] 17[11] நியா 1[27] 1 இரா 4[11].

**தோலா.** Tola [புழு.]

1. இசக்காருடைய மூத்தகுமாரன். ஆதி 46[13] எண் 26[23] 1 நாளா 7[1].

2. நியாயாதிபதிகளில் ஒருவன். நியா 10[1].

**தோலாத்.** Tolad. தென் யூதாவிலுள்ள ஒரு ஊர். 1 நாளா 4[29]. எல்தோலாத் காண்க.

**தோல் பதனிடுகிறவன்.** Tanner. அப் 9[43] 10[32]. ஊர்களுக்குப் புறம்பே இவர்கள் தங்கள் வேலைசெய்வது அவசியம்.

**தோவா.** Toah. [தாழ்மை] 1 நாளா 6[34] நகாத் (2) காண்க.

**தோவேக்கு.** Doeg. சவுல் ராஜாவின் சேவகர்களில் ஓர் ஏதோமியன் இவன் ஆசாரியனாகிய அகிமெலேக்கின்மேல் குற் றம் சாட்டி, சவுலின் கட்டளையின்படி அந்த ஆசாரியனையும் மற்ற ஆசாரியர்களையும் கொலைசெய்தான். 1 சாமு 21[7] 22[9-16] சங் 52 தலைப்பு.

**தோழம்.** Fold. தொழுவம் காண்க.

**தோழன்.** Friend. 1 சாமு 15[28] சங் 15[3] 38[11] 88[18] ஏசா 1[23] ஆப 2[15]. அன்பு காண்க.

**தோள்.** Shoulder. ஆதி 49[15] யாத் 28[7] யோசு 4[5] ஏசா 9[4] 10[27] 49[22] சக 7[11] மத் 23[4] லூக் 15[5].

**தோற்சுருள்** Roll. எழுத்து, புஸ்தகம் காண்க.

**தோற்றம்.** Vision. யோபு 4[13]. தரிசனம் காண்க.

**தோனாதிஸ்தர்.** Donatists.

தோனாதஸ் (*Donatus*) என்பவனுடைய சீஷர்களுக்குத் தோனாதிஸ்தர் என்று பெயர். இவர்கள் கிறிஸ்துமார்க்கத்தைக் குறித்துப் பொய்க் கொள்கைகளை அனுசரியாவிட்டா லும், சபை ஒழுங்கைப்பற்றித் தப்பான எண் ணங்களைக் கைக்கொண்டதினாலே கிறிஸ்தவ சபைப் பிதாக்கள் அவர்களை வேதப்புரட்ட ரான பதிதர் என்று நினைத்தார்கள். கி–பி. 4–ம் நூற்றாண்டில் ஆப்பிரிக்காவில் உள்ள கிறிஸ்தவர்களில் அநேகர் இரத்தச்சாட்சிக ளின்மேல் அளவிறந்த பக்தி வைராக்கியம் வைத்து அவர்களுக்குத் தெய்வத்துக்குரிய மரியாதை செலுத்தினார்கள். இதைச் சிலர் கண்டு கார்த்தாகே நகரிலுள்ள சபைக்கு ஒரு கண்காணியாரை நியமிக்கவேண்டிய காலத் தில், இந்தத் தப்பு எண்ணத்தைக் கண்டிக் கும்படி செசிலியன் என்பவனை அதற்கு நியமித்து, குருப்பட்ட அபிஷேகஞ் செய் தார்கள். ஆனால் இரத்தச்சாட்சிகளை வணங்க விரும்பினவர்கள் கி–பி. 311–ளு இந் தப் பட்டம் நியாயவிரோதமாய்ச் செய்யப் பட்டதென்று தீர்மானித்து அத்தேசத்தி லுள்ள கண்காணிகள் எல்லாரையும் அழைத் துச் சங்கங்கூட்டி செசிலியனைத் தள்ளி விட்டு அவனுக்குப் பதிலாக இன்னொருவனை ஏற்படுத்தினார்கள். கி–பி. 313–ளு இவன் இறந்துபோக இவனுக்குப் பதிலாகத் தங்கள் பக்கத்துக்கு இசைந்த கொள்கைக்காரனை தோனாதஸ் என்பவனை அந்த மேலான உத்தி யோகத்துக்குக் குரு அபிஷேகம் செய்தார் கள். தோனாதிஸ்தர் தங்கள் பக்கத்துக்கு வருகிற மற்ற கிறிஸ்தவர்களுக்கு மறுபடியும் ஞானஸ்நானம் கொடுத்ததினாலே, அவர்க ளுக்கும் மற்ற கிறிஸ்தவர்களுக்கும் உண் டான பிரிவினை அதிகரித்தது. ரோமராயனா கிய பெரிய கொன்ஸ்தந்தீன் இவர்கள் விஷ யத்தை விசாரணைசெய்து இவர்களை மறு படியும் பொதுவான சபையிலே சேர்க்கும் படி பட்ட பிரயாசை வீணாய்ப்போயிற்று. அவனுக்குப்பிறகு கொன்ஸ்டன்ஸ் என்னும் இராயன் இவர்களைப் பொதுவான திருச்ச பையில் சேர்க்கும்படி பலவந்தமாய்ப் பிரயா சப்பட்டபொழுது அத்தேசத்தில் அளவுக்கு மிஞ்சின வைராக்கியங்கொண்ட அநேகர் தோனாதிஸ்தராகி, மற்றவர்களைப் பயப்படுத் தும்படிக்கும் தங்களைக் காப்பாற்றும்படிக் கும் சண்டைசெய்து, அங்கும் இங்கும் அலைந்து திரிந்து, ஊர்களைக் கெடுத்துப் பல அநியாயங்களைச் செய்தார்கள். மகா பிர தான பிதாவாகிய அகுஸ்தீன் என்பவன் இவர்களுக்கு விரோதமாய்த் தர்க்கம்பண்ணி

னர். கி-பி. 415-ல் இந்தக் கொள்கைக் காரருடைய சபைக்குப் போகக்கூடாது என்று ஒரு ராஜதீர்மானம் உண்டாயிற்று. அதற்குப்பிறகு 5-ம் நூற்றுண்டில் வடதேசத்திலிருந்துவந்த ஜெர்மானியர் அவர்களில் அநேகரைக் கொன்றுபோட்டார்கள். கடைசியாக 7-ம் நூற்றுண்டில் மகமதியர் அவர்களை முற்றிலும் சங்கரித்துவிட்டார்கள்.

## தௌ.

**தௌ. Tau.** எபிரெயருடைய எழுத்து அட்டவணையில் இருபத்திரண்டாம் எழுத்து. சங். 119-ல் இருபத்திரண்டாம் பாகம் குறிக்கும். சங் $119^{169}$.

## த்.

**த்சாடே. Tsade.** எபிரெயருடைய எழுத்து அட்டவணையில் பதினெட்டாம் எழுத்து. சங் $119^{137}$.

## ந.

**நகசோன். Nahshon.** ஆரோனின் மனைவியின் சகோதரனும், யூதா கோத்திரத்தானுமாகிய இவனுடைய சந்ததியார்களில் தாவீதும் இயேசுவும் இருந்தார்கள். யாத் $6^{23}$ எண் $7^{12}$ ரூத் $4^{20}$ மத் $1^{4}$.

**நகமானி. Nahamani.** சிறையிருப்பினின்று திரும்பிவந்த யூதர்களில் பன்னிரண்டு பெரியவர்களான பன்னிருவரில் ஒருவன். நெகே $7^{6}$.

**நகம். Nail.**

பூர்வீககாலத்து அரபியர்களில் விதவையானவள் இறந்துபோன தன் புருஷனுக்காகத் துக்கம் கொண்டாடினபோது நகங்களை வெட்டாமல் வளரவிடுவாள். ஒருவேளை இந்தவழக்கம் எபிரெயர்களுக்குள்ளும் இருந்தது. உபா $21^{12}$.

**நகராத். Naarah.** [பெண்பிள்ளை] எப்பிராயீம் நாட்டிலுள்ள ஒரு ஊர். =நாரான் யோசு $16^{7}$ 1 நாளா $7^{28}$.

**நகராய். Naharai.** யோவாபின் ஆயுததாரி. 2 சாமு $23^{37}$.

**நகலால், நாகலோல். Nahalal.** செபுலோன் நாட்டில் லேவியர்க்கு கொடுக்கப்பட்ட நாசரேத்தூருக்குச் சமீபமான ஓர் ஊர். யோசு $19^{15}$ $21^{35}$ நியா $1^{30}$.

**நகல். Copy.** எஸ்று $4^{11.23}$ $5^{6}$ $7^{11}$ எஸ்தர் $4^{8}$ $8^{13}$. 'பிரதி' உபா $17^{18}$.

**நகாத், நாகாத். Nahath.** [தாழ்மை]

1. ஏசாவின் புத்திரர்களில் ஒருவன். ஆதி $36^{13}$.

2. சாமுவேலின் முன்னோர்களில் லேவியனாகிய ஒருவன். இவன் மறுபெயர்கள்: தோகு, தோவா. 1 சாமு $1^{1}$ 1 நாளா $6^{26.34}$.

3. ஒரு லேவியன் 2 நாளா $31^{13}$.

**நகாலியேல். Nahaliel.** [கடவுளினுடைய சுதந்தரம்]. மோவாப் தேசத்துக்கு வடக்கிலும் எரிகோ பட்டணத்துக்குக் கிழக்கிலுமுள்ள ஓர் ஊர். இஸ்ரவேலர் இதில் தங்கினார்கள். எண் $21^{19}$.

**நகைக்கிறது Laugh.** ஆதி $17^{17}$ $18^{12}$ ஆதி $21^{6}$ யோபு $9^{23}$ $5^{22}$ $29^{24}$ சங் $2^{4}$ $37^{13}$ $52^{6}$ $59^{8}$ நீதி $21^{26}$ பிர $3^{4}$ மத் $9^{24}$ மாற் $5^{40}$ லூக் $8^{53}$.

**நகைப்பு. Laughter.** யோபு $8^{21}$ சங் $126^{2}$ நீதி $14^{13}$ பிர $2^{2}$ $7^{3}$ யாக் $4^{9}$.

**நகோமி. Naomi.**

பெத்லகேமில் பிறந்த எலிமலேக்கின் மனைவியாகிய இவள் ரூத் என்பவளின் மாமி. நகோமி என்னும் பதத்துக்கு 'என்னுடைய பிரியம்' என்று அர்த்தம். ரூத் $1^{20}$. இவள் சரித்திரம் எல்லாம் ரூத் என்னும் ஆகமத்திலே அடங்கியிருக்கிறது.

**நக்குகிறது. Lick.** 1 இரா $21^{19}$ $22^{38}$ சங் $72^{9}$ ஏசா $49^{23}$ மீகா $7^{17}$ லூக் $16^{21}$.

**நங்காய். R. V. Naggai. A. V. Nagge** இயேசுவின் முன்னோர்களில் ஒருவன். லூக் $3^{25}$.

**நங்கூரம். Anchor.** அப் $27^{29.30.40}$ எபி $6^{19}$. கப்பல் காண்க.

**நசரேயர். Nazarites.**

'நாசர்' என்னும் பதத்துக்கு 'பிரிக்கிறது' என்பது மூல அர்த்தம். ஆதலால் நசரேயன் என்பவன் 'பிரிக்கப்பட்டவன்' 'நியமிக்கப்பட்டவன்' அல்லது 'ஏற்படுத்தப்பட்டவன்' என்று சொல்லலாம். இவர்கள் சர்வ அசுத்தத்தினின்றும் பிரிக்கப்பட்டு, தேவனுடைய கட்டளைகளை நிறைவேற்றும்படி நியமிக்கப்பட்டவர்களும், யாவரும் அறியக்கூடிய அடையாளத்தினாலே அந்த நிலைமைக்கு ஏற்படுத்தப்பட்டவர்களுமாயிருந்தார்கள். ஆதலால் நசரேயர் திராட்சப்பழரசத்தைக் குடியாமலும் தங்கள் தலைமயிரைச் சிரையாமலும், பிரேதங்களைத் தொடாமலும் நியாயப்பிரமாணத்தில் நீக்கப்பட்ட ஆகாரத்தைப் புசியாமலும் இருந்தார்கள். எண் $6^{2}$ நியா $13^{5}$ $16^{17}$ புல $4^{7}$ ஆமோ $2^{11}$.

அத்தேசத்தில் பொய்த்தேவர்களை வணங்கின பூர்வீக ஜனத்தார் தங்கள் தேவதைகளுக்குத் திராக்ஷரசத்தைக் காணிக்கையாக

வார்த்தையினாலே, நசரேயர் அந்த உபயோ கிக்கவில்லை. நசரேயப் பொருத்தனை செய்தவர்கள் யேகோவாவின்பேரிலே அதிக வைராக்கியம் உள்ளவர்களாயிருந்தார்கள். இவர்கள்மேல்யேகோவாவின்விசேஷித்த ஆசீர்வாதம்இருக்கும்என்று இவர்களுடைய தாய்மார் நினைத்து தங்கள் பிள்ளைகள் இந்தப் பொருத்தனைசெய்வார்கள் என்று வாக்களித்தார்கள். சிலசமயங்களில் இந்தப் பிரதிக்கினை செய்துகொண்டவர்கள் தங்கள் ஜீவியகாலமெல்லாம் இதின்படி நடப்பார்கள். இப்பொருத்தனை பண்ணினவன் இதை அனுசரிக்கும் காலவரையறையைத் தானே ஏற்படுத்திக் கொள்ளாவிட்டால், இது எப்படியாவது முப்பது நாளாக நடக்கவேண்டும் என்று ரபிமார் சொன்னார்கள். இந்த நாட்களுக்குள்ளே தங்களுக்கு யாதொரு தோஷம் வராதபடி அவர்கள் அநேக சடங்குகளை அனுசரிக்கவேண்டும். இவ்வித பொருத்தனை செய்துகொண்ட நசரேயர் பக்திமார்க்கத்தில் சிறந்தவர்களானதினால், எபிரெயர்கள் எல்லாரும் இவர்களை மேன்மைப்படுத்தினார்கள். சிலர் நினைக்கிறபடி யோவான்ஸ்நானகனும் இயேசுவின் சகோதரனாகிய 'நீதியுள்ள யாக்கோபும்' நசரேயர்களே. ஆனால் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. நசரேயர்கள் செய்த பிரதிக்கினைக்கும் ரேகாப்பியர் செய்த பிரதிக்கினைக்கும் சம்பந்தம் இருந்தபோதிலும், நசரேயர் வேறேரேகாப்பியர் வேறே. பவுலும் தேவாலயத்தில் அவனோடிருந்த நாலு மனிதரும்செய்தபொருத்தனை நசரேயப் பொருத்தனை என்று நினைக்கிறதற்கு அத்தாட்சி இல்லை. அப் $18^{18}$ $21^{23}$. பொருத்தனை காண்க.

**நஷ்டம். Loss.** பிலி $3^{7}$ 1 கொரி $3^{15}$ கேடு காண்க.

**நஞ்சு. Gall.**= ஒரு செடியின் கசப்பான பால். உபா $29^{18}$.

=விஷப்பூண்டு. ஓசி $10^{4}$ யோபு $20^{14}$. ஒருவேளை இந்தச் செடி கஞ்சாச்செடியைக் குறிக்கும்.

**நடக்கிறது. Walk.** ஆதி $24^{65}$ யாத் $2^{5}$ யோபு $9^{8}$ ஏசா $3^{16}$ மத் $14^{29}$ யோவா $5^{11}$.

நமது ஜீவியத்தைப்பற்றியது. எசே $11^{21}$ சங் $15^{2}$ $26^{11}$ ரோம $6^{4}$ $8^{1}$ எபே $4^{1}$.

அறியாமையாகிய இருளில் நடக்கிறது. 1 யோவா $1^{6}$ $2^{11}$.

பகலிலே நடக்கிறது. சங் $89^{15}$ யோவா $11^{9}$ $12^{35}$ ரோம $13^{13}$ 1 யோவா $1^{6.7}$.

கடவுளுடனே நடக்கிறது. ஆதி $5^{24}$ வெளி $3^{4}$.

துன்பமாகிய அக்கினியில் நடக்கிறது. ஏசா $43^{2}$.

மாம்சத்தின்படி நடக்கிறது. ரோம $8^{1.4}$ 2 கொரி $10^{3}$.

**நடக்கை. 'Walk' 'Conversation'.** கலா $1^{13}$ எபே $4^{22}$ 1 தீமோ $4^{12}$ எபி $13^{7}$ யாக் $3^{13}$ 1 பேது $1^{15.18}$ $2^{12}$ $3^{1.16}$.

**நடத்துகிறது, நடப்பிக்கிறது. Lead.** யாத் $20^{9}$ உபா $8^{2}$ சங் $23^{3}$ $25^{5}$ $31^{3}$ $43^{3}$ $80^{1}$ $136^{16}$ ஏசா $63^{12}$ யோவே $2^{26}$ ஆமோ $2^{10}$ ரோம $8^{14}$ கலா $5^{18}$ வெளி $7^{17}$.

**நடனம். Dancing.** சங் $149^{3}$ கூத்து காண்க.

**நடுகிறது, நாட்டுகிறது. Plant.** சங் $44^{2}$ $80^{8}$ $92^{13}$ பிர $2^{4}$ ஏசா $5^{2}$ $40^{24}$ மத் $15^{13}$ லூக் $17^{6}$ 1 கொரி $3^{6}$.

**நடுக்கம், நடுங்குகிறது. Tremble.** ஆதி $27^{33}$ யோபு $21^{6}$ சங் $99^{1}$ ஏசா $66^{2}$ மாற் $5^{33}$ அப் $16^{29}$ 1 கொரி $2^{3}$ 2 கொரி $7^{15}$ எபே $6^{5}$ பிலி $2^{12}$ யாக் $2^{19}$.

**நட்சத்திரம். Stars.**

I. எபிரெயருடைய அபிப்பிராயம். நட்சத்திரங்களைக் குறித்து எகிப்தியர்களும் பாபிலோனியர்களும் அடைந்த அறிவு எபிரெயர்கள் அடையவே இல்லை. வேதாகமத்தில்அவர்கள் நட்சத்திரங்களைப்பற்றி அறிந்துகொண்டவற்றைப் பின்வருமாறு சுருக்கமாய்ச் சொல்லக்கூடும்.

ஆதியிலே தேவன் நட்சத்திரங்களையும் சூரிய சந்திரர்களையும் படைத்து அவைகளை வானத்தில் வைத்தார். ஆதி $1^{16}$. பகற்காலத்திலே நாம் நட்சத்திரங்களைப் பார்க்காவிடினும் அவைகள் எப்பொழுதும் வானத்திலே இருந்து சூரியன் அஸ்தமிக்கும்போது தோன்றும். நெகே $4^{21}$. சில நட்சத்திரங்கள் பெரிதாயும் சில சிறிதாயும் இருக்கின்றன. 1 கொரி $15^{41}$. நட்சத்திரங்களின் தொகை எண்ணிறந்தது. ஆதி $15^{5}$ உபா $1^{10}$. கடவுள்மாத்திரம் அவைகளின் தொகையை அறிவார். சங் $147^{4}$ ஏசா $40^{26}$. சூரிய சந்திரர்கள் பெரிதாயும் நட்சத்திரங்கள் சிறிதாயும் இருந்தன. ஆதி $1^{16}$. கப்பற்காரர் நட்சத்திரங்களைப் பார்த்துப் பிரயாணம் பண்ணுவார்கள். அவைகள்தோன்றாவிட்டால் அவர்களுக்குச் சொல்லமுடியாத கஷ்டம். அப் $27^{20}$. சிலநட்சத்திரங்கள் விசேஷமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன:—அறு

மீன் (*Pleiades*) ஆமோ $5^8$ யோபு $38^{31}$. மிருகசீரிஷம் (*Orion*) ஆமோ $5^8$ யோபு $38^{31}$. துருவச்சக்கர நட்சத்திரம். யோபு $9^9$ $38^{32}$. 'இராசிகள்' என்னும் பதம் வானத்தில் தெளிவாயிருக்கிற நட்சத்திரக் கூட்டங்களைக் குறிக்கும். யோபு $38^{32}$ ஏசா $13^{10}$. 'தக்ஷண மண்டலங்கள்' என்பது வானத்தின் தென்திசையில் தோன்றுகிற நட்சத்திரங்களைக் குறிக்கலாம். யோபு $9^9$. 'கியூன்' 'சிக்குத்' 'ரெம்பான்' என்று மூன்று பெயர்கொண்ட அசீரிய தேவதை ஒரு நட்சத்திர தேவதையைக் குறிக்கலாம் என்று சிலர் நினைக்கிறார்கள் (ஆங்கிலேய R. V. வேதாகமம் காண்க) ஆமோ $5^{26}$ அப் $7^{43}$.

II. **உபமானங்கள்.** எபிரெயர்கள் நட்சத்திரங்களைக் குறித்து உவமையாய் அநேக விஷயங்கள் சொல்லுவார்கள். நட்சத்திரங்கள் பாடுகின்றன. யோபு $38^7$. நட்சத்திரங்கள் யுத்தம் பண்ணுகின்றன. நியா $5^{20}$. ஒருவேளை இந்த வசனத்தில் நட்சத்திரங்கள் என்பது தூதர்களைக் குறிக்கலாம். இவ்விதமாய் பரி. யோவான் ஏழு சபைகளுக்கு நட்சத்திரங்களான ஏழு தூதர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லுகிறான். வெளி $1^{20}$. வானத்திலே ஒரு புதிய நட்சத்திரம் தோன்றினால் அது நேரிடப்போகிற ஒரு பெரிய சம்பவத்தை முன் குறிக்கிறது என்று அத்தேசங்களிலுள்ளவர்கள் யாவரும் நினைத்தார்கள். எண் $24^{17}$ மத் $2^2$.

இவ்விதமாய்க் கிறிஸ்துமார்க்கத்தை அல்லது தேவபக்தி விருத்தியடைகிறதைக் குறிக்கும்படி பரி. பேதுரு 'விடிவெள்ளி' இருதயங்களில் உதிக்கிறதைப்பற்றிச் சொல்லுகிறான். 2 பேது $1^{19}$. இயேசுகிறிஸ்து தான் அந்த விடிவெள்ளி. வெளி $22^{16}$. பக்திவிருத்திக்கடுத்த நல்ல சன்மார்க்கத்துக்குரிய முன் மாதிரியைக் காட்டுகிறவர்கள் நட்சத்திரங்களைப்போல் இருக்கிறார்கள். தானி $12^3$. கர்த்தருடைய இரண்டாம் வருகையைப்பற்றி நட்சத்திரங்களில் அடையாளங்கள் தோன்றும். லூக் $21^{25}$. ஏழு அல்லது பன்னிரண்டு நட்சத்திரங்களைப் பற்றிப் பேசுவது ஒருவகைச் செய்யுள் நடைவழக்கம். வெளி $1^{16}$ $12^1$. இவ்விதமாய் ஒரு நட்சத்திரத்துக்கு 'எட்டி' என்று பெயர். வெளி $8^{11}$. நட்சத்திரங்கள் தேவனுடைய மகிமையைக் குறிக்கின்றன. சங் $8^3$. அவைகள் கடவுளுக்கு ஒரு சேனை. உபா $4^{19}$ சங் $24^{10}$ $33^6$ $148^2$.

III. **நட்சத்திர வணக்கம்.** நட்சத்திரங்களை வணங்குகிறது தகாதகாரியம் என்றும் அப்படிச் செய்கிறவர்களுக்குத் தண்டனை மரணம் என்றும் கட்டளையிடப்பட்டிருக்கிறது. உபா $4^{19}$. எபிரெயர்கள் பலதடவை இந்தப் பாவத்திலே விழுந்தார்கள் என்பதற்கு அநேக அத்தாட்சிகள் உண்டு. இதற்கு இரண்டு திருஷ்டாந்தங்கள் விசேஷமானவை.

i. எரேமியாவின் காலத்தில் எருசலேம் பட்டணத்தாரும் எகிப்துதேசத்துக்குத் துரத்தப்பட்டவர்களும் வானராக்கினியை வணங்கினார்கள். எரே $7^{18}$ $44^{15}$. இந்த தேவதையானவளுக்கு அஸ்தரோத் என்று பெயர். அவளை வணங்கும்போது தூபங்காட்டி, பானபலிகளை வார்த்து, பணியாரங்களைச் சுட்டு, அவளுக்குப் படைத்துப் பணிந்துகொண்டார்கள். அஸ்தரோத் காண்க.

ii. ஆமோஸ் தீர்க்கதரிசி 'கியூன்' 'சிக்குத்' என்று இருபெயர்கொண்ட தேவதையை வணங்குவதைக் கண்டிருக்கிறான். தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் ஆமோ $5^{26}$-ல் விசேஷ பெயர்களான 'கியூன்' 'சிக்குத்' என்னும் பதங்களைப் பொதுப்பெயர்களாக நினைத்து, அவைகளுக்கு 'கூடாரம்' 'சப்பரம்' என்று எழுதியிருக்கிறார்கள். தற்காலத்து வேதசாஸ்திரிகளோ இந்தப் பெயர்கள் அசீரியர் வணங்கின கிரகமாகிய சனீஸ்வரனே என்று நினைக்கிறார்கள். அசீரிய பாஷையில் இவன் பெயர் 'கைவனு;' இவன் மறுபெயர் 'நினிப்;' இவன் முருகதேவனைப் போல யுத்தத்துக்குத் தேவன். இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வருமுன் எகிப்தியர் அக்காலத்தில் தங்களுக்குக் கீழ்ப்பட்டிருந்த எருசலேம் நாட்டிலே இந்தத் தேவதைக்குத் தேவாலயம் கட்டியிருந்தார்கள். கிரேக்கபாஷையில் பழைய ஏற்பாட்டை மொழிபெயர்த்தவர்களும் அப்போஸ்தலர் நடபடி எழுதின பரி. லூக்காவும் 'கியூன்' என்பதற்குப் பதிலாக 'ரெம்பான்' அல்லது 'ரெப்பான்' என்று எழுதியிருக்கிறார்கள்.

ஜோதிட சாஸ்திரத்தைப்பற்றிப் பழைய ஏற்பாட்டிலே சில வசனங்களிலேமாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இரண்டாம் ஏசாயாவின் காலத்தில் எபிரெயர்களுக்குள் ஜோசியர்கள் அநேகரிருந்தார்கள். ஏசா $47^{13}$. பாபிலோனியா ராஜ்யத்திலே இவர்கள் ஏராளம். தானி $2^{27}$. சூனிய வித்தை காண்க.

பாரசீக தேசத்தில் நட்சத்திரங்களை அதிக ஜாக்கிரதையோடே பார்க்கிற சாஸ்திரிகள் ஒருவிதமான ஜோசியர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. சாஸ்திரி காண்க.

IV. **சாஸ்திரிகள் கிழக்கில் கண்ட நட்சத்திரம்.** இதைக்குறித்து இரண்டு அபிப்பிராயங்கள் உண்டு.

1. சிலர் நினைக்கிறபடி இது அச்சமயத்தில் இயேசுவின் பிறப்பைக் குறிக்கும்படி அதிசயமாய்க் கடவுள் உண்டாக்கின ஒரு நட்சத்திரமே.

2. வேறு சிலர் நினைக்கிறபடி இந்த நட்சத்திரம் அந்த விஷயத்திற்கென்று அற்புதமாய் உண்டாக்கப்பட்டதா யிராமல் கடவுளுடைய இயற்கைப் பிரமாணத்தின்படி அக்காலத்தில் தோன்றின ஒரு வெள்ளியாய் மட்டுமிருந்தது.

i. சிலர் ஜோதிட சாஸ்திரக் கணக்கை விசாரித்து கி—மு. 7—ஆம் புதன் சனி என்னும் இரண்டு பெரிய கிரகங்களும், கி—மு. 7—ஆம் புதன் சுக்கிரன் என்னும் இரண்டு கிரகங்களும், ஒன்றை யொன்று சமீபித்து ஒரு பெரிய பிரகாசத்தை உண்டாக்கினதினாலே ஜோதிட சாஸ்திரிகள் இதைப் புதிதாய்த்தோன்றின ஒரு நட்சத்திரம் என்று நினைத்ததாகச் சொல்லுகிறார்கள். ஆனால் இந்தக் கிரகங்கள் ஒன்றுக்கொன்று சமீபத்திலிருந்தாலும், ஜோதிடர் இவற்றை ஒரே நட்சத்திரமாக கூறமாட்டார்கள்.

ii. 1910—ஆம் நமக்குத் தோன்றின வால் வெள்ளியைப்போல (Halley's comet) இந்த நட்சத்திரமும் அந்தக்காலத்தில் தோன்றின ஒரு வால்வெள்ளியாயிருக்கலாம் என்று வேறு சிலர் அபிப்பிராயங்கொள்ளுகிறார்கள்.

iii. வானசாஸ்திரிகள் சென்ற ஐம்பது வருஷக்காலத்தில் தூரதிருஷ்டிக் கண்ணாடிகளைக்கொண்டு, நட்சத்திரங்களை அதிக ஜாக்கிரதையாய் ஆராய்ந்து பார்த்து, அறிந்து சொல்லுகிறபடி, சில சமயத்தில் கண்ணுக்குப் புலப்படாத இரண்டு நட்சத்திரங்கள் வானமண்டலத்திலே தங்கள் தங்கள் பாதைகளில் செல்லும்போது அதிபலமாய் ஒன்றின்மேல் ஒன்று மோதி, தீப்பற்றி, கண்ணைக் கவரும்வண்ணம் அக்கினி சுவாலித்தெரிந்து, பிறகு அவிந்து சாம்பலாகி கறுத்து, கண்ணுக்குப் புலப்படாமல் மறையும். பூதக்கண்ணாடி யில்லாதவர்கள் சில நாளாக சுவாலித்தெரிகிற இந்தப் பிரகாசத்தைமாத்திரம் பார்த்து ஒரு புது நட்சத்திரம் தோன்றியிருக்கிறது என்று நினைக்கலாம். ஒருவேளை இந்தக் கிழக்கத்திய சாஸ்திரிகள் அப்படியே நினைத்தார்கள்போலும்.

நாம் இதைக்குறித்து யாதும் தீர்மானமாய்ச் சொல்ல ஏதுவில்லை. ஆனால் தெளிவான அடையாளமில்லாமல் சாஸ்திரிகள் கிழக்கு தேசத்திலிருந்து வரமாட்டார்கள் என்பது நிச்சயமாகையால், அவர்கள் ராத்திரிகாலத்திலே மேல்திசையில் வானமண்டலமும் பூமண்டலமும் கலப்பதுபோல் நமது கண்ணுக்குத் தோன்றும் சக்கரவாள ரேகைக்கு சற்று மேலே ஒரு பெரிய வெளிச்சத்தைப் பார்த்தார்கள் என்பது தெளிவாகும்.

இந்த நட்சத்திரத்தைக் கண்டு யூதேயா தேசத்தில் ராஜகுமாரன் ஒருவன் பிறந்திருக்கிறான் என்று கிழக்குத்தேசத்து சாஸ்திரிகள் ஏன் நினைக்கவேண்டும் என்று ஒரு கேள்வி கேட்கலாம். பிலேயாம் தீர்க்கதரிசி 'யாக்கோபினின்று ஒரு நட்சத்திரம் உதிக்கும்; ஒரு செங்கோல் இஸ்ரவேலிலிருந்து எழும்பும்' என்று சொன்ன வாக்குமொழி இயேசு பிறந்த காலத்தில் பாபிலோனியா நாட்டிலிருந்த யூதர்களுக்கு நன்றாய்த் தெரிந்திருந்ததினால், அவர்கள் மூலமாய் அவ்விஷயம் அத்தேசத்து சாஸ்திரிகளுக்குத் தெரியவந்தது என்று அனுமானிக்க இடமுண்டு. இது எப்படியாயினும், நாம் அக்காலத்தில் எபிரெயர்கள் எழுதின நூல்களையும் ரோம கவிராயர்களாகிய விர்கில் (Virgil) ஹாரஸ் (Horace) என்பவர்கள் இயற்றின காவியங்களையும் விசாரித்தால், அக்காலத்தில் கிழக்கு தேசங்களிலும் ரோமராஜ்யத்திலும் வரப்போகிற ஒரு பெரிய மகாத்துமாவுக்காக ஜனங்கள் எதிர்பார்த்திருந்தார்கள் என்று அறிவோம். அக்காலத்தில் ஏதோ ஒரு காரணத்தினால் வானத்தில் ஒரு நூதனமான நட்சத்திரமோ, அல்லது ஒரு வால் வெள்ளியோ, அல்லது ஒருவகைப் பிரகாசமோ தோன்றினதினால் அதைக் கவனித்தவர்கள் அப்பெரியவர் பிறந்திருக்கிறார் என்று நினைத்திருப்பார்கள். அவர்களில் அதிக நம்பிக்கையுடையவர்கள் அம்மகாத்துமாவைப் பார்க்கும்படி நெடும் பிரயாணம் செய்தது அத்தனை ஆச்சரியமான காரியம் அல்ல.

**நதி.** River. 'ஆறு' சங் 137[1] ஏசா 41[18] எசே 31[2] 35[3] தானி 8[2].

'ஓடை' எசே 6[3].

'நதி' ஆதி 2[10] 41[1] யாத் 1[22] 7[18] உபா 1[7] 2 இரா 5[12] யோபு 29[6] சங் 46[4] 80[11] உன். பா 5[12] ஏசா 7[18] 23[3] 66[12] எசே 29[3] யோவா 7[38].

'நீர்வளம்' ஆதி 13[10].

**நதி.** River. பலெஸ்தீனாதேசத்தில்பெரிய ஆறு யோர்தான்மாத்திரமே இதைத்தவிர மழைகாலத்திலே மலைகளிலிருந்து அதிக வேகமாய் ஓடுகிற அநேக சிற்றாறுகளும் இருந்தன. இவற்றில் அநேகம் வெய்

யில் காலத்திலே வற்றி வறண்டுபோம். இதி னிமித்தம் கானானியர்களும் எபிரெயர்களும் தண்ணீரைக் கட்டிவைப்பதற்காகப் பலவித மான ஏரிகளை உண்டாக்கி, அது பாய்கிற தற்காகப் பலவித ஓடைகளையும் கால்வாய் களையும் வெட்டி, தோட்டங்களையும் வயல் களையும் நீர்ப்பாய்ச்சுவார்கள். யோர்தான் நதியைத் தவிர வேறு சில ஆறுகளைப்பற்றி யும் வேதாகமத்தில் வாசிக்கிறோம்.

எகிப்துதேசத்து நீலநதி அல்லது நைல் நதியைப்பற்றிப் பலதடவை சொல்லியிருக் கிறது. ஆதி $41^{1}$ யாத் $2^{3}$ ஏசா $19^{7}$ எரே $46^{7}$.

**தீகிரிஸ் நதி.** ஆதி $2^{16}$ தானி $10^{4}$.'

**ஐப்பிராத்து நதி.** ஆதி $15^{18}$ யாத் $23^{31}$ யோசு $1^{4}$.

எகிப்துக்கும்கானான்தேசத்துக்கும்எல்லை யைக் காண்பிக்கிற ஒரு சிற்றாற்றுக்கு **எகிப் தின் நதி** என்றும் பெயர். எண் $34^{5}$ யோசு $15^{4}$ $15^{47}$ 2 இரா $24^{7}$ 2 நாளா $7^{8}$ ஏசா $27^{12}$.

தமஸ்கு பட்டணத்துக்குக் கிட்ட **ஆப்னா, பேர்பா** என்ற இரண்டு சிறு ஆறுகள் இருந் தன. 2 இரா $5^{12}$.

**கோசான்** ஆறு. 2 நாளா $17^{6}$. கோசான் காண்க.

**யாபோக்.** ஆதி $32^{24}$ நியா $11^{13}$.

**அர்னோன்.** எண் $21^{13}$ ஏசா $16^{2}$.

வேதாகமத்திலே நதி உவமையாய்ப் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. வெள்ளம் அதிக கோபத்துடனே வேகமாய் வருகிற சத்துருக்களின் சேனையை குறிக் கும். எரே $46^{7}$ $47^{2}$ ஏசா $8^{7}$.

நதியிலிறங்கி அக்கரைக்குச்செல்வது துக் கத்தில் பிரவேசித்துச் செல்லுவதைக் குறிக் கிறது. ஏசா $43^{2}$.

ஆறு செல்வத்தையும் செழிப்பையும் குறி க்கும். யோபு $29^{6}$.

நதி தேவதயவைக் குறிக்கும். சங் $46^{4}$ எசே $47^{9}$.

நல்ல சமாதானம் எப்போதும் பாயும் ஆற்றைப்போல் இருக்கிறது. ஏசா $30^{28}$ $48^{18}$.

நீதி ஆற்றைப்போல பெரிதாயும் சுகங் கொடுக்கிறதாயும் இருக்கிறது. ஆமோ $5^{24}$.

மோசத்தைக் குறிக்கும்படி 'காட்டாறு' கூறப்பட்டிருக்கிறது. யோபு $6^{15}$.

**நத்தை.** Snail.

நத்தை தான் போனவழியிலே தனக்குப் பின்னால் மெழுகைப்போன்ற ஒரு தடம்



நத்தை.

வைத்துவிட்டுப் போகிறதினாலே அது கரைந்து போகிறதுபோல் தோன்றுகிறது. சங் $58^{8}$.

**நப்தலி.** Naphtali.

பில்காளின் இரண்டாம் மகனும் யாக்கோ பின் ஆறாம் மகனுமாகிய இவன் பெயருக் குப் 'போராட்டம்' என்று அர்த்தம். ஆதி $30^{7}$. இவனுக்கு நாலு பிள்ளைகள் உண்டு. ஆதி $46^{24}$.

இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து வரும்போது இவர்கள் அநேகராயிருந்தார் கள். எண் $1^{42}$ $26^{48}$. இவர்களுக்கு நியமித்த நாடு பலெஸ்தீனாதேசத்தில் கிழக்குப்பாகத்தி லுள்ள லீபனோன் மலையிலிருந்து கின்ன ரோத் கடல்மட்டும் செல்வதும் ஆசேர் நாட் டுக்கும் கிழக்கு மனாசேநாட்டுக்கும் இடையி லுள்ளதுமான நாடுதான். யோசு $19^{32}$. அதி கச் செழிப்பும் மிகுந்த நீர்ப்பாய்ச்சலும் உள்ள இந்தத்தேசத்தின்மூலமாய் பல பாதை கள் சென்றன. இந்தக் கோத்திரத்தார் யுத் தத்தில் பேர்போனவர்கள். நியா $5^{18}$. கானா னியரோடே இவர்கள் பலதடவை சண்டை செய்தார்கள். யாக்கோபும் மோசேயும் இந் தக் கோத்திரத்தை ஆசீர்வதித்தார்கள். ஆதி $49^{21}$. உபா $33^{23}$. சாலொமோன்காலத்தில் தேவாலயத்தில் சித்திரவேலைசெய்த ஈராமின் தாயார் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந் தவள். 1 இரா $7^{14}$. சீரிய ராஜாவாகிய பெனாதாத் இந்த நாட்டைப் பாழாக்கினான். 1 இரா $15^{20}$. அசீரியர் இதைச் சர்வநாசம் செய்துவிட்டார்கள். 2 இரா $15^{29}$.

**நப்தூகீம்.** Naphtuhim.

எகிப்துதேசத்தைக் குறிக்கும் மிஸ்ராயீம் என்பவனுடைய நாலாம் மகன். ஆதி $10^{13}$ 1 நாளா $1^{11}$. இந்தப் பெயர் எகிப்துதேசத் தில் குடியேறின ஜனங்களில் ஒரு ஜனத் தைக் குறிக்கும். இது மத்தியதரைக்கடலின் ஓரத்துக்குச் சமீபித்திருந்தது என்று தோன் றுகிறது.

**நமஸ்கரிக்கிறது, நமஸ்காரம். Worship.** சங் 106[19] எரே 44[19] எசே 8[16]. 'சாஷ்டாங்கம்' மத் 2[11].

**நமுடு. Crane.** ஏசா 38[14] **தகைவிலான் குருவி காண்க**

**நம்பிக்கை. Hope.**

1. பழைய ஏற்பாட்டிலே நம்பிக்கைக்கும் விசுவாசத்திற்கும் உள்ள வித்தியாசம் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. அதில் நம்பிக்கை என்பது யேகோவா செய்யப்போகிற பெரிய காரியங்களைக் குறித்த எதிர்நோக்கமும் அவர் வல்லமையைப்பற்றிய ஸ்திரமான எண்ணமுமே நம்பிக்கை என்று அர்த்தங் கொண்ட எபிரெய பதங்கள் ஆறு.

i. முதலாம் பதம் யேகோவாவின்மேல் வைத்த விசுவாசத்தைக் குறிக்கிறது யோபு 6[20] சங் 16[9].

ii. இரண்டாம் பதம் ஸ்திரமான துணிவைக் காட்டுகிறது யோபு 8[16] 31[24] சங் 78[7].

iii மூன்றாம் பதம் அடைக்கலம் என்று பொருள்படுகிறது. எரே 17[17] யோவே 3[16].

iv–vi. மற்ற மூன்று பதங்களும் நன்மை வரும்வரை காத்திருப்பதையும், அந்த நன்மை எப்படியாவது வரும் என்று நிச்சயங் கொள்ளுகிறதையும், திடமனங் கொண்டிருக்கிறதையும் குறிக்கிறது ரூத 1[12] யோபு 6[11] 14[7] 14[14] சங் 25[5] 25[21] 33[18] 33[22] 146[5] எசே 37[11] ஓசி 2[15].

பழைய ஏற்பாட்டிலே சொல்லியபடி தேவனுடைய ராஜ்யத்தைப்பற்றிய நம்பிக்கை என்னவென்றால், தேவன் தாமே இவ்வுலகத்தில் ஒரு இராஜ்யத்தை ஸ்தாபித்து, அதிலே தமது ஜனமாகிய இஸ்ரவேலுக்கு மிகுந்த சுக்ஷேமங்களை அருளுவார் என்பதே. சங் 72[96-98] ஏசா 9[6] 11[1] 55 அதி 60 அதி. பிற்காலத்திலிருந்த தீர்க்கதரிசிகள் இந்த நம்பிக்கையை விஸ்தரித்து ஆவிக்குரியவிதமாய் அதைக் கிரகித்து அதைக் குறித்துப் பேசினார்கள். இவ்விதமாயக கடவுளுக்கு 'நம்பிக்கையின் தேவன்' என்றும் 'இஸ்ரவேலின் நம்பிக்கை' என்றும் பெயர் கூறியிருக்கிறது. எரே 14[8] 17[13]. பாபிலோனியர், பாரசீகர், சீரியர், ரோமர் முதலியவர்களுடைய ஆதீனத்துக்குள் தங்கள் தேசம் இருப்பதை இஸ்ரவேலர் கண்டபோது, அவர்கள் விசேஷமாய் மேசியா ஸ்தாபிக்கப் போகிற ராஜ்யத்தைப்பற்றியும் மரித்தோரின் உயிர்த்தெழுதலைப்பற்றியும் ஆழ்ந்த நம்பிக்கை வைத்தார்கள். ஏசா 25[8] 26[19] தானி 12[2] (**இராஜ்யம் காண்க.**)

2. புதிய ஏற்பாட்டிலே அப்போஸ்தலர்கள் இயற்றின நிருபங்களில் நம்பிக்கையைப் பற்றி விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் அந்நியர்கள் நீதி, நியாயம், மறுமை முதலியவற்றைப்பற்றி நம்பிக்கை இல்லாதவர்களாய் இருந்தார்கள் என்று அப்போஸ்தலர் எழுதிய ஆகமங்களிலேமாத்திரம் அல்ல அந்த அந்நியர்கள் இயற்றின நூல்களிலும் தெளிவாய்ப் பார்க்கிறோம். எபே 2[12]. கிறிஸ்தவர்களோ யூதர்களைவிட அதிக நம்பிக்கையுடையவர்களாய் இருந்ததினால் கிறிஸ்துமார்க்கம் நம்பிக்கை நிறைந்த மார்க்கம் என்று சொல்வது நியாயம். அப் 13[32] 23[6] 26[6] 28[20] 1 பேது 1[3] 2 பேது 1[19].

நம்பிக்கையைக் குறிக்கும்படி கிறிஸ்தவர்கள் வழங்கின பதத்தின் மூல அர்த்தம் என்னவென்றால் வரப்போகிற நன்மைக்காகவும் தீமைக்காகவும் காத்திருப்பதே கிறிஸ்தவர்களோ அப்பதத்தை வரப்போகிற தீமையைக் குறிக்கிறதற்கு ஒருக்காலும் வழங்காமல், வரும் நன்மையைக் குறிக்கிறதற்கே வழங்கிவந்தார்கள் மேலும் இவ்விதமாய் விசுவாசத்துக்கும் நம்பிக்கைக்கும் தோன்றுகிற வித்தியாசம் என்னவென்றால்: விசுவாசம் கடவுள் செய்த இரக்ஷிப்பையும், இப்பொழுது அவர் ஈகிற அருளையும் குறிக்கிறது; நம்பிக்கையோ அவர் செய்யப்போகிற நன்மையைக் குறிக்கும்படி சொல்லப்பட்டிருக்கிறது

சில வசனங்களில் கிறிஸ்தவர்கள் அடையவேண்டிய அருளுக்கு 'நம்பிக்கை' என்னும் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது. கலா 5[5] கொலோ 1[5] 1[27] தீத் 2[13] எபி 6[18]. இப்பதம் வரும் அருளுக்காக சாந்தகுணத்தோடும் பொறுமையோடும் உற்சாகத்தோடும் எதிர்நோக்குவதாகிய கிறிஸ்தவ குணத்தைச் சாதாரணமாய்க் குறிக்கிறது. ரோம 8[19-25] 1 கொரி 1[5] கலா 5[5] பிலி 1[20]. தேவனுடைய மகிமையும், அவருடைய ராஜ்யத்தின் விருத்தியும், இயேசு உலகமெங்கும் செங்கோல் செலுத்துவதும், பக்தர்கள் நித்தியஜீவனை அடைகிறதுமே கிறிஸ்தவ நம்பிக்கையின் நோக்கம். ரோம 5[2] 8[17] 8[25] 1 கொரி 15[24] 15[35] பிலி 2[9] 2 தெச 1[10] வெளி 17[14]. இந்த நம்பிக்கையை அடைவதற்கு முதல்படி மரித்தோரின் உயிர்த்தெழுதல். 1 கொரி 15[12] 1 தெச 4[16] பிலி 3[21]. மரித்தோரினின்று உயிர்த்தெழுந்தவர்கள் நித்தியஜீவனை அடைந்து இயேசுவின் சந்நிதானத்தில் பாக்கியம் உடையவர்களாய் இருப்பார்கள். யோவா 14[2] லூக் 20[35] வெளி 7[14]. இந்த நம்பிக்கைக்கு தேவவாக்கே அஸ்திபாரம். மத் 24[30]

எபி 6[13]. இயேசு உயிர்த்தெழுந்ததும், பரத்துக்கேறிச்சென்றதும் இதற்கு உறுதி. அப் 17[31] எபே 1[18]. நமக்குள் இருக்கிற பரிசுத்த ஆவி இந்தநம்பிக்கைக்கு அச்சாரம். ரோம 8[16] 2 கொரி 1[20].

அன்போடும் விசுவாசத்தோடும் கூடிய குணமாகிய இந்த நம்பிக்கை சுவிசேஷத்தின் லக்ஷணமும் பக்தர்களின் பொக்கிஷமுமாயிருக்கிறது. யோவா 10[27] ரோம 5[1] 1 கொரி 13[13] 2 கொரி 1[7] கலா 5[5] எபே 4[1-4] 1 தெச 1[3] 4[13-18] வெளி 21[1-7]. சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் கிறிஸ்தவ நம்பிக்கை எல்லாம் இயேசுகிறிஸ்துவுக்குள் அடங்கியிருக்கிறது. 1 தீமோ 1[1]. ஆதி கிறிஸ்தவர்கள் அவருடைய இரண்டாம் வருகையைபபற்றி அதிக நம்பிக்கை உடையவர்களாய் இருந்தார்கள். 'நமது ஆண்டவர் வருகிறார்' என்னும் அர்த்தங்கொண்ட 'மாரநாதா' என்னும் அரமேயபதத்தை அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்கும்போது அடிக்கடி சொல்லுவார்கள். 1 கொரி 16[22] கொலோ 1[5] தீத் 2[13]. அவர்களிடத்தில் இருந்த நம்பிக்கையினாலே அவர்கள் சொல்லிமுடியாத துக்கங்களையும் உபத்திரவங்களையும் சகித்து ஜெயங்கொண்டார்கள். ரோம 8[18] எபி 6[18] வெளி 7[13].

**நயம், நயவசனிப்பு.** Enticing words. நியா 14[15] 16[5] நீதி 1[10] கொலோ 2[4].

**நரகம்.** Hell.

நாம் வசிக்கிற பூச்சக்கரமானது நமக்கு மேலிருக்கிற வானத்துக்கும கீழே இருக்கிற ஒரு பெரிய கெபிக்கும் இடையில் வைக்கபபட்டிருக்கிறது என்று பூர்வீக எபிரெயர்கள் நினைத்தார்கள். ஷேயோல் என்று அவர்கள் பெயரிட்ட இந்தக் கீழ் மண்டலத்துககுத் தமிழ் வேதாகமததில் **பாதாளம்** என்று சொல்லியிருக்கிறது. இமமண்டலத்தில் மரித்தோர் இருபபதாக எபிரெயர் நினைத்து வந்தாலும், அவர்கள் மரிததோரின் நிலைமையைப்பற்றியும், அனுபவிதத சுகதுக்கங்களைப்பற்றியும் பூர்வீக வேதாகமநூல்களில் விபரமாய் ஒன்றும் கூறவில்லை பிந்தியகாலங்களில்தான் அவர்கள் தீயோருக்கு மரணத்திற்குப் பிற்பாடு தண்டனை இருககும் என்னும் கொள்கையை விபரித்துச் சொன்னார்கள். தானி 12[2]. தீயோர் தண்டனையடையும் இடத்துக்குப புதிய ஏற்பாட்டுக் காலத்தில் கெகென்னா என்று பெயர். இது இன்னோம் பள்ளத்தாக்குக்கு மறுபெயர். 2 நாளா 28[3]. தமிழ்ப் புதிய ஏற்பாட்டிலே இதற்கு **நரகம்** என்று பெயர் கூறப்பட்டிருக்கிறது. இந்த இன்னோம் பள்ளத்தாக்கிலே பூர்வீக கானானியர் அகோரமான நரபலிகளைச் செலுத்தினதினாலும், பிந்தினகாலங்களில் எருசலேம் நகரத்தார் அதில் குப்பை கூளங்களையும் கொலைசெய்யப்பட்ட குற்றவாளிகளின் பிணங்களையும் போட்டுச் சுட்டெரித்ததினாலும், அது சபிக்கப்பட்ட இடமாய் இருந்தது. நரகத்தில் தீயோர் சபிக்கப்பட்ட நிலைமையிலிருந்து தேவ சாபத்துக்குள்ளாகி அதேவிதமாய் எரியும் அக்கினியில் விழுவார்கள் என்று நினைத்தார்கள்.

'நரகம்' மத் 5[29 30] 10[28] 23[15] 23[33] லூக் 12[5].

'எரி நரகம்.' மத் 5[22] 18[9].

'அக்கினியுள்ள நரகம்.' மாற் 9[43.55].

'நரக அக்கினி.' மாற் 9[47] யாக் 3[6] **ஆதேஸ், ஷேயோல்** காண்க.

• **நரம்பு.** Sinew. ஆதி 32[32] யோபு 10[11] 40[17] எசே 37[8] ஏசா 48[4].

**நரி.** Fox. Jackal. நியா 15[4] நெகே 4[3] சங் 63[10] உன். பா 2[15] புல 5[18] எசே 13[4] மத் 8[20] லூக் 9[58] 13[33]. 'குழி நரி' உன். பா 2[15]. **ஓரி** காண்க.

**நருங்குண்டவர்கள்** Broken hearted. சங் 34[18] 51[17] 74[14] 117[3] ஏசா 61[1] லூக் 4[18] **நொறுங்குகிறது** காண்க.

**நரை.** Hoary, grey. லேவி 19[32] நீதி 20[29] ஏசா 46[4] 'நரைமயிர்' ஆதி 42[38] 1 இரா 2[6] நீதி 16[31] சங 71[13]. **நொறுங்குகிறது, கூந்தல்** காண்க.

**நர்கீசு.** Narcissus.

ரோமாபுரியிலுள்ள சபையைச்சேர்ந்த இவனுடைய வீட்டாருக்குப பரிசுதத பவுல் வாழ்த்துதல் செலுத்தினதினாலே, இவன் ஒரு பெரிய குடும்பத்துக்குத் தலைவன் என்று தோன்றுகிறதானாலும் இவனைக் குறித்து வேறொன்றும் நிச்சயமாய்த் தெரிகிறதில்லை. ஆனால அநேகர் நினைககிறபடி, இவன் ரோமராயனாகிய கிலவுதியுவுக்குக் காரியதரிசி பரி. பவுல் ரோமாபுரிக்கு நிருபம் அனுப்புகிறதற்கு மூன்று வருஷத்துக்கு முன்னே, சிமமாசனம் ஏறின நேரோ ராயனுடைய தாயார் ஏறக்குறைய கி-பி. 55ல் இவனுக்கு நஞ்சூட்டி கொன்றுபோட்டாள். இதின்படி பரி. பவுல் இவனுக்கு வாழ்த்துதல் செலுத்தாமல் இவன் வீட்டாருக்கு மாத்திரம் வாழ்த்துதல் செலுத்துகிறான். ரோம 16[19].

**நல்ல துறைமுகம்.** Fair Havens. கிரேத்தாதீவின் தென் கரையிலுள்ள ஒரு துறைமுகம். அப். 27[3].

**நல்வழி.** 'the good path', நீதி 2[9].

**நளதம்.** Spikenard.

இந்தியாதேசத்தில் வளர்ந்த ஒரு செடியிலிருந்து எடுக்கப்பட்ட சுகந்த வாசனையுள்ள எண்ணெய்க்கு நளத தைலம் என்று பெயர். அரபிதேசத்து வியாபாரிகள் இதை இந்தியா தேசத்திலிருந்து பலெஸ்தீனு தேசத்திலும் ரோம ராஜ்யத்திலும் உள்ள பட்டணங்களுக்குக் கொண்டுபோய் அங்கே விற்பார்கள் இந்தத் தைலம் சுத்தமாய் இருக்கும்போது, அது அதிக விலையுயர்ந்தது உன். பா 4[13] மாற் 4[3] யோவா 1[2-3].

**நற்கருணை.** Sacrament. அன்பு, விருந்து, இராப்போஜனம் காண்க.

**நற்கிரியை** Good Work. மத் 26[10] மாற் 14[6] யோவா 10[32] அப 9[36] ரோம 13[3] 2 கொரி 9[8] எபே 2[10] பிலி 1[5] 1 தீமோ 2[10] 6[18] தீத் 2[7.14] 3[1.8] எபி 10[24] 13[21] 1 பேது 2[12]. கிரியைகள் காண்க.

**நன்மை, நன்று** Good. ஆதி 1[31] 45[18] 2 நாளா 18[7] யோபு 22[17] சங் 4[6] 34[14] 14[1] 133[1] நீதி 3[27] 17[13] 31[12] பிர 2[24] 3[12] 9[18] ஏசா 1[19] ஆமோ 5[14] மத் 7[11] 12[35] 19[16] லூக் 16[5] யோவா 1[46] ரோம 14[16] பிலே 1[6] எபி 9[11] 10[1]

**நன்றியறிதல்.** Thanks.

நன்றியறிதல், பெற்றுக்கொண்ட நன்மைக்காக அன்புகூருதல்.

'நன்றி மறப்பது நன்றன்று, நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.'

'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா
முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.'

(குறள்.)

தமிழ் வேதாகமத்தில் பல வசனங்களில் 'ஸ்தோத்திரம்' என்பது 'நன்றியறிதல்' என்பதைக் குறிக்கும். அப 24[3] கொலோ 3[15].

## நா.

**நாகசுரம்** Trumpet

1 இரா 1[40] ஏசா 5[12] தானி 3[4.10.15]. கீதவாத்தியம் காண்க

**நாகபி.** Nahbi. மோசே அனுப்பின வேவுகாரரில் நபதலி கோத்திரத்தானாகிய இவன் ஒருவன். எண் 13[14].

**நாகமா.** Naamah யூதா சமபூமியிலுள்ள ஓர் ஊர். யோசு 15[37] யோபு 2[11].

**நாகமான்.** Naaman. [இன்பம்.]

1. பென்னியமீனுடைய மக்களில் ஒருவன். ஆதி 46[21] எண் 26[40].

2. எலிசா தீர்க்கதரிசியிடத்துக்கு வந்த சீரியருடைய சேனாபதி. எலிசா இவனுக்குச் செய்த அற்புதத்தின் சரித்திரம் வேதாகமத்தில் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. 2 இரா 5 அதி.

**நாகலோல்.** Nahalal. நியா 1[30]. நகலால் காண்க.

**நாகாஷ்** Nahash.

1 அம்மோன் தேசத்து ராஜா. புதிதாய் ராஜபட்டாபிஷேகமடைந்த சவுல் இவனை ஜெயித்தான். இவன் தாவீதுக்குச் சத்துரு. 1 சாமு 11[1] 2 சாமு 10[2] 17[27].

2 யோவாபின் தாயாகிய செருயாளின் தகப்பன் 2 சாமு 17[25]

**நாகாத்** Nahath. நகாத் காண்க.

**நாகாம்** Naam, Naham.

1. காலேபின் மக்களில் ஒருவன். 1 நாளா 4[15].

2 காலேபின் சந்ததியார்களில் ஒருவன். இவன் கேகிலாவின் தகப்பன். 1 நாளா 4[19]

**நாகூம்** Nahum. [ஆறுதல் நிறைந்தவன்.]

நாகூம் தீர்க்கதரிசி எல்கோஸ் என்னும் ஊரைச் சேர்ந்தவன் என்பதைத்தவிர அவனைப்பற்றி நமக்கு வேறொன்றும் தெரியாது. இந்த எல்கோஸ் சிமியோன் கோத்திரத்தைச் சேர்ந்த நாட்டிலே இருந்ததினால், இவன் எருசலேம் பட்டணத்துக்குச் சமீபத்தில் குடியிருந்தான் என்று நாம் நினைக்கலாம். ஆனால் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை.

2. நாகூமின் ஆகமம்.

இந்த ஆகமத்தில் இரண்டு பாகங்கள் உண்டு. அவையாவன.—

I. 1[1]–2[2].

II 2[3]–3[19].

I. 1[1]–2[2].

இந்தப் பாகம் ஒரு சங்கீதம். இதில் தீர்க்கதரிசி முதலாவது யேகோவாவினுடைய நீதி நியாயங்களைக் குறித்து ஜனங்கள் யாவரையும் எச்சரித்து, விசேஷமாய் யூதாவுக்கும நினிவேபட்டணத்தாராகிய அசீரியருக்கும் யேகோவா செய்யப்போகிற தண்டனையை விபரித்துச் சொல்லுகிறான்.

II. 2[3]–3[19]. இந்தப் பாகத்தில் இரண்டு விஷயங்கள் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன

i. முதலாவது நினிவேப்பட்டணத்தின் முற்றுகையையும், அதின் அழிவையும், அது பாழாய்க்கிடக்கும்நிலைமையையும்தீர்க்கதரிசி தெளிவாயும் சுருக்கமாயும் சொல்லுகிறான்.

ii. இரண்டாவது இவன் மறுபடியும் நினிவேக்கு வரும் கெடுதியைப்பற்றி விபரமாய்ச் சொல்லுகிறான். இதில் அவன் யுத்தத்தைக் குறிக்கும்படி வெகு தெளிவாய்க் கூறுகிற வசனங்களில் அமைந்துள்ள பதப்பிரயோகங்களைப் போன்றவை வேதாகமத்தில் வேறெங்கும் கிடையாது.

அசீரியருடைய பொல்லாப்பையும், வேசிகளைப்போல அவர்கள் செய்த உபாயங்களையும், தீர்க்கதரிசி கண்டித்து எகிப்துதேசத்தில் உள்ள பெரிய பட்டணமாகிய 'நோ-அம்மோனுக்கு' வந்த அழிவு நினிவே அடையும் சர்வ நாசத்துக்கு அத்தாட்சியாய் இருக்கிறது என்று சொல்லுகிறான்.

கடைசியாய்த் தீர்க்கதரிசி அதின் ராஜாவை நோக்கி அவனுடைய ராஜயத்துக்கும் அதன் முக்கிய பட்டணத்துக்கும் அழிவு அதிகக கண்டிப்பாய் வரும் என்று கூறுகிறான்

3 காலம் இந்த ஆகமத்தில் தீர்க்கதரிசி நோ-அம்மோன் அழிவுக்குப் பின்னும், நினிவேபபட்டணத்தின் அழிவுக்கு முன்னும் தீர்க்கதரிசனம உரைத்தான் என்று பார்க்கிறோம். ஆகவே இவன் தீர்க்கதரிசனம் கூறிய காலம் கி-மு 661-க்கும 606-கரும இடைப பட்டகாலம கி-மு 666-லூ நினிவேப் பட்டணததில் அசீரியா ராஜாவாகிய அசூர் பானிபால் என்பவன் மரித்தபிற்பாடு, அசீரிய ராஜ்யததின் மகிமை குறைவடைநதது தீர்க்கதரிசி அக்காலத்தில் அந்த ராஜயததின் அரசர்கள் செய்த கொரேத்தினிமித்தம, அவர்களுடைய ராஜயத்துக்குத் தண்டனை வருகிறதைப பார்த்து இந்தத் தீர்க்கதரிசனத்தை உரைத்தான் என்றும், ஏறக்குறைய கி-மு 626-ல் இந்த நூலை இயற்றினான் என்றும் வேத சாஸ்திரிகள் அபிபபிராயஙகொள்ளுகிறார்கள். ஆகவே இவனும் எரேமியா செபபனியா என்னும தீர்க்கதரிசிகளும் ஏககாலத்தினர்.

4. நடையும் நோக்கமும் இதிலே பல உவமைகள் உண்டு. மீகாவைப்போல நாகூம் யூதா நாட்டார் செய்த குற்றங்களைப்பற்றி நினைக்காமல், அசீரியர் செய்த அநியாயங்களைப்பற்றியே நினைத்து, யேகோவா அவர்களுக்கு அளிக்கப்போகிற தண்டனையைக் குறித்து அவர்களை எச்சரிக்க முயலுகிறான்.

**நாகோர். Nahor.**

1. ஆபிரகாமின் பாட்டன். ஆதி 11[22] லூக் 3[34]

2. முன்சொன்ன நாகோரின் பேரன் ஆபிரகாமின் சகோதரன் ஆரான் ஊரிலே குடியேறின இவனுக்குப பன்னிரண்டு புத்திரர். அசீரியா தேசத்துக்கும் சீரியா தேசத்துக்கும் இடையிலுள்ள நாடுகளிலும் வனாந்தரங்களிலும் அலைந்துதிரிகிற ஜாதியாருக்கு இவன்தான் கோத்திரபபிதா. ஆதி 11[26] 22[20] 24[10] 31[53].

**நாகோன் Nachon.** கீத்தோனின் களம். இதில் ஊசா செத்தான் இடம் தெரியாது. 2 சாமு 6[6] 1 நாளா 13[9].

**நாக்கு. Tongue.** நாவு காண்க.

**நாச மலை Mount of corruption** ஒலிவ மலையில் மில்கோம் தேவதையின் ஸ்தலம். 2 இரா 23[13].



நாசரேதது நாசரேதூர்.

**நாசம். Loss.** கேடு காண்க.

**நாசரேத்து. Nazareth.** [இதன் பெயருக்கு அர்த்தம் தெளிவாய் விளஙகவில்லை]

கலிலேயாநாட்டின் தென்பாகத்திலுள்ள செபுலோன் கோத்திரத்தைச்சேர்ந்த மலை

நாட்டில் உள்ள ஓர் ஊர். இதற்குங் கலிலே யாக்கடலுக்கும் உள்ள தூரம் ஏறக்குறைய 20 மைல். இது மத்தியதரைக்கடலுக்கு ஓரத்திலுள்ள கர்மேல் மலைக்கு ஏறக்குறைய 24 மைல் தூரத்திலும், எருசலேமுக்கு ஏறக்குறைய 60 மைல் தூரத்திலும், இருந்தது. பழைய ஏற்பாட்டிலே இதன் பெயருங்கூடக் கூறப்படவில்லை. இதற்கு யாதொரு மேன்மையும் இல்லை. யோவா 1[46]. இதிலே யோசேப்பும் மரியாளும் வசித்தார்கள். லூக் 1[26]. அவர்கள் எகிப்துதேசத்திலேயிருந்து திரும்பிவந்தபோது இதிலேதான் வாசஞ்செய்தார்கள். மத் 2[23] லூக் 2[39]. இயேசு தமது வாலிபப்பிராயமெல்லாம் இந்த ஊரில்தான் வளர்ந்தார். அவர் இதில் உள்ள ஜெப ஆலயத்தில் பிரசங்கஞ் செய்தபிறகு இந்த ஊரார் அவரைத் தள்ளிவிட்டார்கள். மத் 13[54] லூக் 4[29]. பிற்காலங்களில் கிறிஸ்தவர்களில் அநேகர் இந்த ஊருக்குப் புண்ணியயாத்திரை பண்ணினார்கள்.



தற்காலத்து நாசரேத்தூரின் நீரூற்று.

**நாசி**. Nostril. ஆதி 2[7] 7[22] 2 சாமு 22[9] யோபு 4[9] சங் 18[8] ஏசா 2[22] ஆமோ 4[10].

**நாஸ்திகம்**.—Atheism.

எபிரெயர்களும் மற்றவர்களும் கடவுள் உண்டு என்பதைக் குறித்துக் கிஞ்சித்தும் சந்தேகப்படாததினால், வேதாகம நூலாசிரியர் கடவுள் உண்டு என்பதைக் குறித்துத் தர்க்கம் பண்ணாமலும் அதற்கு விபரமாய் அத்தாட்சி கூறாமலும் இருக்கிறார்கள். ஆகையால் சங்கீதக்காரன் 'தேவன் இல்லையென்று சொல்லுகிறவன் மதிகேடன்' என்றும் பரி. பவுல் 'தேவன் இல்லை என்று சொல்லுகிறவர்கள் சாக்குப்போக்குச் சொல்ல இடம் அற்றவர்கள்' என்றும் சொல்லுகிறார்கள். சங் 14[1] ரோம 1[20]. நாஸ்திகக் கொள்கைக்காரர் ரோமராஜ்யத்தில் இருந்தாலும் இவர்களுக்கு விரோதமான தர்க்கவாதம் புதிய ஏற்பாட்டிலே இல்லை. தேவன் இல்லை என்று சொன்ன பூர்வகாலத்து நாஸ்திகர்களுக்கும் தற்காலத்து நாஸ்திகர்களுக்கும் விரோதமாய்த் தர்க்கவாதம் பண்ணுவது பெரும்பாலும் வீண் வேலையே. ஏனென்றால் இவ்வுலகத்திலுள்ள விநோதமான காரியங்களையும் பூகோள ககோள சாஸ்திரங்களையும் மனுஷ சரித்திரங்களையும் கற்றறிந்தவர்கள் தேவன் இல்லை என்று சாதிக்கும்பொழுது அவர்களுடைய தப்பெண்ணங்களை நிராகரிக்கும்படி நாம் சொல்லும் நியாயங்களை அவர்கள் கவனிப்பார்களா? நாம் நாஸ்திகத்தை கண்டிக்காமல் நாம் நன்றாய் அறிந்துணர்ந்த இயேசுகிறிஸ்துவைக்குறித்து நமது அநுபவ சாட்சியைக் கொடுப்போமானால், ஒருவேளை நாஸ்திகர்கள் அதை கவனித்து அதின் மூலமாய் உண்மையை அறிந்துகொள்ளுவார்கள்.

**நாடா**. Shuttle. 'நெய்கிறவன் எறிகிற நாடா.' யோபு 7[6].

**நாடாக்கள்**. Phylacteries. Frontlets. யாத் 13[1-10] உபா 6[4] 11[13] மத் 23[5]. காப்பு நாடாக்கள் காண்க.

**நாடு**. Province. பாபிலோனியா பெர்சியா முதலிய ராஜ்யங்களில் பல நாடுகள் இருந்தன. அவற்றை ஸ்தாபிக்கும் விபரம் நமக்குத் தெளிவாய்த் தெரியவில்லை. ஆனால் வழக்கமாய் இந்த ராஜ்யங்களின் சக்கர

வர்த்திகள் ஒரு நாட்டிற்கு ஒரு தலைவன் ஏற்படுத்தும்பொழுது, அத்தலைவன் தங்களுக்குச் செலுத்தவேண்டிய தீர்வையின் தொகையைக் கட்டாயமாய் ஏற்படுத்துவார்கள். தனக்குக் கீழ்ப்பட்ட ஜனங்களுக்குக் கஷ்டமாயிருந்தாலுஞ்சரி, இல்லாவிட்டாலுஞ்சரி, நியமிக்கப்பட்ட இந்தத் தொகையை அந்நாட்டின் அதிபதி செலுத்தியே தீர்க்கவேண்டும். இத்தொகைக்குமேலே அவன் வசூலித்தால் அது அவன் சொந்த உபயோகத்துக்காகு மாதலால் வழக்கமாய் அந்நாடுகளின் தலைவர்கள் தங்களுக்கு ஆஸ்திசேர்க்கும்படி விரும்பிப் பிரஜைகளுக்குப் பலவிதமான அநியாயங்களைச் செய்வார்கள்.

இயேசுவின்காலத்தில் ரோம ராஜாங்கத்திலுள்ள நாடுகள் இரண்டுவிதமாய்ப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒருநாடு சண்டையில்லாமலும் ரோமசேனைகள் அதில் இருப்பது அவசியம் இல்லாமலும் இருந்தால், அது ரோமராஜாங்கத்தின் மேல்விசாரணைச் சங்கமாகிய 'செனேட்' (*Senate*) என்னும் கூட்டத்தின் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டிருக்கும். அந்த நாடுகளின் தலைவர்கள் இந்தச் சங்கத்தாரால் நியமிக்கப்படுவார்கள். ஒரு நாடு அமைதி அற்றுக் கலகத்துக் கிடமானதாயும், அந்நாட்டின் காரியங்களை ஒழுங்கு பண்ணுகிறதற்கு ராஜாங்கசேனையை அங்கே வைக்கவேண்டுவது அவசியமாயும் இருந்தால், அந்த நாடு ரோமராயனுடைய அதிகா அவன் அப்ப டிப்பட்ட நாடுகளில் தலைவர்களை ஏற்படுத்துவான். மேலும் எந்த நாட்டிலும் தீர்வையைப் பற்றிய விசாரணைக் கர்த்தன் ரோமராயனே. இங்கு கூறிய ஒழுங்கின்படி புதிய ஏற்பாட்டில் சொன்ன சின்ன ஆசியா, ஆப்பிரிக்கா, சீப்புருதீவு, கிரேத்தாத்தீவு, மக்கெதோனியா, என்னும் இந்நாடுகள் செனேட் என்னும் மேல்விசாரணைச் சங்கத்தின் அதிகாரத்திலும்; எகிப்து, யூதேயா, சீரியா, கலாத்தியா என்னும் நாடுகள் ரோமராயனுடைய அதிகாரத்திலும் இருந்தன. மேல் விசாரணைச் சங்கத்தால் ஏற்படுத்தப்பட்டவர்களுக்குச் சம்பளம் இல்லை. ரோமராயனால் ஏற்படுத்தப்பட்டவர்களுக்கு பரி. பவுலின் காலத்திற்குப் பிற்பாடு ஏறக்குறைய கி–பி. 30–ளூ முதல் சம்பளம் இருந்தது. நாடுகளை நடத்துகிறவர்களில் அநேகர் அளவற்ற திரவியம்சேர்த்துக்கொள்ளுவார்கள். திருஷ்டாந்தமாக நீதியையும் நியாயத்தையும் விரும்பின சிசெரோ (*Cicero*) என்னும் சிலிசியாநாட்டதிபதி வருஷம் ஒன்றுக்கு ஏறக்குறைய மூன்று லக்ஷம் ரூபாய் சம்பாதித்தான் என்றால் அநியாயமாய்ப் பணம் சேகரிப்பவர்கள் அடைந்த திரவியம் எத்தனை லக்ஷமோ! வெவ்வேறு நாடுகளிலுள்ள பிரஜைகளுக்கு வெவ்வேறான சலாக்கியங்களும், தீர்வைகளும் இருந்தன.

**நாட்டுகிறது.** Plant. நடுகிறது காண்க.

**நாணல்.** Bulrush, Reed, Flag.

நாணல் பலவிதமாய் இருக்கிறதினாலும், நாணலைக் குறிக்கும்படி மூலபாஷையில் வழங்கின பதங்கள் பலவானதினாலும், அந்தப் பதங்களினாலே எபிரெயர்கள் குறித்த வெவ்வேறான நாணல் செடிகளை நுட்பமாய்ப் பிரித்துக் கூறுவது முடியாதகாரியம். யோர்தான் நதியின் பள்ளத்தாக்கைப்போன்ற சதுப்பு நிலங்களில் நாணல் அதிகமாய் இருக்கும். இது வழக்கமாய் 20 அடி வரை வளரும். இச்செடியின் பக்கங்களில் வெடிக்கிற இளங்கொழுந்து ஆடுமாடுகளுக்கு நல்ல இரையானதினால், இப்படிப்பட்ட கொழுந்துகள் வேரிலிருந்து அதிகமாய் வெடித்து வளரும்படிக்கு அந்நாட்டார் வெயிலில் காய்ந்துபோன நாணல் செடிகளை தீமூட்டி எரித்துவிடுவார்கள். இது இருக்கிற இடங்களில் மரங்கள் இல்லாததினால் இதன் நிழல் அதிகப் பிரயோஜனமாகும். யோபு $40^{21}$. இது இருபது அடி உயரமாயும் பெரிதாயும் இருந்த போதிலும், காய்ந்துபோன பிறகு இதிலே உறுதி இல்லாததினால், இது லேசாய் நெரிந்துபோம். ஆதலால் நெரிந்து [illegible] நம்புவது சுத்த மூடத்தனம் என்று வேதாகமத்தில் சொல்லியிருக்கிறது. 2 இரா $18^{21}$ ஏசா $36^{6}$. நாணல்தண்டு நேரானதினால், அதை வழக்கமாய் அளவுகோலாக உபயோகித்தார்கள். எசே $40^{3}$ வெளி $11^{1}$. நாணலைப்பற்றிச் சொல்லிய வேறு வசனங்களாவன: யாத் $2^{3}$ யோபு $8^{11}$ 1 இரா $14^{15}$ 2 இரா $18^{29}$ சங் $68^{30}$ ஏசா $36^{6}$ $42^{3}$ எரே $51^{32}$.

எகிப்தியர் நீலநதியின் ஓரத்தில் வளர்ந்த நாணலின் பட்டையைப் பதப்படுத்தி, நேர்த்தியான காகிதமாக உபயோகித்து வந்தார்கள். தமிழ் வேதாகமத்தில் சொன்ன 'மடல் உள்ள செடி' இந்தமாதிரி நாணலைக் குறிக்கிறது. ஏசா $19^{7}$.

'வசம்பு' என்னும் பதத்தினால் நல்வாசனையுள்ள ஒருவித நாணல் அல்லது ஒருவகைப் பட்டை குறிக்கப்படுகிறது. யாத் $30^{23}$ உன். பா $4^{14}$ எசே $27^{19}$.

**நாணல் படவு.** (A. V. vessels of bulrushes.) ஏசா $18^{2}$ யோபு $9^{26}$ காண்க. கப்பல் (பக். 211) காண்க.

**நாதாப். Nadab.**

1. ஆரோனின் மூத்தமகன். இவன் மோசேயுடன் சீனாய்மலைக்குப்போனான். இவன் ஆசாரியனாகப் பிரதிஷ்டை செய்யப்பட்ட நாளிலே நியாயப்பிரமாண ஆசாரத்துக்கு விரோதமாகத் தூபங்காட்டினதினால் மாண்டுபோனான். யாத் $6^{23}$ $28^{1}$ லேவி $10^{1}$ எண் $3^{2}$. அபியூ காண்க.

2. யெர்மெயேலின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $2^{28}$.

3. பென்யமீன் கோத்திரத்தாரில் ஒருவன். 1 நாளா $8^{30}$.

4. யெரோபெயாமின் மகன். இவன் இரண்டு வருஷக்காலம் (அதாவது கி–மு. 915–913.) இஸ்ரவேல் இராஜ்யத்தில் அரசாட்சிசெய்து பாசா என்னும் இவனது சேனாபதியினால் கொலைசெய்யப்பட்டான். 1 இரா $14^{20}$ $15^{25}$.

**நாதான். Nathan.** 1 நாளா $2^{36}$. நாத்தான் (6) காண்க.

**நாத்தான். Nathan.** [கொடுக்கிறவன்.]

1. தாவீதின் மூன்றாம் மகன். இவன் தாயார் பத்சேபாள். 2 சாமு $5^{14}$ லூக் $3^{31}$.

2. தாவீதின் ஆலோசனைக்காரர்களில் தீர்க்கதரிசியாகிய ஒருவன். இவன் தேவாலயத்தைக் கட்டுகிறதைப்பற்றி ஆலோசனை சொல்லி பத்சேபாளிடத்தில் ராஜாசெய்த விபசாரத்தைப்பற்றி அவனைக் கண்டித்து, அதோனியா சிம்மாசனத்தை அபகரிக்கும்படி செய்த ராஜதுரோகத்தைப்பற்றி எச்சரிப்புக் கூறினான். 2 சாமு $7^{2}$ $12^{1}$ 1 இரா $1^{8}$. இவன் தாவீதின் சரித்திரத்தை எழுதினான். 1 நாளா $29^{29}$.

3. தாவீதின் போர்வீரனாகிய ஈகாலின் தகப்பன். 2 சாமு $23^{36}$.

4. எஸ்றாவுடன் பாபிலோனியா நாட்டிலிருந்து திரும்பிவந்தவர்களில் ஒருவன். எஸ்றா $8^{16}$.

5. அந்நியஜாதிப் பெண்களை விவாகம் பண்ணினவர்களில் ஒருவன். எஸ்றா $10^{39}$.

6. ஓர் யூதன். 1 நாளா $2^{36}$.

7. யோவேலின் சகோதரன். 1 நாளா $11^{38}$.

8. ஓர் பெரியவன். சக $12^{12}$.

**நாத்தான்வேல். Nathaniel.** [கடவுள் கொடுக்கிறவர்.] கலிலேயா நாட்டில் கானாவூரில் பிறந்தவனாகிய இவன் இயேசுவின் முதல் சீஷர்களில் ஒருவன். இயேசு உயிர்த்தெழுந்தபிறகு இவனும் வேறு ஆறு சீஷர்களும் கலிலேயாக்கடலில் மீன்பிடிக்கும்போது இயேசுவைக் கண்டார்கள். யோவான் சுவிசேஷத்திலே 'நாத்தான்வேல்' என்று சொல்லப்பட்ட இவனுக்கு மற்ற சுவிசேஷங்களில் 'பற்தொலொமேயு' என்னும் பெயர் கூறப்பட்டிருக்கிறது 'பற்தொலொமேயு' என்பதற்கு 'தல்மாயுவின் மகன்' என்று அர்த்தம். ஆதலால் இவனுடைய முழுப்பெயர் என்னவென்றால் 'தல்மாயுவின் மகனாகிய நாத்தான்வேல்' என்பதே. மத் $10^{3}$ மாற் $3^{18}$ லூக் $6^{14}$ யோவா $1^{45}$ $21^{2}$. 'தல்மாய்' என்பது எபிரெயர்களுக்குள் வழக்கமான பெயர்தான். தல்மாய் காண்க.

ஆதிகிறிஸ்தவர்களில் சிலர் இவன் எத்தியோப்பியாவோடு சேர்ந்த சிந்துதேசத்துக் கடற்கரைகளில் போயிருந்து அங்கே சுவிசேஷத்தைத் தெரிவித்தான் என்றும்; அதன் பின்பு இவன் வடதிசையாக அர்மேனியா தேசத்தில் அநேகரைக் கிறிஸ்தவ மார்க்கத்திற்குத் திருப்பினான் என்றும்; அவ்விடத்து அல்பானோப்புலியில் சிலுவைமரத்தில் அறையப்பட்டான் என்றும் நம்பினார்கள்.

**நாபால். Nabal.** [புத்தியில்லாதவன்.] யூதா நாட்டிலுள்ள மாகோனில் குடியிருந்த இவனுடைய சரித்திரம் 1 சாமு 25–ம் அதிகாரத்தில் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இவன் இறந்தபின் இவனுடைய மனைவியாகிய அபிகாயில் தாவீதின் மனைவியானாள். 1 சாமு 25 அதி. $27^{3}$ $30^{5}$ 2 சாமு $2^{2}$.

**நாபீஸ். Naphish.** இஸ்மவேலின் புத்திரர்களில் ஒருவன். ஆதி $25^{15}$.

**நாபோத்து. Naboth.** இராஜாவின் தோட்டத்துக்குக் கிட்ட ஒரு தோட்டத்தை உடையவனாயிருந்த இவனை ராஜாவாகிய ஆகாப் அநியாயமாய்க் கொன்றுபோட்டதை இஸ்ரவேலர் எப்போதும் மனதில் எண்ணிக்கொண்டேயிருந்தார்கள். இவனுடைய சமாசாரம் இராஜாக்களின் புஸ்தகத்தில் விபரமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. 1 இரா 21 அதி. 2 இரா $9^{21-25}$.

**நாமம். Name.**

I. தேவனைக் குறிக்கும்போது,

1. அவருடைய தன்மையையும், யாத் $3^{13.14}$ $6^{3}$

2. அவருடைய லக்ஷணங்களையும், யாத் $33^{19}$ $34^{6.7}$ 1 தீமோ $6^{1}$

3. அவருடைய திருவுளத்தையும், யோவா $17^{6.7}$

4. அவருடைய உதவியையும், 1 சாமு $17^{15}$

5. அவருடைய மகிமையையும், சங் $76^{1}$

6. அவருடைய திருவாக்கையும், அன்பையும், சங் $5^{11}$ $20^{1.7}$ $22^{22}$ யோவா $17^{26}$ அப் $9^{15}$

7. அவருடைய ஞானத்தையும், சங் $8^{1.9}$

8. அவரை அடுத்த ஆராதனையையும், உபா $14^{23}$ 1 இரா $5^{5}$ மல் $1^{6}$

9. தம்மைத் தாமேயும், சங் $29^{2}$ $34^{4}$ $61^{6}$, குறிக்கும்.

தேவநாமத்தை வீணில் வழங்குவது (யாத் $20^{7}$) அவருடைய நாமத்தில் பொய்ச்சத்தியம்பண்ணி அதைத் தகாதவிதமாய் உச்சரிப்பதே. 'நாமநிந்தை' என்பது (லேவி $24^{16}$) தேவ தூஷணமே.

வேறு தேவர்களுடைய பெயரை உச்சரிக்கக்கூடாதென்று கட்டளையிருந்தது. யாத் $23^{13}$. சில பொய்யர் கர்த்தருடைய நாமத்திலே கள்ளத்தீர்க்கதரிசனம் உரைப்பதும் உண்டு. எரே $14^{14.15}$ $27^{15}$ மத் $7^{22}$.

II. கிறிஸ்துவைக் குறிக்கும்போது,

1. அவருடைய தேவீகத்தையும், வெளி $19^{12.13.16}$

2. அவருடைய அதிகாரத்தையும், மத் $7^{22}$ மத் $10^{22}$ $19^{29}$ மாற் $9^{41}$ அப் $4^{7}$ வெளி $2^{13}$

3. அவருடைய அநந்த மகிமையையும் பிலி $2^{10}$ எபே $1^{20}$ குறிக்கும்.

III. குழந்தை பிறந்தவுடனே வழக்கமாய் அதற்குப் பெயர்கொடுக்கப்படும். அதன் தாய் அதற்குப் பெயர்கொடுப்பாள். ஆதி $4^{25}$ $19^{37}$ $29^{32}$. தகப்பனும் சில சமயங்களில் அதற்குப் பெயர் இடுவான். ஆதி $16^{25}$ $21^{3}$ 2 சாமு $12^{24}$. சில சமயங்களில் அயலார் பெயரிடுவதும் உண்டு. ரூத் $4^{17}$ லூக் $1^{55}$.

IV. எபிரெயர்களுடைய அபிப்பிராயத்தின்படி ஒரு குழந்தைக்கு இடப்பட்ட பெயரானது அக்குழந்தையின் குணத்தையாவது, அதின் பிறப்பு விபரத்தையாவது, அதின் பெற்றோரின் விருப்பத்தையாவது, குறிக்கவேண்டும். திருஷ்டாந்தமாக 'ஆதீன்' என்பதற்கு 'அலங்காரம்' என்று அர்த்தமானதினால், அப்பெயர் பிள்ளையின் சௌந்தரியத்தைக் குறிக்கும். 'அமசாயி' என்பதற்குச் 'சுமைதாங்கி' என்று அர்த்தமாகையால், அப்பெயர்கொண்ட பையன் தன் குடும்பத்திலிருந்த தரித்திரம் அல்லது துக்கத்தை நீக்குகிறவன் என்பது குறிக்கப்படுகின்றது. 'சாலொமோன்' என்பதற்குச் 'சமாதானம் உள்ளவன்' என்று அர்த்தமானதினால், இவன் இஸ்ரவேல் தேசத்திலே சமாதானத்தை உண்டாக்கினவன் என்னும் கருத்துத் தோன்றுகிறது. இந்த நோக்கத்துடனே ஏசாயாவும் ஓசியாவும் எரேமியாவும் தங்கள் பிள்ளைகளுக்கு வருங்காரியங்களைக் குறிக்கத்தக்க பெயர்களை இட்டார்கள். ஏசா $7^{3}$ $8^{3}$ ஓசி $1^{4.6.9}$ எரே $20^{3}$. இவ்விதமாகத் தங்களுக்குண்டான நம்பிக்கையைக் குறிக்கத்தக்கதாகக் கிறிஸ்தவர்கள் தங்களுக்கு ஒரு புதுப்பெயர் இட்டுக்கொண்டார்கள் என்று வெளிப்படுத்தின விசேஷத்தில் சொல்லியிருக்கிறது. வெளி $2^{17}$ $19^{13}$.

4. இந்த அகராதியிலே வரும் பல பெயர்களின் அர்த்தத்தை அவற்றின் நிபந்தங்களின் தலைப்புக்களில் சொல்லியிருக்கிறோம். அந்த அர்த்தம் [ ] என்னும் சதுர அடைப்புக்களாகிய அடையாளத்தால் குறிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதமாய்ப் பெயர்களைக்குறித்து நாம் விசாரிக்கும்பொழுது அநேகருக்குப் புல், பூண்டு, மரஞ் செடிகளின் பெயர் கொடுக்கப்பட்டிருந்ததென்று பார்ப்போம். உதாரணமாகத் 'தாமார்' என்பதற்கு 'ஈச்சமரம்' என்றும்; 'அஸ்னு' என்பதற்கு 'முள்ளுச்செடி' என்றும்; 'சூசன்னாள்' என்பதற்கு 'லீலிப்புஷ்பம்' என்றும் அர்த்தம். இந்த தேசத்திற்போலவே தேவபக்தியை அல்லது சன்மார்க்கத்தைக் குறிக்கும் பெயர்கள் அநேகருக்கு இடப்பட்டது. 'பாகால்' என்பது பாகால் தேவதையின் பெயர். 'ஓபேத் ஏதோம்' என்பவன் ஏதோம் தேவதையின் தாசன். 'அபியா' என்பதற்கு 'யா' அல்லது 'யேகோவா என்னுடைய தகப்பன்' என்றும், 'நாத்தான்வேல்' என்பதற்குக் கடவுள் கொடுக்கிறவர் என்றும் அர்த்தம்.

அநேகருக்கு மிருகங்களின் பெயர் கொடுக்கப்பட்டது. திருஷ்டாந்தமாக: 'ராகேல்' என்பதற்குப் 'பெண் ஆடு' என்றும் 'காலேப்' என்பதற்கு 'நாய்' என்றும் அர்த்தம்.

கி—மு. நாலாம் நூற்றாண்டு முதற்கொண்டு பிள்ளைகளுக்கு அவர்களுடைய இனத்தாரின் பெயர்களைக் கொடுப்பது வழக்கமாயிற்று. லூக் $1^{59}$.

'பார்த்திமேயு' 'பற்தொலொமேயு' 'பரபாஸ்' என்னும் பதங்களில் 'பர்' அல்லது 'பார்' அல்லது 'பற்' என்பதற்கு 'மகன்' என்று அர்த்தமாகையால், இப்பெயர்கள் முறையே 'தீமேயுவின் மகன்' என்றும் 'தல்மாயுவின் மகன்' என்றும் 'அபாஸுவின் மகன்' என்றும் பொருள்படும். இதற்குப் பின்பு யூதர்கள் அந்நிய ஜாதியாருடனே அதிகமாய் வியாபாரம் செய்யத்தொடங்கி,

அந்நியதேசங்களோடு போக்குவரவாகி, அந்நியபாஷைகளை வழங்கிவந்தபோது, ஒருவனுக்கு வெவ்வேறான பாஷைகளில் வெவ்வேறு பெயர்கள் இருக்கும். உதாரணமாக எபிரெய பாஷையில் 'சவுல்' என்னப்பட்டவனுக்குக் கிரேக்க பாஷையில் 'பவுல்' என்று பெயர். அப் 13⁹. இதுமுதற்கொண்டு ஒருவனுக்கு இரண்டுபெயர் கொடுப்பது வழக்கமாயிற்று. இதற்கு திருஷ்டாந்தம்: யூதாமக்கபேயு, மாற்கு என்னும் மறுபெயர் கொண்ட யோவான், செலோத்தே என்னப்பட்ட சீமோன். அப் 1¹³.

5. இடப்பெயர்கள்.

பலெஸ்தீனதேசத்தில் உள்ள இடப்பெயர்கள் எபிரெயர்களுக்கு முன்னே அத்தேசத்திலிருந்த ஜாதியாரால் இடப்பட்ட பெயர்கள். இப்பெயர்கள் சாதாரணமாய் அந்தந்த இடங்களின் தன்மையைக் குறிக்கும். உதாரணமாக 'பெயர்செபா' என்பதற்கு 'ஏழு ஊற்றுகள்' என்றும், 'பெத்பகே' என்பதற்கு 'அத்திப்பழங்களின் வீடு' என்றும் அர்த்தம்.

இடப்பெயர் அவ்விடங்களில் நடந்த சமாசாரங்களைக்குறிக்கும். திருஷ்டாந்தமாக 'மிக்தால் ஏல்' என்பதற்குக் 'கடவுளினுடைய காவற்கோபுரம்' என்றும், 'சுக்கோத்து' என்பதற்கு 'இடையர்கள் கட்டின குடிசைகள்' என்றும், 'எபெனேசர்' என்பதற்கு 'உதவியின் கல்' என்றும் அர்த்தம். 1 சாமு 7¹².

சில பெயர்கள் அவ்விடத்தில் உண்டான தேவதரிசனத்தையாவது, அங்கே நடந்த தேவ ஆராதனையையாவது குறிக்கும். உதாரணமாக: 'பாமோத்-பாகால்' என்பதற்கு 'பாகால் தேவதையை வணங்கும் மேடு' என்று அர்த்தம்

பல இடங்களுக்கு மிருகங்களின் பெயர் கொடுக்கப்பட்டது. திருஷ்டாந்தம்:—

லாயிஷ்—சிங்கம்.

என்கேதி-சிறு ஆட்டுக்குட்டியின் கிணறு.

வேதாகமத்தில் சொல்லியிருக்கிற சிறப்புப்பெயர் எல்லாம் எபிரெய ஜனங்கள் நம்பின விஷயங்களையும் அவர்கள் தேசத்தில் நடந்த சமாசாரங்களையும், அவர்களுக்கு முன்னே அத்தேசத்திலிருந்தவர்கள் நடத்திவந்த தேவவணக்கத்தையும், அக்காலத்தில் நடந்த வேறு விசேஷங்களையும் குறிக்கிறதினாலே, நாம் எப்பொழுதும் வேதாகமத்தில் காணும் சிறப்புப்பெயர்களின் அர்த்தத்தை அறிய முயலவேண்டும். அப்பெயர்களின் அர்த்தத்தைத் தெளிவாய் அறிவது எப்போதும் சாத்தியமானதல்ல. ஆனால் நாம் இப்பெயர்களைக்குறித்து விசாரிக்கும்போது, பூர்வீகத்திலுள்ள எபிரெயர்களும் அவர்களுக்கு முன்னே அத்தேசத்திலிருந்த கானானியர் முதலானவர்களும் குடியேறின இடங்களைக் குறித்து நாம் வழக்கமாய் அநேக விஷயங்களை அறியக்கூடும்

**நாமாள்.** Naamah.

1. தூபால்-காயீனுடைய சகோதரி. ஆதி 4²².

2. ரெகொபெயாமின் தாய். அவள் அம்மோன் ஜாதியானவள். 1 இரா 14²¹.

**நாயகர்.** Husband. உவமைசொல். ஏசா 54⁵ எரே 31³².

**நாயகன்.** Lover. 'சோரநாயகர்' எரே 4³⁰. அன்பு காண்க.

**நாயீன்.** Naln. கலிலேயா நாட்டிலுள்ள தாபோர்மலைக்குத் தெற்கேயும், கலிலேயாக் கடலுக்கு ஏறக்குறைய பத்துமைல் மேற்கேயும் உள்ள ஓர் சிறிய ஊர். இதற்கும் நாசரேத்தூருக்கும் ஏறக்குறைய 6 மைல் தூரம். இதிலே இயேசு இறந்துபோன ஓர் வாலிபனுக்குத் திரும்பவும் உயிர்கொடுத்தார். இப்பெயர்கொண்ட ஓர் ஊர் இந்நாள்மட்டும் இருக்கிறது. ஆனால் இவ்வூரின் சரித்திர முழுவதும் நமக்குத் தெரியவில்லை. லூக் 7¹³.

**நாயோத்.** Naloth. [? இருப்பிடம்.] தீர்க்கதரிசியாகிய சாமுவேல் குடியிருந்த ஓர் ஊர். 1 சாமு 19¹⁸ 19¹⁹ 20¹.

**நாய்.** Dog. யோபு 30¹-ல் சொன்ன நாய்கள் இடையர்களால் ஆடுகளைக் காப்பாற்றும்படி வளர்க்கப்பட்டவைகளும் புத்திக் கூர்மையுள்ளவைகளுமாய் இருந்தன. மற்ற வசனங்களில் நாய் என்பது இந்தத் தேசத்தின் தெருக்களில் அலைந்துதிரிகிற நாய்களைப்போன்ற கேவலமான நாய்களைக் குறிக்கும். இந்தமாதிரி நாய் பலெஸ்தீனதேசத்தில் எந்த ஊரிலும் உண்டு. அவைகள் ஊரின் அசுத்தங்களை எல்லாம் தின்னும். எருசலேம் நகரத்தில் விசேஷமாய் இன்னும் பள்ளத்தாக்கிலே இவைகள் செத்துப்போன கழுதை முதலியவற்றின் நாற்றமான பிணங்களைத் தின்னும்படி கூட்டங்கூட்டமாகத் திரியும். சண்டை அல்லது கொள்ளைநோய் உண்டாகும்போது அவைகள் செத்த பிணங்களையும் தின்னும். இவ்விதமாகச் சகல அசங்கியத்துக்கும் உதாரணமான இந்த நாய்களின்பேரிலே எபிரெயர்கள் சாபம் இடுவார்கள். லூக் 16²¹ 2 சாமு 3⁸ 1 இரா 14¹¹ 2 இரா 9¹⁰ சங் 68²³ எரே 15³. இந்த நாய்களுக்கு ஒரு வழக்கமிருக்கிறது. அதா

வது: ஒரு நாய்க்கூட்டமுள்ள தெருவிலே இன்னொருநாய் பிரவேசிக்கிறதற்கு அவைகள் இடம்கொடுக்கிறதில்லை. வேறொரு தெருவிலிருந்து அந்தத் தெருவுக்கு ஒரு நாய் அல்லது நாய்க்கூட்டம் வந்தால் பெரிய சண்டை யுண்டாகும். இராக்காலத்தில் எருசலேம் நகரத்தில் ஏராளமாய் இருந்த நாய்ச் சண்டையினிமித்தம் உண்டான சத்தம் அதிகம். சங் 59[6.14]. இந்த நாய்கள் தனித் தனியாய் இருக்கும்போது மனிதருக்குப் பயப்பட்டாலும், அவை கூட்டமாக வரும்போது அத்தேசத்தார் அவைகளுக்குப் பயப்படுவார்கள். நீதி 26[17]. சில சமயங்களில் ஒரு நாய்க்கூட்டம் ஒரு சத்திரத்தைச் சேர்ந்து அதற்குள் இராக்காலத்தில் ஒருவரும் வராதபடி அதற்குக் காவலாக இருக்க விரும்பும். ஏசா 56[10.11]. ஒருவனை நாய் என்று சொல்வது மகா அவமானம். 1 சாமு 17[43]. 2 இரா 8[13]. செத்துப்போன நாய் முற்றிலும் அசங்கியமானதினாலே மகா இழிவையும் தாழ்மையையும் குறிக்கும்படி அந்தப் பதம் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. 1 சாமு 24[14] 2 சாமு 9[8].

நாய் இவ்விதமாய் இகழ்ச்சியானதினாலும், அப்பம் பரிசுத்தமானதினாலும் நாய்களுக்கு அப்பம் போடுவது தகாது என்று இந்நாள் மட்டும் அத்தேசத்தார் நினைக்கிறார்கள். மத் 7[6] மாற் 7[27].

உபா 23[18]–ல் சொன்ன 'நாய்' என்பது கானானியருடைய தேவாலயங்களில் புருஷனை ஒப்புக்கொடுத்த புருஷர்களைக் குறிக்கும். பிலி 3[2] வெளி 22[15]–ல் சொன்ன 'நாய்கள்' பொல்லாதவர்களையாவது ரோமராஜ்யத்தில் அக்காலத்தில் இருந்த மேற்கூறிய அசுத்தரையாவது குறிக்கலாம்.

**நாராய்.** Naarai. தாவீதைச்சேர்ந்த பராக்கிரமசாலிகளில் ஒருவன். இவன் மறுபெயர் பாராய். 2 சாமு 23[35] 1 நாளா 11[37].

**நாராள்.** Naarah. [பெண்பிள்ளை.] ஆகூரின் மனைவிகளில் ஒருத்தி. 1 நாளா 4[5].

**நாரான்.** Naaran. 1 நாளா 7[28] நகராத் காண்க.

**நாரை.** Pelican, Stork. தமிழ் வேதாகமத்தில் 'நாரை' என்றது மூன்று எபிரெய பதங்களின் மொழிபெயர்ப்பாகும்.

(i) கூழக்கடா. சங் 102[6] ஏசா 34[11] செப் 2[14]. கடற்கரையிலும் வரிகளின் ஓரத்திலுமே எப்பொழுதும் வாசஞ்செய்த இந்தப் பட்சிக்கு அதன் நீண்ட அலகுக்குக் கீழே ஒரு பை இருக்கும். இந்தப் பட்சி தான் பிடித்த மீன்களைத் தனக்காகவும் தன் குஞ்சுகளுக்காகவும் இந்தப் பையிலே போட்டு வைத்துக்கொள்ளும். கூழக்கடா காண்க.

(ii) கொக்கு. யோபு 39[13] எரே 8[7] சக 5[9]. கொக்கு காண்க.

(iii) மூன்றாவது பதம் ஆங்கிலேய A V. இல் இரண்டு வசனங்களில் Swan என்னும் 'அன்னப்பட்சி' என்றும் தமிழ் வேதாகமத்தில் 'நாரை' என்றும் மொழிபெயர்க்கப்பட்டிருந்தாலும், பிற்காலத்து வேதசாஸ்திரிகள் இது ஒருமாதிரி ஆந்தையைக் குறிக்கிறது என்று தீர்மானித்திருக்கிறார்கள். லேவி 11[18] உபா 14[16].

**நார்க்கயிறு.** Cord. யோபு 41[1]. கயிறு காண்க.

**நாலுகிறது.** Hang. 'நான்றுகொண்டு.' 2 சாமு 17[23] மத் 27[5].

**நாவு.** Tongue.

தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே,
நாவினாற் சுட்ட வடு. (குறள் 129.)

'பேச்சு' என்னும் அர்த்தங்கொண்ட 'நாவு' என்னும் பதத்தை எபிரெயர்கள் வழங்கிவந்தார்கள். யோபு 6[30] சங் 57[4] நீதி 6[17.24] 10[20.31] 12[18] 15[4] 18[21] 25[15] ஏசா 30[27] எரே 9[3] யாக் 1[26] 3[5.6.8].

**நாழிகை.** Hour. 60 நாழிகை ஒரு நாள். இப்படிப்பட்ட ஒரு நாழிகையில் ஒரு மனிதன் நடக்கத்தக்கது ஒரு நாழிகை வழியாம். அப்படிப்பட்ட ஏழரைநாழிகை வழி ஒரு காதமாம். ஒரு காதத்திற்குப் பத்து இங்கிலீஷ் மைலாம். மத் 8[13] 24[36.42.50] 25[13] மாற் 13[11.32]. காலம் காண்க.

**நாளாகமங்கள்.** Chronicles.

நாளாகமங்களும் எஸ்றா நெகேமியா என்னும் புஸ்தகங்களும் முதலிலே ஒரே பெரிய சரித்திரப்புஸ்தகமாய் இருந்தன என்று இந்த நூல்களின் பொருளையும் பாஷை நடையையும் ஆய்ந்து விசாரித்தவர்கள் சந்தேகமின்றிக் கூறுகிறார்கள். முதலிலே நாளாகமங்கள் சாமுவேல், இராஜாக்கள் என்னும் புஸ்தகங்களில் சொன்ன விஷயங்களை மறுபடியும் சொன்னதினால் பழைய ஏற்பாட்டிலே நூல்களைச் சேர்த்தவர்கள் நாளாகமம் என்னும் பாகத்தை விட்டுவிட்டு எஸ்றா நெகேமியா என்னும் பாகங்களைமாத்திரம் எபிரெய வேதாகமத்தில் சேர்த்தார்கள். பிறகு நாளாகமம் என்னும் பாகத்தை அவர்கள் வேதாகமத்திலே சேர்த்துக்கொண்டதி

னாலே நாளாகமங்கள் எபிரெய வேதாகமத்தில் கடைசியில் வைக்கப்பட்டிருக்கிறது.

நாளாகமங்களும், எஸ்றா நெகேமியா என்னும் நூல்களும் ஒன்றாய் இருந்ததினாலும், நெகேமியா ஆகமத்தில் யதுவாவைப்பற்றியும் பெர்சியனாகிய தரியுவைப்பற்றியும் சொல்லியிருக்கிறதினாலும் (நெகே $12^{11-22}$), அவர்களுடைய காலத்துக்குப் பின்னே, அதாவது கி-மு. 330-300-ம் வருஷத்துக்குள் நாளாகமம் என்னும் புஸ்தகம் எழுதப்பட்டிருக்கவேண்டும்.

2. உற்பத்தி.

இப்புஸ்தகங்களின் ஆக்கியோன் சாமுவேல், இராஜாக்கள் என்னும் புஸ்தகங்களை விசாரித்து, இஸ்ரவேல் யூதாராஜாக்களின் சரித்திரம், நாத்தான் முதலிய தீர்க்கதரிசிகள் எழுதிய சரித்திரங்கள் முதலிய நூல்களையும் அடிக்கடி படித்து இந்த ஆகமங்களை எழுதினான். 1 நாளா $9^{1}$ $29^{29}$ 2 நாளா $9^{29}$ $12^{15}$ $16^{11}$ $24^{27}$ $25^{26}$ $26^{22}$ $27^{7}$ $28^{26}$ $33^{18}$ $35^{27}$ $36^{8}$.

3. பொருள்.

நாளாகமம் என்னும் புஸ்தகத்துக்கு எபிரெய பாஷையில் 'நாட்களைக்குறித்த வாக்கியங்கள்' என்று பெயரானதினால், இது இஸ்ரவேலருடைய சரித்திரத்தைக் குறிக்கும்படி எழுதப்பட்ட ஒரு நூல் என்று தெளிவாய்த் தோன்றுகிறது. ஆனால் இந்நூலை இயற்றினவன் முன்காலத்துச் சம்பவங்களில் சில விஷயங்களைக்குறித்து விசேஷமாய்ப் பேச விரும்பி அவற்றை அதிகமாய் விவரித்துக் கூறுவான். இவனுடைய நோக்கத்தைச் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால்:

i. இவன் யூதா ராஜ்யத்தைவிட அதிகப் பெரிய ராஜ்யமாகிய இஸ்ரவேல் ராஜ்யத்தைக்குறித்து அவ்வளவு கவனிக்கிறதில்லை.

ii. இவன் எருசலேம் பட்டணத்தில் உள்ள தேவாலயத்தில் நடந்த ஆராதனையை அதிக ஆவலாய் விரும்பி, முற்காலத்தில் சாலொமோன் கட்டின ஆலயத்தில் நடந்த ஆராதனையை அடுத்த பல விஷயங்களைக் கண்டறிந்து அவைகளை வெகு விபரமாய்க் கூறுவான்.

iii. யூதா ராஜ்யத்தின் மகத்துவத்தையும் தாவீது ராஜாவினுடைய சந்ததியாரின்மேன்மையையும் பரிசுத்தத்தில் எருசலேம் நகருக்குரிய முதன்மையையும் லேவியர்களின் சிலாக்கியங்களையும் இந்நூலாசிரியன் அதிகமாய்ச் சிறப்பித்துக் கூறுகிறான்.

iv. இதினிமித்தம் இவன் தாவீதுசெய்த குற்றங்களையும், அப்சலோமின் கலகத்தையும், சாலொமோன் அந்நியஜாதிப் பெண்களை விவாகம் செய்ததையும், இஸ்ரவேல் ராஜ்யத்தின் சரித்திரத்தில் பல விஷயத்தையும் சொல்லாதொழித்து, எருசலேம் தேவாலயத்தையும் அதில் நடந்த ஆராதனையையும் ஆசாரியர்களின் குடும்ப அட்டவணைகளையும் சன்மார்க்கத்தைக் குறித்துத் தீர்க்கதரிசிகள் சொன்ன எச்சரிக்கைகளையும் விசேஷமாய்க் கூறுவான். 1 நாளா $10^{13}$ 13, 15, 16 அதி 22-29 அதி. 2 நாளா $8^{11}$ $12^{2}$ $13^{3}$ $15^{1}$ $16^{7}$ $20^{37}$ $21^{10}$.

v. இந்த நோக்கத்துடனே இவன் சன்மார்க்க விஷயத்தில் ஆசாவும் யோசபாத்தும் செய்த சீர்திருத்தத்தைப்பற்றிச் சொல்லும்போது இராஜாக்கள் என்னும் நூலை இயற்றினவனைப்பார்க்கிலும் அவற்றை மட்டுக்கு மிஞ்சி அதிகரித்து ராஜாக்களின் சேனை, அவர்களுடைய பொக்கிஷம், வீரர்களின் தொகை, முதலியவற்றை அளவுக்கு மிஞ்சி விஸ்தரித்துச் சொல்லுகிறான். பின் வரும் வசனங்களை ஒப்பிட்டுப் பார்க்க:

1 இரா $15^{14}$...... 2 நாளா $14^{5}$
1 இரா $22^{43}$......2 நாளா $17^{6}$
2 சாமு $8^{4}$........ 1 நாளா $18^{4}$
2 சாமு $24^{24}$......1 நாளா $21^{25}$

4. பொருளடக்கம்.

i. 1 நாளா 1-9 அதி. ஆதாம்முதல் சவுலின் மரணமட்டும் உள்ள சரித்திர சுருக்கம். இதில் யூதா லேவி என்னும் கோத்திரங்களின் அட்டவணைகள் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

ii. 1 நாளா 10-29 அதி. சவுலின் மரணம், தாவீது செய்த அரசாட்சி, சாலொமோன் சிங்காசனம் ஏறுதல்.

iii. 2 நாளா 1-9 அதி. சாலொமோன் செய்த அரசாட்சி.

iv 2 நாளா 10-36 அதி. இஸ்ரவேல் யூதா என்னும் ராஜ்யங்களின் சரித்திரமும் அவற்றின் அழிவும், யூதா சிறையிருப்பிலிருந்து திரும்பிப்போகிறதற்குக் கோரேஸ் ராஜா கொடுத்த உத்தரவும்,

இவற்றை எல்லாம் நாம் பார்த்து யூதர்கள் பாபிலோனியா சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த காலத்தில் இந்த நாளாகமங்கள் இயற்றப்பட்டதினாலும்; இந்நூலாசிரியன் தன் காலத்தில் தான்கண்ட தேவாராதனையைச் சிறப்பிக்கும்படி முந்தின காலங்களில் லேவியர்களுக்கும் தேவாலயத்துக்கும் உள்ள

கீர்த்தியை அதிகரித்துக் கூறியிருக்கிறதினாலும்; இவை தாவீது, சாலொமோன் என்னும் அரசர்களின் காலத்தில் நடந்த விஷயங்களைக் குறித்துக் கூறும் சாமுவேல், இராஜாக்கள் என்னும் ஆகமங்களைப்போல அவ்வளவு கீர்த்திபெற்ற நூல்கள் அல்லாவிட்டாலும், தீர்க்கதரிசிகள் முதலியவர்கள் எழுதின பூர்வீக காலத்து நூல்களில் தான் கண்ட விஷயங்களை இவன் இந்நூலில் எழுதினதினாலும்; எப்பொழுதும் இவன் நீதி நியாயத்தை விரும்புகிறதினாலும்; யேகோவாவை வணங்குகிற விஷயத்தில் இவன் மிக வைராக்கியம் உள்ளவனானதாலும்; இந்த நூலிலே இஸ்ரவேலருடைய சரித்திரத்தைப்பற்றிக் கவனிக்கவேண்டிய அநேக விஷயங்களையும், எபிரெயர்கள் சன்மார்க்க விஷயத்தில் விருத்தியடைந்த அநேக காரியங்களையும் அறிகிறோம்.

**நாள்.** **A Day.** எபிரெயருக்கு ஒருநாள் என்பது ஒரு சாயங்காலம் தொடங்கி அடுத்த சாயங்காலம் வரையுள்ள காலம். சாயங்கால முதல் சூரியன் உதிக்குமட்டும் மூன்று ஜாமமும், சூரியோதயம்முதல் சூரியாஸ்தமனமட்டும் பன்னிரண்டுமணி நேரமும் உண்டு. ஆதலால் அவர்களுடைய ஆறும் மணியும் நமது பன்னிரண்டாம் மணியும் ஒன்றுதான். காலம், நாழிகை காண்க.

சில வசனங்களில் 'நாள்' உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

i. நீண்டகாலம். ஆதி 1[5] சங் 90[4] 2 பேது 3[8] வெளி 20[10].

ii. கடவுள் தண்டனைசெய்யுங் காலம். ஏசா 2[12] எசே 13[6].

iii. இயேசுவின் இரண்டாம் வருகை. 1 தெச 5[2].

iv. சுவிசேஷத்தின் பிரகாசம். 1 தெச 5[5].

v. நியாயத்தீர்ப்புநாள். மத் 11[22] 2$_{?}$[50] 2 தீமோ 1[18].

தீர்க்கதரிசிகள் கண்ட தரிசனங்களின் அர்த்தத்தை விபரமாய்த் தெரிவிக்க விரும்புகிறவர்கள் அத்தரிசனங்களில் சொன்ன 'நாள்' ஒரு வருஷத்தைக் குறிக்கிறது என்று சொல்லுகிறார்கள். எசே 4[6]. ஆனால் இதற்குப் போதிய அத்தாட்சி இல்லை.

**நாள்பார்க்கிறவன்.** R.V.'One that practiseth augury' உபா 18[10] **சூனியவித்தை** காண்க.

**நாறுகிறது, நாற்றம்.** **Stink.** யாத் 7[18.21] சங் 38[5] ஏசா 34[3] யோவே 2[20] ஆமோ 4[10] யோவா 11[39].

**நாற்காலி.** **Stool.** 2 இரா 4[10].

**நாற்பது.** **Forty.** **எண்கள்** (பக். 167) காண்க.

**நாற்றம்.** **Stink.** **நாறுகிறது** காண்க.

**நாற்று.** **Plant.** ஏசா 5[7] 17[10] எசே 34[29] மத் 15[13] கிளை, **நாட்டுகிறது** காண்க.

## நி.

**நிகழ்காரியங்கள்.** **'Things present'** ரோம 8[38] 1 கொரி 3[22].

**நிகுஸ்தான்.** **Nehustan.** 2 இரா 18[4] **சர்ப்பம்** (வெண்கல) காண்க.

**நிக்கானோர்.** **Nicanor.** [விஜயன்] ஏழு உதவிக்காரரில் ஒருவன். அப் 6[5].

**நிக்கொதேமு.** **Nicodemus.** [ஜனங்களை ஜெயிக்கிறவன்.] இவன் ஆலோசனை சங்கத்தின் அங்கமும், பரிசேய சமயத்தைச் சேர்ந்தவனும், முதிர்வயதுள்ளவனும், ஐசுவரியவானுமாய் இருந்தான். யோவா 3[1] 3[4] 7[50] 19[39]. பரி. யோவான்மாத்திரம் இவனைக் குறித்துப் பேசுகிறான். நிக்கொதேமைக் குறித்துச் சொல்லப்பட்டிருக்கிற மூன்று விஷயங்களாவன:—

i. இயேசு தமது ஊழியத்தை ஆரம்பித்து பஸ்காப் பண்டிகைக்காக எருசலேமுக்குப் போகும்பொழுது நிக்கொதேமு இவர் மேசியாவோ அல்லவோ என்று ஐயங்கொண்டு அவரோடே பேசும்படி அவர் இருந்த வீட்டுக்கு இராக்காலத்தில் வந்தான். அந்தச் சமயத்தில் இயேசு தாம்செய்த அற்புதங்களைக் குறித்துத் தர்க்கம்பண்ணாமல், மனுஷர் யாவரும் அடையவேண்டிய மறுஜெனனத்தைக் குறித்துப் பேசினதினாலே இந்தப் போதகன் சுவிசேஷத்தின் சாரத்தை யோசிக்கத் தொடங்கினான்.

ii. இயேசு தாம் ஊழியம்செய்த மூன்றாம் வருஷம் அக்டோபர் மாசத்தில் கூடாரப் பண்டிகைக்காக எருசலேமுக்குப் போகும் பொழுது ஆலோசனைச் சங்கத்தார் அவரைக் கொலைசெய்யும்படி யோசனை பண்ணுகையில், நிக்கொதேமு தான் இயேசுவின்மேல் நம்பிக்கை வைத்திருந்ததாகச் சொல்லியிராவிட்டாலும் அவர்கள் செய்த யோசனைக்கு ஆட்சேபனைபண்ண முயன்றான்.

iii. இயேசு சிலுவையில் அறையுண்ட பிறகு நிக்கொதேமும் அரிமத்தியா ஊரானகிய யோசேப்பும் மிக்க மரியாதையுடனே இயேசுவைக் கல்லறையில் அடக்கம்பண்ணினார்கள்.

ஆதிகிறிஸ்தவர்கள் சொன்ன பாரம்பரியங்களின்படி பேதுருவும் யோவானும் நிக்கொதேமுக்கு ஞானஸ்நானங் கொடுத்த பிறகு, யூதர்கள் இவனைப் பகைத்து எருசலேமிலிருந்து, இவனைத் துரத்திவிட்டார்கள். ஆதிகிறிஸ்தவர்கள் வாசித்த நூல்களில் 'நிக்கொதேமுவின் சுவிசேஷம்' என்று ஒன்றிருந்தது. இயேசுகிறிஸ்து அடக்கம் பண்ணப்பட்ட காலத்திலும் அவர் உயிர்த்தெழுந்த காலத்திலும் நடந்த விஷயங்கள் இந்த நூலில் மகா அற்புதமானவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறதினாலே இது கிறிஸ்தவர்கள் மனதில் பக்தியை உண்டாக்கக்கூடிய பல கதைகள் நிறைந்த ஒரு சரித்திர நூலே அல்லாமல், நடந்த விஷயங்களைக் குறித்துக் கூறும் ஓர் உண்மையான சரித்திரநூல் அல்ல என்றே நாம் சொல்ல வேண்டும்.

**நிக்கொப்போலி.** Nicopolis. [ஜெயநகரம்.] ரோமராயனாகிய அகஸ்து கி–மு. 31–ல் தனது சத்துருக்களை ஜெயித்த பிறகு தான் பாளையம் இறக்கியிருந்த இடத்தில் தன் ஜெயத்தைக் குறிக்கும்படி இந்தப் பட்டணத்தைக் கட்டினான். இது கிரேக்கு தேசத்தில் எபிரு என்னும் நாட்டின் மேற்கு ஓரத்தில் இருந்தது. இப்பட்டணத்தில் நடந்த பேர் பிரஸ்தாபமான பந்தயங்களுக்காகவும் இவ்விடத்தில் நடந்த வியாபாரத்துக்காகவும் அநேக ஜனங்கள் இதற்கு வருவார்கள். பரி. பவுல் ரோமாபுரியிலிருந்து தீத்துவுக்கு அனுப்பின நிருபத்தில், தான் இராயனுக்கு அபயமிட்டு விடுதலையடைந்த பிறகு நிக்கொப்போலி என்னும் ஊரிலே மாரிகாலத்தில் தரித்திருக்கும்படி போவதாகத் தெரிவித்திருக்கிறான். தீத் $3^{12}$. ஆனால் இதன்படி அவன் இரண்டாம்தடவை ரோமாபுரியில் சிறையிலிருக்குமுன் இப்பட்டணத்துக்கு வந்தானோ இல்லையோ என்பது தெரியாது.

**நிக்கொலா.** Nicolas. [ஜனங்களை ஜெயிக்கிறவன்.] முதல் ஏழு உதவிக்காரர்களில் ஒருவனாகிய இவன் அந்நிய ஜாதியிலிருந்து யூதமார்க்கத்துக்கு வந்தவன். இவன் அந்தியோகுப் பட்டணத்தான். அப் $6^{5}$. சிலர் நினைக்கிறபடி இவன்தான் நிக்கொலாய் மதத்தை ஸ்தாபித்தவன். வெளி $2^{6}$. ஆனால் நிக்கொலா என்னும் பெயரையுடைய ஒருவன் இந்த மதத்தை ஸ்தாபித்தான் என்பதைத் தவிர, அப்போஸ்தலர் நடபடி ஆகமத்தில் சொன்ன நிக்கொலாவும் வெளிப்படுத்தின விசேஷத்தில் சொன்ன நிக்கொலாவும் ஒருவன்தான் என்பதற்குப் போதிய அத்தாட்சி இல்லை.

**நிக்கொலாய் மதஸ்தர்.** Nicolaitans. இந்த மதத்தை ஸ்தாபித்த நிக்கொலா இன்னான் என்பதும், இந்த மதஸ்தர் விசேஷமாய் அநுசரித்த கொள்கைகள் இன்னதென்பதும் திட்டமாய்த் தெரியாது. ஆனால் இவர்கள் கிறிஸ்தவமத ஒழுங்குப்படி நடக்கவில்லை என்றும் அப்போஸ்தலருடைய அதிகாரத்துக்குள் அடங்கவில்லை என்றும் தோன்றுகிறது. வெளி $2^{6,15}$.

**நிசார்.** 'Hose' நிசார் என்னும் பதத்துக்குப் பதிலாக எபிரெய பாஷையில் வழங்கும் பதம் ஒருவிதமான காற்சட்டையை அல்லது ஒருசட்டையைக் குறிக்கும். தானி $3^{21}$. உடை காண்க.

**நிசான்.** Nisan. இது வருஷத்தில் முதல் மாதத்திற்குப் பெயர். நிசான் மாதமும் ஆபீப் மாதமும் ஒன்றுதான். நெகே $2^{1}$ எஸ்தர் $3^{7}$. காலம் காண்க.

**நிச்சயம்.** Certainty. யோசு $23^{13}$ எரே $26^{15}$ லூக் $1^{3}$ அப் $21^{34}$ $22^{30}$.



நிஸ்ரோகு.

**நிஸ்ரோகு.** Nisroch. அசீரியர் வணங்கின ஒரு தேவதை. 2 இரா $19^{37}$. இத்தேவதையின் ஆலயத்தில் சனகெரிப் என்னும் ராஜா கொலையுண்டான்.

**நிணம்** Fat. 2 சாமு $1^{22}$ ஏசா $58^{11}$.

**நிதனீமியர்.** Nethinim. எஸ்று $8^{20}$. நேதனீமியர் காண்க.

**நித்திய ஜீவன்.** Eternal life. புதிய ஏற்பாட்டிலே விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிற நித்திய ஜீவனைப்பற்றிப் பழைய ஏற்பாட்டில் விபரமாய்ச் சொல்லப்படவில்லை. தானியேலின் ஆகமத்தில் 'நித்திய ஜீவன்'

என்னும் பதங்கள் சொல்லியிருந்தாலும், மரணத்திற்குப் பிற்பாடு மனுஷர்கள் அடையும் நிலைமையைப்பற்றி மற்ற ஆகமங்களில் தெளிவான போதனை இல்லை. யோபு $14^{14}$ பிர $9^{5}$ ஏசா $38^{11}$ தானி $12^{2}$. தள்ளுபடி ஆகமத்தில் நீதிமான்கள் மரணத்துக்குப் பிற்பாடு முடிவில்லாத ஜீவனை அடைவார்கள் என்று சொல்லியிருக்கிறது. திருஷ்டாந்தமாக: சாலொமோனுடைய நீதி 3–5 அதி.

இயேசுகிறிஸ்து தமது சீஷருக்கு நித்திய ஜீவன் உண்டு என்று தெளிவாய்ப்போதித்து அது ஒரு சுதந்தரம் அல்லது ஈவு என்று சொல்லுகிறார். மத் $19^{17}$ $19^{29}$ மாற் $10^{30}$. நித்திய ஜீவனைக் குறிக்கும்படி 'ஜீவன்' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. மத் $7^{14}$ மாற் $9^{43}$. பரி. யோவான் எழுதின சுவிசேஷத்தில் இயேசு சொன்ன போதகம் விபரமாய்க் கூறப்பட்டிருக்கிறது. யோவா $3^{36}$ $10^{10}$ $17^{3}$. இயேசுவின் பெயரில் பக்தி வைத்தவர்கள் இப்போதுதானே நித்தியஜீவனைப் பெற்றுக்கொண்டவர்களாய் இருக்கிறார்கள், ஏனென்றால் பிதாவானவரையும் இயேசுகிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன். யோவா $3^{36}$ $5^{24}$ $6^{47}$. ஆனால் பல வசனங்களில் நித்திய ஜீவன் மரணத்துக்குப் பின் நாம் அடையவேண்டிய நன்மை என்று காண்கிறோம். மத் $25^{46}$ மாற் $10^{30}$. 'நித்திய ஜீவன்' என்னும் பதங்கள் யோவான் சுவிசேஷத்தில் 17 தடவையும், யோவான் எழுதின முதலாம் நிருபத்தில் 6 தடவையும் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கொப்பாகவே இயேசுகிறிஸ்து நித்திய ஜீவனைக் குறித்து அருளிய போதனையையும் அவருக்குள்ளே நாம் இந்த ஜீவனை அடைவதையும்பற்றி பரி. பவுல் அதிக தெளிவாய்ச் சொல்லுகிறான். நித்திய ஜீவனைக் குறிக்கும்படி 'ஜீவன்' என்னும் பதத்தை அவன் அடிக்கடி சொல்லுகிறான். இப்படியே வெளிப்படுத்தின விசேஷத்தில் 'ஜீவ கிரீடம்,' 'ஜீவ ஊற்று,' 'ஜீவ தண்ணீர்' முதலியவற்றைப்பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. ரோம $6^{23}$ $8^{6}$ 2 கொரி $5^{4}$ பிலி $1^{21}$ $2^{14}$ வெளி $2^{10}$ $21^{6}$ $22^{2}$.

**நித்தியவாசி.** 'He that inhabiteth eternity.' ஏசா $57^{15}$.

**நித்தியம், சதாகாலம்.** Eternity. எபிரெய பதமாகிய 'ஓலாம்' (*olam*) என்பதற்கும் கிரேக்க பதமாகிய 'ஆயோன்' (*aion*) என்பதற்கும் தமிழ் வேதாகமத்தில் 'நித்தியம்' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மூல பதங்களுக்கு யுகம் என்பது அர்த்தம். இந்தப் பதங்கள் நாலுவிதமாய் வழங்கப்படும்.

i. நீடித்திருப்பது, நீடித்திருக்கிற காலம். ஆதி $17^{8.13.19}$ $49^{26}$. 'நித்திய கட்டளை' லேவி $16^{34}$. 'நித்திய மலைகள்' உபா $33^{15}$.

ii. ஆதி இல்லாமை. 'சதாகாலமுமுள்ள தேவன்' ஆதி $21^{33}$. தேவனுடைய 'நித்திய புயங்கள்' உபா $33^{27}$. 'அனாதி சிநேகம்' எரே $31^{3}$. 'ஆதிகாலம்' எபே $3^{11}$.

iii. முடிவில்லாமை.

'என்றென்றைக்கும் ஆசாரியராயிருக்கிறீர்' சங் $110^{4}$.

'காணப்படாதவைகளோ நித்தியமானவை' 2 கொரி $4^{18}$.

'சதாகாலங்கள்' 1 தீமோ $1^{17}$.

'நித்திய இரட்சிப்பு' ஏசா $45^{17}$ எபி $5^{9}$.

'——இராஜன்' எரே $10^{10}$.

'——இலச்சை' எரே $20^{11}$ $23^{40}$.

'——உடன்படிக்கை' ஆதி $9^{16}$ 2 சாமு 23 எபி $13^{20}$.

'——கிருபை' ஏசா $54^{8}$.

'——சுதந்தரம்' எபி $9^{15}$.

'நித்திய நடை' ஆப $3^{6}$.

'நித்திய நியாயத்தீர்ப்பு' எபி $6^{2}$.

'——மகிமை' 1 பேது $5^{10}$.

'——மகிழ்ச்சி' ஏசா $35^{10}$ $51^{11}$ $61^{7}$.

'——மாட்சிமை' ஏசா $60^{15}$.

'——மீட்பு' எபி $9^{12}$.

'——வழி' சங் $139^{24}$.

'——வெளிச்சம்' ஏசா $60^{19}$.

iv. ஆதியந்தமில்லாமை.

கடவுளின் தன்மை. சங் $41^{13}$ $90^{2}$ $103^{17}$ ரோம $1^{25}$ வெளி $4^{10}$ $10^{7}$ $11^{15}$.

'நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள ராஜன்' 1 தீமோ $1^{17}$.

'நித்திய ஆவி' எபி $9^{14}$.

'நித்திய பிதா' ஏசா $9^{6}$.

'யேகோவா நித்திய கன்மலையாயிருக்கிறார்' ஏசா $26^{4}$.

நித்திய ஆக்கினையைப்பற்றிய வசனங்கள்: மத் $18^{8}$ $25^{46}$ 2 தெச $1^{9}$ 2 பேது $2^{17}$ யூதா $1^{13}$ வெளி $14^{11}$ $20^{10}$.

நித்திய ஜீவனைப்பற்றிய வசனங்கள்:

தானி $12^{2}$.

மத் $19^{16}$ $25^{46}$.

மாற் $10^{17}$.

லூக் $10^{25}$.

யோவா $3^{15}$ $5^{39}$ $6^{54.68}$ $10^{28}$ $12^{50}$ $17^{3}$.
அப் $13^{46}$.
ரோம $6^{22}$.
1 தீமோ $6^{12}$.
1 யோவா $1^{2}$ $3^{15}$ $5^{11}$.
வெளி $22^{5}$.

இயேசுகிறிஸ்து நமக்கு நித்தியஜீவனைக் கொடுக்கிறார். யோவா $6^{47}$ $10^{28}$ $14^{6}$ ரோம $6^{23}$.

**நித்திரை.** Sleep.

1. அனந்தல், தூக்கம். ஆதி $28^{11}$ சங் $132^{4}$ நீதி $6^{4.9.10}$ $24^{33}$ பிர $5^{12}$ வாக் $9^{32}$ அப் $12^{6}$.

2. உவமையாய்:

i. நிர்விசாரமான பாவநிலைமை: எபே $5^{14}$ தானி $12^{2}$.

ii. மரணம். 1 இரா $10^{2}$ $15^{8}$ சங் $4^{8}$ எரே $51^{39}$ மத் $9^{24}$ $27^{52}$ லூக் $8^{52}$ யோவா $11^{11.13}$ 1 கொரி $15^{20.51}$ 1 தெச $5^{10}$. தூக்கம் காண்க.

**நிந்தனை, நிந்தை.** Reproach.

i. அவதூறு, தூஷணம். சங் $79^{12}$ ஏசா $51^{7}$ எரே $6^{10}$ ரோம $15^{3}$ 2 கொரி $12^{10}$.

ii. அவகீர்த்தி. ஆதி $30^{23}$ யோசு $5^{9}$ 1 சாமு $17^{26}$ நெகே $2^{17}$ நீதி $6^{33}$ எரே $23^{40}$ லூக் $1^{24}$ 1 தீமோ $3^{7}$ $4^{10}$ எபி $11^{26}$.

**நிபந்தனை.** Bond. எண் $30^{2}$.

**நிபேகாஸ்.** Nibhaz. அசீரியா ராஜா வாகிய சர்கோன் சாமாரியாநாட்டில் குடியேற்றின ஆவியர் என்னும் ஜனம் நிபேகாஸ் என்னும் தேவதையை வணங்கினார்கள். 2 இரா $17^{31}$.

**நிப்சான்.** Nibshan. யூதா வனாந்தரத்திலுள்ள ஓர் ஊர். யோசு $15^{62}$.

**நிம்சி.** Nimshi. இஸ்ரவேல் ராஜாவாகிய யெகூவின் பாட்டன். 1 இரா $19^{16}$ 2 இரா $9^{2.14.20}$ 2 நாளா $22^{7}$.

**நிம்பா, நிம்பாஸ்.** Nymphas. ஆதிகாலத்தில் கிரேக்கபாஷையில் எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதிகளை நாம் விசாரிக்கும் பொழுது, கொலோ $4^{15}$-ல் சிலவற்றில் பெண்பாலாகிய 'நிம்பா' என்னும் பெயரையும் சிலவற்றில் ஆண்பாலாகிய 'நிம்பாஸ்' என்னும் பெயரையும் பார்க்கிறோம். கொலோசே சபையில் கீர்த்திபெற்ற ஒரு கிறிஸ்தவன் அல்லது கிறிஸ்தவளாகிய இந்த நிம்பாவின் வீட்டிலே அந்தப் பட்டணத்திலிருந்த கிறிஸ்தவ சபையார் ஆராதனை நடத்திவந்தார்கள்.

**நிம்ரா, பெத்-நிம்ரா.** Nimrah, Beth-Nimrah. [சிவிங்கியின் வீடு.] யோர்தான் நதிக்குக் கிழக்கே ரூபன் கோத்திரம் வசித்த நாட்டிலுள்ள ஓர் ஊர். சாக்கடலுக்கும் இதற்கும் 10 மைல் தூரம். ஒருவேளை இதுவும் நிம்ரீமும் ஒன்றுதான். எண் $32^{3.36}$ யோசு $13^{27}$.

**நிம்ரீம்.** Nimrim. ஏசா $15^{6}$ எரே $48^{34}$ சாக்கடலின் தென்கிழக்குக் கரைக்குச் சமீபமான ஓர் ஊர். ஒருவேளை இதுவும் நிம்ராவும் ஒன்றுதான்.

**நிம்ரோது.** Nimrod. நிம்ரோது என்பவன் ஆதிகாலத்தில் நாலு பெரிய பட்டணங்களை ஆண்டு அசீரிய ராஜ்யத்தை ஸ்தாபித்தான் என்று ஆதியாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நிம்ரோதும் பாபிலோனியர்கள் சொன்ன ஆதிகாலத்து அரசனாகிய கில்காமேஸ் (*Gilgamesh*) என்பவனும் ஒரே ராஜாவினுடைய பெயர்தான் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. நிம்ரோது பராக்கிரமசாலியும் பலத்த வேட்டைக்காரனுமாய் இருந்தான் என்று எப்படி எபிரெயர்கள் சொன்னார்களோ அப்படியே பாபிலோனியர்களும் இந்தக் கில்காமேஸ் பிரபல போர்வீரனும் வேட்டையாடிச் சிங்கங்களைக் கொல்லுபவனுமாய் இருந்தான் என்று சொன்னார்கள். ஆதி $10^{8}$ 1 நாளா $1^{10}$ மீகா $5^{6}$.

**நியமம்.** Ordinance. யாத் $12^{43}$ எண் $19^{2}$ யோபு $38^{33}$ எரே $31^{35}$ ரோம $13^{2}$.

**நியமிக்கிறது.** Betrothal. உபா $20^{7}$ $28^{30}$ ஓசி $2^{19}$ கலியாணம் காண்க.

**நியாயசாஸ்திரி.** Lawyer. மோசே கொடுத்த நியாயப்பிரமாணத்தையும் அதைப் பற்றி ரபிமார் செய்த கட்டளைகளையும் பாரம்பரியங்களையும் விவரித்து அவைகளுக்கு வியாக்கியானம் சொல்லுகிறவர்கள். அவர்களுக்கும் வேதபாரகருக்குமுள்ள வித்தியாசம் இன்னதென்று சொல்லுவது அரிது. மத் $22^{35}$ தீத் $3^{13}$ லூக் $10^{25}$ $11^{52}$ $14^{3}$. வேதபாரகர் காண்க.

**நியாயசாதுரியன்.** Orator. அப் $24^{1}$ 'சாதுரியன்' ஏசா $3^{3}$.

**நியாயஸ்தலம்.** Place of judgement. பிர $3^{3}$.

**நியாயத்தீர்ப்பின் பள்ளத்தாக்கு.** The valley of decision. யோவேல் தீர்க்கதரிசி யோசபாத் பள்ளத்தாக்கில் கூடிவந்த ஜனங்களின்பேரிலே யேகோவா நியாயத்தீர்ப்புச் செய்வார் என்று சொல்லி, அந்தப் பள்

ளத்தாக்குக்கு இந்தப்பெயர் இடுகிறுன். இது எருசலேம் பட்டணத்தின் கிழக்குப்பாகத்துக்கும் ஒலிவமலைக்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்கு. யூதர்களின் அபிப்பிராயத்தின்படி மற்ற இடங்களில் அடக்கம் பண்ணப்பட்டவர்கள் நியாயந்தீர்க்கப்படும்படி இந்தப் பள்ளத்தாக்குக்கு வரவேண்டியதானதால் இவ்வுலகத்தில் மற்ற இடங்களைப்பார்க்கிலும் இந்தப் பள்ளத்தாக்கு அடக்கம்பண்ணுகிறதற்கு மிகவும் ஏற்றது. யோசபாத் ராஜாவின் கல்லறை என்னும் பெயர் கொண்ட ஒரு கல்லறை இதில் இப்பொழுது இருக்கிறது. ஆனுல் இது அந்த ராஜாவின் கல்லறைதான் என்பதற்கு அத்தாட்சி இல்லை. யோவே 3^2.12.14^.

**நியாயத்தீர்ப்பு. Judgement.** வேதாகமத்தில் பழைய ஏற்பாட்டில் பலநூல்களிலே மனுஷர்களுக்கு விதிக்கப்படும் நியாயத்தீர்ப்பைப்பற்றி அவ்வளவு தெளிவாய்ச் சொல்லியிராவிட்டாலும், பிற்காலத்து ஆகமங்களில் யேகோவா சர்வ ராஜ்யங்களுக்கும் சர்வ ஜாதிகளுக்கும் சர்வ மனுஷர்களுக்கும் தகுந்த நியாயத்தீர்ப்புச் செய்வார் என்னும் கொள்கை வரவரத் தெளிவாய்த் தோன்றுகிறது. புதிய ஏற்பாட்டிலே இதைக்குறித்து விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. புதிய ஏற்பாட்டில் நியாயத்தீர்ப்பைப் பற்றிச் சொன்ன போதனையின் பொழிப்பாவன:

உலகத்தின் முடிவிலும், காலத்தின் அந்தத்திலும் இயேசுகிறிஸ்து சருவ சிருஷ்டியையும் நியாயந்தீர்ப்பார். அப் $17^{31}$.

இந்த நியாயத்தீர்ப்பு உவமையாய்ச் சொன்ன ஆயிர வருஷத்தின் முடிவிலே நடக்கும். வெளி $20^{2}$.

நியாயத்தீர்ப்பு நமது மனச்சாட்சியின்படி நடக்கும். ரோம $2^{15}$.

நியாயத்தீர்ப்பு இயேசு நமக்கு அருளின போதனையின்படி நடக்கும். யோவா $12^{48}$.

அது ஜீவபுஸ்தகத்தில் நம்மைக்குறித்து எழுதியிருக்கிற கணக்கின்படி இருக்கும். லூக் $10^{20}$ வெளி $3^{5}$ $20^{12}$.

நியாயத்தீர்ப்புச் செய்யுங்காலமும் அது நிகழுங்காலமும் நமக்குத் தெரியாது. மத் $24^{36}$.

அது திடீரென வரும். 1 தெச $4^{16}$.

அதிலே இயேசுகிறிஸ்துவுக்கு மேன்மையும் அவருடைய சீஷர்களுக்குக் கீர்த்தியும் உண்டாகும். மத் $19^{28}$.

மத். 25-ல் சொன்ன உவமைகளில், நியாயாதிபதி நீதிமான்களையும் துன்மார்க்கர்களையும் பிரித்து அவர்களுக்கு நித்திய ஜீவனையும் நித்திய தண்டனையையும் அளிப்பார் என்று சொல்லியிருக்கிறது.

நியாயத்தீர்ப்பு நாளிலே 'பிசாசானவனும்,' 'ஆதேசும்,' 'மரணமும்,' 'மிருகமும்,' 'கள்ளத்தீர்க்கதரிசியும்' அக்கினிக்கடலில் தள்ளுண்டு தண்டிக்கப்படுவார்கள். வெளி $20^{10\text{-}14}$.

பின்வரும் வசனங்களிலும் நியாயத்தீர்ப்பைக்குறித்துச் சொல்லியிருக்கிறது. மத் $10^{15}$ $12^{36}$ $15^{31\text{-}46}$ $26^{64}$ யோவா $5^{22}$ ரோம $14^{10}$ 2 தெச $1^{5\text{-}10}$ 2 பேது $2^{9}$ $3^{7}$ 1 யோவா $4^{17}$ வெளி $20^{12}$.

**நியாயப்பிரமாணம். The Law.**

**I. பழைய ஏற்பாடு.**

**1. நியாயப்பிரமாணம் கொடுத்தவன்.** யூதர்கள் நம்பினபடி மோசேதான் யேகோவாவினிடத்திலிருந்து நியாயப்பிரமாணங்களைப் பெற்றுக்கொண்டு அவைகளை இஸ்ரவேல் ஜனங்களுக்குத் தெரிவித்தான். யோவா $1^{17}$. இந்த நியாயப்பிரமாணம் சன்மார்க்கம், ஜனசங்க ஆசாரம், குடும்ப ஒழுக்கம், ஒழுங்கு முதலியவற்றையும் ஏற்படுத்துகிறது. இஸ்ரவேலருடைய அபிப்பிராயத்தின்படி கர்த்தருடைய நியாயப்பிரமாணம் தங்கள் ஜீவியம் அனைத்தையும் நடத்தவேண்டும். ஆதலால் இஸ்ரவேல் ஜனங்களுக்குள்ளே பிரிவினைகளும் சண்டைகளும் பலவிதமான கட்சிகளும் உண்டானபோதிலும், அவர்கள் எல்லாரும் மோசேயின் நியாயப்பிரமாணம் கர்த்தர் கொடுத்த நியாயப்பிரமாணம் என்று நம்பி வந்ததினுலே, அழிக்கமுடியாத ஒரு சமாதானக்கட்டு அவர்களுக்குள் இருந்தது. இஸ்ரவேல் ஜனம் இந்நாள்மட்டும் ஒரு ஜாதியாக நிலைத்திருக்கிறதற்குக் காரணம் மோசே கொடுத்த இந்த நியாயப்பிரமாணமே.

**2. நியாயப்பிரமாணத்தின் உற்பத்தி.** எபிரெயர்கள் எகிப்துதேசத்துக்குப் போகுமுன் கோத்திரப்பிதாவின் சித்தமே அவன் பிள்ளைகளுக்குப் பிரமாணமாய் இருந்தது. எபிரெயர்கள் எகிப்து தேசத்தில் பல வருஷக்காலம் அடிமைத்தனத்திலே இருந்ததினுலும், அவர்களுக்குள்ளே தலைவர்கள் இல்லாததினுலும், அவர்கள் எகிப்துதேசத்தில் இருந்து வனாந்தரத்துக்கு யாத்திரை செய்யும்போது அவர்களுக்குள்ளே யாதாயினும் ஓர் விஷயத்தைப்பற்றி பிரிவினையாவது வாக்குவாதமாவது இருந்தால் அவர்கள் மோசேயினிடத்

துக்கு வந்து அவன் அதைத் தீர்க்கும்படி கேட்பார்கள். அதுமுதல் மோசே இந்த விஷயங்களில் தீர்ப்புச்செய்யும்படி சில புத்திமான்களை ஏற்படுத்தினான். பிறகு இவர்கள் தீர்க்கமுடியாத காரியங்களைக்குறித்து அவன் பரிசுத்த ஸ்தலத்தில் யேகோவாவினுடைய சித்தம் இன்னதென்று விசாரித்துத் தீர்ப்புச்சொல்லுவான். இவ்விதமாய் நியாயந் தீர்க்கும் விஷயத்தில் யேகோவாவினுடைய சித்தத்தை அறிந்தவர்கள் சொன்ன தீர்மானங்களுக்கும், பரிசுத்த ஸ்தலத்தில் மோசே அறிந்த தீர்மானங்களுக்கும் நியாயப்பிரமாணம் என்று அர்த்தம்கொண்ட 'தோரா' என்னும் பெயரை வழங்கினார்கள். விசேஷமாய்ச் சீனாய்மலையில் யேகோவாவினிடத்திலிருந்து மோசே நேரே கேட்டறிந்த பிரமாணங்களுக்கு இந்தப் பெயர் வழங்கினார்கள். 'தோரா' என்பதற்கு 'வேதம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. சங் $19^{7}$ $119^{17.44.61}$ ஓசி $8^{12}$. 'தோரா' என்பதற்கு 'வேதப்பிரமாணம்' என்று யோபு $22^{22}$—ல் சொல்லியிருக்கிறது. பிந்தினகாலத்தில் இந்த வாய்மொழிப்பிரமாணம் எல்லாம் எழுதப்படும்பொழுது இந்தப் பிரமாணங்களைக்கொண்ட பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து ஆகமங்களுக்கும் 'தோரா' என்னும் பெயர் சொல்லப்பட்டது.

3. **தோராவின் நோக்கம்.** ஆசாரியர்கள் வழக்கமாய்த் தாங்கள் நடத்தின ஆராதனைக்கும் ஆசாரத்துக்கும் நியாயப்பிரமாணந்தான் மூல அதிகாரம் என்று நினைத்து, பிந்தின காலங்களில் அந்த ஆசாரத்தை அடுத்த தங்களுடைய சிலாக்கியங்களையும் அந்த ஆசாரத்தின் முதன்மையையும் மெச்சிவந்தார்கள். தீர்க்கதரிசிகளோ நியாயப்பிரமாணம் முக்கியமாய்ச் சன்மார்க்கத்தையும் நல்நடக்கையையும் விருத்தியாக்கவே ஏற்படுத்தப்பட்டிருந்ததென்று சொன்னார்கள். சங் $19^{7}$ $40^{8}$ $119^{142}$ ஏசா $24^{5}$ எரே $7^{21}$ ஆமோ $2^{4}$ ஆகாய் $2^{11}$. இயேசுவின் காலம்மட்டும் ஆசாரியர்களும் வேதபாரகரும் ஆசாரம் உத்தமம் என்று நினைத்ததினாலே சாதாரண ஜனங்கள் நீதி நியாயத்தை விசேஷமாய்த் தேடாமல் ஆசாரத்தைக் கைக்கொண்டுவந்தார்கள். மத் $5^{27-48}$.

4. **நியாயப்பிரமாணத்தின் மூலபங்குகள்.** நியாயப்பிரமாணத்தை நாம் விசாரித்தால் அதில் சில மூலப்பங்குகளைப் பார்க்கிறோம்.

i. **பத்துக்கற்பனை.** இது இரண்டுதடவை சொல்லப்பட்டிருக்கிறது. யாத் 20, உபா 5 அதி. இதோடே யாத் 34—ம் அதிகாரத்தில் சொன்ன கற்பனைகளையும் சேர்த்துப் படிக்கவேண்டும். இந்தப் பத்துக்கற்பனைகள் மோசே ஜனங்களுக்குக் கொடுத்த பத்து வாக்கியங்கள்தான் என்று நினைக்கிறதற்குச் சந்தேகம் இல்லை. கற்பனைகள் பத்துக் காண்க.

ii. **உடன்படிக்கையின் புஸ்தகம்.** பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து ஆகமங்களில் சொன்ன பிரமாணங்களை நாம் விசாரணை செய்யும்போது, பூர்வீக காலத்து ஜனங்களுக்கு நியமிக்கப்பட்ட நியாயப்பிரமாணங்கள் ஒரு சிறிய நூலில் சேர்க்கப்பட்டிருந்தது என்று அறியக்கூடும். இது யாத் $20^{22}$—$23^{33}$—ல் எழுதப்பட்டிருக்கிறது. இதில் ஆசாரம் வியாபாரம் ஆஸ்தி முதலியவற்றைப்பற்றி அவ்வளவு விபரமாய்ச் சொல்லாவிட்டாலும், யேகோவா நியமித்த நீதி நியாயத்தையும் இரக்கத்தையும் இதில் நாம் நன்றாய் அறியக்கூடும். இதற்கு உடன்படிக்கையின் புத்தகம் என்று பெயர். யாத் $24^{7}$. மோசேதானே இந்த உடன்படிக்கையின் புத்தகத்தை ஜனங்களுக்கு முன்பாக வாசித்தான் என்று சொல்லியிருக்கிறது.

iii **உபாகமம்.** உபாகமம் என்னும் புஸ்தகத்தில் எழுதப்பட்ட பிரமாணங்கள் கி—மு. 621—ஆ யோசியா ராஜாவின் காலத்தில் மறுபடியும் கண்டுபிடிக்கப்பட்டாலும், அந்தப் பிரமாணங்கள் அக்காலத்துக்கு முந்தியே இருந்தன என்று நினைக்கிறதற்குக் காரணம் உண்டு என்று உபாகமம் என்னும் நிபந்தத்தில் சொல்லியிருக்கிறோம். ஆனால் நாகரீகத்தில் தேறினவர்களுக்கும், ஆராதனையையும் ஆசாரத்தையும் அதிகமாய் விரும்பினவர்களுக்கும் உரிய பிரமாணங்கள் அநேகம் இருக்கிறதினால், ராஜாக்களின் காலத்தில் எபிரெயர்கள் கைக்கொண்ட பிரமாணங்களை நாம் இதில் அறியக்கூடும். உபாகமம் காண்க.

iv. **பரிசுத்தத்தின் பிரமாணம்.** லேவியர் ஆகமத்தில் நல் ஒழுங்கு ஆசாரமென்னும் விஷயங்களைக் குறித்துக் கூறும் விசேஷமான ஒரு பாகத்துக்குப் 'பரிசுத்தத்தின் பிரமாணம்' என்று வேதசாஸ்திரிகள் பெயர் கூறுகிறார்கள். இதில் விபசாயம், பலிகள், குடும்ப ஒழுங்கு, பரிசுத்தம், அசுத்தம், பண்டிகை, யூபிலி அடிமைகளுக்குக் காட்ட வேண்டிய இரக்கம் முதலியவற்றைக் குறித்து விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. லேவி 17—26 அதி.

v. **ஆசாரியர்களுடைய பிரமாணங்கள்.** ஆசாரியர்கள் எபிரெயர்களுக்குள்ளே அதிக

அதிகாரமுடையவர்களானதினால், அவர்கள் தங்களுடைய லௌகியங்களைப்பற்றியும், தாங்கள் நடத்துகிற ஆராதனையைப்பற்றியும், ஜனங்கள் கொடுக்கவேண்டிய காணிக்கைகளைப்பற்றியும், சுத்தாசுத்தங்களைப்பற்றியும் பல நூற்றாண்டுகளுக்கிடையில் உண்டான ஏற்பாடுகளெல்லாம் கடவுளால் உண்டானவை என்று அபிப்பிராயம்கொண்டு, அவற்றை மற்ற நியாயப்பிரமாணங்களோடு சமமாய் எண்ணி, யாத்திரையாகமத்தின் கடைசி அதிகாரங்களிலும், லேவியர் ஆகமம் முழுவதிலும், எண்ணாகமம், உபாகமம், யோசுவா என்னும் ஆகமங்களிலும் சேர்த்தார்கள். எசேக்கியேல் தீர்க்கதரிசி விசேஷமாய் இவைகளைக் குறித்துச் சொல்லுகிறான். இந்தப் பிரமாணங்களில் நாம் இஸ்ரவேலர் நடத்தின ஆராதனையைக் குறித்தும், சன்மார்க்கத்தைப்பற்றி அவர்கள் கைக்கொண்ட விஷயங்களைக் குறித்தும், நன்றாய் அறிகிறோம். எசேக்கியேல் தான் தரிசனத்தில் கண்ட நகரத்துக்கு 'யேகோவா அங்கே இருக்கிறார்' என்று அர்த்தம்கொண்ட 'யேகோவா ஷம்மா' என்னும் பெயர் இட்டு, அந்நிய மதங்களையும் எவ்விதமான அசுசியையும் நீக்குகிறதைக் குறித்துப் போதித்து எபிரெயர்கள் யேகோவாவுக்கு முன்பாக பரிசுத்தமுள்ளவர்களாயிருக்கவேண்டும் என்று தெரிவிக்கிறான். எசே 48[35].

5. **நியாயப்பிரமாணத்தின் பலன்.** முன் சொன்னபடி நியாயப்பிரமாணத்தில் சேர்க்கப்பட்ட பிரமாணங்களெல்லாம் ஒரேகாலத்தில் உண்டானவை அல்லாததினால், அவற்றை நாம் விசாரிக்கும்போது, ஒழுங்கு ஆசாரம் நாகரீகம் பயபக்தி முதலியவற்றில் இஸ்ரவேலர் காலாகாலத்தில் அடைந்த விருத்தியை நாம் காணமுடியும். திருஷ்டாந்தமாக, ஒருவன் புத்திர சந்தானம் இல்லாமல் மரித்தால் அவனுடைய சகோதரன் மரித்துப்போனவனுடைய மனைவியைத் தனக்கு மனைவியாகக்கொண்டு, தன் சகோதரனுடைய பெயர் இஸ்ரவேலில் அற்றுப்போகாதபடி அவனுக்குச் சந்தானம் உண்டாக்கவேண்டும் என்னும் பிரமாணமும், பழிவாங்குகிறதைப்பற்றிய பிரமாணமும், பூர்வீக காலத்து நாகரீகத்துக்குரியது. உபா 19[6] 25[5]. ஆகிலும் கடவுளை முழுமனதோடு நேசிக்கிறதைப்பற்றியும், தன்னைப்போல் பிறனை நேசிக்கிறதைப்பற்றியும் கூறின பிரமாணங்கள் உத்தம தேவபக்தியைக் குறிக்கின்றன. லேவி 19[18] உபா 6[5] 10[12]. பொதுவாய்ச் சொல்லவேண்டுமானால் மோசேயின் ஆகமத்தில் கூறியிருக்கிற பிரமாணங்கள், பக்தர்களுடைய மனதிலே நம்பிக்கையை அல்ல பயத்தையே உண்டாக்கும். ஆதியில் கற்பலகையின்மேல் எழுதப்பட்ட நியாயப்பிரமாணம் எப்பொழுதும் கல்லைப்போல் கடினமாய் இருந்தது என்று சொல்வது நியாயமே. அடிமைகளோடு எஜமான் பேசுகிறதுபோல நியாயப்பிரமாணமானது மனிதர் செய்யவேண்டியவைகளைப் பற்றியும், தவிர்க்கவேண்டியவைகளைப் பற்றியும், மனுஷர்களுக்குப் பல கடினமான விதிவிலக்குகளை ஏற்படுத்தினது. ஆதலால் பரி. யோவான் 'நியாயப்பிரமாணம் மோசேயின் மூலமாய்க் கொடுக்கப்பட்டது, கிருபையும் சத்தியமும் இயேசுவின் மூலமாய் உண்டாயின' என்று நன்றாய்ச் சொன்னான். யோவா 1[17]. தீர்க்கதரிசிகள் இதைச் செவ்வையாய்த் தெரிந்துகொண்டதினால் யேகோவா வருங்காலத்தில் தமது ஜனங்களோடு புது உடன்படிக்கை பண்ணி அவர்கள் மனதிலே நூலைப் பதித்தருளுவார் என்ற எதிர்நோக்கம் உடையவர்களாய் இருந்தார்கள்.

## II. புதிய ஏற்பாடு.

1. **இயேசுகிறிஸ்துவும் நியாயப்பிரமாணமும்.**

இயேசு பழைய ஏற்பாட்டில் கடவுளினுடைய சித்தத்தைத் தெரிவிக்கும் எல்லா பிரமாணங்களையும் 'நியாயப்பிரமாணம்' என்னும் பதத்தினாலே குறித்து ஒருவன் வீணைவைகளை அழிப்பதுபோல, தாம் அவைகளை அழிக்க வரவில்லை என்றும்; தாம் தம்மிலும், தாம் செய்த பலியிலும், தாம் அருளின மீட்பிலும், தாம் ஸ்தாபித்த ராஜ்யத்திலும் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறார் என்றும்; தமது சீஷர்களுக்குப் போதித்தார். மத் 5[17] லூக் 4[17] 16[16] 24[27] யோவா 1[17] 6[45] 10[34] 12[34] 15[25]. மேலும் அவர் பாரம்பரியங்களைக் குறித்து அதிக ஆவல் உடைய வேதபாரகர்கள் 'கொர்பான்' 'ஓய்வுநாள்' 'ஸ்நானம்' முதலியவற்றைப்பற்றி ஏற்படுத்திய கற்பனைகள், தேவசித்த பிரமாணங்களாயிராமல், தேவ சித்தத்துக்கு விரோதமானவைகளாய் இருக்கின்றன என்றும் தெரிவித்தார். மாற் 2[27] 7[7] 7[14].

இயேசுகிறிஸ்து மற்ற எபிரெயர்களைப் போல நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்படிந்தவரானாலும், அவர் பூரண நல் நேசத்தைப் பற்றிய பொற்பிரமாணங்களைக் கொடுத்து உத்தம போதனை அளித்ததினாலே, மோசேயின் நியாயப்பிரமாணத்தில் அடங்கிய மூல சாரத்தை விளக்கி, மெய்ப்பக்தியின் தன்மை

இன்னதென்று அறிவித்தார். மத் $22^{34}$ லூக் $10^{25}$ கலா $4^{4}$.

இவ்விதமாய் அவர் விவாகம், பழிவாங்குதல் முதலிய விஷயங்களைப்பற்றிப் பூர்வீககாலத்தவர்க்கே நியமிக்கப்பட்ட கற்பனைகளையும், குறைவுடைய கற்பனைகளையும் சீர்ப்படுத்தி, ஆவிக்குரியவிதமாய் இவைகளின் நோக்கத்தைத் தெரிவித்தார். மத் $5^{18}$ $19^{3}$ மாற் $7^{14}$.

இயேசு தாம் சாலொமோனையும் ஆபிரகாமையும் தேவாலயத்தையும்விட மேன்மையுடையவராகையால், தர்க்கம் பண்ணுகிற நியாயசாஸ்திரியைப்போல பேசாமல், பிரதம அதிகாரத்துடனே பேசுகிறூர். யூதர்கள் அவர் இவ்வண்ணமாய்ப் பேசுகிறது தேவதூஷணம் என்று நினைத்தாலும், அவர் அருளின நன்மொழிகள் மோசேயின் நியாயப்பிரமாணத்துக்குப் பதிலாக இவ்வுலகத்தில் யாவருக்கும் உரிய பிரமாணம் ஆனது.

2. பரி. பவுல்.

பரி. பவுல் ரோமருக்கும் கலாத்தியருக்கும் எழுதின நிருபங்களில் 'நியாயப்பிரமாணம்' என்னும் பதத்தை 103 தடவை சொல்லுகிறதினால், பரிசேய சமயத்தைச்சேர்ந்த இந்த அப்போஸ்தலன் அதைக்குறித்து ஆழ்ந்த யோசனை செய்தான் என்று தோன்றுகிறது. நியாயப்பிரமாணத்திற்கு அடிமையாயிருந்த அவன் அதைவிட்டு நீங்கிக் கிறிஸ்துவின் அருளினால் விடுதலை அடைந்ததைக் குறிக்கும்படி, 'தேவனுக்கென்று பிழைக்கும்படி நான் நியாயப்பிரமாணத்தினாலே நியாயப்பிரமாணத்துக்கு மரித்தேனே' என்று சொல்லுகிறான். கலா $2^{19}$. பரிசேயனும் நியாயப்பிரமாணத்தினாலே நீதியைத் தேடினவனுமாகிய பவுல் அந்த நியாயப்பிரமாணம் தன்னிடத்திலிருந்த தீமையை அழிக்காமல், அதைத் தூண்டிவிடுகிறது என்று அறிந்து அது மனுஷர்களுக்கு மரணத்தின் பிரமாணம் என்று சொல்லுகிறான். அப் $13^{38}$ ரோம $4^{1}$ $5^{20}$ $7^{7-23}$ $8^{2}$ $9^{31}$ $10^{3}$ 1 கொரி $15^{56}$.

ஆனால் அவன் இதைக்குறித்து யோசிக்கையில் நியாயப்பிரமாணம் கிறிஸ்துவினிடத்துக்கு மனுஷர்களைக் கொண்டுவரும் உபாத்தி என்றும், அது நமக்குள் பாவத்தைக்குறித்து மனச்சாட்சியை உணர்த்துகிறது என்றும் சொல்லுகிறான். கலா $3^{24}$ $4^{1-5}$. மேலும் பரி. பவுல் மோசே இயற்றின பிரமாணத்தைத்தவிர இயற்கைப் பிரமாணத்தையும் அந்நியர்களுக்குள்ளே பார்க்கிறான். இவ்விதமாய் யூதர்களுக்கேயன்றி மனுஷர் யாவருக்கும் நன்மை தீமை இன்னதென்று தெளிவாய்த் தெரிவிப்பதும் நீக்கக்கூடாததுமான பிரமாணம் உண்டென்று நம்புகிறான். ரோம $2^{6}$ $3^{9}$. இப்படியாக மோசேயின் பிரமாணத்தைக் கைக்கொண்டவர்கள்மாத்திரம் அல்ல, மனுஷர்கள் யாவரும் தங்களுக்குத் தெரிந்த பிரமாணத்தின்படி கடவுளுக்கு முன்பாகக் குற்றவாளிகளாய் இருக்கிறார்கள். இதின்படி மனுஷர்களைக் குற்றவாளிகளென்று காட்டுவதே நியாயப்பிரமாணத்தின் முக்கிய நோக்கம். கிறிஸ்துவுக்குள்ளே நியாயப்பிரமாணத்துக்கு முடிவு இருக்கிறது. ஏனென்றால் அவர்மூலமாய் குற்றவாளிகள் நீதிமான்களாகலாம் (ரோம $13^{8}$ கலா $5^{13}$) என்றும், இனி நீதிமான்கள் மோசேயின் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்படிந்தவர்களாயிராமல், கிறிஸ்துவின் பிரமாணத்தினாலே ஜீவனுடைய ஆவியின் பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவர்களாய் இருக்கிறார்கள் என்றும், தீர்மானமாய்ச் சொல்லுகிறான். ரோம $8^{2}$.

யூதமார்க்கத்திலிருந்து கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்த ஆதிகிறிஸ்தவர்களில் சிலர் அந்நிய மார்க்கத்திலிருந்து வந்தவர்கள் யாவரும் மோசேயின் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று சொன்னபோது, பரி. பவுல் யூதனாய் இருந்தும் யூதர்களுக்கு இட்ட பிரமாணங்களையும், சடங்காசாரங்களையும்பற்றி இனி ஆவலுள்ளவனாயிராமல், அவர்களுக்கும் பரி. பேதுருவுக்கும் மாறாக ஆட்சேபனை பண்ணி, கிறிஸ்தவ சபை மோசேயின் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டுப்போகாதபடி செய்தான். 1 கொரி $7^{18}$ கலா $2^{11}$ $3^{2}$ $5^{1-4}$ $6^{15}$.

3. எபிரேயர் நிருபம்.

இந்த நிருபத்தின் ஆக்கியோன் தேவாலயம், ஆசாரம், இஸ்ரவேலின் சிலாக்கியங்கள், பலிகள் முதலியவைகளைச் சிறப்பித்துப் பேசி இவைகள் யாவும் கிறிஸ்துவின் மூலமாய் நாம் அடையவேண்டிய நன்மைகளைக் குறிக்கும் ஒரு சாயல் அல்லது அடையாளம் என்று சொல்லுகிறான். எபி $7^{18}$ $8^{1}$ $9^{1}$–$10^{14}$. பவுலைப்போல இவனும் நியாயப்பிரமாணத்தின் மூலமாய்ப் பாவமன்னிப்பை அடைவது கூடாதகாரியமென்றும், இயேசுதான் மகா பரிசுத்தஸ்தலத்துக்குள் புதிதும் ஜீவனுள்ளதுமான மார்க்கத்தை உண்டாக்கினார் என்றும் கூறுகிறான். எபி $10^{32}$.

4. பரி. யாக்கோபு.

இயேசு மலைப்பிரசங்கத்தில் சொன்ன போதகத்தின்படி நியாயப்பிரமாணம் அவ

க்குள் ஆவிக்குரியவிதமாய்ச் சேர்ந்திருந்தப்பட்டும், மகிமையடைந்துமிருக்கிறது என்று யாக்கோபு நம்பி, இயேசு இவ்விதமாய்த் தமது சிஷர்களுக்கு ராஜரீகப் பிரமாணத்தையும் அயாதீனப் பிரமாணத்தையும் அருளி இவைகளை பக்தனே நடத்தும்படி கட்டளையிட்டார் என்று நம்புகிறான். யாக் 2[8-12].

5. பரி. யோவானும், பரி. பேதுருவும் எழுதின நிருபங்களில் நியாயப்பிரமாணம் என்னும் பதம் சொல்லப்படவில்லை.

**நியாயம்**. Justice. ஒரு காரியத்தைப் பற்றி விசாரித்து, உள்ளத்தின்படி தீர்மானம் செய்வது.

i. மனுஷனுடைய நல்ல குணங்களில் ஒன்று ஆதி 18[19] 2 சாமு 8[15] 1 இரா 10[9] நீதி 21[7] ஏசா 56[1]

ii தேவனுடைய லக்ஷணங்களில் ஒன்று. யோபு 37[23] சங் 82[1] 89[14] 97[2] உபா 32[4] தானி 4[37].

**நியாயம், நீதி** Justice. வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள 'டீன்' 'மிஷ்பாத்' (*Din, mishpat*) என்னும் இரண்டு எபிரெய பதங்களுக்கு 'நியாயம்' என்று சொல்லியிருக்கிறார்கள். 'டீன்' என்பது விசாரணை செய்து தீர்ப்பிடுகிறதையும், 'மிஷ்பாத்' என்பது பிரமாணம் விதிக்கிறதையும் விவாதங்களைத் தீர்க்கிறதையும், பிரமாணங்களின்படி ஜனங்களை நடத்துகிறதையுங் குறிக்கும். டீன்=நியாயம். யோபு 36[17] தானி 4[37]. மிஷ்பாத்=நியாயம். ஆதி 18[19] உபா 25[1] யோபு 37[23] சங் 89[14]. 'நீதி' என்று வழக்கமாய் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிற 'த்செடெக' என்னும் பதத்தின் மூல அர்த்தம் நியாயமாயும் செம்மையாயும் செய்வதே. ஆதி 18[19] உபா 25[1] 32[4] யோபு 37[23] சங் 89[14] எரே 50[7]. மனுஷர்களின் உத்தம லக்ஷணங்களில் நியாயம் ஒன்று. மூப்பர்களும் தலைவர்களும் மற்ற அதிகாரிகளும் நியாயத்தின்படி தீர்ப்புச்செய்யவேண்டும். உபா 1[16] 2 சாமு 23[3] 2 நாளா 19[6] சங் 82. இதின்படி கடவுள் நியாயம் நிறைந்தவர் என்றும், நியாயமாய்ச் செய்வது அவருக்குப் பிரியம் என்றும், நியாயம் செய்கிறவர்கள் அவர் அருளும் ஆசீர்வாதத்தைப் பெறுவார்கள் என்றும், வேதாகமத்தில் பல வசனங்களில் பார்க்கிறோம். ஆதி 18[25] உபா 32[4] சங் 89[14] 97[2] ஏசா 30[18] தானி 4[37].

**நியாய விசாரணை**. Administration of Justice.

1. பூர்விக காலம்.

i. கோத்திரப்பிதாக்களின் காலம். ஆதி காலத்தில் குடும்பத்தின் தலைவனுக்கு அல்லது தகப்பனுக்கு அக்குடும்பத்தைப்பற்றிய சர்வாதிகாரமும் இருந்தது. குடும்பத்தின் சகல காரியங்களையும் நடத்துதலும், குடும்பத்தில் குற்றஞ்செய்தவர்களுக்குத் தண்டனை செய்தலும், தனக்குச் சித்தமானால் குற்றவாளிகளுக்குக் கொலைத்தீர்ப்பிடுதலும், குடும்பத்தலைவனுக்கு உரியதே. வேறொரு குடும்பத்தான் இவன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு அநியாயம் செய்தால், இவன் தனது குடும்பத்தாரைக் காப்பாற்றவேண்டும். ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவன் இன்னொரு குடும்பத்தைச் சேர்ந்தவனைக் கொன்றுபோட்டால், கொலையுண்டவனுடைய இனத்தார் யாவரும் கொலைசெய்தவனுடைய இனத்தாருக்குள்ளே எப்படியாவது ஒருவனைக் கொன்று பழிவாங்கவேண்டும் என்பது அத்தேசங்களில் எங்கும் வழக்கம்.

ii மூப்பர்களின் அதிகாரம் இஸ்ரவேலர் தங்கள் கோத்திரங்களில் உள்ள மூப்பர்களை எப்பொழுதும் கனப்படுத்தி வந்தார்கள். இவ்விதமாய் ஒரு கோத்திரத்தைச் சேர்ந்த பல குடும்பங்களின் பெரியோர்கள் ஒரு ஊரிலேயாவது ஒரு நாட்டிலேயாவது கூடி, சகல விஷயங்களையும்பற்றி நியாய விசாரணை செய்வார்கள். வழக்கமாய் இவர்கள் ஊரின் ஒலிமுகவாசலில் ஜனங்களுக்கு முன்பாக விசாரணைசெய்வார்கள். உபா 21[19] 22[15] சக 8[16] ஆமோ 5[12]. இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வனாந்தரத்தில் அலைந்து திரிந்தபோது மோசேதானே மூப்பர்களை ஓர் ஆலோசனைச்சங்கமாய் நியமித்ததாகத் தோன்றுகிறது. யாத் 18[13]. இஸ்ரவேல் ஜனங்கள் கானான்தேசத்தில் குடியேறினபிறகு மூப்பர்கள் அதிகாரம் செலுத்தினார்கள் என்பதற்குப் பல திருஷ்டாந்தங்கள் உண்டு. உபா 21[18] 1 இரா 21[8]. கிதியோன்முதலிய நியாயாதிபதிகள் விசேஷித்த காரியங்களுக்காக ஜனங்களால் நியமிக்கப்பட்டவர்கள் இவர்களில் சிலர் தங்களுக்கிருந்த மேலான அறிவினால் அதிக திறமையுடையவர்களாய் ஜனங்களை நடத்தி எவ்வித மான காரியங்களிலும் நியாயவிசாரணை செய்து தீர்மானம் பண்ணுவார்கள். 1 சாமு 7[14].

2. ராஜாக்களின் காலம்.

i. ராஜாக்களின் காலத்திலே ஆரம்பத்தில் ராஜாதானே எவ்விதமான பெரிய காரியங்களையும்பற்றி விசாரணைசெய்து தீர்மானம் பண்ணுவான். சாலொமோன் ராஜா

நியாயவிசாரணை செய்யும்படி ஒரு மண்டபம் கட்டினன். 1 சாமு $8^{20}$ 2 சாமு $14^{4}$ $15^{2}$ 1 இரா $7^{7}$. ஆனால் பிந்தின காலங்களில் நியாயவிசாரணை செய்கிறதற்கு ராஜாக்களுக்குப் போதிய சாவகாசம் இல்லாததினால், தங்களுக்குப் பதிலாக நியாயம் விசாரிக்கும்படி உத்தியோகஸ்தர்களை நியமித்தார்கள். இதுமட்டும் நியாயவிசாரணைசெய்த குடும்பத்தலைவர்களும் மூப்பர்களும் ராஜாக்களும் நீதியை விரும்பி நியாயத்தின்படி தீர்மானஞ் சொல்லுவார்கள் என்று நாம் நம்பலாம். நியாயவிசாரணை செய்யும்படி ராஜாக்கள் உத்தியோகஸ்தர்களை ஏற்படுத்தினபிறகு, இவர்கள் குடும்பத்திலும் ஊரிலும் நீதி நியாயத்தை ஸ்தாபிக்க அவ்வளவு ஆவலில்லாதவர்களாய் இருந்து, முதலாவது தங்கள் சொந்த லாபத்தைத் தேடிப் பரிதானம் வாங்கினார்கள் என்பதற்கு வேதாகமத்தில் பல திருஷ்டாந்தங்கள் உண்டு. தீர்க்கதரிசிகள் இதைக்குறித்து அடிக்கடி பேசுகிறார்கள். ஏசா $1^{23}$ $5^{7}$ மீகா $3^{11}$.

ii. ஆசாரியர்கள் இஸ்ரவேலருக்குள்ளே செல்வாக்கடைந்த காலத்தில் அவர்கள் அநேக விஷயங்களைக்குறித்து விசாரணை செய்யும்படி அதிகாரம் பெற்றார்கள். இதற்குப் பல காரணங்கள் உண்டு. விசேஷமாய் ஆசாரத்துக்கும் கடவுளுடைய கட்டளைக்கும் விரோதமான குற்றங்களைக்குறித்து ஆசாரியர்களின் மூலமாய் யேகோவாவின் சித்தத்தை அறிவது தகுதி என மூப்பர்கள் நினைப்பார்கள் என்று நாம் சொல்லலாம். யாத் $22^{8}$ உபா $17^{8}$ $19^{15}$ $33^{8}$. ஊரீம் தும்மீம் காண்க. ஆதலால் ராஜாக்களின் காலத்தில், ராஜாக்களோடு ஆசாரியர்களும் மூப்பர்களும் எபிரெயருக்குள்ளே நியாயவிசாரணை செய்தார்களென்று தோன்றுகிறது.

3. **சிறையிருப்பின் காலத்துக்குப் பிற்பாடு** எஸ்றாவின் காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் அதின் மூப்பர்கள் நியாயவிசாரணை செய்யும் ஒரு சங்கமாக ஏற்படுத்தப்பட்டார்கள். சிறு ஊர்களில் இந்தச் சங்கங்களில் ஏழு அங்கங்களும் பெரிய பட்டணங்களில் இருபத்துமூன்று அங்கங்களும் உண்டு. இச்சங்கங்கள் ஏதாவது ஒரு விஷயத்தைக் குறித்துத் தீர்மானஞ்செய்ய முடியவில்லையென்றால், எருசலேம் பட்டணத்தில ஸ்தாபகமான மகா ஆலோசனைச்சங்கமாகிய சனெதரீம் (*Sanhedrim*) சங்கத்தார் அந்த விஷயத்திலே தீர்மானஞ் சொல்லுவார்கள்.

இந்த ஊர்ச்சங்கங்கள் விசாரணை நடத்தும்பொழுது, வாதியானவன் ஜனங்களுக்கும் மூப்பர்களுக்கும் முன்பாக பிரதிவாதியின்பேரிலே குற்றஞ்சாட்டுவான். பிறகு பிரதிவாதி அதற்குப் பதில் சொல்லுவான். சில சமயங்களில் எதிராளி தன் வழக்கை எழுதிக்கொடுப்பதும் உண்டு. யோபு $31^{3-5}$. பின்பு இரண்டு சாட்சிகள் ஒவ்வொரு விஷயத்தையுங் குறித்துச் சாட்சி கொடுக்கவேண்டும். பெண்களும் சிறுபிள்ளைகளும் சாட்சிகளாய் இருக்கக்கூடாது. அடிமைகள் சாட்சி சொல்லலாம், ஆனால் அவர்கள் சொன்னதை ருசுப்படுத்தும்படி வேறு சாட்சிகள் இருக்கவேண்டும். ஒரு காரியத்தில் சாட்சிகள் இராவிட்டால், நியாயாதிபதிகள் கேள்விகளைக்கேட்டு, உண்மையை அறிந்துகொள்ளவேண்டும். தள்ளுபடி ஆகமத்தில் சொல்லப்பட்ட சூசன்னாள் என்பவளின் சரித்திரத்தில் நியாயவிசாரணை நடபடிக்கு நல்ல திருஷ்டாந்தம் உண்டு.

4. **புதிய ஏற்பாடு.**

புதிய ஏற்பாட்டிலே இஸ்ரவேலர் நியாயவிசாரணைசெய்கிற விதத்தைத்தவிர, ரோமராஜ்யத்தில் விசாரணை நடந்த மாதிரியைப் பற்றியும் சொல்லியிருக்கிறது. அப் 16 அதி. 24–28 அதி. 2 தீமோ $4^{16}$. ரோமர்களுடைய வழக்கத்தின்படி ரோம ராஜாங்கத்தில் பிரஜா சிலாக்கியம்பெற்றவன், நியாயாதிபதிகளுக்கு முன்பாகக் குற்றஞ் சாட்டப்படும்பொழுது அந்த வழக்கை விசாரணை செய்த நியாயாதிபதி அந்த வியாஜ்யத்தை விசாரிக்கும் தினத்தைத் தன் இஷ்டப்படி குறிக்கலாம். அந்த விசாரணைத்தினம் சில நாள் பொறுத்துவந்தாலும் சரி, பல மாசங்கள் கழித்துவந்தாலும் சரி, நியாயாதிபதி, அந்தக் காரியத்தைக்குறித்து விசாரிக்கும்வரையில் குற்றஞ் சாட்டப்பட்டவன் சிறைச்சாலையில் வைக்கப்படுவான். இது குற்றஞ்சாட்டப்பட்டவர்களுக்கு அதிகக் கஷ்டம். ஆனால் நியாயாதிபதிக்குப் பிரியம் இருந்தால் குற்றஞ்சாட்டப்பட்டவன் காவலறையிலே அல்ல தன் வீட்டிலே இருக்கலாம். அப்பொழுது இவனுடைய வலதுகரமும் ரோம போர்ச்சேவகன் ஒருவனுடைய இடதுகரமும் ஒரு விலங்கினால் பிணிக்கப்பட்டிருக்கும். அப் $12^{6}$ $21^{33}$. சில சமயங்களில் நியாயாதிபதிக்குப் பிரியம் இருந்தால் குற்றஞ்சாட்டப்பட்டவனுக்காக ஒரு பெரிய தனவான் அல்லது உத்தியோகஸ்தன் ஜாமீனாய் ஏற்படும்பட்சத்தில் அவன் தன் ஊரிலேயே கஷ்டமில்லாமல் வாசஞ்செய்யலாம். ரோம பிரஜா சலாக்கியம் பெற்றவர்களுக்கு இப்படிப்பட்ட கஷ்டங்கள் இருந்தாலும்,

இன்னொரு விஷயத்தில் அவர்களுக்குப் பெரிய சிலாக்கியம் இருந்தது. அது என்னவென்றால், அவர்கள் ரோம ராஜாங்க நாடுகளில் கடைசியான நாட்டிலே இருந்தாலும், அவர்கள் நியாயாதிபதிக்கு முன்பாக 'ராயனுக்கு அபயமிடுகிறேன்' என்று சொன்ன பிறகு ரோமாபுரியிலுள்ள ராயனே அந்த வழக்கை விசாரணைசெய்து தீர்மானம்பண்ணுவான். அப் $25^{11}$. இதின்படி பரி. பவுல் இராயனுக்கு அபயம் இட்டபிறகு, ரோமாபுரிக்குப் போனான். ஆனால் இந்தச் சிலாக்கியத்தைப் பெற்றவர்கள் அற்பக் காரணத்துக்காக இவ்விதமாய் அபயமிடமாட்டார்கள். ஏனென்றால் ரோமாபுரிக்குப் பிரயாணம் பண்ணுவது அதிக கஷ்டம் என்றும் அவர்கள் ரோமாபுரிக்கு வந்தபிறகு ராயன் நெடுங்காலம் அந்த வழக்கை விசாரிக்காமல் இருக்கலாம் என்றும், அவர்கள் செய்த அபயம் வீணய்ப்போனால், அவர்களுக்கு அதிக தண்டனை இருக்கும் என்றும் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். அபயம் காண்க.

**நியாயவிசாரணை மண்டபம்.** Porch of Judgement. 1 இரா $7^{7}$.

**நியாயாசனம்.** Judgement seat. மத் $27^{19}$ யோவா $19^{13}$ அப் $18^{12}$ $25^{6.10}$ ரோம $14^{10}$ 2 கொரி $5^{10}$. ரோமர்கள் நியமித்த அதிபதிகள் நியாயவிசாரணைசெய்யும் காலத்தில் அவர்கள் உட்கார்ந்த நாற்காலி யானைத்தந்தத்தினாலும் தங்கத்தினாலும் அலங்கரிக்கப்படும். யாக் $2^{6}$–ல் சொன்ன 'நியாயாசனம்' என்பதற்கு 'விசாரணை' என்று அர்த்தம்.

**நியாயாசனம்.** Throne of judgement. சங் $122^{5}$ நீதி $20^{8}$.

**நியாயாதிபதி.** Judge.

i. நியாயம் விசாரிக்கிறவன். உபா $1^{16}$ $19^{18}$ நியா $2^{19}$ ரூத் $1^{1}$ 1 சாமு $8^{1}$ 2 நாளா $19^{6}$ எஸ்றா $7^{25}$ யோபு $31^{11}$ சங் $2^{10}$ மீகா $7^{3}$ லூக் $12^{14}$ $18^{2}$ மத் $5^{25}$.

ii. தேவன். ஆதி $18^{25}$ 1 சாமு $24^{15}$ சங் $50^{6}$ ஏசா $33^{22}$ எபி $12^{23}$.

iii. கிறிஸ்து. அப் $10^{42}$ 2 தீமோ $4^{8}$ யாக் $5^{9}$.

**நியாயாதிபதிகளின் புஸ்தகம்.** The book of Judges.

1. பெயர்.

எபிரெய பாஷையில் இதற்கு 'நியாயாதிபதிகள்' என்றுமாத்திரம் பெயர். சில பராக்கிரமசாலிகளும் புத்திமான்களும் இஸ்ரவேலுக்காகச் செய்த அரிய பெரிய காரியங்களைப்பற்றி இப்புஸ்தகம் சொல்லுகிறது. ஆனால் இவர்களுக்கு 'நியாயாதிபதி' என்னும் பெயர் இடுகிறதற்குக் காரணம் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. மேலும் இவர்களில் ஏகூத், பாராக், கிதியோன் என்பவர்களுக்கு நியாயாதிபதி என்னும் பெயர் கூறப்பட்டிருக்கவில்லை.

2. பொருள்.

இந்தப் புஸ்தகம் மூன்று பங்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

i. $1^{1}$–$2^{5}$. யூதா, சிமியோன் கோத்திரங்கள் அடைந்த ஜெயங்கள்; காலேபைப்பற்றிய விஷயம்; இஸ்ரவேலர் ஜெயங்கொள்ளாத நாடுகள்; இஸ்ரவேலருடைய அவடக்தியும், மனஸ்தாபமும்; யேகோவாவினிடத்திற்குத் திரும்புதல்.

ii. $2^{6}$–$16^{31}$. ஒவ்வொரு கோத்திரத்துக்கும் ஒரு நியாயாதிபதியாக பன்னிரண்டு நியாயாதிபதிகளின் சரித்திரங்கள். திருஷ்டாந்தமாக ஆத்னியேல் யூதாக் கோத்திரத்தான், ஏகூத் பென்யமீன் கோத்திரத்தான், சிம்சோன் தாண் கோத்திரத்தான்.

$2^{6}$–$3^{6}$. இஸ்ரவேல் செய்த தேவ துரோகமும் பட்டபாடும்.

| | |
|---|---|
| $3^{7-11}$. | ஆத்னியேல். |
| $3^{12-30}$. | ஏகூத். |
| $3^{31}$. | சம்கார். |
| 4–5 அதி. | பாராக். |
| $6^{1}$–$8^{35}$. | கிதியோன். |
| 9–ம் அதி. | அபிமலேக்கு. |
| $10^{6}$–$12^{7}$. | யெப்தா. |
| $12^{8-10}$. | இப்சான். |
| $12^{11-12}$. | ஏலோன். |
| $12^{13-15}$. | அப்தோன். |
| 13–16 அதி. | சிம்சோன். |

iii. 17–21 அதி. இந்த அதிகாரங்களில் இராஜாக்களுக்கு முந்தினகாலத்தில் நடந்த இரண்டு சம்பவங்கள் கூறப்பட்டிருக்கிறது.

17–18 அதி. எப்பிராயீம் கோத்திரத்தைச்சேர்ந்த மீகா என்பவன் செய்த விக்கிரக ஆராதனை.

19–21. அதி. பென்யமீன் கோத்திரத்தைச்சேர்ந்த கிபியாபட்டணத்தார் லேவியன் ஒருவனுடைய மறுமனையாட்டியின் பேரில் செய்த அநியாயமும், இஸ்ரவேலர் பென்யமீனரின்பேரிலே பழிவாங்குதலும், பென்யமீனியர் தங்கள் கோத்திரம் அற்றுப்போகாதபடி பெண்கொள்ளும்பொருட்டுச் செய்த படையெடுப்பும்.

3. இந்தப் புஸ்தகம் உண்டானவிதம்.

ஆதியிலே இஸ்ரவேலர் கிதியோன் முதலிய பெரியவர்கள் செய்த காரியங்களை வாய்மொழியாகச் சொல்லி அவற்றைக்குறித்துத் தங்கள் பிள்ளைகளுக்கு ஞாபகம் உண்டாகும்படி செய்வார்கள். இவ்விதமாய் ஒரு நாட்டிலே ஒரு நியாயாதிபதியைப்பற்றியும் இன்னொருநாட்டிலே வேறொரு நியாயாதிபதியைப்பற்றியும் ஜனங்களுக்கு ஞாபகம் உண்டாய் இருக்கும். பிறகு சிலர் கர்ணபரம்பரையாய்வந்த இந்தச் சரித்திரங்களையெல்லாம் புஸ்தகத்தில் எழுதி வைத்துக் கொள்ளுவார்கள். ஆதலால் இந்தப் புஸ்தகத்தில் இஸ்ரவேல் ஜனங்கள் ராஜாக்களின் காலத்துக்கு முன்னே தங்கள் தேசத்தில் சம்பவித்தவைகளைப்பற்றிய சரித்திரத்தைச் சொல்லுகிறார்கள் என்று நாம் நினைக்க வேண்டும். ஆனால் முதலில் இந்த ஆகமத்தில் சொன்ன சரித்திரங்களை இயற்றினவர்கள் இன்னார் என்றும், இந்தச் சரித்திரங்களை ஒரே ஆகமமாகச் சேர்த்தவன் இன்னான் என்றும் சொல்வது நம்மாலே முடியாத காரியம். இது எப்படியாயினும், இந்த ஆகமத்தில் சாமுவேல் தீர்க்கதரிசியின் காலத்துக்கு முன்னே இஸ்ரவேல் ஜனங்களுக்கு நேரிட்ட பல சம்பவங்களைப்பற்றியும், அவர்கள் திரும்பத் திரும்ப அந்நிய தேவர்களை வணங்கினதைப்பற்றியும், அவர்கள் மறுபடியும் யேகோவாவை நாடித் தேடுவதைப்பற்றியும், அவர்கள் தேசத்திலே உள்ள பல வழக்கங்களைப்பற்றியும் நாம் நன்றாய் அறியக் கூடும். அக்காலத்தில் அவர்கள் யேகோவாவினுடைய உத்தம தன்மையை அறியாமல், தங்களைக் காக்கும் ஒரு குலதேவதையைப் போல்மாத்திரம் அவரை வழக்கமாய் நினைத்தாலும், சில விஷயங்களில் அவர்கள் அவர் எப்பொழுதும் நீதி நியாயத்தை விரும்புகிறவர் என்று அறிந்திருந்ததைப்பற்றியும், சாமுவேலின் காலத்துக்குமுன்னே இஸ்ரவேலர் இருந்த நிலைமையைப்பற்றியும் இந்த ஆகமம் நல்ல சாட்சி கொடுக்கிறது என்று நாம் தீர்மானமாய்ச் சொல்லக்கூடும்.

**நிருபம்.** Epistle. நிருபம் என்பதற்குத் தற்காலத்தில் கடிதம் என்று வழக்கமாய்ச் சொல்லுகிறோம். நிருபங்களின் மூலமாய் நடந்த விஷயங்களைப்பற்றியும், நமது மனதில் உள்ள சங்கதிகளைப்பற்றியும், இனி செய்யப்போகிற காரியங்களைப்பற்றியும், நமக்குத்தெரிந்தவர்களுக்கு அறிவிக்கிறோம், அல்லது நம்மிலும் உயர்ந்தவர்களிடமிருந்து நன்மைகளை வேண்டிக்கொள்ளுகிறோம். அல்லது நமக்குக் கீழ்ப்பட்டவர்களுக்குக் கட்டளை கொடுக்கிறோம். முன்னோர்களும் இப்படியே நிருபங்களை எழுதினார்கள். திருஷ்டாந்தம்: 2 சாமு $11^{14}$ 1 இரா $21^{8}$ 2 இரா $5^{5}$ $19^{14}$ எரே $29^{1}$ எஸ்று $4^{7}$ நெகே $2^{7}$ அப் $9^{2}$ $22^{5}$ $23^{25}$ $28^{21}$ 2 கொரி $10^{10}$ 2 தெச $2^{2}$. புதிய ஏற்பாட்டிலே பரி. பவுல் எழுதின பதின்மூன்று நிருபங்களும், யாக்கோபு எழுதின ஒரு நிருபமும், பேதுரு எழுதின இரண்டு நிருபங்களும், யோவான் எழுதின மூன்று நிருபங்களும், யூதா எழுதின ஒரு நிருபமும், எபிரெயர்களுக்கு எழுதப்பட்ட ஒரு நிருபமுமாக, இருபத்தொரு புஸ்தகங்களுக்கு 'நிருபம்' என்னும் பெயர் வழக்கமாய்க் கூறப்படும். இவைகளில் வேத சாஸ்திரத்துக்குரிய பல விஷயங்களைப்பற்றிய அநேக காரியங்கள் விபரிக்கப்பட்டிருந்தும், இந்த நூல்கள் இயேசுகிறிஸ்துவின் மேல் பயபக்தி நிறைந்த சிலர் மற்ற கிறிஸ்தவர்களுக்கு அனுப்பின கடிதங்களேயல்லாமல் இவைகள் வேதசாஸ்திர கிரந்தங்கள் அல்லது தத்துவ சாஸ்திர பிரபந்தங்கள் அல்ல என்பதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**நிர்ணயிக்கிறது.** To appoint. 2 நாளா $2^{1}$ ஏசா $19^{17}$ அப் $2^{23}$ ரோம $14^{1}$.

**நிர்த்தூளி.** Destruction. சங் $90^{3}$.

**நிர்ப்பந்தம்.** Affliction. யோபு $6^{2}$ ரோம $7^{24}$ துக்கம், துன்பம் காண்க.

**நிர்ப்பாக்கியம்.** Wretched. வெளி $3^{17}$.

**நிர்மூடர்.** Fools. யோபு $5^{2.3}$ சங் $107^{17}$ நீதி $9^{13}$ ஏசா $44^{25}$.

**நிர்மூலமான பட்டணம்.** Ir-ha-heres. ஏசாயா தீர்க்கதரிசி 'நிர்மூலமான பட்டணம்' என்பதினாலே எகிப்துதேசத்தில் யூதர்கள் குடியேறும் ஐந்து பட்டணங்களில் ஒன்றைக் குறிக்கலாம். இந்தப் பட்டணத்தில் யூதர்கள் தங்கள் தாய்ப்பாஷையைப் பேசி யேகோவாவை வணங்குவார்கள் என்று கூறுகிறான். இந்தப் பெயரினாலே இவன் ஆவேன் என்னும் ஊரைக் குறிப்பித்து, அந்த ஊரில் விசேஷமாய் வழங்கின சூரிய ஆராதனை யேகோவாவினுடைய உண்மையினாலே ஜெயிக்கப்பட்டு நிர்மூலமாகும் என்று தெரிவிக்கிறான் என வேதசாஸ்திரிகள் பொதுவாய் நினைக்கிறார்கள். கி—மு. 175—ஞ் ஆவேன் இருக்கிற நாட்டில் யூதர்கள் அநேகர் இருந்தார்கள் என்பதும் அவர்கள் தங்களுக்காக அந்த நாட்டிலே ஒரு ஆலயத்தைக் கட்டினார்கள் என்பதும், அவ்வாலயத்தைக் கட்டினவர்கள் தங்கள் செய்கைக்கு

இந்த வாக்கியத்தை ஆதாரமாகக் காட்டினார்கள் என்பதும் தெரிந்த விஷயமே.

**நிர்மூலம்.** Utter destruction. உபா $4^{26}$ 2 இரா $23^{14}$ ஏசா $48^{19}$ புல $2^{17}$ 2 கொரி $10^{8}$.

**நிர்வாணி.** Naked. ஆதி $2^{25}$ யோபு $1^{21}$ புல $5^{15}$ எசே $16^{7}$ ஓசி $2^{3}$ மாற் $14^{52}$ எபி $4^{13}$ அப் $19^{16}$ 1 கொரி $4^{11}$ வெளி $3^{17}$ $16^{15}$ $17^{16}$.

**நிலம்.** Ground. ஆதி $2^{5.19}$ $4^{2}$ மத் $13^{8}$ லூக் $8^{8}$ யோவா $4^{5}$ $12^{24}$.

**நிலைக்கிறது.** Abide. யோவா $8^{35}$ $15^{4.6.7}$ 1 கொரி $3^{14}$ $7^{20}$ 1 யோவா $2^{6.17}$.

**நிலைமை.** Estate, State. பிர $3^{18}$ ஏசா $22^{19}$ 1 கொரி $7^{20}$.

**நிவாரணம்.** Expiation. பாவ நிவாரணம் காண்க.

**நிழல்.** Shade, shadow.

1. சாயை. நியா $9^{15.36}$ அப் $5^{15}$ 2 இரா $20^{9}$ 1 நாளா $29^{15}$ யோபு $8^{9}$ $14^{2}$ $17^{7}$ சங் $102^{11}$ $144^{4}$ உன். பா $4^{6}$ ஏசா $32^{2}$.

2. அடைக்கலம். யோபு $7^{2}$ சங் $17^{9}$ $57^{1}$ $121^{5}$ ஏசா $25^{4}$ $30^{3}$ $49^{2}$.

3. பழைய ஏற்பாடு புதிய ஏற்பாட்டுக்கு ஒரு குறிப்பாயிருந்தபடியினாலே நியாயப்பிரமாணம் வரப்போகிற நன்மைகளின் நிழல் என்னப்படுகிறது. எபி $8^{5}$ $10^{1}$.

**நிறுக்கிறது.** To weigh.

1. வஸ்துக்களின் பாரத்தை அறிகிறது. ஆதி $23^{16}$ யாத் $22^{17}$ எஸ்ரா $8^{37}$ எரே $32^{10}$.

2. காரியங்களைப் பகுத்தறிவது. யோபு $31^{6}$ சங் $58^{2}$ நீதி $16^{2}$ தானி $5^{27}$.

**நிறைசல்.** Weight. லேவி $19^{36}$ உபா $25^{13}$ நீதி $11^{1}$ $16^{11}$ $20^{10.23}$ மீகா $6^{11}$. அளவு (பக். 38) பணம் காண்க.

**நிறைகிறது.** 'Full' மத் $23^{28}$ ரோம $3^{14}$ அப் $6^{5}$ யோபு $14^{1}$ எசே $9^{9}$.

**நிறைவு.** Fulness. உபா $33^{16}$ சங் $24^{1}$ $96^{11}$ நீதி $28^{20}$ ரோம $11^{12.25}$ 1 கொரி $10^{26}$ கலா $4^{4}$ எபே $1^{23}$. பரிபூரணம் காண்க.

**நிறைவேறுகிறது.** To be fulfilled. மத் $5^{18}$ $1^{22}$ $2^{15}$ $2^{18.23}$ $8^{17}$ $12^{17}$ $13^{35}$ $21^{4}$ $26^{56}$ $27^{35}$ மாற் $1^{15}$ லூக் $1^{57}$ யோவா $12^{38}$ $13^{18}$ $19^{28}$ எபே $1^{9}$.

**நிறைவேற்றுகிறது.** To fulfil. ஆதி $29^{27}$ சங் $20^{5}$ மத் $3^{15}$ ரோம $13^{8.10}$ அப் $13^{29}$ யாக் $2^{8}$.

**நிற்கிறது.** Stand. தேவ ஊழியஞ் செய்கிறது. உபா $10^{8}$ 1 சாமு $6^{20}$ சங் $106^{23}$ $135^{2}$.

கடவுளுக்குமுன் நிற்பது. ஆதி $18^{22}$ உபா $4^{10}$ 1 இரா 17.

உறுதியாய் இருப்பது. சங் $33^{11}$ ஏசா $40^{8}$ தானி $2^{44}$ 1 கொரி $10^{12}$ எபே $6^{13.14}$ 1 பேது $5^{12}$ ரோம $5^{2}$ 2 தீமோ $2^{19}$.

**நினிவே.** Nineveh. ஆதிகாலமுதல் அசீரியாதேசத்தில் ஓர் விசேஷித்த நகரமாய் இருந்த இப்பட்டணத்துக்கு நிம்ரோத் ராஜா அஸ்திபாரம் போட்டான் என்பது பாரம்பரியம். பாபிலோனிய ராஜாவாகிய கம்முராபி இதைத் தன் ராஜ்யத்தில் சேர்த்து இதில் சந்திரதேவிக்கு ஒரு ஆலயத்தைக் கட்டினான். அசீரியர்கள் பிந்தின காலங்களில் தங்கள் ராஜ்யத்தை நடத்தும்பொழுது, சனகெரீப் ராஜா இப்பட்டணத்தைத் தன் ராஜ்யத்துக்குத் தலைநகரி ஆக்கினான். இது திகிரிஸ் நதியோரத்தில் இருக்கிறது. கி—மு. 606-ல் இதற்கு வந்த அழிவைப்பற்றி நாகூமும் செப்பனியாவும் சொல்லுகிறார்கள். இப்பொழுது இது இருந்த ஸ்தலமெல்லாம் பாழாய்க் கிடக்கிறது. ஆதி $10^{11}$ 2 இரா $19^{36}$ யோனா $1^{2}$ ழ நாகூம் $1^{1}$ $2^{8}$ செப் $2^{13}$ மத் $12^{41}$ லூக் $11^{30}$. தற்காலத்தில் சாஸ்திரிகளில் சிலர் நினிவே இருந்த ஸ்தலத்தைத் தோண்டி களிமண் பலகைகளின்மேல் எழுதப்பட்ட அவர்களுடைய நூல்களைக் கண்டுபிடித்து அவற்றை ஆராய்ச்சிசெய்து, அவர்களுடைய ராஜ்யத்தின் சரித்திரத்தைப்பற்றி அநேக விநோதமான காரியங்களை நமக்குத் தெரிவித்திருக்கிறார்கள். அசீரியா ராஜாக்கள் காண்க.



நினிவே பட்டணத்தார் வணங்கின ஒரு தேவன்.

**நினைக்கிறது, நினைவுகூருகிறது.** To think, to remember.

1. கடந்துபோனதை நினைக்கிறது. உபா $15^{15}$ $24^{9}$ 1 நாளா $16^{13}$ சங் $137^{1}$ பிர $9^{15}$.

2. சிந்திக்கிறது. யாத் $20^{8}$ உபா $8^{18}$ சங் $63^{6}$ $74^{22}$ $119^{52}$ பிர $12^{1}$.

3. மறவாமலிருக்கிறது. எசே $16^{63}$ சங் $25^{6}$ $89^{50}$ லூக் $23^{42}$ $22^{19}$.

**நினைவு.** Thought.

1. ஆலோசனை. சங் $33^{11}$ நீதி $12^{5}$ எபி $4^{12}$.

2. நோக்கம். உபா $15^{9}$ எரே $23^{20}$.

## நீ.

**நீகர்.** Niger. [கறுப்பன்.] அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபையைச்சேர்ந்த சிமியோன் என்னும் தீர்க்கதரிசியினுடைய மறுபெயர். சிலர் இவன் கிறிஸ்துவினுடைய சிலுவையைக்கூடச் சுமந்தவனென்றும், வேறுசிலர் இவன் எழுபது சீஷர்களில் ஒருவனென்றும் சொல்லுகிறார்கள். அப் $13^{1}$.

**நீசர்.** R. V. Fools, Base men. யோபு $30^{8}$ எரே $5^{4}$ மல் $2^{9}$. தரித்திரம் காண்க.

**நீடித்த நாட்கள்.** Long life. நீதி $3^{2}$.

**நீட்டுகிறது.** Stretch. தேவன் தம்முடைய கையை நீட்டினார் என்பது, அவருடைய வல்லமையைக் காண்பிப்பதைக் குறிக்கும். யாத் $7^{5}$ 2 இரா $21^{13}$ ஏசா $23^{11}$ அப் $4^{30}$. பாவிகள் இரட்சிக்கப்படும்படி கை நீட்டி அவர்களை அழைக்கிறார். நீதி $1^{24}$. மனிதன் தன் கையை நீட்டினான் என்பது விரோதத்தைக் குறிக்கும். யோபு $15^{25}$ லூக் $22^{53}$. கை நீட்டுகிறது என்பது விண்ணப்பம் பண்ணுகிறதைக் குறிக்கும். யோபு $11^{13}$ சங் $88^{9}$ $143^{6}$.

**நீதி.** Righteousness.

1. பதம்.

வேதாகமத்தில் ஏறக்குறைய ஐந்நூறு வசனங்களில் நீதியைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. இந்த வசனங்களில் சொன்ன எபிரெயபதமாகிய 'த்சொடெக்' என்பதற்கு 'நேர்மை' என்பது மூல அர்த்தம்.

2. வழக்கச்சொல்.

எபிரெயர்கள் பூர்வீககாலத்திலிருந்தே நீதியைப்பற்றி அதிக ஆவலுள்ளவர்களாய் இருந்தார்கள். வேதாகமத்தில் இதற்குப் பல திருஷ்டாந்தங்கள் உண்டு. நியாய விசாரணையிலே நீதியைத் தேடவேண்டும். உபா $25^{1}$ ஏசா $5^{23}$. நியாயாதிபதிகள் நீதியின்படி நியாயத்தீர்ப்புச் செய்யவேண்டும். உபா $16^{18}$. வருகிற மேசியா நீதியைச் செய்வார். ஏசா $11^{4}$ $16^{15}$. நியாயஸ்தலம் நீதிசெய்யும் இடம். பிர $3^{16}$. பரிசுத்தமாக்கப்பட்ட எருசலேமுக்கு நீதிபுரம் என்று பெயர். ஏசா $1^{26}$. பரிதானம் வாங்கும் நியாயாதிபதிகள் நீதியைக் கெடுக்கிறார்கள். ஆமோ $2^{6}$ $5^{7}$ ஏசா $5^{23}$. நீதியின் உத்தம தன்மை. நீதி $16^{8}$. சுமுத்திரையான தராசு முதலியவைகள் நீதியுள்ளவைகள். லேவி $19^{36}$ மீகா $6^{11}$. நீதியுள்ள உதடுகள் உண்மைப்பேச்சைக் குறிக்கிறது. நீதி $16^{3}$.

3. சன்மார்க்கத்தில்.

சன்மார்க்கத்தைக் குறித்துச் சொன்ன விஷயங்களில் நீதியைப்பற்றி அதிகமாய்க் கூறியிருக்கிறது. கடவுள் நீதியுள்ளவர் என்று முதல் முதல் அறியவந்தவர்கள் எபிரெயர்கள்தான். நீதியாவது தேவனுடைய சித்தத்தின்படி நேர்மையாய் இருக்கிறது. அதாவது நீதி தேவனுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறது. எசே 18 அதி. 33 அதி. மோசேயின் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்படிதல் நீதி. உபா $6^{25}$. உத்தமனுடைய குணம் நீதி. சங் 1. கடவுளுக்காக வைராக்கியம்கொண்டு, செய்த கிரியை நீதி. சங் $11^{7}$ $106^{31}$.

இஸ்ரவேல் ஜனம் நீதியை நாடவேண்டும். சங் $14^{5}$ $97^{11}$ $118^{20}$ ஏசா $41^{8-11}$ $51^{1}$. நீதி என்பது கடவுளுடைய உத்தம தன்மை. உபா $32^{4}$ எரே $12^{1}$.

அவருடைய சிம்மாசனம் நீதி. சங் $89^{14}$.

அவருடைய வழி எல்லாம் நீதியுள்ளது. சங் $145^{17}$.

இஸ்ரவேல் ஜனம் செய்யும் பாவத்திற்கு யேகோவா தண்டனை செய்கையில் தமது நீதியைக் காட்டுவார். ஏசா $1^{27}$ $5^{16}$ $10^{22}$.

இஸ்ரவேலை அநியாயம் செய்கிறவர்களுக்குக் கடவுள் தண்டனைசெய்து தமது நீதியைக் காண்பிப்பார் என்னும் எண்ணம் பிந்தின ஆகமங்களில் தோன்றுகிறது. சங் $10^{98}$.

ஏசா 40—66 அதிகாரங்களில் பல வசனங்களிலே நீதி என்பது நீதிமானுக்குகிறதை அல்லது மீட்பைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. ஏசா $45^{8}$ $46^{13}$ $51^{5}$ $58^{8}$ $59^{9}$ $61^{11}$ $62^{1}$. சங்கீத புஸ்தகத்தில் இப்பதம் இந்த அர்த்தத்துடனே சொல்லப்பட்டிருக்கிறது. சங் $22^{31}$ $24^{5}$.

'நீதியின் சூரியன்'. மல் $4^{2}$.

புதிய ஏற்பாட்டிலே நீதி என்பது கடவுளுடைய சித்தத்துக்கு இணங்குவதையும் அதின்படி செய்வதையும் குறிக்கிறது. ஆனால் இயேசுகிறிஸ்து அருளின மலைப்பிரசங்கத்திலும் அப்போஸ்தலர் எழுதின நிருபங்களிலும் கிறிஸ்துவின் சீஷர்கள் அடைய வேண்டிய நீதி ஆவிக்குரியவிதமான நீதி என்று போதிக்கப்பட்டிருக்கிறது. மத் $3^{15}$

5[6] 5[30] 6[33] 9[13] *ரோம* 1[17] 5[7] 9[30] 10[4] *பிலி* 1[11] 1 *தீமோ* 6[11] *எபி* 11[33] 1 *யோவா* 2[29].

**நீதிநூல்கள்.** The books of wisdom. பழைய ஏற்பாட்டில் நீதிமொழி, யோபு, உன்னதப்பாட்டு, பிரசங்கி என்னும் நாலு புஸ்தகங்களும் தள்ளுபடியாகமத்தில் சிராக்கூவின் மகனாகிய இயேசுவின் நீதி, சாலொமோனின் நீதி என்னும் இரண்டு புஸ்தகங்களுமாக இவ்வாறு புஸ்தகங்களுமே யூதர்கள் வழங்கிவந்த நீதிநூல்கள். பழைய ஏற்பாட்டிலுள்ள நாலு நீதிநூல்களைக்குறித்து விபரமாய் அறியவேண்டுமானால் ஞானம், நீதிமொழி, யோபு, உன்னதப்பாட்டு, பிரசங்கி காண்க. தள்ளுபடியாகமத்தில் கண்ட இரண்டு நீதிநூல்களைப்பற்றி இங்கே கூறுவோம்.

I. **சீராகுவின் ஞானம்.** The Wisdom of Sirach. சீராகுவின் மகனாகிய இயேசுவின் ஞானம். *The Wisdom of Jesus the son of Sirach* எக்லெசியாஸ்டிக்கஸ் *Ecclesiasticus.*

i. பெயர். 'நீதிமொழி' 'சாலொமோனுடைய ஞானம்' முதலிய நீதிநூல்களைப்போல இதுவும் ஒரு நீதிசாஸ்திரம். இதற்குச் சாதாரணமாய்ச் 'சீராகுவின் ஞானம்' என்னும் பெயர் வழங்கிவந்தது. திருச்சபையிலே இந்த நூல் அதிகமாய் வாசிக்கப்பட்டு வந்ததினால் 'சபைக்குரியது' என்று அருத்தங்கொண்ட 'எக்லெசியாஸ்டிக்கஸ்' என்னும் லத்தீன்பெயர் இதற்கு இடப்பட்டது. இந்த லத்தீன்பதம் கிரேக்கபாஷையிலும் வழங்கிவந்ததினாலே வேதசாஸ்திரிகளில் அநேகர் இந்த நூலைப்பற்றிப் பேசும்போது 'எக்லெசியாஸ்டிக்கஸ்' என்னும் பதத்தையே உபயோகிப்பார்கள். இந்த நூலின் முகவுரையில் கண்டபடி, இதை இயற்றியவன் 'சீராகுவின் மகனாகிய இயேசு' ஆனதினாலே சிலர் இதற்கு 'சீராகுவின் மகனாகிய இயேசுவின் நீதிநூல்' என்று பெயர் வழங்கி வந்தார்கள்.

ii. **ஆக்கியோன்.** இந்நூலின் முகவுரையை எழுதினவன் இதன் ஆக்கியோன் தன் பாட்டனாகிய இயேசு என்றும், அவன் நியாயசாஸ்திரத்தையும் தீர்க்கதரிசன ஆகமங்களையும் ஆராய்ந்து பார்த்து, ஜனங்களுக்குப் புத்திபோதனை கொடுக்கும்படியாகவும் சன்மார்க்கத்தை விருத்திசெய்யும்படியாகவும் இந்த நூலை எழுதினான் என்றும் சொல்லுகிறான். இந்தப் புஸ்தகத்தின் தலைப்பின்படி இந்த இயேசு என்பவன் சீராகு என்பவனுடைய மகன். இந்த இயேசு என்பவனும் இந்தச் சீராகு என்பவனும் இன்னார் என்று நமக்குத் தெரியாததினாலே, இவ்விரண்டு நாமங்களையல்லாமல் இந்த நூலின் ஆசிரியரைப்பற்றி நாம் வேறொன்றும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. 50[27]—ல் இந்நூலாசிரியன் தான் 'எருசலேமில் வசித்த எலெயாசார் ஆகிய சீராகுவின் மகனாகிய இயேசு என்று தனது பெயரை விபரமாய்ச் சொல்லுகிறான். ஆனால் இதினால் இவனுடைய நிலைமையையும், இவன் இருந்த காலத்தையும்பற்றி நாம் ஒன்றுந் தெரிந்துகொள்ள முடியாது. வேதசாஸ்திரிகளில் சிலர் எபிரெய, கிரேக்க அரமேய பாஷைகளிலுள்ள கையெழுத்துப் பிரதிகள் பலவற்றை ஆராய்ச்சிசெய்து பின்வருமாறு இவர்களுடைய வம்ச அட்டவணை வரைகிறார்கள்:—

1. இந்த நூலைக் கிரேக்கபாஷையில் மொழிபெயர்த்த இயேசு.

2. இவனுடைய தகப்பனாகிய சீராகு.

3. இந்நூல் மொழிபெயர்த்தவனுடைய பாட்டனாகிய இயேசு.

4. இயேசுவின் தகப்பனும் எலெயாசார் என்று மறுநாமங்கொண்டவனுமாகிய சீராகு.

iii. பாஷை.

1896—ம் வருஷம்மட்டும் சீராகுவின் ஞானம் கிரேக்க பாஷையில் முதல் முதல் எழுதப்பட்டது என்று வேதசாஸ்திரிகள் நம்பி வந்தார்கள். சில வித்துவான்கள் எபிரெய பாஷையில் எழுதப்பட்டு அந்தக் காலம்வரையில் தெரியாத சில கையெழுத்துப் பிரதிகளை அந்த வருஷம்முதல் விசாரித்து இப்புஸ்தகத்திலுள்ள 51 அதிகாரங்களில் 39 அதிகாரங்களை இதுவரையும் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதுமட்டும் ஆராய்ச்சி செய்யப்படாத சில எபிரெய கைப்பிரதிகளில் மீதியான அதிகாரங்கள் கிடைக்கும் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. இதினிமித்தம் இதன் மூலபாஷை எபிரெய பாஷைதான் என்று சந்தேகமின்றிச் சொல்லத் துணிவோம். அந்தக்காலத்தில் எபிரெய பாஷை பேசின யூதர்கள் சிலர் ஆனதினாலும், அவர்களில் அநேகருக்குச் சாதாரண பாஷை கிரேக்க பாஷையாகையினாலும், சீக்கிரத்தில் இந்த நூல் எபிரெய பாஷையிலிருந்து கிரேக்க பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டது என்று நினைக்கலாம். மேலும் எபிரெய பாஷை பேசுகிற யூதர்களுக்குத் தங்கள் பாஷையில் இந்த நூலைக்கொண்ட கைப்பிரதிகள் சொற்பமாயிருந்ததினால் கிரேக்க பாஷையில்மாத்திரம் இதை வாசித்தவர்

கள் இதன் மூலபாஷை கிரேக்க பாஷை தான் என்று அபிப்பிராயம்கொண்டு வந்தார்கள்.

iv. காலம்.

வேதசாஸ்திரிகள் நினைக்கிறபடி சீராகுவின் மகனாகிய இயேசு என்னும் ஒரு சாஸ்திரி கிறிஸ்துவுக்குமுன் மூன்றாம் நூற்றாண்டில் மூலபாஷையாகிய எபிரெய பாஷையில் இதை இயற்றினான். இவனுடைய பேரன் ஏறக்குறைய கி—மு. 132—ஆம் இதைக் கிரேக்க பாஷையில் மொழிபெயர்த்தான்.

v. பொருள்.

இப்புஸ்தகத்தில் அடங்கிய பொருளைச் சுருக்கிச் சொல்லுதல் கூடாதகாரியம். ஏனென்றால் இந்நூலாசிரியன் இதை எழுதும்போது யாதாமொரு வரிசைக்கிரமத்தை அனுசரியாமல் பற்பல விஷயங்களைத் தன் மனதில் தோன்றியபடியே இங்கும் அங்குமாக எழுதிவைத்தான் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இந்த விஷயத்திலும் இன்னும் பல விஷயங்களிலும் நீதிமொழி என்னும் புஸ்தகத்துக்கும் இதற்கும் ஒற்றுமை உண்டு. இந்நூலிலே ஞானியாகிய ஒருவன் எபிரெயர்களுக்குத் தெரிந்த ஞானத்தின்படி தன் மனதில் உண்டான அபிப்பிராயங்களைச் சொல்லுகிறான் (ஞானம் காண்க). கடவுளைப்பற்றி இவன் பேசும்போது யூதமார்க்கத்தில் அதிக பக்தி உள்ளவனானாலும் கிரேக்க தத்வ சாஸ்திரத்தில் இவன் அதிக தேர்ச்சியுடையவன் என்பதைக் காண்கிறோம். $18^{10}$ $42^{21}$ $43^{27}$. இவ்வசனங்களில் கடவுள் சர்வேஸ்வரன், நியாயாதிபதி, பக்தியுள்ள பரமராஜா, கருணைகரன் என்று சொல்லுகிறான். வேறு சில வசனங்களை நாம் பார்த்தால் இந்நூலாசிரியன் சதுசேய சமயக்கொள்கைக்கு இசைந்தவனாய்த் தோன்றுகிறான். சதுசேயர் காண்க. இந்த நூலிலே தேவதூதர்களையும் சரீர உயிர்த்தெழுதல் நித்தியஜீவன் என்பவைகளையும்பற்றி ஒன்றும் பேசவில்லை. மரணத்துக்குப் பின்பு மரித்தோருடைய நிலைமையைப்பற்றி சங்கீதம் பாடினவர்கள் என்ன நினைத்தார்களோ அப்படியே இந்நூலாசிரியனும் நினைக்கிறான். ஆதேஸ் காண்க. இந்நூலிலுள்ள 51 அதிகாரங்களில் சன்மார்க்கத்தையும் நல் நடக்கையையும்பற்றிப் பற்பல புத்திபோதனை புகட்டுவதுதான் இவனது முக்கிய நோக்கம். இவ்விதமாய் 'தாழ்மையுள்ளவன் செய்யும் ஜெபம் மேகமண்டலங்களை ஊடறுத்துச் செல்லும்' 'கழுதைக்குத் தீனியும் தடியும் பாரமும்; வேலைக்காரனுக்கு ஆகாரமும் சிக்ஷையும் ஊழியமும்;' 'திராட்சரசம் பலரை அழித்துப்போட்டிருக்கிறது' 'மட்டான சாப்பாட்டால் நல் நித்திரை உண்டாகும்; 'தன் மகனைச் சிக்ஷைசெய்கிறவனுக்கு அவனால் லாபம் உண்டாம்;' 'கசப்பான ஜீவனைப்பார்க்கிலும் மரணம் நல்லது,' என்னும் பல வசனங்களை இங்கே காண்கிறோம். சில வசனங்களிலே இவன் பெண்களைக் கண்டித்தும், வைத்தியம், வியாபாரம் பணம் தர்மம் இரக்கம் இவைகளை விசேஷமாய்ச் சிறப்பித்தும் பேசுகிறான்.

vi. இதின் மேன்மை.

இந்நீதிநூலை இயற்றிய காலமுதல் இதுவரையும் இதன் மேன்மை அதிகரித்து வந்திருக்கிறது. முன்கூறியபடி வெகுசீக்கிரம் இது கிரேக்க பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டது. கிறிஸ்தவ திருச்சபை உண்டானதுமுதல் கிறிஸ்தவர்கள் அதிப்பிரியத்தோடு இந்நூலை வாசித்துவந்தார்கள். போலிக்கார்ப்பு, தெர்த்துல்லியன் முதலிய திருச்சபைப் பிதாக்கள் தாங்கள் எழுதிய நூல்களில் இப்புத்தகத்திலிருந்து பல வசனங்களை மேற்கோளாக எடுத்து எழுதியிருக்கிறார்கள். தள்ளுபடியாகமத்திலுள்ள சகல புஸ்தகங்களிலும் இதுதான் சிறந்தது.

II. சாலொமோனுடைய ஞானம். The Wisdom of Solomon, the Book of Wisdom.

i. பெயர்.

யூதர்களுடைய அபிப்பிராயத்தின்படி தாவீதுராஜா எப்படி சங்கீதக்காரருக்குள்ளே சிரேஷ்டமானவனாயிருந்தானோ அப்படியே சாலொமோன் ராஜா ஞானிகளுக்குள்ளே சிரேஷ்டமானவன். 1 இரா $3^{7}$ சீரா $47^{12}$ பிர $1^{12}$. ஒரு நூலாசிரியன் ஒரு நூலை இயற்றும்போது தான் சொல்லுகிற விஷயங்களைத் தாவீதாவது சாலொமோனாவது சொல்லியிருக்கலாம் என்று எண்ணினால் அவர்களே அந்த நூல்களை இயற்றியதாக கூறுவது அக்காலத்து வழக்கத்தின்படி குற்றமில்லை. இட்படியாகத்தான் பிரசங்கி என்னும் புஸ்தகத்துக்கும் சாலொமோனின் நீதி என்னும் புஸ்தகத்துக்கும் சாலொமோன் இராஜாவே ஆசிரியன் என்று சொல்லுவார்கள். இந்த இரண்டு நூல்களையும் நாம் ஆராய்ந்து பார்க்கும்போது சாலொமோன் ராஜா இவைகளை எழுதவில்லை என்று அறிவோம். சாலொமோன் பிரசங்கி என்னும் புஸ்தகத்தை எழுதவில்லை என்பதற்குக் காரணம் காணவேண்டுமானால் பிரசங்கி காண்க. சாலொமோனுடைய ஞானம் கிரேக்க

பாஷையில் எழுதப்பட்டதினாலே, அந்த பாஷையை அறியாத சாலொமோன் ராஜா அதற்கு ஆசிரியனாயிருப்பது கூடாதகாரியம். மேலும் பிரசங்கி என்னும் புஸ்தகத்தின் ஆசிரியன் தான் இயற்றிய புஸ்தகத்திலே சாலொமோன் ராஜா பல விஷயங்களைக் குறித்துச் சந்தேகங்கொள்ளுவதாகக் காட்டியிருக்க, சாலொமோனின் நீதி என்னும் புஸ்தகத்தை இயற்றியவன், அதற்கு விரோதமான கோட்பாட்டை யுடையவனாய், தான் எழுதின புஸ்தகத்திலே சாலொமோன் பூரண நம்பிக்கையும் பக்தியும் உடையவன் என்று காட்டி, தனது புஸ்தகத்துக்குச் சாலொமோன் ராஜாவை ஆசிரியனாகப் பாவித்து, அதற்குச் சாலொமோனின் நீதி என்று பெயரிட்டான் என்பது வேதசாஸ்திரிகளின் பொது அபிப்பிராயம்.

ii. பாஷை, காலம், ஆக்கியோன்.

கிரேக்கர்களுடைய கல்வி தத்துவசாஸ்திரம் முதலிய பல விஷயங்களை ஆராய்ந்து கிரேக்க பாஷையிலே தேர்ச்சியடைந்து அலெக்சந்திரியா பட்டணத்தில் வசித்த ஒரு யூதன் இந்தப் புஸ்தகத்துக்கு ஆக்கியோன் என்பதும், அவன் கிறிஸ்துவின் பிறப்புக்கு ஏறக்குறைய 100 வருஷத்துக்குமுன் இதை எழுதினான் என்பதும் வேதசாஸ்திரிகளுடைய அபிப்பிராயம். அவன் இப்புஸ்தகத்தை கிரேக்கபாஷையில் எழுதினான்

iii. தன்மை.

இது 19 அதிகாரங்கள் அடங்கிய ஒரு நீண்ட புஸ்தகம். இப்புஸ்தகத்தின் ஆசிரியன் கிரேக்க ஞானம் கல்வி தத்வசாஸ்திரம் முதலியவைகளை நன்றாய் ஆராய்ந்தறிந்திருந்தும், யூதகொள்கைகளையும் ஆசாரங்களையும் மாற்ற விரும்பாமல் அவைகளை வெகு ஜாக்கிரதையாய் அனுசரித்து வந்ததுமன்றி தம் நூலை வாசிக்கிறவர்களும் அவ்வண்ணமே செய்யும்படி போதிக்கிறான். விக்கிரகாராதனைக்காரரை முற்றிலும் வெறுத்துவந்தது மல்லாமல், யூதமார்க்கத்தை விட்டு கிரேக்க தத்வ சாஸ்திரங்களைக் கைக்கொண்டு அவநம்பிக்கைக்கும் துன்மார்க்கத்துக்கும் இடம் கொடுத்த யூதர்களைக் கண்டிக்கிறான். அவர்களிடத்துள்ள குற்றங்களை விலக்கும்படி பல வித முயற்சி செய்கிறான். $1^{16}$–$2^{24}$ $13^{10}$–$14^{31}$.

iv. நோக்கம்.

இந்த நூல் எழுதப்பட்டகாலத்தில் யூதமார்க்கத்தில் பல குறைவுகள் இருந்தன. யூதர்களில் அநேகர் தங்கள் மார்க்கத்தின்படி நடக்கவில்லை. அவர்களுக்குள்ளே பல கட்சிகள் இருந்தன. அநேகர் கிரேக்க தத்வ சாஸ்திரத்தின்மேல் பிரீதிகொண்டு யேகோவாவின் வணக்கத்தின்மேல் பக்திக் குறைவுள்ளவர்களானார்கள். $2^{1}$ $2^{10}$ $3^{10}$ $4^{14}$ $5^{8}$. கிரேக்க தத்வ சாஸ்திரத்திலே ஞானத்தைத் தேடுகின்ற இவர்களுக்கு யூதமார்க்கத்தின் மெய்ஞ்ஞானத்தை அறிவிக்கும் பொருட்டுத்தான், இந்நூலாசிரியன் இப்புத்தகத்தை இயற்றினான். இவன் கிரேக்க தத்வசாஸ்திரம் பொய்யென்று சொல்லாமல் அதிற் சொன்ன உண்மையனைத்தையும் பற்றிக் கொண்டு பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட ஞானம் எல்லாவற்றையும் திரட்டி அந்த ஞானம் கடவுளுடையது என்றும், அது கடவுளுடைய தன்மையுள்ளது என்றும், அது கடவுள்பக்கத்து சுயதன்மையுடையது என்றும் சொல்லுகிறான். ஞானமானது இவ்வுலகத்தில் பிரவேசித்து கடவுளுக்காகப் பல விஷயங்களைச் செய்து யாவற்றையும் நடமாடச்செய்கிற அவரது வல்லமையாக பல வசனங்களில் கூறப்படுகிறது. இதைக்குறித்துக் கூறும்போதெல்லாம் அதைப் பெண்பாலாகப் பாவித்துக் கூறுகிறான். ஞானம் கடவுளிலிருந்து தோன்றியவள். பரிசுத்தமுள்ளவள். சர்வத்திலும் வியாபகமுள்ளவள். மனுஷருக்குச் சர்வ கல்வியும் கற்பித்தவள். வேதசாஸ்திரத்தைத் தெரிவிக்கிறவள். சர்வ சன்மார்க்கத்திலும் மனுஷர்களுக்குப் புத்திபோதனைகளைக் கொடுக்கிறவள். $7^{22}$ $7^{25}$ $8^{3}$ $8^{6}$ $8^{8}$ $8^{9}$ $9^{4}$ $9^{17}$ $10^{1}$. தமிழ் வேதாகமத்தில் இது விளங்காவிட்டாலும், அங்கிலேய வேதாகமத்தில் இதை வாசிக்கிறவர்கள் நீதிமொழியாகமத்தை இயற்றினவன் இந்தக் கருத்தோடு ஞானம் என்பவளைக் குறித்துப் பேசுகிறதைக் காணலாம்.

v. பொருள்.

($a$) 1–5 அதி. மெய்ஞ்ஞானத்துக்கும் இவ்வுலகத்திலுள்ள தேவனுக்கு விரோதமான பொய் ஞானத்துக்கும் உள்ள போரும் மெய்ஞ்ஞானத்தை யடைந்தவர்களுடைய ஜெயமும்.

$1^{1-16}$. நியாயாதிபதிகளுக்கும் பெரியோர்களுக்கும் புத்திபோதனை.

$2^{1-5}$. ஞானம் அற்றவர்களுடைய அஜாக்கிரதை.

$2^{6-9}$. அவர்கள் தேடின சிற்றின்பம்.

$2^{10-20}$. நீதிமான்களுக்கு அவர்கள் செய்த துன்பம்.

$2^{21}$ – $5^{23}$. மெய்ஞ்ஞானமில்லாதவர்களுடைய நிர்ப்பந்தமான நிலைமையும், அவர்களுக்கு வரும் நியாயத்தீர்ப்பும், அவர்கள்

செய்த குற்றங்களும், நீதிமான்களுடைய நல் நிலைமையும் அவர்கள் பட்ட துன்பங்களினால் அவர்கள் அடையவேண்டிய பாக்கியமும்.

(*b*) 6–9 அதி. ஞானத்தின் வெகுமதி.

$6^{1-11}$. விசேஷமாய்ப் பெரியோர்கள் ஞானத்தை அறியும்படி புத்திபோதனை.

$6^{12-25}$. ஞானத்தின் சிரேஷ்டம். பெரியோர்கள் அதை விரும்பவேண்டியது. நூலாசிரியன் அதின் சிரேஷ்டத்துவத்தை விபரிக்க ஆரம்பிக்கிறான்.

$7^{1}$–$8^{1}$. நூலாசிரியன் சாலொமோன் ராஜாவைப்போல ஞானத்தைச் சிறப்பித்து, ஞானத்தின் மகிமையைக் காட்டி ஞானத்தின் மூலமாய்த் தான் அடைந்த நன்மைகளை விபரமாய்ச் சொல்லுகிறான்.

$8^{2-21}$. ஓர் விநோதமான உவமையினால் தான் ஞானத்தை யடைந்தவிதத்தைச் சொல்லுகிறான்.

$9^{1-18}$. அந்த ராஜா ஞானத்துக்காகச் செய்த சிறந்த விண்ணப்பம்.

(*c*) 10–$19^{22}$. இஸ்ரவேலின் சரித்திரத்தில் ஞானம் செய்த அதிசயங்கள்.

$10^{1}$–$11^{1}$. சிருஷ்டிப்புமுதல் இஸ்ரவேலர் சிவந்த சமுத்திரத்தைக் கடந்துபோகும்மட்டும் செய்த அதிசயங்கள்.

$11^{2}$–$12^{27}$. வனாந்தரத்தில் செய்த அதிசயங்கள்.

$13^{1}$–$15^{19}$. ஞானத்தை அறியாதவர்களும், பொய்த்தேவர்களை வணங்குகிறவர்களும் செய்த பொல்லாங்கும், மெய்ஞ்ஞானத்தை அறிந்தவர்களுடைய நிலைமையும்.

$16^{1}$–$19^{22}$. இந்த நீண்டபாகத்தில் நூலாசிரியன் கடவுள் இஸ்ரவேலருக்குச் செய்த சகாயத்தையும், எகிப்தியர்களுக்கு அளித்த தண்டனையையும் காட்டி, எகிப்தியர் நிலைமைக்கும் இஸ்ரவேலருடைய நிலைமைக்குமுள்ள வித்தியாசத்தை விபரித்து, கடவுள் தமது ஜனங்களுக்கு ஈந்த அருளைக் காட்டுகிறான்.

vi. நீதிநூலின் சன்மார்க்கம்.

இந்த நூலாசிரியன் கடவுள் தாம் சிருஷ்டித்த சிருஷ்டியனைத்தையும் நேசித்துக் காப்பாற்றிவருகிறார் என்றும் அவர் மனந்திரும்புதலுக்கேற்ற சமயங்களைப் பொல்லாதவர்களுக்கும் அடிக்கடி கட்டளையிடுகிறார் என்றும், யூதர்களுக்குத் தகப்பனைப்போல சிக்ஷை கொடுக்கிறார் என்றும் அந்நிய ஜனங்களுக்கு அவர் தலைவரைப்போல் தண்டனையளிக்கிறார் என்றும் சொல்லுகிறான். $11^{9}$ $12^{10}$.

மனுஷர்களைப்பற்றி, மனிதர் நித்தியஜீவனுள்ளவர்கள் ($2^{23}$ $6^{19}$ $12^{1}$) என்றும், நீதிமான்கள் அந்த நித்தியஜீவனை அடைவார்கள் ($5^{15}$) என்றும் அந்த நித்தியஜீவனுக்குக் கடவுளை அறிவது மூலாதாரம் ($15^{3}$) என்றும் ஆதேஸ் என்னும் இடத்தில் இறந்துபோன தீயோர் தண்டனையடைவார்கள் என்றும் சொல்லுகிறான்.

பழைய ஏற்பாட்டில் இவ்விதமாய் நித்திய ஜீவனைப்பற்றித் தெளிவான போதனை இல்லாததினாலே இந்நூலில் நாம் பார்த்த போதனையானது புதிய ஏற்பாட்டில் தெளிவாய்க் காட்டப்பட்ட போதனைக்கு உற்பத்தி என்று நாம் சொல்லலாம். இதைப்பற்றி இந்நூலில் சொல்லியிருப்பவைகளை நாம் ஆராய்ச்சி செய்யாவிட்டால், புதிய ஏற்பாட்டுப் போதனையின் உற்பத்தியைப் பூரணமாய் அறிய முடியாது. $2^{23}$ $4^{20}$ $5^{15}$ $6^{19}$ $12^{1}$ $15^{3}$.

இந்த நூலாசிரியன் மேசியாவைப்பற்றியும் கர்த்தருடைய ஊழியனைப்பற்றியும் விபரமாய் ஒன்றும் சொல்லவில்லை. கடவுள் அந்நியர்களின் இராஜ்யம் ஒன்றை ஸ்தாபிப்பார் என்று சொன்னாலும் இவன் மேசியா ஸ்தாபிக்கப்போகிற இராஜ்யத்தைப்பற்றி நினைத்ததாகத் தோன்றவில்லை. $3^{8}$ $5^{16}$ $8^{14}$ $11^{14}$.

vii. இந்த நீதிநூல் பழைய ஏற்பாட்டில் சேர்க்கப்படாவிட்டாலும் பக்தி விஷயத்தில் இதில் குறைவு இருக்கிறதென்று நினைக்கவேதுவில்லை. நீதிமொழி என்னும் புஸ்தகத்தைப்போல இதுவும் அதிக பிரயோஜனமுள்ளது என்றும், உன்னதப்பாட்டு பிரசங்கி என்னும் புஸ்தகங்களைப்பார்க்கிலும் இது அதிக சிறந்தது என்றும் சொல்லத் துணிவோம். தமிழிலே இந்த நூல் கிடைப்பது அரிது. 1728–ம் வருஷத்தில் இந்த நீதிநூல் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டுத் தரங்கம்பாடியில் அச்சிடப்பட்டது.

**நீதிநெறி.** Pathsof uprightness. நீதி $2^{13}$

**நீதீபரர்.** The righteous Lord. நீதியாயிருக்கிற கர்த்தர். ஏசா $45^{21}$ எரே $23^{6}$ புல $1^{18}$ 1 யோவா $2^{1}$.

**நீதிமான்.** The Just; the righteous. ஆதி $6^{9}$ $7^{1}$ $18^{23}$ உபா $25^{1}$ யோபு $12^{4}$ சங் $1^{5}$ $37^{25}$ $58^{10}$ $72^{7}$ $97^{11}$ $112^{6}$ $141^{5}$ நீதி $9^{9}$ $12^{10.21}$ பிர $7^{15}$ ஏசா $3^{10}$ $26^{7}$ எசே $3^{20}$ $18^{20}$ $33^{12}$ மத் $9^{13}$ $13^{43}$ ரோம $1^{17}$ $3^{10}$ கலா $3^{11}$ 1 பேது $3^{12}$ $4^{18}$.

**நீதிமான்களாக்குகிறது. Justification.**

1. *நீதிமான்களாக்குகிறது* கடவுள் கிறிஸ்துவினிமித்தம் பாவிகளைக் குற்றமற்றவர்களென்றும், ஆக்கினைக்கு விடுதலையாயிருக்கிறவர்களென்றும், நித்தியஜீவனுக்குப் பாத்திரவான்களென்றும் அங்கீகரிக்கிறதேயாம். இப்படி மனிதர்கள் கிறிஸ்து இயேசுவின் மேலுள்ள விசுவாசத்தினாலே கடவுளுக்கு முன்பாக மாசில்லாத நீதிமான்களாக அங்கீகரிக்கப்படுகிறார்கள். கிறிஸ்துவினுடைய புண்ணியபலன்களெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன.

மேலும், மனிதர்கள் தாங்களாக ஒரு நீதியையும் செய்யாமல் தேவனுடைய கிருபையினாலே இந்த மகிமையைப் பெற்றுக்கொள்ளுகிறபடியால், இது கைம்மாறில்லாத நீதியென்றும், கடவுளே அதை நமக்காக ஏற்படுத்தினபடியால் கடவுளால் வருகிற நீதியென்றும், கிறிஸ்துவின்மூலமாய் வருகிறபடியால் கிறிஸ்துவினுடைய நீதியென்றும், கிறிஸ்துவும் நம்முடைய நீதியென்றும், விசுவாசமாகிய கருவியால் வருகிறபடியால் விசுவாசத்தின் நீதியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ரோம $3^{21}$ தீத் $3^{6}$ மத் $6^{33}$ ரோம $10^{3.6}$ 1 கொரி $1^{30}$ ரோம $1^{17}$ 2 பேது $1^{1}$.

மேலும், இப்படி விசுவாசிகளை நீதிமான்களாக்கி அவர் அவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறார் என்றும், கடனைத் தீர்க்கிறது போல அவைகளைவிட்டு விலக்குகிறார் என்றும், அவைகளைக் குலைக்கிறார் என்றும், அவைகளை நிவிர்த்திசெய்கிறார் என்றும், அவைகளை மூடுகிறார் என்றும், அவைகளை அவர்கள்மேல் சுமத்தாமலிருக்கிறார் என்றும், அவர்களை வெண்மையாக்குகிறார் என்றும், அவர்களைக் கழுவிச் சுத்திகரிக்கிறார் என்றும், அவர்களைக் கடவுளோடே ஒப்புரவாக்குகிறார் என்றும், அவர்களை மீட்கிறார் என்றும் சொல்லப்படும். கொலோ $1^{14}$ ஏசா $1^{18}$ எரே $33^{8}$ லூக் $7^{47.48}$ அப் $10^{43}$ எபி $1^{3}$ 1 யோவா $1^{7.9}$ வெளி $1^{6}$ ரோம $5^{9.10}$.

2. பாவிகள் விசுவாசத்தினால் நீதிமான்களாக்கப்படுவார்களென்பது, பழைய ஏற்பாட்டின் காலத்திலும் விசுவாசிகளுக்குக் காட்டப்பட்டிருந்தது. திருஷ்டாந்தமாக, ஆபேல் பலியிட்டதினாலே அவன் அங்கீகரிக்கப்பட்டான் (ஆதி $4^{4}$); ஆபிரகாம் தேவனை விசுவாசித்தான், அது அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது. ஆதி $15^{6}$ ரோம $4^{3}$. சங்கீதக்காரன் இந்த நீதியைக்குறித்துச் சொல்லியிருக்கிறான். சங் $22^{3}$ $23^{3}$ $35^{28}$ $36^{6}$ $89^{16}$ $119^{40}$ ரோம $4^{6.8}$.). ஏசாயா தீர்க்கதரிசனத்திலே இந்த நீதியைக்குறித்து மிகவும் சொல்லியிருக்கிறது. ஏசா $33^{5}$ $42^{21}$ $45^{24}$ $46^{13}$ $51^{8}$ $53^{11}$ $54^{17}$ $61^{10}$.

3. மனிதர்கள் தங்களுடைய மாசும் குறைவுமுள்ள நீதியினாலல்ல, கிறிஸ்துவினுடைய மாசில்லாத பூரண நீதியினாலே அங்கீகரிக்கப்படுகிறபடியால், அவர்கள் நித்திய ஜீவனுக்கும் பாத்திரவான்களாகிறார்கள். ஆதலால் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறவனெவனோ அவன் பாவமன்னிப்பைப் பெற்றுக்கொள்ளுகிறதுமல்லாமல், நித்தியஜீவனையும் அடைகிறானென்று சுவிசேஷத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது. அப் $26^{18}$. இது நம்முடைய புத்திக்கும் சரியென்று தோன்றுகிறது. எப்படியென்றால், நாம் கிறிஸ்துஇயேசுவை விசுவாசிக்கிறதினாலே முன்செய்த பாவங்கள்மாத்திரம் மன்னிக்கப்படுமென்றும், நாம் விசுவாசிக்கத் தொடங்கினபின்பு புண்ணியத்திற்கேதுவாகிய நல்ல முயற்சிபண்ணி நித்தியஜீவனாகிய மோட்சத்தை அடையவேண்டுமென்றும் சொன்னால், நம்மை இரட்சிக்கிறது நம்மாலே கூடாததாயிருக்குமே. எப்படியெனில் விசுவாசிகள் யாவரும் மரணபரியந்தமும் அநேக குற்றங்களைச் செய்து பரிசுத்தத்தில் குறைவுள்ளவர்களானபடியினாலும், அதினிமித்தம் நீதியுள்ள கடவுள் அவர்களைத் தள்ளவேண்டியதா யிருக்கிறபடியினாலும், ஒருவராலும் நித்தியஜீவனை அடைகிறதற்கு இடமிராதே. அந்தக் குறைவினாலே நாம் நித்தியஜீவனை அடைவதைக்குறித்து எப்பொழுதும் சமுசயமும் பயமுமுள்ளவர்களாயிராமல் கடவுளோடே சமாதானமுண்டாயிருக்கும்படி வேதமானது நாம் கிறிஸ்துவை விசுவாசிக்கிறதற்கு முன்னாவது அதற்குப் பின்னாவது செய்த நற்கிரியைகளினால் நித்தியஜீவனை அடையவேண்டுமென்று சொல்லாமல், இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறவனெவனோ அவனுக்கே நித்தியஜீவனுண்டென்று சொல்லியிருக்கிறது. ஆதலால் விசுவாசம் பாவமன்னிப்புக்குமாத்திரமல்ல, நித்தியஜீவனுக்கும் ஏதுவாயிருக்கிறது.

4. இப்படியானால் விசுவாசிகள் பாவஞ்செய்தாலும் மோட்சத்தை அடைவார்களா என்றால், அவர்கள் மறுபடியும் பிறந்து பாவசம்பந்தமாகிய பழைய மனித சுபாவத்தைக் களைந்து புதிய மனிதசுபாவத்தைத் தரித்திருப்பார்களே. அப்போஸ்தலன் சொல்லுகிறபடி கடவுளால் பிறந்த எவனும் பாவஞ்

செய்யான், அவன் தன்னைக் காக்கிறான். 1 யோவா $3^{9}$ $5^{18}$. ஆனதால் விசுவாசமுள்ளவன் பாவஞ்செய்தால் அது அவனுடைய புதிய மனதினாலல்ல, அவனுக்குள் அடக்கமாயிருக்கிற பழைய மனதின் பாவமென்று சொல்லவேண்டும். ரோம $7^{15.23}$. அது குற்றந்தான், ஆகிலும் அவன் அதை உணர்ந்தவுடனே வெட்கப்பட்டு மனஸ்தாபத்தோடே இயேசுகிறிஸ்து செய்த புண்ணியத்தினாலே மன்னிப்பைப் பெற்றுத் தன்னைச் சுத்திகரித்துக்கொள்வானே. ஆதலால், விசுவாசியானவன் இவ்விதமாய்ப் பாவஞ்செய்தாலும் மோட்சத்தை அடைவானென்பதற்குச் சந்தேகமில்லை. தாவீது இராஜனும், பேதுரு அப்போஸ்தலனும் அதற்குத் திருஷ்டாந்தங்களா யிருக்கிறார்கள். சங் $51^{1}$ யோவா $21^{19}$. அவனுடைய பழைய மனித தத்துவத்திற்கும் புதிய மனித தத்துவத்திற்கும் எப்போதும் போராட்டமுண்டு. மறுபிறப்பினாலே விசுவாசமுள்ளவன் பரிசுத்தத்தின்மேல் பிரியப்பட்டு தன்னுள்ளே கெட்ட ஆசைகளுக்கும் பொல்லாத உலகவாடிக்கைகளுக்கும் பிசாசின் கெட்ட யோசனைகளுக்கும் எதிர் நிற்கவும் அவைகளை ஜெயிக்கவுந் தகுதியுள்ளவனாய் நாடோறும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்; இல்லாவிட்டால் பாவத்தைச்செய்து தனக்கு மிகுந்த சஞ்சலங்களை உண்டாக்குவான். ஆதலால் அப்போஸ்தலர்கள் விசுவாசிகளை நோக்கி விழித்துக்கொள்ளவும், விண்ணப்பம் பண்ணவும், விசுவாசத்தில் எப்பொழுதும் முயற்சி பண்ணவும், தீமைகளை ஜெயிக்கவும் புத்தி சொல்லுகிறார்கள். 1 பேது $1^{22.23}$ யூதா $1^{20.21}$ 1 பேது $5^{8.9}$. மீட்கப்பட்டவன் ஒருவேளை விழுந்தாலும் மறுபடியும் எழும்புவான். சங் $37^{24}$.

5. கிறிஸ்துவை விசுவாசிக்கிறதினால் கைம்மாறில்லாத கிருபையைக்கொண்டு இரட்சிக்கப்படுகிறதைக் குறித்து அறியாமல், சிலர் கடவுளுடைய கற்பனைகளின்படி செய்கிற கிரியைகளினால் இரட்சிக்கப்படவேண்டுமென்றும், சிலர் முதலாவது நல்லவர்களாகிப் பின்பு கிறிஸ்துவினுடைய புண்ணியத்தை விசுவாசித்து இரட்சிக்கப்படவேண்டுமென்றும், சிலர் முதலாவது கைம்மாறில்லாத இரக்கத்தினாலே மன்னிப்பைப்பெற்று பின்பு நற்கிரியைகளைச் செய்கிறதினாலே தேவனுக்கு முன்பாக நீதிமான்களாக்கப்பட வேண்டுமென்றும், சிலர் நற்கிரியைகள் எவ்வளவாகிலும் வேண்டுவதில்லை, விசுவாசம்மாத்திரம் வேண்டுமென்றும் சொல்லி, வீணான தர்க்கம்பண்ணுகிறார்கள்.

இவர்களில் தங்கள் கிரியைகளினாலே எவ்வளவாகிலும் நீதிமான்களாக்கப்படும்படி பார்க்கிறவர்கள் தங்கள் கெட்ட நிலைமையையும் கடவுளுடைய பரிசுத்தத்தையும் நீதியையும் மறந்துவிடுகிறார்கள். நாம் செய்கிற கிரியைகளில் கடவுளுக்குப் பிரியமாயிராதே. புத்தியின் கிரியைகளும் சித்தத்தின் கிரியைகளும் சரீரத்தின் கிரியைகளுமாகிய சகலமும் பாவத்தினால் அசுசிப்பட்டிருக்கிறதே. அன்றியும், அநேகம் பாவங்களைச் செய்கிறவர்களாகிய நாம் அவருக்கு முன்பாக நம்மைக் குற்றவாளிகளாக்குகிறோம். அவர் தமது நீதிக்குத் திருத்திசெய்யாமல் ஒரு பாவத்தையாகிலும் மன்னிக்கக்கூடாதே. சங் $49^{8}$ மீகா $6^{6}$.

மேலும், நாம் பாவிகளாகிறதற்குமுன் கிரியையுடன்படிக்கை தகுதியாயிருந்தது; நாம் பாவிகளானபின்பு, கிருபையுடன்படிக்கை மாத்திரந் தகும். அந்தக் கிருபையும் நீதியை நிறைவேற்றாமலிராதே. இரண்டையும் ஸ்தாபிக்கும்படிக்குக் கடவுள் கிறிஸ்துவை ஏற்படுத்தினார். அவர் நமது பாவத்திற்குப் பிராயச்சித்தமாக மரித்தபின்பு அதினால் வருகிற பலனைப் பிரித்து, நமது கிரியைகளையும் ஒருவகையான இரட்சிப்புக்கேதுவாகச் சேர்ப்பாரா? மேலும், நம்முடைய கிரியைகளும் ஒருவகையாய் இரட்சிப்பை உண்டாக்குமானால் அவைகள் இரட்சிப்பு முழுமையையும் செய்யலாமே. அதற்காக கிறிஸ்து வரவும் பாடுபடவும் மரிக்கவும் வேண்டுவதில்லையே! ஆகையால் தேவகிருபையினால் கிறிஸ்துவினுடைய நீதியைக்கொண்டுமாத்திரம் இரட்சிக்கப்படுகிறது நியாயமாயிருக்கிறதுமல்லாமல், நமக்கு அதிக நிச்சயமாயும் அதிக ஆறுதலைக் கொடுக்கிறதாயும் கடவுளுக்கு அதிக மகிமையாயும் இருக்கிறது என்பதற்குச் சந்தேகமில்லை. ஆதலால், ஒரு மனிதனாகிலும் நியாயப்பிரமாணத்திற்கேற்ற கிரியைகளினாலே கடவுளுக்கு முன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை யென்றும், கைம்மாறில்லாமல் வருகிற அவருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக் கொண்டு நீதிமானாக்கப்படுகிறானென்றும், அது கிருபையினால் உண்டாயிருக்கிறபடியால், அது கிரியைகளினால் ஆகவில்லை என்றும் தோன்றுகிறது அப்படி அல்லவென்றால், கிருபையானது கிருபையாயிராது. அன்றியும் அது கிரியைகளினால் உண்டாயிருந்தால், அது கிருபையினால் இராது.

அல்லவென்றால், கிரியையானது கிரியை அல்லவென்றும், பவுல் அப்போஸ்தலன் தீர்மானித்திருக்கிறான். ரோம 2[24] 4[4] 11[6]. நம்முடைய சொந்த நீதிகளெல்லாம் மனிதர்களுக்கு முன்பாக எவ்வளவு பிரகாசமாயிருந்தாலும் கடவுளுக்கு முன்பாகத் தீட்டான வஸ்திரம்போல் இருக்கின்றன. ஏசா 64[6].

கிரியைகள் எவ்வளவாகிலும் வேண்டுவதில்லை, விசுவாசம்மாத்திரம் வேண்டுமென்று சொல்லுகிறதும் தப்பிதம். எப்படியெனில், நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய்கிறதற்கு நம்முடைய கிரியைகள் வேண்டுவதில்லை, விசுவாசமே போதும். அது மெய்தான். ஆகிலும் நம்முடைய விசுவாசத்தின் உண்மையைக் காட்டும்படிக்கு நற்கிரியைகள் வேண்டுமே. திருஷ்டாந்தமாக அன்பின் கிரியைசெய்கிற விசுவாசமே உதவுமென்று பவுல் அப்போஸ்தலனும் சொல்லியிருக்கிறான். கலா 5,6 அதி. நாம் விசுவாசத்தினால் செய்கிற கிரியைகள் நம்முடைய பாவத்தை நிவிர்த்திசெய்யாது. அதை நிவிர்த்திசெய்யும்படிக்கு கிறிஸ்துவினுடைய கிருபையும், அதை ஏற்றுக்கொள்ளுகிற விசுவாசமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவே. பின்பு அந்த விசுவாசத்தினால் நாம் தேவனுக்குத் தோத்திரமாகச் சகலவிதமான நற்கிரியைகளையும் சந்தோஷமாகச் செய்யவேண்டும். அப்படிச் செய்யாமலிருக்கிற விசுவாசம் மெய்யான விசுவாசமல்லவே.

6. நற்கிரியை யில்லாமல் விசுவாசத்தினாலேமாத்திரம் நீதிமான்களாக்கப்படுகிறோம் என்று பரி.பவுல் அப்போஸ்தலன் சொல்லியிருக்க, விசுவாசத்தினாலே மாத்திரமல்ல, கிரியைகளினாலேயும் நீதிமான்களாக்கப்படுகிறோம் என்று பரி. யாக்கோபு அப்போஸ்தலன் 2[24]–ல் சொல்லியிருக்கிறானே என்று கேட்டால், பவுலினுடைய விசாரணைக்குள்ளிருந்த சபைகளிடத்தில் சில கள்ளப்போதகர் வந்து, சுவிசேஷத்திற்கேற்ற விசுவாசத்தினாலல்ல, கிரியைகளினாலேயும் நீதிமான்களாக்கப்படுகிறோம் என்று சொன்னார்கள். அது தப்பிதமென்று ரோமாபுரியிலும் கலாத்தியா நாட்டிலுமுள்ள சபையாருக்குக் காண்பித்தான். அதன்றி அன்பினால் கிரியைசெய்கிற விசுவாசமே உதவும் என்றும் சொன்னான். யாக்கோபினுடைய விசாரணைக்குள்ளிருந்த சபைகளிடத்தில் சிலர் வந்து நற்கிரியைகளைச் செய்யாமல் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படலாம் என்றார்கள். அதுவும் தப்பிதமானபடியினாலே யாக்கோபு அதை அவர்களுக்குக் காட்டி, கிரியையில்லாத விசுவாசம் செத்ததென்று அறிவித்திருக்கிறான். யாக் 2[14.26]. இப்படி அப்போஸ்தலர் இருவருடைய கொள்கையும் ஒருவகையேயன்றி வேறில்லை என்றும் விளங்குகிறது.

ஆனபடியினாலே பாவியானவன் கடவுளுக்கு முன்பாக நீதிமானாக அங்கீகரிக்கப்படும்படிக்குக் கிறிஸ்துவையன்றி வேறொன்றையும் நோக்கவும் பற்றிக்கொள்ளவும் கூடாது. அப்படி ஆரம்பத்திலே மாத்திரமல்ல, கடைசி நியாயத்தீர்ப்புநாள் பரியந்தமும் செய்யவேண்டும். கிறிஸ்துவினுடைய மாசில்லாத நீதிமாத்திரம் நம்மைக் குற்றப்படுத்துகிற மனச்சாட்சியையும் தேவப்பிரமாணத்தையும் சமாதானப்படுத்துகிறதற்கு ஏதுவாயிருக்கிறது. கடவுள் நமக்காகவே அதை ஏற்படுத்தியிருக்கிறார். ஒரு நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளுவது நீதிமான்களாகிறதற்கு ஏதுவாயிருக்குமானால் அவர் அப்படி ஏற்படுத்துவாரல்லவா? பிரமாணங்கள் யாவும் நமக்கு ஞான உயிரைக் கொடுக்கத் தகுதியில்லாதவைகளாயிருக்கிறபடியால், கடவுள் கிறிஸ்துவை விசுவாசிக்கிறதினாலே நம்மை நீதிமான்களாக்கச் சித்தமுள்ளவராயிருக்கிறார். கலா 3[19.22]. விசுவாசமே நாம் பரிசுத்தமாய் நடக்கும்படிக்கு பலமாய் நம்மை ஏவுகிறது. ஆதலால் இந்த வகையை ஒருவிதத்தாலும் விட்டுவிடக் கூடாது. லூத்தர் சொன்னபடி இந்த உபதேசத்தினாலே ஒரு சபை நிற்கும், அல்லது விழும். ஒரு சபையார் சுவிசேஷத்தின்படி இதை உண்மையாய்ப் பற்றிக்கொள்ளுமளவாக தேவபத்தியும் நீதியும் பரிசுத்தமுமுள்ள மார்க்கத்தில் நடந்தேறுவார்கள். அதைத் தள்ளினால் நன்மார்க்கத்தைச் சீக்கிரமாய் விட்டுத் திவ்விய ஜீவனில்லாதவர்களாய்ப் போவார்கள். ரோமான் மார்க்கத்தார் இந்த உபதேசத்தைப் புரட்டித் தங்கள் கருமங்களையும் முன்னிருந்த பரிசுத்தவான்களுடைய கருமங்களையும் கிறிஸ்துநாதருடைய புண்ணியத்தோடே கூட்டி, இப்படி ரட்சிக்கப்படுகிறதற்கு வழி உண்டுபண்ணினதினாலே அதற்குத் திருஷ்டாந்தமாயிருக்கிறார்கள். கிறிஸ்துநாதர் தமக்குரிய மகிமையில் எவ்வளவாகிலும் மற்றொருவனுக்குக் கொடுக்கவேமாட்டார். (இரேனியுஸ் ஐயர் வேதசாஸ்திரம் ஐம்பதாம் அதிகாரம் காண்க.)

1. நீதிமொழி. Proverb, saying. பழமொழி காண்க.

நீதிமொழி. The book of Proverbs. எபிரெயர்கள் பழைய ஏற்பாட்டுப் புஸ்தகங்களை 'நியாயப்பிரமாணம்' 'தீர்க்கதரிசிகள்,'

'எழுதப்பட்டவைகள்' என மூன்று வகையாகப் பிரித்தார்கள். எழுதப்பட்டவைகளில் 'நீதிமொழி' இரண்டாம் பாகம். இதில் எபிரெய ஞானிகளுக்குத் தெரிந்த ஞானத்தை நாம் அறிந்துகொள்ளலாம்.

2. இப்புஸ்தகத்தின் பொருளடக்கம்.

i. $1^1$–$9^{18}$. சாலொமோனின் நீதிமொழிகளில் முதலாம் கோவை. இதில் அறிவீனம், சிற்றின்பம் ஆகிய இவைகளை விலக்கிக் கடவுளுக்குப் பயப்படுதலின் போதனையை நாடித் தேடவேண்டும் என்று குரு சீஷர்களுக்கு உரைக்கிறார்.

ii. $10^1$–$22^{16}$. சாலொமோனின் நீதிமொழிகளில் இரண்டாம் கோவை. இந்தப் பாகம் நீதிமொழி புஸ்தகத்திற்கு மூலாதாரம். இதில் ஒவ்வொரு வாக்கியமும் ஒன்றோடொன்று சம்பந்தப்படாமல் தனித்தனியே பூரண வாக்கியமாய் இருக்கிறது. இதில் 'உத்தமருடைய நீதி' 'செம்மையானவர்களுடைய நீதி' இவைகள் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன.

iii. $22^{17}$–$24^{22}$. ஞானிகளுடைய வார்த்தைகளில் முதலாம் கோவை. இதிலுள்ள வசனங்கள் தனித்தனியாய் இராமல் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகளாய் இருக்கின்றன. இதில் ஞானிகள் பொருளாசை, அநியாயம், துன்மார்க்கம், சிட்சை, மதுபானம், ஞானம் இவைகளைக் குறித்துச் சொல்லுகிறார்கள்.

iv. $24^{23-34}$. ஞானிகளின் வார்த்தைகளில் இரண்டாம் கோவை முகதாட்சணியத்தையும் சோம்பல்தனத்தையும் கண்டிக்கும் சில வாக்கியங்கள்.

v. $25^1$–$29^{27}$. 'எசேக்கியாவின் மனுஷர்கள் பெயர்த்தெழுதின சாலொமோனின் நீதிமொழிகள்'. இந்தப் பாகத்திற்கும் ($10^1$ –$22^{10}$) இரண்டாம் பாகத்திற்கும் பல ஒற்றுமைகள் உண்டு. இதில் நாம் கவனிக்கவேண்டிய அனேக நல் உவமைகள் இருக்கின்றன. ஆனால் இவைகளில் பக்திக்குரிய காரியங்கள் அவ்வளவு சொல்லாதிருந்தாலும் புத்திமான்களுக்கு அவசியமாய் இருக்கவேண்டிய ஒழுக்கத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறது.

vi. 30 அதி. ஆகூர் உபதேச வாக்கியங்கள். இதில் சன்மார்க்கத்துக்குரிய சில நல்மொழிகள் விடுகதையாயும் உபமானமாயும் சொல்லியிருக்கின்றன.

vii. $31^{1-9}$. ராஜாவாகிய லேமுவேலுக்கு அடுத்த வசனங்கள். நல்நடக்கையைப்பற்றிய புத்தி போதனைகள்.

viii. $31^{10-31}$. நல்மனையாளுடைய குணலட்சணங்களும் கீர்த்தியும்.

3. இதின் தன்மை.

ஒவ்வொரு பாகத்தையும் விஷயம் விஷயமாக எழுத முடியாது. ஒரே விஷயத்தைக் குறித்து ஒரே அதிகாரத்தில் எல்லா மொழிகளும் சொல்லுகிறதில்லை. பெரும்பாலும் ஒவ்வொரு வசனமும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் எழுதப்பட்டிருக்கிறது. இதினாலே இவைகளை எழுதின எபிரெய ஞானிகள் உரைத்த ஞானவாக்குகளின் தன்மையை அறிவதற்குச் சில தடைகள் உண்டு. ஆனால் இவைகளை ஒப்பிட்டுப் பார்ப்போமானால் மனுஷருடைய ஜீவன் நல்லது என்றும், மனுஷருக்கு வரும் நன்மைகள் பலவிதம் என்றும், இவைகளினிமித்தம் மனுஷர் நன்றியுள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்றும், நீதிமான்கள் சுகத்தோடு வாழுகிறார்கள் என்றும், உண்மை எப்பொழுதும் நல்ல பலனைக் கொடுக்கிறது என்றும், மதுபானம், சிற்றின்பம், துன்மார்க்கம் என்பவைகள் சரீரத்தையும் ஆத்துமாவையும் அழிக்கிறது என்றும், ஏழைகளுக்கு இரங்குவது அவசியம் என்றும் போதிக்கிறார்கள். முதற்பாகத்தில் ஞானத்தைச் சிறப்பித்து அதை யடைவதினால் உண்டாகும் பலனைக்குறித்து விபரமாய்ச் சொல்லியிருக்கிறது.

4. இப்புஸ்தகத்தின் மாதிரி.

நாம் இதை நன்றாய் ஆராய்ந்துபார்த்தால் இதில் எட்டுக்கோவைகள் சேர்ந்திருக்கின்றன எனத் தெளிவாய் அறிந்துகொள்ளலாம். இவைகள் எல்லாம் நீதிமொழி புஸ்தகத்தில் சேர்ந்தவிதம் தெரியாது. ஆனால் வித்துவான்கள் நினைக்கிறபடி எபிரெயர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு முந்தின காலங்களில் ஆசிரியர்கள் எட்டுப்பாகங்களில் எழுதின நல்மொழிகளை வேதபாரகர் அல்லது வேதசாஸ்திரிகள் இந்த ஆகமத்தில் சேர்த்தார்கள்.

5. காலம்.

முதலில் இதிலுள்ள வாக்கியங்கள் உரைக்கப்பட்ட காலத்தை நம்மாற் சொல்ல முடியாது. சில மொழிகள் சாலொமோன்காலத்திலும் அல்லது அதற்கு முந்தியும், சில வாக்கியங்கள் அதற்குப் பிந்தியும் சொல்லப்பட்டிருக்கலாம். ஆனால் இவைகளை ஒரே புஸ்தகமாய்ச் சேர்த்த காலம் கி–மு. 350–ஆம் என்று சொல்லலாம்.

**நீதியின் சூரியன்.** The sun of righteousness. மல். $4^2$ வெளி. $22^5$.



எகிப்துதேசத்து இறைப்பெட்டி.

**நீரூற்று.** Fountain, spring. லேவி $11^{36}$ ஆதி $16^{7}$ எண் $33^{9}$ யோசு $15^{9}$ 1 இரா $18^{5}$ சங் $114^{8}$ உன். பா $4^{12,15}$ வெளி $14^{7}$.

**நீர், தண்ணீர்.** Water. பலெஸ்தீனுதேசம் மலைநாடானதினுலே அதில் தண்ணீர் அபூர்வம். வருஷம் முழுவதும் ஓடிக்கொண்டிருந்த யோர்தான் நதியானது அதின் கரையிலுள்ள நஞ்சைப் பூமிக்கு பிரயோஜனமாயிருந்தும், அந்த ஆறு ஆழமான பள்ளத்தாக்கிலே ஓடினதால் அதின் தண்ணீர் மேடான இடங்களிலுள்ள வயல்களுக்குப் பிரயோஜனப்படவில்லை. பலெஸ்தீனு தேசத்தில் யோர்தான்நதிபாயும் பள்ளத்தாக்கும், மத்தியதரைக் கடலின் கரையிலுள்ள பெலிஸ்தியா தேசமும், கர்மேல் மலையின் வடகிழக்கிலுள்ள சமபூமியும் தவிர வேறு செழிப்பான பாகங்களைக் கண்டுபிடிப்பது அரிது. மற்ற நாடுகளில் பல நீரூற்றுகள் இருந்தாலும், மழைகாலத்தில் மாத்திரம் அவைகளில் தண்ணீர் இருக்கும். உஷ்ணகாலத்திலே அவைகள் வறண்டுபோம். அந்தத் தேசத்தில் எப்பிரல்மீ முதல் அக்டோபர்மீ வரை பெய்கிற மழை சொற்பமானதினுலும், மற்ற மாசங்களில் மழை இல்லாததினுலும் ஜனங்கள் தண்ணீர் கட்டிவைக்கக் குளம் குட்டை முதலியவைகள் வெட்டாவிட்டால், பயிர்த்தொழில் செய்வதற்கும், தாங்கள் குடிப்பதற்கும் தண்ணீர் கிடைப்பது கூடாத காரியம். ஆதலால் அவர்கள் மலைச்சாரலிலுள்ள கெபிகளைத் துரவுகளாக உபயோகித்து, பல இடங்களில் கிணறு குளம் முதலியவைகளை வெட்டி, தங்கள் வீடுகளின்மேல் மழைத்தண்ணீர் நிற்பதற்குத் தொட்டிகளைக் கட்டி, இப்படியாகத் தங்களுக்கும் தங்கள் மிருகஜீவன்களுக்கும் உஷ்ணகாலத்தில் உதவும்படி வேண்டியமட்டும் தண்ணீர் சேர்த்துவைக்கப் பிரயாசப்படுவார்கள். தண்ணீர் இத்தனை அருமையாயிருந்ததினுல் நீர்வளமான தேசங்களை யேகோவா விசேஷமாய் ஆசீர்வதிக்கிறார் என்று எபிரெயர் நினைத்து வந்தார்கள்.

மத்தியதரைக் கடலின் கரையிலுள்ள சமபூமிகளில் துரவுகளை வெட்டுவது வழக்கம். ஆதி $26^{15}$. யுத்தகாலத்திலே கிணறுகளையும் நீரூற்றுகளையும் தூர்த்துப்போடுவது பெருத்த அநியாயம். 2 இரா $3^{19}$ 2 நாளா $32^{3}$.

தாகமுள்ளவர்களுக்குத் தண்ணீர்கொடாமல் இருப்பது பெரிய குற்றம். ஆதி $24^{17}$ யோவா $4^{7}$. அந்தத் தேசத்திலே வழிப்போக்கர்களுக்காக வழியோரத்தில் தண்ணீர்க் குடம் வைப்பது தருமம் என்று யாவரும் நினைத்தார்கள்.

பல இடங்களில் தண்ணீர் அதிக அபூர்வமானதினுலே கிணற்றங்கரையில் அடிக்கடி சண்டை உண்டாகும். ஆதி $24^{19}$ $26^{20}$ $29^{3}$ யாத் $2^{16}$. சில சமயங்களில் அத்தேசத்து மிருகஜீவன்களுக்காகத் தண்ணீர் விலைக்கு வாங்குவார்கள். உபா $2^{6}$. இறைப்பெட்டியினுலாவது ஒருவித ஏற்றத்தினுலாவது தண்ணீர் இறைத்துப் பல சிறிய வாய்க்கால்கள் வழியாய்க் கீரைத்தோட்டங்களுக்கும் கனிவர்க்கத் தோட்டங்களுக்கும் தண்ணீர்

பாய்ச்சுவார்கள். சங் 1³ 65¹⁰ எசே 17⁷ பிர 2⁶, எகிப்து தேசத்தார் இவ்வித வாய்க்கால்களை அடைப்பதற்கும் திறப்பதற்கும் மண்வெட்டிகளை உபயோகியாமல் காலினாலே அதைச் செய்துவந்தபடியினால் காலால் நீர்ப்பாய்ச்சலைப்பற்றி உபாகமத்திலே சொல்லியிருக்கிறது. உபா 11¹⁰.

கிணற்றின் வாய்க்குமேலே ஒரு பெரிய கற்பலகையை மூடியாகப் போடுவது வழக்கம். ஆதி 29².

வீட்டுவேலைக்காகத் தண்ணீர் மொண்டு கொள்ளுவது ஸ்திரீகளின் வேலை. ஆதி 24¹¹ 1 சாமு 9¹¹ யோவா 4⁷.

வனாந்தரத்தைக் கடந்துபோக வேண்டுமானால் தோல் துருத்திகளில் தண்ணீர் கொண்டுபோவது அவசியம். ஆதி 21¹⁴.

வந்த அதிதி கைகால் கழுவுவதற்கு அவனுக்குத் தண்ணீர் கொடுப்பது வீட்டெஜமானுடைய கடமை. லூக் 7⁴⁴. எஜமானின் கைகளில் தண்ணீர் வார்ப்பது வேலைக்காரனுடைய கடமை. 2 இரா 3¹¹.

வேதகிரந்த கர்த்தாக்கள் ஊற்றிலிருந்து வருகிற 'ஊற்று நீர்' அல்லது 'ஜீவதண்ணீர்' என்பதற்கும் குளத்திலிருக்கிற தண்ணீருக்கும் உள்ள வித்தியாசத்தைப் பல வசனங்களில் காண்பிக்கிறார்கள். லேவி 14⁶ எரே 2¹³ சங் 1³. இதினிமித்தம் கடவுளுடைய அருளுக்கு 'ஜீவதண்ணீர்' உவமையாகச் சொல்லியிருக்கிறது. எரே 2¹⁸ 15¹⁸ சக 14⁸ யோவா 4¹⁰ ஏசா 29⁸ 55¹ வெளி 22¹.

யூதர்களுக்குத் தண்ணீர் எவ்வளவு அருமையானது என்பதைப் பல வசனங்களில் பார்க்கிறோம். நீதி 25²⁵ ஏசா 12³ 44¹' எரே 17⁸ லூக் 16²⁴ யோவா 7³⁷ வெளி 22¹⁷.

ஆசரிப்புக் கூடாரப்பண்டிகையில் சீலோவாம் குளத்திலிருந்து தண்ணீர் மொண்டு தேவாலயத்துக்குக் கொண்டுவந்து கடவுளுக்கு முன்பாக வார்ப்பது வழக்கம். 1 சாமு 7⁶ ஏசா 12³ யோவா 7³⁷ வெளி 22¹⁷.

ஒடுக்கமான பள்ளத்தாக்குகளில் ஓடிக்கொண்டிருக்கும் சிற்றாறுகள் மழைகாலத்திலே பிரவாகங்கொண்டு ஆற்றின் இருகரையிலும் உள்ள மனிதர்களுக்கும் மந்தைகளுக்கும் கெடுதிசெய்வது வழக்கமாகையினாலே திடீரெனவரும் மோசத்துக்கும் சரீரம் நிலையாமைக்கும் எபிரெயர்கள் நீரை உவமையாகச் சொல்லுவார்கள். சங் 18¹⁶ 32⁶ 58⁷ யோபு 11¹⁶ ஏசா 28¹⁷.

சில வசனங்களில் தண்ணீர் நிலையற்ற மனதைக் குறிக்கிறது. ஆதி 49⁴ எசே 21⁷. தண்ணீர் கண்ணீரைக் குறிக்கும். எரே 9¹.

வெள்ளம் துன்பத்தைக் குறிக்கும். சங் 61¹ புல 3⁵⁴.

'திருட்டுத்தண்ணீர்' என்பது வேசித்தனத்தினால் அடையும் இன்பத்தைக் குறிக்கும். நீதி 9¹⁷ கிணறு, ஜீவதண்ணீர் காண்க.

**நீர்க்காகம்.** Cormorant. பலெஸ்தீனா தேசத்தில் மத்தியதரைக்கடலின் ஓரத்திலும் சாக்கடலின் அருகிலும் நீர்க்காகம் வசிக்கும். இவைகளில் சில மூன்று அடி உயரமாய் இருக்கும். எப்பொழுதும் மீன் பிடிக்கிறதே இப்பட்சிக்கு வழக்கமாகையால், இது சாதாரணமாய்க் கடலில் நீந்தித் திரிந்து மீன் பிடிக்கும்படி தண்ணீரில் முழுகிச் செல்லும். எபிரெயர்கள் இந்தப் பட்சியைத் தின்னமாட்டார்கள். லேவி 11¹⁷ உபா 14¹⁷.

**நீர்க்கோவை.** Dropsy. லூக் 14². தற்காலத்தில் எருசலேம் பட்டணத்தார் அநேகர் நீர்கோவை வியாதியுள்ளவர்களாயிருக்கிறார்கள். வியாதி காண்க.

**நீர்ச்சால்.** Bucket. ஏசா 40¹⁵ எண் 24⁷. ஏற்றச்சால் காண்க.

**நீர்யானை.** பிகெமோத்து காண்க.

**நீர்வளம்.** 'Well-watered.' பலெஸ்தீனா தேசத்தில் பல நாடுகள் வனாந்தரமாயும் தண்ணீர் அற்றதாயும் இருப்பதினாலே யோர்தான் பள்ளத்தாக்கில் மிக்கச் செழிப்புள்ள பாகங்களை எபிரெயர்கள் அதிகமாய்ச் சிறப்பித்துக் கூறினார்கள். ஆதி 13¹⁰.

**நீர்வாழும் ஜெந்துக்கள்.** 'Fishes.' சமுத்திரத்தில் நீரில்வாழும் மச்சங்கள் முதலியவை. ஆதி 1²¹. மீன் காண்க.

**நீலரத்தினம், இந்திரநீலம்.** Sapphire. யாத் 28¹⁸ 39¹¹ எசே 28¹³ ஏசா 54¹¹. இரத்தினம் காண்க.

## நு.

**நுகத்தடி, நுகம்.** Yoke.

பலெஸ்தீனா தேசத்தில் பயிர் செய்கிறவர்கள் தங்கள் மாடுகளுக்குக் கட்டின நுகத்தடிக்கும் தென் இந்தியாவில் சமுசாரிகள் கட்டும் நுகத்தடிக்கும் வித்தியாசம் என்னவென்றால், இத்தேசத்தார் மாட்டின் கழுத்தின்மேல் நுகத்தடியைக் கட்டும்படி ஒரு தோலைச் சுற்றிக் கட்டுவார்கள். பலெஸ்தீனா தேசத்தாரோ நுகத்தடியில் இரண்டு சிறிய மரத்தடிகளைத் தொங்கவைத்து அந்த நுகத்தடியை மாடு மேலே இழுத்துப் போடாதபடி அவை இரண்டையும் கீழே ஒரு கயிற்றி

ஞல் சேர்த்துக் கட்டுவோர்கள். உபா $21^{3}$ 1 சாமு $6^{7}$.

எபிரெயர்கள் நுகத்தையும் நுகத்தடியை யும் உவமையாய் அடிக்கடி சொல்லுவார்கள்.

நுகம் அடிமைத்தனத்தைக் குறிக்கிறது. 1 இரா $12^{4}$.

இருப்புநுகம் கொடிய அடிமைத் தனத் தைக் குறிக்கும். உபா $28^{48}$.

நுகத்தைக் கழற்றுகிறது மீட்பையும் விடு தலையையும் குறிக்கும். ஏசா $58^{6}$ எரே $2^{28}$.

சிலதடவை நுகத்தை நீக்குகிறது நல்ல அதிகாரத்தை நீக்குகிறதையும் குறிக்கும். எரே $5^{5}$.

நுகம் என்பது பாவபாரத்தைக் குறிக்கி றது. புல $1^{14}$.

நுகம் நல் ஒழுக்கத்தைக் குறிக்கிறது. புல $3^{27}$.

தமக்குக் கீழ்படிகிறது லேசானதே என் பதைக் குறிக்கும்படி 'என் நுகம் இலகுவா யிருக்கிறது' என்று நமது ஆண்டவர் சொன் ஞர். மத் $11^{29}$.

மோசேயின் நியாயப்பிரமாணத்தில் சொ ன்ன கட்டளைகள் பாரமானவைகளானதி ஞல் அதற்கு நுகம் என்னும் பேர் சொல் லப்பட்டிருக்கிறது. அப் $15^{10}$ கலா $5^{1}$.

'அடிமைத்தன நுகம்.' 1 தீமோ $6^{1}$.

பிலி $4^{3}$-ல் 'கூட்டாளி' என்பது ஒரு வண்டியின் ஒரே நுகத்தடியைச் சுமக்கிற இரண்டு எருதுகளைப்போல, ஒரே ஊழியத் தில் உடன்வேலையாளாய் இருந்து தன்னோடு கூட அந்த ஊழியத்தை நடத்துகிற மற்ற ஊழியக்காரனைக் குறிக்கும்.

**நுழைகிறது.** Creep. யோவே $2^{9}$ மத் $20^{24}$ கலா $2^{2}$ 2 தீமோ $3^{6}$ யூதா $1^{4}$.

**நுனி.** Top. ஆதி $28^{12}$ எஸ்தர் $5^{2}$.

## நூ.

**நூல்.** Line. அளவுநூல். 2 இரா $7^{15}$. ஏசா $34^{11}$ $44^{13}$ எரே $31^{39}$ புல $2^{8}$ சகரி $1^{16}$ $2^{1}$. 'தூக்குநூல்.' ஏசா $28^{17}$ ஆமோ $7^{7}$. 'மட்ட நூல்.' 2 இரா $21^{13}$.

**நூல் பாவை.** 'Beam of the loom.' நியா $16^{14}$. படைமரம் காண்க.

**நூற்றுக்கதிபதி.** Centurion.

ரோமர்களுடைய சேனைகளில் பட்டா ளம் என்பதற்கு 'லேகியோன்' (*Legion*) என்று பெயர். இயேசுவின்காலத்தில் ஒவ் வொரு லேகியோனிலும் ஏறக்குறைய 6000 போர்வீரர் இருந்தார்கள். ஒவ்வொரு லேகி யோனும் பத்துக் கூட்டங்களாக (*Cohort*) பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு 'கூட்ட மும்' நூறு போர்வீரர் அடங்கிய பத்து பந்திகளாக மறுபடியும் வகுக்கப்பட்டிருந் தது. இந்தப் பந்திகளின் தலைவர்களுக்கு 'நூற்றுக்கதிபதி' என்று பெயர்.

வழக்கமாய் நூற்றுக்கதிபதி தன் போர்வீர ருடன் கோட்டைக்குள்ளே அல்லது பட்ட ணத்துக்குள்ளே இருக்கவேண்டும். ஆனல் சில சமயத்தில் விசேஷித்த ஊழியம் செய் யும்படி சேனாபதிகள் இவர்களை நியமித்து அனுப்புவார்கள். இவ்விதமாய்க் கொர்நே லியு செசாரியா என்னும் ஊரிலே பலகாலம் இருந்தான். நூற்றுக்கதிபதிகள் ரோமசேனை யில் மேலான உத்தியோகத்துக்கு வருவது அரிதான காரியம் என்று தோன்றுகிறது. மத் $8^{5}$ $27^{54}$ மாற் $15^{39}$ லூக் $7^{2}$ $23^{47}$ அப் $21^{32}$ $22^{25}$ $23^{17}$ $27^{6}$ $27^{43}$ $28^{16}$.

**நூன்.** Nun.

1. எபிரெய எழுத்தட்டவணையில் பதி ஞலும் எழுத்து. சங் 119-ல் பதினலாம் பாகத்தில் ஒவ்வொரு வசனத்தின் முதல் பத மும் 'நூன்' என்னும் எழுத்தில் தொடங்கு கிறது.

2. யோசுவாவின் தகப்பன். யாத் $33^{11}$ எண் $11^{28}$ உபா $1^{38}$ யோசு $1^{1}$.

## நெ.

**நெகரியா.** Neariah. [யேகோவா தூரத் துகிறார்.] சிமியோன் கோத்திரத்தான் 1 நாளா $4^{42}$.

**நெகிலோத்.** Nehiloth.

நெகிலோத் என்பது ஒருவகை ஊது வாத்தியத்தை அல்லது ஒரு ராகத்தின் பெய ரைக் குறிக்கும். சங் 5-தலைப்பு.

**நெகினோத்.** Neginoth.

சங் 4, 6, 54, 55, 61, 67, 76 இவற்றின் தலைப்புகளில் சொன்ன 'நெகினோத்' என் பது கின்னரம் வீணை முதலிய நரம்பு வாத்தி யங்களைக் குறிக்கும். கீதவாத்தியம் காண்க.

**நெகுஸ்தான்.** Nehustan, சர்ப்பம், பக் 286 காண்க.

**நெகூம்.** Nehum.

பாபிலோனிய சிறையிருப்பிலிருந்து வந்த யூதர்களின் பன்னிரண்டு தலைவர்களில் ஒரு வன். நெகே $7^{7}$. இவனும் ரெகூமும் ஒரு வன்தான் என்று நினைக்கவேண்டி யிருக் கிறது. எஸ்றா $2^{2}$.

**நெகெலாமியன். Nehelamite.**

எரேமியாவுக்கு விரோதமாயிருந்த கள்ளத் தீர்க்கதரிசியாகிய செமாயா நெகெலாம் என்னும் ஊரில் பிறந்தவன். நெகெலாம் என்பதைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. எரே 29[24].

**நெகேமியா. Nehemiah.** [யேகோவா என் ஆறுதல்.]

1. யூதர்களுடைய பன்னிரண்டு மூப்பர்களில் ஒருவன். எஸ்றா 2[2] நெகே 7[7].

2. எருசலேமின் மதிலைப் பழுதுபார்த்தவர்களில் ஒருவன். நெகே 3[16].

3. அகலியாவின் குமாரனாகிய நெகேமியா. இவன் பெர்சியா இராஜாங்கத்துக்குப் பெரிய அரசனாகிய அர்தசஷ்டா என்பவனுக்குப் பானபாத்திரக்காரன். இவன் செருபாபேலுடனே பலெஸ்தீனாவுக்குப் போன யூதர்களுடைய நிர்ப்பந்த நிலைமையைக் குறித்துக் கேள்விப்பட்டு அவர்களுக்குச் சகாயம் செய்யும்படி அங்கே போக உத்தரவு கேட்க, அரசன் இவனுக்குக் கொஞ்சக்காலம் போகும்படி உத்தரவு கொடுத்தான். இவன் கி—மு. 444—ம் ஆு எருசலேமுக்கு வந்து, அதின் மதிலை மறுபடியும் கட்டும்படி அங்கே வந்த யூதர்கள் யாவரையும் திடன்கொள்ளச்செய்து, மார்க்க விஷயங்களில் சீர்திருத்தம் பண்ணி, ஜனங்கள் மறுபடியும் யேகோவாவோடு உடன்படிக்கை பண்ணும்படி செய்து, பெர்சியா ராஜாவின் அரண்மனைக்குத் திரும்பப்போனான். இவன் மறுபடியும் கி—மு. 433—ம் ஆு எருசலேமுக்கு வந்து, தேவாலயத்தில் சீர்திருத்தவேண்டிய சில காரியங்கள் உண்டு என்றும், யூதர்கள் ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்கிறதில்லை என்றும், அவர்கள் அந்நியஜாதிப் பெண்களை விவாகம்பண்ணி வந்தார்கள் என்றும் கண்டு, மறுபடியும் மார்க்கவிஷயத்தைக் குறித்துச் சீர்திருத்தம் பண்ணினான். இவன் முதல்தடவை பன்னிரண்டு வருஷக்காலம் எருசலேமுக்குத் தலைவனாக இருந்தான். ஆனால் இந்தக்காலத்தில் இவன் பெர்சியா ராஜாவின் அரண்மனைக்குத் திரும்பிப்போய் அங்கே சிலவருஷம் தங்கியிருந்தான் என்று தோன்றுகிறது. நெகே 5[16] 13[6] இவன் இரண்டாம்தடவை எருசலேமுக்கு வந்து தங்கினகாலம் எவ்வளவு என்று நாம் தீர்க்கமாய்ச் சொல்ல முடியாது.

நெகேமியா என்னும் ஆகமத்தில் நாம் நெகேமியாவின் குணலக்ஷணங்களை நன்றாய் அறியக்கூடும். இவன் கருமத்தில் சுறுசுறுப்புள்ளவனும், ராஜாவின் அரண்மனைக்குள்ளே அனுசரிக்கவேண்டிய முறைமைகளைத் தெரிந்தவனும், ஜனங்களுக்குள்ளே தைரியத்தை உண்டாக்கச் சாமர்த்தியமுள்ளவனும், பயபக்தியில் சிறந்தவனும், ஆளுந்திறமை யுள்ளவனுமாய் இருந்தான். எருசலேமுக்குத் திரும்பிவந்தவர்கள் பயப்பட்டு எருசலேமின் மதிலைத் திரும்பக் கட்டத் தவறினகாலத்தில் இவன் வந்து அவர்களைத் திடப்படுத்தி, சத்துருக்கள் செய்த தந்திரங்களை நீக்கி, எருசலேமின் மதிலைக் கட்டினதினாலே எருசலேம் நகரம் பின்காலங்களில் அடைந்த மேன்மையை ஆரம்பித்தவன் இவனே என்றும், இவன் வராதிருந்தால் சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் திகைப்படைந்து தங்களையும் தங்கள் நகரத்தையும் காப்பாற்றாமல் தங்கள் சத்துருக்களின் கையில் அகப்பட்டு முற்றிலும் நாசம் அடைந்திருப்பார்கள் என்றும் சொல்வது தகுந்தது.

**நெகேமியாவின் புஸ்தகம். The Book of Nehemiah.**

1. பெயர். முதலிலே எஸ்றாவும் நெகேமியாவும் சேர்ந்து ஒரே புஸ்தகமாய் நாளாகமப் புஸ்தகங்களுக்குக் கடைசிப் பாகமாக இருந்தன. ஆனால் இதின் பிந்தின அதிகாரங்களிலே நெகேமியாவின் சரித்திரம் விபரமாய்ச் சொல்லியிருப்பதினாலே, வேதபாரகர் இந்தப் பாகத்தைப் பிரத்தியேகமான நூலாக எழுதி இதற்கு 'நெகேமியா' என்று பெயரிட்டார்கள்.

2. பொருளடக்கம்.

இப்புஸ்தகத்தில் அடங்கிய சரித்திரத்தை மூன்று பாகமாக வகுக்கலாம்.

i. நெகேமியா தானே எழுதின விஷயங்கள்.

(1) 1[1]–7[5]. இதில் நெகேமியா தன்னுடைய நோக்கத்தையும் தான் செய்த பிரயாசையையும் எருசலேமிலே மதில் கட்டுகிற விஷயத்தையும்பற்றிச் சொல்லுகிறான்.

(2) 12[27-43]. இதில் மதில் பிரதிஷ்டை செய்யப்பட்டதைப்பற்றி நெகேமியா சொல்லுகிறான்.

(3) 13[4-31]. இதில் நெகேமியா தான் எருசலேமுக்குத் திரும்ப வருகிறதையும் தான் செய்த காரியங்களையும்பற்றிச் சொல்லுகிறான்.

ii. சில வேதபாரகரால் எழுதப்பட்டு நெகேமியாவினால் இப்புஸ்தகத்தில் சேர்க்கப்பட்ட நாம அட்டவணைகள் இந்தப் பாகத்தில் அடங்கியிருக்கிறது.

(1) $7^{6-73}$. பாபிலோனியாவிலிருந்து எருசலேமுக்குத் திரும்பி வந்தவர்களின் பெயரட்டவணை.

(2) $11^{1-35}$. எருசலேம் நகரத்தில் குடியேறும்படி சீட்டுப்போட்டவர்கள்.

iii. எஸ்றா நெகேமியா முதலியவர்கள் செய்த காரியங்களைக்குறித்தும் விசேஷமாய் ஜனங்கள் செய்த உடன்படிக்கையைக் குறித்தும் ஒரு சரித்திரக்காரன் எழுதிய பாகம்.

(1) $7^{73}$–$10^{40}$. இது நெகேமியா செய்த காரியங்களைப்பற்றிய சரித்திரமே.

(2) $12^{1-26}$. இதில் கண்ட வம்ச அட்டவணையில் நெகேமியாவின் காலத்துக்குப் பிற்பாடு இருந்த சிலருடைய பெயர் இருக்கிறதினாலே, பிந்தியகாலத்தில் இச்சரித்திரம் அனைத்தையும் ஒரே நூலாய்ச் சேர்த்து எழுதினவனால் இந்தப் பாகம் எழுதப்பட்டது என்று நாம் சொல்லலாம்.

இவை யெல்லாவற்றையும் பார்த்து, இந்நூலில் ஓர் பெரிய பாகத்தை நெகேமியாவே எழுதினான் என்றும், இன்னொரு பெரிய பாகம் நெகேமியாவையும் எஸ்றாவையும் நன்றாய் அறிந்திருந்த ஒருவனால் எழுதப்பட்டது என்றும், அந்தக் காலத்துக்குப் பிற்பாடு ஒரு சிறிய பாகம்மாத்திரம் இத்துடன் சேர்க்கப்பட்டது என்றும் தீர்மானித்த வேத சாஸ்திரிகள் இப்புஸ்தகம் எவ்விதமாயும் நம்பத்தக்க நூல் என்றே நினைக்கிறார்கள்.

**நெகோதா. Nekoda.**

1. நெதனீமியர்களில் ஒரு குடும்பம். எஸ்றா $2^{48}$.

2. சிறையிருப்பிலிருந்து யூதர்களுடனே வந்தும், தாங்கள் யூதர்கள் என்று ரூபிக்க முடியாத ஒரு குடும்பம். எஸ்றா $2^{60}$.

**நெசவு. Spinning and weaving.**

எபிரெயர்கள் தொண்டுதொட்டே, ஆட்டு மயிர், சணல் முதலியவற்றை நெய்துவந்தார்கள். நெசவுத் தொழிலைப்பற்றி வேதாகமத்தில் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

சணலை வெய்யிலில் காயவைக்கிறது. யோசு $2^{6}$.

சணல் நெய்கிறது. ஏசா $19^{9}$.

நெசவு நாடா. யோபு $7^{6}$.

நெசவுநூல் பாவை. நியா $16^{14}$.

இராட்டினம். நீதி $31^{19}$.

கதிர். நீதி $31^{19}$.

பாவு. லேவி $13^{48}$.

ஊடை. லேவி $13^{48}$.

எகிப்தியர்களைப் போலவே எபிரெயர்களும் நெசவுத்தொழிலில் சாமர்த்தியமுள்ளவர்களாய் இருந்தார்கள். இதற்குத் திருஷ்டாந்தம் தையலில்லாமல் முழுவதும் நெசவுத்தொழிலான இயேசுவின் அங்கி. யோவா $19^{23}$.

நெசவுத்தறியிலிருந்து புதிதாய் எடுக்கப்பட்ட துணி அல்லது கோடித்துணியைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. மத் $9^{16}$ மாற் $2^{21}$. விசித்திரமான உட்சட்டை என்பது ஒருவித நெசவு வேலையைக் குறிக்கிறது. யாத் $28^{4}$.

சில சமயத்தில் பிரதான ஆசாரியனுடைய வஸ்திரம் பொன் நூல் கலந்து நெய்திருக்கும். யாத் $28^{5}$ $39^{3}$. ஏரோது அகிரிப்பாவின் ராஜவஸ்திரம் வெள்ளிநூலால் நெய்யப்பட்டிருந்ததென்று சரித்திரக்காரன் ஒருவன் சொல்லுகிறான். அப் $12^{21}$. பழைய ஏற்பாட்டுக் காலத்தில் பாபிலோனிலிருந்தும் பெனிக்கேயா தேசத்திலிருந்தும் வியாபாரிகள் நல்ல துணிகளைக் கொண்டுவருவார்கள். ராஜாக்களின் காலத்தில் எருசலேம் பட்டணத்தில் நெசவுத் தொழிற்காரர் தங்கள் தொழில் அபிவிர்த்திக்காகப் பல சங்கங்களை ஏற்படுத்தினார்கள் என்று தோன்றுகிறது. 1 நாளா $4^{21}$. எபிரெயர்கள் இந்தத் தொழில் இழிவான தொழில் என்று நினைத்து நெசவுக்காரர்களைச் சிறப்பிக்கவில்லை. ஆனாலும், யூத வேத சாஸ்திரிகளில் சிலர் இந்த வேலை செய்துவந்ததினால், பரி. பவுல் இத்தொழில் செய்வது ஆச்சரியம் அல்ல. அப் $18^{3}$ 2 கொரி $11^{9}$.

**நெஸ்டோரியானர். Nestorians.**

நெஸ்டோரியஸ் (*Nestorius*) கி–பி. 428–ல். கொன்ஸ்தந்தீன்புரியில் மேற்றிராணிப்பட்டம் அடைந்தான். மரியாள் இயேசுவினுடைய மானிட சுபாவத்துக்குமாத்திரம் தாயார் என்றும், அவளைச் 'சர்வேஸ்வரனுடைய மாதா (*Theotokos*)' என்று சொல்லக்கூடாது என்றும், இயேசுவின் சரீரம் தெய்வீகத்தன்மையுடைய 'வார்த்தைக்கு' ஆலயமாய்மட்டும் இருந்தது என்றும், அவரது தெய்வ சுபாவமும் மனுஷீக சுபாவமும் இவ்விதமாய்ப் பிரிக்கப்பட்டிருந்தபோதிலும் ஒரே ஆளின் பெயரிலே அவை இணைக்கப்பட்டிருந்தது என்றும், இவன் உபதேசித்தான். ஒரே ஆளில் இரண்டுபெயர் இருக்கிறதாக நெஸ்டோரியஸ் சொல்லாவிட்டாலும், இவனுடைய உபதேசத்தைக்கேட்ட அநேகர், சர்வேஸ்வரனுடைய தன்மையுள்ள ஒரு ஆளும், மனுஷீக சுபாவமுள்ள இன்

னொரு ஆளுமாக இரண்டு ஆட்கள் இயேசு கிறிஸ்துவுக்குள்ளே அடங்கியிருக்கிறதாக இவன் போதித்தான் என்று நினைத்ததினாலே, அக்காலத்தில் உள்ள கிறிஸ்தவ சபையில் ஒரு பெரிய பிரிவினை உண்டாயிற்று. கி-பி. 431-ஆம் எபேசு பட்டணத்தில் கூடின பொதுவான சங்கத்தைச் சேர்ந்தவர்கள் இவனுடைய போதகத்தைத் தள்ளிவிட்டார்கள். இதற்குப் பிற்பாடு இவன் கொன்ஸ்தந்தீன்புரியிலிருந்து அரபிதேசத்துக்குத் துரத்துண்டு அங்கிருந்து எகிப்து தேசத்துக்கு ஓடி அங்கே மரித்தான். நெஸ்டோரியானர் நெஸ்டோரியஸ் போதித்த போதகத்தைக் கைக்கொண்டதினாலே, ரோமராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு பெர்சியா, இந்தியா, சீனா முதலிய தேசங்களுக்குப் போனார்கள். இந்த நெஸ்டோரிய கொள்கையுடைய ஒருவனிடத்திலிருந்தே மகமது கிறிஸ்தவ மதத்தைக் குறித்துக் கேள்விப்பட்டான் என்று சிலர் சொல்லுகிறார்கள்.

கி-பி. 14-ம் நூற்றாண்டுமுதல் அத்தேசங்களில் வந்த உபத்திரவங்களின் நிமித்தமும், ரோமான் கத்தோலிக் சபையைச்சேர்ந்தவர்கள் செய்த பிரயத்தனங்களின் நிமித்தமும், இவர்களில் அநேகர் ரோமாபுரியிலுள்ள பாப்புவானவருக்குக் கீழடங்கினார்கள். இவர்களுக்குத்தான் 'கல்தேயக் கிறிஸ்தவர்கள்' என்று பெயர். இவர்களுடைய குருக்கள் கலியாணம் செய்யலாம். ஆனால் இவர்கள் கண்காணிமார் கலியாணமற்றுச் சந்நியாச நிலைமையில் இருக்கவேண்டும். இவர்கள் பலதடவை உபவாசம் பண்ணுவார்கள். தென் இந்தியாவில் மலையாளக் கரையில் உள்ள 'சீரிய கிறிஸ்தவர்கள்' இந்தக் கொள்கையைச் சேர்ந்தவர்கள்.

**நேதபியா. Nedabiah.** [யேகோவா விரும்புகிறார்.] தாவீதின் சந்ததியாரில் ஒருவன் 1 நாளா $3^{18}$.

**நேதனியா, நேதானியா, நேத்தனியா, நேத்தானியா. Nethaniah.** [யேகோவா ஈகிறார்.]

1. கெதலியாவைக் கொன்றுபோட்ட இஸ்மவேலின் தகப்பன். 2 இரா $25^{23}$ எரே $40^{8}$ $41^{1}$.

2. தாவீதின்காலத்தில் இருந்த ஒரு பாடகன். 1 நாளா $25^{2}$.

3. ஒரு லேவியன். 2 நாளா $17^{8}$.

4. எகுதியின் தகப்பன். எரே $36^{14}$.

**நெதனீமியர். Nethinim.**

'நெதனீமியர்' என்னும் பதத்துக்கு 'ஏற்படுத்தப்பட்டவர்கள்' என்று அர்த்தம். பூர்வகாலத்தில் ஆசாரியர்களுக்குத் தங்கள் வேலை விஷயமாய்க் கஷ்டமே இல்லை. ஆனால் பிந்தின காலங்களில் எபிரெயர்கள் தேவாலயத்துக்குள்ளே கணக்கில்லாத தகனபலிகளைச் செலுத்திவந்தபொழுது விறகு வெட்டுகிறதும், நெருப்பு மூட்டுகிறதும், கத்திகளைத் தீட்டுகிறதும், தண்ணீர் மொள்ளுகிறதும், சாம்பல் அள்ளுகிறதும், பீடத்தையும் பணிமுட்டுகளையும் கழுவுகிறதும், வெகு கஷ்டந்தான். ஆதலால் தேவாலயத்திலே இந்த வேலைக்காக ஆசாரியர்களுக்கு உதவி செய்யும்படி ஏற்படுத்தப்பட்டவர்களுக்கு 'நெதனீமியர்' என்று பெயர்.

[தமிழ் வேதாகமத்தில் 'நெதனீமியர்' என்பதற்குப் பதிலாக 'நீதனீமியர்' என்று சொல்லியிருக்கிறது.]

இவர்கள் தாவீதின் காலத்திலே லேவியர்களுக்கு வேலையாட்களாய் இருந்தார்கள். தாவீதும் பிரபுக்களும் இந்த வேலை செய்யும்படித் தங்கள் அடிமைகளைத் தேவாலயத்துக்குக் கொடுத்ததாகத் தோன்றுகிறது. ஆகவே இவர்கள் முதலில் தேவாலயத்தின் அடிமைகளாய் இருந்தார்கள். எஸ்றா $8^{20}$. இவர்களும் 'சாலொமோனுடைய வேலையாட்களின் புத்திரரும்' ஒரே வகுப்பார்தான் என்று தோன்றுகிறது. எஸ்றா $2^{55,58}$ நெகே $7^{57,60}$ $11^{3}$. இவர்களில் அநேகர் அந்நியர்களாய் இருந்தார்கள் என்று சொல்வதற்கு அத்தாட்சி உண்டு. எசே $44^{7}$. சிறையிருப்பிலிருந்து யூதர்கள் திரும்பிவரும்பொழுது, தேவாலயத்துக்குள் வேலை செய்கிறவர்கள் அந்த ஊழியம் செய்வதினாலே கனம் அடைந்திருந்தார்கள் என்று யூதர்கள் அபிப்பிராயம் கொண்டதினாலும்; நெதனீமியர் மற்ற யூதர்களோடே பாபிலோனியாவுக்குப் போனதினாலே சிறையிருப்புக்காலத்தில் இவர்களுக்கும் மற்ற யூதர்களுக்கும் இருந்த வித்தியாசம் அற்றுபோனதினாலும்; யூதர்கள் இவர்கள் அந்நியர் என்பதை மறந்துவிட்டார்கள். இவர்கள் அக்காலமுதல் யூதர்களாய் இருந்து, யூதர்களைப்போல் விருத்தசேதனம் செய்துகொண்டு, ஆசாரியர்களுக்கும் லேவியர்களுக்கும் கீழ்ப்பட்டவர்களாயிருந்தாலும், ஜனங்கள் வழக்கமாய் இவர்கள் ஒரு விதமான தேவ ஊழியக்காரர் என்றே நினைத்தார்கள். இவ்விதமாய் எஸ்றாவும் நெகேமியாவும் ஆசாரியர் லேவியர் முதலியவர்களின் பெயர் அட்டவணையை எழுதும்பொழுது

நெதனீமியர்களின் பெயர்களையும் எழுதினார்கள். எஸ்றா 2[43] நெகே 7[46]. எஸ்றாவுடனே 220 நெதனீமியர்கள் பாபிலோனியாவிலிருந்து வந்தார்கள். எஸ்றா 8[20]. ஆசாரியர்களைப்போலவே இவர்களும் வரி செலுத்தவில்லை. எஸ்றா 7[24]. இவர்கள் ஒரு சங்கமாகித் தேவாலயம் இருக்கிற மலையில் ஓபேல் என்னும் பாகத்தில் தண்ணீர்வாசல் அண்டையில் வாசஞ்செய்தார்கள். நெகே 3[26]. இவர்களில் சிலர் யூதேயாவில் உள்ள மற்ற ஊர்களில் வசித்தார்கள். எஸ்றா 2[70].

இதற்குப் பிற்பாடு இவர்கள் மற்ற யூதர்களைப்போல, இருந்து யூதர்களுடனேமாத்திரம் சம்பந்தம் செய்துவந்தார்கள். நெகே 10[28]. பிந்தின காலத்தில் லேவியர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள வித்தியாசம் தெரியவில்லை.

**நெதனெயேல்.** Nethaniel. [கடவுள் ஈகிறார்.]

1. இசக்காரின் பிரபுக்களில் ஒருவன். எண் 1[8] 10[15].

2. தாவீதின் சகோதரரில் ஒருவன். 1 நாளா 2[14].

3. தாவீதின் காலத்தில் இருந்த ஒரு ஆசாரியன். 1 நாளா 15[24].

4. ஒரு லேவியன். 1 நாளா 24[6].

5. ஓபேத்–ஏதோமின் புத்திரரில் ஒருவன். 1 நாளா 26[5].

6. யோசபாத் ராஜா ஜனங்களுக்குப் போதனை கொடுக்கும்படி அனுப்பினவர்களில் ஒருவன். 2 நாளா 17[7].

7. யோசியாவின் காலத்தில் லேவியர்களில் ஒரு தலைவன். 2 நாளா 35[9].

8. அந்நிய ஜாதிப்பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்றா 10[22].

9. யொயகீமின் காலத்திலுள்ள ஓர் ஆசாரியன். நெகே 12[21].

10. ஒரு லேவியன். நெகே 12[36].

**நெதானியா.** Nethaniah. நெதனியா காண்க.

**நெத்சியா.** Neziah. நெதனீமியர்களில் ஒரு குடும்பம். எஸ்றா 2[54].

**நெத்சீப்.** Netzib. எப்ரோன் பட்டணத்துக்கு வடமேற்கே ஏழுமைல் தூரத்தில் உள்ள ஒரு ஊர். யோசு 15[43].

**நெத்தனியா.** Nethaniah. நெதனியா காண்க.

**நெத்தானியா** Nethaniah. நெதனியா காண்க.

**நெத்தோபா.** Netophah.

யூதா நாட்டிலே எருசலேமுக்குத் தென்கே பெத்லெகேமுக்குச் சமீபத்திலுள்ள ஒரு ஊர். 2 சாமு 23[28] 2 இரா 25[23] நெகே 7[26].

**நெபலாத்.** Neballat.

பென்யமீனர் வசித்த ஓர் ஊர். நெகே 11[34]. இது எருசலேமுக்கு வடமேற்கே ஏறக்குறைய 20 மைல் தூரத்தில் இருந்தது.

**நெபாயோத்து.** Nebaioth.

வட அரபி தேசத்திலுள்ள ஒரு கோத்திரம். இதின் கோத்திரப் பிதாவாகிய நெபாயோத்து இஸ்மவேலின் மூத்த மகன். ஆதி 25[13] 28[9]. அசீரியா ராஜாவாகிய அசூர்பானிபால் ஏறக்குறைய கி–மு. 650–ஆய் இவர்களை ஜெயித்தான். இவர்கள் ஒரு காலத்தில் பலெஸ்தீனாவின் தென்கிழக்கு எல்லைவரைக்கும் பரவினார்கள். ஏசா 60[7].

**நேபாய்.** Nebai.

நெகேமியாவின் காலத்தில் உடன்படிக்கைக்கு முத்திரைபோட்டவன். நெகே 10[19].

**நெபிஷசீம்.** R. V. Nephushesim. நெகே 7[52] நெபுசீம் காண்க

**நெபிலீம்.** Nephilim.

இந்த எபிரெய பதம் பழைய ஏற்பாட்டில் இரண்டு வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி 6[4] எண் 13[33]. இராக்ஷதர் காண்க. பக். 135.

**நெபுசராதான்.** Nebuzaradan.

இப்பாபிலோனிய பதத்துக்கு 'நபூ என்னும் தேவன் விதை கொடுத்திருக்கிறான்' என்று அர்த்தம். இவன் நேபுகாத்நேச்சாரின் மெய்க்காவலாளருக்குத் தலைவன். ராஜா எருசலேமைப் பிடித்தபிறகு இவன் யூதாவுக்குத் தேசாதிபதியாய் இருந்தான். 2 இரா 25[8] எரே 39[9] 40[1] 52[12].

**நெபுசீம்.** Nephusim. அரபி தேசத்தில் வசிக்கும் ஒரு கோத்திரம். =நெபிஷசீம் எஸ்றா 2[50] நெகே 7[52].

**நெப்தோவா.** Nephtoa.

யூதா பென்யமீன் நாடுகளுக்கு இடையில் இருக்கிற எல்லையில் உள்ள ஒரு ஊர். இது எருசலேமுக்கு வடமேற்கே இரண்டுமைல் தூரத்தில் இருக்கிறது. இதில் தண்ணீர் ஊற்று அதிகம் என்று சொல்லியிருக்கிறதினாலே, இதுவும் இப்போது இருக்கிற 'சாலொமோன் குளங்களுடைய ஏத்தானும், ஒன்றுதான்' என்று தோன்றுகிறது. யோசு 15[9] 18[15].

**நெப்பேக்.** **Nepheg.** [துளிர்.]

1. கோராவின் சகோதரன். யாத் $6^{21}$.

2. தாவீதின் புத்திரரில் ஒருவன். 2 சாமு $5^{15}$.

**நெயாப்போலி.** **Neapolis.**

பிலிப்பிப் பட்டணத்தின் துறைமுகமாகிய இதின் மூலமாய்ப் பரி. பவுல் முதல் முதல் ஐரோப்பாக் கண்டத்துக்குள் பிரவேசித்தான். இதற்கும் பிலிப்பிப் பட்டணத்துக்கும் 10 மைல் தூரம். ஐரோப்பாக் கண்டத்திலிருந்து பிரயாணம் செய்கிறவர்கள் வழக்கமாய்ப் பிலிப்பிப் பட்டணத்தின் மூலமாய் நெயாப்போலிக்கு வந்து, அங்கே கப்பல் ஏறி, சின்ன ஆசியாவில் உள்ள துறைமுகத்தில் இறங்கி சீரியாவுக்கும் ஆசியாவுக்கும் பிரயாணம் பண்ணுவார்கள். இப்பட்டணம் மக்கெதோனியா நாட்டைச் சேர்ந்தது. அப் $16^{11}$.

இத்தாலியா தேசத்தில் ரோமாபுரிக்குத் தெற்கே இன்னொரு நெயாப்போலி இருந்தது. ஆனால் இதைப்பற்றி வேதாகமத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை.

**நெயாரியா** **Neariah.** [யேகோவா துரத்துகிறார்.] தாவீதின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $3^{22}$.

**நெரிசல்.** **'Broken.'** லேவி $22^{22}$. **அசுத்தம்** காண்க.

**நெரிஞ்சல்.** **Brier.** நியா $8^{7}$ ஏசா $5^{6}$ $7^{23}$ உவமையாய்: ஏசா $10^{17}$ $27^{4}$ எசே $28^{24}$ மீகா $7^{4}$. **முள்ளு** காண்க.

**நெருக்கம்** **Affliction.** ஏசா $63^{9}$ எரே $15^{11}$ 2 கொரி $6^{4}$.

**நெருக்குண்டு செத்தது.** **'Things strangled.'**

கழுத்தை நெருக்கித் தற்கொலை செய்துகொள்ளுவதும், கழுத்தை நெருக்கி ஒருவனைச் சாகும்படி செய்வதும் எபிரெயர்களுக்குத் தெரிந்த காரியம். யோபு $7^{15}$. அகித்தோபேலும் யூதாஸ் காரியோத்தும் நான்றுகொண்டு மாண்டார்கள். 2 சாமு $17^{23}$ மத் $27^{5}$. ஆனால் அப் $15^{20,29}$ $21^{25}$-ல் சொல்லியிருக்கிற 'நெருங்குண்டு செத்தவைகள்' என்பது எபிரெய ரபிமார்கள் அதிக நுட்பமாய் ஏற்படுத்தின ஆசாரப் பிரமாணங்களின்படி கொல்லப்படாமல் அந்நியருடைய வழக்கத்தின்படி வெட்டுண்ட ஆடு மாடு கோழி முதலியவைகளைக் குறிக்கிறது.

**நெருப்புச்சட்டி, தூபகலசம்.** **Fire pan, Censer.**

இது வெண்கலத்தினாலாவது வெள்ளியினாலாவது பொன்னினாலாவது செய்த ஒருவிதச் சட்டி. யாத் $27^{3}$ 1 இரா $7^{50}$. பெரிய கரண்டியைப்போல் இருக்கும் இவற்றைக்கொண்டு தகனபலி பீடத்திலிருந்து சாம்பல் கரி முதலியவற்றை எடுப்பார்கள். சில சமயங்களில் இவ்வித நெருப்புச்சட்டியில் அக்கினிக்கரியை வைத்து அதின்மேல் தூபவர்க்கம்போட்டு அதைத் தூபகலசமாக உபயோகிப்பார்கள். இச்சட்டியைக்கொண்டு பொன் விளக்குத்தண்டிலிருந்து எரிந்துபோன திரியை எடுப்பார்கள். லேவி $10^{1}$ $16^{12}$ எண் $4^{14}$ 1 இரா $7^{50}$.

**நேர்கல் சரேத்சேர்.** **Nergal-sharezer.**

பாபிலோனியா பாஷையில் இந்தப் பதத்துக்கு 'நேர்கால் என்னும் தேவன் ராஜாவைக் காப்பாற்றுகிறான்' என்று அர்த்தம். **நேர்கால்** காண்க. இந்த 'நெர்கல் சரேத்சர்' பாபிலோனியா தேசத்தில் 'ரப்மாக' என்னும் உத்தியோகஸ்தனாய் இருந்தான். அதாவது இவன் பாபிலோனியா ராஜாவின் அரமனையில் பிரதம ஜோசியனாய் அல்லது பிரதான சாஸ்திரியாய் இருந்தான். **சாஸ்திரி** காண்க. இவன் சிறைச்சாலையிலிருந்த எரேமியாவை விடுதலை பண்ணினான். எரே. $39^{3}$.

**நெறி.** **Path.** 'நீதி நெறி.' நீதி $2^{13}$.

**நெற்றி.** **Forehead.** யாத் $28^{38}$ 1 சாமு $17^{49}$ 2 நாளா $26^{19}$ எசே $9^{4}$ $16^{12}$ எரே $3^{3}$. வெளிப்படுத்தின விசேஷத்தில் பரிசுத்தவான்களின் நெற்றிகளில் முத்திரை போடப்படுகிறது என்பதற்கு அவர்கள் சத்தியத்துக்குச் சாட்சிகளும் நன்னடக்கையினால் தேவசாயலை யுடையவர்களுமாய் இருக்கிறார்கள் என்று அர்த்தமே. வெளி $7^{3}$ $14^{1}$ $22^{4}$. அப்படியே தீயோர் ஒரு முத்திரையைப் பெறுவார்கள். வெளி $13^{16}$ $14^{9}$. 'ஸ்திரீயின்' நெற்றியில் எழுதினதாவது. வெளி $17^{5}$. **முத்திரை** காண்க.

## நே.

**நேகியேல்.** **Neiel.** [கடவுளின் இருப்பிடம்.] இதுவும் நேயாவும் ஒன்றாய் இருக்கலாம். யோசு $19^{27}$.

**நேகோ.** **Necho.**

எகிப்துதேசத்தின் ராஜாக்களில் ஒருவன். 2 இரா $23^{29}$. **எகிப்து,** பக். 158 காண்க.

**நேசர்.** **Lover. Friend.**

உன். பா $2^{16}$ எரே. $3^{2}$ $22^{22}$ $30^{14}$ புல 1 ஓசி $2^{5}$ $8^{9}$. **அன்பு.** காண்க.

**நேபாத்.** **Nebat.**

முதல் யெரொபெயாமின் தகப்பன். 1 இரா 11[26].

**நேபுகாத்நேச்சார். Nebuchadnezzar.**

'நேபுகாத்நேச்சார்' என்னும் பெயரைச் சரியாய் எழுதவேண்டுமானால் 'நேபுகாத்ரேத்சார்' என்றெழுதவேண்டும். நேபுகாத்நேச்சாரின் தகப்பன் பாபிலோனியாவிலே கி–பி. 625-ல் பெரிய ராஜாங்கத்தை ஸ்தாபித்தான். தவிர நேபுகாத்நேச்சார் யூதேயா தேசத்தின் ராஜாவாகிய யோசியாவை ஜெயித்து அத்தேசத்தை விட்டு எகிப்துதேசத்திற்கு விரோதமாய்ப் படையெடுக்கப் போகும்போது, முதல்தடவை எருசலேமை முற்றிகைபோட்டு தன் தகப்பன் மரித்துப்போன சங்கதியைக் கேள்விப்பட்டு, பாபிலோனியாவுக்குப் போய தன் ஆளுகையை ஸ்திரப்படுத்தி அதற்குப் பிற்பாடு திரும்பிவந்து எருசலேமை மறுபடியும் முற்றிகைபோட்டு அதிலிருந்த ஜனங்களெல்லாரையும் சிறையாக்கிப் பாபிலோனியாவுக்குக் கொண்டுபோனான் என்று தோன்றுகிறது. இவன் பாபிலோன் பட்டணத்திற்கு மூன்று மதில்களையும் அதிலே அநேக ஆலயங்களையும் கட்டி, சொல்லமுடியாத மேன்மையுடனே அப்பட்டணத்தை அதிக விநோதமாய் அலங்கரித்தான். இவன் சிலகாலம் ஒருவிதமான பைத்தியம் பிடித்தவனாயிருந்தபோதிலும் இவன் பாபிலோனியா ராஜ்யத்தில் அரசாட்சி செய்தவர்களில் மிகவும் விசேஷித்தவனா யிருந்தானென்று சொல்லலாம். இவன் கி–மு. 604-ல் முதல், 561-ல் வரைக்கும் ஆளுகை செய்தான். 2 இரா 24[1] 2 நாளா 36[6] எஸ்ரா 1[7] எரே 21[2] 24[1] 25[1] 28[3] 34[1] 39[1] 46[13] 52[12] தானி 1, 2, 3, 4, 5 அதி.

**நேபுசஸ்பான். Nebushazban.**

பாபிலோனியா பாஷையில் இந்தப் பெயருக்கு 'நபூ என்னும் தேவனே என்னை ரக்ஷித்துக்கொள்' என்பது அர்த்தம். இவன் 'ரப்சாரீஸ்' என்னும் உத்தியோகஸ்தனாய், பாபிலோனிய ராஜாவின் அரமனையில் பெரிய ஸ்தானத்திலிருந்தான். நேபுகாத்நேச்சார் எருசலேமைப் பிடிக்கும்போது இவன் ராஜாவோடேகூட இருந்தான். எரே 39[13].

**நேபோ. Nebo.**

1. இந்துக்கள் வணங்கும் சரஸ்வதிதேவியைப்போல் பாபிலோனியர்கள் நேபோ என்னும் தேவனை வணங்கி, இந்தத் தேவன் சகல கல்விக்கும் சர்வ சாஸ்திரத்துக்கும் கர்த்தாவாய் இருக்கிறான் என்று நினைத்தார்கள். இவன் பெயரின் அருத்தம் என்ன



நேபோ தேவன்.

வென்றால் 'சங்கதி தெரிவிக்கிறவன்' என்பதே. அவர்கள் சொன்னபடி இந்தத் தேவன் மனுஷருக்கு எழுத்துகளைத் தெரிவித்தான். இவனுடைய பெயரைச் சரியாய்ச் சொல்லவேண்டுமானால் 'நபூ' என்பதாம். 'நேபுகாத்நேச்சார்' 'நேபுசராதான்' முதலிய பாபிலோனிய பதங்களில் இந்தப் பதம் சேர்ந்திருப்பதினாலே, இந்தப் பெயர்கொண்டவர்கள் விசேஷமாய் இந்தத் தேவனை வணங்கினார்களென்று அறியவேண்டும். ஏசா 46[1].

2. யூதா நாட்டில் எருசலேமுக்கு வடமேற்கில் ஏறக்குறைய பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ள ஓர் ஊர். எஸ்ரா 2[29].

3. மோவாப் தேசத்தில் உள்ள ஓர் ஊர். இது இருந்த இடம் இன்னதென்று நமக்குத் தெளிவாய்த் தெரியவில்லை, ஆனால் இது நேபோ மலைநாட்டில் இருக்கலாம். எண் 32[3] ஏசா 15[2] எரே 48[1].

4. நேபோ மலை யோர்தான் நதிக்குக் கிழக்கே மோவாப் தேசத்தின் வடஎல்லையில் சாக்கடலின் வடமூலையிலிருந்து ஏறக்குறைய 10 மைல் தூரத்தில் இருந்த ஒரு மலைநாடு. இந்த மலைநாடு யோர்தான் நதியின் பள்ளத்தாக்குக்கு மேலே தென் இந்தியாவிலுள்ள சேர்வராய மலையைப்போல ஏறக்குறைய 4000 அடி உயரம் இருக்கும். இதின்மேல் நிற்

கிற ஒருவன் எழுபது மைல் தூரத்திலுள்ள தாபோர் மலையையும் மேற்கிலுள்ள யூதா தேசத்து மலைநாட்டையும் நன்றாய்ப் பார்க்கக்கூடும். இந்த மலைமேலே மோசே நின்று பரிசுத்த பூமியைப் பார்த்தபிறகு இதில் மரித்தான். இதின் மறுபெயர் 'பிஸ்கா.' உபா $32^{49}$ $34^{1}$. பிஸ்கா காண்க

5. ஒரு யூதன். எஸ்ற $10^{43}$.

6. நெபாயி காண்க. நேகே $10^{19}$.

**நேமிக்கிறது. Appoint.**

மீகா $6^{9}$.

**நேமுவேல். Nemuel.**

1. = எமுவேல். ஆதி $46^{10}$ எண் $26^{12}$.

2. ரூபன் கோத்திரத்தான். எண் $26^{9}$.

**நேயா. Neah.** செபுலோன் நாட்டில் உள்ள இந்த ஊர் இருந்த இடத்தைப்பற்றி நமக்குத் தெரியாது. யோசு $19^{13}$.

**நேரி. Neri.**

இயேசுவின் முற்பிதாக்களில் ஒருவன். லூக் $3^{27}$.

**நேரியா. Neriah.** [யெகோவா ஒளியாய் இருக்கிறார்.] பாருக் என்னும் வேதபாரகனின் தகப்பன். எரே $32^{12}$ $36^{8}$ $51^{59}$.

**நேரேயு. Nereus.**

ரோமாபுரிச்சபையிலுள்ள ஒரு கிறிஸ்தவன். இவனுக்கும் இவன் சகோதரனுக்கும் பரி. பவுல் வந்தனம் செலுத்துகிறான். ரோம $16^{15}$.

**நேரோ. Nero.**

நேரோ என்பவனுடைய பெயர் புதிய ஏற்பாட்டில் சொல்லப்படாவிட்டாலும், இவனுக்குப் பரி. பவுல் அபயம் இட்டதினாலும், இவன் அரமனையிலும் சேனையிலும் இருந்த சிலர் கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்ததினாலும், '666' என்னும் இலக்கம் இவனுடைய நாமத்தை ரகசியார்த்தமாய்க் குறிக்கிறதினாலும், இவனுடைய பெயரை நாம் இந்த அகராதியிலே சேர்க்கவேண்டும். அப் $25^{10}$ பிலி $4^{22}$ வெளி $13^{18}$.

ரோம ராஜ்யத்தில் ஒரு பெரிய சேனாதிபதியாகிய இவனுடைய தகப்பன் கி—பி. 40—ஆ மரித்தபிற்பாடு, கிலவுதியுராயன் இவனுடைய தாயை விவாகம் பண்ணிக் கொண்டான். இவனுடைய தாய் செய்த பிரயத்தனத்தினால் அந்த ராயன் இவனைத் தனது தத்துப்புத்திரனாக ஏற்படுத்தினபிற்பாடு, கி—பி. 54—வருஷத்தில் அந்த ராயன் நஞ்சூட்டப்பட்டு கொலை செய்யப்பட்ட பொழுது, இவன் ரோமாராஜாங்கத்துக்கு ராயன் ஆனான். இவன் கி—பி. 54—68 வரை 14 வருஷமாக ஆளுகை செய்தான். இவன் அரசாட்சி செய்த முதல் 5 வருஷங்களில் இவனுடைய மந்திரிகளில் சிறந்த வித்வானாகிய செனக்கா (*Seneca*) என்பவனும் நியாயத்தை விரும்பின சேனாதிபதியாகிய புரஸ் (*Burrus*) என்பவனும் இவனுக்கு நல்ல புத்திமதிகளைக் கொடுத்ததினாலே, அந்த வருஷங்களில் இவன் நியாயத்தின்படி ஆளுகை செய்தான். ஆயினும் இவனுடைய குணலட்சணங்கள் அதிக கேடுள்ளவைகளானதினாலும், இவன் தாய் தகப்பன் பொல்லாதவர்களானதினாலும், இவனுடைய பரிவாரங்களில் கொடிய துஷ்டர்கள் அநேகர் இருந்ததினாலும் இவன சீக்கிரத்திலே காமக்குரோதங்களில் விழுந்து சொல்லமுடியாத தீமைகளைச் செய்யும்படி ஆசைப்பட்டான். இவன் தன் சகோதரனை நஞ்சு உண்ணச்செய்து தன் சொந்த தாயாரையும், தன் மனைவியையும் கொன்றுபோட்டான். நல்லவனாகிய அந்தச் சேனாதிபதி இறந்துபோனபிறகு, அந்த வித்துவான் இவனுக்குப் பயந்து ராஜாவின் அரமனையை விட்டுத் தனது சொந்த ஊருக்குப் போய்விட்டான். இதற்குப் பிற்பாடு தான் செய்த துஷ்டத்தனத்தினாலே, தான் இஷ்டப்பட்ட தோழர்களைத்தவிர ரோமாபுரியிலும் மற்றப் பாகங்களிலும் உள்ள யாவரையும் இவன் பயமுறுத்தினான். சில துஷ்டர்கள் செய்த உபாயத்தினாலே கி—பி. 64—ஆ ரோமாபுரியில் தீப்பற்றிப பல பாகங்களில் அநேக வீடுகள் எரிந்து, அந்த நகரில் மூன்றில் இரண்டு பாகங்கள் அக்கினிக்கு இரையானது. அக்காலத்தில் ராயன் ஜனங்களுக்குச் சம்பவித்த துன்பத்துக்காக இரக்கங் காட்டாததினிமித்தம் அநேகர் இவன் பெயரில் கோபங்கொண்டதினாலே, இவன் தன் மேல் இருந்த அந்தக் கோபத்தை மாற்றும்படி, கிறிஸ்தவர்கள் இந்தப் பெரிய துரோகத்தைச் செய்திருக்கிறார்கள் என்று சொல்லி அவர்கள்மேல் குற்றம் சாற்றினான். அக்காலத்துச் சரித்திரக்காரர் இது பொய்யென்றே சொல்லுகிறார்கள். ஆனால் அந்த நகரத்தார் தாங்கள் செய்த பாவங்களினிமித்தம் கிறிஸ்தவர்கள் தங்களைக் கண்டித்ததினாலே அந்தக் கிறிஸ்தவர்களின்பேரில் பகையுள்ளவர்களாய் இருந்து ராஜா செய்த ஏவுதலின்படி கிறிஸ்தவர்களை இம்சிப்பது நல்லது என்று இதற்குச் சம்மதித்தார்கள். இதின்படி ராஜா அநேக கிறிஸ்தவர்களைப் பிடித்துக்கொண்டு அவர்களுக்குச் சொல்லமுடியாதவிதமாய்ப் பல வேதனைகளைச் செய்து

சிங்கங்களுக்கும் புலிகளுக்கும் அநேகரையும் பைத்தியம்பிடித்த எருதுகள் அவர்களை மிதிக்கும்படி நிருவாணிகளாய் அநேகரையும் எறிந்துவிட்டு, பலருக்குக் கீல் பூசப்பட்ட வஸ்திரங்களைக் கட்டி தன் அரமனையின் தோட்டத்தில் அவர்களை தீபஸ்தம்பங்களாக வைத்து, தன் மனதிலிருக்கிற குரூர குணம் எல்லாவற்றையும் காட்டினான்.

இதற்குப் பிற்பாடு கி–பி. 65–ஆம் தனது பரிவாரங்களில் சிலர் தன்னைக் கொல்லும்படி விரும்புகிறார்கள் என்று இவன் சாக்குச் சொல்லி அவர்களில் அநேகரைக் கொன்று போட்டான். அக்காலத்தில் அந்த நல்ல வித்துவானையும் கொலைசெய்தான். அக்காலத்தில் தான் இரண்டாம்முறை விவாகஞ்செய்த மனைவி கர்ப்பவதியாயிருந்தபோது இவன் அவளைக் காலால் உதைத்துக்கொன்றுபோட்டான். இவனால் கொல்லப்பட்டவர்களின் தொகையைச் சொல்வது அரிது. கடைசியாக இவனுடைய பரிவாரங்கள் இவன் செய்த கொடூரத்தைச் சகிக்க முடியாதவர்களாயிருந்து போர்ச்சேவகருடனே உடன்பாடு பண்ணி கி–பி. 68–ஆம் இவனைக் கொன்று போட்டார்கள். இவனைக் குறித்து நாம் இரண்டு விஷயங்கள் கவனிக்கவேண்டும்:

1. பரி. பவுல் இந்த இராயன்பேரிலே அபயமிட்ட காலம் இவனது நல்ல மந்திரிகள் இவன்மேல் செல்வாக்குடையவர்களாய் இருந்த காலமே. இதினிமித்தம் பரி. பவுல் ரோமாபுரிக்கு வந்து (அப் 28.) பலகாலம் அந்த நகரத்தில் வைக்கப்பட்டிருந்தாலும் கடைசியிலே ஏறக்குறைய 61–ஆம் இராயன் அவனை விசாரணைபண்ணி அவனை விடுதலை செய்தான்.

2. கி–பி. 64–ஆம் ரோமாபுரியில் தீப்பற்றினபிறகு ராயன் கிறிஸ்தவர்களில் அநேகரைப் பிடித்துக் கொன்றகாலத்தில், ரோம உத்தியோகஸ்தர்கள் பவுலை மறுபடியும் பிடித்து அவனை ரோமாபுரிக்கு அனுப்பினபொழுது ராயன் அவனைப்பற்றி நியாய விசாரணை செய்யாமலே அவனுக்குக் கொலைத்தீர்ப்பு விதித்தான்.

**நேர்**. Ner. [வெளிச்சம்.] அப்நேரின் தகப்பன். 1 சாமு $14^{50}$ $26^{5}$.

**நேர்கால்**. Nergal.

பாபிலோன் தேசத்தார் வணங்கின இந்த் தேவதையைச் சர்கோன் ராஜா சமாரியா தேசத்தில் குடியேற்றின ஜனங்கள் சமாரியாவிலே தொழுதுகொள்ள ஆரம்பித்தார்கள். 2 இரா $17^{30}$. யுத்தத்துக்கும் வேட்டைக்கும் தேவனாகிய இவன் வியாதியையுங் கூட அனுப்புவதாக அவர்கள் எண்ணினார்கள்.

**நேற்று**. Yesterday.

1 முந்தின நாள். ஆதி $31^{29}$ யாத் $5^{14}$ 1 சாமு $20^{27}$ யோவா $4^{52}$ அப் $7^{28}$.

2 கடந்துபோன காலம். யோபு $8^{9}$ சங் $90^{4}$ எபி $13^{8}$.

## நை.

**நைல் நதி**. The River Nile.

எகிப்தியர்கள் வழக்கமாய்ப் பெரிய நதி என்று பெயரிட்ட இந்த நதிக்கு எபிரெயர் சாதாரணமாய் 'நதி' என்று மாத்திரம் சொன்னார்கள். இது ஆபிரிக்காக் கண்டத்தின் மத்தியிலிருந்து எகிப்து தேசத்தின் மூலமாய்க் கடலுக்குப் பாய்ந்து, அந்தத் தேசத்தின் சர்வ செல்வத்துக்கும் காரணமாயிருக்கிறது. ஏனென்றால் இந்த நதியின் ஓரத்தில் தவிர மற்றப் பாகங்களில் எல்லாம் எகிப்து தேசம் வனாந்தரமாய் இருக்கிறது. இது பெரிய நதியானதினால் தென் எகிப்திலிருந்து வட எகிப்துக்குப் பிரயாணிகளும் வியாபாரிகளும், கப்பல் ஏறி இதின் மூலமாய் யாத்திரை செய்வார்கள். இதில் நீர்யானையும் மீன் முதலை முதலிய நீர்வாழும் ஜெந்துக்களும் அதிகம். மழைகாலத்தில் இந்த ஆற்றில் தண்ணீர் அதிகமானதினாலே அது கரைபுரண்டோடிப் பக்கத்தில் உள்ள பூமி எல்லாவற்றையும் நீர்ப்பாச்சும். மழைகாலம் முடிந்தபிறகு தண்ணீர் சிறிது சிறிதாய் வற்றிப்போகையில் சமுசாரிகள் உடனே ஈரமான வயல்களில் பயிர் இடுவார்கள். இதின் தண்ணீர் கொஞ்சங் குறைந்துபோனபிறகு ஏற்றத்தின் மூலமாயும் தண்ணீர்ச் சக்கரத்தின் மூலமாயும் தண்ணீர் இறைத்து நீர்ப்பாய்ச்சல் செய்வார்கள். எகிப்தியர் நைல் நதியாகிய தெய்வத்தை வணங்கினார்கள். ஆதி $41^{1}$ யாத் $1^{22}$ $2^{3}$ $7^{17}$ $8^{3}$ $17^{5}$ ஏசா $19^{6}$ $3$ $5^{21}$. நதி காண்க.

**நைவேத்தியம்**. Offering. பலி காண்க.

## நொ.

**நொண்டி**. Lame. நீதி $26^{7}$ மீகா $4^{7}$ செப $3^{19}$. சப்பாணி, முடம் காண்க.

**நொவதியா**. Noadiah.

எஸ்றாவின் காலத்தில் உள்ள ஒரு லேவியன். எஸ்றா $8^{33}$.

**நொவதியாள்**. Noadiah.

நெகேமியாவுக்கு விரோதமாய் இருந்த தீர்க்கதரிசியான ஒருத்தி. நெகே $6^{14}$.

25[15] ஏசா 57[15] எரே 23[29] 51[20] தானி 2[33] 6[24] வெளி 2[27].

நொறுங்குகிறது. Broken. 2 நாளா 34[4] யோபு 13[25] 16[14] சங் 2[9] 16[14] 34[18] 51[17] நீதி.

## நோ.

நோ, நோ–அம்மோன். No, No-ammon.

எகிப்து தேசத்திலுள்ள ஒரு பெரிய நகரம். இதற்கு தேப்ஸ் (*Thebes*) என்று மறுபெயர். இது மத்தியதரைக் கடலுக்கு நேர் தேற்கே ஏறக்குறைய 400 மைல் தூரத்தில் நைல் நதியின் ஓரத்தில் இருந்தது. இதற்குச் சுற்றிலும் உள்ள தேசம் எல்லாம் வனாந்தரமாய் இருந்தாலும், நைல் நதி இதின் மூலமாய்ப் பாய்கிறதினாலே இது மிக்கச் செழிப்புற்றிருந்ததினிமித்தம் எகிப்திய ராஜாக்களில் சிலர் இதைத் தங்களுக்குத் தலைநகரியாக வைத்துக்கொண்டார்கள். பின்காலத்தில் அது எகிப்து ராஜ்யத்துக்குத் தலைப்பட்டணமாய் இராமற்போனாலும், இதில் அம்மோன் தேவதைக்கு ஆலயங்களை ஏற்படுத்தினதினாலே இதிலே அம்மோன் தேவதையை வணங்குகிறவர்கள் எப்பொழுதும் அந்தத் தேவதையை விசேஷமாய்த் தொழுதுகொள்வார்கள். அசீரிய ராஜாவாகிய அசூர்பானிபால் என்பவன் கி-மு. 666-ல் நோ-அம்மோனுக்குச் செய்த அழிவைப்பற்றி நாகூம் தீர்க்கதரிசி சொல்லுகிறான். ஆனால் இதற்குப் பிற்பாடு இதின் ஆசாரியர்கள் இதின் ஆலயங்களை மறுபடியும் கட்டினார்கள். இயேசுகிறிஸ்துவின் காலத்துக்கு முந்தி இது முற்றிலும் அழிந்துபோயிற்று.

எகிப்தியர்கள் நோ பட்டணத்தில் வணங்கின அம்மோன் தேவனும் சூரிய தேவனும் ஒருவன்தான் என்றும், இவன் மானிடசாயலைத் தரித்தவன் என்றும், இவன் பச்சை நிறமுள்ளவன் என்றும் சொன்னார்கள். எரே 46[25] எசே 30[14] நாகூம் 3[8].

நோகா. Noga. [பிரகாசிக்கிறது.]

தாவீதின் புத்திரரில் ஒருவன். 1 நாளா 3[7].

நோகா. Nohah. [இளைப்பாறுதல்.] பென்யமீனின் நாலாம் மகன். 1 நாளா 8[2].

நோக்குகிறது. Look. யோபு 6[28] ஏசா 45[22] மீகா 7[7] லூக் 22[61] 2 கொரி 4[17] பிலி 2[4].

நோதாப். Nodab.

ரூபன் கோத்திரத்தார் ஜெயித்த ஒரு கோத்திரம். 1 நாளா 5[19].

நோத். Nod. [அலைந்து திரிந்த நாடு.]

காயீன் ஆபேலைக் கொலைசெய்தபிறகு போன தேசம். இது இருந்த இடத்தைத் தெளிவாய்க் குறிப்பிட முடியாது. ஆதி 4[16].

நோபாக். Nobah.

1. கேனாத் ஊரைப் பிடித்த ஒரு கோத்திரம். எண் 32[42].

2. யாபோக் நதியின் பக்கத்தில் இருந்த ஓர் ஊர். இதின் பக்கத்தில் சேபா முதலிய வர்களைக் கிதியோன் துரத்தினான். நியா 8[11]. இதுவும் நோப்பாவும் ஒன்றாய் இருக்கலாம். எண் 21[30].

நோப். Nob.

சீலோ என்னும் பரிசுத்த ஸ்தலம் அழிக்கப்பட்டபின்பு, அதின் ஆசாரியர்கள் குடியேறின ஒரு ஊர். இது பென்யமீன் நாட்டிலே எருசலேமுக்கு வடக்கே இருந்தது. இதிலேதான் தாவீதுக்குச் சகாயஞ்செய்த ஆசாரியர்களைத் தோவேக்குக் கொலைசெய்தான். 1 சாமு 21[1] 22[9] நெகே 11[32] ஏசா 10[32].

நோப். Noph.

எகிப்து தேசத்தில் தற்காலத்துக் கைரோப் பட்டணம் இருக்கும் இடத்துக்குத் தெற்கே இருந்த இப்பட்டணம் பல நூற்றாண்டுகளாக எகிப்து ராஜ்யத்துக்குத் தலைநகரியாய் இருந்தது. இதற்கு மெம்பிஸ் (*Memphis*) என்று மறுபெயர். தற்காலத்தில் நாம் மிக்க ஆச்சரியத்துடனே காண்பவைகளும், நோப் பட்டணத்தில் அரசாட்சிசெய்த ராஜாக்களின் கல்லறைகளுமாகிய செய்குன்றுகள் (*Pyramids*) இங்கே இருந்தன. தீரகா, நோகோ, ஆப்பிரா என்னும் ராஜாக்கள் இதிலே ஆளுகை செய்தார்கள். கி-மு. 332-ல் அலெக்சந்திரியாப் பட்டணம் அஸ்திபாரம் போடப்பட்டபிறகு இதின் மேன்மை குறைந்துபோனது. எகிப்தியர் இதில் ஆபிஸ் (*Apis*) என்னும் எருதை வணங்கினார்கள்.

இது 'நோப்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா 19[13] எரே 2[16] 44[1] 46[14] எசே 30[13].

இது 'மோப்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஓசி 9[6]. இதற்கு மெம்பிஸ் என்னும் பெயரும் கூறப்பட்டிருக்கிறது. பக்கத்துறிப்பு காண்க.

நோப்பா. Nophah. நோபாக் காண்க.

நோவா. Noah. [இளைப்பாறுதல்.]

ஜலப்பிரவாகத்தைப்பற்றியும் நோவாவைப்பற்றியும் உள்ள சமாசாரம் எல்லாம், ஆதி

5, 6, 7, 8, 9-ம் அதிகாரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. 1 நாளா $1^{4}$ ஏசா $54^{9}$ எசே $14^{14}$ மத் $24^{37}$ லூக் $3^{36}$ $17^{26}$ எபி $11^{7}$ 1பேது $3^{20}$ 2 பேது $2^{5}$. சலப்பிரளயம் காண்க.

**நோவாள்.** Noah. [முகஸ்துதி.]

செலோப்பியாத்தின் குமாரத்திகளில் ஒருத்தி. அவனுக்குக் குமாரர்கள் இல்லாததினால் அவன் குமாரத்திகள் அவனுக்குச் சுதந்தரவாளிகளாய் இருக்கும்படி ஏற்பாடு உண்டாயிற்று. எண் $26^{33}$ $36^{11}$.

**நோவு.** Pain.

யோபு $33^{19}$ எரே $51^{8}$. வாதை, வேதனை காண்க.

## ப.

**பகல்.** Day.

யாத் $13^{21}$ யோவா $9^{4}$ 1 தெச $5^{5}$ வெளி $4^{8}$ $7^{15}$ $21^{25}$. நாள் காண்க.

**பகவன்.** The Blessed One 'அயன், அரன், அரி, கடவுள், அருகன், குரு, புத்தன்.' கடவுள் காண்க.

**பகிருகிறது.** Distribute.

யோபு $21^{16}$ அப் $4^{35}$ 1 கொரி $7^{17}$ 2 கொரி $10^{13}$.

**பகுதி.** (1)=*Matter*. தத்துவ சாஸ்திரத்தில் 'பகுதி' என்பது 'இயல்பு' அல்லது 'பிரகிருதி' என்பதைக் குறிக்கிறது.

(2)= Tax. குடியிறை.

யூதர்கள் தேவனுடைய ஆளுகைக்குட்பட்டிருந்து அவர்கள் வருஷாந்தரம் தலையொன்றிற்கு அரைச்சேக்கல் விழுக்காடு தேவாலயத்திற்குக் கொடுத்தார்கள். யாத் $30^{13}$ மத் $17^{25}$ காண்க.

இராஜாக்களுக்குக் குடிகள் வரி செலுத்துவது நியாயம். தானி $11^{20}$ எஸ்று $4^{13}$ 2 நாளா $17^{11}$ மத். $22^{17}$ ரோம $13^{7}$.

கானான் தேசத்தார் எபிரெயர்களுக்குப் பகுதிகட்டினார்கள். யோசு $16^{10}$ நியா $1^{30.35}$.

சாலொமோன் பத்துக்கோத்திரங்களையும் பகுதிகட்டச் செய்தான். 1 இரா $5^{13}$. தீர்வை காண்க.

**பகூரீம்.** Bahurim.

பென்யமீன் நாட்டிலுள்ள ஓர் ஊர். 2 சாமு $3^{16}$ $16^{5}$ $17^{18}$ 1 நாளா $11^{33}$.

**பகை.** Hatred.

பழைய ஏற்பாட்டிலே சத்துருக்களைப் பகைக்கிறது கண்டிக்கப்படவில்லை, ஆனால் இயேசுவினுடைய சீஷர்கள் ஒருவரையும் பகைக்கக்கூடாதென்று புதிய ஏற்பாட்டிலே தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது. யாவரிடத்திலும் எப்பொழுதும் கிறிஸ்தவர்கள் காட்டவேண்டிய குணம் பகை அல்ல, அன்பே. மத் $5^{43}$ $22^{37}$ கிறிஸ்தவர்கள் தீமையைப் பகைக்கக் கூடும். எபி $1^{1}$ யூதா $1^{23}$ வெளி $2^{6}$ $17^{16}$. இயேசுகிறிஸ்துவினுடைய சித்தத்துக்குக் கீழ்ப்படியாதபடிக்கு இடறல் செய்கிறதை ஒருவன் பகைக்கக் கூடும் என்பதை 'வெறுக்கிறது' என்னும் பதம் இரண்டு வசனங்களில் காண்பிக்கிறது. லூக் $14^{26}$ யோவா $12^{25}$.

பகையைக் குறிக்கும் சில வசனங்கள். ஆதி $3^{15}$ யாத் $23^{5}$ சங் $25^{19}$ $34^{21}$ நீதி $13^{24}$ எரே $44^{4}$ யோவா $7^{7}$ ரோம $1^{30.75}$ கலா $5^{20}$ யாக் $4^{4}$.

**பகைஞன்.** Enemy. விரோதி. ஆதி $24^{60}$ யாத் $15^{6.9}$ 1 இரா $21^{20}$ சங் $3^{7}$ அப் $13^{10}$.

**'பக்கவழி.** நுழைகிறது.' 'Privily brought in.' கலா $2^{4}$ யூதா $1^{4}$.

**பக்தி.** Godliness. எபி $12^{28}$. தேவபக்தி காண்க.

**பக்தியில்லாதவர்கள்.** 'The ungodly.' சங் $43^{1}$ 'தேவபக்தியில்லாதவர்.' 2 பேது $3^{7}$.

**பக்தி வைராக்கியம்.** Zeal. 2 கொரி $7^{11}$.

**பக்பக்கார்.** Bakbakkar. 1 நாளா $9^{15}$.

**பக்புக்கியா, பக்பூக்கியா.** Bakbukia. [யேகோவா பாழாக்குகிறார்.]

1. ஒரு லேவியன். நெகே $11^{17}$.

2. ஒரு சுமைகாரன். நெகே $12^{25}$.

**பக்பூக்.** Bakbuk. எஸ்று $2^{51}$.

**பங்கு.** Lot, part, portion. ஆதி $14^{24}$ $31^{14}$ எண் $18^{20}$ $32^{54}$ உபா $10^{9}$ $32^{9}$ யோசு $11^{23}$ $15^{1}$ $17^{1.14}$ $19^{9}$ $22^{25}$ 2 சாமு $20^{1}$ யோபு $20^{29}$ $27^{13}$ சங் $16^{5}$ $119^{57}$ $142^{5}$ பிர $3^{22}$ $5^{18}$ $9^{9}$ $11^{2}$ ஏசா $17^{14}$ மத் $24^{51}$ லூக் $10^{42}$ $12^{46}$ $15^{12}$ யோவா $13^{8}$ அப் $1^{17}$ $8^{21}$ 2 கொரி $6^{15}$ வெளி $21^{8}$.

**பசாசு.** Demon, devil. பிசாசு காண்க.

**பசி.** Hunger. 2 சாமு $17^{29}$ நீதி $19^{15}$ புல $4^{9}$ மத் $4^{2}$ $25^{35}$ லூக் $6^{21}$ $15^{17}$ ரோம $12^{20}$ 1 கொரி $4^{11}$ 2 கொரி $11^{27}$ பிலி $4^{12}$ உவமையாய்: சங் $107^{8}$ மத் $5^{6}$ யோவா $6^{35}$ பிலி $4^{19}$ வெளி $7^{16}$.

**பசு.** Cow. லேவி $22^{28}$ ஏசா $11^{7}$.

'இளம்பசு' ஏசா $7^{21}$.

'கிடேரி' யோபு $21^{10}$. மாடு காண்க.

**பசேயாத, பாசேயாகு.** Paseah.

1. யூதாவின் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $4^{12}$.

2. அலங்கத்தைக் கட்டினவர்களில் ஒருவன். நெகே $3^{6}$.

3. நெதனீமியரில் ஒரு குடும்பம். எஸ்ரா $2^{49}$.

பசேயாத. Paseah. பசேயாத காண்க.

பச்சாத்தாபம். Contrition. மனஸ்தாபம் காண்க.

பச்சிலை. 'Green thing.' யாத் $10^{15}$.

பச்சை. 'Green thing.' ஏசா $15^{6}$. புல், பூண்டு காண்க.

பச்சை குத்துகிறது. Cutting marks, Tattooing. லேவி $19^{28}$. கீறுதல், தீர்க்கதரிசியின் அடையாளங்கள் காண்க.

பச்சைப்புழு. 'Palmer worm' 'Caterpillar.' யோவேல் $1^{4}$ $2^{25}$ ஆமோ $4^{9}$. வெட்டுக்கிளி காண்க.

பச்சைமரம். Bay tree. சங் $37^{35}$. இந்தப் பதம் கேதுருமரத்தைக் குறிக்கலாம்.

'பச்சையான மரம்.' Green tree. உபா $12^{2}$ 1 இரா $14^{23}$ 2 இரா $16^{4}$ $17^{10}$ ஏசா $57^{5}$ எரே $3^{6}$ $17^{2}$ லூக் $23^{31}$ அசேரா, தோப்பு, விருட்சம் காண்க.

பச்சோந்தி. Chameleon. விலக்கப்பட்ட மிருகங்களில் ஒன்று. லேவி $11^{30}$.

பஸ்கா. Passover.

யூதர்களால் அனுசரிக்கப்பட்ட முக்கியமான பண்டிகை. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து புறப்படுமுன்னே, தாங்கள் இந்தப் பண்டிகையை ஆசரித்தார்களென்றும்; இந்தப் பண்டிகை வசந்தகாலத்திலே ஆசரிக்கப்பட்டு, ஆடுமாடுகளின் தலையீற்றுக்களைத் தேவனிடத்தில் பலியிடுகிறதற்காக இது உண்டாக்கப்பட்டதென்றும்; இதன் உற்பத்தியை ஆபேல் கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்த தலையீற்றுகளில் காணலாமென்றும், சாஸ்திரிகள் அபிப்பிராயம் கொள்ளுகிறார்கள். அப்படியிருந்தாலும் இஸ்ரவேலர் எகிப்திலிருந்து அடிமைத்தனம் நீங்கி புறப்பட்டுப் போனதால், இந்தப் பண்டிகை புதிய கருத்து அடைந்து அவர்களுக்கு முக்கியமான பண்டிகையானது.

அந்நாள் தொடங்கி, இந்நாள் வரைக்கும், யூதர்கள் இந்தப் பண்டிகையைத் தாங்கள் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை அடைந்ததை ஞாபகப்படுத்தத் தக்கதாக அனுசரித்து வந்தார்கள்.

பஸ்காப்பண்டிகைக்கு முதலாம் சரித்திரம். யாத் $12^{21-27}$–ல் காணலாம். இதில் ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு ஆட்டுக்குட்டியை எடுத்து அடித்து, இரத்தத்தை அடையாளமாக கதவு நிலையில் தெளிக்க, தேவதூதன் வீட்டிலுள்ளவர்களை அழியாதபடிக்கு இவ்வீடுகளைக் கடந்துபோவார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கிரியை நித்திய நியமமாக ஆசரிக்கப்படவேண்டும். யாத் $12^{24}$.

பிந்தின சரித்திரங்களில் வேறு கட்டளைகள் கூட்டப்பட்டன. உபா $16^{1-8}$–ல் இரத்தத்தைத் தெளிக்கிறதைக் கூறாமல், பஸ்காவின் பலியைக்குறித்துவிசேஷமாய்ச்சொல்லியிருக்கின்றன. இந்தப் பலியை வீடுகளிலல்ல, தேவனுடைய ஆலயத்திலே பலியிடவேண்டும். உபா $16^{2}$. இவ்வசனங்களில் பஸ்காப்பண்டிகை புளிப்பில்லாத அப்பஞ்சாப்பிடுகிற பண்டிகையோடு இணைக்கப்பட்டது. எசே $45^{21}$ காண்க.

கடைசியாக நியாயப்பிரமாண புஸ்தகங்களில் வேறு கட்டளைகள் தோன்றின. லேவி $23^{5}$ யாத் $12^{1-13-43-51}$ எண் $9^{1-14}$. இவைகளில் யூதர்கள் பாபிலோனியா தேசத்தில் சிறையிருப்பிலிருந்தபோது, பஸ்காப் பண்டிகையை அதிக திட்டமாய் அனுசரித்தார்கள் என்று எண்ணலாம். சிறையிருப்பில் இருந்து திரும்பி வந்தபின்பு எருசலேமில் இந்தப் பண்டிகையை முக்கியமாய் ஆசரிக்கத் தொடங்கினார்கள். எஸ்ரா $6^{19-22}$.

இயேசுகிறிஸ்துவினுடைய காலத்தில், யூதர்கள் பண்டிகையில் ஆட்டுக்குட்டியைச் சாப்பிடும்படிக்கு நிற்பதும், கதவு நிலைகளில் இரத்தத்தைத் தெளிப்பதும் முதலிய சில சடங்குகளைக் கைக்கொள்ளாமலிருந்தாலும், அதிக வணக்கத்தோடும் பயபக்தியோடும் இந்தப் பண்டிகையைக் கொண்டாடினார்கள். எவ்விதமாயென்றால், ஆபீப் அல்லது நிசான் என்னும் மாதத்திலே 13–ம் தேதி குடும்பத்தலைவர் யாவரும் தங்கள் வீடுகளிலிருக்கும் புளித்தமாவைத் தேடிக் கண்டுபிடித்து அகற்றிப்போடுவார்கள். 14–ம் தேதி முதல், ஏழுநாட்களாய்ப் புளித்தமாவை ஒருவனும் சாப்பிடக்கூடாது. அந்தப் பதினாலாம் தேதியில், யாதொரு வேலையும் செய்யமாட்டார்கள்.

சாயங்காலத்திலே ஜனங்கள் பத்துப்பேர் முதல் இருபதுபேர் வரைக்கும் அடங்கிய கூட்டங்களாய்க் கூடி, தங்கள் ஆட்டுக்குட்டிகளைக் கொண்டுபோக, ஒவ்வொரு கூட்டத்திலிருந்து ஒரு ஆள் ஆட்டுக்குட்டியோடு ஆல

யப்பிராகாரத்துக்குள் உட்பிரவேசிப்பான். எக்காளசத்தம் கேட்கும்பொழுது அங்கே வந்து ஒவ்வொருவனும் தான் கொண்டுவந்த ஆட்டுக்குட்டியை அடிப்பான். ஆசாரியர் இரத்தத்தை எடுத்து, அதைப் பலிபீடத்தின் அடியில் தெளித்து, கொழுப்பைப் பீடத்தில் வைத்துப் பலியிடுவார்கள். பலியிடும் கூட்டங்கள், ஆட்டுக்குட்டிகளை எடுத்துக்கொண்டு, தங்கள் வீடுகளுக்குத் திரும்பிவருவார்கள். பத்துமணிக்குப் பஸ்காவிருந்து சாப்பிடுவார்கள். அதில் பலியிட்ட ஆட்டின் மாமிசத்தையும், கசப்பான பூண்டுகளையும், புளிப்பில்லாத அப்பங்களையும் சாப்பிட்டு, திராட்சரசத்தின் பாத்திரத்தில் நாலுதரம் பானம் பண்ணுவார்கள். இடையிலே, 'அல்லேல்' என்னும் பேர்பெற்ற 113–118 சங்கீதங்களைப் பாடுவார்கள். மாற் 14[26]. இரண்டாம் பாத்திரத்தைப் பானம் பண்ணின பின்பு, மகன் தன் தகப்பனை நோக்கி, 'இந்த விருந்துக்குக் கருத்தென்ன?' என்று கேட்க, தகப்பன் விபரமாய்ச் சொல்லவேண்டும். யாத் 12[26].

பஸ்காப்பண்டிகை கொண்டாடுவதற்காக புறதேசங்களிலிருந்து ஆயிரக்கணக்கான யூதர்கள் எருசலேமுக்குப் போவார்கள். மற்ற யூதர்களைப்போல, இயேசுவும் பண்டிகை காலத்திலே எருசலேமுக்குப் போவார். யோவா 2[13.23] 12[1.12]. இயேசுவும் அவருடைய சீஷரும் பஸ்கா போஜனம் செய்கிற வேளையில், அவர் கர்த்தருடைய இராப்போஜனம் அல்லது 'நற்கருணை' ஏற்படுத்தினார். மத் 26[17-30] மாற் 14[17-26] லூக் 22[14-20]. பஸ்காப் பண்டிகைக்குப் பதிலாக கிறிஸ்தவசபை, இயேசு கட்டளையிட்ட இந்த இராப்போஜன விருந்தை நடத்தி, இயேசுகிறிஸ்துவைத் தங்கள் பஸ்காப்பலியாக எண்ணவேண்டும். 1 கொரி 5[7.8]. அன்பு விருந்து, இராப்போஜனம் காண்க.

**பஸ்கூர்.** **Pashkur.**

1. எரேமியா தீர்க்கதரிசிக்கு விரோதமாயிருந்த ஒரு யூதபிரபு. எரே 21[1] 38[1].

2. எரேமியாவை வருத்தப்படுத்தின ஒரு ஆசாரியன். 'மாகோர் மீசாபீப்' காண்க. எரே 20[1-6].

3. கெதலியாவின் தகப்பன். எரே 38[1]. (ஒருவேளை இவனும் முன்சொன்ன இரண்டு பெயர்களில் ஒருவனும் ஒரே ஆளாய் இருக்கலாம்.)

4. குடும்பத்தலைவன். எஸ்றா 2[38] நெகே 11[12].

5. உடன்படிக்கைக்கு முத்திரைபோட்டவர்களில் ஒருவன். நெகே 10[3].

**பஸ்மாத்து.** **Bashemath.** [வாசனையுள்ளவள்.]

1. ஏசாவின் மனைவிகளில் இரண்டுபெயர்கள்.

(i) ஏலோனின் குமாரத்தி. ஆதி 26[34].

(ii) இஸ்ரவேலின் குமாரத்தி. ஆதி 36[3].

2. சாலொமோனின் குமாரத்தி. 1 இரா 4[15].

**பஸ்லீத்.** **Bazlith.** நெகே 7[54]. = பஸ்லூத் எஸ்றா 2[52].

**பஸ்லூத்.** **Bazluth.** = பஸ்லீத்.

**பஞ்சதாது.** **Five elements.**

மண்ணுதி யைந்து. **பூதம்** காண்க.

**பஞ்சம்.** **Famine.**

முற்காலத்திலே சீரியா எகிப்து, என்னும் தேசங்களில் நாலு காரணங்களினால், பஞ்சம் உண்டானது. அவையாவன:—

1. ஏற்றகாலத்திலே மழை பெய்யாமை. 1 இரா 17.

2. கல்மழையாவது, மழைத்தாரையாவது சொரிந்து, தானியத்தையும் பழங்களையும் அழித்தல். யாத் 9[23.31 32].

3. வெட்டுக்கிளிகளும், வேறு ஜெந்துக்களும் விளைவுகளை அழித்தல். யாத் 10[15] யோவே 1[4].

4. யுத்தத்தினாலும், சத்துருக்களினாலும் வந்த நாசம். உபா 28[51-56] 2 இரா 6[24.25.28].

பஞ்சத்தினால் ஆபிரகாம் எகிப்துதேசத்திற்கும், ஈசாக்கு, கேரார் பட்டணத்திற்கும் போகவேண்டியதாய் நேரிட்டது. ஆதி 12[10] 26[1]. யோசேப்பு எகிப்திலிருந்த காலத்திலே ஓர் கொடிய பஞ்சம் அத்தேசம் முழுவதிலும் பரம்பிற்று. ஆதி 41[54-57]. யோசேப்பு, பயன் சொன்ன சொப்பனத்திலே, பார்வோன் எச்சரிக்கப்பட்டு, பரிபூரணமுள்ள ஏழு வருடங்களில், மிகுதியான தானியத்தைச் சேர்த்துவைத்து, பஞ்சமுள்ள வருடங்களுக்கு அதைக் கட்டிவைக்கும்படி, கட்டளையிட்டான். இப்படியே எகிப்துதேசத்திலும், வேறு தேசங்களிலும், பஞ்சமுண்டாயிருந்தாலும், எகிப்து தேசத்திலேமாத்திரம் ஆகாரமிருந்தது. ஆதி 41. ரோமை இராயனாகிய கிலவுதியு அரசாண்டகாலத்திலே, (கி–பி. 41–54.) ரோமை இராஜ்யத்தில் எங்கும் கொடிய பஞ்சமுண்டாயிற்று. அப் 11[28].

பலெஸ்தீனா தேசத்திலே. கி—பி. 46 வருஷத்திலே, பஞ்சம் வரவரக் கொடிதாயிருந்தது. ரூத் 1¹ 2 சாமு 21¹ மத் 24⁷.

**பஞ்சமாபாதகம்.** The five capital vices.

'கொலை, பொய், களவு, கள், குருநிந்தை.'

'கொலைகளவு கட்காமங்
கோபம் விட்டார்க்கன்றோ
மலையிலக்காம் நின்னருள்தான்
வாய்க்கும் பராபரமே.'
(தாயுமானவர்.)

**பஞ்சலோகம்.** 'The five simple metals.'

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்.

**பஞ்சாக்ஷரம்.** The Saivite mantra.

சைவ சித்தாந்தத்தில் மூலமந்திரமாகிய ந—ம—சி—வா—ய.

**பஞ்சு.** Cotton.

மூலபாஷையில் ஒருதரம்மாத்திரம் இந்தப் பதம் தோன்றுகிறது. எஸ்தர் 1⁶-ல் 'பச்சை, தொங்குதிரைகள்,' என்னும் பதத்திற்குப் பதிலாக, 'பஞ்சுத்தொங்கு திரைகள்' என்று சொல்லவேண்டும். முற்காலத்திலே பலெஸ்தீனா தேசத்திலே பருத்தி விளையவில்லை ஆனாலும் அகாஸ்வேரு இந்தியாதேசம் வரைக்கும் அரசாண்டபடியினால் ஒருவேளை இந்தியாவிலிருந்து பஞ்சு கொண்டுவந்து தன் அரமனையை அலங்கரித்திருக்கலாம். யாத் 25⁴. எஸ்தர் 1⁶-ல் 'பச்சை' என்பதற்குப் பதிலாக 'பஞ்சு' என்று எழுதப்பட்டிருக்கவேண்டும்.

**படரு———** 'Eat as doth a canker.' 2 தீமோ 2¹⁷.

**படர்.** Bright spot.

வெள்ளைப்படர். லேவி 13²⁻¹⁹ 14⁵⁶. **குஷ்டம்** காண்க.

**படவு.** Boat.

மாற் 4¹ லூக் 5³ யோவா 6²²⁻²³ அப் 27¹⁶⁻³⁰⁻³². 'நாணல் படவு' ஏசா 18². 'வலிக்கிற படவு' ஏசா 33²¹. **கப்பல்** காண்க.

**படிகப்பச்சை.** Beryl.

யாத் 28²⁰ 39¹³ உன். பா 5¹⁴ எசே 1¹⁶ 10⁹ 28¹³ தானி 10⁶ வெளி 21²⁰ **இரத்தனம்** காண்க.

**படிகள்.** Steps, stair.

யாத் 20²⁶ 1 இரா 10¹⁹ 2 இரா 9¹³ நெகே 3¹⁵ 9⁴ 12³⁷ எசே 40⁶ அப் 21³⁵·⁴⁰ 'சுழற்படிகள்' 1 இரா 6⁸.

**படுகுழி.** Pit.

யோபு 33¹⁸ ஏசா 24¹⁷ எரே 48⁴³ எசே 19⁴·⁸. **கிணறு, குழி.** காண்க.

**படுக்கை.** Bed.

1. மஞ்சம். யாத் 8³ லேவி 15⁴ 2 சாமு 4⁵ யோபு 33¹⁵ சங் 6⁶ சங் 132³ பிர 10²⁰ மத் 9² மாற் 2⁹ லூக் 5¹⁸ 17³⁴ யோவா 5⁸ அப் 5¹⁵ 9³⁴.

2. உவமையாய்: யோபு 17¹³ சங் 139⁸ ஏசா 57² **கட்டில், மஞ்சம்** காண்க.

**படுக்கை அறை.** Bed chamber. யாத் 8³. **பள்ளிஅறை, வீடு.** காண்க.

**படைக்கிறது.** Make, create. ஏசா 41²⁰ 45⁷ தமிழ் வேதாகமத்தில் 'படைக்கிறது' என்பது அல்ல 'சிருஷ்டிக்கிறது,' 'உண்டாக்குகிறது,' 'உண்டுபண்ணுகிறது' என்பவை வழக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. **சிருஷ்டிப்பு** காண்க. 'படைப்பு' லேவி 7¹⁴.

**படைக்கிறது.** Offer. 'படைக்கப்படுகிற முன்னந்தொடை' யாத் 29²⁷ 'படைக்கும் பலி'. லேவி 7¹⁴ 'படைக்கும் காணிக்கை'. எண் 15¹⁹ 'படைப்பானம்'. யாத் 29²⁸ 'படைப்பு'. லேவி 7¹⁴ எண் 18⁸·²⁴'. 'ஏறெடுத்துப் படைக்கும் படைப்பு'. லேவி 7¹⁴ **பலி** காண்க.

**படைமரம்.** 'Weavers beam' 1 சாமு 17⁷ 2 சாமு 21¹⁹ 1 நாளா 11²³. **நூல்பாவை** காண்க.

**பட்சபாதம்.** Partiality, respect of person. மல் 2⁹ அப் 10³⁴ ரோம 2¹¹ எபே 6⁹ 1 தீமோ 5²¹ கொலோ 3²⁵ யாக் 2¹·⁹ 3¹⁷ 1 பேது 1¹⁷.

**பட்சி.** Bird. ஆதி 1²¹ 7¹⁴ ஏசா 46¹¹ எரே 12⁹. **காகம், கழுகு, குருவி** முதலியவை காண்க.

**பட்சிக்கிறது.** Devour. ஆதி 37²⁰ 49²⁷ சங் 14⁴ 18⁸ நீதி 30¹⁴ மத் 23¹⁴ 2 கொரி 11²⁰ எபி 10²⁶ மாற் 12⁴⁰ கலா 5¹⁵ லூக் 8⁵.

**பட்டங்கொடுக்கிறது.** Appoint. **அபிஷேகம்** காண்க.

**பட்டணத்து அதிகாரிகள்.** 'Rulers of the city'. தெசலோனிக்கே பட்டணத்தின் தலைவர்களுக்கு (*Politarchai*) 'பட்டணத்து அதிகாரிகள்' என்னும் கிரேக்கு பட்டப்பெயர் இருந்தது. அப் 17⁶.

**பட்டணத்துச் சம்பிரதி.** Town clerk. ரோம ராஜாங்ககாலத்தில் சின்ன ஆசியாவிலுள்ள பட்டணங்களில் பட்டணத்துச் சம்பிரதி என்று பெயர்கொண்ட பெரிய

கணக்கன், அப்பட்டணத்துக் கூட்டத்திலே சம்மதமான ஏற்பாடுகளையும் செய்யப்பட்ட கட்டுப்பாடுகளையும் நியாயத்தின்படி விளம்பரம் செய்யவேண்டிய உத்தியோகஸ்தன். இதினிமித்தம் எபேசுபட்டணத்துச் சம்பிரதிதான் கிறிஸ்துமார்க்கத்துக்கு விரோதமாய்க் கட்டுப்பாடு செய்யப்போகிற விஷயத்தைப்பற்றி ரோம அதிகாரிகள் தன்னைத் தண்டிப்பார்கள் என்று பயந்து அந்தக் கூட்டத்தைக் கலைக்கப் பிரயாசப்பட்டான். அப் $19^{35}$.

**பட்டணம். City.**

வேதாகமத்தில் எண்ணிறந்த பட்டணங்களைப்பற்றிச் சொல்லியிருந்தாலும், எபிரெயர்கள் அப்பெயரைப் பெரிய நகரங்களுக்கு மட்டும் அல்ல, சிறு ஊர்களுக்கும் சொல்லுவார்கள் என்பதை நாம் அறியவேண்டும். இந்த ஊர்களுக்குச் சாதாரணமாய் மதில் இருந்ததினாலே இவைகள் தென் இந்தியாவிலுள்ள ஊர்களைப்போல அல்ல, வட இந்தியாவில் நாம் காணக்கூடிய ஊர்களைப்போன்றிருந்தன. இந்த ஊர்களைக் கட்டினவர்கள் மூன்று காரியங்களைக் கவனிப்பார்கள். முதலாவது: வருஷம் முழுவதும் பாய்ந்துகொண்டிருக்கும் நீரூற்றைத் தேடுவார்கள். இரண்டாவது: அவ்வூர் கோட்டை கட்டுகிறதற்குத் தகுந்ததோ இல்லையோ என்பதை ஆராய்வார்கள். மூன்றாவது: தங்கள் ஆடுமாடு முதலியவைகளுக்காக மேய்ச்சல்பூமியும் பயிர் விளைநிலமும் பக்கத்தில் இருக்கிறதோ இல்லையோ என்பதைக் கவனிப்பார்கள். இதினிமித்தம் பலெஸ்தீனா தேசத்தில் எந்த ஊற்றண்டையிலும் இவ்வித பட்டணங்களை நாம் காணக்கூடும். எண் $13^{28}$ உபா $1^{28}$. அத்தேசத்தார் சில காலங்களில் திரிகிற கள்ளர் கொள்ளைக்காரர்முதலியவர்களுக்குப்பயந்து, கோட்டைபோன்ற இம்மதில்களுக்கு வெளியே தங்கள் வீடுகளைக் கட்டத் துணியாமல், இம்மதில்களுக்குள்ளேயே சகல வீடுகளையும் கட்டினதினாலே, இந்த ஊர்களில் வீடுகள் நெருக்கமாயும் வீதிகள் ஒடுக்கமாயும் இருக்கும். இந்த மதில்களில் சிலவற்றின்மேல் வீடுகள் கட்டப்பட்டிருப்பதும் உண்டு. யோசு $2^{15}$. சில பட்டணங்கள் நல்ல கோட்டைகளாய் இருப்பதினாலே, இவை சுற்றிலும் உள்ள ஊர்களுக்குத் தாய்ப்பட்டணம் ஆகும். யோசு $15^{32}$ 2 சாமு $20^{19}$. இப்பட்டணங்களிலுள்ள முச்சந்தி நாற்சந்திகளில் சந்தையும் கடைகளும் இருக்கும். ஜனங்கள் ஊர்விஷயங்களைப்பற்றிப் பேசுகிறதற்குக் கூடுகிறதும் பிள்ளைகள் விளையாடுகிறதும் இவ்விடங்களிலேதான்.

மூப்பர்கள் இவ்வித முச்சந்தி நாற்சந்திகளிலும், ஒலிமுக வாசல் என்ற பட்டணத்து வாசல்களிலும் அவ்வூர் வழக்குகளை நியாயந் தீர்ப்பார்கள். மதிலின் வாசல்கள் ராக்காலத்தில் பத்திரமாய்ச் சாத்தப்படும். யோசு $2^{5}$. காவலாளர் மதிலின்மேல் நின்றும் ஊர்த்தெருக்களில் நடமாடியும் கள்ளர் முதலியவர்கள் வாராதபடி காப்பார்கள். ஏசா $62^{6}$ உன். பா $3^{3}$.

ஒவ்வொரு தொழிற் செய்கிறவர்களும் ஒரேதெருவில் வாசஞ்செய்வார்கள். அவர்களுடைய வீடுகள் சிறிதானதினாலே பட்டணத்தார்கள் தெருப்பக்கங்களில் உட்கார்ந்து வேலை செய்வதும் அயலகத்தாரோடு பேசிக்கொண்டிருப்பதும் வழக்கம். ஒவ்வொரு ஊரிலும் ஒரு கோட்டை அல்லது காவற்கோபுரம் இருக்கும். நியா $9^{51}$ 2 சாமு $5^{7}$ $24^{7}$. விரோதிகள் வந்து முற்றுகை போடுங் காலத்திலும், உஷ்ணகாலத்திலும் தண்ணீர் இருக்கும்படி இந்தப் பட்டணங்களில் தடாகம் வெட்டப்பட்டிருக்கும்.

கானானிய பட்டணங்கள் ஒவ்வொன்றிலும் அதினதின் ராஜாவுக்குச் சர்வ அதிகாரம் இருந்தது. எபிரெயர்களுக்குள்ளே ஒவ்வொரு ஊரிலும் அதினதின் மூப்பர்கள் சகல விஷயங்களையும் நடத்திவருவார்கள். உபா $19^{12}$ $21^{3}$ ரூத் $4^{2}$. பட்டணத்துக்கு வந்த அந்நியர்களுக்கும் பரதேசிகளுக்கும் அடிமைகளுக்கும் அந்த ஊர் விஷயங்களில் பங்கு இல்லை.

கானானியர்கள் தாங்கள் கட்டின பட்டணங்களிலாவது அந்தப் பட்டணங்களுக்குச் சமீபத்திலாவது தங்கள் தேவதைகளை வணங்கும்படி மேட்டின்மேலே ஒரு ஆலயம் கட்டுவார்கள். 1 சாமு $9^{12}$. எபிரெயர்களுக்குள்ளே அநேகர் கானானியருடைய மார்க்கத்துக்கு இசைந்து, பிற்காலங்களில் தாங்களும் இப்படியே செய்துவந்தார்கள். அப்புறம் அவர்கள் பட்டணங்கள்தோறும் ஊர்கள்தோறும் ஜெப ஆலயங்களைக் கட்டத் தொடங்கினார்கள். அடைக்கலபட்டணம், கிணறு, தெரு, மேடு, வீடு காண்க.

**பட்டயம். Sword.**

யாத் $15^{9}$ நியா $3^{16}$ 1 சாமு $17^{51}$ $25^{13}$ 2 சாமு $20^{8}$ சங் $149^{8}$.

உவமையாய்.

யுத்தம். ஏசா $34^{5}$ வெளி $19^{21}$. அதிகாரம். ரோம $13^{4}$. நியாயத்தீர்ப்பு. உபா $32^{41}$ சங் $17^{13}$. ஆயுதம் காண்க.

பட்டாளம். Band. அப் $10^{1}$. அகுஸ்து பட்டாளம், இத்தாலியா பட்டாளம் காண்க.

**பட்டினி. Hunger.** யாத் $16^{3}$ யோபு $18^{12}$ $24^{10}$.

**பட்டு. Silk.** வெளி $18^{11}$. தமிழ் வேதாகமத்தில் எசே $16^{10.13}$-ல் 'பட்டு' என்னும் பதத்தினால் மொழி பெயர்க்கப்பட்ட எபிரெய பதத்தின் அர்த்தத்தைப்பற்றி வேத சாஸ்திரிகளுக்குச் சந்தேகம்.

**பணம். Money.**

குறிப்பு. இதில் இங்கிலீஷ் தமிழ் நிறை அளவு முதலானவற்றின் பின்ன இலக்கங்களை நுட்பமாய்க் கவனியாமல் உத்தேசமாய்ப் போட்டிருக்கிறோம்.

**பணநிறை.**

**பழைய ஏற்பாடு.**

பூர்வகாலமுதல் எபிரெயர்கள் வியாபார விஷயத்தில் அதிக சிரேஷ்டமானவர்களாய் இருந்தாலும் கி—மு. 500-வருஷத்திற்குமுன்னே அச்சிட்ட நாணயங்களை அவர்கள் வழங்காமல், பொன் வெள்ளி செம்பு இவற்றைத் தராசிலே நிறுத்து இவ்விதமாய்க் கொள்வனை விற்பனை செய்வார்கள். இதினிமித்தம் பழைய ஏற்பாட்டில் நாம் நாணயங்களைப் பற்றி யல்ல பொன்நிறை வெள்ளிநிறை என்பவைகளைப்பற்றியே வழக்கமாய் வாசிக்கிறோம்; எபிரெய பாஷையிலே 'செலவு கொடுக்கிறது' என்னும் வினைச்சொல்லுக்கு மூல அர்த்தம் 'தராசிலே நிறுக்கிறதே.' ஆதி $23^{16}$ யோபு $28^{15}$ எரே $32^{10}$ ஆமோ $8^{5}$.

'வர்த்தகரிடத்தில் செல்லும்படியான சேக்கல்' என்பது ஒரு நாணயம் அல்ல, வர்த்தகருடைய குறியிட்ட சில பொன் தகடுகளையும் வெள்ளித் தகடுகளையும் குறிக்கிறது. ஆதி $23^{16}$. பொன் வெள்ளி முதலியவற்றை நிறுக்கிறதற்கு வர்த்தகர்கள் சில கல் நிறைக்கல்லுகளைக்கொண்டுபோவார்கள். நீதி $16^{11}$. இஸ்ரவேலர் பாபிலோன் சிறையிருப்புக்குப் போகுமுன், வழக்கமாய்ப் பணத்தைச் சேக்கலாகவும் தாலந்துகளாகவும் எண்ணுவார்கள். வேறு விதமாய்ச் சொல்லியிராவிட்டால் அந்தச் சேக்கல், தாலந்து என்பவை வெள்ளிச் சேக்கலையும் வெள்ளித்தாலந்தையும் குறிக்கும். பொன்சேக்கல் அல்லது பொன் தாலந்தைக் குறித்துப் பேசும்போது அது பொன் என்று தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கும். 1 நாளா $21^{25}$. பழைய ஏற்பாட்டில் ஒரே ஒரு நாணயம் மாத்திரம் குறிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு தரீக்காசு (*Daric*) என்று பெயர். தமிழ் வேதாகமத்தில் இதற்கு 'தங்கக்காசு' என்று சொல்லியிருக்கிறது. 1 நாளா $29^{7}$ எஸ்றா $2^{69}$ $8^{27}$ நெகே $7^{70.72}$. ஏறக்குறைய கி—மு. 520—வருஷம் முதல் அது பாரசீக ராஜ்யத்தில் சென்றது. அதன் விலை ஏறக்குறைய 16 ரூபாய் அது நமது சவரன் காசைவிட கொஞ்சம் பெரியது.

எபிரெயர்களுக்குள்ளே பொன்னை நிறுக்கும்படி மூன்று நிறைகளும், வெள்ளியை நிறுக்கும்படி மூன்று நிறைகளும் இருந்தன. இந்நிறைகளுக்குப் பெயர் ஒன்றாயிருந்தாலும் அவைகள் வேறே என்பதை நாம் எப்போதும் நினைக்கவேண்டும். அந்த நிறைகள் என்னவென்றால்,

| வெள்ளி. | | | ப. | ஷி. | பெ. | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|---|---|
| கேரா .... | *Cerah* | யாத் $30^{13}$ லேவி $27^{25}$<br>எண் $3^{47}$ எசே $45^{12}$ | 0 | 0 | $1\frac{1}{2}$ | 0 | $1\frac{1}{2}$ |
| சேக்கல் .... | *Shekel*<br>=20 கேரா | ஆதி $23^{15}$ யாத் $21^{32}$<br>யோசு $7^{21}$ | 0 | 2 | 9 | 2 | 0 |
| இராத்தல் .... | *Mina*<br>=50 சேக்கல் | எஸ்றா $2^{69}$ நெகே $7^{71}$ | 6 | 16 | 0 | 102 | 0 |
| தாலந்து .... | *Talent*<br>=3000 சேக்கல் | யாத் $38^{27}$<br>2 இரா $5^{5}$ $23^{33}$ | 410 | 0 | 0 | 6150 | 0 |

| பொன். | | | ப. | ஷி. | பெ. | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|---|---|
| சேக்கல் .... | *Shekel* | 2 இரா $5^{5}$<br>1 நாளா $1^{25}$ | 2 | 1 | 0 | 31 | 0 |
| இராத்தல் .... | *Mina*<br>=50 சேக்கல் | 1 இரா $10^{17}$ | 102 | 10 | 0 | 1537 | 0 |
| தாலந்து .... | *Talent* | யாத் $25^{39}$<br>2 சாமு $12^{30}$<br>1 இரா $10^{10}$ | 6150 | 0 | 0 | 92250 | 0 |

ஒரு வெள்ளித் தாலந்தின் நிறை 96 இங்கிலீஷ் பவுண்
ஒரு பொன் தாலந்தின் நிறை 108 இங்கிலீஷ் பவுண்

யூதர்களுக்குள்ளே முதல்முதல் நாணயங்களை அச்சிட்டவர்கள் மக்கபெயர்தான். அவர்கள் அச்சிட்ட நாணயங்கள் சேக்கலும் அரைச்சேக்கலுமே.

பரிசுத்த ஸ்தலத்துச் சேக்கல் ஒரு விசேஷித்த நாணயம் அல்ல என்றும், தேவாலயத்தில் ஆசாரியர்கள் அதிநுட்பமாய் ஏற்படுத்தின ஒரு நிறை என்றும் நாம் அறியவேண்டும். வர்த்தகரும் ஜனங்களும் வழங்கின சேக்கல் முதலிய நிறைகளும் நாணயங்களும் காலாகாலத்தில் விலை ஏற்றம் இறக்கமாய்ப் போய்விட்டால், ஆசாரியர்கள் தேவாலயத்தில் செலவழிக்கவேண்டிய காணிக்கைக்காகச் சரியான காசு அல்லது நிறையைமாத்திரம் வாங்குவார்கள். யாத் $30^{13}$ $38^{24}$ லேவி $5^{15}$ $27^{25}$ எண் $3^{47}$ $7^{13}$.

யோசு $7^{21}$–ல் சொன்ன 'பொன் பாளம்' ஒரு நாணயம் அல்ல. வழக்கமாய் ஆபரணங்கள் பண்ணும்போது குறித்த நிறையில் அவ்வாபரணங்களைச் செய்வார்கள். உதாரணமாக ரெபேக்காளின் கடகங்கள் 10 சேக்கல் இடை பொன் உள்ளவை. ஆதி $24^{22}$.

**புதிய ஏற்பாட்டில் சொன்ன நாணயங்கள்.**

ரோம ராஜ்யத்தில் செல்லும் நாணயங்கள்தான் புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிறது. ஆனால் அவைகள் எல்லாம் ரோமர்கள் அச்சிட்ட நாணயங்கள் அல்ல. கிரேக்கர் முதலியவர்கள் அச்சிட்ட நாணயங்களும் ரோம ராஜ்யத்தில் சென்றது. எருசலேம் பட்டணத்துக்குப் பல தேசங்களிலேயிருந்து பிரயாணிகள் ஏராளமாய் வருகிறது வழக்கமானபடியால், அந்த நகரத்தில் எல்லாவிதமான காசுகளும் செல்லும். ஆனால் தேவாலயத்திலே ஆசாரியர்கள் தாங்கள் ஏற்படுத்தின அரைச்சேக்கல் முதலிய நாணயங்களைமாத்திரம் வாங்குவார்கள். இதினிமித்தம் தேவாலயத்தின் பிராகாரங்களில் புறதேசத்துக் காசுகளை ஆசாரியர் வாங்கும் சேக்கல் காசுகளாக மாற்றும்படி காசுக்காரர் கடைவைத்திருப்பார்கள். மத் $21^{12}$ $25^{27}$.

புதிய ஏற்பாட்டில் சொன்ன நாணயங்களாவன.

i. திராக்மே (*Drachme*) வெள்ளிக்காசு. லூக் $15^{8}$-ல் சொன்ன இந்த வெள்ளிக்காசு கிரேக்கர்கள் அச்சிட்ட நாணயம். இதன் விலை 9½ அணா.

ii. திதிராக்மோன் (*Didrachmon*). மத் $17^{24}$–ல் சொன்ன இந்த 'வரிப்பணம்' அல்லது 'அரைச்சேக்கல்' பெனிக்கேயர் அச்சடித்த ஒரு நாணயம். ஆசாரியர்கள் இந்தக் காசைத் தேவாலயத்துப் பொக்கிஷத்திலே ஏற்றுக்கொள்ளுவார்கள். தேவாலயக் காணிக்கைக்கு ஆளுக்கு அரைச்சேக்கல் வீதம் வாங்க வேண்டியிருந்தது.

iii. ஸ்தாதேர்(*Stater*)'வெள்ளிப்பணம்' மத் $17^{27}$–ல் சொன்ன இது பெனிக்கேயர் அச்சடித்த வேறொரு வெள்ளிக்காசு. இதன் விலை ஏறக்குறைய 2 ரூபாய். யூதாசுக்குக் கொடுக்கப்பட்ட முப்பது வெள்ளிக்காசுகள் ஸ்தாதேர்தான் என்று வேத சாஸ்திரிகள் நினைக்கிறார்கள். மத் $26^{15}$ $27^{3}$.

iv. லெப்தோன் (*Lepton*) 'காசு'. மாற் $12^{42}$ லூக் $12^{59}$ $21^{2}$. இது யூதர்கள் வழங்கும் காசுகளில் சிறியது. இதன் விலை நமது பைக்குக் கொஞ்சங் குறைந்தது.

v. தேனாரியோன் (*Denarion*). ரோம ராஜாங்கத்தில் வழங்கும் நாணயங்களில் இது தான் அதி சாதாரணமானது. இது நமது கால் ரூபாய்க்குக் கொஞ்சம் பெரியது. இதன் விலை ஏறக்குறைய 9½ அணா. இதற்குத் தமிழ் வேதாகமத்தில் சொல்லியிருக்கிற பெயர்கள் என்னவென்றால்,

'பணம்,' மத் $20^{2}$ மாற் $6^{37}$ $12^{15}$ $14^{5}$ லூக் $10^{35}$ $20^{24}$ யோவா $6^{7}$ $12^{5}$ வெளி $6^{6}$.

'வெள்ளிப்பணம்' மத் $18^{28}$.

'வெள்ளிக்காசு' மத் $22^{19}$ லூக் $7^{41}$.

vi அசாரியோன் (*Assarion*) 'காசு'. இது செம்புக்காசு, இதன் விலை நாலு பை. மத் $10^{29}$ லூக் $12^{6}$.

vii. கொதிராந்தேஸ் (*Kodrantes*) 'காசு' மத் $5^{26}$. 'துட்டு' மத் $12^{42}$. இது கால்–அசாரியோன் விலையானதினாலே இதன் விலை 1 பை என்று நாம் உத்தேசமாய்ச் சொல்லலாம்.

கவனிப்பு. (i) 'தாலந்து'. *Talent* மத் $18^{25}$ $25^{15}$. இது ஒரு நாணயம் அல்ல, ஒரு பணத்தொகைதான். இதன் விலை ஏறக்குறைய 240 பவுண் அல்லது 3600 ரூபாய். இதைக்கொண்டு மத் $18^{23}$-ல் சொன்ன உவமையில் சொல்லப்பட்ட வேலைக்காரர் இருவருடைய கடன்களின் தொகையையுங் கணித்துப் பார்ப்போமானால் 10,000 தாலந்து கடன்காரனுடைய தொகை 24,00,000 பவுண்; அதாவது 3,60,00000 ரூபாய் (3 கோடியே 60 லட்சம்), மற்ற வேலைக்காரருடைய கடனோ ஏறக்குறைய 62 ரூபாய் மாத்திரம்.

(ii) இராத்தல். லூக் 19[13]-ல் சொன்ன இராத்தல் அல்லது பவுண் ஒரு நாணயத்தை அல்லது தொகையைமட்டுமே குறிக்கும். இது மத் 18[23]-ல் சொன்ன தாலந்தில் $\frac{1}{60}$. இதன் விலை 4 பவுண் அல்லது 60 ரூபாய்.




'அசாரியோன்' என்னும் செம்புக்காசு.



லெப்தோன் என்னும் செம்புக்காசு.



மக்கபெயர் அச்சிட்ட சேக்கல்.



தெனாரியோன் என்னும் வெள்ளிக்காசு.

**பணி, பணிவிடை.** Service. யாத் 30[16] 36[1] எண் 3[7] 4[49] 1 நாளா 9[13.19].

**பணிகிறது.** Worship, Serve. தானி 3[5 10] ஆதி 24[26] யாத் 24[21] உபா 29[26] 2 சாமு 15[32] 2 இரா 21[21] சங் 95[6] செப் 1[5] மத் 2[2.11]. மத் 8[2] லூக் 4[8] யோவா 9[38] அப் 7[43]. 'சாஷ்டாங்கம்' மத் 2[11]. தொழுகிறது, வணங்குகிறது காண்க.

**பணிமுட்டு.** Vessels. யாத் 25[39] 37[16] எண் 3[31] 1 இரா 7[45] 15[15] 2 இரா 14[14] 24[13] 1 நாளா 9[28] 2 நாளா 4[18] 15[18] 36[7] எஸ்று 1[7] நெகே 10[39] எரே 27[16] 28[3] (தானி 1[2] காண்க.) எபி 9[21]. தேவாலயம் காண்க.

**பணியாரம்.** Cakes. எரே 44[19].

**பணிவிடைக்காரன்.** Servant. 1 இரா 9[22] 2 இரா 10[19] லூக் 12[42] அப் 17[25]. அடிமைத்தனம், வேலைக்காரன் காண்க.

**பணிவிடைக்காரி.** 'Maiden' R. V. நீதி 9[3]. வேலைக்காரன் காண்க.

**பணையம்.** Pledge. = வேசிப்பணையம். எசே 16[33] ஓசி 2[12].

**பண்டசாலை.** R. V. Treasuries. பொக்கிஷம் வைக்கும் இடம். யோபு 38[22].

**பண்டசாலை பட்டணங்கள்.** R. V. Store cities. எகிப்து தேசத்து ராஜாக்கள் தானியம் முதலியவை வைத்த நகரங்கள். திருஷ்டாந்தம், பித்தோம், ராமசேஸ். ஆதி 41[48] யாத் 1[11]. சாலொமோன் இவ்வித பட்டணங்களைக் கட்டினான். 1 இரா 9[19] 2 நாளா 8[4].

**பண்டிகை.** Feast. எபிரெயர்கள் நடத்தின பண்டிகைகளைப்பற்றி வேதாகமத்தில் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் ஆரம்பத்தில் கானானியர் முதலிய சேமியர்களைப்போலத் தங்கள் ஊர்களிலே திருவிழாக்களை நடத்தினார்கள். நியாயப் பிரமாணத்தை அவர்கள் அநுசரித்தபின் அவர்கள் ஒவ்வொரு ஊரிலும் அல்ல, எருசலேம் நகரத்திலே மாத்திரம் வருஷத்துக்கு மூன்றுதரம் பெரிய திருவிழாக்களை நடத்திவந்ததினாலே, பிற்காலங்களில் 'பண்டிகை' என்பது அந்த மூன்று திருவிழாக்களையும் விசேஷமாய்க் குறிக்கிறது. யாத் 23[14] 34[23] உபா 16[16]. பெனிக்கேயர் முதலிய சேமியர்கள் தங்கள் ஊர்களில் திருவிழா நடத்தின காலங்களில் வேசித்தனமுதலிய அகோரமான விஷயங்களை நடத்திக்கொண்டதுபோல எபிரெயர்கள் யேகோவாவின் வணக்கத்தை அநுசரித்தகாலத்தில் தங்கள் திருவிழாக்களை நடத்தவில்லையென்று நாம் பொதுவாய்ச் சொல்லக்கூடுமொனாலும், சமயாசமயத்தில் அவர்களும் இந்த மகா பாதகங்களைச் செய்தார்கள் என்பதற்கு அத்தாட்சிகள் உண்டு. உபா 23[18] 1 சாமு 1[13] 2 இரா 23[7] ஆமோ 2[7].

I. ஷப்பாத் (Sabbath) என்னும் பெயர் கொண்ட பண்டிகைகள்.

'ஷப்பாத்' என்பது ஏழாம் நாள். எபிரெயர்களின் அபிப்பிராயத்தின்படி ஏழு என்னும் எண் பரிசுத்தமாயிருந்தது; இதினிமித்தம் வாரத்தின் ஏழாம் நாளையும், வருஷத்தின் ஏழாம் மாசத்தையும் கவனித்துப் புளிப்பில்லாத அப்பப்பண்டிகைகளையும் கூடாரப் பண்டிகைகளையும் ஏழுநாட்களாக நடத்தினார்கள் என்றும்; பெந்தெகோஸ்தே பண்டிகையைப் புளிப்பில்லா அப்பப்பண்டிகைக்கு நாற்பத்தொன்பது நாளுக்குப்பிறகு நடத்தி

ஞர்கள் என்றும்; பஸ்காப் பண்டிகையையும் கூடாரப் பண்டிகையையும் மாசத்தின் பதினலாம் நாளிலே ஆரம்பித்தார்கள் என்றும்; வருஷத்தில் விசேஷித்துக் குறிக்கப்பட்ட சபை கூடும் நாட்கள் ஏழு என்றும் பார்க்கிரோம்.

**1. 'ஷப்பாத்' என்னும் ஓய்வுநாள்.**

கடவுள் ஆறுநாட்களில் சர்வ சிருஷ்டிகளையும் உண்டாக்கி ஏழாம் நாளாகிய ஓய்வு நாளிலே ஓய்ந்திருந்தார் என்பது எபிரெயர்களின் அபிப்பிராயம். ஆதி $2^{2}$ யாத் $20^{8}$ $31^{17}$. கடவுள் எகிப்து தேசத்திலிருந்து இஸ்ரவேல் புத்திரரை மீட்டுக்கொண்ட காரியத்துக்கு இது ஞாபகக்குறி என்று பலர் நினைத்தார்கள். உபா $5^{14}$. மேலும் நியாயப்பிரமாணத்தின்படி ஏழாம் நாளிலே அடிமைகளும் எருதும் கழுதையும் இளைப்பாறவேண்டும். யாத் $23^{12}$. ஏழாம் நாளில் எபிரெயர்கள் எவ்விதமான தொழிலும் செய்யக் கூடாது. அந்நாளிலே காலை பலியும் மாலை பலியும் இரண்டுதடவை செலுத்தப்பட வேண்டும். எண் $28^{9}$. அந்நாளிலே வேலை செய்தவனுக்கு மரணதண்டனை இடப்பட்டது. யாத் $31^{14}$ எண் $15^{32}$. ஆபிரகாம் முதலிய கோத்திரப் பிதாக்களின் காலத்தில் ஜனங்கள் ஓய்வுநாளை ஆசரித்தார்கள் என்பதற்கு அத்தாட்சி இல்லை. எபிரெயர்கள் சிறையிருப்புக்குப் போகிறதற்கு முன்னே, ஏழாம் நாளை அதிக வைராக்கியத்துடனே ஆசரித்தார்கள் என்பதற்கும் போதிய அத்தாட்சி இல்லை. சில வசனங்களிலேமட்டும் அதை அநுசரிக்கிறதைக் குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $56^{2}$ $58^{13}$ எரே $17^{20}$ எசே $20^{12}$. சிறையிருப்புக்குப் பின்னேதான் அவர்கள் இந்த நாளை அதிக பக்தியுடனே ஆசரிக்கத் தொடங்கினார்கள். வேதபாரகரும் ரபிமார்களும் இதைப்பற்றி மிதமிஞ்சின வைராக்கியங் கொண்டவர்களாய் அநேகவித ஏற்பாடுகளை உண்டுபண்ணினார்கள். நெகே $13^{15}$. ஓய்வுநாள் காண்க.

**2. மாதப்பிறப்பு அல்லது அமாவாசி**

மாசத்துவக்கத்தில் விசேஷித்த பலிகளைச் செலுத்துவது எபிரெயர்களுக்கு வழக்கம். அக்காலத்தில் ஆசாரியர்கள் வெள்ளிப் பூரிகைகளை ஊதுவார்கள். எண் $10^{10}$ $28^{11}$. வியாபாரம், விவசாயம் முதலிய வேலைகளெல்லாம் நிறுத்தப்படும். ஆமோ $8^{5}$. இந்தக் காலத்திலே இனத்தார் ஒரே குடும்பத்தாராய் ஒரேவீட்டில் சேர்ந்து சாப்பிடுவார்கள் என்றும்; தீர்க்கதரிசிகளிடத்தில் வினவுவது இக்காலத்தில்தான் என்றும் தோன்றுகிறது. 1 சாமு $20^{5}$ 2 இரா $4^{23}$ ஆமோ $8^{5}$.

**3. எக்காளப்பண்டிகை.**

ஏழாம் மாதமாகிய திஸ்ரி அல்லது ஏத்தானீம் என்னும் புரட்டாசி மாசத்தில் 1-ம் தேதி எக்காளப் பண்டிகை நடத்துவார்கள். இக்காலத்தில் கடவுளுக்கும் தங்களுக்கும் உள்ள உடன்படிக்கைகளை ஞாபகப்படுத்தும்படி பூரிகைகளையும் எக்காளங்களையும் ஊதி விசேஷித்த பலிகளைச் செலுத்துவார்கள். இது எபிரெயர்கள் கொண்டாடின மாதப்பிறப்புப் பண்டிகைகளில் விசேஷமானது. எண் $29^{1}$ லேவி $23^{24}$.

4. **ஓய்ந்திருக்கும் வருஷம் (ஷப்பாத் வருஷம்)** அல்லது **விடுதலையின் வருஷம்.** உபா $31^{10}$. ஓய்ந்திருக்கும் வருஷத்தைப்பற்றி அநேக பிரமாணங்கள் உண்டு. ஜனங்கள் ஆறு வருஷக்காலம் கஷ்டப்பட்டு ஜீவனம் பண்ணியபின்பு, ஏழாம் வருஷத்தில் ஓய்ந்திருக்கவேண்டியது. இப்படியே அடிமைகளுக்கும் பூமிக்கும் ஓய்வுவேண்டும். இந்தப் பிரமாணத்தை எபிரெயர்கள் அதிக நுட்பமாய்க் கைக்கொண்டார்கள் என்பதற்கு அத்தாட்சி இல்லை. இந்தப் பிரமாணங்களின்படி நடப்பது மிக்க அரிதாயினும், அவர்கள் ஏழாம் வருஷம் ஒவ்வொன்றிலும் மற்ற வருஷங்களிற்போல் வியாபாரம் முதலிய விஷயங்களில் அதிக கஷ்டப்படவில்லை என்று தோன்றுகிறது. இந்த வருஷத்தைப்பற்றிய பிரமாணங்களாவன:

i. எபிரெய அடிமை ஆறு வருஷம் மாத்திரம் அடிமைத்தனத்திலிருந்து இந்த ஏழாம் வருஷத்தில் விடுதலை பெறுவான். அந்த விடுதலையை அவன் விரும்பாவிட்டால், அவன் எப்பொழுதும் அடிமையாயிருக்கவேண்டும். யாத் $21^{2}$ உபா $15^{1}$.

ii. விவசாயத்தொழில்களெல்லாம் ஓய்வு வருஷத்தில் நிறுத்தப்படவேண்டும். யாத் $23^{10}$ லேவி $25^{1}$.

iii. கடன்காரர் தாங்கள் பட்ட கடனை ஏழாம் வருஷத்தில் செலுத்தவேண்டியதில்லை. உபா $15^{2}$.

iv. ஏழாம் வருஷத்துக் கூடாரப்பண்டிகையிலே நியாயப்பிரமாணம் வாசிக்கப்பட வேண்டும். உபா $31^{10}$.

5. **யூபிலி.** ஐம்பதாம் வருஷத்திற்கு 'யூபிலி' என்று பெயர். இந்த வருஷத்தைப் பற்றிய விபரம் லேவி 25-ம் அதிகாரத்தில்

கண்டிருக்கிறது. 49-ம் வருஷம் கழிந்து பின் ஐம்பதாம் வருஷம் ஆரம்பிக்கிறபோது ஆசாரியர்கள் எக்காளங்களை ஒலிக்க, அடிமைகள் யாவரும் விடுதலை அடைவார்கள். இந்த வருஷத்திலும் நிலம் எல்லாம் பயிரிடப்படாமல் இருக்கவேண்டும். வேறு வம்சங்களுக்குத் தங்கள் சொந்த நிலம் மாறிப்போகாதபடி, சொந்தக்காரர் ஈடு செய்யப்பட்ட வீடு நிலம் முதலியவைகளை இந்த வருஷத்தில் திரும்ப மீட்டுக்கொள்ளுகிறதைப்பற்றிச் சில பிரமாணங்கள் உண்டு.

யூபிலியைக் கொண்டாடுகிறதைப்பற்றி வேதாகமம் சொல்லுகிற வசனங்கள் சொற்பம். எபிரெயர்கள் இந்த யூபிலி வருஷத்தைக் கவனியாமல் போனதினாலேதான் அவர்கள் சிறையிருப்புக்காலத்தில் எழுபது வருஷம் நிலத்தைப் பயிர் செய்யாமல் காலியாய்ப் போடவேண்டியிருந்தது என்பது யூத ரபிமாரின் அபிப்பிராயம். 2 நாளா $36^{21}$. எரே $25^{9}$ $29^{10}$.

அவ்வருஷங்களில் அடிமைகள் விடுதலை அடைகிறது. எரே $34^{8}$.

கடன் மன்னிக்கிறதைப்பற்றி நெகே $10^{31}$–ல் சொல்லியிருக்கிறது.

ஈடு பத்திரம் எழுதிக்கொடுத்த வீடு நிலம் முதலியவைகள் விற்கிறதைப்பற்றித் தெளிவாய் ஒரு வசனத்திலும் சொல்லப்படவில்லை.

தீர்க்கதரிசிகளும் பக்தர்களும் யேகோவா தமது ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் காலத்தையும் அதின் நல் நிலைமையையும் குறிக்கும்படி யூபிலி என்னும இவ்வருஷத்தைச் சொல்லுவார்கள். ஏசா $61^{1}$ லூக் $4^{18}$.

II. பெரிய திருவிழாக்கள்.

1. பஸ்காவும் புளிப்பில்லாத அப்பப் பண்டிகையும்.

முதலில் இவ்விரண்டு பண்டிகைகளும் வெவ்வேறாய் இருந்தும் பிற்காலங்களில் இவைகள் ஒன்றாயின என்று யூதர்கள் அபிப்பிராயங்கொண்டார்கள். லேவி $23^{5}$ எண் $28^{16}$ மாற் $14^{12}$ லூக் $22^{1}$. இது ஆபிப் அல்லது நிசான் என்னும் பங்குனி மாசத்தில் நடந்தது. பஸ்கா காண்க.

2. பெந்தேகோஸ்தே பண்டிகை.

புளிப்பில்லாத அப்பப் பண்டிகைக்குப் பின் ஐம்பதாம் நாளாகிய நிசான் மாசத்தின் 16–ம் தேதி அறுப்புக் காலத்தைக் குறித்து இப்பண்டிகை நடத்தப்பட்டது. கோதுமை, வாற்கோதுமை இவைகளின் அறுப்புக்குப் பின்னே வரும். இதற்கு வேறு பெயர்களாவன:

'வாரங்களின் பண்டிகை,' யாத் $34^{22}$.

'அறுப்புக்காலப் பண்டிகை,' யாத் $23^{16}$.

'முதற்கனிகளைச் செலுத்தும் பண்டிகை நாள்'. எண் $28^{26}$.

வழக்கமாய் இப்பண்டிகை சிவான் என்னும் சூன் அல்லது வைகாசி மாசம் 16உ தொடங்கி இரண்டு நாள் நடக்கும். இந்நாட்களில் ஜனங்கள் யாதொரு தொழிலையும் செய்யாமல் திருக்கூட்டத்துக்கு வரவேண்டும். விசேஷித்த பலிகள் செலுத்தப்படும். லேவி $23^{17}$. ஏழைகளுக்கும் அந்நியர்களுக்கும் தருமம் செய்யவேண்டும். லேவி $23^{22}$. தேவாலயத்துக்குக் காணிக்கை செலுத்தவேண்டும். உபா $16^{10}$.

பெந்தெகோஸ்து நாளில் பரிசுத்தஆவி ஆதி கிறிஸ்தவர்கள்மேல் இறங்கினதினால், இது கிறிஸ்தவாகள் நடத்தின பெரிய பண்டிகைகளில் ஒன்றாயிற்று. இத்திருநாள் உபவாசம் பண்ணுமலும், ஜெபம் பண்ணும்பொழுது முழங்காற்படியிடாமலும், மனமகிழ்ச்சியாயிருக்கவேண்டிய காலம் என்றும்; குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் ஞானஸ்நானங் கொடுக்கிறதற்குத் தகுந்த காலம் என்றும் நினைத்தார்கள்.

3. கூடாரப்பண்டிகை.

கனிவர்க்கம் எண்ணெய் திராக்ஷரசம் முதலிய சகல பலன்களையும் சேர்த்தபிறகு, கூடாரப்பண்டிகை என்ற சேர்ப்பின் பண்டிகை நடத்தப்படும். யாத் $23^{14}$ $34^{22}$ உபா $16^{13}$. இது ஏழு அல்லது எட்டுநாள் நடக்கும். லேவி $23^{24}$ எண் $29^{12}$. புரட்டாசி மாசமாகிய திஸ்ரிமாசம் 15உ ஆரம்பிக்கும். அந்நாட்களில் ஜனங்கள் கூடாரங்களிலும், தாங்கள் போட்ட பந்தல்களிலும், கட்டின குச்சுகளிலும் குடியிருப்பார்கள். பட்டணங்களில் வீடுகளுக்குப் பக்கத்தில் தோட்டங்கள் இல்லாததினாலே, ஜனங்களில் அநேகர் பட்டணத்தின் வெளிப்புறத்துக்குப் போய் அங்கே கூடாரங்களைப் போடுவார்கள். இந்தப் பண்டிகையில் அநேக தகனபலிகளைச் செலுத்துவார்கள். ஓய்வு வருஷத்தில் இந்தப் பண்டிகையில் நியாயப்பிரமாணம் ஜனங்களுக்கு முன்பாக வாசிக்கப்படும். உபா $31^{10}$. சாலொமோன் ராஜா

இந்தப் பண்டிகைகாலத்தில் தேவாலயத்தை பிரதிஷ்டை பண்ணினான். 1 இரா $8^{2}$ 2 நாளா $7^{8}$. ஜனங்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு, இந்தப் பண்டிகையை நடத்தும்படி விரும்பினார்கள். எஸ்று $3^{4}$. அந்தக் காலத்திலே இவர்கள் நியாயப்பிரமாணத்தின்படி இதை நடத்திவந்தார்கள். நெகே $8^{16}$. யெரொபெயாம் ராஜா விக்கிரகாராதனையை ஸ்திரப்படுத்தும்படி கூடாரப்பண்டிகை போன்ற ஒரு பண்டிகையை எட்டாம் மாசத்திலே ஏற்படுத்தினான். 1 இரா $12^{32}$. வருஷத்தின் பழம் எண்ணெய் முதலியவற்றைச் சேர்த்தபின் கூடாரப்பண்டிகை நடந்ததினாலே இது சந்தோஷத்தைக் குறிக்கும்படி ஏற்படுத்தப்பட்டது என்று தோன்றுகிறது. ஆனால் இதில் தானியம் முதலியவற்றைக் காணிக்கையாகச் செலுத்துவது வழக்கம் இல்லை என்பதை நாம் கவனிக்கவேண்டும். ரபிமாருடைய அபிப்பிராயத்தின்படி இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பிரயாணம் பண்ணினதைக் குறிக்கும்படி இந்தப் பண்டிகை ஏற்பாடானது. சபைகூடும் நாட்கள் மூன்றிலும் இதை விசேஷமாய்க் கவனித்தார்கள். ஆகையால் தீர்க்கதரிசியாகிய சகரியா யெகோவாவின் ராஜ்யத்துக்கு வரும் மகிமையையும் புகழ்ச்சியையும் குறிக்கும்படி இவ்வுலகத்து ஜனங்களெல்லாரும் கூடாரப்பண்டிகை நடத்துகிறதற்கு எருசலேமுக்கு வருவார்கள் என்று சொல்லுகிறான். சக $14^{16}$. பிற்காலங்களில் இந்தப் பண்டிகையில் ஜனங்கள் நாள்தோறும் பலிபீடத்தைச் சுற்றிவருவார்கள். ஏழாம் நாளிலே ஏழுதரம் சுற்றிவருவார்கள். முதல் ஏழு நாட்களிலும் சீலோவாம் குளத்துக்குப் போய்த் தண்ணீர் மொண்டு, தேவாலயத்துக்குக் கொண்டுவந்து, பலிபீடத்தின் அடியில் அதை ஊற்றுவார்கள். இதைப்பார்த்து இயேசு, யோவா $7^{37}$–ல், ஜீவதண்ணீரைப் பற்றிச் சொல்லுகிறார். மேலும் இந்தப் பண்டிகைகாலத்தில் தேவாலயத்தில் ஸ்திரீகளின் பிராகாரத்தில் நாலு பெரிய பொன் குத்துவிளக்குகள் ஏற்றப்பட்டிருந்ததினாலே, இயேசு இதைப் பார்த்து 'நான் உலகத்துக்கு ஒளி' என்று சொன்னார். யோவா $8^{12}$.

III. மற்றப் பண்டிகைகள். இந்த மூன்று பெரிய திருவிழாக்களைத்தவிர பிற்காலங்களில் யூதர்கள் விசேஷமாய் நடத்தின உற்சவங்கள் மூன்று.

1. பூரீம். சிறையிருப்பிலிருந்து வருமுன் பார்சிக ராஜ்யத்தில் சிறையிருந்த யூதர்களுக்கு ஆமான் செய்த சதியுபாயத்தினின்று வந்த மீட்பை ஞாபகப் படுத்தும்படி பூரீம், பண்டிகை ஏற்பாடானது. முதலிலே இப் பண்டிகையில் விசேஷித்த ஆராதனை இல்லை. பிற்காலத்தில் யூதர்கள் ஜெபஆலயங்களிலே கூடிவந்து எஸ்தரின் சரித்திரத்தை வாசித்து, ஆமானைச் சபித்து, எஸ்தரின் பெயரையும் மொர்தெகாயின் பெயரையும் ஆசீர்வதித்து வீட்டுக்குப்போய் விருந்துண்பார்கள். சில சமயங்களிலே இதற்கு 'மோர்தெகாயின் நாள்' என்று பெயர். எஸ் $3^{7}$ $4^{3}$ $9^{15}$ 2 மக்கபெயர் $15^{36}$. புதிய ஏற்பாட்டில் யோவா $5^{1}$–ல் சொன்ன பண்டிகை இந்தப் பூரீம் பண்டிகைதான் என்று சிலர் நினைக்கிறார்கள். ஆயினும் இது பஸ்காப்பண்டிகைதான் என்பது வேத சாஸ்திரிகளுடைய பொதுவான அபிப்பிராயம்.

2. பிரதிஷ்டைப் பண்டிகை.

அந்நிய ராஜாவாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் என்பவன் கி–மு. 168–ஆம் எருசலேமைப் பிடித்துத் தேவாலயத்தைப் பரிசுத்தக்குலைச்சல் ஆக்கினபிற்பாடு, யூதாஸ் மக்கபெயர் கி–மு. 165–ஆம் டிசம்பர் மாசமாகிய கிஸ்லேமூ 25உ அதைச் சுத்திகரித்து அதிலே மறுபடியும் தேவாராதனை நடத்தும்படி பிரதிஷ்டைச்சடங்கு செய்ததினாலே அந்நாள் முதற்கொண்டு யூதர்கள் அனைவரும் வருஷந்தோறும் எட்டு நாளாகத் தங்கள் வீடுகளிலே அத்தினத்தை ஞாபகப்படுத்தும்படி விருந்து செய்தபின் குருத்தோலை பிடித்து ஜெப ஆலயங்களுக்குப்போய், 'அலேல்' அல்லது 'ஸ்தோத்திரம்' என்னும் 113–118 சங்கீதங்களைப் பாடுவார்கள். அந்த நாட்களிலே அவர்கள் உபவாசம் பண்ணக்கூடாது. இரவுதோறும் அவர்கள் ஒவ்வொரு வீட்டிலும் சிட்டி விளக்குகளை ஏற்றுவது வழக்கமாகையால் இப்பண்டிகைக்கு தீபோற்சவம் என்றும் பெயர். 1 மக்கபெயர் $4^{59}$ 2 மக்கபெயர் $10^{6}$ யோவா $10^{22}$.

3. விறகு கொண்டுவரும் பண்டிகை.

வருஷத்துக்கு ஒன்பது நாட்களில் தேவாலயத்துக்கு விறகு கொண்டுபோய், அதைத் தகனபலிக் காணிக்கையாகக் கொடுப்பது தகுதி. இந்த நாட்களில் விசேஷமாய்ப் பங்குனிமாசத்துக்குச் சரியான ஆபிப் மாசம் 15–ம் தேதியில் இவ்விதஞ் செய்வதுநல்லது. இதினிமித்தம் இந்தத் தினத்துக்கு 'விறகுப் பண்டிகை' அல்லது 'விறகுக்காரப் பண்டிகை' என்று பெயர். தேவாலயம் அழிந்த பிறகு இப்பண்டிகையும் அற்றுப்போனது. நெகே $10^{34}$ $13^{31}$.

4. இந்தப் பண்டிகைகளைத் தவிர யூதர்கள் 'நியாயப்பிரமாணம் வாசிக்கிற பண்டிகையையும்' வேறு சில பண்டிகைகளையும் ஆசரித்துவந்தவர்கள். இவைகள் முக்கியமானவை அல்ல என்றும் சில இடங்களிலேமாத்திரம் அனுசரிக்கப்பட்டவைகள் என்றும் தோன்றுகிறது.

## IV. பாவநிவர்த்தி செய்யும் நாள். Day of atonement.

பாவநிவர்த்திசெய்யும் நாள் ஒரு பண்டிகை அல்ல, ஓர் உபவாசதினம். ஆனால் எபிரெயர்கள் கவனித்த சபைகூடும் நாட்களைப் பற்றி நாம் பேசும்போது இந்த நாளைக்குறித்தும் நாம் பேசுவது தகுதி. யூதர்கள் உபவாசம் செய்யும் முறைமையைப்பற்றி உபவாசம் என்னும் நிபந்தத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறோம். ஆதலால் உபவாசத்தைப்பற்றி இவ்விடத்தில் நாம் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. பழைய ஏற்பாட்டில் நாம் காணும் ஆசாரத்தின் கிரீடமான இந்நாளைப்பற்றி வேதாகமத்தில் பல இடங்களிற் சொல்லியிருக்கிறது. யாத் 30[15] லேவி 16–ம் அதி 23[26.32] எண் 29[7]. இவைகளில் விசேஷமானது லேவி 16–ம் அதி. இந்த நாள் திஸ்ரி மாசமாகிய செப்டெம்பர்மீ ஏறக்குறைய 30வ நடத்தப்பட்டது. இந்த நாளிலே மற்ற ஓய்வுநாட்களிற்போல தொழில் செய்வது விலக்கப்பட்டிருந்ததோடு இது உபவாசநாளும் ஆனபடியால் இது யூதர்களுடைய பண்டிகைகளில் விசேஷமானது.

இந்த நாளின் சடங்காசாரங்கள் ஐவகைப்படும்.

i. **ஆயத்தம் பண்ணுதல்.** லேவி 16[3.10].

விசேஷித்த காலைபலிகள் செலுத்தின பின்பு (எண் 29[8]), பிரதான ஆசாரியன் தனக்காகவும் தன் 'வீட்டாருக்காகவும்' (அதாவது ஆசாரியருக்காகவும்) பலியாகச் செலுத்த வேண்டிய காளையையும் ஆட்டுக்கடாவையும் நியமித்து, ஜனங்களுக்காக இரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும் ஒரு ஆட்டுக்கடாவையும் ஏற்படுத்தி, அந்த இரண்டு வெள்ளாட்டுக் கடாக்களின்பேரில் சீட்டுப்போட்டு, அவைகளில் ஒன்றைப் பலிக்காகவும், ஒன்றைப் 'போக்காடாக விடும்படியாகவும்' நியமிப்பான்.

**குறிப்பு.** 'போக்காடாகிய வெள்ளாட்டுக் கடா'. எபிரெய பாஷையில் இந்த வார்த்தைகளுக்கு மூல பதம் 'அசாசேல்' (*Azazel*) என்னும் ஒரே வார்த்தைதான்.

'அசாசேல்' என்பது வனாந்தரத்தில் வசிக்கும் ஒரு பெரிய தேவதை. இந்த தேவதையின் பெயரில் இஸ்ரவேலின் பாவத்தைச் சுமத்தும்படி இந்தத் துஷ்டதேவதையினிடத்துக்கு இக்கடாவை அனுப்பினார்கள். இப்படிப்பட்ட தேவதைகள் உண்டு என்று, இஸ்ரவேலர் உறுதியாய் நம்பினார்கள். சாத்தானைக் காண்க. இந்த 'அசாசேல்' தேவ புத்திரருக்கு மனுஷ குமாரத்திகளிடத்தில் பிறந்த குமாரரில் ஒருவன் என்றும், பாவத்தில் விழுந்துபோன தேவதூதர்களின் மகாபிரபு என்றும் பிற்காலத்து யூதர்கள் நம்பினார்கள். ஆதி 6[3]. இதின்படி அங்கிலேய A. V.–இல் சொல்லியிருக்கிற *Scapegoat* என்பதற்குப் பதிலாக அங்கிலேய R. V.–இல் *Azazel* (அசாசேல்) என்று சொல்லியிருக்கிறது.

ii. **மகா பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசித்தல்.** லேவி 16[11.14]. பிரதான ஆசாரியன் இவ்விதமாய்ச் சகலத்தையும் ஆயத்தப்படுத்தினபின்பு, தனக்காகவும் ஆசாரியர்களுக்காகவும் பாவநிவாரணம் செய்யும்பொருட்டுக் காளைபலி செலுத்தி, தூபகலசத்தை எடுத்து மகா பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்து, தானும் பிறரும் பரிசுத்த கிருபாசனத்தைப் பார்க்காமல் தூபகலசத்தில் தூபவர்க்கமிட்டு, தூபங்காட்டி, அதின் புகையானது மகா பரிசுத்த ஸ்தலத்தை நிரப்பும்படி செய்வான். யாத் 33[20]. இதன்பிறகு வெளியே வந்து பலிசெலுத்தின காளையின் இரத்தத்தை எடுத்து, திரும்பவந்து கிருபாசனத்தின்மேல் ஒரு தடவையும், உடன்படிக்கைப் பெட்டியின் முன்பாக தரையில் ஏழுதடவையும் அதைத் தெளிப்பான்.

iii. **ஸ்தலத்தைப் பரிசுத்தம் ஆக்குதல்.** லேவி 16[16.19]. இதற்குப்பின்பு பிரதான ஆசாரியன் மறுபடியும் வெளியே வந்து, பலிக்காகக் கொல்லப்பட்ட வெள்ளாட்டுக் கடாவின் இரத்தத்தை எடுத்து, மூன்றாம்தடவை மகா பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசித்து, அந்த இரத்தத்தை முன்போல் தெளித்து, வெளியேவந்து பரிசுத்த ஸ்தலத்தையும் தேவாலயத்தின் புறங்களையும் தகன பலிபீடத்தையும் பாபதோஷத்தினின்று பரிசுத்தமாக்கும்படி காளையின் இரத்தத்தையும் ஆட்டுக்கடாக்களின் ரத்தத்தையும் அவைகளின்மேல் தெளிப்பான்.

iv. **வனாந்தரத்துக்கு ஆட்டை அனுப்புதல்.** லேவி 16[20–22]. இவ்விதமாய்த் தன்னையும் தேவாலயத்தையும் பரிசுத்தமாக்கினபிறகு, பிரதான ஆசாரியன் ஜனங்களைப் பரிசுத்தமாக்கும்படி 'அசாசேலுக்கு' நியமிக்கப்

பட்ட வெள்ளாட்டுக்கடாவைக் கொண்டு வந்து, அதின் தலைமேல் தன் கைகளை வைத்து, ஜனங்கள் செய்த பாவங்களுக்காக அறிக்கையிட்டு, ஜனங்களின் பாவத்தைச் சுமக்கிற அந்த ஆட்டுக்கடாவை மனுஷர் சஞ்சாரமற்ற காட்டுக்குட் போகவிடும்படி அதை ஒரு ஆள்வசம் அனுப்பிவிடுவான். பிரதான ஆசாரியன் செய்த பாவஅறிக்கையை ரபிமார் தங்கள் நூல்களிலே மிகக் கவலையாய் எழுதினார்கள். புதிய ஏற்பாட்டுக் காலத்தில், ஆட்டுக்கடாவைக் கொண்டுபோன ஆள் அதை எருசலேம் பட்டணத்துக்குக் கிழக்கே பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள ஓர் பெரிய மலையின்மேல் கொண்டுபோய்ச் செங்குத்தான மலையிலிருந்து ஆழ்ந்த பள்ளத்தாக்கிலே அதைக் கொல்லும்படி எறிந்து விடுவான்.

v. **முடிவு.** லேவி $16^{23-28}$. பிரதான ஆசாரியன் ஸ்நானஞ்செய்தபின் மறுபடியும் விசேஷித்த வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு தனக்காகவும் ஜனங்களுக்காகவும் தகனபலிகளைச் செலுத்துவான். பின்பு இவ்வேலைக்கென்று நியமிக்கப்பட்ட ஒருவன் பாவ நிவாரண பலியாகிய காளையின் உடலையும் ஆட்டுக்கடாவின் உடலையும் வெளியே கொண்டு போய் அவற்றை நெருப்பிலே தகனித்து விடுவான். 'அசாசேலுக்கு' ஆட்டுக்கடாவைக் கொண்டுபோனவனும் காளை ஆட்டுக்கடா இவற்றின் உடலை எரித்துவிடப் போனவனும் ஸ்நானம் பண்ணாமல் ஊருக்குள்ளே மறுபடியும் வரக்கூடாது.

இவையெல்லாவற்றையும் பார்த்து இந்தச் சடங்கின் முக்கிய கருத்து என்னவென்று ஆராய்வோமானால், பாவம் அகோரமானது என்றும், அதை நீக்க வழிதேடுவது அவசியம் என்றும், பாவநிவாரண பலிகளை இடுவதினால்மாத்திரம் கடவுளோடு ஐக்கியமாக முடியும் என்றும் அறியவேண்டும்.

இவைகளில் பாவத்தின் அகோரத்துக்குத் திருஷ்டாந்தங்களாவன:

i. ஜனங்கள் செய்த பாவங்கள் தேவாலயத்தையும் அசுசிப்படுத்தும்.

ii. பிரதான ஆசாரியன் தானே தன்னைச் சுத்திகரிக்கும்படி பலி செலுத்தவேண்டும்.

iii. வனாந்தரத்துக்கு ஆட்டுக்கடாவைக் கொண்டுபோனவன் அதைக் கையாலே தொட்டபடியால் அது சுமந்துகொண்டு போன பாவத்தினாலே அசுசிப்பட்டிருக்கிறான்.

iv. பிரதான ஆசாரியன் பாவஅறிக்கை செய்யும்போது ஆட்டுக்கடாவின் தலைமேல் தன் கைகளை வைக்கிறதினாலே தான் அறிக்கையிட்ட பாவங்களை அதற்குள் செலுத்துவது விசேஷித்த திருஷ்டாந்தம்.

பூர்வீக காலங்களில் ஜனங்கள் வனாந்தரத்துக்கு அனுப்பிவிடப்பட்ட ஆட்டுக்கடாவின் மூலமாய்த் தாங்கள் செய்த பாவங்களை 'அசாசேல்' என்னும் துஷ்ட தேவதைக்கு மாற்றுவதாக நம்பினாலும், பிந்தின காலங்களில் யூதர்கள் இதில் ஆவிக்குரிய கருத்தைத் தெரிந்துகொண்டு, பாவநிவாரணம் அடையும் விதத்தை இது காட்டுகிறது என்று அறிந்தார்கள்.

இவ்விதமாகவே எபிரெயர் நிருப ஆக்கியோன் பிரதான ஆசாரியன் செய்த பாவ நிவாரணத்தையும் இயேசுகிறிஸ்து பரிபூரணமாய்ச் செய்தருளிய உத்தம பாவநிவாரணத்தையும் ஒப்பிட்டு, பிரதான ஆசாரியன் செய்த பாவநிவாரணம் இயேசு அருளிய பாவநிவாரணத்துக்கு ஓர் அடையாளம் என்று உறுதியாய்ச் சொல்லுகிறான். எபி $7^{25}$ $9^{12}$. **பலி, பலிகள், பாவநிவாரணம்** காண்க.

**பண்டிதர்.** 'Wise men'. எஸ்தர் $1^{14}$.

**பண்ணை.** Husbandry. 1 கொரி $3^{9}$. **விவசாயம்** காண்க.

**பதர்.** Chaff. யோபு $21^{18}$ சங் $1^{4}$ $35^{3}$ ஏசா $33^{11}$ $29^{5}$ $41^{15}$ எரே $23^{28}$ ஓசி $13^{3}$ மத் $3^{12}$ லூக் $3^{17}$.

**பதான், பதான் அராம். Padan, Padan Aram.** [அராமின் சமபூமி] ஐபிராத்து, திகிரீஸ் நதிகளுக்கு இடையிலுள்ள சமபூமியின் வடபாகம். ஆதி $25^{20}$ $28^{2.5.7}$ $31^{18}$ $46^{15}$ $48^{7}$. =மெசொபொத்தாமியா. சங் 60 தலைப்பு. **அராம்** காண்க.

**பதில் அளிக்கிறது, பதிற்செலுத்துகிறது, பதிற்செய்கிறது. Recompense, repay.** உபா $7^{10}$ $32^{35}$ 2 சாமு $22^{21}$ சங் $18^{20}$ லூக் $14^{12}$ ரோம $11^{9}$ $12^{19}$ எபி $10^{30}$.

**பதிவிருக்கிறது. Lie in wait.** யோசு $8^{4}$ நியா $16^{12}$ சங் $10^{9}$ $59^{3}$ நீதி $7^{12}$ 2 நாளா $20^{22}$ 'சதிபண்ணுகிறது' 1 சாமு $29^{8.11}$. 'பதிவிடையாட்கள்' நியா $20^{29}$. 'பதிவிடை' யோசு $8^{2}$ 2 நாளா $13^{13}$.

**பத்சூவா. Bath-shua.** [செல்வத்தின் மகள்.]

1. =பத்சேபாள். 1 நாளா $3^{5}$.
2. =சூவா. **சூவா** காண்க.

**பத்சேபாள். Bath-sheba.** [ஆணையின் மகள்.] உரியாவின் மனைவியாகிய இவளோடு

தாவீது விபசாரம் செய்து, இவள் புருஷன் சாகும்படி உபாயம்பண்ணி, அவன் செத்த பிறகு இவளைத் தன் மனைவியாக எடுத்துக் கொண்டான். 2 சாமு $11^{2-27}$. நாத்தான் தீர்க்கதரிசி இதைக்குறித்து தாவீதைக் கண்டித்தான். 2 சாமு $12^{7}$. இவள் பெற்ற குழந்தை இறந்துபோனது. 2 சாமு $12^{18}$. பிறகு இவள் சாலொமோனைப் பெற்ருள். 2 சாமு $12^{2.4}$. அதோனியா அரசாட்சியை அபகரிக்கும்படி ராஜதுரோகம் பண்ணினபோது, நாத்தான் தீர்க்கதரிசியின் உதவியினுல் இவள் அந்த ராஜதுரோகத்தை அடக்கி தன் மகனுகிய சாலொமோன் இஸ்ரவேலுக்கு ராஜாவாயிருக்கும்படி செய்தாள். 1 இரா 1 அதி. இவள் அதோனியாவுக்கு அபிஷாகைக் கொடுக்கும்படி விண்ணப்பம் பண்ணினுள். சாலொமோன் அந்த விண்ணப்பத்துக்கு இணங்காமல் இதினிமித்தம் அதோனியாவைக் கொன்ருன். 1 இரா $2^{12.25}$. இவளுக்கு 'பத்சுவா' என்றும் பெயர். 1 நாளா $3^{5}$.

**பத்தாரா.** **Patara.** சின்ன ஆசியாவின் தென் திசையிலுள்ள நாடாகிய லீசியாவில் ஒரு பெரிய கடல் துறைமுகம். இதிலிருந்து கப்பல்கள் பெனிக்கேயா தேசத்துக்கும் எகிப்து தேசத்துக்கும் நேராய்ப் போவது வழக்கம். அப் $21^{2}$.

**பத்திரோபா.** **Patroba.** ரோமாபுரியிலுள்ள சபையைச்சேர்ந்த ஒரு கிறிஸ்தவன். ரோம $16^{14}$.

**பத்து கற்பனைகள்.** **The ten commandments.** **கற்பனைகள்** காண்க.

**பத்மராகம்.** **Sardius.** யாத் $28^{17}$ $39^{10}$ எசே $28^{13}$ வெளி $21^{20}$. **இரத்தினம்** காண்க.

**பத்மு.** **Patmos.**

சின்ன ஆசியாவுக்கு மேற்கே, பதினுறு மைல் விஸ்தீரணமுள்ள ஒரு தீவு. ஆதி கிறிஸ்தவர்களுடைய பாரம்பரியங்களின்படி ரோமராயனுகிய தோமித்தியன் இத்தீவுக்குப் பரிசுத்த யோவானைத் துரத்திவிட, பரி. யோவான் இதிலுள்ள ஒரு குகையில் வசித்து; வெளிப்படுத்தின விசேஷத்தில் கண்ட காட்சிகளை இந்தக் குகையில் எழுதினுன். வெளி $1^{3}$.

**பத்ரபீம்.** **Bath-rabbim.** [அநேகரின் மகள்.] எஸ்போன் ஊரின் வாசற்களில் ஒன்று. உன். பா $7^{4}$.

**பத்ருசீம்.** **Pathrusim.** ஆதி $10^{14}$. **பத்ரோஸ்** காண்க.

**பத்ரோஸ்.** **Pathros.** எகிப்து தேசத்தின் தென்பாகம். கி—மு. 525—ஞ முதல் இதிலிருக்கிற செவேனே பட்டணம் முதலிய ஊர்களில் யூதர்கள் அநேகர் இருந்தார்கள். எசா $11^{11}$ எரே $44^{1}$ எசே $29^{14}$ $30^{14}$.

ஆதி $10^{14}$—ல் 'பத்ருசீம்' என்பதற்கு 'பத்ரோஸ் தேசத்தார்' என்று அர்த்தம்தான்.

**பந்தம்.** **Torch.** நியா $15^{4}$ யோபு $41^{19}$ யோவா $18^{3}$. தீவட்டி **தூத்துவிளக்கு** காண்க.

**பந்தயச்சாலை.** **Race course.** 1 கொரி $9^{24}$. **பந்தயம்** காண்க.

**பந்தயம்.** **Races.**

கிரேக்கர்கள் குதிரைப்பந்தயம், ரதமீது சவாரிப்பந்தயம், ஆட்கள் ஓடும்பந்தயம், மல்யுத்தம் முதலிய விளையாட்டுக்களைக் கொண்டாடிவந்தார்கள்.

நாலு வருஷத்துக்கொருதடவை கொண்டாடப்படுகிற ஒலிம்பிக் (*Olympic*) என்



பத்மு பட்டணத்தின் துறைமுகம்.

னும் பந்தய ஓட்டம் எல்லாவற்றிலும் விசேஷமானது. இவைகளுக்காகச் சகல ராஜ்யங்களிலுமிருந்து இந்த விளையாட்டுக்களில் அதிக திறமையுள்ளவர்கள் பந்தயம் பெறும்படி ஏராளமாய் வருவார்கள். இவைகளைத் தவிர இந்தமாதிரியான பந்தய ஓட்டங்கள் எபேசு, கொரிந்து முதலிய பட்டணங்களிலும் நடந்துவந்தன. எந்த ஊரிலும் பந்தய சாலைகளிருந்தன. பரி. பவுல் ஓடுகிறவர்கள் நெடுங்காலமாய்த் தங்களை அப்பியாசப்படுத்த வேண்டிய பந்தய ஓட்டத்தையும் (1 தீமோ $4^{7}$ 2 தீமோ $2^{5}$), கால் ஓட்டத்தையும் (2 தீமோ $4^{7}$ பிலி $3^{12.16}$ ரோம $9^{16}$ கலா $2^{2}$ $5^{7}$ பிலி. $2^{14}$ அப் $20^{24}$), திருஷ்டாந்தங்களாக சொல்லுகிறான்.

இந்த ஓட்டங்களில் ஜெயிக்கும் பந்தயப் பொருள் ரத்தினுதிகள் பதித்த கிரீடமல்ல, இலைகளினுற் செய்யப்பட்ட ஒரு முடியாம். ஒலிம்பிக் பந்தய ஓட்டங்களில் காட்டொலிவ மரங்களின் இலைகளினுல் செய்தமுடி வைப்பார்கள். சில இடங்களில் பந்தய இலக்கை முதல் அடைந்தவனுக்குக் குருத்தோலை கொடுப்பார்கள் (வெளி $7^{9}$ 1 கொரி $9^{24}$). ஜெய சின்னமாக இலைகளினுற் செய்த இந்த முடியைப் பெறுகிறவன், அழிவுள்ள கிரீடத்தையல்ல, நித்தியகீர்த்தியைப் பெறுவதற்காக அவனுடைய பேரைப் பல இடங்களிலும் பிரஸ்தாபப்படுத்துவார்கள். எபே $4^{27}$ $6^{12}$.

மேலும் பரி. பவுல் துஷ்டமிருகங்களுடனே போராடினேன் (1 கொரி $15^{3}$) என்று சொல்லி அக்காலத்தில் ஜனங்கள்



பந்தயம்.

ஆவலாய்ப் பார்க்க விரும்பின காட்சியைக் குறித்துப் பேசுகிறான். எபே $4^{27}$ $6^{12}$. அநேக கிறிஸ்தவர்கள் துஷ்டமிருகங்களோடு போராடும்படி அவைகளுக்குமுன் போடப்பட்டு இரத்தச் சாட்சிகளாய் மரித்தார்கள்.

பந்தய ஓட்டங்களைப் பார்க்கும்படி ஜனங்கள் திரள் திரளாய் வருவார்கள். எபி $12^{1}$.

கல், வெள்ளைக்கல் காண்க.

**பந்தி.** Table, company of guests.

1. விருந்து. 1 சாமு $20^{29}$ சங் $23^{5}$ $69^{22}$ உன். பா $1^{12}$.
2. விருந்தாளிகளின் கூட்டம். லூக் $9^{14}$.
3. போஜனம். அப் $6^{2}$ ரோம $11^{9}$.
4. =பலி. மல் $1^{7.12}$.
5. உவமையாய். லூக் $22^{30}$.
6. கர்த்தருடைய நற்கருணை. 1 கொரி $10^{21}$.

**பந்தி விசாரிப்புக்காரன்.** 'Ruler of the feast.' விருந்தை ஒழுங்காய் நடத்தவும், தாங்கள் நல்லொழுக்கத்தின்படி சாப்பிடவும் பானம்பண்ணவும் பந்தியிலிருக்கிறவர்கள் தங்களுக்கு ஒரு பந்தி விசாரிப்புக்காரனை நியமிப்பது வழக்கம். யோவா $2^{8}$.

**பம்பிலியா.** Pamphylia.

சின்ன ஆசியாவின் தென்பாகத்தில் ஒரு நாடு. இது லீசியா நாட்டுக்கும் சிலிசியா நாட்டுக்கும் இடையில் இருந்தது. கிழக்கிலிருந்து மேற்குவரை இது 80 மைல் தூரம். தௌரஸ் (*Taurus*) என்னும் மலைகள் இதின் வட எல்லையாய் இருந்தது; தென் எல்லை மத்தியதரை கடல். இதின் தலைநகர் பெர்கே. முதல் பிரயாணத்தில் பவுலும் பர்னபாவும் பெர்கே என்னும் ஊருக்கு வந்தபின் யோவான் மாற்கு இவர்களை விட்டுப் பிரிந்து எருசலேமுக்குத் திரும்பிப் போனுன். இவர்கள் பிரயாணத்தை முடித்து பெர்கேக்கு திரும்பி வந்தார்கள். அப் $13^{13}$ $14^{25}$. பம்பிலியா நாட்டில் கிறிஸ்தவசபை அவ்வளவு விருத்தி அடையவில்லை.

**பயங்கரம்.** Fearfulness. உபா $28^{58}$ சங் $76^{7.11}$ ஏசா $21^{4}$ எரே $6^{25}$ லூக் $21^{11}$ எபி $10^{31}$.

**பயபக்தி.** 'Fear. யோபு $15^{4}$ 'பயபக்திக் குரியவர்' ஆதி $31^{42.53}$.

**பயப்படத்தக்கவர்.** To be feared. யாத் $15^{11}$ சங் $96^{4}$ $89^{7}$.

**பயம்.** Fear.

1. அச்சம். ஆதி $9^{2}$ யாத் $15^{16}$ $23^{27}$ மத் $14^{26}$ லூக் $1^{12}$ அப் $24^{25}$ ரோம $8^{15}$ 1 கொரி $2^{3}$ 2 தீமோ $1^{7}$ 1 யோவா $4^{18}$ வெளி $11^{11}$.
2. வணக்கம். மல் $1^{6}$ ரோம $13^{7}$ 1 பேது $2^{18}$ $3^{2.15}$.

3. தைரியமில்லாமை. ஏசா $8^{12}$ நீதி $29^{25}$ எஸ்று $3^{3}$ எசே $30^{13}$ ரோம $8^{15}$ 1 கொரி $2^{3}$ 2 கொரி $7^{5.15}$. **தேவபயம்** *காண்க.*



பயற்றஞ்செடி.

**பயறு**. **Lentils.** *வறுத்த பயறு.* 2 சாமு $17^{28}$. *பெரும் பயறு (Beans)* 2 சாமு $17^{28}$ எசே $4^{9}$. *சிறு பயறு (Lentils).* 2 சாமு $17^{28}$ $23^{11}$ எசே $4^{9}$. *வறுத்த சிறு பயறு.* 2 சாமு $17^{28}$. *பயற்றங்கூழ்.* ஆதி $25^{34}$.

**பயித்தியக்காரன்**. **Fool.** **பைத்தியக்காரன்** *காண்க.*

**பயித்தியக்காரி**. **Foolish woman.** யோபு $2^{10}$.

**பயித்தியம்**. **Madness.** **பைத்தியம்** *காண்க.*

**பயிர் இடுகிறது**. **Husbandry.** ஆதி $9^{20}$ 2 நாளா $26^{10}$ எரே $31^{24}$ யோவே $1^{11}$ ஆமோ $5^{16}$ சக $13^{5}$ 2 தீமோ $2^{6}$ யாக் $5^{7}$. **விவசாயம்** *காண்க.*

**பரகேயேல்**. **Barachel.** [*கடவுளால் ஆசீர்வதிக்கப்பட்டவன்*] எலிகூவின் தகப்பன். யோபு $32^{2.6}$.

**பரஸ்திரீ**. **Strange woman.** நீதி $2^{17}$ $5^{3}$ $5^{20}$ $6^{24}$ $7^{5}$ $22^{14}$ $23^{27.33}$.

**பரணி**. **Box.** *'பரணி.'* லூக் $7^{37}$. *'வெள்ளைக்கல் பரணி.'* மத் $26^{7}$ மாற் $14^{3}$. *'சுகந்த பரணி.'* ஏசா $4^{19}$.

**பரதீசு**. **Paradise.** மூல பாஷைகளில் 'பரதீசு' என்பதற்குச் சிங்காரவனம் அல்லது தோட்டமென்று அர்த்தமாம். பழைய ஏற்பாட்டின் மூலபாஷையில் சில வசனங்களில் 'பரதீசு' (*Paradise*) என்பது இக் கருத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. உன். பா $4^{13}$ பிர $2^{5}$ நெகே $2^{8}$. உன். பா $4^{13}$ எண் $24^{6}$–ல் 'தோட்டம்' நெகே $2^{8}$–ல் 'வனம்' ஆதி $2^{8.10.15}$ $3^{2.3.23.24}$–ல் 'தோட்டம்' என்பவை 'சிங்காரவனம்' என்பதைக் குறிக்கிறது.

பரதீசைக்குறித்து யூதர்கள் மெத்த நூதனமாயெண்ணினார்கள். ஏதேன் தோட்டத்திற்கும், மரித்துப்போனவர்களுடைய ஆத்துமாக்கள் தங்குமிடத்திற்கும், மோட்சத்திற்கும், 'பரதீசு' என்று யூதர்கள் வழங்கி வந்தார்கள். புதிய ஏற்பாட்டில் இப்பதம் மிகச் சொற்பமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. லூக் $23^{43}$–ல் மரித்துப்போனவர்கள் தங்கும் ஸ்தலம் பரதீசு என்று இயேசு சொல்லுகிறதாகத் தோன்றுகின்றது. 2 கொரி $12^{3}$–ல் பரி. பவுல் 'பரதீசு' என்பது ஆவிக்குரியவிதமாய் அடைந்த பரமஞானம் என்று சொல்லுகிறான். 2 கொரி $12^{2}$–ல் சொன்ன 'மூன்றும் வானம்' என்பதற்கும் வெளி $2^{7}$–ல் ஜெயம்கொண்ட பரிசுத்தவான்களின் கடைசியான வாசஸ்தலமாகிய மோட்சம் என்பதற்கும் ரபிமார் 'பரதீசு' என்று பெயர் இட்டார்கள். **வானம்** *காண்க.* இதின்படி அந்நாள் முதற்கொண்டு விசுவாசிகள் அடையும் மோட்சகதிக்குக் கிறிஸ்தவர்கள் யாவரும் பரதீசு என்று சொல்லுவார்கள். **ஏதேன்** *காண்க.*

**பரதேசி**. **Pilgrim, Stranger, Sojourner.** ஆதி $47^{9}$ $15^{13}$ $23^{4}$ யாத் $2^{22}$ $6^{4}$ $12^{19-49}$ லேவி $17^{15}$ $25^{23-47}$ எண் $35^{15}$ உபா $23^{7}$ யோபு $19^{15}$ சங் $39^{12}$ $105^{23}$ எபி $11^{8.13}$ 1பேது $1^{17}$ $2^{12}$. *'அரதேசிகளும் பரதேசிகளும்'* 1 நாளா $29^{15}$.

**பரபாஸ்**. **Barabbas.** [*தகப்பனுடைய மகன்*] கலகம்பண்ணி, அந்தக் கலகத்தில் கொலைசெய்த கள்ளன் ஒருவன். இவன் மகா குற்றவாளி ஆனாலும் யூதர்கள் தாங்கள் இயேசுவின் பெயரில் வைத்த பகையினிமித்தம் இயேசுவையல்ல இவனை விடுதலையாக்க வேண்டும் என்று கேட்டார்கள். மத் $27^{16}$ மாற் $15^{7}$ லூக் $23^{8}$ யோவா $18^{40}$.

**பரம**. **'Heavenly.'**

'பரம காரியங்கள்'. யோவா $3^{12}$.

'பரம சேனை'. லூக் $2^{13}$.

'பரம தரிசனம்'. அப் $26^{19}$.

'பரம தேசம்'. எபி $11^{16}$.

'பரம நன்மைகள்'. எபே $1^{4}$ (பக்கத்தில்). கிரேக்க பதத்துக்குப் 'பரம காரியங்கள்' அல்லது 'பரமண்டலம்' அல்லது 'உன்னதம்' என்று அர்த்தமாம்.

'பரம அழைப்பு'. எபி $3^{1}$.

'பரம ஈவு'. எபி $6^{4}$.

'பரம எருசலேம்'. எபி $12^{22}$.

'பரம பிதா'. மத் $6^{14.26-32}$ $15^{13}$ $18^{35}$ லூக் $11^{13}$.

'பரம ராஜ்யம்'. 2 தீமோ $4^{18}$.

**பரமண்டலம். Heaven.** எபிரெயர்கள் ஒரு மெத்தைவீட்டுக்கு மேல்வீடுகள் எப்படியிருக்கின்றனவோ அப்படியே பரலோகங்கள் சமபூமியுள்ள இவ்வுலகத்திற்கு மேற்கூரைகளாய் இருக்கிறது என்றும்; அதைத் தாங்கும்படி 'அஸ்திபாரங்கள்' அல்லது 'தூண்கள்' உண்டு, என்றும் (2 சாமு $22^{8}$ யோபு $26^{11}$ நீதி $8^{27}$); பரமண்டலங்கள் ஏழு அல்லது ஏழுக்கு மேற்பட்டவை இருக்கின்றன என்றும் (உபா $10^{14}$); மேலான லோகத்தில் கடவுளுடைய சிங்காசனம் இருக்கிறது என்றும் (சங் $11^{4}$ $103^{19}$ ஏசா $14^{3}$); மூன்றும் லோகம் பரதீசு என்றும் (2 கொரி $12^{2}$) நம்பினார்கள். சிலருடைய அபிப்பிராயத்தின்படி தண்டனைக்காக வைக்கப்பட்ட துஷ்ட ஆவிகளும் தூதர்களும் இரண்டாம் லோகத்தில் இருந்தார்கள். எபே $6^{12}$ வெளி $12^{7}$ காண்க. மோட்சமாகிய பரமண்டலம் தேவனுடைய விசேஷமான கிரியையாயிருக்கிறது சங் $19^{1}$ $33^{6}$ நீதி$8^{27}$ ஏசா $42^{5}$. 'வானுதிவானங்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிற வசனங்களாவன: உபா $10^{14}$ 1 இரா $8^{27}$ 2 நாளா $2^{6}$ $6^{18}$ நெகே $9^{6}$ சங் $148^{4}$. கடவுள் தமது வேலையை எவ்விடத்திலும் செய்தும், அவர் விசேஷமாய்ப் பரலோகத்தில் வாசம் பண்ணுவார். சங் $2^{4}$ $103^{19}$ $104^{2}$ $115^{3}$. அங்கேயிருந்து கடவுள் உலகங்களெல்லாவற்றையும் ஆளுகைசெய்துவருகிறார். 2 நாளா $6^{18-25}$. பிற்காலத்தில் யூதர்கள் அது எண்ணிறந்த அரூபிகளாகிய தூதர்களும் பரிசுத்தவான்களும் இருக்கிற இடம் என்று நினைக்கவந்தார்கள். கிறிஸ்தவர்கள் அது மீட்கப்பட்டவர்கள் இருக்கிற இடம் என்றும்; அவர்கள் அங்கே கடவுளினுடைய ஆசனத்தைச் சூழ நின்றுகொண்டு அவரை ஸ்தோத்திரம்பண்ணி, அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறார்கள் என்றும்; அது பரிசுத்தமும் பாக்கியமுமுள்ள நித்திய இடமாயிருக்கிறது என்றும்; அசுத்தமும் நிர்ப்பாக்கியமும் அங்கே இல்லை என்றும்; நிஷ்களங்கமான நன்மை எக்காலமும் அங்கே உண்டு என்றும்; அன்றியும் அதுவே விசுவாசிகள் யாவரும் இளைப்பாறிச் சந்தோஷப்படும்படிக்கான இடமாயிருக்கிறது என்றும்; அது நித்திய ஒளி பொருந்தியது என்றும் நம்பினார்கள். அதுவும் அன்றி வேதசாஸ்திரிகளில் சிலர் பரமண்டலம் ஒரு இடம் அல்ல, மரணத்துக்குப் பிற்பாடு பாக்கியசாலிகள் அடையும் கதிதான் என்று போதித்துவந்தார்கள். பரமண்டலத்தைப்பற்றி நமக்குத் தெளிவாய்த் தெரியாததினால் நாம் இதைப்பற்றித் தீர்மானமாய்ச் சொல்லாமல், எப்படியாவது 'பரமண்டலம்' விசுவாசிகள் அடையும் உத்தம பாக்கியத்தைக் குறிக்கிறது என்று சொல்லத் துணிகிறோம். ஆகாயம் காண்க.

**பரம்புகிறது. Spread.** அப் $4^{17}$.

**பரலோக ராஜ்யம். The kingdom of heaven.** இராஜ்யம் (பக். 135) காண்க.

**பரவசம். Trance.** அப் $10^{10}$–ல் பக்கத்தில் 'ஞானதிருஷ்டி' என்பதற்குப் பதிலாக 'பரவசம்' என்று எழுதியிருக்கிறது.

**பராக்கிரமசாலிகள். Mighty ones.** யோவே $3^{11}$. தூதன் காண்க.

**பராபரன். The Supreme Being.** கடவுள்; சர்வவியாபகம், சர்வஞானம், சர்வவல்லபம், ஆதியந்தமில்லாமை, மாறாமை, சுயம்பு, சம்பூரணம், அளவில்லாத பரிசுத்தம், நீதி, விவேகம், சத்தியம், அன்பு, இரக்கம் முதலிய இலட்சணங்களை உடையவராய் சிருஷ்டி திதி சங்காரக்கிரியைகளை நடத்துகிறவராய் ஜீவனும் புத்தியுமுள்ள அரூபியாய் ஒப்புவமையில்லாத பாக்கியப்பொருளே கடவுள்.

'ஆதியந்தமில்லாத காலந்தன்னி
லனாதியாய்நின்றதே பரமென்றாகும்.'

(கௌதமர்.)

'கடையிலா ஞானத்தோடு
காட்சிவீ ரியமேயின்ப
மிடையுறு நாமமின்மை
விதித்தகோத் திரங்களின்மை
யடைவிலா வாயுவின்மை
யந்தரா யங்களின்மை
யுடையவன் யாவன்மற்றிவ்
வுலகினுக் கிறைவனாமே.'

(சூளாமணி நிகண்டு.)

குறிப்பு.—வேதாகமத்திலே கடவுளுக்கு 'தேவன்' என்கிற பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. 'தெயாஸ்' (θεός) என்னும் கிரேக்குமொழியும் 'தேவன்' என்னும் சமஸ்கிரதமொழியும் ஒரேமொழி. 'கடவுள்' என்பது தமிழ் பதமே. அதின் பொருள் 'கடந்த உள்ளம்' (*Infinite existence*) என்பதே.

I. சர்வத்தையும் படைத்து ஆண்டுகொண்டுவருகிற ஒரு ஆதிகாரணக் கடவுள் உண்டென்று இயல்பாய் யாவருக்குந் தெரியும். அகங்காரமுள்ள நாஸ்திகர் சிலர்மாத்திரம் தேவன் இல்லையென்று எண்ணுகிறார்கள். அந்த மயக்கத்தை நீக்குதற்குச் சில நியாயங்கள் உண்டு: அவையாவன:—

1. காரணமில்லாமல் ஒரு காரியமும் இல்லை.

உலகத்தில் அநேகம் பொருள்களும் நடக்கைகளும் நிறைந்திருக்கிறபடியால் அவற்றிற்கு ஒரு காரணம் உண்டென்று தெளிவாய்த் தோன்றுகிறது. அந்தக் காரணம் கடவுளே. எப்படி இரண்டும் இரண்டும் மூன்ருகாவோ, அப்படியே ஒன்றுமில்லாமையினின்று ஒன்றும் தோன்ருது என்பது சத்தியப் பிரமாணம். புகைகாணுமிடத்திலே தீ இருக்குமென்ற அநுமானப் பிரமாணத்தின்படியே சிருஷ்டியிருக்க, அதனைச் சிருஷ்டித்தவரும் இருக்கவேண்டும் அல்லவா? காணப்பட்ட உலகினுலே காணப்படாதகடவுளின் உண்மையைச் சொல்லவேண்டி,

'அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு'

என்று குறளில் சொல்லியிருக்கிறது. 'எந்த வீடும் ஒருவனுல் உண்டாக்கப்படும். எல்லாவற்றையும் உண்டுபண்ணினவர் தேவன்.' எபி 3:4 ரோம 1:20.

2. விஸ்தாரமான உலகம் மிகவும் ஒழுங்காய்ச் செய்யப்பட்டிருக்கிறதினுலும், சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களெல்லாம் ஒன்ருேடொன்று இசைவாயும் ஒன்றுக்கொன்று உதவியாயும் இருக்கிறதினுலும் கடவுள் உண்டென்று விளங்குகிறது.

சராசரங்களெல்லாம் தற்செயலாய் உண்டாயின என்பது அறிவீனமாயிருக்கிறது. ஒரு சுவடியின் ஏடுகளையெல்லாம் உருவிக் கலைத்துக் குலுக்கித் தரையில் போடுவோமாஞல், ஏடுகளெல்லாம் வாசிக்கத்தக்கதான ஒழுங்காய் விழுமோ? விழாதே. அப்படியிருக்க, இந்த விநோதமான உலகம் இவ்வளவு சீருள்ளதாய் ஒருவராலுண்டாக்கப்படாமல் தன்னைத்தானே ஒழுங்குசெய்து கொள்ளக் கூடுமோ? தற்செயலாய் உண்டான வீடு எங்கேயாகிலும் உண்டா? இல்லையே. தற்செயலாய் ஒன்றும் ஒழுங்குபடாதாகையால் ஒழுங்குப்பிரமாணத்திற்கு அடங்கியிருக்கிற சந்திரன், சூரியன், பூமி, நட்சத்திரம் முதலியவை தற்செயலாய் அல்ல, அளவில்லாத புத்தியுள்ள ஒரு வஸ்துவினுலே உண்டாயின என்பதற்குச் சந்தேகமில்லை. அந்த வஸ்துவே கடவுள்.

3. இவ்வுலகத்திலுள்ள பொருள்கள் யாவும் ஒவ்வொரு காரியத்திற்காக ஏதோ ஒரு நோக்கத்தோடே ஏற்படுத்தப்பட்டவைகளாயிருக்கிறதினுலேயும் கடவுள் உண்டென்று விளங்குகிறது.

ஒவ்வொரு பொருளும் வீணுகவல்ல, ஒரு பிரயோஜனத்திற்காகவே உண்டாக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலிருக்கிற பொருள்களில் சில புத்தியுள்ளதும், சில புத்தியில்லாததுமாயிருக்கிறது. புத்தியுள்ள சில வஸ்துக்களும் அநேக காரியங்களை யோசனையில்லாமல் இயல்பாய்ச் செய்கின்றன. திருஷ்டாந்தமாக, மனிதனுனவன் தான் சாப்பிடுகிற போஜனத்தை இப்படி ஜீரணிக்க வேண்டும் என்றும், அதின் சாரத்தை இப்படித் தேகத்துக்குள்ளே பகிர்ந்துகொடுக்க வேண்டும் என்றும் யோசிக்கிறதில்லையே. ஆதலால் இந்தக் காரியங்களை ஏற்படுத்துகிறதற்கு ஒரு காரணம் வேண்டுமே. அந்தக் காரணம் தேவனே. இயல்பினுலே அப்படியாகமாட்டாதா என்று கேட்டால், ஆகமாட்டாது. இயல்பானது ஒரு பொருளுக்குப் புறம்பான ஒரு காரணமல்ல, அந்தப் பொருளின் தன்மையாயிருக்கிறது. அந்தத் தன்மையை யோசித்து உண்டாக்க ஒருவர் வேண்டும்; அப்படிச் செய்கிறவர் கடவுளே.

4. உலகமாகிய உடலையும் அதற்குண்டாயிருக்கிற அசைவையும் சிந்திக்கிறதினுலேயும் கடவுள் உண்டென்று விளங்குகிறது.

உடலானது நித்தியமாயும் தானுயும் இருக்கும் என்ருவது, அல்லது வேருெருவஸ்துவினுலே உண்டாக்கப்பட்டிருக்கும் என்ருவது சொல்லவேண்டும். உடலானது செயலற்ற பதார்த்தம்; அதற்கு உணர்வும் யோசனையும் இல்லை; ஆதலால் அது மிகவும் மேன்மையான குணங்களாகிய நித்தியமும் சுயம்புவுமானதென்று சொல்வது புத்தியீனமாயிருக்கும். உடலானது ஆதியிலே வேருெரு வஸ்துவினுலே உண்டாக்கப்பட்டதென்ருல் அந்த வஸ்துவே கடவுள். அல்லாமலும் அசைவானது உடலுக்கு இயல்பாயிருக்கும் என்ருவது, அல்லது ஒருவரால் உடலுக்குக் கொடுக்கப்பட்டதாய் இருக்கும் என்ருவது சொல்லவேண்டும். அசைவானது உடலுக்கு இயல்பு என்று புத்திமான்கள் சொல்லார்கள். உடலானது தன்னைத்தான் அசைக்குந் தன்மை தனக்கில்லாதிருக்க அது மற்றென்றை அசைக்கக்கூடுமா? கூடாதே. ஆதலால் அது மற்றெரு வஸ்துவினுலே அசைக்கப்படவேண்டும் என்பதற்குச் சந்தேகமில்லை. அப்படிச் செய்கிற வஸ்துவே அளவில்லாத புத்தியும் வல்லமையுமுள்ள கடவுள்.

5. மிகவும் ஆச்சரியப்படத்தக்க நம்முடைய சரீரத்திலே வாசமாயிருக்கிற ஆத்துமாவின் தன்மைகளைச் சிந்திக்கிறதினுலேயும் கடவுள் உண்டு என்று அறிந்துகொள்ளலாம்.

நம்முடைய ஆத்துமா அநாதியாயிருக்கும் என்றாவது, உடலினால் உண்டாயிருக்கும் என்றாவது, மற்றொரு வஸ்துவினால் உண்டாக்கப்பட்டிருக்கும் என்றாவது சொல்ல வேண்டும். இவைகளில் ஆத்துமா அநாதியாயிருக்கும் என்று சிலர் சொன்னாலும், புத்திமான்கள் அப்படிச் சொல்லுகிறதற்கு இடமில்லை. அதற்கு ஆதியுண்டென்று பிரத்தியட்சமாய்த் தோன்றுகிறதே. இரண்டாவது ஆத்துமா உடலினால் உண்டாயிருக்கும் என்பது கூடாதகாரியம். அதெப்படியென்றால், உடலானது ஆத்துமாவுக்கு மேன்மையானதல்லவே. அற்பமானது மேன்மையானதைப் பிறப்பிக்குமா? உயிரும் புத்தியுமில்லாத உடலானது உயிரும் புத்தியுமுள்ள ஆவியை எப்படிப் பிறப்பிக்கும்? ஆத்துமாக்களுக்கு உலகமெல்லாவற்றையுங் குறித்துச் சிந்திக்கிறதற்கும், திரிகாலவித்தியாசங்களைக்குறித்து நினைக்கிறதற்கும், அநேக அதிசயமான தொழில்களை யோசிக்கிறதற்கும், இந்தப் பூமியையல்லாமல் வானத்திலேயும் நுழைந்து கடவுளையும் நித்தியத்தையும் ஆராய்ந்து பார்க்கிறதற்கும் ஏற்ற திறமைகளுண்டு. இப்படிப்பட்ட ஆத்துமாக்களை ஒன்றையும் செய்யத் திராணியில்லாத உடல் எப்படியுண்டாக்கும்? ஆதலால் மூன்றாவது, நம்முடைய ஆத்துமா மிகவும் மேன்மையான ஒரு வஸ்துவினாலே உண்டாக்கப்பட்டிருக்கவேண்டும் என்பதே தீர்மானம். அந்த வஸ்து கடவுளே. ஆத்துமா காண்க.

6. நம்முடைய மனம் சொல்லுகிற சாட்சியினாலும் கடவுள் உண்டு என்று விளங்குகிறது.

அதெப்படியென்றால், நாம் ஒரு குற்றத்தைச் செய்யத் தொடங்கும்போதாவது ஒரு குற்றத்தைச்செய்தபோதாவது நம்முடைய மனதிலே ஒருவிதமான பயம் தோன்றுகிறதே. குற்றம் நமக்குள்ளே கலக்கத்தை யுண்டாக்கி, அதினாலே அகத்துரைப்பானாகிய மனச்சாட்சி நம்மைக் குற்றவாளிகள் என்றும், ஆக்கினைக்குப் பாத்திரவான்கள் என்றும் தீர்மானிக்கிறதே. 'தன்னெஞ்சறியாப் பொய்யுமில்லை,' 'தன்வினை தன்னைச் சுடும்' என்பது மெய்யாயிருக்கிறதுமன்றி, கடவுள் உண்டு என்பதற்கு ஓர் அத்தாட்சியாயுமிருக்கிறது. தேவனில்லாவிட்டால் குற்றத்திற்குப் பயமேன்?

7. உலகத்திலுள்ள சகலவித ஜனங்களும் இந்த விஷயத்தைக் கைக்கொள்ளுகிறதினாலேயும் கடவுள் உண்டு என்று இயல்பாய் விளங்குகிறது.

பூமியிலுள்ள மனிதர்களெல்லாரும் பல வித்தியாச முறைமைகளையும் கொள்கைகளையுங் கொண்டிருந்தாலும், கடவுள் உண்டு என்கிற பிரமாணத்தை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். பூமியில் சில விடங்களிலே கல்வி, விவேகம் முதலானவைகளில்லாத ஜனங்களுமுண்டு. கடவுள் இல்லை என்று சொல்லுகிற ஒரு ஜனம் எங்குமில்லை. இப்பூமியிலுள்ள ஜனங்களில் அநேகம்பேர் மெய்யான கடவுளைக் குறித்து அறிவில்லாதவர்களாயிருந்தும் ஒரு கடவுள் இருக்கவேண்டுமென்றெண்ணி, கல், மண், மரம் முதலியவைகளில் உருவங்கள் செய்து அவைகளைக் கடவுளாகப் பாவித்து வணங்குகிறார்கள். யாவருமுண்டென்று எண்ணுகிற பொருள் மெய்யாயிருக்கவே யிருக்கும் ஆதலால் கடவுள் உண்டு என்பதற்குச் சந்தேகமில்லை.

II. தேவன் ஆவியா யிருக்கிறபடியால் நம்முடைய இந்திரியங்களுக்குத் தோன்றுகிறவரல்ல; அவருடைய தத்துவத்தைச் சிற்றறிவுள்ள மனிதர்களாகிய நாம் பூரணமாய் அறியாமல் அவருடைய ஆச்சரியமான கிரியைகளினாலே அவருடைய இலட்சணங்களில் சிலவற்றைமாத்திரம் நாம் அறிந்துகொள்ளுகிறோம். அவர் அருளிய அற்புத ஆகமமாகிய வேதத்தினாலே விசேஷமாய் அவருடைய குறைவற்ற இலட்சணம் முதலியவைகளைக் குறித்து அறிந்துகொள்ளலாம்.

கடவுள் இருக்கிறார் என்கிற சத்தியம் யாவருக்கும் தெரிந்திருக்கிறபடியால், சத்தியவேதம் அதைத் தெரிவிக்கும்படி தர்க்கம் பண்ணாமல் கடவுள் ஒருவரே என்று தீர்மானமாய்ச் சொல்லுகிறது. அவர் ஒருவரே மெய்யான காரணக்கடவுள் என்பதற்கு இஸ்ரவேல் ஜனங்கள் அநுபவித்த நன்மைகளும், அவர்கள் கண்டு கேட்ட அற்புதங்களும், அவர்களுடைய மகாத்துமாக்கள் மொழிந்த தவறாத தீர்க்கதரிசனங்களும் பூரண திருஷ்டாந்தங்களாயிருக்கிறது.

சத்தியவேதத்தில் கடவுளைக்குறித்து எபிரெயர்களும் யூதர்களும் கிறிஸ்தவர்களும் நம்பினவைகளை நாம் மூன்றுவிதமாய் அறியலாம். அவையாவன:

முதலாவது, அவருடைய நாமங்களைக் குறித்தும்;

இரண்டாவது, அவருடைய கிரியைகளைக் குறித்தும்;

மூன்றாவது, அவருடைய இலட்சணங்களைக் குறித்தும் சொன்ன வேதவசனங்கள்.

1. கடவுள் ஒருவரானபடியாலும், அவர் ஒப்புவமையில்லாதவரானபடியாலும், அவருடைய தத்துவத்தில் எவ்வளவேனும் வேற்றுமை இல்லாதவரானபடியாலும், கடவுளுடைய தத்துவத்தைக் குறிக்கும் நாமங்கள் இல்லே. ஆனாலும், கடவுள் நிர்க்குணரல்லாதவராகையால் அவரை மனிதர்கள் அறிந்துகொள்ளும்படிக்கு அவருடைய குணங்களைக்குறிக்கும் காரணபபேர்கள் அவருக்குண்டாயிருக்கின்றன.

பழைய ஏற்பாட்டில் யூதர்கள் கடவுளுக்குத் தற்பரன் அல்லது சுயம்பு அல்லது 'இருக்கிறவர்' என்றர்த்தங்கொள்ளும் 'யேகோவா' என்றும் (ஏசா $42^{8}$), 'கடவுளர்' என்றர்த்தங்கொள்ளும் 'ஏலோகீம்' என்றும் (ஆதி $1^{1}$), 'ஆண்டவர்' என்றர்த்தங்கொள்ளும் 'அடோனுய்' என்றும் (ஆதி $15^{2}$), 'கடவுள்' என்றர்த்தங்கொள்ளும் 'ஏல்' என்றும் (ஆதி $31^{13}$), 'உன்னதமானவர்' என்றர்த்தங்கொள்ளும் 'எலியோன்' என்றும் (ஆதி $14^{18}$), 'எல்லாவற்றையும் செய்யக்கூடியவர்' என்றர்த்தங்கொள்ளும் 'ஷட்டாய்' என்றும் (ஆதி $17^{1}$), 'தற்பரன்' அல்லது 'இருக்கிறேன்' (*I am*) என்றர்த்தங்கொள்ளும 'எகிய' என்றும் (யாத் $3^{14}$), இவ்விதமாய்த் தகுந்த பல நாமங்களினுல் ஆதிகாரணராகிய கடவுளைக குறித்திருக்கிறார்கள் (யாத் $34^{6}$ காண்க.) **கடவுள்** காண்க

புதிய ஏற்பாட்டில் கிரேக்கபாஷையிலே தேவன் அல்லது கடவுள் என்றர்த்தங்கொள்ளும் 'தெயோஸ்' (*theos*) என்றும், கர்த்தர் அல்லது ஆண்டவர் என்றர்த்தங்கொள்ளும் 'குரியோஸ்' (*kurios*) என்றும், கடவுளுககு நாமங்கள் இடபபட்டிருக்கிறது.

இங்கிலீஷ் வேதபுஸ்தகத்தில் தேவன் என்றர்த்தங்கொள்ளும் 'காட்' (*God*) என்பதற்குப் பொருள் 'நன்மை'. கர்ததர் என்றர்த்தங்கொள்ளும் 'லார்ட்' (*Lord*) என்பதற்குப் பொருள் 'ஆண்டவர்.'

2. வேதம் கடவுளுடைய செய்கைகளின் வழியாய் அவரை நமக்கு அறிவிக்கிறது. அவர் வானத்தையும் பூமியையும் ஒன்றுமில்லாமையினின்று தம்முடைய வார்த்தையின் சக்தியினுலுண்டாக்கி அவற்றிலுள்ள எல்லா வஸ்துக்களையும் சிருஷ்டித்தாரென்று படிப்பிக்கிறது. இதினுல் சிருஷ்டிக்கத்தக்கவர் அநாதியாய் இருக்கவேண்டுமென்றும், மற்றவைகளுக்கு உயிரை உண்டாக்கத்தக்கவர் சுயம்புவாய் இருக்கவேண்டுமென்றும், ஆச்சரியமான அநேக அண்டங்களைப் படைத்தவர் சர்வ வல்லவரென்றும், இந்த அண்டங்களையெல்லாம் ஒழுங்காய்ப் படைத்தவர் சர்வ ஞானமுடையவரென்றும், அவர் செய்தவையெல்லாம் பிரயோஜனமானவைகளானதால் சர்வ நன்மையுடையவரென்றும் படிப்பிக்கிறது. அன்றியும் மனிதர்கள் பாவிகளானபோது, அவர் அவர்களுக்குச் செய்த நன்மைகளினுல் அவருடைய அன்பும் இரக்கமும் ஆச்சரியமாய் வெளிபபடுத்தப்பட்டன.

கடவுளுடைய செய்கைகளைக் குறித்து வேதம் அறிவிக்கும்போது நம்முடைய சிற்றறிவுக்குத் தோன்றும்படியாக நமக்குள் வழங்கும் பாஷைநடையின்படி கடவுள் மனிதனைக் கையால் சிருஷ்டித்தாரென்றும், அவருடைய சாயலில் சிருஷ்டித்தாரென்றும், அவர் நாசியின் சுவாசத்தை ஊதினுரென்றும், மனஸ்தாபபபட்டாரென்றும் சில வாக்கியங்களில் சொல்லியிருக்கிறது. கடவுள் ஆவியானவராகையால் இந்த உவமையான வாக்கியங்களுக்குத் தகுநதபடி வியாக்கியானம் பண்ணவேண்டும்

3. மேலே எடுத்துககாண்பித்த கடவுளுடைய செய்கைகளினுல் அவருடைய இலட்சணங்கள் தோன்றும இன்னமும் தேவவஸ்து ஒன்றென்றும் (உபா $6^{4}$ $32^{39}$ ஏசா $44^{1-3}$ 1 கொரி $8^{4\,6}$ எபே $4^{6}$ 1 தீமோ $2^{5}$), தேவன் ஆவியென்றும் (யோவா $4^{24}$), தேவன் வெளிச்சமென்றும் (1 யோவா $1^{5}$), தேவன் அன்பென்றும (1 யோவா $4^{8}$), அவர் நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள இராஜனென்றும, ஞானமுள்ள தேவனென்றும் (1 தீமோ $1^{17}$) சொல்லுகிறது.

தேவவஸ்து ஒருவரேயென்று வேதம் அறிவிக்கிறது. அதற்கு உலகத்தில் தோன்றுகிறவைகளில் பல திருஷ்டாந்தங்கள் உண்டு சிருஷ்டிபபுகள் செய்யப்பட்டிருக்கிற விதமும், ஒவ்வொரு ஜாதியைச் சேர்ந்திருக்கிற வஸ்துக்களின் ஒரே தன்மையும் அவைகளில் தோன்றுகிற ஒற்றுமையும், ஒரே காரணர் இருக்கிறுரென்றும் திருஷ்டாநதபபடுத்துகிறது. (*From an uniformity of plan is inferred the operation of one designer.*) இந்த உலகததில் நாம எஙகே போனுலும், எந்த வஸ்துக்களைக் கண்டாலும் அந்த வஸ்துக்களில் காணபபடும் சம்பந்தத்தினுலே காரணப்பொருள் ஒருவரேயென்று நினைப்பது நியாயம். இந்தப பொருள் வேதத்தில் திரியேகரென்றும் சொல்லியிருக்கிறது. புதிய ஏற்பாட்டில் சொன்னவைகளை நாம் விசாரித்தால் தேவதத்துவத்தில்

மூவரும் ஒருபொருளானபடியாலும் மூவரும் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரக் கிரியைகளை விகற்பமில்லாமல் ஏகசிந்தையாய் நடத்துகிறபடியாலும் உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் ஒரே தன்மையுள்ளதாயிருக்கிறது. ஒரு கடியாரத்தைச் செய்ய ஒருவனுடைய வல்லமை போதும்; ஆனாலும் அந்த ஒரே கடியாரத்தை ஒருமனப்பட்ட மூவர் சேர்ந்தும் செய்யலாமே. அப்படியே திரியேகர் சர்வத்தையுஞ் செய்து நடத்துகிறாரென்று வேதம் சொல்லுகிறது. (திரியேகத்துவம் காண்க)

III. கடவுளைக்குறித்து மேற்சொல்லிய நியாயங்களை விரோதிக்கிற நாஸ்திகன் தேவனில்லையென்று சாதிப்பான் காரணமில்லாமல் காரியமில்லை. ஆகையால் எல்லாவற்றிற்கும் தேவன் காரணரென்று நாம் சொல்லும்போது, அதை நாஸ்திகன் ஆட்சேபித்துத் தகப்பனால் பிள்ளையும், குயவனால் பானையும் உண்டாகவில்லையோ என்பான். மேலும், மனிதன் போகககூடாதவிடமாகிய வஞைந்தரததில் மரம் எபபடி வளரும் என்போமானால், அவன் சாணியில் புழு உற்பத்தியாகிறதுபோல வனாந்தரத்தில் மரஙகள் இயல்பாயுண்டாகிறது என்பான் அதற்கு நாம, விததில்லா சமபிரதாயமுண்டோ தகபபனில்லாமல் பிள்ளையுண்டாமோ என்போமானால், நாஸதிகன் உத்தரஞ்சொல்ல மாட்டாமல் எல்லாம் பிரகிருதியிலிருந்து தற்செயலாய் உண்டாகிறது என்பான் அபபடியாயினும, பிரகிருதியில் இருக்கும் பிராணி உணடாக்கினது எப்படி? முதலில் அதை உண்டாக்குகிற ஒரு பொருள் இருக்கவேண்டும் அபபடியே எல்லா காரணஙகளுககும் முதலில் ஆதிகாரணம ஒன்று இருககவேண்டும் அநதப பொருளை நாம் ஜீவனும புததியுமுள்ள ஆதிகாரணக கடவுள் என்போம்.

அபபடிச சொன்னாலும், பிரகிருதியின் சுபாவமே வஸ்துக்களுககுக் காரணமென்பவனுககும், தேவனே வஸ்துக்களுக்குக காரணமென்பவனுக்கும் வித்தியாசமுண்டு — அந்த வித்தியாசமென்னவென்றால், பிரகிருதியின் சுபாவமே எல்லாவற்றுககும் காரணம் என்கிறவன் வெறும் வஸ்துவாகிய அநதப் பிரகிருதிக்குத் தேவதன்மை உண்டு என்று சொல்லுகிறான். தேவனே சர்வத்துக்கும் காரணமென்பவன் சிருஷ்டிகள் யாவற்றிற்கும் அவற்றின் சுபாவங்களுக்கும் ஒரே சிருஷ்டிகர்த்தா உண்டென்று நியாயமாய் ஸ்தாபனம் பண்ணுகிறான்.

நாஸ்திகர்களில் சிலர் 'கண்டதே காட்சி' என்று தேவனைக் காணக்கூடாமையால் அவர் இல்லையென்று சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுகிறது புத்தியா? மனிதனை மனிதன் காணவில்லையே. அதெப்படியெனில், நாம் காண்கிற ஒரு மனிதனுடைய சரீரம் 'நான்' என்று சொல்லி அந்தச் சரீரத்தை நடத்தும்பொருளை பார்த்திருக்கிறோமா? அப்படியே காணப்பட்ட உலகத்தினாலே காணப்படாத கடவுளின் உண்மை விளங்கும். காண்பதைமாத்திரம் நம்புவோமானால், உலகத்திலுள்ளவை எத்தனையோ பொய்யென்று தீர்மானிக்க வேண்டியதாகுமே

அத்துவைதர்களாகிய வேதாந்திகள் பரப்பிரமம் உண்டென்று சொல்லியும், சமஸ்தமும் அவரே என்றும்; பரப்பிரமம் நிர்க்குணபொருளாய் இருக்கிறது என்றும், நாம் காண்பதெல்லாம் மாயை என்றும்; சமுத்திரத்தில் குமிழிகள் தோன்றி மறைவதுபோலவும் உலகத்திற் கனவுகாண்கிறதுபோலவுஞ் சகலமுந் தோன்றி மறையும் என்றும் சொல்லுகிறார்கள் அப்படியே காண்பதெல்லாம் மாயையா யிருக்குமானால், மாயையாகிய பொய்யைக்கொண்டு மெய்யாகிய பரப்பிரமம் உண்டென்று திருஷ்டாந்தப்படுத்தக் கூடுமா? பொய் மெய்யை விளக்குவிக்குமா? கூடாதே. எல்லாம் பொய்யென்று சாதிப்பவன், தன் சொல்லை மெய்யென்று நாட்டப பார்பபானே. எல்லாம் பொய்யாயிருக்குமானால், தான் உறுதியாய்ச் சாதிபபதும் பொயயாகுமே இவர்கள் பரபபிரமததை மேன்மைபபடுத்தபபோய் உள்ளதை இல்லையென்று கூறுவது நியாயமா? இந்தக் கொள்கை மனதில் மகா ஆணவத்தை யுண்டாக்கி மனிதனைத் தேவன் என்றும், ஆததுமா பிரமத்தின் அமசம என்றும் சொல்லத் துணியவைககும. ஆதியிலே ஆத்துமா தேவ 'சாயலில்' உண்டாக்கபபட்டது என்று சொல்லபபட்டிருககிறது, ஆயினும் அது தேவதன்மையில் உண்டாககபபடவில்லை. அதற்கிருந்த பூரவச்சாயலையும் அது பாவமாகிய அகநதையினால் இழந்துபோயிற்று. இந்தக் கொள்கை தன்னைத்தான் அறியாத அவிவேகத்தின் பயன் 'தன்னையறிந்தவன் தலைவனையறிவான்' என்பது மெய். ஒரு மனிதன் தன்னை ஒரு பொருளென்று பிரதியட்சமாய் அறிந்துகொள்ளும்போது தன்னைத்தான் உண்டாக்கிக்கொள்ளும் வல்லமை தனக்கில்லாதிருக்கிறபடியால், ஓர் ஆதிகாரணக் கடவுள் இருக்கவேண்டுமென்று நிச்சயித்துக கொள்ளுகிறான். அந்த நிச்சயத்துககுப் பல

திருஷ்டாந்தங்கள் அவன் அகத்திலும் புறத்திலும் தோன்றுகிறபடியால், சந்தேகமற அந்த நிச்சயத்தை ஏற்றுக்கொள்வது நியாயம். இந்தக் கருத்தைக்கொண்டு காரியப் பொருளாகிய மனிதன் தனக்குள்ளே வல்லமையும் அறிவுமிருக்கக் காணும்போது தன்னை உண்டாக்கினவர் முடிவில்லாத வல்லமையும் அளவில்லாத அறிவுமுடையவர் என்றும்; தனக்குள்ளே அன்பும் இரக்கமுங் கொஞ்சமாகிலுங் காணும்போது தன்னை உண்டாக்கினவருக்கு அளவில்லாத அன்பும் அளவில்லாத இரக்கமுமுண்டு என்றும்; தான் குறைவும் பாவமுமுள்ளவன் ஆனாலும் தனக்குள் சில நற்காரியங்கள் இருப்பதினால், கடவுள் பரிபூரண நற்குணராய் இருக்கிறார் என்றும் அறிந்துகொண்டு, கடவுள் எல்லாரையும் எல்லாவற்றையும் நல்ல நோக்கத்துடனே சிருஷ்டித்திருக்கிறார் என்றும் யோசித்து மனதினால் அறியக்கூடிய கடவுளை மனதினாலே தொழுது துதிக்கவேண்டுமென்றும் தீர்மானித்துக்கொள்ளுகிறான்.

'தன்னையறிவது மெய்யறிவாகும்
பின்னையறிவது பேயறிவாமே.'

கடவுளைக்குறித்துப் பலவிதமாய் மனிதர்கள் பேசிக்கொள்வதற்கு ஒரு முகாந்தரம் உண்டு. அது பாவத்தின் பயனாகிய கர்வத்தினாலுண்டாகும் அறிவீனமே. சிலர் தேவன் துர்க்குணமுள்ளவர் என்று சொல்லுவதற்கு இந்த அறிவீனமே காரணம். இப்படி 'தேவனைத் தங்களைப்போலொத்தவரென்று எண்ணி' (சங் $50^{21-22}$), இஷ்டமானபடி அவருடைய தத்துவத்தையும் குணங்களையுந் தெளிவாய் அறியாமல் அவைகளைப்பற்றித் தப்பிதமான கொள்கைகளை ஏற்றுக்கொள்ளுவார்கள்.

சைவசித்தாந்தம் என்னும் தத்துவ சாஸ்திரத்தை நன்றாய் அறிந்த மகா புலவராகிய தாயுமானவர் 'பொருள்' என்பதைப்பற்றிச் சொன்ன பாட்டைக் கவனிக்கவேண்டும்.

'பூதலயமாகின்ற
மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுல னடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண
முடிவென்பர் சிலர்குணம்
போனவிட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர்
விந்துமய மென்பர்சிலர்
நட்டநடுவேயிருந்த
நாமென்பர் சிலருருவ
மாமென்பர் சிலர்கருதி
நாடிலரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட
நிலையமென் றிடுவர்சிலர்
பேசினரு வென்பர்சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட
சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவரிவையாற்
பாதரசமாய் மனது
சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிட்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு
நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.'

(தாயுமானவர்.)

கடவுளைக்குறித்துப் பலவிதமாய் எண்ணினதுமன்றி, ஒருவராலும் காணக்கூடாத அளவில்லாத மகத்துவமுள்ள ஆதிகாரணக் கடவுள் ரூபமற்றவராயிருக்க அவருடைய கட்டளைக்கு விரோதமாய் (யாத் $20^{4}$ உபா $4^{15}$ ழ.), சத்தியத்தைப் பொய்யாக மாற்றினவர்கள் என்றென்றைக்கும் ஸ்துதிக்கப்படத்தக்க சிருஷ்டிகரை மறந்துவிட்டு பல உருக்கள் செய்து சிருஷ்டிகளைத் தொழுதுகொண்டார்கள் என்று பரி. பவுல் எழுதினான். தற்காலத்திலும்கூட மெய் அறிவை விரும்பாத அநேகர் இப்படியே செய்கிறார்கள் என்று தோன்றுகிறது. ரோம $1^{25}$.

'அஞ்செழுத் துயிருமல்ல
அரிசிவன் பிர்மனல்ல
விஞ்சிய சத்தியோடு
விந்துடன் நாதமல்லத்
தஞ்சமாஞ் சிவனுமல்லச்
சாரூபந் தானுமல்ல
அஞ்சொலாம் பரமசோதி
யப்புறங் கடந்தவாறே.'

(சிவவாக்கியம்.)

'அண்ணலாம் பரமசோதி
அற்புத மறியாதாலே
கண்ணிலே கண்டதெல்லாங்
கதிதருங் கடவுளென்று
மண்ணுளோர் வணங்கினார்கள்
வான்முறைப் படியீதென்ன
எண்ணியே நடந்துமோட்ச
மிழந்தெரி நரகில்வீழ்வார்.'

நாம் கடவுளை அவர் அருளிச்செய்த வேதத்தினாலே அறிந்துகொள்ளவேண்டியது. சத்தியவேதத்தில் கண்டிருக்கும் கடவுள் நிர்க்குணருமல்ல, துர்க்குணருமல்ல நற்குணராயிருக்கிறார். காணக்கூடாத இவரைக் காண்கிற கண் மெய்பக்தியே. 'விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது

கூடாதகாரியம்; ஏனென்றால், தேவனிடத்தில்சேருகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பலன் அளிக்கிறவர் என்றும் விசுவாசிக்கவேண்டும்' (எபி $11^{6}$). மனிதன் செய்யும் நன்மையெல்லாம் இந்த விசுவாச பக்தியின் உண்மையே. அவன் செய்யும் தீமையெல்லாம் இந்தப் பக்தியின் இன்மையே. தேவனை அறிவதே ஞானம், அவரைப் பணிவதே நீதி; அவரில் அன்புகூருவதே பாக்கியம். மத் $22^{37}$. கடவுள், யேகோவா காண்க.

**பாராமரிப்பு. Providence.**

1. தமிழ்வேதாகமத்தில் 'பாராமரிப்பு'என்னும் பதம் சில வசனங்களில் மாத்திரம் சொல்லப்பட்டிருந்தாலும், அப்பதத்தால் குறிக்கப்படுங் கருத்து வேதாகமத்தில் எங்கும் தோன்றுகிறது.

2. இயேசுகிறிஸ்து பிறக்கும் முன்னே ஞானஆகமங்களை இயற்றினவர்கள் பாராமரிப்பு என்னும் விஷயத்தைப்பற்றிப் பல தடவை பேசி, கடவுள் சகலத்தையும் நன்மைக்கென்றே உலகத்தில் நடத்திவருவார் என்று உறுதியாய் நம்பினார்கள்.

3. பழைய ஏற்பாட்டிலே மூலபாஷையில் 'பாராமரிப்பு' என்று அர்த்தங்கொண்ட எபிரெயபதம் சொல்லப்படவில்லை. ஆனால் வேதாகமத்தை வாசிக்கும்பொழுது அது முதலிலிருந்து கடைசிமட்டும் கடவுள் காட்டிய பாராமரிப்பை வெளிப்படுத்துகிறது என்று அறிகிறோம். எபிரெய சரித்திரக்காரர் கடவுள் தமது ஜனத்தையும் தம்மைத் தேடின யாவரையும் இரட்சிக்கும் நோக்கத்தையும், அந்த ரக்ஷிப்பை நிறைவேற்றின விதத்தையும் தாங்கள் இயற்றின நூல்களில் விபரித்துச் சொல்லுகிறார்கள். ஆதி $50^{20}$ யாத் $8^{22}$ உபா $33^{8}$. இதை நியாயாதிபதிகள், ரூத், சாமுவேல் என்னும் ஆகமங்களில் எந்த அதிகாரத்திலும் நாம் பார்க்கலாம். எபிரெய கவிஞர்களும் கடவுள் காட்டிய இரக்கத்தையும் அவரது பரிதாப சிந்தையையும் சிறப்பித்துக் கூறுவார்கள். சங் 29, 37, 104, 136, 145. தீர்க்கதரிசிகள் கடவுள் அருளும் மீட்பு அவரது பாதுகாவல் முதலிய கிரியைகளைச் சொல்லி, தற்காலத்தில் பக்தர்கள் ஞானத்தை அடையவேண்டும் என்றும் வருங்காலத்துக்காக அவர்கள் தைரியசாலிகளாய் இருக்கவேண்டும் என்றும் போதிக்கிறார்கள். உபா $32^{7}$ ஏசா $51^{2}$ ஆகாய் $2^{9}$ மல் $4^{4}$.

யோபின் சரித்திரத்தில் நீதிமான்களுக்கு வந்த துன்பத்தைப்பற்றியும், இவ்வுலகத்து விஷயங்களில் கடவுளுடைய ஆளுகை நியாயம் விசாரணை தீர்மானம் முதலியவற்றைப் பற்றியும் நாம் தெளிவாய் அறியக்கூடும். யோபு 27, $34^{10}$ $36^{22}$ $37^{21}$ $38^{41}$.

4. கடவுள் அருளும் பாராமரிப்பைப் பற்றி நாம் விசாரிக்கும்போது அவர் நிர்க்குணராக இராமல் சற்குணராக இருக்கிறார் என்பதை அறிவோம். ஏனெனில் நிர்க்குண தெய்வத்துக்கு மனிதர்களைக்குறித்து யாதொரு கவலையும் இல்லை. நீதி $16^{33}$ ஏசா $14^{26}$ மத் $10^{29}$ அப் $17^{24}$ எபே $1^{11}$. இதற்கு இயேசு அருளிய போதகம் ஒத்திருக்கிறது. இயற்கைப் பிரமாணங்களும் நியாயப்பிரமாணங்களும் பரமபிதா காட்டுகிற இரக்கத்தையும் அவரது உத்தம ஞானத்தையும் அவருடைய பரிசுத்த சித்தத்தையும் குறிக்கின்றன என்று இயேசு போதித்தார். மத் $6^{25}$ $10^{29}$ யோவா $5^{17}$. இந்தப் பரமபிதாவானவர் இயேசுகிறிஸ்துவை நமக்காக இவ்வுலகத்தில் அனுப்பியிருக்கிறார் என்றும், இம்மைக்காகவும் மறுமைக்காகவும் அவர் இயேசுகிறிஸ்துவின்மூலமாய்த் தமது கிருபையையும் நம்மைக்குறித்த அவருடைய நல்நோக்கங்களையும் விளக்கியிருக்கிறார் என்றும் அறிவோம். இதினாலே சமயாசமயத்திலே நாம் அவர் செய்யும் கிரியைகளைப் பூரணமாய் அறியாவிட்டாலுங்கூட அவர் நமக்கு வரும் கஷ்ட நஷ்ட துக்கங்கள் மூலமாய் நமக்கு நன்மையேசெய்து இவைகளிலும்கூட நம்மைப் பாராமரிக்கிறார் என்று நாம் நிச்சயமாய் நம்பவேண்டும். ரோம $8^{28}$ 2 கொரி $4^{12}$ 1 பேது $1^{6}$.

**கவனிப்பு.** அப் $27^{3}$-ல் 'பாராமரிப்பு' என்பது ஒருவனுடைய சிநேகிதர்கள் அவனுக்குச் செய்யக்கூடிய உதவியைக் குறிக்கும்.

**பாராமரிப்பைப்பற்றிய வேதவசனங்கள்.**

பாராமரிப்பு கடவுளின் ஜனங்களின்மேலிருக்கும். சங் $145^{9}$.

**அது,**

தமது சிருஷ்டிகளைக் காப்பாற்றுகிறதினாலும். நெகே $9^{6}$ சங் $36^{6}$ மத் $10^{29}$.

தமது சிருஷ்டிகளுக்கு வேண்டியவைகளைக் கொடுக்கிறதினாலும். சங் $104^{27.28}$ $136^{25}$ $147^{9}$ மத் $6^{26}$.

பரிசுத்தவான்களை விசேஷமாய்க் காப்பாற்றுகிறதினாலும். சங் $37^{28}$ $91^{11}$ மத் $10^{30}$.

பரிசுத்தவான்களின் காரியங்களைச் சித்தியாக்குகிறதினாலும். ஆதி $24^{48.56}$.

பரிசுத்தவான்களைத் தற்காக்கிறதினாலும். சங் $91^{4}$ $140^{7}$.

பரிசுத்தவான்களை விடுவிக்கிறதினாலும். சங் $91^{3}$ ஏசா $31^{5}$.

பரிசுத்தவான்களை நடத்துகிறதினாலும். உபா $8^{2.15}$ ஏசா $63^{12}$.

தமது வாக்கை நிறைவேற்றுகிறதினாலும். எண் $26^{65}$ யோசு $21^{45}$ லூக் $21^{32.33}$.

மனுஷரை வழிநடத்துவதினாலும். நீதி $16^{9}$ $19^{21}$ $20^{24}$.

மனுஷரின் சீர்திருவாகங்களை நியமிக்கிறதினாலும். 1 சாமு $2^{7.8}$ சங் $75^{6.7}$.

மனுஷ ஆயுளைத் தீர்மானிக்கிறதினாலும். சங் $31^{15}$ $39^{5}$ அப் $17^{26}$.

துராலோசனைகளை வியர்த்தமாக்குகிறதினாலும். யாத் $15^{9-11}$ 2 சாமு $17^{14.15}$ சங் $33^{10}$.

துர்ச்செய்கைகளை நன்மையாக மாற்றுகிறதினாலும். ஆதி $45^{5-7}$ $50^{20}$ பிலி $1^{12}$.

சுபாவமுறையைக் காத்துக்கொள்ளுகிறதினாலும். ஆதி $8^{22}$ யோபு $26^{10}$ சங் $104^{5-9}$.

சகல சம்பவங்களையும் நடத்துகிறதினாலும். யோசு $7^{14}$ 1 சாமு $6^{7}$ நீதி $16^{33}$ ஏசா $44^{7}$ அப் $1^{26}$.

பூதியங்களை ஆளுகிறதினாலும். யோபு $37^{9}$ ஏசா $50^{2}$ யோனா $1^{4.15}$ நாகூ $1^{4}$.

அற்பப்பொருள்களையும் ஆண்டுகொள்ளுகிறதினாலும். மத் $10^{29}$ லூக் $21^{18}$. விளங்குகின்றது.

**அது,**

நீதியுள்ளதாயிருக்கிறது. சங் $145^{17}$ தானி $4^{37}$.

இடைவிடாத காப்பாற்றுதலாயிருக்கிறது. சங் $121^{4}$ ஏசா $27^{3}$.

சர்வ வியாபகமுள்ளது. சங் $139^{1}$.

சிலவேளை அறிகிறதற்கு அரிதாயும் அந்தரங்கமாயும் இருக்கின்றது. சங் $36^{6}$ $73^{16}$ $77^{19}$ ரோம $11^{33}$.

**அதினால்,**

தமது மகிமைக்காகவும் (ஏசா $63^{14}$), பரிசுத்தவான்களுடைய நன்மைக்காகவும் (ரோம $8^{28}$) சகலமும் ஏற்படுத்தப்படுகிறது.

துன்மார்க்கரும் அதின் நோக்கத்தை சித்தியாக்கும்படி உண்டாக்கப்பட்டிருக்கிறார்கள். ஏசா $10^{5}$ அப் $3^{17}$.

**அது,**

ஐசுவரியத்திலும். உபா $8^{18}$ 1 நாளா $29^{12}$.

தரித்திரத்திலும். யோபு $1^{21}$ சங் $119^{75}$.

தேசத்தின் தண்டனையிலும். ஆமோ $3^{6}$.

அன்றாடக ஆதரிப்பிலும். ஆதி $48^{15}$

சகலத்திலும். நீதி $3^{6}$.

அறிக்கையிடத்தக்கதாயிருக்கிறது.

அதைத் தடுக்கக்கூடாது. 1 இரா $22^{30.34}$ நீதி $21^{30}$.

அதில்லாத மனுஷப் பிரயாசங்கள் விருதாவாயிருக்கின்றன. சங் $127^{1.2}$ நீதி $21^{31}$.

**பரிசுத்தவான்கள்**

அதை நம்பவேண்டும். மத் $6^{33.34}$ $10^{9.29}$.

அதில் பூரண நம்பிக்கை வைக்கவேண்டும். சங் $16^{8}$ $139^{10}$.

தங்கள் வேலைகளை அதற்கென்று ஒப்புவிக்கவேண்டும். நீதி $16^{3}$.

அதினாலேதானே தங்களை தைரியப்படுத்தவேண்டும். 1 சாமு $30^{6}$.

அதைச் சார்ந்து பிரார்த்திக்கவேண்டும். அப் $12^{5}$.

அதினால் வழிநடத்தப்படும்படி பிரார்த்திக்கவேண்டும். ஆதி $24^{12-14}$ $28^{20.21}$ அப் $1^{24}$.

அதற்குக் காத்திருப்பதினால் வரும் பலன். லூக் $22^{35}$.

எத்தனங்களைக் கையாடுதல் அதனோடே ஐக்கியப்பட்டிருக்கின்றது. 1 இரா $21^{19}$ $22^{37.38}$ மீகா $5^{2}$ லூக் $2^{1-4}$ அப் $27^{22.31.32}$.

அதை மறுதலிக்கிறதினால் வரும் மோசம். ஏசா $10^{13-17}$ எசே $28^{2-10}$ தானி $4^{29-31}$ ஓசி $2^{8.9}$.

**பரிகாசம், பரியாசம்.** Mockery. ஆதி $19^{14}$ நியா $16^{10}$ 1 இரா $18^{27}$ 2 இரா $2^{23}$ 2 நாளா $30^{10}$ $36^{16}$ நீதி $14^{9}$ $20^{1}$ ஏசா $28^{22}$ எசே $22^{4}$ மத் $20^{19}$ $27^{29.41}$ மாற் $10^{34}$ $15^{20.31}$ லூக் $14^{30}$ $18^{32}$ $22^{63}$ $23^{11.37}$ கலா $6^{7}$ அப் $2^{13}$. 'பரிகாசக்காரர்.' 2 பேது $3^{3}$.

**பரிகாரி.** 'Physician.' 2 நாளா $16^{12}$. வைத்தியன் காண்க.

**பரிசம்.** Dowry. சீதனம், புருஷன் பெண்ணுக்காக கொடுக்கவேண்டிய பொருள். ஆதி $34^{12}$ யாத் $22^{17}$ 1 சாமு $18^{25}$. கலியாணம் காண்க.

**பரிசாரகி.** R. V. Temple-keeper. அப் $19^{35}$–ல் சொன்ன கிரேக்கபதமாகிய 'நெவோகொரஸ்' (*Neokoros.*) என்பதற்கு 'கோவிற் பரிசாரகி' அல்லது 'கோவிற் காவலாளி' என்பது அர்த்தம். எபேசு பட்டணத்தார் தியானாள் தேவதையின் பெயரில் அதிக பக்திவைராக்கிய முள்ளவர்களாய் அந்தத் தேவதையின் கோவிலை வெகுபத்திரமாய்க் காப்பாற்றினதினாலே, எபேசு பட்டணத்துக்கு இந்தப் பெயர் சொல்லப்பட்டிருந்தது. தியானாள் காண்க.

**பரிசு.** **Reward.** =வெகுமானம். தானி $5^{17}$.

**பரிசுத்த ஆவி.** **The Holy Spirit, The Holy Ghost:** ('இஸ்பிரீத்துசாந்து.') திரியேகத்துவத்தில் மூன்றாம் ஆள். (திரியேகத்துவம் காண்க.)

பரிசுத்த ஆவியானவரைக்குறித்துத் திருச்சபையில் வழங்கும் பொதுவான விசுவாசமாவது, நிசேயா விசுவாசப்பிரமாணத்தில் 'கர்த்தருமாய், ஜீவனைக் கொடுக்கிறவருமாய், பிதாவிலும் குமாரனிலும் நின்று புறப்படுகிறவருமாய், பிதாவோடுங் குமாரனோடும்கூடத் தொழுது ஸ்தோத்திரிக்கப்படுகிறவருமாய், தீர்க்கதரிசிகள் உரைத்தவருமாயிருக்கிற பரிசுத்த ஆவியையும் விசுவாசிக்கிறேன்' என்றும், அதனாசி என்பவருடைய விசுவாசப்பிரமாணத்தில் 'பரிசுத்த ஆவி பிதாவினாலும் குமாரனாலு மிருக்கிறவர்; சிருஷ்டிக்கப்பட்டவருமல்ல, ஜெனிப்பிக்கப்பட்டவருமல்ல, புறப்படுகிறவரே' என்றும் சொல்லியிருக்கிறது.

கிறிஸ்து, 'சீஷர்கள்மேல் ஊதி, பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்றார்' (யோவா $20^{22}$.)

பரிசுத்த ஆவி தேவவல்லமை அல்லது தேவஞானம் என்னப்பட்ட பிதாவினுடைய இலட்சணங்களில் ஒன்றாயிருக்கிறார் என்று சிலர் சொல்லுவார்கள். அவர்கள் சொல்லுவது மெய்யல்ல என்றும், பரிசுத்த ஆவியானவர் தேவதன்மையுடையவர் என்றும் வேத வாக்கியங்களைக்கொண்டு ரூபகாரப்படுத்துவோம்.

I. பரிசுத்த ஆவி தேவதன்மை யுடையவர்.

1. ஆவியினால் பிறப்பது என்று இயேசு சொன்னார். யோவா $3^{6}$.

தேவனால் பிறப்பது என்று யோவான் சொன்னான். 1 யோவா $5^{4}$.

இவ்விரண்டு வாக்கியங்களையும் ஒத்துப்பார்க்கிறபோது நமக்குள்ளே புதிய குணத்தை உண்டாக்குகிற ஆவி தேவனே என்று விளங்குகிறது.

2. பரிசுத்த ஆவியானவர் அப்போஸ்தல ஊழியத்துக்காக பர்னபாவையும் சவுலையும் அழைத்தார் என்று அப்போஸ்தலருடைய நடபடி ஆகமத்திலே சொல்லியிருக்கிறது. அப் $13^{2}$.

தேவனால் பிரதான ஆசாரியன் அழைக்கப்பட்டாலொழிய ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்துக்குத் தானாய் ஏற்படுகிறதில்லையென்று எபிரெயருக்கு எழுதின நிருபத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எபி $5^{4}$.

ஆதலால், தேவ ஊழியத்துக்கு ஆட்களை அழைக்கிற ஆவி தேவனே என்று விளங்குகிறது.

3. அறுப்புக்கு எஜமானன் தமது அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி அவரை வேண்டிக்கொள்ளுங்கள் என்று இயேசு தமது சீஷர்களுக்குச் சொன்னார். மத் $9^{38}$.

பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலர் அனுப்பப்பட்டார்கள் என்று லூக்கா எழுதினான். அப் $13^{4}$.

ஆதலால், சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கு வேலையாட்களை அனுப்புகிற பரிசுத்த ஆவியும் அறுப்புக்கு எஜமானனாகிய கர்த்தாவும் ஒருவரே என்று விளங்குகிறது.

4. கர்த்தருடைய கிறிஸ்துவை நீ காணுமுன்னே மரணமடையமாட்டாய் என்று பரிசுத்த ஆவியினாலே சிமியோனுக்கு அறிவிக்கப்பட்டிருந்தது என்று லூக்கா எழுதினான். லூக் $2^{26}$.

ஆண்டவரே, உமது வார்த்தையின்படி உமது அடியேனைச் சமாதானத்தோடே போகவிடுகிறீர் என்று சிமியோன் தேவனைத் தோத்திரஞ்செய்தான் என்று லூக்கா எழுதினான். லூக் $2^{28.32}$.

ஆதலால் அவனுக்கு அதை வெளிப்படுத்தின பரிசுத்த ஆவியும் கடவுளும் ஒருவரே என்று விளங்குகிறது.

5. சத்திய ஆவியானவர் உங்களுக்குள்ளே இருப்பார் என்று இயேசு சொன்னார். யோவா $14^{17}$.

தேவன் மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறார் என்று பவுல் எழுதினான் 1 கொரி $14^{25}$.

வேதவாக்கியங்கள் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறதென்று பவுல் எழுதினான் 2 தீமோ $3^{16}$.

தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டுப் பேசினார்களென்று பேதுரு எழுதினான். 2 பேது $1^{21}$

எல்லாரும் தேவனாலே போதிக்கப்பட்டிருப்பார்கள் என்று இயேசு சொன்னார். யோவா $6^{45}$.

அவைகளை நாங்கள் மனுஷஞானம் போதிக்கிற வார்த்தைகளாலே பேசாமல், பரிசுத்த ஆவி போதிக்கிற வார்த்தைகளாலே பேசி, பிரசங்கம் பண்ணுகிறோம் என்று பவுல் எழுதினான். 1 கொரி $2^{13}$.

இந்த வாக்கியங்களை ஒத்துப்பார்க்கிறபோது அவைகளில் திவ்விய அறிவைப் போதிக்கிற ஆவியானவர் தேவனாயிருக்கிறார் என்று விளங்குகிறது.

6. பரிசுத்த ஆவியினிடத்தில் பொய் சொல்லும்படி சாத்தான் உன் இருதயத்தை நிரப்பினதென்ன?...நீ மனுஷரிடத்திலல்ல, தேவனிடத்திலே பொய் சொன்னாய் என்று பேதுரு சொன்னான். அப் $5^{3,4}$.

நீங்கள் தேவனுடைய ஆலயமாயிருக்கிறீர்களென்றும், தேவனுடைய ஆவி உங்களில் வாசமாயிருக்கிறாரென்றும் அறியாதிருக்கிறீர்களா?...தேவனுடைய ஆலயம் பரிசுத்தமாயிருக்கிறது; நீங்களே அந்த ஆலயம் என்றும் பவுல் எழுதினான். 1 கொரி $3^{16}$ $6^{19}$.

இந்த வாக்கியங்களை ஒத்துப்பார்க்கிறபோது தேவஆவி தேவனே என்று விளங்குகிறது.

7. மனுஷனிலுள்ள ஆவியே அன்றி மனுஷரில் எவன் மனுஷனுக்குரியவைகளை அறிவான்? அப்படிப்போல தேவனுடைய ஆவியே அன்றி, ஒருவனும் தேவனுக்குரியவைகளை அறியமாட்டான் என்று பவுல் எழுதினான். 1 கொரி $2^{11}$.

ஆதலால் பரிசுத்தஆவி சகலத்தையும் அறிகிற தேவனாயிருக்கிறாரென்று விளங்குகிறது.

8. நான் தேவனுடைய விரலினாலே பிசாசுகளைத் துரத்துகிறேனென்று இயேசு லூக்கா சுவிசேஷத்திலே சொல்லியிருக்கிறார். லூக் $11^{20}$.

நான் தேவனுடைய ஆவியினாலே பிசாசுகளைத் துரத்துகிறேனென்று அவர் மத்தேயு சுவிசேஷத்திலே சொல்லியிருக்கிறார். மத் $12^{28}$.

தேவனாகிய கர்த்தர் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளின் வாக்கினால் பேசினாரென்று லூக்கா எழுதினான். லூக் $1^{73}$.

பரிசுத்தஆவி ஏசாயா தீர்க்கதரிசியைக் கொண்டு பேசியிருக்கிறாரென்று லூக்கா எழுதினான். அப் $28^{27}$.

இந்த வாக்கியங்களை ஒன்றோடொன்று ஒத்துப்பார்க்கிறபோது பரிசுத்தஆவி தேவவஸ்துவாயிருந்து கிரியை செய்கிறாரென்று விளங்குகிறது.

9. பரிசுத்தஆவி உன்மேல் வரும்; உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமானது தேவனுடைய குமாரன் என்னப்படுமென்று லூக்கா எழுதினான். லூக் $1^{35}$.

இதில் ஆவியானவர் உன்னதமான தேவனென்று விளங்குகிறது.

10. இவைகளையெல்லாம் அந்த ஒரே ஆவியானவர் நடப்பித்துத் தமது சித்தத்தின்படியே அவனவனுக்குப் பகிர்ந்து கொடுக்கிறார் என்று பவுல் எழுதினான். 1 கொரி $12^{11}$.

ஆதலால் ஆவியானவர் சுயாதீனமும் அளவில்லாத விவேகமுமுள்ளவர் என்று தோன்றுகிறது.

11. நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதற்ற பலியாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்தார் என்று எபிரெயருக்கு எழுதின நிருபத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எபி $9^{14}$.

ஆனதால் ஆவியானவர் நித்தியமானவர் என்று தோன்றுகிறது.

அவர் இவ்விதமாய்த் தேவதன்மையுடையவராயும் தேவசெயல்களைச் செய்கிறவராயும் இருப்பதினால் அவர் மெய்யாய்க் கடவுளே அல்ல என்று சொல்வது எப்படி? அவர் கடவுளாய் இருப்பதினாலும் கடவுள் ஒருவர் ஆனதினாலும், இயேசுகிறிஸ்து கடவுள் ஆனதினாலும், பரிசுத்த ஆவி நமது புத்திக்குத் தெரியாதவிதமாய்ப் பிதாவோடும், சுதனோடும் திரியேகத்துவத்தில் மூன்றாம் ஆளாயிருக்கிறார் என்று சொல்லவேண்டும்.

## II. பரிசுத்த ஆவி திரியேகத்துவத்தில் மூன்றாம் ஆளாய்ச் செய்யும் வேலை.

1. பழையஏற்பாட்டில் பரிசுத்தஆவியானவர் தேவவஸ்துவில் மூன்றாம் ஆளாயிருக்கிறார் என்று தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. பழைய ஏற்பாட்டில் 'பரிசுத்த ஆவி' என்பது மனுஷர்களுக்குத் தேவசித்தத்தைத் தெரிவிக்கிற ஒரு நல்ல ஆவியையும் அல்லது தேவகிரியைகளைச் செய்கிற ஒரு வல்லமையுள்ள ஆவியையும், அல்லது கடவுளின் ஞானத்தையும், அருளையும் குறிக்கிறது.

திருஷ்டாந்தமாக: ஆதியிலே 'தேவ ஆவி' பூமி ஒழுங்கில்லாமையாயும் வெறுமையாயும் இருந்தபோது, அதின்மேல் அசைந்துகொண்டு அதைச் சிறப்பாக்கினார். ஆதி $1^{2}$ யோபு $27^{3}$ $33^{4}$.

2. தண்ணீரும் ஒளியும் அக்கினியும் காற்றும் அவருக்குக் குறிப்புகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

தீர்க்கதரிசிகள் அப்படிச் சொன்னவை இதற்குத் திருஷ்டாந்தங்கள்:

தாகமுள்ளவன்மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின்மேல் ஆறுகளையும் ஊற்று

வேன்; உன் சந்ததியின்மேல் என் ஆவியையும், உன் சந்தானத்தின்மேல் என் ஆசீர்வாதத்தையும் ஊற்றுவேன். ஏசா $44^{3}$.

அப்பொழுது நான் உங்கள்மேல் சுத்தமான ஜலம் தெளிப்பேன்; நான் உங்களுடைய எல்லா அசுத்தங்களையும் உங்களுடைய எல்லா நரகலான விக்கிரகங்களையும் நீக்கி உங்களைச் சுத்தமாக்குவேன், நீங்கள் சுத்தமாவீர்கள். உங்களுக்கு நவமான இருதயத்தைக் கொடுத்து, உங்கள் உள்ளத்திலே புதிதான ஆவியைக் கட்டளையிட்டு, கல்லான இருதயத்தை உங்கள் மாம்சத்திலிருந்து எடுத்துப்போட்டு, சதையான இருதயத்தை உங்களுக்குக் கொடுப்பேன். உங்கள் உள்ளத்திலே என் ஆவியை வைத்து, உங்களை என் கட்டளைகளில் நடக்கவும் என் நியாயங்களைக் கைக்கொள்ளவும் அவைகளின்படி செய்யவும் பண்ணுவேன். எசே $36^{25-27}$.

கிருபையின் ஆவியையும் விண்ணப்பம் பண்ணுகிற ஆவியையும் ஊற்றுவேன். சக $12^{10}$.

நெகே $9^{20}$ சங் $51^{11}$ $143^{10}$ காண்க.

கடவுள் விசேஷமாய் இஸ்ரவேல் ஜனங்களுக்கு இந்த ஆவியைத் தந்தார் என்று அவர்கள் நினைத்தார்கள். நெகே $9^{20}$ ஏசா $63^{12}$.

இவ்விதமாய்க் கடவுள் தமது ஆவியைத் தீர்க்கதரிசிகள் முதலியவர்களுக்கு அருளினார். 1 சாமு $16^{13}$ 2 சாமு $23^{2}$ ஏசா $48^{16}$.

அந்தப்படி யோவான்ஸ்நானகனும் கிறிஸ்துவைக்குறித்து ஜனங்களை நோக்கி, நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தேன்; அவரோ பரிசுத்த ஆவியினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார் என்று பிரசங்கித்தான். மாற் $1^{8}$.

3. பின்பு, இயேசுகிறிஸ்து தாமும் மரித்துப் பரலோகத்திற்குப் போகிறதற்கு முன்னே சீஷர்களுடனே வாக்குத்தத்தமாகச் சொன்னது:—என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படியாக சத்திய ஆவியாகிய தேற்றரவாளனை உங்களுக்குக் கொடுக்கும்படிக்கு அவரை வேண்டிக்கொள்வேன் என்றும்; நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகிறேன்; நான் போகிறது உங்களுக்குப் பிரயோஜனமாயிருக்கும்; எப்படியென்றால், நான் போகாதிருந்தால் அந்தத் தேற்றரவாளன் உங்களிடத்தில் வரார்; போவேனேயாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன். அவர் வந்து, பாவத்தையும் நீதியையும் நியாயத்தீர்ப்பையுங்குறித்து, உலகத்தாருக்கு மெய்யறிவைக் கொடுப்பார் என்று சொன்னார். யோவா $14^{16}$ $16^{7.8}$. அன்றியும் சத்திய ஆவியானவர் வரும்போது, சகல சத்தியத்திலேயும் உங்களை நடத்துவார்; இனி வருங்காரியங்களையும் உங்களுக்கு அறிவிப்பார். அவர் என்னுடையதிலே எடுத்து உங்களுக்கு அறிவிப்பதால், அவர் என்னுடைய மகிமையை விளங்கப்பண்ணுவாரென்றும், என்னைக்குறித்துச் சாட்சி கொடுப்பாரென்றும் சொன்னார். (யோவா $16^{13.14}$ $15^{26}$.)

இந்த வாக்கியங்களினாலே இயேசுகிறிஸ்து பரலோகத்திற்குப் போனதுமுதல் திரும்பிவருகிறவரைக்கும் அவருக்கு ஈடாகத் தேவ ஆவியானவர் எல்லாருக்கும் போதகராயிருப்பார் என்றும்; பாவிகளுக்கு மெய்யறிவைக் கொடுத்து, விசேஷமாய் இயேசுகிறிஸ்துவை அவர்களுக்கு வெளிப்படுத்துவார் என்றும்; அவர்களுடைய இருதயங்களைச் சுத்திகரிப்பார் என்றும்; அவர்கள் தாங்கள் தேவதயவைப் பெற்றுக்கொண்டிருக்கிறதைப்பற்றி அவர்களுக்கு நல்சாட்சி கொடுக்கிறார் என்றும்; அவர்களை ஆற்றித்தேற்றுவார் என்றும்; அவர்களைச் சத்தியத்திலே நடத்துவார் என்றும்; அவர்கள் தேவகிருபையை அநுபவித்துச் செவ்வையாய் விண்ணப்பம் பண்ணும்படி செய்வார் என்றும்; அவர்கள் தீர்க்கதரிசனங்கள் சொல்லி அற்புதங்களை நடப்பிக்கும்படி செய்வார் என்றும் தோன்றுகிறதல்லவா? ரோம 8 அதி. கலா $5^{15-26}$.

இவைகளில் தீர்க்கதரிசனங்களைச் சொல்லுகிறதற்கும் அற்புதங்களைச் செய்கிறதற்கும் வேண்டிய வரங்களைச் சிலருக்குமாத்திரம் கொடுக்கிறபடியினாலே அவைகள் தேவ ஆவியினுடைய விசேஷமான ஈவுகள் என்னப்படும். மற்றவைகளை அவர் யாவருக்கும் பொதுவாய்க் கொடுக்கிறபடியால் அவைகள் பொது ஈவுகள் என்னப்படும். அப் $9^{17}$ அப் $10^{48}$ 1 கொரி $14^{1-20}$ $12^{1-13}$.

4. கிறிஸ்து மனிதாவதாரம் செய்கிறதற்கு முன்னே, தேவ ஆவியானவர் பூர்வீகத்தாருக்கு இந்த நன்மைகளைச் செய்யாமலிருக்கவில்லை. ஆனால் அவர்கள் அவரைக் குறித்துத் தெளிவாய் அறியாமலிருந்தார்கள் என்று சொல்வது நியாயம். அக்காலத்தில் அவர் வெளிப்படாததினாலே அப்படி மறைவாயும் மட்டாயும் தமது ஊழியத்தைச் செய்தார்.

கிறிஸ்து மனிதாவதாரஞ்செய்து, இரட்சிப்பை உண்டுபண்ணி, நற்போதனை அருளினபின்பு, தேவ ஆவியானவர் அந்த நன்மைகளைப் பிரத்தியட்சமாகவும் அதிக மகிமையாகவும் விஸ்தாரமாகவும் யூதர்களுக்கு

மாத்திரமல்ல, புறத்தேசத்தாருக்குள்ளேயும் செய்தார் என்று கிறிஸ்தவர்கள் அறியவந்தார்கள். யோவா $7^{37,39}$.

5. கிறிஸ்து பரலோகத்திற்குப் போன பின்பு, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட அந்த ஆவியைச் சீஷர்களுக்கு அனுப்பினார். அப்போது அவருடைய விசேஷமான ஈவுகளும் பொதுவான ஈவுகளும் மகா மகிமையாக விளங்கினதைக்குறித்து அப் 2-ம் அதிகாரத்தில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அநேக ஆயிரம்பேர் கிறிஸ்து அருளின இரட்சிப்பை அறிந்து, மறுபடியும் பிறந்தவர்களைப் போல பரிசுத்தவான்களானார்கள். கிறிஸ்துவின்மேலுள்ள விசுவாசத்தினாலே அவர்கள் புதிய மனிதர்களானார்கள். இந்தப் புதிய சிருஷ்டிப்பு இதுவரைக்கும் தேவ ஆவியால் நடந்துவருகிறது. ஆயிரக்கணக்கான ஆத்துமாக்கள் அவருடைய உதவியினால் இயேசு கிறிஸ்துவின்மேல் பக்திவைத்து மீட்பை அடைந்திருக்கிறார்கள். தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களெவர்களோ அவர்கள் இந்த மகிமையைப் பெறுவார்கள்.

6. இப்படி தேவஆவி செய்கிற தொழிலில் அழைப்பு, மறுபிறப்பு, கடிந்துகொள்ளுதல், நீதிமான்களாக்கல், தேற்றல், தேவ புத்திரராக்கல், பரிசுத்தமாக்கல், மகிமைப்படுத்தல் என்னும் கிரியைகள் அடங்கியிருக்கின்றன. இவைகளினாலே பாவிகள் மெய்யறிவை அடைந்தும், மனஸ்தாபப்பட்டும், மனந்திரும்பியும், புதுப்பிக்கப்பட்டும், விசுவாசித்தும், சமாதானமடைந்தும், தேவபுத்திரர்களாகியும், பரிசுத்தமாக்கப்பட்டும், நித்தியஜீவனையடைந்தும் வருகிறார்கள். பாவிகளுக்குத் தமது இரட்சிப்பைக் கொடுக்கும்படி கிறிஸ்துநாதர் தமது ஆவியினாலே இந்த விசேஷமான கிரியைகளைச் செய்துவருகிறார். தேவ ஆவியானவர் கிறிஸ்துவின் நாமத்தினாலேயும் தேவவசனத்தைப் பிரசங்கம் பண்ணுவிக்கிறதினாலேயும் அதைக் கேட்கிற ஜனங்களுடையமனதில் சத்தியத்தை அறிவிக்கிறதினாலேயும் இதை நிறைவேற்றிவருகிறார். அவர் தமது ஊழியத்தைச் செய்கிற வகை தெரியாது. கிறிஸ்துநிக்கொதேமுவுடனே சொன்னபடி, காற்றானது தனக்கிஷ்டமான இடத்திற்குச்செல்லுகிறபோது அதின் சத்தத்தைக் கேட்கிறோம். அது வந்த இடத்தையும் அது போகும் இடத்தையும் அறியமாட்டோம். அதுபோலவே தேவ ஆவியினுடைய நடக்கைகளுமிருக்கின்றன. அவருடைய கிரியை தோன்றுகிறது. அதைச் செய்கிற வகை தோன்றாது. யோவா $3^{8}$.

பரிசுத்தஆவியில்லாமல் கிறிஸ்துவுக்குள் நமக்குப் பங்கு இல்லாததினால் 'பரிசுத்த ஆவியைத் துக்கப்படுத்தாதிருங்கள்' என்றும், 'ஆவியை அவித்துப்போடாதிருங்கள்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ரோம $8^{9}$ எபே $4^{30}$ 1 தெச $5^{19}$.

**பரிசுத்த ஸ்தலம்.** Holy place. யாத் $26^{33}$ $28^{29}$ லேவி $10^{18}$ எண் $18^{10}$ எசே $45^{3}$ அப் $6^{13}$ எபி $9^{24}$. உவமையாய். ஏசா $57^{15}$. தேவாலயம் காண்க.

**பரிசுத்தபூமி.** The holy land. கானான் காண்க.

**பரிசுத்தம்.** Holiness.

1. ஆதிகாலத்து நோக்கம்.

எபிரெயர்கள் யேகோவாவை வணங்குமுன்னே பரிசுத்தத்தைப்பற்றிக் கானானியர் பாபிலோனியர் முதலிய சேமியர்கள் கொண்டிருந்த கொள்கையைக் கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் அவர்கள் பழைய ஏற்பாட்டில் சொன்ன பரிசுத்தத்தைக் குறிக்கும் பதங்களை வழங்கிவந்தார்கள். ஆனால் அவர்கள் யேகோவாவின் வணக்கத்தையும் கடவுளின் உத்தம தன்மையையும் அவர் அருளின உத்தம கற்பனைகளையும் அறிந்த பொழுது, அவர்கள் படிப்படியாய்ப் 'பரிசுத்தம்' என்னும் பதத்தை ஆவிக்குரியவிதமாய் வழங்கிவந்தார்கள். இதின்படி ஆதியில் 'பரிசுத்தம்' என்னும் பதத்தினால் குறிக்கப்பட்ட கருத்தைவிட, பிற்காலங்களில் உள்ள பக்தர்கள் 'பரிசுத்தம்' என்னும் பதத்தினால் குறிப்பிட்ட கருத்துச் சிறந்தது என்பதை நாம் விசேஷமாய்க் கவனிக்கவேண்டும்.

ஏனென்றால் இதைப்பற்றி நமக்கு ஞாபகமிருந்தால்மட்டும் கொடூரமான அநேக கிரியைகளையும், பெரும் பாவத்தையும் செய்த தாவீது கடவுளுக்குப் பிரியமுள்ளவனாயிருந்தான் என்று எபிரெயர்கள் சொல்லுகிறதற்குக் காரணத்தை நாம் அறியக்கூடுமேயன்றி மற்றப்படி முடியாது.

2. பழைய ஏற்பாட்டில் சொன்ன பதம்.

எபிரெய பாஷைமுதலிய சேமிய பாஷைகளில் பரிசுத்தத்தைக் குறிக்கும்படி (*qdsh*) என்னும் பகுதி வழங்கப்பட்டிருக்கிறது. 'பிரிக்கப்படுகிறது' என்பதே இதின் மூல அர்த்தம். இப்பதம் பழைய ஏற்பாட்டில் ஏறக்குறைய 830 வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்றும், முதல் ஐந்து ஆகமங்களில் 350 வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்றும் காண்கிறோம்.

இதின்படி எபிரெயர் முதலிய சேமியர்கள் கடவுள் பரிசுத்தராய் இருக்கிறார் என்று சொல்லும்போது, கடவுள் மனுஷர்களிடத்தினின்று பிரிக்கப்பட்டவர், அல்லது மனுஷர்களுக்கு இருக்கிற பலவீனம் வியாதி முதலியவைகளினின்று பிரிக்கப்பட்டவர் என்பதைத் தெரிவித்தார்கள். மேலும் கடவுள் சாமானியமானவர் அல்ல, விசேஷித்த தன்மையுடையவர் என்பதை இந்தப் பதத்தினாலே குறித்தார்கள். இதற்குப்பின் அவர்கள் கடவுளைக்குறித்துப் பேசும்போது 'திவ்வியம்' 'தெய்வீகம்' 'பரிசுத்தம்' முதலிய பதங்கள் ஒன்றோடொன்று கலந்துபோய் ஒரு பொருள் குறித்த பல பெயர்களாயின.

இப்படியே சேமியர்கள் மனுஷர்களுக்கு இப்பதத்தைப் பிரயோகிக்கும்போது அவர்கள் இந்த ஆள் மற்ற ஆட்களினின்று கடவுளுக்கென்று பிரிக்கப்பட்டவன், அல்லது நியமிக்கப்பட்டவன், அல்லது பிரதிஷ்டைசெய்யப்பட்டவன் என்பதைக் குறித்தார்கள். இப்படியே மிருகங்களும் ஸ்தலங்களும் பரிசுத்தமானவை என்று சொல்லும்போது அவைகள் ஒரு தேவதைக்கு நியமிக்கப்பட்டவை என்பதைத் தெரிவித்தார்கள்.

முதலிலே அவர்கள் 'பரிசுத்தம்' என்னும் பதத்தைச்சொல்லும்போது சன்மார்க்க விஷயங்களைக்கவனிக்காமல், அதைச் சொன்னார்கள். ஒரு ஆசாரியன் துன்மார்க்கமாய் நடந்தாலும், அவன் தேவனுக்கென்று நியமிக்கப்பட்டதினால் அவன் 'பரிசுத்தன்' என்று சொல்லுவார்கள். இப்படியே கானானியருடைய தேவாலயங்களிலுள்ள வேசிகளான தேவதாசிகளுக்குப் 'பரிசுத்த ஸ்திரீகள்' என்று பெயர் வழங்கப்பட்டது.

3. எபிரெயர் அபிப்பிராயம்.

மோசேயின் பிரமாணத்தை அறிந்த எபிரெயர்களுக்கும் மற்ற சேமியர்களுக்கும் வித்தியாசம் இருந்தது. எபிரெயர்கள் பல குற்றங்களைச் செய்தாலும், அவர்கள் யேகோவா நீதியுள்ளவர் என்று எப்போதும் உறுதியாய் நினைத்து வந்தார்கள். ஆதலால் அவர்கள் படிப்படியாய்ச் சன்மார்க்க லக்ஷணங்களைக் குறிக்கும்படி மூல பதத்தை வழங்குவார்கள். இதன்படி, அவர்கள் தேவஸ்தலம் 'பரிசுத்தம்' என்று சொல்லுகிறதினாலே அது யேகோவாவுக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பதை மாத்திரம் குறித்தாலும், அவர்கள் கடவுள் 'பரிசுத்தர்' என்று சொல்லும்போது அவர் உத்தம நீதியுள்ளவர் என்றும், ஒருஆள் பரிசுத்தன் என்று சொல்லும்போது அவன் கடவுளைப்போன்ற நீதியுள்ளவன் என்றும் தெரிவித்து வந்தார்கள்.

4. நியாயப்பிரமாணம்.

மோசே இஸ்ரவேலருக்குக் கொடுத்த நியாயப்பிரமாணமானது ஆசாரத்துக்குரிய பரிசுத்தத்தையும் சன்மார்க்கத்துக்குரிய பரிசுத்தத்தையும் சிறப்பிக்கிறது. லேவி 17–26 அதிகாரங்களில் அவ்வித பரிசுத்தத்தின் பிரமாணங்கள் விபரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

இவைகளில் யேகோவாவிடத்திலுள்ள பரிசுத்தத்தையும், அவர் தமது அடியாரிடத்தில் தேடுகிற பரிசுத்தத்தையும் நாம் அறியலாம். இதில் ஆசாரத்துக்குரிய பரிசுத்தமும் சன்மார்க்கத்துக்குரிய பரிசுத்தமும் கலந்திருக்கிறது. திருஷ்டாந்தமாக பரிசுத்தத்துக்குரியவைகளில் சிலவாவன:

களவு செய்யாமை. $19^{11}$.

சத்தியம். $19^{11}$.

தாய் தகப்பனைக் கனம்பண்ணல். $20^{9}$.

அடிமைகளுக்கு இரக்கம். $19^{13}$.

அந்நியர்களிடத்தில் சிநேகம் பாராட்டல். $19^{34}$.

பலவீனர்களையும் ஏழைகளையும் காப்பாற்றுதல். $19^{14-32}$.

கற்புடைமையும் முறைகெடாத்தன்மையும். $20^{11}$ $20^{18}$.

பிறரைச் சிநேகிப்பது. $19^{18}$.

இரத்தம் புசியாமை. $17^{10}$.

மிருக விருக்ஷ ஜாதிகளின் விதைகளைக் கலவாமை. $19^{19}$.

ஆசாரியர்கள் துக்கம் கொண்டாடுவதைப்பற்றியும் கலியாணம் செய்வதைப் பற்றியும் கவனிக்க வேண்டியவை. $21^{1-15}$.

5. தீர்க்கதரிசிகள்.

தீர்க்கதரிசிகள் இயற்றின ஆகமங்களை நாம் வாசிக்கும்போது, 'பரிசுத்தம், என்னும் பதத்தின் உத்தம பொருள் நமக்கு விளங்கும். அவர்கள் சடங்காசாரத்தைப்பற்றி விருப்பம் இல்லாதவர்களாய், இருதய சுத்தத்தின்மேல் அதிக வைராக்கியங்கொண்டு, யேகோவாவினுடைய பரிசுத்த தன்மையைப் பூரணமாய் அறிந்து, மனுஷர்களிடத்திலும் அவ்வித பரிசுத்தத்தைத் தேடினார்கள். அவர்களுடைய தாற்பரியத்தின்படி அநீதியும் குறைபாடும் உடையவர்கள் பரிசுத்தர் அல்ல. நற்குணம் உடையவர்கள் மாத்திரம் கடவுளுக்குப் பிரதிஷ்டை செய்யப்

பட்டவர்கள். ஆகையால் தீர்க்கதரிசிகளின் காலமுதல் பின் எக்காலங்களிலும் 'பரிசுத்தம்' என்னும் பதம் இருதயத்தின் ஆழத்திலுள்ள தூய்மையையும் நற்குணங்களையும் நல்நோக்கங்களையும் குறிக்கிறது. யேகோவா சகல தீமைகளினின்றும் பிரிக்கப்பட்டவராகையால், அவருடைய அடியார்களும் அவ்வாறே தீமையினின்று பிரிக்கப்பட்டவர்களாய், பரிசுத்தவான்களாக இருப்பார்கள். 'அசுத்த உதடுகள்' உள்ள மனுஷன் பரிசுத்தன் அல்ல. ஏசா $6^{5}$. பரிசுத்தம் யேகோவாவினுடைய உத்தம மகிமை. ஏசா $6^{3}$. இதினாலே அவர் எல்லாரிலும் மேன்மையுடையவர். சங் $99^{3}$. பரிசுத்தம் அவருடைய சுபாப லக்ஷணம். ஏசா $57^{15}$.

6. **பரிசுத்தவான்களும் பரிசுத்தமானவைகளும்.**

யேகோவாவுக்குப் பணிவிடை செய்கிற யாவரும் பரிசுத்தவான்கள். யேகோவாவுக்கு உபயோகமாகிற யாவும் பரிசுத்தமானவை. திருஷ்டாந்தமாக:

வானம். சங் $20^{6}$.

யேகோவாவினுடைய சிங்காசனம். சங் $47^{8}$.

அவருடைய பரம சேனை. சங் $89^{7}$.

அவருடைய ஆவி. சங் $51^{11}$ ஏசா $63^{10}$.

அவருடைய நாமம். லேவி $20^{3}$.

அவருடைய புயம். சங் $98^{1}$.

அவருடைய வழி. ஏசா $35^{8}$.

அவருடைய ஜனம். லேவி $19^{2}$ உபா $7^{6}$ மு

அவர்கள் வசிக்கும் பூமி. சக $2^{12}$.

தேவாலயம். சங் $11^{4}$ மு.

தேவாலயம் இருக்கும் நகரம். ஏசா $52^{1}$ நெகே $11^{1}$.

தேவாலயத்தின் பணிமுட்டுகள். 1 இரா $8^{4}$.

பலிபீடம். யாத் $30^{97}$.

பலி. ஆகாய் $2^{12}$.

தூபம். யாத் $30^{36}$.

தேவசமுகத்து அப்பமேசை. யாத் $30^{27}$.

தேவசமுகத்து அப்பம். 1 சாமு $21^{6}$.

குத்துவிளக்கு. யாத் $30^{27}$.

உடன்படிக்கைப் பெட்டி. யாத் $30^{26}$ 2 நாளா $35^{3}$.

அபிஷேக தைலம். யாத் $30^{25}$.

யேகோவாவின் சடங்காசாரங்களை நடத்துகிற ஆசாரியர். லேவி $21^{6}$.

லேவியர். எண் $8^{17}$.

தீர்க்கதரிசிகள். 2 இரா $4^{9}$.

7. **புதிய ஏற்பாட்டில்வழங்கும் பதங்கள்.**

புதிய ஏற்பாட்டிலே பரிசுத்தத்தைக்குறிக்கும் மூன்று பதங்கள் உண்டு.

i. 'ஹைறயாஸ்' (*Hieros*). இது விசேஷமாய்ச்சடங்காசாரத்துக்குரிய பரிசுத்தத்தைக் குறிக்கும். இரண்டு வசனங்களில் மாத்திரம் இப்பதம் சொல்லப்பட்டிருக்கிறது. 1 கொரி $9^{13}$ 2 தீமோ $3^{15}$.

ii ஹொசியஸ் (*Hosios*). இப்பதம் விசேஷமாய் வணக்கத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவைகளைக் குறிக்கும். இதுவும் சில வசனங்களிலே மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. அப் $2^{27}$ $13^{35}$ 1 தீமோ $2^{8}$ தீத் $1^{8}$ எபி $7^{26}$ வெளி $15^{4}$ $16^{5}$.

iii. 'ஹாக்கியஸ்' (*Hagios*). என்னும் பதம் 230 தடவையும், அதற்குரிய வினைச்சொல் 27 தடவையும் புதிய ஏற்பாட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வளவு சிறிய புஸ்தகத்தில் இப்பதம் இத்தனைதடவை வழங்கியிருக்கிறதினாலே புதிய ஏற்பாட்டை இயற்றினவர்கள் பரிசுத்தத்தைப்பற்றிக் கொண்டிருந்த யோசனை எவ்வளவு என்று நாம் அறியக்கூடும். இப்பதம் ஆவிக்குரியதும், சன்மார்க்கத்துக் கடுத்ததும், தீமையினின்று நீங்கியதும், துர்நோக்கமும் துராசையும் அற்றதுமான தூய்மையைக் குறிக்கிறது. இக்கருத்தின்படி பரிசுத்தவான் தீமையிலிருந்து பிரிக்கப்பட்டு பரிசுத்தராகிய கடவுளுக்கென்று நியமிக்கப்பட்டு, அவரது உத்தம தன்மையை அடைந்தவனாய் இருக்கவேண்டும்.

8. **புதிய ஏற்பாட்டில் 'பரிசுத்தம்' என்பது மூன்று வகைப்படும்.**

i. புதிய ஏற்பாட்டில் கடவுள் பரிசுத்தர் என்று சிலதடவை மாத்திரம் சொல்லப்பட்டிருந்தாலும் (லூக் $1^{49}$ யோவா $17^{11}$ 1 பேது $1^{15}$ வெளி $4^{8}$), பரிசுத்த ஆவியைக் குறிக்கும்படி அது 94 தடவை சொல்லப்பட்டிருக்கிறது.

ii. 'பரிசுத்தம்' என்பது 10 வசனங்களில் இயேசுகிறிஸ்துவைக் குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. மாற் $1^{24}$ லூக் $1^{35}$ $4^{34}$ யோவா $6^{69}$ அப் $3^{14}$ $4^{27.30}$ எபி $7^{27}$ 1 யோவா $2^{20}$ வெளி $3^{7}$.

iii. 'பரிசுத்தம்' என்பது 60 தடவை கிறிஸ்தவர்களைக் குறிக்கச் சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்தவர்கள் பரிசுத்தவான்களும், குற்றமற்றவர்களும், நீதியுள்ளவர்களுமாய் இருக்கவேண்டும் என்று உறுதி

யாய்ச் சொல்லியிருக்கிறது. மாற் 6[20] அப் 3[14] எபே 1[4] 5[27] கொலோ 1[22]. பரிசுத்தாவி காண்க.

அவர்கள் சம்பாஷணை அப்படியிருக்க வேண்டும். 1 பேது 1[15] 2 பேது 3[11].

அதில் நிலைத்திருக்கவேண்டும். லூக் 1[75].

அதில் பூரணராகும்படி பிரயாசப்பட வேண்டும். 2 கொரி 7[1].

அப்படிப்பட்டவர்களாய்த் தேவனுக்கு முன்பாக நிறுத்தப்படுவார்கள். கொலோ 1[22] 1 தெச 3[13].

என்றென்றைக்கும் அதில் நிலைப்படுத்தப் படுவார்கள். வெளி 22[11].

முதிர்வயதுள்ள ஸ்திரீகளும் அப்படி யிருக்கவேண்டும். தீத் 2[3].

அதில் நிலைத்திருக்கிற ஸ்திரீகளுக்குரிய வாக்குத்தத்தமாவது. 1 தீமோ 2[15].

தேவவசனம் அது உண்டாவதற்கு ஏது வாயிருக்கிறது. யோவா 17[17] 2 தீமோ 3[16.17].

அது,

தேவகிருபையின் பிரசன்னத்தினாலும். தீத் 2[11-13].

தேவனுக்குக்கீழ்ப்படிகிறதினாலும். ரோம 6[22].

கிறிஸ்துவோடு ஐக்கியப்படுவதினாலும், யோவா 15[4.5].

உண்டாகும் பலனாயிருக்கிறது.

அது,

தேவனுடைய மகிமையினிமித்தமும். யோவா 15[8] பிலி 1[11].

அவருடைய இரக்கங்களினிமித்தமும் ரோம 12[1.2].

சகல பூதியமும் அழிந்துபோம் என்பதினிமித்தமும். 2 பேது 3[11].

இருக்கவேண்டும்.

பரிசுத்தவான்களில் அது விருத்தியாகும்படி தண்டனைகள் நேரிடுகின்றன. எபி 12[10].

அது துன்மார்க்கரைவிட்டுப் பிரிகிறதற்கு ஏவவேண்டும். 2 கொரி 6[17.18].

துன்மார்க்கர் அது இல்லாதவர்களாயிருக்கிறார்கள். 1 தீமோ 1[9] 2 தீமோ 3[2].

கிறிஸ்து தமது ஜனங்களுக்கு அது இருக்கும்படி விரும்புகிறார். யோவா 17[17].

தமது ஜனங்களுக்கு அது பயன்படச் செய்கிறார். எபே 5[25-27].

அதற்கு மாதிரியாயிருக்கிறார். எபி 7[26] 1 பேது 2[21.22].

மாசில்லாத பரிசுத்தம் தேவ லட்சணங்களிலொன்று. லேவி 19[2] 1 பேது 1[15.16].

மாசில்லாத பரிசுத்தம் கிறிஸ்துவுடைய லட்சணங்களில் ஒன்று. ரோம 8[29] 1 யோவா 2[6].

பரிசுத்தவான்கள்

அதற்குத் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார்கள். ரோம 8[29] எபே 1[4].

அதற்கு அழைக்கப்பட்டிருக்கிறார்கள். 1 தெச 4[7] 2 தீமோ 1[9].

அதில் புதிதாய்ச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறார்கள். எபே 4[24].

அதைப் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். 1 கொரி 3[17] எபி 3[1].

அது அவர்கள் கனிகளிலொன்று. ரோம 6[22].

அதைப் பின்பற்றவேண்டும். எபி 12[14].

அதோடே தேவனுக்கு ஊழியஞ்செய்ய வேண்டும். லூக் 1[74.75].

தங்கள் அவயவங்களை அதற்கென்றே ஒப்புவிக்கவேண்டும். ரோம 6[13.19].

தங்கள் சரீரங்களை அப்படியே தேவனுக்கு முன்னிறுத்தவேண்டும். ரோம 12[1].

**பரிசுத்தம் ஆக்கப்படுதல். Sanctification.**

1. பரிசுத்தம் ஆக்குதல் நம்மை கடவுளினுடைய சித்தத்திற்கு இசைந்தவர்களாக்குகிறதேயாம். நாம் பாவத்தினாலே தேவசாயலை இழந்து, தேவசித்தத்திற்கு விரோதிகளானோம். அந்தச் சாயல் மறுபடியும் நமக்குள் உண்டாகும்படிக்குக் கிறிஸ்துவினுடைய இரட்சிப்பு முழுவதும் ஏதுவாயிருக்கிறது. அவர்மேலுள்ள விசுவாசம் அதற்கு விசேஷமான கருவியாயிருக்கிறது. பரிசுத்த ஆவியானவர் அந்த விசுவாசத்தினாலே அதை நமக்குள்ளே நிறைவேற்றுகிறார். அவர் நம்முடைய புத்திக்கு மெய்யறிவைக் கொடுக்கிறதும், நம்முடைய இருதயத்தைப் பிழைப்பிக்கிறதும், நம்மைக் கடிந்துகொள்ளுகிறதும், கிறிஸ்துவின்மேல் பக்திவைக்கப்பண்ணி நம்மை நீதிமான்களாக்குகிறதும், நம்மைத் தேற்றிச் சமாதானத்தால் நிரப்புகிறதும், தேவபுத்திர பட்டத்தைக் கொடுக்கிறதுமாகிய இவைகளெல்லாம் நம்மைப் பரிசுத்தமாக்குகிறதற்கு ஏதுக்களாயிருக்கின்றன. பரிசுத்தமில்லாதவன் தேவனிடத்திற் சேர்ந்து அவருடைய ஒளியிலே தங்கக்கூடாது. எபி 12[14]. முந்தின ஆதாமினால்வந்த பாவமாகிய பழைய மனிதத்தத்துவத்தைக் களைந்து,

இரண்டாம் ஆதாமினால் வந்த பரிசுத்தமாகிய புதிய மனிதத்தத்துவத்தை நாம் தரித்துக் கொள்ளவேண்டும். கொலோ $3^{9.10}$.

2. பரிசுத்தமாக்கல் என்றர்த்தங்கொள்ளுகிற எபிரெய பதத்தின் மூலஅர்த்தம் 'ஒன்றை மற்றவைகளினின்று பிரித்துத் தேவனுக்குப் படைக்கிறதேயாம்.' அப்படிப் படைக்கப்பட்ட வீடு நிலம் மிருகம் முதலானவைகளும், தேவாராதனை செய்யும் படிக்குக் கூட்டத்தினின்று பிரித்து ஏற்படுத்தப்பட்ட பேர்களும், மற்ற நாட்களினின்று ஓய்வுநாளாகப் பிரித்து ஏற்படுத்தப்பட்ட ஏழாம்நாளும் 'பரிசுத்தம்' என்னப்பட்டன. அதுபோல இஸ்ரவேல் ஜனங்கள் பாவமுள்ளவர்களாயிருந்தும் மற்ற ஜனக்கூட்டங்களினின்று பிரிக்கப்பட்டு யேகோவாவினுடைய ஜனங்களாயிருக்கும்படி ஏற்படுத்தப்பட்டிருந்தபடியால், அவர்கள் தேவனுக்குப் பரிசுத்தம் என்று சொல்லப்பட்டார்கள். எரே $2^3$ யாத் $19^6$. இந்தக் கருத்துடனே இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்கள் தேவனுக்கு முன்பாக பரிசுத்தராயிருக்கும்படி, தேவஆவியின் பிறப்பினால் புதிய இருதயத்தைப்பெற்று நினைவிலும் விருப்பத்திலும் நடக்கையிலும் உலகத்தாரினின்று பிரிக்கப்பட்டிருக்கிறதினால், பூர்வீகத்தில் கிறிஸ்தவர்கள் 'பரிசுத்தவான்கள்' என்றும் 'பரிசுத்த சகோதரர்' என்றும் அழைக்கப்பட்டார்கள். கொலோ $1^2$ ரோம $1^{2-7}$ $15^{25}$ 1 கொரி $1^2$ எபே $5^3$ எபி $6^{10}$.

3. விசுவாசிகளுடைய பரிசுத்தமாவது அவர்களுடைய நினைவுகள் விருப்பங்கள் நடக்கைகள் யாவும் கடவுளினுடைய திருச்சித்தத்திற்கும் வசனத்திற்கும் இசைவாயிருக்கிறதேயாம். அவர்கள் தேவஆவியினாலே மெய்யறிவைப் பெற்று மறுபிறப்பு அடைகிறதே அந்தப் பரிசுத்தத்திற்கு ஆரம்பம். அந்த மறுபிறப்பினால் அவர்கள் தாங்கள் தேவனுடைய திருச்சித்தத்திற்கு வேற்றுமையாய் நடந்துவந்ததை நினைத்து மனஸ்தாபப்பட்டு அவருடைய மன்னிப்பைத் தேடும்படிக்கும், துன்மார்க்கங்களை விட்டுத் தேவனுக்குப் பிரியமான மார்க்கத்தாராகும்படிக்கும் விருப்பமுள்ளவர்களாயிருந்து, இயேசுகிறிஸ்துநாதர்மேல் பக்திவைத்து அவர் மூலமாய்ப் பாவமன்னிப்பைப் பெற்று தேவனுக்கு முன்பாக குற்றமற்ற நீதிமான்களென்று எண்ணப்பட்டதினாலே அவர்கள் பரிசுத்த ஆவியின் ஆலயமும் கிறிஸ்துவின் சரீரத்தில் அவயவங்களுமாவார்கள். 1 கொரி $6^{11.15.19}$ எபே $5^{30}$.

4. தெரிந்துகொள்ளப்பட்டவர்களைப் பரிசுத்தமாக்குகிறது கடவுளினுடைய ஆதி நோக்கமாயிருந்தது. 2 தெச $2^{13}$ 1 தெச $4^7$. இயேசுகிறிஸ்து செய்த புண்ணியபலி நாம் பரிசுத்தராகிறதற்கேதுவாயிருக்கிறது. திருஷ்டாந்தமாக, இயேசுகிறிஸ்து நம்மைச் சகல அக்கிரமங்களினின்றும் மீட்டு, தமக்குச் சொந்தமாயும் நற்கிரியைகளைச் செய்ய மிகுந்த விருப்பமாயுமிருக்கிற ஜனங்களாக நம்மைச் சுத்திகரிக்கும்படிக்கு நமக்காக தம்மையே ஒப்புக்கொடுத்தார் என்றும் (தீத் $2^{14}$); இப்போது 'உங்களைப் பரிசுத்தவான்களாகவும் மாசற்றவர்களாகவும் குற்றஞ் சாற்றப்படாதவர்களாகவும் தமக்கு முன்பாக நிறுத்தும்படிக்கு அவர் தமது மாம்சதேகத்தை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்ததினாலே உங்களையும் ஒப்புரவாக்கினார்' என்றும் பவுல் எழுதியிருக்கிறான். கொலோ $1^{22}$ எபே $5^{25.27}$.

5. தேவகிருபையால் நீதிமான்களாக்கப்பட்டவர்கள் வாயினால் மாத்திரமல்ல, சகல விதமான செய்கைகளினாலும் தேவனுடைய சித்தத்தின்படி நடக்க விரும்புகிறார்கள். அந்த விருப்பம் ஒரு விதை பயிராகிறது போலவும், பிள்ளை வளருகிறதுபோலவும், அஸ்திபாரத்தின்மேல் வீடு எழும்புகிறது போலவும், புளிப்புள்ள மா பிசைந்தமா முழுவதையும் புளிப்பாக்குகிறது போலவுமிருக்கிறது. 1 பேது $2^{1.5}$ கொலோ $^{6.8}$ மத் $13^{8.31-33}$.

6. இந்த உவமைகளினாலே விசுவாசிகளினுடைய பரிசுத்தம் உடனே நிறைவாயிராமல் அவர்கள் மரிக்கிறவரைக்கும் பெருகுகிறதா யிருக்கிறது. அது பரலோகத்தில் பூரணமாயிருக்கும். ஆதலால், நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையையும அவரை அறிகிற அறிவையும் அதிகமதிகமாய் அடைந்துகொள்வீர்களாக என்று பேதுரு எழுதியிருக்கிறான். 2 பேது $3^{18}$ 2 கொரி $3^{18}$ கொலோ $2^{6.7}$ மத் $5^{48}$.

7. விசுவாசிகள் பரிசுத்தமாகுதல் என்னும் உபதேசமானது திரியேக தேவனை அதிக மதிகமாய் அறிந்துகொள்ளுகிறதினாலும், அவர்மேல் அதிகமாய் அன்பு கூருகிறதினாலும், மனிதரெல்லார்மேலும் அன்பு கூருகிறதினாலும், அவருடைய கற்பனைகள் யாவையுங் கைக்கொள்ளுகிறதினாலும், பாவமான இச்சைகளை அழிக்கிறதினாலும், பாவஞ்செய்கிறதற்கேதுவான தூண்டுதல்களைச் ஜெயிக்கிறதினாலும், துன்பங்களைப் பொறுமையோடும் உறுதியோடும் சகிக்கிறதினாலும், சகலத்தையும் தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாக

செய்கிறதினாலும், பரலோகத்தின் மகிமையை நாடுகிறதினாலும், தங்களுடைய குறைவுகளைக் குறித்து மனஸ்தாபப்பட்டு மன்னிப்பைத் தேடுகிறதினாலும் அனுபவ சாட்சிக்கு இசைந்திருக்கிறது.

8. பரிசுத்தமாக்குதல் தேவ ஆவியினுடைய விசேஷமான கிரியையாயிருக்கிறது. 1 தெச $5^{23}$. தாயானவள் தன் பிள்ளையை நடக்கப்பண்ணுகிறதுபோல தேவ ஆவியானவர் நாம் பரிசுத்தமாய் நடக்கும்படி போதிக்கிறார். பின்பு, பிள்ளை பெலனேயடைந்து தானாய் நடக்கும்படி செய்கிறதுபோல தேவ ஆவியும் நாமே நடக்கும்படி பண்ணுகிறார். ஆதலால், நாம் நம்மைப் பரிசுத்தமாக்கவேண்டுமென்றுஞ் சொல்லியிருக்கிறது. 1 தெச $4^{3.5}$ பிலி $2^{12.13}$ 1 பேது $1^{15.16}$ கொலோ $3^{1.10}$. இப்படி விசுவாசிகள் தேவ ஆவியினுடைய கிருபையினாலே தங்களைப் பரிசுத்தமாக்கிக் கொண்டுவருகையில் அவர் அவர்களைவிட்டு நீங்காமல் அவர்களுடைய நடக்கைகளைக் கவனித்து, அவர்கள் செய்கிற தப்பிதங்களைக் கடிந்துகொண்டு, விழுகிறபோது அவர்களைத் தூக்கி யெடுத்துப் பலப்படுத்தி அன்புள்ள தாயைப்போல அவர்களை நடத்திவருவார். 1 பேது $5^{10}$ 1 தெச $5^{23.24}$ 2 தெச $3^5$ 1 கொரி $1^8$ பிலி $1^6$. கடைசியில் இம்மையிலாவது மறுமையிலாவது பரிசுத்தஆவி தமது ஊழியம் எல்லாம் முடித்தபின், பரிசுத்தவான்களாகிய நாம் மாசற்றவர்களாய்த் தேவசந்நிதானத்தில் நிற்போம். யூதா $1^{24}$.

**பரிசுத்தவான்கள். Holy Ones.** சகரியா $14^5$. தூதன் காண்க.

**பரிசேயர். Pharisees.** யூதர்களுக்குள் மார்க்கவைராக்கியமுடைய சிலர் இந்த வகுப்பை உண்டாக்கினார்கள். சீரிய ராஜாவாகிய அந்தியோகுஸ் எபிப்பானேஸ் என்பவன் யூதேயாவில் அரசாண்டபொழுது (கி-மு. 175–168) யூதமார்க்கத்தை அழித்து, கிரேக்க மார்க்கத்தையும் வழக்கங்களையும் கொண்டுவரப் பிரயாசப்பட்டான். அதற்கு மாறாய் யூதர்களில் அனேகர் தங்கள் தேசமார்க்கத்தை விடமாட்டோம் என்று உறுதியாய் நின்றார்கள். இதினிமித்தம், அவர்களில் சிலர், சித்திரவதை செய்யப்பட்டும் கொல்லப்பட்டும் இறந்தார்கள். இவர்கள் 'பயபக்தியுள்ளவர்கள்' என்னும் அர்த்தங்கொண்ட 'கசீதீம்' (*Hasidim*) என்று அழைக்கப்பட்டார்கள். மக்கபெயர் என்பவர்களுடைய காலத்தில் கசீதீம் என்பவர்கள் முற்றாய்த் தெய்வபக்தியுடையவர்களானார்கள். இதில் இவர்களுக்கும் சதுசேயருக்கும் விசேஷித்த வித்தியாசம் இருந்தது. இவர்கள் கைக்கொண்டுவந்த பிரமாணங்களாவன:— புறஜாதியாரிலிருந்து தங்களைப் பிரித்துக்கொள்வதும்; பிறதேச வழக்கங்களை ஏற்றுக்கொள்ளாமல் விடுவதும்; புறஜாதியாரோடு சம்பந்தம் செய்யாதிருப்பதும்; யூதப்பிரமாணங்களை அதிக நுட்பமாய் அநுசரிப்பதுமே. இவைகளினிமித்தம் கி-மு. 150-ஆம் முதல் 'பிரிக்கப்பட்டவர்கள்' என்று அர்த்தங்கொண்ட 'பரிசேயர்' என்னும் பெயர் இவர்களுக்கு வழங்கவந்தது. இவைகளைக் கைக்கொண்டு வந்ததினாலே அதிக கஷ்டங்களை யடைந்தார்கள். ஜனங்கள் இவர்களுடைய யதார்த்தத்தையும் சுத்தத்தையுங்குறித்து வியப்பாய் எண்ணினார்கள். ரோம ராஜாங்கத்தார் யூதேயாவை ஆண்டுவந்தகாலத்தில் பரிசேயருக்கும் சதுசேயருக்கும் தீராத பகை இருந்தது. சதுசேயர் ஏரோதியரோடு சேர்ந்தவர்களாயிருந்தார்கள். சதுசேயரிலிருந்தே பிரதான ஆசாரியர் தெரிந்துகொள்ளப்பட்டார்கள். சதுசேயர் ஆலோசனை சங்கத்தில் அதிக செல்வாக்குடையவர்களாய் இருந்தார்கள். பரிசேயரோ ஜனங்களுக்குள்ளே அதிக செல்வாக்குடையவர்களாய் இருந்தார்கள். இயேசுகிறிஸ்துவினுடைய காலத்தில் பரிசேயர் மார்க்க விஷயத்திலே முதன்மைபெற்ற வழிகாட்டிகளாயிருந்தார்கள்.

1. இவர்களுடைய கோள்கை.

பூமியிலே ராஜ்யத்தை ஸ்தாபித்து அதன்மேல் அரசாளும் ஒரு மேசியாவுக்காகப் பரிசேயர் காத்திருந்தார்கள். மரித்தபின் சரீரத்திற்கு உயிர்த்தெழுதலுண்டு என்றும், ஆத்துமா நித்தியவஸ்து என்றும் பரிசேயர் போதித்தார்கள். நீதிமான்கள் மேசியாவின் ராஜ்யத்திற்குரிய ஆசீர்வாதங்களை அடைவார்கள் என்றும்; அநீதிமான்கள் தண்டனை அடைவார்கள் என்றும் நம்பினார்கள். சதுசேயருடைய கொள்கைக்கு மாறாகப் பரிசேயர், தேவதூதரும் ஆவியும் உண்டென்று சாதித்தார்கள். இந்தக் கொள்கைகளைச் சதுசேயரைத்தவிர மற்ற யூதர்கள் சாதாரணமாய் ஏற்றுக்கொண்டார்கள். அப் $23^8$. பரிசேயரோ மற்றவர்களைப்பார்க்கிலும் திட்டமாய் இப்பிரமாணங்களைக் கைக்கொண்டார்கள். இதனால் தங்களுக்கும் மற்ற ஜனங்களுக்கும் வித்தியாசமுண்டென்றெண்ணி, சாதாரண ஜனங்களை அசட்டைபண்ணி, அவர்களுடனேகூட இருப்பது தங்களைத் தீட்டுப்படுத்துமென்று நினைத்தார்கள். யோவா $7^{49}$. இயேசுகிறிஸ்து ஆயக்காரரோடும் பாவிகளோடும்

போஜனம் பண்ணினபடியால் பரிசேயர்கள் அதை ஆட்சேபித்து அவர்மேல் குற்றம் பிடித்தார்கள். மத் $9^{11}$ மாற் $2^{16}$ லூக் $5^{30}$ $7^{39}$ $15^{2}$. இவர்கள் ரோமருடைய ஆளுகை யூதரைச் சிட்சிப்பதற்கு அவசியமாயிருந்தாலும், யேகோவாவே இஸ்ரவேலுக்கு ராஜாவாயிருப்பதினால், ரோமர்களுடைய ஆளுகை நீதிக்கேடானதாயிருந்தது என்று சாதித்தார்கள்.

## 2. இவர்களுடைய கிரியை.

பரிசேயர் எழுதப்பட்ட பிரமாணங்களை மாத்திரமல்ல, முன்னோர்களின் பாரம்பரியததையும் மிகவும் திட்டமாய்க் கைக்கொண்டார்கள். மாற் $7^{3}$. இவர்கள் இவ்விதமாய் அதிக நுட்பமாகக் கவனித்துவந்த சில சடங்குகள் சுவிசேஷங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

கழுவுவதால் சுத்தமாகுதல். மத் $23^{25.26}$ மாற் $7^{1-4}$ லூக் $11^{37-39}$.

உபவாசமிருத்தல். மத் $9^{14}$ லூக் $18^{12}$.
தசமபாகம் கொடுத்தல். மத் $23^{23}$ லூக் $18^{12}$.

ஓய்வுநாளைத் திட்டமாய் ஆசரித்தல். மாற் $2^{23.24}$ லூக் $14^{1-6}$ யோவா $9^{16}$.

பரிசேயர் பிரமாணத்திலும், முன்னோர்களின் பாரம்பரியத்திலும், ஒவ்வொரு கட்டளையையும் முற்றாய்க் கைக்கொள்வதை யல்லாமல், வேறொன்றையும்பற்றிக் கவனியாமலிருந்தபடியினால், இவர்களுடைய மார்க்கம் சடங்காசாரமாகமாத்திரம் இருந்தது. இயேசுகிறிஸ்துவினுடைய காலத்திலே பரிசேயர்களில் அநேகர் மாயக்காரராயிருந்தார்கள். மத் 23 அதி. இவர்கள் பயபக்தியுள்ளவர்களல்ல. இவர்கள் முதன்மையோராகும்படி விரும்பினவர்களாயும் (மத் 23 $^{6.7}$), சுத்தமுள்ளவர்களாயும் காணப்பட்டு, இருதயத்திலே தீமையுள்ளவர்களாயும் (மத் 23 $^{25-28}$), நீதியையும் இரக்கத்தையும் விசுவாசத்தையும் விட்டு விட்டவர்களாயும் (மத் $23^{23}$), பொருளாசைக்காரராயும் (லூக் $16^{14}$), தங்களை நீதிமான்களென்று நம்பினவர்களாயும் (லூக் $18^{9}$ $16^{15}$) இருந்தார்கள். யூதப்பிரமாணத்தில் ஆவிக்குரியவைகளைப் பாராமல் எழுத்துக்குரியவைகளைமாத்திரம் இவர்கள் கவனித்தார்கள். இதின்படி இவர்கள் பல தந்திரங்களையும் உபாயங்களையும் செய்தார்கள். மாற் $7^{9-13}$ மத் $23^{16-22}$. பரிசேயர் யூதமார்க்கத்தைச் சுமப்பதற்கரிய பாரமான சுமையாக்கி (மத் $23^{4}$), மனுஷர் பிரவேசியாதபடி பரலோகராஜ்யத்தைப் பூட்டிப்போட்டார்கள். மத் $23^{13}$.

## 3. பரிசேயரும் இயேசுவும்.

இயேசுகிறிஸ்துவைப் பகைத்தவர்களுக்குள் பரிசேயர் பிரதானமானவர்கள். இயேசு ஓய்வுநாளையும் (மத் $12^{2}$ லூக் $6^{7-11}$ யோவா $9^{16}$), முன்னோர்களின் பாரம்பரியத்தையும் (மத் $15^{12}$), கைக்கொள்ளாமல் சாதாரண ஜனங்களுடனே கூடினார் என்றும், பாவங்களை மன்னித்தார் என்றும் (மத் $9^{2.3}$ லூக் $5^{20.21}$), பரிசேயர் அவரிடத்தில் குற்றம் பிடித்து, இயேசுவுக்குச் சத்துருக்களாயிருந்து அவர் அடையாளத்தைக் காண்பிக்கவேண்டும் என்று கேட்டார்கள். மத் $12^{38}$ $16^{1}$. ஆனாலும் இவர்கள் அவருடைய அற்புதங்களைக் கண்டபோது, பெயெல்செபூலினாலே பிசாசுகளைத் துரத்துகிறான் என்று சொன்னார்கள். மத் $12^{24}$. அநேகமுறை தந்திர வினாக்களினால் அவரை அகப்படுத்தும்படி இவர்கள் பிரயாசப்பட்டார்கள். மத் $19^{3}$ $22^{15.34.36}$ லூக் $11^{53.54}$. பலகாலும் அவரைப் பிடித்துக் கொல்லும்படி ஆலோசனை பண்ணிவந்தார்கள். மத் $12^{14}$ $21^{45.46}$ மாற் $3^{6}$ யோவா $7^{32-45-52}$ $11^{47.53.57}$. கடைசியாய் இவர்கள் இயேசுவைக் கொன்று, தாங்கள் நினைத்தகாரியத்தை முடித்தார்கள். யோவா $18^{3-13}$. இவர்கள் தங்கள் சொந்த சத்துராதிகளாகிய ஏரோதியரோடும் சதுசேயரோடும் இயேசுவுக்கு விரோதமாகச் சேர்ந்துகொண்டதினால் இவர்கள் இயேசுவுக்கு விரோதமாகக்கொண்ட வர்மம் எவ்வளவு பெரியதென்பதை நாம் காணலாம். மத் $16^{1}$ $22^{16}$ மாற் $3^{6}$. இயேசுவும் பரிசேயருக்கு எதிர்த்து, இவர்கள் தங்களை நீதிமான்களென்று காட்டும்படி வெளியாசாரமான கிரியைகளைக் கைக்கொண்டுவந்த கோட்பாட்டை தம்முடைய போதனையினால் கண்டித்தார். அவர் இவர்களுடைய போதனைகளைக்குறித்துத் தமது சீஷர்களை எச்சரித்து (மத் $16^{6.11.12}$) இவர்களுடைய மாய்மாலத்தை மிகத் தெளிவாய்க் கண்டித்து வேதபாரகர் பரிசேயர் என்பவர்களுடைய நீதி போதாதென்று சொன்னார். மத் $5^{20}$ மத் 23 அதி. மாற் $7^{6-23}$ லூக் $11^{39-44}$ $18^{10-14}$. ஆனால் பரிசேயருக்குள் சிலர் நேர்மையுள்ளவர்களாயிருந்தார்கள். திருஷ்டாந்தமாக—நிக்கொதேமு ஓர் பரிசேயன. யோவா $3^{1}$ $7^{50}$. பரி. பவுலும் பரிசேயனாயிருந்து (அப் $23^{6}$ $26^{5}$ பிலி $3^{5}$), பரிசேயருக்குள் கீர்த்திபெற்ற கமாலியேல் என்பவனுக்குச் சீஷனாயிருந்தான். அப் $22^{3}$. பரிசேயர்களில் சிலர் கிறிஸ்தவர்களானார்கள். அப் $15^{5}$.

**பரிதாபம், பரிதபிக்கிறது.** Pity. சங் $69^{20}$ ஏசா $63^{9}$ எசே $16^{5}$ யோனா $4^{10}$ எபி $10^{34}$. **இரக்கம் காண்க.**

**பரிதானம். Bribe.** உபா 16[19] 1 சாமு 8[3] 12[3] 2 நாளா 19[7] யோபு 15[34] சங் 26[10] ஏசா 33[15] ஆமோ 5[12].

**பரிந்து பேசுகிறவர். Advocate.** 1 யோவா 2[1]. **பரிசுத்தஆவி** காண்க.

**பரிபாலனம். Protection.**

எரே 31[22]. பக்கத்தில், **பராமரிப்பு** காண்க.

**பரிபூரணம். Fulness.**

தெய்வீக பரிபூரணமாகிய உத்தம அருள்.

1. கிறிஸ்துவுக்குள் இருக்கிறது. கொலோ 1[19] 2[9.10] யோவா 1[16].

2. இந்த அருள் சபைக்குக் கொடுக்கப்பட்டது. எபே 1[23].

3. இந்த அருள் கிறிஸ்தவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. எபே 3[16] 4[11-13]. 'சம்பூரணமான ஆசீர்வாதம்' ரோ 15[29].

**பரிமளதைலம். Precious ointment.** யாத் 30[25] 1 சாமு 8[13] நீதி 27[9] உன்.பா 1[3] ஏசா 39[2] ஆமோ 6[6] மத் 26[7] யோவா 11[2] 12[3]. **தைலக்காரர்** காண்க.

**பரிமளம். Perfume.** யாத் 30[35] ஏசா 57[9].

**பரியாசம். Mocking.** **பரிகாசம்** காண்க.

**பரீட்சை. Temptation.** **சோதனை** காண்க.

**பருக்கள். Boils.**

'பருக்கள்' என்னும் பதம் காட்டுகிற வியாதி இன்னதென்று தீர்மானமாய்ச் சொல்ல நம்மால் முடியாது. யோபின் சரித்திரத்தில் நாம் விசாரிக்கும்போது பருக்கள் என்பது தேகத்தில் அரிப்பைக் கொடுப்பதும், முகத்தில் அருவருப்பானதும், நோவு உண்டாக்குவதும், சுவாசத்திலே துர்நாற்றத்தைக் கொடுக்கிறதும், பூச்சிகள் நிறைந்ததுமான கொடிய புண்கள்தான் என்று தோன்றுகிறது. யோபு 2[11] 6[4] 7[5] 19[17]. சிலர் இவ்வியாதி யானைக்கால் என்றும், சிலர் இது குஷ்டரோகம் என்றும், சிலர் இது அம்மை என்றும் சொல்வார்கள்; ஆனால் இது ஓர்விதமான கொடிய புண் என்று நினைக்கலாம். லூக் 16[20]-ல் லாசருவுக்கு இருந்த பருக்கள் இதே மாதிரிதான். இதைப் பற்றி வேறு வசனங்கள் உபா 28[27] யாத் 9[9] 2 இரா 20[7]. **கொப்பளம், பிளவை** காண்க.

**பருந்து. Kite.**

லேவி 11[14] உபா 14[13].

**பருமியன். Barhumite.** **பகூரீம்** காண்க.

**பருவம். Season.** 'பருவகாலம்' மாற் 12[2] லூக் 20[10].

**பருவா. Paruah.** 1 இரா 4[17].



பருந்து.

**பர்கோஸ். Barkos.** எஸ்ரா 2[53].

**பர்சபா. Barsabbas.** [சபா என்பவனுடைய மகன்.]

1. பர்சபா என்று மறுபேர்கொண்ட யூதா. எருசலேமிலிருந்த சபையாரில் தீர்க்கதரிசியாகிய ஓர் கிறிஸ்தவன். அப்போஸ்தலரும் மூப்பரும், எருசலேமில் விருத்தசேதனத்தைக்குறித்து ஆலோசனைபண்ணித் தீர்மானித்தபின்பு, அந்தத் தீர்மானத்தை அந்தியோகியாவிலிருந்த சபையாருக்கு அறிவிக்கும்படி, பவுலோடும், பர்னபாவோடும் பர்சபா அனுப்பப்பட்டான். அப் 15[22.32.33].

2. யுஸ்து என்னும் மறுநாமமுள்ள பர்சபா என்னப்பட்ட யோசேப்பு. இயேசு கிறிஸ்துவோடு சஞ்சரித்தவர்களில் ஒருவன், இயேசு வானத்திற்கு ஏறினபின்பு, அவர் உயிரோடெழுந்ததைக் குறித்துச் சாட்சி கொடுக்கும்படிக்கும், யூதாஸ் இழந்துபோன அப்போஸ்தலப் பட்டத்தில் பங்கு பெறும்படிக்கும் ஒரு சீஷனை ஏற்படுத்தவேண்டுமென்று அப்போஸ்தலரும் சபையாரும் எண்ணினார்கள். அப்படியே இவனையும் மத்தியா என்பவனையும் நிறுத்தி ஜெபம் பண்ணி, சீட்டுப்போட தேவனுடைய சித்தத்தின்படி, மத்தியா தெரிந்துகொள்ளப்பட்டான். அப் 1[23].

**பர்சான்தாத்தா. Parshandatha.** ஆமானின் மூத்தமகன். எஸ்தர் 9[7].

**பர்சிலா. Barzillai.** [இரும்புபோன்ற மனுஷன்.]

1. ரோகிலீம் ஊரானும், கிலெயாத்தியனுமாகிய ஒரு பெரிய மனுஷன். அப்சலோம் தாவீதுக்கு விரோதமாய் இராஜதுரோகம் பண்ணினபடியினால், தாவீது எருசலேமை விட்டு, யோர்தானைக் கடந்து, மகனாயீமுக்கு வந்தபோது, பர்சிலாவும் மற்றவர்களும் அவ

லைச்சந்தித்து, பராமரித்தார்கள். 2 சாமு $17^{27}$. அதற்குப் பிற்பாடு தாவீது எருசலேமுக்குத் திரும்பிவருகையில், பர்சிலா இராஜாவை வழிவிட்டனுப்ப, யோர்தானின் துறைமட்டும் வந்தான். தாவீது நன்றியுள்ளவனாய், பர்சிலா தன்னுடனே கூடவந்து, எருசலேமிலே தன்னிடத்தில் தங்கி, தன்னால் பராமரிக்கப்படும்படிக்கு அவனை வேண்டிக்கொண்டான். பர்சிலா அதை அங்கிகரியாமலிருந்தான். 2 சாமு $19^{31-40}$. கடைசியாகத் தாவீது, பர்சிலாவின் குமாரருக்குத் தயைசெய்யும்படி சாலொமோனை ஏவினான். 1 இரா $2^{7}$. இவன் சந்ததியார். எஸ்றா $2^{61}$ நெகே $7^{63}$.

2. மேகோலாத்தியனான ஓர் ஆள். 2 சாமு $21^{8}$.

**பர்திமேயு.** Bartimaeus. [திமேயுவினுடைய மகன்.] எரிகோபட்டணத்துக்குப்புறம்பேயிருந்து இயேசுகிறிஸ்து சுகமாக்கின ஓர் குருடன். ஜனங்கள் இவனை அதட்டினாலும், இவன் ஊக்கமாய்ச் சத்தமிட்டு, விசுவாசத்தைக் காட்டிப் பார்வையடைந்தான். மாற் $10^{46-52}$ மத் $20^{29-34}$ லூக் $18^{35-43}$.

**பர்தொலொமேயு.** Bartholomew. மத் $10^{3}$. நாத்தான்வேல் காண்க.

**பர்பார்.** Pharpar. தமஸ்கு நகரம் இருக்கும் சமபூமியிலுள்ள நதிகளில் ஒன்று. 2 இரா $5^{12}$.

**பர்பார் வாசல்.** The gate Parbar. தமிழ் வேதாகமத்தில் 'வெளிப்புறமான வாசல்.' 1 நாளா $26^{18}$. எருசலேம் காண்க.

**பர்மஷ்டா.** Parmashta. ஆமானின் ஏழாம் மகன். எஸ்த $9^{9}$.

**பர்மேனா** Parmenas பந்திவிசாரணை செய்வதில் அப்போஸ்தலருக்கு உதவி செய்யும்படிக்கு, எருசலேமிலிருந்த சபையாரால் தெரிந்துகொள்ளப்பட்ட ஏழுபேரில் ஒருவன். அப் $6^{5}$. இவன் பெயர் கிரேக்க பதம் ஆனதினால் இவன் கிரேக்கனென்று நாம் எண்ணலாம். இவன் பிலிப்புபட்டணத்தில் இரத்தச்சாட்சியாக மரித்தான் என்று ஒரு பாரம்பரியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**பர்யேசு.** Bar-Jesus. அப் $13^{6}$. எலிமா காண்க.

**பர்வதம்.** Mount, Hill. யோபு $9^{5}$ சங் $30^{7}$ $48^{1}$ $90^{2}$ ஏசா $2^{2}$ $40^{9}$ $49^{13}$ எரே $31^{23}$ $51^{25}$ எசே $17^{23}$ யோவேல் $2^{2}$ ஆமோ $4^{13}$ மீகா $4^{2}$ சக $4^{7}$. மலை காண்க.

**பர்வாயீம்.** Parvaim. இந்தத் தேசத்தில் பொன் கண்டுபிடிக்கப்பட்டது. 2 நாளா $3^{6}$. பர்வாயீம் தென் அரபிதேசத்தைக் குறிக்கலாம்.

**பர்னபா.** Barnabas. ['ஆறுதலின் மகன்' அல்லது 'புத்திமதியின் மகன்'] 'பர்னபா' என்பது சீப்புருதீவிலே குடியேறியிருந்த ஓர் யூதனும், லேவியனுமாகிய யோசேப்பு என்னும் ஒருவனுக்கு அப்போஸ்தலரால் கொடுக்கப்பட்ட பெயர். அப் $4^{36}$. எருசலேமிலே பெந்தெகோஸ்தே காலத்தில் இவன் கிறிஸ்தவனானான் என்று விளங்குகின்றது. இவன் தன் வயலை விற்று, அதன் கிரயத்தை அப்போஸ்தலரிடங் கொடுத்தான். அப் $4^{37}$ பவுல் குணப்பட்டு எருசலேமுக்கு வந்தபோது, பர்னபா அவனைக்குறித்தும் அவனுடைய குணலக்ஷணங்களைக்குறித்தும் விபரித்துச் சொன்னான். அப் $9^{26}$ ஆதலால் பவுல் எருசலேமுக்கு வருகிறதற்குமுன் பர்னபா அவனை நன்றாய் அறிந்திருந்தான் என்று நினைக்க இடமுண்டு.

சீரியாவிலுள்ள அந்தியோகியாவிலே, கிறிஸ்தசபை உண்டாக்கப்பட்டபோது அந்த வேலையை நடத்தும்படி பர்னபா அனுப்பப்பட்டான்: சபை வளர்ந்தபோது இவனுக்கு உதவி வேண்டியதாயிருக்கையில் இவன் பவுலை தர்சுவிலிருந்து அழைத்தான். ஒரு வருஷம் சென்றபின், அந்தியோகியாவிலுள்ள கிறிஸ்தவர்களால், யூதேயாவிலுள்ள கிறிஸ்தவர்களுக்காகக் கொடுக்கப்பட்ட தருமப்பணத்தை, பவுலும் பர்னபாவும் எருசலேமுக்குக் கொண்டுபோனார்கள். அப் $11^{19-30}$. இவர்கள் எருசலேமிலிருந்து திரும்பி வந்தபின்பு வேறு தேசங்களிலேயும் பிரசங்கம் செய்யும்படியாக அனுப்பப்பட்டார்கள். அப்படியே இவர்கள் சீப்புருதீவுக்கும், பிசிதியா நாட்டிலுள்ள அந்தியோகியா, இக்கோனியா லீஸ்திரா தெர்பை என்னும் பட்டணங்களுக்கும் போனார்கள். அப் 13, 14 அதி. பவுல் காண்க.

புறஜாதி கிறிஸ்தவர்களுக்குள், விருத்தசேதனத்தைப்பற்றி நடந்த வாக்குவாதத்தைக்குறித்து எருசலேமில் கூடிய சங்கத்துக்குப் பவுலும் பர்னபாவும் போனார்கள். அப் 15 அதி. பவுலும் பர்னபாவும் இரண்டாம்முறை சுவிசேஷப் பிரசங்கம் செய்யும்படி யாத்திரை பண்ணும்போது, பர்னபா தன் இனத்தானாகிய மாற்குவைக் கூட்டிக்கொண்டுபோக விரும்ப, பவுல் அந்த வாலிபன் தங்களுடைய முதலாம் பிரயாணத்தில் பெர்கே பட்டணத்தில் தங்களை விட்டுப் பிரிந்து

போய்விட்டபின், அவனைத் தங்களுடனே சேர்க்க விரும்பவில்லை. அப் $13^{13}$. இனிமித் தம் பவுலும் பர்னபாவும் பிரிந்தார்கள். பர்னபா மாற்குவைக் கூட்டிக்கொண்டு சீப்புருதீவுக்குப் போனான். பவுல் வேறு இடங்களுக்குப் போனான். அப் $15^{36}$. இதன்பின் பர்னபாவினுடைய பெயர் அப்போஸ்தலர் நடபடிகளில் சொல்லப்படவில்லை. ஆனால் பவுல் எழுதின நிருபங்களில் இவன் தன்னை ஸ்தாபரிக்கும்படி தன் கைகளினால் வேலைசெய்தானென்றும் (1 கொரி $9^{6}$) எருசலேமிலுள்ள சபையிலே அதிக செல்வாக்குள்ளவனாய் இருந்து சபையைப் பராமரிப்பதில் மிகவும் அநுகூலமுள்ள போதகராயிருந்தான் என்றும் (கலா $2^{9}$) அறிகிறோம். இவன் நல்லவனும் பரிசுத்தாவியினாலும், விசுவாசத்தினாலும் நிறைந்தவனுமாய் இருந்தான் என்று லூக்கா சொல்லுகிறான். அப் $11^{24}$.

**பர்னாகு.** Parnach. எலிசாப்பானின் தகப்பன். எண் $34^{25}$.

**பலகணி.** Lattice. நியா $5^{28}$ 1 இரா $6^{4}$ உன். பா $2^{9}$. வீடு காண்க.



பலகணி.

**பலகை.** Table. யாத் $26^{15}$ $27^{8}$ $36^{20}$ $38^{7}$ 1 இரா $6^{15}$ அப் $27^{44}$.

எழுதும் பலகை. ஏசா $30^{8}$ ஆப $2^{2}$ லூக் $1^{63}$.

'இருதயமாகிய பலகை.' நீதி $3^{3}$ $7^{3}$ எரே $17^{1}$ 2 கொரி $3^{3}$.

கப்பற்பலகை. எசே $27^{5}$.

'காசுக்காரருடைய பலகைகள்.' மத் $21^{12}$ மாற் $11^{15}$ யோவா $2^{15}$.

கேதுருப்பலகை. 1 இரா $6^{15}$ உன். பா $8^{9}$.

நியாப்பிரமாணத்தின் கற்பலகை. யாத் $24^{12}$ $32^{15}$ $34^{1}$ உபா $4^{13}$ 1 இரா $8^{9}$ 2 கொரி $3^{3}$ எபி $9^{4}$.

**பலஸ்தீனா தேசம்.** Palestine. கானான் காண்க.

**பலம், பெலன், பலத்த.** **Strength.** ஆதி $49^{3}$ யாத் $6^{1}$ $15^{2.13}$ உபா $21^{17}$ $33^{25}$ யோபு $12^{16}$ சங் $28^{7}$ $46^{1}$ $68^{35}$ $84^{5}$ $90^{10}$ பிர $9^{16}$ ஏசா $30^{15}$ எரே $16^{19}$ மாற் $12^{30}$ லூக் $10^{27}$ 1 கொரி $15^{55}$ 2 கொரி $1^{8}$ $12^{9}$ வெளி $3^{8}$. வல்லமை காண்க.

**பலவந்தம்.** Violence. மத் $11^{12}$ அப் $5^{26}$.

**பலவர்ணம்.** Divers colours.

'பலவர்ணமான பட்சி.' '*Speckled bird*' எரே $12^{9}$.

'பலவர்ணச் சோடிப்பான மேடை.' எசே $16^{16}$.

'பலவர்ணமான அங்கி.' ஆதி $37^{3.23.32}$.

'பலவர்ணமான வஸ்திரம்.' 2 சாமு $13^{18}$.

**பலவான்களின் புத்திரர்.** Sons of the mighty. சங் $29^{1}$ $89^{6}$. தூதன் காண்க.

**பலன்.** Reward. ஆதி $15^{1}$ சங் $19^{11}$ $58^{11}$ நீதி $22^{4}$ பிர $4^{9}$ $9^{5}$ ஏசா $3^{11}$ மத் $5^{12}$ $6^{5}$ $10^{41}$ லூக் $6^{35}$ 1 கொரி $9^{17.18}$ எபி $11^{6}$ வெளி $22^{12}$. 'மெய்பலன்' நீதி $11^{18}$. 'முதற்பலன்' யாத் $23^{16}$ லேவி $2^{14}$ $23^{17}$ உபா $18^{4}$ நெகே $10^{35}$ ரோ $11^{16}$ $16^{5}$ 1 கொரி $15^{20-23}$ யாக் $1^{18}$ வெளி $14^{4}$. 'முதற்பாகம்' 'எசே $44^{30}$.' 'ஆவியின் முதற்பலன்.' ரோம $8^{23}$.

**பலாதான்.** Baladan. ஏசா $39^{1}$. அசீரியா (பக்கம் 10) காண்க.

**பலாத்காரம்.** Violence. அப் $24^{7}$.

**பலி.** **Sacrifice.**

பழைய புதிய ஏற்பாடுகள் இரண்டிலும் பலியானது ஒரு விசேஷித்த காரியமாக எண்ணப்படுகிறது. பழைய ஏற்பாட்டில் பலி செலுத்தல் தேவாராதனையில் ஒரு முக்கியமான பாகம். புதிய ஏற்பாட்டில் இயேசு கிறிஸ்து செய்த மீட்பு பலியாகவே எண்ணப்படுகிறது. என்றாலும் பலிசெலுத்தல் கடவுளால் நியமிக்கப்பட்டதென்று வேதம் சொல்லுகிறதில்லை. அதன் உற்பத்தியைக் குறித்தும் ஒன்றும் சொல்லப்படுகிறதில்லை. நியாயப்பிரமாணத்தில் அதைக்குறித்த அநேக சட்ட திட்டங்கள் இருந்தும் அப்பிரமாணம் கொடுக்கப்படுவதற்கு முந்தியே பலி செலுத்தும் வழக்கம் இருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. ஆதி $4^{3-4}$ 22 அதி. $31^{54}$. அதுவுமன்றி புறமதஸ்தர் எல்லாருக்கும் இந்த வழக்கம் இருந்ததென்று தோன்றுகிறது. யாத் $18^{12}$ 2 இரா $3^{27}$.

I. **பலியின் நோக்கம்.** தற்காலத்தில் பல வித்வான்கள் உலகத்திலுள்ள பற்பல மார்க்கங்களைக்குறித்துச் செய்த ஆராய்ச்சி

யினால் இந்த வழக்கம் சர்வசாமானியமா யிருக்கிறதென்று முன்னிலும் தெளிவாகத் தென்பட்டு வந்திருக்கிறது. இவ்விதமான ஆராய்ச்சி செய்தவர்கள் பலி செலுத்தின வர்களின் நோக்கங்கள் பலவாறாயிருக்கலாம் என்று கண்டறிந்திருக்கிறார்கள்.

இவைகளில் முக்கியமானவைகள் எவைக ளென்றால்:—

1. பலியாகச் செலுத்தப்பட்ட பொருள் தேவர்களுக்கு அவசியம் என்றும் தேவர் களால் விரும்பப்படத் தக்கதென்றும் பூர் வகாலத்தில் அநேகர் நம்பியிருந்தார்கள். காளி தேவதைக்கு இரத்தமே பிரியமாதலால் இந்நாள்மட்டும் அவள் கோவில்களில் வெள் ளாடுகளைப் பலியாகச் செலுத்துவதே இத் தேசத்து வழக்கம். மற்ற தேவர்களும் தங் களுக்கு முன்பாகப் படைக்கப்பட்ட போஜ னத்தின் சாரத்தை உண்டு ஜீவிக்கிறார்கள் என்று அநேகர் நம்புகிறதுண்டு. அதுபோல, இந்துக்கள் மரித்துப்போனவர்களுக்காகச் செய்யும் கர்மாந்தரத்தின் நோக்கமென்ன வென்றால், செத்தவனுக்குத் தற்காலத்துக் குப் பிரயோஜனப்படக்கூடிய சரீரத்தைப் படைத்து, அதை ஆதரிப்பதேயாம். இப் படி நம்புகிறவர்கள் தங்கள் பலிகள் தேவர் களுக்காவது மரித்தோருக்காவது தேவை என்று நினைத்து இவைகளைக் கொடைக ளாகக் கொடுக்கிறார்கள். மனுஷன் இந்தக் கொடையை ஏன் கொடுக்கவேண்டுமென்று விசாரித்தால் அவனுடைய நோக்கம் பல வாறாயிருக்கலாம் என்று நாம் அறிவோம். திருஷ்டாந்தமாக:

(*a*) ஒருவன் தன் நன்றியறிதலைக் காட் டக் கொடுக்கலாம்; அல்லது

(*b*) பொருத்தனைசெய்து அதை நிறை வேற்றும்படிக் கொடுக்கலாம்; அல்லது

(*c*) அவன் எதிர்பார்க்கிற நன்மைகளுக்கு ஈடாகக் கொடுக்கலாம். அவன் பெற்றதும் பெற எதிர்பார்க்கிறதுமான நன்மைகள் சரீ ரத்திற்குரியவைகளாயாவது ஆவிக்குரியவை களாயாவது இருக்கலாம்.

(*d*) நன்மையைப் பெறலாம் என்று எதிர் பாராவிட்டாலும் தேவர்களைப் போஷிக்கா விட்டால் அவர்கள் தீங்குசெய்வார்கள் என்று பயந்து ஒருவன் பலிசெலுத்தலாம்.

(*e*) நன்மை கிடைத்தாலும் சரி, கிடை யாவிட்டாலும் சரி பலிசெலுத்துவதே கட மை என்று எண்ணுவது அபூர்வம் என் றாலும் ஒருவன் தன் இராஜாவுக்கு இராஜ பக்திக்கடுத்த அடையாளத்தைக் காட்டுவது போல தேவர்களுக்கும் பக்திக்கு அடையாள மாகக் கொடையைக் கொடுக்கலாம்.

2. சிலதேசத்தாருக்குள் இன்னொரு எண் ணம் காணப்படும். அதென்னவென்றால், ஜனங்கள் தங்கள் தேவனோடு ஐக்கியப்படும் படியாக அவரோடு போஜனம் பண்ணுகி றார்கள். அந்தப் போஜனத்தால் அத்தேவன் பலப்படுவதுமல்லாமல் தன் பக்தரோடு ஐக் கியப்படுவார் என்றும், விசேஷமாய்த் தேவ னும் அவருடைய பக்தரும் பரிசுத்தமாக எண் ணுகிற ஒரு மிருகத்தின் மாம்சத்தைப் புசிப்ப தால் தங்கள் பொது ஜீவனைப் புதுப்பிக் கிறார்கள் என்றும் எண்ணிக்கொண்டிருக் கிறார்கள். இதிலே கொடைக்குப் பதிலாக ஐக்கியமே முக்கியமான காரியமாகக் காணப் படுகிறது. பூர்வகாலத்தில் பல ஜாதிகளுக்கு இருந்த அப்படிப்பட்ட யோசனைகள் பூர்வ காலத்திலுள்ள இஸ்ரவேலருக்கும் இருந் திருக்கலாம். வேதத்தில் பலியைக் குறிக் கிற பொதுவான எபிரெய பதமாகிய மின்கா (*Minchāh*) என்பதற்குக் கொடை என்பது அர்த்தமாம். எப்படியாவது நியாயப்பிரமா ணம் கொடுக்கப்படும்முன் இஸ்ரவேலர் பூர்வகாலத்து எண்ணங்களைவிட்டுப் பலி செலுத்தவேண்டிய நோக்கம் ஆவிக்குரியதே என்று அறிந்துகொண்டார்கள்.

3. பலியின் நோக்கம் ஆவிக்குரியதென்று உணர்ந்திருக்கும் ஜனங்கள் தாங்கள் பலியில் செலுத்தும்பொருள் தேவர்களுக்குத் தேவை என்று நினையாமல் அதை அடையாளமாக மாத்திரம் உபயோகிப்பார்கள். அவர்கள் தேவர்களுக்கு அப்பொருள் தேவையில்லை என்று அறிந்தும் தேவை என்று நினைக்கிற வர்கள் பலிசெலுத்தும் நோக்கத்தோடு பலி யாசாரத்தை நடத்துவார்கள். அதாவது, நன்றியறிதலைக் காட்டவோ, இகபர நன் மைகளைப் பெறவோ, ஐக்கியத்தின்பேரி லுள்ள வாஞ்சையை வெளிப்படுத்தவோ அவர்கள் பலிசெலுத்தலாம். ஆவிக்குரிய சிந்தனை மனுஷர் மனதில் பிரவேசித்தபின், முந்தித் தோன்றாத சில நோக்கங்கள் தோன் றுகின்றன. திருஷ்டாந்தமாக, ஒரு பக்தன் தன்னைத் தேவனுக்கு ஒப்புக்கொடுக்கிறதற் காவது மனந்திரும்புதலுக்காவது அடையாள யாக பலிசெலுத்தலாம். அப்படிச் செய்யும் பொழுது அவன் தான் பலியாக செலுத்தின மிருகத்தைத் தனக்குப் பதிலாக செலுத்து கிறான் என்று நாம் நினைக்கலாம். ஆனா லும் தேவ வெளிப்படுத்தலில்லாமல் மனு ஷர் தாங்கள் பலியாகக் கொல்லும் மிருகம் தாங்கள் செய்த பாவத்தினிமித்தம் கடவுள்

நியாயமாய் வாங்கக்கூடிய தங்கள் உயிருக்குப் பதிலாக கொல்லப்பட்டதென்று நினைத்தார்கள் என்று நாம் நிச்சயமாய்ச் சொல்லக் கூடாது.

முதலில் நரபலியானது பல தேசங்களில் சாதாரண வழக்கமாய் இருந்தும், பிந்தின காலங்களில் அத்தேசங்களில் அந்த வழக்கம் நின்றுபோய்விட்டது. அதற்குப் பதிலாக மிருகங்கள் பலிகளாக செலுத்தப்பட்டன. ஆதி 22 அதி. நியா $11^{29-40}$ 2 இரா $3^{27}$ மீகா $6^{7}$.

இவ்விதமாக இஸ்ரவேலருடைய சிந்தனைகள் படிப்படியாய் உயர்த்தப்பட்டுக்கொண்டே வந்தபொழுது அவர்களுக்கு நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டது. அந்த நியாயப்பிரமாணத்தின் மூலமாய் இஸ்ரவேலருடைய வழக்கங்களில் அடங்கியிருந்த அஞ்ஞான காரியங்கள் விலக்கப்படவே கர்த்தருடைய ஜனங்கள் அவருக்குப் பிரியமான பலியைச் செலுத்தும்படியாக பலியின் முறைமை விவரமாய்க் காட்டப்பட்டது.

II. **எபிரேயருடைய பலிகள்.** பலிகளில் முக்கியமானவைகள் எவை என்றால்:–

1. **தகனபலி** (எபிரெய பதம், ஓலா, *'olāh.*) லேவி 1 அதி. யாத் $29^{38-42}$ எண் $28^{3-4}$ லேவி $6^{8-13}$. பலியிடவேண்டிய பொருள் பழுதற்ற மாடாகவாவது, செம்மறியாடாகவாவது, வெள்ளாடாகவாவது இருக்கலாம்; இவை ஆணாய் இருக்கவேண்டும்; அல்லது ஒருஜோடு காட்டுப்புறாக்களாவது புறாக்குஞ்சுகளாவது கொடுக்கப்படலாம். ஆடுமாடுகளின் விஷயத்தில் கொடுக்கிறவன் ஆசரிப்புக் கூடாரவாசலில் கொண்டுவந்து அதன் தலையின்மேல் தன் கைகளைவைத்து அதைக் கொலைசெய்து சந்து சந்தாகத் துண்டித்து அதன் குடலையும் தொடைகளையும் கழுவவேண்டும். ஆசாரியன் அதன் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேல் தெளித்து அதன் துண்டுகளைப் பலிபீடத்திலிருந்த கட்டைகளின்மேல் அடுக்கிவைத்துக் கொளுத்திவிடுவான். புறாவின் விஷயத்தில் ஆசாரியனே புறாவைக் கொல்லுவான். தகனபலி சாதாரண ஜனங்களால் மாத்திரமல்ல பொதுச் சபைக்காக அன்றாடக பலியாக ஆசாரியராலும் செலுத்தப்படும். காலையிலும் மாலையிலும் இடப்பட்ட அத்தகனபலியோடு போஜனபலியும் பானபலியும் சேர்க்கப்பட்டன. எண் $28^{1-8}$. தகனபலியானது கர்த்தருக்குக் கொடுக்கப்பட்ட கொடையாக எண்ணப்பட்டது. அதன் பலன்களாவன:

(1) அது கர்த்தருக்குச் சுகந்த வாசனையானது, அதாவது அவராலே அங்கிகரிக்கப்படும். லேவி $1^{9}$.

(2) பாவத்தை நிவிர்த்திசெய்யும் அல்லது 'மூடும்.' லேவி $1^{4}$.

(3) தீட்டை நீக்கும். லேவி $14^{20}$. அது சுற்பிரதிஷ்டைக்கு அடையாளமாயிருக்கலாம்.

2. **போஜனபலி** (எபிரெய பதம், மின்கா, *Minchāh.*) லேவி 2 அதி. இது நாலு விதமாம்: மெல்லியமாவு, புளிப்பில்லா அதிரசங்கள், தட்டையான சட்டியில் பாகம் பண்ணபபட்ட போஜனம், பொரிக்குஞ் சட்டியில் பாகம் பண்ணப்பட்ட போஜனம் என்பவைகளே. அதன்மேல் எண்ணெய் வார்க்கப்பட்டது. புளிப்பாவது தேனாவது அதோடு கலந்திருக்கக் கூடாது. அதில் ஒரு பாகம் எடுத்துத் தகனிக்கப்பட்டபின் மீதி ஆசாரியருக்குக் கொடுக்கப்படும். லேவி $6^{14-18}$. முதற்பலனும் (யாத் $23^{16}$), சமுகத்தப்பங்களும் (லேவி $24^{5-9}$) போஜன பலிகளாகவே எண்ணப்படலாம். இந்தப் பலி தனிமையாயும் இடப்படலாம் என்று தோன்றுகிறது. என்றாலும் இது பலதடவை மற்ற பலிகளோடு சேர்க்கப்பட்டது. திருஷ்டாந்தமாக தகனபலியோடும் சமாதான பலியோடும் உபயோகிக்கப்பட்டது. எண் $15^{8}$ லேவி $7^{11-13}$. ஆசாரியரின் பிரதிஷ்டைச் சடங்கிலும், ஒரு நசரேயன் விரதங்காக்கும் நாட்கள் நிறைவேறின சடங்கிலும் இது மற்ற பலிகளோடு கலந்திருந்தது. லேவி $8^{26}$ எண் $6^{17}$.

3. **சமாதானபலி** (எபிரெய பதம், ஷெலெம், *Shelem*) லேவி 3 அதி. $7^{11-21.28-34}$. இதில் மூன்றுவகைகள் உண்டு: ஸ்தோத்திரபலி, பொருத்தனை, உற்சாகபலி என்பவைகளே. இவைகளுக்குள்ள வித்தியாசமென்னவென்றால், ஸ்தோத்திர பலியானது கிடைத்த உபகாரங்களுக்காகவும், பொருத்தனையானது எதிர்பார்த்த நன்மைகளுக்காகவும், உற்சாகபலியோ பொதுவாகவும் செலுத்தப்பட்டன என்று நினைக்க இடமுண்டு. பலியிடப்பட்ட பொருள் புறாக்கள்தவிர தகனபலியின் பொருளைப்போலவே இருந்தது; ஆனாலும் மிருகம் பெண்ணாக இருக்கலாம். உற்சாகபலியாக இடப்பட்ட மிருகம் பழுதற்றதாயிருப்பது அவசியமில்லை. லேவி $22^{23}$. அதை ஆசரிக்கும் முறை தகனபலி ஆசாரத்தைப்போலவே இருந்தது, ஆனாலும் ஒரு பாகம்மாத்திரம் தகனிக்கப்படவே மீதியான பாகங்களில்

சிலது ஆசாரியருக்கும் சிலது பலிசெலுத்தினவர்களுக்கும் பங்கிடப்பட்டன. ஆசாரியன் பெற்ற பாகங்கள் விஷயத்தில் ஒரு விசேஷித்த ஆசாரம் செய்யப்பட்டது. லேவி 7³¹⁻³⁴. இப்பலி ஸ்தோத்திரத்தைக் காட்டும்படி செலுத்தப்பட்டிருந்தால் பலி செலுத்தினவனுக்குரிய பாகம் ஒருநாளுக்குள்ளே சாப்பிடப்படும். மற்றப்படி அது இரண்டு நாட்களுக்குள் சாப்பிடப்படும். மீதி பாளயத்திற்குப் புறம்பே தகனிக்கப்படவேண்டும். லேவி 7¹⁵⁻¹⁷. பலி செலுத்தினவன் தன் சிநேகிதரை அழைத்து அந்தப் பாகத்தைக் கொண்டு விருந்து செய்வான் என்று தோன்றுகிறது. ஜனங்கள் சந்தோஷங் கொண்டாடின சமயங்களில் சமாதானபலி செலுத்துவார்கள். 1 சாமு 11¹⁵ 1 இரா 1¹⁹ 8⁶³⁻⁶⁶. இந்தப் பலியும் கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும் என்று சொல்லியிருக்கிறது. லேவி 3⁵. இது பாவத்தை மூடுவதாக தோன்றுகிறதில்லை. இதற்குச் சமாதானபலி என்னும் பெயர் இடப்பட்ட காரணம் என்னவென்று கேட்டால் ஜனங்கள் கர்த்தரோடு சமாதானம் பண்ணும்படியாகவல்ல, அவரோடு சமாதானமா யிருந்ததற்காகச் செலுத்தப்பட்டதென்று தோன்றுகிறது.

4. **பாவநிவாரணபலி.** (கூத்தாத், *Chattāth*) லேவி 4 அதி. 5¹⁻¹³. பலி இடப்பட்ட பொருள் அதைக் கொடுத்தவனுடைய அந்தஸ்தின்படியே வெவ்வேறாயிருந்தது. இதற்காக (1) ஆசாரியருக்கு பழுதற்ற இளங் காளையும் (2) சபைக்கு இளங்காளையும் (3) ஒரு பிரபுக்கு வெள்ளாடுகளில் பழுதற்ற ஒரு இளங்கடாவும் (4) சாதாரண ஜனங்களில் ஒருவனுக்கு வெள்ளாடுகளிலாவது செம்மறியாடுகளிலாவது பழுதற்ற ஒரு பெண் ஆட்டுக்குட்டியும் முறையே நியமிக்கப்பட்டன. ஏழைகள் ஒரு காட்டுப்புறாவையாவது ஒரு புறாக்குஞ்சையாவது கொண்டுவரலாம்; இதையும் கொண்டுவரச் சக்தியற்றவன் எண்ணெயில்லாத ஒரு போஜனபலி செலுத்தலாம். ஆசாரியனுக்காக அல்லது சபைக்காக பலியாகக் கொடுக்கப்பட்ட ஜீவஜெந்து தேவாலயத்தின் வாசலண்டை கொண்டுவரப்படும். அங்கே ஆசாரியனாவது, சபைக்கு பிரதிநிதியாவது அதன் தலைமேல் தன் கையை வைத்துக் கொலைசெய்வான். ஆசாரியன் அதன் இரத்தத்தை எடுத்துப் பரிசுத்த ஸ்தலத்தின் திரைக்கு எதிரே ஏழுதரம் தெளித்து அந்த இரத்தத்தில் கொஞ்சம் எடுத்துச் சுகந்த தூபபீடத்தின் கொம்புகளின் மேல் பூசி மீந்த இரத்தத்தைத் தகன பலிபீடத்தண்டை ஊற்றவேண்டும். இந்த மிருகத்தின் சில பாகங்கள் தகனிக்கப்பட்டபின் மற்றதெல்லாம் பாளயத்திற்குப் புறம்பே தகனிக்கப்படும். பிரபுவாவது சாதாரண மனுஷனாவது செலுத்தும் பலிகளின் இரத்தம் பரிசுத்த ஸ்தலத்துக்குள்ளே கொண்டுவரப்படாமல் தகனபலிமீடத்தின்மேல் பூசப்பட்டது: இதைத்தவிர இவைகளின் ஆசாரம் அதேமாதிரியாகவே யிருந்தது. இவைகளில் ஒருபாகம் ஆசாரியருக்குக் கொடுக்கப்பட்டது. லேவி 6²⁴⁻³⁰. பாவநிவாரண பலியானது பாவத்தை மூடுமென்று சொல்லப்படுகிறது. லேவி 4⁵⁶. ஆனாலும் மனுஷர் அறியாமல் செய்யும் பாவங்களையும் தற்செயலாய் நேரிடும் தீட்டுகளையும் அது மூடுமேயொழிய துணிகரமான பாவங்களை மூடாது. லேவி 5¹⁻⁶ 12⁶⁻⁸ எண் 15²⁷⁻³⁰.

5. **குற்றநிவாரணபலி.** (எபிரெய பதம் ஆஷாம், '*Āshām*.) லேவி 5¹⁴–6⁷. இந்தப் பலிசெலுத்தப்பட்ட சமயங்களாவன: ஒருவன் பரிசுத்தமானவைகளில் குற்றம்செய்து அறியாமையால் பாவத்துக் குட்படுவதும், கர்த்தருடைய கட்டளைகளினால் விலக்கப்பட்ட யாதொன்றைச் செய்வதும், கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் பாவம் செய்வதுமே. பலியிடவேண்டிய பொருள் ஒரு ஆட்டுக்கடா. மற்றப்படி இந்தப் பலிக்கடுத்த ஆசாரம் பாவநிவாரணபலிக்கடுத்த ஆசாரத்தைப்போலிருந்தது. இவ்விரண்டு விதமான பலிகளுக்கும் இருந்த முக்கியமான வித்தியாசம் என்னவென்றால்: குற்றநிவாரணபலி அபகரிக்கப்பட்ட பொருளுக்காகக் கொடுக்கப்பட்டபடியால், அபகரித்தவன் தான் எடுத்த பொருளுக்கு ஈடாகப் பொருளைக் கொடுப்பதுடன் அதற்கு ஐந்தில் ஒரு பாகத்தைக் கூட்டிக் கொடுக்கவேண்டும். பலி இதோடு கூட்டப்பட்டதென்று தோன்றுகிறது. இந்தப் பலியும் மனுஷர் அறியாமல் செய்த பாவங்களைமாத்திரம் மூடும்.

6. **பானபலி** மற்ற பலிகளோடு சேர்க்கப்பட்டதென்று தோன்றுகிறது. எண் 15¹⁻¹⁰. **உடன்படிக்கைக்குரிய பலி.** ஆதி–15 அதி. யாத் 24 அதி. இதிலே தகனபலியும் சமாதான பலியும் கலந்தன.

தூபம், தூபவர்க்கம், பஸ்கா, பண்டிகை, பலிகள், பாவநிவாரண நாள், சுத்திகரிப்பு, தசமபாகம் காண்க.

III. **பலியின் மூலமாய் நிவாரணம்.** பலியிடுவதற்குப் பலவாறான நோக்கங்கள் இருக்கலாம் என்று நாம் மேலே பார்த்தோம். சமாதானபலியின் மூலமாய் ஜனங்கள் தங்கள் சந்தோஷத்தையும் நன்றியறி

தலையும் காண்பித்தார்கள் என்றும், தகன பலி தற்பிரதிஷ்டைக்கு ஏற்ற அடையாளம் என்றும் சொன்னாலும் பழைய ஏற்பாட்டின் பொதுவான போதனையைப் பார்த்து, பலியானது பாவ நிவாரணத்திற்கென்றே செலுத்தப்படுமென்று நாம் நினைக்கவேண்டும். மனுஷர் செய்த பாவத்தைக் கர்த்தர் காணாதபடிக்கு அது பலியினால் மூடப்படும். இந்த மூடுதல் அல்லது பாவ நிவாரணம் பலியின்மூலமாய் உண்டாகிறதெப்படி என்று விசாரிப்போம்.

1. இரத்தம் சிந்துதலுக்கும் பாவநிவாரணத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்தும் ஒரு மிருகத்தின் இரத்தத்தைச் சிந்துதலினால் மாத்திரம் யாதாமொரு பிரயோஜனம் உண்டென்று நாம் நினைக்கலாகாது. அது எபிரெயருக்கு எழுதின நிருபத்தின் போதனைக்கு விரோதமாயிருக்குமே.

2. ஒரு மிருகத்தைக் கொலைசெய்வது கிறிஸ்துவைக் கொல்வதற்கு முன்னடையாளமாயிருந்தபடியால் இவ்வித பலிகள் நடந்தது என்று சிலர் நினைக்கிறார்கள். இஸ்ரவேலர் இட்ட பலி கிறிஸ்துவின் பலிக்கு முன்னடையாளம் என்று சொல்லலாம். என்றாலும் பலி செலுத்தினவனுக்கு அதைப்பற்றி என்ன தெரியும்? இஸ்ரவேலர் இதை அறிந்து பலி செலுத்தினார்கள் என்று தோன்றுகிறதில்லையே. இன்னும் பலியானது கிறிஸ்து செய்த பலியைக் குறிப்பாகக் காண்பித்தாலும் பலிக்கடுத்த ஆசாரத்தின் ஒவ்வொரு நுட்பமான காரியமும் அதற்கு ஒரு முன்னடையாளம் என்று சொல்வதற்கு ஆதாரமில்லை.

3. மனந்திரும்பினவன் கர்த்தரின் இரக்கத்தின்மேல் நம்பிக்கை வைத்துக்கொண்டு, தன் மனஸ்தாபத்திற்கு அடையாளமாகத் தனக்குப் பிரியமான ஒரு பொருளை எடுத்துச் சமூலமாய் ஒப்புக்கொடுக்கிறதைத் தவிரப் பலிசெலுத்தும் வழக்கத்தில் வேறொன்றுமில்லை என்று சிலர் நினைக்கிறார்கள். இதற்கு ஆட்சேபனையாக மூன்று காரியங்களைச் சொல்லலாம்.

(1) காரியம் இப்படியிருந்தால் இரத்தம் சிந்துதல் அவசியமா?

(2) நுட்பமான ஆசாரத்தைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்? பாவ நிவாரணநாளில் செய்யப்பட்ட ஆசாரத்தின்படி குற்றவாளிகளுடைய குற்றங்கள் பலியாகக் கொல்லப்பட்ட மிருகத்தின்மேல் அமரச் செய்யப்பட்டதே. சாதாரணபலியின் விஷயத்திலும் ஒருவன் மிருகத்தின்மேல் தன் கையை வைத்தபொழுது அந்த நோக்கத்தோடே செய்வான் என்று நாம் நினைக்கலாம்.

(3) பாவ உணர்ச்சி அடைந்த மனுஷன் கர்த்தருக்கு இரக்கம் உண்டென்று நம்புவது அவ்வளவு இலேசான காரியமா? அவன் அதை நம்புவதற்குப் பலி அவசியமில்லையா?

4. உண்மையான உபதேசம் என்னவென்றால், இஸ்ரவேலரைச் சேர்ந்த ஒரு பாவி கிறிஸ்து வெகுநாளைக்குப்பின் செலுத்தும் பலியைக்குறித்து ஒன்றும் அறியாமற்போனாலும், அவன் பலியின் மூலமாய்ப் பாவ மன்னிப்பை அடைவான்; எப்படியென்றால், அவன் கர்த்தரின் நியமனத்தின்படி மிருகத்தின் பிராணனைப் பலியில் செலுத்தி, தன் பாவத்தை அறிக்கையிட்டு, அந்த மிருகத்தின் மரணமானது யேகோவா பாவத்தின்மேல் வைத்த தண்டனைக்கு ஏற்ற அடையாளமென்று உணர்ந்து, கர்த்தர் அவ்வழியே கொடுத்த மன்னிப்பை ஏற்றுக்கொள்ளுவான். அவ்விதமான பலி கிறிஸ்து இட்ட பலிக்கு எவ்விதமாய் அடையாளமென்றால், அதின்மூலமாய் எது குறிப்பாகக் காட்டப்பட்டதோ அதுவே கிறிஸ்துவின் மரணத்தின் மூலமாய்ப் பூரணமாய்க் காட்டப்பட்டதே. எபி $10^{4-10}$.

என்றாலும் கிறிஸ்து செய்த புண்ணிய பலி பழைய ஏற்பாட்டுப் பலிகளுக்கு எல்லாவிதமாயும் ஒப்பாயிருந்ததென்று நாம் சொல்லக்கூடாது. நாம் மேலே பார்த்திருக்கிறபடி பாவ நிவாரணபலியும் குற்ற நிவாரணபலியும் மனுஷர் அறியாமையினால் செய்த பாவங்களை மூடினதேயொழிய துணிகரமான பாவங்களை மூடவில்லை. துணிகரமான பாவத்திற்குப் பலி இல்லை என்று எண் $15^{22-31}$-ல் தோன்றுகிறது. அப்படிப்பட்ட பாவம் செய்கிறவன் சாகவேண்டும். ஆனாலும் இஸ்ரவேலருடைய சரித்திரத்தை நாம் கவனித்தால் கர்த்தர் அப்படிப்பட்ட பாவத்தையும் தமது அளவற்ற கிருபையின்படி மன்னித்தார். அம்மன்னிப்பை பலியின் மூலமாய் அளித்தார் என்று தோன்றுகிறதில்லை. சங் 32, 51. கிறிஸ்து செய்த புண்ணியபலியின் மூலமாய்ப் பூரணமீட்பு உண்டாகும்.

அதுவுமன்றி பலியின் ஆசாரத்திற்குச் சம்பந்தமாக பல ஒழுங்கீனங்கள் உண்டாயிருந்தன. பாவ நிவாரணபலியில் ஒரு பாகம் ஆசாரியருக்குக் கொடுக்கப்பட்டபடியால் ஜனங்கள் செய்த பாவத்தின் மூலமாய்த் தங்களுக்கே லாபத்தைச் சம்பாதிக்கிறது அவர்களுக்குச் சோதனை உண்டானது. 1 சாமு $2^{12-17}$

ஓசி 4[6-8]. இதுவுமன்றி ஜனங்கள் இந்த ஆசாரத்தின் நோக்கத்தைக்குறித்துச் சற்றும் யோசிக்காமல் செய்யவேண்டியதை வெறும் வழக்கமாகமட்டும் செய்துவந்தார்கள். மனந்திரும்புதலுக்கும் தற்பிரதிஷ்டைக்கும் அடையாளங்களாகப் பலிசெலுத்தாமல், அவைகளுக்குப் பதிலாகவே அநேகர் பலிகளைச் செலுத்தினார்கள். அந்தத் தப்பான சிந்தனைகளுக்கு எதிர்த்துநின்ற தீர்க்கதரிசிகளுடைய உபதேசத்தை நாம் இப்பொழுது கவனிக்க வேண்டும்.

IV. **தீர்க்கதரிசிகளின் போதனை.** தீர்க்கதரிசிகளும் சங்கீதக்காரரும் கண்டிக்கிறதென்னவென்றால்:

i. அஞ்ஞான பலிகள். ஓசி 11[2] எரே 11[12] சங் 16[4] 106[28-29].

ii. நரபலி. எசே 20[31].

iii. நீதிக்குப் பதிலாகப் பலியின்மேல் நம்பிக்கையை வைக்கிறது என்பவைகளே. பலி செலுத்துவதே முக்கியமென்றும், மிகுந்த பலி மிகுந்த புண்ணியம் என்றும் சாதாரண ஜனங்கள் அபிப்பிராயங்கொண்டு சன்மார்க்கம் முக்கியமான காரியமல்லவென்று நினைத்தார்கள். இது கள்ளப்போதகம் என்று தீர்க்கதரிசிகள் சாதித்தார்கள். கீழ்ப்படிதலே பிரதானம் என்று சாமுவேல் போதித்தான். 1 சாமு 15[22]. பலியின் திரள், விசேஷமாய் அக்கிரமத்தோடு சேர்க்கப்பட்ட பலியின் திரள், என்னத்துக்கென்று ஏசாயா கேட்கிறான். ஏசா 1[10-17]. அப்படியே, ஆமோ 5[22-24] காண்க. தேவ அறிவே விசேஷம் என்று ஓசியா சாதித்தான். தீர்க்கதரிசிகள் சில சமயங்களில் பலிகளை நீக்கவேண்டும் என்றாற்போல பேசினாலும் (எரே 7[22-23]), அப்படிச் செய்ய விரும்பவில்லை. பலி இருதயஸ்திதிக்கு அடையாளமாயிருந்தால் பிரயோஜனமுள்ளதாயிருக்கலாம். ஆதலால் தீர்க்கதரிசிகள் பலியின்பொருள் ஆண்டவருக்குத் தேவை என்னும் அபிப்பிராயத்தைக் கண்டிக்கிறார்கள். சங் 50[7-15]. அப்படியே மனந்திரும்புதல் இல்லாவிட்டால் பலி பிரயோஜனமில்லை என்று அவர்கள் போதித்தார்கள். சங் 51[16.17]. ஓசியா ஜனங்களை மனந்திரும்புதலுக்கு அழைத்து கர்த்தர் மன்னிப்பார் என்று வாக்குக்கொடுக்கும்பொழுது அந்த மன்னிப்பு பலியின் மூலமாய் வரும் என்று சொல்லுகிறதில்லை. ஓசி 1–3 அதி. ஆனாலும் இஸ்ரவேலர் சிறையிலிருந்து வந்த பிற்பாடு தீர்க்கதரிசிகள் பலிகளைத் தள்ளிவிடாமல் அவைகளைச்சேர்ந்த ஆசாரத்தைச் சீர்திருத்தி ஸ்தாபித்தார்கள். எசேக்கியேலினுடைய தரிசனங்களில் பலி செலுத்துவதின் உத்தமத்தை நாம் காணலாம். பக்தியுள்ளவர்களுக்கு அந்த ஆசாரம் வெறும் ஆசாரமாயிராமல் பாவத்தின் அகோரத்தையும் பரிசுத்தத்தின் மேன்மையையும் பாக்கியத்தையும் காட்டும் அடையாளமாயிருக்கும். அதன்படியே கர்த்தருடைய தாசன் தன் ஜனங்களுடைய பாவபாரம் சுமந்து தன் ஆத்துமாவைக் குற்றநிவாரண பலியாகக் கொடுப்பார் என்று ஒரு தீர்க்கதரிசி சொல்லும் விசேஷித்த தீர்க்கதரிசன வாக்கியம் புதிய ஏற்பாட்டின் போதனையை ஏற்றுக்கொள்ளும்படி மனுஷரை ஆயத்தம் பண்ணினது. ஏசா 53 அதி.

பிந்தியகாலத்து யூதர்கள் தங்கள் பழைய ஆசாரத்தை விட்டுவிட்டார்கள். ஏனென்றால் எருசலேம் அழிந்துபோன நாள்முதல் பலி செலுத்தக்கூடிய தேவாலயம் இல்லை.

V. **கிறிஸ்தவ போதனை.** கிறிஸ்தவர்கள் பலிசெலுத்தாமல் இருக்கும் காரணம் என்னவென்றால் பழைய பலிகளின் மூலமாய் என்னென்ன நன்மைகள் குறைவாய்க் கிடைத்ததோ அவைகள் கிறிஸ்துவின் மரணத்தின் மூலமாய்ப் பூரணமாய்க்கிடைத்திருக்கிறதே. பாவநிவாரணம் காண்க. புதிய ஏற்பாட்டின்படி விசுவாசிகள் இடவேண்டிய பலிகளென்னவென்றால் ஆவிக்குரிய பலிகளே. 1 பே 2[5]. திருஷ்டாந்தமாக (1) தங்கள் சரீரங்கள். ரோம 12[1]. (2) தங்கள் மூலமாய்க் குணப்பட்டவர்கள். ரோம 15[15.16]. (3) ஸ்தோத்திரமும் ஜெபமும். எபி 13[15]. (4) நல்ல கிரியைகள். எபி 13[16]. (5) பணம். பிலி 4[18]. (6) விசுவாசமும் ஊழியமும். பிலி 2[17]. இவைகளையே பக்தர்கள் பலியாகக் கொடுக்க வேண்டும். இவ்வித பலிகள் பாவ நிவாரண பலிகளாயிராமல் நன்றியறிதலைக் காட்டும் பலிகளாயிருக்கின்றன. நற்கருணை இப்படிப்பட்ட ஸ்தோத்திரபலியாயிருப்பதேயொழிய, அது மறுபடியும் செலுத்தப்பட்ட கிறிஸ்து செய்த புண்ணிய பலியும் அல்ல, அந்தப் பலியின் தொடர்ச்சியும் அல்ல. கிறிஸ்துவின் பலி முடிந்துவிட்டது. எபி 9[12].

VI. **பலியைப்பற்றி இந்துமார்க்கத்தின் கொள்கைகள்.**

1. **ஆரியர்களின் பலிகள்.** இத்தேசத்தில் பலி செலுத்துவது ஆதிகாலமுதல் நடந்தேறியிருக்கிற ஒரு வழக்கமாம். இருக்கு வேதத்தின் காலத்துப் பூர்வ ஆரியஜனங்கள் தங்கள் தேவர்களுக்குக் கொடைகளைக் கொடுத்தார்கள். தேவர்கள் தங்களை ஆராதித்த மனுஷருடைய அழைப்பின்படி விருந்தா

ளிகளாக வந்து தங்களுக்குப் படைக்கப்பட்ட போஜனத்தின் சாரத்தைச் சாப்பிட்டுத் திருப்தியடைவார்கள் என்று நம்பினார்கள். நாள் செல்லச்செல்ல சோம பலி என்னும் விசேஷித்த யாகம் ஆரம்பித்தது. சோமச்செடியின் சாறு கொடையாகச் செலுத்தப்பட்டபோது தேவர்கள் அதனால் பெலனடைந்தார்கள் என்று நம்பினார்கள். யாகமாகக் கொடுக்கப்பட்ட பொருட்களின் சாரம் அக்கினி என்னும் தேவனால் தேவர்களிடத்தில் கொண்டுபோகப்பட்டதென்று நினைத்தார்கள் ஆதியில் செலுத்தப்பட்ட யாகம் நைவேத்தியம். அப்புறம் மிருகங்கள் யாகமாகச் செலுத்தப்பட்டதுமல்லாமல் சில சமயங்களில் மனுஷரும் யாகங்களாகச் செலுத்தப்பட்டார்கள். அஸ்வமேதம் என்னும் யாகத்தினால் மிகுந்த புண்ணியம் கிடைக்குமென்கிற நம்பிக்கை உண்டானது. யஜுர்வேதமானது யாகம் செலுத்தப்பட்ட சமயங்களில் மந்திரமாகப் பாடப்பட்ட பாடல்கள் அடங்கிய புஸ்தகம். அக்காலத்தில் யாகம் செலுத்தினவர்களின் நோக்கம் என்னவென்றால் இப்படிச் செய்வதால் தங்களுக்கு உபகாரம் கிடைக்கும் என்பதும், கிடைத்த உபகாரத்திற்கு நன்றிகாட்ட வேண்டுமென்பதுமே. அவ்வுபகாரம் சாதாரணமாக லௌகீக உபகாரந்தான். துஷ்ட தேவர்களைச் சாந்திபண்ணவேண்டும் என்கிற நோக்கம் ஆதிகாலத்தில் காணப்படவில்லை. அக்காலத்தில் செலுத்தப்பட்ட யாகங்கள் விசேஷித்த ஆசாரமில்லாத குடும்பவிருந்து மாதிரியாயிருந்தது. காலம் செல்லச்செல்ல வேதியருக்குமாத்திரம் தெரிந்த ஆசாரம் அவசியமென்று எண்ணப்பட்டது. அதுவுமன்றி யாகம் செலுத்தும் வழக்கத்திற்கு இசைவாக நூதனக் கொள்கைகள் படிப்படியாக உண்டாயின. திருஷ்டாந்தமாக.

(1) யாகத்தின் மூலமாய் ஒருவன் இந்திரலோகத்தில் சேரலாம் என்பதும்;

(2) புருஷன் என்னும் சுயம்புவானவர் மனுஷரூபமெடுத்துத் தம்மைப் பலியாகக் கொடுத்துத் தம்மைத் துண்டித்து நாலு வர்ணங்களைச் சிருஷ்டித்தார் என்பதும்;

(3) ஒருவன் நூறுதடவை அஸ்வமேதத்தைச் செலுத்தினால் அவன் இந்திரனை ஆசனத்திலிருந்து தள்ளக்கூடும் என்பதும்;

(4) தேவர்களே யாகத்தின் மூலமாய் மோட்சத்தில் சேரலாம் என்பதும்;

(5) யாகமே ஒரு தேவனென்பதுமே. பலியானது பாவநிவாரண பலியாக எண்ணப்படவில்லை. என்றாலும் பிரஜாபதி தம்மை மனுஷருக்காகப் பலியாகத் தந்தது அதற்கு ஒரு குறிப்பாகக் கூறப்பட்டிருக்கிறது என்று சொல்லலாம்.

2. **தற்காலத்து பலிகள்.** இதெல்லாம் படிப்படியாக மாறிப்போய்விட்டது. உபநிடதங்களில் யாகம் செலுத்தும் வழக்கம் அற்பமாக எண்ணப்பட்டது. ஜீவவதை செய்யக்கூடாதென்னும் கொள்கை உண்டானபோது பலிக்காகவும் உயிர் கொல்வது தப்பு என்று நினைக்கப்பட்டது. ஞானம் பக்தி கர்மம் என்னும் மூன்று மார்க்கங்களில் முக்கியமாகக் கர்மமார்க்கத்தில்தான் பலி ஆசாரம் நிலைகொண்டிருந்தது; ஆனாலும் கர்மமார்க்கம் சிரேஷ்டமார்க்கமல்ல என்று எண்ணப்பட்டது. இந்நாள்மட்டும் வழங்கப்பட்டிருக்கிற முக்கியமான பலிகளின் மாதிரிகள் என்னவென்றால்: (1) கோவில்களில் நடக்கிற அன்றாடக நைவேத்தியம்; (2) கலியாணம் முதலிய விசேஷித்த சமயங்களில் நடக்கிறஹோமமும் மற்றசில சடங்குகளும்; (3) மரித்தோருக்காக செய்யப்படுவரும் சிராத்தம்; (4) காளிமுதலிய தேவதைகளுக்கும் தேவர்களுக்கும் செலுத்தப்படும் மிருக பலிகள்.

3. **இந்தப் பலிகளின் தன்மை.** இந்தக் கொள்கை கிறிஸ்தவ கொள்கைக்குத் திருஷ்டாந்தமாயும் முன்குறிப்பாயும் இருக்கலாமென்று சிலர் நினைத்திருக்கிறார்கள்; ஆனாலும் இந்துக்கள் செலுத்தின பலிகளின் தன்மையும் நோக்கமும் இன்னதென்று நாம் திட்டமாய்க் கவனித்தால் இவைகள் தகுந்த திருஷ்டாந்தங்களல்லவென்று சொல்லவேண்டும். இவைகளின் தன்மையைக்குறித்து சாதாரண இந்துக்கள் ஒன்றும் யோசிக்காமல் இப்படிச் செய்வது முன்னோருடைய வழக்கமென்று சொல்லுவார்கள். இவைகளில் அடங்கியிருக்கும் எண்ணங்களை நாம் ஆராய்ந்துபார்த்தால் இவைகள் மிகவும் குறைவானவைகள் என்று நாம் சொல்லவேண்டும். திருஷ்டாந்தமாக, அன்றாடக அனுஷ்டானத்திலிருக்கும் கருத்தென்னவென்றால் போஜனத்தின் மூலமாய்த் தேவர்களை ஆதரிக்கவேண்டும் எனபதே. சிராத்தம் என்னும் சடங்கின் நோக்கம் என்னவென்றால், மரித்துப்போனவனுடைய ஆவிக்குத் தகுந்த சூட்சுமதேகம் இல்லாவிட்டால் அது இங்கும் அங்கும் திரிந்து தொந்தரவு செய்யும் என்று பந்துக்கள் பயந்து, அத்தேகத்தை உண்டுபண்ணவும் அதை ஆதரிக்கவும் வேண்டும் என்பதே. தற்காலத்து மிருகபலி கிறிஸ்

துவின் பலிக்கு ஏற்ற திருஷ்டாந்தம் என்று நாம் நினைக்கலாகாது. காளி இரத்தப்பிரிய முள்ளவளென்றும் மிருகங்களின் இரத்தம் கிடையாவிட்டால் மனுஷரைப் பிடித்து அவர்களுடைய இரத்தத்தைக் குடிப்பவளென்றும் நினைத்து ஜனங்கள் அவளுக்கு இரத்தப்பலி செலுத்துவார்கள். மற்ற துஷ்டதேவதைகளுக்குச் செலுத்தப்படும் பலிகளிலும் அப்படியே தேவர்களைச் சாந்திபண்ணவேண்டும் என்கிற நோக்கம் உண்டு. ஆனாலும் இது துஷ்டதேவதைகள் இம்சை செய்யாதபடிக்கு அவர்களைப் பிரியப்படுத்தவேண்டும் என்கிற நோக்கமாயிருப்பதேயொழிய பாவத்திற்கு ஈடாகப் பரிசுத்தமுள்ள கடவுளுக்கு ஒரு பிராணனைக் கொடுக்கவேண்டும என்னும நோக்கமல்ல. பலியானது பாவத்தை நீக்கும் என்னும் கொள்கை இந்துக்களிடத்தில் அபூர்வம்: அந்நோக்கம் தோன்றும்போது கொல்லப்பட்ட மிருகம் பாவிக்குப் பதிலாகக் கொல்லப்பட்டது என்கிற எண்ணம் தோன்றுகிறதில்லை.

4. **எச்சரிப்பு.** ஆகையால் கிறிஸ்து செய்த அருமையான பாவநிவாரண பலியைப்பற்றி நாம் இந்துக்களோடு பேசும்போது அதிக ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். சத்தியவேதத்தி லடங்கியிருக்கிற அநேக வசனங்கள் யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் விளங்குமேயொழிய இந்துக்களுக்கு இலேசாய் விளங்காது. நாம் தெருப்பிரசங்கத்தில் இரத்தஞ் சிந்துதலைப்பற்றிப் பேசினால் கிறிஸ்தவர்களின் தேவன் காளியைப்போல இரத்தப்பிரியர் என்று பிரசங்கத்தைக் கேட்கிறவர்கள் நினைக்கமாட்டார்களா? இன்னும், இந்துக்கள் பலியைக் குறித்து வழங்கும் பதஙகள் திருப்திகரமானவைகளல்ல. பலி என்னும் பதத்தின் சரியான அர்த்தம் துஷ்டதேவனைக் கொடையால் சாந்திபண்ணுவதேயாம். யாகம் என்னும் பதம் ஒருவேளை இன்னும் கொஞ்சம் நன்றாயிருக்கலாம், ஆனாலும் இது சாதாரண ஜனங்களுக்கு இலேசாய் விளங்கும் பதம் அல்ல. பாவ உணர்ச்சி உண்டாகும்படியாக நாம் முக்கியமாய் உபயோகிக்கவேண்டிய வழிகள் வேறே.. **பாவம்** காண்க.

என்றாலும் இந்தக் கொள்கைகளில் அடங்கியிருக்கிற சத்தியங்களை நாம் எடுத்து, சுவிசேஷத்திற்குத் திருஷ்டாந்தங்களாக உபயோகிக்க வழியுண்டு. இந்துக்கள் தாங்கள் தங்கள் தேவர்களுக்குக் கொடைகளைக் கொடுக்கவேண்டும் என்றும், விலையேறப்பெற்ற பொருளைக் கொடுக்கவேண்டுமென்றும், தேவர்களோடு ஐக்கியப்படவேண்டுமென்றும் நினைக்கிறார்களே. நாம் இந்த நல்ல நோக்கங்களை எடுத்து ஒரே மெய்யான கடவுள் விரும்புகிற கொடைகள் எவை என்றும் மனுஷருக்கு அவரோடே இருக்கவேண்டிய மெய்யான ஐக்கியம் எதுவென்றும் காட்டப் பிரயாசப்படவேண்டும். விசேஷமாய் மனுஷர் துஷ்டதேவதைகளுக்குச் செய்யும் சாந்தியை மெய்யான கடவுள் விரும்பமாட்டார் என்றும், மனுஷர் செய்த பாவத்துக்காக அவர் அதிக துக்கப்பட்டுப் பாவிகள்மேல் கோபமாயிருக்கிறார் என்றும், அவருடைய நீதியுள்ள கோபத்தைத் தணிக்கும்படி நாம் தகுந்த கொடைகளைக் கொடுக்க முடியாதென்றும், கடவுள் மகா அன்புள்ளவராதலால் பாவத்தை நீக்கும்படியான வழியை அவரே ஏற்படுத்தியிருக்கிறார் என்றும் நாம் காண்பிக்கவேண்டும். **பாவநிவாரணம்** காண்க.

## பலிகள். Sacrifices.

### முகவுரை.

1. **பலி** என்னும் நிபந்தத்தில் நாம் எபிரெயர்கள் செலுத்தின பலிகளின் தன்மையையும் நோக்கத்தையும் கூறியிருக்கிறோம். இவ்விடத்தில் வேதாகமத்தில் சொல்லியிருக்கிற பலிகள் இன்னின்னவென்று முறைப்படுத்திக் கூறுவது வேத ஆராய்ச்சி செய்கிறவர்களுக்குப் பயன்படும் என்று கருதி, பலிகளின் அட்டவணையைச் சுருக்கமாய் எழுதுகிறோம்.

2. எபிரெயர்கள் ஆசரிப்புக் கூடாரத்திலும் தேவாலயத்திலும் செலுத்தின பலிமுதலியவற்றைக் குறிக்கும்படி, '**பலி**' '**காணிக்கை**' என்னும் இரண்டு பதங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் அர்த்தத்தைப் பிரித்துக் கூறவேண்டுமானால், 'காணிக்கை' என்பது பலிபீடத்திற்குக் கொண்டுவரப்பட்டு, அதின்மேல் தகனிக்கப்பட்டவைகளோடு, தேவாலயத்திற்குச் செலுத்தவேண்டிய தசம பாகங்களையும், அறுப்பின் பலன் முதலியவற்றையும், விசேஷித்த காரணங்களின் நிமித்தம் கொண்டுவரப்பட்ட காணிக்கைகளையும் குறிக்கும். 'பலி' என்னும் பதமோ பலிபீடத்தின்மேல் தகனிக்கப்பட்டவைகளைமாத்திரமே குறிக்கும். 1 சாமு $2^{29}$ சங் $40^{6}$ ஆமோ $5^{25}$ ஏசா $19^{21}$.

3. எபிரெயர் செலுத்தின பலிகளைப்பற்றி லேவி 1–5 அதிகாரங்களில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அவையாவன:

i. தகனபலி. Burnt offering. '**ஓலா**. '*Olah*. பலியாகச் செலுத்தப்பட்ட காளை

முதலியவை பலிபீடத்தின்மேலுள்ள நெருப்பிலே முழுவதும் தகனிக்கப்படும். காளை வெள்ளாட்டுக்கடா, ஆட்டுக்கடா ஆகிய இவைகளே தகனபலியாகச் செலுத்தப்படும். ஏழைகள் புறாக்களைச் செலுத்தலாம். ஆசாரியர்கள் காலையிலும் மாலையிலும் தேவாலயத்திலே தகனபலி செலுத்துவார்கள். இதே சமயத்திலே போஜனபலியும் பானபலியும் செலுத்தப்படும். ஆதி $8^{20}$ யாத் $29^{38}$ எண் $28^{3}$ லேவி 1–5 அதி, 1 சாமு $6^{14}$ 2 சாமு $6^{17}$ 1 இரா $3^{4}$ 2 இரா $16^{13}$ எசா $1^{11}$ எரே $7^{22}$ $17^{26}$.

ii. சர்வாங்க தகனபலி காலீல். Whole burnt offering. காலீல். *Kālīl*. தகனபலியாய்ச் செலுத்தின பலி முழுவதும் தகிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் குறிக்கும்படி இதற்குச் சில சமயங்களில் 'சர்வாங்க தகனபலி' என்றும் பெயர். உபா $33^{10}$ சங் $51^{19}$.

iii போஜனபலி. R. V. Meal offering, A. V. Meat offering. மின்கா. *Minchāh*. 'பெரியோர் தயவைப் பெறும்படி அவர்களுக்குக் கொடுக்கும் வெகுமானம்' என்பது இதின் மூல அர்த்தம். இது சாதாரணமாய் வாற்கோதுமை முதலான தானியங்களையும், மாவையும், கனிவர்க்கங்களையும் குறிக்கிறது. சமயாசமயங்களிலே எண்ணெய் உப்பு முதலியவைகளும் இவற்றோடு சேரும். ஆசாரியர்கள் இதில் பாதியைச் சாப்பிடுவார்கள், பாதி தகனிக்கபடும். ஆசாரியர்கள் செலுத்தும் போஜனபலி முழுவதும் தகனிக்கப்படும். லேவி 2 அதி $6^{14-23}$ எண் $15^{1-16}$.

iv. பானபலி. Drink offering. நெசெக். *Nesek*. தகனபலியையும் சமாதானபலியையும் செலுத்தும்போது எண்ணெயையும் திராட்சரசத்தையும் செலுத்துவது வழக்கம். எண் $15^{1-16}$ ஓசி $9^{4}$. திராட்சரசம் பலிபீடத்தின் அடியில் வார்க்கப்பட்டதாகத் தோன்றுகிறது.

v,vi. சமாதானபலியும் ஸ்தோத்திரபலியும். Peace offering, Thank offering. யாத் $20^{24}$ லேவி $3^{1-16}$ $7^{11-21}$ $7^{28-34}$ $17^{1}$ $22^{21}$ 2 நாளா $29^{31}$ சங் $50^{14}$ ஆமோ $5^{22}$. கடவுள் அருளின நன்மைக்காகவும் அவருக்கும் அடியாருக்கும் உள்ள ஐக்கியத்துக்காகவும் அடியார்கள் இந்த பலிகளைச் செலுத்துவார்கள். இவைகளில் ஆசாரியன் ஒரு பங்கையும், பலி செலுத்தினவன் மற்ற பங்கையும் எடுத்துக் கொண்டு விருந்துண்பார்கள்.

vii. பொருத்தனைபலி. Votive offering. இதுவும் ஒருவிதமான ஸ்தோத்திரபலி. லேவி $7^{16}$. பொருத்தனை நிறைவேற்றின பிறகு ஸ்தோத்திரத்துக்காக இப்பலி இடப்படும்.

viii. உற்சாகபலி. Free will offering. இது ஒருவன் தன் மனசிலிருக்கிற நன்றியறிதலைக் காட்டும்படி செலுத்தும்பலி. இதுவும் ஸ்தோத்திரபலிகளில் ஒன்று. லேவி $7^{16}$ $22^{20}$. இந்தப் பலிக்குமாத்திரம் பழுதுள்ளவைகளைச் செலுத்தலாம், மற்ற பலிகள் யாவும் பழுதற்றவைகளாயிருக்கவேண்டும்.

ix. பாவநிவாரணபலி. Sin offering. கஷத்தாத். *Chattāth*. யாத் $29^{11-14}$ லேவி $4^{1}$-$5^{13}$ $6^{24-30}$ எண் $15^{22-27}$. இது அகஸ்மாத்தாய்ச் செய்யப்பட்ட பாவங்களுக்காகவும் பலவிதமாய் அடைந்த தீட்டுக்காகவும் செலுத்த வேண்டிய பலி. பிள்ளைபெற்ற தாய், சொஸ்தம் அடைந்த குஷ்டரோகி இப்படிப்பட்டவர்கள் இந்தப் பாவ நிவாரணபலி செலுத்தவேண்டியது அவசியம். இது இருவகைப்படும்.

*a.* காளைகளைப் பலியாகச் செலுத்தக்கூடிய பிரதான ஆசாரியர் முதலியவர்கள் இவ்வித பலிகளைச் செலுத்துவார்கள். இஸ்ரவேல் புத்திரர் தெரியாதவண்ணமாய் கடவுள் முன்பாக பாவம் செய்ததினால், அவர்கள் அதை நிவிர்த்திசெய்யும்படி இக்காளையைப் பலிசெலுத்தவேண்டியது. பலிசெலுத்தின பிறகு இதின் ரத்தத்தில் கொஞ்சத்தை பரிசுத்தஸ்தலத்தில் ஏழுதடவை தெளித்து, மீதத்தை பலிபீடத்தின் அடியில் வார்ப்பார்கள். அப்புறம் இந்தப்பலி தகனிக்கப்படும்.

*b* மற்றவர்கள் தாங்கள் தெரியாமற்செய்த மீறுதல்களை நிவிர்த்திசெய்யும்படி வெள்ளாட்டுக்கடா அல்லது புறாக்களைப் பலியாகச்செலுத்துவார்கள். இந்த இரத்தத்தில் கொஞ்சத்தை பலிபீடத்தின் கொம்புகளில் பூசி, மீதத்தை பலிபீடத்தின் அடியில் வார்ப்பார்கள். இதன் மாம்சத்தில் ஒரு பங்கு தகனிக்கப்பட்டபின் மீதபாகத்தை ஆசாரியர்கள் தேவாலயத்தின் எல்லைக்குள் சாப்பிடுவார்கள்.

x. குற்றநிவாரணபலி. R. V. Guilt offering, A. V. Trespass offering. ஆஷாம். *Āshām*. லேவி $5^{14}$ $6^{7}$ $7^{1-7}$ எண் $5^{5-8}$. மற்றவர்களுக்குச் செய்த குற்றத்தினிமித்தமும், சொந்தக்காரனுக்குத் திரும்பிக் கொடுக்கவேண்டிய நிலத்தை அல்லது பொருளைக் கொடாமல் அநியாயமாய் அபகரித்துத் தன் வசத்தில் வைத்துக்கொண்டதினிமித்தமும், யேகோவாவுக்குச் செலுத்தவேண்டிய காணிக்கைகளைச் செலுத்தாததினிமித்தமும், இந்தப் பலியைச் செலுத்துவது அவசியம். இப்பலி செலுத்துமுன் குற்றவாளியானவன் அபகரிக்கப்பட்டுத் தன் வசத்திலுள்ள அந்நிய பொருள்களை அபராதத்தோடு உடையவனுக்குச் செலுத்தித் தீர்க்கவேண்டும். இதில்

பலியாகச் செலுத்தப்படும் ஆட்டுக்கடாவின் மாமிசத்தை ஆசாரியர்மாத்திரம் தேவால யத்தின் எல்லைகளுக்குள்ளே சாப்பிடுவார்கள்.

xi. தகனபலி. R. V. 'Fire Offering' A. V. 'Offering made by fire.' *Ishseh*. இந்தப் பதம் வேறுவிதமான பலி அல்ல, முன்சொன்ன பத்து பலிகளையும் குறிக்கும் பொதுப்பெயர். எண் $15^{10.13.25}$ உபா $18^{1}$ சாமு $2^{28}$.

xii. ஏறெடுத்துப்படைக்கும் பலி. Heave offering. *Terumah*. யாத் $29^{27}$ லேவி $7^{14.34}$. இது ஒரு பெரிய தானியக் குவியலிலிருந்து 'எடுக்கப்பட்ட' பங்கையும், யுத்தத்தில் சத்துருக்களிடத்திலிருந்து 'எடுக்கப்பட்ட' கொள்ளைப் பொருள்களின் ஒரு பாகத்தையும், பலியாகச்செலுத்தின மிருகத்தினின்று 'எடுக்கப்பட்ட' தொடை முதலியவற்றையும் குறிக்கிறது. வழக்கத்தின்படி 'எடுக்கப்பட்ட' இப்பங்கு ஆசாரியர்களுடையதாகும்.

xiii. 'அசைவாட்டப்படும் காணிக்கை' Wave Offering. *Tenuphah*. யாத் $29^{26}$. ஆசாரியன் தனக்குக் கிடைத்த பங்கை எடுத்து அதை முன்னும் பின்னும் அசைவாட்டுகிறதினாலே அவன் அதை யேகோவாவுக்குக் கொடுப்பதையும் யேகோவா அவனுக்கு அதைத் திரும்பக் கொடுப்பதையும் தெரிவித்தான். லேவி $7^{34}$ $10^{14}$.

xiv. ஞாபகக்குறிக் காணிக்கை. Memorial offering. லேவி $2^{2.9}$. இது காணிக்கையிலிருந்து ஆசாரியர்கள் எடுத்துச் செலுத்தின கைபிடிமாவையும் எண்ணெயையும் குறிக்கும். யேகோவா பலிசெலுத்தினவனைக் குறித்து ஞாபகமுள்ளவரா யிருக்கும்படிக்கு இந்தப்பலி செலுத்தப்பட்டது.

**பலிபீடம். Altar.**

கானான் தேசத்துப் பூர்வ ஜாதியார் எல்லாரும் நூதன உருவமுடைய கற்களில் தேவதைகள் வசிப்பதாக எண்ணினார்கள். செலுத்தப்படும் பலிகளின் இரத்தத்தை இந்தத் தேவதைகள் அங்கிகரிக்கும்படி இக்கற்களின்மேல் அந்தப் பலிகளின் இரத்தத்தைப் பூசுவதும், இக்கற்களிலுள்ள பள்ளங்களில் இரத்தத்தை வார்ப்பதும் வழக்கம். ஆதலால் இந்தக் கற்கள் அல்லது கற்பாறைகளே பூர்வ பலிபீடங்களென்று நாம் சொல்லக்கூடும். 1 சாமு $6^{14}$ $14^{33}$. பிறகு அவர்கள் தனிக் கற்களைமட்டும் பலிபீடங்களாகப் பாவியாமல், உளியினால் வெட்டப்படாத கற்களை ஒரு குவியலாக வைத்து அதை ஒரு பலிபீடமாக்குவார்கள். யாத் $20^{25}$ உபா $27^{5}$. பிற்காலத்திலுள்ளவர்களும் தகன பலிகளைச் செலுத்தும்படி பலிபீடங்களை உபயோகிக்கும்போது வெட்டப்படாத இவ்வித கற்களினாலேயே பலிபீடங்களைக் கட்டினார்கள். இப்படியே தேவாலயத்து பலிபீடமும் வெட்டப்படாத கற்களினாலே கட்டப்பட்டது. 1 மக்கபேயர் $4^{47}$.

2. பலியிடுவதைத் தங்கள் தேவர்களுக்கு விருந்து செய்வதாக அவர்கள் எண்ணினதினாலே அநேக இடங்களில் மேசைபோன்ற கற்பாறைகளை உபயோகித்து வந்தார்கள். இவைகள் சாதாரணமாய் மேடான இடங்களில் இருக்கும். இவைகளில் ரத்தத்துக்காகச் சில பள்ளங்கள் உண்டு; சிலவற்றில் அக்கினிக்கு ஒரு அடுப்பு இருக்கும். பூர்வ எபிரெயர் பெத்தேல், சீலோ முதலிய இடங்களில் கட்டின தேவஸ்தலங்களில் இவ்வித பலிபீடங்கள் இருந்ததென்று நினைக்கலாம். நியா $6^{20}$ $13^{19}$.

3. சில சமயங்களில் கானானியர் மேடைகளில் தங்கள் தேவதைகளை வணங்குவது வழக்கம். சமயா சமயங்களில் அவர்கள் மேடைகளண்டையில் போகாமல் மண்ணினாலே ஒரு பலிபீடத்தைக் கட்டுவார்கள். மோசேயின் நியாயப்பிரமாணத்தில் இஸ்ரவேல் புத்திரர் இவ்வித பலிபீடங்களைக் கட்டினதற்கு அத்தாட்சி உண்டு. யாத் $20^{24}$. மேடை காண்க.

4. இந்த பலிபீடங்கள் தேவஸ்தலத்துக்கு முன்னே இருந்தது. தூபங்காட்டுகிறதற்கு வேறுவிதமான சிறிய பலிபீடமும் இருக்கும் அதுதேவாலயத்துக்குள்ளே இருக்கும். யாத் $30^{1}$ 1 நாளா $6^{49}$ 2 நாளா $30^{14}$. தேவாலயம் காண்க. தேவசமுகத்து அப்ப மேசையும் ஒருவிதமான பலிபீடம் என்று நினைக்கலாம்.

5. இவை யெல்லாவற்றையுங் கண்டு, கானானியர்கள் கட்டின சகல தேவஸ்தலங்களிலும் பலிபீடம் இருக்கவேண்டும் என்றும், யோசியாராஜாவின் காலமட்டும் பல தேவஸ்தலங்களில் யேகோவாவின் வணக்கத்தை ஆசரித்த எபிரெயர்கள் பிற்காலத்தில் ஒரு ஸ்தலத்திலே பலிபீடங்களைக் கட்டினார்கள் என்றும் அறிகிறோம். சாமுவேலும் எலியாவும் பலிபீடங்களைக் கட்டினார்கள். 1 சாமு $7^{12}$ 1 இரா $8^{31}$. யோசியா ராஜாவோ உபாகமப் பிரமாணத்தின்படி எருசலேமிலே யேகோவா வணக்கத்தை ஸ்திரப்படுத்த விரும்பி, மற்ற ஸ்தலங்களிலுள்ள பலிபீடங்களையும் மேடைகளையும் நிர்மூலமாக்கினான். உபா $12^{1}$ 2 இரா $23^{5}$.

6. விசேஷமான பலிபீடங்களில் சில:

i. தாவீது அர்வனாவின் களத்தில் கட்டின பலிபீடம். 2 சாமு 24[18]. அது இருந்த இடத்திலே தேவாலயம் கட்டப்பட்டிருந்தது. தற்காலத்தில் அவ்விடத்தில் மகமதியர் ஒரு பெரிய மசூதி கட்டியிருக்கிறார்கள்.

ii. ஆகாஸ் தான் தமஸ்குவில் கண்ட பலிபீடத்தைப்போல் கட்டின பலிபீடம். 2 இரா 16[10].

iii. வானசேனைக்குக் கட்டின பலிபீடங்கள். 2 இரா 23[12] எரே 19[13].

iv. யேகோவாவின் தகன பலிபீடத்தின் மேல் சீரியர் ராஜாவாகிய அந்தியோகு எப்பிப்பானேஸ் தான் வணங்கின யூப்பித்தர் தேவனுக்கு கட்டின பலிபீடம். 1 மக்கபேயர் 1[54].

7. பலிபீடங்கள் கடவுளுக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்ட இடங்களானபடியால் குற்றவாளிகளுக்கு அவைகள் சில விஷயங்களிலே அடைக்கலமாயிருந்தன. கல்லினாலாவது வெண்கலத்தினாலாவது செய்யப்பட்டு, பலிபீடத்தின் மூலைகளில் இருந்த குண்டுகள் அல்லது கொம்புகளைக் குற்றவாளிகள் பிடிக்கும்போது அவர்களை ஒருவரும் அவ்விடத்திலே கொல்ல முடியாது. யாத் 21[13] 1 இரா 1[51] 2[28]. அடைக்கலப்பட்டணங்கள் காண்க.

**பலுக.** Increase. ஆதி 1[22] 8[17] 35[11] யாத் 1[7] சங் 105[24] எரே 3[16].

**பலெஸ்தீனு தேசம்.** Palestine. கானான் காண்க.

**பல்.** Tooth. ஆதி 49[12] யாத் 21[24] உபா 19[24] யோபு 16[9] சங் 35[16] 57[4] நீதி 10[26] 25[19] 30[14] உன். பா 4[2] 6[6] எரே 31[29] எசே 18[2] தானி 7[5.7.19] ஆமோ 4[6] மத் 5[38] அப் 7[54] வெளி 9[8]. 'பற்கடிப்பு' மத் 8[12] 13[42] 22[13] 24[51] 25[30] லூக் 13[28].

**பல்தியன்.** The Paltite. பெத்பெலேத் அல்லது பெத்பாலேத் என்னும் ஊரில் பிறந்த ஏலெஸ். 2 சாமு 23[26]. நாளாகமத்தில் இவன் 'பெலோனியன்' என்று சொல்லப்பட்டிருக்கிறான். 1 நாளா 11[27]. இவன் தாவீதின் 30 பராக்கிரமசாலிகளில் ஒருவன்.

**பல்த்தி.** Palti. [கடவுள் மீட்கிறார்.]

1. பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த வேவுகாரன். எண் 13[9].

2. சவுல் பல்த்தி அல்லது பல்த்தியேல் என்பவனுக்குத் தாவீதின் மனைவியாகிய மீகாளைக் கொடுத்தான். 1 சாமு 25[44] 2 சாமு 3[15].

**பல்த்தியேல்.** Paltiel. [கடவுள் மீட்கிறார்.]

1. இசக்கார் கோத்திரத்தின் பிரபு. எண் 34[26].

2.=பல்த்தி (2).

**பல்லி.** Lizard. சாப்பிடக்கூடாது என்று விலக்கின ஜெந்துக்களில் ஒன்று. லேவி 11[30]. பலெஸ்தீனு தேசத்தில் பலவிதமான பல்லிகள் உண்டு.



பல்லி.

**பல்லூ.** Pallu. [சிரேஷ்டமானவன்] ரூபனுடைய குமாரரில் ஒருவன். ஆதி 46[9] யாத் 6[14]. 'பல்லூவியர் குடும்பம்', எண் 26[5].

**பவளம்.** Coral. சமுத்திரத்தில் சில சிறிய பூச்சிகள் தங்களுக்காகக் கட்டுகிற இருப்பிடம். இது ஓர் கற்பூண்டுபோல் இருக்கிறது. இது பல நிறமுள்ளது. மத்திய தரைகடலிலும் இந்தியா சமுத்திரத்திலும் கண்டுபிடிக்கப்பட்ட சிவப்புப்பவளம் இரத்தினங்களோடுசேர்க்கப்பட்டிருக்கிறது. யோபு 28[12] எசே 27[16]. இரத்தினம் காண்க.

**பவுல்.** Paul.

I. **ஆதாரங்கள்.** பரி. பவுலின் ஜீவியச் சரித்திரத்தையும் அவன் செய்த போதகத்தையும் அவன் கொண்ட கொள்கைகளையும் நாம் அறியவேண்டுமானால், அப்போஸ்தலருடைய நடபடிகளையும், பவுல் எழுதிய 13 நிருபங்களையும் கொண்டுதான் அறியவேண்டும்.

இவைகளைச் சாட்சியாக ஏற்றுக்கொண்டால், நடபடிகள் உண்மையாய் நடந்த சம்பவங்களை அடக்கியதாயும், அச்சம்பவங்கள் நன்றாய் அறிந்தவரால் எழுதப்பட்டதாயும் இருக்கவேண்டியதுமல்லாமல், 13 நிருபங்களும் நம்பப்படத்தக்கவைகளாயும் பவுல் என்பவனால் எழுதப்பட்டவைகளாயும் இருக்கவேண்டும். இவ்விஷயத்தைப்பற்றி அதிகமான தர்க்கம் உண்டாயிருந்தும் வேதசாஸ்திரிகளில் பெரும்பான்மையோர், சற்றேறக்குறைய ஒவ்வொரு நிருபமும் பவுலால் எழுதப்பட்டதாக ஒத்துக்கொள்ளுகிறார்கள். அந்தந்த நிருபத்துக்கடுத்த குறிப்புகளை அறிய அந்தந்த நிருபத்தைப்பற்றி இந்த அகராதி

யில் எழுதினவைகளைக்காண்க. பொதுவாய்ச் சொல்லவேண்டுமானால், கி—பி. 150—ம் வருஷத்துக்குள்ளாக, ஆதி திருச்சபையின் பிதாக்கள் தாங்கள் எழுதிய நிருபங்களிலும் நூல்களிலும் ஒவ்வொரு நிருபத்திலுமுள்ள காரியங்களையும் எடுத்துச் சொல்லுகிறதினால், அவர்கள் அந்நிருபங்களை அறிந்தும் அவை பவுலால் எழுதப்பட்டவை என்று நம்பியும் இருந்தார்கள் என்பதை நிதானிக்கலாம்.

இந்த 13 நிருபங்களை நாம் நாலு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

i. தெசலோனிக்கேயருக்கு எழுதின இரண்டு நிருபங்கள்:—

இவை 52—3—ம் வருஷத்தில் கொரிந்து பட்டணத்தில் எழுதப்பட்டன. அக்காலத்தில் கிறிஸ்து சீக்கிரத்துக்குள்ளாக திரும்பவும் வருவார் என்று பவுல் நம்பினதுபோல் தோன்றுகிறது. 1 தெச $4^{13-18}$. அதைப் பற்றி 2 தெச 2—ம் அதிகாரத்தில் அவன் வேறுவிதமாய்ப் பேசி, தன்னுடைய அபிப்பிராயத்தைக் கொஞ்சம் மாற்றினவனாகக் காணப்படுகிறான்.

ii. கலாத்தியருக்கும் கொரிந்தியருக்கும் ரோமர்களுக்கும் எழுதப்பட்ட நிருபங்கள்:—

இவைகளிலே பவுல் முக்கியமாய்க் கிறிஸ்தவர்களுக்கிருக்கிற சுயாதீனத்தைக் குறித்து எழுதி, எல்லா கிறிஸ்தவர்களும் யூதர்களாகி விருத்தசேதனம் அடையவேண்டும் என்ற யூதக்கட்சிக்காரரோடு தர்க்கம்பண்ணி, தான் அப்போஸ்தலனானபடியால் தனக்கு அப்போஸ்தல அதிகாரம் உண்டென்பதையும் சாதிக்கின்றான்.

iii. எபேசியருக்கும், பிலிப்பியருக்கும் கொலோசெயருக்கும் பிலேமோனுக்கும் எழுதப்பட்ட நிருபங்கள்:—

இவை ரோமாபுரியில் சிறைச்சாலையிலிருந்த காலத்தில் எழுதப்பட்டன. இந்நாலு நிருபங்களுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு.

iv. தீமோத்தேயுவுக்கும் தீத்துவுக்கும் எழுதப்பட்ட நிருபங்கள்:—

இவைகளுக்கும் சம்பந்தமுண்டு. இவைகளில் சொல்லப்பட்ட சங்கதிகள் நடபடிகளில் சொல்லப்படவில்லை என்பது மெய்யென்றாலும், அதினாலே இவைகள் நம்பப்படத்தக்கவைகளல்லவென்று சொல்வது தகாது. பிலி $1^{23-26}$ $2^{24}$ பிலே $1^{22}$ பார்த்தால், நடபடிகளில் சொல்லப்பட்ட அந்த முதலாம் சிறையிருப்பினின்று தான் விடுதலை பெறுவான் என்று பவுல் உறுதியாய் நம்பினான் என்பதைக் காண்கிறோம். இப்படியாக அவன் விடுதலைபெற்று, இன்னும் சில பிரயாணங்களைச் செய்து இஸ்பானியாதேசம் வரைக்கும் போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான் என்கிற ஓர் பாரம்பரியமும் உண்டு.

அதுவும்தவிர தீமோத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டு நிருபங்களில் பவுல் அதிகமாய்த் தன்னைக்குறித்தும், தான் அநுபவித்தவைகளைக் குறித்தும் எழுதிவருகிறதினால், இந்த நிருபங்கள் அசத்தியமாய் அவனாலே எழுதப்பட்டவை என்று உத்தேசிக்கலாம்.

இந்த 13 நிருபங்களையும் பொதுவாய்ப் பார்த்தால், இவைகளிலுள்ள விஷயங்கள் ஆதி திருச்சபையில் நடந்திருக்கக்கூடியவைகளுக்கு இசைவாயிருக்கின்றனவென்பதைக் காணலாம்.

*a*. முதல் கிறிஸ்தவர்கள் யாவரும் யூதர்களானதினால், புறஜாதியார் சபையில் சேர்ந்தபொழுது, அவர்களோடு யூதகிறிஸ்தவர்கள் தர்க்கம்பண்ணியிருப்பார்கள் என்பது நம்பக்கூடிய காரியமே. பவுல் கலாத்தியருக்கும், கொரிந்தியருக்கும் ரோமர்களுக்கும் எழுதிய முக்கியமான நிருபங்கள் அத்தர்க்கத்தைப் பற்றியவைகள்.

*b*. அந்தத்தர்க்கம்தீர்ந்தபின் கிறிஸ்துவைப் பற்றின கொள்கைகளைக்குறித்தும்சபையைப் பற்றின விஷயங்களைக்குறித்தும் ஆதி கிறிஸ்தவர்கள் கரிசனையுள்ளவர்களா யிருந்திருக்கலாம். சிறைச்சாலையினின்று பவுல் எழுதிய நிருபங்கள் அவ்விஷயங்களுக் கடுத்தவைகளே.

*c*. கடைசியாய்ச் சபை ஒழுங்கைப்பற்றிய கேள்விகள் கேட்கப்படும் என்பது எதிர் நோக்கக்கூடிய காரியமானதால் அதற்கு பவுல் கடைசியாய் எழுதின மூன்று நிருபங்கள் இசைவாயிருக்கின்றன.

எப்படியாயினும், பவுல் இவ்விதமாய் ஜீவித்து, நடமாடி, இவ்வண்ணமாய் எழுதினான் என்பதை ஆதி திருச்சபையார் நம்பினார்கள் என்பதற்குச் சந்தேகம் இல்லை.

**அப்போஸ்தலருடைய நடபடிகள்.** லூக்கா என்பவனால் எழுதப்பட்டதாயும், நம்பப்படத் தக்கதாயும் இருக்கிறதாக வேத சாஸ்திரிகளில் பெரும்பாலார் ஒத்துக்கொள்ளுகிறார்கள். லூக்கா எல்லாச் சம்பவங்களையும் கண்ணாரக் காணாதவனாயிருந்தும், பாராத விஷயங்களைக்குறித்து அதிக திட்டமாய் விசாரித்துச் சரித்திரசம்பந்தமாய் அவன் தனது சுவிசேஷத்தை எழுதியதுபோல்,

இப்புஸ்தகத்தையும் எழுதினான் என்று நாம் நிதானிக்கலாம். நடந்த சம்பவங்களை மாத்திரமல்ல பவுல் செய்த பிரசங்கங்களையும் லூக்கா இதில் எழுதிவருகிறதினால், அவைகளைக் கேட்டவர்களில் யாராவது ஒருவன் அவைகளைப்பற்றிய குறிப்புகளைச் சுருக்கமாய் எழுதி லூக்காவுக்குத் தந்திருக்கலாம் என்று நாம் உத்தேசிக்கலாம்.

## II. ஜீவிய சரித்திரம்.

### i. பெயர்:—

அப் $7^{58}$—ல் நாம் வாசிக்கிறபடி பவுலினுடைய பெயர் சவுல் என்பதே. அவன் பென்யமீன் கோத்திரத்தானானபடியால் (ரோம $11^{1}$ பிலி $3^{5}$) அக்கோத்திரத்தில் பிறந்த சவுல் என்னும் இராஜாவினுடைய பெயர் அவனுக்கு இடப்பட்டிருக்கலாம். அவன் ரோமனுமாயிருந்ததினால், பவுல் என்னும் லத்தீன்பெயருமுடையவனுமாயிருந்தான். அப் $13^{9}$ வரையில் அவனுக்குச் சவுல் என்றே பெயர் கூறப்பட்டிருக்கும். அதற்கப்புறம் அவன் முக்கியமாய் ரோமருக்குள்ளும் புறஜாதியாருக்குள்ளும் வேலைசெய்து வந்ததினிமித்தம், அவனுடைய ரோமைப் பெயராகிய பவுல் என்பது வழங்கலாயிற்று. அவன் செர்கியு பவுலைக் குணப்படுத்தினான் என்பதினிமித்தம், அல்லது அவன் குள்ளனாயிருந்து 'குள்ளன்' என்னும் அர்த்தங்கொண்ட 'பவுல்' என்ற பெயர் தரித்தான் என்று நினைக்கக்கூடாது.

### ii. பிறந்த இடமும் குலமும்.

பவுல் சிலிசியா நாட்டுக்குத் தலை நகரமாகிய தர்சு என்னப்பட்ட ஊரிலே பிறந்தான். அப் $9^{11}$ $21^{39}$ $22^{37}$. அது சின்ன ஆசியாவிலுள்ள முக்கியமான பட்டணங்களில் ஒன்றாயிருந்ததுமல்லாமல், அதிலே மகா கீர்த்தி பெற்ற சர்வகலாசாலை ஒன்றும் இருந்தது.

அவனுடைய குலத்தார் தர்சு பட்டணம் போன காலம் தெரியாது. அவர்கள் கலிலேயாவிலுள்ள கிஸ்காலா என்னும் ஊரிலிருந்து போனதாக பூர்வீக பாரம்பரியம் சொல்லுகிறது. ரோமர் சிலிசியாவை ஜெயிப்பதற்குமுன், அத்தேசத்தை ஆண்ட கிரேக்கு இராஜாவால் அவர்கள் குடியேற்றப்பட்டிருக்கலாம். அவர்கள் பரிசேயரும் எபிரேய பாஷை பேசினவர்களுமாயிருந்தார்கள். அப் $23^{6}$. (2 தீமோ $1^{4}$ காண்க.) பிலி $3^{5}$ அப் $21^{40}$ $22^{2}$.

அவர்கள் நல்ல ஸ்திதியிலிருந்தார்கள் என்பதற்குச் சில அத்தாட்சிகளுண்டு. பவுல் தான் ரோமன் என்கிற சிலாக்கியத்திற்குரியவனாய்ப் பிறந்ததாக சொல்லுகிறான். அப் $22^{28}$. அந்த சிலாக்கியமானது ரோமரால் எல்லாருக்கும் கொடுக்கப்படாமல், சில இடங்களில் சில முக்கியமான குடும்பத்தாருக்குமாத்திரம் கொடுக்கப்பட்டதாகையால் பவுலின் குடும்பம் கொஞ்ச உயர்ந்த ஸ்திதியில் இருந்திருக்கவேண்டும். அவர்கள், சிலிசியாவிலுள்ள அநேகரைப்போலவே கூடாரம்பண்ணுகிற தொழிலாளிகளா யிருந்தார்கள். அப் $18^{3}$ $20^{34}$. (1 கொரி $9^{14.15}$. காண்க) 1 தெச $2^{8}$ 2 தெச $3^{8}$. பவுல் தெசலோனிக்கே பட்டணத்தில் இவ்விதமாய் முதலில் வேலைசெய்து வந்தான் என்பதினால், அவன் அக்காலத்தில் தரித்திரனாக இருந்திருக்கவேண்டும் என்று யூகிக்கலாம். ஆனாலும் அதற்கப்புறம் அவனுக்கு வேண்டிய பணமிருந்ததாக தெரிகிறது. பேலிக்ஸ் என்பவன் அவரை விடுதலை பண்ணும்படி தனக்குப் பவுல் பணங்கொடுப்பான் என்று எதிர்பார்த்தான். அப் $24^{26}$. அவன் தேசாதிபதியாயிருந்ததினால், அவன் எதிர்பார்க்கக்கூடிய லஞ்சம் கொஞ்சமல்ல. மேலும் பவுல் இராயனுக்கு அபயமிட்டு ரோமாபுரிக்குப் போய்த் தான் வாடகைக்கு வாங்கின வீட்டிலே இரண்டு வருஷமாக தங்கினான். அப் $28^{30}$. இதினாலும் இன்னும் சில குறிப்புகளினாலும் அக்காலத்தில் அவனுடைய தரித்திரம் நீங்கி யிருந்ததென்பது விளங்குகிறது. அவன் கிறிஸ்தவனானவுடன், தனது இனத்தாரால் தள்ளப்பட்டுக் கடைசியாய் அவர்களால் அங்கீகரித்துக் கொள்ளப்பட்டான் (அவன் கிறிஸ்தவனானது, இத்தேசத்தில் ஓர் பிராமணவாலிபன் கிறிஸ்தவனாவதற்கு ஒப்பாயிருந்திருக்கும்.). அவன் அவர்களால் திரும்பவும் அங்கீகரிக்கப்பட்டான். என்பதற்கு, அவனுடைய சகோதரியின் குமாரன் அவனுக்குச் செய்த உபகாரமே அத்தாட்சி (அப் $23^{16}$). கடைசியாய்ப் பிதிரார்ச்சித சொத்தில் அவனுக்குச் சேரவேண்டிய பாகத்தை அவன் பெற்றுக்கொண்டிருக்கலாம்.

### iii. ரோமை பிரஜா சிலாக்கியம்.

பவுலின் முன்னோர் ரோமஜாதியைச் சேராதவர்களாயிருந்தபடியால், இந்தச் சிலாக்கியத்தை அடைவதற்கு அவர்களில் ஒருவன் ரோமருக்கு ஓர் விசேஷித்த உபகாரத்தைச் செய்திருக்கவேண்டும். பிலிப்பி பட்டணத்திலும் எருசலேமிலும் இந்தச் சிலாக்கியத்தை முன்னிட்டு அபயமிட்டான். அப் $16^{37}$ $22^{25}$. அவன் இவ்விதமாய் ரோமபுரியாருக்குக் கிடைத்த சிலாக்கியங்களுக் குட்பட்டவனாயிருப்பது புறஜாதியாருக்குள்ளே அவன்

செய்த வேலைக்கு மெத்த அநுகூலமாயிருந்தது. இதினிமித்தம் அவன் ரோமர் உண்டாக்கின பெரும் பாதைகளின் வழியாய்ப் போய் அவர்கள் குடியேறின கொரிந்து, அந்தியோகியா, லீஸ்திரா, பிலிப்பி முதலிய பட்டணங்களில் தங்கி சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான்.

iv. வாலிபப்பிராயம்.

பவுல் தர்சுவிலும் எருசலேமிலும் படிப்பிக்கப்பட்டவனாயிருந்தான். தர்சுவின் சர்வ கலாசாலையிலே ஸ்தோயிக் (*Stoic*) என்கிற தத்துவசாஸ்திரம் அக்காலத்தில் அதிகமாக நன்கு மதிக்கப்பட்டபடியால் பவுல் அநேகமாய் அதைப் படித்தான். எருசலேமிலே அவன் கனம்பெற்ற நியாயசாஸ்திரியாகிய கமாலியேல் * கொடுத்த போதனையைக் கற்றுக்கொண்டான். அப் 22³ 26⁴ 5³⁴ காண்க.

1 கொரி 9¹ 15⁸ கண்டால், பவுல் சரீரக் கண்ணினால் இயேசுவைப் பார்க்கவில்லை என்று தோன்றுகிறது. இயேசுவானவர் தமது பகிரங்கமான ஊழியத்தைச் செய்ய ஆரம்பிக்கிறதற்குமுன் பவுல் எருசலேமை விட்டுத் தனது ஊருக்குப் போயிருக்கலாம். [என்றாலும் சில வேதசாஸ்திரிகள் பவுல் இயேசுவைக் கண்டதாக அபிப்பிராயங் கொள்ளுகிறார்கள்.]

பவுல் பரிசேயனாகவும் எபிரெயனாகவும் வளர்க்கப்பட்டான். அப் 23⁶ 26⁵ கலா 1¹⁴ பிலி 3⁵. தான் யூதனாயிருப்பது ஓர் மேன்மை என்று சில இடங்களில் காட்டுகிறதோடு தன்னுடைய சுயஜனத்தாரை அவன் நேசித்ததாகவும் சொல்லுகிறான். ரோம. 4¹ 9³ 10¹ 11¹ 2 கொரி 11²².

அவன் மதவைராக்கிய முடையவனாயிருந்து, ஸ்தேவானைக் கொலைசெய்வதிலும், கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்துவதிலும் பங்குபெற்றான். அப் 7⁵⁸ 8¹ 9¹ 26¹⁰.

v. குணப்படுதல். † (கி-பி. 32? 33?)

அவனுடைய குணப்படுதலின் விவரங்களை மூன்று இடங்களில் வாசிக்கிறோம். அப் 9¹⁻¹⁶ 22⁴⁻¹⁶ 26⁹⁻¹⁸. அதுவுந்தவிர அவன் அடிக்கடி அதைப்பற்றி எழுதினான். 1 கொரி 9¹ 15⁸ பிலி 3⁷ மு. அச்சமயத்தில் தான் இயேசுவை உண்மையாய் ஊனக்கண்ணால் தரிசித்ததாகச் சொல்லுகிறான். 1 கொரி 9¹. அவனோடிருந்தவர்கள் அத்தரிசனத்தைக் காணாமலும், கேட்கப்பட்ட சப்தத்தின் கருத்தை அறியாமலும் இருந்தார்கள்.

தனது மனமாறுதலுக்கு அடையாளமாக ஞானஸ்நானம் பெற்று, தாமதமின்றி இயேசுவைப் பிரசங்கித்தார். அப் 9¹⁸⁻²⁰. குணப்பட்ட அந்நாள்முதல் தான் அப்போஸ்தல ஊழியத்தைச் செய்யும்படி அழைக்கப்பட்டான் என்று அவன் அடிக்கடி சொல்லுகிறான். கலா 1¹·¹²·¹⁶ ரோம 1¹·⁷ 1 கொரி. 1¹ 4¹ 9¹ 15⁹. அதுவுந்தவிர தான் புறஜாதியாருக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி அழைக்கப்பட்டான் என்பதையும் ஆதிமுதல் அறிந்திருந்தான். அப் 9¹⁵ 22²¹ 26¹⁷ ரோம 11¹³ கலா 2⁷. அந்த வேலை செய்வதற்குத் தன்னை ஆயத்தப்படுத்தும்படி அவன் அரபிதேசம் போய்ச் சற்றேறக்குறைய மூன்று வருஷமளவும் அங்கே தங்கித் திரும்பவும் தமஸ்குவுக்கு வந்தான். கலா 1¹⁷ அப் 9²². அவ்விடத்தில் அவன் அதிக ஊக்கமான வேலைசெய்துவந்ததினால், அவ்வூர் யூதர்கள் அவனைக் கொலைசெய்ய வகைதேடினார்கள். அவனோ ஓர் கூடையிலே வைக்கப்பட்டு மதில்வழியாய்த் தப்பித்துக்கொண்டு எருசலேமுக்குப் போனான். அப் 9²³⁻²⁵ 2 கொரி 11³².

பவுல் குணப்பட்டபின் எருசலேமுக்குப் போன முதல் சமயம் இதுவே (கி-பி. 35). கலா 1¹⁸ அப் 9²⁶⁻³⁰. சபையார் அவனை ஏற்றுக்கொள்ள பயப்பட்டபடியால் பர்னபா என்பவன் பவுலைக் கூட்டிக்கொண்டுபோய் நடந்த சங்கதிகளையெல்லாம் விவரித்துச் சொன்னான். பவுல் அங்கே பதினைந்துநாள் தங்கி, கிரேக்கருக்குள் செய்த பிரசங்கத்தினால் கலகமுண்டானபடியால், சீஷரால் தர்சுவுக்கு அனுப்பப்பட்டான்.

(அப் 22¹⁷-ல் சொல்லப்படுகிற தரிசனத்தை இச்சமயத்தில் கண்டான் எனச் சிலர் நினைக்கிறார்கள். வேறு சிலர், பவுல் எருசலேமுக்குப்போன இரண்டாம்முறை இச் சம்பவம் நடந்ததாக உத்தேசிக்கிறார்கள்.)

பவுல் தர்சுவிலே சில வருஷகாலமாகத் தரித்து அவ்விடத்திலும் அதற்குச் சுற்றுப் புறங்களாகிய சீரியா சிலிசியா நாடுகளிலும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான். கலா 1²¹.

ஸ்தேவான் நிமித்தமாய் உண்டான உபத்திரவத்தினாலே சிதறப்பட்டவர்களில் சிலர் சீரியாவிலுள்ள அந்தியோகியாவுக்கு வந்து, யூதர்களுக்கு மாத்திரமல்ல, புறஜாதியாருக்

---

* அப். 22³-ல் 'அந்த' நகரம் என்பதற்குப் பதிலாக 'இந்த' நகரம் என்று வாசிக்கவேண்டும்.

† இந்தப் பிரபந்தத்தில் சொல்லப்படுகிற காலங்கள் சர் வில்லியம் ராம்ஸி என்பவர் (Sir William Ramsay) குறிக்கின்றவைகளாயிருக்கின்றன.

கும் தேவ வசனத்தை அறிவித்தார்கள். அவ்வூரின் கிரேக்கரும் கிறிஸ்தவர்களாகிறார்கள் என்று எருசலேமிலுள்ள சபை கேள்விப்பட்டு, அவ்விடத்துக்குப் போக பர்னபாவை அனுப்பினார்கள். அப் $11^{19-24}$. அவன் தர்சுவுக்குப் போய் பவுலை அழைத்து, அவனோடே ஓர் வருஷமாக அந்தியோகியாவிலே வேலை செய்தான் (கி-பி. 43. 44). அப் $11^{25-26}$.

அக்காலத்தில் எருசலேமிலே பஞ்சம் உண்டானபடியால், அவன் இரண்டாவது முறை அதற்குப் போய், அந்தியோகியாவிலுள்ள சபையாரால் சேகரிக்கப்பட்ட பணத்தை மூப்பர் கையிலே கொடுத்தான் (கி-பி. 45-6). அப் $11^{30}$ கலா $2^{1}$-ல் சொல்லப்படுகிற பிரயாணம் இதுவாயிருந்தால் பவுல் தேவ அறிவிப்பினாலே சென்று தீத்துவையும் கூட்டிக்கொண்டுபோனான்.

கொஞ்சக்காலம் எருசலேமிலேயிருந்து, செய்யவேண்டிய ஊழியத்தைச் செய்து முடித்தபின், பவுலும் பர்னபாவும், பர்னபாவின் இனத்தவனாகிய மாற்கு என்பவனும் அந்தியோகியாவுக்கு வந்தார்கள். (கி-பி. 46-47.)

vi. முதல் சுவிசேஷப் பிரயாணம் (கி-பி. 47-49) அப் $13^{4}$-$14^{26}$.

தேவாவியானவரால் ஏவப்பட்டு, சவுலும் பர்னபாவும் மாற்குவும் அந்தியோகியா பட்டணத்தை விட்டுக் கப்பலேறி, பர்னபாவின் ஜனன தேசமாகிய சீப்புருதீவுக்கு வந்து சாலமி என்னும் ஊரிலே கப்பல்விட்டிறங்கி, பிரசங்கம்பண்ணி, அத்தீவைக் கடந்து பாப்போ பட்டணத்தில் ரோம தேசாதிபதியாகிய செர்கியு பவுலையும் மாயவித்தைக்காரனாகிய எலிமாவையும் சந்தித்தார்கள்.

அதற்கப்புறம் கப்பலேறி, சின்ன ஆசியாவிலுள்ள பம்பிலியா நாட்டுக்கு வந்து பெர்கே என்னும் துறையிலே இறங்கினார்கள். யோவான் மாற்கு அவ்விடத்தில் அவர்களை விட்டுத் திரும்பி எருசலேமுக்குப் போனான். அவன் அவர்களைவிட்ட காரணம் இன்னதென்பது சொல்லப்படவில்லை. உள்நாட்டுக்குப் போவது அதிக அபாயத்திற் கிடமாயிருந்தபடியால் அவன் போக பயந்திருக்கலாம். இது எப்படியாயினும் அவன் தங்களை மாத்திரமல்ல, சுவிசேஷ ஊழியத்தையும் விட்டுப் பின்வாங்கினதாக பவுலுக்கு காணப்பட்டது. அப் $15^{38}$.

கலா $4^{13}$-ல் தான் 'சரீர பலவீனத்தோடு' முதலில் கலாத்தியருக்குப் பிரசங்கித்தான் என்கிறான். மூலபாஷையில் அது 'சரீர பலவீனத்தால்' என்று அர்த்தங்கொள்ளுகிறதினால், பெர்கே பட்டணத்தில் பவுலுக்கு விஷஜுரம் (*Malaria*) கண்டபடியால் மலைநாட்டுக்குப் போகவேண்டியதாய் நேரிட்டதென்றும், இவ்விதமாய் அந்த நோயே அவ்விடத்தில் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுவதற்குக் காரணமாயிற்றென்றும் சிலர் உத்தேசிக்கிறார்கள்.

அவர்கள் பெர்கே பட்டணத்தில் தாமதம் பண்ணாமல் உடனே மலைவழியாக நூறு மைல் தூரம் பிரயாணஞ்செய்து பிசீதியா நாட்டிலுள்ள முக்கியமான பட்டணமாகிய அந்தியோகியாவுக்கு வந்தார்கள். அங்கே சிறிதுநேரம் தங்கி யூதருக்கும் புறஜாதியாருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தபின் யூதருடைய விரோதத்தினால் அவ்வூரை விட்டுவிட வேண்டியதாயிற்று. எனினும் 'கர்த்தருடைய வசனம் அத்தேசமெங்கும் பிரசித்தமாயிற்று.' அப் $13^{49}$.

அந்தியோகியாவை விட்டு, எண்பது மைல் தூரத்திலிருந்த இக்கோனியா என்னும் ஊருக்கு வந்து, அங்கே அநேகநாள் தரித்து, அநேகரைச் சபையிலே சேர்த்துக்கொண்டார்கள். யூதர்கள் கலகம் செய்ததினால் அவ்விடத்தையும் விட்டு லீஸ்திராவுக்கு வந்தார்கள். அங்கே சப்பாணியாயிருந்த ஓர் மனுஷனை அவர்கள் சொஸ்தமாக்கியதினிமித்தம், ஜனங்கள் அவர்களைத் தேவர்கள் என்று எண்ணி அவர்களுக்குப் பலியிட மனதாயிருந்தார்கள். கொஞ்சக்காலத்திற்குள்ளே, அந்தியோகியா இக்கோனியா என்னும் ஊர்களினின்று வந்த யூதர்கள் செய்த உபாயத்தினால் அந்த ஜனங்கள் பவுலைப் பிடித்துக் கல்லெறிந்தார்கள். ஆகவே அப்பட்டணத்தை விட்டு, தெர்பைக்கு வந்து சிலநாள் சென்றபின் திரும்பவும் தாங்கள் வந்தவழியாகப் போய், சீஷரைத் திடப்படுத்தி, ஒவ்வொரு ஊரிலும் மூப்பரை ஏற்படுத்தி வைத்தார்கள். 2 தீமோ $3^{11}$-ல் தான் பட்ட பாடுகள் இவ்வளவென்று பவுல் சொல்லுகிறான். கடைசியாய் அவர்கள் பெர்கே அத்தலியா என்னும் ஊர்களுக்கு வந்து கப்பலேறி, தாங்கள் விட்டுப்போன சீரியாவிலுள்ள அந்தியோகியாவுக்கு வந்தார்கள் பவுல் போன ஒவ்வொரு ஊரிலும் முதல் முதல் யூதர்களுக்கும், அப்புறம் புறஜாதியாருக்கும் அவன் பிரசங்கித்ததாகக் காண்கிறோம். அப் $14^{1}$ $17^{2}$.

கலா $2^{11}$-ல் பேதுருவோடு செய்ததாகச் சொல்லப்படுகிற தர்க்கம் இக்காலத்தில் நடந்திருக்கலாம். அப்படியிருந்தால் பவுல் சொல்

லியதைப் பேதுரு நன்கு மதித்தான் என்று அப் $15^{7}$ கொண்டு அறியலாம்.

**vii. அப்போஸ்தலருடைய ஆலோசனைச் சங்கம்.** அப் $15^{1-29}$. (கி–பி. 49–50.)

பவுலும் பர்னபாவும் முதல் சுவிசேஷப் பிரயாணம்செய்து முடித்தபின் அந்தியோகியாவில் அநேக நாளாய் வேலை செய்துவந்தார்கள். அச்சமயத்தில் யூதேயாவிலிருந்து வந்த யூதர்கள், கிறிஸ்தவர்கள் யாவரும் விருத்தசேதனம் பண்ணப்படவும் மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளவும் வேண்டும் என்று சொல்லிச் சபையிலே கலக்கம் உண்டாக்கினதினால், எருசலேமிலுள்ள அப்போஸ்தலரும் மூப்பர்களும் இவ்விஷயத்தைப்பற்றிச் சொல்லக்கூடிய ஆலோசனையைக் கேட்கும்படி சபையாரால் பவுலும், பர்னபாவும் வேறு சிலரும் எருசலேமுக்கு அனுப்பப்பட்டார்கள். பவுல் எருசலேமுக்குப் போன மூன்றாவதுமுறை இதுவே.

எருசலேமிலே நடந்த இந்த ஆலோசனைச்சங்கம் திருச்சபையின் சரித்திரத்தில் மகா முக்கியமானதாயிருக்கிறது. தேவாவியானவரின் ஏவுதலாலும் பவுலின் பிரயாசத்தினாலும் சுவிசேஷம் சர்வ லோகத்தாருக்கும் உரியதாயிருக்கிறதென்று அவர்கள் செய்த தீர்மானமோ சபையின் சுயாதீனத்திற்கு மூலைக்கல்லாயிருக்கிறது. அச்சங்கத்தார் தாங்கள் செய்த தீர்மானத்தை நிருபத்தில் எழுதி, பவுல் பர்னபா என்பவர்களோடு பர்சபாவையும் சீலாவையும் அந்தியோகியாவுக்கு அனுப்பினார்கள். பர்சபாவும் சீலாவும் அங்கே சிலநாள் இருந்து தீர்க்கதரிசனம் சொன்னார்கள். பர்சபா திரும்பவும் எருசலேமுக்குப் போகவே சீலா அவனோடு போகாமல் அந்தியோகியாவிலே தங்கிவிட்டான். அப் $15^{30-35}$.

**viii இரண்டாம் சுவிசேஷப் பிரயாணம்** (கி–பி. 50–53). அப் $15^{36}$–$18^{22}$.

சிலநாளானபின்பு பவுல் இவ்விரண்டாம் பிரயாணத்தைச் செய்ய உத்தேசித்து, பர்னபா மாற்குவை திரும்பவும் கூட்டிக்கொண்டு போகவேண்டும் என்று விருப்பமுள்ளவனானதால் பர்னபாவை விட்டுவிட்டு, சீலாவை அழைத்துக்கொண்டு சீரியா சிலிசியா நாடுகள்வழியாய்த் தெர்பைக்கும் லீஸ்திராவுக்கும்வந்தான். லீஸ்திராவிலே அவர்கள் தீமோத்தேயுவைச் சந்தித்து, அவனுடையதாயார் யூதஸ்திரீயாயிருந்ததினிமித்தம் அவனுக்கு விருத்தசேதனம்பண்ணி அவனைத் தங்களோடு கூட்டிக்கொண்டு போனார்கள். 2 தீமோ $1^{5}$ $3^{15}$. அவர்கள் பிரிகியா கலாத்தியா நாடுகளைக் கடந்துபோய் ரோமை இராஜதானியாகிய ஆசியாவிலே வேலைசெய்யத் தலைப்பட்டாலும் தேவாவியானவரால் தடைபண்ணப்பட்டார்கள் (ஆசியாவின் தலைநகராகிய எபேசுவிலே வேலைசெய்ய அவர்கள் விருப்பமாயிருந்திருக்கலாம்.). வடக்கேயிருந்த பித்தினியா நாட்டுக்குப் போகப் பிரயத்தனம்செய்தும் அங்கேயும் ஆவியானவரால் தடைபண்ணப்பட்டார்கள். போகக்கூடிய வழி ஒன்றுயிருந்தமையால் அவ்வழியாக மீசியா பக்கமாய்ப் போய், துரோவா என்கிற துறைக்கு வந்தார்கள். அவ்விடத்திலே அவர்கள் லூக்காவைச் சந்தித்தார்கள். இது எப்படித் தெரியும் என்றால், லூக்கா அப் $16^{10}$–ல் 'அவர்கள்' என்பதற்குப் பதிலாய் 'நாங்கள்' என்கிறான். அதாவது இந்நூலின் ஆசிரியனும் அதுமுதல் அவர்களோடு சேர்ந்திருக்கவேண்டும்.

அப் $16^{9}$–ல் சொல்லிய தரிசனத்தைப் பவுல் கண்டவுடன், ஆசியாவை விட்டு, முதல்தடவையாக ஐரோப்பாக் கண்டத்துக்குப் போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான். அவர்கள் நெயாப்போலியாகிய துறைசேர்ந்து தாமதமின்றி பிலிப்பிப் பட்டணத்துக்கு வந்து சிலநாள் தங்கினார்கள். அவ்விடத்தில் யூதமார்க்கத்தமைந்தவளும் நல்ல ஸ்திதியிலுள்ளவளுமாகிய லீதியாளும், ஏழை அடிமை கிரேக்கப்பெண்ணும், ரோமப் போர்ச்சேவகனும் சுவிசேஷத்தை ஏற்றுக்கொண்டார்கள். குறிசொல்லும் பெண்ணின் எஜமான்கள் செய்த கலகத்தினால் பவுலும் சீலாவும் அடிக்கப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டு இரவிலே உண்டான பூமி அதிர்ச்சியினால் விடுதலையாக்கப்பட்டார்கள். மறுநாள் காலையில் அதிகாரிகள் அவர்களை இரகசியமாய் அனுப்ப மனதாயிருந்தபோது அவர்கள் இந்த அப்போஸ்தலர்கள் ரோமர்களாய் இருக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டு, பயந்து, அவர்களுக்கு மரியாதை செய்து அவர்களை அனுப்பிவிட்டார்கள்.

அவர்கள் அவ்விடத்தில் லூக்காவை விட்டுவிட்டார்கள் (அப் $17^{1}$ 'நாங்கள்' என்கிற பதத்திற்குப் பதிலாய் 'அவர்கள்' என்று சொல்லப்படுவதினால் இது விளங்குகிறது.). அந்நாட்டின் தலைநகரமாகிய தெசலோனிக்கே பட்டணத்துக்கு வந்து அங்கே சில மாசக் காலமாகத் தங்கி யூதருக்கும் கிரேக்கருக்கும் சுவிசேஷத்தை அறிவித்து அநேகரைக் குணப்படுத்தினார்கள். அப் $17^{4}$ 1 தெச $1^{9}$ $2^{1.9}$. தன்னுடைய ஜீவனத்துக்காகப் பவுல் தனது தொழிலைச் செய்தான். 2 தெச $3^{8}$. ஆயினும் பிலிப்பிச் சபையார் அவனுக்குச் சமயா

சமயங்களில் உதவிசெய்தார்கள். பிலி 4[15] 2 கொரி 11[9]. தெசலோனிக்கேயர் சுவிசேஷத்தை ஆவலாய் ஏற்றுக்கொண்டதுமல்லாமல் அதை மற்றவர்களுக்கும் அறிவித்தார்கள். 1 தெச 1[8]. மற்றவிடங்களில் நடந்ததுபோல இங்கேயும் யூதர்கள் அவர்களுக்கு விரோதமாய் இருந்து அதிகாரிகளுக்கு முன்பாக பாரமான குற்றமாகிய இராஜதுரோகத்தை அவர்கள்பேரில் சுமத்தி, அவர்களை ஏற்றுக்கொண்ட யாசோனை அதிகாரிகளுக்கு முன்பாக நிறுத்தினார்கள். அவனிடத்தில் அவர்கள் ஜாமீன் வாங்கினமையால், அப்போஸ்தலர் திரும்பவும் வெளியரங்கமாய்ப் பிரசங்கம்பண்ண முடியாமற் போயிற்று. அவர்கள் அப்படிச் செய்துவந்திருந்தால், திரும்பவும் கலகம் உண்டாயிருக்கும். உண்டாயிருந்தால், ஜாமீனைக் கொடுத்த யாசோனுக்குப் பிராண அபாயம் நேரிட்டிருக்கும். ஆனதுபற்றி அவர்கள் உடனே பெரோயா பட்டணத்துக்குப் போனார்கள். அங்கேயும் தெசலோனிக்கேப் பட்டணத்து யூதர்கள் வந்து பவுலுக்குத் தீங்கு செய்யப் பார்த்ததினால், சகோதரர் சமுத்திரவழியாக அத்தேனே என்னும் பட்டணத்துக்கு அவனைக் கூட்டிக்கொண்டு போனார்கள். பவுல் தெசலோனிக்கே ஊருக்குத் திரும்பிப் போக மனதாயிருந்தும் இந்த யூதர்களின் விரோதத்தினால் அவனால் போகக்கூடாமற் போயிற்று. 1 தெச 2[14-18] 2 தெச 1[4]. சீலாவும் தீமோத்தேயுவும் பெரோயாவிலே இரண்டொருநாள் தரித்திருந்து அவனுக்குப்பின் அத்தேனே பட்டணத்துக்குப் போனார்கள்.

கிரேக்குத் தேசத்துக்கு முக்கியமானதும் உலகத்திலுள்ள எல்லாப் பட்டணங்களையும் பார்க்க நாகரீகத்திலும் கல்வியிலும் சிரேஷ்டமானதுமாயிருந்த அத்தேனே பட்டணத்தில் அவர்கள் நாலைந்துவாரம் தங்கினார்கள்.

சீலாவும் தீமோத்தேயுவும் வாராததற்கு முன் பவுல் அப் 17[22-31]–ல் சொல்லப்படுகிற உபநியாசஞ் செய்தான். அதிலே அவன் ஓர் தத்துவ சாஸ்திரியாகத் தத்துவ சாஸ்திரிகளுடன் பேசினதாகக் காண்கிறோம். மூலபாஷையில் 'மார்ஸ் மேடை' என்று மொழிபெயர்க்கப்பட்ட 'அரியோப்பகஸ்' (*Areopagus*) என்னும் பதமானது ஓர் இடத்தையல்ல, தத்துவசாஸ்திரிகளின் சங்கத்தையே குறிக்கலாம்.

தெசலோனிக்கேயாவிலுள்ள கிறிஸ்தவர்களைக் குறித்துப் பவுல் அதிக மனக்கவலையுள்ளவரானதால், அத்தேனே பட்டணத்தினின்று அவன் தீமோத்தேயுவை அவ்விடத்திற்கு அனுப்பினான். 1 தெச 3[1]. அதுவுமல்லாமல் அவன் சீலாவையும் மக்கெதோனியாவுக்கு (அநேகமாய் பிலிப்பி பட்டணத்துக்கு) அனுப்பினான். இவர்கள் இருவரும் கொரிந்து பட்டணத்தில் அவனிடம் திரும்பி வந்து சேர்ந்தார்கள். அப் 18[5]. ஏனெனில் அவன் அத்தேனே பட்டணத்தை விட்டு, கொரிந்துவுக்குப் போயிருந்தான். தேவ தரிசனத்தால் அவன் அப்பட்டணத்தில் ஒன்றரை வருஷக்காலமாய்த் தங்கி, ஆக்கில்லா பிரிஸ்கில்லாள் என்பவர்களோடிருந்து தன்னுடைய தொழிலைச் செய்தான். அவ்வூரில் அநேகர் சுவிசேஷத்தை ஏற்றுக்கொண்டு விசுவாசித்தார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் ஏழைகளாயிருந்தார்களாம். 1 கொரி 1[26].

அங்கிருந்து பவுல் தெசலோனிக்கேயருக்கு இரண்டு நிருபங்களை எழுதி அனுப்பினான். 1 தெச 3[6] அப் 18[5].

கொரிந்து பட்டணத்தில் பவுல் முதலில் யூதருக்குப் பிரசங்கித்து, அவர்கள் தன்னை எதிர்த்துப் பேசினதினால் அவர்களை விட்டு, யுஸ்து என்பவனுடைய வீட்டிலே பிரசங்கஞ்செய்தான். ஆயினும் ஜெபஆலயத் தலைவனாகிய கிறிஸ்பு என்பவன் விசுவாசித்தான். அப் 18[8]. இதைக்கண்டு யூதர்கள் சினங்கொண்டு கல்லியோன் என்னும் ரோம அதிபதியிடம் பவுலின்மேல் பிராதுசெய்தார்கள். கல்லியோன் அப்பிராதைத் தள்ளினான் என்று யூதர்கள்பேரில் எப்போதும் விரோதங்கொண்டிருக்கும் கிரேக்கர் கண்டு, அப்பிராதைச்செய்த ஜெபஆலயத் தலைவனாகிய சொஸ்தேனேயைப் பிடித்து அடித்தார்கள். அப் 18[17]. 1 கொரி 1[1]–ல் சொல்லப்பட்ட சொஸ்தேனே இவன்தானானால் அதற்கப்புறம் இவன் கிறிஸ்தவனாயிருக்கவேண்டும்.

அநேகநாள் சென்றபின், பவுல் கொரிந்தைவிட்டு ஆக்கில்லாவையும் பிரிஸ்கில்லாளையும் கூட்டிக்கொண்டு, கெங்க்ரேயா என்னும் துறைவழியாக எபேசு பட்டணத்துக்குப் போனான். அப் 18[18.19]. அவர்களை அங்கே விட்டுவிட்டு செசரியா பட்டணத்துக்கும் எருசலேம் பட்டணத்துக்கும் போய், அந்தியோகியாவுக்கு வந்தான். எருசலேமுக்குப் போன நாலாவது முறை இதுவே. (கி–பி. 53.)

அநேகமாய்த் தீமோத்தேயு எபேசு பட்டணத்தினின்று தான் பிறந்த ஊராகிய லீஸ்திராவுக்குப் போய், கலாத்தியா சபைகளில் யூத கட்சிக்காரர் உண்டாக்கின தீமை

களைக் கண்டு, அச்சங்கதிகளைப் பவுலுக்கு அறிவிக்கும்படியாக அந்தியோகியாவுக்கு வந்தான். அவைகளைக்கேட்டு பவுல் அவர்களுக்கு நிருபத்தை எழுதி, தானும் அவ்விடம் போகவேண்டும் என்று தீர்மானித்து அந்நிருபத்தைத் தீமோத்தேயுவிடம் கொடுத்து முந்தி அனுப்பினான்.

**ix. மூன்றாம் சுவிசேஷப் பிரயாணம்.** அப் $18^{23}$ $21^{16}$ (கி–பி. 53–57.)

**அந்தியோகியாவிலே** சிலகாலம் சஞ்சரித்தபின்பு பவுல் **கலாத்தியா** நாட்டிலேயும் **பிரிகியா** நாட்டிலேயும் திரிந்து, சீஷரைச் சந்தித்து, மேடான தேசங்கள்வழியாய் **எபேசு**வுக்கு வந்தான். அப் $19^{1}$ கொலோ $2^{1}$ (பேதுருவோடு அவன் செய்த தர்க்கம் அந்தியோகியாவை விட்டு நீங்குவதற்கு முன் நடந்ததாகச் சிலர் நினைக்கிறார்கள். கலா $2^{11}$.).'யோவான் கொடுத்த ஞானஸ்நானம்' பெற்ற பன்னிரண்டுபேரை எபேசுவில் சந்தித்து, அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெறுவதற்கு அவர்கள்மேல் கைகளை வைத்தான். அவ்விடத்திலே அவன் இரண்டரை வருஷக்காலமாகச் சஞ்சரித்து, அநேகரைக் குணப்படுத்தி, அங்கிருந்து மக்கெதோனியா வழியாக எருசலேமுக்குப் போகவும், அப்புறம் ரோமாபுரிக்கும் ஸ்பானியா தேசத்துக்கும் போகவும் வேண்டும் என்று தீர்மானித்திருந்தான். அப் 19 அதி. ரோம $1^{10-12}$ $15^{24.28}$. அதற்குமுன்பே அவன் தீமோத்தேயுவை மக்கெதோனியாவுக்கும் (அப் $19^{22}$) கொரிந்து பட்டணத்துக்கும் (1 கொரி $4^{17}$ $16^{10}$) அனுப்பி, சொஸ்தெனே என்பவனைத் தன்னோடிருக்க நிறுத்திக்கொண்டான். 1 கொரி $1^{1}$. தீமோத்தேயு போனபின் (1கொரி $4^{17}$) **பவுல் கொரிந்தியருக்கு முதலாம் நிருபத்தை** எழுதி, கொரிந்து சபையார் தன்னிடம் அனுப்பிய ஸ்தேவான் முதலியவர்கள் மூலமாய் அதை அனுப்பினான். 1 கொரி $16^{17}$.

அதற்குமுன் பவுல் ஓர் நிருபத்தை எழுதியிருந்ததாகக் காணப்படுகிறது. 1 கொரி $5^{9}$. கொரிந்து சபையிலே சில ஒழுங்கீனங்கள் இருந்தமையால் அவைகளைப்பற்றி அச்சபையாரைக் கண்டிக்கவும், அவர்கள் கலியாண விஷயங்களைப்பற்றிக் கேட்ட கேள்விகளுக்கு ஆலோசனை சொல்லவும் இந்நிருபத்தை எழுதினான். 1 கொரி $1^{11}$ 5, 6, 11 அதி. அவ்வூரிலே அப்பொல்லோ என்பவன் வேலைசெய்து வந்திருந்தான். அப் $18^{24}$–$19^{1}$ 1 கொரி $3^{6}$. பவுல் அவர்களைக் காணவருவான் என்று சொல்லுகிறான்: 1கொரி $16^{5}$. அச்சமயத்தில் அவன் அங்கே போனானோ இல்லையோ என்று திட்டமாய்த் தெரியாது. 2 கொரி $1^{16-23}$ பார்த்தால், பவுல் தனது தீர்மானத்தை மாற்றினதாகக் காணப்படுகிறது.

**எபேசு** பட்டணத்திலே பவுல் அநேக பாடுகளைப்பட்டு, மரணத்துக்கு ஏதுவான வைகளை அநுபவித்துவந்தாலும் (2 கொரி $1^{8}$) அதிக ஊக்கமாய் வேலைசெய்து மாயவித்தைக்காரரையும் குணப்படுத்தி, கடைசியாய்த் தெமேத்திரியு என்பவன் செய்த கலகத்தினால் அப்பட்டணத்தை விட்டுவிட வேண்டியதாய் நேரிட்டது. அப். $19^{23-41}$.

எபேசுவை விட்டு துரோவா என்னும் துறைவழியாக மக்கெதோனியாவுக்கு வந்து (2கொரி $2^{12}$) கொரிந்து பட்டணத்தினின்று தீத்து என்பவன் தன்னிடம் வரக் காத்திருந்தான். மக்கெதோனியாவிலிருந்து அவன் **கொரிந்தியருக்கு இரண்டாம்** நிருபத்தை எழுதி, அதைத் தீத்துவினிடம் கொடுத்து அனுப்பினான். 2 கொரி $7^{6.7.}$ $8^{16-18}$. மக்கெதோனியாவிலிருந்தபோது அவன் திரும்பவும் உபத்திரவத்தை அநுபவித்தான். 2கொரி $7^{5}$.

மக்கெதோனியாவை விட்டு, **கொரிந்து** பட்டணத்துக்கு வந்து அங்கே மூன்று மாதக்காலமாக சஞ்சரித்தான். அப் $20^{2.3.}$ அங்கிருக்கையில் அவர் **ரோமருக்கு** நிருபத்தை எழுதி, அதைக் கொரிந்து பட்டணத்தின் துறையாகிய கெங்கிரேயா ஊர் சபையின் ஊழியக்காரியாகிய பெபேயாள் மூலமாய் அனுப்பினான். ரோம $16^{1}$.

கப்பலேறி சீரியாவுக்குப்போக பவுல் மனமாயிருக்கவே யூதர்கள் தனக்கு விரோதமாய் உபாயங்களைச் செய்துவந்தநிமித்தம் (அநேகமாய் அவனைக் கப்பலிலே கொலைசெய்யும்படியாக யோசனையாயிருந்தார்கள்.), பவுல் மக்கெதோனியா வழியாக போய், **பிலிப்பி** பட்டணத்துக்கு வந்தான். அப் $20^{6}$. கொரிந்து பட்டணத்தில் அவனோடிருந்தவர்கள் முந்தி கப்பல் ஏறி **துரோவா**வுக்குப் போய் பவுல் வரக் காத்திருந்தார்கள். அப் $20^{4.5.}$ பிலிப்பி பட்டணத்திலிருந்த லூக்கா என்பவனைக் கூட்டிக்கொண்டு (அப் $20^{6}$ 'நாங்கள்.') **துரோவா**வுக்கு வந்து, மரித்துப்போன ஐத்திகு என்னும் வாலிபனை உயிரோடு எழுப்பி (அப் $20^{8-12}$), பின்பு கப்பலேறி **மிலேத்து**வுக்கு வந்து, **எபேசு** சபையின் மூப்பரை வரவழைத்து அவர்களுக்குப் பிரசங்கஞ்செய்தான். அப் $20^{18-35}$. திரும்பவும் கப்பலேறி **தீரு, செசரியா** பட்

டணங்கள் வழியாக எருசலேமுக்கு வந்தான். செசரியா பட்டணத்தில் அகபு என்கிற தீர்க்கதரிசி எருசலேமிலே பவுலுக்கு நேரிடப் போகிறவைகளைச் சொன்னான். அப் $21^{10.11}$. ஆயினும், பெந்தெகொஸ்தே நாளிலே எருசலேமிலே யிருக்கவேண்டும் என்று தான் தீர்மானித்தபடி (அப் $20^{16}$) அவ்விடம் வந்து மினாசோன் என்பவனுடைய வீட்டிலே தங்கினான்.

**x. எருசலேமுக்குப் போன ஐந்தாவது சமயம்.** அப் $21^{17}$–$23^{30}$ (கி–பி. 57.)

மூன்றாவது சுவிசேஷப் பிரயாணஞ்செய்கையில் பவுல் போன இடங்களில் எல்லாம், எருசலேமிலுள்ள ஏழைகளுக்காக காணிக் [illegible] வந்ததினால், சேகரிக்கப்பட்ட அப்பணத்தை மூப்பர் கையிலே கொடுக்கும்படியாக எருசலேமுக்கு வந்தான். அதுவுமல்லாமல் அவன் தான் செய்தவைகளை யெல்லாம் அவர்களுக்கு அறிவித்தான். எருசலேமிலுள்ள யூதக்கிறிஸ்தவர்களில் சிலர் இன்னும் அவனைப்பற்றித் தப்பபிப்பிராயங்கொண்டவர்களா யிருந்ததினால் அவ்வபிப்பிராயத்தை நீக்கும்படி யூத நியாயப்பிரமாணத்திற்கிசைவான சில சடங்குகளைக் கைக்கொண்டு தேவாலயத்துக்குப் போகும்படி மூப்பர் அவனுக்கு ஆலோசனை சொன்னார்கள்; அப் $21^{20-24}$. அந்த ஆலோசனையின்படி பவுல் தேவாலயத்திலிருக்கும்போது, ஆசியாநாட்டிலிருந்து வந்த சில யூதர்கள் கலகம்பண்ணி, அவனைப் பிடித்துக் கொலைசெய்யும்படியாக ஜனங்களை ஏவினார்கள். ரோமபோர்ச்சேவகர்கள் அக்கலகத்தைக் கண்டு அவனைப் பிடித்துக் கட்டினார்கள். கோட்டைக்குள் போகிறதற்குமுன் 'எபிரெய' பாஷையிலே ஜனங்களோடு பேசினான். தான் புறஜாதியாருக்கு அனுப்பப்பட்டதாக அவன் சொன்ன வார்த்தையை ஜனங்கள் கேட்டவுடன், திரும்பவும் கலகம் உண்டாயிற்று. கோட்டைக்குள்ளே போர்ச்சேவகர்கள் அவனைச் சவுக்கால் அடித்துவிசாரிக்கப்போகிறசமயத்தில் அவன் இரண்டாவதுமுறை தனது ரோம பிரஜாசிலாக்கியத்தை முன்னிட்டு அபயமிட்டான்.

மறுநாள் காலையில் பவுல் சனெதிரீம் (*Sanhedrim*) என்கிற யூதருடைய ஆலோசனைச் சங்கத்துக்கு முன்பாக நிறுத்தப்பட்டான். அச்சங்கத்தில் அநேகர் பரிசேயராயிருந்தார்கள் என்று அறிந்து பரிசேயருக்கும் சதுசேயருக்கும் வாக்குவாதம் உண்டாகும்படி பவுல் தான் பரிசேயன் என்று சொன்னான். அந்நாள் இராத்திரியிலே இயேசு பவுலுக்குத் தரிசனமாகி அவனைத் திடப்படுத்தினார். அப் $23^{11}$. யூதர்கள் அவனைக் கொலைசெய்யும்படியாகச் செய்த கட்டுப்பாட்டை அவனுடைய சகோதரியின் மகன் அறிந்து அதை அவனுக்கும் சேனாதிபதிக்கும் தெரிவித்தபடியால் சேனாதிபதி பவுலைச் செசரியா பட்டணத்திலிருக்கும் பேலிக்ஸ் என்னும் தேசாதிபதியினிடத்தில் அனுப்பினான். ஐந்துநாள் சென்றபின் யூதர்கள் வந்து பவுலின்மேல் பிராதுபண்ணி அவன் எங்கும் கலகம் பண்ணினவன் என்று சொன்னார்கள். இவ்விஷயமாக பவுல் ஐந்துமுறை பிரதிவாதம் செய்யவேண்டியதாயிற்று. அவையாவன:—(1) கோட்டையின் படிகளின்மேல் நின்று ஜனங்களுக்கு முன்பாக. அப் $21^{40}$. (2) ஆலோசனைச் சங்கத்துக்கு முன்பாக. $23^{1}$. (3) பேலிக்ஸ் என்பவனுக்கு முன்பாக. $24^{10}$. (4) பெஸ்து என்பவனுக்கு முன்பாக (இராயனுக்கு அபயமிட்டகாலத்தில்). $25^{10}$. அக்கிரிப்பாவுக்கு முன்பாக. $26^{2}$.

ரோம அதிகாரிகள் பவுல் குற்றமற்றவன் என்று தீர்மானித்திருந்தும் யூதருக்குள் கலகமுண்டாகாதபடிக்கு அவனை விடுதலைபண்ணப் பயந்து, இரண்டு வருஷமாக செசரியா பட்டணத்தில் அவனைக் காவலில் வைத்துக் கடைசியாய் அவன் கேட்டுக்கொண்டபடியே இராயனிடம் அவனை அனுப்பினார்கள். அப் $23^{31}$–$26^{32}$.

**xi. ரோமாபுரியில் சிறைச்சாலையில் இருத்தல்.** அப் 27, 28 அதி. இத்தாலியா தேசத்துக்கு லூக்காவும் அரிஸ்தர்க்குவும் பவுலோடு போனார்கள். $27^{2}$ (கி–பி. 59). இக்கப்பல் யாத்திரையை லூக்கா அதிக திட்டமாய் விவரிக்கிறான். மீறாப் பட்டணத்தில் எகிப்து தேசத்திலிருந்து இத்தாலியாவுக்குத் தானியத்தைக் கொண்டுபோகிற 'சர்க்கார்' கப்பல் ஒன்றிலே ஏறிப்போனார்கள். வெகுகாலம் சென்று மாரிகாலம் சமீபமானபோது யாத்திரைசெய்யத் தலைப்பட்டு கப்பற்சேதத்தில் அகப்பட்டார்கள். இச்சம்பவத்தின் சரித்திரத்தினால் பவுலுக்கிருந்த ஞானமும் தைரியமும் பரிஷ்காரமாய் விளங்குகிறது.

அவர்கள் மெலித்தா (*Malta*) என்னும் தீவிலே விழுந்து கரைசேர்ந்து அங்கே மூன்று மாதமாகத் தரித்திருந்து, புபிலியு என்பவனால் உபசரிக்கப்பட்டுத் திரும்பவும் கப்பல் ஏறிப் புத்தேயோலி என்னும் பட்டணத்தில் இறங்கி, கரைவழியாய் ரோமாபுரிக்குப் போனார்கள். அவ்விடத்திலுள்ள கிறிஸ்தவர்கள் பவுல் வருகிறதைப்பற்றிக் கேள்விப்பட்டு அவனைச் சந்திக்க மூன்று சத்திரம் என்கிற இடம்வரையும் எதிர்கொண்டு வந்தார்கள். (கி–பி. 60.)

இதன்பிறகு பவுல் ரோமாபுரியில் இரண்டுவருஷகாலமாய் தான் வாடகைக்கு வாங்கின வீட்டிலே தன்னைக் காத்திருந்த சேவகனுடன் சஞ்சரித்து சுவிசேஷவேலை செய்தான். அப் $28^{30-31}$ பிலி $1^{7-13}$ கொலோ $4^{3}$ எபே $3^{1}$ முதலானவை. (கி–பி. 60. 61.)

பவுல் ரோமாபுரியிலிருக்கையில் நாலு நிருபங்களை எழுதினான். இவைகளில் எபேசியருக்கு எழுதின நிருபமும் கொலோ $4^{16}$–ல் சொல்லப்பட்ட 'லவோதிக்கேயாவிலிருந்து வரும் நிருபமும்' ஒரே சபைக்கு எழுதப்படாமல் இரண்டொரு சபைகளுக்கு எழுதப்பட்ட ஒரே நிருபமே. கொலோசெயருக்கு எழுதின நிருபத்தில் தான் அவர்களை இன்னும் சந்திக்கவில்லை என்று சொல்லுகிறான். $2^{1}$. அச்சபையிலே கள்ள உபதேசம் நுழைந்திருக்கிறதைக் கேட்டு எச்சரிப்பதற்கு இந்நிருபத்தை எழுதினான். அதே சமயத்தில் பிலேமோன் என்பவனுக்கு எழுதி கொலோசெ பட்டணத்துக்குப் போனவர்கள் கையில் கொடுத்தனுப்பினான். அவர்களில், பிலேமோனுக்கு அடிமையாயிருந்து, ஓடிப்போய்ப் பவுலால் குணப்படுத்தப்பட்ட ஒநேசிமு என்பவன் ஒருவன். பிலே $1^{10}$ கொலோ $4^{9}$. பிலேமோன் அவனைத் திரும்பவும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று பவுல் மன்றாடுகிறான்.

பிலிப்பியருக்கு எழுதின நிருபத்தில் பவுல் இவர்கள் தன்னுடைய அவசரத்துக்கு எப்பாப்பிரோதீத்துவின் கையால் சகாயம் அனுப்பியிருந்தார்கள் என்று சொல்லுகிறான். சபையிலே பிரிவினை உண்டென்பதைக் கேட்டு இதை எழுதி, தான் சீக்கிரமாக விடுதலைப்பெற்று அவர்களிடம் போவான் என்று நம்பினான். பிலி $2^{24}$ பிலே $1^{22}$.

**xii. பிந்தின ஜீவிய சரித்திரம்.** (கி–பி. 61–67) தீமோத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டு நிருபங்களையும், தீத்துவுக்கு எழுதப்பட்ட நிருபத்தையும்கொண்டு பவுலின் பிந்தின ஜீவியச் சரித்திரத்தைப்பற்றி நாம் சிற்சில காரியங்களை அறியலாம். ரோம $15^{24}$ பார்த்தால் பவுல் ஸ்பானியா தேசம்போக விருப்பமாயிருந்தான் என்பதைக் காண்கிறோம். அவன் அப்படியே போனான் என்று ஓர் பாரம்பரை உண்டு: அதற்கு அத்தாட்சி ஒன்றுமில்லை.

பிலி $2^{24}$–ல் பார்த்தால் பவுல் விடுதலை பெற்றால் அவ்விடம் போக உத்தேசித்திருந்தான் என்று பார்க்கிறோம். அநேகமாய் அவன் அப்படியே செய்தான். அவன் கொரிந்துபட்டணம் போய், எரஸ்து என்பவனை அங்கே விட்டு (2 தீமோ $4^{20}$), சின்ன ஆசியாவின் கரைக்குச் சமீபமாய்க் கப்பல் யாத்திரை செய்து, 'துரோப்பீமுவை மிலேத்துவில் வியாதிப்பட்டவனாக' விட்டுவிட்டு, தீமோத்தேயுவை எபேசுவிலுள்ள சபைக்குக் கண்காணியாக ஏற்படுத்தி அவ்வூரிலே விட்டுவிட்டான். 1 தீமோ $1^{4}$. அவன் துரோவாவுக்குப் போய் சில சாமான்களை அங்கே வைத்துவிட்டு, மக்கெதோனியா நாட்டுக்குப் போனான். 2 தீமோ $4^{13}$ 1 தீமோ $1^{4}$.

இந்தச் சம்பவங்கள் எல்லாம் ஒரே யாத்திரையிலே நடந்திருக்குமோ இல்லையோ என்று தெரியாது.

பவுல் இன்னொரு சமயத்தில் கிரேத்தாத் தீவிலே தீத்துவை விட்டுவிட்டான். தீத் $1^{5}$. அதற்கப்புறம் கிரேக்கு தேசத்திய நிக்கொப்போலி என்னும் ஊரிலே மாரிகாலத்தைக் கழிக்க மனதாயிருந்தான். தீத் $3^{12}$. அங்கே போய்ச் சேராததற்குமுன் தீமோத்தேயுவுக்கு முதலாம் நிருபத்தையும் தீத்துவுக்கும் நிருபத்தையும் எழுதினான்.

பவுல் தீமோத்தேயுவுக்கு இரண்டாம் நிருபத்தை எழுதியகாலத்தில் திரும்பவும் ரோமாபுரியில் சிறைச்சாலையிலிருந்தான் என்று அதில் அறிகிறோம். 2 தீமோ $2^{9}$. அக்காலத்தில் லூக்காவைத்தவிர வேறொருவனும் அவனோடிருந்ததில்லை. மாற்கு என்பவனைக் கூட்டிக்கொண்டு, துரோவாவிலே விட்டுவிட்ட சாமானை எடுத்துக்கொண்டு வரவேண்டும் என்று தீமோத்தேயுவை வேண்டிக்கொண்டான். 2 தீமோ 4 $^{9-13}$. தான் தப்பித்துக்கொள்ளமாட்டான் என்று நிச்சயங்கொண்டவனாக காணப்படுகிறான். $4^{6}$.

**xiii. பவுலின் மரணம்.**

ரோமாபுரியில் நேரோ என்னும் இராயனால் உண்டான துன்பங்களில் ஒன்றில் அவன் சிரச்சேதம் பண்ணப்பட்டான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. நேரோ காண்க (கி–பி. 67). அதற்குப் பூர்வீக பாரம்பரியம் உண்டு. ரோமாபுரிக்கு மூன்றுமைல் தூரத்திலுள்ள ஓர் இடத்தில் சிரச்சேதம் பண்ணப்பட்டு, அந்நகரத்துக்குச் சமீபமாய் அடக்கம் பண்ணப்பட்டான் என்று வேறுசிலர் சொல்லுகிறார்கள். அவன் அடக்கம் பண்ணப்பட்டதாக அவர்கள் சொல்லுகிற இடத்தில் ஓர் கோவில் கட்டப்பட்டிருக்கிறது.

**xiv. தேகத் தோற்றம்.**

2 கொரி $10^{10}$ $11^{6}$–ல் பவுல் தமது சரீரத் தோற்றத்தைக்குறித்து மற்றவர்கள் சொல்லக்கூடிய காரியங்களையே சொல்லிவந்தான். பூர்

வீக பாரம்பரியத்தின்படி அவன் குள்ளனும், கோணற்காலுடையவனுமாயிருந்தான். அதுவுமல்லாமல் அவன் பட்ட பாடுகளின் தழும்புகள் அவனுடைய தேகத்தில் அதிகமாய்க் காணப்பட்டன. கலா 6[17]. தவிர மாம்சத்தில் அவனுக்கு ஓர் 'முள்' கொடுக்கப்பட்டது. 2 கொரி 12[7]. அது இன்னதென்பதைப்பற்றி திட்டமான ஓர் தீர்மானம் இல்லை. அநேகமாய் அது கண்நோய் அல்லது காக்காய் வலிப்பாய் இருந்திருக்கலாம். கலா 4[15] 6[11].

குறிப்பு 1. மூலபாஷையிலே 'எவ்வளவு பெரிதான எழுத்துக்கள்' என்பதே இதற்கு அத்தாட்சி என்று நினைக்கலாம். கலா 6[11]. மேலும் கலா 4[14]-ல் 'அரோசியாமல்' என்கிற பதத்திற்கு மூலபாஷையிலே 'காறித்துப்பாமல்' என்றர்த்தமாம். அதாவது காக்காய் வலி அதிக அரோசிகரமான ஓர் வியாதியானதால் பூர்வீகத்தில் அவ்வியாதியையுடைய ஓர் மனுஷனைக் கண்டவர்கள் எல்லாரும் துப்புவார்களாம். பவுல் தேகத்தில் அவ்வளவு சவுந்தரியமும் பலமுமுள்ளவனாயிராவிட்டாலும், ஆவியிலே மற்றெல்லா அப்போஸ்தலரையும்விட பெலனுள்ளவனாயிருந்து, திருச்சபைக்கு உத்தம அஸ்திபாரத்தைப்போட்டு, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைத்தவிர, மற்ற எல்லாரிலும் முதன்மையானவனானான்.

குறிப்பு 2. அப் 16[6]. 'பிரிகியா கலாத்தியா நாடுகள்' என்பது இன்னின்ன விடங்களைக் குறிக்கிறதென்பதைப்பற்றி அதிக தர்க்கமுண்டாயிருக்கின்றது. எப்படியெனில் சின்ன ஆசியாவிலிருந்த நாடாகிய கலாத்தியாவை ரோமர் ஜெயித்து, கலாத்தியா என்னும் ஓர் ரோமராஜதானியிலே அதைச்சேர்த்துக்கொண்டார்கள். ஆகவே அப்போஸ்தலருடைய நடபடிகளில் சொல்லப்பட்ட 'கலாத்தியா' என்பது பழைய கலாத்தியாவோ, ரோமராஜதானியாகிய கலாத்தியாவோ என்கிறதைப் பற்றி அதிக தர்க்கமுண்டாயிற்று. (i) 'கலாத்தியா' என்பது ராஜதானியைக் குறிக்கிறதென்று நிதானிக்கிறவர்கள், கலாத்தியருக்கு எழுதிய நிருபமானது பவுல் தான் செய்த முதல் சுவிசேஷப்பிரயாணத்தில் ஸ்தாபித்த அந்தியோகியா, இக்கோனியா, லீஸ்திரா முதலான சபைகளுக்கு அவனால் எழுதப்பட்டதென்று நினைக்கிறார்கள். இந்த அபிப்பிராயம் 'தென்கலாத்தியக் கோட்பாடு' (*South Galatian Theory*) என்று சொல்லப்படுகிறது. (ii) 'வடகலாத்தியக் கோட்பாடு' (*North Galatian Theory*) என்னும் அபிப்பிராயமுடையவர்கள், இரண்டாம்சுவிசேஷப் பிரயாணத்தில் பவுல் 'ஆசியாவிலே வசனத்தைச் சொல்லாதபடிக்குப் பரிசுத்த ஆவியினாலே தடைபண்ணப்பட்ட' காலத்தில் அவன் வடக்கேபோய், ரோமர் ஜெயித்த நாடாகிய கலாத்தியாவிலே சுவிசேஷத்தைப் பிரசங்கித்துச் சபைகளை ஏற்படுத்தினான் என்று நிதானிக்கிறார்கள். இந்த அபிப்பிராயத்தைக் கொள்ளுகிறவர்கள் கலாத்தியருக்கு எழுதிய நிருபம் எபேசுவிலிருந்தாவது மக்கெதோனியா நாட்டிலிருந்தாவது, அச்சபைகளுக்கு எழுதப்பட்டதென்று உத்தேசிக்கிறார்கள்.

இப்பிரபந்தத்தில் முதல் கோட்பாட்டை ஒட்டி எழுதினோம். கலாத்தியா காண்க.

### III. பவுலின் உபதேசம்.

பரி. பவுல்கொண்ட கொள்கைகளையும் கோட்பாடுகளையும் அவன் எழுதிய நிருபங்களைக்கொண்டு அறிகிறோம். ஆயினும், அவைகளில் கண்டிருக்கும் சித்தாந்தங்களை அவன் கிறிஸ்தவ சமயாசாரநூலாக ஒழுங்காகவும் வரிசைக்கிரமமாகவும் எழுதாமல், அந்தந்த சபையின் அவசரத்துக்கும் ஆவிக்குரிய வளர்ச்சிக்கும் தக்கபடி எழுதினான். நிருபம் காண்க. மேலும் அந்நிருபங்களை வாசித்தவர்கள் கிறிஸ்தவமார்க்கத்தின் மூலாதாரமான சங்கதிகளை அறிந்தும் விசுவாசித்துமிருந்தார்கள் என்றும், கிறிஸ்துவின் தெய்வீகம், பரிசுத்த ஆவியின் தெய்வீகம், இயேசுகிறிஸ்து செய்த பிராயச்சித்தம், அவர் ஏற்படுத்திய ஞானஸ்நானம், நற்கருணை என்னும் சாக்கிரமெந்துக்களாகிய (*Sacrament*), இவைகளையெல்லாம் அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள் என்றும் பாவித்து எழுதினான் என்பதையும் காண்கிறோம். 2 தெச 2[15] 3[6] 1 கொரி 11[2] ரோம 3[25.26] 5[17].

1 கொரி 15[3-5]-லும் 1 தீமோ 3[16]-லும் ஒருவிதமான விசுவாசப்பிரமாணம் உண்டென்று சிலர் நினைக்கிறார்கள். அக்காலத்திய பக்திமான்கள் தாங்கள் விசுவாசித்தவைகளை ஓர் பிரமாணத்தில் அடக்கியிருப்பார்களோ என்பதைப்பற்றி அதிக சந்தேகம்.

#### i. தேவனுடைய பிதாத்துவம்.

பழைய ஏற்பாட்டிலே கடவுள் இஸ்ரவேல் ஜனங்களுக்குப் பிதாவாகச் சொல்லப்படுகிறார். இதைப்பற்றி அப்போஸ்தலனாகிய பவுலின் உபதேசம் என்னவென்றால்:

(*a*) கடவுள் இயேசுகிறிஸ்துவுக்குப் பிதாவாயிருக்கிறார். 2 கொரி 1[3] எபே 1[3] முதலானவை.

இயேசு தேவனுடைய குமாரன். ரோம $1^{4}$ 1 கொரி $1^{9}$ எபே $4^{11}$ 1 தெச $1^{.10}$. பரி. பவுல் ரோம $8^{32}$–ல் 'தம்முடைய சொந்த குமாரன்' என்பதினால், கிறிஸ்து தேவனோடு ஒரே தன்மையுடையவர் என்பதைக் குறிக்கிறான். மாற் $1^{11}$ யோவா $3^{16}$ காண்க.

(*b*) **கடவுள் எல்லாருக்கும் பிதாவாயிருக்கிறார்.** எபே $4^{6}$ $3^{14.15}$ கலா $1^{4}$ ('நம்முடைய பிதா' பொதுவாக.). எபே $1^{17}$. ('மகிமையின் பிதா.')

(*c*) **கடவுள் விசேஷமாய்க் கிறிஸ்தவர்களுக்குப் பிதாவாயிருக்கிறார்.** அவர்களுக்குப் புத்திரசுவிகாரத்தின் ஆவியை அருளிச்செய்கிறார். ரோம $8^{15-23}$ கலா $3^{26}$ $4^{6}$ எபே $1^{5}$.

நாம் சுவிகாரத்தினால் பிள்ளைகளாகிறோம்: கிறிஸ்துவோ ஏக சுதனாயிருக்கிறார். 'என் பிதா' 'உங்கள் பிதா' என்று சொல்லி (யோவா $20^{17}$) இயேசு தாமே இந்தப் பேதத்தை விளக்கினார். புத்திர சுவிகாரத்தைப்பற்றிப் பேசும்போதெல்லாம் பவுல் இப்பேதத்தை மனதில் வைத்து எழுதினான்.

**2. மனிதன் விழுதல்.**

மானிடர் யாவரும் பாவிகள் என்று பவுல் அடிக்கடி சாதிக்கின்றான். முக்கியமாய் ரோமருக்கு எழுதிய நிருபத்திலே இந்தக் கொள்கையை வற்புறுத்துகிறான். ரோம 1-7 அதி. $1^{18-28}$ $2^{1-16}$ $3^{9}$. 'யாவரும் பாவத்திற்குட்பட்டவர்கள்' இதின் மூலகாரணம் ஆதாம் செய்த பாவமே. ரோம $5^{12}$. ஆயினும் நாம் செய்கிற பாவத்துக்கு நாம் தனித்தனியாய் உத்திரவாதிகளாயிருக்கிறோம். ரோம $1^{20}$. 'பாவத்தின் சம்பளம் மரணம்'. ஆதாம் செய்த பாவத்தினால் நமது அவயவங்களில் 'பாவப்பிரமாணமானது' உண்டாயிருக்கிறது. ரோம $7^{23}$. அதினாலே 'ஜென்ம சுபாவமான' மனுஷனுக்குப் பாவம் செய்வது இயல்பாயிருக்கிறது. இது 'ஜென்ம பாவம்' எனச் சொல்லப்படுகிறது. இந்த ஜென்ம சுபாவமாகிய பாவத்துக்கு நாம் இடங்கொடுக்கிறதற்குச் சாத்தானும் அவனுடைய தூதர்களும் நம்மை தூண்டிவிடுகிறார்கள். 1 கொரி $7^{5}$ எபே $6^{12}$. **பாவம்** காண்க.

**3. கிறிஸ்துவின் மனுஷாவதாரம்.**

சர்வ சாதாரணமாயிருக்கிற பாவத்தை நீக்கும்பொருட்டாகக் கிறிஸ்து மனிதனானார். இதிலே பிதாவானவருடைய அன்பும், குமாரனுடைய அன்பும் விளங்குகின்றது. ரோம $8^{32}$ கலா $2^{20}$ எபே $5^{2}$.

பவுல் பலதடவைகளில் கிறிஸ்துவினுடைய தெய்வீகத்தையும் மனுஷீகத்தையும் சாதிக்கிறான். ரோம $1^{5}$ $8^{3}$ $9^{5}$ பிலி $2^{6-8}$ 2 கொரி $9^{8}$. அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாயிருக்கிறதினால், அவர் சகலத்துக்கும் முந்தினவர் என்பது விளங்குகிறது. 1 கொரி $8^{6}$ கொலோ $1^{16-20}$ (யோவா $1^{3}$ காண்க). கொலோ $1^{15}$–ல் அவருக்கும் பிதாவுக்கும் இருக்கிற சம்பந்தத்தையும், 2 கொரி $4^{4}$–ல் அவருக்கும் சிருஷ்டிக்கும் இருக்கிற சம்பந்தத்தையும் காண்கிறோம். அவர் பிதாவாகிய தேவனுடைய குடும்பத்தில் முதற்பேறானவரானதால், அந்தக் குடும்பத்துக்குத் தலைவரும், அதை ஆளுகை செய்கிறவருமாயிருக்கின்றார். ரோம $8^{29}$.

ஒவ்வொரு நிருபத்திலும் பவுல் இவ்விதமாய்க் கிறிஸ்துவின் தெய்வீகத்தை விளக்கிக் காட்டுகிறான். 1 தீமோ $3^{16}$ தீத்து $2^{13}$. அவர் உபதேசித்த எல்லாவற்றிற்கும் அதுவே அஸ்திபாரமாயிருந்தது. அதிலேதான் அவன் கிறிஸ்துவின் அடிமையானான். ரோம $1^{1}$.

**4. கிறிஸ்து செய்த பிராயச்சித்தம்.** 1 கொரி $15^{22.45}$ ரோம $5^{14-17}$. மானிடர் மகா மேலான நிலைமையில் சிருஷ்டிக்கப்பட்டாலும், ஆதாமின் பாவத்தினால் அந்நிலைமையை இழந்தார்கள். அந்நிலைமைக்குத் திரும்பவும் மானிடரைக் கொண்டுவரும்படிக்குக் கிறிஸ்து வானத்திலிருந்துவந்த 'இரண்டாம் மனுஷன்'க உலகத்தில் தோன்றி (1 கொரி $15^{47}$), எல்லாவற்றையும் தமக்குள்ளாகக் கூட்டி (எபே $1^{9}$), மனுமக்கள் அடையக்கூடிய நிலைமையின் மகத்துவம் இன்னதென்பதை வெளிப்படுத்தினார். நாம் இழந்த அந்த ஸ்திதியைத் திரும்ப அடைவதற்கும், பராபரன் பாவியின்பேரில் கொண்டிருந்த நீதியுள்ள கோபத்தைத் தணிப்பதற்கும் அவர் தம்மைக் கிருபாதாரபலியாக ஒப்புக்கொடுத்தார். ரோம $3^{26}$ (1 யோவா $2^{2}$ $4^{10}$ காண்க). **பாவநிவாரணம்** காண்க.

(*a*) நம்முடைய இரட்சிப்புக்கு இரத்தம் சிந்துதலே அவசியம். ரோம $5^{9}$ எபே $1^{7}$ $2^{13}$ கொலோ $1^{14.20}$. (எபி $9^{22}$ காண்க.)

(*b*) கிறிஸ்துவின் மரணத்தினால் தேவனோடு ஒப்புரவாக்கப்பட்டோம். ரோம $5^{10}$ 2 கொரி $5^{18}$. அவர் நம்மோடு ஒப்புரவாக்கப்பட்டார் என்று வேதத்தில் எங்கும் சொல்லப்படவில்லை. அவர் நித்திய சதாகாலங்களிலும் சர்வ அன்புடையவராயிருப்பதால் அவருக்கு மனமாறுதல் அவசியமில்லை. நாமோ பாவத்தால் அவருக்குச் சத்துருக்களானதால் அவரோடு ஒப்புரவாக்கப்படவேண்டியதவசியமே. கொலோ $1^{21}$. இந்த ஒப்புரவாக்கப்படுதல் கிறிஸ்துவானவர் செய்த

பிராயச்சித்தத்தினாலுண்டாயிற்று. நம்முடைய பாவங்களை நிவிர்த்தி செய்வதற்கு அவர் தம்மைத்தாமே கிருபாதாரபலியாக மனதார ஒப்புக்கொடுத்தார். கலா $2^{20}$ 1 தீமோ $2^{6}$ தீத்து $2^{14}$. அவர் பாவமற்றவராயிருந்தும் பாவிகளுக்காகத் தம்மை ஒப்புக்கொடுத்தார். 2 கொரி $5^{21}$ 1 கொரி $15^{3}$ கலா $3^{13}$. அவர் செய்த பிராயச்சித்தம் எல்லாருக்கும் உரியது. 2 கொரி $5^{14.15.19}$. எல்லாரும் இரட்சிக்கப்படவேண்டும் என்பது தேவசித்தமாயிருக்கிறது. ஆயினும் இவ் விஷயத்திலே அவர் நமக்குச் சுயாதீன சிலாக்கியத்தைக் கொடுத்திருக்கிறார். அந்தச் சுயாதீனம் ஒருவிதமாய் அவருடைய சர்வாதிகாரத்துக்கு விரோதமானதெனக் காணப்படுகிறது. சில சமயங்களில் பவுல் தேவனுடைய சர்வாதீனத்தையும் வற்புறுத்திப் பேசுகிறான். ஆனாலும் இவ்விரண்டுக்கும் சமாதானம் சொல்ல அவன் எத்தனிக்கவில்லை. ரோம 9-யும் 10-யும் ஒப்பிட்டுப்பார்க்க.

(i) குயவன் தன்னிஷ்டப்படி களிமண்ணை உருவாக்குகிறதுபோல் தேவன் தம்முடைய திருவுளச் சித்தத்தை நிறைவேற்றச் சக்தியும் அதிகாரமுமுள்ளவராயிருக்கிறார். ரோம $9^{21}$. அதற்கு இசைவாக சிலரை முன் குறித்திருக்கிறார். ரோம $8^{29.30}$ $9^{23}$ எபே $1^{4-6}$. ஆனாலும் எல்லாரும் இரட்சிக்கப்படவேண்டும் என்பது அவருடைய திருச்சித்தம். ரோம $11^{32}$ 1 தீமோ $2^{4}$ $4^{10}$.

(ii) எனினும் நாம் தேவனுடைய சித்தத்தை எதிர்க்கக்கூடியவர்களாயிருக்கிறோம். இஸ்ரவேலில் 'மீதியாயிருப்பவர்களை'த் தவிர மற்றுமுள்ள யாவரும் அப்படிச் செய்தார்கள். ரோம $9^{27}$ $11^{1-5}$. நாம் நித்தியஜீவனுக்குச் சுதந்தரராகும்பொருட்டு அழைக்கப்பட்டாலும், அந்தப் பாக்கியத்தை இழந்துவிடக்கூடியவர்களாயிருக்கிறோம். 1 கொரி $9^{27}$.

பராபரன் மனிதனை முன்குறித்திருக்கிறார் என்பதைப் பற்றியும் (*Predestination*) மனுஷனுக்கிருக்கிற சுயாதீன சித்தத்தைப் பற்றியும் (*Free Will*) வேதசாஸ்திரிகள் இரண்டுவிதமான கோட்பாடுகளைக் கைக்கொண்டிருக்கிறார்கள். ஜீவனைத் தெரிந்துகொள்ளுகிறவர்கள் இன்னார் என்றும், அதைத் தெரிந்துகொள்ளாதவர்கள் இன்னார் என்றும் தேவன் ஏற்கனவே அறிந்து, அதைத் தெரிந்துகொள்பவர்களை முன் குறித்திருக்கிறார் என்று சாதிக்கிறவர்கள் அர்மினியன்ஸ் (*Arminians*) என்றும், கடவுள் தம்முடைய இஷ்டப்படி சிலரை ஜீவனுக்கும் சிலரை அழிவுக்கும் முன்குறித்ததால், அந்தக் குறிக்கப்படுதல் எவ்வளவேனும் மாறாது என்று சாதிக்கிறவர்கள் கல்வனிஸ்ட்ஸ் (*Calvinists*) என்றும் சொல்லப்படுகிறார்கள். இவ்விரண்டாம் கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளுகிறவர்கள் இப்போது வெகு சிலர். ரோம $2^{4}$ $11^{22}$-ல் பவுல் தேவனுடைய தயவையும் கண்டிப்பையும் காட்டுகிறான் என்றாலும் கடவுள் ஆக்கினைக்கு ஆட்களை முன் குறித்திருக்கிறார் என்று எவ்விடத்திலாகிலும் சொல்லவில்லை.

பவுல் சில வசனங்களில் கிறிஸ்து செய்த பிராயச்சித்தத்தை மீட்பாகவும் கிரயத்துக்குக் கொள்ளப்படுதலாகவும் பேசுகிறான். 1 கொரி $6^{20}$ $7^{23}$ கலா $3^{13}$ $4^{4}$ தீத்து $2^{14}$ முதலானவை. 2 பேது $2^{1}$ காண்க. இது ஓர் உபமானமானதால் அந்தக் கிரயம் யாருக்குக் கொடுக்கப்பட்டதென்பதைக் கேட்பது வீண் காரியம். அதிலே முக்கியமாய்க் கவனிக்கப்படத்தக்க விஷயமானது, கொடுக்கப்பட்ட கிரயமாகிய கிறிஸ்துவின் இரத்தமே. அவர் செய்த உபகாரம் எவ்வளவு பெரிதென்று இதினாலே அறிந்துகொள்ளுகிறோம். பாவ நிவாரணம் காண்க.

5. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலும் பரமேறுதலும்.

கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் பவுலின் உபதேசத்துக்கு அஸ்திபாரம். 1 கொரி $15^{1-11}$-ல் அது மெய்யாய் நடந்த ஓர் சம்பவம் என்று பல சாட்சிகளைக்கொண்டு ரூபிக்கிறான். அதிலே தான் தமஸ்குவுக்குப்போகிற வழியில் இயேசுவைக் கண்ணாரக் கண்டான் என்று சாதிக்கிறான். 1 கொரி $9^{1}$ காண்க.

உயிர்த்தெழுதல் இல்லையானால் நமது பிரசங்கமும் விசுவாசமும் விருதாவாய்ப்போகும். 1 கொரி $15^{14}$ 1 தெச $1^{10}$ $4^{14}$ 2 தீமோ $2^{8}$ முதலானவைக் காண்க. அப்போஸ்தலருடைய நடபடிகளில் சொல்லப்படுகிற பிரசங்கங்களில் இது முக்கியமான பொருள் என்று காண்கிறோம். அப் $13^{30}$ $17^{31}$ $26^{23}$ $25^{19}$. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலின் வல்லமையினாலே ஒருவன் கிறிஸ்தவஜீவியம் செய்யக்கூடும். பிலி $3^{10}$.

பரத்துக்கு ஏறுதலைப்பற்றி பவுல் பலமுறை பேசுகிறான். எபே $4^{8}$. அவர் மகிமையிலே உயர்த்தப்பட்டிருக்கிறார். பிலி $2^{9}$ 1 தீமோ $3^{16}$. தேவனுடைய வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறார். ரோம $8^{34}$ எபே $1^{20}$ கொலோ $3^{1}$. அவரோடு கூட விசுவாசி உன்னதங்களில் வாசஞ் செய்கிறான். எபே $2^{7}$.

6. **பரிசுத்த ஆவியானவர்.** ரோம $8^{1-27}$–ல் பவுல் தேவாவியானவர் நமக்குள்ளும் நமக்காகவும் செய்கிற கிரியைகளை விவரிக்கிறான். பரிசுத்த ஆவி நமக்குள்ளே வாசஞ்செய்து, நம்மை உயிர்ப்பிக்கிறார். நம்மை வழிநடத்துகிறார். நாம் ஜெபஞ்செய்யும்படி நமக்கு உதவிசெய்து, நமக்காகப் பரிந்து பேசுகிறார். 1 கொரி $3^{16}$ $6^{19}$ ரோம $8^{9-11}$. [இயேசு வாக்குத்தத்தம் பண்ணின 'பரகிலீட்' (*Paraclete*) இவ்விதமான சகாயஞ் செய்வார் என்று, பரகிலீட் என்னும் பதத்தினால் அறிகிறோம். **பரிசுத்தஆவி** காண்க.]

பரிசுத்தஆவி நமக்காகப் பிதாவோடு பரிந்துபேசுகிறதினால், அவர் பிதாவுக்குப் பிரத்தியேகப்பட்ட ஓர் ஆள் என்பது விளங்குகிறது. அவர் துக்கப்படுத்தப் படக்கூடும். எபே $4^{30}$. அவர் கிறிஸ்துவின் ஆவி என்று சொல்லப்படுகிறார். ரோம $8^{9}$. 1 கொரி 12–ல் அவர் மனுஷருக்குள்ளே செய்கிறவைகளைக் காண்கிறோம் (11–ம் வசனத்தைக் காண்க.). அவராலே பிழைக்கிறோம். கலா $5^{25}$ 2 கொரி $3^{17}$–ல் ஆவியானவரும் கிறிஸ்துவும் ஒருவரே (யோவா $14^{16-23}$ மத் $28^{20}$ யோவா $16^{7}$ காண்க.). நாம் கிறிஸ்துவை அறியவும் ஏற்றுக்கொள்ளவும் அவரோடு இணைக்கப்படவும் செய்கிறார். நம்மை ஏவினவர் அவரே. நம்முடைய கிறிஸ்தவ ஜீவியத்தின் ஆரம்பத்திலே அவரிலே ஞானஸ்நானம் பெறுகிறோம். 1 கொரி $12^{13}$. அவர் நமக்கு அளிக்கப்படுகிறார். கலா $3^{5}$ தீத் $3^{7}$ அப் $19^{2.6}$ முதலானவை. 'ஆசீர்வாதம்' கூறுவதில் திரியேகரைக் காண்கிறோம். 2 கொரி $13^{14}$–ல் கிறிஸ்துவின் கிருபையினாலே தேவஅன்பை அறிகிறோம். அந்தக் கிருபையையும் அன்பையும் நமக்குச் சொந்தமாக்கிக்கொள்வதற்கு ஆவியானவருடைய ஐக்கியமும் அவர் செய்கிற கிரியையும் அவசியமே.

7. **விசுவாசத்தினால் நீதிமானாக்கப்படுதல்.**

நீதிமானாக்கப்படுதல் என்பது நியாயஸ்தலத்துக்கடுத்த ஓர் பதம். நியாயாதிபதி ஒருவனைக் குற்றமற்றவன் என்று தீர்த்து, அவனை நீதிமான் என்று சொல்வதுபோல, தேவன் இயேசுகிறிஸ்துவினிமித்தம் நமது பாவங்களை மன்னித்து நம்மை நீதிமான்களாக எண்ணுகிறார். ரோம. $3^{24}$ $8^{33}$. அதினாலே நாம் புதிதாக்கப்பட்டவர்களும் அவர் பார்வையிலே குற்றமற்றவர்களுமாகிறோம். மறுபிறப்பினால் நம்முடைய குணமும் நீதிமானாக்கப்படுவதினால் நம்முடைய நிலைமையும் மாற்றப்படுகிறது. இது விசுவாசத்தினாலாகிறது. ரோம $1^{17}$ $4^{3}$ கலா $3^{6.11}$. யூதர்கள் நம்பின நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினால் இது ஆகிறதில்லை. கலா $2^{16}$ $3^{21.22}$. இலவசமாய் அளிக்கப்படுகிறது. ரோம $3^{24}$. இவ்விதமாய் மனுஷனுக்குப் பாவமன்னிப்புக் கொடுப்பதில் தேவஅன்பு மாத்திரமல்ல, தேவநீதியும் விளங்குகிறது. 2 கொரி $5^{21}$ ரோம $1^{17}$ பிலி $3^{9}$. பாவமன்னிப்பை உண்டாக்கும் விசுவாசமானது பவுலின் ஜீவியத்தை முற்றிலும் மாற்றின கிறிஸ்துவின்மேலுள்ள உயிரும் உறுதியுமான விசுவாசத்தைப்போன்றதா யிருக்கவேண்டும். கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தங்களை விசுவாசித்து வந்ததினால், ஆபிரகாம் நீதிமானாக்கபபட்டதுபோல், இயேசுவைப் பூரணமாய் விசுவாசிக்கிறவன் நீதிமானாக்கப்படுவான். ரோம $1^{4}$ $3^{2}$ $10^{9.17}$. முதலானவை. பவுல் காத்துக்கொண்ட 'விசுவாசம்' இதுவே 2 தீமோ $4^{7}$.

**நியாயப்பிரமாணத்தைப்பற்றி** பரி. பவுல் கொண்ட அபிப்பிராயம் இவ்விஷயத்துக்கு ஒட்டினதாயிருக்கிறது. அது நம்மை கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்துகிற உபாத்தியாயும் காவலாளியாயுமிருந்தும் (கலா $3^{22-29}$) அது சுவிசேஷத்துக்கு தாழ்ந்ததாயும் நிலைவரமற்றதாயு மிருக்கிறது. நியாயப்பிரமாணம் அளிக்கப்படுவதற்குமுன் ஆபிரகாம் வாக்குத்தத்தத்தை அடைந்திருந்தான். கலா $3^{17}$. நியாயப்பிரமாணம் வாக்குத்தத்தத்தைப் போல் தேவனால் நேராய் அருளப்படாமல், தூதர்கள் மூலமாயும் மோசேயின் மூலமாயும் அளிக்கப்பட்டது. கலா $3^{19}$ (அப் $7^{38}$ காண்க.). நியாயப்பிரமாணமானது பாவத்துக்கு வரவேண்டிய தண்டனையைச் சொல்லுகிறதேயன்றி, அத்தண்டனைக்குத் தப்பித்துக்கொள்ளக்கூடிய வழிவகையைச் சொல்லுகிறதில்லை. நியாயப்பிரமாணத்தின் கீழுள்ளவர்கள் சுவிசேஷத்தினால்மாத்திரம் நிவிர்த்திக்கக்கூடிய சாபத்திற் குட்பட்டவர்களாயிருக்கிறார்கள். கலா $3^{10-14}$. நியாயப்பிரமாணமானது ஒழிந்துபோம் என்று மோசே அறிந்து அதற்கு அறிகுறியாயிருந்த தேவதரிசனத்தால் தான் அடைந்த முகப்பிரகாசம் குறைந்துபோகிறதை ஜனங்கள் பாராதபடிக்குத் தன் முகத்தின்மேல் முக்காடு போட்டுக்கொண்டான்.

நாம் அடைகிற பாவமன்னிப்பு இலவசமானதாயிருந்தாலும் அந்த வரம் அநீதியைச் செய்வதற்கு ஏதுவானதாயிருக்கக்கூடாது. ரோம $6^{1-11}$ $3^{8}$. இரட்சிப்பு நியாயப்பிரமா

ணத்தின் கிரியைகளினாலல்ல, விசுவாசத்தினாலே உண்டாகும் என்று பவுல் சொன்னதற்கும், யாக் $2^{14-26}$–ல் சொல்லப்படுகிற போதகத்திற்கும் உள்ளான விபரீதம் கிடையாது. யாக்கோபு சொல்லுகிற விசுவாசம் சுத்த ஜீவியமில்லாத வீண் விசுவாசமே. பவுல் சொல்லுகிற கிரியைகள், அன்பில்லாமல் நியாயப் பிரமாணத்துக்குரிய வெறும் கீழ்ப்படிதலே. மெய் விசுவாசமானது நற்கிரியைகளுக்கு உற்பத்தியாயிருக்கிறதென்பதை இருவரும் ஒத்துக்கொள்ளுகிறார்கள்.

**௮. பரிசுத்தமாக்கப்படுதலும், ஞானனுஷ்டானங்களும்** *(Sacraments)*

பாவமன்னிப்போடுகூட பரிசுத்தமாக்கப்படுதலும் அவசியமே. 2 கொரி $5^{21}$ $7^{1}$. கிறிஸ்து நமக்குள் பிழைத்திருப்பதே பரிசுத்தமாகுதல். கலா $2^{20}$. இது இம்மையிலே ஆரம்பமாகி மறுமையிலே பரிபூரணப்படும். கொலோ $3^{1}$. அது அவரோடு இணைக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ரோ $6^{5}$ பிலி $3^{10}$. (யோவா $6^{53-7}$ $15^{1-8}$ காண்க.)

இந்த இணைக்கப்படுதலுக்கு ஞானஸ்நானமே அடையாளம். ரோம $6^{3-11}$–ல் தண்ணீரில் இறங்குவதும் அதினின்று ஏறுவதும், பாவத்துக்கு மரிப்பதற்கும் புதிய உயிரை அடைவதற்கும் அடையாளமாயிருக்கிறதென்பதைக் காண்கிறோம். கொலோ $2^{12}$ தீத் $3^{5}$ ரோம $6^{3}$. ஞானஸ்நானத்தினால் நாம் கிறிஸ்துவுக்குள்ளாகிறோம். கலா $3^{27}$ 1 கொரி $1^{13-15}$ அப் $19^{5}$. மூலபாஷையில் கண்டிருக்கிறபடி மத் $28^{19}$–ல் திரியேக தேவனுடைய அதிகாரத்தினால்மாத்திரமல்ல, அவருக்குள்ளாகவும் ஞானஸ்நானம் பெறுகிறோம்.

பரிசுத்த நற்கருணை தேவனுக்கும் நமக்குமிருக்கிற இவ்வைக்கியத்துக்கு ஓர் அடையாளமும் ஏதுகரமுமாயிருக்கிறது. அதினாலே கிறிஸ்தவர்கள் ஒருவரோடொருவர் ஐக்கியப்படுவதுமன்றி கிறிஸ்துவினுடைய சரீரத்திற்குப் பங்குள்ளவர்களுமாகிறார்கள். 1 கொரி $10^{16-18}$. ஆதலால் அதை அபாத்திரமாய்ப் புசிக்கிறவன் மகா பாவி. 1 கொரி $11^{23-32}$.

நாம் கிறிஸ்துவோடு ஐக்கியப்படுவது நம்முடைய செயலாயிராமல், கிருபையினால் உண்டாகிறது. கிருபை என்கிற பதத்தை பவுல் பலவிதமாய்ப் பிரயோகிக்கிறான் (கிருபை காண்க.) தேவன் மனுஷர்மேல் வைத்த தயவு அதினாலே குறிக்கப்படும். அந்தத் தயவு நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்துவின் மனிதவதாரத்தினாலே முக்கியமாய் விளங்குகிறது. ரோம $5^{21}$ 1 கொரி $1^{4-6}$. ஆகவே அது இயேசுகிறிஸ்துவின் கிருபை என்று சொல்லப்படுகிறது. 2 கொரி $8^{9}$ $13^{14}$. அதினாலே பாவத்தை மேற்கொள்ளுகிறோம். எபே $4^{7}$. அது எல்லாவற்றிற்கும் போதுமானதாயிருக்கிறது. 2 கொரி 12. அது கூலியாகவாவது கடனாகவாவது கொடுக்கப்படமாட்டாது. ரோம $4^{4}$. நற்கிரியைகளைச் செய்வதினால் அதைச் சம்பாதிக்கவும் முடியாது. ரோம $11^{6}$.

புறஜாதியாருக்குப் பிரசங்கிக்கும்படியான சிலாக்கியத்தை அடைவது கிருபை என்றும், அவர்கள் பெற்றனுபவித்த தேவ உதவி கிருபை என்றும் பவுல் சொல்லுகிறான். 1 கொரி $3^{10}$ 2 கொரி $6^{1}$ எபே $3^{2,8}$ அப் $13^{43}$ முதலானவை.

**9 திருச்சபையும் சர்வலோகத்தாருக்கும் உரித்தான சுவிசேஷமும்.**

யூதமார்க்கத்தமைந்தவர்கள் கிறிஸ்தவர்களாய் இருந்து அம்மார்க்கத்தின் வழியாய்த்தான் எல்லாரும் கிறிஸ்தவ சபையில் பிரவேசிக்கவேண்டும் என்றிருந்தார்கள். அந்த அபிப்பிராயத்தைப் பரி. பவுல் வெகுகாலமாய் எதிர்க்கவேண்டியதாயிருந்தது. ரோமருக்கும், கலாத்தியருக்கும் எழுதப்பட்ட நிருபங்களில் சுவிசேஷம் சர்வலோகத்தாருக்கும் உரியதென்று சாதிக்கிறான். யூதருக்கும் புறஜாதியாருக்கும் மத்தியில் இருந்த நடுச்சுவரைக் கிறிஸ்து தகர்த்தார். எபே $2^{14}$ $3^{3}$.

திருச்சபை ஒன்றே ஒன்று. 1 கொரி $10^{17}$ $12^{31}$ எபே $4^{4}$. அது பரிசுத்தமானது. எபே $5^{27}$. அதிலுள்ளவர்கள் யாவரும் பரிசுத்தவான்களாயிருக்க அழைக்கப்பட்டார்கள். 1 கொரி $1^{2}$. அதைப் பரிசுத்தப்படுத்துகிறவர் கிறிஸ்துவே. எபே $5^{26}$ (ஆயினும் அதிலே அநீதியை நடப்பிக்கிறவர்களும் உண்டு. 1 கொரி 5). அது எல்லாருக்கும் உரியது. கொலோ $1^{21}$ கலா $3^{28}$. அது பொதுவாயும், அப்போஸ்தலருடைய அஸ்திபாரத்தின்மேல் கட்டப்பட்டதாயும் இருக்கிறது. எபே $2^{20}$.

சபைக்கு அறிகுறியான சொற்களாவன: கிறிஸ்துவின் சரீரம். 1 கொரி $12^{27}$ எபே $4^{12}$ $5^{30}$ கொலோ $1^{18,24}$. நாம் அவரோடு இணைக்கப்பட்ட அவயவங்கள். அவரே தலையாயிருக்கிறார். எபே $1^{23}$ ரோ $12^{5}$ 1 கொரி $12^{12}$. சபையானது கிறிஸ்துவுக்கு மணவாட்டி. எபே 5 $^{25-32}$. வெளி $21^{2}$ காண்க. அது தேவனுடைய ஆலயம். 1 தீமோ $3^{15}$ எபே $2^{20}$ $4^{12}$ அது ஒலிவமரம். ரோம 11 $^{13-24}$. முறித்துப்போடப்பட்ட கிளைகள் யூதர்

கள் என்றும், ஒட்டவைக்கப்பட்ட கிளைகள் புறஜாதியார் என்றும் அறிந்துகொள்ளலாம்.

ஆதி திருச்சபையிலே தேவஊழியம் ஒழுங்காய் நடத்தப்பட்டதென்பதைக் காண்கிறோம். அவ்வூழியத்தைச் செய்தவர்கள் யாரெனில்,

i. அப்போஸ்தலர்களும், தீமோத்தேயு, தீத்து என்பவர்களைப்போல் அப்போஸ்தலரால் அனுப்பப்பட்ட பிரதிநிதிகளும். இவர்கள் ஒரேஇடத்தில் வேலைசெய்யாமல் அதிகமாய்ப் பிரயாணஞ் செய்துவந்தார்கள்.

ii. கண்காணிகள் (*Bishops*). இவர்கள் ஒரே இடத்தில் சபையை மேல்பார்வையிட்டார்கள்.

iii. உதவிக்காரர்களும் (*Deacons*). பிலி 1[1] 1 தீமோ 3[8]. மூப்பர்களும் (*Elders, Presbyters*) அப் 11[30] 20[17] முதலானவை. 1 தீமோ 4[14] 3[1] தீத்து 1[7]. மூப்பன் என்பதும் கண்காணி என்பதும் ஒரே உத்தியோகத்தைக் குறிக்கின்றனவென்று நினைக்கிறவர்கள் அநேகர் உண்டு.

தேவ ஊழியர்கள்மேல் கைகள் வைக்கப்படுவதினால் அவர்கள் தங்கள் வேலைக்கு நியமனம் பெற்றார்கள். 1 தீமோ 4[14] 5[22] (அப் 6[6] காண்க). 2 தீமோ 1[6]. அவர்கள் இன்னவகையாய்த் தெரிந்துகொள்ளப்பட்டார்கள் என்று சொல்லப்படவில்லை (அப் 6[5-6] காண்க). தேவ ஊழியக்காரர். (பக். 438 காண்க)

1 கொரி 12[28]–லும் எபே 4[13]–லும் சொல்லப்படுகிறவை உத்தியோகஸ்தர்களையல்ல, தேவன் சபைக்கு அளித்த வரங்களைக் குறிக்கின்றன. விசேஷித்த வரங்களைப் பெற்று ஒழுங்கின்படி நியமிக்கப்படாத ஊழியரும் இருந்தார்கள். ரோம 12[3-9] 1 கொரி 12,13, 14 அதி.

ஒழுங்கீனங்களைச் சீர்திருத்தும்படியான அதிகாரம் தேவஊழியருக்கிருந்தது 1 கொரி 5[5] 1 தீமோ 1[20]. (இதினாலே சபையினின்று தள்ளப்படுதல் குறிக்கப்படும்.)

10. கிறிஸ்வின் இரண்டாம் வருகை.

இயேசுகிறிஸ்து உயிரோடு எழுந்ததுபோல நாமும் கடைசிநாளிலே சரீர உயிர்த்தெழுதலை அடைவோம் என்று பவுல் பல இடங்களில்சொல்லுகிறான். 1 கொரி 15[12-23].

(a) பவுல் எழுதிய முதல் நிருபங்களில் கிறிஸ்து சீக்கிரமாய் வருவார் என்று அவன் நம்பி எழுதினான். 1 தெச 4[13-18] 3[13] பிலி 3[20] 1 கொரி 15[20.22.51] 16[22].

பவுல் தெசலோனிக்கேயருக்கு எழுதிய முதலாம் நிருபத்தை வாசிக்கக்கேட்ட சிலர், கர்த்தருடைய வருகையைப்பற்றித் தப்பபிப்பிராயங்கொண்டபடியால் அவ்வபிப்பிராயத்தை நீக்கும்படி இரண்டாம் நிருபத்தில் சில வசனங்களை எழுதினான். 2 தெச 2 அதி. இரண்டாம் வருகைக்குமுன் அதிக துன்பம் உண்டாயிருக்கவேண்டும் என்கிறான். அவ்வருகையைப்பற்றி நிச்சயமாய்ச் சொல்லக்கூடியது ஒன்றே. அதாவது அது நாம் நினையாதநேரத்தில் உண்டாகும் என்பதே. 1 தெச 5[2]. இயேசுகிறிஸ்து வந்து நியாயத்தீர்ப்பு செய்வார். 2 கொரி 5[10] 2 தீமோ 4[8] அப் 17[30].

(b) சரீரத்துக்கு உண்டாகும் மாறுதலைப் பற்றி பவுல் முதல் நிருபங்களில் ஒன்றும் சொல்லாமலிருந்தும் பிந்தின நிருபங்களில் சொல்லுகிறான். 1 கொரி 15[35-53]. 'மறுரூபமாக்கப்படுவோம்'. பிலி 3[21]. இயேசு உயிரோடு எழுந்தபின் அவருடைய சரீரம் மறுரூபப்பட்டதைச் சீஷர்கள் கண்டார்கள். சில சமயங்களில் அவர்கள் அவரை அறியவில்லை. பூட்டப்பட்ட அறையிலே அவர்களுக்குத் தரிசனமானார். அதுபோலவே நம்முடைய சரீரம் மறுரூபமாக்கப்படும். அது ஆவிக்குரிய சரீரமாயிருக்கும் 1 கொரி 15[50]. விதைக்கும் பயிர்க்கும் மேனியில் எப்படி வித்தியாசம் காணப்படுமோ, அப்படியே இம்மைக்குரிய சரீரத்துக்கும் மறுமைக்குரிய சரீரத்துக்கும் வித்தியாசமுண்டு. 15[35-38].

நல்லோர் மாத்திரமல்ல, தீயோரும் எழுந்திருப்பார்கள். அப் 24[15] ரோ 2[5-11] 14[10-12] 2 கொரி 5[10].

(c) மரித்துப்போனவுடனே விசுவாசிகள் கிறிஸ்துவோடு ஓர் நெருங்கிய ஐக்கியத்தை அடைகிறார்கள். 2 கொரி 4[16]–5[10]. நாம் மரித்துப்போகிற நாளுக்கும் நியாயத்தீர்ப்பு நாளுக்கும் இடையிலுள்ள காலத்தில் நாம் நித்திரையாயிருக்கிறோம்என்று பவுல் சொல்லியும் (1 தெச 4[15]), தான் தேகத்தைவிட்டுப் பிரிந்து கர்த்தரிடத்தில் குடியிருக்க விரும்பினதாகச் சொல்லிவருகிறதினால் அக்காலத்தில் நாம் நம்முடைய நிலைமையை அறிந்து அவர் சந்நிதானத்தில் இருப்போம் என்றும் விளங்குகிறது (2 கொரி 5[8]). 2 தீமோ 4[8]–ல் அவன் நீதியின் கிரீடத்தை அடையப்போகிற கடைசிநாளை எதிர்ப்பார்க்கிறான் என்று வாசிக்கிறோம்.

11. கலியாண நிலைமையும் கன்னிகை நிலைமையும்.

இதைப்பற்றி பவுல் அடிக்கடி பேசுகிறான். யூதருக்குள்ளும் புறஜாதியாருக்குள்ளும்

விவாக நிவிர்த்திசெய்வது சாதாரணமாயிருந்தது. பவுலோ, புருஷன் உயிரோடிருக்குமளவும் ஸ்திரீ அவனை விட்டுவிடுவது ஆகாதென்கிறான். விதவையோ திரும்பவும் கலியாணஞ் செய்துகொள்ளலாம் என்கிறான். ரோம $7^{1-3}$. விவாகம் செய்வது தகாது என்று அவன் ஒருபோதும் சொல்லவில்லை. 1 தீமோ $1^{1-3}$ 1 கொரி $9^{5}$.

1 கொரி 7-ம் அதிகாரத்தில் விவாகஞ்செய்யாமலிருப்பது நலமோ என்று கொரிந்தியர் கேட்ட கேள்விக்கு அவர் உத்தரவாக, செய்யக்கூடாதென்று சொல்லாமல், கிறிஸ்து சீக்கிரமாய் வருவார் என்று நினைத்தபடியாலும், அக்காலத்திய துன்பம் அதிகமானபடியாலும் விவாகம் செய்யாமலிருப்பது நல்லதென்று சொன்னான்.

(ஆயினும், விவாகஞ்செய்வது கட்டாயமான கடமை என்று அக்காலத்திய யூதரும் புறஜாதியாரும் நினைத்தபடியால், இது கடமையோ என்று அவனைக் கேட்பதற்கு, இது கடமையல்லவென்று அவன் சொன்னதாகச் சிலர் உத்தேசிக்கிறார்கள்.)

விவாகமானது பரிசுத்தமுள்ள நிலைமை. எபே $5^{22-30}$.

கண்காணியானவன் 'ஒரே மனைவியை உடைய புருஷனாய் இருக்கவேண்டும். 1 தீமோ $3^{2-12}$ தீத் $1^{6}$. இதின் அர்த்தம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்ல முடியாது. கண்காணியானவன் அகத்தியமாய்க் கலியாணஞ்செய்த ஓர் மனுஷனாயிருக்கவேண்டும் என்பதல்ல. அவன் ஒரேசமயத்தில் இரண்டு மனைவிகளை உடையவனாயிருக்கக்கூடாது என்பதுமல்ல. (இது கண்காணிகளுக்கு மாத்திரமல்ல' எல்லாருக்கும் உரிய பிரமாணமே.)

அதின் அர்த்தமாவது தன் மனைவி மரித்துப்போனபின் கண்காணி மறு கலியாணம் செய்யாதவனாயிருக்கவேண்டும்; அல்லது தான் கிறிஸ்தவனாவதற்குமுன் விவாக நிவிர்த்தி செய்யாதவனாயிருக்கவேண்டும்; அல்லது தான் கிறிஸ்தவனாவதற்குமுன் இரண்டு மனைவிகளை யுடையவனாயிருக்கக் கூடாது.

விதவைகளைக் கூட்டத்தில் சேர்த்துக் கொள்வதற்கும், சபையாரால் அவர்கள் சம்ரட்சணை செய்யப்படுவதற்கும் ஓர் விதவையானவள் ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்திருக்கவேண்டும். 1 தீமோ $5^{9}$.

## IV. பவுலின் போதகாசிரியர்.

பவுல் பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு எழுதினான் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆயினும் அவன் செய்யவேண்டிய வேலைக்குத் தகுதியுள்ளவனாயிருக்கும்படி தாயின் வயிற்றிலிருந்தமுதல் அவனை அழைத்த தேவன் பலவாறாக அவனை ஆயத்தப்படுத்தி வந்தார். அந்த ஆயத்தப்படுத்தலிலுள்ள சில காரியங்கள் கவனிக்கப்படத்தக்கவை.

1. **யூத போதகர்.** அவர் எருசலேமிலே கமாலியேல் என்னும் வேதசாஸ்திரியினால் போதிக்கப்பட்டார் அப் $22^{3}$. கமாலியேல் பேர்போன நியாய சாஸ்திரியாரும், இல்லெல் (*Hillel*) என்னும் மகா கீர்த்தி பெற்றவனுடைய பேரப்பிள்ளையுமாயிருந்தான். அவனுக்கிருந்த விவேகத்தையும் நற்குணத்தையும் அப் $5^{34-39}$-ல் தோன்றும். பவுல் முதலில் இசர கொள்கைகளை யுடையவர்களைச் சகிக்கும்படியான நற்குணமில்லாதவனாகவும், மதவைராக்கிய முடையவனாகவும் இருந்தும், தான் கமாலியேலிடம் கற்றுக்கொண்டவைகளைப் பிற்காலத்தில் உணர்ந்திருப்பான் என்று நினைப்பது தகுதியே.

2. **யூத புஸ்தகங்கள்.** பழைய ஏற்பாட்டிற்கும் புதிய ஏற்பாட்டிற்கும் இடையில் எழுதப்பட்ட அநேக புஸ்தகங்களுண்டு. அவைகளில் தள்ளப்பட்ட ஆகமங்களில் சில. அவைகளைப் பவுல் கவனமாய் வாசித்திருந்தான் என்பதற்கு அநேக அத்தாட்சிகளுண்டு. ரோம $1^{18-32}$–லும், $9^{19-21}$–லும் கண்டிருக்கிறவைகள் 'ஞானம்' (*Book of Wisdom*) என்கிற ஆகமத்தில் காணப்படும். அப்புஸ்தகங்களில் கண்டிருக்கிறபடி, அவனும் பழைய ஏற்பாட்டிலுள்ள சில வசனங்களை ஆதாரமாகக்கொண்டு, அவைகளுக்கு வியாக்கியானம் சொல்லிவருகிறான். ரோம $10^{5-11}$ கலா $4^{22-7}$ எபே $4^{7-10}$. அவைகளில் செய்திருக்கிறபடி அவனும் பழைய ஏற்பாட்டில் பல இடங்களில் சொல்லப்படுகிற வசனங்களைச் சேர்த்து உதாரணமாகச் சொல்லுகிறான். ரோம $3^{10-18}$ 2 கொரி $6^{16-18}$. பழைய ஏற்பாட்டில் காணப்படாத சில பாரம்பரியமான கதைகளை உதாரணங்களாக பிரயோகிக்கிறான். 1 கொரி $10^{4}$. வனாந்தரத்தில் மோசே அடிக்கத் தண்ணீர் புறப்பட்டுவந்த அந்தக் கன்மலையானது இஸ்ரவேலின் பிரயாணம் முழுவதிலும் அவர்களோடேகூடவே போனது என்பதும் (கலா $4^{29}$) இஸ்மவேல் ஈசாக்கை மனவருத்தப்படுத்தினான் என்பதும் (2 தீமோ $3^{8}$) இதற்கு உதாரணங்கள். ஞானம், நீதிநூல்கள் காண்க.

3. **கிரேக்க தத்துவசாஸ்திரம்.** பவுல் பிறந்த ஊராகிய தர்சுவிலே ஓர் மகா சர்வகலாசாலை இருந்தமையால் அவன் அதிலே படித்

திருக்கவேண்டும். அக்கலாசாலையில் ஸ்தோயிக் (*Stoic*) என்னும் தத்துவசாஸ்திரம் அதிகமாய் வழங்கிவந்தது. பவுல் அந்த தத்துவசாஸ்திரம் அறிந்தவனாய் அத்தேனே பட்டணத்திலே பிரசங்கஞ்செய்தான். 'நாம் அவருடைய சந்ததியார்' என்கிற வசனம் கிலெயாந்தீஸ் (*Cleanthes*) என்னும் ஓர் ஸ்தோயிக் புலவனால் சொல்லப்பட்ட வசனமே. அப் $17^{28}$. 'மனச்சாட்சி' என்னும் பதமானது அவர்களுக்குள் வழங்கிவந்த ஓர் பதமே. அதைப்போன்ற வேறு சில பதங்களையும் பவுல் பிரயோகித்துவருகிறான்.

4. **ரோம சிலாக்கியம்.** பவுல் ரோம சிலாக்கியத்திற்குரியவனாக பிறந்தது அவனுக்கும் அவன் செய்த ஊழியத்திற்கும் மகா அநுகூலமான ஓர் காரியம் என்று நாம் கண்டிருக்கிறோம். அவன் ரோமனாயிருந்ததினால் ரோமர்கள் கைக்கொண்ட பிரமாணங்களையும் வழக்கங்களையும் ஒட்டி சில சமயங்களில் பேசினான். திருஷ்டாந்தமாக உடன்படிக்கை (அல்லது மரணசாதனம்). கலா $3^{15}$. சுதந்தரம். ரோ $8^{17}$. காரியக்காரன். கலா $4^{2}$.

5. **கிறிஸ்தவ போதகன்மார்.** பவுல் அற்புதமாக கர்த்தரால் அழைக்கப்பட்டாலும், போதிக்கப்பட்டாலும் (கலா $1^{1-16-17}$ $2^{6}$) சில காரியங்களை அவன் மற்ற கிறிஸ்தவர்களைக்கொண்டு அறிந்திருக்கவேண்டும். ஸ்தேவான் செய்த உபந்நியாசத்தை அவன் கேட்டான். தமஸ்குவிலுள்ள அனனியா அவனுக்கு இயேசுவைப்பற்றிச் சில காரியங்களையாகிலும் சொல்லாமல் இருந்திருக்க மாட்டான். அந்தியோகியாவிலுள்ள கிறிஸ்தவர்களும் பர்னபாவும் கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரத்தை அவனுக்குத் தெரிவித்திருப்பார்கள் என்பது நம்பப்படத்தக்கது. அப்படி யில்லாவிட்டால் கர்த்தர் செய்ததையும் சொல்லியதையும் பவுல் அறிந்திருப்பது அரிது. 1 கொரி $11^{23}$ (இராபோசனம்) $15^{2}$ (உயிர்த்தெழுதல்) அப் $20^{35}$.

ஆயினும், சரித்திர சம்பந்தமாய் நடந்தவைகளை மற்றவர்கள் பவுலுக்கு சொல்லியிருந்தாலும் அவைகளின் ஆவிக்குரிய கருத்தை அவனே தேவாவியின் ஏவுதலால் கண்டறிந்து எழுதினான். கலா $1^{12}$. சமயாசமயங்களில் அவனுக்கு விசேஷித்த தரிசனங்கள் அளிக்கப்பட்டன: அப் $9^{3-6}$ $16^{6-9}$ $18^{9}$ $22^{17}$ $23^{9-11}$ 1 கொரி $9^{1}$ 2 கொரி $12^{1-4}$ கலா $2^{2}$ எபே $3^{3}$ முதலியவை.

இவ்விதமாகவே யூதனாகப் பிறந்து, சர்வ கலாசாலையிலே கிரேக்கனாகப் படிப்பிக்கப்பட்டு ரோமசிலாக்கியத்திற் குரியவனாயிருந்த பவுல் கர்த்தராலே அழைக்கப்பட்டுப் போதிக்கப்பட்டு புறஜாதியாருக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி ஏற்ற கருவியானான்.

**பவுல் அப்போஸ்தலனும் இயேசு கிறிஸ்துவும். Paul and Jesus Christ.** **'நான் அவரையும் அறிகிறதற்கு.'** பிலி $3^{10}$.

1. இந்த வாக்கியத்தில் பவுலுக்குத் தெரிந்த சுவிசேஷத்தின் சாரம் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சுவிசேஷங்களின் ஆரம்பம், நிறைவு, மகிமை, முடிவு ஆகிய இவையெல்லாம் இயேசுகிறிஸ்துவைப் பூரணமனதோடே அறியும் அறிவேயாம். இயேசுவை அறிவது வீணான வாஞ்சையல்ல. தூரதேசங்களிலுள்ள கவிஞர் முதலிய வித்துவான்களை அவர்கள் இயற்றின செய்யுள்கள் முதலியவற்றினால் அறிவதற்கு ஒருவன் விரும்பினாலும் அந்த வித்துவான்களை அவன் அறிய முடியாது. இயேசுவை அறிய விரும்புவோர் பூரண அறிவை அடையலாம். அப்படியே பரி. பவுல் தனது ஆண்டவரை அறிந்தான். 'வீணான விக்கிரகங்களைப் பின்பற்றினவர்கள் வீணராவார்கள்.' 2 இரா $17^{15}$. அப்படியே உண்மையுள்ளவரைப் பின்பற்றுகிறவன் உண்மையுள்ளவனாவான். குரு எப்படியோ, சீஷனும் அப்படியே. பரி. பவுல் இயேசு தன்னை அழைத்த நாள்முதல் அவரைப் பின்பற்றினதினாலே அவன் தனது ஆண்டவரைப்போலானான். அவனுக்கும் இயேசுவுக்குமுள்ள ஒற்றுமையை அவன் எழுதின நிருபங்களிலுள்ள பல வசனங்களில் நாம் காணக்கூடும்.

கிறிஸ்தவனான பவுலின் சரித்திரம் எல்லாம் ஒரே வாக்கியத்தில் அடங்கியிருக்கிறது. அது, 'பிழைத்திருக்கிறேன், இனி நான் அல்ல, கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார்' என்பதே. கலா $2^{20}$. இயேசு தம்மைக்குறித்து அருளின மொழிகளிலும், பரி. பவுல் தன்னைக்குறித்துச் சொன்ன வாக்கியங்களிலும் இந்த ஞான ஐக்கியம் தோன்றுகிறது.

2. (i) இயேசு: 'நான் என் பிதாவின் நாமத்தினால் வந்தேன்.' யோவா $5^{43}$.

பவுல்: 'கிறிஸ்து எனக்கு ஜீவன்.' பிலி $1^{21}$.

(ii) இயேசு: 'நான் பிதாவினால் பிழைத்திருக்கிறேன்' யோவா $6^{57}$.

பவுல்: 'அன்புகூர்ந்து எனக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்த தேவனுடைய குமாரனைப்பற்றும்விசுவாசத்தினாலே பிழைத்திருக்கிறேன்.' கலா $2^{20}$.

(iii) இயேசு: 'மனுஷகுமாரன் ஊழியம் செய்யும்படி வந்தார்.' மத் 20^28.

பவுல்: 'நான் என்னைத்தானே எல்லாருக்கும் அடிமையாக்கினேன்.' 1 கொரி 9^19.

(iv) இயேசு: 'ஆடுகளுக்காக என் ஜீவனைக் கொடுக்கிறேன்.' யோவா 10^15.

பவுல்: 'என் சகோதரருக்குப் பதிலாக நானே கிறிஸ்துவை விட்டுச் சபிக்கப்பட்டவனாகவேண்டும்.' ரோ 9^3.

3. நோவு, துக்கம், உபத்திரவம், மரணம் முதலியவைகளில் இயேசுவுக்கும் பரி. பவுலுக்கும் அதிக ஒற்றுமையிருக்கிறது.

**பவுலும் கிறிஸ்துவும்:—**

(i) இயேசு: 'அவர்கள் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் போகையில், இயேசு அவர்களுக்கு முன்னே நடந்துபோனார்; அவர்கள் திகைத்து, அவருக்குப் பின்னே பயத்தோடே போனார்கள்.' மாற் 10^32.

பவுல்: 'அதற்குப் பவுல்: நீங்கள் அழுது என் இருதயத்தை ஏன் உடைந்துபோகப் பண்ணுகிறீர்கள்? எருசலேமில் நான் கர்த்தராகிய இயேசுவின் நாமத்திற்காகக் கட்டப்படுவதற்குமாத்திரம் அல்ல, மரிப்பதற்கும் ஆயத்தமாய் இருக்கிறேன் என்றான்.' அப் 21^13.

(ii) இயேசு: 'மனுஷகுமாரன் பல பாடுகள்பட்டு, மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் ஆகாதவன் என்று தள்ளப்பட்டு, கொல்லப்பட்டிருக்கவேண்டும்.' மாற் 8^31.

பவுல்: 'கட்டுகளும் உபத்திரவங்களும் எனக்கு வைத்திருக்கிறது.' அப் 20^23.

(iii) இயேசு: 'சீஷன் தன் போதகனைப் போலவும், வேலைக்காரன் தன் எஜமானைப் போலவும் இருப்பது போதும்.' மத் 10^25.

பவுல்: 'கர்த்தராகிய இயேசுவினுடைய அச்சடையாளங்களை நான் என் சரீரத்திலே தரித்துக்கொண்டிருக்கிறேன்.' கலா 6^17.

(iv) இயேசு: 'அப்பொழுது அவர்மேல் எறியும்படி கல்லுகளை எடுத்துக்கொண்டார்கள்.' யோவா 8^59.

பவுல்: 'பவுலைக் கல்லெறிந்து அவன் மரித்துப்போனான் என்று எண்ணி, அவனைப் பட்டணத்துக்கு வெளியிலே இழுத்துக் கொண்டுபோனார்கள்.' அப் 14^19.

(v) இயேசு: 'இயேசுவைக் கட்டிக்கொண்டுபோய், பிலாத்துவினிடத்தில் (அவரை) ஒப்புக்கொடுத்தார்கள்.' மாற் 15^1.

பவுல்: 'அந்தப்படி அவர்கள் அவனை (பவுலை) வாரினால் அழுந்தக் கட்டும்போது.' அப் 22^25.

(vi) இயேசு: 'இயேசுவை வாரினால் அடிப்பித்தான்.' மத் 27^26.

பவுல்: 'யூதர்களால் ஒன்றுகுறைய நாற்பதடியாக ஐந்துதரம் அடிபட்டேன்.' 2 கொரி 11^24.

(vii) இயேசு: சேவகரில் ஒருவன் இயேசுவை ஒரு அறை அறைந்தான்.' யோவா 18^22.

பவுல்: பிரதான ஆசாரியனாகிய அனனியா இவன் (பவுலின்) வாயில் அடியுங்கள் என்று, கட்டளையிட்டான். அப் 23^2.

(viii) இயேசு: 'அவர் மதிமயங்கியிருக்கிறார்.' 'இவன் பயித்தியக்காரன்.' மாற் 3^21 யோவா 10^20.

பவுல்: 'பவுலே, நீ பிதற்றுகிறாய், அதிக கல்வி உனக்குப் பயித்தியமுண்டாக்குகிறது.' அப் 26^24.

(ix) இயேசு: 'இவன் ஜனங்களைக் கலகப்படுத்தக் கண்டோம்.' லூக் 23^2.

பவுல்: 'இந்த மனுஷன் சகல யூதர்களுக்குள்ளும் கலகம் எழுப்புகிறவன்.' அப் 24^5.

(x) இயேசு: மனுஷகுமாரன் அவமதிக்கப்படுவார். மாற் 9^12.

பவுல்: 'இந்நாள்வரைக்கும் உலகத்தின் குப்பையைப்போலவும், எல்லாரும் துடைத்துப்போடுகிறஅழுக்கைப்போலவுமானோம்.' 1 கொரி 4^13.

(xi) இயேசு: 'சீஷர்கள் எல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள்.' மத் 26^56.

பவுல்: 'எல்லாரும் என்னைக் கைவிட்டார்கள்.' 2 தீமோ 4^16.

(xii) 'இயேசு: இவனை அகற்றும் அகற்றும்.' யோவா 19^15.

பவுல்: 'இப்படிப்பட்டவனைப் பூமியிலிருந்து அகற்றவேண்டும்.' அப் 22^22.

4. பரி. பவுல் கடைசிக்காலத்தில் சிறையிலேயிருந்து தீமோத்தேயுவுக்கு எழுதின நிருபத்தில், தனது ஜீவிய சரித்திரம் முழுவதையும் பார்த்து அதைக்குறித்துப் பேசித் தனக்கும் தனது ஆண்டவருக்கும் உள்ள ஒற்றுமையை அதில் காண்பிக்கிறான்.

'நான் தேகத்தைவிட்டுப் பிரியும்காலம் வந்தது. நல்ல போராட்டத்தைப் போராடினேன், ஓட்டத்தை முடித்தேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்டேன்.' 2 தீமோ 4^6.

**பழ, பழமை. Old.**

'பழசாவார்கள்.' ஏசா $50^{9}$.

'பழம் புடவை.' எரே $38^{12}$.

'பழமையான எழுத்து.' ரோ $7^{6}$.

'பழமையானது.' எபி $8^{13}$.

'பழைய குளம்.' ஏசா $22^{11}$.

'பழைய பாதரட்சை.' யோசு $9^{4}$.

'பழைய திராட்சரசத் துருத்தி.' யோசு $9^{4}$ மத் $9^{17}$ மாற் $2^{22}$ லூக் $6^{37}$.

'பழைய வஸ்திரம்.' யோசு $9^{5}$ மத் $9^{16}$. மாற் $2^{21}$ லூக் $5^{86}$.

'பழைய வாசல்.' நெகே $3^{6}$ $12^{39}$.

'பழையவை.' 2 கொரி $5^{17}$ மத் $13^{52}$.

'பழைய மனுஷன்.' ரோம $6^{6}$ எபே $4^{22}$ கொலோ $3^{9}$.

'பழைய புளித்தமாவு.' 1 கொரி $5^{7}$.

'பழைய ஏற்பாடு.' 2 கொரி $3^{14}$.

'பழைய கற்பனை.' 1 யோவா $2^{7}$.

**பழமொழி. A proverb.**

வேதாகமத்திலே உவமை என்பதற்கும் பழமொழி என்பதற்கும் உள்ள வித்தியாசத்தைச் சொல்வது அரிது. ஒரு உவமையைச் சொல்லுகிற ஞானி சம்பவித்த விஷயங்களையும் மிருகங்கள் முதலியன செய்த காரியங்களையும் பார்த்து இவைகளைத் திருஷ்டாந்தமாகச் சொல்லி புத்திமதி கொடுப்பான். பழமொழியைச் சொல்லுகிறவன் சாரமுள்ள வசனங்களைச் சுருக்கமாய்ச் சொல்லிப் புத்திமதி கூறுவான். உவமைக்குத் திருஷ்டாந்தமாவது: மரங்களைப்பற்றி யோதாம் சொன்ன கதை. நியா $9^{7}$. பழமொழிக்குத் திருஷ்டாந்தம்: 'தாயைப்போல மகள்.' எசே $16^{44}$. 'விதைக்கிறவன் ஒருவன், அறுக்கிறவன் ஒருவன்.' யோவா $4^{37}$.

பழமொழி எப்பொழுதும் சுருக்கமாய் இருக்கவேண்டும். திருஷ்டாந்தம், 'சவுலும் தீர்க்கதரிசிகளில் ஒருவனோ?' 1 சாமு $10^{11}$. பழமொழி அதிக சுருக்கமாய் இருப்பதினாலே அவைகளின் அர்த்தம் சில வேளைகளில் சாதாரண ஜனங்களுக்குப் பூரணமாய்த் தோன்றாது. இதினிமித்தம் 'ஞானிகளுடைய வார்த்தைகளைக் கேட்பது கஷ்டம்' என்று கூறப்பட்டிருக்கிறது. நீதி $22^{17}$. இதினிமித்தமே நீதிமொழியைக் குறிக்கும்படி 'மறைபொருள்,' 'புதைபொருள்' என்னும் பதங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. சங் $49^{4}$ நீதி $1^{6}$ நீதி $30^{15-31}$. பழமொழிகள் நமது மனதில் உள்ள இன்பதுன்பங்களையும், மனுஷர்களுக்கு நேரிடுகிற சுகதுக்கங்களையும், கஷ்ட நஷ்டங்களையும், மனிதருடைய கடமைகளையும், குடும்ப விஷயங்களையும், மனுஷர்கள் அடையவேண்டிய லக்ஷணங்களையும், அவர்கள் தேடுகிற பொருளையும்பற்றிப் பல விஷயங்களைச் சொல்லுகிறது. எபிரெயர்கள் எப்பொழுதும் பழமொழிகளையும், விசேஷமாய் முதியோர்கள் சொன்ன மொழிகளையும் கவனித்தார்கள். 1 சாமு $24^{13}$. இதினிமித்தம் அவர்கள் வழங்கின பழமொழிகள் தத்துவசாஸ்திரத்தைப் பற்றி அல்ல நமக்குச் சாதாரணமாய் நேரிடுகிற விஷயங்களைப்பற்றிமாத்திரம் பேசினாலும், இந்நீதிமொழிகளில் சாதாரண ஜனங்களின் அறிவு முதலிய விஷயங்கள் அடங்கி இருக்கிறதினாலே, நீதிமொழி என்னும் நூலேயும், தள்ளுபடி ஆகமத்தில் உள்ள ஞானாகமங்களையும் நாம் அதிக ஜாக்கிரதையாய் விசாரித்தால் எபிரெயர்கள் வழக்கமாய் அடைந்த ஞானத்தை நாம் தெளிவாய் அறிவோம்.

**பழமொழிப் புஸ்தகம். The book of Proverbs.** நீதிமொழி (பக் 495) காண்க.

**பழம். Fruit.**

'கனி.' ஆதி $1^{11}$ $3^{2}$ சங் $1^{3}$ $127^{4}$ உன். பா $6^{11}$ எரே $11^{19}$ தானி $4^{12}$ எசே $17^{8}$ யாத் $10^{15}$ நீதி $28^{18}$ ஏசா $37^{30}$ ஆமோ $6^{12}$ உபா $7^{13}$ $28^{4-42}$ மீகா $6^{7}$ மத் $3^{8}$ $7^{16}$ $12^{33}$ $21^{18}$ லூக் $6^{43}$ $13^{6}$ $20^{10}$ யோவா $15^{2.8.16}$ 1 கொரி $9^{7}$ எபி $13^{15}$ யாக் $3^{18}$ வெளி $22^{2}$.

'ஆவியின் கனி.' கலா $5^{22}$ எபே $5^{9}$.

'நீதியின் கனி.' பிலி $1^{11}$.

'பழம்.' ஆப $3^{11}$ யாத் $22^{29}$. அத்திமரம், மு பலன் காண்க.

**பழி. Vengeance.**

சில தருணங்களில் இந்தப் பதம் மனுஷரால் அல்லது தேவனால் செய்யப்படும் நீதியுள்ள தண்டனையைக் குறிக்கிறது. அப்படியிருக்கிறபடியினால் பழிவாங்குதல் என்ற பதமும் நீதியைச் சரிக்கட்டுதல் என்ற பதமும் சரி. ஏசா $1^{24}$ $34^{8}$ எரே $5^{9}$ $51^{11}$. இப்படியே பழிவாங்குதல் தேவனுக்குரியதென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. உபா $32^{35}$. (இந்த வாக்கியம் ரோம $12^{19}$ எபி $10^{30}$–இல் எடுத்துக் காட்டப்படுகிறது). சங் $9_{1}^{1}$ காண்க

அதுவுமன்றி தேவன் பழிவாங்குகிறார் என்று சத்தியவேதம் கூறுகிறது. உபா $32^{41.43}$ 2 சாமு $22^{48}$ ஏசா $34^{8}$ எரே $50^{15.28}$ $51^{11}$ (சங் $99^{8}$ ஏசா $35^{4}$ $47^{3}$ $63^{4}$ எரே $5^{9}$ நாகூ $1^{2}$ காண்க.). அதாவது தேவன் தம்முடைய நீதி

யுள்ள கோபாக்கினையைக் காட்டி தண்டனை செய்கிறார்.

ஆனாலும் மனுஷருக்குள்ளே கோபம் பாராட்டப்பட்டால் மனுஷ பாவசுபாவத்தினால் வன்பகையும் வன்மமுள்ள கோபமும் பிறக்கும். தீமையடைந்தவன் அல்லது நிந்திக்கப்பட்டவன் அல்லது தனக்குத் தீமை செய்யப்பட்டதென்று நினைக்கிறவன் பகைத்து வன்மஞ்சாதித்து தீமைக்குத் தீமை செய்தால் அவன் பழிவாங்குகிறான் என்று சொல்வோம். இப்போப்பட்ட வேகமும் தீயநெஞ்சும் குரோதமும் கொடுமையுமான பழிவாங்குதலுக்குப் பல உதாரணங்களுண்டு. நியா $15^{1-8}$ 2 சாமு $3^{27}$ $13^{28.29.32}$ 1 இரா $19^{1-2}$ எஸ்தர் $3^{1-15}$. ஆனபடியால் பழைய ஏற்பாட்டிலே ஒருவன் தானே பழிக்குப் பழிவாங்குதல் தடுக்கப்பட்டிருக்கிறது. லேவி $19^{18}$ யாத் $23^{5}$ நீதி $20^{22}$ $24^{29}$. ஆனால் யூதர்களுக்குள்ளே ஜீவனுக்கு ஜீவன், கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலுக்குக் கால் பழிகொடுப்பது நீதியான பிரமாணமாய் எண்ணப்பட்டது. யாத் $21^{23.24}$. விசேஷமாக ஒருவன் மற்றவனைக்கொன்றால் கொலை செய்யப்பட்டவனுடைய இனத்தவர்களில் ஒருவன் அந்தப் பாதகனைக் கொலைசெய்ய வேண்டும் என்பது வழக்கம். **பழிவாங்குகிறவன்** காண்க. இயேசுகிறிஸ்து இந்தச் சாதாரண பழக்கத்தை நீக்கிவிட்டார். மத் $5^{39-44}$. கிறிஸ்தவ ஜீவியத்தின் பிரமாணம் அன்புதான். தீமைக்கு நன்மை செய்வது கிறிஸ்தவ பழிவாங்குதல். ரோம $12^{17.19.20}$ 1 தெச $5^{15}$ 1 பேது $3^{9}$.

ஆதி $4^{15}$ உபா $32^{35}$ 2 சாமு $19^{27}$ சங் $58^{10}$ ஏசா $34^{8}$ எரே $50^{15}$ $51^{11}$. 36 எசே $25^{14}$ ரோம $12^{19}$ எபி $10^{30}$. **அடைக்கலப்பட்டணம்** காண்க.

**பழியானது.** Justice. அப் $28^{4}$–ல் சொன்ன 'பழியானது' ரோமர்களும் கிரேக்கர்களும் வணங்கின 'நியாயம்' (*Dike*) என்னும் ஒரு தேவியைக் குறிக்கிறது. அவர்கள் அபிப்பிராயத்தின்படி யூப்பித்தர் மகாதேவனுடைய மகளாகிய இவள் குற்றம் செய்தவர்களை நியாயமாய்த் தண்டிப்பாள்.

**பழிவாங்குகிறவன்.** Avenger.

முற்காலத்திலே பல ஜாதிகளுக்குள்ளே ஒருவன் இன்னொருவனைக் கொன்றுபோட்டால் கொல்லப்பட்டவனுடைய இனத்தார் கொலைபாதகனைக் கொல்வது வழக்கம். இஸ்ரவேலருக்குள்ளும் இந்த வழக்கம் உண்டு. ஜீவனுக்கு ஜீவன் என்ற இந்தப் பிரமாணம் ஆதி $9^{6}$ யாத் $21^{12.23}$ லேவி $24^{17}$ எண் $35^{30.31}$–ல் காணலாம். இந்தப் பழைய வழக்கத்தின்படி கொல்லப்பட்டவனுடைய இனத்தவர்களில் ஒருவன் கொலைகாரனை வருவான். அவன் பழிவாங்குகிறவன் என்று சொல்லப்பட்டான். எண் $35^{12.19.27}$ யோசு $20^{5}$. (இரத்தபழி வாங்குகிறவன்—உபா $19^{12}$ 2 சாமு $14^{11}$. இரத்தப்பழிகாரன்–உபா $19^{6}$. பழி வாங்கவேண்டியவன். எண் $35^{19}$.)

பழிவாங்குகிறவன் பாதகனைத் தன் மனம் எரிகையில் தொடர்ந்துபிடித்து அநியாயவதை செய்யாதபடிக்குச் சில கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டன.

1. கொலைகாரன் பலிபீடத்தண்டையிலாவது ஒரு அடைக்கலப்பட்டணத்துக்குள்ளாவது ஓடிப்போய் இருக்க, சபையார் கொலைகாரன் பகையினிமித்தம் கொன்றானோ அல்லவோ என்று விசாரிக்கவேண்டும். **அடைக்கலப்பட்டணம்** காண்க. கொலைகாரன் கைபிசகாய் அல்ல பகையினிமித்தம் கொலை செய்தான் என்று சபையார் கண்டால் பழிவாங்குகிறவன் அவனைக்கொல்லும்படி இடம் கொடுப்பார்கள். எண் 35–ம் அதி யாத் $21^{12-14}$ உபா $19^{11.12}$ யோசு 20–ம் அதி.

2. இரண்டுபேர் அந்தக் கொலைக்குச் சாட்சி சொல்லவேண்டியது. இல்லாவிட்டால் சபையார் கொலைபாதகனுக்கு விரோதமாய்த் தீர்ப்புச் செய்யலாகாது. எண் $35^{30}$.

பழிவாங்குகிறவன் தானே தண்டனை செய்யும் பூர்வ வழக்கம் இராஜாவாகிய தாவீதினுடைய காலம்வரைக்கும் இருந்தது. 2 சாமு $14^{7-11}$. **நியாயவிசாரணை** காண்க.

**பழுது.** Blemish. லேவி $22^{19.20}$ எண் $19^{2}$ உன். பா $4^{7}$ எபி $9^{14}$.

**பழைய ஏற்பாடு.** Old Testament. 2 கொரி $3^{14}$. **வேதாகமம்** காண்க.

**பளிங்கு.** Crystal. ஒருவிதமான ஸ்படிகம். யோபு $28^{17}$ வெளி $4^{6}$ $21^{11}$ $22^{1}$. **இரத்தினம்** காண்க.

**பள்ளத்தாக்கு.** Valley. வேதாகமத்தில் சொன்ன பள்ளத்தாக்குகள்.

1. ஆகோர் பள்ளத்தாக்கு எரிகோவுக்கு மேற்கே இருந்தது. யோசு $7^{24}$ ஏசா $65^{10}$ ஓசி $2^{15}$.

2. ஆமோன்கோகின் பள்ளத்தாக்கு பலெஸ்தீனா தேசத்துக்குப் புறம்பே. = பிரயாணக்காரரின் பள்ளத்தாக்கு. எசே $39^{11}$.

3. ஆயலோன் பள்ளத்தாக்கு தாண் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு $10^{12}$.

4. இப்தாவேலின் பள்ளத்தாக்கு செபுலோன் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு $19^{4}$.

5. இராட்சதருடைய பள்ளத்தாக்கு எருசலேமுக்குத் தெற்கே=ரெப்பாயீம் பள்ளத்தாக்கு. யோசு $15^{8}$. ரெப்பாயீம் காண்க.

6 இன்னோம் குமாரனின் பள்ளத்தாக்கு =இன்னோம் பள்ளத்தாக்கு. எரே $7^{32}$ $19^{2.6}$ $32^{35}$ யோசு $15^{8}$. இன்னோம் காண்க.

7. இன்னோம் பள்ளத்தாக்கு. யோசு $15^{8}$. இன்னோம் காண்க.

8. உப்புப் பள்ளத்தாக்கு உப்புக்கடலின் தெற்கில் இருந்தது. 2 சாமு $8^{13}$ 2 இரா $14^{7}$ 1 நாளா $18^{12}$ 2 நாளா $25^{11}$ சங் 60 தலைப்பு.

9. எஸ்கோல் பள்ளத்தாக்கு தென் யூதாவில் இருந்தது. எண் $32^{9}$ உபா $1^{24}$.

10. எபிரோன் பள்ளத்தாக்கு தென் யூதாவில் இருந்தது. ஆதி $37^{14}$.

11. எரிகோவின் பள்ளத்தாக்கு உப்புக்கடலுக்கும் எரிகோ பட்டணத்துக்கும் இடையில் இருந்தது. உபா $34^{3}$.

12. ஏலா பள்ளத்தாக்கு எருசலேமுக்குத் தென்மேற்கே. 1 சாமு $17^{2}$.

13. கராஷீமன் பள்ளத்தாக்கு இருந்த இடம் தெரியாது. 1 நாளா $4^{14}$.

14. கிபியோனின் பள்ளத்தாக்கு பென்யமீன் கோத்திரத்தின் நாட்டிலிருந்தது. ஏசா $28^{21}$.

15. கேசீஸ் பள்ளத்தாக்கு பென்யமீன் கோத்திரத்தின் நாட்டிலிருந்தது. யோசு $18^{21}$.

16. கேராரின் பள்ளத்தாக்கு பலெஸ்தீன தேசத்தின் தென்மேற்கில் இருந்தது. ஆதி $26^{17}$.

17. 'சங்காரப் பள்ளத்தாக்கு' = இன்னோம். எரே $7^{32}$ $19^{6}$.

18. சாரேத் பள்ளத்தாக்கு சாக்கடலுக்கு கிழக்கே இருந்தது. எண் $21^{12}$.

19. சாவே பள்ளத்தாக்கு = ராஜாவின் பள்ளத்தாக்கு. ஆதி $14^{17}$.

20. சித்தீம் என்னும் பள்ளத்தாக்கு எருசலேமிலிருந்து சாக்கடலுக்குச் சென்றது. யோவே $3^{18}$.

21. சித்தீம் பள்ளத்தாக்கு உப்புக்கடலுக்குத் தென்மேற்கே. ஆதி $14^{3}$.

22. சிற்பாசாரிகளின் பள்ளத்தாக்கு எருசலேமுக்கு வடமேற்கே. நெகே $11^{35}$.

23. சுக்கோத்தின் பள்ளத்தாக்கு காத் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு $13^{27}$ சங் $60^{6}$ $108^{7}$.

24. செபோயீமின் பள்ளத்தாக்கு பென்யமீன் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. 1 சாமு $13^{18}$.

25. செப்பத்தா என்னும் பள்ளத்தாக்கு சிமியோன் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. 2 நாளா $14^{10}$.

26. 'சோரேக் ஆற்றங்கரை' என்பது தாண் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. நியா $16^{4}$.

27. 'தரிசனப் பள்ளத்தாக்கு' என்பது உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $22^{1.5}$.

28. நியாயத்தீர்ப்பின் பள்ளத்தாக்கு என்பது யோசபாத்தின் பள்ளத்தாக்குக்கு உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. யோவேல் $3^{14}$.

29. பாகா பள்ளத்தாக்கு உவமையாய் 'துன்பம்' என்பதைக் குறிக்கிறது. 'பாகா' என்பதற்குக் 'கண்ணீர் விடுகிறது' என்று அர்த்தம். சங் $84^{6}$. பாகா காண்க.

30. 'பிரயாணக்காரரின் பள்ளத்தாக்கு'= ஆமோன்கோகின் பள்ளத்தாக்கு. எசே $39^{11}$.

31. பெராக்கா பள்ளத்தாக்கு, அதாவது, 'ஆசீர்வாதத்தின் பள்ளத்தாக்கு.' யூதாவின் நாட்டில் தெக்கோவாவுக்கு மேற்கே. 2நாளா $20^{26}$.

32. 'மலைகளின் பள்ளத்தாக்கு' எருசலேமுக்குச் சமீபமாயிருந்தது. சக $14^{5}$.

33. மிஸ்பே பள்ளத்தாக்கு தாண் கோத்திரத்தின் நாட்டில் இருந்தது. யோசு $11^{8}$.

34. மெகிதோவின் பள்ளத்தாக்கு கலிலேயாவின் தென்பாகத்தில்இருந்தது. இதில் கீசோன் நதி பாய்ந்தது. 2 நாளா $35^{22}$ சக $12^{11}$.

35. யெஸ்ரயேல் பள்ளத்தாக்கு இசக்கார் கோத்திரத்தின் நாட்டிலிருந்தது. யோசு $17^{16}$ நியா $6^{33}$ ஓசி $1^{5}$. யெஸ்ரயேல் காண்க.

36. யோசபாத்தின் பள்ளத்தாக்கு, எருசலேமுக்கும் ஒலிவமலைக்கும் இடையில் இருந்தது. யோவே $3^{2}$. யோசபாத்தின் பள்ளத்தாக்கு காண்க.

37. ராஜாவின் பள்ளத்தாக்கு யோசபாத்தின் பள்ளத்தாக்கின் தென்பாகத்தில் இருந்தது. ஆதி $14^{17}$ 2 சாமு $18^{18}$.

38. ரெப்பாயீம் பள்ளத்தாக்கு எருசலேமுக்குச் சமீபமாயிருந்தது. 2 சாமு $5^{18}$ $23^{13}$ 1 நாளா $11^{15}$ $14^{9}$ ஏசா $17^{5}$.

39. லீபனோனின் பள்ளத்தாக்கு எர்மோன் மலைக்கு மேற்கேயிருந்தது. யோசு $11^{17}$.

# A TAMIL BIBLE DICTIONARY

BY

A. C. CLAYTON

PART IV

(PAGES 577–736)

# வேத அகராதி

நான்காம் பாகம் 

(பக்கம் 577–736) 

இஃது

ஏ. சி. கிலேற்றன் ஐயரால்

இயற்றப்பட்டது

THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA,
MADRAS ALLAHABAD CALCUTTA RANGOON COLOMBO
1916

# NOTICE

It was intended to complete this Bible Dictionary in four parts, but after the publication of the Third Part it was found that so much matter remained, that two more parts had to be published, making Five Parts in all.

## விளம்பரம்

இந்த வேத அகராதி நாலு பாகங்களாகப் பிரசுரமாகும் என்று முதலில் கருதினோம். ஆனால் மூன்றும் பாகத்தைப் பிரசுரித்தபிறகு, இன்னும் எழுதவேண்டிய பொருள் ஒரே பாகத்தில் அடங்காதென்றும் இரண்டு பாகங்களுக்குப் போதும் என்றும் அறிந்து, இந்த வேத அகராதியை ஐந்து பாகங்களாக வெளியிட்டிருக்கிறோம். ஐந்தாம் பாகம் இப்பொழுது அச்சிலிருக்கிறது.

**பள்ளி அறை.** Bed chamber. 2 சாமு $4^{7}$ 2 இரா $6^{12}$ $11^{2}$. படுக்கை அறை, வீடு காண்க.

**பள்ளிக்கூடம்.** School, Education, Teacher.

1. எபிரெயர்கள் தங்கள் பிள்ளைகளுக்குப் படிப்புக் கற்றுக்கொடுக்கும் விஷயத்தில், மற்ற எல்லா ஜாதியாரையும்விட அதிக ஆசையுள்ளவர்களாயிருந்தார்கள். அவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குக் கல்விப்பயிற்சி தரும்பொழுது விசேஷமாய் அவர்கள் தெய்வபக்திக்குரிய மெய்ஞானம் அடையும் படிக்குப் பிரயாசப்படுவார்கள். நீதி $1^{7}$. ரபிமார் சொன்னபடி, கற்றுக்கொண்ட கல்வி அல்ல, செய்யும் கிரியைகளே விசேஷம்.

2. இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து கானான்தேசத்துக்கு வருமுன், கானானியர் அடைந்த கல்வியைப்பற்றி நமக்குச் சிறிது தெரியும். ஆனால் கண்டுபிடிக்கப்பட்ட செங்கற்பலகைகளை ஆராய்ந்து விசாரித்து அந்தத் தேசத்தில் ராஜாக்களின் அரமனைகளிலுள்ள பாபிலோனிய பாஷையையும், அதின் விநோதமான அச்செழுத்துக்களையும் பார்த்து, செங்கற் பலகைகளில் தங்கள் பத்திரம் முதலியவற்றை எழுதும் வகையை அவர்கள் அறிந்திருந்தார்கள் என்று நாம் தீர்மானமாய்ச் சொல்லக்கூடும். எழுத்து காண்க. சாலொமோன் முதலிய எபிரெய ராஜாக்களின் காலத்தில் வியாபாரம் விருத்தியடைந்ததை நாம் கவனிக்கும்போது, பக்கத்திலிருந்த பெனிக்கேயரைப்போலவே எபிரெயர்களும் வியாபாரத்துக்கு வேண்டிய கல்விவிஷயத்தில் விருத்தியடைந்திருப்பார்கள் என்று நினைக்கலாம்.

3. யூதர்கள் சிறையிருப்பிலிருந்து திரும்பி வந்தபிறகு மாத்திரம் அவர்கள் ஸ்தாபித்த பள்ளிக்கூடங்களைப்பற்றி அத்தாட்சி உண்டு. இதற்குமுன் நியாயப்பிரமாணத்தின்படி ஒவ்வொரு தகப்பனும் தனது பிள்ளைகளுக்கு நியாயப்பிரமாணங்களைக் கற்பிக்கவேண்டும். இவ்விதமாகப் பிள்ளைகள் நியாயப்பிரமாணங்களையும் பண்டிகைகளில் ஆசரிக்க வேண்டிய சடங்காசாரங்களையும், தங்கள் ஜாதியின் சரித்திரத்தையும் அறிவார்கள். யாத் $12^{26}$ $13^{8.14}$ உபா $6^{20}$.

4. எஸ்றாவும் நெகேமியாவும் சிறையிருப்பிலிருந்துவந்த யூதஜனங்களை நியாயப்பிரமாணத்தைத் தங்கள் ஜீவியப்பிரமாணமாக ஏற்றுக்கொள்ளும்படி ஏவினதினாலே, ஜனங்கள் எல்லாருக்கும் அந்த நியாயப்பிரமாணம் தெரிந்திருந்தது என்று நாம் அறிகிறோம். அந்தக்காலம்முதல், இஸ்ரவேலர் நூலின்படி நடக்கிறவர்கள் என்று நாம் சொல்லக்கூடும். இதினிமித்தம் அவர்கள் அந்நூலை அறியும்படி பள்ளிக்கூடங்களையும் உபாத்திமார்களையும் ஏற்படுத்துவது வழக்கமாயிற்று. அக்காலம்முதல் தங்கள் ஊர்களில் உள்ள ஜெப ஆலயங்களில் எப்போதும் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுப்பார்கள். இப்பள்ளிக்கூடங்களுக்கு 'நூலின் வீடு' என்று பெயர். ஜெபஆலயம் காண்க. யூதருடைய பிள்ளைகள் இவ்விதமாய் ஜெபஆலயத்திலே வேதாகமத்தைக் கற்றுக்கொண்டதினாலே அவர்கள் அனைவரும் மிகுந்த பக்திவைராக்கியமுள்ளவர்களானார்கள். அவர்கள் வாசித்த வாசகப் புஸ்தகம் வேதாகமந்தான். வேதாகமத்தை வாசிக்கக் கூடாதவன் மெய் யூதன் அல்ல என்றும், பக்தியும் கல்வியும் ஒன்றோடொன்று சென்றன என்றும் யூதர்கள் உறுதியாய் நம்பினார்கள்.

5. வேதபாரகர்களே சாதாரணமாய் இந்த ஜெபஆலயங்களில் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுக்கொடுப்பார்கள். நீதிமொழி, சீராகின் ஞானம், சாலொமோனின் ஞானம் முதலிய ஞானகமங்களை நாம் வாசித்தால், எபிரெயர் தங்கள் பிள்ளைகளுக்குக் கொடுத்த கல்வியின் சாரத்தை நாம் அறியலாம்.

6. மக்கபெயரின் காலத்தில் பலெஸ்தீனா தேசத்துக்கும் ரோமராஜாங்கத்திலுள்ள நாடுகளுக்கும் வியாபாரசம்பந்தம் இருந்ததினாலும், அந்த நாடுகளில் அநேக யூதர்கள் குடியேறினதினாலும், அந்நாடுகளிலுள்ள புறஜாதியாரில் அநேகர் யூதமார்க்கத்துக்கு வந்திருந்ததினாலும் யூதர்களில் அநேகர் வேதாகமத்தைத் தவிர வேறு கல்விகளிலும் தேர்ச்சியடைந்தார்கள்.

7. யூதப்பிள்ளைகள் ஆறும்வயதுமுதல் பள்ளிக்கூடத்துக்குப் போவார்கள். அதற்குமுன் பையன்கள் தங்கள் தகப்பன் வீட்டிலேயே 'ஷெமா' என்னும் (உபா $6^{4}$)வசனங்களையும், சில பழமொழிகளையும், சங்கீதங்களில் சிலவற்றையும் வாய்ப்பாடமாகப் படித்திருப்பார்கள். பள்ளிக்கூடத்திலே பையன் வேதாகம நூலை, விசேஷமாக லேவியர் ஆகமத்தின் முதல் அதிகாரங்களைப் படிப்பான். படிக்க ஆரம்பிக்கும் முறை என்னவென்றால், பையன் எபிரெய எழுத்தட்டவணையைக் கற்றுக்கொண்டபிறகு, அவனுக்கு முன்னமே மனப்பாடமாகத் தெரிந்திருக்கிற வசனங்களில் ஒன்றை உபாத்தியாயர் எழுதி அவனுக்குக் காண்பித்து, அவன் அதை வாசிக்கும்படி செய்வார். பிள்ளைகள் உபாத்தியாய

ரின் பாதத்தண்டை தரைமேல் உட்கார்ந்திருப்பார்கள். பள்ளிக்கூடங்களில் கொஞ்சம் கணிதமும் கற்றுக்கொடுக்கப்படும். சாதாரணமாய்ப் பெண்பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வருகிறதில்லை. 'நூலின் வீட்டிலே' பிள்ளைகள் படித்தபிறகு பெரும்பாலும் அவர்கள் வேறொரு கல்விச்சாலைக்குப் போகிறதில்லை. போக விரும்பினால், அவர்கள் நியாயப்பிரமாண சாஸ்திரத்தில் கீர்த்தி பெற்ற போதகர்கள் நடத்திவருகிற 'கல்வியின் வீடு' என்னும் வித்தியாசாலைகளுக்குப் போவார்கள். கல்வியின் வீட்டில் வேதாகமத்தின் வியாக்கியானத்தையும், நியாயப்பிரமாணத்தில் அனுசரிக்கிற பலவிதமான கட்டளைகளையும்மாத்திரம் கற்றுக்கொடுப்பார்கள். பரி. பவுல் கமாலியேல் என்னும் ஆசிரியன் நடத்தின 'கல்வியின் வீட்டிற்குப்' போய்க் கல்விவிருத்தி பெற்றான். அப் $22^{3}$.

8. பிற்காலங்களில் யூதர்களில் அநேகர் சர்வகலாஞானத்தை அடைந்து கல்வியில் சிறந்தவர்களாய் விளங்கினார்கள். தற்காலத்திலும் அவர்கள் அப்படியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் சர்வஞானத்தையும்விட வேதாகமநூலைக் கற்றறிவதே அதிமுக்கியம் என்று உறுதியாய் நம்பி அதற்கிசைய எப்பொழுதும் நடந்துவந்தார்கள்.

**பறக்கிறது.** Fly. உபா $28^{50}$ யோபு $39^{26}$ சங் $18^{10}$ $55^{6}$ $90^{10}$ $91^{5}$ ஏசா $6^{6}$ $14^{29}$ $60^{8}$ எசே $13^{20}$ வெளி $4^{7}$ $8^{13}$ $12^{14}$ $14^{6}$ $19^{17}$. 'பறக்கிற புஸ்தகம்', சக $5^{1}$. 'பறக்கிற கொள்ளிவாய்ச் சர்ப்பம்'. ஏசா $30^{6}$.

**பறவை.** Bird. ஆதி $1^{20}$ $7^{14}$ யாக் $3^{7}$. கழுகு, காகம், குருவி முதலியவை காண்க.

**பறி.** Rob. நீதி $17^{12}$ எரே $22^{3}$. களவு, கொள்ளை, திருடன் காண்க.

**பறிக்கிறது.** Take (by force), Pluck. லேவி $6^{4}$ எண் $21^{26}$ யோபு $20^{19}$ சங் $80^{12}$ மீகா $2^{2}$ ஆமோ $4^{11}$ யோவா $10^{28}$.

**பறித்தம்.** Spoil. யோபு $29^{17}$.

**பற்தொலொமேயு.** Bartholomew. நாத்தான்வேல் காண்க.

**பனி.** Dew. பலெஸ்தீனாதேசத்தில் பனி அதிகம். ஆதி $6^{38}$. பனியில்லாவிட்டால் அதிக நஷ்டம் உண்டாகும். ஆதலால் பனியில்லாமை பாவத்துக்குத் தண்டனை. 2 சாமு $1^{21}$ 1 இரா $17^{1}$ ஆகா $1^{10}$. பனி பெய்தல் கடவுள் செய்த அற்புதம். யோபு $38^{28}$ நீதி $3^{20}$. 'உறைந்த பனி'. யோபு $38^{29}$ சங் $147^{16}$.

'பனி' உவமையாய்ச் சிலவற்றைக் குறிக்கிறது:

(1) செழிப்பு. ஆதி $27^{28}$ உபா $33^{13}$.

(2) சுகந்தருகிறது. உபா $32^{2}$ ஏசா $18^{4}$.

(3) மறைவாய்ச் செல்லுகிறது. 2 சாமு $17^{12}$.

(4) உறுதியின்மை. ஓசி $6^{4}$ $13^{3}$.

(5) மேசியாவின் யௌவன சேவகர். சங் $110^{3}$.

(6) சகோதர சிநேகம். சங் $133^{3}$.

(7) கடவுளின் அருள். ஓசி $14^{5}$.

**பனை.** Palm. 'பனை' என்பதற்குப் பதிலாக 'பேரீச்சமரம்' என்று சொல்லவேண்டும். சங் $92^{12}$ உன். பா $7^{8}$ எரே $10^{5}$. பேரீச்சம் காண்க.

**பன்றி.** Swine. யூதர்கள் அருவருத்த மிருகம். லேவி $11^{7}$ உபா $14^{8}$ நீதி $11^{22}$ லூக் $15^{15}$. கிறிஸ்துவினுடைய அருளை அசட்டைசெய்து பாவத்தை விரும்பினவர்கள் பன்றிக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறார்கள். மத் $7^{6}$ 2 பேது $2^{22}$. பூர்வகாலத்தில் கானான் தேசத்தார் தங்கள் தேவதைகளுக்குப் பன்றிகளைப் பலிகளாக செலுத்தி, பன்றிமாமிசத்தைத் தின்றார்கள். ஏசா $65^{4}$ $66^{3}$ $66^{17}$. இயேசுவின்காலத்தில் அந்நியர்கள் இவைகளை வளர்த்தார்கள். மத் $8^{30}$ மாற் $5^{13}$ லூக் $8^{32}$.

**பன்னாக்.** Pannag. எசே $27^{17}$–ல் சொன்ன இந்தப் பதத்தின் அர்த்தம் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. இது ஓர் இடத்தின் பெயராயிருந்தால், அவ்விடம் இன்னதென்று தெரியாது.

## பா.

**பாகா பள்ளத்தாக்கு.** A. V. The Valley of Baca. R. V. The Valley of Weeping. சங் $84^{6}$–ல் பக்கத்தில் சொன்ன எபிரெய பதமாகிய 'பாகா' என்பதற்கு 'கண்ணீர் விடுகிறது' என்று அர்த்தம்; ஆதலால் 'பாகா பள்ளத்தாக்கு' என்பதற்குப பதிலாக 'அழுகையின் பள்ளத்தாக்கு' என்று சொல்வது நியாயம். இது 'துன்பம் இருக்கும் காலம்' என்பதைக் குறிக்கிறது.

**பாகாத்-மோவாப்.** Pahath-Moab. யூதா கோத்திரத்தில் ஒரு குடும்பம். இவர்களில் சிலர் செருபாபேலுடனேயும், சிலர் எஸ்றாவுடனேயும் சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்தார்கள். மற்றவர்கள் பாபிலோனியாவிலே நின்றுவிட்டார்கள். எஸ்றா $2^{6}$ $8^{4}$ நெகே $7^{11}$ $10^{14}$.

**பாகால்.** Baal. 'பாகால்' என்பதற்கு 'ஆண்டவன்' என்று அர்த்தம் ஆகையால்

ஓசி 2$^{16-17}$-ல் சொன்ன 'பாகாலி' என்னும் பதத்துக்கு 'என் ஆண்டவனே' அல்லது 'என் தேவனே' என்று அர்த்தம். இஸ்ரவேலரில் சிலர் இந்தப் பெயரை யேகோவாவுக்கு வழங்குவது நல்லதல்ல என்று ஓசியா தீர்க்கதரிசி போதித்தான். எபிரெய நூலாசிரியர், 'பாகால்' என்னும் பெயரைக் கானானியர் வணங்கின தேவனுக்குமாத்திரம் சொன்னார்கள். 1 இரா 16$^{31}$ 18$^{18}$ 2 இரா 10$^{18}$ 17$^{16}$ 2 நாளா 23$^{17}$ 28$^{2}$. பாகால் காண்க.

'பாகாலுடைய மேடைகள்.' 'The High Places of Baal.' பாமோத்,மேடை காண்க.

பாகால். Baal.

'பாகால்' என்னும் பதத்துக்கு மூலஅர்த்தம் யாதெனில் 'உரியவன்,' 'ஆண்டவன்' 'நாயகன்.' ஒரு தேவதை வசிக்கும் இடம் அதற்கே உரியதென்று சேமியர் எண்ணியிருந்தார்கள். கானானியர் வேளாண்மைத் தொழில் செய்தவர்களாயிருந்து, நதிகளாலும் நீரூற்றுகளாலும் செழிப்பைக் கொடுத்த தேவதைகளை விசேஷமாய் மதித்தார்கள். செழிப்பு முதலிய நன்மைகளைக் கொடுத்த இந்தத் தேவதைகள் செழிப்புள்ள இடங்களில் வசித்தார்கள் என்றும்; ஒவ்வொரு தேவதையும் தான் இருக்கிற இடத்துக்கு 'உரியவன்,' அல்லது 'பாகால்' என்றும் நினைத்து, அந்தச் சேமியர் 'பாகால் காத்' என்னும் ஊரிலும் 'பாகால் ஆமோன்' என்னும் ஊரிலும், 'பாகால்' என்னும் பெயர்பெற்ற வேறு இடங்களிலும் பாகால் என்னும் தேவதைகளை வணங்கிவந்தார்கள். மேலும் மரங்கள் மலைகள் பட்டணங்கள் கற்றூண்கள் இவைகளில் பாகால்கள் என்ற பெயர்பெற்ற தேவதைகள் வசித்தார்கள் என்று கானானியர் எண்ணினார்கள். திருஷ்டாந்தமாக: — 'பாகால் தாமார்' என்னும் பெயர் 'பேரீச்சமரத்தின் பாகால்' என்பதைக் குறிக்கிறது. 'பாகால் எர்மோன்' 'பாலஆத்சோர்' என்னும் பெயர்கள் தேவதைகள் வசித்துத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டிருந்த எர்மோன் ஆத்சோர் என்னும் மலைகளைக் குறிக்கின்றன. 'பாகால்மெயோன்' முதலிய அநேக பெயர்கள் பாகாலுக்கு நியமித்த தேவஸ்தலங்களுள்ள பட்டணங்களைக் குறிக்கின்றன. சில இடங்களிலே வணங்கப்பட்ட தேவதைகளுக்கு அந்தந்தப் பட்டணத்தின் பெயரே பட்டப்பெயராய்ச் சொல்லப்பட்டு வந்தது. இப்படியே தீருபட்டணத்தில்பூசிக்கப்பட்ட பிரதானமான தேவதை 'பாகால் தீரு' என்று சொல்லப்பட்டது. ஆதலால் 'பாகால்' என்பது ஒரே தேவனல்ல, ஒரு தேவதையாக மதிக்கப்பட்ட சூரியனுமல்ல, இந்தியா தேசத்தில் கிராமங்களில் வணங்கின தேவதைகளைப்போல, கானானியர் வெவ்வேறு இடங்களில் பூசைசெய்த தேவதைகளையே குறிக்கிறது.

இஸ்ரவேல் புத்திரர் கானான்தேசத்திலே பிரவேசித்தபொழுது எங்கும் பாகால்களைப் பூசிக்கிறதைக் கண்டார்கள். இந்தியா தேசத்திலே எந்தக் கிராமத்துக்குப் போனாலும் அந்தக் கிராமத்துக்குரிய தேவதையின் வாசஸ்தானமாகிய அம்மன் கோவிலையாவது கற்சிலையையாவது காண்கிறதைப்போல கானான்தேசத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் பாகால்கள் பூசிக்கப்படத்தக்கதான 'மேடைகள்' அல்லது மேட்டிலுள்ள ஸ்தலங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன. வழக்கமாய் ஒரு மேடையில் பாகாலின் பலிபீடமும் 'மஸ்ஸெபோத்' (*mazzeboth*) என்னும் கற்றூணும் 'அசேரா' என்னும் மரமும் இருக்கும். ஆதலால் அவ்விடத்திலே பூசிக்கப்பட்ட 'பாகால்' அவ்விடத்துக்குரிய தேவதையாயிருந்து, நிலத்தை ஆசீர்வதித்துச் செழிப்பைக் கொடுக்கும் என்று இஸ்ரவேலருக்குத் தோன்றினது. இதினிமித்தம் இஸ்ரவேலர் பலமுறைகளில் நல்நெறி விலகி, தங்களுக்குரிய தேவனாகிய யேகோவாவை விட்டு, தேசத்துக்குரிய பாகால்களைப் பின்பற்றி அவைகளைப் பணிந்துவந்தார்கள். நியா 2$^{11.13}$ 3$^{7}$ 8$^{33}$ 10$^{6.10}$ 1 சாமு 12$^{10}$ 2 இரா 17$^{16}$.

இஸ்ரவேலரின் நியாயாதிபதிகள் தீர்க்கதரிசிகள் இராஜாக்களாகிய இவர்களில் சிலர் இந்தக் கேடான வணக்கத்துக்கு விரோதமாய் எதிர்த்து நின்று சில வேளைகளில் தங்கள் ஜனங்களிடத்திலிருந்து இந்த வணக்கத்தை அகற்றினார்கள். இவர்கள் யாரெனில்: கிதியோன், நியா 6$^{25-32}$; சாமுவேல், 1 சாமு 7$^{3.4}$; எலியா, 1 இரா 18. அதி; ஏகூ, 2 இரா 10$^{18-31}$; யோய்தா, 2 இரா 11$^{11}$; யோசியா, 2 இரா 23$^{4-14}$; எரேமியா, எரே 11$^{13-17}$ 32$^{29-35}$; ஓசியா, ஓசி 2$^{13-17}$; செப்பனியா, செப் 1$^{4}$. ஆனாலும் ஆகாப் அகசியா ஆகாஸ் என்பவர்களாகிய வேறு சில இராஜாக்கள் பாகால்களின் வணக்கத்தை ஸ்தாபித்தார்கள். 1 இரா 16$^{31-33}$ 22$^{53}$ 2 நாளா 28$^{2}$. ஆகாப் தன் மனைவியினால் ஏவப்பட்டு, தீருபட்டணத்தில் பூசிக்கப்பட்ட மெல்கார்ட் என்னும் பாகாலுக்குரிய வணக்கத்தைச் சமாரியாவில் ஸ்தாபித்தபின்பு, அது சிலதடவை தள்ளப்பட்டாலும் எரேமியாவின் காலம்வரைக்கும் அவ்விடத்தில் பாகால்

கள் வணங்கப்பட்டன. இதனால் இந்த வணக்கம் எவ்வளவு பரந்ததாயிருந்ததென்பதைக் காணலாம். எரே $2^{20}$ $11^{13}$. எபிரெயர்களில் அநேகர் இந்தப் பெயரை தேவனாகிய யேகோவாவுக்கு வழங்கிவந்தார்கள். திருஷ்டாந்தமாக, 1 நாளா $12^{5}$–ல் 'பிகலியா' என்பது 'யேகோவா பாகாலாய் இருக்கிறார்,' அல்லது 'யேகோவா நாயகனாய் இருக்கிறார்' என்று குறிக்கிறது. ஓசி $2^{16}$. இதனால் யேகோவாவினுடைய மெய் வணக்கத்தையும் பாகால்களின் பொய் வணக்கத்தையும் கலந்து இஸ்ரவேலர் தேவனுடைய வழிகளிலிருந்து விலகிப்போனார்கள்.

மேடைகளிலும் (எண் $22^{41}$ எரே $19^{5}$), வீடுகளின்மேலும் (எரே $32^{29}$), சர்வாங்க தகன பலிகள் (1 இரா $18^{26}$), கொடைகள் (ஓசி $2^{8}$), தூபம் (2 இரா $23^{5}$), முழங்காற்படியிடுதல், சிலையை முத்தம் செய்தல் (1 இரா $19^{18}$), பூசாசாரிகள் தங்களை வெட்டாயுதங்களினால் கீறுதல் (1 இரா $18^{28}$) ஆகிய இந்த ஆசாரங்களால் பாகால்கள் பூசிக்கப்பட்டன. அவைகளை பூசிக்கத்தக்க தான சடங்குகளில் வேசித்தனம் முதலிய துர்நடத்தைகளும் இருந்தன. யாத் $34^{15}$ எண் $25^{3}$ எரே $7^{9}$ ஓசி $4^{12}$. அவர்களுக்குப் பூசாசாரிகளும் தீர்க்கதரிசிகளும் இருந்தார்கள். 1 இரா $18^{19}$ 2 இரா $23^{5}$.



தீருவில் வணங்கின பாகால் தேவதை.

**பாகால்.** Baal.

1. 1 நாளா $5^{5}$.
2. 1 நாளா $8^{30}$ = $9^{36}$.
3. 1 நாளா $4^{33}$ = பாலாத் பெயர்.

**பகால் எர்மோன்.** Baal Hermon. நியா $3^{3}$ 1 நாளா $5^{23}$. எர்மோன் காண்க.

**பாகால் காத்.** Baal Gad. [சுகானுபோதம் கொடுக்கிற பாகால்] எர்மோன் மலையின் பக்கத்திலிருந்த லீபனோனின் பள்ளத்தாக்கிலுள்ள ஓர் இடம். யோசு $11^{16}$ $12^{7}$ $13^{5}$ காத் (3) காண்க.

**பாகால் காமோன்** Baal Hamon. இந்தப் பெயர் எர்மோன் மலையை அல்லது அமனா மலையைக் குறிக்கிறது. உன். பா $8^{11}$.

**பாகால் கானான்.** Baal Hanan. [பாகால் தயையுள்ளவர்]

1. ஏதோம் தேசத்திலே அரசாண்ட ஒரு ராஜா. ஆதி $36^{38.39}$ 1 நாளா $1^{49.50}$. (பாகாலானான்)
2. 1 நாளா $27^{28}$. (பால் கானான்)

**பாகால் சலீஷா.** Baal Shalishah. 2 இரா $4^{42}$. சலீஷா காண்க.

**பாகால் செபோன்.** Baal Zephon. இவ்விடத்துக்கு முன்பாக இஸ்ரவேலர் பாளயமிறங்கினார்கள். யாத் $14^{2}$ எண் $33^{7}$.

**பாகால் சேபூப்.** Baal–Zebub. [ஈக்களின் பாகால்] எக்ரோன் என்னும் பட்டணத்திலே வணங்கப்பட்ட ஓர் தேவதை. ஒருவேளை ஈக்களின்மேல் அரசாண்டு அவைகளைத் தனக்குரிய தூதர்களாய் அனுப்பியிருப்பதினால் அவன் 'ஈக்களின் பாகால்' என்னும் பெயர் பெற்றான். இந்தத் தேவதை பின்வரும் சம்பவங்களை அறிவிக்கக்கூடியவன் என்பதாக சிலர் நம்பியிருந்தார்கள். 2 இரா $1^{2-6}$. புதிய ஏற்பாட்டிலே 'பெயெல்செபூல்' (=பாகால் சேபூப்) என்னும் பதம் பிசாசுகளின் தலைவனாகிய சாத்தானைக் குறிக்கிறது. மத் $10^{25}$ $12^{24.27}$ மாற் $3^{22}$ லூக் $11^{15.18.19}$.

**பாகால் தாமார்.** Baal Tamar. [பேரீச்சமரத்தின் பாகால்] பெத்தேலுக்கும் கிபியாவுக்கும் அடுத்த ஓர் இடம். நியா $20^{33}$.

**ப்பாகால் பிராத்சீம்.** Baal Perazim. எருசலேமுக்கு அடுத்த ஓர் இடம். 2 சாமு $5^{20}$. 1 நாளா $14^{11}$.

**பாகால் பேயோர்.** Baal Peor. [பேயோர் மலையின் தேவதை.] எண் $23^{28}$. இஸ்ரவேலர் சித்தீம் நாட்டிலே தங்கியிருக்கையில் அந்தத் தேசத்தின் தேவதையாகிய பாகால் பேயோரைப் பொல்லாதவிதமாய்ப் பற்றிக்கொண்டதினால் அவர்கள் தலைவரைத் தூக்கிக் கொல்லும்படி கர்த்தர் மோசேக்கு கட்டளையிட்டார். எண் $25^{3-5}$ உபா $4^{3}$ சங் $106^{28}$ ஓசி $9^{10}$.

**பாகால் பேரீத்.** Baal Berith. [உடன்படிக்கையின் பாகால்] சீகேம் பட்டணத்திலே வணங்கப்பட்ட ஓர் தேவதை. கிதியோன் மரித்தபின் இஸ்ரவேலர் தவறிப்போய் இந்தப் பாகாலை பூசித்தார்கள். நியா $8^{33}$ $9^{4.46}$.

**பாகால் மெயோன். Baal Meon.** சாக் கடலுக்குக் கிழக்கே, ரூபன் நாட்டிலுள்ள ஓர் ஊர். எண் $32^{38}$ 1 நாளா $5^{8}$ எசே $25^{10}$. இதுவும் பெத் பாகால் மெயோனும் (யோசு $13^{17}$), பெத் மெயோனும் (எரே $48^{23}$), பெயோனும் (எண் $32^{3}$) ஒன்றுதான் என்று தோன்றுகிறது.

**பாகியேல். Pagiel.** [கடவுள் சந்திக்கிறார்] எண் $2^{27}$ $7^{72}$ $10^{26}$.



பாகை.

**பாகை. Mitre.** தமிழ் வேதாகமத்தில் 'பாகை' என்பது பிரதான ஆசாரியன் தரிக்கும் தலைப்பாகையைக் குறிக்கிறது. இது மெல்லிய பஞ்சுநூலால் செய்யப்பட்டது. இதின் முன்பாகத்தில் 'பரிசுத்த கிரீடம்' என்னும் பொற்பட்டம் இருக்கும். யாத் $28^{4-37}$ $39^{28-31}$ லேவி $8^{9}$ $16^{4}$ சக $3^{5}$ எசே $21^{26}$–ல் சொன்ன 'பாகை' யூத ராஜாக்கள் தரிக்கும் முடியைக் குறிக்கிறது. யோபு $29^{14}$–ல் இது உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. **உடை, கிரீடம்** காண்க.

**பாக்கியம். Blessedness.** வேதாகமத்தில் 'பாக்கியம்' என்பது ஒருவன் சன்மார்க்கத்தின் மூலமாய் அடைந்த கடவுளின் ஆசீர்வாதத்தை விசேஷமாய்க்குறிக்கிறது. பழைய ஏற்பாட்டில் இது இம்மையில் நீதிமான் பெறவேண்டிய பூரண ஆயுசு, பொருள் பொக்கிஷம், புத்திர பௌத்திரர், நற்கீர்த்தி முதலியவைகளைக் குறிக்கும். ஆனால் எந்த ஆகமத்தை நாம் பார்த்தாலும் ஒருவன் இவைகளைப் பெறவேண்டுமானால் அவன் உண்மையுள்ளவனும், கடவுளை வணங்கிவருகிறவனும், பக்தியில் சிறந்தவனுமாய் இருக்கவேண்டும். இந்தக் குணங்கள் இல்லாவிட்டால் பாக்கியம் இல்லை. அநேக வசனங்களில் வெளித்தோற்றத்துக்குரிய பொருள் பொக்கிஷம் முதலியவைகள் அல்ல, பக்தன் மனதில் அடைந்த சாந்தம் முதலிய ஆவிக்குரிய தன்மைகள்தான் கடவுள் அருளும் பெரும்பாக்கியம் என்று சொல்லியிருக்கிறது. சங் 1,32.

புதிய ஏற்பாட்டில் ஆவிக்குரியவிதமாய் மனதில் அடைந்த சமாதானம் முதலிய நன்மைகளே பாக்கியம் என்று சொல்லியிருக்கிறது. தேவ அருளையும் இவ்வித பாக்கியத்தையும் ஒருவன் மறுமையில் பூரணமாய்ப் பெறவேண்டுமானால், அவன் இம்மையிலேயே அவ்வித பாக்கியத்தை அடையவேண்டும். இயேசுவுடன் ஒருவன்கொண்ட ஞான ஐக்கியமாகிய நித்தியஜீவனே சிரேஷ்ட பாக்கியம்; ஏனெனில் இதினால் மனுஷர் தெய்வீக ஜீவனில் பங்கு பெறுகிறார்கள். மத் $5^{10}$ மாற் $10^{17}$ லூக் $6^{20-26}$ $17^{20}$ யோவா $3^{3.36}$ $4^{14}$ $5^{24}$ $6^{54}$ $17^{3}$ 1 தீமோ $1^{11}$ $6^{15}$ யாக் $1^{12}$ 1 யோவா $5^{11}$.

**பாக்கியவதி. Blessed (Woman).** ஆதி $30^{13}$ நீதி $31^{25}$ லூக் $1^{45. 48}$ 1 கொரி $7^{40}$.

**பாக்கியவான். Blessed.** யோபு $5^{17}$ சங் $1^{2}$ $32^{1}$ $3{,}^{8}$ $40^{4}$ $41^{1}$ $65^{4}$ $84^{5}$ $94^{13}$ $106^{3}$ $112^{1}$ $119^{1}$ $128^{1}$ நீதி $3^{13.16-20}$ $28^{14}$ பிர $2^{4}$ மல் $3^{15}$ மத் $5^{3-10}$ லூக் $6^{20-23}$ யோவா $13^{17}$ $20^{29}$ யாக் $1^{12}$ ரோம $4^{8}$ 1 பேது $3^{14}$ $4^{14}$ வெளி $14^{13}$ $16^{15}$ $19^{9}$ $20^{6}$ $22^{7.14}$. **பாக்கியம்** காண்க.

**பாக்கியவான்களைப் பற்றிய வேதவசனங்கள்.**

இவர்களைக் கடவுள் தெரிந்துகொள்ளுகிறார். சங் $65^{4}$ எபே $1^{3.4}$. இவர்களைக் கடவுள் அழைக்கிறார். ஏசா $51^{2}$ வெளி $19^{9}$.

**இவர்கள்,**

கிறிஸ்துவை அறிகிறார்கள். மத் $16^{16.17}$.

சுவிசேஷத்தை அறிகிறார்கள். சங் $89^{15}$.

விசுவாசிக்கிறார்கள். லூக் $1^{45}$ கலா $3^{9}$.

இவர்களுடைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. சங் $32^{1.2}$ ரோ $4^{7}$.

இவர்கள் கிரியையின்றி நீதிமான்களாக எண்ணப்படுகிறார்கள். ரோ $4^{9}$.

இவர்களைக் கடவுள் இரட்சிக்கிறார். யோபு $5^{17}$ சங் $94^{12}$.

**இவர்கள்,**

கிறிஸ்துவினிமித்தம் பாடு அனுபவிக்கிறார்கள். லூக் $6^{22}$ மத் $10^{6}$ யாக் $1^{12}$.

யேகோவாவைத் தங்கள் தேவனாக்கிக் கொள்ளுகிறார்கள். சங் $144^{15}$.

தேவனில் நம்பிக்கையாயிருக்கிறார்கள். சங் $2^{12}$ $34^{8}$ $40^{4}$ $84^{12}$ எரே $17^{7}$.

தேவனுக்குப் பயப்படுகிறார்கள். சங் $112^{1}$ $128^{1.4}$.

தேவ வசனத்தைக் கேட்டுக் கைக்கொள்ளுகிறார்கள். சங் $119^{2}$ யாக் $1^{25}$ மத் $13^{16}$ லூக் $11^{28}$ வெளி $1^{3}$ $22^{7}$.

தேவ கற்பனையில் பிரியப்பட்டிருக்கிறார்கள். சங் $112^{1}$.

கர்த்தருக்குக் காத்திருக்கிறார்கள். ஏசா $30^{18}$.

பெலம் கர்த்தரிடத்திலிருக்கிறது. சங் $84^{5}$.

நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்களாயிருக்கிறார்கள். மத் $5^{6}$.

தேவாலயத்தை வாஞ்சிக்கிறார்கள். சங் $65^{4}$ $84^{4}$.

துன்மார்க்கரை விலக்குகிறார்கள். சங் $1^{1}$.

பாவத்துக்கு எச்சரிக்கையாயிருக்கிறார்கள். வெளி $16^{15}$.

பாவிகளைக் கடிந்துகொள்ளுகிறார்கள். நீதி $24^{25}$.

கர்த்தருடைய வகைக்கு விழித்திருக்கிறார்கள். லூக் $12^{37}$.

கர்த்தருக்குள் மரிக்கிறார்கள். வெளி $14^{13}$.

முதலாம் உயிர்த்தெழுதலில் பங்குள்ளவர்கள். வெளி $20^{6}$.

## இவர்கள்,

பரிசுத்தவான்களுக்கு உதவி செய்கிறார்கள். ஆதி $12^{3}$ ரூத் $2^{10}$.

உத்தம மார்க்கத்தார். சங் $119^{1}$.

இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள். மத் $5^{8}$.

நியாயவான்கள். சங் $106^{3}$ நீதி $10^{6}$.

நீதிமான்களின் புத்திரர். நீதி $20^{7}$.

நீதியுள்ளவர்கள். சங் $5^{12}$.

செம்மையானவர்களின் சந்ததி. சங் $112^{2}$.

உண்மையுள்ளவர்கள் நீதி $28^{20}$.

ஆவியில் எளிமையுள்ளவர்கள். மத் $5^{3}$.

சாந்தகுணமுள்ளவர்கள். மத் $5^{5}$.

இரக்கமுள்ளவர்கள். மத் $5^{7}$.

உதாரத்துவமுள்ளவர்கள். உபா $15^{10}$ சங் $41^{1}$ நீதி $22^{9}$ லூக் $14^{13.14}$.

சமாதானத்தை உண்டுபண்ணுகிறவர்கள். மத் $5^{9}$.

துயரப்படுகிறவர்கள். மத் $5^{4}$ லூக் $6^{21}$.

நியாயத்தீர்ப்புநாளிலும் பாக்கியர். மத் $25^{34}$.

தேவனுடைய ராஜ்யத்தில் புசிப்பார்கள். லூக் $14^{15}$ வெளி $19^{9}$.

**பாசாக்.** Pasach. 1 நாளா $7^{33}$.

**பாசான்.** Bashan.

கலிலேயாக் கடலுக்குக் கிழக்கேயுள்ள ஒரு நாடு. இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வரும்போது, ஓகு என்பவன் இந்நாட்டுக்கு ராஜாவாய் இருந்தான். எண் $21^{33}$ உபா $29^{7}$ நெகே $9^{22}$. யோர்தானுக்குக் கிழக்கேயிருக்கிற மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்குப் பாசான் தேசம் நியமிக்கப்பட்டிருந்தது. இதில் இரண்டு ஊர்கள் லேவியர்களுக்குக் கொடுக்கப்பட்டது. யோசு $21^{27}$. சீரிய ராஜாவாகிய ஆசகேல் ஏகூராஜாவின் காலத்தில் இத்தேசத்தைப் பாழாக்கினான். 2 இரா $10^{33}$. இந்தத் தேசம் எல்லாம் மலைநாடு. சங் $68^{15}$. இந்நாட்டில் சிங்கங்கள் உண்டு. உபா $33^{22}$ இதிலுள்ள கர்வாலி மரங்கள் மிகப் பெரிதாய் இருந்தன. ஏசா $2^{13}$ எசே $27^{6}$ சக $11^{2}$. இதில் வளர்ந்த மாடுகளும், வெள்ளாட்டுக் கடாக்களும் பெரியவைகளாய் இருந்தன. உபா $32^{14}$ எசே $39^{18}$. பாசானிலுள்ள எருதுகள் கொடூரத்துக்கும் அநியாயத்துக்கும் உவமைகள். சங் $22^{12}$ ஆமோ $4^{1}$. அடைக்கலப் பட்டணங்களில் ஒன்றாகிய கோவான் இந்நாட்டில் ஒரு விசேஷித்த ஊர். உபா $4^{43}$.

**பாசேயா.** Baaselah. [யேகோவா தைரியமுள்ளவர்.] 1 நாளா $6^{40}$.

**பாசேயாகு.** Paseah. எஸ்றா $2^{49}$. **பசேயாகு** காண்க.

**பாஸ்-தம்மீம்.** Pas-dammim. [ஆற்றுகள் பரம்பின இடம்.] 1 நாளா $11^{13}$. **எபேஸ்-தம்மீம்** காண்க.

**பாஷா.** Baasha. இசக்கார் கோத்திரத்தானாகிய பாஷா என்பவன், யெரொபெயாமின் மகனாகிய நாதாபைக் கொன்றுபோட்டு, அவனுக்குப் பதிலாக இஸ்ரவேல் ராஜ்யத்தில் 24–வருஷ காலம் அரசாட்சி செய்தான். (கி–மு. 913–889). யூதா ராஜ்யத்திற்கு இவன் எப்பொழுதும் விரோதி. இவன் 'யெரொபெயாமின் வழியில்' நடந்தான். 1 இரா $15^{16}$–$16^{13}$ 2 நாளா $16^{1.6}$.

**பாஷை.** Speech, Tongue. ஆதி $10^{5}$ $11^{1-9}$ உபா $28^{49}$ நெகே $13^{24}$ எஸ்தர் $1^{22}$ $8^{9}$ சங் $114^{1}$ ஏசா $19^{18}$ எரே $5^{15}$ எசே $3^{5}$ தானி $3^{4}$ சக $8^{23}$ செப் $3^{9}$ அப் $1^{19}$ $2^{6}$ $14^{11}$ $21^{40}$ $22^{2}$ $26^{14}$ 1 கொரி $12^{10.28.30}$ $13^{1}$ $14^{2-39}$ வெளி $5^{9}$ $7^{9}$ $10^{11}$ $11^{9}$ $13^{7}$ $14^{6}$ $17^{15}$.

**பாஷைகள் பேசும் வரம். The Gift of tongues.**

புதிய ஏற்பாட்டிலே பக்திமான்களுக்கு அருளிய வரங்களில் அந்நிய பாஷைகளைப் பேசும் திறமை ஒன்று. இதைக்குறித்துப் பேசும் வாக்கியங்கள் மூவகைப்படும்.

*a*. **பவுலின் நிருபங்கள்.** பவுல் இந்த வரத்தைப் பெற்றான். 1 கொரி $14^{18}$. ஆனால் தேவசித்தத்தை விளக்குகிற தீர்க்கதரிசன வரத்தைப்போல் இது விசேஷமானதல்ல என்று நினைக்கிறான். ஏனெனில் தெரியாத பாஷையில் பேசப்பட்ட வாக்கியங்கள் மொழிபெயர்க்கப்படாவிட்டால் அவைகளினாலே கிறிஸ்தவ சபைக்குத் தேர்ச்சி அல்ல, வெட்கமே உண்டாகும். கொரி $14^{23}$. 'அந்நிய பாஷைகளைப் பேசுதல்' என்பது கேட்போருக்கும், சில சமயங்களில் பேசுகிறவர்களுக்கும், தெரியாத பாஷையில் பேசுவதைக் குறிப்பதாக தோன்றுகிறது. 1 கொரி $14^{14}$. இதினிமித்தம் இவ்விதமாய்ப் பேசுவது கூடாது என்று பரி. பவுல் சொல்லாவிட்டாலும், நல்லொழுக்கம் இதினாலே அற்றுப்போகாதபடிக்கு எல்லாவற்றையும் நல்லொழுக்கமாயும் கிரமமாயும் செய்யும்படி சபைத் தலைவர்கள் எச்சரிக்கை யுள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்று கட்டாயமாய்ச் சொல்லுகிறான்.

இந்த வரத்தின் தன்மை இன்னதென்று தெளிவாய் அறிவது அரிது; ஏனெனில் பரி. பவுல் 1 கொரி 12–14 அதிகாரங்களில் இதற்கடுத்த பல புத்தி போதனைகளைச் சொல்லியும், அவன் அதன் தன்மையை விபரமாய்க் கூறவில்லை. வேறு சில வசனங்களிலும் அவன் இந்த வரத்தைக்குறித்துப் பேசுகிறான் என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனால் இதைப்பற்றி ஒன்றும் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ரோம $8^{15}$ $8^{26}$ கலா $4^{6}$ எபே $5^{19}$ 1 தெச $5^{19}$. பொதுவான நிருபங்களிலும், பேதுரு யோவான் என்னும் நிருபங்களிலும் இந்த வரத்தைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை.

*b*. **அப்போஸ்தலர் நடபடி** ஆகமத்தில், எருசலேம் பட்டணத்துக்கு வந்த அந்நியர்கள் சுவிசேஷத்தை அறியும்படி அப்போஸ்தலர் பரிசுத்தஆவியின் மூலமாய்ப் பலபாஷைகளைப் பேசிவந்தார்கள் என்று வாசிக்கிறோம். அப் $2^{4.11}$. கொர்நேலியுவும், அவன் வீட்டாரும், இந்த வரத்தைப் பெற்றார்கள். அப் $10^{46}$ $11^{15}$. எபேசு பட்டணத்தில் கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்த சிலரைப்பற்றியும் அப்படியே சொல்லியிருக்கிறது. அப் $19^{6}$.

*c*. மாற் $16^{17}$-ல் கிறிஸ்தவர்கள் 'நவமான பாஷைகளைப் பேசுவார்கள்' என்னும் வாக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

ஆதிகிறிஸ்தவ சபையிலுள்ள சாஸ்திரிகள் இந்த வரமானது அந்நியர்கள் சுவிசேஷத்தை அறியும்படி தங்கள் தங்கள் பாஷைகளில் பேசத்தக்கதாக அவர்களுக்கு அற்புதவிதமாய் அருளப்பட்ட ஒரு திறமை என்று நினைத்தார்கள். சிலர் சுவிசேஷத்தைக் கூறும்படி அல்ல, கடவுளை ஸ்தோத்திரிக்கும்படிக்கே இவ்வரம் கொடுக்கப்பட்டது என்று சொல்லுகிறார்கள். இதைப்பற்றித் தெளிவாய்ச் சொல்லியிராவிட்டாலும், இதைக் குறித்துப் பேசும் வசனங்களெல்லாம் இந்த இரண்டாவது கொள்கைக்கு இசைந்திருக்கிறது.

ஆதலால் இந்த வரமானது பேசுகிறவன் தனக்குத் தெரியாத பாஷையில் கடவுளை ஸ்தோத்திரித்து அவ்வரைப் புகழ்வது என்றும்; விசேஷித்தகாலத்தில் சில கிறிஸ்தவர்களுக்குமாத்திரம் அருளப்பட்டது என்றும்; இது மற்ற வரங்களைப்போல அத்தனை விசேஷமானது அல்ல என்றும்; எப்பொழுதும் அல்ல, கிறிஸ்துமார்க்கத்தின் உற்பத்திகாலத்திலே மாத்திரம் கொடுக்கப்பட்டது என்றும் தோன்றுகிறது.

**பாடகர், சங்கீதக்காரர். Singers.** 2 சாமு $19^{35}$ 1 நாளா $6^{33}$ $15^{16}$ 2 நாளா $5^{12}$ $20^{21}$ $23^{13}$ $35^{15.25}$ எஸ்று $2^{41.65}$ $7^{7}$ $7^{24}$ நெகே $7^{1.67}$ $10^{28}$ $12^{28}$ பிர $2^{8}$ ஆப $3^{19}$. 'பாடகி.' எஸ்று $2^{65}$ நெகே $7^{67}$ 2 சாமு $19^{35}$ 2 நாளா $35^{25}$. 'சங்கீதக்காரி.' பிர $2^{8}$. **கீதம், கீதவாத்தியம்** காண்க.

**பாடு, பாடுகள், பாடுபடுகிறது, பாடு அனுபவிக்கிறது. Passion, Suffer.**

1. இயேசுகிறிஸ்துவினுடைய வேதனைகளும் மரணமும். மத் $16^{21}$ $17^{12}$ மாற் $8^{31}$ $9^{12}$ லூக் $9^{22}$ $17^{25}$ $22^{15}$ லூக் $24^{26.46}$ அப் $1^{3}$ $3^{18}$ $17^{3}$ $26^{23}$ ரோ $8^{17}$ 2 கொரி $1^{5-7}$ பிலி $3^{10}$ எபி $2^{18}$ 1 பேது $1^{11}$ $2^{21}$ $4^{1.13}$ $3^{18}$.

2. கிறிஸ்தவர்கள் சகிக்கிற துன்பங்கள். ரோ $8^{18}$ அப் $9^{16}$ 2 கொரி $1^{7}$ கலா $3^{4}$ பிலி $1^{24}$ கொலோ $1^{24}$ 1 தெச $2^{2}$ 2 தீமோ $1^{12}$ $2^{12}$ 1 பேது $3^{14}$ $4^{16}$ $5^{10}$ வெளி $2^{10}$.

3. பொதுவாய் வருத்தப்படுகிறது. மத் $27^{19}$ 1 பேது $3^{17}$.

**பாடுகிறது. Sing.** யாத் $15^{1.21}$ எண் $21^{17}$ நியா $5^{1}$ 1 சாமு $21^{11}$ எஸ்று $3^{11}$ சங் $13^{6}$ $33^{3}$ $98^{1}$ $105^{2}$ $137^{2-4}$ நீதி $25^{20}$ ஏசா $5^{1}$ $27^{2}$ $54^{1}$ மத் $26^{30}$ மாற் $14^{26}$ அப் $16^{25}$ 1 கொரி

$14^{15}$ எபே $5^{19}$ கொலோ $3^{16}$ எபி $2^{12}$ யாக் $5^{13}$ வெளி $5^{10}$ $14^{3}$ $15^{3}$. **கீதம்**, **கீதவாத்தியம்** காண்க.

**பாடை.** Bier. 2 சாமு $3^{31}$ லூக் $7^{14}$.

**பாட்டி.** Grandmother. 2 தீமோ $1^{5}$.

**பாட்டு.** Song, Hymn. கீர்த்தனம், சங்கீதம். செங்கடலைக் கடந்தபோது மோசேயினாலும் (யாத் $15^{1}$ மு.) சவுலும் யோனத்தானும் மரித்தபோது தாவீதாலும் (2 சாமு $1^{17}$ $3^{33}$) எருசலேம் அழிவைக் குறித்துஎரேமியாவாலும்(புலம்பல்), இயேசுவைக்குறித்துக் கன்னிமரியாள் முதலியவர்களாலும் (லூக் $1^{46.68}$ $2^{29}$) ஞானபபாட்டுகள் உண்டாக்கப்பட்டன.

யூதர்கள் தேவாலயத்தில் கீதவாத்தியங்களோடே பாடினார்கள். கிறிஸ்தவர்கள் இம்மையில் ஸ்தோத்திரத்தைப் பாடுகிறார்கள். எபே $5^{19}$ கொலோ $3^{16}$. மறுமையிலும் உன்னத ஸ்தோத்திரங்களைப் பாடுவார்கள். வெளி $5^{9}$ $14^{3}$ $15^{3}$ **உன்னதப்பாட்டு**, **கீதம்**, **சங்கீதம்** காண்க.)

**பாண்டம்.** Vessel. எரே $18^{4}$ $19^{11}$ $32^{14}$ **சட்டி**, **தாலம்**, **பாத்திரம்**, **மண்பாண்டம்** காண்க.

**பாதகன்.** Transgressor. ஏசா $46^{8}$.

**பாதபடி.** Footstool. 1 நாளா $28^{2}$ 2 நாளா $9^{18}$ சங் $99^{5}$ $110^{1}$ $132^{7}$ ஏசா $66^{1}$ மத் $5^{35}$ $22^{44}$ மாற் $12^{36}$ லூக் $20^{42}$ அப் $2^{34}$ $7^{49}$ எபி $1^{13}$ $10^{13}$ யாக் $2^{3}$. 'பாதபீடம்'. புல $2^{1}$.

**பாதபீடம்.** Footstool. **பாதபடி** காண்க.

**பாதம்.** Foot. ஆதி $49^{10}$ யாத் $24^{10}$ உபா $33^{3}$ 1 சாமு $2^{9}$ 2 இரா $4^{37}$ எஸ்தர் $8^{3}$ சங் $8^{8}$ ஏசா $60^{13}$ லூக் $10^{39}$ $17^{16}$ அப் $4^{37}$ $5^{2}$ $10^{25}$ $22^{3}$ 1 கொரி $15^{27}$ எபி $12^{13}$ வெளி $1^{17}$ $2^{18}$ $3^{9}$ $19^{10}$ $22^{8}$.

**பாதரட்சைகள்.** 'Shoes', Sandals. ஆதி $14^{22}$ யாத் $3^{5}$ $12^{11}$ உபா $25^{9}$ $29^{5}$ $33^{25}$ யோசு $5^{15}$ $9^{5}$ ரூத் $4^{7}$ 1 இரா $2^{5}$ சங் $60^{8}$ $108^{9}$ உன். பா $7^{1}$ ஏசா $5^{27}$ $20^{2}$ எசே $24^{17}$ ஆமோ $2^{6}$ $8^{5}$ மத் $3^{11}$ $10^{10}$ மாற் $6^{9}$ லூக் $3^{16}$ $10^{4}$ $15^{22}$ $22^{35}$ யோவா $1^{27}$ அப் $7^{33}$ $12^{8}$ $13^{25}$. **உடை** காண்க.

**பாதாளம்.** Abyss, Hades, Hell, Pit. எண் $16^{30}$ யோபு $17^{16}$ சங் $16^{10}$ $139^{8}$ நீதி $1^{12}$ $5^{5}$ $7^{27}$ $15^{11}$ ஏசா $14^{15}$ எசே $31^{15.17}$ லூக் $8^{31}$ $16^{23}$ அப் $2^{27}$ ரோம $10^{7}$. **ஆதேஸ்**, **ஷேயோல்** காண்க.

**பாதை.** Path. யோபு $19^{8}$ சங் $25^{10}$ $77^{19}$ $119^{105}$ நீதி $2^{19}$ $4^{11.18}$ எரே $6^{16}$ $18^{15}$ மத் $3^{3}$ மாற் $1^{3}$.

**பாதோன்.** Padon. எஸ்றாவுடனே பாபிலோனிலிருந்து திரும்பிவந்த நெதனீமியர்களில் ஒரு குடும்பம். எஸ்றா $2^{44}$.



எகிப்தியர் வெள்ளைக்கல்லினால் செய்த பானபாத்திரங்கள்.

**பாத்திரம்.** Cup, Vessel.

கொம்பினாலாவது, மண்ணினாலாவது, வெள்ளியினாலாவது, பொன்னினாலாவது செய்யப்பட்ட பான பாத்திரங்கள். ஆதி $40^{13}$ $44^{2}$ 2 சாமு $12^{3}$ 1 இரா $17^{10}$ சங் $75^{8}$ மத் $23^{25}$ மாற் $7^{4}$ லூக் $11^{39}$ 1 கொரி $11^{25}$.

இறந்தவனை அடக்கம் செய்தவர்கள், அடக்கம் செய்தபிறகு 'தேற்றரவின் பாத்திரம்' குடிப்பார்கள். எரே $16^{7}$.

உவமையாய்:

'தத்தளிப்பின் பாத்திரம்.' சக $12^{2}$

'இரட்சிப்பின் பாத்திரம்.' சங் $116^{13}$.

'ஆசீர்வாதத்தின் பாத்திரம்.' அதாவது, நற்கருணை. 1 கொரி $10^{16}$.

'உக்கிரத்தின் பாத்திரம்.' ஏசா $51^{17}$.

'பாத்திரம்'=உபத்திரவம். மத் $20^{22}$ $26^{39}$ சங் $11^{6}$ லூக் $22^{42}$.

'பாத்திரம்.'=பாக்கியம். சங் $23^{5}$.

'பாத்திரம்.'=தீமையின் பரிபூரணம். எரே $51^{7}$ எசே $23^{32}$ வெளி $17^{4}$.

**கிண்ணம்**, **குடம்**, **சட்டி**, **தாலம்**, **பானை**, **பானபாத்திரம்** காண்க.

**பாத்திரம்**, **பாத்திரன்**, **பாத்திரவான்.** Worthy. ஆதி $32^{10}$ உபா $25^{2}$ 1 இரா $2^{26}$ எரே $26^{11}$ மத் $10^{10}$ லூக் $7^{4}$ $10^{7}$ $12^{48}$ $15^{19}$ யோவா $1^{27}$ கொலோ $1^{10}$ 1 தீமோ $1^{15}$ $4^{9}$ $5^{18}$ எபி $11^{38}$ வெளி $4^{11}$ $5^{2.4.9.12}$.



பாபிலோன் இருந்த இடம்.

**பாபிலோனிய இராஜ்யம், பாபிலோன், பாபேல்.** Babylon.

1. **பாபிலோன் பட்டணம்.** பாபேல் பட்டணம் இவ்வுலக சரித்திரத்தில் நமக்குத் தெரிந்த அதிபூர்வீக பட்டணங்களில் ஒன்று. ஆதி 10[10]. இது ஐப்பிராத்து என்னும் பெரிய நதியின் கீழ்க்கரையில், தற்காலத்திலுள்ள பாக்தாத் என்னும் பட்டணத்துக்கு ஏறக்குறைய 50 மைல் தூரத்துக்குத் தெற்கே இருந்தது. இப்போது இது பாழாய்க்கிடக்கிறது. அங்கே போய் அவ்விடத்தில் தோண்டி ஆராய்ச்சிசெய்து விசாரித்தவர்கள் அது முன்காலத்தில் பல மைல் தூரம் பரவியிருந்த விஸ்தாரமான ஒரு பட்டணம் என்று அறிந்து இப்போது பாழாய்க்கிடக்கிற சமபூமியின்மேல் சாகரம்போன்ற மணலில் புதைந்து கிடக்கிற கட்டடங்களைக் கண்டுபிடித்து அப்பட்டணத்தின் சிறப்பையும் கீர்த்தியையும் நமக்குத் தெரிவிக்கிறார்கள். அதில் அநேக விஸ்தாரமான தேவாலயங்களும், ராஜாக்கள் கட்டின மாளிகைகளும், பட்டணத்தைச் சுற்றிப் பெரிய கோட்டைமதிலும் ஆற்றங்கரையில் கப்பற்களுக்காகப் பல துறைமுக மதில்களும் இருந்தன. ஆபிரகாமின் காலத்திலுள்ள கமுராபி (*Khammurabi*) என்னும் ராஜா முதலாவது இதை பாபிலோனியா தேசத்துக்கு ராஜஸ்தானமாக்கினான். பாபிலோனியாவும் அசீரியாவும் வெவ்வேறான ராஜ்யங்களாக இருக்கும்பொழுது அந்த ராஜ்யங்கள் இரண்டுக்கும் நேர்ந்த யுத்தங்களில் பாபிலோன் பட்டணம் பாபிலோனியர்களுக்கு விசேஷித்த கோட்டையாயிருந்தது. அசீரியருடைய ராஜாவாகிய சனகெரிப் இதினிமித்தம் கி-மு. 689-ல் இதற்கு முற்றுக்கை போட்டு, இதைப் பிடித்து, இதிலிருந்த தேவாலயங்களையும் மாளிகைகளையும் மதில்களையும் இடித்துத் தரையோடு தரையாக்கி, ஐப்பிராத்து நதியைத் திருப்பி இதின்மேல் பாயவிட்டான்.

ஆனால் இதற்குப் பிறகு பாபிலோனிய ராஜாக்கள் மறுபடியும் இதைக் கட்டினார்கள். நேபுகாத்நேச்சார் இதை விசேஷமாய் அலங்கரித்து, இதில் யாவரும் அதிசயிக்கத்தக்க உயர்ந்த மாளிகைகளைக் கட்டினான். கோரேஸ் ராஜா இதைப் பிடித்தான். கிரேக்கரில் சிலர் இதைப் பிடித்து இதைக் காப்பாற்றும்படி முயன்றார்கள். ஆனால் படிப்படி



பாபிலோனியர் எழுதின மண்ஓடு.

யாய் இதின் கீர்த்தி அழிந்துபோய் விட்டது. அந்தத் தேசத்தில் நீர்ப்பாய்ச்சலுக்காகக் கட்டப்பட்ட ஏரிக்கரைகளும், ஆற்றின் தண்ணீரைக் கொண்டுபோகும்படி வெட்டப்பட்ட பெரிய கால்வாய்களும் அழிந்துபோனதினிமித்தம், முன்னே அதிசெழிப்பான இந்தத் தேசமெல்லாம் இப்போது வனாந்தரமாய் இருக்கிறது. முன்னே கோடாகோடிக் குடிகளுக்கு இருப்பிடமான அந்தப் பெரிய பட்டணம் இப்போது குடியற்ற மண்மேடாய்க் கிடக்கிறது. இதினாலே தீர்க்கதரிசிகள் பாபிலோனுக்கு விரோதமாகச் சொன்ன எச்சரிப்புகள் யாவும் நிறைவேறினது. ஆதி $10^{10}$ 2 இரா 17, 20, 24, 25 அதி. எஸ்ரு $1^{11}$ $5^{12}$ மி சங் $87^{4}$ $137^{1.8}$ ஏசா $13^{1}$ $14^{4}$ $39^{1}$ $48^{14}$ எரே 20, 21 அதி. $25^{12}$ 27, 28, 29, 32, 34, 36, 38, 39, 40, 50, 51, 52, அதி. தானி 1–7 அதி.

2. **பாபிலோன் தேசம்**. இது தீகிரீஸ், ஐபிராத்து என்னும் நதிகளின் மத்தியில் அசீரியாவுக்குத் தெற்கே சினேயா என்னும் சமபூமியில் பாபேல், ஏரேக், அக்காத், கல்னே ஆகிய நாலு நகரங்கள் அடங்கிய ஒரு பெரிய ராஜ்யமாயிருந்தது.

இந்தச் சமபூமிக்கு இருபக்கமும் நதிகளும் ராஜாக்களால் வெட்டுவிக்கப்பட்ட ஏரிகளும் பெரிய கால்வாய்களும் இருந்ததினால் அது நாம் அறிந்த மற்ற எல்லாத் தேசங்களையும் விட மிகவும் செழிப்புள்ளதாய் இருந்தது. அதிலே எல்லாரும் விரும்பத்தக்க கோதுமை, எள்ளு, பேரீச்சமரம் முதலானவை மற்ற இடங்களிற் கொடுப்பதினும் 100-மடங்கு அதிக பலனைக் கொடுத்தன.

**ஜனங்கள்**. பாபிலோனியர் தங்கள் தேசத்திற்கு வடக்கே இருக்கும் அசீரியரைப்போலச் சூரர்களல்லாவிட்டாலும் வியாபாரத்திலும் விவசாயத்திலும் பேர்போனவர்கள்.

3. **நாகரீகம்**. பாபிலோனியர் நாகரிகத்திலும் சிறந்தவர்கள். ஆடை ஆபரணம் செய்வதிலும், சித்திரம் வரைதலிலும் அவர்கள் அதிகம் தேர்ந்தவர்கள். அவர்கள் செய்யும் வஸ்திரம் முதலானவற்றை வாங்குவதற்கு அதிக தூரமான இடங்களிலிருந்து வியாபாரிகள் வருவார்கள். யோசு $7^{21}$.

அவர்கள் செய்த கைவேலையாகிய ஆபரணம் முதலானவைகள் வைக்கப்பட்டிருக்கும் காட்சிசாலைகளுக்குப் போய் அவைகளைப் பார்த்தவர்களில் பிரமிப்படையாதவர்களில்லை.

பாபிலோனியர் தங்கள் வீடுகளைச் செங்கற்களினாற் கட்டிவந்தார்கள். கோவில்களையும் அரமனைகளையும் கருங்கற்களால் அலங்காரமாய்க் கட்டுவதற்குத் தங்கள் தேசத்தில் அவைகள் இல்லாததினால் தூரமான மலைகளிலிருந்து அவைகளைக் கொண்டுவருவார்கள்.

4. **கல்வி**. பாபிலோனியர் கணிதசாஸ்திரம், வானசாஸ்திரம், வைத்தியம், சத்திர வைத்தியம் ஆகிய இவைகளில் அதிக யூகமுள்ளவர்கள். அவர்கள் எழுதிய நூல்களால் அவர்கள் கல்வியில் கீர்த்திபெற்றவர்கள் என்பதை நாம் பூரணமாய் அறியக்கூடும். அவர்கள் மண்ணினாற் செய்யப்பட்ட ஓடுகளில் புஸ்தகங்களை வரைந்து எழுதினதினால் அவைகள் விநோதமானவைகள். அவைகளைக் கறையான் முதலானவை அரித்துக்கெடுக்கமாட்டாவாகையால் இப்போது பாபிலோனிய தேசத்தில் அழிந்துகிடக்கும் அரமனை முதலான கட்டடங்களில் அவைகள் கண்டெடுக்கப்படும்போது அவைகளில் எழுதப்பட்டவைகளை வித்துவான்கள் தெளிவாய் வாசிக்கக்கூடும். அவர்கள் தங்கள் தேவர்களைப்பற்றிப் பாடின பாட்டுக்களையும், தங்கள் ராஜாக்களின் சரித்திரத்தையும், அகராதி பஞ்சாங்கம் முதலியவற்றையும் இந்த ஓடுகளிலேதான் வரைந்துவந்தார்கள். ராஜாக்களும் ஆசாரியர்களும் ஓடுகளில் வரையப்பட்ட இப்புஸ்தகங்களையும் இம்மாதிரியான ராஜாங்கத்துக்குரிய பத்திரங்களையும் வெவ்வேறு சாலைகளில் வைத்துவந்தார்கள். இவைகளிலிருந்து அவர்களுடைய வழக்க பழக்கம் முதலானவைகளை நாம் நன்றாய் அறியலாம்.

பாபிலோனியா தேசத்தில் ஆண்களைப் போலவே பெண்களும் கல்வி கற்கிறவர்களாய் இருந்தார்கள்.

5. **பூர்வீகம்**. ஆபிரகாம் கி–மு. 2300-ம் வருடல் இருந்தான். அவனுக்கு 2000 வருஷங்களுக்குமுன் பாபிலோன் ராஜ்யம் உண்டானது என்பதற்கு ஐயமில்லை. அது ஆரம்பமான காலம் திட்டமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் இந்த ராஜ்யம் ஏறக்குறைய 4500 வருஷங்களாகக் கீர்த்திபெற்றிருந்தது.

6. **மார்க்கம்**. பாபிலோனியர் பல தேவர்களை வணங்கிவந்தார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் வான தேவன், ஆகாய தேவன் என்னும் 'பேல்' (ஏசா $46^{1}$) பூமி தேவன், சூரியதேவன், சந்திரதேவி, காமதேவி, முதலானவர்களே. பெரிய பொற்சிலைகளும் பொக்கிஷங்களும் நிறைந்த ஆலயங்களில் அவர்கள் ஏராளமான காணிக்கை, பலிகள் முதலானவைகளைச் செலுத்தி, அதிக ஆடம்பரத்துடன் ஊர்கோலம்வந்து திருவிழா நடத்துவார்கள்.

அமெரிக்காதேசத்துப் பட்டணங்களி லொன்றாகிய பென்சில்வானியாவிலுள்ள சர்வகலாசாலையில் பாபிலோனிய பாஷையை நன்றாய் அறிந்த ஜாஸ்திரோ (*Jastrow*) என்னும் வேதசாஸ்திரி கி—பி. 1911-ம் வருஷத்தில் பாபிலோனியர் அனுசரித்து வந்த மார்க்க ஒழுக்கத்தைப்பற்றிய புத்தகமொன்றை எழுதி, நாம் கவனிக்கவேண்டியதும், அறிந்துகொள்ள வேண்டியதுமான சில விஷயங்களைத் தெரிவித்திருக்கிறார்.

i. பாபிலோனியதேசத்து ஜனங்களுக்குச் சன்மார்க்கத்தைப்பற்றி வெவ்வேறு அபிப்பிராயங்கள் இருந்தது. அத்தேசத்துச் சாதாரண ஜனங்கள் பேய் பிசாசுகள் உண்டென்றும், அவைகள் மந்திரவாதிகளின் அதிகாரத்தில் இருக்கிறதென்றும் நம்பி, சூனியம், மந்திரம் முதலானவைகளை அனுசரித்து வந்தார்கள்.

அந்த மார்க்கத்தைச் சேர்ந்த ஆசாரியரோ, தத்துவசாஸ்திரம் முதலானவற்றைக் கற்றறிந்து வித்துவான்களாயும், சாதாரண ஜனங்களைப்போல் பேய் பிசாசுகள் உண்டென்று நம்பினாலும், அவைகளுக்குப் பயப்படாதவர்களாயும் இருந்ததாகத் தோன்றுகிறது.

ii. பாபிலோனியருக்குள் 'மரித்துப்போனவர்களுடைய நிலைமை' என்னவென்று விசாரித்துப் பார்க்கையில், சாதாரண ஜனங்களும், வித்துவான்களான ஆசாரியரும் வித்தியாசமாய் நினைத்ததாக விளங்குகிறது. சாதாரண ஜனங்கள் கொண்டிருந்த அபிப்பிராயம் என்னவென்றால்: மரித்துப்போன ஆண்களும் பெண்களும் ஆவிக்குரிய இன்னொரு நிலைமைக்குள்ளாகி உயிரோடிருக்கிறார்கள். அந்த நிலைமையிலிருக்கையில், அவர்களுக்குப் பூரண அறிவு உண்டோ இல்லையோ என்று சொல்வது அரிது. அவர்கள் இருக்கும் அந்த நிலைமை சுக க்ஷேமமானதல்ல. அவர்கள் ஒன்றும் செய்யாமல் அங்கே சும்மாயிருப்பார்கள். அவர்கள் இருக்கும் அந்த இடம் பூலோகத்திற்குக் கீழிருக்கும் காரிருளும், ஈரமும், பயங்கரமுமுள்ள ஒரு பெரிய கெபியேயன்றி வேறல்ல. அந்த இடத்தைப்பற்றிப் பாபிலோனியர் இயற்றிய செய்யுளில், அது தூசி நிறைந்து, ஒட்டடை பிடித்து, பாசி பற்றின சுவர்களுள்ள குடியில்லாத ஒரு ராஜமாளிகைக்கும், இருள் மூடியிருக்கிற ஒரு பட்டணத்திற்கும், மந்தாரமான பிராகாரங்களுள்ள ஒரு தேவஸ்தலத்திற்கும் ஒப்பிடப்பட்டு எழுதியிருக்கிறது. யோபின் புஸ்தகத்தில் இவ்விடத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறதாவது: 'காரிருளும் மரணாந்தகாரமுமான இருண்ட தேசமும், இருள்சூழ்ந்த ஒழுங்கில்லாத மரணாந்தகாரமுள்ள தேசமும், ஒளியும் இருளாகும் தேசமுமாகிய, போனால், திரும்பிவராத தேசத்திற்கு நான் போகுமுன்னே.' யோபு 10[21].

மரித்தவர்களுடைய ஆவியானது சில சமயங்களில் பூலோகத்திலுள்ள ஜனங்களைத் தொந்தரவு செய்யும்படி வந்தாலல்லாமல், மற்றப்படி இவ்விடத்திற்குப் போன மரித்தவர்கள் திரும்ப வருகிறதில்லை. இருள்நிறைந்த இவ்விடத்தில் போனவர்களுக்கு எவ்விதத்திலும் மீட்பு இல்லை. இவ்விடத்திற்கு 'அரலு' (*Aralu*) என்னும் பெயர் வழங்கிவந்தது. வித்துவான்களாகிய ஆசாரியரோ மரித்தவர்களில் அநேகர் இருள்நிறைந்த இந்த 'அரலு' என்னும் இடத்திற்குப் போனாலும், தெரிந்துகொள்ளப்பட்ட சிலர் அவ்விடத்திற்குப் போகாமல் பாக்கியம் நிறைந்த ஒரு தீவுக்குப் போய் அங்கே எல்லா சுகவாழ்வும் பெற்றனுபவிப்பார்கள் என்னும் அபிப்பிராயமுடையவர்களா யிருந்தார்கள். இந்த நல்ல தீவுக்குப் போகும் சிலாக்கியம் ஆசாரியராகிய தங்களுக்கும் தங்கள் மதத்துக்குப் பெரியவர்களாகிய ராஜாக்களுக்குமே உரியது என்று சொல்லுகிறவர்களா யிருப்பார்களென்று நாம் எதிர்பார்த்தாலும் அவர்கள் அப்படிச் சொல்லாமல், இந்தப் பாக்கியமானது தேவர்கள் தங்கள் இஷ்டத்தின்படி தெரிந்துகொண்டவர்களுக்குமாத்திரம் கிடைக்கும் என்று சொல்வார்கள்.

iii. பாபிலோனிய மார்க்கக் கொள்கைகளைப் பரிசோதித்த வேதசாஸ்திரிகள், அந்தத் தேசத்தார் நியாயத்தீர்ப்பைப்பற்றி விசேஷித்த கொள்கையுடையவர்களா யிருந்தார்கள் என்று சொல்வதற்கு யாதொரு அத்தாட்சியையும் இதுவரைக்கும் கண்டுபிடிக்கவில்லை. எகிப்தியரின் மார்க்கக் கொள்கைகளை நாம் பார்த்தால், அவர்கள் வணங்கிவந்த சூரிய தேவன் மனுஷர் செய்கிற ஒவ்வொரு கிரியைகளையும் நியாயம் விசாரித்து அவைகளுக்குத் தக்க பலாபலன்களை அளிக்கிறான் என்கிற நம்பிக்கையுள்ளவர்களா யிருந்தார்கள் என்று காண்கிறோம். பாபிலோனியரோ ஒருவன் இந்த ஜீவியத்தில் தான் செய்த நன்மை தீமைகளுக்குத் தக்க பலனை மறுமையிலே அனுபவிக்கவேண்டும் என்று கற்பிக்காமல், உயிரோடிருக்கும்போதே பாவத்தை அறிக்கையிட்டு, சடங்காச்சாரங்களை நடத்தி, தேவகோபத்தைச் சாந்திசெய்து, இந்த ஜீவியகாலத்தில்மாத்திரம் அத்தேவர்களின் தய

னால் இன்பசுகங்களை அடையவேண்டும் என்று போதித்தார்கள்.

எபிரெயரும், ஒருவன் நன்னடக்கையுள்ளவனாயிருந்தால் யேகோவா அவனுக்கு இம்மையிலே சுகத்தையும், மறுமையிலே ஆசீர்வாதத்தையும் அருளுவார் என்றும், ஒருவன் துர்நடத்தையுள்ளவனாயிருந்தால் அவர் அவனுக்கு இம்மையிலே துக்கத்தையும் மறுமையிலே சாபத்தையும் விதிப்பார் என்றும் ஆதிகாலமுதல் அடிக்கடி கண்டிப்பாயும் மிகத் திட்டவட்டமாயும் போதித்துவந்ததினாலே எபிரெயருடைய மார்க்கம் பாபிலோனியருடைய மார்க்கத்தைப்பார்க்கிலும் சன்மார்க்கவிஷயத்தில் எந்தக்காலத்திலும் மேலானது என்று தைரியமாய்ச் சொல்வதற்கு இடமுண்டு.

**7. புதிய ஏற்பாடு.** புதிய ஏற்பாட்டில் 'பாபிலோன்' என்பது விக்கிரகாராதனை, வீண்பக்தி, செல்வம், அக்கிரமம், துன்மார்க்கம் என்பவைகள் நிறைந்த ரோமாபுரியையும், ரோம ராஜ்யத்தின் அதிகாரத்தையும், அந்த ராஜ்யத்தாரின் பாவநிலைமையையும் குறிக்கிறது. வெளி $14^{8}$ $16^{19}$ $17^{5}$ $18^{2.10.21}$.

1 பேது $5^{13}$–ல் சொன்ன 'பாபிலோன்' எகிப்துதேசத்தில் ஓர் ஊரை, அல்லது பாபிலோனியாவிலுள்ள பாபிலோனை, அல்லது ரோமாபுரியைக் குறிக்கலாம்.

**பாபிலோனிய சால்வை. Babylonish Garment.** பூர்வீககாலத்தில் பாபிலோனியர்கள் விலையுயர்ந்ததும் பலவர்ண விசித்திர வேலையினால் அலங்கரிக்கப்பட்டதுமான வஸ்திரங்களை நெய்தார்கள். இவ்வித வஸ்திரங்களைத் தரித்திருக்கிற ராஜாக்களையும் தனவான்களையும் ஆசாரியர்களையும் பாபிலோனியர் கல் பலகைகளில் வெட்டின சித்திரங்களிலும், அச்சிட்ட செங்கற்பலகை எழுத்துக்களிலும் காணலாம். ஆகான் திருடின பாபிலோனிய சால்வை இந்தமாதிரி வஸ்திரந்தான். யோசு $7^{21}$.

**பாபேல் கோபுரம். Tower of Babel.** எபிரெயர்கள் இவ்வுலகத்தில் பல பாஷைகள் உண்டு என்று நன்றாய் அறிந்தார்கள். உபா $28^{50}$ ஏசா $28^{11}$ $33^{19}$ எரே $5^{14}$ சங் $19^{3}$ எசே $3^{5}$. அவர்களின் முன்னோர்கள் இதைப் பற்றிப் பின்வருமாறு சொல்லுவார்கள்.

ஜலப்பிரளயமுண்டாகி 120 வருஷத்திற்குப் பின்பு ஜனங்கள் ஒரே மார்க்கத்தாரும் பாஷைக்காரருமாயிருந்தபோது பெருமைக்காக நிம்ரோத் என்ற தலைவனுடைய ஏவுதலினால் ஒரு பெரிய கோபுரத்தைக் கட்டத் தொடங்கினார்கள். இதற்காக மூன்று வருஷம் கருவிகளைச் சேகரித்து இதை இருபத்திரண்டு வருஷமாய்க் கட்டினார்கள். கடவுளுக்கு இது பிரியமாயிராததினால் அவர் அவர்களுடைய பாஷையைத் தாறுமாறாக்கி அவர்கள் செய்யும் வேலையை நிறுத்தினார். அதினால் அவர் அந்தக் கோபுரத்திற்குத் 'தாறுமாறு' என்று அர்த்தங்கொள்ளும் 'பாபேல்' என்ற பேரையுங் கொடுத்து, நோவாவின் சந்ததியாரைப் பூமியின் நாலு திசைகளிலும் போய்க் குடியேறச்செய்தார். ஆதி 10 அதி.

இந்தக் கோபுரம் கட்டின இடம் தெரியாது. பாபிலோனியருக்குப் பெரிய கோபுரங்களைக் கட்டுவது வழக்கமானதினாலும், பாபிலோன் நகரத்தில் சில பெரிய கோபுரங்கள் இருந்ததினாலும், 'பாபேல்' என்னும் கோபுரம் பாபிலோன் தேசத்திலே இருந்தது என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனால் இதற்குப் போதுமான அத்தாட்சி இல்லை. 'பாபேல்' என்பதற்கு 'தாறுமாறு' என்னும் அர்த்தத்தைத்தவிர 'கடவுளினுடைய வாசல்' என்றும் அர்த்தம் ஆனதினால் ஒருவேளை இது ஒரு பெரிய தேவஸ்தலமாயிருந்தது என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு.

**'பாப்டிஸம்.' Baptism.** புதிய ஏற்பாட்டில் 'ஞானஸ்நானம்' என்னும் அர்த்தங்கொண்ட கிரேக்க பதமாகிய 'பாப்டிஸம்' என்பதை மொழிபெயர்க்காமல் வழங்குவது நல்லது என்று சிலர் அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள். ஞானஸ்நானம் காண்க.

**பாப்பு. Pope.** கிரேக்க பாஷையில் 'பாப்பஸ்' (*Pappas*) என்பதற்கும் லத்தீன் பாஷையில் 'பாப்பா' (*Papa*) என்பதற்கும் பதிலாக தமிழ் கிறிஸ்தவர்கள் 'பாப்பு' என்று சொல்லுவார்கள். ஆதி கிறிஸ்தவர்கள் குருமார் எல்லாருக்கும் 'தகப்பன்' என்னும் அர்த்தங்கொண்ட இந்தப் பெயரைப் பொதுவாய்ச் சொன்னார்கள்.

இதின்படி தற்காலத்தில் கிரேக்க சபையார் தங்கள் குருமாருக்குப் 'பாப்பு' என்று வழக்கமாய்ச் சொல்லுவார்கள். ஆனால் ஐந்தாம் நூற்றாண்டில் ரோமான் கத்தோலிக் மார்க்கத்தார் ரோமாபுரியிலுள்ள அந்தச் சபையின் மேற்றிராணிக்கு மாத்திரமே இந்தப் பெயரைச் சொல்லிவந்திருக்கிறார்கள்.

**பாப்போ. Paphos.** சீப்புருதீவின் மேற்குப்பாகத்தில் 'பழைய பாப்போ' என்னும் பட்டணம் கடற்கரைக்கு ஒருமைல் தூரத்திலும், 'புதிய பாப்போ' என்னும் பட்டணம் பழைய பாப்போவுக்கு வடமேற்கே ஏழுமைல் தூரத்திலும் இருந்தன. இந்தப் பட்

டணத்தில், பல தேசங்களிலிருந்து வந்த பிரயாணிகள் காமதேவியைத் துன்மார்க்கமாய் வணங்கினார்கள். புதுப் பாப்போவிலே ரோம அதிகாரிகள் இருந்தார்கள். பரி. பவுல் முதல் சுவிசேஷப்பிரயாணம் பண்ணும்போது புதுப் பாப்போவுக்கு வந்தான். அப் $13^{6}$.

**பாமா.** Bamah. எசே $20^{29}$-ல் சொன்ன 'பாமா' சிறப்புப்பெயர் அல்ல, பொதுபெயர் தான். இதின் அர்த்தம் 'மேடை' என்பதே. **மேடை** காண்க.

**பாமோத்.** Bamoth. [மேடைகள்] மோவாப் தேசத்தில் இஸ்ரவேலர் சந்தித்த ஓர் ஊர். எண் $21^{19.20}$.

='பாகாலுடைய மேடுகள்.' எண் $24^{41}$.

=ரூபன் கோத்திரத்தின் நாட்டிலுள்ள 'பாமோத் பாகால்.' யோசு $13^{17}$.

**பாமோத்–பாகால்.** Bamoth–Baal. **பாமோத், மேடை** காண்க.

**பாம்பாட்டி.** Charmer. சங் $58^{5}$. எகிப்து தேசத்திலும் சீரியா தேசத்திலும் பாம்பாட்டிகள் சிலர் இருக்கிறார்கள்.

**பாம்பு.** Snake. **சர்ப்பம்** காண்க.

**பாயித்து.** Bayith. [வீடு.] ஏசா $15^{2}$. இவ்விடம் இன்னதென்று தெளிவாய்த் தோன்றவில்லை.

**பாய்.** Mat. A. V. Bed. மாற் $2^{4-12}$ $6^{55}$ யோவா $5^{6-12}$-ல் சொன்ன 'படுக்கை' என்பது 'பாய்' என்பதைக் குறிக்கிறது. எபிரெயர் வழக்கமாய்ப் பாய்களில் தூங்குவார்கள்.

**பாய்மரம்.** Pine. ஏசா $41^{19}$ $60^{13}$. ஒரு மாதிரி தேவதாரு விருக்ஷம்.

**பாய்ச்சல்.** Water. உபா $11^{10}$ சங் $65^{10}$ ஏசா $58^{11}$ எரே $17^{7}$ 1 கொரி $3^{6}$. நீர் காண்க.

**பாரம்.** Burden. 1. சுமை. ஏசா $22^{25}$.

2. உத்தரவாதம். யாத் $18^{22}$ எண் $11^{11}$ கலா $6^{5}$.

3. துக்கம், கஷ்டம். சங் $55^{22}$ கலா $6^{2}$ 1 யோவா $5^{3}$.

4. பாவத்தின் பாரம். சங் $38^{4}$.

5. தீர்க்கதரிசனம், அல்லது சன்னதம். ஏசா $13^{1}$ $14^{28}$ $15^{1}$ $17^{1}$ $19^{1}$ $21^{1}$ $21^{11}$ $22^{25}$ $23^{1}$ $30^{6}$ எரே $23^{33}$ நாகூ $1^{1}$ ஆப $1^{1}$ சக $9^{1}$ $12^{1}$ மல் $1^{1}$.

6. கட்டாயமான கட்டளை, ஆசாரம். 'பாரமான சுமை.' மத் $23^{4}$ லூக் $11^{46}$ அப் $15^{28}$.

7. செலவு. 2 கொரி $11^{9}$.

**பாரம்பரியம், பாரம்பரை.** Tradition. மத் $15^{2-6}$ மாற் $7^{3-13}$ கலா $1^{13}$ கொலோ $2^{8}$. 'முறைமை.' 2 தெச $2^{15}$ $3^{6}$.

யூதர்கள் வேதத்தில் எழுதப்பட்ட பிரமாணங்களைத்தவிர யேகோவா மோசேக்கு அநேக பாரம்பரைப் பிரமாணங்களைக் கொடுத்தாரென்றும், மோசே அந்தப் பிரமாணங்களை ஆரோன் முதலியவர்களுக்குக் கொடுத்தானென்றும், அவர்கள் அவைகளை மூப்பர்களுக்கும் மூப்பர்கள் தீர்க்கதரிசிகளுக்கும் தீர்க்கதரிசிகள் மற்றவர்களுக்கும் ஒலிவடிவாய்க் கொடுத்தார்களென்றும் சொல்லுவார்கள். மேலும் இந்த ஒலிவேதம் வரிவேதத்திற்கு உரை என்பார்கள். ஆயினும் இந்தப் பாரம்பரைப் பிரமாணங்கள் வேதபாரகர்களால் உண்டாயின என்பது மெய். **தார்க்தும், தல்மூத்** காண்க.

**பாரா.** Parah. பென்பமீன் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு $18^{23}$.

**பாராக்.** Barak. [மின் மின்னல்.] நப்தலி கோத்திரத்தானாகிய பாராக்கும், தெபொராளும் கானானியர்களை ஜெயித்து, வட இஸ்ரவேலரை இரட்சித்தார்கள். இவன் தெபொராள் சொன்ன புத்திமதியினால் ஜெயம் அடைந்ததைத் தவிர இவனைப்பற்றி வேறொன்றும் தெரியாது. இந்தச் சரித்திரம் நியா 4, 5-ம் அதிகாரங்களில் விவரமாய் எழுதப்பட்டிருக்கிறது. புதிய ஏற்பாட்டில் இவன் பெயர் எபி $11^{32}$-ல் கண்டிருக்கிறது.

**பாராய்.** Paarai. 2 சாமு $22^{35}$. **நாராய்** காண்க.

**பாரான்.** Baarah. 1 நாளா $8^{8}$.

**பாரான் வனாந்தரம்.** The Wilderness of Paran. [? சுதந்தரம்.] பலெஸ்தீனா தேசத்துக்குத் தெற்கிலுள்ள ஒரு மலைநாடு. இது சீனாய் மலைநாடுவரைக்கும் எட்டினது. இதெல்லாம் கல்பூமியும் மணற்தரையுமாயிருக்கிறது. இதற்குள் சீன்வனாந்தரம் சேர்ந்திருந்தது. எகிப்திலிருந்து செல்லும் வழி இதைக் கடந்துபோகிறது. ஆனதினால் இந்நாள்மட்டும் இதற்கு 'அலைந்து திரிகிறதின் வனாந்தரம்' என்று பெயர். 'எல்பாரான்' என்பதற்கு 'பாரான் வனாந்தரத்திலுள்ள கர்வாலி மரம்' என்பது அர்த்தம். ஆதி $14^{6}$. ஆரோனும் இஸ்மவேலும் இதில் வாசம் செய்தார்கள். ஆதி $21^{21}$. இஸ்ரவேலர் இதில் 38 வருஷம் சஞ்சரித்தார்கள். எண் $10^{12}$ $12^{16}$ $13^{3.26}$ உபா $1^{1}$. தாவீது இதில் சிலகாலம் இருந்தான். 1 சாமு $25^{1}$. இதின் மூலமாய் ஆதாத் எகிப்துக்குப் போனான். 1 இரா $11^{17}$. 'பாரான் மலை.' உபா $33^{2}$ ஆப $3^{3}$.

**பாரியா.** Bariah. 1 நாளா $3^{22}$.

**பாருக்.** Baruch. [ஆசீர்வதிக்கப்பட்டவன்.]

1. நேரியாவின் மகன். எரேமியா தீர்க்கதரிசி ஜனங்களுக்கும் ராஜாவுக்கும் புத்தி போதனை கொடுக்கும் காலத்திலும், பாபிலோனியர் எருசலேமை முற்றிக்கைபோடும் காலத்திலும், அதற்குப் பிந்திய சில வருஷங்களிலும், இவன் எரேமியாவுக்குத் தோழனும் சீஷனுமாயிருந்து இருபது வருஷக் காலம் அந்தத் தீர்க்கதரிசிக்குப் பணிவிடை செய்து அவன் கூறின தீர்க்கதரிசனங்களை எழுதினான். எரே $32^{12-14}$ 36 அதி. $43^{3.6}$ 45 அதி. எரேமியா காண்க.

2. எருசலேமின் மதில்களைக் கட்டினவர்களில் ஒருவன். நெகே $3^{20}$.

3 உடன்படிக்கைக்கு முத்திரை போட்டவன். நெகே $10^{6}$.

4. ஓர் யூதன். நெகே $11^{5}$.

**பாருக்கின் ஆகமம்.** The Book of Baruch.

எரேமியாவின் சீஷனாகிய பாருக் தள்ளுபடி ஆகமத்திலுள்ள இந்தப் புஸ்தகத்தை எழுதினான் என்று அதன் முகவுரையில் சொல்லியிருந்தாலும், அவன்தான் அதை எழுதினான் என்பதற்கு அத்தாட்சி இல்லை. பாபிலோன் சிறையிருப்பில் எபிரெய பாஷை பேசுகிற யூதர்களுக்குக் கிரேக்கு பாஷையில் ஒரு நூல் எழுதுவதினால் பிரயோஜனம் என்ன? ஆதலால் நமக்குத் தெரியாத ஆக்கியோனாலே ஏறக்குறைய கி–மு. 320–ம் வருடல் இது எழுதப்பட்டது என்று வேதசாஸ்திரிகள் நினைக்கிறார்கள்.

இதில் அடங்கிய ஆறு அதிகாரங்களில் இதன் ஆக்கியோன் யூதர்களுடைய மனதில் நம்பிக்கையையும் சாந்தத்தையும் உண்டாக்கும்படி, அவர்கள் சீக்கிரம் தங்கள் ஜென்ம தேசத்துக்குத் திரும்பிப் போவார்கள் என்றும்; அவர்கள் பாபிலோனிய விக்கிரகாராதனையை ஒழித்துவிடவேண்டும் என்றும்; இஸ்ரவேலுக்கு மறுபடியும் மேன்மை வரும் என்றும் சொல்லி, பார்சிய சக்கரவர்த்தியின் அதிகாரத்துக்குள்ளான யூதர்கள் யேகோவாவின்பேரிலே பக்திவைத்து ஸ்திரமாயிருக்கும்படி ஆறுதலான புத்திமதிகளைக் கொடுக்கிறான்.

இந்த நூலின் ஆறும் அதிகாரத்துக்கு 'எரேமியா தீர்க்கதரிசி எழுதின நிருபம்' என்னும் பெயர் உண்டு. ஆனாலும் இதில் பிற்காலத்திலுள்ள யூதர்களுக்கு அருமையான நற்போதனை அதிகமாயிருந்தாலும், எரேமியா தீர்க்கதரிசி இதை எழுதினான் என்று நம்புகிறதற்கு இடம் இல்லை.

**பாரேஸ்.** Perez, Phares. [வெடித்து மீறி வருகிறது.]

யூதா தாமார் என்பவர்களின் மகன். ஆதி $38^{29}$. பேரேசியர் இவனுடைய சந்ததியார். எண் $26^{20}$ (பேரேசியர் வேறே பெரிசியர் வேறே.). ஆதி $46^{12}$ ரூத் $4^{12}$. தாவீது இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன். ரூத் $4^{13}$ 1 நாளா $2^{4}$ நெகே $11^{4}$ மத் $1^{3}$ லூக் $3^{33}$.

**பாரேத்.** Bered. நமக்குத் தெரியாத ஓர் இடம். ஆதி $16^{14}$.

**பாரை.** 'Harrow.' எபிரெய பதம் ஒரு விதமான கட்டப்பாரையைக் குறிக்கிறது. 'இருப்புப் பாரை'. 2 சாமு $12^{31}$ 1 நாளா $20^{3}$. இந்த வாக்கியத்தின் அர்த்தம் என்னவென்றால்: தாவீது அம்மோன் புத்திரர்களை ஜெயித்து, அவர்களை அடிமைகளாக்கி, அவர்கள் கஷ்டமான வேலை செய்யும்படி செய்தான் என்பது.

**பாரோஷ்.** Parosh. சிறையிருப்பிலிருந்துவந்த ஒரு குடும்பம். எஸ்றா $2^{3}$ $8^{3}$ நெகே $3^{25}$ $10^{14}$.

**பார்க்கிறது.** Look.

['பார்க்கிறது' என்னும் பதம் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. சிலவற்றை மாத்திரம் காட்டுகிறதற்கு நமக்கு இடம் உண்டு.] ஆதி $6^{12}$ $8^{13}$ $15^{5}$ லேவி $13^{3}$ நியா $6^{14}$ யோபு $28^{24}$ சங் $33^{13}$ நீதி $23^{31}$ பிர $2^{11}$ ஏசா $33^{20}$ $5^{30}$ ஆப $1^{13}$ மத் $5^{28}$ லூக் $9^{62}$ யோவா $7^{52}$ $13^{22}$ அப் $3^{4}$ யாக் $1^{25}$ வெளி $5^{4}$.

**பார்சியரும் மேதியரும்.** Persians and Medes.

இந்தியா தேசத்துக்கு வந்த ஆரியரும் பூர்வகாலத்தில் பார்சியா தேசத்துக்குச் சென்ற இரானியர்களும் முதலிலே ஒரே ஜாதியாராய் இருந்தார்கள். ஏறக்குறைய கி–மு. இருபதாம் நூற்றாண்டிலே ஆரியர்கள் இந்தியா தேசத்தில் பிரவேசித்தபோது இரானியர் இந்தியாவுக்கு வடமேற்கிலுள்ள துர்க்கிஸ்தானம் என்னும் நாட்டில் இருந்தார்கள். பிந்தின நூற்றாண்டுகளில் இரானியர்களில் அநேகர் இருபிரிவாகத் தாங்கள் இருந்த அத்தேசத்தை விட்டார்கள். அவர்களில் பாதி பெயர்கள் கஸ்பிய கடலின் தென்கரையிலுள்ள நாடுகளில் பிரவேசித்தார்கள். இவர்களுக்கு 'மேதியர்' என்று பெயர். அந்தத் தேசங்களுக்குத் தெற்கே பார்சியா குடாக் கடலின் கீழ்கரையிலுள்ள நாடுகளில் குடி

யேறின மற்றப் பாதிப்பேருக்கு 'பார்சியர்' என்று பெயர். மேதியர் முதலிலே பார்சியரை ஜெயித்து அவர்களைக் கீழ்ப்படுத்தி வந்தார்கள். அப்பொழுது மேதியர்களுடைய ராஜ்யம் அசீரியருடைய ராஜ்யத்தின் எல்லை வரைக்கும் எட்டினகாலத்தில் அசீரியா ராஜாக்களாகிய திகிலாத்பிலேசரும் சர்கோனும் இவர்களோடே யுத்தம்பண்ணி கி–மு. 721–ஆம் இவர்களில் அநேகரைச் சிறையாக்கிச் சமாரியா நாட்டிலே குடியேற்றினார்கள். 2 இரா $17^{6}$ $18^{11}$. இதற்குப்பின்பு மேதியர் அசீரியரை ஜெயித்து கி–மு. 607–ஆம் பாபிலோனியரோடு உடன்படிக்கை பண்ணி, அசீரியருடைய முக்கிய பட்டணமாகிய நினிவே நகரையும், அசீரியா ராஜ்யத்தையும் அழித்தார்கள். பிறகு மேதியர்கள் சின்ன ஆசியாவிலே சில நாடுகளை ஜெயித்தார்கள். அக்காலத்தில் பார்சியர்களுக்கு ராஜாவாயிருந்த கோரேஸ் மேதியரை ஜெயித்து கி–மு. 550–ஆம் தனது பார்சிய ராஜாங்கத்தை ஸ்தாபித்தான். கி–மு. 545–ஆம் சின்ன ஆசியா முழுவதையும் ஜெயித்து, பிறகு பாபிலோன் ராஜ்யத்துக்கு விரோதமாய்ப் படையெடுத்து, கி–மு. 539–ஆம் பாபிலோன் பட்டணத்தையும் பிடித்தான். அதற்குப்பிறகு பாபிலோன் பட்டணம் பார்சிய ராஜாங்கத்து முக்கிய பட்டணங்களில் ஒன்றாய் இருந்தது. அசீரியர்களைப்போல் பார்சியர் கொடூரமானவர்கள் அல்லாததினாலே, பாரசீக அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டிருந்த ஜனங்கள் யாவரும் பெரும்பாலும் சுகமாய் வாழ்ந்தார்கள். இப்படியே பார்சியர் ராஜாக்கள் யூதேயா தேசத்தையும் அதிக பட்சத்துடனே அரசாண்டு, பாபிலோன் தேசத்திலே சிறையிருப்பிலிருந்த யூதர்கள் தங்கள் ஜென்ம தேசத்துக்குத் திரும்பப் போகிறதற்கு உத்தரவு கொடுத்ததும் அல்லாமல், அவர்கள் எருசலேம் பட்டணத்தையும் அதிலுள்ள தேவாலயத்தையும் கட்டுகிறதற்கு உதவியும் செய்தார்கள்.

வேதாகமத்தில் 'மேதியர்' என்பது பொதுவாய் மேதியர்களையும் பார்சியர்களையும் குறிக்கும். ஏசா $3^{17}$ $21^{2}$ எரே $25^{25}$ $51^{11}$ அப் $2^{9}$. ஏசாயா தீர்க்கதரிசியும் எரேமியா தீர்க்கதரிசியும் விசேஷமாய்ப் பார்சிய ராஜ்யத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனங்களைச் சொல்லியிருக்கிறார்கள். ஏசா 13, 14, 21, 41, 44-47 அதி. எரே 50, 51 அதி. எஸ்றா, நெகேமியா காண்க.

பார்சிய ராஜாக்களில் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டவர்கள்.

(i) தரியு ஹிஸ்தாஸ்பிஸ், கி–மு. 521-485

(ii) இவன் மகனாகிய முதலாம் சர்க்சேஸ் எஸ்தர் ஆகமத்தில் சொல்லப்பட்ட ஆகாஸ்வேரு. கி–மு. 485-465.

(iii) முதலாம் அர்த்தசஷ்டா. எஸ்றா 7-ம் அதிகாரத்தில் சொல்லப்பட்டவன். கி–மு. 465–424. அர்த்தசஷ்டா, தரியு காண்க.

**பார்த்தர்.** Parthians. கி-மு. மூன்றாம் நூற்றாண்டில் சீரிய ராஜாக்கள் பார்சியா தேசத்தில் அரசாட்சி செய்துவந்தபோது, பார்த்தர்கள் சீரியர்களை ஜெயித்துத் துரத்தி ஏறக்குறைய 500 வருஷங்களாக அந்தத் தேசத்தை ஆண்டுவந்தார்கள். மேதியரும் பார்சியரும் பார்சியா தேசத்துக்கு வருமுன்னே அங்கே குடியேறின ஜனங்களில் இவர்கள் ஒரு ஜாதி. அப் $2^{9}$.

**பார்வை.** Sight. காட்சி. ஆதி $2^{9}$ நியா $4^{1}$ 1 சாமு $12^{17}$ 2 இரா $3^{18}$ யோபு $15^{15}$ $25^{5}$ சங் $72^{14}$ மத் $11^{5}$ $20^{34}$ மாற் $10^{51}$ லூக் $4^{18}$ $18^{41}$ யோவா $9^{11}$ அப் $9^{9}$.

**பார்வோன்.** Pharaoh. எகிப்து காண்க.

**பாலகன்.** Child. ஏசா $9^{6}$. கன்னிகை, குடும்பம், குழந்தை காண்க.

**பாலா.** Baalah.

1. 1 நாளா $13^{6}$ யோசு $15^{9.10}$. கீரியாத்யாரீம் காண்க.

2. எக்ரோனுக்கும் யாப்னியேலுக்கும் நடுவிலிருக்கும் ஓர் மலை. யோசு $15^{11}$.

3. யோசு $15^{29}$. இதுவும் பில்லாவும் (1 நாளா $4^{29}$) ஒன்றாயிருக்கலாம்.

4. சிமியோன் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு $19^{3}$.

**பாலாக்.** Baalak. [பாழாக்கினவன்.] பிலேயாமை அழைத்த மோவாபின் ராஜா. எண் 22–24 அதி. பிலேயாம் காண்க.

**பாலாத்.** Baalath.

1. யோசு $19^{44}$.

2. 1 இரா $9^{18}$ 2 நாளா $8^{6}$.

**பாலாத்சோர்.** Baal Hazor. எப்பிராயீமுக்கும் பெத்தேலுக்கும் வடக்கேயிருக்கும் ஒரு மலை. 2 சாமு $13^{23}$.

**பாலாத்பேயர்.** Baalath Beer. [கிணற்றின் நாயகி.] யோசு $19^{8}$. அதின் மறுபெயர் 'பாகால்.' 1 நாளா $4^{33}$.

**பாலா மலை.** Mount Baalah. யோசு $15^{11}$.

**பாலால்.** Balal. நெகே $3^{25}$.

**பாலிஸ்.** **Baalis.** நேபுகாத்நேச்சார் பிடித்த ஒரு ராஜா. எரே $40^{14}$.

**பாலே-யூதா.** **Baale-Judah.** = பாலா (1). 2 சாமு $6^{2}$.

**பால்.** **Milk.**

1. பசு முதலிய மிருகங்களின் பால். ஆதி $18^{8}$ யாத் $3^{8}$ உபா $14^{25}$ $32^{14}$ யோபு $10^{10}$ நீதி $27^{27}$ $30^{33}$ 1 கொரி $9^{7}$.

2. தாயின் பால். ஏசா $28^{9}$.

3. வேதநூல். 1 கொரி $3^{2}$ எபி $5^{12}$ 1 பேது $2^{2}$.

4. இன்பம். உன். பா $4^{11}$.

5. நன்மை. ஏசா $55^{1}$.

**பால்கட்டி.** **Cheese.** 1 சாமு $17^{18}$ 2 சாமு $20^{29}$.

**பாவ அறிக்கை.** **Confession of Sin.**

**I. பழைய ஏற்பாடு.** பழைய ஏற்பாட்டிலே மோசேயின் பிரமாணத்தில் ஒவ்வொருவனும் தான்செய்த பாவங்களுக்காக பாவ அறிக்கை செய்வது அவசியம் என்றும், ஜனங்கள் தாங்கள் பொதுவாய்ச் செய்த பாவங்களுக்காக ஏகமாய்ப் பாவ அறிக்கை இடவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. லேவி $5^{1}$ $16^{21}$ $26^{40}$. பாவ அறிக்கை இல்லாவிட்டால் பாவ மன்னிப்பும் இல்லை. பாவ அறிக்கையைப்பற்றிய திருஷ்டாந்தங்கள் அநேகம் உண்டு. எஸ்றா $10^{1}$ நெகே $1^{6}$ சங் $25^{7}$ $32^{5}$ $51^{2}$ தானி $9^{4}$ நீதி $28^{13}$. **பாவநிவிர்த்தி செய்யும்நாள்** காண்க.

**II. புதிய ஏற்பாடு.** புதிய ஏற்பாட்டில் பாவ அறிக்கையைப்பற்றிய போதனை.

*a.* கடவுளுக்குமுன் பாவ அறிக்கை செய்வது அவசியம். மத் $4^{17}$ மாற் $1^{15}$ லூக் $11^{29}$ $15^{17}$ $18^{10}$ $24^{47}$ 1 யோவா $1^{9}$. இயேசு கிறிஸ்து மனுஷர்கள் தாங்கள் செய்த பாவத்தைக் குறித்துக் கடவுளுக்கு முன்பாகப் பாவ அறிக்கை செய்யவேண்டும் என்று பல தடவை சொல்லியும், தாம் தேவகுமாரனாயிருந்து ஒருபோதும் தமக்காகப் பாவ அறிக்கை செய்யவேயில்லை.

*b.* ஒருவனுக்கு நாம் தீமை செய்திருந்தால், செய்த குற்றத்தைப்பற்றி அவன் முன் பாவ அறிக்கை செய்யவேண்டும். மத் $5^{23}$ லூக் $17^{4}$ யாக் $5^{16}$. பரி. யாக்கோபு கிறிஸ்தவர்கள் தாங்கள் செய்த பாவங்களை ஒருவருக்கொருவர் அறிக்கை செய்யவேண்டியதைப்பற்றிப் பேசுகிறான். யாக் $5^{16}$.

பிற்காலத்தில் ஓரிகேன் (*Origen*) என்னும் மகா வேதசாஸ்திரி, வியாதியஸ்தன் ஒருவன் தனது உடற்குறைகளை வைத்தியனிடம் எப்படிச் சொல்லுவானோ, அப்படியே பாவத்தினால் காயப்பட்ட ஒருவனும் தனக்கு நல்ல புத்திபோதனைகளைக் கொடுக்கக்கூடிய ஒருவனிடத்தில் போய், பாவ அறிக்கை செய்யவேண்டும் என்று புத்திமதி சொல்லுகிறான்.

மூன்றும் நூற்றாண்டில் கொலை, விக்கிரகாராதனை, விபசாரம் என்னும் மூன்று பாவங்களுக்கும் உட்பட்டவன் சபைக்கு முன்பாக பாவ அறிக்கை செய்து தண்டிக்கப்படவேண்டும் என்பதும், கண்காணிமார் அவனுக்குப் பாவமன்னிப்பைக் கொடுக்குமட்டும் அவன் திருச்சபையினின்று அப்புறப்படுத்தப்படவேண்டும் என்பதும் வழக்கம்.

கி—பி. 440—461 பாப்புவாயிருந்த முதலாம் லேயோ என்பவன் சபைக்கு முன்பாகப் பாவ அறிக்கை செய்யும் முறைமைக்குப் பதிலாக, குருவானவரிடத்தில் பாவ அறிக்கை செய்யும் முறைமையை ஸ்தாபித்தான். ஆனால் முதலிலே பெரிய பாவங்களைப்பற்றிமாத்திரம் இவ்விதமாய்ப் பாவ அறிக்கையிடவேண்டியிருந்தது. இந்தப் பாவங்களைச் செய்தவர்களைத் திருச்சபையிலிருந்து தூரத்துவதற்கு அந்தக் காலம்வரையில் சபைக்கு அதிகாரம் இருந்தது. யோவா $20^{22.23}$ மத் $16^{19}$ $18^{18}$. பிறகு சபையின் அதிகாரம் குருமார் கைவசம் மாறிற்று. படிப்படியாக சபையார் மகாபாதகங்கள்மாத்திரம் அல்ல, தாங்கள் செய்த சகல பாவங்களையும் குற்றங்களையும் அறிக்கை செய்யவேண்டும் என்று குருமார் கட்டாயப்படுத்திவந்தார்கள். பிற்காலத்தில் ரோமான்கத்தோலிக்க சபையானது கிறிஸ்தவர்கள் யாவரும் வருஷந்தோறும் தாங்கள் செய்த குற்றங்களையும் மனதில் பாவனைசெய்த பாவங்களையும் குருவானவருக்கு அறிக்கையிடுவது அவசியம் என்றும், ஒருவன் தான் செய்த குற்றத்தைப் பற்றி மனஸ்தாபப்பட்டு இனி அப்பாவங்களைச் செய்யாதிருக்க விரும்பினால், அவைகளை மன்னிக்கிறதற்குக் குருமாருக்கு அதிகாரம் உண்டு என்றும், ஏற்பாடு செய்திருக்கிறது. மற்றக் கிறிஸ்தவ சபைகளில் குருமாரிடத்தில் பாவ அறிக்கை செய்வது கட்டாயம் அல்ல.

**பாவ சங்கீர்த்தனம்.** **Auricular Confession.** பாவ அறிக்கையை ரோமசபையார் 'பாவ சங்கீர்த்தனம்' என்கிறார்கள். (தமிழ் அகராதியில் இந்த மொழிக்கு இந்த அர்த்தம் சொல்லப்படவில்லை.) அவர்

கள் குருவினிடத்தில் பாவங்களை அறிக்கையிட்டால், குருவானவன் பாவங்களை மன்னிப்பான் என்கிறார்கள். பரி. யாக்கோபும் விசேஷமாய்க் குருவினிடத்திலல்ல, ஒருவர் மற்றொருவருக்குப் பாவங்களை அறிக்கையிடுங்கள் என்றான் என்பது மெய். யாக் 5[16]. ஆனால் ஆண்களும் பெண்களும் ஒரு குருவானவரிடத்தில் தாங்கள் செய்த பாவங்களையும் தங்கள் மனதிலுள்ள ஆசைகளையும் இரகசியமாய்த் தெரிவிப்பது நலமா? நல்லதல்ல, என்று நமக்குத் தோன்றுகிறது. மேலும் வேதவசனத்தில் இதற்குக் கட்டளையில்லை. பாவங்களை மன்னிக்கிறது கடவுளுக்கே உரியது. சங் 32[5] ஏசா 43[25] 55[6] எரே 29[13] மத் 11[28] மாற் 2[7]. போதகர்கள் இக்காலத்தில் மனிதர்கள் தங்கள் பாவங்களைவிட்டு மெய்யாய்க் குணப்பட்டு இயேசுகிறிஸ்துவை விசுவாசித்தாலொழிய அவர்களுக்கு பாவ மன்னிப்பில்லை என்று சொல்லக்கூடும். ஆயினும் போதகர்கள் மனிதர்களுடைய பாவங்களை நாங்கள் மன்னிக்கக்கூடும் என்று துணிந்து சொல்ல இடமில்லை.

**பாவ நிவாரண பலி.** Sin offerings. யாத் 29[14] 30[10] சங் 40[6] லேவி 4[3] 5[6] 6[17] 7[37] 9[1] 10[16] 12[6] 14[13] 15[15] 16[3-27] எண் 6, 7, 8, 15, 28 அதி. எசே 40[39] 42[13] 43[19-25] 44[27] 45[17-25] 46[20]. பலிகள் காண்க.

**பாவ நிவாரணம்.** Atonement.

பாவத்தின் தன்மையைக்குறித்து வேதம் போதிக்கிறதை அறிய தீமை, பாவம் காண்க. பாவம் உண்டென்று உலகத்திலுள்ள மனுஷர் யாவரும் ஒத்துக்கொள்வார்கள். ஆதலால் நாம் எங்கே பார்த்தாலும் மனுஷர் புண்ணியக் கிரியைகளினாலாவது, பலியினாலாவது பாவ நிவாரணம் செய்வதற்குப் பிரயாசப்படுவதைப் பார்க்கிறோம். பலியின்மூலமாய்ப் பாவம் போகும் என்கிற நம்பிக்கை புறமதஸ்தருக்குள் அபூர்வம் என்றும், இஸ்ரவேலருக்குள் சாதாரணம் என்றும் நாம் பார்த்திருக்கிறோம். பலி காண்க. புதிய ஏற்பாட்டின் போதனையை நாம் ஒரே வாக்கியத்தில் அடக்கிவைக்கக் கூடுமானால் அது இயேசுகிறிஸ்து தம்மையே பாவ நிவாரண பலியாக கொடுத்ததனால் சர்வலோகத்தின் பாவங்களை நிவிர்த்திசெய்கிறார் என்பதே என்று நாம் சொல்லலாம். இதுவே புதிய ஏற்பாட்டின் போதனை என்று நாம் முதலாவது காண்பித்து அப்புறம் இந்தப் போதனை நியாயம் என்றும் சர்வலோகத்தாருடைய வாஞ்சையையும் திருப்தியாக்கக் கூடியது என்றும் காண்பிக்கப் பிரயாசப்படுவோம்.

**I. புதிய ஏற்பாட்டின் போதனை.**

**1. இயேசுகிறிஸ்துவின் போதனை**

(1) முதல் மூன்று சுவிசேஷங்களில் தோன்றுகிறபடி இயேசுகிறிஸ்து தமது மரணத்தை முந்தி அறிந்துகொண்டு தமது ஊழியத்தின் முதல் அல்லது இரண்டாம் வருஷத்தில் அதைக்குறித்துக் குறிப்பாய்ப் பேசத் தொடங்கினார். மாற் 2[20]. பிலிப்புச் செசரியாவண்டை பேதுரு அவரை அறிக்கையிட்ட நாள்முதல் இயேசு தாம் மரிக்கப் போகிற சங்கதியைத் தெளிவாக காண்பித்தார். மாற் 8[31] 9[12.31]. அப்புறம் தமது மரணம் மனுஷருடைய ஜீவனை மீட்கும் என்று அவர் போதித்து இவ்விதமாய் அதன் நோக்கத்தைக் குறித்துக் குறிப்பாக பேசினார். மாற் 10[45]. கடைசி இராப்போஜனத்தில் தமது இரத்தம் புதிய உடன்படிக்கைக்குரியதென்று சொன்னார். மத் 26[28] (யாத் 24, எரே 31[31-34] காண்க). அதே சமயத்தில் ஏசா 53—ல் சொன்ன அக்கிரமக்காரரில் ஒருவனாக தாம் எண்ணப்பட்டார் என்று சொல்லப்பட்டிருப்பது தமக்கே உரியதென்று சொன்னார். லூக் 22[37]. இயேசு உயிரோடெழுந்தபின் தீர்க்கதரிசிகளுடைய வார்த்தைகள் தமது மரணத்தின்மூலமாய் நிறைவேறிற்றென்று காண்பித்தார். லூக் 24[26.27.46].

(2) யோவான் எழுதின சுவிசேஷத்திலும் அதேமாதிரியாக முதலாவது குறிப்புகளும் (2[19] 3[14] 6[51-8] 8[28]) அப்புறம் தெளிவான போதனையும் (10[11] 12[24] 15[13]) தோன்றுகின்றன.

2. அப்போஸ்தலருடைய போதனை.

(1) பேதுரு பெந்தெகொஸ்தே என்னும் நாளில் செய்த பிரசங்கத்தில் இயேசுவின் மரணம் தேவன் நிர்ணயித்திருந்த ஆலோசனையின்படி நடந்ததென்று சொன்னான். அப் 2[23]. அப்புறம் அவருடைய மரணம் தீர்க்கதரிசிகளுடைய முன் அறிவிப்பின்படி நடந்தது என்றும் (அப் 3[18]), பாடுபட்ட கிறிஸ்துவின் மூலமாய்ப் பாவங்கள் நிவிர்த்தி செய்யப்படுமென்றும் சொன்னான். அப் 3[20]. அப்படியே தன் முதல் நிருபத்தில் இயேசுகிறிஸ்துவின் இரத்தம் தெளிக்கப்படுவதைப்பற்றிப் பேசுகிறான். 1பேது 1[2] (யாத் 24 காண்க.). அந்நிருபத்தை வாசிப்பவர்கள் தங்கள் வீணான நடத்தையிலிருந்து கிறிஸ்துவின் இரத்தத்தினால் மீட்கப்படுவார்கள் என்றும் (1பேது 1[18.19]), கிறிஸ்து பாடுபடுவதில் நமக்கு மாதிரியைப் பின்வைத்ததோடுகூட நம்முடைய பாவங்களையும் சுமந்தார் என்றும் சொல்லுகிறான். 1பேது 2[21.24] (லேவி 5[17]

எண் $14^{34}$ காண்க) அநீதியுள்ளவர்களுக்குப் பதிலாக கிறிஸ்து பாடுபட்டார் என்றும் சொல்லுகிறான். 1 பேது $3^{18}$.

(2) பவுல் சிலுவையில் அறையப்பட்ட இயேசுகிறிஸ்துவைப் பிரசங்கிப்பதே தன் பிரதான வேலை என்று எண்ணினான். 1 கொரி $2^{2}$. ஒருவன் வந்து வேறொரு சுவிசேஷத்தைப் பிரசங்கித்தால் அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவன் என்று சொல்லுகிறான். கலா $1^{4.8}$. இங்கு முக்கியமான வசனங்களைமாத்திரம் காண்பிக்கும்படி இடம் உண்டு. இவைகளை நாம் கூடியமட்டும் அவன் எழுதிய காலக்கிரமப்படி சொல்லுவோம்.

கிறிஸ்து நமக்காக மரித்தாரே என்று பவுல் சொல்லுகிறான். 1 தெச $5^{10}$ கலா $2^{20}$–ல் கிறிஸ்தவ ஜீவியம் கிறிஸ்து தமது மரணத்தின் மூலமாய்க் காண்பித்த அன்புக்கு நன்றியறிதலான ஜீவியம் என்று சொல்லுகிறான். கலா $5^{24}$ $6^{14}$ காண்க. மனுஷர் மீறின நியாயப்பிரமாணத்தினால் வரும் சாபத்திற்கு அவர்களை நீங்கலாக்கி மீட்டுக்கொள்ளும்படி கிறிஸ்து வந்தார் என்று சொல்லுகிறான். கலா $3^{13}$. 1 கொரி $6^{20}$ $7^{23}$ என்னும் வசனங்களின் மூலமாய் இரட்சிப்பு ஒரு அற்பகாரியமல்ல என்று அறிவோம். 1 கொரி $5^{7}$–ல் கிறிஸ்துவின் மரணம் பஸ்காவுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. 2 கொரி $5^{13-21}$–ல் அவர் பாவம் (அதாவது பாவநிவாரணபலி) ஆக்கப்பட்டார் என்றும், மனுஷர் எல்லாரும் ஒப்புரவாக்கப்படும்படி இது செய்யப்பட்டது என்றும் போதிக்கிறான். ரோம $3^{21.26}$–ல் தேவனுடைய நீதி கிறிஸ்துவின் மரணத்தின் மூலமாய் வெளியாக்கப்பட்டதென்றும்; ரோம 6-ம் அதிகாரத்தில் கிறிஸ்து நமக்காக அடைந்த மரணத்தின் மூலமாய் நாம் பாவத்திற்கு மரிக்கும்படி ஏவப்படுகிறோம் என்றும் காண்பிக்கிறான். அப்படியே ரோம $8^{1-4}$–ல் கிறிஸ்துவின் மரணத்தின்மூலமாய் நாம் ஆக்கினையிலிருந்து விடுதலையாக்கப்படும்போது அதே மரணத்தால் பாவத்தின் வல்லமையிலிருந்து விடுதலை பெறுவோம் என்று சொல்லியிருக்கிறது. கொலோ $1^{20}$ $2^{13-5}$ எபே $1^{7}$ $2^{13}$ 1 தீமோ $2^{5.6}$ தீத்து $2^{14}$ என்னும் வசனங்களில் பவுல் இதே சத்தியத்தை வற்புறுத்தித் திருஷ்டாந்தப்படுத்துகிறான்.

(3) எபிரெயருக்கு எழுதின நிருபத்தில் கிறிஸ்துவின் மரணத்தின் விசேஷம் பலவாறாகக் காண்பிக்கப்படுகிறது. இந்நிருபத்தை எழுதினவன் அந்த மரணம் தேவனுடைய கிருபையை வெளிப்படுத்துகிறதென்றும் (எபி $2^{9}$), பாவங்களை நீக்கினதென்றும் ($1^{3}$) காண்பித்து, இயேசு பிரதான ஆசாரியராய்த் தேவனால் நியமிக்கப்பட்டார் என்றும், தேவனுடைய சித்தத்திற்குக் கீழ்ப்படிந்து வந்தாரென்றும் காண்பிக்கிறான். கிறிஸ்துவின் மரணம் பாவத்தை நிவிர்த்திசெய்யும் பலி என்று இந்நிருபத்தில் தெளிவாய்ப் போதிக்கப்படுகிறது. மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி பாவத்திற்காக பலி செலுத்துவது ஆசாரியனுடைய முக்கியமான வேலை என்றும் கிறிஸ்து பிரதான ஆசாரியராக வந்து தம்மையே ஒரே பலியாக ஒப்புக்கொடுத்து மனுஷரைப் பரிசுத்தமாக்கினார் என்றும் இந்த நிருபம் காண்பிக்கிறது. எபி $10^{14}$ மு. இந்தப் பலியின்மூலமாய்ப் பாவிகள் தேவனுடைய சமுகத்தில் பிரவேசிக்கும்படியாக சிலாக்கியம் பெறுகிறார்கள். $10^{19}$. கிறிஸ்து நித்தியஆவியின் மூலமாய்த் தம்மை ஒப்புக்கொடுத்தாரென்றும் ($9^{14}$), கட்டாயமில்லாமல் தமது சுய சித்தத்தின்படி இப்படிச் செய்தாரென்றும் ($10^{5-10}$) சொல்லியிருக்கிறது.

(4) யோவான் எழுதின சுவிசேஷத்தில் தோன்றுகிற இயேசுவின் சொந்த போதனையைப்பற்றி மேலே எழுதியிருக்கிறோம். அதுதவிர சுவிசேஷகன் யோவான்ஸ்நானனுடைய சாட்சியைச் சொல்லி (யோவா $1^{35}$), இயேசுவின் மரணத்தைப்பற்றி வெகு நுட்பமாய் எழுதி, அந்த மரணமானது பழைய ஏற்பாட்டுத் தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களைப் பலவாறாக நிறைவேற்றிற்றென்று காண்பிக்கிறான். யோவா $3^{16}$–ல் இரட்சிப்பின் காரணர் தேவபிதா என்றும், இரட்சிப்பின் தன்மை இன்னதென்றும் காண்பிக்கிறான். முதல் நிருபத்தில் இயேசுவின் மரணத்தைக்குறித்தும், அதன் மூலமாய் வரும் பாவ மன்னிப்பைக்குறித்தும் அடிக்கடி பேசுகிறான். 1 யோவா $1^{7}$ $2^{1.2}$ $2^{12}$ $3^{5}$ $4^{10}$ $5^{6-8}$ காண்க. வெளிப்படுத்தின விசேஷத்திலும் அடிக்கடி இவைகளைப்பற்றிப் பேசுகிறான். வெளி $1^{5.6}$ முதலியவைகளைக் காண்க. 'ஆட்டுக்குட்டி' என்னும் பெயர் வெளிப்படுத்தின விசேஷத்தில் 29 தடவை சொல்லப்பட்டிருக்கிறது. ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினால் சுத்திகரிப்பும் ($7^{14}$), ஆவிக்குரிய பலனும் ($12^{11}$) கிடைக்கும் என்று காண்பிக்கிறான்.

இத்தனை திருஷ்டாந்தங்களின் மூலமாய்ப் புதிய ஏற்பாட்டின் போதனையைக் காட்டப் பிரயாசப்பட்டிருக்கிறோம். இத்தனை வெவ்வேறான ஆகமங்களில் இவ்வளவு ஒற்றுமை

இருப்பது விசேஷித்த காரியந்தான். இந்தப் போதனையில் அடங்கியிருக்கும் முக்கியமான காரியங்களாவன, கிறிஸ்து சர்வலோகத்தாருடைய பாவத்திற்காக மரித்தார் என்பதும், அவருடைய மரணத்தின் மூலமாய் மனுஷருக்குப் பாவமன்னிப்பும் தேவனோடு சமாதானமும், புதிய ஜீவனும், உலகத்தின் மேல் ஜெயமும் கிடைக்கும் என்பதுமே.

II. இந்தப்போதனை நியாயமென்று காட்டும்படியாக நாம் பிரயாசப்படவேண்டும்.

1. கிறிஸ்து ஏன் மரித்தாரென்றால் அந்தக் கேள்விக்குப் பல பதில் சொல்லலாம்.

அவர் சத்துருக்களுடைய விரோதத்தின் மூலமாய்க் கொல்லப்பட்டாரென்று சொல்லலாம். அவர் நன்மை செய்தவராய்ச் சுற்றித் திரிந்தார் (அப் 10[38]). மனுஷரோவென்றால் அவர் செய்த நன்மைகளை அலட்சியம் பண்ணினார்கள், அல்லது அந்நன்மையைத் தீமை என்று சொன்னார்கள். மாற் 3[22]. அதிகாரிகள் பொறாமைகொண்டு அவரைக் கொலை செய்யவேண்டுமென்று தீர்மானஞ் செய்தார்கள். இயேசு அவர்களுக்கு இணங்கியிருந்தால் அவர் உயிர் தப்பியிருக்கலாம். அவர் கொஞ்சமேனும் இணங்காமல் தைரியத்தோடு சத்தியத்திற்குச் சாட்சி கூறினதினால் அவர்களால் கொல்லப்பட்டார். ஆதலால் அவர் ஒரு இரத்தச்சாட்சி என்று சொல்லக்கூடும்.

ஆனாலும் நாம் இன்னும் விசாரித்தால் அவருக்கும் சாதாரண இரத்தச்சாட்சிகளுக்கும் இருந்த வித்தியாசம் கொஞ்சமல்ல என்று பார்ப்போம்.

(i) அவருக்கு இஷ்டமானால் அந்தக் குரூர மரணத்துக்குத் தப்பித்துக்கொள்ளும்படி பரம பிதாவின் சகாயத்தைக் கேட்கலாம். மத் 26[53]. ஆதலால் அவர் மற்றவர்களைப் போல் பலவந்தமாய்க் கொல்லப்படாமல் தமது சுய இஷ்டப்படி தம்மை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்தார் என்று காணப்படுகிறது.

(ii) நாம் இரத்தச்சாட்சிகளைக் குறித்து வாசித்தால் அவர்களில் அநேகர் மரணத்தின்மேல் ஜெயங்கொண்டு சரீர வேதனையை அற்பமாய் எண்ணிக் கெம்பீரத்தோடு மரித்தார்கள் என்று அறிவோம். இயேசுவோவென்றால் சொல்லிமுடியாத வியாகுலத்தோடு மரித்தார். சிலுவையின் மரணம் மற்ற எல்லாவிதமான மரணத்தைப்பார்க்கிலும் குரூரமான மரணமே. சிலுவையில் அறையுண்டவர்கள் படவேண்டிய நோவும் தாகமும், அவமானமும் அகோரமாயிருந்தன. என்றாலும் இரத்தச்சாட்சிகளில் அநேகம் பேர் கிறிஸ்துவினிமித்தம் அவ்வளவு வேதனை நிறைந்த மரணத்தைப் பொறுமையோடும் சந்தோஷத்தோடும் சகித்தார்களே. அவ்விஷயத்தில் குருவானவர் தம் சீஷர்களைப்பார்க்கிலும் பலவீனரா? அப்படி நினைக்கலாகாது. என்றாலும் அவர் கெத்செமனேயில் இருந்தபொழுது 'இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமானால் நீங்கும்படி செய்யும்' என்று ஜெபம் செய்து சிலுவையில் தொங்கினபொழுது 'என் தேவனே, என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர்' என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார். நாம் இதைக் கவனிக்கும்பொழுது சாதாரண இரத்தச்சாட்சிகள் சுமக்காத ஒரு பாரத்தை அவர் சுமந்தாரென்று தோன்றுகிறது. அந்தப் பாரம் சர்வலோகத்தாருடைய பாவம் தான் என்று வேதம் சொல்லுகிறது.

2. ஆனாலும் பாவஞ்செய்யாதவர் பாவபாரம் எப்படிச் சுமக்கக்கூடும் என்று நாம் விசாரிக்கவேண்டும். அவனவன் தன்தன் பாரத்தைச் சுமப்பானே என்று சொல்லியிருக்கிறது அல்லவா? கலா 6[5]. மெய்தான்; என்றாலும் மனுஷர் அநேகவிதமாய் மற்றவர்களுடைய பாரத்தைச் சுமக்கக்கூடும் என்று நாம் சாதாரண ஜீவியத்தில் காண்கிறோம். கிறிஸ்து செய்த இரட்சண்யவேலை தனியே நிற்கிறபடியால் மனுஷரின் ஜீவியத்திலிருந்து நாம் எடுக்கும் திருஷ்டாந்தங்கள் எல்லாம் குறைவாயிருக்கவேண்டும். என்றாலும் இவ்விதமான திருஷ்டாந்தங்கள் எம்மட்டும் பிரயோஜனமாயிருக்கிறதோ அம்மட்டும்மாத்திரம் நாம் அவைகளை உபயோகிக்கக்கூடும். நாம் இவ்விதமாய்ச் சாதாரண ஜனங்களின் ஜீவியத்தைப்பார்த்தால் நல்லவர்கள் பொல்லாதவர்களின் பாவத்திற்காகப் பாடுபடுவார்கள் என்று பார்க்கலாம். ஒருவன் கெட்ட குமாரன் போலத் துன்மார்க்கமாய் ஜீவித்தால் அவன் செய்யும் பாவம் அவனுடைய அன்புள்ள தாய்தகப்பன்மாருக்குச் சொல்லிமுடியாத விசனத்தை உண்டாக்கும். பெற்றோருக்கும் பிள்ளைக்கும் இரத்த சம்பந்தம் இருப்பதால் பிள்ளைக்கு எந்த அவமானம் வருகிறதோ அது தங்களுக்கே அவமானம் என்று பெற்றோர் நினைப்பார்கள். அதுவுமன்றி, இவ்வித பாத்தியமில்லாத ஒருவன் அன்பினால் ஏவப்பட்டு மற்றவர்களுடைய பாரம் தனக்குச் சொந்தமாயிருந்தால்போல அதைச் சுமக்கக்கூடும். திருஷ்டாந்தமாக, ஒரு ராஜகுமாரன் தன் தகப்பனுடைய ராஜ்யத்திலிருக்கும் ஒரு ஊராருடைய பரிதாபமான நிலைமையைக்குறித்துக் கேள்விப்பட்டு அவ்

ரூராரைச் சீர்ப்படுத்தும்படியாக அவர்கள் நடுவே வாசம்பண்ணி, தினந்தினம் அவர்களுக்கு நன்மை செய்யப் பிரயாசப்பட்டால் அவன் அவர்களுடைய பாவபாரத்தை ஒருவாறாக சுமக்கவேண்டும் அல்லவா? துன்மார்க்கரான அவர்களோடு சஞ்சரித்து, அவர்களுடைய துர்ப்பேச்சைக் காதாரக் கேட்டு, அவர்களுடைய துர்நடக்கையைக் கண்ணாரக் கண்டு அதிக வருத்தப்படுவான். அதுவுமன்றி அந்த துஷ்ட ஜனங்கள் அவன் சொல்லைக் கேளாமலும், அவன் செய்யும் உபகாரங்களைக் கவனியாமலும் தங்கள் பொல்லாதவழியில் முன்போலவே நடந்ததுமன்றி நன்றிகெட்டு அவ்வுபகாரியை நிந்தித்து வாதித்துக் கடைசியாக அவனைக் கொலைசெய்வார்களானால் அவன் அவர்களுடைய பாரத்தைச் சுமந்தான் என்று நாம் சொல்லக்கூடும். இவ்விதமான அன்பான ஊழியத்திற்கு இயேசுவின் மரணம் மகா சிறந்த திருஷ்டாந்தமே. உலகமானது அந்தப் பொல்லாத ஊரைப்போலவே இருக்க, தேவகுமாரன் தம்மைத்தாழ்த்தி அதன் பொல்லாதகுடிகளோடு தம்மை ஐக்கியப்படுத்தினார். பிலி 2[6,7]. அவர் மெய்யான மனுஷனாக, மனுஷன் சாதாரணமாய் அனுபவிக்கவேண்டிய எல்லாக் கஷ்டங்களையும் அனுபவித்தார். மனுஷர் பட்ட பாடுகளைப் பார்த்து அநுதாபத்துடன் அவர்களோடு துக்கப்பட்டார். மத் 8[17]. அதுவுமன்றி அவர்களுடைய பாவத்திற்காக விசேஷித்த விதமாய்ச் சிலுவையில் மாத்திரமல்ல தமது ஜீவநாள் எல்லாம் அவர் பாடுபட்டார். பூரண பரிசுத்தர் பாவிகளின் நடுவில் ஜீவிப்பதே அவருக்கு அதிக சஞ்சலமாயிருக்கும். நாள் செல்லச்செல்ல ஜனங்களின் நன்றிக்கேடும் அவருடைய சத்துருக்களின் பகையும் தெளிவாகக் காணப்பட்டன. கடைசியாக அவர் கொல்லப்பட்டபொழுது அந்தக் கொலைபாதகத்தில் மனுஷருடைய தன்மை பாவம் நிறைந்தது என்று காணப்படுகிறது. அவர் தமக்குச் சொந்தமானதிலே வந்தார், அவருக்குச் சொந்தமானவர்களோ அவரை ஏற்றுக்கொள்ளவில்லை. யோவா 1[11]. அவரைக் காட்டிக்கொடுத்தவன் அவருடைய சொந்த சீஷன். அவர்மேல் பொறாமைகொண்டு சதியோசனை செய்தவர்கள் அவருடைய சொந்த ஜனத்தின் அதிகாரிகளே. உலகத்திலிருந்த மற்ற மனுஷர்கூட அதேவிதமான பாவத்தன்மை யுடையவர்கள் என்று இயேசு அறிந்து உலகத்தின் பாவத்தைச் சுமந்தார் என்று நாம் சொல்லக்கூடும்.

**3. அவருடைய மரணம் தேவனுடைய கோபாக்கினைக்கு அடையாளம்.**

இயேசுகிறிஸ்து இவ்விதமாய்த் தமது ஜீவநாளெல்லாம் மனுஷருடைய பாவத்தைச் சுமந்திருந்தாரென்றும் விசேஷமாய்த் தமது மரணத்தில் அந்தப் பாரம் இவ்வளவென்று உணர்ந்தார் என்றும் நாம் சொல்லியிருக்கிறோம். ஆனாலும் அவருடைய மரணத்தில் இன்னொன்று அடங்கியிருந்தது; அதென்னவென்றால், மரணம் தேவனுடைய கோபாக்கினைக்கு அடையாளம் என்று அறிதலே. வேதத்தின் போதனையின்படி மரணம் பாவத்தின் பலனாயிருக்கிறது. ஆதி 2[17] முதலியவை. பவுல் அப்புறம் சொன்னபடி மரணத்தின் கூர் பாவம். 1 கொரி 15[56]. இயேசு பாவம் செய்யாதவராயிருந்தும் அவருடைய மரணத்தில் ஒரு கூர் இருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. மரணத்தின்மூலமாய்த் தேவன் மனுஷர்மேல் தமது கோபாக்கினையைக் காண்பித்தாரென்று அவர் அறிந்து மரணத்தின் கூர் இன்னதென்று அறிந்தார். தமது மரணம் மனிதருடைய பாவத்தினிமித்தம் வந்ததென்று அவர் அறிந்து அதிக வியாகுலப்பட்டார்.

**4. அவர் மரணத்தில் பாவபாரம் சுமந்தார்.**

ஆதலால் இயேசு மனுஷருடைய பாவபாரத்தைச் சுமந்தார் என்று நாம் சொல்லக்கூடும். அதுவுமன்றி நாம் இப்படிச் சொல்வது அவசியம். ஏனென்றால், இயேசு பட்ட பாடுகளுக்கு இதுதவிர போதுமான நியாயம் இல்லை. சிலர் சொல்லியிருக்கிற மற்ற நியாயங்கள் போதாது. திருஷ்டாந்தமாக, சிலர் அவர் இரத்தச்சாட்சியாக மரித்தார் என்று சொல்லுவதும், வேறு சிலர் நாம் தைரியத்தோடு மரணத்தைச் சந்திக்கும்படி அவர் நமக்கு முன்மாதிரியைக் காண்பித்தார் என்று சொல்லுவதும் போதாது. அது அவருடைய நோக்கமாயிருந்தால் ஏன் இவ்வளவு வியாகுலத்தை அடையவேண்டும்? அதே மாதிரியாக அவர் மற்றவர்களுக்காக பாடுகளைப் பொறுமையோடு சகித்துத் தமது உயிரைக் கொடுத்து இவ்விதமாய் நமக்கு நல்ல முன்மாதிரியைக் காண்பித்தார் என்று சொல்லுவதும் போதாது. அவருடைய மரணம் முன்மாதிரிதான். 1 பேது 2[21-3]. ஆனால் ஒருவன் நோக்கம் இல்லாமல் மற்றவர்களுக்காகப் பாடுபடுவது அவசியமில்லை. ஒரு நல்ல மனுஷன், ஒருவனை ஏதோ ஓர் ஆபத்திலிருந்து இரட்சிக்க வேண்டுமானால் தன் உயிரைக் கொடுப்பானேயொழிய தன் சிநேகத்தைக் காண்பிக்கும்படியாக மாத்திரம் தன் உயிரைக் கொடுக்கமாட்டான். இயேசு மிகுந்த வியாகுலத்தோடு மரித்த

பொழுது நமக்கு நல்ல முன்மாதிரியைக் காண்பிக்கும்படி மாத்திரமல்ல, கொடிய ஆபத்திலிருந்து நம்மை இரட்சிக்கும்படியாகவும் மரித்தார். ஆதலால் இயேசு பட்ட பாடுகளுக்குக் காரணம் என்னவென்றால், அவர் அன்பினாலே ஏவப்பட்டு, பாவமுள்ள மனுஷரோடு தம்மை ஐக்கியப்படுத்தி, பாவத்தினால்வரும் சாபத்தையும் விசேஷமாய்த் தேவனுடைய கோபாக்கினைக்கு அடையாளமாயிருந்த மரணத்தையும் மனுஷரினிமித்தம் அனுபவிப்பதேயாம்.

5. **அவர் பிரதிநிதியாய் இருக்கிறார்.**

இயேசு இப்படிச் செய்ததால் உலகத்தார் செய்த பாவங்களைச் சுமப்பதோடுகூட அப்பாவங்களைத் தீர்த்துப்போட்டார் என்று நாம் சொல்லலாம். யோவா 1[29]. ஏனென்றால் இந்த விசேஷித்த கிரியையில் அவர் மத்தியஸ்தராக நிற்கிறார். 1 தீமோ 2[5]. அதாவது மனுஷர் பார்வையில் தேவனுக்குப் பிரதிநிதியாகவும் தேவனுடைய பார்வையில் மனுஷருக்குப் பிரதிநிதியாகவும் காணப்படுகிறார். முதலாவது தேவனுக்குப் பிரதிநிதியாக மனுஷர்செய்த பாவத்தின்மேல்தேவன் கொண்ட கோபாக்கினை இன்னதென்று காண்பிக்கிறார். பாவமானது தேவனுக்கு ஒரு சொற்பகாரியமாக காணப்படுகிறதேயில்லை. நல்ல பெற்றோருக்குக் கெட்ட குமாரனினிமித்தம் உண்டாகும் துக்கத்தைப் பார்க்கிலும் எல்லா மனுஷரும் செய்த பாவத்தினிமித்தம் தேவனுக்கு உண்டாகும் வேதனை அகோரமாயிருக்கிறது. அந்த வேதனை இவ்வளவென்று கிறிஸ்து பட்ட பாடுகளின்மூலமாய் நாம் பார்க்கலாம். இன்னும், பாவத்திற்குத் தகுந்த தண்டனை ஆறுதலில்லாத மரண வேதனையே என்று இயேசு தமது மரணத்தினால் காண்பித்தார். இவ்விதமாய்த் தேவன் தமது பிரமாணத்தின் மேன்மையைக் காண்பித்தார். ஏசா 42[21]. முக்கியமாக தேவன் இதன்மூலமாய்த் தமது அன்பைக் காண்பிக்கிறார். யோவா 3[16] ரோ 5[8]. மனுஷரை இரட்சிக்க அவர் விரும்பும்பொழுது தாம் தூரத்தில் நின்று இரட்சித்தால் போதுமென்று அவர் எண்ணாமல் தமது குமாரன் மூலமாய் மனுஷர் செய்த பாவத்தின் பலனைத் தாமே அநுபவித்து, இரட்சிப்புக்கு வேண்டியவைகளையெல்லாம் செய்கிறார். இவ்விதமாய் இயேசு தேவனுக்குப் பிரதிநிதியாக நின்று தேவனுடைய பரிசுத்தத்தையும் நீதியையும் அன்பையும் காண்பிக்கிறார். அப்படியே அவர் மனுஷருக்குப் பிரதிநிதியாக நின்று மனுஷர் மீறியிருந்த பிரமாணத்தைக் குறைவில்லாமல் நிறைவேற்றினார். தமது சுயசித்தத்தின்படி தேவனுக்குத் தம்மை ஒப்புக்கொடுத்து மரணபரியந்தம் தேவனுக்குக் கீழ்ப்படிந்தார். எபி 10[8,9] பிலி 2[8]. இன்னும் அவர் பாவம் செய்யாதவராயிருந்தும் மனுஷருடைய பாவத்தைத் தேவனுக்கு அறிக்கையிட்டு தேவனுடைய பிரமாணம் பரிசுத்தமென்றும், பாவத்தினால் வந்த அகோரவேதனை நியாயமான தண்டனை என்றும் காண்பித்தார்.

6. **எச்சரிப்புகள் சில.**

இவ்விதமாய் இயேசு நமக்குப் பதிலாகத் தம்மை ஒப்புக்கொடுத்தாரென்று நாம் சொல்லலாம். மத் 20[28]. நாம் தேவனுக்குக் காட்டவேண்டிய குறைவற்ற கீழ்ப்படிதலை அவர் நமக்குப் பதிலாகக் காண்பித்து நாம் படவேண்டிய ஆக்கினையை நமக்குப் பதிலாகச் சகித்தார். என்றாலும் அவர் நமக்குப் பதிலாக மரித்தாரென்று நாம் சொல்லும்பொழுது நாம் ஜாக்கிரதையாய்ப் பேசவேண்டும். ஏனென்றால் இந்தச் சத்தியத்தோடு சில தப்பான கொள்கைகள் கலந்திருக்கும்படி நேரிட்டிருக்கிறது. திருஷ்டாந்தமாக,

(i) பிதாவானவர் குமாரன்மேல் கோபமாயிருந்தார் என்று சிலர் சொல்லியிருக்கிறார்கள். இது முடியாதகாரியம். இவர் என்னுடைய நேசகுமாரன் என்று சொன்னவர் (மத் 3[17]) அந்தக் குமாரன் பிதாவின் சித்தத்தைப் பூரணமாய் நிறைவேற்றித் தன்னை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்தபொழுது அவர் மேல் கோபமாயிருப்பாரா? பிதா குமாரன் மேல் கோபமாயிருந்தார் என்று சொல்ல முடியாது; என்றாலும் இயேசு பாவிகளோடு தம்மை ஐக்கியப்படுத்தி, பாவிகள்மேல் நியாயமாய் விழுந்த தேவ கோபாக்கினை இவ்வளவென்று உணர்ந்தார் என்று நாம் சொல்லலாம்.

(ii) இயேசு பட்ட பாடுகள் ஒருதிட்டமான கணக்கின்படியே மனுஷர் எல்லாரும் நரகத்தில் படவேண்டிய பாடுகளுக்குச் சரி என்று சிலர் நினைக்கிறார்கள். வேதம் இப்படிச் சொல்லாததினாலும் இவ்விதமான கணக்கிடுதல் இரட்சிப்புக்கு அனாவசியமாயிருப்பதாலும் இப்படி நினைக்கலாகாது.

(iii) இயேசுகிறிஸ்து பிதாவின் மனசை மாற்றினார் என்று சிலர் நினைக்கிறதும் தப்பு. பிதா நீதியுள்ளவரென்றும் குமாரன் இரக்கமுள்ளவரென்றும் குமாரன் பிதாவின் நீதியைத் திருப்தியாக்கினதினால் அவர் மனுஷர்மேல் இரக்கம் வைக்கும்படி அவரை

ஏவிவிட்டார் என்றும் போதிக்கிற போதனை வேதத்திற்கு விரோதமான போதனைதானே. நாம் முன் பார்த்தபடி பிதாதாமே பாவநிவாரணத்திற்கு ஊற்றாயிருக்கிறார். யோவா $3^{16}$ ரோம $5^{8}$ 1 யோவா $4^{9}$. ஒரு தகப்பன் மற்றவர்களினிமித்தம் தன் பிள்ளையை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்தால் அதைச்செய்வதில் அவனுடைய அன்பு விளங்கமாட்டாதா? பிதாவாகிய தேவன் தமது ஒரேபேறான குமாரனை ஒப்புக்கொடுத்தபொழுது தமது நீதியைக் காண்பித்ததுமல்லாமல் தமது அன்பையும் விளங்கப்பண்ணினார். ஆதலால் இயேசு அவருடைய மனசை மாற்ற அவசியமில்லை. அப்படியே இயேசு அன்புநிறைந்தவர் மாத்திரமல்ல பிதாவைப்போல நீதியுள்ளவராயுமிருக்கிறார். பிதாவின் மனசை மாற்றும்படியல்ல, தமக்கும் பிதாவுக்கும் பொதுவாயிருந்த நீதியையும் அன்பையும் வெளிப்படுத்தும்படியாகவே குமாரன் மரித்தார்.

(iv) ஒரு மனுஷன் இன்னொரு மனுஷனுக்குப் பதிலாக தண்டிக்கப்படும் மாதிரியே இயேசு தண்டிக்கப்பட்டார் என்று சொல்லுகிறது தப்பு. ஒருவன் மரணாக்கினைத்தீர்ப்புப் பெறும்பொழுது ஒரு சிநேகிதன் வந்து அவனுக்குப் பதிலாக தன் ஜீவனை ஒப்புக்கொடுத்தால் அவன் தன் அன்பைப் பாராட்டுவான் என்று நாம் சொன்னாலும் குற்றமற்ற ஒருஆள் குற்றஞ்செய்த வேறொரு ஆளுக்குப் பதிலாகத் தண்டிக்கப்படுவது நியாயமா? இவ்விதமான திருஷ்டாந்தம் இயேசுவின் அன்பை விளங்கப்பண்ணத்தக்க திருஷ்டாந்தமா யிருப்பதேயொழிய அவருடைய இரட்சண்ணிய வேலையைக் காண்பிக்கத்தக்க திருஷ்டாந்தமல்ல. இயேசு பல ஆட்களில் ஒரு ஆளல்ல. அவர் எல்லாமனுஷருக்கும் பிரதிநிதியாக தேவனுக்கு முன்பாக நிற்கிறவரே.

(v) குற்றவாளிகளின்மேல் விழவேண்டிய தண்டனை விழாதபடிக்கு இயேசு மரித்தார் என்கிற அபிப்பிராயம் தப்பு. ஒருவன் சில வருஷக்காலமாய்த் துன்மார்க்கமாய் ஜீவித்துத் தன் சரீர சுகத்தைக் கெடுத்துத் தன் ஆஸ்தியை நாசமாக்கி அப்புறம் தன் பாவத்தை அறிக்கையிட்டுப் பாவநிவாரணஞ்செய்கிற இயேசுகிறிஸ்துவின்மேல் விசுவாசம் வைக்கும்பொழுது போன சுகமும் ஆஸ்தியும் திரும்பிவருமா? இவ்விதமான தண்டனையை அந்தப் பாவி தன் ஜீவநாளெல்லாம் சகிக்கவேண்டுமே. அல்லது தேவன் பாவத்தை மன்னிக்கும் சமயத்தில் அவர் விசேஷித்த தண்டனையை நியமிக்கலாம். எண் $14^{20-23}$ 2 சாமு $12^{13.14}$ காண்க. ஆதலால் நாம் படவேண்டிய தண்டனை முற்றிலும் நீக்கப்படும் என்று நாம் சொல்லக்கூடாது. இப்படியிருக்க கிறிஸ்து நமக்காக என்ன செய்திருக்கிறார் என்று கேட்டால் அவர் மூலமாய் நாம் தேவனோடு ஒப்புரவாகி, அவர் நம்மேல் நம்பிக்கைவைக்கவே இந்த நம்பிக்கைக்கு ஏற்றபடி நடக்கும்படியாக ஏவப்படுகிறோம் (பாவமன்னிப்பு காண்க). இதற்கு இசைவாக தன் மகனுடைய கண்ணுக்குப் பதிலாகத் தன் கண்ணைக் கொடுத்த ராஜாவைப்பற்றிச் சில பிரசங்கிகள் உபயோகிக்கும் கதை கிறிஸ்துவின் வேலைக்குத் தகுந்த திருஷ்டாந்தம் அல்ல.

5. கிறிஸ்து செய்த ஒப்புரவாகுதல்.

கிறிஸ்துவின் மரணத்தின் மெய்யான பிரயோஜனத்தை நாம் அறியவேண்டுமானால் மனுஷருக்குத் தேவையானதென்னவென்று நாம் விசாரிக்கவேண்டும். மனுஷர் தேவனுடைய பிரமாணத்திற்கு மாத்திரமல்ல, அவருடைய அன்புக்கும் விரோதமாகவே பாவஞ்செய்திருக்கிறார்கள். கெட்ட குமாரனைப்போல் பிதாவைவிட்டுப் பிரிந்து போயிருக்கிறார்கள். அவர்கள் மறுபடியும் பிதாவோடு ஒப்புரவாகி அவருடைய ஐக்கியப்பாட்டில் சகவாசஞ் செய்யக்கூடுமானால்தான் அவர்களுக்குப் பாக்கியம் கிடைக்கும். இந்த ஒப்புரவாகுதல் எப்படி உண்டாகும்?

சிலருடைய போதகத்தின்படி ஒவ்வொரு மனுஷனும் தன்தன் பாவத்தின் பலனை அனுபவிக்கவேண்டும், ஆதலால் பாவமன்னிப்புக் கிடைக்கிறது முடியாதகாரியம். இப்படி யிருக்குமேயானால் மனுஷருடைய நிலைமை மகா நிர்ப்பந்தமாயிருக்கிறது. பயங்கரமான குழியிலிருந்து தன்னைத்தானே தூக்கி எடுக்கக்கூடியவன் யார்?

சிலர் வெகு பிரயாசப்பட்டுத் தங்களை ஒருவாறாகத் தூக்கி எடுத்தாலும் தாங்கள் அடைந்த நிலைமை தங்கள் சுயப்பிரயாசத்தினால் அடைந்தார்களென்று அவர்கள் நினைத்துத் தங்கள் புண்ணியத்தில் மேன்மை பாராட்டுவார்கள். தேவனுடைய கிருபையினால் இரட்சிக்கப்படுகிறார்களென்று அவர்கள் நினைக்கிறதில்லை. அவர்கள் தேவனுக்கு நன்றி காட்டவேண்டும் என்றும் அந்நன்றியறிதலே சன்மார்க்கத்திற்கும் பரிசுத்தத்திற்கும் பலமான ஏவுதல் என்றும் அவர்கள் அறிகிறதுமில்லை.

வேறு அநேகர் கடவுளுடைய தயவினால் மன்னிப்புக் கிடைப்பது இலேசு என்று

நினைக்கிறார்கள். முந்தினவழி அதிக கஷ்டமான வழியாயிருக்க இந்த வழி வெகு சுலபமான வழி. பாவமன்னிப்பு இவ்வளவு இலேசாய்க் கிடைக்குமேயானால் அது மனுஷருக்கு அருமையான ஒரு நன்மையாக தோன்றாது. ஆதலால் மனந்திரும்புதல், நன்றியறிதல், பரிசுத்தம் முதலான ஆவிக்குரிய நன்மைகள் அதற்குப் பலனாகக் காணப்படா. லூக் 7[47].

மனுஷனைத் திருப்தியாக்கி மனச்சாட்சிக்கு மெய்ச்சமாதானத்தை அளிக்கக்கூடிய மன்னிப்பு என்னவென்றால் பாவத்தை அலட்சியமாக எண்ணாமல் அதன் அகோரத்தைக் காண்பித்து அப்பேர்ப்பட்ட பாவிகளுக்கும் தேவனுடைய கிருபை கிடைக்கும் என்று காண்பிக்கிற மன்னிப்பே. இயேசுவின் சிலுவையின் மூலமாய்க் கிடைக்கும் மன்னிப்பு அப்படிப்பட்ட மன்னிப்பே. பாவத்தின் அகோரம் எதிலே காணப்படுகிறதென்றால் தேவனே அதன் பலனைத் தம்மேல் சுமத்திக்கொண்டு அதன் சாபத்தை அனுபவிக்கிறார் என்பதிலேதான். அதாவது அதன் துர்ப்பலன்கள் மனுஷருக்கு மாத்திரம் அல்லாமல் தேவனுக்கும் எட்டுகின்றன. ஆனாலும் பாவம் இவ்வளவு அகோரமான காரியமாயிருந்தும் தேவனுடைய மட்டில்லாத இரக்கத்தின்படி மன்னிப்புக் கிடைக்கும். தேவன் பாவத்தை மன்னிக்காதபடி அநேக தடைகள் இருந்தும் அவர் இயேசுவின் சிலுவையின்மூலமாய் இவைகளை மேற்கொண்டு பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களுடைய பாவத்தை மன்னிக்கிறார். இந்தப் போதனை நாம் முன் சொன்ன இரண்டு தப்பிதங்களில் நாம் விழாதபடிக்கு மன்னிப்பு முடியாத காரியமுமல்ல, இலேசான காரியமுமல்ல, மகா அரிதான காரியமாயிருந்தும் இது தேவனுடைய கிருபையினால் கிடைக்கும் என்று காட்டுகிறது.

இயேசுவின் சிலுவையின் மூலமாய் மன்னிப்பைப் பெறுகிற மனுஷன் மூன்று காரியங்களை அறிந்து மூன்று காரியங்களைச் செய்வான். அவன் காணும் மூன்று காரியங்கள் யாவையெனில்:

(i) தன் பாவம் தேவனுடைய பார்வையில் தோன்றுகிறபடி அதைப் பார்ப்பான்.

(ii) பாவத்தின் பலனாகவந்த மரணம் அதற்கேற்ற தண்டனை என்று ஒத்துக்கொள்வான்.

(iii) ஒப்புரவாகுதலின் வழியில் நின்ற இடையூறுகளை மேற்கொண்டதில் காணப்பட்ட தேவனுடைய அன்பு இவ்வளவென்று உணருவான்.

அவன் செய்யும் மூன்று காரியங்கள் யாவையெனில்:

(i) தன் பாவத்தை வெறுப்போடு விட்டுவிடுவான்.

(ii) இயேசுவின் மூலமாய்க் கொடுக்கப்படும் மன்னிப்பை விசுவாசத்தினால் ஏற்றுக்கொள்வான்.

(iii) நன்றியறிதலோடு தன்னைத் தேவனுக்கு ஒப்புக்கொடுத்து, இனிமேல் கலா 2[20]–இன்படி நடப்பான். கிறிஸ்து நமக்காக மரித்தார் (ரோ 3[21-26]) என்று அவன் அறிந்து கிறிஸ்துவுடன் பாவத்திற்கு மரிப்பான். ரோம 6[2-7]. இவ்விதமான நல்ல பலன் கிடைப்பதே இந்தக் கொள்கையின் உண்மைக்கு ஒரு முக்கியமான அத்தாட்சி. தேவன் தமது பிரமாணத்தை மகிமைப்படுத்திப் பாவத்தின் பயங்கரத்தையும் அப்பாவத்தை நீக்குகிற தமது அன்பையும் காண்பிக்கவே மனுஷர் இவைகளை உணர்ந்து மனந்திரும்பித் தங்களைத் தேவனுக்கு ஒப்புக்கொடுக்கிறார்கள்.

**III. பாவநிவாரணத்தைப்பற்றி இந்தேசமார்க்கங்களின் போதனை.** நாம் கடைசியாகக் கேட்கவேண்டியதென்னவென்றால், இந்தப் போதனையை ஏற்றுக்கொள்ளும்படி ஜனங்களுடைய மனதை ஆயத்தப்படுத்தத்தக்க போதனை இந்த தேசத்தின் மார்க்கங்களில், விசேஷமாய் இந்து மார்க்கத்தில் இருக்கிறதா? நாம் முந்திபார்த்தபடி பலி என்னும் விஷயத்தைக் குறித்து இந்துக்களுடைய கொள்கைகள் திருப்திகரமானதல்ல. ஏனென்றால் பலியின் சாதாரண நோக்கம் துஷ்டதேவதையைச் சாந்திபண்ணுவதும் ஏதோ ஒரு லௌகீகத் தீங்கை நீக்குவதுமே. கிறிஸ்துவின் பலிக்கு இவ்விதமான நோக்கமிருந்ததென்று நாம் நினைக்கவேகூடாது. இந்துக்களுடைய மனம் தப்பான கொள்கையினால் நிறைந்திருப்பதால் நாம் புறமதஸ்தருக்குப் பிரசங்கிக்கும்பொழுது ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். திருஷ்டாந்தமாக, இரத்தஞ்சிந்துதலில்லாமல் பாவமன்னிப்பில்லை என்னும் வாக்கியம் பழைய புதிய ஏற்பாடுகளை வாசித்த நமக்கு அருமையானதும் நன்றாய் விளங்குவதுமான ஒரு வசனமாயிருந்தும், அதை நாம் இந்துக்கள் காதில் விழச்செய்தால் அதைக்குறித்து என்ன நினைப்பார்கள்? கிறிஸ்தவர்களுடைய சுவாமி காளியைப்போல் இரத்தப்பிரியர் என்று நினைக்கமாட்டார்களா? அதுபோல் பிராயச்சித்தம் என்னும் பதம் திருப்திகரமான பதமல்ல: ஏனென்றால் ஒரு இந்து

மனுஷன் தான் செய்த ஒழுங்கீனத்திற்குப் பிராயச்சித்தம் செய்யும்போது அந்த ஒழுங்கீனம் பாவம் என்றும் அதைத் துக்கத்தோடு அறிக்கையிட்டு விட்டுவிடுகிறேன் என்றும் சொல்லுகிறதில்லை. திருஷ்டாந்தமாக, ஒருவன் கல்வி கற்றுக்கொள்ளும்படி சீமைக்குப்போய்த் திரும்ப இத்தேசத்திற்கு வந்து தான் பிறந்த ஜாதியை மறுபடியும் சேர விரும்பினால் அவன் பிராயச்சித்தஞ் செய்தாலும் தான் சீமைக்குப் போனது பாவம் என்று ஒத்துக்கொள்ளமாட்டான். ஆதலால் இயேசு நமக்காகச் செய்த வேலை பிராயச்சித்தம் என்று சொன்னால் அதன் மெய்யான தன்மை இந்துக்களுக்கு விளங்காது.

கிறிஸ்து செய்த பாவ நிவாரண வேலையை இப்பேர்ப்பட்ட பதங்களின் மூலமாய் நாம் விளங்கப்பண்ணக் கூடாமற்போனாலும் இந்தச் சத்தியம் இந்துக்களுக்கு மகா அவசியமே. பாவமன்னிப்பு கிடையாதென்றும் பாவமன்னிப்பு வெகு இலேசென்றும் கூறுவதாகிய முன் சொன்ன இரண்டு தப்பிதங்களில் இந்துக்கள் சாதாரணமாக விழுகிறார்கள். கர்மம் என்னும் கொள்கையின்படி பாவஞ்செய்தவனே அப்பாவத்தின் பலாபலன்களைப் பல ஜென்மாந்தரங்களிலே அனுபவிக்கவேண்டும். அவன் கடைசியாக முக்தி அடைந்தால் அவன் தன் சொந்த கிரியையினால் அடைந்தான் என்று சொல்லக்கூடும். இந்தக் கொள்கை இந்துமார்க்கத்தின் மூலைக்கல்லாக எண்ணப்பட்டாலும் அநேகர் இதைக் கவனியாமல் அந்திய நேரத்தில் நாராயணன் என்னும் பேர் சொன்னால் பாவம் நீங்குமென்று நம்புகிறார்கள். இந்துக்கள் இவ்விரண்டு உபதேசங்களுக்கும் நடுவிலே இங்கும் அங்கும் அலைகிறார்கள். இவ்விரண்டினாலும் மனச்சாட்சிக்குச் சமாதானமில்லை. ஒரு கொள்கையின்படி ஒரு பாவி அநேக ஜென்மாந்தரங்களைத் தாண்டிக் கடைசியாக முக்தி பெறலாம் என்று நினைக்கிறான். அந்த நம்பிக்கையில் என்ன ஆறுதலும் உற்சாகமும் இருக்கும்? ஆகையினால் அநேகர் மன்னிப்பு சுவாமியின் தயவினால் கிடைக்கும் என்கிற நம்பிக்கையிலே ஒரு மாதிரியான ஆறுதலடைவார்கள். என்றாலும் கர்மம் என்னும் கொள்கையில் ஒரு விசேஷித்த சத்தியம் அடங்கியிருக்கிறது, அதென்னவென்றால் பாவம் இலேசாய்ப் போகமாட்டாதென்பதே. சத்தியவேதத்தின் போதனையின்படி பாவ நிவாரணம் இலேசான காரியமல்ல என்றாலும் கிறிஸ்துவின் சிலுவையின் மூலமாய்த் தேவன் எல்லாத் தடைகளையும் மேற்கொண்டு பாவிகளுக்கு மனந்திரும்புதலும் நன்றியறிதலான ஜீவியமும் உண்டாகத்தக்கவிதமாய்ப் பாவமன்னிப்பைக் கொடுக்கிறார். ஆதலால் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கிற அவ்விரண்டு கொள்கைக்கும் சிலுவையின் உபதேசத்திலேதான் சமாதானம் உண்டாகும். ஆதலால் நமது இந்து சகோதரர் இதைக் கிரகித்துக்கொண்டால் தாங்கள் வெகுநாளாகத் தேடின மனச்சமாதானம் இதிலே கிடைக்குமென்று நன்றியறிதலோடு அறிக்கையிடுவார்கள்.

மகம்மதியருக்கும் இந்த உபதேசம் மகா அவசியம். அல்லா மகா இரக்கமுள்ளவர் என்று அவர்கள் சாதித்தாலும் அவர் தமது இரக்கத்தை நியாயமில்லாமல் தமது இஷ்டப்படி காட்டுகிறார் என்று நம்புகிறார்கள். அல்லா தமது பக்தர் செய்த பாவத்தை காணாதவர்போலிருக்கிறார் என்கிற நம்பிக்கை மனந்திரும்புதலுக்கும் சன்மார்க்கத்திற்கும் ஏதுவான நம்பிக்கையல்ல. ஆதலால் தேவன் சகல பாவங்களையும் அரோசித்து, சகல பாவிகளையும் நேசித்து, அவர்கள் பாவம் போகும்படி தாமே அதன் பாரஞ் சுமக்கிறார் என்கிற சத்தியம் இஸ்லாம் மார்க்கத்தாருக்கும் மிகவும் அவசியமான சத்தியமே.

**பாவ நிவிர்த்தி செய்யும் நாள்.** Day of atonement. பண்டிகை (பக்கம் 520) காண்க.

**பாவமன்னிப்பு.** Remission of sins. மத் $29^{28}$ மாற் $1^{4}$ லூக் $1^{27}$ $24^{47}$ அப் $2^{38}$ $10^{43}$ மன்னிப்பு காண்க.

**பாவ மனுஷன்.** 'The man of sin.' 2 தெச $2^{3}$. கிறிஸ்துவின் மறுவருகைக்குமுன் விசுவாசிகளில் அநேகர் பின்வாங்கிப் போவார்கள் என்பதும், கடவுளுக்கு விரோதமாக மகா சத்துரு ஒருவன் தோன்றி கிறிஸ்துவினால் தனது அதிகாரம் அழியும்வரை விசுவாசிகளை அதிக உபத்திரவப்படுத்துவான் என்பதும், பரி. பவுலின் அபிப்பிராயம். வேத சாஸ்திரிகளில் சிலர் 'பாவ மனுஷன்' என்னும் பெயரினால் பரி. பவுல் ரோமராஜ்யத்தைக் குறிக்கிறான் என்றும், வேறு சிலர் கிறிஸ்தவமார்க்கத்துக்கு விரோதமாயிருந்த யூதஜனங்களைக் குறிக்கிறான் என்றும் சொல்லுகிறார்கள். ஆயினும் 'பாவ மனுஷன்' என்னும் இப்பெயர் அந்திக்கிறிஸ்துவைத்தான் குறிக்கிறது என்பது எமது அபிப்பிராயம்.

2 தெச $2^{6}$-ல் சொன்ன 'பாவ மனுஷனைத் தடைசெய்கிறது' என்பது அநியாயத்தை விரும்புகிற ராயனுடைய மந்திரவாதிகளால் நியாயத்தை விரும்புகிற ஒருவனை அல்

லது அநியாயம் செய்ய விரும்புகிற சத்துருக்களினின்று கிறிஸ்தவர்களைக் காப்பாற்றிய ஒரு அதிகாரியைக் குறிக்கலாம்.

**பாவ மன்னிப்பு.** பக்கம் 600 காண்க.

**பாவம். Sin.**

**I. பாவமாவதென்ன? 1. பழைய ஏற்பாட்டில்** பாவம் என்னும் அர்த்தங்கொள்ளும் முக்கிய பதங்கள் மூன்று; இவைகள் பாவம், அக்கிரமம், மீறுதல் என்னும் மூன்று தமிழ் சொற்களால் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. சங் 51[1,3]. மூலபாஷையில் வரும் அம்மூன்று பதங்களின் மூலார்த்தம் என்னவென்றால்: பாவம், குறிதப்பல்; அக்கிரமம், கோணல்; மீறுதல், கலகம்பண்ணல் என்பதாம். முதல் இரண்டு சொற்களின்படி ஒருவன் பாவஞ்செய்யும்பொழுது அவன் குறியை அல்லது இலக்கைத் தப்பவிடுகிறான், அல்லது நேர்வழியை விட்டுக் கோணலாய்ப் போகிறான். அதாவது குறித்த நோக்கத்தை நிறைவேற்றாமல் தவறிப்போகிறான். இந்த நோக்கம் பலவாறாக எண்ணப்படலாம். அநேகர் நிறைவேற்ற விரும்பும் நோக்கம் சாதாரண வழக்கத்தின்படி நடப்பதே. பழைய ஏற்பாட்டின்படியோ மனுஷர் தங்களுக்குமுன் வைக்கவேண்டிய நோக்கம் கடவுள் கொடுத்த பிரமாணத்தைக் கைக்கொள்வதுதான். இந்தப் பிரமாணத்தின் மூலமாய்க் கடவுள் தமது ஜனங்களுடன் ஒரு உடன்படிக்கை செய்திருந்தார். ஆகையால் பாவமானது மனுஷன் பலவீனத்தினால் செய்யும் தப்பு அல்லது பிழையாய் அல்லது ஒரு வியாதியைப்போல நேரிடும் துர்ச்சம்பவமாய் மாத்திரமிராமல் மனுஷனைத் தண்டனைக்குட்படுத்தும் குற்றமாகவே எண்ணப்படும். மூன்றாம் பதத்தின்படி பாவமானது கடவுளுக்கு விரோதமான செய்கையென்று அதிக தெளிவாக காணப்படும். மனுஷன் கலகக்காரன். ஏசா 1[2]. பிரமாணத்தைக் கொடுத்தவர் கடவுளாதலால் அப்பிரமாணத்தை மீறுவது ராஜதுரோகத்தைப் பார்க்கிலும் கொடிய குற்றமாம்.

கடவுள் கொடுத்த கற்பனைகள் பலவாறாயிருக்கின்றன. நமக்கு அற்பசொற்பமாகக் காணப்படும் அநேக காரியங்களைக்குறித்துப் பலவிதமான விதிவிலக்குகளுண்டு. திருஷ்டாந்தமாகத் தீட்டைப்பற்றிய கட்டளைகள் ஏராளம். லேவி 11–15 அதி. இப்படிப்பட்ட சடங்காசாரத்திற்கடுத்த கற்பனைகளோடு சன்மார்க்கத்திற்கடுத்த அநேக கற்பனைகளுமுண்டு. என்றாலும் இவ்விரண்டு விதமான கட்டளைகளும் கடவுளுடைய பரிசுத்தத் தன்மையை வெளிப்படுத்துகிறபடியால் அவைகள் சடங்காசாரத்துக் கடுத்திருந்தாலும் சன்மார்க்கத்துக் கடுத்திருந்தாலும் அவைகளை மீறுவது அவருடைய பிரமாணத்திற்கு மாத்திரமல்ல, அவருக்கே விரோதமான பாவமாக எண்ணப்பட்டது. இஸ்ரவேலரில் அநேகர் தங்களுக்குக் கிடைத்த பிரமாணத்தின் ஆவிக்குரிய தன்மையைக் கவனியாமல் சடங்காசாரத்திற்கடுத்த கட்டளைகளைக் கைக்கொண்டபொழுது இவைகள் முக்கியம் என்றும், இவைகளை எழுத்தின்படித் திட்டமாய்க் கைக்கொண்டால் போதும் என்றும் நினைத்தார்கள். காலாகாலத்தில் வந்த தீர்க்கதரிசிகள் கடவுளுடைய மகிமையைக் காண்பித்து வெறும் சடங்காசாரம் வீண் என்றும், சன்மார்க்கமும் மெய் பக்தியுமே அவசியம் என்றும் வற்புறுத்திவந்தார்கள். ஏசா 1[11-17]. பாவத்தின் அகோரம் எதிலே காணப்படுகிறதென்றால், பாவிகள் கடவுளை விட்டுப் பிரிந்திருப்பதில்தான். இதற்கிசைய விக்கிரகாராதனை பயங்கரமான பாவமாக எண்ணப்பட்டது. இதுவுமன்றி மனுஷர் ஒருவருக்கொருவர் விரோதமாகச்செய்தபாவங்களைக்கடவுளுக்கேவிரோதமான பாவங்கள் என்று தீர்க்கதரிசிகள் போதித்தார்கள். ஏசா. 5[8,9]. தீர்க்கதரிசிகள் நீதிநியாயங்களைப்பற்றி அதிக விபரமாய்ப் போதித்தாலும் மாம்ச சடங்காசாரங்களைக் குறித்து மோசே கொடுத்த நியாயப்பிரமாணத்தைப்பற்றி அவர்கள் அவ்வளவாய் விபரித்துப் பேசவில்லையென்று தோன்றுகிறது. கடவுளுடைய தன்மையைக்குறித்துப் போதனைகொடுப்பது அவர்களுக்கு முக்கியமான காரியம். அவர் தகப்பனைப்போல இருக்கிறார் என்று ஏசாயா போதித்தான். ஏசா 1[2]. ஓசியாவின் போதகத்தின்படி கடவுள் அன்புள்ள புருஷனைப்போல் இருக்கிறார். ஓசி 1–3 அதி. இவ்விதமான நெருங்கிய சம்பந்தம் இருப்பதால் அவரை விட்டு விலகுவது அகோரமான துரோகம்.

அதுவுமல்லாமல் பாவம் செய்வது நன்றியற்ற கிரியை. அடிமைத்தனத்திலிருந்து தமது ஜனங்களை விடுவித்த கடவுள் செய்த ஏராளமான நன்மைகளைக்குறித்துத் தீர்க்கதரிசிகள் அடிக்கடிப் பேசி அவ்விதமாகவே இஸ்ரவேலருடைய நன்றிக்கேட்டை கண்டிக்கிறார்கள். இஸ்ரவேலர் செய்த பாவங்களையே தீர்க்கதரிசிகள் விசேஷமாய்க் கண்டித்தார்கள். அவர்களுக்கும் கடவுளுக்கும் ஒரு உடன்படிக்கை இருந்தபடியால் அவர்கள்மேல் அமைந்த குற்றம் கொஞ்சமல்ல. புறஜாதியாருக்கும் கடவுளுடைய பிரமாணத்

இன் சாராம்சம் ஒருவாறாக தெரிந்தபடியால் அவர்களும் கடவுளுடைய பார்வையில் குற்றவாளிகளாக எண்ணப்பட்டார்கள். ஆமோ 1 அதி. $2^{1-3}$. ஆனாலும் இஸ்ரவேலருக்கு விசேஷித்த வெளிப்படுத்தல் இருந்தபடியால் அவர்களுடைய குற்றம் விசேஷித்ததாய் இருந்தது. ஆமோ $2^{4-16}$ $3^{1-2}$.

தீர்க்கதரிசிகளுடைய போதனையைக்குறித்து இன்னும் கவனிக்கவேண்டியதென்னவென்றால், (i) இஸ்ரவேல் ஜனம் ஒரே ஆளாய் இருந்தால்போல் அதன் பாவத்தைத் தீர்க்கதரிசிகள் பொதுவாய்க் கண்டித்தார்கள். ஏசா 64 அதி. இஸ்ரவேலர் சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்பட்டபின் அவர்கள் பொதுவாக மாத்திரமல்ல தனித்தனியாகவும் பாவிகளாயிருந்தார்கள் என்று தீர்க்கதரிசிகள் முன்னிலும் தெளிவாய்ப் போதித்தார்கள். எரே $31^{29-30}$ எசே 18 அதி. (ii) நாள் செல்லச்செல்லப் பங்குபங்காகவும் வகைவகையாகவும் தம்மை வெளிப்படுத்திக்கொண்டே இருந்த கடவுளுடைய தன்மை இன்னும் தெளிவாக தெரியவந்த அளவின்படி அத்தன்மைக்கு விரோதமாக மனுஷர் செய்த பாவம் முன்னிலும் அதிக அகோரமாக எண்ணப்பட்டது. நாம் பழைய ஏற்பாட்டை வாசிக்கும்போது ஆபிரகாம் முதலான பக்தர் பாவத்தில் விழுந்ததைக் கடவுள் கவனியாதவர்போல் இருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவோம். ஆதி $12^{10-20}$. இதற்குச் சமாதானமாக நாம் சொல்லக்கூடியதென்னவென்றால், முதலாவது நாம் இப்பொழுது சொல்லியிருக்கிறபடி கடவுள் தம்மைப் படிப்படியாக வெளிப்படுத்தினார் என்பதும்; இரண்டாவது மனுஷனுடைய இருதய கடினத்தினிமித்தம் கடவுள் கவனியாதவர்போல் தோன்றினாலும் பாவஞ்செய்த மனுஷர் அந்தந்தச் செய்கைகளுக்குப் பலனாக பல தீங்குகளை அனுபவித்ததனால் அந்தச் செய்கைகள் பாவங்கள் என்று கற்றுக்கொண்டார்கள் என்பதுமே. மாற் $10^{5}$ அப் $17^{30}$. ஆபிரகாம் ஒரு மறுமனையாட்டியை வைத்துக்கொண்ட சங்கதியும், அதனால் உண்டான வருத்தமும் இதற்குத் திருஷ்டாந்தமாய்க் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆதி 16, 21 அதி.

**2. புதிய ஏற்பாட்டின் போதனை** பாவ உணர்ச்சியை உண்டுபண்ணுவதற்கு நியாயப்பிரமாணத்தினாலும் தீர்க்கதரிசிகளுடைய போதனையினாலும் கடவுளுடைய சிட்சையினாலும் செய்யப்பட்ட வேலை கிறிஸ்துவின் மூலமாய் முடிவுபெற்றது. பழைய ஏற்பாட்டில் பாவத்தின் பலவாறான தன்மையைக் காட்டும்படி வெவ்வேறான எபிரெயபதங்கள் வழங்கப்பட்டதுபோல, புதிய ஏற்பாட்டில் ஏறக்குறைய அதே அர்த்தங்கொள்ளும் கிரேக்கு பதங்களும் வழங்கப்பட்டன; என்றாலும் இயேசுகிறிஸ்துவின் மூலமாய் அவைகளில் அடங்கியிருக்கும் பொருள் இன்னும் விசேஷித்ததாகக் காணப்படுகிறது.

மனுஷர் சாதாரணமாய்ச் செய்யும் பாவத்தைக்குறித்து இயேசு போதித்தது அதிகம் அல்ல. மனுஷரால் கொடிய பாவிகள் என்று எண்ணப்பட்டவர்களை அவர் சிநேகித்து அவர்களுடைய வீடுகளுக்குப் போய் அவர்களோடு போஜனஞ்செய்து பட்சமாய்ப் பேசினார். அந்தச் சமயங்களில் அவர்களுடைய பாவங்களைக் கண்டித்தார் என்று தோன்றவில்லை. மாற் $2^{15}$ லூக் $7^{36-50}$ யோவா $8^{1-11}$. இன்னும் தாம் நியாயத்தீர்ப்புச் செய்யும்படி வந்தவரல்லவென்றும் சொன்னார். யோவா $12^{47}$. என்றாலும் அவர் பாவத்தைக்குறித்துக் கவலைப்படவில்லையென்று யார் சொல்லக்கூடும்? மாம்ச இச்சைக்கு இணங்குவது பாவம் என்பது அப்பாவங்களைச் செய்தவர்களுக்கு நன்றாய்த் தெரிந்தபடியால் அதைப்பற்றி விவரமாய்ப் பேசுவது அவசியம் என்று அவருக்குத் தோன்றவில்லை. இதுவுமன்றி மாம்ச இச்சைக்கடுத்தப் பாவங்களைவிட மனசுக்குரிய பாவங்கள் அகோரமாய் இருந்தன. ஆதலால் ஆயக்காரர் செய்த பாவங்களைக் குறித்து அவ்வளவாய்ப் பேசாமல், மனுஷர் கவனியாததும் பரிசேயர் செய்ததுமான பாவங்களைக்குறித்தே பேசினார். மாற் $7^{1-23}$ காண்க. இதிலே இயேசுவானவர் கற்பித்ததென்னவென்றால், சடங்காசாரத்தைவிட சன்மார்க்கமே முக்கியம் என்பதும் இருதயச் சுத்தியை நாடாமல் புறம்பான சுத்தியை நாடுவது வீண் என்பதும் கடவுளுடைய பிரமாணத்திற்குப் பதிலாக மனுஷருடைய பாரம்பரியத்தைக்கைக்கொள்பவர்கள் மாயக்காரர் என்பதுமே. வேறொரு சமயத்தில் அவர்களுடைய சுயநீதியினிமித்தம் அவர்களைக் கண்டித்தார். எங்களுக்குப் பாவமில்லையென்று அவர்கள் சொன்னதே அவர்கள் பாவிகள் என்பதற்கு முக்கியமான ரூபகாரமாய் இருந்தது. யோவா $9^{40-41}$. இதுவுமன்றி கடவுள் கொடுத்த பிரமாணம் ஆவிக்குரியதென்று மலைப்பிரசங்கத்திலே தெளிவாக போதித்தார். மத் $5^{17-48}$. பாவக்கிரியை மாத்திரமல்ல, பாவ இச்சையும் குற்றம் என்று காண்பித்தார். மற்றவர்களுக்கு இடறலாயிருக்கும் காரியங்களைச் செய்வதும் பாவம் என்று சாதித்தார். மத் $18^{6,7}$. அவிசுவாசமும் பாவம் என்று காட்டி

ஞர். யோவா 16⁹. மனுஷர் பாவஞ்செய்து தங்கள் பரமதகப்பனை விட்டு விலகுவதால் அவருக்குக் கிலேசத்தையும் தங்களுக்குப் பலவிதமான வருத்தத்தையும் வருவித்துக் கொள்ளுகிறார்கள் என்று லூக் 15–ல் தெளிவாகத் தெரிவித்தார்.

பாவத்தின் கொடுமை இவ்வளவென்று இயேசுவானவர் நான்கு விசேஷித்த விதங்களால் விளக்கிக் காண்பித்தார். ($a$) கடவுள் பிதாவாயிருக்கிறார் என்ற அருமையான சத்தியத்தைப் பலவாறாகப் போதித்துத் திருஷ்டாந்தப்படுத்தினதால் பாவமானது ஒரு அதிகாரியினுடைய சட்டத்திற்கு மாத்திரமல்ல அன்பு நிறைந்தவருடைய நல்ல சித்தத்திற்கே விரோதமானது என்று காண்பித்தார். ($b$) எல்லாக் காரியங்களிலும் அவரே பூரண பரிசுத்தராக நடந்து மனுஷருக்குக் குறைவற்ற முன்மாதிரியைக் காட்டினதினால் (யோவா 8⁴⁶) புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் இருந்த பேதம் இவ்வளவென்று காண்பித்தார். ($c$) மன்னிப்பு அற்பக்காரியமல்லவென்று அவர் காட்டினதால் பாவமன்னிப்பை அடைவது எளிதல்ல என்று காட்டினார். லூக் 7³⁶⁻⁵⁰. ($d$) அநேகரை மீட்கும்பொருளாகத் தம்முடைய ஜீவனைக் கொடுத்ததால் பாவத்தின் அகோரத்தைக் காண்பித்தார். மாற் 10⁴⁵. கெத்செமனேயிலும் கொல்கொதாவிலும் மற்றவர்களுடைய பாவத்திற்குப் பலனாக அவர் பட்ட வியாகுலம் இவ்வளவென்று கொஞ்சமேனும் உணர்ந்தவர்கள் மனதாரப் பாவத்தில் மறுபடியும் விழுவதெப்படி?

வேதத்தில் அடங்கியிருக்கிற போதனையைப் பொதுவாகப் பார்த்துப் பாவத்தின் தன்மையை ஒரே வார்த்தையில் அடக்கிவைத்தால், பாவமானது சுயசித்தமே என்று சொல்லலாம். ஆதிமனுஷன் கடவுளுடைய சித்தத்தை நிறைவேற்றாமல் தன் சித்தத்தின்படி செய்ததே பாவம். இதற்கு எதிரிடையாக கிறிஸ்து தம்முடைய சித்தத்தின்படி செய்யாமல் தம்மை அனுப்பினவருடைய சித்தத்தின்படி நடந்தார். யோவா 5³⁰. அவரை நம்புகிறவர்களும் அப்படியே நடக்கவேண்டும். ரோம 15²·³ கலா 2²⁰. நாம் இன்னும் கவனிக்கவேண்டிய காரியம்: ($a$) பாவமானது கிரியைகளால் மாத்திரமல்ல, வார்த்தைகளாலும் சிந்தனைகளாலும் செய்யப்படும் என்பதும் (மத் 12³⁶⁻³⁷ மத் 5²⁸); ($b$) செய்யக்கூடாததைச் செய்வதுமன்றி செய்யவேண்டியதைச் செய்யாததும் பாவமே என்பதும் தான். நியா 5²³ மத் 25²⁶·²⁷·⁴⁵.

II. **பாவத்தின் உற்பத்தி.** பாவமானது எப்படி உற்பத்தியானதென்று இந்துமார்க்கத்தார் அடிக்கடி கேட்டாலும் பாவத்தின் உற்பத்தியைக்குறித்து நாம் அதிக கவலையோடு விசாரிக்கவேண்டியதில்லை. பாவத்தின் உற்பத்தியைப்பற்றித் தர்க்கம் பண்ணுவதைவிட பாவ நிவிர்த்திக்காக முயற்சிசெய்வதே உசிதம். ஆதலால் பாவத்தின் உற்பத்தியைக் குறித்து வேதம் ஒன்றும் போதிக்கிறதில்லை. ஆதி 3–ல் அதின் உற்பத்தி தெரிவிக்கப்படுகிறதில்லை. பாவம் இப்பூமியில் சாத்தான்மூலமாய் வந்ததென்று சொன்னாலும், சாத்தானில் அது உற்பத்தியான விதத்தைக்குறித்து வேதத்தில் போதனை கிடையாது. எல்லாரும் பாவிகள் என்பதை ரூபகாரப்படுத்தும்படிக்குப் பாவத்தின் உற்பத்தி இன்னதென்று அறிவது அனுவசியம். ரோமருக்கு எழுதின நிருபத்தில் பவுல் முதலாவது மனுஷருடைய பொதுவான அநுபவத்தால் பாவம் எல்லாருக்கும் உண்டென்பதை ருசுப்படுத்தின பின்புதான் அவன் ஆதாமின் சரித்திரத்தைக் கொண்டு கிருபையின் பெருக்கத்தைத் திருஷ்டாந்தப்படுத்துகிறான். பாவத்தின் உற்பத்தியானது நமது அறிவுக்கு எட்டாத காரியமாயினும் பாவம் இப்பூமியில் காணப்பட்ட விதத்தைப்பற்றி நாம் ஆதாமின் காரியத்தைக் கொண்டு சில விசேஷங்களை அறிந்துகொள்ளலாம். ஆதி 3–ல் எழுதியிருப்பது சரித்திரமோ, கதையோ, உவமையோ என்பதைக் குறித்து மிகுந்த தர்க்கம் உண்டு. இயேசுவானவர் ஒரு கட்டுக்கதையை உவமையாக உபயோகிப்பதுபோல பரிசுத்த ஆவியால் போதிக்கப்பட்ட ஆதியாகமத்தின் கிரந்தகர்த்தா பழைய கதைகளில் உள்ள தகாதவைகளை நீக்கி எக்காலத்திற்கும் பிரயோஜனமுள்ள பாடங்களைக் கற்பிக்கும்படியாக இவைகளை உபயோகித்திருக்கலாம் என்று அநேகர் நினைக்கிறார்கள். எப்படியாவது இந்த அதிகாரத்தில் உவமை கலந்திருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை. 'சர்ப்பம்' என்பதினால் இத்தீங்கு நேரிட்டதென்று சொல்லியிருக்கிறது. 'சாத்தான்' என்னும் பதமும் இதிலே இல்லை, சாத்தானைப்பற்றியும் ஒன்றும் சொல்லப்படவில்லை; ஆகையால் 'சர்ப்பம்' என்பதற்கு ஒரு ஞானார்த்தம் இருக்கிறது என்று நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். இதை ஒப்புக்கொள்ளும்பொழுது மற்றதெல்லாம் உவமையற்ற சரித்திரம் என்று நிச்சயமாய்ச் சொல்லுவது எப்படி? இந்த அதிகாரத்திலுள்ள விஷயம் எம்மட்டும் மெய்யாய் நடந்ததென்று நாம் நிச்சயமாய் அறியாவிட்டாலும் அதன் ஆவிக்குரிய போதனையைக்

குறித்துச் சந்தேகமில்லை. நாம் கற்றுக் கொள்ளவேண்டிய முக்கியமான காரியங்கள் இவைகளே:

1. உலகமானது இயல்பாகவே தீமையினால் நிறைந்திருக்கிறதென்று அநேகர் போதித்த கள்ளப்போதகம் கண்டிக்கப்படுகிறது. தேவன் உலகத்தையும் மனுஷனையும் சிருஷ்டித்தபோது தம்முடைய சிருஷ்டிகள் மிகவும் நன்றாயிருந்ததென்று கண்டார். ஆதி 1[31].

2. மிருகங்கள் முன்பின் யோசியாமல் தங்கள் இயற்கையின்படி கோபம் சண்டை முதலிய குற்றங்களை அறியாமல் செய்வதுபோல பாவமும் உற்பத்தியாகிறதென்கிற போதனை கண்டிக்கப்படுகிறது. மனுஷனும் ஆதியில் தன் மிருகசுபாவத்தின்படி பாவத்துக்கு உள்ளானன் என்னும் போதனை கண்டிக்கப்படுகிறது. பாவத்தைச் செய்தவர்கள் தங்கள் மனதுக்குமுன் கொண்டுவரப்பட்ட காரியத்தைக் குறித்துச் சிந்தித்துத்தான் பாவஞ்செய்தார்கள்.

3. ஆதி மனுஷனுக்கு ஒரு கட்டளை கொடுக்கப்பட்ட படியால் அறிவீனம் அவன் பாவத்திற்குக் காரணம் என்று நாம் சொல்லக்கூடாது.

4. மேற்குறித்தகாரியங்கள் பாவத்தின் உற்பத்தியாயில்லாதிருக்கையில் அது எதிலே இருக்கவேண்டுமென்று நாம் பார்க்கவேண்டும்:—பகுத்தறிவு மனுஷனுக்கு இருப்பதால் அவன் இயல்பாய்ப் பாவத்தில் விழக்கூடியவனயிருக்கிறான். ஆதிமனுஷனுக்கு நாகரீகமாவது, சிறந்த மனோசக்தியாவது சன்மார்க்க வளர்ச்சியாவது இருந்ததென்று, வேதம் சொல்லுகிறதில்லை. அவன் அநேக விஷயங்களில் மிருகங்களைப்போல இருந்தான் என்று நினைக்கிறதற்கு இடமுண்டு. பகுத்தறியும் ஞானமே அவனுடைய மேன்மை. இந்தச் சக்தியுடையவனுக்கு நேரிடும் சோதனை அவனுடைய மிருகசுபாவத்தின் மூலமாயாவது அறிவீனத்தினலாவது வேறெந்த விதமாயாவது வரலாம். அது எப்படி வந்தாலும் அதற்கு இணங்குவது மனுஷனுக்கு அவசியம் அல்ல. அதைக்குறித்து யோசித்து அதற்கு இணங்குவதாவது அதை மேற்கொள்வதாவது அவனுடைய ஆதீனத்தில் உண்டு. கடவுளுடைய சித்தத்தைத் தள்ளிவிட்டுத் தன் சுயசித்தத்தின்படிச் செய்யத் தெரிந்துகொள்ளும்போது அவன் பாவஞ் செய்கிறான்.

5. மனுஷனுக்குச் சோதனை வரும்படி கடவுள் உத்தரவுகொடுத்தாலும் அவர் பாவத்திற்குக் காரணர் என்று நாம் சொல்லவே கூடாது. யாக் 1[13].

6. பாவம் கடவுளுடைய கட்டளையை மீறுதலாயிருப்பதால் அது அவருடைய பார்வையில் குற்றமாக எண்ணப்படுகிறது. ஆதலால் பாவஞ்செய்கிறவர்கள் கடவுளுடைய கோபாக்கினைக்குட்படுகிறார்கள். பாவத்தைத் தண்டிப்பதால் பாவம் தமக்கு அருவருப்பாயிருக்கிறதென்று கடவுள் காண்பிக்கிறார்.

7. கடவுள் மனுஷரைத் தண்டிப்பது அவசியமானாலும் அந்தத் தண்டனையின் மூலமாய் மனுஷருக்கு நன்மைசெய்ய வகை தேடுகிறார். தண்டனையின் விஷயத்தோடு ரட்சிப்பு முன்குறிப்பாக தெரிவிக்கப்படுகிறது. ஆதி 3[15].

மேற்சொல்லியதை நாம் மனதில் வைத்து வேதத்தின் போதனைக்கு ஆட்சேபனையாக சிலர் சாதிக்கிறதைச் சிந்திக்கலாம். மனுஷன் சோதனைக்கு இணங்குவான் என்று கடவுள் முன்னமே அறிந்திருக்க அவன் சோதனைக்குட்பட ஏன் இடங்கொடுக்கிறார் என்றும், அல்லது அவன் பாவஞ்செய்யாதபடிக்கு ஏன் தடைபண்ணவில்லை என்றும் கேட்கிறார்கள். இதற்குச் சமாதானமாக நாம் சொல்லவேண்டியதாவது: (1) நன்மைக்கும் தீமைக்கும் இருக்கும் வித்தியாசத்தைத் தெரிந்துகொள்ளுகிற சக்தியில்லாதவன் மனுஷனய் இராமல் வெறும் மிருகமாய் இருப்பான். அப்படிப்பட்டவன் கடவுளோடு ஐக்கியப்படுவதெப்படி? சுவாதீனமுடையவனேடுதான் கடவுள் ஐக்கியப்பட்டு அந்த ஐக்கியப்பாட்டில் சந்தோஷப்படுவார். ஆதலால் மனுஷன் பாவத்தில் விழக்கூடியவனகவே சிருஷ்டிக்கப்படவேண்டும். தன் பிள்ளை ஒருபோதும் பொய் சொல்லக்கூடாதென்று ஒரு தகப்பன் விரும்பி அந்தப் பிள்ளை ஒரு வார்த்தையும்பேசாதபடிக்கு அதன் வாயை அடைத்தால் பிரயோஜனம் என்ன? பொய்பேசக்கூடிய சக்தி இருக்கும்பொழுதுதான் பொய் பேசாமலிருப்பது மேன்மை. ஆதலால் பாவஞ்செய்யக்கூடிய சக்தி மனுஷனுக்கு அவசியம். (2) இப்படியிருந்தும் சோதனை, அதாவது பாவஞ்செய்யும்படியான தூண்டுதல், அவசியமா? அவசியந்தான். எப்படியெனில் ஒருவன் கஷ்டமான தேகாப்பியாசத்தால் சரீரபலனை அடைவதுபோல சோதனையை மேற்கொள்வதினல்தான் மனுஷன் சன்மார்க்கத்தில் முன்னேறிச் செல்லுவான். (3) சோதனைக்குட்படவேண்டிய மனுஷனுடைய நிலைமை அபாயகரமானதாயினும் மனுஷன்

நன்மையைத் தெரிந்துகொள்ளாமல் தீமையைத் தெரிந்துகொண்டு பாவத்தில் விழும்போது கடவுள் பாவநிவிர்த்தி செய்ய வழி உண்டுபண்ணுகிருர்.

### III. பாவமானது வளரும் விதம்.

1. ஒரு பாவியிடத்தில் பாவம் வளரும் விதமாவது தனித்தனியான பாவச்செய்கைகள் பாவ வழக்கம் ஆகும். பாவ வழக்கம் பாவ சுபாவமாகும். எரே 17[9]. பாவமானது ஒரு செய்கைமாத்திரமல்ல ஒரு நிலைமை அல்லது ஒரு வல்லமை; சில வேதவாக்கியங்களில் பாவமானது ஒரு ஆளாகப பாவிக்கப்படுகிறது. ரோம 7[17] யாக் 1[15]. பாவத்திற்குத் தன்னை ஒப்புக்கொடுக்கிறவன் அதற்கு அடிமையாவான். யோவா 8[34] ரோம 7[14]. அவனுடைய இருதயம் கடினமாகும். யாத் 8[32]. மனுஷன் மனந்திரும்பாவிட்டால் அவன் கடைசியாக மாற் 3[29] எபி 6[4-6] 1 யோவா 5[16] ஆகிய வேதவாக்கியங்களில்சொல்லியிருக்கிறபயங்கரமான நிலைமைக்கு வருவான்.

2. பாவமுள்ள தன்மை எப்படியாவது எல்லாமனுஷருக்குள்ளும் பரம்பியிருக்கிறதென்பது எல்லாரும் ஒத்துக்கொள்ளவேண்டிய காரியம் என்று வேதம பலவாருகக் காட்டுகிறது. சங் 130[3] 1 இரா 8[46] 1யோவா 1[8]. விசேஷமாய் ரோம 1-3 அதி. காண்க. பக்தர் தங்கள் பாவத்தை அறிக்கையிடும்பொழுது பாவஞ்செய்வதில தாஙகள மற்றவர்களோடு ஐக்கியப்பட்டிருக்கிருர்களென்று சொல்லுகிருர்கள். சங் 51[5] ஏசா 6[5] தானி 9[20]. ஒருவன பாவத்தில் விழும்பொழுது புறம்பேயிருந்து வரும் சோதனையால் மாததிரமல்ல, தன சொந்த துர்ச்சுபாவத்தாலும் ஏவபபட்டு பாவஞ்செய்கிருன். இந்தத் துர்ச்சுபாவம எல்லாருக்குமுரியதே. மனுஷர் எல்லாரும ஒரேவிதமாயப பாவங்களைச் செய்தவாகளென்றும் ஒரே அளவுக்கு பாவத்தில் விழுந்தவாகளென்றும் வேதம் சொல்லுகிறதில்லை. லூக் 15–ல் வருகிற மூத்தகுமாரன தன் தமபியைபபோல அக்கிரமக்காரன் அல்ல என்ருலும், அவன் அன்பில்லாதவனுனதால் அவனும பாவிதான். இபபடி எலலாரும் பாவிகளானது எபபடி? பெற்ருேருடைய சுபாவம் பிளளைகளுககு இயற்கையாய் உண்டாகிறதுபோல ஆதி மனுஷன் செய்த பாவத்தினுல் அவனுடைய சந்ததியாருக்குப பாவமுள்ள குணம கிடைத்தது. இவ்வித இயல்பான சமபந்தம்தவிர வேறே சம்பந்தமில்லை என்று சிலர் சாதிக்கிருர்கள். சிலரோ ஆதி மனுஷனுடைய குணம் தோன்றுவதுமல்லாமல் அவன் செய்த குற்றமும் எல்லார்மேலும் எண்ணப்படுகிறதென்று சொல்லுவார்கள். பழைய ஏற்பாட்டின் போதனையை நாம் ஆராய்ந்து பார்த்தால் இந்தக் கொள்கைக்கு ஆதாரமில்லை என்று அறிந்துகொள்வோம. மனுஷர் ஒருவரோடொருவர் பலவாருக சம்பந்தப்பட்டிருபபதால் ஒருவன் செய்யும் குற்றத்தின் தண்டனையில் அவனைச் சேர்ந்தவர்களும் அகபபடுவார்கள். யாத் 34[7] யோசு 7[24]. ஆனுலும மனுஷர் இவ்விதமாக மற்றவர்கள் செயத குற்றத்தின் பலனை அனுபவிக்க வேண்டுமாயினும் அக்குற்றம் அவர்களுக்குக் குற்றமாக எண்ணப்படுமென்று வேதம சொல்லுகிறதில்லை. அதுபோல நாம் முன்பாரத்தபடியே பக்தர் தஙகள் பாவத்தை அறிக்கையிடும்பொழுது மறறவர்களுடைய குற்றஙகளையும் அறிக்கையிடுவார்கள. அவர்கள் தங்கள் குற்றத்தை மறைக்கும்படியாவது குறைக்குமபடியாவது பிறர் குற்றங்களைத் தாஙகள் அறிக்கையிடாமல் மற்றவர்கள் அக்குற்றத்தில் அகப்பட்டிருக்கிருர்களே என்று யோசித்துப் புலம்பி முன்னிலும் அதிகமாய் வெட்கப்படுகிருர்கள். இப்படிச் செய்வது நியாயந்தான் என்று நினைத்து இந்தக் கொள்கையை பக்தர்களில் அநேகர் ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள். என்ருலும் ஒருவன் செய்த குற்றத்தினிமித்தம் மற்றவாகளைக் கடவுள் குற்றவாளிகளாக எண்ணுகிருர் என்னும் கொள்கை வேறே. ரோம 5[12]–ம் வசனம இந்தக் கொள்கைக்கு ஆதாரம் எனறு சிலர் நினைக்கிருர்கள். இநத வசனத்தின் கருத்தைக்குறித்துச் சந்தேகமிருப்பதால் இதைமாத்திரம இந்தப் பயங்கரமான கொள்கைக்கு ஆதாரமாக வைக்கலாகாது. பவுலினுடைய போதனை என்னவென்ருல் மனுஷர் தஙகள் சம்மதமில்லாமல் ஆதாம செய்த பாவத்தின் பலாபலன்களில் சிக்கிக்கொண்டிருககிருர்கள் எனபதே. ஆதாமுடைய குற்றம் அவாகளுக்கு எண்ணப்பட்டிருக்கிறதென்று அவன் தெளிவாய்ச் சொல்லுகிறதில்லை. நாம் கடவுள் நீதியுள்ளவரென்று நினைக்கிறதினுல், ஆதி மனுஷனுக்கும் நமக்கும் எந்தச் சமபந்தமிருந்தாலும, நாமே சோதனைக்கு இணஙகி எமமட்டும குற்றஞ்செய்கிருேமோ அம்மட்டுமே கடவுள் நம்மைக் குற்றவாளிகளென்று எண்ணுவார் என்பதே நியாயம்.

### IV. பாவத்தின் பலாபலன்.

நாம் முன் பார்த்தபடி தனித்தனியான மனிதனுக்கும் மனுஷஜாதிக்கும் உண்டான சுபாவமானது கெட்டுப்போகிறதே ஒரு முக்கிய பலனும். இதைத்தவிர வேறு பலாபலன் என்ன?

1. பாவத்தின் சம்பளம் மரணம் என்கிற வாக்கியத்தின் கருத்தென்ன? பவுல் ரோம 5—லும் 1 கொரி 15—லும் இதைக் குறித்துப் போதிக்கும்பொழுது அவன் சரீரத்தின் மரணத்தைக் குறித்தே பேசுகிறான். மனிதன் சோதனைக்கு இணங்காமற்போனால் சாகாமை என்னும் பாக்கியத்தை அடையலாம்; அல்லது, மிருகங்களைப்போல அவன் மரிக்கவேண்டுமானாலும் அவனுடைய மரணம் கூரற்ற மரணமாயிருப்பதால் அதற்கு மரணம் என்று பெயர் இடுவது தகாததாகக் காணப்படும். பாவத்திற்குச் சம்பளமாகவரும் மரணம் பாவ உணர்ச்சியினால் பயங்கரமாகத் தோன்றுகிற மரணமே.

2. பாவிகளுக்கு இம்மையில் பல துன்பங்கள் நேரிடும் என்று உபா $28^{15-68}$ முதலான வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. என்றாலும் துன்பம் எல்லாம் அத்துன்பத்தை அனுபவித்தவனுடைய சொந்தப்பாவத்தின் பலன் என்னும் தப்பான கொள்கை யோபுடைய சரித்திரத்தில் கண்டிக்கப்பட்டிருக்கிறது.

3. மறுமையில் நேரிடும் தண்டனையைக் குறித்துப் பழைய ஏற்பாட்டில் தெளிவான போதனை அதிக சொற்பமாயிருந்தும் (தானி $12^{2}$) புதிய ஏற்பாட்டின்படி மனுஷர் மனந்திரும்பாமற்போனால் நரகத்திலேதான் வேதனைப்படுவார்கள் என்பது தெளிவாய் இருக்கிறது. மத் $25^{31-46}$ மாற் $3^{29}$ ரோம $2^{5-11}$ வெளி $20^{11-15}$. மனுஷன் பாவத்தில் விழுந்ததால் தேவனுடைய சாயலை இழந்துபோனான் என்று அநேகர் சாதிக்கிறதற்கு வேதாதாரம் இல்லை. தீமை காண்க.

**V. பாவத்தைப்பற்றி இந்தியாவில் சாதாரணமாயிருக்கும் உபதேசம்.**

இந்துதேச தத்துவ சாஸ்திரங்களில் பாவ உணர்ச்சி மிகவும் குறைவாயிருக்கிறதென்பது எல்லாரும் ஒத்துக்கொள்ளவேண்டிய காரியம். சாதாரண ஜனங்கள் 'ஐயோ பாவம்' என்று சொல்லும்பொழுது 'பாவம்' என்னும் பதத்திற்கு ஒரு தூர்ச்சம்பவம் என்னும் கருத்து இருக்குமேயொழிய 'குற்றம்' என்னும் கருத்தோடே அதைச் சொல்லுகிறதில்லை. இந்தக் குறைவுக்கடுத்த முகாந்தரங்களைப் பார்ப்போமாக.

(1) சுருதி ஸ்மிருதி என்னும் ஆகமங்களின் போதனையை நாம் கவனித்தால், அது பாவ உணர்ச்சியை உண்டாக்கத்தக்க போதனை அல்ல என்று காணப்படும். இருக்குவேதத்தில் அநேக ரிஷிகள் தங்கள் பாவத்தை வருணதேவனுக்கு அறிக்கையிட்டு அவனையும் மற்ற தேவர்களையும் தங்களுக்குச் சகாயஞ்செய்ய விண்ணப்பம் பண்ணுகிறார்கள். பிற்காலத்திலோ அந்த உணர்ச்சி கிடையாது. புராணங்களின்படி தேவர்களே அகோர பாவங்களைச் செய்கிறவர்களாயிருக்கிறார்கள். மனுஷர் அப்படிச் செய்யக்கூடாதென்று சொல்லியிருந்தாலும் தேவர்கள் செய்யும் தூர்க்கிரியைகளினால் அவர்களுடைய பக்தர்களுக்குக் கெடுதல் வருகிறதேயொழிய வேறல்ல. சாதாரண ஜனங்கள் புராணக்கதைகளைப் பலதடவை கேட்டுக் கவனிப்பதால் அவர்கள் சன்மார்க்கத்திற்கும் துன்மார்க்கத்திற்கும் இருக்கும் வித்தியாசம் இன்னதென்று அறியாமல் பாவமென்ன புண்ணியமென்னவென்று அடிக்கடி கேட்பதை நாம் கவனித்திருக்கிறோம்.

இவ்வித போதனை புராணங்களில் காணப்படுவதுமல்லாமல், உபநிஷதத்திலும் காணப்படும். கௌஷீதகீ உபநிஷதத்தில் இந்திரன் தான் செய்த அக்கிரமத்தைப்பற்றி வம்பான காரியங்களைப் பேசி, 'என்னை அறிந்தவன் தன் தகப்பனைக் கொலைசெய்தாலும் சேதம் அடையான்' என்று சொல்லுகிறான்.

(2) கர்ம மார்க்கம் சாதாரண மார்க்கமானபடியால் ஜனங்கள் முக்கியமென்று எண்ணுகிற பாவங்கள் சடங்காசாரத்திற்காவது ஜாதி வழக்கத்திற்காவது விரோதமான தப்பிதங்களேயொழிய சன்மார்க்கத்திற்கடுத்த குற்றங்கள் அல்ல. இதிகாசம் புராணம்முதலிய புஸ்தகங்களில் சொல்லப்படுகிற தேவர்கள் தங்கள் பக்தர்கள் சடங்காசாரத்தின்படி நடக்கவேண்டுமென்று கவலைப் படுகிறார்களேயொழிய அவர்களுடைய சன்மார்க்கத்தைப்பற்றிக் கவலைப்படுகிறதில்லை. நடக்கைக்குரிய விதிவிலக்குகள் தேவதாபக்திக்குரிய புஸ்தகங்களில் வராமல் நீதிசாஸ்திர ஆகமங்களிலும் எழுதப்படாத ஜாதி வழக்கங்களிலும் வருகின்றன. ஆதலால் அந்த விதிவிலக்குகளை மீறுவது பாவம் என்று எண்ணாமல் தப்பிதம் என்று எண்ணுவதே வழக்கம்.

(3) உபநிஷதத்தில் 'பாவம்' என்னும் பதம் அபூர்வம். மனுஷர் தங்களைச் சிட்சைக்குட்படுத்தும் அநேக கிரியைகளைச் செய்தாலும் இவைகள் பாவங்கள் அதாவது கடவுளுக்கு விரோதமான குற்றங்கள் என்று எண்ணப்படுகிறதில்லை. மனுஷர் என்னசெய்தாலும் அவர்கள் செய்வது தெய்வச்செயல் என்று சொல்லப்படுகிறது. மகாபாரதத்தில் சன்மார்க்கத்தைக்குறித்துச் சில நல்ல போதனை அடங்கியிருந்தபோதிலும் அதிலும் இந்தத் தூர்ப்போதனை உண்டு. திருஷ்டாந்தமாக பன்னிரண்டாம் பருவத்தில் மாத்தை வெட்டு

திறவிஷயத்தில் குற்றம் இருந்தால் அது கோடாரியின்மேல் சுமராமல் அக்கோடாரியைக் கையாடின மனுஷன்மேல் சுமருவது போல் தனித்தனியான ஆத்துமாக்கள் செய்யும் குற்றங்களின் உத்தரவாதம் பரமாத்துமாவின்மேல் அமரும் என்று சொல்லியிருக்கிறது. அதேமாதிரியாக அமெரிக்காவுக்குப் போன விவேகானந்த சுவாமி மனுஷனைப் பாவி என்று சொல்லுவதைத்தவிர வேறே பாவமில்லை என்று வற்புறுத்தினர்.

பாவத்தைப்பற்றிய குறைவான போதனையின் மூலமாய் இத்தேசத்தாருடைய மனச்சாட்சி மங்கிப்போய்விட்டாலும் அது செத்துப்போனதென்று யார் சொல்லக்கூடும்? சாதாரண ஜனங்கள் மற்றவர்கள் செய்த அக்கிரமத்தைப்பற்றி முறையிட்டு, தாங்களும் பாவிகள் என்று அறிக்கையிடுகிறார்கள். பிராமணர்கள் தங்கள் நித்திய அனுஷ்டானத்தில் 'பாபோஹம், பாபகர்மாஹம் பாபாத்மா, பாபசம்பவம்:' என்றுசொல்லித்தங்கள்பாவத்தை ஒருவாறாக அறிக்கையிடுகிறார்கள். மாணிக்கவாசகர், இராமானுஜர் முதலான மகாத்துமாக்கள் தங்களைப் பாவிகள் என்று ஒத்துக்கொண்டார்கள். இன்னும் கர்ம உபதேசத்தின்படி பாவத்தின் பலாபலன்கள் கொஞ்சமல்ல என்று இந்துக்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள்.

பாவத்தைக்குறித்து இஸ்லாம் மார்க்கத்தில் காணப்படுகிற போதனையும் குறைவாயிருக்கிறது. இந்த மார்க்கத்திலே கடவுள் தன் சித்தத்தின்படி ஆளுகைசெய்யும் அரசனைப் போலிருக்கிறார் என்றும் பாவமானது கடவுளுடைய சித்தத்திற்கு விரோதமான குற்றம் என்றும் மகம்மது போதித்தார். அதுவுமன்றி மனுஷர்கள் செய்த பாவங்கள் குற்றங்களல்லவென்று கடவுள் திருவுளம்பற்றினதால் மகம்மது இவைகள் குற்றங்களல்ல என்று சொல்லுகிறான். இந்துக்களுக்கும் மகம்மதியருக்கும் அவசியமான காரியம் என்னவென்றால் கடவுளை அறிகிற அறிவே. அவருடைய தன்மை தெரிந்தால் பாவத்தின் அகோரம் இவ்வளவென்று தெளிவாய்த் தெரியவரும்.

## VI. பிரசங்கிகளுக்குரிய குறிப்புகள்.

கேட்கிறவர்களுக்குப் பாவ உணர்ச்சி வருவிக்கும்படியாக நாம் கவனிக்கவேண்டிய காரியங்கள்.

(*a*) நாங்கள் இயல்பாய்ப்பாவிகள் அல்ல, நீங்களே பாவிகளாயிருக்கிறீர்கள் என்னும் மாதிரியாய்ப் பேசவேகூடாது.

(*b*) எல்லாரும் கடவுளுடைய பார்வையில் பாவிகளாயிருக்கிறார்கள் என்று சொன்னாலும் எல்லாரும் துன்மார்க்கராயிருப்பது போல நாம் பேசக்கூடாது.

(*c*) ஆதி மனுஷனுடைய பாவத்தைப் பற்றி இந்துக்களோடு பேசவேண்டியதில்லை. அப்போஸ்தலர் புறமதஸ்தருக்குச் சுவிசேஷத்தைக் கூறினபொழுது ஆதாமைக்குறித்துப் பேசாமல் மனுஷருடைய மனச்சாட்சியின் மூலமாய் அவர்களுக்குப் பாவ உணர்ச்சியை உண்டாக்கப் பிரயாசப்பட்டார்கள்.

(*d*) பாவத்தைப்பற்றி ஜனங்கள் ஒத்துக்கொள்வதைக்கொண்டே அதன் தன்மையை அவர்களுக்குக் காட்டவேண்டும். இம்மையில் நடக்கும் துர்ப்பலன்கள் இத்தனையென்று எடுத்துக் காண்பிக்கலாம்.

(*e*) கடவுள் நமது பிதாவென்றும், அவரை மறந்துவிடுவதும், அவரை நம்பாமலிருப்பதுமே நன்றிக்கேடு என்றும் காண்பிக்கலாம்.

(*f*) கிறிஸ்துவினுடைய போதனையை அவர்களுக்கு விவரித்து அவருடைய சாதனையின் மேன்மையைக் காட்டி அவருடைய மரணத்தின் நோக்கத்தைக் கூடியமட்டும் காண்பிக்கவேண்டும்.

**பாவி.** Sinner. ஆதி 13[13] சங் 1[1] 26[9] நீதி 13[22] பிர 8[12] 9[18] ஏசா 65[20] மத் 9[10] 11[19] 26[45] மாற் 2[16] லூக் 5[30] 6[32] 7[34] 13[2] 15[1] 18[13] 15[7] யோவா 9[16] ரோம 5[8.19] கலா 2[17] 1 தீமோ 1[15] எபி 7[26] 12[3] யாக் 5[20] 1 பேது 4[18].

**பாவு.** Warp. லேவி 13[48 49 51. 53.57-59]. நேசவு காண்க.




பாழாக்குகிற அருவருப்பு.

**பாழாக்கும் அருவருப்பு.** 'The Abomination of Desolation.' 'பாழாக்கும் அருவருப்பு' என்னும் பதம் புதிய ஏற்பாட்டில்

இரண்டுதரம் சொல்லப்பட்டிருக்கிறது. மத் $24^{15}$ மாற் $13^{14}$.

பழைய ஏற்பாட்டில் இப்பதம் தானியேல் ஆகமத்தில் சொல்லியிருக்கிறது. தானி $11^{31}$ $12^{11}$.

'பாழாக்குகிற அருவருப்பு' என்பதைப் பற்றி இயேசு பேசும்பொழுது, தானியேல் ஆகமத்தில் சொன்ன வசனங்களைப்பற்றி ஞாபகமுடையவராய் இருந்திருப்பார் என்று நாம் நினைக்கவேண்டும். தானியேல் ஆகமத்தில் இது அந்தியோகு எப்பிப்பானேஸ் தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சல்செய்து தகன பலிபீடத்தின்மேல் யூபித்தர் என்னும் விக்கிரக தேவதைக்குப் பலிபீடம் கட்டினதைக் குறிக்கலாம். புதிய ஏற்பாட்டில் இது ரோமர்கள் வந்து எருசலேமுக்கு முற்றுக்கைபோட்டு அதை அழிப்பதைக் குறிக்கும். லூக் $21^{20}$—ல் சொன்ன 'அழிவு' என் பதும், முன் குறித்த வசனங்களிலுள்ள 'பாழ்' என்பதும் ஒரே பதம்தான். இந்த 'அழிவு' என்பதைப்பற்றி வேதசாஸ்திரிகள் மூன்றுவிதமான வியாக்கியானங்கள் சொல்லுகிறார்கள்:

i. தேவாலயத்தில் ஏரோதுவின் சுரூபத்தை வைத்தல்.

ii. ரோமர்கள் முற்றுகை போடுங்காலத்தில் யூதர்களிற் சிலர் தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்குதல்.

iii. ரோமருடைய சேனாபதி தனது சேனையோடு தேவாலயத்தைப் பிடித்து அதிலே பிரவேசித்தல்.

**பாழ்.** Desolation. ஆதி $47^{19}$ யாத் $23^{29}$ லேவி $26^{31}$ எண் $21^{30}$ யோசு $8^{28}$ 2 இரா $22^{19}$ யோபு $15^{28}$ ஏசா $61^{4}$ $64^{10}$ எரே $22^{5}$ $25^{11}$ மத் $12^{25}$ $24^{15}$ வெளி $18^{19}$.

**பாளம்.** 'Wedge', Ingot. 'பொன் பாளம்'. யோசு $7^{21}$.

**பாளயம், பாளையம்.** Camp. யாத் $16^{13}$ $19^{17}$ $32^{26}$ லேவி $8^{17}$ எண் $2^{2-32}$ 10 அதி 11 அதி $12^{15}$ $15^{35}$ உபா $23^{10-14}$ நியா $7^{15}$ 1 சாமு $4^{5}$ $26^{6}$ 2 இரா $7^{5}$ 2 நாளா $22^{1}$ எபி $13^{11,13}$ வெளி $20^{9}$. சேனை காண்க.

**பாறை.** 'Rock'. 2 சாமு $21^{10}$.

**பான பலி.** Drink offering. ஆதி $35^{14}$ யாத் $29^{40}$ $30^{9}$ லேவி $23^{13}$ எண் $6^{15}$ $15^{5-10,24}$ $28^{7-14,31}$ $29^{11-39}$ உபா $32^{37}$ எஸ்றா $7^{17}$ சங் $16^{4}$ ஏசா $57^{6}$ $65^{11}$ எரே $7^{18}$ $19^{13}$ $32^{29}$ $44^{17-25}$ எசே $20^{28}$ $45^{17}$ யோவே $1^{9,13}$ $2^{14}$. பலிகள் காண்க.

**பான பாத்திரக்காரன்.** Cup bearer. பான பாத்திரக்காரர் ராஜாவுக்குப் பானம் கொடுக்கிறதினால், இவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாயிருக்கவேண்டும். சமயாசமயத்தில் இவர்கள் ராஜாவினுடைய மந்திரிகளைப் போல ராஜாங்க விஷயங்களைப்பற்றி ராஜாவுக்கு ஆலோசனை சொல்லுவார்கள். ஆதி $40^{1-23}$ $41^{9}$ 1 இரா $10^{5}$ 2 நாளா $9^{4}$ நெகே $1^{11}$.

**பானபாத்திரம்.** Cup. எஸ்தர் $1^{7}$. ஆதி $44^{2,12,16,17}$—ல் சொன்ன 'பாத்திரம்' சூனியக்காரர் உபயோகித்த பாத்திரமே. பாத்திரம் காண்க.

**பானம்.** Drink. லேவி $11^{34}$ எஸ்றா $3^{7}$ சங் $102^{10}$ தானி $1^{10}$. உவமையாய்: ஓசி $2^{6}$ யோவா $6^{55}$ ரோம $12^{20}$. 'ஞானபானம்.' 1 கொரி $10^{4}$ கொலோ $2^{16}$ எபி $9^{10}$.

**பானா.** Baana, Baanah. [துக்கத்தின் மகன், பொறுமையுள்ளவன்.]

1. சாலொமோனின் உக்கிராணக்காரரில் ஒருவன். 1 இரா $4^{12}$.

2. இன்னொரு உக்கிராணக்காரன் 1 இரா $4^{16}$.

3. சாதோக்கின் தகப்பன். நெகே $3^{4}$.

4. ஏலேபின் தகப்பன். 2 சாமு $23^{29}$.

5. மேவிபோசேத்தைக் கொன்றுபோட்டவன். 2 சாமு $4^{6}$.

6. திரும்பிவந்த யூதர்களில் ஒருவன். எஸ்றா $2^{2}$ நெகே $7^{6}$.

**பானி.** Bani. [பின்சந்ததி.]

1. தாவீதின் 30 போர்வீரர்களில் ஒருவன். 2 சாமு $23^{36}$.

2. ஒரு லேவியன். 1 நாளா $6^{46}$.

3. இன்னொரு லேவியன். நெகே $3^{17}$. =பின்னுயி. எஸ்றா $8^{33}$.

4. இன்னொரு லேவியன். நெகே $9^{4}$.

5. இன்னொரு லேவியன். நெகே $11^{22}$.

6. ஒரு யூதன். 1 நாளா $9^{4}$.

7. சிறையிருப்பிலிருந்து வந்த குடும்பத் தலைவன். =பின்னுயி. எஸ்றா $2^{10}$ $10^{29}$ நெகே $7^{15}$.

8. அன்னிய பெண்ணை விவாகம் செய்தவன். எஸ்றா $10^{38}$.

9. குடும்பத்தலைவன். எஸ்றா $10^{34}$.

10. உடன்படிக்கைக்கு முத்திரைபோட்டவன். நெகே $10^{14}$.

**பானுவேல்.** Phanuel. அன்னாளின் தாய். லூக் $2^{36}$.

**பானை.** 'Kettle.' பெரிய மண்பாத்திரம். நியா $7^{16}$ 1 சாமு $2^{14}$ 1 இரா $17^{12}$. குடம் காண்க.

## பி.

**பிகலியா.** Bealiah. [யேகோவா பாகால் தான்.] 1 நாளா $12^{5}$. **பாகால்** காண்க.



பிகெமோத்.

**பிகெமோத்.** Behemoth. லிவியாதான் என்னும் ஒருவித முதலையும் பிகெமோத் என்னும் ஒருவித கடல்யானையும் இருந்ததாக எபிரெயர் நம்பினார்கள். யோபு $40^{15}$ $41^{4}$.

லிவியாதான் என்பது உலகத்தின் ஜலப் பெருக்குக்கு மூலகாரணமாயுள்ள நீரூற் றண்டை இருக்கிற பெண்மிருகம் என்றும், பிகெமோத் என்பது அளவற்றதும் பயங்கரமானதுமான வனாந்தரத்தில் இருக்கிற ஓர் ஆண்மிருகம் என்றும் ரபிமாரில் சிலர் சொன்னார்கள். ஆனால் யோபில் சொன்ன வசனங்களை நாம் விசாரித்தால் அவற்றில் கடல்யானையைப்பற்றிய பல விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. எபிரெயர்களுக்குத் தெரிந்த மிருகங்களில் கடல்யானை பெரியது. அது வழக்கமாய் ஆப்பிரிக்காக் கண்டத்தில் இருக்கிறது. அதின் கால்கள் அதிகக் குட்டையாயிருந்தும், அதின் உடல் யானையின் உடல்போலப் பெரிதாய் இருக்கிறது. அதன் தோல் இரண்டு அங்குல கனமாயிருக்கும். செடி, தழை, புல், தானியம் முதலியவை அதன் இரை. வழக்கமாய் ஆறுகளிலும் ஏரிகளிலும் அது வசிக்கும். பகல் முழுவதும் ஜலத்தில் நீராடித் திரிந்து, முழுகி, மறைவாயிருந்து, இரவில் கரையேறி பக்கத்திலுள்ள வயல்களுக்குப் போய் தானியம் முதலியவைகளைத் தின்னும். ஆனால் அது பலமுள்ளதும் பயமற்றதும், தன் தோலின் கனத்தினால் காயமுறக் கூடாததுமாய் இருக்கிறபடியினால் அதற்குக் கோபம் மூளும்போது அத்தேசத்தார் அதைப்பற்றி மிகுந்த பயங்கொண்டிருப்பார்கள். **லிவியாதான், ராகாப்** காண்க.

**பிகெல்லு.** Phygellus. ஆசியா நாட்டிலுள்ள சபையான் ஆகிய இவன் பவுலை விட்டு விலகிப்போனான். 2 தீமோ $1^{15}$. **எர்மோகேனே** காண்க.

**பிகோல்.** Phicol. கேரார் ராஜாவாகிய அபிமெலேக்கின் சேனாபதி. ஆதி $21^{22,32}$ $26^{26}$.

**பிக்கிரி.** Bichri. பிக்கிரி என்பதற்குப் பெகோர் என்பவனுடைய சந்ததியான் என்று அர்த்தம் ஆதி $46^{21}$ 2 சாமு $20^{1}$.

**பிக்தா.** Bigtha. எஸ்தர் $1^{11}$.

**பிக்தானா. பிகதான்.** Bigthan. அகாஸ்வேருவைக் கொன்றுபோடும்படி உபாயம் செய்த 'பிரதானிகளில்' ஒருவன். எஸ்தர் $2^{21}$ $6^{2}$.

**பிக்தான்.** Bigthan. **பிக்தானா** காண்க.

**பிக்வாய்.** Bigvai.

1. செருபாபேலின் தோழரில் ஒருவன். எஸ்றா $2^{2}$.

2. உடன்படிக்கைக்கு முத்திரைபோட்டவன். நெகே $10^{16}$.

**பிசகு.** Error. பிர $5^{6}$. **தப்பிதம், தீங்கு** காண்க.

**பிசாசுகள், பசாசுகள், பேய்.** Devils. பிசாசு. சங் $106^{37}$. பேய். உபா $32^{17}$ 1 கொரி $10^{20}$ வெளி $9^{20}$.

**1. பூர்வீக காலத்து அபிப்பிராயங்கள்.** பூர்வகாலத்துக் கானானியர் முதலியவர்களைப்போலவே எபிரெயர்களும் பேய் பிசாசுகள் இருப்பதாக நம்பினார்கள். மரித்துப் போனவர்களுடைய ஆவிகளானவை பெரிய கற்கள் கல்தூண்கள் மரங்கள் முதலிய ஸ்தானங்களைத் தங்களுக்கு இருப்பிடமாக வைத்துக்கொண்டு மனுஷர்களுக்குத் தொந்தரவையும் நஷ்டத்தையும் செய்யக்கூடும் என்றும், இவ்வகை ஆவிகள் நுழைந்த மிருகங்கள் விசேஷித்த நஷ்டம் செய்யும் சக்தியுள்ளவைகள் என்றும், இப்பிசாசுகள் வனாந்தரமான இடங்களில் வசிக்கும் என்றும் நினைத்தார்கள். ஆதி $3^{1-15}$ லேவி $14^{7.53}$ $16^{10}$ $17^{7}$ 2 நாளா $11^{15}$ ஏசா $13^{21}$ $34^{14}$ ரோம $16^{20}$.

**2. பிந்தினகாலம்.** பிந்தின காலங்களில் யூதர்கள் பேய் பிசாசுகளைப்பற்றிப் பல அபிப்பிராயம் உடையவர்களாய் இருந்தார்கள். இவையாவன:

(i) அந்நியருடைய தேவதைகள் பிசாசுகளே. எபிரெயருடைய அபிப்பிராயத்தின்படி இவை மேன்மை குறைந்தவையானாலும், இவற்றிற்கு வல்லமை இருந்தது. யாத் $12^{12}$ ஏசா $19^{1}$ $24^{21}$.

(ii) யூதருடைய அபிப்பிராயத்தின்படி முன்காலத்தில் தேவனுக்கு நல்ல ஊழியம் செய்து பிறகு அவருக்குக் கீழ்ப்படியாமற்

போன தூதர்கள் பிசாசுகளானார்கள். 2பேது $2^4$ யூதா $1^6$.

(iii) மரித்துப்போன துஷ்டர்களின் ஆவிகளும் பிசாசுகளே. இவைகள் கல்லறைகளில் வாசம்பண்ணி மனுஷர்களுடைய சரீரத்துக்கும் ஆத்துமாவுக்கும் பலவித தீமைகளை உண்டாக்கின என்றும், இவைகள் பாதாளலோகத்தில் உள்ள ஒரு ராஜ்யத்தைச் சேர்ந்தவை என்றும் யூதர்கள் நினைத்தார்கள். உபா $32^{22}$ யோபு $11^8$ $18^{14}$ சங் $139^8$ மத் $12^{24}$ லூக் $16^{24}$ வெளி $9^{11}$.

3. **புதிய ஏற்பாட்டுக் காலம்.** புதிய ஏற்பாட்டுக் காலத்தில் யூதர்களும் அந்நியர்களும் பலவித பேய் பிசாசுகள் உண்டு என்றும், அவைகள் பற்பல தீமைகளைச் செய்யக்கூடியவை என்றும் நம்பினார்கள். பிசாசு பிடிக்கிறதைப்பற்றிச் சுவிசேஷங்களில் அடிக்கடி வாசிக்கிறோம். இயேசு பிசாசு பிடித்தவர் என்று அவருடைய சத்துருக்கள் நினைத்ததாக மூன்று வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. யோவா $7^{20}$ $8^{40}$ $10^{20}$. இதினிமித்தம் தீமை அனைத்தையும் சாத்தானே செய்தான் என்று யூதர்கள் அடிக்கடி நினைத்தார்கள். யோவா $6^{70}$ மத் $16^{23}$ யோவா $13^2$. பிசாசுகள் மனுஷர்களுக்குள் புகுந்திருக்கிறது. லூக் $8^{30}$. பிசாசுகள் பன்றிகளுக்குள் புகுந்திருக்கிறது. மத் $8^{32}$. பிசாசுகள் மனுஷரைவிட்டுத் துரத்தப்படுகிறது. மத் $9^{34}$ $17^{18}$ லூக் $11^{14}$. **பிசாசு பிடிக்கிறது** காண்க.

பரி. பவுல் அந்நியருடைய தேவதைகள் பேய்கள் என்றும், அவை கிறிஸ்தவர்களுக்குள்ளே கள்ளப் போதகத்தை உண்டாக்குகின்றன என்றும்சொல்லுகிறான். 1தீமோ$4^1$ 1 கொரி $10^{20}$. பரி. யாக்கோபு பிசாசுகள் உண்டு என்று சொல்லுகிறான். யாக் $2^{19}$. பிசாசுகள் செய்த கிரியைகளைக் குறித்துப் பரி. யோவான் வெளிப்படுத்தின விசேஷத்தில் அடிக்கடி சொல்லுகிறான். வெளி $9^{20}$ $16^{14}$ $18^2$.

ஆனால் புதிய ஏற்பாட்டில் கிறிஸ்தவர்கள் பேய் பிசாசுகளைப்பற்றி அவ்வளவு சொல்லாமல் பேய் பிசாசுகளின் தலைவனாகிய சாத்தானைப்பற்றி அதிகமாய்ச்சொல்லுகிறார்கள். திருஷ்டாந்தமாக, சாத்தான் இயேசுவைச் சோதிக்கிறான். இயேசு சொன்ன உவமைகளில் களைகளை விதைக்கிறான்; விதைகளை எடுத்துப்போடுகிறான். மத் $4^1$ $13^{39}$ லூக் $8^{12}$. யோவான் சுவிசேஷகன் சொல்லுகிறபடி இந்தச் சாத்தான் யூதாஸ்காரியோத்தைத் தீமைக்கு ஏவினான்; எல்லாத் தீமையையும் உண்டாக்குகிறான்; தன் சுபாவத்தில் மகாப் பொல்லாதவனாய் இருக்கிறான்; பரிசுத்தவான்களை உபத்திரவப்படுத்துகிறான்; கடைசியில் ஜெயிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுகிறான். யோவா $8^{44}$ $13^2$ 1 யோவா $3^8$ வெளி $2^{10}$ $12^9$ $20^{10}$. சாத்தான் பிரதான தூதனாகிய மிகாவேலோடு சண்டை செய்தான் என்று பரி. யூதா சொல்லுகிறான். யூதா $1^9$. இவன் மனுஷர்களுக்கு மகாச் சத்துரு என்று பரி. பேதுரு சொல்லுகிறான். அப் $10^{38}$ 1 பேது $5^8$. பரி. யாக்கோபு கிறிஸ்தவர்கள் சாத்தானைத் துரத்திவிடவேண்டும் என்று சொல்லுகிறான். யாக் $4^7$. இவன் இராஜ்யம் மரணம். எபி $2^{14}$. **சாத்தான்** காண்க.

பேய் பிசாசுக்களைப்பற்றிய கொள்கையில் பூர்வகாலத்தவர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இருக்கவேண்டிய வித்தியாசம் புதிய ஏற்பாட்டிலே தெளிவாய்த் தோன்றுகிறது. பூர்வீக காலத்தாரும் அந்நியரும் கடவுள் பேய் பிசாசுகளுக்கு மேலானவர் என்று சொல்லிவந்தாலும், அவர்கள் பேய் பிசாசுகளுக்குப் பயந்து அவைகள் மனுஷரைப் பரீட்சித்து ஏமாற்றி அவர்களை ஜெயித்து நாசம்பண்ணும் சக்தியுடையவை என்று உறுதியாய் நம்பிவந்தார்கள். கிறிஸ்தவர்களோ சாத்தானுக்கு வல்லமை இல்லை என்று சொல்லாமல், இயேசுவின் ஆளுகைக்குச் சாத்தானும் பேய் பிசாசுகளும் அடங்கியிருப்பதாகவும் இயேசுவின்மேல் பக்திவைத்தவர்கள் சாத்தானுடைய வல்லமைக்குப் பயப்படவேண்டியதில்லை என்றும் நம்பிவந்தார்கள்.

இயேசுவுக்கு மேலான அதிகாரம் உண்டு. லூக் $11^{22}$ $22^{32}$.

இயேசு சாத்தானுடைய கிரியைகளை அழிக்கிறார். 1 யோவா $3^8$ எபி $2^{14}$.

இயேசு இப்பொழுதுதானே ஜெயங்கொள்ளுகிறார். பிற்காலத்தில் அந்த ஜெயம் முழுவதையும் அடைவார். யோவா $16^{11}$ ரோம $16^{20}$ 1 கொரி $15^{26}$ 1 யோவா $4^4$.

**பிசாசு பிடிக்கிறது, பேய் பிடிக்கிறது.** **Devil possession.**

பிசாசு பிடிக்கிறதைப்பற்றி வேதாகமத்தில் பலதடவை சொல்லியிருக்கிறது. 1 சாமு $18^{10}$ மு. பேய் பிடித்தவனுடைய விஷயத்தில் மூன்று காரியங்களைப் பார்க்கிறோம்.

1. ஒரு மனுஷனுடைய இஷ்டத்துக்கு விரோதமாக ஒரு பேய் அவனைப் பிடிக்கும்.

2. அந்தப் பேயைத் துரத்திவிட அவனால் முடியாது.

3. அதினாலே பிசாசு பிடித்தவனுக்கு அதிக நஷ்டம் வருகிறது.

இப்படியாக பல வியாதிகளுக்குப் பேய்கள்தான் மூலகாரணம் என்று யூதர்கள் நினைத்தார்கள். மத் 9[32] 12[22] மாற் 1[26] 9[25] லூக் 11[14] 13[11]. ஆனால் வேறு சில வசனங்களைப் பார்க்கும்பொழுது பலதடவை வியாதிகள் இயற்கையாக வருகின்றனவேயன்றி பிசாசுகள் அவற்றிற்குக் காரணம் அல்ல என்று அவர்கள் நம்பினதாக தோன்றுகிறது. மத் 15[30] மாற் 7[32] லூக் 18[35]. பேய் பிடித்தவன் பயம் நிறைந்தவனும் புத்தி கலங்கினவனும் இருப்பான். மாற் 1[24] 5[7] 9[18] யோவா 7[20].

2. பிசாசுகளைப்பற்றி யூதர்களுக்கிருந்த கொள்கையே இயேசுவுக்கும் இருந்ததாக தோன்றுகிறது. மாற் 12[27] லூக் 11[16]. இதற்குக் காரணம் என்னவென்றால், அவர் இவ்வுலகத்தில் அவதரித்து, முழுவதும் மனுஷரைப்போலவே இருக்கும் பொருட்டாக தம்மைத்தாமே வெறுமை யாக்கினதினாலே அவர் மற்ற யூதர்களைப்போன்ற ஒரு யூதனாயிருந்து இவைகளை நம்பினார். 2 கொரி 8[9] பிலி 2[7]. வெறுமை காண்க. ஆனால் அவர் செய்துவந்த ஊக்கமான ஜெபத்தின் வல்லமையால் ஆழ்ந்த ஞானம் உடையவராய்ப் பேய் பிசாசுகளைப்பற்றி அறிந்து, அவற்றிற்குப் பயப்படாமல் அவைகளைத் தூரத்திவிடக் கூடிய வல்லமையுடையவராய் இருந்தார்.

3. தற்காலத்தில் அறிவீனர் அநேகர் பூர்வீகத்தாரைப்போலப்பேய்பிசாசுகளைப்பற்றி நினைத்து அவைகளுக்குப் பயப்படுகிறார்கள். கல்வியும் நாகரீகமும் அடைந்தவர்கள் அறிவீனர்களைப்போல் இதை நம்பாவிட்டாலும் கண்ணுக்குப் புலப்படாமல் ஜீவிக்கிற அநேக ஆவிகள் இருக்கின்றன என்பதற்கு அத்தாட்சி உண்டு என்பதை ஒத்துக்கொள்ளுவார்கள். இந்த ஆவிகளில் சில நல்லவை, சில தீயவை. இவைகளினாலே மனமயக்கம் அடைந்தவன் வருத்தப்படுகிறதில்லை என்று சொல்லாமல், மனுஷர்கள்மேல் இப்பொல்லாத ஆவிகளுக்குச் சர்வ அதிகாரம் இல்லை என்றும், இயேசுவின்மேல் நாம் பக்திவைத்தால் அவர் மூலமாய் நாம் இப்பொல்லாத ஆவிகளை ஜெயிக்கலாம் என்றும் கிறிஸ்தவர்கள் இவற்றினால் சோதிக்கப்பட்டாலும் அவர்கள் எப்பொழுதும் இவற்றை ஜெயிக்க வேண்டும் என்றும் அறிகிறோம்.

**பிசினித்தனம்.** (A. V. 'And spareth not') நீதி 22[26].

**பிசின்தைலம். Balm, Mastic.**

பிசின்தைலம் என்பது கிலேயாத் நாட்டிலுள்ள சில மரங்களிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு பிசின். அது மருந்துக்கு மிகவும் உபயோகமாயிருந்ததினால் ஒரு விசேஷ வியாபாரப் பொருளாயிருந்தது. ஆனால் அது இன்னதென்று நமக்குத் தெளிவாய்த் தோன்றுகிறதில்லை. தற்காலத்தில் அரபியர்கள் மஸ்டிக் (*Mastic*) என்னும் ஒரு செடியிலிருந்து எடுத்த பிசினைத் தாங்கள் சாப்பிடும் காப்பி முதலிய பான பதார்த்தங்களில் உபயோகிக்கிறார்கள். ஆதி 37[25] 43[11] எரே 8[22] 46[11] 51[8] எசே 27[17].

**பிசீதியா. Pisidia.**

சின்ன ஆசியாவின் தென்கரையின் மத்தியிலே பம்பிலியா என்னும் நாடு இருந்தது. அந்த நாட்டுக்கு வடக்கே 120 மைல் நீளமும் 50 மைல் அகலமும் உள்ள ஒரு மலைநாடு இருக்கிறது. பரி. பவுலின் காலத்தில் இம்மலைநாட்டுக்கு பிசீதியா என்று பெயர். நாகரீகமற்றவர்களும் கள்ளர்களுமான ஜனங்கள் இதில் வசித்தார்கள். பிசீதியாவிலுள்ள அந்தியோகு இதன் வடகோடியில் இருந்தது. கி-மு. 25-ம் வருஷம் அகுஸ்துராயன் பிசீதியாவிலுள்ள கள்ளர்களை ஜெயிக்கும்படி இந்த அந்தியோகுப் பட்டணத்திலும் லீஸ்திரா முதலிய வேறு சில பட்டணங்களிலும் கோட்டைகளைக் கட்டினான். ஆனால் கி-பி. 74-ம் வருஷமட்டும் இந்த ஜனங்கள் நாகரீகத்தில் கொஞ்சம் தேறினவர்களாய் இருந்தார்கள் என்று தோன்றுகிறது. பரி. பவுலின் காலத்தில் இத்தேசத்தில் பிரயாணம் பண்ணுவது மிக அபாயகரமானது. அப்படியிருந்தும் பவுலும் பர்னபாவும் தாங்கள் செய்த முதலாம் சுவிசேஷப் பிரயாணத்தில் இதை இரண்டுதடவை கடந்துபோனார்கள். அப் 13[13] 14[24]. ஒருவேளை பரி. பவுல் கள்ளரால் தனக்கு வந்த மோசத்தைக்குறித்துப் பேசும்போது, பிசீதியா நாட்டால் தனக்கு நேரிட்ட விஷயங்களைப்பற்றி நினைத்துப் பேசுகிறான். 2 கொரி 11[26].

**பிச்சு. Gall.**

பாம்பின் விஷம் அதின் பிச்சிலே இருந்ததென்று எபிரெயர்கள் நினைத்தார்கள். பிச்சு என்னும் பதம் கசப்பைக் குறிக்கும்படி பலதடவை சொல்லப்பட்டிருக்கிறது. யோபு 16[13] 20[24-25] புல 3[5].

'பிச்சுக்கலந்த தண்ணீர்' மகா துக்கத்தை அல்லது துன்பத்தைக் காட்டுகிறது. எரே 8[14] 9[15].

**பிச்சை, பிச்சைகேட்கிறது.** **Alms, Beg.** *சங்* $109^{10}$ *நீதி* $20^{4}$ *மாற்* $10^{46}$ *லூக்* $11^{41}$ $18^{35}$ *யோவா* $9^{8}$ *அப்* $3^{2.3.10}$. **தர்மம்** *காண்க.*

**பிஸ்கா.** **Pisgah.**

*மோவாப் தேசத்திலுள்ள சாக்கடலுக்கு வடகிழக்கில் ஒரு மலை. இதிலிருந்து பலெஸ்தீனாதேசத்தை நன்றாய்க் காணலாம். இதின் மேல் பிலெயாம் ஏழு பலிபீடங்களைக் கட்டினான்.* எண் $21^{20}$ $23^{14}$. இதின்மேல் நின்று *மோசே பரிசுத்த பூமியைக் கண்டு மரித்தான்.* உபா $3^{27}$ $34^{1}$. *இதின் மறு பெயர் நேபோ.* **நேபோ** *காண்க. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் குடியேறினபோது. ரூபன் கோத்திரத்தார் பிஸ்கா மலை இருக்கும் தேசத்தைப் பெற்றார்கள்.* யோசு $13^{20}$.

**பிஸ்தா.** **Biztha.** *எஸ்தர்* $1^{11}$.

**பிஸ்பா.** **Bispah.** *ஆசேர் கோத்திரத்தானாகிய ஒருவன்.* 1 *நாளா* $7^{38}$.

**பிஸ்யோத்யா.** **Bizlothiah.** *யோசு* $15^{28}$.

**பிஸ்லாம்.** **Bishlam.** [*சமாதானமுள்ளவன்.*]

*சிறையிருப்பிலிருந்து சில யூதர்கள் செருபாபேலுடனே வருங்காலத்தில் பார்சிக ராஜா பலெஸ்தீனா தேசத்தில் ஏற்படுத்திய அதிகாரிகளில் ஒருவன்.* எஸ்றா $4^{7}$.

**பிஞ்சு.** **Bud.** *ஏசா* $18^{5}$.

**பிடரி.** **Neck.** **ஆதி** $49^{8}$ *யோபு* $16^{12}$ *ஏசா* $48^{4}$.

**பிடிக்கிறது** **Lay hold, catch.** *ஆதி* $39^{12}$ *யாத்* $4^{4}$ **உபா** $21^{19}$ *நியா* $21^{23}$ 1 *சாமு* $15^{27}$ 2 *சாமு* $2^{16}$ *சங்* $10^{9}$ *நீதி* $7^{13}$ *எரே* $50^{33}$ *மத்* $14^{31}$ $21^{39}$ *யோவா* $21^{3}$ **லூக்** $5^{10}$ $8^{29}$ *அப்* $10^{19}$ $19^{29}$ 2 *கொரி* $12^{16}$ 1 *தெச* $5^{21}$ *வெளி* $1^{7}$ $20^{2}$.

**பிடுங்குகிறது.** **Pluck.** *பிர* $3^{2}$ *எரே* $12^{14}$ $18^{7}$ $24^{6}$ *மீகா* $5^{14}$ *மத்* $5^{29}$ $18^{9}$ *'மாற்* $9^{47}$ **லூக்** $17^{6}$ *கலா* $4^{15}$.

**பிட்கிறது.** **Break (bread).** *மத்* $14^{19}$ $15^{36}$ $26^{26}$ *மாற்* $6^{41}$ $8^{6}$ $14^{22}$ **லூக்** $9^{16}$ $22^{19}$ $24^{30}$ *அப்* $2^{46}$ $20^{7-11}$ $27^{35}$ 1 *கொரி* $10^{16}$ $11^{24}$.

**பிணம், பிரேதம்.** **Carcase.**

(i) **'உடல்'** **ஆதி** $15^{11}$ *லேவி* $5^{2}$ $11^{8-40}$ *யோசு* $8^{29}$ *நியா* $14^{8}$ *மாற்* $6^{29}$ *வெளி* $11^{8}$.

(ii) **'பிணம்'** *உபா* $28^{26}$ 1 *சாமு* $17^{46}$ *ஏசா* $5^{25}$ *எரே* $7^{33}$ *மத்* $24^{28}$.

(iii) **'பிரேதம்'** *எண்* $14^{32}$ 1 *இரா* $13^{22-30}$ 2 *இரா* $9^{37}$ $19^{35}$ *எரே* $16^{4}$ $19^{7}$ *எசே* $6^{5}$ $43^{7}$ *நாகூ* $3^{3}$.

(iv) **'சவம்'** *எரே* $9^{22}$ *எபி* $3^{17}$. **சரீரம்** *காண்க.*

**பிணைக்கிறது.** **'Forge'.** *யோபு* $13^{4}$ *சங்* $119^{69}$.

**பிணைப்படுகிறது.** **Be surety.** *யோபு* $17^{3}$ *நீதி* $6^{1}$ $11^{15}$ $17^{18}$ $20^{16}$ $22^{26}$ $27^{13}$.

**பிணையாளி.** **Surety.** *எபி* $7^{22}$.

**பிண்டம்.** **A. V. Birth.** *'வெளிப்படாத முதிரா பிண்டம்'. யோபு* $3^{16}$ *சங்* $58^{8}$ *பிர* $6^{3}$.

**'பிதற்றுகிறாய்'** **'Art mad'.** *அப்* $12^{15}$ $26^{24}$.

**பிதா.** **Father.** *உபா* $32^{6}$ **சங்** $89^{25}$ *ஏசா* $63^{16}$ $64^{8}$ *மத்* $6^{9}$ $23^{6}$ *யோவா* $8^{44.56}$ $20^{17}$ **லூக்** $11^{2}$ *ரோம* $8^{15-7}$ *எபி* $12^{9}$. *'நித்திய பிதா'. ஏசா* $9^{6}$. **குடும்பம், தகப்பன்** *காண்க.*

**பிதாக்கள்.** **Fathers.** **ஆதி** $15^{15}$ $31^{3}$ $48^{15}$ *யாத்* $3^{15}$ $20^{5}$ *எண்* $1^{2}$ **உபா** $5^{9}$ *யோபு* $15^{18}$ *சங்* $95^{9}$ $106^{7}$ *எசே* $18^{2}$ *மத்* $23^{30}$ **லூக்** $1^{55}$ *அப்* $7^{32}$ *ரோம* $9^{5}$ *கலா* $1^{14}$ 1 *யோவா* $2^{13}$ *மு.*

**பிதோலாகு.** **Bdellium.**

எபிரெய பதமாகிய 'பிதோலாகு' வேதாகமத்தில் இரண்டு வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $2^{12}$ எண் $11^{7}$ பக்கத்தில், இது வெள்ளைப்போளத்தைப்போன்ற ஒரு பிசினை அல்லது முத்துவர்ணமான ஒரு கல்லைக் குறிக்கும்.

இதினிமித்தம் ஆதி $2^{12}$–ன் பக்கத்திலும் எண் $11^{7}$–லும் 'முத்து' என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

**பித்கார்.** **Bidkar.** 2 *இரா* $9^{25}$.

**பித்தம், பித்தர்கள்.** **Fools.** 1 *சாமு* $21^{13}$ *ஓசி* $9^{7}$. **பைத்தியம்** *காண்க.*

**பித்தளை.** **Brass.** (*துத்தநாகம் கலந்த செம்பு*) **ஆதி** $4^{22}$ எசே $22^{17}$–ல் சொன்ன 'பித்தளை' என்பதற்குப் பதிலாக 'செம்பு' அல்லது 'வெண்கலம்' என்றிருக்கவேண்டும். **செம்பு, வெண்கலம்** *காண்க.*

**பித்தியாள்.** **Bithiah,** [*யேகோவாவின் மகள்.*]

*யூதாவின் சந்ததியாரில் மேரேத் என்பவனுடைய மனைவி. இவள் எகிப்துதேசத்து ராஜாக்களின் வம்சத்தைச் சேர்ந்தவள்.* 1 *நாளா* $4^{18}$.

**பித்தினியா.** **Bithynia.**

**சின்ன ஆசியாவின் வடகரையிலுள்ள ஒரு நாடு. ரோமர்கள் தங்கள் இராஜாங்கத்தில் ஒரு தேசமாக இதை ஸ்தாபித்திருந்தார்கள்.** பவுலும் சீலாவும் இதில் சுவிசேஷத்தைப் பிரசங்

கம்பண்ண விரும்புங்காலத்தில் பரிசுத்த ஆவியானவர் அவர்கள் அப்படிச் செய்வதற்குத் தடை பண்ணினார். பரி. பேதுரு தமது முதலாம் நிருபத்தை எழுதும்பொழுது அந்தத் தேசத்தில் கிறிஸ்தவ சபைகள் இருந்தன. அப் $14^7$ 1 பேது $1^1$.

**பித்தொலோமாய்.** Ptolemais. அப் $21^7$ **அக்கோ பட்டணம்** காண்க.

**பித்தோம்.** Pithom.

பித்தோம் இஸ்ரவேலர் எகிப்திய ராஜாவுக்காக கட்டின பொக்கிஷப் பட்டணங்களில் ஒன்று. இது வட எகிப்திலேயிருந்தது. இதில் எகிப்தியர் சந்திரதேவனை அதிகமாய் வணங்கினார்கள். யாத் $1^{11}$.

**பித்தோன்.** Pithon. மேவிபோசேத்தின் பேரப்பிள்ளை. 1 நாளா $8^{35}$ $9^{41}$.

**பித்ரோன்.** Bithron. பித்ரோன் யோர்தான் நதிக்கருகே கீலேயாத் நாட்டிலுள்ள ஒரு பள்ளத்தாக்கு. 2 சாமு $2^{29}$.

**பி-பேசேத்** Pi-beseth.

இது வட எகிப்தின் முக்கிய பட்டணங்களில் ஒன்று. சாதாரணமாய் இதற்குப் 'பூபாஸ்திஸ்' என்று பெயர். பூபாஸ்திஸ் என்பதற்கு 'உபாஸ்தி தேவியின் வீடு' என்று அர்த்தம். இதில் எகிப்தியர் சிங்கத்தலையுடைய உபாஸ்தி தேவியை மிகுதியாய் வணங்கிவந்தார்கள். பிபேசேத் நைல் நதியின் கிழக்குச் சங்கஸ்தானத்துக்கு 40 மைல் தூரத்தில் இருந்தது. நைல் நதி அதிக பெரிய நதியானதினாலே அதற்கு அநேக துறைமுகங்கள் இருந்தன. அவைகளில் ஒன்றாகிய இந்தப் பட்டணத்துக்கு வியாபாரிகள் அநேகர் வருவார்கள். எசே $30^{13}$.

**பிம்மால்.** Bimhal. 1 நாளா $7^{33}$.

**பியூலா.** Beulah. பியூலா என்னும் எபிரெய பதத்தின் அர்த்தம் என்னவென்றால், 'விவாகத்தில் கட்டப்பட்டவள்.' இந்தப் பெயர் உவமையாக சிறையிருப்பிலிருந்து வந்த யூத ஜனத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஏசா $62^4$.

**பிரகாசம்.** Brightness. 2 சாமு $22^{13}$ சங் $18^{12}$ எசே $1^4$ தானி $2^{31}$ அப் $10^{30}$ அப் $26^{13}$ எபி $1^3$ வெளி $22^{16}$. **வெளிச்சம்** காண்க.

**'பிரகாசிக்கிறது.'** Shine. யோபு $31^{26}$ எசே $8^2$ தானி $12^3$ அப் $26^{13}$.

**பிரசங்கம்.** Speech, discourse, sermon. (*பிரசங்கிக்கிறது, to preach.*) யாதொரு காரியத்தைக்குறித்து வெளியரங்கமாய்ப் பேசுகிறதே பிரசங்கமாம். பூர்வகாலத்தில் ஜனங்கள் தேவாராதனை முதலியவற்றை நடத்தும்படிக்கு கூடினபோது யோசே நியாயப்பிரமாணத்தைப் பிரசங்கித்தான். யோவா $1^{17}$ யாத் $4^{31}$ உபா $33^7$ மு. யோசுவாவும் பிரசங்கித்தான். உபா $34^9$ யோசு 24 அதி. தீர்க்கதரிசிகளெல்லாம் பிரசங்கிகளாயிருந்தார்கள். எஸ்றா என்பவன் பண்ணின பிரசங்கம் ஜெப ஆலயங்களிலே தேவாராதனையில் செய்த ஒரு விதமான வேதவியாக்கியானம். எஸ்றா 8. அதி. இயேசுகிறிஸ்துவுக்கு முன்தோன்றின பிரபலமான பிரசங்கி யோவான்ஸ்நானனே. இயேசு உலகத்தார் ஒருபோதும் கேட்டறியாத திவ்வியமான இரட்சணிய பிரசங்கியாயிருந்தார். அவருக்குப் பின்பு அப்போஸ்தலர்கள் உலகத்தாருக்குக் கிறிஸ்துபெருமான் இயற்றின புண்ணிய பலன்களினாலுண்டாகும் இரட்சணியத்தைக் குறித்துப் பிரசங்கித்தார்கள். பூர்வத்தில் திருச்சபையில் கிரேக்கபாஷையிலே பாசில், கிரிசோஸ்தமர், கிரிகோரி நாசியான்சன் முதலியவர்களும், லத்தீன்பாஷையிலே எரோம், அகுஸ்தீன் என்பவர்களும் சத்தியத்தைச் சாதுரியமாய்ப் பிரசங்கித்தார்கள். அக்காலத்தில் பிரசங்கி தன் பிரசங்கத்தைத் துவக்குகிறதற்கு முன் ஜனங்களைநோக்கி, 'உங்களோடே சமாதான மிருக்கக்கடவது' என்றும், 'கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கிருபையும், தேவனுடைய அன்பும், பரிசுத்தஆவியின் ஐக்கியமும், உங்களுடனே இருக்கக்கடவது' என்றும் சொல்லிப் பிரசங்கத்தைத் துவக்குவான்; ஜனங்களெல்லாரும் 'ஆமென்' என்பார்கள்.

மற்றவர்களுக்குப் பிரயோஜனமுண்டாக பிரசங்கிக்கிறது எளிதான காரியமல்ல, அதற்குச் சாமர்த்தியம் வேண்டும். பிரசங்கிகள், தீர்க்கதரிசிகள், இயேசுகிறிஸ்து, அப்போஸ்தலர்கள் முதலியவர்கள் பிரசங்கித்ததுபோலப் பிரசங்கிக்க விரும்பவேண்டும்.

பிரசங்கத்தில் வசனம், முகவுரை, வகுப்பு, பொருள் விஸ்தரிப்பு, உதாரணம், முடிவுரை இருக்கவேண்டும்.

1. தெளிவும் இயல்புமாயிருக்கிற வேத வசனங்களை இடம், பொருள், ஏவல் அறிந்து தெரிந்துகொள்ளவேண்டும். 1 கொரி $3^2$ எபி $5^{12,13}$.

2. முகவுரை, வசனத்தின் முன்னும் பின்னுமுள்ள கருத்தின்மேலாவது பிரசங்கப் பொருளை நோக்கியாவது இயல்பாயும் சுருக்கமாயும் இருக்கவேண்டும்.

3. பிரசங்கம் ஒழுங்காயிருக்கும்படி தெளிவாயும் சுருக்கமாயும் வகுக்கப்படவேண்டும். ஒரு ஜாதியான மணிகளை வரிசையாய்க் கோப்பதுபோல ஒரு ஜாதியான பொருள்களை ஒருவழிப்படச் சேர்த்து விசேஷ பிரிவும் அவற்றின் உட்பிரிவும் தோன்றப் பெரிய சரீர முதலானவைகளின் சாயலைத் தனக்குள்ளே செவ்வையாக அடக்கி இனிதாக காட்டுகிற கண்ணாடியைப்போல சுருக்கமான சொற்களில் பலவகைப்பட்ட பொருள்களை ஒழுங்காய் அடக்கிக் காட்டுவதே வகுப்பாகும்.

4. பிரசங்க வகுப்பின் விஸ்தரிப்பே அதின் பொருளாகும். விஸ்தரிப்பில் பல விபரீதங்களல்ல வசனத்தின் கருத்தும், பதப்பொருளும், உட்பொருளும் விளங்கவேண்டும்.

5. விஸ்தரிப்பைப் பிரகாசிப்பது உதாரணம்; ஆகையால் உறுதியான அஸ்திபாரமாகிய நியாயமான வகுப்புகளின்மேல் அலங்காரமாய்க் கட்டப்படுகிற பிரசங்க விஸ்தரிப்பு உதாரணங்களாகிய தூண்களாலே நிற்கவேண்டும். வேதமே வேதத்திற்கு நல்ல உதாரணமாயிருந்தாலும் அநுமானப்பிரமாணம், அநுபவப்பிரமாணம் முதலியவற்றாலும் காரியங்களை விளக்குவிக்கலாம்.

6. பிரசங்கமுடிவிலே முன்சொன்ன நியாயங்களின் தொகுப்பையாவது, அந்த நியாயங்களின்மேல் தோன்றும் தகுந்த புத்திமதிகளையாவது சொல்லி முடிக்கவேண்டும்.

பிரசங்கத்தில் தெளிவோடே அலங்காரம் கலந்திருந்தால் நலமே. ஆனாலும் வேத காரியங்களில் அலங்காரத்தைப்பார்க்கிலும் தெளிவே நலமாகையால் வேதத்தின் பொருளைமாத்திரமல்ல, வேத மொழிகளையும் பொன்னைப்போலக் காப்பாற்றிப் பிரயோகிக்கிறது மிகவும் நலம். தேவன் மகிமைப்படவும், வேதம் மாட்சிமைப்படவும், ஆத்துமாக்கள் இரட்சிக்கப்படவும் எவைகள் துணைக்காரணங்களாய் இருக்குமோ அவைகளையெல்லாம் அநுசரிப்பது நியாயமே. அறிவும், அறமும், வரமும், பரமும், பிரசங்கத்தின் பொருளும் பயனுமாயிருக்க வேண்டும்.

பிரசங்கத்தின் பாஷைநடை தெளிவாயும் இயல்பாயும் உறுதியாயும் இசைவாயு மிருக்க வேண்டும்.

'இதமான வார்த்தைகளைக் கண்டுபிடிக்கப் பிரசங்கி வகைதேடினான்; எழுதின வாக்கியங்கள் செவ்வையும் சத்தியமுமானவைகள். ஞானிகளின் வாக்கியங்கள் தாற்றுக்கோல்கள்போலவும் சங்கத்தலைவர்களால் அறையப்பட்ட ஆணிகள்போலவும் இருக்கிறது.' பிர 12[10,11].

நன்னூல் பொதுப்பாயிரத்தில் 12-ம், 13-ம் சூத்திரங்களிலே நூலின் பத்துக் குற்றங்களையும் பத்து அழகுகளையுங் குறித்துச் சொல்லியிருப்பது பிரசங்கத்திற்கும் தகுதியாயிருக்கிறது. அதாவது:—

'குன்றக்கூறல் மிகைபடக்கூறல்
கூறியதுகூறல் மாறுகொளக்கூறல்
வழூஉச்சொற்புணர்த்தல் மயங்கவைத்தல்
வெற்றெனத்தொடுத்தல் மற்றொன்றுவிரித்தல்
சென்றுதேய்ந்திறுதல் நின்றுபயனின்மை
என்றிவையீரைங் குற்றநூற்கே.

சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்
நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்தல்
ஓசையுடைமை ஆழமுடைத்தாதல்
முறையின்வைப்பே யுலகமலையாமை
விழுமியதுபயத்தல் விளங்குதாரணத்தது
ஆகுதனூலிற் கழகெனும்பத்தே.'

பிரசங்கம் பண்ணுகிறதில் உச்சரிப்பு நடையைக் குறித்தும் கவனிக்கவேண்டும். ஏனெனில், மிகவும் அலங்காரமான பிரசங்கத்தை எழுதும் வல்லமையிருந்தும் அதை நன்றாய்ப் பார்த்து வாசிக்கவாவது அதை ஞாபகத்திலிருத்திப் பேசவாவது தெரியாமற்போகுமானால் பிரசங்கத்தின் அலங்காரமொன்றும் தோன்றவேமாட்டாது; கேட்கிறவர்களுக்கு இன்பமும் பிரயோஜனமுமில்லாமற்போகும்.

பிரசங்கி இயல்பான சத்தத்தோடே நிறுத்தித் தெளிவாய் இருதயத்தின் பரிபூரணத்திலிருந்து காரியங்களை யுணர்ந்து பேசுகிறவனைப்போல மேட்டிமையில்லாத பிகுவோடும், ஆத்திரமில்லாத விரைவோடும், அசதியில்லாத சாந்தத்தோடும் சுயமேன்மையை எவ்வளவேனும் நோக்காமல் சத்தியத்தைப் பட்சபாதமில்லாமல் பேசவேண்டும்.

'ஈதலியல்பே யியம்புங்காலைக்
காலமுமிடனும் வாலிதினோக்கிச்
சிறந்துழியிருந்துதன் றெய்வம்வாழ்த்தி
யுரைக்கப்படும்பொரு ளுள்ளத்தமைத்து
விரையான்வெகுளான் விரும்பிமுகமலர்ந்து
கொள்வோன்கொள்வகை யறிந்தவனுளங்கொள
கோட்டமின்மனத்தினூல் கொடுத்தலென்ப.' [க்

பிரசங்கியானவன் நல்ல வசனத்தைத் தெரிந்துகொண்டு, கர்த்தருடைய உதவியை முன்னிட்டுத் தன்னாலானமட்டும் அதைக் கவனித்து வகுத்து, இன்னின்ன காரியங்களைச் சொல்லலாமென்று தீர்மானித்துக் கொண்டபின்பு அந்தக் காரியத்தைக்குறித்து மற்றவர்கள் எழுதிவைத்திருக்கிற புஸ்

தகங்களையும் பார்த்து, வண்டானது புஷ்பங்களிலுள்ள அமிர்தத்தை உண்டு தேன்கூண்டைக் கட்டுவதுபோல மெய்யறிவையும் சத்தியத்தையும் திரட்டிச்செய்த பிரசங்கம் இருதயத்திற் கருதப்பட்டதாய் நாவின்மேல் ஆடும்போது, அன்பும் வைராக்கியமும் மூகநாடியில் ஆடுமொனுல், அந்தப் பிரசங்கியின் மொழிகள் கல்நெஞ்சைப் பிளக்கும் அம்புகளாகுமே.

பிராஞ்சுதேசத்தில் ராஜாவாயிருந்த பதினாலாவது லூயிஸ் என்பவன் ஒரு கண்காணியினுடைய பிரசங்கத்தைக் கேட்டபோது பிரசங்கியை நோக்கி, 'ஐயா, இந்த ஆலயத்தில் நான் அநேக சாதுரிய பிரசங்கிகளைக் கேட்டபோது, அவர்களைக்குறித்து மிகவும் சந்தோஷப்பட்டேன். ஆனுல் நீர் பிரசங்கிக்கும்போது என்னை நான் அறிந்துகொள்ளுகிறபடியால் என்னைக்குறித்து மிகவும் விசனப்படுகிறேன்' என்ருன். அப்படியே பிரசங்கம் மனிதர்கள் தங்கள் இருதயத்தைப் பார்க்கத்தக்க கண்ணுடியாயிருக்கவேண்டும்.

பிரசங்கங்கள் பலவிதமாய் வகுக்கப்படும். குறிப்புக்காக சில வகுப்புக்கள் வகுத்துக் காட்டுகிறேம்:

1. பாவிகளை இரட்சிக்க கிறிஸ்துஇயேசு உலகத்தில் வந்தார் என்கிற வார்த்தை உண்மையும் எல்லா அங்கிகரிப்புக்கும் பாத்திரமுமானது. 1 தீமோ 1[15].

i. இந்த வசனத்தில் ஓர் ஆச்சரியமான நற்செய்தி சொல்லியிருக்கிறது. அதாவது, பாவிகளை இரட்சிக்க கிறிஸ்துஇயேசு உலகத்தில் வந்தார் என்பதே. (அவரைக்குறித்த தீர்க்கதரிசனம் அவருடைய பிறப்பு, கிரியை, மரணம், அதினுலுண்டாகும் புண்ணிய பலன்களைக் குறித்துப் பேசவும்.) பிலி 2[6-8] ஏசா 53 அதி. ரோம 3[9-29].

ii. இந்த நற்செய்தியின் உண்மையை விசாரித்தறிவோமாக. (*a*) தேவனுடைய சாட்சி (1 யோவா 5[1-11]), (*b*) தீர்க்கதரிசனம் (அப் 10[38]), (*c*) அற்புதம் (யோவா 3[2]. 9[16.33] அப் 2[22]).

iii. இந்த நற்செய்தி உண்மையாயிருக்கிறபடியால் இது எல்லா அங்கீகரிப்புக்கும் பாத்திரமான வார்த்தையாயிருக்கிறது. உலகத்தார் பாவிகளானபடியால் பாவநாசகராகிய கிறிஸ்து யாவருக்கும் வேண்டும். அவரே இரட்சகராகையால் அவரை ஏற்றுக்கொள்ளவேண்டும். மாற் 16[16] யோவா 3[16.36].

2. 'நானே நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் சிலுவையைக் குறித்தேயல்லாமல் வேறென்றையுங் குறித்து மேன்மை பாராட்டாதிருப்பேனுக'. கலா 6[14].

i. கிறிஸ்துவினுடைய சிலுவை (சிலுவையின் உபதேசம்) பாவிகளுடைய நம்பிக்கைக்கு ஆதாரமானபடியாலும் (கொலோ 2[13-15] ரோம 3[23.28] அப் 16[31]);

ii. கிறிஸ்துவிடைய சிலுவை நாம் பெற்றுக்கொள்ளுகிற எல்லா நன்மைகளுக்கும் காரணமாயிருக்கிறபடியாலும் (ரோம 8[32]);

iii. கிறிஸ்துவினுடைய சிலுவை சத்தியவேத போதகத்திற்கு மூலமானபடியாலும், (யோவா 3[16] அப் 4[16]);

iv. கிறிஸ்துவினுடைய சிலுவைமாத்திரமே மேன்மை பாராட்டுதலுக்குரிய பொருளானபடியாலும், பவுல் அப்போஸ்தலன் இந்த வசனத்தைச் சொன்னுன். ரோம 8 அதி.

3. 'நம்பிக்கையுடைய சிறைகளே, அரணுக்குத் திரும்புங்கள்; இரட்டிப்பான நன்மையைத் தருவேன், இன்றைக்கே தருவேன்'. சக 9[12].

i. இந்த வசனத்தில் குறிக்கப்பட்டவர்கள் யார்? 'சிறைகள்' (கடன்காரர், பாவிகள்.)

ii. அவர்கள் செய்யவேண்டியது என்ன? 'அரணுக்குத் திரும்புவது' (இரட்சணியத்தைத் தேடுவது.).

iii. திரும்புகிறவர்களுக்கு உண்டாகும் நன்மை, 'இரட்டிப்பான நன்மையைத் தருவேன்' (பரமபாக்கியம்).

(பிரமாணம் காண்க.)

**பிரசங்கியின் புஸ்தகம். The Book of Ecclesiastes.**

1. இதன் பெயர். ஆதிகாலத்தில் நூலாசிரியர்கள் ஜனங்கள் தங்கள் பெயரை அறிய விரும்பாமல் தாங்கள் இயற்றின நூல்களில் தங்கள் பெயரை எழுதவில்லை. ஆனுல் தாங்கள் இயற்றின நூல்கள் சாலொமோன் முதலிய பெயர்பெற்ற ஞானிகள் இயற்றின நூல்களுக்கு இசைந்திருக்கும் என்று எண்ணி, தங்கள் புஸ்தகங்களின் முகப்பில் முன்னேர்களில் ஒரு பெரியவரின் பெயரை வைப்பது குற்றம் இல்லை என்று நினைத்தார்கள். இதினிமித்தம் இந்த நூலை இயற்றினவன் சாலொமோன் ராஜா இதை இயற்றியதாக சொல்லுகிருன். ஆனுல் இந்தப் புஸ்தகத்தில் நாம் விசாரித்தால் இதை இயற்றினவன் சாலொமோன் அல்ல என்பதை அறியலாம். மேலும் இதன் நூலாசிரியன் தன் சொந்தப் பெயரைச் சொல்லாமல் 'சபையில் பேசுகிறவன்' என்று அர்த்தங்கொண்ட 'கோகெ

லெத்' என்னும் பதத்தைமாத்திரம் சொல்லி அதினால் தன்னைக் குறிக்கிறான்.

ஆகையால் எபிரெய வேதாகமத்தில் இந்த நூலுக்கு 'கோகெலெத்' என்று பெயர். 'சபையில் பேசுகிறவன்' சாதாரணமாய்ச் சபையில் பிரசங்கம் பண்ணுகிறவன் ஆனதினாலே, தமிழ் வேதாகமத்தில் இதற்குப் 'பிரசங்கி' என்று பெயர். ஆங்கிலேய வேதாகமத்தில் இதற்குச் 'சபையிலுள்ளவன்' என்று அர்த்தங்கொண்ட 'எக்லெசியாஸ்டீஸ்' (*Ecclesiastes*) என்னும் பெயர் கூறப்பட்டிருக்கிறது.

**2. ஆக்கியோனும் காலமும்.** எபிரெயர்கள் வேதாகமத்திலுள்ள நூல்களை மூவகையாக பிரிப்பார்கள். இவையாவன:

i. நியாயப்பிரமாணம்.

ii. தீர்க்கதரிசிகள்.

iii. எழுதப்பட்டவை.

'எழுதப்பட்டவை' என்னும் வகுப்பில்பிரசங்கி என்னும் புஸ்தகம் சேர்ந்திருக்கிறது. பிரசங்கி, உன்னதப்பாட்டு, எஸ்தர், என்னும் மூன்று நூல்களும் கடைசியில் ஏறக்குறைய கி—பி. 100-ம் ஆு-மாத்திரம் எபிரெய வேதசாஸ்திரிகளால் பழைய ஏற்பாட்டிலே சேர்க்கப்பட்டன. ஆனால் அதற்கு முந்தியே சிலர் இதை வேதாகமத்தில் ஒரு நூலாக அங்கீகரித்திருந்தார்கள்.

இந்த நூலை நாம் விசாரிக்கும்போது இதன் ஆக்கியோன் கி—மு. இரண்டாம் நூற்றாண்டிலுள்ள ஓர் யூதன் என்றும், இவன் தனவானாயிருந்து பலதுக்கங்களுக்கு உட்பட்டு வயது சென்றவனாய் எருசலேம் பட்டணத்தில் வாசம் பண்ணினான் என்றும் அறிகிறோம். *பிர* 1[12] 2[11] 2[4-10] 7[26-28] 8[10].

மேலும் இவன் தான் இருக்கிற தேசத்தின் நிலைமையை விபரமாய்ச் சொல்லுகிறான். அத்தேசத்தின் ராஜா தன் அதிகாரத்தை நேர்மையாய்ச் செலுத்தாமல், நடுவுநிலைமை குன்றி, தன் பரிவாரங்களில் உள்ளவர்களுக்கு விசேஷ தாக்ஷண்யம் காட்டி, அவர்களுடனே துன்மார்க்கமாய் ஜீவனம்செய்து, பலதடவை கோபங்கொண்டு மிகுந்த அநியாயம் செய்தான். *பிர* 8[2.4.10] 10[16].

ராஜா இத்தன்மை யுடையவனாயிருந்ததினால், நீதிஸ்தலத்திலே அநியாயம் இருந்தது. *பிர* 3[16]. தனவான்கள் ஏழைகளை வருத்தப்படுத்தினார்கள். 4[1]. அதிகாரிகள் முகஸ்துதி பண்ணி நீதியை அல்ல, பெரியோருடைய தயவையே தேடினார்கள். 5[7]. வேவுகாரர் அநேகர் பலர்பேரிலே அநியாயமாய்க் குற்றஞ்சாட்டினார்கள். 10[20]. இதெல்லாம் பார்த்துச் சரித்திரநூல்களில் நாம் விசாரித்தால், இந்த நூலாசிரியன் யாதோ ஒரு காலத்தைப்பற்றி விசேஷமாய்க் குறிக்கிறான் என்று சொல்லமுடியாது; ஏனென்றால் அந்த நூற்றாண்டில் இதைப்போன்ற காரியங்கள் வழக்கமாய் நடந்தது.

இந்தப் புஸ்தகம் கி-மு. இரண்டாம் நூற்றாண்டிலே எழுதப்பட்டது என்பதற்கு இதன் பாஷைநடைதான் இன்னொரு அத்தாட்சி. இதன் பாஷைநடையை விசாரித்த வேதசாஸ்திரிகள் இந்தப் புஸ்தகம் அந்த நூற்றாண்டில் எழுதப்பட்டது என்பதற்குப் போதிய குறிப்புகளைக் கண்டிருக்கிறார்கள். இதெல்லாம் பார்த்து இது கி—மு. 300-ம் ஆு இயற்றப்பட்ட எஸ்தரின் சரித்திரத்துக்குப் பிந்தி எழுதப்பட்டதென்று சொல்லலாம். இதைக்குறித்துப் பேசுகிற சீராகுவின் ஞானாகமம் ஏறக்குறைய கி—மு. 180—ம் ஆு இயற்றப்பட்டது என்று அறிவோம். ஆதலால் பிரசங்கியின் புஸ்தகம் கி—மு. 200-ம் ஆு எழுதப்பட்டது என்று நாம் உத்தேசமாய்ச் சொல்லுகிறோம்.

**3. இதன் பொருள்.**

இந்நூலிலே இரண்டு நோக்கங்கள் தோன்றுகிறது. இந்நூலாசிரியன் சமயாசமயங்களில் பக்திக்கு ஏற்றவிதமாய்க் கடவுளுடைய சித்தத்தையும் பிரமாணங்களின் பயனையும்பற்றிச் சொல்லுகிறானென்றாலும், பலதடவை அவன் நம்பிக்கை இல்லாதவனாய் கசப்பான மனசோடு இவைகளைப்பற்றிப் பேசுகிறான். இவைகளைக் கவனித்த சிலர் ஒரே ஆக்கியோன் இந்நூலை எழுதியிருக்க முடியாது என்றும், ஞானத்தின்மேல் பிரீதிகொண்ட ஒருவன் இந்நூலின் ஒரு பாகத்தையும், யூதர்களுக்குள்ளே நடமாடிய ஞானத்தின்மேல் வெறுப்புற்ற இன்னொருவன் இதில் கண்ட அவநம்பிக்கைக்குரிய வசனங்களையும் எழுதியிருக்கிறதாக சொல்லுகிறார்கள். ஆனால் ஒரே ஆசிரியன்தான் இந்நூலை எழுதினான் என்பது தற்காலத்து வேதசாஸ்திரிகளில் அநேகருடைய அபிப்பிராயம். நமக்கும் இதுவே உடன்பாடு. இந்நூலாசிரியன் ஒன்றுக்கொன்றொவ்வாத பல அபிப்பிராயங்களை எழுதியிருக்கிறான். ஏனென்றால் இவனுடைய மனதில் எழும்பின கொள்கைகள் பலவிதமாய் இருந்தன. நூலின் கடைசியிலும் இன்னும் சில வசனங்களிலும் இவன் தீர்மானமாக அடைந்த பக்திக்குரிய நம்பிக்கை தோன்றுகிறது. 2[26] 3[14.17] 5[1-5] 7[18.26.29] 8[2-6.10-13] 11[9] 12[1.11-14].

4. கோகேலேத்தின் அபிப்பிராயங்கள்.

(i) ஜீவனைப்பற்றியது.

இந்தப் புஸ்தகத்தில் சாலொமோன் ராஜா சொன்ன ஞான மொழிகள் சில இருக்கலாம். இருந்தால் முதல் இரண்டு அதிகாரங்களில் அவைகளை நாம் காணலாம். இது எப்படியானாலும் சாலொமோன் ராஜா ஜீவன் முதலியவைகளைப் பற்றி யோசித்திருக்க வேண்டிய விஷயங்களை இந்நூலாசிரியன் தான் நினைத்து $1^{1}-2^{11}$ வசனங்களில் சொல்லுகிறான். இவைகளைமாத்திரம் நாம் பார்த்தால் ஒரு மனுஷன் நன்மையானதைத் தேடுவதினாலும் தன்னைத் தீமையிலிருந்து காப்பாற்றுவதினாலும் யாதொரு பிரயோஜனமும் இல்லையென்றும், அவன் உலக இன்பத்தை நாடுவதே அவனுக்குப் பலன் என்றும் இந்த நூலாசிரியன் நினைக்கிறான் என்று நமக்குத் தோன்றும். மற்ற அதிகாரங்களிலும் இதைப்போன்ற சில வசனங்கள் உண்டு. $2^{24}$ $3^{12}$ $5^{17}$ $3^{15}$ $9^{17}$ $11^{1-10}$ $12^{1-7}$.

(ii) சன்மார்க்கத்தைக்குறித்து.

இந்த நூலாசிரியன் அக்காலத்து கிரேக்க தத்துவ சாஸ்திரிகளின் போதனையைப் படித்திருக்கலாம். ஸ்தோயிக்கியர் காண்க. அல்லது இவன் அநேக விஷயங்களைப் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சி செய்தபிறகு இந்த நூலை எழுதியிருக்கலாம்.

சன்மார்க்கத்தைப்பற்றி இவனுக்குப் பல சந்தேகங்கள் இருந்தன என்று நாம் நினைக்கலாம்; ஏனென்றால் இவன் கடவுளின் தன்மையையும் அவர் செய்யும் கிரியைகளையும் பற்றி நல்ல நம்பிக்கையுடையவனாய் இருந்தாலும் இவனுடைய அபிப்பிராயத்தின்படி மனுஷர்களைப்பற்றிக் கடவுளுக்கு அவ்வளவு அக்கறை இல்லை. $3^{1-9.11.15.16.22}$ $6^{12}$ $7^{3.1}$ $8^{17}$ $11^{5}$.

இந்த நூலிலே மேசியாவைப் பற்றியும் அவர் அருளும் ராஜ்யத்தைப் பற்றியும் ஒன்றும் கூறப்படவில்லை. 'பிரசங்கி' என்பவன் கடைசியில் நல் நம்பிக்கையைக் காண்பித்தான் என்றால் அது சந்தேகத்தோடு கலந்த நம்பிக்கையே என்று நாம் சொல்வது அவசியம்.

5. இந்நூலின் பயன்.

இந்த நூலிலே அக்காலத்தில் சிலரிடத்திலிருந்த பயபக்தியையும், சிலர் கைக்கொண்ட நீதியையும், சிலர் தங்கள் சந்தேகத்தின் மூலமாய்த் தேடின உண்மையையும் நாம் காணலாம்.

இத்தன்மையை உடையவர்கள் இவ்வுலகத்தில் எப்பொழுதும் இருப்பதினாலே அவர்கள் எல்லாரும் இந்த நூலின் பயனை அடையலாம். ஏனெனில் இந்த மூன்று வகுப்பினரும் சத்தியத்தில் கொஞ்சம் கொஞ்சம் கண்டடைந்து, நாம் எல்லாரும் கேட்கும் கேள்விகளைக் கேட்கிறார்கள். ஆயினும் இந்நூலிலே சத்தியம் என்பது பூரணமாய் விளங்காததினாலும், விடைகூற முடியாத அநேக கேள்விகள் இந்த நூலில் இருக்கிறதினாலும், வேறொரு போதகரிடத்தில் இக்கேள்விகளை வினவி, நாம் சந்தேக நிவிர்த்தி அடையவேண்டும். அதாவது இந்த நூலை மாத்திரம் வாசித்துத் திருப்தியடையாதவர்கள் இயேசுவின் சந்நிதானத்துக்கு வந்து அவருடைய அருமைத் திருமொழிகளை வாசிப்பார்களானால் இந்நூலில் இல்லாததும் நமது ஜீவியத்திற்கு அவசியமானவைகளுமான புத்தி போதனைகளைக் கண்டு முழுச் சத்தியத்தையும் அடைவார்கள்.

**பிரசவம்.** Birth. ஆதி $25^{24}$ சங் $97^{5}$. பிறப்பு காண்க.

**பிரசவம், பிறப்பு.** Child-birth. பிரசவகாலத்தில் ஸ்திரீகளுக்கு உண்டாகும் வலியானது ஏவாள் செய்த குற்றத்தினிமித்தம் தாய்மார் அனைவருக்கும் வந்த தண்டனை என்பது எபிரெயர்களுடைய அபிப்பிராயம். ஆதி $3^{16}$.

வேதாகமத்தில் சொல்லியிருக்கிற பிறப்புக்களில் சிலவாவன:

இரட்டைப்பிள்ளை பெறுதல். ஆதி $25^{22}$ $38^{29}$.

ராகேல் பிரசவகாலத்தில் மரித்தது. ஆதி $35^{18}$.

அகாலப்பிறப்பு. 1 சாமு $4^{19}$ 1 கொரி $15^{8}$.

வயது சென்றவர்களாயிருந்தும் பிள்ளை பெற்ற சில தாய்மார்.

சாராள். ஆதி $21^{2}$.

சிம்சோனின் தாய். நியா $13^{24}$.

அன்னாள். 1 சாமு $1^{20}$.

சூனேமித்திய ஸ்திரீ. 2 இரா $4^{17}$.

எலிசபெத்து. லூக் $1^{57}$.

பிரசவகாலத்தில் விழுந்துபோகிற கர்ப்பம் தேவனுடைய கோபாக்கினைக்கு அடையாளம். ஓசி $9^{14}$. மருத்துவச்சிகளும் இனத்தவரான பெண்களும் பிரசவகாலத்தில் சகல விஷயங்களையும் கவனித்துக் கொள்ளுவார்கள். ஆதி $30^{3}$ $35^{17}$ யாத் $1^{14}$. பிரசவகாலத்துக்குப் பிற்பாடு தாயானவள் ஆண்பிள்ளை

பெற்றால் 7 நாளும், பெண்பிள்ளை பெற்றால் 14 நாளும், தீட்டுப்பட்டிருப்பதாக எபிரெயர் நினைத்தார்கள். இதற்குப்பிறகு ஆண்குழந்தை பெற்றவள் 33 நாளும் பெண் குழந்தை பெற்றவள் 66 நாளும் தேவாலயத்துக்குட்பிரவேசிக்கக்கூடாது. லேவி 12 அதி.

**பிரசவிக்கிறது.** Bear. ஏசா $66^{9}$.

**பிரசன்னம்.** 'Appearing.' 1 தீமோ $6^{13}$ 2 தீமோ $1^{10}$ $4^{1.8}$ தீத் $2^{13}$.

**பிரசித்தம் ஆகிறது.** 'Spread abroad.' மத் $9^{31}$ மாற் $1^{28}$ 1 தெச $1^{8}$.

**பிரஸ்தாபமானவர்.** Principal men. எரே $25^{34}$.

**பிரஜை.** Subjects. ராஜா, ஜனங்கள் காண்க.

**பிரதட்சணம்.** Circumambulation. சங் $26^{7}$–ல் 'சுற்றிவருகிறேன்' என்பதற்குப் பதிலாக 'பிரதட்சணம்பண்ணுவேன்' என்று சொல்லலாம்.

**பிரதான ஆசாரியன்.** Chief priest. ஆசாரியன் (பக். 55) காண்க.

**பிரதான தூதன்.** Archangel. 1 தெச $4^{16}$ யூதா $^{9}$. தூதன் காண்க.

**பிரதானமானவர்.** Principal men. அப் $25^{23}$ $28^{17}$.

**பிரதானம்.** Chief. 'பிரதானமானவர்.' அப் $28^{17}$. 'பிரதான அப்போஸ்தலர்.' 2 கொரி $11^{5}$ $12^{11}$. 'பிரதான பாவி.' 1 தீமோ $1^{15}$. 'பிரதான மேய்ப்பர்' 1 பேது $5^{4}$. 'பிரதானமான ஒரு கிரியை.' யோபு $40^{19}$.

**பிரதானி.** Ministers, Councillors.

இவர்கள் ராஜாக்களின் மந்திரிகள். வழக்கமாய் இவர்களை ஏற்படுத்துவதும் உத்தியோகத்தினின்று நீக்குவதும் ராஜாவே. ராஜாவுடைய தயவு தங்களுக்கு இருக்கும் வரைக்கும் இவர்கள் தாங்கள் ராஜாவிடத்திலிருந்து பெற்ற அதிகாரத்தையும் உத்தியோகத்தையும் தேச அரசாட்சியின்பொருட்டுச் செலுத்தலாம். ராஜாவும் இவர்கள் ஆலோசனையின்படியே நடப்பான். ராஜாவின் தயவு மாறிப்போகும்போது இவர்களுடைய செல்வாக்கும் குறைந்து போகும். ராஜாவுக்குச் சித்தமானால், பாபிலோனிய ராஜன் தானியேலைச் சிங்கக் குகையிலே எப்படி எறிந்துவிட்டானோ, அப்படியே தங்கள் பிரதானிகளைத் தண்டிக்கவும், அவர்களைக் கொலைசெய்துவிடவும் ராஜாக்களுக்கு அதிகாரம் இருந்தது. சில சமயங்களில் தீர்க்கதரிசி முதலானவர்கள் ராஜாங்க முறையாக மந்திரி உத்தியோகத்தைச் செலுத்தாவிட்டாலும், பல விஷயங்களைக் குறித்து அரசனுக்கு ஆலோசனை சொல்லுவார்கள். 2 சாமு $15^{12}$ 1 நாளா $26^{14}$ 2 நாளா $22^{3}$ எஸ்று $4^{5}$ நீதி $11^{14}$ $12^{20}$ $15^{22}$ $24^{6}$ ஏசா $19^{11}$ தானி $3^{24}$. ஆலோசனைக்காரன், ஆலோசனைச்சங்கம் காண்க.

**பிரதி.** Copy.

பிரதி=நகல், உபா $17^{18}$.

பிரதி=பத்திரம். எரே $32^{11}$.

**பிரதிக்கினை** Vow. பொருந்தனை காண்க.

**பிரதிஷ்டை.** Dedication. எண் $7^{84}$ உபா $20^{5}$ 1 இரா $8^{63}$ 2 நாளா $2^{4}$ எஸ்று $6^{16}$ நெகே $12^{27}$ சங் 30 தலைப்பு தானி $3^{2}$ யோவா $10^{22}$ எபி $9^{18}$. முதற்பேறனைத்தும் கடவுளுக்குப் பிரதிஷ்டை செய்தல். யாத் 13 அதி. சாபத்தீடு காண்க.

**பிரதிஷ்டை பண்டிகை.** Feast of Dedication. பண்டிகை காண்க.

**பிரதிமை.** Image. சுரூபம் விக்கிரகம் காண்க.

**பிரத்தோன்.** Pirathon. எப்பிராயீம் கோத்திரத்தார்களுடைய தேசத்திலுள்ள ஓர் ஊர். நியா $12^{13}$ 2 சாமு $23^{30}$.

**பிரபஞ்சம்.** World. லூக் $20^{34}$ $16^{8}$ 1 கொரி $2^{8}$ 2 கொரி $4^{4}$ கலா $1^{4}$ 2 தீமோ $4^{10}$. உலகம் காண்க.

**பிரபந்தம்.** Treatise. 1 நாளா $29^{29}$ அப் $1^{2}$.

**பிரபு.** Prince. தலைவன், ஆள்கிறவன், ராஜாவாயிருக்கிறவன், அதிபதியாய் இருக்கிறவன், சிறந்தவன் முதலியவற்றைக் குறிக்கும்பல எபிரெயகிரேக்க பதங்களுக்கு 'பிரபு' என்று தமிழ் வேதாகமத்தில் சொல்லியிருக்கிறது. ஆதலால் 'பிரபு' என்பதற்குப் பல அர்த்தம் உண்டு என்று நாம் சொல்லலாம். திருஷ்டாந்தமாக: தேசத்தை அல்லது பட்டணத்தை ஆளுகிறவன். ஏசா $21^{5}$ 1 சாமு $18^{30}$. ராஜா ஏற்படுத்தின உத்தியோகஸ்தன். ஆதி $12^{15}$ 2 இரா $24^{12}$. கோத்திரப் பிதா. ஆதி $17^{20}$ $23^{6}$ $34^{2}$. ராஜாவின் வம்சத்தார். 1 சாமு $2^{8}$ சங் $47^{9}$ $107^{40}$.

உவமையாய் இப்பதம் ஜனங்களைக் காக்கிற மகா தேவ தூதர்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. தானி $10^{13\ 20}$.

**பிரமாணம்.** Law. நடக்கவேண்டிய விதத்தைக் குறிக்கிறதே பிரமாணமென்னப்படும்.

I. பொதுவாகப் 'பிரமாணம்' உயர்திணைப் பொருள்களுக்கும் அஃறிணைப் பொருள்களுக்கும் உரித்தாயிருக்கிறது. ஆதிகடவுள் ஒன்றுமில்லாமையினின்று தம்முடைய வல்லமையினாலே உலகத்தை உண்டாக்கின போது 'பிரகிருதி' என்னப்பட்ட அஃறிணைப பொருள்களுக்கும் பிரமாணங்களை ஏற்படுத்தினார். சூரியன் ஒரு நிலையில் மற்றக் கிரகங்களுக்கு மத்தியில் நின்று வெளிச்சத்தையும் வெப்பத்தையும் கொடுக்கவும், பூமி குறித்தகாலங்களில் நாள்தோறும் தன்னைத் தான் சுற்றியோடவும் வருஷந்தோறும் சூரியனைச் சுற்றியோடவும், விதை முளைத்துக் கனிதரவும் அந்தந்தப் பொருள்களுக்கு இயல்பான பிரமாணங்களை ஏற்படுத்தினார். அஃறிணைப் பொருள்கள் பிரமாணப்படி நடக்கிறதே அவைகளுக்குரிய சீராயிருக்கிறது; அவைகள் பிரமாணப்படி நடக்கத் தடைபடும்போது அவைகளின் இயல்பு மாறிப்போகும்.

அஃறிணைப் பொருள்களுக்குச் சிருஷ்டிகர் கொடுத்த பிரமாணங்களைப்போலவே உயர்திணைப் பொருள்களுக்கும் அவற்றுக்குரிய பிரமாணங்களைக் கொடுத்தார். அவர் புத்திசித்தமுள்ள மனிதர்களைப் பிரமாணத்தினாலே ஆளுகிறார். இந்தப் பிரமாணம் யாவரும் ஒத்துக்கொள்ளத் தக்கதாயிருக்கிறது. நாம் உத்தமமாய் நடந்துகொள்ள வேண்டும் என்றும், தீமையை ஒழித்து நன்மை செய்யவேண்டும் என்றும், மனிதனுக்குள்ளிருக்கும் இந்தப் பிரமாணம் அவனுக்குப் படிப்பிக்கிறது. இந்தப் பிரமாணத்தைக் கைக்கொள்வதே மனிதனுடைய சீருக்கும் பாக்கியத்திற்கும் மூலமாயிருக்கிறது. இது நன்மை தீமை அறியத்தக்க பிரமாணமாயிருக்கிறது. சிருஷ்டிகரின் நீதியுள்ள திருச்சித்தமே இந்தப் பிரமாணத்திற்கு மூலம். இதற்குச் சுபாவப் பிரமாணம் என்று வேதசாஸ்திரிகள் சொல்லுவார்கள். (*Natural Law*) ரோம 2:12-15 7:21.

இந்தச் சுபாவப் பிரமாணம் மனிதன் பாவஞ்செய்யாததற்கு முன் அவன் மனது சீருள்ளதாயிருந்தபோது தகுந்த பிரமாணமாயிருந்தது.

II. மனிதன் பாவஞ்செய்தபின்பு அகத்திலிருந்த சுபாவப்பிரமாணம் சீரழியவே கிருபையுள்ள சிருஷ்டிகர் சுபாவப்பிரமாணத்தை உறுதிப்படுத்தவும் சீர்கெட்ட மனிதன் சீர்படவும் புறத்துப் பிரமாணமாகிய வேதப் பிரமாணத்தைக் கொடுத்தார். (*Revealed Law*) சங் 19:8.

இந்த வேதப்பிரமாணத்தை மோசேக்கு முன்னிருந்தவர்களுக்கு ஒலிவடிவாயும், மோசேக்குப் பின்னிருந்தவர்களுக்கு வரிவடிவாயும் கொடுத்தார். மோசேயின் பிரமாணம் மூன்றுவிதமானது என்று வேதசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

1. சன்மார்க்கப் பிரமாணம். *Moral Law*. எபிரெயர்கள் அபிப்பிராயத்தின்படி அது பத்துக் கற்பனைகளே; இதற்கு நியாயப்பிரமாணம் என்றும் பேர்; இந்தப் பிரமாணத்தின் மேன்மையைக் காண்பிக்க தேவன் தாமே அதை இரண்டு கற்பலகைகளில் எழுதினார்; அப்படி இந்தப் பிரமாணம் கல்லிலே எழுதப்பட்டதால் அது உறுதியுள்ளதென்றும், மனிதர்களுடைய இருதயம் கல்லைப்போலிருக்கிறதென்றும், கற்களின் இருபக்கங்களிலும் எழுதப்பட்டபடியால், அதிலிருந்து ஒன்றாகிலும் குறைக்கவும் கூட்டவும் கூடாதென்றும் விளங்குகிறது. இந்தப் பிரமாணம் இரண்டு வகுப்புள்ளது; முதலாம் வகுப்பு நாலு கற்பனைகளடங்கியது. அது நாம் தேவனுக்குச் செய்யவேண்டிய கடமைகளைப் படிப்பிக்கிறது. இரண்டாவது ஆறு கற்பனைகள் அடங்கியிருக்கிறது. அது நாம் மனிதருக்குச் செய்யவேண்டிய கடமைகளைப் படிப்பிக்கிறது. யாத் 20 அதி. புதிய ஏற்பாட்டில் இந்த பத்துக் கற்பனைகளைக் கிறிஸ்து இரண்டு கற்பனைகளாக தொகுத்துச் சொல்லியிருக்கிறார். 'உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனதோடும் அன்புகூருவாயாக. இது முதலாம் பிரதான கற்பனை. இதற்கொப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன்னிடத்தில் நீ அன்புகூருவதுபோலப் பிறனிடத்திலும் அன்புகூருவாயாக என்பதே'. மத் 22:37-39 உபா 6:5 லேவி 19:18 ரோம 2:25 7:7 13:8 கலா 3:24-25. இது அழியாத பிரமாணம். மத் 5:17. கற்பனை, நியாயப்பிரமாணம், நீதி காண்க.

2. சடங்குப் பிரமாணம். *Ceremonial Law*. தேவாராதனை முதலானவைகளை நடப்பிக்கும்படிக்குக் கொடுக்கப்பட்ட கட்டளைகள் சடங்குப் பிரமாணமாம். இந்தப் பிரமாணம் ஆலயம், ஆசாரியர், பலி, காணிக்கை, தூபம், ஸ்நானம், உபவாசம், திருநாட்கள் முதலியவற்றிற்குரியது. பண்டிகை, பலிகள் ௴ காண்க. ரோம 3:27.

3. தருமப்பிரமாணம். *Civil law*. இஸ்ரவேலரை ஆளும்படிக்கும் அவர்களுடைய வழக்குகளைத் தீர்க்கும்படிக்கும் கொடுக்கப்

பட்ட கட்டளைகள் தருமப்பிரமாணம் என னப்படும். ரோம $7^2$ 1 கொரி $7^{39}$ கலியா ணம், பழி ழி காண்க.

**பிரமிக்கிறது.** R. V. Amaze. ஏசா $13^8$ அப் $8^{9.11}$.

**பிரமியம்.** Issue. லேவி $15^{2.13.15}$ $22^4$ எண் $5^2$ 2 சாமு $3^{29}$.

**பிரமை.** 'Mad' (A. V. and R. V.)' எரே $29^{26}$.

**பிரம்பு.** Rod. நீதி $10^{13}$ $13^{24}$ $22^{15}$ $23^{13}$ $26^3$ $29^{15}$ 1 கொரி $4^{21}$.

**பிரயாசம்.** Labour, effort. ஆதி $31^{42}$ நீதி $5^{10}$ $14^{23}$ $23^4$ பிர $1^3$ $2^{10.11.20}$ $3^{13}$ $4^8$ $5^{15}$ $6^7$ லூக் $13^{24}$ யோவா $4^{38}$ ரோமர் $16^6$ 2 கொரி $6^5$ $11^{23}$ 1 தெச $2^9$ வெளி $2^2$ $14^{13}$.

**பிரயாணம்.** Journey. ஆதி $11^2$ $24^{21}$ $30^{36}$ யாத் $3^{18}$ $5^3$ $8^{27}$ $17^1$ $40^{36}$ எண் $9^9$ $10^6$ $33^1$ யோசு $9^{13}$ 1 இரா $18^{27}$ நீதி $7^{19}$ யோனு $3^3$ யோவா $4^6$. 'ஓய்வுநாள் பிரயாணம்' ஏறக் குறைய ஒருமைல் தூரம். ரபிமார் செய்த ஏற்பாட்டின்படி யூதர்கள் ஓய்வுநாளில் ஒருமைல் தூரம்மாத்திரம் பிரயாணம்பண் ணலாம். மத் $24^{20}$ அப் $1^{12}$.

**பிரயோஜனம்.** Profit, use. யோபு $22^2$ நீதி $14^{23}$ பிர $7^{11}$ ஏசா $30^5$ மல் $3^{14}$ ரோம $3^1$ 1 கொரி $10^{32}$ எபே $4^{29}$ எபி $12^{10}$ 1 தீமோ $4^8$ 2 தீமோ $2^{14}$ யாக் $2^{14-16}$.

**பிரளயம்.** Flood. **சலப்பிரளயம்** (பக். 286) காண்க.

**பிராணசிநேகிதர்.** A.V. 'Chief Friends.' நீதி $17^{28}$.

**பிராணன்.** Life. 1 சாமு $19^{5.11}$ $20^1$ $22^{23}$ 1 இரா $3^{11}$ $19^{2.14}$ 2 இரா $7^7$ சங் $31^{13}$ நீதி $7^{23}$ $13^3$ எரே $19^9$ புல $5^9$ அப் $15^{26}$ பிலி $2^{30}$. **ஜீவன்** காண்க.

**பிராயச்சித்தம்.** Atonement. யாத் $29^{36}$ $30^{10}$ லேவி $16^{33}$. பிராயச்சித்தம் என்பதற் குப் பதிலாகப் 'பாவநிவர்த்தி' என்பது வழக் கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. **பாவ நிவாரணம்** காண்க.

**பிரார்த்தனை.** Vow. அப் $18^{18}$ $21^{23}$. **பொருத்தனை** காண்க.

**பிரிகியா.** Phrygia.

பிரிகியா சின்ன ஆசியாவின் மேற்கு பாக த்திலுள்ள ஒரு மலைநாடு. இதில் அநேக சிற்றாறுகள் ஓடின. திராட்சப்பழச் செடி களும் ஒலிவமரங்களும் இதில் வளர்ந்தன. இதில் தங்கமும், உப்பும் அதிகம். இதில் ஆட்டு மந்தைகள் நன்றாய்ப் பெருகின. ரோமர்கள் ஏறக்குறைய கி—மு. 25—ம் வரு ஷத்தில் முன்னிருந்த பிரிகியா நாட்டிலி ருந்து ஒரு பாகத்தை எடுத்து, கலாத்தியா நாட்டோடு அதைச் சேர்த்து, மீதியிருந்த பாகத்திற்குப் 'பிரிகியா' என்னும் பெயரை விசேஷமாய் ஏற்படுத்தினார்கள். பிரிகியாவி லுள்ள அந்தியோகு இதின் தென்கிழக்கு எல்லையில் இருந்தது. கொலோசே பட்ட ணம் இதற்குள்ளே யிருந்தது. பரி. பவுலும் பர்னபாவும் தாங்கள் செய்த முதலாம் பிரயா ணத்திலே இந்த தேசத்திலே பிரவேசித்தார் கள். பரி. பவுலும் சீலாவும் இரண்டாம் பிர யாணத்திலே இதிலே பிரசங்கம் பண்ணினார் கள். பரி. பவுல் தனது மூன்றாம் பிரயா ணத்திலே இந்த நாட்டிலே கிறிஸ்துமார்க் கத்தைப் பற்றிப் போதித்தான். இதிலிரு ந்து மலைநாட்டின் மூலமாய் எபேசு பட்ட ணத்துக்குப் போனான். அப் $13^{14}$ $14^{24}$ $16^6$ $18^{23}$.

**பிரிக்கிறது.** Separate. ஆதி $13^9$ $30^{40}$ எண் $6^2$ $16^{21}$ உபா $10^8$ $19^2$ $32^8$ எஸ்றா $8^{24}$ மத் $25^{32}$ அப் $13^2$ ரோம $1^1$ $8^{36.39}$ கலா $1^{15}$ $2^{12}$.

**பிரிஸ்காள்.** Prisca.

ரோமர்களுக்குள் பெண்களுக்கு வழங்கும் பெயர். 'பிரிஸ்கில்லாள்' என்பதும் 'பிரிஸ் காள்' என்பதும் ஒன்றுதான். 2 தீமோ $4^{19}$. **ஆக்கில்லா** காண்க.

**பிரிஸ்கில்லாள்.** Priscilla. **ஆக்கில்லா** காண்க.

**பிரியம்.** Love. உபா $24^1$ 1 சாமு $2^{26}$ சங் $41^{10}$ $85^1$. **அன்பு, சிநேகம், சிநேகிதன், நேசர்** காண்க.

**பிரிவினை.** Division. நியா $5^{15}$ லூக் $12^{51}$ யோவா $7^{43}$ $9^{16}$ $10^{19}$ ரோம $16^{17}$ 1 கொரி $1^{10}$ $11^{18}$ $12^{25}$ கலா $5^{20}$.

**பிரிவு.** Division. 2 நாளா $35^5$.

**பிரீற்றோரியம்.** Praetorium. பிலி $1^{13}$. **அரமனை** காண்க.

**பிரேத அடக்கம்.** Mourning and Burial. எபிரெய குடும்பங்களில் யாராவது ஒருவன் இறந்துபோனால் எபிரெயர்கள் மகா வண க்கமாய்க் கையினால் வாயை மூடி 'இது கடவுளுடைய சித்தம்' என்று தாழ்மையாய்ச் சொல்லுவார்கள். யோபு $1^{21}$ சங் $39^9$. இறந் துபோன சங்கதியை இனத்தாருக்கும் அய லகத்தாருக்கும் தெரிவிக்கும்படி, மரிக்கும் க்ஷணத்தில் அதிக சத்தமாய்க் கூச்சலிட்டு அழுவார்கள். ஊரார் இந்தச் சத்தத்தைக் கேட்டு இறந்துபோனவனுடைய வீட்டுக்கு வருவார்கள். ஒருவன் இறந்துபோனவுட னே அவனுடைய இனத்தாரில் சிலர் பிரே



பிரேத அடக்கம்.

தத்தைக் கழுவி, துணியால் அதைச் சுற்றி, அடக்கத்துக்காக ஆயத்தப்படுத்துவார்கள். யூதர்கள் வழக்கமாய் 24 மணி நேரத்துக்குள்ளே பிரேதத்தை அடக்கம்பண்ணிவிடுவார்கள். அடக்கம் முடியுமட்டும் இனத்தார் யாவரும் துக்கங்கொண்டாடுவார்கள். அறிமுகமானவர்கள் துக்கவீட்டுக்கு வந்து ஆறுதலான வார்த்தைகளால் அந்தக் குடும்பத்தார்களைத் தேற்றி, இறந்துபோனவனுடைய குணலட்சணங்களைப் புகழ்ந்து பேசுவார்கள். இந்ததேசத்தில் கூலிக்காக மாரடிக்கிறவர்களைப்போல அத்தேசத்திலுள்ள 'துக்கங்கொண்டாடிகளை' சம்பளத்துக்கு அமர்த்துவார்கள். இவர்கள் பாடையின் பக்கத்தில் உட்கார்ந்து இடைவிடாமல் கண்ணீர் விட்டுப் புலம்பிக் கூச்சலிட்டு, தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, தலைமேல் சாம்பலைவாரிப் போட்டுக்கொண்டு, துக்கத்தினால் மயக்கம் அடைந்ததாக காட்டுவார்கள். சில சமயங்களில் இறந்துபோனவனுடைய நற்குணங்களைப்பற்றியும், அவன் காலஞ்சென்று போனதினாலே மற்றவர்களுக்கு வந்த கஷ்டத்தைப்பற்றியும், சரமகவிகள் பாடுவார்கள். இந்தத் துக்க சங்கதியைப் பிந்திக் கேள்விப்பட்டு வந்த அயலகத்தாரும், இனத்தாரும் மாரடிக்கிறவர்களோடு சேர்ந்துகொண்டு கண்ணீர்விட்டுக் கூக்குரலிடுவார்கள். அடக்கம்பண்ணும் நேரம் வரும்போது வீட்டுக்குள்ளே சகலமும் தாறுமாறாக தோன்றும். பாடைசுமக்க வந்தவர்கள் பிரேதத்தைத் தூக்காதபடி சாவுவீட்டுக்காரரில் அநேகர் தடைபண்ணி, இப்படிப் பல தொந்தரவுகள் செய்வதும் உண்டு. பிறகு எல்லாரும் கல்லறைக்குப் போய், குழிக்குள்ளே பிரேதத்தை வைப்பார்கள். தனவான்கள் கற்பாறைகளில் வெட்டப்பட்ட கெபிகளுக்குள்ளே பிரேதங்களை வைப்பார்கள். லாசருவும் இயேசுவும் இப்படிப்பட்ட கல்லறைகளில் வைக்கப்பட்டார்கள். **கல்லறை** காண்க.

பிரேத அடக்கம் செய்தபிறகு இறந்துபோனவனுடைய இனத்தார் சிலநாள் தீட்டுப்பட்டிருப்பதாக எபிரெயர்கள் நினைத்தார்கள். அந்நாட்களில் வேதசாஸ்திரியாகிய ரபி ஒருவன் வீட்டுக்குவந்து வேதவாக்கியங்களை வாசித்துத் துக்கவீட்டாருக்காகப் பிரார்த்தனை பண்ணுவான்.

சகலரும் இறந்தபிறகு மெய்ஜீவனை அடைவார்கள்; அல்லது சகலரும் இதர வீடுகளை விட்டுப் பிரேதகுழியாகிய வீட்டுக்கு வரவேண்டும் என்பதைக் குறிக்கிறதற்காக யூதர்கள் தாங்கள் கட்டின கல்லறைகளின் வாசலின்மேல் எபிரெய பாஷையில 'நித்தியத்தின் வீடு', அல்லது 'ஜீவிக்கிறவர்களின் வீடு' என்று எழுதுவார்கள்.

வேதாகமத்தில் பிரேத அடக்கத்தைக் குறித்துச் சொன்ன வாக்கியங்களாவன:

கூச்சலிடுவது. மீகா $1^{8}$ மாற $5^{38}$.

அயலகத்தார் வருவது. யோபு $2^{11}$.

இறந்துபோனவனைப் புகழ்தல். 2 சாமு $1^{17}$ $3^{33}$ 1 இரா $13^{30}$ எரே $22^{18}$.

'புலம்பற்காரிகள்.' எரே $9^{17}$.

மாரடிக்கிறவர்கள். எரே $9^{17}$ ஆமோ $5^{16}$ ஏசா $22^{12}$ $32^{12}$ பிர $3^{4}$ $12^{5}$ 1 இரா $13^{29}$ மத $24^{30}$.

வஸ்திரத்தைக் கிழிக்கிறது. 2 சாமு $3^{31}$.

உபவாசம். 1 சாமு $31^{13}$. 2 சாமு $3^{35}$.

இரட்டுடுத்தல். 2 சாமு $3^{31}$ $12^{20}$ 1 இரா $21^{27}$.

பிரேத அடக்கம் முதலியவை சில வசனங்களில் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. திருஷ்டாந்தமாக.

இஸ்ரவேலைப்பற்றித் துக்கங்கொண்டாடல. எரே $9^{1}$ புல $1^{16}$ $3^{48}$. தீருப்பட்டணம். எசே $27^{28}$. தமூசின விக்கிரகாராதனை. எசே $8^{16}$.

கிறிஸ்தவர்கள் துக்கமுற்றவர்களுக்கு வேண்டிய ஆறுதலைக் கொடுக்கவேண்டும். என்றாலும் கிறிஸ்தவர்கள் இறந்துபோனவர்களுக்காகத் துக்கங்கொண்டாடுகிற காலத்தில், அவர்கள் உயிர்த்தெழுந்த இயேசுவின் மூல

மாய் ஜீவனைப்பற்றிய நம்பிக்கையுடையவர்களாய் இருக்கவேண்டும். மத் $5^{4}$ ரோம $12^{15}$ 1 தெச $4^{13}$.

இதினிமித்தம் புதிய எருசலேமிலே துக்கமும் கண்ணீரும் இல்லை.

**பிரேத அலங்காரம். Embalming.** எகிப்தியர்கள் பிரேதத்திற்குள்ளே சில சுகந்தவர்க்கங்களைச் செலுத்தி, அதை மருந்திலே சில காலம் வைத்திருந்து அதின் மாமிசம் நாறிப்போகாதபடி செய்து, அநேக கெஜ நீளமான துணியினால் அதைச் சுற்றிக் கெட்டியாய்க் கட்டி, ஈரம் இல்லாத கல்லறைகளில் அப் பிரேதங்களை அடக்கம் பண்ணினதினாலே அவைகள் பட்டுப்போன இலைகளைப்போல பல நூற்றாண்டுகளாக அழியாமல் இருக்கும். இஸ்ரவேலர் இந்த வழக்கத்தை அநுசரித்துப் பிரேதங்களை அலங்கரிக்கவில்லை. இது அவர்களுக்கு விநோதமான விஷயமாயிருந்ததினாலே, யாக்கோபுக்கும் யோசேப்புக்கும் சுகந்தவர்க்கம் இடுதலாகிய இந்தப் பிரேத அலங்காரம் செய்யப்பட்டது என்று ஆதியாகமத்தில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $50^{2,26}$. இயேசு இறந்தபோது அவர் பிரேதத்துக்குக் கந்தவர்க்கமிட்டது இந்தமாதிரி சுகந்தம் இடுதல் அல்ல, நமது தேசத்தில் பிரேதத்தின்மேல் சந்தனம் பன்னீர் முதலியவற்றைத் தெளித்தலைப்போல் இருந்தது. மாற் $14^{8}$ லூக் $24^{1}$ யோவா $19^{38}$.



பூர்வீக எகிப்துதேசத்தில் அலங்கரிக்கப்பட்ட பிரேதத்தைக் கல்லறைக்குக் கொண்டுபோகும் வண்டி.



பூர்வீக எகிப்தியர் அலங்கரித்த பிரேதங்கள்.

**பிரேதக்குழி.** Grave. எரே $26^{23}$ எசே $32^{25}$. கல்லறை காண்க.

**பிரேதம்.** Carcase. லேவி $21^{11}$ உபா $21^{23}$ சங் $79^{2}$ ஏசா $26^{19}$ எரே $34^{20}$ $36^{30}$. 'உடல்' வெளி $11^{8,9}$. **பிணம் காண்க.**

**பிரோகோரு.** Prochorus. ஆதி கிறிஸ்தவ சபையில் முதலாவது ஏற்படுத்தின ஏழு உதவிக்காரர்களில் ஒருவன். அப் $6^{5}$.

**பிர்சா.** Birsha. ஆபிரகாம் காலத்தில் கொமோரா பட்டணத்தின் ராஜா. ஆதி $14^{2}$.

**பிர்சாவீத்.** Birzaith. 1 நாளா $7^{31}$.

**பிலதெல்பியா.** Philadelphia. [சகோதர ஐக்கியம்.]

பிலதெல்பியா சின்ன ஆசியாவில் லீதியா நாட்டில் உள்ள ஒரு பட்டணம். இதற்கும் சர்தைப் பட்டணத்துக்கும் 28 மைல் தூரம். சின்ன ஆசியாவின் உட்புறங்களிலிருந்து கடல் ஓரத்திலுள்ள துறைமுகங்களுக்குப் பெரிய ராஜபாதைகள் பிலதெல்பியாவின் மூலமாய் போனதினாலே இதில் வியாபாரம் அதிகமாயிருந்தது. இந்தத் தேசத்தில் பூமி அதிர்ச்சி அடிக்கடி உண்டாகும். இதில் குடியிருந்தவர்கள் ரோமராயனை அதிகமாய் விரும்பினதினாலே, இதில் ரோமராயனுடைய விக்கிரகத்தை வணங்கும் ஆராதனை விசேஷமாய் நடந்தது. பரி. யோவான் வெளிப்படுத்தின விசேஷத்தின் முதலில் சின்ன ஆசி

யாவிலுள்ள ஏழு சபைகளுக்கு நிருபங்களை யனுப்பும்போது, அவன் பிலதெல்பியாவுக்கு ஒன்று எழுதினான். கிறிஸ்தவசபை இந்த ஊரிலே ஸ்தாபிக்கப்பட்ட விபரம் நமக்குத் தெரியாது. ஆனால் பரி. யோவான் எழுதின நிருபத்திலிருந்து இந்தப் பட்டணத்தில் கிறிஸ்தவ சபை புதிதாய் இருந்தது என்றும், இந்தப் பட்டணத்திலுள்ள யூதர்கள் யூதமார்க்கத்திலே சரியாய் நடக்கவில்லையென்றும், இதில் இருந்த கிறிஸ்தவர்கள் தங்களுக்குத் தெரிந்த வாக்குத்தத்தத்தை உற்சாகமாய்க் கைக்கொள்ள வேண்டும் என்றும் அறிகிறோம். இந்தப் பட்டணத்திலுள்ள கிறிஸ்தவசபை பல நூற்றாண்டுகளாகப் பேர் பிரஸ்தாபமுள்ளதாய் இருந்தது. வெளி 3[8].

**பிலாஸ்து.** **Blastus.** முதலாம் அகிரிப்பாவின் பிரதானி. இவன் மூலமாய்த் தீரு சீதோன் பட்டணத்தார்கள் இராஜாவின் தயவைப் பெறும்படி பிரயாசப்பட்டார்கள். அப் 12[20].

**பிலாத்து.** **Pilate.** பொந்தியுப்பிலாத்து யூதேயாவுக்கும், சமாரியாவுக்கும், இதுமேயாவுக்கும் ரோமராயனால் நியமிக்கப்பட்ட கவர்னர் அல்லது 'பிராக்குரேத்தோர்' (*Procurator*) என்னும் அதிபதியாயிருந்தான். கி–பி. 26–36. இவனுடைய தலைநகரி செசரியா. இவன் அதில் வாசம்பண்ணினாலும் யூதருடைய பண்டிகை வரும்போது எருசலேமுக்குப் போய் அங்கே தங்குவான். இவனுடைய கடமைகளாவன: — ராஜ்ய பரிபாலனம் பண்ணுதலும், தேசத்துக்குரிய காரியங்களை நடப்பிக்கிறதையும், வரிப்பணம் சேர்க்கிறதையும், மேல்விசாரணை செய்தலும், ஜனங்களுக்குள்ளே சமாதான ஒற்றுமை இருக்கும்படி செய்தலுமே. ரோம அதிகாரிகளில் அநேகரைப்போல, பிலாத்து பொருளாசையும், கொடுமையுமுள்ளவன். யூதர்கள் சில தருணங்களில் அவனுடைய அதிகாரத்துக்கு எதிர்த்தபடியினால், பிலாத்து அவர்களைக் குரூரமாய்த் தண்டனை செய்தான்.

இயேசுகிறிஸ்துவுக்கு மரணாக்கினையை விதித்தவன் இவனே. யூதருடைய ஆலோசனைச் சங்கம் ஒருவனுக்கு மரணாக்கினைத் தீர்ப்புக்கொடுக்க அதிகாரமுள்ளதல்ல. இதினிமித்தம் மரணத்தீர்ப்பு சொல்லப்படும் படிக்கு, யூதர்கள் இயேசுவைப் பிலாத்துவுக்கு முன்பாகக் கொண்டுவந்தார்கள். பிலாத்து பண்ணின விசாரணையைப்பற்றி சுவிசேஷங்களில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. மத் 27[1-2,11-26] மாற் 15[1-15] லூக் 23[1-7,13-25] யோவா 18[28] 19[22]. பிலாத்து பிடிவாதமுள்ளவனும், இரக்கமில்லாதவனும், மூர்க்ககுணமுள்ளவனுமாய் இருந்தானென்று சொல்லப்பட்டிருந்தபோதிலும் இயேசு குற்றமற்றவரென்று அறிந்து அவரை விடுதலை செய்ய வகைதேடினதை யூதர்கள் கண்டு 'இவனை விடுதலை பண்ணினால், நீர் இராயனுடைய சிநேகிதனல்ல' என்று சத்தமிட்டார்கள். யோவா 19[12]. அப்போது பிலாத்து யூதர்கள் தன்மேல் இராயனிடம் குற்றம் சாட்டினால் தான் தண்டிக்கப்பட வேண்டியிருக்கும் என்பதை அறிந்து பயம் அடைந்து, இயேசுவைச் சிலுவையி லறையும்படிக்கு அவரை அவர்களிடத்தில் ஒப்புக்கொடுத்தான். யோவா 19[16].

கி–பி. 36–ம் வருஷத்தில் இவன் சமாரியா நாட்டிலே பெருத்த அநியாயம் செய்ததினாலே ரோமராயன் இவன்விஷயத்தில் நியாய விசாரணை செய்யும்படியாக இவனை ரோம பட்டணத்திற்கு அழைத்தான். இதற்குப் பின் இவனைக்குறித்து ஒன்றும் நிச்சயமாய்த் தெரியவில்லை.

ஆதி கிறிஸ்தவர்களின் பாரம்பரியங்களில் பிலாத்துவைப்பற்றி அநேக விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. பிலாத்துவும் இவன் மனைவியும் தங்கள் பாவங்களைக் குறித்து மனஸ்தாபப்பட்டு கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தார்கள் என்றும்; பிலாத்து இயேசுவின் அங்கியைத் தரித்துக்கொண்டான் என்றும்; இவன் தான் செய்த குற்றத்தினிமித்தம் தற்கொலை செய்துகொண்டான் என்றும்; ரோமர்கள் இவனுடைய பிரேதத்தை ஒரு மலைமேலிருக்கிற ஏரியிலே எறிந்துவிட்டாலும், இவன் அடிக்கடி அந்த மலைமேல் ஏறித் தன் கைகளைக் கழுவிக்கொண்டிருப்பதுபோலக் காணப்பட்டான் என்றும்; பல விதமான கதைகள் சொல்லப்பட்டிருக்கிறது.

**பிலிப்பிப்பட்டணம்.** **Philippi.**

பிலிப்பிப்பட்டணம் கிரேக்கு தேசத்தின் வடகிழக்கில் பரவின மக்கெதோனியா நாட்டின் கிழக்குமூலையில் உள்ள ஒரு பட்டணம். இதற்கும் கடலோரத்திற்கும் 10 மைல் தூரம். ஆனாலும் இதனருகில் தங்கச்சுரங்கங்கள் அநேகமிருந்ததினாலே இது ஒரு பெரிய பட்டணம் ஆயிற்று. ரோமர்கள் கட்டின பெரிய ராஜபாதை இதின்மூலமாய் இதின் துறைமுகமாகிய நேயாப்போலிக்குப் போன தினாலே, அந்த இராஜபாதையில் இத்தாலியா நாட்டிலிருந்து சின்ன ஆசியாவுக்குப் போகிற பிரயாணிகள் அநேகர் பிலிப்பிப்பட்டணத்தின் மூலமாய்ப் போவார்கள். ஆத

லால் இதில் வியாபாரம் அதிகமாய் இருந்தது. பிலிப்பிப்பட்டணத்திலுள்ள சபையைப் பரி. பவுல் தனது இரண்டாம் பிரயாணத்திலே ஸ்தாபித்தான்.

ரோமர்கள் இந்த நாட்டில் தங்கள் சேனைகளிலிருந்த அநேகருக்கு நிலங்கள் கொடுத்ததினாலும், அவர்கள் அதிக விசுவாசத்துடனே நடந்துவந்ததினாலும், அந்தப் பட்டணத்துக்குப் பல சிலாக்கியங்கள் கொடுக்கப்பட்டன. ரோமாபுரியில் இரண்டு பெரிய அதிகாரிகள் எப்படி இருந்தார்களோ அப்படியே பிலிப்பிப்பட்டணத்திலும் இரண்டு பெரிய அதிகாரிகள் இருந்தார்கள். இதில் ஜெப ஆலயம் இல்லாததினாலே, இதில் இருந்த யூதர்கள் சிலர்மாத்திரம் என்று நினைக்கிறதற்கு இடமுண்டு. பரி. பவுலுக்கு இந்த ஊரில் சம்பவித்த விஷயங்கள் அப் 16–ம் அதிகாரத்தில் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஊரில் இருந்த சபைக்கும் பரி. பவுலுக்கும் அதிக சிநேகம் இருந்தது. அப்போஸ்தலர் நடபடியில் சொன்ன சமயம் தவிர பரி. பவுல் இன்னொருதடவை பிலிப்பிப்பட்டணத்திற்கு வந்தானென்று 1 தீமோ 1³–ம் வசனத்தினால் அறிய வேண்டியது.

**பிலிப்பியருக்கு எழுதின நிருபம். Epistle to the Philippians.** பிலிப்பிப் பட்டணமானது மகா அலெக்சாந்தரின் தகப்பனை பிலிப்பு அரசனால் கட்டப்பட்டது. அது கிழக்குக் கண்டத்துக்கும் மேற்குக் கண்டத்துக்கும் மத்தியிலுள்ள ராஜபாதையில் உபாய யுக்தமான விடத்தில் அமைந்திருந்தது. ஆகையால் அதைப்பற்றிப் பின் வருமாறு நன்குரைக்கப்பட்டிருக்கிறது. 'நாங்கள் ஆசியாக் கண்டத்தவர்க்கும் ஐரோப்பியருக்குமுரிய ஆசாரங்களாகிய அருவிகள் சங்கமமாகுமிடத்தில் நின்றுகொண்டிருக்கிறோம். பிலிப்பிப் பட்டணத்தில் சுவிசேஷம் பரம்புவதிலே கீழ்தேசத்திலிருந்து மேல்தேசத்துக்குக் கிறிஸ்துமார்க்கம் செல்லும் வழியைக் கண்ணாடியில் நிழலாட்டமாய்ப் பார்க்கிறோம்' என்பதே. இப்பட்டணமானது ரோமைக் குடியேற்ற நாடாய் இருந்தது. அதன் குடிகள் ரோமை நகரத்தாராயும் அந்நகரக் கோத்திரவழிகளில் ஒன்றைச் சார்ந்ததாக பேரெழுதப்பட்டவர்களாயும், ரோமை ஆட்சி சங்கங்களில் சம்மதச்சீட்டுக் கொடுக்கும் சிலாக்கியம் பெற்றவர்களாயுமிருந்தார்கள். இவர்கள்விஷயத்தில் ரோமைச் சட்டங்கள் திட்டவட்டமாய் அனுசரிக்கப்பட்டன. மாகாணத் தேசாதிபதிகளாலல்ல தங்கள் சொந்த அதிகாரிகளால் ஆளப்பட்டுவந்தார்கள். ரோமர்கள் தங்கள் நகரில் ஒரு பாகமானது இன்னொரு மாகாணத்தில் பெயர்த்து நாட்டப்பட்டது என்று நினைத்து, அதில் குடியிருப்போர்கள் ரோமாபுரி பிரஜாசிலாக்கியத்தைப் பூரணமாய் அடைவதை 'ரோமை குடியேற்றம்' என்று சொன்னார்கள். பவுல் தன் நிருபத்தில் பிலிப்பிப் பட்டணமானது ரோமைக் குடியேற்றம் என்னும் இந்த ஒப்பற்ற நிலைமையை சமயோசிதமாக நன்கு வழங்கியிருக்கிறான். அவர்கள் ரோமாபுரியின் குடிகள். அப்படியானால் ரோமை ராஜாங்கத்தின் கண்யத்தை அன்னியர் முன்பாகவும் அநாகரீக ஜனத்தார் முன்னிலையிலும் உயர்த்திக் காட்டவேண்டிய உத்தரவாதிகளா யிருக்கிறார்கள். கிறிஸ்தவர்களான விஷயத்தில் தாங்கள் மோட்சநகரின் குடிகளென்பதையும் நினைத்து 'ஒரே ஆத்துமாவினாலே சுவிசேஷத்தின் விசுவாசத்துக்காகப் போராடி, எதிர்க்கிறவர்களால் ஒன்றிலும் மருளாதிருந்து' யுத்தம் பண்ணக் கடமைப்பட்டவர்களென்றும் சொல்லுகிறான் (1²⁷⁻²⁸). உள்ளபடி அவர்கள் தேவனது உடன் நகரத்தாராய் நடந்துகொள்ள வேண்டியவர்களே.

பவுல் பிலிப்பிப் பட்டணத்தை மூன்று முறை சந்தித்ததாக தெரிகிறது. முதலாவது அவன் செய்த இரண்டாம் சுவிசேஷப் பிரயாணத்தில் சீலா, தீமோத்தேயு, பிரியமான வைத்தியனாகிய லூக்கா என்பவர்களோடே ஏறக்குறைய கி–பி. 51–ம் ஆண்டில் இதைச் சந்தித்தான். இரண்டாம் சந்திப்பு அதற்கு ஐந்து வருஷங்களுக்குப் பின் கி–பி. 57–ல் ஏப்ரில்மீ நடந்தது. அதற்கு அடுத்த வருஷத்தில் கடைசியாக சந்தித்தான். அதுமுதல் பிலிப்பிய கிறிஸ்தவர்கள் ரோமையில் கைதியாயிருந்த பவுலுக்கு உதவியாக தங்கள் மனோற்சாக காணிக்கைகளை எப்பாப்பிரோதீத்துவின் மூலமாய்க் கொடுத்தனுப்பின காலபரியந்தம் அவர்களைப்பற்றி யாதொன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லையென்று பார்க்கிறோம் (2 ²⁵⁻³⁰ 4 ¹⁰⁻¹⁸). இவன் மூலமாகத்தான் பவுல் இந்த நிருபத்தை அனுப்பினான். பிலிப்பிய கிறிஸ்தவர்களுடன் பவுலுக்கிருந்த சம்பந்தம் எப்போதும் உத்தம நேசத்துக்குரியதாகவே இருந்தது. அவர்களை நேசிப்பதிலும் அவர்களுக்காக ஜெபிப்பதிலும் பவுல் ஒருக்காலும் தவறினதேயில்லை. அவனுக்கு உண்மையாகவும்நன்றியாகவும் நடந்துகொள்வதில் அவர்களும் தவறினதில்லை. அவனது முதற்சந்திப்புத்தான் அதிக விசேஷம். அச்சமயத்தில் தான் பல முக்கிய சம்பவங்கள் நடந்தன. வழக்கம் போலவே சுவிசேஷமானது முதலாவது யூத

ருக்குப் பிரசங்கிக்கப்பட்டது. யூதர் சொற்ப பேர்தான் அங்கிருந்தனர். அதில் ஜெபாலயங்களுமில்லை. ஆனால் ஒரு சிறு ஜெபக் கூடம்மாத்திரம் பட்டணவாசலுக்குப் புறம்பே ஆற்றோரத்தில் ஜன சந்தடியில்லாமல் அமைதியை உத்தேசித்துக் கட்டப்பட்டிருந்தது. ஓய்வுநாளாராதனைக்கு அங்கே கூடிவரும் சபையில் பெண்களே அதிகமாயிருந்தார்கள். இச்சபையார் எல்லாருமே யூதரல்ல. எல்லாருமே அப்பட்டணவாசிகளுமல்ல. இந்நிருபத்தில் பெயர் சொல்லப்பட்டிருக்கிற லீதியாள் ஆசியாவிலுள்ள தியத்தீரா ஊராள். சாயத்தொழிலை விட்டு இங்கு வந்தவள். சுவிசேஷமானது முதல் முதல் ஐரோப்பாவில் இந்த அற்பமான இடத்திலே பக்தியுள்ள பெண்களடங்கிய இந்தச் சிறு சபைக்குத்தான் பிரசங்கிக்கப்பட்டது. பிரசங்கிமார் நின்றவிதமோவென்றால் பவுலும் அவன் தோழரும் தரையில் 'உட்கார்ந்து' அங்கே கூடிவந்த ஸ்திரீகளுக்குப் பிரசங்கித்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. மக்கெதோனியாவில் சுவிசேஷத்தைக் கூறத் துரோவாப் பட்டணத்திலிருந்து தமது ஊழியரை யழைத்துவந்த கர்த்தர் லீதியாளின் இருதயத்தைத் திறந்தார். அவள் விசுவாச அறிக்கைசெய்து உடனே தானும் தன் வீட்டாருமாக ஞானஸ்நானம் பெற்றார்கள். பவுலின் சரித்திரத்தில் முழுக் குடும்பமாக அவனால் சபையிற் சேர்க்கப்பட்ட சங்கதி முதல் முதல் இங்கேதான் வருகிறது. அடுத்தாற்போல் குணப்பட்ட ஒரு முக்கியமான ஆத்துமா ஒரு அடிமைப்பெண்ணே. அவள் குறிசொல்லுகிற ஆவியைக்கொண்டிருந்து பல எஜமான்களுக்குரிய பொதுச் சொத்தாயிருந்தாள். அவ்வெஜமான்கள் இவளைக் கொண்டு பிலிப்பிநகர்ப் பேதைகளை ஏமாற்றி அதிக பணம் பறித்துவந்தார்கள். அவர்களுக்கு உள்ளபடி மிகுந்த ஆதாயத்துக்கிடமாயிருந்த இந்த அடிமை குணப்படவே ஊழியமற்றவளானாள். அவர்களுக்குச் சடுதியில் நஷ்டமூண்டாயிற்று. ஆனதால் அப்போஸ்தலருக்குக் கொடிய துன்பமுண்டானது. பவுலும் சீலாவும் சிறைச்சாலையில் வைக்கப்பட்டனர். ஆயினும் இதினால் சிறைச்சாலைக்காரனும் அவன் குடும்பத்தோடு ஞானஸ்நானம் பெற ஏதுவுண்டாயிற்று. இந்த மூன்று குணப்படுத்தலும் மகா விசேஷித்தது. இம்மூவரும் தேசாச்சார ஜனச்சார மதாச்சார விஷயங்களில் ஒருவருக்கொருவர் முற்றும் பிரத்தியேகமானவர்கள். ஒருத்தி ஆசியாவாசி, மற்றவள் கிரேக்கை நாட்டாள், மூன்றும் ஆள் ரோமைத் தேசத்தான். ஒருத்தி தியத்தீராவூர், இரத்தாம்பர வியாபாரி, மற்றவள் சுதேச அடிமைப் பெண், மூன்றும் ஆள் ரோமைச் சிறைச்சாலைக்காரன். 'யூதனென்றுமில்லை கிரேக்கனென்றுமில்லை; அடிமையென்றுமில்லை சுயாதீனனென்றுமில்லை; ஆணென்றுமில்லை பெண்ணென்றுமில்லை; எல்லாரும் கிறிஸ்து இயேசுவுக்குள் ஒன்றாயிருக்கிறோம்' என்ற கிறிஸ்துமார்க்க உன்னத சத்தியம் இதில் விளங்குகிறது. மேலும் இக்குணப்படுதல்களின் வரிசைமுறையும் கவனிக்கப்படத்தக்கது.

முதலாவது ஒரு புரோசெலைத்து (*Proselyte*) (புறமதத்திலிருந்து யூதமதம் புகுந்தவள்), அடுத்தவள் கிரேக்க ஸ்திரீ, கடைசியில் ஒரு ரோமன். உலகமெங்கும் கிறிஸ்துமார்க்கம் விர்த்தியடைந்துவரும் முறையை இது காட்டுகிறது. மேலும் கிறிஸ்துமார்க்கமானது தன் வல்லமையைச் செலுத்துகிற இன்னொரு பெரிய ஜனச்சார ஒழுக்கத்தையும் இது விளக்கும். ஒரு ஸ்திரீயையும் ஒரு அடிமைப்பெண்ணையும் பற்றி விசேஷித்துச் சொல்லியிருப்பதைக் கவனிக்கையில் பெண்களின் நிலைமை உயர்வடைவதும் அடிமைத்தனம் ஒழிக்கப்படுவதுமான கிறிஸ்தவ மார்க்கத்தின் வெற்றிசிறப்பை இது விசிதப்படுத்துகிறது.

கவனிக்கப்படத்தக்க இன்னொரு சத்தியமென்னவென்றால் சுவிசேஷமானது முதலாவது ஸ்திரீகளுக்கேபிரசங்கிக்கப்படும்போது, ஸ்திரீகளே முதல் முதல் குணப்பட்டிருப்பதாக சொல்லப்பட்டிருப்பதுபோலவே, பிலிப்பிய சபையின் சமாதானமும் அதில் செல்வாக்குடையவர்களாயிருந்த இரண்டு ஸ்திரீகளின் சண்டையினாலே குலைக்கப்பட்டதென்றும் காண்கிறோம். பிலி 4². ஆனால் இவ்விருமாதரும் சுவிசேஷ பிரபல்யவிஷயத்தில் பவுலுக்கு வைராக்கியத்துடன் உதவிசெய்ததாய்ப் பவுல் நன்றியறிதலுடன் ஒத்துக்கொண்டிருக்கிறான்.

**காலம்**. இந்த நிருபம் எழுதப்பட்ட காலத்தைப்பற்றிக் கல்விமான்களெல்லாம் பொதுப்பட ஒத்துக்கொண்டிருப்பது என்னவென்றால் பவுல் ரோமாபுரியில் சிறைப்பட்டிருந்தபோது கி-பி. 60-வது வருஷக் கடைசியிலாவது 61-வது ஆரம்பத்திலாவது இதை எழுதியிருப்பான் என்பதே. இதை யெழுத நேரிட்ட சந்தர்ப்பமாவது: பவுல் சிறையிலிருக்கையில் பிலிப்பிய கிறிஸ்தவர்கள் மனோற்சாகமாக பணஞ்சேர்த்து எப்பாப்பிரோதீத்துவின்மூலமாய்ப் பவுலுக்கு அனுப்

பினார்கள். இவன் ரோமைக்கு வந்தபோது மிகவும் வியாதிப்பட்டு மரணத்துக்குச் சமீபமானான் ($2^{27-30}$). இவன் சுகப்பட்டுப் பிரயாணம் செய்யத்தக்கவனானபோது பவுலின் வேண்டுகோளுக்கிணங்கிப் பிலிப்பிப் பட்டணத்துக்குத் திரும்பிவரச் சம்மதித்தான். ஏனெனில் அங்கிருந்த அவனுடைய சிநேகிதர்கள் அவன் வியாதிப்பட்டதைக் கேள்விப்பட்டு மிகவும் ஏக்கமுற்றிருந்தார்கள். ஒருவேளை அவன் அந்தச் சபையில் ஒரு உத்தரவாதமான ஊழியனா யிருந்திருப்பான். ஆனதால் அவன் கடமை தவறிப்போகும் என்று நினைத்து, பவுல் அவனைத் தாமதப்படுத்த மனமில்லாமலிருந்திருப்பான். இச் சமயத்தை அனுகூலமாய்க்கொண்டு பவுல் பிலிப்பிய சபையின்பேரில் தனக்கிருக்கும் அன்பும் அவர்களின் ஆவிக்குரிய க்ஷேமத்தைப்பற்றித் தனக்கிருக்கும் ஆவலும் நிறைந்து விளங்கும் இந்த நிருபத்தை யெழுதி யனுப்பினான்.

**இந்த நிருபத்தின் பொருளடக்கம்.** பவுல் எழுதிய மற்றெல்லா நிருபங்களையும்விட இந்த நிருபத்தில் சபையைப்பற்றிக் குறைகூறல் கொஞ்சமாயும் புகழ்ச்சியோ அதிகமாயும் அடங்கியிருக்கிறது. பிலிப்பிய சபையின் நிலைமையைப்பற்றி உயர்ந்த கருத்தை இந்நிருபம் நமக்குண்டாக்குகிறது. உபத்திரவகாலத்தில் அவர்களுக்கிருந்த விசுவாச உறுதியும் ($1^{28-29}$) பவுலின்பேரில் அவர்களுக்கிருந்த மாறாத பற்றுதலும் கீழ்ப்படிதலும் ($2^{12}$), மற்றெல்லாச் சபைகளைப்பார்க்கிலும் அவர்களுக்கே உரித்தாயிருந்த உதாரத்துவமும் ($4^{15}$) ஆகிய இவற்றுடன் தப்புபதேசங்களுக்கும் அவர்கள் அகப்படாதிருந்தார்கள். யூதமதச் சார்பினராலுண்டாகும் மதப்பிரிவினைகளும் அவர்களுக்குள் இன்னும் வந்தெட்டவில்லை. என்றாலும் இம்மதக்கட்சியாருள் பிரபலமானவர்கள் ஒருவேளை சமீபத்திலிருந்திருப்பார்கள் என்றும்; ஒருவேளை அவர்கள் இந்தச்சபையில் தலைகாட்டுவார்கள் என்றும் அறிந்து இந்தச் சபையார்களைப் பரி. பவுல் எச்சரிக்கிறான். ஆயினும் பிலிப்பிய சபைக்குள்ளிருந்ததாக குறிக்கப்பட்டிருக்கிற ஒரு குறை என்னவெனில், அவர்களில் சிலர் தாழ்மையற்றவர்களாயிருந்து தங்கள் சகோதரர்களுக்குள் கலகத்துக்கும் வாக்குவாதத்துக்கும் இடம்பண்ணினார்கள். அங்கே கிறிஸ்தவர்களானவர்களில் பேர் குறிக்கப்பட்ட **எயோதியாள் சிந்திக்கேயாள்** என்னும் இரண்டு செல்வாக்குள்ள ஸ்திரீகளே இத்தப்புக்குள்ளான விசேஷித்த குற்றவாளிகள். இவ்விருவருடைய சச்சரவுகளைப் பற்றி நாம் அதிக விசனப்படவேண்டியது. ஏனென்றால் இவர்கள் சபையின் விசுவாச விர்த்திக்காக அதிக வைராக்கியத்துடன் உழைத்தார்களாம். இக்கேவலமான சண்டையை ஒழித்துவிடும்படி பவுல் மிகுந்த தாபந்தத்தோடு புத்தி சொல்லுகிறான்.

மேலும் இந்த நிருபத்தில் பவுல் பிலிப்பியருக்குத் தன் சொந்த நிலைமையையும் ரோமாபுரியில் சுவிசேஷம் பரம்புவதையும்பற்றித் திட்டமாய் அறிவித்திருக்கிறான். தான் அவர்களை மகா அன்புடன் நினைவுகூர்வதோடு சீக்கிரத்தில் தனக்கு நேரிடவிருக்கும் முடிவை எதிர்பார்த்தவனாய்த் தனது விசுவாசத்தையும் நம்பிக்கையையும் சந்தோஷத்தையும் உரைத்தெழுதுகிறான்.

## B. இந்நிருபத்தின் பொருளடக்கம்.

இந்நிருபத்தில் அடங்கின விசேஷங்களைப் பின்வருமாறு சுருக்கமாயும் தெளிவாயும் பகுத்துக் காட்டுவது பிரயோஜனமாயிருக்கும்.

**I. விண்ணப்பமும் பவுலுக்கடுத்த விசேஷங்களும்.** $1^{1-26}$.

முகவுரை வாழ்த்துதல். $1^{1.2}$.

ஸ்தோத்திரமும் விண்ணப்பமும். $1^{3-11}$.

பவுலுக்கடுத்த விசேஷங்கள். $1^{12-26}$.

அவருடைய கட்டுகளும் வேலைகளும் விரோதிகளும் சந்தேக ஸ்திதியும் தெரிந்துகொள்ளுதலும் நிச்சயமும்.

**II. புத்திமதிகளும் பவுலுக்கடுத்த விசேஷங்களும்.** $1^{27}$-$2^{30}$.

நல்லொழுக்கத்தையும் தைரியத்தையும்பற்றின புத்திமதிகள். $1^{27-30}$.

சுயவெறுப்பையும் சகோதர ஐக்கியத்தையும் பற்றின புத்திமதிகள். $2^{1-4}$.

கிறிஸ்துவின் மனத்தாழ்மையைப்பற்றின புத்திமதிகள். $2^{5-11}$.

கீழ்ப்படிதலையும் பரிசுத்த ஜீவியத்தையும் பற்றின புத்திமதிகள். $2^{12-16}$.

பவுலுக்கடுத்த விசேஷங்கள். $2^{17-30}$.

அவர்கொண்ட யோசனைகளும் தீமோத்தேயு எப்பாப்பிரோதீத்து என்பவர்களைப் பிலிப்பிப்பட்டணத்துக்கு அனுப்புதலும்.

**III. எச்சரிப்புகள்.** அதி 3.

யூதமார்க்க கொள்கைகளைப்பற்றின எச்சரிப்புகள். $3^{1-14}$.

கிறிஸ்தவர்கள் மனம்போல நடக்கலாம் என்னும் தப்பறையைப்பற்றின எச்சரிப்புகள். $3^{15-21}$.

**IV. புத்திமதிகளும் பவுலுக்கடுத்த விசேஷங்களும். அதி 4.**

*ஐக்கியம், சந்தோஷம், பொறுமை, ஜெப முதலியவைகளைப்பற்றின புத்திமதிகள். 4[1-9].*

*பவுலுக்கடுத்த விசேஷங்கள். 4[10-20].*

*அவர்களுடைய பொருட்சகாயத்தினிமித்தம் அவன் நன்றி சொல்லுதலும் அவனுடைய மனோரம்மியமும்.*

*முடிவுரை வாழ்த்துதல். 4[21-23].*

C. *இந்நிருபமானது தற்கால இந்திய சபைக்குப் பல முக்கியமான பாடங்களைப் போதிக்கின்றது.*

1. **எல்லா விவாதங்களையும் கலகங்களையும் கட்சித்துணங்களையும் ஒழித்துவிடுவோமாக.**

*பிலிப்பிய சபை அநேக நற்காரியங்களில் சிறப்புற்றிருந்தும் ஒரு பெருங் குறைவு அதிலிருந்தது. விவாதக்குணம் தலைகாட்டினது. வாக்குவாதமும் போட்டித்தனமும் அங்கிருந்தது. பவுல் எயோதியாள் சிந்திக்கேயாள் என்ற இரண்டு பெண்களின் பேர்களைக் காட்டுகிறான். இவர்களே இச்சண்டைகளுக்கு முக்கியஸ்தர். இவர்களை ஒப்புரவாக்கிக்கொள்ளும்படி பவுல் ஏவுகிறான். இதிலே இந்திய சபைக்கொரு பாடமில்லையா? எத்தனையோ சபைகள் கட்சியினாலும் விவாதங்களினாலும் சின்னாபின்னமாகியிருக்கின்றன. பவுல் அவர்களைப் பார்த்து 'நீங்கள் ஏக மனதுள்ளவர்களாய் ஒன்றையும் வாதினாலாவது வீண் பெருமையினாலாவது செய்யாதிருங்கள். சுவிசேஷத்தின் விசுவாசத்துக்காக ஏக சிந்தையோடு போராடி ஒரே ஆவியில் உறுதிப்பட்டிருங்கள். அப்படிச் செய்வீர்களானால் எல்லாப் புத்திக்கும் மேலான தேவ சமாதானம் உங்களோடிருக்கும்' என்று சொல்லுவான்.*

2. **உதாரத்துவத்தைப்பற்றிய பாடம்.**

*பிலிப்பிய கிறிஸ்தவர்கள் உதாரத்துவமாய்க் கொடுப்பதில் பிரக்கியாதிபெற்றிருந்தார்கள். தங்கள் தகுதிக்கேற்கவும் அதற்கதிகமாகவும் தேவகாரியங்களுக்காக கொடுத்தார்கள். சுவிசேஷப் பிரபலியத்துக்கென்று கிறிஸ்துவினிமித்தம் தங்களை வெறுத்து, தங்கள் வறுமையிலிருந்தும் திடன்கொண்டு கொடுக்கச் சித்தமுள்ளவர்களாயிருந்தார்களென்பதற்கு அநேக சாட்சியங்களுண்டு. பிலிப்பிய சபையானது சுயாதீனமுடையதாய்த் தற்பரிபாலன முற்றிருந்ததுமன்றி, காலமெல்லாம் தானே சுவிசேஷ விர்த்திக்காக பணம் சேர்த்தது. இந்திய சபை இதைப் பின்பற்றவேண்டும். நாம் குழந்தைகளாயிருந்த காலம் போதும். நாம் புருஷத்துவமடைவோமாக. பிலிப்பியரைப் போல இந்திய கிறிஸ்தவர்களும் சுவிசேஷ விர்த்திக்காகவும் தங்கள் சபை தாபரிப்புக்காகவும் தங்கள் வறுமையிலிருந்து தாராளமாய்க் கொடுக்கவேண்டும்.*

3. **ஜாதிபேதத்தன்மையும் வருணபேத எண்ணமும்.**

*பிறப்பிலும் கல்வியறிவிலும் மேம்பாடுடையவனும், உயர்ந்த குடிவழிப் பிறப்புக்கும் வைதீக ஆசார வளர்ப்புக்கும் சொந்தம் பாராட்டக் கூடியவனும், ஜனுங்க அந்தஸ்தில் குறைகூறப்படாத உயர்ந்தபதவியுடையவனுமான பவுல் (3 [4-8]) மனிதருக்குள் லாபமாக எண்ணப்படும் இந்த ஜாதி அந்தஸ்து மேன்மைகளையெல்லாம் கிறிஸ்துவுக்காக நஷ்டமென்றெண்ணினான். இந்தப் பூர்வோத்திரப் பெருமை, ஜாதி அபிமானம், மதவைராக்கியங்களையெல்லாம் விட்டுக் கிறிஸ்துவுக்குள்ளாக உன்னதப் பிறவியானான்.*

*கிருபையினாலே தேவனுக்குப் பிள்ளையாகிப் போனபின்பு ஜனசமுகத்தின் மேன்மையான இந்தச் சுத்தக் கேவல நிலைமையை அவன் தேடவேண்டுவதேன்? தன் கர்த்தராகிய கிறிஸ்துஇயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக அவன் எல்லாவற்றையும் நஷ்டமென்றெண்ணினனே. இவ்விஷயமாக பிலிப்பிய சபைக்குக்கிறிஸ்துவின் முன்மாதிரியைச் சுட்டிக் காட்டுகிறான். 'அவர் தேவனுக்குச் சமமாயிருந்தும் மனிதரினிமித்தம் தமது பரம மகிமையையும் மகத்துவத்தையும் துறந்து தம்மைத்தாமே வெறுமையாக்கி ஒரு அடிமையின் ரூபமெடுக்கத் தக்கதாக தம்மையே தாழ்த்திச் சிலுவையின் மரணபரியந்தமும் கீழ்ப்படிந்தவரானார்'. இவ்வித முன்மாதிரிக்கு முன்னே சகல ஜாதிப்பெருமைகளும் என்றென்றைக்குமாக சாபத்துக்குள்ளாகிவிடும். தற்கால இந்திய சபைக்கு இதிலொரு பாடமில்லையா? ஜாதிபேதத் தப்பெண்ணங்களும் வருண வித்தியாசங்களும் அதிக பலவீனத்துக்கும் அநேக கேடுகளுக்கும் மூலமாயிருக்கிறதே. 'கிறிஸ்துவுக்குள் யூதனென்றும் கிரேக்கனென்றும், விருத்தசேதனமுள்ளவனென்றும் விருத்தசேதனமில்லாதவனென்றும், அடிமையென்றும் சுயாதீனனென்றும், ஆணென்றும் பெண்ணென்றுமில்லை;' 'எல்லாரும் ஒன்றாயிருக்கிறார்கள்.' 'கிறிஸ்துஇயேசுவிலிருந்த இந்தச் சிந்தையே உங்களிலும் இருக்கக்கடவது.' 'மாம்சத்தின்மேல் நம்பிக்கையாயிராமல் ஆவி*

யினாலே தேவனுக்கு ஆராதனைசெய்து கிறிஸ்துவுக்குள் மேன்மை பாராட்டுங்கள்.' கிறிஸ்துவுக்குள் ஜீவிப்பதை விருத்திபண்ணுவோமாக. அப்போது இவையெல்லாம் அற்பமும் அப்பிரதானமானதுமாய்க் காணப்படும்.

**பிலிப்பு.** Philip.

1. அப்போஸ்தலன். மத் $10^{3}$ மாற் $3^{18}$ லூக் $6^{14}$. இவன் பெத்தானியா ஊரில் இயேசு அழைத்த சீஷன். யோவா $1^{28.43}$. இவனுக்கும் அந்திரேயாவுக்கும் பேதுருவுக்கும் சிநேகம். இவர்கள் மூவரும் பெத்சாயிதா ஊரார். யோவா $6^{7}$ $12^{21}$. அந்திரேயாவையும் யோவானையும்போல இவன் இயேசுவினிடத்திற்குத் தானே போகாமல் இயேசு தன்னை அழைக்கும்வரை காத்திருந்தான். யோவா $6^{43}$. இவன் இயேசுவினிடத்துக்கு நாத்தான்வேலை அழைத்துக் கொண்டு வந்தான். இயேசு பரத்துக்கெழுந்தருளியபின்பு இவன் சின்ன ஆசியாவிலே தேவ ஊழியத்தை நடத்திவந்தான். இவன் பெயர் கிரேக்க பதமானதினால் இவனுக்கு அப்பாஷை தெரியும் என்று தோன்றுகிறது. இதினிமித்தம் இயேசுவைக் கண்டு பேச விரும்பின கிரேக்கர்கள் முதலாவது பிலிப்புவினிடத்தில் தங்கள் மனவிருப்பத்தைக் காட்டினார்கள்.

2. உதவிக்காரரில் ஒருவன். அப்போஸ்தலர் சபை விசாரணையில் தலையிடுவதினால் சுவிசேஷ ஊழியம் தடைபடாதபடிக்குச் சபை விஷயங்களைப் பார்த்துக்கொள்ளும்படி ஆதி கிறிஸ்தவசபையால் ஏற்படுத்தப்பட்ட ஏழுபெயரில் பிலிப்பு ஒருவன். அப் $6^{5}$. இவன் பெயரும் கிரேக்கபதம் ஆதலால் இவன் கிரேக்கு அல்லது எகிப்துதேசத்தில் பிறந்து யூதமார்க்கத்துக்கு வந்தவன் என்று தோன்றுகிறது. இவன் அந்நியர்களுக்குச் சுவிசேஷத்தைத் தெரிவிக்கப் பிரயாசப்பட்டான். இவ்விதமாக இவன் பவுல் சுவிசேஷ வேலை செய்கிறதற்குமுன்னே யூதர்கள் அல்லாத சமாரியாப் பட்டணத்தாருக்கும், ஆப்பிரிக்காக்கண்டத்திலிருந்து வந்த மந்திரிக்கும், சுவிசேஷத்தைக் கூறி அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தான். அப் $8^{4.26}$. இவன் செசாரியாவிலே குடியேறினபிறகு பரி. பவுல் தான் கடைசியாய் எருசலேமுக்கு வந்தபோது இவன் அவனை ஏற்றுக்கொண்டான். அப் $8^{40}$ $21^{8}$.

3. பெரிய ஏரோதுவின் மகனும் ஏரோதியாளின் புருஷனுமாகிய பிலிப்பு. மத் $14^{3}$ மாற் $6^{17}$ லூக் $3^{19}$. ஏரோது காண்க.

4. பெரிய ஏரோதுவினுடைய இன்னொரு மகன். லூக் $3^{1}$. ஏரோது காண்க.

**பிலிப்புச்செசரியா.** Caesarea Philippi.

பிலிப்புச்செசரியா பலெஸ்தீனாதேசத்தின் வட எல்லையிலுள்ள ஓர் பட்டணம். இது தீருபட்டணத்திற்கு 30 மைல் கிழக்கே எர்மோன் மலைநாட்டில்இருந்தது. இதில் அந்நிய ஜாதியார் விக்கிரகாராதனையை அதிக பிரியத்தோடே நடத்தினார்கள். பெரிய ஏரோது இதிலே பான் (*Pan*) தெய்வத்துக்காக ஒரு பெரிய தேவாலயத்தைக் கட்டினான். அக்காலத்தில் ரோமராஜாங்கத்தை ஆண்ட ராயனுக்குக் 'கேசர்' அல்லது 'சேசர்' என்ற பட்டப்பெயர் இருந்தது. இதினிமித்தம் ஏரோதினுடைய மகனாகிய பிலிப்பு, ராயனுடைய தயவை விரும்பி, இந்தப் பட்டணத்துக்குக் 'கேசரினுடையது' என்று அர்த்தங்கொண்ட 'செசரியா' என்ற பெயரைக் கொடுத்தான். இதற்கும் சமாரியாநாட்டிலுள்ள செசரியாவுக்கும் வித்தியாசம் காட்டும்படி இதற்குத் தன்னுடைய பெயராகிய 'பிலிப்பு' என்பதையும் சேர்த்தான். அதினிமித்தம் இதற்குச் 'செசரியா பிலிப்பி' அல்லது 'பிலிப்புச் செசரியா' என்ற பெயர் இருந்தது.

இதனருகே இயேசு தம்மைக்குறித்தும் பேதுரு செய்யவேண்டிய ஊழியத்தைக் குறித்தும் எச்சரிப்புச் செய்தார். மத் $16^{13}$ மாற் $8^{27}$.

**பிலேகோன்.** Phlegon. ரோமசபையைச்சேர்ந்த ஒரு கிறிஸ்தவன். ரோம $16^{14}$.

**பிலேத்தியர்.** Pelethites. கிரேத்தியர் காண்க.

**பிலேத்து.** Philetus. உயிர்த்தெழுதலைப்பற்றிக் கள்ள போதகத்தைக் கொடுத்தவன். இவன் அபிப்பிராயத்தின்படி உயிர்த்தெழுதல் பாவத்தினின்று கடவுளிடத்துக்குத் திரும்புதலே. இதைத்தவிர 'நித்திய ஜீவன்' இல்லை. இந்தப் போதகத்தைப் பரி. பவுல் கண்டித்தான். 2 தீமோ $2^{17}$.

**பிலேமோன்.** Philemon. இப்பெயர் கொண்ட நிருபத்தைப் பரி. பவுல் பிலேமோன் என்பவனுக்கு எழுதியனுப்பினான். இவன் பவுலுடைய அருமையான சிநேகிதரிலொருவன். பவுலுடைய போதனையினால் குணப்பட்டவனாயிருக்கலாம். பிலே $1^{19}$. கொலோசே பட்டணத்தில் வாசமாயிருந்த இவன் ஐசுவரியமுள்ளவனாயிருந்தான் என்று தோன்றுகிறது. பரி. பவுல் இவனை உடன் வேலையாளென்று அழைக்கி

ருன். பிலே 1[1]. கொலோசே பட்டணத்தி லுள்ள சபையின் கண்காணியாயிருந்து கல்லெறியுண்டு இரத்தசாட்சியாக இறந்தானென்பது ஒரு பாரம்பரியம்.

**பிலேமோன் நிருபம். The Epistle to Philemon.**

1. **காலமும் பொருளும்.** ரோமர்களுக்கும் கொரிந்தியர்களுக்கும் எழுதப்பட்ட நிருபங்களில் வேதசாஸ்திரத்துக்குரிய அநேக நியாயங்கள் உண்டு. இந்நிருபங்களில் பரி. பவுல் வேதசாஸ்திரத்துக்கடுத்த விஷயங்களைப்பற்றிப் பிரசங்கம் பண்ணுகிருன் என்று சொல்லலாம். பிலேமோனுக்கு எழுதின நிருபமோ தற்காலத்தில் ஒரு சிநேகிதன் இன்னொரு சிநேகிதனுக்கு எழுதுகிற நிருபத்தைப்போலவே இருக்கிறதினால், வேதசாஸ்திரத்துக்குரிய கொள்கைகளை நாம் இந்நிருபத்தில் தேடவேண்டியதில்லை. பரி. பவுல் இதை எழுதும்போது ரோமாபுரிச் சிறையிருப்பில் இருந்தான். பிலே 1[1.9.13]. அந்தச் சமயத்தில்தான் பிலிப்பியருக்கும், எபேசியருக்கும், கொலோசெயருக்கும் நிருபங்களை அனுப்பினுன் என்று தோன்றுகிறது. ஆதலால் பரி. பவுல் கொலோசெயருக்குத் தீகிக்குவின் மூலமாய் நிருபம் அனுப்பும்போது, பிலேமோனுக்கும் இந்த நிருபத்தை அனுப்பிவிட்டான் என்று நினைக்கிறதற்கு இடம் உண்டு. அக்காலத்தில் ரோம ராஜாங்கத்தில் எந்தக் குடும்பத்திலும் அடிமைகள் இருந்தார்கள். இந்த நிருபத்திலே பரி. பவுல் ஒநேசிமு என்னும் ஓர் அடிமையைப்பற்றி எழுதுகிருன். இந்த அடிமை பிலேமோன் என்னும் தன் எஜமானை விட்டு ஓடிப்போய், எப்படியோ பவுல் அப்போஸ்தலனிடத்துக்கு வந்து, அவன் மூலமாய்க் கிறிஸ்துமார்க்கத்தில் பிரவேசித்தான். இதினிமித்தம் பரி. பவுல் இவன் மேல் அதிக பிரியம் உடையவனுய் இருக்கிருன். 1[10-16]. மேலும் பரி. பவுல் ஒநேசிமுவினிடத்திலுள்ள நற்குணத்தையும் திறமையையும் பார்த்து இவன் சுவிசேஷ ஊழியத்தில் தனக்கு உதவியாயிருப்பான் என்று எண்ணி, இவனைத் தன்னிடத்தில் வைத்துக்கொள்ள விரும்புகிருன். ஆனுல் இவன் பிலேமோனுடைய அடிமையானதினுல், பரி. பவுல் இவனைப் பிலேமோனிடத்தில் திரும்ப அனுப்பி, கிறிஸ்தவனுகிய பிலேமோன் உடன்கிறிஸ்தவனுன ஒநேசிமு செய்த குற்றத்தை மன்னித்து இவனை நேசிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிருன். பரி. பவுல் இந்நிருபத்தை அப்போஸ்தல அதிகாரத்துடனே அல்ல, சிநேக பாந்தமாக எழுதுகிருன்.

2. **இந்நிருபத்தின் போதனை.** சிலர் இந்த நிருபத்தில் ஜனங்களை விலைக்குவாங்கி தங்கள் வேலைகளைச் செய்ய அவர்களை அடிமைகளாய் வைப்பது நியாயந்தான் என்று பரி. பவுல்எண்ணுகிருன் என்று சொல்லத் துணிகிருர்கள். ஆனுல் பரி. பவுல் அப்படி ஒன்றும் தீர்மானமாய்ச் சொல்லாமலும் அக்காலத்தில் ரோம ராஜாங்கத்திலுள்ள நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாய் ஒன்றும் செய்யாமலும், அடிமைகளை உடைத்தாயிருப்பது நியாயமோ அல்லவோ என்பதைப்பற்றி ஒன்றும் பேசாமலும், அந்தக்காலத்தில் சகஜமாயிருந்த வழக்கத்துக்கு இணங்கி, இந்நிருபத்தை எழுதுகிருன். மேலும் பரி. பவுல் இதில் கிறிஸ்தவனுகிய பிலேமோன் கிறிஸ்தவனுகிய ஒநேசிமுவைப் பட்சத்தோடே ஏற்றுக்கொண்டு, நேசத்தோடே நடத்தும்படி புத்திமதி சொல்லும்பொழுது, கிறிஸ்தவர்கள் எல்லாரும் சகோதர ஐக்கியத்தினுலே இணைக்கப்பட்டவர்களாய் இருக்கிருர்கள் என்பதைத் தெரிவித்து அடிமைத்தனத்தின் அநியாயத்தை விளக்கிக் காட்டுகிருன். அல்லாமலும் அடிமைகளுக்கு நீதியையும் நியாயத்தையும் செய்யவேண்டும் என்று பரி. பவுல் மற்ற நிருபங்களிலும் சொன்னதினுல், கிறிஸ்தவ சபையில் அடிமைத்தனம் இருக்கக்கூடாது என்று தன்னை அறியாமலே ஏற்பாடுசெய்தான். 1 கொரி 7[21] எபே 6[5] கொலோ 3[22].

3. **ஆக்கியோன்.** புதிய ஏற்பாட்டிலுள்ள கொலோசெயர், பிலிப்பியர், பிலேமோன் என்பவர்களுக்கு எழுதப்பட்ட நிருபங்களைப் பரி. பவுல் எழுதவில்லை என்று தற்காலத்தில் சில சாஸ்திரிகள் சொல்லுகிருர்கள். ஆனுல் இப்படி நினைப்பதற்குப் போதிய நியாயமில்லை. மேலும் தெர்த்துல்லியன் ஒரிகேன் முதலிய ஆதி கிறிஸ்தவ சபைப் பிதாக்களும், ஆதி கிறிஸ்தவர்களும் இதைப் பவுலின் நிருபம் என்றே சொல்லுகிருர்கள்.

4. **இடம்.** பரி. பவுல் இந்நிருபத்தைச் செசரியாவிலிருந்து அனுப்பினுன் என்று சிலர் எண்ணினுலும் தற்காலத்து வேதசாஸ்திரிகள் ரோமாபுரி சிறையிலிருந்து பரி. பவுல் இதை கி-பி. 60-62-ஆ எழுதினுன் என்று சொல்லுகிருர்கள்.

**பிலேயாமுடைய போதனை. Doctrine of Balaam.**

பெர்கமு பட்டணத்திலுள்ள சபையிற் சிலர் அந்தப் பட்டணத்திலுள்ள அந்நியர்

களின் வழக்கத்தின்படி, விக்கிரக தெய்வத்துக்குப் பலிசெலுத்தின மாமிசம் முதலியவைகளைச் சந்தையில் வாங்குவார்கள். கிறிஸ்தவர்கள் வழக்கமாய் இவைகளை வாங்கமாட்டார்கள். மேலும் அந்தச் சபையார்களில் சிலர் வேசித்தனம் பெரிய பாவம் அல்லவென்று சொல்லுவார்கள். பரி. யோவான் அந்நியமதஸ்தர்களுடைய வழக்கங்களுக்கு இவ்விதமாய் இசைந்திருப்பது 'பிலேயாமுடைய போதனை' யென்று சொல்லுகிறான். வெளி $2^{14}$.

**பிலேயாம்.** Balaam.

எண்ணாகமத்தில் 22, 23, 24–ம் அதிகாரங்களில் பிலேயாம் என்பவனைப்பற்றிய சரித்திரம் விவரமாய் எழுதப்பட்டிருக்கிறது. பிலேயாம் ஐபிராத்து நதியின் ஓரத்திலுள்ள பெத்தோர் என்னும் கிராமத்தில் பிறந்தவன். அவன் குறிசொல்லுவதில் தேர்ந்தவனானதினாலே இஸ்ரவேலர் எகிப்து தேசத்திலிருந்து வந்து, வனாந்தரத்தை 40 வருஷகாலமாய்க் கடந்து, மோவாப் தேசத்தின் எல்லைகளுக்கு வந்தபோது, மோவாப் ராஜாவாகிய பாலாக் பிலேயாமை அழைத்து இஸ்ரவேலரைச் சபிக்கும்படி இவனை வேண்டிக்கொண்டான். இஸ்ரவேலர் யோர்தான் நதியின் பள்ளத்தாக்கிலே பாளயம் இறங்கியிருந்தார்கள். பிலேயாம் சாக்கடலின் ஓரத்திலுள்ள மலைகளின்மேல் ஏறி, அவ்விடத்தில் நின்று இஸ்ரவேலரைச் சபிக்கும்படி ஆரம்பித்தபோது, தான் அப்படிச் சபிக்கிறதற்குக் கடவுள் ஆட்சேபனை பண்ணுகிறார் என்று அறிந்து, இஸ்ரவேலரைச் சபிக்காமல் கடைசியில் அவர்களை ஆசீர்வதித்துவந்தான். இதினிமித்தம் பாலாக் ராஜா வெகுமானம் இல்லாமல் பிறந்ததேசத்திற்கு இவனை அனுப்பிவிட்டான். பிலேயாம் இஸ்ரவேலர் துன்மார்க்கத்தைச் செய்யும்படி ஏவினவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எண் $31^{8}$ 2 பேது $2^{15}$ வெளி $2^{14}$ யூதா $1^{11}$. வேதசாஸ்திரிகள் இவனுடைய சரித்திரத்திலிருந்து நல்ல படிப்பினைகளை உரைப்பார்கள். இவைகளில் சில:

1. பிலேயாம் தான் செய்த மோசத்தினாலே தன்னை அழித்தவன்.

2. இவன் நன்மையை விரும்பியும், பொருளாசையினால் கெடுதியடைந்தவன்.

3. இவன் நன்மையைத் தெளிவாய் அறிந்திருந்தும், தீமையைச் செய்தவன்.

4. இவன் கடவுள் தனக்கு அருளின புத்தி முதலிய சுபலட்சணங்களை மாற்றி, தனக்கே கெடுதியை வருவித்தவன்.

இந்தச் சரித்திரத்தில் கழுதை பேசுகிறது என்று சொன்னதினிமித்தம், இதைப்பற்றிச் சிலர் ஆட்சேபனை பண்ணுகிறார்கள். ஆனால் நாம் பிலேயாம் குறிசொல்லுகிறவன் ஆனதினாலே, இவன் வழக்கமாய் ஆந்தை முதலிய மிருக சப்தங்களைக் கவனித்து, அந்த சப்தங்களில் கடவுள் சொல்லும் குறிப்புகள் உண்டு என்று நம்பினதினாலே, கழுதை கத்தும்போதும் இதில் இவன் கடவுள் சித்தத்தைப்பற்றிய குறிப்பை அறிந்தான் என்பது ஆச்சரியம் அல்ல.

**பிலொலோகு.** Philologos. ரோமாபுரி சபையிலிருந்த ஒரு கிறிஸ்தவன். ரோம $16^{15}$.

**பில்கா.** Bilgah. [மன மகிழ்ச்சி.]

(1) ஆசாரியனாகிய ஒருவன். 1 நாளா $24^{14}$.

(2) செருபாபேலுடனே சிறையிருப்பிலிருந்து வந்த ஒரு ஆசாரியன். இவனும் பில்காயும் ஒரே ஆள்தான். நெகே $10^{8}$ $12^{15}$.

**பில்கா.** Pilha. உடன்படிக்கைக்கு முத்திரைபோட்டவன். நெகே $10^{24}$.

**பில்காயி.** Bilgai. பில்கா (2) காண்க.

**பில்காள்.** Bilhah.

ராகேலுக்குக் கொடுக்கப்பட்ட அடிமைப் பெண். ராகேல் இவளை யாக்கோபுக்கு மறுமனையாட்டியாக கொடுத்தாள். இவள், தாண் நப்தலி யென்பவர்களின் தாய். கடைசியில் ரூபன் இவளோடே சயனித்து மகா பாவம் செய்தான். ஆதி $29^{29}$ $30^{3-7}$ $35^{22}$.

**பில்கான்.** Bilhan.

1. ஓரியரின் தலைவன். ஆதி $36^{27}$.

2. பென்யமீன் சந்ததியாரில் ஒருவன். இவனுடைய ஏழு பிள்ளைகள் அந்தக் கோத்திரத்தில் ஏழு குடும்பங்களுக்குத் தலைவர்களாயிருந்தார்கள். 1 நாளா $7^{10}$.

**பில்சான்.** Bilshan. [தேடுகிறவன்.] எஸ்றா $2^{2}$.

**பில்தாஸ்.** Pildash. நாகோரின் மக்களில் ஒருவன். ஆதி $22^{22}$.

**பில்தாத்.** Bildad. யோபுக்குத் துன்பம் வந்தகாலத்தில் அவனிடம் வந்து சம்பாஷணை செய்தவர்களில் ஒருவன். யோபு $2^{11}$ $8^{1}$ $18^{1}$ $25^{1}$ $42^{9}$.

**பில்தாயி.** Piltai. ஆசாரிய குடும்பத்தார்களில் ஒருவன். நெகே $12^{17}$.

**பில்லா.** Bilhah. சிமியோனின் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஓர் ஊர். 1 நாளா

$4^{29}$. இது பாலா (யோசு $15^{9}$), அல்லது பாலா (யோசு $19^{3}$), அல்லது பாலாத் (1 இரா $9^{18}$).

**பில்லி சூனியம்.** **Divination.** 1 சாமு $15^{23}$ 2 இரா $9^{22}$ கலா $5^{20}$. **சூனியம்** காண்க.

**பிழை.** **Fault.** சங் $19^{12}$ எபி $8^{7}$. **தீமை, பாவம்** காண்க.

**பிழைக்கிறது.** **To Live.** எண் $21^{9}$ $24^{23}$ உபா $8^{1.3}$ $16^{20}$ $33^{6}$ சங் $72^{15}$ $118^{17}$ $119^{17.77.116}$ நீதி $4^{4}$ $7^{2}$ $9^{6}$ ஏசா $38^{1.16}$ $55^{3}$ எரே $21^{9}$ $38^{1.20}$ எசே $3^{21}$ $16^{6}$ $18^{9.13.21.33}$ $33^{10-19}$ $47^{9}$ ஆமோ $5^{4.6.14}$ ஆப $2^{4}$ மத் $4^{4}$ $9^{18}$ லூக் $4^{4}$ $10^{28}$ யோவா $4^{50}$ $5^{25}$ $6^{51.57}$ $11^{25}$ $14^{19}$ அப் $17^{28}$ $28^{4}$ ரோம $1^{17}$ $6^{10}$ $8^{13}$ $14^{7}$ 2 கொரி $5^{15}$ $13^{4}$ கலா $2^{20}$ $3^{12}$ $5^{25}$ பிலி $1^{22}$ 1 தெச $3^{8}$ எபி $7^{8}$ $10^{38}$ 1 பேது $4^{2}$. **ஜீவன்** காண்க.

**பிழைப்பு.** **Living.** 1 கொரி $9^{14}$.

**பிளவை.** **Boil.** 2 இரா $20^{7}$ ஏசா $38^{21}$.

**பிள்ளை.** **Child.** **குடும்பம்** (பக்கம் 246) காண்க.

'தேவனுடைய பிள்ளைகள்.' 1 யோவா $3^{1}$.

'ஒளியின் பிள்ளைகள்.' லூக் $16^{8}$.

'வெளிச்சத்தின் பிள்ளைகள்.' எபே $5^{8}$.

'தேவனுடைய மாசற்ற பிள்ளைகள்.' ரோம $8^{21}$ பிலி $2^{15}$ 1 யோவா $3^{10}$.

கிறிஸ்து அவர்களுக்கு முன்மாதிரியாயிருந்தார். லூக் $2^{51}$ யோவா $19^{26.27}$.

அவர்கள் தேவ ஈவாயிருக்கிறார்கள். ஆதி $33^{5}$ சங் $127^{4}$.

அவர்கள் தேவனை மகிமைப்படுத்தத் தக்கவர்கள். சங் $8^{2}$ $148^{12.13}$ மத் $21^{15.16}$.

அவர்கள்

கிறிஸ்துவிடத்தில் கொண்டுவரப்படவும் (மாற் $10^{13-16}$), இளமையிலே தேவாலயத்தில் கொண்டுவரப்படவும் (1 சாமு $1^{24}$), தேவனுடைய மார்க்கத்தில் படிப்பிக்கப்படவும் (உபா $31^{12.13}$ மத் $21^{15.16}$), சன்மார்க்கத்தில் வளர்க்கப்படவும் (நீதி $22^{15}$ $29^{17}$) **வேண்டும்.**

அவர்கள்

தேவனுக்குக் கீழ்ப்படியவும். உபா $30^{2}$ நீதி $24^{21}$ பிர $12^{1}$.

பெற்றாருடைய போதனைகளைக் கவனிக்கவும், (நீதி $1^{8.9}$ யாத் $20^{12}$ எபி $12^{9}$ லேவி 19 நீதி $6^{20}$ எபே $6^{1}$ 1 தீமோ $5^{4}$.)

பெரியோரைக் கனப்படுத்தவும், (லேவி $19^{32}$ 1 பேது $5^{5}$.)

பெற்றாருடைய துன்மாதிரியைப் பின்பற்றாதிருக்கவும் (எசே $20^{18}$) **வேண்டும்.**

**பிறக்கிறது.** **Be born.** ஆதி $17^{17}$ யோபு $3^{3}$ ஓசி $9^{11}$ ஏசா $9^{6}$ யோவா $1^{13}$ $3^{3-8}$ கலா $4^{23}$ 1 யோவா $2^{29}$.

**பிறப்பு.** **Birth.** எசே $16^{3}$ லூக் $1^{14}$. **பிரசவம்** காண்க.

**பிறவி.** **Birth.** யோவா $9^{1}$.

**பிறன்.** **Neighbour.** யாத் $20^{17}$ $22^{7}$ உபா $4^{41}$ $15^{2}$ $19^{11}$ $23^{24}$ நீதி $6^{29}$ $25^{17}$ $29^{5}$ மத் $5^{43}$ $19^{19}$ $22^{39}$ மாற் $12^{31}$ லூக் $10^{27-36}$ அப் $7^{27}$ ரோம $13^{9-10}$ $15^{2}$ கலா $5^{14}$ எபே $4^{25}$ யாக் $2^{8}$.

**பினியா.** **Binea.** 1 நாளா $8^{37}$.

**பினேகாசு, பினேகாசு.** **Phinehas.**

1. ஆரோனுடைய பேரனாகிய பினெகாசு பிரதான ஆசாரியனும் நியாயாதிபதியுமாயிருந்தான். இஸ்ரவேலர் சித்தீமிலே வேசித்தனத்தையும் விக்கிரகாராதனையும் செய்யும்போது இவன் சிம்ரியையும் கஸ்பியையும் கொன்றான். யோர்தான் நதிக்குக் கிழக்குத் தேசங்களிலுள்ள இஸ்ரவேலர் சாட்சிக்காகப் பீடத்தைக் கட்டினபிறகு பினெகாசு அவர்கள் செய்ததை ஆசீர்வதித்தான்.

யாத் $6^{25}$ 1 நாளா $6^{4}$ எண் $25^{1-18}$ யோசு $22^{30-32}$.

2. ஏலியின் குமாரரில் ஒருவன். 1 சாமு $1^{3}$.

3. ஒரு ஆசாரியனின் தகப்பன். எஸ்றா $8^{33}$.

**பினோன்.** **Pinon.** ஏதோமியரின் பிரபுக்களில் ஒருவன். இவனும் பூனோன் என்பவனும் ஒருவனே. ஆதி $36^{41}$ எண் $33^{42}$.

**பின்செல்லுகிறது.** **Follow.** **பின்பற்றுகிறது** காண்க.

**பின்தொடருகிறது.** **Follow.** **பின்பற்றுகிறது** காண்க.

**பின்பற்றுகிறது, பின்செல்லுகிறது, பின்தொடருகிறது, பின்னே வருகிறது, தொடருகிறது.** **Follow.** ஆதி $44^{4}$ யாத் $23^{2}$ எண் $14^{24}$ $32^{12}$ உபா $1^{36}$ $16^{20}$ நியா $2^{12}$ 2 சாமு $2^{10}$ 1 இரா $18^{21}$ சங் $23^{6}$ $38^{20}$ $63^{8}$ $119^{150}$ நீதி $12^{11}$ $21^{21}$ ஓசி $6^{3}$ மத் $4^{20}$ $8^{19}$ $9^{9.27}$ $10^{38}$ $16^{24}$ $19^{27}$ $26^{58}$ $27^{55}$ மாற் $1^{18}$ $2^{14}$ $8^{34}$ $9^{38}$ $10^{21}$ லூக் $5^{11.27}$ $9^{23.49.57}$ $18^{22}$ யோவா $1^{40}$ $8^{12}$ $10^{4}$ $10^{27}$ $12^{26}$ $13^{36}$ $21^{19-22}$ 1 கொரி $11^{1}$ பிலி $3^{12}$ 2 தெச $3^{9}$ எபி $13^{7}$ 2 பேது $1^{16}$ வெளி $14^{4}$ $19^{14}$.

**பின்வாங்கி விழுதல்.** **Backsliding.**

அது,

தேவனை விட்டு விலகுகிறது. 1 இரா $11^{9}$ எரே $3^{8}$.

மூந்தின அன்பை விட்டு விலகுதலாயிருக்கிறது. வெளி $2^{4}$.

சுவிசேஷத்தை விட்டு விலகுதலாயிருக்கிறது. 2 கொரி $11^{3}$ கலா $3^{1-3}$ $5^{4-7}$.

அதைத் தேவன் வெறுக்கிறார். சங் $78^{57-59}$.

அதைப்பற்றிய எச்சரிப்பு. சங் $85^{8}$ 1 கொரி $10^{12}$.

அதின் குற்றமும் பலன்களும். எண். $14^{43}$ சங் $125^{5}$ ஏசா $59^{2.9.11}$ எரே $5^{6}$ $8^{5-13}$ $15^{6}$ லூக் $9^{62}$.

அது தண்டனையை வருவிக்கின்றது. நீதி $14^{14}$ எரே $2^{19}$.

மேட்டிமையான குணம் அதை ஏவுகிறது. நீதி $16^{18}$.

அதற்குச் சார்பானவைகள். நீதி $24^{16}$ ஓசி $11^{7}$.

அது நிலைத்திருக்கவும் அதிகரிக்கவும் ஏதுவாயிருக்கின்றது. எரே $8^{5}$ $14^{7}$.

அதிலிருந்து சீர்ப்படுகிறதற்கு ஜெபம்பண்ணவேண்டும். சங் $80^{3}$ $85^{4}$ புல $5^{21}$.

மற்றவர்களை அதற்குட்படுத்துகிறவர்களுக்கு வரும் ஆக்கினை. நீதி $28^{10}$ $18^{6}$.

அதிலிருந்து திரும்பவுங்கூடும். சங் $37^{24}$ நீதி $24^{16}$.

அதிலிருந்து திரும்புவதற்கான போதனைகள். 2 நாளா $30^{6}$ ஏசா $31^{6}$ எரே $3^{12}$ $14^{22}$ ஓசி $6^{1}$.

அப்படிப்பட்ட குற்றவாளிகளைத் திரும்பும்படி பிரயாசப்படவேண்டும். கலா $6^{1}$ யாக் $5^{19.20}$.

அந்தப் பாவம் அறிக்கையிடப்படவேண்டும். ஏசா $59^{12-14}$ எரே $3^{13.14}$.

அதற்கு மன்னிப்பு வாக்குத்தத்தம் பண்ணப்பட்டது. 2 நாளா $7^{14}$ எரே $3^{12}$ $31^{20}$ $36^{3}$.

அதற்கு நிவிர்த்தி வாக்குத்தத்தம் பண்ணப்பட்டது. எரே $3^{22}$ ஓசி $14^{4}$.

அதிலிருந்து மறுபடியும் திரும்பும்படி உபத்திரவங்கள் நேரிடுகின்றன. ஓசி $5^{15}$.

அதற்கு விலகுவதே பாக்கியம். நீதி $28^{14}$ ஏசா $26^{3.4}$ கொலோ $1^{21-23}$.

அது பரிசுத்தவான்களுக்குப் பகையாயிருக்கிறது. சங் $10^{13}$.

**திருஷ்டாந்தம்.**

இஸ்ரவேலர். யாத் $32^{8}$ நெகே $9^{26}$ எரே $3^{11}$ ஓசி $4^{16}$. சவுல். 1 சாமு $15^{11}$. சாலொமோன். 1 இரா $11^{3.4}$. பேதுரு. மத் $26^{70-74}$.

**பின்னல்.** **Wreathed work.** யாத் $28^{14}$ $39^{15}$ 1 இரா $7^{17}$ 2 இரா $25^{17}$ 2 நாளா $4^{12}$. தேவாலயம் காண்க.

**பின்னூயி.** Binnui. [கட்டடம்.]

1. செருபாபேலுடனே சிறையிருப்பிலிருந்துவந்த ஒரு குடும்பத்தலைவன்.=பானி. நெகே $7^{15}$ எஸ்றா $2^{10}$.

2. ஒரு லேவியன் எஸ்றா $8^{33}$.

3. பாகாத்–மோவாவின் மகன். எஸ்றா $10^{30}$.

4. அந்நியபெண்ணை விவாகம் பண்ணினவன்; இவன் பானியின் மகன். எஸ்றா $10^{38}$.

## பீ.

**பீடம்.** Altar. எசே $40^{42}$. **பலிபீடம்** காண்க.

குறிப்பு: எசே $23^{41}$–ல் 'பீடம்' என்பது ஒருவிதமான மேசையைக் குறிக்கிறது.

**பீத்தோ தேவன்.** Pytho. அப் $16^{16}$ பக்கத்திலே.

தமிழ் வேதாகமத்தில் அப் $16^{16}$–ல் சொன்ன 'குறிசொல்ல ஏவுகிற ஆவி' என்பதற்குப் பதிலாக 'பீத்தோ தேவன்' என்பது நல்லது. கிரேக்கதேசத்தில் டெல்பி (*Delphi*) என்னும் ஊரில் கிரேக்கர்கள் சூரிய தேவனாகிய அப்பொல்லோ (*Apollo*) என்னும் தேவனை விசேஷமாய் வணங்கிவந்தார்கள். அதற்குக் கிட்டபீத்தோ என்னும் நாடு இருந்தது. இதினிமித்தம் அவர்கள் அந்த அப்பொல்லோவுக்குப் 'பீத்தோ தேவன்' என்றும், அந்தத் தேவனுடைய ஆலயத்தில் குறிசொல்லுகிற ஆசாரிய பெண் 'பீத்தோ தேவனால் பிடிக்கப்பட்டவள்' என்றும் சொன்னார்கள். பிறகு குறிசொல்லும் பெண்கள் எல்லாருக்கும் இது பொதுப்பெயராயிற்று. அப்பெண்கள் இத்தேசத்தில் பேய் பிடித்தவர்களைப்போல் நடந்துகொள்ளுவார்கள். **ஞானியம்** காண்க.

**பீராம்.** Piram. யோசுவா ஜெயித்த யர்மூத்தின் ராஜா. யோசு $10^{3}$.

**பீலியாம்.** Bileam. மனாசே கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஓர் ஊர். இதுவும் 'இப்லெயாம்' என்னும் ஊரும் ஒன்றாயிருக்கலாம். யோசு $17^{11}$ நியா $1^{27}$ 1 நாளா $6^{70}$ 2 இரா $9^{27}$.

**பீறுகிறது.** Raven, Tear. ஆதி $44^{28}$ $49^{27}$ 2 இரா $2^{24}$ யோபு $16^{9}$ சங் $7^{2}$ $22^{13}$ நாகூ $2^{12}$ ஓசி $13^{8}$.

## பு.

**புகழ், புகழ்ச்சி.** Praise. உபா $10^{21}$ சங் $111^{10}$ நீதி $31^{30}$ ஏசா $62^{7}$ தானி $4^{34}$ $5^{23}$ ரோம $2^{29}$ $13^{3}$ பிலி $4^{8}$ 1 பேது $2^{14}$. **துதி** காண்க.

**புகை.** Smoke.

i. தூமம். ஆதி $15^{17}$ $19^{28}$ யோபு $41^{20}$ சங் $68^{2}$ $102^{3}$ நீதி $10^{26}$.

ii. உவமையாய்: துன்பம். வெளி $14^{11}$ $18^{10}$. 'புகைக்காடாய்.' ஏசா $14^{31}$. கடவுளினுடைய கோபம். 2 சாமு $22^{9}$ சங் $18^{8}$. உதவி. ஏசா $4^{5}$.

**புக்கி.** Bukki. [யேகோவாவின் வாய்.]

1. தாண் கோத்திரத்தில் ஒரு பிரபு. கானான் தேசத்தைப் பங்கிட்ட பத்துப் பெயர்களில் ஒருவன். எண் $34^{22}$.

2. ஆரோன் சந்ததியாரில் ஒருவன். 1 நாளா $6^{5}$ எஸ்றா $7^{4}$.

**புக்கியா.** Bukkiah. [யேகோவாவின் வாய்.]

ஒரு லேவியன். 1 நாளா $25^{4}$.

**புசல்.** Storm, whirlwind. சங் $55^{8}$. **சுழல் காற்று, யூரோக்கிலிதோன்** காண்க.

**புசிக்கிறது.** Feed, Eat.

(1) சாப்பிடுகிறது. ஆதி $2^{16}$ $3^{1}$ லேவி $7^{26}$ மாற் $1^{6}$. (2) விசுவாசிக்கிறது. யோவா $6^{53}$. (3) அநுபவிக்கிறது. நீதி $23^{6}$ ஏசா $1^{19}$ பிர $2^{24}$ $5^{18}$. (4) 'உட்கொள்ளுகிறது,' கவனிக்கிறது. எரே $15^{16}$, (5) 'மேய்கிறது.' ஏசா $44^{20}$.

யூதர்கள் புறமதஸ்தரோடே புசிக்கக்கூடாது. ஆதி $43^{32}$ யோவா $4^{9}$ மத் $9^{11}$.

சபைக்கு விலக்கப்பட்ட பாவிகளோடே புசிக்கக்கூடாது. 1 கொரி $5^{11}$. 'புசிக்க எனக்கு ஒரு போஜனமுண்டு' என்பது தேவசித்தத்தைக் குறிக்கும். யோவா $4^{32}$. மனித குமாரனுடைய மாமிசத்தைப் புசித்து அவருடைய இரத்தத்தைக் குடித்தாலொழிய உங்களுக்குட் ஜீவனிராது, என்பது கிறிஸ்துவானவர் மனுஷீகத்தில் நமக்காகப் பாடுபட்டுச் சம்பாதித்த புண்ணியபலன்களை உட்கொள்ளாமற் போனால் பாவநிவிர்த்தி, ஞானவுயிர், தேவனோடைக்கியம், நித்தியஜீவன் என்பவைகள் இல்லையென்பதே. யோவா $6^{53-58}$.

விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட பதார்த்தங்களைச் சாப்பிடுவது கூடாது. 1 கொரி $8^{1-13}$ $10^{18}$ வெளி $2^{14}$. **ஆகாரம்** காண்க.

**புஸ்தகச்சுருள்.** Book, roll. சங் $40^{7}$ $69^{28}$ $139^{16}$ பிர $12^{12}$ ஏசா $29^{12}$ $30^{8}$ $34^{16}$ எரே $36^{2-10}$ எசே $32^{9}$ எபி $10^{7}$. 'ஆகமம்.' மாற் $12^{26}$ லூக் $3^{4}$. **எழுத்து** காண்க.

**புஸ்தகம்.** Book. உபா $28^{58}$ யோசு $8^{34}$ $10^{13}$ 2 இரா $22^{8}$ $23^{2}$ 2 நாளா $9^{29}$ $34^{15}$ எஸ்றா $4^{15}$ நெகே $8^{8}$ எஸ்தர் $2^{23}$ $6^{1}$ யோபு $19^{23}$ எரே $30^{2}$ $36^{10}$ $51^{59-63}$ தானி $9^{2}$ $12^{1}$ மல் $3^{16}$ லூக் $4^{17}$ $20^{43}$ யோவா $20^{30}$ $21^{25}$ அப் $1^{20}$ $7^{43}$ $19^{19}$ கலா $3^{10}$ பிலி $4^{3}$ 2 தீமோ $4^{13}$ எபி $9^{19}$ வெளி $1^{11}$ $3^{5}$ $5^{1-9}$ $10^{2}$ $13^{8}$ $17^{8}$ $20^{12.15}$ $21^{27}$ $22^{7-19}$. **எழுத்து** காண்க.

**புஸ்தகம்.** Book.

1. 'எழுத்து' என்னும் நிபந்தனத்தில் எபிரெயர்கள் உபயோகித்த காகிதம் எழுத்தாணி முதலியவைகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. (பக்கம் 188 காண்க.)

2. அசீரியர்களும் பாபிலோனியர்களும் வழக்கமாய் மண் பலகைகளின்மேல் எழுதுவார்கள். பாபிலோன்தேசத்தில் பாபிலோனியர்களைப்பற்றி விசாரணைசெய்கிற வேத சாஸ்திரிகள் பாழாய்க்கிடந்த பாபிலோன் பட்டணம் இருக்கிற இடத்திலே காற்றினாலே வனாந்தரத்திலிருந்து வீசப்பட்ட மணலினாலே மூடப்பட்டிருந்ததும் இவ்விதமான மண் பலகைகளின்மேல் எழுதப்பட்ட புஸ்தகங்கள் நிறைந்ததுமான புஸ்தகசாலைகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். விசேஷமாய்க் கோயுஞ்சிக் (*Koyunjik*) என்னும் இடத்திலே ராஜாங்க புஸ்தகசாலையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இதிலே ஆயிரக்கணக்கான மண் பலகைகளை எடுத்து அவைகளின் இருபக்கங்களிலும் எழுத்தாணியினாலே எழுதப்பட்ட அநேக நூல்களை வாசித்திருக்கிறார்கள். இந்த நூல்கள் அத்தேசத்தின் சரித்திரத்தையும், வான சாஸ்திரத்தையும், நீதி சாஸ்திரத்தையும், மார்க்க ஆசாரத்தையும், பாஷை இலக்கணத்தையும், கணிதம் முதலியவைகளையும் தெளிவாய்த் தெரிவிக்கின்றன. இவைகளில் பூமியின் சிருஷ்டிப்பு, ஜலப்பிரளயம், பஞ்சாங்கம் முதலியவை சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிற ஒரு பலகையிலே ஆதியாகமத்தில் நமக்குத் தெரிந்த ஆதாம், ஏவாள், ஏதேன் தோட்டத்தில் வசித்ததைப்பற்றிய சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. இதின்படி பாபிலோனியர்கள் எபிரெயர்களைப் போல உலகத்திலே மனிதருக்கு மரணம் நேரிட்ட விதத்தை அறிந்தார்கள் என்று பார்க்கிறோம். **அசீரியா, எழுத்து** காண்க.

3. புதிய ஏற்பாடு எழுதும்காலத்தில் ஜனங்கள் பலவிதமான காகிதம் தோல் முதலியவைகளை உபயோகிப்பார்கள்.

4. சில பூர்வீக கையெழுத்துப்பிரதிகள். சுமார் 1908—ம் வருஷத்தில் கிளாஸ்கோ சர்வகலாசாலையில் வேதசாஸ்திர பாஷைகளின் வித்தியாபாரகராகிய ஜியார்ஜ் மில்லிகன் (*George Milligan*) என்பவர் எகிப்து தேசத்தில் புதிதாய்க் கண்டுபிடித்த சில கையெழுத்துப் பிரதிகளைப்பற்றிச் செய்த உபந்நியாசத்தில் நாம் கவனிக்கவேண்டிய சில விஷயங்களாவன:—

எகிப்து தேசத்திலே மழை பெய்வது அபூர்வமானபடியால் மரம் காகிதம் முதலியவை பல நூற்றாண்டுகளாக அழிந்து போகாமல் இருக்கும். ஆகையால் நாற்பது நூற்றாண்டுகளுக்கு முன்னே பலகைகளின்மேல் வரையப்பட்டதும் நாணற் காகிதத்தின்மேல் எழுதப்பட்டதுமான நூல்களும், தஸ்தவேஜுக்களும், கணக்கு வழக்குச் சாதனங்களும், இந்த நாள்வரைக்கும் கெட்டுப்போகாமல் நிலைக்கக்கூடும். மில்லிகன் வேதசாஸ்திரி அந்த நூல் முதலியவைகளைப்பற்றிப் பேசவே இல்லை, அவர் ஆக்சிரிங்கஸ் (*Oxyrrhynchus*) என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டதும், கல்வி அதிகமில்லாத சாதாரண ஜனங்கள் எழுதினதுமான, வாடகைப் பத்திரங்கள், குடிமதிப்புக் கணக்குகள், உடன்படிக்கைப் பத்திரங்கள், குடும்ப விஷயங்களைப்பற்றி எழுதிய கடுதாசிகள் முதலியவைகளைப்பற்றிப் பேசினார். இவைகள் அப்போஸ்தலனாகிய பவுல் முதலியவர்கள் சுவிசேஷப் பிரயாணம்பண்ணிய காலத்திலே எழுதப்பட்டவைகளானபடியால், அக்காலத்து வழக்க பழக்கங்களை இவைகளின் மூலமாய் நன்றாய் அறியலாம்.

லூக் 15[13]—ல் கெட்டுப்போன மகன் 'துன்மார்க்கமாய் ஜீவனம் பண்ணித் தன் ஆஸ்தியை அழித்துப்போட்டான்' என்று வாசிக்கிறோம். புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட பிரதிகள் ஒன்றிலே இதே பதங்களைக் காண்கிறோம். கஸ்தோர் என்னும் ஒரு வாலிபனுடைய தாய் தந்தையார் 'எங்கள் மகனாகிய கஸ்தோர் சில தோழருடனே துன்மார்க்கமாய் ஜீவனம்பண்ணித் தன் ஆஸ்தியை எல்லாம் அழித்துப்போட்டான்' என்றும் அவன் பட்ட கடனைத் தீர்ப்பதற்கு நாங்கள் உதவிசெய்யமாட்டோம் என்றும் விளம்பரம் செய்தார்கள்.

இன்னொரு கடுதாசியில் தன் தாயாரை விட்டுப் பிரிந்து, அவள் சொன்ன புத்திமதிகளை மறந்து, பலவித தீமைகளைச் செய்து வந்த அந்தோனியஸ் லாங்கஸ் என்னும் வாலிபன் தான் செய்த குற்றங்களுக்காக மனஸ்தாபப்பட்டு கானிஸ் என்னும் ஊரில் வாசம்செய்த தன் தாயாருக்கு எழுதிய காரியங்களைப்பற்றி வாசிக்கிறோம். இது கிறிஸ்து மரித்தபிறகு ஏறக்குறைய 80—ம் வருஷத்தில் எழுதப்பட்டது. இந்தக் கடிதத்திலே 'கானிஸ் ஊருக்கு வருவது எனக்கு வெட்கமாயிருக்கிறது. என் உடுப்பெல்லாம் கந்தை, நிர்வாணியைப்போலிருக்கிறேன். என் தாயே என்னோடு சமாதானமாவீராக. எனக்கு வந்த கஷ்டமெல்லாம் நான் செய்த குற்றத்தினாலே வந்தது என்று இப்போது அறிகிறேன். அதற்காகத் தண்டனையடைகிறேன். நான் பாவம் செய்தேன் என்பதை நன்றாய் உணருகிறேன்' என்று அந்தோனியஸ் தன் தாயாருக்கு எழுதுகிறான். இதற்கு இவன் தாயார் அனுப்பிய பதில் இன்னதென்று தெரியாது. ஆனால் இதிலிருந்தே அந்த மகனுடைய பரிதாபமான நிலைமையைத் தெளிவாய்ப் பார்க்கலாம். இதிலுங்கூட வேதவாக்கியங்களுக்கு ஒப்பான பதங்களை நாம் பார்க்கலாம்.

ஒருவேளை கிறிஸ்து பிறந்த வருஷத்திலேயே எழுதின இன்னொரு கடிதத்தில் ரோமருடைய தேசப்பிரமாணத்தில் அநுமதிபெற்ற ஒரு துர்வழக்கத்தைப்பற்றி அறிகிறோம். அலெக்சாந்திரியாப் பட்டணத்திற்குப் போயிருந்த ஹிலாரியோன் என்னும் ஒருவன் பிரசவகாலம் சமீபமாயிருந்த தன் மனைவிக்கு இக்கடிதத்தை எழுதி 'இப்போது நமக்கு இருக்கிற சிறுபிள்ளையைப் பற்றி அதிக ஜாக்கிரதையாயிரு. எனக்குச் சம்பளம் கிடைக்கவும் அதெல்லாவற்றையும் உனக்கு அனுப்புகிறேன். பிரசவகாலத்தில் உனக்கு நன்மையுண்டாவதாக. நீ பெறப்போகிற குழந்தை ஆண்குழந்தையானால் அதைக் காப்பாற்றவேண்டியது. அது பெண் குழந்தையாயிருந்தால் ஊர்த்தெருவிலே அதைப் போட்டுவிடவேண்டியது' என்று சொல்லுகிறான். ரோம ராஜாங்கத்தில் தகப்பன்மார்களுக்குத் தங்கள் குடும்ப விஷயங்களில் உள்ள மேலான அதிகாரத்தையும், அக்காலத்தில் பெண் குழந்தைகளுக்குச் செய்துவந்த அநியாயத்தையும் இதினாலே தெளிவாய்க் காண்கிறோம்.

**புஷ்டி.** Fat. கொழுப்பு காண்க.

**புஷ்பம்.** Flower.

'புஷ்பம்' அல்லது 'பூ' என்பதைக் குறிக்கும்படி எபிரெய பாஷையில் பல பதங்கள் உண்டு. பலெஸ்தீனா தேசத்தில் மழைகாலம் முடிந்தபின் வசந்தகாலம் அதிக உஷ்ணமாயிருப்பதினாலே, மழைகாலத்துக்குப் பின்

பூக்கும் புஷ்பங்கள் திரளாயும் அலங்காரமாயுமிருந்தாலும், சில வாரங்களுக்குள் அவையெல்லாம் வாடிப்போகும். இதினிமித்தம் வெகு சீக்கிரத்தில் முடிவுக்கு வருகிற நமது இம்மையின் வாழ்வுக்கு இவைகள் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. யோபு $14^{2}$ சங் $103^{15}$ உன். பா $2^{12}$ ஏசா $28^{1}$.

**புஷ்பராகம்.** Topaz. யாத் $28^{17}$ $39^{10}$ யோபு $28^{19}$ எசே $28^{13}$ வெளி $21^{20}$. இரத்தினம் காண்க.

**புடவை.** A. V. Linen yarn. 1 இரா $10^{28}$ 2 நாளா $1^{16}$.

**புடம்.** Furnace. நீதி $17^{3}$ $27^{21}$. உவமையாய்: துன்பம். ஏசா $48^{10}$ சக $12^{9}$ மல் $3^{2}$. 'இருப்புக் காளவாய்.' உபா $4^{20}$ 1 இரா $8^{51}$ எரே $11^{4}$. சூளை காண்க.

**புடம் இடுகிறது.** Refine.

பூர்வீக காலத்தில் எகிப்தியர் பொன் பொதிந்துள்ள கற்களை எடுத்து ஈயம் உப்பு தகரம் கோதுமைத்தவிடு என்பவைகளுடனே சேர்த்து, மண்பாண்டங்களில் போட்டு, மூடி, அப்பாண்டங்களை ஐந்துநாள் அடுப்பிலே வைத்து, பொன்னைச் சுத்தப்படுத்துவார்கள். வெள்ளியைச் சுத்தப்படுத்தும்பொழுது அப்படியே அடுப்பில் வைத்து அந்த அடுப்பின் சுவாலையில் அந்த வெள்ளியிலுள்ள களிம்பு, துருமுதலிய எல்லாம் அற்றுப்போம்படி செய்வார்கள். எரே $6^{29}$.

புடமிடப்பட்ட பொன். 1 நாளா $28^{10}$.

புடமிடப்பட்ட வெள்ளி. 1 நாளா $29^{4}$.

பொன் முதலியவை அக்கினியினால் சுத்திசெய்யப்படுகிறதுபோல, கடவுளை வணங்குகிற உத்தமர்கள் துன்பத்தினால் சுத்திகரிக்கப்படுவார்கள். ஏசா $48^{10}$ சக $13^{9}$ மல் $3^{2}$.

**புண்.** Sore. சங் $38^{5}$ வெளி $16^{2}$.

**புண்ணியம்.** Virtue. பிலி $4^{8}$ 1 பேது $2^{9}$. தேவபக்தி காண்க.

சதுரகராதியில் சொன்னதாவது:

புண்ணியத்தோற்றம் 4: (*Moral merit*) தவம், ஒழுக்கம், கொடை, கல்வி.

புண்ணியம் 7: (*Acts of virtue*) நகங்கிருதி, தானம், விரதம், சிநேகம், நயபோசனம், கமை, உற்சாகம்.

புண்ணியம் 9: (*Acts of politeness*) எதிர்கொளல், பணிதல், ஆசனத்திருத்துதல், தாள்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், புகழ்தல், அமுதமேந்தல், இவை துறந்தோர்க்குச் செய்வனவாம்.

**புதிய ஏற்பாடு.** New Testament. வேதாகமம் காண்க.

**புதேஞ்சு.** Pudens.

ரோமாபுரியில் வழக்கமான பெயர். சிலர் நினைக்கிறபடி இவன் கிலவுதியாவின் புருஷன். 2 தீமோ $4^{21}$.

**புத்தி.** Understanding.

1. அறிவு. புத்தியானது முன்னும் பின்னும் இருக்கிறவைகளையும், காணப்படுகிறவைகளையும், கடவுளுடைய தன்மையையும், இயற்கைப் பொருள்களையும், செயற்கைப் பொருள்களையும், நன்மைதீமைகளையும்வகையறுத்து நிதானித்தறிவதேயாம். தேவனுடைய புத்தி அளவில்லாதது, மனிதர்களுடைய புத்தி அளவுள்ளது. அறிவு, மனச்சாட்சி காண்க.

2 சாமு $14^{2}$ 1 நாளா $27^{32}$ நீதி $17^{10}$ $14^{1}$ மத் $25^{2}$ 2 கொரி $11^{19}$ பிலி $4^{7}$ 2 தீமோ $2^{7}$.

2. போதனை. எரே $6^{8}$.

'புத்திமதி.' நீதி $1^{2}$.

**புத்திசாலி.** Wise. நியா $5^{29}$ நீதி $14^{1}$ 1 கொரி $4^{10}$.

**புத்திமயக்கம்.** Foolishness. உபா $28^{28}$ பிர $7^{25}$ சக $12^{4}$.

**புத்திமான்.** Wise. நீதி $1^{5}$ ரோம $11^{25}$ $12^{16}$.

**'புத்தியில்லாத.'** Foolish. மத் $7^{26}$ $25^{2}$ லூக் $24^{25}$ 2 கொரி $11^{19}$ கலா $3^{1}$.

**புத்தியீனம், புத்தியீனன்.** Folly, Fool. 1 சாமு $13^{13}$ 2 சாமு $24^{10}$ சங் $69^{5}$ 1 கொரி $11^{17.21}$ $15^{36}$ 2 கொரி $11^{16.23}$ $12^{6.11}$ கலா $3^{3}$ 2 தீமோ $2^{23}$ தீத் $3^{3.9}$ 1 பேது $2^{15}$. மதியீனம், மூடன் காண்க.

**புத்தியுள்ள ஸ்திரீ.** Wise (woman). 2 சாமு $14^{2}$ $20^{16}$ நீதி $14^{1}$.

**புத்திர சுதந்தரம்.** Birth-right.

எபிரெயர்களுக்குள்ளே ஒருவனுக்குச்சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று மனைவிகள் இருந்ததினாலே, பிள்ளைகள் சுதந்தரத்தைப் பெறும் முறையைப்பற்றிக் கட்டாயமான பிரமாணங்களிருந்தன என்றும், முதற்பேறானவனுக்கு விசேஷித்த பங்கு இருந்தது என்றும் அறிகிறோம். உபா $21^{15}$.

சேஷ்ட புத்திரனுடைய சுதந்தரத்தின் சலாக்கியங்களைச் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால்.

i. தகப்பன் சேஷ்ட புத்திரனுக்குப் பிரதானமான ஆசீர்வாதம் கொடுப்பான். ஆதி 27 அதி.

ii. முதற்பேறானவன் கடவுளுக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டவன். யாத் $13^{12}$ $22^{29}$. பிரதான ஆசாரியனுடைய முதற்பிள்ளை தகப்பனுக்குப் பிற்பாடு பிரதான ஆசாரியனாயிருப்பான். யாக்கோபினுடைய முதற்பேறான மகனாகிய ரூபன் பாவம் செய்ததினாலே இந்தச் சலாக்கியம் இவனிடமிருந்து லேவிக்கு மாற்றப்பட்டது. ஆதி $35^{22}$ $49^{3}$ எண் $3^{12}$ $8^{18}$.

iii. முதற்பேறானவன் மற்றப் பிள்ளைகளை விட தகப்பனுடைய ஆஸ்தியிலும் நிலத்திலும் இரட்டிப்பான பங்கு பெறுவான். உபா $21^{17}$. இதினிமித்தம் எலிசா எலியாவிலிருந்து தனக்கு ஆவியின் வரம் இரட்டிப்பாய்க் கிடைக்கும்படி வேண்டிக்கொண்டான். 2 இரா $2^{9}$.

iv. முதற்பேறானவன் தகப்பனுக்கிருந்த அதிகாரத்தையும் மேன்மையையும் பெறுவான். 2 நாளா $21^{3}$. **குடும்பம், சேஷ்ட புத்திரன்** காண்க.

**புத்திரசுவிகாரம். Adoption.**

தன் குடும்பத்தில் பிறவாத ஒருவனைத் தன் குடும்பத்திலே சேர்க்க விரும்புகிற ஒருவன் ஒருவித சடங்கு செய்வான். அதின்மூலமாய்ச் சேர்க்கப்படுகிறவனுக்கு வரும் சிலாக்கியத்திற்குப் 'புத்திரசுவிகாரம்' என்று பெயர். சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் அவன் ஊர் மூப்பர்களுக்கும் மற்ற பெரியோர்களுக்கும் முன்பாக தனது குடும்பத்திலே சேர்க்கப்போகிற பையனை நிறுத்தி, தான் இவனைத் தன் குடும்பத்திலே சேர்க்கிறதாக தெளிவாய்த் தெரிவிப்பான். அவர்கள் அதற்குச் சாட்சிகளாயிருப்பார்கள். அதன் பின் அப்பையன் தான்பிறந்த குடும்பத்தில் சேர்ந்தவனல்ல. இச்சடங்கின் மூலமாய் அவன் தான் பிரவேசித்த குடும்பத்தில் சேர்ந்தவனென்று யாவரும் அறிவார்கள். எபிரெயர்கள் பூர்வீக காலத்தில் தங்கள் குடும்பங்களில் பிறவாதவர்களுக்கு இவ்விதமாய்ப் புத்திரசுவிகாரத்தைக் கொடுப்பார்கள். இதற்குப் பழைய ஏற்பாட்டில் சில திருஷ்டாந்தங்கள் உண்டு. அவையாவன:—

யாக்கோபு தன் பேரப்பிள்ளைகளாகிய எப்பிராயீமையும் மனாசேயையும் தன் பிள்ளைகளாக ஏற்றுக்கொண்டான். ஆதி $48^{5}$. இதினிமித்தம் இவர்கள் யாக்கோபுடைய பிள்ளைகளோடே கோத்திரப் பிதாக்களாயிருந்தார்களென்று எபிரெயர்கள் நம்பினார்கள். இவர்களுடைய சந்ததியார் யாக்கோபின் சந்ததியாரோடே கானான் தேசத்திலே பங்கு பெற்றார்கள்.

மாகீர் தனது மகளின் பிள்ளைகளுக்குப் புத்திர சுவிகாரத்தைக் கொடுத்தான். 1 நாளா $2^{21}$. இதினிமித்தம் யாவீர் மனாசேயின் மகன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எண் $32^{41}$.

இதின்படி மொர்தெகாய் தனது சிறிய தகப்பனுடைய குமாரத்தியாகிய எஸ்தரைத் தனது மகளாக ஏற்றுக்கொண்டான். எஸ்தர் $2^{7}$. இதைப்போல எகிப்து தேசத்திலே பார்வோனின் குமாரத்தி மோசேயைத் தனது மகனாக ஏற்றுக்கொண்டாள். யாத் $3^{10}$.

புதிய ஏற்பாட்டிலே மனந்திரும்புதலினால் நாம் அடையும் சலாக்கியங்களைக் குறிக்கும் பல பதங்கள் உண்டு. நாம் புதிதாய்ப் பிறந்த குழந்தைகளாயிருக்கிறோம். 1 பேது $2^{2}$. அல்லது நாம் புது சிருஷ்டிகளாயிருக்கிறோம். 2 கொரி $5^{17}$. இந்தப்பிரகாரமாக பரி. பவுலின் அபிப்பிராயத்தின்படி கிறிஸ்தவர்கள் கடவுளுடைய குடும்பத்தில் புத்திர சுவிகாரத்தைப் பெற்றவர்களாய் இருக்கிறார்கள். மேலும் பரி. பவுலின் நிருபங்களில் அவன் உவமையாக 'புத்திரசுவிகாரம்' என்பதைப் பல வசனங்களில் சொல்லுகிறான். ரோம $8^{15}$ $8^{23}$ $9^{4}$ கலா $4^{5}$ எபே $1^{5}$.

நாம் இந்த வசனங்களை விசாரித்தால், விசேஷமாய் ரோமர்கள் தங்கள் நியாயப் பிரமாணத்தின்படி செய்த சடங்கைப்பற்றி அவன் நினைக்கிறான் என்று அறிவோம். அந்தச் சடங்கிலே தன் குடும்பத்திலே பையனைச் சேர்க்கப்போகிறவனும் அந்தப் பையனும், 5 சாட்சிக்காரரும், தராசு கொண்டு வருகிறவனும் நிற்பார்கள். அப்போது பையனைத் தன் குடும்பத்தில் சேர்க்கப்போகிறவன் சாட்சிகளுக்கு முன்பாக தராசிலே பணத்தை எறிந்துபோட்டு, அவர்கள் முன்பாக தான் சேர்க்கப்போகிற பையன் இனி என் மகனாயிருக்கிறான் என்று உறுதியாயும் தெளிவாயும் தெரிவிப்பான்.

அந்நாள்முதல் அந்தப் புத்திரசுவிகாரத்தைப் பெற்றவன் அவனை இவ்விதமாய் வாங்கினவனுடைய குடும்பத்தில் இருப்பான். அக்குடும்பத்திலே அவன் மகனைப்போல சுதந்தரம் முதலிய சலாக்கியங்களையெல்லாம் பெறுவான்.

பரி. பவுல் புத்திரசுவிகாரத்தைப்பற்றி மூவகையாய்ப் பேசுகிறான்.

i. தேவபுத்திர சுவிகாரத்தினாலே மோசேயின் நியாயப்பிரமாணத்திலிருந்து விடுதலையையும், தேவனுடைய குடும்பத்தில் பிரவேசித்தலையும் அதினாலே நாம் தேவனை

நமது தகப்பனாக ஏற்றுக்கொள்ளுதலையும் அடைவோம்.

ii. புத்திரசுவிகாரத்தினாலே நாம் அடையவேண்டிய சலாக்கியமெல்லாம் இம்மையிலேயல்ல மறுமையிலே கிறிஸ்துவோடே பூரணமாய் அடைவோம். இதோடு 1 யோவா $3^{2}$ காண்க.

iii. புத்திரசுவிகாரத்தினாலே நாம் தேவனுடைய குடும்பத்தில் பிரவேசிக்கிற சிலாக்கியத்தோடே, இயேசுகிறிஸ்துவினுடைய குண லட்சணங்களை அடையக்கூடிய திறமையுள்ளவர்களாவோம். இதினாலே நாம் படிப்படியாய் இயேசுகிறிஸ்துவுக்கு ஒப்பாவோம். எபே $1^{5}$.

**புத்திரன்.** Son. ரோம $8^{14}$. **குடும்பம், குமாரன், சேஷ்டபுத்திரபாகம், புத்திரசுவிகாரம், புத்திரசுதந்தரம்** காண்க.

**புத்தேயோலி.** Puteoli.

இத்தாலியா தேசத்தின் மேற்குக்கரையில் நெயாப்போலி என்னும் பட்டணத்திற்குச் சமீபத்திலிருக்கிற துறைமுகம். ஆசியா சீரியா ஆப்பிரிக்கா தேசங்களிலிருந்து ரோமாபுரிக்குப் போகிறவர்களில் அநேகர் இதில் கப்பலை விட்டு இறங்குவார்கள். மேலும் அத்தேசங்களுக்குப் போக விரும்புகிறவர்கள் இந்தத் துறைமுகத்தில் கப்பலேறிப் போவதால், இதில் வியாபாரம் அதிகம். பரி. பவுல் ரோமாபுரிக்குச் சிறையாகப் போனபோது கிறிஸ்தவர்களான சிலரை இங்கே கண்டான். அப் $28^{13}$.

**புபிலியு.** Publius.

பரி. பவுலும் அவனோடு சேர்ந்தவர்களும் கப்பற்சேதமடைந்து கரையேறின மெலித்தாதீவிலுள்ள பிரதான மனுஷன். அப் $28^{7}$.

**புயம்.** Arm. யோபு $31^{22}$ 2 சாமு $1^{10}$ நியா $15^{14}$.

உவமையாய் 'வல்லமை' என்பதைக் குறிக்கும்.

i. தேவனுடைய வல்லமை. சங் $89^{13}$ ஏசா $52^{10}$ $62^{8}$ $63^{12}$ எரே $32^{17}$ லூக் $1^{51}$ யோவா $12^{38}$ அப் $13^{17}$.

ii. கடவுள் செய்யும் உதவி. ஏசா $33^{2}$ $53^{1}$.

iii. அகங்காரம், பலவந்தம். யோபு $38^{15}$ சங் $10^{15}$ எசே $30^{24}$.

**புரட்டுகிறது.** Pervert. உபா $24^{17}$ யோபு $8^{3}$ $33^{27}$ $34^{12}$ 1 சாமு $8^{3}$ எரே $23^{36}$ அப் $13^{10}$ 2 கொரி $4^{2}$ கலா $1^{7}$ 2 பேது $2^{11}$ யூதா $1^{4}$.

**புருஷன்.** Husband.

i. தலைவன். ஆதி $3^{6}$ $16^{3}$ உபா $24^{3}$ நீதி $31^{11}$ யோவா $4^{17}$ ரோம $7^{2}$ 1 கொரி $7^{3-39}$ எபே $5^{22}$ கொலோ $3^{18}$ 1 பேது $3^{1-7}$.

ii. யூதர்கள் கலியாணத்தில் நியமிக்கப்பட்டவனுக்குப் 'புருஷன்' என்று சொன்னார்கள். மத் $1^{16-18}$.

iii. உவமையாய். எரே $31^{32}$ எசே $16^{30-45}$ ஓசி $2^{2-7}$ 2 கொரி $11^{2}$ வெளி $21^{2}$. **குடும்பம்** காண்க.

**புலம்பல்.** Lamentations.

1. **உற்பத்தி.** கி—மு. 586-ம் ௵ நேபுகாத்நேச்சார் எருசலேம் பட்டணத்தைப் பிடித்து அதின் ராஜாவாகிய சிதேக்கியாவின் கண்களைப் பிடுங்கி, அப்பட்டணத்தின் பிரபுக்களைக் கொலைசெய்து, தேவாலயத்தையும் ராஜ மாளிகைகளையும் அழித்து, பட்டணத்து மதில்களைத் தரையோடு தரையாக்கி, சில ஏழைகளைத்தவிர அப்பட்டணத்தார் அனைவரையும் அடிமைகளாக்கி, அமஞ்சு வேலைசெய்யும்படி அவர்களைப் பாபிலோனியாவுக்குக் கொண்டுபோனான். 2 இரா 25 அதி. துக்ககரமான இந்த விஷயங்களைக் குறித்துப் புலம்பல் என்னும் புஸ்தகத்தில் ஐந்து பாட்டுகள் உண்டு. இந்தத் துக்கசெய்திகள் யூத ஜனத்தின் சாவுக்கு அடையாளங்கள் என்று இதின் ஆக்கியோன் எண்ணி, கவிஞன் ஒருவன் இறந்துபோனவனைக் குறித்து எப்படிச் சரமகவிகள் பாடுவானோ அப்படியே யூத ஜனத்தைப்பற்றிப் புலம்பிப் பாடுகிறான்.

2. **காலம்.** எருசலேம் பட்டணம் அழிந்து சில வருஷங்களுக்குள்ளே புலம்பல் என்னும் இந்நூல் பாடப்பட்டிருக்கவேண்டும். ஆதலால் இது கி—மு. 586–550–க்கு இடையில் இயற்றப்பட்டிருக்கலாம்.

3. **நடை.** தமிழ் வேதாகமத்தில் இந்நூல் வசன நடையில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தாலும் எபிரெய பாஷையில் இது விசேஷித்த செய்யுள் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அதிகாரமும் ஒரு பாட்டு. இவைபோன்ற செய்யுள் ஆமோஸ் ஏசாயா எசேக்கியேல் என்னும் ஆகமங்களில் சில அதிகாரங்களில் காணப்படும். எப்படியென்றால் இந்நூலாசிரியன் எபிரெய எழுத்தட்டவணையின் 22 எழுத்துக்களையும் முதல் எழுத்தாகக்கொண்ட 22 பதங்களைத் தெரிந்து, 1, 2, 4-ம் அதிகாரங்களிலுள்ள 22 வசனங்களுக்கும் அவ்வட்டவணையின் கிரமத்தின்படி இப்பதங்களை முதல் பதங்களாக வைத்து, சொல்லலங்கார இலக்கணத்துக்கிசைய இப்பாடல்களைப் பாடியி

ருக்கிறான். அறுபத்தாறு வசனங்களுள்ள மூன்றாம் அதிகாரத்தை ஒரே மோனைபெற் றதும் மும்மூன்று வசனங்கள் கொண்டது மான இருபத்திரண்டு பிரிவுகளாக பகுத்து மேற்சொன்ன சப்தாலங்கார முறைப்படியே வர்ணித்துப் பாடியிருக்கிறான்.

5–ம் அதிகாரத்தில் 22 வசனங்கள் இருந் தாலும், இது ஒரு ஜெபமானதினாலே இதன் ஆசிரியன் எபிரெய எழுத்தட்டவணையின் வரிசைக் கிரமத்தையும் சொல்லலங்கார அணிகளையும் இதிலே அனுசரிக்கவில்லை.

4. பொருளடக்கம். இந்த ஐந்து பாட் டுக்களில் கவிஞன் கண்ட விஷயங்கள் கலந் திருக்கிறது. சத்துருக்கள் செய்த கொடூரத் தையும் யூதர்கள் மனசில் பொங்கி எழும் பின துக்கத்தையும் கடவுளின் செய்கை களைப்பற்றி யுண்டாகிற சந்தேகங்களையும் இவன் சொல்லுகிறான்; சில சமயங்களில் இந் நூலாசிரியனே பேசுகிறான்; சில சமயங் களில் எருசலேம் பட்டணம் முதலிய அஃ றிணைப் பொருள்களை உருவகப்படுத்தி அவை களே பேசும்படி செய்கிறான். சில வசனங் களில் யூதஜனமே பேசுகிறது.

1–ம் அதி = 1–ம் பாட்டு.

கவிஞன் எருசலேமின் அழிவையும் சிறையிருப்புக்குச் சென்றவர்களுடைய அவ மானத்தையும் விபரிக்கிறான். $1^{12-22}$. எருச லேம் பட்டணம் இவைகளைப்பற்றிப் புலம் புகிறது.

2–ம் அதி = 2–ம் பாட்டு.

யேகோவா தமது ஜனத்தைக் காப்பாற் றாமல் அவர்களுடைய சத்துருக்கள் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்ததே மற்ற துக்கங் கள் எல்லாவற்றையும்விட மகாப் பெரிய துக்கம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

3–ம் அதி. = 3–ம் பாட்டு.

$3^{1-18}$. ஜனத்துக்கு வந்த அழிவு. $3^{19-47}$. அவர்களுக்கு வந்த துக்கங்களில் யேகோவா வின் நல்ல நோக்கம் படிப்படியாய்த் தோன் றுகிறது. $3^{48-66}$. ஜனங்கள் செய்த பாவத் தைப்பற்றி அவர்கள் மனஸ்தாபப்படும்படி க்கு அவர்களை அழைத்தல்.

4–ம் அதி = 4–ம் பாட்டு.

சென்றகாலத்தில் சீயோனின் சிறப்புற்ற நிலைமையும் தற்காலத்தில் அதற்கு நிகழ்ந்த துக்ககரமான நிலைமையும்.

5–ம் அதி. = 5–ம் பாட்டு.

ஒரு ஜெபம். இதிலே கடவுளுடைய இரக் கத்தைத் தேடி, அவர் திரும்ப யூதாவுக்கு ஆசீர்வாதம் கொடுக்கும்படி செய்யும் விண் ணப்பம் கூறப்பட்டிருக்கிறது.

5. இதன் ஆக்கியோன். புலம்பல் என் னும் நூலில் அதின் ஆக்கியோன் பெயர் தோன்றுகிறதில்லை. 2 நாளா $35^{25}$–ல் எரே மியா தீர்க்கதரிசி யோசியா ராஜாவின் மேல் புலம்பல் பாடினான் என்று சொல்லி யிருக்கிறதை வாசித்த சிலர் அந்த வசனம் எரேமியா தீர்க்கதரிசியே இந்தப் புலம்ப லையும் இயற்றினதாக குறிக்கிறது என்று நினைக்கிறார்கள். இப்படியே அலெக்சாந் திரியாப் பட்டணத்தில் எபிரெய வேதா கமத்தைக் கிரேக்க பாஷையில் மொழி பெயர்த்தவர்களும் எரேமியா தீர்க்கதரிசியே இந்த நூலை எழுதினான் என்று சொல்லு கிறார்கள். ஆதலால் இவன் இதை எழுதி னான் என்பதற்கு வேறே அத்தாட்சி யில்லா விட்டாலும் யூதர்களும் ஆதி கிறிஸ்தவர்க ளும் கைக்கொண்டுவந்த பாரம்பரியத்தின்படி எரேமியாதான் இதை எழுதினான். மேலும் தற்காலத்தில் சில வேதசாஸ்திரிகள் இதற்கு ஆக்ஷேபனை பண்ணினாலும் இதின் பாஷை நடையையும் மற்ற விஷயங்களையும் ஆராய்ச்சி செய்கிறவர்கள் எரேமியா தீர்க்கதரிசி இதை எழுதியிருக்கிறதற்கு உறுதியான ஆக்ஷேபனை இல்லையென்று சொல்லுகிறார் கள். ஆகையால் எரேமியா தீர்க்கதரிசி இதற்கு ஆக்கியோன் என்று நாம் சொல்ல லாம்.

6. வேதாகமத் திருமுறையில் இதன் இடம். எபிரெய வேதாகமத்திலுள்ள நூல் கள் 'நியாயப்பிரமாணம்' 'தீர்க்கதரிசிகள்' 'எழுதப்பட்டவை' என்று மூன்று வகுப்புக் களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. வேதா கமம் காண்க. இவற்றுள் இந்நூல் கடைசி யில் 'எழுதப்பட்டவைகளில்' ஒன்று. தற்கா லத்து யூதர்கள் ஆப் மீ 9 உ ரோமர்கள் எருசலேம் பட்டணத்தைப் பிடித்து அதை அழித்த விஷயத்தைப்பற்றி உபவாசம் செய் யும் நாளிலே இந்த நூலின் பாடல்களை மகா துக்கத்துடனே பாடுவார்கள்.

**புலம்புகிறது.** Weep, Lament. ஆதி $50^{10}$ நியா $11^{40}$ 2 நாளா $35^{25}$ யோபு $27^{15}$ ஏசா $24^{4}$ எரே $6^{26}$ $31^{15}$ எசே $2^{10}$ யோவே $1^{8}$ ஆமோ $5^{16}$ மீகா $2^{4}$ மத் $2^{17}$ யோவா $16^{20}$ வெளி $18^{9}$. பிரேத அடக்கம் காண்க.

**புலவர்.** Poets. அப் $17^{28}$. பரி. பவுல் குறித்த புலவர் யார் என்றால் கிரேக்கர்க ளுக்குள் பேர்பெற்ற அராதஸ் (*Aratus*) என்பவனும் கிலெயாந்தெஸ் (*Kleanthes*) என்பவனும். அராத்ஸ் தர்சு பட்டணத்தான்.

அவன் கி—மு. 270–ம் ௵த்தில் இறந்தான். கிலேயாந்தெஸ் கி—மு. 300–ம் ௵ இறந்தான்.

**புலி.** Tiger. எசா $11^{6}$–ல் 'புலி' என்பதற்குப் பதிலாக 'சிவிங்கி' அல்லது 'சிறுத்தை' என்று வாசிக்கவேண்டும். புலி பலெஸ்தீனா தேசத்தில் இல்லை.

**புல்.** Grass. வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கும் 'புல்' என்னும் பதம் எவ்வகையான புல்லையும் பொதுவாய்க் குறிக்கும். எசா $15^{6}$.

சில வசனங்களில் மிருகங்கள் மேயும் புல்லை விசேஷமாய்க் குறிக்கும். சங் $104^{14}$ எரே $14^{5}$.

கானான் தேசத்திலே உஷ்ணகாலத்தில் புல் யாவும் வெய்யிலினால் காய்ந்து புழுதியாய்ப் போய்விடும். காற்றினால் அடிக்கப்பட்டுப் பதரைப்போல் பறந்துபோகும். இதினிமித்தமே வேதாகமத்தில் பல வசனங்களில் புல் உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. சங் $90^{5}$ $92^{7}$ $103^{15}$ எசா $40^{6}$ $51^{12}$ யாக் $1^{19}$ 1 பேது $1^{24}$. பலெஸ்தீனா தேசத்தில் விறகு வாங்குவது கஷ்டமாதலாலும், விறகுக்காக போதுமான மரங்கள் இல்லாததினாலும் ஜனங்கள் புல் பூண்டுகளை வழக்கமாய் விறகுக்காக உபயோகிப்பார்கள். மத் $6^{28}$. எபிரெயர்கள் கட்டின வீடுகளின் மேற்கூரை இத்தேசத்திலுள்ள மச்சுக்களைப்போல சமமாய் இருப்பதினாலும், அதின்மேல் மண் கொஞ்சமிருப்பதினாலும், மழைகாலத்தில் அந்த மண்ணின்மேல் புல் பூண்டுகள் வளரும். ஆனால் வெய்யில்காலத்திலோ அவையெல்லாம் உடனே வாடிப்போகும். சங் $129^{6}$. சீக்கிரத்தில் நாசமடைகிறவர்களுக்கு இது உபமானமாய்ப் பேசப்படுகிறது. எசா $37^{27}$.

**புல்லாங்குழல்.** Pipe. 1 கொரி $14^{7}$. **கீதவாத்தியம்** காண்க.

**புழு.** Worm. யோபு $21^{26}$ $25^{6}$ சங் $22^{6}$ எசா $14^{11}$ மாற் $9^{44-48}$ அப் $12^{23}$. **பூச்சி** காண்க.

**புழுக்கொத்தி.** R. V. Hoopoe; A. V. Lap-wing. பலெஸ்தீனா தேசத்தில் புழுக்கொத்தி வசந்தகாலத்திலும் உஷ்ணகாலத்திலும் வழக்கமாய் வரும். புசிக்கத்தகாத பட்சிகளில் இதுவும் ஒன்று. இது குளிர்காலத்தில் தென் தேசங்களுக்குப் பறந்து போய்விடும். லேவி $11^{19}$ உபா $14^{18}$.

**புழுதி.** Dust. யாத் $8^{16}$ உபா $28^{24}$ யோசு $7^{6}$ 1 சாமு $2^{8}$ யோபு $5^{6}$ $7^{5}$ சங் $30^{8}$ $113^{7}$ அப் $22^{23}$ வெளி $18^{19}$. **தூசி** காண்க.



புழுக்கொத்தி.

தலையின்மேல் புழுதி போட்டுக்கொள்வது துக்கத்துக்கு அடையாளம். 1 சாமு $4^{12}$ 2 சாமு $1^{2}$ $15^{32}$. **பிரேத அடக்கம்** காண்க.

**புளித்தமா.** Leaven. பஸ்காப்பண்டிகை கொண்டாடப்பட்ட ஏழுநாட்களிலும் யூதர்கள் புளிப்பில்லாத அப்பம் புசித்ததினாலே அந்நாட்களுக்கு 'புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாட்கள்' என்று பேர். லூக் $22^{1}$. எபிரெயர்கள், தங்கள் முன்னோர் எகிப்து தேசத்திலிருந்து அவசரமாய் யாத்திரை செய்யப் புறப்பட்டுப்போன சங்கதியை ஞாபகப்படுத்தும்படி இவ்விதமாய் அப்பண்டிகை நாட்களில் புளிப்பில்லாத அப்பங்களைப் புசித்தார்கள். யாத் $12^{8, 15-20}$ யோசு $5^{11}$. அந்நாட்களுக்கு முன்னமே, அவர்கள் தங்கள் வீடுகளிலிருந்து புளித்தமா யாவற்றையும் முற்றிலும் அகற்றிப்போடுவார்கள். கொஞ்சமாகிலும் வீட்டுக்குள்ளிருந்தால், அது தங்கள் ஆராதனையைக் கெடுத்துப்போடுமென்று நினைத்தார்கள். தேவாலயத்திலே நடத்தின பலிகளில் புளித்தமாவையும் தேனையும் சேர்ப்பது ஆகாதகாரியம். லேவி $2^{11}$. புளிப்புள்ள கொஞ்சமாவானது நல்ல மாவையும் மாற்றக்கூடியதாகையால் இது உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இது சுவிசேஷத்தின் வல்லமையைக் குறிக்கும். மத். $13^{33}$. கள்ள உபதேசத்தின் வல்லமையையும் குறிப்பிடும். மத் $16^{6-12}$ லூக் $12^{1}$. பொல்லாதவர்கள் திருச்சபையில் போதித்த துன்மார்க்கத்தையும் காட்டும். 1 கொரி $5^{6}$ கலா $5^{9}$.

**புள்ளி.** Spot. ஆதி $31^{32-39}$ எரே $13^{23}$ லேவி $13^{38}$. **துஷ்டம்** காண்க.

**புள்ளிமான். 'Pygarg.'**

எபிரெயர்கள் தங்கள் ஆசாரப் பிரமாணத்தின்படி புள்ளிமானைப் புசிக்கலாம். இந்தப் பதத்தினாலே குறிக்கப்பட்ட மிருகம் வெள்ளை வாலும், பின்பக்கம் சாய்ந்த முறுகின கொம்புகளும் உடைய ஒருவித மான். தற்காலத்தில் பலெஸ்தீனாதேசத்தில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிற ஒருவகை மானைக் குறிக்கும். உபா $14^5$.

**புறங்கூறல்.** Backbiting. சங் $15^3$ நீதி $10^{18}$ $25^{23}$ ரோம $1^{30}$ 2 கொரி $12^{20}$. 'அவதூறு'. சங் $50^{20}$ $101^5$. கோள் காண்க.

**புறஜாதி.** Nations, gentiles.

இஸ்ரவேலர் தங்கள் ஜனத்தாருக்கும் தாங்கள் அறிந்த மற்ற ஜனத்தாருக்கும் வித்தியாசமுண்டென்று எப்போதும் நினைத்துவந்தார்கள். அவர்கள், தாங்கள் யேகோவாவினுடைய ஜனங்கள் என்றும், அவர் தங்களைக் காப்பாற்றுவார் என்றும், மற்றவர்கள் மார்க்க ஆசாரத்திலும் பாஷையிலும் அந்நியரான படியினாலே யேகோவா அவர்களுக்கு அவ்வளவு தயவுசெய்யமாட்டார் என்றும் நினைத்தார்கள். பின்வரும் வசனங்களில் 'புறஜாதி' என்பது சொல்லப்படுகிறது.

லேவி $25^{44}$ $26^{38}$ சங் $79^1$ $79^{10}$ $115^2$ எசா $42^1$ எரே $10^2$ $16^{19}$ எசே $20^{14}$ செப் $2^{11}$ யோவே $3^9$ மத் $20^{19}$ லூக் $21^{24}$ அப் $4^{28}$ $11^1$ $11^{18}$ $13^{46}$ ரோம $11^{11}$ கலா $2^{14}$ $3^8$ கொலோ $3^{11}$ எபே $2^{11}$ 1 தீமோ $2^7$. ஜனங்கள் காண்க.

**புறதேசத்தான்.** Scythian.

எபிரெயர்கள் தங்கள் ஆசாரமும் பாஷையும் தெரியாத புறஜனங்கள் யாவரையும் தங்களுக்குக் கீழானவர்களென்றே எண்ணிவந்தார்கள். அப்படியே கிரேக்கரும் தங்கள் பாஷை பேசத்தெரியாதவர்களைக் கீழானவர்களென்று எண்ணினார்கள். மேலும் கிரேக்கரும் யூதரும் நாகரீகமற்ற ஸ்கீதியர் (*Scythians*) என்னும் கோத்திரத்தாரை மற்ற எல்லாரையும்விட ஈனமானவர்கள் என்று நினைத்தார்கள். கொலோ $3^{11}$–ல் 'புறதேசத்தான்' என்பது இந்த ஈனஜனங்களைக் குறிக்கிறது. பவுல் கிறிஸ்துமார்க்கத்திலே உயர்ந்த ஜாதியாருக்கும் தாழ்ந்த ஜாதியாருக்கும் பேதமேயில்லை என்று போதித்து, இந்த அகோரமானவர்களுங்கூட இயேசுகிறிஸ்துவினுடைய தயவைப் பெறக்கூடியவர்களாயிருக்கிறார்களென்று தெரிவிக்கிறான். ஜனங்கள் காண்க.

**புறா.** Pigeon, Dove.

பலெஸ்தீனா தேசத்தில் எழுவகையான புறாக்கள் உண்டு. அவைகளில் காட்டுப்புறா வசந்தகாலத்தில் தென் தேசங்களிலிருந்து பலெஸ்தீனாவுக்கு வரும். இன்னொரு வகைப் புறா வழக்கமாய் எருசலேம் நகரத்திலுள்ள தெருக்களில் வசிக்கும். மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி புறாக்கள் சுத்தமான பிராணிகள்தான். ஏழைகள் மிகுதியாய் இவைகளைப் பலியாக செலுத்துவார்கள். ஆதி $15^9$ லேவி $5^7$ $12^6$ லூக் $2^{24}$. சமயாசமயங்களில் இவைகள் பெருங்கூட்டமாக சேர்ந்து பறக்கும். ஏசா $60^8$. புறாக்களின் சிறகு வெகு அலங்காரமாயிருக்கும். சங் $55^6$ $68^{13}$. அதின் கண்கள் இரக்கமுள்ளவைகளாயும், அதின் பாட்டு துயரமுள்ளதாயுமிருக்கும். உன். பா $1^{15}$ $2^{14}$ ஏசா $59^{11}$.

புறாக்கள் பேதமைக்கும் தூய்மைக்கும் கற்புக்கும் உபமானமாய்ச் சொல்லப்படும். ஓசி $7^{11}$ மத் $10^{11}$. தேவதயவுக்கும், பரிசுத்த ஆவியானவருக்கும் புறா அடையாளம். ஆதி 8 அதி. மத் $3^{16}$.

**புறு.** Pyrrhus.

தமிழ் வேதாகமத்திலே 'புறு' என்பது தோன்றுகிறதில்லை. ஆனால் வேதசாஸ்திரிகளால் புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிற பூர்வீக காலத்துக் கையெழுத்துப் பிரதிகளில், அப் $20^4$–ல் புறு என்பவன் பெரோயா ஊரானாகிய சோபத்தரின் தகப்பன் என்று சொல்லப்படிருக்கிறது.

**புறேட்டேஸ்தாந்து.** Protestant. புறேட்டெஸ்தாந்து என்னும் பதத்துக்கு வேதசாஸ்திரத்திலும் மார்க்க ஆசாரத்திலும் உண்டான தப்புகளை எதிர்ப்போர் என்று அர்த்தம். இந்தப் பெயர் 1529-ம்வருஷத்திலே லூத்தருடைய கொள்கையை அநுசரித்த கிறிஸ்தவர்களுக்கு ஜெர்மனியா தேசத்தில் இடப்பட்டது. இந்தப் பேர் பொதுவாய்ச் சுவிசேஷ கிறிஸ்தவர்களுக்கு வழங்கிவருகிறது.

**புன்னி.** Bunni. நெகே $9^4$ $10^{15}$ $11^{15}$. ஒருவேளை இவனும் 'பின்னூயி' என்பவனும் ஒருவன்தான். எஸ்றா $8^{33}$ நெகே $12^8$.

**புன்னைமரம்.** R. V. Bay tree. A. V. Poplar. 'புன்னைமரம்' என்று மொழி பெயர்க்கப்பட்டிருக்கிற எபிரெய பதம் இன்ன ஜாதிமரத்தைக் குறிக்கிறதென்று திட்டமாய்ச் சொல்லமுடியாது. ஆனால் இது ஒருயாதிரி தேவதாரு மரமாயிருக்கலாம். ஆதி $30^{37}$ ஏசா $41^{19}$ $60^{13}$ $30^{37}$ ஓசி $4^{13}$. எசே $27^6$–ல் சொல்லப்பட்ட ஆஷூர் மரம் என்பது இந்த மரமே.

## பூ.

**பூ.** Flower. யாத் $25^{33}$ எண் $17^8$ யோபு $14^2$ ஏசா $40^6$ $18^5$ யாக் $1^{10}$. புஷ்பம் காண்க.

**பூசி**. Buzi. எசேக்கியேல் தீர்க்கதரிசியின் தகப்பன். எசே $1^3$.

**பூசியன்**. Buzzite. யோபு $32^2$. **பூஸ்** காண்க.

**பூசுகிறது**. Anoint. உபா $28^{40}$ ரூத் $3^3$ தானி $10^3$ ஆமோ $6^6$ மீகா $6^{15}$ மத் $6^{17}$ மாற் $6^{18}$ லூக் $7^{38}$ யோவா $9^6$ $11^2$ $12^3$ யாக் $5^{14}$. **அபிஷேகம்** காண்க.

**பூச்சக்கரம்**. World. சங் $98^7$ ஏசா $26^{9-18}$ $18^3$ புல $4^{12}$ நாகூ $1^5$. உலகம், **பூமி** காண்க.

**பூச்சிகள்**. Worms. பூச்சி என்பதைக் குறிக்கும்படி எபிரெய பாஷையில் சொல்லப்பட்டிருக்கிற பதங்கள் பெரும்பாலும் நாற்றமாய்ப்போன புண்களில் உண்டாகிற புழு முதலியவைகளைக் குறிக்கும். யாத் $16^{20}$ உபா $28^{39}$ ஏசா $66^{24}$ யோனா $4^7$ ஓசி $5^{12}$. **புழு** காண்க.

**பூஸ்**. Buz. 1. நாகோரின் இரண்டாம் மகன். ஆதி $22^{21}$. இவனுடைய சந்ததியார் பூசியர் எனப்படுவார்கள். யோபு $32^2$ எரே $25^{23}$.

2. காத் கோத்திரத்தான். 1 நாளா $5^{14}$.

**பூஜாசாரி**. A. V. Priests. R. V. Priests. விக்கிரகாராதனையை நடத்துகிற ஆசாரியர். 1 சாமு $6^2$ 2 இரா $11^{18}$.

**பூட்டு**. Lock. நியா $3^{23}$ நெகே $3^{3.6.13}$ உன். பா $5^5$. **திறவுகோல்** காண்க.

**பூண்டு**. Herb. ஆதி $1^{11.30}$ 2 இரா $19^{26}$ யோபு $38^{27}$ சங் $37^2$ ஏசா $37^{27}$ $26^{19}$. 'முள் பூண்டு.' எபி $6^8$.

**பூதம் ஐம்பூதம்**. The elements. 2 பேது $3^{10}$. நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் ஆகிய இவை தமிழிலே பஞ்சபூதங்கள் என்னப்படும்.

புதிய ஏற்பாட்டை எழுதினவர்கள் இருந்த காலத்தில், தத்துவசாஸ்திரிகளில் அநேகர் அக்கினி, ஆகாசம், காற்று, மண், ஜலம் என்னும் இவ்வைந்து பூதங்களுண்டென்றும், இவை சகல உடல்களுக்கும் மூலாதாரமாயிருக்கிறதென்றும் சொன்னார்கள். பிறகு சிலர் ஆகாசம் என்பதும் காற்று என்பதும் ஒரே பொருள்; ஆதலால் அக்கினி, ஆகாசம், மண், ஜலம் இந்நான்கு பூதங்களே உண்டென்று நினைத்தார்கள்.

**பூதலத்தோர்**. 'On earth'. பிலி $2^{10}$.

**பூதியர்**. Puthites. கீரியாத்யாரீமில் இருந்த ஒரு குடும்பம். 1 நாளா $2^{53}$.

**பூத்**. Phut, Put. காமின் புத்திரரில் பூத் என்பவன் ஒருவன். ஆதி $10^6$. பூத்தின் சந்ததியார் தீர்க்கதரிசிகள் பல வசனங்களில் சொன்ன ஓர் ஜனம். இந்த ஜனம் எகிப்துக்கு மித்திரராயிருந்தார்கள். எரே $46^9$ எசே $27^{10}$ $30^5$ நாகூ $3^9$.

எசே $38^5$–ல்சொல்லப்பட்டிருக்கிற 'லீபியர்' பூத் ஜனங்கள்தான். **லூபீம்** காண்க.

வேத சாஸ்திரிகளின் அபிப்பிராயத்தின்படி பூத் ஜனங்கள் அல்லது சிவந்த சமுத்திரத்தின் மேற்கு எல்லையில் வசித்த ஒரு ஜனம், அல்லது லீபியா தேசத்தில் வசித்தவர்கள், அல்லது எகிப்தியரின் சேனைகளில் வில் எய்கிற ஒரு கோத்திரம், அல்லது லூத் தேசத்தார்கள்தான்.

எப்படியாவது அவர்கள் யுத்தத்தில் அதிக திறமையுள்ளவர்களாயும் மூர்க்கமுள்ளவர்களாயும் இருந்தார்கள்.

**பூத்தியேல்**. Putiel. எலெயாசாரின் மனைவியின் தகப்பன். யாத் $6^{25}$.

**பூத்துப்போகிறது**. Sight fails. 1 சாமு $2^{33}$ யோபு $31^{16}$ $11^{20}$ $17^5$ சங் $69^3$ $119^{82-123}$ எரே $14^6$ புல $4^{17}$.

**பூமி**. Earth. தமிழ் வேதாகமத்திலே பூமி என்று சொல்லப்பட்டிருந்த பதத்துக்கு மூல பாஷையிலே இரண்டு எபிரெய பதங்கள் வழக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அவையாவன: 'எரெட்ஸ்' (*Erets*), 'அடாமா' (*Adamah*) என்பவை. எபிரெய வேதாகமத்தில் இந்தப் பதங்களைப்பற்றி நாம் விசாரித்தால் இவைகளின் அர்த்தம் பல வகைப்படும். இவைகள் வழக்கமாய் தமிழ் வேதாகமத்தில் 'பூமி' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால் சில வசனங்களில் இவைகளுக்கு 'நிலம்' 'தேசம்' முதலிய பதங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அர்த்தங்களின் விபரம் பின்வருமாறு காட்டப்படும்.

(1) எரெட்ஸ். *Erets*.

(a) வானத்துக்குக் கீழ் பரவப்பட்ட பூமி. ஆதி $1^1$ உபா $3^{24}$ யோபு $1^7$ சங் $24^1$.

(b) சமுத்திரம் அல்லாத மனுஷர் வசிக்கக்கூடிய தரை. ஆதி $1^{20}$ $3^{19}$ யாத் $15^{12}$ 2 சாமு $17^{12}$.

(2) அடாமா. *Adamah*.

(a) மண், மணல், பாறை முதலியவற்றால் ஆகிய பூமி. யாத் $3^5$; 'மண்' ஆதி $2^7$ யாத் $20^{24}$ 2 இரா $5^{17}$.

'புழுதி' 1 சாமு $4^{12}$ 2 சாமு $1^2$ $15^{32}$.

(b) மனிதரும் மிருகஜீவன்களும் நடமாடுகிற பூமியின் மேற்பரப்பு 'நிலம்'. ஆதி $1^{5}$ $4^{3}$. 'பூமி'. சங் $104^{30}$.

(3) 'எரேட்ஸ்' என்பதும் 'அடாமா' என்பதும் பொதுவாய்ப் பின்வருமாறு வித்தியாசமின்றிச் சொல்லப்படும்.

(a) புற்பூண்டுகள் வளரும் மண்தரை: இதற்கு எரேட்ஸ். ஆதி $1^{11}$ $2^{5}$. அடாமா. ஆதி $7^{4}$ உபா $6^{15}$ சங் $104^{30}$.

(b) இவ்வுலகமும் அதில் வசிக்கும் மனிதர்களும்: எரேட்ஸ். ஆதி $1^{10}$ $6^{13}$ $11^{1}$ யாத் $9^{14-15}$ எண் $14^{21}$ யோபு $1^{7}$. அடாமா. ஆதி $4^{11}$ $12^{3}$

(c) தேசம்: எரேட்ஸ். எரே $22^{20}$. அடாமா. ஆதி $4^{14}$.

இந்த வசனங்களையெல்லாம் எபிரெயர்கள் கவனித்து, பூமியானது வானத்தின் கீழே நாலு திசைகளிலும் பரவின ஒரு பெரிய சம பூமியென்றும், அது மண்ணால் படைக்கப்பட்டதென்றும், செடிகளுக்கும் மிருகஜீவன்களுக்கும் மனிதருக்கும் வேண்டிய உணவைக் கொடுக்கத்தக்கதாக உண்டாக்கப்பட்டது என்றும் நினைத்தார்கள் என்று அறியலாம். வேதாகமத்திலே பூமியின் அளவையும் உருவத்தையும்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை.

**பூமிஅதிர்ச்சி.** Earthquake.

பலெஸ்தீனா தேசத்தின் பூகோளசாஸ்திரத்தை அறிந்தவர்கள் பூர்வகாலத்தில் அதில் பூமி அதிர்ச்சி அடிக்கடி உண்டானதாக சொல்லுவார்கள். எபிரெயர்கள் அத்தேசத்தில் இருக்கும் காலங்களில் அவ்வளவு பூமி அதிர்ச்சி உண்டாகவில்லை. வேதாகமத்திலோ, பூமி அதிர்ச்சியைப்பற்றிப் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வசனங்களில் சொல்லியிருக்கும் உவமைகளை நாம் பார்த்தால், எபிரெயர்கள் பூமி அதிர்ச்சியினால் உண்டான நஷ்டங்களை நன்றாய் உணர்ந்து கடவுளின் வல்லமையையும் கோபத்தையும் குறிக்கும்படி, பூமி அதிர்ச்சியை உவமையாக சொல்லுவார்கள் என்று விளங்கும். பழைய ஏற்பாட்டில் உசியா ராஜாவின் காலத்தில் சம்பவித்த பூமி அதிர்ச்சி ஒன்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆமோ $1^{1}$ சக $14^{5}$.

புதிய ஏற்பாட்டில், நமது ஆண்டவர் சிலுவையில் மரிக்கும்போதும், அவர் உயிர்த்தெழுந்தபோதும், பரி. பவுல் பிலிப்பியர் பட்டணத்தில் இருந்தபோதும், உண்டான மூன்று பூமி அதிர்ச்சிகள் சொல்லப்பட்டிருக்கிறது. மத் $27^{51}$ $28^{2}$ அப் $16^{26}$.

பூமி அதிர்ச்சி உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கும் வாக்கியங்கள் சில: யாத் $19^{18}$ எண் $16^{31}$ 1 இரா $19^{11}$ சங் $18^{7}$ $46^{2}$ $68^{8}$ $77^{18}$ $104^{4}$ $104^{32}$ ஏசா $29^{6}$ மத் $24^{7}$ மாற் $13^{8}$ லூக் $21^{11}$ வெளி $6^{12}$ $8^{5}$ $11^{13}$ $16^{18}$.

**பூரணம்.** Fulness. யோபு $20^{22}$.

'பூரண சற்குணம்.' கொலோ $3^{14}$.

'பூரண சற்குணர்.' மத் $5^{48}$.

'பூரண வடிவு.' சங் $50^{2}$ புல $2^{15}$.

'பரிபூரண ஆனந்தம்.' சங் $16^{11}$.

'சம்பூரணம்.' சங் $119^{96}$. **பரிபூரணம்** காண்க.

**பூரா.** Purah. கிதியோனின் ஆயுததாரி. நியா $7^{10}$.

**பூரிகை.** Trumpets. எண் $10^{1}$. கீதவாத்தியம் காண்க.

**பூர், பூரீம்.** Pur, Purim. ராணியாகிய எஸ்தர் செய்த உதவியினால் ஆமான் செய்த உபாயத்தினின்று தங்களுக்கு வந்த ரட்சிப்பைப்பற்றி யூதர்கள் மார்ச்சுமாதமாகிய ஆதார் மாதம் 14-ம், 15-தேதிகளில் கொண்டாடின உற்சவம். இந்த நாட்களில் வேலைசெய்யாமல் விருந்து உண்டு ஜெப ஆலயத்துக்குப் போய் அதில் எஸ்தர் ஆகமத்தை வாசித்து, ஆமான் பெயரைச் சபித்து, ராணியாகிய எஸ்தரையும் மொர்தெகாயையும் ஆசீர்வதிப்பது வழக்கம். எஸ்தர் $3^{7}$ $4^{3}$ $9^{15-32}$.

புதிய ஏற்பாட்டில் யோவா $5^{1}$–ல் சொல்லியிருக்கும் பண்டிகை பூரீம் பண்டிகைதான் என்று சிலர் நினைத்தாலும், அதற்குப் போதுமான அத்தாட்சி யில்லை. அது பஸ்காபண்டிகை என்று நினைக்க இடமுண்டு. ஆமான், பண்டிகை காண்க.

**பூர்வகாலம்.** 'Old time'. 1 சாமு $27^{8}$ பிர $1^{10}$ எசே $26^{20}$ அப் $15^{21}$.

**பூர்வத்தார்.** 'They of old time.' மத் $5^{21.27.33}$.

**பூர்வ நாட்கள்.** 'Ancient Days.' 2 இரா $19^{25}$ சங் $77^{5}$ ஏசா $23^{7}$.

**பூர்வம்.** Old. ஆதி $6^{4}$ ஏசா $51^{9}$ 1 பேது $3^{5}$.

**பூல்.** 1. Pul. திகலாத்பிலேசர் என்றும் தில்காத்பில்நேசர் என்றும் மறுநாமங்கள் தரித்த இவன் கி–மு. 745-727-வரையில் அசீரியா தேசத்தில் அரசாட்சி செய்தான். 2 இரா $15^{19}$. **அசீரியா** காண்க.

2. Bul. ஒரு மாதம். 1 இரா $6^{38}$. **காலம், மாதம்** காண்க.

3. ஏசா 66[19]-ல் சொன்ன 'பூல்' என்பது 'பூத்' என்பதைக் குறிக்கலாம்.

**பூவா.** Puah. தோலாவின் தகப்பன். நியா 10[1]. அல்லது, தோலாவின் சகோதரன். ஆதி 46[13] எண் 26[23] 1 நாளா 7[1].

**பூவாவியர்.** Punites. பூவாவின் சந்ததியார். எண் 26[23].

**பூவாள்.** Puah. எபிரெய மருத்துவச்சிகளில் ஒருத்தி. யாத் 1[15].

**பூனா.** Bunah. [புத்தி.] 1 நாளா 2[25].

**பூனோன்.** Punon. எண் 33[42]. பினோன் காண்க.

## பெ.

**பெகேர்.** Becher.

1. எப்பிராயீமின் குமாரரில் ஒருவன். எண் 26[35].=பெரேத் 1 நாளா 7[20]. இவனுடைய சந்ததியார் பெகேரியர் என்னப்பட்டார்கள். எண் 26[35].

2. பென்யமீனுடைய குமாரரில் ஒருவன். ஆதி 46[21] 1 நாளா 7[8].

**பெகோராத்.** Becorath. சவுலின் முன்னோர்களில் ஒருவன். 1 சாமு 9[1].

**பெக்கா.** Beka. அரை சேக்கல். அளவு காண்க.

**பெக்கா.** Pekah.

இஸ்ரவேல் ராஜ்யத்தை கி–மு. 735-733 வரையில் ஆண்டிருந்த அரசன். இவன் தனக்குமுன் இரண்டு மாதமாக அரசாட்சி செய்த பெக்காகியா என்பவனைக் கொன்றுபோட்டவன். யூதாவின் ராஜாவாகிய ஆகாஸ் இவனோடு அசீரிய ராஜாவின்மேல் படையெடுக்கச் சம்மதிக்காததினிமித்தம், பெக்காவும், ரெத்சீனும் யூதா தேசத்தின்மேல் படையெடுத்தார்கள். அப்பொழுது ஆகாஸ் ஸ்தானாபதிகளை அனுப்பி அசீரிய ராஜாவாகிய திகிலாத்–பிலேசர் தனக்கு உதவிபுரியும்படிக் கேட்டுக்கொண்டான். திகிலாத்–பிலேசர் இந்த விண்ணப்பத்துக்கு இணங்கி தன் சேனைகளோடு வந்து இஸ்ரவேல் ராஜ்யத்தின் மேல் படையெடுத்தான். அப்போது இஸ்ரவேல் ராஜ்யத்தில் அசீரியர்களுக்குச் சிநேகமானவர்கள் பெக்காவைக் கொன்றுபோட்டார்கள்.

2 இரா 15[30]-ல் இவன் இருபது வருஷம் அரசாட்சி செய்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் காலத்தைக் கணிக்கிறவர்கள் மற்ற வசனங்களை ஆராய்ச்சி செய்து இவன் அத்தனை வருஷம் அரசாட்சி செய்யவில்லை என்று தீர்மானித்திருக்கிறார்கள்.

**பெக்காகியா.** Pekahiah. [யேகோவா கவனிக்கிறார்.]

மெனாகேமின் மகனாகிய இவன் கி–மு. 735–ல் இரண்டு மாதக்காலம் இஸ்ரவேல் ராஜ்யத்தில் அரசாட்சி செய்தான். இவன் யேகோவாவின் மார்க்கத்தில் நடக்கவில்லை. பெக்கா இவனைக் கொன்றுபோட்டான். 2 இரா 15[23-26].

**பெசலெயேல்.** Bezalel. [கடவுளின் நிழலில் நிற்கிறவன்.]

1. ஆசரிப்புக் கூடாரத்தைக் கட்டின பிரதான சிற்பாசாரி. யாத் 31[2] 35[30] 36[1] 1 நாளா 2[20] 2 நாளா 1[5].

2. அந்நிய ஜாதிப்பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்றா 10[30].

**பெஸ்து.** Festus.

போர்கியு பெஸ்து என்பவன் பேலிக்ஸ் என்பவனுக்குப் பிற்பாடு யூதேயா நாட்டில் ரோமராயனால் நியமிக்கப்பட்ட தேசாதிபதியாயிருந்தான். இவன் கி–பி. 59–ம் ஆண்டுமுதல் நாலைந்து வருஷங்களாக அந்த அதிகாரத்தை நடத்தி, தன்னால் இயன்றமட்டும் எல்லாவற்றையும் நியாயமாய்ச் செய்ய விரும்பி, பரி. பவுலை யூதர்கள் கையிலே ஒப்புவிக்காமல், பவுல் அபயமிட்டபோது அவனை ரோமாபுரிக்கு அனுப்புவித்தான். பெஸ்துவும் இரண்டாம் அகிரிப்பாவும் சிநேகிதராயிருந்தார்கள். அப் 24[27] 25 அதி. 26[24-32].

**பெட்டி.** Ark, Box, Coffer, Coffin. ஆதி 50[26] யாத் 25[10-22] 35[12] யோசு 6[4] 1 சாமு 6[8.11.15].

'உடன்படிக்கைப் பெட்டி.' எபி 9[4].

'உடன்படிக்கையின் பெட்டி.' வெளி 11[19].

'கர்த்தருடைய பெட்டி.' யோசு 4[11] 6[11] 1 சாமு 6[8] 2 சாமு 6[16].

'சாட்சிப் பெட்டி.' யாத் 30[6] 39[35] 40[5].

'தேவனுடைய பெட்டி.' 1 சாமு 3[3] 4[11] 5[1] 2 சாமு 6[2].

'நாணற் பெட்டி.' யாத் 2[3].

'கர்த்தருடைய உடன்படிக்கைப் பெட்டி.' எண் 10[33] உபா 10[8] யோசு 3[11] 1 சாமு 4[3] எரே 3[16].

'மரப் பெட்டி.' உபா 10[1]. உடன்படிக்கைப் பெட்டி, துப்பி, பாணி காண்க.

**பெண்.** Daughter, Girl, Wife.

மகள். நீதி 31[29].

'பெண்குழந்தை.' யோவே $3^{3}$.

'பெண்பிள்ளை.' எசா $8^{5}$ யாத் $1^{16}$ $21^{4}$ நியா $21^{11}$.

மனைவி. நியா $14^{3}$ $21^{18}$ எரே $29^{6}$ யோசு $8^{35}$. குடும்பம், ஸ்திரீ காண்க.

**பெதஸ்தா.** Bethesda. [இரக்கத்தின் வீடு.] எருசலேமில் ஆட்டுவாசலின் அருகே ஐந்து மண்டபங்களால் சூழப்பட்டிருந்த ஒரு குளம். யோவா $5^{2}$. இந்தக் குளத்திலே ஓர் ஊற்றிலிருந்து காலத்துக்குக் காலம் தண்ணீர் ஊறுகின்றது. இந்தத் தண்ணீர் நோய்களை நீக்கத்தக்கத் தன்மையுள்ளதாயிருந்தது. தண்ணீர் ஊறும் வேகத்தினால் குளம் கலங்கும்போது நோயாளிகள் அதிலே மூழ்கத் துரிதமாய்ச் செல்வார்கள்.

இயேசு ஒரு வியாதிக்காரனைக் கண்டு இக்குளத்தண்டை இவனைச் சொஸ்தமாக்கினார்.

**குறிப்பு** 1. யோவா $5^{4}$. பூர்வீக கையெழுத்துப் பிரதிகளில் இந்த வசனம் இல்லாதபடியாலும், அக்குளத்தில் தண்ணீர் கலக்கப்படுவதற்குக் காரணமாகக் காட்ட இந்த வசனம் பிற்காலத்தில் எழுதப்பட்டதினாலும் இதை விட்டுவிடவேண்டும்.

**குறிப்பு** 2. யோவா $5^{3-9}$. ஆட்டுவாசல் எருசலேம் நகரத்தில் உள்ள தேவாலயத்துக்கு வடபாகத்தில் இருந்தது. இதற்குக் கிட்ட இந்தமாதிரி ஊற்றுள்ள குளம் இப்போது இல்லை. ஆதலால் வேதசாஸ்திரிகள் நினைக்கிறபடி கெதரோன் பள்ளத்தாக்கில் இந்தமாதிரி ஊற்றை உடைய இன்ராகேல் என்னும் ஊற்றும் பெதஸ்தாக் குளமும் ஒன்றுதான். ஆனால் இதைக்குறித்து நாம் திட்டமாய் ஒன்றும் சொல்லமுடியாது.

**பெதாக்கேல்.** Pedahel. நப்தலிக் கோத்திரத் தலைவரில் ஒருவன். எண் $34^{23}$.

**பெதாசூர்.** Pedahzur. மனாசே கோத்திரத் தலைவனான ஒருவனுடைய தகப்பன். எண் $2^{20}$.

**பெதாயா.** Pedaiah. [யேகோவா இரட்சித்திருக்கிறார்.]

(1). தாவீதின் காலத்தில் மனாசே கோத்திரத்தலைவனாயிருந்த யோவேலின் தகப்பன். 1 நாளா $27^{20}$.

(2). செபுதாளின் தகப்பன். 2 இரா $23^{36}$.

(3). எக்கோனியாவின் குமாரன். 1 நாளா $3^{18}$. அடுத்த வசனத்தில் இவன் செருபாபேலின் தகப்பன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 1 நாளா $3^{19}$. மற்ற வசனங்களிலோ செருபாபேல் செயல்தியேலின் மகன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(4). எருசலேமின் மதிலைப் பழுது பார்த்தவர்களில் ஒருவன். நெகே $3^{25}$.

(5). எஸ்றாவின் தோழரில் ஒருவன். நெகே $8^{4}$.

(6). ஓர் லேவியன். நெகே $13^{13}$.

(7). பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவன். நெகே $11^{7}$.

**பெதானுத்.** Beth-anath. நப்தலிகோத்திரத்தின் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{38}$.

**பெதானோத்.** Beth-anoth. யூதேயா மலைநாட்டில் உள்ள ஒரு ஊர். யோசு $15^{59}$.

**பெதியா.** Bedelah. எஸ்றா $10^{35}$.

**பெத்-அஸ்மாவேத்.** Beth-azmaveth. பென்யமீன் கோத்திர நாட்டிலுள்ள ஒரு ஊர். 1 நாளா $12^{3}$ நெகே $7^{28}$.

**பெத்-அப்ரா.** Beth-le-aprah. [சிற்றூரான வீடு.] பெலிஸ்தியரின் நாட்டிலுள்ள இந்த ஊர் இருக்கும் இடம் இன்னதென்று திட்டமாய்ச் சொல்வது முடியாது. மீகா $1^{10}$.

**பெத்-அரபா.** Beth-arabah. எரிகோ பட்டணத்தின் சமபூமியிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{6}$ $18^{22}$. அரபா காண்க.

**பெத்-ஆவேன்.** Beth-aven. [அக்கிரமத்தின் வீடு.] ஆயீபட்டணத்துக்குச் சமீபமாய் வனாந்தரத்திலுள்ள ஒரு ஊர். யோசு $7^{2}$ $18^{12}$ 1 சாமு $13^{5}$ $14^{23}$ ஓசி $5^{8}$ $10^{5}$.

**பெத்-எக்லா.** Beth Hogla. [கௌதாரியின் வீடு.] எரிகோபட்டணம் இருக்கிற சமபூமியிலுள்ள ஓர் ஊர். இதுவும் பெத்-ஒக்லாவும் ஒன்றுதான். யோசு $15^{6}$ $18^{19}$.

**பெத்-ஏசல்.** Beth-Ezel. பெலிஸ்தியர் சமபூமியில் உள்ள ஒரு ஊர். மீகா $1^{11}$. ஒருவேளை இதுவும் ஆத்சாலும் ஒன்றாயிருக்கலாம். சக $14^{5}$.

**பெத்-ஏதேன்.** House of Eden. [பிரியமுள்ள வீடு.] தமஸ்குபட்டணம் இருந்த நாட்டிலுள்ள ஒரு ஊர். ஆமோ $1^{5}$.

**பெத்-ஒக்லா.** Beth-Hogla. யோசு $18^{19}$. பெத் எக்லா காண்க.

**பெத்-கமூல்.** Beth-Gamul. [ஒட்டகத்தின் வீடு.] மோவாப் தேசத்திலுள்ள ஒரு இடம். எரே $48^{23}$.

**பெத்-காதேர்.** Beth-gader. பெத்லெகேமுக்குச் சமீபமாய் இருந்திருக்கவேண்டியது. இதுவும் கெதேரும் ஒன்றாயிருக்கலாம். யோசு $12^{13}$ 1 நாளா $2^{51}$.

**பெத்-காரீம்.** Beth-Car. [ஆட்டுக்குட்டியின் வீடு.] இந்தப் பெயர் சரியாய் எழுத வேண்டுமானால் பெத்கார் என்று இருக்க வேண்டியது. இது எருசலேம் நகரத்துக்குச் சமீபமாய் மேற்குத்திசையில் இருந்திருக்கவேண்டியது. 1 சாமு $7^{11}$.

**பெத்-கில்கால்.** Beth-Gilgal. [கல் குவியலின் வீடு.] எரிகோபட்டணத்துக்குக் கிழக்கிலிருந்த ஒரு ஊர். நெகே $12^{29}$. ஒருவேளை இதுவும் யோர்தான் நதியைக்கடந்து இஸ்ரவேலர் தங்கின கில்காலும் ஒன்றுதான். யோசு $4^{19}$.

**பெத்-கேரேம்.** Beth-Haccherem. [திராட்ச தோட்டத்தின் வீடு.] இது பெத்லெகேம் ஊருக்குத்தெற்கில் இருந்திருக்கலாம். இதின் பக்கத்தில் தீபஸ்தம்பத்தையும் ராஜகொடியையும் நாட்டினதற்கு ஒப்பான ஒரு மலை இருக்கும். நெகே $3^{14}$ எரே $6^{1}$.

**பெத்சாயீதா.** Bethsaida. [வலைகளின் ஊர், அல்லது வேட்டையின் ஊர்.] கலிலேயாக் கடலின் வடக்கரையிலிருக்கும் ஓர் ஊர். அந்திரேயா, பேதுரு, பிலிப்பு என்பவர்களுடைய ஊர். யோவா $1^{44}$. இயேசு பலதடவை அங்கே போனார். மத் $11^{21}$ மாற் $8^{22}$ லூக் $8^{10}$ $10^{13}$. காற்பங்கு தேசாதிபதியாகிய பிலிப்பு இதை அலங்கரித்தான். இதற்குக் கிட்டக் கலிலேயாக் கடலில் மீன்கள் ஏராளமானதினாலே, இயேசுவின்காலத்தில் மீன்பிடிகாரரும் மீன் வியாபாரிகளும் பெத்சாயீதா ஊரிலே வாசம் பண்ணித் தங்கள் தொழிலை நடத்திவருவார்கள்.

**பெத்சாய்.** Bezai. நெகே $10^{18}$.

**பெத்-சான்.** Beth-shan. [சாந்தத்தின் வீடு.] இசக்கார் கோத்திரத்தின் எல்லைக்குள் மனாசே என்னும் கோத்திரத்தார் வசத்திலிருந்த ஒரு ஊர். கலிலேயாக் கடலின் தென்மேற்கில் 12-மைலுக்கப்பால் இருக்கிறது. யோசு $17^{11}$. நியா $1^{27}$. இவ்விடத்தில் பெலிஸ்தியர், இறந்துபோன சவுலின் உடலையும் அவன் புத்திரரின் உடல்களையும் அவமானப்படுத்தினார்கள். 1 சாமு $31^{10}$.

**பெத்-சித்தா.** Beth-shittah. [சித்தீம் மரத்தின் வீடு.] யெஸ்ரயேல் பள்ளத்தாக்கில் உள்ள ஒரு ஊர். நியா $7^{22}$.

**பெத்-சூர்.** Beth-Zur. [மலை வீடு.] எபிரோன் மலைநாட்டிலுள்ள ஒரு ஊர். இதில் ரெகொபெயாம் என்னும் ராஜா ஒரு பெரிய கோட்டை கட்டினான். யூதர்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு அவர்கள் இந்தக் கோட்டையில் தங்கள் போர் வீரர்களில் அநேகரை வைத்தார்கள். இதற்குச் சமீபமாய் கி—மு. 165-ல் யூதா மக்கபேயு என்பவன் யூதஜனங்களை உபத்திரவப்படுத்தின கிரேக்கர்களை ஜெயித்தான். யோசு $15^{58}$ 1 நாளா $2^{45}$ நெகே $3^{16}$ 1 மக்கபெயர் $4^{29}$.

**பெத்-செயான்.** Beth-shean. பெத்சான் காண்க.

**பெத்-ஷிமேஸ்.** Beth-shemesh. பெத்-ஷேமேஸ் காண்க.

**பெத்-ஷேமேஸ்.** Beth-shemesh. [சூரியனுடைய வீடு அல்லது சூரியனுடைய ஆலயம்.]

1. யூதா கோத்திரத்தின் நாட்டில் எருசலேம் பட்டணத்துக்கு மேற்கே 15 மைல் தூரத்திலுள்ள ஒரு ஊர். யோசு $15^{10}$. இதற்கு இர்ஷேமெஸ் என்று மறுபெயர். யோசு $19^{41}$. இது லேவியர்களுடைய மானியம். பெலிஸ்தியர் தேவனுடைய பெட்டியை இதற்குத் திருப்பி அனுப்பினார்கள். 1 சாமு $6^{9}$. இவ்விடத்தில் இஸ்ரவேல் ராஜாவாகிய யோவாஸ் யூதாராஜாவாகிய அமத்சியாவை ஜெயித்தான். 2 இரா $14^{11}$. ஆகாஸ் காலத்தில் பெலிஸ்தியர்கள் இதைப் பிடித்தார்கள். 2 நாளா $28^{18}$.

2. இசக்கார் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{22}$.

3. நப்தலி கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{38}$.

4. ஆவேன் காண்க. எரே $43^{13}$.

**பெத்தகியா, பெத்தகீயா.** Bethahiah. [யேகோவா திறக்கிறார்.]

1. ஆசாரியரின் 19-ம் வகுப்புக்குத் தலைவன். 1 நாளா $24^{16}$.

2. ஒரு லேவியன். எஸ்றா $10^{23}$.

3. ஒரு யூதன். நெகே $11^{24}$.

**பெத்-தப்புவா.** Beth-Tappuah. [இலந்தைப்பழ வீடு.] இது எபிரோன் மலைநாட்டில் உள்ள ஒரு ஊர். யோசு $15^{53}$.

**பெத்-தாகோன்.** Beth-Dagon. [தாகோன் என்னும் தேவதையின் வீடு.]

1. யூதா நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{41}$.

2. ஆசேர் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{27}$.

**பெத்தாபரா.** A. V. Bethabara. R. V. Bethany beyond Jordan. [ஆற்றில் இறங்குதுறை.] யோர்தானுக்குக் கிழக்காக இருக்கும் ஓர் இடம். யோவா $1^{28}$. யோவான்

இங்கே ஞானஸ்நானங் கொடுத்து, இயேசுவைக்குறித்துச் சாட்சி பகர்ந்தான். யோவா 1:19-34.

**பெத்-தாபரா.** Beth-barah. யெஸ்ரெயேல் பள்ளத்தாக்கில் யோர்தான் நதிக்கு அருகில் உள்ள ஒரு ஊர். நியா 7:24. இதுவும் யோவான் சுவிசேஷத்தில் சொன்ன பெத்தாபராவும் ஒன்றுதான் என்று சிலர் நினைத்தாலும், அதற்குப் போதுமான சாக்ஷி இல்லை. யோவா 1:28.



பெத்தானியா.

**பெத்-தாரன்**. Beth-Haran. எண் $32^{36}$. பெத்தாராம் காண்க.

**பெத்-தாராம்**. Beth-Haram. [உயர்ந்த இடமான வீடு.] யோர்தான் நதிக்குக் கிழக்கே சாக்கடலின் வடகரைக்கு 4 மைல் தூரத்திலுள்ள ஊர். எருசலேம் பட்டணத்துக்குப் போகும் பிரயாணிகள் இதில் ஸ்நானம் பண்ணுவார்கள். இதில் ஏரோது அந்திப்பா ஒரு மாளிகை கட்டினான். யோசு $13^{27}$ எண் $32^{36}$.

**பெத்தார்பேல்**. Beth-arbel. இந்த ஊர் இருக்கும் இடம் திட்டமாய்த் தெரியாது. கானான் தேசத்துக்கு வடக்கிலுள்ள சீரியாதேசத்தில் இருந்திருக்கலாம். ஓசி $10^{14}$.

**பெத்தாவேன்**. Beth-aven. பெத் ஆவேன் காண்க.

**பெத்தானியா**. Bethany. [அத்திப்பழத்தின் வீடு.]

1. யூதர்நாட்டில் ஒலிவமலை அடிவாரத்தில் எருசலேமிலிருந்து இரண்டு மைல் தூரத்திலிருக்கிற ஓர் ஊர். யோவா $11^{18}$. எருசலேமிலிருந்து எரிகோவுக்குப் போகும் வழி இதின் ஊடே செல்லும். இயேசுவின் சிநேகிதராகிய லாசருவும், மரியாளும், மார்த்தாளும் இங்கே வாசமாயிருந்தார்கள். யோவா $11^{1-5}$. இயேசு தம்முடைய ஜீவியகாலத்தின் கடைசி வாரத்தில் இவர்களோடு தங்கியிருந்தாரென்று எண்ணலாம். மத் $21^{17}$ மாற் $11^{11-19}$. இங்கே குஷ்டரோகியாகிய சீமோனுடைய வீட்டிலே, மரியாள் இயேசுவுக்குப் பரிமள தைலம் பூசினாள். மத் $26^{6}$ மாற் $14^{3}$ யோவா $12^{1}$. ஆதி கிறிஸ்தவர்கள் இதற்கு ஸ்தலயாத்திரை செய்து இங்கேயுள்ள கன்மலையில் விநோதமான ஒரு பெரிய கோயிலை வெட்டினார்கள்.

2. யோவா $1^{28}$–ல் சொன்ன 'பெத்தாபரா' என்பதற்குப் பதிலாக அநேக கையெழுத்துப் பிரதிகளில் 'பெத்தானியா' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது கலிலேயா நாட்டிலாவது, கலிலேயா நாட்டுக்குச் சமீபத்திலாவது இருந்த ஒரு ஊர் என்று தோன்றுகிறது.

**பெத்-திப்லாத்தாயீம்**. Beth-Diblathaim. [இரண்டு அத்திப்பழ வற்றல்களின் வீடு.]

இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பயணம் பண்ணும்போது நேபோ மலைநாட்டில் பாளையம் இறங்குமுன்னதாக பாளையம் இறங்கின இடம் இதுதான். எண் $33^{46}$ எரே $48^{22}$. இதுவும் **அல்மோன்-திப்லாத்தாயீமும்** ஒன்றுதான்.

**பெத்துவேல்**. Bethuel. [கடவுளின் சமுகத்தில் வசிக்கிறவன்.]

1. நாகோரின் மகன். லாபனுக்கும் ரெபேக்காளுக்கும் தகப்பன். ஆதி $22^{23}$ $24^{15-50}$ $28^{5}$.

2. = பெத்தூல். 1 நாளா $4^{30}$ யோசு $19^{4}$.

**பெத்துவேல்**. Pethuel. [கடவுள் மீட்கிறார்.]

யோவேல் தீர்க்கதரிசியின் தகப்பன். யோவே $1^{1}$.

**பெத்தூர், பேத்தோர்**. Pethor. [விசாலமான வீடு.] ஐபிராத்து நதியின் மேல்கரையிலுள்ள ஒரு ஊர். பிலேயாம் தீர்க்கதரிசி இதில் வாசம்செய்தான். எண் $22^{5}$ $23^{4}$.

**பெத்தூல்**. Bethul. [கடவுளின் சமுகத்தில் வசிக்கிறவன்.] யூதாநாட்டில் உள்ள ஒரு ஊர். இதுவும் பெத்துவேலும் பெத்தேலும் (2) ஒன்றுதான். யோசு $19^{4}$ 1 சாமு $30^{27}$ 1 நாளா $4^{30}$.

**பெத்தேமேக்கு**. Beth-Emek. [ஆழ்ந்த பள்ளத்தாக்கின் வீடு.] செபுலோன் கோத்திரத்தார் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{27}$.

**பெத்தேல்**. Bethel. [கடவுளுடைய வீடு.] முன் இதற்கு 'லூஸ்' என்று பேர். ஆதி $28^{19}$ $35^{6}$. மலைநாட்டில் எருசலேமுக்கு வடக்கே ஏறக்குறைய பதினொருமைல் தூரத்திலிருக்கும். ஆபிரகாம் இங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினான். ஆதி $12^{8}$ $13^{3-4}$. யாக்கோபு ஆரானுக்குப் போனபோதும், பதான் அராமிலிருந்து திரும்பிவந்தபோதும், கடவுள் அவனுக்கு இங்கே தரிசனையை அருளினார். ஆதி $28^{10-11.19}$ $35^{1-15}$. ஆதலால் இந்த இடம் மகாப் பரிசுத்த ஸ்தலம் என்று இஸ்ரவேலர் எண்ணினார்கள். நியாயாதிபதிகளின் காலத்தில் வடகோத்திரத்தாருக்கு மார்க்க விஷயத்திற்கு மத்திய ஸ்தானமாயிருந்தது. நியா $20^{18-26}$ $21^{2}$. இந்த வசனங்களில் 'தேவனுடையவீடு' என்பது பெத்தேல் ஊர்தான். 1 சாமு $7^{16}$ $10^{3}$. பெத்தேல், இஸ்ரவேல், யூதா என்னும் ராஜ்யங்களின் எல்லைகளிலிருந்தாலும் பெரும்பாலும் இஸ்ரவேலருக்குரியதாயிருந்தது. முதல் யெரொபெயாம் பூர்வீக கானானியருடைய மார்க்க அனுசரணைகளுக்கு இசைந்து மார்க்க விஷயங்களுக்கு இந்த ஊரைத் தலைநகராக்கி இஸ்ரவேலர் வணங்கும்படி இதிலே ஒரு பொற்கன்றுக்குட்டியை ஸ்தாபித்தான். 1 இரா $12^{28-29.32-33}$. பெத்தேலில் நடந்த தேவ

வணக்கத்திலே பொல்லாத விஷயங்கள் உண்டு. ஓசி $10^{15}$ ஆமோ $4^{4}$ $5^{5}$.

யோசியா மார்க்கத் திருத்தங்களைச் செய்த போது அங்கேயிருந்த பலிபீடத்தை அழித்துப்போட்டான். யோசு $7^{2}$ $8^{9.12.17}$ 1 இரா 13 அதி 2 இரா $2^{2-3}$ 2 இரா $23^{4.15-20}$.

பெத்தோரோன். Beth-horon. [கெபிகளுள்ள இடம்.] மேல் பெத்தொரோன் கீழ் பெத்தொரோன் என்னும் இரண்டு சிறு பட்டணங்களும் சேராள் என்பவளால் கட்டப்பட்டன. 1 நாளா $7^{24}$. சாலொமோன் இவைகளைத் திரும்பக் கட்டிக் கோட்டை கொத்தளங்களை உண்டாக்கினான். 2 நாளா $8^{5}$. இப்பட்டணங்கள் ஆயலோன் பள்ளத்தாக்கிலிருந்து கிபியோனுக்குப் போகும் பாதைக்குச் சமீபமாயிருக்கின்றன. இவைகள் ஒன்றுக்கொன்று இரண்டு மையில் தூரம். யோசு $10^{10-11}$ 2 நாளா $25^{13}$.

இவைகள் கடல் ஓரத்தில் உள்ள ஜாதியார்களுக்கும் யூதேயா ராஜ்யத்திற்கும் இடையிலுள்ள எல்லைகளிலிருக்கின்ற கோட்டைகளானதினால், இவைகளில் பல யுத்தங்கள் நடந்தன. யோசு $10^{10}$. யூதாஸ் மக்கபெயர் இந்த ஊர்களில் சீரிய ராஜாவின் சேனாதிபதிகளை கி—மு. 166-ம் வருஷத்திலும் 161-ம் வருஷத்திலும் இரண்டுதடவை ஜெயித்து அந்த ராஜாவின் ஆளுகையை நீக்கி யூதர்களுக்கு விடுதலை உண்டாக்கினான். 1 மக்கபெயர் $3^{13}$ $7^{39}$.

பெத்தோர். Pethor. பெத்தூர் காண்க.

பெத்தோனீம். Betonim. கீலேயாத் நாட்டின் வடபாகத்திலுள்ள ஓர் கிராமம். யோசு $13^{26}$.

பெத்–நிம்ரா. Beth–Nimrah. எண் $32^{36}$. நிம்ரா காண்க.

பெத்பகே. Bethphage. [அத்திப்பழத்தின் வீடு.] பெத்தானியாவுக்குச் சமீபமாயிருக்கிற ஓர் ஊர். இது ஒலிவமலையிலே இருக்கிறதாக எண்ணப்படுகின்றது. மாற் $11^{1}$.

பெத்-பலேத். R. V. Beth–Pelet, A. V. Beth-Palet. யோசு $15^{28}$. பெத்பெலேத் காண்க.

பெத் பாகால் மெயோன். Beth–baal–meon. யோசு $13^{17}$. பாகால் மெயோன் காண்க.

பெத்–பாத்சேஸ். Beth–Pazzez. [சிதறடிக்கும் வீடு.] இஸக்கார் கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $19^{21}$.

பெத்பிரீ. Beth-Biri. = பெத்லெபாவோத். 1 நாளா $4^{31}$.

பெத்–பெயோர். Beth-Peor. [பாகால் பெயோர் என்னும் தேவதையின் வீடு.] ரூபன் கோத்திரத்தார் நாட்டில் நேபோ மலைக்குச் சமீபமாய் உள்ள ஒரு ஊர். எகிப்துதேசத்திலிருந்து வந்த இஸ்ரவேலர் இதில் பாளையம் இறங்கினார்கள். உபா $3^{29}$ $4^{46}$. இதில் இஸ்ரவேலர் பெரும் பாவங்களைச் செய்தார்கள். எண் $25^{1}$. இதற்கு அருகாமையில் மோசேயினுடைய பிரேதம் அடக்கம் பண்ணப்பட்டது. உபா $34^{6}$.

பெத்–பெலேத். Beth-Pelet. [மீட்பின் வீடு.] இதுவும் பெத்பலேத்தும் ஒன்றுதான். யூதா ராஜ்யத்தின் தென்பாகத்திலிருந்த சிமியோன் கோத்திரத்தார் நாட்டிலுள்ள ஒரு ஊர். இது பெயெர்செபா என்னும் ஊருக்குத் தெற்கிலிருந்தது என்பதை ஒழிய இது இருந்த இடத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. பல்தியனாகிய ஏலெஸ் இந்த ஊரான். யோசு $15^{28}$ நெகே $11^{26}$ 2 சாமு $23^{26}$. இவன் 'பெலொனியன்' என்று சொல்லப்படுவான். 1 நாளா $11^{27}$ $27^{10}$.

பெத்-மாக்கா. Beth-maacah. [வருத்தங்களின் வீடு.] இதுவும் ஆபேல் பெத்மாக்காவும் ஒன்றுதான். இது காணன் தேசத்தில் கலிலேயாக் கடலுக்கு வடகிழக்குத் தேசத்திலிருக்கிறது. 2 சாமு $20^{14-18}$ 1 இரா $15^{29}$ 2 இரா $15^{29}$. ஆபேல் காண்க.

பெத்-மார்க்கபோத். Beth-marcaboth. [இரதங்களிருக்கும் வீடு.] சிமியோன் கோத்திரத்தார் நாட்டின் தென்பாகத்திலுள்ள ஓர் ஊர். யோசு $19^{5}$.

பெத் மெயோன். Beth-meon. எரே $48^{23}$. பாகால் மெயோன் காண்க.

பெத்-யெசிமோத்து. Beth-Jeshimoth. [வனாந்தரமான வீடு.] இஸ்ரவேல் புத்திரர் மோவாப் தேசத்தில் அலைந்து திரியும் போது அவர்கள் கடைசி வருஷங்களில் அதின் தென்திசையில் பாளையம் இறங்கினார்கள். இது சாக்கடலின் தென்கரைக்குச் சமீபமாயுள்ளது. பிந்தினகாலத்தில் ரூபன் கோத்திரத்தின் நாட்டிலே சேர்ந்திருந்தது. எசேக்கியேல் தீர்க்கதரிசியின் காலத்தில் இது மறுபடியும் மோவாப் ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. எண் $33^{49}$ யோசு $12^{3}$ $13^{20}$ எசே $25^{10}$.

பெத்-ராபா. Beth-Rapha. [ராட்சதன் வீடு.] இது இருந்த இடம் தெரியாது. 1 நாளா $4^{12}$.

பெத்-ரேகோபு. Beth–Rehob. இஸ்ரவேலின் தென்பாகத்தில் உள்ள தாண்

கோத்திரத்தின் நாட்டைச்சேர்ந்த ஒரு ஊர். இதிலிருந்த ஜனங்கள்தான் தாவீதுக்கு விரோதமாய்ப் படையெடுத்தவர்கள். நியா 18[28] 2 சாமு 10[6].



தற்காலத்து பெத்லெகேம்.

**பெத்லெகேம்.** Bethlehem. [ஆகார வீடு.]

1. யூதாவிலுள்ள பெத்லெகேம். முன்னே இதற்கு 'எப்பிராத்தா' என்று பேர். இது எருசலேமுக்குத் தெற்கே ஐந்து மைல் தூரத்திலிருக்கிற ஒரு ஊர். ராகேல் அடக்கம் பண்ணப்பட்ட இடம். ஆதி 35[16-19]. இது தாவீதின் பட்டணம், இங்கே சாமுவேலினால் அவன் அபிஷேகம் பண்ணப்பட்டான். 1 சாமு 16[1-13]. ரெகொபெயாம் இதை அரணபடுத்தினான். 2 நாளா 11[6]. இயேசுவின் பெற்றோர் தாவீதின் வம்சத்தைச் சேர்ந்தவர்களானபடியால், குடிமதிப்பு எழுதும்படி இங்கே வந்தார்கள். அவ்வேளையில் இயேசு இங்கே பிறந்தார். ரூத் 1[1-2.22] 2 சாமு 23[14-16] மீகா 5[2] மத் 2[1.5.6.8] லூக் 2[4.15].

1 நாளா 2[51] 4[4]-ல் சொன்ன பெத்லெகேம் இந்த ஊரை ஸ்தாபித்தவன் பேரைக் குறிக்கலாம்.

2. செபுலோனிலிருந்த ஓர் ஊர். யோசு 19[15].

**பெத் – லெபாவோத்.** Beth–lebaoth. [பெண் சிங்கங்களின் வீடு.] சிமியோன் கோத்திரத்தார் நாட்டிலுள்ள ஓர் ஊர். ஒரு வேளை இதுவும் பெத்-பிரியும் ஒன்றுதான். யோசு 19[6] 1 நாளா 4[31].

**பெந்தெகொஸ்தே.** Pentecost. அப் 2[1] 20[16] 1 கொரி 16[8]. பண்டிகை காண்க.

**பெபாயி.** Bebai. சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த ஒரு குடும்பம். எஸ்று 2[11] 8[11] 10[28] நெகே 10[15].

**பெபேயாள்.** Phoebe. கெங்கிரேயா ஊரிலுள்ள சபைக்கு உதவிக்காரியாகிய இவள் பரி. பவுல் ரோமருக்கு எழுதின நிருபத்தை ரோமாபுரிக்கு எடுத்துக்கொண்டு போனாள். ரோம 16[1].

**பெயர்.** Name. நாமம் காண்க.

**பெயர்-லகாயி-ரோயி.** Beer–lahai–roi. [என்னைப் பார்த்து உயிரோடிருக்கிறவருடைய கிணறு.] யூதாவின் தென்பாகத்திலுள்ள காதேசுக்கும் பேரேத்துக்கும் இடையிலிருந்த ஒரு கிணறு. யூதேயாவிலிருந்து எகிப்துக்குப்போகும்வழி இதின் பக்கமாய்ப் போனது. இதற்குச் சமீபத்தில் ஆகார் என்பவள் பிரயாணத்தை நிறுத்தி, திரும்பிப் போனாள். ஆதி 16[14]. இங்கே ஈசாக்கு ரெபெக்காளைச் சந்தித்தான். ஆதி 24[62].

ஆபிரகாம் இறந்துபோனபின் ஈசாக்கு இவ்விடத்திலேயே குடியேறினான். ஆதி 25[11].

**பெயாலோத்.** Bealoth. யூதாவின் தென் எல்லையில் உள்ள ஒரு ஊர். யோசு 15[24].

**பெயுள்தாயி.** Peullethai. [யேகோவா செய்கிறார்.] ஓபேத்-ஏதோமின் எட்டாம் மகன். 1 நாளா 26[5].



பெத்லெகேம் பள்ளத்தாக்கு.

**பெயெரோத்.** Beeroth. [கிணறுகள்.] பென்யமீன் கோத்திரத்திலுள்ள ஓர் ஊர். யோசு $9^{17}$ 2 சாமு $4^{2}$. இஸ்போசேத்தைக் கொன்றவனும், யோவாவின் ஆயுததாரியும் இதில் வசித்தார்கள். 2 சாமு $4^{2}$ $23^{37}$.

**பெயெர் - செபா.** Beer-sheba. [உடன்படிக்கையின் கிணறு அல்லது ஏழுகிணறுகள்] ஆபிரகாம் கூடாரம் இறங்கின இடம். ஆதி $21^{31}$. இதிலிருந்து ஆகாரை அனுப்பிவிட்டான். ஆதி $21^{14}$. இங்கே அபிமெலேக்கு என்பவனோடு உடன்படிக்கை பண்ணினான். ஆதி $21^{32}$. ஈசாக்கு இங்கே தங்கிக் கிணறு ஒன்று வெட்டினான். ஆதி $26^{23.33}$. இந்த ஊரிலிருந்துதான் யாக்கோபு ஓடிப்போனான். ஆதி $28^{10}$. அவன் தன் விருத்தாப்பியத்தில் எகிப்து தேசத்துக்குப் போகும்போது இவ்விடத்தில் பலியிட்டான். ஆதி $46^{1}$. இது யூதாவின் எல்லைக்குள்ளிருந்தாலும் சிமியோன் கோத்திரத்தாரின் வசத்திலிருந்தது. யோசு $15^{28}$ $19^{2}$. இவ்விடத்திலே சாமுவேலின் புத்திரர்கள் நியாயாதிபதிகளாய் இருந்தார்கள். 1 சாமு $8^{2}$. எலியா,

ஏசபேல் ராணியின் கைக்குத் தப்பி ஓடிப் போகும்போது இவ்விடத்திற்கு வந்தான். 1 இரா $19^{3}$. யோவாஸ் ராஜாவின் தாயார் இதில் பிறந்தாள். 2 இரா $12^{1}$. இதில், ஆகார், ஈசாக்கு, யாக்கோபு, எலியா தேவதரிசனம் அடைந்தார்கள். ஆதி $21^{17}$ $26^{24}$ $46^{2}$ 1 இரா $19^{5}$. தீர்க்கதரிசிகள் இருந்த காலம்மட்டும் எபிரெயர்கள் கானானியர் வணங்கின தெய்வத்தை இதில் வணங்கிவந்தார்கள். ஆமோ $5^{5}$ $8^{14}$. எபிரேயர்கள் இந்த ஊரைத் தங்கள் தேசத்துக்குத் தென் எல்லை என்று நினைத்தார்கள். நியா $20^{1}$. இதில் ஏழு கிணறுகள் இருக்[illegible]களாக இதில் ஜனங்கள் குடியிராவிட்டாலும் தற்சமயம் இது ஒரு பெரிய ஊராக இருக்கிறது.

பெயெல்செபூல். Beelzebul. சாத்தான் என்னும் பிசாசானவனுக்கு இந்தப் பெயரை யூதர்கள் வழக்கமாய்ச் சொன்னார்கள். இதுவும் பெலிஸ்தியர்கள் வணங்கின பாகால் செபூப்பும் ஒன்றுதான். மத் $10^{25}$ $12^{24}$ மாற் $3^{22}$ லூக் $11^{15}$. பாகால் செபூப் காண்க.

பெ–யேஸ்திரா. Be–Eshterah. [அஸ்தரோத் தேவியின் ஆலயம்.] யோர்தான் நதிக்குக் கிழக்கே பாசான் தேசத்திலுள்ள ஒரு பெரிய பட்டணம். யோசு $21^{27}$. அஸ்தரோத் (2) காண்க.

பெயேரி. Beeri.

1. ஏசாவின் மனைவியாகிய யூதீத்தின் தகப்பன். ஆதி $26^{34}$.

2. தீர்க்கதரிசியாகிய ஓசியாவின் தகப்பன். ஓசி $1^{1}$.

பெயோர். Beon. எண் $32^{3}$ பாகால் மெயோன் காண்க.

பெரகியா. Berechiah. [யேகோவா ஆசீர்வதிக்கிறார்.]

1. ஆசாபின் தகப்பன். 1 நாளா $6^{29}$.

2. செருபாபேலின் மகன். 1 நாளா $3^{20}$.

3. வேலை பார்க்கும்படி நெகேமியா நியமித்த ஒருவனுடைய தகப்பன். நெகே $3^{4}$.

4. ஒரு லேவியன். 1 நாளா $9^{16}$.

5. சகரியா தீர்க்கதரிசியின் தகப்பன். சக $1^{1}$.

6. எப்பிராயீம் கோத்திரத்தில் ஒரு தலைவன். 2 நாளா $28^{12}$.

பெராக்கா. Beracah. [ஆசீர்வாதம்.]

1. சவுலின் சகோதரரில் ஒருவன். 1 நாளா $12^{3}$.

2. எபிரோனிலிருந்து எருசலேமுக்குப் போகும் வழியில் இருக்கும் ஒரு பள்ளத்தாக்கு. யோசபாத் என்னும் ராஜா தான் மோவாபியர் முதலியவர்களை ஜெயித்ததினிமித்தம் கடவுளை நோக்கி இவ்விடத்தில் ஸ்தோத்திரம் செலுத்தினதினால் இதற்கு பெராக்கா அதாவது ஆசீர்வாதம் என்னும் பெயர் வந்தது. 2 நாளா $20^{26}$.

பொராத்சீம். Perazim. எருசலேம் பட்டணத்துக்குச் சமீபமான ஒரு ஊர். = பாகால்-பொராத்சீம். ஏசாயா $28^{21}$.

பெராயா. Beraiah. 1 நாளா $8^{21}$.

பெரிசியர். Perizzites. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் குடியேறுமுன் பெரிசியர் என்னும் ஒரு ஜாதியார் அத்தேசத்திலிருந்தார்கள். ஆதி $13^{7}$ $15^{20}$ $34^{30}$ யாத் $3^{8}$ $23^{23}$ $33^{2}$ $34^{11}$ உபா $20^{16}$ யோசு $3^{10}$ $17^{15}$ 1 இரா $9^{20}$ எஸ்று $9^{1}$.

பெரிசியரைப்பற்றி எத்தனையோ வசனங்களில் சொல்லப்பட்டிருந்தாலும் அவர்களுடைய சரித்திரம் எவ்விடத்திலும் பூரணமாக எழுதப்பட்டிருக்கவில்லை. வேதசாஸ்திரிகள் இவர்கள் விஷயத்தை விசாரணைசெய்து இவர்கள் மதில்களில்லாத பட்டிக்கிராமங்களில் வசித்த குடியானவர்களாய் இருக்கவேண்டும் என்று நினைக்கிறார்கள்.

பெரிதா. Beridah. சாலொமோனுடைய பரிவாரங்களில் ஒரு குடும்பம். = பெருதா. நெகே $7^{57}$ எஸ்று $2^{55}$.

பெரியவன், பெரியமனுஷர், பெரியோர். The great. யாத் $11^{6}$ யோசு $14^{15}$ 2 சாமு $3^{38}$ 2 இரா $5^{1}$ $10^{6}$ யோபு $32^{9}$ நீதி $18^{16}$ பிர $2^{9}$ ஏசா $2^{9}$ தானி $2^{48}$ நாகூ $3^{10}$ மத் $20^{25}$ மாற் $10^{42}$ லூக் $1^{32}$ அப் $8^{9}$ வெளி $6^{15}$ $18^{23}$ $20^{12}$.

பெரீம். Berites. தாவீதுக்கு விரோதமாய் ராஜதுரோகம் செய்த சேபாவுக்கு உதவிசெய்தவர்கள். பெரீம் என்பது பிக்கிரியர் என்பதைக் குறிக்கும். ஏனென்றால் வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயப்படி அவர்களும் இவர்களும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்கள். 2 சாமு $20^{1.14}$.

பெருகுகிறது. Increase, multiply.

1. அதிகரிக்கிறது. ஆதி $1^{28}$ $8^{17}$ $22^{17}$ $35^{11}$ உபா $7^{13}$ $28^{63}$ நீதி $9^{11}$ $28^{8}$ $29^{16}$ பிர $1^{19}$ $5^{11}$ ஏசா $9^{3}$ எசே $36^{37}$ அப் $6^{7}$ $16^{5}$.

2. வளருகிறது. அப் $12^{24}$ 2 கொரி $9^{10}$ 1 தெச $3^{12}$ $4^{10}$ 1 பேது $1^{2}$ யூதா $1^{2}$.

3. கனம் அடைகிறது. ஆதி $48^{19}$ யோவா $3^{30}$.

**பெருங்கடல், பெரிய சமுத்திரம்.** 'The Great Sea.' பெருங்கடல் என்பதும் பெரிய சமுத்திரம் என்பதும் வழக்கமாய் மத்தியதரைக்கடலைக் குறிக்கும். எண் $34^{6}$ யோசு $1^{4}$ $9^{1}$ $15^{12}$ எசே $47^{10}$ $48^{28}$. அப்போஸ்தலர் நடபடிகளில் கடல் என்பது மத்தியதரைக் கடலைத்தான் குறிக்கும். அப் $10^{6}$ $27^{30}$. இஸ்ரவேல் ஜனங்கள் கடலோரத்தில் வசித்து அவர்களில் அநேகர் கடல் பிரயாணங்களை யும் செய்யும்போது அவர்கள் சமுத்திரத்திற் கும், அதிலிருக்கும் பயங்கரமான திமிங்கலம் முதலிய ஜெந்துக்களுக்கும், அதிலடிக்கும் புசல்காற்றுக்கும், அவைகளினால் உண்டாகும் கப்பற்சேதத்துக்கும் அதிகமாய்ப் பயந்ததினாலே பரி. யோவான் மோக்ஷலோகத்திலே சமுத்திரம் இல்லை என்று மகிழ்ச்சியோடு சொல்லுகிறான். சங் $46^{2}$ $89^{9}$ ஏசா $17^{12}$ எரே $49^{23}$ வெளி $13^{1}$. மத்தியதரைக் கடல், ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா கண்டங்களுக்கு இடையிலுள்ளது. அதன் வடபுறத்தில் ஸ்பானியா, இத்தாலியா, கிரேக்கு, சின்ன ஆசியா தேசங்களும்; அதன் கிழக்குபுறத்தில் சீரியாவும், பலெஸ்தீனாவும்; தென்புறத்தில் ஆப்பிரிக்காவும் எகிப்தும் இருக்கின்றன. மேற்கில் அது ஸ்பானியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் இடையிற்சென்று அத்லாண்டிக் சமுத்திரத்தில் கலக்கிறது. இதில் சீப்புருதீவு, மெலித்தாதீவு, பத்முதீவு முதலிய தீவுகள் இருக்கின்றன. பவுல் அப்போஸ்தலன்காலத்தில் இந்தக் கடல் ஓரங்களிலிருந்த ராஜ்யங்கள் எல்லாம் ரோமராஜ்யத்தில் சேர்ந்திருந்தது. ரோமராயன் இந்தத் தேசங்களை எல்லாம் அரசாட்சிசெய்து சமாதானப்படுத்திக்கொண்டதினால் வியாபாரிகளும் இன்னும்மற்ற பிரயாணிகளும் யாதொரு இடையூறுமின்றி எந்தத்திசைக்கும் கப்பல் ஏறி இந்தக் கடலைக் கடந்துபோவார்கள்.

**பெருங்காற்று.** Storm. யோபு $21^{18}$ $38^{1}$ சங் $83^{15}$ ஏசா $29^{6}$ எரே $23^{19}$. சுழல்காற்று காண்க.

**பெருச்சாளி.** Weasel. தரையில் ஊருகிற அசுத்தமான பிராணிகளில் ஒன்று. எபிரெய பதத்துக்கு *Weasel* என்று சொல்வது தப்பு. அப்பதம் பெருச்சாளியை அல்லது ஒருவிதமான மூஞ்சூறைக் குறிக்கிறது. லேவி $11^{29}$.

**பெருதா.** Peruda. பெரிதா காண்க.

**பெருமூச்சு.** Sigh. யோபு $3^{24}$ சங் $12^{5}$ $79^{11}$ ஏசா $24^{7}$ புல $1^{22}$ எசே $21^{6}$ மாற் $7^{34}$ $8^{12}$.

**பெருமை.** Pride. சங் $10^{2}$ நீதி $8^{13}$ மாற் $7^{22}$ யாக் $4^{6}$ 1 யோவா $2^{16}$.

**பெரும்பாடு.** Issue of blood. இந்தப் பதத்துக்கு *Menorrhagia* என்னும் பெயரை வைத்திய சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். மாற் $5^{25}$ லூக் $8^{43}$.

**பெரேஸ்.** Peres. [பிரிக்கப்பட்டது.] தானி $5^{28}$. மெனே காண்க.

**பெரேலீம்.** Beer-Elim. [பராக்கிரமசாலிகளின் கிணறு.] இதுவும் பேயேர் என்னும் பாளையமும் ஒன்றுதான் என்று நினைக்க வேண்டும். எண் $21^{16}$ ஏசா $15^{8}$.

**பெரோதாக் பலாதான்.** Berodach Baladan. அசீரிய ராஜாவாகிய மெரோதாக்-பலாதான் என்பவனுடைய மறுபேர். 2 இரா $20^{12}$ ஏசா $39^{1}$. அசீரியா (பக்கம் 10) காண்க.

**பெரோத்.** Beeroth. பெயெரோத் காண்க.

**பெரோயா.** Beroea. கிரேக்க தேசத்தின் வடகிழக்குப் பாகமாகிய மக்கெதோனியா நாட்டிலுள்ள ஒரு ஊர். கி—மு. 168—ம் வருஷத்தில் இது ரோமருக்குக் கிடைத்தது. பரி. பவுல் இப்பட்டணத்திலிருந்த யூதருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான். சோபத்தர் என்பவன் இந்த ஊரான். அப் $17^{10}$ $20^{4}$. இவ்வூரார் பவுலின் பிரசங்கத்தை மனோவாஞ்சையாய் ஏற்றுக்கொண்டு, வேதவாக்கியங்களை ஆராய்ந்து, வேதாகமத்தை வாசிக்கிற விஷயத்தில் சகலருக்கும் நல்ல மாதிரியைக் காண்பித்திருக்கிறார்கள்.

**பெர்கமு.** Pergamus. பெர்கமு சின்ன ஆசியாவின் வடமேற்கு மூலையிலிருந்த நாட்டிலுள்ள ஓர் ஊர். துவக்கத்திலே இது ஒரு சிறிய ராஜ்யத்தின் முக்கிய பட்டணம். கி—மு. 133—ம் வருஷத்தில் ரோமர்கள் இந்த ராஜ்யத்தை ஜெயித்து, இதைத் தங்களுடைய ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார்கள். இது கடலுக்கு 15 மைல் தூரத்திலுள்ளது. இதினூடே பெரிய ராஜபாதை போகாததினால் இங்கு வியாபாரம் அவ்வளவு இல்லை. கிரேக்கர் வணங்கின யூப்பித்தர் தேவனுக்கும் அத்தேனே தேவிக்கும் பெரிய தேவாலயங்கள் இங்கிருந்தன. பரி. யோவான் ஏழு சபைகளுக்கு எழுதின நிருபங்களில் ஒன்று பெர்கமு சபைக்கு எழுதப்பட்டது. இந்த ஊரில் ரோமராயனுடைய சுரூபத்தை வணங்கினதினாலே இங்கே 'சாத்தானுடைய சிங்காசனம்' இருந்தது என்றான். மேலும் இச்சபையிலுள்ள சிலர் இயேசுகிறிஸ்துவின் பிரமாணங்களின்படி நியாயமாய் நடவாமல், அந்நிய மதஸ்தர்கள் வணங்கின விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டதை வாங்கிப் புசித்து, வேசித்தனம் பண்ணிவருகி

ரர்களென்றும் குறிப்பிடுகிறான். இதினாலே கொரிந்துசபையில் காணப்பட்ட குறைவுகள் பெர்கமு சபையிலும்கூட தோன்றினது என்று நினைக்கவேண்டும். வெளி $1^{11}$ $2^{12-17}$.

**பெர்கே. Perga.** பெர்கே சின்ன ஆசியாவின் தென்கரையிலுள்ள பம்பிலியா நாட்டிலிருந்த முக்கிய பட்டணமாயிருந்தது. இது கடலுக்கு 12 மைல் தூரத்திலிருந்தது. இதற்கும் கடலுக்குமிடையில் ஒரு துறைமுகமிருந்ததினாலே இதில் வியாபாரம் மிகுதி.

எபேசுப்பட்டணத்தில் வணங்கப்பட்ட தியானாள் தேவியைப்போன்ற ஒரு தேவியை இவ்வூரார் வணங்கிவந்தார்கள். பரி. பவுல் தான் செய்த முதல் பிரயாணத்தில் இதின்வழியாய் இரண்டுதடவை போனான். ஆனால் இரத்தச்சாட்சிகளைப்பற்றிய சரித்திரங்களில் பெர்கே பட்டணத்திலிருந்து வந்த இரத்தச்சாட்சிகளின் பெயர்கள் சொல்லப்படாததினாலே, இதில் கிறிஸ்தவ சபை அவ்வளவு விருத்தியடைந்ததென்று நினைக்கிறதற்கு இடமில்லை. அப் $13^{14}$ $14^{25}$.

**பெர்சியா. Persia.** எஸ்றா $1^{1}$. பார்சியர் காண்க.

**பெர்சியாள். Persis.** ரோமாபுரிச் சபையைச்சேர்ந்த ஓர் கிறிஸ்தவள். ரோமர் $16^{12}$.

**பெர்னீக்கேயாள். Bernice.** இரண்டாம் அகிரிப்பாவின் சகோதரி. இவள் மகாப் பொல்லாத ஸ்திரீ. அப் $25^{13.23}$ $26^{30}$. ஏரோது காண்க.

**பெலத்தியா. Pelatiah.** [யேகோவா மீட்கிறார்.]

1. யூதர்களில் ஒரு தலைவன். எசேக் $11^{1}$.

2. செருபாபேலின் பேரன். 1 நாளா $3^{21}$.

3. சிமியோன் கோத்திரத்தான். 1 நாளா $4^{42}$.

4. உடன்படிக்கைக்கு முத்திரை போட்டவர்களில் ஒருவன். நெகே $10^{22}$.

**பெலலியா. Pelaliah.** [யேகோவா நியாயத்தீர்ப்பு செய்கிறார்.] ஒரு ஆசாரியன். நெகே $11^{12}$.

**பெலன். Strength.** பலம் காண்க.

**பெலாகியானர். Pelagians.** பெலாகியு என்பவன் பிரித்தானியா தேசத்தில் பிறந்தவன் என்று அநேகர் நினைக்கிறார்கள். இவன் கி–பி. ஏறக்குறைய 370–ம் வருஷத்தில்பிறந்து, கல்வியிலும் பக்தியிலும் தேர்ந்தவனாயிருந்து, குருபட்டாபிஷேகம் பெறாமல் போனபோதிலும் யாவரும் புகழத்தக்க ஒரு சந்நியாசியாக இருந்தான். கி–பி. 400–ம் வருஷத்தில் ரோமாபுரிக்குச் சென்று அவ்விடத்தில் தன் மார்க்கங்களைக் கண்டித்து வேதாகமத்திலுள்ள சில புத்தகங்களைப்பற்றி வியாக்கியானங்கள் எழுதினான். இவன் தான் இயற்றிய வியாக்கியானங்களில் சில தப்பறைகளைச் சேர்த்ததினாலே வேதசாஸ்திரிகள் இவன் வேதப்புரட்டர்களில் ஒருவன் என்று நினைக்கிறார்கள். கி–பி. 410–ம் வருஷத்தில் ஜெர்மானிய தேசத்திலிருந்து வந்த கோத்தர் (*Goths*) ரோமாபுரியைப் பிடித்தபிறகு இவன் எருசலேமுக்குப் போய்ச் சிலகாலம் தங்கினான். கி–பி. 416–ம் வருஷத்தில் கார்தாகோ (*Carthage*) என்னும் பட்டணத்தில் கூடின பொதுச்சங்கத்தார் இவனுடைய தப்பறைகளைக் கண்டித்தார்கள். கி–பி. 418–ம் வருஷத்தில் ரோமராயன் இவனை ரோமாபுரியிலிருந்து தூரத்திப்போட்டான். இவன் இறந்துபோன காலத்தையும், இடத்தையும் பற்றி ஒன்றும் தெளிவாய்த் தெரியாது. என்றாலும் சுமார் கி–பி. 430–ம் வருஷத்தில் இறந்துபோனான் என்று நினைக்க இடமுண்டு.

இவனுடைய கொள்கைகளைச் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால்:

i. ஜென்மபாவம் இல்லை. ஒரு மனுஷன் தான் காண்கிற பொல்லாத முன்மாதிரிகளினால்மட்டுமே ஏவப்பட்டுப் பாவம் செய்வான்.

ii. ஆதாம் செய்த பாவம் அவன் சந்ததியாரை அல்ல அவனைமாத்திரம் கெடுத்தது.

iii. ஆதாம் பாவம் செய்யாவிட்டாலும் மரித்திருப்பான்.

iv. குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பது அவர்கள் ஜென்மபாவத்தின் நிவிர்த்திக்கல்ல, கிறிஸ்தவசபையைச் சேர்ந்திருக்கும்படிக்காக மட்டுமே கொடுக்கப்படுகிறது.

v. மனிதர்கள் பாவமே இல்லாமல் ஜீவிக்கலாம். இவ்விதமாய் நடக்க, தங்கள் முழுமனதோடு தீர்மானித்து வேதாகமத்தில் உள்ள கற்பனைகளின்படி நடந்தால் போதும்.

vi. ஒருவன் குணப்படவேண்டுமானால், தானே தேவகிருபையைத் தேடி அதற்குத் தன்னைத் திருப்பிக்கொள்ளவேண்டியது.

இதையெல்லாம் பார்த்து, பெலாகியு மனிதனுடைய சுயாதீனத்தை மேன்மைப்படுத்தி மனிதர்கள் துர்ப்பழக்கங்களிலிருந்து தங்களை விலக்கி, தேவதயவைத் தேடிக்கொள்ள, தாங்களே உத்திரவாதிகள் என்று காட்டும்படி இக்கொள்கைகளைக் கற்பித்தான் என்றும், அப்படி மனிதர்களிலிருக்கும் உத்தரவாதத்தைப் பெரிதாக நினைத்து பரிசுத்த

ஆவியானவர் அருளின நன்மைகளை அற்பமாக கொண்டான் என்றும் நாம் தீர்மானிக்கவேண்டியது.

மனிதனுடைய சுயாதீனத்தைப் பற்றிச் செய்த போதகத்தில் தப்பறைகளோடு உண்மையும் அதிகமாய்க் கலந்திருந்ததினாலே, கிறிஸ்தவர்கள் இவன் செய்த போதகம் முழுமையும் பெரும்பாலும் அங்கிகரிக்காவிட்டாலும், எக்காலத்திலும் சிலர் இம்மாதிரியான கொள்கைகளுக்கு இசைந்திருக்கிறார்கள் என்பது மெய்.

**பெலாயா. Pelaiah.**

1. எலியோனாவின் மகன். 1 நாளா 3[24].

2. நியாயப்பிரமாணத்தை விவரித்துச் சொல்ல எஸ்றாவுக்கு உதவிசெய்த ஒரு லேவியன். இவன் உடன்படிக்கைக்கு முத்திரையிட்டான். நெகே 8[7] 10[10].

**பெலிஸ்தரின் சமுத்திரம். The sea of the Philistines.**

யாத் 23[31]. பெலிஸ்தர்கள் குடியேறின சமபூமி மத்தியதரைக்கடல் ஓரத்திலிருந்ததினாலே மத்தியதரைக் கடலுக்கு 'பெலிஸ்தரின் சமுத்திரம்' என்று பெயர்.

**பெலிஸ்தர், பெலிஸ்தியா. Philistines, Philistia.**

பலெஸ்தீனா மேல்கரைக்கு தெற்கிலுள்ள எகிப்தின் நதி என்னும் சிற்றாற்றிலிருந்து யோப்பா என்னும் ஊர்மட்டும் கடலோரமாய் ஒரு சமபூமி உண்டு. அது தெற்கிலிருந்து வடக்குமட்டும் சுமார் 80 மைல் நீளமும், மத்தியதரைக்கடலிலிருந்து யூதேயா மலைநாடுவரையில் சுமார் 12 மைல் அகலமும் உள்ளது. இந்தச் சமபூமிக்குத்தான் பெலிஸ்தியா என்று பெயர். யோவே 3[4] யாத் 15[14] ஏசா 14[29,31]. பெலிஸ்தர்கள் கப்தோர் என்னும் கிரேத்தா தீவிலிருந்து இதற்கு வந்தார்கள். உபா 2[23] எரே 47[4] ஆமோ 9[7]. அவர்கள் விவசாய வேலையிலும், சிற்பசாஸ்திரத்திலும், கருமான்தொழிலிலும் வெகு தேர்ந்தவர்கள். தங்கள் தேசத்தைக் காப்பாற்றும்பொருட்டு அநேக கோட்டைகளைக் கட்டினார்கள். தாவீதின் காலம் மட்டும் இந்த ஊர்களில் காத்சா, அஸ்கெலோன், அஸ்தோத், எக்ரோன், காத் என்னும் ஊர்கள் விசேஷித்தவைகளாயிருந்தன. இந்த ஐந்து ஊர்களின் தலைவர்களுக்கு 'செரென்' (Seren) என்னும் விசேஷித்த பெயர் இருந்தது. செரென் என்பதற்கு 'வண்டி அச்சு' என்றர்த்தம். இவர்கள் அத்தேசத்தில் ஐந்து தனித்தனி ராஜாக்களைப்போல் விஷயங்களை நடத்திவந்தார்கள். யோசு 13[3] நியா 3[3] 16[5-30] 1 சாமு 5[8] 6[4-18] 7[7] 29[2] 1 நாளா 12[19].

நியாயாதிபதிகளின் காலம்வரையில் பெலிஸ்தர்களைப்பற்றி வேதாகமத்தில் ஒன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஆதலால் அக்காலம்மட்டும் கானான் தேசத்திற்கு வந்த எபிரெயர்கள் இவர்கள் தேசத்தின் எல்லைமட்டும் பிரவேசிக்கவில்லை என்று தெளிவாய் நினைக்கலாம். சம்கார் என்னும் நியாயாதிபதி முதலாவது இவர்களோடு சண்டைசெய்தான். நியா 3[31].

சிம்சோன் காலத்திலிருந்து பெலிஸ்தர்களுக்கும் எபிரெயர்களுக்கும் தீராத விரோதம் உண்டானது என்பதற்குப் பல வசனங்களில் அத்தாக்ஷிகளுண்டு. சிம்சோன், சாமுவேல், தாவீது முதலியவர்களின் சரித்திரங்களை நாம் வாசித்தால் பெலிஸ்தர்கள் எபிரெயர்களை ஜெயிக்கும்படி விரும்பினார்கள் என்று அறியலாம். இதினிமித்தம் சிம்சோன் அடிக்கடி இவர்கள் தேசத்தில்தானே நுழைந்து இவர்களை ஏமாற்றும்படி பல உபாயங்களைச் செய்தான். நியா 13-16 அதி.

ஏலி சீலோவிலே ஆசாரியனாயிருக்கும் காலத்தில் பெலிஸ்தர்கள் தைரியங்கொண்டு எபிரெயர்கள் தேசத்தின்மேல் படையெடுத்து தேவனுடைய பெட்டியைப் பிடித்தார்கள். பிறகு தங்கள் தேசத்தில் கொள்ளை நோய் அதிகமாய் உண்டானதினாலே அவர்கள் பயந்து தேவனுடைய பெட்டியைத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். அது பியூபானிக் பிளேக் என்னும் பெருவாரி வியாதியாயிருக்கலாம். 1 சாமு 4-6 அதி.

சவுல் எபிரெயர்களுக்கு ராஜாவானபிறகு பெலிஸ்தர்கள் அவனை ஜெயிக்க அதிக பிரயாசப்பட்டார்கள். ஆனால் அவன் மகனாகிய யோனத்தானும் தாவீதும் காட்டின பிரஸ்தாபமான பராக்கிரமத்தினாலே பெலிஸ்தர்கள் தோல்வி அடைந்தார்கள். 1 சாமு 13, 14, 17 அதி. ஆனால் பெலிஸ்தர்கள் பெத்சான் என்னும் ஊர்மட்டும் படையெடுத்து எபிரெயர்களின் தேசத்தில் பல நாடுகளைப் பிடித்துக் குடியேறினார்கள் என்று தோன்றுகிறது. தாவீது அரசனானபோது இவர்களை ஜெயித்து இவர்கள் தனக்குத் தீர்வை செலுத்தும்படி கட்டாயப்படுத்தினான். 1 சாமு 31[10] 2 சாமு 5[22] 8[1].

சாலொமோன் ராஜா இறந்துபோனபிறகு அவனுடைய ராஜ்யம் இரண்டு பாகங்களாக பிரிக்கப்படும்போது இஸ்ரவேல் ராஜாக்களுக்கும் யூதா ராஜாக்களுக்கும் விரோதம் உண்டானதினால் பெலிஸ்தர்கள் மறுபடியும் சுயாதீனம் அடைந்தார்கள். இஸ்ரவேலின் ராஜாக்களாகிய பாஷாவும், சிம்ரியும் பெலிஸ்தர் வசித்த கிபெத்தோன் என்னும் ஊரைப்

பிடிக்கப் படையெடுத்தார்கள். 1 நாளா 15[27] 16[15].

ஆமோஸ் தீர்க்கதரிசி பெலிஸ்தர் நாட்டிலுள்ள காத்சா என்னும் ஊரைச் சபித்தான். ஆமோ 1[6].

அசீரியா தேசத்திலிருந்து எகிப்து தேசத்துக்குப் போகும்வழி பெலிஸ்தர் நாட்டின் மூலமாய்ப் போனதினாலே எகிப்தியரின் பேரில் விரோதமாயிருந்த அசீரியர்களும் பாபிலோனியர்களும் இந்த நாட்டின் மூலமாய்த் தங்கள் சேனைகளை அனுப்ப விரும்பிப் பலதடவைகளில் இத்தேசத்தை ஜெயிக்கப் பிரயாசப்பட்டார்கள். மூன்றாம் திகிலாத்பிலேசரும், சர்கோனும், சனகெரிபும் இவ்விதமாய் வந்தார்கள். **அசீரியா** காண்க.

சனகெரிபின் காலத்தில் பாடி என்னும் பெலிஸ்தரின் ராஜா அவனுக்குக் கப்பம் கட்டினதினாலே எசேக்கியா என்னும் யூதாவின் ராஜா பாடியின் பெயரில் படையெடுக்கும்போது சனகெரிப் எருசலேம் பட்டணத்தை முற்றுகை போட்டான். 2 இரா 18, 19. அதி.

இதற்குப்பிறகு அசீரியர்கள் பெலிஸ்தர்களின்பேரில் அதிகாரம் செலுத்திவந்தார்கள் என்று தெரியவருகிறது. அசீரிய ராஜ்யத்தின் பெருமை குறைந்தபோது எகிப்தியர்கள் பெலிஸ்தர் நாட்டில் பிரவேசித்து, பெலிஸ்தர்களைக் கீழ்ப்படுத்தினார்கள்.

பார்சிய ராஜாக்கள் பாபிலோனிய ராஜ்யத்தைப் பிடித்தபிறகு பெலிஸ்தியாவையும் யூதாவையும் பிடித்தார்கள். அதன்பின் பெலிஸ்தரைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவேயில்லை.



பெலிஸ்தர்.

பெலிஸ்தர்கள் கிரேத்தா தீவிலிருந்து வந்தவர்கள்; ஆனாலும் இவர்கள் கானானியரின் ஆசாரத்தை அநுசரித்து, அவர்கள் வணங்கின தேவதைகளையும் வணங்கிவந்தார்கள். அவர்களின் முக்கிய தெய்வமாகிய தாகோன் கானானியர் வணங்கின தேவதை. 1 சாமு 5 அதி.

தாகோனைத்தவிர அஸ்தரோத் தேவியையும் இவர்கள் வணங்கினார்கள்.

**பெலிஸ்தியா.** **Philistia.**

பெலிஸ்தர்கள் குடியேறின சமபூமி. யோவே 3[4] யாத் 15[14] ஏசா 14[29].

**பெலியாதா.** **Beeliada.** [பாகால் அறிகிறான்.]

தாவீதின் மகன். 1 நாளா 14[7]. இவனுக்குக் கடவுள் அறிகிறார் என்று அர்த்தம் கொள்ளும் எலியாத்தா என்பது மறுபெயர். ஒரு சமயத்தில், தாவீது ராஜா கானானியர் வணங்கின தேவதைக்குப் பயந்து, இவனுக்கு முதலில் பெலியாதா என்னும் பெயர் கொடுத்து, பிறகு எலியாத்தா என்னும் பெயரைக் கொடுத்தான் என்று வேதசாஸ்திரிகளில் சிலர் நினைக்கிறார்கள்.

**பெலோனியன்.** **Pelonite.**

தாவீதின் சேனைவீரரில் இருவருக்கு 'பெலோனியன்' என்ற பெயர் இருந்தது. இதினால் இவர்கள் பெத்-பெலேத் என்னும் ஊரில் பிறந்தவர்கள் என்பது குறிக்கப்படுகிறது. 1 நாளா 11[27.36].

**பெல்ஷாத்சார்.** **Belshazzar.**

தானி 5 அதி. 7[1] 8[1] நேபுகாத்நேச்சாரின் மகன். நேபுகாத்நேச்சார் அரசாட்சியின் கடைசி வருஷங்களில் இவன் பாபிலோன் பட்டணத்தில் தனது தகப்பனுக்குப் பதிலாக அப்பட்டணத்துக்குப் பிரதிகாவலனாய் வைக்கப்பட்டான். **அசீரியா** காண்க.

**பெலலியா.** **Pelaliah.** **பெலலியா** காண்க.

**பெறுகிறது.** **Bring forth.** ஆதி 3[16] 18[17] யோபு 15[35] உன். பா 8[5] ஏசா 1[14] 8[3] 45[10] 66[3]. ஓசி 1[3] மத் 21[22] 1[21.23] லூக் 1[57] 2[7] வெளி 12[5].

**பெனபெராக்.** **Bene-Berak.** யோசு 19[45].

**பெனாதாத்.** **Ben-Hadad.** [ஆதாத் தேவனின் மகன்.]

தமஸ்கு பட்டணத்தில் அரசாட்சி செய்த மூவருக்கு இந்தப் பெயர் இருந்தது.

1. முதலாம் பெனாதாத்: இவன் ஏறக்குறைய கி-மு. 913-ம் வருஷத்தில் அரசாட்சி செய்தான். இவன் யூதாவின் ராஜாவாகிய ஆசாவின் காலத்தில், இஸ்ரவேல் ராஜாவாகிய பாஷாவுக்கு விரோதமாய்ப் படையெடுத்தான். இதனிமித்தம் ஆசா தேவாலயத்தின் பொக்கிஷத்திலிருந்து இவனுக்கு நல்ல பரிசுகளைக் கொடுத்தான். 1 இரா 15[18].

2. இரண்டாம் பெனாதாத்: முதல் பெனாதாத்தின் மகன். இவன் யுத்தம் செய்வதிலும் அரசாளுவதிலும் மிக்கத் திறமையுள்ளவன். கி-மு. 854-ம் வருஷத்தில் இவனும

இஸ்ரவேல் ராஜாவாகிய ஆகாப் முதலிய சில ராஜாக்களும் அசீரிய ராஜாவாகிய இரண்டாம் சல்மனேசரை ஜெயிக்கும்படி படையெடுத்தார்கள். ஆனால் இந்தக் காலத்தைத்தவிர மற்றெல்லா காலத்திலும் ஆகாபுக்கும் இவனுக்கும் தீராவிரோதம் இருந்தது. 1 இரா 20, 22 அதி. இவனுடைய ராஜ்யத்தில் ராஜதுரோகம் செய்த ஆசகேல் கி—மு. 843—ம் வருஷத்தில் இவனைக் கொன்றுபோட்டான். 2 இரா 8[15].

3. மூன்றாம் பெனாதாத், ஆசகேலின் மகன். இவன் யுத்தத்தில் திறமையில்லாதவனாயிருந்ததால் இஸ்ரவேல் ராஜாவாகிய யோவாஸ் மூன்றுதரம் இவனை ஜெயித்து இவன் தகப்பன் பிடித்த நாடுகளை ஏறக்குறைய கி—மு. 797—ம் வருஷத்தில் மறுபடியும் தன்னுடைய ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டான். 2 இரா 13[24]. அசீரியர்களுங்கூட இவனை ஜெயித்தார்கள்.

**பெனயா.** Benaiah. [யேகோவா கட்டினார்.

1. தாவீதின் போர்வீரர்களில் தைரியசாலியாயிருந்த ஒருவன். இவன் ராஜனான சாலொமோனுக்கு உதவிசெய்து அவனுக்கு பட்டாபிஷேகமானபிறகு அவன் சேனையில் தலைவனாயிருந்தான். 2 சாமு 8[18] 20[23] 23[20] 1 இரா 1[7-38] 2[25.35].

2. தாவீதின் முப்பது சேனைவீரர்களில் ஒருவன். 2 சாமு 23[22.30] 1 இரா 27[14].

3. சிமியோன் கோத்திரத்தான். 1 நாளா 4[36].

4. ஒரு ஆசாரியன். 1 நாளா 15[18] 16[5].

5. யோய்தாவின் தகப்பன். 1 நாளா 27[34].

6. 2 நாளா 20[14].

7. ஒரு லேவியன். 2 நாளா 31[13].

8. எஸ்றா 10[25].

9. எஸ்றா 10[30].

10. எஸ்றா 10[35].

11. எஸ்றா 10[43].

12. யூதாவில் இருந்த ஒரு பிரபு. எசே 11[1].

**பெனிக்கே, பெனிக்கேயர்.** Phoenicia, Phoenicians.

பெனிக்கேநாடு கானான் தேசத்தின் மேற்கு எல்லையிலுள்ள மத்திய தரைக்கடல் ஓரத்தில் பெலிஸ்தியா நாட்டுக்கு நேர்வடக்கிலிருந்தது. பெனிக்கேநாட்டின் மேற்கு எல்லையில் மத்திய தரைக்கடலும்; கிழக்கு எல்லையில் லீபனோன் மலையும், கலிலேயா மலைநாடும்; வடஎல்லையில் சீரியாவிலுள்ள அந்தியோகியா பட்டணமும்; தென் எல்லையில் கர்மேல் மலையும் இருந்தன. இதில் முக்கிய பட்டணங்கள் சீதோனும் தீரும்.

பெனிக்கேயர் மற்ற கானானியர்களைப் போலச் சேமியர்களாயிருந்தார்கள். சேமியர் காண்க.

அவர்கள் தேசத்தில் ஒவ்வொரு ஊரிலும் ஒரு ராஜா இருந்தான். இந்த ராஜாக்களிடத்தில் எப்போதும் தீராப்பகை இருந்ததினால், பெனிக்கேயர்கள் எல்லாரும் எக்காலத்திலாவது ஒரே பெரிய ராஜ்யத்தில் சேர்ந்திருக்கவில்லை. அவர்களிடத்திலிருந்த அத்தேசம் பெரியதேசமாயில்லாததினாலும், அதன் கீழ்ப்பாகம் விவசாயம்செய்யக்கூடாத மலைநாடாய் இருந்ததினாலும், அவர்கள் விவசாய வேலையைவிரும்பாமல்கப்பல்ஏறிப் பலதேசங்களுக்குச் சென்று வியாபாரம் செய்யும் திறமையுள்ளவர்கள் ஆனார்கள். கப்பல் பிரயாணிகளில் முதலாவது ராத்திரியில் கப்பல் பிரயாணம் பண்ணினவர்களும் துருவ நக்ஷத்திரத்தைப் பார்த்துப் பிரயாணம் பண்ணினவர்களும் இவர்களே.

இதனிமித்தம் கப்பல் பிரயாணத்தில் பேர் பெற்றவர்கள் ஆனார்கள். 1 இரா 9[27]. இவர்கள் கப்பல் பிரயாணம்பண்ணிச் சிவந்த சமுத்திரம் முதல் ஆப்பிரிக்கா கண்டத்தின் எல்லை முழுவதையும் சுற்றித் திரிந்து பார்த்தார்கள்.

வட ஆப்பிரிக்காவிலும், சீப்புருதீவிலும், சிசிலியாதீவிலும் இவர்கள் ஏற்ற துறைமுகங்களைக் கண்டுபிடித்து, தங்களுக்காக பட்டணங்களையும் கோட்டைகளையும் கட்டினார்கள்.

பெனிக்கேயர்கள் தங்கள் தேசத்தில் கட்டின பட்டணங்களில் சீதோன் பட்டணம் முக்கியமானது. சீதோன் காண்க. சமயா சமயத்தில் எபிரெயர்கள் சீதோனியர்களோடு உடன்படிக்கை செய்தார்கள். இவ்விதமாய் எபிரெயர்கள் பெனிக்கேயர்களுடன் உடன்படிக்கைபண்ணி வந்ததினால், அவர்கள் அடிக்கடி பெனிக்கேயர்கள் வணங்கின தேவதைகளை வணங்கலாயிற்று. நியா 10[6] 18[7] 1 இரா 5[6] 11[5] 16[31] 2 இரா 23[13].

இஸ்ரவேலர் எகிப்துதேசத்தில் அடிமைத்தனத்திலிருக்கும்பொழுது பெனிக்கேயர்களுடைய பட்டணங்கள் எகிப்திய ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டன. எபிரெயர்கள் எகிப்துதேசத்திலிருந்து விடுதலையடைந்த சில காலத்திற்குப் பிறகு, பெனிக்கேயர்கள் மறுபடியும் சுயாதீனம் அடைந்தார்கள் என்று தோன்றுகிறது. தாவீதின் காலத்தில் (ஏறக்

குறைய கி-பி. 1000) எபிரெயர்களுக்கும் தீரு பட்டணத்தை அரசாண்ட ஈராமுக்கும் நெருங்கிய சிநேகம் உண்டாயிருந்ததினாலே ஈராம் தேவாலயத்தைக் கட்டுவதற்கு நல்ல மரங்களை அனுப்பினான். 2 சாமு $5^{11}$ 1 இரா $5^{1}$ $7^{13}$ $9^{11}$. சுமார் கி-மு. 875-ம் வருஷத்தில் இஸ்ரவேல் ராஜாவாகிய ஆகாப் தீருவின் ராஜகுமாரத்தியாகிய எசபேலை விவாகம் பண்ணினான். 1 இரா $16^{31}$.

அசீரிய ராஜாக்கள் பல தடவைகளில் மத்தியதரைக் கடலோரத்திற்குத் தங்கள் சேனைகளைக் கொண்டுபோய்த் தீரு சீதோன் முதலிய பட்டணங்களிலிருந்த பெனிக்கேயர்களைக் கப்பம் கட்டும்படி பலவந்தம் செய்தார்கள். இதனால் இப்பட்டணத்தார் வியாபார விஷயத்தில் சிறந்தவர்களாயிருந்தும் அடிக்கடி இவர்களுடைய தேசத்துக்கு மோசம் நேரிட்டது. பாபிலோனிய ராஜாவாகிய நேபுகாத்நேச்சார் பல வருஷகாலம் தீரு பட்டணத்தை முற்றுகைப்போட்டான். எசே $26^{2}$ $29^{18}$.

நமக்குத்தெரியாதவிதமாய்ப் பார்சிய ராஜாக்களின் காலத்தில் பெனிக்கேயா தேசம் பார்சிய ராஜ்யத்தில் ஒரு நாடாய் இருந்தது. பார்சிய சக்கரவர்த்தி யுத்தம்பண்ணும்போது தீரு சீதோன் பட்டணத்தார் அவருக்கு அநேக யுத்தக்கப்பல்களைக் கொடுத்து உதவிசெய்தார்கள்.

கி-மு. 65-ம் வருஷத்தில் ரோமர்கள் இந்தத் தேசங்கள் எல்லாவற்றையும் ஜெயித்துத் தங்கள் ராஜ்யத்தில் இவைகளைச் சேர்த்துக்கொண்டார்கள். இதன்பின் பெனிக்கேயர்கள் மற்ற ஜாதி ஜனங்களோடு கலந்துபோனதினாலே இவர்களைப்பற்றிச் சரித்திர சாஸ்திரத்தில் பிற்காலத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை.

பெனிக்கேயர் அநேக தேசங்களுக்குப் போய், வியாபாரம்பண்ணி, எப்போதும் புது விஷயங்களை அறியும்படி ஆராய்ச்சி செய்து, நாகரீகத்தில் தேறினவர்கள் ஆனார்கள். இவ்விதமாய் இவர்கள் தூரதேசங்களில் தாங்கள் கண்ட சமாசாரங்களைத் தெரிவிக்கவேண்டும் என்று எண்ணி, தங்கள் பாஷையை எழுதும்படிக்குத் தாங்களே எழுத்தட்டவணையை உண்டுபண்ணினார்கள். இவர்கள் இயற்றின எழுத்தட்டவணை ஐரோப்பா கண்டத்திலும், இந்தியா தேசத்திலும் வழங்கும் அநேக பாஷைகளின் எழுத்தட்டவணைகளுக்கு ஆதாரமாயிருக்கிறது என்று நாம் சொல்லக்கூடும்.

பெனிக்கேயர்கள் பாகால், அஸ்தரோத் என்னும் தேவதைகளை வணங்கி ஆராதனையில் நல்லொழுக்கத்துக்கு விரோதமான அநேக துன்மார்க்கங்களைச் செய்தார்கள். அந்த ஆசாரத்திலும் இவர்கள் நரபலி செலுத்திவந்தார்கள். ஈராம், தீரு, சீதோன் காண்க.

**பெனியேல்.** Peniel. [கடவுளின் முகம்.] யோர்தான் நதிக்குக் கிழக்கில் அந்நதி சாக்கடலில் கலக்கிற இடத்துக்கு ஏறக்குறைய 20 மைலுக்கப்பால் வடக்கே யாபோக் என்னும் சிற்றாற்றின் கரையில் உள்ள ஒரு இடம். இதில் யாக்கோபு தேவதூதனோடு போராடினபிறகு 'நான் தேவனை முகமுகமாய்க் கண்டேன்' என்று சொல்லி அவ்விடத்திற்குக் 'கடவுளின் முகம்' என்று அர்த்தங்கொண்ட பெனியேல் என்னும் பெயரையிட்டான். ஆதி $32^{30}$. பிற்காலங்களில் இதில் கிதியோன் அழித்த ஒரு கோட்டை இருந்தது. நியா $8^{8}$.

முதலாம் யெரொபெயாம் ராஜா மறுபடியும் இதில் கோட்டை கட்டினான். 1 இரா $12^{25}$.

**பெனினு.** Beninu. நெகே $10^{13}$.

**பெனின்னாள்.** Peninnah. சாமுவேலின் தகப்பனாகிய எல்கானாவின் இரண்டாம் மனைவி. 1 சாமு $1^{2}$.

**பெனூவேல்.** Penuel. பெனியேல் காண்க.

**பெனே - யாக்கானுக்கடுத்த பேரோத்.** Beeroth-Bene-Jaakan.

'பெனே-யாக்கான்' என்பதற்கு 'அறிவுள்ளவர்களுடைய புத்திரர்' என்று அர்த்தம். இவர்கள் ஒரு கோத்திரத்தார்.

'பெரோத்' என்பதுக்குக் கிணறு என்று அர்த்தம்.

ஆதலால் முழுபெயருக்கும் 'யாக்கான் என்னும் கோத்திரத்தின் கிணறுகள்' என்பது அர்த்தம். இவர்கள் வனாந்தரத்தில் அலைந்து திரிந்த ஒரு ஜனம்.

இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பயணம் பண்ணும்பொழுது இவ்விடத்தில் பாளையம் இறங்கினார்கள். எண் $33^{31}$ உபா $10^{6}$.

**பெனோனி.** Benoni. [என் துக்கத்தின் மகன்.] ராகேல் தான் இரண்டாவது மகனைப் பெற்றபோது அவள் மகா வேதனையடைந்து மரித்துப்போகையில் இவனுக்கு 'என் துக்கத்தின் மகன்' என்று அர்த்தம் கொள்ளும் பெனோனி என்னும் பெயரைக் கொடுத்தாள். யாக்கோபு பிறகு இந்தப் பெயரை மாற்றி பென்யமீன் என்னும் பெயரை இட்டான். பென்யமீன் காண்க.

**பேன்கானன்.** **Ben-Hanan.** [தயவுள்ளவனுடைய மகன்.] 1 நாளா $4^{20}$.

**பேன்-சோகேத்.** **Ben-Zoheth.** 1 நாளா $4^{20}$.

**பேன்யமீன்.** **Benjamin.**

1. யாக்கோபின் இளைய மகனாகிய இவன் தன் தாயாராகிய ராகேலுக்கு இரண்டாம் மகன்; யோசேப்புக்கு உடன் பிறந்தவன்; யாக்கோபின் புத்திரரில் இவன்மாத்திரம் கானான் தேசத்தில் பிறந்தவன்; இவன் பிறந்தபோது இவன் தாயார் மிகுந்த வேதனையடைந்து மரிக்கையில், 'என் துக்கத்தின் மகன்' என்று அர்த்தங்கொள்ளும் 'பெனோனி' என்னும் பெயரை இவனுக்கு இட்டாள். அப்பதம் மங்களப்பெயர் அல்லாததினால் யாக்கோபு அதை மாற்றி 'என் வலது கரத்தின் மகன்' என்று அர்த்தம்கொள்ளும் 'பென்யமீன்' என்ற பெயரை இவனுக்கு இட்டான். ஒரு விருந்தில் அவ்விருந்துசெய்யும் எஜமானுடைய வலதுபக்கத்தில் உட்கார்ந்தவன் மேன்மையுள்ளவன் ஆனதினால் இந்தப் பெயர் மங்களப்பெயர் தான் என்று தோன்றுகிறது. ஆதி $30^{23}$ $35^{18}$ $48^{14}$. கானான் தேசத்தில் பஞ்சம் வந்த காலத்தில் யாக்கோபு தன் புத்திரர்களில் பத்துப்பெயர்களை எகிப்துக்குப் போய்க் கோதுமை வாங்கிவரும்படி உத்தரவு கொடுத்தும் அவன் இவனை அனுப்பவில்லை. கடைசியில் யூதாவும், ரூபனும் தாங்கள் இவனை பத்திரமாய்த் திரும்பி கொண்டுவந்து சேர்ப்பதாக வாக்களித்ததின்பேரில் இவனை அனுப்பினான். ஆதி $42^{37}$ $43^{9}$. யாக்கோபும் அவன் புத்திரர்களும் எகிப்துதேசத்தில் குடியேறுங் காலத்தில், பென்யமீனுக்குப் பத்துப் பிள்ளைகள் இருந்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $46^{21}$. ஆனால் இது எப்படி என்று தெளிவாய்த் தோன்றவில்லை.

பென்யமீன் சந்ததியாராகிய பென்யமீன் கோத்திரத்தார் நாட்டின் எல்லைக்குள்ளே பெத்தேல், கேபா, கிபியோன், கிபியா, ராமா, மிஸ்பே, எரிகோ முதலியவை இருந்தன. எரேமியா தீர்க்கதரிசி இதில் ஆனதோத் என்னும் ஊரில் பிறந்தவன். யோசு $21^{18}$ எரே $1^{1}$.

பென்யமீன் கோத்திரத்தார் யுத்தத்தில் வெகு திறமையுடையவர்கள். ஆதி $49^{27}$. பாராக் சிசெராவை ஜெயிக்கும்போது, இவர்கள் பாராக்குக்கு யுத்தத்தில் உதவிசெய்தார்கள். நியா $5^{14}$. இந்தக் கோத்திரத்துக்கு வந்த கெடுதியும், இவர்கள் தங்களுக்கு மனைவிகளைக் கொள்ளும்படி செய்த உபாயமும், நியா 19-21 அதிகாரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. எபிரெயர்களுடைய முதல் ராஜாவாகிய சவுல் இந்தக் கோத்திரத்தான். 1 சாமு $9^{16}$. தாவீது அரசாக்ஷி செய்த காலத்தில் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்த அநேகர் அவனுக்கு ராஜதுரோகம் செய்தார்கள். 2 சாமு $16^{5}$ $20^{1}$.

சாலொமோன் ராஜா இறந்துபோனபிறகு இவர்களில் சிலர் இஸ்ரவேல் ராஜ்யத்தையும் சிலர் யூதா ராஜ்யத்தையும் சேர்ந்துகொண்டார்கள். 1 இரா $12^{20.21}$. ஆசா ராஜாவின் சேனையில் அநேக பென்யமீனர்கள் இருந்தார்கள். 2 நாளா $14^{8}$. தாவீது ராஜாவின் காலத்திற்குப் பிறகு இந்தக் கோத்திரத்தாரின் சரித்திரத்தில் ஒன்றும் விசேஷமில்லை. பரி. பவுல் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவன். ரோம $11^{1}$ பிலி $3^{5}$.

இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்த அநேகர் இடதுகைப் பழக்கமுள்ளவர்கள். நியா $3^{1}$. $20^{16}$.

2. பென்யமீன் பேரனுடைய மகன். 1 நாளா $7^{10}$.

3. அந்நியஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணினவர்களில் ஒருவன். எஸ்றா $10^{32}$.

4. மதிலைப் பழுதுபார்க்கிறவன். நெகே $3^{23}$.

5. நெகே $12^{34}$.

**பேன்யமீன் வாசல்.** **The Benjamin gate.** தேவாலயம் எருசலேம் பட்டணத்தின் கிழக்குப் பாகத்திலிருந்ததினாலே அதின் மதிலும் பட்டணத்தின் மதிலும் ஒன்றாயிருந்தது. இதினால் பென்யமீன் வாசல் தேவாலயத்துக்கும், பட்டணத்துக்கும் வாசலாயிருந்ததென்று நாம் சொல்லக்கூடும். ஆனால் இது இருந்த இடம் இன்னதென்று தெளிவாய்த் தெரியாது. எரே $20^{2}$ $37^{13}$ $38^{7}$ சக $14^{10}$.

**பேன்னம்மி.** **Ben-Ammi.** [என் ஜனத்தின் மகன்] லோத்தின் இரண்டாவது குமாரத்தி பெற்ற மகன். இவன் அம்மோனியர் என்னும் ஜனத்துக்குக் கோத்திரப்பிதா என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $19^{38}$.

**பேன்னுயீல்.** **Ben-Hail** [பலமுள்ள மகன்.] 2 நாளா $17^{7}$.

## பே.

**பே.** **Pe.** எபிரெயபாஷை எழுத்தட்டவணையில் 17-ம் எழுத்து. சங் $119^{129-136}$-ல் ஒவ்வொரு வசனத்தின் முதல் பதத்தில் உள்ள முதல் எழுத்து 'பே' தான்.

**பேகோடு.** Pekod. தென்பாபிலோனியாவில் குடியேறின ஒரு ஜாதியார். எசே $23^{23}$ எரே $50^{21}$.

**பேசாய்.** Besai. எஸ்று $2^{49}$.

**பேசாய்.** Bezai. எஸ்று $2^{17}$.

**பேசுகிறது.** Speak. ஆதி $18^{27}$ சங் $5^{6}$ $15^{2}$ $31^{18}$ $63^{11}$ நீதி $6^{13}$ $12^{18}$ $16^{13}$ ஏசா $45^{19}$ மத் $13^{10}$ மாற் $1^{34}$ அப் $21^{37}$ ரோம $6^{19}$ 1 கொரி $13^{1}$ $14^{35}$.

**பேசேக்.** Bezek.

1. பூர்வீகத்தில் எருசலேம் பட்டணத்துக்கு மேற்கில் உள்ள ஒரு ஊர். நியா $1^{5}$.

2. சவுல் தனது சேனையைக் கூட்டின இடம். 1 சாமு $11^{8}$.

**பேசேர்.** Bezer. [கோட்டை.]

1. ஆசேர் கோத்திரத்தான். 1 நாளா $7^{37}$.

2. சாக்கடலுக்குக் கிழக்கே ரூபன் கோத்திரத்தார் நாட்டுக்கும் மோவாப் தேசத்துக்கும் இடையில் வனாந்தரத்திலுள்ள ஒரு அடைக்கலப்பட்டணம். உபா $4^{43}$ யோசு $21^{36}$.

**பேசோதியா.** Besodeiah. நெகே $3^{6}$.

**பேசோர்.** Besor. [சிற்றாறு.] பெலிஸ்தியா சமபூமியில் சிக்லாக்குக்குத் தெற்கே உள்ள ஒரு பள்ளத்தாக்கு. 1 சாமு $30^{9}$.

**பேதகம்.** R. V. 'Divided in your own mind' A. V. 'partial.' யாக் $2^{4}$.

**பேதம்.** Difference, Division. 1 கொரி $3^{3}$.

**பேதலிக்கிறது.** Be estranged. சங் $58^{3}$ எசே $14^{5}$.

**பேதாத்.** Bedad. ஆதி $36^{35}$.

**பேதான்.** Bedan.

1. இஸ்ரவேலை ரட்சிக்கிற நியாயாதிபதிகளில் ஒருவன். 1 சாமு $12^{11}$. பேதான் பாராக்குக்கு மறுபெயர் என்று நினைக்க வேண்டியது.

2. மனாசே கோத்திரத்தான். 1 நாளா $7^{17}$.

**பேதுரா, பேத்ரா.** Petra. சேலா காண்க.

**பேதுரு.** Peter. [பாறை.]

i. **பேதுருவின் அழைப்பு:** இயேசுநாதருடைய பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் பேதுரு என்னும் மறு நாமமுடைய சீமோன் என்பவன் பிரதானமான சீஷன். தாய் ஊராகிய கப்பர்நகூம் பட்டணத்தைச் சேர்ந்த செம்படவர்கள் குடியிருந்த பெத்சாயிதா என்னும் கிராமத்தில் சீமோனின் தகப்பனாகிய யோனா வசித்தான். மத் $16^{17}$ யோவா $1^{44}$ $21^{15}$. பெத்சாயிதாவிலே சீமோனும் இவன் மனைவியும் மாமியாரும் இவன் சகோதரனாகிய அந்திரேயாவும் ஒரேவீட்டில் வசித்துவந்தார்கள் என்று நினைக்கலாம். மாற் $1^{29}$ மத் $8^{14}$ லூக் $4^{38}$. சீமோனும் அந்திரேயாவும் கலிலேயாக்கடலில் மீன்பிடித்து ஜீவனம் செய்தார்கள். இவர்களும் யோவானும் யாக்கோபும் அந்தத் தொழிலில் கூட்டாளிகளாயிருந்தார்கள் என்று தோன்றுகிறது. மத் $4^{18}$ மாற் $1^{16}$ லூக் $5^{7}$. இயேசுநாதர் கலிலேயா நாட்டில் முப்பது வயதுவரையில் வாசம் செய்திருந்தாலும், யோவான்ஸ்நானகன் வரப்போகிற மேசியாவைக்குறித்துப் பிரசங்கம் பண்ணும்முன் சீமோன் இயேசுவைக் கண்டிருந்தானோ இல்லையோ என்று தெரியாது. எப்படியென்றாலும் யோவான்ஸ்நானகன் யோர்தான் நதிக்கு அக்கரையிலுள்ள பெத்தானியாவிலே தன் பிரசங்கத்தைக் கேட்கும்படி வந்தவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்போது, சீமோன் முதலாவது இயேசு அருளின நன்மொழிகளைக் கேட்டான். யோவா $1^{28-42}$. அக்காலத்தில் சீமோன், அந்திரேயா முதலியவர்களுடன், யோவான் ஸ்நானகன் செய்த பிரசங்கத்தைக் கேட்கும்படி அவ்விடத்திற்குப் போயிருந்தான். அந்திரேயா யோவான்ஸ்நானகனுடைய சீஷர்களில் ஒருவன் ஆனதால், யோவான்ஸ்நானகன் இயேசுவைப் பார்த்தபிறகு இவர்தான் மேசியா என்று அறிந்து அந்நற்செய்தியை அந்திரேயாவுக்குத் தெரிவிக்க, அந்திரேயா இதைக்கேட்டுச் சந்தோஷத்துடனே சீமோனுக்கு இந்தச் சமாசாரத்தைச் சொல்லி, இவனை இயேசுவினிடத்திற்குக் கூட்டிக்கொண்டு வந்தான். அப்பொழுது இயேசுநாதர் இவனிடத்திலுள்ள குணாதிசயங்களை அறிந்து அரமேய பாஷையில் 'பாறை' என்று அர்த்தங்கொண்ட 'கேபா' என்னும் மறுநாமத்தை இவனுக்கு அருளினார். அரமேயபதமாகிய 'கேபா' என்பதற்குப் பதிலாக கிரேக்கபாஷையில் 'பெத்ரொஸ்' (*Petros*) என்று சொல்லப்படும். 'பெத்ரொஸ்' என்பதற்குத் தமிழ்பாஷையில் 'பேதுரு' என்று சொல்வார்கள். இவ்விதமாய்ச் சீமோன் என்பவன் 'பாறை' என்றர்த்தங்கொண்ட பேதுரு என்னும் பெயரால் அழைக்கப்பட்டான்.

இயேசுநாதர் பேதுருவுக்கு இந்தப் பெயர் கொடுத்த காரணம் ஏதெனில், அக்காலத்தில் பேதுரு ஆத்திரகுணமுள்ளவனும், அவசரமாய்ப் பேசுகிறவனுமாயிருந்தாலும், பிற்காலங்களில் இவன் அந்தக் குணங்களை நீக்கித் தமக்காக எல்லாவற்றிலும் அசைக்கக்கூடாதவனும் உண்மையுள்ளவனுமாயிருப்

பானென்று அறிந்து இயேசு இவனுக்கு இந்தப் பெயரை அருளினார். இதைப்பெற்ற பேதுரு எப்போதும் நற்குணத்தை நாடித் தேடவேண்டியவனா யிருப்பான். அப்படி இயேசுவின் சித்தப்படி இவன் நடவாமற் போனால், இயேசு இவனைப் 'பேதுரு' என்றல்ல, 'சீமோன்' என்று அழைத்து இவனை எச்சரிப்புச் செய்தார் என்று தோன்றுகிறது. மாற் $14^{37}$ லூக் $22^{31}$ யோவா $21^{15}$.

பேதுரு முதலியவர்கள் இயேசுவைக் கண்டபிறகு இவர்தான் மேசியா என்று தீர்மானமாய் அறிந்து தங்கள் ஊருக்குத் திரும்பிப் போனார்கள். சிலகாலத்திற்குப் பிறகு இயேசுநாதர் கப்பர்நகூமிலே ஜனங்களுக்குப் போதிக்க ஆரம்பிக்கும்போது அவர் பேதுருவையும், அந்திரேயாவையும், யோவானையும், யாக்கோபையும் அழைத்து அப்போஸ்தலக் கூட்டத்தை ஸ்தாபித்தார். அவர் அந்தக் கூட்டத்தில் பன்னிருவரைச் சேர்த்த பிறகு அவர்களைச் சுவிசேஷவேலை செய்ய அனுப்பும்போது, அந்திரேயாவையும் பேதுருவையும் கூட அனுப்பினார். மத் $10^{2}$ $4^{18}$ மாற் $1^{16}$ $6^{11}$ லூக் $1^{5}$.

**II. பேதுருவினிடத்தில் தோன்றின குணங்கள்.** இயேசுநாதர் பேதுருவை அழைக்குமுன் இவனைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் இவன் மூன்று வருஷகாலம் இயேசுவுடன் சஞ்சரித்து, அவனுக்குப் பின்சென்று, அவருடைய தோழனாய் இருந்தபோது இவனிடத்தில் தோன்றிய குணங்கள் நன்றாய் விளங்கும். இவன் கல்வியில் தேறினவன் அல்ல என்றும், கல்வியின்மேல் விருப்பமுடையவன் அல்ல என்றும், வெகு ஆத்திரக்குணம் உள்ளவனென்றும் நாம் சொல்ல வேண்டியிருந்தாலும், இவன் வாய்ச்சாதுரியத்திலும் பக்திவைராக்கியத்திலும் மிகவும் தேறினவனாயிருந்தான் என்று நாம் சொல்லக்கூடும். இவனைப்பற்றிய ஐந்து விசேஷங்களை நாம் கவனித்தால் இவனுடைய குணலட்சணங்களை அறியலாம்.

i. 5,000 பெயருக்கு இயேசுநாதர் ஆகாரம் கொடுத்தபிறகு, அவர் பெத்சாயிதாவிலே ஜீவ அப்பத்தைக்குறித்துப் பிரசங்கம் பண்ணித் தமக்குப் பின்செல்லுகிற சீஷர்களுடைய பக்தியைச் சோதிக்கும்படி, தாம் அவர்களுடைய அபிப்பிராயத்துக்கேற்றபடி யூதாவில் ராஜ்யத்தை ஸ்தாபிக்காமல் ஆவிக்குரியவிதமான ராஜ்யத்தைமாத்திரம் உண்டு பண்ணப்போகிறதாக தெரிவித்தார். அப்போது அவருடைய போதகத்தைக் கேட்க வந்தவர்களில் அநேகர் வெறுப்படைந்து பின்வாங்கிப் போனார்கள். தவிரவும் இயேசுநாதருடைய பன்னிரண்டு சீஷர்களிலும் சிலருக்குச் சந்தேகம் உண்டாயிற்று. இதனிமித்தம் இயேசு பேதுருவை நோக்கி 'நீங்களும் போய்விட மனதாயிருக்கிறீர்களோ' என்று வினவ, பேதுரு சந்தேகமின்றி நாம் இந்நாள்மட்டும் கவனிக்கவேண்டிய சில வார்த்தைகளைச் சொன்னான். அதாவது தான் இயேசுவின் தெய்வீகத்தன்மையை நன்றாய் அறிந்திருப்பதைக் காட்டும்படி 'நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நாங்கள் விசுவாசித்தும் அறிந்தும் இருக்கிறோம்' என்றான். யோவா $6^{66.69}$.

ii. இயேசுநாதர் சுவிசேஷ ஊழியத்தை நடத்தின கடைசி வருஷத்தில் அவரும் சீஷர்களும் செசரியா பிலிப்பி என்னும் நாட்டில் அலைந்து திரியும் காலத்தில் அவர் தமது பெயரில் அநேகர் இனிமேல் பக்தி வைக்கமாட்டார்கள் என்றும், தமது சத்துருக்கள் அதிக விரோதங்கொண்டு தம்மை கொல்லப்போகிறார்கள் என்றும், தாம் அவர்களுடைய கைகளில் அகோரவிதமாய் மரிக்க வேண்டும் என்றும் உணர்ந்து தம்முடைய சீஷர்களுக்கு இதனால் பயமும், சந்தேகமும் இருக்குமோ இல்லையோ என்று பார்க்கும்படி 'நீங்கள் என்னை இன்னார் என்று சொல்லுகிறீர்கள்' என்று கேட்டார். அப்பொழுது பேதுரு சற்றும் பயமும் சந்தேகமுமில்லாமல், 'நீர்தான் கிறிஸ்து' என்று சொல்லி இவ்விதமாய் இயேசுநாதர் கட்டப்போகிற சபைக்குத் தான் அஸ்திபாரக்கல்லா யிருக்கப்போகிறதைக் காண்பித்தான். இதைக் கேட்டபிறகு இயேசுநாதர் தாம் அடையப் போகிற மரணத்தைப்பற்றிப் பேசினபோது, பேதுரு வெறுப்புடனே 'இது உமக்கு நேரிடாம லிருக்கக்கூடாதோ' என்று கேட்டான். இயேசுவுக்கு இந்தக் கெடுதி வராதபடி இவன் விரும்பினதினாலே, இவன் இயேசுவின் முழுக்கருத்தையும் நன்றாய் அறியவில்லை என்று தோன்றினாலும், இவன் இயேசுவின் மேல் வைத்த பக்தியில் கொஞ்சங்கூட குறைவில்லை என்று நாம் சொல்லக்கூடும். மத் $16^{13}$ மாற் $8^{27}$ லூக் $9^{18}$.

iii. இதற்கு ஒருவாரத்திற்குப் பிறகு இயேசுநாதர் பேதுரு, யாக்கோபு, யோவான் என்பவர்களை அழைத்து ஓர் மலைமேல் ஏறி அவர்களுக்கு முன்பாக மறுரூபம் அடையுங்காலத்தில், பேதுரு தான் கண்டதைப் பூரணமாய் அறியாமல் 'ஆண்டவரே இங்கே இருப்பது நமக்கு நலம்; உமக்குச் சித்தமானால் இங்கே உமக்கு ஒரு கூடாரமும், மோசேக்கு ஒரு கூடாரமும், எலியாவுக்கு ஒரு கூடாரமுமாக

மூன்று கூடாரங்களைப் போடுவோம்' என்று சொன்னான். இவன் மனதில் இருந்த பக்தியினாலே இவனுக்கு இந்த எண்ணம் உண்டானது என்று தோன்றுகிறது. இவன் இப்படிச்சொன்னதின் அபிப்பிராயமென்னவெனில் நன்றியில்லாத ஜனங்களிடத்திற்கும் விரோதமாயிருந்த மூப்பர்களிடத்திற்கும் இனிப் போவது ஏன் என்றும், நாம் எல்லாரும் இந்தப் பரிசுத்த ஸ்தலத்திலே ஞான ஐக்கியத்தோடு எப்போதும் இருப்பதே உத்தமம் என்றும் அர்த்தம். இந்த வார்த்தைகளினாலே பேதுரு இயேசுவுக்கு மோசம் வரப்படாது என நினைத்தான் என்றும் இவன் எப்போதும் இயேசுவின் திருச்சமுகத்திலே இருக்க விரும்பினான் என்றும் அறிகிறோம். மத் $17^{1-8}$ மாற் $9^{2-8}$ லூக் $9^{28-36}$.

iv. இயேசு தாம் சிலுவையில் அறையப்படுவதற்குமுந்தின நாள் சாயங்காலத்தில்தமது சீஷர்களின் பாதங்களைக் கழுவும்பொழுது பேதுரு இயேசுவை இப்படிச் செய்யாதிருக்க வேண்டிக்கொண்டான். இதனால் இவன் ஆண்டவருடையமகிமையைக்கொஞ்சம் தெரிந்துகொண்டு பெரியவராகிய அவர் அடிமையின் தொழிலைச் செய்வது கூடாது என்று நினைத்தான் எனத்தெளிவாய்த்தோன்றுகிறது. மேலும் இயேசுநாதர் தமது நோக்கத்தை விளக்கிக் காட்டினபிறகு இவன் இயேசுவை நோக்கி 'ஆண்டவரே, என் கால்களைமாத்திரம் அல்ல; என் கைகளையும் தலையையும்கூடக் கழுவவேண்டும்' என்று மன்றாடினதினாலே இவன் இயேசுவின் பெயரில்வைத்த சிறந்த பக்தி மறுபடியும் தெரியவரும். யோவா $13^{6}$.

v. கெத்செமனே தோட்டத்தில் இயேசுவின் சத்துருக்கள் அவரைப் பிடிக்கும்போது, பேதுருமாத்திரம் இயேசுவைக் காப்பாற்றும்படி பட்டயத்தை எடுத்தான். அக்காலத்தில் இவன் தன் சுகத்தை நாடாமல் இயேசுவுக்கு உதவிசெய்யும்பொருட்டு இவ்விதமாய்ப் போர்புரிய ஆயத்தமுள்ளவனாயிருந்தான். யோவா $18^{10}$.

III. பேதுருவின் சோதனை: பேதுரு செய்த குற்றங்களில் இவன் பிரதான ஆசாரியன் மாளிகை முற்றத்தில் இயேசுவை மறுதலித்தது பெரும் பாவமே. நாலு சுவிசேஷகர்களும் அந்தச் சங்கதியைக் கவனித்துப் பேதுருவின் பெயரில் ஒரு வார்த்தையும் குற்றமாக சொல்லாவிட்டாலும், அவர்கள் அச்சங்கதியை விவரமாய் எழுதியிருக்கிறார்கள். மத் $26^{69}$ மாற் $14^{66}$ லூக் $22^{54}$ யோவா $18^{12}$. அக்காலத்தில் பேதுரு தனது ராஜாவாகிய இயேசுவுக்குத் துரோகம் செய்தான் என்பது உண்மையே. ஆனால் பல குற்றங்களைச் செய்த நாம் இவன் இவ்விதமாய்க் குற்றத்தில் விழும்படிக் காரணம் இல்லை என்று சொல்வது எப்படி? இதைக்குறித்து நாம் கவனிக்க வேண்டியதாவது:

i. பேதுருவும் யோவானும்மாத்திரம் பிரதான ஆசாரியன் வீட்டில் தங்களுக்கு நேரிடும் அபாயத்தைக் கவனியாமல் கெத்செமனே தோட்டத்திலிருந்து அந்த மாளிகைக்கு இயேசுவைத் தொடர்ந்துசெல்லத் துணிந்தார்கள். மத் $26^{58}$ மாற் $14^{54}$ லூக் $22^{54}$ யோவா $18^{15}$.

ii. பேதுரு தைரியசாலியாயிருந்தும், இவன் மனக்கலக்கமும் ஆத்திரக்குணமும் உள்ளவனானதால், மோசம் உண்டாகும் காலத்தில் தான் செய்யவேண்டியதின்னதென்று தெளிவாய் அறிந்துகொள்ளமாட்டான். பேதுரு இயேசுவின் பெயரில் பக்திவைத்து அவரைப் பின்தொடர்ந்து பிரதான ஆசாரியன் மாளிகையில் பிரவேசித்திருந்தாலும், இவன் அங்கே வந்தவுடனே தான் இவ்விதமாய்த் தன்னைச் சங்கரிக்க ஆயத்தமாயிருந்த சத்துருவின் கோட்டையில் நுழைந்ததைக் கண்டு, இயேசுவின்மேல் தான் வைத்திருந்த பக்தியை விட்டு தனக்கு உண்டான மோசத்தை அறிந்து சொல்லிமுடியாத மனக்குழப்பமுள்ளவனாய்த் தான் பூரணமாய் விரும்பாத வார்த்தைகளைச் சொல்லியிருக்கக் கூடும்.

iii. பேதுரு இயேசுவை மறுதலித்து மகா பாதகம் செய்தபோதிலும், இயேசுவைக் கண்டவுடனே உண்மையாய் மனந்திரும்பினான். மத் $26^{75}$ மாற் $14^{72}$ லூக் $22^{61}$.

iv. இயேசு பேதுரு செய்த பாவம் மன்னிக்கக்கூடாத பாவம் என்று எண்ணாமல், இவனுக்குப் பரிபூரண மன்னிப்பை அருளி அவர் உயிர்த்தெழுந்த முதல்நாளிலே அவனுக்குத் தரிசனம் ஆனார். அதற்குப்பின் அவர் கலிலேயாக்கடல் ஓரத்தில் தோன்றி, பேதுருவைப் பார்த்து, கிறிஸ்தவ சபையை ஸ்தாபிக்கும் விஷயமாய் இவனுக்கு உத்தம உத்தியோகத்தை அருளினார். லூக் $24^{34}$ 1கொரி $15^{5}$ யோவா 21 அதி. இவ்விதமாய் நமது ஆண்டவர் தாம் பேதுருவினிடத்தில் வைத்த விசுவாசத்தைக் காட்டினார்.

IV. பேதுருவின் ஊழியம்: இயேசு பரத்துக்கு ஏறினபிறகு பேதுரு ஆதிசபையில் தலைவனாயிருந்ததாக தோன்றுகிறது. இவன் யூதாசுக்குப் பதிலாக வேறொரு அப்போஸ்தலனைத் தெரிந்துக்கொள்ளும்படி மற்ற அப்

போஸ்தலர்களை ஏவினான். அப் $1^{15}$. பெந்தெகோஸ்தே நாளில் இவன்தான் ஜனங்களுக்குக் கிறிஸ்துமார்க்கத்தைப்பற்றிப் பிரசங்கம் பண்ணினான். அப் $2^{14}$. இவன் இயேசுவின் நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தான். அப் $3^{6}$ $5^{15}$ $9^{32}$. பிரதான ஆசாரியர்களும் மூப்பர்களும் இவனைப் பயமுறுத்தியும் இவன் அதைக் கவனியாமல் தைரியத்துடன் இயேசுவை அறிக்கையிட்டு, இயேசுவுக்காக உபத்திரவத்தைச் சகித்தான். அப் $4^{1}$ $5^{17}$ $12^{1}$. சபையில் பாவங்களை ஒழிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு குற்றவாளிகளை அதிகாரத்துடனே கண்டித்தான். அப் $5^{1}$ $8^{14}$.

ஸ்தேவான் இரத்தசாக்ஷியாய் மரித்தபிறகு கிறிஸ்துவை விசுவாசித்தவர்களில் அநேகர் மற்றத் தேசங்களுக்குத் துரத்தப்பட்டு அவ்விடங்களில் இயேசுவைக் குறித்துப் பிரசங்கம்பண்ணி அநேகரைக் குணமாக்கினதினால், கிறிஸ்தவசபையில் முதலாவது பிரிவினை உண்டாயிற்று, எப்படியென்றால் இதுவரையில் கிறிஸ்தவமார்க்கத்தாரெல்லாரும் யூதர்களாயிருந்து, இயேசுவுக்குக் கீழ்ப்படிந்து நடந்தும், அவர்கள் வழக்கமாய் மோசேயின் நியாயப்பிரமாண ஆசாரத்தின்படியும் நடந்துவந்தார்கள். இதனிமித்தம் அந்நிய மார்க்கங்களிலிருந்து கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்தவர்களில் சிலர் இரக்ஷிப்புக்காக கிறிஸ்துவை நம்பினாலும், அவர்கள் ஜீவியபழக்க வழக்கங்களில் மோசேயின் நியாயப்பிரமாண ஆசாரத்தின்படி நடக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தினார்கள். அதாவது ஒரு கிறிஸ்தவன் யூதனுமிருக்கவேண்டும் என்பது அவர்களுடைய அபிப்பிராயம். இந்தவிஷயத்தில் பேதுரு வெகு விவேகமாய்ப் பிலிப்பு முதலியவர்கள் செய்த ஊழியத்தின் மூலமாய்க் கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவர்களை விசாரித்து, இவர்கள் உண்மையாகவே கிறிஸ்துவின் சீஷர்களாயிருக்கிறார்களென்பதை அறிந்து, தான் யோப்பாவில் கண்ட தரிசனத்தின்படி கிறிஸ்துமார்க்கத்துக்கு வந்தவர்கள் கிறிஸ்துவைப் பின்சென்றால் போதும் என்று ஏற்பாடு செய்துவிட்டு எருசலேமுக்குத் திரும்பிவந்து, தான் கண்ட தரிசனத்தைக்குறித்து விவரமாய்த் தெரிவித்து, மற்றவர்களும் தான் செய்த ஏற்பாட்டுக்கு இணங்கிவரும்படி பண்ணினதினால் ஆதி கிறிஸ்தவசபைக்கு யூதமார்க்க ஆசாரபாசத்தினின்று விடுதலை உண்டாக்கினான். அப் $8^{1-25}$ $10^{1}$–$11^{19}$. சில வருஷங்களாக பேதுருவின் ஊழியத்தைக்குறித்து ஒன்றும் சொல்லப்பட்டிருக்கிறதில்லை. பிறகு ஏறக்குறைய கி-பி. 50-ம் ஆண்டில் அந்தியோகியா பட்டணத்திலுள்ள சிலர் மோசேயின் நியாயப்பிரமாண ஆசாரத்தில் வைராக்கியங்கொண்டவர்களாய், கிறிஸ்தவமார்க்கத்துக்கு வருகிறவர்களுக்கு விருத்தசேதனச் சடங்கு செய்வது அவசியம் என்று கட்டுப்பாடு பண்ணினபோது, எருசலேமிலுள்ள அப்போஸ்தலமார்கள் கிறிஸ்தவ சபையில் முதல் பொதுச்சங்கத்தைக் கூட்டி அதில் இந்த விஷயத்தைக்குறித்து விசாரித்தார்கள். பவுலும் பர்னபாவும் தங்களால் அந்நியர்களுக்கு மீட்பு அருளப்பட்டது என்று சொன்னபோது பேதுரு அவர்கள் பாரிசமாய் நின்று, மறுபடியும் கிறிஸ்தவர்கள் யூத ஆசாரத்தை அநுசரிக்க வேண்டியதில்லை என்று உறுதியாய்ச் சொன்னான். இதன் பெயரில் அப்பொதுச்சங்கத்தார் அந்நிய மதத்திலிருந்து வந்த கிறிஸ்தவர்கள் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளுக்கும், இரத்தத்திற்கும், நெருங்குண்டு செத்ததற்கும், வேசித்தனத்துக்கும் விலகியிருக்கவேண்டுமென்றும், மற்றப்படி யூத ஆசாரத்தை அநுசரிக்கவேண்டியதில்லை என்றும் தீர்மானித்தார்கள். இதற்குப்பிறகு பேதுரு அந்தியோகியாவிலுள்ள சபையைச் சந்திக்கப் போயிருந்தபோது, அவ்விடத்தில் யூத ஆசாரத்தை விரும்பின சிலர் செய்த உபாயத்திற்குத் தானும் பர்னபாவும் இணங்கி, கிறிஸ்தவ மார்க்கத்துக்கு வந்து யூத ஆசாரத்தின்படி நடவாத அந்நிய கிறிஸ்தவர்களைக் கண்டித்து, அவர்களுடன் சாப்பிடாமல் இவ்விதமாய்க் கட்சிக்காரர்கள் செய்த கட்டுப்பாட்டுக்கு உடன்பட்டார்கள். இவன் இப்படிச் செய்வது தகாது என்று பரி. பவுல் ஆக்ஷேபனை செய்தபோது, இவன் மனந்திரும்பி முன்போல நடந்துவந்தான் என்று தோன்றுகிறது. கலா $2^{11}$. இதற்குப்பிறகு இவனைப்பற்றி நிச்சயமாய் ஒன்றும் தெரியாது.

## V. பேதுருவைப்பற்றிய பாரம்பரியம்:

ஆதி சபையில் உண்டான பாரம்பரியங்களில் பேதுருவைப்பற்றிப் பல விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளை எல்லாம் இங்கே எடுத்துக் காட்டுவது அசாத்தியம். அவைகளில் விசேஷமானவை என்னவென்றால்: பேதுரு ரோமாபுரிக்குப் போய் அங்கே பல வருஷங்களாய்த் தேவ ஊழியத்தை நடத்தினான். அக்காலத்தில் நேரோராயன் கிறிஸ்தவசபையை உபத்திரவப்படுத்தினபோது பேதுரு பயப்பட்டு ரோமாபுரியைவிட்டு ஓடிப்போகும் வழியில், ரோமாபுரிக்குக் கிறிஸ்தவசபைகளுடனே உபத்திர

வப்படும்படி இயேசு வருகிறதைத் தரிசனத்தில் கண்டு மனஸ்தாபப்பட்டு ரோமாபுரிக்குத் திரும்பிப்போய், பிடிக்கப்பட்டு கி–பி. 68–ம் வருஷத்தில் ரத்தசாக்ஷியாய் மரித்தான். போர்ச்சேவகர்கள் இவனைச் சிலுவையில் அறையப்போகும்போது, இயேசு மரித்தவிதமாய் மரிக்க தான் அபாத்திரன் என்று நினைத்து, அவர்களைக் கேட்டுக்கொண்டதினால் அவர்கள் இவனைத் தலைகீழாக அந்தச் சிலுவையில் அறைந்தார்கள்.

சதாகாலங்களிலும் கிறிஸ்தவசபைக்குப் பரி. பேதுரு செய்த இன்னொரு ஊழியத்தைக் கவனிக்காமல்போவது சரியல்ல. மாற்கு சுவிசேஷகன் பரி. பேதுரு இயேசுவைக் குறித்துச் சொன்ன விஷயங்களைத் தான் இயற்றின சுவிசேஷத்தில் அடக்கியிருக்கிறான் என்பதற்குப் பல அத்தாக்ஷிகள் உண்டு. மாற்கு ரோமாபுரியில் பேதுருவுக்குத் தோழனாயிருந்து இந்தச் சுவிசேஷத்தை எழுதி, பேதுருவுக்கு அதை வாசித்துக் காட்ட பரி. பேதுரு அதெல்லாம் கேட்டு, அதற்குச் சம்மதித்துக் கிறிஸ்தவசபையார் அதை ஏற்றுக்கொள்ளலாம் என்று உத்தரவு கொடுத்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**பேதுரு எழுதின முதலாம் நிருபம். The First Epistle of Peter.**

இயேசுகிறிஸ்துவின் பெயரில் அளவற்ற பக்திவைத்து இயேசு அருளின சுவிசேஷத்தின் மூலமாய் இவ்வுலகத்தார் நல்லகதி அடைவார்கள் என்றும், இயேசுவின் ஜீவியமும், மரணமும், உயிர்த்தெழுதலும் இதற்கு ஆதாரமாயிருக்கிறதென்றும் நம்பி சுவிசேஷத்தின் மூலமாய்க் கிறிஸ்தவர்கள் நடக்க வேண்டிய நல்லொழுங்குகளைப் பரி. பேதுரு இந்த நிருபத்தில் காட்டுகிறான்.

1. **பொருளடக்கம்:** சின்ன ஆசியாவிலுள்ள கிறிஸ்தவர்களுக்கு வந்தனம் சொல்லுதல். 1^1.2.

I. கிறிஸ்தவ மீட்டைப்பற்றிய ஸ்தோத்திரமும் எச்சரிப்பும். 1^3–2^10.

i. கிறிஸ்தவ மீட்பின் உத்தமம். 1^3-12.

(a) இது நம்பக்கூடிய சுதந்தரம்.

(b) நமக்கு உபத்திரவம் உண்டாகும்போது இதிலே நமக்கு ஆறுதல் இருக்கிறது.

(c) இது தீர்க்கதரிசிகளுக்கு அருளப்பட்ட வாக்குகளின் நிறைவேற்றம்.

ii. தேவனுடைய குடும்பத்தைச் சேர்ந்து பரிசுத்தமாய் நடந்து நாம் மீட்பை அடைய வேண்டும். 1^13–2^10.

(a) நாம் நமது பரிசுத்த பரம தகப்பனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும்.

(b) பாவத்திலிருந்து நம்மை மீட்கும்படி கொல்லப்பட்ட மேசியாவின் உயிர்த்தெழுதலினால் நாம் நல்நம்பிக்கை அடைந்து இதின் மூலமாய்ப் பரிசுத்த கடவுளை அறிகிறோம்.

(c) இதினிமித்தம் தேவனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகிய நாம் ஒருவரையொருவர் சிநேகித்து ஜீவனுள்ள கற்களாயிருந்து பராபரனுக்கேற்ற தேவாலயமாவோமாக. இத்தோடு நாம் ஆசாரியர்களும் தேவனுடைய புது ஜனங்களுமாயிருப்போம்.

II. நாம் உலகத்திலும் கிறிஸ்தவ குடும்பத்திலும் நடக்கவேண்டிய கிறிஸ்தவ ஒழுங்கின் விவரம். 2^11–3^12.

கிறிஸ்தவர்கள் பொய்மதஸ்தர்கள் முன்பாக நல்லொழுக்கமுள்ளவர்களும் பரிசுத்தர்களுமா யிருக்கவேண்டும்.

(a) கிறிஸ்தவர்கள் நியாயாதிபதி முதலிய உலக அதிகாரிகளுக்கும் இன்னும் மற்ற யாவருக்கும் அவரவர்க்குரிய மரியாதையைச் செலுத்தவேண்டும்.

(b) அடிமைகள் தேவதயவைப் பெற்று இயேசுகிறிஸ்துவைப்போல் துன்பத்தைச் சகித்துத் தங்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்தவர்களா யிருக்கவேண்டும்.

(c) மனைவிகள் தங்கள் புருஷர்களைக் கனப்படுத்தி, கிறிஸ்தவமார்க்கத்தின் அருமையை அவர்களுக்குக் காண்பிக்கவும், புருஷர்களும் அப்படியே தங்கள் மனைவிகளைக் கனப்படுத்தவும் அவசியம்.

(d) யாவரும் சமாதானத்தையும் சிநேகத்தையும் நாடவேண்டும்.

III. உபத்திரவத்தின் பலன். 3^14–4^19.

(a) கிறிஸ்துவை நம்பினவனுக்கு உபத்திரவம் கெடுதியல்ல, துன்பப்பட்டவனுடைய பொறுமையின் மூலமாய் மற்றவர்கள் பக்திவிர்த்தியை அடையக்கூடும்.

இதை யோசித்து அப்போஸ்தலன் கிறிஸ்து பாதாளத்திலிறங்கி சிறையிருப்பிலிருந்தவர்களுக்குச் சுவிசேஷத்தை அருளினார் என்றும் ஜலப்பிரளயம் ஞானஸ்நானத்துக்கு முன்னடையாளமாயிருக்கிறதென்றும் சொல்லுகிறான். 3^18-22.

(b) துன்பம் பாவத்துக்கு நம்மை விலக்குகிறது. முன்காலத்தில் சிற்றின்பத்துக்கு நம்மை ஏவினவர்களைக் கடவுள் தாமே நியாயந்தீர்ப்பாராக. நமது ஆண்டவர் கொஞ்சக்

காலத்தில் திரும்ப வரப்போகிறபடியால் கிறிஸ்தவர்கள் ஞான ஐக்கியத்துடனே இருந்து மற்றவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்வார்களாக.

(*c*) துன்மார்க்கத்தினிமித்தம் வரும் துன்பம் உதவாது. சபையார்கள் தங்களுக்கு வருகிற துன்பம் தங்கள் நல்நடக்கையினிமித்தம் வருகிறதோ இல்லையோ என்பதைப் பற்றி எச்சரிக்கையாயிருப்பார்களாக. இதற்காக அவர்கள் தங்களைக் கடவுளின் திருக்கரத்தில் ஒப்புவிப்பார்களாக.

IV. பலவிஷயங்களைப்பற்றிய சில புத்திமதிகள். 5[1-14].

(*a*) சபை மூப்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெய்வபக்தியைக்குறித்தும் நல்லொழுக்கத்தைக்குறித்தும் புத்திமதிகள்.

(*b*) உபத்திரவத்தில் நமக்கு இருக்கவேண்டிய பொறுமை, ஜாக்கிரதை, நம்பிக்கை.

(*c*) சிலருக்கு வாழ்த்துதல்.

2. **இதை வாசிப்போர்கள்** சின்ன ஆசியாவிலுள்ள கிறிஸ்தவர்கள். இவர்களில் சிலர் யூதமார்க்கத்திலிருந்து வந்தவர்களாயிருந்தும், மற்றவர்கள் முற்காலத்தில் சின்ன ஆசியாவிலுள்ள புறமதஸ்தர்களைப்போல மதாசாரத்திலுங்கூட சிற்றின்பத்தையும் துன்மார்க்கத்தையும் நாடினவர்களாயிருந்திருப்பார்கள். இதனால் ஒருவேளை அந்நியர்களில் சிலர் இந்தக் கிறிஸ்தவர்களின் பெயரில் பிராது செய்திருந்திருக்கலாம். 2[12] 4[15]. அக்காலத்தில் இந்தச் சபையார்களுக்கு உபத்திரவம். 4[7] 5[6]. இவர்களில் சிலர் அடிமைகள், சிலர் புறமதத்தில் நிற்கிறவர்களுடைய மனைவிகள்.

3. **நோக்கம்.** அச்சபைகளில் அநேகர் துன்பத்தினிமித்தம் பயப்பட்டுப் பின்வாங்கிப்போய், அந்நிய மதஸ்தர்களுடைய ஒழுங்கீனத்தில் விழுந்துபோவார்கள் என்று அறிந்து இவர்களைத் தைரியப்படுத்தும்படி பரி. பேதுரு இயேசு சகித்த துன்பங்களையும், அவர் அடைந்த உயிர்த்தெழுதலையும் பலதடவை சொல்லி இவர்களுக்குள்ளே கடவுளின் அருளினாலே நம்பிக்கை யுண்டாக்கவும், இவர்கள் அந்நியர்களுக்கு நல்ல முன்மாதிரியைக் காட்டவும் இவர்களுக்கு இந்த நிருபத்தை அனுப்புவித்தான். 1[13] 4[7.19] 5[8-10].

4. **இதன் போதனை:**

(*a*) இதிலுள்ள வேத சாஸ்திரக் கொள்கைகள் என்னவென்றால்: கடவுள் பரமதகப்பனும் இரக்கமுள்ள சிருஷ்டிகருமா யிருக்கிறார். சதாகாலங்களுக்கும் இயேசு மேசியாவாயிருக்கிறார். 1[3-21]. இயேசுகிறிஸ்து தமது ஜீவியத்திலும், மரணத்திலும், உயிர்த்தெழுதலிலும் எல்லாருக்கும் மாசில்லா முன்மாதிரியைக் காட்டியிருக்கிறார். இவர் மூலமாய்க் கிறிஸ்தவர்கள் தேவனுடைய ஜனங்கள். இவர் மூலமாய்க் கடவுளுக்கும் மனுஷருக்கும் புது உடன்படிக்கை. 1[2.18] 2[22]. இவர் உயிர்த்தெழுந்து மகிமையை அடைந்து, சீக்கிரத்தில் திரும்பி வருவார். 1[13] 3[22]. இவர் பூர்வீகத்திலிருந்தவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரபல்லியப்படுத்தினார். 3[18]. இவர்மூலமாய் நமக்குச் சந்தோஷம். 1[2.8.12]. பரிசுத்த ஆவியானவர் கிறிஸ்தவர்களுக்கு அருளின நல் ஈவு. 4[14]. பரிசுத்த ஆவியானவர் இயேசுவுக்கும், பூர்வீக பக்தர்களுக்கும் இப்பொழுதிருக்கிற கிறிஸ்தவர்களுக்கும் அருள் புரிவார். 1[11] 3[18] 4[14]. பரிசுத்தஆவியின் மூலமாய்ப் பரிசுத்தம். 1[2]. உயிர்த்தெழுந்த இயேசுவின்பெயரில் விசுவாசிகள் எப்போதும் பக்திவைத்து நித்திய சுதந்தரத்தை அடைந்திருப்பார்கள்.

(*b*) கிறிஸ்தவ ஜீவியத்தைப்பற்றிய கொள்கைகள் என்னவென்றால்: கிறிஸ்துவை நம்புகிறவர்கள் உயிர்த்தெழுந்த கிறிஸ்துவின் அருளினாலே மனச்சாட்சியில் சுத்தமுள்ளவர்களாய், வேதவசனத்தின் மூலமாய்ப் பக்திவிருத்தி அடைந்து, இச்சையடக்கமும், துன்பத்தில் பொறுமையும், நம்பிக்கையும் உண்மையுமுள்ள பரிசுத்தர்களாயிருக்கவேண்டும். இயேசுகிறிஸ்து வெளிப்படுத்தின சுவிசேஷத்தின் மூலமாய்க் காணுதவைகளின் அருமையை அறிந்து இவைகளைப்பற்றிக் கடவுளின் பெயரில் பக்திவைப்பதுதான் விசுவாசம். கிறிஸ்துவும் கிறிஸ்தவர்களும் புது தேவாலயத்தின் கற்களாயிருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் ராஜாங்க ஆசாரியர்களும் மெய்யான இஸ்ரவேலரும் உண்மையுள்ள சகோதரக் கூட்டமும். ஒவ்வொரு கிறிஸ்தவனும் இவ்வுலகத்தில் பரதேசியாயிருக்கிறான். இவன் சகோதரர்களை நேசித்து, அந்நியர்களால் வரும் உபத்திரவங்களைப் பொறுமையோடே சகித்து, அவர்களைச் சுவிசேஷமார்க்கத்துக்குக் கொண்டுவரப் பிரயாசப்பட்டு இயேசுவின் இரண்டாம் வருகைக்கு ஆயத்தமுள்ளவனாய் அதை எதிர்பார்க்கவேண்டியது. 1[13] 5[5].

5. **இதற்கும் மற்ற வேதாகமங்களுக்குமுள்ள சம்பந்தம்.**

இந்த நிருபம் சுருக்கமாயிருந்தும் இதன் ஆக்கியோன் சங்கீதங்களையும் ஏசாயாவின் தீர்க்கதரிசன ஆகமத்தையும்பற்றி நல்ல ஞாபகமுள்ளவனுயிருந்தான் என்று நாம் பார்க்கிறோம்.

1 பேது $1^{18-20}$ .......... ஏசா $52^{3}$ 53 அதி.
,, $1^{24-25}$ .......... ,, $40^{6}$.
,, $2^{6-9}$ .......... ,, $28^{6}$.
,, $3^{10}$ .......... சங் $34^{12}$.

இவன் இதில் நாலுசுவிசேஷங்களைப்பற்றி ஒன்றும் சொல்லாவிட்டாலும் இயேசுவைப் பற்றித் தான் கண்ட விஷயங்களைச் சொல்லியிருக்கிறான். இதினால் இயேசு சகித்த உபத்திரவத்தையும், அவர் அடைந்த மகிமையையும் அவர் துன்பப்பட்டவர்களுக்குச்சொன்ன ஆசீர்வாதங்களையும் எப்போதும் மனதில் நன்றாய் வைத்திருந்தான் என்று அறிகிறோம். $3^{14}$ $4^{14}$ $5^{1}$. இயேசு அருளின மொழிகள் பேதுரு எழுதின வாக்கியங்களுக்கு எப்படி ஆதாரம் என்பதைப் பின்வரும் வாக்கியங்களில் காண்க. மத் $5^{10.11.16}$ $6^{25}$ 1 பேது $2^{12}$ $3^{13-16}$ $5^{6}$. நடபடி ஆகமத்தில் எழுதப்பட்ட பரி. பேதுருவின் பிரசங்கங்களைப்போல இந்த நிருபத்தில் அநேக வாக்கியங்கள் உண்டு. அப் $2^{23.33}$ $3^{18-21}$ $5^{30}$ $10^{42}$.

பரி. பவுல் எழுதின நிருபங்களிலும், பரி. பேதுரு எழுதின முதலாம் நிருபத்திலும் பல ஒற்றுமையான வாக்கியங்கள் உண்டு. திருஷ்டாந்தம்:

1 பேது $1^{14}$ .......... ரோம $12^{2}$.
,, $1^{22}$ .......... ,, $12^{9}$.
,, $2^{6}$ .......... ,, $9^{33}$.
,, $1^{3-9}$ .......... எபே $1^{3-14}$.
,, $1^{12}$ .......... ,, $3^{5}$.
,, $2^{4}$ .......... ,, $2^{18-22}$.
,, $2^{18}$ .......... ,, $6^{5}$.
,, $1^{1-7}$ .......... ,, $5^{22-32}$.

எபிரெயர்களுக்கு எழுதின நிருபத்திலும் இந்த நிருபத்திலும் ஒற்றுமையான பல விஷயங்கள் உண்டு. நம்பிக்கை, இயேசு அருளின முன்மாதிரி, அவர் தம் மரணத்தின் மூலமாய்ச் செய்த புது உடன்படிக்கை, கீழ்ப்படிதல், கிறிஸ்தவர்கள் படவேண்டிய துன்பங்கள் முதலிய கொள்கைகளைப்பற்றி அந்நிருபத்தின் நூலாசிரியனும் பரி. பேதுருவும் ஏக அபிப்பிராயமுடையவர்களாய் இருந்தார்கள் என்று தோன்றுகிறது.

1 பேது $1^{8}$ .......... எபி $11^{1}$.
,, $1^{20}$ .......... ,, $9^{26}$.
,, $2^{21}$ .......... ,, $12^{1}$.
,, $4^{13}$ $5^{1}$ .......... ,, $11^{26}$ $13^{23}$.
,, $4^{11}$ .......... ,, $13^{21}$.
,, $5^{10}$ .......... ,, $13^{21}$.

யாக்கோபின் நிருபத்திலும் இந்த நிருபத்திலும் சிலவாக்கியங்கள் ஒத்திருக்கிறது. 1 பேது $1^{23}$ $2^{1}$ $5^{5}$ யாக் $1^{11-22}$ $4^{6}$.

6. **நூலாசிரியன்.**

ஆதி கிறிஸ்தவ பிதாக்களாகிய ஐரெனேயு (*Irenaeus*), தெர்துல்லியன் (*Tertullian*), அலெக்சந்திரியனான கிலெமெந்து (*Clement of Alexandria*) என்பவர்கள் பரி. பேதுருதான் இந்த நிருபத்துக்கு ஆக்கியோன் என்று தெளிவாய்த் தெரிவிக்கிறார்கள். அவர்களுக்குமுன் போலிகார்ப் (*Polycarp*) முதலியவர்களுக்கு இது தெரிந்திருந்தது. தற்காலத்திலோ சில வேதசாஸ்திரிகள், இதில் பரி. பவுல் இயற்றின வேதக்கொள்கைகள் அநேகம் இருப்பதினாலும், இது பரி. பவுல் சுவிசேஷப்பிரசங்கம் பண்ணின தேசங்களிலுள்ள சபைகளுக்கு அனுப்பப்பட்டதினாலும், இதில் இயேசுவின் சரித்திரம் விவரமாய்ச் சொல்லப்படாதிருப்பதினாலும், இது கலிலேயாநாட்டில் உள்ள செம்படவனுக்குத் தெரியாத நல்ல கிரேக்க பாஷை நடையில் எழுதியிருப்பதினாலும், பேதுருவின் காலத்தில் கிறிஸ்தவசபையை ரோமராயன் உபத்திரவப்படுத்தாததினாலும், பரி. பேதுரு இந்த நிருபத்தை எழுதவில்லை என்றுசொல்லுகிறார்கள்.

இந்தச் சந்தேகத்தை நிவிர்த்தியாக்க:

i. பரி. பவுலுக்கும் பரி. பேதுருவுக்குமுள்ள சிநேகத்தையும், பரி. பவுல் வேத சாஸ்திரத்திலும் சுவிசேஷப்பிரசங்கத்திலும் காட்டிய மேலான திறமையையும், கிறிஸ்தவ வேத தத்துவசாஸ்திர சம்பந்தமாய் அவன் செய்த அநேக பிரயத்தனங்களையும் பரி. பேதுரு அறிந்து இவ்விதமான பல விஷயங்களில் பரி. பவுலுக்குத் தன்னைக் கடனாளியாக காட்டுவது ஆச்சரியம் அல்ல. கிறிஸ்தவர்களை நடத்திக்கொள்ளவேண்டிய சன்மார்க்கத்தில் அவர்களிருவரும் ஒரேவிதமாய் நினைத்திருப்பது அவசியம். விவாக நிலைமை, அடிமைத்தனம், ராஜாங்க உத்தியோகஸ்தர்களுக்குக் காண்பிக்கவேண்டிய கீழ்ப்படிதல் முதலிய விஷயங்களைப்பற்றிய

போதகத்தில் அவர்களிருவரும் செய்த உபதேசத்திலே வித்தியாசம் தோன்றியிருந்தால் ஆச்சரியமாயிருக்கும். ஆனதால் இந்த நிருபத்தை இயற்றினவனுக்கும் பரி. பவுலுக்கும் பலவிஷயங்களில் ஒற்றுமை இருந்ததினாலே இதை இயற்றினவன் பரி. பேதுரு அல்ல; பரி. பவுலின் சிஷர்களில் ஒருவனாயிருக்கவேண்டும் என்று சொல்வதற்குத் தகுந்த முகாந்தரமில்லை. மேலும் இந்த நிருபத்தில் கிறிஸ்துவின் மரணத்தின் மூலமாய் நாம் அடையவேண்டிய இரட்சிப்பைப்பற்றியும், பரிசுத்தத்தை அடைகிற வழியைப்பற்றியும் பரிசுத்த ஆவியானவர் செய்த ஊழியத்தைப்பற்றியும் சொல்லியிருப்பவைகளை நாம் பார்த்தால், இதை இயற்றினவன் பரி. பவுல் செய்த போதகங்களை எல்லாம் அங்கீகரிக்கவில்லை என்று நினைக்கவேண்டும்.

ii. பரி. பவுல் செய்த சுவிசேஷப் பிரசங்கத்தைக் கேட்டவர்களுக்குப் பரி. பேதுரு நிருபம் அனுப்புவது கூடாதகாரியம் என்று நாம் எப்படி சொல்லக்கூடும்?

iii. இதின் ஆக்கியோன் கிறிஸ்துவின் ஜீவியத்தைப்பற்றி எல்லா விஷயங்களையும் விவரமாய் எழுதாததினிமித்தம் இவன் இயேசுவை அறிந்த அப்போஸ்தலனாகிய பேதுரு அல்ல என்பது வீண் ஆக்ஷேபனை. ஏனென்றால், இதின் ஆக்கியோன் தான் சொல்லுகிற நியாயங்களை ஸ்தாபிக்கும்படி வேண்டியமட்டும் இயேசுவைக் குறித்துச் சுருக்கமாய்ச் சொல்லுகிறான். மற்றப்படி அதிகமாய்ச் சொல்வதற்கு இந்த நிருபத்தில் அவசியம் என்ன?

iv. கிரேக்கபாஷை அக்காலத்தில் ரோம ராஜாங்கத்தில் பொதுவாய்ப் பரம்பினதாலும் அது எல்லா தேசங்களிலும் வழக்கமான பாஷையானதினாலும், சுவிசேஷ ஊழியத்தைச் செய்கிறவன் அந்தப் பாஷையைக் கற்றுக்கொள்வது அவசியம். ஆதலால் கலிலேயாநாட்டில் பிறந்த செம்படவனாகிய பேதுருவுக்கு அந்த பாஷை தெரியாது என்றும், அவன் கிரேக்கபாஷையில் இந்த நிருபத்தை எழுதுவது கூடாதகாரியம் என்றும் நாம் சொல்வது எப்படி? ஒருவேளை பரி. பேதுரு அப்பாஷையை சிறந்த நடையில் எழுதமுடியாமலிருக்கலாம். அப்படியிருந்தாலும், சில்வானு ($5^{12}$) முதலியவர்கள் இவன் வாயாலே சொன்னதைக்கேட்டு வேண்டியமட்டும் சீர்திருத்தி எழுதுவது கூடாத காரியமா?

v. பரி. பேதுரு இந்த நிருபத்தை எழுதுங்காலத்தில் ரோமராயன் சபையை உபத்திரவப்படுத்தவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் இந்த நிருபத்தில் ரோமராயன் செய்த பொது உபத்திரவத்தைப் பற்றி ஒன்றும் சொல்லப்படுகிறதில்லை. இதின் ஆக்கியோன் அக்காலத்தில் சின்ன ஆசியாவிலுள்ள சபையார்களுக்கு அவர்களுடைய சத்துருக்கள் செய்த துன்பங்களையும் உபத்திரவத்தையும் பற்றிப் பேசுகிறான். அந்தமாதிரி துன்பமும் உபத்திரவமும் சோதனையும் பலதடவை அவர்களுக்கு நேரிட்டுக்கொண்டிருந்தது. ரோமராயன் இதற்குக் காரணன். மேலும் அவன் அச்சமயத்தில் அவர்களுக்கு உபத்திரவத்தைச் செய்யாவிட்டாலும், அவர்களுடைய சத்துருக்களினால் இந்த மாதிரியான துன்பம் அவர்களுக்கு அடிக்கடி நேரிடும்.

சுருக்கமாய்ச் சொல்லவேண்டும் ஆனால், பரி. பேதுருவைத்தவிர இவ்விதமாய் இந்த நிருபத்தை எழுதக்கூடிய வேறு ஒரு ஆக்கியோன் நமக்குத் தெரியாது என்றும், மேற்சொன்ன காரியங்களினால் பரி. பேதுரு தான் இவ்விதமான நிருபத்தை எழுதக்கூடியது என்றும் பார்த்து, கிறிஸ்தவசபையின் அபிப்பிராயத்தின்படி பரி. பேதுரு தான் இந்த நிருபத்துக்கு ஆக்கியோன் என்று தீர்மானமாய்ச் சொல்லுகிறோம்.

7. காலம். பரி. பேதுரு ரோமாபுரிக்கு வந்து, கி–பி. 64–ம் வருஷத்தில் நேரோராயன் செய்த உபத்திரவத்தில் இரத்தசாக்ஷியாய் மரித்தான் என்பது ஆதி கிறிஸ்தவ சபையின் அபிப்பிராயம். இதற்கு எதிரிடையான காரணம் இல்லை. ஆதலால் பரி. பேதுரு எப்படியாவது, கி–பி. 64–ம் வருஷத்துக்குமுன் இந்த நிருபத்தை எழுதினான் என்று நினைக்கவேண்டியது.

## பேதுரு எழுதின இரண்டாம் நிருபம்.
## The Second Epistle of Peter.

1. பொருளடக்கம்.

i. வாழ்த்துதலும் எச்சரிப்பும். $1^{1-11}$.

நூலாசிரியன் சபையின் பெயர் சொல்லாமல், விசுவாசத்தின் சிலாக்கியங்களைப் பெற்ற கிறிஸ்தவர்களுக்கு வாழ்த்துதல் சொல்லி, அவர்களுக்குக் கிடைத்த பாக்கியம் பெருகும்படி விண்ணப்பம்செய்து, அவர்கள் கடவுள் அருளின வாக்குத்தத்தங்களை ஏற்றுக்கொண்டு இயேசுவின் நித்திய ராஜ்யத்தில் பிரவேசிக்கும்படி நல்லொழுக்கத்தை நாடவேண்டும் என்கிறான்.

ii. சுவிசேஷத்தின் உண்மை. $1^{12-21}$.

பேதுரு தான் ஒருவேளை சீக்கிரத்தில் இறந்துபோகலாம் என்று நினைத்து, தான்

கண்ட இயேசுகிறிஸ்து அடைந்த மறுரூபத்தையும், தான் கேட்ட தேவவாக்கையும் அவர்களுக்கு அத்தாக்ஷிகளாய்ச் சொல்லுகிறான். தீர்க்கதரிசிகளின் மூலமாய் வந்த ஞானத்தைக் கவனித்து அவர்கள் இயேசுவின் இரண்டாம் வருகைக்கு எச்சரிக்கையோடு காத்திருக்கவேண்டும்.

iii. கள்ளப் போதம். $2^{1-22}$.

*கள்ளப் போதகர்களையும், அவர்கள் நடத்தும் கூட்டத்தையும், அவர்கள் அடையும் தண்டனையையும்பற்றிய எச்சரிப்பு.*

iv. இயேசுவின் இரண்டாம் வருகை. $3^{1-18}$.

*சில பரியாசக்காரர்கள் இதை நம்பாவிட்டாலும் இயேசு திரும்பிவந்து நியாயத்தீர்ப்புச் செய்வார். அவர் தாமதம் செய்தது மனந்திரும்புதலுக்குச் சமயம். நாம் பரிசுத்தமாய் நடந்தால் அவர் சீக்கிரத்தில் வருவார். பரி. பவுலும் இதைப்போல போதனை செய்கிறான். நாம் எல்லாரும் எச்சரிப்போடு நடந்து கிருபையிலும் ஞானத்திலும் வளரவேண்டியது.*

2. நோக்கம். $3^{1}$–ல் இந்த நிருபத்தை எழுதினவன் தான் முந்தி எழுதின நிருபத்தை வாசித்தவர்களுக்கு இதையும் அனுப்பியிருக்கிறான் என்று தோன்றுகிறது. இது ஒரு சபையைக்குறித்து அல்ல; சின்ன ஆசியாவிலுள்ள கிறிஸ்தவர்களுக்குப் பொதுவாய் அனுப்பப்பட்டிருக்கிறது. அந்தச் சபைகளில் கள்ளப்போதகர்கள் அநேகரை ஏமாற்றினதினாலே தப்பறையில் விழுந்தவர்களுக்கு எச்சரிப்பாக பரி. பேதுரு இதில் விசேஷமாய்ப் பேசுகிறான். அவர்கள் அன்னியமார்க்கத்திலிருந்து வந்த கிறிஸ்தவர்களாயிருக்கலாம். அந்தக் கள்ளப் போதகத்தைப்பற்றி ஒரு விவரமும் இல்லை. ஆனால் அவர்கள் இந்த நிருபத்தில் சொல்லியிருக்கிற சன்மார்க்கத்துக்குரிய பிரமாணம் எல்லாவற்றையும் விட்டு, கிறிஸ்தவர்கள் யாதொரு பிரமாணத்துக்கும் இணங்கி நடக்கவேண்டியதில்லை என்றும், கிறிஸ்தவர்களுக்குப் பிரியமிருந்தால் அவர்கள் துன்மார்க்கமாய் நடக்கலாம் என்றும் சொல்லி, உயிர்த்தெழுதல், நியாயத்தீர்ப்பு முதலியவைகளைப்பற்றி அசட்டையாய் நடந்து பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் துன்மார்க்கத்தைப்போல அசுத்தமானதைச் செய்தார்கள் என்று தோன்றுகிறது. $2^{4-6.15}$.

இவர்களும் பரி. யோவான் கண்டித்த நிக்கோலாய் மதஸ்தர்களும் ஒரே சமயத்தார்கள் என்று நினைக்கலாம். வெளி $2^{13}$. ஆதலால் பரி. பேதுரு பயபக்தியுடன் ஜீவிக்கும்படி எச்சரிப்புச்செய்து, இயேசுவினுடைய ரட்சிப்பு நல் ஒழுக்கின்படி நடக்கிறவர்களுக்கு யாத்திரம் அருளப்பட்டிருக்கிறது என்றும், இயேசுகிறிஸ்துதான் பயபக்திக்குக் காரணர் என்றும், அவர் நியாயத்தீர்ப்புச் செய்கிறவர் என்றும் சொல்லி, கள்ளப்போதகர்களுடைய துன்மார்க்கத்தைக் கண்டித்து அவர்கள் பெறப்போகிற தண்டனைக்கு விலகி, இயேசுகிறிஸ்து திரும்ப வருமளவும் நாம் மனந்திரும்புதலைத் தேடவேண்டும் என்னும் நோக்கத்துடன் இதை எழுதுகிறான்.

3. இதுவும் வேதாகமத்திலுள்ள மற்ற புஸ்தகங்களும். இதில் சிருஷ்டிப்பு, ஜலப்பிரளயம், கர்த்தருடைய நாள் என்பவைகளைப்பற்றிச் சொல்லியிருப்பதைப் பார்க்கையில் இதின் ஆக்கியோன் பழைய ஏற்பாட்டை நன்றாய் தெரிந்துகொண்டவன் என்று நாம் சொல்லவேண்டும். இயேசு மறுரூபமடைதலைப்பற்றி இவன் சொன்னதும் சுவிசேஷங்களில் சொல்லி யிருக்கிறவைகளும் ஒத்திருக்கிறது. 2 பேது $1^{16}$. இதின் ஆக்கியோன் தான் பரி. பவுல் எழுதின நிருபங்களை நன்றாய் அறிந்துகொண்டான் என்பதைத் தெரிவிக்கிறான். $3^{15}$. முதல் நிருபத்தில் 'மேசியாவை'ப்பற்றியும் இதில் 'ரட்சகரை'ப்பற்றியும் விசேஷமாய்ச் சொல்லுகிறதினாலும்; முதல் நிருபத்தில் நம்பிக்கை, பொறுமை, சந்தோஷம் என்பவைகளைப்பற்றியும், இதில் நல்லறிவைப்பற்றியும் சொல்லுகிறதினாலும்; முதல் நிருபத்துக்கும் இரண்டாம் நிருபத்துக்கும் பொருளிலே வித்தியாசங்கள் உண்டு. ஆனால் இவைகளில் சொன்ன உதாரணங்களையும், இயேசுவின் வருகையையும், மறுரூபமடைதலையும், உயிர்த்தெழுதலையும், நியாயத்தீர்ப்பையும், பரிசுத்த ஆவியானவரையும், கிறிஸ்தவ ஜீவியத்தின் விருத்தியையும், பொறுமையையும், நல் ஒழுங்கையும், கிறிஸ்தவ ஜீவிய பிரமாணத்தையும்பற்றி நாம் பார்த்தால் இவ்விரண்டு நிருபங்களுக்கும் நெருங்கிய சம்பந்தங்கள் உண்டு என்று தீர்மானமாய்ச் சொல்லக்கூடும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 பேது | $1^{13}$ $4^{13}$ $5^{1}$ | .... | 2 பேது | $1^{3.4.16}$. |
| ,, | $1^{10}$ | .... | ,, | $1^{19}$. |
| ,, | $1^{23}$ | .... | ,, | $1^{8}$ $3^{18}$. |
| ,, | $1^{22}$ | .... | ,, | $2^{21}$. |
| ,, | $2^{8}$ | .... | ,, | $1^{10}$. |
| ,, | $1^{15}$ $2^{15}$ | .... | ,, | $2^{19}$ $3^{11.14}$. |
| ,, | $1^{1-5}$ | .... | ,, | $1^{11-14}$. |

4. இதின் ஆக்கியோன்: இந்த நூலை இயற்றினவன் இன்னான் என்பதைப்பற்றிச் சில சந்தேகங்கள் உண்டு. ஏனென்றால் பரி. பேதுரு இதை எழுதினான் என்பதற்குத் தெளிவான முகாந்தரங்கள் இல்லை. கி—பி. 150—ம் வருஷத்தில் 'பேதுருவின் வெளிப்படுத்தின விசேஷம்' என்னும் நூலின் ஆசிரியன் இந்த நிருபத்தை அறிந்து எழுதியிருக்கிறான் என்று தோன்றுகிறது. ஆனால் கி—பி. 250—ம் வருஷத்தில் செசரேயனாகிய பிர்மிலியன் (*Firmilian*) என்பவன் பரி. பேதுரு இந்த நிருபத்திற்கு நூல்ஆசிரியன் என்று தெளிவாய்ச் சொல்லுகிறான். கி—பி. 204-ம் வருமுதல் அலெக்சந்திரியா பட்டணத்தில் போதகம்பண்ணின ஓரிகேன் (*Origen*) இதன் ஆக்கியோன் பரி. பேதுருவோ இல்லையோ என்று சந்தேகப்பட்டான். அரமேய பாஷையில் எழுதப்பட்டிருக்கும் பெஷித்தா (*Peshitta*) என்னும் மொழிபெயர்ப்பில் இந்த நிருபம் சேர்க்கப்படவில்லை. இதன் சந்தேக நிவிர்த்திக்காக நாம் இந்த நிருபத்தில் விசாரித்தால், இதன் ஆக்கியோன் பரி. பேதுரு அல்ல என்று சொல்வதற்குப் போதுமான நியாயங்கள் இல்லாவிட்டாலும், இவன்தான் இதை எழுதினான் என்று சொல்வதற்கு ஏற்ற முகாந்தரங்கள் இல்லை என்று நாம் ஒப்புக்கொள்ளவேண்டியது. ஆயினும், பாஷை நடையில் இதற்கும் முதல் நிருபத்துக்கும் வித்தியாசம் இருந்தால், முதல் நிருபத்தை எழுதும்படி உதவிசெய்த சில்வானு என்பவனுக்குப் பதிலாக அவ்வளவு கல்வியில் தேர்ச்சியில்லாத வேறொருவன் இதை எழுதும்படி பரி. பேதுருவுக்கு உதவி செய்திருந்தால் இப்படி பாஷைநடையில் வித்தியாசம் உண்டாயிருக்கலாம். மேலும் இதற்கும் முதல் நிருபத்துக்கும் போதனை விஷயங்களில் நாம் முன்னே சொன்ன ஒற்றுமையினாலும், பரி. பேதுருவின் மூலமாய் மாற்கு தெரிந்துகொண்ட சுவிசேஷத்தின் போதனைக்கும் இதிலிருக்கும் போதனைக்கும் உள்ள ஒற்றுமையினாலும், அப்போஸ்தலர் நடபடிகளில் பரி. பேதுரு மனந்திரும்புதலைப்பற்றிச் சொன்னப் பிரசங்கத்துக்கும் இதில் அதைக் குறித்துச் சொல்லியிருக்கும் எச்சரிப்புக்கு முள்ள ஒற்றுமையினாலும் பரி. பேதுரு இதை எழுதினான் என்பதற்கு நியாயமுண்டு. மாற் 1 அதி 2 பேது $3^{9}$ அப் $3^{19}$ 2 பேது $3^{11}$. தீர்மானமாய்ச் சொல்லவேண்டுமானால், பரி. பேதுருதான் இந்த இரண்டாம் நிருபத்துக்கு ஆக்கியோன் என்பதைப்பற்றிச் சந்தேகமிருந்தாலும், பரி. பேதுரு இதை எழுதினதற்கு சில அத்தாக்ஷிகளாவது இருப்பதினாலும், இவ்வேனைத்தவிர இதை எழுதக்கூடிய வேறொருவனும் நமக்குத் தெரியாததினாலும் இதற்குத் திருச்சபை நம்பின பாரம்பரியம் சம்பந்தப்பட்டிருக்கிறதினாலும் பரி. பேதுரு தான் இதன் ஆக்கியோனாக இருக்கிறான் என்று நாம் ஒப்புக்கொள்ளவேண்டியது.

**பேதேன்.** Beten. ஆசேரிலுள்ள ஓர் ஊர். யோசு $19^{25}$.

**பேதை, பேதையன்.** Fool, Simple. சங் $19^{7}$ $119^{130}$ நீதி $1^{22-32}$ $8^{5}$ $14^{15-18}$ $19^{25}$ ஏசா $35^{8}$ ரோம $2^{20}$.

**பேத்.** Beth. எபிரெயர் அட்டவணையில் இரண்டாம் எழுத்து. சங் $119^{9-16}$ மட்டும் ஒவ்வொரு வசனத்தின் முதல் பதத்திலுள்ள முதல் எழுத்து 'பேத்' தான்.

**பேத்தா.** Betah. பலெஸ்தீனாவுக்கு வடக்கிலும் யோர்தான் நதிக்குக் கிழக்கிலும் இருந்த சோபா ராஜாவின் தேசத்தில் உள்ள ஒரு ஊர். இதுவும், திப்காத்தும் தேபாவும் ஒன்றுதான். ஆதி $22^{24}$ 2 சாமு $8^{8}$ 1 நாளா $18^{8}$.

**பேத்தோர்.** Pethor. பெத்தூர் காண்க.

**பேத்ரா.** Petra. சேலா காண்க.

**பேயேர்.** Beer. [கிணறு.]

1 இஸ்ரவேலர் அர்னோனிலிருந்து யோர்தான் நதிக்குப் போகும்வழியில் பாளயம் இறங்கின ஒரு இடம். அவர்கள் அவ்விடத்திலே கிணற்றை வெட்டி கடவுளுடைய கிருபையால் அதில் ஊற்றைக் கண்டுபிடித்ததினால் 'கிணறு' என்று அர்த்தமுள்ள பெயரை இதற்குக் கொடுத்தார்கள். எண் $21^{14-18}$. இதுவும் பெரேலீம் என்பதுவும் ஒன்றுதான். ஏசா $15^{8}$.

2 உவமை சொன்னபிற்பாடு யோதாம் என்பவன் ஓடிப்போய் குடியிருந்த இடம். நியா $9^{21}$.

**பேயோர்.** Beor.

1. பிலேயாமின் தகப்பன். எண் $22^{5}$ $24^{3}$ உபா $23^{4}$ யோசு $24^{9}$ மீகா $6^{5}$ 2 பேது $2^{15}$.

2. ஏதோமின் ராஜாவாகிய பேலாவின் தகப்பன். ஆதி $36^{32}$.

**பேயோர்.** Peor.

1. யோர்தான் நதிக்குக் கிழக்கில் உள்ள ஒரு மலை. இது நேபோ மலைநாட்டில் இருக்கலாம். இதற்கு மோவாபின் ராஜாவாகிய பாலாக் பிலேயாமை நடத்திக்கொண்டுபோனான். எண் $23^{28}$.

2. = பாகால்-பேயோர். பேயோர் மலையில் மோவாபியர் வணங்கின பாகால் தேவதை. எண் $25^{18}$ $31^{16}$ யோசு $22^{17}$.

**பேய்.** Devil. பிசாசு காண்க.

**பேய்க்கோமட்டி.** 'Wild vine.' பேய்க் கோமட்டி என்பதைக் குறிக்கிற எபிரெய பதம் நஞ்சுள்ள ஒரு காயைக் குறிக்கும். ஆனால் இது இன்னதென்று நமக்குத் தெளி வாய்த் தெரியாது. 2 இரா 4[39].

**பேரா.** Beera. ஆசேர் கோத்திரத் தான். 1 நாளா 7[37].

**பேரா.** Beerah. திகிலாத் பிலேசர் சிறையிருப்புக்குக் கொண்டுபோன ரூபன் கோத்திரத்தான். 1 நாளா 5[6].

**பேரா.** Bera. ஆபிரகாமின் காலத்தில் சோதோம் பட்டணத்தின் ராஜா. ஆதி 14[2]

**பேரி.** Beri. 1 நாளா 7[36].

**பேரீச்சம்.** Palm. பேரீச்சமரம் எகி ப்து, பாபிலோனியா, அரபியா முதலிய தேசங்களில் அதிகமாய் விளைகிறது. இந்த உஷ்ணதேசங்களில் நெல் கோதுமை முத லிய பயிர் அதிக விளைவு இல்லாததினாலும், பேரீச்சமரம் வெயில்காலத்திலும் கனி அதிக மாய்க் கொடுத்ததினாலும், சேமியர்கள் எல் லாரும் பேரீச்சமரத்தை அதிக பெருமை யாக பேசி, இது பரிசுத்தமரம் என்று சொன்னார்கள். தென்னிந்தியாவில் ஜனங் கள் எப்படி சாதம் சாப்பிடுவார்களோ அப்படிச் சேமியர்கள் பேரீச்சம்பழத்தை வழக்கமாய்ப் புசித்தார்கள். பேரீச்ச ஓலை களை முடைந்து பாய்களையும் கூடைகளை யும் பின்னினார்கள். அதன் பட்டைகளி னால் கயிறு திரித்தார்கள். பழத்தின் கொட்டைகளை இடித்து மாடுகளுக்குத் தீனி யாக போடுவார்கள். பழ ரசத்திலிருந்து ஒருவிதமான தேன் செய்வார்கள். பலெஸ் தீன தேசத்திலும் முன்காலத்தில் இது விளைந்தது. ஆனால் தற்காலத்தில் அத்தேசத் தார் இதைப் பயிர்செய்ய நல்ல முயற்சி எடுத்துக்கொள்ளாததினால் அத்தேசத்தில் இது அதிகமாய்ப் பெருகவில்லை.

சுகசெல்வத்தையும் சௌந்தரியத்தையும் குறிக்கும்படி பேரீச்சத்தை உவமையாய்ச் சொன்னார்கள்.

தமிழ் வேதாகமத்தில் பேரீச்சத்திற்குப் பதிலாகப் 'பனை' என்று சொல்லப்பட்டிருக் கிறது. சங் 92[12] உன். பா 7[7]. கூடாரப் பண்டிகைமுதலிய காலங்களில் சந்தோ ஷத்தைக் காட்டும்படி பேரீச்சங்குருத்தோலை களை வீசுகிறது வழக்கம். யாத் 15[27] லேவி 23[40] உபா 34[3] எண் 33[9] நியா 1[16] 3[13] யோவா 12[13] வெளி 7[9].



பேரீச்சம்.

**பேரேஸ்.** Peresh. மாகீர் சந்ததியா ரில் ஒருவன். 1 நாளா 7[16]. தமிழ் வேதா கமத்தில் 'பாரேசின் சந்ததியான பாரேசிய ரின் குடும்பம்' என்பதற்குப் பதிலாக 'பே ரேசின் சந்ததியான பேரேசியர்' என்று வாசிக்கவேண்டும். எண் 26[20].

**பேரேஸ்–ஊசா.** Perez–Uzza. [ஊசா வின் பிளப்பு.]

தாவீது உடன்படிக்கைப் பெட்டியை எரு சலேமுக்குக் கொண்டுவரும்படி விரும்பின காலத்தில் ஊசா என்பவன் அது வைக்கப் பட்டிருந்த வண்டியை ஓட்டினான். வழி யில் வண்டி அசைந்ததினால் ஊசா உடன் படிக்கைப் பெட்டியை அசையாதபடிக்குப் பிடித்தான். ஆசாரியன் அல்லாதவனாகிய இவன் ஒடுக்க வணக்கமில்லாமல் தேவ பெ ட்டியைப் பிடித்ததினால் யேகோவா அவனை அடித்துக்கொன்றார் என்று அந்தச் சரித்திரத் தை இயற்றினவன் சொல்லுகிறான். இதனி மித்தம் இது நேரிட்ட இடத்திற்கு 'ஊசாவின் பிளப்பு' அல்லது 'ஊசாவின் அழிவு' என்று அர்த்தம்கொள்ளும் 'பேரேஸ்–ஊசா' என் னும் பேர் இடப்பட்டது.

**பேரேத்.** Bered.

1. நமக்குத் தெரியாத ஒரு ஊர். ஆதி 16[14].

2.=பெகேர். எண் $26^{35}$ 1 நாளா $7^{30}$.

**பேரோத்.** Beeroth. **பெயெரோத்** காண்க.

**பேர்.** Name. **நாமம்** காண்க.

**பேலா.** Bela.

1. ஏதோமின் ராஜா. ஆதி $36^{32}$.

2. பென்யமீனின் மூத்த குமாரன். ஆதி $46^{21}$.

3. மோவாப் தேசத்தில் குடியேறினவன். 1 நாளா $5^{8}$.

4. சோவார் என்ற ஊரின் மறுபேர். நியா $14^{2}$.

**பேலிக்ஸ்.** Felix. [சந்தோஷமுள்ளவன்.] ரோமராயனுகிய கிலவுதியு கி–பி. 52–ம் வருஷத்தில் பேலிக்ஸ் என்பவனை யூதேயா நாட்டிற்கு தேசாதிபதியாக நியமித்தான். ரோமராஜ்ய சரித்திரக்காரர், பேலிக்ஸ் கொடூரமாயும் அநியாயமாயும் தன் அதிகாரத்தைச் செலுத்தினுன் என்பார்கள். பரி. பவுல் கடைசியாய் எருசலேமுக்கு வந்தபோது இவன் தேசாதிபதியாய் இருந்தான். இவன் பவுலின் பிரசங்கத்தைக் கவனித்தபோதிலும், அவன் தனக்கு லஞ்சம் கொடுப்பானென்றும், தான் பரி. பவுலைச் சிறைச்சாலையில் வைப்பதால் யூதரைப் பிரியப்படுத்தலாமென்றும் எண்ணி, பவுலின் விஷயத்தில் நியாயஞ் செய்யவில்லை. அப் $23^{24}$ $24^{10}$. இவன் மூன்றுதடவை விவாகஞ்செய்தான். முதலாம் ஏரோது அகிரிப்பாவின் மகளாகிய துருசில்லாள் என்பவள் இவனுடைய மூன்றும் மனைவி. அப் $24^{24}$.

**பேலியாள்.** Belial. 'பேலியால்' என்கிற எபிரெய பதத்திற்கு, 'பொல்லாப்பு,' 'அக்கிரமம்,' 'கேடு' என்று அர்த்தம். இதின்படி 'பேலியாலின் மகள்' என்பது கெட்டுப்போன துஷ்ட ஸ்திரீயைக் குறிக்கும். 1 சாமு $1^{16}$.

'பேலியாலின் மகன்' என்பது கெட்டுப்போனவனை அல்லது துஷ்ட புருஷனைக் குறிக்கும். உபா $13^{12}$ நியா $19^{22}$ 1 சாமு $2^{12}$ $10^{27}$ $25^{17}$ 2 சாமு $16^{7}$ $20^{1}$ $23^{6}$ சங் $17^{4}$ $41^{7}$ நீதி $6^{12}$ $16^{27}$ நாகூ $1^{11}$.

இப்பதத்தின் அர்த்தம் இப்படி யிருப்பதினுலே பரி. பவுல் பிசாசாகிய சாத்தானை 'பேலியாள்' என்று குறிப்பிடுகிருன். 2 கொரி $6^{15}$.

**பேலேக்.** Peleg. [நீர்க்கால்வாய்.] சேம் என்பவனின் சந்ததியாரில் ஒருவன். ஆதி $10^{25}$ லூக் $3^{35}$.

**பேலேத்.** Belet, Peleth

1. யாதாயின் மகன். 1 நாளா $2^{47}$.

2. தாவீதினிடத்திற்கு வந்த பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா $12^{3}$.

3.=பல்லூ. ஆதி $46^{9}$ எண் $16^{1}$.

4. யெர்மெயேலின் குடும்பத்தாரில் ஒருவன். 1 நாளா $2^{33}$.

**பேல்.** Bel. முதலில் பாபிலோனியர்கள் வணங்கின திரிமூர்த்திகளில் ஒரு தெய்வம். வேதாகமத்திலும், அப்போகிரிப பாவிலும் 'பேல்' என்பது பாபிலோனியா பட்டணத்தைக் காக்கும் மெரோதாக் என்னும் மறுநாமமுள்ள தேவதையைக் குறிக்கும். எரே $50^{2}$ $51^{44}$ ஏசா $46^{1}$ பாரூக் $6^{41}$ எரேமியாவின் நிருபம் $1^{40}$.

**பேல் விக்கிரகமும் வலிய சர்ப்பமும்.** Bel and the Dragon. அப்போகிரிப்பாவைச்சேர்ந்த இந்த நூல் தானியேலைப்பற்றி இரண்டு கதை சொல்லுகிறது. முதல் கதையில் தானியேல் விக்கிரகாராதனை நடத்திய ஆசாரியர்செய்த மோசத்தைப் பாபிலோனிய ராஜாவுக்கு எடுத்துக் காண்பிக்கிருன் என்றும்; இரண்டாம் கதையில் தானியேல் பாபிலோனியர் வணங்கின வலிய சர்ப்பத்தைக் கொன்றுபோடுகிருன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதின் நூலாசிரியன் பெயர் தெரியாது. ஆனுல் இந்த நூல் முதலில் கிரேக்க பாஷையில் எழுதப்பட்டு, கி–மு. ஏறக்குறைய 150–ம் வருஷத்துக்குள் முடிந்த கிரேக்க சத்திய வேதத்தில் சேர்க்கப்பட்டிருந்தது. கிறிஸ்தவ ஆதி பிதாக்களில் சிலர் இந்தப் புத்தகத்தில் எழுதியிருந்த கதைகளை உண்மை என்று நம்பி, வேதாகமத்தில் இதைச் சேர்க்கச் சித்தங்கொண்டார்கள். ஆனுல் வேத சாஸ்திரிகள் இதைக் குறித்து ஆராய்ச்சிசெய்து, இது ஒரு சரித்திரமேயல்ல, பக்திக்கு ஏதுவான உவமை என்று தீர்மானமாய்ச் சொல்லுகிருர்கள்.

**பேழை.** Ark. நோவா கட்டின தெப்பம் அல்லது கப்பலுக்குத் தமிழ் வேதாகமத்திலே 'பேழை' என்று சொல்லியிருக்கிறது. ஆதி $6^{14}$–$8^{19}$ மத் $24^{3-8}$ லூக் $17^{27}$ எபி $11^{7}$ 1 பேது $3^{20}$. **ஜலப்பிரளயம்** காண்க.

ஆதியாகமத்தில் இதைக்குறித்துச் சொல்லப்பட்டிருக்கிற விபரத்தை நாம் பார்க்கும்போது அந்த நூலை இயற்றினவனுடைய அபிப்பிராயத்தின்படி பேழை ஒரு தெப்பத்தின்மேல் கட்டப்பட்ட ஒரு மச்சுவீட்டைப் போல் இருந்ததென தோன்றுகிறது.

**பேளியாள்.** Belial. 2 கொரி $6^{15}$. **பேலியாள்** காண்க.

**பேறு.** Birth. 2 இரா 19³.

**பேனிக்ஸ்.** Phoenix, Phenice. கிரேத்தாதீவின் தென் ஓரத்திலிருந்த ஒரு விசேஷித்த துறைமுகம். அப் 27¹².

**பேனோ.** Beno. ['அவனுடைய மகன்.'] 1 நாளா 24²⁶.

**பேன்.** Ben. [மகன்.] 1 நாளா 15¹⁸.

**பேன்கள்.** Lice. யாத் 8¹⁶ சங் 105³¹.

## பை.

**பை.** Bag. வேதாகமத்திலே 'பை' என்று சொல்லப்படுகிற வசனங்களை நாம் ஆராய்ந்து பார்த்தால், எபிரெயர்கள் பல விதமான பைகளை உபயோகித்ததாக அறியலாம். இவைகள் வழக்கமாய்த் தோலினால் செய்யப்பட்டவை.

i. இடையர்களும் பிரயாணிகளும் ஒரு நாள் அல்லது இரண்டுநாளைக்கு வேண்டிய உணவைக் கொண்டுபோகும் பைகள். 1சாமு 17⁴⁰ மத் 10¹⁰.

ii. இதைவிட நேர்த்தியாய்ச் செய்யப்பட்ட ஒருவிதத் தோல்பை பணத்தை வைக்கும்படி உபயோகிக்கப்பட்டது. லூக் 10⁴ 12³³.

iii. வியாபாரிகள் நிறைகளையும் நாணயங்களையும் வைத்துக்கொள்ளும்படி உபயோகித்த பைகள். உபா 25¹³ நீதி 1¹⁴.

iv. இரத்தினங்கள் முதலிய விலையுயர்ந்த ஆபரணங்களை வைக்கும்படி கயிற்றினால் பின்னப்பட்டு முத்திரை போடப்பட்ட பைகள். ஆதி 42³⁵ 2 இரா 12¹⁰ நீதி 7²⁰ யோபு 14¹¹.

v. பெரிய பையையும் சிறு பையையும் பொதுவாய்க் குறிப்பிடுகிற எபிரெய பதம் ஒன்றுண்டு. 2 இரா 5²³ ஏசா 3²².

vi. யூதாஸ்காரியோத் பணத்தை வைத்துக்கொண்டிருந்த 'பை' எப்படிப்பட்டதென்று நமக்குத் தெரியாது. ஒருவேளை ஒருவித சிறு பாணிப் பெட்டியாயிருக்கலாம். யோவா 12⁶ 13²⁹.

**பைசோன்.** Bishon. ஏதேன் தோட்டத்திலிருந்து உற்பத்தியான நதிகளில் ஒன்று. வேதசாஸ்திரிகள் இந்த ஆறு எதுவென்று திட்டமாய் அறியும்படி பலதடவைகளில் ஆராய்ச்செய்தும், இன்னும் தீர்மானமான முடிவுக்கு வரவில்லை.

பைசோன் நதி பாரசீக வளைகுடாவையும் அரபிய வளைகுடாவையும் குறிக்கலாம். ஆதி 2¹¹.

**பைத்தியக்காரன், பயித்தியக்காரன்.** Fool. அப் 26²⁵ ரோம 1²² 1 கொரி 3¹⁸ 4¹. நீதி 26¹⁸ 2 இரா 9¹¹ யோவா 10²⁰. மூடன், மதியீனன் காண்க.

**பைத்தியக்காரி.** Foolish woman. யோபு 2¹⁰.

**பைத்தியம்.** Folly, Madness. 1 சாமு 25²⁵ சங் 49¹³ பிர 1¹⁷ 2² 7²⁵ ஏசா 44²⁵ எரே 5²² 1 கொரி 1 ¹⁸·²¹·²³·²⁵·²⁷ 2¹⁴ 3¹⁹ 4¹⁰ 14²³.

**பைரி.** Glede. உபா 14¹³–ல் 'பைரி' என்னும் தமிழ் பதத்தினால் மொழிபெயர்க்கப்பட்ட எபிரெய பதம் உயர ஆகாயத்திலிருந்து வேகமாய்ப் பறந்துவந்து மற்ற பட்சிகளை அடிக்கிற பறவையைக் குறிக்கும். இது ஒருவித பருந்து என்று நினைக்கலாம்.

## பொ.

**பொகேரேத்.** Bocchereth. சிறையிருப்பிலிருந்து செருபாபேலுடனே வந்தவன். எஸ்றா 2⁵⁷. இவனுக்கு, 'பொகெரேத் செபாயீம்' என்ற பேர் சொல்லப்பட்டிருக்கிறது. நெகே 7⁵⁹.

**பொக்கிஷக்காரன்.** Treasurer. இராஜாங்க பொக்கிஷசாலைகளில் இருந்த பொக்கிஷக்காரன் கணக்குகளைப் பார்க்கும்படி ஏற்படுத்தப்பட்டவன். எஸ்றா 1⁸. இந்தியா தேசத்தின் கச்சேரிகளில் உள்ள சிரஸ்தார்களைப் போன்றவன். உக்கிராணக்காரன் காண்க.

**பொக்கிஷசாலை.** Treasury. ஆதி 28¹⁵ ஏசா 39² எசே 28⁴. 'பொக்கிஷ அறை'. நெகே 13¹³.

**பொக்கிஷம்.** Treasure. யோசு 6¹⁹ 1 இரா 7⁵¹ ஏசா 45⁴ மத் 6²⁰·²¹ 12³⁵ 13⁴⁴ 19²¹ லூக் 12³⁴ அப் 8²⁷ 2 கொரி 4⁷ கொலோ 2³.

**பொக்தூரு.** Bocheru. 1 நாளா 8³⁸.

**பொடி.** Dust. ஏசா 29⁵ யாத் 32²⁰ உன். பா 3⁶. தூசி காண்க.



**பொட்டுப்பூச்சி.** Moth. பலெஸ்தீன தேசத்தில் பொட்டுப்பூச்சி அதிகம். இவை

கள் துணி, சால்வை தரையின்மேல் போடப்படும் ஜமுக்காளம் முதலியவைகளைக் கெடுக்கும். யோபு $4^{19}$ $27^{18}$ ஏசா $50^{9}$ $51^{8}$ மத் $6^{19}$ லூக் $12^{33}$.

**பொது.** Common. அப் $2^{44}$ $4^{32}$ தீத் $1^{4}$ யூதா $1^{3}$.

**பொந்து.** Pontus. [கடல்.] பூர்வீக காலத்தில் 'கடல்' என்னும் அர்த்தங்கொண்ட பொந்து என்பது சின்ன ஆசியாவின் வடகிழக்கு ஓரத்தில் கருங்கடலுக்குச் சமீபத்திலுள்ள தேசத்தைக் குறிக்கும். ரோமர்கள் கி-மு. 61-ம் வருஷத்தில் இதின் ஒருபாகத்தைத் தங்கள் ராஜ்யத்தோடு சேர்த்துக் கொண்டார்கள். கி-மு. 36-ம் வருஷத்தில் இதில் மறுபடியும் பொந்து ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட்டது. கி-பி. 63-ம் வருஷத்தில் இது மறுபடியும் ரோமர்களால் கைவசப்படுத்தப்பட்டது. இந்நாட்டின் அரசன் இரண்டாம் ஏரோது அகிரிப்பாவின் மகளாகிய பெர்னிகேயாளை விவாகம் செய்தான். ஆதி கிறிஸ்தவ பாரம்பரியங்களின்படி இந்நாட்டுக் கிறிஸ்தவர்களுக்கு உண்டான துன்பங்களைப் பார்க்கும்போது, இதில் கிறிஸ்துமார்க்கம் பரம்பியிருந்ததென அறிகிறோம். அப் $2^{9}$ $18^{2}$ 1 பேது $1^{1}$. கி-பி. 110-ம் வருஷத்தில் இந்நாட்டிலுள்ள பிலினி (*Pliny*) என்னும் தேசாதிபதி ரோம ராயனாகிய திரேஜன் என்பவனுக்கு எழுதிய நிருபங்களில் இந்த தேசத்திலுள்ள எல்லாப் பட்டணங்களிலும் ஊர்களிலும் அநேக ஆண்களும் பெண்களும் கிறிஸ்துமார்க்கத்திற்கு வந்தார்களென்றும், அவர்களில் சிலர் 20, 25 வருஷங்களாக அந்த மார்க்கத்தில் இருந்தார்களென்றும் ராயனுக்குத் தெரிவிக்கிறான்.

**பொய்.** Lie, Falsehood.

**1. பழைய ஏற்பாடு:**

உண்மையை மறைப்பதும், உண்மைக்குப் பதிலாகப் பொய் சொல்லுவதும் யேகோவாவின் பரிசுத்தத்துக்கு அடுக்காதவையானதினால், யேகோவாவின் பரிசுத்தத்தைத் தேடுகிறவன் பொய் சொல்லக்கூடாது. லேவி $6^{2}$ $19^{11}$. பொய் பேசுகிறதைவிட நியாய விசாரணையில் பொய்ச்சாட்சி சொல்வது மகா குற்றம். யாத் $20^{16}$ $23^{1}$ உபா $19^{16}$. எபிரெயர்கள் எப்பொழுதும் பொய் பேசுகிறது பாவம்தான் என்று அறிந்து அதைக் கண்டித்தார்கள். நீதி $19^{22}$ $21^{28}$ $24^{28}$ $25^{18}$ $30^{6}$. நூலாசிரியர்கள் காயீன் ஆபேலைப்பற்றியும், ஆபிரகாம் தன் மனைவியைப்பற்றியும், சொன்ன கபடான வார்த்தைகளையும்; கேயாசி எலிசாவுக்குச் சொன்ன மொழிகளையும் எழுதும்பொழுது கபடத்தனத்தைக் கண்டிக்கிறதுபோல எழுதுகிறார்கள். ஆதி $4^{9}$ $12^{11}$ $20^{2}$ 2 இரா $5^{20}$. தீர்க்கதரிசிகள் விசேஷமாய்ப் பொய் பேசுகிறதையும், எல்லாவிதமான கபடத்தனத்தையும் கண்டித்து எல்லாத்தீமைக்கும் பொய்தான் காரணம் என்று தெரிவிக்கிறார்கள். ஓசி $7^{13}$ $12^{1}$ மீகா $6^{11}$. அவர்கள் யேகோவா சத்தியமுள்ளவர் என்று அதிகமாய் வற்புறுத்திச் சொல்லுகிறார்கள். எண் $23^{19}$ 1 சாமு $15^{29}$ சங் $89^{35}$ எசே $24^{14}$ மல் $3^{5}$. இதனால் அவர்கள் அபிப்பிராயத்தின்படி கள்ளத் தீர்க்கதரிசிகள் மகா குற்றவாளிகளா யிருக்கிறார்கள். எரே $5^{31}$ $6^{13}$ $29^{9}$ எசே $13^{6}$.

சில வாக்கியங்களில் யேகோவா மனுஷர்களை ஏமாற்றுவதற்குப் பொய்த்தீர்க்கதரிசனத்தைச் சொல்லும்படி தீர்க்கதரிசிகளுக்குப் பொய் பேசுகிற ஆவியை அனுப்புவார் என்று எபிரெயர்கள் நம்பினதாக தோன்றுகிறது. ஆனால் தீர்க்கதரிசிகள் உரைத்தவைகளை நாம் பார்த்தால் அவர்கள் எப்போதும் சத்தியத்தை விரும்புகிற யேகோவா இவ்விதமாய் மனுஷரை ஏமாற்றமாட்டார் என்றும்; கள்ளத் தீர்க்கதரிசிகள் கள்ளத் தீர்க்கதரிசனத்தைச் சொன்னால், அவர்கள் யேகோவாவினாலே ஏமாற்றப்பட்டவர்கள் அல்ல; அவர்கள் ஏதோ ஒரு காரணத்தினிமித்தம் தங்களைத்தானே ஏமாற்றிக்கொண்டவர்கள் என்றும் எபிரெயர்களுக்குப் போதித்தார்கள் என்பதை யறிவோம். 1 இரா $22^{23}$.

**2. புதிய ஏற்பாடு:**

பொய் எல்லாம் தீமைதான். இதற்குக் காரணன் சாத்தான். யோவா $8^{44}$ அப் $5^{3}$ வெளி $12^{9}$. கிறிஸ்தவர்கள் எவ்விஷயத்திலும் பொய் பேசாமல் உண்மை யுள்ளவர்களாய் இருக்கவேண்டும். எபே $4^{24}$ கொலோ $3^{9}$. இயேசு மேசியா அல்ல என்று சொல்வது பொய். 1 யோவா $2^{22}$. கிறிஸ்தவர்களாகிய நாம் நம்மில் பாவமில்லை என்று சொல்லுவோமானால் நாம் பொய்யர். 1 யோவா $1^{8}$. பொய் மதங்களுக்கும் எல்லாத்துன்மார்க்கங்களுக்கும் பொய்தான் காரணம். ரோம $1^{25}$. இயேசு சத்தியமுள்ளவரானதால் பொய் பேசுகிறவர்களுக்கும் அவருக்கும் யாதொரு ஐக்கியமும் இல்லை. வெளி $21^{8.27}$ $22^{15}$. **சத்தியம்** காண்க.

**பொய்ச்சாட்சி.** False Witness. யாத் $20^{16}$ உபா $5^{20}$ சங் $27^{12}$ நீதி $12^{17}$ $14^{5}$ $19^{5}$ $21^{28}$ $25^{18}$ மத் $19^{18}$ $26^{59}$ அப் $6^{13}$. 'கள்ளச் சாட்சி.' உபா $19^{18}$. **சாட்சி, பொய்** காண்க.

**பொய்யன்.** Liar. சங் $116^{11}$ நீதி $17^{4}$ $19^{22}$ எரே $50^{36}$ யோவா $8^{44-55}$ ரோம $3^{4}$

1 தீமோ 1[10] 4[1] தீத் 1[12] 1 யோவா 1[10] 2[4.22] 4[20] 5[10] வெளி 2[2] 21[8].

**பொய்யாணை.** Perjury. லேவி 6[5] எரே 5[2] ஓசி 10[4] சக 8[17] மல் 3[5] 1 தீமோ 1[10]. **சத்தியம், சாட்சி, பொய்** காண்க.

**பொராதா.** Poratha. ஆமானின் நான்காம் மகன். எஸ்தர் 9[8].

**பொருத்தனை.** Vow. பூர்வீகத்தில் மற்ற ஜனங்களைப்போலவே எபிரெயர்களும் தேவ தயவைப் பெறும்படி தாங்கள் விசேஷித்த காணிக்கைகள் செலுத்துவதாக கடவுளுக்குப் பொருத்தனை செய்வது வழக்கம். உதாரணமாக: யாக்கோபு யேகோவா தன்னைக் காப்பாற்றி, தான் போகும் தேசத்திலிருந்து சுகமாய்த் திரும்பிவரப் பண்ணுவாரானால், தான் எப்போதும் யேகோவாவை வணங்குவதாயும் தசமபாகம் செலுத்துவதாயும், பொருத்தனை பண்ணினான். ஆதி 28[20]. யெப்தா என்பவன் யேகோவா தனக்கு யுத்தத்திலே ஜெயம் கொடுத்தால், தன் வீட்டிலிருந்து எதிர்கொண்டு வருவது எதுவோ அதைச் சர்வாங்க தகனபலியாக கொடுப்பதாக பொருத்தனை செய்தான். நியா 11[30]. அன்னாள், தனக்குப் புத்திரபாக்கியம் கிடைத்தால், அந்தப் புத்திரனைத் தேவ ஊழியத்திற்கு ஒப்புக்கொடுப்பதாக பொருத்தனை செய்தாள். 1 சாமு 1[11]. இந்தப் பொருத்தனைகளைச் செய்தவர்கள் தேவ தயவைத் தேடினார்கள். நசரேயரோ தலைச்சவரம் செய்யாமலும், திராட்சப்பழ ரசத்தை அருந்தாமலும், அசுத்தமான உணவைப் புசியாமலும், பிரேதத்தைத் தொடாமலும் இருப்போம் என்று பொருத்தனைசெய்து தங்கள் முன்மாதிரியினால் அக்காலத்துக் கானானியருடைய வழக்க பழக்கங்களை விரும்பின எபிரெயர்களைக் கண்டிக்கத் தீர்மானித்தார்கள். பொருத்தனை பண்ணுதவன் நியாயப்பிரமாணத்தின்படி குற்றவாளியல்ல. ஆயினும், பொருத்தனைசெய்த ஒருவன் அதை எப்படியாவது நிறைவேற்றுவது அவசியம். உபா 23[21] எண் 30[2] நியா 11[35]. என்றாலும் பெண்கள் சில காரணங்களினாலே தாங்கள் செய்த பொருத்தனையை நிறைவேற்றுவது அவசியமில்லை. எண் 30[3-15] நீதி 20[25]. மல்கியா தீர்க்கதரிசி தன்காலத்தில் காணிக்கை செலுத்துவதாக பொருத்தனை செய்தவர்கள் பொருத்தனையின் மேன்மையைக் கவனியாமல், பழுதான பலிகளை ஆண்டவருக்குச் செலுத்தினார்கள் என்று அறிந்து அவர்களைப் பயங்கரமாய் எச்சரிக்கிறான். மல் 1[14].

யூதர்களில் சிலர் தங்கள் வெளிவேஷ பக்தியைப் பிறருக்குக் காண்பிக்கும்படி, தங்கள் தாய்தகப்பன்மாரைப் போஷித்துக் காப்பாற்றாமல் அந்தச் சவரட்சணைக்கு ஈடாக, 'கொர்பான்' என்னும் காணிக்கையை தேவாலயத்தில் கொண்டுபோய் செலுத்துவார்கள். மாற் 7[11]. **'கொர்பான்'** காண்க.

பரி. பவுல் இரண்டு தடவைகளில் பொருத்தனை செய்ததாக வாசிக்கிறோம். இது நசரேய பொருத்தனைதான் என்று சிலர் நினைத்தாலும் இதற்குப் போதுமான அத்தாட்சிகளில்லை. அப் 18[18] 21[23].

**பொருந்துகிறது.** Agree. ஏசா 1[19] மத் 5[25].

**பொருளாசை, பணஆசை.** Covetousness. வேதாகமத்தின்படி பொருளாசை பாவம்தான்; பத்துக் கற்பனைகளின்படி கொலை, விபசாரம், களவு, பொய்ச்சாக்ஷி என்னும் பாவங்களைப்போல பொருளாசையும் தகாதது. யாத் 20[17] உபா 5[21]. எபிரெயர்கள் ஆகானை இந்தக் குற்றத்தினிமித்தம் கொன்றுபோட்டார்கள். யோசு 7[16-26]. பொருளாசையைப்பற்றிச் சொல்லியிருக்கும் எல்லா வசனங்களிலும் அது கண்டிக்கப்பட்டிருக்கிறது. சங் 10[3] 119[36] நீதி 21[26] 28[16] ஏசா 57[17] ஆப 2[9]. புதிய ஏற்பாட்டில் விபசாரமும் பொருளாசையும் ஒரேவிதமாய்க் கண்டிக்கப்பட்டிருக்கிறது. 1 கொரி 5[11] 6[9] கொலோ 3[5] 2 பேது 2[14]. இயேசு இவ்விரண்டையும் மற்ற பாதகங்களுடனே சேர்த்துச் சொல்லுகிறார். மாற் 7[21]. கிறிஸ்தவன் மதுபானம் வேசித்தனம் முதலிய பாவங்களை நீக்கித் தன்னில் இச்சையடக்கத்தை நாடினால் அவன் பொருளாசையையும்கூட நீக்கும்படி கடவுளுடைய கிருபையைத் தேடுவது அவசியம். தேவனுடைய ராஜ்யத்தில் பொருளாசைக்காரனுக்கு இடமில்லை. எரே 22[17] மீகா 2[2] லூக் 12[15] ரோம 7[7] எபே 5[3] 1 தீமோ 6[10] எபி 13[5].

**பொருள்.** Wealth. நீதி 13[11] 18[11]. **திரவியம்** காண்க.

**பொர்க்கியு பெஸ்து.** Portius Festus. **பெஸ்து** காண்க.

**பொர்த்துனாத்து.** Fortunatus. [செல்வமுள்ளவன்.] கொரிந்துபட்டணத்துச் சபையிலிருந்த ஒருவன். பரி. பவுல் இவனுக்கு ஞானஸ்நானம் கொடுத்திருக்கலாம். பரி. பவுல் எபேசு பட்டணத்திலிருக்கும்போது பொர்த்துனாத்து இவனைச் சந்திக்கும்படி வந்தான். 1 கொரி 1[16] 16[17].

**பொலிகார்ப்பு.** Polycarp. ஆதிகிறிஸ்தவ பிதாவாகிய பொலிகார்ப்பு ஸ்மிர்னா பட்

டணத்தில் கண்காணியாயிருந்தான். இவன் ஏறக்குறைய கி—பி. 69—ம் ஆண்டில் பிறந்து வாலிபனுகி பரி. யோவானிடத்தில் சீஷனுயிருந்து, இயேசுகிறிஸ்துவைப்பற்றி அவன் அருளின போதகத்தை அடைந்து இயேசுவைப்பார்த்த அநேகருடன் சம்பாஷணை செய்து, சபைகளில் தேவ ஊழியத்தை நடத்தி, ஸ்மிர்ஞ பட்டணத்தில் கண்காணியாராய் நியமிக்கப்பட்டான். இவன் பிலிப்பியர்களுக்கு ஒரு நிருபம் எழுதி அவர்களுக்குப் புத்திமதிகளைச் சொன்ஞன். இவன் கி—பி. 135-150—ம் ஆண்டுகளுக்கு இடையில் ஐரெனேயு (*Irenaeus*) என்பவனுக்குத் தான் யோவானிடத்திலிருந்தும் இயேசுவைக் கண்ட மற்ற சாக்ஷிகளிடத்திலிருந்தும் தெரிந்துகொண்டவைகளைப் போதித்தான். ஏறக்குறைய கி—பி. 150—ம் ஆண்டில் இவன் ரோமாபுரிக்குப் போய் அங்கே பலருக்குப் பக்திவிர்த்தியை யுண்டாக்கி, ஸ்மிர்ஞவுக்குத் திரும்பி வந்தான். அக்காலத்திலே அந்தப் பட்டணத்திலுள்ள புறமதஸ்தர்கள் தங்கள் தேவதையின் திருவிழாவை நடத்தும்போது, கிறிஸ்தவர்களின்மேல் பொருமைகொண்டு, பொலிகார்ப்பைக் கொன்றுபோடும்படி இவனைத் தேடினர்கள். அப்போது இவனுடைய வேலைக்காரர்களில் ஒருவன் இவனை அந்தச் சத்துருக்களுக்குக் காட்டிக் கொடுத்தான். ஸ்மிர்ஞ சபையார் தாங்கள் எழுதின நிருபத்தில் இவன் அடைந்த உபத்திரவங்களை விவரமாய்க் காண்பித்திருக்கிறார்கள். அந்த ஊரில் ரோமராயனுல் நியமிக்கப்பட்ட ஒரு அதிபதி பொலிகார்ப்பைப்பார்த்து, 'நீ ராயனைக் கடவுளாக வணங்கி இயேசுவைத் தூஷித்தால் உன்னை விடுதலை செய்வேன்' என்று சொல்ல, பொலிகார்ப்பு, 'எண்பத்தாறு வருஷகாலமாய் நான் இவரைச் சேவிக்க, இவர் எந்தவிஷயத்திலும் எனக்கு யாதொரு அநியாயமும் செய்யவில்லை. என் ராஜாவும் மீட்பருமான இவரை நான் தூஷிப்பது எப்படி?' என்று தைரியத்துடனே கூறினன். அந்த அதிபதி இதைக்கேட்டு, இவனைக் கொன்றுபோட்டான். இவன் கி—பி. 155-ம் ஆண்டு பெப்ருவரிமீ 23-ம் உ ரத்தசாக்ஷியாக மரித்தான்.

**பொல்லாங்கு.** Evil. யோவா $3^{20}$ யாக் $1^{13}$.

**பொல்லாதவன், பொல்லாதவை.** Wicked. சங் $37^{9}$ மத் $9^{4}$.

**பொல்லாப்பு.** Evil. 2 சாமு $12^{11}$. 1 இரா $14^{22}$ $16^{25}$ சங் $140^{11}$ நீதி $20^{8}$ ஏசா $59^{15}$ எரே $5^{22}$ $23^{17}$ மீகா $7^{3}$. தீமை காண்க.

**போவனெர்கேஸ்.** Boanerges. [இடி முழக்கத்தின் மகன்.] இயேசு யாக்கோபுக்கும் யோவானுக்கும் இந்த மறுபெயர் அருளினர். சிலர் நினைக்கிறபடி இவர்கள் வாய்ச்சாதுரியத்தில் தேறினவர்களாய்ப் பிரசங்கம் பண்ண அதிக விருப்பமுள்ளவர்களானதினுல் இந்தப் பெயர்பெற்றிருக்கலாம். வேறு சிலர் இவர்கள் ஆத்திரகுணமுள்ளவர்களான தினுல் இந்தப் பெயர் இவர்களுக்குக் கொடுக்கப்பட்டது என்று எண்ணுகிறார்கள். மாற் $3^{17}$ லூக் $9^{54}$.

**பொறாமை.** Envy. கலகம், பிரிவினை, தூஷணம், பகை, கொலை என்பவைகளுக்குக் காரணம் பொருமை. ஆதி $26^{14}$ $30^{1}$ $37^{11}$ யோபு $5^{2}$ சங் $73^{3}$ $106^{16}$ நீதி $14^{30}$ ஏசா $11^{13}$ அப் $13^{45}$ ரோம $1^{29}$ $13^{13}$ 1 கொரி $3^{3}$ 2 கொரி $12^{20}$ கலா $5^{21}$ பிலி $1^{15}$ 1 தீமோ $6^{4}$ தீத் $3^{3}$ யாக் $3^{14}$ 1 பேது $2^{2}$. கிறிஸ்தவ அன்புக்குப் பொருமை நேர்விரோதமானது. 1 கொரி $13^{4}$. பிசாசினுடைய சுபாவத்தில் பொருமை இயற்கையாயுள்ளது. வேதாகமத்தில் பொருமைக்குப் பல திருஷ்டாந்தங்கள் உண்டு. ஆபேலின் பெயரில் காயீனும், ஏசாவின் பெயரில் யாக்கோபும், ராகேலின் பெயரில் லேயாளும், யோசேப்பின் பெயரில் அவன் சகோதரர்களும், தாவீதின் பெயரில் சவுலும், மொர்தெகாயின் பெயரில் ஆமானும், காணமற்போன குமாரன் பெயரில் அவன் அண்ணனும், பவுலின் பெயரில் ரோமாபுரி சுவிசேஷகரும் (பிலி $1^{15}$) பொருமை கொண்டார்கள்.

**பொறுமை.** Patience, Long-suffering. மூலபாஷைகளில் துன்பம் அநியாயம் முதலியவற்றைச் சகித்தல், தீயோருக்கு இரக்கத்தைக் காட்டுதல் என்று அர்த்தங்கொள்ளும் பதங்களுக்குத் தமிழ் வேதாகமத்தில் பொறுமை, சாந்தம், நீடியபொறுமை, நீடிய சாந்தம் என்று மாறிமாறிப் பொதுவாய்ச் சொல்லியிருக்கிறது.

பொறுமை: சங் $86^{15}$ எரே $15^{15}$ மத் $18^{26}$ அப் $26^{3}$ ரோம $2^{4}$ கலா $5^{22}$ எபே $4^{2}$ கொலோ $3^{12}$ 1 தீமோ $1^{16}$ எபி $6^{11}$ யாக் $5^{7}$ $5^{10}$ 1 பேது $3^{20}$ 2 பேது $3^{9}$.

சாந்தம்: யாத் $34^{6}$ எண் $14^{18}$ ரோம $9^{22}$ 1 கொரி $13^{4}$ 2 கொரி $6^{6}$ 1 தெச $5^{14}$ கொலோ $1^{11}$ 2 தீமோ $3^{10}$ $4^{2}$.

புதிய ஏற்பாட்டில் பொறுமையைக்குறிக்கும் கிரேக்கபாஷையின் மூல அர்த்தம் என்னவென்றால்: கோபத்துக்கு இடங்கொடாதிருப்பது; ஆத்திரத்துடனே யாதொன்றையும் செய்யாமலிருப்பது; ஒருவன் செய்த குற்றத்தை இரக்கத்துடனே நீடியகாலம் நினைப்பது. கடவுளின் லட்சணங்களில் இது

ஒன்று. அவர் பொறுமையுள்ளவராயிருப்பதினால் மனந்திரும்புதலுக்கு நமக்குச் சமயம் கொடுத்திருக்கிறார். இயேசுவின் லட்சணங்களிலும் இது ஒன்று. ஆகையால் கிறிஸ்தவர்கள் யாவரும் இதைத் தேடவேண்டியது. ஒரு கிறிஸ்தவன் பொறுமையுள்ளவனானால் அவன் பரிசுத்த ஆவியானவர் அருளும் இந்த ஈவை அடைந்ததினாலே அவன் கிறிஸ்து மார்க்கத்தில் தேறினவன் என்று நாம் சொல்லக்கூடும்.

**பொற்கன்றுக்குட்டி.** Golden calf. கன்றுக்குட்டி காண்க.

**பொற்பழம்.** 'Apples of Gold.' நீதி $25^{11}$.

**பொன்.** Gold. பூர்வகாலம்முதல் பொன் பலதேசங்களில் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இஸ்ரவேலர் அதை நன்றாய் அறிந்திருந்தார்கள். யாத் $12^{35}$ எண் $31^{52}$ யோசு $7^{21}$ நியா $8^{26}$. சாலொமோன்காலத்தில் அது யூதாவில் அதிகமாய் வழங்கப்பட்டது. 1 இரா $10^{14}$ 2 நாளா $1^{15}$ $9^{1}$ $9^{13}$. எபிரெயரின் அபிப்பிராயப்படி அது கீழ்க்கண்ட தேசங்களில் கண்டுபிடிக்கப்பட்டது:

ஆவிலா. ஆதி $2^{11}$.

ஒப்பீர். 1 இரா $9^{28}$ $10^{11}$ யோபு $28^{16}$.

தர்ஷீஷ். 1 இரா $10^{22}$.

சேபா. 1 இரா $10^{2}$ சங் $72^{15}$ எசே $27^{22}$.

ராமா. எசே $27^{22}$.

பர்வாயீம். 2 நாளா $3^{6}$.

அரபிதேசம். 2 நாளா $9^{14}$.

இவைகளில் ஆவிலா, சேபா என்பவைகள் அரபிதேசத்திலிருந்தன. ஒப்பீர் அரபிதேசத்திலாவது இந்தியாவிலாவது தென் ஆப்பிரிக்காவிலாவது இருந்திருக்கலாம்.

யோபு ஆகமத்தில் பலவிதமான பொன்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. யோபு $22^{24}$ $28^{15}$. ஆபிரகாமின் காலத்தில் ஜனங்கள் பொன் ஆபரணங்களை அணிந்துவந்தார்கள். ஆதி $13^{2}$ $24^{22}$ $24^{35}$. பிந்தினகாலங்களில் ராஜாக்களும் தனவான்களும் அதைப் பொக்கிஷமாய்ச் சேர்த்து வைத்தார்கள் எஸ்தர் $1^{6}$ தானி $3^{1}$ நாகூ $2^{9}$.

பூர்வகாலத்தில் பொன் நாணயங்கள் அச்சிடப்படாததினாலே, வியாபாரிகள் தராசிலே அதின் நிறையைப் பார்த்து 'சேக்கல்' 'தாலந்து' முதலிய நிறை அளவுகளைக் கொண்டு விலை கணிப்பார்கள். ஆதி $43^{21}$. கி-மு. 139-ம் வருஷம் முதல் யூதர்கள் பொன் நாணயங்களை அச்சிட்டார்கள். மத் $10^{9}$-ல் சொன்ன 'பொன்' ரோமர்கள் அச்சிட்டதும் 15 ரூபாய் விலையுள்ளதுமான பொன் நாணயத்தைக் குறிக்கிறது.

ஆசரிப்புக் கூடாரத்திலும் தேவாலயத்திலும் பொன் தகடுகள் அதிகமாய் உபயோகிக்கப்பட்டது. யாத் $36^{24}$ 1 நாளா $22^{14}$ $29^{4}$ 2 நாளா $3^{4}$.

## போ.

**போகன்.** Bohan. யோசு $15^{6}$.

**போகீம்.** Bochim. [துக்கம் கொண்டாடுகிறவர்கள்.] நமக்குத் தெரியாத ஒரு இடம். நியா $2^{1}$.

**'போக்காடாகிய வெள்ளாட்டு கடா.'** A. V. Scapegoat. R. V. Azazel. பக்கம் 520 காண்க.

**போக்கு.** Excuse. லூக் $14^{18}$ யோவா $15^{22}$ ரோ $1^{20}$.

**போசேஸ்.** Bozez. பென்யமீன் கோத்திரத்தின் நாட்டில் மிக்மாஸ் என்னும் பள்ளத்தாக்கின் ஒரு பக்கத்தில் உள்ள ஒரு செங்குத்தான மலை. 1 சாமு $14^{4}$.

**போஸ்காத்.** Bozkath. யோசு $15^{39}$.

**போஸ்றா.** Bozra. [அலங்கம்.]

1. ஏதோம்தேசத்திலுள்ள ஒரு கோட்டை. இது இருந்த இடம் தெரியாது. ஆனால் தீர்க்கதரிசிகள் இதைப்பற்றிச் சொன்ன வசனங்களை நாம் பார்க்கும்போது இது ஒரு பெரிய பட்டணமாயிருந்திருக்கவேண்டும். ஆதி $36^{33}$ ஏசா $34^{6}$ $63^{1}$ மீகா $2^{12}$.

2. மோவாப் தேசத்தில் எரேமியா தீர்க்கதரிசியால் கண்டிக்கப்பட்ட ஒரு ஊர். எரே $48^{24}$.

**போஜனசாலை.** A. V. 'Parlour.' R. V. 'Guest chamber.' ஒரு அறை. 1 சாமு $9^{22}$.

**போஜன பலி.** A. V. 'Meat offering'. R. V. Meal offering. யாத் $29^{41}$ லேவி $2^{1}$ $6^{14}$ எண் $7^{13}$ எசே $45^{15}$ மு. பலிகள் காண்க.

**போஜனம்.** Meal. எபிரெயர்களும் பலஸ்தீனா முதலிய தேசங்களிலுள்ளவர்களும் தினத்துக்கு இரண்டுமுறை சாப்பிடுவார்கள். அதிகாலையில் வேலைக்குப் போகுமுன் குடியானவர்களும், கைத்தொழிலாளிகளும் சில அப்பத்துண்டையும் பேரீச்சப்பழங்கள் அல்லது ஒலிவப்பழங்களையும் புசிப்பார்கள்.



போஜனசாலை.

ஆனால் இது சரியான போஜனமல்ல. மேலும், அதிகாலமே போஜனம் செய்வது எபிரெயர்களுக்கு வெட்கமானகாரியம். பிரசங்கி $10^{16}$. இந்துக்களைப்போல பெரும்பாலும் எபிரெயர்கள் மத்தியானத்தில் முதலாவது சாப்பிடுவார்கள். சூரியன் அஸ்தமித்தபிறகு வேலைக்காரர்கள் வேலைமுடிந்து வரும்போது மறுபடியும் சாப்பிடுவார்கள். லூக் $11^{38}$ $14^{17}$ $17^{7}$ மத் $22^{4}$ ரூத் $2^{14}$. மத்தியானத்தில் மாவினால் சுட்ட ரொட்டி, கோதுமை அடை, கூழ் அல்லது மீன்துண்டுகள் முதலியவற்றைச் சாப்பிடுவார்கள். எப்படியாகிலும் அப்பொழுது அதிகமாய்ச் சாப்பிடமாட்டார்கள். சாயங்காலத்தில் மேற்சொன்ன போஜனங்களுடன் இன்னும் சிலவற்றைச் சேர்த்து நன்றாய்ச் சாப்பிடுவார்கள். ஆகாரம் காண்க. இதனிமித்தம் சில வசனங்களில் சாயங்காலம் செய்யும் போஜனத்துக்கு 'விருந்து' என்னும் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது.

பூர்வீகத்தில் எபிரெயர்கள் பாய்மேல் சப்பணங்கால் இட்டு, உட்கார்ந்து (ஆதி $37^{2}$) ஒரு பாயின்மேல் வைக்கப்பட்டு மரத்தட்டு ஒன்றில் போட்ட போஜனத்தை எடுத்துச் சாப்பிடுவார்கள். பிற்காலங்களில் போஜனத்தை மேசையின்மேல்வைத்து, தாங்கள் அதைச்சுற்றி நாற்காலியில் உட்கார்ந்து சாப்பிடுவார்கள். இப்படியே சாலொமோன் ராஜா போஜனத்துக்குப் பந்தியில் உட்கார்ந்ததைச் சேபாவின் ராணி பார்த்தாள். 1 சாமு $20^{25}$ 1 இரா $10^{5}$ $13^{20}$. பின்காலங்களில் பெரிய ஆஸ்திக்காரர்கள் சீரியாதேசத்தார்களைபோல மேசையின்மேல் சாப்பாட்டைவைத்து அதின்பக்கத்தில் கட்டில்களைப்போட்டு அவைகளின்மேல் படுத்துக்கொண்டு சாப்பிடுவார்கள். மேசைகளுக்கு இடையில் வேலைக்காரர்கள் போவதற்கு வழிவிட்டிருக்கும். தீர்க்கதரிசிகள் 'மஞ்சம்' என்பதைப்பற்றிப் பேசும்போது இவ்விதமான கட்டில்களைக் குறிக்கிறார்கள். ஆமோ $3^{12}$ $6^{4}$ எசே $23^{41}$. (கட்டில் காண்க). ஆனால் பெண்களும் பிள்ளைகளும் ஏழைகளும் முன்போலவே தரையில் உட்கார்ந்து சாப்பிடுவார்கள். கட்டில்மேல் படுத்துக்கொண்டவனின் வலது பக்கத்தில் படுத்துக்கொள்ளுகிறவன் அவன் 'மார்பில் சாய்ந்துகொண்டிருக்கிறவன்' என்று வழக்கமாய்ச் சொல்லுவார்கள். இதனிமித்தம் இயேசுவும் சீஷர்களும் போஜனம் பண்ணும்போது யோவான் இயேசுவின் வலது பக்கத்தில் இருந்தான் என்று விளங்குகிறது. யோவா $13^{23}$.

சாப்பிடுவதற்குமுன் யூதர்கள் அதிக ஜாக்கிரதையாய்த் தங்கள் கைகளைத் தண்ணீர் வார்த்துக் கழுவிக்கொள்வார்கள். மாற் $7^{3}$ யோவா $2^{6}$. பிறகு பெண்கள் போஜனம் கொண்டுவருவார்கள். மாற் $1^{31}$ லூக் $10^{40}$. ஐசுவரியவான்களுடைய வீடுகளில் வேலைக்காரர்கள் இந்த வேலையைச் செய்வார்கள். யோவா $2^{5}$. சாப்பிடுமுன் யூதர்கள் தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துவார்கள். மத் $15^{36}$ $26^{26}$ அப் $27^{35}$. யூதர்கள் உபயோகித்த பானைகளும் பாத்திரங்களும் பலமாதிரியாக இருந்தது. சட்டி, தாளம், பாத்திரம், கூடை முதலியவை காண்க.

அவர்கள் சாப்பிடும்போது வேண்டிய பதார்த்தங்களை வலது கையில் எடுப்பார்கள்.

கூழ் ரசம் முதலியவைகள் வாங்கும்போது லேசான அப்பம் எடுத்து அதில் கோப்பைப் போல் பள்ளம் செய்து, அதில் ரசத்தை எடுத்துச் சாப்பிடுவார்கள். இயேசு 'தோய்த்த அப்பத்துணிக்கை' இதுதான். யோவா $13^{26}$.

யூதர்களில் ஒரு பெரியவன் விருந்து செய்தால், அவன் முதலாவது வேலையாட்களை அனுப்பித் தன் சிநேகிதர்களுக்குத் தெரிவிப்பான். மத் $22^{3}$. பிறகு குறிக்கப்பட்ட நாளிலே அவர்களை அழைக்கும்படி ஆட்களை மறுபடியும் அனுப்புவான். லூக் $14^{17}$. அழைக்கப்பட்டவர்கள் வரும்போது விருந்து செய்கிறவன் அவர்களுக்கு முத்தமிட்டு, வாழ்த்துதல் சொல்வான். வேலைக்காரர்கள் வழியில் கால்களில் படிந்த தூசிகளைக் கழுவும்படி விருந்தாளிகளின் கால்களின்மேல் தண்ணீர் வார்ப்பார்கள். பிறகு தலைமேல் நல்ல வாசனையுள்ள எண்ணெய் கொஞ்சம் பூசுவார்கள்.

விருந்தாளிகள் விருந்துக்கு வரும்போது விசேஷித்த வஸ்திரங்களைத் தரித்துக்கொள்வார்கள். சில சமயங்களில் பெரியவர்கள் விருந்தாளிகளைப் பிரியப்படுத்தும்படி அவர்களுக்கு விசேஷித்த வஸ்திரங்களைக் கொடுப்பார்கள். மத் $22^{11}$. உடை (பக்கம் 143) காண்க.

விருந்து செய்கிறவன் விருந்தாளிகளில் விசேஷித்த சிலரைக் கனப்படுத்தும்படி அவர்களுக்குக் கட்டில்களில் 'முதன்மையான இடம்' என்னும் முக்கியமான இடங்களைக் காட்டி அவர்கள் எல்லாரும் கட்டிலின்மேல் படுத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்வான். மத் $23^{6}$. அவர்கள் சாப்பிட்ட பிறகு வேலைக்காரர் மறுபடியும் தண்ணீர் கொண்டுவந்து விருந்தாளிகளின் கைகளைக் கழுவி, பலவித பழங்களைக் கொண்டுவந்து வைப்பார்கள். பழங்களுக்காகவும் மறுபடியும் தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துவார்கள். விருந்தின் துவக்கத்தில் எபிரெயர்கள் திராட்சப்பழரசம் கொஞ்சம் குடிப்பார்கள். பழம் கொண்டுவந்தபிறகு தண்ணீரோடும், வாசனையுள்ள பூண்டுகளோடும் கலந்த திராட்ச ரசத்தைக் குடிப்பார்கள். எரே $35^{5}$. இவைகளையெல்லாம் முறைமுறையாயும் ஒழுங்காயும் பரிமாறும்படிக்கு 'பந்தி விசாரிப்புக்காரன்' ஒருவனை நியமிப்பார்கள். யோவா $2^{8}$. சில சமயங்களில் பாடகரும் கூத்தாடிகளும் வந்து பாடி நடனம் ஆடுவார்கள். லூக் $15^{25}$. யூதர்கள் வழக்கமாய் போஜனபானத்தில் நல்லொழுக்கத்தைக் கவனித்து அதிகமாய்ச் சாப்பிடாமலும் குடியாமலும் இருப்பார்கள்.



போஜனம்.

**போதகம், போதனை.** Teaching. 2 நாளா $18^{20}$ நீதி $4^{2}$ ஆப $2^{18}$ மத் $7^{29}$ யோவா $18^{19}$ அப் $5^{28}$ கொலோ $2^{21}$ வெளி $2^{14}$. **நியாயப்பிரமாணம்** காண்க.

**போதகர்.** Teacher. நீதி $5^{18}$ ஏசா $30^{20}$ லூக் $2^{36}$ யோவா $3^{2}$ அப் $13^{1}$ ரோம $2^{20}$ 1 கொரி $12^{28}$ எபே $4^{13}$ 1 தீமோ $2^{7}$ 2 தீமோ $1^{11}$ $4^{3}$ 2 பேது $2^{1}$. **குரு, நியாயசாஸ்திரி, பள்ளிக்கூடம், வேதபாரகர்** காண்க.

**போதிக்கிறது.** Teach. சங் $119^{26, 99}$ மத் $7^{28}$ மாற் $7^{7}$ லூக் $12^{12}$. ரோம $12^{1}$ 1 கொரி $4^{17}$ 1 தீமோ $1^{13}$ $4^{6-11}$ 2 தீமோ $2^{2}$.

**போத்திபார்.** Potiphar. யோசேப்பின் சரித்திரத்தில் சொன்ன எகிப்து ராஜாவினுடைய பரிவாரங்களில் உள்ள ஒரு உயர்ந்த உத்தியோகஸ்தன். இவனைப்பற்றித் தமிழ் வேதாகமத்தில் தலையாரிகளுக்கு அதிபதி என்றும், ஆங்கிலேய வேதாகமத்தில் காவலாளிகளின் தலைவன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதனிமித்தம், எகிப்து ராஜாவின் மாளிகையில் குற்றம் செய்தவர்களை, இவன் தன் வீட்டைச்சேர்ந்த சிறைச்சாலையில் வைப்பான். சிலர் நினைக்கிறபடி இவன் ராஜா நம்பின ஆலோசனைக்காரர்களில் ஒருவன் ஆனதினால் இவன் ராஜா புசிக்கும் பதார்த்தங்களில் நஞ்சு கலந்திராதபடிக்கு அவைகளை ராஜா சாப்பிடுமுன் தான் ருசித்துப் பரிசோதிப்பான். இவன் யோசேப்பை அடிமையாக வாங்கினான். இவன் மனைவி யோசேப்பின்பேரில் குற்றம் சாட்டியதினிமித்தம் இவன் யோசேப்பைச் சிறைச்சாலையில் வைத்தான். ஆதி $37^{36}$ $39^{1}$.

**போத்திபிரா.** Potipherah. [சூரிய தேவதையால் கொடுக்கப்பட்டவன்.] யோசேப்பின் மனைவியாகிய ஆஸ்நாத்தின் தகப்பன். இவன் ஆவேன் பட்டணத்தில் சூரிய

தேவனின் ஆசாரியர்களில் ஒருவன் என்று தோன்றுகிறது. ஆகையால் இவன் எகிப்து தேசத்தில் கல்வியில் தேறின சிரேஷ்டமான வர்களில் ஒருவன். ஆதி 41[45] 46[20].

**போத்தினியானர்.** Photinians. போத்தினு (*Photinus*) கலாத்தியா நாட்டில் பிறந்து மார்கெலு என்பவன் போதித்த தப்பறைகளைக் கற்றுக்கொண்டு கி-பி. 136-166 மட்டும் வேத சாஸ்திரத் தத்துவத்தைக் குறித்துப் பல தர்க்கங்களைச் செய்து அவைகளினிமித்தம் பல துன்பங்களை அநுபவித்து மரித்தான். இவன் இயேசுகிறிஸ்துவைப்பற்றிப் போதித்த தப்பறைகளைத் தெளிவாய் இவ்விடத்தில் சொல்வது அரிது. ஆனால் சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் இவன் திரியேகத்துவத்தைக்குறித்துச் சரியாய் அறியாமல், கிறிஸ்துவுக்கும் பரிசுத்த ஆவியானவருக்கும் தேவத்துவம் பரிச்சேதம் இல்லை என்று போதித்தான். நித்திய வார்த்தையாகிய இயேசு கிறிஸ்து இவ்வுலகத்தில் பிறக்கும்போதுமாத்திரம் தேவகுமாரனாய் இருந்தார் என்றும், தேவகுமாரன் இரட்சணிய ஊழியம் செய்த பிறகு இனி தேவகுமாரனாயிராமல் பிதாவோடு ஏகமாய்ப் போவார் என்றும் போதித்த சபெல்லியுவைப்போல் போதித்தான் என்று தோன்றுகிறது. 16-ம் நூற்றாண்டில் சோசினியானர் இவ்விதமான கொள்கைகளைப் பற்றிக்கொண்டார்கள்.

**போரடிக்கிறது.** Thresh. உபா 25[4] 1 நாளா 21[20] ஏசா 28[28] ஆப 3[12] 1 கொரி 9[9]. களம் காண்க.

**போராட்டம்.** Contention. 1 தெச 2[2] யூதா 1[3]. இவ்வசனங்களில் சொல்லப்படுகிற போராட்டம் என்கிற பதம் கிறிஸ்தவர்களிடம் காணப்படவேண்டிய முயற்சியைக் குறிப்பிடுகிறது.

**போர்.** War. சண்டை காண்க.

**போர்ச்சேவகர்.** Soldiers, Band, Legion. பூர்வீககாலத்தில், நமக்குத் தெரிந்த பட்டாளங்களில் போர்ச்சேவகர் இருக்கவேயில்லை. அவர்கள் சாதாரணமாய் ஒரு பெரிய இராஜாவினிடத்திலாவது தலைவனிடத்திலாவது வந்து, அவர்களுடைய உத்தரவின்படி சத்துருக்களை ஜெயிக்கும்படி ஒரு கூட்டமாயிருப்பார்கள். நியாயாதிபதிகளும், சவுல் தாவீது ராஜாக்களும் இவ்விதமான போர்ச்சேவகர்களைச் சேர்த்து அவர்களுடைய உதவியினாலே போர் செய்வார்கள். 1 இரா 11[24].

பிந்தின காலங்களில் எபிரெயர்களுடைய ராஜாக்களாகிய சாலொமோன் முதலியவர்கள், தங்களையும் தங்கள் தேசத்தையும் பாதுகாக்கவும் சத்துருக்களை எதிர்த்துத் துரத்தவும் சம்பளத்துக்காக ஆட்களை அமர்த்தி, இவ்விதமாய்ச் சேனைகளைச் சேர்த்தார்கள். அசீரிய, பாபிலோனிய ராஜாக்களும் இவ்விதமாகவே பெரிய சேனைகளை வைத்திருந்தார்கள். இந்தச் சேனையில் சேர்ந்தவர்கள் தங்கள் தலைவனிடத்திலிருந்து பெற்றுவந்த சம்பளத்தைத் தவிர தாங்கள் ஜெயித்த நாடுகளிலுள்ள ஆஸ்திகளையும் கொள்ளையிடுவது வழக்கம்.

புதிய ஏற்பாட்டில் சொல்லப்பட்டிருக்கிற போர்ச்சேவகர் அக்காலத்தில் மேன்மைபெற்றுவந்த ரோம ராஜாங்கத்தின் சேனைகளில் இருந்தவர்கள்தான். எருசலேம் பட்டணத்திலுள்ள அந்தோனியாக்கோட்டையில் அக்காலத்திலே ஒரு பட்டாளமிருந்தது. புதிய ஏற்பாட்டில் சொல்லப்படுகிற போர்ச்சேவகரின் 'கூட்டம்' இதுதான். மத் 27[27] மாற் 15[16] அப் 21[32] யோவா 18[3.12].

இத்தாலியா, அகஸ்து முதலிய பட்டாளங்கள் ரோம சேனையைச் சேர்ந்தவைதான். அப் 10[1] 27[1]. அகுஸ்து பட்டாளம், இத்தாலியாப் பட்டாளம், சண்டை, சேனை, முற்றுகை காண்க.

**போர்வை.** Skirt, Garment. ரூத் 4[9]. உடை காண்க.

**போவாஸ்.** Boaz. [? பலம்.]

1. ரூத்தின் சரித்திரத்தில் சொல்லப்படுகிற போவாஸ் என்பவன் தாவீதின் தகப்பனாகிய ஈசாயின் பாட்டன். இவன் மோவாப் தேசத்திலிருந்து விதவையாக வந்த ரூத்தை விவாகம் செய்தான். ரூத் 4[21] 1 நாளா 2[11] மத் 1[5] லூக் 3[32].

2. சாலொமோன் கட்டின தேவாலய வாசல் மண்டபத்தின் இடதுபுறத்தில் நிறுத்தப்பட்டிருந்த தூண். 1 இரா 7[21] 2 நாளா 3[17]. தூண் காண்க.

**போற்றுகிறது.** Sing Praises. சங் 47[6].

## பௌ.

**பௌர்ணமி.** Full-Moon. சந்திரன் காண்க.

## ம.

**மகடன்.** Magadan. தல்மனூத்தா காண்க.

**மகத்துவம்.** Majesty. யாத் 15[11] 1 நாளா 29[25] யோபு 40[10] சங் 21[5] 29[4] 45[3] ஏசா 63[1] எபி 1[3] 8[1] யூதா 1[25]. மகிமை காண்க.

**மகமது, இஸ்லாம்மார்க்கம். Muhammad and Islam.**

[இந்தவேத அகராதியில் மகமது மார்க்கத்தைப் பற்றி விவரமாய் எழுத இடம் இல்லாதிருந்தாலும், இதை வாசிப்பவர்களில் அநேகர் இஸ்லாம் மார்க்கத்தைக் குறித்துச் சில விஷயங்களை அறிவது அவசியமாயிருக்குமாகையால் நாம் இதிலே மகமதுவைக் குறித்தும், இஸ்லாம் மார்க்கத்தைக் குறித்தும் முக்கியமான சிலவற்றைச் சொல்லுவோம்.]

**I. மகமது:**

மகமது கி—பி. 570—ம் வருஷத்தில் அராபியா தேசத்திலுள்ள மெக்கா பட்டணத்தில் பிறந்தான். அக்காலத்தில் அராபியா தேசத்தார் பெரும்பாலார் விக்கிரகாராதனைக்காரர்களாயிருந்தார்கள். சிலர் நக்ஷத்திரங்களை வணங்கினார்கள். அத்தேசத்தில் சில யூதர்களும் கிறிஸ்தவர்களும் இருந்தார்கள். அத்தேசத்தார் ஒரே ராஜ்யத்தில் சேர்ந்திராமல் பற்பல கோத்திரங்களாகப் பிரிந்து தங்களுக்குள்ளே பலதடவைகளில் சண்டைசெய்து நாகரீக மற்றவர்களா யிருந்தார்கள்.

மகமது பிறக்குமுன் அவன் தகப்பன் இறந்துபோனான். இவனுடைய ஆறும் வயதில் இவன் தாயாரும் இறந்துபோனாள். அதற்குப்பிறகு இரண்டு வருஷகாலம் இவன் பாட்டனும், அதற்குப்பிறகு இவன் தகப்பனுடைய சகோதரனாகிய அபுதாலிப் என்பவனும் இவனைக் காப்பாற்றினார்கள். அபுதாலிப் வியாபாரத்தினிமித்தம் சீரியா முதலிய தேசங்களுக்குப் பிரயாணம் பண்ணும்பொழுது இவனையும் கொண்டுபோனான். சில காலத்திற்குப் பிறகு மகமது கதீஜாள் என்னும் ஐசுவரியமுள்ள ஒரு பெருமாட்டிக்காக வியாபாரம் செய்யும்படிப் பிரயாணம் பண்ணி அந்த வேலையை நன்றாய்ச் செய்து அவளை விவாகம்பண்ணி, அவளால் கிடைத்த செல்வத்தினால் ஒட்டக வியாபாரம் முதலியவற்றைச் செய்து மெக்கா பட்டணத்தில் ஒரு பெரிய ஆஸ்திக்காரனானான். அச்சமயத்தில் அப்பட்டணத்தார்களில் சிலர் அராபியா தேசத்தில் நேரிட்ட அவபக்தியையும், நாகரீகமின்மையையும்பற்றித் துக்கங்கொண்டு மகமதுவைச் சந்தித்தார்கள். இவர்களில் விக்கிரகாராதனையை நீக்கினவர்கள் மெய்பக்தியைத் தேட, ஒருவன் மெக்கா பட்டணத்தை விட்டு, அதற்குச் சமீபமாய் இருந்த ஒரு மலைக்குப் போய் அங்கே வாசம்பண்ணி, பயபக்தியை நாடிக்கொண்டிருக்கும்பொழுது, மகமது முதலியவர்கள் மெக்காவிலிருந்து அவனிடம் வந்து, தாங்கள் பக்தியடையும் மார்க்கத்தைப்பற்றி விசாரித்தார்கள். அப்பொழுது மகமது ஒருசமயத்தில் பிரதான தூதனாகிய காபிரியேலைத் தரிசனத்திலே கண்டு, அத்தரிசனத்தில் இவன் கண்டதின்படி விக்கிரகாராதனையை நீக்கவும், புதிய மார்க்கத்தை ஸ்தாபிக்கவும் ஏற்பாடு செய்தான். அதை அறிந்து கதீஜாளும் இன்னும் சிலரும் இவனுடைய சீஷர்களானார்கள். முதலில் இவர்கள் இந்தப் புது உபதேசத்தைப் பகிரங்கமாய்ப் பிரசங்கிக்கவில்லை. மெக்கா பட்டணத்தாரோ இதைப்பற்றிக் கொஞ்சம் தெரிந்து, விக்கிரகாராதனை அற்றுப்போனால், திருவிழாக்களுக்காகத் தங்கள் பட்டணத்துக்கு வந்தவர்கள் மூலமாய்த் தங்களுக்கு உண்டான ஐசுவரியம் அகன்றுபோம் என்று கருதி, மகமதுவையும் இவன் சீஷர்களையும் உபத்திரவப்படுத்தி வந்தார்கள். மகமது இதை லக்ஷியம் செய்யவில்லை. பிறகு அவர்கள் இவனை ஏமாற்றும்படி லஞ்சம் கொடுக்கப் பிரயாசப்பட்டார்கள். அதையுங்கூட மகமது கவனிக்கவில்லை. பிறகு அவர்களுக்கும் இவனுக்கும் அதிகமாய்த் தர்க்கவாதம் இருந்தது. இப்படியாக மகமது படிப்படியாய் விக்கிரகாராதனை வீணானது என்று தெரிந்து அக்காலமுதல் விக்கிரகாராதனைக்கு இடம் கொடுக்கவேயில்லை. அப்படியிருக்க மெக்கா பட்டணத்தார் இவனையும் இவனைச் சேர்ந்தவர்களையும் தங்கள் குல ஐக்கியத்தினின்று துரத்தினார்கள். அச்சமயத்தில் கதீஜாள் என்பவள் இறந்துபோனாள்.

மூன்று வருஷத்திற்குப் பிறகு மெக்கா பட்டணத்தார் தாங்கள் செய்திருந்த கட்டுப்பாட்டை நீக்கி, மறுபடியும் பட்டணத்திலே சஞ்சரிக்கும்படி மகமது முதலியவர்களுக்கு உத்தரவு கொடுத்தும், ஜனங்களுக்கு முன்பாக இவன் ஜனங்களை ஏமாற்றுகிற மாயக்காரன் என்று இவன்பெயரில் குற்றம் சாட்டினார்கள். இதெல்லாம் கண்ட மகமது மனச்சோர்வு அடைந்து, 70 மைல் தூரத்துக்கப்பாலிருந்த தாயீவ் (*Taif*) என்னும் ஊருக்குப் போனான். ஆனால் அந்த ஊராரும் இவனை மதிக்கவில்லை, ஆயினும் தேவதரிசனத்தில் அநேக தேவதைகள் தன் மார்க்கத்துக்கு வருகிறதாக கண்டு தைரியத்துடனே திரும்பவும் மெக்காவுக்கு வந்து சேர்ந்தான்.

இப்படியாக மகமது தான் 10 வருஷக்காலம் விக்கிரகாராதனையைக் கண்டித்து, கடவுளைமாத்திரம் வணங்கவேண்டுமென்றுபோதித்தும், தான் செய்த பிரயத்தனங்களெல்லாம் வீணாய்ப்போயிற்று என்று பார்த்தான். அக்காலத்தில் மதீனா (*Medina*) என்னும் ஊரிலிருந்து மெக்காவுக்கு வந்த சில பிரயாணிகள் மகமதுவின் உபதேசத்தைக் கேட்டு,

அதை ஏற்றுக்கொண்டு, தங்கள் ஊருக்குப் போய் அதைக்குறித்துப் பிரசித்தம் பண்ணினார்கள். அடுத்த வருஷத்தில் அவர்கள் மதீனாவிலிருந்து மெக்காவுக்கு வந்து, மகமது தங்கள் ஊருக்கு வந்துவிட்டால், தாங்கள் அவனைக் காப்பாற்றுவதாக சொன்னதினாலும், மெக்கா பட்டணத்தார் இவனை ஓயாமல் தொந்திரவு செய்ததினாலும், இவன் மதீனாவுக்குப் போய்விடுவது நலம் என்று தீர்மானித்து, கி-பி. 622-ம் வருஷத்தில் மெக்காவை விட்டு மதீனாவுக்குப் போனான். மகமது இப்படிப்போன பிரயாணத்துக்கு இஜிரா (*Hijra*) என்று பெயர். இந்த இஜிரா வருஷம் முதற்கொண்டு மகமது மார்க்கத்தார் தங்கள் வருஷங்களைக் கணிக்கிறார்கள்.

மதீனா பட்டணத்தார் மகமதுவைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டார்கள். அப்பட்டணத்தில் அநேக யூதர்களும் கிறிஸ்தவர்கள் சிலரும் இருந்தார்கள். யூதர்களும் கிறிஸ்தவர்களும் இவன் செய்த போதகத்தை அங்கீகரிக்கவில்லை. மற்ற அராபியர்களோ இவனைத் தங்களுக்குத் தலைவனாக ஏற்படுத்தி இவனுக்குக் கீழ்ப்படிந்துவந்தார்கள். மகமதுவும் அவனைச் சேர்ந்தவர்களும் தங்களுக்கு வேண்டிய சவரக்ஷணைக்காக, தங்களைத் துரத்தின மெக்கா பட்டணத்து வியாபாரிகள் பிரயாணம் பண்ணும்போது, அவர்களைக் கொள்ளையடித்தார்கள். பதர் (*Badr*) என்னும் சண்டையில் மகமது மெக்கா பட்டணத்தாரை ஜெயித்ததின்மேல் இவனுக்குப் பேர் பிரஸ்தாபம் உண்டாயிற்று. மெக்கா பட்டணத்தாரோ மறுபடியும் மகமதுவை எப்படியாவது ஜெயிக்க வேண்டும் என்று தீர்மானித்து, இவன் பெயரில் படையெடுத்து, உகத் (*Uhud*) என்னும் சண்டையில் மகமதுவை ஜெயித்தார்கள். அவர்கள் இவனை ஜெயித்தபோதிலும், மதீனாவைப் பிடிக்கும்படி ஒன்றும் செய்யாததினால் மகமது தன்னை ஏற்றுக்கொள்ளாத அநேக யூதர்களை மதீனாவிலிருந்து துரத்திவிட்டு, அவர்களுடைய நிலங்களையும் ஆஸ்திகளையும் கைப்பற்றித் தனக்கும் தன் சீஷர்களுக்கும் வேண்டிய உதவி செய்துகொண்டான்.

இக்காலத்தில் மகமதுக்கு வேறு சில மனைவிகள் இருந்தும் இவன், தான் விடுதலையையும், புத்திர சுவிகாரத்தையும் கொடுத்த தனது அடிமையாகிய சாயீத் (*Zaid*) என்பவனுடைய மனைவியாகிய சாயீனாப் (*Zainab*) என்பவளை விவாகம் பண்ணிக்கொள்ள விரும்பினான். இதினிமித்தம் சாயீத் அவளுக்குத் தள்ளுதல் சீட்டைக் கொடுத்தான். அவளை விவாகம் செய்வது ஆசாரத்துக்கு விரோதமானதால், மகமது தான் கண்ட தரிசனத்தில் தனக்கு உத்தரவு கிடைத்ததென்று தெரிவித்து, அவளை மணம்புரிந்தான்.

இதின்பிறகு மெக்கா பட்டணத்தார் மதீனாவை முற்றுகைபோட்டு, பயந்து ஓடிப்போனார்கள். மகமது, மதீனா பட்டணத்திலுள்ள யூதர்கள் மெக்கா பட்டணத்தாருக்கு இந்த முற்றுகையில் உதவிசெய்தார்கள் என்று சொல்லி, அவர்களில் 700 அல்லது 800 பெயர்வரையில் கொன்றுபோட்டான்.

மகமது, அராபியர்களெல்லாரும் மெக்கா பட்டணத்தில் தங்கள் ஆசாரச் சடங்குகளை நடத்திக்கொண்டு, 'சிறிய வீடு' என்ற 'காபா' (*Kaaba*) கோவிலிலுள்ள பரிசுத்தமான கறுப்புக்கல்லை வணங்கும்படி அங்கே போவார்கள் என்று கண்டு, தான் ஸ்தாபிக்க விரும்புகிற மார்க்கம் விருத்தியடைய வேண்டுமானால், தான் எப்படியாகிலும் மெக்காவைப் பிடித்து அதைத் தன் மார்க்கத்துக்கு முக்கிய ஸ்தானமாக்க வேண்டுமென்று தீர்மானித்தான். கி-பி. 628-ம் வருஷத்தில் இவனுடைய சீஷர்களில் சிலர் மெக்காவுக்குப் போகப் பிரயத்தனப்பட்டபோது, மெக்கா பட்டணத்தார் அவர்களுக்குத் தங்கள் ஊரில் பிரவேசிக்கும்படி உத்தரவு கொடுக்கவில்லை. மறு வருஷத்திலோ அவர்கள் இவர்களுக்கு உத்தரவுகொடுக்க, மகமதுவும் அவனுடைய சீஷர்களும் மெக்காவுக்குப் பயணம்பண்ணி, மதீனாவுக்குத் திரும்பினார்கள். அதற்குப் பிறகு மகமது மெக்கா பட்டணத்தின் பெயரில் படையெடுக்கும்போது, அப்பட்டணத்தார் சண்டைசெய்யாமல், பயந்து இவனுக்குக் கீழ்ப்பட்டுப் போனார்கள். மகமது மெக்காவிலே பிரவேசித்து, அதற்குள்ளிருந்த விக்கிரகங்களைத் தகர்த்துப்போட்டு, கறுப்புக்கல்லை வணங்கும்படி காபாவுக்குப் பிரயாணம் செய்யும் வழக்கத்தைமாத்திரம் மாற்றாமல் ஆபிரகாம் அந்தக் காபாவைக் கட்டினான் என்று சொன்னான். அதற்குப்பிறகு அராபியா கோத்திரத்தார் எல்லாரும் மகமதுவின் அதிகாரத்துக்குக் கீழடங்கிவந்தார்கள். இவ்விதமாய் மகமது அத்தேசத்தில் விக்கிராராதனையை ஒழித்து அத்தேசத்தாரெல்லாரையும் தன் அதிகாரத்தோடு சேர்த்து, தனது மார்க்கத்தை ஸ்திரப்படுத்தி கி-பி. 632-ம் வருஷத்தில் இறந்துபோனான்.

II. **இஸ்லாம்: Islam.** மகமதியர்கள் சொன்ன பாரம்பரியங்களில் இவர்கள் மார்க்கவிஷயங்களைப் பற்றிய பல விசேஷங்கள் விளங்கும். திருஷ்டாந்தமாக:

ஒரு சமயத்தில் பிரதான தூதனாகிய காபிரியேல் மானிடவேஷத்தைத் தரித்து மகம

துவினிடத்தில் வந்து சிஷனைப்போலிருந்து சில கேள்விகளைக் கேட்டான். அவையாவன:

i. 'கடவுள் அனுப்பின அப்போஸ்தலனாகிய மகமதுவே, இஸ்லாம் (*Islām*) ஆவது என்ன?'

இதற்கு மகமது: 'கடவுள் ஒருவராயிருக்கிறார் என்றும், அவர் என்னை அனுப்பியிருக்கிறார் என்றும் அறிக்கையிடுவதும்; நியமித்த ஜெபங்களைப் பிரமாணத்தின்படி சொல்வதும்; ஏழைகளுக்குத் தர்மம் செய்வதும்; ரமதான் (*Ramadān*) மாதத்தில் உபவாசம் செய்வதும்; மெக்காவுக்குப் பிரயாணம் பண்ணுவதுமாகிய இவைகள்தான் இஸ்லாம்' என்று பகர்ந்தான்.

இதற்குக் காபிரியேல் 'இதெல்லாம் சரி' என்று சொல்லி வேறொரு கேள்வி கேட்டான். அதாவது:

ii. 'இமான் (*Imān*) என்பது என்ன?

இதற்கு மகமது, 'கடவுள், தேவதூதர்கள், கடவுள் அருளின ஆகமங்கள், தீர்க்கதரிசிகள், நியாயத்தீர்ப்புநாள், கடவுள் முன் விதித்த விதிஆகிய இவைகளை மனதில் ஏற்றுக்கொள்வதுதான் இமான்,' என்றான்.

'இதெல்லாம் சரி' என்று காபிரியேல் சொல்லி, கடைசியாக:

iii. 'இஃசான் (*Ihsān*) என்பது என்ன?' என்று கேட்டான். இதற்கு மகமது 'நாம் கடவுளைப் பார்க்காவிட்டாலும், அவர் நம்மைப் பார்க்கிறார் என்று அறிந்து நாம் அவரை முகமுகமாய்ப் பார்ப்பதுபோல அவரை வணங்குவதுதான் இஃசான்' என்று பிரதியுத்தரம் அருளினான்.

இதெல்லாம் பார்த்து (i) இஸ்லாம் என்பது, மகமது போதித்த மார்க்கத்தை அனுசரிப்பது என்றும், (ii) இமான் என்பது, மகமது போதித்தவைகளை விசுவாசிப்பது என்றும், (iii) இஃசான் என்பது, பயபக்தியாயிருப்பது என்றும் நாம் சுருக்கமாய்ச் சொல்லலாம்.

III. குறன். (*Koran: Qur'an.*) 'குறன்' என்பதற்கு 'வாசிப்பு' என்றர்த்தம். ரமதான் மீ 27-உ ராத்திரியில் நித்தியமாயிருந்த குறன் ஆகமம் முழுவதும் மற்ற ஆறு வானலோகங்களுக்கும் கீழான ஏழாம் லோகத்துக்கு இறங்கிவந்தது என்றும், பிரதான தூதனாகிய காபிரியேல் அதிலிருந்து வேண்டிய வசனங்களை சமயாசமயங்களில் மகமதுவுக்குத் தெரிவித்தான் என்றும் பாரம்பரியம் உண்டு. மகமது தான் இவ்விதமாக தெரிந்த இந்த வசனங்களை ஜனங்களுக்குக் கூறுவான். இவன் இறந்துபோனபிறகு இஸ்லாம் மார்க்கத்தார் இந்த வசனங்களை எல்லாம் சேர்த்து, அவைகளை ஒரே நூலாய்ச் சீர்திருத்தி, எழுதி, மற்றப்பிரதிகளை எல்லாம் அழித்து, இப்பொழுது இருக்கும் குறன் என்பதை இயற்றினார்கள்.

குறனில் 114 சூரா (*Sūra*) என்னும் அத்தியாயங்களுண்டு. இதில் கடவுள் அருளின வார்த்தைகள் திட்டமாய் உண்டு என்றும், இது இஸ்லாம் என்னும் போதகத்துக்கு மூலமாயிருக்கிறது என்றும், இதிலுள்ள பிரமாணத்தின்படி யாவரும் இணங்கி நடக்கவேண்டும் என்றும், ஸ்நானம் செய்யாமல் ஒருவரும் இந்த ஆகமத்தைத் தொடக்கூடாது என்றும், நினைத்து இஸ்லாம் மார்க்கத்தார் எப்பொழுதும் இதைப்பற்றிக் கவனமாயிருப்பார்கள்.

IV. சுன்னு. (*Sunna*). மகமது, பக்தி, வழக்க பழக்கங்கள், சமய ஆசாரம், தான் நியாயந்தீர்த்த பல விசாரணைகள் முதலியவைகளைப்பற்றிச் சொன்ன வாக்கியங்களை மகமதுவின் சிஷர்கள் ஞாபகத்தில் வைத்து, அவைகளைத் தங்களின் பின்னடியார்களுக்குத் தெரிவித்துவந்தார்கள். இந்த வாக்கியங்களுக்குப் 'பாரம்பரியம்' என அர்த்தம்கொண்ட அதீத் (*Hadith*) என்று பெயர். இந்தப் பாரம்பரியங்களில் மெய்பக்தியைப்பற்றியும், நல் ஒழுக்கத்தைப்பற்றியும் தெரிவிக்கும் நூலுக்கு சுன்னு (*Sunna*) என்று பெயர். குறன் இஸ்லாம் மார்க்கத்துக்கு எப்படி முதல் மூலாதாரமாயிருக்கிறதோ, அப்படியே சுன்னு என்னும் நூல் அதற்கு இரண்டாம் ஆதாரமாயிருக்கும்.

V. இஸ்லாம் மார்க்கத்தாரின் விசுவாசம்.

i. கடவுள்: கடவுள் ஒருவராயிருக்கிறார்; ஆதியந்தமில்லாதவர்; அவரைப்போல ஒருவனும் இல்லை; அவர் யாவையும் அறிகிறார்; யாவையும் செய்கிறார்; அவருடைய சித்தம் யாவற்றிற்கும் மேலானது. மோசே, மகமது காபிரியேல் முதலியவர்கள் மூலமாய் மனுஷர்களுக்குத் தமது சித்தத்தைத் தெரிவிக்கிறார்.

ii. தேவதூதர்கள்: தேவதூதர்களில் ஆண்களென்றும் பெண்களென்றுமில்லை; சாப்பிடமாட்டார்கள்; வானலோகத்திலும் பூலோகத்திலும் இருக்கிறார்கள். பிரதான தூதர்கள் நாலுபெயர்; சாத்தான் ஆகிய இப்லீஸ் (*Iblis*) என்பவனை வணங்காததினாலே பரதீசிலிருந்து ஆதாம் துரத்தப்பட்டான். ஒவ்வொரு மனுஷனுக்கும் இரண்டு தூதர்கள் உண்டு;

ஒருவன் அவன் வலதுபக்கத்தில் நின்று அவன் செய்யும் நன்மைகளைப்பற்றியும், மற்றொருவன் அவன் இடதுபக்கத்தில் நின்று அவன் செய்யும் தீமைகளைப்பற்றியும் கணக்கு எழுதுவார்கள்.

iii. **ஆகமங்கள்:** காபிரியேல் மூலமாய்க் கடவுள் மோசேக்கு நியாயப்பிரமாணத்தையும், தாவீதுக்கு சங்கீதங்களையும், கிறிஸ்துவுக்கு இஞ்சீல் (*Injil*) என்னும் சுவிசேஷத்தையும், மகமதுக்கு குரான் என்னும் ஆகமத்தையும், இன்னும் சில தீர்க்கதரிசிகளுக்கு நூறு நூல்களையும் தெரிவித்தார். குரான் மற்ற ஆகமங்களைப்பார்க்கிலும் விசேஷித்தது.

iv. **தீர்க்கதரிசிகள்:** கடவுள் ஆதாம்முதலிய தீர்க்கதரிசிகளை அனுப்பியிருக்கிறார். அவர்கள் மூலமாய்த் தமது சித்தத்தைத் தெரிவிக்கிறார். அவர்களில் முக்கியமானவர்கள், ஆதாம், ஆபிரகாம், மோசே, இயேசு. இவர்களைவிட மகமது பெரியவர்.

v. **கடைசிநாள்:** கடைசிநாளிலே இறந்துபோனவர்கள் உயிரோடெழுந்து நிற்பார்கள். அப்போது அவர்கள் செய்த காரியங்களைப்பற்றிய கணக்கு ஆகமங்கள் வானலோகத்திலிருந்து இறங்கும். இஸ்லாம் மார்க்கத்துக்கு வராத யாவரும் உடனே நரகத்துக்கு நித்தியமாய்ப் போவார்கள். இஸ்லாம் மார்க்கத்திலிருந்தவர்களுக்கு நியாயத்தீர்ப்புத் தராசு வரும். அந்தத் தராசில் அவர்கள் செய்த நன்மையும் தீமையும் நிறுக்கப்படும். நன்மை அதிகமாய்ச் செய்தவர்கள் பரதீசுக்கும்,தீமை அதிகமாய்ச் செய்தவர்கள் நரகத்துக்கும்போகவேண்டியது. ஆனால் நரகத்துக்குப் போனவர்கள் நித்தியமாய் அங்கே இராமல் கடைசியில் இரட்சிக்கப்படுவார்கள்.

நன்மை அதிகமாய்ச் செய்தவர்களுக்கு வேறொரு சோதனை உண்டு. அதாவது: பட்டயத்தின் கூரைப்பார்க்கிலும் மிகக் கூர்மையான பாலம் ஒன்றில் ஏறி அவர்கள் நரகபள்ளத்தைத்தாண்டி மோக்ஷலோகத்துக்குப்போகவேண்டும். இரட்சிக்கப்பட்டவர்கள் கஷ்டமில்லாமல் ஏறிப்போவார்கள். மற்றவர்கள் அந்தப் பாலத்திலிருந்து நரகப்பள்ளத்தில் விழுவார்கள். இரட்சிக்கப்பட்டவர்கள் வானலோகத்தில் பலவிதமான இன்பத்தையும் நரகத்தில் உள்ளவர்கள் பலவிதமான துன்பத்தையும் அநுபவிப்பார்கள்.

VI **முன் விதித்த விதி:** விதியைக்குறித்து இஸ்லாம் மார்க்கத்தின் வேதசாஸ்திரிகள் பலவித தர்க்கவாதங்களைச் செய்திருக்கிறார்கள். ஆனால் பொதுவாய்ச் சொல்லவேண்டுமானால் இஸ்லாம் மார்க்கத்தார், மனிதர்களுக்குச் சுயாதீனம் இல்லை என்றும், கடவுள் தாம் விதித்த விதியின்பிரகாரம் நன்மையும் தீமையும் செய்யும்படி அவர்களைச் சிருஷ்டித்திருக்கிறார் என்றும் எண்ணுகிறார்கள்.

VII. **ஆசாரம்:** இஸ்லாம் மார்க்கத்தார் 'கடவுளைத்தவிர வேறு கடவுள் இல்லை, கடவுளின் அப்போஸ்தலன் மகமது' என்னும் விசுவாசப் பிரமாணமாகிய 'கலிமா' (*Kalima*) அறிக்கையிட்டு முழுமனதோடே அதை விசுவாசிக்கவேண்டும். காலை, மத்தியானம், சாயங்காலம், சூரியன் அஸ்தமித்தபிறகு, இராக்காலம் ஆக ஒரு நாளைக்கு ஐந்துமுறை அவர்கள் ஜெபம் பண்ணவேண்டியது. ரமதான் மாதம் முப்பதுநாளும் பகலில் உபவாசம் பண்ணவேண்டியது. மெக்காவுக்கு ஆஜ் (*Hajj*) என்னும் பிரயாணம் பண்ணவேண்டியது. ஒரே சமயத்தில் இஸ்லாம் மார்க்கத்தானுக்கு நான்கு மனைவிகள் இருக்கலாம். புருஷன் தன் மனைவியை, 'நீ தள்ளப்பட்டுப்போனாய்' என்று சொல்லித் தன் இஷ்டத்தின்படி அவளை நீக்கிவிடலாம். மறு மனையாட்டிகளை வைத்துக்கொள்ளும்படிக்கும் அடிமைகளை வைத்துக்கொள்ளும்படிக்கும் குரான் அவர்களுக்கு உத்தரவு கொடுக்கிறது. தங்கள் மார்க்கத்தைச் சிறப்பிக்கும்படி இஸ்லாம் மார்க்கத்தார் அந்நிய தேசங்களுக்குப் போய், அந்தத் தேசத்தார்களோடு ஜிஹாட் (*Jihād*) என்னும் 'பரிசுத்த யுத்தம்' செய்து ஜெயித்து அவர்களைத் தங்கள் மார்க்கத்தில் சேர்க்கவேண்டும். இஸ்லாம் மார்க்கத்துக்கு வராதவர்களின் தேசத்தில் மகமதியர்களுக்கு க்ஷேமம் உண்டாயிருந்தால், அத்தேசத்தில் இவ்விதமான ஜிஹாட் செய்வது கூடாது. இதின்படி இந்தியாதேசத்தில் அவர்கள் ஜிஹாட் பண்ணுவது கூடாது.

VIII. **இயேசு:** குரானில் இயேசுவுக்கு ஈசா என்று பெயர், இவர் மரியாளின் மகன், மேசியா, தேவனுடைய வாக்கு, தேவனுடைய ஆவி, அப்போஸ்தலன் என்றும்; இவர் அற்புதங்களைச்செய்தார் என்றும்; சிலுவையில் அறையப்படாமல் பரத்துக்கு எடுக்கப்பட்டுத் திரும்பி வருவார் என்றும், அவர் தேவகுமாரன் அல்ல என்றும், மற்றத் தீர்க்கதரிசிகள் பாவம் செய்திருந்தும், ஈசாவும், மகமதுவும் பாவம் செய்யவில்லை என்றும், மகமதுவைப்போல் ஈசா சிரேஷ்டமானவர் அல்ல என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

IX. **இஸ்லாம் மார்க்கத்தார் கைக்கொண்ட சத்தியம் என்னவென்றால்;**

i. சிருஷ்டிகரும் ஆண்டவருமாகிய கடவுளை விசுவாசிக்கவேண்டும்.

ii. கடவுள் தீர்க்கதரிசிகளின் மூலமாய்த் தமது சித்தத்தைத் தெரிவிக்கிறார்.

iii. உயிர்த்தெழுதல், நியாயத்தீர்ப்பு உண்டு.

iv. ஜெபம் பிரயோசனம் உள்ளது.

v. ஈசா சிரேஷ்டமானவர்.

vi. இஸ்லாம் மார்க்கத்தாரெல்லாரும் ஐக்கியப்படவேண்டும்.

vii. இஸ்லாம் மார்க்கத்தார் தங்கள் மார்க்கத்தைப்பற்றி மேன்மை பாராட்டி அந்நியர்களுக்கு அதைத் தெரிவிக்கப் பிரயாசப்படவேண்டும்.

**X. இஸ்லாம் மார்க்கத்தின் குறைவுகள்.**

இவைகளையெல்லாம் நாம் பார்த்தால் இந்த மார்க்கத்தில் பிரயோசனமானவை அநேகம் உண்டு என்று நாம் சொல்லவேண்டும். ஆனால் இஸ்லாம் மார்க்கத்தில் பெரிய குறைவுகள் உண்டு. அவையாவன:

i. இந்த மார்க்கம், திரியேகத்துவம் என்னும் கொள்கையை நீக்கி, இயேசு செய்த இரக்ஷணிய ஊழியத்தை மறுதலித்து, கடவுளுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தராகிய இயேசுவின் மூலமாய் மனுஷர்களுக்குத் தேவ இரக்கத்தையும் அன்பையும் காட்டுகிறதில்லை. இந்த மார்க்கத்தாருடைய போதகத்தின்படி கடவுள் நல்ல தகப்பனைப்போல் அல்ல; தன் மாளிகையில் உள்ளவரும் மனுஷர்கள் சந்திக்கக்கூடாதவருமாகிய ஒரு ராஜாவைப்போல் இருக்கிறார்.

ii. மனுஷர்கள், கடவுள் தங்களுக்கு விதித்த விதியின்படி யாவையும் செய்கிறார்கள் என்று இம்மார்க்கத்தார் நம்புகிறதினாலே, தீமை இன்னதென்றும், மீட்பு இன்னதென்றும், மீட்பர் செய்யும் ஊழியம் இன்னதென்றும் கவனிக்காமல் இருக்கிறார்கள். நாம் செய்ததெல்லாம் கடவுள் செய்தது என்றும், வருவது வரும் என்றும், நமது மார்க்க ஆசாரத்தின்படி நாம் நடந்தால் போதும் என்றும் நினைக்கிறவர்கள் நன்மை, தீமை, தண்டனை, மீட்பு முதலியவைகளைப்பற்றி ஏன் கவனிக்கவேண்டும்?

iii. விதி: கடவுள் மனிதர்களுக்குச் சுயாதீனம் கொடாமல் அவர்கள் செய்யப்போகிறவைகளையெல்லாம் முன்னமே விதித்திருந்தால் மனுஷர்கள் அவருக்கு அடிமைகளாயிருப்பார்கள். மேலும், அவருடைய சித்தம் அவர்களுக்குப் பூரணமாய்த் தெரியாததினால் அவர்கள் இராத்திரியில் காட்டில் அலைந்து திரிகிறவர்களைப்போல் இருப்பார்கள். இந்தக் கொள்கையைக்கொண்டு ஒருவன், நான் சன்மார்க்கம், பரிசுத்தம், உண்மை முதலிய குணங்களை விரும்புகிறேன்; ஆதலால் இவைகளை நான் நாடித்தேட, கடவுளால் ஏவப்பட்டிருக்கிறேன் என்றும்; வேறொருவன், துன்மார்க்கமாய் ஜீவிக்க எனக்கு இஷ்டம்; ஆதலால் நான் துன்மார்க்கத்தை நாடித்தேட கடவுளால் ஏவப்பட்டிருக்கிறேன் என்றும் சொன்னால், இவர்களில் உத்தமன் இன்னான் என்று நாம் எப்படித் தீர்மானிக்கக்கூடும்? கடவுள் மனிதர்களுக்குச் சுயாதீனம் என்னும் வரத்தை அருளியிருக்கிறார் என்று நம்புகிறவர்கள்மாத்திரம் நாம் நீதி நியாயத்தை எப்போதும் செய்யும்படி உத்தரவாதிகளாயிருக்கிறோம் என்று உணருவார்கள். இஸ்லாம் மார்க்கத்தார் நீதி நியாயம் செய்யமாட்டார்கள் என்று நாம் சொல்லமாட்டோம். ஆனால் அவர்கள் மார்க்கபோதகத்தின்படி, நாம் செய்யப்போகிறதெல்லாம் கடவுளால் முன் விதிக்கப்பட்டிருந்தால், அவருக்கு முன்பாக நீதி நியாயத்தைத் தேடுவதற்கு நாம் உத்தரவாதிகளா யிருக்கிறோம் என்று சொல்வதற்குக் காரணம் இல்லை.

iv. பல மனைவிகள்: ஒருவன் பல மனைவிகளை வைத்துக்கொள்ளலாம் என்றும் மறுமனையாட்டிகளையும், அடிமைகளையும் வைத்துக்கொள்ளலாம் என்றும் உத்தரவு கொடுக்கிற இந்த மார்க்கத்தில் குறைவு இல்லை என்று யார் சொல்லக்கூடும்?

v. இயேசுகிறிஸ்துவின் உத்தமத்தையும், சிறந்த நற்போதகத்தையும் நீக்கி, மற்றத் தீர்க்கதரிசிகளுடனே அவரை ஒன்றாக வைத்து, அவர் அருளின போதகம் நல்லது என்று இஸ்லாம் மார்க்கத்தார் சொன்னாலும் அவர் புரியும் இரக்ஷணியத்தை அறியாமலிருக்கிறார்கள்.

**மகராய். Maharai.** தாவீது நியமித்த 30 போர்வீரர்களில் ஒருவன். 2 சாமு 23[28].

**மகலாத். Mahalath.**

1. ஏசாவின் மனைவிகளில் ஒருத்தி. ஆதி 28[9].

2. ரெகொபெயாமின் மனைவி. 2 நாளா 11[18].

**மகலாத். Mahalath.** 53–ம் சங்கீதத்தின் தலைப்பிலே சொல்லப்பட்டிருக்கும் இந்த எபிரெய பதத்தின் அர்த்தம் நமக்குத் தெரியாது. ஒருவேளை எபிரெயர்களுக்குத் தெரிந்த ஒரு இராகத்தை இப்பதம் குறிக்கலாம்.

**மகலாத்-லேயனோத்.** **Mahalath-Leanoth.** 88-ம் சங்கீதத்தினுடைய தலைப்பில் சொல்லப்பட்ட இந்தப் பதம் எபிரெயர்களுக்குத் தெரிந்த ஒரு இராகத்தைக் குறிப்பிடலாம்.

**மகலாலெயேல்.** **Mahalalel.** [கடவுள் மேன்மையுள்ளவர்.]

1. கேனான் என்பவனுடைய மகன். ஆதி $5^{12}$ லூக் $3^{37}$. = மெகுயவேல். ஆதி $4^{18}$.

2. சிறையிருப்புக்குப் பிறகு எருசலேம் பட்டணத்திலிருந்த ஒருவன். நெகே $11^{4}$.

**மகள்.** **Daughter.** ரூத் $1^{12}$ $3^{1}$ மத் $9^{22}$ **குமாரத்தி, குடும்பம்** காண்க.

**மகனாயீம்.** **Mahanaim.** [இரண்டு பாளையங்கள்.] யோர்தான் நதிக்குக் கிழக்கே, காத் கோத்திரத்திற்கும் மனாசேக் கோத்திரத்திற்கும் இடையிலிருந்த எல்லையிலுள்ள ஒரு பட்டணம். யோசு $13^{26}$. இது லேவியருக்கு நியமிக்கப்பட்ட ஊர். யோசு $21^{38}$. யாக்கோபு தேவதூதர்களைச் சந்தித்த இடம். ஆதி $32^{2}$. அப்னேரும் தாவீதும் இந்த ஊருக்குப் போனார்கள். 2 சாமு $2^{8}$ $17^{24}$ 1 இரா $4^{14}$ உன். பா $6^{13}$.

**மகன்.** **Son.** நீதி $1^{8}$ $4^{10}$ $6^{20}$ $23^{26}$ மத் $9^{2}$ லூக் $15^{31}$. **குமாரன், குடும்பம்** காண்க.

**மகாசியோத்.** **Mahazioth.** தேவாலயத்தில் பாடகர்களின் தலைவர்களில் ஒருவன். 1 நாளா $25^{4}$.

**மகாத்துமாக்கள்.** **The Excellent.** சங் $16^{3}$. **பரிசுத்தவான்கள்** காண்க.

**மகா பரிசுத்தஸ்தலம்.** **The Holy of Holies.** ஆசரிப்புக் கூடாரத்திலும், அதற்குப் பிறகு கட்டின தேவாலயங்களிலும் மகா பரிசுத்த ஸ்தலம் அந்தக் கட்டடத்தினுள்ள மற்ற அறைகளினாலே சூழப்பட்டிருந்தது. பிரதான ஆசாரியன்மட்டும் இதில் பிரவேசிக்கலாம். இதில் தேவனுடைய பெட்டி இருந்தது. இதுதான் யேகோவாவின் சிம்மாசனம் ஆகிய இரக்கபீடம் ஆனதினால் உலகத்திலுள்ள மற்ற எல்லா ஸ்தலங்களைப்பார்க்கிலும் இதுவே முக்கியம் என்று எபிரெயர்கள் எண்ணினார்கள். யாத் $26^{33}$ எண் $4^{4}$ 1 இரா $6^{16}$ $7^{50}$ $8^{6}$ 2 நாளா $3^{8}$ எசே $45^{3}$ எபி $9^{12}$. **தேவாலயம்** காண்க.

**மகாய்.** **Maai.** நெகேமியா எருசலேமின் மதில்களைப் பிரதிஷ்டை பண்ணும்போது எருசலேமில் வசித்த ஒருவன். நெகே $12^{36}$.

**மகாராத்.** **Maarath.** யூதா நாட்டிலுள்ள ஒரு ஊர். யோசு $15^{59}$.

**மகிமை.** **Glory.**

### I. பழைய ஏற்பாடு.

பழைய ஏற்பாட்டில் 'மகிமை' என்பதின் முதல் அர்த்தம் என்னவென்றால் கடவுளையாவது, மனிதனையாவது, வானம் முதலியவற்றையாவது சிறப்பிக்கிறது. இதோடு இந்த மேன்மைக்குக் காரணமாகிய கனம், பொருள் என்பதைக் குறிக்கும். விசேஷமாய்க் கடவுளினுடைய மேன்மையையும் சர்வவல்லமையையும் காட்டும். திருஷ்டாந்தங்கள்:

i. கடவுளின் மகிமை. யோசு $7^{19}$ சங் $29^{1}$ ஏசா $42^{8}$ மு.

கடவுளுடைய ஞானமும் வல்லமையும் அவருடைய மகிமையாயிருக்கிறது. சங் $19^{1}$ $63^{2}$.

ii. லீபனோனின் மகிமை என்பது அந்த மலையின்மேல் உள்ள கேதுருமரங்களைக் குறிக்கும். ஏசா $35^{2}$.

வீட்டின் மகிமை = ஐசுவரியம். சங் $49^{16}$.

ஜனங்களின் மகிமை: அவர்களின் பொருள், பொக்கிஷம். வெளி $21^{26}$.

மனிதனுடைய மகிமை. ஆதி $45^{13}$ எபி $2^{7}$.

மனிதனுடைய மகிமை = அவனுடைய ஆத்துமா. ஆதி $49^{6}$ சங் $16^{9}$ $30^{11}$ $57^{8}$.

இஸ்ரவேல் அடைந்த உத்தம மேன்மை கடவுளே. 1 சாமு $4^{21}$ எரே $2^{11}$ லூக் $2^{30}$.

iii. கடவுளினுடைய மகிமை இருவிதமாய் இருக்கும்.

(a) அவர் தமது பரிசுத்தத்தினாலும், வல்லமையினாலும், நீதி நியாயத்தினாலும் தமது சுபாவத்தின் மகிமையைக் காண்பிக்கிறார். ஏசா $6^{3}$ எண் $14^{22}$ எசே $39^{21}$ சங் $29^{3}$ $104^{31}$.

(b) தரிசனமாகி அவர் தமது மகத்துவத்தைக் காட்டுகிறார். எசே $1^{28}$ யாத் $24^{16}$ $33^{18}$ $34^{6}$ லேவி $9^{6}$ மு.

### II. புதிய ஏற்பாடு.

புதிய ஏற்பாட்டில் 'மகிமை' என்பது பலவிதமாய் வழங்கப்பட்டிருக்கிறது.

= மகத்துவம். ரோ $2^{7}$ யோவா $9^{24}$.

= கடவுள் தரிசனத்திலாவது, அவருடைய கிரியையிலாவது காண்பிக்கும் பெருமை. யோவா $1^{14}$ $2^{11}$ $5^{41}$ $17^{4}$.

= மனிதர்கள் இழந்துபோன தேவ லக்ஷணங்கள். ரோம $3^{23}$ 1 கொரி $11^{7}$.

= அவர்கள் அடையவேண்டிய தேவ லக்ஷணங்கள். 2 கொரி $3^{7}$.

=இயேசுவின் மூலமாய் அடைந்த அருளாகிய மகிமை. 2 கொரி 3 8-11. தேவமகிமை மனுஷகுமாரனுடையது. மத் 16[27] மு.

புதிய எருசலேமில் தேவனுடைய மகிமையே வெளிச்சம். வெளி 21[23].

பரிசுத்தவான்கள் குணமாக்கப்பட்டுத் தேவமகிமையைப் பெறவேண்டியது. ரோம 3[23] 5[2] 8[18.30] 2 கொரி 3[18] 4[6] பிலி 3[21] கொலோ 3[4].

III. யேகோவாவின் சந்நிதானத்தின் மகிமை.

யூதர்களுடைய அபிப்பிராயத்தின்படி யேகோவா விசேஷமாய்த் தேவாலயத்தின் மகா பரிசுத்த ஸ்தலத்தில் தங்கி அதிலும் இன்னும் சில இடங்களிலும் இறங்கித் தமது மகிமையை வெளிப்படுத்துகிறார். பெத்தேலிலே யாக்கோபு அந்த மகிமையைப் பார்த்தான். ஆதி 28[16]. ஏசாயா தேவாலயத்திலே அந்த மகிமையைக் கண்டான். ஏசா 6[5]. மோசே சீனாய்மலையில் அதைத் தரிசித்தான். யாத் 24[16]. இஸ்ரவேலர் வனாந்தரத்திலும், ஆசரிப்பு கூடாரத்திலும், தேவாலயத்திலும் அதைக் கண்டார்கள். யாத் 16[7] 29[43] 40[34] எண் 14[10] 1 இரா 8[11] எசே 1[28]. செருபாபேல் கட்டின இரண்டாம் தேவாலயத்தில் அந்த மகிமை காணப்படவேயில்லை. எசே 11[23] 43[2]. மேசியா வரும்போது இந்த மகிமை மறுபடியும் காணப்படும் என்று யூதர்கள் நினைத்தார்கள். பரி. பவுல் இந்த மகிமையைப்பற்றிப் பேசுகிறான். ரோம 9[4]. பேதுரு முதலியவர்கள் இயேசு மறுரூபமடைதலைப்பற்றி எழுதும்போது பிரகாசமான இந்த மகிமையைப் பற்றிச் சொல்லுகிறார்கள். மத் 17[5] 1 பேது 4[14] 2 பேது 1[17] எபி 1[3] யாக் 2[1].

**மகிழ், மகிழ்ச்சி. Joy.** 1 நாளா 12[40] நெகே 8[10] சங் 43[4] 48[11] 51[8] 53[6] 96[11] 97[12] 100[1] 104[31] நீதி 5[18] 14[10] 23[15] பிர 11[8] ஏசா 24[11] 25[2] 61[7] செப 3[17] லூக் 1[14] பிலி 2[14] 1 பேது 4[13] யூதா 1[24]. சந்தோஷம் காண்க.

**மகேர்-சாலால்-அஷ்-பாஸ். Maher-shalal-hash-baz.** ஏசாயா தீர்க்கதரிசி தன் குமாரர்களில் ஒருவனுக்கு இந்தப் பெயர் கொடுத்தான். இதன் அர்த்தம் என்னவென்றால் 'கொள்ளையைக் கவர்ந்து சூறைக்குத் தீவிரி'. இந்தப் பதத்தினாலே அசீரியாராஜா சீரியாவின் ராஜாவாகிய ரேத்சீனுக்கும் இஸ்ரவேல் ராஜாவாகிய பேக்காவுக்கும் செய்யப்போகிற அழிவைக் காட்டுகிறான். ஏசா 8[1].

**மகேலி. Mahli.**

1. மெராரியின் மகன். யாத் 6[19] எண் 3[20] எஸ்றா 8[18].

2. முன் சொன்னவனுடைய மகன். 1 நாளா 6[47] 23[23] 24[30]. இவனுடைய சந்ததியாருக்கு மகேலியர் என்று பெயர். எண் 3[33].

**மக்கபெயர், மக்கபேயர். Maccabees.** கி—மு. 175-ம் வருஷத்தில் சீரியாதேசத்தில் அரசனான அந்தியோகு எபிபானேஸ் (*Antiochus Epiphanes*) என்பவன் கிரேக்க சமயாசாரத்தில் விருப்பமுடையவனாயிருந்து, தனது ராஜாங்கத்திலிருந்த ஒரு நாடாகிய பலெஸ்தீனா தேசத்திலுள்ள யூதர்களை அந்த மார்க்கத்தில் சேர்க்கும்படி விரும்பி ஏழு வருஷகாலமாய் அவர்களை உபத்திரவப்படுத்தி, எருசலேம் நகரத்தை அழித்து, யூதர்கள் தங்கள் நியாயப்பிரமாணத்தின்படிச் சடங்குகளை நடத்தாமல் அங்கே விக்கிரகங்களுக்குப் பலி செலுத்தும்படி 'பாழாக்கின அருவருப்பு' என்னும் பலிபீடத்தை தேவாலயத்திலே கட்டி, நியாயப்பிரமாணப் பிரதிகளைக் கிழித்து, அநேகரைக் கொன்றுபோட்டான். பிறகு பலெஸ்தீனாவிலுள்ள யூதர்கள் எந்த ஊரிலும் விக்கிரகாராதனை செய்யும்பொருட்டுப் பலி பீடத்தைக் கட்டி அதின்மேல் அவர்கள் பலி செலுத்தும்படி ஏற்பாடுசெய்து, அந்த யூதர்கள் அந்தப்பிரகாரம் செய்கிறார்களோ இல்லையோ என்று அறியும்படி தனது சேவகரை அனுப்பினான். அப்போது மோதீன் என்னும் ஊரில் மத்ததியா (*Mattathias*) என்னும் ஒரு ஆசாரியன், தன் மார்க்கத்தை மறுதலித்து அந்தப் பலியைச் செலுத்தப்போன ஒரு கள்ள யூதனையும் ராஜாவினுடைய சேவகனையும் கொன்றுபோட்டு, யோவான், சீமோன், யூதா, எலியாசார், யோனத்தான் ஆகிய தன்னுடைய ஐந்து குமாரர்களுடன் போய் அந்த ராஜாவினுடைய கொடூரத்தினின்று தங்கள் தேசத்தை விடுவித்துக் கொள்ளும்படி போர்புரிந்தான். கி—மு. 166—ம் வருஷத்தில் மத்ததியா இறந்துபோனான். அதற்குப்பிறகு யூதாஸ் மக்கபெயு (*Judas Maccabaeus*) என்னும் இவனுடைய மூன்றாம் மகன் இவனுக்குப் பதிலாக அந்தச் சண்டையை நடத்தினான். யூதாசுக்கு 'சுத்தியல்' என்னும் அர்த்தங்கொண்ட 'மக்கபெயு' என்பது மறுபெயரானதினால், இவன் சந்ததியாருக்கு வழக்கமாய் 'மக்கபெயர்' (*Maccabees*) என்று பெயர். ஆனால் வம்ச அட்டவணைகளில் இந்தக் குடும்பத்துக்கு அஸ்மோன் என்பவன் தலைவனானதினால் இவர்களுக்கு 'அஸ்மோனியர்' (*Hasmonaeans*) என்று பெயராம்.

யூதாஸ் மக்கபேயு கி–மு. 166–161 மட்டும் யூதர்களுடைய சேனுபதியாயிருந்து சீரியா ராஜாவை ஜெயித்து எருசலேமைப் பிடித்து, பரிசுத்தக்குலைச்சலினால் கெடுக்கப்பட்ட தேவாலயத்தைச் சுத்திகரித்து, மறுபடியும் அதைப் பிரதிஷ்டைசெய்து, அதில் ஆராதனையை முன் வழக்கத்தைப்போல ஆரம்பித்தான். இவன் ரோமர்களுடன் உடன்படிக்கை செய்தான்.

யூதாஸ் மக்கபெயுவுக்குப் பதிலாக யோனத்தான் (*Jonathan*) கி–மு. 161–143 மட்டும் அந்த ஜனங்களுக்குத் தலைவனுயிருந்து ரோமர்களுடனே உடன்படிக்கை செய்து பிரதான ஆசாரியனுனான். அக்காலத்தில் சீரியா ராஜாவின் ஊழியர்களில் ஒருவன் தந்திரமாய் இவனைக் கொன்றுபோட்டான்.

யோனத்தான் இறந்தபிறகு யூதர்கள் சீமோனைத் (*Simon*) தங்களுக்குப் பிரதான ஆசாரியனும் சேனுபதியுமாய்த் தெரிந்து கொண்டார்கள். கி–மு. 143–135 மட்டும் இவன் இவர்களை ஆண்டுவந்தான். இவன் மகா க்ஷேமமாய் யூத ஜனங்களை நடத்தி வியாபாரமும் விவசாயமும் பெருகும்படி யாவருக்கும் நீதி நியாயம்பண்ணி, சமயாசாரத்தை வெகு ஜாக்கிரதையுடன் நடப்பித்து, இஸ்ரவேல் ஜனங்கள் மிகுந்த சந்தோஷத்துடனே மகிழும்படி செய்து, சீரியா ராஜாவின் சேனுபதியை முறியடித்தான். இவன் காலத்தில் யூதர்கள் சீரியாவின் அதிகாரத்தி லிருந்து முற்றிலும் விடுதலை அடைந்தார்கள். கி–மு. 135–ம் வருஷத்தில் சீரியர்கள் தந்திரம் பண்ணி ஒரு விருந்தில் இவனையும் இவனுடைய குமாரர்களில் இருவரையும் கொன்றுபோட்டார்கள். யோவானும் எலியாசாரும் இதற்குமுன் இறந்துபோனார்கள். இதற்குப் பிறகு மக்கபெயர்களின் சந்ததியாரில் சிலர் ஏறக்குறைய எழுபது வருஷகாலம் யூத ஜனங்களை ஆண்டுவந்தார்கள். அதற்குப் பிறகு பெரிய ஏரோதின் தகப்பனுகிய அந்திபத்தர் மேலான அதிகாரத்தைப் பெற்றான்.

**மக்கபேயர் (மக்கபேயர்) சரித்திரங்கள். The Books of the Maccabees.**

கிரேக்க வேதாகமத்தில் மக்கபெயர் ஆகமங்கள் நான்கு உண்டு. கிறிஸ்தவசபையின் வேதசாஸ்திரிகள் இந்த புத்தகங்களைப் பழைய ஏற்பாட்டில் சேர்க்காமல், தள்ளுபடி ஆகமத்தில் இவைகளில் இரண்டு ஆகமங்களை மாத்திரம் சேர்த்திருக்கிறார்கள்.

1. **மக்கபெயர்**: இந்தச் சரித்திரத்தில் பெரிய அலெக்சந்தர் அடைந்த ஜெயங்களும், அந்தியோகு எபிபானெஸ் யூதர்களுக்குச் செய்த உபத்திரவமும், மக்கபெயர் வம்ச அட்டவணையும், மத்ததியா செய்த கலகமும், யூதாஸ் யோனத்தான் சீமோன் என்பவர்களுடைய சரித்திரங்களும் எழுதப்பட்டிருக்கிறது. இதின் ஆக்கியோன் முதலில் இதை எபிரெயபாஷையில் எழுதினான் என்றும்; ஆனால் அந்த எபிரெயநூல் காணமற்போய் விட்டது என்றும்; இதின் ஆக்கியோன் பெயர் நமக்குத் தெரியாது என்றும்; இது ஏறக்குறைய கி–மு. 50-ம் வருஷத்தில் எழுதப்பட்டது என்றும்; இதின் ஆக்கியோன் தான் எழுதின விஷயங்களை விவரமாயும் திட்டமாயும் விசாரித்து உண்மையான வற்றை மட்டும் எழுதினான் என்றும் தெரிய வருகிறது.

**இரண்டாம் மக்கபேயர்**: இந்தநூல் முதல் மக்கபெயரைப்போல உண்மையான சரித்திரம் அல்ல. இதின் ஆக்கியோன் சரித்திரத்தைத் திட்டநுட்பமாய் எழுத விரும்பாமல், சில விஷயங்களைமாத்திரம் சொல்லி, அவைகளின் மூலமாய் யூதர்கள் கைக்கொள்ளவேண்டிய புத்திமதிகளைச் சொல்ல விரும்பினான். இதன் ஆக்கியோன்பெயர் தெரியாது. இவன் கிரேக்கபாஷையில் இந்த நூலை எழுதினான். முதல் மக்கபெயருக்கும் இதற்கும் அநேக வித்தியாசங்கள் உண்டு. இப்படி வித்தியாசம் இருப்பதனால் இந்த நூலை அல்ல; முதல் மக்கபெயர் என்னும் நூலையே நாம் நம்பவேண்டும். இந்த நூல் ஏறக்குறைய கி–பி. 40-ம் வருஷத்துக்குமுன் எழுதப்பட்டிருக்குமென்று நாம் சொல்லக் கூடும்.

**மூன்றும் மக்கபேயர்**: எகிப்து தேசத்து ராஜாவாகிய நான்காம் பித்தோலமியு தேவாலயத்தைப் பரிசுத்தக் குலைச்சலாக்கச் செய்த பிரயத்தனங்கள், பிரதான ஆசாரியனுகிய சீமோன் மூலமாய் அந்தப் பிரயத்தனங்கள் நீக்கப்பட்ட விஷயம் முதலியவைகள் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இதில் எழுதினவைகளுக்கு அத்தாக்ஷிகள் இல்லாமையால் இது சரித்திரமோ, கதையோ என்று சொல்வது கூடாது. இதன் ஆக்கியோன் கிரேக்க பாஷையில் ஏறக்குறைய கி – பி. 40–ம் வருஷத்தில் இதை எழுதியிருக்கலாம். யூதர்களும் கிறிஸ்தவர்களும் இந்த நூலை வழக்கமாய் ஏற்றுக்கொள்ளவில்லை.

**நான்காம் மக்கபேயர்**: இந்த நூல் ஞானத்தின் உத்தமத்தைச் சிறப்பிக்கும்படி எழுதப்பட்ட ஒரு உபந்நியாசமாயிருக்கிறது. இதெல்லாம் ஜெபஆலயத்தில் செய்த பிரசங்கத்தைப்போலத் தோன்றுகிறது. இதன்

காலமும், ஆக்கியோனும் சொல்வது அரிது. அப்போகிரிப்பா காண்க.

**மக்கேதா. Makkedah.** பலெஸ்தீனு தேசத்தின் தென்பங்கிலுள்ள ஒரு ஊர். இதன் பக்கத்தில் உள்ள ஒருகெபியில் யோசுவா ஜெயித்த ஐந்து கானானிய ராஜாக்கள் ஒளிந்துக்கொண்டார்கள். யோசு $10^{10-28}$.

**மக்கெதோனியா. Macedonia.** கிரேக்க தேசத்தின் வடகிழக்கிலுள்ள ஒரு பெரிய தேசம். பெரிய அலெக்சந்தரின் காலத்தில் இந்தத் தேசம் மற்ற எல்லா தேசங்களுக்கும் பெரியதாயிருந்தது. ஆனால் இவன் காலத்திற்குப் பிறகு அந்த தேசத்தின் மேன்மை குறைந்துபோனது. இதில் பரி. பவுல் ஐரோப்பா கண்டத்தில் முதலாவது சந்தித்த பிலிப்பி, தெசலோனிக்கே, பெரேயா என்னும் பட்டணங்கள் இருந்தன. ரோமாபுரியிலிருந்து சின்ன ஆசியாவுக்குப் பிரயாணம் பண்ணுகிறவர்கள் இத்தாலியா தேசத்திலுள்ள பிருந்திசியம் என்னும் துறைமுகத்தில் கப்பல் ஏறி ஏறக்குறைய 60 மைல் பிரயாணம் பண்ணி மக்கெதோனியாவிலுள்ள திர்ராக்கியம் (*Dyrrhachium*) என்னும் துறைமுகத்திலிறங்கி ரோமர்கள் மக்கதோனியாவில் போட்ட ராஜபாதைமூலமாய் நேயாப்பொலி என்னும் துறைமுகத்துக்குப் போய் மறுபடியும் கப்பல் ஏறிச் சின்ன ஆசியாவுக்குப் போய்ச் சேருவார்கள். பரி. பவுல் பிலிப்பியிலிருந்து தெசலோனிக்கேமட்டும் அந்த ராஜபாதை வழியாய்ப் பிரயாணம் பண்ணினான். அப் $16^9$. மறுபடியும் மக்கெதோனியா தேசத்துக்குப் போனான். அப் $20^3$. அவன் முதலாவது ரோமாபுரியில் சிறையிருப்பிலிருந்து விடுதலையடைந்தபிறகு மூன்றாந்தரம் மக்கெதோனியா தேசத்துக்குப் போனான். 1 தீமோ $1^3$.

**மக்கெலோத். Makheloth.**

இஸ்ரவேலர் பாளையம் இறங்கின இந்த இடம் வேதசாஸ்திரிகளுக்குத் தெரியாது. எண் $33^{25}$.

**மக்தலா. Magdala.** கலிலேயாக் கடலின் மேற்குக்கரையில் திபேரியாப் பட்டணத்திற்கு வடக்கே மூன்றுமைல் தூரத்திலுள்ள ஓர் ஊர். இதிலிருந்துதான் மகதலேனு மரியாள் வந்தாள். மத் $15^{39}$.

**மக்தலேனு. Magdalene.** மரியாள் காண்க.

**மக்தியேல். Magdiel.** ஏதோம் நாட்டில் உள்ள ஒரு பிரபு. ஆதி $36^{43}$.

**மக்தேஷ். Maktesh.** எருசலேம் பட்டணத்தின் பாகங்களில் செப்பனியா தீர்க்கதரிசி சொன்ன ஒரு பாகம். செப் $1^{11}$. இது இன்னதென்று திட்டமாய்க் குறிப்பது நம்மால் கூடாது. எருசலேம் காண்க.

**மக்நாதபாய். Machnadebai.** அந்நிய ஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்று $10^{40}$.

**மக்பன்னாய். Machbannai.** தாவீதினிடம் வந்த காத் கோத்திரத்தானாகிய ஒருவன். 1 நாளா $12^{13}$.

**மக்பியாஷ். Magpiash.** இந்த ஊர் இருந்த இடம் நமக்குத் தெரியாது. இதுவும் மக்பீஷ் என்பதும் ஒன்றாயிருக்கலாம். எஸ்று $2^{30}$ நெகே $10^{20}$.

**மக்பீஷ். Magbish.** மக்பியாஷ் காண்க.

**மக்பேனு. Machbena.** யூதா கோத்திரத்தின் நாட்டில் எக்லோன் ஊருக்குச் சமீபத்திலுள்ள ஒரு ஊர். இதுவும் காபோனும் ஒன்றாயிருக்கலாம். யோசு $15^{40}$ 1 நாளா $2^{49}$.

**மக்பேலா. Machpelah.** எபிரோன் ஊருக்குச் சமீபமான ஒரு இடம். இதில் ஆபிரகாம் தன்னையும் தன் குடும்பத்தையும் அடக்கம் பண்ணும்பொருட்டு ஒருபக்கத்தில் குகையோடு இருந்த ஒரு நிலத்தை வாங்கினான். ஆதி $23^{17}$. இதில் ஆபிரகாம், சாராள், ஈசாக்கு, ரெபேக்காள், லேயாள், யாக்கோபு என்பவர்கள் அடக்கம் பண்ணப்பட்டார்கள். ஆதி $25^9$ $49^{30}$ $50^{13}$. இப்போது அந்தக் குகையைச் சுற்றிலும் 40 அடி உயரமுள்ள மதில் கட்டப்பட்டிருக்கிறது. இந்தத் தேசம் தற்காலத்தில் மகமதியர் வசத்தில் இருப்பதினால் இதில் முன்காலத்தில் கிறிஸ்தவர்கள் கட்டின ஒரு தேவாலயத்தை மகமதியர்கள் இப்பொழுது தங்களுக்கு மஸ்ஜீத்தாக வைத்துக்கொண்டார்கள். இந்த மஸ்ஜீத்துக்குள் ஈசாக்கின் கல்லறையும் ரெபெக்காளின் கல்லறையும் இதன் பக்கத்தில் ஒரு மண்டபத்தில் ஆபிரகாம், சாராள் என்பவர்களின் கல்லறையும், இந்த நிலத்தின் மற்றப் பக்கங்களில் மற்றக் கல்லறைகளும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவர்களின் பிரேதம் அடக்கம் செய்யப்பட்ட குகை மஸ்ஜீத்துக்குக் கீழே இருக்கிறதாகச் சொல்லப்படுகிறது.

**மக்லாள். Mahlah.** செலோப்பியாத்தின் குமாரத்திகளில் ஒருத்தி. எண் $26^{33}$ யோசு $17^3$.

**மக்லோன். Mahlon.** [இளைத்துப்போகிறது.] ரூத்தின் முதல் புருஷன். ரூத் $1^2$ $4^{10}$.

**மக்னிதான்.** Mahaneh-dan. 'தாண் கோத்திரத்தாரின் பாளையம்' என்று அர்த்தங்கொண்ட மக்னிதான், தாண் கோத்திரத்தார் நாட்டின் எல்லைக்குள் இருந்த ஒரு இடம். நியா 13[25] 18[12].

**மசேயா.** Maaselah. மாசேயா காண்க.

**மச்சம்.** Fish. ஆதி 1[21] 1 [26] 9[2] எண் 11[22] 1 இரா 4[33] யோபு 12[8] எசே 38[20] ஆப 1[14]. மீன் காண்க.

**மச்சுப் பாவுகிறது.** 'Lay beam'. நெகே 3[15] சங் 104[3]. உத்திரம், வீடு காண்க.

**மஸ்கீல்.** Maschil எபிரெய பதமாகிய மஸ்கீல் என்பதற்கு 'தியானம்' அல்லது 'புத்தியடங்கிய சங்கீதம்' அல்லது 'சொல்லலங்காரமுள்ள பாட்டு' என்று அர்த்தம். சங் 32, 42-45, 52-55, 74-78 88, 89, 142.

**மஸ்ரேக்கா.** Mashrekah. ஏதோமிய ராஜாவாகிய சம்லாவின் ஊர். ஆதி 36[36] 1 நாளா 1[47].

**மஞ்சம்.** Bed. நீதி 7[6] ஏசா 57[8] எசே 23[41] எபி 13[4]. கட்டில், படுக்கை காண்க.

**மடலுள்ள செடி.** Reed. ஏசா 19[7]-ல் 'மடலுள்ள செடி' ஒருவிதமான நாணலைக் குறிக்கும். எகிப்தியர்கள் அந்த நாணலின் பட்டைகளை எடுத்து நேர்த்தியான காகிதம் செய்வார்கள். வேதசாஸ்திரிகளில் சிலர் நினைக்கிறபடி இந்த வசனத்தில் 'மடலுள்ள செடி' என்பதற்குப் பதிலாக 'செழிப்புள்ள நிலங்கள்' என்பது எபிரெய பதத்துக்குச் சரியான மொழிபெயர்ப்பாயிருக்கும். எழுத்து காண்க.

**மடல்.** Tip. 'காதின் மடல்'. யாத் 29[20] லேவி 8[24] 14[14].

**மடிந்துபோகிறது.** Perish. மத் 8[25] மாற் 4[38] லூக் 8[24].

**மட்டநூல்.** Measuring line. 2 இரா 21[13]. நூல் காண்க.

**மட்டப்பலகை.** Line ஏசா 44[13]-ல் 'மட்டப்பலகை' என்று மொழி பெயர்க்கப்பட்ட எபிரெய பதம் ஒருவிதமான எழுத்தாணி அல்லது ஒருமாதிரி சிவப்பு மண்ணைக் குறிக்கும்.

**மணமகள்.** Bride. ஏசா 49[18]. கலியாணம், குடும்பம், மணவாட்டி காண்க.

**மணல்.** Sand. பலெஸ்தீனா தேசத்தில் கடலோரத்திலும் வனாந்தரங்களிலும் மணல் ஏராளமாயிருக்கும். ஆதி 22[17] உபா 33[19] எரே 5[22] 33[22]. எகிப்து தேசத்தில் மணல் அதிகமாய் இருந்ததினால்சுழல்காற்று அதைக் கொண்டுபோய்ச் செழிப்பான அநேக நிலங்களைப் பாழாக்கி, அநேக ஊர்களை மூடிப் போட்டிருக்கிறது. யாத் 2[12]

உவமையாய் மணல் குறித்ததாவது:

'திரள்'. ஆதி 32[12] 41[49] மு.

கனம். யோபு 6[3] நீதி 27[3]

உறுதியின்மை. மத் 7[26].

**மணவாட்டி.** Bride. ஏசா 61[10] 62[5] எரே 2[32] 7[34] 16[9] 25[10] 33[11] யோவே 2[16] யோவா 3[29] வெளி 18[23] 21[2-9] 22[17]. கலியாணம், குடும்பம், மணமகள் காண்க.

**மணவாளன்.** Bridegroom.

i. விவாக புருஷன். சங் 19[5] ஏசா 61[10] 62[5] எரே 7[34] 16[9] 25[10] 33[11] யோவே 2[16] மத் 25[1-10] யோவா 2[9] 3[29]. கலியாணம், குடும்பம் காண்க.

ii. உவமையாய்: மத் 9[15] மாற் 2[19] லூக் 5[34] வெளி 18[23].

**மணி.** 1. Bell. எபிரெயர்கள் பலெஸ்தீனா தேசத்துக்கு வருமுன் அசீரியர்கள் மணிகளை வார்ப்பாக வார்த்தார்கள். பூர்வீகத்தில் பலெஸ்தீனா தேசத்திலிருந்த கேசேர் ஊராரும் சிறு மணிகளை உபயோகித்து வந்தார்கள். பிரதான ஆசாரியனுடைய உடைகளில் சிறு பொன்மணிகள் கட்டப்பட்டிருந்தது. யாத் 28[33] 39[25]. ரதங்களில் கட்டின குதிரைகளின் ஜீனி முதலியவற்றில் மணிகள் தைக்கப்பட்டிருந்தது. சக 14[20]. கிரேக்கர்கள் பாளயம் இறங்கியிருக்கும்போது மணியடித்துப் போர்ச்சேவகர்களுக்கு நேரத்தைக் குறிப்பிடுவார்கள். கிறிஸ்தவர்கள் தேவாலயங்களில் மணிகளை முதலாவது உபயோகித்த காலத்தைப்பற்றி உறுதியாய்ச்சொல்ல முடியாது. சிலர் நினைக்கிறபடி கி–பி.500–ம் வருஷத்துக்குள்ளே நோலா என்னும் கண்காணியர் முதல் முதல் தேவாலயங்களில் மணியடிக்கிற வழக்கத்தை ஏற்படுத்தியிருக்கலாம். அதேகாலத்தில் ஆங்கிலேய தேசத்தில் மணிகள் உபயோகிக்கப்பட்டது. மகமதியர்கள் தங்கள் ஆராதனையில் மணிகளை உபயோகிக்கமாட்டார்கள். ரோம சபையைச் சேர்ந்தவர்கள் புது மணிகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்துப் பெயரிடுவார்கள்.

**மணி.** 2. Hour. புதிய ஏற்பாட்டில் பகல் காலம் 12 மணியாக வகுக்கப்பட்டிருந்தது. மத் 20[3-12] 27[45] மாற் 15[33] லூக் 23[44] அப் 10[9]. காலம் காண்க.

**மணி.** 3. Seed. 'கோதுமை மணி'. யோவா 12[24].

4. **மணி. கண்மணி.** 'Apple of the eye' உபா $32^{10}$ சங் $17^{8}$ நீதி $7^{2}$ சக $2^{8}$ புல $2^{18}$.

5. **மணி.** இரத்தினம் காண்க.

**மணியகாரன்.** Officer. 1 இரா $4^{7}$.

**மணை.** Stool. பிரசவிக்கும்பெண்கள் உட்காரும் மணை. யாத். $1^{16}$.

**மண்.** Dust. ஆதி $2^{19}$ $3^{19}$ யோபு $5^{6}$ ஏசா $29^{4}$. தூள், தூசி காண்க.

**மண்டபம்.** Porch. இஸ்ரவேலர் சாலொமோனின் தேவாலயத்துக்கும் மாளிகைக்கும் முன் மண்டபங்களைக் கட்டினார்கள். 1 இரா $6^{3}$ $7^{6-21}$ 2 நாளா $3^{4}$.

புதிய ஏற்பாட்டில் பிரதான ஆசாரியரின் மாளிகைக்கு முன் இருந்த 'மண்டபம்' தெரு வாசலிலிருந்து வீட்டுக்குள்ளிருக்கும் முற்றம்வரையில் மேல் கூரைபோட்டுள்ள இடத்தைக் குறிக்கும். பத் $26^{71}$ மாற் $14^{68}$. 'சாலொமோனுடைய மண்டபம்'தேவாலயத்தில் கிழக்கோரத்திலுள்ள மதிலைச்சேர்ந்த தாழ்வாரத்தைக் குறிக்கும். யோவா $10^{23}$ அப் $3^{11}$ $5^{12}$. தேவாலயம் காண்க.

**மண்டலம்.** Chambers. யோபு $9^{9}$. நக்ஷத்திரம் காண்க.

**மண்பாண்டம்.** Earthen vessel, pitcher, pot. பூர்வீக காலம்முதல் பலெஸ்தீனாவில் உள்ள பெண்கள் பெரிய மண்பாண்டங்களைக் கிணற்றுக்குக் கொண்டுபோய்த் தண்ணீர் மொண்டுவருவார்கள் ஆதி $24^{14}$ புல $4^{2}$. தனவான்களுடைய வீடுகளில் அடிமைகள் இந்த வேலையைச் செய்வார்கள். இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பிரயாணம்பண்ணும் காலத்திலும், அதற்கு முந்தின காலங்களிலும் கூடாரங்களில் வாசம்பண்ணி அடிக்கடி பிரயாணம் பண்ணினதினால் அவர்கள் மண்பாண்டங்களை அவ்வளவாய் உபயோகிக்கவில்லை. ஆனால் அவர்கள் பலெஸ்தீனா தேசத்தில் குடியேறினபிறகு மண்பாண்டங்களைப் பலவிதமாய் உபயோகித்துவந்தார்கள். லேவி $6^{28}$ $11^{33}$ $14^{50}$ 2 சாமு $17^{28}$ சங் $2^{9}$ ஏசா $29^{16}$ எரே $18^{2}$ $19^{1}$. குயவன் காண்க.

**மண்வெட்டி.** Mattock, Ploughshare. 1 சாமு $13^{20}$ ஏசா $7^{25}$–ம் வசனங்களில் சொன்ன 'மண்வெட்டி' சாதாரண ஏர் போர்க்கக்கூடாத நிலத்தை வெட்டுகிற நமது மண் கொத்தியைப்போலிருந்தது. ஏசா $2^{4}$ யோவே $3^{10}$–ம் வசனங்களில் 'மண்வெட்டி' என்பது ஏர்க்கொழுவைக் குறிக்கும்.

**மதகு.** Channel. சங் $18^{15}$. வாய்க்கால் காண்க.

**மதகு.** 'Windows.' ஆதி $7^{11}$ 2 இரா $7^{2}$ ஏசா $24^{18}$. இவைகளில் 'மதகு' என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. 'மதகு' என்று மொழிபெயர்க்கப்பட்ட மூலபாஷையின் பதத்துக்குச் சரியான அர்த்தம் 'ஜன்னல்' என்பதுதான். மல்கி $3^{10}$–ல் இந்தப் பதத்துக்குப் 'பலகணிகள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆங்கிலேய வேதாகமத்தில் இந்தப் பதத்துக்கு '*Window*' என்று சொல்லப்பட்டிருக்கிறது. எபிரெயர்கள் அபிப்பிராயத்தின்படி வானம் பூமிக்குமேல் ஒரு பெரிய கூடாரத்தைப்போல் பரம்பி யிருக்கிறது. வானத்துக்கு மேல் வானலோகம் இருக்கும். வானத்தினூடே ஜன்னல்களும் கதவுகளும் உண்டு. அந்த ஜன்னல்களின் மூலமாய் மழை பூமியின்மேல் வருஷிக்கும். வெளி $4^{2}$.

**மதபேதம்.** A. V. Heresy. R. V. Sect. அப் $24^{14}$ 1 கொரி $11^{19}$ கலா $5^{20}$ 2 பே $2^{1}$. மார்க்கபேதம் காண்க.

**மதனும், மத்தனும், மத்னும்,** Mattenai. [யேகோவாவின் ஈவு.]

1, 2. அந்நிய பெண்களை விவாகம் பண்ணினவர்கள். எஸ்ரா $10^{33.37}$.

3. ஒரு ஆசாரியன். நெகே $12^{19}$.

**மதிகேடன்.** Fool. சங் $53^{1}$ நீதி $3^{35}$ பிர $10^{5}$ மத் $23^{17.19}$ லூக் $11^{40}$ $12^{20}$. மூடன் காண்க.

**மதிகேடு.** Folly. 2 சாமு $13^{12}$ சங் $38^{5}$ நீதி $5^{23}$ $17^{12}$ பிர $7^{25}$ மாற் $7^{22}$ 2 தீமோ $3^{9}$ 2 பேது $2^{16}$. 'மதிகேடான காரியம்' யோசு $7^{15}$. மூடன் காண்க.

'மதிகெட்ட ஜனங்கள்.' உபா $32^{6}$.

'மதிகெட்டவன்.' 2 சாமு $3^{33}$ சங் $14^{1}$.

'மதிகெட்டவர்கள்.' 2 சாமு $13^{13}$.

'மதிகெட்ட தீர்க்கதரிசி.' எசே $13^{3}$.

'மதிகெட்ட காரியம்.' ஆதி $34^{7}$ உபா $22^{21}$.

**மதிமயக்குகிறது.** R. V. Maketh fools. யோபு $12^{17}$.

**மதிமயங்குகிறது.** R. V. Be mad. உபா $28^{34}$.

**மதியற்ற ஸ்திரீ.** Foolish woman. நீதி $9^{13}$.

**மதியற்றவன்.** Fool. 1 சாமு $26^{21}$.

**மதியில்லாமல்.** Foolishly. ஆதி $31^{28}$.

**மதியீனம், மதியீனன்.** Folly, Fool. யோபு $4^{17}$ நீதி $1^{22}$ $12^{15.23}$ $14^{16.24.33}$ $15^{14}$ $16^{22}$

$17^{21}$ $19^{3}$ பிர $10^{13}$ 2 கொரி $11^{1}$. மூடன் காண்க.

**மதில்.** Wall. பலெஸ்தீனா தேசத்தார் தங்கள் ஊர்களைச் சுற்றிலும் மண்ணோடு சேர்த்த கற்களினால் அல்லது செங்கல்லுகளினால் அதிக உயரமாயும் கனமாயும் மதில்களைக் கட்டுவது வழக்கம். எருசலேம் பட்டணத்தின் மதில்கள் விசேஷமானவை. சில சமயங்களில் சத்துருக்கள் இடறலில்லாமல் பிரவேசிக்கக்கூடாதபடி இந்த மதிலைச் சுற்றி வெளியே வேறு மதிலையும் கட்டுவார்கள்.

சில பட்டணங்களுக்கு 30 அடி உயரமும் 14 அடி கனமுமுள்ள மதில்கள் இருக்கும். எருசலேமின் மதில்கள் இவைகளைப் பார்க்கிலும் பெரியவை. அசீரியர்களும் பாபிலோனியர்களும் தங்கள் ஊர்களைச்சுற்றி இவைகளைவிட மகா பெரிய மதில்களைக் கட்டினார்கள். உபா $3^{5}$ 2 சாமு $20^{15}$ 1 இரா $20^{30}$ $21^{23}$ யோசு $6^{5}$ நெகே $1^{3}$ $2^{8}$ $3^{15}$ $4^{3}$ $5^{16}$ $12^{27}$ யோபு $24^{11}$ சங் $48^{13}$. சுவர் காண்க.

**மது, மதுபானம்.** Drunkenness. வேதாகமத்தில் மதுபானத்தைப்பற்றிப் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இது கண்டிக்கப்பட்டது. ஏசா $5^{22}$ ரோம $14^{21}$. இதன்மூலமாய் வரும் நஷ்டத்தைப்பற்றிய திருஷ்டாந்தங்கள். நோவா. ஆதி $9^{21}$ லோத். ஆதி $19^{32}$. நாபால். 1 சாமு $25^{36}$. ஏலா. 1 இரா $16^{9}$. பேனாதாத். 1 இரா $20^{16}$. இதின் தண்டனை. 1 கொரி $6^{10}$. திராட்சரசம் குடிப்பதனால் வெறிமயக்கம் உண்டாகும். ஆதி $9^{21}$ $19^{33}$ 1 சாமு $1^{13}$ சங் $107^{27}$ ஏசா $5^{11}$ $19^{14}$ $24^{20}$ $28^{7}$ எரே $23^{9}$ எபே $5^{18}$. ஆராதனையை நடத்துகிற ஆசாரியர்கள் திராட்சரசத்தைக் குடிக்கக் கூடாது. லேவி $10^{9}$. மதுபான விலக்கைப்பற்றிய புத்திமதிகள். நீதி $20^{1}$ $23^{30}$. மற்றவர்களை மதுபானம் பண்ண ஏவிவிடுவது மகா பாதகம். 2 சாமு $11^{13}$ ஆப $2^{15}$. திராட்சரசமும் சாராயமும் அளவுக்கு மிஞ்சாமல் குடிக்கலாம் என்று சிலர் நினைத்தாலும், சாதாரண ஜனங்கள் இவைகளைக் கொஞ்சம் சாப்பிட்டால் அதிகம் சாப்பிடவேண்டுமென்று ஆசைப்படுவார்கள் என்பது யாவருக்கும் தெரியும். ஆகையால் கிறிஸ்தவர்கள் தங்களுடைய சகோதரர்களுக்கு இந்தவிஷயத்தில் இடறலாயிராதபடிக்குத் தாங்கள், கள், சாராயம், திராட்சரசம் முதலியவற்றை கிஞ்சித்தும் சாப்பிடாமல் இருப்பது அவசியம். இதற்குப் பரி. பவுல் சொன்ன புத்திமதிகள் இசைந்திருக்கிறது. 1 கொரி $8^{13}$. திராட்சரசம் காண்க.

**மதுரம்.** Sweet. யாத் $15^{25}$ நெகே $8^{10}$ உன். பா $2^{3}$ $5^{16}$ நீதி $16^{24}$ சங் $19^{10}$ $119^{103}$ வெளி $10^{9}$.

**மத்தத்தா.** Mattattah. அந்நியஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்றா $10^{33}$.

**மத்தத்தியா.** Mattathias. [யேகோவா ஈந்திருக்கிறார்.] இயேசுவின் முன்பிதாக்களில் இருவர். லூக் $3^{25.26}$.

**மத்தனாய்.** Mattenai. மதனாய் காண்க.

**மத்தனியா.** Mattaniah [யேகோவா அருளின வரம்.]

1. செதேக்கியா ராஜாவின் முதல் பெயர். 2 இரா $24^{17}$.

2. ஒரு பாடகன். 1 நாளா $9^{15}$ நெகே $11^{17}$ $12^{25}$.

3. ஒரு லேவியன். இவனும் முன் சொன்ன பாடகனும் ஒருவனாயிருக்கலாம். 2 நாளா $20^{14}$.

4, 5, 6, 7. அந்நியஜாதிப் பெண்களை விவாகம் பண்ணினவர்கள். எஸ்றா $10^{26.27.30.37}$.

8. ஒரு லேவியன். நெகே $13^{13}$.

9. ஒரு பாடகன். 1 நாளா $25^{4}$.

10 தேவாலயத்தைச் சுத்திகரித்தவர்களில் ஒருவன். 2 நாளா $29^{13}$.

11. மக்கபெயரின் தகப்பன். மக்கபேயர் காண்க.

**மத்தித்தியா.** Mattithiah.

1. அந்நியஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்றா $10^{43}$.

2, 3, 4. மூன்று லேவியர்கள். 1 நாளா $9^{31}$ $15^{18}$ $16^{5}$.

5. எஸ்றா நியாயப்பிரமாணத்தை வாசிக்கும்பொழுது அவ்விடத்தில் நின்றவர்களில் ஒருவன். நெகே $8^{4}$.

**மத்தியஸ்தர்.** Mediator. தேவன் ஒருவரே, தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே. எல்லாரையும் மீட்கும்பொருளாக தம்மை ஒப்புக்கொடுத்த மனுஷனாகிய கிறிஸ்து இயேசு அவரே. 1 தீமோ $2^{5}$ எபி $8^{6}$ $9^{15}$ $12^{24}$ கலா $3^{30}$.

மத்தியஸ்தர்கள் மனிதர்களுக்குள்ளே மூன்று வகைப்பட்டிருக்கிறார்கள். எப்படியெனில்,

1. **ஸ்தானாதிபதி.** ஒருவன் தனக்குப் பதிலாக தான் செய்யவேண்டியவைகளை எல்

லாம் செய்யும்படிக்கு ஏற்படுத்துகிறவனுக்கு ஸ்தானாதிபதி என்று பெயர்.

2. **காரியக்காரன்**. இன்னொருவனுக்காக அவனுடைய காரியத்தை நடத்திவருகிற வனுக்குக் காரியக்காரன் என்று பெயர்.

3. **பிணையாளி**. ஒருவன் செய்த குற்றத்தைத் தான் ஏற்றுக்கொண்டு, அதற்கு உத்தரவாதம் பண்ணுகிறவனுக்குப் பிணையாளி என்றும் பொறுப்பாளி என்றும் பெயர்.

இம்மூன்று வகையாயும் இயேசுகிறிஸ்து கடவுளுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தராயிருக்கிறார். எப்படியென்றால், அவர் ஸ்தானாதிபதியாய்த் தேவசித்தத்தை மனிதருக்கு அறிவித்திருக்கிறார். யோவா $1^{18}$. அதினால் அவருக்கு 'உடன்படிக்கையின் தூதன்' என்றும் 'ஆலோசனைக் கர்த்தர்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மல் $3^{1}$ ஏசா $9^{6}$. அன்றியும் அவர் காரியக்காரராய் மனிதருடைய காரியத்தைக் கடவுளுக்கு முன்பாக நடப்பிக்கிறார். 1 யோவா $2^{1}$ அன்றியும், அவர் மனிதருக்காகப் பிணையாளி அல்லது பொறுப்பாளியாய்த் தம்முடைய நீதியினாலும் மரணத்தினாலும் கடவுளோடே மனிதரை ஒப்புரவாக்கிக் கடவுளுக்கும் மனிதருக்கும் ஏற்றவைகளைச் செய்துவருகிறார்.

கடவுளுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரானவர் மனிதனாய் இருக்கவேண்டும். ஆனால் பாவியாகிய மத்தியஸ்தன் தேவனால் அங்கீகரிக்கப்படக் கூடாதபடியால், அவர் பரிசுத்தராய் இருக்கவேண்டும். தவிர அளவுங் குறைவுமுள்ளவன் அளவில்லாத தேவசமுகத்துக்கு முன்பாக உத்தரவாதஞ் செய்யவும் அளவில்லாத தேவனுடைய கோபாக்கினையைச் சுமக்கவுங் கூடாததினால், அவர் தேவத்துவமுள்ளவராய் இருக்கவேண்டும். இயேசுகிறிஸ்து இம்மூன்று இலட்சணங்களையும் உடையவராயிருந்தார்.

மேலும், கடவுளுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரானவர் கடவுளினுடைய நீதிக்குத் திருத்திசெய்யவும், மனிதர்களுக்காக வேண்டுதல்பண்ணவும், மனிதருடைய இருதயத்திலுள்ள பாவத்தை நீக்கவும், அந்த இருதயத்திற் பரிசுத்தத்தை யுண்டாக்கவும் மனிதரோடே ஐக்கியப்படவும் வேண்டுவது நியாயமாகையால், இயேசுகிறிஸ்து இவைகளெல்லாவற்றையுஞ் செய்து, விசுவாசத்தினாலே பாவிகளைக் கடவுளோடே ஒப்புரவாக்கிக்கொண்டு வருகிறார்.

மேற்சொல்லியவைகளினாலே, இயேசுகிறிஸ்துவினுடைய தேவசுபாவம் மனிதசுபாவமிரண்டும் இந்த மத்தியஸ்தத் தொழிலை நிறைவேற்றுதற்கு வேண்டியவைகள் என்று விளங்குகிறது. அன்றியும், அவரே அதற்கு ஏற்படுத்தப்பட்டு அதை நிறைவேற்றுகிறபடியால், அவர் ஒருவரே அல்லாமல் வேறு மத்தியஸ்தரில்லை. 1 தீமோ $2^{5}$.

இந்த மத்தியஸ்தத் தொழிலினாலே கிறிஸ்து தீர்க்கதரிசியாகிய குருவாயும் ஆசாரியராயும் ராஜாவாயுமிருக்கிறார். உபா $18^{15.18}$ ஏசா $61^{1}$ சங் $110^{4}$ சக $6^{12}$ யோவா $14^{6}$ அவர் தீர்க்கதரிசியாகிய குருவாயிருந்து நமக்குப் போதிக்கிறார். ஆசாரியராயிருந்து நமக்காக பலி செலுத்தி வேண்டுதல் செய்கிறார். ராஜாவாயிருந்து நம்மைக் காத்து ஆண்டு வருகிறார். அவர் இம்மூன்று தொழில்களையுஞ் செய்யும்படிக்குத் தேவ ஆவியினாலே அபிஷேகம் பண்ணப்பட்டார். அவர் தேவ ஆவியால் மரியாளிடத்தில் உற்பவித்தபோதும், ஞானஸ்நானம் பெற்றபோதும், மலையிலே மறுரூபப்பட்டபோதும், மரித்தோரிலிருந்தெழுந்தபின்பு கிறிஸ்துவும் கர்த்தருமானபோதும், எல்லா நாமங்களுக்கும் மேலான நாமத்தை அடைந்தபோதும், அவர் அந்த அபிஷேகம் பெற்றவரென்று விளங்கிற்று. மத் $3^{17}$ $17^{5}$ அப் $2^{36}$ பிலி $2^{9}$. பூர்வீகத்தில் எண்ணெயினால் அபிஷேகம் பண்ணப்பட்ட தீர்க்கதரிசிகளும் ஆசாரியர்களும் ராஜாக்களும் இம்மூன்று தொழில்களையுஞ்செய்கிற கிறிஸ்துவுக்கு அடையாளங்களாயிருந்தார்கள். அவர்மாத்திரம் இம்மூன்றையும் பொருந்தியிருக்கிறார். இயேசுகிறிஸ்து, பாவநிவாரணம், நீதிமானாக்கப்படுதல் காண்க.

**மத்தியதரைக்கடல்** Mediterranean sea. பெருங்கடல் காண்க.

**மத்தியா**. Matthias. [யேகோவாவின் ஈவு.] இயேசுவைக் காட்டிக்கொடுத்த யூதாசுக்குப் பதிலாக மற்ற அப்போஸ்தலர்கள் மத்தியாவைத் தங்களுடனே ஒரு அப்போஸ்தலனாக தெரிந்துகொண்டார்கள். புதிய ஏற்பாட்டில் இவனைப்பற்றி வேறொன்றும் சொல்லப்படுகிறதில்லை. அப் $1^{23.26}$. ஆதி கிறிஸ்தவர்கள் கைக்கொண்ட பாரம்பரியத்தின்படி இவன் இயேசு அனுப்பின எழுபது சீஷர்களில் ஒருவன்; இவன் எத்தியோப்பியா தேசத்தில் உள்ள நரமாமிசம் தின்கிறவர்களுக்குச் சுவிசேஷத்தை அறிவித்து, சுவிசேஷநூலையும் இயேசுவைப்பற்றிய பாரம்பரிய மாலையையும் எழுதினான்.

**மத்தேயு**. Matthew. [யேகோவாவின் ஈவு.] இயேசுவின் 12 அப்போஸ்தலர்களைச் சேர்ந்த மத்தேயுவின் மறுநாமம். லேவி.

இவன் அல்பேயுவின் மகனும், கலிலேயா நாட்டானும், ஆயக்காரனுமாயிருந்தான். மத் 9⁹ 10³ லூக் 6¹⁵. இயேசு இவனை அழைத்தார். மாற் 2¹⁴ லூக் 5²⁷. கப்பர்நகூம் பட்டணத்தில் காற்பங்கு தேசாதிபதியாயிருந்த ஏரோதுவுக்காக இவன் அப்பட்டணத்துக்கு வருகிறவர்களிடம் தீர்வை வசூல் செய்தான். இவன் இயேசுவுக்கு விருந்து செய்ததினால் இவன் ஐசுவரியமுள்ளவன் என்று நாம் சொல்லக்கூடும். ஒருவேளை இவனும் அல்பேயுவின் மகனாகிய யாக்கோபும் சகோதரர்களாயிருக்கலாம். லூக் 6¹⁵ அப் 1¹³. இவன் புதிய ஏற்பாட்டில் முதலாம் சுவிசேஷத்தை எழுதினான். சில பாரம்பரியங்களின்படி இவன் இரத்தசாக்ஷியாய் மரித்தான்.

**மத்தேயு சுவிசேஷம். The gospel according to Matthew.**

1. **நூலின் காரணம்.** நாம் நான்கு சுவிசேஷங்களையும் தீர்க்கமாய் வாசித்து, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைப்பற்றிய செய்திகளைக் கவனிக்கும்போது, கைதேர்ந்த சித்திரக்காரர் நாலுபேர் ஒருவருடைய கனமும் அருளும் நிறைந்த முகரூபத்தைப் பார்த்துவிட்டுத் தங்கள் தங்கள் சித்திரசாலைக்குப் போய் நன்கு வரைந்த நான்கு சித்திரங்களைப்போல் காணப்படும். நடந்த சம்பவம் ஒன்றையே கண்ட நாலுபேர் அதை விவரிக்கிறபோது, உண்மையெல்லாம் ஒரேவிதமாக இருந்தாலும், தங்கள் கல்விச் சாமர்த்தியத்தின்படியும், பேச்சு வல்லபத்தின்படியும் அவைகளை வெவ்வேறாய்த் தெரிவிப்பார்களல்லவா? அவ்வாறே சுவிசேஷத்தை எழுதின நாலுபேரும் தாங்கள் கண்ட காரியங்களை வெவ்வேறாய் எழுதினதோடு பற்பல நோக்கங்களுடன் எழுதினதினால், சுவிசேஷங்களில் அங்கங்கே சிற்சில வித்தியாசங்களைக் காண்கிறோம். உதாரணமாக பவுலுக்குத் தோழனும் உடன் வேலைக்காரனுமாகிய லூக்கா ஆண்டவருடைய திவ்விய வசனங்களையும், அருளிய செய்கைகளையும் புறஜாதியாருக்குத் தக்க போதனையாக எடுத்துக் கூறி, அவர் ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்று காட்டுகிறான். இப்பொழுது நாம் கவனிக்கப்போகிற சுவிசேஷத்தை எழுதினவன் யூதனாகிய மத்தேயு. இவன் தன் சொந்தத் தேசத்தாருக்கு இயேசு மெய்யான மேசியாவென்றும், தலைமுறை தலைமுறையாய்க் கடவுள் அற்புதங்களைச் செய்து பிரமாணங்களைக் கொடுத்துத் தம்மை யூதருடைய சரித்திரத்தில் வெளிப்படுத்திவந்த ஆயத்தத்துக்கு முடிவானவர் என்றும், தெளிவாய்ச் சொல்லுகிறான். லூக்கா சுவிசேஷகன் இவரை உலகமெங்குமுள்ள மனுஷரனைவருக்கும் மித்திரனும் மீட்பருமானவர் என்று தெரிவிக்கிறான். மத்தேயுவோ இயேசுவுக்கும் ஆதிகாலமுதல் எல்லா நூற்றாண்டுகளிலுமிருந்த மனுஷரனைவருக்குமுள்ள சம்பந்தத்தைக் காட்டுகிறான். நியாயப்பிரமாணத்தையும் தீர்க்கதரிசனங்களையும் நிறைவேற்றுகிறவர் என்று காட்டும் நாற்பது ஒத்துவாக்கியங்களைப் பழையஏற்பாட்டு ஆகமங்களிலிருந்து எடுத்துச் சொல்லுகிறான். தன் சுவிசேஷத்தின் துவக்கத்தில் இயேசு 'ஆபிரகாமின் சந்ததியும் தாவீதின் குமாரனுமானவர்' என்பதை ரூபிக்கிறான். மத் 1¹. லூக்கா சுவிசேஷகன் பின்னும் அவருடைய வம்சவரிசையை விவரிக்கையில், அவர் ஆதாமின் குமாரன் என்றும், ஆதாம் தேவனால் உண்டானவன் என்றும் சொல்லி ஆண்டவருடைய மெய்யான மனுஷத்துவத்தைமாத்திரம் காண்பிக்கிறான். லூக் 3³⁸. முதல் முதலாக மத்தேயுவின் சுவிசேஷம் எழுதப்படாவிட்டாலும், இது பழையேற்பாட்டையும் புதியேற்பாட்டையும் இணைக்கிற கொக்கிபோலிருப்பதினாலும், வெகு சீக்கிரத்தில் ஆதி கிறிஸ்தவர்களுடைய மனதைக் கவர்ந்து அவர்களால் நன்குமதிக்கப்பட்டதாலும் மற்றச் சுவிசேஷங்களுக்குமுன் வைக்கப்பட்டிருக்கிறது. பூர்வகாலம்முதல் இது மிகப் பிரசித்தமான சுவிசேஷம். மற்ற சுவிசேஷ ஆகமங்களிலிருந்து சங்கதிகளை ஒப்பனையாக எடுத்துச் சொல்வதைப்பார்க்கிலும் இந்தச் சுவிசேஷத்திலிருந்தே பல சங்கதிகளை உதாரணமாக அநேக கிரந்த கர்த்தாக்கள் உபயோகித்திருக்கிறார்கள்.

2. **கிரந்த கர்த்தாவும் பாஷையும்.** இரண்டாம் நூற்றாண்டு முதல் இந்தச் சுவிசேஷத்துக்கு 'மத்தேயு பிரகாரம்' ('*According to Matthew*') என்பதுமாத்திரம் மேலெழுத்து. இதனால் மத்தேயுதான் இதை எழுதினான் என்பதாக நிச்சயிக்கலாகாது. ஆயினும், மத்தேயு கிறிஸ்துவைப் பற்றிச் செய்த பிரசங்கங்களைக் கேட்டு வேறொருவன் அவைகளை இதிலடக்கி எழுதியிருக்கலாம்; மத்தேயு சங்கதிகளைச் சொல்லச் சொல்ல இன்னொருவன் லிகிதனாக இருந்து அவைகளை எழுதியுமிருக்கலாம்; அல்லது மத்தேயு தானே அவைகளை ஒன்றாய்த் திரட்டி எழுதியிருக்கலாம் என்பதே இதின் திட்டமான அர்த்தம். எப்படியிருந்தாலும் இந்தச் சுவிசேஷத்தை எழுதினவன் மத்தேயு என்று திருச்சபை மூப்பர்களும் பொதுவாய்க் கிறிஸ்தவ சபையாரனைவரும்

ஆதிகாலமுதல் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். மத்தேயு அப்போஸ்தலனைப்பற்றிச் சுவிசேஷங்களில் கண்டிருக்கிறவைகள் மிகச் சொற்பம். இயேசு அவனை அழைத்ததைப்பற்றிய விவரத்தை வாசிக்கிறோம். இவன் பெயர் சுவிசேஷகர் அட்டவணையிலும் அப்போஸ்தலருடைய பட்டியிலும் வருகிறது. இவன் புரிந்த செய்கைகளையும் மொழிந்த வார்த்தைகளையும்பற்றிப் புதியேற்பாட்டில் நாம் ஒன்றும் வாசிக்கிறதில்லை. ஆனால் மத்தேயு இந்தச் சுவிசேஷத்தை எழுதினான் என்பதற்கு அகச்சாட்சியுமுண்டு. தன்னை ஆயக்காரனாகிய லேவி என்று தெரிவிக்கிறான். மத் $10^3$. மற்றக் கிரந்த கர்த்தாக்களோ ஆயக்காரவேலை கனவீனமானது என்று எண்ணி, இயேசுவானவர் அழைத்த லேவி மத்தேயுதான் என்பதை வெளியிடவில்லை. மேலும், லேவி தன் பழைய வேலையை விடுவதற்குமுன் தன் சிநேகிதருக்கு விருந்து செய்தான் என்று மற்றச் சுவிசேஷகர் எழுதியிருக்கிறார்கள். மத்தேயுவோ, இந்தச் சுவிசேஷத்தை எழுதினபோது தன்னைப்பற்றிய இந்தக் கனமான சங்கதியை எழுதவில்லை. அன்றியும், அப்போஸ்தலருடைய பேர்ப்பட்டியில் தன் பெயருக்கு முந்தி தோமாவின் பெயரை வைத்து எழுதுகிறான். மற்றவர்களோ, தோமாவின் பெயருக்குமுன் இவன் பேரை வைத்து எழுதுகிறார்கள். தன்னைப் பற்றிக் கனவீனமான காரியத்தை எழுதி, கனமான சங்கதியை எழுதாமல் விட்டிருக்கிறபடியால் மத்தேயுதான் இந்தச் சுவிசேஷத்தை எழுதினான் எனச் சொல்லத்தகும்.

இரண்டாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்த பாப்பையஸ் (*Papias*) என்னும் வேதசாஸ்திரி மத்தேயு இந்தச் சுவிசேஷத்தை 'எபிரெய' பாஷையில் எழுதினான் என்று சொல்லுகிறான். இப்படியாக அப்போஸ்தலன் ஒருவன் எழுதியிருப்பதைப்பற்றி ஆச்சரியப்பட ஏதுவில்லை. யூதருக்குள் வேலை செய்த அப்போஸ்தலர் அரமேய என்னும் 'எபிரெய' பாஷையில் பேசவேண்டியதாயிருந்தது. ஆகையால் தன் சொந்த ஜனங்களை ஆதாயப்படுத்தும்படியாக அவர்களில் ஒருவன் சுவிசேஷம் எழுதினால், கிரேக்க பாஷையில் எழுதாமல் 'எபிரெய' பாஷையில் எழுதுவது நல்லது. தற்கால வேதசாஸ்திரிகளில் பலர், மத்தேயு தன் சுவிசேஷத்தை 'எபிரெய' பாஷையிலே எழுதி, வெகு சாதாரணமாக இயேசு பேசி வந்த அந்த அரமேய பாஷையில் அவரது அருமைப் பிரசங்கங்கள், அமிர்த வசனங்கள், உத்தமபோதனைகள் யாவற்றையும் கோர்வையாக சேர்த்திருக்க வேண்டுமென்றும்; நமக்குத் தெரியாத இன்னொரு ஆக்கியோன் இப்படிச் சேர்த்து எழுதப்பட்டவைகளோடு முதல் முதல் எழுதப்பட்டதென்று அநுமானிக்கப்படுகிற மாற்கு சுவிசேஷத்திலிருந்தும், பாரம்பரியமாக காதால் கேட்டுவந்த போதனைகளிலிருந்தும், மற்றக் கிரந்தங்களிலிருந்தும் இயேசுசுவாமியினுடைய ஜீவிய சரித்திரத்தின் சங்கதிகளைத் திரட்டி நாம் இப்போது வழங்குகிற இந்தச் சுவிசேஷத்தை கிரேக்கபாஷையில் இயற்றினான் என்றும்; மத்தேயு வெகுவாய்ச் சேர்த்த இயேசு சுவாமியினுடைய உன்னத பிரசங்கங்களும் அமிர்தவாசகங்களும் இதில் விசேஷமாய் அடங்கியிருக்கிறபடியால், இந்தக் கிரேக்க பதிப்புக்கு மத்தேயுவின் பேர் வழங்கினது என்றும் நினைக்கிறார்கள். இயேசு கிறிஸ்துவின் 'சங்கதிகளைக்குறித்துச் சரித்திரம் எழுத அநேகம்பேர் ஏற்பட்டார்கள்' என்று லூக்கா $1^2$-ல் சொல்லப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவானவருடைய பரிசுத்த ஜீவிய சரித்திரத்தை எழுதின சுவிசேஷகர் ஆவியானவரால் ஏவப்பட்டு, தங்கள் அனுபவத்தில் கண்டும் கேட்டுமிருந்த சம்பவங்களை ஞாபகப்படுத்தும் சக்தியையும் சகாயத்தையும் அருளையும் பெற்று, மற்றவர்கள் இயற்றிய சுருள்களிலடங்கிய சங்கதிகளையும் சம்பவங்களையும் சேர்த்துத் தங்கள் சுவிசேஷங்களில் எழுதியிருக்கலாம் என்று நாம் நம்புவதற்கு ஏதுவுண்டு.

3. காலம்.

கி—பி 70-ம் ஆண்டில் ரோம சேனாபதியாகிய தீத்து எருசலேமை அழிக்குமுன், இந்தச் சுவிசேஷம் எழுதப்பட்டிருக்கிறதென்று நம்புவதற்கு ஐயமில்லை. இயேசுவானவர் பரிசுத்த நகரத்தையும் தேவாலயத்தையும்பற்றி மொழிந்த வார்த்தைகளைச் சுவிசேஷகன் எழுதும்போது நகரத்துக்கும் தேவாலயத்துக்கும் இயேசு சொன்ன அழிவு வந்தது என்று சொல்லாமல், இவைகள் அவருடைய காலத்தில் எப்படி இருந்தனவோ, அப்படியே இருக்கின்றன என்று நினைத்து எழுதுகிறான். மத் $4^5$ $5^{35}$ $24^{15}$ $27^{53}$. ஒரு கல்லின்மேல் ஒரு கல் இராதபடி அழிவுவந்தபின் இந்தச் சுவிசேஷம் எழுதப்பட்டிருக்குமாகில், அந்தப் பயங்கரமான மாறுதலைப்பற்றியும் தெரிவித்திருப்பானல்லவா? மத் $24^{15}$-ம் வசனத்தைக் கவனித்துப் பார்க்கையில் எருசலேமின் அழிவு மிகவும் சமீபத்தில் இருந்ததாக சொல்லலாம். ஆதலால் சுவிசேஷகன் 'பாழாக்குகிற அருவருப்பு' என்பதின் பேரையும் சொல்லத் துணியாமல், வாசிக்கிறவன்

சிந்திக்கக்கடவன் என்று ஜாடையாய் அதின் முடிவைக்குறித்துத் தெரிவிக்கிறான். எருசலேமின் அழிவு அவ்வளவு சமீபத்திலிருப்பது நம்பத்தக்கதானபடியால் இந்தச் சுவிசேஷம் கி–பி. 66-ம் வருஷம் முதல் கி–பி. 70–ம் வருஷத்துக்குள்ளாக எழுதப்பட்டிருக்கவேண்டுமென்று நிச்சயிக்கலாம்.

4. தன்மையும் பொருளடக்கமும்.

நாம் முன் பார்த்தபடி இந்த ஆகமம் பழைய ஏற்பாட்டு ஆகமங்களை அறிந்து, யூதருடைய பழக்க வழக்கங்களையும் நடையுடைகளையும் அநுசரித்துவந்த யூதனாலே யூத ஜனங்களுக்கென்று எழுதப்பட்டது. பிற்காலத்தில் எழும்பின பழைய ஏற்பாட்டுத் தீர்க்கதரிசிகளில் பலர் பரிசுத்தமும் மகத்துவமும் வெற்றியுமுள்ள மேசியா பூலோகத்திலே எழுந்தருளி, தமது மகிமை நிறைந்த ராஜ்யத்தை ஸ்தாபிக்கப்போகிறதாக பலமுறை திட்டமான தீர்க்கதரிசனம் உரைத்திருந்தார்கள். இந்தத் தீர்க்கதரிசனங்களை யூதர்கள் ஆவலோடு ஏற்றுக்கொண்டபடியால் அவர்களுடைய ஞாபகத்தில் அவைகள் பலமாய் ஊன்றியிருந்தன. அவர்கள் அவைகளைப் பூரணமாய் நம்பி, அந்த வல்லமையுள்ள ராஜ்யத்தின் வருகைக்காக ஏக்கமுற்றுக் காத்துக்கொண்டிருந்தார்கள். வெகுடம்பமும் கண்ணியமுமாக ஒருவன் அக்காலத்தில் வந்து தன்னை மேசியாவென்று அறிக்கையிட்டிருப்பானானால், ஆயிரக்கணக்கான யூதர்கள் அவனை வழிப்பட்டு ஒருப்பட அவனைப் பின்பற்றியிருப்பார்கள். மத்தேயு இந்தப் பொதுவான கோரிக்கையைக் கண்டு, இயேசுகிறிஸ்து ஸ்தாபித்த சபை யூதர்கள் பல நூற்றாண்டுகளாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த கடவுளுடைய ராஜ்யமே என்று தெரிவிக்கிறான். மத்தேயு காட்டுகிற மெய்யான மேசியாவின் ராஜ்யமானது, ஜாதி, தேசம் இவைகளின் எல்லைகளைத் தாண்டி எங்கும் ஸ்தாபிக்கப்படும். மேலும் அது பூமிக்கடுத்ததாயிராமல், தன்மையிலும் முடிவிலும் பரலோகத்தை அடுத்ததாயிருக்கும். தீர்க்கதரிசனம் நிறைவேறத்தக்கதாக இப்படி நடந்தது என்று நமது ஆண்டவரைப் பற்றிய சங்கதிகளைப் பலதரம் எழுதி, தீர்க்கதரிசிகள் ஏற்கனவே இப்படிப்பட்ட காரியங்களை எதிர்நோக்கினார்கள் என்பதைக் காட்டுகிறான்.

இந்தச் சுவிசேஷத்தின் போதனையெல்லாம் யூதமார்க்கக் கொள்கைக்கும் அபிப்பிராயங்களுக்கும் மேலானதெனக் கீழ்க்கண்ட திருஷ்டாந்தங்களினால் அறியலாம்.

(1) ஓய்வுநாளானது மகா பரிசுத்தமும் விசேஷித்ததுமாக இருந்தாலும் இயேசுசுவாமி இந்த உயர்வான ஏற்பாட்டுக்கும் ஆண்டவராயிருக்கிறார். மத் $12^{8}$.

(2) மோசேயின் கற்பனையின்படி யூதர் கைக்கொண்டுவருகிற சுகாதாரமான ஆகார ஒழுங்கைத் தவிர்க்கிறதினால் பாரம்பரியச் சடங்குக்குப் பின்னம் உண்டாகுமேயொழிய இருதயத்தில் தீட்டு ஏதும் உண்டாகிறதில்லை. மத் $15^{11.19}$.

(3) நியாயப்பிரமாணிக்கனாகிய மோசேயைப்பார்க்கிலும், அவன் விதித்த கற்பனைகளைக்காட்டிலும், ஜகத்குருவாகிய இயேசுசுவாமி மேலானவராயிருந்து மகத்தான கட்டளைகளை அளித்திருக்கிறார். மத் $5^{22-44}$.

(4) கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய சுவிசேஷம் யூதருக்கு மாத்திரமல்ல, வலியோர் எளியோரான பூவுலகத்தார் யாவருக்கும் பிரசங்கிக்கப்படவேண்டும். மத் $24^{14}$ $28^{19}$.

(5) இயேசுரட்சகர், பாவபாரத்தினாலும், கஷ்ட நஷ்டத்தினாலும், மனவேதனையினாலும் இளைப்படைந்திருக்கிற யாவரும் தம்மை யண்டினால், தாம் அவர்களுக்கு இளைப்பாறுதல் கொடுப்பதாக வாக்கருளுகிறார். அருமையும் பெருமையும், ஆறுதலும் தேறுதலுமுள்ள இந்த வார்த்தைகள் கிருபாநிதியாகிய இயேசு மீட்பரினிடத்தினின்று புறப்படுகிறதேயொழிய சுவிசேஷகனுடைய வெறும் வார்த்தைகள் அல்ல. யூதருக்குமாத்திரம் அல்ல யாவருக்கும் அருளின இந்த வாக்கு யூதமார்க்கக் கொள்கையாயிராமல் அதற்கு மேலானதாயிருந்து கிறிஸ்துமார்க்கத்தின் மேன்மையும் சாரமுமாக இருக்கிறது.

சம்பவங்கள் நிகழ்ந்த காலம், இடம் இவைகளின் திட்டவட்டமான குறிப்புகளை மத்தேயு சுவிசேஷத்தில் நாம் காண்கிறதில்லை. ஒன்றுபோல் தோன்றுகிற சம்பவங்களும், ஒரேமாதிரியாய்க் காணும் போதனைகளும், இந்தச் சுவிசேஷத்தில் அடங்கியிருக்கிறது, மலைப்பிரசங்கக் குறிப்பை லூக்கா சுவிசேஷகன் எழுதிய குறிப்போடு ஒத்துப்பார்ப்பது நல்லது. 13–ம் அதிகாரத்தில் தேவனுடைய ராஜ்யத்தின் தன்மையையும், அதின் பிரபலத்தையும் காட்டுகிறதும், வெவ்வேறு சமயங்களில் சொல்லப்பட்டதுமான உவமைகளைக் கோர்வையாகக் கோர்த்துச் சேர்த்து எழுதியிருக்கிறது. 23 24, 25–ம் அதிகாரங்களில், யூதஜாதியாரின் அழிவையும், உலகத்தின் முடிவையும்,

இயேசு கர்த்தர் பற்பல சமயங்களில் பேசின சங்கதிகளேயும் ஒரே உபந்நியாசமாகத் திரட்டி எழுதியிருக்கிறது. வேறு சுவிசேஷங்களிலுள்ள ஆண்டவருடைய வசனங்கள் பூந்தோட்டங்களில் தனித்தனியாய்க் காணப்படுகிற புஷ்பங்களைப்போன்றவை. இயேசு மீட்பருடைய விசேஷித்த போதனைகளைக் காட்டும்படி இந்தச் சுவிசேஷத்தில், அவர் திருவாய் மலர்ந்தருளிய திருவசனங்கள் ஓர் பூங்கொத்தாகச் சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது.

இந்தச் சுவிசேஷத்தைப் பகுத்தறிவது சற்றுக் கஷ்டம். ஆயினும் இதை இரண்டு பாகமாகப் பிரிக்கலாம். அதி. $4^{17}$–ல் கிறிஸ்துவானவருடைய ஊழியத்தின் துவக்கமும், அதி. $16^{21}$–ல் அவரது பாடுகளின் ஆரம்பமும் தென்படுகிறது. 4–ம் அதிகாரம்முதல் 11 அதிகாரம்வரை அவருடைய பொதுவான ஊழியத்தைப்பற்றி வாசிக்கிறோம். அவர் கிராமங்கள்தோறும் சுற்றித் திரிந்து, புண்ணியக் கிரியைகளைப் பலருக்குஞ் செய்து, ஞானோபதேசத்தைத் தம்மை யண்டினவர்களுக்குக் கொடுத்து, தமது திருப்பணிவிடையை விடாமுயற்சியோடு நிறைவேற்றி வந்தார். அவரது அன்பையும் மன இரக்கத்தையும் உருக்கத்தையும் கண்டு சிலர் அவருக்குச் சீஷரானார்கள். அந்தச் சீஷர்களுக்குப் போதனையினாலும் சாதனையினாலும் தமது உன்னத ஊழியத்தின் மேன்மையான நோக்கத்தை வெளிப்படுத்த அவர்கள் அதை நன்குணர்ந்து சன்மானத்தோடு அவரைப் பற்றிக்கொண்டபின், தாம் பல பாடுகள்பட்டு, மரணம் அடையவேண்டுமென்பதாய் அடிக்கடி அவர்களுக்குச் சொல்லிக்கொண்டே வந்தார். பிந்தின அதிகாரங்களில் அடங்கியிருக்கிற போதனை, சரித்திரம் முதலானவைகளில் சிலுவையின் சாயலும் நிழலும் விழுகிறதைப் பார்க்கலாம். அவர் ஞானஸ்நானம்பெற்ற தருணம் ($3^{17}$) அவருடைய ஊழியத்தின் துவக்கம், அவர் மறுரூபம் அடைந்த சமயம் ($17^5$) அவருடைய பாடு மரணம் இவைகளுக்கு ஆரம்பமே. பிதாவாகிய தேவன் தமது அசரீரி வாக்கினால் குமாரன் தம்முடைய ஊழியத்தை நிறைவேற்றி முடிப்பதற்கு அங்கு நின்றவர்கள் யாவரும் அறியும்படி தமது அநுமதியைக் கொடுத்தார். இதினால் பிதாவாகிய தேவன் தமது ஒரேபேறான குமாரனாகிய இயேசு செய்யும்படி இடைகட்டிக்கொண்ட புண்ணியக் கிரியையின்பேரில் பிரியங்கொண்டார் எனப் பார்க்கிறோம்.

மத்தேயு தன் சுவிசேஷத்தில், இயேசு 'மனுஷகுமாரன்' என்று 33 தரம் சொல்லுகிறான். இதினால் அவருடைய மனுஷீகத்தையும், இரண்டாம் ஆதாமுக்குரிய விசேஷித்த குணநிசயத்தையும் காணலாம். இவன் இன்னும் மற்றச் சுவிசேஷகரைப் பார்க்கிலும் பலதடவை அவர் 'தேவனுடைய குமாரன்' என்று சொல்வதினால் அவருடைய தெய்வீகத்தையும் சர்வ வல்லமையையும் பார்க்கலாம். இவ்விருவித தத்துவங்களும், பிரிவினையும் விரோதமின்றி, ஒரே திவ்விய சுபாவத்தில் அடங்கியிருக்கின்றன. ஆதலால், இந்த மனுஷகுமாரன் தேவனானவர்; பூலோகத்தில் நடைபெறும் இவரது பரிசுத்த ஊழியம் நமக்கு மீட்பு.

**மத்மன்னா.** Madmannah. தென்யூதாவில் ஒரு ஊர். யோசு $15^{31}$

**மத்மேனா.** Madmenah. இது எருசலேமுக்கு வடக்கேயிருந்த ஒரு சிறு ஊராயிருக்கலாம். ஏசா $10^{31}$.

**மத்மேன்.** Madmen. மோவாப் தேசத்திலுள்ள ஒரு ஊர். எரே $48^2$.

**மத்ரேத், மாத்திரேத்.** Matred. ஏதோமின் ராஜாவாகிய ஆதார் அல்லது ஆதாத் என்பவனுடைய மாமியார். ஆதி $36^{39}$ 1 நாளா $1^{50}$.

**மத்னாய்.** Mattenai. மதனாய் காண்க.

**மந்திரம்.** Mantra. 'மந்திரம்' என்னும் பதத்துக்கு அர்த்தங்கள் ஆவன:

1. திருவாக்கு.

2. ஒரு தேவனுக்குச் செய்த விண்ணப்பம், அல்லது கீதம். இதின்படி சமஸ்கிருத பாஷையில் எழுதின ருக், யஜுஸ், சாம, அதர்வ வேதங்களில் சேர்ந்த பாட்டுகளுக்கு 'மந்திரம்' என்று பெயர்.

3. வழக்கமாய்ச் சூனியக்காரர்கள் ஒருவனுக்குத் தீமை உண்டுபண்ணும்படிச் சொன்ன சில விசேஷித்த உருக்களுக்கு 'மந்திரம்' என்று சொல்வார்கள். இதினிமித்தம் அவர்கள் மந்திரக்காரர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். **சூனியவித்தை காண்க.**

**மந்திரவாதி.** Sorcerer. ஆதி $41^8$ உபா $18^{11}$ ஏசா $19^3$ அப் 19 13. **சூனியவித்தை காண்க.**

**மந்திரி.** Counsellor, Minister. எபிரெய பாஷையில் ஆலோசனைக்காரன், பிரதானி, மந்திரி முதலியவர்களைக் குறிக்கும்படிச் சொன்ன பதங்களின் விசேஷித்த அர்த்தங்களை நன்றாய்த் தெரிந்துகொள்வது அரிது.

ஏனென்றால் அந்த ஆலோசனைக்காரர் ராஜாவுக்குப் பிரியமுள்ளவர்களாய் இருந்தால் அவன் அவர்களுக்கு மிகுந்த அதிகாரத்தையும் உத்தியோகத்தையும் கொடுப்பான். மற்றப்படி அவர்களுக்கு இந்தப் பெயர் இருந்ததினால்மாத்திரம் அதிகாரமும் உத்தியோகமும் இல்லை. மேலும் சமயாசமயத்தில் ராஜாங்கவிஷயத்தில் வழக்கமாய்ப் பிரவேசியாத தீர்க்கதரிசிகள் சில விசேஷித்த விஷயங்களினிமித்தம் ராஜாக்களுக்கு ஆலோசனை சொல்லுவார்கள். மந்திரி என்னும் பதம் தானியேல் சரித்திரத்தில் பலதடவைச் சொல்லியிருந்தும் அதில் சொன்ன மந்திரி உத்தியோகம் இன்னதென்று சொல்வது நம்மால் முடியாது. தானி $3^{24}$ $4^{36}$ $6^{7}$.

**மந்தை.** **Flock.** ஆதி $4^{4}$ $29^{2}$ $30^{40}$ 1 சாமு $17^{34}$ உன். பா $4^{2}$ சங் $77^{20}$ $78^{52}$ $80^{1}$ ஏசா $40^{11}$ $61^{5}$ எசே $34^{2.31}$ ஆமோ $7^{15}$ மத் $26^{31}$ லூக் $2^{8}$ $12^{32}$ அப் $20^{28}$ 1 கொரி $9^{7}$ 1 பேது $5^{2}$. கிடை காண்க.

**மம்மோன்.** **Mammon.** மம்மோன் என்பதற்கு அரமேய பாஷையில், 'வரவு' 'பொக்கிஷம்' 'உலகப்பொருள்' என்று அர்த்தம். இது ஜனங்களுக்குப் பெரும்பாலும் சாதாரணமாய்த் தெரிந்திருந்த பதம் ஆனதினால் பரி. மத்தேயுவும், பரி. லூக்காவும் கிரேக்க பாஷையில் எழுதின தங்கள் சுவிசேஷங்களில் இந்தப் பதத்தை மொழிபெயர்க்காமல் சொல்லியிருக்கிறார்கள். வேதாகமத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர்கள் 'மம்மோன்' என்ற பதத்துக்குப் பதிலாக 'உலகப்பொருள்' என்று சொல்லியிருக்கிறார்கள். சிலர் நினைக்கிறபடி பெனிக்கேயர்கள் வணங்கின ஒரு தேவதைக்கு மம்மோன் என்று பெயர். ஆனால் இதற்குப் போதுமான அத்தாக்ஷியில்லை. மத் $6^{24}$ லூக் $16^{9.11.13}$.

**மம்ரே.** **Mamre.**

1. ஆதியாகமத்தில் மம்ரே என்னும் வார்த்தை பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இது எபிரோன் பட்டணத்துக்கு வடக்கே இரண்டு மைல் தூரத்திலுள்ள ஒரு இடம். இதில் கருவாலிமரங்கள் மிச்சமாயிருந்தது. ஆதி $13^{18}$ $18^{1}$. ஆபிரகாம் வாங்கின மக்பேலா என்னும் கெபி இதற்கு அருகாமையில் உள்ளது. ஆதி $23^{17}$ $25^{9}$ $49^{30}$ $50^{13}$. ஈசாக்கு இவ்விடத்தில் மரித்தான். ஆதி $35^{27}$. பூர்வீகத்தில் மம்ரே எபிரோன் பட்டணத்தைக் குறித்தது என்று தோன்றுகிறது. ஆதி $23^{19}$ $35^{27}$. நாளதுமட்டும் அந்தத் தேசத்தார் அவ்விடத்துக்கு யாத்திரை பண்ணுகிறவர்களுக்கு ஆபிரகாமின் கருவாலி மரங்களைக் காட்டுவார்கள். ஆனால் இந்த மரங்கள் ஆபிரகாமின் கருவாலிமரங்கள் என்று நிச்சயமாய்ச் சொல்வதற்குப் போதுமான அத்தாக்ஷியில்லை.

2. ஆபிரகாம் லோத்தை ரட்சிக்கும்படி படையெடுத்தபோது அவனுக்கு உதவி செய்தவர்களில் ஒருவன். ஆதி $14^{13.24}$.

**மயக்கம்.** **Confusion.** மத் $13^{22}$.

**மயக்கினவன்.** **Bewitched.** கலா $3^{1}$ சூனியவித்தை காண்க.

**மயிர்** **Hair.** லேவி $13^{3}$ எண் $6^{5}$ நியா $16^{22}$ 2 சாமு $14^{26}$ 2 இரா $1^{8}$ உன். பா $7^{5}$ தானி $3^{27}$ மத் $3^{4}$ $5^{36}$ $10^{30}$ லூக் $7^{38}$ $12^{7}$ $21^{18}$ 1 கொரி $11^{15}$ 1 தீமோ $2^{9}$ 1 பேது $3^{3}$ வெளி $1^{14}$ $9^{8}$. கூந்தல், **ரோமம்** காண்க.

**மயில்.** **Peacock.**

தற்காலத்தில் 'தோகை' என்பது மயிலின் விரிந்தவாலைக் குறிக்கும். ஆனால் ஆதியில் 'தோகை' என்பது மயிலைக் குறித்தது. ராஜாக்கள், நாளாகமம் என்னும் புத்தகங்களில் அந்தத் தமிழ்பதம் எபிரெய பாஷையில் சொல்லப்பட்டிருக்கிறதினால், சாலொமோன் ராஜாவின் மாளிகைக்குக் கொண்டுவரப்பட்ட மயில்கள் தென் இந்தியாவிலிருந்து வந்ததென்றும்; எபிரெயர்கள் தங்கள் பாஷையில் இவைகளுக்குப் பெயரில்லாததினால் அவர்கள் இந்தத் தமிழ் பதத்தை வழங்கினார்கள் என்றும் நாம் அறியவேண்டும். 1 இரா $10^{22}$ 2 நாளா $9^{21}$.



மயில்.

**மயினன்.** **A. V. Menam. R. V. Menna.** பூர்வீக கைப்பிரதிகளை நாம் வாசித்தால் மயினன் என்பதற்குப் பதிலாக 'மென்னா'

என்று வாசிக்கவேண்டும். மென்னா இயேசுவின் முற்பிதாக்களில் ஒருவன். லூக் $3^{31}$.

**மரகதம்.** Emerald. யாத் $28^{18}$ $39^{11}$. எசே $27^{16}$ $28^{13}$ வெளி $4^{3}$ $21^{19}$. இரத்தினம் காண்க.

**மரக்கால்.** Bushel. மத் $5^{15}$ மாற் $4^{21}$ லூக் $5^{33}$. அளவு (பக். 39) காண்க.

**மரணசாதனம்.** Testament. எபி $9^{16.17}$. சாதனம் (பக். 292) காண்க.

**மரணம்.** Death.

I. பழைய ஏற்பாடு.

1. வேதாகமத்தில் சொன்ன சரித்திரங்களை நாம் விசாரித்தால் பூர்வீக காலமுதல் எபிரெயர்கள், மனுஷர்கள் எல்லாரும் மரணத்துக்குள்ளானவர்களாயிருந்தார்கள் என்று அபிப்பிராயம் கொண்டார்கள் என்பது தெரியவருகிறது. ஆதியாகமத்தில் ஆதாம் பாவம் செய்யுமுன் அதைக்குறித்து அறிந்திருந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $2^{17.22}$.

2. எபிரெயர்கள், மரணம் என்பதனால் சாவுமாத்திரம் அல்ல; மரித்துப்போனவர்கள் அடைந்த ஒரு நிலைமையையும் குறித்தார்கள். மரித்துப்போனவர்கள் மரணத்தின் மூலமாய் அடைந்த இந்த நிலைமையைப்பற்றி மூவகையான அபிப்பிராயங் கொண்டார்கள் என்று தோன்றுகிறது. இவை யென்னவென்றால்:

3. (*a*) பல வசனங்களில் மரித்துப்போனவர்கள் மௌன நிலைமையிலிராமல் பல காரியங்களை அறிந்து தெரிந்து, அவைகளை மனுஷருக்குத் தெரிவிக்கக்கூடியவர்களா யிருந்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. தமிழ் வேதாகமத்தில் 'குறி சொல்லுகிறவர்கள்' என்பதற்குரிய மூலபாஷைப் பதத்தின் அர்த்தம் என்னவென்றால் 'சங்கதிகளைத் தெரிந்துகொள்ளுகிறவர்கள்' என்பதே. ஆனதினால் இந்தப் பதம் குறிசொல்லுகிறவர்களை அல்ல; சங்கதிகளைத் தெரிந்துகொண்டு மனுஷருக்கு அவைகளைத் தெரிவிக்கக்கூடிய மரித்துப்போனவர்களின் ஆவிகளைக் குறிக்கிறது. லேவி $19^{31}$ $20^{6}$ ஏசா $8^{19}$ $19^{3}$. சவுல் ராஜா சூனியக்காரியைத் தேடின சரித்திரமும், ஏசாயாவின் தீர்க்கதரிசனத்தில் சொன்ன நேபுகாத்நேச்சார் பாதாளத்தில் செய்த கலகமும் மரித்தோரினுடைய திறமைக்குத் திருஷ்டாந்தங்கள். 1 சாமு $28^{7}$ ஏசா $14^{9}$. மரித்துப்போனவர்களுக்கு இந்தவிஷயமாய் அதிகாரமும் திறமையும் இருந்ததினால் சில வசனங்களில் அவர்களுக்கு 'தெய்வங்கள்' என்று பெயர். 1 சாமு $28^{13}$.

(*b*) வேறு அநேகருடைய அபிப்பிராயத்தின்படி மரணம் என்பது மௌனநிலைமை அல்லது மரண நித்திரை என்பதைக் குறிக்கும். அதில் மரித்துப்போனவர்கள் ஒன்றும் தெரியாதவர்களாயும், தாங்கள் செய்த எல்லா விஷயங்களைப்பற்றியும் ஞாபகம் அற்றவர்களாயும், பேசாதவர்களாயும் இருந்தார்கள். சங் $13^{3}$ $88^{12}$ $94^{17}$ $115^{17}$மு. இந்தப் பூமி 'ஜீவனுள்ளோரின் தேசம்'. மரித்தவர்கள் போன நிலைமையிலோ அவர்களுக்குப் பூரணமாய் ஜீவன் இல்லை. சங் $27^{13}$ $116^{9}$. இந்த மௌன நிலைமையின் விசேஷித்த பெயர் 'ஷேயோல்'. இதில் பிரவேசித்தவன் யாவையும் அறியாமல் போவான் என்று நினைத்துத் துக்கப்பட்டவர்களுக்கு இதிலேதான் இளைப்பாறுதல் உண்டு என்று சொல்லுகிறார்கள். யோபு $3^{17}$ பிர $9^{10}$. எபிரெயர்கள் ராஜாக்களின் காலத்தில் இந்த அபிப்பிராயத்தைப் பொதுவாய் ஏற்றுக்கொண்டார்கள் என்று தோன்றுகிறது. ஷேயோல் காண்க.

(*c*) தீர்க்கதரிசிகள் செய்த போதனையின் மூலமாய் மரணநிலை மௌனநிலையல்ல என்றும்; மரணம் அடைந்தவர்கள் கடவுளின் சந்நிதானத்திலிருப்பார்கள் என்றும்; கடவுள் செய்த உடன்படிக்கையினால் பக்தர்கள் இரட்சிப்பு அடைவார்கள் என்றும்; தீமை செய்தவர்கள் மரணத்தில் தண்டனை அடைவார்கள் என்றும் பிற்காலங்களிலுள்ள யூதர்கள் நம்பி வந்தார்கள். எரே $31^{25}$ எசே $18^{18}$. இதின்படி எபிரெயர்கள், மரித்தவர்கள் மரணநிலையில் தாங்கள் செய்த நன்மைக்குப் பலனையும், தாங்கள் செய்த தீமைக்குத் தண்டனையும் அனுபவிக்கவேண்டும் என்று உறுதியாய் நம்பிவந்தார்கள். உபா $30^{15.19}$ நீதி $14^{32}$ $15^{10}$.

4. பழைய ஏற்பாட்டில் உள்ள மரணத்தைப்பற்றிய உவமைகள் சில கவனிக்க வேண்டியது:

மரண அறை. நீதி $7^{27}$.

மரணவாசல். சங் $9^{13}$.

மரணத்தின் கசப்பு. 1 சாமு $15^{32}$ பிர $7^{26}$.

மரணக்கட்டு. சங் $116^{3}$.

மரண இருள் அல்லது மரண அந்தகாரம். யோபு $3^{5}$ $10^{21}$ $12^{22}$ சங் $23^{4}$ $107^{11}$ ஏசா $9^{2}$.

மரணநித்திரை சங் $13^{3}$.

மரணக்கண்ணி. சங் $18^{5}$ நீதி $13^{14}$ $14^{27}$.

II. தள்ளுபடி ஆகமம்.

தள்ளுபடி ஆகமத்தில் நாம் விசாரித்தால் சிறையிருப்பிலிருந்து வந்த யூதர்கள் மரணத்தைப்பற்றி ஒரே அபிப்பிராயங்கொண்டவர்கள் அல்ல என்பது விளங்கும். சாலொமோன் ஞானம் என்னும் ஆகமத்தில் முதல் 5 அதிகாரங்களை நாம் வாசித்தால், பக்தியில்லாதவர்களுக்கு மரணத்திலிருந்து மீட்பு இல்லை என்றும்; நன்மை செய்கிறவர்கள் அகாலமாய் மரிப்பதைப்பற்றித் தீராத சந்தேகம் உண்டு என்றும்; நீதிமான்கள் மரணத்தில் இளைப்பாறுதல் அடைவார்கள் என்றும்; நீதிமான்கள் நித்தியமாய் ஜீவித்துக் கடவுளிடத்திலிருந்து ராஜ கிரீடத்தைப் பெறுவார்கள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை இயற்றினவன் மரணத்தைப் பற்றி நல்ல அறிவு உடையவனாயிருந்தான் என்பது நிச்சயம். இதற்கு மாறாக சீராகுவின் ஞான ஆகமம் இதைப்பற்றி அவ்வளவு நம்பிக்கையோடு பேசாமல், மரித்தவர்களைப் பற்றித் துக்கங்கொண்டாடுகிறவர்கள் அளவுக்கு மிஞ்சி துக்கங்கொண்டாடக் கூடாது என்றும்; நான் இன்றைக்குச் செத்துப்போவேன், நீ நாளைக்குச் செத்துப்போவாய் என்றும்; மரணத்தில் இளைப்பாறுதல் உண்டு என்றும்; மனுஷர்கள் தங்கள் வாழ்நாளெல்லாம் மரணநாளை எதிர்பார்த்துக்கொண்டு பயந்திருப்பார்கள் என்றும்; மரணம் நமக்குப் பெரிய சத்துருவாயிருக்கிறான் என்றும்; தரித்திரருக்கும் விருத்தாப்பியருக்கும் மரணம் சிநேகிதன் என்றும் சொல்லுகிறது. அதி. 3[8-40].

III. புதிய ஏற்பாடு.

1. இயேசுவின் போதனை.

மரணத்தைப்பற்றி இயேசுநாதர் அடிக்கடி பேசவும் இல்லை, அதைக்குறித்த பூரண போதனையை நமக்கு அருளவும் இல்லை. ஆனால் அவர் அருளின வாக்கியங்களில் பின் வருவனவற்றை நாம் கவனிக்கவேண்டியது.

(*a*) அவர் மரணத்தின் காரணம், மரண தூதன் முதலியவற்றைப்பற்றி ரபிமார்களைப் போலப் பேசாமலும், மனுஷர்களுக்கும் மிருகங்களுக்கும் உண்டாகிற சாவைப்பற்றிய முகாந்தரங்களைச் சொல்லாமலும், கடவுள் இவ்வுலகத்திலுள்ளவர்களுக்கு ஈந்த இயற்கைப் பிரமாணங்களின்படி மனுஷர்கள் இறந்துபோவார்கள் என்று ஒத்துக்கொள்ளுகிறார். மாற் 9[1] யோவா 8[51].

(*b*) மரித்துப்போவது பயங்கரமான காரியம் என்று அநேகர் நினைத்தாலும், இயேசு கிறிஸ்து அப்படிப் போதிக்கிறதில்லை. நாயீன் விதவைக்கு இருந்த துக்கத்தைக் கண்டு பரிதபித்து அவள் மகனை உயிர்த்தெழப்பண்ணினார். லூக் 7[11]. தேவனுடைய மகிமைக்காக லாசருவை உயிரோடெழுப்பினார். யோவா 11[4]. எந்தச் சமயத்திலாவது மரணம் கெடுதியானகாரியம் என்று அவர் பேசினதில்லை. சில வசனங்களில் அவர் தம்மேல் பக்திவைத்தவர்கள் மரணம் அடையார்கள் என்றாலும், மரணம் தன்னில்தானே தீமையானது என்று நினைக்காமலிருந்தார். மேலும் தம்மோடு சிலுவையில் மரிக்கப்போகிற கள்ளனுக்கு அவர் சொன்ன வாக்கின்படி மரண நிலைமை நல்ல கதி தான் என்று காட்டினார். லூக் 23[43].

(*c*) பழைய ஏற்பாட்டு ஆகமங்களையும், தள்ளுபடி ஆகமங்களையும் எழுதினவர்களைப் போல இயேசு மரணநித்திரையைப் பற்றிப் பேசுகிறார். மாற் 5[39] யோவா 11[11]. இதன் மூலமாய் நாம் மரித்தபிறகு சில காலமாக நித்திரைபோன்ற இளைப்பாறும் நிலையிலிருப்போம் என்று நினைக்கிறதற்கு இடமுண்டு. என்றாலும் அந்த நிலையில் நாம் இருக்கவேண்டிய காலத்தைப்பற்றியும் அந்த நிலையின் விபரத்தைப்பற்றியும் அவர் போதிக்கவே இல்லை.

(*d*) இயேசு மனுஷர்கள் பாவத்தினாலே அடைந்த நிலைமையைக் குறிக்கும்படி அதற்கு 'மரணம்' என்று பெயர் சொன்னார். யோவா 5[24] 8[21]. தீமையை விரும்பினவர்கள் சரீர மரணத்தின்மூலமாய் ஆவிக்குரியவிதமான மரணத்தையும் அடைவார்கள். இதன்படி ஆதிகிறிஸ்தவர்கள் தீயோரின் நிலைமையைக் குறிக்கும்படி மரணம் என்பதைச் சொல்லுவார்கள்.

2. அப்போஸ்தலர்.

இயேசுகிறிஸ்து மரணத்தைப்பற்றி எப்படி விவரமான போதனை செய்யவில்லையோ அப்படியே அப்போஸ்தலர்களும் அதைப்பற்றிய விவரத்தைச் சொல்லவில்லை. ஆனால் பின்வரும் சங்கதிகளைக் கவனிக்கலாம்.

(*a*) யூத ரபிமார்கள் ஆதாம் பாவம் செய்யுமுன் மரணத்துக்கு ஏதுவானவன் அல்ல என்றும், அவன் செய்த பாவத்தினாலே தான் மனுஷர்கள் மரணத்துக்கு அடிமைகளாய்ப் போனார்கள் என்றும் போதித்தார்கள். இதின்படி இயேசுநாதர் போதிக்கவே இல்லை. பரி. பவுல் பாவத்தினால் மரணம்

உண்டானது என்றும், அந்த மரணம் ஆதாம் செய்த பாவத்தினாலே இவ்வுலகத்தில் பிரவே சித்தது என்றும் நம்பினன். ரோம $5^{12}$.

(*b*) பரி. பவுல் முதலியவர்கள் தீயோர்கள் நடத்துகிற ஜீவனுக்கு மரணம் என்று சொல்லுகிறார்கள். எபே $2^{1}$ $5^{14}$ கொலோ $2^{13}$ 1 தீமோ $5^{6}$ யாக் $1^{15}$ யூதா $1^{12}$ வெளி $3^{1}$.

(*c*) முன் சொன்னதற்கு வித்தியாசமாய்ப் பாவ மன்னிப்பைப் பெற்றவர்கள் தாங்கள் முன் நடந்த பாவமுள்ள ஜீவனுக்கு மரித்து அந்த மரணத்தின் மூலமாய் ஜீவனை யடைந்திருக்கிறார்கள் என்றும் உவமையாய்ச் சில வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ரோம $6^{2.8}$ கொலோ $2^{20}$ 1 பேது $2^{24}$.

(*d*) வேதசாஸ்திரிகள் நித்திய மரணத்தைப்பற்றிப் பேசுகிறார்கள். புதிய ஏற்பாட்டிலோ, 'கேடு' (மத் $7^{13}$) 'நித்திய அழிவு' (2 தெச $1^{10}$) 'நித்திய அக்கினி' (மத் $18^{8}$) 'நித்திய ஆக்கினை' (மத் $25^{46}$) 'இரண்டாம் மரணம்' (வெளி $21^{8}$) என்பவைகள் சொல்லப்பட்டிருக்கிறது. எந்த வசனத்திலும் 'நித்திய மரணம்' என்று சொல்லப்படவே யில்லை.

IV. இதனுல் கடவுள் மரணத்தின் காரணங்களையும், மரணத்தின் மூலமாய் நாம் அடையவேண்டிய மாறுதல், நிலைமை முதலியவற்றையும் நமக்குத் தெரிவிக்கமாட்டார் என்றும், மனுஷன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான் (கலா $6^{7}$) என்றும் தெரிந்துகொண்டு, தாழ்மையோடு கடவுள் சித்தத்துக்கு இணங்கி, மரணத்தின் மூலமாய்த்தான் அவர் நமக்கு நன்மை செய்யப்போகிறார் என்று நாம் நம்பவேண்டியது.

**மரம். Tree.**

விசேஷித்த மரங்களைப்பற்றி அறியவேண்டுமானுல் **ஈச்சம், கருவாலி, பேரீச்சம்** முதலியவற்றைக் காண்க.

யுத்தகாலத்தில் எபிரெயர்கள் தங்கள் சத்துருவின் தேசத்திலிருக்கும் கனி கொடுக்கிற மரங்களை வெட்டக்கூடாது. உபா $20^{19}$.

உவமையாக ராஜாக்களையும் தனவான்களையும் வல்லமையுடையவர்களையும் குறிக்கும்படி 'மரம்' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. சங் $1^{3}$ $37^{35}$ ஏசா $2^{13}$ தானி $4^{10}$ சக $11^{1}$ மத் $3^{10}$ $7^{19}$.

'ஜீவவிருக்ஷம்'. ஆதி $2^{9}$.

'நன்மை தீமை அறியத்தக்க விருக்ஷம்.' ஆதி $2^{9.17}$ வெளி $2^{7}$ $22^{2}$.

'மரம்' என்பது சிலுவை மரத்தைக் குறிக்கும். அப் $5^{30}$ $10^{39}$ $13^{29}$.

**மரித்தவர்களுக்காக ஞானஸ்நானம். Baptism for the Dead.** 1 கொரி $15^{29}$. ஞானஸ்நானம் காண்க.

**மரித்தோர், மரிக்கிறவர், மரித்தவர். The Dead.**

i. தேகத்தை விட்டுப் பிரிந்த ஆத்துமாக்கள். சங் $88^{5}$ $115^{17}$ நீதி $2^{18}$ $9^{18}$ பிர $4^{2}$ $9^{5}$ மத் $10^{8}$ $11^{5}$ $17^{9}$ $27^{64}$ மாற் $6^{14}$ $9^{10}$ $12^{26}$ லூக் $9^{60}$ $16^{30}$ யோவா $12^{1}$ அப் $4^{2}$ $13^{30}$ $17^{32}$ $23^{6}$ ரோம $8^{11}$ 1 கொரி $15^{12}$ 1 பேது $4^{6}$ வெளி $14^{13}$ $20^{12}$.

ii. உவமையாய்: மத் $8^{22}$ $22^{32}$ ரோம $6^{13}$ எபே $2^{1}$ $5^{14}$ கொலோ $2^{13}$.

**மரியாள். Mary.** எபிரெயர்கள் 'மீரியாம்' என்றும் கிரேக்கர்கள் 'மரியாள்' என்றும் சொல்லுவார்கள். **மீரியாம்** காண்க.

புதியஏற்பாட்டில் மரியாள் என்று அழைக்கப்பட்டவர்கள் ஆறு பெயர் உண்டு.

1. **சின்ன யாக்கோபுக்கும் யோசேக்கும் தாயாகிய மரியாள்.** இவள் கலிலேயா நாட்டிலிருந்து இயேசுவுக்குப் பணிவிடை செய்யும்படி வந்த ஸ்திரீகளில் ஒருத்தி. இவள் 'மற்ற மரியாள்' என்றும், 'சின்ன யாக்கோபுக்கும் யோசேக்கும் தாயாகிய மரியாள்' என்றும், 'யோசேயின் தாயாகிய மரியாள்' என்றும், 'யாக்கோபின் தாயாகிய மரியாள்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறாள். மத் $27^{61}$ $28^{1}$ மாற் $15^{40.47}$ $16^{1}$ லூக் $24^{10}$. இவள்தான் 'கிலெயோப்பா மரியாள்' என்று தோன்றுகிறது. யோவா $19^{25}$. **கிலோபா** காண்க.

இயேசுவை சிலுவையில் அறையும்போது அவ்விடத்தில் நின்றவர்களில் இவள் ஒருத்தி. மத் $27^{56}$. இவள் இயேசுவின் தாயாகிய மரியாளுக்குச் சகோதரியாய் இருந்தாள் என்று சிலர் நினைக்கிறார்கள். யோவா $19^{25}$.

2. **லாசருவின் சகோதரியாகிய மரியாள்.** இவள் இயேசு அருளின போதகத்தைக் கேட்கும்படி விருப்பங்கொண்டவள். லூக் $10^{39}$. இறந்துபோன லாசருவை உயிரோடு எழுப்பும்படி இயேசு வந்தபோது இவள் அவரைக் கண்டு நமஸ்காரம் செய்தாள். யோவா $11^{28}$. அவர் சிலுவையில் அறையப்படுவதற்கு முந்தின வாரத்தில் பெத்தானியாவில் விருந்திலிருக்கும்போது இவள் அவர் பாதத்தில் நளத தைலத்தைப் பூசினவள். மத் $26^{7}$ மாற் $14^{3}$ யோவா $12^{3}$.

இவளும் பரிசேயனுடைய வீட்டில் இயேசுவின் பாதத்தின்மீது பரிமளதைலம் பூசின மரியாளும் ஒருத்திதான் என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனுல் சரித்திரங்களை நாம் சேர்த்

துப் பார்த்தால் லாசருவின் சகோதரி வேறு, பரி. லூக்கா சொன்ன ஸ்திரீ வேறு என்றே நாம் தீர்மானிக்கவேண்டும். ஏனென்றால்:

i. இடம் வெவ்வேறு. லாசருவின் சகோதரி எருசலேமுக்குச் சமீபத்திலிருந்த பெத்தானியாவில் தைலம் பூசினாள்; மற்றவள் கலிலேயாவில் தைலம் பூசினாள்.

ii. இயேசுவுக்கு விருந்துசெய்த இருவருக்கும் சீமோன் என்று பெயர் இருந்தாலும் ஒருவன் குஷ்டரோகி என்றும் மற்றவன் பரிசேயன் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. யூதர்களுக்குள் 'சீமோன்' என்ற பெயர் தரித்தவர்கள் அநேகர்.

iii. லாசருவின் சகோதரி பாவி என்று சொல்லப்படுகிறதில்லை. கலிலேயா ஸ்திரீயோ அவ்வூரில் பொது மகள்தான் என்று யாவரும் அறிந்தார்கள்.

iv. பெத்தானியாவில் இயேசு அருளின போதகம் வேறு, கலிலேயாவில் அவர் அருளின போதகம் வேறு.

v. கலிலேயாவில் தைலம் பூசினவளின் பெயரைப் பரி. லூக்கா சொல்லவேயில்லை.

vi. இவ்விதமாய் விருந்துக்கு வந்தவர்கள் பாதங்களில் தைலம் பூசுவது வழக்கமான காரியம் ஆனதினால் இரண்டு ஸ்திரீகளும் வெவ்வேறு காலங்களில் வேவ்வேறு இடங்களில் இப்படிச் செய்திருக்கக்கூடியது ஆச்சரியமில்லை.

3. **மகதலேனாள் மரியாள்.** மக்தலா என்னும் ஊர் கலிலேயாக் கடலுக்கு வடமேற்கு ஓரத்தில் இருக்கிறது. இயேசு இவளிடத்திலிருந்து ஏழு பிசாசுகளைத் துரத்தினதினால் இவள் பேய் பிசாசு பிடித்தவள் என்று நாம் சொல்லக்கூடும். மத் 15[39] லூக் 8[2] மாற் 16[9].

ஆதி கிறிஸ்தவர்களில் சிலர் கைக்கொண்ட பாரம்பரியத்தின்படி இவளும் பரி. லூக்கா சொன்ன பாவியாகிய ஸ்திரீயும் ஒருத்திதான். ஆனால் புதிய ஏற்பாட்டில் இதற்கு அத்தாக்ஷியில்லை. லூக் 7[37].

இயேசு கடைசியாக எருசலேமுக்குப் பயணம் பண்ணினபோது அவருக்குப் பணிவிடை செய்யவந்த ஸ்திரீகளுடனே இவளும் வந்து சிலுவையில் அவர் அறையப்படுவதைக் கண்டாள். மத் 27[55] யோவா 19[25]. சீஷர்கள் இயேசுவின் பிரேதத்தை அடக்கம் செய்யும்போது இவளும் வந்தாள். மாற் 15[47]. இயேசு உயிர்த்தெழுந்தநாள் அதிகாலையில் இவள் தனிமையாய்க் கல்லறைக்குப் போனாள். யோவா 20[1]. இவள் கல்லறையில் இயேசுவின் சரீரத்தைக் காணாமல், ஓடிப் போய், பேதுருவுக்கும் யோவானுக்கும் 'சத்துருக்கள் இயேசுவின் பிரேதத்தை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்' என்று அறிவித்தாள். அவர்கள் மூவரும் கல்லறைக்குத் திரும்பி வந்தபோது கல்லறைக்குக் காவலாயிருந்த இரண்டு தேவதூதர்களை இவள் பார்த்தாள். பிறகு இவள் கல்லறையிலிருந்து திரும்பி இயேசுவைப் பார்த்தாள். யோவா 20[11]. இவ்விதமாய்ச் சீஷர்களில் இவளே முதல் முதல் இயேசுவைக் கண்டாள். மாற் 16[9].

4. **இயேசுவின் தாயாகிய மரியாள்.**

i. இவளுடைய சரித்திரம். புதிய ஏற்பாட்டில் இயேசுவின் தாயாகிய மரியாளைக் குறித்துச் சில விஷயங்கள்மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. இவளுடைய சுகுணங்களும், கடவுளின் பெயரில் இவள் வைத்த பக்தியும், நம்பிக்கையும், இயேசுவைப் பெறுமுன் இவளிடத்தில் காணப்பட்ட அற்புதங்களும், மத்தேயு, லூக்கா இயற்றின சுவிசேஷங்களின் முதல் அதிகாரங்களில் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்குப் பிறகு புதிய ஏற்பாட்டில் இவளுடைய பெயர் சொல்லப்படும் சந்தர்ப்பங்களாவன:

*a.* எகிப்திலிருந்து இவள் தனது புருஷனோடு பாலகனாகிய இயேசுவைத் தூக்கிக் கொண்டு நாசரேத் ஊருக்குப் போனாள். மத் 2[20.23].

*b.* இவளும் இவளுடைய புருஷனும் பன்னிரண்டு வயதுக்கு வந்த இயேசுவை எருசலேம் பட்டணத்திலிருந்த தேவாலயத்துக்குக் கூட்டிப்போனார்கள். லூக் 2[48].

*c.* இயேசு தமது ஊழியத்தை ஆரம்பித்த பிறகு அவர் கானாஊரில் முதலாம் அற்புதத்தைச் செய்யும்போது இவள் அங்கே இருந்தாள். யோவா 2[1].

*d.* அவர் தம்முடைய ஊழியத்தைச் செய்யும்பொருட்டு ஆகாரத்தைக் கவனிக்காமல் போனபோது அவருடைய இனத்தார் அவர் மதிமயங்கி இருக்கிறார் என்று சொன்னார்கள். இப்படிச் சொல்லும்போது இவருடைய தாயார் அவ்விடத்தில் இருந்தாள். மாற் 3[21.31]. இதினிமித்தம் இயேசு ஆவிக்குரியவிதமாய்த் தமக்கிருக்கிற இனத்தாரைப் பற்றிப் பேசினார். மத் 12[49].

*e.* அவர் சிலுவையில் தொங்கினபோது இவளைக் காப்பாற்றிவரும்படி அவர் பரி. யோவானுக்குக் கட்டளையிட்டார். யோவா 19[26].

*f.* இயேசு பரத்துக்கு ஏறிப்போனபிறகு இவள் மற்றச் சீஷர்களுடனேகூட ஜெபக் கூட்டத்திலிருந்தாள். அப் 1[14].

இவைகளை நாம் பார்க்கையில் இயேசு பாலகனாய் இருந்தகாலத்தில் இவள் அவரைப் பற்றி அதிக சந்தோஷம் அடைந்திருந்தாலும் அவர் தமது ஊழியத்தைச் செய்யுங் காலத்தில் இவள் சொல்லிமுடியாத துயரம் அடைந்திருந்தாள் என்று அறிகிறோம்.

**ii. இவளைப்பற்றிய கிறிஸ்தவ சபைப் பாரம்பரியங்கள்.** தள்ளுபடி சுவிசேஷங்களில் இயேசுவின் தாயாகிய மரியாளைக் குறித்து அநேக கதைகள் உண்டு. இவள் பன்னிரண்டு வயதுக்கு வருமட்டும் தேவாலயத்துக்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டவளாய் இருந்தாள் என்றும்; இவளுக்குத் தேவதூதர்கள் பணிவிடை செய்துவந்தார்கள் என்றும்; பன்னிரண்டாம் வயதுக்கு வந்த பிறகு இவள் விருத்தாப்பியனை யோசேப்புக்கு நியமனம் செய்யப்பட்டாள் என்றும்; பெத்லெகேமில் இவள் இயேசுவைப் பெறும்போது அநேக அற்புதங்கள் காணப்பட்டது என்றும் பலவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கும் உண்மையுள்ள சுவிசேஷங்களில் சொல்லியிருக்கிறவைகளுக்கும் வித்தியாசம் இருக்கிறது. உண்மையுள்ள சுவிசேஷ சரித்திரத்தின்படி இவள் இரக்கசாலி, பக்திநிறைந்தவள், ,தாழ்மை பொருந்தியவள், பொறுமையுடையவள்தான், ஆனால் மற்ற ஸ்திரீகளைப்போல இவளும் ஒரு பெண்தான்.

தள்ளுபடி சுவிசேஷங்களில் சொன்னவைகளை எழுதினவர்களும், நம்பினவர்களும் இவள் வணங்கப்படத்தக்கவள் என்று நினைத்து கி—பி. 450—ம் ஆண்டுக்குள் இவளுக்குக் 'கடவுளைப் பெற்றவள்' (*Theotokos*) என்னும் பட்டப்பெயரைக் கொடுத்தார்கள் இதன்மூலமாய் அநேகர் இவளுக்குக் 'கடவுளின் தாய்' என்னும் பெயர் கூறி இவளை வணங்குவது அவசியம் என்று தீர்மானித்தார்கள். இதன்பிறகு இவள் பாவம் அற்றவள் என்றும், மரணம் அடைந்தபிறகு இவளுடைய சரீரம் அற்புதவிதமாக பரத்துக்குப் போனது என்றும் நம்பிவந்தார்கள். ரோமசபையார் இவளைச் சிறப்பிக்கும்படி நடத்தின ஆராதனைகளை நாம் விசாரித்தால், அச்சபையில் அநேகர் இயேசுவை எப்படி மதிக்கிறார்களோ அப்படியே அவருடைய தாயாகிய மரியாளையும் மதிக்கிறார்கள் என்பது விளங்கும்.

**iii. கன்னிகைப்பேறு.**

பரி. மத்தேயு, பரி. லூக்கா எழுதின சுவிசேஷங்களை நாம் ஆராய்ந்து பார்த்தால், இயேசுவின் தாயாகிய மரியாள் புருஷனை அறியாத கன்னிகையாயிருந்து பரிசுத்த ஆவியானவருடைய அருளினாலே அற்புதமான விதமாய் இயேசுவைப் பெற்றாள் என்று அவர்கள் உறுதியாய் நம்பி அதைத் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்கள் என்று அறிவோம். ஆதி சபையார் துவக்கமுதல் இந்தக் கொள்கையைக் கைக்கொண்டுவந்தார்கள். சிலர் இந்த அதிசயமான சம்பவத்தைப்பற்றி ஆக்ஷேபனை சொல்லுகிறதினால் இந்த விஷயத்தை ஸ்தாபிக்கும் காரணங்களைச் சுருக்கமாய்ச் சொல்வது தகுதி.

*a.* இந்த அற்புதத்துக்கு அத்தாக்ஷி குறைவாயிருக்கிறது என்றால், இவ்விதமான காரியங்களுக்கு ஏராளமான அத்தாக்ஷி இருக்கக்கூடியது எப்படி? மரியாளுக்கும் யோசேப்புக்கும்மாத்திரம் சங்கதி முழுமையும் தெரிந்திருக்கும். மற்றவர்களுக்குத் தெரிந்திருக்கமாட்டாது. பரி. மத்தேயு யோசேப்பு அதைப்பற்றித் தெரிவித்த வரலாறையும், பரி. லூக்கா மரியாள் தெரிவித்த விவரத்தையும் தங்கள் சுவிசேஷங்களில் சொல்லுகிறார்கள். இவைகளைத்தவிர நாம் வேறொன்றையும் அறியமாட்டோம்.

*b.* பரி. லூக்கா கி—பி. 80—ம் ஆண்டுக்குள் தனது சுவிசேஷத்தை எழுதினான். சிலர் நினைக்கிறபடி கி—பி. 60—ம் ஆண்டுக்குள் இதை எழுதியிருந்திருக்கலாம். எப்படியாவது இவன் அந்தச் சுவிசேஷத்தில் மற்றக் காரியங்களையும் திட்டநுட்பமாய் விசாரித்து உண்மையானவைகளை எழுதியிருக்கிறான் என்று வேதசாஸ்திரிகள் ஒப்புக்கொண்டிருக்க இந்தக் காரியத்தை விசாரியாமல் எழுதியிருப்பானா?

*c.* யூதர்கள், கடவுள் மானிட தேகத்தைத் தரித்து அவதாரமாய் வருவார் என்னும் கொள்கையை எந்தச்சமயத்திலும் அங்கீகரிக்கவேயில்லை. மேலும் அவர்கள் கன்னிகை நிலைமையைச் சிறப்பிக்காமல், குடும்ப ஸ்திரீயின் நிலைமையைமாத்திரம் புகழ்ந்தார்கள். ஆதலால் யூதர்கள் கன்னிகை கடவுளைப் பெற்றாள் என்பதை எளிதில் நம்பக்கூடியவர்கள் அல்ல. இந்தச் சங்கதி உண்மையானதாயிராவிட்டால் அவர்கள் அதை ஏற்றுக்கொண்டிருக்கமாட்டார்கள்.

*d.* அந்நிய ஜாதிகளுக்குள் சில மதஸ்தர்கள் தெய்வங்களுக்குத் தாய்மார் கன்னிகைஸ்திரீகள் என்று சொன்னார்கள். ஆதி கிறிஸ்த

வர்கள் இதைக்குறித்துக் கேள்விப்பட்டு இயேசுவின் தாயாரும் கன்னிகைப்பெண் என்று சொல்லவந்ததாக சிலர் நினைக்கிறார்கள். ஆனால் இதற்குச் சுத்தமாய் அத்தாக்ஷியில்லை.

*e.* ஆதி சபையார் அங்கீகரித்த இந்தக் கொள்கை உண்மையானதாய் இல்லாவிட்டால், இதற்கு காரணம் எப்படி?

*f.* கடவுள் இவ்வுலகத்திற்கு அவதாரமாய் இறங்கி வரும்போது, அவர் அற்புதவண்ணமாய் மானிடதேகத்தை ஏற்றுக்கொண்டது ஆச்சரியப்படத்தக்க காரியமல்ல.

ஆதலால் இதெல்லாம் பார்த்துப் பரி. லூக்கா சுவிசேஷத்தில் சொன்னவிதமாய்க் கன்னிகையான மரியாள் இயேசுவுக்குத் தாயாராய் இருப்பதை நாம் அங்கீகரிக்க வேண்டியது.

**iv. மரியாளின் நித்திய கன்னி நிலை.**

பரி. மத்தேயு எழுதின சுவிசேஷத்தில் மரியாள் இயேசுவைப் பெறுமட்டும் புருஷனை அறியவில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. மத் $1^{25}$. இதற்குப் பிறகு மங்களஸ்திரீபோல இவள் புருஷனோடு வாழ்ந்து இயேசுவின் சகோதரர் சகோதரிகளைப் பெற்றாள் என்று தோன்றுகிறது. மத் $13^{55}$. ஆனால் சிலர் இவர்களை யோசேப்பின் முதல்தாரத்தின் பிள்ளைகள் என்றும்; 'சகோதரன்' 'சகோதரி' என்னும் பதங்கள் ஒரேவயிற்றில் பிறந்த பிள்ளைகளையல்ல யோசேப்பின் சகோதரனுக்கு அல்லது மரியாளின் சகோதரிக்குப் பிறந்த பிள்ளைகளைக் குறிக்கலாம் என்றும் சொல்லி, மரியாள் மரணமட்டும் கன்னிகையாகவே இருந்தாள் என்று போதிக்கிறார்கள். ரோம சபையாரும் கிரேக்க சபையாரும் மரியாள் இவ்விதமாய் எப்போதும் கன்னிகையாக இருந்தாள் என்னும்கொள்கையை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். ஆனால் இதைப்பற்றிய சந்தேகத்தைத் தீர்க்கக் கூடிய போதுமான அத்தாக்ஷியில்லை. எப்படியாகிலும் இதைக்குறித்து நாம் சற்று யோசிக்குங்கால் இவ்விஷயம் அவ்வளவு கவனிக்கப்படத்தக்க விசேஷமல்ல என்றும் சொல்லலாம்.

5. **மாற்கு என்று பெயர்கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள்.** அப் $12^{12}$. இவளைப்பற்றி வேறொன்றும் தெரியாது.

6. **ரோமாபுரியிலுள்ள சபைக்கு வந்த மரியாள்.** ரோம $16^{6}$.

**மருக்கொழுந்து. Rue.** யூதர்கள் உபயோகித்த ஒருவித மருந்துச்செடி. லூக் $11^{42}$.

**மருதமரம். 'Cypress'.** மருதமரம் என்று மொழிபெயர்க்கப்பட்ட எபிரெய பதம் கெட்டியான மரம் ஒன்றைக் குறிக்கும். ஒருவேளை இது ஒருமாதிரிக் கருவாலிமரமா யிருக்கலாம். ஏசா $44^{14}$.

**மருதோன்றிச்செடி. Camphire.** எபிரெயர்கள் உபயோகித்த மருதோன்றி நமக்குத் தெரிந்த மருதோன்றிபோல் இருக்கும். பெண்கள் அதின் பூக்களின் வாசனைகளை விரும்பி அவைகளைத் தங்கள் கூந்தலில் வைத்துக்கொள்வார்கள். கைநகங்களையும், பாதங்களையும், தலைமயிரையும் சிவக்கச் செய்யும்படி அதன் பாலை உபயோகிப்பார்கள். உன். பா $1^{14}$ $4^{13}$.

**மருத்துவச்சி, மருத்துவம். Midwife.**

ஆதி $35^{17}$ $38^{28}$ யாத் $1^{16-21}$. **பிரசவம்** காண்க.

**மருந்து. Medicine.**

நீதி $17^{22}$ எரே $30^{13}$ $46^{11}$ எசே $47^{12}$. **அவுழ்தம், ஔஷதம்** காண்க.

**மருமகள். Daughter-in-law.**

ஆதி $11^{31}$ $38^{11}$ லேவி $18^{15}$ $20^{12}$ ரூத் $1^{6.22}$ $2^{20}$ $4^{15}$ 1 சாமு $4^{19}$ எசே $22^{11}$ மீகா $7^{6}$ மத் $10^{35}$ $12^{53}$.

**மருளுகிறது. R. V. 'Affrighted.'**

பிலி $1^{28}$.

**மரேசா, மரேஷா. Maresha.**

1. யூதா கோத்திரத்தான். 1 நாளா $4^{21}$.

2. யூதாநாட்டில் மேற்குத்திசையிலுள்ள ஒரு ஊர். இதில் ரெகொபெயாம் ராஜா கோட்டை கட்டினான். யோசு $15^{44}$ 2 நளா $11^{8}$ $14^{9}$ $20^{37}$ மீகா $1^{15}$. மரேஷா கட்டப்பட்ட மலையில் பூர்வீகத்தில் வெட்டின பல கெபிகள் இருப்பதினால் இதில் மலைநாட்டு ஜனங்கள் பூர்வீககாலத்தில் வசித்தார்கள் என்பது தெரியவரும்.

**மரை. Hart.**

உன். பா $2^{17}$. கலைமான், **மான்** காண்க.

**மர்சேனா. Marsena.**

அகாஸ்வேரு என்னும் ராஜாவின் சமுகத்தில் பிரவேசிக்கச் சிலாக்கியம் பெற்றுக்கொண்ட ஏழு பிரபுக்களில் ஒருவன். எஸ்தர் $1^{13}$.

**மலடி, மலடு. Barren, Barrenness.**

ஆதி $11^{30}$ $25^{21}$ யாத் $23^{26}$ உபா $7^{14}$ நியா $13^{2}$ 1 சாமு $2^{5}$ யோபு $24^{21}$ சங் $113^{9}$ நீதி $30^{16}$ உன். பா $4^{2}$ லூக் $1^{7.36}$ $23^{29}$ கலா $4^{27}$.

**மலை. Mountain.**

1. பலெஸ்தீனு தேசம் பெரும்பாலும் மலை நாடு. ஆனால் அதில் உயரமான மலைகள் வெகு சொற்பம். சில சமயங்களில் சீனாய், ஓரேப், கர்மேல் முதலிய மலைகளின் பெயர்கள் அவைகளின் சிகரத்தைத்தவிர அம்மலைகள் உள்ள நாடுகளையும் குறிக்கும்படி வழங்கப்பட்டது. யூதேயாநாடு விசேஷித்த மலைநாடாயிருந்தது. எபிரெயர்கள் இந்த மலைச் சாரல்களிலுள்ள நிலங்களைப் படிப்படியாக வெட்டி அவைகளில் திராட்சை, ஒலிவமரம், அத்திமரம் முதலியவைகளை நாட்டுவார்கள். சீனாய் முதலியவை காண்க.

2. பூர்வீகத்தில் அத்தேசத்திலிருந்த ஜாதியார் மலைகளிலிருந்த குகைகளிலும், அவர்கள் தங்களுக்காக வெட்டின குகைகளிலும் வாசம்பண்ணினார்கள். ஆதி $36^{8}$. மலைகள் சில தேசங்களுக்கு எல்லைகளாயிருந்தது. எண் $34^{7}$. பெரிய ஜனக்கூட்டத்துக்குப் பிரசங்கம் பண்ணும்பொருட்டு யோசுவா, யோதாம், அபியா, இயேசு முதலியவர்கள் குன்றுகளைப் பிரசங்கப்பீடங்களாகத் தெரிந்துகொண்டார்கள். யோசு $8^{30}$ நியா $9^{7}$ 2 நாளா $13^{4}$ மத் $5^{1}$.

3. எபிரெயர்கள் மலைச்சாரலில் கல்லறைகளை வெட்டி அவைகளில் பிரேதங்களை அடக்கம்பண்ணினார்கள். சில சமயங்களில் மலைகளிலுள்ள குகைகளை இதற்காகவே உபயோகிப்பார்கள். 2 இரா $23^{16}$. பலர் மலைநாடுகளில் ஒளிந்துகொண்டார்கள். ஆதி $14^{10}$ மத் $24^{16}$. போர்வீரர்கள் மலைகளில் பாளையம் இறங்கினார்கள். 1 சாமு $17^{3}$. காவலுக்காக மலைகளில் கோட்டை கோபுரங்களைக் கட்டினார்கள். எசே $40^{2}$ மத் $4^{8}$ சங் $125^{2}$. மலைகளிலிருந்து மரம் முதலியவைகளை வெட்டிக்கொண்டு வருவார்கள். 2 நாளா $2^{18}$ நெகே $8^{15}$ ஆகாய் $1^{8}$. மலைநாடுகளில் ஆடுமாடுகள் முதலியவைகளுக்கு நல்ல மேய்ச்சல் இருந்தது. சங் $50^{10}$.

4. தீர்க்கதரிசிகளும் சங்கீதக்காரர்களும் மலைகளையும் பர்வதங்களையும்பற்றிச் சொன்ன உவமைகளாவன:

நிலைநிற்கிற ராஜ்யம். சங் $30^{7}$ ஏசா $2^{2}$ $11^{9}$ தானி $2^{35}$.

பெரிய இடையூறு. சக $4^{7}$.

மகா அற்புதமான காரியம். சங் $46^{2}$.

பர்வதங்கள் மெழுகுபோல உருகுகிறது கடவுளின் வல்லமையைக் குறிக்கும். சங் $97^{5}$.

தேவநீதி மலைகளைப்போல நித்தியமாய் மாறாமலிருக்கும். சங் $36^{6}$.

தேவ இரக்கமும், உடன்படிக்கையும் மலைகளைப்போல நிலையுள்ளதாயிருக்கும். ஏசா $54^{10}$.

கடவுள் அளிக்கும் பராமரிப்பு. சங் $121^{1}$ $125^{2}$.

கடவுள் உண்டாக்கின மீட்பு மனுஷர்கள் செய்யக்கூடிய எல்லாவற்றிற்கும் மேலானது என்பதைக் குறிக்கும்படி மலைகளில் ரட்சிப்பைத் தேடுவது வீண் என்று எரேமியா சொல்லுகிறான். எரே $3^{23}$.

எபிரெயர்கள் தங்கள் பாஷையில் மலையின் தலை, காது, தோள், இடுப்பு, தொடை, விலா என்பவற்றைச் சொல்லி அவைகளினால் மலைகளின் சிகரம், சாரல் முதலியவைகளைக் காட்டுவார்கள்.

5. பூர்வீகத்திலிருந்த கானான் தேசத்தார் இவ்விதமான பர்வதங்களிலும், குன்றுகளிலும் தங்கள் தேவதைகள் வசித்தார்கள் என்று நம்பி, அவ்விடங்களில் அவைகளுக்குப் பூஜை செய்வது மெத்த சிரேஷ்டமானது என்று எண்ணி, அவ்விடங்களைப் பரிசுத்த ஸ்தலங்களாக ஏற்படுத்திக்கொண்டார்கள். எபிரெயர்களும் கானான் தேசத்தில் பிரவேசித்தபிறகு மலைக் குன்றுகளில் யேகோவாவை வணங்கினதுமன்றி பலதடவைகளில் பூர்வீகத்தார் கும்பிட்ட தேவதைகளையும் தொழுதுவந்தார்கள். எபிரெயர்கள் சிறையிருப்புக்குப் போகுமட்டும் இவ்வித ஆராதனை செய்துவந்தார்கள். மேடை காண்க.

6. சில மலைகள் தேவச்செயலுக்கு அத்தாக்ஷி.

அராரத்மலை, மனுஷர்கள் செய்த தீமைக்குக் கடவுள் செய்த நீதி நியாயத்தைக் குறிக்கும்.

சீனாய்மலை, நியாயப்பிரமாணத்தின் கண்டிப்பைக் காட்டும்.

கர்மேல்மலை, ஜனங்கள் கடவுளைப்பற்றிச் செய்யவேண்டிய தீர்மானத்தைக் குறிக்கும்.

சீயோன், மோரியா, நேபோ முதலியவைகள் கடவுளின் வல்லமைக்கும், உண்மைக்கும் உதாரணமாகச் சொல்லப்படும்.

**மலைக்குகைகள். Caves.** கானான் தேசத்திலுள்ள மலைகளில் குகைகள் ஏராளம். இவைகளில் சில இயற்கையில் உண்டானது. அநேகம் பூர்வீகத்தார் வெட்டினவைகள். இந்தக் குகைகளில் ஒன்று 400 அடி நீளமும், 80 அடி உயரமும் ஆக வெட்டப்பட்டிருக்கிறது. ஆனால் இவ்விதமான குகையை வெட்டினதற்குக் காரணங்களும்,

வெட்டின காலமும், விதமும் நமக்குத் தெரியாது. தூகை காண்க.

**மலோத்தி.** Mallothi. ஒரு லேவியன். ஏமான் தீர்க்கதரிசியின் மகன். 1 நாளா $25^{4,26}$.

**மல்காம்.** Malcam.

1. பென்யமீன் கோத்திரத்தலைவர்களில் ஒருவன். 1 நாளா $8^{9}$.

2. ஒரு தேவதை. செப் $1^{5}$.

அல்லது இந்த பதத்தைப் பொதுப்பெயராக எடுத்துக்கொண்டால் இது 'அவர்களுடைய ராஜா' என்று அர்த்தங்கொள்ளும்.

**மல்கிசூவா.** Malchi-Shua. [என் ராஜா செல்வவந்தன்.] சவுல் ராஜாவின் மூன்றும் மகன். 1 சாமு $14^{49}$ $31^{2}$.

**மல்கிஜா** Malchijah. மல்கியா காண்க.

**மல்கியா, மல்கிஜா.** Malchiah, Malchijah. [யேகோவாவின் தூதன்.]

1. ஒரு ஆசாரியன். எரே $21^{1}$ $38^{1}$ 1 நாளா $9^{12}$ நெகே $11^{12}$.

2. யூதா ராஜவம்சத்தைச் சேர்ந்தவன். எரேமியா தீர்க்கதரிசியை இறக்கிவிட்ட குழி இவனுடையது. எரே $38^{6}$.

3. ஒரு பாடகன். 1 நாளா $6^{40}$.

4. ஒரு ஆசாரியன். 1 நாளா $24^{9}$.

5, 6. அந்நியஜாதிப் பெண்களை விவாகம் பண்ணினவர்கள். எஸ்று $10^{25}$.

7. அந்நியஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணி, மதிலைப் பழுது பார்த்துக் கட்டினவர்களில் ஒருவன். எஸ்று $10^{31}$ நெகே $3^{11}$.

8. குப்பைமேட்டு வாசலைப் பழுதுபார்த்தவன். நெகே $3^{14}$.

9. மதிலைப் பழுதுபார்த்த ஒரு தட்டான். நெகே $3^{31}$.

10. நியாயப்பிரமாணத்தை வாசிக்கும்போது எஸ்றுவின் பக்கத்தில் நின்றவர்களில் ஒருவன். நெகே $8^{4}$.

11. உடன்படிக்கைக்கு முத்திரை போட்டவன். நெகே $10^{3}$.

12. மதிலைப் பிரதிஷ்டை செய்த ஆசாரியர்களில் ஒருவன். நெகே $12^{42}$.

**மல்கியா தீர்க்கதரிசி.** Malachi.

1. **ஆக்கியோன்:** 'மல்கியா' என்பதற்கு 'என் தூதன்' அல்லது 'யேகோவாவின் தூதன்' என்று அர்த்தம். இது ஒரு தீர்க்கதரிசியின் சொந்தப் பெயராகவாவது அல்லது தன் ஊழியத்தைக் குறிக்கும்படி அவன் தனக்கிட்டுக்கொண்ட நாமதேயமாகவாவது இருக்கலாம். எப்படியாவது இந்தத் தீர்க்கதரிசியின் ஜீவிய சரித்திரத்தைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது.

2. **இதின் காலம்:** இதை இயற்றினவனைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாததினால் இந்த ஆகமம் இயற்றப்பட்ட காலத்தைக் குறித்து வேதசாஸ்திரிகளுக்குச் சந்தேகம் இருக்கக்கூடியது ஆச்சரியமல்ல. இந்த நூலில் நாம் ஆராய்ந்து பார்த்தால் பார்சிக ராஜாக்கள் பலெஸ்தீனு தேசத்தில் அரசாட்சி செய்த காலத்திலும், எருசலேமில் புதிதாய்க் கட்டப்பட்ட தேவாலயத்தில் மறுபடியும் ஆராதனை செய்துவந்தகாலத்திலும், ஆராதனையில் சில தப்பறைகள் ஏற்பட்டகாலத்திலும் இது இயற்றப்பட்டதாக தோன்றுகிறது. இதன் ஆக்கியோன் தேவாலயத்தில் ஆராதனை நடத்துகிறவர்கள் செய்யும் குற்றங்களைக் கண்டித்து, ஜனங்கள் பாபிலோனியாவில் சிறையிருப்பிலிருந்தபோது வேதசாஸ்திரிகள் அதிக திட்டநுட்பமாய் விசாரித்து நூலாகச் சேர்த்த நியாயப்பிரமாணத்தின்படி கட்டாயமாய் நடக்கவேண்டும் என்றும், ஜனங்களும் ஆசாரியர்களும் அந்நியஜாதிப் பெண்களை விவாகம் செய்து, துன்மார்க்கமாயும் அவபக்தியாயும் நடப்பது மகா பாவம் என்றும் சொன்னதினால், இவன் நெகேமியா இரண்டாம்தடவை எருசலேம் பட்டணத்துக்கு வந்தகாலத்தில் தீர்க்கதரிசனத்தைச் சொன்னான் என்று நினைக்கிறதற்கு இடமுண்டு. இவ்விஷயத்தைப்பற்றி நாம் தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. சில வேதசாஸ்திரிகள் இவன் ஏறக்குறைய கி—மு. 460-ம் வருஷத்தில் இந்தத் தீர்க்கதரிசனம் உரைத்தான் என்று சொன்னாலும், இவன் ஏறக்குறைய கி—மு. 430—ம் வருஷத்தில் ஊழியத்தைச் செய்தான் என்று நாம் நினைக்க வேண்டியது.

3. **பொருள் அட்டவணை:**

I. $1^{1}$. முகவுரை.

II. $1^{2-5}$. யாக்கோபின் காலம் முதல் யேகோவா இஸ்ரவேலுக்குக் காட்டின நேசம்.

III. $1^{6}$—$2^{9}$. இஸ்ரவேலர் யேகோவாவை அலக்ஷியம் செய்ததும், ஆசாரியர்கள் பிரமாணத்தின்படி நடவாததும்.

IV. $2^{10-16}$. தள்ளுதல் சீட்டுக் கொடுத்ததையும் அந்நியஜாதிப் பெண்களை விவாகம் பண்ணினதையும் கண்டித்தல்.

V. $2^{17}$—$3^{6}$. யேகோவாவினுடைய நாள். ஆசாரியர்கள் யேகோவாவுக்குச் செய்யவேண்டிய நல்ல ஆராதனை. யேகோவா வந்து

பக்தியில்லாதவர்கள் முதலிய பாவிகளை நியாயந்தீர்ப்பது.

VI. 3$^{7-12}$. தசமபாகம் செலுத்தாதவர்களினிமித்தம் வறட்சியும், வெட்டுக்கிளியுமாகிய தண்டனை.

VII. 3$^{13}$–4$^{6}$. யேகோவாவின் நாளில் பாவிகளுக்குத் தண்டனையும், நீதிமான்களுக்கு மேன்மையும் கிடைப்பது. எல்லாரும் மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி நடக்கவேண்டியது. எலியாத்தீர்க்கதரிசி திரும்ப வந்து பாவமன்னிப்பைப் பெறும்படி ஜனங்களை நடத்தப்போவது.

4. இதின் போதனை:

யேகோவா இஸ்ரவேல் ஜனத்தை நேசித்துத் தமது சொந்த ஜனமாக இவர்களைத் தெரிந்துகொண்டதினிமித்தம் இவர்கள் அவர் பெயரில் நம்பிக்கைவைத்து தேவாலயத்தில் எப்போதும் அவருக்குமாத்திரம் ஆராதனை செய்யவேண்டும். இவர்கள் தங்கள் சொந்த ஜாதியான மனைவிகளுக்குத் தள்ளுதல்சீட்டுக் கொடுத்து, அந்நியஜாதிப் பெண்களை விவாகம்பண்ணி, யேகோவாவின் நியாயப்பிரமாணத்தை மீறிவந்திருக்கிறார்கள். யேகோவா நியாயந்தீர்க்கிறவரானதினால் 'யேகோவாவின் நாள்' என்னும் நியாயத்தீர்ப்புநாளில் அவர் நீதிமான்களை ஆசீர்வதித்து அக்கிரமக்காரரைத் தண்டிப்பார். மல்கியா தனக்கு முந்திவந்த தீர்க்கதரிசிகள் நியாயப்பிரமாண ஆசாரத்தைச் சிறப்பித்ததைப்பார்க்கிலும், அதின்படி நடப்பதை விசேஷமாய்ப் பாராட்டுகிறான். தீர்க்கதரிசிகளில் இவன் மாத்திரம் எலியா திரும்ப வருவதைக்குறித்துப் பேசுகிறான்.

5. இந்த நூல் மீகா, ஏசாயா, எரேமியா தீர்க்கதரிசிகள் இயற்றின நூல்களைப்போல் அவ்வளவு சிரேஷ்டமானதல்ல என்று தோன்றினாலும், இதில் யேகோவாவினுடைய நீதி நியாயத்தைப்பற்றி எபிரெயர்கள்மாத்திரம் அல்ல, மனுஷர்கள் எல்லாருமே கவனிக்கவேண்டிய நல்ல போதனை இருப்பதினால் கிறிஸ்தவசபையார் எல்லாரும் இதில் பக்திவிர்த்திக்கு ஏதுவான பல புத்திமதிகள் உண்டென்று அறிந்து இதை ஏற்றுக்கொண்டார்கள்.

**மல்கீராம்**. Malchiram. [என் ராஜா உயர்த்தப்பட்டவர்.] யோயாக்கீமின் மகன். 1 நாளா 3$^{18}$.

**மல்குஸ்**. Malchus. பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரன். கெத்செமனே தோட்டத்தில் பேதுரு இவன் காதுமடலை வெட்டினான். பரி. யோவான்மாத்திரம் பிரதான ஆசாரியன் வீட்டாருக்கு அறிமுகமுள்ளவனாயிருந்ததினால் இவனுடைய பெயரைக் கேட்டு அறிந்து சொல்லுகிறான். பரி. லூக்கா வைத்தியனானதால் இயேசு இவனுடைய காதை சொஸ்தப்படுத்தின விஷயத்தைச் சொல்லுகிறான். மத் 26$^{51}$ மாற் 14$^{47}$ லூக் 22$^{51}$ யோவா 18$^{10}$.

**மல்லூக்**. Malluch.

1. எத்தானின் முன்னோர்களில் ஒருவன். 1 நாளா 6$^{44}$.

2, 3. அந்நியஜாதிப் பெண்களை விவாகம் செய்தவர்கள். எஸ்றா 10$^{29-32}$.

4. உடன்படிக்கைக்கு முத்திரை போட்ட ஒருவன். இவனும் மெலிகூவும் ஒரே ஆளாயிருக்கலாம். நெகே 10$^{4}$ 12$^{2,14}$.

5. உடன்படிக்கைக்கு முத்திரை போட்ட ஒருவன். நெகே 10$^{27}$.

**மழை**. Rain. இந்தியாவில் வருஷத்தின் சில மாதங்களில்மாத்திரம் மழை பெய்வது போல் பலெஸ்தீனாதேசத்திலும் மழை பெய்யும். 'முன்மாரி' நவம்பர் மாதத்தில் பயிர் விதைக்குங் காலத்தில் பெய்யும் மழையையும், 'பின்மாரி' ஏப்பிரல் மாதத்தில் பயிர்கள் வளர்ந்து கதிர்விடும்போது பெய்யும் மழையையும் குறிக்கும். முன்மாரி பெய்த பின் பின்மாரி பெய்யுமட்டும் சமயா சமயங்களில் மழைபெய்யும். உபா 11$^{14}$ எஸ்றா 10$^{9}$ உன். பா 2$^{11}$ ஓசி 6$^{3}$ யோவே 2$^{23}$ ஆமோ 4$^{7}$.

மழை மேற்கில் மத்தியதரைக் கடலிலிருந்து வரும். 1 இரா 18$^{43}$ லூக் 12$^{54}$. பின்மாரி பெய்தபிறகு அக்டோபர் மாதம்மட்டும் மழை பெய்யாது. மேமாதத்தில் வாற்கோதுமை அறுப்பு. ஆகஸ்டு செப்டெம்பர் மாதங்களில் அத்தி, ஒலிவம், திராட்சைக் கனிகள் அறுப்பு. அறுப்புக்காலத்தில் மழை பெய்வது அபூர்வம். 1 சாமு 12$^{16}$ நீதி 26$^{1}$.

உஷ்ணகாலத்தில் மழை பெய்யாததினாலும், பயிர் பச்சைகளுக்கும் ஜனங்களுக்கும் தண்ணீரில்லாமல் கஷ்டம் உண்டானதினாலும், மழை பெய்யும்போது நல்ல செழிப்பு உண்டாயிருப்பதினாலும், ஆவிக்குரிய ஆசீர்வாதங்களைக் குறிக்கும்படி மழை உவமையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. உபா 32$^{2}$ யோபு 29$^{23}$ ஏசா 44$^{14}$ ஓசி 6$^{3}$ 10$^{12}$.

சில சமயங்களில் புசல்காற்றடித்து அடைமழை பெய்தபொழுது பயிர்களுக்கு நஷ்டமுண்டாவதினால் சிலவசனங்களில் அது

தேவனுடைய கோபாக்கினைக்கு உவமையாக சொல்லியிருக்கிறது. நீதி $28^{3}$ சங் $11^{6}$ எசே $38^{22}$.

**மளிகைக்காரர். Merchants.** வியாபாரிகள். நெகே $3^{31}$.

**மறக்கிறது. Forget.**

1. ஞாபகப்பிசகு. ஆதி $27^{45}$ யோபு $11^{16}$ பிர $8^{10}$ மத் $16^{15}$ எபி $12^{5}$.

2. எபிரெயர்கள் கடவுளை மறக்கிறது என்பதினால் அவருடைய சித்தத்தையும் கட்டளையையும் மீறுகிறதைக் குறித்தார்கள். உபா $4^{9}$ $6^{12}$ $8^{19}$ $26^{13}$ சங் $103^{2-22}$ ஏசா $17^{10}$ எரே $2^{32}$ $18^{15}$ ஓசி $4^{6}$.

3. பழைய ஏற்பாட்டில் 'கடவுள் மனுஷர்களை மறக்கிறார்' என்று சொல்லியிருப்பது கடவுள் மனுஷர்கள் தாங்கள் செய்த தீமையின் பலனை உண்ணும்படி இடம் கொடுக்கிறதையும் மனுஷர்களுக்குத் துன்பத்தை அநுபவிக்க இடங்கொடுப்பதையும் குறிக்கும். சங் $10^{11}$ $42^{9}$ ஏசா $49^{14}$ ஓசி $4^{6}$ லூக் $12^{6}$ எபி $6^{10}$.

கிறிஸ்தவர்கள் எப்பொழுதும் பிறர் செய்த குற்றங்களைப்பற்றி மனஸ்தாபப்படாமல் அவைகளை மறக்கவேண்டும். எபே $4^{32}$.

**மறதி. Forgetfulness.** உபா $25^{19}$ சங் $88^{12}$. 'மறதியின் பூமி' என்பது 'ஷேயோல்' என்னும் பாதாளத்தைக் குறிக்கும். **ஷேயோல்** காண்க.

**மறுஜென்ம காலம். Restoration.** 'மறுஜென்ம காலம்' 'புதிய வானம் புதிய பூமி' என்பவைகளினால் புதிய ஏற்பாட்டை எழுதினவர்களும் ஆதி கிறிஸ்தவர்களும் தற்காலத்தில் தீமையினால் அசுசியான இவ்வுலகத்திற்கு உண்டாகப் போகும் நன்மை நிறைந்த காலத்தைக் குறிக்கிறார்கள். மத் $19^{28}$ அப் $3^{21}$ எபே $1^{10}$ 2 பேது $3^{13}$ வெளி $21^{1-5}$. அக்காலத்தில் தீமை எல்லாம் ஒழிந்துபோம். பிலி $2^{10}$. இயேசுகிறிஸ்து அப்போது இவ்வுலகத்திற்கு வந்து யாவருக்கும் நியாயத்தீர்ப்பைச் செய்து தம்முடைய ராஜ்யத்திற்குள் யாவரையும், யாவையும் சேர்த்து ஆண்டுகொள்வார். 1 கொரி $15^{24}$ பிலி $2^{10}$. இவ்வுலகத்தில் பாவம், தீமை, பொல்லாப்பு, துன்மார்க்கம் என்பவை முழுவதும் அகன்றுபோய் அப்புறம் ஒருபொழுதும் இருக்கவே மாட்டா எனத் தோன்றுகிறது என்றும் கடவுள் இவ்விதமாய் நன்மையினாலே தீமையை வெல்ல விரும்புகிறார் என்றும் இந்த வசனங்களினால் நாம் தெளிவாய் அறிந்துகொள்ளக்கூடும் என்று வேதசாஸ்திரிகள் அநேகர் நினைக்கிறார்கள்.

**மறுஜென்மம், மறுபிறப்பு. Regeneration.** மறுஜென்மமாவது என்ன? பாவத்தினால் கடவுளிடத்திலிருந்து பிரிக்கப்பட்ட பாவசுபாவமுள்ள ஆத்துமத்தில் பரிசுத்த ஆவியானவர் செய்யும் மாறுதல். இதனால் பாவி இயேசுகிறிஸ்துவுக்குள் புதிதாய் உயிர்ப்பிக்கப்பட்டு, நன்மையானவற்றை விரும்பி, பரிசுத்த ஜீவியத்துக்குள் பிரவேசித்து, படிப்படியாய் இயேசுவின் சாயலை அணிந்து, கடைசியாய் அவரைப்போல் ஆகி, பூரண பரிசுத்தத்தை அடைவான். இந்த மாறுதலின் தன்மையைக் காட்டும்படி வேதாகமத்தில் பல உவமைகள் உண்டு. அவையாவன:

மறுபடியும் பிறப்பது; ஆவியினால் பிறப்பது. யோவா $3^{3-7}$.

புதுச்சிருஷ்டி ஆகிறது. 2 கொரி $5^{17}$.

மரணத்திலிருந்து உயிர்ப்பிக்கப்படுகிறது. எபே $2^{1}$.

மனம் புதிதாகி மறுரூபமடைகிறது. ரோம $12^{2}$.

உள்ளத்தில் கிறிஸ்து உருவாகுகிறது. கலா $4^{19}$.

தெய்வசுபாவத்தில் பங்கு பெறுகிறது. 2 பேது $1^{4}$.

பரிசுத்த ஆவியானவர் இந்த மாறுதலை நடப்பிக்கிறார். யோவா $1^{12}$ $3^{5}$ எபே $2^{8}$.

சுவிசேஷ சத்தியத்தினால் மறுஜென்மம் அடைவோம். 1 கொரி $4^{15}$ யாக் $1^{18}$ 1 பேது $1^{23}$.

மறுஜென்மம் அடைந்தவன் தேவசாயலைத் தரித்து எப்போதும் கடவுளையும் பிறரையும் நேசித்துக்கொண்டிருப்பான் என்று வேதாகமத்தில் போதிக்கப்படுகிறது.

நீதிமானாக்கப்படுதல் என்பதும் மறுஜென்மம் அடைதல் என்பதும் பாவிகளுக்குக் கடவுளின் அருளால் உண்டாகும் மாறுதலைக் குறிக்கும். வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயத்தின்படி நீதிமானாக்கப்படுதல் என்பது பரம நியாயாதிபதியாகிய கடவுள் நமது மத்தியஸ்தராகிய இயேசுகிறிஸ்துவின் பாடுகளினிமித்தம் நாம் நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாய்ச் செய்த பாவங்களை மன்னித்து, குற்றவாளிகளாகிய நம்மைக் குற்றம் செய்யாத நீதிமான்களைப்போல் பாவிப்பதைக் குறிக்கும்.

மறுஜென்மம் என்பது தீயசுபாவமுடைய நம்மில் பரிசுத்த ஆவியானவர் நற்சுபாவத்தை உண்டாக்குகிறதைக் குறிக்கும்.

மறுஜென்மம் அடைந்த கிறிஸ்தவன் இனி எப்பொழுதும் பாவம் செய்யாமலிருப்பான் என்று சொல்ல முடியாது. ஆனால் அவன் பரிசுத்த ஆவியின் அருளினால் தினந்தோறும் கழுவப்பட்டுப் படிப்படியாய்ப் பரிசுத்தத்தை அடைகிறான். 1 தீமோ $3^{5}$. பூரண பரிசுத்தத்தை இவ்வுலகத்தில் அடைவது அரிது என்றாலும், ஒருவன் இயேசுவின்பேரில் முழுபக்தி வைப்பானானால் அவன் பரிசுத்த ஆவியானவருடைய கிருபையினால் பூரண பரிசுத்தத்தை அடைவது கூடாதகாரியம் என்று யார் சொல்லத் துணிவான்? கடவுள் பாவசுபாவமுள்ள மனுஷனிடத்தில் புதுச் சுபாவத்தை உண்டுபண்ணினால், அவர் துவக்கின அற்புதமான வேலையை இவ்வுலகத்தில் முடிப்பது அவரால் கூடாத காரியம் அல்ல. எபே $3^{14-21}$ 1 தெச $5^{23}$ 1 யோவா $1^{7}$ $3^{9}$.

**மறுதலிக்கிறது. To deny.**

1. உள்ள சங்கதியை இல்லாததாகச் சொல்லுகிறது. ஆதி $18^{15}$. யோவா $1^{20}$.

2. (i) கடவுளை மறுதலிப்பது என்பது கடவுளுக்கு விரோதமாய் நடக்கிறது. யோபு $31^{28}$ நீதி $30^{9}$.

(ii) கிறிஸ்துவை மறுதலிப்பது:

a. பேதுருவின் குற்றம். மத் $26^{35-75}$ மாற் $14^{30-72}$ லூக் $22^{34-61}$ யோவா $13^{38}$ $18^{27}$.

b. இயேசுவை ஏற்றுக்கொள்ளாதவர்களின் குற்றம். மத் $10^{33}$ லூக் $12^{9}$ அப் $3^{13}$ 2 தீமோ $2^{12}$ 2 பேது $2^{1}$ 1 யோவா $2^{23}$ வெளி $3^{8}$.

**மறுமனையாட்டி. Concubine.** பூர்வீக காலத்தில் எபிரெயர்களுக்குள் விவாகம் செய்துகொண்ட மனைவிகளைத்தவிர தனவான்கள் வேறு ஸ்திரீகளையும் மனையாட்டிகளாக தங்கள் வீடுகளில் வைத்துக்கொள்வார்கள். இவர்கள் சொந்த மனைவிகளைவிட குறைந்த சலாக்கியமுள்ளவர்களாயிருந்தார்கள். மனைவிகளின் பிள்ளைகளுக்கிருந்த சுதந்தரம், மறுமனையாட்டிகளின் பிள்ளைகளுக்கு இல்லை. ஆனால் தகப்பன்மார் இந்தப் பிள்ளைகளுக்குச் சில சமயங்களில் புத்திரசுவிகாரத்தைக் கொடுப்பார்கள். மோசேயின் நியாயப்பிரமாணத்தில் மறுமனையாட்டிகளை வைக்கும் வழக்கத்துக்கு இடம் இருந்தாலும், இது ஒரு பொது ஏற்பாடாயிராதபடிக்கும், இதினால் மனைவிகளுக்கு யாதொரு அநியாயம் நடவாதபடிக்கும் பிரமாணம் இருந்தது. ஒரு புருஷன் ஒரே மனைவியை மாத்திரம் கொள்ளவேண்டும் என்று இயேசுகிறிஸ்து போதித்ததினால், கிறிஸ்தவசபையார் மறுமனையாட்டி வைப்பது விபசாரத்துக்கொத்த ஒரு பாவம் என்று தீர்மானித்து வந்தார்கள். ஆதி $16^{30}$ $21^{9-14}$ $25^{6}$ $30^{6}$ யாத் $21^{7-9}$ உபா $21^{10-14}$ மத் $19^{5}$ 1 கொரி $7^{2}$.

**மறுமை. 'World to come.'** மத் $12^{32}$ மாற் $10^{30}$ லூக் $18^{30}$ எபே $1^{20}$.

**மறுரூபமாகுதல். Transfiguration.** நமது ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து மறுரூபம் அடைந்த விஷயம் மகா அற்புதமானதால் நாம் அதின் வர்த்தமானங்களில் சிலவற்றை அறியாமல்போவது உசிதமன்று. இயேசுதாமே இதற்குத் 'தரிசனம்' என்று பெயர் சொல்லுகிறார். மத் $17^{9}$. இதைக்குறித்து மூன்று சுவிசேஷகர்களும், பரி. பேதுருவும் எழுதினதினால் இது இயேசுவின் ஜீவிய சரித்திரத்தில் முக்கியமானவைகளில் ஒன்று என்று நாம் சொல்லக்கூடும். மத் $17^{1-13}$ மாற் $9^{2-13}$ லூக் $9^{28-36}$ 2 பேது $1^{16-18}$. பரி. யோவானும் இதைக் குறித்துப் பேசுகிறான் என்று தோன்றுகிறது. யோவா $12^{23-36}$. இது காணப்பட்ட மலை எர்மோன் மலையாய் இருக்கலாம். இது நேரிட்ட காலம் இருட்டான காலம். லூக் $9^{32}$. அதேசமயத்தில் இயேசு ஜெபம் பண்ணிக்கொண்டிருந்தார்.

இதனால் வெளிப்படுகிற சத்தியத்தைப் பற்றி மூன்று காரியங்களை நாம் கவனிக்க வேண்டும்.

1. இதில் சொன்ன மேன்மையான பிரகாசம் இயேசுவின் சாயலிலிருந்து வெளிப்பட்டது. லூக் $9^{29}$.

2. பேதுரு இயேசுகிறிஸ்துவை மேசியா என்று அறிக்கையிடும்பொழுது, இயேசு பேதுருவுக்கும், மற்ற சீஷர்களுக்கும் தாம் அடையப்போகிற மரணத்தைப்பற்றித் தெரிவித்திருந்தார். ஏறக்குறைய ஒரு வாரத்திற்குப்பின் அவர் மறுரூபமானார். லூக் $9^{18}$. அந்த வாரத்துக்குள் இயேசுவும் அவருடைய சீஷர்களும் அவர் அடையும் மரணத்தைப் பற்றி அதிகமாய் யோசித்துக்கொண்டிருப்பார்கள். ஆதலால் அவர் மறுரூபமாகுதல் இயேசுவுக்கும் அவருடைய சீஷர்களுக்கும் உதவியாயிருந்தது. இதில் இயேசு மோசேயையும் எலியாவையும் தரிசித்து, அசரீரி வாக்கைக் கேட்டு, பரிசுத்தவான்கள் தமது ஊழியத்தை அதிப்பிரியத்தோடு பார்ப்பதையும்,

அவ்வூழியத்தைக் கடவுள் அங்கீகரிப்பதை யும் அறியவந்தார்.

சீஷர்கள் இதனால் சிலுவையில் வெட்க மும், கெடுதியும், அபஜெயமும் இல்லை என் றும், இயேசு நித்திய மகிமையில் பிரவேசிப் பார் என்றும், நோய், கஸ்தி, பாடு முதலிய வற்றினால் துன்பப்பட்டவர்கள் பரமபாக்கி யத்தை அடைவார்கள் என்றும் அறிந்தார்கள்.

இதனிமித்தம் கிறிஸ்தவர்கள் பழைய சுபா வத்திலிருந்து விடுவிக்கப்பட்டு, புதிய சுபா வத்தை அடையும்போது அவர்கள் மறுரூப மாக்கப்பட்டவர்களாயிருக்கிறார்கள் என்று பரி. பவுல் சொல்லுகிறான். ரோம $12^{2}$.

**மறைகிறது, மறைக்கிறது.** Hide. ஆதி $18^{18}$ சங் $32^{5}$ $55^{1}$ நீதி $27^{12}$ $28^{13}$ ஏசா $45^{15}$ ஆப $3^{4}$ யோவா $8^{59}$ $12^{36}$.

**மறைவிடம்.** 'Hiding place,' 'Secret place.' உபா $32^{38}$ சங் $32^{7}$ $119^{114}$ உன். பா $2^{14}$ ஏசா $28^{17}$ எரே $23^{34}$ லூக் $11^{33}$.

**மறைவு.** Hiding. சங் $91^{1}$ ஏசா $28^{15}$.

**மனசு, மனது.** Mind. வேதாகமத்தில் தத்துவசாஸ்திரம் இல்லை என்று நாம் சொல் லக்கூடும். ஆதலால் இதில் மனிதனுடைய தன்மையைப்பற்றி யாதொரு விவரமும் இல்லை என்று நாம் அறிவது ஆச்சரியமல்ல. ஆனால் எபிரெயர்கள் மனுஷன் இரு பிரிவு டையவனாயிருக்கிறான் என்று பகுத்தறிந்து, உடல் அல்லது மாமிசம் வேறு; ஆத்துமா அல்லது ஆவி வேறு என்று நம்பினதாக தோன்றுகிறது. உடல் அல்லது மாமிசம் என்னும்போது அவர்கள் நமது சரீரத்தையும், அதற்குள்ள இயற்கையான குணாதிசயங்களை யும் ஆசை இச்சைகளையும் குறித்தார்கள். ஆத்துமா அல்லது ஆவி என்னும்போது, மனுஷன் தன்னையும் கடவுளையும் அறிந்து கடவுளிடத்திலிருந்து தான் நன்மைகளைப் பெற்றுக்கொண்டிருக்கிறான் என்பதை அறி கிற மனுஷனுடைய உத்தம சுபாவத்தைக் குறித்தார்கள். ஆத்துமா என்பது மனுஷன் சுதந்தரவாளியாய் இருக்கிறான் என்றும், ஆவி என்பது மனுஷன் தேவனால் சிருஷ் டிக்கப்பட்டுக் காப்பாற்றப்படுகிறான் என் றும் குறிக்கிறது.

தமிழ் வேதாகமத்தில் 'மனது' என்பது, ஆத்துமா, உயிர், ஜீவன், விவேகமுள்ள பகுத்தறிவு, தீர்மானம்செய்கிற சிந்தை இவை களைக் குறிக்கும். உபா $28^{65}$ 1 நாளா $28^{9}$ எசே $23^{17}$ அப் $14^{2}$ ரோம $7^{23}$ $12^{2}$ 2 கொரி $4^{4}$ $11^{3}$ எபே $2^{3}$ எபி $8^{10}$ 1 பேது $1^{13}$ 2 பேது $3^{1}$.

'சிந்தை' என்பது 'மனசு' என்பதைக் குறிக்கும்படி பல வசனங்களில் சொல்லி யிருக்கிறது. ரோம $1^{28}$ $8^{7}$ $11^{34}$ 1 கொரி $2^{16}$ 1 பே $4^{1}$.

வழக்கமாய் எபிரெயர்கள் ஆவி, ஜீவன், இருதயம், உள்ளம், மனது என்பவைகளை வித்தியாசம் இல்லாமல் உபயோகித்தார்கள். ஆத்துமா, இருதயம், சித்தம், காண்க.

**மனச்சாட்சி.** Conscience. புதிய ஏற் பாட்டில் மனச்சாட்சியைப்பற்றி 30 தரம் சொல்லப்பட்டிருக்கிறது.

மனச்சாட்சி நன்மை தீமையைப் பகுத்தறி யும் குணம். ரோம $2^{15-16}$. மனச்சாட்சியானது நம்முடைய மனதிலிருந்துண்டாகும் ஆசை இச்சை முதலிய எண்ணங்களையும், நாம் செய்யும் வினைகளையும் நியாயந்தீர்த்து நலமா னதைச்சிறப்பித்து, தீமைகளைக் கண்டிக்கும். இவ்விதமாய் நாம் நம்மில்தானே நம்மைத் தீர்ப்பு செய்கிறவர்களாயிருப்போம். யோவா $8^{9}$ அப் $23^{1}$ $24^{16}$ ரோம $9^{2}$ 2 கொரி $1^{12}$ 1 தீமோ $1^{5,18}$ $3^{9}$ 2 தீமோ $1^{8}$ எபி $9^{9}$ $10^{2,22}$ $13^{18}$ 1 பேது $3^{16-21}$.

மனச்சாட்சி நாம் செய்யப்போகிற ஒரு வினையினால் நாம் அடையவேண்டிய லாப நஷ்டத்தை லக்ஷியம் செய்யாமல், அந்த வினையின் தன்மையையும், அதைச் செய்ய நம்மை ஏவும் ஆசை இச்சை நோக்கம் முத லியனவற்றையும் கவனித்துத் தீர்ப்புச்செய் யும். நாம் செய்யவேண்டிய கருமங்களினால் லௌகீகவிதமான தீராதகெடுதி நமக்கு உண் டானாலும், மனச்சாட்சி 'இதுதான் நியாயம், இதைத்தான் செய்யவேண்டும்' என்று உறுதி கூறி, நாம் எப்பொழுதும் நியாயத்தைமாத் திரமே செய்ய ஏவிக்கொண்டிருக்கும். அப் $4^{19}$ $20^{9}$ ரோம $13^{5}$ 1 கொரி $8^{7,10,12}$. இதனி மித்தம் இரத்தசாக்ஷிகள் இயேசுகிறிஸ்துவை அறிக்கையிடுவதினால் மரணம் அடைந்த போதிலும், இவர்கள் அப்படிச் செய்வது அவசியம் என்று இவர்களுடைய மனச்சா ட்சி திட்டம் செய்திருக்கும். மனச்சாட்சி நமக்குள் இருக்கும் உண்மையுள்ள அகப்பிர மாணம் என்று சொல்லியும், சிலர் மார்க்க விஷயத்தில் தப்பு எண்ணங்களை ஏற்றுக் கொண்டு மனச்சாட்சியின் கட்டாயத்தினால் தாங்கள் நீதியாய் நடப்பதாக எண்ணி, சம யா சமயங்களில் பெரிய பாவங்களைச் செய்து வந்திருக்கிறார்கள். திருஷ்டாந்தமாக: கிறி ஸ்தவர்களில் எத்தனையோபெயர் தங்களைப் போலத் திரியேகத்துவம் முதலிய கொள்கை களை ஏற்றுக்கொள்ளாத கிறிஸ்தவர்கள் பாவி கள் என்றும், தாங்கள் அந்தப் பாவிகளைத்

தண்டிக்கவேண்டும் என்றும் தீர்மானித்து, அவர்களை உபத்திரவப்படுத்தி வந்திருக்கிறார்கள். இதுபோல பரி. பவுல் தான் யூதமார்க்கத்திலிருந்தபோது கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தினான். அப் $26^{11}$ 1 கொரி $15^{9}$ பிலி $3^{6}$. சில கிறிஸ்தவர்கள் ஞானவிஷயத்தில் குறைந்த அறிவுள்ளவர்களாயிருந்து, தங்கள் மனச்சாட்சியில் குற்றமில்லாத சில விஷயங்களைக் குற்றமென்று எண்ணும்போது மற்ற கிறிஸ்தவர்கள் இவர்களுக்கு இடறலாயிராதபடிக்கு எச்சரிக்கையாய் நடந்துகொள்ளவேண்டும். அப் $26^{9}$ ரோம $15^{1}$ 1 கொரி $8^{7.10.12}$ $10^{25}$. மனச்சாட்சியின் தீர்மானத்துக்குக் கீழ்ப்படியாமை ஆத்தும நஷ்டத்துக்கும், சன்மார்க்கத்தைப்பற்றிய மயக்கத்துக்கும், இருதயகடினத்துக்கும் காரணம். மத் $6^{22}$ 1 தீமோ $4^{2}$ தீத் $1^{15}$ யாக் $4^{17}$.

மனச்சாட்சி விசேஷமாய் நாம் செய்யக்கூடிய தீர்மானங்களைமாத்திரம் கவனிக்குமேயொழிய நமக்குச் சாதாரணமாய் நேரிடும் விஷயங்களைப்பற்றித் தீர்ப்புச்செய்கிறதில்லை. அதாவது மனச்சாட்சி ஒருவனுக்கு நேரிடப்போகிற வியாதியைப்பற்றி ஒன்றும் எண்ணுகிறதில்லை. ஆனால் ஒருவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும்படி வியாதிப்பட்ட வேறு ஒருவனிடம் போகாமலும், அவனுக்கு உதவிசெய்யாமலும் இருந்தால் அவனுடைய மனச்சாட்சி உடனே அவனிடமிருக்கும் தற்சிநேகத்தைக் கண்டித்து, அவன் வியாதிப்படுவதாயிருந்தபோதிலும் எப்படியாவது வியாதியஸ்தனுக்குச் சகாயம் செய்யவேண்டும் என்று உற்சாகமாய்ச் சொல்லும். நன்மையைச் செய்யவும், தீமையை வெறுக்கவும் இடம் இருக்கும்போது மனச்சாட்சி அவ்விஷயங்களைப்பற்றிக் கவனிக்கும்.

ஒரு பிராதைப்பற்றிய சங்கதி முழுவதும் புத்தியுள்ள ஒரு நியாயாதிபதிக்குத் தெரிந்திருக்குமானால் எல்லாரும் அங்கீகரிக்கத் தக்கதாக நியாயத்தீர்ப்பு எப்படிச்செய்வானோ, அப்படியே மனச்சாட்சிக்கு ஒரு விஷயத்தைப்பற்றிய உண்மையெல்லாம் தெரிந்திருந்தால் அது எல்லாரும் அங்கீகரிக்கவேண்டிய தீர்மானம் செய்யும். இவ்வித காரணத்தினால் தான் எல்லாரும் கபட்டுத்தனத்தையும், பொறாமையையும் கண்டிக்கிறார்கள். இதின்படி நாம் எல்லாரும் நமது ஆண்டவர் போதித்தபடி இருதய சுத்தத்தையும், பொறுமையையும், இரக்கத்தையும் நீதி நியாயத்தின்மேல் உள்ள விருப்பத்தையும் சிறப்பிக்கிறோம். லூக் $18^{6}$ பிலி $2^{4}$. மேலும் பலதடவைகளில் மனச்சாட்சி சந்தேகமின்றி தீர்ப்புகளை உடனே செய்யும். இதின்படி நாம் கிறிஸ்துமார்க்கம் போதிக்கிற அநேக விஷயங்களை நல்லவைதான் என்று சந்தேகமில்லாமலும், தாமதமில்லாமலும் ஒப்புக்கொள்ளுகிறோம். மத் $5^{48}$ கொலோ $4^{12}$.

இயேசுகிறிஸ்து எல்லா நீதி நியாயத்துக்கும் காரணகர்த்தர் என்று அறிந்திருப்பதனால் நமது மனச்சாட்சி நாம் எப்பொழுதும் அவருடைய கட்டளையின்படி நடக்கவேண்டுமென்று நம்மைக் கட்டாயப்படுத்தும். மத் $10^{37}$ லூக் $14^{33}$ யோவா $15^{14}$. இதனிமித்தமே இயேசு தமது முதல் சீஷர்களை அழைத்தபோது 'எனக்குப் பின் செல்லுங்கள்' என்று அதிகாரத்துடனே சொன்னார்.

நாம் மனச்சாட்சி செய்யும் தீர்மானங்களுக்குக் கீழ்படியாமலிருந்தால் நமக்குத் திருப்திகரம் இல்லை. யோபு $42^{6}$ ஏசா $6^{5}$ மாற் $6^{20}$ லூக் $5^{8}$ அப் $24^{25}$.

மனச்சாட்சியின் தன்மையைப்பற்றிக் கவனிக்கவேண்டிய சிலவற்றைச் சொல்லுவோம்.

1. கல்வியினாலாவது, படிப்பினாலாவது அல்ல; மனச்சாட்சி கடவுள் கொடுத்த இயற்கைச் சுபாவத்தினால் நீதி நியாயத்தை அறியும்.

2. மற்றவர்களுக்குத் தீமை செய்யும்படிக்கான நோக்கங்களை மனச்சாட்சி உடனே கண்டிக்கும்.

3. விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், நாம் விசாரணைசெய்தால் மனச்சாட்சி நமக்கு நம்மைக்குறித்து நியாயத்தீர்ப்புச் செய்யும்.

4. நம்முடைய மனதில் இருவிதமான எண்ணங்கள் உண்டானால் மனச்சாட்சி அப்போதைக்கப்போது 'மேன்மையானது இது; இழிவானது இது' என்று சந்தேகமின்றிக் கற்பிக்கும்.

5. ஒரு சங்கதி நியாயமானதானால் மனச்சாட்சி தானாகவே அதை அறிந்து, அந்த விஷயத்தில் நாம் செய்யவேண்டியது இன்னதென்று நமக்குச் சொல்லும்.

6. மனச்சாட்சியின் பிரமாணத்தின்படி நாம் செய்யாவிட்டால் நம்மைக் குறைவுள்ளவர்களாகவும், குற்றவாளிகளாகவும் அறிந்துகொள்வோம்.

7. மனச்சாட்சியின் அதிகாரத்தை, நாம் சிலகாலம் மறந்துபோனாலும் அதின் கட்டளைகளை நாம் தள்ளக்கூடாதவர்களாயிருப்போம்.

இல்லறம், வியாபாரம், சபை, உலகம் இவைகளுக்கடுத்த விஷயங்களிலும், இன்

னும் பற்பல விஷயங்களிலும் எல்லாக் காரியங்களையும் அறிந்திருப்பது அரிது ஆனதால், நாம் நிறைவேற்றவேண்டிய கடமைகளைப் பற்றிச் சில சமயங்களில் நமக்குச் சந்தேகம் உண்டாவது ஆச்சரியமல்ல. ஆனால் நாம் பொறுமையோடும், புத்தியோடும் விசாரித்தால் நாம் செய்யவேண்டிய கடமையை நமது மனச்சாட்சி நமக்குத் தெரிவிக்கும். இதனிமித்தம் கிறிஸ்தவர்கள் இவ்விஷயங்களில் தாங்கள் செலுத்தவேண்டிய கடமை இன்னதென்பதைப்பற்றி ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும் என்று பரி. பவுல் வேண்டிக்கொண்டான். பிலி $1^{10}$ கொலோ $1^{9}$.

மனச்சாட்சியின் கட்டளைப்படி நடக்க நாம் உத்தரவாதிகளாயிருப்பதின் காரணம் என்னவென்றால் அது கடவுளினுடைய வாக்காய் இருப்பதுதான். சன்மார்க்கத்தைப்பற்றிய தப்பறையான கொள்கைகள் நம்மை வஞ்சியாவிட்டால் மனச்சாட்சியிடும் கட்டளைகள் அவருடைய கட்டளைகளே. அவருக்குமாத்திரமே நீதி நியாயத்துக்கடுத்த விஷயங்களில் சர்வ அதிகாரம் உண்டு. முதலில் இதைப் பார்த்து, மனச்சாட்சி கொடுத்த கட்டளையின்படி நடப்பது கஷ்டம்தான் என்று நாம் சொல்லலாம். ஆனால் மனச்சாட்சி கொடுக்கும் கட்டளைகளின்படி நடக்கக் கடவுள்தாமே உதவிபுரிவார். பிலி $2^{13}$.

மனச்சாட்சி நம்மில் இருக்கும் அகோர குணங்களை நமக்கு எடுத்துக் காட்டுகிறதினால், வனாந்தரத்தில் யோவான்ஸ்நானன் பிரசங்கம் பண்ணினதுபோல மனச்சாட்சி மனந்திரும்புதலுக்கு நம்மைத் தூண்டி, சுவிசேஷத்தை முன்னறிவிக்கிற தூதனும், கடவுளின் இரக்கத்துக்கு நம்மை அழைக்கிற ஸ்தானுபதியுமாய் இருக்கிறது.

**மனஸ்தாபம். Repentance.** மனஸ்தாபம் என்று மொழிபெயர்க்கப்பட்ட மூலபாஷையின் பதம் பல வசனங்களில் மனந்திரும்புதலை அல்லது குணப்படுதலைப் பொதுவாய்க் குறிக்கிறது. **குணப்படுதல்** காண்க.

வேறு வசனங்களில் மனஸ்தாபம் என்பது பாவத்தின் இயற்கையையும், நாம் செய்த பாவங்களின் தன்மையையும் உணர்ந்து அவைகளைப்பற்றி நாம் அடையும் மனச்சஞ்சலத்தையும், அவைகளைவிட்டுவிலகவேண்டிய விருப்பத்தையும் குறிக்கும். இந்தத் துயரம் குணப்படுதலுக்கு முதலாம் படி. ஏனென்றால் இப்படித் துக்கமடைந்து பாவத்திலிருந்து ரக்ஷிப்பை மிகுந்த கருத்தோடு நாடித் தேடுவோம். 2 கொரி $7^{10}$.

இந்த மனஸ்தாபத்துக்குப் புதிய ஏற்பாட்டில் உள்ள திருஷ்டாந்தங்களாவன: லூக் $15^{17}$ ரோம $6^{17}$. இதின் உண்மை இதின் கனிகளினால் தெரியும். மத் $3^{8}$ லூக் $6^{43}$.

**மனந்திரும்புதல். Conversion.** குணப்படுதல் காண்க.

**மனப்பூர்வம். Willingness.** பிலே $1^{14}$ 1 பேது $5^{2}$ எபி $10^{26}$.

**மனமேட்டிமை. Pride of heart.** 2 நாளா $32^{16}$.

**மனாகாத். Manahath.** ஒரு ஊர். இது இருந்த இடம் தெரியாது. 1 நாளா $8^{6}$.

**மனாசே. Manasseh.**

1. **யோசேப்பின் மூத்தமகன்.** ஓன்பட்டணத்து ஆசாரியனுடைய குமாரத்தியாகிய ஆஸ்நாத் இவன் தாயார். எப்பிராயீமும் இவனும் ஒரே தாய்வயிற்றுப் பிள்ளைகள். ஆதியாகமத்தை இயற்றினவன் மனாசே என்பதுக்கு 'மறதி' என்று அர்த்தம் சொல்லுகிறான். ஏனென்றால் இவனைப் பெறும்பொழுது யோசேப்பு தனக்குக் கடவுள் இந்தப் புத்திரபாக்கியத்தைக் கொடுத்ததினால்தான் முற்காலங்களில் தனக்குண்டாயிருந்த துன்பம் எல்லாம் மறந்துபோக வேண்டியதாயிருந்தது என்கிறான். ஆதி $41^{50}$. யாக்கோபு எகிப்துக்கு வந்தபோது இவனுக்குப் புத்திர சுதந்தரத்தைக் கொடுத்தான். ஆதி $48^{14}$.

2. **மனாசே கோத்திரம்.** இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பிரயாணம் பண்ணினபொழுது எப்பிராயீம், பென்யமீன், மனாசே என்னும் கோத்திரங்கள் ஆசரிப்புக் கூடாரத்தின் இடது பக்கத்தில் 'எப்பிராயீமின் பாளயம்' ஆனார்கள். எண் $2^{24}$. இஸ்ரவேலர் கானான் தேசத்தில் பிரவேசிக்கும்பொழுது இந்தக்கோத்திரத்தில் ஒரு பாதிக்குக் கலிலேயா கடலுக்குக் கிழக்கிலுள்ள வடகானானில் ஒரு பெரியபாகமும், மற்றப்பாதிக்கு மத்திய தரைக் கடலுக்கும் யோர்தான் நதிக்கும் இடையிலும், தாண், எப்பிராயீம் கோத்திரங்களுக்கு வடக்கில் இன்னொரு பாகமும் ஏற்படுத்தப்பட்டது. எண் $32^{33-42}$ யோசு 17 அதி. மனாசேகோத்திரம் இவ்விதமாய்ப் பரிசுத்தபூமியில் பெரிய பங்கைப் பெற்றிருந்தபோதிலும், அதில் அநேக பாகங்கள் அவ்வளவு செழிப்புள்ளவையாயிராததினால், இந்தக் கோத்திரம் அவ்வளவு செல்வம் பொருந்தி இருக்கவில்லை என்று நாம் சொல்லலாம். மனாசே கோத்திரத்தார் கானான் தேசத்தில் தங்கள் பாகங்களைப் பெறும்பொழுது மாகீரும் இவனுடைய பேரப்பிள்ளையாகிய

யாவீரும் கிலேயாத் நாட்டில் அந்தக் கோத்திரத்தை வெகு பராக்கிரமத்துடன் நடத்திவந்தார்கள். எண் $32^{41}$ நியா $10^{3}$ உபா $3^{13}$. இவர்கள் யோர்தான் நதிக்கு மேற்கிலிருந்த தங்கள் நாட்டில் உள்ள கானானியர்களைச் சீக்கிரத்தில் துரத்தவில்லை. நியா $1^{27}$. இவர்கள் சிசெராவுடன் யுத்தம் பண்ணினார்கள். நியா $5^{14}$. கிதியோன், யாவீர் என்னும் நியாயாதிபதிகள் இக்கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். நியா $6^{15}$ $10^{3}$. ஒருவேளை யெப்தா என்னும் நியாயாதிபதியும் இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவனா யிருக்கலாம். நியா $11^{1}$. சவுல் மரித்தவுடன் இவர்கள் முதலில் தாவீதின் பக்ஷத்தில் சேரவில்லை. 2 சாமு $2^{9}$. பிறகு சீக்கிரத்தில் இவர்கள் தாவீதினிடம் சேர்ந்து எபிரோனிலே அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்தார்கள். 1 நாளா $12^{19}$. சீரிய ராஜாவாகிய ஆசகேல் இவர்களுக்கு விரோதமாய்ப் படையெடுத்தான். 2 இரா $10^{32}$. அசீரியர்கள் இவர்களில் அநேகரைச் சிறையிருப்புக்குக் கொண்டுபோனார்கள். 1 நாளா $5^{25}$. இவர்களில் அநேகர் பலெஸ்தீனாவுக்குத் திரும்பிவந்தார்கள் என்று தோன்றுகிறது. இவர்கள் சன்மார்க்கவிஷயத்தில் அதிக வைராக்கியமுள்ளவர்களா யிருந்தார்கள். 2 நாளா $15^{9}$ $30^{1}$ $31^{4}$ $34^{6}$ எசே $48^{3}$. பிந்தினகாலங்களில் இந்தக் கோத்திரத்தைப்பற்றிய விசேஷம் ஒன்றும் இல்லை.

3. **யூதாவின் ராஜாவாகிய மனுசே.** இவன் எசேக்கியாவின் மகன். இவன் கி—மு. 696—641 வரையில் 55 வருஷங்களாக அரசாட்சி செய்துவந்தான். யூதாவின் ராஜாக்களில் இவன் அதிககாலம் அரசாட்சி செய்தவன். 2 இரா $21^{1}$. இவன் தன் தகப்பன் எசேக்கியா சன்மார்க்கவிஷயமாய்ச் செய்த சீர்திருத்தத்தை எல்லாம் நீக்கி, பாகால்முதலியபொய்த்தேவதைகளை வணங்கும்படி பீடங்களைக் கட்டி, வானராக்கினி முதலிய நக்ஷத்திரங்களுக்குப் பூஜைசெய்து, பில்லிசூனியம் முதலிய தந்திரங்களைப் பாராட்டி, தன் மகனை நரபலியாகச் செலுத்தி, தீர்க்கதரிசிகள் உரைத்த சத்தியத்தை நம்பினவர்களை உபத்திரவப்படுத்தி, உடன்படிக்கைப் பெட்டியையும், ஓய்வுநாளையும் அலக்ஷியம் செய்துவந்தான். எசா $56^{2}$ $57^{1}$ $58^{13}$ மீ எரே $2^{30}$ $7^{18}$ 2 இரா $21^{7}$ $21^{16}$ $23^{17}$ $24^{4}$ செப் $1^{4}$ 2 நாளா $33^{16}$ $35^{3}$. இவன் சரித்திரத்தை எழுதினவர்கள் இவன் செய்த துன்மார்க்கத்தினிமித்தம் யூதா ராஜ்யத்தின்மேல் யேகோவாவின் கோபாக்கினை பூரணமாய் வந்தது என்று எண்ணினார்கள். நாளாகமத்தை எழுதினவன், அசீரிய ராஜா இவன் தேசத்தின்மேல் வந்து இவனை ஜெயித்து இவனை பாபிலோனியாவுக்குக் கொண்டுபோனான் என்றும், அவ்விடத்தில் இவன் தான் செய்த துன்மார்க்க கிரியைகளைப்பற்றி மனஸ்தாபப்பட்டதினால், யேகோவா இவனை மறுபடியும் இவனது தேசத்திற்குக் கொண்டுவந்தார் என்றும்; அதுமுதல் இவன் பயபக்தியுடனே நடந்துவந்தான் என்றும்; இவன் எருசலேம் பட்டணத்துக்கு வெளிப்புறத்தில் ஒரு மதிலைக் கட்டினான் என்றும்; ஜனங்களோ மேடைகளில் யேகோவாவுக்குப் பலி செலுத்தினார்கள் என்றும் தெரிவிக்கிறான். சிறையிருப்பில் இவன் தள்ளுபடி ஆகமத்தில் சேர்க்கப்பட்ட 'மனுசேயின் ஜெபத்தை' உரைத்தான் என்று ஆதி கிறிஸ்தவர்களில் சிலர் நம்பிவந்தாலும், அது பிற்காலத்தில் பயபக்திக்கு ஏதுவாக எழுதப்பட்ட ஒரு கிரேக்க புஸ்தகம் என்று நாம் நினைக்கவேண்டியது. 2 நாளா $33^{12}$. பாருக் காண்க.

4. தாண் கோத்திரம் லாயீஷில் விக்கிராராதனை நடத்திவந்தகாலத்தில் அவ்வாராதனையை நடத்தின யோனத்தானுடைய பாட்டன். நியா $18^{30}$.

5. அந்நிய பெண்களை விவாகம் பண்ணின இருவர். எஸ்றா $10^{30-33}$.

**மனாயீன். Manaen.** [தேற்றுகிறவன்.] அந்தியோகு பட்டணத்திலிருந்த தீர்க்கதரிசிகளில் ஒருவன். இவன் ஏரோது அந்திப்பா ராஜாவோடுகூட வளர்க்கப்பட்டவன் ஆனதால் இவன் அந்தியோகு பட்டணத்திலுள்ள ஒரு கனவானாயிருக்கலாம். அப் $13^{1}$.

**மனுஷகுமாரன். Son of Man.** தானி $7^{13}$-ல் 'மனுஷகுமாரன்' என்று வரும் ரட்சகரைக்குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் புதிய ஏற்பாட்டில் மேசியாவைக் குறிக்கும்படி 'மனுப்புத்திரன்' என்றல்ல 'மனுஷகுமாரன்' என்றே எழுதியிருக்கிறார்கள். மனுஷகுமாரன் என்பது மேசியாவைக் குறிக்கும். யோவா $12^{34}$. இயேசு தம்மை 'மனுஷகுமாரன்' என்று 40 தரம் வழங்குகிறார். மத் $26^{63}$ யோவா $1^{49}$ $3^{14}$. இதோடு வெளி $1^{13}$ $14^{14}$ காண்க. புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவைக்குறித்து 80 தரம் 'மனுஷகுமாரன்' என்பது உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இதனால் குறித்தவையாவன:

அவருடைய தாழ்மை. மத் $8^{20}$.

அவருடைய மானிடத்தன்மை. ரோம $8^{3}$.

அவர் மகிமையில் உண்மையான மனுஷ ஞயிருக்கிருர். லூக் $22^{69}$ அப் $7^{55}$.

அவர் மனுஷர்களின்மேல் இரக்கசாலி. எபி $4^{15}$.

அவர் நியாயாதிபதியாய் இருக்கவேண் டும். மத் $25^{31}$ யோவா $5^{26}$ வெளி $5^{9}$. இயேசுகிறிஸ்துவின் தத்துவம் (பக்கம் 120) காண்க.

மனுஷன். Man.

1. வேதாகமம் மனுஷனுடைய தன்மையைப்பற்றிப் பேசும்பொழுது சன்மார்க்கத்துக்குரிய விஷயங்களைமாத்திரம் கவனித்து அதையே தெரிந்துகொண்டு, மனுஷனுடைய மேலான அந்தஸ்தையும் அவன் அடைந்த இழிவான நிலைமையையும் குறித்துச் சொல்லுகிறது.

*a.* மனுஷன் கடவுளினுடைய தீர்மானத்திலும், செயலினும் சிருஷ்டிக்கப் பட்டவனும், கடவுளினுடைய சாயலாய் உண்டாக்கப்பட்டு, மற்றப் பிராணிகள் எல்லாவற்றின்மேலும் அதிகாரம்பெற்று, கடவுளோடே ஜெபத்தில் பேசக்கூடியவனுமாயிருந்த தினல் இவனுடைய மேலான நிலைமை வெளிப்படுகிறது. ஆதி 1, 2, 3 அதி. சங் 8.

*b.* ஆதியாகமத்தில் சொல்லியிருக்கும் இவன் செய்த பாவமும், இவன் அடைந்த பாவ சுபாவமும் இவனுக்கு உண்டான இழிவான நிலைமைக்குக் காரணங்களும் அடையாளங்களுமாய் இருக்கின்றன. ஆதி 3 அதி. சங் 51. புதிய ஏற்பாட்டில் இந்தப் பாவ சுபாவம் பல வசனங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது. ரோம $5^{12}$ $7^{7}$.

2. பழைய ஏற்பாட்டில் மனுஷன் மரணத்துக்கு ஏதுவானவனும், வியாதியினல் நொறுக்கப்பட்டவனும் பெலயீனமுள்ளவனும், சாம்பலும் தூசியுமானவனுமா யிருக்கிறுன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி $2^{7}$ $3^{19}$ $18^{27}$. ஆனலும் தேவனுடைய சாயலாய் உண்டாக்கப்பட்டதினலே இவன் புத்தி, மனச்சாட்சி, அன்பு, சுயாதீனம் என்பவைகளை உடையவனுயிருக்கிறுன். இவையெல்லாம் ஆதாமில் தோன்றியது. ஆதி $2^{19-25}$ $3^{9}$. கடவுளின் ஆவி மனுஷனுடைய ஜீவனுக்கும், புத்திக்கும், ஞானத்துக்கும், பராக்கிரமத்துக்கும், திறமைக்கும் ஊற்று. கடவுள் மனுஷனைவிட்டு விலகிவிடவில்லை. நீதி $20^{27}$. தீர்க்கதரிசிகள் இயற்றின நூல்களிலும், சங்கீதங்களிலும் இதற்குப் பல திருஷ்டாந்தங்கள் உண்டு.

3. புதிய ஏற்பாட்டில் மனுஷனுடைய பாவ சுபாவத்தைப்பற்றிப் பல வசனங்களில் விவரமாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. ரோம $5^{12}$ $7^{7}$ 1 கொரி $6^{11}$ கலா $5^{19}$ எபே $5^{3}$ கொலோ $3^{5}$. மனுஷர்கள் தேவபுத்திர சுதந்தரத்தை அடையக்கூடியவர்களானதினல் இவர்கள் தேவனுடைய சந்நிதானத்தில் உத்தம மேன்மையை அடையலாம் என்பது ஆதி கிறிஸ்தவர்களின் காலம்முதல் கிறிஸ்தவ சபையின் நம்பிக்கை. லூக் $3^{38}$ அப் $17^{26}$ 1 கொரி $11^{7}$. பரி. பவுலின் போதகத்தின் படி புறஜாதிகளும் தங்கள் மனதில் தேவனுடைய பிரமாணத்தைக் கொண்டிருப்பதினல் அவர்களிடத்திலும் கடவுள் கிருபை பாராட்டுகிறவராயிருக்கிருர். ரோம $2^{15}$. இயேசு கடவுள் நமக்குப் பரமபிதாவாயிருக்கிருர் என்றும்; அவர் அருளும் பராமரிப்பு யாவருக்கும் உண்டென்றும்; ரட்சிப்பு யாவருக்கும் பரிபூரணமாயிருக்கிறதென்றும் சொல்லி, தேவனுடைய பார்வையில் மனுஷர்கள் அவருக்கு மெத்த அருமையானவர்களாயிருக்கிருர்கள் என்று போதிக்கிருர். மத் $10^{30}$ $16^{26}$ லூக் $10^{20}$ 15 அதி. இவர்களில் கடவுளின் பெயரில் பக்திவைக்கிறவர்கள் அவருடைய பிள்ளைகளாயிருக்கிருர்கள். மத் $5^{9}$ யோவா $1^{12}$.

4. தீர்க்கதரிசிகள், ஆதி கிறிஸ்தவர்கள் முதலானவர்கள் மனுஷனுடைய ஜீவன் இவ்வுலகத்தில் முடிந்தபிறகு மறுமையில் இன்னும் சேரும் என்றும் அவன் இவ்வுலகத்தில் செய்த நன்மை தீமையைப்பற்றிய நியாயத்தீர்ப்பை அடையவேண்டுமென்றும் போதித்து மனுஷன் தேவகட்டளைகளின் படி நடக்க உத்தரவாதியாயிருக்கிறுன் என்றும், மனுஷனுடைய உயிருக்கும் கடவுளின் நித்திய ஜீவனுக்கும் சம்பந்தம் உண்டு என்றும் கூறி, இதிலும் விசேஷமாய் இவன் சிலாக்கியம் பெற்றவனுயிருக்கிறுன் என்று நினைத்தார்கள்.

மனுப்புத்திரன். Son of Man. தமிழ் வேதாகமத்தில் பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கும் 'மனுபுத்திரன்' என்னும் பதம் பொதுவாய் மனுஷர்களையும், விசேஷமாய் அவர்களுக்குரிய பெலயீனத்தையும், தாழ்ந்த நிலைமையையும் குறிக்கும். எண் $23^{19}$ யோபு $25^{6}$ சங் $144^{3}$ $146^{3}$ எசே $2^{1}$ $3^{1}$ தானி $8^{17}$ மு.

மனைவி. Wife.

1. பெண்சாதி. ஆதி $2^{24}$ $28^{1}$ $39^{9}$ யாத் $20^{17}$ லேவி $18^{8-20}$ $20^{10-21}$ $21^{14}$ எண் $5^{12-30}$ உபா $5^{21}$ $20^{7}$ $21^{11}$ $22^{13}$ $24^{1}$ $25^{5}$ $27^{20}$ எஸ்ரு $2^{61}$ 10 அதி நீதி $5^{18}$ $6^{29}$ $18^{22}$ $19^{13.14}$ 31 அதி

பிர $9^{9}$ எசே $16^{32}$ ஓசி $2^{2}$ ஆமோ $7^{17}$ மல் $2^{14}$ 1 கொரி $5^{1}$ 7 அதி எபே $5^{22-33}$ கொலோ $3^{18}$ 1 தீமோ $3^{2-11}$ தீத்து $1^{6}$.

2. திருச்சபை. வெளி $19^{7}$ $21^{9}$ $22^{17}$. **குடும்பம்** காண்க.

**மனோரம்மியம்.** Contentment.

(i) எபிரெயருடைய அபிப்பிராயம்: நீதி $15^{17}$ $17^{1}$.

(ii) ஆதி கிறிஸ்தவர்களுடைய அபிப்பிராயம். 2 கொரி $12^{9}$ பிலி $4^{11}$ 1 தீமோ $6^{6,8}$ எபி $13^{5}$.

**மனோவா.** Manoah. சிம்சோனின் தகப்பன். இவன் தாண் கோத்திரத்தைச் சேர்ந்தவன். யேகோவாவை வணங்கினவன். சிம்சோன் பெலிஸ்தியர்களோடு செய்த சம்பந்தத்தை இவன் அருவருத்தான். இவனுக்குத் தேவதூதன் தரிசனம் ஆகி பிள்ளைபெறாத இவன் பெண்சாதி கர்ப்பந்தரித்து யேகோவாவின் ஊழியத்தைச் செய்யும் மகனைப் பெறுவாள் என்று தெரிவித்தான். நியா $13^{2-23}$ $16^{31}$.

**மன்றாட்டு.** Prayer. ஜெபம் காண்க.

**மன்னா.** Manna. 'மன்னா' என்பதின் அர்த்தம் திட்டமாய்த் தெரியாது. இஸ்ரவேலர் வனாந்தரத்தில் சாப்பிட்ட ஒருவிதமான ஆகாரம். அது வெள்ளையாயும் கொத்துமல்லிபோலச் சிறியதாயும் இருந்தது. யாத் $16^{14}$ எண் $11^{7}$. இஸ்ரவேலர் அதைச் சமைத்து அல்லது அரைத்து அப்பமாகச் சுட்டுச் சாப்பிடுவார்கள். அதின் ருசி தேன் அல்லது ஒலிவ எண்ணெய்போல் இருந்தது. யாத் $16^{31}$ எண் $11^{8}$. இது இரவில் உண்டாகும். விடியற்காலத்தில் இஸ்ரவேலர் அதைப் பொறுக்கிக்கொள்ளவும் அதேநாளுக்குள்ளே அதைச் சாப்பிடவும் வேண்டும். அப்படியில்லாமல் அடுத்த நாளைக்காக எடுத்து வைத்தால் அது நாற்றமெடுத்துப் போகும். இதெல்லாம் பார்த்து இது இன்னதென்று திட்டமாய் நாம் சொல்வது முடியாது. இது சீனாதேசத்தில் விளையும் ஒரு மரத்தின் பால் என்று சிலர் நினைக்கிறார்கள். இது பித்தோலாகு என்பதைப் போன்றது என்று சொல்லியிருப்பது இதற்கு அத்தாட்சி. எண் $11^{7}$. ஆனால் தற்காலத்தில் சிலர் இது ஒருவிதமான காளான் என்று சொல்லுகிறார்கள்.

1914-ம் ௵த்து ஜூன் ௴த்திய *The Expository Times* என்னும் பத்திரிகையில் *J. H. Phillipson* என்பவர் தான் ஆப்பிரிக்காவில் இவ்வித காளானைப் பார்த்ததாகத் தெரிவிக்கிறார். அவர் இருந்த தேசத்தில் சில மாதங்களில் மழை பெய்யாமல் காடுகள் தீப்பற்றி எரிந்துபோம். பிறகு மழைத்தூறல் விழும்போது இப்படி எரிந்துபோன இடங்களிலெல்லாம் இந்தக் காளான் முளைத்திருக்கும். இது ஒரு காலணா அவ்வளவு பெரியதாயிருக்கும். ஜனங்கள் காலைதோறும் சூரியன் உதயமாகுமுன் கூடைகளைக் கொண்டுபோய் அவைகளை எடுத்துப் பாதியைச் சாப்பிட்டு பாதியை வீடுகளுக்குக் கொண்டுபோய்ச் சமையல் செய்வார்கள். இவ்விதமான காளான் சுமார் இரண்டு மாதம் காலைதோறும் அதிகமாய் கிடைத்துக்கொண்டிருக்கும். மத்தியானத்துக்குமுன் வெயிலில் உலர்ந்துபோம். இப்படிச் சேகரித்த காளானை உடனே சமைக்காமல் சிலநேரம் வைத்துவிட்டால் அது புழுத்து நாற்றமெடுக்கும். பத்திரிகைக்கு எழுதினவர் இதுகொஞ்சம் தித்திப்பாயிருந்தது என்றும், ஜனங்கள் அதிகாலையில் இவைகள் விரியுமுன் இவைகளை எடுத்துக் காடியிற் போட்டு ஊறுகாயாக்கினால் கெட்டுப்போகாமலிருக்குமென்றும் எழுதுகிறார். 1914-ம் ௵ நேரிட்ட இச்சம்பவம் அதற்கு முந்தின காலங்களில் இஸ்ரவேலர் சீனாய் வனாந்தரத்திலிருந்தபோது நேரிட்டிருக்கக்கூடாது என்று எப்படிச் சொல்லத் துணியலாம். ஆனால் இது வழக்கமாய் அல்ல; அபூர்வமாய் நடந்த விஷயமானதாலும், இஸ்ரவேலர் இதற்குமுந்தி அதைக் கண்டிராததினாலும், வனாந்தரத்திலிருந்த இவர்களுக்கு இது விசேஷித்த போஜனமாயிருந்ததினாலும், இவர்கள் இது யேகோவா தங்களுக்கு அற்புதமான விதமாய்ச் செய்த உதவி என்று நினைத்தது நியாயம்தான். இந்த நோக்கத்துடன் இவர்கள் ஆசரிப்புக் கூடாரத்திலிருந்த உடன்படிக்கைப் பெட்டிக்குச் சமீபத்தில் அதை வைப்பார்கள். யாத் $16^{33}$.

மன்னா என்பது சில வசனங்களில் யேகோவாவின் இரக்கத்துக்கு அடையாளமாக சொல்லப்பட்டிருக்கிறது. நெகே $9^{20}$ சங் $78^{24}$ $105^{40}$.

இயேசுகிறிஸ்து ஜீவ அப்பத்தைக் குறித்து இதை உவமையாய்ச் சொன்னபோது, இஸ்ரவேலர் வனாந்தரத்தில் சாப்பிட்ட மன்னாவைவிட ஜீவ அப்பம் மேன்மையானதென்பதைத் தெரிவிக்கிறார். யோவா $6^{31}$ $49^{58}$. பரி. பவுல் இதற்கு ஞானபோஜனம் என்னும் பெயர் சொல்லுகிறார். 1 கொரி $10^{3}$. உபத்திரவப்பட்டவர்களுக்கு இயேசுகிறிஸ்து அருளும் உதவிக்கு 'மறைவான மன்னா' என்று பெயர். வெளி $2^{17}$.

**மன்னிப்பு. Forgiveness.**

1. **பழைய ஏற்பாடு.** *பழைய ஏற்பாட்டில் கடவுள் மனுஷர்களுக்கு அருளின மன்னிப்பையும், மனுஷர்கள் தாங்கள் கவனிக்க வேண்டிய மன்னிப்பையும் குறிக்கும்படி மூன்று பதங்கள் உண்டு. ஆதி* 50$^{17}$ *யாத்* 34$^{7}$ 1 *சாமு* 25$^{28}$ *சங்* 86$^{5}$ *நெகே* 9$^{17}$. *எபிரெயர்கள் கடவுள் மனுஷர்கள் செய்த பாவங்களை அவர்களுக்கு மன்னிக்கிறார் என்று ஆதிகாலம் முதல் நம்பினார்கள். ஆதி* 4$^{13}$. *பாவமன்னிப்பு அருளும்படி கடவுளுக்கு அதிகாரமும் பிரியமும் உண்டு என்று நம்பினார்கள். இதைப் பெறும்படிக்கு மனுஷர்கள் தாங்கள் செய்த குற்றங்களைக் குறித்து மனஸ்தாபப்பட்டு, தங்களைத் தாழ்த்தி, திரும்ப நன்மைசெய்யப் பிரயாசப்படவேண்டும். யோசு* 24$^{19}$ 1 *இரா* 8$^{36}$ 2 *இரா* 24$^{4}$ 2 *நாளா* 7$^{14}$ *சங்* 103$^{3}$ *எரே* 36$^{3}$.

*நியாயப்பிரமாணத்தின்பிரகாரம் பாவமன்னிப்பை அடையவேண்டுமானால் குற்றம் செய்தவன் தான் மீறின கட்டளைகளை நிறைவேற்றுவதற்கு, தான் அநியாயம் செய்த ஒருவனுக்குத் திரும்ப நியாயம் செய்தபின், குற்றநிவாரணபலியைச் செலுத்தவேண்டும். லேவி* 6$^{2}$ *மத்* 5$^{24}$ *காண்க. இதனிமித்தம் நியாயத்தை விரும்புகிற கடவுளிடத்தில் மன்னிப்புக்காக நாம் வருமுன் நம்மால் கூடியமட்டும் நியாயமானவற்றைச் செய்யவேண்டும் என்றும், நியாயப்பிரமாணம் நாம் அந்தமன்னிப்பு பெறும்வழியைக் காட்டினதினால் அது 'நம்மைக் கிறிஸ்துவிடத்தில் வழிநடத்துகிற வாத்தியாய் இருக்கிறது' என்றும் பரி. பவுல் சொல்லுகிறான். கலா* 3$^{24}$.

*தீர்க்கதரிசிகளும் நாம் இவ்விதமாய் மனந்திரும்பி, பாவமன்னிப்பைத் தேடவேண்டும் என்று அடிக்கடி சொல்லுகிறார்கள். ஏசா* 44$^{22}$ *எசே* 33$^{11}$ *எரே* 18$^{11}$ 35$^{15}$ *ஓசி* 14$^{1}$. *அவர்கள் மனுஷர்கள் இப்படிக் கடவுளைத் தேடினால் அவரும் இவர்களைத் தேடி இவர்கள் செய்த எல்லாக் குற்றங்களையும் பூரணமாய் மன்னிப்பார் என்று போதித்தார்கள். சங்* 85$^{2}$ *ஏசா* 55$^{7}$ *எரே* 13$^{17}$.

2 **புதிய ஏற்பாடு.** *இயேசுவின் காலத்தில் யூதர்கள் எல்லாரும் பாவங்களை மன்னிக்கக் கடவுளுக்கு மாத்திரமே அதிகாரம் உண்டென்று எண்ணினார்கள். மாற்* 2$^{7}$ *லூக்* 5$^{21}$. *இயேசுவும் அப்படியே போதித்தார். மத்* 6$^{14}$ *மாற்* 11$^{25}$ *லூக்* 23$^{34}$. *அவர் தமது பிதாவினிடத்திலிருந்து இந்த அதிகாரத்தைப் பெற்றார். மத்* 9$^{6}$ *மாற்* 2$^{10}$ *லூக்* 5$^{24}$ 7$^{48}$. *அவர் பிதாவுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தராய் இருக்கிறதினால் பாவ மன்னிப்பு அவருக்குள் அல்லது அவர் மூலமாய் நமக்கு அருளப்பட்டது. எபே* 4$^{32}$ *கொலோ* 2$^{13}$ *வெளி* 1$^{5}$. *தீர்க்கதரிசிகள் போதித்ததுபோல அப்போஸ்தலர்களும் நாம் பாவ மன்னிப்பைப் பெற வேண்டுமானால் நாம் செய்த பாவத்தின் அகோரத்தை உணர்ந்து அதை அறிக்கையிட்டு நம்மால் இயன்றமட்டும் பாவத்தை விட்டு விலகி நடக்கவேண்டும் என்று போதித்தார்கள். அப்* 19$^{18}$ *ரோம* 10$^{10}$ 1 *யோவா* 1$^{9}$.

*புதிய ஏற்பாட்டில் மனுஷர்கள் தேவசாயலை அடையும்படி கடவுள் தங்களுக்கு மன்னிக்கிறதுபோல் தாங்களும் தங்களுக்கு விரோதமாய்க் குற்றம் செய்கிறவர்களுக்கு மன்னிக்கவேண்டும் என்று கற்பிக்கப்பட்டது. இவ்விதமாய் மன்னிப்பது கிறிஸ்தவர்களுடைய விசேஷித்த லக்ஷணங்களில் ஒன்று. மத்* 6$^{12}$ 18$^{21-35}$ *மாற்* 11$^{25}$ *லூக்* 11$^{4}$ 17$^{4}$. *அப்போஸ்தலர்களும் அப்படியே போதித்தார்கள். கொலோ* 3$^{13}$ 1 *யோவா* 4$^{11}$. *எபிரெயர்களுக்கு எழுதின நிருபத்தின் நூலாசிரியன் பாவ மன்னிப்புக்காக இயேசு செலுத்தின பரம பலிக்கும் நியாயப்பிரமாணத்தின்படி ஏற்பட்ட பலிகளுக்கும் உள்ள ஒற்றுமையைப்பற்றிச் சொல்லுகிறான். எபி* 9$^{22}$ 10$^{18}$. *மனுஷர்களுக்குப் பாவமன்னிப்பு என்னும் உத்தம வரத்தைக் கொடுக்கும்படிக்கே இயேசு இவ்வுலகத்தில் இறங்கி ஜீவித்துச் சிலுவையில் மரணமடைந்தார்.*

*சில வசனங்களில் அப்போஸ்தலர்களுக்குப் பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் இருந்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மத்* 16$^{19}$ *யோவா* 20$^{23}$. *கிறிஸ்தவ சபைக்கும் அந்த அதிகாரம் கொடுக்கப்பட்டது. மத்* 18$^{18}$. *அப்போஸ்தலர்கள் இயேசுவினிடத்திலிருந்து பரிசுத்த ஆவியைப் பெற்றதினாலும் திருச்சபையில் பரிசுத்த ஆவியானவர் வாசம்செய்து தமது ஊழியத்தைச் செய்கிறதினாலும் அவர்களுக்கும் இதற்கும் இந்த அதிகாரம் உண்டு. அதாவது தற்காலத்தில் திருச்சபையைச் சேர்ந்து, பரிசுத்த ஆவியைப் பூரணமாய்ப் பெற்று, கிருபையில் தேர்ச்சி அடைந்தவர்கள் ஏகோபித்து ஒருவன் செய்த சமயாசாரத்தைப்பற்றி அதின் விவரம் முழுமையும் விசாரித்துத் தீர்மானம் செய்ய நேரிடும்பொழுது பரிசுத்த ஆவியின் உதவியைப் பெறுவார்கள் என்று நாம் நினைக்கவேண்டும். திருச்சபை சில சமயங்களில் ஒருவன் செய்த கருமத்தின் விவரங்களைப்பற்றி விசாரியாமல், தேவசித்*

த்தை அல்ல, சபையார்கள் விரும்பினதை ஸ்தாபிக்கும்படி பிரயாசப்பட்டு அகங்காரம் கொண்டு தன்னுடைய மேன்மையைக் கருதி அம்மனுஷன் செய்த வினையைப்பற்றித் தீர்ப்புச் செய்யும்பொழுது எத்தனையோ தடவை அது கடவுளுக்கு விரோதமாயும் மனுஷர்களுக்கு இடறலாயும் தீர்ப்புச் செய்திருக்கிறது என்று அறிந்து, திருச்சபை கடவுளுக்கும் மனுஷர்களுக்கும் இடையில் நின்று நியாயம் செய்ய உத்தரவாதியாயிருப்பதால் இந்த அதிகாரத்தை மிகுந்த தாழ்மையோடும் இரக்கத்தோடும் செலுத்தவேண்டி இருக்கிறது.

மன்னிக்கக்கூடாத பாவம் உண்டு என்று இயேசுநாதர் சொன்னார். அதாவது ஒரு மனுஷன் வேண்டுமென்று கடவுளின் நியாயப்பிரமாணத்தை மீறி பரிசுத்த ஆவியை இகழ்ச்சி செய்து தன்னை முற்றிலும் கெடுத்துக் கொள்வதுதான். மத் 12[31] மாற் 3[29] லூக் 12[10]. இயேசுகிறிஸ்து இதைக்குறித்து நமக்கு விவரமாய்ப் போதிக்கவில்லை. இதற்கு மன்னிப்பு இல்லாமையைப்பற்றி விவரமாய் இயேசு நமக்குச் சொல்லாதிருந்தும் கடவுள் எவ்விஷயத்திலும் நியாயத்தின் படியும் இரக்கத்தின்படியும் எல்லாவற்றையும் செய்து அவர் தம்முடைய நற்சித்தத்தை நிறைவேற்றுவார்.

தேவதூஷணம் காண்க.

## மா.

**மா, மாவு.** Flour.

அப்பம் செய்வதற்கு எபிரெயர்கள் வழக்கமாய்க் கோதுமை மாவையும் வாற்கோதுமை மாவையும் உபயோகித்தார்கள். தானியங்களைத் தூற்றிப் பதர்களைப் பறக்கடித்து, புடைத்து இரண்டு கற்களின் இடையில் அதைத் தேய்த்த பிறகு நமக்குத் தெரிந்த உலக்கையால் குத்தி, யந்திரத்தில் அரைத்து மாவாக்குவார்கள். மூன்றுதரம் மாவு என்பது சொல்லப்பட்டிருக்கிறது. முதல்தரம் உதிர்த்த தானியம். லேவி 2[16]. இரண்டாவது பொதுவாய் மாவு என்பது. 1 இரா 4[22] 17[10]. மூன்றாவது மெல்லிய மாவு என்பது. ஆதி 18[6] 1 இரா 4[22].

**மாகலா.** Mahlah. மாகீருடைய மகளின் புத்திரன். 1 நாளா 7[18].

**மாகா.** Maacah.

1. நாகோரின் மகன். ஆதி 22[24].

2. காத் ராஜாவாகிய ஆகீசின் தகப்பன். 1 இரா 2[39]. ஒருவேளை இவனும் மாயோகும் ஒருவனாயிருக்கலாம். 1 சாமு 27[2].

3. தாவீதின் போர்வீரரில் ஒருவன். 1 நாளா 11[43].

4. சிமியோன் கோத்திரத்தைச் சேர்ந்த ஒருவன். 1 நாளா 27[16].

**மாகாணம்.** A. V. Chapmen. 2 நாளா 9[14].

**மாகாத்.** Maath, Mahath.

1. இயேசுவின் முற்பிதாக்களில் ஒருவன். லூக் 3[26].

2. லேவியர் குடும்பம். 1 நாளா 6[35] 2 நாளா 29[12].

3. எசேக்கியாவின் காலத்திலிருந்த ஒரு லேவியன். 2 நாளா 31[13].

**மாகாத்தியன்.** Maacathites. மாகா ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள். 2 சாமு 23[34].

**மாகாவியன்.** Mahavite. தாவீதின் போர் வீரர்களில் எலியேல் என்பவனுடைய மறுபெயர். மாகா என்னும் ஊர் இருந்த இடம் தெரியாது. 1 நாளா 11[46].

**மாகாள்.** Maacah.

1. ரெகொபெயாமின் மனைவி. 2 நாளா 11[20]. இவள் விக்கிரகாராதனையில் அதிக பக்தி வைராக்கியம் உள்ளவள். 1 இரா 15[13].

2. காலேபின் மறுமனையாட்டி. 1 நாளா 2[48].

3. ஆசா ராஜாவின் தாய். இவளும் ரெகொபெயாமின் மனைவியாகிய மாகாளும் ஒரே பெண்தான் என்று சிலர் நினைக்கிறார்கள். 1 இரா 15[2].

**மாகி.** Machi. வேவுகார்களில் ஒருவனுடைய தகப்பன். எண் 13[15].

**மாகீர்.** Machir.

1. மனாசேயின் மூத்த மகன். யோசு 17[1] எண் 26[29].

2. யோர்தான் நதிக்குக் கிழக்குப் பக்கத்தில் வாசஞ்செய்தவனாகிய மாகீர் சவுலின் பக்ஷத்தில் கூடியமட்டும் இசைந்து, பிறகு தாவீது அப்சலோமிடத்திலிருந்து ஓடிப்போகும்பொழுது இவன் ராஜாவுக்கு உதவி செய்தான். 2 சாமு 9[5] 17[27].

**மாகோகு.** Magog. கோகு காண்க.

**மாகோர்-மீசாபிப்.** Magor Missabib. எரேமியா தீர்க்கதரிசி தன்னை அடித்த தேவாலயப் பிரதான உத்தியோகஸ்தனாகிய பஸ்கூருக்கு இந்த மறுபெயர் கொடுத்தான். 'பஸ்கூர்' என்பதற்கு 'நிலையான சமாதானம்' என்று அர்த்தம். 'மாகோர்-மீசாபிப்' என்பதற்கு 'பயம் சுற்றியிருக்கிறது' என்று அர்த்தம். எரே 20[3].

**மாகோல். Mahol.** ஏத்தான் முதலிய மூன்று ஞானிகளின் தகப்பன். 1 இரா $4^{31}$.

**மாகோன், மாகோனியர். Maon.**

1. சாக்கடலுக்குத் தெற்கில் செயீர் மலை நாட்டில் இஸ்ரவேலைத் துன்பப்படுத்தின ஒரு ஜனம். நியா $10^{12}$. இவர்களும் மெகுனியரும் ஒரே ஜனத்தார். உசியா ராஜா இவர்களை ஜெயித்தான். 2 நாளா $26^{7}$.

2. யூதேயா நாட்டின் தென்பாகத்திலுள்ள ஒரு ஊர். யோசு $15^{55}$. நாபால் என்பவன் இதன் பக்கத்தில் வசித்தான். தாவீது இதில் ஒளித்திருந்தான். 1 சாமு $23^{24}$ $25^{2}$.

**மாக்கா. Maacah.** மாகா காண்க.

**மாக்கா. Maacah.** கலிலேயாக் கடலுக்குக் கிழக்குப் பக்கத்திலுள்ள ஒரு ராஜ்யம். இஸ்ரவேலர் கானான் தேசத்துக்கு வரும்பொழுது இதிலிருந்த ஜனங்களை அவர்கள் துரத்தவில்லை. யோசு $13^{13}$. தாவீதுக்கு விரோதமாய் இவர்கள் படையெடுத்தபொழுது அவன் இவர்களையும் அம்மோனியர்களையும் ஜெயித்தான். 2 சாமு $10^{8}$ 1 நாளா $19^{6}$.

**மாக்காத்ஸ். Makaz.** யூதா நாட்டின் மேற்குப் பாகத்திலிருந்த ஒரு ஊர். 1 இரா $4^{9}$.

**மாக்காள். Maacah.**

1. அப்சலோமின் தாய். 2 சாமு $3^{3}$.

2. மாகீரின் மனைவி. 1 நாளா $7^{15}$.

3. கிபியோனின் தாய். 1 நாளா $7^{29}$.

**மாகாள்** காண்க.

**மாசம். Month.** எபிரெய வருஷத்தின் மாசங்களாவன:

| | | |
|---|---|---|
| ஆபீப் | — பங்குனி | — March–April |
| சீப் | — சித்திரை | — April–May |
| சீவான் | — வைகாசி | — May–June |
| தம்மூஸ் | — ஆனி | — June–July |
| ஆப் | — ஆடி | — July–August |
| எலூல் | — ஆவணி | — August–September |
| ஏத்தானீம் | — புரட்டாசி | — September–October |
| பூல் | — ஐப்பசி | — October–November |
| கிஸ்லே | — கார்த்திகை | — November-December |
| தேபேத் | — மார்கழி | — December–January |
| சேபாத் | — தை | — January–February |
| ஆதார் | — மாசி | — February–March |

**மாதப்பிறப்பு, காலம்** காண்க.

**மாசா. Massa.** இஸ்மவேலின் மகன். இந்தப் பெயர் வடஅரபியா தேசத்தில் வசித்த கோத்திரத்தின் பெயர் ஆனதினால் இது இஸ்ரவேல் தேசத்துக்கு அதிக தூரத்திலிருந்திருக்கும். நீதிமொழி ஆகமத்தின் கடைசி அதிகாரத்தில் சொல்லியிருக்கும் 'ராஜாவாகிய லேமுவேலுக்கடுத்த வசனங்கள்' என்னும் பதம் மூலபாஷையின் அர்த்தப்படி 'மாசாதேசத்தின் ராஜாவாகிய லேமுவேல்' என்றிருக்கவேண்டுமென்று சில வேதசாஸ்திரிகள் அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள். அப்படியே நீதி 30-ம் அதிகாரத்தில் 'ஆகூர்...வசனித்து' என்பதற்குப் பதிலாக 'மாசாதேசத்து ராஜனாகிய ஆகூர்' என்று வாசிக்கவேண்டியது. ஆதி $25^{14}$ நீதி $30^{1}$ $31^{1}$.

**மாசாய். Maasai.** ஆசாரியர் குடும்பம் 1 நாளா $9^{12}$.

**மாசாவும் மேரிபாவும். Massah and Meribah.** 'மாசா' என்பதற்கு 'சோதனை செய்தல்' என்றும் 'மேரிபா' என்பதற்கு 'சச்சரவு செய்தல்' என்றும் அர்த்தம். இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பிரயாணம் பண்ணும் காலத்தில் ஒரேப் மலைநாட்டில் தங்களுக்குத் தாகம் அதிகரித்தபோது தண்ணீர் கிடைக்காததினால் யேகோவாவின் இரக்கத்தின் பேரில் சந்தேகப்பட்டு அதைப் பரீட்சை பார்த்து யேகோவாவுடன் சண்டை செய்தபொழுது மோசே கல்பாறையை அடித்து, ஜனங்களுடைய தாகத்தைத் தீர்க்கும்படி தண்ணீர் புறப்படப்பண்ணின இடத்தின் பெயர். யாத் $17^{7}$ எண் $20^{13}$ உபா $6^{16}$ $9^{22}$ $32^{51}$ $33^{8}$ சங் $81^{7}$ $95^{8}$. இந்த இடம் காதேஸ் என்னும் ஊருக்குச் சமீபத்திலிருந்ததாகத் தோன்றுகிறது.

**மாசியா. Maaziah** ஆசாரிய குடும்பம். நெகே $10^{8}$.

**மாசு. Blemish.** 1 தீமோ $6^{13}$ யூதா $1^{24}$ வெளி $14^{5}$.

**மாசேயா, மாசேயா. Maaseiah, Mahseiah.** [யேகோவாவின் ஊழியம்.]

1, 2, 3, 4. அந்நியஜாதிப் பெண்களை விவாகம்பண்ணினவர்கள். எஸ்றா $10^{18,21,22,30}$.

5. மதில் கட்டினவர்களில் ஒருவன். நெகே $3^{23}$.

6. நியாயப்பிரமாணம் வாசிக்கும்பொழுது எஸ்றாவின் பக்கத்தில் நின்றவர்களில் ஒருவன். நெகே $8^{4}$.

7. நியாயப்பிரமாணத்தைப் பிரசங்கித்தவர்களில் ஒருவன். நெகே $8^{7}$.

8. உடன்படிக்கைக்கு முத்திரை போட்டவர்களில் ஒருவன். நெகே $10^{25}$.

9. ஒரு யூதன் = அசாயா. நெகே 11[5] 1 நாளா 9[5].

10. பென்யமீன் கோத்திரத்தான். நெகே 11[7].

11, 12. இரண்டு ஆசாரியர்கள். நெகே 12[41].

13. சிதேக்கியா ராஜாவின் காலத்திலிருந்த ஒரு ஆசாரியன். எரே 21[1] 29[24] 35[4] 37[3].

14. கள்ளத் தீர்க்கதரிசியாகிய சிதேக்கியாவின் தகப்பன். எரே 29[21].

15. ஒரு பாடகன். 1 நாளா 15[18].

16. ஒரு சேனைத்தலைவன். 2 நாளா 23[1].

17. உசியாவின் ஆதிக்கக்காரன். 2 நாளா 26[11].

18. ஆகாசின் மகன். 2 நாளா 28[7].

19. யோசியாவின் காலத்திலிருந்த எருசலேம் பட்டணத்துத் தலைவன். 2 நாளா 34[8].

20. = பாசேயா. 1 நாளா 6[40].

21. பாரூக்கின் பாட்டன். எரே 32[12] 51[59].

**மாஸ்.** Maaz. யெரமெயேல் கோத்திரத்தைச் சேர்ந்தவன். 1 நாளா 2[27].

**மாஸ்.** Maash. ஆராமின் மக்களில் ஒருவன். சேமுடைய பேரன். ஆதி 10[23].

**மாஷால்.** Mashal. ஆசேர் கோத்திர நாட்டிலுள்ள ஒரு ஊர். = மிஷயால். யோசு 19[26] 1 நாளா 6[74].

**மாடு, பசு, எருது.** Ox, Cow, Bullock, Cattle. பலெஸ்தீனு தேசத்தில் ஏர் உழுகிறதற்கும் (உபா 22[10] 1 இரா 19[19]) தானியம் அடிக்கிறதற்கும் (உபா 25[4] ஓசி 10[11]) வண்டி இழுக்கிறதற்கும் (எண் 7[3]) அடிக்கடி சுமைகள் சுமக்கிறதற்கும் எருதுக்களை உபயோகித்தார்கள். 1 நாளா 12[40]. அக்காலத்தில் மாடுகளை அதிகமாய் பலிசெலுத்தி வந்தார்கள். இப்படிப் பலியிடக்கூடிய மாடுகள் முதல் தரமானதாய் இருக்கவேண்டும். மல்கி 1[14]. நியாயப்பிரமாணத்தின்படி மாடுகள் தீட்டில்லாத மிருகங்களானதினால் இஸ்ரவேலர் அவைகளின் மாமிசத்தை விருந்து காலங்களில் சாப்பிட்டார்கள். உபா 14[4] 1 இரா 1[9] 4[23] 19[21]. வனாந்தரத்தில் அவர்கள் பயணம் பண்ணினபொழுது பலியிடப்பட்ட மாடுகளின் மாமிசத்தை மாத்திரம் புசித்தார்கள். லேவி 17[4]. பாலையும் அதிலிருந்து பால்கட்டி தயிர், வெண்ணெய் முதலியவற்றையும் எடுத்துச் சாப்பிட்டார்கள். உபா 32[14] 2 சாமு 17[29] ஏசா 7[22]. ஓய்வு நாட்களில் மாடுகள் வேலை செய்யாதபடிக்குப் பிரமாணம் இருந்தது. யாத் 23[12] உபா 5[14]. எபிரெயருடைய ஆஸ்திகளில் மாடுகள் பிரதானமானவை. ஆதி 24[35] யாத் 12[32] 2 சாமு 12[2] 1 நாளா 27[29] யோபு 1[14]

யோர்தான் நதிக்குக் கிழக்கில் மாடுகளுக்கு நல்ல மேய்ச்சல் இருந்தது. அத்தேசத்து மாடுகள் அதிக மூர்க்கமுள்ளவைகள். சங் 22[12]. மாடு திருடினவன் தான் திருடின ஒவ்வொரு மாட்டுக்கும் பதிலாக இரண்டு அல்லது ஐந்து மாடுகள் கொடுக்கவேண்டும். ஒருவனுடைய காணமற்போன மாட்டை வேறொருவன் கண்டு பிடித்தால் அவன் அதை அதன் சொந்தக்காரனிடம் கொண்டு போய்க் கொடுக்கவேண்டியது. யாத் 22[1] 23[4]. மிரளுகிற மாடு ஒருவருக்கும் சேதம் செய்யாதபடி அதின் சொந்தக்காரன் வெகு ஜாக்கிரதையாய் அதை வைத்திருக்கவேண்டும். யாத் 21[28]. ஜதை மாடுகளை நுகத்தில் புதிதாய்க் கட்டுவது ஒரு விசேஷமான சம்பவம். லூக் 14[19].

'பணியாதமாடு' அதாவது வேலைக்குப் பழக்கப்படாத மாடு என்பது கடவுளின் சித்தப்படி நடக்க விரும்பாதவனைக் குறிக்கிறது. எரே 31[18]. வனாந்தரமான இடங்களில் காட்டு மாடுகள் இருந்தது. இவை பெரியதாயும் மகா மூர்க்கமுள்ளதாயும் இருந்தது. இதற்குத் தமிழ் வேதாகமத்தின் சில வசனங்களில் 'கலைமான்' அல்லது 'காண்டாமிருகம்' என்று சொல்லியிருக்கிறது. ஏசா 51[20] யோபு 39[9]. காண்டாமிருகம் முதலியவை காண்க.

**மாணுக்கன்.** 'Taught'. 1 நாளா 25[8].

**மாணிக்கம்.** Carbuncle. யாத் 28[17] 39[10] எசே 28[13] ஏசா 54[12]. இரத்தினம் காண்க.

**மாதப்பிறப்பு.** New moon. கானானியர் முதலிய சேமியர்கள் சந்திரதேவியினால் தங்களுக்குச் செல்வம் உண்டாகிறது என்று நம்பி அதை வணங்கிவந்தார்கள். இஸ்ரவேலரும் யேகோவாவைப் பூரண பக்தியோடு வணங்குமுன் இந்தச் சந்திரதேவியை வணங்கினார்கள். எரே 7[18] 44[15]. இதுவும் அஸ்தரோத்தேவியும் ஒன்றுதான். இதற்காக அந்த ஜனங்களெல்லாரும் மாதப்பிறப்பாகிய அமாவாசைநாளைத் திருநாளாக எண்ணி அந்தத்தினத்தில் திருவிழா கொண்டாடுவார்கள். மோசேயின் நியாயப்பிரமாணத்தில் ஜனங்கள் விக்கிரகாராதனை செய்யக்கூடாதென்று பல கட்டளைகளிருந்தபோதிலும் அவர்கள் மாதப்பிறப்பு நாளில்

பயபக்தியோடு யேகோவாவை வணங்கி சந்தோஷம் கொண்டாட உத்தரவு கொடுக்கப் பட்டிருந்தது. யாத் $12^{2}$ $40^{3}$ எண் $1^{1}$ $10^{10}$ $28^{11}$ 1 சாமு $20^{5}$ 2 இரா $4^{23}$ 1 நாளா $23^{31}$ 2 நாளா $2^{4}$ எஸ்று $3^{5}$ சங் $81^{3}$ ஏசா $1^{14}$ 66 $^{23}$ எசே $45^{16}$ ஓசி $2^{11}$ ஆமோ $8^{5}$.



மாதளம்.

**மாதளம்பழம்.** Pomegranate. பழைய ஏற்பாட்டில் மாதளம் பழத்தைப்பற்றிப் பல வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மரம் சாதாரணமாய் 10 அடி உயரத்துக்கு மேல் இருக்கமாட்டாது. இது மிக சௌந்தரியமான மரம் என்று எபிரெயர்கள் அபிப்பிராயங்கொண்டிருந்தார்கள். இதன் பூ பெரியதாயும் சிவப்பாயும் இருக்கும். சிற்பாசாரிகள் பிரதான ஆசாரியர்களுடைய அங்கியையும் சாலொமோனின் தேவாலயத்தையும் இதுமாதிரியாக சித்திரித்தார்கள். இதன் பழங்கள் இஸ்ரவேலருக்கு அதிக பிரியம். இதின் பட்டையை மருந்தாக சாப்பிட்டார்கள். இதின் ரசத்தையும் திராட்சரசத்தைப்போல் ஒருமாதிரி ரசமாகச் செய்தார்கள். யாத் $28^{33}$ $39^{24}$ எண் $13^{23}$ $20^{5}$ உபா $8^{8}$ 1 சாமு $14^{2}$ 1 இரா $7^{18}$ 2 இரா $25^{17}$ 2 நாளா $3^{16}$ $4^{13}$ உன். பா $4^{3.13}$ $6^{6}$ $7^{12}$ $8^{2}$ எரே $52^{22}$ யோவே $1^{12}$ ஆகாய் $2^{19}$.

**மாதா.** Mother. தாய், குடும்பம். காண்க.

**மாதாய்.** Maadai. அந்நியஜாதிப் பெண்ணை விவாகம் பண்ணின ஒருவன். எஸ்று $10^{34}$.

**மாதாய்.** Madai. ஆதியாகமத்தில் எழுதப்பட்ட வம்ச அட்டவணையில் மேதியா ஜனங்களுடைய ஆதிபிதாவின் பெயர். ஆதி $10^{2}$.

**மாதான்.** Matthan. யோசேப்பின் பாட்டன். மத் $1^{15}$. இவனும் லூக்கா $3^{24}$-ல் சொன்ன மாத்தாத்தும் ஒருவனுயிருக்கலாம்.

**மாதியா.** Maadiah. [யேகோவா என் அலங்காரம்.] சிறையிருப்பிலிருந்து செருபாபேலுடன் திரும்பிவந்த ஆசாரிய குடும்பம்=மோவதியா. நெகே $12^{5.17}$.

**மாதிரி.** Pattern. யாத் $25^{9}$ 2 இரா $16^{10}$ யோவா $13^{15}$ 1 தீமோ $4^{12}$ தீத்து $2^{7}$ எபி $8^{5}$ 1 பேது $2^{21}$.

**மாதோன்.** Madon. இஸ்ரவேலர் கானான் தேசத்தை ஜெயிக்குமுன் கானானியர்களுடைய தலைநகரங்களில் ஒன்று. யோசு $11^{1}$ $12^{19}$.

**மாத்தனு.** Mattanah. இஸ்ரவேலர் பாளையம் இறங்கின ஒரு இடம். எண் $21^{18}$.

**மாத்தாத்** Matthat.

1. இவனும் மத் $1^{15}$-ல் சொன்ன மாத்தானும் ஒருவனுயிருக்கலாம். லூக் $3^{24}$.

2. லூக்கா எழுதின இயேசுவின் வம்ச அட்டவணையில் உள்ள வேறொருவன். லூக் $3^{29}$.

**மாத்தாத்தா.** Mattatha. இயேசுவின் முற்பிதாக்களில் ஒருவன். லூக் $3^{31}$.

**மாத்தான்.** Mattan.

1. பாகாலின் ஆசாரியன். 2 இரா $11^{18}$.

2. செபதியாவின் தகப்பன். எரே $38^{3}$.

**மாத்திரி.** Matrite. பென்யமீன் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குடும்பம். சவுல் ராஜா இதைச் சேர்ந்தவன். 1 சாமு $10^{21}$.

**மாத்திரேத்.** Matred. மத்ரேத் காண்க.

**மாமன்.** Father-in-law.

1. புருஷனின் தகப்பன். ஆதி $38^{14}$ 1 சாமு $4^{19}$ யோவா $18^{13}$.

2. மனைவியின் தகப்பன். யாத் $3^{1}$ $4^{18}$ 18 அதி. எண் $10^{29}$ நியா $1^{16}$ $19^{4}$.

**மாமி.** Mother-in-law. உபா $27^{23}$ ரூத் $1^{14}$ $2^{11.18}$ $3^{1}$ மீகா $7^{6}$ மத் $8^{14}$ $10^{35}$ மாற் $1^{30}$ லூக் $4^{38}$ $12^{53}$.

**மாமிச இச்சை.** Lust of the flesh. ரோம $13^{14}$ கலா $5^{16.24}$ எபே $2^{3}$ $4^{22}$ 1 தீமோ $6^{9}$ 2 தீமோ $2^{22}$ $3^{6}$ $4^{3}$ தீத்து $2^{12}$ $3^{3}$ யாக் $1^{14}$ $4^{1}$ 1 பேது $1^{14}$ $2^{11}$ $4^{2}$ 2 பேது $1^{4}$ $2^{10.18}$ 1 யோவா $2^{16}$. மாமிச இச்சை என்பது கடவுளுடைய சித்தத்துக்கு விரோதமான நம்முடைய துர்க்குணத்தைப் பொதுவாய்க் குறிக்கிறது. இதை அடக்கிக் கடவுளின் சித்தப்படி நடக்க நமக்குத் திறமையில்லாததினுல் இயேசு செய்த ரக்ஷணிய ஊழியத்தின் மூலமாய்ப் பரிசுத்த ஆவி நம்மில் இறங்கி நம்மைச் சுத்திகரித்து நம்முடைய இச்சைகளை அடக்கி நம்மை ஆண்டு கொண்டு ஜீவவழியிலே நடத்துவார். ஆதி கிறிஸ்தவர்களில் அநேகர் காம இச்சையா

கிய மாமிச இச்சை தன்னில் தானே பாவமுள்ளதாய் இருக்கிறது என்று தீர்மானித்து அதை முழுவதும் கண்டித்து விவாகமில்லாமையையுங் கூட நிந்தித்து வந்தார்கள். புதிய ஏற்பாட்டிலுள்ள போதகத்தை நாம் விசாரித்தால், காமஇச்சை மட்டுக்கு மிஞ்சாதபடிக்கும், வேசித்தனம் முதலிய அசுத்தத்துக்கு இடங்கொடாதபடிக்கும், கடவுள் ஏற்படுத்தின விவாகமில்லாமை சிறந்தது என்றும், அதில் நிதானமாய் நடப்பது தேவசித்தத்துக்கு விரோதமானதல்ல என்றும் தெளிவாய்க் காணலாம்.

**மாமிசம்.** Flesh.

1. தசை, இறைச்சி. யாத் $12^{8}$ 1 சாமு $17^{44}$ 1 கொரி $15^{39}$.

2. மனித ஜாதி. ஆதி $6^{12}$ ஏசா $40^{5}$ எரே $17^{5}$ லூக் $3^{5}$.

3. உயிர்ப்பிராணிகள். ஆதி $7^{15}$ சங் $145^{21}$.

4. மனித தன்மை. மத் $16^{17}$ மாற் $14^{38}$ யோவா $1^{14}$ $8^{15}$ ரோம $8^{3}$ 1 கொரி $15^{50}$ 2 கொரி $5^{16}$ 1 பேது $3^{18}$.

5. பந்து. ஆதி $37^{27}$ 2 சாமு $5^{1}$ $19^{12}$ ஏசா $58^{7}$.

6. ஜென்ம சுபாவ சம்பந்தம். கலா $4^{23}$ ரோம $4^{1}$ எபி $7^{16}$.

7. கலியாண சம்பந்தம். ஆதி $2^{24}$ மத் $19^{5}$ மாற் $10^{8}$ எபே $5^{30}$ 1 கொரி $6^{16}$.

8. பாவமுள்ள சுபாவம், ஜென்ம சுபாவம். ரோம $7^{5.23}$ $8^{8}$ கலா $5^{17}$ 2 கொரி $7^{1}$.

9. கிறிஸ்துவின் மனுஷீகம். எபி $10^{17}$.

10. கிறிஸ்துவின் புண்ணிய பலன்கள் யோவா $6^{55}$.

'மாம்சமான இருதயம்' என்பது இணங்கும் குணத்தைக் குறிக்கும் எசே $36^{26}$.

'மாம்சசிந்தை' என்பது அசுத்த இச்சைகளைக் குறிக்கும். ரோம $8^{6-7}$.

**மாயக்காரன்.** Hypocrite. பழைய ஏற்பாட்டில் 'மாயக்காரன்' என்று சில வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. யோபு $8^{13}$ $17^{8}$ $27^{8}$ நீதி $11^{9}$ ஏசா $9^{17}$ $32^{6}$ $33^{14}$.

புதிய ஏற்பாட்டிலும் மாயக்காரனைப் பற்றிச் சுவிசேஷங்களிலும் நிருபங்களிலும் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. 'மாயக்காரன்' என்று மொழிபெயர்க்கப்பட்ட மூலபாஷை பதத்தின் அர்த்தம் என்னவென்றால் நாடகன், வேஷக்காரன் அல்லது வேஷந்தரித்து மற்றவர்களை வஞ்சிக்கும்படி தன் இயற்கைக் குணத்தை மறைத்து, பார்ப்பவர்களுக்கு விருப்பமான குணத்தை காண்பிக்கிறவன். அதின்படியே புதிய ஏற்பாட்டில் பார்வைக்கு நற்குணத்தைக் காட்டி உண்மையில் துர்க்குணத்தை உடையவர்களுக்கு 'மாயக்காரர்கள்' என்று சொல்லியிருக்கிறது. அக்காலத்தில் பரிசேயர்களில் அநேகர் அந்தரங்கத்தில் மகாபாதகர்களாயிருந்தும் பக்திவேஷம் பூண்டு, ஜனங்களுக்கு முன்பாக நற்குணத்தை நாடுகிறவர்களைப்போல நடந்ததினாலே அவர்கள் 'மாயக்காரர்' என்று அழைக்கப்பட்டார்கள். மத் $6^{2.5.16}$ $15^{7}$ $22^{18}$ $23^{13.15.25.27}$ மாற் $7^{6}$ லூக் $12^{56}$. சத்தியத்தை விரும்பாமல் வெளிக்கு அதைத் தேடுகிறவர்களைப்போலத் தங்களைக் காண்பிக்கிறவர்கள் மாயக்காரர். மத் $7^{5}$ லூக் $6^{42}$ யாக் $3^{17}$.

**மாயம்.** Deceit, Hypocrisy. ஏசா $32^{6}$ மத் $23^{28}$ மாற் $12^{15}$ லூக் $12^{1}$ 1 தீமோ $4^{1}$ யாக் $3^{17}$.

**மாயவித்தை.** Sorcery, Divination. அப் $19^{19}$. சூனியவித்தை காண்க.

**மாயவித்தைக்காரன்.** Sorcerer, Magus. சூனியவித்தை, சீமோன் என்னும் மாயவித்தைக்காரன் காண்க.

**மாயை, வீண்** Vanity. வேதாந்தத் தத்துவ சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் 'மாயை' என்பதற்கும் வேதாகமத்தில் சொல்லியிருக்கும் 'மாயை' என்பதற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.

வேதாகமத்தில் சொன்ன மாயை என்பதின் மூல பாஷையின் அர்த்தம் வெறுமை என்பது. இதின்படி இந்தப் பதத்தின் அர்த்தங்களைப் பின்வருமாறு சொல்லலாம்.

வீணானது. பலனற்றது. யோபு $7^{3}$ சங் $144^{4}$ பிர 1 அதி. மு.

நன்மையின்மை, தீமை, பொய். உபா $32^{21}$ யோபு $15^{35}$ சங் $4^{2}$ $12^{2}$ $24^{4}$ $26^{4}$ $41^{6}$ $119^{37}$ $144^{8}$ கொலோ $2^{8}$

விக்கிரகாராதனை. 2 இரா $17^{15}$ எரே $2^{6}$ $8^{19}$ $18^{15}$ யோனா $2^{8}$.

உண்மையைத் தேடாமை. வீணை சிந்தை. எபே $4^{17}$.

வீண்வார்த்தை. 2 பேது $2^{17}$.

**மாரநாதா.** Maranatha. 'மாரநாதா' என்பது அரமேயபதம். இதற்கு 'என் ஆண்டவரே, வாரும்' அல்லது 'என் ஆண்டவர் வந்திருக்கிறார்' என்று அர்த்தம். ஆதிகிறிஸ்தவர்கள் 'இயேசுகிறிஸ்து திரும்பிவருவார்' என்று தங்கள் மனதிலிருக்கிற நம்பிக்கையைச் சுருக்கத்தில் காட்டும்படி இந்தப் பதத்தை உபயோகிப்பார்கள். பிற்காலங்களில் சிலர் இதின் மூலஅர்த்தத்தை அறியாமல்

'அநாதேம' என்னும் பதத்தோடு இதைச் சேர்த்து இவற்றின் அர்த்தம் 'சபிக்கப்பட்டவனைத் தண்டிக்கும்படி கர்த்தர் வருவாராக' என்று நினைத்து, கிறிஸ்தவ சபையிலிருந்து தள்ளப்படுவோர்களுக்கும் தள்ளப்படவேண்டியவர்களுக்கும் சாபவார்த்தையாய் இதை உபயோகித்தார்கள். 1 கொரி 16[22].

**மாராலா.** **Maralah.** செபுலோன் கோத்திரத்தார் நாட்டின் மேற்கு எல்லையில் உள்ள ஒரு இடம். யோசு 19[11].

**மாராள்.** **Mara.** மாராள் என்பதற்குக் கசப்பு என்று அர்த்தமானதினால் நகோமி தனக்கு உண்டான துன்பத்தின் பொருட்டு, தனக்கு இனி இன்பமானது என்று அர்த்தங்கொண்ட நகோமி என்னும் பெயரைத் தள்ளிவிட்டு; கசப்பானது என்று அர்த்தங் கொண்ட மாராள் என்னும் பெயரை வைத்துக்கொண்டாள். ரூத் 1[20].

**மாரிகாலம்.** **Winter.** பலெஸ்தீனா தேசத்தில் நவம்பர் மாதம் முதல் பெப்ருவரி மட்டும் (கார்த்திகை முதல் மாசிமட்டும்) கல்மழை அதிகமாய்ப் பெய்யும். அக்காலத்தில் சாதாரணமாய் வடகாற்று வீசும். ராத்திரிகாலங்களில் குளிர் அதிகமாய் இருக்கும். சமயாசமயங்களில் உறைந்த பனிமழைபெய்து பள்ளத்தாக்குகளில் உஷ்ணகாலம் மட்டும் இருக்கும். ஆதி 8[22] சங் 74[17] எரே 36[22] ஆமோ 3[15] சக 14[8] உன். பா 2[11] மத் 24[20] மாற் 13[18] யோவா 10[22] அப் 27[12] தீத் 3[12] 2 தீமோ 4[21].

**மாரோத்.** **Maroth.** [கசப்பானவைகள்.] மீகா தீர்க்கதரிசி சொன்ன ஒரு ஊர். இது இருந்த இடம் தெரியாது. மீகா 1[12].

**மார்க்கண்டம்.** **Breast.** யாத் 29[26] லேவி 7[30] 10[14].

**மார்க்கபேதம்.** **Heresy.** புதிய ஏற்பாட்டிலுள்ள நூல்களை இயற்றினவர்கள் சொன்ன மார்க்கபேதங்களைப்பற்றி அப்போஸ்தலர்களுக்கு அதிக விசனம். சபையில் எப்பொழுதும் ஞானஐக்கியம் இருக்கவேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். தவிர மார்க்க பேதத்தினால் சகோதர ஐக்கியம் குறைந்து போகும் என்றும் இதினால் கிறிஸ்தவ சபை தனக்கு ஏற்பட்ட ஊழியத்தைச் சரிவர நிறைவேற்றுவது அசாத்தியம் என்றும் நினைத்தார்கள். 1 கொரி 11[19] 12[25] கலா 5[20] 2 பேது 2[1] தீத் 3[10] யூதர்கள் கிறிஸ்து மார்க்கத்துக்கு 'மார்க்கபேதம்' என்று பெயரிட்டார்கள். அப் 24[5.14] 28[22]. அப்போஸ்தலர் காலத்திற்குப் பிறகு இரண்டாம் நூற்றாண்டில் வேதப்புரட்டர்கள் சுவிசேஷ போதகத்தை உண்மையாய்க் கைக்கொண்டு வந்த திருச்சபையிலிருந்து பிரிந்துபோய், தங்களுக்கேற்ற விசேஷித்த சமயங்களை ஸ்தாபிக்க ஆரம்பித்தார்கள். **மதபேதம்** காண்க.

**மார்க்கம்.** **Way.** கிறிஸ்தவசபை. அப் 9[2] 19[23] 22[4] 24[14.22].

'ஜீவமார்க்கம்.' அப் 2[28].

'சத்தியமார்க்கம்.' 2 பேது 5[2].

வழி காண்க.

**மார்க்கவசம்.** **Breast plate.** ஏசா 59[17] உவமையாக. வெளி 9[9.17]. 'நீதி என்னும் மார்க்கவசம்.' எபே 6[14]. 'விசுவாசம் அன்பு' என்னும் மார்க்கவசம். 1 தெச 5[8].

**மார்சியோனித்தர்.** **Marcionites.** கி–பி. 150ஆம் முதல் 250ஆம் மட்டும் மார்சியோனித்தர் என்னும் சமயத்தார் அதிகரித்தார்கள். மார்சியோன் என்பவன் ஏறக்குறைய கி–பி. 140–ம் ஆண்டில் ரோமாபுரிக்கு வந்து அங்கேயிருந்த கிறிஸ்தவர்கள் உண்மையாய் நடக்காததைக் கண்டு பதிதமார்க்கத்தை ஸ்தாபித்தான். சுவிசேஷங்களில் லூக்கா எழுதின சுவிசேஷத்தைமாத்திரம் இவன் ஏற்றுக் கொண்டு வந்தான். மேலும் பவுல் எழுதிய நிருபங்களில் தனக்கு இசைந்திராத வசனங்களைத் தள்ளிப்போட்டான். இவன் பழைய ஏற்பாட்டுக்கும் புதிய ஏற்பாட்டுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்று அபிப்பிராயங்கொண்டிருந்தான்.

இவன் எல்லா நன்மைக்கும் காரணமான ஒரு தேவனும், எல்லா தீமைக்கும் காரணமான ஒரு தேவனும் ஆக இரண்டு தேவர்கள் உண்டு என்றும்; கிறிஸ்து பரமகடவுளே என்றும்; கிறிஸ்து பிறவாமல் தாமாகவே தோன்றி, பவுலுக்குத் தம்மை வெளிப்படுத்தினார் என்றும் போதித்தான். கிறிஸ்து தீமைக்குக் காரணமாயுள்ள தேவன் செய்த உபாயத்தினால் சிலுவையில் அறையப்பட்டும் அவர் அவனை ஜெயித்து பரி. பவுலுக்குத் தன்னை வெளிப்படுத்தினார் என்று சொன்னான். இந்த சமயத்தார் சந்நியாசிகளைப்போல ஜீவித்து இரத்தசாட்சிகளாய் மரிப்பதில் அதிக விருப்பமுடையவர்களாயிருந்தார்கள்.

**மார்த்தாள்.** **Martha.** லாசருவின் சகோதரி. லூக் 10[38] யோவா 11 அதி 12[2] இவள் வீட்டுக்காரியங்களில் அதிக கவலை கொண்டவளாயும், சுறுசுறுப்புள்ளவளாயும், கொஞ்சம் ஆத்திர குணமுடையவளாயும், நற்புத்தியுள்ளவளாயும் இருந்தாள்.

**மார்பு.** Breast. லூக் $18^{13}$ $23^{48}$ வெளி $15^{6}$. 'மார்பிலே சாய்ந்துகொள்ளுகிறது' யோவா $13^{25}$ $21^{20}$. **பந்தி** காண்க.

**மார்ப்பதக்கம்** Breast-plate. பிரதான ஆசாரியர் போட்டிருந்த மார்ப்பதக்கத்தைப் பற்றிய விபரம் யாத்திராகமம் 28-ம் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் தங்கள் விசேஷித்த ஊழியத்தை நடத்தும் போது இதை அணிந்துகொள்வார்கள். ஊரீமையும் தும்மீமையும் வைக்கும்படி அதிலே பையிருக்கும். உயர்ந்த சணலினால் அரை முழ நீளமும் அகலமுமான சதுரமாய்ச் செய்யப்பட்டது. வெளிப்பாகத்தில் 12 உயர்ந்த ரத்தினங்கள் நாலு வரிசைகளாக பதிக்கப்பட்டிருக்கும். இந்த ரத்தினங்கள் யேசோவாவுக்கு ஞாபகக் குறிப்பாக இருந்தன. பிரதான ஆசாரியருடைய மார்பில் ஏபோத்துடனே பொற்சங்கிலிகளால் இணைக்கப்பட்டிருக்கும். **மார்க்கவசம்** காண்க. யாத் $28^{13}$ $39^{8}$ லேவி $8^{8}$.

**மாளிகை.** Palace. **அரமனை, வீடு** காண்க.

**மாளுகிறது.** To die. ஆதி $6^{17}$. **மரணம்** காண்க.

**மாறுகிறது.** Change. பிர $8^{1}$ ஆப $1^{11}$ மல் $3^{6}$.

**மாறுபாடு.** Backsliding, perverse. எண் $22^{32}$ நீதி $17^{20}$ $14^{2}$ $12^{8}$ $4^{24}$ $28^{18}$ ஏசா $30^{12}$ எரே $2^{19}$ ஓசி $11^{17}$ மத் $17^{17}$ லூக் $9^{41}$ அப் $20^{30}$ பிலி $2^{15}$ 1 தீமோ $6^{5}$.

**மாற்கு.** Mark, Marcus. மாற்கு என்னும் மறுபெயர்கொண்ட யோவான் எருசலேம் பட்டணத்துக் கிறிஸ்தவ சபையைச் சேர்ந்த கண்ணியம்பெற்ற மரியாள் என்பவளின் மகன். பேதுரு சிறைச்சாலையிலிருந்து சபையார் கூடி ஜெபக்கூட்டம் நடத்திக்கொண்டிருந்த அவள் வீட்டுக்குப் போனான். அப் $12^{12}$. இவள் யூத ஸ்திரீயாயிருந்தால் மாற்கு யூதமார்க்கத்தைச் சேர்ந்தவன் என்றும், இவள் சகோதரனாகிய பர்னபா என்பவன் லேவி கோத்திரத்தான் ஆனதால் இவன் லேவியனென்றும் நாம் சொல்ல வேண்டியது. அப் $4^{36}$ கொலோ $4^{10}$. யூதனாகிய இவனுக்கு யோவான் என்பது ஜென்மப் பெயர். ஆனால் யூதர்கள் அக்காலத்தில் பொதுவாயிருந்த கிரேக்கபாஷையை வியாபார விஷயங்களில் வழங்கினதினால் வழக்கமாய்த் தங்களுக்குக் கிரேக்கபெயரையே வைத்துக்கொண்டார்கள். இதின்படி யோவானும் புறஜாதிகளுடன் வியாபாரம் செய்தவன் ஆனதினால் சுவிசேஷத்தைக் கிரேக்கபாஷையில் எழுதும்போது மாற்கு என்னும் கிரேக்க பெயரைத் தரித்துக்கொண்டான். இயேசுவைப் பின்தொடர்ந்து பிறகு ஓடிப்போன 'ஒரு வாலிபன்' இவன்தான் என்று சிலர் நினைக்கிறார்கள். மாற் $14^{51}$. பர்னபாவும் பவுலும் முதலாம் சுவிசேஷப் பிரயாணம் செய்த பொழுது மாற்கு அவர்களுக்கு சீஷன் அல்லது தோழனாயிருந்தான். அப் $12^{25}$ $13^{5}$. அவர்கள் சீப்புருதீவை விட்டு சின்ன ஆசியாவிலுள்ள பெர்கே பட்டணம்போய்ப் புறமதஸ்தர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரபல்லியப்படுத்தும் பொருட்டு புறமதஸ்தர்கள் உள்ள நாடுகளுக்கு அவர்கள் போகிறதை அறிந்து இவன் பயந்தோ அல்லது புறமதஸ்தர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதைப்பற்றிச் சந்தேகங்கொண்டோ அவர்களை விட்டு எருசலேமுக்குத் திரும்பிப்போனான். அப் $13^{13}$. இதினிமித்தம் பர்னபா இரண்டாமுறை சுவிசேஷப்பிரயாணம் பண்ணும்பொழுது இவனைக் கூட்டிக் கொண்டுபோக விரும்ப, பரி. பவுல் அதற்கு இணங்கவில்லை. இந்தக் காரணத்தைப்பற்றிப் பரி. பவுலுக்கும் பர்னபாவுக்கும் கொஞ்சம் மனஸ்தாபம் உண்டானதினால் பர்னபா சீப்புருதீவுக்கும், பரி. பவுல் சீலாவைத் தெரிந்துக்கொண்டு சீரியாவுக்கும் சிலிசியாவுக்கும் போனார்கள். அப் $15^{37}$.

பிறகு பரி. பவுலுக்கும் பர்னபாவுக்கும் இருந்த மன வருத்தம் நீங்கிப்போனது. ஏனென்றால் பரி. பவுல் எழுதின நிருபங்களில் மாற்கு தன்னோடு இருக்கிறான் என்றும், தனக்கு உடன் ஊழியக்காரனும் ஆறுதல் படுத்துகிறவனுமா யிருக்கிறான் என்றும், கொலோசே பட்டணத்துக் கிறிஸ்தவர்களுக்கு நன்றாய்த் தெரிந்தவனாயிருக்கிறான் என்றும் அவன் அவர்களைச் சந்திக்கக் கருதுகிறான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. கொலோ $4^{10}$ 2 தீமோ $4^{11}$ பிலே $1^{24}$. பரி. பேதுரு 'பாபிலோன்' என்னும் ரோமாபுரியிலிருந்தபொழுது மாற்குவும் இவனோடு இருந்தான். மேலும் பரி. பேதுரு இவனை 'என் குமாரன்' என்று சொல்லுகிறதினால் மாற்கு இவனுக்கு மெத்த உகந்தவனாயிருந்தான் என்று தோன்றுகிறது. 1 பேது $5^{13}$.

**குறிப்பு:** மற்றப்படி 'என் குமாரன்' என்று பேதுரு சொன்னது தன் சொந்த புத்திரனைப் பற்றியிருந்தால் இந்த மாற்கு வேறு என்றும் மற்றவசனங்களில் சொல்லப்பட்ட மாற்கு வேறு என்றும் நாம் சொல்லவேண்டியது.

பரி. பவுல் சிரச்சேதம் பண்ணப்பட்டு இரத்தசாக்ஷியாய் மரித்தபிறகு மாற்கு பரி. பேதுரு இரத்தசாக்ஷியாய் மரிக்குமட்டும்

அவனோடு இருந்தான் என்று ஆதி கிறிஸ்தவ பாரம்பரியத்தினால் தோன்றுகிறது. கி–பி. 68.

யோவான் என்று பெயர்கொண்ட இந்த மாற்கு இரண்டாம் சுவிசேஷத்தின் ஆக்கியோன் என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை.

**மாற்கு எழுதின சுவிசேஷம். The Gospel according to St. Mark.**

1. ஆதி கிறிஸ்தவ பிதாக்கள் இதைக்குறித்துக் கொடுத்த சாக்ஷி:

பரி. லூக்கா தான் எழுதிய சுவிசேஷத்தின் முகவுரையில் பரி. மாற்கு எழுதின சுவிசேஷத்தைக் குறித்துப் பேசுகிறான் என்று சிலர் நினைக்கிறார்கள். லூக் $1^{1-4}$.

பாப்பியஸ் (*Papias*) என்பவன் கி–பி. 140–ம் வருஷத்துக்கு முன் மாற்கு சுவிசேஷத்தைப் பற்றிப் பின் வருமாறு சொல்லுகிறான்:— மாற்கு பேதுரு சொன்ன பிரசங்கங்களை (கிரேக்கபாஷையில்) மொழி பெயர்த்தான். கிறிஸ்து சொன்னவைகளையும் செய்தவைகளையும் பற்றிப் பேதுரு உரைத்ததை இவன் (மாற்கு) ஞாபகத்தில் வைத்து யாவையும் நிதானமாய் எழுதினான். ஆனால் காலக்கிரமத்தின்படி இவன் இவைகளை எழுதவில்லை. இவன் ஆண்டவர் சொன்னவைகளைக் கேட்கவாவது மற்ற சீஷர்களுடனே அவரைப் பின் செல்லவாவது இல்லை. இவன் பேதுருவுக்குத் தோழனாய் மாத்திரம் இருந்தான். பேதுரு ஆண்டவர் அருளிய வாக்குகளைக் காலக் கிரமத்தின்படி மாற்கு எழுதக் கருதாமல் தன் போதனையைக் கேட்கிறவர்களுக்கு வேண்டியவற்றை மாத்திரம் எழுதினான். மாற்கு என்பவன் பேதுரு சொன்னயாவையும் எழுதும்படிக்கும் அவைகளில் பொய்யைச் சேர்க்காதபடிக்கும் ஜாக்கிரதையாயிருந்து தான் ஞாபகத்தில் வைத்திருந்த யாவையும் தப்பிதமில்லாமல் எழுதினான்.

ஏறக்குறைய கி–பி. 150-ம் வருஷத்தில் ரத்தசாக்ஷியாய் மரித்த யுஸ்தீனும் (*Justin Martyr*) தாத்தியனும் (*Tatian*) தெர்துள்ளியானும் (*Tertullian*) ஏறக்குறைய கி–பி. 200-ம் வருஷத்தில் அலெக்சந்திரியாவிலிருந்த கிலமெந்தும் பரி. மாற்கு என்பவன் பரி. பேதுரு அவனுக்கு அறிவித்தவைகளை இந்தச் சுவிசேஷத்தில் எழுதினான் என்று சொல்லுகிறார்கள். இதெல்லாம் பார்த்து கி–பி. 150–ம் வருஷத்துக்கு முந்தியே பரி. மாற்கு எழுதின சுவிசேஷம் பல இடங்களிலும் பரவிற்று என்று நாம் தீர்மானமாய்ச் சொல்லுகிறோம்.

2. இந்தச் சுவிசேஷத்தில் பரி. பேதுரு அருளின போதனை யிருப்பது:

இந்தச் சுவிசேஷத்தை நாம் பார்வையிட்டால் அதிலே பரி. மாற்கு பரி. பேதுருவின் போதகங்களை மாத்திரம் எழுதினான் என்னும் ஆதி கிறிஸ்தவர்களின் பாரம்பரியத்துக்கும் பல அத்தாக்ஷிகள் உண்டு. மேலும் அதில் பேதுரு கண்ணாரப் பார்த்தவைகள் உண்டு. இயேசு யவீரின் மகளை உயிரோடெழுப்பும்போதும், அவர் மறுரூபமடையும் போதும், கெத்செமனேயில் அவர் மனச் சஞ்சலம் அடையும்போதும் பரி. பேதுருவும், யோவானும், யாக்கோபும் அவரோடு இருந்தார்கள். பரி. யாக்கோபு வெகு சீக்கிரத்தில் ரத்தசாக்ஷியாய் மரித்துப் போனதினால் அவன் இவைகளைப்பற்றிச் சொல்லியிருந்தால் அது சீக்கிரத்திலே மறக்கப்பட்டிருக்கும். பரி. யோவானும் தான் எழுதிய சுவிசேஷத்தில் இவைகளைக் குறித்துச் சொல்லுகிறதில்லை. இப்படிச் சொல்லாதது ஒருவேளை இவன் அவைகளை ஞாபகத்தில் வைக்காததினாலேயோ அல்லது அவைகளைப் போதிப்பது அவசியமானதல்ல என்று எண்ணினதினாலேயோ என்பது தெரியவில்லை. ஆதலால் பரி. பேதுரு இவைகளைக் குறித்து ஆதி கிறிஸ்தவர்களுக்குத் தெரிவித்தான் என்று நினைக்கவேண்டும். மேலும் பரி. மாற்கு எழுதின சுவிசேஷத்தையும் மற்றவர்கள் எழுதின சுவிசேஷத்தையும் ஆராய்ந்து பார்த்தால் பரி. மாற்கு தனக்கு பரி. பேதுரு சொன்னவைகளைத் தன்னுடைய சுவிசேஷத்தில் எழுதினான் என்று நாம் தீர்மானிக்கக்கூடும். இந்த சுவிசேஷத்தில் மாத்திரம் பேதுரு இயேசுவுக்குப்பின் மற்றவர்களை வனாந்தரத்துக்குக் கூட்டிப்போனதையும் (மாற் $1^{36}$) அவர் அத்திமரத்தைப் பற்றிசொன்னவைகளையும் (மாற் $11^{21}$) ஒலிவமலையில் இயேசு வரும்துன்பங்களைப்பற்றிப் பேசும்போது நாலு சீஷர்கள் அவரோடு இருந்ததையும் (மாற் $13^{3}$) பரி. பேதுரு இயேசுவை மறுதலித்ததையும் (மாற் $14^{55.66.72}$) பற்றி சொல்லியிருப்பதைப் பார்த்தால் பரி. பேதுரு சொன்னவைகளைத்தான் பரி. மாற்கு எழுதியிருக்கிறான் என்பதற்குச் சந்தேகமில்லை. மேலும் இந்தச் சுவிசேஷத்தில் பரி. பேதுருவை மேன்மைப்படுத்தும்படிக்கான யாதொன்றும் இல்லாததினால் பரி. பேதுருதான் பரி. மாற்கு இதில் எழுதப் போகிறவற்றையறிந்து தன்னைச் சிறப்பிக்

கும்படியான விஷயங்களை இவன் எழுதக்கூடாதென்று கட்டளையிட்டிருப்பான் என்பதற்குச் சந்தேகமில்லை. தவிர இந்தச் சுவிசேஷகன் பல வசனங்களில் இயேசு செய்தவைகளையும் சொன்னவைகளையும் தானே நேரில் கண்டதுபோலும் கேட்டதுபோலும் தெளிவாய் எழுதுகிறதினாலே பரி. பேதுரு கற்பித்தவைகள்தான் இதற்கு மூலம் என்று நாம் சொல்லக்கூடும்.

3. கண்ணாரக் கண்டவன்போல் இதில் சொல்லியிருப்பது:

இந்தச் சுவிசேஷம் ஆதியில் எழுதப்பட்டிருந்த கிரேக்க பாஷைக்கும், பிறகு இது மொழி பெயர்க்கப்பட்ட தமிழ் முதலிய மற்ற பாஷைகளுக்கும் இலக்கண நடைகளின் வித்தியாசம் பலவானதால் அதின் பாஷை நடையைப்பற்றி இங்கே விவரமாய்ச் சொல்வது கூடாதகாரியம். ஆனால் கிரேக்க பாஷையிலிருக்கும் இச்சுவிசேஷத்தை வாசித்தவன் அதின் இலக்கண நடைகளை கவனிப்பானாகில் இது இயேசுவோடு இருந்த ஒருவனுடைய வார்த்தைகள்தான் என்று சொல்வான். கிரேக்கபாஷையைத் தெரிந்தவன் பின்வரும் வசனங்களினால் பாஷை நடையிலும் இலக்கண விஷயத்திலும் இதற்குத் திருஷ்டாந்தங்கள் காணலாம். $1^{10.27}$ $2^{4}$ $4^{38}$ $6^{40}$ $9^{36}$ $10^{16.21}$.

**மாற்று வஸ்திரம்**. Change of raiment. ஆதி $45^{22}$ நியா $14^{12}$. 2 இரா $5^{5.22}$.

**மாற்றுகிறது**. Change. ஆதி $31^{7}$ சங் $102^{26}$ $106^{20}$ தானி $7^{25}$ எரே $13^{23}$ எபி $7^{12}$ ரோம $1^{26}$.

**மானாகாத்**. Manahath. ஏதோமியர்களின் மூற்பிதாக்களில் ஒருவன். ஆதி $36^{23}$ 1 நாளா $1^{40}$ $2^{51}$.

**மானாத்தியர்**. Manahathites. மனாகாத் அல்லது மெனுகோத் என்னும் ஊரில் குடியிருக்கிறவர்கள். 1 நாளா $2^{54}$.

**மானிக்கேயர்**. Manicheans. மானிக்கேயர் என்பவர்கள் பாரசீக தேசத்தாராகிய மானி அல்லது மானிக்கேயு என்பவனுடைய சீஷர்கள். இவன் ஏறக்குறைய கி-பி. 215-ம் ஆண்டில் பிறந்து பாரசீக ராஜாவின் அரமனையில் தன் உபதேசங்களைப் போதித்து சாஸ்திரிகள் என்ற மாக்கியர் (*Magi*) என்பவர்களால் உபத்திரவப்பட்டு கி-பி. 276-ம் ஆண்டில் அவர்களால் சிலுவையில் அறையப்பட்டு மரித்தான். இவன் அநேக நூல்களையும் நிருபங்களையும் எழுதியிருந்தபோதிலும் தற்சமயத்தில் அவைகளில் ஒன்றும் கிடையாது.

நிதானமாய்ப்பேசவேண்டுமானால் மானிக்கேய மார்க்கத்துக்கும் கிறிஸ்து மார்க்கத்துக்கும் சம்பந்தமேயில்லை, ஏனெனில் இது கிறிஸ்தவ பதிதர்கள் செய்த மார்க்க போதனையல்ல, பூர்வீககாலத்துபாபிலோனியருடைய மார்க்கத்துக்கு இசைந்தது. அநேக கிறிஸ்தவ பதிதர்கள் இதிலுள்ள போதனையை ஏற்றுக்கொண்டதினாலும், மானிக்கேயரில் அநேகர் கிறிஸ்தவ மார்க்கக் கொள்கைகளை அநுசரித்ததினாலும், கிறிஸ்தவ ஆதி பிதாக்களில் அநேகர் பதிதமார்க்கங்களில் இதுவும் ஒன்று என்பார்கள்.

மானி என்பவனுடைய போதகத்தில் விசேஷங்களாவன: ஆதியிலே ஒளியும் இருளும், நன்மையும் தீமையும், கடவுளும் வஸ்துவும் ஆகிய இரண்டு மூலகாரணங்களிருந்தது. அவை இரண்டிற்கும் எப்போதும் தீரா விரோதமிருந்தது. ஒவ்வொன்றிற்கும் ஒரு ராஜ்யம் உண்டு. கடவுளின் ராஜ்யத்தில் ஒளியிலிருந்து பன்னிரண்டு யுகங்களும் (*Aeons*), வஸ்துக்களின் ராஜ்யத்தில் தீயும் பிசாசுகளும் இருந்தது. இந்தப் பிசாசுகள் கடவுளின் ராஜ்யத்தில் உள்ளவைகளைப் பிடிக்கப் படையெடுக்கிறது. அவைகள் முதலில் கடவுள் உண்டாக்கப்போகிற ஆதி மனிதனைப் பிடித்து, அவனிடத்திலுள்ள ஒளி மங்கிப்போகப் பண்ணினதினாலே, கடவுள் அவனை அவர்களிடமிருந்து நீக்கியிருந்தும், ஆதியிலிருந்த மனிதர்களுடைய குணத்தில் நன்மையோடு தீமையும் கலந்திருக்கிறது. நோவா, ஆபிரகாம், இயேசு முதலிய சிலரிடத்தில் ஒளியின் குணம் அதிகமாயிருந்தபடியால் அவர்கள் மனிதருக்குச் சற்குருக்களாயிருந்தார்கள். யூதர்கள் சிலுவையில் அறைந்த இயேசு தோற்றமுள்ள ஒரு ஆவிதான். அவர் அனுப்பிய தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவர் மானி என்பவனே. கடைசியில் இருளின் ராஜ்யம் தீப்பற்றி அற்றுப்போம். மனுஷர் பூரண பிரகாசமுள்ள ராஜ்யத்தை அடையவேண்டுமானால், இச்சையை அடக்கி, மாமிசம், முட்டை, பால், திராட்சரசம் முதலியவைகளை அருந்தாமல், பொக்கிஷம் சேர்ப்பதைத் தவிர்த்து, எப்போதும் பிரமச்சாரிகளாயிருத்தல் அவசியம். மானிக்கேயர் பலியிடுகிறதில்லை. அவர்கள் ஜெபம் உபவாசம் முதலியவற்றைச் செய்து, மானி இயற்றிய நூல்களை வாசித்து, பழைய ஏற்பாட்டைத் தள்ளி, புதியேற்பாட்டில் சில வசனங்களைமட்டும் படித்து ஆராதனை நடத்துவார்கள்.

இக்கொள்கைக்காரர் பல தடவைகளில் துன்பப்படுத்தப்பட்டார்கள். ஆனால் பத்தாம்

நூற்றாண்டு வரையிலும் இந்தக் கொள்கையைக்கொண்ட சிலர் இருந்தார்கள். பத்தாம் நூற்றாண்டுக்குப் பின் இவர்களுடைய கள்ளப்போதனை வேறுவித பதிதர்களுடைய கோட்பாடுகளோடே கலந்து போனதினால் மானிக்கேய மார்க்கம் அற்றுப்போனது.



மான்.

**மான். Deer.** வனாந்தரங்களிலும் காடுகளிலும் வசிக்கிற மான்கள் பலவகைப்படும். நியாயப்பிரமாணத்தின்படி மான் சுத்தமான மிருகமாகையால் யூதர்கள் இதன் மாமிசத்தைப் புசிக்கலாம். உபா $14^{5}$ 1 இரா $4^{23}$. மான்கள் மலைநாடுகளில் அதிகவேகமாய் ஓடிக் குதித்துத் திரியும். மான் அதிகமாய்ப் பயப்படுகிற ஒரு மிருகம். அது தன் குட்டிகளை மிகவும் அன்பாய் நேசிக்கும். உபா $12^{15}$ 2 சாமு $22^{34}$ சங் $18^{33}$ $29^{9}$ நீதி $5^{18}$ உன். பா $2^{7}$ $3^{5}$ எரே $14^{5}$ ஆப $3^{19}$.



பெண் மான்.

## மி.

**மிகவேல். Michael.** [யேகோவாவைப் போன்றவர் யார்?] எஸ்ரா $8^{8}$. **மிகாவேல்** காண்க.

**மிகா. Mica.** சிக்கிரியின் மகன். 1 நாளா $9^{15}$. =மிகாயா. நெகே $12^{35}$.

**மிகாயா. Micaiah, Michaiah.** [யேகோவாவுக்கு ஒப்பானவர் யார்?]

1. இம்லாவின் குமாரனாகிய மிகாயா தீர்க்கதரிசி ஆகாபுக்கு வரும் அபஜெயத்தை முன்னறிவித்தான். 1 இரா 22 அதி 2 நாளா 18 அதி.

2. அக்போரின் தகப்பன். 2 இரா $22^{12}$.

3. ஜனங்களுக்குப் போதிக்கும்படி யோசபாத் ராஜாவினால் நியமிக்கப்பட்ட ஒரு பிரபு. 2 நாளா $17^{7}$.

4. அலங்கத்தைப் பிரதிஷ்டை செய்த ஆசாரியரில் ஒருவன். நெகே $12^{35}$.

5. எரேமியாவின் காலத்திலிருந்த கெமரியா என்பவனுடைய மகன். எரே $36^{11}$.

**மிகாயாள். Michaiah.** அபியாவின் தாயாகிய மிகாயாளின் மறுபேர் மாகாள். 1 இரா $15^{2}$ 2 நாளா $11^{20}$ $13^{2}$.

**மிகாவேல், மிகாயேல் Michael.** [கடவுளைப்போன்றவர் யார்?]

1. வேவுபார்க்கப் போனவர்களில் ஆசேர் கோத்திரத்தானுடைய தகப்பன். எண் $13^{13}$.

2,3 காத்கோத்திரத்தைச் சேர்ந்த இருவர். 1 நாளா $5^{13}$.

4. பாடகர்களில் ஒரு குடும்பம். 1 நாளா $6^{40}$.

5. இசக்கார் கோத்திரத்தைச்சேர்ந்த ஓர் குடும்பம். 1 நாளா $7^{3}$.

6. பென்யமீனில் ஒரு குடும்பம். 1 நாளா $8^{16}$.

7. தாவீதினிடம் வந்த ஆயிரத்துச் சேர்வைக்காரரில் ஒருவன். 1 நாளா $12^{20}$.

8. யோசபாத் ராஜாவின் குமாரன். 2நாளா $21^{2}$.

9. செப்பதியாவின் தகப்பன். எஸ்ரா $8^{8}$.

10. ஓம்ரியின் தகப்பன். 1 நாளா $27^{18}$.

**மிகாவேல் என்ற பிரதான தூதன். Michael.** மிகாவேல் என்பவனே தூதர்களில் பிரதானமானவன் என்று யூதர்கள் நினைத்தார்கள். இவன் மோசேயின் சரீரத்தை அடக்கம்செய்தானென்றும், அதைச் செய்தபோது சாத்தானுடனே போர் புரிந்தானென்றும், பிரபுக்களில் இவனே பெரிய

பிரபு என்றும், யூதஜனங்களை காப்பாற்று கிறான் என்றும் எண்ணினார்கள். உபா 34[6] தானி 10[13] 12[1]. புதிய ஏற்பாட்டிலே பரி. யூதாவும் பரி. யோவானும் மிகாவேலைப் பற்றிப் பேசுகிறார்கள். இவன் சாத்தானுடனே சண்டை செய்கிறதைப்பற்றிப் பரி. யூதாவும், இவன் சாத்தானுக்கு விரோதமாய்ப் படையெடுக்கிறானென்று பரி. யோவானும் சொல்லுகிறார்கள். யூதா 1[9] வெளி 12[7].

**மிக்கிரி.** Michri. பென்யமீன் கோத்திரத்தான். 1 நாளா 9[8].

**மிக்தாம்.** Michtam. 'மிக்தாம்' என்பதற்கு 'தியானம்' அல்லது 'தங்கப்பாட்டு' என்று அர்த்தமாயிருக்கலாம். சங் 16, 56-60 தலைப்புகளில்.

**மிக்தாலேல்.** Migdal-el. [கடவுளின் கோபுரம்.]

நப்தலி கோத்திரத்தின் நாட்டிலுள்ள ஓர் ஊர். யோசு 19[38].

**மிக்தால்–காத்.** Migdal–Gad [காத் கோத்திரத்தின் கோபுரம்.] தென் யூதாவிலுள்ள ஓர் ஊர். யோசு 15[37].

**மிக்தோல்.** Migdol. [கோட்டை கோபுரம்.]

1. எகிப்தியர் சிவந்த சமுத்திரத்தில் கரையில் கட்டியிருந்த ஒரு கோட்டைக் கோபுரமாயிருக்கலாம். யாத் 14[2].

2. எகிப்துதேசத்தின் வடகிழக்கு எல்லையிலுள்ள ஒரு இடம். எசே 29[10] 30[6].

3. எகிப்துதேசத்தில் யூதர்கள் போய்க் குடியேறின ஒரு ஊர். எரே 44[1] 46[14].

**மிக்மாஸ்.** Michmash. பென்யமீன் கோத்திரத்தில் பெத்தேலுக்குச் சமீபமான ஒரு ஊர். பெலிஸ்தியர் இதில் பாளையமிறங்கியிருந்தார்கள். யோனத்தானும் அவனுடைய ஆயுததாரியும் இதைப் பிடித்தார்கள். 1 சாமு 13, 14 அதி. எஸ்று, நெகேமியா, ஏசாயா என்பவர்கள் இதின் பேரைக் குறிப்பிடுகிறார்கள். எஸ்று 2[27] நெகே 7[31] 11[31] ஏசா 10[28].

**மிக்மேத்தா.** Michmethah. சீகேமுக்குக் கிட்ட ஓர் இடம். யோசு 16[6] 17[7].

**மிக்லோத்.** Mikloth.

1. 1 நாளா 8[32].

2. 1 நாளா 27[4].

**மிக்னேயா.** Mikneiah. வாசல் காவலாளனாகிய ஒருவன். 1 நாளா 15[8].

**மிசுல்லாம்.** Meshullam. எஸ்று 8[16]. மெசுல்லாம் காண்க.

**மிஸ்காப்.** Misgab [அரண்.] இடம் தெரியாது. எரே 48[1].

**மிஸ்பா, மிஸ்பே.** Mizpah, Mizpeh. 'மிஸ்பா' என்பதற்குச் 'சத்துருக்கள் வருவதைக் காவல்காரர் நின்று பார்க்கிற இடம்' அல்லது 'காவல் கோபுரம்' என்று அர்த்தம். பலெஸ்தீனு தேசத்தில் இந்த அர்த்தங்கொண்ட இடங்கள் ஏழு உண்டு.

1. யாக்கோபும் லாபானும் உடன்படிக்கை பண்ணின இடம். ஆதி 31[49]. மிஸ்பா என்பது காவல்காரர் நிற்குமிடம் என்று அர்த்தங்கொள்வதினால் அவ்விடத்தில் அவ்விருவரும் கட்டின கற்குவியல் தாங்கள் செய்த உடன்படிக்கையை நிறைவேற்றும் விஷயத்தில் கடவுள் பார்க்கிறவர் என்பதற்குச் சாட்சியாயிருக்கும். இந்த இடம் கலிலேயாக் கடலுக்குத் தென்கிழக்கில் 40 மைல் தூரத்திற்கப்பால் இருக்கும் என்று அனேகர் எண்ணியபோதிலும் அதற்குத் தகுந்த அத்தாட்சி இல்லை.

2. எர்மோன் மலையின் அடிவாரத்தில் மிஸ்பே என்ற நாடு ஒன்று இருந்தது. யோசு 11[3].

3. தென்யூதாவில் எருசலேம் பட்டணத்துக்குத் தென்மேற்கில் 34 மைல் தூரத்தில் 'மிஸ்பே' என்னும் ஒரு ஊர் இருந்தது. யோசு 15[38].

4. யெப்தா நியாயாதிபதி வசித்த 'மிஸ்பா.' இதற்கு 'ராமாத் மிஸ்பே' என்பது மறு பெயர். இது யோர்தான் நதிக்குக் கிழக்கிலும் யாப்போக் நதிக்குத் தெற்கிலும் இருந்த ஒரு பெரிய மலை என்று தோன் நியா 10[17] 11[11] யோசு 13[26] ஓசி 5[1].

5. இஸ்ரவேலர் அடிக்கடி யோர்தான் நதிக்கு மேற்கிலுள்ள மிஸ்பா என்னும் ஊரில் கூட்டங் கூடினார்கள். நியா 21[1] 1 சாமு 7[5] 10[17]. ஆசா ராஜா இதில் கோட்டை கட்டினான். 1 இரா 15[22]. நேபுகாத்நேச்சார் யூதா ராஜ்யத்தை ஜெயித்தபிறகு அந்தத் தேசத்திற்குக் கெதலியாவை அதிபதியாக நியமித்தான். கெதலியா எருசலேமுக்கு வடமேற்கில் 4½–மைல் தூரத்திலுள்ள மிஸ்பா என்னும் இந்த ஊரில் வாசஞ்செய்தான். 2 இரா 25[23] எரே 40[6] 41 அதி. இஸ்ரவேலர் சாமுவேல் தீர்க்கதரிசியை இவ்வூரில் அடக்கம்பண்ணினதாக முன்னோர்கள் சொன்னார்கள்.

6. மோவாப் தேசத்தில் 'மிஸ்பே' என்னும் ஒரு ஊர் இருந்தது. 1 சாமு 22[3].

7. நெகே $3^{15-19}$-ல் சொல்லப்பட்ட 'மிஸ்பே' என்னும் இடம் முன் எழுதிய 5-ம் மிஸ்பாவாய் இருக்கலாம், அல்லது அது எருசலேம் பட்டணத்தில் காவலாளருக்குக் கட்டின இடத்தைக் குறிக்கலாம்.

**மிஸ்பார்.** **Mispar.** சிறையிருப்பிலிருந்து வந்தவன். = மிஸ்பெரேத். எஸ்று $2^{2}$ நெகே $7^{6}$.

**மிஸ்பெரேத்.** **Mishpereth.** மிஸ்பார் காண்க.

**மிஸ்மன்னு.** **Mishmanna.** காத் கோத்திரத்தில் ஒரு தலைவன். 1 நாளா $12^{10}$.

**மிஸ்மா.** **Mishma.** சிமியோன் கோத்திரத்தைச்சேர்ந்த ஒரு குடும்பம். 1 நாளா $4^{25}$

**மிஸ்ரபோத் - மாயீம்.** **Misrephoth-Maim.** யோசுவாவினால் ஜெயிக்கப்படாத சீதோனியரின் தென் எல்லையிலுள்ள ஓர் ஊர். யோசு $11^{8}$ $13^{6}$.

**மிஸ்ராயீம்.** **Mizraim.** காமின் குமாரன். ஆதி $10^{6}$ 1 நாளா $1^{8}$. இந்தப் பெயர் எகிப்து தேசத்தையும் ஜனத்தையும் குறிக்கும்.

**மிஸ்ராவியர்.** **Mishraites.** கீரியாத்யாரீமிலுள்ள ஒரு வம்சம். 1 நாளா $2^{53}$.

**மிஷயால்.** **Mishal.** = மாஷால். யோசு $19^{26}$ 1 நாளா $6^{74}$.

**மிஷ்மா.** **Mishma.** இஸ்மவேலின் மகன். ஆதி $25^{14}$.

**மிஷ்னு.** **Mishna.** தல்மூத். (பக்கம். 377) காண்க.

**மித்னியன்.** **Mithnite.** 1 நாளா $11^{43}$. மிதினி என்னும் ஊர் இருந்த இடம் தெரியாது.

**மிதுனம்.** **Castor and Pollux.** பரி. பவுல் மெலித்தா தீவிலிருந்து இத்தாலியாவுக்கு யாத்திரைசெய்த கப்பலின் அடையாளம். ரோம கப்பலோட்டிகள் தங்கள் கப்பலின் பக்கத்தில் ஒரு படம் அல்லது சிலையை அடையாளமாக வைப்பது வழக்கம். அதுவே அந்தக் கப்பலுக்குப் பெயராயிருக்கும். மிதுனம் என்பது விசேஷமாய் மாலுமிகளைக் காப்பாற்றின சகோதரர்களாகிய இரண்டு தேவர்கள் என்று ரோமர்கள் நம்பினார்கள். நாம் பார்க்கும் மிதுன இராசி இந்தத் தேவர்களுடையது என்பார்கள். அப் $28^{11}$.

**மித்கா.** **Mithkah.** இஸ்ரவேலர் வனாந்தரத்தில் பாளயம் இறங்கின ஓர் இடம். எண் $33^{28}$.

**மித்திரேதாத்.** **Mithredath.** [சூரிய தெய்வமாகிய மித்ராவின் ஈவு.]

1. தேவாலயத்தின் பணிமுட்டுகளை சேஸ்பாத்சாரிடம் ஒப்புக் கொடுக்கும்படி கோரேஸ் ராஜா நியமித்த பிரதானி. எஸ்று $1^{8}$.

2. சமாரியா நாட்டிலிருந்த பாரசிய ராஜ்யத்து உத்தியோகஸ்தன். எஸ்று $4^{7}$.

**மித்திலேனே.** **Mitylene.** சின்ன ஆசியாவுக்கு மேற்கிலுள்ள லெஸ்பஸ் (*Lesbos*) [illegible] நகரம். இது ஒரு நல்ல துறைமுகமானதினாலே பவுலின் கப்பல் ஒரு இரவு இங்கு தங்கினது. அப் $28^{11}$.

**மித்தீன்.** **Middin.** யூதா வனாந்தரத்திலுள்ள ஓர் ஊர். யோசு $15^{61}$.

**மித்ராஷ்.** **Midrash** தல்மூத் (பக் 377) காண்க.

**மிப்காத்** என்னும் வாசல். **Miphkad.** நெகே $3^{21}$. எருசலேம் காண்க.

**மிப்கார்.** **Mibhar.** தாவீதின் போர்வீரரில் ஒருவன். 1 நாளா $11^{38}$.

**மிப்சாம்.** **Mibsam.**

1. இஸ்மவேலின் புத்திரரில் ஒருவன். ஆதி $25^{13}$.

2. சிமியோன் கோத்திரத்தான். 1 நாளா $4^{25}$.

**மிப்சார்.** **Mibzar.** [கோட்டை.] ஏதோமியரின் பிரபு. ஆதி $36^{42}$.

**மியாமீன், மினியாமீன், மின்யமீன், மீயாமின்.** **Mijamin, Miniamin.**

1. அந்நியஜாதி பெண்ணை விவாகம் செய்தவன். எஸ்று $10^{25}$.

2. ஆசாரிய குடும்பம். 1 நாளா $24^{9}$ நெகே $10^{7}$ $12^{5}$ $12^{17}$.

3. ஒரு லேவியன். 2 நாளா $31^{15}$.

4. ஒரு ஆசாரியன். நெகே $12^{41}$.

**மிரியாம்.** **Miriam.**

1. மோசே ஆரோன் என்பவர்களின் சகோதரி. பால்ய மோசேயைக் காப்பாற்றினாள். யாத் $2^{4}$. தீர்க்கதரிசியாயிருந்த இவள் ஸ்தோத்திரப்பாட்டு பாடினாள். யாத $15^{20}$ வனாந்தரத்திலே மோசேக்கு விரோதமாய் இவள் ஒருதரம் கலகம்செய்து குஷ்டரோகியானாள். பின் அவன் செய்த வேண்டுதலினால் சுகமடைந்தாள். எண் $12^{15}$. இஸ்ரவேலரின் வனாந்தரப் பிரயாணம் முடிவுபெறும் சமயத்தில் இறந்துபோனாள். எண் $20^{1}$. மோசே ஆரோன் என்பவர்களோடு கூட

இவளும் இஸ்ரவேல் ஜனங்களுக்குத் தலைமை யானவளா யிருந்தாள். மீகா $6^{4}$.

2. காலேபின் வம்சத்தைச்சேர்ந்த ஒரு ஆணாய் அல்லது பெண்ணாய் இருக்கலாம். 1 நாளா $4^{17}$.

**மிருகசீரிஷம்.** Orion. யோபு $9^{9}$ $38^{31}$ ஆமோ $5^{8}$. நட்சத்திரம் காண்க.

**மிருகம்.** Beast. பகுத்தறிவுள்ள மனுஷர்களைத்தவிர இதர பிராணிகளெல்லாம் பொதுவாய் 'மிருகம்' என்று அழைக்கப்படும். சங் $8^{7}$ $36^{6}$ நீதி $12^{10}$. சில வசனங்களில் நாலுகால் ஜீவன்களைமட்டும் குறிக்கும். லேவி $11^{2}$. வேறு வசனங்களில் நாட்டு மிருகங்களைக் குறிக்கும். ஆதி $1^{25}$. ஆதாமின் பாவத்தினாலே மிருகங்களுக்குத் தண்டனை வந்தது. ஆதி $3^{14}$ யாத் $9^{6}$ $13^{15}$ எசே $38^{20}$ ஓசி $4^{3}$. மிருகங்களைக் காப்பாற்றும்படி நியாயப்பிரமாணத்தில் சில கட்டளைகள் உண்டு. யாத் $20^{10}$ $23^{11}$ லேவி $22^{28}$ $25^{7}$ உபா $22^{4}$ $25^{4}$. பலி செலுத்தும் விஷயத்தில் சுத்தமான மிருகங்கள் அசுத்தமான மிருகங்கள் என இருவகுப்புகளுண்டு. ஆதி $7^{2}$ லேவி 11 அதி. ராஜாக்களையும் ஜனங்களையும் குறிக்கும்படி முதலை முதலிய மிருகங்கள் உவமையாய்ச்சொல்லப்பட்டிருக்கிறது. சங் $22^{12}$ $74^{14}$ ஏசா $27^{1}$ எசே $29^{3}$ தானி $7^{8}$ 1 கொரி $15^{32}$ 2 பேது $2^{12}$ வெளி 12, 13 அதி.

எசே $1^{26}$–ல் எசேக்கியேல் தீர்க்கதரிசி சொல்லுகிற 'விலங்கு' உயிரோடிருக்கிறவர்களைக் குறிக்கும். வெளிப்படுத்தின விசேஷத்தில் சொல்லப்படுகிற 'மிருகங்கள்' என்பது இவ்வுலகத்தில் நீதிமான்களைத் துன்பப்படுத்துகிற அதிகாரிகளைக் குறிக்கும். வெளி $11^{7}$ $13^{1}$. அந்த நூலில் கண்ட 'ஜீவன்கள்' என்பது எசேக்கியேல் தரிசனத்தில் கண்ட விலங்குகளைப்போலவே வானலோகத்தில் ஊழியஞ்செய்கிற மகிமையுள்ள அதிகாரிகளைக் குறிக்கும்.

**மிருதுச்செடி.** Myrtle. பலெஸ்தீனா தேசத்தில் கர்மேல் கிலேயாத் முதலிய மலைநாடுகளில் மிருதுச்செடி காணப்படும். சில நாடுகளில் ஜனங்கள் இதைத்தோட்டங்களில் வைத்துப் பயிர் செய்கிறார்கள். இதின் இலை கரும்பச்சையாயும், இதின் பூ வெண்மை நிறமாயும் இருக்கும். ஜனங்கள் இதின் கனியைப் புசிப்பார்கள்.

யூதர்கள் கூடாரப்பண்டிகையில் இதின் கிளைகளை உபயோகிப்பார்கள். நெகே $8^{15}$ ஏசா $41^{19}$ $55^{13}$ சக $1^{8}$.

**மிலாலாய்.** Milalai. ஆசாரிய குடும்பம். நெகே $12^{36}$.

**மிலாறு.** Rod. யோபு $9^{34}$ நீதி $14^{3}$ ஏசா $9^{4}$ $28^{27}$ மீகா $6^{9}$.

**மிலேத்து.** Miletus. சின்ன ஆசியாவின் மேற்பாகத்தில் எபேசுப் பட்டணத்துக்குத் தெற்கே 20 மைல் தூரத்திலிருந்த ஒரு துறைமுகம். பரி. பவுல் தன் மூன்றும் பிரயாணத்தை முடித்து எருசலேமுக்குத் திரும்பிப்போகையில், இந்தத் துறைமுகத்துக்கு வந்து எபேசு சபையின் மூப்பர்களை வரவழைத்து, அவர்களுக்கு ஒரு விசேஷித்த பிரசங்கம் செய்தான். அப் $20^{16}$. அவன் ரோமாபுரியில் ராயனுக்கு அபயமிட்டபின் விடுதலைபெற்றுப் பிரயாணம் செய்தபோது, மிலேத்துவிலே துரோப்பீமுவை வியாதிப்பட்டவனாக விட்டுவந்தான். 2 தீமோ $4^{20}$.

**மில்காள், மில்க்காள்.** Milcah.

1. நாகோரின் மனைவி. ஆதி $11^{29}$ $22^{20}$ $24^{15}$.

2. செலோப்பியாத்தின் மகள். எண் $26^{33}$ யோசு $17^{3}$.

**மில்கோம்.** Milcom. [அவர்களுடைய ராஜா.] அம்மோன் புத்திரர் வணங்கிய தேவதை. சாலொமோன் ராஜா ஒலிவமலையில் மில்கோமுக்காக ஒரு தேவாலயம் கட்டினான். 1 இரா $11^{5}$ 2 இரா $23^{13}$. இதுவும் மோளேகு தேவனும் ஒன்றுதான் என்று சிலர் நினைக்கிறார்கள். 1 இரா $11^{7}$.

**மில்லோ.** Millo.

1. சீகேம் ஊருக்குச் சமீபமான ஓர் இடம். இது இருந்த இடம் இன்னதென்று திட்டமாய்த் தெரியாது. நியா $9^{6}$ 2 இரா $12^{20}$.

2. எருசலேம் பட்டணத்திலுள்ள ஒரு மேடு அல்லது கோட்டை. 2 சாமு $5^{9}$ 1 இரா $9^{15}$ 1 நாளா $11^{8}$ 2 நாளா $32^{5}$.

**மினா.** Mina. பணம் காண்க.

**மினாசோன்.** Mnason. சீப்புரு தீவிலிருந்து வந்த முதல் சீஷர்களில் ஒருவன். பரி. பவுல் எருசலேமுக்குப் பிரயாணம் பண்ணும்போது அவன் வழியில் மினாசோனின் வீட்டில் தங்கினான். அப் $21^{16}$.

**மினியாமீன்.** Miniamin. மியாமீன் காண்க.

**மினுக்கு.** Brightness. எசே $28^{7,17}$.

**மின்யமீன்.** Miniamin. மியாமீன் காண்க.

**மின்னல். Lightning.** யாத் $20^{18}$ 2 சாமு $22^{15}$ மத் $24^{27}$. பளபளவென்று பிரகாசிக்கும் லோகத்துக்கும் ஆயுதத்துக்கும் உவமையாக சொல்லப்பட்டிருக்கிறது. உபா $32^{41}$ யோபு $20^{25}$ நாகூ $2^{4}$. கடவுள் தரிசனமாகும்போது உண்டாகும் மின்னல். யாத் $19^{16}$ 2 சாமு $22^{15}$ சங் $18^{14}$ $97^{4}$ எரே $10^{13}$. அவர் மின்னலைப் பிரகாசிக்கச் செய்வார். யோபு $38^{35}$ சங் $18^{14}$ $135^{7}$ யோபு $28^{26}$. மின்னலாகிய அம்புகளினாலே கடவுள் தமது சத்துருக்களை ஜெயிப்பார். சங் $144^{6}$. தானியேல் கண்ட புருஷனுடைய முகத்தின் மகிமை மின்னலைப்போல் பிரகாசித்தது. தானி $10^{6}$.

தூதனின் மகிமையும் அப்படியே. மத் $28^{3}$. சாத்தானுக்கு வரும் அபஜெயம் மின்னலைப்போல் சடுதியாய் நேரிடும். லூக் $10^{18}$. இடிமுழக்கம் காண்க.

**மின்னி. Minni.** பாபிலோனியாவுக்கு விரோதமாய் வரும் ஒரு ஜனம். எரே $51^{27}$.

**மின்னித், மின்னீத். Minnith.** இந்த ஊர் இருந்த இடம் தெரியாது. நியா $11^{33}$ எசே $27^{17}$.

## மீ.

**மீகா. Micah, Micha, Michah.**

1. நியாயாதிபதிகளின் ஆகமத்தில் 17-ம் 18-ம் அதிகாரங்களில் சொன்ன எப்பிராயீம் கோத்திரத்தான். தன் தாயினிடத்திலிருந்து 1,100 வெள்ளிக்காசுகளைத் திருடிய இவன் அவள் இட்ட சாபத்துக்குப் பயந்து அதைத் திரும்பக் கொடுக்கும்போது அவன் தாயார் அந்தப் பணத்தில் ஒரு பங்கை எடுத்து ஒரு விக்கிரகத்தை உண்டாக்கினாள். யோனத்தான் என்னும் ஒரு லேவியன் மீகாவின் வீட்டுக்கு வந்தபோது இவன் அவனை அந்த விக்கிரகத்துக்குப் பூசாரியாக ஏற்படுத்தினான். அக்காலத்தில் தாண் கோத்திரத்தார் தங்கள் கோத்திரத்துக்கு நிலம் சம்பாதிக்கும் பொருட்டு, அவ்விடம் வந்து, அந்த லேவியனை மீகா பண்ணின ஏபோத்தையும் தெராப்பீமையும் விக்கிரகத்தையும் எடுத்துக்கொண்டு, மீகாவைத் தங்கள் பக்கத்துக்கு வரும்படி செய்தார்கள். இவ்விதமாய்த் தாண் கோத்திரத்தார் தாண் பட்டணத்தில் தேவஸ்தலத்தை ஏற்படுத்தினதாகத் தோன்றுகிறது.

2. ரூபன் கோத்திரத்தான். 1 நாளா $5^{5}$.

3. சவுலின் பேரன். 1 நாளா $8^{34}$ 2 சாமு $9^{12}$.

4. ஒரு லேவியன்=மிகா. 1 நாளா $9^{1}$. நெகே $11^{17}$.

5. ஒரு கோகாத்தியன். 1 நாளா $23^{20}$.

6. நியாயப்பிரமாண நூலை விசாரிக்கும்படி அனுப்பப்பட்ட அப்தோனின் தகப்பன். 2 நாளா $34^{20}$.

7. ஒரு லேவியன். நெகே $10^{11}$.

8. மீகா தீர்க்கதரிசி காண்க.

**மீகா. Micah.** [யேகோவாவைப்போன்றவர் யார்?]

1. தீர்க்கதரிசி. மீகா என்னும் தீர்க்கதரிசன ஆகமத்தை எழுதினவன். கி-மு. எட்டாம் நூற்றாண்டில் தேவ வாக்கை உரைத்த ஆமோஸ் ஓசியா ஏசாயா என்பவர்களுடனே தேவ வசனத்தைக் கூறினான். வேத சாஸ்திரிகள் பெரும்பாலும் இவன் கி-மு 722-ம் வருஷத்தில் சர்கோன் சமாரியாவை அழிப்பதற்கு முன்னே சில தீர்க்கதரிசனங்களைக் கூறினான் என்று நினைக்கிறார்கள். வேறு சிலர் இவன் இதற்கு 15 வருஷங்களுக்குப் பிறகு தீர்க்கதரிசனம் உரைத்தான் என்று சொல்லுகிறார்கள். ஆமோஸ், ஓசியா என்பவர்களுடைய காலத்துக்குச் சற்றுப் பிறகு மீகா தீர்க்கதரிசனம் கூறினான் என்றும், இவன் ஏசாயாவின் காலத்தில் தீர்க்கதரிசனம் உரைத்தான் என்றும், சந்தேகமின்றி நாம் சொல்லக்கூடும். எப்படியாவது இவன் கி-மு. 720-ம் வருஷமுதல் 695-ம் வருஷவரை ஜனங்களுக்குப் போதித்தான்.

மீகாவைப்பற்றி நமக்குக் கொஞ்சம்தான் தெரியும். இவன் பிறந்த ஊராகிய மொரேசாவும் மோர்ஷேத்காத்தும் ஒன்றுதான் என்றும், இது யூதாவின் தென்மேற்கு பாகத்தில் சமபூமியில் இருந்தது என்றும் நாம் சொல்லலாம். அப்படியானால் மீகா பிறந்த ஊருக்கும் எருசலேம் பட்டணத்துக்கும் உள்ள தூரம் ஒருநாள் பிரயாணம்.

மீகா ஜனங்களுக்குப் பிரசங்கம் பண்ணினான் என்றும், இவன்தான் கொடுத்த போதகத்தை எழுதினான் என்றும் சொல்லலாம். இவன் விசேஷமாய் ஜனங்களுக்கு அவர்கள் செய்த குற்றத்தையும் அதற்கு வரும் தண்டனையையும்பற்றிப் போதகம்பண்ணி ஜனங்கள் செய்த பாவங்களுக்கு அக்காலத்தில் சிறப்போடிருந்த சமாரியாவும் எருசலேமுமே அடையாளங்கள் என்றும், அக்காலத்தில் அதிகாரிகளும் தனவான்களும் ஏழைகளுக்குச் செய்த அநியாயம் யேகோவாவுக்கு முன்பாக விசேஷமான குற்றம் என்றும் கூறினான். மீகா $1^{5}$ $2^{1}$ $3^{8-12}$.

சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமானால் மீகா தீர்க்கதரிசியானவன் யேகோவா நீதி

நியாயத்தை விரும்பி மனுஷர் செய்த அநியாயத்தையும் துன்மார்க்கத்தையும் வெறுத்து அவற்றைத் தண்டித்து, நீதிமான்களை ஆசீர்வதிப்பார் என்று போதித்தான். மீகா செய்த போதகத்தை யூதர்களில் சிலர் அதிகமாய்க் கவனித்தார்கள். ஏனெனில் ஏறக்குறைய நூறு வருஷத்துக்குப் பிறகு எரேமியா தீர்க்கதரிசியின் காலத்தில் சில மூப்பர்கள் மீகா தீர்க்கதரிசியின் வாக்கியங்களை ஜனங்களுக்கு ஞாபகப்படுத்தினார்கள். எரே 26[18].

2. **மீகாவின் ஆகமம்.** இந்த நூலில் மூன்று பாகங்கள் உண்டு.

i. 1–3 அதி. ஜனங்கள் செய்த பாவத்தைப்பற்றிய தீர்க்கதரிசனம்.

ii. 4–5 அதி. யேகோவா நீதிமான்களுக்குச் செய்யப்போகிற ஆசீர்வாதங்களைப் பற்றியவை.

iii. 6–7 அதி. இவைகளில் தீர்க்கதரிசி பலகாரியங்களைப்பற்றிப் பேசி விசேஷமாய் ஜனங்கள் செய்த பாவங்களைப்பற்றி அறிக்கையிடுகிறான்.

வேதசாஸ்திரிகள் எல்லாரும் மீகா தீர்க்கதரிசி 1-3 அதிகாரங்களில் எழுதின தீர்க்கதரிசனங்களைக் கூறினான் என்று நினைக்கிறார்கள்.

4–5 அதிகாரங்களில் சொன்ன தீர்க்கதரிசனங்களைப்பற்றிச் சிலர் சந்தேகப்படுகிறார்கள். இவைகளில் சிலவற்றில் இஸ்ரவேல் சிறையிருப்புக்குப் போகிறதையும் அதில் அவர்களுக்கு மீட்பு கிடைக்கிறதையும் ஜனங்களுக்கு வருகிற நியாயத்தீர்ப்பையும் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அதிகாரங்களில் தீர்க்கதரிசி எழுதாத சில வாக்கியங்கள் இருந்தாலும் அவைகள் பெரும்பாலும் இவன் உரைத்தவை என்று சொல்வது அவசியம்.

6–7 அதிகாரங்களில் சொன்னவைகளை நாம் விசாரித்தால் இவைகளை மீகா தீர்க்க ^^ உரைத்தான் என்று சொல்லுகிறதற்குப் போதிய அத்தாட்சி இல்லை. ஏசாயா தீர்க்கதரிசி முதலில் எழுதின புஸ்தகத்தோடு பின்காலத்தில் அநேக வாக்கியங்கள் சேர்க்கப்பட்டிருக்கிறதுபோல மீகா கூறின வாக்கியங்களுடனே பிந்தின காலத்தில் வேறு சில நியாய போதனைகளும் சேர்க்கப்பட்டிருக்கிறது என்று நாம் சொல்லலாம்.

சுருக்கமாய்ச் சொல்லவேண்டுமானால் மீகா தீர்க்கதரிசி எழுதின முதல் மூன்று அதிகாரங்களும் இன்னும் சில வாக்கியங்களும் முதலாவது ஒரு நூலிலே சேர்க்கப்பட்டிருந்தது. 100 வருஷங்களுக்குப்பின் இந்த நூல் எருசலேம் பட்டணத்தில் நன்றாய்த் தெரிந்திருந்தது. எரே 26[17]. அப்பொழுது வேறொருவன் அந்த நூலிலே சில வாக்கியங்களைச் சேர்த்தான். இவை மீகா கூறின வாக்கியங்களோ இல்லையோ என்று தெரியாவிட்டாலும் எபிரெயர் சீக்கிரத்தில் இவைகளை மீகா கூறியவைகள் என்று நம்பிவந்தார்கள். எப்படியாவது இந்த நூலில் சேர்க்கப்பட்ட வாக்கியங்களெல்லாம் மீகா தீர்க்கதரிசி யேகோவாவினுடைய நீதி நியாயத்தைக் குறித்துக் கூறின போதகம் ஜனங்களுடைய மனதில் அழுந்தும்படி பிரயோஜனமாய் இருந்தது.

**மீகாள்.** Michal. சவுல் ராஜாவின் இளைய குமாரத்தி. பெலிஸ்தியர்கள் தாவீதைக் கொன்றுபோடுவார்கள் என்று சவுல் ராஜா நம்பி அவன் 100 பெலிஸ்தியர்களைக் கொன்றுபோட்டால்தான் மீகாளை அவனுக்கு விவாகம் செய்துகொடுப்பேன் என்று வாக்களித்திருந்தான். தாவீது அப்படியே 100 பேரைக் கொன்றபிறகு சவுல் வெட்கமடைந்து தன் வாக்கை நிறைவேற்றினாலும், தாவீதைக் கொன்றுபோடும்படி அவன் வீட்டிற்குச் சேவகர்களை இரகசியமாய் அனுப்பினான். மீகாள் அக்காலத்தில் தாவீது சேவகர்கள் கைக்குத் தப்பி ஓடிப் போகும்படி உதவிசெய்தாள். 1 சாமு 19[11]. சவுல் அதற்குப்பிறகு மீகாளைப் பல்த்தியேல் என்பவனுக்கு மனைவியாகக் கொடுத்தான். தாவீது ராஜாபிஷேகம் பெறும்பொழுது மறுபடியும் அவளைப் பல்த்தியேலிடமிருந்து எடுத்துத் தன்னிடமாய்ச் சேர்த்துக்கொண்டான். உடன்படிக்கைப் பெட்டியை எருசலேம் பட்டணத்திற்குக் கொண்டுவரும்பொழுது, தாவீது அதற்கு முன்பாக நடனமாடிக்கொண்டு வந்ததைக் கண்டு, அரசன் இப்படி செய்வது தகாது என்று மீகாள் அவனைக் கண்டித்ததினிமித்தம் அவன் அவளைத் தள்ளிவிட்டான் என்று தோன்றுகிறது. 2 சாமு 3[14] 6[16].

**மீசா.** Mizzah. ஏதோமியரில் ஒரு பிரபு. ஆதி 36[13].

**மீசாவேல், மீஷாவேல்.** Mishael.

1. ஒரு கோகாத்தியன். யாத் 6[22].

2. எஸ்றாவின் பக்கத்தில் நின்றவன். எஸ்றா 8[4].

3. தானியேலின் தோழன். இவன் மறு பெயர் மேஷாக். தானி 1⁷ 2⁴⁹ 3¹².

**மீசியா. Mysia.** சின்ன ஆசியாவின் வடமேற்கிலுள்ள ஒரு நாடு. பரி. பவுல் இதின் மூலமாய்ப் பிரயாணம் பண்ணினான். அப் 16⁷.

**மீஷாம். Misham.** பென்யமீன் கோத்திரத்தில் ஒரு குடும்பம். 1 நாளா 8¹².

**மீஷாவேல். Mishael.** மீசாவேல் காண்க.

**மீட்கும்பொருள். Ransom, Atonement.**

1. கடவுளுக்கு நியமிக்கப்பட்ட நிலப் பலன் ஆடுமாடு முதலியவைகளுக்குப் பதிலாகச் செலுத்தவேண்டிய காணிக்கை. யாத் 21³⁰ யோபு 33²⁴ 36¹⁸ சங் 49⁸.

2. தங்களுக்கு வாதை உண்டாகாதபடிக்கு இஸ்ரவேலர் யாவரும் யேகோவாவுக்கு அரைச்சேக்கல் மீட்கும்பொருளாகக் கொடுப்பது கட்டாயம். யாத் 30¹².

3. கிறிஸ்துவின் மரணத்தினால் உண்டான புண்ணிய பலன்கள் பாவிகளை ரட்சிக்கிறதற்கு மீட்கும்பொருளாய் இருக்கிறது. மத் 20²⁸ 1 தீமோ 2⁶. மீட்பு, பாவநிவாரண பலி காண்க.

**மீட்பர், மீட்பு. Redeemer, Redemption.**

I. பதம்.

1. 'மீட்பர்' 'மீட்பு' என்னும் பதங்களைப் பற்றி எபிரெயர்கள் பழைய ஏற்பாட்டிலும், கிரேக்குபாஷையை வழங்கின கிறிஸ்தவர்கள் புதிய ஏற்பாட்டிலும் தெரிந்துகொண்ட மூலஅர்த்தத்தை நாம் தமிழ் வேதாகமத்திலே அறிவது கஷ்டம். ஏனெனில் தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் மூலபாஷைப் பதங்களின் அர்த்தத்தைத் தமிழ் வேதாகமத்தில் விளக்கிக் காட்டும்படி அவ்வளவு பிரயாசப்படாமல் வெவ்வேறான வசனங்களில் வெவ்வேறான தமிழ்ப்பதங்களால் மூலபாஷைப் பதங்களை மொழிபெயர்த்திருக்கிறார்கள்.

தமிழில் 'மீட்பு' என்னும் பதத்துக்குத் 'திருப்புதல்' என்பது பொதுவான அர்த்தம். இதின்படி 'திரும்பப் பெறுதல்' 'பிறர் அபகரித்த பொருளைத் திரும்ப அடைதல்,' அல்லது 'அடிமைத்தனத்தில் அகப்பட்ட ஆளை விடுதலை செய்தல்' என்னும் அர்த்தங்கள் உண்டாயின. இப்படியாக 'மீட்பு' என்னும் பதத்துக்கு 'விடுதலைசெய்தல்' என்று அர்த்தமாயிற்று.

2. பழைய ஏற்பாட்டில் எபிரெயபாஷையில் 'மீட்பு' என்பதை அல்லது 'மீட்பர்' என்பதைக் குறிக்கும்படி இரண்டு பகுதிகள் சொல்லப்பட்டிருக்கிறது.

i. கா—அல், *Ga-al.* பழி வாங்குகிறவன் இறந்துபோன தனது இனத்தானுக்கு வந்த சேதத்தினிமித்தம் கொலையாளியினிடத்தில் வாங்கின பழியானது ஒருவித மீட்பு என்று எபிரெயர் நினைத்தார்கள். ஏனெனில் அவன் கொலையாளியைக் கொன்றுபோட்டதினால் அக்கொலைபாதகனைச் சேர்ந்த கோத்திரத்தாருக்குக் கொலையாளி செய்த குற்றத்தினின்று விடுதலை உண்டாயிற்று. எண் 35¹². ஏசாயா என்னும் ஆகமத்தின் 2—ம் பாகத்திலும், இன்னும் பல வசனத்திலும் இப்பதம் புறமதஸ்தர் இஸ்ரவேல் ஜனத்துக்குச் செய்த அநியாயத்துக்காக அவர்களிடத்தில் பழி வாங்கித் தமது ஜனங்களை இரட்சித்துக் காப்பாற்றின யேகோவாவைப்பற்றிச் சொல்லியிருக்கிறது. யோபு 19²⁵ சங் 19¹⁴ ஏசா 41¹⁴ 43¹⁴.

ii. பாதா. *Padhah.* இதற்குத் 'திரும்ப வாங்குகிறது' என்று அர்த்தம். இதின்படி ஒரு தகப்பன் யேகோவாவுக்கென்று நியமிக்கப்பட்ட தனது முதல் பேறான குமாரனுக்குப் பதிலாக பலிசெலுத்தி, அந்தக் கிரயத்தினாலே தன் மகனைத் 'திரும்பப்பெற்று,' அல்லது அவனை விடுதலைசெய்து, அவனை மீட்டுக்கொள்ளுகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது யாத் 13¹³ 34²⁰.

3. புதிய ஏற்பாட்டில் 'மீட்பு' என்பதை அல்லது 'மீட்பர்' என்பதைக் குறிக்கும்படி இரண்டு பதங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

i அகோராசோ. *Agorazo.* இதற்குக் கிரயத்துக்கு வாங்குதல் என்று அர்த்தம். இதனால் கிறிஸ்தவர்களுக்கு இயேசுவினால் கிரயத்துக்குக் கொள்ளப்பட்டவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 1 கொரி 6²⁰ 7²³ 2 பேது 2¹. இப்பதத்துக்கு 'மீட்கிறது' என்றும் சொல்லியிருக்கிறது. வெளி 5⁹ 14³ கலா 3¹³.

ii. லூட்ரோசிஸ், அப்போலூட்ரோசிஸ். *Lutrosis, Apolutrosis.* கிரயம் கொடுத்து விடுதலைசெய்தல் என்பது இதற்குப்பொருள். ரோம 3²⁴ 8²³ 1 கொரி 1³⁰ எபே 1⁷ கொலோ 1¹⁴.

II மீட்பரின் ஊழியம்.

எபிரெயர்களில் பக்திமான்கள் சிறையிருப்பிலிருந்து வந்தபிறகு தங்கள் ஜனத்துக்கும் தேசத்துக்கும் வந்த துன்பங்களையும்

அழிவையும் பார்த்து நீதிமான்களுக்குக் கடவுள் செய்யும் நன்மையின்பேரில் நம்பிக்கை வைத்து கடவுள் தமது ஜனத்தை அதன் சத்துருக்களுடைய கையினின்று விடுதலைசெய்யும்பொருட்டு மீட்பர் ஒருவரை அனுப்புவார் என்று நம்பிவந்தார்கள். இயேசுவின் காலத்திலிருந்த பக்தர் எல்லாரும் கடவுள் இந்த மீட்பைத் தங்கள் காலத்தில் உண்டாக்கும்படி மீட்பரை அனுப்புவார் என்று நினைத்தார்கள். லூக் $2^{38}$. அந்த மீட்பை உண்டாக்கும் மீட்பர் தம் ஜனத்துக்கு விடுதலையைப் பற்றிய மெய்ஞ்ஞானத்தையும் பாவமன்னிப்பையும் பரிசுத்தத்தையும் எல்லாருக்கும் சுகத்தையும் சமாதானத்தையும் கொடுப்பார். லூக் $1^{74}$. யூதரில் பலர் தங்கள் தேசாபிமானத்தைப்பற்றி வைராக்கிய முடையவர்களாயிருந்து ஆவிக்குரிய இந்த நன்மைகளைக் கவனிக்காமல் யேகோவா அந்த மீட்பரின் மூலமாய் ரோமரின் அதிகாரத்தினின்று விடுதலை செய்வதே அந்த மீட்பின் விசேஷ நன்மை என்று நினைத்து ரோமர் அதிகாரத்துக்கு விரோதமாய் ராஜதுரோகஞ் செய்த அநேகரை ஏற்றுக்கொண்டு வெகு இஷ்டத்தோடு அவர்களைப் பின்பற்றினார்கள். அப் $5^{36}$. இதினிமித்தம் அவர்களில் சிலர் இயேசு செய்த அற்புதங்களைப் பார்த்து அவரைத் தங்களுக்கு ராஜாவாக்கப் பிரயாசப்பட்டார்கள். இயேசுவோ லௌகீக நன்மைகளைக் குறித்து நினைக்காமலும் ராஜாங்க அதிகாரத்தைத் தேடாமலும் ஆவிக்குரியவிதமான மீட்பைப்பற்றி மாத்திரம் போதகம் பண்ணினார். இந்த மீட்பு அவர் மூலமாயும் அவர் மரணத்தின் மூலமாயும் வருகிறது. மத் $20^{28}$ $26^{26}$ யோவா $3^{16}$ $6^{51}$. அப்போஸ்தலர் நடபடியாகமத்திலும், பவுல் பேதுரு இவர்கள் எழுதின நிருபங்களிலும் எபிரெயருக்கு எழுதப்பட்ட நிருபத்திலும் இயேசு அருளிச்செய்த ஊழியத்தின் நோக்கம் மீட்புத்தான். மூல பதங்களை நாம் விசாரித்தால் கட்டப்பட்டவனுக்கும் அடிமைக்கும் செய்த விடுதலை இதுதான். அப் $20^{28}$ 1 கொரி $6^{20}$ எபே $1^{7}$ 1 தீமோ $2^{9}$ 1 பேது $1^{18}$ வெளி $5^{9}$. இயேசு இவ்விதமாய்க் கொடுத்த போதனை என்னவென்றால் முதலாவது மனுஷர்கள் மீட்பு அடையும்படி அவர் அனுபவித்த கஷ்டநஷ்டமும் மரணப்பாடுகளும் வேண்டியவை; இரண்டாவது அவருடைய மரணம் பாவநிவாரண பலியாக இருந்ததினால் இந்தப் பலியின் பலனை அடைந்தவர்கள் அவருடைய மரணத்தினாலே பாவத்தினிமித்தம் வந்த தங்கள்மேலே தண்டனையினின்று மீட்கப்பட்டவர்களாகிறார்கள். ரோம $3^{24}$ 2 கொரி $5^{18}$ கலா $3^{10}$ $4^{4}$ தீத் $3^{14}$.

### III. மீட்பின் பலன்கள்.

இந்த மீட்பின் பலன்கள் என்னவென்றால்,

1. நமதுபேரிலிருக்கிற குற்றத்தின் சாபத்தினின்று விடுதலையடைதல். ரோம $8^{1.33}$.

2. பாவத்தின் வல்லமையினின்றும் சாத்தானின் அதிகாரத்தினின்றும் உலகத்தின் மயக்கத்தினின்றும் விடுதலையடைதல். ரோம 6 அதி. கலா $1^{4}$ தீத் $2^{14}$ எபி $2^{14}$.

3. மரணத்தின் வல்லமையினின்று விடுதலையாதல். இதின்படி இந்த மீட்பு பாவத்திலிருந்து விடுதலைபடைவதை யல்லாமல் நித்திய ஜீவன் என்னும் விசேஷ பொருளை அடைவதையும் காட்டுகிறது. இவ்விதயாய் இயேசு அருளும் மீட்பு பூரணமான ரக்ஷிப்பே. ரோம $6^{23}$ $8^{23}$ எபே $1^{3}$.

**மீதியானர், மீதியானியர், மீதியான்.** Midianites, Midian. ஆபிரகாமுடைய மனைவியாகிய கேத்தூராளுக்குப் பிறந்த நாலாம் குமாரனாகிய மீதியான் என்பவனுடைய சந்ததியார். ஆதி $25^{2}$. பூர்வீகத்தில் இவர்கள் உப்புக்கடலுக்குக் கிழக்கேயுள்ள வட அரபியா தேசத்தில் குடியிருந்தார்கள். வர்த்தகரான மீதியானியர் யோசேப்பைக் கிரயத்துக்கு வாங்கி எகிப்து தேசத்திலே கொண்டுபோய் விற்றார்கள். ஆதி $37^{28}$. எத்திரோ அவர்களுக்கு ஆசாரியனாயிருந்தான். யாத் $3^{1}$ எண் $10^{29}$ ஆப $3^{7}$. கேனியர்கள் மீதியானியருக்கு இனத்தாரெனத் தோன்றுகிறது. நியா $1^{16}$. பலெஸ்தீனாவில் படையெடுத்துவந்த இவர்களைக் கிதியோன் ஜெயித்தான். நியா 6, 7 அதி. சங் $83^{9}$. பிற்பாடு இவர்களைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை.

**மீயாமீன்.** Mijamin. மியாமீன் காண்க.

**மீறா.** Myra. சின்ன ஆசியாவின் தென் ஓரத்திலிருந்த லீசியா நாட்டிலுள்ள ஒரு துறைமுகப்பட்டணம். எகிப்து தேசத்துக் கப்பல்கள் கோதுமை வியாபாரம் செய்யும்படி இப்பட்டணத்திற்கு வரும். பவுலின் காலத்தில் மீறா லீசியா நாட்டிற்குத் தலைநகரியாயிருந்தது. அப் $27^{5}$.

**மீன்.** Fish. எபிரெய பாஷையில் மீன் வகைகளைக் குறிக்கும் பதங்கள் சில உண்டு. நூலாசிரியர் வேதாகமத்தில் மீன்வகைகள் என்பதற்கு 'மீன்' என்பதைப் பொதுவாய்ச் சொல்லுவார்கள்.

எபிரெயர்கள் மீன்களை அதிக இஷ்டத்தோடு சாப்பிட்டார்கள். அவர்கள் மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி சிறகும் செதிளும் உள்ள கடல் மீன்களையும் ஆற்று மீன்களையும் புசிப்பார்கள். லேவி 11⁹ உபா 14⁹.

எகிப்து தேசத்திலுள்ள நைல் நதியில் மீன்கள் அதிகம். யாத் 7¹⁸ எண் 11⁵. கலிலேயாக் கடலிலும் மீன்கள் ஏராளம். லூக் 5⁵ யோவா 21⁶. இயேசுவின்காலத்தில் யூதர்கள் வழக்கமாய் மீன்களை சாப்பிட்டு வந்தார்கள். மத் 7¹⁰. எருசலேம் பட்டணத்தில் மீன்கடைகள் பட்டணத்தின் வாசல்களில் ஒன்றிற்குச் சமீபத்தில் இருந்ததினால் அதற்கு 'மீன் பிடிப்பவர்கள் வாசல்' என்று பெயர். நெகே 3³ 12³⁹ 13¹⁶. செம்படவர்கள் தூண்டில் ஈட்டி வலை முதலியவைகளைக் கொண்டு மீன் பிடிப்பார்கள். ஆமோ 4² யோபு 41⁷ ஏசா 19⁸ மாற் 1¹⁶. மீன் தேவனை வணங்குவது கூடாதகாரியம். உபா 4¹⁸. தாகோன் காண்க.

மத்தியதரைக்கடலிலுள்ள திமிங்கிலம் எபிரெயர்கள் கண்டிருக்கிறார்கள். யோபு 7¹². யோனாவை விழுங்கின 'பெரிய மீன்' ஒருவித திமிங்கிலம் என்று தோன்றுகிறது. யோனா 1¹⁷. திமிங்கிலம் காண்க.

'மீன' என்பதைக் குறிக்கும்படி கிரேக்க பாஷையில் *I—ch—th—u—s* என்ற பதம் ஒன்று உண்டு. ஆதி கிறிஸ்தவர்கள் இந்தக் கிரேக்க பதத்தில் அடங்கிய பஞ்ச அட்சரங்கள் *Iesous-Christos-Theou-Uios—Soter* என்னும் இந்த 5 மொழிகளைக் குறிக்கிறது என்று சொன்னார்கள். இந்த 5 மொழிகளுக்கு 'இயேசு—கிறிஸ்து—தேவனுடைய—குமாரன்—மீட்பர்' என்று அர்த்தம்.

ஆதலால் அவர்கள் தாங்கள் அச்சிட்ட முத்திரைகளிலும் கட்டின கல்லறைகளிலும் மீனைப் பதித்து இவ்விதமாய்க் கிறிஸ்தவ மார்க்கத்தை அறிக்கையிட்டார்கள்.

## மு.

**முகதரிசனம்.** Favour. நீதி 29²⁶.

**முகதாட்சண்யம்.** Respect of Persons. உபா 1¹⁷ 14¹⁹ 2 நாளா 19⁷ நீதி 24²³ 28²¹.

**முகம்.** Face. அதிக துயரப்படும்போது எபிரெயர்கள் முகத்தை மூடிக்கொள்ளுவதினால், முகத்தை மூடிக்கொள்ளுதல் துக்கத்திற்கு அடையாளம். 2 சாமு 19⁴.

இப்படிச் செய்வது வணக்கம், மரியாதை, நாணம் முதலியவைகளைக் குறிக்கும். ஆதி 24⁶⁵ யாத் 3⁶ 1 இரா 19¹³ ஏசா 6².

அது மனக்குழப்பத்தையும் மனக்கலக்கத்தையும் காண்பிக்கும். யோபு 9²⁴.

முகங்குப்புறவிழுதல் சாஷ்டாங்க நமஸ்காரத்தைப்போன்ற ஒரு மகா வணக்கம். லேவி 9²⁴ எண் 16²².

முகத்தில் காறித் துப்புகிறதைவிட வேறு இகழ்ச்சி ஒன்றும் இல்லை. எண் 12¹⁴ உபா 25⁹ மத் 26⁶⁷.

'முகத்தைக் கடினப்படுத்துவது' பாவத்தைப் பிடிவாதமாய் விரும்புகிறதைக் குறிக்கும். நீதி 21²⁹ எரே 5³.

உபவாசியின் முகம் வாடியிருக்கும். மத் 6¹⁶.

ஒருவன் முகம் மற்றொருவன்மேல் 'பிரகாசிக்கும்' என்பது அவன் இவன்பேரில் தயவுள்ளவனாய் இருப்பான் என்று அர்த்தங்கொள்ளும். எண் 6³⁵ சங் 31¹⁶.

ஒருவன் கடவுளுக்குத் தன் முகத்தைக் காட்டாமலிருப்பது அவருக்குக் கீழ்ப்படியாமையைக் குறிக்கும். எரே 2²⁷ 32³³.

ஒருவனுடைய முகம் இன்னொருவனுக்கு விரோதமாய் இருப்பது அவன்பேரில் இவனுக்குத் தயவு இல்லாமையைக் குறிக்கும். சங் 34¹⁶ எரே 21¹⁰ எசே 15¹⁷.

முகத்தை மறைப்பது=ஞாபகத்தில் வைக்காமல் இருப்பது. சங் 51⁹.

ராஜாவின் முகத்தைக் காண்கிறது=அவனுடைய சந்நிதானத்தில் பிரவேசிக்கிறது. ஆதி 33¹⁰ 43³ 46¹¹.

முகத்தைக் காண்கிறது=ஒருவனைத் தயவோடு ஏற்றுக்கொள்ளுகிறது. சங் 84⁹.

ஒருவனைப்பார்த்து முகத்தைத் திருப்புகிறது=அசட்டை செய்வது. சங் 121¹⁰.

கடவுளினின் முகத்தைக் காண்கிறது=தேவஸ்தலத்திலே பிரவேசிப்பது. ஆதி 32³⁰ யாத் 33¹¹.

தேவஸ்தலத்தில் காணிக்கையாக படைக்கிற அப்பத்திற்கு 'தேவசமுகத்தப்பம்' என்று பெயர்.

முதிர் வயதுள்ளவனுடைய முகத்தைக் கனம்பண்ணுவது. லேவி 19³².

ஏழையின் முகத்தை நெறிக்கிறது. ஏசா 3¹⁵.

முகமுகமாய்ப் பார்ப்பது = பூரணமாய் அறிவது. 1 கொரி 13¹².

**முகாந்தரம்.** Reason. தானி 6⁴.



முக்காடு.

**முக்காடு.** Veil. எபிரெய ஸ்திரீகள் எப்போதும் முக்காடிட்டுக்கொள்ளாமல் சமயா சமயத்தில்மாத்திரம் அதைத் தரித்துக்கொள்வார்கள். ரெபெக்காள் முதலிய பெண்கள் தண்ணீர் மொள்ளக் கிணற்றுக்குப் போனபோது முக்காடு போடவில்லையென தோன்றுகிறது. ஆதி $12^{14}$ $24^{16}$ $29^{10}$ 1 சாமு $1^{12}$. ஆண்களுக்கு மரியாதை காட்டும்படி ஸ்திரீகள் அதை உபயோகித்துவந்தார்கள். ஆதி $24^{65}$. மோசே சீனாய் மலையிலிருந்து இறங்கிவந்தபின் தன் முகப்பிரகாசத்தை முக்காட்டு மறைத்துக்கொண்டான். யாத் $34^{33}$. ஒருவன் ஒரு பெண்ணின் முக்காட்டைப் பலவந்தமாய் எடுத்துவிடுவது அவளுக்கு மிகவும் அவமரியாதை. உன். பா $5^{7}$. சபையிலே தன் தலையை மூடிக்கொள்ளாதிருக்கிற எந்த ஸ்திரீயும் தன் தலையை கனவீனப்படுத்துகிறாள் என்று பரி. பவுல் சொல்லுகிறான். 1 கொரி $11^{5}$.

அசீரிய ஸ்திரீகளும் எகிப்திய ஸ்திரீகளும் பொதுவாய் முக்காடு தரிக்கவேயில்லை. தற்காலத்திலே சீரியாவிலும் எகிப்திலுமுள்ள பெண்கள் இருவகை முக்காடு தரித்துக்கொள்கிறார்கள். ஒன்று இத்தேசத்தில் மகமதிய ஸ்திரீகள் போடுகிற பெரிய முக்காட்டைப்போல், தலைமுதல் காலமட்டும் இருக்கும். பெண்ணின் கண்கள் சில துவாரங்களின் மூலமாய்ப் பார்க்கக்கூடும். தெருவிலே போகும்போது இதை உபயோகிப்பார்கள். வீட்டிலிருக்கும்போது மெல்லிய சல்லாத்துணியினால் முக்காடிட்டுக்கொள்வார்கள். தமிழ் வேதாகமத்திலே இது 'போர்வை' என்று சொல்லப்படும். ரூத் $3^{15}$ ஏசா $3^{22}$ உன். பா $5^{7}$. உடை காண்க.

பரி. பவுல் சொல்லுகிறபடி பழைய ஏற்பாட்டுக் காலத்தில் உண்மை பூரணமாய் யூதர்களுக்குத் தெரியாதபடி சடங்குப் பிரமாணம் ஒரு முக்காட்டைப்போலிருக்கிறது. அது இயேசுகிறிஸ்துவினால் நீங்கிப்போகிறது. 2 கொரி $3^{14}$



முசல்.

**முசல்.** Hare. பலெஸ்தீனாவில் நான்குவகை முசல்களுண்டு. இவைகளுக்கு விரி குளம்பில்லாததினால் நியாயப்பிரமாணத்தின்படி எபிரெயர்கள் இவைகளைப் புசிக்கலாகாது. லேவி $11^{6}$ உபா $14^{7}$.

**முசுக்கட்டைச்செடி.** Mulberry. தற்காலத்து வேதசாஸ்திரிகளின் அபிப்பிராயத்தின்படி 'முசுக்கட்டைச் செடி' என்னும் மொழிபெயர்க்கப்படும் எபிரெய பதம் முசுக்கட்டைச் செடியைக் குறிக்கிறதில்லை. இது ஒருவிதமான புன்னைமரமாயிருக்கலாம். 2 சாமு $5^{23}$ 1 நாளா $14^{14}$.

**முசுக்கட்டைப் பூச்சி.** Caterpillar. 'முசுக்கட்டைப் பூச்சி' என்பது ஒருவகை வெட்டுக்கிளியைக் குறிக்கும். யோவே $1^{4}$ $2^{25}$.

**முடம்.** Maimed. 2 சாமு $4^{4}$ $9^{3}$ ஏசா $35^{6}$. எபி $12^{13}$ சப்பாணி, வியாதி காண்க.

**முடி.** Crown. 2 சாமு $1^{10}$ மத் $27^{9}$ வெளி $12^{3}$ $13^{1}$ கிரீடம் காண்க.

**முடிக்கிறது.** Finish. யோவா $4^{34}$ $17^{4}$ $19^{30}$ அப $20^{24}$ 2 தீமோ $4^{7}$.

**முடிவு.** End. உபா $34^{20}$ நீதி $14^{12}$ பிர $7^{8}$ மத் $24^{6}$.

**முட்செடி.** Thorn, Bramble. முட்செடிகளைக் குறிப்பிடும்படி பழைய ஏற்பாட்டில் பதினேழு எபிரெய பதங்களும், புதிய ஏற்பாட்டில் மூன்று பதங்களும் வழங்கியிருக்கிறது. இப்பதங்கள் குறிக்கிற முட்செடி இன்னதென்று திட்டமாய்ச் சொல்ல ஏதுவில்லை. என்னனில் பலெஸ்தீனா தேசத்தில முட்செடி ஏராளம். இவை விவசாயம் செய்பவர்களுக்கு மிகவும் இடையூறாயிருக்கும். ஆதி $3^{18}$. இவைகள் விறகாகவும் உபயோகிக்கப்படும். இந்த விறகு வெகு சீக்கிரம் எரிந்து அவிந்துபோம். சங் $58^{9}$ $118^{12}$ பிர $7^{6}$ ஏசா $33^{12}$. ஐந்து அல்லது ஆறு அடி உயரமட்டும் வளரும் ஒருவகை முட்செடி ஊர்களுக்கும் வயல்களுக்கும் நல்ல வேலியாயிருக்கிறது. நீதி $15^{19}$ ஓசி $2^{6}$. இதிலுள்ள முட்கள் ஊசியைப்போல கூர்மையாயிருக்

ரும். எண் $33^{55}$ நீதி $26^{9}$ 2 கொரி $12^{7}$. பாழாய்க்கிடக்கிற ஸ்தலங்களில் ஏராளமாய் வளரும். நீதி $24^{81}$ சில முட்கள் தண்டிலைப்போல் வளையும். ஏசா $34^{13}$ ஓசி $2^{6}$ நாகூ $1^{10}$. இந்தமாதிரி முட்செடிகளுள்ள இடங்களில் பிரயாணம் செய்வது ஜனங்களுக்கு மெத்த கஷ்டம். ஏசா $7^{25}$ $32^{13}$ ஓசி $9^{6}$. இயேசுவின் சிரசின்மேல் வைத்த முண்முடி இத்தேசத்திலுள்ள வேலமரத்தின் கிளைகளைப்போல் முட்கள் நிறைந்த கிளைகளால் சூட்டப்பட்டதுதான். மத் $27^{29}$ யோவா $19^{2}$.

**முட்டை. Egg.** எபிரெயர்கள் சுத்தமான பட்சிகள் இட்ட முட்டைகளை சாப்பிடுவார்கள். உபா $22^{6}$ ஏசா $10^{14}$ யோபு $6^{6}$ லூக் $11^{12}$.



முதலை.

**முதலை, லிவியாதான். Crocodile, Leviathan.** கலிலேயாக்கடலிலும் உப்புக்கடலிலும்யோர்தான் நதியிலும் முதலை கிடையாது. ஆனால் கர்மேல் மலைக்குத் தெற்கிலிருந்த ஒரு சிற்றாற்றிலே முதலைகள் இருந்தனவென்பது நிச்சயம். இவைகள் தற்காலத்திலும் அங்கே காணப்படுகின்றன என்பதற்கு அத்தாட்சியுண்டு. என்றபோதிலும் இவை பலெஸ்தீனாவில் மிகவும் அபூர்வமே. சங் $74^{14}$ எசே $32^{2}$.

சில வசனங்களில் சொல்லிய 'லிவியாதான்' என்பது பயங்கரமான ஒரு முதலையையே குறிப்பிடுகிறது. யோபு $41^{1}$. வேறு சில வசனங்களில் வருகிற 'லிவியாதான்' என்பது சிலர் நினைக்கிறபடி யாளியைப் போன்ற பயங்கரமான ஓர் ஜீவஜெந்தைக் குறிக்கும். ஏசா $27^{1}$ யோபு $3^{8}$ பிகெமோத், லிவியாதான், வலுசர்ப்பம், காண்க.

**முதற்பலன். First-fruits.** யாத் $23^{16}$ $34^{26}$ உபா $18^{4}$ 2 நாளா $31^{5}$ எரே $2^{3}$ ரோம $8^{23}$ $11^{16}$ $16^{5}$ 1 கொரி $15^{20.23}$ $16^{15}$ யாக் $1^{18}$ வெளி $14^{4}$. பலன் காண்க.

**முதற்பேறு. First born.** யாத் $13^{2}$ செகே $10^{36}$ மீகா $6^{7}$ சக $12^{10}$ சங் $89^{27}$ மத் $1^{25}$ லூக் $2^{7}$ ரோம $8^{29}$ கொலோ $1^{18}$ எபி $1^{6}$ $11^{28}$ $12^{23}$ [கொலோ $1^{15}$ வெளி $1^{5}$.] ஜேஷ்ட புத்திரன், தலைச்சன், தலைப்பிள்ளை, மூத்தமகன் காண்க.

**முதன்மை. 'First'.** மத் $20^{27}$ மாற் $11^{44}$.

**முதியோர். Ancient.** யோபு $12^{12}$ சங் $119^{100}$.

**முதிர்வயதுள்ளவன். Ancient.** ஏசா $3^{5}$.

**முத்தம். Kiss.** எபிரெயருக்குள்ளே பெற்றோருக்கும் பிள்ளைகளுக்குமுள்ள பாசத்தைக் காட்டும்படியாகவும் (ஆதி $27^{26}$ ரூத் $1^{9}$ 1 இரா $19^{20}$), இனத்தாருக்குள்ளேயுள்ள அன்பை வெளியிடும்படிக்கும் (ஆதி $29^{13}$ $45^{15}$), பிறர்மேலுள்ள மெய்நேசத்தைக் காண்பிக்கும்படிக்கும் முத்தமிட்டுக்கொள்வது வழக்கம். 2 சாமு $20^{9}$ அப் $20^{37}$.

வீட்டெஜமான்கள் தங்கள் வீட்டுக்கு வருகிற அதிதிகளை முத்தமிடுவார்கள். லூக் $7^{45}$. தன் தயவைக் காட்டும்படி பெரியவன் சிறியவனை முத்தம் செய்வான். 2 சாமு $15^{15}$ $19^{39}$. முத்தம் கொடுப்பது அன்பை வெளியிடும். உன். பா $1^{2}$ $8^{1}$. இது கீழ்ப்படிதலையும் தெரிவிக்கும். யோபு $31^{27}$ சங் $2^{12}$.

சிலையை முத்தமிடுவது விக்கிரக ஆராதனையில் ஒரு சடங்கு. 1 இரா $19^{18}$ ஓசி $13^{2}$. மிகுந்த தாழ்மையைக் காண்பிக்கும்படி பெரிய மனுஷர் மிதித்த தடத்தையும் தாழ்ந்தவன் முத்தமிடுவான். ஏசா $50^{23}$.

ஆதி திருச்சபையில் கிறிஸ்தவர்கள், தங்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் 'பரிசுத்த முத்தம்' செய்து தங்கள் சபையின் சகோதர ஐக்கியத்தை வெளியிட்டார்கள். ஆனால் ஆண்கள் ஆண்களையும், பெண்கள் பெண்களையும் மாத்திரமே இப்படிச் செய்தார்கள். 1 கொரி $16^{20}$ 1 பேது $5^{14}$.



முத்திரை.

**முத்திரை. Seal, Signet.** பூர்வீககாலத்தில் எகிப்தியரும் பாபிலோனியரும் முத்

